உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிவசண்முகன் றுணை.



ஸ்ரீகாஞ்சிபுரத்தில், ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுளின்

வரப்பிரசாதராயெழுந்தருளியிருந்த

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகளியற்றிய

# கந்தபுராண மூலமும்

முத்தமிழ் ரத்நாகரம்

ம. தி. பானுகவி அவர்களியற்றிய

கலாபூஷணமென்னும் உரையும்



இவை

தா-குப்புசாமிநாயகர் கம்பெனியாரால்

தமது

சென்னை ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.



1907.

**Vol. 2**

# மகேந்திரகாண்டத்தின் படல அட்டவணை.



# யுத்தகாண்டத்தின் படல அட்டவணை.

## தேவகாண்டத்தின் படல அட்டவணை.



## தட்சகாண்டத்தின் படல அட்டவணை.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.
சிவசண்முகன்றுணை.

---

மூன்றாவது,

# மகேந்திரகாண்டம்.

## வீரவாகுகந்தமாதனஞ்செல்படலம்.

---

விரிஞ்சன்மா றேவ ராலும் வெலற்கரும் விறலோ னாகிப்
பெருஞ்சுரர் பதமும் வேத வொழுக்கமும் பிறவு மாற்றி
யருஞ்சிறை யவர்க்குச் செய்த வவுணர்கோ னாவி கொள்வான்
பரஞ்சுட ருருவாய் வந்த குமரனைப் பணிதல் செய்வாம்.

(இ-ள்.) பிரமன் திருமால் முதலானதேவர்களாலும் வெல்லுதற்குக்கூடாத வலிமைவாய்ந்தவனாய் பெரியதேவர்களது பதவிகளையும் வைதீகநெறிகளையு மற்றவைகளையு நீக்கி அத்தேவர்களைச் சிறைபடுத்திய அசுரராஜனாகிய சூரபன்மனது உயிரை வாங்கும்பொருட்டு பரஞ்சுடருருவாய்த்திருவவதாரஞ்செய்த குமாரசுவாமியை வணங்குவாம்.—எ-று.

பரஞ்சுடர்-பரத்தினின்றும் உண்டானசுடர். பரம்-சிவம். சுடர்-ஊர்த்துவரோதஸானதீப்பொறி என்றும், பரஞ்சுடர்-பரமாகிய சுடரே குமாரனாகி என்றும், பரஞ்சுடருருவாய்-பரஞ்சுடரைப்போல வுருவாய்வந்த குமரன் என்றும் கூறினுமமையும்.

இதன் விதப்பு:—"முத்தகச்செய்யுடனின்றுமுடியும்" என்னுமாசிரிய வசனத்துக்கியைந்த "விரிஞ்சன்மாறேவராலும்" என்னுமிம்முத்தகச்செய்யுள், இக்காண்டத்திறாரம்பத்தி லிவ்வாசிரியரா லிந்நூலினிதுமுடிதற்பொருட் டியற்றப்பட்டதாம். மக்கள் தன்னியல்பினரன்றாதலானும் இறைவன்றன்னியல்பினனே ஆதலானும் "அவனன்றியோரணுவுமசையா" தென்றதவருக்குடன்பாடாதலானும், "ஆட்டுவித்தாலாரொருவராடாதாரோ" என்னுந் திராவிடவேதவுடன்பாட்டினராதலானும், ஸுவொவாவு நிஸ்ஜ்ரயம் ஶாஸ்ரமாரம்பணோசிதம் । வீக்ஷ்ய விக்நார்ணவோத்தீர்ணாம் ப்ரத்யக்ஷஸித்திதாம் ஸிதாஃ என்று வியாசமுனிவர்கூறியபடி தான் மஹேந்திரகாண்டத்தை யாரம்பித்தாரில்லை; கடவுள்வாழ்த்துக்கூறியே ஆரம்பித்தனர். "எடுத்துக்கொண்டநூ லிடையூறின்றி இனிது முடிதற்பொருட்டுச் செயற்பாலதென ஆன்றோரொழுக்கத்தா னனுமிக்கப்படும் வழிபடுகடவுள் வணக்கமாகிய மங்கலம் மாணாக்கர்க் கறிவுறுத்தற்பொருட்டு யாப்பினுள் யாத்து கூறுகின்றார்" என்றும், அற்றாக: மங்கல மினிதுமுடிதற்குக்காரணமன்று, மங்கலங்கூறியவழியும் நன்னூல்முதலியவற்றின் முடிவுகாணாமையின், மங்கலங்கூறாவழியும் தொல்காப்பிய முதலியவற்றின் முடிவு காண்டலின், உடன்பாட்டினும் எதிர்மறையினும் நியமந்தப்புதலின் எனின், நன்று சொன்னாய்! நன்னூல் முதலியவற்றின் இடையூற்றின் மிகுதிப்பாட்டான் முடிவு பேறின்று. தொல்காப்பிய முதலிய

வற்றின் நூற்குப் புறமாகவே மங்கலஞ்செய்யப்பட்டதாகலின், நியமந்தப்பியது யாண்டையதென்க. அற்றேல், மங்கலஞ்செயற்பாலதென்பதற்குப் பிரமாணமென்னையெனின், ஆன்றோரொழுக்கத்தானுண்டென் றனுமிக்கப்படுஞ்சுருதியே பிரமாணமென்க. ஈண்டனுமானமாமாறு, மங்கலஞ்செயற்பாலதென வேதத்தின் விதிக்கப்பட்டது உலக நடையும் பழிப்புமல்லாத ஆன்றோரொழுக்கமாகலின், வேள்விமுதலியனபோல எனக் காண்க. உண்டிமுதலிய வற்றின்சேறலை நீக்குதற்கு உலகநடையல்லாத என்றும், இரவின்கட்டென்புலத்தார் கடனோம்பல் முதலியவற்றிற் சேறலை நீக்குதற்குப் 'பழிப்பில்லாத' என்றும், கூறப்பட்டது பயனிலசெய்யற்கவென, நீரடித்தல் துரும்பு கிள்ளுதல் முதலியவையும், பழிக்கப்படுதலின் உலகநடையும் பழிப்புமல்லாத ஒழுக்கம் எனவே அமைதலின், 'ஆன்றோரென்றது விளங்குதற்பொருட்டு 'ஒழுக்கம்' ஆசரித்து வருதல்'' என்று நியாயநூலுளாசிரியர் சிவஞானமுனிவர் திருவாய்மலர்ந்தருளியபடியால் இது ஆன்றோர் வழக்கென்றறியப்படுகிறது.

அன்றியுமிவ்வாசியர் குமரக்கடவுளின் திருவருளினாலேயே இந்நூல் இயற்றினானெனக் கதைமுகத்தா லறியப்படுகிறது. இவர் குமரக்கடவுளை சொயந்தேவதத்த (ஸ்வயந்தேவதத்த) என்று கூறுமொழிபோல சிவபெருமானே என்றறிந்தவராதலானும்; தான் துணிந்தனுபவிக்கும்பொருள் பசுபதியே ஆதலானும், இதரதேவர்கள் பசுபதியாகியசிவபெருமானது முன்னிலையிற் பகற்காலத்து மின்மினிபோல்வாரென்ப திவர் துணிபாதலானும், நிரதிசயவின்பஸாக்ஷாத்காரமான மங்கலமூர்த்தியாகிய சிவபெருமானே சண்முகராதலால் திரிமூர்த்திகளி லொருமூர்த்தியை யொழித்திருமூர்த்திகளைத் தாழ்த்தித் தனது பரத்துவ நிரூபணங்காட்டி வணங்கினர்.

அவ்வாறு வணங்கிய வணக்கத்துள் எம்பெருமானாராகியகுமரக்கடவுள் ஆறுதிருமுகமுள்ளவராதலா லாசிரியருமவரை அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தத்தாலேயே துதித்தனர். தன்னை வணங்கினவர்களுக்குத் தான் சதுர்வித புருஷார்த்தங்களையும் அளிப்பவொன்று விளக்க வெண்சீர்வெண்டளை, நேரொன்றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, நிரையொன்றாசிரியத்தளையென்னும் நான்குதளைகளையுடையதாக முதலடியையமைத்தனர்; இருபத்துநான்குசீர்களினுறழ்வினாற்போந்த பதினாறுதளைகளாற் பின்னப்பட்ட விவ்வியாப்புமுழுதிலுமுள்ள எழுத்துக்கள் தொண்ணூற்றேழேயாக நிற்றல்; தத்துவங்களை விரிவுபடுத்திப்பார்க்குங்காலை தொண்ணூற்றாறேயாம். தொண்ணூற்றாறுக் கப்பாலுள்ள தொண்ணூற்றேழாவது பொருளே முருகப்பிரான் என்றுணர்த்த வவ்வாறுகூறினர். ஒற்றொலிமுன்னு முயிரொலிபின்னுமாக வரும். வி – என்று முன்னிருத்தலையும், ம் – என்று பின்னீற்றடியினீற்றிலிருத்தலையும் கருதின், யோகத்தின் சார்பினிற்பார்க்கு வ் – ம் – முதலியவைகள் இம் – முதலியவைகளைப்போல கும்பகத்திற்குத் துணையாக உபதேசவழியிற் காணப்படுதலால் யோகமுடையவர்களே குமரக்கடவுளைக் காணத்தக்கவர்களென்று குறிப்பிக்க அவ்வாறு கூறினர்.

இதுவன்றியும், "ஆரணனிரணியகருப்பன்விரிஞ்சன்'' என்று நிகண்டிற்கூறப்படுதலால், விரிஞ்சனென்றது பிரமனை; பிரமன்-படைத்தற்றொழிலை மேற்கொண்டவன். இந்நூலினு மிக்காண்டந் தமிழில் தோற்றுந்தொழில் மேற்கொண்டுள்ளது. ஆதலால், படைப்புக்கடவுளை விரிஞ்சனென்று முன்னர் வைத்தனர். படைக்கப்பட்டவுலகத்தைக் காக்கப்படுங்கடவுள் மாலாதலின் அடுத்தமொழியில் மாலைவைத்தனர். அன்றியும், விரிஞ்சனென்னும் உயர்திணையாண்பாற்படர்க்கைப்பெயர், மொழியினு மங்கல மொழியேயாம் "சீர்பொன்பூமணி திங்கள்பரிதி, கார் திருவெழுத்துக் கங்கையானை, கடனிலை மாவுலகஞ்சொன்னீர் தேரமுதம் புகழ்நிலமாரணங்கடவுள் திகிரிபிறவுஞ் செப்புமங்கலமே''என்னும்பாட்டியலில் கடவுள்என்று தேவவாசகம்குறிக்கப்பட்டிருத்தலால் விரிஞ்ச

னென்றுரைத்ததை மங்கலமொழியென்றுணரப்படுகிறது. முதலில்வைக்குஞ்சொல்"ஈறு திரிவதின்றிச்செய்வதுசொல்லே" என்பதிலக்கணம். ஆதலால், முதன்மொழியீறுதிரிந்து வருதல் முதலியவை மங்கலத்துக்கவ்வளவாகச் சிறந்ததன்றென்றறியப்படுகிறது. விரிஞ்சன் என்னும் மெய்ம்முதல் மெய்யீருகவுள்ள உயர்திணையாண்பாற்படர்க்கைப் பெயராய் இயல்பீருகிய னகரமெய்யை ஈற்றிற்கொண்டுள்ள விரிஞ்சன் என்னும் சொல்லினுடன் வருமொழிமுதலில் நின்றமகரம் இயல்பாயேநின்று புணர்ந்தது. இம்முதன்மொழிவிகாரமின்றிப்புணர்ந்தமையால் மங்கலமொழி இழிவுபடாதுநின்றது. இம்முதற்சீர் மங்கலமொழியொடு நின்றதன்றியும் ஆயுளைவளர்த்தலென்னும் நற்கணப்பொருத்தத்தையும் பெற்றது. "ஆதியுமிடையுமிறுதியுமுற்று- மோதியநேருநிரையுமுற்றிடின்-நீர்தீமாகநிகரில்சுவர்க்க-மாமதிபரிதிவாயுபூகண மாமுற்ருதியாமுதற்சீர்க்கே" என்றிலக்கணத்திலும், "முதனிரையாகிய யிணைநேர்பின்வரின் - மதியின்கணமென வகுத்தனர்புலவர்" என்று நிகண்டிலும் கூறப்படுதலால் இவ் வறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தத்தின் முதற்சீரில் விரிஞ்சன்மால் என்றுள்ளது. நிரை நேர்நேர் ஆதலால் சந்திரகணமாயது "நிலமதி நீரியமானன் என்னுநான்கும், பெருக்கஞ்செய்தலில்வாழ்நாள்பயத்தலில்- தருக்கிய சீர்த்தி தன்னைத்தருதலின்- மிகுதிருவாக்கலின் வேந்தர்க்கும் பிறர்க்குந்- தகுமெனக்கழறினுந் தகாமற்றச்சீர்க் - குரியவாநாளொடும் பொருந்தாக்காலே" என்று நிகண்டிலும், "நீரதுகணமேசீர்சிறப்பெய்துந் - தீயின்கணமேநோயதுசேரு - மந்தரகணமேவாணுளகற்று- மிந்திரகணமேபெருக்கஞ்செய்யும்- சந்திரகணமேவாழ்நாள்தரூஉஞ்- சூரியகணமேவீரியம்போக்கு- மாருதகணமேசீர்சிறப்பகற்று- நிலக்கணந்தானே மலர்த்திருவிளங்கும்" என்றிலக்கணத்துங்காணப்படுதால்வாழ்நாளைத்தருதலாகிய நன்மையைக்கொண்ட சந்திரகணமமைந்தமையாற் படிப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் நூலுக்கும்நிலைத்தலுண்டாயது. பாட்டுடைத்தலைவர் நித்தியமானவராதலால் எந்தக்கணமுமவரையொன்றுஞ்செய்யா. பின்னை, ஆக்கியவருக்கும் அனுஷ்டிப்பவர்களுக்குமே அதின் பல சித்தியென்று சத்துக்கள் கூறுகின்ருர்கள். இதிலுள்ள நன்மைகளையெல்லாம் இதனை சிரவணமனனஞ்செய்பவர்களேஅடைகின்ருர்கள். இதுவன்றியும், கணப்பொருத்தத்தாலாகிய நன்மையைப்போல தானப்பொருத்தத்திலும் "தன்னெழுத்துப்பாலன்குமரனிரண்டாகு,மன்னவற்குமூன்ரும்வகுக்குங்காற்-றுன்னிய,நஞ்சார்விருத்தமாநான்காகிலைந்தாகிலெஞ்சாமரணத்தியல்பு" என்று நிகண்டிலும், "குற்றெழுத்தைந்துமொத்தநெட்டெழுத்தொடு-மையெளவென்னுமாயீரெழுத்தை-இ உ என்னுமிரண்டொடுஞ்சேர்த்திப்-பாலகுமாரவிராசவிருத்த-மரணமென்னவகுத்திறைவன்பெயர்-முதலெழுத்தினை முதற்பொருத்தமதாக-முதற்சீரிடத்துமுதற்கணின்ற-வெழுத்தொடுதாக்கியிடமுதன்மூன்றும்- விழுத்தபுமூப்புமரணமும்விலக்கே" என்றிலக்கணத்திலும் கேட்கப்படுதலால், கந்தன்-சண்முகன்-கந்தபுராணம் என்னுமித்தகையபெயர்களுக்கிவ்விரிஞ்சன் என்பதன்முதலெழுத்து, குமரதானமாதலால் தானப்பொருத்தமும், விரிஞ்சனென்பதின் முதலிலுள்ளது குற்றெழுத்தாதலால்"உயிர்பன்னிரண்டு மாணெனப்படுமே" என்று நிகண்டிலும் "ஆஉஉக்குறினெடிலாகுமகரஉப், பேடொற்ருய்தம்பெண்ணுண்புகழ்ச்சிக், கவ்வெழுத்துமயங்கினுமமையுமென்ப" என்றிலக்கணத்திலும் காணப்படுதலால் முதலில்வந்த குற்றெழுத்து ஆண்பாலெழுத்தாதலால்பாற்பொருத்தமும், "எண்ணின்மூன்றைந்தேழொன்பான்முதனண்ணுமக்கரநாலாறெட்டுரு" என்பதிலக்கணமாதலால், இதின் முதற்சீர் ஏழு எழுத்தானமைந்தமையால் எழுத்துப்பொருத்தமும், கசதபநமவவேழொடுமகர - மிகர முகர மெகர நான்கு - மமுத வெழுத்தென் றறைந்தனர் புலவர்" என்ப திலக்கணமாதலால் அமுதஉண்டிப்பொருத்தமும், மற்றையமங்கலங்களும் பொருந்தி யழகொடு நிற்குமிச் செய்யுள், "கொடிநிலைகந்தழி வள்ளியென்ற - வடுநீங்குசிறப்பின் முதலறமூன்றுங்-கட

வுள்வாழ்த்தொடு கண்ணியவருமே" என்ற விலக்கணப்படி கடவுள்வாழ்த்தாம். இதனை நமஸ்காரரூபமங்கலமென்றுங்கூறுவர்.

சூரபன்மனதேற்றமறிந்தால் அவனைக்கொன்றருளிய பெருமானதேற்றந்தானே விளங்கும் அது பற்றியே ஆசிரியர் ஒருவராலும் ஜயிக்கப்படாத சூரபன்மனென்றனர். சூரபன்மன் அரசாண்டகாலத்து பிரமன்முதலிய தேவர்களாற் ஜயிக்கப்படாதவனாகவே விளங்கினன். இதனை—

“ஜநலோகே தபோலோகே ப்³ரஹ்மஸ்தா²நே ஸேநயா
ஸத்யலோகே ச ஸர்வாணி விஜித்வா ஸுரஸத்தம:”
“ஜகா³ம விஷ்ணுலோகம் ச ப்³ரஹ்மாண்ட³ம் க்ஷணாத்
ஸ்வர்க³ம் ப்³ரஹ்மாண்ட³ம் வா வாஸவம் ஜயந் ஸ்வயம்”
“விதா⁴தாபி ஸ்வயம் த்³ரஷ்டும் நிவாஸாத்³ ஸஹஸா
ஸமேத்ய ஸிம்ஹாஸநம் ஜக³தா³ம் நாயக:”
“த்³ரஷ்டாத்மஜம் தாஸ்யா நிஷ்ப்ரபே⁴ தி³ஸி
தவாந்தஜாநாம் ஸ்வயம்பு⁴வ: ஸ்வயம்பூ⁴ நாராயணா தி³வி”
“ப்³ரஹ்மாண்ட³ம் ஸ்ருஷ்டம் நிர்ஜித்ய ஸ்வர்கா³தா³ விபி⁴:”—என்று வடமொழிஸ்காந்தத்திலும்,

“கற்றுணர்கேள்வியான்மார்க்கண்டேயனுதிவானே
ருற்றிடும்பதமாந்தொல்பேருலகமேமுதலமூன்று
மற்றவர்பரவநீங்கிமலரயன்பதத்திற்போகத்
தெற்றெனவதனைத்தேர்ந்துதிசைமுகன்றனுக்கமுற்றான்" என்றும்,

“வசையினேன்புடைவாலறிவுள்ளோ, ரிசைகொள்வேதமியம்பினர்சூழ
நசையினீரொடொன்முகவேதா, வசுரர்கோனையடைந்தனனன்றே" என்றும்,
“மன்னநீயிவண்வந்திடமேனு, ளென்னநோன்பையியற்றினனேயா
னன்னவாறுணரேன்சிவனல்லா, லுன்னிநாடியுணர்ந்துளர்யாரோ"
“காதலான்மிருகாசிபன்மைந்த, ஞதலாலவுணர்க்கிறைநின்மூ
தாதையான்சரதம்மிதுநின்சீ, ரோதுமென்புகழ்யான்பிறனன்றே"
“என்றுபன்முகமன்களிசைத்தே, நின்றுதம்பியர்தங்களைநேர்ந்து,
பொன்றிடாதபொலஞ்சிலைதிண்டே, ரொன்றுதன்படையும்முதவுற்றான்" என்றும் இப்புராணத்திலும் வருதலாற் பிரமன்சூரபன்மனை வெல்லுமாற்றலுடையவனல்லனென்றறியப்படுகிறது. வெல்லுந்திறமுள்ளவனாற் சென்றுபுகழான். இனிமாலாவார், சூரபன்மனிளையவனாகிய தாரகாசுரனுடன் இடைவிடாது நான்குநாள் யுத்தஞ்செய்து தனதருமைச்சக்கரத்தை விட்டனர்; அதுசென்றவ்வசுரனுக்கொரு கண்டாபரணமாக விளங்கியது; உடனே திருமாலத்தாரகனைப் புகழ்ந்துசென்றனர். இதுவன்றியும் திக்குவிசயத்திற் சூரபன்மன் தன்னுலகைக்கருதி வந்தபோதுமாயன்—

“ஸ்ரவயாதவ தே³வேந்த்³ர லோகேஷு நிவஸே ஸதா³
த்³ருஷ்ட்வா ஸுராலோக ஸர்வே த்³ருஷ்டே நிமேஷ ஸதா³"—என்றுரென்று வடமொழியிலும்,

“அந்தவேலையிலாண்டுறுமாலோன், வந்தசூரபன்மாவினையெய்தி,
நந்தலில்லதொர்நாளொடுவாழ்கென், றந்தமில்பலவாசிபுகன்றான்.

ஆசிகூறினனூற்றவுமின்சொற், பேசவேபெருமாமகிழ்வெய்தி
மாசிலவ்வுலகெங்கணும்வல்லே, பாசனத்தொடுபோர்த்தனனன்றே'' என்று தமிழிலும் கூறப்படுதலால் திருமால் சூரபன்மனை செயிக்குமாற்றலில்லாதவரென் றறியப்படுகிறது. இவ்விருவர்களையன்றி யேனைய தேவர்களும் இச்சூரபன்மனை வென்றார்களில்லை என்பதை—

''ஸ்ரீயொ ஹழ்வவஸாஜ்ஞே த ரக்ஷோநயயாய நா
விஸ்ரஷ்டாஸ்ந பஸ்ருணக வெமஹ்ஸவ ம க:'' என்றுவடமொழியிலும்,

''போயினனளகையண்ணல்புட்பகமீதுசென்று
தூயதோரியக்கரோடுஞ்சூரனைத்தொழுதுபோற்றி
யேயினவாசிகூறியானுமக்கடியனென்ன
நீயினி திருத்தியென்றேவிடுத்தனனிருதர்போற்ற'' என்றிதிலும் கூறப்படுதலாற் குபேரன் ஜயித்தானில்லை என்றும்—

''தஷா நீஜவவாஹ்ஸணம் வலாயதவியசஷ்டுவெ
வணயாஜவஸதஸ்யாஸ வதநம்வெஸநிவெஸ்ஸஷா'' என்றுவடமொழியிலும்,

''அந்தமாநகனைவிட்டவுணர்கோமகன், முந்துதன்படையொடுமுனிந்துகீழ்த்திசை
யிந்திரனகர்புகவிதனைநாடியே, வெந்துயரமரர்கோன்விண்ணிற்போயினான்''
''போயதைநாடியப்புரத்தைமுற்றவுங், காயெரிகைக்கொளகடிதினல்கியே
யாயிடையனிகமோடகன்றுவெய்யசெந், தீயுறுமூரிடைச்சேறன்மேயினன்'' என்று தமிழிலுங் கூறப்படுதலா லிந்திரனும்—

''வஜாஜவிவடொமகா ஸ்ரீயொஹம்விஜஞஜ
ஜத்ஜஸ்ஜஸ்ஜதவஸ்த ஹயகம்விதவிந ஹ:''—என்றுவடமொழியிலும்,

''சுடுங்கனற்கடவுளுஞ்சுருக்கித்தன்னுரு, வொடுங்கினனுகுலமுற்றுச்சிந்தையு
நடுங்கினன்றாரகன்முன்னர்நண்ணினன், கடுங்கதியதனொடுங்கரங்கள்கூப்பியே''
என்றுதமிழிலும்—

''ஸஷா ஜயாஸ்ரீயொஹ வம்யதி நாம்வஸாஜ்ஞத :
ஸஸராஸ்ஜஹாவீரா நமாநாஸயக்ஷிதெத''—என்று வடமொழியிலும்,

''தேற்றமோடெழுந்துதன்மகிடஞ்சேர்ந்தன, னேற்றமில்படைஞருமீண்டவேகியே,
கூற்றுவனிமைப்பினிற்குறுகிச்சூரனைப், போற்றினன்றொழுதனன்புகலுமாசியான்''
என்று இதிலும் கூறப்படுதலால் இயமனும்—

ஸஷ ஸஸஹஜெத்வ நிவஸாஜஷா ஜயா
வாயநீயம்ஸவெவெஷ வெஜஸயமஸவஷயெ—என்று வடமொழியிலும், ''உன்னினன்றனையோடொருங்குமேவியே, மன்னவனெதிர்புகாவழுத்திமற்றவன், றன்னடிவணங்கியுன்றமரியானெனுப், பன்னினன்றாகன்பாங்கரேகினான்'' என்றிப் புராணத்திலுங் கூறப்படுதலால் நிருதியும்—

''ஷஸாநஜஸ்ஸஸாய வஸணஃஷாவவாஸியிழ
ஸாயாவதஷாஜெஸ்த்ய வஸம்வெஸநாஷயீயஸீழ—''
''வாயஸ்தஸஸாவொகம் தாஜஸ்யம்மஷவாநுஜிஜாஃ
ஸஸணதஸ்யநமாம் தாரகஸ்ஸவஹெதாஜஷ''—என்றுவடமொழியிலும்,

பாப்பானேயெம்பரமாவென்றுபாடிப்பாடிபணிந்துபாத
பூப்போதணைவதென்றுகொலோவென்பொல்லாமணியைப்புணர்ந்தே ''—என்றும்வரும்
பாடல்களாலும் ([illegible])அஜம்துருவம்என்றும் [illegible]
[illegible] -ஸவாஏஷமஹாநஜஆத்மாஜரோமர: என்றும்

[illegible]

[illegible] என்றும்,

[illegible]

[illegible] என்றும்

[illegible] என்றும்,

[illegible] என்றும்

[illegible] என்றும் இதின் மொழிபெயர்ப்பாய்—,

''உயர்காயத்திரிக்குரியபொருளர்களிற், றசரதன்மதலைதாபித்தேத்தலில்
கண்ணன்கைலையினண்ணிநின்றிரப்பப், புகழ்ச்சினமைந்தமகப்பேறுதவலின்
தஞ்துவிழியுடனொராயிரங்கமலப், புதுமலர்கொண்டரிபூசனையாற்றலின்
ஆங்கவற்கிரங்கியாழியீந்தருளலின், ஐங்கணைக்கிழவனையழல்விருந்தாக்கலில் [ன்
அமைப்பருங்கவிடமமுதுசெய்திடுதலில், தென்றிசைத்தலைவனைசெயிர்த்துயிர்பருகலி
அவுணர்முப்புரமழியவில்வாங்கலில், தக்கன்வேள்விதகர்த்தருள்செய்தலின்
தனஞ்சயன்றனக்குத்தன்படைவழங்கலின், மானிடமடங்கலின்வலிதபக்கோறலின்
மாயோன்மகவேஉவாகியகாலை, தடமுலைதிளைத்துச்சாத்தனைத்தருதலின்
ஆழ்கடல்வரப்பிலன்பரனேகர், அன்புமீதூரவருச்சனையாற்றலின்
நான்கிருசெல்வமாங்கவர்க்கருடலின், ஐயிருபிறப்பினுமரிபூசித்தலின்
இருவருமன்னமுமேனமுமாகி, அடிமுடிதேடவழற்பிழம்பாதலின்

பிறப்பிறப்பாதியுயிர்க்குணமின்மையின், கங்கைசூழ்கிடந்தகாசிமால்வரைப்பில்
பொய்புகல்வியாதன்கைதம்பித்தலின், முப்புரமிறுப்புழிமுகுந்தப்புத்தேள்
மால்விடையாகினாலமொடுதாங்கலின், அயன்சிரமாலையளவிலவணிதலின்
ஞானமும்வீடும்பேணினர்க்குதவலின், பசுபதிப்பெயரியதனிமுதற்கடவுள்
உம்பர்களெவர்க்குமுயர்ந்தோ, னென்பது தெளிகவியல்புணர்ந்தோரே'' என்றும்,
''தாவில்சுயம்பிரகாசனுய்ச்சருவசாட்சியாய், ஒவில்பெருஞ்சமுசாரமோசகனுயுத்தமனுய்
மேவியநற்கருணையனுய்விளங்காநின்றிடுகடவுள், காவிமலர்க்கண்டநுதற்கண்ணுடையா
னொருவனே'' என்றும்,

''பிரமமென்மருமீசனென்மருஞ்சிவனென்மரும்பேதுறுங்
கருமமென்மரும்வேறுமவ்வவகடவுளென்மருமாகியே
முரணியவ்வவர்பேசிநின்றருண்முதல்வனேமுதலீறிலா
வொருவனேயடியோங்களென்றுமுனக்கடைக்கலமையனே'' என்றும்,

[illegible]
[illegible]
[illegible] - என்றும்,

''உலகெலாமாகிவேறாயுடனுமாயொளியாயோங்கி
யலகிலாவுயிர்கள்கன்மத்தாணையினமர்ந்துசெல்லத்
தலைவனுயவற்றின்றன்மைதனக்கெய்தலின்றித்தானே
நிலவுசீரமலனுகிநின்றனனீங்காதெங்கும்'' என்றும்,

''பலகலையாகமவேதமியாவையினுங்கருத்துப்பதிபசுபாசந்தெரித்தல்பதிபரமேயதுதா
னிலவுமருவுருவின்றிக்குணங்குறிகளின்றிநின்மலமாயேகமாய்நித்தமாகி
யலகிலுயிர்க்குணர்வாகியசலமாகியகண்டிதமாயானந்தவுருவாயன்றிச்
செலவரிதாய்ச்செல்கதியாய்ச்சிறிதாகிப்பெரிதாய்த்திகழ்வது தற்சிவமென்பர் தெளிந்து
ளோரே'' என்றும்,

''உலகமும்பல்லுயிருமொன்றிநிறைந்தோங்கி, யிலகுசிவனெம்மிறை'' என்றும், வரும் ப்ரபலசுருதிப்பிர்மாணங்களாற் சிவபெருமானே ஸர்வதேவோத்கிருஷ்டரென்றறியபடுகிறுராதலால் ஈண்டுக்கூறியபரஞ்சுடருவாய்வந்த குமரன் என்றது சிவபெருமானதுருவமாகத் திருவவதரித்தவனையென்றறிக. சிவபெருமானதுருவமாக வந்தனரென்றுல் அவருக்குள்ள அனந்தகல்யாணகுணங்களிவரிடத்திலுண்டோவென்னின்: நன்று கடாவினுய்! இந்நூலிலிவரது வைபவங்களையெல்லா நீ நன்கறியாதவனுதலாற் கூறினை யென்பேம். யாதாலென்னில் இப்பெருமானுக்குப் பகைவனுகத் தேவர்கள் நிமித்தமாகிய சிங்கமுகனுமன்றே ''சீலமில்லவர்க்குணரவொண்ணுதசிற்பரனைப், பாலனென்றனையவனிடத்திற்பலபொருளு, மேலைநாள்வந்து தோன்றிய சிறியதோர்வித்தின், ஆலம்யாவையும் ஒடுங்கியேஅவதரித்ததுபோல்'' என்றுகூறியிருக்கின்றுன்.

அவன்மாத்திரமோ சூரபன்மனும் இவரதுவிசுவரூபத்தைத் தெரிசித்தகாலத்திற் பரவசனுகத்தலையின்மீது வைத்தகையினுடனும்புளகாங்கிதத்தினுடனும் ''ஒன்றொரு முதல்வனுகியுறைதருமூர்த்திமுன்ன, நின்றமர்செய்தேனிந்நாளெஞ்சினித் தளரேனம்மா, நன்றிதோர்பெருமைபெற்றேன்வீரனுநானேயானேன், என்றுமிப்புகழேநிற்குமிவ் வுடனிற்பதுண்டோ'' என்றுகூறித்துதித்திருக்கின்றனன். தேவர்களுமேருமலையிலிவ் விறைவனது விசுவரூபத்தைத் தொழுதவந்நாளில் ''அம்புவிமுதலாம்பல்வேறண்டமு மங்கங்குள்ளவும்பருமுயிர்கள்யாவுமுயிரலாப்பொருளுமாலுஞ், செம்பதுமத்தினேனுஞ்

சிவனொடு செறிதல் கண்டோம், எம்பெரு மானின் மெய்யோவகிலமுமிருப்ப தம்மா" என்றுதாங்கண்ட வுண்மையைக்கூறித் துதித்திருக்கின்றனர். அருணகிரிநாதவடிகளும் "பெம்மான்முருகன் பிறவானிறவான்" என்றனர். முன்னர்க்கூறிய பல நியாயங்களாலும் பின்னர்கட்டிய நியாயங்களாலும் குமாரக்கடவுள் சிவபெருமானாகிய பரஞ்சுடரென்றறிக. அவரது அவதாரவியல்பை—

"ஒருவனேயிராவணாதிபாவகமுற்றாற்போலத், தருவனிவ்வுருலகமெல்லாந்தன்மையுந்திரியானாகும், வரும்படிவெல்லாஞ்சத்திசத்திதான்மரமும்காழ்ப்பு, மிருமையும்போல மன்னிச்சிவத்திஞேடியைந்துநிற்கும்" என்னுந்திருவிருத்தத்தாலுமுணர்க. (க)

இந்திர னாதி யான வமரரு மேனை யோரும்
புந்தியி லுவகை பூத்துப் புடைதனி லொழுகிப் போற்றச்
செந்திமா நகரந் தன்னிற் சீயமெல் லணைமேல் வைகுங்
கந்தவே ளருளி னீரா லினையன கருத லுற்றான்.

(இ-ள்.) இந்திரன் முதலிய தேவர்களு மற்றவர்களு மனதிற் சந்தோஷங்கொண்டு பக்கத்தில் வணக்கத்துடனின்று துதிக்கும்வண்ணம் திருச்செந்தூரென்னும் மஹாக்ஷேத்திரத்தில் சிங்கங்களாற் சுமக்கப்படுகின்ற மெல்லிய அணையின்மீது எழுந்தருளியிருக்கும் கந்தக்கடவுள் திருவருண்முறையாலிவ்வாறு தமது திருவுள்ளத்தில் எண்ணுவாராயினர்.—எ-று. (உ)

நான்முக னாதி யான நாகரு முனிவ ரும்போன்
மேன்முறை யவுண ராகும் வியன்றிறை யவரு மெங்கோன்
கான்முளை நெறிய ரேனுங் கடியரை முடிவு செய்த
லான்முறை யியற்கை யாகு மறுவலரு மறனு மஃதே.

(இ-ள்.) பிரமன்முதலிய தேவர்களையு மிருடிகளையும்போலவே மேலேசொன்னமுறையின்படி மிக்ககூட்டத்தினராகிய அசுரர்களும் எம்பெருமானது புத்திரசம்பந்தமுள்ளவர்களானாலும் கொடியவர்களை சங்கரிப்பது சாத்திரமுறையான இலக்கணம். இதுவுமன்றி, சொல்லுதற்கரிய தருமமுறையுமவ்வாறேயாம்.—எ-று. (ங)

இற்றிது துணிபா மேனு மெண்ணெழிற் சூரன் றன்னை
யற்றமில் சிறப்பின் வைகு மவன்றமர் தம்மை யெல்லாஞ்
செற்றிடன் முறைய தன்றாற் றேவர்தஞ் சிறைவிட் டுய்ய
மற்றவன் றனக்கோ ரொற்றை வல்லையில் விடுத்து மன்னோ.

(இ-ள்.) இன்று இது துணிபானாலும் நினைக்கத்தக்க அழகினையுடைய சூரபன்மனையும் அழியாதசிறப்புடன் வாழ்கின்ற அவனது உறவினர்களையும் எலலாம்கொல்லுதல் முறைமையன்று அதனால் நாம் தேவர்களது சிறையையொழித்து வாழும்படி சொல்லுதற்கு ஒருதூதனை விரைவாக அனுப்புவோம்.—எ-று. (ச)

தூண்டுநம் மொற்றன் மாற்றஞ் சூரனு மவுணன் கேளா
வீண்டிடு சிறையி னீக்கி யமரரை விடுப்ப னென்னின்
மாண்டிட லின்றி யின்னும் வாழிய மறுத்து ளானே
லாண்டுசென் றடுது மீதே யறமென வகத்துட் கொண்டான்.

(இ-ள்.) நாமனுப்புகிறதூதனது வசனத்தைக்கேட்டு இப்போதடைத்திருக்கின்ற சிறையினின்றும் தேவர்களை விட்டுவிடுவானானால் சாகாமல் இன்னும் (பலகாலம்) வாழட்டும், (தூதனதுசொல்லை) தடுத்துவிடுவானேல் நாம்அங்குச்சென்றுஅவனைக்கொல்வோம்; இதுவே தருமசாத்திர முறைமை என்றுதிருவுள்ளத்திலெண்ணினர்.—எ-று. (ரு)

வடித்தசெங் கதிர்வே லண்ணன் மாலயன் மகவா னாதி
யடுத்தபண் ணவரை நோக்கி யவுணர்தங் கிளையை யெல்லா
முடித்திடப் பெயர்து நாளை முன்னமோர் தூதன் றன்னை
விடுத்தன முணர்தல் வேண்டும் வெய்யசூர் கருத்தை யென்றான்.

(இ-ள்.) கூரியசெவ்விய ஒளிபொருந்திய வேலாயுதத்தினையுடைய குமாரக்கடவுள் திருமால் பிரமன் இந்திரன் முதலியோர் களாகிய பக்கத்தில் நெருங்கிநின்ற தேவர்களைப்பார்த்து அசுரர்களது வமிசங்களை எல்லாம் சங்கரிக்கும் பொருட்டு நாளையத்தினம்போவோம், அதற்குமுன்னமே ஒருதூதனை அனுப்பிக்கொடியவனாகிய சூரபன்மனது மனக்கருத்தை அறியவேண்டுமென்று கூறினார்.—எ-று. (சு)

கடலுடைக் கடுவை யுண்டோன் காதல னினைய செப்ப
மடலுடைப் பதுமப் போதில் வைகினோன் மாயன் கேளா
வடலுடைப் பெரும்போ ரெந்தை யாற்றுமுன் சூரன் முன்னோ
ரிடலுடைத் தூதன் றன்னை விடுத்தலே யறத்தா றென்றார்.

(இ-ள்.) கடலிற்றோன்றிய விஷத்தை உண்டருளிய சிவபெருமானது திருக்குமாரராகிய குமாரக்கடவுளிவ்விதமாகக்கூறியருளியதை அருகில்நின்றுகேட்ட இதழ்கள் விரிந்ததாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனும்திருமாலும் எந்தைபெருமானே தேவரீர் சூரபன்மனுடன் போர்புரிதற்கு முன்பலசாலியான ஒருதூதனையனுப்புதலே தருமசாத்திரமுறைமை என்றுகூறினார்கள்.—எ-று. (எ)

என்றலுங் குமர மூர்த்தி யிப்பெருந் திறலோர் தம்முள்
வென்றிகொள் சூரன் றன்பால் வீரமா மகேந்தி ரத்துச்
சென்றிட விடுத்தும் யாரைச் செப்புதி ரென்ன லோடு
நன்றென வதனை நாடி நான்முக னவிற லுற்றான்.

(இ-ள்.) பிரமனுந் திருமாலும் இவ்வாறு கூறியவுடனே குமாரக்கடவுள் (அவர்களைப்பார்த்து) இங்குவந்திருக்கும் பலசாலிகளுக்குள் வெற்றிபொருந்திய சூரபன்மனிடத்திற்குத்தூதாக வீரமகேந்திரபுரத்திற்கு யாரைஅனுப்பலாம் சொல்லுங்கள் என்றவுடனே நல்லதென்று அதனை பிரமதேவனாலோசனைசெய்து சொல்லத்தொடங்கினான்.

மெல்லென வுலவைக் கோனும் வீரமா மகேந்தி ரத்திற்
செல்லரி தெனக்கு மற்றே செய்பணி நெறியா லன்றி
யொல்லையி லங்க ணேகி யொன்னலர்க் கடந்து மீள
வல்லவ னினைய வீர வாகுவே யாகு மென்றான்.

(இ-ள்.) ஊழியஞ்செய்வதற்கல்லாமல் எங்குமுலாவுகின்ற வாயுதேவனும்உள்ளேபோகக்கூடாது நானும்பஞ்சாங்கஞ்சொல்லுதலாகிய தொழிலுக்காக உள்ளேபோகலாமே அன்றிவேறுகாரணங்களைக்கொண்டு உள்ளேபோகப்படாது ஆதலாலவ்வளவு கட்டுத்திட்டமானகாவலோடு கூடிய அந்த வீரமகேந்திரபுரிக்குள் விரைவாகச்சென்று திரும்பிவரத்தக்க வல்லவன் இந்தவீரவாகு தேவனேயாம்.—எ-று. (அ)

சதுர்முக னிளைய வாற்றாற் சண்முக னுளத்துக் கேற்பக்
கதுமென வுரைத்த லோடுங் கருணைசெய் தழகி தென்னா
மதுமலர்த் தொடையல் வீர வாகுவின் வதன நோக்கி
முதிர்தரு முவகை தன்னா லித்திற மொழிய லுற்றான்.

(இ-ள்.) பிரமதேவனிவ்வண்ணம் குமாரக்கடவுளின் திருவுளத்தினுக்கு இசையுமாறு விரைவாகக் கூறுதலும் அப்பிரமன்மீது கிருபைகாட்டி நல்லதென்றுகூறி தேன்

நடுங்கிய துருமுற் றென்ன நனிபகிர் வுற்ற தங்க
ணொடுங்கிய மாவும் புள்ளு மொல்லென விரிந்த வன்றே.

(இ-ள்.) வேகமாகச்செல்லுகின்ற கடிவாளமிட்ட குதிரைகள் பூட்டிய தேரினையுடைய சூரியன்கீழுறும்படி உயர்ந்த செவ்வியபொன்மயமான கந்தமாதனமலையின் மீது வீரவாகு தேவர்ஏறிநிற்கவும் அம்மலை அவரைச்சுமக்கலாற்ருது நடுங்கியது இடிவிழுந்தாற்போல பிளந்தது அம்மலையில் வாழ்ந்திருந்த மிருகங்களும் பறவைகளும் விரைவாகச்சிதறின.—எ-று. (உ0)

உண்ணிறை புள்ளு மாவு மோலிட வொலிமேல் கொண்டு
துண்ணென வருவி தூங்கத் தோன்றிய குடுமிக் குன்ற
மண்ணலைத் தரிக்க லாற்றே னளியனே னந்தோ வென்னுக்
கண்ணிடை வாரிசிந்தக் கலுழுதல் போலு மாதோ.

(இ-ள்.) தன்னுட்பொருந்திய பறவைகளும் விலங்குகளும் ஆரவாரம்செய்ய ஓசையுடனே அருவிகளொழுகக்காணப்படுகின்ற சிகரங்களையுடைய அக்கந்தமாதனம்நிற்கும் நிலமை ஏழையாகிய நான் அந்தோ இவ்வீரவாகுதேவரை சுமக்கத்தக்க வலிமையுடையவனல்லேன் என்று கண்ணீர்விட்டழுதலை ஒக்கும்.—எ-று. (உக)

அடல்கெழு திண்டோள் வீர னடிகளின் பொறையாற் றுது
விடர்கெழு குடுமி வெற்பு வெருவலு மாண்டை வைகும்
படவர வுமிழ்ந்த செய்ய பருமணி சிதறும் பான்மை
யுடல்கெழு குருதி துள்ளி யுகுக்குமா றொப்ப தன்றே.

(இ-ள்.) வலிமை உடன் விளங்குகின்ற திண்ணியதோள்களையுடைய வீரவாகு தேவரது கால்களின் சுமையைத்தாங்கமாட்டாமல் குகைகளுடன் விளங்குகின்ற சிகரங்களையுடைய அக்கந்தமாதனம் நடுங்குதலும் அவ்விடத்தில் வாழ்கின்றபடத்தோடுகூடிய பாம்புகள் கக்கியசெந்நிறம்பொருந்திய பெரியமணிகள் சிதறுந்தன்மை தன் உடம்பிற் பொருந்திய இரத்தத்துளிகளை சிதறுந்தன்மையை ஒத்தது.—எ-று. (உஉ)

அறைகழ லண்ண னிற்ப வவ்வரை யசைய வங்க
ணுறைதரு மாக்க ளஞ்சி யொருவில வெருவி விண்மேற்
பறவைகள் போய துன்பம் பட்டுழிப் பெரியர் தாமுஞ்
சிறியரு நட்டோர்க் காற்றுஞ் செயன்முறை காட்டு கின்ற.

(இ-ள்.) சப்திக்கின்ற வீரகண்டாமணிதரித்த காலினையுடைய வீரவாகுதேவர் ஏறி நின்றவுடன்அக்கந்தமாதனமலை அசைதலும் அம்மலையில் வாழ்ந்துக்கொண்டிருந்த விலங்குகள்பயந்து ஓடிப்போகாமலிருந்தன. பறவைகள் பயந்துவானத்திற்பறந்து சென்றன. (எத்தன்மையதெனில்) துன்பம்உண்டாயவிடத்து கீழ்மக்களும் மேன்மக்களும் தமது சிநேகிதர்களுக்கு செய்யும்செய்கையின் முறைமையை காட்டாநின்றதன்மைய.—எ-று.

கீழ்மக்கள் தமதுசிநேகிதர்களுக்கு இடர்வருங்கால் அஞ்சிவிலகியோடும் தன்மையைப்போல் இங்குபறவைகள் மலையசைந்து நடுங்குங்கால் சென்றனவென்றும் மேன்மக்கள் தமதுநண்பர்களுக்கு இடர்வருங்கால் அவரைவிட்டோடிப்போகாமல் நின்று தம்மால் இயன்றவளவு உபசரித்து விலகியோடாமல் இருக்கும் தன்மையைப்போல அம்மலையிலுள்ள விலங்குகள் (மிருகங்கள்) அவ்விடம்விட்டுச்செல்லாதிருந்தனவென்றும் உதாரணம் காட்டிக்கூறினர். (உ௩)

மழையுடைக் கடமால் யானை வல்லிய மடங்க லெண்கு
புழையுடைத் தடக்கை யாளி பொருப்பசை வுற்ற காலை
முழையிடைத் தவறி வீழ்வ முதியகா லெறியப் பட்ட
தழையுடைப் பொதும்பர் பைங்காய் தலைத்தலை யுதிர்க்குமாபோல்

(இ-ள்.) பெரிய காற்றடிக்கும்பொழுது தழைகளையுடைய சோலை இடங்கடோறும் இடங்கடோறும் கனிகளை உதிர்க்குந்தன்மையைப்போல அம்மலை அசைந்தவுடனே மழைபோலும் மதநீரை யூற்றுகின்ற பெரிய யானைகளும் பெரும்புலிகளும் சிங்கங்களும் கரடிகளும் துவாரம்பொருந்திய பெரிய துதிக்கையினையுடைய யாளிகளும் குகைகளினின்றுந் தவறி விழுகின்றன.—எ-று. (உச)

நன்றிகொள் பரிதிப் புத்தே ணருசிர மாக வென்றாழ்
துன்றிருஞ் சடில மாகச் சுரநதி தோயத் திங்க
ளொன்றொரு பாங்கர் செல்ல வோங்கிரும் பிறங்க லுச்சி
நின்றதோர் விசயத் தோளா நெற்றியங் கண்ணன் போன்றான்.

(இ-ள்.) நன்மைபொருந்திய தேவனாகிய சூரியன் சிரிக்கின்ற வெண்டலையாகவும், கிரணக்கதிர்கள் நெருங்கிய பெரிய சடைகளாகவும், ஆகாயகங்கைமேலே படியவும் சந்திரன் பொருந்தி ஒருபுறத்திற்போகவும் உயர்ந்த பெரிய மலையினுச்சியில் நின்ற வீரவாகுதேவர் முக்கண்களையுடைய சிவபெருமானை ஒத்தனர்.—எ-று.

மலையிலேறிநின்ற வீரவாகுதேவர் செயற்கை இலக்கணத்தால் சிவபெருமானை ஒத்தவராகக்கூறினார். (உரு)

வலமிகு மொய்ம்பின் மேலோன் மலர்க்கழ லுறைப்ப வாற்றா
தலமரு குவட்டி னிற்ற லன்றுதீ முனிவ ருய்த்த
கொலைகெழு முயல கன்மெய் குலைந்திடப் புறத்துப் பொற்றா
ணிலவணி சடையோ னூன்றி நின்றிடு நிலைமை நேரும்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் தமது காலினால் அழுத்தும்பொழுது தாளாமல் அசைகின்ற மலையின்மீது நிற்றல் முற்காலத்தில் கொடியதாருகாவனத்து முனிவர்கள் அனுப்பிய கொலைத்தொழில்பொருந்திய முயலகனது உடல்நடுங்கும்படி அவன்முதுகின்மீது பொன்மயமான திருவடியை சந்திரனைத்தரித்த சடையினையுடைய சிவபெருமான் வைத்துநிற்றலை ஒக்கும்.—எ-று.

சிவபெருமான் முயலகன்மீது திருவடியூன்றிநின்ற கதையைப்பின் வரும்தக்ஷகாண்டத்தில் பரக்கக்காணலாம். (உசு)

மாசிருள் செறியுந் தெண்ணீர் மறிதிரை யளக்கர் வேலைப்
பாசடைப் பொதும்பர் வெற்பிற் பண்ணவன் றூத னிற்றல்
காசியி லரற்றத் தள்ளிக் களிறுடல் பதைப்பக் கம்மே
லீசனன் றடிக ளூன்றி யிருத்திய வியற்கை போலும்.

(இ-ள்.) களங்கம்பொருந்திய இருள்நெருங்கியதெளிந்த நீரினையுடைய அலைகின்ற அலைகளோடுகூடிய கடலின்கரையில் பசியஇலைகளோடுகூடிய சோலையினையுடைய கந்தமாதனகிரியில் குமாரக்கடவுளினது தூதுவராகிய வீரவாகுதேவர் நிற்கும் தன்மை காசியில் மணிகர்ணிகாக்ஷேத்திரத்தில் கஜமுகாசுரனாகிய யானையை கீழே தள்ளி உடல் துடித்து கூச்சல் இடும்படி தலையின்மீது சிவபெருமான் முற்காலத்தில் திருவடிஊன்றி நின்றதன்மையை ஒக்கும்.—எ-று. (உஎ)

தாரகன் படைஞர் பல்லோர் சமரிடை யிரிந்து போனார்
பாரிடை யுறுமே யந்தப் பருவரை முழைக்க ணுற்றார்

வீரமொய்ம் புடையோ னங்கண் மேவலு மவற்கண் டேங்கி
யாருயிரு லந்தார் தீயோர்க் காவதோ ரரண முண்டோ.

(இ-ள்.) (முன்னம் மாயாபுரியிலிருந்த) தாரகாசுரனது சேனைகளிற் பலர் யுத்தத்தில் புறமுது கிட்டோடிப்பூமியில்வராமல் அந்தப்பெரிய கந்தமாதனகிரியின் பெரிய குகைகளில் மறைந்திருந்தார்கள். வீரவாகுதேவர் அவ்விடத்திற்குவருதலும் அவரைப் பார்த்து ஏங்கி ஏக்கங்கொண்டு அரிய உயிரைவிட்டார்கள். கொடியவர்களுக்கு எங்குத் தான் ரக்ஷைக்குரிய இருப்பிடம் கிடைக்கும்! கிடையா,—எ-று. (௨௮)

அனையதோர் சிமையக் குன்ற மசைதலு மங்க ணுற்ற
வனைகழல் விஞ்சை வேந்தர் மங்கைய ருடன் மாற்றி
யினிதுமுன் கலந்தா ரஞ்சி யின்புறு திடைக்க ணீத்து
வினைவிளை வுன்னி நொந்து விண்மிசை யுயிர்த்துச் சென்றார்.

(இ-ள்.) அத்தன்மையாகிய கொடுமுடிகளையுடையகந்தமாதனகிரி அசைதலும் அவ்விடத்திலிருந்த வீரகண்டைதரித்த காலினையுடைய வித்தியாதரவரசர் பெண்களதுபிணக்கைநீக்கிச் சந்தோஷத்துடன் முன்னேபுணர்ந்தவர்களாய்ப்பயந்து புணர்ச்சியைமுடிக்காம லிடையிலேயேவிட்டு ஊழின்தோற்றத்தை நினைத்து வருந்தி ஆகாயத்தின்மீது பெருமூச்சுடன் சென்றார்கள்.—எ-று. (௨௯)

வரைமிசை நின்ற வண்ணல் வனைகழ லவுணர் கோமான்
பொருவரு நகர்மேற் செல்லப் புந்திமேற் கொள்ளா வெந்தை
திருவுரு வதனை யுன்னிச் செங்கையாற் றொழுது மாலும்
பிரமனும் வியந்து நோக்கப் பேருருக் கொண்டு நின்றான்.

(இ-ள்.) கந்தமாதனகிரியின் மீதேறிச்சென்ற வீரவாகுதேவர் வீரக்கழலணிந் அசுரராஜனாகிய சூரபன்மனதொப்பற்ற நகரத்துக்குள்ளேபோகும்படி நினைத்து எம் பெருமானாகிய குமரக்கடவுளின் திருவுருத்தியானத்துடன் கைகளைத்தலையின்மீதுகுவித்துவணங்கி திருமாலும் பிரமதேவனும் ஆச்சரியத்துடன் பார்க்கும்படி பெரியவடிவத்தை (விசுவரூபத்தை) க்கொண்டு நின்றனர்.—எ-று. (௩௦)

பொன்பொலி யலங்கற் றோளான் பொருப்பின்மேற்பொருவி லாத
கொன்பெரு வடிவங் கொண்டு குலாய்நிமிர் கொள்கை செவ்வேண்
முன்பொரு ஞான்று மேரு முடியில்வந் தமரர்க் கெல்லாந்
தன்பெரு வடிவங் காட்டி நின்றதோர் தன்மை யாமால்.

(இ-ள்.) பொன்மயமாகவிளங்குகின்ற மாலையணிந்த தோள்களையுடைய வீரவாகுதேவர் கந்தமாதனமலையின்மீது ஒப்பில்லாத பெருமைவாய்ந்த பெரியதிருவுருக்கொண்டுமேலெழுந்து நிற்குந்தன்மை முன்னொருகாலத்தில் குமரக்கடவுள் மகாமேருமலையில் தேவர்களெல்லாம் பார்க்கும்படித்தனது திருவுருவமாகிய விசுவரூபத்தைக்காட்டிநின்றதன்மையை ஒத்தது.—எ-று. (௩௧)

ஆண்டகை நெடுந்தோள் வீர னண்டமேன் மவுலி தாக்க
நீண்டிடு மெல்லை யன்னா னின்றிடு குன்ற ஞாலங்
கீண்டது பிலத்திற் சேறல் கேடில்சீர் முனிகை யூன்ற
மீண்டு பாதலத்திற் புக்க விந்தமே போலு மாதோ.

(இ-ள்.) ஆண்டன்மையிற் சிறந்தவீரவாகுதேவர் அண்டகோளகையில் தனது மகுடம்பட உயர்ந்து செல்லுஞ்சமயத்தில் அவரதுபாதம்பொருந்திய அம்மலைபூமியைப் பிளந்துகொண்டு கீழேஅழுந்திச்செல்லுதல் அழியாதசிறப்பினையுடைய அகஸ்தியமு

ணிவர் தமதுதிருக்கரத்தை வைத்தமாத்திரத்திற் கீழேதாழ்ந்து பாதாளத்திற்குச்சென்ற விந்தகிரியை ஒத்தது.—எ-று. (கூஉ)

இக்கதை முன்னர் அசுரகாண்டத்தில்வந்தது.

விண்ணவ ருய்த்த தேர்மேன் மேவலர் புரநீ றுக்கும்
பண்ணவ னொருதா ளூன்றப் பாதலம் புகுந்த வாபோற்
கண்ணகன் வரையும் வீரன் கழல்பட வழுந்திற் றம்மா
வண்ணலந் தாதை வன்மை யருள்புரி மகற்கு றுதோ.

(இ-ள்.) தேவர்களாலேகொண்டுவந்து நிறுத்தப்பட்ட தேரின்மீது சத்துருக்களின் மூன்றுநகரங்களையும் எரித்துநீறாக்கிய திரிபுராந்தகனாகிய சிவபெருமான் ஒருகாலைஎடுத்தழுத்திவைத்தஉடனேயே அதுபாதாளத்தைநோக்கிச்சென்றதைப்போல இடமகன்ற கந்தமாதனமாகியமலையும் வீரவாகுதேவரது கால்பட்டமாத்திரத்தில் கீழேதாழ்ந்தது; தெய்வீகம்பொருந்திய தந்தையின்வல்லமை அவராற்பெறப்பட்ட புத்திரனுக்கில்லாதுபோகுமோ.—எ-று. (கூகூ)

கன்றிய வரிவிற் செங்கைக் காளைபொற் றாளு மந்தண்
குன்றொடு பிலத்துட் செல்லக் குறிப்பொடு விழிக்கு றுமே
சென்றிட முடியுஞ் சேண்போய்த் திசைமுகத் தயனு மாலு
மன்றடி முடிகா ணாத வசலமும் போல நின்றான்.

(இ-ள்.) கட்டப்பட்ட வில்லின்பிடிப்பாலுண்டானதழும்புபொருந்திய செவ்வியகையினையுடைய வீரவாகுதேவர் தமதுகால்மலையுடன் பாதாளத்திற் செல்லவும் குறிப்பினாலும் கண்ணுக்கெட்டாதபடி ஆகாயத்தையளாவியமுடியையும் உடையவராய் முன்னந் திருமாலும் பிரமனும் அடியும்முடியுந்தேடியறியாத அக்கினிமலையாகிய அருணாசலத்தையும்போல நின்றார்.—எ-று. (கூச)

ஆளரி யன்னோன் றாளு மடுக்கலு மழுந்தும் பாரி
னீளிரு முடிசேர் வானி னிரந்தமாப் பறவை போதல்
சூளுடை யிமையோர் புள்ளு மாவுமாய்த் தோமில் வீரன்
றாளோடு முடியு நாடிச் சார்தருந் தகைமைத் தாமால்.

(இ-ள்.) நரசிங்கத்தை ஒத்த வீரவாகுதேவரது கால்களும் மலையாகிய கந்தமாதனமுஞ்சென்ற (பாதாள) பூமியிலும் அவரது முடிபொருந்திய ஆகாயத்திலும் முறையே மிருகங்களும் பறவைகளும் கீழுமேலுமாகப்போகுதல் எதுபோலுமெனின் சபதஞ்செய்து கொண்டதேவர்கள் பறவைகளும் விலங்குகளுமாய் குற்றமில்லாத வீரவாகுதேவரது அடியையும் முடியையும் தேடிச்செல்லுந் தன்மையைப்போலும்.—எ-று. (கூரு)

அந்தமில் வலியோ னிற்ப வாயிடைத் துஞ்சும் பாந்த
டங்கொகை வீழு றாது தழிஇமருங் காகக் கீழ்போய்
முந்துயர் கமடஞ் சேர்ந்து முழங்குதெண் டிரைக்கண் வைகு
மந்தர மென்னக் கந்த மாதனந் தோன்றிற் றம்மா.

(இ-ள்.) அளவற்றவலிமையினையுடைய வீரவாகுதேவர் நின்றவுடனே அங்கே தூங்கியபாம்புக்கூட்டங்கள் கீழேவிழாமல் பக்கமாகச்சுற்றிக்கொண்டு பாதாளத்திற்குச் சென்று முற்பட்டவுயர்ந்த ஆதிகூர்மத்தின் முதுகையடைந்து சத்திக்கின்றதெளிந்த அலைகளையுடைய பாற்கடலினடுவினின்ற மந்தரமலையைப்போல கந்தமாதனகிரிகாணப்பட்டது.—எ-று.

மந்தரமலையுங் கடலைக்கடையும்போது திருமால்கொண்ட கூர்மவுருவத்தின் மீது தானின்று வாசுகியாகிய பாம்புத்தாம்பினாற் சுற்றப்பட்டதைப்போல இக்கந்தமா

தனமும் பாம்பினாற்சுற்றப்பட்டு ஆதிகூர்மத்தின் மீதுவைக்குஞ்சென்று நின்றமையால் கடலைக்கடைந்த மந்தரத்தோடொத்தது என்றார். (ரு௬)

பதுமநேர் கண்ணன் வேதாப் பலவகை முனிவர் தேவர்
கதிபட ருவணர் சித்தர் கந்தரு வத்த ரொண்கோண்
மதியுடக் கதிர்க ளேனோர் வான்பத முற்று மேங்கு
மதிர்கழல் வீரன் பல்வே றுரமா யொளிர நின்றான்.

(இ-ள்.) தாமரைமலரிதழ்போன்ற கண்களையுடைய திருமாலும் பிரமனும்பலவிதமுனிவர்களும் தேவர்களும் ஆகாயவழியாகச்செல்லுகின்ற கருடர்களும் சித்தர்களும்காந்தருவர்களும் ஒள்ளிய கிரகங்களும் சந்திரசூரியர்களும் மற்றவர்களுமாகிய இவர்களது பதவிகளெல்லாம் உயர்ந்த வுருவத்தோடுநின்ற சத்திக்கின்ற வீரகண்டாமணியணிந்தகாலினையுடை வீரவாகுதேவர்தமக்கு பலவிதமான வேறுபாட்டினையுடைய ஆரமாகவிளங்கும்படி நின்றனர்.—எ-று. (ரு௭)

எண்டிசை முழுது நேமி யெழுதிறத் தனவு மற்றைத்
தெண்டிரைக் கடலும் பாருஞ் சேண்கிள ராழி வெற்பு
மண்டமு முலகம் யாவு மகன்விழி பரப்பி நோக்கிக்
கண்டன னமலன் வைப்புங் கைதொழு தைய னின்றான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் தமது பெரியகண்களைப்பரப்பி எட்டுத்திக்குகளையும் ஏழுவிதமான கடல்களையும் இதுவன்றி உள்ளேதெளிந்த அலைகளையுடைய பெரும்புறக்கடலையும் பூமியையும் மேலேயுயர்ந்து விளங்குகின்ற சக்கரவாளகிரியையும் அண்டத்தையும் மற்றைஎல்லாவுலகங்களையும் பார்த்து சிவபெருமானது திருக்கைலையையும்பார்த்து கைகுவித்துவணங்கினவராக நின்றனர்.—எ-று. (ரு௮)

ஆணமில் சிந்தை வீர னச்சுதன் முதலோர் வைகுஞ்
சேணகர் நோக்கிச் சூழுந் திசைநகர் நோக்கிப் பாரின்
மாணகர் நோக்கி வீர மகேந்திர நோக்கிச் சூர
னீணக ரிதற்கி யாவு நிகரிலை போலு மென்றான்.

(இ-ள்.) ஆணவத்தடிப்பில்லாத மனதினையுடைய வீரவாகுதேவர் திருமால்முதலியவர்கள் வசிக்கின்ற (வைகுந்தம்முதலிய) உலகங்களைப்பார்த்து சுற்றிலுமுள்ள அமராவதிமுதலிய திசை நகரங்களைப்பார்த்து பூமியிலுள்ள மாட்சிமையான (காஞ்சியாதி) நகரங்களைப்பார்த்து வீரமகேந்திராபுரியைப்பார்த்து இந்தச்சூரபன்மனது பெரிய நகரத்திற்கு எந்தநகரமும் ஒப்பானதல்ல என்றுகூறினார்.—எ-று. (ரு௯)

விண்ணுலாம் புரிசை வெஞ்சூர் வியனக ரதனை நோக்கி
யுண்ணிலா வெகுளி கொண்டா னொருகர மங்க ணேசசி
நண்ணலார் யாருந் துஞ்ச நாமறப் பிசைகோ வென்னா
வெண்ணினன் சிறையி னுற்றோர்க் கிரங்கியவ் வெண்ண மிட்டான்.

(இ-ள்.) மேகங்கள்பொருந்திய மதிலோடுகூடிய சூரபன்மனது புகழத்தக்க ஊரைப்பார்த்து உள்ளேநில்லாத கோபமுடையவராய் தனதொருகையை அந்தஊருக்குள்ளே நீட்டிநாம்சத்துருக்களெல்லாம் சாகும்படிபிசைந்துவிடுவோம் என்று எண்ணினார் பின்னும் அந்நகரத்துள்ளே சிறையிற்பட்டிருக்கிற தேவர்களும் இறந்துபோவார்களே என்று இரக்கங்கொண்டந்தவெண்ணத்தை திருப்பிக்கொண்டனர்.—எ-று. (௬0)

விஞ்சைய ரியக்கர் சித்தர் வியன்சிறை யுவணர் திங்கள்
செஞ்சுடர்ப் பரிதி நாள்கோ டெய்வத கணத்தர் யாரும்

வஞ்சினத் தடுதோள் வீரன் மாலுரு நோக்க லாற்று
தஞ்சினர் வெருவச் செங்கை யமைத்தன னழுங்க லென்றே.

(இ-ள்.) வித்தியாதரர்களும் இயக்ஷர்களும் சித்தர்களும் ஆச்சரியகரமான சிறகுகளையுடைய கருடர்களும் சந்திரனும் செவ்வியசுடரினையுடைய சூரியனும் நக்ஷத்திரங்களும் கிரகங்களும் பிசாசர்முதலிய தேவகணங்களும் எல்லாம் சபதத்துடன் சத்துருக்களைக் கொல்கின்ற தோள்களையுடைய வீரவாகுதேவரது பெரிய உருவத்தைப்பார்க்கச்சகிக்காதவர்களாய் அஞ்சினவர்களாகப்பயப்படுதலைநோக்கி அஞ்சாதேயுங்களென்று செவ்வியகையினால் அபயமளித்தனர்.—எ-று. (சக)

கோளியல் கருடர் தாம்வீழ் மாதரை விழைந்து கூடி
வாளுறு நகத்தி னூறு மதிக்கிலர் மயங்கித் துஞ்சி
வேளனு நெடியோ னூன்றும் வெற்பொடும் பிலத்திற் சென்று
கேளுட னெழுந்து நாகர் கிளைதனக் கணங்கு செய்தார்.

(இ-ள்.) குணமமைந்த கருடர்கள் தாங்கள்விரும்பிய மாதர்களை விருப்பத்துடனணைந்து வாள்போலுங் கூர்மைபொருந்திய நகத்தினால் வைக்கும் (அர்த்தசந்திராதிகளாகிய) காயங்களைமதியாதவர்களாய்ப் (போகவயர்வினால்) மயங்கினவர்ளாகத்தூங்கி மன்மதனென்று சொல்லத்தக்கவழகிய வீரவாகுதேவரது காலினாலூன்றப்பட்டுக் கீழேசென்ற கந்தமாதனகிரியுடன் பாதாளத்திற்குசென்று தங்களுறவினருடனுணர்ந்து எழுந்து (பாதாளத்திலுள்ள) நாகக்கூட்டத்தினர்களுக்குத் துன்பத்தைஉண்டாக்கினார்கள்.—எ-று. (சஉ)

ஆதியங் குமரன் றூத னூற்றலா லூன்றி நிற்பப்
பூதலங் கீண்டு வெற்புப் பொள்ளென வாழ்ந்து கீழ்போய்ப்
பாதலங் குறுக வங்கட் பயிலராத் தொகைபை நாகர்
காதலங் கேண்மை நாடிக் கலந்தனர் விருந்து செய்தார்.

(இ-ள்.) முதற்கடவுளாகிய குமாரப்பெருமானது தூதுவராகிய வீரவாகுதேவர் வலிமையுடன் ஊன்றிக்கொண்டு நிற்கவும், பூமியைப்பிளந்துக்கொண்டுக் கந்தமாதனமலைவிரைவாகக்கீழ்ப்புறமாகச்சென்றுபாதாளத்தை அடையவும், அவ்விடத்திலம்மலையிற்பொருந்திய பாம்புகளை (அப்பாதாளத்திலுள்ளபாம்புகள்) அன்புடன்சுற்றமென்னுமுறையையுத்தேசித்து தழுவிக்கொண்டு) (அதிதிசத்காரஞ்செய்தார்கள்) விருந்துசெய்தார்கள்.—எ-று. (சங)

தேன்றிகழ் தெரியல் வாகைச் சேவகன் கழல்கள் வெற்பி
னூன்றலு மனைய பாங்க ரொருசில ரரக்கர் நோற்று
ரான்றுயர் பதத்தை வெஃகி யாங்கவர் பிலத்துள் வீழ்ந்து
மான்றன ரிரங்க லுற்றார் வன்கணோர்க் குய்வு முண்டோ.

(இ-ள்.) தேனோடு விளங்குகின்ற மாலையணிந்த தோள்களோடுகூடியவீரவாகுதேவரது பாதங்கள் மலையிலழுந்திய வுடனே அம்மலையினொருபுறத்தில் உயர்ந்தமாக்ஷிமைதங்கிய பதவியை விரும்பிச் சில அரக்கர்கள் தவஞ்செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அம்மலையுடனே பாதாளத்தில் விழுந்துமயங்கி வருந்தினார்கள்; கொடுந்தன்மையுடையவர்களுக்கும் பிழைக்கமார்க்கமுண்டோ! இல்லை.—எ-று. (சச)

புண்டர நீற்று வள்ளல் புரையுருத் தேவர் நோக்கி
மண்டலம் புகழும் வீர மகேந்திரஞ் சேறற் கன்றுற்
கொண்டவிவ் வுருவ நோக்கிற் குறைகழ லவுணர் தம்மை
யண்டமு மிடித்துச் சாடு நினைவுகொ லையற் கென்றார்.

(இ-ள்.) திருபுண்டரந்தரித்த நெற்றியினையுடைய வீரவாகுதேவரது பெரிய உருவத்தைதேவர்கள்பார்த்து இவர்கொண்ட விவ்வுருவத்தைப்பார்த்தால் பூமியிலுள்ளவர்களெல்லாம் புகழுகின்ற வீரமகேந்திராபுரிக்குப் போதற்கல்ல, வேறண்டங்களிலும்இருக்கிற அசுரர்களை அண்டகோளத்தையும் இடித்து (அப்புறஞ்சென்று) கொல்லவேண்டுமென்னுங் கருத்துத்தானோ! (நமது) ஐயனாகிய வீரவாகுதேவருக்கென்று கூறினார்கள்.—எ-று. (சரு)

வீரமா மகேந்தி ரத்தி லவுணரும் வீற்று வீற்றுச்
சாருறு மவுணர் தாமுஞ் சயங்கெழு புயத்து வள்ளல்
பேருரு நோக்கி யிங்ஙன் பிறந்தசொற் சழக்கே யின்னுந்
தேருவ துண்டு நந்தந் திறல்வரைப் புணர்ப்பி தென்றார்.

(இ-ள்.) வீரமகேந்திரபுரியிலுள்ள அசுரர்களும் அவ்விடத்திற்கு வேறுவேறாகவருகின்ற அசுரர்களும் வீரவாகுதேவரது பெரியவுருவத்தைப்பார்த்து: இவ்விடத்திலுண்டான சொல் (சுப்ரமண்யக்கடவுளால்கிரவுஞ்சமழிந்ததென்னுஞ்சொல்) வீணேயாம்; இன்னம் ஆலோசிக்கவேண்டிய திருக்கிறது. (இப்பெரியவுருவம்) நமது திறமைபொருந்திய கிரவுஞ்சமலையின் மாயமே! இது என்றுகூறினார்கள்.—எ-று. (சசு)

ஒலிகழல் வீர வாகு வோங்கலே யூன்றி யிந்த
நிலைமையி னிற்ற லோடு நெடியமால் சுதனும் விண்ணோர்
தலைவனும் பிறரு மன்னோன் றம்பிய ரளப்பி லோருங்
கலிகெழு பூதர் யாருங் கண்டுவிம் மிதத்தி னார்த்தார்.

(இ-ள்.) சத்திக்கின்ற வீரகண்டாமணிதரித்த காலினையுடைய வீரவாகுதேவர் அம்மலையைக் காலினாலமுத்திக்கொண்டிவ்வாறுநிற்கவும், அதனை உயர்ந்ததிருமாலினது புதல்வனாகிய பிரமனும் இந்திரனும் மற்றவர்களும் அவ்வீரவாகுவினளவற்ற தம்பிமார்களும் வலிமையொடு விளங்குகின்ற பூதர்களுமெல்லாம்பார்த்து ஆச்சரியத்தினாலே ஆரவாரஞ்செய்தார்கள்.—எ-று. (சஎ)

தேவர்கண் முனிவ ரேனைத் திறத்தவர் யாருந் தத்த
மோவரும் பதத்தி னின்றே யொல்வதோ ருறுப்பின் மேவக்
காவரு கடிமென் பூத்தூய்க் கைதொழு தைய வெஞ்சூர்
மேவரு நகர்சென் றெங்கள் வியன்றுய ரகற்று கென்றார்.

(இ-ள்.) தேவர்களும் முனிவர்களும் மற்றுள்ளவர்களுமெல்லாம் அவரவர்களதுகெடாதபதத்தினின்றே உண்டான (அந்தப்பெரிய) திருவுருவத்திற்படும்படி கற்பகவிருக்ஷத்திற்பிறந்த வாசனைபொருந்திய மெல்லியபுட்பங்களை இறைத்து கைகுவிந்துவணங்கி, ஐய்யனே! கொடியசூரனது பிறராலடைதற்கரிய நகரத்தை அடைந்து எங்கள்பெரியதுன்பத்தை நீக்குவாயாக என்று கூறினார்கள்.—எ-று. (சஅ)

ஆவதோர் காலை யெந்தை யாறிரு தடந்தோள் வாழ்க
மூவிரு வதனம் வாழ்க முழுதருள் விழிகள் வாழ்க
தூவுடை நெடுவேல் வாழ்க தொல்படைபிறவும் வாழ்க
தேவர்க டேவன் சேயோன் றிருவடி வாழ்க வென்றான்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் வீரவாகுதேவர் எம்பெருமானது ஆறுதிருமுகங்களும் வாழ்க, பன்னிரண்டு பெரியதோள்களும் வாழ்க, பூரணகிருபைததும்புகின்றகண்களும் வாழ்க, (பதினெட்டுக்கண்களும் வாழ்க) பரிசுத்தமானநெடிய வேலும் வாழ்க, பழைய மற்றையபதினோராயுதங்களும் வாழ்க, தேவதேவனாகிய குமாரக்கடவுளினது திருவடி வாழ்க என்றுகூறினார்.—எ-று.

குமரக்கடவுளுக்கு விழிகள்பதினெட்டென்று வடநூற்காந்தத்திலும் அவரது மாலாமந்திரத்திலும் கூறப்படுதலாலீண்டுப் பதினெட்டென்று ஆதாரத்தாலழைத்துக்கூறினேம். தூவுடைநெடுவேலென்பதைமாமிசம்பொருந்திய வேலென்பாருமுளர். கந்தக்கடவுளின் வேல் ஏனையரது வேலைப்போலாது சத்துருக்களைச் சங்கரித்தவுடனே ஆகாயகங்கையிற்றோய்ந்து பரிசுத்தமடைவதுவழக்கம். (சகூ)

ஆண்டகை தொழுத பாணி யணிமுடிக் கொண்டிவ் வாற்றா
லீண்டுசீர்க் குமர வேளை யேத்தலு மன்பின் கண்ணீர்
வீண்டுதெண் கடலு ளேகி வெள்ளமிக் குவரை மாற்றப்
பூண்டகண் டிகையை மானத் தோன்றின பொடிப்பின் பொம்மல்.

(இ-ள்.) ஆண்டன்மையிற்சிறந்த வீரவாகுதேவர் தலையின்மீது குவித்தகைகளுடன் இவ்வண்ணமாகச்சிறந்த குமாரக்கடவுளைத்துதித்தவுடனே (ஆனந்தபாஷ்பம்) ஆனந்தக்கண்ணீர் ஒழுகி அதுதெள்ளிய நீரினையுடைய கடலையடைந்து பிரவாகமாகி அந்நீரின் உவரைமாற்றவும் தரித்துக்கொண்ட கண்டிகையைப்போல (உருத்திராக்க மாலையைப்போல) வியர்வையின் கூட்டந்தோற்றின.—எ-று.

கண்ணீர் உப்புநீராகவே மனிதர்களுக்கிருக்கக்காண்கிறோம், வீரவாகுதேவரது கண்ணீர் கடலுவரைமாற்றியதென்றிதிற் கூறுப்படுகின்றது. அவர்கண்ணீருக்குவரில்லை என்று இதனால் அறியப்படுகிறது. (ருo)

மீதுகொள் பொடிப்பு மூட மெய்ப்புலன் சிந்தையொன்ற
வோதுவ தவற வென்பு முருகிய செருக நாட்டங்
கோதில்பே ரருளின் மூழ்கிக் குதூகலித் திடுத லோடு
மூதுல கனைத்து மாவி முழுவது மகிழ்ந்த வன்றே.

(இ-ள்.) சரீரத்தில் வியர்வை மூடிக்கொள்ளவும் ஞானேந்திரியங்களும் அந்தக்கரணங்களும் ஒடுங்கவும் சொல் தடுமாறவும் எலும்பு உருகவும் கண் சொருகவும் குற்றமற்ற பேரருளின்முழுகி மிக்க களிப்படைவதனாலே பழைய உலகமும் உலகம் முழுமையிலுமுள்ள உயிர்கள்முழுமையும் மகிழ்வடைந்தன.—எ-று. (ருக)

அவ்வகை நிகழச் செவ்வே ளாரரு ளதனைப் பெற்று
மொய்வரை மீது நின்றோன் முழுதுல களந்து சேண்போ
மிவ்வுரு வோடு செல்லி னிறந்திடு முலக மீது
செவ்விதன் றென்னு வேண்டுந் திருவடி வமைந்தா னன்றே.

(இ-ள்.) அவ்வாறு நடக்கக் குமரக்கடவுளது திருவருளைப்பெற்று யானைகளையுடைய வம்மலையின்மீது நின்ற வீரவாகுதேவர் எல்லாவுலகத்தையுங்கடந்து மேலே போகிய இந்த உருவத்தோடு போவோமாகில் இவ்வுலகமழியும் ஆதலால் இதுமுறைமையல்ல என்றுநினைத்து அங்குப்போதற்குத்தகக்க அழகோகூடிய வடிவத்தைக்கொண்டனர்.—எ-று. (ருஉ)

கிரிமிசை நின்ற வண்ணல் கிளர்ந்துவா னெழுந்து சென்னிக்
குருமணி மகுட மண்ட கோளகை புடைப்ப வீர
னுருகெழு சீற்றச் சிம்பு ளுருவு கொண் டேகிற் றென்ன
வரைபுரை மாட வீர மகேந்திர முன்னிப் போந்தான்.

(இ-ள்.) மலையின்மீதுநின்ற வீரவாகுதேவர் ஆகாயத்திலெழும்பித்தமது தலையிலுள்ள நிறம்பொருந்திய மணிமகுடமானது மேலண்டகோளகையைமுட்ட வீரபத்திரர் உருவிளங்குகின்ற சரபவடிவங்கொண்டு சென்றாற்போல மலையையொத்த மாடங்களையுடைய வீரமகேந்திராபுரியைக் குறித்துப்போயினர்.—எ-று. (ருங)

**வீரவாகுகந்தமாதனஞ்சேல்படலம்முற்றிற்று.**

# கடல்பாய்படலம்.

அழுங்கிய கழற்கால் வீர னவ்வழி யவனிக் கீழ்போய்
விழுங்கிரி நிலைமை நோக்கி மீண்டுநீ யெழுதி யென்று
வழங்கினன் வழங்கு மெல்லை வல்லையிற் கிளர்ந்து தோன்றி
முழங்கிருங் கடலின் மாடே முந்துபோ னின்ற தன்றே.

(இ-ள்.) ஒலிக்கின்ற வீரகண்டையணிந்த காலினையுடைய வீரவாகுதேவர் அப்பொழுது பூமிக்குக் கீழேபோய்விழுந்து கிடக்கும் கந்தமாதனத்தின் தன்மையைப்பார்த்து நீதிரும்ப எழுந்திருக்கக்கடவை என்றுகூறினர். கூறியவுடனே விரைவாகப் பிரகாசத்துடன் மேலேகிளம்பிச் சத்திக்கின்ற பெரியகடலின்கரையிற் பழயபடியேநின்றது.

வீரனங் கெழலு மன்னோன் விண்படர் விசைப்பின் காலாற்
பாறுரு வரைகள் யாவும் படர்ந்தன பாங்க ராகச்
சாரதத் தலைவ ரேனைத் தம்பிய ரிலக்கத் தெண்ம
ராருமங் கவன்றன் பாலா யணிந்துடன் சேறலென்ன.

(இ-ள்.) பூதத்தலைவர்களும் மற்றையவோரிலக்கத்தெட்டுத் தம்பிமார்களுமெல்லாம்அவ்வீரவாகு தேவரதுபக்கத்தி லணிவகுத்துச் சென்றாற்போல அம்மலையினின்றும் வீரவாகுதேவர் மேற்கிளம்பிச் செல்லும்போது வானத்திலுண்டான காற்றினது விசையினாற் பூமியிலுள்ள மலைகளெல்லாம் (வேர்பறிந்து) பக்கத்திலேயே உடன் பறந்து சென்றன. எ-று. (உ)

விரைந்துவான் வழிக்கொள் வீரன் விசைத்தெழு காலி னண்டந்
திரிந்தன வுயிர்கண் முற்றுந் தெருமர லுற்ற தெண்ணீர்
சுரந்திடு கொண்டல் யாவுஞ் சுழன்றன வடவை யுண்ண
விருந்திடு மூழிக் காலு மாற்றலா திரியல் போன.

(இ-ள்.) விரைவாகஆகாயவழி யாகச்செல்லுகின்ற வீரவாகுதேவரது உந்துதலாலுண்டாகிய காற்றினால் அண்டங்கள்சுழன்றன எல்லாவுயிர்களும் சுழன்றன(திக்குமுக்காடின) தெள்ளியநீரைச்சுரக்கின்ற மேகங்களெல்லாம் சுழன்றன வடவாமுகாக்கினியைஉண்ணுதற்கிருந்தபிரளயகாலத்துவருகின்றபிரசண்டவாயுவும்பிற்பட்டோடின.

பிரளயகாலத்திலே வடவாமுகாக்கினி உலகத்திற்படர்ந் துலகையழித்தானவுடனேயதையழிக்கத்தோன்றுங்காற்றே ஊழிக்காற்று (௩)

பெருமிடல் பூண்ட தோன்றல் பெயர்தலும் விசைப்பி னூதை
பரவின வெம்மை மாற்றிப் பரிதியைக் கனலைத் திங்கள்
வருணன தியற்கை யாக்கி வடவையின் முகத்துத் தோன்றித்
திரைகட லிருந்த வூழித் தீயையு மவித்துச் சென்ற.

(இ-ள்.) மிக்கவலிமையினையுடைய வீரவாகுதேவர் விரைந்து செல்லவும்(அவர்போகும்வேகத்தாலுண்டான)குளிர்காற்றானது வெப்பத்தைமாற்றி விரைவிலெங்கும்பரவின(இதுவன்றியும்)சூரியனையும் அக்கினியையும் சந்திரனையும் வருணனையும்போல செய்து பெட்டைக்குதிரையின் முகத்தைப் போலகாணப்பட்டு அலையோடு கூடியகடலினடுவிருந்த ஊழித்தீயையும் அவித்துச்சென்றன.—எ-று.

வீரவாகுதேவரதுபடர்க்கையாலுண்டான காற்றுச்சூரியனைச்சந்திரன் போலவும் அக்கினியை (தீயை) வருணனைப்போலவும் வடவையை இல்லாமலும் ஆக்கின.

இவ்விடத்திற் சென்ற என்றது ஒருமைக்கண்வந்த பன்மைமயக்கம். சென்றது என்றேபொருள்கொள்ள வேண்டும். அ ஆ வீற்றப்பலவின்படர்க்கை என்பதுநன்னூல்.

விரைசெறி நீபத் தாரோன் விரைந்துசெல் விசைக்கா றள்ளத்
திரைகடல் சுழித்துள் வாங்கித் திறன்மகேந் திரத்திற் சேற
லரசியல் புரிவெஞ் சூர னனிகங்க ளவன்மேற் சென்று
பொருமுர ணின்றித் தம்மூர் புகுவன விரிவ போலாம்

(இ-ள்.) மணம்பொருந்தியவெண்கடம்பமலர்மாலையணிந்த வீரவாகுதேவர்விரைவாகச்செல்லுதலாலுண்டான விசைக்காற்றானது ஒதுக்க(அதனால்)அலைகளையுடைய கடல்சுழித் துள்வளைந்து வெற்றிபொருந்திய மகேந்திராபுரிக்குட்போகுதல் அந்நகரிலிருந்து அரசபுரிகின்ற கொடியசேனைகள் அவ்வீரவாகுதேவரெதிரிற்போய் போர்செய்ய ஆற்றலிலாது திரும்பித்தங்களூருக்குத் திரும்பினவையாக விலகிச் செல்லுதலை ஒக்கும்.—எ-று. (கு)

விடைத்தனி யாற்றல் சான்ற விடலைகால் வெற்பி னோடும்
படித்தலங் கீண்டு முன்னம் பாதலங் காட்டிற் றன்னா
னடற்படு விசையின் காலு மெளியதோ வலிய தன்றோ
கடற்புவி கீண்டு நாக ருலகினைக் காட்டிற் றன்றே.

(இ-ள்.) இடபம்போலும் ஒப்பற்ற வலிமைமிக்க வீரவாகுதேவரது (கால்) பாதங்கள் மகேந்திரமலையுடனே பூமியைப்பிளந்து முன்னே பாதாளத்தைக் காட்டியது அவரது வலிமையமைந்தவேகமாகிய (காலும்) காற்றும் இலேசானதோ! வலிமையானதல்லவோ (ஆதலால்) கடல்சூழ்ந்த பூமியைக்கிழித்து நாகலோகத்தைக்காட்டிற்று.எ-று

பாசிழை யலங்கற் றோளான் படர்தலும் விசையின் காலைக்
காய்சின வுயிர்ப்புச் செந்தீக் கலந்துடன் றழீஇக்கொண் டேகி
மாசுறு சூரன் வைகும் வளநகர் சுற்றி யன்னோன்
றாசிய தென்ன முன்னங் கொளுவிய தூமஞ் சூழ.

(இ-ள்.) பசுமையான ஆபரணங்களையும் மாலைகளையும் அணியுந்தோள்களையுடைய வீரவாகுதேவர் செல்லுதலும் வேகத்தின்காற்றை கொல்லத்தக்க கோபத்தால் விடுகின்றசுவாசமாகிய தீயுங்கலந்துகொண்டுசென்று குற்றம்பொருந்திய சூரபன்மனிருக்கின்ற வளப்பம் பொருந்திய நகரத்தை அடைந்து அவ்வீரவாகுதேவரது தூசிப்படையைப்போல புகைசூழும்படி முன்னே சூழ்ந்துகொண்டன.—எ-று. (எ)

பூஞ்சிலம் பரற்றுந் தாளான் போதுமுன் விரைவி னோதை
வேய்ஞ்சிலம் படுதோட் சூரன் வீரமா மகேந்தி ரத்தி
னுஞ்சிலம் புரிசை பொன்செய் நளிர்வரை குளிர்பூங் கிள்ளை
தாஞ்சிலம் புற்ற சோலை யலைத்தன தரையிற் றள்ளி.

(இ-ள்.) அழகிய சிலம்பு சத்திக்கின்ற காலினையுடைய வீரவாகுதேவர் செல்லுதற்குமுன்னமே வேகத்தின்காற்றோசை மூங்கில்களையுடைய மலையைப்பழிக்கின்ற தோளினையுடைய சூரபன்மனது வீரமகேந்திராபுரியிலுள்ள உறுப்புக்களமைந்த மதில்களையும் பொன்னாற்செய்த குளிர்ச்சிபொருந்திய கட்டுமலைகளையும் குளிர்ச்சிவாய்ந்த அழகிய கிளிகள் சத்திக்கின்ற சோலைகளையும் கீழேதள்ளிக்கெடுத்தன.—எ-று. (அ)

உறைபுகு நெடிய வேலா னுயிர்ப்புறு கனன்முன் னோடிச்
செறுநனூர் கொளுவ வன்னான் சென்றிடு விரைவின் கால்போ
யெறிபுனற் கடலைத் தாக்க விடைந்துமற் றதுதா னேகி
முறைமுறை திரைக்கை நீட்டி மூண்டிடா தவித்துப் போமால்.

(இ-ள்.) உறையிலிட்டிருக்கின்ற நீண்டவேலினையுடைய வீரவாகுதேவரது சுவாசத்தீயானது முன்னேசென்று பகைவனாகிய சூரபன்மனது நகரத்திற்பற்றிக்கொள்ளவும் அவர்செல்லும்விசைக்காற்றானது சென்று அலைவீசுகின்ற நீரினையுடையகடலை மோதவும் அக்கடல் விலகிச்சென்று வரிசைவரிசையாக அலைகளென்னுங் கைகளை நீட்டி அத்தீமூளாமல் அவித்துக்கொண்டுசெல்லும்.—எ-று.

இங்கே வேலென்றது வாளை. வேல் என்பது ஆயுதங்களையெல்லாம் உணர்த்துமொரு பொதுமொழி வீரவாகுதேவரது தனியாயுதம் வாளேயாம். (கூ)

அண்ணலங் காளை யேக வுயிர்த்தகா லவன்செல் லோதை
கண்ணழ றுண்ட மோச்சுங் கடுங்கன லெதிரா தோடு
முண்ணிறை புணரி யாவு மொன்னலன் பதிமேற் சென்று
விண்ணில மொழிந்த பூத மடுதலின் விளைத்த பூசல்.

(இ-ள்.) பெருமையிற்சிறந்த வீரவாகுதேவர் தாஞ்செல்லுதற்கெத்தனித்துவிட்ட சுவாசக்காற்று செல்லுதலாலுண்டான வேகக்காற்றுநேத்திராக்கினி சுவாசாக்கினி காற்றின்வழியேசெல்லுகின்ற நிறைந்த கடல்நீர்முதலிய எல்லாம் பகைவனது ஊராகிய மகேந்திராபுரிக்குட்போய் விண்ணும்நிலமும் ஒழிந்த பூதங்கள் கொல்லுதலைப்போல சண்டையிட்டன.—எ-று. (கo)

வெள்வரைக் குவவுத் திண்டோள் வெலற்கருந் திறலோ னெண்காற்
புள்விசை கொண்டு செல்லப் புறந்தரப் புணரி யங்க
ணுள்வளைந் துலாய சின்னை யொண்சுறுப் பனைமீ னூறை
தெள்விளித் திருக்கை தந்தி திமிங்கில மிரிந்து பாய்ந்த.

(இ-ள்.) வெள்ளியமலையைப்போல குவிந்ததிண்ணிய தோள்களையுடைய வெல்லுதற்கரிய வலிமையினையுடைய வீரவாகுதேவர் எட்டுக்கால்களையுடைய சரபத்தைப்போல விசையாகச்செல்லுதலும் (அவர்செல்லுகையாலுண்டானகாற்றினால்) கடல்விலகி ஓடுதலும் அவ்விடத்திலுள்ளேவளைந்துவளைந்துலாவிய சின்னைமீன்களும் ஒள்ளிய சுறுமீன்களும் பனைமீன்களும் நூறைமீன்களும் ஓசைகாட்டுகின்ற திருக்கைமீன்களும் யானைமீன்களும் திமிங்கிலமீன்களும் விலகிப்பாய்ந்தன.—எ-று. (கக)

நாயகன் றூத னேக நளிர்கட லெதிர்ந்தி டாது
சாய்வது மீன முற்றுந் தரங்கவெண் கரங்க டாங்கித்
தீயசூர் மூதூ ருய்த்துச் சென்றது பொன்று வோர்க்கு
மேயின விச்சை யுண்டி மிகத்தமர் வழங்கு மாபோல்.

(இ-ள்.) சண்முகக்கடவுளது தூதராகிய வீரவாகுதேவர்செல்லும்போது குளிர்ச்சிபொருந்திய கடலெதிரேவராமல் அவர்போகும்வழியே சாய்ந்துசெல்வது தன்னிடத்துள்ள மீன்கள்முழுவதையும் அலைகளாகிய வெள்ளியகைகளிற்றாங்கி சாகப்போகின்றவர்கட்குப்பொருந்திய விருப்பமான உணவுகளை மிகவும் நெருங்கியபந்துக்கள் கொடுப்பதுபோல கொடியசூரபன்மனது பழயமகேந்திராபுரியிற்கொண்டிட்டுச்சென்றது. ()

காழ்தரு தடக்கை மொய்ம்பன் கடுமைசால் செலவி னோதை
சூழ்தரு கின்ற காலைத் துண்ணெனத் துளங்கி விண்மீன்
வீழ்தர வேலை தன்னில் வேலையு மறிந்து செல்ல
வாழ்திரை யெறிமீன் முற்று மந்தரம் புகுவ மாறாய்.

(இ-ள்.) வலிமைபொருந்திய பெரியகையினையுடைய வீரவாகுதேவர் செல்லுதலாலுண்டான அதிகவேகத்தின் ஒலியானது சூழ்ந்துகொண்டசமயத்தில் திடீரென்று நடுங்கிக் கடலிலே நட்சத்திரங்களாகிய மீன்கள் உதிரவும் நீர்மேலேபொங்கிச்செல்லுத

லாலே அக்கடலில்வாழும் மீன்களெல்லாம் அலைவீசுதலால் முன்விழுந்த வானமீன்களுக்குப்பதிலாய் ஆகாயத்திற்செல்லுகின்றன.—எ-று. (௧௩)

காமரு நயக்குங் காளை கதுமெனச் செல்லப் பாங்கிற்
றாமலர்க் கரத்தி லிட்ட சுடர்மணிக் கடக வாள்போய்
நேமியங் குவடு சூழ்ந்து நிமிர்தரு திமிர மோட்டி
யேமநல் லண்ட வில்லோ டெதிர்ந்துபோ யிகல்செய் கின்ற.

(இ-ள்.) அழகினையுடையவர்களும் விரும்பத்தக்கவீரவாகுதேவர் விரைவாகச் செல்ல பக்கத்தில்உள்ள பரிசுத்தமான மலரணிந்த கரங்களிலிட்டுள்ள ஒளிபொருந்திய மணிகளிழைத்ததோள் வளையின் ஒளிசென்று சக்கரவாளகிரியைச்சூழ்ந்து நிறைந்திருக்கிற இருளையோட்டி பொன்மயமான அண்டச்சுவற்றினோடு எதிர்ந்துசென்று போர்செய்கின்றன.—எ-று. (௧௪)

விண்ணவர் யாருந் தேரும் படையுமாய் விரவ மேலோ
னண்ணலர் புரமே லோச்சு நகையழல் போத லொத்தான்
கண்ணழற் செலவும் போன்றான் கார்முகம் பூட்டி யுய்த்த
மண்ணுல கிடந்த கூர்வாய் வாளியு மென்னச் சென்றான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் தேவர்களெல்லாம் தேருஞ்சேனையும் ஆயுதங்களுமாக பொருந்திவர சிவபெருமான் பகைவர்களது முப்புரங்களின்மீதுவிட்ட நகைப்பின் அக்கினிபோதலையொத்தனர், (அதுவுமன்றி) அச்சிவபெருமானது நேத்திரத்திலுண்டாகிய கோபாக்கினிசெல்லுதலையும் ஒத்தார், அதுவன்றியும் மேருவாகிய வில்லிலேவைத்துவிட்ட பூமியை மேலே கொண்டுவந்த கூரியவாயினையுடைய திருமாலாகிய அம்பினது வேகத்தையும் ஒத்தார் போகும்விஷயத்தில்.—எ-று. (௧௫)

தரைதனை யலைத்து நோற்குந் தாபதர்க் கலக்கண் செய்து
சுரர்திருக் கவர்ந்து வாட்டுஞ் சூரனைக் கிளையி னோடும்
விரைவுடன் முடிப்பான் முன்னி வெகுண்டுசெவ் வேளுங் குய்த்த
வொருதனிச் சுடர்வேல் போன்றும் போயின னுயர்திண் டோளான்

(இ-ள்.) பூமியை வருத்தித் தவஞ்செய்கின்ற முனிவர்களுக்குத் துன்பத்தையுண்டாக்கித் தேவர்களது செல்வங்களையபகரித்து வருகின்ற சூரபன்மனைச்சுற்றத்தவர்களுடன் சீக்கிரமாக அழிக்கும்படி நினைத்துக்கோபங்கொண்டு குமாரக்கடவுள் அவனிருக்கின்ற மகேந்திரபுரிக்கனுப்பிய ஒப்பற்ற ஒளிபொருந்திய வேலாயுதத்தையும்போல உயர்ந்த திண்ணிய தோள்களையுடைய வீரவாகுதேவர் சென்றனர்.—எ-று. (௧௬)

இமிழ்தரு தரங்கப் பாலி னெறிகடன் மதித்து வானோர்க்
கமிர்தினை யளிப்பான் வேண்டி யகிலமு முண்டு தொன்னா
ளுமிழ்தரு திருமா லுன்ன வுணர்ந்துமந் தரமா மோங்க
னிமிர்தரு புணரி செல்லு நிலைமைபோல் வீரன் போந்தான்.

(இ-ள்.) ஒலிக்கின்ற வலைகளையுடைய பாற்கடலைக்கடைந்துத் தேவர்களுக்கு அமிர்தத்தையளிக்கும்பொருட்டு உலகங்களையெல்லாம் முற்காலத்திலுண்டு மிழ்ந்ததிருமால் நினைக்கவும் அவ்வாறு நினைத்ததையுணர்ந்து பெரியமந்தரமாகியமலை உயர்ந்தபாற்கடலுக்குச் செல்லும் நிலைமையைப்போலவும் வீரவாகுதேவர்சென்றனர்.—எ-று.(௧௭)

சேண்டொட்ட ருலகும் பாருந் தெருமர வனலம் வீசிக்
காண்டகு விடத்தை யீசன் களத்திடை யடக்கி வைப்ப
வீண்டெமை விடுத்தி யென்னா வேத்தலு மவனங் குய்ப்ப
மீண்டது கடல்போந் தென்ன வீருள் வீரன் சென்றான்.

(இ-ள்.) சொர்க்கலோகமும் பூமியும் சுழலும்படி அகினிச்சுவாலையை வீசிக்கொண்டுவந்த ஆலகாலவிஷத்தைச் சிவபெருமான் தமது ஸ்ரீ கண்டத்திலடக்கிவைக்கவும் அவ்விஷம் சிவபெருமானைப்பார்த்து இப்பொழுது என்னைவிட்டருள்வீராகவென்றுதுதிக்கவும் அச்சிவபெருமான் அவ்விஷத்தைவெளியில்விட அது திரும்பி கடலைநோக்கிவந்தாற்போலவும் வீரர்களுக்குட்சிறந்த வீரவாகுதேவர் சென்றனர்.—எ-று. (௧அ)

பொலங்கழல் வீர வாகு புணரிமே லிவ்வா றேகி
யலங்கலந் திண்டோள் வெஞ்சூ ரணிநகர் வடாது பாலின்
விலங்கலில் வீரன் யாளி வியன்முகத் தவுணன் போற்று
மிலங்கையந் தொல்லை மூதூ ரணித்தெனு மெல்லை சென்றான்.

(இ-ள்.) பொன்மயமான வீரகண்டையணிந்த காலினையுடைய வீரவாகுதேவர்கடலின்மீது இவ்வண்ணமாகச் சென்றுமாலையணிந்த திண்ணியதோள்களையுடைய கொடிய சூரபன்மனது அழகிய ஊரின் வடபுறத்திலே நீங்காதிருக்கின்ற வீரத்தினையுடைய வீரனாகிய பெரிய யாளிமுகத்தினையுடைய அசுரனாலே காக்கப்படுகின்ற இலங்கையென்னும் பெயரினையுடைய பழயபெரியநகரத்திற்குள் சமீபமாகிய எல்லையின்வழியாய்ச் சென்றனர்.—எ-று. (௧௯)

கடல்பாய்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - எ௨.

---

# வீரசிங்கன்வதைப்படலம்.

அன்னதோர் வேலை முன்ன மகன்றலை யாளிப் பேரோன்
றுன்னுபல் லனிகத் தோடுஞ் சூரனைக் காண்பா னேக
மன்னதி வீர னென்னு மதலையா யிரமாம் வெள்ளந்
தன்னொடு மிலங்கை வைகித் தணப்பறப் போற்றி யுற்றான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் அவ்வாறு செல்லுதற்குமுனம் பெரிய தலைகளையுடையயாளிமுகனென்பவன் நெருங்கிய பலசேனைகளுடன் சூரபன்மனைக் காணும்பொருட்டுச்செல்ல அவன் பிள்ளையாகிய அதிவீரனென்பவனுயிரம் வெள்ளம்சேனைகளுடன்இலங்கையிலிருந்து விடாமற்காவல் புரிந்தனன்.—எ-று. (௧)

ஆனதோர் மிக்க வீரத் தாண்டகை யவுணர் போற்ற
மாநகர்க் கோயி னண்ண வடதிசை வாயி றன்னின்
மேனிமி ரவுணர் தானை வெள்ளமைஞ் ஞூறு டன்னுன்
சேனையந் தலைவன் வீர சிங்கனுந் திறலோ னுற்றான்.

(இ-ள்.) அத்தன்மையான மிகுந்தவீரத்தினையுடைய அதிவீரனாகியதலைவன்அசுரர்கள்துதிக்கும்படி பெரிய இலங்காநகரத்திலுள்ள அந்தப்புரத்திலிருக்க வடதிசைவாசலில் அவன்சேனாபதியான வீரசிங்கனென்னும் பலசாலியானவன் உயர்ந்த ஐந்நூறுவெள்ளஞ் சேனைகளுடன் இருந்தான்.—எ-று. (௨)

உற்றதோர் வீர சிங்க னெண்சிறைச் சிம்பு ளேபோல்
வெற்றியந் திண்டோ ளேந்தல் விரைந்துசென் றிடலுங் காணூஉச்
சற்றுநங் காவ லெண்ணான் றமியன்வந் திடுவான் போலு
மற்றிவன் யாரை யென்னுச் சீறினன் வடவை யேபோல்

(இ-ள்.) வடக்குவாசலிலிருந்த சேனாபதியான வீரசிங்கனென்பவன் ஒள்ளிய இறகுகளையுடைய சிம்புட் பறவையைப்போல வெற்றிபொருந்திய திண்ணிய தோள்க

ளையுடைய வீரவாகுதேவர் விரைவாகச் செல்லுதலைப்பார்த்து நமது காவலைச் சற்று மெண்ணுமல் தனித்தவனுக ஒருவன்வருவான் போலும் இங்குவந்த இவன்யாரென்று வடவாமுகாக்கினியைப்போல சீறினன்.—எ-று. (ங)

உன்குவ னிவன்ற னுவி யொல்லையென் றுன்னிக் காலு
மெண்கிளர் மனமும் பின்ன ரெய்துமா றெழுந்து நேர்போய்
விண்கிளர் செலவிற் றானை வெள்ளமைஞ் ஞாறுஞ் சுற்ற
மண்கிளர் கடல்போல் வீர வாகுவின் முன்னஞ் சென்றான்.

(இ-ள்.) இவனதுயிரைவிரைவில் வாங்குவேனென்று தன்னுக்குள் நினைத்து வாயுகதியும் மனோகதியும் பின்னிடும்படியெழுந்து ககனமார்க்கமாய் ஐந்நூறு வெள்ளம் சேனைகளும் தன்னைச்சூழ்ந்து வரும்படி பூமியில் விளங்குங்கடலைப்போல நேரே போய்வீரவாகுதேவரது எதிரிற்சென்றான்.—ஏ-று. (ச)

சென்றிடு வீர சிங்கன் றிறல்கெழு புயனைப் பாரா
வின்றளவெமது காப்பு ளேகின ரில்லை யார்நீ
யொன்றொரு தமியன் போந்தா யுயிர்க்குநண் பில்லாய் நின்னைக்
கொன்றிடு முன்னீ வந்த செயன்முறை கூறு கென்றான்.

(இ-ள்.) அவ்வாறு சென்றவீரசிங்கன் வலிமையோடுவிளங்குகின்ற தோள்களையுடையவீரவாகு தேவரைப்பார்த்து இதுகாறும் எனது காவலுக்குள் எல்லைகடந்தேகினர்களில்லை. நீயார்! ஒரோ ஒருத்தனுக வந்திருக்கின்றாய் ஏ உயிரினிடத்தில் பற்றற்றவனே உன்னைக் கொல்லுதற்குமுன்னே நீவந்தவரலாற்றை முறைப்படி சொல்லக்கடவையென்றனன்.—எ-று. (ரு)

பொன்னிய றிண்டோள் வீரன் புகலுவா னிலங்கை வாவி
மன்னியல் சூரன் வைகு மகேந்திரஞ் சென்று மீள்வா
னுன்னினன் போந்தே னீதென் னுறுசெயல் வலியை யென்னி
னின்னினி வேண்டிற் றென்னை யியற்றுதி காண்ப னென்றான்.

(இ-ள்.) பொன்போன்ற நிறம்வாய்ந்த திண்ணிய தோள்களையுடைய வீரவாகுதேவர் கூறுவாராயினர். யான் இவ்விலங்கையைக்கடந்து அரசமுறை நடத்துகின்ற சூரபன்மனிருக்கும் வீரமகேந்திரபுரிக்குள் சென்று வரும்பொருட்டு உன்னினவனுக வந்திருக்கின்றேன் இதுதான் நான்வந்தகாரியம் நீ வல்லமை யுடையவனுனால் இப்பொழுது உன்னுலான தொன்றைச்செய் பார்க்கின்றேன் என்று கூறினர்.—எ-று. (சு)

திறன்மிகு சிங்க னன்னோன் செப்பிய மொழியைக் கேளா
விறையுநம் மவுண ராணை யெண்ணலன் வலியன் போலு
மறிகுது மீண்டு சேற லழகிதன் றென்னு வுன்னிக்
குறுகிய படைஞர் தம்மை யிவனுயிர் கோடி ரென்றான்,

(இ-ள்.) வலிமைமிக்க வீரசிங்கன் அவ்வீரவாகுதேவர் கூறியமொழிகளைக்கேட்டு இவன் சற்றும் நமது அசுரர்களது கட்டளையை மதிக்கின்றானில்லை. இவனொருவல்லமைசாலிபோலும் சென்றுதிரும்பிவருதலை அறிவோம் நல்லது என்று தனக்குண்ணினைத்து தன்னுடன்வந்த சேனுவீரர்களைப்பார்த்து இவனுயிரை வாங்குங்கோளென்றனன்.—எ-று. (எ)

என்றலு மரிய தொன்றை யெயினர்கள் வேட்டைக் கானிற்
சென்றனர் திரண்டு சுற்றிச் செருவினை யிழைப்ப தேபோற்
பொன்றிகழ் விசயவாகுப் புங்கவன் றன்னைச் சீற்ற
வன்றிற லவுணர் யாரும் வளைந்தமர் புரிய லுற்றார்.

(இ-ள்.) என்று வீரசிங்கன் கூறிய உடனே ஒருசிங்கத்தை வேடர்கள் வேட்டையாடுங்காட்டில் சென்று வளைந்து சூழ்ந்துகொண்டு சண்டை செய்வதைப்போல அழகுவிளங்குகின்ற வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவரைக்கோபம் பொருந்திய மிக்க வலிமையோடு கூடிய அசுரர்களெல்லாம் சுற்றிக்கொண்டு யுத்தம் செய்யத்தொடங்கினார்கள்.—எ-று. (அ)

வேலினை விடுப்பர் தண்டம் வீசுவர் முசலந் தூர்ப்பர்
சாலம தெறிவ ராலந் தன்னையோச் சிடுவர் வார்விற்
கோல்வகை தொடுப்பர் நாஞ்சிற் கொடும்படை துரப்பர் வெய்ய
சூலம துய்ப்பர் கொண்ட தோமரஞ் சொரிவ ரம்மா.

(இ-ள்.) அசுரர்கள் வேலாயுதத்தை விடுவார்கள்; தண்டாயுதங்களை யெறிவார்கள்; வலைகளைவீசுவார்கள்; மழுக்களையெறிவார்கள்; நீண்டவிற்களிலே அம்புகளை வைத்துத்தொடுப்பார்க்ள்; வளைந்தகலப்பையாகிய ஆயுதத்தைவிடுவார்கள்; கொடிய சூலங்களையெறிவார்கள்; தாங்கள்வைத்திருந்த தோமரங்களை விடுவார்கள்.—எ-று. (கூ)

கிளர்ந் தெழு பரிதி தன்னைக் கேழ்கிள ருருமுக் கொண்மூ
வளைந்தென வவுணர் வீரன் மருங்குசூழ்ந் தாடல் செய்யத்
தளர்ந்தில னெதிர்ந்து தன்கைத் தாரைவா ளுறையி னீக்கி
யுளந்தனின் முனிந்தன் னோரை யொல்லைசூழ்ந் தடுத லுற்றான்

(இ-ள்.) ஒளியுடனுதிக்கின்ற சூரியனை ஒளிபொருந்திய இடியோடுகூடிய மேகங்கள் சூழ்ந்துகொண்டாற்போல அசுரர்கள் வீரவாகுவைச்சூழ்ந்து போர்செய்யவும் தளர்ச்சியடையாதவராய் அவர்களுடன் எதிர்த்துக் கூர்மைபொருந்திய வாளாயுதத்தை உறையினின்று மெடுத்து உள்ளத்திற் கோபங்கொண்டு அவர்களை விரைவாகச்சுற்றிக் கொல்லத்தொடங்கினார்.—எ-று. (கo)

அரக்குருக் கொண்ட வெற்பி னடுகனற் கடவு ளெய்தி
யுருக்கியே யதனை யெல்லா மொல்லையி னுடைக்கு மாபோ
னெருக்கிய வவுணர் தானை நீத்தம துடைய வீரன்
றிருக்கிளர் வாளொன் றேந்திச் சென்றுசென் றடுதல் செய்தான்.

(இ-ள்.) அரக்கினாலே உருவமாகவமைக்கப்பட்ட மலையில் அக்கினிதேவன் புகுந்து உருக்கி அம்மலையினிடங்களனைத்தையும் விரைவாக உடைக்குந்தன்மையைப் போல தன்னைச்சுற்றிலும் வந்துநெருங்கிய ஐந்நூறுவெள்ளம் சேனைகளும் உடையும்படி வீரவாகுதேவர் ஒளிவிளங்குகின்ற ஒருவாளினை கையிற்றாங்கி அவர்கள் நிற்குமிடங்களிலெல்லாம் சென்றுகொன்றனர்.—எ-று. (கக)

பனிபடர் குழும றன்னைப் பாயிருட் செறிவை யங்கிக்
கனிபடர் பொற்பிற் றேன்றுங் காய்கதிர் முடிக்கு மாபோ
னனிபட ரவுணர் தானை நைந்திடச் சுடர்வா ளொன்றுற்
றனிபடர் வீர வாகு தடிந்தனன் றிரித லுற்றான்.

(இ-ள்.) விரிந்த பனிக்கூட்டத்தையும் பரவிய இருளினையும் அக்கினிமுதிர்ந்து படர்ந்ததுபோன்ற வழகொடுகாணப்படும் எறிக்கின்றகதிர்களையுடைய சூரியனழிக்குந்தன்மையைப்போல தனியேசென்ற வீரவாகுதேவர் மிகவும்மிகுதியாகவந்துள்ள அசுரசேனைகள்வருந்தும்படி ஒளிபொருந்திய ஒற்றைவாளினால் சுற்றிச் சுற்றி வெட்டினார்.—எ-று. (கஉ)

உறைந்தன குருதி வாரி யொல்லையி னுவரித் தெண்ணீர்
மறைந்தன வவுணர்தானை மால்கரி பரிதேர் முற்றுங்

குறைந்தன கரந்தாண் மொய்ம்பு கொடுமுடி துணிந்து வீழ்ந்த
நிறைந்தன வலகை யீட்ட நிரந்தன பரந்த பூதம்.

(இ-ள்.) விரைவாக இரத்தவெள்ளம் உப்புக்கடலிற்சென்றுறைந்தன. அசுரர் சேனைகளெல்லாம் ஒழிந்தன ; பெரியயானையுங் குதிரையுந்தேருமெல்லாம் குறைவுபட்டன ; கையும் காலும் மார்பும் வளைந்தமுடியும் வெட்டுண்டுவிழுந்தன பைசாசக்கூட்டங்கள்நிறைந்தன ; பூதங்கள்பரந்தன.—எ-று. (கங)

வெள்ளநூ றவுணர் தானை விளிந்திட விளைய பாலால்
வள்ளல்சென் றடுதல் செய்ய மற்றுள வவுணர் யாரு
முள்ளநொந் திரங்கித் தத்த முயிரினை யோம்பல் செய்து
பொள்ளென நிலனும் வானும் புலந்தொறு மிரியல் போனார்.

(இ-ள்.) இவ்வண்ணமாக நூறுவெள்ளமசுரசேனைகளை வீரவாகுதேவர்சென்று கொல்லவும் எஞ்சிய நானூறுவெள்ளஞ் சேனைகளும் மனநொந்து வருந்தி அவரவர்கள் பிராணனைக் காப்பாற்றிக்கொண்டு விரைவாக வானத்திலும் பூமியிலும் உள்ள இடங்களேடோறும் விலகிச்சென்றார்கள். (கச)

போதலும் வீர சிங்கன் பொள்ளெனச் சினமேற் கொண்டு
மாதிரங் கடந்து மேல்போய் வளர்தரும் வாகை மொய்ம்பன்
மீதொரு சூலந் தன்னை விட்டனன் விட்ட காலை
யேதியங் கதனு லன்ன திருதுணி படுத்தி யார்த்தான்.

(இ-ள்.) சேனைகள் புறமுதுகிட்டுச் செல்லவும் சேனபதியாகிய வீரசிங்கன் விரைவாக மிக்ககோபங்கொண்டு திக்குகளையும் கடந்து சென்று வளர்ந்துள்ள வீரவாகு தேவர்மீது ஒருசூலாயுதத்தினை யெடுத்து விட்டனன். விட்டவுடனே வாளினால் அதனை இரண்டு துண்டாக வெட்டி வீரவாகு தேவர் கெர்ச்சனைசெய்தார்.—எ-று. (கரு)

ஆர்த்தலு மடங்கற் பேரோ னாண்டகை வீரன் மேன்மை
பார்த்தனன் றனது பாணி பற்றிய படைக டம்மிற்
கூர்த்ததோர் குலிசம் வீசக் குறுகிவா ளதனான் மாற்றிப்
பேர்த்தொரு படையெ டாமுன் பெயர்ந்தவன் முன்னஞ் சென்றான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் அவ்வாறு கெர்ச்சனைசெய்தவுடனே வீரசிங்கன் ஆண்டன்மை யிற்சிறந்த அவரது மேன்மையைப்பார்த்தவனாய் தன்கைகளிற் பிடித்துள்ள ஆயுதங்களுள் கூர்மைபொருந்திய ஒப்பற்ற வச்சிராயுதத்தை வீசி யெறிதலும் அதனை அதனெதிரிலே சென்று வாளினால் வெட்டி வேறே யொரு ஆயுதத்தை அவனெடுத்தற்குமுன்னே நடந்து அவ்வீரசிங்கனது எதிரில் சென்றனர்.—எ-று. (கசு)

சென்றுதன் மணிவா ளோச்சிச் செங்கைக டுமித்துத் தீயோ
னென்றொரு முடியுங் கொய்தே யுவர்க்கட லிடையே வீட்டி
நன்றுதன் னுறையுட் செல்ல நாந்தகஞ் செறித்து முன்னோர்
வென்றிகொண் டகன்று னென்ப வேலவன் விடுத்த தூதன்.

(இ-ள்.) சென்று தமது ஒளிபொருந்திய வாளினால் வீசி அவ்வீரசிங்கனதுசெவ்வியகைகளை வெட்டி கொடிய வவனது ஒருதலையையும் அறுத்து உப்புக்கடலினிடத்திற்றள்ளி தன்னுறைக்குட்போம்படி நன்றாய்வாளைச்செலுத்தி முதலில் இவ்வாறான ஓர் வெற்றியையடைந்தவராக சண்முகக்கடவுள் அனுப்பிய தூதராகிய வீரவாகுதேவர் சென்றனரென்றுகூறுவார்கள். (கஎ)

வீரசிங்கன்வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - அகூ.

# இலங்கைவீழ் படலம்.

மலங்கொடு சுறவு தூங்கு மறிகடன் மீது மேரு
விலங்கல்சென் றிட்ட தென்ன விண்ணிடந் தன்னி னீங்கி
யலங்கலந் திண்டோள் வள்ள லவுணர்தம் மிருக்கை யாகு
மிலங்கையங் குவடு மூன்றி லிடைப்படு சிகரம் பாய்ந்தான்

(இ-ள்.) விலாங்குகளுடன் சுறுமீன்களும் தூங்குகின்ற அலைகளையுடைய கடலின்மீது மேருமலைசென்றாற்போல ஆகாயவழியிற் செல்வதைவிட்டு மாலையணிந்த திண்ணிய தோள்களையுடைய வீரவாகுதேவர் அசுரர்களது இருப்பிடமாகிய இலங்கையில் மூன்று சிகரங்களில் நடுவிலுள்ள சிகரத்தின்மீது குதித்தனர்.—எ-று.

ஈண்டு, சிகரமென்றது அந்தநகரத்தின் பிரதானமான மூன்றுகோபுரங்களை; அதுகளில் நடுவிலுள்ள கோபுரத்தின்மீது வீரவாகுதேவர் குதித்தார் என்பதுகுறிப்பு. (க)

நெடுவரை தன்னை வேலா னீறுசெய் திட்ட வண்ணல்
விடவரு தமியோன் றொல்லை யிலங்கையின் மீது பாய
வடலதி வீர னேனை யவுணர்கள் கலங்கி யேங்கி
யிடியுறு புயங்க மென்ன யாருமெய் பனித்து வீழ்ந்தார்.

(இ-ள்.) நீண்டகிரவுஞ்சமலையை வேலினால் நீறாக்கிய சண்முகப்பெருமான் அனுப்புதலால் வருகின்ற வீரவாகுதேவர் புராதனமான இலங்காபுரியின்மீது குதித்தலும் அதிலிருந்த வலிமையுடைய அதிவீரனும் மற்றைய அசுரர்களும் கலங்கி யேக்கங்கொண்டு இடிவிழுந்த பாம்பைப்போல யாவர்களும் உடனடுங்கி கடலுளாழ்ந்தனர். (உ)

வேறு.

வைப்புறு மகேந்திர வடாது புலமாகி
யிப்புற மிருந்திடு மிலங்கைதனி லேந்தல்
குப்புறுத லுங்குலை குலைந்தவுண ரோடு
முப்புறு கடற்படிதல் கண்டு வகை யுற்றான்.

(இ-ள்.) பெருமையமைந்த மகேந்திராபுரிக்கு வடக்கிலுள்ளதாய் இப்புறத்திலிருக்கிற இலங்கையின்மீது வீரவாகுதேவர் குதித்தவுடனே அவ்விலங்கை கலகலத்து அசுரர்களுடன் உவர்க்கடலில் படிவதைப்பார்த்து மகிழ்வுற்றனர்.—எ-று. (௩)

தந்திமுக மாமதலை தன்னடி வணங்கா
தந்தரவின் ஞோர்கட லலைத்திட லுமன்னோன்
சிந்தைமுனி வெய்தவிடை சேர்த்தகயி றோடு
மந்தர நெடுங்கிரி மறிந்தபடி மானும்.

(இ-ள்.) இலங்கைகடலில் மூழ்கியது தேவர்கள் யானைமுகத்தினையுடைய மூத்தபிள்ளையாரது திருவடிகளை வணங்காமல் கடலைக்கடைதலும் அவர்திருவுளத்தில் கோபங்கொண்டமையான் நடுவிற்சுற்றிய பாம்பாகிய தாம்புடன் மத்தாகிய மந்தரமலை கலுடண்மூழ்கினதை யொக்கும்.—எ-று. (௪)

ஆடல்கெழு மொய்ம்பின னடித்தலம தூன்ற
மூடுதிரை வேலையிடை மூழ்கிய விலங்கை
கூடுமக வண்ணல்குலி சந்தொடர நேமி
யூடுபுக லுற்றிடுமை நாகவரை யொக்கும்.

(இ-ள்.) வெற்றியொடுவிளங்குகின்ற தோள்களையுடைய வீரவாகுதேவரது கால்களாலழுத்தப்பட்ட உடனே திரைகளால் மூடப்பட்ட கடலினுள்மூழ்கிய இலங்கையானது போருக்குவந்த தேவேந்திரனது வச்சிராயுதமானது தனது இறகுகளை அறுத்தற்கு வருதலும் (அதனைக் கண்டுபயந்து) கடலினிடத்தேபுகுந்து ஒளித்த மைநாகமலையையொக்கும்.—எ-று. (ரு)

மாமறைக் டம்மைமுனம் வஞ்சனை புரிந்தே
சோமுகன் மறைந்ததிரை தூங்குகட லூடே
யேமமுறு பேருரு வெடுத்ததொரு மாண்சேல்
போமதென வாழ்ந்தது பொலங்கெழு மிலங்கை.

(இ-ள்.) பெருமைவாய்ந்த வேதங்களை முன்னம் வஞ்சனையுடன் திருடிக்கொண்டுசென்ற சோமுகாசுரன் மறைந்த திரைபொருந்திய கடலுக்குள் மகிழ்வைத் தருகின்ற பேருருவத்தையடைந்த ஒப்பற்ற (திருமாலாகிய) மாட்சிமைதங்கிய சேல்மீன்போனதைப்போல பொன்னொளிவிளங்குகின்ற இலங்கை கடலுள் ஆழ்ந்தது.—எ-று. (சு)

தொல்லைதனி லோர்விதி துயின்றகடை நாளி
னெல்லைய திகந்துகட லேழுமெழ வங்க
ணொல்லையில முற்றபுவி யுய்ப்பவொரு கேழல்
செல்லுவதி னாழ்ந்தது திரைக்கட லிலங்கை.

(இ-ள்.) முன்னொருகாலத்தில் பிரமன்றூங்குகின்ற இரவாகிய பிரளயத்தில் கரைகளைக்கடந்து ஏழுகடல்களும்பெருக அதனால் பாதாளத்தை யடைந்த பூமியைப் (பிரளயமுடிவில்) மேலே கொண்டுவரும்பொருட்டு ஒப்பற்ற (திருமாலின் சுவேதவராகாவதாரமாகிய) பன்றி கடல் நீருட்சென்றதைப்போல இலங்கைகடலுளழுந்தியது.

சிந்துவி னகன்கரையொர் திண்கிரி யழுந்த
வந்தமி லிலங்கையு மழுந்தியிடு தன்மை
முந்தொரு மடக்கொடி விருப்பின்முனி மூழ்க
விந்திரனு நேமியி னிடைப்புகுதல் போலும்.

(இ-ள்.) கடலின் பெரியகரையில் ஒருதிண்ணிய மலையாகிய கந்தமாதனம் முன்னே முழுக அழிவற்ற இலங்கையும் அதன்பின்னே மூழ்கியிடுந்தன்மை எதுபோலுமெனின்: முன்னொருகாலத்தில் ஒரிளம்பெண்ணினாசையால் கௌதமமுனிவர் கடனீருண்மூழ்க அவரைப்போலவே இந்திரனும் கடலுக்குட்புகுதலையொக்கும்.—எ-று.

மடக்கொடியென்பது அகலிகையை, பிரமனால் நல்லழகுடையவளாகபடைக்கப்பட்ட அகலிகையென்பவளை ஆயிரவருடம் கடலுண்மூழ்கி எழாமற்றவம்புரிபவர்கட்குத்தான் கொடுப்பதாகக்கூறிய வசனத்தைக்கேட்ட அநேகர்களால் சாதிக்கமுடியாதுவிடப்பட்ட இக்காரியத்தை யான்முடிப்பேனென்று கௌதமமுனிவர் நீருண்மூழ்கி அவ்வாறே தவஞ்செய்தனர். இந்திரனும் அக்கடலினொருபுறத்தில் அவள்மீதுள்ள மோகத்தால் தானும் முழுகி முழுகிப் பலதரம் எழுந்தும் அழுந்தியும் கிடந்தனன். பின்னர் பிரமன் சரியாயுள்ளழுந்தியிருந்த கௌதமருக்கே அகலிகையை யளித்தனன் இக்கதையிலுள்ள இருவர்களும் இலங்கைக்கும் கந்தமாதனத்திற்கும் நீருண்மூழ்கிய விஷயத்திற்குமாத்திரம் உவமையானார்கள். (அ)

உலங்கொள்புய வீரனடி யூன்றுதலு முன்னோர்
விலங்கல்பணி தன்னுலக மேவியது கேளா
வலங்கல்பெறு வாகையவ னூற்றலது தாங்கி
யிலங்கையது காண்பலென வேகியது போலும்.

(இ-ள்.) இலங்கை கடலின் மூழ்கியதன்மை திரண்டகல்லேப்போன்ற தோள்களையுடைய வீரவாகுதேவரது கால்பட்டவுடனே முன்னொருமலை நாகலோகத்திற்குச் சென்றதைக் கேள்வியுற்று வெற்றிமாலையணிந்த அவ்வீரவாகுதேவரது சகாய வலிமையைக்கொண்டே அந்நாகலோகத்தைக் காண்பேன் என்றுசென்றதைப்போலும். எ-று.

இலங்கையிது பான்மையி னிருங்கடலுண் மூழ்கக்
குலங்களொடு வைகிய கொடுந்தகுவர் யாருங்
கலங்கின ரழுங்கினர் கவன்றனர் துவன்றி
மலங்கினர் புலம்பினர் மருண்டனர் வெருண்டார்.

(இ-ள்.) இலங்கையிவ்வண்ணமாக பெரியகடலுண்மூழ்கவும் அவ்விலங்கைக்குள் சுற்றத்தினர்களுடன் வாழ்ந்திருந்த கொடிய அசுரர்களெல்லாம் கலங்கினார்கள்; அழுங்கினார்கள் ; கவர்ச்சிகொண்டார்கள் ; நெருங்கிமயங்கினார்கள் ; புலம்பினார்கள் ; மருண்டுவெருண்டார்கள்.—எ-று.

அழுங்கினார்கள் என்பதை, அச்சமுற்றார்களென்னினுமாம். (௧௦)

அற்றமுறு தானவர்க ளாழவனை யோரைச்
சுற்றியவ ளப்பில சுறுவுழுவை மீனம்
பற்றியவ ளைந்தன பலப்பல திரண்டே
செற்றிய திமிங்கில திமிங்கில கிலங்கள்

(இ-ள்.) நாசம்பொருந்தியவசுரர்கள் அக்கடலுக்குண்மூழ்கவும் அவர்களை அளவற்ற சுறுக்களும் உழுவைகளும் சுற்றிக்கொண்டன; திமிங்கிலங்களும் திமிங்கிலகிலங்களும்பிடித்துக்கொல்லும் பொருட்டு அநேகமாக வளைந்துதிரண்டன;எ-று. (௧௧)

கையதனை யீர்ப்பசில கால்கள்சில வீர்ப்ப
வெய்யதலை யீர்ப்பசில மிக்கவுயர் தோள்கண்
மொய்யுடைய மார்பதனை யீர்ப்ப சில மொய்த்தே
சையமுறழ் யாக்கையுள தானவரை மீனம்.

(இ-ள்.) மலைகளை யொத்த சரீரங்களையுடைய அசுரர்களை மொய்த்துக்கொண்டுசில மீன்கள் கைகளைப்பிடித்து ஈர்க்கின்றன ; சிலகால்களைப் பிடித்துஈர்க்கின்றன. மிகுந்த உயர்ந்ததோள்களைப் பிடித்தீர்க்கின்றன ; வலிமைமிக்க மார்பினைப் பிடித்தீர்க்கின்றன. எ-று. (௧௨)

அத்தனொடி யாயைமனை யன்பின்முதிர் சேயைக்
கொத்தினொடு கொண்டுசிலர் கூவியெழு கின்றா
ரெய்த்தனர்கள் செய்வதெ னிரும்படையும் விட்டுத்
தத்தமுயிர் கொண்டுசிலர் தாமுமெழ லுற்றார்.

(இ-ள்.) தந்தையுடன் தாயையும் மனைவியையும் அன்பின்மிக்க குழந்தையையும் கூட்டமாகக்கொண்டு சில அசுரர்கள் கூவிக்கொண்டு எழுகின்றார்கள்; வேறு சிலர் இளைத்தவர்களாய் என்னசெய்வதென்று பெரியவாயுதங்களையுமிழ்ந்து தங்களுயிரைமாத்திரங்கொண்டு எழுந்தார்கள்.—எ-று. (௧௩)

உற்றசில தானவரை யொய்யென வளாவித்
திற்றிவிழை வானனி திரண்டனர்க ளெல்லாம்
பற்றுழி தனித்தனி பறித்தது பொருட்டாற்
பொற்றைபுரை மீன்கள்பெரும் போர்வினை புரிந்த.

(இ-ள்.) அங்குவந்துபொருந்திய சில அசுரர்களோடு விரைவாகச் சூழ்ந்துகொண்டு உணவின்விருப்பத்தால் மிகவும்விரைவில் கூடினவர்களெல்லாம் பிடிக்குமிடத்துத் தனித்தனியே அவர்களது கைகளினின்றும் தப்பித்துக்கொண்டு தங்களைப்பிடித்ததையே காரணமாக்கொண்டு மலைகளையொத்த மீன்கள் அசுரர்களுடன் பெரியபோர்த்தொழிலைச்செய்தன.—எ-று. (௧௪)

தானவர்க ளோர்சிலவர் தம்முணல் குறித்தே
வானிமிரு மோதையென வந்துதமை யெற்றப்
பூநுனைய வாள்சுரிகை போரயில்கள் கொண்டே
மீனமொடு வெஞ்சினம் விளைத்தமர் புரிந்தார்.

(இ-ள்.) சில அசுரர்கள் தங்களைத்தின்ன உத்தேசித்து இடிமுழக்கம்போல சத்தித்துக்கொண்டு (சிலமீன்கள்) வந்து தங்களையடிக்க அழகியநுனியினையுடைய வாள்களினாலும் உடைவாள்களினாலும் போருக்குரிய வேல்களினாலும் அம்மீன்களுடன் கொடியகோபங்கொண்டு போர்புரிந்தார்கள்.—எ-று.

சாணைபிடித்துத் தைலமிட்டுப் பளபளப்பாக்கியிருக்கும் வாள் முருட்டுவேலைகளுக்குரியதன்றிப் போருக்குமாத்திரமே உரியதாதலால் பூநுனையவாள் என்றார். (௧௫)

சீர்த்திகொ ளிலங்கைகடல் சென்றிடலு மங்க
ணார்த்திபெறு மங்கையர்க ளங்கையவை பற்றி
யீர்த்தபிற ரில்லுறவி னைந்துகரம் பற்றுந்
தூர்த்தரை நிகர்த்தன சுறுமகர மீனம்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய இலங்கைகடலுண்மூழ்குதலும் அவ்விடத்தில் விருப்பத்துடனிருந்த பெண்களது கைகளைப்பிடித்து இழுத்த சுறுமீன்களும் மகரமீன்களும் அயலார்களது மனைவியர்களைப்புணரவிரும்பி அவர்களதுகைகளைப்பிடிக்கின்ற காமுகர்களையொத்தன.—எ-று.

காமம் எல்லாரிடத்திலும் இருப்பினும் அளவுகடந்துநடவார்; தூர்த்தர்கள் கேவலம் மாதாவையும் மனைவியையும் சோதரியையும்கூட விரும்பத்தக்கவர்களே என்பதையுணர்த்த அறிவற்றமீன்களுக்குக் காமுகர்களையுவமையாகக்கூறினர். (௧௬)

மீனொருகை பற்றியிட வேறொரு கரத்தைத்
தானவர் வலித்தொரு தடக்கைகொ டிசிப்ப
மானனைய கண்ணியர் வருந்திடுத லோரைந்
தானபுல னீர்ப்பவுள ழுங்குவது போலும்.

(இ-ள்.) மீனொருகையைப் பிடித்துக் கொள்ள மற்றொருகையை அசுரர்கள் தழுதுவலியஒருகையினால் பிடித்துஇழுக்க மான்விழிபோன்ற பார்வையினையுடைய அசுரமாதர்கள் வருந்துந்தன்மை பஞ்சேந்திரியங்களினாலேவிஷயங்களில் இழுக்கப்பட்டபோது மனமானது வருந்துதலை யொக்கும்.—எ-று.

நிக்கிரகத்தன்மையடையாத மனம் கேவலம் பஞ்சேந்திரியவசப்பட்டு ஒரு சிறுகணத்துளெவ்வளவோ மாறுபாட்டையடைந்து கஷ்டப்படுவதுவழக்கம் ஆசிரியர் பஞ்சேந்திரியங்களை அடக்கியாளுந்திறமுடையவராதலால் அவைகளை யடக்காமையால் வருந்துன்பம் இத்தகையதெனவிளக்க மடவாருக்குமனத்தையும் இந்திரியங்களுக்கு மீன்களையுமுவமையாக்கிக்கூறினர். (௧௭)

திண்டிறல் வலம்படு திருக்கைசுற மீன
மண்டிய திமிங்கிலம் வருந்தகுவர் சூழல்
கண்டுமிசை யெற்றிடுத லுங்கடிது வாளாற்
றுண்டமுற வேயவை துணித்தெழுநர் சில்லோர்.

(இ-ள்.) பலமும் அழுத்தமும் வெற்றியும் பொருந்திய திருக்கைமீன்களும் சுறாமீன்களும் நெருங்கிய திமிங்கில மீன்களும் எதிரில் வருகின்ற அசுரர்கள்சுற்றிக் கொள்வதைப் பார்த்துத் தங்கள் வால்முதலியவற்றால் அடித்தலும் உடனே சில அசுரர் கள்வாளினால் அவைகளைத் துண்டாகும்படி வெட்டிக் கரையிலேறுகின்றார்கள்.—எ-று.

கட்டழல் விழிச்சுறவு காரவுணர் தம்மை
யட்டுணல் குறித்துவர வன்னவர்க ணீவித்
தொட்டனர் பிடித்தகடு தூரும்வகை பேழ்வா
யிட்டனர் மிசைந்தன ரெழுந்தனர்கள் சில்லோர்.

இ-ள். தீப்பொறியைக் கக்குகின்றகண்களையுடைய சுறாமீன்கள் கருநிறம்பொருந்திய வடிவினையுடைய வசுரர்களைக் கொன்று தின்னுதலையுத்தேசித்து வருதலுஞ்சில அசுரர்கள் அவைகளைத் தமது கைகளால் தடவித்தொட்டெடுத்துப் பெரியவாயிலிட்டு வயிறு நிரம்பும்படி மென்றுகொண்டு கரையேறினார்கள்.—எ-று.

அசுரர்கள் வெகுபோஜ்யர்களும் அபக்குவமான மாமிசாதிகளை அருந்துபவர்களும் ஆதலால் ஆசிரியருமவர்களை அலக்ஷியமாகவே "அகடுதூரும்வகை" என்றார். (௧௯)

ஏற்றபுன லூடுதெரி வின்றியெம ரென்றே
வேற்றொரு மடந்தையர் வியன்கையது பற்றிப்
போற்றியெழ வங்கவர் புறத்தவர்க ளாக
மாற்றின ரிசைந்துசிலர் வாழ்க்கைமனம் வைத்தார்.

(இ-ள்.) பொருந்திய நீரினிடத்தில் தெரியாமையினால் தம்மவர்களென்றே வேறாகிய பெண்களின் பெரியகைகளைப்பிடித்துக் கொண்டு பாதுகாப்புடன் கரையிலேறுதலும் அவர்கள் அயலார்களாகவிருக்கவும் அவர்களை விட்டுச் சென்றார்கள்; வேறு சிலர் உடன் வாழ்தற்கு மனமிசைந்தார்கள்.—எ-று.

அசுரர்களிற்சிலரோ வியபிசாரமுள்ளவர்கள் பலர் நல்லவர்கள் என்று குறிப்பிக்க சிலர் என்றார். (௨0)

இல்லிவ ரெனப்பிறரை யேந்தியெழ வன்னோர்
புல்லுதனி யன்பர்புடை போகவொரு சில்லோ
ரல்லலுறு வார்தமை யடைந்ததொரு கன்னி
மெல்லவயல் போந்துழி மெலிந்துழலு வார்போல்.

(இ-ள்.) தமது நாயகியர்கள் இவர்களென்று வேறுமாதர்களைச் சுமந்துகொண்டு கரையிலேறுதலும் அவர்கள் அவர்களைப்புணருகின்ற ஒப்பற்ற நாயகர்கள் பக்கத்திலே செல்ல தமக்குக்கிடைத்த ஒருபெண்மெல்லென வேறிடஞ்சென்றவுடன் அதனிமித்தம் மெலிந்து வருந்துகின்றவர்களைப்போல வருத்தமடைவார்கள்.—எ-று.

கட்டாதபெண் முதலில் எவனை அடைவாளோ அவனுக்கே அவள் உரியவளாக, மணத்தற்குமுன்னே அவள் வேறொருவனைக்கண்டு அவனிடஞ்சென்றாலவனுக்கு சுவதந்திரத்தாலதிகவ்யசனம் உண்டாவதைப்போல நீருக்குள்கிடந்தவளைத் தன்மனைவியென்றே நினைத்துத் தோளிற்பட்சத்துடன் தூக்கிவைத்து சுமந்துகொண்டு கரையில்வந்தவுடனவளிவனைவிட்டுத் தன்னாயகனிடஞ்சென்றது. அவனுக்கு துன்பத்தை யுண்டாக்கினமையால் "அடைந்ததொருகன்னி மெல்லவயல்போந்துழிமெலிந்துழலுவார் போல்" என்றனர். (௨௧)

தீமைபுரி மால்களிறு திண்புரவி யாவு
மேமருசு ரூத்தொகுதி யீர்த்துவிரைந்தேகித்
தோமறுபி னுமகரந் துய்ப்பவுத வுற்ற
காமர்கெழு பெண்மயல் கடக்கவெளி தன்றே.

(இ-ள்.) துன்பத்தைச்செய்கின்ற மயக்கம்பொருந்திய யானைகளையும் திண்ணிய குதிரைகளையுமெல்லாம் மகிழ்வினையுடைய ஆண்சுறுமீன்கூட்டங்கள் இழுத்து விரைந்துசென்று குற்றமற்ற பெண்மகரமீன்கள் உண்ணும்படிகொடுக்கின்றன ; அழகு விளங்குகின்ற பெண்களின் மோகத்தைக் கடத்தல் எளிதல்லவே.—எ-று.

மதமேலிட்டால் நன்மையுந்தீமையும் யானைகளுணரா என்பதையுணர்த்த 'மால் களிறு' என்றார். முனிவர் முதலானவர்களாலேயே கடக்கமுடியாத காமத்தை மீன்கள் கடக்கத்தக்கவையோ என்பார் 'எளிதேயோ' என்றார். (௨௨)

மாற்றறு சுறுச்சில மடப்பிடிகை பற்றி
யேற்றபெண் வழிச்செல வெதிர்ந்ததனை நோக்கி
வேற்றொர்பெடை யாயதென வேர்வுறுகை கையர்க்
காற்றுமுப காரவியல் பாகியதை யன்றே.

(இ-ள்.) ஒப்பற்ற சிலமகரமீன்கள் பெண்களின் கைகளைப்பிடித்துத் தங்களது பொருந்திய பெண்மகரமீன்கள் இருக்குமிடத்திற்குச் செல்லுதலும் அவை எதிரே வந்து அதனைப்பார்த்து வேறேயொருபெண் சுறுவென்று கருதி கோபங்கொள்ளுதல், இழிசனர்களுக்குச் செய்யும் உபகாரங்களைப்போலப் பயனற்றதாயது.—எ-று.

தீயகுணமுள்ளவருக்குச் செய்யுமுபகாரமு மபகாரமாகவே முடியுமென்பார் "கையர்க்காற்றுமுபகாரவியலாகியது" என்றார். (௨௩)

சிந்துவதன் மீதிலெழு சில்லவுண ராயோர்
கந்தன்முரு கேசன்விடு காளைசெயல் காணு
நந்தமையு நின்றிடி னலிந்திடுவன் யாங்க
ளுய்ந்திடுது மென்றுகடி தோடியயல் போனார்.

(இ-ள்.) கடலின்மீது எழுந்த சில அசுரர்கள் கந்தக்கடவுளாலே அனுப்பப்பட்ட வீரவாகுதேவரது செய்கையைப்பார்த்து நாமிங்குநின்றால் நம்மையுங்கொல்லுவானிவன் என்று (நினைத்து) நாமிவ்விடத்தினின்றும் ஓடி வேறிடஞ்சென்று பிழைத்துக் கொள்ளலாமென விலகிச்சென்றார்கள்.—எ-று. (௨௪)

பீடுசெறி தங்கணவ ரைப்பிரிகி லாமே
கூடும்வழி யாழ்ந்தசில கோற்றொடிமின் னார்க
ளாடைபுன லூடுபுக வல்குறம கையான்
மூடியெழு வார்முலை முகத்தின்முகம் வைத்தே.

(இ-ள்.) பெருமைபொருந்திய தமதுகணவர்களை விடாமலே கூடுகின்ற சமயத்தில் கடலுள்மூழ்கிய சில அழகிய வளையலணிந்த கைகளையுடைய பெண்கள் தமதாடைகள் நீருள்மூழ்கவும் (அதனாலே) வெளிப்பட்ட நிதம்பத்தை கையினான்மறைத்தவர்களாய் முலைமுகத்தில் முகத்தைச்சாய்த்துக்கொண்டு கரையிலேறுவார்கள்.-எ-று.

நாணமுடையோ ரபிநயத்தில் சிரந்தனமேற்சாய்த்து நிற்றலுமொன்றுதலால் பெண்டன்மையையுணர்த்த "முலைமுகத்தின் முகம்வைத்தே" என்றார். (௨௫)

சேண்டொட ரிலங்கைகடல் சென்றுழிய தன்பா
லாண்டசில மாதர்க ளரத்தவுடை கொண்டார்
மீண்டெழலு நீர்பட வெளிப்படுவ தல்குல்
காண்டகைய செம்மதிக ளங்கமடைந் தென்ன.

(இ-ள்.) ஆகாயத்தையளாவிய இலங்காநகரம்கடலுள் மூழ்குதலும் அந்நகரத்துடனமுந்திய செந்நிறம்பொருந்திய சேலையணிந்த சிலமாதர்கள் நீரில்நனைந்த ஆடை

யுடன் கரையிலேறினர்கள் உடனே அவர்களது கடிப்பிரதேசம் செந்நிறம்பொருந்திய சந்திரன்களங்கமடைந்தாற்போல காணப்பட்டது.—எ-று.

அல்குலென்பதை, பெண்குறியினெரு பகுதியாமென்பர் சிலர். சந்திரன்பெண் குறிக்குவமையல்லாதபொருள் சந்திரன்வட்டவடிவு, நிதம்பம் அவ்வாருனவட்டவடிவி னதல்ல ஆதலால் கடிப்பிரதேசமென்ரும். (உ௬)

காரவுணர் மாதர்சிலர் காமர்கடல் வீழ்வார்
நீரமெழ வேயுடை நெகிழ்ந்தொருவி யேக
மூரன்முக மல்லுருவு முற்றுறம றைத்தே
தேரையென வொண்புனல் செறிந்துதிரி வுற்ருர்.

(இ-ள்.) கரிய அசுரமாதர்கள் சிலர்கடலுள்முழுகி நீருக்குமேலே எழுந்தசமய த்தில் ஆடைகழன்றகன்றமையால் (கரையிலேறுதற்கு வெட்கங்கொண்டு) பல்வரிசை களையுடைய (வாயோடுகூடிய) முகந்தவிர மற்றைய அவ்வயவங்களையெல்லா மறைத்துக் கொண்டு தேரையைப்போல ஒள்ளிய நீரினெருங்கியுலாவினர்கள்.—எ-று

முகத்தை யுள்ளழுத்தி நீரிலுலாவுவது கட்டமாதலால் "மூரன்முகமல்லுருவுமு ற்றுறமறைத்தே" என்ருர். (உஎ)

ஆசுறு மரைத்துகி லகன்றிட வெழுந்தே
தேசுறு மடந்தைய ரிலோர்சிலவர் சேண்போய்
மாசுறு புயற்குழுவை வல்லைகரம் பற்றித்
தூசினியல் பானடுவு சுற்றியுல வுற்ருர்.

(இ-ள்.) சிறுமைபொருந்திய இடுப்பிலுள்ள ஆடைநீருள்விலகிச் செல்லுத லும் அழகுபொருந்திய மாதர்களிற்சிலர் ஆகாயத்திற்சென்று கருநிறம்பொருந்திய மேகக்கூட்டங்களை விரைவாகப்பிடித்து வஸ்திரத்தைப்போல இடையில் (இடுப்பில்) சுற்றிக்கொண்டு சஞ்சரித்தார்கள்.—எ-று.

ஆசுறுமென்மதை குற்றம்பொருந்திய என்றும் தேசுறுமடந்தையரிலோர் சிலவர் என்பதை அழகுபொருந்திய பெண்டீரல்லாத சிலபெண்டீர் என்றும் கூறினும் இவர் கள் அரக்கியர்கள் ஆதலால் அமையும் இவர்களில் விரூபிகளும் சொரூபிகளும் உண்டு ஆதலால் ஒருவாறுகூறலாம். இடைக்குக்குற்றமாவது செக்குப்போல பருத்திருத்தல்.

இலங்கைவீழ்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-ககஎ.

---

# அதிவீரன்வதைப்படலம்.

அன்னதோர் பான்மைக ளாக விலங்கை
முன்னுறு வார்கட லாழ்ந்தது மூழ்க
வின்நகர் போற்றி யிருந்திடு கின்ற
மின்னுனை வேலதி வீர னுணர்ந்தான்.

(இ-ள்.) இவ்வண்ணங்களாக இலங்கையானது எதிரிலுள்ள ஆழமானகடலு ள்மூழ்குதலும் அந்நகரத்தை அப்பொழுது காத்துக்கொண்டிருந்த ஒளிபொருந்திய வே லாயுதத்தினையுடைய யாளிமுகனதுபிள்ளையாகிய அதிவீரனென்னும் மன்னவனறிந் தனன்.—எ-று. (க)

தனது புரங்கடல் சாருதல் காணு
நனிதுய செய்தின ஞனு மடைந்தான்
சினவி யுயிர்த்தழல் சிந்த நகைத்தா
னனையவ னின்னத கத்திடை கொண்டான்.

(இ-ள்.) அவ்வதிவீரனனவன் தனது நகரமாகிய இலங்கையானது கடலிலழுந்துதலைக்கண்டு மிகவுந் துன்பமடைந்து வெட்கங்கொண்டு கோபித்துப் பெருமூச்சுவிட்டு தீப்பொறிகள் வெளியே சிதறும்படி கோபச்சிரிப்பாகச் சிரித்து தன்னுக்குள் இவ்வாறுநினைப்பானாயினன்.—எ-று. (உ)

சுந்தர மேவரு சூரபன் மாவோ
வந்தமி றம்பிய ரோவனை யார்தம்
மைந்தர்க ளோமதி யேனவ ரல்லா
லிந்தவி யற்கையை யார்புரி கிற்பார்.

(இ-ள்.) அழகுபொருந்திய சூரபன்மராஜனோ! அல்லதுஅழிவற்றவரது தம்பிமார்களாகிய தாரகாசுரனோ! சிங்கமுகாசுரனோ! அல்லது அவர்களது பிள்ளைகளாகிய பானுகோபஅக்கினிமுக இரணியவச்சிரவாகு அதிசூர அசுரேந்திராதியர்களோ! தீருமானமாக வறிகின்றேனில்லை; இவர்களல்லாமல் வேறேயார் இப்படிப்பட்ட காரியத்தை (துணிந்து) செய்வார்கள்.—எ-று. போலும் என்றது பாதபூரணம். (௩)

ஆயவ ரென்னினு மாங்கது செய்தற்
கேயதொ ரேதுவு மின்றுதம் மூர்க்குத்
தீயது செய்கலர் சிந்தைய தன்றுன்
மாயையு மீது மதிக்கிலள் போலும்.

(இ-ள்.) முன்சொல்லிய அவர்களாகவே இருந்தாலும் இவ்வாறு செய்தற்குத் தக்க காரணமொன்றையுங்கண்டிலேன் (இதுவன்றியும்) தங்களூருக்குத்தாங்களே தீங்குசெய்துகொள்ளமாட்டார்கள் ஆதலாலிதெண்ணத்தக்கதல்ல (இவர்தாயாகிய) மாயையுமிவ்வாறுசெய்கலள்.—எ-று. (௪)

மூவரு மிச்செயன் முன்னலர் பின்னர்த்
தேவர்கள் யாரிது செய்திட வல்லா
ரேவரு நஞ்சிறை யெய்தினர் வேள்விக்
காவல ரூருயிர் காத்து மறைந்தான்.

(இ-ள்) அயன் அரி அரன் என்னும் மூவர்களும் இவ்வாறுசெய்தற்கு நினையார்கள் இதுவன்றி தேவர்களிலேயார் இவ்வாறு செய்வதற்குத்தக்கவர்கள் தேவர்களெல்லாம் நமது சிறைச்சாலையிலடைபட்டுக்கிடக்கின்றார்கள். அவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனோ தன்னுயிரைக் காத்துக்கொள்ளும்பொருட்டு (எங்கேயோ) மறைந்திருக்கிறான்.—எ-று. (௫)

மாதிர மேலவர் வானிடை வைப்பின்
மேதகும் விண்ணவர் விஞ்சையர் சித்த
ராதியர் நம்மிறை யாணையி னீங்கா
ரீது புரிந்திட வெண்ணுவர் கொல்லோ.

(இ-ள்.) திக்குபாலகர்களும் ஆகாயத்திலுள்ள (பதவிகளாகிய) இடங்களிலே வாழுகிற மேன்மைபொருந்திய தேவர்களும் வித்தியாதரர்களும் சித்தர்கள்முதலானவர்களும் நமதரசனாகிய சூரபன்மனது கட்டளைப்படி நடக்கிறவர்களாதலால் இவ்வாறு செய்கிறதற்கு நினைப்பார்களா.—எ-று. (௬)

தவ்வற வீண்டமர் தானவ ராற்ற
மெய்வலி மாயைகண் மேவின ரேனுந்
தெவ்வடு சூர்முத றிண்படை யஞ்சி
யிவ்விய றன்னை யிழைக்கலர் போலும்.

(இ-ள்.) குறைவற இவ்விடத்தில் வாழுகின்ற அசுரர்கள் மிகவும் சரீரவலிமையும் மாயாவல்லபமும் அடைந்துள்ளவர்களானாலும் பகைவர்களைச்சங்கரிக்கின்ற சூரபன்மனது திண்ணிய ஆக்ஞாசக்கரத்துக்குப்பயந்து இப்படிப்பட்டகாரியத்தைச்செய்யமாட்டார்கள்.—எ-று. (எ)

ஆதலி னன்னவ ராற்றல ரென்
னீதொரு செய்கை யிழைத்தவர் யாரோ
தாதை யகன்றுழி தானவ ரோடுங்
காதல னிந்நகர் காத்தது நன்றால்.

(இ-ள்.) ஆகையாலவர்கள் இவ்வாறுசெய்யமாட்டார்களென்றால் (பின்னர்,) இப்படிப்பட்ட காரியத்தைச்செய்தவர்கள் யாராயிருக்கலாம் (யாளிமுகனாகிய) தந்தை மகேந்திரபுரிக்குச் சென்றவுடனே அசுரசேனைகளோடு மைந்தனாகிய (அதிவீரன்)யான் இந்நகரத்தைக்காத்தது நன்றாயிருக்கிறது.—எ-று. (அ)

காய மொடுங்கு கனற்சிர மூடு
போயது வல்லை புறஞ்செல நோற்று
மாயை பெரும்படை வன்மைகள் வேத
னீயமுன் வாங்கிய வென்செய னன்றால்.

(இ-ள்.) உடம்பிலொடுங்கியிருந்த அக்கினியானது தலையின்வழியாய் வெளியேசெல்லும்படி தவஞ்செய்து, மாயைவித்தைகளையும் உயர்ந்தபிரமாஸ்திர முதலாகிய அம்புகளையும் சரீரவலிமையும் பிரமதேவன்தர, அவரிடத்தில் அவைகளையெல்லாம்பெற்ற எனதுசெய்கைநன்றாயிருக்கின்றது.—எ-று. (௯)

தந்தை யுறுது தணந்துழி யாங்கோர்
மைந்த னிருந்துதன் மாநக ரோடு
மந்தில கன்கட லாழ்ந்தன னென்று
னந்தம ரென்னை நகைப்பர்க ளன்றே.

(இ-ள்.) தந்தையாகிய யாளிமுகன் மகேந்திராபுரிக்குப்போனபோது அவனது தானத்தி லவன்பிள்ளையிருந்து தனதுபெரிய நகரத்துடனே கடலில் முழுகினான். என்றால் நமது சுற்றத்தவர்கள் (இவனசுரகுலத்தில்பிறந்தும் தவம் வலிமை முதலியவற்றையடைந்தும் இவ்வாறானானென்று பரிகாசஞ்செய்து) சிரிப்பார்கள்.—எ-று. (௧௦)

மன்னவ னீது மதித்திடின் மற்றென்
றன்னை யடும்பெறு தாதையு மற்றே
பின்னுள ரெள்ளுவர் பெற்றியி தாமே
லென்னிய னன்றென வெண்ணி யினைந்தான்.

(இ-ள்.) இதுவன்றியும் அரசனாகிய சூரபன்மனிந்தக்காரியத்தைக் கேட்பானானால் என்னைக் கொன்றுவிடுவான் எனதுதந்தையறிந்தாலும் கொன்றுவிடுவார் மற்றையவர்கள்கேட்டால் நகைப்பார்கள் இவ்வாறாகுமானால் எனதுதன்மைநன்றாயிருக்கின்றது என்றுநினைத்துக்கொண்டு வருத்தமுற்றான் (அதிவீரன்).—எ-று. (௧௧)

இனைந்ததி வீர னெனுந்திறன் மைந்தன்
கனைந்திடு கின்ற கடற்கிடை யாழ்வோ

னனந்தர மூழ்வினை யாற்றலி லன்னான்
மனந்தனி லீதொரு தன்மை மதித்தான்.

(இ-ள்.) இவ்வாறு அதிவீரனாகிய வலிமைமிக்க அசுரவீரன்நினைத்து வருந்திக் கொண்டே கடலினுள் மூழ்குமவன் உடனே பூருவகருமபலத்தால், மனத்திலிவ்வண்ண மான ஒருகாரியத்தை நினைத்துத் தீருமானஞ்செய்தான்.—எ-று. (௧௨)

ஒல்லொலி சேரு வரிக்கடன் மீதாய்ச்
செல்லுவன் யாரிது செய்தன ரென்றே
வல்லையி லோர்குவன் மற்றவர் தம்மைக்
கொல்லுவன் மெய்ப்படு சோரி குடிப்பன்.

(இ-ள்.) ஒல்லென்றொலிக்கின்ற இந்தஉப்புக்கடலுக்கு மேலேசென்று இக்கா ரியத்தை யார்செய்தார்களென்று விரைவாகநாடி அவர்களைக்கொன்று அவர்களதுடலில் உள்ளசோரியைக் (இரத்தத்தை) குடிப்பேன்.—எ-று. (௧௩)

என்றதி வீர னிரும்படை யாவு
மொன்றற வாரி யுருத்த னிகத்து
ணின்றுளர் தங்களை நேடிபு கொண்டே
வன்றிரை வேலையின் மீமிசை வந்தான்.

(இ-ள்.) இவ்வண்ணம் பலவிதமாக நினைத்து மேலே செல்லுவதே சரி என்று தீர்மானஞ்செய்து தனதுபெரிய ஆயுதங்களையெல்லாம் வாரியெடுத்துக்கொண்டு கோப த்துடன் சேனைகளுள் இறந்தவர்கள்போக மற்றையவர்களையெல்லாம் தேடியழைத்துக் கொண்டு பெரிய அலைகளையுடைய கடலின்கரையின்மேலே வந்துசேர்ந்தான்.-எ-று. ()

வேறு.

விடலைதிரு முன்னமதி வீரனனி கங்கள்
புடையில்வர நீரின்மிசை பொள்ளென வெழுந்தா
னடுதொழி லியற்றியிடு மாதிதனையெய்தக்
கொடியவிடம் வார்கடல் குலாய்கிமிர்வ தேபோல்

(இ-ள்.) சங்காரகருத்தாவாகிய பரமேசுவரனையடைதற்குக் கொடிய ஆலகால விஷம் கடலுக்குமேலேகிளம்பி வந்தாற்போல, வீரவாகுதேவரதெதிரிலே சேனைகள் பக்கத்திற் சூழ்ந்துவரும்படி (இலங்கையின்யுவராஜாவாகிய அதிவீரன்) கடல்நீருக்கு மேலே தீடீரொன்றெழுந்தான்.—எ-று. (௧௫)

விழுந்திடு மிலங்கைதனின் மேவுமதிவீர
னெழுந்துதன தானையொ டிருங்கட லுளங்கிக்
கொழுந்துமிசை சென்றனைய கோலமொடு நின்ற
செழுந்திறல்கொண் மொய்ம்புடைய செம்மனிலை கண்டான்

(இ-ள்.) கடலுளழுந்திய இலங்காநகரத்திலிருந்த அதிவீரன் தனதுசேனைகளு டனே அக்கடலின் கரையின்மேற்புறத்தையடைந்து, பெரியகடலினடுவிலுள்ள வடவா முகாக்கினியின்கொழுந்துமேலே சென்றாற்போல நின்ற மிக்கதிறமையோடு கூடிய வீரவாகுதேவரது நிலைமையைக்கண்டான்.—எ-று. (௧௬)

கண்டனன் வெகுண்டிதழ் கறித்துநகை செய்யா
வண்டர்குழு வானிவனெ ராண்டகைநம் மூதூர்
தெண்டிரையி லாழும்வகை செய்துமிவ னின்று
னெண்டிசை தொழுந்தகுவ ராணையினி தென்றான்.

(இ-ள்.) (வீரவாகுதேவரைக்) கண்டு கோபங்கொண்டு மேல்வாய்ப்பற்களால் கீழ்வாயுதட்டை மடித்துக்கடித்து, நகைசெய்து, தேவர்கூட்டத்திலொருவனுகிய விந்த ஆண்டன்மையிற்சிறந்தவனு! நமதிலங்காநகரம் கடலுள்மூழ்கும்படி செய்தனனுகியும், இவ்விடத்திலேயே நின்றான்; எட்டுத்திக்குகளிலும் உள்ளவர்கள் வணங்குகின்ற அசுரர்களததிகாரம் நன்றாயிருக்கின்றது என்றுகூறினன்.-எ-று. உம்மை-சிறப்பும்மை.

என்றுமொழி யாவிரைவில் யாளிமுகன் மைந்தன்
கொன்றிவன தாருயிர் குடிப்பனென வுன்னிச்
சென்றிடலு மாழ்ந்தவர் செயற்கையது காண்பா
னின்றதொரு பேரறிஞ னீர்மையது கண்டான்.

(இ-ள்.) என்றுகூறி யாளிமுகனதுபுத்திரனுகிய அதிவீரன், இவனைக்கொன்று இவனதுயிரை வாங்குகிறேனென்று நினைத்துவருதலும் கடலினுள்மூழ்கியவர்களது செயல்களைப் பார்ப்பதற்காக அங்குச்சற்றுதங்கிநின்ற பேரறிவாளராகிய வீரவாகுதேவர் அதிவீரன் வருதலைக்கண்டனர்.—எ-று. (கஅ)

ஆனபொழு தத்தினில வன்புடையில் வந்த
தானவர்கள் சூழ்ந்தனர் சமர்த்தொழி லியற்ற
மானவிற லோன்றனது வாளுறை கழித்தே
யூனொடுயிர் சிந்தியிட வொல்லையடல் செய்தான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் அவனதுபக்கத்திற் சேனைகளாகச் சூழ்ந்து வந்த அசுரர்கள் போர்புரிதற்குச் சூழ்ந்துகொண்டார்கள் உடனேவலிமையும் வெற்றியும் வாய்ந்த வீரவாகுதேவர் தமது வாளாயுதத்தை உறையினின்றும் வெளியிலெடுத்து அவர்களது உடலும் உயிரும் அழியும்வண்ணம் விரைந்துகொல்லுவாராயினர்.—எ-று.(கக)

அற்றன சிரத்தொகுதி யற்றன கரங்க
ளற்றன புயத்தொகுதி யற்றன பதங்க
ளற்றன பெரும்புறமு மற்றவுடன் முற்று
மற்றனர்கள் யாருமுயி ரற்றதவர் பூசல்.

(இ-ள்.) (வீரவாகுதேவர் வெட்டியவுடனே) அனேகந்தலைக ளறுபட்டன அனேகம்கைக ளறுப்பட்டன அனேகம்புயங்களறுப்பட்டன அனேகங்கால்களறுப்பட்டன அனேகம்பெரிய முதுகுகளறுப்பட்டன சரீரங்கள்முழுமையுமறுப்பட்டன எல்லாரும் வெட்டுப்பட்டு உயிரைவிட்டார்கள் போரையும்விட்டார்கள்.—எ-று. (உo)

பங்கிசெறி செந்தலைகள் பாய்குருதி நீர்மே
லெங்கணு மிதப்பன விருங்கடலி னூடே
செங்கொடி படர்ந்திடு செழும்பவள வைப்பி
லங்கமல மானவை யலர்ந்திடுதல் போலும்.

(இ-ள்.) பங்கியானமயிர்நிறைந்த செந்நிறமானதலைகள் ஓடுகின்ற இரத்தவெள்ளத்தின்மீது எவ்விடங்களிலும்மிதப்பன பெரியகடலினிடத்தில் செந்நிறம்பொருந்திய கொடியாகிய செழுமைவாய்ந்த பவளங்களிருக்குமிடத்தில் அழகிய செந்தாமரைமலர்கள் புட்பித்தலையொக்கும்.—எ-று. (உக)

அற்றமகல் வீரனவு ணப்படை துணிப்பச்
செற்றிய பிணத்தொகை திரைப்புணரி தூர்த்து
மற்றுமிசை போந்துமணி யாலுமொரி லங்கைப்
பொற்றைய தியற்றியது போன்றுளது மாதோ.

(இ-ள்.) அழிவற்றவீரவாகுதேவர் அசுரசேனைகளைக்கொல்லுதலும் நெருங்கிய பிணக்கூட்டங்கள் அலைகளையுடைய கடலைத்தூர்த்துப் பின்னுமேலேநிரப்பி மணியினுலும் ஒருஇலங்கைமலையைச் செய்ததுபோலுமிருந்தது.—எ-று.

முன்னுள்ள இலங்கை பொன்மயமானதால் பின்பிணமலையாலுண்டாகிய மேட்டினை மணிகளாற்செய்த இலங்கையைப்போல என்றார். (உஉ)

தன்படை விளிந்துசல திக்கடலுள் வீழ
முன்பனதி வீரன்முனி யாவதனை நோக்கி
யென்புடையி னேரையெறிந் தாய்கடிதி னின்னைத்
தின்பனது காண்டியென வேசெருமு யன்றான்.

(இ-ள்.) தனது சேனைகளெல்லாம் இறந்து கடலுள்விழுந்து முழுகிப்போகவும் தலைவனுகிய அதிவீரன் அதனைப்பார்த்து கோபங்கொண்டு நீயென்னுடன்வந்தவர்களைக்கொன்றனை அவ்வாறுசெய்தநின்னை விரைவாகத்தின்றுவிடுகிறேன் பாரென்றுகூறி, போர்செய்யத்தொடங்கினுன்.—எ-று. (உ௩)

சொல்லுமதி வீரன்வரு தோற்றமது காணு
வல்லைவரு கென்றுதிறல் வள்ளலு மழைப்ப
வெல்லையத னிற்செருவி னேற்றிவனை யின்னே
கொல்லுகென வங்கணொரு குந்தமதெறிந்தான்.

(இ-ள்.) அவ்வாறு கூறிக்கொண்டு வருகின்ற அதிவீரனதிருமாப்பைப்பார்த்து விரைவாகவருதியென்று வீரவாகுதேவருமழைத்தனர் உடனே விரைந்தெதிரிந்சென்று போரில் எதிர்த்து இப்பொழுதே இவனைக்கொல்லுகவென்று ஒரு குந்தாயுதத்தை எடுத்தெறிந்தனன்.—எ-று. (உ௪)

உய்த்ததொரு கூரயிலு ரத்திலுறு முன்னர்
மத்தகய னேர்விடலை மற்றது தெரிந்தே
கைத்தல மிருந்திடு கனற்புரையும் வாளா
லத்துணை யிரண்டுதுணி யாய்விழ வெறிந்தான்.

(இ-ள்.) அதிவீரன்விட்ட கூரியகுந்தாயுதம் மார்பில் வந்துபடுதற்குமுன்னமே மதயானையையொத்த வீரவாகுதேவர் அதனைப்பார்த்து தமது கரத்திலுள்ள அக்கினியையொத்த வாளாயுதத்தினுல் அப்பொழுதே இரண்டுதுண்டாகவிழும்படி வெட்டினுர்.

கண்டமுற ஞாங்கரது கண்டுதிறன் மைந்தன்
றண்டம்விரைந் தொன்றொரு தடக்கைகொ டெடுத்தே
மண்டமர்செ யுன்னுயிரை வாங்குமிஃ தென்னு
வண்டர்புகழ் காளைதன தாகமுற விட்டான்.

(இ-ள்.) தனது பக்கத்திலே அக்குந்தாயுதம் துண்டாக விழுந்ததைப்பார்த்து அதிவீரன் பெரிய கையாலொரு தண்டத்தை விரைவாகவெடுத்து நெருங்கிய போரைச்செய்கின்ற உன்னுயிரை இதுவாங்கி விடுமென்றுகூறித் தேவர்கள் புகழுகின்ற வீரவாகுதேவரது மார்பிற்படும்படி விட்டான்.—எ-று. (உ௬)

வேறு.

விட்ட காலையத் தண்டினை வெலற்கருந் திறலோ
னட்டி டான்றனி வாளினு லேற்றன னகலம்
பட்டு மற்றது நுண்டுக ளாகவப் பதகன்
மட்டி லாததோர் விம்மித மெய்தினன் மறுகி.

(இ-ள்.) அதிவீரனத்தண்டத்தை, தன்மீதுபடும்படி எறிந்தபோது அதனைபிற ரால் வெல்லுதற்கரிய வீரராகிய வீரவாகுதேவர் தமதொப்பற்ற வாளினால் வெட்டாமல் மார்பைக்காட்டினர் உடனே அதுமார்பிற்பட்டுப் பலநுண்ணிய துகளாயின அதைக்க ண்டவதிவீரன் அஞ்சுதலுடன் ஆச்சரியத்தை யடைந்தான்.—எ-று. (௨எ)

வேறோர் முத்தலைப் படையது கொண்டதி வீரன்
மாறி லாவிறன் மொய்ம்பினன் றன்மணி மார்பி
னூறு செய்திற மோச்சலுங் கண்டுநம் முரவோன்
சீறி யாங்கது பற்றினன் செங்கையா லிறுத்தான்.

(இ-ள்.) அதிவீரன் பின்னும் வேறேயொரு மூன்றுதலையினையுடைய சூலத் தையெடுத்து கெடாத வெற்றியினையுடைய வீரவாகுதேவரது அழகியமார்பை ஊறுபடு த்தும்படி யெறிதலும் அதனை நமது வீரவாகுதேவர் பார்த்து கோபத்துடனச்சூலத்தை ப்பிடித்து கையாலொடித்தனர்.—எ-று. (௨அ)

இறுத்த காலையி லிலங்கையில் யாளிமா முகன்சேய்
செறுத்து மற்றிவன் றனையட லரிதெனச் சிந்தை
குறித்து மற்றொரு நாந்தக மேந்தினன் குறுகி
வெறித்த கொண்டலுட் கொட்புறு மின்னென விதிர்த்தான்.

(இ-ள்.) ஒடித்தவுடனே இலங்கையிலுள்ள யாளிமுகனது பிள்ளையாகிய அதி வீரன் இவனையெதிர்த்துக் கொல்லுதலரிதென்று நினைத்து வேறே ஒருவாள் ஏந்திக் கொண்டு எதிரில்வந்து விளங்குகின்ற மேகத்துட்சுழலுகின்ற மின்னலைப்போலவாளைச் சுழற்றினன்.—எ-று. (௨௯)

கறங்கி னிற்பெரு வட்டணை புரிந்துதன் கரமே
னிறங்கொள் வாளினை யிடம்வலந் திரித்தன னெறியே
பிறங்கு மார்கலித் தெண்டிரை யலைதரப் பெரிது
மறங்கொ ணுந்தக மீனுகண் டலமரும் வகைபோல்.

(இ-ள்.) விளங்குகின்ற கடலிலுள்ள அலைகளலையும் பொழுது பெரியகொடு மை பொருந்தியவாள்மீன்கள் பாய்ந்து புரண்டு சுழலுந்தன்மையைப்போல காற்றாடி யைப்போல் சுற்றிக்கொண்டு தனதுகையிலுள்ள ஒளிபொருந்திய வாளினைமுறைப்படி யே யிடமாகவும் வலமாகவும் சுழற்றினன்.—எ-று. (௩0)

ஏதி யிங்கிது நான்முகன் றந்துள தெவர்க்கும்
பேத கஞ்செய லரியதா லன்னது பிடித்தேன்
சாதி திண்ணநீ வருகென மிகைமொழி சாற்றிக்
கோதில் வீரன்மு னணுகலு மனையவன் கூறும்.

(இ-ள்.) இந்தவாள் பிரமதேவனால் எனக்கு அளிக்கப்பட்டது இதனையாரா லும் தடுத்தற்கு முடியாது அப்படிப்பட்டவாளினை நான் கையிற் பிடித்திருக்கின்றேன் ஆதலால் நீ சாவது நிச்சயம். என்னெதிரில் வருவாயாகவென்று வீரவசனங்களைக்கூறிக் கொண்டு குற்றமற்ற வீரவாகுதேவனெதிரிற்செல்லுதலும் உடனே அவர் இவனைப்பார்த் துச்சொல்லுகின்றார்.—எ-று. (௩க)

நன்று நன்றுநின் னாற்றலு மாண்மையு நம்மை
வென்றி யேயெனின் யாவரு மேலுனை வியப்பார்
நின்று நீசில மொழிவதென் கடிதுநே ருதியால்
வென்றி வீரருந் தமைப்புகழ் கிற்பரோ வென்றான்.

(இ-ள்.) நல்லது! நல்லது!! நினது வலிமையும் ஆண்மையும்; நீ நம்மை வெல்லுவாயானுல் பின்னர் உன்னை யெல்லாரும் புகழ்வார்கள். நீ தூரத்தில் நின்றுகொண்டு சில வீரவசனங்களைப் பேசுவதேன்? விரைந்துவந் தெதிர்ப்பாயாக; வெற்றிபொருந்திய வீரர்களும் தற்புகழ்ச்சி செய்வார்களோ? என்று வீரவாகுதேவர் கூறினார்.—எ-று.

என்ன வொன்னலன் கிடைத்தனன் வீரனு மெதிர்ந்தா
னன்ன பான்மையர் வாளம ராடின ரகல்வான்
மின்னு மாமுகி ரேன்றியே யெதிரெதிர் விரிந்து
பின்ன ருள்புகுந் துடனுடன் செறிந்தபெற் றிமைபோல்.

(இ-ள்.) இவ்வாறு கூறுதலும் அதிவீரன் கிட்டநெருங்கிவந்தான் வீரவாகுதேவரும் எதிர்த்தனர். மின்னல் பெரியமேகங்களில் ஒன்றுடனொன்று எதிரிலே மின்னிப் பின்னர் அவற்றுள் மறைந்தொடுங்குந் தன்மையைப்போல அவ்விருவர்களும் வாட்போர்புரிந்தார்கள்.—எ-று. (சுரு)

சென்னி நாடுவர் களத்தினை நாடுவர் செவிதாள்
கன்ன நாடுவர் புயங்களை நாடுவர் கரங்க
ளுன்னி நாடுவ ருரத்தினை நாடுவ ருகளப்
பொன்னின் வார்கழ னாடுவர் வாளமர் புரிவார்.

(இ-ள்.) வாட்போர்புரியுமவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் தலையை நாடுவார்கள்; கழுத்தை நாடுவார்கள்; காதினையும் காலினையும் கன்னத்தையும் நாடுவார்கள்; புயங்களை நாடுவார்கள்; கரங்களைக்குறித்து நாடுவார்கள்; மார்பினை நாடுவார்கள்; பொன்னாற்செய்த இரட்டை வீரவெண்டயங்களை நாடுவார்கள்.—எ-று. (சுச)

இணங்கு நீரவ ரிருவரு மினையன வுறுப்பி
லணங்கு செய்திடு மரபினு லாயிடை யுய்ப்பார்
நுணங்கு விஞ்சையின் வன்மையா னெய்தின்மாற் றிடுவார்
மணங்கொள் செந்நிற வாள்கொடே வட்டணை வருவார்.

(இ-ள்.) சமானமான அவ்விருவர்களும் இவ்வண்ணமாக அவயவங்களில் நோவுண்டாகும் வண்ணம் முறைப்படி அவ்வவ்விடங்களுக்கு வாளைக்கொண்டு செல்வார்கள். நுட்பமான தங்கள் வித்யாசாமர்த்தியத்தால் அவைகளை விரைவாகத்தடுப்பார்கள். புலவுநாறுகின்ற செந்நிறம்பொருந்தியவாளைக் கையிற்பிடித்தபடியே வட்டமாகச் சு ன்று வருவார்கள்.—எ-று. (சுரு)

போத மின்னதி லெம்பிரான் றூதுவன் பொருவா
னேதி கொண்டுளான் றன்னையான் வலிந்திட லியல்போ
வாத லாலிவன் படைமுறை வெல்வதே யறனென்
றேதி சேருளங் கொண்டன னிடைதெரிந் துற்றான்.

(இ-ள்.) இவ்வாறு யுத்தம் செய்கின்ற சமயத்தில் வீரவாகுதேவர் போர்செய் ற்குவாளுடன்வந்த இவனை வாட்போர் முறைதவறி நாம்கொல்லுதல் முறைமையல்ல ஆதலால் இவனுடைய யுத்தமுறைப்படி வெல்லுவதே தருமமென்று ஞானம்பொருந்திய வுளத்திற்றுணிந்து சமயம்பார்த்து அருகிற்சென்றனர்.—எ-று. (சுசு)

இடைபு குந்ததி வீரன் றடிகளோ ரிரண்டு
முடியு மாகமுந் தோள்களு மாங்கொரு முறையே
சுடர்பி றங்கிய வாளினு லாண்டகை துணித்துக்
கடிது வீட்டினன் றுவன்வந் தவனுயிர் கவர்ந்தான்.

(இ-ள்.) சமயம்பார்த்துச்சென்று வீரவாகுதேவர் அதிவீரனது இரண்டு கால்களையும் தலையையும் மார்பையும் தோள்களையும் ஒளிவிளங்குகின்ற வாளினால் ஒருதரமாகவே விரைந்துவெட்டிக்கொன்றனர். உடனே எமன்வந்து அவனதுயிரைக் கவர்ந்துகொண்டுபோயினான்.—எ-று. (௩௭)

அதிவீரன்வதைப்படலம்முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௧௰௪.

# மகேந்திரஞ்செல்படலம்.

வீர வாகுநின் றவ்வதி வீரனை வீட்டித்
தாரை வாளுறை செலுத்தியே வெஞ்சமர் தணித்து
நேரில் வீரமா மகேந்திரம் போவது நினைந்தே
யேரு லாவரு மிலங்கையி னெல்லைநீத் தெழுந்தான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் அவ்வதி வீரனைக்கொன்றபின்னர் வாளினை உறைக்குள் இட்டுக்கொண்டு கொடிய போர்செய்வதை யொழித்து ஒப்பற்ற வீரமகேந்திராபுரிக்குள் போகவேண்டியதைக் குறித்து அழகுபொருந்திய இலங்காபுரியினின்றும் மேலே கிளம்பினவராகச்செல்லத் தொடங்கினார்.—எ-று. (௧)

எழுந்து வான்வழிச் சேறலு மார்கலி யிடையே
விழுந்து கீழுறு மிலங்கைமீண் டெழுந்தது விரைவிற்
கழிந்ததொல்பர நீங்கிய காலையிற் கடலூ
டழுந்து கின்றபொற் றோணிமீச் சென்றிடு மதுபோல்.

(இ-ள்.) தன்னுள் இருந்தசுமை நீங்கியவுடனே விரைவில் மேலெழும்புகின்ற ஒளிபொருந்திய பொன்மயமான தோணியினது செய்கையைப்போல வீரவாகுதேவர் ஆகாயத்தின்மீது செல்லுதலும் இவர்சென்று நின்றமையா லுண்டான சுமையைத் தாங்கமுடியாமல் உள்ளேயழுந்தின இலங்கையானது பின்னும்பழையபடியே மேலே வந்து நின்றது.—எ-று. (உ)

வார்த்த யங்கிய கழலவன் வான்வழிக் கொளலு
மீர்த்த தெண்கட னீத்தமே லெழுதரு மிலங்கை
சீர்த்த நான்முக னுறங்குழிச் சிந்துவூ டழுந்திப்
பேர்த்து ஞாலம்விட் டெழுதரு மேருவிற் பிறழும்.

(இ-ள்.) வாரொடு விளங்கிய வீரகண்டாமணி தரித்துள்ள காலினையுடைய வீரவாகுதேவர் ஆகாயவழியாகச்செல்லுதலும் குளிர்ந்த தெள்ளியகடலின்மீது பழையபடியே எழுந்துநின்ற இலங்கையானது சிறப்புப்பொருந்திய பிரமதேவன் நித்திரைசெய்கிற இரவாகிய ஊழிக்காலத்திற்றோன்றிய கடலினுள்ளே அழுந்தியமேருமலையானது அந்தப்பிரளயநீக்கத்தில் மறுபடியும் உலகத்தி லொளியொடு (நீர்வற்றுதலால்) விளங்குகின்ற தன்மையை ஒக்கும்.—எ-று. (௩)

எள்ளு நீரரைப் பற்பக லாற்றலி னிலங்கை
கொள்ளை வெம்பவ மாசிரு ளடைந்தது குறைதீர்
வள்ள லுள்படு நீத்தது பவந்துகண் மாற்றத்
தெள்ளு நீர்க்கடல் படிந்தெழுந் தாலெனத் திகழும்.

(இ-ள்.) இகழுந்தன்மைக்குரிய தூர்க்குணங்களையுடைய அசுரர்களை அநேககாலமாகச்சுமந்து நிற்றலால் இலங்கையானது கூட்டமான கொடியபாவத்தையும் அழுக்கினையும் அடைந்து அடியார்களது குறைகளை நீக்குகின்ற வள்ளலாராகிய வீரவாகுதேவரது பாதங்கள் தன்றலைமீதுபட்டமையால் பாவத்தை ஒழித்துக்கொண்டது ஆதலால் எஞ்சிநின்ற அழுக்கினையும் மாற்றவேண்டுமென்று நினைத்து கடலுள்மூழ்கி எழுவதைப்போல எழுந்தது.—எ-று. (ச)

கந்த ரந்தவழ் தெண்புனற் கருங்கட னடுவட்
சுந்த ரஞ்செறி பொன்சுட ரிலங்கைதோன் றியது
முந்து காலையி லெம்பிரா னருள்வழி முராரி
யுந்தி நின்றெழு பிரமன்மு தண்டமொத் துளதால்.

(இ-ள்.) மேகங்கள் நீருண்ணும்பொருட்டுத் தவழுகின்ற, தெள்ளிய நீரினையுடைய கரியகடலினது நடுவில் அழகுநெருங்கிய பொன்னொளிவிடுகின்ற இலங்கையானது தோன்றிய தன்மையானது முற்காலத்தில் எம்பெருமானாகிய சிவபெருமானது திருவருளால் திருமாலினது உந்தித்தாமரையினின்றும் பிறந்த பிரமன் (முதலில்) படைத்த பெரிய அண்டத்தை ஒத்துளது.—எ-று.

முன்னொருகற்பத்தில் உலகமெல்லாமழிந்து நீர்மயமானது அப்போது சிவபெருமான் திருமாலைப்புணர்ந்தனர் அவரது புணர்ச்சியால் திருமாலின் உந்திக்கமலத்தின் வழியாய்ப் பிரமன்தோன்றினான் அவன் நீரின்மீது அண்டவடிவமான பூமியைப்படைத்தான் அவ்வண்டம் நீரின்நடுவிற் பொன்வண்ணமாகக் காணப்பட்டது என்று இலிங்கபுராணம் கூறும். (ரு)

இன்ன தாகிய விலங்கைமா புரத்தைநீத் தெழுந்து
பின்னு மாயிரம் யோசனை வானிடைப் பெயர்ந்து
பொன்னு லாவுறு வாகையம் புயத்தவன் புலவோ
ரொன்ன லானுறை மகேந்திர வரைப்பின்முன் னுற்றான்.

(இ-ள்.) வீரலட்சுமிகுடிகொண்டிருக்கிற தோளினையுடைய வீரவாகுதேவர் இவ்வண்ணமான இலங்காநகரத்தைவிட்டு மேலே ஆயிரம்யோசனை ஆகாயத்திற் சென்று தேவர்களது பகைவனாகிய சூரபன்மனிருக்கின்ற மகேந்திர புரிக்குநேரே போயினர்.—எ-று. (சு)

நெற்றி நாட்டத்து நந்திதன் கணத்தவ னேமிப்
பொற்றை யாமெனச் சூழ்ந்துயர் மகேந்திரப் புரிசைச்
சுற்று ஞாயிலும் வாயில்க டொறுந்தொறுந் தோன்றுங்
கற்றை மாமணிச் சிகரியு நுனித்துமுன் கண்டான்.

(இ-ள்.) நெற்றிக் கண்ணையுடைய நந்திகணத்தவராகிய வீரவாகு தேவர் சக்கரவாளகிரியைப் போல உள்ள மதிலாற் சூழப்பட்ட மகேந்திரபுரியையும் அப்புரியின் மதிலுறுப்புக்களையும் வாசல்கள்தோறும் காணப்படுகிற கூட்டமான மணிகளிழைத்த கோபுரங்களையும் உற்றுப்பார்த் துணர்ந்தனர்.—எ-று. (எ)

சேரலாரமர் மகேந்திர நகர்வட திசையில்
வாரி வாய்தலுட் கோபுரத் தெற்றியின் மாடே
கோர னேயதி கோரனே யெனப்படுங் கொடிய
வீரர் தானையோ டிருந்தனர் காவல்கொள் வினையால்.

(இ-ள்.) பகைவர்களிருக்கின்ற மகேந்திரபுரியின் வடக்கின்கண்ணுள்ள கதவோடுகூடிய வாசலுக்குள்ளே கோபுரத்தின் திண்ணையின் பக்கத்தில் கோரன் அதிகோ

ரன் என்றுசொல்லப்படுகிற கொடியசேனை வீரர்கள் காவலின்பொருட்டாகச் சேனைகளோடு உடனிருந்தார்கள்.—எ-று. (௮)

கரிகளாயிரம் வெள்ளமே தேருமக் கணிதம்
பரிகளாங்கதற் கிருதொகையத்தொகை பதாதி
யுரிய வப்பெருந் தானையம்பெருங்கட லுலவா
விரவி மேவர விருந்தனர் காத்திடும் வீரர்.

(இ-ள்.) அச்சேனைத்தலைவர்கள் அவ்விடத்தில் ஆயிரம்வெள்ளம் யானைகளும் ஆயிரம்வெள்ளம் தேர்களும் இரண்டாயிரம் வெள்ளம் குதிரைகளும் இரண்டாயிரம் வெள்ளம் காலாட்களும் ஆகிய ஆறாயிரம் வெள்ளம் சேனைகளாகிய பெரியசமுத்திரத்துடன் நீங்காமற் பொருந்திக் காத்துக்கொண்டிருந்தார்கள்.—எ-று. (௯)

பகுதி கொண்டிடு தானையஞ் சூழலாம் பரவைத்
தொகுதி கண்டனன் விம்மிதங் கொண்டனன் றன்னார்
மிகுதி கொண்டுறை காவலுங் கண்டனன் விபுனூர்
புகுதி கொண்டிடு முணர்விறு னினையன புகல்வான்.

(இ-ள்.) சதுரங்கமாகப்பகுக்கப்பட்ட சேனைகளின் கூட்டமாகியகடலை வீரவாகுதேவர் பார்த்து ஆச்சரியங்கொண்டு பகைவர்கள் மிகுதியாகவிருத்தலையும் காக்குந்தன்மையையும் அப்படிப்பட்டபெரியவூருக்குள் போகவேண்டும் எண்ணமுங்கொண்டு இவ்வாறனைவைகளைக்கூறுவாராயினர்—எ-று. (௧௦)

ஈண்டு செல்லினித் தானைசூழ்ந் தமர்செயும் யானு
மூண்டு நேரினு முடிப்பவோர் பகலெலா முடியு
மாண்ட தென்னினு முலவுமோ மாநகரிடத்து
மீண்டும் வந்திடுங் கரிபரி பதாதிதேர்வெள்ளம்.

(இ-ள்.) யானிவ்வழியே போவேனாகில் இங்குள்ள இச்சேனைகளெதிர்த்துப் போர் செய்யாநிற்கும் அவர்களுடனேயானு மெதிர்த்துப் போர்புரிந்து கொல்லுதற்கு ஒரு நாளெல்லாம்பிடிக்கும் அப்படியே இன்றே இவர்களையெல்லாம் கொன்றாலும் இத்துடன்முடியுமோ அப்பெரிய நகரினிடத்தினின்றும் தேரும் குதிரையும் யானையும் காலாளுமாகிய சேனைகள் வெள்ளமாகவரும்.—எ-று. (௧௧)

வந்த வந்ததோர் தானவப் படையொடே மலைவுற்
றெந்தை கந்தவே ளருளினால் யானொரு வேனுஞ்
சிந்தி நிற்பனே லிந்நகர்த் தானைகள் சிதைய
வந்த மில்பகல் சென்றிடு மளியரோ வவுணர்.

(இ-ள்.) அவ்வாறு வந்துகொண்டேயிருக்கிற அசுரசேனைகளுடனே போர்புரிந்து எந்தையாகிய கந்தவேளினது திருவருளினால் யானொருவனாகவே கொன்றுகொண்டு நின்றால் இந்நகரத்திலுள்ள சேனைகளழிய அநேககாலஞ்செல்லும் இதனிலுள்ள அசுரர்கள் இலேசானவர்களோ.—எ-று. (௧௨)

எல்லை யில்பகல் செல்லினுஞ் செல்லுக வினைய
மல்லன் மாநக ரவுணர்மாப் பெருங்கடல் வறப்ப
வொல்லு நீர்மையால் யானடல் செய்வனே லூருத்துத்
தொல்லை மைந்தனைத் துணைவரை யுய்க்குவன் சூரன்.

(இ-ள்.) அவ்வாறனேக காலஞ்சென்றாலுஞ்செல்லட்டும் இந்த வளப்பம் பொருந்திய பெரிய ஊரிலுள்ள சேனைகளெல்லாம் கெடும்படியான் கொல்லுவேனானால் சூரபன்மன் கோபத்துடன் தனது தம்பிமார்களையும் பழயபிள்ளைகளையுமனுப்புவான்.()

உய்த்த மைந்தர்கள் சூழ்ச்சியின் றுணைவர்க ளொழிந்தோ
ரத்தி றத்துளோர் யாரையும் வெலற்கரி தயில்வேற்
கைத்த லத்தவன் வலிகொடே பற்பகல் காறு
மித்த லச்சமராற்றியே முடிக்குவ னெனினும்.

(இ-ள்.) அவனாலனுப்பப்படுகிற பிள்ளைகள் தந்திரத் துணைவர்கள் மற்றுள்ளவர்கள் ஆகிய அத்தன்மையோர்கள் யாரையும் வெல்வதென்றால் கஷ்டம்; கூரிய வேற்படையையுடைய குமரக்கடவுளின் திருவருள்வலிமையால் அநேககாலம் இவ்விடத்தில் நின்றுபோர்புரிந்து இவர்களை எல்லாங் கொல்லுவேன் அவ்வாறுகொன்றாலும்.—எ-று.

ஏவ ரும்வெலற் கரியசூர் பின்னர்வந் தெதிர்க்கு
மோவில் வெஞ்சமர் பற்பக லாற்றியா னுறினும்
வீவ தில்லையா லங்கவன் மேலைநாட் டவத்தாற்
றேவதேவன்முன் னருளிய வரங்களின் சீரால்.

(இ-ள்.) யாவராலும் வெல்லுதற்குமுடியாத சூரபன்மன் பின்னர்வந்து எதிர்ப்பான் அவ்வாறெதிர்த்த அவனுக்கு முற்காலத்திற் சிவபெருமானவன் தவத்துக்கிரங்கி அளித்துள்ளவரத்தின் சிறப்பினால் நானனேககாலம் அவனோடுநின்று போர்புரிந்தாலும் அவனிறக்கப் போகிறதில்லை.—எ-று. (கரு)

அன்ன வன்றனை மாலயன் றனக்கும்வெல் லரிதா
லின்னு மாங்கவ னுணைக்கும் வெருவியே யிருந்தார்
பின்னை யாரவன் றன்னைவென் றிடுவர்கள் பெருநாட்
டுன்னி யான்சம ராற்றினுந் தொலைகிலன் சிறிதும்

(இ-ள்.) அவ்வாறான சூரனை திருமால் பிரமன்முதலியவர்களும் வெல்லுதற்கு முடியாது அவர்களிப்பொழுதுகூட அவனுக்கினைக்குப்பயந்து இருக்கின்றார்கள் வேறே யாரவனை வெல்லப்போகிறவர்கள் அநேககாலம் எதிர்த்து நெருங்கிநின்று யான்போர்புரிந்தாலும் அவன்சற்று மவசயமடையான்.—எ-று. (கசு)

தொலைந்து போகிலன் சூரம ரியற்றிடிற் றுன்னிக்
கலந்த யான்விற லின்றிமீண் டேகுதல் கடனோ
மலைந்து நிற்கவே வேண்டுமோ லாயினும் வறிது
மலைந்த லைப்படுஞ் சுரர்சிறை யகன்றிட வற்றோ.

(இ-ற.) யான்செய்யும்போரினால் சூரபன்மனிறவான் அவனோடுநெருங்கிப் போருக்குநின்ற யான்மாத்திரம் அவசெயமாகத் திரும்பிப்போகுதல் முறைமையோ போர்புரிந்துகொண்டே நிற்கவேண்டும் ஆனாலும் வீணாக கஷ்டப்படுகின்றதேவர்களது சிறையொழியுமோ ஒழியா—.எ-று. (கஎ)

மற்றிந் நீர்மையிற் பற்பகலவனொடு மலைந்து
வெற்றி கொண்டிலனின்னுமென் றமரினை விட்டி
யொற்றி னீர்மையை யுணர்த்துத லொல்லுமோ வுலவா
தெற்றை வைகலு மமர்செய வேண்டுமா லெனக்கே.

(இ-ள்.) இவ்வண்ணம் பலகாலமவனோடு போர்புரியப்புகுந்த யான் பின்னர் வெற்றிகிடைக்கவில்லையென்று போர்த்தொழிலைவிட்டு யான் தூதன் என்று வந்தகாரியங்களை அவனிடத்திற் கூறுதல் பொருந்துமோ பொருந்தா ஆதலாலெப்பொழுதும் போரையே இவனுடன் செய்து கொண்டு நிற்கவேண்டும்.—எ-று. (கஅ)

போத நாயகன் பரம்பொரு ளாயகன் பொருவில்
வேத நாயகன் சிவனரு ளாயகன் விண்ணோர்க்

காதி நாயக னறுமுக நாயக னமலச்
சோதி நாயக னன்றியார் சூரனைத் தொலைப்பார்.

(இ-ள்.) ஞானநாயகனும் பரவஸ்து வாகிய நாயகனும் ஒப்பற்றவேதநாயகனும் சிவபெருமானளித்த கர்த்தாவும் தேவர்களுக்கு முதற்கடவுளும் சண்முகநாயகனும் நிருமலசோதிநாயகனுமாகிய (சுப்ரமண்யப்பெருமானாகிய) கடவுளன்றி சூரபன்மனை வேறே யார் கொல்லத்தக்கவர்கள்.—எ-று. (௧௯)

இம்பர் சூரொடு பொருதுநின் றிடுவனே யென்னி
னம்பி ரானறு மாமுகன் பின்னரே நண்ணி
வெம்பு சூரனை வேலினாற் றடிந்துவெஞ் சிறையி
லும்பர் யாரையு மீட்டிட வேண்டுமே லொருநாள்.

(இ-ள்.) இவ்வுலகத்திற் சூரபன்மாவோடு யான்போர்புரிந்துகொண்டு நின்றால் பின்னொரு காலத்தில் நமதுகடவுளாகிய ஆறுமுகப்பெருமான் எழுந்தருளிவந்துகொடிய சூரனை வேலாயுதத்தாற் கொன்று கடோரமான சிறையிற் கிடக்கின்ற தேவர்களையெல்லாம் விடுவிக்கவேண்டும்.—எ-று. (௨௦)

ஆத லாலம ராற்றுதன் முறையதோ வஃதான்
றீது நம்பெரு மான்றன தருளுமன் றினைய
தூதர் செய்கட னன்கொலோ வமர்பெறுத் தொடர்பாற்
போத லேகட னென்றனன் பொருவில்சீ ரறிஞன்.

(இ-ள்.) ஆகையால் சண்டைசெய்வது முறையோ அதுவல்லாமலும் இவ்வாறு செய்திடுவதற்கு நம்பெருமானாகிய கந்தப்பெருமானது திருவருட்கட்டளையுமின்று இதுவன்றியும் இவ்வாறெல்லாஞ்செய்தல் தூதுவந்தவர்களுக்கு முறையாகவும் இல்லை ஆதலால் (எப்படியாவது)சண்டையில்லாத வண்ணமாக நாம் உள்ளே போதலே முறைமையென்று கூறினர் ஒப்பற்ற சிறந்தஞானியாகிய வீரவாகுதேவர்.—எ-று. (௨௧)

வேறு.

இப்பால் வாய்தலி னெல்லை நீங்கிய
துப்பார் தானைக டுற்று நின்றவா
லப்பா லெய்தரி தாம ருங்குபோய்
வைப்பார் கீழ்த்திசை வாயி னண்ணுவேன்.

(இ-ள்.) இவ்விடத்திலுள்ள இந்தவாய்தலில் அளவற்ற வலிமை மிக்கசேனைகள் நெருங்கி நின்றன ஆதலால் அப்புறம் போதற்குமுடியாதுஇதின்பக்கமாகவேசென்று பெருமைபொருந்திய கிழக்குவாய்தலை யடைவேன்.—எ-று. (௨௨)

என்னா வுன்னி யியன்ற வுத்தரப்
பொன்னார் வேலி புகாது பாங்கர்போய்க்
கொன்னார் கின்ற குணக்கு வாய்தலின்
முன்னா வேகினன் மொய்ம்பின் வீரனே.

(இ-ள்.) என்று நினைத்துப் பொன்மயமான வடக்கு வாசலின் வழிபோகாமல் அதின் ஓரமாகவே சென்று வலிமைபொருந்திய கீழ்த்திசை வாய்தலின் முன்னே வீரவாகுதேவர் சென்றனர்.—எ-று. (௨௩)

மேதிக் கண்ணவன் வீர பானுவென்
றோதிக் கத்தவு ணர்க்கு நாயக
ரேதிக் கையரி ரண்டு வீரரு
மாதிக் கன்னதன் வாயில் போற்றினர்.

(இ-ள்.) அந்தக்கீழ்த்திசையிலுள்ள கோபுரவாசலில்மகிஷாக்ஷனும் வீரபாநுவும் என்று சொல்லப்படுகிற முதன்மையாகிய அசுரத்தலைவர்கள் வாளாயுதந்தாங்கியகைகளுடன் இருந்துகொண்டந்தத்திசையைக் காத்தார்கள்.—எ-று. (௨௪)

திருவுந் தும்பட திக்கு வாய்தலின்
விரவுந் தானையின் வெள்ள மெய்த்தொகை
பரவுஞ் சூரர் பயிற்று பல்பவத்
துருவஞ் சூழ்ந்தென வொத்து நின்றவே.

(இ-ள்.) சிறந்த செல்வகரமான வடக்குவாய்தலைப்போலவே பொருந்திய சேனைவெள்ளங்களாகிய வீரர்கள் செய்யப்பட்ட பல பாவங்களுருக்கொண்டு நின்றாற்போல நின்றார்கள்.—எ-று. (௨௫)

வண்டார் செற்றிய வாகை மொய்ம்பினன்
கண்டா னன்னக டிக்கொள் காவலுந்
தண்டா துற்றிடு தானை நீத்தமு
மண்டா வற்புத நீர னாயினன்.

(இ-ள்.) வளப்பம்பொருந்திய மாலையணிந்த தோள்களையுடைய வீரவாகுதேவர் அவ்விடத்தி லவ்வண்ணமாகப்பொருந்திய கூர்மையான காவலையும் கெடாமலிருக்கின்ற சேனைவெள்ளத்தையும் பார்த்து அடங்காத ஆச்சரியத் தன்மையுடையவராயினார்.—எ-று. (௨௬)

ஆண்டங் குற்றவ ளப்பில் சேனையைக்
காண்டும் மிவ்வழி காவல் போற்றியே
சேண்டுன் றும்புவி செற்று மாதலா
லீண்டுஞ் செல்லரி தென்று முன்னினன்.

(இ-ள்.) அவ்விடத்திலுள்ள வவ்வாய்தலிலிருந்தசேனைகளைப்பார்த்தோம் இவ்விடத்திலும் சேனைகள் பூமியிலும் அந்தரத்திலும் நிறைந்து நிற்பதா லிவ்வழியாகவும் போதல் கூடாதுஎன்று நினைத்தனர் வீரவாகுதேவர்.—எ-று. (௨௭)

நின்றிப் பாற்பட னீர்மை யன்றரோ
தென்றிக் கின்வழி சென்று நாடுவ
னென்றுட் கொண்டவ ணீங்கி யேகினன்
குன்றிற் றிரண்மிடல் கொண்ட தோளினன்.

(இ-ள்.) மலையினைக்காட்டிலும் வலிமையானதோள்களையுடைய வீரவாகுதேவர் இங்குநின்றிவ்வழியாகப்போதற்கு முறையில்லை ஆதலாலினித்தெற்குத்திக்கிலுள்ள வழியைச்சென்று பார்ப்பேனென்று தன்னுளத்தில் நினைத்துக்கொண்டு அவ்விடம்விட்டு விலகிச்சென்றனர்.—எ-று. (௨௮)

மகேந்திரஞ்சேல்படலம் முற்றிற்று.
ஆக திருவிருத்தம் - ௧௮௨.

# கயமுகன்வதைப்படலம்.

ஏகா நிற்புழி யேந்தல் கீழ்த்திசை
மாகா வற்கொண் மதங்க மாமுகன்
மீகா னப்ப வியன்க லத்தினுக்
காகா யத்தி னமர்ந்து போற்றுவான்.

(இ-ள்.) வீரவாகுதேவ ரவ்வண்ணம் போகும்போழ்து அந்த நகரத்தின் கிழக்குத்திக்கைக் காப்பவனும் யானைமுகமுடையவனும் கப்பலுக்கு மீகாமனைப்போல்பவனும் ஆகாயத்திலிருந்தவ் வூரைக்காப்பவனும்.—எ-று. (க)

இதுமுதல் ஐந்துபாடல்கள் குளகம்.

நூற்றுப் பத்து நுவன்ற தோன்முகன்
மூற்றைக் கையினன் மொய்ம்பி ராயிரன்
சீற்றத் துப்புறு தீய சிந்தையான்
கூற்றத் துக்கொரு கூற்ற மேயனான்.

(இ-ள்.) சொல்லப்பட்ட ஆயிரம்யானைத் தலைகளாகிய தலைகளையுடையவனும் மூவாயிரம் கைகளையுடையவனும் இரண்டாயிரம் தோள்களையுடையவனும் மிக்க கோபம்பொருந்திய கொடிய மனத்தினையுடையவனும் யமனுக்கொரு யமனைப்போல்பவனும்.—எ-று. (உ)

பொன்னு றேம புரத்து வைகனு
மன்னாய் வாழ்பவன் மாறு கொண்டுதன்
முன்னு வெய்தி முனிந்து போர்செய
வொன்னு ரின்றி யுளங்கு றைந்துளான்.

(இ-ள்.) பொன்மயமான எமபுரத்திலே எப்பொழுதும் அரசனாகவிருப்பவனும் பகைத்துத் தன்முன்னில்வந்து போர்புரியத்தக்க பகைவரின்மையால் உளக்குறைந்து நிற்பவனும்.—எ-று.

உளக்குறைதலாவது பகைவரின்மையாலதனைப்பாராட்டிப்பழகாமல் அலக்ஷியமாகவிருத்தல். (ங)

கருமே கங்கள் கறித்து வாரியுண்
டுருமே றேடு முரற்ற வோச்சுவான்
பெருமே தக்க பவஞ்செய் பெற்றியான்
செருமேல் கொண்டிடு சிந்தை பெற்றுளான்.

(இ-ள்.) கரியமேகங்களை வாரிவாய்விட்டுக் கடித்து நீரையெல்லாங் குடித்து ஆணிடியுடனம்மேகங்கள் கூச்சலிட்டோட ஓட்டுபவனும் பாவங்களில் உயர்ந்தனவற்றையெல்லாம் செய்யுந்தன்மையுடையவனும் எப்பொழுதும் சண்டையிற்பொருந்திய மனதுடையவனும்.—எ-று. (ச)

மஞ்சார் வேழம் வனத்தில் வல்லுளி
யெஞ்சா வெவ்வரி யாளி வல்லிய
மஞ்சா ராயிர மங்கை கொண்டுணைச்
செஞ்சோ ரிப்புனல் சிந்தும் வாயினான்.

(இ-ள்.) மேகம்போன்ற கருநிறம்பொருந்திய யானைகளையுங்காட்டிலுள்ள கரடிகளையும் கெடாத கொடியசிங்கங்களையும் யாளிகளையும் பெரும்புலிகளையும் ஐயாயிரந்தொகையாகக்கொண்டு அகங்கைகளால்வாரியுண்டு அதனுதிரத்தைச்சிந்துகின்ற வாயினையுடையவனும்.—எ-று. (ரு)

காசைப் போது கடுத்த மெய்யர்தென்
னைசைக் காலரொ ராயிரத் தர்தம்
பாசத் தோடு பயின்று சேர்ந்தன
வீசித் தூங்கும் வியன்று திக்கையான்.

(இ-ள்.) காசாம்பூவினையொத்த நிறத்தினையுடைய தென்றிக்கிலுள்ள ஆயிரங் காலர்கள் தங்கள் பாசக்கயிறுகளுடன் வந்து பொருந்தியிருந்தாற்போல அசைந்துதொங்குகின்ற பெரியவாயிரந் துதிக்கைகளையுடையவனும் ஆகிய கயமுகன்.—எ-று. (௬)

வாணா ளஃகினன் மாயு மெல்லையா
னோணா வெத்திசை யேகும் வீரனைக்
காணா நின்று கனன்று சாலவுஞ்
சேணா னின்னன செப்பி யேகுவான்.

(இ-ள்.) ஆயுள் முடிந்து சாகுங்காலஞ் சமீபித்தவனாகையால் இறுமாப்புடன் அவ்வழியேசெல்லுகின்ற வீரவாகு தேவரைக்கண்டு மிகவுங்கோபித்து ஆகாயத்திலிருந்தவக்கயமுகன் இவ்வாறு சொல்லிக்கொண்டு செல்லுகின்றான்.—எ-று. (௭)

மிக்கார் காவல் விலங்கி நீயிவட்
புக்காய் மாயை புகன்றுளாய் கொலோ
வக்கா றுனுமெம் மாணை நீங்கியே
யெக்கா லத்தினு மேக வல்லதோ.

(இ-ள்.) மிகுதியாகப்பொருந்திய காவலையெல்லாங் கடந்திங்குவந்தாய்; மாயைவித்தை பழகியிருக்கின்றனையோ! அந்தக்காற்றுங்கூட வெமது கட்டளையைக்கடந்து எக்காலத்திலும் செல்லும் வல்லமையுடையதோ?—எ-று. (௮)

வறியா ராகி மயங்கும் வானவச்
சிறியார் வைகிய சீரி லூரெனக்
குறியா வந்தனை கோதி லிந்நக
ரறியா யோநம தாணை யாற்றலே.

(இ-ள்.) தரித்திரர்களாக உழலுகின்ற சிறிய தேவர்களிருக்கின்ற சிறப்பற்ற ஊரைப்போல வெண்ணிவந்தாய் குற்றமற்ற விந்நகரத்தில் நமதாணைசெல்லுவதை நீயுணராயோ?—எ-று. (௯)

மூண்டே குற்றனென் மொய்சி னத்தினென்
மாண்டே போயினை வல்லை நீயினி
மீண்டே போந்திற மில்லை மேலுனக்
கீண்டே மாயவி ழைத்த வெல்லையே.

(இ-ள்.) மிக்க கோபத்துடன் வந்திருக்கிறேன் ஆதலால் நீ யிப்பொழுதே இறந்துபோவாய் இனி நீ திரும்பிப்போகும் திறமில்லை. நீசெய்த பூர்வகர்மம் உன்னை யிவ்விடத்திலேயே சாகவேண்டியவனாக்கியது.—எ-று. (௧௦)

சூராள் கின்றதொர் தொல்லை மாநகர்
சேரா நின்றனை சீறு கேசரி
போரா வெல்லையோர் பீடின் மான்பிணை
யாராய் தற்குவ ருங்கொ லாற்றலால்.

(இ-ள்.) சூரபன்மனாளுகின்ற பழைய பெரியநகரத்தையடைந்தனை. கோபம் பொருந்திய சிங்கம் விலகாமலிருக்கின்ற இடத்தில் பெருமையற்றவொரு பெண்மான் தனது சாமர்த்தியத்தால் ஆராய்தற்குவருமா?—எ-று. (௧௧)

தொடுநே மிக்கட லுண்டெனத் தடந்
திடைசேர் கின்றவி லங்கை நீங்கியே
கடிதே யிந்நகர் காண வுன்னியே
யடைவாய் தேவர்க ணத்து ளாரைநீ.

(இ-ள்.) தோண்டப்பட்ட வட்டமானகடலை விரைவாகத்தாண்டி இடையிலுள்ள விலங்காபுரத்தையுங்கடந்து விரைவாக விந்தநகரத்தைக் காணும்பொருட்டு நினைத்து வருகின்றவனே! நீ தேவர்கூட்டத்துளியாவன்?—எ-று. (௧௨)

திருத்தங் கண்ணக றேவர் தம்முளும்
விருத்தன் போலு மிகத்து ணிந்துநீ
யொருத்தன் போந்தனை யொன்றொர் வாளொடே
வரத்தென் னிவ்விடை மாயை கற்றுளாய்.

(இ-ள்.) மாயைவித்தைகள் கற்றவனே! மிக்க சிறப்பினையுடைய தேவர்கூட்டத்துளும் நீ புதியவனாக இருக்கின்றாய் மிக்க துணிவுடன் ஒருத்தனாக ஒருவாளையாத் திரங்கொண்டு வந்துள்ளாய். இவ்விடத்திற்கு நீவந்தகாரியமென்னை?—எ-று. (௧௩)

ஆலா லத்தை யயின்ற நம்பனோ
மாலா னோவன சத்தி லண்ணலோ
பாலார் தந்தி படைத்த கள்வனோ
மேலா ரிங்குனை விட்ட தன்மையார்.

(இ-ள்.) விஷபானஞ்செய்த சிவனோ? நாராயணனோ? கமலாசனனாகிய பிரமனோ? வெண்ணிறம்பொருந்திய ஐராவதம் என்னும் யானையினையுடைய கருநிறம்பொருந்திய விந்திரனோ? பின்னை யாருன்னை யிங்கனுப்பினவர்கள்?—எ-று. (௧௪)

சுற்று நின்றனை சூழ விந்நக
ரொற்றாய் வந்தனை போலு முன்றனை
மற்று ருய்த்தனர் வந்த தென்கொலோ
விற்றாய் நின்னுயி ரெங்க னுய்திநீ.

(இ-ள்.) இந்நகரமுழுமையையும் சுற்றிச் சுற்றிவருகின்றாய் உன்னை ஆராயுமிடத்தில் தூதனாகவந்தவனென்றறிகின்றேன். உன்னையாரனுப்பினவர்கள். எதற்காக வந்தாய் ஒ அழிந்தவனே! இனி உன்னுயிருடன் நீஎவ்வாறுதப்பிப்பிழைப்பாய்?—எ-று.

சிறையிற் பட்டுழ றேவர் செய்கையை
யறிகுற் றிந்திர னானை யாகியே
நெறியிற் போக நினைந்து ளாய்கொலாங்
குறுகுற் றாயிது வுங்கு றிப்பதோ.

(இ-ள்.) சிறையிலகப்பட்டு வருந்துகின்ற தேவர்களது செயல்களையுணர்ந்து செல்லும்பொருட்டு இந்திரனதுதூதனாய் வழியேசெல்லும்பொருட்டு எண்ணியிருக்கின்றாய்போலும். இங்குவந்தவனே இவ்வாறாகவும் நீயெண்ணிவரலாமோ?—எ-று. ()

விண்டோ யுங்கனன் மேவு மெல்லையின்
மண்டோய் பூளை மருத்த னுய்த்தெனப்
பண்டே நொய்யை படுந்தி றத்திவட்
கொண்டே வந்தது கொல்லும் வல்வினை.

(இ-ள்.) ஆகாயத்தை யளாவிய அக்கினியிருக்கின்றவிடத்தில் வாயுவினாலனுப்பப்பட்டுவந்தமண்ணிலுள்ள புஞ்சைப்போல உன்னைக்கொல்லுந்தீவினையானது முன்னமேயிளைத்தவனாகவுள்ள உன்னைச்சாகும்பொருட்டாகவே இவ்விடத்தில் கொண்டுவந்து சேர்த்தது.—எ-று. (௧௭)

முன்னங் கம்பணி முற்று மாற்றியே
கின்னங் கொண்டு காந்த கீழ்த்திசை

மன்னன் பாலுறு வாரு ளன்றுநீ
யின்னும் மஞ்சலே யென்னை யெண்ணலாய்.

(இ-ள்.) முன்னம் நமது ஊழியங்களையெல்லாம்செய்து துன்பங்கொண்டு மறைந்துசென்ற கீழ்த்திசைக்கிறைவனுகிய இந்திரனது ஊழியக்காரரில் ஒருனல்லவா! நீ இன்ன மஞ்சுகின்ருயில்லை என்னையும் மதிக்கின்றிலை—.எ று. (கஅ)

கொல்லா நிற்பதோர் கூற்ற மேயெனச்
செல்லா நின்றிடு திண்ணி யேன்முன
நில்லா யெங்கடா நீங்குவா யென
வொல்லா ளேதி யுரப்பி யேகினுன்.

(இ-ள்.) எல்லாவுயிர்களையும் கொல்லுதற்கு நின்ற இயமனைப்போல வரா நின்ற வல்லபசாலியான வென்னெதிரில் நில்லாமல் எங்கடாபோவாய் என்று கயமுகன் சொல்லி யதட்டிக்கொண்டுவந்தனன்.—எ-று. (கசு)

வன்ருள் கொண்ட மதக்க யாசுரன்
சென்ற னின்னன செப்பி யிம்மொழி
நன்ற லென்று நகைத்து நோக்கியே
நின்ருன் வாகை நெடும்பு யத்தினன்.

(இ-ள்.) இவ்வாருன வசனங்களை வலிமைபொருந்திய கால்களையுடைய மதத்தோடு கூடியயானையின் முகம்போன்ற முகங்களையுடைய கயாசுரன் சொல்லிக்கொண்டு செல்லுதலும் உடனே வெற்றிபொருந்திய நீண்டதோள்களையுடைய வீரவாகுதேவர் போதலை விட்டுத்திரும்பினவராய் இவன் கூறுமிம்மொழிகள் நன்ருயிருக்கிறதென்று சொல்லிக்கொண்டு நின்றனர்.—எ-று. (உ0)

ஓவா திவ்வகை யோதி முன்வருந்
தீவா யோனெதிர் சென்று வல்லையிற்
சாவா யென்னிடை சார்ந்து ளாய்கொலாம்
வாவா வென்றனன் வாகை மொய்ம்பினன்.

(இ-ள்.) விடாமலிவ்வாறு கூறிக்கொண்டுவருகின்ற தீயவாயையுடைய கயமுகனெதிரிலே வீரவாகுதேவர்சென்று விரவிலிறப்பவனே அவ்வாறுசாகும்பொருட்டே என்னை நாடிவருகின்ருய் போலும் வருக வருக வென்றுகூறினர்.—எ-று. (உக)

வானோ ரஞ்ச வருங்க யாசுரன்
ருனோர் குன்று தனைப்ப றித்திடா
வூனோ டுன்னுயி ருண்ணு மீதென
வானேன் மைந்தன் முன்னூர்த்து வீசினுன்.

(இ-ள்.) தேவர்கள் பயப்படும்படி வருகின்ற கயமுகாசுரன் ஓர் மலையைப் பிடுங்கி இது உன்னுயிரையுமுடலையும் உண்ணுமென்றுகூறி இடபவாகனத்தினையுடைய சிவபெருமானது திருக்குமாரராகிய வீரவாகுதேவர் மீதுகர்ச்சனையுடனெறிந்தான். ()

விண்டோய் மேனி வியன்க யாசுரன்
கொண்டோர் கையில் விடுத்த குன்றது
வண்டோ லம்புரி மாலை மொய்ம்பினன்
திண்டோண் மீமிசை செவ்வ னுற்றதே.

(இ-ள்.) ஆகாயத்தை யளாவின சரீரத்தையுடைய பெரியகயமுகாசுரன் ஒருகையினுல் எடுத்தெறிந்த மலையானது வண்டுகளோலமிடுகின்ற மாலையணிந்த தோள்களையுடைய வீரவாகுதேவரது திண்ணியபுயங்களின்மீது நேரேவந்துபட்டது—எ-று (உங)

வேழத் தோன்முகன் விட்ட பூதரம்
பாழித் தோண்மிசை பட்ட காலையில்
வாழிப் பூதியின் வட்டு விண்டெனப்
பூழித் தாகி யுடைந்து போயதே.

(இ-ள்.) யானைமுகத்தினையுடைய கயமுகாசுரனெடுத்தெறிந்த மலையானது வீரவாகுதேவரது பெரியதோளின்மீது பட்டவுடனே விபூதிக்கட்டியுடைந்தாற்போல புழுதியாயுடைந்து கெட்டது.—எ-று. (உ௪)

பொடியுங் காலெதிர் புக்க தீயவன்
மிடல்கொண் டுற்றிடு வீர னாற்றல்கண்
டுடனுந் திண்சின முற்றொ ராயிரம்
படருங் குன்று பறித்தன் மேயினான்.

(இ-ள்.) தானெறிந்தமலை பொடிந்துபோகின்ற சமயத்தில் எதிரில்வந்த கய முகாசுரன் வலிமையோடுநிற்கின்ற வீரவாகுதேவரது ஆற்றலைப்புணர்ந்து பகைக்கின்ற பெருங்கோபங்கொண்டு பெரிய ஆயிரமலைகளை யசைத்தெடுத்தான்.—எ-று. (உ௫)

பறியா நின்ற பகட்டு மாமுக
னெறிவிழ் கின்ற நெடுங்கை சுற்றினா
னிறைசேர் மேரு விருந்த கோடெலாங்
கறைசேர் காலவர் கட்டெ டுந்தபோல்.

(இ-ள்.) கடவுளெழுந்தருளியிருக்கின்ற மேருமலையிலுள்ள சிகரங்களைத் தையும் கரியவாயுக்கள் சுற்றிப்பிடுங்கிக் கொண்டெழுந்தாற்போல மலைகளையசைத்தெடுத்த கயமுகாசுரன் முறையே கீழ்தாழ்ந்து தொங்குகின்ற நீண்டதும்பிக்கைகளால் சுற்றி யவைகளைப்பிடித்தனன்.—எ-று. (உ௬)

பத்தா நூறு படுத்த வேலையுண்
மத்தா குற்றன வாசு கித்தொகை
மொய்த்தார் வன்றலை முன்பு சூழ்ந்தெனக்
கைத்தா மால்வரைக் காட்சி மிக்கவே.

(இ-ள்.) அக்கயமுகனது துதிக்கைகளினால் சுற்றப்பட்ட பெரியமலைகள் கடலிலிட்ட மத்தாகிய வாயிரமந்தரகிரிகளை வாசுகிக்கூட்டங்கள் நெருங்கியதலைகளை முன்புறத்தில் வைத்துக்கொண்டு சூழ்ந்துகொண்டாற்போல மிகுதியாகக்காணப்பட்டன—எ-று.

துன்னொன் றேரயா சூர னூறுபத்
தெண்ணுந் தொல்கிரி யாவு மெம்பிரான்
கண்ணின் றோன்றிடு காமர் காளைமேல்
விண்ணங் கான்றென வார்த்து வீசினான்.

(இ-ள்.) எம்பெருமானது திருக்கண்களிற்றோன்றியருளிய குமாரப்பெருமானது தூதனாகிய அழகிய வீரவாகுதேவர்மீது விரைவாக ஆயிரம்பெரியமலைகளை ஆகாயங்கக்கினாற்போல கர்ச்சனையுடனெறிந்தனன்.—எ-று. (உ௮)

பாடார் பல்கிரி பற்றி வீசலு
மீடார் வெம்புலி யாளி கேசரி
கோடார் தந்திகள் கோடி கோடிகள்
வீடா வார்ப்பொடு விம்மி வீழ்பவே.

(இ-ள்.) பெருமைபொருந்திய பல மலைகளைப்பிடுங்கி யெறிதலும் ஒன்றற்கொன்றீடாயுள்ள பெரிய கொடிய புலிகளும் யாளிகளும் சிங்கங்களும் கொம்புபொருந்திய யானைகளுங்கோடாகோடியாக நீங்காத பேரொலியுடன் நெருங்கிவிழுகின்றன. ()

கேடாய் மன்னர் கிடப்ப வாங்கவர்
வீடா வாக்கமி சைந்து ளாரெனப்
பாடா வண்டு பராரை மால்வரை
யூடார் தேன்க ளுகுப்ப வுண்டவே.

(இ-ள்.) உலகாளும் அரசர்கள் (ஊழ்வலியால்) வலியிழந்து கிடக்கும் சமயத்தில் அவர்களதான கெடாத செல்வங்களை அநுபவிக்கின்ற பகைவர்களைப்போல கயமுகனாலெறியப்பட்ட பரிய அரையினையுடைய உடைகிற மலைகள் தம்மிடமிருந்தே தேனைச்சிதற அவைகளை வண்டுகள் இசைபாடிக்கொண்டுண்டன.—எ-று. (௫0)

வேறு கும்பல வெற்பி டந்தொறு
மூறு நின்றுல வுற்ற வான்புனன்
மாறு மற்கவிழ் வுற்று வல்லைபே
ராறு கிக்கட லென்ன வார்த்ததே.

(இ-ள்.) பல விடங்களிலும் வேறுவேறாக விருந்த மலைகளிடங்கடோறும் ஊறி ஒழுகாநின்ற உயர்ந்த கானியாறுகள் விடாமல் ஒரிடத்திலேசேர்ந்து விரைந்து பெரிய நதியாகி கடலைப்போல் முழங்கியது.— எ-று. (௫௧)

வரைவிழ் பூம்புனன் மாந திக்கணே
யிரையா மாக்க ளியாவும் வீழ்தலாற்
றிரைசேர் வாரிகள் சென்று சேணுழீஇ
விரைவால் வெய்யவன் வெப்ப நீக்குமே.

(இ-ள்.) மலைகளினின்றும் விழுகிற வழகிய நீராலுண்டாகிய பெரியயாற்றில் பெரிய மிருகங்களெல்லாம் இரைந்துகொண்டு விழுதலால் அலைபொருந்திய அவ்வாற்றிலுள்ள நீர் விரைவாக மேலெழுந்து சென்று சூரியனது வெப்பத்தை யொழிக்கும்.—எ-று. (௫௨)

பேசுஞ் சீரிவை பெற்ற வெற்பெலா
மீசன் றாதுவன் முன்ன ரெய்தின
பாசஞ் சுற்றிய பம்ப ரத்தொகை
வீசுங் காலை சுழன்று வீழ்வபோல்.

(இ-ள்.) சொல்லப்பட்ட விவ்வாறானசிறப்புகள் பொருந்திய மலைகளெல்லாம் கயிறு சுற்றிய பம்பரக்கூட்டங்கள் எறியும்போது சுழன்று விழுந்தன்மையைப்போல கந்தக்கடவுளின்றூதராகிய வீரவாகுதேவரது எதிரில்வந்தன.—எ-று. (௫௩)

வேறு.

சுடர்ப்பெ ருங்கதி ராதவன் றுண்ணெனக் கரப்ப
வடுக்க லாயிர மின்னவா றொருதலை யாகக்
கடற்பு குங்கண முகிலென வருதலுங் கண்டான்
றடக்கை வேலுடை யண்ணறன் முன்னினன் றமியோன்.

(இ-ள்.) ஒளிபொருந்தியபெரிய கிரகணங்களுள்ள சூரியன் விரைவாகமறைய ஆயிரமலைகளிவ்வாறு கடனீரை யுண்ணச்செல்லும் மேகங்களைப்போல ஏககாலத்தில் வருதலும் அவ்விடத்திற் றனியேநிற்கிற வீரவாகுதேவ ரவைகளைப்பார்த்து வேலாயுதந்தாங்கிய திருக்கரத்தினையுடைய குமரக்கடவுளது திருவடிகளைத் தியானித்தனர். ()

நிற்கு மெல்லையின் வெங்கொலைத் தொழின்முறை நிரப்பக்
கற்கும் வெய்யவன் விடுத்திடு மாயிரங் கிரியும்
பற்கன் மால்வரை காப்பவன் றன்மிசை பழிதீ
ரற்கன் மேல்வரு மெழிலிக ளெனவடைந் தனவே.

(இ-ள்) அவ்வாறு நின்றசமயத்தில் வெவ்விய கொலைத்தொழில்களை நிரம்பப் பழகியுள்ள கொடிய கயமுகாசுரன்விட்ட ஆயிரங்கிரிகளும் சிவபெருமானது ஸ்ரீ கயிலாசத்தைக் காக்கின்ற நந்திகணத்தலைவராகிய வீரவாகுதேவர்மீது சூரியன்மீதுவந்த மேகக்கூட்டங்களைப்போல வந்தன.—எ-று. (௫௫)

வேறு.

மறுவரை யாத திங்கள் வாரசடைக் கடவு ளல்க
வறுவரை யன்னையாப் பெற்றோ னருளினா லைய னிற்ப
வுறுவரை பத்து நூறு மொருங்குமா யுற்று மற்றோர்
சிறுவரை தன்னில் யாவுஞ் சிதறியே யுடைந்த வன்றே.

(இ-ள்.) களங்கமில்லாத சந்திரனையணிந்த நீண்ட சடையினையுடைய சிவபெருமானளிக்க கிர்த்திகைமாதர்களாகிய அறுவர்களை யன்னையர்களாகக்கொண்ட கார்த்திகேயப்பெருமானது திருவருளினால் வீரவாகுதேவர் சும்மாநிற்கவும் அவரெதிரில்வந்த ஆயிரமலைகளும் ஒன்றாய்வந்து திருமேனியிற்பட்டு ஓர் கணப்பொழுதில் அவைகள் எல்லாம் சிதறியுடைந்தன.—எ-று. (௫௬)

தெளிதரு வீரன் றன்மேற் செறிந்திடு மடுக்கல் யாவும்
விளிவொடு மாய்ந்த வன்றி விளைந்தில வேறங் கொன்றும்
வளநனி சுருங்கி வானம் வறந்தநாள் வெளிற்றுக் கோண்மூக்
கிளர்வன பயனின் றாகிக் கெடுபட் டுடையு மாபோல்.

(இ-ள்.) உலகத்தில் வளப்பங்களெல்லாம் மிகவும் கெட்டு க்ஷாமமடைகின்ற மழையில்லாமல் வறந்தகாலத்து ஆகாயத்திற்றோன்றுகிற வெள்ளைமேகங்கள் பிரயோஜனமில்லாமல் கெட்டழியுந்தன்மையைப்போல தெளிவுபொருந்திய சிந்தையினையுடைய வீரவாகுதேவர்மீது வந்துபட்ட மலைகளெல்லாம் கெட்டொழிந்தனவேயன்றி அங்கு வேறொன்றும் செய்ததில்லை.—எ-று. (௫௭)

மட்பகை வினைஞ ரானோர் வனைதரு கலங்கண் முற்றுந்
திட்பமொ டமர்ந்த கற்றூண் சேர்ந்துழிச் சிதறு மாபோற்
கொட்புறு புழைக்கை வெய்யோன் குறித்தெறி பிறங்கல் யாவு
மொட்பம தடைந்த வீரன் மிசைபட வுடைந்த வன்றே.

(இ-ள்.) குலாலர்கள் செய்த பாண்டங்களெல்லாம் பலம்பொருந்திய கற்றூணில் மோதப்பட்டபோது உடைந்து சிதறுந்தன்மையைப்போல துவாரம்பொருந்திய சுழலுகின்ற கைகளையுடைய கயமுகாசுரன் குறிப்புவைத்தெறிந்த மலைகளனைத்தும் ஒளிபொருந்திய வீரவாகுதேவரது திருமேனியிற் பட்டவுடனே உடைந்தன.—எ-று. (௫௮)

விறல்கெழு புயத்தி னான்மேல் விடுத்திடு கிரிகள் யாவும்
வறிதுபட் டிடலுங் காணா மால்கரி முகத்த னின்றா
னறநெறி யொருவி மொய்ம்பா லாற்றிய வெறுக்கை யாவும்
பிறர்கொள வுகுத்தி யாது மூதியம் பெறுகி லார்போல்.

(இ-ள்.) தருமசாத்திர முறையைக்கடந்து தனது வலிமையினால் சம்பாதித்த திரவியங்களெல்லாம் அயலார்கொள்ளும்படி யிறைத்து அதனா லியாதொரு லாபத்தையும் அடையாத நிர்ப்பாக்கிய சாலிகளைப்போல வெற்றியுடன் விளங்குகின்ற வீரவாகுதேவர்மீது விட்டமலைகளெல்லாம் வீணா யுடைந்துபோனதைப் பார்த்துக்கொண்டு பெரிய கயமுகாசுரன் நின்றனன்.—எ-று. (௫௯)

கண்டுவிம் மிதத்த னாகிக் கயாசுரன் முனிந்தோர் தண்டந்
திண்டிறன் மொய்ம்பன் றன்மேற் செலுத்தலு மதனைக் காணா

வொண்டழல் புரையுமொள்வா ளுறைகழித் தொல்லை வீழத்
துண்டம தாக்கி யன்றே யெதிருறத் துன்ன லுற்றான்.

(இ-ள்.) கயமுகாசுர னிதனைப்பார்த் தாச்சரியமுற்றவனாய்க் கோபங்கொண்டு ஓர் தண்டாயுதத்தை மிக்க வலிமையினையுடைய வீரவாகு தேவர்மீது படும்படியெறிதலும், அதனை யவர்பார்த்து ஒள்ளிய தீயையொத்த வொளிபொருந்திய வாளினை உறையினின்றுமெடுத்து அதனைத் துண்டாகவெட்டி யெறிந்து கயமுகாசுரனது எதிரிற் சென்றனர்.—எ-று. (௪௰)

மத்தவெங் கயமாந் தீயோன் வாகையந் தடந்தோ ளண்ணல்
மெய்த்தனி யாற்றல் காணா விழுத்தகு பனைக்கை யோச்சிப்
பத்துநூ றான சாலப் பழுமரம் பறியா வேந்தி
யுய்த்திட வொருதன் வாளா லொய்யெனச் சிந்தி யார்த்தான்.

(இ-ள்.) மதம்பொருந்திய வெவ்விய யானைமுகத்தையுடைய கயமுகாசுரன் அழகிய வெற்றிவாய்ந்த திண்ணியதோள்களுடைய வீரவாகுதேவரது ஒப்பற்ற சரீரபலத்தைக்கண்டு புகழத்தக்க பனைபோன்ற நீண்ட துதிக்கைகளை நீட்டி ஆயிரம் பெரிய ஆலமரங்களைப்பறித்தெடுத்து வீசியெறிதலும் அவைகளை வீரவாகுதேவர் தமதுகையிலுள்ள வாளினால் விரைவாகவெட்டியெறிந் தாரவாரித்தனர்.—எ-று. (௪௧)

காயெரி கலுழும வெங்கட் கயாசுரன் விடுவான் பின்னுஞ்
சேயுயர் வரைபல் வேறு தெரிந்தனன் பறிக்கு மெல்லை
நாயகன் றூதன் காணா நாந்தகங் கொடுபோ யன்னா
னுயிர மாகி யுள்ள புழைக்கையு மறுத்தா னன்றே.

(இ-ள்.) பின்னரும் வீரவாகுதேவர்மீது விடும்பொருட்டுச்சுடுகின்ற தீப்பொறி பறக்கும் கொடியகண்களையுடைய கயமுகன் மிகவுமுயர்ந்த வேறேசில பெரிய மலைகளைப்பார்த்துப் பிடுங்குவதைக் குமரக்கடவுளினது தூதராகிய வீரவாகுதேவர் கண்டு வாளாயுதத்துடனவனருகிற்சென்று அவனது ஆயிரம் துதிக்கைகளையும் வெட்டியெறிந்தனர்.—எ-று. (௪௨)

அறுத்தலுங் கவன்று தீயோ னாயிரத் திரட்டி கையுஞ்
செறித்திவன் றன்னைப் பற்றித் திற்றியாக் கொள்வ னென்றே
குறித்தனன் வளைப்ப வாளாற் கொம்மென வாற்றல் வீரன்
றறித்தன னொருசார் வந்த வாயிரந் தடக்கை முற்றும்.

(இ-ள்.) வீரவாகுதேவரவ்வாறு அக்கயமுகனது துதிக்கைகளையறுத்தவுடனே அக்கொடியோன் மனதிற்கலக்கமுடையவனாய்த் தனதிரண்டாயிரங்கைகளையும் நீட்டி அவ்வீரவாகுதேவரைப்பிடித்து உணவாகக்கொள்வேனெனத் தன்னுள் நினைத்துக்கையை நீட்டி வளைத்துக்கொள்ளுதலும் வலிமைமிக்க வவ்வீரர் தமது கரத்திலுள்ள வாளாயுதத்தால் விரைவாக ஒருபுறத்திலுள்ளவவனது பெரியவாயிரங்கைகளையும் வெட்டினர்.

செற்றமால் கரியின் பேரோன் றிண்கையா யிரமும் வீட்ட
மற்றையா யிரங்கை யாலும் வாகையஞ் செம்மன் மார்பி
னெற்றினா னெற்று மெல்லை யெல்லையில் வெகுளி யெய்தி
யற்றுவீழ்ந் திடவே வாளா லவையெலா மடுதல் செய்தான்.

(இ-ள்.) கோபத்தினையுடைய பெரிய கயமுகாசுரனது வலிமைமிக்க வாயிரங் கைகளையும் வெட்டுதலும், பின்னொருபுறத்திலுள்ள வாயிரங்கைகளாலும் வெற்றிபொருந்திய வீரராகிய வீரவாகுதேவரது மார்பின்மீது ஓங்கியடித்தான்; அவ்வாறடித்தவுட

னே அவர் அளவற்ற கோபமுடையவராய் அவ்வாயிரங்கைகளுமறுந்துவிழும்படி வாளாயுதத்தினால் அவைகளனைத்தையு மறுத்தெறிந்தனர்.—எ-று. (௬௪)

கொலைகெழு தறுகணல்வாய்க் குஞ்சர முகத்து வெய்யோ
னிலைகெழு பாணி முற்று நீங்கியீ ரைந்து நூற்றுத்
தலைகெழு நிலைமைத் தாகித் தண்சினை பலவு மல்கி
யலைகெழு வீழ்போ யுற்ற வாலமே போல நின்றான்.

(இ-ள்.) கொலைத்தொழிலனைத்தையு மஞ்சாமையினையுமுடைய தொங்குகின்ற வாயோடு கூடிய கசமுகாசுரனாகிய கொடியவன் தன்னுடலிற்பொருந்திய கைகளனைத்தும்போய் ஆயிரந்தலைகளை மாத்திரமுடையவனாய் குளிர்ச்சிபொருந்திய அனேகங்கிளைகளால் நிறையப்பட்டு அசைந்துவிழுகின்ற விழுதுகளறுபட்டு நிற்கின்றவாலமரம்போல நின்றனன்.—எ-று. (௬௫)

பாணிக ளிழந்து நின்ற பகட்டுடை வதனத் தீயோ
னூணின னிவனை யட்டு நம்முயிர் துறத்து மென்னு
மாணறு மனத்திற் கொண்டு மற்றொழின் முன்னித் தோளாற்
றூணுவின் கயிலை காப்போன் றடம்புயந் தாக்கி யார்த்தான்.

(இ-ள்.) கைகளறுபட்டு நிற்கின்ற யானைமுகத்தையுடைய கயமுகாசுரனாகிய கொடியவன் கைகள்போனமையால் வெட்கமுற்று (நம்மையிவ்வாறுசெய்த) இவனைக் கொன்று நமது உயிரையும் விடுவோமென்று மாட்சிமையற்ற தனது மனதினினைந்தவனாய் மல்யுத்தம் செய்யும்பொருட்டு உத்தேசித்து அறுபட்டதனது தோள்களால் சிவபெருமானது திருக்கைலைமலைக்குக் காவலாகிய வீரவாகுதேவரது பெரிய தோள்களின் மீதுமுட்டிக் கெர்ச்சனை செய்தனன்.—எ-று. (௬௬)

ஐயன தொற்றன் காணு வாற்றலின் றாகி முற்றுங்
கையினை யிழந்து நின்றான் கடுங்கதிர் வாளின் வெம்போர்
செய்யல னினியா னென்னுச் சிந்தைசெய் துறைவா ளோச்சி
யொய்யென வவன்றன் மார்பி னுதைத்தன னொருதன் றாளால்.

(இ-ள்.) குமரக்கடவுளின்றூதராகிய வீரவாகுதேவர் அக்கயமுகன் தோள்களாலிடித்துப் போர்புரிவதைப்பார்த்து இவன் வலிமையற்றவனாய் எல்லாக்கைகளையுமிழந்து நிற்கின்றானதலாலிவனோடு கொடியவாட்போரினை யான்செய்யேன் என்றுதான் நினைத்துத் தீர்மானித்துத் தனது வீரவாளினை யுறையிலிட்டு ஒருதாளினால் அவன்மார்பின்மீது விரைவாக உதைத்தனர்.—எ-று. (௬௭)

உதைத்திடு கின்ற காலை யொல்லென வரற்றி வீழ்ந்து
மதத்தினை யுறுக போல் மால்கரி முகத்து வெய்யோன்
பதைத்தன னாவி சிந்திப் பட்டனன் பகிர்ந்த மார்பிற்
குதித்திடு சோரி நீத்தங் குரைகடற் போய தன்றே.

(இ-ள்.) வீரவாகுதேவரவ்வாறு உதைத்தவுடனே மதநீர்பொருந்திய கபோலத்தினையுடைய பெரிய யானைமுகத்தினையுடைய கயமுகாசுரனாகிய கொடியவன் ஒல்லென்றிரைந்துகொண்டு கீழேவிழுந்து துடித்தவனாய்ப் பிராணனொழிந்திறந்தனன். (வீரவாகுதேவரால் உதைக்கப்பட்டமையால்) பிளப்புண்டமார்பினின்றுங்குதித்தோடி வருகின்ற இரத்தவெள்ளம் சத்திக்கின்ற கடலைநோக்கிச்சென்றது.—எ-று. (௬அ)

அவ்வியல் கண்டு பல்லோ ரவுணர்க ணமரே யீண்டு
தெவ்வியன் முறையி னின்று செருவினை யிழைப்பார் போலு

மிவ்விவ ராடற் கேது வென்கொலோ வறிது மென்றே
சவ்வையி னெறிக டோறுங் காண்பது கருதிப் போந்தார்.

(இ-ள்) அவ்வாறிரத்தமோடி வருவதைப்பார்த்து அனேகமசுரர்கள் நம்மவர்களே யிவ்விடத்தில் பகைவர்முறைமையைப் பாராட்டிநின்று போர்புரிகின்றார்கள்போலும்: இவர்களது போருக்குக் காரணமியாவையோ அறிவோமென்று ஆரவாரத்தினையுடைய பலவழிகளின்வழியாகவிப்போரைப் பார்க்கும்பொருட்டு வந்தார்கள்.—எ-று. ()

சென்றிடல் வீரன் காணுத் தீயரென் செய்கை நோக்கிற்
கன்றிவெஞ் சினமேற் கொண்டு சடுஞ்சம ரிழைப்பர் யானு
நின்றமர் புரிதல் வேண்டு நிலைமையீ தென்று லம்மா
வின்றோடு முடியுங் கொல்லோ வியற்றினு மிவர்போ ரென்றான்.

(இ-ள்.) அவர்களவ்வாறு வருதலை வீரவாகுதேவர்பார்த்து இங்குவருகின்றவிக்கொடியவர்களெனது செய்கையைக் காண்பார்களாயின் மனக்கன்றுதலுடன் மிகுந்த கோபமுடையவர்களாய்க் கடும்போர்புரிவார்கள்; அவர்களவ்வாறு செய்தால் யானுமவர்களோடுநின்று போர்புரிதல்வேண்டும் முறைமையிதுவானால் அம்மா! யான் போர்செய்தாலும் இன்றோடு இவர்கள் போர்முடியுமோ? (முடியாதே) என்று கூறினர்.—எ-று.

ஆரணந் தனக்குங் காணு வாதியங் கடவுள் சொற்ற
பேரருண் மறந்தே யின்னே பீடிலார் தம்மோ டேற்றுப்
போரினை யிழைத்து நிற்றல் புல்லிது புலமைத் தன்றாற்
சூருறை மூதூர் தன்னிற் றுன்னுவன் கடிதி னென்றான்.

(இ-ள்) வேதங்களாலேயும் காணுதற்குக்கூடாத முழுமுதற்கடவுளாகிய குமாரப்பெருமான் அடியேனைநோக்கிக் கட்டளையிட்டருளிய பெரியவருட்டன்மையை மறந்திவ்விடத்திற் பெருமையற்ற விவர்களோடெதிர்த்து யுத்தம்செய்துகொண்டு நிற்பது இழிவேதவிரபுத்திசாலித்தனமல்ல ஆதலாலியான் சூரபன்மனிருக்கின்ற பெரிய நகரத்தினுள்விரைந்து செல்லுவேன் என்றுகூறினர்.—எ-று. (ருக)

எப்பெரு வாயில் சார வேகினு மங்க ணெல்லாங்
கைப்படை யவுணர் வெள்ளங் காவல்கொண் டுற்ற வாற்றாற்
றப்பினன் சேற லொல்லா தமியனிப் படிவத் தோடு
மெய்ப்பதி யிதற்குச் செல்வன் வேற்றுரு வெய்தி யென்றான்.

(இ-ள்.) எந்தப்பெரியவாயிலின் வழியாகச்சென்றாலு மவ்விடங்களிலெல்லாம் ஆயுதங்களை கைகளிற்றாங்கியவசுரர் சேனைவெள்ளங்கள் காவல்பூண்டுநிற்குந் தன்மையால் இந்நகரத்துள் யான் இவ்வுருவத்தோடு ஒருவர்கண்ணிலகப்படாமல் செல்லுதற்கு முடியாது ஆதலால் வேற்றுருவடைந்துள்ளேபோவேன் என்றுகூறினர்.—எ-று. (ருஉ)

கூற்றினை யுறழும் வைவேற் குமரவே ளருளா லீண்டோர்
வேற்றுரு வதனைக் கொண்டு வெய்யரா மவுண வீரர்
போற்றுமிக் குணமால் வாய்தல் பொள்ளெனக் கடந்து பின்னர்
மாற்றல னூரிற் செல்வ னென்றனன் வாகை மொய்ம்பன்.

(இ-ள்.) இயமனைப்போலும் கொலைத்தொழிலினையுடைய கூரிய வேலாயுதத்தைத் திருக்கரத்திற்றாங்கிய சுப்பிரமணியப்பெருமானது திருவருளினால் யான் இப்பொழுதடைந்திருக்கின்றவிவ்வுருவன்றி வேறேயொரு சிறிய வடிவத்தைக்கொண்டு கொடியவர்களாகிய அசுரவீரர்களால் காக்கப்படுகின்ற இக்கிழக்குவாசலை விரைவாகக்கடந்து பின்னர் பகைவனாகிய சூரபன்மனது நகரிற்போவேனென்று வீரவாகுதேவர்கூறினார்.—எ-று. (ருகூ)

நொய்யதோ ரணுவி னுற்ற நுணுகியும் பெருமை தன்னிற்
பொய்யில்சீர் பெருமைத் தாயும் பூரண மாகி வைகுஞ்
செய்யதோர் குமரன் பொற்றாள் சிந்தைசெய் தன்பிற் போற்றி
யொய்யென வருளின் வீர னோரணு வுருவங் கொண்டான்.

(இ-ள்.) நுட்பமான அணுவைக்காட்டிலும் மிகவும் நுட்பமாகியும் பெருமையில் உண்மையான சிறந்த பெருமையினையுடையதாயும் எங்கு நிறைந்ததாயுமுள்ள வஸ்துவான செவ்விய ஒப்பற்ற குமரக்கடவுளினது விளங்குகின்ற திருவடிகளை மனதில் நினைத்து அன்புடன் துதித்து அக்கடவுளின் திருவருட்டிறத்தால் விரைவாக வீரவாகுதேவர் ஒரணுப்போன்ற வுருவெடுத்தனர்.—எ-று. (௫௪)

நுணுகுதன் னுணர்வே போல நோக்கருந் திறத்தாற் றோ
ரணுவுருக் கொண்டு வீர னடுகள மதனை நீங்கி
யிணையறு குமரற் போற்றி யெழுந்துவிண் படர்ந்து மூதூர்க்
குணதிசை வாயி னின்ற கோபுர மிசைக்க ணுற்றான்.

(இ-ள்.) நுட்பமான தனதறிவைப்போல பிறரால்பார்க்கப்படாத தன்மையினையுடையதாகவுள்ள ஒரு சிறியவணுவுருவத்தை வீரவாகுதேவரெடுத்துக்கொண்டு கயமுகனைக்கொன்ற போர்க்களத்தினின்றும் விலகி, ஒப்பற்ற குமரக்கடவுளைத்துதித்து மேலெழுந்து ஆகாயவழியாய்ச்சென்று பெரிய மகேந்திரபுரியினது கிழக்குவாயலில் நிற்கின்ற கோபுரத்தின்மீது சென்றிருந்தனர்.—எ-று. (௫௫)

கயமுகன்வதைப்படலம்முற்றிற்று.
ஆக திருவிருத்தம் - உ௲௭.

---

# நகர்புகுபடலம்.

அண்டம் யாவையு மெழுவகை யுயிர்த்தொகை யனைத்தும்
பிண்ட மாம்பொருண் முழுவது நல்கியெம் பெருமான்
பண்டு பாரித்த திறமென மகேந்திரப் பதியின்
மண்டு தொல்வள நோக்கியே யின்னன மதிப்பான்.

(இ-ள்.) எமது சிவபெருமான் எல்லாவண்டங்களையும் தேவர்-மக்கள்-விலங்கு-புள்-ஊர்வன-நீர்வாழ்வன-தாவாரம் எனச்சொல்லப்படுகிற எழுவகையான உயிர்வர்க்கங்களையும் பிண்டப்பொருளான மற்றவைகளையுமெல்லாம்படைத்து முற்காலத்தில் ஓரிடத்து நிறைத்துவைத்த தன்மையைப்போலக் காணப்படுகிற மகேந்திரபுரியில் நெருங்கியிருக்கின்ற மிகுந்த வளப்பங்களையெல்லாம் வீரவாகுதேவர்பார்த்துத் தன்னுளிவைகளை யெண்ணுவாராயினர்.—எ-று. (௧)

எந்தை முன்னரே சூரபன் மாவினுக் கீந்த
முந்து மண்டங்க ளலமரு முவரிகண் முழுதும்
வந்து மொய்த்தன போலுமால் வரைபுரை காட்சிக்
கந்து பற்றியே யார்த்திடு மெல்லைதீர் கரிகள்.

(இ-ள்.) மலையினையொத்த வடிவினையுடைய கட்டுத்தறியினின்றுகொண்டு கெர்ச்சனைசெய்கின்ற அளவற்றயானைகள், எனது தந்தையாகிய சிவபெருமான் முற்காலத்தில் சூரபன்மனுக்குக்கொடுத்த உயர்ந்த வாயிரத்தெட்டண்டங்களிலுமுள்ள அலைவீசுகின்ற கடல்களனைத்தும் இவ்விடத்தில் ஏககாலத்தில்வந்து நெருங்கி நிற்றலையொக்கும்.—எ-று. (௨)

இயலு மைம்பெரு நிறத்தினண் டங்களி னிருந்த
புயலி னம்பல வோர்வழித் தொக்கன பொருவ
மயிலி ருஞ்சர முயலொடு யூகமற் றெழிலைப்
பயில்ப ரித்தொகை யளப்பில வயின்றொறும் பரவும்.

(இ-ள்.) இவ்விடத்தில் பொருந்திய பஞ்சவர்ணங்களையுடைய பலவண்டங்களிலுமுள்ள மேகங்களெல்லாம் ஒரிடத்தில் நெருங்கி நிற்றலை யொப்பென்று கூறும்படி மயூரம்-பாணம்-சசம்-மர்க்கடம்-மல்லம் என்னும் ஐங்கதிகளைப்பழகியுள்ள குதிரைகள் இடங்கடோறும் அளவற்றனவாக நிற்கின்றன.—எ-று. (ரு)

அண்ட மாயிரத் தெண்டினுண் மேதகு மடன்மாத்
தண்ட மால்கரி யாயின தடம்பெருந் தேர்க
ளெண்ட ரும்பொரு ளியாவுமீண் டிருந்தன விவற்றைக்
கண்டு தேர்ந்தன ரல்லரோ வகிலமுங் கண்டோர்.

(இ-ள்) இவ்விடத்தில் ஆயிரத்தெட்டண்டங்களிலுமுள்ள மேன்மையினையும் வலிமையினையுமுடைய குதிரைகளும் காலாட்களும் பெரிய யானைகளும் விசாலமான தேர்களும் இவைகளன்றியுள்ள மற்றயவைகளும் எல்லாம் இருக்கின்றனவாதலால் இவைகளைப்பார்த்தறிந்தவர்களல்லவோ எல்லாவுலகத்தையும் பார்த்தறிந்தவர்கள். (சு)

இணையி லிவ்விடைத் தானையின் வெள்ளமோ ரிலக்க
நணுகு மென்றன னந்தண னாற்பெரும் படையுங்
கணித மில்லன விருந்தன வெள்ளிகண் ணிலன்போ
லுணர்வி லன்சொலாங் கனகனுங் கேட்டசொல் லுரைத்தான்.

(இ-ள்.) ஒப்பற்றவிவ்விடத்தில் ஓரிலக்கம் வெள்ளச்சேனைகள் இருக்கிறதாக வியாழன்கூறினன். (அவன்சொன்னதுபோலன்றி) சதுரங்கசேனைகளும் அளவற்றனவிருக்கின்றன. அசுரகுருவாகிய சுக்கிரனுக்கு எப்படி கண்ணில்லையோவதுபோல தேவகுருவாகிய இந்த வியாழனுக்கும் புத்தியில்லையாயிருக்கலாம் அதனாற்றான் தான்கேட்டதை மெய்யென்றுகருதிக்கூறினன்.—எ-று. (எ)

உரையின் மிக்கசூர் பெற்றவண் டந்தொறு முளவாம்
வரையின் மிக்கதேர் கடல்களின் மிக்கதை மாக்க
டிரையின் மிக்கவாம் பரித்தொகை யாயிடைச் செறிந்த
பரவை நுண்மண றன்னினு மிக்கன பதாதி.

(இ-ள்.) மிக்க புகழினையுடைய சூரபன்மன் சிவபெருமானிடத்திற் றவஞ்செய்துபெற்ற ஆயிரத்தெட்டண்டங்களிலும் இருக்கிற மலைகளைக்காட்டிலும் மிகுந்ததேர்களும், கடல்களைக்காட்டிலும் மிகுதியான யானைகளும், அக்கடல்களிலுள்ள அலைகளைவிடமிகுதியான தாவுகின்ற குதிரைக்கூட்டங்களும், அவ்வண்டங்களிலெல்லாம்பொருந்தியுள்ள கடற்கரைகளிலே நெருங்கிக்கிடக்கின்ற நுண்ணிய மணலைவிட மிகுதியான காலாட்படைகளும் இவ்விடத்திலதிகமே.—எ-று. (அ)

மண்கொ ளாயிரத் தெட்டெனு மண்டத்தின் வளமு
மெண்கொ ளெண்பதி னாயிர யோசனை யெல்லைக்
கண்கொள் பான்மையி லீண்டிய தற்புதங் கறைதோய்
புண்கொள் வேலுடைச் சூர்தவத் தடங்கிய போலாம்.

(இ-ள்.) பிருதுவிபூதத்திலிருக்கிற ஆயிரத்தெட்டண்டங்களிலுமுள்ள வளப்பங்களனைத்தும் எண்பதினாயிரயோசனைவிஸ்தீரணத்தினையுடைய இந்நகரினிடத்தில் கா

னும்படி நெருங்கியிருத்தல் ஆச்சரியம்! இவைகளிவ்வாறு நெருங்கியிருத்தல் இரத்தந் தோய்ந்த மாமிசமளைந்த வேலினையுடைய சூரபன்மனது தவத்தினலடங்கியதேயாகும்.

உரைசெ யாயிரத் தெட்டெனு மண்டத்தி னுளவாங்
கரையில் சீரெலாந் தொகுத்தன னீண்டவை கண்டாந்
தருமமெய்யளி கண்டில மவற்றையுந் தந்து
சுரர்க டம்முடன் சிறையிலிட் டான்கொலோ சூரன்.

(இ-ள்.) இவ்விடத்திற் சொல்லப்பட்ட ஆயிரத்தெட்டென்னு மண்டங்களிலுள்ள அளவற்ற சிறப்புப்பொருள்களையெல்லாம் நிரப்பிவைத்திருக்கின்றனன்; யானவைகளையிவ்விடத்திற் கண்டேன்; தருமத்தையும் சத்தியத்தையும் இரக்கத்தையும் கண்டேனில்லை. சூரபன்மன் அவைகளையும் பிடித்துத் தேவர்களுடன் சேர்த்துச்சிறைச்சாலையிலடைத்துவைத்திருக்கின்றானோ.—எ-று. (௮)

அரண்ட ருங்கழற் சூரன்வாழ் மகேந்திர மதனிற்
றிரண்ட பல்லியத் துழனியேழ் கடலினுந் தெழிப்ப
முரண்டி றத்தவை யியம்புவா ரளவையார் மொழிவா
ரிரண்டு பத்துநூ றியோசனை யுண்டவ ரிடங்கள்.

(இ-ள்.) அழகுபொருந்திய வீரக்கழலையணிந்த சூரபன்மன் வசிக்கின்ற இந்த மகேந்திரபுரியில் கூட்டமாக அடிக்கப்படுகின்ற பலவகை வாச்சியங்களின் (மேளங்களின்)முழக்கங்கள் சப்தசமுத்திரங்களின் முழக்கங்களைப்பார்க்கிலு மதிகமாகின்றன. வலிமையுடன் அவைகளை வாசிப்பவர்களது கணக்கினை யாவர்கூறுபவர்கள்? இரண்டாயிரம்யோசனை விஸ்தீரணமிருக்கின்றது அம்மேளமடிப்போரிருக்குமிடங்கள்.—எ-று.

கரிகள் சேவக மொருபதி னாயிரங் கடுந்தேர்
விரிய நீளிடை யொருபதி னாயிரம் விசயப்
பரியி னென்னையோ விருபதி னாயிரம் பையத்
தருவி னின்னமு முண்டுகொல் யோசனைத் தொகையே.

(இ-ள்.) யானைக்கூடங்கள் பதினாயிரயோசனை: விரைவாகச் செல்லுகின்ற பெரியதேர்நிலயங்கள் பதினாயிரயோசனை; வெற்றிபொருந்திய குதிரைலாயங்கள் இருபதினாயிரயோசனை நீளங்களாம். இவைகளை இன்னும் நன்றாய் ஆராய்ந்தால் அதிகதூரமானாலுமாகும்.—எ-று. (௧௦)

இவுளி வாயினு மால்கரிக் கரத்தினு மிழிந்து
திவளு நீர்மைசால் விலாழியுந் தானமுஞ் செறிந்து
குவளை யுண்கணார் நீத்தசாந் தணிமலர் கொண்டே
யுவள கந்தரு மகழிசென் றகன்கட லுறுமால்.

(இ-ள்.) குதிரைகளின் வாய்களிலும் பெரிய யானைகளின் கைகளிலும் நின்று மெலிந்தொழுகிவருகின்ற நுரைநீரும் மதநீரும் ஒன்றாய்க்கலந்து நீலோற்பலமலர்போன்ற கண்களிலே மையெழுதிய பெண்கள் அணிந்துகளைந்தசந்தனபுஷ்பங்களை யடித்துக்கொண்டு சென்று சேறுபொருந்திய அகழியையடைந்து பெரிய கடலிற் சென்று விழும்.—எ-று. (௧௧)

வளமை மேதகு மிப்பெரு மகேந்திரம் வகுத்தன்
முளரி யண்ணலிங் கொருவனோ முடிந்திட வற்றோ
வொளிறு வாட்படை யவுணர்கோ னுடையவண் டத்தி
னளவி னான்முகர் யாரும்வந் திழைத்தன ராமால்.

(இ-ள்.) மிக்கவளப்பத்தினையுடைய இந்தப்பெரிய மகேந்திரபுரியை இவ்வண்டத்திலிருக்கின்ற தாமரையாசனனாகிய இந்த ஒருபிரமனால் உண்டாக்குதற்கு முடியுமோ? விளங்குகின்ற வாளாயுதத்தினையுடைய அசுரமன்னனாகிய சூரபன்மனது அண்டங்களிலுள்ள அளவற்றபிரமர்களெல்லாம் ஒன்றுசேர்ந்துவந்து செய்ததாயிருக்கலாம்.

புரந்த ரன்றன துலகமு மொழிந்த புத்தேளி
ரிருந்த வானமு மெண்டிசை நகரமும் யாவும்
வருந்தி யிந்நகர் சமைத்திட முன்னரே வண்மை
திருந்த வேசொலாம் படைத்தனர் திசைமுகத் தலைவர்.

(இ-ள்.) தேவேந்திரனது அமராவதி நகரத்தையும் அவனன்றியுள்ளதேவர்கள் வாழ்கின்ற விண்ணுலகங்களையும் எட்டுத்திக்கிலுமுள்ள நகரங்களையும் மற்றெல்லாவுலகங்களையும், கஷ்டத்துடன் இந்தநகரத்தையுண்டாக்கும்பொருட்டு முதலிலேயே வளப்பம் பொருந்தியவைகள் திருத்தமடையும்பொருட்டே பிரமர்கள் (அண்டங்கள்தோறும்) முன்னே படைத்தார்கள்.—எ-று. (௧௩)

பொன்பு லப்படு துறக்கம்வான் மாதிரம் புவிகீழ்
துன்பில் போகமா ருலகென்பர் தொடுகடற் பெருமை
முன்பு காண்கலர் கோட்டகம் புகழ்தரு முறைபோ
லின்பம் யாவையு முளநக ரீதுபோ லியாதோ.

(இ-ள்.) தோண்டப்பட்ட கடலின் பெருமையை முன்னேகாணாதவர்கள் தாம்பார்த்த குளங்களை, புகழுந்தன்மையைப்போலப்பொன்மயமாகக்காணப்படுகிற சுவர்க்கத்தையும் மற்றைய விண்ணுலகங்களையும் திக்குக்களையும் பாதாளத்தையும் இன்பம் பொருந்திய போகமனுபவித்தற்குரிய உலகமென்று கூறுவார்கள். எல்லாவின்பங்களையும் தன்னிடத்திலுடைய இந்த நகரத்திற்கு ஒப்பான நகரம் வேறெங்குள்ளது.—எ-று.

கறைப டைத்ததாட் கரிபரி யவுணர்தேர்க் கணங்க
ளுறைப டைத்திவ ணீண்டிய வண்டங்க ளனைத்து
முறைக டற்றொகை முழுவதுஞ் சூர்கொணர்ந் தொருங்கே
சிறைப டுத்திய போலும்வே றெனறிலை செப்ப.

(இ-ள்.) உரல்போன்ற காலினையுடைய யானைகளும் குதிரைகளும் காலாட்களும் தேர்க்கூட்டங்களும் இருப்பிடங்களையுடையனவாக இவ்விடத்தில் நெருங்கியிருக்கின்றன. எல்லாவண்டங்களிலுமுள்ள கடல்களனைத்தையும் சூரபன்மன் கொண்டுவந்துவரிசையாக சிறைப்படுத்திவைத்ததை யொக்கும். இதையன்றி இதற்கு ஒப்பாகச்சொல்லுதற்கு வேறேயொன்றுமில்லை.—எ-று. (௧௫)

ஐய பூழியு மாரகி லாவியு மாற்ற
நொய்ய வாகிய வணுக்களு நுழைவரி தென்னிற்
செய்ய விந்நக ராவண மெங்கணுஞ் செறிந்த
வெய்ய தேர்கரி யவுணர்தம் பெருமையார் விரிப்பார்.

(இ-ள்.) அழகிய சிறியபுழுதியும் அரிய அகிலின்புகையும் மிகவும் நுண்ணிதாகிய அணுக்களும் உள்ளேநுழைதற்கு இடமில்லையானால், செவ்வியநகரத்திலுள்ள வீதிகளிலெல்லாம் நிறைந்திருக்கின்ற வேகத்தினையுடைய தேர்கள் யானைகள் அசுரர்கள் என்னும் இக்கூட்டத்தின் மிகுதியை எவர்களெடுத்து இவ்வளவென்று விவரித்துரைப்பவர்கள்.—எ-று. (௧௬)

அள்ளல் வேலைசூழ் மகேந்திர புரிக்கிணை யாகத்
தெள்ளி தாவொரு நகருமின் றுளதெனச் செப்ப

வெள்ள மின்றிய வண்டமோ ராயிரத் தெட்டி
னுள்ள சீரெலா மீதுபோ லொருபுரத் துளதோ.

(இ-ள்.) சேற்றினையுடைய நீரோடுகூடிய கடலாற்சூழப்பட்ட மகேந்திரபுரிக்கு ஒப்பாக பிரகாசத்தோடுகூடிய வேறேயொரு நகரமும் இல்லை; உண்டென்றுகூறவேண்டுமாயின் புகழோடுகூடிய ஆயிரத்தெட்டண்டங்களிலுமுள்ள சிறந்த பொருள்களெல்லாம் உள்ள இந்த நகரத்தைப்போல வேறொருநகரத்திலிருக்கின்றனவோ.—எ-று.

கழிந்த சீர்த்திகொ ளிந்நகர் தன்னிடைக் கனல
வழிந்து தொல்லுரு மாழையின் மணிநிழ லாகி
யிழிந்து ளான்பெறு திருவெனப் பயன்பெறு தெவர்க்கு
மொழிந்த வேலைக டம்புகழ் கொள்வதிவ் வுவரி.

(இ-ள்.) மிக்ககீர்த்தியினையுடைய இந்நகரம் தன்னிடத்திற் பொருந்த அதனால் தனது பழயகரியநிறமொழிந்து பொன்னினது அழகிய நிறமடைந்து, லோபகுணமுடையவன் அடைந்த செல்வத்தைப்போல யாவருக்கும் பிரயோசனமில்லாமல் (இது வேற்றுநிறமான பொன்னிறமடைந்தும்) மற்றையகடல்களின் புகழையே இக்கடலும் அடைந்தது.—எ-று.

கடல்கள் தம்மிடத்துள்ள உப்பாகிய தரித்திரத்தால் பிறருக்குப் பயன்படாதனவாயின. இம்மகேந்திரபுரியைச் சூழ்ந்துள்ள இவ்வுப்புக்கடலும் அவ்வூரின் நிறமாகிய பொன்னைத் தானடைந்தும் உவர்க்குணம் நீங்குதலின்மையால், லோபகுணமுடையவன் அடைந்தபொருளைப்போல இக்கடலிற் காணப்படுகிற பிரதிபிம்பமாகிய பொன்னும்பிறர்களுக்குப் பிரயோசனத்தைக் கொடாதொழிந்தமையால், கடல் உலோபிக்கு உவமையாய் நின்றது. (௧௮)

ஏற்கு மேமிசூழ் மகேந்திர வெறுக்கை யிவ்வுலகோ
ரார்க்கு மோர்பயன் பெற்றில துயிர்ப்பலி யருந்துங்
காரக்கு ழாம்புரை யலகைசூழ் காளிமந் திரத்திற்
சீர்கொள் கற்பகம் பிறர்க்குத வாதமர் செயல்போல்.

(இ-ள்.) உயிர்களைப் பலியாக உண்ணுகின்ற கரியமேகங்களை யொத்த உடல்களையுடைய பிசாசுகளாற் சூழப்பட்டுள்ள பத்திரகாளியின் ஆலயத்தில் நிற்கின்ற சிறப்புப் பொருந்திய கற்பக விருட்சம் பிறருக்குப் பயன்படாத தன்மையைப்போல, கடல்சூழ்ந்த தகுந்த இந்த மகேந்திரபுரியிலுள்ள செல்வங்களனைத்தும் இவ்வுலகத்திலுள்ள எவர்கட்கும் யாதொரு பிரயோசனத்தையும் கொடுத்ததில்லை.—எ-று.

கற்பகவிருக்ஷங்கள் தன்னையடைந்தவர்களுக்குச் சர்வாபீஷ்டங்களையும் கொடுப்பதானாலும் அவை காளிகோட்டத்துள்ளிருந்தால் அங்குள்ள பேய்கள் கொன்று தின்றுவிடுமென்று பயந்து யாரும் அவைகளினருகில் செல்லார்கள். அதுபோலவே மகேந்திரபுரியில் சர்வாபீஷ்டங்களையும் தரத்தக்க எல்லாச் செல்வங்களும் நிறைந்திருக்கினும் பேய்களைப்போன்ற அசுரர்களும் காளியைப்போன்ற சூரனும் இருத்தலால் பிறர் அடைதற்கு அருமையாதலால் மகேந்திரபுரியை காளிகோயிலாகவும், அதிலுள்ள செல்வங்களை கற்பக விருட்சங்களாகவும் அசுரர்களை அலகைகளாகவும் எடுத்துக் காட்டுவமை யாகக் கூறினர். (௧௯)

மறக்கொ டுந்தொழி லிரவியம் பகையழன் மடுப்பத்
துறக்க மாண்டது பட்டிமை யாகுமத் தொல்லூர்
சிறக்கு மிந்நகர் நோக்கியே தன்னலந் தேய்ந்து
பெறூஉக்க ரும்பெரு நாண்சுடக் கரிந்தது போலாம்.

(இ-ள்.) கொலையாகிய கொடுந் தொழிலையுடைய பாநுகோபன் தீயிட்டெரிக்கச்சுவர்க்கம் அழிந்தது பொய்யே யாகும் எதனாலென்னில் அப்பெரிய விண்ணுலகம் சிறப்புப் பொருந்திய இந்தமகேந்திரபுரியைப் பார்த்தே தன்னழகு கெட்டு பொறுத்தற்கரிய நாணந்தன்னைச்சுட அதனால் கரிந்ததேயாம்.—எ-று. (உ0)

துங்க மிக்கசூர் படைத்திடு மண்டமாத் தொகையுட்
செங்க திர்த்தொகை யாங்கவன் பணியினாற் சென்று
பொங்கு தண்சுடர் நடாத்திநின் றென்னவிப் புரியி
லெங்கு முற்றன செழுமணிச் சிகர மெண்ணிலவே.

(இ-ள்.) வலிமைமிக்க சூரபன்மனது ஆயிரத்தெட் டண்டங்களுள் வாழுஞ் சூரியர்கள் அச்சூரபன்மனது கட்டளையால் இவ்விடத்திற்கு வந்து பிரகாசிக்கின்ற குளிர்ந்த ஒளி வீசிக்கொண்டிருந்தாற்போல இந்நகரத்தி லெவ்விடங்களிலும் செழுமை வாய்ந்தமாணிக்கங்களிழைத்த ஸ்தூபிகள் எண்ணிறந்தன இருக்கின்றன.—எ-று. (உக)

மாணி லைப்படு மெழுவகை யுலகின் வைப்பென்ன
வேணி லைப்பெருஞ் சிகரிகள் செறிந்தன யாண்டுங்
கோணி லைக்கதி ருடுப்பிறர் பதங்களிற் குழுமி
நீணி லைத்தலம் பலவுள மாடங்க ணிரந்த.

(இ-ள்.) மாட்சிமை பொருந்திய மேலேழுலகங்களைப் போல இவ்வூரி லெவ்விடங்களிலும் ஏழுநிலைகளையுடைய பெரியகோபுரங்கள் நெருங்கி இருக்கின்றன; நிலைத்த கோள்களாகிய சூரிய சந்திர நக்ஷத்திராதிகளின் உலகங்களைப்போல பலமேல் நிலைகளையுடைய மாளிகைகள் வரிசையாக நிற்கின்றன.—எ-று. (உஉ)

நூறி யோசனை சேண்படு நீட்சியு நுவலு
மாறி யோசனைப் பரவையும் பெற்றவா வணங்க
ளேறு தேர்பரி களிறுதா னவர்படை யீண்டிச்
சேற லாயிடை யருமையால் விசும்பினுஞ் செல்லும்.

(இ-ள்.) நூறி யோசனை தூரமான நீளமும் ஆறியோசனை நீளமான அகலமும்உள்ள வீதிகளில் ஏறுகின்ற தேர்களும் குதிரைகளும் யானைகளும் காலாட்படைகளும்ஒன்றாய் நெருங்கிச் செல்லுதற்கவ்விடம் போதமையால் ஆகாயவழியாகவும் போகும்.—எ-று.

இதுவே இந்நகரிலுள்ள சந்தென்னுஞ் சிறு தெருக்கள். (உங)

அடன் மிகுத்திடு தானவ ரகலிரு விசும்பிற்
கடிதி னிற்செல மத்திகை காட்டுமா றொப்ப
நெடுமு கிற்கணந் தழுவுசூ ளிகைமிசை நிறுவுங்
கொடிக ளெற்றிடப் போவன விரவிகொய் யுளைமா.

(இ-ள்.) வலிமைமிக்க அசுரர்கள் இடமகன்ற பெரியவிண்ணில் விரைந்துசெல்லுதற்கு சம்மட்டியெடுத்தடித்தாற்போல நீண்ட மேகசாலங்கள்பொருந்திய சூளிகைகளிலே நாட்டப்பட்ட கொடிகள்மோத சூரியனது குதிரைகள் விரைவாகச்செல்லுகின்றன.—எ-று.

இதுசூளிகையினுயரங்குறித்து காட்டிக்கூறியது. (உச)

மேலு லாவிய படிகமா ளிகைசில மின்னார்
மாலை தாழ்குழற் கிடுமகி லாவியான் மறைவ
சில நீங்கிய வவுணர்தஞ் சீர்த்திக ளனைத்து
மேல வேயவர் பவத்தினு ளொடுங்குமா றென்ன.

(இ-ள்.) சிலபெண்கள் மின்னற்கொடிபோன்ற அழகிய இடையினையுடைய மாலையுடனேதாழ்ந்த தங்கள் கூந்தலுக்கிடுமகிற்புகையால் உயரமாகவுள்ள பளிக்குமாளிகைகள் ஒழுக்கமற்ற அசுரர்களது கீர்த்திகளனைத்தும் அவர்கள்செய்யும் பாவத்தொழில்களான் மறைந்துகிடந்தாற்போல மறைகின்றன.—எ-று. (உரு)

அணிகு லாயகோ மேதக மாகத மாரந்
துணியு நீலம்வச் சிரம்வயி டூரியந் துப்பு
நணிய பங்கயம் புருடரா கம்மெனு நவமா
மணிக ளாற்செய்து மிளிர்வன வரம்பில் பொன்மாடம்.

(இ-ள்.) அழகுபொருந்திய கோமேதகம் மரகதம் முத்து ஒளிபொருந்திய நீலம் வச்சிரம் வயிடூரியம் பவளம் செம்மைபொருந்திய பதுமராகம் புஷ்பராகம் என்று கூறப்படுகிற ஒன்பதுவகையான பெருமைவாய்ந்த மணிகளாற் செய்யப்பட்ட (கொத்துச்சித்திர)வேலைகளோடு அளவற்ற பொன்மயமான மாளிகைகள் விளங்காநின்றன.

இயல்ப டைத்தவெண் படிகத்தி னியன்றமா ளிகைமேற்
புயல்ப டைத்திடு களிமயில் வதிந்திடப் புடையே
கயல்ப டைத்தகண் ணியர்புரி யகிற்புகை கலப்ப
முயல்ப டைத்திடு மதியினைச் சூழ்தரு முகில்போல்.

(இ-ள்.) இலக்கணமமைந்த வெள்ளியபடிகத்தாலியற்றப்பட்ட மாளிகையின் மீது மேகத்தின்வருகையால் மகிழ்வடைகின்றமயில் இருக்கின்றசமயத்தில் களங்கம்பொருந்திய சந்திரனைச்சூழ்ந்துகொண்ட மேகத்தைப்போல சேன்மீனையொத்த கண்களையுடைய பெண்கள் தங்கள் கூந்தலினீரம்புலர்த்தலாதிகளுக்காக உண்டாக்குகின்ற அகிற்புகைகலக்கின்றன.—எ-று. (உஎ)

வளனி யன்றிடு செம்மணிப் பளிங்குமா ளிகைமே
லொளிறு பொற்றலத் தரிவையர் வடிமிசைந் துறுதல்
வெளிய சேயன பங்கயப் பொகுட்டின்மீ மிசையே
யளியி னங்கடேன் மாந்தியே வைகுமா றனைய.

(இ-ள்.) வளப்பம்பொருந்திய மாணிக்கக்கற்களா லமைத்த மாளிகைகளின் மீதும்பளிங்குக்கற்களாலாகிய மாளிகைகளின்மீதும்விளங்காநின்ற பொன்பீடங்களின் மீதில் அசுரமாதர்கள் கட்குடித்தமர்தல் வெண்டாமரை செந்தாமரை யென்னும் புட்பங்களின் உட்கொட்டைகளின்மீது வண்டுக்கூட்டங்கள் தேனுண்டமர்தலையொக்கும்.

துய்ய வாலரி புனற்கிறை மண்ணியே தொகுப்பச்
செய்ய தீயவ னூன்களோ டவைபதஞ் செய்ய
மையன் மாதரோ டவுணர்க ளரம்பையர் வழங்க
நெய்யளா வுண்டி யுண்குவர் மறுசிகை நீக்கி.

(இ-ள்.) தூய்மையான வெள்ளிய அரிசிகளை கடலிறைவனாகிய வருணன் கழுவிக்குவிக்க அவைகளை மாமிசங்களுடன் கலந்து அக்கினிதேவன் சமைக்க சமைத்த நெய்யொடுகலந்த (மென்மையான) அந்த உணவினை காமமயக்கம் பொருந்திய மாதர்களுடனே அசுரர்கள் அரம்பையர்கள் பரிமாறக்கடினபதார்த்தங்களைத் தள்ளி உண்கின்றனர்.—எ-று. (உகூ)

துப்பு றுத்தன குஞ்சியங் காளையர் தொகையுஞ்
செப்பு றுத்துசீ றடிமினார் பண்ணையுஞ் செறிந்து
மெய்ப்பு றத்தியல் காட்சியுங் கலவியும் வெறுப்பு
மெப்பு றத்தினு நிகழ்வன மதனுல கிதுவே,

(இ-ள்.) இந்நகரினெவ்விடங்களினும் செவ்வரக்கையுருக்கி ஊற்றிவைத்தாற்போலவிளங்குகின்ற சிகைகளையுடையவாலிபர்களது கூட்டமும் செம்பஞ்சுக்குழம்பு பூசிய சிறியகால்களையுடைய பெண்களதுகூட்டமுநெருங்கி மெய்யினிடத்துவிளங்குகின்ற பிரகாசமும் புணர்ச்சியும் ஊடலும் நடக்கின்றன ஆதலாலிது மன்மதலோகமே.

பூணு மாரமுங் கலாபமு மிழைகளும் பொன்செய்
நாணு மொற்றராற் பரத்தையர் பாற்பட நல்கிப்
பேணி மற்றவர் விலக்கின நயந்தன பிறவு
மாணு மைந்தர்க டேறுவா னுறுபார்த் தயர்வார்.

(இ-ள்.) மாட்சிமைபொருந்திய புருஷர்கள் தங்கள்தூதர்களிடத்தில் தரித்துக்கொள்ளுகின்ற முத்தாலாகிய ஆபரணங்களையும் இடையணியாகிய கலாபத்தையும் ஆடைகளையும் பொன்னாலாகிய மற்றையவாபரணங்களையும் கொடுத்து பரத்தையர்களிடங்கொடுக்கச்சொல்லியனுப்பி அப்பரத்தையர் விரும்பியெடுத்துக்கொண்டனவற்றையும் விலக்கிவிட்டனவற்றையும் மற்றையவிஷயங்களையும் உணரும்பொருட்டு வீதிகளிலே வழிபார்த்துநின்று கவலாநிற்பார்கள்.—எ-று. (சுக)

துன்று தானவர் தெரியலின் மாதர்பூந்தொடையின்
மன்றன் மாளிகைச் சோலையி னிலஞ்சியின் மலரிற்
குன்ற மால்கரித் தண்டத்தின் யாழ்முரல் குழுவிற்
சென்று சென்றென துணர்வுபோ லளிகளுந் திரியும்.

(இ-ள்.) நெருங்கிய அசுரர்களது மாலைகளிலும் பெண்களது அழகியமாலைகளிலும் மங்கலகரம் பொருந்திய மாளிகைகளிலுள்ள சோலைகளிலும் குளங்களிலே உள்ள புட்பங்களிலும் மலைகளைஒத்த யானைகள் செல்லும்வழிகளிலும் யாழ்வாசிக்கும் பாணர்களைப்போலச் சென்றுசென்று என்மனத்தைப்போல வண்டுகள் சுழன்றுதிரியாநிற்கும்.—எ-று. (சுஉ)

மாறி லாதசூ ராணையால் வந்திடும் வசந்த
னூறு தெண்கட லளவியே தண்டலை யுலவி
வீறு மாளிகை நூழைபி னிடந்தொறு மெல்லத்
தேறல் வாய்மடுத் தோரென வசைந்துசென் றிடுமால்.

(இ-ள்.) ஒப்பில்லாத சூரபன்மனது கட்டளையால் இங்குவந்தடிக்கின்ற காற்றாகிய தென்றல்நீ ரூறுகின்ற தெளிந்தகடலொடுகலந்து சோலைகளிலேசென்றுபரவிப் பின்னர் உயர்ந்தமாளிகைகளின் சாளரங்களின் வழியாகக்கள்ளைக் குடித்தவர்களைப்போல மெல்லென அசைந்துலாவாநிற்கும்.—எ-று. (சுங)

மாட மீதமர் மடந்தையர் தம்முரு வனப்புக்
கூட வேபுனைந் தணிநிழற் காண்பது குறித்துப்
பாடு சேர்கர நீட்டியே பகலவற் பற்றி
யாடி நீர்மையி னோக்கியே யந்தரத் தெறிவார்.

(இ-ள்.) மேன்மாளிகைகளிலே வாசஞ்செய்கின்ற பெண்கள் தங்களுடலினழகு மிகுதியாகும்படி அலங்கரித்துக்கொண்டு அழகிய நிழலாகிய பிரதிவிம்பத்தைப்பார்க்கவேண்டுமென்றுகருதி பெருமைபொருந்திய கைகளைநீட்டிச் சூரியனைப்பிடித்து கண்ணாடியின் றன்மையாகப்பார்த்துப் பின்னர் வானத்தின்மீதெறியாநிற்பர்கள்.—எ-று

வன்ன மாடமே லாடவர் பரத்தமை மகளி
ருன்னி யூடியே பங்கியீர்த் தடிகளா லுதைப்பப்

பொன்னி னுணறத் தமதுகை யெழிலியுட் போக்கி
மின்னு வாங்கியே யார்த்தனர் குஞ்சியை வீக்கி.

(இ-ள்.) அழகிய மாளிகைளின்மீது புருடர்களை வேசித்தொழிலினையுடைய பெண்கள் நினைத்துப் பிணங்கி சிகையைப்பிடித்திழுத்து கால்களாலுதையாநிற்க அதனுற்றங்கள் குறுகிய குடுமையிற்கட்டியிருந்த பொன்கயிறு அறுந்துபோக அதற்குப்பதிலாகத் தங்கள்கைகளை மேகங்களுக்குள்விட்டு மின்னலையெடுத்து சிகையை அவிழாமலிறுகக் கட்டினார்கள்.—எ-று. (கூரு)

முழங்கு வானதி தோய்ந்தசின் மாளிகை முகட்டி
னழுங்க லென்பதை யுணர்கிலா மாதரா ரகல்வான்
வழங்கு கோளுட னுருமினைப் பற்றியம் மனையுங்
கழங்கு மாயெறிந் தாடுவ ரலமரக் கண்கள்.

(இ-ள்.) முழங்குகின்ற ஆகாயகங்கையிற் படிந்த மாளிகைகளினுச்சியில்வருத்தமென்பதை இன்னதென்றறியாமல் வாழுகின்றபெண்கள் பெரிய ஆகாயத்திலே உலாவுகின்ற செவ்வாயாதியகிரகங்களையும் இடிகளையும் பிடித்து அம்மானையும் கழங்குமாக எறிந்து கண்கள் சுழலமிட விளையாடுவார்கள்.—எ-று. (கூசு)

ஈண்டை மாளிகை மங்கையர் தஞ்சிறு ரிரங்க
வாண்டு மற்றவ ராடுவான் பற்றியா தவன்றேர்
பூண்ட மான்றொகை கொடுத்தலு மாங்கவன் போந்து
வேண்டி நின்றிட வாங்கியே யுதவுவார் மெல்ல.

(இ-ள்.) இவ்விடத்திலுள்ள மாளிகைகளிலே வசிக்கின்ற பெண்கள் தங்கள் குழந்தைகள் பிடித்துத்தாவென்றழும்போதெல்லாம் அவர்கள் அவ்விடத்தி லச்சிறுவர்கள் விளையாடும்பொருட்டு சூரியன்து தேரிற்கட்டியுள்ள குதிரைகளைப்பிடித்துக் கொடுத்தலும் உடனே அவ்விடத்திற்கு அந்த சூரியனிறங்கிவந்து என்குதிரைகளை அளிமினென்றுவேண்டிக்கொள்ளுதலும்அக்குழந்தைகளின் கைகளினின்றும் அவைகளைமெல்லென வாங்கிக்கொடுப்பார்கள்.—எ-று. (கூஎ)

நீடு மாளிகை மிசைவரு மாதர்கை நீட்டி
யீடு சாலுரு மேறுடன் மின்பிடித் திசைத்தே
யாடு கிங்கிணி மாலையா மைந்தருக் கணியா
வோடு கொண்டலைச் சிறுதுகி லாப்புனைந் துகப்பார்.

(இ-ள்.) பெண்கள்தங்கள்கைகளைநீட்டிஉயர்ந்தமாளிகைகளின்மீதுவருகின்ற வலிமிக்க ஆணிடிகளுடன் மின்னல்களைப்பிடித்துக்கட்டி அசைகின்ற கிங்கிணிமாலைகளாகத் தங்கள் குழந்தைகளுக்கணிந்து ஓடும்படியான மேகங்களைப்பிடித்து சிற்றுடைகளாகக் கட்டி அதனைப்பார்த்து மகிழ்வார்கள்.—எ-று. (கூஅ)

பொங்கு மாமணி மேற்றலத் திரவிபோந் திடலு
மிங்கி தோர்கனி யெனச்சிறு ரவன்றனை யெட்டி
யங்கை பற்றியே கறித்தழ லுறைப்பவிட் டழுங்கக்
கங்கை வாரிநீ ரூட்டுவார் கண்டநற் றாயர்.

(இ-ள்.) விளங்குகின்ற பெரிய அரதனங்களிட்டிழைத்தநள்ளமாளிகைகளின் மீது சூரியன்வருதலும் சிறுவர்கள் இதுஒருபழமாக்குமென்று எட்டிக்கையாற்பிடித்துக் கடித்து அது சுடுதலால் விட்டு அழுதலும் அதனைப்பார்த்த அவர்களைப்பெற்றதாய்மார்கள் அச்சுடுகைஒழியும்படி ஆகாயகங்கையின் நீரைமொண்டுகுடிப்பிப்பார்கள்.எ-று.

கண்டு வந்தனை வரும்புகழ் தஞ்சிறார் கலுழ
விண்டு வந்தனை செய்தெனத் தாழ்ந்தமே னிலத்தில்
வண்டு வந்தணைப் படுகதிர் கைம்மலர் வலிந்து
கொண்டு வந்தனை மாரிரங் காவகை கொடுப்பார்.

(இ-ள்.) யாவர்களும் பார்த்து மகிழ்ந்து புகழுகின்ற மேகம்வணங்கினாற்போலதாழ்ந்து கிடக்கின்ற மேன்மாளிகையிலுள்ள அசுரர்களும் அசுரமாதர்களும் தங்கள் குழந்தைகள் அழுதலும் அவர்கள் அழாதிருக்கும்படி வளப்பம்பொருந்திய இரண்டென்னும் எண்ணைப்பொருந்திய சூரியனது கைகளிலுள்ள தாமரை புஷ்பத்தைப்பிடுங்கி எடுத்துக்கொண்டு வந்து கொடுப்பார்கள்.—எ-று. (சுo)

அஞ்சி லோதியர் மாளிகை மிசைச்சில ரகல்வான்
விஞ்சு தேவரை விளித்தலு மெய்யுறன் மறுப்ப
வஞ்சர் வஞ்சரென் றரற்றியவ் வானவ ரிசைய
நஞ்சி றாருட னாடுது மென்பர்நண் ணினர்க்கு.

(இ-ள்.) மாளிகைகளின்மீது சில அழகிய சில்லாகிய தகட்டணி அணிந்தகூந்தலினையுடைய அசுரமாதர்களிற்சிலர் விரிந்தவானத்தை வழியாகக்கொண்டு செல்லுகின்ற தேவர்களை அழைத்தலும் அவர்கள் கூடுதற்கு ஒவ்வாதுசெல்ல உடனே இவர்கள் திருடர் திருடர் என்றுகூவிப் (பயமுறுத்துதலால் அசுரர்களுக்குப்பயந்து அவர்களிஷ்டத்துக்குச்) சம்மதப்படுதலும் அந்தசமயத்தில் வந்தநாயகர்களுக்கு நமது குழந்தைகளுடன் விளையாடுகின்றோம் என்று கூறுவார்கள்.—எ-று. (சுக)

பொருளின் மாளிகைப் படிற்றியர் புணர்வரென் றுன்னி
வரவு மஞ்சுவர் வராமையு மஞ்சுவர் மீடவார்
சுரவின் மேவுத லவுணர்கள் காண்பர்கொ லென்றும்
வெருவு கின்றன ரென்செய்வார் விண்ணெறிப் படர்வார்.

(இ-ள்.) ஆகாயவழியே செல்பவர்கள் பொன்மயமான மாளிகைகளிலுள்ள சோரமாதர்கள் புணர்வார்களே என்று நினைத்து வருதற்கும் பயப்படுவார்கள் வராதிருத்தற்கும் அஞ்சுவார்கள் இவ்வசுரமாதர்கள் சோரஞ்செய்வதை அசுரர்கள் கண்டுவிடுவார்களோ என்றும்(கருதி) அஞ்சுகின்றார்கள் என்ன செய்வார்கள்.—எ-று. (சுஉ)

மேனி லந்தனின் மங்கையர் சிறார்விடா திரங்க
வூன மில்கதிர் தேர்வர வவரையாண் டுய்த்து
வான கந்தனிற் சில்லிடை யேகிநம் மகவைப்
பானு வந்துநீ தருகென விடுக்குநர் பலரால்.

(இ-ள்.) மேன்மாளிகைகளிலுள்ள பெண்களிற்பலர் தங்கள் சிறுவர்கள் விடாமலழுதலும் குற்றமற்ற சூரியனது தேர் அவ்வழியாகவருதலைப்பார்த்து அதில் அக்குழந்தைகளைத் தூக்கிவைத்து ஏ பானு நீ ஆகாயத்திற் சற்று தூரஞ்சென்று நமது குழந்தையைத் திரும்பக்கொண்டுவந்து விடக்கடவை என்றனுப்புகின்றார்கள்.—எ-று. (சுங)

கலதி யாகிய வவுணர்தம் மாதர்கால் வருடிச்
சிலதி யாரென வணங்கினோ ரேவல்செய் கிற்பார்
சலதி யார்தரு முலகமேற் றெரிகுறிற் றவமே
யலதி யாவுள வேண்டியாங் குதவநின் றனவே.

(இ-ள்.) மூதேவிகளாகிய அசுரமாதர்களது கால்களைப்பிடித்துக்கொண்டு தோழியர்களைப்போல தேவமாதர்கள் ஊழியஞ்செய்யா நிற்கின்றார்கள் கடல் சூழ்ந்த

உலகத்தில் உணருமிடத்துத் தவமே சிறந்ததாம் அல்லாமல் வேறே எதுவிரும்பின இஷ்டைத்தைத் தரும்படியாக நின்றுள்ளது.—எ-று. (சச)

ஐந்த வாகிய தருக்களு மணியுநல் லாவு
நந்து மம்புய நிதியமும் பிறவுமிந் நகரின்
மைந்தர் மாதர்க ளிருந்துழி யிருந்துழி வந்து
சிந்தை தன்னிடை வேண்டியாங் குதவியே திரியும்.

(இ-ள்.) ஐந்தென்று சொல்லப்படுகிற கற்பகவிருக்ஷங்களும் சிந்தாமணியும் நல்ல காமதேனுவும் உயர்ந்த பத்மநிதியும் மற்றையவைகளும் இந்நகரத்திலுள்ள புருடர்களும் பெண்களும் இருக்கும் இடங்கள்தோறும் இருக்கும் இடங்கள்தோறும்போய் அவர்கள் மனதில் விரும்பினவற்றை அளித்துக்கொண்டுலவாநிற்கும்.—எ-று. (சரு)

மீது போகிய மாளிகைக் காப்பினுண் மேவு
மாதர் வானெறிச் செல்லுவோர் சிலர்தமை வலித்தே
காத லாற்பிடித் தொருசிலர் முறைமுறை கலந்து
போதி ராலென விடுப்பர்பின் னசமுகி போல்வார்.

(இ-ள்.) அசமுகியைப்போன்ற சில அசுரமடந்தையர்கள் மேலே உயர்ந்த மாளிகைகளுக்குள் காவலுடனிருக்கின்றவர்கள் ஆகாயமார்க்கமாகப்போகின்ற சிலரை துராகிருதமாகப்பிடித்து வரிசைவரிசையாகப்புணர்ந்து (இனிநீங்கள்)போங்கள் என்று கூறிவிட்டனுப்புவார்கள்.—எ-று. (சசு)

வேறு.

மேதாவி கொண்டகதிர் வெய்யவனை வெஞ்சூர்
சேய்தான் வலிந்துசிறை செய்திடலின் முன்ன
மேதாமி னங்கொலென வெண்ணியவ னென்றாழ்
வாதாய னங்கடொறும் வந்துபுக லின்றே.

(இ-ள்.) மேன்மைபொருந்திய கதிர்களையுடைய சூரியனைக் கொடியசூரபன்மனது குமாரனாகிய பாநுகோபன்பிடித்துச் சிறையிலடைத்தமையால் இவ்வாறு நுழைந்தமையால் நாம் எவ்வாறாயினோமென்று நினைந்து அச்சூரியனது கிரணக்கதிர்கள் சாளரங்கள்தோறும்போய்ப்புகுதலில்லை.—எ-று. (சஎ)

தேசுற்ற மாடமுறை சீப்பவரு காலோன்
வாசப்பு னற்கலவை வார்புணரி கொண்கன்
வீசப்பு லர்த்தியிட விண்படரும் வெய்யோ
னூசுற்ற தானவ ரமர்ந்திவ ணிருந்தார்.

(இ-ள்.) ஒளிபொருந்திய மாளிகைகளைப் பெருக்குதற்கு முறைப்படி வருகின்றவாயுதேவன் அலகிடவும் வாசனைபொருந்திய நீரிலே சவ்வாது முதலியவற்றைக் கலந்துசமுத்திரநாயகனாகிய வருணன் தெளிக்கவும் ஆகாயவழியாகச் செல்லுகின்ற சூரியன்அந்த ஈரத்தை உலரச்செய்யவும் களங்கம்பொருந்திய அசுரர்கள் இவ்விடத்தில்சுகமாக வாழ்கின்றார்கள்.—எ-று. (சஅ)

பால்கொண்ட தெண்கடன் மிசைப்பதுமை தன்னை
மால்கொண்டு சண்டுயிலும் வண்ணமிது வென்ன
மேல்கொண்ட நுண்புனித மேனிலம தன்கட்
சூல்கொண்ட காரெழிலி மின்னினொடு துஞ்சும்.

(இ-ள்.) பாலைத்தன்னிடத்துக்கொண்டுள்ள தெளிந்த கடலின்மீது திருமகளையுடன்கொண்டு நாராயணனுறங்குவதைப்போல உயர்வுபொருந்திய நுண்ணியகர்ப்பூரம்

போன்ற சுண்ணும்பிட்டு மெழுகிய வெண்ணிறம்பொருந்திய மாளிகைகளின்மீது கருக்கொண்டுள்ள கரியமேகங்கள் மின்னலுடனே தங்கிக்கிடக்கும்.—எ-று. (௪௯)

வேறு.

குழலி னோதையு மெழால்களி னோதையுங் குறிக்கும்
வழுவில் கோட்டொடு காகள வோதையு மற்றை
முழவி னோதையும் பாடுந ரோதையு முடிவில்
விழவி னோதையுந் தெண்டிரை யோதையின் மிகுமால்

(இ-ள்.) குழற்கருவிகளின் முழக்கமும் நரப்புக்கருவிகளாகிய வீணைகளினோசையும் குற்றமற்ற கொம்புகளுடனே காகளங்களின் ஓசைகளும் இதுவன்றியுள்ள மத்தளங்களினோசையும் பாடுவோர்களதோசையும் அழிவில்லாத உத்ஸவங்களின் ஓசையும் தெளிந்ததிரைகளையுடைய கடலோசையை விட அதிகரியாநிற்கும்.—எ-று. (௫௦)

மதனி ழுக்குறு மைந்தரு மாதரும் வனமா
மதனி ழுக்கிய வீதியில் வீசும்வண் கலவை
பதனி ழுக்குறச் சேதக மாகுமீன் பலவும்
பதனி ழுக்கிய வாந்தினம் புனைந்தெறி பணிகள்.

(இ-ள்.) மன்மதனையும் அழகினாலழிவுபடுத்துகிற வாலிபர்களாகிய புருடர்களும் பெண்களும் யானைமதத்தாற்போவார்களை வழுக்கிவிழச்செய்கின்ற வீதிகளிலே எறிந்த வளப்பமான கூட்டுவருக்கச் சந்தனங்கள் கால்வழுக்கும்படி சேறாகாநிற்கும் தினந்தோறும் அவர்கள் தரித்துக் கழித்து எறிந்த ஆபரணங்கள் நக்ஷத்திரங்கள் பலவும் தங்கள் பதவிகளினின்றும் தவறி விழுந்தனபோல (காணப்படும்).—எ-று. (௫௧)

அளப்பில் வேட்கையங் கொருவர்கண் வைத்துமற் றதனை
வெளிப்ப டுக்கிலர் மெலிதலுங் குறிகளை விளம்ப
வொளிப்ப தென்னுளம் பகரென வாற்றலா துடைந்து
கிளிப்பெ டைக்கிருந் தொருசில மடந்தையர் கிளப்பார்.

(இ-ள்.) அளவற்ற ஆசையை ஒருவர்மீதுகொண்டு அதனைவெளிப்படுத்தாமல் வருத்தப்படுத்தலும் அவர்கள் கொண்டிருக்கும் ஆசையை அவர்களதங்கசேட்டைகளை வெளிப்படுத்துதலும் புருடர்கள் அதனையுணர்ந்து உன்மனதிலென்னவென்றொருவாறாக இருக்கின்றாய்சொல் என்னலும் உள்ளடக்கிய விஷயத்தை மறைக்கத்திறமின்மையால் அவருடன் பெண்கிளியை முன்னிலையாக்கி தம்மனத்திலுள்ள இச்சையைச் சில பெண்கள் வெளிப்படுத்துகின்றார்கள்.—எ-று. (௫௨)

குருளை மான்பிணித் திளஞ்சிறா ரூர்ந்திடுங் கொடித்தே
ருருளை யொண்பொனை மணித்தலங் கவர்ந்துகொண் டுறுவ
வெருளின் மாக்களை வெறுப்பதென் முனிவரும் விழைவார்
பொருளி னாசையை நீங்கினர் யாவரே புவியில்.

(இ-ள்.) இளமைவாய்ந்த மான்களைக்கட்டிச் சிறுவர்களாலே ஓட்டப்படுகிற கொடிகளையுடைய தேர்களின் உருளைகள் பொன்னினை அழகிய பூமியினிடங்களில் நின்றும் கவர்ந்துகொண்டுசெல்லுகின்றன அச்சமற்ற சிறுவர்களிதற்குக் காரணமானார்களென்று அவர்களை என்வெறுத்துக்கொள்ளவேண்டும் பொன்னைக்கண்டால் முனிவர்களும் விரும்புவார்கள் இவ்வுலகத்திற் பொன்னாசையை விட்டவர்கள் யார்.—எ-று.(௫௩)

விழைவு மாற்றிய தவத்தின ரேனுமிவ் வெறுக்கை
மொழியி னேரினு மவுணரா கத்தவ முயல்வா

சொழியு மேனையர் செய்கையை யுரைப்பதென் னுலகிற்
கழிபெ ரும்பக னோற்றவ ரேயிது காண்பார்.

(இ-ள்.) நிராசையினையுடைய தவசிகளாக விருந்தாலும் இச்செல்வத்தை சொல்லளவினாலே கேட்டனரினும் (ஆசைகொண்டு) அசுரர்களாகும்படி தவஞ்செய்வார்கள் இவர்களன்றியுள்ள மற்றையோர்களது செய்கையை எவ்வாறு கூறுவது உலகத்தில் மிகுதியாகவுள்ள இந்நகரத்தை மிகவுந்தவஞ்செய்தவர்களேகாண்பார்கள்.—எ-று.(ருச)

குழவி வான்மதிக் கிம்புரி மருப்புடைக் கொண்மூ
விழுமெ னச்சொரி தானநீ ராறுபோ லேகி
மழலை மென்சிறு ராவணத் தாடும்வண் சுண்ணப்
புழுதி யீண்டலின் வறப்பவான் கங்கையும் புலர.

(இ-ள்.) இளையவெள்ளிய பிறைபோன்ற பூண்கட்டிய கொம்புகளையுடைய யானையாகியமேகம் இழுமென்னுமொலியுடன் ஒழுக்குகிற மதநீர் ஆகாயகங்கையுஞ் சிறியதென்னும்படி ஆறுபோற்சென்று மழலைச்சொற்களையுடைய இளஞ்சிறுவர்கள் வீதிகளிலே விளையாடுகின்ற மெல்லிய சுண்ணப்பொடி கலத்தலால்வற்றுநின்றன.

கங்கை யூண்பய னாகவுந் தூயதெண் கடனீ
ரங்கண் மாநகர்ப் பரிசன மாடவு மணைந்து
துங்க மேனிலை மாளிகை யாவணஞ் சோலை
யெங்கும் வாவியும் பொய்கையும் பிறவுமா யீண்டும்.

(இ-ள்.) கங்கையாற்று நீர் பானத்துக்குரிய நீராகவும் நன்னீர்க்கடல் அந்தப் பெரிய நகரத்துள்ள ஜனங்கள் குளிக்கு நீராகவும்வந்து உயர்ந்த மேனிலைகளையுடைய மாளிகைகளிலும் வீதிகளிலும் சோலைகளிலும் எவ்விடங்களிலும் வாவீகூபதடாகங்களும் பிறவுமாக நெருங்கி நிற்கும்.—எ-று. (ருசு)

வில்லி யற்றுவோர் வாட்படை யியற்றுவோர் வேறு
மெல்லை யில்படை யுள்ளவு மியற்றுவோ ரிகலான்
மல்லி யற்றுவோர் மாயம தியற்றுவோர் மனுவின்
சொல்லி யற்றுவோர் கண்ணுறு புலந்தொறுந் தொகுமால்.

(இ-ள்.) வில்லையுண்டாக்குபவர்களும் வாளாயுதத்தை உண்டாக்குபவர்களும் இதுவன்றியுள்ள அளவற்ற ஆயுதங்களைச் செய்பவர்களும் வலிமையால் மல்யுத்தம் பயில்பவர்களும் ஜாலஞ்செய்பவர்களும் மந்திரோச்சாடனஞ்செய்பவர்களும் பார்க்கப்படுமிடங்களிலெல்லாங் காணப்படுகிறார்கள்.—எ-று. (ருஎ)

நாடி மேலெழத் தசையிலா துலறியே நரையாய்க்
கோடு பற்றிமுத் தசைந்திடு வோரையுங் கூற்றால்
வீடு வோரையும் பிணியுழப் போரையு மிடியால்
வாடு வோரையுங் கண்டில மிதுதவ வலியே.

(இ-ள்.) நரம்புகள் மேலேதெரிய மாமிசமனைத்தும் வற்றி உலர்ந்து நரைத்து கோலூன்றி முதிர்ந்து நடுங்குபவர்களையும் எமனாற் சாமவர்களையும் வியாதியனுபவிப்பவர்களையும் தரித்திரத்தால் வாடுகின்றவர்களையும் கண்டோமில்லை இவ்வாறு காணமலிருப்பதற்குக் காரணம் இந்நகரிலுள்ளவிவர்கள் செய்ததவத்தின்வல்லமையே ஆம்.எ-று.

கன்னன் மாண்பயன் வாலளை நெய்கடுந் தேற
றுன்னு தீயபா லளக்கர்தம் பேருருச் சுருக்கி
மன்ன னணையா லிந்நகர் மனைதொறு மருவிப்
பன்னெ டுங்குள னாகியே தனித்தனி பயில்வ.

(இ-ள்.) மாசுநீமைதங்கிய கருப்பஞ்சாறும் வெள்ளிய தயிரும்நெய்யும் முதிர்ந்ததேனும் நினைக்கத்தக்க இனிப்பினையுடையபாலும் ஆகிய கடல்கள்தங்கள் பெரிய உருவத்தைச் சுருக்கி அரசனாகிய சூரபன்மனது கட்டளையால் இந்த நகரத்திலுள்ள வீதிகள்தோறும் பொருந்தி பலநெடியகுளங்களாகித் தனியேதனியே இராநின்றன.

அட்ட தேறலு மடாதமை தேறலு மருந்திப்
பட்டு வார்துகில் கீறியே தம்மொடு பறைந்து
விட்ட நாணினோ ரொருசில மடந்தையர் வியன்கை
கொட்டி யாவரும் விழைவுறக் குரவையாட் டயர்வார்.

(இ-ள்.) காய்ச்சிய மதுவையும் காய்ச்சாதமதுவையும் குடித்து நீளம்பொருந்திய பட்டுவஸ்திரங்களைக் கிழித்தெறிந்து தானாகபேசிக்கொண்டு வெட்கம்விட்டவர்களாய்ச் சிலமாதர்கள் பெரியகைகளைக்கொட்டி எல்லாரும்விரும்பும்படி குரவைக் கூத்தாடுவார்கள்.—எ-று.

அட்டதேறலென்றது-சாராயத்தை. அடாதமை தேறல் என்றது-கள்ளை. குரவைக்கூத்தென்பது-மாதர்பலர்கூடி கைகோத்தாடுமோர் ஆட்டம். (சுo)

திலக வாணுதன் மாதரா டவர்சிறு வரையி
னலகி லாமுறை புனைதலி னணிந்தணிந் தகற்று
மிலகு பூண்டுகின் மாலைகந் தம்பிற வீண்டி
யுலகில் விண்ணக மெனச்சிறந் தாவண முறுமே.

(இ-ள்) திலதமிட்ட நெற்றியினையுடைய பெண்களும் புருடர்களும் க்ஷணத்துக்கு க்ஷணம் அநேகந்தரமாகத்தரித்துக்கொள்ளுதலால் தரித்துத்தரித்து அகற்றுகின்ற விளங்காநின்ற ஆபரணங்கள் ஆடைகள் மாலைகள் சந்தனங்கள் முதலியவைகளும் மற்றவைகளும் நெருங்கி இது இவ்வுலகிலுள்ள சுவர்க்கமென்று கூறும்படி வீதிகள் விளங்காநிற்கும்.—எ-று.

அலங்காரஞ்செய்தலையே பெருங்காரியமாகக்கொண்டுள்ளவர்கள் என்பார் "சிறுவரையில்" என்றார். (சுக)

கொய்த லர்ந்தபூ நித்தில மணியுடன் கொழித்துப்
பொய்த லாடுவார் முற்றிலா லெற்றுபொற் பூழி
யெய்த லானதிந் நகரள வோகட லிகந்து
நெய்த லங்கரைக் கானலை யடைந்துமே னிமிரும்.

(இ-ள்.) விளையாடுகின்ற பெண்கள் விரிந்த பூவினைப்பறித்து முத்துக்களையும் ஒன்றாயிட்டு முறத்தினால்கொழித்து புடைக்கின்ற பிரகாசமான புழுதி இந்நகருள் மாத்திரந்தானா வருகின்றது கடலைக்கடந்து மறுகரையிலுள்ள நெய்தலினது கரையிற்பொருந்திய சோலையையடைந்து மேலேயும்போகும்.—எ-று.

கானலென்பது-கழிக்கரைச்சோலை. (சுஉ)

சுந்த ரங்கெழு செய்யவெண் மலர்களாற் றொடுத்த
கந்து கங்களைச் சிறுவர்கள் கரங்களி னேந்தி
யந்த ரம்புக வெறிதலு மாங்வன மேகி
வந்து வீழ்மா லிருகதிர் வழுக்கிவீழ் வனபோல்.

(இ-ள்.) அழகுவாய்ந்த செந்நிறமும் வெண்ணிறமுமான மலர்களாற்தொடுக்கப்பட்ட பந்துகளைச் சிறுவர்கள் கைகளிலெடுத்துமேலே செல்லும்படி எறிதலும்மேலே சென்று சூரியசந்திரர்கள் தவறிக் கீழேவிழுந்தார்களென்று கூறும்படி கீழேவந்து விழாநிற்கும்.—எ-று.

சூரியனுஞ் சந்திரனும் இயற்கையில் செந்நிறமும் வெண்ணிறமுடையவர்களா தலால் செம்மலர்ப்பந்தைச் சூரியனைப்போலவும் வெண்மலர்ப்பந்தைச்சந்திரனைப்போலவுங் கூறினர். (சுரு)

கழக மீதுமுன் போந்திட முதுகணக் காயர்
குழகு மென்சிறார் தனித்தனி வந்தனர் குறுகிப்
பழகு கற்பினூல் பயின்றனர் மாலையிற் பட்ட
வழகு சேர்மதிப் பின்னெழு கணங்கண்மொய்த் தனையார்.

(இ-ள்.) முதிர்ந்த வாத்திமார்கள் பள்ளிக்கூடங்களில் முன்னேவர பின்னர் மாலைக்காலத்திலுதிக்கின்ற அழகுபொருந்திய சந்திரோதயத்திற்குபின்பு உதயமாகிற நக்ஷத்திரங்கள் மொய்த்துக்கொண்டாற்போல மிகவும் இளஞ்சிறுவர்கள் தனியே தனியேவந்து பழகவேண்டிய கற்கத்தக்க நூல்களை கற்காநின்றனர்.—எ-று.

பள்ளிக்கூடமே ஆகாயம் கணக்காயனே சந்திரன் மாணவர்களேநக்ஷத்திரங்கள்.

கள்ளி னூற்றலாற் களிப்பவர் தேறலைக் கரத்திற்
கிள்ளை யாணினுக் கூட்டியே காமநோய் கிளர்த்தி
யுள்ள மோடிய சேவலு மிரங்கவோ திமத்துப்
புள்ளின் மென்பெடை மீமிசை கலந்திடப் புணர்ப்பார்.

(இ-ள்.) குடித்தகள்ளின்வன்மையாற் மயக்கங்கொண்டவர்கள் தங்கையிலுள்ள ஆண்கிளிகளையுண்பித்து காமநோயையுண்டாக்கிக் காமத்தில் மனஞ்சென்றுள்ள ஆணன்னமும்வருந்த அன்னமாகிய மெல்லிய பெண்பறவையின்மீதுவிட்டு சேரும்படி புணர்த்துவார்கள்.—எ-று.

ஆண்கிளியைப் பெண்ணன்னத்தைப்புணர விடுதல் முறைமையோ எனின் கட்குடியால் வெறியேறினருக்குமுறையல்லதும் முறையாமெனக்குறிப்பால் மதுபானத்தை இகழ்வார் "கள்ளினூற்றலால்" என்றனர். (சுடு)

உரத்தின் முன்னரே வெளவிவந் திட்டிய வும்பர்
சிரத்தின் மாமுடித் திருமணி பறித்தொரு சிலவ
ரரத்த மேயதம் பங்கியிற் பஞ்சிக ளழுத்தும்
பரத்தை மாரடிப் பாதுகைக் கணிபெறப் பதிப்பார்.

(இ-ள்.) தங்கள் வலிமையால் முன்னமே அபகரித்துக்கொண்டுவந்து சேர்த்துள்ள தேவர்களது தலையிற்றரித்திருந்த முடிகளிலுள்ள அழகியமணிகளைப் பறித்தெடுத்து ஒருசில அசுரர்கள் செவ்வரக்குப்போலும் நிறம்வாய்ந்த தங்கள் தலையுரோமங்களில் உதைப்பதனாற் செம்பஞ்சின்சாயத்தை யுண்டாக்குகிறபரத்தையர்களது பாதக்குறடுகளிலழகுண்டாகும் வண்ணம்பதிப்பார்கள்.—எ-று.

சிறப்புப்பொருந்திய தேவர்களிடத்தில் அசுரர்கள் வைத்திருக்கும் மதியாமையை விளக்குவான் "மாமுடி" என்றார். (சுசு)

தேவி மார்பலர் வருந்தவு மனையர்பாற் சேரா
ராவி போவது நினைகில ராகியே யயலார்
பாவை மார்தமை வெஃகியே பட்டிமை நெறியான்
மேவு வார்சிலர் காண்பதே யிதுவுமென் விழியே.

(இ-ள்.) மணஞ்செய்துகொண்ட தனது பல மனைவியர் தம்மொடு புணராது செல்கின்றானே என்றுநினைந்து வருந்தவும் அவர்களோடு கூடாதவர்களாய் உயிர்போகவருமே இதனுலென்றுநினையாமல் அயலார்மனைவியர்களை சோரவழியாகப்புணருதற்கு

வி நம்பிப்போகின்றார்கள் சிலர் இப்படிப்பட்ட காரியத்தையும் எனது விழிகள் இங்குபார்க்கின்றனவல்லவா.—எ-று.

மணஞ்செய்த மனைவியர் வருந்த அயன்மாதர்களைப் புணர்ச்சிசெய்பவர்கள் இவ்வுலகத்திற் பலராலும் இகழப்படுபவர்களாவதுடன் நரகத்திலும்பின்னர் வருந்தவேண்டியவர்களே என்பதை உணர்ந்தவர்கள் அவ்விதவியல்புடையவர்களைக் கண்ணாலும் பாாரென்று குறிப்பிப்பார் "காண்பதே இதுவுமென்விழியே" என்றார். (சுஎ)

நெருக்கு பூண்முலை யியக்கர்தம் மங்கையர் நெஞ்ச
முருக்கு மேருடை யமரர்தம் மங்கைய ருளத்தி
னிரக்க நீங்கிய வவுணர்தம் மங்கைய ரேனை
யரக்கர் மங்கையர் கணிகைமங் கையர்களா யமர்வார்.

(இ-ள்.) நெருங்கிய ஆபரணமணிந்த கொங்கைகளையுடைய இயக்கமாதர்களும் பார்ப்பவர்களுடைய மனத்தை உருக்குகிற அழகுவாய்ந்த தேவமாதர்களும் மனதிரக்கமென்பதில்லாத அசுரமாதர்களும்இன்னமுள்ள அரக்கஜாதியர்களது பெண்களும் (ஆகிய இவர்களே) இந்நகரத்தில் வேசைமாதர்களாக இருப்பவர்கள்.—எ-று.

எல்லாமாதர்களிலுஞ் சிறந்த அழகுடையவர்களிருப்பினும் தேவமாதர்களுக்கு இணையாகார்கள் என்பதை யுணர்த்த அவர்களைக்கூறுங்கால் "நெஞ்சமுருக்குமேருடையமரர் தம்மங்கையர்" என்றார். (சுஅ)

கந்த மானபல் களபமுஞ் சுண்ணமுங் கமழும்
பந்து மாலையுஞ் சிவிறிநீ ரொடுபரத் தையர்கண்
மைந்த ரோடெறிந் தாடல்யா ருளத்தையு மயக்கு
மிந்த வீதிகொல் லுருவுகொண் டநங்கன்வீற் றிருத்தல்.

(இ-ள்.) வாசனைபொருந்திய பலவகைச்சந்தனக்கூட்டுக்குழம்புகளும் சுண்ணப்பொடிகளும் மணம்வீசுகின்ற பந்தும் பூமாலையும் (சிறுநீர்த்துருத்தி) நீருடனே வேசையர்கள் புருடர்களுடனே இறைத்து விளையாடுதலைக் கண்டவர்களது மனத்தை மயக்குகின்ற இந்த வீதிதானோ மன்மதன் உருக்கொண்டு கொலுவிருக்கும் இடம்.—எ-று.

இவ்விடத்திற் காமகேளிகளையன்றி வேறொன்றுங்காணப்படாமையால் இதனை மன்மதன் தானே உருக்கொண்டுவந்த வீதியோ என்று ஐயத்துடன் கூறினாரென்பார் "இந்த வீதிகொல்" என்றார். (சுகூ)

பொன்னி னன்னமும் பதுமரா கம்புரை புறவுஞ்
செந்ந லங்கிளர் மஞ்ஞையுஞ் சாரிகைத் திறனும்
பன்னி றங்கெழு புள்ளின மீனையன பலவு
மின்ன தொன்னகர் மங்கையர் கரந்தொறு மிருப்ப.

(இ-ள்.) பொன்போன்ற நிறம்வாய்ந்த அன்னப்பறவைகளும் பதுமராகமணியை ஒத்த புறாக்களும் செந்நிறத்துடனே விளங்குகின்ற மயில்களும் நாகணவாயிற் பலசாதிகளும் இதுவன்றியுள்ள பலநிறங்களோடு விளங்குகின்ற அநேகவிதமான பறவைகளும் இந்தப்பெரிய ஊரிலுள்ள பெண்களது கைகளிலெல்லாம் இருக்கின்றன.—எ-று.

பண்டு வேட்டவர் பின்முறைப் பாவையர் பரிவிற்
கண்டு பின்வரை மங்கையர் கானம தியற்றிக்
கொண்ட வில்வழிப் பரத்தையர் கணிகையர் குழாத்துள்
வண்டு பூவுறு தன்மைசென் றுடவர் மணப்பார்.

(இ-ள்.) முன்னங்கல்யாணஞ் செய்துகொண்டவர்களிடத்திலும் இதுவன்றிப் புணர்தற்குமுறைமையுடைய மங்கையர்களிடத்திலும் விருப்பத்துடனே கண்டு யோக

ங்கொண்டு பின்னர் மணந்தவர்களிடத்திலும் இசைபாடிவென்ற இல்வழிப்பரத்தையரிடத்திலும் இதுவன்றியுள்ள வேசைமாதர்களிடத்திலும் வண்டுகள் பலசாதியாகிய புஷ்பங்களிலுள்ள தேனைச்சென்றுண்பதைப்போல புருடர்கள் இந்நகரத்திற் புணருகின்றூர்கள்.—எ-று.

பண்டுவேட்டவராவார், தந்தை தாயர் சுற்றத்தினர் முதலியோர்களாற் குலமுங் கோத்திரமுங் கேட்டுப் பெண்ணுக்குப் பொன்சூட்டித் தீமுன்னர்ச்செய்துகொண்ட மணத்தினையுடைய இல்லக்கிழத்தியராகிய மனைவியர் முறைப்பாவையராவார். தம்மால் வரைதற்கு முறையுடையவர்களாய் சேரிப்பரத்தையர் குலத்திற்றேன்றி காமக்குவளைந்த காமக்கிழத்தியர். பரிவிற்கண்டு பின்வேட்டவராவார்-கொடுப்பாருமடுப்பாருமின்றி தாமே புணர்ந்து களவிற்சின்னுடள்ளி வரைவிற்கொண்ட காந்தருவமணமாதர். கானமதியற்றிக்கொண்டஇல்வழிப்பரத்தையாவார். இல்லிற்பரத்தைமகளாய்கானவித்தையாற் றம்மை வென்றுரைமணந்துகொள்ளுவான் நின்றுரொடு இசைப்பாடிவென்று மணந்து மனையானவர். கணிகையர் குழாமாவார் சேரிப்பரத்தையர். (எக)

தக்க மெல்லடிப் பரிபுர முழவுறத் தனமா
மிக்க தாளங்க ளொத்தமென் புள்ளிசை விரவ
விக்கு வேளவை காணிய பூந்துகி லெழினி
பக்க நீக்கியே மைந்தரோ டாடுவார் பலரே.

(இ-ள்.) அனேகம் பெண்கள் இலக்கணமமைந்த கால்களிலணிந்துள்ள சிலம்புகளாகிய மத்தளங்கள்முழங்க தனங்களென்றுசொல்லப்படுகிற சிறந்த தாளங்கள் ஒத்த மெல்லிய பறவைகளாகிய வண்டுகளினேசை கலந்துவர கரும்புவில்லினையுடைய மன்மதனது சபைகாணும்படி அழகிய சேலையாகிய திரைச்சீலையை பக்கங்களிலொதுக்கி வாலிபரோடு ஆடுகின்றூர்கள்.—எ-று.

இக்குவேளவை காணிய மாதர்களது மறைவிடம்வெளிப்பட எனினுமாம். ஆடலென்றது-கூடலே. (எஉ)

பாட்ட மைந்திடு காளைய ரணிநலம் பாரா
வேட்டு மங்கைய ரொருசிலர் தமதுமெய் விளர்ப்பக்
கூட்ட முன்னியே பன்னிறக் கலவையுங் குழைத்துத்
தீட்டு வாரவ ருருவினை வியன்கிழி திருத்தி.

(இ-ள்.) ஒப்பற்ற சிலபெண்கள் பெருமைவாய்ந்த வாலிபர்களது அழகிய உடம்பின் தன்மையைப்பார்த்து விரும்பி தங்களுடலம் ஆசையால் வெளிறடைய (எவ்வாறுவது) அவர்களோடு சேரவேண்டுமென்று கருதி பலநிறமான வன்னங்களையெல்லாங் கூட்டிவைத்துக்கொண்டு தாம்விரும்பிய புருடர்களது உருவங்களை எழுதுபடங்களில் எழுதுவார்கள்,—எ-று.

மங்கையரொருசிலரென்றது-கற்பின்மங்கையரை. கிழிதிருத்தி என்றது-தணிக்குக்கஞ்சூட்டிப் பளபளப்பாக்கிலாஞ்சனபடமாக்கியதை. (எகூ)

சுற்று விட்டலர் தாருடை வயவர்தொல் லுருவிற்
பற்று விட்டுட னுளத்தையும் விட்டுமென் பார்ப்பைப்
பெற்று விட்டிலாப் பெடைமயி றழிஇத்துயர் பேசி
யொற்று விட்டன ரொருசில ராறுபார்த் துழல்வார்.

(இ-ள்.) சிலபெண்கள் முறுக்கவிழ்ந்த மலர்மாலையணிந்த வெற்றிவீரர்களது பெரிய உருவத்தைக்கண்டு பற்றுவைத்து மனத்தையுமவர்களிடம் அனுப்பி தான்பெற்ற

இளங்குஞ்சுகளுடன் விலகாதிருக்கிற பெண்மயில்களைத்தழுவி தங்களது காமதுன்பங்களையெல்லாம் உரைத்து தூதுசென்றுவரும்படியனுப்பி போனவைகள் வாராமையால் வழியைப்பார்த்துக் கவலுவார்கள்.—எ-று.

அஃறிணை மருங்கினு மறையப்படுமே என்றிருத்தலிலிது மயிலொடுகிளத்து மரபுரைத்தது. (எச)

அகன்ற கொண்கரை நனவினெக் காலமு மகத்திற்
புகன்று மட்டித்த வெம்முலைச் சாந்தொடும் புலர்வார்
பகன்றை போன்முரல் சிலம்படிப் பாவையர் பல்லோர்
முகன்ற னிற்கரு மணிகளிற் சொரிதர முத்தம்.

(இ-ள்.) கிலுகிலுப்பையைப்போல முழங்குகின்ற சிலம்பணிந்த கால்களையுடைய பாவைபோல்பவர்களாகிய அநேகம்பெண்கள் கண்மணிகளில் நின்றும்முகத்தின் வழியாக முத்துப்போன்ற நீரொழுகும்படி பிரிந்தநாயகர்களைப்பகற்காலத்தில் எப்பொழுதும் உள்ளத்தில் நினைத்தவண்ணமாய் தனத்திற்பூசிய சந்தனக்குழம்புடன் வருந்துவார்கள்.—எ-று.

இதுதலைவனைப்பிரிந்த கற்புடைப்பெண்உரிலக்கணம். (எரு)

மங்கை மார்சில ராடவர் தம்மொடு மாடத்
துங்க மேனிலத் திடைப்படு சேக்கையிற் றுன்னி
வெங்கண் மெல்லிதழ் வேறுபட் டணிமுகம் வியர்ப்பக்
கங்கு லொண்பக லுணர்கிலர் விழைவொடு கலப்பார்.

(இ-ள்.) சிலபெண்கள் நாயகர்களுடனே உயர்ந்தமேன்மாளிகையிலுள்ள சயனங்களிற்பொருந்தி விருப்பத்தைத்தருகிறகண்களும் மெல்லியஇதழ்களும் வேறுபட்டு அழகிய முகமும்வியர்ப்ப இரவும் ஒள்ளியபகலும் உணராதவர்களாய் ஆசையுடனே புணருகின்றார்கள்.—எ-று.

இது ஒத்தகாமமுடையாரிலக்கணம். (எசு)

மறிகொள் சோரிநீர் பலியுட னொக்கிநாண் மலர்தூ
யிறைகொ ளில்லிடைத் தெய்வதம் வழிபட லியற்றிப்
பறைக றங்கவக் கடவுளை யாற்றுறப் படுத்தி
வெறிய யர்ந்துநின் றுடுவ ரளப்பிலர் மின்னுர்.

(இ-ள்.) ஆட்டினது இரத்தத்தையும் சோற்றையுங்கலந்திறைத்து அன்றலர்ந்த மலர்களைப்பரப்பி வாசஞ்செய்யும்வீட்டின் தெய்வமாகிய கிரகதேவதையைப்பூசித்து பம்பைமுதலிய வாச்சியங்கள்முழங்க அத்தெய்வத்தை வெளிப்படுத்தி வெறியாட்டுச்செய்து அநேகம்பெண்கள் ஆவேசங்கொண்டு ஆடுவார்கள்.—எ-று.

இவர்கள் மாமிசபக்ஷணிகளாதலாலிவர்கள் கிரகபலி இவ்வாறிருந்தது ஆவேசம் வருதல் என்பதை ஆற்றுறப்படுத்தி எனப்பொருண்முறையாற் கூறினர். (எஎ)

அலங்கல் வேல்விழி மாதரு மைந்தரு மமர்ந்த
பொலங்கொண் மாடமே லாடுறு பெருங்கொடி பொலிவ
மலங்கு சூழ்தரு தெண்டிரைப் புணரியில் வைகுங்
கலங்கண் மேவிய கூம்பெனக் காட்டிய வன்றே.

(இ-ள்.) ஒளிபொருந்திய வேல்போலும் கண்களையுடைய பெண்களும் புருடர்களும் வாசஞ்செய்கின்ற பொன்மயமான மாளிகைகளின்மேல் ஆடுகின்ற பெரியகொ

டிகள் விளங்குவன மலங்கென்னும் மீன்களாற்சூழப்பட்டதெள்ளிய அலைகளையுடைய கடலில் நிற்கின்ற கப்பல்களின் பாய்மரங்களைப்போல காணப்படுகின்றன.—எ-று.

அலங்கல்வேல்என்றதை மாலைசூட்டிய வேலென்னினுமாம் மலங்கு என்பதை விலாங்கு என்று கூறுவார்கள். (எஅ)

புரசை வெங்கரி புரவிதேர் பொருபடைத் தலைவர்
பரிச னங்களா தோரணர் வாதுவர் பரவ
முரச மேமுத லியமெலா முன்னரே முழங்க
வரசு வேழமா வெண்ணில சோயில்வந் தடைவ.

(இ-ள்.) கழுத்திலிட்ட கயிற்றினையுடைய கொடியயானைகளும் குதிரைகளும் தேர்களும் போர்செய்தற்குரியவர்களாகிய படைத்தலைவர்களும் ஊழியக்காரர்களும் யானைப்பாகர்களும் குதிரைவீரர்களும் சூழ்ந்துவர முரசுமுதலிய வாத்தியங்களெல்லாம் எதிரில்முழங்க (அரசுவாஎன்னும்) பட்டத்துயானைகளனேகம் அரசனிருப்பிடத்திற்குச்செல்லுகின்றன.—எ-று.

முன்காலத்தில் அரசுவாக்களுக்கு மன்னவனுக்குள்ள மரியாதைகள் உண்டு.

கள்ளு றைத்திடு மாலையம் பங்கியர் கமஞ்சூல்
வள்ளு றைப்புயன் மேனிய ரொருசிலர் வார்வி
லொள்ளு றைப்படை பிறவினிற் கவரிதூங் குறத்துத்
தள்ளு தற்கரும் வயமுர சறையமுன் சார்வார்.

(இ-ள்.) நீளம்பொருந்திய வில்லிலும் ஒளிபொருந்திய உறையோடுகூடிய வாளிலும் மற்றையவைகளிலும் சாமரங்களைத் தொங்கவிட்டு நீக்குதற்கரிய வெற்றிமுரசு முழங்கத் தேன்பொருந்திய மாலையணிந்த சிகையினர்களும் சூன்முதிர்ந்த மேகத்தை ஒத்த நிறத்தினர்களுமாகிய சிலஅசுரர்கள் முன்னே வருகின்றார்கள்.—எ-று.

அக்காலத்திற் சாமரையைச்சிறந்த மாலையைப்போல அலங்காரமாக ஆயுதங்களில் கட்டுவது வழக்கம். (அ௦)

அறுகு வெம்புலி வலியுடை மடங்கன்மா னுமாச்
சிறுகு கண்ணுடைக் கரிமரை யிரலையித் திறத்திற்
குறுகு மாக்களைப் படுத்தவற் றான்வகைக் குவால்கண்
மறுகு ளார்பெறப் பண்டிகொண் டளப்பிலோர் வருவார்.

(இ-ள்.) யாளி கொடியபுலி வலிமைவாய்ந்த சிங்கம் மான் காட்டுப்பசு சிறிய கண்களையுடையயானை மரை கருமான் என்னும் இவைகளையும் இவைகளன்றியுள்ள மற்றைப்பொருந்திய மிருகங்களையும்கொன்று அவற்றின் மாமிசக்குவியல்களை வீதியிலுள்ளவர்கள் வாங்கிக்கொள்ளும்பொருட்டு அவைகளை இட்டிருக்கின்ற பண்டிகளை அநேகம்பேர்கள் கொண்டுவருவார்கள்.—எ-று. (அக)

மஞ்சு லாவரு சிகரியுஞ் சூளிகை வரைப்பும்
விஞ்சு மேனில வடுக்கமுஞ் சோலையும் வெற்புந்
சஞ்ச ரீகமா ரோடையும் வாவியுந் தடமு
மெஞ்ச லில்லதோர் மாடங்க ளெங்கணு முளவே.

(இ-ள்.) மேகங்கள் தவழுகின்ற கோபுரங்களும் சூளிகையிடங்களும் உயர்ந்த வரிசையான மேனிலைமாளிகைகளும் சோலைகளும் கட்டுமலைகளும் வண்டுகள் பொருந்திய ஓடைகளும் வாவிகளும் தடாகங்களும் குறைவில்லாதமாடங்கள்தோறும் இருக்கின்றன.—எ-று.

ஒவ்வொரு வீடுகளும்எல்லாச்செல்வங்களாலும் நிரம்பப்பெற்றன என்பார் "எங் கணுமுளவே" என்றார். (அஉ)

எற்றி முன்செலு முரசினர் கம்பிய ரெல்லிற்
பற்று தீபிகைச் சுடரினர் மாலைதாழ் படைய
ரொற்றை முக்குடை யிருபுடைக் கவரிய ருலப்பில்
கொற்ற வீரரீண் டளப்பிலோர் வந்தனர் குலவி.

(இ-ள்.) முன்னே அடித்துக்கொண்டு செல்லப்பட்ட முரசினையுடையவர்களும் ஊழியக்காரர்களாற் பிடிக்கப்படுகிற பகல்தீவர்த்தியினையுடையவர்களும் பூமாலை தொங்குகின்ற ஆயுதத்தினை உடையவர்களும் ஒற்றைக்குடையினையும் முக்குடையினையும் உடையவர்களும் உபய சாமரைகளையுடையவர்களுமாகிய கெடாத வெற்றியினையுடைய வீரர்கள் அளவற்றவர்கள் பிரகாசத்துடன் வந்தார்கள்.—எ-று.

பகற்றீவட்டியும் முரசமும் சாமரையுமெல்லாம் பண்டைக்காலத்தில் உள்ள ராஜ மரியாதைப்பொருள். (அக)

மண்ப டைத்திடு தவமெனு மகேந்திர மலிசீ
ரெண்ப டைத்தகண் ணிரண்டினர் காணுத லெளிதோ
விண்ப டைத்தவற் காயினு மமையுமோ மிகவுங்
கண்ப டைத்தவர்க் கன்றியே கண்டிட லாமோ.

(இ-ள்.) இப்பூமிசெய்தவதவத்தாலுண்டானது என்று சொல்லத்தக்க மகேந்திரபுரமாகிய பெரியஇந்நகரத்தின் சிறப்புக்களை இரண்டென்னும எண்ணினையுடைய கண்களையுடையவர்களாற் காணுதற்குமுடியுமோ ஆகாயவுலகத்தில் வசிப்பவர்களாலு மாகுமோ இதனை கண்களை மிகுதியாகப் பெற்றவர்களாலன்றிக் காணுதற்கு ஆகுமோ.

விண்படைத்தவற்கு என்றதை பொன்னாட்டைத் தன்னதாககொண்டுள்ள இந்திரனாலானும் எனினுமாம். (அச)

வரம்பில் கட்புலங் கொண்டவ ரேனுமற் றிவ்வூர்
விரும்பி யித்திரு நோக்கினு மாத்தன்மே வருமோ
வரும்பு யற்குழு வைகலும் பருகினு மதனுற்
பெரும்பு னற்சட லானது முடிவுபெற் றிடுமோ.

(இ-ள்.) அரியமேகங்கள் கூட்டங்கூட்டமாகச்சென்று தினந்தோறுங் குடித்தாலும் மிக்கநீரினையுடைய கடல்வற்றியில்லாதுபோகுமோ போகா அதுபோலவே அளவற்ற கண்களென்னும் அறிகருவியைப்பெற்றவர்களாயிருந்தபோதிலும் விருப்பத்துடனிந்த நகரத்தினழகைப்பார்த்து இவ்வளவினதென்றளவிட முடியுமோ (முடியாதென்றபடி).—எ-று. (அரு)

கழியு மிந்நக ராக்கமோ கரையில விவற்றுள்
விழிக ளெண்ணில பெற்றுளார் தாங்கண்ட வெறுக்கை
மொழிவ ரென்னினு நாவதொன் றுன்முடிந் திடுமோ
வழிவி லாயிர கோடிநாப் பெறுவரே லறைவார்.

(இ-ள்.) சிறந்த இந்த நகரிலுள்ள செல்வத்திற்கோ வளவில்லை இச்செல்வங்களுள் அநந்தங்கண்ணுள்ளவர்கள் கண்டனவற்றைக் கூறுவார்களாயினும் அவர்களது ஒருநாவினுற் சொல்லிமுடியுமோ அழிவற்ற ஆயிரங்கோடிநாவினைப்பெறுவார்களாயில் இந்தவீரமகேந்திரத்தின் சிறப்பு இப்படிப்பட்டதென்று கூறுவார்கள்.—எ-று. (அசு)

வாழ்வின் மேதகு மகேந்திரப் பெருமித வளத்தைத்
தாழ்வி லாநெறி கண்டனர் தாலுவெண் ணிலவாற்

யுடைய அக்கினிமுகாசுரனதரண்மனையையுங்கடந்து செந்நிறமான உடம்பினையுடைய இரணியனது அரண்மனையையுங் கடந்து சென்றனர்.—எ-று. (௬௬)

உச்சி யையிரண் டிருபது கரதல முடைய
வச்சி ரப்பெரு மொய்ம்பினோன் மாளிகை வரைப்பு
மச்செ னத்தணந் தேகிமூ வாயிர ராகு
மெச்ச மெய்திய மைந்தர்தம் மிருக்கையு மிகந்தான்.

(இ-ள்.) பத்துத்தலைகளையும் இருபது கரங்களையும் உடைய வலிமைமிக்க வச்சிரவாகுவின் மாளிகையையும் விரைவாகக்கடந்து மூவாயிரரென்று கூறப்படுகிற புத்திரர்களது இருப்பிடங்களையுஞ் சண்முகக்கடவுளின் தூதனாகிய வீரவாகுதேவர்விரைந்துகடந்து சென்றனர்.—எ-று. (௬௭)

உரிய மந்திரத் துணைவரிற் றலைமைபெற் றுறையுந்
தரும கோபன்றன் கடிமனைச் சிகரமேற் றங்கிச்
சுரரும் வாசவன் மதலையு மவுணர்கள் சுற்றப்
பரிவு கொண்டமர் சிறைக்கள நாடியே பார்த்தான்.

(இ-ள்.) சூரபன்மனது உரிமையான மந்திரியர்களாகிய துணைவர்களுக்குள்ளே முதன்மந்திரித்தன்மையைப்பெற்று வாழுகின்ற தருமகோபனென்பானது காவலமைந்தமாளிகையின் சிகரத்தின்மீது தங்கியிருந்து தேவர்களும் இந்திரகுமாரனாகிய சயந்தனும் அசுரர்கள்சூழ்ந்திருக்கத் துன்பத்துடனே இருக்கிற சிறைச்சாலையை உற்றுப்பார்த்தனர் வீரவாகுதேவர்.—எ-று. (௬௮)

சுறைய டித்தொகை பிரிதலுங் கயமுனி கவர்ந்து
மறையி டத்தினில் வேட்டுவ ருய்ப்பவை குவபோற்
பொறையு டைத்துய ரிந்திரன் போந்தபின் புல்லார்
சிறையி னுற்றவர் செய்கையிற் சிறிதுரை செய்வாம்.

(இ-ள்.) யானைக்கூட்டங்கள் பிரிந்தவுடனே யானையின் கன்றைப்பிடித்து மறைவான இடத்திலே வேடர்கள் வைப்ப அவ்வியானைக்கன்று அவ்விடத்திலிருப்பதைப்போல துன்பத்தினைப்பொறுத்த மனதினையுடையவனும் இந்திரன் மறைந்துவந்ததற்குப்பின்பு பகைவர்களாகிய அசுரர்களது சிறையிலடைக்கப்பட்ட சயந்தனுதியர்களது செய்கையிற் சிலவற்றை கூறுகின்றேன்.—எ-று. (௬௯)

நகர்புகுபடலம் முற்றிற்று.
ஆக திருவிருத்தம் - ௩௩௬.

## சயந்தன்புலம்புறுபடலம்.

பரஞ்சுடர் நெடுங்கணை படுத்த பாயலில்
வருஞ்சசி யனையதோர் வாணு தற்சசி
தருஞ்சிறு குமரனுஞ் சயந்த னவ்விடை
யருஞ்சிறை யிருந்தன னமரர் தம்மொடும்.

(இ-ள்.) அவ்விடத்தில் பரஞ்சுடராகிய சிவபெருமானது அம்பாகிய நெடிய திருமால் கிடந்துறங்கும் பாயலாகிய பாற்கடலிலே பிறந்த சந்திரனையொத்த நெற்றியினையுடைய இந்திராணிபெற்ற சிறியகுமாரனாகிய சயந்தன் தேவர்கூட்டத்துடன் அரிய சிறையில் அசுரர்களால் வைக்கப்பட்டிருந்தனன்.—எ-று. (௧)

வாலிதா மமரர்சூழ் வைப்பி லிந்திரன்
கோலமா கியதனிக் குமரன் வைகுதன்
மேலைநா ளமுதெழும் வேலை தன்னிடை
நீலமா முகிலுறை நீர்மை போலுமே.

(இ-ள்.) வெண்ணிறம்பொருந்திய உடலினையுடைய தேவர்கள் சூழ்ந்திருக்கும் இடத்தில் இந்திரனது உருவமான கருநிறம்பொருந்திய உருவத்துடனே ஒப்பற்ற அவ்விந்திரகுமாரனாகிய சயந்தன் இருப்பது முற்காலத்திற் கடைந்தபோழ்து அமுதம் பிறந்த பாற்கடலினடுவில் நீலநிறம்பொருந்திய முகில்போன்ற திருமால் இருக்கின்ற தன்மையை ஒக்கும்.—எ-று. (உ)

மழைபுரை யவுணர்சூழ் வைப்பில் வாலொளி
தழுவிய வமரருட் சயந்தன் மேயினன்
கழிதரு பணிபல கவரச் சோர்தரு
முழுமதி யதனிடை முயலுற் றென்னவே.

(இ-ள்.) மேகம்போன்ற கருநிறம்வாய்ந்த சரீரங்களையுடைய அசுரர் சூழ்ந்திருக்கும் இடத்தில் வெண்ணிறம்பொருந்திய தேவர்களுக்கு நடுவில் மிகுதியான அனேகம் கரும்பாம்புகளாற் சூழப்பட்டுப் பிடிக்கப்படுகின்ற பூரணசந்திரனது நடுவில் முயலென்னும் களங்கம் இருந்தாற்போல சயந்தனிருந்தனன்.—எ-று. (ங)

வென்றிவில் லியற்றிய விஞ்சை நீர்மையாற்
கன்றிய கரமெனக் காவற் சாலையிற்
பொன்றிகழ் வல்லிகள் பூண்டு பற்பக
றன்றுணைத் தாள்களிற் றழும்பு சேர்ந்துளான்.

(இ-ள்.) அச்சயந்தன் வெற்றிபொருந்திய வில்லெடுத்துநிறுத்தல் நாணேற்றல் அம்புவிடல் முதலியவித்தைகளைப் பழகிய தன்மையினாற் கன்றுதலடைந்த கைகளைப்போல (காவற்சாலையாகிய) சிறைச்சாலையிற் அனேககாலமாகப் பொன்மயமாக விளங்குகின்ற விலங்குபூணப்பட்டு தனதிரண்டுகால்களிலுந்தழும்பு அடைந்தனன்.—எ-று.

இயற்படு மானமு மிகலு நாணமு
மயர்ப்பட வெம்பழி யனலஞ் சுற்றிட
வுயிர்ப்பெனு மோதைநின் றுயிர லைத்திடத்
துயர்ப்பெரும் பரவையூ டழுந்திச் சோருவான்.

(இ-ள்.) இதுவன்றியும் இயல்பாகப் பொருந்திய அபிமானமும் வலிமையும் நாணமும் விலகிச்செல்லவும் கொடியபழியாகிய தீயானது சூழ்ந்துகொள்ள பெருமூச்சு என்கிற காற்றொலியானது நின்று பிராணனை வருத்த துன்பமென்று சொல்லப்படுகிற பெரியசமுத்திரத்தில் முழுகிச் சயந்தன் சோருகின்றனன்.—எ-று. (ரு)

அண்டருஞ் சிறையினால் வீடு மல்லதே
லெண்டரு முகம்பல விடருண் மூழ்கலின்
மண்டுதொல் பழியற வலிது துஞ்சுமா
லுண்டநல் லமுதினு லவையொ ழிந்துளான்.

(இ-ள்.) இதுவல்லாமலும் பிறரால் அணுகுதற்கு அரியசிறையினால் இறந்திருப்பான் அச்சிறையினாற்சாகாதுபோனாலும் எண்ணத்தக்க அனேகயுககாலமாகத் துன்பத்தில்மூழ்கிக்கிடத்தலால் நெருங்கியபழையபழி நீங்கும்படி தானே பிராணனை விடுவான் (ஆனால்) தான் உண்டிருக்கிற நல்லஅமுதத்தால் தனக்கு அகாலமரணமின்மையாக அவைகளைச்செய்யாது சயந்தன்இருந்தனன்.—எ-று. (சு)

துணிப்பரும் வெஞ்சினத் தகுதவர் மன்னவன்
பணிப்படு சிறைக்களம் பட்டுத் தம்முட
றுணிப்புறு வோரெனத் துயர்கொண் டோர்கணங்
கணிப்பரு முகங்களாக் கழித்து வைகுவான்.

(இ-ள்.) (அச்சயந்தன்) பிறராலடக்குதற்கரிய பெருங்கோபத்தினை யுடைய அசுரராஜனாகிய சூரபன்மனதுகட்டளைக்குட்பட்ட சிறையினிடத்திலகப்பட்டு தனதுடலைவெட்டுங்காலத்துப் பிறர்துடிப்பதைப்போல் துன்பம்பொருந்தி ஒருகணப்பொழுதை அளவற்ற யுகங்களாகக்கருதி காலங்கழித்துக்கொண்டிருந்தனன்.—எ-று. (எ)

தேவியன் மரகதந் தெளித்துத் தீட்டிய
வோவிய வுருவமா சுண்ட தன்மையா
னாவியம் புனலறு முமருங் காவியம்
பூவியன் மென்றொடை புலர்ந்த தேயனான்.

(இ-ள்.) (அச்சயந்தன்) தெய்வீகம்பொருந்திய மரகதக்கல்லைச் சாணைபிடித்து செய்து அமைத்த பிரதமையின் உருவம் அழுக்கேறின லெப்படியோ அப்படிப்போல மாசடைந்த உடம்பினையுடையவனானான் இதுவன்றியும் குளத்திலுள்ளநீரைவிட்டுப்பிரியாதிருந்துள்ள நீலோற்பலமலராற் கட்டப்பட்ட மாலைவாடினாற்போல பொலிவிழந்த தன்மையினையடைந்தனன்.—எ-று. (அ)

வியலுக நூறுடன் மிக்க வெட்டினு
ளியலுறு சிறுவரை யெனினுந் துஞ்சுமேன்
மயல்சிறி தகலுமான் மரபின் வைகலுந்
துயில்கில னதலா லறுத துன்பினான்.

(இ-ள்.) மிகுதியாகவுள்ள நூற்றெட்டியுகங்களிற் சிறிய ஒருகணநேரமாவது கண்ணுறங்கி இருப்பானானால் சற்றுமயக்கந்தெளிந்தவனாகவிருப்பான் முறைப்படி ஒருநாளும் தூங்காததன்மையை யுடையவனாதலால் நீங்காததன்பத்தையுடையவனாக விருந்தனன்சயந்தன்.—எ-று. (கூ)

நெஞ்சழி துன்பிடை நீட வைகலிற்
றுஞ்சலன் வலிதுயிர் துறப்பு மாற்றல
னெஞ்சுமோ ரிறைவரை யிமையுங் கூட்டலன்
விஞ்சிய தவந்துயர் விளைக்கு மாங்கொலோ.

(இ-ள்.) (சயந்தன்) மனத்தின் நிலைமையைக் கெடுக்கின்ற துன்பத்தில் மிகுதியாகப்பொருந்தி இருந்ததால் தூங்கினானில்லைதானே வலிந்து தற்கொலைபுரிந்துகொள்ளவும் எண்ணினானில்லை ஒருசற்றுநேரமாவது இமைகூட்டினானில்லை (ஐயோ) மிகுந்ததவமானது ஒருவனுக்கு இவ்வாறு துன்பத்தையுண்டாக்குமோ.—எ-று. (க0)

இலங்கிய மரகதத் தியன்று பொன்குவாய்
நலங்கிளர் தன்வனப் பிழந்து நாடொறுஞ்
சலங்கெழு மவுணர்க டமைக்கண் டஞ்சியே
கலங்கின னுய்வகை யாதுங் காண்கிலான்.

(இ-ள்.) (அச்சயந்தன்) விளங்குகிற மரகதம்போல வமைந்து பொன்னொளி வீசாநின்ற நன்மையமைந்த தன்னுடலினழகையிழந்து சதாகாலமும் கோபத்தோடு விளங்குகிற அசுரர்களைப்பார்த்து அச்சங்கொண்டு சிறையினின்று தப்பிப்பிழைத்தற்கு வழிகாணாதவனாய் தன்மனதில் கலக்கங்கொண்டனன்.—எ-று. (கக)

...சுந்தா மரகதத் தனது தொல்லுரு
வெந்துய ருழத்தலின் வெய்து யிர்ப்பென
வந்தெழு புகைபட மறைந்து கட்புனல்
சிந்திட வுடனுடன் றிகழத் தோன்றுமால்.

(இ-ள்.) அழகிய மரகதம்போன்ற தனதுபழையவுருவம் தான்மிகவுந் துன்பமனுபவித்தலால் பெருமூச்சென்று சொல்லப்படுகிற புகையாகிய வந்துபடுந்தோறும் மறைந்து கண்ணீர்சிந்துந்தோறும் சிந்துந்தோறும் அடிக்கடி அச்சயந்தனது உருவம் விளக்கமாகக் காணப்படும்.—எ-று. (கஉ)

முழுதுறு தன்றுயர் முன்னி முன்னியே
யிழுதைய ரவுணரு மிரங்க வேங்குறு
வழுதிடுங் காப்பினோ ரச்சஞ் செய்தலும்
பழுதுகொ லென்றுவாய் பொத்தும் பாணியால்.

(இ-ள்.) தானனுபவிக்கின்ற முழுத்துன்பத்தை நினைத்து நினைத்து பொய்யினையுடைய அசுரர்களுங்கேட்டுவருந்தும்படி சயந்தன் ஏங்கி அழுவான் பின்னுஞ்சிறைச்சாலையிலிவனைக்காத்துநிற்கின்ற அசுரர்கள் பயமுறுத்தலும் அழுததுதவறோவென்று கையினால் வாயைமூடிக்கொள்ளுவான்.—எ-று. (கங)

இந்திரன் சசியொடு மிருந்த சூழல்போய்த்
தந்தனர் பற்றினர் தம்மை னச்சிலர்
முந்துறு காவலோர் மொழிந்த பொய்யுரை
யந்தம தடையுமுன் னயர்ந்து வீழுமே.

(இ-ள்.) இந்திரன் இந்திராணியுடனே இருந்த இடத்திற்குச்சென்று நம்மவர்கள் சிலர் பிடித்துக்கொண்டு வந்தார்களென்று எதிரிலிருக்கிற சில காவலாளிகளாகிய அசுரர்கள் கூறிய பொய்மொழியை நன்றாய்க்கேட்டு முடித்தற்குமுன்னமே (நமது தந்தைதாயர்களையும் பிடித்துக்கொண்டு வந்தாலிவ்வாறாகத்தானே தண்டிப்பார்கள் என்று எண்ணுமதனால்) சோர்ந்துவிழுவான்—.எ-று. (கச)

ஐந்தரு நீழலை நினைக்கு மாய்மலர்
தந்தமென் பள்ளியை யுன்னுந் தானெனப்
புந்திகொண் மங்கையர் புணர்ப்பை யுட்கொளு
மிந்திரப் பெருவள மெண்ணிச் சோருமே.

(இ-ள்.) (இதுவன்றியு மச்சயந்தன்) மந்தாரசந்தானபாரிசாத அரிசந்தன கற்பகம் என்னும் ஐந்துவகையான மரங்களின் நிழலைக்குறித்து நினைப்பான் காம்பரிந்து புறவிதழை நீக்கி மிருதுவான உள்ளிதழிட்டமைக்கின்ற மலர்ப்பாயலை நினைப்பான் தன்னைப்போல் விரும்புகிற தேவமாதர்களது கலவியை நினைப்பான் இந்திரசெல்வமாகிய பெரியசம்பத்தை எண்ணிச்சோருவான்.—எ-று. (கரு)

தன்னிணை யில்லதோர் தருவி னீழலு
ணன்னலந் துய்த்தியா நாளு மின்புறும்
பொன்னகர் பூழியாய்ப் போங்கொ லோவென
வுன்னிடுந் தொன்மைபோ லுறுவ தென்றெனும்.

(இ-ள்.) (அதன்றியும் சயந்தன்) சமானரகிதமான கற்பகநிழலில் நல்ல இன்பங்களை அநுபவித்துக்கொண்டு நாம் எப்பொழுதுஞ் சுகிக்கிற பொன்னகரமாகிய அமராவ

திபுழுதியாக வழிந்துபோகுமோ என்றுகருதுவான் நாம்பழையபடி அப்பொன்னகரத்திற்கற்பக நிழலையடைவதெக்காலம் என்றுகருதுவான்.—எ-று. (கசு)

ஈண்டையி லவுணர்கோ னேவத் தானைகள்
சேண்டொடர் துறக்கமேற் செல்ல நாடியே
மாண்டகு தம்முருக் கரந்து போயினார்
யாண்டைய ரோவெமை யீன்று ளாரெனும்.

(இ-ள்.) இவ்விடத்திலுள்ள அசுரராஜனாகிய சூரபன்மனனுப்ப வானுலகிலுள்ள சுவர்க்கத்துக்கு அசுரசேனைகள் வருவதையுணர்ந்து பார்வைக்குத்தகுந்த தங்களுருவங்களை மறைத்துக்கொண்டு வேற்றுருவுடன் சென்ற என்னன்னையும் அத்தனும் (இப்பொழுது) எங்கிருக்கின்றார்களோஎன்பான்.—எ-று. (கஎ)

ஏயின துறக்கநா டிழிந்து தொல்லைநாட்
டாயொடு பயந்துள தந்தை பாரகம்
போயின னெனச்சிலர் புகலக் கேட்டனன்
ஆயிடைப் புகுந்தன வறிகி லேனெனும்.

(இ-ள்.) (பின்னுஞ் சயந்தன்) நாம் வாழ்ந்திருந்த சுவர்க்கநாட்டைவிட்டு நம்மைப்பெற்ற தாயுந்தந்தையும் பூமியினிடத்திற்குச்சென்றார்களென்று சிலதேவர்கள் கூறுதலைக்கேட்டேன் அவர்கள்சென்ற அப்பூலோகத்திலே அவர்களுக்குண்டான நன்மை தீமைகளை யறிகின்றேனில்லையென்பான்.—எ-று. (கஅ)

அண்டர்க ளொருசில ரயர்வு கூறவுட்
கொண்டன ரேகினர் குறுகி யெந்தையைக்
கண்டன ரேகொலோ கலந்துளார் கொலோ
விண்டன ரேகொலோ வினைவெனோ வெனும்.

(இ-ள்.) (அல்லாமலும் இந்திரகுமாரனாகிய சயந்தன்) தேவர்களிற்சிலர் சூரபன்மன்செய்த துன்பங்களை உள்ளே நினைத்துக்கொண்டு நம்மைவிட்டுப்பிரிந்து சென்றார்கள் (அவ்வாறுசென்றவர்கள்) எனது தந்தையாகிய தங்களரசனைக்கண்டார்களோ அவருடன் கலந்துகொண்டார்களோ கண்டுபின்னும் விலகிவேறிடஞ்சென்றார்களோ அவர்களைக்குறித்து நடந்தவிஷயங்கள் யாவையோவென்பான்.—எ-று. (கக)

சீகர மிக்கசூர் செயிர்த்துச் செய்திடு
மாகுல முழுவது மறைய வம்மையோர்
பாகம துடையநம் பரமன் மால்வரைக்
கேகினா னேகொலோ வெந்தை யென்றிடும்.

(இ-ள்.) (இதுவன்றியும்புலோமசாநந்தனனாகியசயந்தன்) எனதுதந்தை திருமகள்விலாசம்பொருந்திய சூரபன்மன்கோபித்துச் செய்கின்றதுன்பங்களை ஒன்றொழியாமல் கூறுதற்காக உமாதேவியாரை ஓர்பாகத்திலுடைய நமது பரமேசுவரரது பெரிய திருக்கைலைமலைக்குச்சென்றிருப்பாரோ என்பான்.—எ-று. (உ0)

பொருந்தலர் கண்ணுறுப் பொருட்டுத் தம்முருக்
கரந்தன ரோவழீஇக் குரவர் கள்வர்பாற்
பொருந்தின ரேகொலோ புவன மெங்குமாய்த்
திரிந்தன ரேகொலோ தெளிகி லேனெனும்.

(இ-ள்.) (இதல்லாமலும் கற்பகநீழலிலிருந்து இந்திரனுக்குப் பின்னர் தேவருலகத்தை யாண்டசயந்தன்) எனது தந்தைதாயர்கள் பகைவர்களாகிய அசுரர்கள் பார்

க்காதிருக்கும்படி தங்களுருவங்களை மறைத்துக்கொண்டார்களோ அல்லது தவறித்திருடர்களாகிய அசுரர்களிடத்திலகப்பட்டுக்கொண்டார்களோ அன்றேல் எல்லா வுலகங்களிலுஞ் சஞ்சரிக்கிறார்களோ உணர்கின்றிலேனே என்பான்.—எ-று. (௨௧)

மாண்கிளர் சூரபன் மாவி னேவலா
லேண்கிள ரவுணர்கள் யாயைத் தந்தையை
நாண்கொடு பிணித்திவ ணல்கப் போயினார்
காண்கிலரே கொலோ கரந்த வாறெனும்.

(இ-ள்.) (அமுதமுண்ட சயந்தனென்னுந் தேவராஜகுமாரன்) மாட்சிமையொடுவிளங்குகின்ற சூரபன்மனது கட்டளையால் வலிமைமிக்கஅசுரர்கள் எனது அன்னை தந்தையர்களை கயிற்றினாற்கட்டி இங்குக்கொண்டுவந்து இவனிடமளிக்கும்படி சென்றார்கள் அவர்கள் மறைந்துசென்றதனைக் கண்டார்களில்லையோவென்பான்.—எ-று. (௨௨)

அன்புடை யம்மனை யத்த னீங்கிவர்
வன்புடை யவுணர்கள் வரவு காண்பரேற்
றுன்புடை மனத்தராய்த் துளங்கி யேங்கியே
யென்படு வார்கொலோ வறிகி லேனெனும்.

(இ-ள்.) (திருமாலாகிய உபேந்திரனைச் சிறியதந்தையாகக் கொண்டுள்ள சயந்தன்) என்மீது அன்புள்ள தாயும் தந்தையும் கொடுமையினைச்செய்கின்ற அசுரர்களது வருகையைக் காண்பார்களாயின் துன்பம்பொருந்திய மனத்தினையுடையவர்களாய் நடுக்கங்கொண்டு எங்ஙனம்பாடு படுவார்களோ அறிகிலேனென்பான்.—எ-று. (௨௩)

பொன்னகர் கரிந்ததும் புதல்வ னாகுமென்
றன்னையிம் முதுநகர்த் தந்து தானவர்
துன்னருஞ் சிறையிடு துயருங் கேட்டபி
னென்னினைந் திரங்குமோ வீன்ற தாயெனும்.

(இ-ள்.) (சாமளமானகோமளரூபத்தினையுடையசயந்தன்) என்னைப்பெற்ற தாயான இந்திராணிதேவியார் பொன்னகர் கரியானதும் தன்மகனாகிய என்னை அசுரர்கள் இந்தப்பெரியநகரத்திலே கொண்டுவந்து (அடைதற்கரிய கொடுந்துன்பமிகுதலால்) பிறரால்டைதற்கரிய சிறையிலிட்ட துன்பத்தையும் கேட்டதற்குப்பின்னர் என்ன நினைந்து வருந்துகின்றனரோ என்பான்.—எ-று. (௨௪)

பன்னெடு மாயைகள் பயின்ற தானவ
ரன்னையொ டத்தனை யாய்ந்து பற்றியென்
முன்னுறக் காண்டகு முறையி னுய்ப்பினு
மென்னுயிர் பின்னரு மிருக்குங் கொல்லெனும்.

(இ-ள்.) (சக்கிரிகுமாரனாகிய சயந்தன்) பலவிதமான பெரியமாயைகளைப் பழகியுள்ள அசுரர்கள் என்தந்தையையுந் தாயையுந் தேடிப்பிடித்து என்னெதிரிலே யான் பார்க்கத் தக்கவண்ணம் கொண்டுவந்து நிறுத்துவார்களாயினும் பின்னருங்கூட எனது உயிர் இருக்குமோ என்பான்.—எ-று. (௨௫)

ஆற்றருஞ் செல்லலு ளழுந்தும் பான்மையான்
மேற்றிகழ் பரஞ்சுடர் விமலற் போற்றியே
நோற்றனர் முத்தியி னுழைதற் றார்கொலோ
பேற்றின ரிருந்தசொற் பிறந்த தில்லெனும்.

(இ-ள்.) (ஐராவதமென்னுந் தேவயானையையேறிநடாத்துகிற பாக்கியம்பெற்றிருந்த சயந்தன்) என்னைப்பெற்ற தாயாகிய இந்திராணிதேவியுந் தந்தையாகிய இந்திரமன்னனும் சகித்தற்கரிய துன்பத்தில் மூழ்கியிருந்ததன்மையால் மேலாக விளங்குகின்ற பரஞ்சுடராகிய இயல்பாகவேபாசத்தினின்று நீங்கியுள்ள (துவதைப்பொருளாகிய) சிவபெருமானைக்குறித்து (நிஷ்காமிய) தவஞ்செய்து (பாசத்தினின்றுநீங்கி) மோக்ஷலோகத்தை யடைந்தார்களோ அவர்கள் ஜீவதசையோடிருக்கிறார்கள் என்னும் வசனம் (எவர்களது வாயிலும்) பிறக்கக்கேட்டிலேன் என்பான்.—எ-று. (உசு)

தீங்கதிர்ப் பகையொடு செருமு யன்றநாட்
டாங்கியெற் கொண்டுழித் தநத மிற்றிட
வாங்கனம் வீழ்ந்ததா லதற்கு மேற்பட
யாங்குசென் றதுகொலோ யானை யென்றிடும்.

(இ-ள்.) (பின்னும்சயந்தன்) கொடியகிரணங்களையுடைய சூரியனுக்கு பகைவனாகிய பாநுகோபனுடனே யான் போர்செய்தகாலத்து என்னைச்சுமந்துகொண்டு நின்ற இடத்தில் (பானுகோபன்கன்னத்தி லறைந்தமையால்) கொம்பொடிந்து அப்போர்க்களத்தில் விழுந்தது அதன் பின்னர் எவ்விடத்திற்குச்சென்றதோ (நமது) வெள்ளையானை என்பான்.—எ-று. (உஎ)

பிறப்புறு வைகலைத் தொட்டுப் பின்னரே
யிறப்புறு நாள்வரை யாவர்க் காயினு
முறப்படு துய்ப்பெலா மூழி னூற்றமால்
வெறுப்பதென் னவுணரை வினையி னேனெனும்.

(இ-ள்.) (சிறையிற் கிடக்கின்ற சயந்தன்) ஒருவன் பிறந்ததினமுதல் இறக்கும் தினம்வரைக்கும் எப்படிப்பட்டவர்களுக்கானாலும் உண்டாகிற துன்பமெல்லாம் ஊழின்வலிமையினாலேயாம் ஆதலால் பாவியாகிய யான் அசுரர்களென்னை இவ்வாறுசிறையிலடைத்தார்களென்று அவர்களை என்வெறுத்துக்கொள்ள வேண்டும் என்பான்.—எ-று.

தாவறு தொன்னகர் விளியத் தந்தைதா
யாவியொ டிரிந்திட வளிய னோர்மகன்
வீவருஞ் சிறைப்பட மேலை நாட்புரி
தீவினை யாவதோ தெளிகி லேனெனும்.

(இ-ள்.) (பின்னுஞ்சயந்தன்) கெடாதபழைய எனது அமராவதி தீப்பட்டழியவும் மாதாபிதாக்கள் ஆகிய இந்திராணிதேவியும் இந்திரமன்னனும் உயிருடனேஇருந்த இடம்விட்டு விலகியோடவும் அவர்களதன்புள்ள மைந்தனாகிய யானொருத்தன் மீளாச்சிறைச்சாலையையடையவும் முன்னாளிற்செய்த தீவினை இன்னதென்றறிகின்றிலேன்என்பான்.—எ-று. (உகூ)

துப்புறழ் சடையினான் சூரற் கீறிலா
வப்பெரு வரத்தினை யளித்த லாலவன்
மெய்ப்பட விளிகிலன் வீடுஞ் செய்கில
னெப்பொழு திச்சிறை தீரு மென்றிடும்.

(இ-ள்.) (உச்சைச்சிரவத்தை ஏறி நடாத்துகிற சயந்தன்) செந்நிறம்வாய்ந்த சடாபாரத்தினையுடைய சிவபெருமான் சூரபன்மனுக்கு அழிவற்ற வரத்தைக்கொடுத்திருத்தலால் அச்சூரன் தனதுடம்பழியும்படி சாகான் நம்மையுஞ்சிறையினின்றும் விடமாட்டான். இப்படியானல் நமக்கிந்தச்சிறைச்சாலையின் வாசம் எந்நாள் நீங்குவது என்பான்.—எ-று. (௩0)

மட்டறு வெறுக்கையு நகரும் வாழ்க்கையும்
விட்டனர் கடந்தனர் மேலை யோரென
வுட்டெளிந் தகன்றில னுவர்பி ணித்திடப்
பட்டன னேகொலோ பாவி யேனெனும்.

(இ-ள்.) (பின்னுஞ்சயந்தன்) நமதன்னை தந்தையர்களாதி பெரியவர்களெல்லாம் அளவற்றசெல்வத்தையும் அமராவதியையும் தேவபோகத்தையும்விட்டுச்சென்றார்கள். (ஆதலால் நாம்மாத்திரம் இங்கிருப்பானேனென்று) மனத்தினுள்தெளிவடைந்து சென்றேனில்லை; இவர்கள் பிடித்துக்கட்டிச் சிறையிலிடும்படியாகத்தானோ பாவியாகியயான் அவ்விடத்திலிருந்தேன் என்பான்.—எ-று. (கூக)

மாற்றல னிவ்வுயிர் வசையு றுவகை
போற்றலன் குரவர்பாற் புகுந்த புன்கணைத்
தேற்றலன் றமியனுந் தெளிகி லன்சிறை
யாற்றல னாற்றல னைய கோவெனும்.

(இ-ள்.) (பின்னுஞ்சயந்தன்) யானெனது இந்த உயிரை மாற்றிக்கொண்டேனில்லை; அபகீர்த்திவராதபடி (முன்னே) காப்பாற்றிக்கொண்டேனில்லை; அன்னை தந்தையர்களிடத்திலுண்டான துன்பத்தையும் இன்னதென்றுணர்ந்தேனில்லை; யானும் உணர்ந்திலேன்; இச்சிறைக்குளிருத்தற்கு சகிக்கக்கூடவில்லை சகிக்கக்கூடவில்லை ஐயகோ என்பான்.—எ-று. (கூஉ)

துறந்ததோ பேரறந் தொலையுந் தீம்பவஞ்
சிறந்ததோ மாதவப் பயனுந் தேய்ந்ததோ
குறைந்ததோ நன்னெறி கூடிற் றோகலி
யிறந்ததோ மறைசிவ னில்லை யோவெனும்.

(இ-ள்.) (இதுவன்றியுஞ் சயந்தன்) பெரிய தருமமழிந்ததோ முன்னரழிந்த கொடியபாவங்கள் இப்பொழுது மிகுதியாயினவோ பெரியதவத்தின்பலமும் தேய்ந்து போயதோ நல்வழிகளெல்லாங்குறுகியதோ கலிகாலம்வந்துவிட்டதோ வேதமும் அழிந்ததோ சிவபெருமானும் இல்லையோ என்பான்.—எ-று. (கூங)

கூடலர் வருத்தலிற் குரவர் தங்களைத்
தேடினர் விரைவுடன் சென்ற தேவர்போ
லோடினர் புகாவகை யொழிந்து ளோரையும்
வீடருஞ் சிறையிடை வீட்டி னேனெனும்.

(இ-ள்.) (பின்னுஞ்சயந்தன்) சத்துருக்களாகிய அசுரர்கள் வருத்துவதனால் நமது தந்தைதாயர்களைத் தேடிச்சென்ற தேவர்களைப்போல ஓடிஒளித்துக்கொள்ளாத வண்ணம் எஞ்சியதேவர்களனைவரையும் (யானே) இந்த மீளாச்சிறைச்சாலையிலடைப்பித்தவனாகிறேன் என்பான்.—எ-று. (கூச)

அந்தியின் மறைமொழி யயர்த்து வைகினன்
சந்தியில் வினைகளுந் தழலு மோம்பல
னெந்தையை வழிபடு மியல்பு நீங்கினன்
முந்தையி னுணர்ச்சியு முடிந்து ளேனெனும்.

(இ-ள்.) (பின்னுஞ்சயந்தன்) சந்தியாசமயத்திற்சொல்லத்தக்க வேதவசனங்களையும் மறந்திருக்கின்றேன் இதுவன்றி சந்தியாவந்தனாதிகளையும் அக்கினிகாரியத்தையும் செய்கின்றேனில்லை எம்பெருமானாகிய சிவபெருமானைப்பூசிக்குந் தன்மை

களையும் விட்டேன் பூருவத்திலிருந்த அறிவும் ஒழிந்தவனாக இருக்கிறேன் என்று கூறுவான்.—எ-று. (ருரு)

மெய்யுயி ரகன்றிட விளிகி லேனெனி
னெய்யுறு மலக்கணீத் தினிது மேவலன்
வையுறு நெடும்புரி வடிவம் வெந்தெனப்
பொய்யுடல் சுமந்தனன் புலம்புற் றேனெனும்.

(இ-ள்.) நித்தியமான இந்தஉயிர் உடம்பைவிட்டு நீங்கும்படி இறக்காமற்போ வேனானால் இளைப்பைத்தருகின்ற துன்பத்தினின்று நீங்கி சுகமுடையவனாக இருக்கமாட்டேன்; வைக்கோலாற்செய்த நெடியபழுதைத்திரிவெந்தாற்போல பொய்யான இந்த சரீரத்தைச்சுமந்துகொண்டு வருத்தப்படுகின்றேன்என்பான்.—எ-று. (ருசு)

சொல்லுவ தென்பிற தொல்லை வைகலின்
மெல்லென வாற்றிய வினையின் பான்மையா
லல்லுறழ் மிடற்றினெம் மடிக ளேயெமக்
கெல்லையி லித்துய ரியற்றி னானெனும்.

(இ-ள்.) (பின்னுஞ்சயந்தன்) வேறே என்னசொல்லவேண்டுவது முற்காலத்தில் எம்மால் மெல்லெனச்செய்யப்பட்ட தீவினையின் தன்மையால் எமக்கு இப்படிப்பட்ட அளவற்ற துன்பங்களை (மறக்கருணையின்முறைமையால்) இருளினைஒத்த ஸ்ரீகண்டத்தினையுடைய சிவபெருமானே அமைத்தனர் என்பான்.—எ-று. (ருஎ)

ஆவியு முலகமு மனைத்து மாகியு
மோவியுங் கருணையி னுருக்கொண் டாடல்செய்
தேவர்க டேவனாஞ் சிவன்மற் றல்லதை
யேவரென் குறையுணர்ந் திரங்கு வாரெனும்.

(இ-ள்.) (பின்னுஞ்சயந்தன்) உயிர்வருக்கங்களிலும் உலககோடிகளிலும் எல்லாம் (சூரியபிரகாசத்தைப்போல) வியாபித்தும் வியாபியாமலும் திருவருட்டிறத்தால் தானே முதல்வனாகவுருக்கொண்டு நின்று திருவிளையாடல்களைச்செய்கின்ற தேவர்களுக்கெல்லாந் தேவனாகிய சிவபெருமானானா அன்றி (வேறேயார்)எனது குறையையுணர்ந்து இரக்கங்கொள்பவர்கள் என்பான்.—எ-று. (ருஅ)

பெறலருந் திருவெலாம் பிழைத்துச் சூருயி
ரறுவது மவுணர்க ளவிந்து மாய்வதுஞ்
சிறையிது கழிவதுந் தீர்கி லாவசை
யிறுவது மொருபக லெய்து மோவெனும்.

(இ-ள்.) (பின்னுஞ்சயந்தன்) (அக்கினித்தம்பமுதலானவைகளினின்று பதினாயிரம்யாண் டருந்தவஞ்செய்த இவனுக்கன்றி பிறராலடைதற்கரிய இந்தச் செல்வத்தினின்றும் தவறி இச்சூரபன்மன்சாவதும் இவனன்றியுள்ள மற்றைய அசுரர்களெல்லாம் செத்தொழிவதும் இச்சிறைச்சாலை ஒழிவதும் நம்மை விட்டொழியாதிருக்கிற வசைமொழிகள் தொலைவதும் ஒருதினத்தில் உண்டாகுமோ என்பான்.—எ-று. (ருகூ)

நூறொடர் கேள்வியோர் நுணங்கு சிந்தைசேர்
கூறுடை மதிமுடிக் குழகன் றன்னருட்
பேறுடை யேனெனிற் பெருந்து யர்க்கட
லேறுவன் வினையினேற் கில்லை கொல்லெனும்.

(இ-ள்.) (சயந்தன்) சன்மார்க்கசாத்திர விசாரணைசெய்து (திரிபுடியொழிந்த) அநுபவிகளது ஒடுங்கி அகமுகமாக நிற்கும் (தூய்மையான மனத்தின்கண் எழுந்தருளி

யிராநின்ற கலையின் கூறுபாட்டினையுடைய சந்திரனையணிந்த சடாமுடியினையுடைய அழகோடு கூடிய சிவபெருமானது திருவருட்பேற்றை யான் உடையவனாக இருந்தால் இப்பெரிய துன்பக்கடலினின்றுங் கரையேறுவேன் பாவியாகிய எனக்கத்திருவருளில்லையோ என்பான்.—எ-று. (சo)

இத்திற மளப்பில வெண்ணி யெண்ணியே
மெய்த்துய ருழந்துவெய் துயிர்த்து விம்மியே
யத்தலை சுற்றிய வமரர் யாவருந்
தத்தமி லிரங்குறச் சயந்தன் வைகினான்.

(இ-ள்.) இவ்வண்ணமாக அநேக விஷயங்களை நினைத்து நினைத்து துன்பமடைந்து பெருமூச்சுவிட்டு விம்மி அவ்விடத்திலவனைச் சூழவிருக்கிற தேவர்களெல்லாம் இவனைப்போலவே தங்கள் பழைய நிலைமையை எண்ணியெண்ணித் துன்பப்பட்டுக்கொண்டிருக்க சயந்தன் (சிறைச்சாலையில் கால்கைகளில் பூணப்பட்ட விலங்குடையவனாகி) இருந்தனன்.—எ-று. (சக)

கண்டக னுதாவகன் கராளன் மாபலன்
சண்டக னிசங்கனே சங்க னாதியா
வெண்டகு மவுணர்க ளெண்ணி லோர்குழீஇக்
கொண்டனர் சிறைக்களங் குறுகி யோம்பினார்.

(இ-ள்.) (சயந்தனுந் தேவர்களுமிவ்வாறிருக்குஞ் சமயத்தில்) கண்டகனும் உதாவகனும்-கராளனும்-மாபலனும்-சண்டகனும்-இசங்கனும்-சண்டனும் முதலாகவுள்ளகொடுமை செய்வதிற் றக்கவர்களென்றெண்ணத்தக்க அசுரர்கள் அநேகர் கூட்டமாச் சேர்ந்துகொண்டு அச்சிறைச்சாலையைக் காத்தார்கள்.—எ-று. (சஉ)

ஆயதோர் காப்பினோ ரறுமு கத்தனி
நாயகன் றூதுவ னணுகு மப்பக
லேயுறு சயந்தனை யிமைப்பி லாரொடு
காயெரி யாமெனக் கனன்று சுற்றினார்.

(இ-ள்.) அக்காவலாளிகள் ஆறுதிருமுகங்களையுடைய சுப்ரமண்யப்பெருமானது தூதராகிய வீரவாகுதேவர் மஹேந்திரபுரிக்குச்சென்று தருமகோபனது மாளிகையின் சிகரத்திலணுரூபத்துடனிருக்கின்ற அத்தினத்தில் இமையாநாட்டங்களையுடைய தேவர்களையும் சயந்தனையும் சுடுகின்ற தீயைப்போல கோபித்துக்கொண்டு சூழ்ந்தார்கள்.—எ-று. (சங)

வேறு.

மன்னா னங்கோன் றன்பணி நில்லா மகவேந்து
மின்னா டானும் யாண்டுறு கின்றார் விரைவாகிச்
சொன்னா லுய்வீ ரல்லதும் மாவி தொலைவிப்பே
முன்னா ளேபோ லெண்ணலி ருண்மை மொழிகென்றார்.

(இ-ள்.) (காவலாளிகள்) அரசனாகிய நமது சூரபன்மனது கட்டளைப்படி நில்லாத யாகாதிபனாகிய இந்திரனும் அவன் மனைவியாகிய இந்திராணியும் எங்கே இருக்கின்றார்கள் அவர்களிருக்கும் இடத்தைச் சீக்கிரஞ்சொல்லுவீர்களானால் நீங்களுயிருள்ளவர்களாக இருப்பீர்கள் அன்றேல் உங்கள் பிராணனை வாங்கிவிடுவோம் நேற்றையத்தினம் வரைக்கும் சொல்லிய சொல்லைப்போல கருதாதீர்கள் இது உண்மையான வசனம் என்று கூறினார்கள்.—எ-று. (சச)

என்னுங் காலைக் கேட்ட சயந்த னெம்மாயு
மன்னும் வானின் றோடின கண்டா மற்றன்னோர்

பின்னங் குற்ற தன்மையு மோராம் பிணிநோயுட்
டுன்னுந் தீயேம் யாவ துரைத்துஞ் சூழ்ந்தென்றான்.

(இ-ள்.) இவ்வாறு கண்டகனுதியர்சொல்லியவுடனே சயந்தன் அவர்களைப்பார்த்து எமது தாயுந்தந்தையும் நிலைபெற்ற சுவர்க்கத்தினின்றும் ஒடிப்போனவன்று கண்டோம் அதுவன்றி அவர்கள் பின்னர்ச்சென்ற இடமுதலிய வொன்று முணரோம் பிணியையொத்த இக்கொடியசிறையிலடைக்கப்பட்டுத் துன்பமனுபவிக்கிற நாங்கள் என்ன ஆலோசனைசெய்து சொல்லப்போகிறோம் என்று கூறினான்.—எ-று. (சரு)

விண்டோய் மன்னன் முன்னொரு நாண்மெல் லியறன்னைக்
கொண்டேபோனா னின்னுழி யென்று குறிக்கொள்ளேங்
கண்டோ மல்லங் கேட்டில முள்ளங் கழிவெய்தப்
புண்டோய் கின்றோ மென்சொல்வ தென்றார் புலவோர்கள்.

(இ-ள்.) சுவர்க்கத்தினரசனாகிய இந்திரன் முன்னொருதினத்தில் தனது மனைவியை அழைத்துக்கொண்டு வெளியேபோனதையறிவோம் ஆனாலது இன்ன இடத்திற்கு என்று அறியோம் அவர்களிருக்குமிடத்தை நாங்கள்பார்த்ததுமில்லை கேட்டதுமில்லை மனமழிய துன்பப்படுகின்றோம் இவ்விடத்தில் துன்பத்தோடுகிடக்கின்ற நாங்கள் எதனை ஆலோசித்துச் சொல்லப்போகிறோம் என்று தேவர்கள் கூறினார்கள்.—எ-று.()

சொற்றா ரிவ்வா றன்னது போழ்திற் றுணிவெய்தி
யுற்றார் போலு மிங்கிவ ரெல்லா முள்ளமொன்றி
யெற்றா லுண்மை யோதுவ ரின்றே னெவெண்ணாச்
செற்றா ராகுங் காவலர் துன்பஞ் செய்கின்றார்.

(இ-ள்.) இவர்களனைவர்களும் இவ்வாறே கூறுதலும் அதனைக்கேட்ட அவ்வசுரர்கள் (இவர்களைப்பார்த்து) இவர்களெல்லாம் ஒரேவிதமாகப் பேசுவது என்று தீர்மானஞ்செய்துகொண்டு இவ்வாறுகூறுகின்றார்கள் என்னசெய்தாலிவர்கள் உண்மைசொல்லுவார்கள் என்றாலோசித்து நெருங்கிவந்த காவலாளிகள் இவர்களைத் துன்பஞ்செய்யத் தொடங்கினார்கள்.—எ-று. (சஎ)

வென்னஞ் சென்னக் காயெரி யென்ன மிகுதீஞ்சொன்
முன்னஞ் சொற்றே வைவர் தெழிப்பர் முரணோடுங்
கன்னஞ் செல்லத் தோமர முய்ப்பர் கலடகிற்பார்
சின்னஞ் செய்வார் போலுடன் முற்றுஞ் சேதிப்பார்.

(இ-ள்.) கொடியவிஷத்தைப்போலவும் காய்கின்ற தீயைப்போலவும் மிகவுங் கொடியசொற்களை எதிரிலே சொல்லித் திட்டுவார்கள் அதட்டுவார்கள் வலிமையுடனே காதுகளில்தோமரமென்னுமாயுதத்தை இட்டுகடைவார்கள் அறுத்துக்கூறிடுபவர்களைப் போல உடம்புமுழுமையும் துண்டுதுண்டாக வெட்டுவார்கள்.—எ-று. (சஅ)

கண்டந் துண்டஞ் செய்திடு மங்கங் கடிதொன்றிப்
பிண்டந் தன்னிற் கூட வெருண்டே போற்றல்
கொண்டங் கையால் வாள்கொடு மார்பங் குடைகிற்பார்
தண்டந் தன்னா லோதுவ ரன்னோர் தலைசீற.

(இ-ள்.) இவ்வசுரர்களாலே கண்டந்துண்டங்களாக வெட்டப்பட்ட சரீரத்தினவயவங்கள் விரைவாக ஒன்றாகச்சேர்ந்து உடம்பொடு கலத்தலைப்பார்த்துக் கோபங்கொண்டு மிகவும் வலிமையுடனழகிய கையில் வாளைக்கொண்டுமார்பைக்குடைவார்கள் அத்தேவர்களது தலைகளுடையும்படி தண்டாயுதங்களாலடிப்பார்கள்.—எ-று. (சகூ)

இத்தன் மைத்தாக் காவலர் யாரு மெண்ணில்லா
மெய்த்துன் பத்தைச் செய்திட மைந்தன் விண்ணோர்தங்
கொத்துந் தானு மாற்றல னாகிக் குலைவெய்தி
நித்தன் றன்னை யுன்னிய ரற்று நிற்கின்றான்.

(இ-ள்.) இவ்வண்ணமாகக்காவலாளிகளெல்லாம் அளவற்றதுன்பங்களைத் தங்களுடம்பிற்செய்தமையால் தேவர்களுடனே சயந்தன் சகிக்கமாட்டாதவனாய் நடுக்கங்கொண்டு எவ்வகையூழிகளிலும் அழியாத ஏகனாதலால் நித்தனென்னுந் திருநாமத்தைப்பெற்றுள்ள சிவபெருமானைக்குறித்துப் புலம்பத்தொடங்கினான்.—எ-று. (௫௦)

சீற்றத் துப்போர் பல்படை கொண்டே செறுபோழ்து
மாற்றத் துன்பம் பட்டத லான்மெய் யழிவாகி
யிற்றுத் தன்மை சேர்ந்திலன் விண்ணோ ரிறைமைந்தன்
கூற்றிற் பட்டுச் செல்ல லுழக்குங் கொடியோர்போல்.

(இ-ள்.) மிக்ககோபத்தினையுடைய அசுரர்கள் பலவிதவாயுதங்களைக்கொண்டு துண்டித்தல் குத்தல் முதலியவைகளைச் செய்தபோழ்தும் மிகவுந்துன்பமுண்டாகிய தேயன்றி தேவராஜகுமாரனாகிய சயந்தன் உடம்பழிந்து செத்தானாயினானில்லை எமனுலகையடைந்து நரகவேதனையை அநுபவிப்பவர்களைப்போல இருந்தனன்.—எ-று.(௫௧)

நெஞ்சினில் வாலறி வெய்தின ராம்புல நெறிநின்று
மெஞ்சிய மேல்வினை பெற்றில தேயென விறும்வண்ணந்
தஞ்செயல் வெய்யோர் செய்யவு மைந்தன் றமரோடுந்
துஞ்சில னூறும் பெற்றில னுற்றான் றுயரொன்றே.

(இ-ள்.) மனத்தினில் நல்லறிவடைந்தபெரியோர்கள் பஞ்சேந்திரியவழிப்பட்டு நின்றும் அவ்விந்திரியவியாபாரங்களால்வருகிற சஞ்சிதகருமபந்தமவர்களுக்கில்லாமையைப்போல சாகும்படி அசுரர்கள் தண்டித்தும் தேவர்களுடனே சயந்தன் இறந்தானில்லை காயங்களையுமடைந்தானில்லை துன்பமொன்றைமாத்திரம் அநுபவித்தான். ()

மாடே சூழ்வார் தம்மொடு மைந்தன் சிறைபுக்கான்
காடே போனா னிந்திர னேனோர் கவலுற்றார்
பாடே விண்ணோர் தம்பத முககட் பரனல்கும்
வீடே யல்லாற் றுன்பறு மாக்கம் வேறுண்டோ.

(இ-ள்.) பக்கத்திற்சூழ்ந்திருப்பவர்களுடனே தேவராஜகுமாரனாகிய சயந்தன் சிறைச்சாலையை யடைந்தான் (அநேகமான யாகாதி புண்ணியங்களினாலே கிடைத்த தனது செல்வங்களையெல்லாம் ஒழித்துவிட்டு) மகேந்திரன் காட்டுக்குச்சென்றான் மற்றையதேவர்களெல்லாம் மனக்கவலையடைந்தார்கள் அதனால் தேவபதமும் துன்பந்தரத்தக்கதேயாம் மூன்றுகண்களையுடையபரமேசுவரராலே (அநுபவிக்கும்படிகொடுக்கின்ற) மோக்ஷவீட்டைவிட துக்க நிவர்த்தியான சம்பத்துவேறே ஒன்று இருக்கிறதோ (இல்லை.)—எ-று. (௫௩)

அந்தா வாளந் தோமர மெஃக மடுதண்ட
முந்தா வுற்ற பல்படை யாவு முரிவெய்தச்
செந்தார் மார்பிற் காவலர் கையுந் திறலெஞ்ச
நோந்தா ரின்னா செய்வது நீத்தார் நுவல்கின்றார்.

(இ-ள்.) அழகிய வாளுந் தோமரமும் வேலும் கொல்லத்தக்க தண்டமும் முதலியபலவகை ஆயுதங்களெல்லாம் ஒடிந்துபோம்படி செம்மலர்மாலையணிந்தமார்பினையுடைய காவலாளராகிய அசுரர்கள் கைகளும் வலிமையுங்குறையும்படி (தண்டித்து)

வருத்தமடைந்தவர்களாய் அத்தேவர்களை வருத்துவதை ஒழிந்து (ஒருவருக்கொருவர்) சொல்லுகிறார்கள்.—எ-று. (ருச)

வீவார் பின்னு ளல்லது வேறோர் வினையத்தாற்
சாவா ரெஞ்சார் பேரமிர் துண்டார் தவமிக்கார்
நோவார் நாமிங்காற்றிய பாலா னொய்நொந்து
மாவா யாநுஞ் சொற்றில ரென்றப் புதமுற்றார்.

(இ-ள்.) இவர்களுக்கென்று முன்னேயே யமைந்து கிடக்கின்ற மரணமமைந்த பிற்காலத்திலல்லாமல் சாகமாட்டார்கள் அங்கப்பழுதுமடையார்கள் பெரிய அமிர்தத்தை உண்டிருக்கிறார்கள் தவத்திலே மிகுந்திருக்கிறார்கள் (எவ்விடத்திலும்) நோவடைந்தவர்களாகமாட்டார்கள் நாமிவ்விடத்தில்செய்த நோயினால் வருத்தமடைந்தும் ஆவா! ஒன்றுஞ்சொன்னார்களில்லை என்று இத்தேவர்களை தண்டித்த அசுரர்கள் ஆச்சரியமடைந்தார்கள்.—எ-று.

ஆவா - ஆச்சரியத்தையும் துக்கத்தையு முணர்த்துமோரிடைச்சொல். (ருரு)

இன்னோர் யாரு மைந்தனை வானோ ரினமோடு
மெய்ந்நோ வாகும் பாங்கி னலைத்த வினையாலே
கைந்நோ வெய்தி வன்மையு நீங்கிக் கவலுற்றார்
முன்னோர் தம்பாற் செய்த துடன்சூழ் முறையேபோல்.

(இ-ள்.) இவ்வசுரர்கள் யாவர்களும் சயந்தனைத் தேவர்கூட்டத்துடன் சரீரம் வருந்தும்படி அடித்தல் முதலியவைகளைச்செய்தலினால் பெரியோர்களிடத்திற்செய்யப்படுகிற நல்வினை தீவினைகள்செய்த உடன் செய்தவர்களை வந்தடையுந் தன்மையைப் போல கைகளும் நோவடைந்து வலிமையுமொழிந்து துன்பமடைந்தார்கள்.—எ-று.()

வேறு.

அத்தகைய காவ லவுண ரவர்க்கணித்தாய்
மொய்த்தொருசா ரீண்டி முறைநீங் கலர்காப்ப
வெய்த்த வமரருட னிந்திரன்சேய் பண்ணவரு
ளுத்தமனுங் கண்ணுதலை யுன்னிப் புலம்புறுவான்.

(இ-ள்.) இவ்விதமான தண்டனைகளைச்செய்த காவலாளிகளாகிய அசுரர்கள் அத்தேவர்களுக்குச் சமீபத்திலேயே நெருங்கி இருந்து முறைமைமாறாமல் காவல்செய்து கொண்டிருந்தார்கள் இந்திரகுமாரனாகிய சயந்தன் இளைத்ததேவர்களுடனே தேவர்களுக்குள் உத்தமனாகிய நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானை (மனதில்) நினைத்துக்கொண்டு புலம்பத்தொடங்கினான்.—எ-று.

தேவர்களுக்குட் சிவபெருமானுத் தமனென்பதை "உத்தமனத்தனுடையான் என்னுந் திருவாசகமாதிகளாலுணர்க. (ருசு)

வந்திப்பவர் பவங்கண் மாற்றுவோ யெத்தேவர்
சிந்தைக்கு மெட்டாச் சிவனே செழுஞ்சுடரோ
யிந்தப் பிறவி யிடருழப்பச் செய்தனையோ
வந்தித்த நின்புணர்ப்பை யாரே கடந்தாரோ.

(இ-ள்.) வணங்குபவர்களது பிறவிகளை ஒழிப்பவரே எத்தன்மையான தேவர்களது மனத்திற்கும் எட்டப்படாத சிவபெருமானே செழுமையான சுடருருவரே (அடியேங்களை) இந்தப்பிறப்பிலே துன்பமநுபவிக்கும்படிசெய்தருளினீரோ- எல்லாம் ஒழிந்தவிடத்திலும் ஒழியாது நிற்கின்ற உமது தந்திரத்தை எவர்கள் கடந்தவர்கள்.—எ-று.

கைந்நாகத் துக்குங் கயவாய்க்கு நாரைக்கும்
பைந்நாகத் துக்கும் படருஞ் சிலந்திக்கும்
பின்னாகிய வுயிர்க்கும் பேரருண்முன் செய்தனையா
லென்னு யகனே யெமக்கே னருளாயே.

(இ-ள்.) எந்தைபெருமானே தேவரீர் யானைக்கும் கரிக்குருவிக்கும் நாரைக்கும் படத்தினையுடைய பாம்புக்கும் இயங்குவனவாகிய சிலந்திக்கும் இவைகளன்றியுள்ள வனையஉயிர்களுக்கும் முன்காலத்தில் பெரிய அருளினைச்செய்திருக்கின்றீர் (துன்பத்திலுந்திருவடியைமறவாத) அடியோங்களுக்கேனின்னந்திருவருள்செய்யவில்லை.

கங்கை முடித்தாய் கறைமிடற்றாய் கண்ணுதலாய்
திங்கள் புனைந்தாய் சிவனே சிவனேயென்
றிங்கு நினதடியே மெல்லேங் களுமரற்ற
னங்க ளுயிர்க்குயிரா நாயகநீ கேட்டிலையோ.

(இ-ள்.) கங்காதரரே நீலகண்டரே நிடாலாக்ஷரோ சந்திரசேகரரே சிவபெருமானே சிவபெருமானே என்றிவ்வாறாக இவ்விடத்திலுமதடியவர்களாகிய நாங்கள் எல்லாரும் (சூரபன்மனது கட்டளையாலசுரர்களாகிய காவலாளிகள்செய்யும் கொடுமைகளைச் சகிக்கமாட்டாமல்) இரைந்து துதிப்பதை எங்களதுயிருக்குள் உயிராக இருக்கின்ற கத்தாவே தேவரீர்திருச்செவியலச்சத்தங்கள் கேட்கப்படவில்லையோ.—எ-று. (கூ0)

பாசங்கொண் டாவி பலவும் பிணிப்போனு
நேசங்கொண் டாங்கதனை நீக்கியருள் செய்வோனு
மீசன் சிவனென் றியம்புமறை நீயிழைத்த
வாசொன்று மித்தீமை யார்தவிர்க்க வல்லாரோ.

(இ-ள்.) பாசத்தைக்கொண்டு பலவிதப்பசுக்களையும் பந்திப்பவரும் விருப்பம் பொருந்திய அப்பாசத்தையகற்றி அருள்செய்பவரும் ஈசனாகிய சிவபெருமானே என்று வேதவசனம் சொல்லாநிற்கும் (ஆதலால்) அடியேங்களுக்குண்டான இத்தீமையுந்தேவரீரால் அளிக்கப்பட்டதன்றி வேறல்ல இதனை எம்பெருமானே) தேவரீரையன்றி வேறேயார் நீக்கத்தக்கவர்கள்.—எ-று. (கூக)

நாராயணனு மந்த நான்முகனு நாடரிய
பேராதி யான பெருமா னுயிர்க்கெல்லா
மாராயி னீயன்றி யாரோ துணையாவார்
வாராய் தமியே னுயிரளிக்க வாராயே.

(இ-ள்.) நாராயணனும் அந்தப்பிரமதேவனும் நாடியறிதற்கரிய பெரிய ஆதிமுதல்வனாகிய கடவுளும் எல்லாவுயிர்களுக்கும் விசாரிக்கும்இடத்தில் உம்மைத்தவிர வேறே உற்றதுணையுங்காணேம் ஆதாலால் எம்பெருமானே அடியேங்களது உயிரினை இரக்ஷிக்கும்பொருட்டு எழுந்தருளி வரமாட்டீரோ.—எ-று. (கூஉ)

சீற்றம் விளைத்துமுனந் தேவர்தொகை யலைப்பான்
கூற்ற மெனவே குறுகுற்ற வந்தகனு
மாற்ற லிழப்பவகன் மார்பின் முத்தலைவே
லேற்றியவ னீயன்றோ வெமக்கே னிரங்கலையே.

(இ-ள்.) முன்னொருகாலத்தில் தேவர்களது கூட்டங்களை வருத்தும்பொருட்டு எமனைப்போலவராநின்ற அந்தகாசுரனும் வலிமைகெடும்படி அவனது அகலமான மார்பினில் மூன்றுதலைகளையுடைய சூலத்தைமாட்டியருளினவர் தேவரீரன்றோ (அப்படியிருக்க எங்கள் பொருட்டேன் இரக்கம்கொள்ளவில்லை.—எ-று. (கூ௩)

ஏங்கி யமர ரிரிந்தோட வேதுரந்த
வோங்கு குரண்டத் துருக்கொண்ட தானவனைத்
தீங்கு பெறத்தடிந்து சின்னமா வோர்சிறையை
வாங்கி யணிந்தவரு ளிங்கென்பால் வைத்திலையே.

(இ-ள்) தேவர்களெல்லாம் ஏக்கங்கொண்டு விலகியோடும்படி துரத்திய உயர்ந்தகொக்கின்வடிவங்கொண்டு வந்த குண்டாசுரனென்னும் அசுரனை அவனுக்குக் கேடுண்டாம்படிவெட்டி அவனைக் கொன்றதற்கடையாளமாக ஒருஇறகினைபிடுங்கியெடுத்து (திருமுடியின்மீது) தரித்தருளிய திருவருள் அடியேனிடத்தில் வைத்தீரில்லையே.

ஞாலத் தினையளித்த நான்முகனு நின்றவற்றைப்
பாலித் தவனும் பிறரும் பணிந்திரங்க
வோலக் கடலு ளுலகந் தொலைப்பவந்த
வாலத்தை யுண்டவரு ளென்பா லயர்த்தனையோ.

(இ-ள்.) இவ்வுலகாதிகளைப்படைத்த பிரமனும் இவ்வுலகத்தைக் காக்கின்ற திருமாலும் மற்றபேர்களும் வணங்கிவேண்டிக்கொள்ளவும் ஓசையினையுடைய பாற்கடலிற்பிறந்து உலகங்களை அழிக்கும்பொருட்டுவந்த ஆலகாலவிஷத்தை திருவமுதுசெய்தருளியகருணை அடியேன்பக்கத்தில்மட்டும் மறந்தருளினீரோ.—எ-று. (சுரு)

மோடி தரவந்த முக்கணு டைக்காளி
யோடி யுலகுயிர்க ளுண்ணும் படியெழலு
நாடி யவள்வெருவி நாணிச் செருக்ககல
வாடி யருள்செய்த வருளிங் கணுகாதோ.

(இ-ள்.) காடுகொள்பெற்ற மூன்றுகண்களையுடைய காளியானவள் விரைந்து உலகிலுள்ள உயிர்களையெல்லாம் புசிக்கும்படியாக முயலுதலும் அவள்கண்டு பயந்து வெட்கங்கொண்டு செருக்கிழந்தவளாகும்படி அவளெதிரிற் (பந்தயமாக) நடனஞ்செய்தருளிய திருவருள் இவ்விடத்திற்கு வராதோ.—எ-று. (சுசு)

பொற்றைக் கயிலைப் புகல்புக்க தேவர்தமைச்
செற்றத் துடனடவே சென்ற சலந்தரனை
யொற்றைத் திகிரிப் படையா லுடல்பிளந்தே
யற்றைப் பகலவரை யஞ்சலென்றாய் நீயன்றே.

(இ-ள்.) பொற்றைகளையுடைய திருக்கைலைமலையிலடைக்கலமாக வந்தடைந்த தேவர்களை கோபத்துடன் கொல்லும்பொருட்டுச்சென்ற சலந்தராசுரனை ஒன்றாகிய சக்கராயுதத்தால் அவனதுடலை இருபிளவாக்கி அத்தினத்திலத்தேவர்களை அஞ்சாதீர்கள் என்று திருவாய்மலர்ந்தருளியவர் (ஏ சிவபெருமானே எங்களால் துதிக்கப்படுகின்ற) தேவரீரன்றோ.—எ-று. (சுஎ)

நந்துற்ற கங்கை நதிசெறியுங் காசிதனிற்
றந்திக் கொடியோன் றவத்தோர் தமைத்துரந்து
வந்துற் றிடச்சினவி வன்றோ லினையுரித்த
வந்தக் கருணைக் களியோம் பற்றிலமோ.

(இ-ள்.) சங்குகள் பொருந்திய கங்கையாற்றாற் சூழப்பட்ட காசி க்ஷேத்திரத்தில் கயமுகனென்னும் கொடிய ஒரு அசுரனானவன் தவஞ்செய்யு முனிவர்களையெல்லாம் துரத்திக்கொண்டுவர கோபங்கொண்டு (அவனைக்கொன்று அவனது) வலியதோலினையுரித்தருளிய அந்தக்கருணைத்திறத்துக்கு அடியேங்களின்னம் போதாதவர்களோ.

ஈரஞ்சு சென்னி யிருபான் புயங்கொண்டோ
ரோரஞ் சரக்க ருலகலைப்ப வன்னவரை
வீரஞ்செய் தட்ட விமல வெமையவுணர்
கோரஞ்செய் கின்ற கொடுந்தொழிலுட் கொள்ளாயோ.

(இ-ள்.) பத்துத்தலைகளையும் இருபது கைகளையும் உடைய பஞ்சராவணர்கள் என்னும் அசுரர்கள் உலகங்களைத் துன்பப்படுத்திய சமயத்தில் அவர்களை வீரத்திறங் காட்டி நின்றுகொன்றருளிய மலரகிதமானவரே! அடியேங்களை இந்தவீரமகேந்திராபுரியிலுள்ள) அசுரர்கள் வருத்துகின்ற கொடிய தொழிலை திருவுள்ளத்திற்கொண்டருளமாட்டீரோ?.—எ-று. (சுக)

பண்டை மகவான் பரிசுணராத் தக்கனைப்போ
லண்டர்பிரா னின்னை யறியாதோர் வேள்விசெயத்
துண்டமது செய்து சுரரையவன் றோண்முரித்தாய்
தண்ட மதனையின்று தானவர்பாற் காட்டாயோ.

(இ-ள்.) தேவரீரது தன்மையையுணராது கேடடைந்த தக்கனைப்போல முன்னொரிந்திரன் தேவதேவரே உம்மை உணராது ஒரு யாகஞ்செய்தலும் (உடனிருந்த தேவர்களையெல்லாம் துண்டாகவெட்டி அவ்விந்திரனது தோள்களையும் ஒடித்தருளினீர் (ஹேபெருமானே) அவ்வாறு முன்னெல்லாநடத்திய) தண்டனையை இப்பொழுதிந்த அசுரர்களிடத்தில் காட்டியருளீரோ.—எ-று. (எ0)

சிந்தப் புரங்கொடிய தீயவுணர் மூவகைத்தா
மந்தப் புரங்க ளடல்செய்தா யெம்பெருமான்
சந்தப் புரங்கொண்ட தானவரோ டொன்றுரு
மிந்தப் புரமு மெரிக்குதவ வொண்ணாதோ.

(இ-ள்.) கொடிய தாருகாக்ஷன் கமலாக்ஷன் வித்துன்மாலி யென்னும் மூவர்களது சரீரங்கள் கெடவும் அவர்களிருந்த முப்புரங்களழியவும் செய்தருளிய எம்பெருமானே அழகிய சரீரங்களையுடைய அசுரர்களுடனே ஒன்றாக விளங்குகின்ற இந்த வீரமஹேந்திரத்தையும் அக்கினிக்களித்தல் கூடாதோ.—எ-று. (எக)

அன்பா னவருக் கருளுதியாற் பத்திநெறி
யென்பா லிலையா லிறையுமெவனளித்தி
நன்பான் மதிமிலைச்சு நாயகனே நல்லருள்கூ
ருன்பான் மிகநொந்தே யோதியதென் பேதமையே.

(இ-ள்.) அன்புள்ளவர்களுக்கு வேண்டியவற்றைக்கொடுக்கின்றீர் சற்றேனும் பத்திமார்க்கம் இல்லாதவன்யான் (அப்படி இருக்க) அடியேன் கேட்டவைகளை எவ்வாறளிப்பீர், நல்ல பால்போன்ற வெண்ணிறம்வாய்ந்த இளம்பிறையையணிந்த தலைவரே ஆன்மாக்களிடத்தில் நல்லஅருள்பொருந்திய தேவரீரிடத்தில் மிகவும் வருத்தத்துடன் கூறியது எனது அறியாமைத்தன்மையேயாம்.—எ-று. (எஉ)

ஆனாலுந் தீயே னழுங்க வருள்கொடுநீ
தானாக நண்ணித் தலையளிசெய் தாண்டாயே
லானாத வித்துயர மாறுமே யாறியக்கான்
மேனா ளெனயான் றுறக்கவளன் வேண்டிலனே.

(இ-ள்.) அவ்வண்ணம் பத்திமார்க்கமில்லாதவனாக இருந்தாலும் கொடிய அடியேன் வருத்தமநுபவிக்கின்ற இத்தருணத்தில் தேவரீரே வலியவந்து பேரன்பு காட்டி

ஆளுவீரோயானல் அடியேனைவிட்டு நீங்காதவிந்தத்துன்ப நீங்குமே அதுநீங்கினல் முன்போல யான் சுவர்க்கபோகத்தை (ஒருபொருளாகக்கருதியினி) விரும்பமாட்டேன்.

வென்றி யரக்கரான் மேதகைய தானவரா
லன்றி முனிவரா லண்டரா லேனையரா
லொன்று செயவொன்று யுறுதுயரத் தாழ்ந்ததன்றி
யென்று மகிழ்வா யிடாற் றிருந்தனமே.

(இ-ள்.) வெற்றிபொருந்திய அரக்கர்களாலும் உயர்வுபொருந்திய அசுரர்களாலும் முனிவர்களாலும் தேவர்களாலும் மற்றையவர்களாலும் ஒன்றைச்செய்ய அது இன்னென்றும் அதனலுண்டாகின்ற துன்பத்திலே முழுகிகிடந்ததேயொழிய (நாங்கள் சுவர்க்கத்தில்) எந்தக்காலத்திற் சந்தோஷத்தை அனுபவித்துக்கொண்டு துன்பமற்று வாழ்ந்தோம்.—எ-று. (எச)

கீற்று மதியுங் கிளர்வெம் பொறியரவு
மாற்றி னுடுமிலைந்த வாதியே நின்னருளா
லேற்ற மிகுமலக்க ணேகி னிழிந்தவளம்
போற்று கிலனேற்றல் புரிவேன் புரிவேனே.

(இ-ள்.) கீற்றுகிய இளம்பிறையையும் விளங்குகின்ற வெவ்வியபொறிகளையுடைய பாம்பினையும் கங்கையுடனே தரித்துக்கொண்டிருக்கிற முதல்வனே தேவரீரது திருவருளினல் மிகுதியாக உள்ள இந்தத்துன்பமொழியுமானல் இழிவான சுவர்க்கசெல்வத்தை யான்விரும்பேன் தவத்தைச்செய்வேன்.—எ-று. (எடு)

தண்டேன் றுளிக்குந் தருநிழற்கீழ் வாழ்க்கை வெஃகிக்
கொண்டேன் பெருந்துயரம் வான்பதமுங் கோதென்றே
கண்டேன் பிறர்தம் பதத்தொலைவுங் கண்டனனற்
றெண்டேன் சிவனேநின் றெல்பதமே வேண்டுவனே.

(இ-ள்.) சிவபெருமானே! அடியேன் தண்ணியதேன்துளிகள்துளிக்கின்ற கற்பகமரநிழலில் வாழும்வாழ்க்கையை விரும்பி மிக்க துயரத்தையடைந்தேன் (ஆதலால்) சுவர்க்கபதவியும் சாரமற்றது என்றிருந்தேன் ஏனையர்களது பதவிகளினழிவுகளையுங் கண்டிருக்கின்றேன் அழியாததும் அநாயாசமானதும் ஆகிய தேவரீரது சிறந்த சிவலோகவாழ்வையே விரும்புவேன்.—எ-று. (எசு)

அல்லற் பிறவி யலமலம்விண் ணுடுறைந்து
தொல்லைத் திருநுகருந் துன்பு மலமலமாற்
றில்லைத் திருநடஞ்செய்தேவே யினித்தமியேற்
கொல்லைத் துயர்தீர்த் துனதுபதந் தந்தருளே.

(இ-ள்.) தில்லையென்னுந் திருநாமத்தினையுடைய இடத்தில் எழுந்தருளி இருந்து திருநடனம்புரியுமஹாதேவரோ! துக்கரூபமானசனனமும் துன்பமானதேபொன்னுட்டிலிருந்து பழையதாகிய செல்வங்களை அநுபவிப்பதுந் துன்பமே ஆதலால் இனி விரைவாக அடியேனதித்துன்பத்தை ஒழித்து தேவரீரது (துக்கமற்ற) திருவடிச்செல்வத்தை அளித்தருளவேண்டும்.—எ-று. (எஎ)

ஒன்று யிருதிறமா யோரைந்தா யையைந்தா
யன்று தியின்மீட்டு மைந்தா யளப்பிலவாய்
நின்றுய் சிவனேயிந் நீர்மையெல்லாந் தீங்ககற்றி
நன்று விகட்கு நலம்புரிதற் கேயன்றே.

(இ-ள்.) ஒன்றாகியும் இரண்டாகியும் ஐந்தாகியும் இருபத்தைந்தாகியும் மூற் காலத்திற் பின்னும் ஐந்தாகியும் அளவற்றனவாகியும் நின்றருளினீர் சிவபெருமானே தேவரீர் இவ்வாறு நின்றருளியதெல்லாம் குற்றங்களைநீக்கி பசுவருக்கங்களுக்கு இன்ப மளிக்கும்பொருட்டன்றோ.—எ-று.

சிவபெருமான் சிருட்டிகாலத்திற்கு முன்னே தாமொருவரோ இருப்பவராதலா ல் ஒன்றாகி என்றும் சிருட்டிநடத்த எண்ணியவுடனே தன்னருளேசத்தியாக உருக் கொண்டு கூடநின்றேபடைப்பதாதலால்சிருட்டியினாரம்பத்தில் சத்தியும்சத்தனுமாகிய இருவர்களாக நிற்றலால் இருதிறமாகி என்றும் சத்திசத்தர்களாகிய அவர்களில்நின்றும் பஞ்சகர்த்தாக்களாக சகரீகரித்துநின்றே சிருட்டித்தலால் ஓரைந்தாகி என்றும் அவர் களாலே இருபத்தைந்து தத்துவ உருவங்களாக உலகமாக்கப்படுதலால் ஐயைந்தாய் என்றும் பின்னும் ஒடுங்குங்கால் தோன்றியமுறையே ஒடுங்கி பழைய ஐங்கர்த்தாக்க ளாகி நின்று முறையே பழயவண்ணமே ஆகி மறுசிருட்டியிலும் முன்சொன்னவண்ண மாகி எண்ணிறந்த திருவுருவமாகநின்றருளுதலால் மீட்டும் ஐந்தாய் அளப்பிலவாய் நின்றாய் என்றும் இவ்வாறு செய்வதெல்லாம் அகர்த்தாக்களான பசுக்களுக்கு நற்சுகத் தை அளித்தற்கே அன்றிவேறே தன்பொருட்டல்லாமையால் இந்நீர்மையெல்லாம் தீங் ககற்றி நன்றாவிகட்கு நலம்புரிதற்கே அன்றோ என்றும் கூறினான் என்றார். (எஅ)

பொன்பொலியுங் கொன்றைப் புரிசடையா யிவ்வழிசேர்
துன்ப மகற்றித் துறக்கத்துட் டாழாது
பின்பு கனிநோற்றுப் பெறற்கரிதா நின்னடிக்கீ
ழின்ப மொருதலையா வெய்தவரு ளாயெனக்கே.

(இ-ள்.) பொன்னைப்போல விளங்குகின்ற கொன்றைமலர்மாலையணிந்த மு றுக்கேறியசடையினையுடையவரே! இவ்விடத்திற்பொருந்தியதுன்பத்தை ஒழித்து சுவ ர்க்கபதவியில் மோகங்கொண்டு முழுகாமல் பின்னர் மிகவும் தவஞ்செய்து கிடைத்தற் கரிய தேவரீரது திருவடிநிழலிலிருந்து சிறந்தபேரின்பத்தை யடையும்படி அடியேனு க்கருள்புரிவீராக.—எ-று. (எகூ)

வேறு.

என்று பற்பல விரங்கியே விடஞ்செறிந் தென்னச்
சென்று சென்றிடர் மூடுற வுணர்வெலாஞ் சிதைப்ப
வொன்று மோர்கிலன் மயங்கின னுயிர்கரந் துலையப்
பொன்றி னார்களின் மறிந்தன னிந்திரன் புதல்வன்.

(இ-ள்.) என்றிவ்வண்ணம் பலவிதமாகக் கூறிவருந்தி விஷந்தலைக்கேறினாற் போல துன்பம் மேலுமேலும் அதிகரித்து அறிவைமுற்றிலுங்கெடுக்க ஒன்றுமுணராத வனாய் மயக்கங்கொண்டு மூச்சுமறைந்தொடுங்க இறந்தவர்களைப்போல இந்திரகுமா னாகிய சயந்தன் பூமியிற் சாய்ந்தனன்.—எ-று. (அ0)

ஆங்க வன்றனைப் போலவே யமராரு மழுங்கி
யேங்கி யாருயிர் பதைத்திட வீழ்ந்துணர் விழந்தார்
தூங்கு வீழுறு பழுமரஞ் சாய்தலுந் தொடர்ந்து
பாங்கர் சுற்றிய வல்லிக டியங்கிவீழ் பரிசின்.

(இ-ள்.) தொங்குகிற விழுதுகளையுடைய ஆலமரஞ்சாய்தலும் அம்மரத்துடன் சம்பந்தமாகப் பக்கத்திற் சுற்றியிருக்கும் கொடிகளும் வாடிவிழுந்தன்மையைப்போல அவ்விடத்தில் தேவர்களும் வருத்தங்கொண்டு ஏங்கி அரிய உயிர்துடிக்க அந்தச்சயந் தனைப்போலவே கீழே விழுந்து அறிவிழந்தார்கள்.—எ-று. (அக)

சயந்தன்புலம்புறுபடலம்முற்றிற்று.
ஆக திருவிருத்தம் – சகஎ.

# சயந்தன்கனவுகாண்படலம்.

விண்ணு ளார்களுஞ் சயந்தனும் வியன்மகேந் திரத்தி
னுண்ணி லாம்பெருந் துயருடன் மாழ்கிய துணர்ந்தா
னெண்ணி லாவுயிர் தோறுமுற் றின்னருள் புரியு
மண்ண லார்குமரேசனு மறுமுகத் தமலன்.

(இ-ள்.) அளவற்ற உயிர்கள்தோறுஞ்சென்று அவ்வுயிர்களுக்கு இனிய திருவருள்செய்கின்ற கடவுளாகிய சண்முகப்பெருமான் தேவர்களுஞ் சயந்தனும் பெரியமகேந்திரபுரத்தினுள்ளே மனதில் நிலைத்ததுன்பத்துடன் மயங்கிக்கிடப்பதை யுணர்ந்தனர்.—எ-று. (௧)

வெஞ்சி றைத்தலை மூழ்கியே யவுணரான் மெலிந்து
நெஞ்ச ழிந்திடு மவர்தமை யருள்வது நினைந்தான்
றஞ்ச மின்றியே தனித்தயர் சிறுவரைத் தழுவி
யஞ்ச லென்றுபோற் றிடவரு மீன்றையா யனையான்.

(இ-ள்.) ஆதாரமில்லாமல் தனித்துவருந்துகின்ற குழந்தைகளையணைத்து நீ பயப்படாதே என்று கூறுதற்குவருகின்ற நற்றாயையொத்த சண்முகப்பெருமான் கொடிய சிறைச்சாலையிலமுழ்ந்தி அசுரர்களால் மெலிவடைந்து மனநிலை கெட்டுக்கிடக்கின்ற அத்தேவர்களுக்கு திருவருள்புரியும்வண்ணம் (கருணையேயுருவமான) திருவுளத்தில் நினைத்தனர்.—எ-று. (௨)

இனிய சீறடிக் குமரனிற் செந்திவந் திமையோர்
வினைகொள் கம்பலை யகற்றுவா னிருந்திடும் விமலன்
றனது ணர்ச்சியின் றாகியே யவசமாஞ் சயந்தன்
கனவின் முன்னுற வந்தன னருள்புரி கருத்தால்.

(இ-ள்.) இனிமையமைந்த சிறியபாதங்களையுடைய பாலனைப்போல திருச்செந்தூரினில்வந்து தேவர்களது வினையோடுகூடிய துன்பத்தை நீக்கக்கருதி எழுந்தருளி இராநின்ற மலரகிதராகிய சண்முகப்பெருமான் தன்னினைவின்றி மயங்கிக்கிடக்கின்ற சயந்தனது கனவினில் அவனுக்குத்திருவருள்புரியவேண்டுமென்னும்திருவுள்ளத்துடனே முன்னேவந்து நின்றருளினுர்.—எ-று. (௩)

வீறுகேதனம் வச்சிர மங்குசம் விசிக
மாறி லாதவே லபயமே வலமிடம் வரத
மேறு பங்கய மணிமழுத் தண்டுவில் லிசைந்த
வாறி ரண்டுகை யறுமுகங் கொண்டுவே ளடைந்தான்.

(இ-ள்.) (சயந்தனது கனவில்) குமரக்கடவுள் உயர்வுபொருந்திய கொடி-வச்சிரம்-அங்குசம்-அம்பு-மாறுபாடற்றவேல்-வலப்புறமபயம் இடப்புறம்வரதம் - பெருமைபொருந்திய தாமரை மணி-மழு-தண்டு-வில்-என்னும் இவைகளுடன் பொருந்திய பன்னிரண்டு திருக்கரங்களும் ஆறுதிருமுகங்களும் உடையவராக எழுந்தருளினுர்.—எ-று.

கொடிமுதல் அபயமீறுக வலப்புறக்கரங்களும் வரதமுதல்வில் ஈறுக இடப்புறக்கரங்களும் அமைந்துகொள்ள எழுந்தருளினுர் என்றுணர்க. (௪)

தந்தை யில்லதோர் பரமனைத் தாதையா வுடைய
தந்த னேகியே யனையதன் னுருவினைக் காட்ட

விந்தி ரன்மக னுளப்படும் யாக்கையு ளிருந்த
முந்து கண்களாற் கண்டனன் றெழுதனன் மொழிவான்.

(இ-ள்.) தனக்கொரு தந்தையில்லாத சிவபெருமானைத் தந்தையாகஉடைய குமரக்கடவுள் சென்று அவ்வாறாகிய தன்றிருவுருவத்தைக் காட்டியருளுதலும் சயந்தன் தனது சூக்குமசரீரத்திலுள்ள மனோநேத்திரங்களாற் கண்டுவணங்கிக் கூறுகின்றான்.—எ-று.

முந்துகண்கள்-ஞானக்கண்களெனினுமமையும். (ரு)

தொண்ட னேன்படு மிடுக்கணை நாடியே தொலைப்பான்
கொண்ட பேரரு ணீர்மையிற் போந்தனை குறிக்கின்
விண்டு மல்லையப் பிரமனு மல்லைமே லாகு
மண்டர் நாதனு மல்லைநீ யேவர்மற் றருளே.

(இ-ள்.) அடியேன் அநுபவிக்கின்ற துன்பத்தையுணர்ந்தே அத்துன்பத்தை நீக்கும்பொருட்டு உள்ளேகொண்டுள்ள பெரியஅருட்டன்மையினாலே எழுந்தருளி வந்திருக்கின்றீர் ஆராயும் இடத்து நீர்திருமாலுமல்லீர் அந்தப்பிரமதேவனுமல்லீர் அவ்விருவர்களிலும் உயர்ந்த தேவனாகிய சிவபெருமானுமல்லீர் பின்னைத்தேவரீர் யார் அடியேனறியும்படி கூறியருள்வீராக.—எ-று. (சு)

என்ற காலையி லறுமுகப் பண்ணவன் யாயக்
கொன்றை வேணியின் மிலைச்சிய பரஞ்சுடர் குமர
னுன்ற னல்லலு மிரக்கமு மையலு முணர்ந்து
சென்ற னம்மெனக் கூறியே பின்னருஞ் செப்பும்.

(இ-ள்.) சயந்தனிவ்வாறு கூறியவுடனே சண்முகதேவர் (அவனைப்பார்த்து நாம் கொன்றைமலர்மாலையைச் சடையிலணிந்துள்ள சிவபெருமானது மைந்தன் உனது துன்பமும் இரக்கமும் மயக்கமும் உணர்ந்துவந்தேமென்றுகூறி பின்னருஞ் சொல்லுகின்றனர்.—எ-று. (எ)

நுந்தை தன்குறை நுங்குறை யாவையு நுவன்று
வந்து நந்தமை வேண்டலும் வரம்பில்சே னையொடு
மிந்த ஞாலத்தி னெய்தியே கிரவுஞ்ச மென்னு
மந்த வெற்பையுந் தாரகன் றன்னையு மட்டாம்.

(இ-ள்.) ஹே! சயந்த! உன்றந்தையான விந்திரன் தனது குறையையும் உங்களது குறைகளையும் நம்மிடம்வந்துகூறி வேண்டிக்கொண்டமையால் அளவற்றசேனைகளுடனே இந்தபூவுலகத்திற்கு வந்து கிரவுஞ்சமென்னும் பெயரினையுடைய அந்த மலையையும் தாரகனையும்கொன்றோம்.—எ-று. (அ)

அனைய வன்றனை யட்டபின் செந்திவந் தமர்ந்தாம்
வனச மீமிசை யிருந்திடு பிரமனு மாலு
முனது தாதையு மமரரு நம்வயி னுறைந்தா
ரினையல் வாழிகே ளுங்கையு மேருவி னிருந்தாள்.

(இ-ள்.) அத்தாரகனைக் கொன்றதற்குப் பின்பு திருச்செந்தூரிலே வந்திருந்தோம் தாமரைமலரிலேயிருக்கிற பிரமனும் நாராயணனும் இந்திரனும் தேவர்களும் நம்மிடத்திலிருக்கின்றார்கள் நீவருந்தாதே உன்னிளையவளும் மகாமேருவிலிருக்கிறாள்.

இளையவ்ளென்றது-தேவயானையை. (கூ)

வீர வாகுவாந் தூதனை யாமிவண் விடுத்தேஞ்
சூரன் மைந்தனங் கொருவனைப் பலரொடுந் தொலையா

நேரி லாதவிக் கடிநக ரழித்து நீறுக்கிப்
பாரின் மாலையின் மீண்டிடப் புரிதுமிப் பகலின்.

(இ-ள்.) நாம் இவ்விடத்திற்கு வீரவாகுதேவனைத் தூதனுகஅனுப்பியிருக்கிறோம் அவன் இன்று சூரபன்மனது பிள்ளைகளிலொருவனை அனேகரோடுங்கொன்று ஒப்பற்ற இந்தக்காவலமைந்த ஊரையுமழித்து நீறுகச்செய்து பூலோகத்திற்கு மாலைப்பொழுதில் திரும்பிவரும்வண்ணம் செய்வோம்.—எ-று. (கo)

செல்லு மிப்பகல் கழிந்தபி னுளையே செந்தி
மல்ல லம்பதி நீங்கியிந் நகர்க்கயல் வைகிச்
சொல்லு மைந்திரு வைகலி னவுணர்தந் தொகையு
மல்ல லாற்றிய சூரனு முடிந்திட வடுதும்.

(இ-ள்.) சென்றுகொண்டிருக்கிற இன்றையத்தினம் ஆனவுடனே நாளையத்தினமே வளப்பம்பொருந்திய திருச்செந்தூராகிய நகரத்தைவிட்டு பிரயாணமாகிவந்து இந்த ஊருக்கருகிலிருந்து சொல்லப்பட்ட பத்துதினங்களில் அசுரர்களது கூட்டங்களும் உங்களுக்குத் துனபத்தை விளைத்த சூரபன்மனும் சாகும்படி கொல்லுவோம்.

அட்ட பின்னரே நின்னைவா னவருட னவுண
ணிட்ட வெஞ்சிறை நீக்கிநுந் திருவெலா மீதும்
விட்டி டிங்குன தாகுல மென்றனன் வினைதீர்ந்
துட்டெ ளிந்தவர் போதத்தி னுணர்வுமா யுறைவோன்.

(இ-ள்.) அவ்வாறு கொன்றதற்குப்பின்பு உன்னைத்தேவர்களுடனே சூரபன்மனிட்ட கொடியசிறையை ஒழித்து உங்களது செல்வங்களையெல்லாங் கொடுப்போம் நீ உனதுமனதிலுள்ள துன்பத்தை ஒழித்துவிடு என்று திருவாய்மலர்ந்தருளினுர் பாவங்களினின்றுநீங்கி பரிசுத்த இருதயம்பெற்ற ஞானிகளது அறிவுக்குள் அறிவாகவிளங்குகிற குமரக்கடவுள்.—எ-று. (கஉ)

ஐய னீங்கிவை யுரைத்தவை கேட்டலு மகத்துண்
மையன் மாசிரு ளகன்றன புகுந்தன மகிழ்ச்சி
மெய்யு ரோமங்கள் சிலிர்த்தன வுகுத்தன் விழிநீர்
சைய மேயென நிமர்ந்தன சயந்தன தடந்தோள்.

(இ-ள்.) குமரக்கடவுள் இவ்வண்ணமாகக் கூறியவைகளைக் கேட்டவுடனே சயந்தனது உள்ளிலிருந்தமயக்கமான இருள்ஒழிந்தன மகிழ்ச்சிபுகுந்தனஉடலிலுள்ள உரோமங்கள் சிலிர்த்தன கண்களினின்றும் நீரொழுகின விசாலமான தோள்கள் மலையைப்போல வளர்ந்தன.—எ-று. (கங)

பற்றி னல்வரு மமிர்தினை யெளிதுறப் படைத்துத்
துற்று ளோரெனத் தண்ணெனத் தனதுமெய் சுருதி
கற்ற கற்றன பாடினு னுடினுன் களித்தான்
மற்ற வன்பெறு முவகையின் பெருமையார் வகுப்பார்.

(இ-ள்.) விருப்பத்தால் (கஷ்டப்பட்டால் அரிதிற்கிடைத்தற்பாலதாம்) அமிர்தத்தை எளிதாக சம்பாதித்து உண்டவர்களைப்போல தன்னுடல்குளிர்ச்சியுறும்படி தான்முன்னே கற்றுள்ள வேதங்களைச்சொல்லிப்பாடினுர் ஆடினுன் சந்தோஷித்தான் அச்சயந்தன் அடைந்த மகிழ்வின்பெருமையை யார்எடுத்துக்கூறுவார்கள்.—எ-று. ()

வேறு.

நிகழ்ந்திடு மறவியை நீங்கி யிவ்வகை
மகிழ்ந்திடு மிந்திரன் மதலை யெம்பிரான்

றிகழ்ந்திடு பதமலர் சென்றி றைஞ்சியே
புகழ்ந்தன னினையன புகல்வ தாயினான்.

(இ-ள்.) உண்டாயிருந்த மயக்கத்தை யொழிந்து இவ்வண்ணமாக மகிழுகிற இந்திரகுமாரனாகிய சயந்தன் எம்பெருமானாகிய சண்முகக்கடவுளது விளங்குகின்ற திருவடித்தாமரைகளைச்சென்று வணங்கி புகழ்ந்தவனாக இவ்வண்ணமாகக் கூறுகின்றான்.—எ-று. (கரு)

நொய்யசீ ரடியரோ நோவு மாற்றியே
யையநீ வலிதுவந் தளித்தி யானுரை
செய்வது முண்டுகொல் சிறிது நின்கணே
யையடை புகுந்தனங் காத்தி யாலென்றான்.

(இ-ள்.) குறைந்தசெல்வத்தினையுடைய அடியோங்களது துன்பத்தை ஒழித்து ஐயனே தேவரீர் வலியவந்தருள்செய்யாநின்றீர் அடியேன் சொல்லவேண்டுவது முண்டோ அடியோங்கள் தேவரீரிடத்தடைக்கலமாக வடைந்துள்ளோம் இரக்ஷிப்பீராகவென்று கூறினான்.—எ-று. (கசு)

சயந்தன்மற் றிவ்வகை சாற்ற யாரினு
முயர்ந்திடு பரஞ்சுட ரொருவன் கேட்குறு
வயர்ந்தநுங் குறையற வளித்துந் திண்ணமென்
றியைந்திட மேலுமொன் றிசைத்தன் மேயினான்.

(இ-ள்.) சயந்தனிவ்வாறு கூறுதலும் அதனை யாரினும் உயர்ந்தபரஞ்சுடராகிய குமாரக்கடவுள் கேட்டு நிச்சயமாக சோர்வடைந்த உங்கள்குறைவுபாடு நீங்கும்படி உங்களைக்காப்போம் என்றருளிச்செய்து பொருந்தும்படி பின்னும் வேறொன்றை திருவாய்மலர்ந்தருளத்தொடங்கினார்.—எ-று. (கஎ)

இந்நகர் குறுகயா மேய தூதுவ
னின்னையுஞ் சுரரையு நேர்ந்து கண்ணுறீஇ
நன்னயங் கூறியே நடப்ப வுய்க்குது
மன்னதுங் காண்கென வருளிப் போயினான்.

(இ-ள்.) இந்த நகரத்திற்கு வரும்படி யெம்மாலனுப்பப்பட்ட தூதன் உன்னையுந்தேவர்களையும் இவ்விடத்தில் வந்துபார்த்து உங்களுக்கு நல்லவசனங்கூறிப்பின்னர் மற்றையகாரியங்களைச்செய்யும்படி அனுப்புகிறோம் அதை நீபார் என்று கூறிச்சென்றனர்.—எ-று. (கஅ)

படைப்புறு தயர்ந்திடு பங்க யன்கனா
வடுத்தனக் கருள்செய வாறொ டைவரை
விடுத்துமென் றேகிய விமலன் போலவே
யிடர்ப்படு சயந்தன்மு னிவைசொற் றேகினான்.

(இ-ள்.) சிருட்டித்தொழில் நடவாமல் மயக்கங்கொண்டிருந்த பிரமனதுசொப்பனத்திலே சென்று உன்படைப்புத்தொழில் நடக்கும்பொருட்டு உனக்குத் திருவருள்புரியும்படி ஏகாதச உருத்திரர்களை அனுப்புகிறோமென்று கூறியெழுந்தருளிய சிவபெருமானைப்போல வருந்துகின்ற சயந்தன்முன்னே இவ்வாறுகூறி குமரக்கடவுள் மறைந்தருளினர்.—எ-று. (கக)

ஏகிய காலையி னிறந்து முன்னரோ
போகிய புலமெலாம் பொறியிற் றேன்றலு

மாகிய கனவினை யகன்று பைப்பய
நாகர்கோன் றிருமக னனவி னண்ணினன்.

(இ-ள்.) குமரக்கடவுள் இவ்வண்ணந் திருவாய்மலர்ந்தருளிச் சென்றவுடனே தேவராஜனது குமாரனுய சயந்தன் உள்ளே ஒடுங்கிச்சென்றிருந்த சத்தமுதலிய புலன்களெல்லாம் காதுமுதலிய பொறிகளில்வந்து நிற்கவும் முன்னரிருந்த சொப்பனுவத்தையினின்று நீங்கி மெல்லெனமெல்லெனச்சாக்கிராவத்தையையடைந்தனன்.-எ-று.

வேறு.

தந்தி நஞ்சந் தலைக்கொளச் சாய்ந்தவர்
மந்தி ரத்தவர் வாய்மைவந் துற்றுழிச்
சிந்தை மையலைத் தீர்ந்தெழு மாறுபோ
லிந்தி ரன்றன் மதலை யெழுந்தனன்.

(இ-ள்.) பாம்புவிஷந்தலைக்கேறி மயங்கினவர்கள் (கருடபஞ்சாக்ஷர முதலிய) மந்திரங்களையுணர்ந்தவர்களது ஆணைமொழியைக் கேட்டவுடனே மனமயக்கநீங்கி எழுந்தன்மையைப்போல இந்திரகுமாரனுகிய சயந்தனெழுந்தனன்.—எ-று.

மந்திரத்தவர்வாய்மைவந்துற்றுழி என்பதை மந்திரமறிந்தவர்களது சத்தியம் வந்து பொருந்திய உடனே எனினும் ஆம் மந்திரத்தால் விஷமிறக்குபவர்களிலனேகர் ஆணையிடவிஷம் இறங்கக்காண்கிறோம் ஆதலாலவர்களது மொழியைக் கேட்டவுடனே என்றும். (உக)

நனவு தன்னிடை நண்ணிய சீர்மகன்
கனவி னெல்லைபிற் கண்டன யாவையு
நினைவு தோன்றின னெஞ்சங் குளிர்ந்துநம்
வினையெ லாமிவண் வீடிய வோவென்றான்.

(இ-ள்.) சக்கிராவத்தையை அடைந்த சிறப்பினையுடைய சயந்தன்தான்சொப்பனுவத்தையிற் கண்டனவற்றையெல்லாம் நினைவுக்குக்கொண்டுவந்து மனங்குளிர்ந்து நமது பாவங்களெல்லாம் இவ்விடத்திலொழிந்ததோ என்றுகூறினன்.—எ-று. (உஉ)

கவலை தூங்கிக் கடுந்துயர் நீரதா
யவல மாகிய வாழியி லாழ்நதுளான்
சிவகு மாரன் றிருவரு ளுன்னியே
யுவகை யென்னு மொலிகடன் மூழ்கினன்.

(இ-ள்.) கவலைபொருந்தி மிகவுந் துன்பத்தின் தன்மையாம் அவலமாகிய கடலிலேமுழுகிக்கிடந்த சயந்தன் சண்முகக்கடவுளின் திருவருளை நினைந்துசந்தோஷமென்கிற ஆரவாரத்தினையுடைய கடலிலே முழுகினன்.—எ-று. (உந)

அனைய காலை யயர்ந்திடு வானுளோர்
கனவு தோறுங் கடிதுசென் றிந்திரன்
றனய னுக்குமுன் சாற்றிய வாறுசொற்
றினைய லீரென வேகின னெம்பிரான்.

(இ-ள்) அந்தச்சமயத்தில் அந்தச்சிறைச்சாலையில் மயங்கிக்கிடக்கிற தேவர்களது கனவுகள்தோறும் விரைவாகச்சென்று இந்திரகுமாரனுகிய சயந்தனுக்கு முன்னே சொன்னதைப்போலவே நீங்கள் வருந்தாதேயுங்களென்று திருவாய்மலர்ந்தருளி எம்பெருமானுகிய குமரக்கடவுள் எழுந்தருளினர்.—எ-று. (உச)

அம்மென் கொன்றை யணிமுடிக் கொண்டவன்
செம்ம லேகலுந் தேவர்க ளுவெரி இ
விம்மி தத்தின் விழித்தெழுந் தேயிரீ இத்
தம்மி லோர்ந்து தவமகிழ் வெய்தினர்.

(இ-ள்) கங்கையை மெல்லியகொன்றைமலர்மாலையையணிந்த முடியில் தரித்தருளிய சிவபெருமானது திருக்குமாரராகிய குமரக்கடவுள் எழுந்தருளிய உடனே தேவர்களெல்லாம் சொப்பனவத்தையைவிட்டு ஆச்சரியத்துடனே சாக்கிராவத்தையை யடைந்தெழுந்திருந்து ஒருவருக்கொருவர் கண்டசொப்பனங்களைச்சொல்லி மிகவு மகிழ்வடைந்தார்கள்.—எ-று. (உரு)

சில்லை வெம்மொழித் தீயவர் கேட்பரே
லல்லல் செய்வரென் றஞ்சிக் கனுத்திற
மல்லன் மைந்தன் மருங்குறு வார்சிலர்
மெல்ல வங்கவன் கேட்க விளம்பினர்.

(இ-ள்) கவுதாரிப்பக்ஷியைப்போன்ற கொடுந்தொனியோடுகூடிய பாவிகளான இந்த அசுரர்கள்கேட்பார்களானுல் துன்பப்படுத்துவார்களென்று பயந்து சில தேவர்கள் வலிமையமைந்த சயந்தனருகிற்சென்று மெல்லெனவவன்கேட்கும்படி தாங்கண்ட கனுத்திறத்தைக்கூறினர்கள்.—எ-று. (உசு)

வேறு.

அண்டர்கண் மொழிதரு மற்பு தத்தையுட்
கொண்டன னங்கவை குமரன் முன்முனங்
கண்டது போன்றிடக் களித்துப் பாரெலா
முண்டவ னுமென வுடலம் விம்மினன்.

(இ-ள்.) சயந்தன் தேவர்கள்கூறிய கனுத்திறத்தையெல்லாம் உட்கொண்டு தான்முன்னே கண்டகனவையே இவர்களுங்கண்டிருக்கின்றார்கள் என்று மகிழ்வடைந்து பூமியையெல்லாம் உண்ட திருமாலைப்போல உடம்புபூரித்தான்.—எ-று. (உஎ)

அறுமுக முடையதோ ராதி நாயக
னிறைதரு முலகெலா நீங்க லின்றியே
யுறைவதுங் கருணைசெய் திறனு முன்னியே
மறைமுறை யவனடி வழுத்தி வைகினன்.

(இ-ள்.) சயந்தன் ஆறுதிருமுகங்களையுடைய ஆதிமுதல்வன் நிறைந்துள்ள உலகமுழுவதிலும் நீக்கமில்லாமலெழுந்தருளியிருப்பதும் தனக்குத்திருவருள் புரிந்த தன்மையுநினைத்து வேதமுறைப்படி யக்குமரக்கடவுள் திருவடிகளைத் துதித்துக்கொண்டு சிறையிலிருந்தனன்.—எ-று. (உஅ)

சயந்தன்கனவுகாண்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் – சசரு.

---

# வீரவாகுசயந்தனைத்தேற்றுபடலம்.

இத்திற மமரரொ டிந்தி ரன்மக
னத்தலை யிருத்தலு மனையர் யாவரு
மொய்த்திடு சிறையகமுன்கண் டானரோ
வித்தக வறிவனும் வீர வாகுவே.

(இ-ள்.) இவ்வண்ணந்தேவர்களுடனே சயந்தன் அந்தமஹேந்திரபுரியிலுள்ள சிறைச்சாலையிலிருத்தலும் அவர்களெல்லாம் நெருங்கியிருக்கின்ற சிறைச்சாலையை மேலாகிய உணர்ச்சியினையுடைய வீரவாகுதேவர் எதிரிலேகண்டனர்.—எ-று. (க)

வேறு.

மாகண்ட மொன்பான் புகழுந் திறல் வாகு வங்க
ணாகண்டலன் மைந்தனை விண்ணவ ராயி னாரைக்
காய்கண்ட கராமவுணத் தொகை காத்தல் கண்டான்
பேய்கண்ட செல்வந் தனைக்காத் திடும் பெற்றி யேபோல்.

(இ-ள்.) பெரிய நவகண்டங்களிலும் உள்ளவர்கள் புகழுகின்ற வெற்றியமைந்த வீரவாகுதேவர் அச்சிறைச்சாலையில் இந்திரகுமாரனாகிய சயந்தனையும் தேவர்களாயுள்ளவர்களையும் பேய்கள் தங்கள் கண்ணெதிரிலே காணப்படுகிற செல்வத்தைக் காத்துக்கொண்டு நிற்குந்தன்மையைப்போல கோபிக்கின்ற துஷ்டர்களாகிய அசுரர்கள் காவல்புரிவதைக்கண்டனர்.—எ-று. (உ)

கண்ணோட மின்றித் துயர்வேலியிற் காவல் கொண்ட
வெண்ணோ ரெனைக்கண் டிலராயுணர் வின்றி மாழ்க
விண்ணோர்கள் காணத் தமியேன் செலவேண்டு மென்றான்
மண்ணோ ரடியா லளக்குந்தனி மாய னொப்பான்.

(இ-ள்.) மண்ணுலகத்தைத் தனது ஓரடியினாலளந்த ஒப்பற்ற திருமாலைப்போன்ற வீரவாகுதேவர் விருப்பமில்லாமல் துன்பமாகிய வேலியைப்போல காவல்பூண்டிருக்கிற இத்தொகைய அசுரர்கள் என்னைப்பாராதவர்களாய் அறிவழிந்து வருந்தவும் தேவர்களென்னைக் காணவும் யான்செல்லுதல்வேண்டும் என்றனர்.—எ-று. (ங)

ஓங்கார மூலப் பொருளா யுயிர்தோறு மென்று
நீங்காத மருங்கும ரேசனை நெஞ்சி னுன்னி
யாங்காகுவ தோரவன் மந்திர மன்பி னோதித்
தீங்காமவுணர் செறிகாப்பகஞ் சென்று புக்கான்.

(இ-ள்.) ஓங்காரமந்திரத்தின்பொருளாகி யுயிர்கள்தோறும் எப்பொழுதும் நீங்காமல் எழுந்தருளியிருக்கிற குமரக்கடவுளை மனதிலேநினைத்து அவ்விடத்திற்குவேண்டிய ஒருசண்முகமோகனமந்திரத்தை அன்புடனே சொல்லிக்கொண்டு கொடுமைபொருந்திய அசுரர்கள் நெருங்கியுள்ள சிறைச்சாலைக்குள் சென்றுபுகுந்தனர்.—எ-று. (ச)

தாமந்தரு மொய்ம்புடை வீரன் சயந்தன் விண்ணோ
ரேமந்தரு வன்சிறைச் சூழலு ளேக லோடுந்
தூமந்திகழ் மெய்யுடைக் காவலர் துப்பு நீங்கி
மாமந்திர மாம்வலைப் பட்டு மயங்க லுற்றார்.

(இ-ள்.) ஒளியைத்தருகின்ற தோள்களையுடைய வீரவாகுதேவர் சயந்தனுந் தேவர்களும் துன்பப்படுகின்ற கொடியசிறைச்சாலைக்குள்ளே செல்லுதலும் புகைபோலவிளங்குகின்ற கரிய உடம்பினையுடைய அசுரர்கள் அறிவொழிந்து பெரிய மந்திரமென்னும் வலைக்குள் அகப்பட்டுமயங்கினார்கள்.—எ-று. (ரு)

எண்டா னவரிற் புடை காப்பவர் யாருமையல்
கொண்டார் குயிற்றப் படுமோவியக் கொள்கை மேவத்
தண்டா ரயில்வேற் படைநாயகன் றானை வேந்தைக்
கண்டார் சயந்த னொடுதேவர் கருத லுற்றார்.

(இ-ள்.) எண்ணப்படுகிற காவலாளிகளாகிய அசுரர்களுக்குள்ளே பக்கத்திற் காவல்பூண்டிருப்பவர்களெல்லாம் மயக்கங்கொண்டு செய்யப்பட்ட சித்திரத்தின் தன்மையையடையவும் உடனே தண்ணிய மலர்மாலையணிந்த கூரிய வேலாயுதத்தினையுடைய குமரக்கடவுளின் சேனாபதியாகிய வீரவாகுதேவரைபார்த்துச் சயந்தனும் தேவர்களும் நினைக்கத்தொடங்கினார்கள்.—எ-று. (சு)

ஏமாந் தவுணர் சிறுகாலையி னின்னல் செய்ய
நாமாண் டனர்போ லவசத்தி னணுகு மெல்லை
மாமாண் படைய வருள்செய்தநம் வள்ள றூத
னாமா மிவனென் றகங்கொண்டன ரார்வ முற்றார்.

(இ-ள்.) சற்றுநேரத்திற்குமுன்னே இறுமாப்புடனே அசுரர்கள் துன்பப்படுத்த நாம் இறந்தவர்களைப்போல மூர்ச்சித்துக்கிடக்குஞ்சமயத்தில் மகத்தானமாட்சிமையை நாமடையும்படி அருள்செய்த வள்ளலாகிய குமரக்கடவுளின் தூதரோ இவர் என்று தங்கள் மனங்களில் நினைத்து அவரது வருகையில் விருப்பமுள்ளவர்களாக இருந்தார்கள்.—எ-று. (எ)

அன்னா ரமருங் களஞ்சென் றயிலேந்து நம்பி
நன்னா யகமாந் திருநாம நவின்று போற்றிப்
பொன்னா டிறைகூர் திருநீங்கிய புங்க வன்றன்
முன்னா வணுகி யிருந்தா னடன் மொய்ம்பின் மேலோன்.

(இ-ள்.) சிறந்த வீரவாகுதேவர் அத்தேவர்களிருக்குமிடத்திற்சென்று வேலாயுதமேந்திய திருக்கரங்களையுடைய குமரக்கடவுளின் சிறந்ததாகவுள்ள ஒருபெயரைக் கூறித் துதித்து பொன்னுலகத்தை ஆளுகின்ற செல்வத்தினின்று நீங்கியுள்ள சயந்தனது எதிரிலே சென்றிருந்தனர்.—எ-று. (அ)

செறிகின்ற ஞானத் தனிநாயகச் செம்ம னாம
மெறிகின்ற வேலை யமுதிற்செவி யேக லோடு
மறிகின்ற துன்பிற் சயந்தன் மகிழ்வெய்தி முன்ன
ரறிகின்றி லன்போற் றொழுதின்ன வறைத லுற்றான்.

(இ-ள்.) நெருங்கிய ஒப்பற்ற ஞானநாயகனாகிய குமரக்கடவுளின் திருநாமத்தைத் (வீரவாகுதேவர் உச்சரித்தலுமது) அலைவீசுகின்ற பாற்கடலிலுண்டாகிய அமுதத்தைப்போல தனது காதுகளிற் பிரவேசித்தலும் சாகத்தக்கதுன்பத்தினையுடைய சயந்தன் மகிழ்வடைந்து முன்னமறியாதவனைப்போல வணங்கி இவைகளைச் சொல்லாநின்றனன்.—எ-று. (கூ)

தாவம் பிணித்த தெனுங்குஞ்சித் தருவ ரானோர்
பாவந் தலைச்சூழ் வதுபோலெமைப் பாடு காப்ப
மாவெம் படரி லிருந்தேங்கண் மருங்கி னைய
நீவந்த தென்னை யினிதிங்கு நிகழ்த்து கென்றான்.

(இ-ள்.) காடாக்கினி பற்றிக்கொண்டதென்று சொல்லத்தக்க தலையுரோமங்களையுடைய அசுரர்கள் பாவமானது சுற்றியிருந்துகாப்பதைப்போல எங்களைப்பக்கத்திலிருந்து காவல்செய்ய மிகவுங்கொடியதுன்பத்திலிருந்த எங்களிடத்தில் ஐயரேநீர்வந்ததைக்குறித்து இனிமையாக இவ்விடத்தில் சொல்லியருளுவீராக என்றுகூறினான். ()

வேறு.

முறைபுணர் கேள்வி வீரன் மொழிகுவான் முதல்வன் றந்த
வறுமுக வையன் றன்பி னடுத்துளே னவன்றா தானேன்

விறல்கெழு நந்தி பாலேன் வீரவா கென்பேர் நுங்கள்
சிறைவிடும் பொருட்டுச் சூர்முன் செப்புவான் வந்தே னென்றான்.

(இ-ள்.) சாத்திரங்களை முறையே உணர்ந்த காதுகளையுடைய வீரவாகுதேவர் சொல்லுகின்றனர்; யான் சிவபெருமானளித்தருளிய சண்முகக்கடவுளின் தம்பியாக வுள்ளவன் அவருக்கேதூதனுமாயினேன். அன்றியும் வெற்றியொடுவிளங்குகின்ற நந்தி கணங்களிலுள்ளவன். என்பெயர் வீரவாகு. உங்கள்சிறையைவிடச் சொல்லும்பொருட்டு சூரபன்மனது முன்னர்க்கூறும் வண்ணம் வந்தேனென்றனர்.—எ-று. (௧௧)

என்னலு மமர ரோடு மிந்திரன் குமரன் கேளாச்
சென்னியி னமிர்துள் ளூறல் செய்தவத் தயின்ற மேலோ
ரன்னதற் பின்னர் நேமி யமிர்தமும் பெற்றுண் டாங்கு
முன்னுறு மகிழ்ச்சி மேலு முடிவிலா மகிழ்ச்சி வைத்தான்.

(இ-ள்.) வீரவாகு தேவரிவ்வாறு கூறுதலும் அதனைத்தேவர்களுடன் சயந்தன் கேட்டு தாம்செய்ததவத்தால் தலையிலுள்ள ஊறலாகிய அமிர்தத்தை முன்னே உண்பவர்கள்பின்னல் கடலிலுண்டாகிய அமிர்தத்தையுங்கிடைக்கப்பெற்று உண்டாற்போல முன்னர் அடைந்த மகிழ்வைக்காட்டிலும் அளவற்ற மகிழ்ச்சியடைந்தனன்.—எ-று. ()

அந்தா முதல்வன் மைந்த னறைகுவா னைய துன்பூர்
புந்தியேங் குறைவி னதற் பொருட்டினாற் போந்தா யற்றா
லிந்தவன் சிறையு நீங்கிற் றிடரெலா மகன்றி யாங்க
ளுய்ந்தனம் பவங்க டரு மூதியம் படைத்து மென்றான்.

(இ-ள்.) தேவராஜ குமாரனாகிய சயந்தன் சொல்லுகின்றான்; ஐயனே! துக்கம் பொருந்திய மனத்தினையுடைய எங்கள்துன்பத்தைப்பற்றி வினவும்பொருட்டு வந்திருக்கின்றீர் ஆதலால் இந்தக்கொடியசிறையும் நீங்கியது துன்பமெல்லாநீங்கி நாங்களும் உய்ந்தோம் பாவங்களைவிட்டுநீங்குகிறவித்தையையும் அடைந்தோம் என்றுகூறினான்.()

பூண்டகு தடந்தோள் வீரன் புகலுவான் சூர்மே லொற்றா
வீண்டெனை விடுத்த வேற்கை யெம்பிரான் வலிதே நும்மை
யாண்டிடு கின்றான் முன்ன ராக்கமும் பெறுதிர் பின்னும்
வேண்டிய தெய்து கின்றீ ரென்றனன் மேலுஞ் சொல்வான்.

(இ-ள்.) ஆபரணங்களுடனே விளங்குகின்ற பெரியதோளினையுடைய வீரவாகுதேவர் சொல்லுகின்றனர்; சூரபன்மனிடத்துக்குத்தூதனாக என்னை அனுப்பிய வேலாயுதந்தாங்கிய திருக்கரத்தினையுடைய எம்பிரான் உங்களை வலியவாட்கொள்ளுகின்றார் ஆதலால் பழையசெல்வத்தையுமடைவீர்கள் இதுவன்றியும் வேண்டியவற்றையும்அடைகின்றீர்கள் என்றுகூறிப் பின்னுஞ்சொல்லுகின்றனர்.—எ-று. (௧௪)

உலமெலாங் கடந்த தோளீ ருன்னுதி ருன்னி யாங்கு
நலமெலாம் வழிபட் டோர்க்கு நல்கிய குமரன் றன்னாற்
றலமெலாம் படைத்த தொல்லைச் சதுர்முகன் முதலாம் வானோர்
குலமெலா முய்ந்த தென்றா லுமக்கொரு குறையுண் டாமோ.

(இ-ள்.) திரண்டகற்களையெல்லாம் வென்றதோள்களையுடையவர்களே! எண்ணிக்கொள்ளுங்கள் தன்னைவணங்கினவர்களுக்கு எல்லாநன்மைகளையும் அளிக்கின்ற குமரக்கடவுளினால் உலகமெல்லாம்படைத்த பழையபிரமன்முதலியதேவர்களது பரம்பரைகளெல்லாம் நன்மையை யடைந்ததானால் (அவரைநினைக்கின்ற) உங்களுக்கு ஒரு குறைவுவருமோ.—எ-று. (௧௫)

தேவர்க டேவன் வேண்டச் சிறைவிடுத் தயனைக் காத்த
மூவிரு முகத்து வள்ளன் முழுதருள் செய்தானும்பாற்
பாவமும் பழியுந் தீங்கும் பையுளும் பிறவு மெல்லாம்
போவது பொருளோ தோற்றப் புணரியும் பிழைத்தீ ரன்றே.

(இ-ள்.) தேவர்களுக்கெல்லாம் தேவனுகிய சிவபெருமான் வேண்டிக்கொண்டமையால் பிரமனைச்சிறையினின்று நீக்கிக்காத்தருளிய சண்முகக்கடவுளாகிய வள்ளல் உங்களிடத்தில் முழுக்கருணைவைத்திருக்கின்றனர்; (அதனுல்) பாவங்களும் பழிகளும் தீங்குகளும் துன்பங்களும் மற்றையவைகளும் எல்லாம் போவது ஒரு பெரிய காரியமோ! பிறவிக்கடலேயுங்கடந்தீர்கள்.—எ-று. (கசு)

சீர்செய்த கமலத் தோனைச் சிறைசெய்து விசும்பி னோடும்
பார்செய்த வுயிர்கள் செய்த பராஞ்சுடர் நும்மை யெல்லாஞ்
சூர்செய்த சிறையி னீக்கத் தொடர்ந்திவ ணுற்ற னென்று
னீர்செய்த தவத்தை யாரே செய்தனர் நெடிது காலம்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய பிரமனைச்சிறையிலடைத்துஆகாயத்திலும் பூமியிலுமுள்ள உயிர்களைப்படைத்தகுமரக்கடவுள் உங்களையெல்லாம்சூரபன்மனிட்ட சிறையினின்றும் நீக்குதற்கு இங்கேவந்தாராலுல் நீங்கள்செய்த தவத்தைப்போல யார் அநேககாலந்தவஞ்செய்தார்கள்.—எ-று. (கஎ)

சங்கையில் பவங்க ளாற்றுந் தானவர் செறிந்த மூதூ
ரிங்கிதி னறிஞர் செல்லா ரெம்பிரா னருளி னல்யா
னங்கணம் படர்வோ ரென்ன வகமெலிந் துற்றே னீண்டே
யுங்களை யெதிர்த லாலே யுலப்பிலா வுவகை பூத்தேன்.

(இ-ள்.) அளவில்லாத பாவங்களைச்செய்கின்ற அசுரர்கள் நெருங்கிவாழுகின்ற பெரிய இந்த நகரத்தில் விவேகிகள் புகுதமாட்டார்கள் எமது பெருமானுகிய குமரக்கடவுளினது திருவருளினல் யான் சேற்றுநிலத்திற் செல்பவர்களைப்போல மனவாட்டத்துடனுற்றேன்; இவ்விடத்தில் புண்ணியங்களை (செய்பவர்களாகிய) உங்களைக்கண்டதினுலே கெடாத மகிழ்ச்சியடைந்தேன்.—எ-று. (கஅ)

என்றலு மகிழ்ச்சி யெய்தி யிந்திரன் மதலை யாங்கள்
வன்றளைப் படுமுன் போனார் மற்றெமைப் பயந்தோ ரன்னோ
ரன்றுதொட் டின்று காறு மாற்றிய செயலு மற்று
லொன்றிய பயனும் யாவு முரைமதி பெரியோ யென்றான்.

(இ-ள்.) இவ்வாறு கூறுதலுஞ் சயந்தன் சந்தோஷமடைந்தவனாய் (வீரவாகுதேவரைப்பார்த்து) ஐய நாங்களிந்தக்கொடிய சிறையிலகப்படுதற்கு முன்னே என்னைப்பெற்ற தந்தைதாயர்கள் போனார்கள் அவர்களந்நாள் தொடங்கி இன்றையதினம்வரைக்கும்செய்த செய்கையும் அதனுலடைந்த பலமும் ஆகிய எல்லாம் பெரியவரே நீர் கூறவேண்டும் என்று கூறினான்.—எ-று. (கக)

வீரனங் கதனைக் கேளா விண்ணவர் கோமான் றன்னு
ளாரணங் குடனே காழி யடைந்ததே யெழுவாயாகச்
சீரலை வாயி லந்நாட் சென்றிடு காறு முள்ள
காரிய நிகழ்ச்சி யெல்லாங் கடிதினிற் கழறி னானே.

(இ-ள்.) அதனை வீரவாகுதேவர்கேட்டு தேவர்களுக்கு அரசனுகிய இந்திரன் முன்னாளில் அரிய அழகினையுடைய இந்திராணியுடனே சீகாழியை அடைந்ததை முத

லாகக்கொண்டு திருச்செந்தூருக்கு வந்ததிறுதியாகவுள்ளசெயல்களனைத்தையும் விரைவாகக்கூறினர்.—எ-று. (உ0)

மேதகு தடந்தோள் வீரன் விண்ணவர் கோமான் செய்கை
போதலுஞ் சயந்தன் கேளா வுரைசெய்வா னன்னை தன்னைத்
தாதையை யடிக டன்னைச் சண்முகத் தனிவேற் செங்கை
யாதியை யெதிர்ந்தா லொத்தே னையநின் மொழிகேட் டென்றான்.

(இ-ள்.) பெருமைவாய்ந்த தடந்தோள்களையுடைய வீரவாகுதேவர் இந்திரனது தொழில் முழுமையும் கூறுதலும் அதனைச் சயந்தன் கேட்டுச் சொல்லுகின்றான் (ஐய! நின்வாய்மொழியைக்கேட்டயான் என்றாயாகிய இந்திராணிதேவியையும் தந்தையாகிய இந்திரனையும் குருவாகிய வியாழனையும் தெய்வமாகிய ஒப்பற்ற வேலேந்திய திருக்கரத்தினையுடைய சண்முகக்கடவுளையும் கண்டவன்போல வாயினேன்; என்று கூறினான்.

இறைதரு மமரர் தம்மோ டிந்திரன் புதல்வன் றன்னை
யறிவரி லறிவன் கண்ணுற் றறுமுகம் படைத்த வண்ணன்
மறையிடை வதிந்த நுங்கள் வன்சிறை மாற்றும் வைகல்
சிறிதிவ ணிருத்தி ரென்று பின்னருஞ் செப்பு கின்றான்.

(இ-ள்.) மறுமொழி கூறிய தேவர்களையும் இந்திரகுமாரனாகிய சயந்தனையும் விவேகிகளிற் சிறந்த வீரவாகுதேவர்பார்த்து ஆறுதிருமுகங்களைப்பெற்றுள்ள கடவுள் மறைவிடமாகிய பொல்லாச் சிறையிலிருக்கின்ற உங்கள் கொடிய இந்தச்சிறையை கிறகாலம் சமீபித்துவிட்டது அது வரையிலும் இங்கே இருங்களென்று கூறிப்பின்னருக்கூறுகின்றனர்.—எ-று. (உஉ)

தன்னிக ரின்றி மேலாய்த் தற்பர வொளியா யாரு
முன்னரும் பரமாய் நின்ற வொருவனே முகங்க ளாறும்
பன்னிரு புயமுங் கொண்டு பாலகன் போன்று கந்த
னென்னு மோர் பெயரு மெய்தி யாவருங் காண வந்தான்.

(இ-ள்.) ஒப்பற்றதாய், மேலானதாய், ஞானவொளியாய், எத்தகையோர்களாலும்நினைத்தற்கரிய பரம்பொருளாக இருக்கின்ற சிவபெருமானே ஆறுதிருமுகங்களும் பன்னிரண்டு திருத்தோளகளுங்கொண்டு குழந்தையைப்போல கந்தன் என்னுமோர் திருநாமத்தையுந் தாங்கி எல்லாருங்காணும் வண்ணம் எழுந்தருளி இருக்கின்றார்.

பங்கய முகங்க ளாறும் பன்னிரு புயமுங் கொண்டே
யெங்கடம் பெருமான் போந்த வேதுமற் றென்னை யென்னிற்
செங்கண்மா லுந்தி பூத்தோன் சிறுமையு மகவான் றுன்பு
முங்கடஞ் சிறையு நீக்கி யுலகெலா மளிப்பக் கண்டாய்.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற ஆறுதிருமுகங்களையும் பன்னிரண்டு திருத்தோள்களையுங்கொண்டு எங்கள் கடவுளெழுந்தருளிவந்திருத்தல் எதன்பொருட்டென்றால், செந்நிறம்பொருந்திய கண்களையுடைய திருமாலின் நாபிக்கமலத்திற் பிறந்த பிரமனது சிறுமையும் இந்திரனது துன்பமும் உங்களது சிறைச்சாலையும் ஒழித்து எல்லாவுலகங்களையும் இரக்ஷிக்கும் பொருட்டேயாம்.—எ-று. (உச)

சிறுவிதி வேள்வி நண்ணித் தீயவி நுகர்ந்த பாவ
முறைதனில் வீரன் செற்று முற்றவு முடிந்த தில்லை
குறைசில விருந்த வாற்றாற் கூடிய துமக்கித் துன்ப
மறுமுகப் பெருமா னன்றி யாரிது நீக்கற் பாலார்.

(இ-ள்.) தக்கனது யாகசாலையை யடைந்து அக்கினிச்சம்பந்தமான அவிர்ப்பாகமுண்டபாவம் முறைப்படி வீரபத்திரரால் தண்டிக்கப்பட்டும் முற்றிலும் முடியவில்லை அந்தபாவத்தின் மிச்சம் கொஞ்சம் இருந்தமையால் உங்களுக்கிந்தத்துன்பமுண்டாயது. இதனை ஆறுமுகக்கடவுளைத்தவிர யார் நீக்கத்தக்கவர்கள்.—எ-று. (உரு)

தாட்கொண்ட கமல மன்ன சண்முகத் தெந்தை வேலாற்
காட்கொண்ட கிரியி னோடு தாரகற் கடந்த பூச
லாட்கொண்ட மதுகை சான்ற சூர்முதல் களைய முன்ன
நாட்கொண்ட தன்மையன்றோ நறைகொண்ட வலங்கற் றோளாய்.

(இ-ள்.) தேன்பொருந்திய மலர்மாலையணிந்த தோளையுடையோய்! ஒருதாளோடு கூடிய தாமரைமலரைப்போன்ற ஆறுதிருமுகங்களையுடைய எம்பெருமானது வேலாயுதத்தினால் வயிரம்பொருந்திய கிரவுஞ்சமலையுடனே தாரகாசுரனைக்கொன்றது போர் வெற்றிபொருந்திய தோள்களையுடைய சூரபன்மனாகிய அசுரர்தலைவனை அழிக்க முதலில்முகூர்த்தத்திலாரம்பித்தது போன்றதன்றோ.—எ-று. (உசு)

காலுறக் குனித்துப் பூட்டிக் கார்முகத் துய்ப்ப வோர்செங்
கோலினுக் குண்டி யாற்றார் குணிப்பிலா வவுணர் யாரு
மாலினுக் கரிதா மண்ணன் மாமகன் கரத்திற் கொண்ட
வேலினுக் கிலக்க தில்லை விடுப்பது மிகைய தன்றே.

(இ-ள்.) காலிற்பொருந்தும்படி வில்லைவளைத்து விடுதற்கு அளவிடப்படாத அசுரர்களனைவர்களும் ஒரு செவ்விய அம்புக்கிரையாகப் போதாதவர்கள் ஆதலால் திருமாலால் காணுதற்கரிய சிவபெருமானது திருக்குமாரராகிய சண்முகப்பெருமானது திருக்கரத்திலிருக்கிற வேலாயுதத்தை இவர்கள்மீது விடுதலுக்கு இவர்கள் போதாதவர்கள்; அதை விடுவதுவுங் குற்றமேயாம்.—எ-று. (உஎ)

வாரிதி யேழு மெண்ணில் வரைகளும் பிறவுங் கொண்ட
பாருட னுலகீ ரேழும் படைத்தபல் லண்டம் யாவு
மோரிறை முன்ன மட்டே யுண்டிடு மொருவன் செவ்வேல்
சூரனை யவுண ரோடுந் தொலைப்பதோர் விளையாட் டம்மா.

(இ-ள்.) ஏழுகடல்களையும் அளவற்ற மலைகளையும் இன்ன முள்ளவைகளையுந் தன்னுட்கொண்டு விளங்குகின்ற பூமியுடனே பதினாலுலோகங்களையும் தன்னிடத்திலுள்ள பல அண்டங்களையும் ஒருகணப்பொழுதுக்குள் அழித்து உண்ணத்தக்க ஒப்பற்ற குமரக்கடவுளின் செவ்வியவேலாயுதம் சூரபன்மனை அசுரர்களுடனே கொல்லுவது (அதற்கு) ஒருவிளையாட்டேயாம்.—எ-று. (உஅ)

சுறமறி யளக்கர் வைகுஞ் சூரபன் மாவின் மார்பி
னெறிசுட ரெஃகம் வீசி யிருபிள வாக்கின் ல்லாற்
சிறையுளீர் மீள்கி லாமை தேற்றியும் பொருநர் செய்யு
மறநெறி தூக்கி யொற்றா வடியனை விடுத்தா னையன்.

(இ-ள்.) சுறாமீன்கள் மறிகின்றகடலிலே இருக்கிற சூரபன்மனது மார்பினில் ஒளிவீசுகின்ற வேலினைவிட்டு இரண்டாகப்பிளந்தாலொழியச் சிறையிலிருப்பவர்களே! இச்சிறை ஒழியாமையை உணர்ந்திருந்தும் போர்வீரர்செய்யும் தருமவழியை (நிலைநிறுத்தும்பொருட்டு) எண்ணி எம்பெருமான் தூதனாக அடியேனை அனுப்பியருளினார். ()

ஆளுடை முதல்வன் மாற்ற மவுணருக் கிறைவன் முன்போய்க்
கேளிதென் றுரைப்ப னற்றே கிளத்தினுங் கடனாக் கொள்ளான்

மீளுவன் புகுந்த தெல்லாம் விளம்புவன் வினவி யெங்கோ
னாளைவந் திவரை யெல்லா நாமற முடிப்பன் காண்டி.

(இ-ள்.) என்னை அடிமையாகவுடைய குமரக்கடவுளின்வசனத்தை அசுரவரசனாகிய சூரபன்மனது எதிரிலேசென்று ஹே சூர! நீ இதனைக்கேள் என்றுகூறுவேன் அவ்வண்ணமே சொன்னாலும் அதனை முறையென்று ஒப்புக்கொள்ளான் ஆதலால் யான் திரும்பச்சென்று இவ்விடத்தில் நடந்தவற்றையெல்லாம் சொல்லுவேன் எம்பெருமான் அதனைக்கேட்டு நாளையத்தினம்வந்து இவ்வசுரர்களையெல்லாம் அச்சமறக்கொன்றருளுவார்.—எ-று. (௯௦)

நீண்டவன் றனக்கு மெட்டா நெடியதோர் குமரன் செவ்வே
லாண்டிருந் தேயு முய்த்தே யவுணர்யா வரையுங் கொல்லும்
பாண்டிலந் தேற்மேற் கொண்டு படைபுறங் காத்துச் சூழ
வீண்டுவந் தடுத லன்னாற் கிதுவுமோ ராட லன்றே.

(இ-ள்.) திருமாலாலுமறியப்படாத குமாரக்கடவுள் தமது செவ்விய வேலாயுதத்தை அவ்விடத்திலிருந்துவிட்டே எல்லாஅசுரர்களையுங்கொன்றருளுவர் சக்கரங்களையுடைய தேரின்மீதேறிக்கொண்டு இருபுறங்களினுஞ் சேனைகள்காத்துச் சூழ்ந்துவரும்படி இவ்விடத்தில் வந்துகொல்லுதல் அவ்வெம்பெருமானுக்கு இதுவுமோர் திருவிளையாடலேயாம்.—எ-று. (௯௧)

ஈரிரண் டிருமூன் றாகு மிரும்பக லிடையே யெங்கோ
னாரிருஞ் சமர மூட்டி யவுணர்யா வரையுங் கொல்லுஞ்
சூரொடு முடித்து நும்மைத் துயர்ச்சிறைத தொடர்ச்சி நீக்கிப்
பேரிருஞ் சிறப்பு நல்கும் பிறவொன் றுநினையன் மன்னோ.

(இ-ள்.) நாலும் ஆறுமாகிய பத்துதினங்களிலேயே எம்பெருமான் பொருந்திய பெரியபோரையுண்டாக்கி அசுரசேனைகளை சூரபன்மனுடனேகொன்று உங்களைவருத்துகின்ற சிறையின்சம்பந்தத்தை ஒழித்து பெரியஉங்களது சிறப்புக்களனைத்தையும் உங்களுக்கே அளித்தருள்வார் நீங்கள் வேறே ஒன்றும் நினையாதேயுங்கள்.—எ-று.

என்றிவை பலவும் வீர னிமையவர் குழாத்தி னோடுங்
குன்றெறி பகைஞன் மைந்தனுணர்தரக் கூற லோடு
நன்றென வுவகை பூத்து நாமவே னம்பியாற்ற
வென்றி பெற்றிடுக வென்று வீற்றுவீற் றுசிசொற்றார்.

(இ-ள்.) என்றிவ்வாறாகிய பலவற்றையும் வீரவாகுதேவர் தேவர் கூட்டங்களுடனே மலைகளின் இறகுகளையறுத்த இந்திரனது குமாரனாகிய சயந்தனும் அறியும்படி சொல்லுதலும் அவர்கள் நல்லதென்று சந்தோஷமுள்ளவர்களாய் (பகைவர்களுக்கு அச்சத்தைத்தராநின்ற வாட்படையினையுடைய தலைவனே! நீ மிகவும்வெற்றியைப்பெறுவாயாக என்று தனித்தனி ஆசிர்வாதங்கூறினார்கள்.—எ-று. (௯௩)

எண்டகு மாசி கூறி யிந்திரன் றனதுமைந்த
னண்டரொ டங்கை கூப்பி யளியரேந் தன்மை யெல்லாங்
கண்டனை தாதை கேட்பக் கழறுதி யிவணீ யுள்ளங்
கொண்டது முடிக்கப் போதி குரைகழற் குமர வென்றான்.

(இ-ள்.) மதிக்கத்தக்க ஆசிமொழிகளைச் சொல்லி இந்திரனது புதல்வனாகிய சயந்தன் தேவர்களுடனே கைகளைக்குவித்து எளியோர்களாகிய எங்களது தன்மைகளையெல்லாம் குமரனே நீபார்த்தனையல்லவா (இவைகளையெல்லாம்) என்றந்தைகேட்கும்

வண்ணம் சொல்லுவாய் இனி இவ்விடத்தில் நீ மனதில் நினைத்துக்கொண்டுவந்ததை நிறைவேற்றும்பொருட்டுச் செல்லுவாயாக.—எ-று. (௬௪)

வயந்திகழ் விடலை யங்கண் மற்றவர் தம்மை நீங்கிக்
கயந்தகு காவ லோர்தங் கருத்தின்மா லகற்றியேக
வியந்திர மன்னோர் தேறி யிமையவர் குழாத்தி னோடு
சயந்தனைச் சுற்றி முன்போற் றனைமுறை யோம்ப லுற்றார்.

(இ-ள்.) வெற்றியோடு விளங்குகின்ற வீரவாகுதேவர் அவ்விடத்திலுள்ள அவர்களைவிட்டு நீங்கி யானையையொத்த காவலாளிகளது மனதிலிருந்த மோகனமயக்கத்தை விலக்கிச்செல்லுதலும் சூத்திரப்பாவையையொத்தவர்கள் மயக்கந்தெளிந்து தேவர்கூட்டத்துடனே சயந்தனைசூழ்ந்துகொண்டு முன்னைப்போலவே காவன்முறைப்படி காக்கத்தொடங்கினார்கள்.—எ-று. (௬௫)

**வீரவாகுசயந்தனைத்தேற்றுபடலமுற்றிற்று.**

ஆக திருவிருத்தம் – ௪௮௦.

---

# அவைபுகுபடலம்.

மடந்தையொ டிரிந்திடும் வாச வன்மக
னடைந்திடு சிறைக்கள மகன்று வானெறி
நடந்தன னவுணர்கோ னண்ணு கோனக
ரிடந்தரு கிடங்கரை யிகந்து போயினான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் இந்திராணியுடனே சூரபன்மனுக்குப்பயந்து சுவர்க்கத்தைவிட்டு விலகிச்சென்ற இந்திரனது குமாரனாகிய சயந்தன் இருக்கிற சிறைச்சாலையைவிட்டு ஆகாயவழியாக நடந்து சூரபன்மனிருக்கின்ற இராஜநகரத்திலுள்ள விசாலமான அகழியைக்கடந்து சென்றனர்—எ-று. (க)

அகழியை நீங்கினா னயுதந் தன்னினு
மிகுதிகொ ணாற்படை வெள்ளந் தானைக
டகுதியின் முறைமுறை சாரச் சுற்றிய
முகிறவழ் நெடுமதின் முன்ன ரேகினான்.

(இ-ள்.) அகழியைக்கடந்து பதினாயிரத்தைக்காட்டிலும் அதிகமாக யானைகளும் தேர்களும் குதிரைகளும் காலாள்களும் ஆகியசதுரங்கசேனைகளாகிய அசுரவெள்ளங்கள் தக்கவாறு முறையாகபொருந்தும்படி சூழ்ந்திருக்கிற மேகங்கள் தவழுகிற நெடியமதிலின் எதிரிற்சென்றனர்.—எ-று. (உ)

கான்கொடி கங்கைநீர் கரப்ப மாந்தியே
மீன்கதி ருடுபதி விழுங்கி விட்டிடும்
வான்கெழு கடிமதில் வரைப்பின் முன்னரோ
தான்கிளர் கோபுரங் கண்டு சாற்றுவான்.

(இ-ள்.) காடுபோல மிகுதியாகக் கட்டப்பட்டுள்ள கொடிகள் கங்கையாற்று நீர் வற்றும்படி நனைந்துட்கொண்டு நட்சத்திரங்களையும் சூரியனையும் சந்திரனையும் விழுங்கிப்பின்னர் விடுகின்ற ஆகாயத்தில் விளங்குகின்ற காவலோடுகூடிய மதிலிருக்குமிடத்திலெதிரிலே விளங்குகின்ற கோபுரத்தைப்பார்த்துச் சொல்லுகின்றனர்.—எ-று.

குடைகட லுண்டவன் கொண்ட தண்டினல்
வருபுழை மீமிசை வாய்ப்பத் தாரகன்
பெருவரை நிமிர்ந்திடு பெற்றி போலுமாற்
றிருநிலை பலவுடைச் சிகரி நின்றதே.

(இ-ள்.) அழகியபல தட்டுகளையுடைய கோபுரம்நிற்பது சத்திக்கின்ற கடலினை உண்ட அகத்தியமுனிவர் தமதுகையில் வைத்திருக்கிற தண்டத்தினல் இடித்தமையா லுண்டான துவாரத்தைத்தன்மீது பொருந்தக்கொண்டு தாரகாசுரனது பெரியகிரவுஞ்ச மலை உயர்ந்துநிற்குந்தன்மையை ஒக்கும்.—எ-று. (சு)

தூணம துறழ்புயச் சூர னென்பவன்
சேணுறு மண்டமேற் செல்லச் செய்ததோ
ரேணிகொ லோவிது வென்ன நின்றதா
னீணிலை பலவுட னிமிர்ந்த கோபுரம்.

(இ-ள்.) தூணினையொத்த தோளினையுடைய சூரபன்மன் என்னும் இந்நகரா சன் வானத்திற்பொருந்திய மற்றையண்டங்களுக்குச் செல்லும்பொருட்டுச்செய்த ஒரு படிவேணிதானே என்றுசொல்லும்படி நீண்டபலநிலைகளுடனே யுயர்ந்த கோபுரநின்ற தன்மை.—எ-று. (ஞ)

துங்கமொ டிறைபுரி சூரன் கோயிலிற்
பொங்குசெம் மணிசெறி பொன்செய் கோபுர
மெங்கணு முடியுநா ளிவ்வுளி வாய்ப்படு
மங்கிவிண் காறெழும் வடிவு மன்னதே.

(இ-ள்.) உயர்வுடனரசுபுரிகின்ற சூரபன்மனது அரண்மனையில் விளங்காநின்ற மாணிக்கங்களிட்டிழைத்த பொன்னாலாகிய கோபுரமானது எல்லாவுலகங்களு மழிகிற காலத்தில் வடவையினிடத்திலே உண்டாகிற அக்கினி ஆகாயமளவுமுயர்ந்த தன்மை யையொத்தது.—எ-று. (சு)

அண்டமங் கெவற்றினு மமர்ந்து நிற்புறும்
விண்டொடர் வரைகளு மேரு வானவுங்
பண்டிதன் மிசையுறப் பதித்த தொக்குமாற்
கொண்டியல் சிகரியுட் கூட சாலைகள்.

(இ-ள்.) சூரபன்மனதாளுகையிலுள்ள எல்லா அண்டங்களிலும் பொருந்தி நிற்கிற ஆகாயத்தை யளாவுகிறமலைகளும் மேருவும் முற்காலத்திலிதன்மீது பதித்த தையொக்கும் இக்கோபுரத்திலுள்ளே பொருந்தப்பட்டு விளங்குகிற கூடசாலைகள். ()

மெய்ச்சுடர் கெழுமிய வியன்பொற் கோபுர
முச்சியிற் றொடுத்திட முழங்கு கேதன
மச்சுத னுஞ்சிவ னளவை தீர்முகத்
துச்சிதொ றிருந்தரா வொலித்தல் போலுமால்.

(இ-ள்.) ஒளிவீசுகின்ற பெருமைவாய்ந்த பொன்னாலாகிய கோபுரத்தின் உச் சியிற் கட்டப்பட்டுக் காற்றினலசைந்து முழங்குகின்ற கொடிகள் அழியாத சிவபெரு மானது முகங்களினுச்சிகளுக்கு மேலே இருந்துகொண்டு பாம்புகள் சீறுதலை ஒக்கும்.

திசைபடு சிகரியிற் செறிந்த வான்கொடி
மிசைபடு மண்டமேல் விடாமலெற்றுவ
பசைபடு மதளுடைப் பணை யகத்தினி
லிசைபடப் பலகடிப் பெறிதல் போலுமால்.

(இ-ள்.) மேலே உயர்ந்துவிளங்குகிற கோபுரத்திலே காணப்படுகின்ற கொடிகள் சத்தமுண்டாகின்ற ஆகாயத்தில்விடாமலடிப்பன எதுபோலுமெனில் மிருதுவான தோலிட்டிருக்கின்ற தோற்கருவிகளில் ஓசையுண்டாக்கும்வண்ணம் பலதடிகளாலடித் தலைப்போலவாம்.—எ-று. (௯)

விண்ணவர் தாமுறை வியன்ப தத்தொடுந்
திண்ணிலை யிடந்தொறுஞ் செவண வைகின
ரண்ணலங் கோபுர மதனிற் கைவலோன்
பண்ணுறு மோவியப் பாவை யென்னவே.

(இ-ள்.) தெய்வீகம்பொருந்திய இந்தகோபுரத்திற்கைதேர்ந்த வேலைக்காரனாலமைக்கப்பட்டச் சித்திரப்பாவையைப்போல தேவர்கள் தாங்களிருக்கின்ற பதவிகளுடனே திண்ணிய அதனது நிலைகள்தோறும் நெருங்கி இருக்கின்றார்கள்.—எ-று. (க0)

என்பன பலபல வியம்பி யீறிலாப்
பொன்புனை தோணியம் புரிசைச் சூழலின்
முன்புறு கோபுர வனப்பு முற்றவு
நன்பெரு மகிழ்ச்சியா னம்பி நோக்கினான்.

(இ-ள்.) என்று பலவிதமாகக்கூறி அழியாத பொன்னாலமைக்கப்பட்ட சித்திரங்களினையுடைய மதிலின்சுற்றிலும் உள்ளவற்றில் முன்னேயிருக்கின்ற கோபுரத்தினழகு முழுமையையும் மிக்கமகிழ்ச்சியுடனே வீரவாகுதேவர் பார்த்தனர்.—எ-று.(கக)

புதவுறு கோபுரப் பொருவில் வாய்தலுண்
மதவலி யுக்கிரன் மயூர னாதியோ
ரதிர்தரு நாற்படை யயுதஞ் சுற்றிடக்
கதமொடு காப்பது காளை நோக்கினான்.

(இ-ள்.) திட்டிவாசலையுடைய கோபுரத்தின் ஒப்பற்றவாய்தலிலே மிக்கவலிமையுடைய உக்கிரன் மயூரன் முதலானவர்கள் முழங்குகின்ற சதுரங்கசேனைகள் பதினாயிரஞ்சூழவலிமையுடன் காவல்செய்வதை வீரவாகுதேவர் பார்த்தனர்.—எ-று. (கஉ)

நோக்கிய திறலவ னொச்சி தாவியே
யாக்கமொ டமர்தரு மவுணன் கோயிலு
ளூக்கமொ டும்பரா னோடி முன்னுறு
மேக்குயர் சூளிகை மிசையிற் போயினான்.

(இ-ள்.) பார்த்த வீரவாகுதேவர் அம்மதிலைக்கடந்து செல்வத்துடனே வாழ்கின்ற சூரபன்மனது அரண்மனைக்குள் ஊக்கத்துடனே மேல்வழியாச்சென்று எதிரிலுள்ள மேலே உயர்ந்துவிளங்குகின்ற சூளிகையின்மீது சென்றனர்.—எ-று. (கரு)

வேறு.

சூளிகை மீமிசை துன்னுபு சூரன்
மாளிகை யுள்ளவ ளந்தனை யெல்லா
மீளரி தாவிழி யோடுள மேவ
வாளரி நேர்தரு மாண்டகை கண்டான்.

(இ-ள்.) சூளிகையின்மேலேசென்று சூரபன்மனது மாளிகையிலுள்ள வளப்பங்களனைத்தையும் திரும்புதற்கரிதாகக் கண்ணுமனமும் பொருந்த நரசிங்கத்தையொத்த உக்கிரத்தினையுடைய ஆண்டன்மையிற் சிறந்த வீரவாகுதேவர் பார்த்தனர்.-எ-று.

கண்டதொ ரண்ணல் கடுந்திறல் வெஞ்சூர்
திண்டிறல் வாளரி சென்னிகொள் பீடத்
தெண்டகு மாணை யியற்றிய செம்பொன்
மண்டபம் வைகுறும் வண்மை தெரிந்தான்.

(இ-ள்.) மாளிகையின் அழகு முதலியவற்றைப் பார்த்த வீரவாகுதேவர் கொடுமையும் வலிமையும் உடைய அரசனாகிய சூரபன்மன் மிக்க வலிமையினையுடைய ஒளிபொருந்திய சிங்கங்களின் தலைகளாற் சுமக்கப்படுகிற ஆசனத்தின் மீது இருந்து மதிக்கத்தக்க அரசை நடாத்திக்கொண்டு செவ்விய பொன்னாலாகிய மண்டபத்திலிருக்கிற தன்மையையுணர்ந்தனர்.—எ-று. (கரு)

அருந்தவ வேள்வி யயர்ந்தர னீயும்
பெருந்திரு மிக்கன பெற்றுல கெல்லாந்
திருந்தடி வந்தனை செய்திட வெஞ்சூ
ரிருந்திடு கின்ற வியற்கை யிசைப்பாம்.

(இ-ள்.) அரிய தவத்தினையுடைய யாகத்தினைச்செய்ய அதனால் சிவபெருமான் அளித்த சிறந்த பெரிய செல்வங்களையெல்லாம் அடைந்து உலகங்களனைத்தையும் அழகிய தனது பாதங்களை வணங்கக் கொடிய சூரபன்மனிருக்கின்ற தன்மையைச் சொல்லுகின்றோம்.—எ-று. (கசு)

ஐயிரு நூறெனும் யோசனை யான்றே
மொய்யொளி மாழையின் முற்றவு மாகித்
துய்யபன் மாமணி துஞ்சிவில் வீசி
மையறு காட்சிகொண் மண்டப மொன்றின்.

(இ-ள்.) ஆயிரயோசனை அகலமாய் தன்னிட முழுமையும் தங்கத்தாலமைக்கப்பட்டதாய் சாணைபிடித்தல் முதலியவைகளாற் பரிசுத்தமடைந்துள்ள உயர்ந்தமணிகளாலிழைக்கப்பட்டுத் தங்கி ஒளியை வீசுகின்றகளங்கமற்ற அழகமைந்த (நேத்திரத்தை இழுக்கின்ற) ஒரு மண்டபத்தில்—எ-று. (கஎ)

மேனகை யோடு திலோத்தமை மெய்யி
னூனமில் காமரு ருப்பசி யாதி
வானவர் மங்கையர் வட்ட மசைத்தே
மேனிமிர் சீகரம் வீசினர் நிற்ப.

(இ-ள்.) மேநகையுடனே திலோத்தமையும் சரீரத்திற் குற்றமற்ற அழகிய ஊர்வசிமுதலாகிய தேவமாதர்களும் ஆலவட்டங்களை அசைத்துக்கொண்டுமேலே உயருகின்ற வெண்சாமரைகளை வீசினவர்களாக. (இரண்டு புறங்களிலும் வரிசையாக) நிற்கவும்.—எ-று. (கஅ)

சித்திர மாமதி செங்கதிர் பாங்காய்
முத்தணி வேய்ந்து முகட்டிள நீல
முய்த்து மணித்தொகை யுள்ள மழுத்துஞ்
சத்திர மாயின தாங்கினர் நிற்ப.

(இ-ள்.) அழகிய பூரணசந்திரனும் சூரியனும் ஒழுங்காக முத்தாபரணங்களைத் தரித்து தலையிலே இளமையான நீலமணியைவைத்து மணிக்கூட்டங்களை உள்ளே அழுத்திச் செய்திருக்கிற குடைகளை சுமந்தவர்களாக நிற்கவும்.—எ-று. (கக)

வெள்ளடை பாகு வெளிற்றுறு சுண்ணங்
கொள்ளு மடைப்பைமென் கோடிகம் வட்டில்

வள்ளுடை வாளிவை தாங்கி மருங்காய்த்
தள்ளரு மொய்ம்புள தான்வர் நிற்ப.

(இ-ள்.) வெற்றிலை-பாக்கு, வெண்ணிறம் பொருந்திய சுண்ணும்பு-என்னுமிவைகளை யுள்ளே வைத்திருக்கிற அடைப்பைகளும் மெல்லிய பூந்தட்டுகளும் தாம்பாளங்களும் கூரியவுடைவாள்களும் என்னும் இவைகளைச் சுமந்துகொண்டு விலக்குதற்கரிய வலிமையினையுடைய அசுரர்கள்நிற்கவும்.—எ-று.

கோடிகம்-பிடிமொந்தையுமாம். (உ0)

வெம்மைகொள் பானுவை வெஞ்சிறை யிட்ட
செம்மனு மேனைய சீர்கெழு மைந்தர்
மும்மைகொ ளாயிர மூவரு மாகத்
தம்முறை யாற்புடை சார்ந்தனர் வைக.

(இ-ள்.) உஷ்ணம் பொருந்திய கிரணங்களையுடைய சூரியனை (முன்னாளில்) கொடியசிறையிலிட்ட பாநுகோபனும் அவனன்றி யுள்ள சிறப்பு விளங்குகின்ற பிள்ளைகளான மூவாயிரத்து மூன்றுபேர்களும் தங்கள் முறைப்படி பக்கத்திலே வந்திருக்கவும்.—எ-று. (உக)

பாவ முயன்று பழித்திற னுற்றுங்
காவிதி யோர்கரு மங்கண் முடிப்போ
ராவதொர் சாரண ராய்படை மள்ள
ரேவரு ஞாங்கரி னெங்கணு நிற்ப.

(இ-ள்.) முயற்சியுடன் பாவமான காரியங்களிலே பிரவேசித்து பழிகளைச் செய்கின்ற மந்திரிதந்திரியர்களும் கருமவதி காரியர்களும் விஷயங்களை உணர்ந்துகூறுகிற சாரணர்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட போர்வீரர்களுமாகிய எல்லாரும் பக்கத்திலெவ்விடங்களிலு நிற்கவும்.—எ-று.

எவரும்என்றது-அரசனைம்பெருங்குழுவினை. ஐம்பெருங்குழுவாவார் "மந்திரியர் புரோகிதர் சேனுபதியர் தந்திரத்தூதர் சாரணரொன்றிவ ரந்தமிலரசர்க்கைப் பெருங்குழுவே" என்னும் பிங்கலநிகண்டால் உணர்க. (உஉ)

நாடக நூன்முறை நன்று நினைந்தே
யாடவ ரம்பைய ராயுள ரெல்லாஞ்
சேடியர் கின்னரர் சித்த ரியக்கர்
பாடுற வீணைகள் பண்ணினர் பாட.

(இ-ள்.) பரதசாத்திரங்களை நன்றாய் நினைவுக்குக்கொண்டுவந்து பின்னர் அரம்பையர்களெல்லாம் ஆடவும் வித்தியாதரர்கள் கின்னரர்கள் சித்தர்கள் இயக்கர்கள் என்னுமிவர்கள் பக்கத்திலே பொருந்தும்படி நின்று வீணைகளைத் தட்டி வாசிக்கவும். (உஙு)

ஏகனை ஈசனை யெந்தையை யெண்ணு
ராகிய தொல்லவு ணக்குழு வென்ன
வேகு முளத்தினர் கஞ்சுகர் வெங்கண்
மாகதர் சூரல் பிடித்து வழுத்த.

(இ-ள்.) ஏகனாய், ஈசனாய், எம்பெருமானாயுள்ள சிவபெருமானை மதியாதவர்களாக விருந்து அப்பெருமானது நகைநெருப்பினால்வெந்த அத்திரிபுரங்களையுடையவர்களைப்போல கோபத்தால் வேகின்ற மனத்தினையுடைய கஞ்சுகியர்களும் கொடியபார்வையினையுடைய மாகதர்களும் பிரம்பையேந்திக்கொண்டு நின்று புகழவும்.—எ-று.

மாகதர்-கட்டியனைப்போல் அரசசபையினின்று அரசனைப்புகழ்பவர்கள். நின்றேத்துவோரெனினுமாம். (உச)

உள்ளிடு மாயிர யோசனை யெல்லை
கொள்ளிட மான குலப்பெரு மன்றந்
தள்ளிட வற்ற சனங்கண் மிகுத்தே
யெள்ளிட வெள்ளிட மின்றென வீண்ட.

(இ-ள்.) உட்சுற்றளவில் ஆயிரம்யோசனை அளவினையுடைய தாகக்கொள்ளப்பட்ட இடத்தினையுடைய சிறந்த பெரியசபா மண்டபத்தில் நீக்குதற்கரிய சனங்கள் நிறைந்து எள்ளினைக்கீழே இடுதற்குக்கூட வெளியான இடம் இல்லையென்று கூறும்படி நெருங்கவும்.—எ-று. (உரு)

வச்சிர மெய்வயி ரேரிய மொண்ப
லுச்சியில் வாலுளை யேயொளிர் முத்த
மச்சுறு கண்மணி யாமரி மாவின்
மெய்ச்சிர மேந்தும் வியன்றவி சின்கண்.

(இ-ள்.) வயிரமணிகளாலுடம்பும் வயிரேரியமாகிய ஒள்ளிய மணிகளால் பற்களும் ஒளிபொருந்திய தலையின்மீதுள்ள வெண்ணிறம் பொருந்திய பின்மயிர்முத்துகளாலும் அச்சத்தைத்தராநின்ற கண்கள் மாணிக்கமணிகளாலுமாகிய சிங்கத்தின்தலையினாற் சுமக்கப்படுகிற ஆச்சரியகரமான ஆசனத்தின்மீது.—எ-று. (உசு)

மீயுயர் நீல வியன்கிரி யும்பர்
ஞாயிறு காலையி னண்ணிய வாபோற்
பாயிருள் கீறிய பன்மணி கொண்ட
சேயபொன் மாமுடி சென்னியின் மின்ன.

(இ-ள்.) மேலே உயர்ந்து விளங்குகிற பெரிய நீலமலையினுச்சியில் சூரியன் உதையகாலையில் வந்திருந்தாற்போல பரவிய இருளினை ஓட்டுகிற பலவிதமான அரதனங்களாலிழைக்கப்பட்ட செவ்விய பொன்னாலாகிய மகுடம் தலையின்மீது விளங்கவும்.—எ-று. (உஎ)

கறுத்தவ ராத்துணை கண்டிரு வெய்யோ
ருறுப்பிடை கவ்வியொ சிந்துத லைப்போய்
முறுக்கிய வாலொடு முன்கலந் தென்ன
மறுத்தவிர் குண்டலம் வார்குழை தூங்க

(இ-ள்.) கருநிறம்பொருந்திய இரண்டுபாம்புகள் இரண்டு சூரியர்களைக்கண்டு அவர்களதவயவங்களிலே கடித்து வளைந்துமேற்சென்று முறுக்கப்பட்ட வாலுடனே எதிரிலிருந்தாற்போல களங்கமற்ற குண்டலங்கள் வடிந்த காதிலே தங்கவும்.—எ-று.

மறுவற்ற குண்டலம் கரிய இருநாகங்களுக்கு இரண்டு சூரியர்கள் பயந்து சூரபன்மன துறுப்பாகிய காதினையடைந்து வளைந்து மேற்சென்று முறுக்கப்பட்ட வாலுடனே அவன் முன்னே விளங்கினாற்போல விளங்கும் என்றுகூறுதலும் உண்டு. (உஅ)

வீறிய மாமணி வெற்பின் மிசைக்க
ணேறிய வொண்பக லிந்துவி யற்கை
மாறிய வந்தென மால்வள மாகு
நீறு செறிந்திடு நெற்றி யிலங்க.

(இ-ள்.) உயர்ந்த பெரிய அழகிய மலையின்மீது ஏறிய சூரியனும் சந்திரனும் தன்னியல்பினை மாற்றிக்கொண்டு வந்தாற்போல பெரிய செல்வமென்று சொல்லப்படுகிற விபூதியினாலே நிறையப்பட்ட நெற்றியானது விளங்கவும்.—எ-று. (உகூ)

விண்டுமிழ் கின்ற வியன்புழை தோறுந்
தண்டுளி வந்தமர் தன்மைய தென்னப்
புண்டரி கம்பொறை போற்றி யுயிர்க்கும்
வண்டர ளத்தொடை மார்பின் வயங்க.

(இ-ள்.) மலையின்வெடிப்பிடங்களிலெல்லாம் தண்ணிய நீர்த்துளிவந்து தங்கியிருக்குந் தன்மையைப்போல வெண்டாமரைகளில் (சங்குகள்) சூல்கொண்டிருந்து பெறுகிற வளப்பம்பொருந்திய முத்து மாலைகள் மார்பிலே விளங்கவும்.—எ-று. (௩௦)

பங்கமில் சந்தொடு பாளித நானங்
குங்கும மேனைய கந்திகள் கூட்டி
யங்கம தன்கண ணிந்தன வண்ட
மெங்குமு லாவி யிருங்கடி தூங்க.

(இ-ள்.) குற்றமற்ற சந்தனத்துடனே கர்ப்பூரம் கஸ்தூரி குங்குமமுதலான வாசனைத்திரவியங்களை ஒன்றாகக்கலந்து அவயவங்களிலே தரிக்கப்பட்டுள்ளவை அண்டங்களிலெல்லாஞ்சென்று அருமையான மணம்வீசவும்.—எ-று. (௩௧)

வான்றிகழ் நீனிற மாமுகி லின்பாற்
றோன்றிய மின்புடை சுற்றிய தென்ன
வேன்றுள வண்ட மெனத்தையு மாற்று
மான்றுயர் தோளிடை யங்கத மல்க.

(இ-ள்.) வானத்திலே விளங்குகிற நீலநிறமான மேகத்தினிடத்தில் உண்டானமின்னல் பக்கத்திற் சூழ்ந்துகொண்டாற்போல தன்னதாகவுள்ள எல்லா வண்டங்களையும் ஆளுகையினாற் சுமக்கப்பட்டு பெருத்து உயர்ந்து விளங்குகிற தோள்களில் வாகுவலயங்கள் விளங்கவும்.—எ-று. (௩௨)

மெய்த்துணை யாமிரு வெம்பணி ஞாலம்
பைத்தலை கொள்வ பரம்பொறை யாற்றா
தெய்த்தன பூண்கொடி யாப்புறு மாபோற்
கைத்தல முன்கட கஞ்செறி வெய்த.

(இ-ள்.) ஒன்றோடொன்றுவிடாமற் சிநேகித்துள்ள இரண்டுகொடிய நாகங்கள் பூமியைப்படத்தோடு கூடியதலையின் மீது சுமத்தற்காற்றாது இளைத்துள்ளவைகளை ஆபரணமாகக்கொண்டு கட்டினாற்போல முன்கைகளினிடத்திலே கடகங்கள் நெருங்கவும்.—எ-று.

கடகமென்பது இக்காலத்துத்தோடாவென்றும் வழங்கும். (௩௩)

நீலம தாய நெடுங்கிரி மேல்பால்
வாலிய கங்கை வளைந்திடு மாபோற்
கோல மிடற்றிடை கோவைகொண் முத்தின்
சால்வுறு கண்ட சரங்க ளிமைப்ப.

(இ-ள்.) நீலமயமான நெடியமலையினது மேற்புறத்தில் வெண்ணிறம் பொருந்திய கங்கையாறு சூழ்ந்துகொண்டாற்போல அழகிய கழுத்தினிடத்தில் கோக்கப்பட்ட முத்தின் மாக்ஷிமையான கண்டசரங்களென்னும் ஆபரணங்கள் விளங்கவும்.-எ-று.

வீர மடந்தையர் மேதக நாளுஞ்
சேரிய தோளிணை செல்கதி யென்ன
வேரியல் பன்மணி யிட்டணி செய்த
வார வடுக்கல்பொன் ணுக மிலங்க.

(இ-ள்.) வீரமாதர்கள் உயர்வாக எப்பொழுதும் சிறப்புப்பொருந்திய தோளிணிடத்துக்குச்செல்லுகின்ற மார்க்கத்தைப்போல அழகுபொருந்திய பலமணிகளைவைத்து அலங்காரமாகச் செய்யப்பட்டுள்ள ஆரங்களின் அடுக்குகள் அழகியமார்பிலே விளங்கவும்.—எ-று. (கூரு)

அந்தியின் வண்ணமு மத்தொளி யூருஞ்
சுந்தர மாலிடை சுற்றிய வாபோன்
முந்து பராரைகொண் மொய்ம்மணி யாடை
யுந்தியி ஞெண்பணி யோடு வயங்க.

(இ-ள்.) செக்கர்வானமும் செவ்வொளிபொருந்திய பரிவேடமும் அழகியகரிய மேகத்தின் நடுவிலே சூழ்ந்துகொண்டாற்போல உயர்ந்தபெரிய அரையிலுடுக்கப்பட்ட நெருங்கிய அரதனகசிதமான ஆடையானது உதரபந்தனமென்னும் ஒள்ளியஆபரணத்துடனே விளங்கவும்.—எ-று. (கூசு)

இருபணி பார்முக மிட்டிட வீட்டி
யுருமொடு மின்னு முலப்பில சுற்றிக்
கருமிட றாடு கலந்தென நுண்ணூல்
குறைகழல் வார்கழல் கொண்டு குலாவ.

(இ-ள்.) இரண்டு பாம்புகளை கீழ்நோக்கியமரும்படி செய்து அதனில் இடியும் மின்னலும் அனேகமாகச் சூழ்ந்து கரியதொண்டைக்குள் கலந்திருந்தாற்போலநுட்பமான நூலிலிட்டு சத்திக்கும்படி செய்துள்ள வீரக்கழலானது நீண்டகாலிலே பொருந்தி விளங்கவும்.—எ-று. (கூஎ)

மென்மணி மாழையின் வேத னியற்றிப்
பன்மணி மீது படுத்திய பல்பூண்
டொன்மணி மெய்புனை சூரபன் மாவோர்
பொன்மணி மாமுகில் போல விருந்தான்.

(இ-ள்.) மெல்லியதும் அழகியதுமான பொன்னாற் பிரமனாற் செய்யப்பட்டு பலவிதமான (மணிகளை மேலேஇட்டிழைத்திருக்கிற பலவித ஆபரணங்களை பெரிய இந்திர நீலமணிபோன்ற உடம்பினிற்றரித்துள்ள சூரபன்மனொரு பொன்மயமான அழகிய மேகத்தைப்போல இருந்தனன்.—எ-று. (கூஅ)

இருந்திடு கின்ற வியற்கை விழிக்கோர்
விருந்தமு தாக வியப்பொடு நோக்கிச்
சுரந்திடு மன்பொடு சூளிகை வைகும்
பெருந்திறன் மாமுகி லிங்கிவை பேசும்,

(இ-ள்.) இவனிங்கிவ்வாறிருக்குந்தன்மையை சூளிகையின்மீதிருக்கின்ற மிக்கவெற்றியினையுடையவரும் மேகத்தையொத்த தயாளமுடையவருமாகிய வீரவாகுதேவர் தமது விழிகளால் மகிழ்வுண்டாகும்படி பார்த்து சுரக்கப்பட்ட அன்புடனே இவைகளைச் சொல்லுகின்றனர்.—எ-று. (கூக)

மூவரின் முந்திய முக்கண னம்பொற்
சேவடி பேணிய தேவர்க டம்முட்

வேயுடை வேலுள சூரபன் மாப்போ
லேவர் படைத்தன ரித்திரு வெல்லாம்.

(இ-ள்.) மும்மூர்த்திகளிற்சிறந்த சிவபெருமானாரது அழகிய பொன்மயமான திருவடியை ஆன்மார்த்தமாகக்கொண்டுள்ள மாமிசம்பொருந்திய வேலினையுடைய சூரபன்மனைப்போல இந்தச்செல்வங்களை யெல்லாம் வேறேயார் பெற்றிருக்கின்றார்கள்.()

ஓய்ந்து தவம்புரி வோருளு வன்போன்
மாய்ந்தவ ரில்லை மறத்தொடு நோற்றே
யாய்ந்திடின் முக்கணெம் மையனு மின்னோற்
கீந்தது போற்பிறர்க் கீந்தது மின்றால்.

(இ-ள்.) உடம்புங்கருவிகளும் இளைக்கும்படி தவஞ்செய்பவர்களுக்குள்ளே இந்தச்சூரபன்மனைப்போல வைராக்கியத்துடனே தவஞ்செய்து இறந்தவர்களில்லை. ஆராயுமிடத்து மூன்றுவிழிகளையுடைய எந்தைபெருமானும் இவனுக்கு வரங்கொடுத்ததைப்போல வேறொருவருக்கு கொடுத்ததுமில்லை.—எ-று. (சுக)

பாடுறு வேள்வி பயின்றழல் புக்கும்
பீடுறு மிவ்வள மாயின பெற்று
நீடுறு மாறு நினைந்திலன் வெய்யோன்
வீடுறு கின்ற விதித்திற னன்றே.

(இ-ள்.) பெருமைபொருந்திய யாகத்தைச்செய்து தீயிலேயேவிழுந்தும் (பின்னமொழுந்து) உயர்வுபொருந்திய இத்தன்மையவான செல்வங்களைப் பெற்றிருந்தும் இவ்வசுரன் நீடூழிவாழுந்தன்மையை நினைந்தானில்லை (இப்படிப்பட்ட இவன்) சாகுதலாகிய விதிநல்லதோ.—எ-று. (சுஉ)

வேறு.

மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை விரகின்மை கொண்ட குருகார்
கச்சோத மென்று கருதிக் குடம்பை தனினுய்த்து மாண்ட கதைபோ
லச்சோ வெனப்ப விமையோரை யீண்டு சிறைவைத்த பாவ மதனு
லிச்சூர பன்மன் முடிவெய்து நாளை யிதனுக்கொ ரைய மிலையே.

(இ-ள்.) புத்தியில்லாத தூக்கணங்குருவி தான்வசிக்கின்ற கூட்டினில் ஒளிபொருந்திய சிறிய கொள்ளிநெருப்பை மின்மினியென்று நினைத்துகொண்டுவந்துவைத்து அதனாற் கூண்டு தீப்பிடித்தெரிய கூண்டுடனே தானும் இறந்த கதையைப்போல ஐயோவென்று கூறும்படி பலதேவர்களைச் சிறையிலிட்ட பாவத்தினுல் இந்தச் சூரபன்மன் நாளையத்தினம் இறந்துபோவான் இதற்கொரு சந்தேகமுமில்லை.—எ-று. (சுஙூ)

மிகையான வீரம் வளமாற்றல் சால மேவுற்று ளோரு மிறையும்
பகையார்க ணேனு முளராகி வாழ்தல் பழுதன்றி நன்றி படுமோ
மகவானை மங்கை யுடனே துரந்து மவர்மைந்த னோடு சுரரை
யகலாம லீண்டு சிறைசெய்த பாவ மதனு லிழப்ப னரசே.

(இ-ள்.) அதிகமான வீரமும் செல்வமும் வலிமையும் மிகுதியாகப் பெற்றுள்ளவர்களும் கொஞ்சமாவது பகையை எப்படிப்பட்டவர்களிடத்திலாயினும் கொண்டு வாழுதல் கெடுதியேயல்லாமல் நன்மையைத்தருமோ இந்திரனை அவன்மனைவியுடனே ஓட்டி அவர்கள் பிள்ளையான சயந்தனுடனே தேவர்களையும் விடாமலிவ்விடத்திற் சிறைசெய்தவதனுல் இச்சூரபன்மனும் தனதுசெல்வத்தை இழப்பான்.—எ-று. (சுச)

மன்னுந் திறத்தி னமர்சூர பன்மன் மாமக்கள் சுற்ற நகர
முன்னும் படிக்கு மரிதான செல்வ முடனுளை யீறு படுமேன்

முன்னென் பவர்க்கு முன்னாகு மாறு முகனல்கு முத்தி யலதே
லென்னுண்டு நாளும் வினைசெய் துழன்ற விவனா ருயிர்க்கு நிலையே.

(இ-ள்.) அழியாமலிருக்கவேண்டிய தன்மையுடனே இருக்கின்ற சூரபன்மன் அவனது சிறந்த புத்திரர்கள் சுற்றத்தினர் நகர் நினைக்கும்வண்ணமும் அரிதானசெல்வ முதலிய எல்லாத்துடனும் நாளையத்தினம் இறந்துபடுவோனாதல் முதல்வருக்கெல்லாம் முதல்வனாக உள்ள சண்முகப்பெருமானளிக்கும் முத்தியேயல்லாமல் சதாகாலமும் தீவினைகளைச்செய்துகொண்டிருந்த இவனுயிருக்கு வேறேயென்ன கிடைக்கவேண்டிய திருக்கிறது.—எ-று. (சரு)

என்றித் திறங்க ளருளோடு பன்னி யெழில்கொண்ட வேர மிசையே
துன்றுற்ற வீரன் வளமோ டிருந்த சூரன்மு னேகறுணியாக்
குன்றத்தி னின்று மிவரெல்லை போன்று குமரேச னெந்தை யடிக
ளொன்றக் கருத்தி னிடைகொண் டெழுந்து நடைகொண் டவைக்க ணுறுவான்.

(இ-ள்.) என்றித்தன்மையானவைகளை யெல்லாம் இரக்கத்துடன் தன்னுட் கூறினவராய் சூளிகையின்மீதிருந்த வீரவாகுதேவர் செல்வத்துடனிருக்கின்ற சூரபன் மனது எதிரிலே போகும்படிநினைத்து மலையினின்றும் இறங்குகிற சூரியனைப்போல குமரக்கடவுளாகிய எம்பெருமானது பாதங்களை மனதிற் பொருந்தும்படி தியானித்து க்கொண்டெழுந்து நடந்து சபைக்குச் செல்லும்பொருட்டு.—எ-று. (சசு)

வேறு.

நலஞ்செய் சூளிகை நீங்கிவிண் ணெறிக்கொடு நடந்து
கலஞ்செய் திண்டிறல் வாகுவாம் பெயருடைக் கடவுள்
வலஞ்செய் வாட்படை யவுணர்கோன் மன்னிவீற் றிருக்கும்
பொலஞ்செய் கின்றவத் தாணிமண் டபத்திடைப் போனான்.

(இ-ள்) திரண்டகல்லைப்போல அழகுவாய்ந்த தோள்களையுடைய வீரவாகு தேவர் நன்மையமைந்த சூளிகையைவிட்டு நீங்கி ஆகாயமார்க்கமாகச்சென்று வெற்றியைத்தருகின்ற வாட்படையினையுடைய அசுரராஜனாகிய சூரபன்மன் எப்பொழுதுங் கொலுவிருக்கின்ற பொன்னாற்செய்யப்பட்ட அரசிருக்கை மண்டபத்திற் சென்றனர்.

எல்லை யில்லதோர் பெருந்திரு நிகழவீற் றிருந்த
மல்ல லங்கழ லிறைவனைக் குறுகிமாற் றலரால்
வெல்லரூந் திறல் வீரவா குப்பெயர் விடலை
தொல்லை நல்லுருக் காட்டின னவைக்கெலாந் தோன்ற.

(இ-ள்.) அளவற்றதாகிய மிக்கசெல்வங்கள் விளங்கக்கொலுவிருந்த வளப்பம் பொருந்திய வீரக்கழலணிந்த சூரபன்மனதருகாகச்சென்று சத்துருக்களால் வெல்லுதற்குமுடியாத வலிமையினையுடைய வாலிபரான வீரவாகுதேவர் அச்சபை முழுவதிலும் உள்ளவர்கள் காணும்படி தனது பழைய உருவத்தைக்காட்டினர்.—எ-று. (சஅ)

ஒற்றை மேருவி லுடையதோர் பரம்பொரு ளுதவுங்
கொற்ற வேலுடைப் புங்கவன் றூதெனக் கூறி
யிற்றை யிப்பக லவுணர்கோன் கீழியா னெளிவாய்
நிற்ற லெம்பிரான் பெருமையி னிழிபென நினைந்தான்.

(இ-ள்.) ஒன்றாகிய மகாமேருவென்னும் வில்லினையுடைய சிவபெருமானளித்தருளிய வெற்றிபொருந்திய வேலாயுதத்தினையுடைய குமரக்கடவுளின் தூதனென்றுசொல்லி இன்றிப்பொழுது சூரபன்மனது (ஆசனத்தின்கீழ்) நான் எளியவனாய் நிற்பது எம்பெருமானது பெருமைக்குத்தாழ்வு என்று நினைத்தனர்.—எ-று. (சக)

மாயை தந்திடு திருமகன் மன்னிவீற் றிருக்கு
மீயு யர்ந்திடு மரியணைக் கொருபுடை விரைவிற்
போயி ருப்பது மேலன்று புன்மையோர் கடனே
யாய தன்றியும் பாவமென் றுன்னின னகத்துள்.

(இ-ள்.) மாயைபெற்ற பிள்ளையாகிய சூரபன்மன் பொருந்தி இருக்கின்ற மிகவும் உயர்ந்த சிங்கவாதனத்தினொருபுறத்தில் சீக்கிரம்சென்று இருப்பதுசிறப்பான காரியமல்ல அவ்வாறுசெய்வது இழிதொழிலாளிகளின் தொழில் அதுவல்லாமலும் அது பாவமான காரியம் என்று தனது மனத்தில் நினைத்தனர் வீரவாகுதேவர்.—எ-று. (ருo)

இனைய துன்னியே யறுமுகப் பண்ணவ னிருதா
ணினையு மெல்லையி னுங்கவ னருளினா னிசியிற்
றினக ரத்தொகை யாயிர கோடிசேர்ந் தென்னக்
கனக மாமணித் தவிசொன்று போந்தது கடிதின்.

(இ-ள்.) இவ்வண்ணமானவைகளை நினைத்து ஆறுதிருமுகங்களையுடைய பெருமானது திருவடிகளைத்தியானிக்கும் சமயத்தில் அக்கடவுளின் திருவருளினால் இரவில் ஆயிரங்கோடிச் சூரியர் ஒன்றுகூடினாற்போல பொன்னுமணியுமிட்டிழைக்கப்பட்டுள்ள ஒரு ஆசனம் விரைவாக வந்தது.—எ-று. (ருக)

நித்தி லப்படு பந்தருஞ் சிவிகையு நெறியே
முத்த மிழ்க்கொரு தலைவனு மதலைக்கு முதல்வ
னுய்த்த வாறெனக் குமரவேள் வீரனுக் குதவ
வத்த லைப்பட வந்தது மடங்கலேற் றணையே.

(இ-ள்.) முத்துகளினாலாகிய பந்தரும்சிவிகையும் முறைப்படி முத்தமிழ் விரகராகிய ஸ்ரீஞானசம்பந்தப்பெருமானாகிய திருக்குமாரருக்கு தலைவனாகியசிவபெருமானளித்த தன்மையைப்போல குமரக்கடவுள் வீரவாகுதேவருக்களிக்க அவ்விடத்தையடைய வந்தது சிங்கவாதனம்.—எ-று. (ருஉ)

பன்னி ரண்டெனுங் கோடிவெய் யவரெலாம் பரவப்
பொன்னின் மால்வரை திரைக்கட லடைந்தவா போல
மின்னு லாவிய பொலன்மணிப் பீடிகை விறல்சேர்
மன்னர் மன்னவ னவைக்களத் தூடுவந் ததுவே.

(இ-ள்.) பன்னிரண்டுகோடியென்னுந் தொகையினோர்களாகிய ஆதித்தியர்களெல்லாம்சூழ்ந்துவர பொன்னினாயமேருமலை அலைகளையுடைய கடலினிடத்தைஅடைந்த தன்மையைப்போல ஒளிபொருந்திய பொன்னுமணியுமிட்டிழைத்துள்ள பீடம் வெற்றிபொருந்திய சூரபன்மனது சபையினடுவேவந்தது.—எ-று. (ருரு)

சிவன் மகன்விடு பொலன்மணித் தவிசுசேண் விளங்கிப்
புவன முற்றுறத் தன்சுடர் விடுத்தலிற் பொல்லாப்
பவம னத்தொடு தீமையே வைகலும் பயிற்று
மவுணர் மெய்யையுந் தெய்வதப் படிவமாக் கியதால்.

(இ-ள்.) சிவபெருமானது திருக்குமாரராகிய குமரக்கடவுளனுப்பிய பொன்னுமணியும் பொருந்திய ஆசனம் தூரத்திலே பிரகாசித்து உலகமுழுவதிலும் தன்னொளியை விடுதலினாலே பொல்லாத பாவமனத்துடனே பாவங்களையே நாள்தோறுஞ்செய்கின்ற அசுரர் சரீரங்களையும் தேவ உருவங்களாகச்செய்தது.—எ-று. (ருச)

அயிலெ யிற்றுடை யவுணர்க ளணிகலந் தன்னிற்
குயிலு டைப்பல மணிகளுங் குமரவே ளுய்த்த

வியனு டைப்பெருந் தவிசொளி பரத்தலி னிரவி
வெயிலி டைப்படு மின்மினி போல்விளங் கிலவே.

(இ-ள்.) கூரிய பற்களையுடைய அசுரர்களது ஆபரணங்களில் அழுத்தப்பட்டுள்ள பலவித மணிகளும் குமரக்கடவுளாலனுப்பப்பட்ட இலக்கணமமைந்த பெரிய அந்த ஆசனத்தின் ஒளிபரந்ததினால் சூரியனது வெயிலிலே அகப்பட்ட மின் மினிகளைப்போல அப்பிரகாசமடைந்தன.—எ-று. (௫௫)

செக்கர் வானிற மதிக்கதி ருடுக்களின் றிரட்சி
தொக்க பாயிருள் பலவகை யெழிலியின் றுளக்க
மிக்கெ லாஞ்செறி மாலையி னும்பர்மேல் வெய்யோன்
புக்க தேயெனத் தொலைத்ததா லச்சபைப் பொலிவை.

(இ-ள்.) செக்கர்வானினது நிறத்தையும் சந்திரன் நட்சத்திரம் முதலியவற்றின் கூட்டங்களையும் பொருந்திய பரவிய இருளும்பலவிதமான மேகங்களின் விளக்கமும் மிகுந்திவையெலாம் நெருங்கியிருக்கின்ற மாலைகாலத்திற்குப்பின் சூரியனுதித்தாற்போல அச்சபையினழகையழித்தது.—எ-று. (௫௬)

திசைமு கத்தனுஞ் செயற்கருந் தவிசொளி செறிந்தே
யசைவ ருந்திறற் சூரபன் மாவெனு மவுண
னிசைமை தன்னையு மாணை தன்னையுமவ னியாக்கை
மிசைகொள் பேரணிக் கதிரையும் விழுங்கின விரைவில்.

(இ-ள்.) பிரமனாலும் செய்தற்கருமையான சிம்மாசனத்தின் ஒளியானது நெருங்கியழிவற்ற வலிமையினையுடைய சூரபன்மனென்னும் அசுரனது கீர்த்தியையும் ஆக்கினையையும் அவன் சரீரத்தின்மீது தரித்துள்ள பெரிய ஆபரங்களினொளியையும் விரவில் விழுங்கியது.—எ-று. (௫௭)

அணைய வான்றவி சவுணனே ரிருத்தலு மதுகண்
டெனது நாயகன் விடுத்தனன் போலுமென் றெண்ணி
மனமகிழ்ச்சியா லறுமுகப் பிரானடி வழுத்தி
வினைய நாடவா னிருந்தன னங்கதன் மிசையே.

(இ-ள்.) அத்தகைய உயர்ந்த சிம்மாசனம் சூரபன்மனது எதிரில் வந்திருத்தலும் வீரவாகுதேவரதனைப்பார்த்து எம்பெருமானாகிய குமரக்கடவுள் அனுப்பினார்போலுமிதனையென்று நினைத்து சந்தோஷத்துடன் சண்முகப் பெருமானது திருவடிகளைத் துதித்து அவர்கட்டளையை எண்ணுகின்றவராய் அதன் மீதிருந்தனர்.—எ-று. (௫௮)

பெருந்த னிச்சுட ரொறித்திடு பொன்மணிப் பீடத்
திருந்து மேதகு சிறப்பொடு விளங்கிய வேந்தல்
விரிந்த பல்கதி ருடையதோர் வெய்யவ னடுவட்
பொருந்தி வைகிய கண்ணுதற் பரமனே போன்றான்.

(இ-ள்.) ஒப்பற்றமிக்க ஒளிவீசுகின்ற பொன்னும் மணியுமிழைத்த ஆசனத்தின்மீது செவ்விய உயர்ந்த சிறப்போடு இருந்து விளங்கிய வீரவாகுதேவர் விரிந்தபலகிரணங்களையுடைய சூரியனது நடுவில் எழுந்தருளியிருந்த நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானை யொத்தனர்.—எ-று. (௫௯)

மின்னி ருந்தவே லவுணர்கோ னெதிருறும் விடலை
முன்னி ருந்தவா டகன்றனை யடுமுரட் சீயஞ்
சென்னி ணங்கவர்ந் தலமர வணுகிமுன் றெற்றப்
பொன்னி ருந்தவி சிருந்திடும் வீரனே போன்றான்.

(இ-ள்.) ஒளிபொருந்திய வேற்படையினையுடைய சூரபன்மனது எதிரிலிருக்கிற வீரவாகுதேவர் முற்காலத்திலிருந்த இரணியனைக்கொன்ற வலிமைமிக்க நரசிம்மமானது இரத்தத்தைக்குடித்து மயங்குதலும் அதனெதிரில் சாமரூபமாக விரைவாகவந்துபொன்மயமான பெரிய ஆசனத்திலிருந்தருளிய வீரபத்திரக்கடவுளை யொத்தனர். ()

வெம்மைக் காவிருள் வேலைபோன் மூடிவிண் புவியைத்
தம்முட் சித்தரிற் காட்டலுஞ் சதுர்முகத் தொருவ
னம்மொத் தாரிலை யென்றிடச் சிவன்புகழ் நவிலுஞ்
செம்மைத் தொல்குண மாலுநேர்ந் திருந்தனன் றிறலோன்.

(இ-ள்.) வீரவாகுதேவர் தங்களுக்குள் நான் பெரியன் நீபெரியன் என்னும்கோபத்தினிடத்தில் கருங்கடல்போற்சூழ்ந்து சுவர்க்கத்தையும் பூமியையும் ஒருவருக்கொருவர் (மாயாசாலங்காட்டவல்ல) சித்தர்களைப்போல காட்டுதலும் பிரமன் நமக்குச்சமானமானவர்களில்லை என்று கூறுதலும் அவனெதிரில் நமக்குயர்ந்தவர் சிவபெருமானென்று அவர் புகழைக் கூறிக்கொண்டு சென்றிருந்த திருமாலையொத்தனர்.-எ-று.

இவற்றி யற்கையால் வீரவா குப்பெய ரேந்த
லிவப்பின் மிக்கதோர் பொன்மணித் தவிசின்மே னெஞ்சி
னுவப்பும் வீரமு மேதக விருந்தனு முற்ற
வவைக்க ளத்தினர் யாவருங் கண்டன ரதனை.

(இ-ள்.) இத்தன்மையான தன்மையால் வீரவாகுவென்னும் பெயரினையுடைய தலைவர் உயர்விற்சிறந்ததாகிய பொன்னும்மணியும் இட்டிழைத்த ஆசனத்தின்மீது மனத்திற் சந்தோஷமும் வீரமுமதிகமாம்படியிருந்தனர் அவர் அவ்வாறிருந்ததனை அச்சபாமண்டபத்திலுள்ள யாவர்களும் பார்த்தார்கள்.—எ-று. (சுஉ)

நோற்றன் முற்றுறும் வினைஞர்பா னெய்தின்வந் திறுத்த
வாற்றல் சால்வளம் போலவே யரியணை யதன்கட்
டோற்று மேலவ னிலைமையைக் காண்டலுந் துளங்கி
யேற்ற வற்புத மெய்தின ரவைக்களத் திருந்தார்.

(இ-ள்.) தவம்முடிந்துள்ள புண்ணியர்களிடத்தில் விரைவாகவந்து சேர்ந்த வலிமைமிக்க செல்வத்தைப்போல சிம்மாசனத்தின்கண் எழுந்தருளியிருக்கின்ற வீரவாகுதேவரின் தன்மையை பார்த்தவுடன் நடுங்கி அச்சபையிலிருந்தவர்களெல்லாம் மிக்க ஆச்சரியமடைந்தார்கள்.—எ-று. (சுௗ)

வேறு.

வாரிலங் கியகழன் மன்னன் முன்னரே
தாரிலங் கியமணித் தவிசி னுற்றுளான்
வீரனும் போலுமால் வினைய மோர்கிலேம்
யாரிவன் கொல்லென வியம்பு வார்சிலர்.

(இ-ள்.) வாரொடுவிளங்குகின்ற வீரக்கழலணிந்த அரசனெதிரிலே மாலைகளோடு விளங்குகின்ற அழகிய ஆசனத்திலிருந்தவன் வீரனைப்போலவுமிருக்கின்றான் வந்த காரியமுணர்கிலோம் இவன் யாராயிருக்கலாம் என்றுசிலர் கூறினார்கள்.—எ-று. (சுச)

முந்திவட் கண்டில் முடிவி லாற்றல்சே
ரெந்தைமு னிதுபொழு திருத்தன் மேயினு
னந்தமை நீங்கியே நடுவ ணேயிவன்
வந்ததெவ் வாறென வழங்கு வார்சிலர்.

மூவரு ளாகுமோ முடிவின் மாதிரத்
தேவரு ளாகுமோ சேணில் வைகிய
தாவரு முனிவரர் தம்மு ளாகுமோ
வேவரு ளாகுமோ விவனென் பார்சிலர்

(இ-ள்.) இவன் மும்மூர்த்திகளிலொருவனோ அழியாத திக்குபாலர்களிலொருவனோ தவலோகத்தில் வசிக்கின்ற கெடாத முனிவர்களுக்குள்ளொருவனோ இவன் யாரிலொருவனுயிருப்பான் என்றுசிலர் கூறுகின்றார்கள்.—எ-று. (எஎ)

மாலைதாழ் மார்புடை மன்னற் கின்னமு
மாலமார் கண்டனே யருளி னின்னதோர்
கோலமாய் வரந்தரக் குறுகி னன்கொலோ
மேலியா முணருதும் வினைவென் பார்சிலர்.

(இ-ள்.) மாலைதொங்குகின்ற மார்பையுடைய நமதரசனுக்கு நீலகண்டனாகிய சிவபெருமானே திருவருளுடன் இத்தன்மையான வடிவத்தோடு இன்னம் இவருக்கு வரமளிக்கும்பொருட்டு வந்தனரோ நடக்கும்விஷயத்தை நாம் அருகிற்சென்று காண்போமென்பார்கள் சிலர்.—எ-று. (எஅ)

காற்றுட னங்கியுங் கடுங்கட் காலனுங்
கூற்றனு மோருருக் கொண்டு வைகிய
தோற்றமி தன்றியிச் சூரன் முன்வரு
மாற்றலர் யாரென வறைகின் றார்சிலர்.

(இ-ள்.) வாயுவுமக்கினியும் கொடிய கண்களையுடைய இயமனும் சேர்ந்து ஒருருவங்கொண்டு இருக்கின்ற உருவமே இவ்வுருவமன்றி சூரபன்மனது எதிரில் வரத்தக்கவல்லபர்கள் யார் இருக்கிறார்கள் என்றார்கள் சிலர்.—எ-று. (எகூ)

குன்றமு மவுண னுங் குலைந்து பாடுற
வொன்றொரு வேலினை யொருவ னுய்த்தன
னென்றன ரன்னவ னீண்டு மன்னன்முன்
சென்றன னோவெனச் செப்பு வார்சிலர்.

(இ-ள்.) கிரவுஞ்சமலையும் தாரகாசுரனும் கெட்டழியும்படி ஒப்பற்ற வேலாயுதத்தை ஒருவன் விட்டனனென்று கூறினார்கள் அவன் இப்பொழுது நமதுஅரசன் எதிரிலும் வந்தனனோ என்று கூறுவார்கள் சிலர்.—எ-று. (அ0)

செற்றிய பண்மணிச் செம்பொன் மன்றமு
முற்றிடு மவுணரு மொளிறு வான்கதிர்
மற்றிவ னணிகளின் றவிசின் வாள்பட
வற்றது பகற்சுட ராயென் பார்சிலர்.

(இ-ள்.) நெருங்கிய பலமணிகளிட்டுச் செய்துள்ள செவ்விய பொன்மயமான இம்மண்டபமும் இதிலிருக்கின்ற அசுரர்களும் விளங்குகின்ற உயர்ந்த ஒளியோடு கூடிய இவனது ஆபரணங்களினதும் ஆசனத்தினதும் ஒளிபட பகல்விளக்கைப்போல அழிந்ததென்பார்கள் சிலர்.—எ-று. (அக)

இருந்திடு மவுணர்கள் யாரு மித்திறம்
வருந்திற நினைகிலர் மறந்து மிவ்விடை
தெரிந்திடி னிங்கிது திறல்கொண் மன்னனே
புரிந்திடு மாயையின் புணர்ப்பென் பார்சிலர்.

(இ-ள்.) அவ்விடத்திலிருந்து அசுரர்கள் யாரும் இவ்வண்ணம் இவ்விடத்திற்கு வருந்தன்மையை யுணராதவர்களாய் மறந்துமெண்ணுர்கள் என்னுமிடத்தில் வெற்றிபொருந்திய நமது அரசனேசெய்த மாயையின்தந்திரம் இதுவென்று சிலர் கூறுவார்கள்.—எ-று. (அஉ)

நென்னலி னிறந்துயிர் நீத்த தாரகன்
மூன்னுறு தன்னுரு முடிய விப்பக
லின்னதோர் பொன்னுரு வெடுத்து முன்னைபாற்
றுன்னினன் கொல்லெனச் சொல்கின் றூர்சிலர்.

(இ-ள்.) நேற்று உயிரிழந்த தாரகன் முன்னமிருந்த தனது யானையுருவமொழிய இன்றையதினத்தில் இத்தன்மையான அழகிய உருவத்தை யெடுத்துக்கொண்டு தன்தமயனிடத்திற்கு வந்தானே என்று சிலர் கூறுவார்கள்.—எ-று. (அரு)

வேறு.

சங்க மேவின ரினையன வளப்பில சாற்ற
வங்க ணோரரி மான்றவி சிருக்கையி லவுணன்
றுங்க மெத்துணை யத்துணைச் சிறப்பொடு தோன்றிச்
செங்கை வேலவற் புகழ்ந்துவீற் றிருந்தனன் றிறலோன்.

(இ-ள்.) அச்சபையிற்பொருந்தினவர்கள் இவ்வாறு அநேகவிதமாகச் சொல்ல அவ்விடத்திலுள்ள ஒப்பற்ற சிங்காதனத்தின்மீது சூரபன்மன் எவ்வளவான உயர்வாக இருக்கின்றானே அவ்வளவு உயர்வுடன் காணப்பட்டு செவ்வியதிருக்கரத்தில் வேற்படைதாங்கிய குமரக்கடவுளைப் புகழ்ந்துகொண்டு வீரவாகுதேவரிருந்தனர்.—எ-று. ()

அறிவர் மேலவன் றவிசில்வீற் றிருத்தலு மவுணர்க்
கிறைவ னுங்கது நோக்கியே யெயிற்றணி கறித்துக்
கறுவி யேநகைத் துரப்பிமெய் வியர்ப்பெழக் கண்கள்
பொறிசொ ரிந்திடப் புகையுமிழ்ந் தினையன புகல்வான்.

(இ-ள்.) விவேகிகளுள் முதல்வராகிய வீரவாகுதேவர் தமதுசிம்மாசனத்திலிருத்தலும் அதனை அசுரர்தலைவனாகிய சூரபன்மன்கண்டு பல்லின் வரிசைகளைக் கடித்து கறுவி சிரித்து அதட்டி உடம்பில் வெயர்வைதோன்ற கண்களில் தீப்பொறிபறக்க மூச்சிற்புகையுண்டாக இவ்வண்ணங் கூறுகின்றான்.—எ-று. (அகு)

சுற்ற நீங்கியே யிலையுண்டு விலங்கெனச் சுழன்று
வற்றன் மாமரக் காட்டகத் திருந்துடல் வருத்துஞ்
சிற்று ணர்ச்சியோர் வல்லசித் தியல்பிது சிறியோய்
கற்று ளாய்கொலாங் காட்டினை நமதுமுன் காண.

(இ-ள்.) சுற்றத்தினர்களைவிட்டு உலர்ந்த பெரிய மரங்களையுடைய காட்டினிடத்திருந்து இலைகளைத்தின்று மிருகங்களைப்போலசஞ்சரித்துஉடலைவருத்துகின்ற அறிவிற்குறைந்தவர்கள் செய்கின்ற சித்தின்றன்மையேயிது ஏ சிறியோய் இதனை நீகற்றுக் கொண்டாய்போலும் நாம்பார்க்கும்படி (இந்தமாயைவித்தையைக்)காட்டினாய்.—எ-று.

துன்று வார்சடை யோகினோ ரல்லது தொலைந்து
பின்று தேவரும் வல்லரிச் சிறுதொழில் பெரிது
மொன்று மன்னதை யிவ்விடைக் காட்டல ரூன்போ
னன்று நன்றுநீ நம்முனர்க் காட்டிய நடனம்.

(இ-ள்.) நெருங்கியநீண்ட சடையினையுடைய முனிவர்களையன்றியும் இச்சிறிய மாயவித்தையைச் செய்தற்கு ஓடிமறைந்த தேவர்களும் வல்லவர்களேயாம் அவர்க

ளெல்லாம் உன்னைப்போல் இவைகளொன்றையும் இங்கேகாட்டினார்களில்லை நீ நமது நேரிற்காட்டிய இந்தநடிப்பு வெகுநன்றாயிருக்கின்றது.—எ-று. (அஎ)

சித்த ராயினோர் செங்கண்மான் முதலிய தேவ
ரித்தி றத்தன காட்டுதற் கஞ்சுவ ரென்முன்
றத்த மெல்லையிற் புரிந்திட லல்லது தமியோய்
பித்த னேகொலா நமக்கிது காட்டுதல் பிடித்தாய்.

(இ-ள்.) சித்தர்களும் திருமால்முதலிய தேவர்களும் தங்களிடங்களிற் செய்துகொள்ளுவதல்லாமல் என்னெதிரிலே இப்படிப்பட்ட காரியங்களை செய்கின்றதற்கு பயப்படுவார்கள் ஒ ஏகனே! நீ பைத்தியங்கொண்டவனோ? நமக்கிதனைக் காட்டப்புகுந்தனை.—எ-று. (அஅ)

உரைசெ யிந்நகர் மகளிருஞ் செய்வரூன் முற்றாக்
கருவி னுள்ளுறு குழவியுஞ் செய்திடுங் கருத்தில்
வரைக ளுஞ்செயு மாக்களுஞ் செய்யுமற் றதனு
லரிய தன்றரோ பேதைநீ புரிந்திடு மாடல்.

(இ-ள்.) சொல்லப்பட்ட இந்தஊரிலே இருக்கிற பெண்பிள்ளைகளும் செய்வார்கள்; மாமிசம் அழுந்தாதகருவினுள்ளிருக்கின்றகுழந்தையுஞ்செய்யும்; அறிவில்லாத மலைகளும் செய்யும் விலங்குகளுஞ் செய்யும், ஆதலால் அறிவற்றவனே! உன்னாற் செய்யப்பட்ட இவ்விளையாட்டு ஆச்சரியமானதல்ல.—எ-று. (அகூ)

என்னை யெண்ணலை யெதிருற விருந்தனை யிதனான்
மின்னல் வாட்படை யுறைகழித் தொய்யென வீசிச்
சென்னி வீட்டுவ னின்செயன் முற்றவுந் தெரிந்து
பின்ன ரத்தொழில் புரிவனென் றேயுளம் பிடித்தேன்.

(இ-ள்) என்னை மதிக்காமல் எதிரில்வந்திருந்தனை இதனாற் ஒளிபொருந்திய வாளாயுதத்தை உறையினின்றும் எடுத்து விரைவாகவெட்டி உன் தலையை அறுப்பேன் உன் சங்கதிகள் முழுமையும் உணர்ந்து அதன்பின்னர் அந்தக்காரியத்தை செய்வேனென்று நினைத்து மனம்பொறுத்தேன்.—எ-று. (கூo)

ஏனாற் றாரெலாம் வழுத்திய வவுணரும் யாமுங்
காணக் காட்டினை நீயறி விஞ்சையைக் கண்டாம்
பூணித் தாயென வருமுனக் கித்துணைப் பொழுது
பாணித் தாவியை யளித்தனன் னன்னது பரிசே.

(இ-ள்.) இறுமாந்திருந்தவர்களெல்லாம் துதித்த அசுரர்களும் நாமும் நீ கற்ற வித்தையைக் காணும்படி காட்டினை நாங்களும்பார்த்தோம் கவுரவமடைந்திருக்கின்றோம் என்று கருதி இவ்விடத்துக்குவந்த உனக்கு இவ்வளவுகாலம் தாமதமாக உன்னுயிரை உனக்களித்தேன் இதுதான் அதற்குச்சன்மானம்.—எ-று. (கூக)

வாசவன்கரந் தோடினன் பிறரிது மதியார்
கேச வன்னிது நினைகிலன் மறைகளின் கிழவோ
னாசி கூறியே திரிந்திடு மவர்க்கெலா முதலா
மீச னென்னிடை வருகிலன் யாரைநீ யென்றான்.

(இ-ள்.) இந்திரனோ மறைந்தோடிப்போய்விட்டான் மற்றையவர்களோ இவ்வாறுசெய்தற்கு நினைக்கமாட்டார்கள் திருமாலும் இதனை எண்ணான், பிரமனோ நமக்கு ஆசீர்வாதமொழிந்துகொண்டு திரிவான், இவர்களுக்கெல்லாந் தெய்வமாகிய சிவபெரு

மான் என்னிடத்திற்கு வரமாட்டார்; ஆதலால் வேறே நீயார் என்று சூரபன்மன் கேட்டனன்.—எ-று. (கஉ)

தீய னித்திற முரைத்தன கேட்டலுந் திறலோன்
காய மீனெனக் காயமேல் வியர்ப்பெழக் கனன்று
மாயை செய்துழல் வலியிலார் போலெனை மதித்தா
யாய புந்தியை விடுமதி கேளிதென் றறைவான்.

(இ-ள்.) கொடியவனாகிய சூரபன்மன் இவ்வண்ணங்கூறுதலும் அதனைக்கேட்டவீரவாகுதேவர் ஆகாயத்தினிடத்திற் காணப்படுகிற நக்ஷத்திரங்களைப்போல வியர்வை உண்டாகக்கோபித்து நீமாயையைச்செய்து திரிகின்ற சாமன்யர்களைப்போல என்னை நினைத்தனை அவ்வாறான எண்ணத்தை விட்டுவிடு நான்சொல்லுவதைக்கேள் என்று கூறிக்கூறுகின்றனர்.—எ-று. (கங)

புரந்த ரன்குறை யயன்முத லமரர்தம் புன்மை
வருந்தும் வானவர் சிறையெலா நீக்கிமற் றவர்தந்
திருந்து தொல்லிறை யுதவுவான் செந்திமா நகர்வந்
திருந்த வாதியம் பண்ணவ னடியனேன் யானே.

(இ-ள்.) யான் இந்திரனது குறைவையும், பிரமன்முதலிய தேவர்களது தாழ்வையும்துன்பப்படுகிற தேவர்களதுசிறைமுதலியவைகளையுமெல்லாம் ஒழித்து அவர்களது பழைய சுதந்திரங்களை அளிக்கும்பொருட்டு திருச்செந்தூரிலே வந்து எழுந்தருளி யிருக்கிற முழுமுதற்கடவுளாகிய சண்முகப்பெருமானது அடியேன்.—எ-று. (கச)

துன்னு தானைகட் கரசரா யறுமுகத் தொல்லோன்
பின்னர் வந்துளா ரொன்பதோ டிலக்கமாம் பெயரா
லன்ன வர்க்குளே யொருவன்யா னந்திபாங் கமர்ந்தே
னென்ன லார்புகழ் வீரவா கெனும்பெய ருள்ளேன்.

(இ-ள்.) பெருங்கடவுளாகிய சண்முகப்பெருமானது சேனாபதிகளாய் ஒரு இலக்ஷத்து ஒன்பதுபெயர்கள் அவருடன் வந்திருக்கின்றார்கள்; அவர்களுள்யானும் ஒருவன் நந்திகணத்திலுள்ளவன் என்பெயர் சத்துக்களாற் புகழப்படுகிற வீரவாகு என்பதேயாம்.—எ-று. (கரு)

தார கப்பெய ரிளவலைத் தடவரை தன்னை
யோரி றைக்குமுன் படுத்தவே லறுமுகத் தொருவன்
சூரெ னப்படு நின்னிடைத் தமியனைத் தூதாப்
பேர ருட்டிறத் துய்த்தன னென்றனன் பெரியோன்.

(இ-ள்.) பெரியவராகிய வீரவாகுதேவர் தாரகாசுரனென்னும் உனது தம்பியையும் பெரியகிரவுஞ்சமலையையும் ஒருகணப்போதிலே கொன்றருளிய வேலாயுதத்தினையுடைய சண்முகப்பெருமான் சூரபன்மன் என்னும் பெயர்வாய்ந்த உன்னிடத்தில் என்னை தூதுவனாக தனதுபெருமிதமான அருளின்தன்மையா லனுப்பினார் என்றுகூறினார்.

கொடுத்திடாதவென் கொண்டவ னுரைத்தசொற் கொடுங்கோ
னடத்து மன்னவன் கேட்டலு மாங்கவ னம்மேல்
விடுத்த காரண மென்னையோ விளம்புதி யென்ன
வெடுத்து மற்றிவை யெம்பிரான் றூதுவ னிசைப்பான்.

(இ-ள்.) சத்துருக்களுக்குப்புறங்காட்டி ஓடாததன்மையினையுடைய வீரவாகுதேவர்கூறியவசனம் கொடுங்கோலாளியாகிய சூரபன்மன் கேட்டவுடனே அக்குமாரன்

நம்மிடத்திலுன்னைத் தூதனுக அனுப்பினுன் சொல்வாயாக என்றவுடனே எம்பெருமானுகிய குமரக்கடவுளின் தூதுவராகிய வீரவாகுதேவர் சொல்லத்தொடங்கினுர். ()

மருத்து வன்றனைச் சசியொடு துரந்துசேண் வதிந்த
புரத்தை யாரழற் கூட்டியே யனையவன் புதல்வ
னொருத்த னோடுபல் லமரரை யுவளகந் தன்னி
லிருத்தி னுயென வினவின னறுமுகத் திறைவன்.

(இ-ள்.) இந்திரனை இந்திராணியுடனே ஓட்டிவிட்டு ஆகாயத்திலிருந்த சுவர்க்கலோகத்தை அரியநெருப்புக்கு உணவாகச்செய்து அவ்விந்திரனதொருமகனுகிய சயந்தனுடனே பலதேவர்களையும் சிறையிலிட்டிருக்கின்றுயென்று ஆறுதிருமுகங்களையுடைய கடவுள் வினவி உணர்ந்தனர்.—எ-று. (கூஅ)

இந்தி ராதிப ரயன்முதற் பண்ணவர் யாரும்
வந்து வந்துவேண் டுதலு மவர்குறை மாற்றப்
புந்தி கொண்டுபன் னிருபுயத் தெம்பிரான் புவிக்க
ணந்த மின்றுறை பாரிடத் தானையோ டடைந்தான்.

(இ-ள்.) இந்திரன் முதலானவர்களும் பிரமன்முதலியமுனிவர்கள் முதலானவர்களும் வந்து வேண்டிக்கொண்டமையால் அவர்களதுகுறைகளை ஒழிக்கும்பொருட்டு திருவுளத்திலே நினைத்து பன்னிரண்டு திருத்தோள்களையுடைய எம்பெருமான் இந்த பூலோகத்திலே அளவற்றதாகவுள்ள பூதசேனைகளுடனே எழுந்தருளிவந்தனர்.—எ-று.

தரையி னண்ணிநின் னிளவலை வரையொடு தடிந்து
நெருந லேவந்து செந்தியின் வைகினு னின்னையும்
விரைவின் வந்தட வுன்னினு னின்றுநம் மிசையே
யருள்கொ டேசில புகன்றெனைத் தூண்டின னதுகேள்.

(இ-ள்.) பூவுலகத்திற்குவந்து உன்றம்பியை கிரவுஞ்சமலையுடனே அழித்து நேற்றையத்தினமேவந்து திருச்செந்தூரிலே எழுந்தருளிஇருக்கிறுர், உன்னையும்விரைந்துவந்து கொல்லும்பொருட்டு திருவுளத்திலெண்ணினுர்; இன்று நின்மீது கருணையுடையவராய் சிலவிஷயங்களைச் சொல்லிச்சொல்லும்படி என்னை அநுப்பினுர் அதனைச் சொல்லுகின்றேன் கேள்?—எ-று. (கOO)

நிறையு மிந்துவைப் படவராக் கவர்ந்தென நிகளச்
சிறைப டுத்தியே யமரரை வருத்தினை செய்யு
மறையொ ழுக்கமு நீக்கினை யுலகமாண் மன்ன
ரறமு மன்றிது வீரர்தஞ் செய்கையு மன்றால்.

(இ-ள்.) பூரணசந்திரனைப் படத்தோடுகூடிய பாம்பு பிடித்துக்கொண்டாற்போல தேவர்களை விலங்கோடுகூடிய சிறையிலடைத்துவருந்தச்செய்தனை; (அதுவுமன்றி) வைதிக ஒழுக்கங்களையுந் தள்ளிவிட்டாய்; இவ்வாறுசெய்தல் உலகத்தை ஆளுகின்ற மன்னவர்களது நீதியுமல்ல வீரருடைய செய்கையுமல்ல.—எ-று. (கOக)

தாதை யாகியோன் காசிப னுங்கவன் றனய
னுத லாலுனக் கமரரைச் சிறைசெய்வ தறனே
வேத மார்க்கமும் பிழைத்தனை சிறுபொருள் விழைந்தாய்
நீதி யாலுல களிப்பதே யரசர்தந் நெறியே.

(இ-ள்.) தேவர்களுக்குத் தந்தையாகவுள்ளவன் காசிபமுநிவன் நீயும் அக்காசிபமுனிவனுக்குப் பிள்ளையாதலால் நீதேவரைச்சிறையிலிடுதல் முறைமையோ? இதுவன்

றி வைதிகமார்க்கத்தையுமொழித்தனை இழிந்தவஸ்துவி லாசைகொண்டனை அரசர்களது முறைமை நீதியுடனே உலகத்தை யாளுவதல்லவோ.—எ-று. (கOஉ)

உலத்தின் மாண்டதோட் சலந்தர னந்தக னொருங்கே
கலத்த லில்லதோர் புரத்தவ ராதியோர் கடவுட்
குலத்தை வாட்டலி னிமைப்பினில் வீந்தனர் கொடியோய்
நிலத்தி னும்பரை வருத்துத லழகிதோ நினக்கே.

(இ-ள்.) திரண்டகல்லைவிடச்சிறந்ததோள்களையுடைய சலந்தராசுரனும் அந்தகாசுரனும், ஏககாலத்திலோரிடத்தில் நிற்குமியல்பின்றிப் பறந்துதிரிகிற திரிபுராதியர்கள்முதலானவர்களும் தேவர்கூட்டங்களை வருத்தினமையினாலே விநாடியினில் அழிந்தார்கள்; கொடியவனே! பூமியில் தேவர்களை வருத்துவது உனக்குஅழகோ?—எ-று.(கOங)

மெய்மை நீங்கியே கொலைகள வியன்றமே லுள்ள
செம்மை யாளரைச் சீறியே யணங்குசெய் தீயோர்
தம்மி லாற்றரும் பழிசுமந் தொல்லையிற் றமரோ
டிம்மை வீடுவ ரெழுமையுந் துயரினு டிருப்பார்.

(இ-ள்.) உண்மையை ஒழித்து கொலையும்களவும்பழகி சுவர்க்கத்திலுள்ள ஒழுக்கம்பொருந்திய தேவர்களைக் கோபித்துத் துன்பஞ்செய்கின்ற கொடியவர்கள் தங்களுக்குட் சகித்தற்கரிய பழியைச்சுமந்து விரைவாகச் சுற்றத்தவர்களுடன் இவ்வுலகிலும் அழிவார்கள், மறுமையிலும் உண்டாகிற எழுவகைத்தோற்றங்களிலும் துன்பமுள்ளவர்களாகவே இருப்பார்கள்.—எ-று. (கOச)

இங்ங னந்திரு நீங்கியே துயருழந் திறப்ப
ரங்ங னம்பெரி தாரிருண் மூழ்குவ ரதற்பி
னுங்ங னம்பிறந் தயருவ ரென்றுமீ துலவா
ரெங்ங னுய்வரோ பிறர்தமக் கல்லல்செய் திடுவோர்.

(இ-ள்.) அயலார்களுக்குத் துன்பத்தைச்செய்பவர்கள் இவ்விடத்திற் செல்வங்களை இழந்து துன்பத்தை யனுபவித்து இறப்பார்கள், மறுமையி லவ்விடத்திலுள்ள கொடிய அரியநரகத்தில்விழுவார்கள், அதற்குப்பின்னர் (கன்மசேடத்தால்) இவ்விடத்தில் பிறந்துவருந்துவார்கள், எப்பொழுதும் உயர்ந்தகதியை அடையமாட்டார்கள். ()

தீது நல்லன வாயிரு திறத்தவுந் தெரிந்தே
யேதி லார்க்கவை செய்வரேற் றமக்குட னெய்தும்
பேதை நீரையா யமரரைச் சிறைசெய்த பிழையான்
மாது யர்ப்பட லன்றியே யிறுதியும் வருமால்.

(இ-ள்.) தீமையும் நன்மையும் ஆகிய இருவிதமானவைகளும் தெரிந்து அயலார்களுக்கு அவைகளைச்செய்வார்களானல் உடனே அதின்பலனைச் செய்தவர்களடைவார்கள் நீ அறியாமையையுடையவர்களைப்போல தேவர்களைச் சிறையிலடைத்த குற்றத்தால் பெரியதுன்பத்தை அநுபவிப்பதல்லாமலும் மரணத்தையுமடைவாய்.—எ-று.

அண்ட ராற்றலை வவ்விய தாரக னாவி
யுண்ட கொற்றவே லிருந்தது விடுத்திடி னுனையுங்
கண்ட துண்டம தாக்குமா லறநெறி கருதித்
தண்டம் வல்லையிற் புரிந்தில னித்துணை தாழ்த்தான்.

(இ-ள்.) தேவர்களது வீரமுதலியவற்றை அபகரித்த தாரகாசுரனது பிராணனை வாங்கிய வெற்றிபொருந்திய வேலாயுதம்இருக்கின்றது, அதனைவிடப்படுமானலது

உன்னையும் கண்டதுண்டங்களாகச் செய்திடும்; தருமவழியையெண்ணி தண்டனையை விரைந்துசெய்யாமல் இதுகாறும்பொறுத்திருக்கின்றனர்.—எ-று. (க0எ)

கெடுத லில்லதோ ரமரர்கள் சிறையிடைக் கிடப்ப
விடுதல் செய்தனை பல்லுக மவர்தமை யின்னே
விடுத லுய்வகை யாகுமான் மறுத்தியேல் விரைந்து
படுத லேநினக் குறுதியா முறையுமப் பரிசே.

(இ-ள்.) அழிவற்ற தேவர்களைச் சிறைச்சாலையிற்கிடக்கும்படி அநேகயுகங்களாக இட்டனை, அவர்களை இப்பொழுது விட்டுவிடுதல் நீபிழைத்தற்கேதுவாகும், விடாது தடைசெய்வாயாகில் நீ சீக்கிரம் இறந்துபடுவாய்; இவ்வண்ணமே முறைமையும். ()

ஆண்ட ளப்பில நோற்றனை வேள்விநின் றூற்றி
மூண்ட தீயிடை மூழ்கினுப்க் கெந்தைமுன் னளித்த
மாண்டி டார்தபே ராயுளைத் திருவொடும் வாளா
வீண்டொர் புன்னெறி யாற்றியே யிழுக்குவ தியல்போ.

(இ-ள்.) அநேகமாண்டு நியமத்துடன் தவத்தைச்செய்து பற்றியெரிகின்ற தீயினிடத்தில் விழுந்த உனக்கு எம்பெருமான் ஆதிகாலத்தில் அளித்த அழியாத ஆயுளைச்செல்வத்துடன் வீணாக இங்கே ஒரு இழிந்தவேலையைச்செய்து அழித்துக்கொள்ளுதல் முறைமையோ?—எ-று. (க0கூ)

சைய மேற்படு வளத்தொடு நீயுநின் றமரு
முய்ய வேண்டுமே லமரர்தஞ் சிறையினை யொழித்து
வைய மேலறத் தியல்புளி வாழிமற் றிதனைச்
செய்ய லாயெனி னீங்குவந் தடுவனுற் றிண்ணம்.

(இ-ள்.) மலையைவிட அதிகஉன்னதமான செல்வத்துடன் நீயும் உனது சுற்றத்தினர்களும் பிழைக்கவேண்டுமானால் தேவர்களது சிறையைவிட்டு இந்த உலகத்தில் நீதியுடனே வாழ்வாய்; இவ்வாறுசெய்யாது போவாயானால் சண்முகப்பெருமான் இவ்விடத்திலேயே வந்து உன்னை நிச்சயமாகக்கொல்லுவார்.—எ-று. (கக0)

என்று மற்றிவை யாவையும் வரைபக வெறிந்தோ
னுன்ற னக்கறை கென்றன னீங்குநீ யும்பர்
வன்ற ளைச்சிறை நீக்கியே யறத்தினில் வளத்தை
நன்று துய்த்தனை நெடிதுநீ வாழ்கென நவின்றான்.

(இ-ள்.) என்றிவைகளையெல்லாம் கிரவுஞ்சபின்னராகிய குமாரசுவாமி உன்னிடத்தில் கூறுமாறு திருவாய்மலர்ந்தருளினர்; ஆதலால் நீ இவ்விடத்தில் தேவர்களது கொடிய விலங்கோடு கூடியசிறையை அகற்றி தருமமுறையாக இந்தச்செல்வத்தை சுகமாக அநுபவித்துக்கொண்டு அநேககாலம் நீ வாழ்கஎன்று கூறினர்.—எ-று. (ககக)

மறம கன்றிடா வீரனிங் கினையன வுகுத்தே
யறையும் வாசகங் கேட்டலும் வெகுளிமூ ளகத்தன்
பொறியு மிழ்ந்திடு கண்ணினன் புகையுமி ழுயிர்ப்ப
னெறியு மங்கைய னிறந்திடு முறுவல னிசைப்பான்.

(இ-ள்.) வீரங்குறையாத வீரவாகுதேவர் இவ்வாறாக வகுத்துக் கூறுநின்ற சொற்களைக்கேட்டவுடனே கோபம் அதிகமாகிற மனத்தையும் தீப்பொறிகளைக் கக்குகிற கண்களையும் புகைவீசாநின்ற சுவாசத்தினையும் ஒன்றோடொன்றடிக்கப்படுகிற அகங்கைகளையும் அளவுகடந்த சிரிப்பினையும் உடையவனாய் சூரபன்மன் சொல்லுகின்றனன்.—எ-று. (ககஉ)

மேலை யாயிரத் தெட்டெனு மண்டமும் வென்றே
யேலு கின்றதோர் தனியிறை யாகிய வெனக்குக்
கோல வாலெயி றின்னமுந் தோன்றிலாக் குதலைப்
பால னேகொலா மினையன புந்திகள் பகர்வான்.

(இ-ள்.) உயர்ந்த ஆயிரத்து எட்டு என்று சொல்லப்படுகிற அண்டங்களையுஞ் செயித்து தக்க ஒப்பற்ற ஏகச்சக்கிரவர்த்தியாக விருக்கிற எனக்கு அழகியபற்கள் இன்னமும் முளையாதமழலைச் சொற்களையுடைய சிறுவன்தானா இத்தன்மையவான புத்திகளைச்சொல்லுகின்றவன்?—எ-று. (ககங)

விறலின் மேதகு மவுணராம் வலியிலார் மிகவும்
வறிய ராகிய தேவரா மேலவர் மழலைச்
சிறுவ ராந்தனி முதல்வற்கு மமைச்சியல் செய்வா
ரெறியு நேமிசூ ழுலகத்து வழக்கநன் றிதுவே.

(இ-ள்.) மிக்கமேன்மையினையுடைய வெற்றிவாய்ந்த அசுரர்கள் வலிமையில்லாதவர்கள் மிகவும் ஏழைகளாகவிருக்கிற தேவர்கள் உயர்ந்தவர்கள் ஒப்பற்ற அரசருக்கு மழலைச்சொற்களையுடைய சிறுகுழந்தைகள் மந்திரித்தன்மை நடத்துபவர்கள் அலைகள் வீசுகின்ற கடலாற்சூழப்பட்ட இவ்வுலகத்திலிந்த வழக்கநன்றாயிருக்கின்றது. ()

நறைகொ டார்முடி யவுணர்தங் குலத்தினை நலித்து
வறுமை செய்தனர் கடவுள ரவர்திரு மாற்றிக்
குறிய வேவலுங் கொண்டன னொழுக்கமுங் கொன்றேன்
சிறையும் வைத்தன னெங்குடித் தமர்முறை செய்தேன்.

(இ-ள்.) தேன்பொருந்திய மாலையணிந்த முடிகளையுடைய அசுரர்களது குலங்களை துன்பப்படுத்தி ஏழைகளாக்கினார்கள் தேவர்கள் ஆதலால் நான் அவர்களது செல்வங்களையெல்லாம் ஒழித்து மீன்பிடித்தல் முதலிய இழிதொழில்களையும் செய்யவைத்தேன், அவர்களதாசாரங்களையும் அழித்தேன், சிறையிலும் அடைத்தனன், எமதுகுலத்தினர்களது முறைமையிலொன்று மாறாது நடத்தினேன்.—எ-று. (ககரு)

நெடிய மான்மக னுறங்குநா ளாணையை நீங்கித்
தொடுபெ ருங்கட லுலகெலாங் கொள்ளினுஞ் சுரரை
விடுவ னல்லன்யான் வீடருஞ் சிறையினை விண்மே
லுடைய வண்டத்தி னுச்சியி னொருதலை யுய்ப்பேன்.

(இ-ள்.) நெடியோனாகிய திருமாலினது குமாரனாகிய பிரமன் நித்திரைசெய்கின்ற அவனிராத்திரியில் அத்துமீறித் தோண்டப்பட்ட கடல்உலகமுழுமையிலும் மூடிக்கொண்டாலும் யான் தேவர்களைவிடேன்; இந்த அழியாதசிறையை அந்தச்சமயத்தில் பிரளயமில்லாதிருக்கிற வானத்தின்மீதுள்ள வேறொரு அண்டத்தின் உச்சியிலொருவிடத்தில் வைப்பேன்.—எ-று. (ககசு)

தப்பல் செய்திடு மகபதி முதலினோர் தமையு
மிப்பதி திக்கணே கொணர்ந்தனன் சிறைசெய விருந்தேன்
கைப்பு குஞ்சிறை விடுவனோ விடுகிலன் கண்டா
யொப்ப ருந்திறற் சூரனென் றொருபெய ருடையேன்.

(இ-ள்.) ஒப்பற்ற வெற்றியினையுடைய சூரன் என்னும் ஒருபெயரினைக்கொண்டுள்ள நான் அகப்படாமல் தப்பித்துக்கொண்ட இந்திரன்முதலானவர்களையும் தேடிப்பிடித்துக்கொண்டுவந்து இந்நகரத்தில் சிறையிடவேண்டுமென்று எண்ணி இருந்தேன்; அப்படிஇருக்க அகப்பட்டிருக்கிற இந்தச்சிறையைவிடுவேனா?—எ-று. (ககஎ)

மின்னு வச்சிரப் படிவமும் வேறுபல் வரமு
முன்னொர் ஞான்றுதன் றாதையெற் களித்திடு முறையைப்
பின்னர் யாவரே பெயர்ப்பவர் பெருஞ்சம ரியற்றி
யென்னை யாற்றலால் வென்றிடு நீர்மையோ ரெவரே.

(இ-ள்.) ஒளிவீசாநின்ற வச்சிரசரீரமும் இன்னம் அநேகவரங்களும் முன்னொருகாலத்தில் நீசொல்லிய குமரனது தந்தையாகிய சிவபெருமான் எனக்களித்துள்ள அரசுமுறையையும் வேறேயார்அழிப்பவர்கள்? அதுவன்றியும் பெரும்போர்புரிந்து என்னை வல்லமையால் வெல்லத்தக்க தன்மையினை யுடையவர்கள் யார்?—எ-று. (கக அ)

தான மாமுகத் தாரக வெம்பியைத் தடிந்த
மான வேற்படை யவன்மிசை வருவது வலித்தேன்
பானல் வாய்ச்சிறு சேயொடு நீயமர் பயிற
லூன மேயெனத் தடுத்தன ராதலா லொழிந்தேன்.

(இ-ள்.) மதமொழுகுகின்ற யானையின்முகம்போன்ற முகத்தினையுடைய தம்பியாகிய தாரகனைக்கொன்ற வலியவேற்படையினையுடைய சண்முகன்மீது போருக்குவருவதை உத்தேசித்தேன், (இங்குள்ளவர் என்னை) நீ கருநெய்தல்மலர்போன்றவாயினையுடையசிறுவனுடனே போர்புரிவதுதகுதியல்ல என்றார்கள்; அதனால்வராமலிருந்தேன்.

தூங்கு கையுடைத் தாரக விளவலைத் தொல்லை
யோங்க றன்னொடு மட்டது நென்னலே யுணர்ந்தேன்
பாங்கி னோரையப் பாலன்மே லுந்தியென் பழியும்
வாங்கு கின்றன னாளையே காண்டியான் மன்னோ.

(இ-ள்.) தொங்குகின்ற கையினையுடைய தாரகாசுரனாகிய தம்பியை கிரவுஞ்சமலையுடனே அழித்தமை யான் நேற்றேயறிந்தேன், தக்கவர்களையச்சண்முகச் சிறுவன் மீது போருக்கனுப்பி என்பழியையும் யான் நாளையத்தினம் வாங்குகின்றேன்.—எ-று.

அரிக ளெண்ணில ரிந்திர ரெண்ணில ரல்லாச்
சுரர்க ளெண்ணில ரண்டங்க டொறுந்தொறு மிருந்தார்
செருவி னாற்றலர் வழுத்தியே போயினர் சிவன்க
ணொருநல் வந்திடு சிறுவனோ வென்னெதிர் நிற்பான்.

(இ-ள்.) அநேகம் நாராயணர்களும், அநேகம் இந்திரர்களும், அளவற்றமற்றையதேவர்களும் அண்டங்கள்தோறும் இருக்கின்றனர்; அவர்கள் யுத்தத்துக்குத் தக்கவர்களல்லாதவர்களாய் என்னை வணங்கினவர்களாகப் போய்விட்டார்கள். அதுநிற்க, சிவபெருமானது கண்களின்வழியாக நேற்றுப்பிறந்தபாலனா என்னெதிரிலே நின்று போர் புரியத்தக்கவன்.—எ-று. (கஉக)

ஓதி யென்பல வமரரை விடுகில னுணர்ச்சி
யேது மில்லதோர் மகவுதன் புன்மொழி யேற்றுப்
பேதை யாதலி னொற்றனாய் வந்தனை பிழைத்துப்
போதி நின்னுயிர் தந்தனன் யானெனப் புகன்றான்.

(இ-ள்.) அநேகவிதங்களாகக்கூறுவதனாலே என்னபிரயோசனம் யான் தேவர்களது சிறையைநீக்கமாட்டேன். நீ அறிவற்றவனாதலால் ஒன்றுமுணராத ஒருகுழந்தையின்பேச்சைக் கேட்டுக்கொண்டு தூதனாகவந்தாய்; உன்னுயிரை அளித்தேன்; நீ உயிருள்ளவனாகவே போகக்கடவை என்று கூறினான்.—எ-று. (கஉஉ)

அகில மாள்பவ னிங்கிவை மொழிதலு மையன்
வெகுளி வெங்கனல் சிந்திட வுளஞ்சுட வெகுண்டு

புகையு மங்கியு முயிர்ப்புற மயிர்புறம் பொடிப்ப
நகையும் வந்திடச் சிவந்திட விழியிவை நவில்வான்.

(இ-ள்.) உலகங்களை யாளுகிற சூரபன்மன் இவ்வாறு கூறுதலும், வீரவாகுதேவர் கோபத்தீ சிதற உள்ளஞ்சுட கோபங்கொண்டு, தீயுங்காற்றுஞ்சுவாசத்தின் வழிவர, ரோமங்கள் பொடியாநிற்ப, சிரிப்புந்தோன்ற, கண்கள்செந்நிறமடையவிருந்து, இவ்வாறு கூறுகின்றனர்.—எ-று. (கஉங)

உய்ப லாவதோர் பரிசினை யுணர்வுறு துழலுங்
கைய கேண்மதி கட்செவி மதியொடு கலந்த
செய்ய வார்சடைப் பரம்பொருட் டிருநுதல் விழிசே
ரையன் மேதக வுணர்ந்திலை பாலனென் றறைந்தாய்.

(இ-ள்.) பிழைக்கத்தக்க மார்க்கத்தையறியாமல் தடுமாறுகிறவீனோய் ! கேட்பாயாக: பாம்பினுடனே சந்திரனுங்கலந்து வாழுகின்ற செந்நிறம்பொருந்திய நீண்ட சடைகளையுடைய சிவபெருமானது நெற்றிக்கண்ணின்வழியாக அவதரித்த சண்முகப் பெருமானது உயர்வினை உணர்ந்தாயில்லை; ஆதலால் நீ அவரைச் சிறுவனென்று கூறினாய்.—எ-று. (கஉச)

மானு டத்தரைத் தேவென்பர் வானகத் தவரை
யேனை முத்தொழி லவரென்ப ரிருவர்தங் களையு
நானி லத்தினிற் பரம்பொரு ளிவரென நவில்வ
ரான சொற்றிற முகமனே சரதமற் றன்றால்.

(இ-ள்.) நான்குவகையாக வகுக்கப்பட்டுள்ள இந்த உலகத்திலே மனிதர்களைத் தேவர்களென்று கூறுவார்கள். தேவர்களை மற்றையமும்மூர்த்திகள் என்பார்கள். பிரமனையும் திருமாலையும்பரம்பொருளென்று சொல்லுவார்கள். அவ்வாறுசொல்லப்படுகிற சொற்கள் உபசாரிகமேயன்றி உண்மையானதல்ல.—எ-று. (கஉரு)

ஆய புல்லிய புகழ்ச்சிபோற் கொள்ளலை யறிவோர்
தேய மாவது யார்க்குமெட் டாதது தெளியிற்
றூய வீடுபே றருளுவ துபநிடத் துணிவாம்
வாய்மை யாவது புகலுவன் கேளென வகுப்பான்.

(இ-ள்.) அவ்வாறு கூறப்படுகிற இழிந்த புகழ்ச்சியைப்போல கருதாதே ! ஞானிகளாற்றியானிக்கப்படுவதை, யாராலும் எட்டப்படாததை, உணர்ந்தால்பரிசுத்தமான மோக்ஷஇன்பத்தை அளிப்பதை, உபநிடதத்தின்பொருளாகிய உண்மையாக உள்ளதை நான்சொல்லுகின்றேன்; நீ கேள் என்றுகூறி வீரவாகுதேவர் சொல்லுகின்றனர்.—எ-று.

மண்ண ளந்திடு மாயனும் வனசமே லவனு
மெண்ண ரும்பக றேடியுங் காண்கிலா திருந்த
பண்ண வன்னுதல் விழியிடைப் பாஞ்சுட ருருவா
யுண்ணி றைந்தபே ரருளினான் மதலையா யுதித்தான்.

(இ-ள்.) பூமியையளந்த திருமாலும், பிரமதேவனும் அளவற்ற நாள்கள்வரைக்குந் தேடியும் காணப்படாதிருந்த சிவபெருமான்தனது நெற்றிக்கண்ணினிடத்தில் பரஞ்சுடராகிய சண்முகத்திருவுருவமாக உள்ளேபொருந்திய பெரிய அருளின்தன்மையால் குழந்தையாக வவதரித்தனர்.—எ-று. (கஉஎ)

முன்ன வர்க்குமுன் னாகுவோர் தமக்குமுற் பட்டுத்
தன்னை நேரிலா ஈசனுந் தனிப்பெயர் தாங்கி

யின்னு யிர்க்குயி ராயரு வுருவமா யெவர்க்கு
மன்னை தாதையா யிருந்திடும் பரமனே யவன்காண்.

(இ-ள்.) முதல்வர்களுக்கெல்லாம் முதல்வராகின்றவர்களுக்கும்முற்பட்டு முதல்வனாய், சமானரகிதனாய், ஈசனாகிய ஒப்பற்ற திருநாமத்தைக்கொண்டு இனியவுயிர்களுக்குயிராய், அருவமாய், உருவமாய், யாவர்களுக்கும் அன்னைதந்தையாயிருக்கின்ற சிவபெருமானே அந்த சண்முகக்கடவுள்.—எ-று. (கஉஅ)

ஈச னேயவ னாடலான் மதலையா யினன்கா
ணாசி லாவவ னறுமுகத் துண்மையா லறிநீ
பேசி லாங்கவன் பரனொடு பேதக னல்லன்
றேசு லாவகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல்.

(இ-ள்.) சிவபெருமானே திருவிளையாட்டினால் தானேதனக்கு மகனாயினார். அதனை அவரது ஆறுதிருமுகங்களின் உண்மையினாலேயே நீ அறிந்துகொள். ஒளிபொருந்திய பெரிய மணியினிடத்தினின்றும் கிரணங்களுண்டாந் தன்மையைப்போல சொல்லுமிடத்தில் குமரக்கடவுள் சிவபெருமானினின்றும் வேறானவரல்லர்.—எ-று.(கஉக)

பூத மைந்தினுட் கீழ்நிலைத் தாகிய புவியு
ளோது கின்றபல் லண்டத்தி னோராயிரத் தெட்டுங்
கோதி லாக்கமும் படைகளு முனக்குமுன் கொடுத்த
வாதி யீசனே யவனெனின் மாற்றுவ தரிதோ.

(இ-ள்.) ஐம்பூதங்களுக்குள் கடைசியதாகியபிருதிவிபூதத்தில் உள்ளதென்று சொல்லப்படுகிற பலவண்டங்களுள் ஆயிரத்தெட்டண்டங்களையும், குற்றமற்றசெல்வங்களையும், படைகளையும் முற்காலத்தில் உனக்களித்த ஆதிமுதல்வனாகிய அச்சிவபெருமானே அக்குமரக்கடவுளானால், இவைகளையெல்லாம் இல்லாதுசெய்தற்கு அருமையோ?—எ-று. (கருO)

ஏத மில்புவி யண்டங்கள் பெற்றன மென்றே
பேதை யுன்னினை சிறிதவன் றன்னருள் பெறுவோர்
பூத மைந்தினு மேனைய திறத்தினும் புறத்து
மீது மாமண்ட மெவற்றிற்கும் வேத்தியல் புரிவார்.

(இ-ள்.) குற்றமற்ற பிருதிவி அண்டங்களை அரசாளப் பெற்றோமென்று அறிவற்ற நீ நினைத்தனை! அக்குமரக்கடவுளின் திருவருளில் சற்றடைபவர்கள் பஞ்சபூதங்களிலும், மற்றையவிதங்களிலும், வெளியிலும், மேலுமாகிய சகல அண்டங்களையும் ஆளுவர்.—எ-று. (கருக)

ஆதி யாகிய குடிலையு மைவகைப் பொறியும்
வேதம் யாவையுந் தந்திரப் பன்மையும் வேறா
வோத நின்றிடு கலைகளு மவ்வவற் றுணர்வாம்
போதம் யாவையுங் குமரவேள் பொருவிலா வுருவம்.

(இ-ள்.) யாவற்றிற்கும் முதலாகிய பிரணவமும், ஐம்பொறிகளும், சகலவேதங்களும், எல்லாவாகமங்களும், இதுவன்றிச்சொல்லப்படுகிற கலைஞானங்களும், அவற்றில்சொல்லப்படுகின்ற ஞானங்களும், மற்றவைகளுமாகியவெல்லாம் குமரக்கடவுளின் ஒப்பற்ற திருவுருவமாம்.—எ-று. (கருஉ)

எங்க ணும்பணி வதனங்க ளெங்கணும் விழிக
ளெங்க ணுந்திருக் கேள்விக ளெங்கணுங் கரங்க

ளெங்க ணுந்திருக் கழல்டி யெங்கணும் வடிவ
மெங்க ணுஞ்செறிந் தருள்செயு மறுமுகத் திறைக்கே.

(இ-ள்.) எவ்விடங்களிலும் நின்று அடியவர்களுக்குத் திருவருள்புரிகின்ற குமரக்கடவுளுக்கு, எவ்விடங்களிலும் யாவர்களாலும் வணங்கப்படுமுகங்கள்; எவ்விடங்களிலும் நேத்திரங்கள்; எவ்விடங்களிலும்திருச்செவிகள்; எவ்விடங்களிலும் திருக்கரங்கள்; எவ்விடங்களிலும் அழகிய வீரகண்டையணிந்த பாதங்கள் எவ்விடங்களிலும் திருவுருவங்கள்.—எ-று. (கரு௩)

தாம ரைக்கணுன் முதலிய பண்ணவர் தமக்கு
மேமு றப்படு மறைக்கெலா மாதிபெற் றியலு
மோமெ னப்படுங் குடிலையே யொப்பிலா முருகன்
மாமு கத்துளொன் றூமவன் றன்மையார் வகுப்பார்.

(இ-ள்.) பிரமன்முதலிய தேவர்களுக்கும், இன்பத்தைத்தருகின்றவேதங்களுக்கும், மற்றையவைகளுக்கெல்லாம் முதன்மைபெற்று விளங்குகின்ற ஓம் என்று சொல்லப்படுகின்ற பிரணவமே ஒப்பற்ற முருகக்கடவுளின் அழகிய முகங்களிலொன்றும். அப்படிப்பட்ட அவரது தன்மையை யார் எடுத்துக்கூறத்தக்கவர்.—எ-று. (கருச)

முக்கண் மூர்த்தியு மாங்கவன் முண்டகா சனனுஞ்
சக்க ரப்படை யண்ணலு மாங்கவன் றனே
திக்குப் பாலருங் கதிர்களு முனிவருஞ் சிறப்பின்
மிக்க தேவரு மாங்கவன் யாவர்க்கு மேலோன்.

(இ-ள்.) மூன்றுகண்களையுடைய சிவபெருமானும் அவரே. பதுமாசனத்தனாகிய பிரமனும், சக்கராயுதத்தையுடைய திருமாலும் அவரே. திக்குப்பாலகர்களும், சந்திரசூரியர்களும், முனிவர்களாயுள்ளவர்களும், மிகுந்தசிறப்பினையுடைய தேவர்களும் அவரே. அவர்தாம் யாவரினும் சிறந்தவர்.—எ-று. (கருரு)

ஈட்டு மன்னுயி ரெவற்றிற்கு மிருவினைப் பயனைக்
கூட்டு வானவ னுங்கவை துலையெனக் கூடின்
வேட்ட மேனிலைக் கதிபுரி வானவன் மேலாய்க்
காட்டு வான்முதற் றிறமெலா மாங்கவன் கண்டாய்.

(இ-ள்.) இருவினைகளைச் சேகரிக்கின்ற நித்தியமான உயிர்களுக்கெல்லாம் இருவினைகளின் பயனாகிய நன்மைதீமைகளைக் கொடுக்கின்றவரும் அவரே. இருவினை யொப்புவருமாயின், விரும்பிய உன்னதபதவியாகிய மோக்ஷத்தையளிப்பவரும் அவரே. உயர்வாகச்சொல்லப்படுகிற ஆகாயமுதலியயாவும் அவரேயாம்.—எ-று. (கருசு)

சிறுவன் போலுறுங் குரவனே போலுறுந் திணையிற்
குறியன் போலுறு நெடியவ னாகியுங் குறுகு
நெறியி னின்னணம் வேறுபல் லுருக்கொடு நிலவு
மறிவர் நாடருங் கந்தவே ளாடலா ரறிவார்.

(இ-ள்.) சிறுவனைப்போலுமிருப்பர்; ஆசாரியனைப்போலுமிருப்பர்; தினையைக் காட்டிலும் சிறியவடிவமுடையவரைப்போலுமிருப்பர்; உயர்ந்தவராகவும் இருப்பர்; முறைப்படி இவ்வண்ணமாக பலவேறுஉருவங்களைக்கொண்டுவிளங்குவர். ஞானிகளால் உணர்தற்கரிய குமரக்கடவுளின் திருவிளையாடல்களை எவர்கள் அறிவார்கள்.—எ-று.

சிவன தாடலின் வடிவமா யுற்றிடுஞ் செவ்வே
ளவன தாணையி னன்றியே பெயர்கிலா தணுவு

மெவர வன்றனி யாற்றலைக் கடந்தவ ரிவணீ
தவம யங்கினை யவன்றனி மாயையிற் சார்வாய்.

(இ-ள்.) சிவபெருமானது திருவிளையாட்டின் உருவமாக எழுந்தருளியிருப்ப வர் குமரக்கடவுள். அவருடைய கட்டளையில்லாமல் அணுவும் அசையாது. அவரது ஒப் பற்ற வீரத்தினின்றும் ஜயத்துடன் நீங்கினவர் எவர்? இவ்விடத்தில் நீயும் அவரது ஒப்ப ற்ற மாயையிலகப்பட்டவனாய் மிகவும் மயங்கினாய்.—எ-று. (கருஅ)

எல்லை யில்லதோர் பொருளெலா மாகுறு மியாவு
மல்ல னாகியு மிருந்திடு மருவமு மாகும்
பல்வ கைப்படு முருக்கொளும் புதியரிற் பயிலுந்
தொல்லை யாதியா மநாதியு மாகியே தோன்றும்.

(இ-ள்.) அளவற்றனவாகிய எல்லாப்பொருள்களாகவுமிருப்பார். எல்லாவஸ் துக்களாகாதவராயுமிருப்பார். அருவமாகவுமிருப்பார். பலவகைப்பட்டவுருவங்களையுங் கொள்ளுவார். புதியவரைப்போலவுங் காணப்படுவார். பழயஆதிப்பொருளாகவுமிருப் பார். ஆதிப்பொருளுக்கும் அப்பாற்பட்ட அநாதிப்பொருளாகவும் காணப்படுவார்.

வாரி வீழ்தரும் புன்னுனித் துள்ளிகண் மான
நேரி லாதமர் குமரவே ணெடியபே ருருவி
னோரு ரோமத்தி னுலப்பிலா வண்டங்க ளுதிக்கு
மார வன்றிரு மேனியின் பெருமையை யறிவார்.

(இ-ள்.) புல்லின்நுனிகளில் வீழ்ந்த மழைத்துளிகளைப்போல ஒப்பற்றவராயி ருக்கின்ற பெரியகுமரக்கடவுளினது திருமேனியிலுள்ள ஒருரோமத்தினின்றும் அள வற்ற அண்டங்கள் பிறக்கும். ஆதலால் அவரது திருமேனியின் பெருமையையுணர்ந்த வர் யார்.?—எ-று. (கசo)

தொலைவி லாவுயிர்த் தொகுதியுந் தொல்லையம் பூதத்
தலகி லண்டமு மேனவு மாதியக் குமர
னிலைகொண் மேனியி னிவர்தரு முரோமத்தி னின்றே
யுலைவை யின்றிமுன் னுதித்திடு மிறுதிநா ளொடுங்கும்.

(இ-ள்.)நித்தியமான வுயிர்க்கூட்டங்களும்,பழமையாகிய பஞ்சமகாபூதங்களும், அவைகளிலுண்டான அளவற்ற அண்டங்களும், மற்றவைகளும் ஆதிமுதல்வனாகிய கும ரக்கடவுளினது அழிவற்ற திருமேனியில் காணப்படுகின்ற உரோமங்களினின்றும் சிரு ஷ்டிகடோறும் கெடுதலின்றி முன்னேதோன்றும். முடிவுகாலத்தில் அவைகளெல்லாம் அவ்வுரோமங்களிலேயே ஒடுங்கும்.—எ-று. (கசக)

ஆவ தாகிய வடிவத்தி னகிலமுஞ் செறிந்து
மேவு மந்நிலை யணையனேயல்லது வேறிங்
கேவர் கண்டன ரவ்வுரு வியற்கையை யெங்கோன்
றேவர் யாவர்க்குக் காட்டிடக் கண்டனர் சிறிது.

(இ-ள்.) அப்படிப்பட்ட திருவுருவத்தில் எல்லாம்நெருங்கிப் பொருந்தியிருக் கும். அவ்வாறுநெருங்கியிருத்தலை அக்குமரக்கடவுளேயன்றி முற்றிலும் கண்டவர்யார்? அவ்வெம்பெருமான் தனது அந்தத்திருவுருவத்தின் தன்மையைத் தேவர்களுக்கெல் லாம் காட்டியருளுதலும் அவர்கள் அந்நாளில் சிறிதுகண்டார்கள்.—எ-று. (கசஉ)

தண்ட லில்லதோ ரொன்றொரு மயிர்நுனித் தலையி
னண்ட மெண்ணில கோடிகள் கோவைபட் டசையப்

பண்டு மேருவிற் கந்தவேள் கொண்டதோர் படிவங்
கண்டி லாய்கொலாங் கணிப்பிலாப் பவம்புரி கடியோய்.

(இ-ள்.) அளவற்ற பாவங்களைச்செய்த கொடியோனே! கெடுதலற்ற ஒருமயிரின் நுனியிலே அளவற்ற அண்டங்கள் கோவையாக அசைய முன்காலத்தில் மேருமலையிலே குமரக்கடவுள் கொண்டவிசுவரூபத்தை நீகாணவில்லையோ?.—எ-று. (௧௪௩)

அன்று கந்தவே ளமைந்ததோர் பெருவடி வதனு
ளொன்று ரோமத்தி னிருந்தகற் காற்றிடா துனதாய்த்
துன்று மாயிரத் தெட்டெனு மண்டமாந் தொகையு
மின்று நீயது தெரிகிலை சிறுவனென் றிசைத்தாய்.

(இ-ள்.) அக்காலத்தில் கந்தவேளாகிய குமரக்கடவுள் கொண்டருளிய விசுவரூபத்தில் உண்டான ஒரு ரோமத்தில் பொருந்தி இருந்தவைகளுக்குக்காணுது உன்னதாக நெருங்கி இருக்கிற ஆயிரத்தெட்டென்னு மண்ட கூட்டங்களும். அதனை நீ உணர்ந்தாயில்லை யாதலா லவனைச் சிறுவனென்று கூறினாய்.—எ-று. (௧௪௪)

அளப்ப ருங்குணத் தாதியா மெம்பிரா னமரர்
தளைப்ப டுஞ்சிறை மாற்றவுஞ் சதுர்முகன் முதலோர்
கொளைப்ப டுந்துய ரகற்றவுங் கொடியரை யறுத்து
வளைப்ப டும்பரி சுலகெலாம் போற்றவும் வந்தான்.

(இ-ள்.) அளவற்ற ஆச்சரிய குணங்களையுடைய எம்பெருமானாகிய குமரக்கடவுள், தேவர்களது விலங்கோடுகூடிய சிறையையொழிக்கவும், பிரமன் முதலியவர்களடைந்துள்ள துன்பங்களை ஒழிக்கவும், துட்டர்களைச் சங்கரித்து உலகங்கண் முழுவதையும் வளப்பமடையும்படியுஞ்செய்து காத்தற்பொருட்டே எழுந்தருளி இருக்கின்றனர்.

வாழி யானநின் னாயுளும் வன்மையும் வரமுங்
கேழில் சுற்றமும் படைகளும் வான்றொடக் கிளர்ந்து
பூழி யாலுயர் மால்வரைச் சூழலிற் புகுந்த
வூழி மாருதம் போலடு மெம்பிரா னொருவேல்.

(இ-ள்.) எம்பெருமானது ஒப்பற்ற வேலாயுதம், ஆகாயத்தை அளாவவளர்ந்து விளங்குகிறபுழுதியாலுயர்ந்த பெரியமலையினிடத்திற்பிரளயவாயுபிரவேசித்தாற்போல, வாழ்தலையுடைய நினது ஆயுளையும், வன்மையையும், வரங்களையும், ஒப்பில்லாத சுற்றத்தினர்களையும், சேனைகளையும் (விரைவில்) அழித்துவிடும்.—எ-று. (௧௪௬)

ஆகை யாலிவை யுணர்ந்திலை யிணையிலா தமர்ந்த
வேக நாயக முதல்வனைப் பாலனென் றிகழ்ந்தாய்
சேகு லாவிய மனமுடைக் கற்பிலாச் சிறியோய்
போக போகயா மிவ்வொரு தவற்றையும் பொறுத்தாம்.

(இ-ள்.) வைரம்பொருந்திய மனத்தினையும், படிப்பின்மையையும் உடைய சிறியவனே நீ ஆதலால், இவைகளை உணர்ந்தாயில்லை. ஒப்பற்றவராக எழுந்தருளி இருக்கின்ற ஏகநாதராகிய குமரக்கடவுளை பாலன் என்றுகூறி இகழ்ந்தனை போனாலும்,போகட்டுமென்று நாம் இந்த ஒருகுற்றத்தைமாத்திரம் பொறுத்தோம்.—எ-று. (௧௪௭)

நொய்ய சொற்களா லெந்தையை யிகழ்ந்தனை நொடிப்பின்
வெய்ய நாத்துமித் துன்னுயிர் வாங்குவம் விடுத்த
வைய னாணையன் றுதலி னளித்தன மதனு
லுய்தி யிப்பகல் வேற்படைக் குண்டியா யுறைவோய்.

(இ-ள்.) எம்பெருமானது வேலாயுதத்திற்கு உணவாக இருப்பவனே! நீ இழிந்தசொற்களால் குமரக்கடவுளையிகழ்ந்தனை. விரைவாகவுனதுகொடியநாவினை அறுத்து உன்னுயிரையும் வாங்கிவிடுவோம். எம்மையனுப்பிய இறைவனதுகட்டளையின்மையால் உன்னுயிரையளித்தோம் இதனால் இன்றையதினமாத்திரம் உயிரோடிரு.—எ-று. ()

உறுதி யின்னமொன் றுரைக்குவ நீயுமுன் கிளையு
மிறுதி யின்றியே யெஞ்சுதல் வேண்டுமே லிமையோர்.
சிறைவி டுக்குதி யிகலினைத் தவிருதி செவ்வே
ளறைக ழற்றுணை யரணமென் றுன்னியே யமர்தி.

(இ-ள்.) இன்னமோருறுதியைச்சொல்லுகின்றோம், நீயும் நினது சுற்றத்தினர்களும் அழியாமலிருக்கவேண்டுமேயானால், தேவர்களைச்சிறையினின்றும் விட்டுவிடு; பகையையும் தவிர்வாய்; பின்னர் வீரகண்டைசத்திக்கின்ற திருவடிகளையுடைய குமரக்கடவுளுடைய சரணத்துக்கே அடைக்கலம் என்றுநினைத்துக்கொண்டுஇருக்கக்கடவை.

வேறு.

என்றிவை பலப்பல விகப்பில்பெரு மாயைக்
குன்றெறி படைக்குரிசில் கொள்கைய தியம்பப்
புன்றொழில் படைத்துடைய பூரிய னுணர்ந்தே
கன்றின னுயிர்த்தினைய கட்டுரைசெய் கின்றான்.

(இ-ள்.) என்றிவ்வண்ணம் அநேகமாக நீங்குதலில்லாதபெரிய மாயையினையுடைய கிரவுஞ்சமலையைத் தொளைத்த வேலாயுதத்தினையுடைய குமரக்கடவுளின் தன்மைகளை எடுத்துக்கூறுதலும், இழிதொழில்களைப்பழகியுள்ள அசுரனாகிய இழிந்தவன் அவைகளையெல்லாங்கேட்டறிந்து கோபங்கொண்டு நெடுமூச்சு விட்டவனாய் இவைகளைக் கூறினான்.—எ-று. (கூ0)

கூரெயி றெழாதகுழ விச்சிறுவ னுய்த்த
சாரென நினைந்துனது தன்னுயிர் விடுத்தேன்
பேரலை யவன்பெருமை பின்னுமொழி கின்றாய்
வீரமு முரைக்குதியென் வெய்யசின முன்னாய்.

(இ-ள்.) கூரிய பற்களின்ன முளையாத இளஞ்சிறுவனாலே அனுப்பப்பட்டதூதெனநினைத்து உன்னுயிரை வாங்காமல் விட்டனன்; அவ்வாறு நான்கொல்லாதிருந்தும்போகின்றாயில்லை; இன்னமுமவனதுபெருமைகளையே கூறுகின்றனை. (இத்துடன்) வீரவசனங்களையுங்கூறுகின்றனை, எனக்குவருகிற கொடுங்கோபத்தை எண்ணிப்பார்க்கின்றிலை.—எ-று. (கூக)

கொஞ்சுமொழி கொண்டகுழ விச்சிறுவன் மேலா
யெஞ்சலில தோர்முதல்வ னேயெனினு மாக
வஞ்சிடுவ னோசிறிது மண்டநிலை தோறும்
விஞ்சியமர் பண்ணவர்கள் யாவரையும் வென்றேன்.

(இ-ள்.) கொஞ்சுகின்ற மழலைச்சொல்லினையுடைய அந்த முருகன் உயர்ந்த கெடாதகடவுளாக இருந்தாலும் இருக்கட்டும்; ஒவ்வொரு அண்டங்களிலும் மிகுதியாக வாழ்கின்ற எல்லாத்தேவர்களையும் வென்றயான் (அவனுக்கு) பயப்படுவேனோ? .—எ-று.

சேண்புரம தாகியமர் தேவர்சிறை தன்னை
வீண்படுக ளுவினும் விடுக்குநினை வில்லே

னேண்பல பகர்ந்தனை யெனக்கெதி ரிருந்தே
காண்பன தெலாமொரு கணத்திலினி யென்றான்.

(இ-ள்.) ஆகாய உலகத்தை இடமாகக்கொண்டு வாழுகின்ற தேவர்களது சிறைகளை உபயோகமற்ற சொப்பனத்திலும்கூட விடும்படி நினையேன்; நீ என்னெதிரிலிருந்து பல இறுமாப்பான வசனங்களைச்சொல்லினாய்: ஒரு கணப்பொழுதுக்குள்ளே அவைகளனைத்தையும் பார்க்கிறேன்.—எ-று. (கடுரு)

கொற்றமிகு சூரனிவை கூறியய னின்ற
வற்றமறு மானவரு ளாயிரரை நோக்கி
யொற்றுமைசெய் தோனுயி ரொறுத்தல்பழி வல்லே
பற்றியிவ னைச்சிறை படுத்திடுதி ரென்றான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய சூரபன்மன் இவ்வண்ணங்கூறி, பக்கத்திலே நிற்கிற அளவற்ற அசுரர்களுள் ஆயிரம்பேர்களைப்பார்த்து தூதுத்தொழில் புரிந்த இவனைக் கொல்லுதல் பழியாகும். (அதனால்) இவனைவிரைவாகப்பிடித்துச் சிறையிலிடுங்கள் என்று கூறினான்.—எ-று. (கடுச)

என்னலுமவ் வாயிரரு மேற்றெரி விழித்துத்
துன்னுகன லைப்புகைசு லாவுவது மானப்
பொன்னின்மிளிர் பீடிகை யமர்ந்தபுகழ் வீரன்
றன்னைவளை குற்றனர் தருக்கினொடு பற்ற.

(இ-ள்.) சூரபன்மன் இவ்வாறு கூறிய உடனே, அந்த ஆயிரம் வீரர்களும் எதிர்த்து கண்களில் தீப்பறக்கப்பார்த்து, நெருங்கிய அக்கினியைப் புகை சூழ்ந்தாற்போல் பொன்னினாற் செய்யப்பட்டு விளங்குகின்ற பீடத்தின்மீது இருக்கின்ற புகழினையுடைய வீரவாகுதேவரைச் செருக்குடனே பிடிக்கும்பொருட்டுச் சூழ்ந்துகொண்டார்கள்.

மிடற்றகுவர் சூழ்வரலும் வீரனெழுந் தன்னோர்
முடிச்சிகை யொராயிரமு மொய்ம்பினொரு கையாற்
பிடித்தவுணர் மன்னனமர் பேரவை நிலத்தி
னடித்தன னொடிப்பிலவ ராவிமுழு துண்டான்.

(இ-ள்.) வல்லவர்களான அவ்வாயிரம் பேர்களும் தன்னைப்பிடிக்கும் பொருட்டுவந்து சூழ்தலும், வீரவாகுதேவர் இருந்த ஆசனத்தைவிட்டெழுந்து பலத்துடன் ஒரு கையினால் அவர்களது தலையிலுள்ள ரோமங்களைப்பிடித்து அசுரராஜனாகிய சூரபன்மன் இருக்கிற பெரியசபையிலுள்ள தரையிலடித்து விரைவில் அவர்களது உயிரையழித்தனர்.—எ-று. (கடுசு)

மார்புடைய மொய்ம்பொசிய வார்குருதி சோர
வோர்புடையின் யாவரையு மொல்லைதனி நட்டே
சூர்புடையின் முன்னரனி துன்னும்வகை வீசிச்
சீர்புடைய நம்பியிவை செப்பல்புரி கின்றான்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய வீரவாகுதேவர், அவர்களதுமார்புகளொடியவும், தோள்கள் நசுங்கவும், இரத்தமொழுகவும், ஒருபக்கமாக அவர்களையெல்லாம் அடித்துக் கொன்று, சூரபன்மனது எதிரிலே அவைகள் விரைவாகச்சென்றுவிழும்படியாக எறிந்து, அச்சூரபன்மனைப்பார்த்து இவ்வாறு சொல்லுகின்றனர்.—எ-று. (கடுஎ)

எந்தைநெடு வேலுனை யினித்தடித நிண்ண
மந்தமுறு முன்னமுன தைம்புலனும் வெஃக

வந்தபல துப்புரவும் வல்லைபெரி தார்ந்தே
புந்திதெளி வாயமர்தி பேர்ந்திடுவ னென்றான்.

(இ-ள்.) இனி எம்பெருமானது நெடியவேலாயுதம் உன்னைக்கொல்லுவது நிச்சயம்; நீ சாதற்குமுன்னே உன்னுடைய ஐம்புலங்களும் விரும்பும்படி வருகின்ற பல அநுபோகங்களையும் மிகவும் விரைவாக அநுபவித்துத்தெளிந்த புத்தியுடனே இரு: வருகின்றேன் என்று கூறினர்.—எ-று. (கஞ௬அ)

சீயவிற லண்ணலிவை செப்பியகல் காலை
யாயவ னிருந்திடு மரித்தவிசு தானு
மீயுறவெ ழுந்துவிசும் பிற்றலையி னேகி
மாயையென வொல்லையின் மறைந்துபடர்ந் தன்றே.

(இ-ள்.) சிங்கம்போன்ற சாமர்த்தியமுள்ள வீரவாகுதேவர் இவ்வாறுகூறிச் செல்லுகின்ற சமயத்தில், அவரிருந்த சிங்கவாதனமும் மேலேகிளம்பி ஆகாயத்தினிடத் திற்சென்று மாயையைப்போல விரைவாக மறைந்து சென்றது.—எ-று. (கஞ௬௯)

அவைபுகுபடலமுற்றிற்று.
ஆக திருவிருத்தம் – ௬௯௯.

---

# சதமுகன்வதைப்படலம்.

ஒண்ணில வெயிற்றினரொ ராயிரரை யட்டே
யெண்ணலன வைக்கள மிகந்துபடர் காலைக்
கண்ணினழல் காலும்வகை கண்டுபுடை யாக
நண்ணிசத மாமுகனை நோக்கிநவில் கின்றான்.

(இ-ள்.) ஒள்ளிய நிலாவைப்போன்ற கோரைப்பற்களையுடைய ஆயிரமசுரர்களைக்கொன்று சற்றுமதிக்காமல் வீரவாகுதேவர் சபையினிடத்தைவிட்டுச் செல்லுகிற சமயத்தில், (அதனை) கண்களில் தீப்பொறி பறக்கும்படி சூரபன்மன் பார்த்து தனது அருகாகநிற்கிற ஆயிரமுகங்களையுடையவனைப்பார்த்து இவ்வாறு கூறினன்.—எ-று. ()

ஆறுமுக னேயிவ னுயிரரை யிங்ஙன்
கோறல்புரிந் தானெனது கொற்றமுழு தெள்ளி
வேறலுடை யோர்களென மேன்மைபல செப்பிச்
சேரல்புரி வான்றவிசு மும்பரிடை செல்ல.

(இ-ள்.) ஆறுமுகனதாளாகிய இவன், இவ்விடத்தில் ஆயிரம்பேர்களைக்கொன்று, எனது வீரமுதலியவற்றை முற்றிலுமிகழ்ந்து, வெற்றியினையுடையவர்களைப்போல பல உயர்மொழிகளைக்கூறி, தானிருந்த ஆசனமும் ஆகாயவழியாகச் செல்லத் தானும் போகாநின்றான்.—எ-று. (௨)

ஒட்டியநம் வீரரை யொறுத்தகல்வ னேனும்
விட்டதொரு தூதனொடு வெஞ்சமரி யற்றி
யட்டல்பழி யாகுமவ னாற்றலை யடக்கிக்
கட்டிவிரை வால்வருக வெனக்கழற லோடும்.

(இ-ள்.) எதிர்த்த நமது வீரர்களைக்கொன்று செல்லுகின்றானாயினும் ஒருவனனுப்பிய தூதனுடனே கொடும்போர்புரிந்து அவனைக்கொல்லுதல்பழியாகும்; ஆதலால்,

நீ அவனுடைய வல்லபத்தைக் குறைத்துப் பிடித்துக்கட்டிச் சீக்கிரம் கொண்டுவருக என்று கூறுதலும்.—எ-று. (ரு)

சூற்குல முகிற்பொருவு சூரனடி தாழா
வேற்கும்விடை பெற்றிசைவி னேகுதல் புரிந்தா
ஞற்கடலு மேவினு நதுப்பரிய வூழிக்
காற்கனலி னேதொடர் காட்டியது மான.

(இ-ள்.) அச்சதமுகன் கருக்கொண்டுள்ள சிறந்த மேகத்தைப்போல கருநிறம் வாய்ந்த சூரபன்மனது அடிகளை வணங்கி தகுதியான உத்தரவுபெற்றுக்கொண்டு நாற்புறங்களிலுஞ் சூழ்ந்துள்ள கடல்முற்றிலும் வந்தாலும் கெடுத்தற்கு முடியாத ஊழிக்காலத்தில் பிரசண்டவாயுவை பிரளயாக்கினி தொடர்ந்து சென்றாற்போல போயினன்.

ஏகுசத மாமுக னிலக்கமற வீரர்
பாகம்வர வெண்ணில்படை பாணிமிசை பற்றி
வேகமொடு சென்றுதனி வேலன்விடு வீர
வாகுவினை யெய்தியொரு மாற்றமறை கின்றான்.

(இ-ள்.) செல்லுகின்ற சதமுகன் அளவற்ற வீரர்கள் பக்கத்திற் சூழ்ந்துவர அநேகம் ஆயுதங்களைகைகளிற் பிடித்துக்கொண்டு விரைந்துசென்று குமரக்கடவுளனுப்பிய தூதராகிய வீரவாகுதேவரிடஞ்சென்று ஒரு சொல் சொல்லினன்.—எ-று. (சு)

காவல்பல் நீங்கிவரு கள்வவுல குள்ளோ
ரேவரும் வியப்பவரு மெங்களிறை முன்ன
மேவினை யிகழ்ந்துசில வீரருயிர் வௌவிப்
போவதெவ னில்லுனது போர்வலி யழிப்பேன்.

(இ-ள்.) பலகாவல்களையுங் கடந்துவந்த சோரனே எவ்வுலகங்களிலு முள்ளவர்களெல்லாம் புகழுகின்ற எங்களரசனதெதிரில் வந்தாய் அவனையும் இகழ்ந்தனை சில வீரர்கள் உயிரினையும் அபகரித்துக்கொண்டு எங்குபோகின்றாய்? நில் உனது போர்த்திறமையை யழிக்கிறேன்.—எ-று. (எ)

பட்டிமை யுருக்கள்கொடு பாறலரி தாசை
யெட்டுளப ரப்பதனுள் யாண்டகல்வை யேனும்
விட்டிடுவ னோவெனவி ளம்பிவெரி னெய்திக்
கிட்டுதலும் வீரனிது கேட்டென னெதிர்ந்தான்.

(இ-ள்.) கள்ளவடிவங்களைக்கொண்டு போதற்குமுடியாத எட்டுத்திக்குகளினெல்லைக்குள் எங்குப்போவாயானாலும் உன்னை விடுவேனோ என்று கூறிக்கொண்டு பின்னாலே நெருங்கிவருதலும்: இதனை வீரவாகுதேவர் கேட்டுப்போதலைவிட்டு அவனெதிர் முகமாகத்திரும்பினார்.—எ-று. (எ)

வேறு.

கொற்ற வேலுடை யண்ணறன் மொழியினைக் கொண்டில னிகழ்ந்தென்னை
பற்ற வாயிரர் தங்களை விடுத்தலும் படுத்தனன் பெயர்காலை
மற்று மீதொரு வயவனை யுய்த்தனன் மன்னவ னிவனாவி
செற்று மாநக ரந்தனை யழித்தனன் செல்லுவ னினியென்றான்.

(இ-ள்.) அரசனாகிய சூரபன்மன் வெற்றிபொருந்திய வேலாயுதத்தினையுடைய கடவுளின் வசனத்தை ஏற்றுக்கொண்டானில்லை. அவனையுமிகழ்ந்து என்னையும் பிடிக்கும் வண்ணம் ஆயிரம்பேர்களை விடுதலும் அவர்களையெல்லாம் கொன்றுயான் தி

ரும்பி வருகிற சமயத்தில் பின்னும் இந்தப்போர்வீரனை அனுப்பியிருக்கின்றான். ஆதலால் இவனையுங்கொன்று இனி இந்த ஊரையும் அழித்துச் செல்கின்றேன் என்று வீரவாகு தேவர் கூறினார்.—எ-று. (அ)

கருதி யின்னணஞ் சதமுக னெனப்படு காவலன் றனைநோக்கிக்
குருதி வேலுடைப் பண்ணவ னடிமனங் கொண்டுதிண் டிறல்வாகு
பொருத லுன்னியே யீண்டுறை கூவினை பொள்ளெனப் படையோடு
வருதி யாலெனத் தெள்விளி யெடுத்தனன் மறலிக்கு மிறைபோல்வான்.

(இ-ள்.) இவ்வாறு நினைத்து இரத்தந்தோய்ந்த வேலாயுதத்தினையுடைய குமரக்கடவுளின் திருவடிகளை மனதில் தியானித்து வீரவாகுதேவர் சதமுகனென்றழைக்கப்படுகிற அசுரத்தலைவனைப்பார்த்து நீ போர்புரியக் கருதி இங்கே என்னைச் சண்டைக்கழைத்தனை ஆதலால் உனது சேனைகளோடு சீக்கிரம் வருவாயாக என்று எமனுக்கும் எமன் போல்பவராகிய இவர் கூறினார்.—எ-று. (௯)

எல்லை யன்னதிற் சதமுகற் சூழ்தரு மிலக்கரு மெதிரூன்று
வில்லு மிழ்ந்திடு வெஞ்சரந் தொடுத்தனர் வேற்படை விடுக்கின்றார்
கல்லெ னும்படி நேமிக ளுருட்டினர் கப்பணஞ் சிதறுற்றார்
வல்லை முத்தலைப் படையெழு வோச்சினர் மழுக்கொடே யெறிகின்றார்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் சதமுகனைச் சூழ்ந்துவந்த இலக்கம் வீரர்களும் எதிர்த்து நின்று ஒளிபொருந்திய கொடிய அம்புகளைவிட்டார்கள், வேலாயுதத்தினைவிட்டார்கள், கல்லென்று முழங்கும்வண்ணம் சக்கரப்படைகளை விட்டார்கள், கைவேல்களை விட்டார்கள், விரைவாக மூன்றுகவராகவிளங்குகின்ற சூலாயுதங்களை விட்டார்கள் கண்டகோடரிகளால் வெட்டினார்கள்.—எ-று. (௧0)

அணிகள் பட்டவர் விட்டவிப் படைவகை யண்ணன்மேற் புகலோடுந்
துணிகள் பட்டன நெரிந்தன துகளுமாய்ப் போயிற்றான்
மணிகள் பட்டிடு மிருஞ்சிறைக் கலுழர்க்குள் வலியன்மேற் படுநொய்ய
பணிகள் பட்டன போன்றன வேறிலை படியெடுத் துரைத்தற்கே.

(இ-ள்.) வரிசையாக நிற்கும் அவர்களால் விடப்பட்ட இவ்வாயுதக்கூட்டங்கள் வீரவாகுதேவரது திருமேனியில்வந்து படுதலும்; துளிகளாக ஆயின, நெரிந்தன, எரிந்தன, துகளாகவும்போயின, கழுத்திலிரேகைகளையுடைய பெரிய இறகுகளையுடைய கருடர்களுக்குள் தலைவனாகிய வைநதேயன்மீது (போருக்குவந்து) சிறியபாம்புகள் அழிந்த தன்மையினை ஒத்தன (என்று கூறுவதையன்றி) உவமானம் எடுத்துக்கூறுதற்குவேறு ஒன்றும் இல்லை.—எ-று. (௧௧)

இலக்க மாகிமுன் னின்றபே ராண்டகை யிவர்செய வினைநோக்கி
யிலக்க மாய்முழு துலகமுந் துளக்கியே யிராயிரப் பத்தென்னு
மிலக்க மாமுடி கொண்டதோர் சூளிகை யிம்மெனப் பறித்தேந்தி
யிலக்கமாகியே யெதிர்பொரு தானவர் தங்கண்மே லெறிந்திட்டான்.

(இ-ள்.) இலக்ஷியமாக எதிரினின்ற வீரவாகுதேவர் இவர்களது செய்கைகளைப்பார்த்து ஒளிபொருந்தினதாய் எல்லாவுலகங்களையும் விளக்கிக்கொண்டு இருபதினாயிரமென்னும் தொகையைக்கொண்டு நிற்கின்ற சிகரங்களையுடைய ஒரு சூளிகையை விரைவாகப்பிடுங்கி எடுத்து ஓரிலக்கம்பேர்களென்னும் தொகையாகவந்து போர்செய்கின்ற அசுரர்கள்மீது படும்படி எறிந்தனர் —எ-று. (௧௨)

ஏதி லான்விடு சூளிகை சிறகர்பெற் றிறந்துவீழ் மேருப்போன்
மீது சென்றம ரியற்றியே நின்றிடும் வெய்யவர் மிசையெய்தித்
தாது முற்றவுஞ் சாந்துபட் டொருங்குறத் தனுவெலாஞ் சிதைத்திட்டே
யோத நீர்முகி லார்ப்பொடு புவிக்கண்வீழ்ந் துடைந்தன வுதிராகி.

(இ-ள்.) அசுரர்களுக்குப் பகைவராகிய வீரவாகுதேவர் எடுத்தெறிந்த சூளிகையானது மேலேசென்று ஆகாயத்தில் நின்று யுத்தஞ்செய்கின்ற அசுரர்க...றுபட்டு அவர்களது சத்ததாதுக்களும் சுண்ணமாய் உடலெல்லாம் ஏககாலத்திலழியும்படிசெய்து சிறகைப்பெற்றுப் பறந்து மேலேசென்று ஊழ்முடிவினால் இறந்து கீழேவிழுகின்ற மேருமலையைப்போல பிரவாகமான நீரோடுகூடிய மேகங்களினாரவாரத்துடனே பூமியில் விழுந்து தூளாக உடைந்தது.—எ-று. (கரு)

கொடிசெ றிந்திடு சூளிகை தன்னுட னவுணர்தங் குழாங்கொண்ட
முடிசி தைந்தன நாசிநீ டலையெலா முடிந்தன முடிவில்லா
வடிவ மைந்திடு கன்னகூ டத்தொகை மாய்ந்தன நிலைகொள்ளு
மடித கர்ந்தன கொடுங்கையு மாண்டன வொழிந்தவு மழிவுற்ற.

(இ-ள்.) கொடிகள் நெருங்கி இருக்கிற சூளிகையுடனே அசுரர்கூட்டத்தினர் தரித்திருந்த முடிகளுஞ்சிதைந்தன; நாசிகளும் நீண்டதலைகளும் எல்லாமழிந்தன; அழிவில்லாத காதுகளும் மறைவுறுப்புகளும் அழிந்தன; நிற்றற்குரியகால்கள் ஒடிந்தன; முழங்கைகளும் அழிந்தன; மற்றையவைகளுமழிந்தன.—எ-று.

இதில் சூளிகைக்கும் அசுரர்களும் அழிவுபட்ட பொருளினொற்றுமை சமமாதலால் "அழிவுற்ற" என்றார். சூளிகைகளும் சிகரங்களழிந்தன; சாளரங்களையுடைய நீண்டமேற்புறங்களெல்லாமழிந்தன; அழியாத சித்திரங்கள்பொருந்திய முன்னறைகளழிந்தன; உறுதியாகவுள்ள அஸ்திவாரங்களழிந்தன; முன்னிறைப்புகளும் அழிந்தன; என்னும் பொருளமைத்துரைத்துக்கொள்க. (கசா)

இலக்கர் தம்மையுஞ் சூளிகை தன்னுட னிமைப்பொழு தினிலட்டு
நிலக்கண் வீரனின் றிடுதலுஞ் சதமுக னிணைவிழி கொடுநோக்கிக்
கலக்க நண்ணியே தமரினைக் காண்கிலன் கவன்றனன் றெளிவெய்தி
யுலக்கை சூலம்வேல் சக்கரந் தோமர மோச்சுத லுறுகின்றான்.

(இ-ள்.) இலக்கம் அசுரர்களையுஞ் சூளிகையுடனே ஒரு கணப்பொழுதினிலழித்து, பூமியில் வீரவாகுதேவர் நிற்கவும், உடனே சதமுகனென்போன் தனது நயனவரிசைகளால் பார்த்து, கலக்கங்கொண்டு, தன்னுடன்வந்த சுற்றத்தினர்களைக்காணாது வருந்தி, தெளிந்து, உலக்கையையும், சூலத்தையும், சக்கரத்தையும், தோமரத்தையுமெடுத்தெறிந்தனன்.—எ-று. (கரு)

உற்ற காலையி னொண்டிறன் மொய்ம்பினோ னுருகெழு சினஞ்செய்தோர்
பொற்றை நேர்தரு சிகரியைப் பறித்தனன் பொள்ளென வெறிகாலை
மற்றொர் வார்சிலை வணக்கியே வெய்யதீ வாளியா யிரம்பூட்டி
யிற்று வீழ்வக்க யிடைதனி லறுத்தன னெறிதரு கதிர்வேலான்.

(இ-ள்.) சதமுகன் விட்டதோமரமுதலியவைகள் தன்னெதிரில் வருதலை வீரவாகுதேவர்பார்த்து, மிகுந்தகோபத்துடன் மலைபோன்ற ஒரு கோபுரத்தைப்பிடுங்கி விரைவாக எறிந்தசமயத்தில், ஒளிபொருந்திய வேற்படைகளையுடைய அவன் ஒரு பெரிய வில்லைவளைத்து, அதில் கொடிய ஆயிரம் அம்புகளைவைத்துவிட்டு, இடைநடுவிலேயே அக்கோபுரத்தினை உடைத்தனன்.—எ-று. (கசு)

அறுத்து நூறுகோல் பின்னரு மாங்கவ ளுகத்தி னடுவெய்தச்
செறித்த காலையின் வீரவா குப்பெயர்ச் செம்மல்போ யவன்வில்லைப்
பறித்த னன்முறித் தெறிதலுஞ் சதமுகன் பற்றவீ திடையென்னுக்
குறித்தொ ராம்பதிற் றிருகர மோச்சியே குரிசிலைப் பிடித்திட்டான்.

(இ-ள்.) கோபுரத்தை உடைத்தபின்னர், அவ்வீரவாகுதேவரது மார்பிற்படும்படி; நூறுபாணங்களைவிட்டனன். உடனே வீரவாகுதேவர் என்னுந்தலைவர் அவனருகிற்சென்று அவன்வில்லைப்பிடுங்கி முறித்தெறிந்தனர்; அப்பொழுது சதமுகன் இவனைப் பிடித்தற்கிதுதான் சமயமென்று எண்ணி, தனது கைகளில் நூறுகைகளைநீட்டி, வீரவாகுதேவரைப்பிடித்தனன்.—எ-று. (கஎ)

பிடித்த தானவத் தலைவனை யண்ணலோர் பெரும்புயங் கொடுதாக்கிப்
படித்த லைப்படத் தள்ளலும் வீழ்ந்துளான் பதைபதைத் தெழுகாலை
யடித்த லத்தினு லுதைத்தன னசனியா லழுங்குறு மரவம்போற்
றுடிப்ப வேயுரத் தொருகழ லுறுத்தினன் சோரிவாய் தொறுஞ்சோர.

(இ-ள்.) வீரவாகுதேவர் தன்னைப்பிடித்த சதமுகனை ஓர் தோளினாலிடித்து பூமியினிடத்தில் தள்ளுதலும், கீழேவிழுந்த அவன் பதைபதைப்புடனே எழுதற்கு முயலுதலும், பாதங்களாலுதைத்தனர்; பின்னும் இடிபட்ட நாகத்தைப்போல துடிக்கும்படி, மார்பினில் வாய்களின்வழியாக இரத்தமொழுகும்வண்ணம் மிதித்தனர்.-எ-று.

கந்தெ னப்படு மொய்ம்புடை வெய்யசூர் கட்டுரை முறைபோற்றி
வந்தெ திர்த்திடு சதமுகத் தவுணனை மிதித்திடு மறமைந்த
"னந்த கப்பெய ரசுரனை யாற்றல்பெற் றமர்முய லகன்றன்னைத்
தந்தி யைப்பத மொன்றுகொண் டூன்றிய தாதைபோற் றிகழ்கின்றான்.

(இ-ள்.) தூணென்று சொல்லத்தக்க தோள்களையுடைய கொடிய் சூரபன்மனது உறுதிமொழிப்படிவந்து எதிர்த்த சதமுக அசுரனையும் எழுந்திருக்க ஒட்டாமல் மிதிக்கின்ற வீரவாகுதேவர், அந்தகனென்று பெயருள்ள அசுரனையும் வலிபெற்று வந்து பொருதமுயலகனையும், கயமுகாசுரனையும், திருவடிகளால் மிதித்தருளிய தனது தந்தையாகிய சிவபெருமானைப்போல விளங்கினர்.—எ-று. (கக)

வேறு.

மின்னல் வாளெயிற் றவுணன் மார்பகம் விடமொ னும்படி விள்ளவே
தன்னொர் பாத முறுத்தி மற்றொரு தாளி னேக்கொடு தள்ளியே
சென்னி யாவு முருட்டி னுன்றிசை முற்று நின்று பரித்திடுங்
கன்ன மார்மத மால்க ளிற்றினும் வன்மை சான்றிடு கழலினன்.

(இ-ள்.) மின்னலைப்போல ஒளிவீசாநின்ற கோரைப்பற்களையுடைய சதமுகவசுரனது மார்பினிடம் வெடியைப்போல பிளக்கும்படி தனது ஒரு காலினாலுதைத்து மற்றொருகாலினால் கீழேதள்ளி அவனது தலைகளையெல்லாம் உதைத்துருட்டினர்; எட்டுத்திக்குகளிலும் நின்று உலகத்தைத்தாங்குகின்ற தன்மைத்தினையும் மயக்கத்தினையுமுடைய திக்கயங்களைவிட பலசாலியான வீரவாகுதேவர்.—எ-று. (உ0)

நூறு சென்னியு மிடறி யாங்கொரு நொடிவரைப் பின்முன் னவுணனை
யீறு செய்தன னதுமு டித்தபி னெல்லை யில்சின மெய்தியே
யாறு மாமுக வள்ளல் வாய்மை யிகழ்ந்து ளானவை யத்தைமுன்
னீறு செய்துபி னடுவ னிந்நக ரத்தை யென்று நினைந்தனன்.

(இ-ள்.) நூறுதலைகளையும் உடைத்து ஒரு நொடிநேரத்துக்குள் சதமுகாசுரனைக்கொன்றனர்; அவனைக்கொன்றதற்குப்பின்னர் அளவற்றகோபமுள்ளவராய் ஆறுதிருமுகங்களையுடைய எம்பெருமானது உறுதிமொழிகளை இகழ்ந்த சூரபன்மனது சபாமண்டபத்தை முன்னே அழித்து, பின்னரிந்த நகரத்தையும் அழிப்பேன் என்று நினைந்தனர்.—எ-று. (உக)

சதமுகன்வதைப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-சுசுO.

---

# காவலாளர்வதைப்படலம்.

சுடரும் வேற்படைத் தொல்குும ரேசன
தடிகண் முன்னி யருளுட னண்டகை
படிய ளந்திடு பண்ணவ னமெனை
நெடிய பேருருக் கொண்டுநின் றனரோ.

(இ-ள்.) ஒளி வீசுகின்ற வேலாயுதத்தினையுடைய பெரிய குமரக்கடவுளின் திருவடிகளை நினைத்து தியானத்திற்கிடைத்த அவர் திருவருளுடனே வீரவாகுதேவர் பூமியையளந்த திருமாலைப்போல ஒரு பெரிய நெடிய உருவம் கொண்டுநின்றனர்.எ-று

திசைய ளந்தன திண்புயஞ் சென்றுசேண்
மிசை யளந்தன மேதகு நீண்முடி
வசுதை யாவு மளந்தன வார்கழ
லசைவ றுந்திற லாடவ னிற்பவே.

(இ-ள்.) கெடாத வெற்றியினையுடைய வீரவாகுதேவர் அவ்வாறு நின்றவுடனே அவரது திண்ணிய தோள்கள் திக்குகளை எட்டிநின்றன; உயர்ந்த நீண்டமுடியானது மேலுலகத்தை எட்டிநின்றது; வீரகண்டையணிந்த பாதங்கள் பூமிமுழுமையும் அளந்தன.—எ-று. (உ)

திருவு லாங்கழற் சேறடிச் செம்மல்பே
ருருவு தாங்கி யுகந்தன னிற்றலு
மரவின் வேந்தரு மாதியங் கூர்மரும்
வெருவி னர்கள் வியன்பொறை யாற்றலார்.

(இ-ள்.) வீரலட்சுமிவிலாசம் பொருந்திய கழலணிந்த வீரவாகுதேவர் பேருருக்கொண்டு மகிழ்வுடன் நிற்கவும் அவரது திருமேனிச் சுமையைச் சகிக்கமாட்டாமல் பாதத்திலுள்ள நாகராசர்களும்; ஆதிகூர்மர்களும் பயமடைந்தார்கள்.—எ-று. (ங)

கதிரொ ளித்திடு காமரு பூணினன்
மதுகை பெற்ற வடிவொடு நிற்றலு
மதுப ரித்தற் கருமையி னாற்றவும்
விதலை யுற்றது வீர மகேந்திரம்.

(இ-ள்.) ஒளிவீசுகின்ற அழகிய மணிமயமான ஆபரணங்களைத் தரித்துள்ள வீரவாகுதேவர் வலிமைபொருந்திய பேருருவத்துடனேநிற்கவும், அவரதவ்வுருவத்தைத்தாங்குதற்கு ஆற்றலின்மையால் அவ்வீரமகேந்திரபுரம் நடுங்கியது.—எ-று. (ச)

உலங்கொள் வாகுவி னெண்பத மூன்றலும்
விலங்கி யேதளர் வீர மகேந்திர
மிலங்கை நீர்மைமெய் தாம விருந்ததாற்
குலங்கொ டானவக் கோமக னாணையால்.

(இ-ள்.) திரண்டகல்போன்ற தோள்களையுடைய வீரவாகுதேவரது ஒள்ளிய கால்களாலழுத்துதலும் பிளந்து தளர்வுற்ற வீரமகேந்திரபுரிசிரேட்டம்பொருந்திய அசுரமன்னவனாகிய சூரபன்மனது ஆக்கினையால் (முன்கடலுளழுந்திய) இலங்காபுரியின் தன்மையை அடையாமல் இருந்தது.—எ-று. (ரு)

சேண ளாவிய சென்னிய னெண்டிசை
காண நிற்புறு காட்சியன் கந்தவே
ளாணை காட்டிநி றுவிய வாடலாந்
தானு வென்னத் தமியன் விளங்கினான்.

(இ-ள்.) ஆகாயத்தையளாவிய தலையினையும், எட்டுத்திக்கிலும் உள்ளவர்கள் காணும்படியான திருமேனியினையும் உடையவராக விளங்கிய வீரவாகுதேவர் குமரக்கடவுள் தனது அதிகாரத்தை இம்மகேந்திர புரிக்குள் நிலைக்கச்செய்து அதன் பின்னர் நட்ட வெற்றித்தம்பத்தைப்போல விளங்கினார்.—எ-று. (சு)

சான்ற கேள்வித் தலைமகன் றாட்டுணை
யூன்று கின்ற வுழிதொறு மாநில
மான்று கீண்டிட வவ்வப் புழைதொறுந்
தோன்று கின்றன சூழ்கட னீத்தமே.

(இ-ள்.) சிறந்தசாத்திர சிரவணமுடையவராகிய வீரவாகுதேவர் தனது திருவடிகளை அழுத்துகின்ற இடங்களிலெல்லாம் பெரிய பூமியசைந்து பிளவுபடுகின்றன; அவ்வாறுண்டான துவாரங்களின் வழியாக அந்நகரின்சுற்றிலும் உள்ள சமுத்திரநீர் வெளிப்படுகின்றன.—எ-று. (எ)

ஆத்த னூன்று மடிதொறுந் தோன்றிய
நீத்தம் யாவு நெடுந்திறல் வெய்யசூர்
வாய்த்த கோயில் வளைந்திறை போற்றிய
வேத்த வைக்களந் தன்னினு மேவிய.

(இ-ள்.) வீரவாகுதேவரூன்றிய கால்களின்வழியாக வெளியேவருகிற நீர்முழுமையும் மிக்க திறலினையுடைய கொடியசூரபன்மனது அரண்மனையைச்சூழ்ந்ததுமன்றி அவனிருந்தரசுசெய்கின்ற சபாமண்டபத்திலும் பிரவேசித்தது.—எ-று. (அ)

பூழை கொண்டு புறம்படர் நீத்தநீர்
மாழை கொண்டவன் கோயில் வளைந்துராய்ப்
பேழை கொண்ட பிணிப்பறு பாந்தள்போற்
கூழை கொண்ட மறுகிற் குலாயதே.

(இ-ள்.) (கால்வைத்தலினாலுண்டான) துவாரத்தின் வழியாக வெளியேவருகிற பிரவாகசலமானது, செல்வமுள்ளவனாகிய சூரபன்மனது அரண்மனையை வளைந்து சூழ்ந்துபோய் பெட்டியினின்றுநீங்கிச்செல்லுகின்ற தடையற்ற பாம்பைப்போல குறுந்தெருவுகள்தோறுஞ்சென்றுலாவியது.—எ-று. (கூ)

துய்ய பூழை தொறுந்தொறுந் தோன்றுநீர்
மையல் வெங்கரி வாம்பரி தேர்படை

கைய ரிக்கொடு சாசினி யாறுபோற்
செய்ய மாநகர் யாங்கணுஞ் சென்றதே.

(இ-ள்.) நல்ல துவாரங்களின்வழியாகவருகின்ற நீரானது மயக்கம்பொருந்திய கொடிய யானைகளையும், தாவுகின்ற குதிரைகளையும், இரதங்களையும், காலாட்களையும் வாரிக்கொண்டு உலகத்திலுள்ள ஆறுகளைப்போல அந்த அழகிய பெரிய ஊர்முழுமையும் உலாவியது.—எ-று. (கO)

தோட்ட தன்ன சுழிப்படு வாரியி
னீட்ட மாநகர் வீதிதொ றேகியே
பாட்டின் மாளிகை பற்பல சாடியே
மீட்டு மொல்லையின் வேலை மடுத்ததே.

(இ-ள்.) தோண்டினதை ஒத்துக்காணுகின்ற சுழிகளையுடைய கடல்நீரினது கூட்டம் அப்பெரிய ஊரின் வீதிகளெல்லாம்சென்று பெருமையினையுடைய பலமாளிகைகளை அழித்து பின்னுந்திரும்ப விரைவாகக்கடலையடைந்தது.—எ-று. (கக)

எம்மை யாளுடை யெந்தைதன் றூதுவன்
செம்மை நீடு திருவுரு நோக்கியே.
கைம்ம றிக்கொடு கண்டனர் யாவரு
மம்ம வோவென வச்சமுற் றோடினர்.

(இ-ள்.) எம்மை அடிமையாகவுடைய எந்தைபெருமானாகிய குமரக்கடவுளினது தூதுவராகிய வீரவாகுதேவரது ஒழுங்கான உயர்ந்த திருவுருவத்தைப்பார்த்து இனி என்செய்வமென்று கையை விரித்தவர்களாய் ஐயகோவென கூறிக்கொண்டு பய்முற்றவர்களாய் கண்டவர்களனைவர்களுமோடினார்கள்.—எ-று. (கஉ)

மாவு லாவரு மன்னவன் கோயிலுட்
காவ லாளரிக் காளையைக் கண்ணுறீஇ
யோவி தோர்வஞ்ச னுற்றென னீண்டெனக்
கூவி ளித்தனர் தத்தமிற் கூடினர்.

(இ-ள்.) திருமகள் விலாசம்பொருந்திய சூரபன்மனது அரண்மனையின் உட்காவலர்கள் இந்த வீரவாகுதேவனைப்பார்த்து, ஓஹோ! இவ்விடத்திலொருவஞ்சகன் வந்திருக்கின்றானென்று அவர்களெல்லாருமொன்றாகக்கூச்சலிட்டார்கள்.—எ-று.(கங)

கூடு கின்ற குணிப்பருங் காவலோர்
நீடு மெய்கொடு நின்றவற் கஞ்சியே
யாடல் பூண்டில மென்னி னரசனே
சாடு நம்மைச் சரதமென் றெண்ணினர்.

(இ-ள்.) ஒன்றுசேர்ந்துநின்ற அளவற்ற அக்காவலாளிகள் பேருருவுடனே நிற்கின்ற இவருக்குப்பயந்து போர்புரியாதிருப்போமாயின் நம்மிறைவனே நம்மை எல்லாம் கொல்லுவன் இது உண்மையானவிஷயம் என்று தங்களுக்குள் ஆலோசனை செய்தார்கள்.—எ-று. (கச)

குமரி மாமதிற் கோயிலுட் போற்றியே
யமரி யோர்களொ ரைம்பது வெள்ளத்தர்
திமிர மேனியர் தீயுகு கண்ணினர்
சமரி யற்றத் தலைத்தலை மண்டினர்.

(இ-ள்.) அழிவற்ற மதிலினையுடைய அரண்மனைக்குள் காவல்பூண்டிருப்பவர்களாகிய ஐம்பதுவெள்ளம் அசுரர்கள் இருள்போன்ற உடலினர்களும் தீப்பொறி சிந்து

கின்ற கண்ணினர்களுமாய் சண்டைசெய்யும்பொருட்டு இடங்கள்தோறு நெருங்கிவந்தார்கள்.—எ-று. (கரு)

மண்டி மற்றவர் வல்லெழுத் தோமரம்
பிண்டி பாலம் பெருங்கதை யாதியாக்
கொண்ட கொண்ட கொடும்படை வீசியே
யண்டம் விண்டிட வார்த்தன ராடினர்.

(இ-ள்.) நெருங்கிவந்த அக்காவலாளிகள் வலிய எழுக்களும், தோமரங்களும், பிண்டிபாலங்களும், பெரியகதையும், முதலாகிய தங்கள் கைகளிலுள்ளகொடிய ஆயுதங்களை வீரவாகுதேவர்மீது பிரயோகித்து அண்டமுடையும்படி கர்ச்சித்துக்கொண்டு போர்புரிந்தார்கள்.—எ-று. (கசு)

ஆடு மெல்லை யடுபடைத் தானவர்
பாடு சூழ்ந்த பரிசினை நோக்கினு
னீடு சான்ற விடித்தொகை யாயிர
கோடி போற்புயங் கொட்டிநின் றார்ப்பவே.

(இ-ள்.) வலிமைமிக்க ஆயிரங்கோடி இடிக்கூட்டங்கள் இடித்தாற்போலதோள்களை கொட்டிக்கொண்டு ஆரவாரிக்கவும், போரினிமித்தம் கொலைத்தொழிலுக்குரிய ஆயுதங்களையுடைய அசுரர்கள் பக்கத்தில்வந்து சூழ்ந்துநிற்கின்றதை வீரவாகுதேவர் பார்த்தனர்.—எ-று. (கஎ)

அலைக்க வந்த வவுணப் படையெலாங்
கலக்க மூழ்கிக் கருத்துணர் வஃகியே
யுலக்கு றுத வுருமிடி யுண்டிடும்
புலைக்க டுந்தொழிற் புள்ளென லாயவே.

(இ-ள்.) தன்னைக்கொல்லும்பொருட்டு வந்த அசுரர்களனைவர்களும் கலக்கங்கொண்டு எண்ணமுமறிவுங்குலைந்து கெடாத இடியேறுவீழ்ந்த இடத்திலிருந்த புல்லிய கொடியதொழிலினையுடைய சரபப்பக்ஷியைப்போல ஆயினார்கள்.—எ-று. (கஅ)

வேறு.

பன்மழைக் குலங்களிற் படைக்கலங்கள் யாவையும்
வன்மைபெற்ற வீரருய்ப்ப வந்துமேனி படுதலுஞ்
சின்மயத்த னொற்றன்மிக்க செய்யவீழ் விழுத்திய
தொன்மரத் தியற்கைபோன்று சோரிசோர நின்றனன்.

(இ-ள்.) பலவிதமேககூட்டங்களைப்போல எல்லா ஆயுதங்களையும் பலசாலிகளான வீரர்கள்விட அவைகள்வந்து தன்னுடம்பிற் பட்டமையால் ஞானமயராகிய குமரக்கடவுளின் தூதராகிய வீரவாகுதேவர், ஒழுங்கானவிழுதுகளைத் தொங்கவிட்டுக்கொண்டு நிற்கிற ஆலமரத்தின் தன்மையைப்போல சோரியொழுகும்படிநின்றனர் —எ-று.

ஆனகாலை வீரவாகு வறிவனங்கி யிற்சினை இ
மானவீரர் மீதலாது வாளெடுக்க லேனெனுத்
தேனின்மாப் பெருங்கடற் றிளைத்தலைக்கு மத்தெனத்
தானவப் பதாதியைத் தடிந்தலைத்தன் மேயினன்.

(இ-ள்.) அப்பொழுது வீரவாகுதேவர் தீயைப்போலச் சீற்றங்கொண்டு யான் பெரிய வீரர்களிடத்தன்றி, (இப்படிப்பட்ட சாமான்யமானவர்களைக் கொல்லும்பொருட்டு) வாளாயுதமெடேனென்று பெரியதேன்கடலிற்புகுந்து கலக்குகின்ற மத்தைப்போல அசுரசேனைகளைக்கொன்று வருத்தவாரம்பித்தனர்.—எ-று. (௨0)

மிதித்தனன் கொதித்தனன் விடுத்திலன் படுத்தனன்
சதைத்தனன் புதைத்தனன் றகர்த்தனன் றுகைத்தன
னுதைத்தனன் குதித்தன னுருட்டினன் புரட்டினன்
சிதைத்தனன் செகுத்தனன் செருக்கினன் றருக்கினன்.

(இ-ள்.) (வீரவாகுதேவர் அசுரர்களை) மிதித்தனர்; கோபங்கொண்டு விடாமல் கொன்றனர்; நசுக்கினர்; புதைத்தனர்; தகர்த்தனர்; துவைத்தனர்; உதைத்தனர்; குதித்தவராக உருட்டினர்; புரட்டினர்; சிதைத்தனர்; செகுத்தனர்; செருக்கினவராகக்களித்தனர்.

சிரத்தினை நெரித்தனன் றிறற்புய மிறுத்தனன்
கரத்தினை முரித்தனன் களத்தினைத் திரித்தன
னுரத்தினைப் பிரித்தன னுருத்தனன் சிரித்தனன்
புரத்தினை யுரித்தனன் பொடித்தனன் படைத்திறம்.

(இ-ள்.) (வீரவாகுதேவர்) அவ்வசுரர்களது தலைகளைநெரித்தனர்; அவர்கள் வெற்றியமைந்த தோள்களை ஒடித்தனர்; கைகளைமுரித்தனர்; சிலர் கழுத்துக்களையொடித்துத்திருப்பினர்; மார்புகளை வேறாகப்பிளந்தனர்; உருத்துச்சிரித்தனர்; சரீரங்களை யுரித்தனர்; ஆயுதங்களைப்பொடியாகச்செய்தனர்.—எ-று. (உஉ)

எடுத்தனன் சுழற்றின னெறிந்தனன் சிலோர்தமைப்
புடைத்தன னிடித்தனன் புயத்தினாற் சிலோர்தமைப்
பிடித்தனன் பிசைந்தனன் பிழிந்தனன் சிலோர்தமை
யடித்தலங் கொடித்தலத் தரைத்தனன் சிலோர்தமை.

(இ-ள்.) (வீரவாகுதேவர்) அக்காவலாளரிற் சிலரைக் கையிலெடுத்துச் சுழற்றி எறிந்தனர்; சிலரைத்தனது தோள்களால் நெருக்கியிடித்தனர்; அடித்தனர்; சிலரைப்பிடித்து பிசைந்துபிழிந்தனர்; சிலரைக்காலால் இந்தப்பூமியிலிட்டு (அம்மியிலரைப்பதைப்போல) அரைத்தனர்.—எ-று. (உங)

பெருத்தனன் சிறுத்தனன் பெயர்ந்தும்வேறு பல்லுருத்
தரித்தனன் னடந்தனன் றனித்தனி தொடர்ந்தனன்
மருத்தெனக் கறங்கினன் வளைந்தனன் கிளர்ந்தன
னொருத்தன்வெள்ள மைம்பது முலக்குறக் கலக்கினான்.

(இ-ள்.) (வீரவாகுதேவர்) காவலாளரோடு போர்புரிகிறதருணத்தில் பெருத்தனர், பெருத்தவண்ணம் நில்லாமற்சிறுத்தனர்; இதுவன்றியும் வேறே பலவுருவங்களையெடுத்தனர்; நடந்தனர்; வேறுவேறாக ஒவ்வொருவர்களையுந்தொடர்ந்தனர்; வாயுவைப்போல சுழன்றனர்; வளைந்தனர்; விளங்கினர்; தானொருவருமே ஐம்பதுவெள்ளஞ் சேனைகளும் கெடும்படி கலக்கினார்.—எ-று. (உச)

மஞ்ஞையன்ன மொண்புறா மடக்குயிற் றிரட்பயில்
செய்ஞ்ஞலங்கொண் மாடமீது சேனங்கூளி பிள்ளைகள்
பிஞ்ஞகன் குமாரனொடு பேரமர்க் களம்படு
மஞ்ஞையாளர் குருதியூ னருந்துமா றிருந்தவே.

(இ-ள்.) மயில்களும் அன்னங்களும் ஒள்ளியபுறாக்களும் இளங்குயிற்கூட்டங்களும் இருக்கின்ற செவ்விய நன்மையமைந்த மாளிகையின்மீது பருந்துகளும், கூளிகளும் காக்கைகளும் தலைக்கோலத்தினையுடைய சிவபெருமான் திருக்குமாரராகிய வீரவாகுதேவர்போர்புரிந்த பெரியபோர்க்களத்திலே இறந்த அறிவிலிகளது சோரிகளையும் மாமிசங்களையும் உண்ணும்வண்ணம் இருந்தன.—எ-று. (உரு)

மானினஞ் செறிந்திரைந்து வந்தவெல்லைத் தன்னிடைத்
தானோர்சிங்க வேறுபுக்க தன்மைபோல வவுணர்தங்
கோனிருந்த வுறையுளிற் குலாயகாவ லாளராஞ்
சேனைவெள்ள மைம்பதுஞ் சினத்தின்வல்லை சிந்தினன்.

(இ-ள்.) மான்கூட்டங்கள் நெருங்கி இரைச்சலிட்டுக்கொண்டு வந்தவிடத்தில் ஒரு ஆண்சிங்கம் வந்ததன்மையைப்போல அசுரராஜனான சூரபன்மனிருக்கின்ற அந்தப் புரத்தின் அகங்காவலாளிகளாகிய ஐம்பதுவெள்ளஞ்சேனைகளையும் கோபத்துடன் வீரவாகுதேவர் விரைந்தழித்தனர்.—எ-று. (உசு)

முறிந்தன ருறுப்பியாக்கை முற்றும்வேறு வேறவாய்ப்
பிறிந்தனர் தகர்ந்தனர் பிறங்குசென்னி சோரியுட்
செறிந்தனர் புதைந்தனர் சிதைந்தன ருருண்டனர்
மறிந்தன ரிறந்தனர் மடிந்தனர் கிடந்தனர்.

(இ-ள்.) வீரவாகுதேவரது போரினால் காவலாளிகள் அவயவங்கள்முறிந்தனர்; உடன்முழுமையும் வேறுவேறாகப்பிரிந்தனர்; விளங்குகின்ற தலையுடைந்தனர்; இரத்தவெள்ளத்துள் மூழ்கி அழுந்தினர்; சிதைந்துருண்டனர்; தன்னைமறந்தனர்; மடிந்துகிடந்தனர்.—எ-று. (உஎ)

இன்னபான்மை வீற்றுவீற்றி னவுணர்தானை யாவையுஞ்
சின்னபின்ன மாகியே சிதைந்துவீழ்ந் துலந்திட
வுன்னுகின்ற முன்னமட் டெலம்பினன் சிலம்பினின்
மன்னன்மங்கை நூபுரத்தின் வந்தவீர வாகுவே.

(இ-ள்.) இவ்வண்ணம் வேறுவேறாக அசுரசேனைகளனைத்தும் சின்னபின்னமாய்ச் சிதைந்துவிழுந்து கெடும்படி பார்வதிதேவியாரது திருவடிச்சிலம்பினின்றுந்தோன்றிய வீரவாகுதேவர் நினைக்குமளவிற்கு முன்னமே கொன்றருளினர்.—எ-று. (உஅ)

வள்ளனின்று சமரிழைப்ப மாண்டவீரர் யாக்கையி
னுள்ளதாது வானவேழு முருவம்வேறு காண்கிலா
தள்ளலாகி யொன்றுபட்ட தங்கிதன்னி னுருகியே
வெள்ளியாதி யுலகம்யாவும் விரவும்வண்ண மென்னவே.

(இ-ள்.) வீரவாகுதேவர்நின்று போர்புரிதலாலிறந்த வீரர்களது சரீரத்திலுள்ள சத்ததாதுக்களும் நெருப்புப்பட்டு உருகி வெள்ளிமுதலான உலோகங்களெல்லாம் ஒன்றாய்க்கலந்தாற்போல, தமதுருவங்கள் வேறுகாணுதற்கின்றிச் சேறாகி ஒன்றுபட்டன.

காவலாளர்வதைப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-சுஅக.

---

## நகரழி படலம்.

ஆசுறு மவுண வெள்ள மைம்பது முடித்தோ னைஞ்ஞூ
றோசனை யளவை யான்றே யொராயிர மும்ப ரோகித்
தேசுறு மேரு வென்னச் சிகரமோ ரிலக்கஞ் சூடி
வீசுபொன் சுடர நின்ற வேரமொன் றங்கட் கண்டான்.

(இ-ள்.) குற்றம்பொருந்திய ஐம்பதுவெள்ள மசுரசேனைகளையும் கொன்றருளிய வீரவாகுதேவர், ஐந்நூறுயோசனை யகலமும், ஆயிரயோசனையுயரமுமுள்ளதாய்

ஒளிபொருந்திய மேருமலையைப்போல ஓரிலக்கஞ்சிகரங்களையுடையதாய் பொன்னொளிவீசிக்கொண்டு நின்ற ஒருவேரத்தை கண்டனர்.—எ-று. (க)

புறத்திரு ளிரிய வைகும் பொலஞ்சுடர்ப் பொன்செய் வேரந்
திறத்தியல் கோயின் முன்னஞ் சேர்ந்தது தன்னை வீரன்
பறித்தொரு கரத்தி னேந்திப் பதகனுஞ் சூர பன்ம
னறத்திய விழுக்கி வைகு மவைக்களம் வீசி யார்த்தான்.

(இ-ள்.) வெளியிலுள்ள இருட்டெலாம் போகும்படி நிற்கிற அழகிய ஒளிவீசுகின்ற பொன்னால்விதிப்படிசெய்யப்பட்டதும், அரண்மனையினெதிரிலுள்ளதும் ஆகிய வேரத்தை வீரவாகுதேவர் ஒருகையினாற் பறித்தெடுத்து பாவியாகிய சூரபன்மன் தருமநூலுக்கு மாறாக இருந்து கொடுங்கோல்செலுத்துகின்ற சபாமண்டபத்திலெறிந்து கர்ச்சித்தனர்.—எ-று. (உ)

பன்மணி செறிந்த பொற்பிற் பாயொளி யெரிபொன் வேர
மன்னவ னுறையுஞ் செம்பொன் மாயிரு மன்றிற் போதன்
மின்னவிர் மேரு வாதி வெற்பெலா மிகலி னொன்றிப்
பொன்னகர் பொடிப்பச் செல்லுந் தன்மையைப் போலு மம்மா.

(இ-ள்.) பலமணிகள்நிறைந்த அழகினையுடைய ஒளிவீசுகின்ற பொன்னாலாகிய வேரமானது,அரசனாகிய சூரபன்மனிருக்கின்றமிகவும்பெரியசபாமண்டபத்திற்குச் செல்லுதல், ஒளிவிடுகின்ற மகாமேருமுதலிய மலைகளெல்லாம் பலமாக வொன்றாகச் சேர்ந்து பொன்னுலகத்தை அழித்தற்குச்செல்லுகின்ற தன்மையை ஒத்திருந்தது. (ங)

வார்த்தரு கழற்கால் வீரன் வானுரு மேறு முட்க
வார்த்திடு துழனி யேகி யரசன்மே வியவத் தாணி
சேர்த்தவர் கன்னத் தூடு செறியுமுன் னெறித லுற்ற
பேர்த்திடு செம்பொன் வேரம் பேரவை மிசையுற் றன்றே.

(இ-ள்.) வாரிட்டிறுக்கிய கழலணிந்த காலினையுடைய வீரவாகுதேவர், மேகத்தினின்று முண்டாகின்ற ஆணிடியு மஞ்சும்வண்ணம் கர்ச்சித்த சத்தஞ்சென்று சூரபன்மனிருக்கின்ற சபாமண்டபத்திலிருப்பவர்களது காதினிடத்திற் படுதற்குமுன்னே அவராற்பறித்து எறியப்பட்ட செவ்வியபொன்மயமான வேரமான தந்தசபாமண்டபத்தையடைந்தது.—எ-று. (ச)

விற்செறி தூபிச் செம்பொன் வியன்மணி களுலும் வேரங்
கற்செறி பெருந்தோள் வீர னெறிதலுங் கடிது நண்ணிப்
பொற்செறி மார்பிற் சூரும் புதல்வருஞ் சிலரும் வைகுஞ்
சிற்சில விடையே யன்றி மன்றெலாஞ் சிந்திற் றுமால்.

(இ-ள்.) ஒளிபொருந்திய தூபிகளையுடைய செவ்வியபொன்மயமான மணிகளிட்டிழைக்கப்பட்ட வேரத்தை மலைபோன்ற தோள்களையுடைய வீரவாகுதேவர் எறிதலும், அதுவிரைவாகச்சென்று பொன்னுபரணங்கள்நெருங்கி விளங்குகின்ற மார்பினையுடைய சூரபன்மனும், அவன்பிள்ளைகளும், இன்னஞ்சிலரும் இருந்த சிற்சிலஇடங்களை அன்றி மற்றைய இடங்களையெல்லாம் அழித்தது.—எ-று. (ரு)

தடத்தனி வேரங் கீண்டு தபனியத் தவைக்க ணேச்சி
யிடித்தன னொருதா னிற்கு னெம்பிரா னேவற் றாதன்
படைத்தளித் திறுதி வேலைப் பசும்பொனூர் தசும்பி னண்ட
முடைத்துல கழித்து நிற்கு மொருபெருங் கடவு ளொத்தான்.

(இ-ள்.) விசாலமான பெரியவேரத்தையெடுத்து, பொன்மயமான சூரபன்மனது சபையினிடத்திலெறிந்து, அழித்துநிற்கின்ற ஒப்பற்ற எம்பெருமானது கட்டளையை மேற்கொண்டு நடக்கின்றதூதுவராகிய வீரவாகுதேவர், பசியபொன்னங்குடம்போன்ற பிரமாண்டத்தைப்படைத்துக்காத்துச் சங்காரகாலத்தி லவ்வண்டத்தையுடைத்து, உலகத்தையழித்துநிற்கிற ஒப்பற்றபெருங்கடவுளாகிய காலாக்கினி உருத்திரதேவரை ஒத்தனர்.—எ-று. (சு)

புலவுகொ ளலகு வெவ்வாய்ப் புட்செறி பொதும்பர் தன்னிற்
பலமுடை யுருமு வீழப் பட்டதோர் பரிச தென்னத்
தொலைவகன் மைந்தன் விட்ட சூளிகை தகர்ப்பத் தொல்சீர்
மலிவுறு சனங்க ளோடு மன்றமங் குற்ற தம்மா.

(இ-ள்.) புலாலைக்கவ்வுகின்ற மூக்கினையுடைய கொடியவாயோடுகூடிய (பருந்துமுதலிய) பக்ஷிகள்நெருங்கி இருக்கிறசோலையில் பலம்பொருந்திய இடிவிழுந்ததன்மையைப்போல அழிவற்ற பலசாலியான வீரவாகுதேவர் எடுத்தெறிந்த சூளிகையென்னும் வேரமானது உடைக்கப் பெரியசிறப்புவிளங்குகின்றமண்டபத்திலுள்ள சனங்களுடனே மண்டபமுமழிந்தது.—எ-று. (எ)

இடிந்தன மிசையி னெல்லை யிற்றபித் திகையின் சூழல்
பொடிந்தன வுத்தி ரங்கள் போதிகை பூழி யாகி
முடிந்தன மதலை யாவு முரிந்தன கபோதம் வீழ்ந்த
மடிந்தன திருவுஞ் சீரு மன்றழி வுற்ற தன்றே.

(இ-ள்.) அந்தச்சபாமண்டபத்தின் மேற்புறங்க ளழிந்தன; சுவரின் பக்கங்கள் அழிந்தன; உத்திரங்கள்பொடிந்தன; போதிகைகளெல்லாம் புழுதியாகப்பொடிந்தன; தூண்களெல்லாம் முரிந்தன; சித்திரக்கம்பிகளெல்லாம் விழுந்தன; திருமகள்விலாசங்களும், செல்வங்களும் அழிந்தன; மண்டபமுமழிந்தது.—எ-று. (அ)

பீடிகை புரைந்த பொற்பிற் பேரவை தகர்த லோடும்
பாடுற வரசர் சூழ்ந்த பரிசனர் தம்முட் சில்லோ
ரோடினர் சிலவர் மெய்யூ றுற்றனர் சிலவர் நெக்கு
வீடினர் சிலவ ராற்ற மெலிந்தனர் புலம்ப லுற்றார்.

(இ-ள்.) முகவுரைபோல யாவற்றையும் விளக்காநின்ற அழகிய அப்பெரிய சபை அழிதலும், பக்கத்திற் சூரபன்மனைச்சுற்றிலுமிருந்த ஊழியர்களில் சிலர் ஓடினார்கள்; சிலர் சரீத்திற் காயப்பட்டார்கள்; சிலர் நசுங்கி இறந்தார்கள்; சிலர் மிகவும் மெலிந்து புலம்பத்தொடங்கினார்கள்.—எ-று.

பிடிகைபோல என்பதனை, அணிகலச்செப்புப்போல எனினுமாம். (கு)

நெக்கது பொதியி லாக நிகழ்ந்தது செம்பொற் பூழி
திக்கொடு புவியும் வானுஞ் செறிந்தன வவுண ராகித்
தொக்கன ருடைந்து மாய்ந்து தொகைபிரிந் தழிந்தார் தொல்லைத்
தக்கனி னுணர்வு தீர்ந்த தகுவர்கோ னிவற்றைக் கண்டான்.

(இ-ள்.) அச்சபாமண்டபமழிந்தது; அதனாற்செவ்வியபொன்மயமான புழுதிகள் திக்குக்களிலும் பூமியிலும் ஆகாயத்திலும் நெருங்கின; அவ்விடத்திற்சூழ்ந்திருந்த அசுரர்களெல்லாம் அழிந்து கூட்டங்கலைந்தொழிந்தனர்; இறைவனைமதியாதறிவிழந்த தக்கனைப்போல அறிவிழந்துநின்ற அசுரராஜனாகிய சூரபன்மன் இதனைப்பார்த்தான்.

ஆயிர நாமத் தண்ண லனையவன் வன்மை காணா
வாயிரம் வடவை யேபோ லழன்றுதன் னயலி னின்ற

வாயிர நெடுந்தோ ளைஞ்ஞூ றுனனங் கொண்ட தீயோ
ராயிரர் தம்மை நோக்கி யடலுரு மேற்றிற் சொல்வான்.

(இ-ள்.) இறைவனையே ஒப்பாகச்சொல்லத்தக்க வீரவாகுதேவரது வல்லபத்தைக்கண்டு, அனேகம் வடவாக்கினியைப்போல கோபித்து, தன்னருகில் நின்ற நெடிய ஆயிரந்தோள்களையும் ஐந்நூறுமுகங்களையுமுடைய கொடிய ஆயிரமசுரர்களைப்பார்த்து, பலம்பொருந்திய ஆணிடியைப்போல சொல்லுகின்றனன்.—எ-று. (கக)

விழிப்பரு நிவப்பி னோங்கும் வேரமொன் றதனைக் கீண்டே
தெழிப்பொடு குமரன் றூதன் செலுத்தினன் செம்பொன் மன்ற
மிழிப்புறத் தகர்ந்து வீழ்ந்த தீண்டுசில் லிடமே யன்றி
பழிப்பெனக் கிதன்மே லுண்டோ பட்டதென் புகழு மன்றே.

(இ-ள்.) சகத்திரவாகுக்களே, கெர்ச்சனையுடனே சண்முகதூதனாகியவீரவாகு கண்ணுக்கெட்டாத உயரமாக உயர்ந்துநின்ற ஒருவேரத்தை அசைத்தெடுத்து எறிந்தனன்; அதனால் இந்தக்கொஞ்சவிடமேயன்றி, சாம்பூநதமென்னும் பொன்னாலமைக்கப்பட்ட சபாமண்டபத்தின் மற்றிடங்களெல்லாம் இழிவுபடும்படி அழிந்துவிழுந்தது. இதனைக்காட்டிலும் அவமானம் எனக்குவேறே உண்டோ? இதனால் எனதுகீர்த்தியும் அழிந்தது.—எ-று. (கஉ)

கோறலே கொற்ற மன்று லொற்றனைக் குறுகி நீவிர்
மாறுபோ ரியற்றி யேனு மற்றவன் வழாத வாற்று
லீறுசெய் திடாது பற்றி யெம்முனர்த் தருதிர் மெய்யி
னூறுசெய் தவனை வானோ ருடன்சிறை யுய்ப்ப னென்றான்.

(இ-ள்.) தூதுவனைக் கொல்லுதல் வெற்றியல்ல; ஆதலால் நீங்கள்சென்று அவனொடுபகைத்துப் போர்செய்தாவது, அவனைத்தவறாதபடி கொல்லாமற்பிடித்துக்கட்டி நம்மெதிரில்கொண்டுவாருங்கள்; கொண்டுவந்தாலவனைக் கைகால்முதலிய உறுப்புகளைக்குறைத்து, முன்னரோ சிறையிற்கிடக்கின்ற, தேவர்களோடுகூட சிறையிலடைப்பேன் என்றுகூறினான்.—எ-று. (கஈ)

அன்னவ ரதனைக் கேளா வரசவீ தருளிக் கேண்மோ
வொன்னலன் றூதன் சோரி யுயிரொடு குடித்தற் குற்று
நின்னரு ளாணை நாடி நெஞ்சகம் புழுங்கி யஞ்சி
யின்னதோர் பொழுதுந் தாழ்த்தே மினியது புரிது மென்றார்.

(இ-ள்.) அவர்களதனைக்கேட்டு, அரசனே! இதனைத் திருச்செவி சாய்த்தருளக்கேட்டுக்கொள்ளுகிறோம்; பகைவனாகியதூதுவனது சோரியை உயிருடனே குடித்தற்கே இருந்தோம்; தேவரீரது தயவோடுகூடிய கட்டளைகிடைக்கவில்லையே என்று மனம்புழுங்கி இதுகாறுங் காலதாமதஞ்செய்தோம். அருள்கிடைத்தமையால் இனியவ்வண்ணமே செய்கின்றோமென்று கூறினார்கள்.—எ-று. (கச)

என்றனர் வணக்கஞ் செய்ய வினிதென வுவகை பூத்துக்
கன்றிய வவுணர் தங்கள் காவலன் விடுப்ப வங்கட்
சென்றனர் பத்து நூற்றுத் திறலுடை மொய்ம்பர் முன்ன
நின்றிடு வீர வாகு நிலைமையை யுரைக்க லுற்றாம்.

(இ-ள்.) என்றிவ்வாறு கூறினவர்களாய் வணங்குதலும், கோபம்பொருந்திய அசுரர்களுக்கிறைவனாகிய சூரபன்மன் அவ்வாறே நல்லதென்று மகிழ்ந்து போங்களென்றனுப்புதலும், ஆயிரந்தோள்களையுடையவர்கள் சென்றார்கள்; அப்பொழுதவர்கள்முன்னேநின்ற வீரவாகுதேவரது நிலைமையைச்சொல்லுகின்றோம்.—எ-று. (கரு)

வேறு.

வேரமதெறிந்தவை விட்டி னின்றுளான்
சூருறை நகர்வளந் தொலைச்சிச் சூழுநர்
சேருறு மிருக்கையுஞ் சிதைப்ப னின்றெனு
வோருறு புந்தியி லுன்னி னானரோ.

(இ-ள்.) வேரத்தை எறிந்து சபையையழித்தவராகிய வீரவாகுதேவர், சூரபன்மனிருக்கின்ற இந்தவளப்பம்பொருந்திய உள்நகரத்தையும் அழித்து, அவனது பரிவாரங்களாயுள்ளவர்கள் முதலானவர்களது இருப்பிடத்தையும் இப்பொழுதே அழிக்கின்றேனென்று எண்ணத்தக்க மனதில் நினைத்தனர்.—எ-று. (கசு)

மறிப்பிணை முதலிய மான்கள் புள்ளினஞ்
சிறப்புறு தண்டலை மணியிற் செம்பொனிற்
குறிப்பினர் குயிற்றுசெய் குன்றம் யாவையும்
பறித்தனன் றிசைதொறும் பரவ வீசினான்.

(இ-ள்.) பெண்ணுடுமுதலிய மிருகங்களும் பறவைகளும் சிறந்துவாழ்கின்ற சோலைகளையும், மணிகளாலும் செவ்விய பொன்னினாலும் குறிப்பாளிகளாகிய சிற்பிகளாற் செய்யப்பட்ட கட்டுமலைகளையும் எல்லாம் பிடுங்கி நானுதிசைகளிலும் பரவும் வண்ணம் வீசினார்.—எ-று. (கஎ)

வரைவயி றுயிர்த்திடு மாசில் பல்வகை
யரதன நிரைகளி னணிய செம்பொனின்
மரபினி லியற்றிய வரம்பி றெற்றிகள்
விரைவொடு தொட்டன னெடுத்து வீசினான்.

(இ-ள்.) மலைகளின் நடுவிலுண்டான களங்கமற்ற பலவகையான மணிவரிசைகளாலும், அழகிய செம்பொன்னாலும், முறைப்படியே அமைத்துள்ள திண்ணைகளையெல்லாம் சீக்கிரமாகத்தோண்டி எடுத்து நானுதிசைகளிலும் வீசி எறிந்தனர்.—எ-று. ()

முடிவகல் பேழையின் மூட்டு நீக்கியே
யடியுறு கொள்கல மவற்றைச் சாய்த்தெனப்
படியுறு மண்டபம் பலவுந் தொட்டெடா
விடிபுரை யோதையான் யாண்டும் வீசினான்.

(இ-ள்.) அழிவற்ற பெட்டகத்தின் பூட்டைத்திறந்து, அடிப்புறத்திலுள்ள பாத்திரத்தைக் கவிழ்த்தாற்போல பூமியிலிருந்த பலமண்டபங்களையுந் தோண்டியெடுத்து, இடிஇடித்தாற்போல ஆரவாரிக்கின்ற வீரவாகுதேவரெவ்விடத்திலும் இறைத்தனர்.—எ-று. (கக)

மலரயன் மிசையுறு மாயற் புல்லுவா
னிலமகள் கைகளை நீட்டி யென்னவா
னுலகெலா மிகந்துமே லோங்கு கோபுரம்
பலபல பறித்தனன் பாங்க ரோச்சினான்.

(இ-ள்.) பிரமதேவனை நாபிக்கமலத்தின்மீது கொண்டுள்ள திருமாலாகிய நாயகனை அணைக்கும்பொருட்டு, பூமிதேவியார் தமது திருக்கரங்களை நீட்டினாற்போல ஆகாய உலகங்களையெல்லாங்கடந்து மேலேவளர்ந்துள்ள அநேககோபுரங்களைப்பிடுங்கி வீரவாகுதேவர் பக்கங்களிலெறிந்தனர்.—எ-று. (உ0)

மூளுறு மெரிசிகை முடித்துத் தானவர்
கேளொடு தமித்தமி கெழுமி யுற்றென

வாளுறு மாமணி வயங்கு தூபிகைச்
சூளிகை பலபல தொட்டு வீசினன்.

(இ-ள்.) பற்றப்பட்ட நெருப்பினை தலையிலுள்ள சிகையில்முடித்துக்கொண்டு அசுரர்கள் சுற்றத்தினர்களுடன் தனியே தனியே இருந்தாற்போல ஒளிபொருந்திய பெரியமணிகள் விளங்குகிற தூபிகளையுடைய அநேகஞ்சூளிகைகளைஎடுத்தெறிந்தனர்.

கற்றிடும் விஞ்சையின் கழகம் பல்கடைத்
தெற்றிகள் வேதிகை சிறந்த சாலைக
டுற்றிடு பழுமரச் சோலை வாவிகண்
மற்றுள பிறவொடு மட்டித் தானரோ.

(இ-ள்.) கல்விபயில்கின்ற பள்ளிக்கூடங்களையும், பல ஆயுதசாலைகளையும், திண்ணைகளையும், சிறப்புப்பொருந்திய சாலைகளையும், நெருங்கிய பழுத்தமரங்களையுடைய சோலைகளையும், தடாகங்களையும், இன்னமுள்ளவைகளையுமெல்லாம் அழித்தனர்.—எ-று. (உஉ)

கந்துக வியனிரை கரிக டேர்த்தொகை
பந்தியிற் சாலையிற் பயின்று நின்றன
வந்தமின் றுயின வள்ளி யள்ளியே
யுந்தினன் றிசைதொறு முாற்றி வீழவே.

(இ-ள்.) பெரிய குதிரைக்கூட்டங்களையும், யானைக்கூட்டங்களையும், தேர்க்கூட்டங்களையும், இலாயங்களிலும் கூடங்களிலும் சாலைகளிலும் பொருந்தி நின்றனவாகிய அநேகமானவற்றை வாரி வாரி திக்குகள்தோறும் இரைந்துகொண்டு விழும்படி வீரவாகுதேவர் வீசிஎறிந்தனர்.—எ-று. (உ௩)

நிலவரை சூழ்தரு நேமி வெற்பென
மலிதரு செம்மணி வகையிற் பண்ணிய
பலவகை யியந்திரப் பதணவிஞ்சிக
ளொலிகழற் காலினு னுதைத்து வீட்டினன்.

(இ-ள்.) பூமியினடையாளமாக பூமியைச்சூழ்ந்துநிற்கிற சக்கரவாளகிரியைப்போல, மிகுதியாகவுள்ள செந்நிறமான மணிகளாலியற்றப்பட்ட பலவிதமான இயந்திரங்களையுடைய திண்ணைகளோடுகூடின மதில்களை சத்திக்கின்ற வீரகண்டைதரித்த காலினையுடைய வீரவாகுதேவர் உதைத்துத்தள்ளினர்.—எ-று. (உ௪)

பூழியம் பொற்புயப் புனிதன் வெய்யசூர்
வாழுறு கோநகர் வளத்தை யின்னண
மூழியின் மருத்தென வுலாவி யட்டபின்
சூழுறு கிடங்குருந் தூர்த்திட் டானரோ.

(இ-ள்.) போராடியதால் வந்த புழுதிபடிந்த அழகிய நிருமலராகிய வீரவாகுதேவர் கொடியவனுகிய சூரபன்மன் வாழுகின்ற சிறந்தநகரிலுள்ள செல்வங்களையெல்லாம், இவ்வாருக ஊழிக்காலத்திலுலகத்தையழிக்கத் தோன்றும் பிரளயவாயுவைப்போல உலாவிக்கொண்டே அழித்ததற்குப்பின்னர், அவ்வூரைச் சூழ்ந்திருந்த அகழையுந் தூர்த்துவிட்டனர்.—எ-று. (உ௫)

அறந்தலை நின்றிடா வரசன் கோயினின்
றெறிந்திடு சிகரிக ளிலங்கு சூளிகை
நிறைந்திடு மண்டப நெருங்கு காமர்காச்
செறிந்தன பிறவொடு சென்று சேணெலாம்,

(இ-ள்.) வீரவாகுதேவர் கொடுங்கோன்மன்னவனாகிய சூரபன்மனது அரண்மனையினின்றுகொண்டு எடுத்தெறிந்த கோபுரங்களும் பிரகாசிக்கிற சூளிகைகளும் கால்கள்நிறைந்த மண்டபங்களும் மரங்கள் நெருங்கியுள்ள அழகிய சோலைகளும் மற்றையவைகளும் மேலேசென்று ஆகாயத்தி லெவ்விடத்திலும் நெருங்காநின்றன.—எ-று.

உளர்ந்திடு வரியளி யுலாவு தொங்கலான்
வளர்ந்திடு பாணியான் மன்னன் செல்வமாய்க்
களைந்தெறி கின்றன கணிப்பி லாதவுங்
கிளர்ந்திடு நெடுமுகில் கிழித்துச் சென்றவே.

(இ-ள்.) சத்திக்கின்ற வண்டுகள் சஞ்சரிக்கின்ற மலர்மாலையணிந்த வீரவாகுதேவர் தமது வளர்ந்துள்ள பெரியகைகளால் சூரபன்மனது செல்வங்களாய் தோண்டி எடுத்தெறியப்படுகின்றனவாகிய அளவில்லாத அவைகளெல்லாம் பிரகாசிக்கின்ற பெரியமேகமண்டலத்தைக் கிழித்து மேலேசென்றன.—எ-று. (உஎ)

சூரெனு மவுணர்கோன் படைத்த தொல்வளஞ்
சேரிய மிசைவரத் தெரிந்து வானிடைச்
சாருறு கடவுளர் தம்மு ளேங்கியே
யேரிய முறைபிரிந் திரியல் போயினார்.

(இ-ள்.) சூரபன்மனென்று பேருள்ள அசுரமன்னவன் தன்னதாகப்படைத்துள்ள பழையசெல்வங்கள் மேலேசெல்லுதற்கு வருதலையுணர்ந்து ஆகாயத்திலிருக்கிற சூரியன் முதலானதேவர்கள் தங்களுக்குள் ஏக்கங்கொண்டு அழகொடுபொருந்திய கூட்டத்தைவிட்டு விலகி ஓடினார்கள்.—எ-று. (உஅ)

ஊனிவர் குருதிவே லொருவ னேச்சிய
தானவர் கோன்வளந் தகைந்து விண்ணவர்
மேனிகழ் பதங்களை விட்டி யேகிய
வானதி தன்னையும் வல்லை தூர்த்தவே.

(இ-ள்.) நிணம்வடிகின்ற இரத்தந்தோய்ந்த வாட்படையினையுடைய ஒப்பற்ற வீரவாகுதேவர் எடுத்தெறிந்த சூரபன்மனது மண்டபமுதலான செல்வங்கள் தேவர்களது மேலேவிளங்குகிற பதவிகளையெல்லாம் முட்டி உடைத்துக்கொண்டு மேலேசென்று ஆகாயகங்கையையும் விரைவில் மேடாக்கிவிட்டது.—எ-று. (உக)

வெறித்திடு தார்ப்புய விடலை நொய்தினிற்
பறித்தெறி யவுணர்கோன் பலவ ளங்களு
மெறித்திடு தீங்கதி ரெல்லை வேந்தனை
மறைத்தன பணிபல மயங்கிச் சூழ்ந்தபோல்.

(இ-ள்.) மணம்பொருந்திய மலர்மாலையணிந்த தோள்களையுடைய வாலிபராகிய வீரவாகுதேவர் கஷ்டமில்லாமல் பிடுங்கி எறிந்த சூரபன்மனாகியமன்னவனது சூளிகை முதலிய பலவளப்பமானபொருள்களும் எறிக்கப்பட்ட உஷ்ணகிரணங்களையுடைய பகற்பொழுதின் நாயகனாகிய சூரியனைப் பலபாம்புகள் மயக்கத்துடன் சூழ்ந்துகொண்டாற்போல மறைத்தன.—எ-று. (௩O)

சோலையின் மண்டபத் தொகையிற் சூளிகைப்
பாலினிற் சிகரியிற் பயின்ற புள்ளெலா
மேலுறு செலவினில் விரைவி னேகிய
மாலயன் புள்ளொடு மருவி வைகிய.

(இ-ள்.) சோலைகளிலும், மண்டபக்கூட்டங்களிலும், சூளிகைகளினிடத்திலும், கோபுரங்களிலும் இருந்த பறவைகளனைத்தும் வீரவாகுதேவரா லெறியப்பட்டு மேலே போனபோக்கினால் விரைந்துசென்று திருமாலினதும் பிரமனதுமான கருடன் அன்னமிவைகளுடன் பொருந்தி இருந்தன.—எ-று. (ருக)

செஞ்சுடர்ச் சூளிகை சிகர மாதிகள்
விஞ்சிய மிசைவர விழித்துத் தாளிலோ
னெஞ்சிய வுடலமு மிறுங்கொ லின்றெனு
வஞ்சின னழுங்கின னலரி பாகனே.

(இ-ள்.) செவ்வொளி வீசுகின்ற சூளிகைகளும், கோபுரமுதலானவைகளும் மிகுதியானவைகளாக மேலேவருதலை சூரியனதுசாரதியான காலில்லாதவனாகிய அருணன்கண்டு, நமக்கோ முன்னமே காலில்லை; இவைகள்வந்து மேலேவிழுந்து மற்றைய சரீரமும் இன்றேயேயழியுமோ என்று பயந்து வருந்தினன்.—எ-று. (ருஉ)

வள்ளுறு வசிகெழு வயிர மாமுடி
யுள்ளபல் சூளிகை யும்பர் செல்வன
பிள்ளைக ளெறிந்திடப் பிறங்கு பம்பரம்
பொள்ளென விண்டிவான் போவ போன்றவே.

(இ-ள்.) கூர்மைபொருந்திய சூலத்தோடுகூடிய வயிரக்கல்லிட்டிழைத்த பெரிய முடியினையுடைய அனேகஞ்சூளிகைகள் மேலேசெல்லுகின்றன ; (எதுபோலுமெனின்), விளங்காநின்ற பம்பரங்கள் ஆடும்பிள்ளைக ளெறிய விரைவாக நெருங்கி மேலே போதலையொத்தன.—எ-று. (ருரு)

மீப்படு வியன்முகில் கிழித்து விண்மிசை
மாப்பெருஞ் சிகரிகள் வல்லை செல்வன
நீப்பருங் ககனமா னெடுங்க துப்பினிற்
சீப்பிடு கின்றதோர் செய்கை போலுமால்.

(இ-ள்.) மேலேதங்கிக்கிடக்கிற பெரியமேகசாலங்களைக் கிழித்துக்கொண்டு ஆகாயத்தில் அம்மேகமண்டலத்திற்கும் மேலே அழகிய பெரியகோபுரங்கள் விரைவாகச் செல்லுந்தன்மை (எதுபோலுமெனின்), நீக்குதற்கரிய வானமென்னும் பெண்ணானவள் தன்னுடைய நீண்டகூந்தலிலே சீப்பிட்டுவாருகின்ற தன்மையை ஒத்தது.—எ-று.

பயனுறு பழுமரப் பைம்பொற் காமர்கா
வயனெறி தந்திட வகல்விண் செல்வன
நயனறு மவுணனூர் நணிய கற்பகம
வியனுல கிருந்திட மீள்வ போலவே.

(இ-ள்.) பழுத்திருக்கிற பிரயோசனத்தினையுடைய அழகிய பசிய பிரகாசமானசோலையானது, வீரவாகுதேவரால் எடுத்து மேலே எறியப்பட்ட அகலமான ஆகாயத்தின்வழியாகச் செல்வன (எதுபோலுமெனின்), சூரபன்மனது நல்ல மகேந்திரபுரியில் வந்திருந்தகற்பகச்சோலை தமது பழையசொர்க்கத்திற் சென்றிருக்கும்பொருட்டு திரும்பச்செல்லுதலை ஒத்தன.—எ-று. (ருகு)

ஐயன தொற்றுவ னள்ளி வீசிய
செய்யபல் பொருள்களுஞ் செறிந்து சேணெலாங்
கொய்யுளை வயப்பரிக் கொடிஞ்சித் தேர்மிசை
வெய்யவன் செலவினை விலக்கு கின்றவே.

(இ-ள்.) சண்முகப்பெருமானது தூதுவரான வீரவாகுதேவர் வாரி எறிந்த செவ்விய பலபொருள்களும் வானத்திலெல்லாம் நெருங்கி, கொய்யப்பட்ட உளையென்னும் பேரிணையுடைய புறமயிரோடுகூடிய வெற்றிபொருந்திய குதிரைகள்கட்டிய மேன்மொட்டினையுடைய தேரின்மீது செல்லுகின்ற சூரியனது செல்லுகையைத் தடுக்கின்றது.—எ-று. (௫௬)

திருமிகு சூளிகை சிகர மாதிக
ணிரல்பட வேகியே நிரந்த பல்வகைப்
பருமணி யெரிசுடர் பரப்பி வான்பட
ரிரவிதன் கதிரையு மிகலி வென்றவே.

(இ-ள்.) அழகுமிக்க சூளிகைகளும், கோபுரமுதலானவைகளும் வரிசையாகச் சென்று பரவிய பலவிதமான பருத்தமணிகள், ஒளிபொருந்திய எரிகின்ற சுடரினை எவ்விடங்களிலும் பரவச்செய்து, ஆகாயவழியாகச்செல்லுகின்ற சூரியனது கிரணங்களையும் பகைத்துவென்றன.—எ-று. (௫௭)

மின்னவிர் சிகரிபொன் வேர மாதிக
ளென்னவும் வான்படர்ந் தெழாலின் விஞ்சைய
ருன்னுறு மோங்கலு முவண வைப்பெனும்
பொன்னெயில் வட்டமும் பூழி செய்தவே.

(இ-ள்.) ஒளிவிளங்குகின்ற கோபுரங்கள், பொன்மயமான வேரங்கள்முதலானவைகள் எல்லாம் மேலேசென்று நரம்பிட்டிசைத்துள்ள யாழினையுடைய கந்தருவர்கள் நினைக்கின்ற மேருமுதலியமலைகளையும், உயர்ந்த இடமென்று சொல்லப்படுகிற பொன்னுலியற்றப்பட்ட மதிலினையுடைய மேலுலகத்தையும் புழுதியாக்கின.—எ-று.
பொன்னெயில் வட்டம்-அருகனது ஆலயம் என்றுகூறினுமாம். (௫௮)

குன்றொடு சூளிகை கோபு ரம்பிற
வொன்றுட னொன்றுபட் டுரிஞ்சி யாயிடைத்
துன்றிய மணிதிசை தோறுஞ் சிந்துவ
மின்றிகழ் தாரகை விளிந்து வீழ்வபோல்.

(இ-ள்.) (வெற்றிபொருந்திய குமரக்கடவுள் தூதுவராகிய மலைபோன்ற திண்ணியதோள்களையுடைய வீரவாகுதேவர்) ஒளியொடுவிளங்குகின்ற நக்ஷத்திரங்கள்அழிந்துவிழுந்தாற்போல, மலைகளும், சூளிகைகளும், கோபுரங்களும் மற்றவைகளும் ஒன்றோடொன்று சேர்ந்து உரைந்து அவைகளிற்பொருந்தியுள்ள மணிகள் திசைகள்தோறுஞ் சிந்துகின்றன.—எ-று. (௫௯)

பொற்றைகள் சிகரகோ புரங்க டத்தமி
லெற்றுழிப் புகையென வெழுந்து பூழிகள்
சுற்றிய புலிங்கமுந் தோன்று கின்றன
வெற்றவெம் புயல்களு மின்னும் போலவே.

(இ-ள்.) சிறுமலைகளும் சிகரங்களையுடைய கோபுரங்களும் ஒன்றோடொன்று முட்டிக்கொள்ளும்பொழுது, வெறுமையான வெவ்விய மேகசாலங்களையும் மின்னல்களையும் புகையையும்போல புழுதிகளெழுந்து சுற்றின; தீப்பொறிகளுந் தோன்றுகின்றன.—எ-று. (௬0)

எழுயர் களிறனு னெறிந்த யாவையுஞ்
சூழுற வானிடைத் துவன்ற வெற்றலிற்
கேழுறு துண்டுகள் கெழுமிச் சிந்துவ
பூழியி னெடுமழை பொழிந்த தன்மைபோல்.

(இ-ள்.) ஏழிடங்களுயர்ந்த யானைபோல்பவராகிய வீரவாகுதேவராலெடுத்து எறியப்பட்ட பொருளெல்லாம் சுற்றிக்கொண்டு வானத்திலொன்றோடொன்று மோதுதலால், பூழியாகிய மண்மழைபெய்தாற்போல நிறம்பொருந்திய நுண்ணிய துகள்கள் நெருங்கிச் சிந்துகின்றன.—எ-று. (சக)

ஆரிய னெறிந்திய வணிகொண் மண்டபம்
வேரமொ டகன்பொழில் பிறவும் விண்ணுறீஇத்
தாரகை முதற்சுடர்த் தனுக்கள் சார்ந்திடச்
சோரியு மிடையிடை துளித்த தென்பவே.

(இ-ள்.) அறிவுடையவராகிய வீரவாகுதேவரொடுத்தெறிந்த அழகுபொருந்திய மண்டபங்களும் வேரங்களும் விசாலமானசோலைகளும் இன்னமுள்ளவைகளுமெல்லாம் ஆகாயத்தையடைந்து நக்ஷத்திரங்கள் முதலிய ஒளிபொருந்திய கிரகங்களினுடலங்களிலேபட அதனால் இடையே இடையே இரத்தத்தையுஞ் சிந்தின என்றுகூறுவார்கள்.

புந்தியி லான்மகம் புகுந்த தீமையா
லிந்திர னாதியோர் யாருஞ் சூரனா
னொந்தன ரவன்கர் வளமு நோவுற
வந்தரத் தவரையு மலக்கண் செய்தவே.

(இ-ள்.) புத்தியில்லாத தக்ஷனது யாகசாலையிற் புகுந்திருந்தபாவத்தால் இந்திரன்முதலான எல்லாரும் சூரபன்மனால் வருந்தினார்கள்; அதுவும்போதாமல் அச்சூரபன்மனது கோபுரமண்டபமுதலான சம்பத்துக்களும் வீரவாகுதேவராலெடுத்தெறியப்பட்டபோது அவை மேலேசென்று அங்கிருந்த தேவர்களையுமிடித்துத் துன்பப்படுத்தின.

வெற்புறழ் மொய்ம்பினன் விடுத்த சூளிகை
பற்பல பொருந்தலும் பட்ட வன்னிபோ
யெற்படு கதிருடை யிரவி பச்சைமாப்
பொற்புறு கொய்யுளை பூழி செய்ததே.

(இ-ள்.) மலையையொத்த தோளிணையுடைய வீரவாகுதேவரால் எடுத்து மேலுக்கெறியப்பட்ட சூளிகைகள் அனேகம் ஒன்றின்பின் ஒன்றாகச்சென்று முட்டுதலாலுண்டான தீயானது சென்று, ஒளிபொருந்தியகிரணங்களையுடைய சூரியனது பச்சைநிறம்பொருந்திய குதிரைகளின் அழகுபொருந்திய புறமயிர்களை எரித்துச் சாம்பராக்கியது.

பொன்னவிர் சிகரகோ புரங்க ளாதிய
துன்னிய தாக்கலிற் றோன்றித் தீப்பொறி
யின்னுயிர் வழங்கிய வெல்லை யெங்கணும்
வன்னிபெய் மழையென மயங்கி வீழ்பவே.

(இ-ள். வீரவாகுதேவரா லெடுத்தெறியப்பட்ட பொன்மயமான சிகரங்களும் கோபுரங்களும் ஆகியஇவைகள் நெருங்கி முட்டிக்கொள்ளுதலால் தீப்பொறி உண்டாகி, இனிய உயிர்வருக்கங்கள் சஞ்சரிக்கின்ற திக்குக்களிலெல்லாம் தீமழையென்று கூறும்படி ஒன்றோடொன்றுகலந்துவீழாநிற்கும்.—எ-று. (சரு)

வழுவுறு மவுணர்கோன் வளங்கள் யாவையுங்
கெழுதகு விசும்பினைக் கிழித்துச் சேறலி
னெழிலிகள் வயிறுடைந் திரங்கி யாற்றலா
தழுதென வுலகெலா மறல்சிந் துற்றவே.

(இ-ள்.) தவறுதலையுடைய அசுரமன்னவனாகிய சூரபன்மனது செல்வங்கள் எல்லாம் விளங்குகின்ற நல்ல ஆகாயத்தைப் பிளந்துகொண்டு மேலேசெல்லுதலால்

மேகங்கள் வயிறுடைந்து இடிபொறுக்க முடியாமல் அழுதாற்போல இரைந்துகொண்டு உலகமுழுமையிலும் நீரைச்சிந்தின.—எ-று. (சுசு)

வேறு.

ஏசிலா வறிவன் விட்ட வின்னபல் வெறுக்கை யாவு
மாசகல் விசும்பி னேகி மதிமுடி யருள்பெற் றுள்ள
கோசிகன் றுறக்க முய்த்த கொற்றவன் றவறி யென்ன
வாசுற மீண்டு ஞாலத் தகிலமும் வீழ்ந்த வன்றே.

(இ-ள்.) குற்றமில்லாத ஞானியாகிய வீரவாகுதேவரா லெடுத்தெறியப்பட்ட இப்படிப்பட்ட பலவிதமான மண்டபமுதலான செல்வங்களெல்லாம் களங்கமில்லாத ஆகாயத்திற்சென்று, சந்திரசேகரராகிய சிவபெருமானது திருவருளைப்பெற்றவராகிய விசுவாமித்திரவிருடியால் சுவர்க்கத்துக்கனுப்பப்பட்ட திரிசங்குமன்னன்(தேவர்களால் கீழேதள்ளப்பட்டுத்) தவறிக்கீழுலகை நோக்கிவந்தாற்போல, மேலேசென்ற எல்லாம் குற்றமுண்டாகும்படி பூமியில் வந்துவிழுந்தன.—எ-று. (சஎ)

படிதனிற் றிசையின் பாலிற் பௌவத்திற் பழுவந் தன்னிற்
றடவரை தன்னி லின்ன தகையன பிறவிற் சூர
னுடையபல் வளங்க ளெல்லா முரற்றியே வீழ வாண்டு
மிடைதரு முயிரின் பொம்மல் வெருவிவீழ்ந் திரித லுற்ற.

(இ-ள்.) பூமியிலும், திக்குகளினிடத்திலும், கடலிலும், காட்டிலும், பெரிய மலைகளிலும் இவைபோன்ற மற்றையவைகளிலும், சூரபன்மனதாகிய பலவிதமான மண்டபாதிசெல்வங்கள் இரைந்துகொண்டு விழுதலும், இவைகள் விழுமிடத்திலுள்ள உயிர்க்கூட்டங்கள் பயந்துவிழுந்து ஓடின.—எ-று. (சஅ)

அலைந்தது பரிதி யோங்க லதிர்ந்தது மேருச் சையங்
குலைந்தது சூழுங் குன்றங் குலுங்கிய வசல மேழுங்
கலைந்தது நாகர் வைப்புங் கலங்கிய கடலும் பாரு
முலைந்தன வுயிர்கண் முற்று மோடின திசையின் யானை.

(இ-ள்.) சூரியனது உதயத்திற்கும் அத்தமனத்திற்கும் இடமாகவுள்ள உதயகிரியும் அத்தகிரியும் அலைந்தன. மஹாமேருவென்னும் (அசையாத) மலையும் நடுங்கியது. அம்மேருவைச் சூழ்ந்துநிற்கிற நாலுமலைகளும் அசைந்தன. இவையன்றி, சத்தகுலாசலங்களுங்குலைந்தன. சொர்க்கமுதலிய தேவரிடங்களும் கலைந்தன. கடலும் பூமியும் கலங்கின. உயிர்களெல்லாம் (பதனழிந்து) வருந்தின. திக்குகளிலேயுள்ளயானைகளோடின.—எ-று. (சகூ)

தண்படு தொடலை மார்பன் றுனெறிந் தவற்றிற் பல்வே
றெண்புவி முழுதுஞ் சிந்திற் றெழிந்தன வுலப்பி லாத
வெண்பதி னுயி ரப்பேர் யோசனை யெல்லைத் தாகிக்
கண்படு சூர னூரிற் கல்லெனு வீழ்ந்த மாதோ.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய மலர்மாலையணிந்த மார்பினையுடையவீரவாகுதேவர் எடுத்தெறிந்தவைகளில், அநேகம் ஒள்ளிய உலகையெல்லாமழித்தன. மற்றையவைகளெல்லாம் கெடுதலில்லாத எண்பதினுயிரயோசனை தூரமுள்ளதாய்க் காணப்படுகிற இடமகன்ற சூரபன்மனது மகேந்திரபுரியில் கல்லென்னும் ஒலியொடுவிழுந்தன.

முடிந்திட லரிய சூரன் மொய்வள மவனூர் முற்றுந்
தடிந்தெறி யுருமே றென்னத் தணப்பற வீழ்த லோடு

மிடிந்தன மாட வீதி யாவையுங் கடிகா விற்ற
பொடிந்தன சிகரி யாதி புரிசைகண் மறிந்து மாண்ட.

(இ-ள்.) சாதலென்பதில்லையென்று கூறும்வண்ணம் நீடூழிகாலமாக வாழுகின்ற சூரபன்மனது நெருங்கிய செல்வங்கள், அவனதூராகிய மகேந்திரபுரிமுற்றிலும் அழித்தெறிகின்ற இடியேற்றைப்போல தடையில்லாமல் விழுதலும், அதனால் மாடவீதிகளெல்லாம் இடிந்தன. மணம்பொருந்திய சோலைகளுமழிந்தன. கோபுரங்கள் முதலானவைகளும்பொடிந்தன. மதில்களும் விழுந்தழிந்தன.—எ-று. (ருக)

மண்டபஞ் சிகரி வேர மணிமதின் மாட கூட
மெண்டகு பொதியின் முற்று மிடிபட வெழுபொற் பூழி
விண்டொடு திசைபார் யாண்டும் வெறுக்கையின் வடிவ மாக்கி
யண்டர்த முலகீ தென்றே யறிகுறு வகைசெய் தன்றே.

(இ-ள்.) மண்டபங்களும், கோபுரங்களும், வேரங்களும், அழகியமதில்களும், மாடங்களும், கூடங்களும் எண்ணத்தக்க பொதுவான சாவடிகளும் எல்லாம் இடிபடுதலினால் உண்டாகி எழுந்த பொன்மயமான புழுதி, ஆகாயத்தை அளாவிய திக்குகளையும் பூமியையும் மற்று எவ்விடங்களையும் பொன்னுருவமாகச்செய்து, தேவர்களதுலகம் இதுவென்று அறியாதிருக்கும்வண்ணஞ்செய்தது.—எ-று. (ருஉ)

புடையகல் பொன்செய் மூதூர் பொள்ளெனத் தகர்ந்து வீழ
மிடைதரு வீதி முற்று மேயின சனங்கள் பூசல்
கடைவரு நாள தெல்லைக் ககனமூ தண்ட கூட
முடைதனு முடியு மாவி யரற்றுமா றொத்த தன்றே.

(இ-ள்.) பொன்னாற்செய்யப்பட்டுப் பக்கங்களிலே அகலமான அந்தப்பழய நகரமானது விரைவாக பொடிந்துவிழுதலும், அவ்வீதிகள்முழுமையிலும் உள்ள சனங்கள் கூச்சலிட ஆரம்பித்தார்கள். (அது எதுபோலவென்னில்), உலகமழியுநாளான பிரளய காலத்தில் ஆகாயத்திலுள்ள பெரிய அண்டகூடமானது உடைந்துவிழுதலும் அப்பொழுது இறக்கின்ற உயிர்கள் புலம்புதலையொத்தது.—எ-று. (ருங)

வேறு.

நாக முந்து நறுநிழன் மாதவி
நாக முந்து நறுநிழற் பொற்கணி
சேக ரம்பல சிந்திடு காழுடைச்
சேக ரம்பல வோடு சிதைந்தவே.

(இ-ள்.) சுவர்க்கலோகபரியந்தம் உயர்ந்துள்ள நல்ல நிழலோடுகூடிய குருக்கத்திகளும், குரங்குகள் மேலேறிச்செல்லுகின்ற நல்ல ஒளியோடு விளங்குகிற வேங்கை மரங்களும், பலதலைகளொடிந்த வயிரம்பொருந்திய கூட்டமான பலாமரங்களுடனே அழிந்தன.—எ-று. (ருச)

கோட ரங்குல வுற்றிட வான்றொடுங்
கோட ரங்குல வுற்றிடு தண்டலைக்
கோட ரங்குலங் கோலஞ்செய் பொன்வரைக்
கோட ரங்குல வுற்றிறை கொண்டவே.

(இ-ள்.) கிளைகள் விளங்கும்படி வளர்ந்து வானத்தைத்தொட்டுள்ள கிரகங்களாற் கிடைக்கப்பட்டுள்ள அழகொடு விளங்குகின்ற சோலையிலுள்ள குரங்குக்கூட்டங்கள், அழகுபொருந்திய மகமேருமலையின் சிகரத்தை இடமாகக்கொண்டுலாவும்படி சிதறின.—எ-று. (ருரு)

ஓடும் வாவியின் மீனின மோங்குபுள்
ளோடும் வாவிவிண் ணுற்றிட வீதியின்
மாட மாலை வரிசையின் மல்கிய
மாட மாலை மறிந்திடி பட்டதே.

(இ-ள்.) குளங்களிலோடாநின்ற மீன்கூட்டங்கள், மேலேபறக்கிற பட்சிகளுடனே பறந்து ஆகாயத்திலே செல்லும்வண்ணம், தெருப்புறங்களின் பக்கங்களில் அழகிய (கட்டப்பட்ட) மாலைவரிசைகளோடு நெருங்கி நின்றுள்ள வரிசையான மாளிகைகள்விழுந்தழிந்தன.—எ-று. (௬௬)

அண்ட ரண்டரு மங்கர் மாண்டன
வண்ட ரண்ட மளவிடு சூளிகை
மண்ட பம்மதின் மாடந் தரித்தயர்
மண்ட பம்மதின் மாதவம் யாவதே.

(இ-ள்.) நெருங்கிய காவலினையுடைய அம்மகேந்திராபுரி அழிந்தன, தேவருலகத்தை அளக்கிற சூளிகைகளையும் மண்டபங்களையும் மதில்களையும், மாடங்களையும் சுமந்துகொண்டு வருந்துகிறமண்டபங்களது மாடங்களதும் மஹத்தான தவம் என்ன?

வீரவாகுதேவரெடுத்தெறிந்த மண்டபங்களும் மாளிகைகளும் மதில்களின்மீதும் மண்டபங்களின்மீது விழுந்துகிடப்பதை, அம்மதிலும் மண்டபமும் சுமப்பது எத்தவத்தாலென்று வியந்தனர். (௬௭)

பூவை யன்ன மணிமயில் பொற்புறு
பூவை யன்ன மணிமயில் பொற்புரு
வாவி யோடைவண் டான மழிந்திட
வாவி யோடைவண் டான மழியுமால்.

(இ-ள்.) நாகணவாய்கள் அன்னங்கள் அழகிய மயில்கள் அழகுபொருந்திய பூவையொத்த களங்கமில்லாதபொன்னம்புருக்கள் என்னும் இவைகளினுயிர்களுடனே அவைகளின் இருப்பிடங்களும் அழிய, வாவிகளும், ஓடைகளும், பெருநாரைகளும் அழியாநிற்கும்.—எ-று. (௬௮)

மொய்யு டைத்தறி மோதித் தளைபறீஇ
மையு டைப்பெரு மால்கரி சோரிநீர்
மெய்யி டத்திக விண்முகி லச்சுறக்
கையெ டுத்துக் கதறி யுடைந்தவே.

(இ-ள்.) வலிமையான கட்டுத்தறியை உடைத்து, சங்கிலியையறுத்து, மயக்கத்தினையுடைய பெரியயானைகள் இரத்தவெள்ளம் உடம்பினின்றும் ஒழுக, வானத்திலுள்ள மேகமும் அஞ்சும்படி தும்பிக்கையை மேலே உயர்த்திக்கொண்டு பிளிறுதலுடையதாய் ஓடிப்போயின.—எ-று. (௬௯)

ஈடு சான்ற வெருத்த முரிந்திட
நீடு பூறுத னெக்குறக் கிம்புரிக்
கோடு சிந்தக் குருதியு குத்தரோ
வோடி வீழ்வ வுவாக்கள ரற்றியே.

(இ-ள்.) வீரவாகுதேவரெடுத்தெறிந்த மண்டபமாதிகள் விழுந்து ஊரழிதலால், ஒப்பில்லாத முதுகொடிய, நீண்ட அழகிய நெற்றிநசுங்க, பூண்கட்டப்பட்டுள்ள கொம்புகள் உதிர இரத்தங்கள் ஒழுகவிட்டுக்கொண்டு யானைகள் கூச்சலிட்டுக்கொண்டு ஓடிவிழுகின்றன.—எ-று. (௭௦)

கார்கொள் சிந்துரங் காயத் திடையிடைச்
சோரி சோர்தரத் தோன்றுவ வீற்றினின்
மேரு வாதி விலங்கலை மெய்க்கனல்
சாரும் வெம்புகை தன்னொடுஞ் சூழ்ந்தபோல்.

(இ-ள்). வீரவாகுதேவரால் அவ்வூரழிந்தவப்பொழுது, பிரளயகாலத்தில் மகாமேருமுதலிய மலைகளை உண்மையான பிரளயகாலாக்கினிபொருந்திய வெவ்வியபுகையுடனே சூழ்ந்துகொண்டாற்போல, கருநிறம்பொருந்தியயானைகள் தமதுடலின் இடையே இடையே இரத்தமொழுகக் காணப்படுகின்றன.—எ-று. (சுக)

கொடிக ளிற்ற கொடிஞ்சி முரிந்தன
விடைகொள் பீடிகை யெல்லைக ணெக்கன
வடிகொள் சில்லியு மாருஞ் சிதைந்தன
பொடிய தாகிப் புரண்டன தேர்களே.

(இ-ள்) வீரவாகுதேவரா லவ்வூரழிந்தவப்பொழுது, கொடிகளறுந்தன; மேன்மொட்டுடைந்தன ; விசாலமான பீடக்கூட்டங்கள் அழிந்தன ; வடிக்கப்பட்ட சில்லுகளும் ஆர்களும் அழிந்தன. இவையன்றித் தேர்களும் பொடிகளாகிப்புரண்டன.—எ-று.

பந்தி தோறும் பராவிய வைங்கதிக்
கந்து கங்கள் கலங்கி நெரிந்திட
நொந்து மேனி நொறில்வரு செம்புனல்
சிந்தி யோடச் சிதறிய திக்கெலாம்.

(இ-ள்) இலாயங்கள்தோறும் பரவிநின்ற பஞ்சகதிகளையுடைய குதிரைகள் கலங்கி, நெரிய உடல்வருந்தி வேகமாகவருகிற இரத்தமானது சிந்தி ஒழுகும்வண்ணம் திக்குகளிலெல்லாம் சிதறின.—எ-று. (சுரு)

சிதவல் கொண்டிடு செம்மயிர்க் கொய்யுளை
மதுகை வெம்பரி வாய்களின் வீழ்தரு
முதிர வாரி யொலிகடற் புக்கதா
விதுகொ லோவட வைக்கன லென்னவே.

(இ-ள்) சிதறிக்கிடக்கின்ற செந்நிறம்பொருந்திய புறமயிரினையுடைய வெற்றியும் வேகமும்பொருந்திய குதிரைகளின் வாய்களினின்றும் விழுகின்ற இரத்தவெள்ளமானது, சத்தத்தோடுகூடியகடலை இதுதானோ வடவாக்கினி என்று கண்டவர்கள் கூறும்வண்ணம் அடைந்தது. (சுச)

காள வெங்கரிக் காலின் வயப்பரித்
தாளி னூடகப் பட்டுத் தனைபுகா
மூளை சிந்த முழுதுடல் பூழியால்
மாளு கின்றனர் மாநக ரோர்சிலர்.

(இ-ள்) கரியகொடிய யானைகளினதும் காற்றைப்போலப் போகின்ற வெற்றிக்குதிரைகளினதும் காலுக்குள் அகப்பட்டு பூமிக்குட்புகுந்து மண்டைச்சோறுகள் சிதற உடல்முழுமையும் புழுதிபோலாய் அவ்வூரிலுள்ள சிலஅசுரர்கள் இறக்கின்றார்கள்.

ஆளி மொய்ம்புடை யண்ணன்முன் வீசின
நீளு மாநகர் ஞெள்ளலின் வீழ்தலுந்
தோளி ழந்து சுவன்முரிந் தொய்யெனத்
தாளி ழந்து தரங்கமுற் றார்சிலர்.

(இ-ள்.) யாளிபோன்ற திடகாத்திரரான வீரவாகுதேவர் முன்னே எடுத்தெறிந்தவைகள், நீளம்பொருந்திய அவ்வூரின்தெருவிலேவிழுதலும், தோளும் ஒடிந்து, பிடரியும் முரிந்து, தாள்களும் விரைவாக இழந்து சிலஅசுரர்கள் துன்பமடைந்தார்கள்.

பொற்றை யன்ன பொலன்மணி மாளிகை
யிற்று வீழ்தலு மென்னிது வென்றெழீஇ
வெற்ற வெள்ளிடை மேவுதன் முன்னியே
முற்றம் வந்திடு முன்மறிந் தார்சிலர்.

(இ-ள்.) மலைபோன்றபொன்னாலாகிய அழகியமணிகளிட்டிழைத்துள்ள மாளிகைகள் உடைந்துவிழுதலும், இதென்னசங்கதியென்று எழுந்து மைதானமென்னும்வெளியிடத்திற்குவருதற்கு முற்றத்தின்வரைக்கும் வருதற்குமுன்னே இறந்தார்கள்சிலர்.

ஊடு மைந்தரு மொண்டொடி மாதரு
மாட மோடு மறிந்தனர் தம்முடல்
வீடி விண்மிசை வேற்றுரு வெய்தியே
கூடி யேவழிக் கொண்டன ரோர்சிலர்.

(இ-ள்.) நாயகர்களோடு பிணங்குகிற ஒள்ளியவளையலணிந்தகைகளையுடைய நாயகிமார்களும்மாளிகைகளுடனே வீழ்ந்தவர்களாய் தமதுடலையொழித்து வேறுருவத்துடனே முன்னிறந்துசென்ற நாயகர்களை அடைந்து கலந்தவர்களாக சிலர் பிரயாணமானார்கள்.—எ-று. (சுஅ)

உவம மில்லவ னேச்சின வெங்கணு
மவதி யின்றிப் பொழியவ வைதெரீஇத்
தவறி லாதுசெய் தாழ்வரை கீண்டெடாக்
கவிகை யாத்தமைக் காத்துநிற் பார்சிலர்.

(இ-ள்.) ஒப்பற்ற வீரவாகுதேவரா லெடுத்தெறியப்பட்டவைகள் எவ்விடங்களிலும் அளவில்லாமல்சிதறுதலும், அவைகளையறிந்து தவறுதலில்லாமல்செய்யப்பட்ட தாழ்ந்தமலைகளைத்தோண்டி யெடுத்து குடையாகப்பிடித்துத் தங்களைக் காவல்செய்து கொண்டுநிற்பார்கள் சிலர்.—எ-று. (சுகூ)

விறற்கொள் வாகு விடுத்தன கல்லக
வுறைப்பின் வீழ வொதுங்கிட மின்மையிற்
சிறக்கு மாநகர்ச் செந்தரைக் கொண்டகீ
ழுறைக்கு ளேபுக் கலமரு வார்சிலர்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வீரவாகுதேவரெடுத்தெறிந்தனவாகிய கன்மலைகள் உறைப்பாகவிழுதலால், ஒதுங்குதற்கு இடம் இன்மையால், சிறப்புப்பொருந்திய அவ்வூரின்பெரியநிலவறைக்குட்புகுந்து தடுமாறுவார்கள் சிலர்.—எ-று. (எ0)

மாதர் தங்களை மக்களை யன்னையைத்
தாதை மாரைத் தமதுகைப் பற்றியே
யேதின் மாட மிகந்துகச் சோரிநீர்
வீதி போந்து வெருவிநிற் பார்சிலர்.

(இ-ள்.) மாதர்களையும் மக்களையும் தாயையும் தந்தையர்களையும் தங்கள்கைகளிலே பிடித்துக்கொண்டு, அயலிலுள்ளமாளிகைகளை விட்டு, இரத்தம் ஒழுக வீதியையடைந்து பயந்துநிற்பார்கள் சிலர்.—எ-று. (எக)

கருவி வானினுங் கண்ணகன் றிக்கினுந்
தரணி தன்னினுந் தாவிலன் வீசிய

திருவ ளங்கள் செறிந்தன வீழ்தலும்
வெருவிப் போய்க்கடல் வீழ்ந்தொளிப் பார்சிலர்.

(இ-ள்.) கூட்டமான வானத்திலும் இடமகன்ற திக்குகளிலும் பூமியிலும்கெடாத வீரவாகுதேவரெறிந்த அழகிய செல்வங்கள்நெருங்கி விழுதலும், பயந்துசென்று கடலில்விழுந்து ஒளிப்பார்கள் சிலர்.—எ-று. (எஉ)

கிழிந்த சென்னியிற் கேழ்படு செம்புனல்
கழிந்து தோன்றவுங் கண்டன னையுறப்
பொழிந்து மெய்ப்புறம் போர்த்தலுந் தேற்றியே
யழிந்தி ரங்குற வாகுலிப் பார்சிலர்.

(இ-ள்.) உடைந்ததலையினின்றும் நிறம்விளங்குகின்ற இரத்தம் ஒழுகிக்காணப்படவும், அதனைக்கண்டுள்ளவர்கள் இதென்னென்று சந்தேகங்கொண்டுநிற்கவும், பின்னும் அது உடம்பிலெல்லாம் மூடிக்கொள்ளுதலும் இன்னதென்றுணர்ந்து நிலைகுலைந்து விம்மவண்ணம் துக்கப்படுவார்கள் சிலர்.—எ-று. (எஙு)

ஆடன் மொய்ம்பின னார்த்துமுன் வீசிய
மாட வீதி வளநக ரெங்கணு
நீட வீழ்தலு நிற்றலை யஞ்சியே
யோடி யூறுற் றுயிர்துறப் பார்சிலர்.

(இ-ள்.) வெற்றியினையுடைய வீரவாகுதேவர் ஆரவாரித்தெறிந்தவைகள், மாடங்களோடுகூடிய வீதிகளையுடைய அவ்வளப்பம்பொருந்திய ஊரிலெவ்விடங்களிலும், முற்றிலும் விழுதலும், அவ்விடத்தில் நிற்றற்குப்பயந்து ஓடிக் காயமடைந்து உயிரை விடுவார்கள் சிலர்.—எ-று. (எச)

திங்கள் சூடி திருமகன் விட்டன
வெங்கும் வீழ மிறப்பினை நோக்கியே
யங்கி வெங்கணை தொட்டறுத் தன்னவை
தங்க ளாருயிர் தாங்கிநிற் பார்சிலர்.

(இ-ள்.) சந்திரசேகரனாகிய சிவபெருமானது திருப்புதல்வராகிய வீரவாகுதேவரொடுத்தெறிந்தவைகள் எவ்விடங்களிலும் விழுகின்றமிகுதியைநோக்கி உஷ்ணத்தினையுடைய அக்கினியாஸ்திரத்தை விட்டு அவைகளை உடைத்துத் தங்களரியவுயிரை சுமந்துநிற்பார்கள் சிலர்.—எ-று. (எரு)

மையன் மாதரு மைந்தரு மாவியும்
பொய்யில் புந்தியு மொன்றிப் புணர்தலுஞ்
செய்ய மாடஞ் சிகரமோ டேவிழ
மெய்யு மொன்றி விளிந்திடு வார்சிலர்.

(இ-ள்.) காமத்தினையுடைய வாலிபர்களும் மாதர்களும் உயிரும் மனமும் ஒன்றாகக்கலந்து புணர்தலும், அவர்கள்மீது செவ்விய ஒருமாளிகை சிகரத்துடனே விழுதலும் உயிரொன்றான தன்றி உடலும் ஒன்றாகிச் சிலர் இறக்கின்றார்கள்.—எ-று. (எசு)

அந்தண் மாடத் தறிவன் விடுத்தன
வந்து வீழ மறிந்துரு மேறெனச்
சிந்த வேயுகு செம்பொறி மெய்ப்பட
வெந்து சின்னம் விரவுறு வார்சிலர்.

(இ-ள்.) ஞானியாகிய வீரவாகுதேவரொடுத்தெறிந்தவைகள், அழகியகுளிர்ச்சியினையுடைய மாளிகையின்மீது வந்துவிழுதலும், அது உடைந்து ஆணிடிவிழுந்தாற்

போல விழுந்து உடைதலும், அதிலுண்டான தீப்பொறி உடம்பிற்பட அதனால் உடல் வெந்து அடையாளமான காயங்களை அடைகின்றார்கள் சிலர்.—எ-று. (எஎ)

வரங்கொள் வீர மகேந்திரத் தின்னணந்
தரங்க மெய்திச் சனங்களெல் லாமிரீஇ
யுரங்கள் சிந்தி யழிந்துழி யொல்லென
விரங்கு மோதை யெழுகட லுண்டதே.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய வீரமகேந்திரத்தில் இவ்வண்ணம் இக்கட்டுண்டாய் சனங்களெல்லாம் விலகியோடித் தன்னிலைமைகெட்டு அழியுமிடத்தில் ஒவென்று இரைந்த ஓசையானது எழுகடலோசையையும் அடக்கிவிட்டது.—எ-று. (எஅ)

மன்றி னிற்கரி பொய்த்து மனுநெறி
கொன்று வாழுங் கொடியர்தம் மில்லெனத்
துன்று மாடத் தொகைவெள் ளிடையதாய்ப்
பொன்றி வீழ்ந்தன புல்லென வாகியே.

(இ-ள்.) சபையிலே பொய்சாக்ஷி சொல்லி மநுநீதிக்குமாறாக நடந்துவாழுகிற பக்ஷபாதகர்களது வீட்டைப்போல, நெருங்கி இருந்தமாளிகைவரிசைகள் அழிந்து சமவெளியாய் புற்கென்றாகி வீழ்ந்தன.—எ-று (எகூ)

நீறு பட்ட நெடுநக ரெங்கணு
மூறு பட்ட வுயிர்கடஞ் சோரிநீ
ராறு பட்டிட வங்கவை யோடளாய்ச்
சேறு பட்டன செக்கர்விண் போலவே.

(இ-ள்.) சாம்பரான பெரிய அவ்வூரானது, எவ்விடங்களிலும் காயமடைந்த உயிர்களின் இரத்தவெள்ளம் ஆறாகிச்செல்ல அவைகளோடுகலந்து செக்கர்வானத்தைப்போல சிவந்து சேறாயின.—எ-று. (அ௦)

மலிந்த சீர்த்தி மகேந்திர மாபுர
மலைந்து தொல்லைத் திருமுழு தற்றதான்
மெலிந்தி டும்படி விண்ணவர் தம்மெலா
நலிந்த வன்வள நன்றுறு மேகொலாம்.

(இ-ள்.) கீர்த்திமிகுந்த பெரியமகேந்திரபுரத்திலுள்ள பழைய செல்வங்களெல்லாம் அலைந்தழிந்தன; தேவர்களையெல்லாம் மெலியும்படி உபத்திரவஞ்செய்த சூரபன் மனது செல்வமும் நன்றாயிருக்குமோ? இரா.—எ-று. (அக)

நகரழிபடலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எஎ௦.

---

# சகத்திரவாகுகள்வதைப்படலம்.

---

எயின பான்மையி னிவன்மூதூர்
மாய்தரு மெல்லையின் வருகின்ற
வாயிர வாகுள வடல்வீரர்
மேயின தன்மை விளம்புற்றாம்.

(இ-ள்.) இவ்வீரவாகுதேவர் விட்டவேரகத்தால் அப்பெரியநகரமழிகின்ற சமயத்தில், ஆயிரங்கைகளையுடைய பலம்பொருந்திய வீரர்கள் அடைந்த தன்மையை அறைகின்றோம்.—எ-று. (க)

ஓல முடைக்கட லுமிழ்கின்ற
நீல விடத்தினை நிகர்மெய்யார்
மாலை யுடைப்பல வடவைத்தீக்
கோல மெனச்சிகை கொண்டுற்றார்.

(இ-ள்.) அவர்கள் ஓசையினையுடைய கடல்கக்கிய நீலநிறம்பொருந்திய விஷத்தினையொத்த உடலினையுடையவர்கள். பலவடவாக்கினிகளின் கொழுந்துகளின் வடிவங்களேயென்று சொல்லத்தக்க தலைரோமங்களையுடையவர்கள்.—எ-று. (உ)

தீங்க ளிருதிய திறன்மாக்க
டாங்குவை யோடு தலைப்பெய்தே
யாங்குள் சோரி யறுதீமப்
பாங்கர்க ளன்னதொர் பகுவாயார்.

(இ-ள்.) கொடிய யானைமுதலிய பலம்பொருந்திய மிருகங்களை கும்பலாக வாரி யுள்ளே இட்டு மெல்லுதலினால் நீங்காத இரத்தம்பொருந்தி மசானப்பிரதேசங்களைப்போலக் காணப்படுகின்ற பிளந்த வாய்களையுடையவர்கள்.—எ-று. (ங)

எல்லையி னேமிகள் யாவுந்தா
மொல்லொலி நீரி னுடைந்தென்னக்
கல்லுறை சிந்து கருங்கொண்மூச்
செல்லென வார்த்தனர் செல்கின்றார்.

(இ-ள்.) அளவற்றனவாகவுள்ள மலைகளெல்லாம் ஒல்லென்னும் ஓசையுடனுடைந்தாற்போலவும், கன்மழை சிந்துகின்ற கரிய மேகத்தைப்போலவும் ஆரவாரஞ் செய்துகொண்டு செல்லுகின்றவர்கள்.—எ-று. (ச)

வேறு.

மைவரு நீல வரைத்தொகை தாங்கு
மொய்வரு கின்ற முடிக்குழு வென்ன
வைவகை நூற்றி னமர்ந்தகல் வானைத்
தைவரு கின்ற தலைத்தொகை கொண்டார்.

(இ-ள்.) மேகந்தவழ்கின்ற நீலகிரிக்கூட்டங்கள் சுமந்துநிற்கின்ற பலம்பொருந்திய சிகரக்கூட்டங்களைப்போல ஐந்நூறென்னும் தொகையினைப்பொருந்தி பெரிய வாகாயத்தைத் தடவுகின்ற கூட்டமான தலையினையுடையவர்கள்.—எ-று. (ரு)

மராமர மானவை மாதிர மெங்கும்
பராவ விடுத்திடு பல்கவ டென்ன
விராவிய வங்கத மேவி விளங்கு
மொராயிர மாகிய வொண்புய முள்ளார்.

(இ-ள்.) மராமரங்கள் திக்குகளிலெல்லாம் பரவும் வண்ணம் விட்டுள்ள பலகிளைகளைப்போல் பொருந்திய தோள்வளைகள் தங்கி விளங்குகின்ற ஒரு ஆயிரமாகிய ஒள்ளிய புயங்களை யுடையவர்கள்.—எ-று. (சு)

எழுக்கொடு முத்தலை யெஃகம்வின் ஞஞ்சில்
கழுக்கடை சங்கொடு கப்பணம் வெவ்வாள்

மழுக்கதை சக்கரம் வச்சிர மாதி
விழுப்படை யாவும் விராவிய கையார்.

(இ-ள்.) எழுவும், வளைந்த திரிசூலமும், எஃகமும், வில்லும், கலப்பையும், கழுக்கடையும், சங்கும், கைவேலும், வெவ்விய வாளும், கண்டகோடரியும், கதையும், சக்கரமும், வச்சிரமும் முதலிய உயர்வுபொருந்திய ஆயுதங்களெல்லாம் உடைய கையினையுடையவர்கள்.—எ-று. (எ)

எண்டகு நேமிக ளேழு மளக்கர்
மண்டல மான்வு மன்னுயிர் யாவுங்
கொண்டிடி னுங்குறை வின்றி நிரம்பா
தண்டம தென்ன வகன்ற வயிற்றார்.

(இ-ள்.) எண்ணத்தக்க எழுகடல்களும், பெரும்புறக்கடலும், கடல்களாற் சூழப்பட்ட பூமியும் ஆகிய விவைகளில் நிலைபெற்றுள்ள எல்லாவுயிர்களையும் உட்கொண்டாலும் பூரணமாக நிரம்பாமல் அண்டத்தைப்போல அகலமான வயிற்றினையுடையவர்கள்.—எ-று. (அ)

விழுமிய பன்றலை வெம்பணி யேனைக்
குழுவொடு போற்றினர் கொண்டிற லாற்று
தழுதிட நாடிய தற்கயர் வார்போற்
கழல்க ளரற்று கழற்றுணை கொண்டார்.

(இ-ள்.) ஆச்சரியமான பல தலைகளை யுடைய வெவ்வியபாம்புகள் மற்றை யானைமுதலிய கூட்டங்களோடு பாதுகாப்பாக சுமந்துநிற்றற்கு ஆற்றாமல் அழுது வேற்றிடங்களைநாடி யதன்பொருட்டு வருந்துந்தன்மையினர்களைப்போல வீரவெண்டயங்கள் முழங்குகின்ற இரண்டுகால்களையுடையவர்கள்.—எ-று. (க)

இருபுய மோர்முக மெய்திய வானோ
னொருவனை வெல்ல வொராயிர ரானேம்
பொருவகை சென்றிடல் புன்மைய தென்னா
வருபழி யுன்னி மனந்தளர் கின்றார்.

(இ-ள்.) இரண்டுதோள்களையும் ஒரு முகத்தினையுமுடைய ஒரு தேவனை வெல்ல, ஐந்நூறு தலைகளையும் ஆயிரங்கைகளையுமுடைய ஆயிரம்பேர்களாகிய நாம்போர் செய்தலைக்குறித்துச் செல்லுகிறது இழிவான விஷயமேயென்று அதனால்வரும் பழியைநினைத்து மனத்தளர்ச்சியையடைபவர்கள்.—எ-று. (கo)

மாகர வான்முன் மாயையின் வந்தா
னாகையி னுவிவ னைதென வானிற்
போகுவ னுவிது பொய்யல வல்லே
யேகுமி னேகுமி னென்றுசெல் கின்றார்.

(இ-ள்.) இவன் மாயையினால் மகத்தான சோரத்தன்மையினாலே வந்தானாதலாலே விரைவாகவானத்தின்கண் மறைந்துவிடுவன்; இதுபொய்யல்ல; விரைந்து செல்லுங்கள் விரைந்துசெல்லுங்களென்று கூறிக்கொண்டு போகின்றவர்கள்.—எ-று. (கக)

மீளிகை யாலெறி மேதகு வேர
மாளிகை கோபுர மண்டபம் வீழ்வ
கூளிக ரன்னக ரங்கள்கொ டேற்றுத்
தூளிகள் செய்தனர் தூர்த்திடு கின்றார்.

(இ-ள்.) வீரவாகுதேவரது கையாலெறியப்பட்ட வுயர்வுபொருந்திய வேரங்களும் மாளிகைகளும் கோபுரங்களும் மண்டபங்களுமாகிய விவைகள் கீழேவிழுங்கால், கருநிறம்பொருந்தியவவ்வசுரர்கள் தங்கள்கைகளாற்பிடித்து புழுதியாகச்செய்து உதிர்க்கின்றார்கள்.—எ-று. (கஉ)

எய்யென மெய்யிடை யெங்கும் வியர்ப்பச்
செய்யன கண்வழி செந்தழல் சிந்த
வெய்ய வுயிர்ப்பெழ வேர்வுள மூள
வொய்யென வோடின ருற்றிடு கின்றார்.

(இ-ள்.) விரைவாக வுடன்முழுமையும் வெயர்வையுண்டாகவும், செய்யனவாகிய கண்களிற் சிவந்த தீப்பொறிகள் சிதறவும், கொடிய உஷ்ணசுவாச முண்டாகவும், வெயர்வையதிகரிக்கவும் விரைந்தோடிவருகின்றார்கள்.—எ-று. (க௩)

நாகர் தமக்கொர் நமன்றனை யன்னோ
ராகிய வாயிர ராயிர மொய்ம்பர்
வேகம தாகி விழுத்தகு வீர
வாகுவை யெய்தி மடங்கலி னார்த்தார்.

(இ-ள்.) தேவர்களுக்கொப்பற்ற எமனைப்போன்றவர்களும், ஆயிரந்தோள்களையுடையவர்களும், ஆயிரமென்னும் எண்ணுள்ளவர்களுமாகிய வவர்கள் வேகமாக ஓடிவந்து, புகழத்தக்க வீரவாகுதேவரை யடைந்து சிங்கத்தைப்போல கெர்ச்சித்தார்கள்.

ஆர்த்திடு மோதை யகன்செவி செல்லத்
தார்த்தொகை தூங்கு தடம்புய வீரன்
பார்த்தனன் மூவெயில் பண்டெரி செய்த
தீர்த்தனெ னச்சிறி தேநகை செய்தான்.

(இ-ள்.) ஆரவாரிக்கின்ற சத்தம் காதிற்கேட்கவும், மாலைவரிசைகள் தொங்குகின்ற பெரியதோள்களையுடைய வீரவாகுதேவர் திரும்பியவர்களைப்பார்த்து, முன்னுளில் திரிபுரங்களையெரித்த சிவபெருமானைப்போல சற்றே நகைத்தருளினர்.—எ-று.

மேனிமிர் மந்தர வெற்பென நின்றே
வானள வோங்கு மராமர மொன்றைத்
தேனினம் வான்றிசை சிந்திய நற்ற
வூன்முதிர் கைகொ டொசித்தனன் மன்னோ.

(இ-ள்.) மேலே உயர்ந்த மந்தரமலையைப்போல் நின்று சுவர்க்கத்தை யளாவிய ஒரு மராமரத்தை அதின்மொய்த்திருந்த வண்டுகள் ஆகாயத்திலும் திக்குகளிலும் சிதறி இரைச்சலிட அழுந்திய தசையினையுடையகையினால் ஒடித்தெடுத்தனர். எ-று.

அண்ட மிருண்டிட வாதவ ராளோர்
மிண்டிய பேரொளி வீந்திட வீரன்
வண்டழை துன்று மராமர மங்கை
கொண்டது பன்முறை கொட்புறல் செய்தான்.

(இ-ள்.) அண்ட மிருளவும், சூரியர்களின் நெருங்கிய பெரிய ஒளிகெடவும் வளப்பம்பொருந்திய தழைகள் நிரம்பியுள்ள மராமரத்தை வீரவாகுதேவர் அகங்கையில் கொண்டு அதனைப்பலதரம் சுழற்றினர்.—எ-று. (கஎ)

வேறு.

மாயிரு மருப்புள மராமர மிறுத்தே
தூயனம ராடன்முய றென்னிலமை நோக்கி

யாயிர மடுத்தபுய ராயிரரு மங்கண்
மூயினர்க ளண்ணலை முரட்படை சொரிந்தார்.

(இ-ள்.) மிகவும் பெரியகிளைகளையுடைய மராமரத்தையொடித்து வீரவாகுதேவர் போர்புரிதற்காரம்பிக்கின்ற பெரியநிலைமையைப்பார்த்து; அந்தசகத்திரவாகுக்களெல்லாம் அவ்விடத்திலொன்றுசேர்ந்து, அவர்மீது பலவிதமான பெரிய ஆயுதங்களைப் பிரயோகித்தார்கள்.—எ-று. (கஅ)

தொடுத்தனர்கள் வார்கணைக டொட்டனர்கள் வைவே
லெடுத்தபல தோமர மெறிந்தனர்க ளாலம்
விடுத்தனர்கண் முத்தலை வியன்சமுமு ளுய்த்தா
ரடற்குலிசம் வீசினர்க ளாழிக டெரந்தார்.

(இ-ள்.) நீண்ட அம்புகளையெய்தார்கள்; கூரியவேல்களைவிட்டார்கள்; கையிலெடுத்த பலதோமரங்களால் குத்தினார்கள்; கண்டகோடரிகளினால் வெட்டினார்கள்; மூன்றுதலைகளையுடைய பெரியகங்கபத்திரங்களைவிட்டார்கள்; வலிமைமிக்க வச்சிராயுதங்களினால் வீசினார்கள்; சக்கரங்களைச் சுழற்றி யெறிந்தார்கள்.—எ-று. (கக)

இப்பரிசி னுள்ளபடை யாவுமுறை தூங்கு
மைப்புயல்க ளென்னவளை வின்றிவிளை வாக
வொப்பரிய வீரன்மிசை யுய்த்திடலு மன்னோன்
றுப்பொடு மரந்தனி சுழற்றியட லுற்றான்.

(இ-ள்.) இவ்விதமாகத் தங்கள்கைகளிலுள்ள ஆயுதங்களையெல்லாம் வீரமொடு பொருந்திய கரியமேகங்களைப்போல அளவில்லாமல் விரைவாக ஸமானரஹிதரான வீரவாகுதேவர்மீது படும்படி விடுதலும், அவர் வலிமையுடன் கையிலுள்ள மராமரத்தையே சுழற்றி அவைகளை யழித்தனர்.—எ-று. (உ०)

விட்டபடை யாவையும் வெறுந்துகள வாகப்
பட்டிட மரங்கொடு பராகமவை செய்ய
வுட்டெளிவின் மானவ ரோராயிரரும் வீரற்
கிட்டினர் வளைந்தனர் கிளர்ந்தமர் முயன்றார்.

(இ-ள்.) அவர்கள்விட்ட ஆயுதங்களெல்லாம் வெறுவிய தூசாகும்படி மராமரத்தைக்கொண்டு புழுதியாகச்செய்தலும், மனமயக்கத்தினையுடைய அவ்வோராயிரம் வீரர்களும் வீரவாகுதேவரது அருகில்நெருங்கி அவரைவளைந்துகொண்டு ஊக்கத்துடன் போர்செய்தார்கள்.—எ-று. (உக)

ஒட்டியம ராடிய வொராயிரவர் தாமுங்
கெட்டிரிய மேருநிகர் கேழ்கிளர் புயத்தோன்
மட்டுநனை வார்சினை மரங்கொடு புடைத்தே
சட்டக மிறந்துபடு தன்மைபுரி குற்றான்.

(இ-ள்.) பற்றுதலோடு போர்புரிந்த அந்த ஆயிரம்வீரர்களும் கெட்டொழியும் வண்ணம்,மேருமலையைப்போலநிறம்விளங்குகின்ற வீரவாகுதேவர், தேனுமரும்பும்பொருந்திய மரக்கிளைகளைக்கொண்டேயடித்து, அவர்களுடலமழிந்தொழியும்படிசெய்தனர்.

செக்கர்புரை குஞ்சிகெழு சென்னிகள் கிழிந்தார்
நெக்கனர்க போலவகை நெற்றிபிள வுற்று
ரக்கநிரை சிந்தின ரலங்குகுழை யற்று
ருக்கனர்கள் பல்லெயி றுடைந்தனர்க டெண்டம்.

(இ-ள்.) செவ்வானம்போன்று விளங்குகின்ற செம்பட்டைரோமங்களையுடைய தலைகள் பிளவுற்றார்கள். கபோலங்களெல்லாம் நசுங்கினார்கள். நெற்றிகள் பிளப்புண்டார்கள். கண்வரிசைகள் சிதறினார்கள். விளங்குகின்ற காதறுபட்டார்கள். பலவகையான பற்கள் உதிர்ப்புண்டார்கள். மூக்குகள் உடைப்புண்டார்கள்.—எ-று. (உ௩)

வாய்நிரை பகிர்ந்தனர்கண் மாழைதிகழ் கண்ட
மானவு முரிந்தனர்க ளற்றனர்கள் பொற்றோ
ளூனமக லங்கைக ளொசிந்தனர் தசைந்தே
பீனமுறு மார்பிடை பிளந்தனர் தளர்ந்தார்.

(இ-ள்.) வாய்வரிசைகள் பிளவுண்டார்கள். பொன்னொடுவிளங்குகின்ற கழுத்துக்களும் முறிவுண்டார்கள். பிரகாசிக்கின்ற தோள்களறுப்புண்டார்கள். குற்றமற்ற அகங்கைகளொடிந்தார்கள். தசைந்துபருத்திருக்கின்றமார்பிடையிற் பிளப்புண்டார்கள். தளர்வடைந்தார்கள்.—எ-று. (உ௪)

உந்திகள் குடங்கரி னுடைந்துகுடர் யாவுஞ்
சிந்தினர் மருங்கெழில் சிதைந்தனர் புறங்கண்
முந்துதொட ரென்பொடு முரிந்தனர்கள் வாமஞ்
சந்துபொரு கின்றமுழந் தாளடிக ளற்றார்.

(இ-ள்.) வயிறுகள் குடமுடைந்தாற்போலுடைந்து குடலெல்லாம் சிந்தினார்கள். பக்கங்களி லழகு அழிந்தார்கள். முதுகுகளிற்பொருந்திய எலும்புகளோடுமுறிந்தார்கள். துடையும் சந்தொடுபொருந்திய முழந்தாளும் காலுமறுப்புண்டார்கள்.—எ-று.

வீந்தனர்க ளோர்சிலவர் வீழ்ந்துமிதி பட்டுத்
தேய்ந்தனர்க ளோர்சிலவர் செய்யகுடர் சிந்திச்
சாய்ந்தனர்க ளோர்சிலவர் தங்குருதி யாற்றுட்
டோய்ந்தனர்க ளோர்சிலர் துடித்தனர்கள் சில்லோர்.

(இ-ள்.) சிலர் இறந்தார்கள்; சிலர் விழுந்து மிதியுண்டு தேய்ந்தார்கள்; சிலர் செவ்விய குடர்கள் சிந்திச்சாய்ந்தார்கள்; வேறுசிலர் தமது இரத்தவாற்றுண்மூழ்கினார்கள்; சிலர் துடித்தார்கள்.—எ-று. (உ௬)

எறிந்திடு படைத்தொகுதி யேகுமுனம் வீழ்ந்து
மறிந்தனர்க ளோர்சிலவர் மாய்ந்துககனம்போய்ச்
செறிந்தனர்க ளோர்சிலர் சிதைந்துதலை போயு
முறிந்தவுடல் கொண்டமர் முயன்றனர்கள் சில்லோர்.

(இ-ள்.) சிலர் தம்மால் விடப்பட்டுள்ள ஆயுதக்கூட்டங்கள் செல்லுதற்கு முன்னே தாங்கள் வீழ்ந்திறந்தார்கள். வேறுசிலர் இறந்து (தேவர்களாய்)சொர்க்கத்திற் சென்று நெருங்கியிருந்தார்கள். சிலர் தலைகளழிந்தொழிந்தும் முண்டமாகிய வுடலுடன் போருக் கெத்தனித்தனர்.—எ-று. (உ௭)

ஏரகலும் வீரர்தமி யாக்கையிது வண்ணஞ்
சேரவிற வுற்றுடைய செவ்வியி னெழுந்த
சோரிநதி மாநகர் தொலைத்துவளன் வாரி
வாரிதி நிறைந்தவனி மீதினு மடுத்த.

(இ-ள்.) இவ்வண்ணமாக அழகற்ற சகத்திரவாகுக்கள் என்னும் வீரர்களது உடல்கள் அழிய, வீரவாகுதேவர் வெற்றியடைந்ததன்மையினாலுண்டான இரத்தவாறு னது அப்பெரிய நகரத்தையழித்து, அதிலுள்ளபெரிய செல்வங்களையெல்லா மபகரித்துக்கொண்டு பூமியிலும்வந்து நிரம்பின.—எ-று. (உ௮)

வேறு.

அறந்தெ ரிந்துணை ராண்டகை யுகன்மரம் புடைப்பக்
குறைந்த சென்னிவான் றிரிவன வெயிற்றொடு குலவிச்
செறிந்த தேவரோ டமிர்தொளித் துண்டவர் சென்னி
நிறைந்தி டாமதித் துணைகவர்ந் துலவுத னேரும்.

(இ-ள்.) தருமசாத்திரங்களைக் கற்றுணர்ந்த ஆண்டன்மையிற்சிறந்துள்ள வீரவாகுதேவர் பெரியமராமரத்தாலடிக்க அதனாற்றறிபட்டதலைகள் பற்களுடன்விளங்கி வானத்திலுலாவுவன (எதுபோலுமெனின்), நெருங்கியதேவர்களுடன்அமிர்தத்தையொளித்துண்டவர்களது தலைகள் இரண்டுகுறைமதிகளைக் கௌவிக்கொண்டுலவுதலையொக்கும்.

அடல்கொண் மொய்ம்பினன் மரம்புடைத் தலுஞ்சில வவுண
ருடல்சி னப்பரி முகத்தவர் தலைதுமிந் துதிர
நெடிதும் வாய்வழி சிந்தவீழ்ந் தனர்நெடுங் கடலுள்
வடவை மாமுக மங்கிகான் றிடுவதே மான.

(இ-ள்.) வீரவாகுதேவர் மராமரத்தாலடித்தலும், கோபத்துடன் போர்புரிந்த சிலகுதிரைமுகத்தினையுடைய அசுரர்களின் தலைகளறுப்புண்டுமிகவும் இரத்தம் வாயின்வழியொழுக, வடவாமுகாக்கினி அக்கினியைக் கக்குமென்று சொல்வதற்கொக்க பெரியகடலுக்குள் விழுந்தனர்.—எ-று. (௬௦)

வள்ளன் மாமரத் தண்டுகொண் டடித்தலும் வலியோர்
பிள்ளை மாமதி யெயிற்றணி சிந்திவிண் பெயர்ந்தே
யள்ளல் வேலையின் முறைமுறை வீழ்வன வதன்கட்
டுள்ளு மீன்கண முகண்டுவீழ் கின்றதோர் தொடர்பின்.

(இ-ள்.) வீரவாகுதேவர் மாமரக்கிளைகளைக்கொண்டு அடித்தவுடன், சகத்திரவாகுக்களின் இளம்பிறைபோன்ற பல்வரிசைகள் உடைந்து மேலேசென்று சேற்றினையுடைய கடலில், அதன்கண் துள்ளுகின்ற மீன்கூட்டங்கள் புரண்டுவிழுந்த தன்மையைப்போல வரிசை வரிசையாக விழுகின்றன.—எ-று. (௬௧)

வலிந்த வூழ்முறை யாவரோ கடந்தவர் மரத்தாற்
பொலந்த யங்குபூண் மார்பின னெற்றிடும் பொழுதிற்
கலந்து போர்செய்தா ரோர்சிலர் வாளொடு கரம்போய்த்
தொலைந்து ளார்செலு நெறியின்வீழ்ந் தவர்சிரந் துணிப்ப.

(இ-ள்.) பலமானவூழின்கிரமத்தை யாவர்கடந்தவர்கள்? மாமரத்தால் பொன்னொடுவிளங்குகின்ற ஆபரணமணிந்தமார்பினையுடைய வீரவாகுதேவர் அடிக்கும்பொழுதில், நெருங்கிநின்று போர்செய்தவர்களிற் சிலர் கைகள் வாளுட னறுப்புண்டு முன்னமே ஓடிச்செல்கின்றவர்களது மார்க்கத்திற்சென்று விழுந்து அவர்கள் தலைகளை யறுக்கின்றன.—எ-று. (௬௨)

இனைய பற்பல நிகழ்ந்திட வினையிலா வொருவன்
றினையின் வேலையி லாயிரம் புயமுடைத் திறலோ
ரனைவர் தம்மையும் பஃறுணி படுந்திற னட்டுத்
தனிமை தன்னொடு நின்றனன மர்க்களந் தன்னில்.

(இ-ள்.) இவ்வண்ணமாய்ப் பலவாச்சரியங்களுண்டாக வீரவாகுதேவர் தினையளவுபோழ்துக்குள் மகாபலசாலிகளான சகத்திரவாகுக ளனைவரையும் பலதுண்டுகளாகும்வண்ணம் அடித்துக்கொன்று தான் ஒருவராகவே போர்க்களத்தில் நின்றனர்.

**சகத்திரவாகுகள்வதைப்படலமுற்றிற்று.**

---

ஆக திருவிருத்தம் - அ௦௬.

# வச்சிரவாகுவதைப்படலம்.

கூடி யாரம ரியற்றினூர் தம்வலி குறைந்து
வீடி யாவிபோய் விளிதலு மன்னது விரைவி
னேடி விண்ணிடை நணுகிய தூதுவர் நில்லா
தோடி யாளுடை யவுணர்கோன் முன்புசென் றுரைப்பார்.

(இ-ள்.) வீரவாகுதேவரையடைந்து அருமையான போர்புரிந்தவர்களெல்லாம் தங்கள்வலியிழந்து உயிரொழிந்திறந்துபடுதலும் அவர்களவ்வாறிறந்ததனை ஆகாயத்தின் வழிசெல்லும் தூதுவர்களுணர்ந்து நில்லாது ஓடிச்சென்று தங்களையாளுகின்ற சூரபன் மன் எதிரில் நின்று கூறுகின்றூர்கள்.—எ-று. (க)

துன்று மாயிர மொய்ம்புடை நின்படைத் தொகைஞர்
சென்று சில்லமர் புரிந்தன ரவனது தெரியா
வொன்றோர் பாதவம் பறித்தனன் புடைத்தலு மொருங்கே
பொன்றி வீழ்ந்தனர் புகுந்தவா றீதெனப் புகன்றூர்.

(இ-ள்.) மன்னவ! நினது சேனைவீரர்களாகிய சகத்திரவாகுக்கள் இங்குநின்றுஞ் சென்று அத்தூதுவனுடன் சற்றேபோர்புரிந்தார்கள். உடனே யவன் அவர்கள்போர் புரிதலைப்பார்த்து ஓர்மரத்தைப் பிடுங்கியடித்தனன். அடித்தவுடன் அவ்வாயிரம்பேர் களுமிறந்துவிழுந்தார்கள். இதுநடந்த சங்கதி என்றனர்.—எ-று. (உ)

புகன்ற வேலையி னவுணர்கோன் புரையிலோன் வன்மை
புகன்ற வேலையின் வடவையா ரழலெனப் பொங்கி
யகன்ற னன்பெரு மிதத்துட னுணையுந் திறனு
மகன்ற னன்பெருந் துயர்கொளீஇ யினையன வறைவான்.

(இ-ள்.) ஒப்பற்ற வீரவாகுதேவரது வன்மையை தூதுவர்கள் கூறியவுடனே, சூரபன்மன் சொல்லப்பட்ட கடலிலுள்ள அரிய வடவாக்கினியைப்போல மிகுதியான கோபத்தையடைந்து பெருமிதத்துடன் ஆக்கினையையும் வெற்றியையும் விட்டவனுய் மிகுதியான துன்பங்கொண்டு இவைகளைக் கூறுகின்றூன்.—எ-று. (௩)

உமைய ளித்திடு சிறுமகன் றூதுவ னொருவ
னெமது முன்னம்வந் தவமதி செய்தன னேகி
யமரில் யாரையு மட்டுநின் றின்னமு மகலா
னமது கொற்றமு நன்றுநன் றூலென நகைத்தான்.

(இ-ள்.) உமையவள்பெற்ற இளங்குமரனது ஒருதூத னெம்மெதிரில்வந்து எம்மையவமானஞ்செய்து இங்குநின்றும்போய் போரிலெதிர்த்தவர்களையெல்லாம் கொன்று இன்னமும் போகாமல் நிற்கின்றூன். (ஆதலால்) நமது வெற்றியும் மிகவும் நன்றூயிருக்கின்றதென்றுரைத்துச் சிரித்தனன்.—எ-று. (௪)

முச்ச கம்புக ழவுணர்கோன் முனிவினை முன்னி
யச்செ னக்கிளர்ந் தெழுந்துசென் றவனடி வணங்கி
மெய்ச்சி ரங்களோ ரையிரு திறலுடை விறல்சேர்
வச்சி ரத்திரு மொய்ம்புடைக் காதலன் வகுப்பான்.

(இ-ள்.) மூன்றுலகத்திலுள்ளவர்களாலும் புகழப்படுகின்ற சூரபன்மனதுகோபத்தைப்பார்த்து வெற்றிபொருந்தினவனும் பலசாலியும் அழகிய வச்சிரசரீரியும் பத்துத் தலைகளையுடையவனும் இருபதுதோள்களை யுடையவனும் ஆகிய வச்சிரவாகு என்னும்

மகன் (தானிருந்த ஆசனத்தினின்றும்) விரைவாக எழுந்துசென்று சூரனது கால்களை வணங்கிக் கூறுகின்றனன்.—எ-று. (௬)

நொய்ய தூதவன் பொருட்டினு லித்திற நுவற
லைய கேட்கநிற் கியலுமே யிறையிவ ணமர்தி
மொய்யில் யான்சென்று மற்றவன் பெருமுரண் முருக்கிக்
கைய கப்படுத் துய்ப்பனு லன்னது காண்டி.

(இ-ள்.) ஐயனே! அற்பனுகிய ஒரு தூதுவன்பொருட்டுத் தாங்கள் இவ்வண்ணங்கூறக்கேட்பது பொருந்தக்கூடியதோ! சற்றுநாழிகை இங்கே இருப்பீராக. நான் சென்று போரில் அவனது பெரியவன்மைகளை யழித்து அவனைக் கைவசப்படுத்தி இங்குகொண்டுவருகின்றேன். யானவ்வாறு செய்தலை பின்னர் காணப்போகின்றீர்.—எ-று.

வேறு.

என்ன லோடு மிறப்பெதி ருற்றிடா
மன்னன் மைந்தனை நோக்கி மகிழ்வுறு
வன்ன தன்மையை யாற்றுதி நீயெனப்
பன்னி யேகும் படிபணித் தானரோ.

(இ-ள்.) என்று கூறுதலும், சூரபன்மன், மரணத்தை முன்னே வைத்துக்கொண்டிருக்கின்ற மகனைநோக்கி மகிழ்வுற்றவனுய் அவ்வாறே செய்யக்கடவையென்றுகூறி போருக்குச் செல்லும்வண்ணம் ஆக்கியாபித்தான்.—எ-று. (எ)

விடைபு ரிந்திட மெய்வழித் தாதைத
னடிவ ணங்கிய கன்றுமன் கோயிலிற்
புடையி ருந்தன போர்ப்படைச் சாலையி
னிடைபு குந்தனன் யாரும் வழுத்தவே.

(இ-ள்.) தந்தையுத்தரவளித்தவுடன் மைந்தன் அவனது கால்களைவணங்கி யச்சபையினின்றும் விலகி தன்னரண்மனையினெருபுறத்திலுள்ள வாயுதசாலையில் யாவர்களும் புகழும்படி பிரவேசித்தனன்.—எ-று. (அ)

அட்ட மின்றி யமர்தரு சாலிகை
யிட்டு மார்பி னிறுக்கி வயத்தரு
பட்டி கைக்கலன் பாலத் துறுத்தியே
புட்டி லங்குலி பூண்டு பொருக்கென.

(இ-ள்.) அவன் அழிதலில்லாமல் கவசத்தை மார்பிலிறுக்கிக்கட்டி, வெற்றிக்குரிய வீரபட்டமென்னு மாபரணத்தை நெற்றியிலணிந்து, புட்டிலென்னும் விரலுறைகளை விரைவாக விரல்களிற் றரித்து.—எ-று (௯)

ஆணி கொண்ட வயிற்கணை பெய்தபொற்
றூணி கொண்டுபின் றும்பை மிலைச்சியே
நாணி கொண்டு நலந்தரு கார்முகம்
பாணி கொண்டு படைபிற வேந்தியே.

(இ-ள்.) மேன்மைபொருந்திய கூரியவம்புகளைநிறைத்துள்ள அம்பறுத்தூணியை பின்புறத்திற்றரித்து, தும்பைமலர்மாலையைச்சூடி, நாணியோடுகூடிய வெற்றியென்னுநன்மையைத் தருகின்ற வில்லையும் மற்றையவாயுதங்களையும் தனது இருபதுகைகளிற் றுங்கிக்கொண்டு.—எ-று. (௧௦)

கொற்ற மாரமர்க் கோலங்க ளுள்ளன
முற்ற வேகொண்டு மூரிவில் வெஞ்சமர்
கற்ற காளை கதுமென நோக்கியே
சுற்று கம்மியர்க் கின்னன சொல்லுவான்.

(இ-ள்.) பெரியவில்லைக்கொண்டு கொடியபோர்புரிதற்குப் பயின்றுள்ள வாலிபனாகிய வச்சிரவாகு, வெற்றிபொருந்திய போருக்குரிய வலங்காரங்களெவ்வளவுண்டோ வவ்வளவையுஞ்செய்துகொண்டு, தம்மைச்சூழ்ந்துள்ள ஊழியர்களைநோக்கி இவ்வாறு கூறுகின்றனன்.—எ-று. (கக)

மிக்க நம்படை வெள்ளத்தி லோர்சில
தொக்க பூசற் றொழிலினை முற்றிய
விக்க ணந்தரு வீரிவ ணென்றலுந்
தக்க தேயென்த் தாழ்ந்தவர் போயினார்.

(இ-ள்.) நீங்கள் சிறந்த நமது சேனைவெள்ளங்களில் பொருந்திய போர்த்தொழிலில் கைதேர்ந்துள்ள சில சைனியங்களை இப்பொழுதே யழைத்துக்கொண்டுவாருங்களென்று கூறுதலும், அவர்களவனை வணங்கி யவ்வாறே செய்கின்றேமெனக்கூறிச் செல்கின்றார்கள்.—எ-று. (கஉ)

ஆங்கு நின்றிடு மேவல ரப்பணி
தாங்கி யேகத் தகுவர்தங் கோமக
னீங்க லின்றுதன் னீழலின் வந்திடும்
பாங்கர் யாரையு நோக்கிப் பகருவான்.

(இ-ள்.) அவ்விடத்து நின்றுள்ள வூழியர்கள் அவனதவ்வுத்தரவை யேற்றுக்கொண்டுபோனவுடன், அசுரர்களுக்கரசனாகிய சூரபன்மனதுமகனாகியவச்சிரவாகு,விட்டுவிலகாதநிழலைப்போலத் தன்னுடன் வருகின்ற மற்றையூழியர்களைப்பார்த்துக் கூறுகின்றனன்.—எ-று. (கங)

குமர வேள்விடு கோற்றொழிற் றூதனை
சமரில் வென்றொரு தாம்பிற் றளைபுரீஇ
யிமையெர டுங்குமு னெந்தைமு னுய்க்குவ
னமைதிர் போருக் கணிவிரு மென்றனன்.

(இ-ள்.) அழகிய குமரக்கடவுளால் விடப்பட்ட வம்பெய்யுந் தொழிலிற் பரிசயமுள்ள தூதுவனை, நான்போரில்வென்று ஒருகயிற்றாற்கட்டி யிமைமூடித்திறக்குமுன் என்றந்தையெதிரிற் கொண்டுவந்துவிடுவேனாதலால், நீங்களெல்லோரும் போர்க்கோலங்கொள்ளுங்களென்றனன்.—எ-று. (கச)

பாலன் மற்றிவை பன்னலு நன்மகனு
வேலு கின்ற விளைஞரு மள்ளரு
மேலை வெஞ்சமர் செய்ய விரைந்துபோர்க்
கோல மெய்திக் குழீஇயினர் கொட்புற.

(இ-ள்.) இளங்குமாரனாகிய வச்சிரவாகு இவ்வண்ணங்கூறுதலும், அவனுடன் வாழ்கின்ற தக்கவூழியர்களும் வீரர்களுமாகிய வாலிபர்களும் முன்குறித்த போரையுத்தேசித்து விரைவாக போர்க்கோலங்கொண்டு வச்சிரவாகுவைச் சுற்றிலுஞ் சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (கரு)

தாறு கொண்டவன் றன்குறிப் பிற்செலு
நூறு நூறு றொறில்பரி மான்பெறீஇ

வீறு பண்ணமை தேரொன்றின் வெய்தென
வேறி னன்மொய்ம் பிருபது கொண்டுளான்.

(இ-ள்.) இரும்புமுள்ளினையுடைய சம்மட்டியைக் கைக்கொண்டுள்ள சாரதியின் அபிப்பிராயப்படியே செல்லுகின்ற வேகத்தினையுடைய பதினுயிரங்குதிரைகளையுடைத்தாய் உயர்வாக வலங்கரிக்கப்பட்டுள்ள வொருதேரின்மீது இருபதுதோள்களுடைய வச்சிரவாகு விரைவாகவேறினன்.—எ-று. (கசு)

தந்தி ரத்துத் தலைவர்த மைந்தரு
மந்தி ரத்து மதிஞர்த மைந்தருஞ்
சுந்த ரத்துத் தொடர்பினிற் சுற்றுறு
வெந்தி ரப்பெருந் தேர்களி லேறினர்.

(இ-ள்.) உடனே தந்திரத்தலைவர்களின் புத்திரரும், புத்திசாலிகளான மந்திரிகுமாரர்களும் அழகுடன் ஒருவரைவிட்டொருவரை விலகாமல் வச்சிரவாகுவின் தேரினருகிற் சூழ்ந்துள்ள சக்கரங்களமைந்த பெரிய தேர்களிலேறினர்கள்.—எ-று. (கஎ)

ஆன வேலை யரசன் சுதன்விடப்
போன கம்மியர் போர்வினை கூறியே
யானை மேல்கொண் டிரும்பணை யெற்றலுஞ்
சேனை தம்முட் சிலதிரண் டுற்றவே.

(இ-ள்.) அப்பொழுது அரசகுமாரனாகிய வச்சிரவாகுவினால் அனுப்பப்பட்டுச் சென்ற வூழியர்கள் யானையின்மீதேறி போர்த்தொழிலை யெடுத்துக்கூறி பறைசாற்றலும் அங்குள்ள சேனைகளிற்சில (இந்தப்போரைக்குறித்து) கூட்டமாக வந்து சேர்ந்தன.—எ-று. (கஅ)

ஒருங்கு தாம்பல் வோடலி னன்னவை
பரங்கொ ளற்கரி தாகிப் படிமகள்
புரங்கி ழிந்திடு புண்கொண் டரற்றல்போ
லிரங்கு மோதைகொண் டேகுவ தேர்களே.

(இ-ள்.) ஏககாலத்தில் ஒன்றாய்ச்சேர்ந்தநேகமாய் ஓடுதலினால், அவைகளின் பாரங்களைச்சுமத்தற்கு வல்லமையில்லாதவளாய்ப் பூமிதேவியானவள் தம்முடம்பிற் கிழிக்கப்படுகின்ற புண்ணுடன்கூச்சலிடுதலைப்போல, இரையாநின்றவோசைகளுடனே தேர்கள் செல்லுகின்றன.—எ-று. (கக)

கருவி வானங் கடலுண்டு செல்லுறும்
வரைக ளாமென வந்ததும் மேனுமீஇ
யுருமி னத்தை யுகுத்தொலி கேட்டலும்
வெருவி வீழ விரைவன வேழமே.

(இ-ள்.) உலகத்திற்குக் கருவியாயுள்ள மேகங்கள் கடல்நீரைக்குடித்து, இவைகள் நடைமலைகளாமெனக்கருதி தம்மீதுவந்திருந்து இடிக்கூட்டங்களைக்கக்கித் தமது கர்ச்சிப்பைக்கேட்டவுடன் பயந்து கீழேநழுவிவிழும்வண்ணம் கர்ச்சியாநின்றன யானைகள்.—எ-று. (உ0)

கிட்டி நாடு நயனமுங் கேடுசெய்
தொட்ட லார்த முளமுஞ் சுழன்றிட
வெட்டு மாதிரத் தெல்லையுஞ் சாரிகை
வட்ட மாகி வருவன வாசியே.

(இ-ள்.) குதிரைகள், உற்றுப்பார்க்கின்ற கண்களையுங்கெடுத்துப் பகைவர்கள் மனமும் சுழலும்வண்ணம் எட்டுத்திக்குகளினளவும் வட்டமாகச் சாரிகையாகச் சுழன்று வருகின்றன.—எ-று. (உக)

ஆடல் வேல்கதை யாழி யலப்படை
பாடு சேர்ந்த பல்கையொள் வாள்சிலை
நீடு சூல நெடுமழு வாதியாக்
கூடு பல்படை கொண்டிடு கையினர்.

(இ-ள்.) (காலாட்களெப்படிப்பட்டவரென்றால்), போருக்குரிய வேலாயுதத்தையுந் தண்டாயுதத்தையுஞ் சக்கராயுதத்தையும் அலாயுதத்தையும் பெருமை பொருந்திய கேடயங்களையும் ஒள்ளிய வாட்களையும் விற்களையும் நீண்ட சூலங்களையும் பெரிய கோடரிமுதலாகச் சொல்லப்பட்ட பலவிதவாயுதங்களையுந் தாங்கிக்கொண்டிருக்கின்ற கைகளையுடையவர்கள்.—எ-று. (உஉ)

இடித்த சொல்ல ரிமையவர் போர்பல
முடித்த மொய்ம்பர் முரணிய பல்படை
வடித்த கற்பினர் மால்வரை யானவை
படித்த லத்திற் படர்ந்தன்ன காட்சியார்.

(இ-ள்.) இடிக்கப்படுகிற சொற்களையுடையவர்கள்; தேவர்களுடனெதிர்த்துப் பலபோர்களைச்செய்து முடித்த பலசாலிகள்; வடிக்கப்பட்ட வலிமையோடுகூடிய பலவகை ஆயுதங்களைப் பிரயோகிக்கப் பயின்றவர்கள்; பெரியமலைகளானவைகள் பூமியினிடத்தில் நடந்துசென்றாற்போன்ற தோற்றத்தினையுடையவர்கள்.—எ-று. (உங)

விசும்பின் மாலை மிலைச்சிய குஞ்சியர்
பசும்பொன் வீரமெய்ப் பட்டிகை நெற்றியர்
நிசும்ப ரன்னதொர் நேரலர் சோரியி
னசும்ப றாத வகன்பில வாயினர்.

(இ-ள்.) தேவர்நாட்டிலுள்ள கற்பகமலர்மாலைகளைத் தரித்துள்ள சிகைகளையுடையவர்கள்; பசியபொன்னாற்செய்தவீரபட்டமணிந்த நெற்றியையுடையவர்கள்; நிசும்பர்களைப்போன்ற வொப்பற்றவர்கள்; இரத்தக்கசிவுமாறாத வகன்றகுகைபோன்ற வாயினையுடையவர்கள்.—எ-று. (உச)

தீம டங்கற் றிறலினர் தென்புலக்
கோம டங்கலின் கொள்கையர் தங்கிளை
தாம டங்கத் தறிபிளந் தார்த்தெழு
மாம டங்க றனைப்பொரும் வன்மையார்.

(இ-ள்.) கொடியசிங்கத்தைப்போன்ற பலமுடையவர்கள்; தென்றிசையையாளுகின்ற சிங்கம்போன்ற யமனது தொழிலினையுடையவர்கள்; தமது வமிசத்தவர்கள் அழிந்தொழியும்படி தூணைப்பிளந்துகொண்டு ஆரவாரத்துடன்தோன்றிய பெரியநரசிங்கத்துடன் போர்புரியத்தக்க பலசாலிகள்.—எ-று. (உரு)

ஏகும் வெஞ்சமர்க் கென்றலும் பூண்பரீஇ
மாக மஞ்ச வளர்ந்தெழு தோளினர்
மோக மில்லவர் மொய்ம்பினின் மேலவ
ராகும் வீர ரளப்பில ரெய்தினர்.

(இ-ள்.) கொடிய போருக்குச் செல்லுங்களென்று கூறுதலும், ஆபரணங்களொடு கலந்து ஆகாயமஞ்சும்படி மேலு மேலும் வளர்கின்ற தோள்களையுடையவர்களும் மோகமற்றவர்களும் பலத்திற் சிறந்தவர்களுமான அநேகமசுரர்கள் வந்தார்கள்.

ஐந்து நூறெனும் வெள்ள மருங்குதேர்
தந்தி யின்குழத் தானு மனையதே
யுந்து மாக்களொ ராயிர வெள்ளமாம்
பந்த மிக்க பதாதி யிரட்டியே.

(இ-ள்.) ஐந்நூறென்று சொல்லப்படுகிற வெள்ளக்கணக்கான அசைகின்ற தேர்களும் ஐந்நூறுவெள்ளமாகிய யானைகளும் உயர்ந்த குதிரைகள் ஆயிரம்வெள்ளங்களுமாகும். அன்றியும் மிக்கவழகினையுடைய காலாட்படைகள் இரண்டாயிரம்வெள்ளங்களும்ாம்.—எ-று. (௨எ)

இத்தொ கைப்படு மீரிரு தானையு
மைத்தி சைக்கடல் வாரியி னூர்ப்புறீஇப்
பத்தி ரட்டி படர்புயத் தண்ணலைத்
தத்த மிற்கலந் தொன்றித் தழீஇயின.

(இ-ள்.) இந்தக் கணக்கினையுடையதான சதுரங்கசேனைகளுந் திரண்ட பெரிய அலைகளோடுகூடிய கடலைப்போல ஆரவாரித்துக்கொண்டு பெரியவிருபதுதோள்களையுடைய வச்சிரவாகுவை ஒன்றோடொன்றுகலந்து ஒருங்குசேர்ந்துசூழ்ந்துசென்றன.

துடிவ லம்புரி துந்துபி சச்சரி
கடிகொண் மொந்தைக் கரடிகை தண்ணுமை
யிடிகொள் பேரி யிரலைக ளாதியா
முடிவி லாவிய முற்று முழங்கிய.

(இ-ள்.) உடுக்கை, வலம்புரிச்சங்கு, துந்துபி, சச்சரி, பிரகாசம்பொருந்திய மொந்தை, கரடிகை, தண்ணுமை, இடியோசையைக்கொண்டுள்ள பேரிகை, கொம்புகள் முதலியவளவற்ற வாத்தியங்களெல்லாம் முழங்கின.—எ-று. (௨௯)

இற்ற வெல்லையி னீரிரு தானையு
நெற்றி யேகடை நீடய விற்செல
மற்று ளார்களும் வந்திட வச்சிரப்
பொற்ற டம்புயன் பொள்ளென வேகினான்.

(இ-ள்.) சேனைகளெல்லாம் வந்து நெருங்கினபின், அணிவகுப்புடன் நீண்ட வழிகளின் பக்கங்களிற்செல்லவும், வேறேயுள்ள மந்திரிகுமாரர் முதலியவர்கள் உடன்வர அழகிய வச்சிரவாகுவானவன் விரைவாகச்சென்றான்.—எ-று. (௩0)

வல்லி யக்கடு மான்பொரு மானவர்
செல்லி யக்கமுஞ் செல்லினை மாறுகொள்
சொல்லி யக்கமுந் துண்ணெனத் தொக்கெழு
பல்லி யக்கட லார்ப்பும் பரந்தவே.

(இ-ள்.) கொடிய பெரும்புலிபோன்ற வீரர்கள்போதலாலுண்டான சத்தமும் மேகத்தையும் பின்னிடச்செய்கின்ற பேச்சினாரவாரமும் விரைவாக ஒன்றாய்ப் பொருந்தியுண்டாகின்ற மேளங்களின் கடல்போன்ற ஓசையும் எவ்விடங்களிலும் பரந்தன.

ஊழி மால்படை யொல்லென வேயெழப்
பூழி யீண்டிவிண் பொள்ளென மூடிய
வேழ மால்வரை வீழ்தரு தானநீ
ராழி யென்ன வகன்புவி கொள்ளவே.

(இ-ள்.) பெரிய மலைபோன்ற யானைகளின் கன்னம் முதலிய இடங்களினின்று விழுகின்ற மதசலமானது கடலைப்போலப் பெரியவுலகத்தை மூடிக்கொள்ளும்

படி வரிசையாகச்செல்லுகின்ற சைனியங்கள் விரைவாகவெழுந்துச்சென்றவதனாலுண்டாகிய புழுதியானது நெருங்கிச்சுவர்க்கத்தை விரைவிலடைந்து மூடிக்கொண்டன.

திகந்த மெட்டுந் திருநிழ லோச்சியே
யுகந்த தேர்களி னொண்கொடி யாடுவ
குகன்வி டுத்திடு கொற்றவ னாற்றல்கண்
டகன்சி ரங்க ளசைப்பன போன்றவே.

(இ-ள்.) எட்டுத்திக்குகளிலும் அழகியவொளியை வீசிக்கொண்டு மகிழ்வைத் தராநின்ற தேர்களிலே ஒள்ளிய கொடிச்சீலைகள் ஆடாநிற்பன (எது போலுமெனின்), குமரக்கடவுளனுப்பியதலைவராகிய வீரவாகுதேவரது வன்மையையுணர்ந்து பெரிய தலைகளையசைக்குந்தன்மைபோலிருந்தன.—எ-று. (ருரு)

ஆகு மெல்லை யவுணர்மன் றேர்மிசைப்
பேய்கள் சூழ்ந்து பிணங்கி மலைந்தன
காகம் யாவுங் கழுகும்வெஞ் சேனமுங்
கூகை யோடு குழீஇயிரங் குற்றவே.

(இ-ள்.) அவ்வாறாகியசமயத்தில், அசுரராசனாகிய வச்சிரவாகுவின் தேரின்மீது பைசாசுகள் சுற்றிக்கொண்டு பிணங்கிச்சண்டையிட்டன. எல்லாக்காக்கைகளும் கழுகுகளும் வெவ்வியபருந்துகளும் கூகைகளுடனே கலந்துகதறாநின்றன.—எ-று. (ருச)

மடித்த வாயுடை வச்சிர மொய்ம்பினன்
பிடித்த கையிற் பெருஞ்சிலை வீழ்ந்தது
தொடுத்த வெந்நுறு தூணியு மிற்றதாற்
றுடித்த வாலிடக் கண்களுந் தோள்களும்

(இ-ள்.) கோபத்தால் கடிக்கப்பட்ட வாயினையுடைய வச்சிரவாகுவின்கையிற் பிடிக்கப்பட்ட பெரியவில் நழுவிக் கீழேவிழுந்தது. முதுகிற்கட்டப்பட்டிருந்த அம்புப்புட்டிலும் அறுந்துவிழுந்தது. அன்றியும் அவனது இடதுகண்களும் இடதுதோள்களும் துடித்தன.—எ-று. (ருரு)

அண்ணன் மைந்தன தாழியந் தேர்மிசைக்
கண்ண சன்கொடி கையற வீழ்ந்தன
விண்ணி னேறு விசும்பின்றி யார்ப்பன
வெண்ணி றீக்குறி யிவ்வகை யுற்றவே.

(இ-ள்.) அசுரமன்னவனாகிய சூரபன்மனது பிள்ளையாகிய வச்சிரவாகுவின் சக்கரங்களமைந்த அழகியதேரின்கண் கட்டப்பட்டுள்ள மிகுதியான எல்லாக்கொடித்துணிகளும் அறுந்துவிழுந்தன. ஆகாயத்திலேமேகமில்லாமலிடியுண்டாகியது. அன்றியும் அளவற்ற கெட்ட சகுனங்களிவ்வண்ணமாக உண்டாயின.—எ-று. (ருசா)

உற்ற காலவை யுள்ளுறக் கொள்கிலன்
செற்ற மேல்கொண்டு சென்னியோர் பத்துளான்
மற்றோர் தூணியும் வார்சிலை யுங்கொளாப்
பொற்ற டங்கை புறந்தனிற் சேர்த்தினன்.

(இ-ள்.) இவ்வண்ணமாக கெட்டசகுனமுண்டாகியபோது அவைகளைப்பற்றி தனதுமனத்தில் கொஞ்சங்கூட நினைக்கின்றானில்லை. பத்தென்னும் அளவினையுடையதாகச்சொல்லப்படுகின்ற தலையினையுடைய அவ்வச்சிரவாகு ஒரு அம்பறாத் தூணியையும் வில்லையுமெடுத்து அழகியகையின் பின்புறமான பிடரியிலணிந்தனன்.—எ-று. (ருஎ)

மொய்கொள் வச்சிர மொய்ம்பனித் தன்மையால்
வெய்ய தன்படை வெள்ளமொ டேகியே
செய்ய வேலுடைச் சேவக னேவல்செ
யைய னின்ற வடுகள மெய்தினன்.

(இ-ள்.) பலம்பொருந்திய தோள்களையுடைய வச்சிரவாகுவானவன் இவ்வண்ணம் கொடிய தனது வெள்ளக்கணக்கான சேனைகளுடன்சென்று செவ்வியவேற்படையினையுடைய குமரக்கடவுளுக்குத் தொண்டுபுரிகின்ற வீரவாகுதேவர் நிற்கின்ற போர்க்களத்தை யடைந்தனன்.—எ-று. (கூஅ)

வண்டு லாந்தொடை வச்சிர வாகுதன்
றண்ட மோடு சமர்க்களஞ் சேர்தலு
மண்டர் நாயகன் றூதுவ னன்னவை
கண்டு நின்று கழறுதல் மேயினான்.

(இ-ள்.) வண்டுகள் தேனினையுத்தேசித்துலாவுகின்ற மலர்மாலையணிந்த தோள்களையுடைய வச்சிரவாகுவானவன் தனது சைனியங்களுடனே வந்துசேருதலும், அவ்வாறு வந்ததைக்கண்ட வீரவாகுதேவர் தனக்குள் சொல்லிக்கொள்ளுவதாயினார். (சக)

வேறு.

இந்திர ஞால வையத் திறைவனே யல்லன் மற்றை
மைந்தரி லொருவ னாகும் வருபவன் வருவான் றன்னை
முந்திய தானை யோடு முரணற முருக்கி வீட்டி
யந்திவான் புகுமு னெந்தை யடிதொழப் போவ னென்றான்.

(இ-ள்.) இங்குபோருக்குவருபவன், இந்திரஞாலமென்னும் பேருள்ளதேரினையுடைய சூரபன்மனல்லன்; அவன்புத்திரர்களிலொருவனேயாகும். வருகின்ற இவனை சிறந்தசைனியங்களுடன் வலிகெடும்படி போர்புரிந்து கொன்று, செவ்வானத்தினையுடைய மாலைப்பொழுது வருதற்குமுன்னே எம்பெருமானது திருவடியை வணங்கச் செல்வேன் என்று கூறினார்.—எ-று. (சo)

எறிதிரை யளக்க ரன்ன வீண்டுறு மனிகம் யாவு
முறைமுறை சாடி வந்த முதல்வனை முடித்து மாலை
யுறுதன்முன் விசய மோடு மொய்யென மீள்வ னென்னி
னறுமுக வையன் றூத னல்லனே வடிய னென்றான்.

(இ-ள்.) அலைவீசுகின்ற கடலைப்போல இவ்விடத்திற்கு வருகின்ற சைனியங்களையெல்லாம் கிரமமாகக்கொன்று இவர்களுடன்வந்த தலைவனாகவுள்ளவனையுங்கொன்று அந்திமாலைப்பொழுது வருதற்குமுன்னே வெற்றியுடனே விரைந்து திரும்பிசெல்லாதுபோவேனானால் நான் ஆறுதிருமுகங்களையுடைய குமரக்கடவுள் தூதுவனாவேனே என்றுகூறினார்.—எ-று. (சக)

எண்டிசை புகழும் வீர னினையன விளம்பிச் செவ்வேள்
புண்டரீ கத்துப் பொற்றாள் புந்தியா லிறைஞ்சிப் போற்றி
மண்டமர் முயன்று நேமி மறிதர வரைகள் கீற
வண்டமுந் திசையும் வானுங் குலுங்கத்தோள் கொட்டி யார்த்தான்.

(இ-ள்.) எட்டுத்திக்குகளிலும் உள்ளவர்களாலே புகழப்படுகிற வீரவாகுதேவர் இவைகளைக்கூறி, குமரக்கடவுளது தாமரைமலர்போல விளங்குகின்ற திருவடிகளை மனத்தினாலேநினைத்து வணங்கித்துதித்து, நெருங்கியபோரைச்செய்தற்கு கடல்கள்

கடைபுரளவும் மலைகள்பிளக்கவும் அண்டமுந்திக்குகளும் சுவர்க்கமும் நடுங்கும்வண்ணமும் தமது தோள்களை கைகளாற்கொட்டி ஆரவாரித்தனர்.—எ-று. (சஉ)

ஆர்த்திடு மோதை கேளா வமர்குறித் தெழுதேர் மேலோர்
கார்த்திடு தந்தி மேலோர் கவனமாப் புரவி மேலோர்
பேர்த்திடு நிலத்தின் மேலோர் பிறங்குசீ ரவுணர் யாரும்
வேர்த்தனர் திரிந்து சிந்தை வெருவினர் விளம்பு கின்றார்.

(இ-ள்.) ஆரவாரிக்கின்ற சத்தத்தைக்கேட்டு முன்னமே போரை உத்தேசித்து வந்து தேரின்மீது இருப்பவர்களும், கரியயானைகளின்மீது இருப்பவர்களும், வேகமாகச்செல்லுகின்ற தாவுங்குதிரைகளின்மீது இருப்பவர்களும், வேறேபூமியில்நிற்குங்காலாட்களும் ஆகிய பிரகாசிக்கின்ற சிறப்புப்பொருந்திய அசுரர்களெல்லாம் உடல்வேர்த்து மனம் மாறுபட்டு வெருக்கொண்டு இவ்வாறு கூறுகின்றார்கள்.—எ-று. (சரு)

வாழிய வுலகம் யாவு மன்னுயிர்த் தொகையு மாய
வூழியிற் றனிநின் றார்க்கு முருத்திர னார்ப்போ வன்றே
லாழிகட் கரச னார்ப்போ வண்டங்க ணெக்க வார்ப்போ
வேழ்கட லுடைந்த வார்ப்போ வித்திற மார்ப்ப தென்றார்.

(இ-ள்.) இவ்வோசை எல்லாவுலகங்களும் உலகங்களிலுள்ள உயிர்வர்க்கங்களும் அழியும்படி பிரளயகாலத்தில் தனியேநின்று ஆரவாரஞ்செய்கின்ற உருத்திரமூர்த்தியின் அட்டஹாஸமோ? அல்லாதுபோனால், சமுத்திரராஜனது ஆரவாரமோ? அல்லது, அண்டங்களுடைந்த ஆரவாரமோ? அல்லது, ஏழுகடல்களும் கரைபுரளுதலாலுண்டான ஆரவாரமோ? இவ்வண்ணம்கேட்கப்படுகின்ற ஆரவாரம் என்றுகூறினார்கள்.எ-று. (சசு)

செருவலி கொண்ட சீற்றச் செங்கணார்க்கு மோதை
மருமலர்த் தொடைய லாக வச்சிர வாகு வென்போ
னிருபது செவியி னூடு மிரவியம் புழைகள் புக்க
வுருமெனச் சேற லோடு முளம்பனித் துரைக்க லுற்றான்.

(இ-ள்.) மிக்க போர்ச்சாமர்த்தியத்தையுடைய செவ்வியகண்ணோடுகூடிய வீரவாகுதேவர் செய்யும்கெர்ச்சனையின் தொனியானது, மணம்பொருந்திய மலர்மாலையையணிந்திருக்கிற தோளினையுடைய வச்சிரவாகுவென்பவனது இருபது கர்ணதுவாரங்களிலும் மலையினழகிய குகைகளிலேபுகுந்த இடியொலியைப்போல செல்லுதலும் மனந்துடித்து இவ்வாறுகூறுவானாயினான்.—எ-று. (சரு)

ஈரொழு திறத்த வான் வுலகினு ளின்று காறிப்
பேரொலி கேட்ட தின்றாற் பிறந்ததித் துழனி யாதோ
தேருதி ரென்று பாங்க ருழையரிற் செப்பத் திண்டேர்ச்
சாரதி விசய னென்பான் றாழ்ந்திவை புகல லுற்றான்.

(இ-ள்.) பதினான்குவகையினவாகக்கூறப்படுகின்ற உலகங்களிலெதிலும் இவ்வகையான பேரோசை இதுகாறுங்கேட்கப்படவில்லை. இப்பொழுதுண்டான இந்த ஓசை எங்கு நின்று எதனாலுண்டாகியதோ அறிகிலேன். நீங்கள் இவ்வோசையெங்குநின்று உண்டாகியது என்று ஆய்ந்தறியுங்கள் என்று அருகில் நிற்பவர்களிடத்திற் கூறினான். கூறுதலும், திண்ணிய தேரோட்டுகின்ற சாரதியான விசயனென்பவன் வணங்கி இவ்வாறு கூறுகின்றான்.—எ-று. (சசு)

தெற்றென வுணர்தி மான்றேர் செலுத்திய வலவ னென்றே
மற்றென துரையை யெள்ளல் வல்லைமேற் காண்டி யெந்தை

யற்றமில் படையி னோடு மமர்செய வருத னாடி
யொற்றென நின்றோன் போர்வேட் டார்த்திடு மொலியீ தென்றான்.

(இ-ள்.) இவன் குதிரைகள்பூண்ட தேரையோட்டுபவனென்று என்வசனத்தை இகழ்ந்து விடாதேயும்; விரைவாகவுணர்ந்துகொள்ளும்; என்வாக்கியமே உண்மையானதென்று பின்னறிவீர். எம்பெருமானே! தேவரீர் அளவற்றசைனியங்களுடன்போர் புரிதற்கு, வருதலையுணர்ந்து, இங்குதூதனாக வந்துநிற்கும் அவன் போரைவிரும்பிச் செய்கின்ற அட்டஹாஸமே இந்தத்தொனி என்றுகூறினான்.—எ-று. (சஎ)

தூதுவ னார்ப்பி தென்று சொல்லுமு னுருத்துக் கண்கண்
மீதெரி பொங்க நக்கு வெய்துயிர்த் துரப்பி யான்போ
யீதொரு கணத்தி னன்னா னிகன்முர ணழித்துப் பற்றித்
தாதைமு னுய்ப்பன் காண்டி சரதமித் தன்மை யென்றான்.

(இ-ள்.) இது தூதுவனுடைய கர்ச்சனையென்று விசயன் உரைத்து முடிக்கு முன்னமே, வச்சிரவாகுவானவன் கண்களில் தீப்பொறிபறக்க கோபங்கொண்டு பெருமூச்சுவிட்டுகொண்டு அதட்டி, அடா விஜய! நான் சென்று இந்த ஒருகணப்பொழுதிலேயே அவனது போர்வலியையொழித்து, அவனைப் பிடித்துக்கட்டி என்றந்தையினெதிரேகொண்டு நிறுத்துகிறேன் இதனை நீ பாரென்று கூறினான்.—எ-று. (சஅ)

என்றிவை யுரைத்துப் போது மெல்லையின் முன்ன மாகச்
சென்றிடு மவுண வீரர் சேனையை வகுத்துச் சீறித்
தன்றுணைத் தாளுந் தோளுந் தடக்கையு மனிக மாக
நின்றதோர் வீரன் றன்னை நேமியிற் சுற்றி யார்த்தார்.

(இ-ள்.) என்று இவ்வண்ணமாக வுரைத்துக்கொண்டு செல்லுதற்குமுன்னமே செல்லாநின்ற அசுரசேனைகளை அழித்தற்கு, சைனியங்களாகத் தனது இரண்டுதோள்களையும் இரண்கொல்களையும் பெரியகைகளையும் அணிவகுத்துக்கொண்டுநின்றருளிய வீரவாகுதேவரை, வச்சிரவாகுவின் சைனியங்கள் சென்று கடல்சூழ்ந்தாற்போல சூழ்ந்துகொண்டு ஆரவாரித்தன.—எ-று. (சகூ)

கைதனி லிருந்த செம்பொற் கார்முகங் குனித்து வெங்கோ
லெய்தனர் முசல நாஞ்சி லெறிந்தனர் தண்டஞ் சூலம்
பெய்தனர் கணிச்சி விட்டார் பிண்டிபா லங்க ளோர்த்தார்
நெய்தவ ழயில்வே றேட்டார் நேமிக ளுருட்டு கின்றார்.

(இ-ள்.) சிலர்கையிலிருந்த செவ்விய பொன்மயமான வில்லைவளைத்து நாணேற்றி கொடியவம்புகளைவிட்டார்கள். சிலர் உலக்கைகளையுங் கலப்பைகளையும் எறிந்தார்கள். சிலர்தண்டங்களையும் சூலங்களையும்விட்டார்கள். சிலர்பழுமரங்களைவிட்டார்கள். சிலர் பிண்டிபாலங்களை விட்டார்கள். சிலர் நெய்பூசியுள்ள கூரியவேற்படைகளை விட்டார்கள். சிலர் சக்கரங்களை விட்டார்கள்.—எ-று. (ரு௦)

வேறு.

தஞ்செனக் கொடுமைசெய் தானவப் படைஞர்கள்
வெஞ்சினத் தன்மையால் விடுபடைக் கலமெலாங்
கஞ்சனைச் சிறைசெயுங் காரணன் றூதுவன்
செஞ்சுடர்ப் படிவமேற் செவ்வண்வந் துற்றவே.

(இ-ள்.) இதுவே நமக்கு உரிமையானது என்றுகருதிக் கொடியகாரியங்களையேசெய்கின்ற அசுரசைனியங்கள் மிகுதியான கோபத்தினால்விட்ட ஆயுதங்களெல்

லாம், பிரமனைச்சிறையிலடைத்த முதற்காரணராகிய குமரக்கடவுளின் றூதுவரான வீரவாகுதேவரது செவ்வொளிவீசுகின்ற உருவத்தில் வந்து பட்டன.—எ-று. (ருக)

துய்யர்மேல் வெம்படைத் தொகுதிவந் தடைதலு
மெய்யெலா முற்றதான் மிக்கசோ ரிப்புனன்
மையறீர் காலையின் வந்தெழும் பரிதிபாற்
பையவே செய்யதண் கதிர்வரும் பான்மைபோல்.

(இ-ள்.) பரிசுத்தமான வீரவாகுதேவர்மீது அசுரர்கள் விட்ட கொடிய ஆயுதவரிசைகள்வந்துபடுதலும், அவரது திருமேனிமுழுமையும் பொழுதுவிடிகின்றகாலத்திலுதிக்கின்ற சூரியனிடத்தில் அவன் செந்நிறமான கிரணங்கள் மெல்லென செவ்வையாகவரும் தன்மையைப்போல, மிகுதியான இரத்தவெள்ளம் ஒழுகியது.—எ-று.(ருஉ)

ஆனதோர் காலையெம் மையன்வெஞ் சினமுறு
மானினம் பலபல மருவியே செறிவுழி
மேனிவந் தேகியோர் வேங்கைபாய்ந் தடுதல்போற்
றானவப் படைதனைத் தாக்குதன் மேயினான்.

(இ-ள்.) அவ்வாறானசமயத்தில் எமது ஐயனாகிய வீரவாகுதேவர் மகத்தான கோபமுள்ளவராகி, அநேக மான்கூட்டங்கள் பொருந்திநெருங்கி இருக்கும் இடத்தில் மேலேபாய்ந்துவந்து ஒருவேங்கையானது அவைகளை எல்லாங் கொன்றாற்போல அசுரசேனைகளைக் கொல்லத்தொடங்கினார்.—எ-று. (ருங)

ஆயிர மாயிர மவதிசே ரவுணர்தஞ்
சேயதண் குஞ்சியைச் செங்கையாற் பற்றியே
பாயிருந் தரையினும் பாற்படு கிரியினு
மேயெனு மளவைமுன் னெற்றியே யெறியுமால்.

(இ-ள்.) வீரவாகுதேவர், ஆயிரமாயிரமாகிய கணக்கைப்பொருந்திய அசுரர்களின் செவ்வியகுளிர்ச்சிபொருந்திய தலைரோமங்களை செவ்வியகையாற்பிடித்து பரவிய பெரியபூமியிலும் பக்கத்திலுள்ளமலைகளின்புறத்தினும் ஒருக்ஷணத்துக்குள் அடித்தெறியாநிற்பர்.—எ-று. (ருச)

எய்யும்வெம் படைகளு மெறியும்வெம் படைகளுங்
கையினிற் பற்றியே கனலெழப் பிசைதரு
மொய்யெனப் பதைபதைத் தோலமிட் டுயிருகச்
செய்யபொற் றாள்களாற் சிலவரைத் தேய்த்திடும்.

(இ-ள்.) எய்யப்படுகின்ற கொடிய ஆயுதங்களையும் எறியப்படுகின்ற கொடிய ஆயுதங்களையும் தமதுகையினாற்பிடித்து தீப்பறக்கப்பிசையாநிற்பர். சிலவரை செவ்விய பொன்மயமானபாதங்களால் அவர்களோலமிட்டுக்கொண்டு பிராணனைவிடும்படி தேய்ப்பர்.—எ-று. (ருரு)

மத்தமால் கரிகளும் வாம்பரித் தொகுதியுஞ்
சித்திரந் திகழ்மணித் தேர்களு மவுணர்தங்
கொத்தொடே வீழ்தரக் கோலமா லடிதனக்
கொத்ததன் றாள்களா லுதைபுரிந் துலவுறும்.

(இ-ள்.) மதம்பொருந்திய பெரியயானைகளும் தாவுகின்ற குதிரைக்கூட்டங்களும் சித்திரங்களுடன்விளங்குகின்ற மணிகள்கட்டியதேர்க்கூட்டங்களும் அசுரர்கூட்டத்துடனே கீழேவிழும்வண்ணம், பெரியதிருமாலின் பாதங்களுக்குச்சமானமான தமது பாதங்களால் உதைத்துருட்டி யுலாவுவார்.—எ-று. (ருசு)

கிடைத்திடுஞ் சிலவரைக் கிண்டன னீண்டமெய்
துடித்திடக் கழல்களாற் றுவைத்தனன் சிலவரை
யடித்தனன் சிலவரை யரைத்தனன் சிலவரைப்
புடைத்தனன் சிலவரைப் புதுமரத் தண்டினால்.

(இ-ள்.) தம்மெதிரில்வந்த சிலரை பிளந்தனர்; சிலரை அவர்கள் நீண்ட உடலம் துடிக்கும்படி பாதங்களால் துவைத்தனர்; சிலரை அடித்தனர்; சிலரை அரைத்தனர்; சிலரை புதிய மரத்தாலாகிய தண்டத்தால் மோதினர்.—எ-று. (எரு)

மத்தவெங் கரிபரி வயவர்தே ராயின
பத்துநூ றொருதலைப் படநெடும் பாணியாற்
குத்திடுஞ் சிகரமேற் கோளரி பாய்ந்தெனத்
தத்தியே திரிதருந் தலைமலைக் குலமிசை.

(இ-ள்.) மதம்பொருந்திய வெவ்வியயானைகள் குதிரைகள் காலாள்கள் வீரர்கள் முதலானவர்கள் ஒவ்வொருதடவைகளிலும் ஆயிரக்கணக்காக அழிந்தொழியும்வண்ணம் குத்துவார். மலைகளின் சிகரங்களில் சிங்கம் குதித்தாற்போல தலைகளாகிய மலைக் குவியல்களின்மீது தத்திதத்தி யுலாவுவார்.—எ-று. (ருஅ)

தேரெலா மிற்றன திண்டிறற் கவனமாப்
பேரெலா மிற்றன பிளிறுமால் கரிகளின்
றேரெலா மிற்றன தானவத் தலைவர்செய்
போரெலா மிற்றன புகழெலா மிற்றதே.

(இ-ள்.) தேர்களெல்லாம் அழிந்தன; மிக்கபலத்தினையுடைய வேகமானகுதிரைகளின்பேர்களே ஒழிந்தன; பிளிறுகின்ற மதமயக்கம்பொருந்திய யானைகளின் அணிவகுப்புக்களெல்லாம் அழிந்தன; அசுரத்தலைவர்கள்செய்த போரெல்லாம் ஒழிந்தன; அவர்களின் புகழ்களும் அழிந்தன.—எ-று (ருகூ)

ஆங்கதோர் பொழுதினி லவுணருக் கிறைமகன்
பாங்கராய் வந்திடும் பல்பெருங் குமரரு
மோங்குநாற் படையொடு மொருவனைச் சுற்றியே
தாங்குபல் படையினாற் சமர்முயன் றாற்றினார்.

(இ-ள்.) அவ்வாறானசமயத்தில், சூரபன்மனது பிள்ளையான வச்சிரவாகுவின் உடன்வந்த பல பெருமைவாய்ந்த வாலிபர்களும் உயர்ந்த சதுரங்கசேனைகளுடன், ஒப்பற்ற வீரவாகுதேவரைச் சூழ்ந்துகொண்டு தாங்கள் சுமந்துகொண்டு வந்திருக்கிற பல வகை ஆயுதங்களால் முயற்சியுடன் போர்புரிந்தார்கள்.—எ-று. (சுO)

வேறு.

அன்ன காலையில் வீரவா குப்பெய ரறிஞன்
றன்ன தோர்கரத் திருந்திடு பழுமரத் தண்டான்
முன்னர் வந்துசூழ் மைந்தர்கண் முரட்படை யோடுஞ்
சின்ன மாகியே விளிவுறப் புடைத்தனன் றிரிந்தான்.

(இ-ள்.) அப்பொழுது, விவேகியான வீரவாகுதேவர் தனது ஒருகையிலிருக்கிற ஒரு பழுத்தமரத்தின் தண்டத்தால் தன்னெதிரிலேவந்து தன்னைச்சூழ்ந்து நின்று போர்புரிகின்ற வாலிபர்களை பலம்பொருந்திய அவர்களின் சேனைகளுடன் சின்னப்பட்டு இறக்கும்வண்ணம் அடித்துக்கொன்றுகொண் டுலாவினர்.—எ-று. (சுக)

செய்ய மத்தக மிற்றன விற்றன செழுந்தாள்
கைக ளிற்றன மருப்பிணை யிற்றன கரிகள்

வெய்ய காலுட னெருத்தமு மிற்றன மிலைச்சுங்
கொய்யு ளைத்தலை யிற்றன குரகதக் குழுவே.

(இ-ள்.) யானைகளுக்கு செவ்விய மத்தகங்கள் உடைந்தன. செழுமையான கைகளும் கால்களும் அழிந்தன. கொம்புகளும் அழிந்தன. குதிரைகளுக்கும் வேகமாகச்செல்லுகின்ற கால்களுடன் பிடரியும் அழிந்தன. அலங்காரமாக வாரிவிடப்பட்ட புறமயிரிடங்களும் அழிந்தன.—எ-று. (கூஉ)

தட்ட ழிந்தன பாரக மழிந்தன சகடு
கெட்ட ழிந்தன கேதன மழிந்தன கிளர்நத
மொட்ட ழிந்தன பாகின மழிந்தன முரண்மாக்
கட்ட ழிந்தன வொழிந்தன கனைகுரற் பலதேர்.

(இ-ள்.) கனைப்பான குரலினைக்காட்டுகின்ற பலதேர்க்கூட்டங்கள் தட்டழிந்தன. பாரிடங்களழிந்தன. சகடுகளழிந்தன. கொடிகளழிந்தன. விளங்காநின்ற மேன் மொட்டுகளழிந்தன. சாரதிக்கூட்டங்களழிந்தன. பலம்பொருந்திய கட்டப்பட்ட குதிரைகளழிந்தன.—எ-று. (கூக)

கால்க ளூற்றிடும் வெஞ்சிலை யிற்றன கடிய
கோல்க ளிற்றன பரிதிக ளிற்றன கொட்பார்
தோல்க ளிற்றன நாந்தக மிற்றன தூண்டும்
வேல்க ளிற்றன நாஞ்சில்க ளிற்றன விரைவில்.

(இ-ள்.) விரைவாகக் கால்களோடுகூடிய வெவ்விய வில்லுகளறுந்தன. கொடிய அம்புகளழிந்தன. சக்கரங்களழிந்தன. சுழலாநின்றகேடயங்கள் அழிந்தன. வாட்படைகளழிந்தன. விடப்படுகிறவேலாயுதங்களழிந்தன. அலாயுதங்களழிந்தன.—எ-று. (கூச)

நெரிந்த சென்னிக ணெரிந்தன மார்பக நெடிது
சரிந்த வெங்குடர் சரிந்தன விழுக்குடைத் தசைகள்
சொரிந்த மூளைகள் சொரிந்தன விரிந்தெழு சோரி
திரிந்த கூளிக டிரிந்துமாய் வுற்றன சேனை.

(இ-ள்.) தலைகள் நெரிந்தன. மார்பிடங்கள் விரைவாகச் சரிந்தன. வெவ்விய குடர்கள் சரிந்தன. இழிவுகள்பொருந்திய மாமிசங்கள்சிந்தின. மூளைகள் சொரிந்தன. விசாலமாகவருகின்ற இரத்தவெள்ளங்கள் பரவின. நாலுபக்கங்களிலும் கூளிகள் உலாவின. சைனியங்களிவ்வண்ணமாக திரிந்திறந்தொழிந்தன.—எ-று. (கூரு)

கரந்து ணிந்தனர் புயங்களுந் துணிந்தனர் காமர்
சிரந்து ணிந்தனர் நாசிக டுணிந்தனர் செழும்பூ
ணுரந்து ணிந்தனர் கழலடி துணிந்தன ருளதொல்
வரந்து ணிந்தனர் வன்மையுந் துணிந்தனர் மைந்தர்.

(இ-ள்.) வாலிபர்கள் கைகளறுப்புண்டார்கள். தோள்களும் அறுப்புண்டார்கள். அழகிய தலைகளும் அறுப்புண்டார்கள். மூக்குகளறுப்புண்டார்கள். செழுமையான ஆபரணமணிந்த மார்பறுப்புண்டார்கள். வீரக்கழலணிந்தகால்களறுப்புண்டார்க. தாங்கள் பெற்றிருந்தனவாகவுள்ள வரங்களும் நிஷ்பலமானதாகவானார்கள்.—எ-று. (கூகூ)

வாக்கி னாற்சிலர் தம்முயி ருண்டிடும் வன்கைத்
தாக்கி னாற்சிலர் தம்முயி ருண்டிடுஞ் சமர்செய்
யூக்கி னாற்சிலர் தம்முயி ருண்டிடு முலம்பு
நோக்கி னாற்சிலர் தம்முயி ருண்டிடு நொய்தின்.

(இ-ள்.) வீரவாகுதேவர் பேசும்பேச்சினுற் சிலரைக் கொல்லுவார். பலம்பொருந்திய சுழலுதலையுடைய கையிடிப்பினுற்சிலரைக் கொல்லுவார். யுத்தஞ்செய்கின்ற ஊக்கத்தாற்சிலர் பிராணனை வாங்குவார். பார்வையாற் சிலரதுபிராணனை விரைவில் வாங்குவார்.—எ-று. (சுஎ)

அங்க ணோர்சில வவுணரை யாடல்வெம் பரியை
வெங்கண் யானையை யிரதத்தை வாரினன் விரைவின்
மங்குல் வானினுந் தரையினுங் கடலினும் வரைக
ளெங்கு மாகியே வீழ்தர வீரனூர்த் தெறிந்தான்.

(இ-ள்.) அவ்விடத்தில் வீரவாகுதேவர் கர்ச்சனைசெய்துகொண்டு சிலவசுரர்களையும் போர்செய்கின்ற வெவ்விய குதிரைகளையும் கோபிக்கின்ற பார்வையினையுடைய யானைகளையும் இரதங்களையும் வாரிஎடுத்து விரைவாக மேகங்களையுடைய ஆகாயத்திலும் பூமியிலும் மலைகளி லெவ்விடங்களிலுமாக விழும்படி எறியாநிற்பர்.—எ-று. ()

அன்பு லப்புறு கொடுந்தொழி லவுணர்க ளமரும்
வன்பு லத்துயிர் கொளவரு மறலிதன் றூதர்
துன்பு மச்சமு மணங்குட னகன்றுதற் றுதிப்பத்
தென்பு லத்தவன் முன்னுற வீசினன் சிலரை.

(இ-ள்.) அன்பென்பதில்லாத கொடியதொழிலினையுடைய அசுரர்கள்வாழ்கின்ற கொடிய போர்க்களத்துக்கு அவர்களுயிரை வாங்கவருகின்ற எமதூதர்கள் துன்பமும் அச்சமும் நோவுடனேயொழிந்து தன்னை துதிக்கும்வண்ணம் எமன் எதிரிலே சிலரை எடுத்தெறிந்தனர்.—எ-று. (சுக)

ஒருத லைப்படுங் கேளிரைத் துன்னுவா னுய்ப்பக்
கருதி னன்கொலோ சிற்சில வவுணர்தங் கணத்தை
நிருதி மாநகர் புகுந்திட வீசின னிகரில்
சுருதி நாயக னேவலாற் றியதனித் தூதன்.

(இ-ள்.) ஒப்பற்ற வேதநாதரான குமாக்கடவுளின் ஊழியங்களைச்செய்கின்ற நிகரற்ற வீரவாகுதேவர் தங்களுடன் இனத்தாலொத்த பந்துக்களை அடையும்பொருட்டு அனுப்பநினைத்தனரோ அசுரர்களிற் சில கூட்டங்களை நிருதியின் பெரியநகரத்திற்சென்றுவிழும் வண்ணம் எடுத்தெறிந்தனர்.—எ-று. (எ0)

நேர்ந்து போர்புரிந் துயிர்தனை விடாததந் நிலைமை
யோர்ந்து விண்ணவர் மானங்கள் விடுத்திடா துயர்வான்
சார்ந்த ஞாயிறு பிளந்திடா தாடலின் றன்மை
சேர்ந்து ளார்பெறுந் துறக்கமேல் வீசினன் சிலரை.

(இ-ள்.) சிலரை, எதிர்த்து போர்புரிந்து உயிரைவிடாமலும், அவர்கள் இறந்து வருகின்றுரென்றுணர்ந்து தேவர்கள் விமானங்களைக்கொண்டு வருதல் இல்லாமலும், உயர்ந்த ஆகாயத்திலிருக்கிற சூரியமண்டலத்தைப் பிளந்துகொண்டு நேரேசெல்லாமலும் போரிலிறந்தவர்கள் அடைகின்ற வீரசுவர்க்கத்தை அடையும்படி எடுத்தெறிந்தனர்.—எ-று. (எக)

எண்டி சைப்புறந் தாங்கியே பெயர்கிலா திரக்கங்
கொண்ட வெங்கரிக் கிரையெனச் சிலவரைக் கொடுக்குந்
தெண்டி ரைப்புனல் பருகிய நிரப்பது தீர
வுண்டி யாகவே வடவைபாற் சிலவரை யுய்க்கும்.

(இ-ள்.) அட்டதிக்குக்களையுஞ் சுமந்துகொண்டு அசையமாட்டாமல் வருத்தங்கொண்டு நிற்கிற வெவ்விய திக்குயானைகளுக்கு உணவாக சிலரை எடுத்தெறிந்தன. வேறுசிலரை தெளிந்த அலைகளையுடைய கடல்நீரைக்குடித்த தரித்திரமானதுதீர வடவாக்கினியினிடத்திற்கு எடுத்தெறிந்தனர்.—எ-று. (எஉ)

ஏந்த லின்னபல் வகையினு லடுதலு மிமைப்பின்
வீந்த தானைக டுணைவரும் பொன்றினர் மிக்கோ
ரோய்ந்து வானினுங் கடலினுந் திசையினு முலைந்து
சாய்ந்து போயினர் மானமும் வன்மையுந் தவறி.

(இ-ள்.) சிறந்த வீரவாகுதேவரிவ்வண்ணமான பலவிதப்போர்களால் கொல்லுதலும், விரைவாகச்சேனைகளும் துணைவர்களும் அழிந்தார்கள்; அழியாதெஞ்சிநின்றவர்கள்தோற்று வானத்திலுங் கடலிலும் திக்குகளினும் நடுங்கிமானத்தையும் வன்மையையும் இழந்து சாய்ந்து ஓடிப்போனார்கள்.—எ-று. (எங)

மற்றிந் நீர்மையைக் காண்டலும் வச்சிர வாகு
விற்ற தேகொலா நம்பெருந் தானையென் றிரங்கிச்
செற்ற மீக்கொண்டு வலவனை நோக்கியித் தேரை
யொற்றன் முன்னுற விடுத்தியாற் கடிதென வுரைத்தான்.

(இ-ள்.) பின்னர் இவ்வண்ணமாக நடந்துள்ள தன்மைகளையெல்லாம் கண்ட வச்சிரவாகுவானவன் நமதுசெல்வங்களெல்லாம் அழிந்தனவேயென்றுவருந்தி மகாகோபங்கொண்டு சாரதியைப்பார்த்து நீ இத்தேரை விரைவாகத் தூதுவனேரில் விடக்கடவையென்று கூறினான்.—எ-று. (எச)

உரைக்கும் வாசகங் கேட்டலுந் தொழுதுமுன் னுற்ற
பரிக்கு லங்களின் மத்திகை வீசியே பாக
னருக்க னூழியந் திகிரியூர் வலவனு மஞ்சி
வெருக்கொ ளும்படி தேரினை வீரன்முன் விடுத்தான்.

(இ-ள்.) வச்சிரவாகு கூறிய வவ்வசனத்தை வணக்கத்துடனங்கீகரித்த சாரதியும் தன்னெதிரிற் கட்டப்பட்டு நிற்கின்ற குதிரைக்கூட்டங்களைச் சம்மட்டியாலடித்து, சூரியனதொரு சக்கரத்தையுடைய தேரையோட்டுகின்ற சாரதியாகிய அருணனும் அச்சத்துடன் பயமடையும்படி தேரினை வீரவாகுதேவர்முன்னே விட்டனன்.—எ-று.

கொடிய வெஞ்சினந் திருகியே சூர்தரு குமரன்
கடிது போர்செய்வான் வருவது மேலையோன் காணு
முடிவி லாமகிழ் வெய்தியே முழுதுல களந்த
நெடிய மாலினு நெடியன்மற் றிவனென நிமிர்ந்தான்.

(இ-ள்.) கொடிய வெவ்விய கோபத்தினையுடைய வச்சிரவாகுவானவன் யுத்தஞ்செய்யும்பொருட்டு விரைந்துவருதலை, சிறந்த வீரவாகுதேவர்பார்த்து அழிவில்லாத மகிழ்ச்சியடைந்து, உலகினையெல்லாம் ஓரடியிலளந்த திருநெடுமாலைக் காட்டிலும் இவன் பெரியவனென்று பிறர்கூறும்வண்ணம் உயர்ந்துநின்றனர்.—எ-று. (எசு)

நெடிய தாள்புவி யளந்திடப் புயங்கள்விண் ணெருக்க
முடியெ லாங்கடந் தண்டகோ ளகைதனை முட்ட
வடிவ மைந்திடு திறலினுன் பணிபதி மயங்க
வடிபெ யர்ந்துபார் வெடிபட விடிபட வார்த்தான்.

(இ-ள்.) நீண்ட கால்கள் பூமியையளக்கவும், புயங்கள் வெளியிடங்களை நெருக்கவும், எல்லா உலகங்களையுங்கடந்து முடியானது அண்டகோளகையை முட்டவும்

பேருருக்கொண்டுநின்ற வீரவாகுதேவர் ஆதிசேடனும் மயங்கும்வண்ணம் காலெடுத்து வைத்து பூமிபிளக்குமாறு இடியொலியுண்டாகக் கர்ச்சித்தனர்.—எ-று. (எஎ)

புரம டங்கலுந் தெறுகணை போன்றுளான் பொன்னோன்
வரம டங்கலுஞ் சோரிய தடங்கலும் வாணு
ளுரம டங்கலு முண்டிடத் தறியின்வந் துதித்த
நரம டங்கலும் வெருவர வெரியெழ நகைத்தான்.

(இ-ள்.) முப்புரங்களையுமழித்த அம்பினைப்போன்ற வீரவாகுதேவர், இரணியன் பெற்ற எல்லாவரங்களையும் அவன் இரத்தத்தையும் அவனது ஆயுளையும் வலிமையையும் உண்ணும்பொருட்டு தம்பத்திற்றோன்றிய நரசிங்கமும் பயப்படும்படி தீப்பொறி பறக்கச் சிரித்தனர்.—எ-று. (எஅ)

முச்ச கம்புகழ் திறலினுன் முறுவலு முழக்கும்
வச்சி ரத்தட மொய்ம்பினுன் கேட்டலு மறுகி
மெய்ச்சி ரத்தொகை துளக்கியா ரழலெழ விழித்து
நச்செ யிற்றர வாமெனச் செயிர்த்திவை நவில்வான்.

(இ-ள்.) மூன்றுலகிலுள்ளவர்களும் புகழ்கின்ற வீரவாகுதேவரது சிரிப்பும் கனைப்பும் வச்சிரவாகுவானவன் கேட்டவுடனே அச்சங்கொண்டு, பின்னர் தனதுடலிலுள்ள தலைகளையசைத்து தீப்பொறிபறக்கும்வண்ணம் விழித்துப்பார்த்து, விஷம்பொருந்திய பற்களையுடைய பாம்பைப்போலக்கோபித்து இவ்வாறு கூறுவானாயினன்.—எ-று.

வீர நன்றுநின் னாண்மையு நன்றுமே தக்க
பேரு நன்றுபே ராற்றலு நன்றுநீ பெற்ற
சீரு நன்றுநின் விஞ்சையு நன்றுசெய் கின்ற
போரு நன்றுகிற் கேற்பதிவ் வார்ப்பெனப் புகன்றான்.

(இ-ள்.) நின்வீரமும் நன்றாயிருக்கின்றது. நின்னாண்மையும் நன்றாயிருக்கின்றது. உயர்வுபொருந்திய நின்பேரும் நன்றாயிருக்கின்றது. நின்வல்லமையுநன்றாயிருக்கின்றது. நினது சிறப்பும் நன்றாயிருக்கின்றது. நீ கற்றவித்தையும் நன்றாயிருக்கின்றது. நீ செய்யும்போரும் நன்றாயிருக்கின்றது. ஆதலால் நீசெய்யுமிவ்வட்டகாசம் நின்னியல்புக்குத் தக்கதுதான் என்று கூறினன்.—எ-று. (அ௦)

மற்று மோருரை புகலுவான் வந்தெதிர் மலைந்த
கொற்ற வீரரைப் படுத்தன மென்றுளங் கொண்டா
யற்றெ லாமினி விடுமதி நின்மிட லலைத்துப்
பற்றி யெந்தைமுன் விடுப்பனு னுனையெனப் பகர்ந்தான்.

(இ-ள்.) அல்லாமலும் பின்னுமொன்று சொல்லுகின்றான். நீ உன்னெதிரில் வந்து உன்னுடன் போர்புரிந்த வெற்றிபொருந்திய வீரர்களைக்கொன்றோமென்று நின் மனதிலெண்ணிக்கொண்டிருக்கின்றனை. அவ்வாறான எண்ணங்களை யெல்லா மினி விட்டுவிடு நான் நினதுவல்லபங்களைக் கெடுத்து உன்னைப்பிடித்து என்றந்தையினெதிரிற் கொண்டுவிடுவேன் என்று கூறினான்.—எ-று. (அக)

நின்னை வென்றிட முயலுவன் றமியனு நீயு
மென்னை வென்றிட முயலுதி யிருவரு மதனைப்
பன்னி நிற்பதிற் பயனெவன் கடிதமர் பயிறி
பின்னை வென்றுளார் வெல்லுக வென்றனன் பெரியோன்.

(இ-ள்.) உடனே வீரவாகுதேவர் வச்சிரவாகுவைப்பார்த்து நானும் நின்னைவெல்லுதற்கு தக்கமுயற்சியைச் செய்கின்றேன். நீயுமென்னை வெல்லுமாறு முயலக்கட

வை. நாமிருவருமிவ்வாறுகூறி நிற்பதிற் பயனென்னை? நீவிரைந்து போர்புரிதி; பின்னர் செயித்தவர்கள் செயிக்கட்டுமென்று கூறினர்.—எ-று. (அஉ)

என்னு முன்னரே வச்சிர வாகுவென் றிசைக்கு
மன்னன் மாமகன் றனதுகைக் கார்முகம் வாங்கிப்
பொன்னி ணுணொலி கொண்டொரா யிரங்கணை பூட்டி
மின்னுலாந்தனி வேலவன் றூதன்மேல் விடுத்தான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் இவ்வாறு சொல்லி முடித்தற்கு முன்னே, சூரபன் மனது குமாரனாகிய வச்சிரவாகு என்பவன் தனது கையில் உள்ள வில்லைவளைத்து பொன்போன்ற நாணியேறிட்டு டங்கார வோசைகாட்டி அதிலாயிரம் பாணங்களைவைத்து ஒளிபொருந்திய ஒப்பற்ற வேற்படையினையுடைய குமரக்கடவுளின் தூதராகிய வீரவாகுதேவர்மீது விட்டனன்.—எ-று. (அங)

விடுத்த வாயிரம் பகழியும் விடலைதன் மிசையே
யடுத்த வெல்லையிற் காணுறு வங்கைபொன் றதனை
யெடுத்து முன்னுற வோச்சியே யங்கவை யெனைத்தும்
பிடித்து வல்லையி னுண்டுகள் பட்டிடப் பிசைந்தான்.

(இ-ள்.) வச்சிரவாகு விட்ட ஆயிரவம்புகளும் வாலிபராகிய வீரவாகுதேவர் மீது படும்வண்ணம் வருதலைக்கண்டு அழகிய ஒருகையை நீட்டி அவ்வம்புகளையெல்லாம் பிடித்து விரைவாக நுண்ணியதுகளாம்படி பிசைந்தனர்.—எ-று. (அச)

விட்ட வாளிகள் பூழிபட் டிடுதலும் வெகுண்டு
மட்டு வாகைவெஞ் சிலையினைப் பின்னரும் வணக்கி
நெட்டி லைச்சர மொருபதி னுயிர நிறத்திற்
பட்டி டும்படி தொட்டன னவுணர்கோன் பாலன்.

(இ-ள்.) சூரபன்மனது புத்திரனாகிய வச்சிரவாகு தான் விட்டபாணங்கள் புழுதியாதலைக்கண்டு கோபித்து தேன்பொருந்திய வாகைப்பூமாலையையணிந்த வில்லினைப் பின்னொருதரம் வளைத்து நீண்ட இலைகளையுடைய பதினாயிரம் அம்புகளை வீரவாகுதேவரது மார்பிற்படும்படி விட்டனன்.—எ-று. (அரு)

அசைவி லானது நோக்கியே முந்துபோ ரகத்தி
லிசைமை நீங்கியே முடிந்திடு தானவ ரிட்ட
முசல மாகிய தொன்றினை யெடுத்துமுன் வந்த
விசிகம் யாவையும் புடைத்தனன் றிசைதொறும் வீழ.

(இ-ள்.) அசைவற்ற வீரவாகுதேவரதனைப்பார்த்து முன்னஞ்செய்த போரினிடத்தில் புகழொழிந்திறந்த வவ்வசுரர்கள் விட்டுச்சென்ற இருப்புலக்கை ஒன்றைக் கையிலெடுத்து தன்னெதிரேவந்த அம்புகளனைத்தையும் திக்குகடோறும் விழும்படி புடைத்தனர்.—எ-று. (அசா)

வழுவில் வாளிகள் வறிதுபட் டிடுதலு மற்றும்
விழுமி தாகிய வொருபதி னுயிரம் விசிகம்
பழுது றுதன தூண்டியே யாண்டகை பரித்த
வெழுவை நுண்டுக ளாக்கியே பின்னரு மெய்வான்.

(இ-ள்.) தவறுதலற்ற வம்புகள் வீணாய் விடுதலும் பின்னருஞ்சிறந்த ஒருபதினாயிரம் அம்புகளைத் தவறுதனவாகும்படிவிட்டு ஆண்டன்மையிற்சிறந்த வீரவாகுதேவர் கையிற்பிடித்த முசலத்தை நுண்ணிய துகளாகச்செய்து பின்னும் எய்யத்தொடங்கினன்.—எ-று. (அஎ)

தலையி லாயிரங் களத்தினி லாயிரந் தடந்தோண்
மலையி லாயிர முரத்தினி லாயிரம் வயத்தா
ணிலையி லாயிரங் கணைகளாத் தூண்டின னீடுங்
கொலையி லாயிரங் கூற்றினைப் போலுறுங் கொடியோன்.

(இ-ள்.) மிகுந்த கொலைத்தொழிலிற் சிறந்த ஆயிரம் காலர்கள் ஒன்றுசேர்ந் துருக்கொண்டுவந்தாற்போல நிற்கின்ற கொடியவனாகிய வச்சிரவாகு தலையில் ஆயிரமும் கழுத்திலாயிரமும் மலைபோன்ற உயர்ந்த தோள்களிலாயிரமும் மார்பிலாயிரமும் வெற்றிபொருந்திய நிலையினையுடைய கால்களில் ஆயிரமும் ஆகியவம்புகள் விட்டனன்.எ-று

கையி லேந்திய பேரெழு முரிந்திடக் காமர்
செய்ய மெய்ம்முழு தீண்டியே பகழிகள் செறிய
வைய னின்றன னேரிறை வருந்தியே யதற்பின்
னெய்யெ னச்சென்று வெய்யவன் றேரினை யுதைத்தான்.

(இ-ள்.) தமது கையிற் பிடிக்கப்பட்டிருந்த பெரிய முசலமழிதலும் அழகிய செவ்விய திருமேனிமுழுமையும் அம்புகள் நெருக்கமாகத் தைத்துக்கொள்ள ஒருகணப்பொழுது வீரவாகுதேவர் வருத்தத்துடனிருந்து பின்னர் தெளிந்து விரைந்துசென்று அக்கொடியவனது தேரினையுதைத்தனர்.—எ-று. (அக)

உதைத்த காலையிற் பண்ணுறு பரியெலா மொருங்கே
பதைத்து வீழ்ந்தன பாகனு முருண்டனன் பட்டான்
கதித்த வையமு மழிந்தது வன்னது காணு
மதித்து வேறொரு தேரிடைப் பாய்ந்தனன் மறவோன்.

(இ-ள்.) உதைத்தவுடனே அதிற்கட்டப்பட்ட குதிரைகளெல்லாம் ஒன்றாய் ஒடிந்துவிழுந்தன. பாகனும் உருண்டு விழுந்தான். பெருத்த அத்தேரும் அழிந்தது. அதனைக்கண்டு இவரது சாமர்த்தியத்தை மதித்த வீரனாகிய வச்சிரவாகு வேறே யொரு க்ஷேமத்தேரில் பாய்ந்து ஏறிக்கொண்டனன்.—எ-று. (கூ0)

பாய்ந்து வச்சிர வாகுவாந் தொல்பெயர் படைத்தோன்
றேய்ந்த வொண்பிறை பணியொடு சேர்ந்தன சிலையி
னாய்ந்தொ ராயிர மயிற்கணை பூட்டியே யடுபோ
ரேந்த னெற்றியுட் செறித்தன னமரர்க ளிரங்க.

(இ-ள்.) வச்சிரவாகுவென்னும் பெரிய நாமத்தைப்பெற்றுள்ள வசுரன் க்ஷேமத்தேரில் பாய்ந்து தேய்வுபொருந்திய ஒள்ளிய சந்திரனானது பாம்பொடு பொருந்தியிருந்தாற்போல காணப்படுகின்ற நாணோடுகூடிய வில்லில் ஆயிரம்பாணங்களைத்தேடியெடுத்துப் பூட்டிக்கொல்லத்தக்க போரினைச்செய்கின்ற வீரவாகுதேவரது நெற்றியில் தேவர்கள் வருந்தும் வண்ணம் அழுத்தினன்.—எ-று. (ககூ)

ஆயி ரங்கணை நுதலிடை யழுத்தலு மடல்வேற்
றூய வன்றிருத் தூதுவன் சூரருள் புரிந்த
தீய வன்றடந் தேரினைச் செங்கையா லெடுத்து
மீயு யர்ந்திடும் விண்ணிடை யெறிந்தனன் விதித்தான்.

(இ-ள்.) ஆயிரமம்புகளை ஏககாலத்தில் நெற்றியிலழுத்துதலும், பலம்பொருந்திய வேற்படையினையுடைய பரிசுத்தராகிய குமரக்கடவுளின் தூதராகிய வீரவாகுதேவர் சூரபன்மன்பெற்ற கொடியவனாகிய வச்சிரவாகுவினது விசாலமான செவ்வியதேரினைக் கையிலெடுத்து மிகவும் உயரமான ஆகாயத்திற்செல்லும்வண்ணம் விட்டெறிந்தனர்—எ-று. (கஉ)

விண்ண கத்திடை யெறிந்தபின் வீரவா குப்பே
ரண்ணல் வச்சிர வாகுவந் தேறுவா னமைந்து
பண்ணு றுத்திய வேமமாய் நின்றதேர் பலவுந்
துண்ணெ னப்புடைத் தெறிந்துதைத் தொல்லையிற் றொலைத்தான்.

(இ-ள்.) வச்சிரவாகுவின்தேரை வானத்திற் செல்லும்வண்ணம் எடுத்தெறிந்த தற்குப் பின்பு வீரவாகுவென்னுந் திருநாமத்தையுடையதலைவர் வச்சிரவாகு ஏறும்பொருட்டு அலங்கரித்து நிறுத்தியுள்ள பல சேமத்தேர்களையும் விரைவாகவடித்தும் எறிந்தும் உதைத்து மழித்தனர்.—எ-று. (கூ)

தொலைக்கு மெல்லையி னவுணர்கோன் மதலைதொல் புவிக்கோ
ரிலக்கம் யோசனை யெல்லையின் காறும்விண் ணேகி
யலக்க ணுற்றுமீண் டழிதரு தேருட னமரில்
வெலற்க ருந்திற லறுமுகன் றூதன்முன் வீழ்ந்தான்.

(இ-ள்.) உதைத்தும் இடித்தும் ஒடிக்கின்றசமயத்தில் சூரபன்மனது புத்திரனாகிய வச்சிரவாகு ஆகாயத்தி லோரிலக்கம் யோசனை மேலேசென்று அலக்கழிந்து கெட்டதேருடன் போரில்வெல்லுதற்குக்கூடாத சாமர்த்தியத்தினையுடைய சண்முகதூதரெதிரே விழுந்தனன்.—எ-று. (கச)

நிலவ ரைப்புறுஞ் சூர்மக னெழுந்துதன் னெடுஞ்
சிலவ ளைத்தமர் செய்திட முன்னலுந் திறலின்
றலைமை பெற்றவன் கண்டுகை யோச்சியத் தனுவை
வலிது பற்றியே முரித்தனன் பேரொலி மயங்க.

(இ-ள்.) பூமியில்வந்து விழுந்த வச்சிரவாகுவெழுந்து தனது நீண்ட வில்லைவளைத்து போர்புரிதற்குத்தேசித்தலும் வீரத்தன்மையில் முதன்மையுடையவராகிய வீரவாகுதேவர் அதனைப்பார்த்து தமது கையைநீட்டி அவனெடுத்தவில்லை வலியப்பிடித்துப் பேரொலியுண்டாகும்வண்ணம் ஒடித்தனர்.—எ-று. (கரு)

ஏந்து கார்முகந் தனைமுரித் திடுதலு மெரியிற்
காந்து கண்ணுடை வச்சிர மொய்ம்பனோர் கரத்தின்
வாய்ந்த வாள்கொடே யெதிர்தலுந் தன்னுடை மருங்கி
னாந்த கந்தனை யுறைகழித் தறிவன்மே னடந்தான்.

(இ-ள்.) தான்பிடித்திருந்த வில்லை ஒடித்திடுதலும், தீயைப்போல சொலிக்கின்ற கண்களையுடைய வச்சிரவாகுவானவன் ஒருகையிற்பொருந்திய வாளாயுதத்தை எடுத்துக்கொண்டு எதிர்க்கவும், வீரவாகுதேவரும் தனது இடையிலணிந்திருந்தவாளை யுறையினின்றும் உருவிகொண்டு எதிரேசென்றனர்.—எ-று. (கசு)

நடந்து வச்சிர வாகுமுன் னுய்த்திட நனிதோ
ளடைந்த வாளினை விலக்கியே யறிவரி லறிவன்
கடந்த போர்வலி கொண்டதன் வாளினாற் கடிது
தடிந்து வீட்டின னவுணர்கோ னுந்தகத் தடக்கை.

(இ-ள்.) வச்சிரவாகுவானவனெதிரோவந்து வெட்டிய வெட்டினைவிலக்கி அறிஞரிலெல்லாம் அறிஞராகிய வீரவாகுதேவர் அநேகர்களைக்கொன்ற போர்த்திறம்பொருந்திய தன்வாளினால் வச்சிரவாகுவின் வாளொடுகூடிய பெரிய கையை வெட்டியெறிந்தனர்.—எ-று. (கஎ)

செய்ய தோர்கரந் துணிபடத் தீயவன் செறுத்தோர்
கையி ருந்திடு தண்டினை யெறிதலுங் கண்டு

மையல் கேள்வியன் றுணிபடுத் தவுணர்கோன் மதலை
யையி ரண்டவாந் தலையையும் வாளினு லறுத்தான்.

(இ-ள்.) செவ்விய ஒரு கை அறுபட்டவுடனே கொடியவனுகிய வச்சிரவாகு வீரவாகுதேவரை மடக்கிக்கொண்டு தனது வேறெரு கையிலிருந்த ஒரு தண்டத்தா லெறிந்தனன் எறிதலும் அதனை வீரவாகுதேவர் பார்த்து அத்தண்டத்தைத் துண்டாக வெட்டி எறிந்து சூரபன்மனது மகனுகிய வச்சிரவாகுவின் பத்துத்தலைகளையும் வாட்ப டையினுல்வெட்டி யெறிந்தனர்.—எ-று. (கசஅ)

வேறு.

எந்தைதன் றூதுவ னெறிந்த வாளினு
லைந்திரு சென்னியு மற்று வீழ்தலு
மைந்தியல் வச்சிர வாகு வாகிய
வெந்திற லவுணர்கோன் வீடி னனரோ.

(இ-ள்.) எந்தை பெருமானுகிய குமரக்கடவுளின் தூதுவரான வீரவாகுதேவர் வெட்டிய வாளாயுதத்தினுல் பத்துத்தலைகளும் அறுந்து விழுதலும் வலிமைபொருந்திய வச்சிரவாகுவென்னும் இயற்பெயரினையுடைய கொடிய தன்மையினையுடைய அசுரமன் னவன் இறந்தழிந்தனன்.—எ-று.

ஆடிய லவுணர்த மண்ண றன்மகன்
வீடிய காலையின் வெருவிப் பாங்கரி
னுடிய வவுணர்க ணனிபு லம்புறீஇ
யோடினர் திசைதொறு முடைந்து போயினுர்.

(இ-ள்.) விளையாட்டினை மிகுதியாகவுடைய அசுரர்களுக்கிறைவனுன சூரப ன்மனது மைந்தனுன வச்சிரவாகுவானவன் இறந்தவுடனே அவனதுபக்கத்திற் சூழ்ந்து நின்ற மற்றைய அசுரர்கள் பயந்து மிகவும் புலப்பத்துடன் ஓடி நானுதிசைகளிலும் உடைந்துபோனுர்கள்.—எ-று. (கூOO)

துஞ்சினன் வச்சிரத் தோளன் கண்டிது
நெஞ்சக மகிழ்ந்திவ ணிற்ப னேயெனின்
வெஞ்சின வவுணர்கோன் வினவிற் றீமையென்
றஞ்சினன் கரந்தென வருக்கன் போயினுன்.

(இ-ள்.) வச்சிரவாகு இறந்தான் அதனைநான் பார்த்துக்கொண்டு மனமகிழ்ச்சி யுடனிவ்விடத்தில் நிற்பேனுனுல் வெவ்விய கோபத்தினையுடைய சூரபன்மன்கேட்டுணை ர்ந்தால் கெடுதிநேரிடுமென்று அஞ்சினவனுக மறைந்தாற்போல சூரியன் அத்தமனமா னுன்.—எ-று. (கூOக)

வச்சிரவாகுவதைப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கூOச.

---

## யாளிமுகன்வதைப்படலம்.

திண்டிற லவுணர்கோன் சிறுவன் வீந்தது
மண்டம ரியற்றிட வருந ரின்மையுந்
தண்டம் துடைந்ததுந் தபனன் மாய்ந்ததுங்
கண்டன னினையன கருதன் மேயினுன்.

(இ-ள்.) வீரவாகுதேவர் மிக்கதிறமையினையுடைய அசுரமன்னவனாகிய சூரபன்மனது புத்திரனான வச்சிரவாகு இறந்ததும் நெருங்கியபோருக்கு வருவாரின்மையும் சைனியங்கள் தோற்றோடினதையும் சூரியன் அத்தமனமானதையும்பார்த்து இவைகளை எண்ணுவாராயினர்.—எ-று. (க)

எந்தையை யெள்ளின னிருந்த கோநகர்
சிந்தினன் புரத்தையுஞ் சிறிது விட்டினன்
வந்தவர் யாரையு மாய்வு செய்தனன்
புந்தியின் வெகுளியிற் சிறிது போக்கினேன்.

(இ-ள்.) எம்பெருமானை இகழ்ந்தவனிருந்த இந்த ராஜநகரத்தை அழித்தேன். இப்பெரியபட்டினத்தையுங் கொஞ்சம் அழித்தேன். எதிர்த்துவந்தவர்களை யெல்லாங் கொன்றேன். மனத்திலிருந்த கோபத்திற் கொஞ்சம் நீக்கிக்கொண்டேன்.—எ-று.

ஏலவெம் போர்செய வெவரும் வந்திலர்
ஞாலம தவிரொளி நடாத்து ஞாயிறு
மேல்கட லீந்தினன் விரையப் போயினான்
மாலையு மிவ்விடை வந்து நேர்ந்ததே.

(இ-ள்.) தக்கபடியே வெவ்வியபோர்புரிதற்கு யாரும்வந்தார்களில்லை. உலகத்திற்கு விளக்கத்தைகாட்டி நடக்கின்ற சூரியனும் மேலைக்கடலைநீந்தி விரைந்து சென்றனன். இவ்விடத்திலிப்பொழுது மாலைக்காலமும் வந்துசேர்ந்தது.—எ-று. (ஙு)

அறந்தனை நினைகிலா தல்லல் செய்பவ
ருறைந்திடு நகரிதி னுற்றிற் போந்தயான்
சிறந்திடு மறுமுகத் தேவ தேவனை
மறந்திட லாங்கொலிம் மாலை காறுமே.

(இ-ள்.) தருமத்தைஎண்ணாமல் பிறருக்குத்துன்பத்தைச்செய்பவர்கள் இருக்கின்ற இவ்வூரிலே தூதனாகவந்தயான் சிறப்புப்பொருந்திய ஆறுதிருமுகங்களையுடைய தேவநாதனை இந்தமாலைக்காலம் வரைக்கும் மறந்திருக்கலாகுமோ.—எ-று. (ச)

எவரும் வழுத்திய வெந்தை கந்தவேள்
பூவடி தணந்திடு புலம்பு மிம்மிடைத்
தேவர்கள் புன்மையுந் தீர வல்லையிற்
போவது துணிவெனப் புந்தி தேற்றினன்.

(இ-ள்.) எல்லாரும் துதிக்கின்ற எம்பெருமானாகிய குமாரக்கடவுள் திருவடி மலர்களைப்பிரிந்துநிற்குந் துன்பமும் இங்கிருக்கின்ற தேவர்களின் துன்பமும் ஒழியும் வண்ணம் விரைந்துபோவதே உறுதி என்று தனக்குள் நினைத்தனர்.—எ-று. (ரு)

தேற்றிய திறலுடைச் செம்ம லிம்மென
மாற்றலர் படுநில வரைப்பு நீங்கியே
காற்றெனக் கனலெனக் கால னென்னவெங்
கூற்றென மறுகிடைக் குலவி யேகினன்.

(இ-ள்.) இவ்வண்ணமாக உறுதிசெய்துகொண்ட வெற்றியினையுடைய வீரவாகுதேவர் விரைவாக சத்துருக்கள் இறந்த இடத்தைவிட்டு காற்றைப்போலவும் தீயைப்போலவும் காலனைப்போலவும் வெவ்விய எமனைப்போலவும் வீதியில்விளங்கும்படி சென்றனர்.—எ-று. (சு)

திறல்கெழு மொய்ம்புடைச் செல்வன் செல்லுழி
மறுகிடை யவுணர்கண் மற்றவி மற்றிவன்

குறுகலிர் நுங்களைக் கொல்வன் கொல்வனென்
றறைகுநர் முறைமுறை யரற்றி யோடினார்.

(இ-ள்.) வலிமையொடு விளங்குகின்ற தோள்களையுடைய வீரவாகுதேவர் போகும்பொழுதுகண்ட அசுரர்கள் இவன் எமனுக்கும் எதிரோ வராதீர்கள். உங்களைக் கொல்லுவான் கொல்லுவான் என்று கூச்சலிட்டுக்கொண்டோடினார்கள்.—எ-று. (எ)

எஞ்சிய வவுணர்கள் யாரு மிவ்வகை
யஞ்சின ரிரிந்திட வழிந்து முன்னையா
டுஞ்சிய வாவணத் தொகைக டந்தொராய்
விஞ்சிய மகேந்திரம் விடுத்து நீங்கினான்.

(இ-ள்.) இறவாதுநின்ற அசுரர்களெல்லாம் இவ்வண்ணங்கூறிக்கொண்டு பயந்தவர்களாகச்செல்ல அழகுகெட்டுமூதேவி வாசம்பொருந்திய அநேகமான வீதிகளையெல்லாங்கடந்து பெரியமகேந்திரபுரியை விட்டுச்சென்றனர்.—எ-று. (அ)

புடையகன் மகேந்திர புரத்தை நீத்தபின்
விடைபொரு வலியினான் விண்ணின் பாலெழீஇ
முடுகினன் வழிக்கொடு முருகற் போற்றியே
வடதிசை யிலங்கையின் வரைப்பு நண்ணினான்.

(இ-ள்.) இடமகன்ற மகேந்திரபுரியை விட்டுவிலகிச்சென்றதற்குப்பின்புஇடபத்தையொத்த பலாட்டியரான வீரவாகுதேவர் ககனமார்க்கமாகக் கிளம்பி முருகக்கடவுளை வணங்கிவிரைந்து வடக்கிலுள்ள இலங்காநகரத்தினருகிற்சென்றனர்.—எ-று.

வேறு.

ஆங்கது காலையி லனைய
பாங்கரின் மேவரு பழையோ
னோங்கிய மூவெயி லுள்ளோர்
தாங்கிய வன்மை தரித்தோன்.

(இ-ள்.) அப்பொழுது அந்த இலங்காநகரத்திலிருக்கும் பழமையானவன் உயர்ந்த முப்புரங்களிலே வாழ்ந்துகொண்டிருந்தவர்களுக்கிருந்த வலிமையினளவு வலிமையுடையவன்.—எ-று. (கo)

முடியு மகேந்திர மூதூர்
வடதிசை யாரரண் மன்னி
யுடைய விலங்கையி னோம்பும்
படியறு காவல் பரித்தோன்.

(இ-ள்.) அழிதற்கு இருக்கின்ற பெரியமகேந்திரபுரியென்னும் பெரிய ஊரின் வடபுறத்தில் மதிலோடுகூடினதாக விருக்கின்ற இலங்காநகரத்தைக் காக்கின்ற ஒப்பற்ற காவலினையுடையவன்—எ-று. (கக)

ஆயிர மாமுக னடுதோ
ளோய்வி லிராயிர முடையோன்
ஞாயிறு தன்மக னகரின்
வாயில்க ளன்னதோர் வாயான்.

(இ-ள்.) ஆயிரமென்னும் எண்ணினையுடைய பெரியமுகங்களை யுடையவன். கொலைத்தொழிலுக்குரிய இராயிரந்தோள்களையுடையவன். இயமனது கோட்டைவாயிலைப்போன்ற வாய்களையுடையவன்.—எ-று. (கஉ)

வடவரை யாயிரம் வந்தோ
ருடல்கொடு மேவிய தொப்பான்
படைபல பாணி பரித்தான்
கடையழல் கான்றிடு கண்ணன்.

(இ-ள்.) மேருமலைகளோராயிரமொன்று சேர்ந்து உருக்கொண்டாற்போல விளங்குகின்ற வுடலினையுடையவன். பிண்டி பாலம் தோமரம் வாள்வேல் முதலிய அனேகம் ஆயுதங்களை கைகளில் தாங்கிக்கொண்டிருப்பவன். ஓரத்திலே தீப்பொறி பறகின்ற கண்களையுடையவன்.—எ-று. (கங)

தண்ணளி யோரிறை தானு
முண்ணிகழ் வற்ற வுளத்தா
னெண்ணரும் வெம்பவம் யாவும்
பண்ணின னன்று பயின்றான்.

(இ-ள்.) இரக்கமென்பது ஒருக்ஷணப்பொழுதேனும் உள்ளே சஞ்சரிக்காத மனத்தினையுடையவன். அளவற்றனவாகிய கொடியபாவங்களையெல்லாம் பூர்வசன்மத்திலும் இந்தசன்மத்திலும் பழகியுள்ளவன்.—எ-று. (கச)

மீளில் சினத்ததி வேகக்
கோளரி யைத்தரு கொடியோன்
யாளி முகத்தவ னென்போன்
வாள்வய முற்றிடு வலியோன்.

(இ-ள்.) நீங்காதகோபத்தினையுடைய அதிவீரனென்னும் புத்திரனைப்பெற்ற கொடியவன். வாட்போரில் வெற்றிபெறுகின்ற பெரியவன். யாளிமுகனென்னும் பெயரினை யுடையவன்.—எ-று. (கரு)

வேறு.

பெருந்தகை யாங்கவன் பெயர்ந்த காலையி
னருந்திறற் சூரனை யடைந்து மீண்டுபின்
மருந்துறழ் தன்மகன் மாட்சி தேர்வுறீஇ
யிருந்தனன் வருந்தியே யிலங்கை தன்னிடை.

(இ-ள்.) பெரியதன்மையினையுடைய வீரவாகுதேவர் அவ்விடத்திற்கு திரும்பி வருகிறசமயத்தில் அருமையான வெற்றியினையுடைய சூரபன்மனிடஞ்சென்று திரும்பி வந்து யாளிமுகனுனவன் மருந்தினையொத்த தனதுமகனது மாட்சிமையைக் கேட்டுணர்ந்து வருத்தத்துட னிலங்காநகரத்திலிருந்தனன். (கசு)

சண்டவெங் கதிகொடு தமியன் சேறலுங்
கண்டனன் யாரிவன் கள்வன் போலுமால்
விண்டல நீந்தியே மேவு வானெனத்
தொண்டுசெ யுழையரி லொருவன் சொல்லுவான்.

(இ-ள்.) சண்டவேகத்துடன் வீரவாகுதேவர் தனியே அவ்வழியே வருதலைப் பார்த்து இவ்வாகாயத்தின்வழியாக வருகின்ற இவன் யார்? இவன் யாரோ ஒருசோரனுக விருக்கலாம் என்றுகூறுதலும், அவனுக்கூழியஞ்செய்யும் அடிமைகளில் ஒருவன்சொல்லத்தொடங்கினுன்.—எ-று. (கஎ)

நங்குல நாயக நவில்வன் கேட்டிநீ
செங்கதிர் முளைத்துழிச் செல்வற் காணிய

பொங்கொளி மகேந்திர புரத்திற் போந்தனை
யிங்குநின் றிருமக னிருந்து காப்பவே.

(இ-ள்.) நமது குலநாயகனே! நான்சொல்வதைக் கேட்பாயாக! நீ இன்று சூரியோதயமானவுடனே நீ இருந்ததானத்தில் நினதுமகனிருந்து இவ்வூரைக் காவல்செய்ய சூரபன்மனைத் தெரிசிக்கும்பொருட்டு மகேந்திராபுரிக்குச்சென்றனை.—எ-று. (கஅ)

போந்திடு கின்றபின் புணரி தன்னுள்வா
னீந்தின னீங்கிவ னேர வன்னதை
வாய்ந்திடு பெருந்திறன் மடங்கற் பேரினுன்
காந்திய கனலெனக் கண்டு சீறினுன்.

(இ-ள்.) நீ யவ்வாறு சென்றதற்குப்பின்பு ஆகாயத்தின்வழியாய்க் கடலைக்கடந்து இவன் இங்குவருதலும் இவனதுவருகையை யுற்றுணர்ந்த வீரசிங்கனென்பவன் எரிகின்ற தீயைப்போல இவனைக்கண்டு கோபித்தான்.—எ-று. (கசு)

சீறினன் படையொடு சென்று தாக்கலும்
வீறொடு வருமவன் வெகுண்டு வாளுரீஇ
மாறம ரியற்றியே மற்ற வன்றனைக்
கோறல்செய் தொருவிறல் கொண்டு மேயினுன்.

(இ-ள்.) கோபங்கொண்டவனுய்ச் சேனைகளுடன் அவனெதிரிற்சென்று வெகுவீறுப்புடன் அவனெடு போர்புரிதலும், உடனே யவன் மகாகோபங்கொண்டு தனதுவாளினை யுறையினின்று முருவியெடுத்து அவனேடெதிர்த்து போர்புரிந்து அவனைக்கொன்று வெற்றியையடைந்தவனுகச் சென்றனன்.—எ-று. (உ0)

மின்னவிர் பூணுடை வீர மொய்ம்பினு
னின்னதோ ரிலங்கையி னிடைக்கட் பாய்ந்தன
னன்னவ னடிபொரு தாழி யுற்றதாற்
பொன்னகர் வளனெடு மங்கட் புக்கபோல்.

(இ-ள்.) மின்போலும் விளங்குகின்ற ஆபரணங்களையுடைய வீரவாகுவென்னும் அவன் இந்தவிலங்கையின் நடுவில்குதித்தனன். குதித்தவவனது பாதங்களைச்சுமக்கவாற்ருது சுவர்க்கலோகம் தனதுசெல்வத்துடன் கடலில்மூழ்கினுற்போல இந்நகரமும் கடலில்மூழ்கியது.—எ-று. (உக)

புக்கிட வளப்பிலர் பொன்ற வேனையோ
ரக்கண மெழுந்தன ரவற்கண் டஞ்சியே
திக்கொடு வானமுஞ் சிந்த நின்மகன்
மைக்கட லகமொரீஇ வல்லை யெய்தினுன்.

(இ-ள்.) இலங்கைகடலுண்மூழ்குதலும் அநேகம்பேர்கள் இறந்தார்கள். இறவாதமற்றையர்கள் உடனேயெழுந்து அவனைக்கண்டு பயந்து திக்குக்களிலும் ஆகாயத்திலும் சிதறியோடினுர்கள். அப்பொழுது நின்மகனுன அதிவீரன் கருங்கடலுள்ளே மூழ்குதலைவிட்டு விரைந்து கரையேறினுன்.—எ-று. (உஉ)

வெய்தென விவண்வரும் வீர னேடமர்
செய்தனன் வாள்கொடு செவ்வி யன்னதின்
மைதவழ் மேனிநின் மதலை மார்புதாள்
கைதலை யொருதலை கண்ட மாக்கினுன்.

(இ-ள்.) விரைந்து இவ்விடத்திற்குவந்த வீரவாகுவுடன் வாளாயுதத்தினுற் போர்புரிந்தனன். அப்பொழுது காரொளிவீசுகின்ற உடலினையுடைய நின்மகனது தலை

யும் மார்புந் தோளுங் கையும் ஆகிய இவைகளை ஒருமுறையிலேயே வெட்டித்துண்டாக்கினான்.—எ-று. (உ௩)

பூழியம் புயமுடைப் பொருநன் பின்னுறக்
கேழுறு வானெறி கிளர்ந்து போந்திடா
வாழிய மகேந்திர வரைப்பிற் புக்கன
னாழுறு மிலங்கையு மாழி மேலெழ.

(இ-ள்.) புழுதிபொருந்திய வழகிய தோள்களையுடைய போர்வீரனாகிய அவன் பின்னர் விளங்காநின்ற ஆகாயத்தின்வழியாகச்சென்று கடலுளழுந்தியவிலங்கையும் கடன்மீது மிதக்கும்படி மகேந்திராபுரியடைந்தான்.—எ-று. (உ௪)

சூருறை திருநகர் துன்னி யாயிடைச்
சீரினை முழுவதுஞ் சிந்தி நங்குல
வீரரொ டேயமர் விளைத்து வென்றவ
னோருந ரின்மையி னீங்கி னானரோ.

(இ-ள்.) சூரபன்மன் இருக்கின்ற சிறந்த நகரத்திற்குச்சென்று அவ்விடத்திலுள்ள செல்வங்களையெல்லாமழித்து நமதுகுலவீரர்களுடன் போர்புரிந்து அவர்களையெல்லாம் ஜெயித்து அவ்விடத்திற்றன்னோடெதிர்ப்பாரின்மையால் அவ்விடத்தினின்றும் திரும்பிவந்தனன்.—எ-று. (உ௫)

என்னலு முருமினு மிடித்த சொல்லினன்
வன்னிகொ ளுயிர்ப்பினன் மடித்த வாயினன்
றுன்னிய வியர்ப்பினன் சுழலுங் கண்ணினன்
மெய்ந்நிறை வெகுட்சியன் விளம்பன் மேயினான்.

(இ-ள்.) என்றுகூறுதலும் இடி இடிப்பதைக்காட்டிலும் அதிகதொனியோடு கூடிய சொல்லினையுடையவனும், நெருப்புக்காற்று வீசுகின்ற சுவாசத்தினையுடையவனும், மடிக்கப்பட்ட வாயினையுடையவனும், உண்டாகிய வியர்வினையுடையவனும், சுழல்கின்ற கண்ணினையும், உடம்புமுழுமையும் நிறைந்தகோபத்தினையும் உடையவனும் ஆகிக்கூறத்தொடங்கினான்.—எ-று. (உ௬)

காண்டியென் கடிமுறை கடந்து மைந்தனை
யீண்டுயிர் வவ்வியே யிறைவ னூர்புகா
மீண்டிடு கள்வனிவ் வீரந் தன்னொடே
மாண்டிட வடுகுவன் வன்மை யாலென்றான்.

(இ-ள்.) எனதுகாவலினையுடைய முறையோடுகூடிய இந்நகரத்தைக்கடந்து இவ்விடத்தில் எனது மகனதுயிரைவாங்கி யெமதரசனதூருக்குச்சென்று திரும்பிவராநின்ற சோரனை அவனிதுகாறுமடைந்துள்ள வீரத்துடன் அழியும்வண்ணம் எனதுவல்லபத்தாற் கொல்லுவேன் என்றுகூறினான்.—எ-று. (உ௭)

என்றிவை விளம்பியே யாளி மாமுகன்
குன்றென வெழுந்தொரு கொற்ற வாள்கொளீஇ
நின்றசில் படையொடு நேர்ந்து வீரன்முன்
சென்றன னினையன செப்பன் மேயினான்.

(இ-ள்.) என்றிவ்வண்ணங்கூறி யாளிமுகன் மலையெழுந்தற்போலவெழுந்து ஒருவெற்றிபொருந்திய வாட்படையைக்கையிலெடுத்து அருகில்நின்ற சிலசேனையுடன் வீரவாகுதேவரது எதிரிற்சென்று நின்றுகொண்டு இவ்வண்ணங்கூறத் தொடங்கினான்.

நங்கடன் முறையினை நடாத்து மைந்தனை
யிங்கடல் செய்தனை யினைய காப்பொரீஇ
யங்கடற் போந்தனை யழிவுசெய்தனை
வெங்கடல் கடந்தனை மீடியே கொலாம்.

(இ-ள்.) நமது கடமையான முறையினை நடத்திக்கொண்டிருந்தமகனான அதிவீரனை இவ்விடத்திற்கொன்றனை. இங்குள்ள இத்தன்மையான காவலைக்கடந்து அழகிய கடலைத்தாண்டி மகேந்திரபுரிக்குச்சென்று அதனையழித்தனை. இனி நீ இந்த வெவ்விய கடலைக்கடந்து திரும்பியும்போகுவையோ.?—எ-று. (உக)

ஒல்லொலி யளக்கரை யுகண்டு நிற்கினிச்
செல்லுத லரிதியான் செருவி னேர்ந்தனன்
கொல்லுவன் பெருவயங் கொள்வ னீயிவண்
வல்லது புரிமதி மதியிலா யென்றான்.

(இ-ள்.) ஒல்லென்னுமொலியினையுடைய கடலைக்கடந்து இனி நினக்குப்போதற்குக்கூடாது; நான்போரிலெதிர்த்தேன்; உன்னைக்கொல்லுவேன்; பெரியவெற்றியையுமடைவேன்; ஓ புத்தியற்றவனே! நீயுன்னாலானதை இங்குச்செய்யென்று யாளிமுகன் கூறினான்.—எ-று. (கூ0)

சொற்றது கேட்டலுந் துழனிப் பேரொலி
யுற்றெறி கனலென வுயிர்ப்பு மூரலுஞ்
செற்றமு மெய்தியே துளக்கிச் சென்னியைக்
கொற்றமொய்ம் புடையதோர் குரிசில் கூறுவான்.

(இ-ள்.) சொன்னதனைக்கேட்டவுடனே சடசடவென்னும் மிக்கப்பேராசையுடன் பொருந்தியெறிகின்ற தீயைப்போல ஊர்த்தசுவாசமும் சிரிப்புங்கோபமும் பொருந்தி தலையையசைத்து வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் சொல்லாநின்றனர்.—எ-று. (கூக)

ஒருதலை யுடையவென் னுயர்வு மாயிரந்
தருதலை யுடையநின் றாழ்வும் யாமிவட்
பொருதலை யிழைத்திடும் போது காண்புறுங்
கருதலை பெருவடி வமைந்த காட்சியே.

(இ-ள்.) ஒரோ தலையினையுடைய என்னுடைய உயர்வையும், ஆயிரமென்னுமெண்ணோடு கூடிய தலைகளையுடைய நினது தாழ்வையும், நாமிங்கே போர்செய்யுஞ்சமயத்தில் கண்டுகொள்ளலாம். நாம் மகேந்திராபுரியில் பேருருக்கொண்டதனை நீ கண்டாயில்லையோ.—எ-று. (கூஉ)

தீயவ விம்மொழி திண்ணந் திண்ணமுன்
மாயிரும் புழைக்கையின் மாமு கங்களோ
ராயிரந் தன்னையு மறுத்து வீட்டியே
நாயினங் கவரிய நல்கு வேனென்றான்.

(இ-ள்.) கொடிய விவ்வசனமானது உண்மை உண்மை உனதுபெரிய துவாரங்களோடுகூடிய கைகளையுடைய நினது ஆயிரமுகங்களையுமறுத்துக்கொன்று அவைகளை நாய்க்கூட்டம் தின்னும் வண்ணம் கொடுப்பேன் என்று கூறினர்.—எ-று. (கூகூ)

கருணைகொ ணந்தியங் கணத்த னிவ்வகை
யுரைதரு மெல்லையி னுததி மேருமால்

வரையினை விழுங்கிய வளைந்த தேயென
விரைவொடு படைஞர்கள் வீரற் சுற்றினர்.

(இ-ள்.) காருண்யத்தினையுடைய நந்திகணத்தவரான வீரவாகுதேவர் இவ்வாறு கூறியசமயத்தில் கடலானது மேருமலையை முழுத்திவிடும்பொருட்டுச் சூழ்ந்துகொண்டாற்போல விரைவாக அசுரசேனைகள் வீரவாகுதேவரைச் சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (௬௪)

சுற்றிய தானையர் தோன்றன் மீதுதாம்
பற்றிய படைக்கலம் பலவுந் தூண்டியே
செற்றமொ டமர்வினை செய்யச் சூறைபோன்
மற்றவர் சூழலுள் வாள்கொண் டெய்தினன்.

(இ-ள்.) சூழ்ந்துகொண்ட சேனைகள் வீரவாகுதேவர்மீது தங்கைகளிற்பிடிக்கப்பட்டுள்ள பலவகையாயுதங்களையும்விட்டுக் கோபத்துடன் போர்புரிதலும் அவர்கோபத்துடன் சூறைக்காற்றைப்போல அவர்கள் கூட்டத்துள் வாட்படையுடன் பிரவேசித்தனர்.—எ-று. (௬௫)

வேறு.

துண்டமு மகலமுந் தோளுந் தாளுமொண்
கண்டமுஞ் சென்னியுங் கரமு மானவை
விண்டுவிண் டழிவுற வெய்ய தானவர்
தண்டம தனைத்தையுந் தடிந்திட் டானரோ.

(இ-ள்.) மூக்கும், மார்பும், தோளும், காலும், ஒள்ளிய கழுத்தும், தலையும், கையுமாகிய இவைகள் வேறுபட்டு வேறுபட்டு அழியும்படி கொடிய அசுரர்களாகிய சைனியங்களை யெல்லாம் கொன்றனர்.—எ-று. (௬௬)

அறுகு மாமுகத் தண்ண லாற்றவுங்
கறுவு பெற்றிடுங் கருத்தின் வீரனைக்
குறுகி யாயிரங் கொண்ட கைகளா
லிறுதி யூழிநா ளிடியி னெற்றினன்.

(இ-ள்.) யாளிமுகத்தினையுடைய தலைவனானவன் மிகவும்கோபம்பொருந்திய உள்ளத்துடன் வீரவாகுதேவரது அருகிற்சென்று ஆயிரமென்னும் எண்கொண்ட கைகளால் உலகமழியும் ஊழிக்காலத்தில் உண்டாகின்ற இடியோசையைப்போல ஓசையுண்டாம் வண்ணம் அடித்தனன்.—எ-று. (௬௭)

அடித்த கைகளை யுங்கை யொன்றினாற்
பிடித்து மேலவன் பெருங்கை வாளினா
லுடைத்த சோரிநீ ருகுத்து வீழ்ந்திறை
துடித்தி டும்படி துண்ட மாக்கினான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் தம்மையடித்த யாளிமுகனது ஆயிரங்கைகளையும் தமது ஒருகையினாற்பிடித்து வாட்படையினால் அழிக்கப்பட்ட இரத்தவெள்ளத்தை ஒழுகவிட்டுக்கொண்டு அக்கைகள் துடிக்கும்படி துண்டாகவெட்டினர்.—எ-று. (௬௮)

ஆயி ரங்கர மறனு மற்றுள
வாயி ரங்கர மவைக ணீட்டியே
யாயி ரங்கிரி யவைப றித்தன
னாயி ரங்கணு னுடல் கொண்டுளான்.

(இ-ள்.) ஆயிரங்கைகள் அற்றவுடனே இந்திரனை செயித்த யாளிமுகன் இன்னொரு புறத்திலுள்ள ஆயிரங்கைகளால் ஆயிரம்மலைகளைப்பற்றிப் பிடித்துத் தூக்க எறிந்தனன்.—எ-று. (ஙக)

பறித்த வாயிரம் பருப்ப தத்தையுங்
கறுத்து வீரனமேற் கடிது வீசலு
மிறத்தல் கொண்டுமெய் யெங்கு மெய்தியே
புறத்து வீழ்ந்தன வுடைந்து பூழியாய்.

(இ-ள்.) தான்பறித்தெடுத்த வாயிரம்மலைகளையும் மகாகோபத்துடன் வீரவாகுதேவர்மீது படும்படி விரைவாகவெறிந்தனன். அவைகள் அவருடன்முழுமையிலும் சென்றுபட்டு உடைந்து புழுதியாய் வெளியே சிதறின.—எ-று. (சு0)

பொற்றை யாவையும் பூழி யாகியே
யற்ற காலையி லையன் றூதுவன்
மற்றை யாயிரம் வான்க ரத்தையுங்
கொற்ற வாள்கொடே குறைத்து வீட்டினான்,

(இ-ள்.) மலைகளெல்லாம் புழுதியாகி யழிந்தவுடனே குமரக்கடவுளின் தூதுவராகிய வீரவாகுதேவர் அவனது மற்றையநீண்ட வாயிரங்கைகளையும் வெற்றிபொருந்திய வாட்படையினாலே வெட்டியெறிந்தனர்.—எ-று. (சுக)

இழைக்கு மெல்லையி னெய்துங் கூற்றினை
யழைக்கு மாறென வார்த்துத் தானவன்
றழைக்கு மொய்ம்பினன் றன்னைப் பற்றுவான்
புழைக்கை முற்றவும் பொள்ளென் றுய்த்தனன்.

(இ-ள்.) இவ்வாறு போர்புரிகின்ற சமயத்தில் தம்மிடத்துவருகின்ற எமனை யழைக்குந்தன்மையைப்போல கர்ச்சித்துக்கொண்டு வீரவாகுதேவனைப் பிடிக்கும்பொருட்டுத் தனது தும்பிக்கைகளையெல்லாம் விரைவாக நீட்டினன்.—எ-று. (சுஉ)

உய்த்த காலையி னொருதன் வாளினு
லெய்த்த வன்மைசேர் யாளி மாமுகன்
பத்து நூறெனப் பட்ட சென்னியுங்
கொத்தொ டேவிழக் குறைத்திட டானரோ.

(இ-ள்.) தனது பெரிய துவாரம்பொருந்திய நீண்ட துதிக்கையை நீளமாக நீட்டிய சமயத்தில் (ஒப்பற்ற குமரக்கடவுளின் தூதுவராகிய வீரவாகுதேவர் தமது) ஒப்பற்ற வாட்படையினால் வல்லபமிழந்த அந்த யாளிமுகனது ஆயிரமாகிய தலைகளையும் கொத்தாயறுந்துவிழும் வண்ணம் வெட்டினர்.—எ-று. (சுஙு)

யாளிமுகன்வதைப்படலம்முற்றிற்று.

ஆக திருவிருத்தம் – கூசுஎ.

---

# வீரவாகுமீட்சிப்படலம்.

---

இன்ன பான்மையால் யாளி மாமுகன்
றன்னை யட்டபின் றன்கை வாளினைப்
பொன்னு லாவுறை புகுத்திச் சென்றனன்
மின்னு செஞ்சுடர் மேனி வீரனே.

(இ-ள்.) இவ்வண்ணமாக ஒளிவீசாநின்ற செவ்விய சுடர்மயமாக விளங்குகின்ற திருமேனியையுடைய வீரவாகுதேவர் பெரியயாளிமுகனைக்கொன்றபிறகு தனது கையிலுள்ள வாளினை பொன்மயமாக விளங்குகின்ற உறையிலிட்டுச்சென்றனர். (௧)

இந்தி ரத்திரு விலங்கை நீங்கியே
யந்தி ரைக்கட லழுவம் வாவியே
கந்த மாதனங் கவின்ற வேலைசேர்
செந்தி மாநகர் சென்று புக்கனன்.

(இ-ள்.) இந்திரசெல்வத்தினையுடைய இலங்கையைவிட்டுச்சென்று அழகிய திரைகளையுடைய கடலினிடத்தைக் கடந்து கந்தமாதனகிரியுடன் விளங்காநின்ற கரையினையுடைய திருச்செந்தூரிற் சென்று சேர்ந்தனர்.—எ-று. (௨)

புக்க காலையிற் பொருவி லாற்றலான்
மிக்க சேவகன் மேவல் காணுறாத்
தொக்க பாரிடஞ் சோமற் காணுறு
மைக்க ருங்கடன் மான வார்த்தவே.

(இ-ள்.) சென்ற உடனே ஒப்பற்ற வல்லபத்தினில் சிறந்ததூதுவர் வந்ததனைப்பார்த்து அவ்விடத்தில் நெருங்கியிருந்த பூதசைநியங்கள் சந்திரனைக்கண்ட கரிய பெரிய கடலைப்போல் ஆரவாரித்தன.—எ-று. (௩)

பாரி டத்தொகை பரிக்கு மன்னவர்
சேர வந்துதஞ் செங்கை கூப்பியே
வீர வாகுவை மெய்யு றத்தழீஇ
யார்வ மெய்தின ரன்பு கூறினார்.

(இ-ள்.) பூதசைநியங்களை ஆளுகின்ற தலைவர்களாகிய நூற்றெட்டுமன்னவர்களும் ஒருமிக்கவந்து தமதுசெவ்விய கைகளைகுவித்து வணங்கி அவ்வீரவாகுதேவரை கட்டித்தழுவி மிக்க விருப்பமுடையவர்களாய் பிரியவசனங்களை கூறினார்கள்—எ-று.

தழுவு வோர்தமைத் தானும் புல்லியே
யிழிஞர் தம்பதிக் கேகும் வெம்பவ
மொழிவ தாயின னுமைக்கண் டேயென
முழுவ லன்பினன் முகமன் கூறினான்.

(இ-ள்.) தன்னை யாலிங்கனம் செய்தவர்களை தானும் ஆலிங்கனம் செய்து இழிகுலத்தினராகிய அசுரர்கள் வாசஞ்செய்கின்ற நகரத்திற்குச்சென்ற கொடிய பாவமானது புண்ணியசாலிகளான உங்களைப்பார்த்து நீக்கிக்கொண்டவனாயினேன் என்று பேரன்புடன் உபசாரவசனங் கூறினர்.—எ-று. (௫)

விலக்கில் வன்மைகொள் வீர வாகுவை
யிலக்கத் தெண்மரு மெதிர்ந்து மற்றவன்
மலர்க்க ருங்கழல் வணங்கிக் கைதொழ
வலக்க ணீங்குமா றனையர்ப் புல்லினான்.

(இ-ள்.) நீக்குதலில்லாத சாமர்த்தியம்பொருந்திய வீரவாகுதேவரை அவர்தம்பிமார்களாகிய ஒருலக்ஷத்து எட்டுவீரர்களும் எதிரேவந்து மலர்போன்ற கழலணிந்த பாதங்களைவணங்கித் தொழலும் துன்பம் நீங்கும்வண்ணம் தானும் அவர்களை யாலிங்கனஞ் செய்தனர்.—எ-று. (௬)

அமைவில் பாரிடத் தனிக வேந்தருந்
தமர்க ளாயினோர் தாமுஞ் சூழ்வர

விமல னாகியே வீற்றி ருந்திடுங்
குமர நாயகன் கோயின் மேயினான்.

(இ-ள்.) அளவற்ற பூதசேனாதிபர்களும் தம்மவர்களாயுள்ள தம்பிமார்களும் உடன் சூழ்ந்துவர நிருமலராக எழுந்தருளியிருக்கின்ற குமாரசுவாமியின் திருக்கோயிலிற்குள் சென்றனர்.—எ-று. (எ)

விண்டு வானுளோர் விரிஞ்சன் மாதவர்
கொண்ட லூர்பவன் குழுமிப் பாங்குற
வண்டர் நாயக னமருந் தன்மையைக்
கண்டு முந்துகண் களிப்பின் மேயினான்.

(இ-ள்.) திருமால் தேவர்கள் பிரமன் முனிவர்கள் இந்திரன் முதலானவர்கள் பக்கங்களில் சூழ்ந்திருக்க தேவதேவன் எழுந்தருளியிருக்குந் தன்மையைப்பார்த்து சிறந்த நேத்திராநந்தத்துடன் சந்நிதானத்திற் சென்றனர்.—எ-று. (அ)

உள்ள மென்புட னுருகத் தூயநீர்
வெள்ளங் கண்ணுற விதிர்ப்பு மேவரப்
பொள்ளெ னப்புரம் பொடிப்பச் சூரடும்
வள்ளல் சேவடி வணங்கி னானரோ.

(இ-ள்.) வீரவாகுதேவர் தமது மனமானது எலும்புடன் உருகவும் ஆனந்தபாஷ்பமானது கண்ணில் உண்டாகவும் புளகாங்கிதம் உண்டாகவும் விரைவாக ரோமகூர்ச்சிதமுண்டாகவும் சூரபன்மனை சங்கரித்தற்கு எழுந்தருளியிருக்கின்ற குமாரக்கடவுளின் செவ்விய பாதங்களை வணங்கினார்.—எ-று. (கூ)

அணங்கு சால்வுறு மந்தண் சேவடி
வணங்கி மும்முறை மகிழ்ச்சி யன்பிவை
யிணங்க வஞ்சலித் தேத்தி நிற்றலுங்
குணங்கண் மேற்படுங் குமரன் கூறுவான்.

(இ-ள்.) தெய்வத்தன்மை மிகுந்த அழகிய தண்ணிய செவ்விய பாதங்களை மூன்றுதரம் வணங்கி சந்தோஷமும் அன்புமாகிய இவ்விரண்டும் பொருந்த துதித்துக் கொண்டு நிற்றலும், நற்குணங்களிற்சிறந்த குமாரக்கடவுள் திருவாய் மலர்ந்தருளினார்.—எ-று. (க0)

சுரரை வாட்டுறுஞ் சூரன் முன்புபோய்
விரைவி னம்மொழி விளம்ப மற்றவ
னுரைசெய் திட்டது மொல்லை மீண்டது
மரபி னிவ்விடை வருத்தியா லென்றான்.

(இ-ள்.) தேவர்களை வருத்துகின்ற சூரபன்மனது எதிரில் சென்று விரைவாக நமது வசனங்களை நீ சொல்ல அதற்கு அவன் பதின்மொழியுரைத்ததுவும் நீவிரைவிற் திரும்பிவந்ததுவும் முறைப்படி இவ்விடத்திற் கூறுவாயாக என்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று. (கக)

வீரன் கூறுவான் விமல நின்மொழி
சூரன் முன்புபோய்ச சொல்ல விண்ணுளோ
ராரி ருஞ்சிறை யதனை வீடலே
காரி யம்மெனக் கருத்திற் கொண்டிலன்.

(இ-ள்.) அதற்கு வீரவாகுதேவர் கூறுகின்றனர்: மலரகிதராகிய கடவுளே! தேவரீரது திருமொழியை அடியேன் சூரபன்மனெதிரிற்சென்றுகூற அதற்கு அவன்

தேவர்களிருக்கின்ற பெரியசிறையை விடுத்தல் முறைமையானதென்று தம்மனத்தில் நினைத்தானில்லை.—எ-று. (கஉ)

கெடல ருஞ்சுரர் கிளையை வெஞ்சிறை
விடுகி லேனென வெகுண்டு கூறின
னடிக வென்னதா லாண்டு நீங்கியே
கடிது வந்தனன் கருமமீ தென்றான்.

(இ-ள்.) கெடுதலற்ற தேவர்களின் வமிசத்தினர்களை அடைத்திருக்கின்ற கொடிய சிறையை நான் நீக்கமாட்டேனென்று கோபத்துடன் கூறினான். ஆண்டவனே! அதனால் அடியேன் அவ்விடத்தைவிட்டு விரைந்து திரும்பிப்போந்தேன் இதுவே அடியேனாலாகிய கருமம் என்று கூறினார்.—எ-று. (கங)

என்ற காலையின் யாண்டு மாகியே
நின்று முற்றொருங் குணர்ந்த நீர்மையா
னுன்றன் செய்கையு ளொன்றுஞ் சொற்றிலை
நன்று மற்றது நவிறியா லென்றான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் இவ்வண்ணம் கூறியவுடனே, எவ்விடங்களிலும்நிறைந்து எல்லாவற்றையும் ஏககாலத்தில் அறிந்தருளும் தன்மையினையுடைய குமார சுவாமியார் வீரவாகுவைப் பார்த்து வீரவாகுவே! உனது செய்கைகளில் ஒன்றையும் இங்கு கூறினாயில்லை, நீ அங்கு சென்று நடத்திய விஷயங்களை யெல்லாம் நன்றாய் உரைக்கக்கடவை என்று திருவாய்மலர்ந் தருளினார்.—எ-று. (கச)

தொடக்க முற்றுவாழ் சூரன் மாநக
ரடுத்த காலையி னகன்ற வேலையிற்
றடுத்து ளோரைநின் சரண வன்மையாற்
படுத்து வந்தனன் பான்மையீ தென்றான்.

(இ-ள்.) ஆண்டவனே! பந்தத்துடன் பொருந்திவாழ்கின்ற சூரபன்மனது பெரிய நகரத்திற்கு அடியேன் சென்றபொழுதும் திரும்பி வந்தபொழுதும் தடைசெய்தவர்களை தேவரீரது சரணவன்மையால் கொன்று திரும்பவந்தேன்; இதுதான் அடியேனால் நடத்தப்பட்ட விஷயம் என்று கூறினார்.—எ-று. (கரு)

அருந்தி றற்புய னனைய செப்பலு
மிருந்த கந்தவே ளிகலி னோர்களால்
வருந்தி னாய்கொலோ மன்ற வென்றுதன்
றிருந்து பேரருள் செய்தன் மேயினான்.

(இ-ள்.) அருமையான சாமர்த்தியத்தினையுடைய வீரவாகுதேவர் இவ்வாறு கூறுதலும், சிம்மாசனத்தி லெழுந்தருளியிருந்த குமரக்கடவுள் வீர! நீபகைவர்களால் மிகவும் வருத்தத்தை யடைந்தனையோ என்று தமது பேரருளைக்காட்டினர்.—எ-று.

அங்கவ் வெல்லையி னாயி ரம்பெயர்ச்
செங்கண் மாயவன் றிசைமு கத்தவன்
மங்குன் மேலவன் வதன நோக்கியே
யெங்க ணாயக னினைய கூறுவான்.

(இ-ள்.) அப்பொழுது ஆயிரநாமங்களையுடைய செந்நிறம்பொருந்திய கண்களோடுகூடிய திருமாலும் பிரமனும் இந்திரனும் ஆகிய இவர்களது முகத்தைப்பார்த்து எங்கள் கடவுளாகிய ஸ்ரீகுமாரசுவாமியார் இவ்வாறு கூறுவாராயினர்.—எ-று. (கஎ)

தேவ ரைச்செயுஞ் சிறைவி டுத்துநீ
மேவு நன்கென வெய்ய சூரனுக்
கேவு தூதைவிட் டியம்பு வித்தனம்
பாவி யன்னது பயனென் றுன்னலான்.

(இ-ள்.) நாம் சூரபன்மனுக்கு, சூர! நீதேவர்களை அடைத்திருக்கும் சிறையை யொழித்து சுகமாகவிரு என்றுகொடியவச்சூரனுக்கு அனுப்பப்பட்ட தூதனைக்கொண்டு சொல்லுவித்தனம் பாவியாகிய அவன் அதனையொரு பிரயோசனமான வசனமாகக் கருதினனில்லை.—எ-று. (கஅ)

வீத லேயவன் விதிய தாதலிற்
றீதில் விண்ணவர் சிறைவி டோமென
வோதி னனவ னுயர்வு நீக்குவான்
போது நாளை யாமெனப் புகன்றனன்.

(இ-ள்.) இறந்துபடுதலே அவனுக்குரிய விதியாதலால், குற்றமற்ற தேவர்களின் சிறையை ஒழியோமென்று கூறினன். ஆதலால் (அப்படிப்பட்ட) அவனது கவுரவங்களை நீக்குமாறு நாம்நாளையதினம் போகின்றோம் என்று திருவாய்மலர்ந்தருளினர்.

ஆறு மாமுகத் தைய னிவ்வகை
கூறக் கேட்டுளோர் கொடிய சூர்மிசைச்
சேறு மென்றசொற் றெளிவி னந்துயர்
மாறிற் றென்றனர் மகிழ்ச்சி யெய்தினர்.

(இ-ள்.) ஆறுதிருமுகங்களையுடைய கடவுள் இவ்வண்ணமாகக் கூறுதலும் அதனைகேட்ட மற்றத்தேவர்கள், இறைவன் கொடிய சூரபன்மனிடத்திற்கு போகின்றேன் என்றசொல்லின் தெளிவினல் நமது துன்பங்கள் நீங்கின என்றுகூறி மகிழ்வடைந்தார்கள்.—எ-று. (உ0)

ஆன வத்துணை யாடன் மொய்ம்பினன்
றூன வப்பதிச் சயந்த னுற்றது
மேனைச் செய்கையு மெடுத்துக் கூறியே
வான வர்க்கிறை மனத்தைத் தேற்றினன்.

(இ-ள்.) அவ்வாறாகிய அப்பொழுது வீரவாகுதேவர் மகேந்திரநகரத்தில் சயந்தன் சிறையிலிருப்பதையும் மற்றுள்ள விஷயங்களையும் எடுத்துக்கூறி தேவராஜனாகிய இந்திரனுடைய மனதுக்கு தேறுதலையுண்டாக்கினர்.—எ-று. (உக)

சீரு லாமகேந் திரபு ரத்தினும்
வீர வாகுமீண் டதுவி ளம்பினு
மார ஞர்க்கட லலைப்ப வாண்டுறுஞ்
சூர னுற்றதும் பிறவுஞ் சொல்லுவாம்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய வீரமகேந்திரபுரியினின்றும் வீரவாகுதேவர் திரும்பிவந்த விஷயத்தைக் கூறினோம் அம்மகேந்திரபுரியிலிருந்த சூரபன்மன் அருமையான துன்பமானது தன்னைவருத்த அதனால் அவனடைந்த கஷ்டமுதலானவைகளையும் மற்றவைகளையும் கூறுகின்றோம்.—எ-று. (உஉ)

வீரவாதுமீட்சிப்படலம்முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கசுக.

---

# சூரன்கர்புரிபடலம்.

ஊக வான்படை யுலப்ப வச்சிர
வாகு மாண்டதும் வாகை மொய்ம்பினு
னேகுந் தன்மையு மேவற் றூதுவர்
சோக மோடுபோய்ச் சூர்முன் கூறினார்.

(இ-ள்.) யூகம் கட்டப்பட்ட பெரியசைனியங்கள் இறக்க தன்மைந்தனான வச்சிரவாகு இறந்ததும்,வீரவாகுதேவர் திரும்பிச்சென்றதும்முதலிய எல்லாம் தூதுவர்கள் துன்பத்தோடுசென்று பெரிய சூரபன்மனிடத்திற் கூறினார்கள்.—எ-று. (க)

ஈளைஞ் சென்னிசே ரிளைய கான்முளை
வீரஞ் சிந்தியே விளிந்த வாற்றினைச்
சூரன் கேட்டலுந் துளங்கித் துன்பெனும்
வாரி யுள்ளுற மயங்கி வீழ்ந்தனன்.

(இ-ள்.) பத்துத்தலைகளையுடைய இளையமகனான வச்சிரவாகு, குமரக்கடவுளின் தூதுவனான வீரவாகுதேவரால் சௌரியமிழந்தழிந்த தன்மையைத் தூதுவர்கள் வந்துசொல்லக்கேட்டவுடனே சூரபன்மன்நடுக்கங்கொண்டு துக்கமென்னுங்கடலினுள் மயங்கிவிழுந்தனன்.—எ-று. (உ)

வேறு.

கண்ணிடை நெடும்புனல் கால மைந்தன்மே
லுண்ணிக ழன்புசென் றுயிரை யீர்ந்திடத்
துண்ணென வுயிர்ப்பெனும் புகையுஞ் சுற்றிட
வெண்ணருஞ் செல்லல்கொண் டிரங்கி யேங்கினான்.

(இ-ள்.) கண்களில் மிகுதியாக நீரொழுக,தமது மைந்தன்மீது உள்ளே விளங்கிய அன்பானதுசென்று உயிரை வாளிட்டறுப்பதுபோலறுக்க, விரைவாக பெருமூச்சென்னும் புகையுஞ் சூழ்ந்துகொள்ள அளவிடக்கூடாத துன்பம்பொருந்தி அழுது தேம்பினான்.—எ-று. (ங)

ஏங்கினன் புலம்பலு மினைய வெய்யசூர்
பாங்கமர் தமர்களும் பரிச னத்தருந்
தீங்குசெ யரக்கருந் தெரிவை மார்களு
நீங்கற வழுதனர் நெடுங்க ணீருக.

(இ-ள்.) ஏக்கத்துடனழுதலும், இக்கொடிய சூரபன்மனது பக்கத்திலே இருக்கிற பந்துக்களும்,பரிசனங்களும்,பிறருக்குத் தீங்கினைச்செய்கின்ற அரக்கர்களும், பெண்களும் ஆகிய இவர்களெல்லாம் நெடியகண்களில் நீரை ஒழுகவிட்டுக்கொண்டு விடாமலழுதார்கள்.—எ-று. (ச)

பழித்திவிர் கற்புடைப் பதுமை தன்மக
னொழிவுறு தன்மையை யோர்ந்து மாமலர்க்
குழலவிழ்ந் தலமரக் கொங்கை மேற்புடைத்
தழுதனள் வீழ்ந்தனண் மறிக்கு மங்கையாள்.

(இ-ள்.) குற்றமற்ற பதிவிரதாதன்மத்தினையுடைய பதுமகோமளையானவள், தன்னிளையமகனிறந்ததைக்கேள்விப்பட்டு சிறந்த மலரணிந்த கூந்தலவிழ கொங்கைகளின்மீது மோதிக்கொண்டு விரிக்கப்பட்ட கையினையுடையவளாக அழுதனள்.—எ-று.

தொல்லிய விழுக்கிய சூர னென்பவன்
புல்லிய பின்முறைப் புணர்வின் மாதருஞ்
சில்லியற் கூந்தரும் சேடி மார்களு
மெல்லவ ருந்தழீஇ யிரங்கன் மேயினர்.

(இ-ள்.) முன்னரிருந்தவரசர்கள் நடந்தநியமங்களினின்றுந் தவறிய சூரபன் மனது காமக்கிழத்தியர்கள் முதலானவர்களும், தகட்டணியணிந்த தாழப்பட்ட கூந்தலினையுடைய தோழிமார்களும் ஆகிய எல்லாரும் ஒன்றாகக் கட்டிக்கொண்டழத்தொடங்கினார்கள்.—எ-று. (சு)

களமெழு மிசையொலி கடிநல் யாழொலி
துளையொலி வயிரொலி தூரி யத்தொலி
யளமரு மொழியொலி யடங்கி யப்பெரு
வளநகர் புலம்பொலி மயங்கிற் றென்பவே.

(இ-ள்.) கண்டத்தினின்றும் உண்டாகின்ற பாட்டிசையொலியும், பிரகாசம் பொருந்திய நல்ல வீணைகளிலுண்டாகும் ஓசையும், புல்லாங்குழல் முதலிய பலதுளைக் கருவிகளினோசையும், மான்கொம்பு முதலியவற்றினோசையும், ஏனையவாத்தியங்களினோசையுங் கலந்து கேட்கப்படுகின்ற சொல்லோசையும் ஆகிய இவைகளினோசைகளடங்கி அந்தப்பெரிய வளப்பம்பொருந்திய ஊரில் அழுகையொலியே எங்கும் கேட்கப்படுகின்றது.—எ-று. (எ)

அன்னது போழ்தினி லறத்தைக் காய்தரு
துன்னெறி மந்திரி சூர பன்மனு
மன்னவன் முன்னுற வந்து கைதொழு
தின்னன கேண்மென விசைத்தன் மேயினன்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில், தருமகோபன் என்னுங்கெட்டவழியில் நடக்கின்ற மந்திரி சூரபன்மனென்னும் அரசனெதிரில்வந்து அவனை வணங்கி மன்னவனே! இவைகளைக்கேள் என்று கூறத்தொடங்கினன்.—எ-று. (அ)

மெய்ப்புவி யண்டங்கள் பரித்த மேன்மையை
யொப்பருந் திருவினை யுலப்பி லாயுளை
செப்பருந் திறலினை சிறந்த சீர்த்தியை
யிப்பரி சழுங்குத லியற்கை யாகுமோ.

(இ-ள்.) மன்னவனே! உண்மையான இந்த பிருதிவியண்டங்களை ஆளுகின்ற மேன்மையையும் சமானமற்ற செல்வத்தையுங் கேடில்லாத ஆயுதங்களையும் கொல்லுதற்குமுடியாத வல்லமையையும் உயர்ந்த கீர்த்தியையும் உடைய நீ இவ்வண்ணம் துன்பப்படுத்தல் ஒழுங்காகுமோ?—எ-று.

மேன்மையை, திருவினை, ஆயுளை, திறலினை, சீர்த்தியை என்னுமிவைகளுக்கு முறையே மேன்மையினை உடையாய் என்று பொருளாக்கி, வரிசையாய், உடையாயென்று கூறினும் அமையும். (கு)

தெண்டிரை நேமிவான் செறிந்து கொள்ளினு
மண்டம தழியினு மனைத்து மாயினும்
விண்டிட லின்றிவாழ் வீர நீமனங்
கொண்டிடு திண்மையுங் குன்றற் பாலதோ.

(இ-ள்.) தெள்ளிய அலைகளையுடைய கடல் சுவர்க்கம் வரைக்கும் நெருங்கி மூடிக்கொண்டாலும் அண்டமழிந்தாலும் எல்லாவஸ்துக்களும் அழிந்தாலும் அழியாம

விருக்கும் பெருவாழ்வினைப்பெற்ற வீரனே! உன்மனத்திலிருக்கிறதைரியமும் அழிதற் பாலதோ?—எ-று.

குன்றற்பாலதோ என்றதை குறைதற்பாலதோ எனினும் ஆம். (௧௦)

எவரும் வியத்தகு மிறைவ நீயிவ
ணோவென வரற்றியே யுயங்குற் றுயெனின்
மூவரு நகைப்பர்கண் முன்ன மேவல்செய்
தேவரு நகைப்பர்கள் புகழுந் தேயுமால்.

(இ-ள்.) எல்லாராலும் புகழத்தக்க இறைவனே! நீ இவ்விடத்தில் ஓவென்று கதறிக்கொண்டு வருந்துவாயானால், திருமூர்த்திகளும் சிரிப்பார்கள். உனக்கு முன்னே யேவல்செய்த தேவர்களும் நகைப்பார்கள். அன்றிப் புகழுங்கெடும்.—எ-று. (௧௧)

பூதர்தம் படையல புராரி நல்கிய
காதல னேயல கழற விட்டதோர்
தூதுவன் செய்தபுன் றொழிலுக் காற்றலை
யேதுற லாகுமோ பெருமைக் கீறிலாய்.

(இ-ள்.) பூதர்களதுசேனைகளல்ல; திரிபுராந்தன்பெற்றமகனாகிய குமரனல்ல; அவன் உன்னிடத்தில் இதைக் கூறிவாவென்றனுப்பிய ஒரு தூதன்செய்த அற்பகாரியத்துக்காக ஸஹிக்கின்றாயில்லை. அழிவற்ற கீர்த்தியினையுடைய மன்னவனே! இதற்காக மனங்கலங்கலாகுமோ?—எ-று. (௧௨)

தந்தையர் துஞ்சினுந் தம்முன் பின்னவர்
மைந்தர்க டுஞ்சினு மற்றுஞ் சார்ந்தவர்
தந்தொகை துஞ்சினுஞ் சயத்தின் மேலையோர்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தேயுமோ.

(இ-ள்.) பிதாக்கள் இறக்கினும், தமது மூத்தவர்களும் இளையவர்களும் புத்திரர்களும் இறந்தாலும், அன்றியும் சேர்ந்திருப்பவர்களின் கூட்டங்களிறந்தாலும், வெற்றியினையுடைய சிறந்தவர்கள் தம்மனத்திற்கொண்டிருக்கும் திடத்தினின்றுஞ் சற்றுந் தேய்வார்களோ?—எ-று. (௧௩)

மேதகு பெருந்திறல் வீரர் தம்மையு
மாதரும் வெல்வரான் மாயு மூழ்வரி
னாதலி னின்மகற் காயுள் குன்றலிற்
றூதனு மட்டன னாகித் தோன்றினான்.

(இ-ள்.) மிகவுஞ் சிறந்த வெற்றியினையுடைய வீரர்களையும் இறக்குமூழ் நெருங்கினால் பெண்களும் வெல்லுவார்க ளாதலினாலே நினது மகனுக்கு அற்பாயுசு இருந்ததுகொண்டு தூதுவனும் கொன்றவனாக விளங்கினான்.—எ-று.

விளங்கினான் - பிரவிசித்தியடைந்தனன். (௧௪)

வெவ்விய வொன்னலர் வினையும் வன்மையுங்
கைவரு நெல்லியங் கனியி னுடியே
செய்வகை தேற்றினஞ் செய்க லாதிவ
ணைவது மாண்மையி னலத்திற் காகுமோ.

(இ-ள்.) கொடியபகைவர்களின் செய்கைகளும் பலமும் உள்ளங்கையிலிருக்கின்ற நெல்லிப்பழத்தைப்போல உணர்ந்து செய்யவேண்டியவற்றைச்செய்யாமல் இவ்விடத்தில் வருத்தத்துடனிருப்பதும் ஆண்தன்மைக்குரிய நன்மைக்கேற்றதாகுமோ?

வரங்களு மதுகையும் வரம்பின் றெய்தியே
யுரங்கிளர் சூரனென் றொருபேர் பெற்றநீ
தரங்கம தடைவதுந் தலைமைக் கேற்பதோ
விரங்கலை யிரங்கலை யென்று தேற்றினான்.

(இ-ள்.) வரங்களையும் வெற்றியையும் அளவற்றதாகப்பெற்று பலத்துடன் விளங்குகின்ற சூரபன்மனென்று ஒருபேரினைப் பெற்றிருக்கிற நீ துன்பமடைவதும் உனது தலைமைத்தன்மைக்கு ஏற்றதாகுமோ? நீ வருந்தாதே: வருந்தாதே என்று கூறித்தேற்றினான்.—எ-று. (கசு)

மேற்றிக ழறத்தினை வெகுளு நாமத்தான்
றேற்றலு மவுணர்கோன் றெளிவு பெற்றெழீஇ
யாற்றருந் துயரினை யடக்கித் தன்பணிக்
கூற்றிய லுழையரை நோக்கிக் கூறுவான்.

(இ-ள்.) சிறந்துவிளங்குகின்ற தருமத்தைக் கோபித்தலென்கின்ற தருமகோபன் என்னும் பெயரினையுடையவன் தேற்றுதலும், அசுரமன்னவனான சூரன்தெளிவுடையவனாகி எழுந்து சகித்தற்குமுடியாத துன்பத்தினைச் சகித்துக்கொண்டு தனது தொழிலைச்சொன்னவுடனேசெய்கின்ற ஊழியர்களைப்பார்த்துகூறுகின்றனன்.—எ-று.

சேயுயிர் வெளவியே சிறந்த விந்நகர்
மாய்வது புணர்த்திடு வலிய தூதுவன்
போயது தெரிந்திரோ புகலக் கேட்டிரோ
நீயிர்கள் வாய்மையை நிகழ்த்து மென்னவே.

(இ-ள்.) என்மகனது பிராணனை வாங்கிவிட்டு சிறப்புப்பொருந்திய இந்நகரத்தையழித்த வலியவனாகிய தூதன்போனது தெரியுமோ? யாரேனும் கூறும்பொழுது கேட்டீர்களோ? நீங்கள் உண்மையைக்கூறுங்கள் என்று கூறுதலும்.—எ-று. (கஅ)

துப்புட னிவ்வழி தூதிற் சென்றுளா
னிப்புர மகன்றன னிலங்கை நோக்குறு
வப்புற மேகினா னதனைக் கண்டன
மெய்ப்பரி சிஃதென விளம்பி னாரரோ.

(இ-ள்.) வன்மையுடன் இவ்விடத்திற்குத் தூதனாகவந்தவன் இந்த நகரத்தை விட்டு இலங்கையைநோக்கிச்சென்று அப்புறம்போயினான்; நாங்களதனைப்பார்த்தோம்; இது உண்மையானவிஷயமென்று கூறினார்கள்.—எ-று. (கக)

வேறு.

அம்மொழி வினவ லோடு மவுணர்கோன் றன்பா னின்ற
கம்மியர் தம்மை நோக்கிக் கடிதுபோ யகில நல்கிச்
செம்மலர் மிசையே வைகுந் திசைமுகத் தொருவன் றன்னை
யிம்மெனக் கொணர்தி ரென்ன வனையவ ரிசைக்க லுற்றார்.

(இ-ள்.) அவ்வசனத்தைக் கேட்டவுடனே அசுரமன்னவனாகிய சூரபன்மன் தனது பக்கத்தில் நின்ற ஊழியர்களைப்பார்த்து நீங்கள் விரைந்துசென்று இவ்வுலகத்தைப்படைத்த செந்தாமரைமலரிலிருக்கிற பிரமனை இம்மென்னும்பொழுதுக்குள்ளழைத்துக்கொண்டுவாருங்கள் என்றுகூறுதலும், அவ்வூழியர்கள் கூறத்தொடங்கினார்கள்.

ஈங்கிது கேட்டி மன்ன வினையமு தண்ட நல்குந்
தேங்கமழ் பதுமத் தண்ணல் றேவர்கோ னுதி யான

பாங்கின ரோடு மேவிப் படையொடும் புவியில் வந்த
காங்கெயன் றன்க ணுற்று னென்பராற் கண்டோ ரொன்றூர்.

(இ-ள்.) அரசனே இதனைக் கேட்பாயாக: இந்தப்பெரிய வண்டத்தைப்படைத்த தேன்மணம்வீசுகின்ற கமலாசனனுகிய பிரமன், தேவராசன்முதலிய தேவர்களுடனேசென்று சைனியங்களுடன் பூலோகத்திற்கு வந்திருக்கின்ற காங்கேயரான சண்முகரது பக்கத்திற் சென்றிருக்கிருனென்று கண்டவர்கள் கூறுகின்றூர்கள் என்று கூறினார்கள்.—எ-று. (உக)

தொழுவர்க ளினைய மாற்றஞ் சொற்றலுஞ் சூரன் கேளா
விழுமிது விழுமி தென்ன வெய்துயிர்ப் பெய்திச் சீறி
யழலெழ நகைத்து மற்றை யண்டத்தி னிருந்து நல்குஞ்
செழுமல ரயனைப் பற்றிச் செல்லுமின் வல்லை யென்றான்.

(இ-ள்.) ஊழியர்கள் இவ்விதமான சொல்லைச்சொல்லுதலும்,அதனைச் சூரன் கேட்டு ஆச்சரியம்! ஆச்சரியம்! என ஊர்த்தசுவாசத்துடன் கூறிக்கொண்டு சீறி தீப்பறக்கச்சிரித்து, நீங்கள் விரைந்துசென்று மற்றையவண்டத்திலிருந்து சிருட்டித்தொழிலை நடத்துகின்ற செழுமையான தாமரைமலரிலிருக்கின்ற பிரமனைப்பிடித்துக்கொண்டு சீக்கிரம்வாருங்கள் என்று கூறினன்.—எ-று. (உஉ)

கொற்றவ னினைய மாற்றங் கூறலு மேழையர் கேளா
விற்றிது செய்து மென்னு விசைவுகொண் டொல்லை யேகி
மற்றையண் டத்திற் சென்று வானவர் முதுவன் றன்னை
பற்றினர் கொணர்ந்தார் தங்கோன் பணித்திடு பரிசு கூறி.

(இ-ள்.) அரசனிவ்வண்ணங்கூறுதலும்,ஊழியர்களதனைக்கேட்டு நாமிக்காரியத்தைச்செய்வோமென்று ஒற்றுமையுடன் விரைவாகச்சென்று,மற்றோரண்டத்திலிருந்த தேவர்முதல்வனுகிய பிரமனைக்கண்டு, உன்னை எங்கள் அரசன் பிடித்துக்கொண்டுவரக் கூறினனென்று கூறி பிடித்துக்கொண்டு வந்தார்கள்.—எ-று. (உங)

பரிசனர் பலரு மீண்டிப் பார்புகழ் சூர னென்னு
மரசன்முற் கொணர்ந்து வேறோ ரண்டத்தி னயனை யுய்ப்ப
வரிசையா லவனை நோக்கி மாணழி வுற்ற மற்றித்
திருநக ரதனைத் தொன்மை போலவே செய்தி யென்றான்.

(இ-ள்.) ஊழியர்கள் பலருமொன்றாய்ச்சென்று வேறேயோரண்டத்திலிருந்த பிரமனைப்பிடித்துக்கொண்டுவந்து நிறுத்துதலும்,சூரபன்மன் முறைப்படி யவனைப்பார்த்து, நீ இந்தமாட்சிமையற்றிருக்கின்ற திருநகரத்தை முன்னிருந்ததுபோலவே செய்வாயாக என்று கூறினன்.—எ-று. (உச)

சூரன்மற் றிதனைச் செப்பச் சொற்பணி தலைக்கொண் டைய
வோரிறை யொடுங்கு முன்ன ருனதுதொன் னகர மற்ற
வேருற முன்ன மேபோ லியற்றுவன் யானே யென்னுப்
பேருல குதவு கின்ற பெற்றியை நினைந்து செய்வான்.

(இ-ள்.) சூரபன்மன் இவ்வாறு இதனைக்கூறலும் அவனதாணையைச் சிரசாகவகித்த அப்பிரமனும் ஐயனே! உனது பழயநகரத்தை ஒரிறைப்பொழுதுக்குள் மிகவும் அழகு பொருந்தியதாக நான்பழயபடியே உண்டாக்குகின்றேனென்றுகூறி, தான்பெரிய உலகத்தைச் சிருட்டிக்கின்ற தன்மையை நினைத்துக்கொண்டுசென்று இவ்வண்ணம் செய்வானுயினன்.—எ-று.

உலகசிருட்டிசெய்யுங்காலத்து சிவபெருமானுடைய திவ்வியமங்கலரூபத்தைத் தியானித்துக்கொண்டே செய்பவனாதலால் நினைந்துசெய்வான் என்றார். (உரு)

பொன்மதின் மாட வீதி பொலன்மணிச் சிகரம் வேர
மன்மதன் விழையுஞ் சோலை மண்டபம் வாவி பொய்கை
சென்மலி யரங்க மன்றந் தெற்றியே முதல வெல்லாந்
தொன்மைபோ லாகத் தன்கைத் தொழின்முறை படைத்தான் மன் [ஞே.

(இ-ள்.) பொன்மயமான மதிலும் மாடவீதிகளும் அழகிய மணிகளிட்டிழைத்துள்ள சிகரங்களும் வேரங்களும் மன்மதனும் விரும்பத்தக்க சோலைகளும் மண்டபங்களும் வாவிகளும் பொய்கைகளும் மேகங்கள் மேலேநிரம்பிக்கிடக்கின்ற அரங்கங்களும் மேடைகளும் முதலியவெல்லாம் முன்னிருந்தவண்ணமே யுண்டாகுமாறு தனது சிருட்டித்தன் முறைப்படியே சிருட்டித்தான்.—எ-று. (உசு)

இவ்வகை நகர முற்று மெழில்பெறப் படைத்த பின்றை
மைவரை மேனி மன்னன் மாபெருங் கோயி றன்னைச்
செவ்விதின் முதுமை போலச் சிறப்பினாற் றிருத்தல் செய்தா
னைவகை யிருபான் கொண்ட வல்லியங் கமலத் தண்ணல்.

(இ-ள்.) இவ்வண்ணமாக ஊர்முழுமையும் அழகுண்டாகும்வண்ணம் படைத்தான். அதற்குப்பின்பு சூரபன்மனாகிய வரசனது மாளிகையை ஒழுங்காக முன்னிருந்தபடியே சிறப்பாக நூற்றிதழ்க்கமலத்திலிருக்கின்ற பிரமன்படைத்தனன்.—எ-று.(உஎ)

கொன்பெரு நகரு மந்தண் கோயிலும் படைத்த லோடு
மன்பெருந் தகைய சூரன் மற்றவன் செய்கை நோக்கி
யன்புசெய் துவகை யாகி யவுணர்கள் யாரும் போற்ற
முன்புபோ லரிமா னேற்று முழுமணித் தவிசி னுற்றான்.

(இ-ள்.) மிகவும் பெரியநகரத்தையும் அழகிய தண்ணிய அரண்மனையையும் உண்டாக்குதலும், பெருந்தன்மையினையுடைய சூரபன்மன் அப்பிரமனது படைப்பின் றன்மையைநோக்கி யவனிடத்திற் பட்சம்பாராட்டிச் சந்தோஷத்துடன் அசுரர்களெல்லாம் துதிக்க பழையபடியே ஆண்சிங்கங்களாற் சுமக்கப்படுகின்ற மணிகளிட்டு முற்றிலுமிழைத்துள்ள வாசனத்தின்மீதிருந்தனன்.—எ-று. (உஅ)

உற்றன னாகிப் பின்ன ரோதிமத் திறையை நோக்கி
மற்றுநின் னண்டஞ் சென்று வைகுதி நல்கி யென்னச்
சொற்றன னேவ வன்னோன் றுண்ணென விடைபெற் றேகிப்
பெற்றதன் னண்டஞ் சென்று பிறங்குதன் னுலகம் புக்கான்.

(இ-ள்.) சிம்மாசனத்திலிருந்ததற்குப்பின்னர்,அன்னவாகனனாகிய பிரமனைப்பார்த்து நீயுன்னுலகத்திற்சென்று சிருட்டித்தொழிலை நடத்திக்கொண்டிருப்பாயாகவென்று கூறியனுப்புதலும்,அவன் விரைவாக விடைபெற்றுக்கொண்டு தனக்குக்கிடைத்துள்ள தனதண்டத்துக்குட்புகுந்து விளங்காநின்ற தன்னுலகத்தையடைந்தனன்.—எ-று.

சூரனகர்புரிபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௬௬அ.

# சூரனமைச்சியற்படலம்.

அந்தநல் லமையந் தன்னி னவுணர்கோ னேவல் போற்றி
முந்துசெல் லொற்ற ரானோர் மூரிநீர்க் கடலை வாவிச்
செந்தியிற் சென்று கந்தன் சேனையும் பிறவுந் தேர்ந்து
வந்தனர் விரைவி னங்கண் மன்னனை வணங்கிச் சொல்வார்.

(இ-ள்.) அந்த நல்லசமயத்தில் சூரபன்மனது கட்டளையை யங்கீகரித்து முன்னேசென்ற தூதுவர்களாயுள்ளவர்கள் மிக்கநீரினையுடைய கடலைக்கடந்து திருச்செந்தூருக்குச்சென்று குமரக்கடவுளின் சைனியங்களையும் மற்றுள்ள விடயங்களையும் உணர்ந்துகொண்டு விரைவாகத்திரும்பிவந்தவர்கள் சூரபன்மனை வணங்கி இவ்வாறு கூறுகின்றார்கள்.—எ-று. (க)

ஏற்றவெம் பூத வெள்ள மிராயிரம் படையின் வேந்தர்
நூற்றுட னெண்மர் பின்னு நுவலருஞ் சிறப்பின் மிக்கோர்
மேற்றிக ழிலக்கத் தொன்பான் வீரர்மற் றினைய ரோடுந்
தோற்றமில் பரமன் மைந்தன் றெடுகட லுலகின் வந்தான்.

(இ-ள்.) அண்ணலே! தக்ககொடிய இரண்டாயிரம் வெள்ளம் பூதசைனியங்களும் சொல்லுதற்கரிய சிறப்பினில் மிகுந்துள்ள நூற்றெட்டு சேனாவீரர்களும் உயர்ந்து விளங்குகின்ற ஒருலட்சத்தொன்பது வீரர்களுமாகிய இவர்களுடன் பிறப்பற்ற பரமேசுவரரது குமாரராகிய சுப்பிரமணியர் தோண்டப்பட்ட கடலாற்சூழப்பட்ட வுலகத்தில் வந்திருக்கின்றனர்.—எ-று. (உ)

சாதமீ தவுணர் கோவே தாரக வீரன் றன்னைக்
கரையறு மாயை போற்றுங் காமரு பிறங்க றன்னை
யிருபிள வாக வேலா லெறிந்தன னீறு செய்து
திரைபொரு மளக்கர் வேலைச் செந்திமா நகரி னுற்றான்.

(இ-ள்.) அவுணர்களுக்கிறைவனே! இது உண்மை. வீரனாகிய தாரகனையும் அளவற்ற மாயைகளை மறவாதுதன்னிடத்துக் காப்பாற்றிவைத்துக்கொண்டிருந்த அழகுபொருந்திய கிரவுஞ்சமலையையும் இரண்டுபிளவாகப் பிளக்கும்படி வேலாயுதத்தைவிட்டு அழித்து அலைவீசாநின்ற கடற்கரையிலுள்ள பெரிய திருச்செந்தூரில் வந்திருக்கின்றார்.—எ-று. (ஙு)

விலங்கிய கதிர்வே லண்ணல் விரைந்திவண் மேவு மாற்று
லுலங்கிளர் மொய்ம்பிற் றூத னொருவனை விடுத்தா னன்னோ
னிலங்கையை யழித்து வந்தான் யாளிமா முகவன் றன்னை
வலங்கையின் வாளாற் செற்று வாரிதி கடந்து போனான்.

(இ-ள்.) தன்னிடத்தினின்றும் பெயர்ந்தசைகின்ற ஒளியினையுடைய வேலாயுதர் சீக்கிரமாக இவ்விடத்திற்கு வரும்பொருட்டு திரண்டகல்லைப்போலும் விளங்குகின்ற தோளையுடைய ஒருதூதுவனை இவ்விடத்திற்கு அனுப்பினார்; அவன்தனது பிரயாணமார்க்கத்திலிருந்த இலங்கையை யழித்துவிட்டு இவ்விடத்திற்குவந்தான்; திரும்பிப்போகும்போது வலதுகையிற்பிடித்த வாட்படையினால் பெரிய யாளிமுகனென்பவனை வெட்டிக்கொன்று கடலைக்கடந்து சென்றனன்.—எ-று. (ச)

செங்கதி ரயில்வேன் மைந்தன் றெண்டிரைப் புணரி வாவிப்
பொங்குவெங் கணங்க ளோடும் போர்ப்படை வீர ரோடு

மிங்குவந் தாடல் செய்வா னெண்ணின னிருந்தா னீது
சங்கையென் றுன்னல் வாய்மை தருவன வுணர்தி யென்றார்.

(இ-ள்.) செவ்விய ஒளிவீசுகின்ற கூரிய வேற்படையினையுடைய குமரக்கடவுள் தெள்ளியவலைகளையுடைய கடலைக்கடந்து போர்செய்வதின்பொருட்டு மனம்பொங்கிக்கொண்டிருக்கின்ற கணங்களுடனும் போருக்குரிய வாயுதங்களைத் தாங்கியுள்ள வீரர்களுடனும் இவ்விடத்திற்குவந்து போர்புரியும்வண்ண மெண்ணிக்கொண்டிருக்கின்றனர். இதனைச் சந்தேகமானவசனமென்று நினையாதேயும்; நாங்கள்சொல்லியதுண்மையே. இதற்குத்தக்கதை யாலோசித்துக்கொள்ளுமென்று கூறினார்கள்.—எ-று. (ரு)

ஒற்றர்சொல் வினவி மன்ன னொருதனி யிளவ றன்னை
யற்றமில் கேள்வி சான்ற வமைச்சரை மைந்தர் தம்மைச்
சுற்றமொ டமைந்த தானைத் தொல்பெருந் தலைமை யோரை
மற்றொரு கணத்தின் முன்னர் மரபொடு கொணரு வித்தான்.

(இ-ள்.) தூதுவர்கள் கூறியவசனங்களைக் கேட்டுச் சூரபன்மன் ஒப்பற்ற தம்பியாகிய சிங்கமுகனையும், அளவற்றகேள்விகளிற் சிறந்துள்ள தருமகோபன் முதலிய மந்திரிகளையும், பானுகோபன்முதலிய புத்திரர்களையும், பந்துக்களுடன்வாழ்கின்ற புலிமுகன் முதலிய சேனாதிபர்களையும் ஒரு கணப்பொழுதுக்குள் முறைப்படியே அழைத்துக்கொண்டுவரும்படி செய்தனன்.—எ-று. (சு)

வேறு.

ஆங்கவர் யாவரு மவுணர் மன்னவன்
பூங்கழல் கைதொழூஉப் புடையின் வைகலுந்
தீங்கனல் சுடுவதோர் சீற்ற முள்ளெழ
வீங்கிய வுயிர்ப்பினன் விளம்பன் மேயினான்.

(இ-ள்.) அவனாலழைப்பிக்கப்பட்ட அந்த சிங்கமுகன் முதலிய அசுரர்களெல்லாம் அவனதழகியகால்களைக்கைகளால்வணங்கி பக்கங்களிலிருந்தார்கள். இருத்தலும், கொடியதீயையுஞ் சுடத்தக்க ஒருகோபம் தன்னுக்குள்ளே தோன்றுதலும் பெருமூச்சுவிட்டுக்கொண்டவனாக (அவர்களைப்பார்த்துச்) சொல்லத்தொடங்கினான்.—எ-று. (எ)

போற்றல ராகிய புலவர் யாரையு
மாற்றருஞ் சிறையில்யான் வைத்த பான்மையைத்
தேற்றிய மகபதி சென்று சென்னிமே
லாற்றினை வைத்திடு மமலற் கோதினான்.

(இ-ள்.) நம்மைவணங்காத தேவர்களையெல்லாம் நான் சிறையிலடைத்துவைத்திருக்கும் தன்மையை உணர்ந்தவனான யாகாதிபனென்னுந் தேவேந்திரன் சென்று, தலையின்மீது கங்கையாற்றினை யணிந்துள்ள நிருமலரான சிவபெருமானுக்குச் சொன்னான்.—எ-று. (அ)

கண்ணுத லுடையோர் கடவுள் வல்லையோ
ரண்ணலங் குமரனை யளித்து மைந்தநீ
விண்ணவர் சிறையினை வீட்டிச் செல்கெனத்
துண்ணென நம்மிசைத் தூண்டி னானரோ.

(இ-ள்.) கண்ணொன்றினை நெற்றியிலேயுடைய கடவுளாகிய சிவபெருமான் சீக்கிரமாக தெய்வீகமும் அழகும்பொருந்திய ஒரு பிள்ளையைப்பெற்று, மகனே நீ தேவர்களின் சிறையை விலக்கிவருக என்றுகூறி விரைவாக நம்மிடத்திற்கு எச்சரித்தனுப்பினார்.—எ-று. (கூ)

வாய்த்திடு கயிலைமால் வரையை வைகலுங்
காத்திடு நந்திதன் கணத்து வீரரு
மீத்தகு பூதரும் விரவ மாலய
னேத்திட வரன்மக னிம்ப ரெய்தினான்.

(இ-ள்.) பின்னர் அச்சிவகுமாரன் சிவபெருமானெழுந்தருளியிருக்கிற பெரிய கைலாயமலையை எப்பொழுதுங்காக்கின்ற நந்திகேசனுடைய ஆளுகையிலிருக்கின்ற கணத்தலைவர்களும் சிறந்த பூதங்களும் உடன்வர திருமாலும் பிரமனுந்துதிக்க இவ்வுலகத்திற்குவந்தனன்.—எ-று.

பூருவபுண்ணியத்தினாலே ஸ்ரீகைலாயமலையின்காவல் நந்திதேவருக்குக்கிடைத்ததை யுணர்ந்துள்ளவனாதலால், "வாய்த்திடுகயிலை" என்றான். (௧௦)

பாரிடை யுற்றுளான் பாணி கொண்டதோர்
கூருடை வேலினாற் கொடிய குன்றொடு
தாரக னிளவலைத் தடிந்து பின்னுற
வாரிதி யகன்கரை வந்து வைகினான்.

(இ-ள்.) பூவுலகத்திற்குவந்த அந்தச் சிவகுமாரன் தனது கையிலுள்ள கூரிய வேலாயுதத்தினால் கொடிகளையுடையதுவாக நின்ற கிரவுஞ்சமென்னு மலையினுடன் என்றம்பியான தாரகனையும் சங்கரித்துப் பின்பு கடலின்பெரிய கரையையடைந்து இருந்தான்.—எ-று.

கொடிய என்பதைக் கொரேமான எனினும் ஆம். ஆனால் தன்னினமாகிய மலையைச்சூரன்கொடியது என்றிகழான் அதுபற்றி அது சிறப்பன்றென்க. (௧௧)'

அன்னதோ ரறுமுக னுங்கொர் தூதனை
யென்னிடை விடுத்தலு மேகி மற்றவன்
மைந்நிற நெடுங்கடல் வரைப்பிற் பாய்ந்தொராய்ப்
பொன்னவி ரிலங்கைமா புரத்தை வீட்டினான்.

(இ-ள்.) தாரகனையுங் கிரவுஞ்சத்தையும் பின்னஞ்செய்து ஜயந்திபுரத்தில் வந்திருந்த அந்த சண்முகன் ஒரு தூதுவனை என்னிடத்திற்கு அனுப்புதலும் அவன் வந்து கரியநிறம்பொருந்திய நெடிய கடலின்கரையினின்றும்பாய்ந்து போந்து பொன்னொளி வீசுகின்ற பெரிய இலங்காநகரத்தை அழித்தனன்.—எ-று.

பொன்னவிர் என்பதைத் திருமகள்விலாசம்பொருந்திய என்னினும் ஆம்.(௧௨)

இலங்கையங் காவலு மிகப்புற் றின்னதோர்
பொலங்கெழு திருநகர் நடுவட் புக்குலாய்
நலங்கிள ரென்னவைக் களத்தி னண்ணினான்
கலங்கல னிறையது மாயைக் கற்பினான்.

(இ-ள்.) (அழித்ததுவுமன்றி) அவ்விலங்கையிலுள்ள காவல்களையுங் கடந்து இந்த ஒப்பற்ற பொன்னொளிவீசுகின்ற ஊரின் நடுவிலும் புகுந்து உலாவி நன்மைவிளங்குகின்ற எனது சபாமண்டபத்திற்கு வந்தான். (யாராயிருந்தாலும் புதிதாகவந்தால் மனங்கலங்கத்தக்க இந்த சபைக்குவந்தவன்) தான்கற்றிருக்கின்ற மாயைவித்தையின் திறமையினால் ஒரு சற்றும் மனங்கலங்கினானில்லை.—எ-று.

பிறரால் கடத்தற்கரியதாக அமைத்துள்ளதாதலால் அதனைக்கடந்து வந்ததை அருமையாகக்காட்ட "காவலும்" எனவுரைத்தனன். (௧௩)

நண்ணினன் றிருந நவையில் வீரர்போல்
விண்ணவர் பாங்கராச் சிலவி ளம்பியென்

கண்முனஞ் சிலருயிர் களைந்து வன்மையா
லெண்ணலன் பின்னுற வெழுந்து போயினன்.

(இ-ள்.) குற்றமற்ற வீரர்களைப்போல என்னெதிரிலே வந்தான். வந்துதேவர்களின் சார்பாகச் சிலவிஷயங்களைச்சொன்னன். பின்னரொன்கண்ணெதிரிலேயே சிலரைக்கொன்று தனக்குள்ள பெலத்தினல் என்னைச்சற்றும் மதியாமல் எழுந்து சென்றனன்.—எ-று.

வீரவாகுதேவரைக் குற்றமற்ற வீரனுகத் தான் மதித்தானில்லை. அதனல் நவையில்வீரர்போல்'' என்றனென்க. (கச)

போயவ னிந்நகர் பொடித்துச் சிந்தியா
னேயின வேயின படைஞர் யாரையு
மாயுற வித்தனன் மற்று மென்னிளஞ்
சேயுயிர் கொண்டனன் செருக்கு நீங்கலான்.

(இ-ள்.) சென்றவன் இந்த வூரையழித்துத் தூளாக்கி என்னாலனுப்பப்பட்ட படைஞர்களையெல்லாம் அழித்தனன். அன்றியும் செருக்கரு த அத்தூதன் என்னிளைய குமாரனை வச்சிரவாகுவின் பிராணனைப் (போரில்) வாங்கினன்.—எ-று.

சகத்திரவாகுக்கள் சதமுகர்கள் முதலியவர்கள் இறந்ததைவிட, தன்மகன் இறந்தது தனக்கு பரிதாபமாக இருத்தலைக்குறிப்பிக்க "என்னிளஞ்சேயுயிர்'' என்றான்.

அழிந்ததித் திருநக ரளப்பி றனைகள்
கழிந்தன செறிந்தது களேப ரத்தொகை
கிழிந்தது பாரகங் கெழீஇய சோரியா
றொழிந்ததென் னணையு முயர்வுந் தீர்ந்ததால்.

(இ-ள்.) எல்லாச்செல்வங்களு நிரம்பியிருந்த இந்த ஊரழிந்தது. அளவில்லாத சைநியங்கள் இறந்தன. பிரேதக்கூட்டங்கள் எவ்விடங்களிலும் நெருங்கிக்கிடக்கின்றன. பூமி பிளவுண்டது. இரத்தநெருங்கி ஆறாக ஓடின. இதனல் என்னதிகாரமும் ஒழிந்தது. என்னுடைய சிறப்புந்தொலைந்தது.—எ-று.

தான் மகுடாபிஷேகஞ் செய்துகொண்ட அந்நாள்முதல் இந்நாள்வரைக்கும் யாதொருவிதத்திலும் அழியாத ஊர்முதலிய அழிந்தமை தனக்கு அவமானமாக இருக்கின்றதைக் குறிப்பிக்க "என்னணையுமொழிந்தது'' என்றும்மைகொடுத்துக்கூறினன்.

ஒற்றென வந்தவவ் வொருவன் றன்னையும்
பற்றிவெஞ் சிறையிடைப் படுத்தி னேனலேன்
செற்றில னூறதே யெனினுஞ் செய்திலே
னெற்றினி வசையுரைக் கீறு கூறுகேன்.

(இ-ள்.) தூதனகவந்த அவ்வொருவனையும் பிடித்து சிறையிலடைத்தேனில்லை. கொல்லவுமில்லை. அங்கப்பழுதாகிலும் செய்தேனில்லை. எனக்குண்டாகிய இவ்வசைமொழிக்கு என்னமுடிவு சொல்லுவேன்.—எ-று.

பிராலாகாதுபோனலும் அத்தூதனைப்பிடிக்க சிறையிலடைக்க இன்னமுள்ள எந்தக்காரியத்தையேனும் செய்யத் தன்னலாகும் என்று குறிப்பிக்க "ஊறதேயெனினுஞ்செய்திலேன்'' என்றான். (கள)

இம்பரி னிவையெலா மிழைத்த தூதுவ
னம்பதி யிகந்துபோ யிலங்கை நண்ணிய
மொய்ம்புடை யாளிமா முகவற் சாடியே
யம்புதி கடந்தன னவனி யெய்தினன்.

(இ-ள்.) இவ்விடத்தில் இவைகளையெல்லாம் செய்ததூதன் நம்மூரைவிட்டுச் சென்று, இலங்காநகரத்திலிருந்த பெலசாலியான யாளிமாமுகனையுங்கொன்று, கடலைக் கடந்து பூவுலகத்திற்குச் சென்றான்.—எ-று.

இங்கேயே அத்தூதனை தக்கவாறு செய்திருந்தால் யாளிமுகன் இறவான் என்று அபிப்பிராயமுள்ளவனுதலால் "நம்பதியிகந்துபோயிலங்கைநண்ணி" என்றான். (கஅ)

கார்பொரு மிடற்றவன் காதன் மாமகன்
வாரிதி கடந்திவண் வந்து நம்மொடும்
போர்பொர நினைகுவான் போலு மிவ்வெலாஞ்
சாரணர் மொழிந்தனர் சரத மாகுமால்.

(இ-ள்.) கரியமேகத்தையொத்த கழுத்தினையுடைய சிவபெருமானது ஆசைக்குகந்த சிறந்தகுமரன் கடலைக்கடந்து இவ்வுலகத்திற்குவந்து நம்முடன் போர்செய்தற்கு எண்ணுவான்போலும் இவைகளனைத்தையும் எமக்குத் தூதுவர்கள் கூறினார்கள். அவர்கள் கூறியவையனைத்தும் உண்மையே.—எ-று.

இவ்வளவு தூரம் வந்தவன் நம்முடைய பராக்கிரமத்தை உணராமல் சண்டைக்காகவந்தாலும் வருவன் என்பதைக்குறிப்பிக்க "நினைகுவான்போலும்" என்றான். (கக)

நெற்றியி லணிகமாய் நின்ற பூதரைச்
செற்றிகல் வீரரைச் செகுத்துச் சேயினை
வெற்றிகொண் டேனையர் தமையும் வீட்டியே
மற்றொரு விகலைமுன் வரவல் லேனியான்.

(இ-ள்.) படைவகுப்புக்களில் சைநியங்களாக நிற்கப்படுகிற பூதர்களைகொன்று பகைத்த வீரர்களையும் அழித்து குமாரனைஜெயித்து மற்றுள்ளவர்களையும் கொன்று ஒரு க்ஷணத்தில் திரும்பி வரத்தக்கசாமர்த்தியம் உள்ளவனே யான்.—எ-று.

நான் கையிலாகாதவனுக உங்களை அழைத்தேனில்லை என்பான் "ஒருவிகலைமுன்வரவல்லேன்" என்றான். (உ0)

சூரனென் றொருபெயர் படைத்த தொல்லையேன்
பாரிடர் தம்மொடும் பாலன் றன்னொடும்
போரினை யிழைத்தடல் புரிந்து வெல்லினும்
வீரம தன்றெனு வறிது மேவினேன்.

(இ-ள்.) சூரனென்று ஒருபெயரை பெற்றுள்ள பெரியவனுகிய நான் பூதர்களுடனும் குமாரனுடனும் போர்செய்து கொல்லுதலைச்செய்து வெல்லுதலையடைந்தாலும் எனது தன்மைக்கு அதுவீரமானது அல்லவென்று சும்மாவிருந்தேன்.—எ-று.

நானவர்களோடு போர்செய்து ஜயித்தாலும் அபகீர்த்திதானே உண்டாகும் என்றுசும்மாவிருந்தேன் என்பான். "வீரமதன்றெனுவறிதுமேவினேன்" என்றான். (உக)

துய்த்திடுந் திருவினில் வலியிற் சூழ்ச்சியி
னெத்துணைப் பெரியர்தா மெனினு மேலையோர்
கைத்தொரு வினைசெயக் கருதிற் றம்முடை
மெய்த்துணை யோரைமுன் வினவிச் செய்வரால.

(இ-ள்.) அநுபவிக்கப்படுகின்ற செல்வங்களிலும் பெலத்திலும் ஆலோசனையிலும் எவ்வளவு சிறந்தவர்களாயிருந்தாலும் பெரியவர்களாயுள்ளவர்கள் கோபத்தோடுகூடிய ஒருகாரியத்தை செய்ய நினைக்கும்பொழுது தம்முடைய வுறுதிச் சுற்றத்தினர்களை முன்னே வினவிப் பின்னர்செய்வார்கள்.—எ-று.

அரசர்கள் எதையும் சூழ்ச்சித்துணைவர்களுடன் ஆலோசித்தேசெய்வார்கள். அம்முறையில் நானும் உங்களை வினவுகின்றேனென்பான் "மெய்த்துணையோராமுன்வினவிச்செய்வரால்" என்றான். (உஉ)

ஆதலின் வினவினன் யானு மாற்றுத
லீதென வுரைத்திரா லென்று மன்னவ
னோதின னன்னதை யுணர்ந்து கைதொழூஉ
மேதியம் பெயரினா னிவைவி ளம்பினான்.

(இ-ள்.) ஆதலாலே நானும் உங்களைக்கேட்டேன் நீங்கள் இவ்வண்ணம் செய்ய வேண்டுமென்று கூறுங்கள் என அரசனாகிய சூரபன்மன்கூறுதலும், அவைகளைக்கேட்டு அந்த சபையிலிருந்த மந்திரிமார்களில் ஒருவனான மாகிஷனென்பவன் எழுந்து அரசனைவணங்கி யிவைகளைக்கூறினான்.—எ-று.

மேதியம்பெயரினான் என்றது - எருமைமுகமுள்ள ஒரு அசுரனை, அவன்மந்திரிகளிலொருவன். (உ௩)

மேலுயர் மாயைகள் விளைக்கும் வெற்பினை
மாலினை வென்றநின் வலிய தம்பியை
யேலவொர் கணத்தின்முன் னெறிந்த வீரனைப்
பாலனென் றுரைப்பது முணர்வின் பாலதோ.

(இ-ள்.) மிகவுஞ்சிறந்த மாயைகளைச்செய்கின்ற கிரவுஞ்சமலையையும் திருமாலைவென்ற நினது சிறந்த தம்பியையும் ஒரு க்ஷணத்துக்குள்ளே வேல்விட்டழித்த வீரனாயுள்ளவனை பாலன் என்று கூறுதலும் விவேகத்திற்கு இலக்கணமோ?.—எ-று.

நின்பகைவர்களை நீ இழிந்தவர்களென்றும் சிறியவனென்றும் கூறுதலழகல்லவென்றனன். (உ௪)

மேதகு தாரக வீரன் றானையை
யாதிபர் தம்முட னட்ட தீரரை
யேதுமோர் வலியிலா வெளிய ரென்பதும்
பூதரென் றிகழ்வதும் புலமைப் பாலவோ.

(இ-ள்.) மேன்மைபொருந்திய வீரனாகிய தாரகாசுரனுடைய சைனியங்களைச் சேனாதிபர்களுடனே கொன்ற வீரர்களை யாதொரு பெலமுமில்லாத எளியவர்களென்று கூறுதலும் பூதர்களென்று இகழ்வதும் விவேக லட்சணமோ.?—எ-று.

தாரகன் சிறந்தவனாதலால் அவன்சேனைகளும் சிறந்தவைளே அவைகளைக்கொன்றவர்கள் தாழ்ந்தவர்களல்லவென்பது அவன்கருத்து. (உ௫)

மீதெழு திரைக்கடல் விரைவிற் பாய்ந்துநம்
மூதெயில் வளநகர் முடித்து நின்னுடைக்
காதல னுயிரையுங் கவர்ந்த கள்வனைத்
தூதனென் றுரைப்பது மறிஞர் சூழ்ச்சியோ.

(இ-ள்.) மேலெழுந்து மோதாநின்ற அலைகளையுடைய கடலை சீக்கிரமாகத் தாண்டி நமதுபுராதனமான மதில்சூழ்ந்த வளவியநகரத்தையழித்து உன்னுடைய புத்திரனுடைய பிராணனையும் வாங்கின கள்வனைக் கேவலம் தூதனென்று கூறுதலும் விவேகிகளுக்குப் புத்திசாலித்தனமோ?.—எ-று.

கள்வன்-மாயாசாலங்களையுடையவன். அல்லது திருடன். (உ௬)

கற்றையஞ் சிறையுடைக் கலுழ னூர்தரு
கொற்றவன் றிசைமுக னமரர் கோமகன்

மற்றொரு வடிவமாய் வந்த தேயலா
லொற்றுவ னிலைமையே றுணரற் பாலதோ.

(இ-ள்.) கூட்டமான இறகினையுடைய கருடனை வாகனமாகக்கொண்டேறி நடத்துகின்ற திருமாலும் நான்கு திக்குகளிலும் முகமுள்ளவனாகிய பிரமனும் தேவர்களுக்கெல்லாஞ் சிறந்த அரசனாகிய இந்திரனும் ஆகிய மூவர்களும் ஒருருவமாக வந்ததேயல்லாமல் தூதனது நிலைமையை வேறொருவிதமாக அறியக்கூடுமோ?.—எ-று.

அரிப்பிரமேந்திராதிகள் ஒவ்வொருவராக வரமாட்டார்கள் என்று துணிந்தவனாதலால் தூதனை அரிப்பிரமேந்திராதி உருவமென்று கூறினான். (உஎ)

உன்றனி யிளவலு மொருநின் னோங்கலும்
பொன்றிய கர்லையே புராரி மைந்தன்மேற்
சென்றிலை யல்லதுன் சேனை தூண்டியும்
வென்றிலை தாழ்த்திவண் வறிது மேவினாய்.

(இ-ள்.) உனது ஒப்பற்ற தம்பியாகிய தாரகாசுரனும் உன்னுடைய ஒரு கிரவுஞ்சமலையும் அழிந்தவுடனேயே சிவகுமாரன்மீது போருக்குச் சென்றாயில்லை. நீ போகாது போனாலும் உன்னுடைய சைனியங்களை அநுப்பியாவது வென்றாயில்லை. இவ்விடத்திற் சும்மா இருந்தனை.—எ-று.

அப்பொழுதே சென்றிருந்தால் இவ்வளவுகாரியம் நடவாதென்பதவனெண்ணம் ஆதலால் "தாழ்த்திவண்வறிதுமேவினாய்" என்றான். (உஅ)

தீயழல் வறியதே யெனினுஞ் சீரியோ
ரேயிது சிறிதென வெள்ளற் பாலரோ
வாயத னாற்றலை யடக்க லாரெனின்
மாயிரும் புவியெலா மிறையின் மாய்க்குமால்.

(இ-ள்.) தீயின் உஷ்ணமானபொறி கொஞ்சமாகவிருந்தாலும் சிறந்த குணமுள்ளவர், ஏ! இது கொஞ்சமானது என்று இகழுந்தன்மையினை உடையவர்களோ? (தீயென்றறிந்தபோதே) அதன்றன்மையை உடனே அடக்கி விடார்களானால் அது மிகவும் பெரிய உலகங்களை எல்லாம் சீக்கிரமாக அழித்து விடும்.—எ-று.

எப்படிப்பட்டதாக இருந்தாலும் கெட்டதை, உடனே கெடுத்துவிடவேண்டும் என்பதவன்கருத்து. (உகூ)

மாற்றலர் சூழ்ச்சிய தெனினு மாறதாய்
வீற்றொரு நிலைமைய தெனினு மேவுமுன்
னேற்றெதிர் காப்பரோ யென்னி னன்னவர்க்
காற்றரு மிடுக்கண்வந் தடைதற் பாலதோ.

(இ-ள்.) பகைவர்களின் தந்திரமாவது அல்லது விரோதமான வேறொருவழியாவது வருதற்கு முன்னமே தாமே வலிந்து எதிர்சென்று பகைவராலாகிய தீங்குவாராதவண்ணங் காத்துக்கொள்ளுவார்களானால் அப்படிச்செய்துகொள்ளுகின்ற அரசர்களுக்கு சகிக்கக்கூடாத துன்பம் வந்து சேருமோ (சேரா).—எ-று.

வெள்ளம்வருமுன்னே அணைபோடவேண்டும் என்னும்வாக்கியத்தை யங்கீகரித்தவனாதலால் அவ்வாறுகூறினான். (௩௦)

துறந்திடா வளந்தனைத் துய்த்துச் செய்வகை
மறந்தன மாகியே வன்மை யாளரா
யெறிந்தவர் தமையிகழ்ந் திங்ஙன் வாழ்துமேற்
சிறந்தவர் யாமலா லேவர் சீரியோய்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய மன்னவனே! நீக்கப்படாத செல்வத்தை அனுபவித்துக்கொண்டு (காலங்களிற்) செய்யவேண்டுங் காரியங்களை மறந்து வல்லமைசாலிகளைக்குறித்து அவர்களற்பமானவர்களென்று இகழ்ந்துகொண்டு இவ்விடத்தில் வாழ்வோமானல் நம்மைக்காட்டிலுஞ் சிறந்தவர்கள் யாவர்.—எ-று.

நாம் பகைவர்களை அடக்காமல்வாழுதல் அபகீர்த்திக்கிடம் என்றான் என்பார் "சிறந்தவர் யாமலாலேவர்" என்றார். (௩௧)

முன்னமக் குமரன்மேன் முனிந்து சேறியே
லுன்னகர்க் கேகுமோ வொற்று மற்றுநீ
யன்னது புரிந்திலை யாடன் மைந்தனோ
டிந்நக ரழிந்ததென் றிரங்கற் பாலையோ.

(இ-ள்.) மன்னவனே! நீ முதலிலேயே அக்குமாரனுடன் பகைகொண்டு போருக்குப் பிரயாணமாகி இருப்பாயானல் உன்னூருக்குத் தூதன் வருவானே? அவ்வாறு செய்தாயில்லை; (அதனாலே) விளையாட்டுப் பருவமுள்ள உன்மகனுடன் இந்தவூரும் அழிந்தது என்று அழக்கூடுமோ?.—எ-று.

நம்முடைய அஜாக்கிரதையினால்வந்த துன்பத்துக்காக நாம் அழப்படாதென்பான் "இந்நகரழிந்ததென்றிரங்கற்பாலையோ" என்றான். (௩௨)

மொய்யுடை நின்மகன் முடிந்த தன்மையு
மையநின் றிருநக ரழிவ தானதுஞ்
செய்யுறு நிலைமைக டெரிந்து செய்திடா
மையலின் கீழ்மையால் வந்த வாகுமால்.

(இ-ள்.) வல்லமைசாலியான நினதுமகன் இறந்ததன்மையும், ஐயனே! நினது அழகிய இந்த ஊரழிந்ததும் செய்யவேண்டிய காரியங்களை ஆலோசித்துச்செய்யாத மோகத்தின் தாழ்வால் வந்ததே அன்றி வேறொன்றுமில்லை.—எ-று. (௩௩)

கழிந்திடு பிழையினைக் கருதிச் சாலவுள்
ளழிந்திட லியற்கையன் றறிஞர்க் காதலா
லொழிந்தன போகவொன் றுரைப்பன் கேண்மியா
விழிந்ததென் றுன்னலை யிமைப்பிற் செய்திநீ.

(இ-ள்.) மன்னவனே! நடந்தேறின தவறுகளைப்பற்றிச் சிந்தித்து மிகவும் மனம்வருந்துதல் விவேகிகளுக்கு ஒழுங்கானதல்ல; ஆகையினாலே போனதுபோகட்டும் நானிப்பொழுது ஒன்று சொல்லுகின்றேன் அதனைக்கேள் அதனைச் சாமானியவிஷயமென்றெண்ணாதே என்சொற்படியே விரைவாகச்செய்.—எ-று.

என்சொற்படி நடந்தால் உனக்கு நலம் உண்டாகும் என்பான் "இமைப்பிற்செய்திநீ" என்றான். (௩௪)

ஆயது பிறவிலை யவுணர் தம்மொடு
மேயின படையொடும் விரைந்து கண்ணுதற்
சேயினை வளைந்தமர் செய்யப் போதியா
னீயினித் தாழ்க்கலை நெருநல் போலவே.

(இ-ள்.) அதுவேறே யொன்றுமில்லை; நீ அசுரர்களுடனும் பொருந்திய சைனியங்களுடனும் சீக்கிரமாக நெற்றிக்கண்ணினையுடைய சிவகுமாரனைவளைத்துக்கொண்டு சண்டையிடப்போகக்கடவை; நீஇனி நேற்றையதினத்தைப்போல காலதாமசஞ்செய்யாதே.—எ-று.

"கண்ணுதற்சேயினை" என்பதை - நெற்றிக்கண்ணினையுடைய குமாரனை என்னினும் ஆம். இறைவனைப்போல அவரும் முக்கண்ணுடையவராதலால் ஆமென்றும்.()

என்றிவை மேதிய னிசைப்பக் கேட்டலு
நன்றிது வாமென நவின்று கையெறிந்
தொன்றிய முறுவலு முதிப்ப நல்லறங்
கொன்றிடு துர்க்குண னினைய கூறுவான்.

(இ-ள்.) என்றிவ்வாறாக மாகிஷன்கூறியதைக்கேட்டவுடனே இது நன்றாயிருக்கின்றது என்று (பரிஹாஸமாக) சொல்லிக்கொண்டுபொருந்திய நகைப்புந்தோன்ற நல்ல தருமநீதியைக் கெடுத்ததுர்க்குணன் என்னுமந்திரி இவைகளைக் கூறாநின்றனன்.

மாகிஷன்கூறியவை தனக்குச்சற்றுஞ் சம்மதமில்லாமற் பரிஹஸித்தானென்பார் "நகைத்துக்கையெறிந்து" என்றார். மிகவுங்கெட்டவனாதலாலவனை "அறங்கொன்றிடுதுர்க்குண" னென்றார். (௬௬)

வன்றிற லுவணன்மேல் வந்த மாயன்மே
னின்றிடு மமரர்மே னேர்ந்து போர்செயச்
சென்றிலை யிளையராற் றிறல்கொண் டேகினு
யின்றினிப் பாலன்மே லேக லாகுமோ.

(இ-ள்) துர்க்குணன் சொல்லுகின்றான். மன்னவ! நீ அந்நாளில் மிக்க வலிமையினையுடைய கருடன்மீதேறிவந்த திருமான்மீதும் இந்திராதி தேவர்மீதும் எதிர்த்துப் போர்செய்ய சென்றாயில்லை. தம்பிமார்களாலே வெற்றிபெற்றுச்சென்றனை. இந்நாளில் பாலகன்மீது நீபோருக்குச்செல்லலாகுமோ?—எ-று.

திருமால்முதலியவர்களைவிடக் குமரக்கடவுள் பலத்தில் குறைந்தவனென்பதவன்கருத்து. ஆதலாலது கூடாதென்றான். (௬௭)

இறுதியி லாயுளு மிலங்கு மாழியு
மறுவிலா வெறுக்கையும் வலியும் வீரமும்
பிறவுள திறங்களுந் தவத்திற் பெற்றனை
சிறுவனோ டமர் செய்தற் கேகொலாம்.

(இ-ள்.) அழிவில்லாத ஆயுளும், விளங்காநின்ற ஆக்கினாசக்கிரமும், களங்கமற்ற செல்வமும், வல்லமையும், வீரமும், இன்னமுள்ள மற்றையவைகளும் இறைவனிடத்தில் வரமாகப்பெற்றனை இவைகளை நீபெற்றது ஒருசிறுவனுடன் போர்செய்யும்பொருட்டுத்தானோ?—எ-று.

அருமையாக சம்பாதித்தபொருள்களை எளிமையான இடத்தில் அல்லது விஷயத்தில் தக்கவர்கள் உபயோகப்படுத்த மாட்டார்கள் என்பதவன்கருத்து. (௬௮)

மேதகு பசிப்பிணி யலைப்ப வெம்பலிக்
காதல்கொண் டலமருங் கணங்க டம்மையுந்
தூதுவன் றன்னையுந் தொடர்ந்து போர்செயப்
போதியோ வமரரைப் புறங்கண் டுற்றுளாய்.

(இ-ள்.) தேவர்களைப் போரில் முதுகுகாட்டியோடும் வண்ணமாகச்செய்து வாழுகின்ற மன்னவனே! மிகுதியாகப் பசியென்னுநோயானது வருத்தச் சரியான ஆகாரம் கிடையாமையால் கொடிய பிச்சையின்மீது விருப்பம்கொண்டலைவுகின்ற பூதகூட்டங்களையும் தூதனையும் பின்றொடர்ந்து சென்று (முன்னேநின்று) போர்செய்தற்கு எண்ணுகின்றனையோ ?—எ-று.

வெம்பலி என்றதை - கெட்டவுணவென்னினும் ஆம். நினது பழையநிலைமைக்கு இது அழகானதல்லவென்பான் "போதியோவமரரைப் புறங்கண்டுற்றுளாய்" என்ருன். பலி - பூதயாகம். (௩௯)

இன்றுநின் பெரும்படைக் கிறைவர் யாரையுஞ்
சென்றிட விடுக்குதி சிறிது போழ்தினிற்
குன்றெறி பகைவனைக் கூளி தம்மொடும்
வென்றிவண் மீள்குவர் வினைய மீதென்ருன்.

(இ-ள்.) இன்று உன்னுடைய பெரிய சேனைகளின் தலைவர்களாக வுள்ளவர்களை எல்லாம் போருக்குச் செல்லும்வண்ணம் அநுப்பக்கடவை. (அவர்கள்) ஒருக்ஷணத்திற்குள்ளே கிரவுஞ்சமலையையுடைத்த சிவகுமாரனை பூதகூட்டங்களுடனே வென்று இவ்விடத்திற்குத் திரும்பிவருவார்கள். இதுவே தந்திரமென்று கூறினன்.—எ-று.

மாகிஷன்கூறியபடி நீபோகவேண்டுவதில்லை; நினது சேனாதிபதிகளை எல்லாம் அநுப்பினற்போதும் என்று தன்னபிப்பிராயம் கூறினன் என்பார் "வினையமீதென்ருன்" என்ருர்.

பூதங்களை அலக்ஷியமாகக்கருதினவன் என்பார், கூளி என்ருர். (ச0)

கருதிடு துர்க்குணக் கயவ னின்னன
வுரைதரு முடிவினி லொழிக விங்கெனக்
கருமணி யாழியங் கைய மைத்தரோ
தருமவெம் பகையுடை யமைச்சன் சாற்றுவான்.

(இ-ள்.) மந்திரிகளிலொருவனுக எண்ணப்பட்டவனுகிய துர்க்குணனென்பவன் இவைகளைச் சொல்லிமுடிக்குஞ் சமயத்தில், நீ நில்லென்று மரகதக்கன் மோதிரமணிந்த கையையெடுத்துப் போதுமென்று அமைத்துக் கொடிய தருமகோபனென்னும் மந்திரி கூறுவான்.—எ-று.

பேரால்மாத்திரம் தருமகோபனல்லன் உண்மையிலுந் தருமகோபனே என்பார் "வெம்பகையுடை" என்ருர். (சக)

குலம்படு நவமணி குயின்று பொன்புனை
யலம்படை கொண்டுபுன் முதிரை யாக்கத்தாற்
புலம்படக் கீறுவ போலும் வீரநீ
சிலம்படி மைந்தனே டாடல் செய்வதே.

(இ-ள்.) சிரேட்டமான நவரத்தினம் இழைத்து பொன்னுற்செய்யப்பட்ட கலப்பையைகொண்டு இழிந்த கொள்ளை விதைக்க புஞ்சைநிலத்தை உழுதலையொக்கும், வீரனே! நீ சிலம்பணிந்தகாலினையுடைய சிறுவனுடன் போர்புரிதல்.—எ-று.

குலம்படுநவமணி யென்பதைக் கூட்டமான நவமணி யெனலுமாம். (சஉ)

மேலுயர் கண்ணுதல் விமல னன்றெனி
னலவ னன்றெனி னயனு மன்றெனிற்
காலனு மன்றெனிற் காவல் வீரநீ
பாலனெ டமர்செயிற் பயனுண் டாகுமோ.

(இ-ள்.) மேலே உயர்ந்து விளங்குகின்ற கண்ணினையுடைய நெற்றியோடு கூடிய நிருமலராகிய சிவபெருமானே, அல்லாது போனல் ஆலிலையிற்கிடந்த மாயனே, அல்லவானல் பிரமனுமல்லவானல் காலனும் அல்லவானல் உலகங்களை காக்கின்ற வீரனே! நீ ஒரு சிறுகுழந்தையுடன் போர்புரிந்தாற் பிரயோசனமுண்டோ.?—எ-று.

நின்னிலைமைக்கு இது அழகல்லவென்ருன் என்க. (சரு)

மன்னிளங் குதலைவாய் மதலை மீதினு
மின்னினி யமர்செய விறத்தி யென்னினு
மன்னவ னினதுபே ராற்றல் காண்பனேல்
வென்னிடு மெதிர்ந்துபோர் விளைக்க வல்லனோ.

(இ-ள்.) நிலைபெற்ற மழலைச்சொற்களையுடைய சிறுகுழந்தையின்மீதும்,இனி போருக்குப்போவாயானாலும், அச்சிறுவன் நினது பெரிய வல்லமையைக்கண்டானானால் முதுகுகாட்டிச் செல்லுவான்; அவன் நின் எதிரேநின்று போர்புரிவதற்குத் தக்கவனோ?

நீசென்றாலும் அவனுன்னெதிரில் நில்லான்; அதனால் நீசென்றும் பயனில்லை யென்பதவன்கருத்து என்பார், "எதிர்ந்துபோர்விளைக்கவல்லனோ" என்றார். (சச)

நேரலர் தங்களை நேர்ந்து ளாரெனப்
பேரிக லாற்றியே பெரிது மாய்வதும்
பூரியர் கடனலாற் புலமைக் கேற்பதோ
சீரியர் கடனவை தெரிந்து செய்வதே.

(இ-ள்.) சமானமில்லாதவர்கள் என, சத்துருக்களை எதிர்த்தார்களென்று பெருஞ் சண்டையிட்டுமிகவுங்கெடுதலும் இழிஞர்தொழிலேயன்றிஅறிவுடையார்க்கடுக்குமோ? சீரினையுடையவர்களது தன்மை எதிரியின் தராதரத்தை அறிந்து நடக்குதல்.—எ-று.

பெரிதுமாய்வதும் என்பதை-மிகவும் ஆலோசிப்பதும் என்னினும் இழுக்காது.

எரிமுக னிரணிய னெனுமுன் மைந்தரி
லொருவனுக் காற்றல ரிலக்கத் தொன்பது
பொருதிறல் வயவரும் பூதர் யாவரு
மரனருள் புரிதரு மறுமு கத்தனும்.

(இ-ள்.) போர்செய்யத்தக்க வல்லபத்தினையுடைய ஒரிலக்கத்து ஒன்பதுவீரர் களும்எல்லாப்பூதங்களும் சிவன்பெற்ற ஆறுமுகனும், அக்கினிமுகாசுரன் இரணியாசுர ன் என்றுபேருள்ள உனது பிள்ளைகளிலொருவனுடைய எதிரிலே நிற்கப்போதாதவர் களேயாம்.—எ-று.

சூரபன்மனுடைய பிள்ளைகளில் மூத்தவனாகிய பானுகோபன் மஹாபராக்கிரம னென்று அவனுடைய சாமர்த்தியாதிகளை அதிவாலிபத்திலேயே அறிந்திருக்கிறதினா லேயும், தருமகோபமந்திரி, சூரனோடு சாமீயமாக அவனைஎண்ணி இப்பொழுது வந்திரு க்கும் எதிரிகளாகிய ஒருலக்ஷத்து ஒன்பது வீரர்களையும், நூற்றெட்டு பூதசேனாதிபர்க ளையும், இரண்டாயிரம்வெள்ளம் பூதங்களையும், இவ்வெல்லார்க்கும் இறைவனாகவுள்ள சண்முகப்பெருமானையும் வெல்லுதல் மெத்த லேசென்றும், அதற்கு உனது இளைய பிள்ளைகளாகிய இரணியன் அக்கினிமுகனென்பவ ரிருவரிலொருவனேபோதும் என் றும் குறிப்பிப்பான், அலக்ஷியமாக "எரிமுகனிரணியனென்னுமைந்தரிலொருவனுக்காற் றல" ரென்றனன் என்றார். எப்படிப்பட்டவர்களிடத்திலும் மதிப்பென்பதை வையாத அசுரனாகிய தருமகோபன், தங்களுக்கிவ்வள வுயர்வினை அளித்தவர் சிவபெருமானே யென்று அவரொருவரிடத்தில்மாத்திரம் மதிப்புடையவனென்று குறிப்பிப்பான், "அர னருள்புரிதரு" மென்றார். (சரு)

கீள்கொடு நகங்கொடு கிள்ளு மொன்றினை
வாள்கொடு தடியுமோ வன்மை சான்றதோ
ராள்கொடு முடித்திடு மவரை வென்றிட
நீள்கொடு மரங்கொடு நீயுஞ் சேறியோ.

(இ-ள்.) கிழிக்கின்ற வளைந்த நகத்தால் கிள்ளவேண்டிய ஒருபொருளை வாள்கொண்டுவெட்டுவோர்களோ? வலிமையில்மிக்க ஒரு ஆளைக்கொண்டு கொல்லவேண்டிய அவர்களை வெல்லும் வண்ணம் பெரியவில்லை எடுத்துக்கொண்டு நீயும் செல்கின்றனையோ?—எ-று.

இவ்வுலகத்திலே நகத்தாற் கிள்ளியெறியவேண்டியவொன்றினை விவேகிகள் வாளைக்கொண்டு வெட்டமாட்டார்கள். அதைப்போல இளங்குமரனையும் அவனோடுவந்தவர்களையுங்கொல்ல தேவரீரொன்னத்திற்கு: ஒருவீரனை அநுப்பினால் போதுமே என்று குமரக்கடவுளின் இளம்பருவத்தையும் சூரபன்மனுடைய முதிர்ச்சியையும் எடுத்துக்காட்டி அலக்ஷியமாகக்காட்டுவான் "கொடுமரங்கொடுநீயுஞ்சேறியோ" என்றானென்றார்.

மாணிமை கூடுறா மகவு தன்னொடு
மேணறு சாரத ரினங்க டம்மொடும்
பூணுதி செருவெனும் புகற்சி கேட்பரோ
ணுணுவர் நமரொலா நகுவர் தேவரும்.

(இ-ள்.) மாக்ஷிமைத்தன்மை பொருந்தாத குழந்தையுடனேயும், வலியுடைய பூதசாதியருடனேயும் சண்டைக்கு எத்தனஞ் செய்திருக்கின்றானென்னும்வசனத்தைக் கேட்பார்களானால் நம்மவர்களெல்லாம்வெட்கமடைவார்கள். தேவர்களும்சிரிப்பார்கள்.

மாணிமைகூடுறா என்பதனை, மாக்ஷிமையான கண்ணிமை இன்னம் உரோம முதலியவைகளாற் சிறப்படையாத எனினுமாம்.

சண்முகப்பெருமானை பேராற்றலினை யுடையவனென்று உணராமல் சூரபன்மனையே நன்குமதித்தவனாதலால், தருமகோபன் 'மகவு' என்று வெகு இகழ்ச்சியாகக் காட்டினான். அன்றியும் நீ ஆயிரத்தெட்டண்டத்திற்கும் அதிபனாகவிருந்து கடைசியிலொரு சிறு குழந்தையுடனெதிர்க்க உத்தேசித்தாயென்று கேட்டால் சாதியாரெல்லாம் நினது வெற்றியைத் தமதுவெற்றியாகமதித்து இறுமாந்திருந்த இறுமாப்பைவிட்டுநாணத்தாற் றலைகவிழ்ந்துகொள்ளுவாரென்றும், ஒருஅசுரன்கூட நினது இந்தக்குழந்தையோடு செய்ய உத்தேசிக்கின்ற போரினைமெச்சாரென்றும், அப்படி இனத்தவர்களை நாணச்செய்வதுஇறைவனாகியஉனக்கழகல்லவென்றும்காட்ட "நமரொலாநாணுவ"ரென்றானென்றார்.

நினது இந்த உத்தேசத்தைக் கேள்விப்பட்டால் மிகவுந் தாழ்ந்தவர்களும் அதிக பகைவர்களுமான இந்திரன் முதலானவர்களும் சிரிப்பார்கள்; அது நின்னிலைக் கேற்றதல்லவென்று குறிப்பிப்பான் "நகுவர்தேவரும்" என்றான். (சஅ)

உம்மை இகழ்வைக்காட்டி நின்ற இடைச்சொல்.

பொற்றையை முடித்தனன் பொருவி றம்பியைச்
செற்றன னென்றிளஞ் சிறுவன் றன்னையும்
வெற்றிகொள் புதல்வனை வீட்டி னானென
வொற்றையு மதித்தனை தொன்மை யுன்னலாய்.

(இ-ள்.) கிரவுஞ்சத்தை அழித்தான்; ஒப்பற்ற தம்பியைக் கொன்றான் என்று இளஞ்சிறுவனையும்,வெற்றியொடு கூடியமகனை அழித்தானென்று தூதனையு நினைத்தனை; உனது பழைய தன்மையை நினைத்தாயில்லை.—எ-று.

நீ மஹாபலசாலியென்றும், உனது சாமர்த்தியத்திற்குச் சிவகுமாரனது பராக்கிரமம் எம்மாத்திரம் என்றும், நீ எண்ணுமல் ஒரு கிரவுஞ்சமலையினுடைய மாயாவல்லபத்தையும், திருமாலாதிதேவர்களை எல்லாம் சயித்து ஒப்பற்றவனாக நின்ற தாருகனையும், அழித்தானே என்று எண்ணுவது நின்றன்மைக்கு அழகல்ல. கிரவுஞ்சனும் தாரகனும்

இறந்தாலும் அவ்விருவர்களை அழித்தசிறுவன் நினக்குச்சற்றும் ஈடானவனல்லன். அவ்வாறிருக்க நீ அவனை ஒருபெருமையுடையவனாக எண்ணுகின்றனை. அதுகூடாது என்பான் "மதித்தனை" என்றான். அநேகரை ஜெயித்தமகனை வென்றானே என்றுகருதுகின்றனை, நீ முன்னம் வென்றவர்களின் நிலைமைக்கு இத்தூதன் நிலைமைசிறந்ததோ? அல்ல; அவ்வாறிருக்க அவனை என்மதிக்கின்றனை என்றான் என்க. (௬௯)

ஆறணி செஞ்சடை யண்ண றந்திடும்
பேறுடை வேலினைப் பிள்ளை யுய்த்தலு
மாறுள படையினான் மாற்ற லாமையா
வீறது வாயின னிளவ லாரகன்.

(இ-ள்.) ஆற்றினையணிந்த சிவந்த சடையினையுடைய இறைவன் கொடுத்துள்ள வரத்தோடுகூடிய வேலினை சிறுவன்விடுதலும், வேறே ஒரு ஆயுதத்தினால் நீக்கக்கூடாமையால் நின்றம்பியான தாரகன் இறந்துபோனான்.—எ-று.

குமரனுக் கென்னவல்லமையுண்டு? நினக்குவரமளித்த கங்காதரனாசீர்வதித்துக் கொடுத்திருந்த வேற்படையினை விட்டபொழுது அதற்கிணையான ஆயுதமொன்றும்விட்டுத் தடுக்காமையினால் இறந்தான். (அல்லது வேறே ஒரு ஆயுதமும் அதற்கெதிரியானதாக இல்லாமையால்) அவ்வேல்பட்டுத்தாரகன் இறந்தனனேயன்றி வேறில்லை என்றுணராமல் சிறுவனை வெகுவாக மதிக்கின்றனை என்பான்; "வேறுளபடைகளால் மாற்றலாமையாலீறதுவாயினன்"என்றான். சிவபெருமானொருவரிடத்தில்மாத்திரம் மதிப்பினைவைத்துக்கொண்டு இருப்பவனாதலால் இறைவனை "அண்ணல்" என்றுயர்த்திக்கூறினனென்றுணர்த்த, ஆசிரியர் அண்ணலென்று பிரயோகித்தனர். (௭௦)

குறுமுனி தொல்லைநாட் கூறும் வாய்மையா
லிறுதியை யடைந்ததாங் கிருந்த மால்வரை
யறிகிலை யீதெலா மாற்றல் கூடுறாச்
சிறுவன செய்கையே சிந்தை கோடியால்.

(இ-ள்.) அம்மாயாபுரியினருகிலிருந்த கிரவுஞ்சமாகிய பெரியமலை, அகத்திய முனிவன் முன்னாளிலிட்ட சாபத்தினால் அழிந்தது. நீ இதனையெல்லாம் அறிந்தாயில்லை; அதனாலேதான் இன்னம் வல்லமையமையாத சிறுவனது செய்கையையே மனத்தில் நினைக்கின்றனை.—எ-று. (௭௧)

எச்சமொ டழிவுறா விரதஞ் சாலிகை
கைச்சிலை பெற்றிலன் கருதி நீயவை
யச்சொடு புரிந்திலை யதனிற் றூதனால்
வச்சிர வாகுவா மகனுந் துஞ்சினான்.

(இ-ள்.) யாகத்தில், அழியாத இரதத்துடன் கவசத்தையும், கையில் பிடிக்கும் வில்லையும் பெற்றானில்லை. நீயும் அதனை ஆலோசித்து அடையாளமாக எதையும் செய்தாயில்லை; அதனால் தூதுவனாலே வச்சிரவாகுவென்னும் பிள்ளையும் இறந்தனன்.

நீ யாகம்செய்து வச்சிரகாயமுதலியவைகளைப் பெற்றிருத்தலைப்போல, நின்மகனை வச்சிரவாகுவும் யாகஞ்செய்து அழியாதிருக்கத்தக்க வரமொன்றும்பெற்றானில்லை; அவன் சிறுவனாதலால் செய்தானில்லை; நீயாவது சொல்லவேண்டும். சொல்லியிருந்தாலும் செய்திருப்பான். அதனாலிறவாதிருப்பான் என்று குறிப்பித்தான்.

நீ அழியாது வச்சிரசரீரத்துட னிருப்பது பிறந்த பிறப்பாலன்றே, சுக்கிரனுபதேசித்த மந்திரத்தைக்கொண்டு செய்த யாகத்தின் பலத்தினாலல்லவா? நம்மைப்போல

நம்மகனும் அழியாதிருக்கவேண்டுமானல் யாகந்தான் செய்யவேண்டுமென்று நீ செய்வித்திலை என்பான் "அச்சொடு புரிந்திலை" என்றான். (நூஉ)

பலவினி மொழிவதென் படியி றனவத்
தலைவரி லொருவனை விளித்துத் தானையோ
டிலையயின் முருகன்மே லேவு வாயெனி
னலைவுசெய் தொல்லையி னடல்பெற் றேகுவான்.

(இ-ள்.) இனிப் பலவிதமாகச்சொல்வதில் (பிரயோசன) மென்ன? ஒப்பற்ற அசுரவீரர்களிலொருவனை அழைத்து சேனைகளுடனே இலைபோன்ற தகட்டுவடிவமான கூரிய வேற்படையினையுடைய குமரக்கடவுளின்மீது அநுப்புவாயாகில் அவனை வருத்தி சீக்கிரமாக வெற்றிபெற்றுத் திரும்பிவருவான்.—எ-று.

சிறுவனை வெல்லுதற்கு இவ்வளவாடம்பரமான ஆலோசனை வேண்டுவதில்லையென்றும், பெரியவனானல் நீபோகவேண்டியது. உன்பகைவனாகவந்துள்ளவன் சிறுவன் ஆதலால் நீ போகவேண்டியதில்லை யென்பான் "முருகன்மேல்" என்றான். (நூ௩)

அன்னது செய்கென வறத்தைச் சீறுவான்
சொன்னதோ ரிறுதியின் முறுவ றோன்றிடக்
கன்னிகர் மொய்ம்புடைக் கால சித்தெனுங்
கொன்னவில் வேலினா னிணைய கூறுவான்.

(இ-ள்.) அவ்வாறே செய்வீராகவென்று தருமகோபன்கூறி முடித்தவுடனே, கல்லினையொத்த தோளினையுடைய காலசித்தென்று பேருள்ள கொலைத்தொழிலினையுடைய வேற்படை தாங்கிய வேறொரு மந்திரியானவன் நகையுண்டாக இவ்வாறுகூறுகின்றனன்.—எ-று.

தருமகோபனுரைத்தவைகள் தனக்கு அங்கீகாரம் இல்லையென்று காட்டச்சிரிப்புண்டாகப் பேசினன் என்பார் "முறுவறோன்றிட" என்றனர். (நூ௪)

செந்தியி னிருந்திடுஞ் சிறுவன் சாரதர்
தந்தொகை தன்னொடு மீண்டு சாருமே
லெந்தையோர் சிலவரை யேவ லல்லது
மந்திரம் வேண்டுமோ மற்றி தற்குமே.

(இ-ள்.) எந்தைபெருமானே! ஜயந்திபுரத்திலிருக்கிற குமாரன் பூதகூட்டங்களுடனே இவ்விடத்திற்கு வருவானானல் (அப்பொழுது) ஒருசிலரை அநுப்புதலல்லாமல் இதற்காக ஒரு மந்திராலோசனையும் செய்யவேண்டுமோ.—எ-று. (௬௧)

இத்திருச்செந்தூரை வடநூற்காந்தம் ஜயந்திபுரமென்று கூறுகின்றது. தருமகோபன் யாரையாவது ஒரு சேனபதியைச் சேனைகளுடனனுப்பி வெல்லலாம் என்றதற்கு மறுப்பாக, சிறுவனை வெல்லுதற்கு அங்குபோவது அநுசிதம்; அவன் இங்குவந்தாலப்பொழுது யாரையாவது சிலரைவிட்டு ஜயித்தாற்போதும். அச்சிறியவனுக்காக இப்பெரியமந்திர மநுசிதமென்பான், "மந்திரம்வேண்டுமோ மற்றிதற்குமே" என்றலட்சியமாகக்கூறினன். (நூ௫)

வசந்தன தையனை வாச வன்றனைச்
சயந்தனைப் பிறர்தமைச் சமரின் வென்றநா
ளினையந்தெமை வினவலை யின்றோர் பாலற்கா
வியன்பெரு மந்திரம் வேண்டிற் றுங்கொலோ.

(இ-ள்.) வசந்தனாகிய மன்மதன் பிதாவையும், இந்திரனையும், சயந்தனையும், இன்னமுள்ளவர்களையும் கலந்து போர்செய்த அந்நாளிலெங்களை ஒன்றும் கேட்டாயி

ல்லை; அதைவிட்டு இன்று ஒருசிறு குழந்தைக்காக மிகவும் பெரிய மந்திராலோசனையும் வேண்டியதாயிற்றே?—எ-று.

நீ பெரியவர்களையெல்லாம் வென்ற அந்நாளிற்செய்யவேண்டிய மந்திராலோசனையை சிறியனொடு பொரவந்த இந்நாளிலாலோசிக்கின்றனையே, இது அநுசிதம் என்பான் "இன்றொருபாலற்கா-வியன்பெருமந்திரம்வேண்டிற்றாங்கொலோ" என்றான். ()

அண்டர்க ளொடுங்கின ராக்க ரஞ்சின
ரெண்டிசைக் கிழவரு மேவ லாற்றுவர்
மண்டம ரவுணரின் வலியர் பூதராங்
கண்டன மின்றியாங் கலியின் வண்ணமே.

(இ-ள்.) தேவர்களெல்லாம் ஒடுங்கிப்போனார்கள்; அரக்கர்களெல்லாம் அஞ்சினார்கள்; எட்டுதிக்குப்பாலகர்களும் ஊழியஞ்செய்கின்றனர். (இதுநிற்க), நெருங்கியபோரைச்செய்கின்ற அசுரர்களைவிட வல்லபசாலிகள் பூதர்களாம்; இவ்வாறானமையால் கலிகாலத்தின் தன்மையைக் கண்டோம்.—எ-று.

கலியுகத்திலே குலங்களெல்லாந் தடுமாறி, இழிந்தவர்கள் உயர்ந்தவர்களாகவும், உயர்ந்தவர்களிழிந்தவர்களாகவும் ஆகவேண்டிவரும் என்பதை, தன்னினத்தவர்களை யுயர்ந்தவர்களென்றும் நீதிமான்களென்றும் பலாட்டியரென்றும், குமரக்கடவுளும் அவரது பூதசைனியங்களும் இழிந்தவர்களென்றுங் கருதி, நூன் கலியிலுள்ள ஏறுமாறான விஷயத்தை இன்று இங்குகண்டேன் என்பான் "மண்டமரவுணரில் வலியர்பூதராங் - கண்டனமின்றியாங்கலியின்வண்ணமே" என்றான். (கஎ)

பணிக்குதி தமியனைப் பரமன் மைந்தனைக்
கணத்தொகை வீரரைக் கால பாசத்தாற்
பிணித்திவண் வருகுவ னென்று பேசலுந்
துணுக்கெனச் சண்டனென் றொருவன் சொல்லுவான்.

(இ-ள்.) அடியேனுக்குக் கட்டளை தந்தால் நான்சென்று பரமேசுவர குமாரனையும் பூதகணவீரர்களையும் என்கையிலுள்ள காலபாசத்தால் கட்டி இவ்விடத்திற்கு எடுத்துக்கொண்டு வருவேனென்று கூறுதலும், திடீரென்று எழுந்து சண்டன் என்னும் ஒருவன் சொல்லுகின்றனன்.—எ-று.

காலபாசம் என்னும் ஆயுதந்தன்னிடத்தில் இருத்தலால் தன்னை யாரும் வெல்லமாட்டார்களென்று எண்ணி இறுமாப்புடன் "பணிக்குதித்தமியனை" என்றான். இவன் (குமரக்கடவுளையு மவரது சைனியங்களையும் காலபாசத்திற்கு அப்பாற்பட்டவர்களென்று கருதினானில்லை.

காலசித்த னிவ்வாறு கூறியவுடனே அவனுக்கருகாசனத்திலிருந்த சண்டன் என்பவன் எங்கே இவன் முந்திவிடுகிறானோ என்று அவன் பேச்சு முடித்ததும் முடியாததுமாக விருக்கும்பொழுதே விரைந்து இடையிற்பேசினானென்பார் "துணுக்கென" என்றார். (கஅ)

கழிபசி நோயடக் கவலும் பூதரு
மழலையம் பிள்ளையு மற்ற வற்குறு
தொழில்புரி சிலவருஞ் சூழ்ச்சிப் பாலரோ
வழகிது மந்திர மவுணர்க் காற்றவே.

(இ-ள்.) மிக்கபசிநோய் வருத்த அதில் வருந்துகின்ற பூதர்களும், நிரம்பா இளஞ்சொல்லினையுடைய குழந்தையும், மற்றந்தச்சிறுவன் முதலியவர்களுக்குள்ள தொழில்களைச்செய்கின்ற சிலரும் மஹா ஆலோசனை உள்ளவர்களோ? அவர்களின்பொருட்டு அசுரர்களுக்கு (உண்டான) மந்திராலோசனை மிகவும் நன்றாக இருக்கின்றது.—எ-று.

பசியொடு வருந்துபவர்களுக்கும் குழந்தைகளுக்கும் ஊழியர்களுக்கும் தந்திர வன்மை இருக்காது. நன்றாக ஆகாரம் செய்பவர்களுக்கும் தகுந்த வயதுள்ளவர்களுக்கும் சுதந்திரமுள்ளவர்களுக்குமே ஆலோசனை இருக்கும் என்னு மபிப்பிராயமுள்ளவனுதலாலே "கழிபசிநோயடக்கவலும்பூதரு-மழலையம்பிள்ளையும்மற்றவற்குறு-தொழில்புரிசிலவருஞ்சூழ்ச்சிப்பாலரோ?" என்றான் என்க. (௩௯)

கொல்லுவன் பூதரைக் குமரன் றன்னையும்
வெல்லுவன் பிறரையும் விளிவு செய்வனுன்
மல்லலந் தோளுடை மன்னர் மன்னவுன்
சொல்லதின் றென்னவித் துணையுந் தாழ்த்துளேன்.

(இ-ள்.) பலம்பொருந்திய தோளினையுடைய அரசர்க்கரசனே! நான் நின்னுடைய கட்டளை உண்டாகவில்லையே என்று இதுகாறுந் தாமசமாக விருந்தேன் (இப்பொழுதும் உத்தரவளித்தால்) சென்று பூதகணங்களைக் கொல்லுவேன்; குமரனையும் வெல்லுவேன்; மற்றுள்ளவர்களையும் கொல்லுவேன்.—எ-று.

எனக்கு எல்லாவித சாமர்த்தியமும் இருந்தாலும், நான் எசமானுகிய உனது கட்டளைப்படி நடக்கவேண்டியவன் ஆதலாற் பொறுத்தேனென்பான் "மன்னர் மன்னவுன்-சொல்லதின்றென்னவித்துணையுந்தாழ்த்துளேன்" என்றான் என்று கூறினர்.(௬௦)

ஏவுதி தமியனை யிமைப்பிற் சென்றியான்
மூவர்கள் காப்பினு முரணிற் றாக்கியே
தூவுறு சாரதத் தொகுதி தன்னொடு
மேவலன் றனையிவண் வென்று மீள்வனால்.

(இ-ள்.) மன்னவ! அடியேனை அனுப்புதி; அனுப்பினுல் ஒரு இமைப்பொழுதுக்குள் பகைவரிடத்தை யடைந்து நான் திரிமூர்த்திகள் காத்தாலும், அவர்கள் வல்லமையைக்கெடுத்து வெண்ணிறம்பொருந்திய பூதகூட்டத்துடன் பகைவனை ஜயித்துத் திரும்பிவருவேன்.—எ-று.

தங்களையன்றி யுள்ளவர்களிற் சிறந்தவர்கள் திரிமூர்த்திகளென்ப தவனபிப்பிராயமாதலால், எளியவர்களாகிய பூதர்கள் முதலானவர்களுடன் நானெதிர்க்குங்கால் திரிமூர்த்திகள்வந்து அவர்களுக்காக காக்கமாட்டார்கள்; ஒருவேளை காத்தாலும் அவர்களையும் வெல்லுவேன் என்பான் "மூவர்கள்காப்பினும்முரணின்றாக்கியே" என்றான். உம்மை சிறப்புப்பொருளில்வந்தது. (௬௧)

எனவிவை சண்டனுங் கிசைத்த வெல்லையி
னனலியென் றுரைத்திடு மவுணர் காவலன்
சினமொடு முறுவலுஞ் சிறிது தோன்றிட
வினையமொ டிம்மொழி விளம்பல் செய்குவான்.

(இ-ள்.) என்று இவ்வண்ணமாக அவ்விடத்தில் சண்டன் கூறியவுடனே, அனலியென்று பேருள்ள அசுரமன்னவன் கோபமும் சிரிப்பும் கொஞ்சமாக உண்டாக சாதுரியமாக இந்தவசனத்தைக் கூறத்தொடங்கினுன்.—எ-று.

அரசனிருக்குஞ்சபையில் தனது கோபத்தைக்காட்டினுல் குற்றமாகவரும்; அதனுல் தனக்குண்டான கோபத்தையும் சிரிப்பினையும் மறைக்கும்பொருட்டு சாதுரியமாகப் பேசினுனென்பார் "வினையமொடிம்மொழி விளம்பல்செய்குவான்" என்றார். ()

தெம்முனை மரபிலோர் சிறுவ னென்னினும்
வெம்மையொ டேற்குமேல் வெகுண்டு மேற்செலா
தெம்மொடு மந்திரத் திருப்ப ரேயெனி
னம்மவோ சூரருக் கழகி தாற்றலே.

(இ-ள்.) முறைப்படி போர்முகத்தி லொரு சிறியவனுகவிருந்தாலும் அகங்காரத்துடனெதிர்ப்பானுனல், கோபத்துடன் அவனெதிரே செல்லுதல்வேண்டும்; அவ்வாறன்றி எம்முடன் ஆலோசனைசபையிலிருப்பார்களானுல் அம்மவோ சூரராகவுள்ளவர்களுக்கு இப்படிப்பட்ட சாமர்த்தியம் அழகாகவிருக்கின்றது.—எ-று.

நான் போகின்றேன் நீ போகின்றையாவென்று சபைகூட்டிப் பேசிக்கொண்டிருப்பது சௌரிய மற்றவர்களினிலக்கணம். பகைவனுக வுள்ளவன் எவனுகவிருந்தாலும் சூரர்களாகவுள்ளவர்கள் போயெதிர்க்கவேணுமென்று அங்குள்ளவர்களை இழித்துப்பேசினுன் என்பார் "அம்மவோசூரருக்கழகிதாற்றலே" என்முர்.

சூரருக்கழகிதாற்றல் என்பதை சூரராகவுள்ளவர்களுக்கு இவ்வாறுசெய்த லழகானதல்ல என்றுமெனினுமாம். (௬௩)

என்றிது மொழிதலு மெரியுங் கண்ணின
ஞென்றிய முறுவல் னுயிர்க்கு நாசியன்
கன்றிய மனத்தினன் கறித்து மெல்லிதழ்
தின்றிடு மெயிற்றினன் சிங்கன் கூறுவான்.

(இ-ள்.) என்றிவற்றை அனலியென்பவன் கூறுதலும், தீப்பொறிபறக்கின்ற கண்ணினையுடையவனும் பொருந்திய சிரிப்பினையுடையவனும் பெருமூச்சுவிடுகின்ற நாசியையுடையவனும் கன்றுதலடைந்த மனத்தினையுடையவனும் மெல்லிய இதழைக் கடித்துத்தின்னுகின்ற பற்களையுடையவனுமாகிய சிங்கனென்பவன் கூறுகின்றனன்.

அனலி என்பவன் கூறிய வசனம் எவ்வளவும் அழகானதாக இன்மையால், விரைவில் கோபத்துடனவனை யடக்கினன் என்பார் "என்றிதுமொழிதலும்" என்முர். அனலியின்றியாமையாதியை யுத்தேசித்தே சிங்கன் சிரித்தானென்க. (௬௪)

வெந்தொழின் மறவரை விளித்த தன்மையு
மந்திர மிருந்தது மனங்கொள் சூழ்ச்சியு
மிந்திர னுதவிசெய் யிளையன் வன்மையைச்
சிந்திட வேகொலா நினைந்த செய்கையே.

(இ-ள்.) வெவ்விய தொழிலினையுடைய வீரர்களை அழைத்த தன்மையும் ஆலோசிக்கும்பொருட்டிருந்ததுவும் மனத்திலெண்ணுகின்ற தந்திரமும் (எல்லாம்) இந்திரனுக்கு உதவிசெய்கின்ற குமரனுடைய வல்லபத்தை யழிக்கும்பொருட்டாகத்தானே இந்தசெய்கைகளையெல்லாம் நினைந்தது.—எ-று.

நம்முடைய நிலைமையை உணராமல் சாமானியனுன இந்திரனுக்கு சகாயார்த்தமாகவந்தவன் பாரம்பரியமறியாத சிறியவன்; அவனுலே நமக்கொருதீங்கும் வரப்போகிறதில்லை. இதற்காக ஏன் வீணுகக்கூட்டம்கூடவேண்டுமென்று குறிப்பித்தானென்பார் "இந்திரனுதவிசெய் யிளையன் வன்மையைச்-சிந்திடவேகொலா நினைந்தசெய்கையே" என்முர். (௬௫)

இருநில வண்டமே லிருந்து ளோரெலா
மருவல ராகியே வருக வந்திடி
ஞெருதமி யேன்பொரு துலையச் செய்வனுற்
றெரியலை போலுநின் னடியன் றிண்மையே.

(இ-ள்.) மன்னவ! என்னெதிரில் இந்த பிருதிவி அண்டங்களிலுள்ளவர்களெல்லாம் சத்துருக்களாகவேவரட்டும்; வந்தால் தனித்தவனுகிய நானொருவனே அவ்வெல்லாருடனும் போர்புரிந்து அவர்களைத் தோற்கும்வண்ணம் செய்வேன்; நின்னடியனுகிய என்னுடைய வல்லபத்தை நீ உணர்ந்ததில்லைபோலும்!—எ-று.

எல்லாவண்டங்களிலும் இருப்பவர்களெல்லாம் ஒன்றுசேர்ந்துவரினும் நான் வெல்லுவேன் அப்படிப்பட்டவெனக்கு இவர்களெம்மாத்திரம் என்பான் "தெரியலை போலுநின் னடியன்றிண்மையே" என்றான். (௬௬)

வன்மையை யுரைப்பது மரபன் றுலெனைச்
சென்மென விடுக்குதி சேனை யோடுபோ
யுன்முனி வுற்றிடு மொன்ன லாரையட்
டின்மைய தாக்கியே வருவ னீண்டென்றான்.

(இ-ள்.) பராக்கிரமத்தைக் கூறுவது முறைமையல்ல. (அதுநிற்க), என்னை நீபோவென்று அனுப்பக்கடவை நான் சேனைகளுடனே சென்று உனது கோபத்திற்குப் பாத்திரரானசத்துருக்களைக்கொன்று இல்லையென்றுகூறும்வண்ணம் அவர்களைச்செயித்து இவ்விடத்திற்குத் திரும்பிவருவேன் என்று சிங்கன் கூறினான்.—எ-று.

தன்னை, எல்லாரையும்விட அதிக வலிமையுள்ளவனாகத் தானே மதித்ததால், "வன்மையையுரைப்பது மரபன்று" என்றான். (௬௭)

இன்னவை போல்வன வியல்பி னோரைய
துன்னெறி யமைச்சருஞ் சூழ்ச்சித் தொல்படை
மன்னரு மிசைத்தலும் வயங்கு செங்கதி
ரொன்னலன் கையமைத் துரைத்தன் மேயினான்.

(இ-ள்.) இவைபோன்ற இயல்பினையுடைய சொற்களாகவே துன்மார்க்கத்தினையுடைய மந்திரிமார்களும் தந்திரத்தினையுடைய புராதனமான சேனாநாயகர்களும் கூறுதலும், அவர்களை நீங்களிருங்களென்று கையமைத்து பிரகாசிக்கின்ற சூரியனுக்குப் பகைவனான பானுகோபன் கூறத்தொடங்கினான்.—எ-று.

இவர்கள் அனைவரும் இதுகாறும் பேசியவைகளிலொன்றும் பிரயோசனமுள்ளதாகத் தோற்றாமையால் நில்லுங்களென்றானென்பார் "கையமைத்து" என்றார். (௬௮)

சென்றிடு முனிவரா தியங்க மாயைசெய்
குன்றுட னிளவலைக் குமரன் கொன்றிடு
மன்றெனை விடுத்திலை யழைத்தொ னோர்ந்திலை
யின்றிது வினவுவ தென்னை யெந்தைநீ.

(இ-ள்.) எந்தையே! நீ செல்லாநின்ற முனிவர்கள் தியங்கும்வண்ணம் மாயைகளைச்செய்கின்ற கிரவுஞ்சமலையுடனே உன்றம்பியான தாருகனையும் குமரன் கொன்ற அத்தினத்திலென்னை அப்பினுயில்லை; விளித்து என்ன செய்யலாமென்று கேட்டாயில்லை; இன்று இதைக்குறித்து கேட்கின்றனை.—எ-று.

நின்மகனாகிய நான் இவர்களைப்போன்றவனல்லவே சொன்னவண்ணஞ் செய்வேனே என்று தன்னை வெகுவாகமதித்துப் பேசினானென்பார் "அன்றெனைவிளித்திலை" என்றார். என்னையழைத்துக்கூறியிருந்தால் நான் இவ்வளவு தூரம் வருமாறு செய்யமாட்டேன் என்பான் "இன்றிதுவினவுவதென்னை" என்றான். (௬௯)

உள்ளுறு கரவின னொருவ னும்பரா
னெள்ளரு மொற்றுவந் தீண்டு போர்செயின்
முள்ளெயி றின்னமு முற்றுந் தோன்றிலாப்
பிள்ளையை விடுக்குமோ பெரியை சாலநீ.

(இ-ள்.) மிகவும் பெரியவனாகிய நீ மனத்திற்பொருந்திய கபடத்தினையுடைய ஒருத்தன் இகழ்வில்லாத தூதனாகவந்திவ்விடத்திற் போர்செய்தால், முட்போன்ற பற்கள் முழுமையும் முளையாத பிள்ளையைவிடுவையோ?—எ-று.

பெரியவனுன நானிருக்கும்பொழுது குழந்தையை நீயனுப்பியது கூடாமை என்பான், "சாலப்பெரியைநீ" என்றான். (எ௦)

இழித்தகு தூதனு விடர்ப்பட் டாயெனும்
பழித்திறம் பூண்டனை பால னுவியை
யொழித்தனை நகரமு மொருங்கு சீரற
வழித்தனை நீயுன தறிவி லாமையால்.

(இ-ள்.) நீ, உனக்குள்ள அறிவொடு நிற்காமையால் இகழத்தக்க தூதனாலே வருத்தமடைந்தனை யென்று கூறுநின்றபழிக்காளாயினை; குழந்தையினுயிரையும் துலைத்தனை; ஊரையும் ஒன்றாக சீர்குலையும்வண்ணம் அழித்துக்கொண்டனை.—எ-று.

என்னை அன்றேயழைத்துச் சண்டைக்கனுப்பாத குற்றத்தால் இவ்வளவையுமடைந்தனை என்பான், "அழித்தனைநீயுனதறிவிலாமையால்" என்றான். (எக)

பொருளல தொன்றினைப் பொருளெ னக்கொடு
வெருவுதல் செய்வதும் வினைய மோர்கிலா
தொருசெயல் விரைந்துசெய் தயங்கி வாழ்தலும்
பெரியவர் கடமையோ பேதைத் தன்மையே.

(இ-ள்.) பொருளல்லாத வொன்றை பொருளென்று எண்ணி பயப்படுவதும், தந்திரத்தை எண்ணாமல் ஒருகாரியத்தைச் சீக்கிரமாகச்செய்து பின்னரதனால் வருந்திக் கொண்டிருத்தலும் பெரியவர்களுக்கு இலக்கணமோ? அறிவிலாதார்க்கிலக்கணம்.

உனதந்தஸ்துக்கு நீ அவ்வாறுசெய்ததுகூடாது என்பான், "பெரியவர்கடமை, யோ" என்றான். (எஉ)

பொற்றையொ டிளவலைப் பொன்ற வீட்டினோன்
கொற்றமும் பூதர்தங் குழாத்தி னாற்றலு
மொற்றுவ னிலைமையு முணரிற் சென்றியான்
பற்றிமுன் னுய்க்குவன் பிணித்துப் பாசத்தால்.

(இ-ள்.) மலையுடனே உன்றம்பியை அழியும்வண்ணங் கொன்றவனுடைய வெற்றியும், பூதகூட்டங்களின் சாமர்த்தியமும், தூதனுடைய நிலையும் உணர்ந்தால், நான் சென்று கயிற்றால் கட்டிப்பிடித்துக் கொண்டுவந்து முன்னே நிறுத்துவேன்.—எ-று.

எனக்கிதுகாறும் இவைகளில் ஒன்றுந்தெரியாது என்பான், "உணரில்" என்றான்.

ஆயிரத் தெட்டெனு மண்டத் துக்கெலா
நாயக முதல்வநீ நம்ப னல்கிய
சேயமர் குறித்தெழல் சீரி தன்றெனை
யேயினை வெற்றிகொண் டிருத்தி யெம்பிரான்.

(இ-ள்.) ஆயிரத்தெட்டென்னும் தொகையினையுடைய அண்டங்களுக்கெல்லாம் நாயகனான முதல்வனே! நீ சிவன்பெற்ற குமாரனுடனே சண்டையை உத்தேசித்துச் செல்லநினைத்தல் சீரியகாரியமல்ல, அதனால் எமது பிரானே! என்னை அனுப்பி வெற்றிபெற்றுக்கொண்டிருக்கக்கடவை.—எ-று

சிறப்பினையுடைய நீ சிறந்த இன்னொருவன் மகனாகிய சிறுவனுடன் போர்செய்யவேண்டுவது மகனாகிய நானில்லாதபோது; இப்பொழுது நானிருத்தலால் அது கூடாதென்பான் "சேயமர்குறித்தெழல் சீரிதன்று" என்றான். (எச)

ஆண்டெனை விடுத்தியே லமர தாற்றிட
மூண்டிடு மவர்தொகை முருக்கித் தேவரா

யீண்டுறு வோரையு மிமைப்பில் வென்றுபின்
மீண்டிடு வேனென விளம்பி னனரோ.

(இ-ள்.) அவ்விடத்திற்கென்னை அனுப்பினல் போர்செய்தற்கு நெருங்கிவாரா நின்றவர்களின் கூட்டத்தை அழித்து, தேவர்களாகவந் தெதிர்த்தவர்களையும் இமைப்பொழுதிற்குள் ஜயித்துப் பின்னர்திரும்பிவருவேனென்று கூறினன்.—எ-று.

தேவர்களெல்லாம் முன்னே சிறையிலடைபட்டார்கள்; இன்னஞ் சிலரிருப்பவர்களையும் வெல்லுகின்றேனென்று தனது பழையவெற்றியைக் குறிப்பிப்பான் "இமைப்பி" லென்றானென்க. (௭௫)

இரவியம் பகையவ னினைய சிற்சில
வுரைதரு மிறுதியி னுலைவு ருததோர்
முரணுறு தாதைதன் முகத்தை நோக்கியே
குரைகழ லிரணியன் கூறன் மேயினன்.

(இ-ள்.) பாநுகோபன் இவ்வண்ணஞ் சில சில சொற்களைச் சொல்லி முடித்தவுடனே,கெடாதவல்லபத்தினையுடைய தந்தையின் முகத்தைப்பார்த்து,சத்திக்காநின்ற வீரகண்டையணிந்த காலினையுடைய இரணியன் கூறத்தொடங்கினன்.—எ-று.

இவன் முன்னம்பேசிய பாநுகோபனுக்குத் தம்பியாதலால், அவன் பேசிவிட்டதற்குப்பின்பு பேசினன் என்பார்,"உரைதருமிறுதியில்" என்றார். (௭௬)

வேறு.

வள்ளற் றன்மைசேர் வயப்பெருஞ் சூரனோர் மழலைப்
பிள்ளைப் போர்வலிக் கிரங்கின னெனுமொழி பிறக்கி
னுள்ளத் தேநினை நினைக்கினும் வெருவுமொன் னலரு
மெள்ளற் கேதுவாம் விடுத்தியான் மந்திர மினியே.

(இ-ள்.) இரப்போர்க்கீகின்ற குணத்தினையுடைய வெற்றியோடுகூடியபெரிய சூரபன்மன் ஒரு மழலைப்பிள்ளையின் போரின்வல்லமைக்கு இரங்கினனெனும் சொல் உண்டாகுமானல் மனதிலே நின்னை நினைத்தாலும் பயப்படுகிற சத்துருக்களும் இகழ்தற்குக் காரணமாம்; ஆதலாலினி ஆலோசனையை விட்டுவிடுவாயாக.—எ-று.

நினது பராக்கிரமத்தை நினைத்தபோதே பயப்படுபவர்களும் நீ இவ்வாறுசெய்தால் கண்டாற்கூட மதிக்காதிகழ்வார்கள். ஆதலாலதற்குக்காரணமான மந்திராலோசனையே அநுசிதமென்பான் "விடுத்தியான்மந்திரமினியே" என்றான். (௭௭)

மைதி கழ்ந்திடு மிடற்றவன் மதலைமா நிலத்தி
னெய்தி னனமர்க் கென்றனு மென்றனை விளித்து
வெய்தெ னப்பொர விடுத்திலை வெறுத்தியோ வினையேன்
செய்தி டுந்தவ றுண்டுகொ லுனக்கொரு சிறிது.

(இ-ள்.) கறுப்பாக விளங்குகின்ற கழுத்தினையுடைய சிவன்பெற்ற பிள்ளை உலகத்தில் போருக்கு வந்தவுடனே, என்னை அழைத்து விரைவாகப் போர்புரியும்வண்ணம் விட்டாயில்லை; பாவியாகிய நான் செய்துள்ள தவறு உனக்கு ஏதாயினும் உண்டோ?

என்னிடத்திலெப்பொழுதும் விருப்பமுள்ள நீ, இப்பொழுது என்னையழைத்தனுப்பாததெதனல்? பிரியத்தைவிட்டனையோ என்பான், "மறத்தியோ" என்றான்.(௭௮)

பானல் போலொளிர் மிடற்றினன் பாலன்மேற் பசிநோய்க்
கூனை வேட்டுழல் பூதர்மே லொழிந்துளார் தம்மேன்
மான வெஞ்சமர்க் கெம்முனோன் சேறலும் வசையே
சேனை யோடியா னேகுவன் செருத்தொழில் புரிய.

(இ-ள்.) கருநெய்தல் மலர்போன்று விளங்குகின்ற கழுத்தினையுடைய சிவகுமாரன்மீதும், பசிவியாதிக்கு மாமிசத்தை விரும்பித்திரிகின்ற பூதர்கள்மீதும், மற்றுள்ளவர்கள்மீதும் பெரிய வெவ்விய போருக்கு எமது தமயன் செல்லுதலும் தவறேயாம்; ஆதலால் சைனியங்களுடனே போர்புரியும்பொருட்டு நான் போகின்றேன்.

தாழ்ந்தவர்களான அவர்களுடன் நீசென்று போர்புரிவது மஹத்தான அநுசிதம் என்ற மயனும் நின்னையொத்தவனாதலால், அவனும்போதல் சிறப்பன்று. சிறியவர்கள் பொருட்டு உங்களுக்குள் சண்டைக்காக நான்போவதே தகுதி என்பான் "சேனையோடியானேகுவன்" என்றான். (எக)

வெற்றிப் பேரம ராற்றியே மேவலர் தொகையைச்
செற்றுத் தேவர்கள் யாரையுந் தடிந்துசெல் குவனா
லிற்றைக் கங்குலி னென்றனை யேவுதி யெனலு
மற்றைத் தம்பியா மெரிமுக னினையன வகுப்பான்.

(இ-ள்.) வெற்றிக்குரிய பெரிய சண்டையைச்செய்து சத்துருக்களின் கூட்டத்தைக்கொன்று தேவர்களையெல்லாம் கொன்றுவருகின்றேன். இன்றிரவிலென்னை அனுப்பக்கடவை என்று கூறுதலும், பாநுகோபனது இன்னொரு தம்பியான அக்கினிமுகாசுர னிவைகளைக் கூறுகின்றனன்.—எ-று.

ஆலோசனைசெய்தகாலம் இராத்திரியாதலால், "இற்றைக்கங்குலில்" என்றான்.

இணையி லாவண்ட மாயிரத் தெட்டினுக் கிறைநீ
துணைய தாயொரு வீரகே சரியுளன் சுதராய்க்
கணித மில்லவர் யாமுளங் கரிபரி கடுந்தே
ரணிகொ டானவப் படையுள வலகிலா தனவே.

(இ-ள்.) ஒப்பற்ற ஆயிரத்தெட்டண்டங்களுக்கிறைவன் நீ; உனக்கோதம்பியாக ஒரு வீரசிங்கனிருக்கின்றான்; பிள்ளைகளாக அளவற்றவர்களும், நாங்களுமிருக்கிறோம்; யானைகள் குதிரைகள் வேகமாகச்செல்லுகின்றதேர்கள் அழகுபொருந்திய அசுரசைனியங்கள் முதலியன அளவில்லாதனவாக விருக்கின்றன.—எ-று.

துணைவரிருவரில் ஒருதுணைவன் வேற்படைக்கிரையானமையால், "துணையதாயொரு வீரகேசரியுளன்" என்றான். (அக)

அழிவில் பாகுள தேருள சிலையுள வலிதான்
றொழிவி லாதம ரம்புபெய் தூணியு முளவா
லிழிவி றெய்வதப் படைகண் முற் றும்முள விறைமைத்
தொழின டாத்துறு பரிதியு மொன்றுண்டு தொல்லோய்.

(இ-ள்.) பெரியோய்! அழிவற்ற சாரதியினையுடைய தேரிருக்கின்றன; வில்லிருக்கின்றன; நீங்காமலிருக்கிற அம்புகளிட்டு நிறைக்கப்பட்ட தூணிகளும் இருக்கின்றன; இழிவில்லாத தேவதாஸ்திரங்களெல்லாமிருக்கின்றன; அரசுமுறைமையை நடத்துகின்ற ஆக்கினைசக்கரமும் ஒன்று இருக்கின்றது.—எ-று.

விட்டால் தவறுததாதலால், "இழிவிறெய்வதப்படை" என்றான். (அஉ)

அண்ட மாயிரத் தெட்டையுங் கன்னலொன் றதனிற்
கண்டு மீடரு மிந்திர ஞாலமுங் கவனங்
கொண்ட தேர்தனி மடங்கலு முனக்குள குறிக்கின்
விண்டு மாலுறு மாயைகள் பலவுள மேலோய்.

(இ-ள்.) பெரியோய்! ஆயிரத்தெட்டண்டங்களையும் ஒரு நாழிகைக்குள் பார்த்துத் திரும்பிவருகின்ற இந்திரஞாலமென்னுந் தேரும், வேகம்பொருந்திய ஒரு சிங்க

மும் உனக்கிருக்கின்றன; ஆலோசிக்குங்கால் திருமாலும் மோஹங்கொள்ளத்தக்க மாயைகளு மனேகமிருக்கின்றன.—எ-று.

இந்திரஞாலத்தேர் ஏனையர் தேரைப்போன்றதல்லவென்பான், "கன்னலொன்றதனில்" என்முன். கவனம் – இங்கே மனோவேகமென்றுபொருள். (அ௩)

இன்ன பான்மைசேர் வெறுக்கைபெற் றிறிலா துறையு
மன்னர் மன்னநிற் போன்றுளார் யாவரே மலையக்
கன்னி பாலகன் றூதுவன் சிறுதொழில் கருத்தி
னுன்னி யுன்னியே யிரங்கவுந் தகுவதோ வுனக்கே.

(இ-ள்.) இத்தன்மையான செல்வம்பொருந்தி அழிவின்றி வாழுகின்ற ராசாதிராசர் நின்னைப்போன்றவர்கள் யாரிருக்கின்முர்கள்? பார்வதிகுமாரனுடைய தூதன் செய்த அற்பகாரியத்தை மனத்தில் நினைத்து நினைத்து வருந்துவதும் உனக்குத் தகுதியானதோ?—எ-று.

உனக்கு ஒப்பானவர்கள் யாருமில்லாதபோது நீ கவற்சிகொள்ளுவது தகுதியல்லவென்பான் "இரங்கவுந்தகுவதோவுனக்கே" என்முன். (அ௪)

குழந்தை வெண்பிறை மிலைச்சினோன் மதலையைக் குறுத்தா
ளிழிந்த பூதரைப் பிறர்தமை வென்றிட வெமரில்
விழைந்த மானவ ரொருவரை விடுப்பதே யன்றி
யழிந்தி ரங்கியே வினவுமோ விதுகொலுன் னறிவே.

(இ-ள்.) வெள்ளிய இளையசந்திரனையணிந்தவனது பிள்ளையையும், சிறிய கால்களையுடைய இழிந்த பூதர்களையும், மற்றுள்ளவர்களையும் வெல்லும்பொருட்டு எங்களில் உனக்கு விருப்பமான ஒருபுருடனை அனுப்புவதல்லாமல் மனநிலைகுலைந்து இரங்கிக்கேட்பையோ? இதுதானோ உன்னுடைய அறிவு?—எ-று.

நினக்கிட்டமானவர்களையனுப்பி நீவெற்றியையடை என்று பிறர் கூற்றுக்களை மறுத்தான். (அ௫)

மூளும் வெஞ்சமர் புரிந்தவென் னிளவல்பன் முடியும்
வாளி னூலடு மொற்றனை மற்றுளார் தம்மைக்
கேளொ டுந்தடிந் தல்லது கேடில்சீர் நகர்க்கு
மீள்க லேனெனப் பகர்ந்தனன் வெய்யசூ ரூரையே.

(இ-ள்.) அதிகமாகிற வெவ்விய போரினைப்புரிந்த என்றம்பியின் பத்துத்தலைகளையும் வாளால் வெட்டியதூதனையும், மற்றுள்ளவர்களையும், அவர்கள் சுற்றத்தினருடன் கொன்றல்லது அழிவில்லாத சிறப்புப்பொருந்திய ஊருக்குத் திரும்பிவரமாட்டேனெனக் கொடியசபதமொழி கூறினன்.—எ-று.

ஆனாலென்னையனுப்பினால் எப்படியாவது என்னிளையவனைக்கொன்றவனை நான் கொல்லுவேன்; பிறருக்கவ்வளவுசிரத்தை யிராது என்று குறிப்பிப்பான், "மீள்கலேன்" என்முன். (அ௬)

கரந்தை சூடுவான் குமரனைப் பொருதல்கா தலியா
விருந்த வீரர்க ளளப்பில ராயினு மிப்போர்
விரைந்து நீயெனக் குதவுதி யேதுவன் மேனாட்
பொருந்து பாதலத் தரக்கர்மேற் சென்றதே போல.

(இ-ள்.) கரந்தைமலரையணிகின்ற சிவகுமாரனுடன் போர்புரிதற்கு விரும்பி அளவற்ற வீரர்களிருக்கின்முர்களானாலும் இந்தச்சண்டையை சீக்கிரமாக எனக்கு உத்தரவுசெய்தி; முன்னாளில் பாதாளத்திற் பொருந்திய அசுரர்கள்மேற் படையெடுத்துச் சென்றாற்போல செல்கின்றேன்.—எ-று.

உனக்கெல்லாரும் பொதுவானவர்களாக விருந்தாலும் இந்தப்போரைமாத்திரங் கேட்கின்றேன் என்பான், "எனக்குதவுதி" யென்முன். (அஎ)

வலிய தோர்சிலை யீறிலாக் கவசம்வான் படைக
ளுலகு தந்தவ னளித்திட முன்புபெற் றுடையேன்
குலம டங்கவா ளரக்கரைத் தடிந்திசை கொண்டேன்
மெலிய னன்றியா னறுமுகன் மேலெனை விடுத்தி.

(இ-ள்.) பெரிய ஒப்பற்றவில்லும் நாசமில்லாத கவசமும் சிறந்த ஆயுதங்களும் முன்னாளில் உலகத்தைப் படைத்த பிரமதேவன் அளிக்கப்பெற்று இருக்கின்றேன்; வாட்படையினையுடைய அரக்கர்களைக் கொன்று கீர்த்தி பெற்றிருக்கின்றேன்; நான் இளைத்தவனல்லேன்; பழையவனாகிய புருஷன் ஆதலால் என்னை அனுப்பக்கடவை.

நான் வச்சிரவாகுவைப்போன்றவனல்லேன், பிரமாவினிடத்தில் யுத்தத்திற்கு வேண்டியவைகளைப் பெற்றிருப்பதுடன் அரக்கர்களையே எதிர்த்துக்கொன்று கீர்த்தி பெற்றிருக்கின்றேன் ஆதலால் எனக்கிவன் எம்மாத்திரம் என்பான் "மெலியனன்றி யான்" என்முன். (அஅ)

என்னு மாற்றங்க ளெரிமுக முடையவ னிசைப்ப
வன்ன வன்றனை விலக்கியே கரதல மமைத்துச்
சென்னி யாயிரம் பெற்றுள சிங்கமா முகத்தோன்
மன்னர் மன்னனை நோக்கியே வகுத்துரை செய்வான்.

(இ-ள்.) இவ்வண்ணமான வசனங்களை அக்கினிமுகாசுரன் சொல்ல, அவனைப் போதும் நிறுத்து என்று தடுத்துக்கையமைத்து, ஆயிரந்தலைகளையுடைய சிங்கமுகாசுரன் அரசர்க்கரசனாகிய சூரபன்மனைப் பார்த்து (இவ்வண்ணமாக) வகுத்துரைக்கின்றனன்.—எ-று.

அக்கினிமுகாசுரன் கூறினமை சற்றும் உசிதமானதன்மையால் அவனை அவன் பேச்சின் இடையிலேயே நீநில் என்று அவன்பேசுவதைத் தடுத்தனன் சிங்கமுகன் என்பார் "விலக்கி" என்முர். (அக)

மந்தி ரத்தருந் தானையந் தலைவரு மகாருந்
தந்த மக்கியல் வன்மையே சாற்றிய தல்லா
லிந்தி ரப்பெருந் திருவுறு முன்றனக் கியன்ற
புந்தி சொற்றில ரிம்மொழி கேளெனப் புகல்வான்.

(இ-ள்.) மன்னவ! மந்திரிமார்களும் சேனபதிகளும் பிள்ளைகளும் அவரவர்களிடம்பொருந்திய வல்லபங்களைக் கூறினர்களேயன்றி பெரிய சுவர்க்கலோக செல்வத்தினையுடைய உனக்குத்தக்க புத்தி கூறினரில்லை. யான் கூறும் இம்மொழியைக் கேள் என்று சிங்கமுகாசுரன் கூறத்தொடங்கினன்.—எ-று.

அழகிற் சிறந்தவர்கள் பலரிருந்தாலும் மன்மதனையே எடுத்துக்காட்டுவ துலக வழக்கம்; அதைப்போல சிறந்தசெல்வமுள்ளவர்கள் பலரிருந்தாலும் மஹேந்திரனையே கூறுவதிம்மாநிலவழக்கம் ஆதலால் சிங்கமுகனும் "இந்திரப்பெருந்திரு" என்முன். ()

வேறு.

பெற்றிடு திருவினிற் பிறந்த வெஞ்சினங்
கற்றவ ருணர்வையுங் கடக்கு மன்னது
முற்றுறு கின்றதன் முன்ன மன்பினே
ருற்றன கூறியே யுணர்த்தல் வேண்டுமால்.

(இ-ள்.) செல்வத்துடனிருக்கின்ற காலத்திலுண்டாகின்ற கோபம் பண்டிதர்களுணர்வையும் பேதித்துக்கொண்டு செல்லும், ஆதலினாலே அவ்வண்ணம் கோபமுதிர்தற்குமுன்னே அன்புள்ளவர்களாயுள்ளவர்கள் உண்மையானவிஷயங்களை யெடுத்துக் கூறித் தெளிவுண்டாக்குதல்வேண்டும்.—எ-று.

"நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண் - மேற்சென் றிடித்தற் பொருட்டு" என்ற குறட்படி "உற்றனகூறியே யுணர்த்தல்வேண்டுமால்" என்றான். (கக)

மன்னவர் செவியழன் மடுத்த தாமென
நன்னெறி தருவதோர் நடுவு நீதியைச்
சொன்னவ ரமைச்சர்க டுணைவர் மேலையோ
ரொன்னலர் விழைந்தவா றுரைக்கின் றார்களே.

(இ-ள்.) அரசர்களுடைய காதுகளில் தீக்கோலைச் சொருகினாற்போல நல்வழியைத்தருகின்ற ஒப்பற்ற நடுவுநிலைமையான நீதியைச் சொன்னவர்களே மந்திரிகள். அவ்வாறிருக்க, உனது சிறந்த சூட்சித்துணைகளாயுள்ளவர்கள், பகைவர்கள் விரும்பிய வண்ணமே பகர்கின்றார்கள்.—எ-று.

"அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்-திறனறிந்தான் றேர்ச்சித் துணை" என்னும் பெரியவர் வாக்கியம்போன்றவைகளை உணர்ந்த சிங்கமுகன் இம்மந்திரியாதியர் கூற்று அனீதம் என்றான் என்பார், "ஒன்னலர்விழைந்தவாறுரைக்கின்றார்களே" என்றார். (கஉ)

முற்றுற வருவது முதலு மன்னதாற்
பெற்றிடு பயன்களும் பிறவுந் தூக்கியே
தெற்றென வுணர்ந்துபின் பலவுஞ் செய்வரேற்
குற்றமொன் றவர்வயிற் குறுக வல்லதோ.

(இ-ள்.) முடிவாகவுண்டாகுங்காரியமும் அதனாரம்பமும் அதனாலுண்டாகும் பிரயோசனமும் மற்றுள்ளவைகளும் ஆகிய வெல்லாம் சீர்தூக்கிநோக்கி நன்றாயுணர்ந்தபின்பு எவைகளையேனும் செய்வார்களேயானால் அவ்வாறு செய்யுமவர்களிடத்தில் எந்தக் குற்றமேனும் வந்து சேர்தற்கிடமுண்டோ?—எ-று.

"முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்-படுபயனும் பார்த்துச் செயல்" என்ற நீதிமொழியின் பொருள்கொண்ட வாக்கியங்களைச் சிங்கமுகன் உணர்ந்திருக்கின்றானென்பது இப்பாட்டினால் புலப்படுதல் காண்க. (கங)

மால்வரு தொடர்பினால் வனத்துச் செல்லுமீன்
கோல்வரு முணவினைக் குறித்து வவ்வியே
பால்வரு புணர்ப்பினிற் படுதல் போலநீ
மேல்வரு கின்றதை வினவல் செய்கிலாய்.

(இ-ள்.) மயக்கமுண்டான காரணத்தால் நீரிலோடாநின்ற மீன் தூண்டிலில் வராநின்ற வுணவினை உணவென்றுத்தேசித்துக் கவ்வி அவ்வுணவுக்குள்ளிருந்த தூண்டின்முள்ளுக்குள் அகப்பட்டுக்கொள்ளுதலைப்போல, நீயும் மேலேவரப்போகின்ற காரியங்களொன்றையும் கேட்கின்றாயில்லை.—எ-று.

தக்காரோடு ஆலோசியாமையால் நீயும் மீன்படும்பாட்டைப் படுவாய் என்பது கருத்து. (கச)

இந்திர னாதியா மிறைவர் தங்களை
யந்தரத் தமரரா யலைத்த தீயவர்

முந்துறு திருவொடு முடிந்த தல்லதை
யுய்ந்துள ரிவரென வுரைக்க வல்லமோ.

(இ-ள்.) இந்திரன்முதலிய அரசர்களையும் சொர்க்கவாசிகளான தேவர்களையும் உபத்திரவித்த கொடியவர்கள் உயர்ந்தசெல்வங்களுடனழிந்தார்களேயன்றி, உயிரோடிருந்தவர்கள் இவர்களென்று கூறும் சாமர்த்தியம் நமக்குண்டோ?—எ-று.

நீ இப்பொழுது செய்ததைப்போல செய்த அசுரர்களில் ஆருமுயிருடனில்லை. ஆதலால் நீயும் அவ்வாறுவை; அதனல் தேவர்களை வருத்தாதே என்பான், "உய்ந்துள ரிவரென வுரைக்க வல்லமோ" என்றான். (௬௫)

தேவர்கள் யாரையுந் திரைகொள் வேலையின்
மேவரு மீன்றொகை விரைவிற் றம்மென
வேவினை யினிதுகொ லினைய செய்கைதம்
மாவியில் விருப்பிலா ரன்றி யார்செய்வார்.

(இ-ள்.) தேவர்களையெல்லாம் அலைபொருந்திய கடலில் வாழ்கின்ற மீன்கூட்டங்களைச் சீக்கிரம் பிடித்துக்கொண்டு வாருங்களென்றனுப்பினய், இவ்வண்ணஞ்செய்தல் நல்லதோ? தம்முயிரில் விருப்பமில்லாதவரன்றி வேறியாவரிவ்வண்ணஞ் செய்வார்கள்.—எ-று.

ஆசாரமுள்ளவர்களைக்கொண்டு அநாசாரமான காரியத்தைச் செய்விக்கப்படாது. அவ்வாறுசெய்வோர் அழிவார்கள் என்பான், "ஆவியில்விருப்பிலாரன்றி யார்செய்வார்" என்றான். (௬௬)

அறைகழல் வாசவற் கலக்க ணுற்றியே
யிறையினை யழித்தனை யிருந்த மாநகர்
நிறைதரு வளனெலா நீக்கு வித்தனை
சிறையிடை யுய்த்தனை தேவர் யாரையும்.

(இ-ள்.) சத்திக்கின்ற வீரகண்டையையணிந்த காலினையுடைய இந்திரனுக்குத்துன்பத்தையுண்டாக்கி யவனதரசைக்கெடுத்தனை; அவனிருந்த பெரியநகரத்திலுள்ள செல்வங்களை யெல்லாம் அப்புறப்படுத்தினை; தேவர்களனைவரையும் சிறையிலடைத்தனை.—எ-று.

நிறைதருவளனென்றது-கற்பகம், சிந்தாமணி, காமதேனுவாதியை. (௬௭)

அத்தகு தேவரா லைய நங்களுக்
கித்துணை யலக்கண்வந் தெய்திற் றிங்கிது
மெய்த்திற மாமென விரைந்துட் கொள்ளலை
பித்தரின் மயங்கினை பேதை யாயினய்.

(இ-ள்.) அந்தத்தகுந்த இந்திரன்முதலிய தேவர்களாலேயே நமக்கு இப்படிப்பட்ட துன்பங்களுண்டாயின; இதுண்மையான விஷயமென்று சீக்கிரமாக மனதிற்கொண்டாயில்லை; பயித்தியக்காரர்களைப்போல் மயக்கமடைந்தனை; பேதையுமாயினய்.

நீ மயக்கத்தாலுணர்ந்தாயில்லை என்றான். (௬௮)

பொன்னக ரழிந்தநாட் புகுந்த தேவரை
யின்னமும் விட்டிலை யிரக்க நீங்கின
யன்னதற் கல்லவோ வாறு மாமுக
னுன்னுடன் போர்செய வுற்ற தன்மையே

(இ-ள்.) சுவர்க்கமழிந்த தினத்தில் இவ்விடத்திற்குவந்த தேவர்களை இன்னமும் விட்டாயில்லை; இரக்கத்தையொழித்து விட்டனை; அதற்காகவல்லவோ சிறந்த சண்முகன் உன்னுடன் போர்செய்யும்பொருட்டு வந்தவண்ணம்.—எ-று. (௬௯)

வேறு.

பேறு தந்திடு பிஞ்ஞகன் பெருந்திரு வுடனீர்
நூறு தன்னுட னெட்டுக மிருமென நுவன்றான்
கூறு கின்றதோர் காலமுங் குறுகிய ததனைத்
தேறு கின்றிலை விதிவலி யாவரே தீர்ந்தார்.

(இ-ள்.) நமக்கு இத்தகைப்பேற்றையெல்லாம் அளித்த சிவபெருமான், நீங்கள் நூற்றெட்டுகம் இந்தப் பெருஞ்செல்வத்துடனிருங்களென்று கூறினார். அவ்வாறு சொல்லப்பட்ட நூற்றெட்டாவது யுகத்தின்முடிவும் சமீபித்துவிட்டது. நீயதனை யுணர்கின்றாயில்லை. விதியின்வல்லபத்தை யார்தான் கடந்தவர்கள்.—எ-று. (௧00)

எத்தி றத்தரு நுங்களை வெல்கில ரெமது
சத்தி வென்றிடு மென்றனன் கண்ணுதற் றலைவ
னத்தி றத்தினா லல்லவோ வறுமுகக் குமர
னுய்த்த செய்யவே லுண்டது தாரக னுயிரை.

(இ-ள்.) நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமான் நம்மைப்பார்த்து உங்களை யெத்தன்மையான வல்லவர்களும் வெல்லமாட்டார்கள். எமது சத்தியொன்றே வெல்லுமென்று கூறினார். இறைவனவ்வாறு கூறியதினால் அல்லவோ தாரகனுயிரை சண்முகன்விட்ட செவ்வியவேலுண்டது.—எ-று. (௧0௧)

பேதை வானவர் தங்களைச் சிறையிடைப் பிணித்தா
யாத லாலுனக் கானதென் றுன்பமே யல்லா
லேது மோர்பய னில்லதோர் சிறுதொழி லியற்றி
வேதனைப்படு கின்றது மேலவர் கடனோ.

(இ-ள்.) பேதைகளாகிய தேவர்களைச் சிறையிலடைத்தனை; அதனால் துன்பமன்றி யுனக்கு வேறேயென்ன பிரயோசனமுண்டு. யாதொரு பிரயோசனமுமில்லாததாகிய ஒரு இழிந்தகாரியத்தைச் செய்து அதனால் உண்டாகின்ற கஷ்டத்தை யனுபவித்தல் சிறந்தவர்கட்கு முறைமையோ?—எ-று. (௧0௨)

குரவ னைச்சிறு பாலனை மாதனைக் குறைதீர்
விரத நற்றொழில் பூண்டுளோர் தம்மையே லவனை
யருமறைத்தொழி லாளனை யொறுத்தன ரன்றோ
நிரய முற்றவுஞ் சென்றுசென் றலமரு நெறியோர்.

(இ-ள்.) குருமார்களையும், சிறிய குழந்தைகளையும், பெண்களையும், குற்றமற்ற நல்லவிரதங்களை யனுட்டித்தலையே தொழிலாகக்கொண்டுள்ள தவசிகளையும், சிறந்தவர்களையும், அருமையான வைதிகச்சடங்குகளைச் செய்கின்ற பிராமணர்களையும் தண்டித்தவர்களல்லவோ வெல்லாநரகங்களிலும் சென்று சென்று துன்பமடைகின்ற தீயமார்க்கத்தினையுடையவர்கள்.—எ-று. (௧0௩)

அமரர் தம்பெருஞ் சிறையினை நீக்குதி யாயிற்
குமர நாயக னீண்டுபோ ராற்றிடக் குறியா
னமது குற்றமுஞ் சிந்தையிற் கொள்ளல னாளை
யிமையொ டுங்குமுன் கயிலையின் மீண்டிடு மெந்தாய்.

(இ-ள்.) தேவர்களது பெரிய சிறையை நீக்கிவிடுவாயானால் சிறந்தவராகிய குமாரக்கடவுள் இவ்விடத்தில் போர்செய்யும்வண்ணம் எண்ணமாட்டார். அன்றியும் நமது குற்றங்களையும் மனதிற் கருதார். நாளையதினமே இமைப்போழ்துக்குள் எந்தையே! கயிலாயத்திற்குத் திரும்பிச்செல்லுவார்.—எ-று. (௧0௪)

சிட்ட ராகியே யமர்தரு மிமையவர் சிறையை
விட்டி டாதுநீ யிருத்தியேன் மேவலர் புரங்கள்
சுட்ட கண்ணுதல் குமரனங் குலமெலாந் தொலைய
வட்டு நின்னையு முடித்திடுஞ் சரதமென் றறைந்தான்.

(இ-ள்) சிறந்தவர்களாக விருக்கின்ற தேவர்களின் சிறையை விட்டுவிடாமல் நீயிருப்பாயானால், பகைவர்களது பட்டினங்களையெரித்த நிடாலாக்ஷரது புத்திரன் நமது வமிசங்களெல்லாம் தொலையுமாறு கொன்று நின்னையும் கொல்லுவான்; இதுண்மையென்று கூறினன்.—எ-று. (கoசு)

தடுத்து மற்றிவை யுரைத்தலும் வெய்யசூர் தடக்கை
புடைத்து வெய்துயிர்த் துரப்பியே நகைநிலாப் பொடிப்பக்
கடித்து மெல்லித ழதுக்கிமெய் பொறித்திடக் கனன்று
முடித்த னித்தலை துளக்கியே யின்னன மொழிவான்.

(இ-ள்.) பிறர்பேசுவதைத்தடுத்து இவ்வசனங்களைச் சிங்கமுகாசுரன் கூறுதலும், கொடியசூரபன்மன் பெரியகையொடு கையடித்து பெருமூச்சுவிட்டு அதட்டி சந்திரிகையைப்போலப் பற்கள் ஒளிவீச மெல்லியவிதழைக்கடித்து உடம்பில் தீப்பொறி பறக்கக்கோபித்து முடியினையுடைய தலையையசைத்து இவைகளைக் கூறுகின்றனன்.

ஏவற் றொண்டுசெய் தின்னமுங் கரந்தவிந் திரற்குந்
தேவர்க் குஞ்சிறு பாலற்குஞ் சிவனுறை கயிலைக்
காவற் பூதர்க்கு மஞ்சினை கருத்தழிந் தனையோ
மூவர்க் கும்வெலற் கரியதோர் மொய்ம்புகொண் டுடையோய்.

(இ-ள்.) திரிமூர்த்திகளாலும் வெல்லுதற்குமுடியாத ஒப்பற்றதோள்களையுடையவனே! நாமிட்டவேலைகளைச் செய்துகொண்டிருந்து மறைந்துசென்று இன்னமும் வெளிப்படாத இந்திரனுக்கும் தேவர்களுக்கும் சிறியபாலனுக்கும் சிவன் வாழ்கின்ற கைலையைக்காக்கின்ற பூதர்கட்கும் பயந்து மனநிலை குலைந்தனையோ?—எ-று. ()

எல்லை நாள்வரை யிழைத்தது மெம்பெருஞ் சத்தி
வெல்லு நுங்களை யென்றதுங் கண்ணுதல் விமலன்
சொல்ல யான்முன்பு கேட்டிலன் வஞ்சமுஞ் சூழ்வும்
வல்லை வல்லைகொ லெம்பிநீ புதிதொன் று வகுத்தாய்.

(இ-ள்.) இவ்வளவுகாலம் இருப்பீர்களென்று வாழ்நாட்கு வரம்புகூறியதனையும், எமது பெரிய சத்தியொன்றே நும்மை வெல்லுமென்பதையும், நெற்றிக்கண்ணினையுடைய நிருமலராகிய கடவுள்சொல்ல நான் முன்பு கேட்டேனில்லை; வஞ்சனையும் தந்திரமும் கூறுதற்கு மிகவும்வல்லபனோ? என்றம்பியே! புதியவொருவிடயத்தை நீயின்றுகூறினாய்.—எ-று. (கoஅ)

நூற்றின் மேலுமோ ரெட்டுக நுவலருந் திருவின்
வீற்றி ருந்தர சியற்றுதி ரென்னினு மேனா
ளாற்றி னைச்சடை வைத்தவன் கொடுத்திடு மழியாப்
பேற்றை யாவரோ விலக்குவா ரதுபிழை படுமோ.

(இ-ள்.) நூற்றெட்டுகம் சொல்லுதற்கரிய செல்வத்துடன் வாழ்ந்து அரசுபுரியுங்களென்று கூறினும், முன்னாளில் கங்கையைச் சடையில்வைத்துள்ளகடவுளளித்த அழியாப் பேற்றினை யார் நீக்குபவர்கள் அது தவறுமோ?—எ-று. (கoகூ)

ஆதி நாயக னெம்பெருஞ் சத்தியே யல்லா
லேதி லார்வெலா ரென்னினுஞ் சத்திய மிறையும்
பேத மோவரங் கொடுத்தவ னடுமென்கை பிழையே
யோத லாவதோர் வழக்கமே யுண்மைய தன்றால்.

(இ-ள்.) முதல்வனுகிய கடவுள், எமது பெரிய சத்தியேயன்றி நம்மை யயலார் வெல்லாரென்று கூறினும், சத்தியும் சிவமும் வேருனபொருளோ? வரமளித்தவன்கொல்லுவானென்பது தவறே. ஆனல் அவ்வாறு கூறுதல் தொன்றுதொட்டுள்ள ஒரு வழக்கம்; அது உண்மையானதல்ல.—எ-று. (கக0)

பழுது ருதுநம் போலவே வேள்வியைப் பயிலா
தழிவி லாவரம் பெற்றிலன் ருரக னதனு
ளுழிவ தாயினன் வச்சிர வாகுவு முணர்வில்
குழவி யாதலின் மாய்ந்தன னீதுகொல் குறையே.

(இ-ள்.) குற்றமுண்டாகாமல் நம்மைப்போல யாகத்தைச்செய்யாமல் அழியாதிருக்கும்வரத்தைத் தாரகன் பெற்றானில்லை. அதனல் இறந்தனன். வச்சிரவாகுவும் இன்னமறிவுநிரம்பாத குழந்தையாதலால் இறந்துபோயினன். இதுதானு நமக்குவந்த குறை ?—எ-று. (ககக)

அண்ட மாயிரத் தெட்டையுந் தனியர சாட்சி
கொண்டு வைகினன் குலத்தொடு மமரர்தங் குழுவைத்
தொண்டு கொண்டனன் யாவர்வந் தெதிர்க்கினுந் தொலையே
னுண்டு கொல்லிவ ணெனக்குநே ராகவே யொருவர்.

(இ-ள்.) ஆயிரத்தெட்டண்டங்களையும் பொதுநீக்கி அரசாட்சிசெய்துகொண்டிருக்கின்றேன். தேவர்கூட்டங்களை வங்கிசங்களுடன் ஊழியம்செய்வித்தேன். எத்தகையோர் வந்தெதிர்க்கினுமழியேன். இவ்விடத்தில் எனக்கு ஒப்பானவர்கள் யாராயினும் இருக்கின்றார்களா?—எ-று. (ககஉ)

தவமு யன்றுழ லமரரி னரக்கர்க டம்மி
னவுணர் தங்களி னுயிரத் தெட்டெனு மண்டம்
புவன முற்றவு மொருதனி யாழியாற் புரந்தே
யெவரொ னக்குநே ராகவே யழிவிலா திருந்தார்.

(இ-ள்.) தவத்தைச்செய்துகொண்டு திரிகின்ற தேவர்களுள்ளும் அரக்கர்களுள்ளும் அசுரர்களுள்ளும் ஆயிரத்தெட்டு என்று கூறப்படுகிற அண்டபுவனங்களையெல்லாம் ஒப்பற்ற ஏகசக்கரத்தால் ஆண்டு யாவர் எனக்குச் சமானமாக அழிவில்லாமல் இருந்தார்கள்?—எ-று. (ககரு)

மால யன்முத லாகிய முதுவர்கள் வரம்பில்
கால மாகயா னமரரைச் சிறைசெயக் கண்டுஞ்
சால வென்றனக் கஞ்சியே யிருந்தனர் தனியோர்
பால னேகொலா மழிவிலா வென்னுயிர் படுப்பான்.

(இ-ள்.) அரியயன் முதலிய பெரியோர்களும் அநேககாலமாக நான் தேவர்களைச் சிறையிலடைத்திருப்பதைப் பார்த்தும், மிகவும் எனக்குப் பயந்தேயிருந்தார்கள்; அவ்வாறிருக்க தனித்தவொரு சிறுவனு அழிவில்லாத என்னுயிரை வாங்குபவன் ?

வேறு பாடுறு வச்சிரப் படிவமு மிடனு
மீறி லாததோ ராயுளும் பெற்றிடு மென்னை

யூறு தான்செயக் கூடுரு தொருவர்க்கு மென்றுன்
மாறு போர்செய்து பாலனே வெனையட வல்லான்.

(இ-ள்.) மாறுபாடில்லாத வச்சிரசரீரத்தையும் பலத்தையும் அளவற்றதான ஆயுளையும் பெற்றிருக்கின்றவனுகவுள்ள வென்னை யாராலும் யாதொரு ஊறும்செய்ய முடியாது; அவ்வாறு இருக்க இப்பொழுது பகைத்துப் போர்செய்து ஒருகுமாரனோ என்னைக்கொல்லவல்லவன்?—எ-று. (ககரு)

எண்ணி லாதசோர் பாலக னெனைவெல்வ னென்கை
விண்ணி லாதவன் றன்னையோர் கனியென வெஃகிக்
கண்ணி லாதவன் காட்டிடக் கையிலா தவன்போ
யுண்ணி லாதபே ராசையாற் பற்றுமா றொக்கும்.

(இ-ள்.) வலியில்லாதவனுகிய ஒருசிறுவன் என்னை வெல்லுவானென்று கூறுதல், வானத்திலுள்ள சூரியனை ஒருபழமென்றுவிரும்பி குருடன்காட்ட அதனைக்கையில்லாதவன்சென்று உள்ளேயடக்கக்கூடாத பெரிய ஆசையினுல்பிடிக்குந் தன்மையையொக்கும்.—எ-று. (ககசு)

என்று மற்றிவை சூரபன் மாவிசைத் திடலுந்
துன்று பஃறலைச் சீயமா முகமுடைத் துணைவ
னன்று நன்றென வினவியே யின்னமு நானிங்
கொன்று கூறுவன் முனியலை கேட்டியென் றுரைப்பான்.

(இ-ள்.) எனவிவைகளைச் சூரபன்மன் கூறுதலும், நெருங்கிய பலதலைகளையுடைய பெரிய சிங்கமுகனுகிய தம்பியானவன் நல்லது நல்லது என்று அவன் கூறியவற்றையெல்லாங்கேட்டு, நான் இன்னமும் ஒன்று இங்கே கூறுகின்றேன். அதனைக் கோபமில்லாமல் கேட்கவேண்டும் என்று கூறத்தொடங்கினுன்.—எ-று. (ககஎ)

வாலி தாமதிச் சடிலமும் பவளமால் வரையே
போலு மேனியு முக்கணு நாற்பெரும் புயமு
நீல மாமணிக் கண்டமுங் கொண்டுநின் றனனுன்
மூல காரண மில்லதோர் பராபர முதல்வன்.

(இ-ள்.) வெண்ணிறம்பொருந்திய சந்திரகலையையணிந்த சடாபாரத்தையும், பெரிய பவளமலைபோன்ற திருமேனியையும், மூன்றுகண்களையும், நாலுபெரிய தோள்களையும், நீலநிறமான வழகிய கண்டத்தையும் தனக்குமேல் காரணமில்லாத ஒப்பற்ற பராபரனுகிய முதல்வன் தரித்து நின்றனன்.—எ-று. (ககஅ)

தன்னை நேரிலாப் பரம்பொரு டனியுருக் கொண்ட
தென்ன காரண மென்றியே லைந்தொழி லியற்றி
முன்னை யாருயிர்ப் பாசங்கண் முழுவது மகற்றிப்
பின்னை வீடுபே றருளுவா னினைந்தபே ரருளே.

(இ-ள்.)தனக்குயாரும் ஒப்பில்லாத பரம்பொருளானது ஒப்பற்ற சகுண ரூபத்தைக்கொண்டுள்ளது என்னகாரணமென்று கேட்பாயாகில், பஞ்சகிருத்தியங்களைச் செய்து அனுதியாகவுள்ள அரிய உயிர்வருக்கங்களின் எல்லாப்பாசங்களையு மொழித்துப் பின்னர் வீடுபேற்றினை யளிக்கும்பொருட்டுத் திருவுளங்கொண்ட பெரியவருளினுலேயேயாம்.—எ-று. (ககக)

அப்ப ரன்றனை யுன்னியே யளவைதீர் கால
மெய்ப்பெ ருந்தவ மியற்றினை யதுகண்டு வெளிப்பட்

டொப்பி லாவர முதவியே யாங்கதற் கொழிவுஞ்
செப்பி வைத்தனன் றேர்ந்திலை போலுமத் திறனே.

(இ-ள்.) அப்படிப்பட்ட பரமேச்சுவரனை நினைத்து அளவற்ற வருஷகாலமுண்மையான பெரிய தவத்தினைச்செய்தனை; அதனைக்கண்டு அக்கடவுள் வெளிப்பட்டு ஒப்பற்றவரங்களைக் கொடுத்து அவ்வரத்தின் முடிவையும் கூறியருளினர். அவர் அவ்வாறு கூறியதனை நீ யுணர்ந்தாயில்லை. மேலும்.—எ-று. (௧௨0)

பெறல ருந்திரு வுடையநீ யறத்தினைப் பேணி
முறைபு ரிந்திடா தாற்றலா லமரரை முனிந்து
சிறையில் வைத்தனை யதுகண்டு நின்வலி சிந்தி
யிறுதி செய்திட வுன்னினன் யாவர்க்கு மீசன்

(இ-ள்.) பெறுதற்கரிய செல்வத்தினையுடைய நீ தருமத்தைப்பாதுகாத்து நீதிமுறைப்படி நடவாமல் சாமர்த்தியத்தினால் தேவர்களைக் கோபித்துச் சிறையிலடைத்துவைத்தனை. அதனால் நினதுபலத்தையொழித்து எல்லாருக்கும் முதல்வனாகிய கடவுள் உன்னைக் கொல்லும்பொருட்டுத் திருவுளங்கொண்டனன்.—எ-று. (௧௨௧)

வரம ளித்தயா மழிப்பது முறையன்று வரத்தாற்
பெருமை பெற்றுள சூரனை யடுவது பிறர்க்கு
மரிதெ னப்பர னுன்னியே தன்னுரு வாகு
மொருமை கற்கொடு முடித்துமென் றுன்னினா னுளத்தில்.

(இ-ள்.) வரமளித்த நாம்அழிப்பது முறைமையல்ல; ஆதலால், வரத்தினாற்பெருமையடைந்துள்ள சூரனைக்கொல்வது அயலார்க்கும் கஷ்டமென்று இறைவன் நினைத்துத் தனதுருவமாகவுள்ள ஒப்பற்றமகனைக்கொண்டு அழிப்போமென்று திருவுளத்தினினைத்தனர்.—எ-று. (௧௨௨)

செந்நி றத்திரு மேனியுந் திருமுக மாறு
மன்ன தற்கிரு தொகையுடைத் தோள்களு மாக
முன்ன வர்க்குமுன் னாகிய பராபர முதல்வன்
றன்னு தற்கணா லொருதனிக் குமரனைத் தந்தான்.

(இ-ள்.) செவ்வண்ணமான திருமேனியையும் ஆறுதிருமுகங்களையும் அம்முகங்களுக்கிரட்டியான தோள்களையும் கொண்ட ஒரு திருமேனியை முன்னுள்ளவர்களுக்கெல்லாம் முன்னுள்ளவராகிய கடவுளெடுத்துத் தமது நெற்றிக்கண்ணால் ஒப்பற்ற ஒருபிள்ளையை யளித்தனர்.—எ-று. (௧௨௩)

மானு டத்தரின் விலங்கினிற் புட்களின் மற்று
மூன முற்றுழல் யாக்கையிற் பிறந்துளா ரொப்ப
நீநி னைக்கலை பரஞ்சுடர் நெற்றியந் தலத்தே
தானு தித்தனன் மறைகளுங் கடந்ததோர் தலைவன்.

(இ-ள்.) மனிதரிலும் மிருகங்களிலும் பட்சிகளிலும் இன்னமுள்ள இழிவுபொருந்திய சரமான சரீரங்களிலும் பிறந்தவர்களைப்போல நீ யெண்ணாதே; பரமேசுவரது லலாடப்பிரதேசத்தில் அவதாரம் செய்தனர். அவர் வேதங்களுக்கும் அப்பாற்பட்டு நிற்கின்ற தலைவர்.—எ-று. (௧௨௪)

சீல மில்லவர்க் குணரவொண் ணாதசிற் பரனைப்
பால னென்றனை யவனிடத் திற்பல பொருளு
மேலை நாள்வந்து தோன்றிய சிறியதோர் வித்தி
னாலம் யாவையு மொடுங்கியே யவதரித் ததுபோல்,

(இ-ள்.) சிட்டாசாரமில்லாதவர்களால் அறியப்படாத சிற்பரனாகிய குமரக்கடவுளை ஒருபாலனென்றுகூறினாய், சிறிய ஒரு ஆலம்விதையில் விழுதுகளையும் கிளைகளையும் வளார்களையுமுடைய விருக்ஷமான ஆலமரமுழுமையும் தோன்றினாற்போல, அக்குமாரப்பெருமானிடத்தில் முன்னாளில் எல்லாவஸ்துக்களும் உற்பத்தியாயின.—எ-று.

அருவு மாகுவ னுருவமு மாகுவ னருவு
முருவு மில்லதோர் தன்மையு மாகுவ னூழின்
கருமமாகுவ னிமித்தமு மாகுவன் கண்டாய்
பரமனாடலை யாவரோ பகர்ந்திடற் பாலார்.

(இ-ள்.) அருவமாகவுமிருப்பான்; உருவமாகவுமிருப்பான்; அருவமும் உருவமும் அல்லாததாகிய ஒருதன்மையையும் அடைவான்; ஊழின்கர்மமாகவு நிற்பன்; நிமித்தமாகவுமிருப்பான்; பரமேசுவரனது திருவிளையாடலை யாவர்சொல்லவல்லுநர். ()

வேதக் காட்சிக்கு முபநிடத் துச்சியில் விரித்த
போதக் காட்சிக்குங் காணலன் புதியரிற் புதியன்
மூதக் கார்க்குமூ தக்கவன் முடிவிற்கு முடிவா
யாதிக் காதியா யுயிர்க்குயி ராய்நின்ற வமலன்.

(இ-ள்.) வேதப்பிரமாணத்திற்கும் உபநிடதங்களின் தலைகளிலே விரித்துக்கூறப்பட்ட ஞானப்பிரமாணங்கட்கும் அப்பாற்பட்டவன். புதியவர்களாயுள்ளவர்களிலெல்லாம் புதியவன். பழையவர்களாயுள்ளவர்களிலெல்லாம் பழமையாகயுள்ளவன். முடிவிற்கெல்லாம் முடிவாயுள்ளவன். ஆதிக்கெல்லா மாதியாகவுள்ளவன் உயிர்க்குயிராக நின்றுள்ள நிருமலன்.—எ-று (கஉஎ)

ஞானந் தானுரு வாகிய நாயக னியல்பை
யானு நீயுமா யிசைத்துமென் றாலஃ தெளிதோ
மோனந் தீர்கலா முனிவருந் தேற்றிலர் முழுதுந்
தானுங் காண்கில னின்னமுந் தன்பெருந் தலைமை.

(இ-ள்.) ஞானமே வடிவாகவுள்ள நாயகன திலக்கணத்தை நானு நீயுமாகச் சொல்லிக்கொள்வோமென்றால் அது இலேசானதோ? மௌனநிலைமையினின்றும் மாறுபடாத முனிவர்களும் தெளிந்தார்களில்லை. தனது பெரிய தலைமையை முற்றிலுந் தானுங்கண்டானில்லை. (கஉஅ)

தத்த மாற்றங்க ணிறுவிய சமயிகள் பலருங்
கத்து புன்சொலை வினவின ரவன்செயல் காணார்
சுத்த வாதுள முதலிய தந்திரத் தொகுதி
யுய்த்து ணர்ந்திடு நீரரோ யொருசிறி துணர்வார்.

(இ-ள்.) அவரவர்களதுசொற்களை நிலைநாட்டிய பலசமயிகளும், வஸ்து நிச்சயமென்று கதறிய இழிமொழிகளைக் கேட்டவர்கள் அவ்விறைவனது செய்கைகளைக் காணமாட்டார்கள். சுத்தமான வாதுளமுதலிய ஆகமகூட்டங்களை யுய்த்துணர்ந்ததன்மையினையுடையவர்களே கொஞ்சமுணர்வார்கள்.—எ-று. (கஉகூ)

கருவி மெய்ப்புலன் காட்டுவான் காண்பவன் காட்சிப்
பொருளெ னப்படு நான்மையு மைவகைப் பொறியு
மிருதி றத்தியல் வினைகளுங் காலமு மிடனு
மரபின் முற்றுறு பயனுமாய் நின்றனன் வள்ளல்.

(இ-ள்.) கருவியாகிய புலன்களும் காட்டுவானும் காண்பவனும் காட்சிப்பொருளும் என்றுகூறப்படுகிற நால்வகைப் பொருள்களும், ஐம்பொறிகளும் இருவகையாக

விளங்குகின்ற வினைகளும், இடமும் முறைப்படியே முற்றுகின்ற பிரயோஜனமுமாகக் கடவுள் நின்றனர்.—எ-று. (௯௦)

ஞால முள்ளதோர் பரம்பொரு ளுமெனப் புகலு
மாலும் வேதனு மாயையாம் வரம்பினுட் பட்டார்
மூல மாகிய தத்துவ முழுவதுங் கடந்து
மேலு யர்ந்திடு தனிமுத லவனன்றி வேறுர்.

(இ-ள்.) உலகத்திலுள்ளதாக வுணரப்படுகின்ற பிரமம் நாமேயென்று கூறுகின்ற அரியும் அயனும் மாயாவியாபகத்தி னுட்பட்டவர்களே. உலகதோற்றத்திற்கு முதலாகவுள்ள எல்லாத்தத் துவங்களுக்கும் அப்பாற்பட்டு யாவைக்கும் மேலாகவுயர்ந்து நிற்கின்ற ஒப்பற்ற பிரமமாகியபொருள் சிவபெருமானேயன்றி வேறு யாவர்.—எ-று.(௯௧)

தூய பார்முத லாகவே குடிலையின் றுணையு
மேய வண்டமு முயிர்களும் வியன்பொருள் பலவு
மாயு நின்றன னல்லனு மாயின னவன்றன்
மாயையாவரே கடந்தனர் மறைகளு மயங்கும்.

(இ-ள்.) பரிசுத்தமான பிருதிவிதத்துவமுதல் குடிலைவரைக்கும் பொருந்தியுள்ள பலஅண்டங்களும், அவைகளிலுள்ள பலவகையான உயிர்களும், அவ்வுயிர்களுக்கு போககருவிகளான பலவகைப்பொருள்களும் ஆகவும் நின்றனன். அவைகள் அல்லவுமாயினன். அவ்விறைவனது மாயாவல்லபத்தை யாவர்கடந்தவர்கள்? வேதங்களும் மயங்காநிற்கும்.—எ-று (௯௨)

இன்ன தன்மைசேர் முதல்வனைச் சிறுவனென் றிகழ்ந்து
பன்னு கின்றனை யவுணர்தங் கிளையெலாம் படுத்து
நின்னை யுந்தடிந் திடுவனே ரிமைப்பினி னிரப்புந்
தன்ன ருட்டிறங் காட்டுவான் வந்தனன் சமர்மேல்.

(இ-ள்.) இத்தன்மையான முதல்வனைச் சிறுவனென இகழ்ந்துகூறுகின்றனை; அவன் அசுரர்களின் வங்கிசங்களையெல்லாம் கொன்று ஒருக்ஷணப்பொழுதில் நின்னையும் கொல்லுவன். வியாபகமான தனது அருளின்தன்மையைக் காட்டும்வண்ணம் போரைக் குறித்து வந்தனன்.—எ-று. (௯௩)

அற்ற மில்வகை யாயிரத் தெட்டெனு மண்டம்
பெற்ற னம்மென வியந்தனை தத்துவ பேத
முற்று ணர்ந்திலை தரணியோ வளப்பில வுளகாண்
மற்றை யண்டங்கள் கேட்டியேன் மருளுதி மன்னே.

(இ-ள்.) அளவில்லாததாக ஆயிரத்தெட்டென்னுந் தொகையினையுடைய அண்டங்களைப் பெற்றோமென்று ஆச்சரியமடைந்தனை. நீ தத்துவபேதங்களை யுணர்ந்தாயில்லை. பிருதிவியுலகங்களோ அளவில்லாதனவாக விருக்கின்றன. நீ இன்னமுள்ள அண்டங்களைக் கேட்பாயானல் மருட்சிகொள்ளுவை.—எ-று. (௯௪)

குடிலை யீறதா வாரியே முதலதாக் குழுமி
யுடைய வண்டங்க ளலகில வென்பரொன் றொன்றி
னடைத லுற்றிடு புவனத்தின் பெருமையா ரறிந்தார்
முடிவு றுததோர் பொருளினை முடிவுகூ றவற்றே.

(இ-ள்.) சுத்தமாயையே கடைசியாக, அப்புதத்துவமே முதலாகக்கலந்து நிற்கும் அண்டங்கள் கணக்கில்லாதனவென்று கூறுவார்கள். ஒவ்வொரு தத்துவங்களிலும்

பொருந்தியுள்ள புவனங்களின் பெருமைகளை யுணர்ந்தவர்கள் யாவர்? முடிவற்ற ஒரு பொருளினை முடிவுகூறுதற்காகுமோ?—எ-று. (கருரு)

அன்ன வாகிய வண்டங்க ளனந்தகோ டியையுந்
தன்ன தாணையா லோரிமைப் பொழுதினிற் றரவும்
பின்னர் மாற்றவும் வல்லதோ ராதியம் பிரான்கா
ணுன்னொ டேபொரு மாடலாற் செந்திவந் துற்றான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட அநந்தகோடி யண்டங்களையும் தமது கட்டளையினால் ஒரு இமைப்பொழுதில் உண்டாக்கவும் பின்னர் அழிக்கவும் வல்லவனாகிய முழுமுதற் கடவுளே உன்னுடன் போர்செய்யவேண்டுமென்னும் லீலாவபிப்பிராயத்தால் ஜயந்திபுரத்திலெழுந்தருளியிருக்கின்றவர்.—எ-று. (கருசு)

வச்சி ரத்தனி யாக்கைபெற் றனமென மதித்தா
யிச்சி ரத்தையை விடுமதி யிருவினைக் கீடா
வச்செ டுத்திடு முயிர்கண்மாய்ந் திடுமென வறிஞர்
நிச்ச யித்தனர் முடிவுறு திருத்திகொ னீயே.

(இ-ள்.) ஒப்பற்ற வச்சிரகாயத்தைப் பெற்றனமென்று மதித்தனை! இந்த எண்ணத்தைவிடுவாயாக. இருவினைகளுக்கேற்றவண்ணம் உடம்பெடுத்துள்ளவுயிர்கள் அழிந்துபோகுமென விவேகிகள் நிச்சயித்திருக்கின்றார்கள். ஆதலால் நீ மாத்திரம் இறவாமலிருப்பையோ?—எ-று. (கருஎ)

பெருமை பெற்றிடு வானத்தி னிலத்திடைப் பிறந்தோ
ரிருமை பெற்றிடு காயமு மிறந்திடுந் திண்ணம்
பருமி தத்துநின் வச்சிர யாக்கையும் பாரி
னுரிமை பெற்றுள தாதலா னழிவின்றி யுறுமோ.

(இ-ள்.) பெருமைபொருந்திய சுவர்க்கத்திலும் பூமியிலும் பிறந்தவர்களது இரண்டு பகுதியினையுடைய உடல்களும் நிச்சயமாகஅழியும். கௌரவம்பொருந்திய நினது வச்சிரசரீரமும் பிருதிவி சம்பந்தமுடையதாதலால் அழியாதிருக்குமோ?—எ-று. (கருஅ)

அழிவின் மெய்வரம் பெற்றன மென்றனை யதற்கு
மொழித ரும்பொருள் கேண்மதி முச்சகந் தன்னுட்
கெழிய மன்னுயிர் போற்சில வைகலிற் கெடாது
கழிபெ ரும்பக லிருந்திடும் பான்மையே கண்டாய்.

(இ-ள்.) அழிவற்ற சரீரத்தினையுடையவனாக விருக்க வரம்பெற்றோமென்று கூறினை. அழிவற்ற சரீரமென்பதற்குச் சொல்லாநின்ற பொருளைக்கேட்பாயாக. மூவகையுலகங்களிலும் பொருந்தியுள்ள நிலைபெற்ற வுயிர்களைப்போல சிலதினங்களிற் கெடாமல் அநேககாலம் இருந்திடும் தன்மையென்றுணர்வாய்.—எ-று. (கருகூ)

அச்சு தன்னய னமரரா கியபெய ரவர்க்கு
நிச்ச யம்படு முகமனே யானபோ னினது
வச்சி ரத்தனி யாக்கையு மழிவிலா வரமு
முச்ச கந்தொழப் பல்லுக மிருத்தலாய் முடியும்.

(இ-ள்.) அச்சுதன், அயன், அமரர்முதலிய பெயர்கள் அப்பெயரினையுடையவர்களுக்கு உண்மையான உபசாரமேயானாற்போல, நினது ஒப்பற்ற வச்சிரசரீரமும் அழிவற்றவரமும் மூன்றுலோகங்களும் வணங்கும்வண்ணம் அநேகயுகங்கள் ஜீவித்திருத்தலாகவே முடியும்.—எ-று. (கசுய)

வான்செய் தேவரை நீயலைக் கின்றதை மதியா
வூன்செய் கின்றபல் லுயிருக்கு முயிரதா மொருவன்
றுன்செய் கின்றதொல் வரத்தினைத் தான்றவிர்த் திடுமே
லேன்செய் தாயென வினவியே நிறுவுவா ரெவரே.

(இ-ள்.) சுவர்க்கத்திலுண்டான தேவர்களை நீ துன்பப்படுத்துவதை மதித்து, மாமிசமயமான சரீரத்தோடுங்கூடிய பலவகையுயிராகவுள்ள ஏகனாகிய கடவுள், தானே யுனக்களித்த வரத்தினை நீக்கிவிடுவாரானால் ஏன் அவ்வாறுசெய்தனையென்று கேட்டு நின்னைப் பழையபடியே யிருக்கச்செய்பவர் யாவர்?—எ-று. (௧௪௧)

கெடுத லில்லதோர் வளனொடு நீயுநின் கிளையும்
படுத லின்றியே வாழ்தியென் றின்னன பகர்ந்தே
னிடுதல் கொண்டிடு சிறையிடைத் தேவரை யின்னே
விடுதல் செய்குதி யென்றன னறிஞரின் மிக்கான்.

(இ-ள்.) கெடுதலற்ற வளப்பங்களுடன் நீயும் நினது சுற்றத்தினர்களும் மரண மடையாமல் சீவித்திருப்பாயென்று இவைகளைக்கூறினேன். தேவர்களை யிட்டிருக்கின்ற சிறையினின்றும் இப்பொழுதே விட்டுவிடக்கடவையென்று அறிவுடையோர்களில் சிறந்த சிங்காமுகாசுரன் கூறினான்.—எ-று. (௧௪௨)

இன்ன பான்மையான் மடங்கலம் பெருமுகத் திளவல்
சொன்ன வாசகம் வினவியே மணிமுடி துளக்கிக்
கன்ன மூடுசெங் கனல்செறித் தாலெனக் கனன்று
முன்னை யாகியோன் பின்னருஞ் சிற்சில மொழிவான்.

(இ-ள்.) இவ்வண்ணமாக பெரியசிங்கமுகத்தினையுடைய தம்பியானவன் சொல்லிய வசனங்களைக் கேட்டு மணிமயமான மகுடத்தையசைத்து காதின்வழி செவ்விய நெருப்பைச் செருகினாற்போலக் கோபித்து மூத்தவனாகிய சூரபன்மன் பின்னும் சில சில வசனங்களைக் கூறுகின்றனன்.—எ-று. (௧௪௩)

காற்றிற் றள்ளுண்டு நெருப்பினிற் சூடுண்டு கங்கை
யாற்றிற் றாக்குண்டு சரவணம் புக்கலை யுண்டு
வேற்றுப் பேர்முலை யுண்டழு தேவிளை யாடு
நேற்றைப் பாலனை யோபரம் பொருளென நினைந்தாய்.

(இ-ள்.) காற்றினாலலைப்புண்டு, நெருப்பினாற் சூடுண்டு, கங்கையாற்றினாலிடியுண்டு, சரவணப்பொய்கையிற் புகுந்தலைப்புண்டு, வேற்றுமாதர்களின் முலைப்பாலுண்டு அழுதுகொண்டு விளையாடுகின்ற நேற்றுப்பிறந்த சிறுவனையோ பரம்பொருளென்று நினைந்தனை?—எ-று. (௧௪௪)

பிரம மாகிய வொருபொரு ளுயிரெனப் பேர்பெற்
றுருவ மெண்ணில கொண்டுதன் மாயையா லுலப்பில்
கரும பேதங்க ளாற்றிடும் பல்புனற் கடத்து
ளிரவி தன்னுருத் தனித்தனி காட்டிய வியல்பின்.

(இ-ள்.) நீரோடுகூடிய பலபாண்டங்களுட் சூரியன் தனதுருவத்தை வேறே வேறே காட்டுந்தன்மையைப்போல, பிரமமென்று சொல்லப்படுகின்ற ஒப்பற்ற வஸ்துவானது ஜீவனென்று பெயரடைந்து அநேக வுருவங்களைத் தாங்கி மாயையினால் கெடாத கருமபேதங்களைச் செய்யும்.—எ-று. (௧௪௫)

கடந்த கர்ந்துழி யவற்றிடை வெளிகக னத்தோ
டடைந்த வாறுபோல் யாக்கையின் பேதக மனைத்து

முடிந்த காலையிற் றென்மைபோ லபேதமா மொழிக்குந்
தொடர்ந்த சிந்தைக்கு நாடொணு தமர்பெருஞ் சோதி.

(இ-ள்.) குடமுடைந்தவுடனே அக்குடங்களி னடுவிலிருந்த வெளியானது ஆகாயத்தோடு கலந்து நின்றதன்மையைப்போல, உடலின் பேதங்களெல்லாம் முடிந்த காலத்தில் பழையபடியே வாக்கினாலும் மனத்தினாலும் தொடரக்கூடாத சோதியானது அபேதமாகும்.—எ-று. (கசசு)

பிரம மேயிவ ரல்லவ ரிவரெனப் பேதித்
திருமை யாகவே கொள்ளலை யாக்கையே வேறு
பரம மாகிய வுயிரெலா மொன்றுபல் பணியும்
பொருள தாகியே யொருமையாய் முடிந்தவா போல.

(இ-ள்.) இவர்கள் பிரமமானவர்களென்றும் இவர்கள் பிரமமாகாதவர்களென்றும் இரண்டுபக்ஷமாய்க் கொள்ளாதே. சரீரந்தான் வேறாகவுள்ளது. பலவகையாபரணங்களும் பொன்னாய் ஒன்றாய் முடிந்தாற்போல, பிரமமாகிய உயிரெல்லாம் ஒன்றே.

விறலும் வன்மையு மில்லவர் தாழ்வர்மே தக்க
நெறிய ரோங்குவ ரீதுல கத்திடை நிகழ்ச்சி
யிறுதி யில்லதோர் பெரியன்யா னறுமுக னென்போன்
சிறிய னாதலி னவனையான் வெல்குவன் றிண்ணம்.

(இ-ள்.) வெற்றியும் வல்லபமும் இல்லாதவர்கள் தாழ்வடைவார்கள்; உயர்ந்த வெற்றியினையும் வல்லபத்தினையுமுடையவர்கள் உயர்வார்கள்; இது உலகத்தில் நிகழும் நிகழ்ச்சி. ஆதலால் நான் அழிவில்லாத பெரியவன். சண்முகனென்று சொல்லப்படுபவன் சிறியவன். இதனால் நான் அவனைவெல்லுதல் நிச்சயம்.—எ-று. (கசஅ)

தொகைமை சான்றநங் குரவர்பல் லோருயிர் தொலைத்த
பகைஞ ராதலி னமரரைச் சிறையிடைப் படுத்தேன்
மிகைசெய் தார்களை நாடியே வேந்தொறுத் திடுத
றகைமை யேயென மனுமுறை நூல்களுஞ் சாற்றும்.

(இ-ள்.) மிகுந்த கூட்டமாக வுள்ள நமது முன்னோர்களிற் பலர் உயிரைவாங்கிய பகைவர்களாதலால் தேவர்களைச்சிறையிலடைத்தேன். விரோதம் செய்தவர்களைத் தேடிப்பிடித்துத் தண்டித்தல் முறைமையானதென்று மனுதருமமுதலிய சாத்திரங்களும் கூறுநிற்கும்.—எ-று. (கசக)

மாக ராயுளோர் காப்பினை விடுகிலன் மற்றைப்
பாக சாதனன் றன்னையு மருஞ்சிறைப் படுப்ப
னேக நாயக னெய்தினு மெதிர்ந்துபோர் புரிவ
னாகை யாலினி யிச்சிறு மொழிகளை யயர்த்தி.

(இ-ள்.) தேவர்களாகவுள்ளவர்களது சிறையை விடமாட்டேன். இத்தேவர்களன்றியுள்ள இந்திரனையும் (பிடித்து) அரியசிறையிலடைப்பேன். சிவபெருமான்வந்தாலும் எதிர்த்துப்போர்செய்வேன். ஆதலினாலே இனி இவ்வாறு கூறுகின்ற சிறியமொழிகளை மறந்துவிடு.—எ-று. (கருO)

உரைப்ப தென்னினி யொருவயிற் றென்னுட னுதித்துப்
பெருக்க முற்றனை நங்குலப் பகைஞரைப் பெரிது
நெருக்க லின்றியே யவர்கள்பாற் பட்டனை நீயே
யிருக்க மற்றொரு தெவ்வரும் வேண்டுமோ வெனக்கே.

(இ-ள்.) இனிச் சொல்லவேண்டுவதென்ன? என்னுடன் சகோதரனுகப்பிறந்து சிறப்படைந்தனை. நமது குலத்துக்குப் பகைவர்களாக வுள்ளவர்களை மிகவும் வருத்துதலைச் செய்யாமல் அச்சத்துருக்களின் வசமாக நிற்கின்றவனுக நீயே இருக்க,இன்னொரு பகைவரும் எனக்கு வேண்டுமோ?—எ-று. (கருக)

பத்துக் கொண்டநூ றுடையதோர் சென்னியும் பலவாங்
கொத்துக் கொண்டமர் தோள்களுங் கரங்களின் குழுவு
மெத்துக் காற்றினை வன்மையும் வீரமு மிழந்தாய்
பித்துக் கொண்டவர் தம்மினும் பேதைமை பிடித்தாய்.

(இ-ள்.) ஆயிரமானதலைகளும் அநேகமான கொத்தாகப்பொருந்தி யிருக்கிற தோள்களும் கைகளின் கூட்டங்களும் எதற்காகச் சுமந்தனை? வீரத்தையும் வன்மையையும் இழந்தனை. பயித்தியம் பிடித்தவர்களைவிட அறியாமையையடைந்தாய்.—எ-று.

வேறு.

தானவர் வழிமுறை தன்னை விட்டனை
வானவர் போன்றனை வன்மை சிந்தினை
மேனிகழ் திட்பமும் விறலு மாண்டனை
மோனமொ டருந்தவ முயலப் போதிநீ.

(இ-ள்.) தநுவமிசத்தவர்களின் முறைமைகளை விட்டுவிட்டனை; தேவர்களைப் போல வாயினை; வன்மையை யிழந்தனை; மேலேநடக்கவேண்டிய தைரியமும் வெற்றியும் ஒழிந்தவனுனுய்; நீ இனிச்சென்று மௌனமாக அரியதவத்தைச் செய்வாயாக.

மறந்தனை யிழந்தனை மான நீங்கினை
சிறந்திடு மவுணர்தஞ் சீர்த்தி மாற்றிடப்
பிறந்தனை யீண்டொரு பயனும் பெற்றிலை
யிறந்தனை போலுநீ யிருந்து ள்ாய்கொலோ.

(இ-ள்.) நீ வீரத்தையிழந்தாய்; மானத்தைவிட்டனை; சிறப்புப்பொருந்திய அசுரர்களுடைய கீர்த்தியை அழிக்கும்பொருட்டுப் பிறந்து இவ்விடத்திலொருபிரயோசனமு மடைந்தாயில்லை. நீ இறந்துபோனவனே: இருப்பாருடன் சேர்ந்தவனு?—எ-று.

மந்திரி யாதியான் மற்றி தற்குநீ
சிந்தையில் வெருக்கொளிற் றிசைமு கத்தர்போ
லேந்திய லங்கமொன் றங்கை பற்றுதி
வெந்திற லேயெனப் படையும் வீசியே.

(இ-ள்.) மந்திரத்தன்மையினையுடைய இந்தவிஷயத்திற்காக மனத்திலே பயமடைவாயானுல், வெவ்விய வெற்றியும் எதற்கென்று உனதாயுதங்களை எறிந்துவிட்டு, பிரமனைப்போல பஞ்சாங்கமொன்றைக் கையிலெடுத்துக்கொள்.—எ-று. (கருரு)

கிளைத்திடு கள்ளியின் கிளைக ளாமென
வளர்த்தனை பலதலை வரம்பில் கைத்தல
நெளித்தனை சுமந்தனை நெடிது காலமா
விளைத்தனை வலியிலா யாது செய்திநீ.

(இ-ள்.) கிளைக்கப்பட்ட கள்ளிகளின் கிளைகளைப்போல பலதலைகளை வளர்த்தனை; அளவில்லாத கைத்தலங்களை நெளித்துக்கொண்டு சுமந்து அநேககாலமாக இளைத்தனை; ஓ வலியற்றவனே! நீ என்னசெய்கின்றனை?—எ-று. (கருசு)

பண்டுணர் வில்லதோர் பருவ மாதலிற்
சண்டனை வருணனைத் தளையி னிட்டனை
யண்டரை யலைத்தனை யறிவு கூடலிற்
பெண்டிரி னடுங்கினை பேடி போலுநீ.

(இ-ள்.) முன்னாளில் விவேகமில்லாத பருவத்தோடுகூடிய காலமாதலால், எமனையும் வருணனையும் விலங்கிலிட்டனை; தேவர்களையும் வருத்தினாய். இப்பொழுது விவேகம் உண்டானமையால் நடுங்கினாய். நீ என்ன பேடியோ?—எ-று. (கருஎ)

பன்னெடுந் தலையுடைப் பால னுருமுன்
வன்மையு மாடலும் வந்து பார்த்திட
வின்னமும் வந்திலள் வருந்தி யீன்றதா
யன்னை தன் குறைகொலோ வருவ மானதே.

(இ-ள்.) பல நெடியதலைகளையுடைய பிள்ளையாகிய உனது வல்லபத்தையும், வெற்றியையும், வந்து பார்த்திட இன்னமும் வந்தாளில்லை. உன்னை வருந்திப்பெற்றவளான மாதாவின்குறைதானோ அவள் காணுமற்போனது?—எ-று. (கருஅ)

பகையென வொன்றுறிற் பதைபதைத் தெழீஇச்
சிகையுடை வாலுளைச் சீயஞ் சீறியே
தகுவிறல் கொள்ளுமா லவற்றின் றன்மையாய்
மிகுதலை பெற்றதும் வீண்கொ லெம்பிநீ.

(இ-ள்.) விரோதமானதாக ஏதாவதொன்று எதிரேவந்தால் பதைபதைத்துக் கொண்டெழுந்து சிகையாகவுள்ள புறரோமத்தோடுகூடிய சிங்கமானது கோபித்துத் தக்க வெற்றியையடையும்; அச்சிங்கங்களின்தன்மையாய் என்றம்பியே! நீ மிகுதியான தலைகளைப் பெற்றதும் வீண்தானோ?—எ-று. (கருகூ)

பூதரைத் தலைவரைப் புராரி மைந்தனை
யேதிலர் யாரையும் யான்வென் றேகுவ
னீதளர் வெய்திட னினது மாநகர்
போதுதி யென்றனன் புலனில் புந்தியான்.

(இ-ள்.) பூதர்களையும் அவர்கள் தலைவர்களையும் புராரிபுத்திரனாகிய குமரன் முதலிய பகைவர்களையும் எல்லாம் நான் வென்று திரும்பி வருவேன். நீ வருந்தாதே. நினதுபெரிய ஊருக்குப் போகக்கடவை என்று கூறினான்; அறிவற்ற புத்தியினையுடைய சூரபன்மன்.—எ-று. (கசு0)

என்றிவை யவுணர்கோ னிசைத்த காலையி
னன்றிவ னுணர்வென நகைத்துக் கண்டொறுந்
துன்றிய பேரழல் சொரிய வெஞ்சினத்
தொன்றிய தன்னுளத் தினைய வுன்னுவான்.

(இ-ள்.) எனவிவைகளை அசுரமன்னவனான சூரபன்மன் கூறியவுடனே, சிங்கமுகன் இவன்புத்தி நன்றாக விருக்கின்றதென்றெண்ணிச்சிரித்து, கண்களில் நின்றும் நெருங்கிய பெரிய அக்கினிப்பொறிகள் சிதற பெருங்கோபத்திற்பொருந்திய தனது மனதிலிவைகளை நினைக்கின்றான்.—எ-று. (கசுக)

உறுதியை யுணர்த்தினு னுணர்வி லாதவன்
வறிதெனை யிகழ்ந்தனன் வருவ தோர்கில
னிறும்வகை நாடினன் யாதொர் புந்தியை
யறிவிலர்க் குரைப்பவ ரவரிற் பேதையோர்.

(இ-ள்.) உறுதியான வசனங்களை நான் சொன்னேன்; விவேகமில்லாதவிவன் வீணே என்னை இகழ்ந்தனன்; மேல்வருங்காரியத்தை எண்ணினானில்லை; தான்சாகத்தக்கபுத்தியையே நினைக்கின்றான்; எந்த புத்தியையானாலும்மூடர்களுக்குக் கூறுமவர்கள் அவர்களைவிட மூடர்களே.—எ-று. (கசஉ)

உப்த்தனர் தேன்மழை யுதவிப் போற்றினுங்
கைத்திட றவிருமோ காஞ்சி ரங்கனி
யத்தக வல்லவோ வறிவி லாதவன்
சித்தம துணர்வகை தெருட்டு கின்றதே.

(இ-ள்.) தேன்மழையை யழைப்பித்துப் பெய்வித்து வளர்த்தாலும் எட்டிப் பழம் கசக்காதிருக்குமோ? அவ்வண்ணமல்லவா அவிவேகியின் மனம் தெளிவடையுமாறு நியாயங்களை எடுத்துக்கூறி அவனைத் தெளியுமாறு செய்தல்.—எ-று. (கசங)

தொலைக்கருந் திருவுடைச் சூரன் புந்தியைக்
கலக்கினு முய்வகை கருது கின்றில
னலக்கணுற் றிருந்துநா மிரங்கி யாவதென்
விலக்கரும் விதியையாம் வெல்ல வல்லமோ.

(இ-ள்.) பிறரால் நீக்குதற்கு முடியாத செல்வத்தினையுடைய சூரபன்மனுடைய புத்தியைக் கலக்கினாலும் அவன் உய்யுந்திறத்தை எண்ணுகின்றிலன்; துன்பம் கொண்டு நாமிருந்து அழுதாகவேண்டுவதென்ன? நீக்குதற்கருமையான விதியை நாம் வெல்லுதற்கு வல்லபமுள்ளவர்களோ?.—எ-று. (கசச)

ஆவது விதியெனி னனைத்து மாயிடும்
போவது விதியெனி னெவையும் போகுமாற்
றேவருக் காயினுந் தீர்க்கத் தக்கதோ
மேவரு மறியொணு வீசற் கல்லதே.

(இ-ள்.) ஒருவனுக்கு உண்டாவது ஆகூழாக விருந்தால் உடனே எல்லாம் உண்டாகும்; போகூழானால் எப்படிப்பட்டவைகளும் போய்விடும். ஊழை யாவராலும் உணர்தற்குக்கூடாத இறைவனாலன்றி தேவர்களாலும் தீர்க்கமுடியுமோ?—எ-று. ()

நீண்டசெஞ் சடைமுடி நிமல னீந்தநாண்
மாண்டது மாய்ந்திடு மெல்லை வந்ததா
லீண்டுளார் யாவரு மிறையுந் துஞ்சுமாற்
பூண்டிடு மமரர்கோன் றவமும் பொய்க்குமோ.

(இ-ள்.) நீளமான சிவந்த சடைமுடியினையுடைய நிருமலரான கடவுளளித்த காலம் ஆய்விட்டது. அதனால் சாநாள் முடுகிவிட்டது. இனி இவ்விடத்தில் உள்ள அனைவர்களும் இறைவனும் இறந்து படுவார்கள். இந்திரன்செய்த தவம் பொய்யாகுமோ?—எ-று. (கசுசு)

இறப்பது சரதமே யிறைவ னென்னுரை
வெறுத்தன னிகழுமேல் வேண்டி யின்னும்யான்
மறுத்தெதிர் மொழியலன் மன்ன வென்பிழை
பொறுத்தியென் றின்னுரை புகல்வ தல்லதே.

(இ-ள்.) இவ்வரசன் இறப்பது நிச்சயமானால்தான் எனதுவசனத்தை விரும்பாமல் இகழுவான். அதனால் மன்னவனே நீ எனதுகுற்றத்தைப் பொறுத்துக்கொள் என்று இனியவசனத்தைக் கூறுவதையன்றி இன்னம் வேண்டி வேண்டி நான் இனிய வசனங்களை (அவன் வசனத்தைத்தடுத்து எதிர்மொழி)கூறமாட்டேன்.—எ-று. (கசுஎ)

மன்னவர் மன்னவன் வள்ளல் வேலினு
லின்னினி யிறந்திடு மிதுவு நோக்கியே
பின்னுமிங் கிருந்திடல் பிழைய தாகுமான்
முன்னுற முடிவதே முறைய தாமெனு.

(இ-ள்.) அரசர்க்கரசன், குமாரக்கடவுளின் வேலாயுதத்தினுல் இனிமேலிறந்து போவான்; இவனிறந்ததனையும் பார்த்துப் பின்னும் இவ்விடத்திலே வாழுதல் குற்றமாம்; முன்னே சாவதே முறைமையாகும்.—எ-று. (கசுஅ)

சிந்தனை செய்திடு சிங்க மாமுகன்
றந்தையை நிகர்வரு தம்முன் முடொழா
வந்தனை செய்தனன் மன்ன சீறிடேல்
புந்தியி லேன்பிழை பொறுத்தல் வேண்டுமால்.

(இ-ள்.) இவ்வாறுநினைத்த சிங்கமுகாசுரன் பிதாவையொத்த தமது தமயனது பாதங்களைவணங்கி வந்தனஞ்செய்து, மன்னவனே! கோபித்துக்கொள்ளாதே புத்தியற்ற வெனது பிழையைப் பொறுத்தல்வேண்டும்.—எ-று. (கசுகு)

சிறியவ ரொருபிழை செய்யின் மேலவர்
பொறையொடு பின்னரும் போற்ற லல்லதை
யிறையதும் வெகுள்வரோ யானுஞ் செய்பிழை
யறிவனீ யன்றியே யார தாற்றுவார்.

(இ-ள்.) சிறியவர்களாகவுள்ளவர்கள் ஒரு குற்றஞ்செய்தால், பெரியவர்களாகவுள்ளவர்கள் பொறுமையுடனே பின்னும் சகித்தலன்றி கொஞ்சமாவது கோபித்துக்கொள்ளுவார்களோ? ஆதலால் நான்செய்த பிழையை விவேகியான நீ யல்லாமல் வேறேயார் அதை சகிப்பார்கள்.—எ-று. (களo)

பொறுத்தனை கோடியென் புன்மை யுள்ளமேற்
செறுத்தெனை யிகழ்ந்திடல் செருவிற் சென்றியான்
மறுத்தெதிர் மலைந்திடு மாற்ற லார்தமை
யொறுத்திடு கின்றன னதனை யோர்திநீ.

(இ-ள்.) என் இழிந்த தன்மையை பொறுத்துக்கொள்ளக்கடவை; மனத்தில் வெறுத்து என்னை இகழ்ந்துவிடாதே; யான் போர்முகத்தில்சென்று பகைத்தெதிரே நின்று போர்செய்கின்ற பகைவர்களை தண்டிக்கின்றேன் நீயதனை யுணரக்கடவை.

செருவினுக் கேகுவன் செறுநர் தம்மிசைத்
தருதியால் விடையெனத் தம்பி கேட்டலும்
பெரிதுள மகிழ்ந்தனன் பிறங்கு காதலால்
வருதியென் றனையனை மார்பிற் புல்லினன்.

(இ-ள்.) நான் பகைவர்கள்மீது போருக்குச்செல்லுகின்றேன், எனக்கு உத்தரவளி என்று தம்பியான சிங்கமுகாசுரன் கேட்டவுடனே, மிகவும் மனமகிழ்ந்தவனுய் மிகுந்தவாசையினுல் வருவாயாகவென்று அவனை மார்பிலணைத்துக்கொண்டனன்.

பையர வளித்திடும் பாத லத்தினில்
வையக வரைப்பினிற் றிசையின் வான்களிற்
செய்யவண் டங்களிற் செய்யும் வென்றியு
ளையநிற் கேதுகொ லரிய தானதே.

(இ-ள்.) விடப்பையோடுகூடிய நாகராஜனால் ஆளப்படுகிற பாதாளத்திலும் பூமியினிடத்திலும் திக்குகளிலும் சுவர்க்காதிமேலுலகங்களிலும் செவ்விய அண்டங்களிலும் ஐயனே! நினக்கு அருமையானது என்னவிருக்கின்றது.—எ-று. (௧௭௩)

நீக்கமில் கேள்வியாய் நீமுன் சொற்றன
தூக்குறி னென்மனத் துணிவுந் திட்பமு
மூக்கமு முணரவே யொன்ன லாரெனு
மாக்களை யடுவதோர் மடங்க லல்லையோ.

(இ-ள்.) விடாத கேள்விகளையுடையாய்! உன்னால் முன்னே சொல்லப்பட்டவை ஆலோசிக்குங்கால் என்னுடையமனத்தின் துணிவையும் தைரியத்தையும் ஊக்கத்தையும் அறிந்துகொள்ளும்பொருட்டேயன்றி வேறில்லை. நீ சத்துருக்களென்னும் யானைகளைக் கொல்லுகின்ற ஒப்பற்ற சிங்கமல்லவோ?—எ-று. (௧௭௪)

சென்றனர் மாற்றல ரென்கை தேர்தியேற்
கொன்றபி னல்லது கும்பிட் டோடிட
வென்றபி னல்லது வெகுளி தீர்தியோ
வுன்றன தாற்றலை யுணர்கி லேன்கொலோ.

(இ-ள்.) சத்துருக்கள் வந்தார்களென்று கேள்விப்பட்டால் அவர்களைக் கொன்றபின் அல்லது, அவர்கள் கும்பிட்டோடிப்போகும்வண்ணம் வென்றபின்னரல்லாமல் கோபசாந்தமடைவையோ உனது சாமர்த்தியத்தை நானறியமாட்டேனோ?—எ-று.

இற்றைநா ணின்னக ரேகி யாயிடை
யுற்றிடு படையெலா மொருங்கு கொண்டுநீ
கொற்றமோ டிருக்குதி குமர னீண்டுறின்
மற்றுனை விளிக்குவன் வருதி யாலென்றான்.

(இ-ள்.) இன்று நீ உன்னூருக்குச்சென்று அவ்விடத்திலுள்ள சேனைகளை எல்லாம் ஒன்றாகத்திரட்டிவைத்துக்கொண்டு வெற்றியுடனிருக்கக்கடவை. சிவகுமாரன் இங்குவந்தாலுன்னை அழைக்கின்றேன்; அப்பொழுது வருதியென்றுகூறினான்.—எ-று.

ஒல்லென முருகவே ளுனது மாநகர்
செல்லினு மேகலை செருவுக் கன்னது
சொல்லினை விடுத்தியோர் தூதன் றன்னையான்
வல்லையி னமர்செய வருகின்றே னென்றான்.

(இ-ள்.) விரைவாக குமாரவேள் உன்னூருக்குவந்தாலும், நீபோருக்குப் போகாதே. அந்தவிஷயத்தைகூறி யொருதூதனை அனுப்பிவை. நான் விரைவாகப் போர்புரியும்பொருட்டு வருகின்றேன் என்று சிங்கமுகாசுரன் கூறினான்.—எ-று. (௧௭௭)

என்றலு மவுணருக் கிறைவ னீங்கிது
நன்றென விடையது நல்கத் தாழ்ந்துபோய்த்
தன்றிரு மாநகர் சார்ந்து வைகினான்
வன்றிற லுடையதோர் மடங்கற் பேரினான்.

(இ-ள்.) இவ்வண்ணஞ் சிங்கமுகன் கூறியவுடனே அசுரமன்னவனாகிய சூரபன்மன் இதுநல்லதுதானென்று உத்தரவளிக்க, வணங்கிச்சென்று தனதழகிய நகரத்தையடைந்து மிக்க சாமர்த்தியத்தினையுடைய சிங்கமுகாசுரன் இருந்தனன்.—எ-று.

ஆனதோர் பொழுதினி லரச னுண்டுறை
தானையர் தலைவரைத் தனயர் தங்களை

யேனையர் யாரையு மேகச் செய்துதன்
மாநக ரிந்திர வளத்தின் வைகினன்.

(இ-ள்.) அப்பொழுது சூரபன்மன் அச்சபையிலிருந்த சேனுதிபர்களையும் புத்திரர்களையும் மற்றுள்ளவர்களையும் எல்லாம் போகும்வண்ணஞ்செய்து, இந்திரசெல்வத்தினையுடைய தனதுபெரிய நகரத்தில் வாழ்ந்துகொண்டிருந்தனன்.—எ-று. (கஎக)

அந்தமில் வளனுடை யவுணர் காவலன்
மந்திர மிருந்தது வகுத்துக் கூறினு
மிந்திரன் முதலினோர் யாரு மேத்திடச்
செந்தியி னமர்ந்தவன் செய்கை செப்புவாம்.

(இ-ள்.) அளவில்லாத செல்வத்தினையுடைய அசுரராசனுகிய சூரபன்மன் மந்திராலோசனைசெய்ததை வகுத்துரைத்தேம்; இனி இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் வணங்க திருச்செந்தூரிலெழுந்தருளியிருக்கின்ற குமரக்கடவுளின் தன்மைகளைக் கூறுகின்றேம்.—எ-று. (கஅ௦)

சூரனமைச்சியற்படல முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்-ககஎஅ.

---

மகேந்திரகாண்டம்
முற்றுப்பெற்றது.
ஆக காண்டம் மூன்றுக்கு திருவிருத்தம் - சஅக௦.

---

கச்சியப்பசிவாசாரியர் திருவடிவாழ்க.

உ

முருகன்றுணை.

திருச்சிற்றம்பலம்.

நான்காவது,

# யுத்தகாண்டம்.

## ஏமகூடப்படலம்.

நாரண னென்னுந் தேவு நான்முகத் தவனு முக்கட்
பூரணன் றானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி
யாரண முடிவுந் தேறு வநாதியா யுயிர்கட் கெல்லாங்
காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்.

(இ-ள்.) நாராயணனென்று கூறப்படுகிறதேவனும், நாலுமுகங்களையுடையவனாகிய பிரமனும், மூன்றுகண்களையுடைய உருத்திரனுமாகி உலகத்தை ஆக்கிக்காத்தழித்து, வேதாந்தத்தாலும் அறியப்படாத அநாதியாய் உயிர்களுக்கெல்லாம் காரணனாகவிருக்கின்ற பரமேசுவரனுடைய உபயபாதங்களை மனத்திலமைத்துக்கொள்ளுவாம்.

திண்ணிய வவுணர் தம்மைச் செற்றிட வின்னே செவ்வேற்
பண்ணவ னேகு மெல்லா வமரரும் பாங்கிற் செல்வர்
துண்ணென யானு மேகா தொழிவது சூழ்வன் றென்னா
வெண்ணிவந் திடுவான் போல விரவிவந் துதயஞ் செய்தான்.

(இ-ள்.) அழுத்தமான சரீரத்தினையுடைய அசுரர்களைக் கொல்லும்பொருட்டு இப்பொழுதே செவ்விய வேற்படையினையுடைய குமரக்கடவுளெழுந்தருளுவர். அப்பொழுது தேவர்களாக உள்ளவர்களெல்லாம் அவருகிற்கூடச் செல்லுவார்கள். நானுந் திடீரென்று போகாதிருப்பது ஆலோசனையான காரியமல்லவென்று நினைத்துக்கொண்டு வந்தாற்போல சூரியன் உதயமாயினன்.—எ-று. (உ)

இரவிவந் துதய வெற்பி னெய்திய காலை தன்னி
னரியணை மிசையே வைகு மறுமுகங் கொண்ட வண்ணல்
பிரமன்மான் மகவான் றேவர் முனிவரர் பிறருங் கேட்ப
வரமிகு சிறப்பின் வீர வாகுவை நோக்கிச் சொல்வான்.

(இ-ள்.) சூரியன் உதயகிரியி னுதயமானவுடனே, சிங்காதனத்திலெழுந்தருளியிருந்த சண்முகங்களையுடைய கடவுள், பிரமன்-திருமால்-இந்திரன்-தேவர்கள்-முனிசிரேட்டர்கள் முதலானவர்களுக்கும் மற்றையர்களுக்கும் கேட்கும்வண்ணம் வரத்தின் மிக்க சிறப்பினையுடைய வீரவாகுதேவனைப்பார்த்துக் கூறுகின்றனர்.—எ-று. (௩)

பாவமே பயிலுஞ் சூர பன்மனு மவுண ரானோ
ரேவரு முடிவா ராக விமையவ ரிடும்பை நீங்க
மாவியல் கின்ற வீர மகேந்திர புரத்துக் கின்னே
போவது புரிது நந்தேர் பொள்ளெனக் கொணர்தி யென்றான்.

(இ-ள்.) (வீரவாகுவே)! பாவத்தொழிலிலேயே பழகுகின்ற சூரபன்மனும், அவனைச்சேர்ந்த எல்லாவசுரர்களும் இறந்து படும்வண்ணமும் தேவர்கள் இப்போழ்து அநுபவிக்கின்ற துன்பநீங்கவும், திருமகள்வாசம்பொருந்திய வீரமகேந்திரபுரத்துக்கு இன்றே போதலைச்செய்வோம். (ஆதலால் நீ) நம்முடைய இரதத்தை விரைவாகக்கொண்டுவரக்கடவை என்று திருவாய் மலர்ந்தருளினர்.—எ-று. (ச)

வள்ளன்மற் றிதனைச் செப்ப மாலயன் மகவா னாதி
யுள்ளபண் ணவர்கள் கேளா வுவகையங் கடலின் மூழ்கித்
தெள்ளிதி னெமது துன்பந் தீர்ந்தது தீர்ந்த தென்னாத்
துள்ளின ராடிப் பாடி யவனடி சூட லுற்றார்.

(இ-ள்.) வள்ளலாகிய குமரக்கடவுள் இவ்வண்ணந் திருவாய்மலர்ந்தருளுதலும், அம்மொழிகளைத் திருமால்-பிரமன்-இந்திரன்முதலிய தேவர்கள் கேட்டு சந்தோசாகரத்தின் மூழ்கினவர்களாய் நன்றாக எங்களுடைய துன்பம் ஒழிந்தது ஒழிந்தது என்று குதித்துக்கூத்தாடி அக்கடவுளின் திருவடிகளைத் தலையின்மீது தாங்கினார்கள்.

ஆயது காலை தன்னி னரும்பெருங் கயிலை போற்று
நாயக நந்தி யண்ண னற்கணத் தலைமை பூண்டோன்
சேயதோர் மனவே கப்பொற் றேரொடு வலவன் றன்னைக்
கூயினன் கொண்டு வல்லே குமரவேண் முன்ன ருய்த்தான்.

(இ-ள்.) அப்பொழுது அருமையும் பெருமையும் பொருந்திய திருக்கைலைமலையைக்காக்கின்ற தலைவராகிய திருநந்திதேவருடைய நல்ல கணபதித்தன்மையைப் பெற்றுள்ள வீரவாகுதேவர் செவ்விய ஒப்பற்ற மனோவேகமென்று பேருள்ள பிரகாசிக்கின்ற இரதத்துடன் சாரதியையும் அழைத்து விரைவாகக் கொண்டுவந்து குமாரசுவாமியின் சந்நிதானத்தில் நிறுத்தினர்.—எ-று. (சு)

முன்னுற மருத்தன் றூண்டு முரண்டகு தடந்தேர் நண்ண
வன்னதை யருளி னோக்கி யறுமுகம் படைத்த வண்ணல்
பன்னெடுஞ் சீயந் தாங்கும் பைம்பொனின் றவிசு தன்னின்
மன்னின னிருத்த னீங்கி யெழுந்தனன் மறைகள் போற்ற.

(இ-ள்.) முன்னே இருந்துகொண்டு வாயுதேவனால் ஒட்டப்படுகிற வலிமையும் தகுதியும் உள்ள விசாலமான இரதம்வந்து நிற்கவும், ஆறுதிருமுகங்களையுடைய கடவுள் திருவருளுடனே அத்தேரைப்பார்த்து, பலநெடிய சிங்கங்களாலே சுமக்கப்படுகிற பசியபொன்னாற் செய்யப்பட்ட ஆசனத்தில் எழுந்தருளியிருத்தலைவிட்டு வேதங்கள் துதிக்க எழுந்தனர்.—எ-று. (எ)

மாறில்பொன் சுடரு மேரு வரைமிசை யிருமூ வெய்யோர்
வேறிலா தொருபாற் பட்டு விளங்கிவந் திவரு மாபோ
லாறுமா முகத்தெம் மைய னணையதொல் விரத மீக்க
ணேறினா னேறிச் சூழ்வோர்க் கினையதொன் றியம்பு கின்றான்.

(இ-ள்.) நிலை மாறுதலில்லாத பொன்னொளிவீசுகின்ற மஹாமேருமலையின் மீது ஆறுசூரியர்கள் அங்கும் இங்கும் விலகாமல் ஒரோசரியாக பிரகாசித்துக்கொண்டு ஏறினாற்போல,அழகிய ஆறுதிருமுகங்களையுடைய எங்கள்கடவுள் அப்படிப்பட்ட பெரியதேரின்மீது ஏறியருளினர். ஏறியபின்னர் சுற்றிநிற்பவர்களைநோக்கி இவ்வண்ணம் ஒருவசனத்தைத் திருவாய்மலர்ந்தருள்வாராயினர்.—எ-று. (அ)

வார்திரை யளக்கர் நாப்பண் வரம்பிலா வளவைத் தாகிச்
சீர்திகழ் மகேந்தி ரப்பேர்த் திருநகர் முன்ன ரேகிச்

சூர்தனை யடுவான் போதுந் துண்ணென நீவிர் நுந்த
மூர்திக டம்மின் மேவி யூர்ந்திவண் வருதி ரென்றான்.

(இ-ள்.) நாம் நீண்ட அலைகளையுடைய கடலின்நடுவில் அளவில்லாத அகலத்தினையுடையதாகிச் சிறப்பொடு விளங்குகின்ற மகேந்திரம் என்று பேருள்ள அழகியநகரத்திற்கு முன்னேசென்று சூரபன்மனைக் கொல்லப்போகின்றோம். ஆதலால் நீங்கள் விரைவாக உங்கள் வாகனங்களிலேறி அவைகளை நடத்திக்கொண்டு இங்கேவாருங்கள் என்று திருவாய்மலர்ந்தனர்.—எ-று. (க)

இப்படி முகமா றுள்ள வெம்பிரா னிசைத்த லோடு
மப்பணி யிசையா வேத னன்னத்து மாழி மேலோ
னொப்பரு முவண மீது மும்பர்கோன் மான மீதுஞ்
செப்புறு மேனை விண்ணோர் தத்தமூர் தியினுஞ் சேர்ந்தார்.

(இ-ள்.) இவ்வண்ணம் ஆறுதிருமுகங்களையுடைய எம்பெருமான்கட்டளை யிட்டவுடனே அக்கட்டளையை அங்கீகரித்து, பிரமன் அன்னத்திலும், சக்கரத்தினையுடைய சிறந்த திருமால் ஒப்பற்றகருடன்மீதும், தேவராஜன்விமானத்திலும், சொல்லப்பட்ட மற்றுள்ள தேவர்கள் அவரவர்கள் வாகனங்களிலும் ஏறிக்கொண்டார்கள்.—எ-று. (க0)

அந்தமி லிலக்கத் தோரு மவரலா வெண்மர் தாமு
மந்தர முறழும் வீர வாகுவாம் வன்மை யோனு
மெந்திர வயமான் றேரின் வீற்றுவீற் றேறி யார்க்குஞ்
சிந்தையி னானு மெட்டாத் தேவர்க டேவற் சூழ்ந்தார்.

(இ-ள்.) சாவில்லாத இலக்கம்வீரர்களும், அவர்களல்லாமலுள்ள எட்டுப்பேர்களும், மந்தரமலையையொத்த வீரவாகுதேவராகிய பலாட்டியனும் சக்கரங்களையும் வெற்றிபொருந்திய குதிரைகளையுமுடைய இரதங்களில் வேறேவேறே ஏறிக்கொண்டு எப்படிப்பட்டவர்களாலும் மனத்தினாலும் எட்டக்கூடாத தேவதேவனைச் சூழ்ந்துக்கொண்டார்கள்.—எ-று. (கக)

சுப்பிரன் மேக மாலி சுவேதசீ ரிடன்க பாலி
யப்பிர சித்துச் சித்தி ராங்கனே சுவால தானு
வொப்பில்வச் சிரனே வீம னுக்கிர னுக்கி ரேசன்
பிப்பல னந்தி சேனன் பிரமசன் பிரம சேனன்.

(இ-ள்.) சுப்பிரன், மேகமாலி, சுவேதசீர்ஷன், கபாலி, அப்பிரசித்து, சித்திராங்கன், சுவாலதானு, ஒப்பற் றவச்சிரன், வீமன், உக்கிரன், உக்கிரேசன், பிப்பலன்,நந்திசேனன், பிரமசேனன். [ஆக-கரு.]—எ-று. (கஉ)

பதுமனே கராளன் றண்டன் பத்திரன் பரிக நேமி
யுதவகன் புட்ப தந்த னுருத்திரா காரன் வீரன்
மதிசயன் கேது மாலி வக்கிரன் பிரம கேச
னதிபதி கலிங்கன் கோர னச்சுத னசலன் சாந்தன்.

(இ-ள்.) பதுமன், கராளன், தண்டன், பத்திரன், பரிகநேமி, உதவகன், புட்பதந்தன், உருத்திராகாரன், வீரன், மதிசயன், கேதுமாலி, வக்கிரன், பிரமகேசன், அதிபதி,கலிங்கன், கோரன், அச்சுதன், அசலன், சாந்தன். [ஆக-கக.]—எ-று. (கங)

சித்திர சேனன் பூரி சுசீலன்மா சயனே சிங்க
னுத்தர மடங்கற் பேரோ னுபதிட்டன் சயனே யீசன்
மத்தகன் மதங்கன் சண்டி மகாபலன் சுவேத னீல
பத்திரன் சுவாகு வண்டா பரணனே காக பாதன்.

(இ-ள்.) சித்திரசேனன், பூரி, சுசீலன், மாசயன், சிங்கன், உத்தரசிங்கன், உபதிஷ்டன், சயன், ஈசன், மத்தகன், மதங்கன், சண்டி, மஹாபலன், சுவேதன், நீலபத்திரன், சுவாகு, அண்டாபரணன், காகபாதன். [ஆக-கஅ.]—எ-று. (கச)

பிங்கலன் சமானன் மாயன் பிறங்கிய நிகும்பன் கும்பன்
சங்கபா லன்வி சாகன் சதநாவ னயக் கிரீவ
னங்கையா யிரத்தன் செங்க ணயுதத்தனனந்தன் வாமன்
மங்கல கேசன் சோமன் வச்சிர மாலி சண்டன்.

(இ-ள்.) பிங்கலன், சமானன், மாயன், விளங்காநின்ற நிகும்பன், கும்பன், சங்கபாலன், விசாகன், சதநாவன், அயக்கிரீவன், சகத்திரபாணி, அயுதாக்ஷன், அனந்தன், வாமன், மங்கலகேசன், சோமன், வச்சிரமாலி, சண்டன். [ஆக-கஎ.]—எ-று. (கரு)

அசமுகன் சரபன் குந்த னுடகன் கவந்தன் மேகன்
விசயன்வித் துருமன் றண்டி வியாக்கிரன் கால பாசன்
றசமுகன் குமுதன் பானு தனஞ்சய னிடப ரூபன்
சுசிமுக னனல கேசன் சுபத்திரன் கேது மோகன்.

(இ-ள்.) அசமுகன், சரபன், குந்தன், அடகன், கவந்தன், மேகன், விசயன், வித்துருமன், தண்டி, வியாக்கிரன், காலபாசன், தசமுகன், குமுதன், பானு, தனஞ்சயன், இடபரூபன், சுசிமுகன், அனலகேசன், சுபத்திரன், கேது, மோகன். [ஆக-உச.]—எ-று.

மத்தனுன் மத்த னந்தி மனோபவன் வாயு வேகன்
பத்துநூ றடிகள் பெற்றோன் பானுகம் பன்ப தங்கன்
சுத்தனே யனிகன் சீதன் சுநாதனே சுமாலி மாலி
யத்திரி யவுணர் கூற்ற னரிகேசன் சுவால கேசன்.

(இ-ள்.) மத்தன், உன்மத்தன், நந்தி, மனோபவன், வாயுவேகன், சகத்திரபாதன், பானுகம்பன், பதங்கன், சுத்தன், அநிகன், சீதன், சுநாதன், சுமாலி, மாலி, அத்திரி, அசுரகாலன், அரிகேசன், சுவாலகேசன். [ஆக-கஅ.]—எ-று. (கஎ)

இங்கிவர் பூத வெள்ளத் திறையவ ரொருநூற் றெண்மர்
பொங்குவெஞ் சினத்த ரெல்லாப் புவனமு மடவென் றாலு
மங்கொரு நொடிப்பின் முன்ன ரடுபவ ராடன் மிக்கோர்
சங்கையில் வலியோர் யாருஞ் சண்முகத் தவனைச் சூழ்ந்தார்.

(இ-ள்.) இவ்விடத்தில் இவர் இரண்டாயிரம் வெள்ளம் பூதசைநியங்களின் அதிபர்களாகிய நூற்றெட்டுப்பெயர்களும் (எப்படிப்பட்டவர்களென்றால்) மேலெழுந்து வராநின்ற வெவ்வியகோபத்தினையுடையவர்கள். எல்லாவுலகங்களையுமழிக்கவேண்டுமோனாலும், ஒருநொடிப்பொழுதிற்குள்ளே அழிப்பவர்கள். சிறந்த வெற்றியினையுடையவர்கள். சந்தேகமில்லாத பலசாலிகளான இவர்கள் குமரக்கடவுளைச்சூழ்ந்துகொண்டார்கள்.

ஏயெனப் பகரு முன்ன மிவ்வகை யெவருஞ் செவ்வேற்
சேயினைச் சூழ்த லோடுஞ் செய்கைமற் றதனைக் காணூஉ
மாயிருட் பரவை ஞாலம் வரைக்குலம் பனிப்ப வார்த்திட்
டாயிரத் திரட்டி வெள்ளத் தனிகமு மெழுந்த வன்றே.

(இ-ள்.) ஏ என்று கூறுதற்கு முன்னே இப்படிப்பட்ட எல்லாரும் செவ்விய வேற்படையினையுடைய குமாரசுவாமியின் சுற்றிலும் வந்து நின்றவுடனே இந்தச்செய்கையைப்பார்த்து,பெரியகரிய கடலாற் சூழப்பட்ட உலகமும் மலைக்கூட்டங்களும் நடுங்க சத்தித்துக்கொண்டு இரண்டாயிரம்வெள்ளம் சைநியங்களும் பிரயாணமாயின.

எழுந்தன வனிக வெள்ள மீண்டிய வெங்கும் விண்ணோர்
பொழிந்தனர் பூவின் மாரி பூதர்தந் தெழிப்பு விண்ணு
மொழிந்திடு திசையும் பாரு முற்றன வுலைந்த தாழி
யழிந்தன கருவி வான மண்டநெக் குடைந்த மாதோ.

(இ-ள்.) இருந்தவிடத்திலிருந்து எழுந்து பூதசைனியங்கள் எவ்விடங்களிலும் நெருங்கின. உடனே தேவர்கள் புட்பவருஷம்பெய்தார்கள். பூதர்களுடைய அட்டகாசமானது ஆகாயத்தையும் அது அன்றியுள்ள திக்குகளையும் பூமியையும் அடைந்தன; கடனிலைகுலைந்து உலகிற்குக் கருவியானமேகமும் உடைந்தது; அண்டகோளகையும் நெக்குவிட்டு உடைந்தது.—எ-று. (உ0)

கல்லென விரங்கு பேரி கரடிகை துடியே காளஞ்
சல்லரி திமிலை தக்கை தண்ணுமை படகங் கோடு
வல்லிய வுடுக்கை சங்கம் வான்குட முழவ மாதிப்
பல்லிய மனந்த கோடி பாரிட மியம்பிச் சென்ற.

(இ-ள்.) கலீரென்று முழங்காநின்ற பேரிகைகளும்,கரடிகைகளும்,துடிகளும், காளங்களும், சல்லரிகளும், திமிலைகளும், தக்கைகளும், தண்ணுமைகளும், படகங்களும், கோடுகளும், வலிய இயலினையுடைய உடுக்கைகளும், சங்குகளும், பெரியகுடமுழாக்களும் முதலிய அனந்தகோடிவாத்தியங்களை பூதங்கள் வாசித்துக்கொண்டு சென்றன.—எ-று. (உக)

கள்ளலம் புற்ற தண்டார் கவினிய மொய்ம்பிற் பூத
வெள்ளமங் கேக லோடும் விரிந்தெழு பூழி மாலை
தள்ளருஞ் சுடர்கண் மாற்றி யகிலமுந் தானே யாகி
யள்ளலங் கடலின் பேழ்வா யடைத்தது திடரே யாக.

(இ-ள்.) தேன் சிதறுநின்ற தண்ணியமலராகிய மாலையானது கிடந்தழகைத் தருகின்ற தோள்களையுடைய பூதசேனைகள் அம்மகேந்திராபுரியைக் குறித்துப் போதலும்,அவர்கள் போதலால் விரிந்து மேலேகிளம்பி புழுதிவரிசைகள் நீக்குதற்கரிய ஒளிப்பொருள்களையெல்லா மறைத்து எல்லாவிடங்களிலுந் தானேயாகி சேற்றினையுடைய கடலின் பெரியவாயை அது திடரடையும்வண்ணம் அடைத்தது.—எ-று. (உஉ)

கலகல மிழற்று நோன்றாட் கழல்புனை பூத வெள்ளம்
வலவயி னெஃக மேந்தும் வள்ளறாள் வழுத்திச் சூழ்ந்து
செலவுறு கிரிகண் மானச் சென்றுதந் தலைவ ரோடு
மலைபொரு மளக்கர் வேலை யகன்கரை யிறுத்த வம்மா.

(இ-ள்) வலியகாலில் கலகலவென்று சத்திக்கின்ற வீரக்கழலணிந்துள்ள பூதசைநியங்கள் வலதுபுறத்தில் வேலாயுதத்தினைச் சுமந்துகொண்டிருக்கிற குமரக்கடவுளின் திருவடிகளைத் துதித்து அவரைச்சூழ்ந்துகொண்டு செல்லாநின்றமலைகளை ஒப்ப போய்த்தங்கள் தலைவர்களுடனே அலைவீசாநின்ற கடலின் கரையில் சென்றுசேர்ந்தன.

மடங்கலை யுறழு மொய்ம்பின் மாபெரும் பூத வெள்ளந்
தடங்கழல் கலிப்பத் தாளிற் சலசல வொலிப்ப மாறு
நெடுந்திரை யலமந் துள்ள நேமியங் கடலே யாறு
நடந்தன பொறையாற் றுது சேடனு நடுக்க முற்றான்.

(இ-ள்.) சிங்கத்தையொத்த வலிமையினையுடைய மகத்தான பெரிய பூதசைனியங்கள் பெரிய வீரக்கழல் முழங்கத் தங்கள் கால்களில் சலசலவென்று சத்தமுண்

டாக நீங்காத நெடிய திரைகளலைந்துகொண்டிருக்கிற வட்டமான சமுத்திரமே வழியாக நடந்துசென்றன. இவைகளின் நடப்பினால் சுமை தாளமாட்டாமல் ஆதிசேடனும் நடுக்கம் அடைந்தனன்.—எ-று. (உச)

படிதவிர் பூத வெள்ளம் படர்தலும் பரட்டின் காறுக்
கடலளவு வமைந்த தன்றே கனல்விழிச் சுறவு சின்னை
கெடலருந் திமிங்கி லாதி கீடம்போ லுலவா நின்ற
வடியுறை பரலே போன்ற வதற்படு கிரிகண் முற்றும்.

(இ-ள்.) ஒப்பற்ற பூதசைநியங்கள் செல்லுதலும், அப்பொழுது கடலின் நீரளவு அவர்கள் காற்பரட்டினளவே அளவாக அமைந்தது, உடனே தீப்பறக்கப் பார்க்கின்ற சுறுக்கள், சின்னைகள், கெடுதலற்ற திமிங்கிலமுதலிய மீன்களெல்லாம்புழுக்களைப் போல சஞ்சரித்தன. அக்கடற்குள் கிடக்கின்ற மலைகளெல்லாம் காற்கீழடங்குகின்றபருக்கைக்கற்களைப்போலவாயின.—எ-று. (உரு)

தந்திரப் பூத வெள்ளந் தடங்கட லாற்றிற் சார
வெந்திறற் றுணைவர் யாரும் விரிஞ்சனு மாலு மற்றை
யிந்திரத் தலைவன் றானு மிமையவர் பலருஞ் சூழ
வந்தரத் தாற்றிற் சென்றா னறுமுக னணித்திண் டேர்மேல்.

(இ-ள்.) கூட்டமான பூதசைநியங்கள் பெரியகடலின் வழியாகச்செல்ல, வெவ்வியசாமர்த்தியத்தினையுடைய துணைவர்களாகவுள்ள வனைவர்களும், பிரமனும், விஷ்ணுவும், இந்திரனாகிய தலைவனும், மற்றுள்ளபலதேவர்களும் சூழ்ந்துவர, அழகிய திண்ணிய தேரின்மீது சண்முகப்பெருமான் ஆகாயவழியாக எழுந்தருளினார்.—எ-று. (உசு)

மாறுபட் டவர்மேற் செல்லும் வயப்பெரும் பூத ரேக
வாறுபட் டமரு முந்நீ ரலமந்து தெளிவின் றாகிச்
சேறுபட் டிறைய தொன்று தேய்ந்திடு முன்ன மஃதே
நீறுபட் டெழுந்து சென்றெவ் வுலகமு நிமிர்ந்து சூழ்ந்த.

(இ-ள்.) பகைத்தவர்கள்மேற் போருக்குச்செல்லுகின்ற வெற்றியினையுடைய பெரியபூதர்கள் செல்லாநிற்க வழியாகப்பொருந்தியிருந்த கடல்கலங்கித் தெளிவில்லாததாகி சேறாகி ஒருகணப்பொழுதுக்குள்ளே அச்சேறே நீறாய் எழுந்துசென்று எந்தவுலகங்களிலும் பரந்து சூழ்ந்தன.—எ-று. (உஎ)

இவ்வகை யயில்வே லண்ண லிராயிரம் பூத வெள்ளங்
கவ்வையி னமைந்து செல்லக் கனைகடல் வரைப்பி னேகி
யெவ்வம தடைந்த தொல்லை யிலங்கையங் குவடு நீங்கி
மைவரை புரைசூர் மேவு மகேந்திர புரமுன் போந்தான்.

(இ-ள்.) இவ்வண்ணமாகக் கூரிய வேற்படையினையுடைய குமாரக்கடவுள் இரண்டாயிரம்வெள்ளம் பூதங்கள் ஆரவாரத்துடன் கூடச்செல்லாநிற்க, சத்தியாநின்ற கடலின் மேற்புறத்தெல்லையே வழியாகச்சென்று வீரவாகுதேவரால் துன்பமடைந்த பழைய இலங்கையாகிய மலையையுங்கடந்து நீலமலையையொத்த சூரபன்மனிருக்கின்ற மகேந்திரபுரத்திற்கு எதிரிலே சென்றனர்.—எ-று. (உஅ)

வேறு.

போந்தகாலை யயலின்வந்து போற்றியங்கை கூப்பியே
நாந்தகஞ் சிலைகதை நலங்கொள் சங்குசக்கர
மேந்தினானு நான்முகனு மிந்திரத் தலைவனு
மாய்ந்துநேடி யின்னதன்மை யார்வமோ டியம்பினார்.

(இ-ள்.) குமரக்கடவுள் மகேந்திரபுரியின் எதிரிற்சென்றவுடனே, வாள்-வில்-கதை-நன்மைபொருந்தியசங்கு-சக்கரம் என்னும் பஞ்சாயுதங்களைத் தாங்கிக்கொண்டிருக்கிற திருமாலும், சதுர்முகனும், சுவர்க்காதிபனாகிய இந்திரனும் நன்றாயாலோசித்து அப்பெருமானருகிற்சென்று அகங்கைகளைக்குவித்து வணங்கித்துதித்து விருப்பத்துடன் இவ்வண்ணங்கூறினர்.—எ-று. (உகூ)

காண்டியீது சூரனூர் கடுங்கணீசர் செறிதலா
லாண்டுசேறன் முறையதன் றதற்கடுத்த வெல்லையா
மீண்டுபாச றைத்தல மியற்றுவித் திருந்தபின்
வேண்டுமாறு புரிதியைய வினையநாடி யென்னவே.

(இ-ள்.) ஐயனே! இது சூரனுடைய ஊர்; இதில் கொடியபார்வையினையுடைய அசுரர்களான நீசர்களிருக்கின்றதினாலே அவ்விடத்திற்குச் செல்லுதல்முறைமையல்ல; அதனால் அதற்கடுத்த பிரதேசத்தில் நாமிருத்தற்கேற்ற படைவீட்டை ஏற்படுத்தி அதிலிருந்துக்கொண்டு அதற்குத்தக்க தந்திரங்களை யுத்தேசித்துப் பின்னர் இஷ்டம்போலச்செய்வீராகவென்று கூறுதலும்.—எ-று. (௩0)

குன்றெறிந்த முருகனன்ன கூற்றுணர்ந்தி சைந்திடா
நன்றிதென் றருட்கண்வைத்து நாகர்கம்மி யன்றனை
மன்றவன்பொ டேவிளித்து வல்லையீண்டு பாசறை
யொன்றுசெய்தி டென்னலு முளஞ்சிறந்து புகலுவான்.

(இ-ள்.) வேற்படையைவிட்டு கிரவுஞ்சமலையை உடைத்த குமரக்கடவுள் அவ்வசனத்தைக்கேட்டு அதற்குச்சம்மதித்து இது நல்லதென்று கருணைநாட்டம்வைத்து தேவதச்சனை மிகவும் அன்புடனே அழைப்பித்து, நீ விரைவாக இவ்விடத்தில் ஒருபாடிவீட்டினை உண்டாக்கக்கடவையென்று கூறுதலும், மனமகிழ்ச்சியுடன் கூறுவான்.

தாரகற் கடந்தவேற் றடக்கைவீர வீண்டியா
னோரிறைக்கு முன்னமாக வோங்குபா சறைத்தலஞ்
சீரிதிற் படைக்குவன் றெரிக்துகாண்டி யுனதுபே
ராரருட் டிறத்தினென் றடித்தலம் பணிந்துபின்.

(இ-ள்.) தாரகாசுரனைக்கொன்ற பெரியகையினையுடைய வீரனே! இவ்விடத்தில் நான் ஒருகணப்பொழுதுக்குள்ளாக வுயர்ந்தபடைவீட்டினை உனது பெரிய அருட்டிறத்தினால் சிறப்புடையதாகச் செய்வேனென்று கூறி திருவடிகளிலே வீழ்ந்துவணங்கிப் பின்னர்.—எ-று. (௩உ)

மாடகூட மண்டபம் வளங்கொள்சோலை வாவிகள்
பீடுலாய கோபுரம் பிறங்குவீதி யோர்திசை
கோடிகோடி யாக்கிமற்றோர் கோநக ரியற்றியே
நாடுமேம கூடமென்று நாமமொன்று நாட்டினன்.

(இ-ள்.) மாடங்கள் கூடங்கள் மண்டபங்கள் வளப்பம்பொருந்திய சோலைகள் வாவிகள் பெருமைபொருந்திய கோபுரங்கள் விளங்காநின்றவீதிகள் ஒருதிக்குக்கு ஒருகோடியாகச்செய்து, வேறொரு சிறந்தநகரம் இயற்றி எண்ணத்தக்க ஏமகூடம் என்று அதற்குப்பெயரிட்டனன்.—எ-று. (௩௩)

கருத்திலன்ன வன்செயுங் கவின்கொள்பாடி வீடுகண்
டருத்தியான் மகிழ்ச்சியெய்தி யருள்புரிந்து கந்தவே
டிருத்தகுஞ் சனங்கள்போற்றி செய்யவாண்டு சென்றபின்
மருத்தனுந்து தேரிழிந்து மந்திரத்தை நண்ணினான்.

(இ-ள்.) மனதினாலே அந்ததேவதச்சன்செய்த படைவீட்டைப்பார்த்து விருப்பத்துடன் மகிழ்வடைந்து அவனுக்குத் திருவருள்செய்து குமரக்கடவுள் திருத்தமான தகுந்த பரிசனங்கள் துதிக்க அப்பாடிவீட்டிற்குச் சென்றதற்குப்பின்னர், வாயுவினாலே ஓட்டப்பட்டதேரினின்றும் இறங்கித் தனக்கென்றமைக்கப்பட்டுள்ள கோவிலுக்குள் எழுந்தருளினார்.—எ-று. (௬௪)

அந்தமற்ற பூதர்தம்மை யாவணங்க ணிறுவியே
முந்துகொற்ற வயவர்நான் முகத்தனுதி யவரொடு
மந்திரத்து ளேகியே மகிழ்ந்துவீற் றிருந்தன
னிந்திரப்பெ ருமடங்க லேறுதாங்கு தவிசின்மேல்.

(இ-ள்.) அளவில்லாதவர்களாக வந்திருக்கின்ற பூதசேனைகளை வீதிகள்தோறும் இருக்கச்செய்து, உயர்ந்தவெற்றியினையுடைய வீரவாகுமுதலிய வீரர்களுடனும், சதுர்முகன்முதலியவர்களோடும், திருக்கோயிலுக்குட்சென்று, இந்திரமென்னும் நூலின்வண்ணஞ் செய்துள்ள பெரிய சிங்கவேற்றினால் சுமக்கப்பட்ட திருவணையின்மீது எழுந்தருளி யிருந்தனர்.—எ-று. (௬௫)

ஒன்பதோடி லக்கவீர ரோங்கலாள ராறுவர்க
ளன்புசெய்து போற்றிசெய்ய வறுமுகேச னமரர்கண்
முன்புசெய் பணித்திற முறைப்படப் புரிந்திட
வின்பினோடு மேமகூட வெழிலிருக்கை வைகினான்.

(இ-ள்.) ஒருலக்ஷத்து ஒன்பதுவீரர்களும், திருப்பரங்குன்றத்திலிருந்து உடன்வந்த பராசரபுத்திரர்கள் ஆறுபேர்களும், அன்புசெய்து துதிக்க, சண்முகப்பெருமான் தேவர்கள் முன்னேசெய்த பணிவிடைகளை முறைப்படியே செய்ய சந்தோஷத்துடன் ஏமகூடமாகிய அழகியவிடத்திலெழுந்தருளியிருந்தனர்.—எ-று. (௬௬)

ஏமகூடப்படல முற்றிற்று.

---

## வரவுகேள்விப்படலம்.

ஏகநா யகனு மைய னிவ்விடை யிருந்த வெல்லை
நாகர்மே லளிவைத் துள்ள நாரத னவற்றை நாடி
மாகநீள் புரிசை சூழ்ந்த மகேந்திர புரத்திற் சென்று
போகமா ருலகின் மேலாம் புரவலன் கோயில் புக்கான்.

(இ-ள்.) சகலருக்கு மொரோ கர்த்தாவான குமரக்கடவுள் இவ்விடத்திலிருந்தவுடனே, தேவர்கண்மீது அன்புவைத்துள்ள நாரதமுனிவன் அவைகளையெல்லாம் ஆராய்ந்து ஆகாயத்திலே நீண்டமதில்சூழ்ந்த மகேந்திரபுரத்திற்குச்சென்று போகத்தை யநுபவித்தற்குரிய சுவர்க்கத்தைவிடச் சிறந்த இராஜமாளிகையை யடைந்தனன்—எ-று.

புக்கன னவுண ருய்ப்பப் பொருவிலா விகல்வெஞ் சூரன்
மிக்குயர் திருவி னோடும் வீற்றிருந் திடுதல் காணூஉ
விக்கென விணைய தீயோ னிறப்பவென் றுன்னி வாயாற்
றக்கதோ ராசி கூறிச் சார்ந்தனன் றவத்தின் மேலோன்.

(இ-ள்.) அசுரர்களுள்ளேவிட, உள்ளேசென்று ஒப்பற்ற வலிமையினையுடைய வெவ்விய சூரபன்மன் மிகவும் உயர்ந்தசெல்வத்துடனே யிருத்தலைப்பார்த்து இந்தக் கொடியவன் மூங்கிலைப்போல அழியக்கடவன் என்றுநினைத்து, வாயினாற்றகுந்த ஒரு ஆசீர்வசனத்தை யுரைத்துக்கொண்டே தவத்திற்சிறந்த நாரதன்சென்றனன்.—எ-று.

மூங்கில் தானே தன்கிளைகளுக்குந் தனக்குந் தீயைக்கொண்டு தீங்கினையுண்டாக்கிக்கொள்ளுதலால், 'இக்கென்ன' என்றான் என்க. (உ)

அங்கைகண் மலர நின்றே யாசிசெய் தானை நோக்கி
யெங்குளை யிங்கு வந்த தென்னைநீ யாரை யென்ன
மங்கையோர் பங்கன் மேவும் வடபெருங் கயிலை வாழ்வே
னுங்குலந் தலைமை யாக வைகலு நோற்றல் செய்வேன்.

(இ-ள்.) அழகிய கைகள் விரியும்வண்ணமாக நின்றுகொண்டு ஆசிகூறினவனைப்பார்த்து, நீ எங்கிருக்கின்றவன்? எதற்காக இங்கேவந்தனை? நீயாவன்? என்று கேட்டனன். அதற்கு நாரதன் நான்பார்வதியை யொருபுறத்திலுடைய பரமேசுவரர் எழுந்தருளியிருக்கின்ற வடக்கிலுள்ள பெரியகைலாயத்திலே வாழுகின்றவன். (அவ்விடத்திலிருந்துகொண்டு) உமது குலம் சிறப்படையும்வண்ணம் தினமுந் தவஞ்செய்வேன்.

மிகவும் சூரபன்மனை மதித்ததாகவும், நன்றாகவாசிகூறுவதாகவும் அபிநயிப்பவனுதலால்,நாரதமுனிவன் கபடமாக இருகைகளையும் விரித்தனன் என்றுணர்க.

எந்தமுனிவனும் இவ்வளவு நெருக்கமாக அருகிற்சென்று ஆசிகூறினதில்லை. ஆதலால், நாரதனை யொரு புதியவனாக அன்று கண்டவனுதலால், எங்குளை யென்றான் என்க. சிவபெருமானுடைய மஹா கைலாயத்தையும், அதில்வசிக்கும் அவ்விறைவனையும் மாத்திரம் இவன் மதித்தவனுதலால், அவன் தன்னை மதிக்கும்பொருட்டு "மங்கையோர் பங்கன் மேவும் வடபெருங் கைலை வாழ்வேன்" என்றானென்க.

அக்கைலாயத்திலே வாழ்ந்தாலும் இச்சூரனுக்கெதாவதொரு சொந்தங்காட்டினுல் தானே அவனுக்குப் பிரியமுண்டாகும் என்றுகருதி "நுங்குலந்தலைமையாகவைகலுநோற்றல் செய்வேன்" என்றான் என்க. (௩)

கைதவம் புகலேன் வெய்ய காமமே முதல நீத்துச்
செய்தவம் பலவு முள்ளேன் றேவருக் கிடுக்கண் செய்வேன்
மைதவிர் புகரி னோடு மருவுநண் புடையே னின்பா
லெய்தியொன் றுரைக்க வந்தே னாரத னெனும்பே ருள்ளேன்.

(இ-ள்.) நான் வஞ்சனைவசனங்களைக்கூறேன்; கொடிய காமமுதலியவைகளை யொழித்துச் செய்யாநின்ற பலதவங்களையுமுடையேன்; தேவர்களுக்குத் துன்பத்தைச் செய்வேன்;குற்றமற்ற சுக்கிரனுடனே பொருந்திய சிநேகமுள்ளவன்; உன்னிடத்துக்கு வந்து ஒன்று கூறும்பொருட்டுவந்தேன்; நான் நாரதன் என்று கூறுநின்ற இயற்பெயரினையுடையேன்.—எ-று.

ஒருவேளை தான் கூறப்போகின்றதைப் பொய்யென்று கருதப்போகின்றானென்று அந்த ஐயத்தை ஒழிக்கும்வண்ணம் "கைதவம் புகலேன்" என்றான்.

பின்னுந்தன்னை நல்ல உசிதமானவன் என்று காட்டும்பொருட்டு "செய்தவம் பலவுமுள்ளேன்" என்றான் என்க.

தவமுள்ளவர்களெல்லாந் தேவர்களிடத்திலே பிரியத்தையும் அசுரர்களிடத்திலே அப்பிரியத்தையும் உடையவர்களாக இருப்பார்கள்; நான் அப்படிப்பட்டவனல்லேன். அசுரர்களிடத்தில் விருப்பமுள்ளவன் என்றுகுறிப்பிக்க"தேவருக்கிடுக்கண்செய்வேன்" என்றான் என்க. அவ்வாறு தவஞ்செய்கின்ற வுனக்கு உலகிலுள்ளவர்களைப்போல தேவர்களிடத்திற் பிரியமில்லாததற்குக் காரணமென்னவென்று கேட்காதிருக்கும் வண்ணம் இன்ன சகவாசத்தால் எனக்கு அசுரப்பிரியம் உண்டாயிற்று என்றுகூறுவான்"மைதவிர் புகரினோடு மருவுநண்புடையேன்" என்றான் என்க.

மதுபானம் முதலிய நிஷித்த காரியங்களை ஏராளமாகச் செய்கின்ற சுக்கிரனை அவனுடைய சீடனாகிய சூரனெதிரிற் கூறுதலால் "மைதவிர்" என்றானென்க.

இங்கு ஏன் வந்தாய் என்று கேட்குமவனுக்கு இதற்காக வந்தேனென்பான், "ஒன்றுரைக்கவந்தேன்" என்றான் என்க. (௪)

சிந்துவான் மதிதோய் வேணிச் செல்வனின் னடுவ தாகக்
கந்தனு முருகன் றன்னைக் காமர்கண் ணழலா னல்க
வந்தமா மதலை தன்பா லையவுன் பணிய தாற்று
மிந்திரா தியர்க ளேகி யிறைஞ்சியே யேத்தி யுற்றார்.

(இ-ள்.) கங்கையையும், வெள்ளியசந்திரனையும் பொருந்தும்வண்ணம் தரித்துள்ள சடாபாரத்தினையுடைய சிவபெருமான் உன்னைக்கொல்வதாக உத்தேசித்து கந்தனாகிய முருகனை அழகிய நெற்றிக்கண்ணின்வழியாக உண்டாக்க அந்தச்சிறந்த பிள்ளையினிடத்தில் ஐயனே உனது ஊழியத்தைச் செய்கின்ற இந்திராதிகள் சென்றுவணங்கித்துதித்து அவனுடனிருந்தார்கள்.—எ-று.

சிந்துவான்மதியென்பதை-கடலில்முளைத்த வெள்ளியமதியெனினுமாம். இச்சூரபன்மனுக்கு இவ்வளவு ஐசுவரியங்களையும் அளித்தவர் அவ்விறைவராதலால், அவரை நாரதன் "செல்வன்" என்று சூரனைமெய்ப்பித்தான் என்க.

மற்றைக்கண்களைப்போல நெற்றிக்கண்ணனது சாய்ந்து கிடவாது நிமிர்ந்திருப்பதாலும்,அது அழகுடையது என்றுகாட்ட "காமர் கண்ணழல்" என்றான் என்க.

சிவபெருமானிடத்தில் இருவரும் அன்புள்ளவர்களென்று குறிப்பிக்க அவர்மகனை, "மாமதலை" என்றான்.

குமரக்கடவுளுக்கு உன்னிடத்தில் பகை இல்லையென்றும், கேட்பார்பேச்சுக் கேட்டு வந்தானென்றும் குறிப்பித்து பின்னலுரைக்கப்போகின்றமையால், முன்னேயே உனக்கு ஊழியஞ்செய்கின்றவனென்று இந்திரனையும் அவனைச்சார்ந்தவர்களையும்கேவலப்படுத்தித் தான்முன்கூறியவாக்கியங்களுக்கு தோஷம்வராதிருக்கும்வண்ணம்இகழ்ந்தானென்க. (௫)

உற்றுளார் தமக்கு நின்னா லுறுதுயர் குமரன் கேட்பச்
சொற்றலு மஞ்ச லென்று தொல்சிவ னருண்மேற் கொண்டு
கொற்றவெம் பூத வீரர் குழாத்தொடும் புவியி னேகி
மற்றுன திளவ றன்னை வரையொடும் வேலாற் செற்றான்.

(இ-ள்.) அங்கு,குமரனிடத்திற் சென்றவர்கள் தங்களுக்கு உன்றனாலே உண்டாகிய துன்பத்தை அக்குமரக்கடவுள் கேட்குமாறு கூறுதலும், அவர்களைநோக்கி நீங்கள் பயப்படாதீர்கள் என்று கூறி தன்னையளித்த சிவபெருமானுடைய அருளினை மேற்கொண்டு வெற்றிபொருந்திய வெவ்விய பூதவீரர்களுடன் பூலோகத்துக்குவந்து உனது தம்பியை கிரவுஞ்சமலையுடனே வேலாயுதத்தினால் அழித்தனன்.—எ-று.

குமரன் தானேவந்தானில்லை என்பான், சிவனருளை மேற்கொண்டுவந்தான் என்றான். குமரனுடைய பெருமையையும் குறிப்பிலுணர்த்த "இளவலைவரையொடும் வேலாற் செற்றான்" என்றான். மலையாகவிருந்தாலும் கிரவுஞ்சம் அசுரனாதலா லவனையுமுடன்சேர்த்துச் செற்றான் என்றான். (௬)

ஆண்டது புரிந்த பின்ன ரறுமுகன் செந்தி மேவித்
தூண்டின னினக்கோ ரொற்றைத் துண்ணென வவனும் வந்து
மீண்டபின் புகுதி நாடி வேலையைக் கடந்து தன்பா
லீண்டிய படையொ டன்னு னிந்நகர் வடபால் வந்தான்.

(இ-ள்.) அவ்விடத்தி லதனைச்செய்ததற்குப்பின்பு, சண்முகன் ஜயந்திபுரத்தையடைந்து உனக்கொருதூதனை யனுப்பினான். அவன் வந்துபோனதற்குப் பின்பு சங்கதிகளை உணர்ந்துகொண்டு கடலைக்கடந்து நெருங்கியசேனைகளுடன் அக்குமரன் உன்னூரின் வடபுறத்திற்குவந்தனன்.—எ-று. (எ)

தூதன் செய்திகளைக்கூறினால் எங்கே கோபித்துக்கொள்ளப் போகின்றானோ? அல்லது, தன்னை எதிரிகளினத்தைச் சேர்ந்தவனென்றெங்கே உணர்ந்துகொள்ளப் போகின்றானோ என்றெல்லாங்கருதி தூதனுடைய ஜயத்தைக்கூறாது சுருக்கினன்.

ஆங்கனம் பாடி வீடொன் றாற்றுவித் தனிகம் யாவும்
பாங்குற விருந்தான் செவ்வேள் பார்த்தன னிவைய வெல்லா
மீங்கிது நிகழ்ந்த வண்ண மென்றலு மவுணர் கோமான்
றீங்கன லென்னச் சிறி நகைத்திவை செப்ப லுற்றான்.

(இ-ள்.) அவ்விடத்திலொரு பாடிவீட்டைக் கட்டுவித்து சேனைகள் அனைத்தையும் பக்கத்திலிருக்கச்செய்து, தானுமங்கிருந்தனன். இவைகளையெல்லாம் நான்பார்த்துக்கொண்டிருந்தேன். இதுநடந்த சங்கதி என்றுகூறினவுடனே, அசுரமன்னவனாகிய சூரன் கொடிய அக்கினியைப்போலச்சீறி நகைத்துக்கொண்டு இவைகளைக்கூறத்தொடங்கினான்.—எ-று. (அ)

வேறு.

மேனிமிர் கொண்ட லுயர்த்தவ னம்புய மிசைவேதா
நீனிற மாயவ னூரது போல நினைந்தானோ
வானதொ லண்டமொ ராயிர கோடியு மரசாள்வேன்
மாநகர் மேலொரு பாலக னும்பொர வருவானே.

(இ-ள்.) மேலே உயர்ந்துவிளங்குகின்ற மேகக்கொடியையுடைய இந்திரன், தாமரைமலரின் மீதிலிருக்கின்ற பிரமன், நீலநிறம்பொருந்திய திருமால் என்னும் இவர்கள் வாழ்கின்ற ஊரைப்போலக் கருதினானோ? பெரிய ஆயிரகோடி யண்டங்களையு மரசாளுவோனாகிய என்னுடைய பெரியநகரத்திலே ஒருபாலகனும் போர்செய்யவருகின்றவன்.—எ-று. (௯)

அரியி னின்ஞ்செறி சூழலி னன்னவை யடலுன்னிக்
கரியது கன்றுழை கலைபிற வற்றொடு கடிதேகிற்
பொருது வயங்கொள வல்லது கொல்லது போலன்றோ
முருகனும் வெம்படை யுடனிவண் வந்திடு முறைதானே.

(இ-ள்.) சிங்கக்கூட்டங்கள் நெருங்கி யிருக்கின்ற விடத்தில் அவைகளைக் கொல்லுதற்குநினைத்து, யானையின்கன்று உழையையும் கலைமான்களையும், மற்றுள்ள விலங்குகளையும் கூட்டிக்கொண்டு விரைந்துசென்றால் போர்செய்துவெற்றிபெறத்தக்கதோ? அதனைப்போலல்லவோ முருகனும் வெவ்வியபடைகளுடன் இவ்விடத்திற்குவந்த முறைமை.—எ-று. (௧௦)

வேலை கடந்தென தானை யிகழ்ந்து வியன்பூதச்
சால நெடும்படை தன்னுட னிந்நகர் சார்வானுங்
கால மிதங்கவன் வீர மழிப்பல் கருத்தில்லாப்
பாலக னென்றும் விடேன்வசை யென்பதும் பாரேனால்.

(இ-ள்.) கடலையுந்தாண்டி எனதாக்கினையையுங்கடந்து பெரியபூதங்களாகிய சேனைகளென்னுங் கூட்டத்துடன் இவ்வூருக்குவருவானும்; இந்தகாலத்தில் அவனுடைய வீரத்தினையழிப்பேன்; புத்தியில்லாத பாலகனென்றும்விடமாட்டேன்; பாலகனுடன் போர்செய்தானென் றுண்டாகிற பழியையும்பாரேன்.—எ-று. (௧௧)

முன்னொரு சூழ்ச்சியி னசமுகி யொண்கர முரிவித்தே
யொன்னல ராயம ரும்பர்கள் யாவரு முய்ந்தாரோ
வென்னிளை யானொடும் வெற்பினை யட்டன மெனவுன்னித்
தன்னுயிர் போவ தறிந்தில னிந்நகர் தனின்வந்தான்.

(இ-ள்.) முன்னே ஒருதந்திரத்தினால் அசமுகியினுடைய ஒள்ளிய கையை முறியச்செய்து பகைவர்களாகவிருக்கின்ற தேவர்களெல்லாம் பிழைத்தார்களோ? என் தம்பியுடனே மலையையழித்தோமென்று நினைத்து தன்னுயிர்போவதை யறியாதவனாக இவ்வூருக்கு வந்தான்.—எ-று. (௬௨)

ஆழிய தெண்டிரை யாழி கடைந்தவ னலகில்லா
வேள்வி புரிந்திடு வாசவ னம்புய மிசைமேயோன்
வாழிய நம்பெயர் கூறினு மஞ்சினர் மறைகுற்றார்
பூழி புனைந்தவர் பாலக னேவமர் புரிவானே.

(இ-ள்.) ஆழமானதாகிய கடலைக்கடைந்தவன், அளவற்றயாகங்களைச் செய்த இந்திரன், தாமரைமலரின்மீது இருக்கின்ற பிரமன் என்னும் இவர்கள் நம்முடைய பெயரினைக் கேட்டாலே அஞ்சிப்பயந்து ஒளித்துக்கொண்டார்கள். பஸ்மதாரியான சிவகுமாரனோ இனிப்போர்புரிபவன்.—எ-று. (௬௩)

அந்தர மேல்வரு செங்கதி ரைச்சிறை யமர்வித்த
மைந்தனை நாற்படை தன்னொடு மேவி வயப்போரான்
முந்திய பூதரை யேனைய வீரரை முடிவித்தே
கந்தனை யொல்லையின் வெற்றிகொள் வேனிது காண்கிற்பாய்.

(இ-ள்.) ஆகாயத்தின்மீது வருகின்ற செவ்விய கதிர்களையுடைய சூரியனைச் சிறையிலிட்ட என்மகனாகிய பானுகோபனை சதுரங்கசைனியங்களுடனனுப்பி வெற்றியினையுடையயுத்தத்தினால் சிறந்த பூதர்களையும் மற்றுள்ளவர்களையும் கொல்வித்து கந்தனை விரைவாகவெற்றி பெறுகின்றேன். நீயேயிதனைப் பார்க்கபோகின்றனை.

என்றசு ரேச னிசைத்தலு நாரத னிவைகேளா
நன்றிது நன்றிது தாழ்க்கலை யின்னினி நகர்சூழச்
சென்றவ னைப்பொர நின்படை யேவுதி செல்கின்றேன்
வென்றிது நுமக்குற நோற்றிடு வானென விண்போனான்.

(இ-ள்.) அசுராதிபனாகிய சூரபன்மன் இவ்வாறு கூறுதலும், இவைகளையெல்லாம் நாரதன்கேட்டு இதுவே நல்லது இதுவேநல்லது தாமதஞ்செய்யாதே: இப்பொழுதே உனதூரைச் சூழ்ந்துகொண்டு போர்செய்தற்கு வந்திருக்கின்ற கந்தனொடு போர் செய்யும்வண்ணம் உனது சைனியங்களைவிடு; உங்களுக்கே வெற்றியுண்டாகும் வண்ணந் தவஞ்செய்யப்போகின்றேனென்று கூறி ஆகாயத்திற்சென்றனன்.—எ-று. (௬௫)

வேறு.

நாரத னினைய கூறி நகையொடு போத லோடுஞ்
சூரரு ளாற்றன் மிக்கோன் றுண்ணென வயலி னின்ற
கோரனுங் கோர னென்னு மொற்றரைக் குறித்து நோக்கி
வாரிதி யிறைவற் பற்றி வல்லையிற் கொணர்தி ரென்றான்.

(இ-ள்.) இவைகளை நாரதன்கூறி நகைப்புடன் போனவுடனே, சூரருக்குட் சூரனான சூரபன்மன் விரைவாக பக்கத்திநின்ற கோரன் உற்கோரன் என்னும் இரண்டு ஒற்றர்களைப்பார்த்து, நீங்கள் கடலிறையாகிய வருணனைப்பிடித்துச் சீக்கிரங்கொண்டுவாருங்கள் என்று கூறினான்.—எ-று. (௬௬)

என்றலு மனைய ரோடி யெறிகடற் கரசைக் கூவி
வன்றிற லோடு பற்றி வல்லைமுன் கொணர்ந்தே யுய்ப்பக்
கன்றிய மனத்த னாகிக் கைதொழு தவலங் கூர்ந்து
நின்றன னவனை நோக்கி நெருப்பெழ விழித்துச் சொல்வான்.

(இ-ள்.) என்று கூறுதலும், அவர்கள்சென்று அலைவீசாநின்ற கடலின் அரசனை அழைத்து மிக்க சாமர்த்தியத்துடன் பிடித்து விரைவாக எதிரிலே கொண்டுவந்து நிறுத்துதலும், அவ்வருணன் கன்றிய மனத்தினையுடையவனாய்க் கைகளைக் குவித்துக்கொண்டு நின்றனன். அவ்வாறு நின்றவனைப்பார்த்து, கண்களில் தீப்பொறிபறக்கச் சூரபன்மன் கூறுகின்றனன்.—எ-று. (கஎ)

பவ்வநீ ரரச கேண்மோ பங்கயத் தவனு மாலுஞ்
செவ்விதி னுணரா வண்ண மொளித்தவன் சிறுவன் றன்னை
வெவ்வலி கடந்த பூத வெள்ளத்தை நமது மாறா
விவ்விடை விடுத்த தென்னை யென்னலு மிசைக்க லுற்றான்.

(இ-ள்.) சமுத்திரராஜனே! கேட்பாயாக: தாமரைமலரிலிருக்கின்றபிரமனும், திருமாலும் நன்றாய்க்காணப்படாதிருக்கும்வண்ணம் ஒளித்தவனுடைய பிள்ளையையும் (அவனுடன்வந்த) மிக்கவல்லமையையுடைய பூதசைனியங்களையும் நமக்குப் பகையாக இவ்விடத்தில்விட்டதென்னை? என்றுகேட்டனன். உடனே வருணன்கூறுகின்றனன்.

மண்படு புவனம் போற்று மன்னகேள் புயங்க மீது
கண்படு முகுந்தன் வேதாக் கடவுளர் தலைவ னோடு
மெண்படு துணைவ ரானோர் யாவரும் புடையிற் சூழ
விண்படு நெறியிற் சென்றான் வீரவேற் றடக்கை யண்ணல்.

(இ-ள்.) மண்ணிலுள்ள புவனத்தவர்களெல்லாந் துதிக்கின்ற மன்னவனே! கேட்பாயாக, வீரம்பொருந்திய வேற்படையினைப் பெரியகையிலேந்தியுள்ள குமரக்கடவுள், பாம்பின்மீதுறங்குகின்ற திருமால், பிரமன், இந்திரன் முதலானவர்களுடன் எண்ணப்பட்ட ஒருலக்ஷத்து ஒன்பது என்றுகூறாநின்ற தம்பிமார்களுடன் மற்றுள்ளவர்களும் அருகிற்சூழ்ந்துவர ஆகாயமார்க்கமாக வந்தனன்.—எ-று. (கக)

மடல்கெழு நீபத் தண்டார் வள்ளல்வா னெறியிற் போத
மிடல்கெழு பூத ரென்பான் மேவினர் சென்றா ரன்னா
ரடிகளின் பரட்டின் காறு மமைந்தில னவரை யானே
தடைசெய வல்லேன் போலுந் தக்கதே யிதுமற் றன்றே.

(இ-ள்.) இதழொடுவிளங்கிய கடப்பமலரால் கட்டப்பட்ட குளிர்ச்சியான மாலையை அணிந்துள்ள தோளினையுடைய குமரக்கடவுள் ஆகாயமார்க்கத்தில் வருதலும், வலியொடுவிளங்குகின்ற பூதர்கள் என்வழியாகவந்தார்கள். நான் அவர்களுடைய காலடிகளின் பரடுவரைக்குமாகக் கூடநின்றேனில்லை. அப்படிப்பட்டயான் அவர்களை எப்படி தடைசெய்ய வல்லவனாவேன்? இது தகுதியானது அல்லவா?—எ-று. (உ0)

ஊழியு முலையாப் பூத ரொல்லெனச் செல்லத் தாளிற்
பூழியா லளறு பட்டாங் கிடையறப் புலம்ப லுற்றே
னாழிய னென்னும் பேரு மற்றனன் வசையே பெற்றே
னேழையேன் செய்வ தென்கொ லெதிருண்டோ வலியர்க் கம்மா.

(இ-ள்.) பிரளயத்திலும் அழியாத பூதர்கள் விரைந்துசெல்லுதலும் அவர்களுடைய கால்களிலுள்ள புழுதியாலே எவ்விடத்திலும் சேறாகியதனால்வருந்தாநின்றேன். ஆழியன் என்னும் நாமமும் இல்லாதவனானேன். வசைமொழியையடைந்தேன். ஏழை

யாகிய நானென்னசெய்யப்போகின்றேன். வல்லபசாலிகளுக்கு நிகரானதும் ஒன்றிருக்கின்றதோ?—எ-று.

தெள்ளிதிற் றமிழ்தேர் காட்சித் திருமுனி கரத்தில் வாரி
யுள்ளுறக் கொண்ட தேபோ லொல்லையின் மிசைவர் போலாங்
கொள்ளையிற் செறிபூ தர்க்கு ளொருவரோர் குடங்கை தன்னி
னள்ளுதற் காற்ற கில்லே ளுதலி னுய்ந்தே னன்றே.

(இ-ள்.) தெளிவாகத்தமிழினையுணர்ந்த தன்மையினையுடைய அகத்தியனுடைய கையினலெடுத்து ஆசமனம்செய்யப்பட்டதைப்போல விரைவாக குடித்துவிடுவார்கள். ஆனல்,கூட்டமாக நெருங்கியபூதர்க்குள் ஒருவன் ஒரு உள்ளங்கையில்மொள்ளுதற்குப் போதாதவனுனேன். அதனலே அவர்கள்மொண்டுகுடிக்காமல்தப்பித்துக்கொண்டேன்.

உடல்சின வசனி தன்னை யொண்பணி விலக்க வற்றே
கடுமுர ணரிமா னேற்றைக் களிறெதிர் விலக்கிற் றுண்டோ
மிடல்கெழு விதியைப் புந்தி விலக்குமோ வஃதே யன்றே
வடன்மிகு பூதர் தம்மை யளியனேன் றடுப்ப தென்றான்.

(இ-ள்.) பகைக்கின்ற கோபத்தினையுடைய இடியை ஒள்ளியபாம்பானது விலக்கத்தக்கதோ? மிக்கவல்லபத்தினையுடைய ஆண்சிங்கத்தை யானையானது எதிர்ந்துவிலக்கினதுண்டோ? பெலத்தோடுநின்ற விதியை மதி வெல்லுமோ? அதனைப்போலல்லவோ மிக்கவெற்றியினையுடைய பூதர்களை ஏழையேன் தடுப்பது என்றுகூறினன்.

இற்றெலா மளக்கர் கோமா னிசைத்துமெய் துளக்க மெய்தி
நிற்றலு நெடுவே லண்ண னீணகர் நணிய தன்மை
யொற்றரிற் சிலவர் காணு வோடின ரொல்லை சென்று
கொற்றவற் பணிந்து நின்றே யிவையிவை கூறலுற்றார்.

(இ-ள்.) இவைகளையெல்லாம் சமுத்திரராஜன்சொல்லி உடல் நடுக்கமடைந்து நின்றவுடனே, நெடியவேற்படையினையுடைய குமரக்கடவுள் பெரிய ஊரினருகிலே வந்திருப்பதைத் தூதுவர்களிற்சிலவர்பார்த்து விரைவாக ஓடிச்சென்று அரசனைவணங்கி எதிரில் நின்று இவைகளைக் கூறத்தொடங்கினார்கள்.—எ-று. (உச)

அராவணை யண்ணல் வேதா வரிமுத லமரர் சூழ
விராவுறு மிலக்கத் தொன்பான் வெலற்கரும் வீரர் போற்ற
விராயிரம் பூத வெள்ள மீண்டிட வெறிநீர்ச் சென்னிப்
பராபரன் மைந்த னந்தம் பதிவட திசையிற் போந்தான்.

(இ-ள்.) சர்ப்பசயனத்தினையுடைய நாராயணன் பிரமன் இந்திரன் முதலான தேவர்களெல்லாஞ் சூழ்ந்துவரும்வண்ணம் பரந்த ஒருலக்ஷத்து ஒன்பதுவீரர் கூட்டங்கள் துதிக்க, இரண்டாயிரம்வெள்ளம் பூதசைநியங்களுடன் வர, அலைவீசாநின்ற கங்கையையணிந்த தலையினையுடைய பராபரனுடைய பிள்ளையான குமரன் நம்முடையஊரின் வடக்குத்திக்கிலே வந்தான்.—எ-று. (உரு)

வடதிசை யதனிற் போந்து வானவர் புனைவற் கொண்டே
படிபுகழ் தகைமைத் தான பாசறை புரிவித் தாங்கே
புடைதனி னனிக மான பூதவெவ் வீரர் மேவ
நடுவணோர் நகரந் தன்னி னண்ணிவீற் றிருந்தா னன்றே.

(இ-ள்.) வடபுறத்தில் வந்து தேவதச்சனைக்கொண்டு உலகம்புகழத்தக்க தன்மையினையுடைத்தான ஒரு படைவீட்டைச்செய்வித்து அதனில் பக்கத்திற் சைநியங்களான வெவ்விய பூதவீரர்களிருக்க நடுவிலொருகோயிலிலிருந்தனன்.—எ-று.

கண்டன மிதனை யின்னே கடவது புரிதி யென்னுத்
திண்டிறல் வெய்ய தூதர் செப்பலு மதனைக் கேளா
வண்டமும் புவனம் யாவு மலமர வழலிற் சீறிப்
புண்டிகழ்ந் தனைய கண்ணு னிவையிவை புகல லுற்ருன்.

(இ-ள்.) நாங்களிதனைப்பார்த்து வந்தோம்; உன்னிஷ்டம்போலச் செய் என்று மிக்கவலிமையினையுடைய கொடியதூதர்கள் சொல்லுதலும், அதனைக்கேட்டு அண்டமும் எல்லாவுலகமும் சுழலத் தீயைப்போலக் கோபித்து புண்ணுடுவிளங்கினுற்போல காணப்படுகிற கண்களையுடைய சூரபன்மன் இவைகளைக்கூறத்தொடங்கினுன்.—எ-று.

வரவுகேள்விப்படலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – ௬௩.

---

# முதனுட்பானுகோபன்யுத்தப்படலம்

கோதை வேலுடைக் குமரன தாற்றலுங் கொற்றப்
பூத ராற்றலு மேனைய ராற்றலும் போர்செய்
தூத னுற்றலுந் தொலைக்குவன் றுண்ணென நீவி
ராத வன்றனிப் பகைஞனைக் கொணர்திரென் றறைந்தான்.

(இ-ள்.) ஒழுங்கான வேற்படையினையுடைய குமாரனுடைய வல்லமையும், பூதர்களுடைய வல்லமையும், மற்றுள்ளவர்களுடைய வல்லமையும், போர்புரிகின்ற தூதனுடைய வல்லபமும் கெடுப்பான், நீங்கள் விரைவாகச்சென்று சூரியனுக்கு நிகரற்ற பகைவனுன பாநுகோபனை அழைத்துக்கொண்டு வாருங்கள் என்று கூறினுன்.—எ-று.

ஆன காலையி னன்றெனத் தூதுவ ரகன்று
பானு கோபன திருக்கைபுக் கனையவற் பணிந்து
மேனி லைப்படு தந்தைதன் பணிவிடை விளம்ப
மான வாலரித் தவிசுவிட் டெழுந்தனன் மன்னே.

(இ-ள்.) அப்பொழுது நல்லதென்று தூதர்கள்சென்று பாநுகோபனுடைய வீட்டுக்குள்நுழைந்து அவனைவணங்கி,சிறந்தபதவியிலிருக்கின்றபிதாவின்கட்டளையைக் கூறுதலும்,பெரிய வெள்ளிய சிங்கங்களாற் சுமக்கப்படுகின்ற ஆசனத்தில் நின்றும் எழுந்தனன்.—எ-று. (உ)

தொல்லை மந்திரத் தலைவருஞ் சுற்றமா யினரு
மெல்லை தீர்தரு தானையந் தலைவர்கள் யாரு
மொல்லெ னப்புடை சூழ்ந்தன ருருமுகான் றென்னப்
பல்லி யங்களு மார்த்தன போர்த்தன பதாதி.

(இ-ள்.) பழையவர்களாகிய சிறந்த மந்திரிகளும்,சுற்றத்தினர்களாகவுள்ளவர்களும், அளவற்ற சேனைகளுக்கு அதிபர்களாகவுள்ளவர்க ளனைவர்களும் விரைவாகப் பக்கத்திலே சூழ்ந்துகொண்டார்கள். இடிஇடித்தாற்போல பலவித மேளங்கள் முழங்கின; சேனைகள் சூழ்ந்துகொண்டன.—எ-று. (ங)

அக்க ணத்தினி லிரவியம் பகைஞனே ரணித்தேர்
புக்கொ ராயிர கோடிவீ திகளோரீஇப் புடையிற்
றொக்க வீரரிற் கண்டுளார் வயின்வயின் றொழப்போய்
மிக்க தாதைதன் றிருநக ரடைந்தனன் விரைவின்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் பாநுகோபன் ஒரு அழகிய தேரின்மீதி லேறிக்கொண்டு ஓராயிரங்கோடி வீதிகளைத்தாண்டி பக்கத்திலே நெருங்கிவராநின்ற வீரர்களிலே கண்டவர்கள் இடங்கள்தோறும் இடங்கள்தோறும் வணங்கச்சென்று சிறந்த தனது தந்தை யிருக்கின்ற நகரத்தை விரைவாக அடைந்தனன்.—எ-று. (௪)

தேரி னின்றிழிந் தண்ணலங் கோயிலுட் சென்று
சூர பன்மனை யணுகியே யவனடி தொழுது
வீர வீரநீ யெனையிவண் விளித்ததென் னென்ன
வாரி ருங்கழன் மன்னவ னின்னன வகுப்பான்.

(இ-ள்.) தேரினின்று இறங்கி தெய்வீகமான அழகிய அரண்மனையையடைந்து சூரனிருக்கு மிடத்திற்குச்சென்று அவனுடைய கால்களை வணங்கி, வீராதிவீரனே! நீ என்னை இவ்விடத்திற்கழைத்தது என்ன காரியத்திற்காக என்று கேட்டலும், பெரிய வீரக்கழலணிந்த காலினையுடைய மன்னவனிவைகளைக் கூறுகின்றனன்.—எ-று. (௫)

முந்து தாரக வெம்பியை வரையொடு முடித்த
கந்த வேள்செந்தி நீங்கியே யளக்கரைக் கடந்து
நந்தி தன்கணத் தலைவரும் பூதரு நணுக
விந்த மாநகர் வடதிசை வாயில்வந் திறுத்தான்.

(இ-ள்.) முன்னே தாரகனாகிய எனது தம்பியைக்கொன்ற கந்தவேள் ஜயந்திபுரத்தைவிட்டுக் கடலைக்கடந்து நந்திகணத்தவர்களும் பூதர்களு முடன்வர சிறந்த இந்த வூரின் வடபுறத்தை அடைந்திருந்தனன்.—எ-று. (௬)

சிந்து போன்றல களந்திடு கள்வனுஞ் செயிர்தீர்
கந்த மாமலர்க் கடவுளு மென்பணி கடந்த
விந்தி ராதியர் யாவரும் பிறருமா யீண்டி
வந்து ளார்களா மறுமுக மதலைதன் மருங்கு.

(இ-ள்.) அறுமுகச்சிறுவனதருகு வாமனனைப்போல வந்து பின்னருலகத்தை யளந்த திருமாலும் குற்றமற்ற மணத்தினையுடைய தாமரைமலரிலிருக்கின்ற பிரமனும் எனது கட்டளைக்குமீறி நடக்கின்ற இந்திரன் முதலான எல்லாரும் மற்றுள்ளவர்களுமாக நெருங்கிவந்திருக்கின்றார்களாம்.—எ-று.

என்பணிகடந்தஎன்பதை - என்பணிகள் தந்த என்று ஆக்கி-எனதூழியங்களைச்செய்த எனினுமாம். (௭)

அளிய ராகிய வமரரு மரன்றரு மகவு
மொளிறு வாட்படை நந்திதன் கணத்தினுள் ளோருங்
களியின் மூழ்கிய பூதருங் கடிதுவந் தடைதற்
கெளிது பட்டதோ நன்றுநன் றினையமா நகரம்.

(இ-ள்.) ஏழைகளாகிய தேவர்களும், சிவன் பெற்ற குழந்தையும், ஒளிவீசாநின்ற வாட்படையினையுடைய நந்திகணத்தவர்களும், களிப்பின் மூழ்கிக்கிடக்கின்ற பூதர்களும் விரைவாகவந்து சேருதற்கு இந்தப் பெரிய நகரம் இலேசாக வாயிற்றோ! நல்லது நல்லது.—எ-று. (அ)

பின்னை தன்னுட னடுக்கலை மைந்தனைப் பிறரை
முன்ன மட்டிடு மாற்றலர் தங்களை முருக்கச்
சென்னெ றிக்கொடு போதலென் கடனவர் சிறியர்
மன்னர் மன்னன்யா னுதலி னிருந்தனன் வறிது.

(இ-ள்.) இளையவனுகிய தாரகனுடன் கிரவுஞ்சமலையையும், வச்சிரவாகுவாகிய மகனையும் முன்னேகொன்ற சத்துருக்களைக்கொல்ல, போகவேண்டிய மார்க்கத்துடன் போகவேண்டிய தென்னுடையகடமை ஆனுலும், என்பகைவர்களாக வந்திருக்கின்ற வர்கள் சிறியவர்கள்; நான் அரசர்க்கரசன்; ஆதலால் சும்மாவிருந்தேன்.—எ-று. (கூ)

அந்தண் மாமுகி லுயர்த்தவன் வேண்டலு மமலன்
றந்த கந்தனைச் சாரதத் தலைவர்க ளோடு
நந்த மைப்பொர விடுத்தன னதலி னுனு
மைந்த நிற்கொடு வென்றிபெற் றிருந்திடல் வழக்கே.

(இ-ள்.) அழகிய தண்ணிய மேகக்கொடியினையுடைய இந்திரன் வேண்டிக்கொள்ளுதலும், சிவன் தான்பெற்ற பிள்ளையை பூதத்தலைவர்களுடன் நம்மோடு போர்புரிதற்கனுப்பினன். ஆதலால், மகனே! நானும் உன்னைக்கொண்டு வெற்றியடைந்திருத்தலே முறைமை.—எ-று. (க0)

ஆத லாலினிப் படையொடு மமர்க்களத் தடைந்து
நாதன் மைந்தனை நந்திதன் கணத்துளார் தம்மைப்
பூதர் தங்களைப் பொருதழித் தடல்வயம் புனைந்து
காதன் மைந்தநீ மீடியா னம்முனங் கடிதின்.

(இ-ள்.) ஆகையினுலே, இனிச் சேனைகளுடனே போர்க்களத்தையடைந்து சிவகுமாரனையும், நந்திகணத்திலுள்ளவர்களையும், பூதர்களையும், போர்செய்து அழித்து வலிமையுடன் வெற்றியையும்பொருந்தி என்னுசைமகனே! நீ நம்மெதிரில் திரும்பி விரைந்துவருவாயாக.—எ-று. (கக)

வேறு.

என்றிவை சூர்முத லிசைப்பக் கேட்டலும்
பொன்றிகழ் தடம்புயம் பொருப்பிற் சேட்செல
வொன்றிய குமிழ்வடி வுடலம் போர்த்திட
நின்றிடு திருமக னிவைநி கழ்த்துவான்.

(இ-ள்.) எனவிவைகளைச் சூரனுகிய முதல்வன் கூறக்கேட்டவுடனே, பொன்னைப்போல விளங்குகின்ற பெரியதோள்கள் மலையைப்போல மேலேசெல்லவும், பொருந்தியவியர்வை அழகினையுடைய சரீரத்திலே மூடிக்கொள்ளவும் நின்ற பாநுகோபன் இவைகளைக் கூறுகின்றனன்.—எ-று. (கஉ)

இருளுறு மிடற்றின னேவு மைந்தனை
மருளுறு பூதரை மற்று ளார்தமை
வெருளுறு சமரிடை வென்று மீள்வதோர்
பொருளென நினைந்துகொல் புகன்றி யிற்றெலாம்.

(இ-ள்.) நீலகண்டத்தினையுடைய சிவனனுப்பிய பிள்ளையையும், மயக்கம்பொருந்திய பூதர்களையும், மற்றுள்ளவர்களையும் வெருட்சிபொருந்திய போரிலே வென்று திரும்பிவருதலை ஒருபொருளென்று கருதியோ இவைகளையெல்லாங் கூறுகின்றனை

பன்னுவ தென்னினிப் பரமன் கான்முளை
யிந்நகர் நணுகுமு னெதிர்ந்து போர்செய்வா
னென்னலே லினவின னீய தோர்ந்திலை
பின்னிது புகலுதல் பிழைய தாகுமால்.

(இ-ள்.) இனிச்சொல்லவேண்டுவதென்ன? சிவகுமாரன் இவ்வூருக்கு வருதற்குமுன்னே எதிர்த்துப் போர்புரியும்வண்ணம் நேற்றேகேட்டேன்; நீ யதனை யுணர்ந்தாயில்லை. அதைவிட்டு, இப்பொழுது இதனைக்கூறுதல் பிழையேயாம்.—எ-று. (கச)

படைப்பெருந் தொறுவொடும் படர்ந்து கந்தனை
யடுத்தனன் பேரம ராற்றி வென்றிகொண்
டிடுக்கணில் பூதரை யேனை யோருடன்
முடித்திவண் வருகுவன் முதல்வ காண்டிநீ.

(இ-ள்.) மிக்ககூட்டமான சைநியங்களுடன்சென்று, கந்தனை அடைந்து பெரிய போரினைச்செய்து வெற்றியடைந்து துன்பமடையாத பூதர்களை மற்றையவர்களுடன்கொன்று இங்குவருகின்றேன். மன்னவனே! அதனைக்காண்பாயாக.—எ-று. (கரு)

கந்தனை விறல்கொடே யவன்றன் கட்படு
செந்திரு மார்பனைத் திசைமு கத்தனை
யிந்திரக் கள்வனை யிமைப்பிற் பற்றிமுன்
றந்திடு கின்றனன் றகுவ செய்தியால்.

(இ-ள்.) கந்தனைவென்று அவனிடத்தில் வந்திருக்கின்ற அழகிய திருமகளுடைய கனையும், பிரமனையும், இந்திரனாகிய கள்வனையும், சீக்கிரமாகப்பிடித்து உன்னெதிரிலே கொண்டுவந்து விடுகின்றேன். நீ உன் இஷ்டப்போலச் செய்யக்கடவை.—எ-று. (கசு)

என்றிவை கூறியே யிறைஞ்ச மைந்தநீ
சென்றனை வருதியாற் றிறலி னோடென
நன்றென விடைகொடு நடந்து நன்கமை
பொன்றிகழ் தனதுதேர் புகுந்து போயினான்.

(இ-ள்.) என்று இவைகளைக்கூறி வணங்குதலும், சூரபன்மன் பானுகோபனைப்பார்த்து, மகனே! நீபோய் வெற்றியுடன் வருவாயாகவென்றுகூறினான். உடனே நல்லதென்று உத்தரவுபெற்றுக்கொண்டுசென்று நன்மைபொருந்திய பொன்னோடு விளங்குகின்ற தனது தேரிலேறிப் போயினான்.—எ-று. (கஎ)

தொல்லையிற் பரிசனம் புடையிற் சூழ்தரப்
பல்பதி னாயிரந் துணைவர் பாற்பட
வொல்லென வியம்பல வொலிப்ப வேகுறு
வெல்லையம் பகைதன திருக்கை யெய்தினான்.

(இ-ள்.) பழைய பரிசனங்கள் பக்கத்திற்சூழவும், பலபதினாயிரம் துணைவர்கள் அருகில் வரவும், ஒல்லென்று பலமேளங்கள் முழங்கவுஞ்சென்று பானுகோபன் தன்னுடைய இருப்பிடத்தை அடைந்தனன்.—எ-று. (கஅ)

பண்டியந் தேரினுந் தணந்து பாங்கரின்
மண்டுறு தூதரை வல்லை கண்ணுறீஇ
யெண்டரு நம்படை யாவு மிவ்விடை
கொண்டணை வீரெனக் கூறிப் போயினான்.

(இ-ள்.) பண்டிகளையுடைய தேரினின்றும் இறங்கி, பக்கத்தில் நெருங்கியிருக்கின்ற தூதர்களை விரைவாகப்பார்த்து, எண்பொருந்திய நமது சைநியங்களையெல்லாம் இவ்விடத்திற்குக் கொண்டுவாருங்களென்று கூறி உள்ளேசென்றனன்.—எ-று.

ஏயிரும் பரிசனர் யாரை யுந்நிறீஇ
மாயிருங் கலைமகள் வதிந்து வைகிய
வாயுத சாலையி னவுணர் கோன்மகன்
போயினன் றொழுதனன் பூசை யாற்றினான்.

(இ-ள்.) பொருந்திய பெரிய பரிவாரங்களையெல்லா நிறுத்தி, மிகவும் பெரிய வீரலட்சுமியானவள் எழுந்தருளியிருக்கிற ஆயுதசாலைக்குள் அசுரமன்னவனான பானுகோபன்சென்று (ஆயுதசாலையிலுள்ள துர்க்காதேவியை,) வணங்கிப்பூசித்தனன்,—எ-று.

கபிரவ நிறத்தபூங் கச்சு வீக்கினன்
வயிரவொள் வாளினை மருங்கு சேர்த்தினன்
வெயில்விடு பொன்றுகின் மீது சுற்றினன்
றுயிலறு மமரரைத் துளக்கங் கண்டுளான்.

(இ-ள்.) தூக்கமற்றவர்களாகிய தேவர்களை நடுங்கச்செய்தவனாகிய பாநுகோபன், வெள்ளல்லிமலர்போன்ற நிறத்தினையுடைய அழகியகச்சினையிடையிற்கட்டி, வயிரத்தாற்செய்யப்பட்ட ஒள்ளிய வாளினை இடையிற்கட்டினன். ஒளிவீசாநின்ற பீதாம்பரத்தை அதன்மீது கட்டினன்.—எ-று. (உக)

செல்லிடை யுருமெனத் தெழிக்கு நோன்கழல்
கல்லென வரற்றிடக் கழலிற் பூட்டினன்
வல்லிதிற் சாலிகை மருமஞ் சேர்த்தினன்
சொல்லினு நிவந்தெழு தூண்செய் தோளினன்.

(இ-ள்.) பேசும்பொழுதும் நிமிர்ந்து விளங்குகின்ற தோள்களையுடைய பாநுகோபன், மேகத்தினிடத்திலுள்ள இடியைப்போல முழங்காநின்ற பெரிய வீரக்கழலை கல்லென்றொலிக்கும் வண்ணம் காலிற்கட்டினன். அன்றியும், விரைவாக கவசத்தை மார்பில் அணிந்தனன்.—எ-று. (உஉ)

கோதையை யங்கையிற் கொளுவிச் சுற்றினன்
போதுற ழங்குலி புட்டி ருங்கினன்
சோதிகொள் சரம்படு தூணி யைச்சுவன்
மீதுற வீக்கினன் விறலின் மேலையோன்.

(இ-ள்.) வெற்றியில்மிக்க பானுகோபன், கோதையை முன்கையிற்கட்டினன். பூவினையொத்த விரல்களில் விரலுறைகளையிட்டான். ஒளிபொருந்திய அம்புகளைவைக்கின்ற தூணியைப் பிடரியின்மீது கட்டினன்.—எ-று (உங)

வெம்பெரு நுதன்மிசை விசயப் பாலதாஞ்
செம்பொனின் பட்டிகை திகழச் சேர்த்தினன்
பம்புறு மணிகலம் பலவுந் தாங்கினன்
றும்பையஞ் சிகழிகை மவுலி சூட்டினன்.

(இ-ள்) வெவ்விய பெரிய நெற்றியின்மீது வெற்றியைக் குறித்தணிகின்ற செவ்விய பொன்பட்டத்தை விளங்கும்படி தரித்தனன். நெருங்கிய தரிக்கத்தக்க பல ஆபரணங்களையும் தரித்தனன். மகுடத்தில் தும்பமலர்மாலையைத் தரித்தனன்.—எ-று.

வடித்ததோர் பெருஞ்சிலை வயமுண் டாகவென்
றெடுத்தனன் விடுத்திடின் யாவர் தம்மையும்
படுத்திடு மோகமாம் படையொன் றேந்தினா
னடுத்திடு செறுநர்தம் மாற்ற லுன்னலான்.

(இ-ள்.) வந்திருக்கின்ற பகைவர்களுடைய வீரத்தின் வல்லமையை எண்ணாதவனாகிய பானுகோபன், இருபுறமும்கூராக்கப்பட்டுள்ள ஒரு பெரிய வில்லினை வெற்றியுண்டாகுகவென்று கூறிக் கையில் எடுத்தனன். விட்டால் எப்படிப்பட்டவர்களையும் கொல்லப்பட்ட பெரிய ஒரு மோகனாஸ்திரத்தையும் எடுத்துக்கொண்டனன்..—எ-று.

ஆனதோர் போரணி யணிந்து வாய்தலிற்
பானுவின் மாற்றலன் படர முன்னரே
போனதோர் தூதுவ ரெழுதிர் போர்க்கெனத்
தானையோ டெழுந்தனர் தகுவர் யாவரும்.

(இ-ள்.) இவ்வாறாகிய ஒப்பற்ற போரலங்காரத்தை அலங்கரித்துக்கொண்டு வாசலில் பானுகோபன் வருதலும், முன்னமேசென்ற தூதுவர்கள் போருக்குப்பிரயாணமாகுகவென்று கூற, உடன் அசுரர்களெல்லாம் சைநியங்களுடன் போர்க்கோலங் கொண்டு பிரயாணமாயினர்.—எ-று. (உசு)

வேறு.

விசைய னேமியன் மிகுந்திறன் மாயன்
முசலி கண்டகன் முரன்கரன் மூர்க்கன்
றசமுகன் கனலி சண்டன் விசண்ட
னசமுகன் மகிட னக்கிர் வாகு.

(இ-ள்.) விஜயன், நேமியன், மிகுந்த சாமர்த்தியத்தினையுடைய மாயன், முசலி, கண்டகன், முரன், கரன், மூர்க்கன், தசமுகன், கனலி, சண்டன், விசண்டன், அசமுகன், மகிடன், அக்கிரவாகு.—எ-று. (உஎ)

விசைய சேனன்விட சேனன் விமோகன்
வசைகொள் சோமகன் மதுச்சசி சித்துச்
சுசிமு கன்னசனி சூனிய கேது
வசுர சேனனிவ ராதிய ரானோர்.

(இ-ள்.) விஜயசேனன், விடசேனன், விமோகன், நீதிக்கு விரோதமான காரியங்களைச் செய்கின்றதினாலே யாவர்களாலும் இகழப்படுகின்ற வசைமொழியைக் கொண்டுள்ளவனாகிய சோமகன், மது, சசிசித்து, சுசிமுகன், அசனி, சூனியகேது, அசுரசேனன், இவர்கள்முதலானவர்களும்.—எ-று. (உஅ)

தடுக்கொ ணாவகை தடிந்திடு தெய்வப்
படைக்க லங்களவை பற்பல பற்றா
வுடைத்த வன்மையுட னெய்யென வந்தார்
கிடைத்த தோவமரெனக்கிளர் கின்றார்.

(இ-ள்.) கிடைத்ததோ சண்டை எனப்பூரிப்பவர்கள் தடுக்கக்கூடாத வண்ணமாக எதிரிகளைக் கொல்லுகின்ற தெய்வீகம் பொருந்திய பலவகை ஆயுதங்களைப் பிடித்துக்கொண்டு வல்லமையுள்ளவர்களாய் விரைவாக வந்தார்கள்.—எ-று. (உகூ)

ஆன காலைபதி னாயிர வெள்ளந்
தான வப்படைஞர் சார்புதொ றேகி
மீன வேலைகளும் வெள்குற வார்த்து
மான வத்தலைவர் மாடுற வந்தார்.

(இ-ள்.) அப்பொழுது பதினாயிரம்வெள்ளம் அசுரசைனியங்கள் இடங்கள்தோறும் சென்று, மீன்களையுடைய கடல்களும் வெட்கம் அடையும்வண்ணம் ஆரவாரித்துக்கொண்டு தங்கள் பெரிய தலைவர்களின் பக்கத்தில் வந்தார்கள்.—எ-று. (௩0)

கோல வார்சிலை கொடுங்கதை நீடுஞ்
சூல நேமியயி றோமர மீட்டி
யாலம் வாள்கணை யமாரெழு நாஞ்சில்
கால பாசமிவை கைக்கொடு சென்றார்.

(இ-ள்.) அழகிய பெரியவில்லுகள், கொடியகதைகள், நீண்ட சூலங்கள், சக்கரங்கள், வேல்கள், தோமரங்கள், ஈட்டிகள், மழுக்கள், வாள்கள், கணையங்கள், கூரியவெழுக்கள், கலப்பைகள், காலபாசங்கள் முதலியவைகளைக் கையிற்கொண்டுசென்றார்கள்.—எ-று. (௩க)

கந்து கத்தொகை கடங்கலுழ் கைம்மா
வெந்தி ரத்திரத மீங்கிவை மூன்று
மைந்தொ கைப்படுமி ராயிர வெள்ளந்
தந்தி ரத்தலைவர் தம்புடை சூழ்ந்த.

(இ-ள்.) குதிரைக்கூட்டங்கள், மதநீரை யொழுக்காநின்ற யானைக்கூட்டங்கள், சக்கரங்களையுடைய தேர்கள்முதலிய இவைகள் மூவகைகளும் பதினாயிரம் வெள்ளங்களாக சேனைத்தலைவர்களின் பக்கங்களில் சூழ்ந்துவந்தன.—எ-று. (௬௨)

ஐந்து நான்குடைய வாயிர வெள்ளத்
திந்த நாற்படையு மீண்டுபு செல்ல
மைந்தி னேற்றமிகு மானவர் தத்தஞ்
சிந்தை போற்கடிது சென்றன ரம்மா.

(இ-ள்.) இருபதினாயிரம் வெள்ளமாகிய இந்த சதுரங்கசேனைகளும் நெருங்கினவைகளாக செல்லாநிற்க, வலிமையில் மிக்கவர்களாகிய சேனைத்தலைவர்கள் தங்கள் மனம்போல விரைவாகச்சென்றார்கள்.—எ-று (௬௩)

சென்ற காவலர்கள் சேனையி னோடு
மென்ற வன்பகைஞ னெய்துழி நண்ணி
யொன்ற வங்கைதொழு தொல்லென வார்த்துத்
துன்றி வந்துபுடை சூழ்ந்தன ரன்றே.

(இ-ள்.) செல்லாநின்ற சேனாநாயகர்கள் சைநியங்களுடனே, சூரியனுடைய பகைவனாகிய பானுகோபனிருக்கின்றவிடத்திற்சென்று, விரைவாக அகங்கைகளைக்குவித்து வணங்கி ஒல்லென்று ஆரவாரித்து நெருங்கிவந்து அவனருகிற் சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (௬௪)

இரவி தன்பகைஞ னீங்கிவை காணா
வொருத னேவலனை யொல்லையி னோக்கித்
திருமை பெற்றதொரு தேரினை வல்லே
தருக வென்னவினி தென்று தணந்தான்.

(இ-ள்.) சூரியனுடைய பகைவனாகிய பானுகோபன், சேனைகளும் சேனாநாயகர்களும் வந்துவணங்கி நிற்றலைக்கண்டு, தனது ஒரு ஏவலாளனை விரைவாகப்பார்த்து திருமகள்விலாசம்பொருந்திய நமதுதேரினை விரைவாகக்கொண்டு வரக்கடவை என்றுகூறினான்; உடனே அவனும் அவ்வாறே செய்கின்றேனென்றுகூறி அங்குநின்றுஞ்சென்றான்.

செப்பு மத்தொழில்சி ரங்கொடு சென்றே
மெய்ப்ப டைக்கருவி மேவுழி நண்ணி
முப்ப தாயிர முரட்பரி பூண்ட
வொப்பி லாவிரத மொன்றினை யுய்த்தான்.

(இ-ள்.) (பானுகோபன்)கூறிய அக்கட்டளையைத் தலையிற்றாங்கிச்சென்று, அப்பானுகோபனுடைய உடற்காவற்குரிய கருவிப்படைகள் இருக்குமிடத்தை யடைந்து முப்பதினாயிரம் குதிரைகள்கட்டப்பட்டதாய் ஒப்பற்றதாயுள்ள ஒருதேரினைக் கொண்டுவந்தனன்.—எ-று. (௬௬)

உய்த்த தேரினுத யக்கிரி வாவு
மொய்த்த வெங்கதிரின் மொய்ம்பொடு பாய்ந்தான்
மெத்து பேரனிக வெள்ள மியாவு
மத்து ணைப்பொழுதி னார்த்தன வன்றே.

(இ-ள்.) கொண்டுவந்து நிறுத்தியதேரின்மீது, உதயகிரியின் மீதேறுகின்ற நெருங்கிய உஷ்ணகிரணங்களையுடைய சூரியனைப்போல, வலிமையுடன் குதித்தேறினான். அந்தச்சமயத்தில் மிகுதியாகவந்துள்ள அவனது பெரிய சைனியங்களெல்லாம் ஆரவாரித்தன.—எ-று. (கூஎ)

உரத்த கந்திக ளோராயிர கோடி
பெருத்து நீண்டசைவு பெற்றிடு பாளை
விரித்து நீட்டியென வெவ்வசு ரேசர்
கரத்தி னெண்ணில்கவ ரித்தொகை வீச.

(இ-ள்.) பலமான பாக்குமரங்கள் ஒரு ஆயிரங்கோடி பெருத்து நீண்டு அசைகின்ற பாளைகளைவிரித்து நீட்டினாற்போல, கொடிய அசுரர்களின் கரங்களில் அளவற்ற சாய்மரங்களை எடுத்துக்கொண்டு விசிறவும்.—எ-று. (கூஅ)

மற்ற வன்றனது மாசிருண் மேனி
யுற்றி டற்கருமை யாலவ னெஞ்சிர்
சுற்றி மீதுலவு தோற்றம தென்னக்
கற்றை வெண்குடைகள் காவல ரேந்த.

(இ-ள்.) அப்பானுகோபனது ஒள்ளியபுகழானது அவனுடைய கரிய இருண்மயமான வடிவத்தில் இருத்தற்குக் கஷ்டமாயிருந்ததால், மேலே சுற்றி சூழ்ந்துக்கொண்ட தோற்றத்தைப்போல, கூட்டமான வெள்ளிய குடைகளை அரசர்கள் மேலே பிடிக்கவும்.—எ-று. (கூகூ)

அடைப்பை கோடிக மடுஞ்சுட ரொள்வாள்
கடிக்கொள் பீலிகவி னுற்ற களாசித்
தொடக்க மேந்திமுறை சுற்றி யனந்தம்
படைப்பெ ருந்தலைவர் பாங்கொடு போற்ற.

(இ-ள்.) அடப்பைகள், பூந்தட்டுகள், இயற்றுநின்ற தீபங்கள், வொள்ளியவாள்கள், ஒளிபொருந்திய மயிற்பீலிகள், அழகுபொருந்திய காளாஞ்சிகள் இவைமுதலானவைகளை கைகளிலே தாங்கிக்கொண்டு வரிசைவரிசையாகச் சுற்றிக்கொண்டு அளவற்ற பெரிய படைத்தலைவர்கள் ஒழுங்குடன் துதிக்கவும்.—எ-று. (சூ0)

எழில்செ றிந்தவிர தத்திடை வைகு
மழலின் வெங்கதிரை யாற்றமு னிந்தோ
னுழைய ரிற்பலரை யொய்யென நோக்கி
விழுமி தோர்மொழி விளம்புத லுற்றான்.

(இ-ள்.) நெருங்கிய அழிகிய இரத்தத்தின்மீது இருக்கின்ற உஷ்ணகிரணத்தினையுடைய வெவ்விய சூரியனை மிகவும் கோபித்தவனாகிய பானுகோபன், தன்னூழியர்களில் அநேகர்களை விரைவாகப்பார்த்து சிறப்பினையுடைய ஒரு வசனத்தைச் சொல்லினான்.—எ-று. (சூக)

காமர் வெம்படை கணிப்பில கொண்ட
சேம மாகியமர் தேரொரு கோடி
யேம மோடுகொணர் வீரென லோடுந்
தாம வேலுழையர் தாழ்ந்தனர் சென்றார்.

(இ-ள்) அழகிய வெவ்விய ஆயுதங்களை அளவற்றனவாகக்கொண்டுள்ள ஒரு கோடி க்ஷேமத்தேர்களை மகிழ்வுடன் கொண்டுவாருங்களென்று கூறுதலும், ஒளிபொருந்திய வேற்படையினையுடைய அவ்வூழியர்கள் வணங்கிச்சென்றார்கள்.—எ-று. (சூஉ)

அண்ட ரும்படை யளப்பில வுய்த்துத்
திண்டி றற்கெழுமு தேரொரு கோடி
கொண்டு வந்துழையர் கொற்றவன் மைந்தற்
கெண்டி சைப்புறமு மீண்டுறு வித்தார்.

(இ-ள்.) அடைதற்கரிய ஆயுதங்களை அளவற்றனவாக வாரி நிறைத்து வலிமையுடன் கொண்டுவந்து ஒருகோடி தேர்களை ஊழியர்கள் அரசனாகிய சூரபன்மனுடைய பிள்ளையாகிய பானுகோபனது எட்டுத்திக்குகளிலும் நெருங்க நிறுத்திவைத்தார்கள்.

ஆண்ட கைக்குமர னன்னது காலை
மாண்ட சீர்வலவன் மாமுக நோக்கிப்
பாண்டின் மாத்தொகுதி பண்ணின வித்தேர்
தூண்டு கந்தனமர் சூழலி னென்றான்.

(இ-ள்.) ஆண்டன்மையிற்சிறந்த அப்பானுகோபன், அப்பொழுது மாட்சிமையான சிறப்பினையுடைய சாரதியின் முகத்தைப்பார்த்து, சக்கரங்களையும் குதிரைகளையும் உடையனவாக அலங்கரித்துள்ளவிந்தத்தேரை கந்தனிருக்கின்ற இடத்திற்கு ஓட்டிக்கொண்டு போகக்கடவை என்று கூறினான்.—எ-று. (சச)

என்ன லும்விழுமி தேயென முட்கோன்
மன்னு மத்திகையின் வன்றொழில் காட்டித்
துன்னு வாம்பரவி யின்றொகை தூண்டிப்
பொன்னந் தேர்கடவி னான்புகழ் வெய்யோன்.

(இ-ள்.) பானுகோபன் இவ்வாறு கூறியவுடனே, தேரோட்டுவதில் புகழடைந்தவனாகிய கொடிய அந்த சாரதியானவன் நல்லதென்று முட்கோலினையுடைய மத்திகையின் தொழிலாகிய அடித்தலைச்செய்து, தாவுகின்ற நெருங்கிய அக்குதிரைக்கூட்டங்களை எச்சரித்து பொன்மயமான தேரினை ஓட்டினான்.—எ-று. (சரு)

வெய்ய வன்றனைவி யன்சிறை யிட்ட
கைய னேகவது கண்டு புறஞ்சூழ்
மையன் மாலவுண மாப்படை யாவு
மொய்யெ னப்பெரிது லம்பின வன்றே.

(இ-ள்.) சூரியனைப் பெரிய சிறையிலிட்ட கீழ்மகனாகிய பானுகோபன் போதலும், அதைக்கண்டு அவனைச்சுற்றிலும் சூழ்ந்திருந்த மயக்கம்பொருந்திய பெரிய அசுர சைநியங்களெல்லாம் விரைவாக மிகவும் ஆரவாரித்தன.—எ-று. (சசு)

எழுந்த தானவ ரிகற்படை வெள்ள
மெழுந்த தேர்நிரை யெழுந்தன கைம்மா
வெழுந்த வாசிக ளெழுந்தன வோதை
யெழுந்த கேதன மெழுந்தன பூழி.

(இ-ள்.) அசுரர்களாகிய வலிமையினையுடைய சேனாவெள்ளங்கள் சென்றன. தேர்வரிசைகளும்சென்றன. யானைகளும் சென்றன. குதிரைகளும்சென்றன. இவைகளின் செல்லுகையினால் ஆரவாரமுண்டாயின. கொடிகளை மேலே தூக்கப்பட்டன. புழுதிகள் கிளம்பின.—எ-று. (சஎ)

அறைந்த பேரிகை யறைந்தன சங்க
மறைந்த காகள மறைந்தன திண்கோ
டறைந்த சல்லிகை யறைந்த தடாரி
யறைந்த தண்ணுமை யறைந்தன தக்கை.

(இ-ள்.) பேரிகைகள் அடிக்கப்பட்டன. சங்குகள் ஊதப்பட்டன. காகளங்கள் ஊதப்பட்டன. திண்ணிய கொம்புகள் ஊதப்பட்டன. சல்லிகைகள் ஊதப்பட்டன. தடாரிகள் அடிக்கப்பட்டன. தண்ணுமைகள் அடிக்கப்பட்டன. தக்கைகள் அடிக்கப்பட்டன.—எ-று. (சஅ)

ஆர்த்த தேர்த்தொகுதி யார்த்தன வாசி
யார்த்த தந்திநிரை யார்த்தனர் வெய்யோ
ரார்த்த வாற்றுவச மார்த்தன கண்டை
யார்த்த தார்நிரைக ளார்த்தது மூதூர்.

(இ-ள்.) தேர்க்கூட்டங்கள் ஓடுதலால் ஆரவாரித்தன. குதிரைகள் கனைத்தன. வரிசையாகச் செல்லுகின்ற யானைக்கூட்டங்கள் கர்ச்சித்தன. கொடியர்களாகிய அசுரர்கள் ஆரவாரித்தார்கள். கொடிகள் அசைதலினால் ஆர்த்தன. மணிகள் முழங்கின. மாலைகள் அசைந்து சலித்தன. அவ்வூரும் ஆரவாரித்தது.—எ-று. (சக)

அதிர்ந்த மாநில மலைந்தன நாக
முதிர்ந்த தாரகை யுலைந்தனர் தேவர்
விதிர்ந்த மேகநிரை விண்டது மேருப்
பிதிர்ந்து போயின பிறங்கல்க ளேழும்.

(இ-ள்.) பெரிய பூமி அதிர்ந்தன. நாகங்கள் அசைந்தன. நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன. தேவர்கள் நடுங்கினார்கள். மேகவரிசைகள் விதிர் விதிர்த்தன. மேருமலை பிளந்துபோயது. மற்றைய மலைகள் ஏழும் பிதிர்ந்து போயின.—எ-று. (ரு௦)

ஊழி யாள்மதலை யோங்கு படைப்பே
ராழி யோடுற வருக்கன் வெருண்டே
பூழி வான்முகடு போர்த்தெழல் காணு
வாழி யென்றதின் மறைந்து படர்ந்தான்.

(இ-ள்.) கற்பகாலமிருக்கின்ற சூரபன்மனுடைய பிள்ளையாகிய பானுகோபன் மிகுந்த சைநியமாகிய கடலுடனே பிரயாணமாதலும், அதனைக்கண்டு பயந்து சூரியன் பூழியானது அண்டமுகட்டை மூடிக்கொண்டு மேலே எழுதலைப்பார்த்து, நீ வாழ்வாயாகவென்று கூறி யப்புழுதிக்குள் மறைந்து சென்றனன்.—எ-று. (ருக)

வாழி மாநகர் வளைந்திடு தொல்பே
ராழி யாங்கடை யவப்படை யாகிச்
சூழும் வேலையிடை தோன்றி யுலாவும்
பூழி தூர்த்துளது பூதர்க ளேபோல்.

(இ-ள்.) அந்தப்பெரிய பழைய ஊரைச்சூழ்ந்துள்ள கடல்முழுமையும், அந்த சைநியங்களாகச் சூழ்ந்துள்ள கடலிலே தோன்றியுலாவின. புழுதியானது முன்னே பூதர்கள் தூர்த்தாற்போல தூர்த்தது.—எ-று. (ருஉ)

விட்ட சோதிநிமிர் விண்மிசை தாக்கப்
பட்டு லாவரு பதாகையி னீட்டம்
வட்ட வானமெனும் வான்பட கத்தைக்
கொட்டு மண்மகள் குலாவுகை போலும்.

(இ-ள்.) ஒளிவிடாநின்ற சூரியனுலாவும் ஆகாயத்திலே பட்டு அசைகின்ற கொடிக்கூட்டங்கள் வட்டமான ஆகாயமென்கின்ற பெரிய படகத்தைக் கொட்டுகின்ற பூமிதேவியினுடைய விளங்குகின்ற கைகளை யொத்துநிற்கும்.—எ-று. (ருங)

தாழும் வீரர்படை தம்மி னுரிஞ்சப்
பாழி வெங்கனல் பரந்த பதாகைச்
சூழல் வானநதி தோய்ந்தசை காலை
வீழு மாலிகளின் வீழ்ந்திடு கின்ற.

(இ-ள்.) வீரருடைய வளைந்த ஆயுதங்க ளொன்றோடொன்று உரைந்தவுடனே மிகுதியான வெவ்விய தீப்பொறிகள் பரந்தன; (அகன்று அசைகின்ற) கொடிக்கூட்டங்கள் ஆகாயநதியினிடத்தையடைந்து அதில் மூழ்கி அசைகின்ற சமயத்தில், வீழாநின்ற மழைத்துளிகளைப்போல, நீர்த்துளிகளைச் சிதறுகின்றன.—எ-று. (ருச)

வான மோடியன மால்கரி தள்ளுந்
தான மோடின சரங்களி னோடி
மீன மோடுதிரை வேலையி னோடுங்
கான மோடின களிற்றின மென்ன.

(இ-ள்.) காட்டிலோடாநின்ற யானைக்கூட்டங்களைப்போல, மழைபெய்தாற் போல வொழுகாநின்ற மதநீரினையுடையனவாய் பெரியயானைகள், அம்பு வேகமாகச் சென்று மீன்களுலாவாநின்ற கடலிலோடாநிற்கும்.—எ-று. (ருரு)

செப்பு தற்கரிய சேணகர் தன்னிற்
றுப்பு மிக்கெழுவு தொல்படை வெள்ள
மிப்பு றத்துநெறி யின்றியவ் வானத்
தப்பு றத்தினு மளப்பில சென்ற.

(இ-ள்.) சொல்லுதற்கரிய அகலமு நீளமுமுடையதாகிய அம்மகேந்திரபுரியில் மிக்கவன்மையுடன் எழுந்த சேனைவெள்ளங்கள் இப்பூமியில் வழியில்லாமல் அவ்வாகாயத்தின் மேற்புறத்திலும் அளவற்றனவாகச்சென்றன.—எ-று. (ருசு)

மறந்த ருங்கதிரை வன்சிறை செய்தோன்
செறிந்த தானையுட னிவ்வகை செல்ல
விறந்த சீர்நகரி னித்திற மெல்லா
மறிந்து நாரத னகன்றிடு கின்றான்.

(இ-ள்.) உஷ்ணகுணத்தைத் தராநின்ற கிரணங்களையுடைய சூரியனைக் கொடிய சிறையிலடைத்தவனாகிய பானுகோபனென்பவன், நெருங்கிய சைனியங்களுடன் இவ்வண்ணமாகச்செல்லுதலும், சிறப்புதங்கிய அந்நகரத்தினின்று இவைகளனைத்தையும் உணர்ந்து, நாரதமுனிவன்செல்லுகின்றனன்.—எ-று. (ருஎ)

வான மேனெறி வழிக்கொடு பூதர்
மேன பாசறை வியன்பதி யுட்போய்
ஞான வாலறிவி னாரதன் விண்ணோர்
சேனை காவல னமர்ந்துழி சென்றான்.

(இ-ள்.) ஆகாயமாகிய மேல்வழியை வழியாகக்கொண்டு சென்று பூதர்கள் வாசஞ்செய்கின்ற சிறந்த பாசறையினையுடைய புகழத்தக்க ஏமகூட நகரத்துட்சென்று தூய்மையான ஞானவுணர்ச்சியினையுடைய நாரதமுனிவன் தேவர்களாகிய சைனியங்களுக் கதிபதியாகவுள்ள குமரக்கடவுள் எழுந்தருளியிருக்கின்ற விடத்திற்குச் சென்றனன்.—எ-று. (ருஅ)

சிந்து ரப்பகை சிரத்தவி சுற்ற
கந்த வேளிரு கழற்றுணை காணுப்

புந்தி நாரொடு புகழ்ந்து வணங்கி
யெந்தை கேட்கவென வின்ன துரைப்பான்.

(இ-ள்.) சிங்கங்களின் தலைகளாற்சுமக்கப்பட்ட ஆசனத்திலெழுந்தருளி யிருக்கின்ற குமரக்கடவுளின் உபயபாதங்களையும் தரிசித்து உள்ளன்புடன் புகழ்ந்து வணங்கி, எம்பெருமானே ! கேட்பீராகவென்று இவைகளைக் கூறுவானாயினன்.—எ-று. ()

பூத சேனையொடு பொள்ளென வேகி
யாதி நீயிவ ணமர்ந்தன யாவுந்
தூதர் கூறவுயர் சூரபன் மாவென்
றோது தீயவ னுணர்ந்து வெகுண்டான்.

(இ-ள்.) ஆதிமூர்த்தியே! தேவரீர் பூதசேனைகளுடன் விரைந்துவந்து இவ்விடத்திலெழுந்தருளியிருத்தல் முதலியனவாகிய வெல்லாவற்றையும் தூதர்கள் கூறக் கேட்டுணர்ந்து சூரபன்மாவென்னுங் கொடியவன் கோபங்கொண்டனன்.—எ-று. (சுO)

நிகண்ட முற்பக னெடுங்கதி ரோன்பா
லுகண்ட தன்மகனை யொல்லை விளித்தே
யகண்ட சேனையொடு மன்பில னின்மேல்
வெகுண்டு போர்செய விடுத்தன னம்மா.

(இ-ள்.) நெடுநாளைக்குமுன்னே நீளமான கதிர்களையுடைய சூரியன்மீது தாவின தன்மகனான பாநுகோபனை விரைவாகவழைத்து, மிகுதியான சைநியங்களுடன் இரக்கமற்ற சூரபன்மன் கோபங்கொண்டு (எம்பெருமானே) தேவரீர்மீது போர்புரியுமாறு அனுப்பியிருக்கின்றனன்.—எ-று. (சுக)

விடுத்த காலையவன் வெஞ்சம ராற்றற்
கடுத்த கோலமொ டளப்பில வான
கடற்பெ ரும்படை கலந்துட னேகத்
தடுப்ப ரும்வெகுளி தன்னொடும் வந்தான்.

(இ-ள்.) தந்தையாகிய சூரபன்மனால் அனுப்பப்பட்டவுடனே மைந்தனாகிய பாநுகோபன், கொடிய போர்புரிதற்கு தகுந்த கோலத்துடன் அளவில்லாதனவாகிய கடல்போன்ற பெரியசைநியங்கள்கலந்து உடன்வர, தடுத்தற்குக்கூடாதகோபத்துடன் வந்தனன்.—எ-று. (சுஉ)

இவனு டன்சமரி னேற்பவர் நீயுஞ்
சிவனு மன்றியெவர் தேவரி னுள்ளா
ரவனை வெல்வதரி தாகுமு னோர்நாட்
புவனி யுண்டவர் புறந்தர வென்றான்.

(இ-ள்.) இப்பானுகோபனுடன் எதிர்த்து நின்று போர்புரியத்தக்கவர் தேவரீரும் சிவபெருமானுமேயல்லாமல் தேவர்கூட்டத்துள் வேறேயாவரிருக்கிறார்கள்? அப்பானுகோபனை வெல்வது அருமையானகாரியம். முன்னொருகாலத்திலே உலகங்களையுண்ட திருமாலொடு போர்புரிந்து அவரை புறமுதுகுகாட்டி ஓடும்வண்ணஞ் செய்து சயம்பெற்றவன்.—எ-று. (சுங)

கணாயி லாவமர் கடந்திசை கொண்டான்
வரைவி லாதபல மாயைகள் வல்லா
னுரக வேந்தினு முரம்பெரி துள்ளான்
பிரம னீந்திடு பெரும்படை பெற்றான்.

(இ-ள்.) அளவற்றனவாகவுள்ள போரையெலாஞ் சயித்து, அதனுற் கீர்த்திபெற்றுள்ளவன்; கணக்குக்குள் அடங்காத பல மாயவித்தைகளைச்செய்யவல்லவன்; பூமியைச்சுமக்கின்ற சர்ப்பராஜனுகிய ஆதிசேடனைவிட அதிகமான வலிமையினையுடையவன்; பிரமதேவனுல் அளிக்கப்பட்ட பெரிய ஆயுதங்களைப் பெற்றிருக்கின்றவன்.

அறைக டற்கிறைவ னங்கைகொள் பாச
மறலி தன்பாசு வவ்வின்ன் மாயோன்
விறலி னேமிகொள வேண்டலன்முன்னஞ்
சிறிய தந்தையணி குற்ற சிறப்பால்.

(இ-ள்.) கரைகளை யலைகளான்மோதுகின்ற கடல்களுக்கிறைவனுகிய வருணனுடைய அழகிய கையில் பிடிக்கப்பட்டிருந்த பாசமும் எமனுடைய கண்டகோடரியும் அபகரித்துக்கொண்டனன்; (இவன்) திருமாலின் சக்கரத்தை தனதுசிறிய தந்தையான தாரகாசுரன் ஆபரணமாகவணிந்துகொண்டுள்ள சிறப்பினுல் திருமாலினுடைய வெற்றியினையுடைய சக்கரத்தை வாங்கிக்கொள்ளும்பொருட்டு அத்திருமாலை கொடு என்று கேட்டானில்லை.—எ-று. (சுரு)

ஆகை யாலவனை யாள்கொடு வல்லே
வாகை கொண்டிட லு மற்றரி தம்மா
பாகு பட்டபடை பாங்குற நீயே
யேகல் வேண்டுமெட வென்று பகர்ந்தான்.

(இ-ள்.) இப்படிப்பட்ட காரணங்களினுலே அப்பானுகோபனை உமது ஆட்களிலெவராயாவதுகொண்டு, வெற்றியடைதலும் மிகவுங்கஷ்டம்; அதனுல் அவனைக் கொல்லுதற்குத் தேவரீரோ, பகுக்கப்பட்ட சைநியங்கள் அருகில்வரச் செல்லுதல்வேண்டும் என்று நாரதன் கூறினுன்.—எ-று. (சுசு)

நார தன்னிவை நவின்றிடு காலை
மூர லெய்திமுரு கன்புடை நின்ற
வீர வாகுவை விளித்தருள் செய்து
சீரி தாவினைய் செப்புத லுற்ருன்.

(இ-ள்.) நாரதமுனிவன் இவைகளைக்கூறுகின்ற சமயத்தில், சிரிப்புடன் குமரக்கடவுள் தமதருகில்நின்ற வீரவாகுதேவரையழைத்துத் திருவருள் புரிந்து சிறப்புடனே இப்படிப்பட்ட வசனங்களைத் திருவாய்மலர்ந்தருளுவாராயினுர்.—எ-று. (சுஎ)

ஈண்டு பூதரொ டியாம்வரு தன்மை
யாண்டு சூரனுணர்ந் தந்நகர் தன்னின்
மாண்ட தானையுடன் மைந்தனை நம்மேற்
றூண்டி னனமர் தொடங்கிய மன்னே.

(இ-ள்.) இவ்விடத்திற்கு பூதசைனியங்களுடன் நாம்வந்துள்ள தன்மையை அவ்விடத்திலிருக்கின்ற சூரபன்மன் அறிந்து அவ்வூரிலே மாட்சிமையுடனிருந்த சைநியங்களுடன் தன்மகனுகிய பானுகோபனை நம்மீது போர்புரியும்பொருட்டு அனுப்பியிருக்கின்ருன்.—எ-று. (சுஅ)

எள்ளு தற்கரிய வெண்மரி லக்க
ருள்ள பேர்களு மொராயிர பூத
வெள்ள மும்புடையின் மேவர நீபோய்
பொள்ளெ னப்புரிசை யின்புடை சூழ்தி.

(இ-ள்.) இகழ்தற்குக்கூடாத எட்டுவீரர்களும், மற்றுள்ள இலக்கம்வீரர்களும், ஒரு ஆயிரம்வெள்ளம் பூதசைனியங்களும் அருகிற் சூழ்ந்துவர நீ சென்று, விரைவாக அவன் நகரத்தின் மதிலின்புறத்தை சூழ்ந்துகொள்ளக்கடவை.(முற்றுகைபோட்டுக்கொள்ளக்கடவை).—எ-று. (சுக)

சென்று முன்கடை சிதைத்தனை யங்ஙன்
கன்றி நேரவுணர் காவலன் மைந்தன்
சென்று சேனைக டொலைத்தம ராற்றி
வென்றி கொண்டவனை மீளுதி யென்றான்.

(இ-ள்.) முற்றுகையிட்டபின்னர், அம்மகேந்திராபுரியின் தலைவாசலையழித்து, அவ்விடத்தில் கோபித்துக்கொண்டு எதிர்க்கின்ற அசுரமன்னவனாகிய சூரபன்மனுடைய சிரேட்டபுத்திரனாகிய பாநுகோபனுடைய சைநியங்களைக்கொன்று, அப்பாநுகோபனுடன் போர்புரிந்து அவனையும்வென்று திரும்பிவருவாயாக வென்று திருவாய்மலர்தருளினர்.—எ-று. (எ0)

ஈரும் வேன்முருக னிவ்வகை கூறி
வீர வாகுவை விடுத்திளை யோரைச்
சார தத்தலைவர் தம்முட னேவி
நார தற்கிது நவின்றருள் செய்வான்.

(இ-ள்.) பகைவர்களைப் பிளக்கின்ற வேற்படையினையுடைய குமரக்கடவுள் இவ்வண்ணந்திருவாய்மலர்ந்து வீரவாகுதேவரையனுப்பினபின்னர், இளையவர்களாகிய வீரகேசரிமுதலியவர்களையும் பூதசேனாதிபதிகளுடன் அனுப்பி, பின்னர் நாரதமுனிவனுக்கு இதனை திருவாய்மலர்ந்தருளுகின்றனர்.—எ-று. (எக)

கேட்டி யான்முனிவ கேழ்கிளர் சிம்புட்
கூட்ட மீதுசில கோளரி மேவின்
வாட்ட வல்லனகொ னாய்குவ தல்லாற்
காட்டு வாமுடிவு காண்டிய தென்றான்.

(இ-ள்.) நாரதமுனியே! கேட்பாயாக, நிறம்விளங்குகின்ற சிம்புட்பட்சி (சரபப் பக்ஷி)களின் கூட்டத்தின்மீது சில சிங்கங்கள் செல்லுமானால் சாதலையடைதலையன்றி சரபங்களைக் கொல்லத்தக்கனவோ ? அதனைப்போல இதன்முடிவைக் காட்டுகின்றோம் நீ பார் என்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று. (எஉ)

குமர னல்குவிடை கொண்டு படர்ந்தே
விமல வாலுணர்வின் மேதகு வீரன்
சிமைய மேருநிகர் திண்சிலை யொன்றை
யமரர் கோன்புகழ வங்கை பிடித்தான்.

(இ-ள்.) குமரக்கடவுளினால் அளிக்கப்பட்ட திருவருளைப்பெற்றுக்கொண்டு சென்று, நிருமலமான நல்ல தூய்மையான ஞானத்திற்சிறந்த வீரவாகுதேவர், கொடுமுடிகளையுடைய மகாமேருவையொத்த அழுத்தமான வொருவில்லினை இந்திரன் புகழும் வண்ணம் அழகியகையிலே பிடித்தனர்.—எ-று. (எங)

வீக்கி னன்கவசம் வெந்நிடை தன்னிற்
றாக்கி னன்பகழி பெய்திடு தூணி
நீக்க மில்விரலி னீடுகை தன்னிற்
றாக்கு கோதையொடு புட்டி றரித்தான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் கவசமணிந்து, பிடரியில் அம்புகளையிடுகின்ற தூணியைக்கட்டி, நீக்கமில்லாத விரலிலும் நீண்டகையிலும் கனமான தோற்கட்டுகளுடன் விரலுறைகளையுந் தரித்தனர். (எசு)

சேம வெம்படை செறிந்திடு வைய
மாம ருங்கினில் வரம்பில செல்லத்
தோமில் வீரமிகு தோளின னங்கோ
ரேம மாமிரத மேறினன் மாதோ.

(இ-ள்.) வெவ்விய வாயுதங்களை நிரம்பவைத்துள்ள சேமத்தேர்கள் பக்கங்களிலளவற்றனவாகச்செல்ல, குற்றமற்ற வீரம்பொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் அவ்விடத்தில் ஒருபொன்மயமான தேரின்மீது ஏறினர்.—எ-று. (எரு)

எட்டு வீரரு மிலக்கரு மேனை
மட்டில் பூதகண மன்னரு மாக
வொட்டி யாடம ருருக்கொடு கொண்மூ
முட்டு தேர்த்தொகையின் மொய்ம்பொடு புக்கார்.

(இ-ள்.) எட்டுவீரர்களும், இலக்கம்வீரர்களும், இன்னுமுள்ள அளவற்ற பூதசேனாதிபர்களும் எதிர்த்துப்போர்புரிகின்றதற்கேற்ற கோலத்துடன் மேகமண்டலத்தை யளாவுகின்ற தேர்க்கூட்டங்களில் வலிமையுட னேறினார்கள்.—எ-று. (எசு)

தேரின் மேற்படு சிறப்புடை வீரர்
வீர வாகுவை விரைந்தயல் சூழ்ந்தார்
நேரி லாயிர நெடுங்கதி ரொன்றைச்
சூரர் தந்தொகுதி சுற்றிய வாபோல்.

(இ-ள்.) தேரின்மீதிருக்கின்ற சிறப்புப்பொருந்திய வீரர்கள் விரைவாகவந்து வீரவாகுதேவருடைய பக்கத்தில் ஒப்பற்ற நீளமான ஆயிரகிரணங்களையுடைய ஒரு சூரியனை, மற்றுள்ள சூரியர் கூட்டத்தினர் சூழ்ந்துகொண்டாற்போல சூழ்ந்துநின்றார்கள்.

விரசி யேயமர் விளைத்திட வெஞ்சூ
ரரசன் மாநகரி னாயிர வெள்ளம்
பரிச னங்கள்படர் மின்கடி தென்னா
முரச றைந்தனர்க ளாயிடை மொய்ம்போர்.

(இ-ள்.) வெவ்விய சூரனாகிய அரசனுடைய பெரிய நகரத்திலே, நெருங்கிப் போர்செய்யும்வண்ணம், விரைவாக ஆயிரம்வெள்ளம் சைனியங்கள் செல்லுங்களென்று, அவ்விடத்தில் பூதவீரர்கள் பறைசாற்றினார்கள்.—எ-று. (எஅ)

அறைந்த காலைதனி லாயிர வெள்ள
நிறைந்த பூதர்நெடு வேன்முரு கன்பாற்
செறிந்து போற்றியிட வேனையர் சென்றா
ருறைந்த வார்கலி யுடைந்தது போல.

(இ-ள்.) பறைசாற்றப்பட்டவுடனே, நிறைந்த ஆயிரம்வெள்ளமான பூதசேனைகள் நீண்டவேலினையுடைய குமரக்கடவுளிடத்திற்காவலாக நெருங்கிநிற்க, மற்றையவாயிரம்வெள்ளம் போர்வீரர்கள் கடலுடைந்தாற்போல சென்றார்கள்.—எ-று. (எகூ)

அருத்தி யிற்படரு மாயிர வெள்ளக்
கிருத்தி மத்தவர் கிளர்ந்திடு தீப்போ
லுருத்து வேலையி னொலித்துய ரூழி
மருத்தின் வன்மைகொடு வந்திடு கின்றார்.

(இ-ள்.) போரிலாசையுடனே செல்லுகின்ற ஆயிரம்வெள்ளமான பூதங்கள், விளங்காநின்ற தீயைப்போல சீறி, கடலைப்போல ஆரவாரித்து உயர்ந்தபிரளயகாலவாயுவினுடைய வேகவல்லமையுடனே வருகின்றனர்.—எ-று. (௮0)

பைய ராவிறை பரித்திடு கின்ற
வையம் யாவையுமோர் வாகுவின் வைக்குங்
கையர் காலனை யடுந்தறு கண்ணர்
வெய்ய ரானவர்கள் யாரிலும் வெய்யோர்.

(இ-ள்.) இப்பூதர்கள் எப்படிப்பட்டவர்களென்றால், படத்தோடுகூடிய நாகராஜனாற்சுமக்கப்படுகின்ற உலகத்தையெல்லாம் தோளிலே எடுத்துவைக்கின்ற கையினையுடையவர்கள்; காலனையுங்கொல்லுகின்ற அஞ்சாமையினையுடையவர்கள்; வெவ்விய தன்மையுள்ளவர்களுக்குள் சிறந்தவெவ்விய தன்மையினையுடையவர்கள்.—எ-று. (௮௧)

அரத்த வேணிய ரடும்படை யேந்துங்
கரத்தர் வெங்கழல் கலித்திடு தாளர்
வரத்தின் மேதகையர் மாயை கடந்தோ
ருரத்தி னண்டமு முடைத்திட வல்லோர்.

(இ-ள்.) இரத்தம்போன்ற சடையினையுடையவர்கள்; கொல்லத்தக்க ஆயுதங்களைச் சுமந்துகொண்டிருக்கிற கைகளையுடையவர்கள்; வெவ்விய வீரகண்டைமுழங்குகின்ற காலினையுடையவர்கள்; வரத்திலே சிறந்தவர்கள்; மாயாசாலங்களை வென்றவர்கள்; வலிமையுடன் அண்டத்தையும் உடைத்தற்கு வல்லவர்கள்.—எ-று. (௮௨)

இனைய தன்மையினி லீண்டிய பூத
ரனைவ ருஞ்செல வவர்க்கிறை யானோர்
தனது தொல்லிளைஞர் தம்மொடு சென்றான்
வனைக ருங்கழல் வயம்புனை வாகு.

(இ-ள்.) இப்படிப்பட்ட தன்மையிலே நெருங்கிய பூதசேனைகளெல்லாம் போக அவர்களுக்கு இறைவர்களாக வுள்ளவர்களும் தமது பழய இளையவர்களுமாகிய இவர்களுடன் கட்டப்பட்ட பெரிய வீரக்கழலினையுடைய வெற்றிபொருந்திய வீரவாகுதேவர் சென்றனர்.—எ-று. (௮௩)

செல்ல லுந்திமிலை செல்லுறழ் பேரி
கல்லெ னுங்கரடி காகள மாம்பல்
சல்ல ரிப்பறை தடாரி யுடுக்கை
பல்லி யம்பிற முழங்கின பாங்கர்.

(இ-ள்.) சேனைக ளிவ்வாறு செல்லுதலும், திமிலைகளும், மேகங்குமிறினாற்போல வொலிக்கின்ற பேரிகைகளும், கல்லென்றொலிக்கின்ற கரடிகைப்பறைகளும், காகளங்களும், கோணைக்கொம்புகளும், சல்லரிப்பறைகளும், பம்பைகளும், உடுக்கைகளும் முதலான மேளவாத்தியங்கள் பக்கங்களில் முழங்கின.—எ-று. (௮௪)

மாறில் சேனையிடை வந்தெழு பூழி
நீறு பூசிமுடி நீடிய கங்கை
யாறு தோய்ந்தகல் விசும்பிடை யாடி
யேறுகொண்ட கொடி யீசனை யொப்ப.

(இ-ள்.) பின்முதுகைப் பகைவர்களுக்குக் காட்டாத சைனியங்களின்நடுவிற்றோன்றுகின்ற புழுதி, விபூதியைத் தரித்த சிவபெருமானுடைய திருச்சடையின்மீது

மிகுதியாகவிருந்த கங்கையாற்றிலே முழுகி பெரியஆகாயத்திலே அசைந்து இடபசித் திரமெழுதப்பட்ட கொடியினையுடைய பரமேசுவரனையொத்தது.—எ-று. (அரு)

பாய சாரதர் படைக்கு ளெழுந்தே
யாய பூழியவு ணப்படை தன்னிற்
சேய பூழியொடு சேர்வன தாமுன்
போயெ திர்ந்தமர் புரிந்திடு மாபோல்.

(இ-ள்.) பரவிய பூதசைநியங்களின் புடைபெயர்ச்சியில் நின்றுந்தோன்றின புழுதி தாம் முன்னேசென்று போர்புரிதலைப்போல அசுர சைநியங்களினின்றுண்டான செவ்விய புழுதியுடனே கலக்கின்றன.—எ-று. (அசு)

பான்மை யின்னன படைப்புற வெண்ணில்
சேனை வெள்ளமொடு திண்டிறல் வாகு
தூந லந்தவறு சூருறை மூதூர்
வானு லாம்புரிசை மாடுற வந்தான்.

(இ-ள்.) இத்தன்மையான விடயங்கள்தோன்ற, அளவற்ற சேனைவெள்ளங்களு டன் திண்ணிய திறலினையுடைய வீரவாகுதேவர் தூய்மையான நல்லொழுக்கத்தினின் றுந்தவறிய சூரபன்மனிருக்கின்ற பெரியஊரின் ஆகாயத்தை யளாவிய மதிலின் அருகி ல் வந்தனர்.—எ-று. (அஎ)

வேறு.

ஆனதொர் காலையி னதனை நோக்குறீஇத்
தானவ ரொருசிலர் தரிப்பின் றேடியே
சேனையங் கடலினைத் தீர்ந்து வல்லைபோய்ப்
பானுவின் பகைஞனைப் பணிந்து கூறுவார்.

(இ-ள்.) அவ்வாறுன சமயத்திலதனைப்பார்த்து சிலவசுரர்கள் மனந்தாளமலோ டிச்சென்று சேனுசமுத்திரத்தைக் கடந்து விரைந்து போய் சூரியனுக்குப் பகைவனுக வுள்ள பாநுகோபனை வணங்கிச்சொல்லுகின்றூர்கள்.—எ-று. (அஅ)

மாயிருந் தானைகண் மருங்கு சூழ்ந்திட
நீயமர் செய்வரு நிலைமை நாடியே
வேயென முந்திவண் மேயி னுன்றனை
யேயினன் குமரவே ளிகழ்ச்சி யீதென்றூர்.

(இ-ள்.) மிகவும்பெரிய சைனியங்கள் பக்கத்திலே சூழ்ந்துவர நீபோர்புரிதற் குவருகின்ற தன்மையை ஆலோசித்து, குமரவேள் விரைவில் முன்னே இங்கே தூது வனுகவந்தவனுகிய வீரவாகுவை அனுப்பியிருக்கின்றுன் இது நடந்தவிஷயம்.—எ-று.

மற்றிவை யவுணர்கோன் மதலை கேட்டலுங்
கற்றையங் கதிர்மணிக் கடகக் கையினை
யெற்றினன் முறுவல்செய் தெயிறு தீயுகச்
செற்றமொ டுயிர்த்திவை செப்பன் மேயினுன்.

(இ-ள்.) இந்த வசனங்களை அசுரமன்னவனுகிய சூரபன்மனுடைய பிள்ளையா கிய பாநுகோபன் கேட்டவுடனே, கூட்டமான வொளிவீசுகின்ற கடகமணிந்த கையி னை மற்றொருகையுட னடித்துச்சிரித்து பற்களில் தீப்பொறிபறக்க கோபத்துடன் பெ ருமூச்சுவிட்டுக்கொண்டு இவைகளைக் கூறத்தொடங்கினுன்.—எ-று. (கூ0)

இருந்திடு பாலனை யென்னெ டேபொர
விரைந்தெதிர் தூதனை வியன்ப தாதியாய்ப்

பொருந்திய பூதரைப் போர்க்க ளத்தியான்
றுரந்திடு கின்றனன் றெலைந்து போகவே.

(இ-ள்.) பாசறையிலிருக்கின்ற குமரனையும் என்னுடன் போர்செய்தற்கு விரைவாக எதிர்த்து வந்திருக்கின்ற தூதனையும் பெரிய சைனியங்களாகப் பொருந்திய பூதர்களையும் போர்க்களத்திலே தொலைந்துபோகுவண்ணம் துரத்துகின்றேன்.

அந்தர வரைப்பினி லாசை யெட்டினின்
வந்திடு மளக்கரின் மற்றை நேமியிற்
சந்தனு மொற்றனுங் கணங்கள் யாவருஞ்
சிந்தினர் வெருவியே திரியக் காண்பனால்.

(இ-ள்.) ஆகாயப் பிரதேசங்களிலும், அட்டதிக்குகளிலும், வராநின்ற கடலிலும், மற்றுள்ள பூமிகளிலும், கந்தனும் அவன்தூதனும் மற்றையவெல்லாக்கணங்களும் பயந்து சிதறியுலாவுமாறு செய்குவேன்.—எ-று. (கூஉ)

புன்மைய ராகிய பூதர் சேனையும்
வன்மையி றாதனு மழலைப் பிள்ளையுந்
தொன்மிட லொருவியே தொலைந்து போகினு
மென்மன வெகுளியு மேகற் பாலதோ.

(இ-ள்.) இழிந்தவர்களாகவுள்ள பூதசைனியங்களும், வலிமையில்லாத தூதனும், இளமையினையுடையவனாகிய குமரனும் பெரிய வல்லபமிழந்து தோற்று ஓடினாலும் என்மனத்திலுண்டான கோபமானது அகலத்தக்கதோ?—எ-று. (கூங)

விடுகில னவர்தமை மேலை யேழ்பெருங்
கடறிசை முழுவதுங் கடந்து செல்லினும்
புடையது சுற்றியே போக்கு றுதிவட்
கொடுவரு கின்றனன் குறுகிப் பற்றியே.

(இ-ள்.) நான் அவர்களைவிடமாட்டேன்; உயர்ந்த ஏழானபெரிய கடல்களையுந் திசைகளையுமெல்லாங் கடந்துசென்றாலும், அவர்களுடைய பக்கத்திலே சூழ்ந்து அவர்களைப் போகவொட்டாமல் போய்ப்பிடித்து இங்கேகொண்டுவருகின்றேன்.—எ-று. ()

மேவலி லவர்தமை மேலை நம்பெருங்
காவலன் முன்புறக் காட்டி யிவ்விடைத்
தேவர்க டம்மொடுஞ் சிறையில் வீட்டுவ
னேவரு மெனதுசீ ரிறைஞ்சி யேத்தவே.

(இ-ள்.) பகைவர்களாகவுள்ள இவர்களைப்பின்னர் நமது பெரிய அரசனெதிரிலே கொண்டுசென்று காட்டி, இங்கு சிறையிற் கிடக்கின்ற தேவர்களுடனே, யாவர்களும் எனது சிறப்பினை வணங்கித்துதிக்கும் வண்ணம் சிறையிலடைப்பேன்.—எ-று.()

என்றிவை பற்பல விசைத்துச் சூர்மகன்
கன்றிய மனத்தொடு கடிது சேறலுந்
துன்றிய வவுணர்தந் தொகுமுன் போயின
பொன்றிகழ் வடமதிற் புதவு நீங்கியே.

(இ-ள்.) என இவ்வாறு அநேகவிதமாகக்கூறிப் பானுகோபன் கோபம்பொருந்திய மனத்தினுடனே விரைவாகச்செல்லுதலும், அவனுடன் நெருங்கிவந்த அசுரகூட்டங்கள் பொன்மயமாக விளங்குகின்ற வடபுறத்து மதிலின் கதவைக் கடந்து முன்னே சென்றன.—எ-று. (கூசு)

ஆனதோர் காலையி னடையும் பூதவெஞ்
சேனையி னாற்றலுந் திறலுங் கண்ணுறீஇத்
தானவர் கூறுவார் சமர்கண் டோடிய
வானவ ரன்றிவர் வலியர் போலுமால்.

(இ-ள்.) அப்படிப்பட்ட சமயத்தில் எதிரேவருகின்ற வெவ்விய பூதசைநியங்களின் வன்மையும் வெற்றியும்பார்த்து, அசுரர்கள் கூறுகின்றார்கள்; இவர்கள் போனாக் கண்டு பயந்து ஓடின தேவர்களல்லர் இவர்கள் வல்லமையுள்ளவர்கள்போலும்.—எ-று.

போலும்-அனுமான சந்தேகப்பொருளைக் காட்டுமோ ரிசைநிறையசைச்சொல்.

என்னினு மிங்கிவ ரெம்மொ டேபொரும்
வன்மையு முடையரோ வரம்பில் குன்றெலாம்
பொன்மலை யதனொடு பொருவ தேயினு
மின்மினி கதிரினும் விளங்க வல்லதோ.

(இ-ள்.) ஆனாலும் இவ்விடத்திலிவர்கள், எம்முடனே போர்செய்கின்ற வல்லபத்தினையும் உடையவர்களோ? அளவில்லாத மலைகளனைத்தும் (ஒன்றாகச்சேர்ந்து வந்தாலும்) மேருமலையுடனே போர்புரிதற்குத் தக்கதோ? இல்லை; அன்றியும் மின்மினிப் பூச்சி ஒளியுள்ளதாகவிருந்தாலும் சூரியனைக்காட்டிலும் பிரகாசிக்குமோ? பிரகாசியா.

என்றிவை போல்வன விணையி ரானவ
ரொன்றல பலபல வுரைத்து வெஞ்சினங்
கன்றிய வழல்விழிக் கணத்தின் சேனைநேர்
சென்றனர் தெழித்தனர் சிலைத்த பல்லியம்.

(இ-ள்.) என, இவைகளைப்போன்ற வநேகவசனங்களை யொப்பற்ற வசுரர்கள் ஒன்றல்லாத பலவாகக்கூறி வெவ்வியகோபத்தினாற் கன்றுதலடைந்த வழல்கின்றவிழியினையுடைய பூதசேனைகளினெதிரிற்சென்று கர்ச்சித்தார்கள்; உடனே பலவகை வாத்தியங்கள் முழங்கின.—எ-று. (கூகூ)

வயிர்த்திடு பூதர்கண் மறலி யென்றுல
கயிர்த்திடு மவுணரை நோக்கி யம்புவி
யுயிர்த்தொகை யலைத்தவ ருவர்கொ லோவெனுச்
செயிர்த்தன ரிடித்தனர் தீயின் வெம்மையார்.

(இ-ள்.) பகைத்தவர்களாகவுள்ள பூதர்கள் எமனென்று உலகத்தவர்கள் சந்தேகிக்கத்தக்க அசுரர்களைப் பார்த்து அழகிய உலகத்திலுள்ள உயிர்க்கூட்டங்களைத் துன்பப்படுத்தினவர்கள் இவர்கள்தானோ? என்று கோபங்கொண்டு தீயையொத்த வெம்மையுடையவர்களாய் (அசுரர்களை) இடித்தார்கள்.—எ-று. (௩௦௦)

கரையறு தானவர் தாமுங் காய்கனல்
புரைதரு சூர்விழிப் பூத வீரரு
மொருவரி னொருவர்போ ருடன்று சேறலா
னிருவகை யனிகமு மிகலி னேற்றவே.

(இ-ள்.) அளவற்றவர்களாகவுள்ள அசுரர்களும், காய்கின்ற தீயினையொத்த கண்களையுடைய பூதவீரர்களும் ஒருவரோடொருவர் போர்செய்து நெருங்கியதனாலே இருவகையான சைனியங்களும் பகைத்தனவாக வெதிர்த்தன.—எ-று. (௩௦௧)

தந்தியின் கரங்களிற் றண்ட மீந்திடா
வந்தெதிர் தெம்முனை மாய்ந்து விடுறச்

சிந்துதி யெனுங்குறி செப்பிப் பூதர்மே
லுந்தினர் மிசை யுலப்பி ருனவர்.

(இ-ள்.) யானைகளின்மேலேயிருக்கின்ற அளவற்ற வசுரர்கள் அவ்வியானைகளின் தும்பிக்கைகளில், தண்டங்களைக்கொடுத்து, உன்னெதிரிலே வந்தெதிர்க்கின்ற சத்துருசைநியங்கள் அழிந்தொழியும்வண்ணம் அடிக்கக்கடவையென்று குறிப்புமொழிகளாலே கூறி பூதர்கள்மீது விட்டார்கள்.—எ-று. (௧0௨)

பகைத்திடு பூதர்கள் பலரு நாடியே
திகைத்திவை யாவெனச் சிந்தித் தையுறத்
தகைத்தடந் தாளவை தரையின் பாற்படா
துகைத்தனர் பரியெனு மோத வேலையே.

(இ-ள்.) சிலவசுரர்கள், பகைத்தவர்களாகவுள்ள பூதர்களெல்லாம் பார்த்துத் திகைத்து இவைகளென்னையென்று நினைத்துச் சந்தேகிக்கும்வண்ணம் தகுந்தபெரிய கால்கள் பூமியிற்படாமல் ஓடும்வண்ணம் குதிரைகளென்னும் அலைகளையுடைய கடல்களை ஓட்டினார்கள்.—எ-று. (௧0௩)

காரிடைச் சென்றெனக் களிற்றி னுந்திரை
நீரிடைச் சென்றென நீடு மாவினும்
போரிடைச் சென்றனர் புறத்துப் போற்றியே
தேரிடைச் சென்றனர் வரையிற் சென்றென.

(இ-ள்.) சிலவசுரர்கள்,போர்முகத்தில் மேகத்தின்மீதுசென்றாற்போல யானையின்மீதும், திரைகளாகிய வெள்ளத்தின்மீது சென்றாற்போல நீண்டகுதிரைகளிலும், மலைகளின்மீதேறிச் சென்றாற்போல தேர்களின்மீதும் ஏறிக்கொண்டு வெளிகளிற் சுற்றிச்சென்றார்கள்.—எ-று. (௧0௪)

அடுகரி நிரையினை யாடன் மாக்களைத்
தடநெடுந் தேர்களைத் தணப்பி லாவகை
கடலினை வளைந்திடு கரைய தாமெனப்
புடைதனிற் சுற்றியே புவியி னேகினார்.

(இ-ள்.) சிலவசுரர்கள், கொலைத்தொழிலினையுடைய யானைகளையும், வெற்றியினையுடைய குதிரைகளையும், விசாலமான நெடியதேர்களையும், நீங்காதவண்ணங் கடலினைச் சூழ்ந்துள்ள கரையைப்போல சுற்றிலுஞ் சூழச்செய்துகொண்டு பூமியிலேசென்றார்கள்.—எ-று. (௧0௫)

அத்திற மெதிர்ந்திடு மவுணர் பூதர்மேன்
முத்தலை வேற்படை முசுண்டி தோமரஞ்
சத்தியொ டெழுமழுத் தண்ட மேமுத
லெத்திறப் படைகளு மெடுத்து வீசினார்.

(இ-ள்.) அவ்வண்ணமெதிர்த்துள்ள வசுரர்கள், பூதர்கள்மீது மூன்றுதலைகளையுடைய வேலாயுதங்களையும் முசுண்டிகளையும், தோமரங்களையும், சத்திகளையும், மழுக்களையும், தண்டங்கள்முதலிய எவ்விதமான ஆயுதங்களையுமெடுத்தெறிந்தார்கள்.-எ-று.

கரங்கொடு பெரும்படைக் கலங்கள் யாவையும்
பரங்கொடு வீசிய பதக ருட்கிட
மரங்கொடு மெழுக்கொடும் வரைகொ டுந்தம்
துரங்கொடும் வீசின ருலைவில் பூதரே.

(இ-ள்.) கைகளால் பெரியவாயுதங்களனைத்தையும், மிருதியாகக்கொண்டெறிந்த கீழ்மக்களான அசுரர்களஞ்சும்வண்ணம், கெடாதபூதர்கள் மரத்தைக்கொண்டும், எழுவைக்கொண்டும் மலையைக்கொண்டும் தமதுமார்பினைக்கொண்டும் சிதறவடித்தார்கள்.—எ-று. (கOஎ)

வேறு.

செறிந்து நேர்ந்து செருச்செயு மெல்லையி
னிறந்த தானவ ரெண்ணில ராவிபோய்த்
தறிந்த தாளுந் தலையுங் கழலுமாய்
மறிந்த சாரத ரும்வரம் பில்லையால்.

(இ-ள்.) நெருங்கிச்சென்று போர்செய்கின்ற சமயத்தில் பிராணனொழிந்து இறந்த அசுரர்கள் அநேகம்; பிராணனொழிந்து தறிக்கப்பட்ட கால்களும் தலைகளும் கழல்களும் உடையவர்களாய் இறந்துவிழுந்த பூதர்களுக்கும் கணக்கில்லை.—எ-று. ()

மாண்ட சாரதர் யாக்கையு மண்மிசை
வீண்ட தானவர் மெய்களுஞ் செங்களம்
யாண்டு மாகி யிருங்கரை போலுற
நீண்ட நேமியி னின்றது சோரிநீர்.

(இ-ள்.) இறந்தபூதர்களின் உடம்பும், பூமியில்விழுந்த அசுரர்களின்சரீரங்களும், போர்க்களத்தி னெவ்விடங்களிலுமாகிப் பெரியகரையைப்போலவாக, (அதனடுவில் பெரியகடலைப்போல இரத்தவெள்ளம் நின்றது.—எ-று. (கOக)

விரவு பூதர் வெகுண்டுசென் றுன்னல
ரிரத மோடிர தங்களை யெற்றினர்
கரிக ளாற்கரி யின்றொகை காதினர்
பரிக ளோடு பரிகளை மோதினர்.

(இ-ள்.) நெருங்கியபூதர்கள் கோபத்துடன்சென்று சத்துருக்களின்தேர்களையெடுத்துத் தேர்களின்மீதெறிந்துடைத்தனர். யானைகளைவாரி யானைகளின்மீது எறிந்து யானைக்கூட்டங்களைக்கொன்றார்கள். குதிரைகளைவாரிக் குதிரைகளின்மீது மோதினார்கள்.—எ-று. (ககO)

ஆளை யாள்கொண் டடர்த்தன ராங்கவர்
தோளை யேதம தோள்கொடு தாக்கினார்
தாளி னலவர் தந்தலை சிந்தினார்
கோள ரித்தொகை மானடுங் கொள்கையார்.

(இ-ள்.) சிங்கக்கூட்டங்கள் மான்கூட்டங்களைக் கொல்லுந்தன்மையினைப்போன்ற தன்மையினையுடையவர்கள். ஆட்களை ஆட்களாலேயே கொன்றார்கள். எதிரிகளின்தோள்களையே தங்கள்தோளைக்கொண்டு இடித்தார்கள். அன்றியும், கால்களினாலேயும் அவர்கள்தலைகளைச்சிந்தினார்கள்.—எ-று. (ககக)

எற்ற சாரத ரெற்றிடத் தானவ
ரூற்ற மின்றி யுடைதலு மவ்வழிக்
காற்றொ டங்கி கலந்தன்ன காட்சியா
னூற்ற லாள னனலிகண் டானரோ.

(இ-ள்.) எதிர்த்தபூதர்கள் அடிக்க அசுரர்கள் தைரியமின்றி பின்னிட்டோடுதலும், அவ்விடத்தில் காற்றுடனே தீயுங்கலந்தாற்போன்ற தோற்றத்தினையுடையவனும் மிக்க வலிமையுடையவனுமாகிய அனலியென்பவ னதனைக் கண்டனன்.—எ-று. (ககஉ)

கையின் மேயின கார்முக மொன்றுதன்
மொய்யின் வாங்கி முரண்கெழு நாணொலி
செய்ய லோடுமத் தேவர் வெருக்கொளா
வைய கோவென் றலக்கணுற் றாரரோ.

(இ-ள்.) கையிற்பொருந்திய ஒருவில்லினை தனதுவலிமையால் வளைத்து, வலியொடுவிளங்குகின்ற நாணோசையைக்காட்டுதலும், அதற்கத்தேவர்கள் பயந்து ஐயகோவென்று கூவி வருந்தினார்கள்.—எ-று. (ககங)

நாரி யார்ப்பு நணுகலு நாற்படை
மூரி யார்ப்பு முகிலிடை யார்ப்பெனும்
பேரி யார்ப்பும் பிறங்கு பெருங்கடல்
வாரி யார்ப்புந் தம் வாய்மடிந் திட்டவே.

(இ-ள்.) வின்னாணியினோசை யுண்டாதலும், சதுரங்கசேனைகளின் பெரிய ஆரவாரமும் மேகத்தின்முழங்குவதென்று கூறத்தக்க பேரிகையினார்ப்பும், விளங்காநின்ற பெரியகடலாகிய வெள்ளத்தினாரவாரமும் தமது வாயடங்கின.—எ-று. (ககச)

கொற்ற வில்லிற் கொடுங்கனல் வெங்கணை
முற்று மாரியின் முத்திறந் தூண்டலுஞ்
செற்று பூதர்த மொய்ம்பினுட் சென்றன
புற்றி னூடு புகுந்திடு பாந்தள்போல்.

(இ-ள்.) வெற்றிபொருந்தியவில்லிலே கொடிய தீப்பொறிபறக்கின்ற வெவ்விய அம்புகளை முதிர்ந்த மழையைவிட மும்மடியதிகமாகவிடுதலும், அவைகள் புற்றிற் பிரவேசிக்கின்ற சர்ப்பத்தைப்போல பூதர்கள்தோளைத் துளைத்துக்கொண்டுள்ளே சென்றன.—எ-று. (ககரு)

அங்கி மாப்படை யேவலு மவ்வழிச்
சிங்க னென்னுந் திறல்கெழு சாரத
னெங்க னுய்தி யிறந்தனை யீண்டெனாப்
பொங்கு சீற்றம் புகுந்தனன் புந்தியேல்.

(இ-ள்.) பெரிய வக்கினியாஸ்திரத்தை விடுதலும், உடனே வெற்றியொடு விளங்குகின்ற பூதசேனாதிபனாகிய சிங்கனென்பவன், நீயெவ்விடத்திற் பிழைக்கப் போகின்றனை இங்கேயே இறந்தாயென்று மனதில் மிக்ககோபத்தையடைந்தனன்.

நேர்கொண் டார்த்து நெடுந்தகை தீயவன்
றேர்கொண் டார்க்குந் திறற்பரிச் சேக்கையிற்
பார்கொண் டார்ப்பப் பரூஉத்தடக் கைதனிற்
றார்கொண் டார்த்திடுந் தண்டினிற் சாடினான்.

(இ-ள்.) உயர்ந்ததன்மையினையுடைய சிங்கன் அனலியினெதிரே ஆரவாரித்துக் கொண்டுசென்று அக்கொடியவனது தேரிற்கட்டப்பட்டுக் கனைக்கின்ற வெற்றிபொருந்திய குதிரைகள் படுக்கையிடத்தைப்போல தரையிற்கிடந்து ஆரவாரிக்க பெரிய நீண்டகையிலே மாலையிட்டு கட்டியிருக்கின்ற தண்டத்தாலடித்தனன்.—எ-று. (ககஎ)

சாடு மெல்லையிற் சாரதி யுந்திய
வாடல் வாம்பரி யாவி யுலந்திட
வோட லின்றி யிரதமங் குற்றதா
னீடு கின்ற நிலைப்படு தேரொன,

(இ-ள்.) அவ்வாறு குதிரைகளை அடித்துக்கொல்லுகின்றசமயத்தில், சாரதியினால்விடப்பட்ட வெற்றிபொருந்திய தாவுகின்றகுதிரைகள் பிராணனைவிடவும், உடனே அவனேறிய தேர் உயர்ந்த நெடிய நிலைத்தேரைப்போல ஓடாமல் அவ்விடத்திலேயே நின்றது.—எ-று. (கசஅ)

யாக்க ளூற்ற மடிவினை நோக்கியே
தீக்க னற்பெய ரோன்சின மேற்கொளாத்
தாக்க ணங்குறு தாழ்சிலை வாங்கியே
யேக்கள் பூட்டி யிதுவொன்று கூறுவான்.

(இ-ள்.) கொடிய அனலியென்று பேருள்ள சேனாபதியானவன் தனது தேரிற் கட்டியிருந்த குதிரைகளிறந்ததைப்பார்த்து மிகுந்தகோபத்தை மேற்கொண்டு வீரலட்சுமிவிலாசம்பொருந்திய வளைந்தவில்லினைவளைத்து, அவ்வளைத்த வில்லிலம்புகளைவைத்து பூதசேநாபதியான சிங்கனைப்பார்த்து இவ்வசனத்தைக்கூறினான்.—எ-று. (கசக)

தடுக்கொ ணுவிச் சரஞ்சொரிந் துன்னுயிர்
படுத்து வானவர் பார்த்திடத் தென்றிசை
விடுக்கி லேனெனின் வெஞ்சம ரத்திடை
யெடுக்கி லேன்சிலை யானெனக் கூறினான்.

(இ-ள்.) தடுத்தற்குக்கூடாத இந்தவம்புகளைவிட்டு, உன்பிராணனை வாங்கி, தேவர்கள் பார்க்கும்வண்ணம் எமதிசைக்கனுப்பாது போவேனானால், யான் இனி வெவ்விய போரிலே வில்லைக் கையிலெடுக்காதிருக்கின்றேன் என்று சபதங்கூறினான்.-எ-று.

சூளிவ் வாறு புகன்று தொலைவிலா
வாளி யான்மிசை யங்கியின் பேரினான்
கோளி யார்பய னுமெனக் கூற்றுறழ்
வாளி தூண்டி மறைத்தனன் மேனியே.

(இ-ள்.) இவ்வண்ணஞ் சபதங்கூறி, அழிவற்றசிங்கன்மீது, அனலியென்னும் பேருள்ளவசுரன், ஆலிற்பொருந்திய காயைப்போல முற்றிலும் நிரம்பும்வண்ணம் அம்புகளைவிட்டு உடலைமறைத்தனன்.—எ-று. (கஉக)

மறைய வேயுடல் வாளித ேண்டவு
மிறையு முன்னல னின்னலுற் றாழ்கிலன்
பொறையி னோடு பொருக்கெனப் போகியத்
தறையி னின்ற சயந்தனத் தேறினான்.

(இ-ள்.) உடன்மறையும்வண்ணம் அம்புகளைவிடுதலும், அவ்வம்புகள் தன்மீது பட்டதற்காகச் சற்றும் பட்டதேயென்று நினைந்தானில்லை; துன்பமடைந்து அதிலும் மூழ்கினானில்லை; பொறுமையுடன் விரைந்துசென்று, அப்பூமியில் குதிரையின்றி நிற்கின்ற தேரின்மீது ஏறினான்.—எ-று. (கஉஉ)

நீர்மு கந்த நெடுமுகி லாமெனத்
தேர்மு கந்தனிற் றியவ னேந்திய
கார்மு கந்தனைக் கைக்கொடு வாங்கியே
பார்மு கத்துப் பதைப்புற வீசலும்.

(இ-ள்.) நீருண்ட நெடியமேகத்தைப்போல தேரிலே கொடியவனான அனலியென்பவன் பிடித்துக்கொண்டிருக்கிற வில்லைக் கையினால்பிடுங்கி பூமியினிடத்தில் விழும்வண்ணம் விரைந்து எறிதலும்,—எ-று; (கஉ௩)

வலக்கை யாலொரு வான்கதை பற்றியே
சிலைக்கை யீர்த்திடுஞ் சிங்கனைத் தீயினோன்
றலைக்கண் மோதலுந் தானவ ரார்த்தனர்
கலக்க முற்றனர் கண்டவத் தேவரோ.

(இ-ள்.) வலதுகையினாலே யொரு பெரியதண்டாயுதத்தை யெடுத்துத் தனது கையிலிருந்த வில்லை இழுத்துப் பிடுங்கி எறிந்த சிங்கனை அனலியானவன் தலையின்மீ தடித்தலும் அசுரர்கள் ஆரவாரித்தார்கள்.—எ-று. (கஉ௪)

அடித்த தண்டொ டனலிதன் கைத்தலம்
பிடித்து மற்றொர் பெருங்கையி னாலவன்
றடித்த மார்பத் தடவரை சாய்ந்துக
விடிப்பின் மும்மை யிசைத்திட வெற்றினான்.

(இ-ள்.) அடித்த தண்டத்துடன் அனலியென்பவனுடைய கையைப்பிடித்துக் கொண்டு இன்னமுள்ள ஒரு பெரியகையினால் அவ்வனலியின் பெரிய மார்பமானது சாய்ந்து சிதற இடி இடிப்பதைவிட மூன்றுபங்கு அதிகமாகச்சத்த முண்டாகும் வண்ணம் அடித்தனன்.—எ-று. (கஉ௫)

எற்ற வெய்யவ னெல்லையி னுன்புறச்
செற்ற மிக்கெழுஞ் சிங்கனுஞ் செங்கையிற்
பற்று தண்டத் தொடுமப் பதகனைச்
சுற்றி வானந் துளுக்குற வார்த்தனன்.

(இ-ள்.) அடிக்க, அக்கொடியவனாகிய அனலியானவன், அளவற்ற துன்பத்தினை யடையப் பின்னும் கோபமிகுதியாகவுண்டான சிங்கனும் செவ்விய கையிற் பிடித்திரு க்கின்ற தண்டத்துடன் அந்தக்கொடியவனான னலியைக்கையிற்பிடித்துச்சுற்றி மேக மும் திடுக்கிடும்வண்ணம் கர்ச்சனைசெய்தான்.—எ-று. (கஉ௬)

மாறி லாத வவுணனை வன்கையாற்
சூறை போலவச் சிங்கன் சுலவலு
மீறில் பித்தினி லேமரு வோன்மிகத்
தேற லார்ந்தெனத் தேற்றமின் றாயினான்.

(இ-ள்.) மாறுபாடில்லாத அசுரனாகிய அனலியை வலியகையினாலே சுழற்காற்றைப்போல அச்சிங்கன் சுழற்றுதலும், நீங்காத பைத்திய வியாதியினாலே திகைப்புற்றவன், மிகவுங் கள்ளைக்குடித்தாற்போல அறிவுமயங்கினவனானான்.—எ-று. (கஉ௭)

ஆர ழற்பெய ரண்ண லறிவொரீஇச்
சோரு மெல்லையிற் றுண்ணென வேறிய
தேரை விட்டுத் திறலரிப் பேரினான்
பாரி னெற்றப் பதைப்பொடு துஞ்சினான்.

(இ-ள்.) அனலியென்னும்பேருள்ள அசுரசேனாதிபன் அறிவொழிந்து, சோர்வடைகின்ற சமயத்தில் திடீரொன்று தானேறி நின்றிருந்த தேரினின்றும் வலிமையினை யுடைய சிங்கனென்னும்பேருள்ளவன் பூமியிலறைதலும், (கீழேதொப்பென்றுவிழுந்தவன்) துடிதுடிப்புட னிறந்தனன்.—எ-று. (கஉ௮)

வேறு.

அண்டருந் திறலின் மிக்க வனலியு மிறந்த வண்ணங்
கண்டனன் கவலா வுள்ள மழலெனக் கறங்கு கண்ணான்

சண்டனென் றுரைக்கும் பேரோன் றடுப்பரும் படைக டன்கை
கொண்டிவ னுயிரை யின்னே குடிப்பனு லென்று சென்றான்.

(இ-ள்.) பிறராலடைதற்கரிய சாமர்த்தியத்தின் மிகுந்தவனான அனலியென்பவனிறந்த தன்மையைக்கண்டு மனக்கவற்சியடைந்து தீயைப்போல சுழலுகின்ற கண்ணினையுடையவனும் சண்டனென்று கூறப்படுகிற பேரினையுடையவன், தடுத்தற்கருமையான ஆயுதங்களைத் தமது கையிலெடுத்துக்கொண்டு நான் இவனுயிரை இப்பொழுதே பானஞ்செய்கின்றேனென்று கூறிச்சென்றனன்.—எ-று. (கஉக)

என்றதோர் மாற்றங் கேளா வெரிவிழித் திடியி னக்குப்
பொன்றிய வனலி யங்கைப் போர்கெழு தண்டம் வாங்கிச்
சென்றனன் விரைவி லன்னோன் றேர்மிசைப் பாய்ந்து நீலக்
குன்றெனும் வயிரத் தோண்மேற் புடைத்தனன் கூற்ற முட்க.

(இ-ள்.) என்றிவ்வாறு சண்டன்கூறிய வசனத்தைக்கேட்டு தீப்பறக்கப்பார்த்து இடியைப்போல தொனியுண்டாகச்சிரித்து இறந்துபோன அனலியினுடையகையிலிருந்த போருக்கேற்றதாக விளங்குகின்ற தண்டாயுதத்தைப் பிடுங்கிக்கொண்டு சிங்கனானவன் விரைவாகச்சென்று அச்சண்டனுடைய வராநின்ற தேரின்மீது குதித்து, நீலமலையென்று கூறத்தக்க வயிரமயமானதோளின்மீது எமனும் அஞ்சும் வண்ணம் அடித்தனன்.—எ-று. (கூ0)

புடைத்தலு முயிர்த்து நெஞ்சம் பொம்மெனப் பொருமலெய்தித்
தடப்பெருந் தேரில் வீழுஞ் சண்டனுந் தனது செங்கை
யெடுத்ததோர் தண்டந் தன்னு லெதிர்புகுஞ் சிங்கன் மார்பத்
தடித்தன னவ்வனுந் தானு மாரஞ ருழந்து வீழ்ந்தார்.

(இ-ள்.) அடித்தவுடனே பெருமூச்சுவிட்டு மனத்திற்றிடீரென்று பொருமுதலடைந்து விசாலமான பெரியதேரிலே விழாநின்ற சண்டனென்பவனும், தனது செவ்வியகையிலே எடுத்ததான ஒருதண்டத்தினால், எதிரிலேவந்த சிங்கனுடைய மார்பில் அடித்தனன்; அடித்தவுடனே அச்சிங்கனும் அவ்வடியால் அரியதுன்பத்தையடைந்து கீழேவிழுந்தனன்.—எ-று. (கூக)

அப்பொழு ததனை நோக்கி யவுணரின் மாய னென்போன்
குப்புறு தடந்தே ரோடுங் குறுகலும் பூதர் தம்மி
னொப்பிலா னீல னேர்போ யோச்சினன் கதையொன் றண்ணன்
முப்புர மத்னிற் றூண்டு மூரிவான் பகழி யென்ன.

(இ-ள்.) அந்தசமயத்தி லதனைப்பார்த்து, அசுரர்களுக்குள் மாயனென்றழைக்கப்படுபவன், தாண்டுதலினையுடைய பெரியதேருடனேவருதலும், பூதர்களுக்குள்ளே நீலனென்பவன் நேரேசென்று, இறைவன் திரிபுரத்தின்மீதுவிட்ட மிகவும் பெரிய நீண்ட அம்பைப்போல ஒருகதாயுதத்தை எறிந்தனன்.—எ-று. (கூஉ)

போந்ததோர் தண்ட மாயன் பொருவகன் மார்பிற் றாக்க
மாய்ந்தனன் போல நின்று வருந்திமற் றவன்றன் பாணி
யேந்துமுத் தலைவே லொன்றை யெறிந்தன னெழிலா கத்திற்
சாய்ந்தது குருதி நீலன் றானுமங் கயரா நின்றான்.

(இ-ள்.) எறியப்பட்டுவந்ததாகிய தண்டமானது மாயனது ஒப்பற்ற அகலமான மார்பிற்படுதலும், இறந்தவனைப்போல மயங்கிநின்று வருத்தமடைந்து பின்னர் அவன் கையிற் பிடித்துக்கொண்டிருந்த மூன்றுதலைகளையுடைய வேலினையெறிந்தனன், எறித

லும் அது நீலனதுமார்பிற்பட்டு இரத்தம் ஒழுகியது. அதனால் அவனும் அயர்வடைந்தனன்.—எ-று. (கூரு)

சிறிதுபோழ் ததனிற் றேறித் திரண்மணிக் கடகஞ் சேர்த்த
வெறுழ்வலித் தடக்கை தனாலெதிர்ந்தவ னுரத்தி னெற்ற
வறைகழன் மாயன் றானு மணங்குற நீல னென்போன்
கறைகெழு நாக மென்னக் கனன்றிது கருதிச் செய்வான்.

(இ-ள்.) சற்றுநேரத்திற்குள்ளே இருவர்களும் தெளிந்தெழுந்து அரதனகடகமணிந்துள்ள மிக்கவன்மையினையுடைய பெரியகையினால் எதிரேசென்று நீலனென்பவனது மார்பிற் சத்திக்காநின்ற வீரகண்டையணிந்த மாயனானவன் அடித்தவுடனே, நீலனானவன் விடத்தோடுவிளங்கிய பாம்பைப்போலச் சீற்றங்கொண்டு ஆலோசனைசெய்து இதனைச்செய்தனன்.—எ-று. (கூகு)

மந்தரந் தழீஇய தொல்லை வாசுகி யென்ன மாயன்
சுந்தரத் தடம்பொற் றோளைத் துணைக்கையாற் றொடர்ந்து வீக்கிக்
கந்தரந் தன்னிற் றீய கறைசெறி யெயிற்றிற் கவ்வி
முந்துறு குருதிச் செந்நீர் குடித்தனன் மொய்ம்பி னோடும்.

(இ-ள்.) மந்தரமலையைச் சுற்றிக்கிடந்த பழய வாசுகியென்னும் பாம்பைப்போல மாயனது அழகிய பெரிய பொன்மயமான தோள்களை யிரண்டுகைகளாற் பிடித்துக் கட்டிக்கொண்டு கொடிய இரத்தந்தோய்ந்த தனதுபற்களால் அவன்கழுத்தைக்கடித்து வன்மையுடன் வெளியில் வாராநின்ற சோரியைப் பானஞ்செய்தனன்.—எ-று. ()

சோரிய துண்டு நீலன் றொல்சினந் துறந்து நின்றா
னாருயி ருண்டு போனா னந்தக னனைய காலை
யூரிவிற் றடக்கை மாயன் முடிந்தனன் சண்டன் சிங்கன்
பேரஞ ருழந்தோர் தேறிப் பின்னும்போர் புரிய லுற்றார்.

(இ-ள்.) இரத்தத்தைப் பானஞ்செய்து நீலனானவன் பழயகோபமாறி நின்றனன். உடனே, மாயனது அரியவுயிரை எமனுங்கைப்பற்றிச்சென்றனன். அப்பொழுது விசாலமான கையிற் பெரியவில்லைப் பிடித்திருந்த மாயன் இறந்தனன். பின்னாற் பெரும்போர்புரிந்து மயங்கிக்கிடந்த சண்டனும் சிங்கனும் மயக்கந்தெளிந்து எழுந்து பின்னரும்போர்செய்யத் தொடங்கினார்கள்.—எ-று. (கூகூ)

கிட்டினர் தடந்தேர் மீது கிடந்ததண் டேந்திக் கீழ்போ
யொட்டின ரொருவர் தம்மி னொருவர்மே லுடன்று பொங்கி
முட்டின ரிரண்டு பாலின் முறைமுறை பெயர்ந்தார் மொய்ம்பால்
வட்டணை திரிந்து தண்டிற் றாக்கினார் மாற்று கின்றார்.

(இ-ள்.) பெரிய தேர்மீதுகிடந்த தண்டங்களைக் கைகளிலெடுத்துக்கொண்டு கீழிறங்கிச்சென்று ஒருவருக்கொருவர் வெறுத்து சபதம்பேசி பகைத்துச்சீறி முட்டினார்கள். இருபுறங்களிலும் வரிசைவரிசையாக விலகினார்கள். வன்மையால் இடசாரி வலசாரியாகச் சுற்றித் தண்டத்தாலடித்துத் தடுக்கின்றார்கள்.—எ-று. (கூஎ)

இங்கிது போலப் பல்வே றியறகையிற் கதையின் வெம்போர்
சிங்கனுஞ் சண்டன் றானுஞ் செய்தனர் திரிந்த வேலைப்
பொங்கிய பூதர் வேந்தன் பொருவரு மவுணன் பொன்னா
ரங்கையிற் றண்டஞ் சிந்த வடித்தன னணிப்பொற் றண்டால்.

(இ-ள்.) இவ்விடத்தில் இதைப்போல பல வேறுவிதமான இயல்புகளையுடைய வெவ்விய கதாயுத்தத்தைச் சண்டனும் சிங்கனும் செய்துகொண்டுலாவிய சமயத்தில், கோபங்கொண்ட பூதராஜனை சிங்கன் ஒப்பற்ற சண்டனுடைய பொன்னுபரணங்கள் பொருந்திய அழகிய கையிலிருந்த தண்டமானது சிதைந்துபோகும்வண்ணம் தன்கையி லிருந்த அலங்கரிக்கப்பட்ட பொன்மயமான தண்டத்தால் அடித்தனன்.—எ-று.

வயிர்த்திடு தண்ட மங்கண் வலிகெழு சிங்கன் மோத
வயிர்த்தொகை யாத லோடு மாற்றல்சே ரவுணர் யாரு
முயிர்த்தன ரென்கொ லாமென் றுன்னின ருருமே றென்னச்
செயிர்த்தனன் சண்ட னென்னுஞ் செருவலா னுரைக்க லுற்றான்.

(இ-ள்.) வயிரம்பொருந்திய தண்டமானது வலியொடுவிளங்குகின்ற சிங்கனால் அடிக்கப்பட்டு நுண்மணலைப்போல வாகுதலும், வலிமைபொருந்திய அசுரர்களெல்லாம் பெருமூச்சுவிட்டுக்கொண்டு என்னும்முடியுமோவென்று எண்ணினார்கள். அப்பொழுது கர்ச்சிக்கின்ற சிங்கம்போல் கோபங்கொண்டவனாய் சண்டனென்னும் போர் வீரன் உரைப்பதாயினன்.—எ-று. (கருக)

தண்டமொன் றிற்ற தென்று தருக்கலை தடம்பொற் றோளாக்
கொண்டது மஃதே யன்றோ கூற்றுவ னகரு மேலை
யண்டமு முலையத் தொன்னா ளடர்த்தன னுனக்கிங் கஞ்சேன்
மண்டமர் புரிதி யென்னு வலிகெழு கரங்கொண் டேற்றான்.

(இ-ள்.) ஒருதண்டாயுதமானது ஒடிந்துபோயது என்று தருக்கடையாதே; விசாலமான அழகிய தோளாகக்கொண்டிருப்பதும் தண்டமேயன்றோ? எமனுலகமும் மேலேயுள்ள வண்டமுங் கெடும்வண்ணம் முன்னேயழித்தேன்; அப்படிப்பட்ட நான் உனக்கு இவ்விடத்திலஞ்சமாட்டேன்; நெருங்கியபோரினை செய்யக்கடவையென்று கூறி வன்மையொடு விளங்குகின்ற கையைக்கொண்டே எதிர்ந்தனன்.—எ-று. (கசo)

ஏற்றன னிகலும் வேலை யெரிசினங் கடவிச் சிங்க
னாற்றலை யாங்கொ னீயென் றுற்றலை யணிபொற் றண்டம்
போற்றுகென் றுய்ப்ப வங்கட் புகாநெறி புடைத்துக் கையாற்
கூற்றனு முட்க வார்த்தான் குருமணித் திரடோள் கொட்டி.

(இ-ள்.) எதிர்த்துப் போர்புரிகின்ற தருணத்தில்,தீயையொத்த கோபத்தினை மேற்கொண்டவனாய் சிங்கனென்பவன், நீ மிக்க வன்மையினையுடையன்போலும் என்றுகூறி வன்மையினையுமழகினையுமுடைய வழகியபொன்னந்தண்டொன்றை எடுத்து இதனை உன்மீதுபடாமல் காப்பாற்றிக்கொள் என்றுகூறி எறிதலும், அதனைத் தன் கையினால் அவ்விடத்திற்குவாராத வண்ணம் அடித்து நொறுக்கி எமனும் அஞ்சும்வண்ணம், நிறம்பொருந்திய மணிமயமான திரண்ட தோள்களைத்தட்டி கர்ச்சித்தனன்.

அங்நெடுந் தகையோ னார்ப்ப வதுபொறா தழன்று சிங்கன்
பொன்னெடுந் தண்டா லன்னான் புயமிறப் புடைத்த லோடுங்
கன்னெடுந் தோளு மோர்சார் கதுமென முரியத் தண்டும்
பன்னெடுந் துணியாய்ச் சிந்திப் படிமிசைக் கிடந்த தன்றே.

(இ-ள்.) அந்த நீளமானவுடலினையுடைய சண்டனென்பவன் கர்ச்சித்தலும், சிங்கனென்பவன் அதற்கு மனம்பொறாதவனாய் கோபித்து, பொன்மயமான நெடிய தண்டினாலவனது தோளொடிந்துபோகும்வண்ணம் அடித்தவுடனே கல்லையொத்த நெடியதோளும் ஓர்பக்கத்திற்சரிந்தது. அடித்ததண்டமும் பலபெரியதுண்டுகளாகச் சிதறிப் பூமியில்விழுந்தது.—எ-று. (கசஉ)

புயந்தளர்ந் திடலுஞ் சண்டன் போவது கரமென் றுன்னு
வயர்ந்தில னொசிபொற் றோளை யங்கையி னிறுத்து வாங்கி
வயங்கெழு தண்டிற் பற்றி வட்டணை புரிந்தான் வானோர்
வியந்தன ரிவனே கொல்லாம் வீரருள் வீர னென்றே.

(இ-ள்.) தோள்சரிந்தவுடனே, சண்டனனவன் தோள் போகின்றதேயென்று வருந்தினனில்லை; ஒடிந்த பொன்னந்தோளினை அழகிய கையினால் இழுத்தெடுத்து, வெற்றியொடுவிளங்குகின்ற தண்டத்தைப்போல கையிற் பிடித்துக்கொண்டு இடசாரி வலசாரியாகச்சுற்றினான்; இவனிவ்வாறுசெய்தலைப்பார்த்து, தேவர்களனைவரும் இவன் தானே வீராதிவீரனென்று கூறப்படுபவனென்று அதிசயித்தார்கள்.—எ-று. (கசரு)

கரங்கெழு புயப்பொற் றண்டாற் கார்கெழு சண்டன் காம
ருரங்கெழு வுரத்தின் மோத வுருகெழு மடங்கற் பேரோ
னிரங்கில னுவன்போல் யானு மெற்றலன் கரங்கொண் டென்னாச்
சரண்கொடே யவன்ற னாகத் தடவரை யதனைச் சாய்த்தான்.

(இ-ள்.) கையிலேவிளங்குகிற புயமென்னும் பொன்னந்தண்டினால், கார்நிறம் பொருந்திய சண்டனென்பவன், அழகும் வன்மையும்பொருந்தி விளங்குகின்ற சிங்கனுடையமார்பில் அடித்தவுடனே,விளங்குகின்ற சரீரத்தினையுடைய வவன் அதற்காகவருத்தமடையாதவனாய், இவனைப்போல நானும் கையைக்கொண்டடிக்கமாட்டேன் என்று தனதுகாலினாலுதைத்து அச்சண்டனது மலைபோன்றவுடலை கீழேவிழுமாறுசெய்தனன்.

சண்டகன் சாய்த லோடுங் கரமெடுத் தார்த்து வானோர்
புண்டருங் குருதிச் செங்கட் பூதநா யகநீ யன்றேற்
சண்டனை யுதைப்பார் யாரோ தாழ்த்திட லவன்ற னாவி
கொண்டரு ளிறையி னென்று குறையிரந் தறைய லுற்றார்.

(இ-ள்.) அசுரனாகிய சண்டன் கீழே விழுந்தவுடனே, அதனைப்பார்த்துக்கொண்டுநின்றதேவர்கள்,கைகளை மேலேதூக்கி ஆரவாரித்து, புண்ணைப்போல காணப்படுகின்ற இரத்தமயமான செவ்வியகண்களையுடைய பூதநாயகனே! நீயல்லாது வேறேயாவர் சண்டனை யுதைக்கப்போகின்றார்கள்? தாமசஞ்செய்யாதே; இறைப்பொழுதுக்குள் அவன்பிராணனை வாங்கிவிடு என்று குறைகூறிக்கூறினார்கள்.—எ-று. (கசகு)

வேறு.

வானவ ருரைகேளா மறலியொ டிகல்வெங்கட்
டானவ னிவனேயென் றனியுயி ரடுகிற்பா
னீனம துறுதேவ ரிவனொடு நுமையின்றே
யூனுட னுயிரோடு முண்குவ னதுகாணீர்.

(இ-ள்.) தேவர்கள்கூறிய வவ்வசனத்தைக்கேட்டு, எமனொடு பகைத்த வெவ்விய கண்ணினையுடைய அசுரனாகிய சண்டன் கூறுகின்றான். ஏ இழிவுபொருந்திய தேவர்களே! இவனுடன் உங்களையும் இன்றையதினமே மாமிசமயமான உடலுடன் உயிரையும் உண்ணுகின்றேன்; இதனை நீங்களே பார்க்கப்போகின்றீர்கள்.—எ-று. (கசசு)

என்னலு மிகல்சிங்க னெரிகலுழ் விழியானென்
முன்னிது புகல்கின்றாய் முடிகுவை யினியென்னாக்
கொன்னவி றருகையாற் கொடிறுடை தரமோத
வொன்னல னதுபோழ்தி னொலிமுகி லெனவீழ்ந்தான்.

(இ-ள்.) சண்டனிவ்வாறு கூறியவுடனே, தீப்பொறிபறக்கின்ற கண்களையுடையவனாகிய சிங்கனனவன் சண்டனைப்பார்த்து, நீ என்னெதிரிலிவ்வாறு கூறுகின்றனை.

இனி இறந்தனை என்று, பெரியதென்று கூறப்படுகிற கையினாலே கதுப்புடைந்து போகும்வண்ணம் அடித்தனன். உடனே பகைவனாகிய சண்டன் ஒலிக்காநின்ற மேகத்தைப்போல கீழேவிழுந்தான்.—எ-று. (கசஎ)

போழுறு பகுவாயிற் பொலிதரு மெயிறோடும்
வீழுறு நகையாலும் விரிகுரு தியினாலுந்
தாழுறு மதிதன்னைத் தாரகை நிரைசூழ
வூழுற வமர்செவ்வா னொத்ததவ் வுழியன்றே.

(இ-ள்.) கிழிந்த பிளந்தவாயினில் விளங்காநின்ற கோரைப்பற்களுடன் உதிர்ந்துவிழுகின்ற மற்றைய பற்களாலும் மிகுதியான இரத்தத்தினாலும், அவ்விடமானது கலைகுறைந்த சந்திரனை நட்சத்திரவரிசைகள் சுற்றிலும் வரிசையாகச்சூழ விருக்கின்ற செக்கர்வானத்தினை யொத்தது.—எ-று. (கசஅ)

சண்டனு மிறலோடுஞ் சமன்விட வருதூத
ரண்டலர் வெருவாமு னலமரு லுறுகின்றார்
கண்டன னதுசிங்கன் கையன துயிர்தன்னைக்
கொண்டணு குதிரென்னக் குறுகின ரதுகொண்டார்.

(இ-ள்.) சண்டனும் இறந்தவுடனே, எமனாலனுப்பப்பட்டுவந்த தூதர்கள், அருகில்வராதவர்களாய் பயந்து எதிரிலே அங்குமிங்கு முழலுகின்றார்கள்; இவர்களிவ்வாறு சஞ்சரித்தலைக்கண்டவனாகிய சிங்கனானவன், (நீங்கள் பயப்படாதீர்கள்.) இவ்விழிஞனதுயிரைக்கொண்டு செல்லுங்கள் என்றுகூறுதலும், (பின்னரச்சநீங்கி) அவனுடலினருகிற்சென்று அவனுயிரைக் கைப்பற்றினார்கள்.—எ-று. (கசகூ)

ஆனதொர் செயல்பாரா வசமுக னெனவோது
மானவ னிறைநின்னில் வந்துன துயிருண்ப
லேனைய ரெனவேநீ யெண்ணலை யெனையென்னாக்
கானிமிர் தருதேர்மேற் கடுவிசை யொடுசென்றான்.

(இ-ள்.) இவ்வாறாகிய தன்மையைப்பார்த்து, அசமுகன் என்று பேருள்ள வீரன் சற்றே நில்நில்: இதோ வந்துனது பிராணனை உண்ணுகின்றேன்; நீ என்னை மற்றையர்களைப்போல நினையாதே என்று கூறிக்கொண்டு உயர்ந்த குத்துக்கால்களையுடைய தேரின்மீது அதிகவேகமாக வந்தனன்.—எ-று. (கருo)

சிங்கன தெதிர்செல்லுஞ் செல்லுறழ் பகுவாயா
னங்கணு கிடும்வேலை யதிபல மதுவென்போ
னெங்கினி யகல்வாய்நீ யிற்றனை யிவணென்னாப்
பொங்கிய சினமோடும் பொள்ளென விடைபுக்கான்.

(இ-ள்.) சிங்கனுடைய எதிரிலேசெல்லாநின்ற இடிமுழக்கம்போன்ற முழக்கத்தினையுடைய பிளந்தவாயோடுகூடிய அசமுகன் அவ்விடத்திற்கு வருகின்றவப்பொழுது, அதிகமான பலத்தினையுடைய மதுவென்னும் பூதசேநாதிபன், நீ இனி எங்கே போகப்போகின்றனை இங்கேயே இறந்தனை என்று உண்டாகின்றகோபத்துடன் விரைவாகக் குறுக்கே புகுந்தனன்.—எ-று. (கருக)

செந்தழல் புரைவெங்கட் டிறலச முகனென்போன்
முந்துற மதுவென்னு மொய்ம்பின னெதிர்கோட
லந்தக னெடுகால னமர்புரி தரவேமுன்
வந்தெதி ரெதிர்தன்மை மானுவ தெனலாமால்,

(இ-ள்.) செந்நிறம்பொருந்திய தீயினையொத்த கண்களையும் வன்மையினையுமுடைய அசமுகன் என்பவன் முன்னேசெல்ல, அவனெதிரில் மதுவென்னும் தோள் வலியுடையவன் எதிரேசெல்லுதல், எமனுடனே காலன் போர்செய்யும்பொருட்டுவந்து முன்னே எதிர்த்த தன்மையை யொக்கும் என்றுகூறலாகும்.—எ-று. (கஙஉ)

அணுகின ரிருவோரு மசமுக னதுகாலைக்
குணநனி சிலைகொள்ளக் குலவிய சிலைகொள்ளாக்
கணிகையர் மிளிர்வேற்கட் கடைநில வியதென்ன
நுணுகிய நுதிவெங்க ணேன்கணை சிதறுற்றான்.

(இ-ள்.) அவ்விருவர்களும் எதிர்த்தார்கள்; அசமுகனென்பவன், அப்பொழுது குணத்தொனி மிகவுமுண்டாகத்தக்க விளங்கிய வில்லையெடுத்து, பரத்தையர்களுடைய விளங்காநின்ற வேல்போன்ற கண்ணின் கடையானது விளங்கினாற்போல குறுகியிருக்கின்ற கூரினையும் வெவ்வியதன்மையினையுமுடைய பெரிய அம்புகளைவிட்டனன்.

முன்னது வரலோடு முகனுறு செயலோரான்
றன்னுபு செறிபோழ்துந் துணைவிழி யிமையாதான்
றன்னிலை யிறையேனுந் தவிர்கில னொருதானே
யந்நிலை தனினின்று னடுதிறன் முயல்கின்றான்.

(இ-ள்.) எதிரிலே அவ்வம்புகள் வருதலும், எதிரிலேவருகின்ற வச்செய்கையையுணராதவனாய், நெருங்கிவருகின்ற சமயத்திலும், இரண்டுகண்களையும் இமைக்காதவனாகிய மதுவென்பான் தனதுநிலைமையினின்று சற்றேனுந்தவறாதவனாய் தானொருவனே அந்த நிலையிலேநின்று கொல்லுந்தொழிலை முயற்சித்தனன்.—எ-று. (கஙச)

பாலுற நிமிர்கின்ற பழுமர மதுபற்றா
மேலுறு சரம்வீசான் விடுகணை படமெய்யிற்
சாலிகை யெனநின்றான் றகுவன திரதத்திற்
கால்லென விசைசென்றே கருமுகி லெனவார்த்தான்.

(இ-ள்.) பக்கத்திலே உயர்ந்துவளர்ந்துநின்ற ஓராலமரத்தைப்பிடுங்கி, தன்னுடம்பிலே வந்துபடுகின்ற அம்புகளை வீசியெறியாதவனாய், அசமுகன்விட்டகணைகள் தன்னுடம்பிற்பட அவைகள் தன்னுடம்பிற்கு கவசமென்னும்படி நின்றனன்; பின்னர் அவ்வசுரனது தேரில் காற்றைப்போல விரைவாகச்சென்று கரியமேகத்தைப்போல ஆரவாரித்தனன்.—எ-று. (கஙரு)

ஆர்த்தன னதுகேளா வசமுக னயர்வெய்தித்
தேர்த்தனி னிலமீதிற் சிலையொடு கணைசிந்தி
வேர்த்தனன் வறிதுற்றான் விம்மினன் மெலிதன்மை
பார்த்தனன் மதுவென்போ னிவையிவை பகர்கின்றான்.

(இ-ள்.) பூதவீரனாகிய மது அட்டகாசஞ்செய்தனன்; அதனைக்கேட்டு அசமுகனயர்ச்சியடைந்து, தேரினின்றும் மேனிலையிலே வில்லம்புகளைச் சிதறவிட்டுக்கொண்டு வியர்வையுடையவனாகச் சும்மாவிருந்து விம்மினவனாகி மெலிகின்ற தன்மையைப் பார்த்து மதுவானவன் இவைகளைக்கூறுகின்றனன்.—எ-று. (கஙசு)

வீரனு மலையஞ்சா வெஞ்சமர் வலனெய்தச்
சூரனு மலைநின்றே சூர்நிலை யதுகாணுந்
தீரனு மலையென்னே செருமுய லுதிநீநின்
னாருயிர் கொடுபோகென் றவனியின் மிசைபோனான்.

(இ-ள்.) நீ வீரனுமல்லே; கெடாத வெவ்வியபோரினில் வெற்றியடையச் சூரனுமல்லை; எதிரினின்று சூரனதுநிலைமையைக்காணுகின்ற தீரனுமல்லை; நீ என்னபோர்செய்யமுயலுகின்றனை! நீ நின்னுடைய அரிய உயிரைக்கொண்டு பிழைத்துப்போகக்கடவையென்று கூறி பூமியின்மீது திரும்பிச்சென்றனன்.—எ-று. (கருஎ)

பாரிடை னிலன்மேவப் பகராச முகனென்னும்
பேருடை யவன்வெள்கிப் பெருமித மிலனாகிப்
போரிடை வெருவுற்றே னெனவொரு புரையுற்றே
னூரிடை யிதுதீர்வ னெனவல மருகின்றான்.

(இ-ள்.) மதுவென்னும் பூதன் பூமியையடைதலும், சொல்லப்பட்ட அசமுகனென்று கூறுகின்ற பெயரினையுடையவன் வெட்கமடைந்து பெருமிதமிழந்தவனாய், நான் போரிலச்சமடைந்தேனென்னு மொருகுற்றத்தையடைந்தேன், நான் யாவரிடத்திலிந்த இழிவைநீக்கிக்கொள்ளுவேன்.—எ-று. (கருஅ)

ஆயிடை யவுணன்று னமர்புரி கிலனாகிப்
போயின னவனந்தோ பொன்றுத லினிதென்னாக்
காயமொ டுளமானக் கனல்சுட மனம்வேவத்
தீயென வெகுளுற்றான் செருமுய றிறல்பெற்றான்.

(இ-ள்.) அவ்விடத்தி லசுரனானவன், நாம் போர்புரியாதவனாயிருந்தமையால் நம்மெதிரில் வந்தவன் சென்றான்; ஐயோ இதைவிட சாகுதல்நல்லதென்று, உடலேயும் மனத்தையும் அபிமானமென்னும் தீயானதுசுட, மனமானது வேவ, தீயைப்போல கோபங்கொண்டு போர்செய்கின்ற சாமர்த்தியத்தினையடைந்தனன்.—எ-று. (கருகூ)

ஒல்லேயி னவனேகி யுழிதனி தொடராநிற்
கொல்லுவ னினியாண்டுக் குறுகினு மகலாதே
நில்லுநில் லெனவாரா நீனிற முகிலென்னச்
செல்லுறழ் பகுவாயாற் றிசைசெவி டுறவார்த்தான்.

(இ-ள்.) விரைவாக வவன்சென்று மதுவின்பக்கத்தையடைந்து, இனி எவ்விடத்திற்குச் சென்றாலும் நின்னைக் கொல்லாநிற்பன்; நீபோகாதே நில்நில் என்று கூறிக்கொண்டுசென்று, நீலநிறமான மேகத்தைப்போல இடி இடித்தாலென முழங்குகின்ற பிளந்தவாயினால் திக்குகள் செவிடாகும் வண்ணம் ஆரவாரித்தனன்.—எ-று. (கசு0)

அற்றமின் மதுவென்போ னசமுக னுரைகேளாக்
கற்றது முளகொல்லோ கழறினே சிலவீரம்
பெற்றிலே யெனைநாடிப் பெயருதல் பிழையேனு
முற்றனை யிசையெற்கோ ருறுபழி தருகின்றாய்.

(இ-ள்.) சாவில்லாதவனாகிய மதுவென்பவன், அசமுகன் கூறிய வசனங்களைக்கேட்டு அவ்வசமுகனைப்பார்த்து, அடா! சிலவீரவசனங்களைப்பேசுதற்கு கற்றனவு நின்னிடத்திலிருந்தனவோ? நீ யொன்றும் பெற்றாயில்லை. நீ யென்னைத் தேடிவருதல் பிழையானாலும், கீர்த்தியையடைந்தனை; எனக்கு ஒருபழியைத் தந்தனை.—எ-று.

என்றிது புகல்கின்றோ னெதிருற விகலிப்போய்ப்
பொன்றிகழ் சிலைகோலிப் பொறியுமிழ் பிறைவாளி
யொன்றல பலவுய்ப்ப வுருகெழு சினமெய்தி
நின்றன னவையாவு நெடியனை கொடுவீசி...

(இ-ள்.) என விதனைக் கூறுநின்ற மதுவினெதிரிலே பகைத்துக்கொண்டு சென்று, பொன்மயமான வில்லைவளைத்து, தீப்பொறியைக்கக்காநின்ற பிறைமுகாஸ்தி

ரங்களை அநேகமாகவிடுதலும், அவன் மிக்ககோபமடைந்துநின்று, அவைகளனைத்தையும் நீண்ட கைகளினாலே விசிறிக்கொண்டு நின்றனன்.—எ-று. (௯௬௨)

வேறு.

வைத்தலைப் பகழிமேல் விடுப்ப மாமது
வெய்த்திலன் இறையுமென் றெண்ணி யெண்ணலன்
முத்தலைக் கவழுயின் முசல மாதியாங்
கைத்தலப் படையெலாஞ் சிதறுங் காலையே.

(இ-ள்.) கூரினையுடைய வம்பினை மேலேவிடுதலும், பெரிய மதுவானவன் சற்றும் இளைத்தானில்லை என்று எண்ணி, பகைவனாகிய அசமுகன் திரிசூலங்கள், கழுக்கள், வேல்கள், முசலங்கள்முதலிய கையிலுள்ள வாயுதங்களையெல்லாம் விட்டனன்; விட்டசமயத்தில்.—எ-று. (௯௬௩)

சாரதன் மெய்யுறத் தளர்ந்து தானவன்
றேரினை விரைந்துதன் செங்கை யாலெடா
வாரிதி மேற்செல விடுப்ப வஞ்சகன்
பாரிடை யொல்லையிற் பாய்ந்து மேயினான்.

(இ-ள்.) இவைகளெல்லாம் உடம்பிற்பட்டு தளர்ச்சியடைந்து, மதுவானவன் அசமுகனுடைய இரதத்தைக்கையினாலெடுத்து கடன்மீதுசென்று விழும்வண்ணம் எறிதலும், வஞ்சகனான வவ்வசமுகன் அத்தேரினின்றும் பூமியில் விரைவாகக் குதித்து வந்தனன்.—எ-று. (௯௬௪)

குப்புறு கின்றவன் கூளி வேந்தன்முன்
வெப்பமொ டணுகுறு வீங்கு தோளினாற்
றுப்புறு மற்றொழி றொடங்க வானகத்
தப்புற மவன்செல வடிகொண் டோச்சினான்.

(இ-ள்.) கீழேகுதித்த வசமுகன், பூதவீரனாகிய மதுவென்பவனுடைய வெதிரில் கோபத்துடன்சென்று, தடித்ததோளினால் வன்மைமிக்க மல்யுத்தத்திற்காரம்பித்தலும், மதுவானவன் தனது காலாலவனைத்தூக்கி வானுலகத்திற்கப்புறம் போகும்வண்ணம் எறிந்தனன்.—எ-று. (௯௬௫)

வெய்தென விறந்துவான் மீண்டு பூதன்மு
னெய்தின னவனுரத் திடியி னெற்றியே
வைதனன் போயினன் மறைந்து மற்றொரு
கைதவ நினைந்தனன் ககனம் புக்குளான்.

(இ-ள்) விரைவாக வானுலகத்தையெல்லாங் கடந்து மேலேசென்று, திரும்ப மதுவினெதிரில்வந்து, அவன்மார்பிலிடியிடித்தாற்போல வடித்து வைது, மறைந்துசென்று வேறேயொரு கபடமானகாரியத்தைநினைத்து ஆகாயத்தை யடைந்தனன்.—எ-று.

வரந்தனிற் பெற்றதோர் மாய னேமியைக்
கரந்தனி லெடுத்தனன் கருத்தி லர்ச்சனை
புரிந்தனன் றொழுதனன் போற்றிப் பூதன்மேல்
விரைந்துற விடுத்தனன் விளியுந் தன்மையான்.

(இ-ள்.) வரம்பெறுங்காலத்துப்பெற்ற ஒருவிஷ்ணு சக்கரத்தைக்கையிலெடுத்து மனத்தினா லதனையர்ச்சித்து வணங்கித்துதித்து நின்று, என்பகைவனைக் கொல்லக்கடவையென்று சாந்தன்மையினையுடைய அசமுகன் மதுவின்மீது விட்டனன்.—எ-று,

மாசுறு மசமுகன் மதுவி னுகமேற்
பாசனம் வியப்பமால் பரிதி யுய்த்தலுங்
காசினி யவன்வெறுங் கரத்த னுதலின்
வீசிய வப்படை வெகுண்டு மீண்டதே.

(இ-ள்.) குற்றம்பொருந்திய அசமுகனென்பவன் மதுவென்பவனுடலிற் படும் வண்ணம், மாலின் சக்கரத்தைத் தன் உறவினர் மகிழும்வண்ணம் விடுதலும், பூமியில் நிற்கின்ற மதுவானவன் வெறுங்கையனுக நிற்றலினுல் அசமுகன்விட்ட வவ்வரிப்படை அவனை ஒன்றுஞ்செய்யாமல் கோபங்கொண்டு திரும்பியது.—எ-று. (கசுஅ)

கனையிரு ளுருவினைக் கனலி சேர்ந்தென
முனைகெழு மசமுகன் முடியை யட்டதாற்
றனதுகை நேமிதன் னுலு ருதவோர்
வினையிலை யென்பது மெய்மை போலுமால்.

(இ-ள்.) தன்கையில் இருந்த சக்கரம் பேரந்தகாரவடிவத்தை அக்கினியடைந் தாற்போல, போர்முகத்தில்விளங்கிய அசமுகனுடைய தலையையறுத்தது. (ஒருவனுக்கு வரும்வினை எங்கிருந்தாலும் வரும்) அவனவனுல் உண்டாகின்றதேயன்றி, வினை பிறரா லுண்டாவதன்றென்றுகூறுவது உண்மையேயாம்.—எ-று. (கசுகூ)

உலந்தன னசமுக னுருமு வீழ்ந்தென
நிலந்தனில் வீழ்தலு நின்ற தானவர்
புலந்தன ராழிமால் புடையிற் போயது
தொலைந்ததின் றமரெனு வமரர் துள்ளவே.

(இ-ள்.) இறந்தவனுகிய வசமுகன் இடிவிழுந்தாற்போல பூமியில் திடீரென்று விழுதலும், அவனைத் துணைகொண்டு சூழ்ந்துநின்ற வசுரர்கள் வருந்தினுர்கள். இன்றை யப்போர்தொலைந்தது என்று தேவர்கள்குதித்து மகிழ சக்கரமும் திருமாலினிடத்தை யடைந்தது.—எ-று. (கஎ0)

சாற்றிய வவுணர்தந் தலைவ ரேனையர்
நாற்றிறப் படையொடு நடந்து தமமுளஞ்
சீற்றம தாகியே செருவி ளைத்தலு
மேற்றெதிர் சாரத ரிரிந்து போயினுர்.

(இ-ள்.) முன்னர்க்கூறிய அசுரர்களின் றலைவர்களாகிய மற்றவர்கள் சதுரங்க சைனியங்களுடன் வந்துதங்கள் மனத்திற்கோபமுள்ளவர்களாய் போர்புரிதலும், எதிர் த்துநின்று போர்புரிந்த பூதவீரர்கள் புறமுதுகுகாட்டி யோடினுர்கள்.—எ-று. (கஎக)

வெற்றிகொ டானவர் வெகுண்டு போர்செயப்
பற்றல ராகிய பாரி டத்தவ
ரிற்றனர் வன்மையை யிரிந்து போயினுர்
மற்றது கண்டனன் வலிய தண்டகன்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வசுரர்கள் கோபத்துடன் போர்புரிதலும், அவர் களுக்குப் பகைவர்களாகிய பூதர்கள் வன்மையிழந்து ஒடிப்போனுர்கள்; பூதர்களவ்வண் ணமோடிப் போனதைப் பெரியதண்டகனென்பவன் பார்த்தான்.—எ-று. (கஎஉ)

வேறு

ஏற்ற மாகு மிலக்கவில் வீரருட்
சாற்று பேரிசைத் தண்டகப் பேரினுன்

கூற்றை நேர்வ தொருசிலை கோட்டியே
மாற்ற லார்மிசை வாளிக வேவினன்.

(இ-ள்.) சிறந்த வில்வீரர்களுக்குள்ளே சொல்லப்படுகிற மிகுந்த கீர்த்திமானாகிய தண்டகனென்னும் பேரினையுடையவன், எமதுல்லியமான ஒருவில்லை வளைத்து சத்துருக்களாகிய அசுரர்கள்மீது அம்புகளை விட்டனன்—எ-று. (கஎ௩)

மின்னு நாரி வியன்சிலை யேசிலை
துன்னு நாணொலி சூருரு மேற்றொலி
பொன்னின் வாளி மழைபொழிந் திட்டதான்
மன்னு தண்டக் மாப்பெருங் கொண்டலே.

(இ-ள்.) நிலைபெற்ற தண்டகனென்னும் பெரியமேகமானது, நாணியே மின்னலாகவும், பெரியதனுசே தனுசாகவும், நெருங்கிய நாணோசையே அச்சத்தைத்தராநின்ற இடியொலியாகவும் கொண்டு பொன்னினையுடைய அம்பாகிய மழையைப்பெய்தது. ()

தட்டின் பொய்ம்புடைத் தண்டக மேலையோன்
விட்ட வாளிகள் வெய்யவர் தானையுட்
பட்ட காலைப் பரந்தெழு சோரிநீர்
மட்டி லாத குடிஞையின் வந்ததே.

(இ-ள்.) தவறுதலில்லாத வன்மையினையுடைய தண்டகனென்னுஞ்சிறந்தவன் விட்டவம்புகள், கொடியவர்களாகிய அசுரசேனைகள்மீது பட்டவுடனே பரவியெழுந்த இரத்தவெள்ளமானது அளவிலாத வாற்றைப்போல வந்தது.—எ-று. (கஎ௫)

இரத மிற்றன வெண்ணில வண்ணமார்
பரிகள் பட்டன பற்பல மாமதக்
கரிகள் பட்ட கணிப்பில வெண்ணிலா
வரிக ணோரவு ணப்படை பட்டதே.

(இ-ள்.) தேர்கள் அழிந்தன; அளவற்றனவாகிய நிறங்களையுடையகுதிரைகளிறந்தன; மிகுந்த மதத்தினையுடைய யானைகளிறந்தன; கணக்கில்லாத அளவற்ற சிங்கங்களை யொத்த வசுரசேனைகளிறந்தன.—எ-று. (கஎ௬)

இந்த வாறிவர் பட்டிட வேனையோர்
நொந்து தம்முயிர் காப்ப நுதலியே
சிந்தி யேயெண் டிசையினும் பாரினு
மந்த ரத்தினு மாயிரிந் தோடினர்.

(இ-ள்.) இவ்வண்ணமாக விவர்களழிந்தவுடனே மற்றவர்கள் வருந்தித் தம துயிரைக்காக்கும்வண்ணம் நினைத்து எட்டுத்திக்குகளிலு மாகாயத்திலும் பூமியிலுமாகச் சிதறி விலகியோடினர்கள்.—எ-று. (கஎஎ)

வேறு.

தண்டா வவுணப் படையிவ்வகை சாய்ந்த வாறு
மெண்டா னைமள்ளர் பலரங்க ணிறந்த வாறும்
விண்டாழ் கதிரைச் சிறைபூட்டிய வீர வீரன்
கண்டான் வெகுண்டா னகைத்தோன்று கழறு கின்றான்.

(இ-ள்.) கெடாத வசுர சைனியங்க ளிவ்வண்ணம் விலகியோடியதனையும் எண்ணப்பட்ட பல வசுரசைனியங்களில் அநேகரவ்விடத்திலிறந்ததன்மையும் வானத்திலிருக்கின்ற சூரியனைச்சிறையிலடைத்த வீராதிவீரனாகிய பாநுகோபன்கண்டு வெகுண்டு சிரித்துக்கொண்டு கூறினன்.—எ-று. (கஎஅ)

ம்ட்டார் தெரியன் மகவான்முதல் வானு ளோர்க
ளொட்டாத சேணிற் றொலைவெய்தி யிரிந்து போக
வட்டாடல் செய்த நமரங்களின் றாவி மாண்டு
பட்டார்கொ லீசன் மகனேவு படைக டம்மால்.

(இ-ள்.) தேன்பொருந்திய மாலையணிந்த விந்திரன் முதலியதேவர்களெல்லாம் கண்ணுக்கெட்டாத நெடுந்தூரம் விலகியோடிப்போம் வண்ணம் கொன்று போர் புரிந்த நம்மவர்கள் சிவகுமாரனு லனுப்பப்பட்ட சேனைகளா லின்று இறந்துபட்டார்களோ?—எ-று. (கஎக)

எல்லார் கதிரைச் சிறைபூட்டிய யானு நிற்க
வொல்லார்க ளாற்ற லுளராயடு றூற்ற நன்றாற்
கொல்லாது சீற்ற மிலாதாயிகல் கொண்டு றாதேல்
வெல்லாது கொல்லோ வரிதன்னையும் வேழ மெல்லாம்.

(இ-ள்.) ஒளிபொருந்திய சூரியனைச்சிறையிலடைத்த நானு மிவ்விடத்திலிருக்க, பகைவர்கள் தைரியமுள்ளவர்களாய் நம்மவர்களைக் கொல்லுகின்றவன்மை நன்றாயிருக்கின்றது. யாதொன்றையுங்கொல்லாமல் கோபமுமில்லாமல் பகைகொண்டுமிராமலிருக்குமானல் யானைகளெல்லாம் சிங்கத்தையும் வெல்லாதோ! வெல்லும்.—எ-று

வாரார் கழற்கா லமராரட மாய்ந்த வெள்ள
மீரா யிரத்தின் மிகுமல்லதை யெஞ்சு றாதாற்
போராம லென்பாங் கரினிற்பன பேசில் வெள்ள
மோரா யிரமே யிரிகின்ற தொழிந்த தெல்லாம்.

(இ-ள்.) வாரிட்டுக்கட்டிய கழற்காலோடுகூடிய சைனியங்கள் போரிலிறந்த இரண்டாயிரவெள்ளங்கட் கதிகமாக விருக்குமேயன்றி குறையாது. விலகாமல் என்னுடைய பக்கத்தில் நிற்பனவாகிய சைனியங்களைக் கூறுமிடத்தில் ஓராயிரவெள்ளமேயாம். மற்றவையனைத்தும் விலகியோடின.—எ-று. (கஅக)

ஒன்றே வரிவி லொருவேன்பிடித் தொன்ன லார்மேற்
சென்றே யடல்செய் திலன்முன்னமென் சேனை யெல்லாங்
கொன்றே னியானே பொரவிட்டனன் கூழை தன்னி
னின்றே னிஃதோர் பொருளென்று நினைந்தி லேனல்.

(இ-ள்.) ஒன்றாகிய வரிந்த வில்லினை நானொருவனே பிடித்துக்கொண்டு சத்துருக்களினெதிரே சென்று கொன்றேனில்லை. முன்னே யென் சேனைகளையெல்லா மனுப்பி நானே போர்செய்யும்வண்ணம் செய்து அவைகளைக் கொன்றேன். கூழைப் படையினின்ற யான் இதனை யொருபொருளாக மதித்திலேன்.—எ-று. (கஅ௨)

தீருஞ் செயலை நினைந்தாவதென் சென்றி யானே
யோரொன்று கன்னன் முடிகின்றமுன் னொன்ன லார்தம்
பேரின் றெனவே யடுவேனது பெற்றி லேனேற்
சூரன் குமர னலன்யானெனச் சூண்மொ ழிந்தான்.

(இ-ள்.) ஆனகாரியத்தை யெண்ணினலாவதென்னை? இனியானேசென்று ஒரு நாழிகைப் பொழுது முடிவதற்குமுன்னே பகைவர்கள் பெயரே யில்லையென்று சொல்லும் வண்ணம் கொல்லுவேன். அவ்வாறு செய்யாது போவேனேயாயின் யான் சூரபன்மனுக்குப் பிறந்தவனல்லேன் என்று சபதங் கூறினன்.—எ-று. (கஅ௩)

பானுப் பகைவ னிவைகூறிப் பரிதி மான்றேர்
மானக் கடுங்கோல் வலவன் மரபிற் கடாவச்
சேனைக் கடலி னுடன்சென் றுதன் செங்கை தன்னிற்
கூனற் சிலையைப் புருவத் தினெடுங் குனித்தான்.

(இ-ள்.) பாநுகோபன் இவ்வண்ணமான சபத மொழிகளைக்கூறி சூரியனுடைய தேரிற் பூண்ட குதிரைகளை யொப்பக் கடியகோலினுல் வலவனுனவன் முறைப்படியடித்தோட்ட, பகைவர்களின் சேனைசமுத்திரத்தி னடுவிற்சென்று தனது கையிலுள்ள வளைந்த வில்லை புருவநெறியுடன் வளைத்தனன்.—எ-று. (௧௬௪)

மேதக்க தன்கைச் சிலைவாங்கி விளங்கும் வெள்ளி
சோதிக் கிறையாயுறு மெல்லையிற் சூல்கொண் மேக
மூதக்க பாரிற் சொரிந்தென்ன முனிந்து நேரும்
பூதப் படைமேற் சரமாரி பொழித லுற்றான்.

(இ-ள்.) சிறப்புபொருந்திய தனது வில்லைவளைத்து பிரகாசியாநின்ற வெள்ளியானவன் அத்தமயனமின்றி சூரியனுக்குமுன்னே உதயம்செய்து ஆட்சியிலிருக்குங் காலத்தில், சூல்கொண்ட மேகங்கள் பெரிய உலகத்தின்கண் மழைபொழிந்தாற்போல பாநுகோபன் கோபங்கொண்டு எதிர்த்த போர்சேனைகள்மீது சரவருஷம் பெய்தனன்.

பொழிகின்ற காலைத் திறன்மேதகு பூதர் நோக்கிக்
குழிகின்ற கண்ணி னழல்காலக் குலா சலங்க
ளொழிகின்ற வெற்பு முழுதும்பறித் தொல்லை வீசி
யழிகின்ற காலத் துருமேறென வார்த்து நின்றார்.

(இ-ள்.) இவனிவ்வாறு அம்புவிடுகின்ற சமயத்தில் வன்மையிற்சிறந்த வசுரர்களதனைக்கண்டு தமது ஆழமாகிய கண்களினின்றும் தீப்பொறியைக் கக்கிக்கொண்டு குலமலைகள் தவிர வுள்ள மற்றைய மலைகளனைத்தையும்பறித்து விரைவாக வெறிந்து பிரளயகாலத்து இடியேற்றைப்போல கர்ச்சனை செய்துநின்றார்கள்.—எ-று. (௧௬௬)

என்றின் பகைஞன் றனைப்பூதர்கள் யாரும் வீசுங்
குன்றம் பலவும் புடைசுற்றக் குறித்து நோக்கி
யொன்றங் கதனுக் கொருகோடி யொண்கோல தாகத்
துன்றும் படியே முறைதூண்டித் துகள்செய் திட்டான்.

(இ-ள்.) பாநுகோபன்மீது எல்லாப் பூதர்களாலும் எடுத்தெறியப்படுகின்ற மலைகளெல்லாம் சூழ்ந்து கொள்ளுதலும் அதனை யுற்று நோக்கி ஒவ்வொரு மலைக்கு ஒவ்வொருகோடி யெண்கொண்ட அம்புகளாக நெருங்கும்வண்ணம் முறையேவிட்டு அவைகளைத் தூளாகச் செய்தான்.—எ-று. (௧௬௭)

வண்டூது பூந்தாரவன் வாளியின் மாய்ந்த குன்ற
நுண்டூளி யாகியது வானிடை நொய்தி னேகி
விண்டோர்க டோறுஞ் செறிகின்றவர் மேனி தோயக்
கண்டேதி யாற்றுதவர் விண்ணிடைக் கங்கை புக்கார்.

(இ-ள்.) வண்டுகளூதுகின்ற பூமாலையணிந்த பாநுகோபனுடைய அம்புகளினுல் அழிந்த மலைகள் நுண்ணிய தூள்களாய் ஆகாயத்தில் விரைந்து சென்று சிதறி அவ்வானத்திலுள்ள ஊர்கடோறு மிருப்பவர்களது உடல்கடோறும் தோய்தலும் அதனுலுண்டாகிய தினவைச் சகிக்கமாட்டாதவர்களாய் அவர்கள் ஆகாயகங்கையில் மூழ்கினுர்கள்.—எ-று. (௧௬௮)

தேவுத் தடந்தே ரொருவன்செரு வெல்லை முற்று
மேவிக் கறங்கிற் றிரிவான்றனி வில்லை வாங்கிக்
கோவைத் தொடையொன் றினிலாயிர கோடி வாளி
தூவிக் கணத்தின் றொகைமுற்றுந் தொலைவு செய்தான்.

(இ-ள்.) தெய்வத்தன்மை பொருந்திய பெருந்தேரின்மீது இருக்கின்ற ஒப்பற்ற பாநுகோபன் போர்க்களமுழுமையுஞ்சென்று காற்றாடியைப்போல சுழலுகின்ற பெரிய ஒப்பற்ற வில்லைவளைத்து கோவையாகத் தொடுக்கின்ற ஒரு தொடையில் ஆயிரங்கோடி பாணங்களைவிட்டு பூதகூட்டங்களனைத்தும் தொலைத்தனன்.—எ-று. (கஅக)

நன்கா லநீவி மிளிர்கின்ற நறுநெய் தோய்ந்த
மின்கா லதனின் விரைகின்ற செந்தீயின் வெய்ய
முன்கா லுகின்ற சுடருள்ளன மூன்று கண்ண
வன்கால னஞ்ச வடவல்லன வஞ்சன் வாளி.

(இ-ள்.) அவ்வஞ்சகனுகிய பாநுகோபனதம்புகள் எத்தகையவென்னில், நன்றாய் விஷதைலத்திற்றோய்க்கப்பட்டு விளங்குகின்றன சில; நறிய நெய்யிற்றோய்க்கப்பட்டன சில; மின்னலையுங் காற்றையும்விட விரைந்து செல்லுகின்றன சில; செந்நிறமான தீயைக்காட்டிலும் வெவ்விய தன்மையினையுடையன சில; முன் புறத்திற் கக்குகின்ற தீப்பொறிகளையுடையன சில; மூன்றுகண்களையுடையன சில; வரிய காலனும் அஞ்சும் வண்ணம் கொல்லும் வல்லபத்தினையுடையன சில.—எ-று. (கக0)

தோளைத் துணிக்குங் கரத்தோடு துணிக்கு மார்பைத்
தாளைத் துணிக்கு மெரிகுஞ்சித் தலைது ணிக்கும்
வாளைத் துணிக்கு மணிமெய்வயப் பூதர் வாழ்க்கை
நாளைத் துணிக்கு மசுரன்விடு நாம வெங்கோல்.

(இ-ள்.) பாநுகோபனுகிய வசுரனுல்விடப்பட்ட அவன்பெயரெழுதப்பட்டுள்ள வெவ்விய வம்புகள் தோள்களை யறுக்கின்றன; கரங்களை யறுக்கின்றன; மார்பையும் கால்களையும் துணிக்கின்றன; பற்றியெரியும் தீயைப்போலக் காணப்படுகின்ற சிகைகளையுடைய தலைகளை யறுக்கின்றன; வாள்களை துணிக்கின்றன; அலங்கரிக்கப்பட்ட வெற்றியோடு கூடிய உடல்களையுடைய பூதர்களது வாழ்நாளைத்துணிக்கின்றன.—எ-று.

சூரற் கினிய மகன்வாளி துணித்து வீச
வீரத்தின் மிக்க கணத்ின்றலை வீழு முன்னர்ச்
சீருற்ற சோரிப் புனல்சிந்துவ தீயர்சென்ற
பாரைப் புனிதஞ் செயுந்தன்மை படைத்த தன்றே.

(இ-ள்.) சூரபன்மனுக்கினிய குமாரனுகிய பாநுகோபனது அம்பினுல் அறுக்கப்பட்டு வீசுகின்ற சௌரியத்திற்சிறந்த பூதகணங்களின்றலைகள் கீழே வீழ்தற்கு முன்னம், சிறப்புப்பொருந்திய இரத்தவெள்ளத்தைச்சிதறுகின்றன வெதுபோலுமென்னில், கொடியவர்களாலே செல்லப்பட்ட பூமியைத் தாம் சென்றுசேர்தற்கு (முன்னே புரோக்ஷணத்தினுல்) புனிதஞ்செய்யுந் தன்மையை யொத்தன.—எ-று. (கக௨)

பொன்சென் றிலங்குங் கணைதள்ளலும் பூதர் சென்னி
மின்சென்ற வானத் தெழச்சோரியு மீதெ ழுந்த
வென்சென் றனையாங் குமரன்படை யேக லென்னுப்
பின்சென்று பற்றித் தருவான்றொடர் பெற்றி போலும்.

(இ-ள்.) பூதர்களின் தலைகளைப் பொன்மயமாகவிளங்குகின்ற வம்புகள்சென்று அறுத்துத்தள்ளுதலு மவைகள் மின்னல் சென்றாற்போல வானத்திற் கிளம்பிச் செல்ல

உடனே (அத்தலையைப் பின்பற்றி இரத்தமும் மேனோக்கி யெழுந்த) அது எதுபோலுமென்னில், நீ யேன் போகின்றனை நாம் குமரக்கடவுளின் சைனியங்கள் (அதனை மக்கழிவில்லை) ஆதலால் நீ போகாதே யென்று கூறிக்கொண்டு பின்னாலே தொடர்ந்துசென்று அத்தலையைப் பிடித்துக்கொண்டு வரும்பொருட்டுப் பின்பற்றிச் செல்லுந்தன்மையை யொக்கும்.—எ-று.' (கக௩)

எய்யுந் தொழிலுக் கவன்மேலவர் யாவ ரெங்க
ளையன் படையாகிய பூதர்தம் மாற்றன் மொய்ம்புங்
கையும் வரையுஞ் சிரமுங் கழற்கானு மார்பு
மொய்யென் றறுக்கு மவுணன்விடு மொன்றொர் வாளி.

(இ-ள்.) அம்புவிடுந்தொழிலிலே அவனைக்காட்டிலும் சிறந்தவர்கள் யாரிருக்கின்றார்கள் ; ஒருவருமில்லை. (அதேனெனில்) அவ்வசுரனால் விடப்பட்ட ஒவ்வொரு அம்பும் எங்களையனது சேனைகளாயுள்ள பூதர்களின் சகித்தற்குரிய குணத்தினையுடைய தோள்களையும் கைகளையும் அலங்கரிக்கப்பட்ட தலைகளையும் கழலணிந்த கால்களையும் மார்புகளையும் விரைவாக அறுக்காநிற்கும்.—எ-று. (ககச)

வானோர் தொகையைச் சிறையிட்டவன் மற்றிவ் வாறு
தானோர் சிலையின் வலியாலடத் தாவில் பூத
ரானோ ரளப்பில்லவர் மாய்ந்திட வாற்ற லில்லா
வேனோர்கள் யாரு முடைவாரிவை யெண்ண லுற்றார்.

(இ-ள்.) தேவர் கூட்டத்தினைச் சிறையிலிட்டவனாகிய பானுகோபன் இவ்வண்ணமாகத் தனது ஒருவில்லின்வல்லமையாலே பூதர்களைக்கொல்லுதலும், அநேகம் பூதர்கள் அவனம்புக்கிரையாயிறத்தலும் வன்மையற்ற மற்றப்பூதர்கள் ஓடத்தொடங்கினவர்களா யிவ்வாறு நினைக்கின்றார்கள்.—எ-று. (ககரு)

மின்னும்புகர் வேலவ னங்குளன் வீர வாகு
பின்னின்றன னீதுண ரான்பிற ராரு மற்றே
முன்னின்ற நம்மை யிவனட்டிடு மொய்ம்பி லேம்யா
மென்னிங்கு நிற்பதெ னப்பூத ரிரிந்து போனார்.

(இ-ள்.) ஒளிவீசாநின்ற நிறத்தோடுகூடிய வேற்படையினையுடைய குமரக்கடவுள் அங்கு பாசறையிலிருக்கின்றனர். வீரவாகுதேவரோ பின்னே கூழைப்படையிலிருக்கின்றனர். அதனாலவரிதனையுணரார். மற்றைய வீரகேசரியாதியரும் அவ்வண்ணமே. எதிரிலேயிருக்கின்ற நம்மை இவனிப்பொழுது கொல்லுவான். நாமோ வன்மையற்றவர்களா யிருக்கின்றோம். அதனால் நாமிங்கிருப்பதிற் பயன் என்னவென்று விலகியோடினார்கள்.—எ-று. (ககசு)

இரிகின்ற பூத ரெவரும் படைக்கீற்றி னின்ற
வரிகின்ற தண்டா ரடன்மொய்ம்புடை வள்ளல் பாங்கர்ப்
பரிகின்ற நெஞ்சத் தொடுசெல்லவப் பான்மை யாவுந்
தெரிகின்ற னனுக்கிர னென்பதொர் சேனை வேந்தன்.

(இ-ள்.) விலகியோடாநின்ற பூதர்களனைவரும் சைனியங்களின் கடைசியில் நின்ற கட்டப்பட்ட தண்ணிய மாலையணிந்த வன்மையோடுகூடிய தோள்களையுடைய வீரவாகுதேவரது பக்கத்தில் வருத்தம்பொருந்திய மனதுடன் செல்லாநிற்க வத்தன்மைகளையெல்லாம் உக்கிரனென்னும் பேரினையுடையசேனாபதியானவன் உணர்ந்தனன்.

கண்டுக்கிர னாகிய பூதன் கனன்று செங்கண்
விண்டிற் பெரிது நிவப்புற்று விளங்கு பொன்னங்

தண்டப்படை யொன்றினை யங்கையிற் றூங்கி யேகி
யண்டத் தவர்கள் புகழத்தனி யர்ச்சித்து நேர்ந்தான்.

(இ-ள்.) இதனைக்கண்டு உக்கிரனாகிய பூதவீரன் கோபத்துடன் செந்நிறம் பொருந்திய கண்களையுடையவனாய் திருமாலைக்காட்டிலுமுயர்ந்து விளங்குகின்ற பொன்மயமான ஒருதண்டாயுதத்தினை அழகியகையிலெடுத்துக்கொண்டு சென்று தேவர்கள் புகழும் வண்ணம் தானொருவனே கர்ச்சனைசெய்துகொண்டு சென்றனன்.—எ-று. ()

செற்றத்துட னுக்கிர னேர்புகு செய்கை தன்னைக்
கற்றைக்கதி ரைத்தளை யிட்டவன் கண்டு தன்கைக்
கொற்றச்சிலை யைக்குனித் தாயிர கோடி வாளி
முற்றத்துரந் தேயவன் யாக்கையை மூடி யார்த்தான்.

(இ-ள்.) கோபத்துடனே உக்கிரனானவன் எதிரில்வருந்தன்மையைக் கற்றையான கிரணங்களையுடைய சூரியனைச்சிறையிலிட்ட பாநுகோபன் கண்டு தனது கையிலுள்ள வெற்றிபொருந்திய வில்லை வளைத்து ஆயிரங்கோடி யம்புகளைவிட்டு அவ்வுக்கிரனுடைய உடல்முழுமையும் மறைத்துக் கர்ச்சித்தான்.—எ-று. (௧௯௯)

மைக்கின்ற மேனி நெடும்பூதனை வஞ்சன் வாளி
தைக்கின்றில வானுதி மாய்ந்து தளர்ந்து வீழ்ந்த
மெய்க்கின்ற வின்பு மறனும் விளையாது வாளா
பொய்க்கின்ற வன்கைப் பொருள்வல்லையிற் போல வேபோல்.

(இ-ள்.) உண்மையான வின்பமும் தருமமும் உண்டாகும் வண்ணம் செய்யாமல் வீணாகப் பொய்யான காரியத்தைச்செய்கின்றவனது கைப்பொருள் விரைந்தழியுந் தன்மையைப்போல், கருநிறம்பொருந்திய உடலினையுடைய நெடிய வுக்கிரனாகிய பூதசேனாபதியை வஞ்சகனாகிய பாநுகோபனது அம்புகள் தைத்துக்கொள்ளாமல் கூர்மையான கூர்மழுங்கித் தளர்வடைந்து விழுந்தன.—எ-று. (௨௦௦)

விடுகின்ற வாளி பயனின் றயல்வீழ்த லோடும்
படுகின்ற தன்மை யதுகண்டனன் பானு கோப
னடுகின்ற தெவ்வா றிவன்றன்னையென் றங்கண் வானந்
தொடுகின்ற தாங்கோ ரெழுவத்தைச் சுழற்றி விட்டான்.

(இ-ள்.) விடப்பட்ட வம்புகள் பிரயோசனமற்று பக்கத்தில்விழுதலும் அவ்வாறாகுந் தன்மையை பாநுகோபன் கண்டு இவனை யெவ்வாறுகொல்வதென்றாலோசித்து அவ்விடத்தில் ஆகாயத்தை யளாவியதாகிய ஒரு எழுவினை (எடுத்து)ச் சுழற்றி யெறிந்தனன்.—எ-று. (௨௦௧)

தீயன்முச லந்தனை யுக்கிரன் செங்கை தாங்கு
மாய்திண்கதை யாற்சிதைத் தேயவன் றேரை யண்மிப்
பாயும்பரி யைப்புடைத் தொல்லையிற் பாரின் வீட்ட
வேயென்று பல்காலிகழ்ந் தார்த்தனர் யாரும் வானோர்.

(இ-ள்.) கொடியவனாகிய பாநுகோபன்விட்ட முசலத்தை உக்கிரனென்பவன் செவ்விய கையிற்றூங்கிக்கொண்டிருந்த திண்ணிய கதையினாலடித்துச் சிதைத்து அவன் தேரினதெதிரிற்சென்று தாவாநின்ற குதிரைகளையடித்து விரைவாக பூமியிற் றள்ள விதனைக்கண்டு பலதரமும் தேவர்கள் ஏ! ஏ! என்று கூறி இகழ்ந்து ஆரவாரித்தார்கள்.—எ-று. (௨௦௨)

புரவித் தொகுதி விளிவாகப் பொருவின் மைந்த
னெரியிற் கனன்று புடைபோயி ரதத்தின் வாவி
வரிவிற் குனித்துக் கிரனேந்தும் வலிய தண்ட
முரிவுற்றிட வேபொரு நூறு மொட்டம்பு தொட்டான்.

(இ-ள்.) குதிரைக்கூட்டங்களிறத்தலும் ஒப்பற்ற பாநுகோபன் தீயைப்போல சீற்றங்கொண்டு பக்கத்திலுள்ள க்ஷேமத்தேரில் பாய்ந்து எறினவனுய் வரியப்பட்ட வில்லைவளைத்து உக்கிரனென்பவன் சுமந்துகொண்டிருக்கின்ற வலிய தண்டமானது முறிந்துபோகும் வண்ணம் நூறுமொட்டம்புகளை யெய்தனன்.—எ-று. (உ0௩)

நூறென்கணை யாலவன் றண்ட நுண்டுளதாகச்
சீறுந்திற லுக்கிரன் கைக்கொடு தீயன் மைந்த
னேறுந்தடந் தேர்தனை வானி னெடுத்து வீசி
வீறும் பரிதி பதத்தின் றுணை மேய தன்றே.

(இ-ள்.) ஒள்ளிய நூறு பாணங்களால் அவ்வுக்கிரனது தண்டாயுதம் நுண்ணிய தூள்களாதலும், கோபங்கொண்ட வன்மையோடுகூடிய உக்கிரனுனவன் கையைக்கொண்டு சூரபன்மனது மகனுகிய பாநுகோபன் ஏறியிருக்கின்ற தேரினையெடுத் தாகாசத்திலெறிதலு மது உயர்ந்து சூரியமண்டலம் வரைக்கும் சென்றது.—எ-று.(உ0௪)

துன்னுன் மதலை வருகின்றது சூர னேக்கி
முன்னுளி னின்று நமைப்பற்ற முயன்று ளான்கொ
லன்னுன் புணர்ப்பை யுணரேனணித் தாகு மின்ன
மென்னு வதோவென் றுளத்துன்னி யிரிந்து போனுன்

(இ-ள்.) பகைவனுகிய சூரபன்மனது மகனுகிய பாநுகோபன் வருதலைச் சூரியன் கண்டு முன்னுளிற்போல இன்று நம்மைப்பிடிக்கும் பொருட் டெண்ணியிருக்கின்றனே! அவன்தாலோசனையை யுணர்கின்றேனில்லை; சமீபமாக வந்துவிடுவான்; இனி என்னுய்முடியுமோ வென்று தன்மனத்தில் நினைத்து விலகிச்சென்றுன்.—எ-று. ()

தேரோடு சென்ற வசுரன்மகன் சேணின் மீண்டு
பாரோடு சேர்வான் வருகின்ற பரிசு நோக்கிற்
காரோடு வானந் தவறுற்றுழிக் காமர் தாருத்
தூரோடு சாய்ந்து மறிகின்றதொர் தோற்ற மொக்கும்.

(இ-ள்.) தேரோடு ஆகாயத்திற்சென்ற அசுரகுமாரனுகிய பாநுகோபன் வானத்தினின்றும் பூமியடையும் பொருட்டு வருந்தன்மையைப் பார்த்தால், மேகத்துடன் ஆகாயமானது கவிழ்ந்த சமயத்தில் அழகிய கற்பகத்தருவானது வேரோடு சாய்ந்து மறிகின்ற ஒப்பற்ற தோற்றத்தினை யொக்கும்.—எ-று. (உ0௬)

வேறு.

வீழு கின்றதே ரொருவியே வெங்கதிர்ப் பகைஞன்
றூழு மெய்யுடை யுக்கிரன் றன்னைவந் தணுகி
மாழை யொண்கையா லெற்றியே யெடுத்துவா னுலகோ
ரேழை யுங்கடந் தப்புறஞ் சென்றிட வெறிந்தான்.

(இ-ள்.) வெவ்விய சூரியனுக்குப் பகைவனுகவுள்ள பாநுகோபன் விழாநின்ற தேரினின்றும் விலகிக் குறுகிய சரீரத்தினையுடைய உக்கிரனை வந்தடைந்து பொன்மயமான வொள்ளிய கையினுலடித்தெடுத்து ஏழு மேலுலகங்களையும் கடந் தப்பாற் செல்லும்வண்ணம் எறிந்தனன்.—எ-று. (உ0௭)

எதியும் வெய்யவன் வேறொரு தேரின்மே லேறி
வெறிகொள் பங்கயத் தண்ணலார் விதித்துமுன் னளித்த
செறியு மூவிலை யிருதலை வேலினைச் சேண்போய்
மறியு முக்கிர னெதிர்புக விடுத்தனன் மன்னோ.

(இ-ள்.) உக்கிரனை யெடுத்தெறிந்த பாநுகோபனென்னும் வெய்யவன் வேறே யொருதேரின்மீதேறி, மணம்பொருந்திய தாமரைமலரி லிருக்கின்ற பிரமனானவன் படைத்தளித்த நெருங்கிய மூன்றிலைகளையுடைய ஓர் இருதலை வேலினை மேலே சென்று கீழே வருகின்ற உக்கிரனெதிரிலே விட்டனன்.—எ-று. (உ0அ)

விடுத்த தெய்வவே லுக்கிரன் மருமத்தை விடர்போற்
படுத்தி யேபுகுந் தப்புறம் போந்திடப் பாரி
னடுத்து மற்றவன் சிறிதயர் வுற்றன னதுகண்
டெடுத்த குன்றொடுந் தண்டியென் றுரைப்பவ னெதிர்ந்தான்.

(இ-ள்.) விட்ட தெய்வவேலானது உக்கிரனுடைய மார்பினை விடரைப் போலாக்கி யுள்ளேபுகுந்து வெளியேவர பூமியையடைந்து அவ்வுக்கிரன் சற்றே மயக்கமடைந்தனன். அதனைக் கண்டதண்டியென்று கூறப்படுபவன் கையிலெடுக்கப்பட்ட ஒரு மலையுடன் பாநுகோபனுட னெதிர்த்தான்.—எ-று. (உ0க)

தண்டி யாகிய பாரிடன் றனதுகைத் தலத்தின்
மிண்டு கின்றதோ ரடுக்கலை யவன்மிசை வீசக்
கொண்ட வார்சிலை வாங்கியா யிரங்கணை கோத்துக்
கண்ட துண்டம தாக்கின னதனையோர் கணத்தில்.

(இ-ள்.) தண்டியென்று கூறப்படுகின்ற பூதவீரன் தனது கையினிடத்திலிருந்த ஒப்பற்றமலையை அப்பாநுகோபன்மீதெறிய வவன் உடனே தன்கையில் வைத்திருக்கின்ற நீண்டவில்லைவளைத்து அதிலாயிரமம்புகளைவைத்துவிட்டு அம்மலையை ஒரு கணப்பொழுதில் கண்டதுண்ட மாக்கினன்.—எ-று. (உகO)

வெற்பு நுண்டுக ளாதலும் விண்ணுற நிமிர்ந்து
கற்ப கம்புரை மராமர மொன்றினைக் களைந்து
வற்பு றுங்கரந் தனினெடுத் தவுணர்கோன் மணித்தேர்
முற்பு குந்திடும் பரிகளைப் புடைத்தனன் மொய்ம்பால்.

(இ-ள்.) மலை நுண்ணியதுகளாகவாதலும், அதனைக்கண்ட தண்டி ஆகாயத்தை யளாவி யுயர்ந்து நிற்கின்ற கற்பகத்தை யொத்த ஓர் மராமரத்தைப் பிடுங்கி வன்மை பொருந்திய கையிலெடுத்து அசுராதிபனாகிய பாநுகோபனது தேரின்முன்னே செல்லாநிற்கின்ற குதிரைகளை பலத்துடனடித்தனன்.—எ-று. (உகக)

மொய்ம்பி னிற்புடைத் திடுதலுங் கவனமா முழுது
மம்பு வித்தலை மறிந்தன வதற்குமுன் னவுணன்
பைம்பொன் முத்தலைப் பல்பதி னுயிரம் பகழி
செம்பு னற்கொளத் தண்டிதன் னெற்றியுட் செறித்தான்.

(இ-ள்.) பலத்துடனடித்தவுடனே வேகமாகச் செல்லுகின்ற குதிரைகளனைத்தும் அழகிய பூமியில்வீழ்ந்திறந்தன;இதற்குள்ளேயே அவ்வசுரன் பசியபொன்மயமான மூன்று தலைகளை யுடைய பல பதினுயிரமம்புகளை இரத்தமொழுகும் வண்ணம் தண்டியின் நெற்றிக்குள் புகுத்தினன்.—எ-று. (உகஉ)

செறித்த காலையின் மெலிந்தனன் றண்டியச் செய்கை
குறித்து நோக்கியே பிஞகியாம் பூதனோர் குன்றம்
பறித்து வீசுவான் முயறலு மாயிரம் பகழி
நிறத்தின் மூழ்குமா றெய்தன னனையனு நின்றான்.

(இ-ள்.) தண்டியின் நெற்றியில் அம்புகள் நெருங்கும் வண்ணம் விட்டவுடனே அவ்வம்புகள்பட்டுத் தண்டியானவன் மெலிவடைந்தனன். இவன் அவ்வாறு மெலிவடைந்த செய்கையை பிநாகியென்னும் பூதவீர னுற்றுநோக்கி ஓர் மலையை யெடுத்து பாநுகோபன்மீது எறிதற்கு முயற்சித்தனன். அதனைக்கண்ட வவன் இவன் மார்பில் படும் வண்ணம் ஆயிரமம்புகளையெய்தான். உடனே அப்பிநாகியும் (சும்மா) நின்றனன்.

குன்று கொண்டகைப் பிஞகியுந் தொல்வலி குறைந்து
நின்ற காலையி லேனைய பூதரு நேர்ந்து
சென்று வீற்றுவீற் றமரினைச் சிலபொழு தியற்றி
யொன்று தீங்கதிர்ப் பகைஞனுக் காற்றல ருடைந்தார்.

(இ-ள்.) மலையைத்தாங்கிக்கொண்டிருக்கின்ற கையினையுடைய பிநாகியென்பவனும் தனது பழயவல்லபமிழந்து நின்றவுடனே, மற்றைய பூதர்களும் எதிர்த்துச் சென்று வரிசைவரிசையாக சற்றுநாழிகை போர்புரிந்து உஷ்ணகிரணங்களையுடைய பாநுவின் பகைவனுக் காற்றாதவர்களாய் தோற்றுப்போயினார்கள்.—எ-று. (உ௧௪)

எண்ட ருங்கணத் தலைவர்க டொலைதலு மிதனைக்
கண்டு வெஞ்சினந் திருகியே யெதிர்ந்தனர் கபாலி
யண்ட லோசன னிரஞ்சன னுருத்திர னகண்டன்
றண்ட கன்முத லிலக்கமா கியபடைத் தலைவர்.

(இ-ள்.) நூற்றெட்டென்னும் எண்ணினையுடைய கணத்தலைவர்கள் தோற்றவுடனே அவர்களின் தோல்வியைக்கண்டு மிக்க கோபங்கொண்டு இலக்கம் படைத்தலைவர்களாகவுள்ள கபாலி, அண்டலோசனன், நிரஞ்சனன், உருத்திரன், அகண்டன், தண்டகன் முதலாயுள்ளவர்கள் எதிர்த்தார்கள்.—எ-று. (உ௧௫)

மிடல்ப டைத்திடு மிலக்கமாம் வீரரும் விரவித்
தடம ணிப்பெருந் தேரொடு மவுணன்முன் சார்ந்து
சுடரு டைக்கட கங்கிளர் செங்கையிற் றுன்னுங்
கொடும ரத்தினைக் குனித்தனர் நாணொலி கொண்டார்.

(இ-ள்.) பலம்பொருந்திய இலக்கம் வீரர்களும் நெருங்கி மணிகள் கட்டிய விசாலமான பெரிய தேர்களுடன் பாநுகோபனது எதிரிற்சென்று ஒளியினையுடைய கடகங்கள் விளங்குகின்ற செவ்விய கைகளிலேயிருக்கின்ற விற்களை வளைத்து நாணொசைகண்டார்கள்.—எ-று. (உ௧௬)

கவடு பட்டிடு மீரிரு மருப்புடைக் கருபக்
குவடு பட்டதை யுரைப்பதெ னொருகரிக் கொம்பாற்
சுவடு பட்டிடு மேருவுஞ் சலித்தது துளங்கிச்
செவிடு பட்டன வானமும் வையமுந் திசையும்.

(இ-ள்.) கிளைகளாகவுள்ள நான்கு கொம்புகளோடுகூடிய திக்குயானைகள் அடைந்த துன்பத்தை என்னென்றுரைக்கப்போகின்றேன். ஒப்பற்ற விநாயகப்பெருமானது கொம்பினால் வடுப்பட்ட சமானரஹிதமாகிய மேருமலையும் சலித்தது; வானுலகமும் மண்ணுலகமும் திக்குகளும் நடுங்கிச் செவிடுபட்டன.—எ-று. (உ௧௭)

பானு கோபன்மற் றதுகண்டு சிறுநகை படைத்து
மான வெஞ்சிலை யொன்றினைத் தோள்கொடு வணக்கி
மேன லந்திக ழண்டங்கள் யாவையும் வெருவத்
தேனின் வீழ்ச்சியை மலைந்திடுங் குணத்தொலி செய்தான்.

(இ-ள்.) இதனைப் பாநுகோபன் கண்டு சற்றே சிரிப்புடையவனாய் பெரிய வெவ்விய ஒரு வில்லினைத் தன்றோளைக்கொண்டு வளைத்து உயர்ந்த நன்மைகளோடு விளங்குகின்ற எல்லாவண்டங்களு மச்சமடையும் வண்ணம் தேனினொழுக்கத்தையும் அவமதிக்கத்தக்க நிறத்தோடுகூடிய நாணியின் ஓசையை யுண்டாக்கினான்.—எ-று. ()

உலத்தின் மேற்படு மொய்ம்புடை யிலக்கரு மொருங்கே
வலத்தில் வெஞ்சிலை யிடத்தினில் வடிக்கணை தொடுத்து
நிலத்தில் வந்துகார் நெடும்புனல் சிதறிய நெறிபோற்
புலத்தி யன்முறைப் போன்மேற் றலைத்தலை பொழிந்தார்.

(இ-ள்.) திரண்ட கல்லைக்காட்டிலும் சிறந்துள்ள தோள்களையுடைய இலக்கம் வீரர்களும் ஒன்றாய் வன்மையுடன் வெவ்விய விற்களில் கூரியவம்புகளை வைத்துப் பூமியில்வந்து, நெடிய மேகமானது மிகுந்த நீரைச்சொரிந்த தன்மையைப்போல புலத்தியன் வழித்தோன்றலாகிய பாநுகோபன்மீது ஒவ்வொருவர்களும் தனியே தனியே விட்டார்கள்.—எ-று. (௨௧௯)

தொடலை யம்புயத் திலக்கமாம் பொருநருந் தொடுத்து
விடுச ரத்தொகை யவுணன்மேல் வீற்றுவீற் றேக
னெடிய தெண்டிரைப் பேரியா றெண்ணில நிரந்து
புடவி கொண்டதோ ரளக்கர்மேற் போவன போலும்.

(இ-ள்.) மாலையணிந்த தோள்களையுடைய இலக்கம் வீரர்களும் தொடுத்துவிட்ட அம்புக்கூட்டங்கள் பாநுகோபன்மீது வரிசை வரிசையாகச் செல்லுதல் (எதுபோலு மென்னில்), நீண்ட தெள்ளிய திரைகளையுடைய அநேக பெரிய ஆறுகள் வரிசையாகப் பூமியிலுள்ள வொப்பற்ற கடன்மீது செல்லுதலையொக்கும்.—எ-று. (௨௨0)

இலக்கர் விட்டிடு சரமெலா மவுணர்க ளெவருங்
கலக்க முற்றிட வருதலுஞ் சூர்மகன் கண்டே
கொலைக்கொ டுஞ்சிலை வளைத்ததி லாயிர கோடி
விலக்க ருங்கணை தொடுத்தவை யறுத்தனன் விரைவில்.

(இ-ள்.) இலக்கம் வீரர்களாலே விடப்பட்ட அம்புகளெல்லாம் எல்லாவசுரர்களுங் கலக்கமடையும்வண்ணம் வருதலும், அதனை பாநுகோபன்கண்டு கொலைத்தொழிலுக்குரிய வில்லினைவளைத்து அதனில் விரைவாக விலக்குதற்கரிய ஆயிரங்கோடி யம்புகளைத் தொடுத்துவிட்டு எதிரிகளினவ்வம்புகளை யறுத்தனன்.—எ-று. (௨௨௧)

அறுத்து மற்றுமோ ராயிர கோடியம் பதனைச்
செறுத்து விட்டிட வறுமுகன் பரிசனர் தெரிந்து
விறற்க டுங்கணை யாங்கதற் கெழுமையால் விடுத்து
மறித்து மீண்டிடு வித்தன ரவுணர்கோன் வாளி.

(இ-ள்.) எதிரிகளினம்புகளையறுத்தும் பின்னுங் கோபங்கொண்டு ஓராயிரங்கோடி யம்புகளைவிட்டனன்; அதனைச்சண்முகப்பெருமானதுபரிசனர்களாகிய இலக்கர்கள் உணர்ந்து வெற்றியினையும் வேகத்தினையும் உடையவம்புகளை அப்பகைவன்விட்டதற்கு ஏழுமடங்கதிகமாக விட்டு அவ்வசுராதிபன் விட்ட அம்புகளைத்தடுத்து அவன்மீதுபோம்வண்ணம் செய்தார்கள்.—எ-று. (௨௨௨)

அறந்தி றம்பிய சூர்மகன் வாளிக ளனைத்து
முறிந்து மற்றவன் றன்மிசை யுற்றன முழங்கிச்
செறிந்த மாமுகி லுயிர்த்திடுஞ் சிகரஞ் செல்லா
தெறிந்து கால்பொர வந்துழி மீண்டுபோ மியல்போல்.

(இ-ள்.) முழங்கி நெருங்கிவந்த பெரிய மேகங்கள் தன்னையளித்த கடன்மீது செல்லாது காற்றுமோதி யடித்தவுடன் வந்தவிடத்தை நோக்கித் திரும்பிச்செல்லுந் தன்மையைப்போல, தருமத்தினின்றுந் தவறிய வசுரகுமாரனாகிய பாநுகோபனதம்புகளனைத்தும் ஒடிந்து அவன்மீதே திரும்பிவந்தன.—எ-று. (௨௨௩)

செங்க திர்ப்பகை சிறியே செயிரில்ா வயிரத்
துங்க வெங்கணை யப்ரித மிசைமிசை தூரந்து
வெங்கண் வீரர்கள் செலுத்திய சரமெலாம் விலக்கி
யங்கை யிற்கொண்ட கார்முக மிலக்கமு மறுத்தான்.

(இ-ள்.) பாநுகோபனானவன் கோபங்கொண்டு குற்றமற்ற பெரிய வெவ்விய நேரானவைகளாகிய வச்சிரமுகாஸ்திரங்களை மேலுமேலும்விட்டு வெவ்வியவீரர்களாலே விடப்பட்டவம்புகளையெல்லாந் தடுத்து அவர்களழகிய கைகளிற்பிடித்திருந்த இலக்ஷம் விற்களையு மறுத்தனன்.—எ-று. (௨௨௪)

பிடித்த கார்முக மற்றுழி மானவர் பெயர்த்துந்
தடத்த தேரிடை யிருந்திடுஞ் சேமமாந் தனுக்க
ளெடுத்து வாங்கியே சரந்தூரந் திரவியம் பகைஞன்
றொடுத்து மேல்விடுங் கணைகளை யிடையிடை துணித்தார்.

(இ-ள்.) பிடித்திருந்த விற்களறுந்தவுடனே அவ்வீரர்கள் பின்னும் பெரிய தேரிலேயிருந்த க்ஷேமவிற்களையெடுத்துவளைத்து அம்புகளைவிட்டுப் பாநுகோபன் தங்கள்மீதுவிட்ட அம்புகளை இடை யிடையே யறுத்தார்கள்.—எ-று. (௨௨௫)

சூரன் மாமகன் றொடுசரந் துணித்தபின் றாண்டுந்
தேரி லாயிரம் பரியினு றுயிரந் தெழித்துக்
காரு லாவரு பதாகையி லாயிரங் கடவி
யூரும் வன்மைசேர் வலவன்மே லாயிர முய்த்தார்.

(இ-ள்.) சூரனது சிறந்த மகனாகிய பாநுகோபன்விட்ட வம்புகளையெல்லாம் அறுத்தபின்பு, ஓட்டாநின்ற தேரிலாயிரமுங் குதிரைகளில் இலக்ஷமும் கொர்ச்சித்துக்கொண்டு மேகஞ்சஞ்சரிக்கின்ற கொடிகளிலாயிரமும் அடித்து ஓட்டுகின்றவன்மை பொருந்திய சாரதியின்மீதாயிரமுமாகிய வம்புகளை விட்டார்கள்.—எ-று. (௨௨௬)

வசையில் வீரர்க ளிவ்வகை விடுத்தலு மனத்திற்
பசையில் சூர்மக னிரதமும் பரிகளும் பாகு
மசனி கொண்டதோர் துவசமு மற்றன வதற்பின்
விசையில் வேறொரு தேரிடைப் பாய்ந்தனன் வெகுண்டு.

(இ-ள்.) குற்றமற்ற வீரர்களிவ்வண்ணம் அம்புகளைவிடுதலும், அவ்வைகளால் மனத்தில் இரக்கமென்பதில்லாத பாநுகோபனது தேரும் குதிரைகளும் சாரதியும் காற்றுலசைந்து இடியோசையைக்காட்டுகின்ற ஒப்பற்றகொடியும் அறுபட்டன. உடனே கோபத்துடனப்பாநுகோபன் வேறேயொரு தேரின்மீது ஏறினன்.—எ-று. (௨௨௭)

வைய மேற்செலு மவுணர்கோன் றன்சிலை வணக்கிச்
செய்ய கூர்ங்கணை நூறுநூ றுயிரஞ் செலுத்தி

யையன் விட்டவர் தேரொடு சிலைகளை யறுத்து
மெய்யி டந்தொறு மழுத்தின னெண்ணிலா விசிகம்.

(இ-ள்.) வேறு தேரிலேறிச்சென்ற அசுராதிபனான பாநுகோபன் தனது வில்லைவளைத்து ஒழுங்கானதுங் கூரியனயுடையதுமான லட்சம்பாணங்களைவிட்டுக் குமரக்கடவுளால் அனுப்பப்பட்ட இலக்கம்வீரர்களின் தேர்களுடன் விற்களையும் அறுத்து, அளவற்ற அம்புகளை அவர்களுடம்பிலு மழுத்தினான்.—எ-று. (உஉஅ)

பரிதி மாற்றலன் பகழிகண் மெய்யெலாம் பட்டுக்
குருதி சோர்தலு மிலக்கருந் தொல்வலி குறைந்து
பெரிது நோயுழந் தாற்றல ராகியே பின்னர்ப்
பொருதி றந்தனை நினைந்தில ருடைந்துபின் போனார்.

(இ-ள்.) பாநுகோபன்விட்டவம்புகள் உடன்முழுதிலும் தைத்து, இரத்தமொழுகுதலும், (போர்செய்த) அந்த இலக்கம்வீரர்களும் பெரிய வலிகுறைந்து மிகவும் வருத்தமடைந்து தாளமாட்டாதவர்களாய்ப் பின்பு போர்செய்யுந்தன்மையை யெண்ணமல் நிலைகுலைந்து பின்னாற்சென்றார்கள்.—எ-று. (உஉகூ)

வற்பு றுத்திய விலக்கம்வில் லாளரு மலைய
விற்பி டித்தவ னொருவனே யாரையும் வென்றான்
முற்ப கற்புரி தவப்பய னிஃதென மொழிமோ
கற்பி னாற்றலென் றுரைத்துமோ கழறுவ தெவையே.

(இ-ள்.) இலக்கம்வீரர்களென்று ஊர்ச்சிதமாகக்கூறப்பட்ட இலக்கம்வில்லாளிகளுமெதிர்ந்துநின்று போர்செய்ய அவர்களோடு எதிர்த்து ஒருவில்லைப் பிடித்த கையினையுடைய பாநுகோபனொருவனேநின்று அவ்வெல்லாரையும் வென்றான்; இது இவ்வாறாகியதை முன்னே செய்த தவத்தின் பயனென்று கூறலாமோ? அல்லது அவன் கற்ற கல்வியின் வன்மையா லாகியதென்று கூறலாமோ? இதனிலெதனைக்கூறுவது.

ஆன காலையில் வீரகோ ளரியென வறையு
மான வீரன்மற் றதுகண்டு தனதுவில் வளைத்துப்
பானு கோபன்முன் னெய்தியே பிறைமுகப் பகழி
சோனை மாரியும் விம்மித முற்றிடச் சொரிந்தான்.

(இ-ள்.) அப்படிப்பட்டசமயத்தில் வீரகோளரியென்று கூறப்படுகின்ற பெரிய வீரனதனைப்பார்த்து தன்வில்லைவளைத்துப் பாநுகோபனெதிரில்வந்து, பிறைமுகாஸ்திரங்களைச் சோனமேகமு மாச்சரியமடையும்வண்ணம் விட்டான்.—எ-று. (உ௩௧)

சொரிந்த காலையி லதுகண்டு சூரன்மா மதலை
சிரந்து ளக்கியே யீங்கிவ னாற்றலுந் திறலும்
பெருந்த னிச்சிலை விஞ்சையு நன்றெனப் பேசி
வரிந்த கார்முகங் குனித்தனன் பனித்தனர் வானோர்.

(இ-ள்.) சோனமேகவருஷத்தைப்போல அம்புகளைவிட்ட, உடனே அதனைப் பாநுகோபன்கண்டு தலையசைத்து இவ்விடத்திலிவனுடைய வல்லபமும் வெற்றியும் பெரிய ஒப்பற்ற வில்வித்தையும் நன்றாயிருக்கின்றதென்று கூறி, வாரிட்டுக்கட்டப்பட்ட வில்லைவளைத்தனன்; அதனைக்கண்டு தேவர்கள் நடுக்கமுற்றார்கள்.—எ-று. ()

குனித்த சாபத்தி னூறுநூ றுயிர கோடி
நுனித்த வச்சிர நொறிலு னடப் பகழிக ளாக்கித்
தனித்து நேர்ந்தவன் விடுத்திடு சரமெலாந் தடிந்து
துனித்தி டக்கணை யாயிர மழுத்தினன் றேண்மேல்.

(இ-ள்.) வளைத்த வில்லில் இலக்ஷங்கோடி யென்னுங் கணக்கினையுடையதுங் கூரியதும் வச்சிரமயமானதும் வேகமுடையதுமான அம்புகளைவைத்துத் தனியே வந்தெதிர்த்த வீரகோளரியால் விடப்பட்ட அம்புகளனைத்தையுமறுத்து, ஆயிரமம்புகளை அவன் தோண்மீது அவன் வருந்தும்வண்ணம் அழுத்தினான்.—எ-று. (௨௯௩)

தோளி லாயிரம் வெங்கணை யழுத்தலுந் தோலாக்
கோள ரித்திறற் பேரினன் கோமகன் றுரந்த
வாளி யாவையும் விலக்கியே யாங்கவன் மருமஞ்
சாள ரம்படச் செறித்தன னாயிரஞ் சரங்கள்.

(இ-ள்.) தோள்களில் ஆயிரம் வெவ்விய அம்புகளை அழுத்துதலும் தோல்வியடையாத சாமர்த்தியத்தையுடைய வீரகோளரி என்னும் பேருள்ளவன் அரசகுமாரனை பாநுகோபன்விட்ட அம்புகளனைத்தையுந் தடுத்து அப்பாநுகோபன் மார்பு சாளரமாகும்வண்ணம் ஆயிரமம்புகளெய்தனன்.—எ-று. (௨௯௪)

சரங்க ளாயிர மக்லமே லழுத்தலுந் தகுவ
னிரங்கி நோயுழந் தாற்றவு முனிவுசெய் திவனைக்
கரங்கொள் வில்லினால் வெல்லரி தாமெனக் கருதி
யுரங்கொள் விண்டுவின் படைக்கலந் தனையெடுத் துய்த்தான்.

(இ-ள்.) ஆயிரம்பாணங்களை மார்பிலழுத்துதலும் பாநுகோபன் வருந்தி நொந்து மிகவுங் கோபித் திவனைக் கையிற்பிடித்திருக்கின்ற வில்லினாற் செயம் பெறுதல் கஷ்டமென்று கருதிப் பலம்பொருந்திய நாராயணனுடைய வம்பினை எடுத்து விட்டனன்.—எ-று. (௨௯௫)

நாரா ணன்படை யாங்கவ னுருக்கொடு நடந்து
வீர கோளரி விடுத்திடு சரமெலாம் விழுங்கிப்
பாரு மண்டமு நடுக்குற விடிக்குரற் பகுவாய்க்
காரி ரிந்திட வார்ப்பொடு கடிதுசென் றதுவே.

(இ-ள்) நாராயணாஸ்திரமானது அந்நாராயண வுருவத்துடன் சென்று, வீரகோளரியால் விடுக்கப்பட்ட வம்புகளனைத்தையும் விழுங்கிப் பூமியும் அண்டமும் நடுக்கத்தையடைய இடியென்னுங் குரலினையுடைய பிளந்தவாயோடுகூடிய மேகமும் பின்டையத்தக்க ஆரவாரத்துடன் விரைந்துசென்றது.—எ-று. (௨௯௬)

விண்டு வின்படை யணுகலும் விறலரி யதனைக்
கண்டு மால்படை யெடுக்குமு னப்படை கடிதாய்
வண்டு லாந்தொடை மார்பிடம் புகுந்துமன் னுயிரை
யுண்ட தில்லையா லவசமாக் கியதவ னுணர்வை.

(இ-ள்.) நாராயணாஸ்திரம் வருதலும், வீரகோளரி யதனைக்கண்டு, தானும் நாராயணாஸ்திரத்தையெடுத்து விடுதற்குமுன்னே, அவ்வம்பு விரைவாகவந்து வண்டுகள் தேனைக்கருதி யுலாவுகின்ற மலர்மாலையணிந்த மார்பிற்பிரவேசித்து நிலைபெற்ற உயிரை நாசஞ்செய்யாமல் அவனறிவை நாசமாக்கியது. (போதமில்லாமற்செய்தது.)

அண்ண லேந்திடும் வேற்படை யாணையா லனையா
னுண்ணி லாவுயிர் கொளவஞ்சி யெருவைநீ ருண்டு
கண்ணா னார்படை சிறிதுதன் வன்மையுங் காட்டித்
துண்ணெ னப்பின்னர் மீண்டது சூர்மகன் றன்பால்.

(இ-ள்.) குமரக்கடவுளால் தாங்கப்பட்ட வேலாயுதத்தினுக்கினையினால், அவ்வீரகோளரியின் உள்ளே நிலைபெற்று நிற்கின்ற உயிரைவாங்குதற்குப்பயந்து, இரத்த

வெள்ளத்தைப் பானஞ்செய்து, நாராயணாஸ்திரஞ்சற்றே தனது வல்லபத்தையுங்காட்டிப்பின்பு விரைவாகத்திரும்பிப் பாநுகோபனிடஞ்சென்றது.—எ-று. (உ௩அ)

மீண்ட காலையில் வீரகோ ளரியவண் வீழ்ந்து
மாண்டு ளானென மயங்கின னங்கது வயமார்த்
தாண்ட னென்பவன் கண்டுதன் றனிச்சிலை குனித்து
மூண்ட செற்றமொ டணுகினன் கதிர்ப்பகை முன்னர்.

(இ-ள்.) நாராயணாஸ்திரந் திரும்பினவுடனே, வீரகோளரி யவ்விடத்தில் விழுந்து இறந்தவனைப்போல மயக்கமடைந்தனன்; இதனை வீரமார்த்தாண்டனென்னும் பெயருள்ளவன்பார்த்து, தனது ஒப்பற்ற வில்லைவளைத்து மிகுதியானகோபத்துடனே, பாநுகோபனெதிரிற்சென்றனன்.—எ-று. (உ௩௯)

ஓங்கல் வாகுடை வீரனேர்ந் திடுமுனொண் கையிற்
றாங்கும் வில்லினை யவுணனோ ராயிரஞ் சரத்தா
லாங்க னந்துணித் தாயிரங் கணைநுத லழுத்த
வேங்கி னார்சுரர் அனையன்வே றொருசிலை யெடுத்தான்.

(இ-ள்.) மலைபோன்ற தோளினையுடைய வீரமார்த்தாண்டன் எதிரில் வருவதற்குள்ளேயே பாநுகோபன் ஒள்ளிய கையி லவன்பிடித்திருந்த வில்லினை ஆயிரமம்புகளாலொடித்து, ஆயிரமம்புகளை நெற்றியிலழுத்துதலும், அதனைக்கண்டு தேவர்கள் ஏக்கமுற்றார்கள்; உடனே அவ்வீரமார்த்தாண்டன் வேறே ஒரு வில்லெடுத்தனன்.

எடுத்த கார்முகம் வாங்குமுன் னிரவியம் பகைஞன்
றொடுத்த நூறுகோ லதனையு மோரிரு துணியாப்
படுத்தொ ராயிரம் பகழியாற் றேரொடும் பரியை
முடித்து வாளியோ ரேழுநூ றுய்த்தனன் மொய்ம்பில். ௧

(இ-ள்.) கையிலெடுத்த வில்லினை வளைத்தற்குமுன், பாநுகோபன் நூறம்புகளைவிட்டு அந்தவில்லினையும் இரண்டுதுண்டாகச்செய்து பின்னுமொரு ஆயிரமம்பினால் தேருங்குதிரைகளு மழியுமாறுசெய்து; எழுநூறம்புகளைத் தோளின்மீதுபடுமாறு விட்டனன்.—எ-று. (உ௪௧)

தோ ழிந்திடச் சிலையது மழிந்திடத் திறல்சேர்
பேர ழிந்திடத் தனிமையாய் நின்றவன் பிரியா
வூர ழிந்திட வறியனும் பரிதிபோ லுற்றான்
கார ழிந்திட வார்த்தனன் கிளர்ந்தெழுங் கதத்தான்.

(இ-ள்.) தேர்அழிய, வில்லுமழிய வெற்றிபொருந்திய பேருமழிய, தனித்து நின்ற வீரமார்த்தாண்டன், தான் எப்பொழுதும் வாசஞ்செய்திருந்த ஊரழிந்தவுடனே தரித்திரத்தன்மையை யடைந்த மார்த்தாண்டனைப்போல நின்றான். இதனைக்கண்டு மிகுதியாகவுண்டாகின்ற கோபத்தினையுடைய பாநுகோபன் மேகமும் இவ்வோசையைக்கேட்டுத்தாளாமல் அழியும்வண்ணம் கர்ச்சித்தனன்.—எ-று.

மார்த்தாண்டன் - சுவர்க்கத்திலுள்ள சூரியன். (உ௪உ)

ப்ராக மாப்புவி யகழ்ந்திடு பணைமருப் பிரட்டை
வராக மாயிரத் தாற்றல்பெற் றுடையசூர் மகன்மேல்
விராக நெஞ்சுடை விறற்கதிர் பாய்ந்தனன் விண்மே
லிராகு வின்மிசைத் தினகரன் வாவினா லென்ன.

(இ-ள்.) இவ்வுலகத்தைப் புழுதியாகத்தோண்டின தடித்த இரண்டுகொம்புகளையுடைய ஆயிரம் வராகங்களின் பலத்தைப்பெற்ற பாநுகோபன்மேல் வெறுப்புள்ள

மனதினையுடைய வீரமார்த்தாண்டன் வானத்திலுள்ள இராகுக்கிரகத்தின்மீது சூரியன் பாய்ந்தாற்போல பாய்ந்தனன்.—எ-று. (உ௪௩)

பாய்ந்து திண்டிறல் வெய்யவன் வெய்யவன் பகைஞ
னேந்து வார்சிலை பறித்திரு துணிபடுத் தெறிய
வேந்தன் மாமகன் வெகுண்டுதன் மருங்கிடை விசித்த
நாந்த கம்முரீஇக் குற்றினன் மருமத்தி னடுவண்.

(இ-ள்.) வீரமார்த்தாண்டன் தாவிப் பாநுகோபன்கையிற்பிடித்திருந்த நீண்ட வில்லைப்பிடுங்கி இரண்டாக வொடித்தெறிதலும், சூரபன்மனுடைய சிறந்தகுமாரனை பாநுகோபன் கோபித்துத் தன்னிடையிற் கட்டியிருந்த உடைவாளையுருவி வீரமார்த்தாண்டனுடைய மார்பினடுவிற் குத்தினன்.—எ-று. (உ௪௪)

வீர வெய்யவ னுரமிசைச் செலுத்திய வெங்கட்
கூரும் வாட்படை வாங்குமுன் னங்கவன் குருதி
சூரி யன்பகை யகலம்வந் துற்றது தூயோன்
றூனை வாளொன்று மாறுபோய்க் குற்றிய தகவின்.

(இ-ள்.) வீரமார்த்தாண்டன்மார்பிற்குத்திய வெவ்விய தன்மையினையுடைய கூரியவாட்படையை இழுத்தெடுத்தற்குமுன்னே அவன் உடற்குருதியானது, தூய்மையினையுடையவனது ஒரு நீண்டவாள் பதிலாகச்சென்று குத்தினாற்போல, பாநுகோபனுடையமார்பில் வந்துபட்டது.—எ-று. (உ௪௫)

குற்றி வாங்குமுன் வீரமார்த் தாண்டனுங் கொதித்துக்
கற்றை வெஞ்சுடர்ச் சுரிகையை மருங்குறை கழித்து
மற்ற வன்மணி மார்பத்து வயிரவான் கவச
மிற்றி டும்படி குற்றினன் யாவரு மிரங்க.

(இ-ள்.) குத்தி இழுக்குமுன், வீரமார்த்தாண்டனுங் கோபங்கொண்டு கூட்டமான வெவ்விய சுடரினையுடைய உடைவாளை இடையிலுள்ள உறையினின்றும் எடுத்து, அப்பாநுகோபனுடைய அழகியமார்பிற்றரித்துள்ள சிறந்த வச்சிரக்கவசம் அறும் வண்ணம் அசுரர்களனைவரும் இரங்கக்குத்தினன்.—எ-று. (உ௪௬)

கிளைத்தி டுந்திறல் வெய்யவன் குற்றலுங் கேடு
விளைத்த சூர்மகன் றன்னுடைச் சுரிகையான் மீட்டுக்
குளத்தின் மூழ்குறக் குற்றின னன்னதோர் குற்றிற்
களைத்து வீழ்ந்தனன் கால்பொர மறிந்தகற் பகம்போல்.

(இ-ள.) மேலுமேலும் உண்டாகின்ற வல்லபத்தினையுடைய வீரமார்த்தாண்டன் குத்துதலும், கெடுதியைச்செய்த சூரன்மகன் பின்னும் தன்சுரிகையினால் நெற்றியிலழுந்தும் வண்ணங்குத்தினன்; அந்தக்குத்தில் காற்றடிக்க வேர்பறிந்துவிழுந்த கற்பகவிருக்ஷத்தைப்போல களையடைந்து கீழ்விழுந்தனன்.—எ-று. (உ௪௭)

தாழ்ந்த சோரியு மலக்கணும் பெருகுறத் தடந்தேர்
வீழ்ந்த வன்றனை விளிந்தன னிவனென விடுத்துத்
தாழ்ந்த தோர்பெருந் தனுவினை யெடுத்துழி தன்னிற்
சூழ்ந்த தானையோ டேற்றனன் சூரியன் பகைஞன்.

(இ-ள்.) பானுகோபன், ஒழுகாநின்ற இரத்தமும் துன்பமும் அதிகமாகப் பெரிய தேரில் விழுந்த வீரமார்த்தாண்டனை இறந்தவனென்றெண்ணி யவனோடு போர் புரிதலைவிட்டு, வளைந்த ஒப்பற்ற பெரிய ஒரு வில்லினை யெடுத்தவுடனே தன்னைச் சூழ்ந்த சைனியங்களுடன் பகைவர்மீதெதிர்த்துச் சென்றனன்.—எ-று. (உ௪அ)

ஏற்று நேர்வரு சூரன்மா மதலையை யெதிர்ந்து
போற்ற லார்புகழ் வீரராக் கதனெனும் பொருநன்
காற்றின் வந்தனன் றுணைவர்க டொலைந்ததுங் கண்டான்
சீற்ற முள்ளுற நிமிர்ந்தெழக் குனித்தனன் சிலையை.

(இ-ள்.) எதிர்த்து நேரேவராநின்ற பாநுகோபனை, பகைவர்களாற் புகழப்படுகின்ற வீரராக்ஷஸன் என்னும் வீரன் எதிர்த்து வாயுவேகமாகவந்து தன்றுணைவரழிந்ததையும் பார்த்து உள்ளே மிகுதியான கோபமுண்டாகத் தன் வில்லை வளைத்தனன்.

சிலைகு னித்தொரு பத்துநூ றயிற்கணை தெரிந்தே
யொலியு டைக்கழற் சூரன்மா மதலைமே லுய்ப்ப
விலகி யத்தொகைப் பகழியா னம்பிதன் வியன்றேர்
வலவ னைத்தலை துணித்தனன் வாளிநூ றதனால்.

(இ-ள்.) வில்வளைத்து அதிற்கூரிய ஆயிரமம்புகளைவைத்துச் சத்தியாநின்ற வீரகண்டையணிந்த காலினையுடைய சூரபன்மனுடைய பிள்ளையான பாநுகோபன்மீது விடுதலும், அவன் ஆயிரமம்புகளா லவைகளையறுத்துப் பின்னு நூறம்புகளைவிட்டு, ஆண்மகனிற் சிறந்தவவ்வீரராக்கதனுடைய பெரியதேரோட்டுகின்ற சாரதியின் றலையை யறுத்தனன்.—எ-று. (உ௱௦)

நூறு வாளியாற் சூதன்மாண் டிடுதலு நொடிப்பில்
வேறொர் பாகனை வீரராக் கதனிறீஇ வெகுளா
வாறு மாமுக னடிநினைந் தாயிரங் கணையாற்
கூறு செய்தன னவுணர்கோன் குருமணி மகுடம்.

(இ-ள்.) நூறம்பினுற் சாரதியழிதலும், வீரராக்ஷஸன் விரைவாகவேறேயொரு சாரதியை யமைத்துக்கொண்டு கோபித்து, சண்முகப்பெருமான்திருவடிகளைத் தியானித்து, ஆயிரம் அம்புகளால் அசுராதிபனுகிய பாநுகோபனுடைய நிறம்பொருந்திய மணிமயமான மகுடத்தைப் பங்கஞ்செய்தனன்.—எ-று. (உ௱௧)

உவமை நீங்கிய வைவகைத் தாயவேற் றுருவின்
மவுலி யிற்றிடத் திருவின்றி மன்றநா ணெய்தி
யவதி யில்லதோர் பெருஞ்சின மூண்டெழ வவுணன்
குவடி லாமணிக் குன்றுபோ னின்றனன் குறுகி.

(இ-ள்.) ஒப்பற்ற ஐந்துவிதவேறுபாடான உருவத்தினையுடைய (சௌகந்திகப் பதுமராகமணியாலமைக்கப்பட்ட) மகுடம் அழிதலும், அழகழிந்து மிகவும்வெட்கி அசுரனுகிய பாநுகோபன் அளவற்ற பெருங்கோபமானததிகரிக்கச் சிகரமில்லாத மணிமலையைப்போல் (வெட்கத்தால்) தாழ்ந்து நின்றனன்.—எ-று. (உ௱உ)

மணியி ழந்திடு மரவுபோற் கதிரிலா வான்போற்
பணையி ழந்திடுங் கற்பகப் பழுமரந் தனைப்போற்
றுணைம ருப்பினை யிழந்திடுந் தந்திபோற் றொல்லை
யணியி ழந்திடு மகளிர்போ லழகில னானன்.

(இ-ள்.) மகுடமிழந்த பாநுகோபன், மணியையிழந்தவரவைப்போலவும், சூரியசந்திரர்களில்லாத வாகாயத்தைப்போலவும், கிளைகளை யிழந்தபழுத்த கற்பகவிருட்சத்தைப்போலவும், இரண்டுகொம்புகளையு மிழந்தயானையைப்போலவும், பழையமங்கலமாகிய வணியையிழந்த பெண்களைப்போலவும் அழகற்றவனுயினன்.—எ-று (உ௱௩)

இற்றொ ழிந்திடு மகுடநீத் தேவல ரளித்த
கற்றை யொண்சுடர் மவுலியொன் றினைமுடி கவித்து

வெற்றி வீரராக் கதன்விடு சரமெலாம் விலக்கி
மற்ற வன்சிலை துணித்தனன் வாளியா யிரத்தால்.

(இ-ள்.) உடைந்தொழிந்த மகுடத்தைவிலக்கி, ஊழியர்களாலே கொண்டுவந்து கொடுக்கப்பட்ட கூட்டமான ஒள்ளியபிரகாசத்தோடு கூடிய வேறேயொரு மகுடத்தை முடியிற்றரித்து, வெற்றிபொருந்திய வீரராக்ஷஸனென்பவனால் விடப்பட்ட அம்புகளனைத்தையுந்தடுத்து ஆயிரமம்புகளா லவ்வீரராக்கதனுடைய வில்லினை ஒடித்தனன்.

ஆடல் வெஞ்சிலை யறுத்தலும் வயமுடை யரக்க
னாடி யோர்தனு வெடுக்குமுன் னுகிளங் கதிரை
வீட ருந்தளை யிட்டவன் விசிகமா யிரத்தாற்
பாடு செய்தன னனையவன் றனதுதேர்ப் பரியை.

(இ-ள்.) போருக்குரிய வெவ்விய வில்லை ஒடித்தலும், வெற்றிபொருந்திய வீரராக்ஷதன் ஆலோசித்து வேறேயொருவில்லெடுத்தற்குமுன்னே, பாலார்க்கனை நீங்குதற்கரிய சிறையிலிட்ட பானுகோபன் ஆயிரமம்புகளால் அவ்வீரராக்கதனுடைய தேர்க்குதிரைகளைக் கொன்றனன்.—எ-று. (௨௫௫)

மாய்ந்து மாத்தொகை படுதலும் வீரனோர் மணித்தேர்
பாய்ந்த காலையி னிரவிமாற் றலனவன் பாணி
யேந்து வில்லினை யாயிரம் பகழியா லிறுப்ப
வேந்தன் மாமகன் றன்மிசை யயிலொன்று விடுத்தான்.

(இ-ள்.) குதிரைகள் இறந்துபடுதலும் வீரராக்கதன் வேறேயொருமணிமயமான தேரில்தாவினான். உடனேபானுகோபன் அவ்வீரராக்கதன் கையிற்பிடித்திருந்த வில்லினை ஆயிரமம்புகளாலே அறுத்தலும், அசுரமன்னவனாகிய சூரபன்மனுடைய சிரேட்டபுத்திரனாகிய பானுகோபன்மீது அவ்வீரராக்கதன் ஒருவேலாயுதத்தைப் பிரயோகித்தனன்.

விடுத்த வேலினை நூறுகோ ளொடுத்தவன் வீட்டத்
திடத்தின் மேற்படு வீரராக் கதனது தெரிந்து
தடத்த தேரினு மிழிந்தறை கூவியே தனிபோ
யெடுத்தெ றிந்தனன பானுகோ பன்றனி யிரதம்.

(இ-ள்.) வீரராக்ஷஸன்விட்ட வேற்படையைப் பானுகோபன் நூறம்புகளை எய்தழித்தனன். வன்மையின் மேம்பட்ட வீராக்ஷஸ னதனைக்கண்டு அகலமானதேரினின்றும் இறங்கி அறைகூவிக்கொண்டு தனியே சென்று பானுகோப னேறியுள்ள ஒப்பற்ற தேரை எடுத்து மேலுக் கெறிந்தனன்.—எ-று.

அறைகூவல்-போருக்கழைத்தல்; இதனை நவீனர் ஜவாலென்பர். (௨௫௭)

எறியு மெல்லையிற் றகுவர்தங் குரிசில்விண் ணெழுந்து
வெறிகொள் பங்கயத் தண்ணன்முன் கொடுத்ததோர் வேலைச்
செறுந னுவியை யுண்கென விடுத்தலுஞ் சென்று
விறல ரக்கன்மேற் பட்டதங் கனைய னும் வீழ்ந்தான்.

(இ-ள்.) தேரை யெடுத்தெறிந்தவுடனே, அசுரர்கள் தலைவனாகிய பானுகோபன் ஆகாயத்திற்கிளம்பி தனக்கு முன்னாளில் மணம்பொருந்திய தாமரைமலரிலிருக்கின்ற பிரமன்கொடுத்த ஒருவேற்படையை எடுத்து, நீ பகைவனுயிரை யுண்ணென்றுகூறி விடுதலும், அவ்வேல்போய் வெற்றியினையுடைய வீரராக்கதன்மீது பட்டது; படுதலும், அவ்வீரராக்கதனும் விழுந்தனன்.—எ-று. (௨௫௮)

தனையில் வீழ்ந்திடும் வீராக் கதனனி தளர்ந்தான்
முருக னாணையாற் போந்தில தவனுயிர் முன்ன
மிரவி யம்பகை திகிரியின் மறிந்துளா னெழுந்து
பொருதல் வன்மையின் ருகியே யிடைந்துபின் போனான்.

(இ-ள்.) கீழ்விழுந்த வீராக்கதன் மிகவுந் தளர்ச்சியடைந்தனன்; ஆனால் குமரக்கடவுளின் ஆக்கினையா லவனுயிர் போகாதிருந்தது. (இதுநிற்க), அப்பொழுது பாநுகோபனுடையதேரில் விழுந்துகிடந்த வீரமார்த்தாண்டனெழுந்து போர்புரிதற்கு வல்லபமில்லாதவனாய் விலகிப் பின்னே சென்றனன்.—எ-று. (௨௫௯)

போன காலையில் வேறொரு தேரிடைப் புகுந்து
பானு மாற்றலன் வணக்கியோர் கார்முகம் பற்றி
யூனு மாவியுங் கவர்ந்திடு சரமழை யோச்சி
யேனை வீரர்க டம்மையும் வெல்லுமா றெதிர்ந்தான்.

(இ-ள்.) வீரமார்த்தாண்டன் போனவுடனே, பாநுகோபன் வேறேயொரு தேரிலேறி ஒருவில்லை வளைத்துப்பிடித்து ஊனையும் உயிரையுங்கவர்கின்ற பாணவருஷம் பெய்துகொண்டு, மற்றையவீரர்களையும் வெல்லும்வண்ணம் எதிர்த்தனன்.—எ-று. ()

வீர வந்தகன் வீரமா மகேச்சுரன் வீர
தீரன் வீரமா மகேந்திரன் றிறற்புரந் தரனு
நேரி லாரிவ ரைவருஞ் சிலைகொடு நேர்ந்து
சூரி யன்பகை வன்மிசைக் கணைமழை சொரிந்தார்.

(இ-ள்.) வீரவந்தகன், வீரமஹேசுவரன், வீரதீரன், வீரமஹேந்திரன், வீரபுரந்தரன் என்னும் ஒப்பற்ற இவ்வைவர்களும், விற்களைபிடித்துக்கொண்டு சூரியனுடைய விரோதியாகிய காரணத்தினால் பானுகோபனென்று பேர்பெற்ற அசுரன்மீது, பாணவருஷம்பெய்தார்கள்.—எ-று. (௨௬௧)

சொரிந்து வேறுவே றளவையி லாதபோர்த் தொழிலைப்
புரிந்து பின்னுறச் சூர்மகன் சரங்கண்மெய் புதைய
வருந்தி நின்றன ரிருவர்கண் மறிந்தன ரொருவ
ரிரிந்து தேர்சிலை யழிந்துநொந் தேகின ரிருவர்.

(இ-ள்.) அம்புகளைக் கும்புகளாகவிட்டுப் போர்செய்ததுவுமன்றி வேறுவேறான அளவற்ற போர்த்தொழிலை நடத்தி, கடைசியாகப் பாநுகோபன் விட்டவம்புகள் உடம்பிற்புதைய இருவர் வருத்தமடைந்து நின்றார்கள்; ஒருவர் கீழேவிழுந்தனர்; தேரும் வில்லும் இழந்துவருந்தி விலகி இருவரோடினார்கள்.—எ-று.. (௨௬௨)

வேறு.

சாற்று மித்திறம் வீரர்கள் யாரையுந் தனிமைந்தன்
வீற்று வீற்றம ராடியே வென்றிகொண் டிடும்வேலை
யாற்ற லின்றிமுன் பின்றிய வவுணர்தா னைகண்முற்று
நாற்றி சைக்கணும் வந்துவந் தவனைநண் ணியவன்றே.

(இ-ள்.) சொல்லப்பட்ட இவ்வண்ணமாக ஒப்பற்ற பாநுகோபன் எல்லாவீரர்களையும் தனித்தனிபோர்புரிந்து வெற்றியடைந்தசமயத்தில், வன்மையில்லாமல் முன்னே இல்லாமலிருந்த அசுரசைநியங்களனைத்தும் நானுபக்கங்களினின்றும் வந்துவந்து அப்பாநுகோபனை யடைந்தன.—எ-று. (௨௬௩)

பின்று சேனைகள் யாவையுந் தன்னயற் பெயர்த்தும்வந்
தொன்ற வேயிர வியம்பகை வருதலு முதுகண்டார்

னன்று நன்றிவ னாற்றலின் றிறமென் நகைசெய்தா
னென்று நந்திதன் கணத்தரிற் றலைமைபெற் றிருக்கின்றான்.

(இ-ள்.) பின்னிடைந்துசென்ற சைநியங்களெல்லாம் பின்னுந்தன்னருகில் சூழ்ந்துவரும் வண்ணம் பாநுகோபன்வருதலும், எந்நாளிலும் நந்திகணமுதல்வனாகவே இருக்கின்ற வீரவாகுதேவரதனைக்கண்டு இவனதாற்றலின்றன்மை நன்றாயிருக்கின்றது நன்றாயிருக்கின்றது என்றுகூறி நகைத்தனர்.—எ-று. (௨௬௪)

வாகை மொய்ம்புடை மேலையோன் மாலயன் றனக்கெட்டா
வேக நாயகன் றிருமகன் றாளிணை யினிதுன்னி
யோகை யானனி வழுத்தியே போர்த்தொழி லுளங்கொண்டு
சேகு நெஞ்சுடைப் பானுகோ பன்முனஞ் செல்லுற்றான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய தோள்களையுடைய சிறந்தவீரவாகுதேவர், திருமால் பிரமன்முதலியவர்களால் அறிதற்கரிய முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானுடைய திருக்குமாரரான சண்முகப்பெருமான் திருவடிகளை நன்றாய்த்தியானித்து சந்தோஷத்துடன் மிகுதியாகத் துதித்துப் போரின்தொழிலை மனதினில் அமைத்து வயிரமான மனதினினையுடைய பாநுகோபனெதிரிற் செல்லத்தொடங்கினார்.—எ-று. ()

அரியு நான்முகத் தொருவனுங் குனித்திட வறத்தேவுஞ்
சுருதி மாமறைத் தொகுதியுங் குனித்திடச் சுரர்கோவு
மிரவி யண்ணலு மதியமுங் குனித்திட விகலாடற்
றிருவு மோடியுங் குனித்திடக் குனித்தனன் சிலைதன்னை.

(இ-ள்.) வீரவாகுதேவர் தமது வில்லினைத் திருமாலும் நான்கு திருமுகங்களையுடைய ஒப்பற்றபிரமனும் கூத்தாடவும், தருமதேவதையும் ஓசையினையுடைய பெரிய வேதகூட்டங்களும் நடனஞ்செய்யவும், தேவாதிபனாகிய இந்திரனும், சூரியதேவனும், சந்திரனும் ஆடவும், போரில் வெற்றிதருகின்ற வீரலட்சுமியும், காடுகாளும் நடிக்கவும் வளைத்தனர்.—எ-று. (௨௬௬)

விசையெ டுத்திடு மூதையும் வடவையும் வெருக்கொண்டு
வசையெ டுத்திட வளக்கருந் தம்மொலி வறிதாகத்
திசையெ டுத்திடு மண்டமும் புவனமுஞ் சிதைந்தேமா
றிசையெ டுத்திட வெடுத்தனன் சிலையினா ணிசைதன்னை.

(இ-ள்.) வேகமான காற்றும் வடவாக்கினியும் பயந்து வசையடையவும், கடலும் தமது ஒலியில்லாததாகவும், திக்குகளைச்சிறந்ததாகக்கொண்டுள்ள அண்டங்களும் புவனங்களும் அழிந்து வேறோசையைத்தரவும், வீரவாகுதேவர் விண்ணாணோசையை உண்டாக்கினர்.—எ-று. (௨௬௭)

நாணொ லிக்கொடு வெஞ்சமர் புரியமே னடப்பானைக்
காண லுற்றன் றினகரற் சினவிய கதக்கண்ணா
னேணு டைப்பெருங் கார்முக மொன்றுவே றெடுத்திட்டான்
சேணி லத்தவர் பனித்திடக் குனித்தொலி செய்திட்டான்.

(இ-ள்.) நாணோசையைக்கண்டு கொடும்போரினைப் புரிதற்கு மேற்செல்லுகின்ற வீரவாகுதேவரைச் சூரியனைக்கோபித்த உக்கிரமான பார்வையினையுடைய பாநுகோபன் பார்த்து, வலிமைபொருந்திய வேறொருவில்லினையெடுத்து ஆகாய உலகத்தவர்கள் நடுங்க வளைத்துக் குணத்தொனிசெய்தனன்.—எ-று. (௨௬௮)

முன்பு திண்டிறல் வாருவின் வாருவின் முழக்கத்தை
யன்பி னாடிய வமரர்க ளளவைதீர் மகிழ்வெய்திப்

பின்பு சூர்மகன் சிலையொலி கேட்டலும் பேதுற்றே
யின்ப துன்பங்க ளொருவழிக் கண்டன மிவணென்றுர்.

(இ-ள்.) மிகுந்தவன்மையினையுடைய வீரவாகுதேவருடைய வெற்றி பொருந்திய வில்லின்முழக்கத்தை முதலில்விருப்பத்தோடு கேட்டதேவர்கள் அளவற்ற மகிழ்ச்சியடைந்து, பின்னர் பாநுகோபனுடைய வின்னாணோசையைக் கேட்டலும் வருத்தமடைந்து இவ்விடத்தில் சுகதுக்கங்களை ஒரேசமயத்தில் கண்டோமென்றுகூறினர்கள்.

புகழ்ச்சி மேலவன் குணத்தொலி செவிக்கொடு பொலிந்தோர்க
ளிகழ்ச்சி மிக்கவன் குணத்திசை கேட்டலு மிரங்குற்றுர்
திகழ்ச்சி யாரமு துண்டவர் நஞ்சமுண் செயல்போன்றுர்
மகிழ்ச்சி யீற்றினிற் றுன்புவந் தடைவதோர் வழக்கன்றே.

(இ-ள்.) கீர்த்தியினையுடைய சிறந்த வீரவாகுதேவரின் நாணோசையைக் காதாரக்கேட்டு மகிழ்ந்தவர்கள், இகழ்ச்சியின் மிகுந்த பாநுகோபனுடைய வின்னாணியின் ஓசையைக்கேட்டவுடனே வருத்தமடைந்தார்கள்; விளங்காநின்ற வரிய வமுதத்தை யுண்டவர்கள் விடமுண்ட தன்மையைப்போலானர்கள்; இன்பத்தின் முடிவிற் றுன்பந்தோன்றுதலும் முறைமையல்லவோ?—எ-று.　(உ௪0)

மாய னான்முகன் மகபதி முதலிய வானோர்கள்
காயம் யாவினு நிரந்தன ரமர்த்தொழில் காண்பாரா
யாய போழ்தினிற் சூரபன் மாவரு ளசுரேசன்
றூய வன்றனை நோக்கியே யினையன சொல்கின்றன்.

(இ-ள்.) திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்கள் போர்த்தொழிலைக் காண விருப்பமுடையவர்களாய் ஆகாயத்தி லெவ்விடத்தினு நெருங்கி நின்றார்கள். அப்பொழுது சூரபன்மன் பெற்ற பாநுகோபன் வீரவாகுதேவனைப்பார்த்து இவைகளை கூறுகின்றனன்.—எ-று.　(உ௪௧)

கோதை வேலினுற் றூரகன் றனையடு குகனல்லை
யாதி யேனமாய்ப் புவியினைக் கிளைத்திடு மரியல்லை
வேத நான்முகத் தவனல்லை விண்ணுளோர் வேந்தல்லை
தூத னாகிய நீகொலென் னெதிர்பொருந் தொழில்வல்லாய்.

(இ-ள்.) நீ, மாலையணிந்த வேற்படையினால் தாரகாசுரனைக்கொன்ற சண்முகனுமல்லை; ஆதிவராகமாகி யுலகைத்தோண்டிய அரியுமல்லை; வேதங்களை அத்தியயனஞ்செய்கின்ற நான்கு முகங்களையுடைய பிரமனுமல்லை; ஆகாயவுலகத்தில் வாழ்பவர்களுக்கிறைவனான இந்திரனுமல்லை; தூதனாகிய நீயா என்னெதிரில் நின்று போர்புரிதற்கு வல்லபமுள்ளவன்!—எ-று.　(உ௪உ)

இழைத்த மாயையான் முற்பகற் போந்தனை யெங்கோன்முன்
பழித்தி றஞ்சில கூறினை யிளவலைப் படுத்திட்டா
யழித்தி மாநகர் யானஃ துணர்ந்தில னதனாலே
பிழைத்தி யன்றெனி னுய்ந்திவண் வந்திடப் பெறுவாயோ.

(இ-ள்.) அடா! நீ பழகியுள்ள மாயையால் எங்களிறைவன்முன் நேற்று வந்தாய்; வந்து சில பழியான மொழிகளை யுரைத்தாய்; என்னிளைய வச்சிரவாகுவைக் கொன்றாய்; இந்தப் பெரிய நகரத்தையும் அழித்தனை; நானதை அறிந்தேனில்லை; அதனாலே நீ பிழைத்தாய்; நானுணர்ந்திருப்பேனானல் பிழைத்து இவ்விடத்திற்கு வரவும் பெறுவையோ?—எ-று.　(உ௪௩)

பொருது வென்றிகொண் டுனதுயிர் நடுவனூர் புகுவிப்பன்
சரத மிங்கிது பிறந்திடு மடவையிற் றழல்காலும்
பரிதி யைச்சிறை பிணித்தவ னெற்றனைப் படுத்தானென்
றொருத னிப்பழி கொள்வதல் லாற்புக ழுறுவேனோ.

(இ-ள்.) நானுன்னொடு போர்புரிந்து உன் உயிரை எமலோகத்திற் கனுப்புவேன். இவ்வுண்மைமொழி யுண்டானவுடனே, உஷ்ணகிரணங்களைக்கக்குகின்ற பானுவினைச் சிறையிலிட்டவன் தூதனைக்கொன்றான் என்று ஒரு ஒப்பற்ற பழியை நானடைவதையன்றி கீர்த்தியை யடைவேனோ? இல்லை.—எ-று. (௨௭௪)

முனைமு டித்தநின் றுணைவரை வென்றனன் முரட்பூதந்
தனைய டர்த்தனன் சிந்தின னனிகமுந் தனிநேர்ந்த
வுனைமு டிக்குவ னுனைவிடுத் தோனையு முலைவித்தென்
சினமு டிக்குவன் மகபதி தன்னையுஞ் சிறைசெய்வேன்.

(இ-ள்.) போர்புரிந்த உனது துணைவர்களை வென்றேன்; வன்மைபொருந்திய பூதங்களைக்கொன்றேன்; சேனைகளையும் அழித்தேன்; தனியேவந்தெதிர்த்த உன்னையுங்கொல்லுவேன்; உன்னை இங்கு அநுப்பினவனையும் வருத்தி, என் கோபத்தை முடிப்பேன்; இந்திரனையும் சிறைசெய்வேன்.—எ-று. (௨௭௫)

என்ற காலையில் வீரவா கியம்புவா னெவரேனுஞ்
சென்று போர்புரி வார்தமை வெல்வதே திறலாகும்
பின்று வார்தமை யடுவதே வசையலாற் பிறிதுண்டோ
வென்றி யெய்துவா ருரைப்பரோ போர்புரி விரைந்தென்றான்.

(இ-ள்.) பாநுகோபன் இவ்வாறு கூறியவுடனே, வீரவாகுதேவர் கூறத்தொடங்கினார். யாவராக விருந்தாலும், போர்க்களத்திற்கு வந்து போர்செய்பவர்களை செயிப்பதே வெற்றியாம், பின்னிடுபவர்களைக் கொல்வதே வசையாகும் அல்லாமல் வேறே யுண்டோ? வெற்றியடையபவர்கள் சொல்லுவார்களோ? நீவிரைந்து போர்செய்யக்கடவை என்று கூறினார்.—எ-று. (௨௭௬)

வேறு.

என்னு மாத்திரத் திரவியம் பகைஞனீ ரைந்து
பொன்னெ டுங்கணை யெடுத்துவார் சிலையிடைப் பூட்டி
மின்னு வாமென விடுத்தலும் வீரனும் விரைவி
லன்ன வீரைந்து வாளிதொட் டவற்றினை யறுத்தான்.

(இ-ள்.) என்று கூறியவுடனே, பாநுகோபன் பொன்மயமான நெடிய பத்தம்புகளை எடுத்து நீண்ட வில்லில்வைத்து கண்டவர்கள் மின்னலென்று கூறுமாறு விடுதலும், வீரவாகுதேவரும் விரைவாக அதுபோன்ற பத்தம்புகளை விட்டு அவைகளை அறுத்தனர்.—எ-று. (௨௭௭)

ஆறு நாலுவெம் பகழியு மறுத்தபின் னறிஞ
னூறு வாளிகள் விடுத்தலும் வந்தது நோக்கி
வீறு மத்தொகைச் சரங்கள்விட் டவையிடை வீட்டி
யீறி லான்மகன் மீதிலாயி ரங்கணை யெய்தான்.

(இ-ள்.) கொடிய பத்தம்புகளையும் அறுத்தவுடனே, வீரவாகுதேவர் நூறம்புகளைவிடுதலும், அவ்வம்புகள் வருதலைப்பார்த்து, உயர்ந்த அந்தத்தொகையாகவேவுள்ள வம்புகளைவிட்டு அவைகளை இடையில் அறுத்து, அழிவில்லாத சிவபெருமானுடைய மைந்தரான வீரவாகுதேவர்மீது ஆயிரமம்புகளை எய்தனன்.—எ-று. (௨௭௮)

ஆயி ரங்கணை தூண்டிமற் றவற்றினை யறுத்துத்
தூய வன்பதி னாயிரஞ் சுடுசரந் தூரப்பத்
தீய னத்தொகை வாளியா லங்கவை சிந்தி
யேயெ னக்கொடும் பகழிநூ றாயிர மெய்தான்.

(இ-ள்.) ஆயிரமம்புகளைவிட் டவ்வம்புகளை யறுத்து, நின்மலரான வீரவாகுதேவர் பதினாயிரமம்புகளை விடுதலும், கொடியவனான பானுகோபன் அதேதொகையான பதினாயிரமம்புகளா லவ்வம்புகளை யறுத்து, விரைவாகக் கொடிய நூறாயிரமம்புகளை எய்தனன்.—எ-று. நூறாயிரம்-இலக்ஷம். (உஎக)

உய்த்த வாளிநூ றாயிரந் தன்னையு முரவோ
னத்தொ கைப்படு பல்லவந் தூண்டியே யறுத்துப்
பத்து நூற்றின்மே லாயிரம் பெற்றிடும் பகழி
மெய்த்த முற்கதி ரிரவியம் பகைஞன்மேல் விடுத்தான்.

(இ-ள்.) பானுகோபன்விட்ட லக்ஷமம்புகளையும், வீரவாகுதேவர் அதேகணக்கான அம்புகளைவிட்டறுத்து, பத்துலக்ஷம் அம்புகளை தீமயமான சரீரியான சூரியனுக்குப் பகைவனாகவுள்ள பானுகோபன்மீது விட்டனர்.—எ-று. (உஎ௦)

விடுத்த வாளியைப் பத்துநூ றாயிரம் விசிகந்
தொடுத்து மாற்றியே சூரபன் மாவரு டோன்ற
லெடுத்து நூறுநூ றாயிரம் புங்கவ மேவ
நொடிப்பில் விட்டின னனையன சிலீமுக நூக்கி.

(இ-ள்.) வீரவாகுதேவர்விட்டவம்புகளைச் சூரபன்மன்பெற்ற பிள்ளையான பானுகோபன் பத்துலக்ஷம் அம்புகளை விட்டுத்தடுத்து, கோடியம்புகளை எடுத்து விடுதலும், அவைகளை வீரவாகுதேவரும் அதே தொகையான கோடியம்புகளை விட்டு நொடிப்பொழுதிற்குள் அழித்தனர்.—எ-று. (உஎக)

வஞ்ச னேவினை மாற்றியே யெம்பிரான் மதலை
செஞ்ச வாளிநூ றாயிர கோடிகள் செலுத்தக்
கஞ்ச மாமக ளுயிர்த்திடு திருமகன் கணிப்பில்
புஞ்ச வார்கணை யிறுதிநாண் முகிலெனப் பொழிந்தான்.

(இ-ள்.) வஞ்சகனாகிய பானுகோபனுடைய அம்புகளைத் தடுத்து, எம்பெருமான் திருக்குமாரரான வீரவாகுதேவர் நேரான ஒருநூறாயிரங்கோடி கணைகளை விடுதலும், சிறந்த பதுமகோமளைபெற்ற பானுகோபன் அளவில்லாத கூட்டமான அம்புகளை ஊழிக்காலத்து மேகத்தின் பெய்தலைப்போல பெய்தனன்.—எ-று. (உஎஉ)

பார்ம றைந்தன திசையெலா மறைந்தன படர்முந்
நீர்ம றைந்தன குலகிரி மறைந்தன நிலவுங்
கார்ம றைந்தன ககனமு மறைந்தன கதிரோன்
றேர்ம றைந்தன விருவர்தங் கணைமழை செறிய.

(இ-ள்.) பானுகோபன் வீரவாகுதேவரென்னும் இருவர்களாலும் விடப்பட்ட அம்புவருஷமானவை நெருங்கினமையால், நிலவுலகமறைந்தன; திக்குகளெல்லாமறைந்தன; பரவிய கடல் மறைந்தன; இமையம்முதலிய குலாசலங்கள் மறைந்தன; விளங்காநின்ற மேகங்கள் மறைந்தன; ஆகாயமுமறைந்தன; சூரியன்தேரு மறைந்தன.

பாரி வட்டமு மாதிர வட்டமும் பரவை
வாரி வட்டமு நேமியின் வட்டமு மலிவான்

சூரி வட்டமு மண்டத்தின் வட்டமு முடுகிச்
சாரி வட்டமாய்த் திரிவன வனையவர் தடந்தேர்.

(இ-ள்.) இவ்வாறு போர்புரிகின்ற அவ்விருவர்களின் பெரியதேர்கள், பூமியிலும் திக்குகளிலும், அகன்ற நீர்நிலையானகடலிலும், சக்கரவாளகிரியிலும், நிறைந்த பெரிய மேகங்களிலும், அண்டத்திலும், விரைந்து சாரிகைவட்டமாகத் திரிகின்றன.

மாறில் வாளிகண் முறைமுறை சொரிதலான் மறைவ
ரீறு செய்தவை யகற்றுழித் தோன்றுவ ரிமைப்பில்
வேறு வேறதா யித்திற நிகழ்ந்திடும் வீரர்
சூறை போலம ராடினர் முலகெலாஞ் சுற்றி.

(இ-ள்.) தவறுதலில்லாத அம்புகளை வரிசை வரிசையாக விடுதலினாலே மறைவார்கள்; அவ்வம்புகளை நாசஞ்செய்தவுடனே இமைப்பொழுதிற்குள் வெளிப்படுவார்கள்; வேறு வேறாக இவ்வண்ணஞ்செய்கின்ற அந்த வீரவாகுதேவர் பானுகோபனென்னும் இவர்கள் எல்லாவுலகங்களிலும் சுழற்காற்றைப்போல சுற்றிச்சுற்றிப் போர்புரிந்தார்கள்.—எ-று. (உஅ௫)

இரவி வானவன் றனதுதிண் டேரினு மீர்க்கும்
புரவி மீதினு முடுபதி மானத்தும் புறஞ்சூழ்
கரிகண் மீதினும் விண்ணுலா வமரர்தங் கண்ணும்
பொருவி லாளியர் விடுகணை சிதறியே போமால்.

(இ-ள்.) போர்புரிகின்ற இவ்வில்வீரர்கள் விடுகின்ற அம்புகள் ஒன்றோடொன்றுமுட்டிச் சிதறி சூரியனுடைய திண்ணியதேரிலும், அத்தேரினை இழுக்கின்ற குதிரைகண்மீதும், சந்திரனுடைய விமானத்திலும், திக்குகளின் சுற்றிலும் நிற்கின்றயானைகளின்மீதும், ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற தேவர்களிடத்திலும் செல்லுகின்றன.-எ-று.

செங்கண் வீரர்க ளிருவரும் பொருவதித் திசையென்
றங்கு நாடரி தவர்விடும் பகழிக ளனந்த
மங்குல் வானெலா நிரந்தன மிசையினும் வருமா
லிங்கு நிற்கரி தெமக்கென வோடின ரிமையோர்.

(இ-ள்.) கோபத்தாற் செந்நிறமடைந்த கண்களையுடைய இரண்டுவீரர்களும், இன்னதிசையில்நின்று போர்புரிகின்றார்களென்று அறிதற்குக் கூடாது. அவர்களாலே விடப்படுகிற அம்புகள் அநேகம் மேகங்களோடுகூடிய ஆகாயமுழுமையும் நிரம்பின; மேலேயும் வருகின்றன; ஆதலால் எங்களுக்கு இவ்விடத்தில் நிற்றல்கூடாது என்று கூறிக்கொண்டு தேவர்கள் ஓடினார்கள்.—எ-று. (உஅ௭)

புடவி கீழ்வன வண்டங்க டுளைப்பன புறத்திற்
கடலொ ரேழையும் பருகுவ புவனங்கள் கடப்ப
வடலின் மேதக்க யாவருந் தடுத்திடற் கரிய
வடவை நாவையுந் துணிப்பன வவர்விடும் வாளி.

(இ-ள்.) அவ்விருவர்களாலும் விடப்படுகின்ற அம்புகள் பூமியைக்கிழிக்கின்றன; அண்டங்களைத்துளைக்கின்றன; உலகின்புறத்திலுள்ள எழுகடல்களையும் குடிக்கின்றன; புவனங்களைக்கடக்கின்றன; வன்மையிற்சிறந்தன; யாவர்களாலும் தடுத்தற்கரியன; வடவாக்கினியின் எழுநாக்குக்களையும் துளைப்பன.—எ-று. (உஅஅ)

இகல்க டந்திடு திண்டிறல் வாகுவு மிரவிப்
பகையு மாற்றிய பெருஞ்சமர் வலியையார் பகர்வார்

மிகுதி கொண்டபல் கணைமழை யுலப்புறா விடுப்பத்
திகிரி யம்படை போன்றன வனையர்கைச் சிலைகள்.

(இ-ள்.) பகையை வெல்லுகின்ற மிகுந்த வலிமையினையுடைய வீரவாகுதேவ வரும் பாநுகோபனுஞ்செய்த பெரியபோரின்றிறமையை யாவரொடுத்துக்கூறவல்லுனர். அவர்கள் கைகளிற்பிடிக்கப்பட்ட விற்கள் மிகுதியான பலவம்பு மழையை விடாது பெய்தற்குச் சக்கரப்படையைப்போல்வன வாயின.—எ-று.

சக்கரப்படைசுழல்வதைப்போல விவர்கள்விற்களுஞ்சுழன்றன என்பது கருத்து.

வெய்ய வன்றனைத் தளையிடும் வெய்யவன் விறலார்
துய்ய மொய்ம்பினன் விடுசர மாரியைத் தொலைத்துக்
கையி ருந்திடு கார்முக மொன்றையுங் கடிதி
னையி ரண்டுநூ றயிற்கணை யாலறுத் தார்த்தான்.

(இ-ள்.) சூரியனைச் சிறையிலிட்ட கொடியவனான பாநுகோபன் வெற்றிபொருந்திய தூயதோள்களையுடைய வீரவாகுதேவர்விட்ட சரவருஷத்தை நாசஞ்செய்து, அவர்கையிலிருந்த ஒருவில்லினையும் ஆயிரங் கூரிய அம்புகளாலறுத்து ஆரவாரித்தனன்.

ஆர்த்த காலையில் வீரவா குப்பெய ரறிஞன்
பேர்த்து மோர்தனு வாங்கியே பெருஞ்சினம் பிடித்துச்
சூர்த்த வெங்கணை யாயிரம் விரைவினிற் றூண்டி
மூர்த்த மொன்றினி லவுணனேந் தியசிலை முரித்தான்.

(இ-ள்.) பாநுகோபன் ஆரவாரஞ்செய்தவுடனே, வீரவாகுதேவரென்று பேருள்ள விவேகியானவர் பின்னும் வேறேயொருவில்லெடுத்து மிகுந்த கோபங்கொண்டு அச்சத்தைத்தரத்தக்க வெவ்விய ஆயிரமம்புகளை விரைவாகவிட்டு ஒருமுகூர்த்த நேரத்தில் அசுரனாகிய பாநுகோபன் பிடித்திருந்த வில்லை யறுத்தனர்.—எ-று. (௨௧௧)

முரித்த காலையி னவுணர்கோ னாற்றவு முனிந்து
கரத்தின் மற்றொரு சிலைகுனித் தாயிரங் கணைக
ளுரத்தி னம்பியு மணங்குற விடுத்தலு மோரேழ்
சரத்தி னாலவன் றனிப்பெரு மவுலியைச் சாய்த்தான்.

(இ-ள்.) வில்லை யொடித்தவுடனே, அசுராதிபனாகிய பாநுகோபன் மிகவுங் கோபங்கொண்டு, வேறொரு தனுசைக்கையிலெடுத்து அதில் ஆயிரம் அம்புகளைவைத்துவிட்டு வீரவாகுதேவரும் துன்புறுமாறு அவர் மார்பிற்பட விட்டனன். உடனே வீரவாகுதேவர் ஒப்பற்ற ஏழுபாணங்களை விட்டுஅவனுடைய மகுடத்தைப் பங்கஞ்செய்தனர்.—எ-று. (௨௧௨)

வாய்த்த பன்மணி குயிற்றிய கனகமா மவுலி
சாய்த்த காலையின் வேறொரு கதிர்முடி தன்னை
யேத்தல் சான்றிடு சூர்மகன் புனையுமா றெடுத்தான்
பூத்த செங்கதி ரவனைமுன் பிடித்தவா போல.

(இ-ள்.) பொருந்திய பலமணிகளிட்டிழைத்த பொன்னாலாகிய மகுடத்தை உடைத்தவுடனே, வேறேயோர் ஒளிபொருந்திய மகுடத்தை, செந்நிறமான கிரணங்களையுடைய சூரியனை முன்னே பிடித்த தன்மையைப்போல, உயர்வு மிகுந்த சிறந்த பாநுகோபன் கையிலெடுத்தனன்.—எ-று. (௨௧௩)

எடுத்த பொன்முடி சென்னியிற் கவித்தன னிதன்முன்
வடித்த வெங்கணை யாயிரந் தூண்டிமற் றவன்மே

லடுத்த சாலிகை சிந்தினன் சிந்திய வளவி
னடித்து நல்லறம் பாடின பரிதியு நகைத்தான்.

(இ-ள்) எடுத்த தங்கக்கிரீடத்தை தலையிலணிந்தனன்; அதற்குள்ளே வடிக்கப்பட்ட வெவ்விய ஆயிரம் அம்புகளைவிட்டு வீரவாகுதேவர் அப்பாநுகோபனுடைய மார்பிலணியப்பட்டிருந்த கவசத்தையுடைத்தனர்; உடைத்தவுடனே, அதனைக்கண்டு நடித்துக்கொண்டு நல்ல தருமதேவதைபாடின; சூரியனுஞ்சிரித்தான்.—எ-று. (உ௬௪)

நிருதர் போற்றிடு சூர்மக னாயிர நெடுங்கோல்
சுருதி நாயக னிளவற்ற னுதலிடைத் துரப்பக்
குருதி நீருண்டு குழுவொடுந் தோன்றுவ குணபாற்
பரிதி வானவ னிளங்கதிர் விரிந்தெழும் பரிசின்.

(இ-ள்.) அசுரர்களாற் புகழப்படுகிற பாநுகோபன், நீண்ட ஆயிரம் அம்புகளை வேதநாயகராகிய குமரப்பெருமானுடைய இளையவராகிய வீரவாகு தேவரது நெற்றியில் படும்படி விட்டான். (அவைகளவருடைய நெய்றியிற்பட்டு) இரத்த நீரைப்பானஞ்செய்து கீழ்த்திசையிலுதயமாகிற சூரியன் இளங்கதிர்களுடன் உதையமானாற்போல காணப்படுகின்றன.—எ-று. (உ௬௫)

நெற்றி மீதுகோ லாயிரம் படுதலு நிறையிற்
சற்று நீங்கிலன் றன்வலி சுருங்கிலன் றக்கோன்
பற்றி யங்கையாற் பறித்தவை வீசினன் பகைஞன்
கொற்ற வெய்யகோல் விளிவின்றி நின்றிடுங் கொல்லோ.

(இ-ள்.) நெற்றியின்மீது ஆயிரமம்புகள் படுதலும் வீரவாகுதேவர் அதற்காகத் தைரியத்தை யிழந்தாரில்லை; தனது வன்மையிலுங் குறைந்தாரிலலை; அவைகளை அழகிய கைகளால் பிடுங்கி எறிந்தனர்; சத்துருவின் வெற்றியோடு கூடிய கொடுங்கோலானது அழியாமல் நிற்குமோ?—எ-று. (உ௬௬)

சகத்தை நல்கிய வறுமுகற் கிளவலத் தகுவன்
முகத்தி னாயிர மகலத்தி னாயிர மொய்ம்பி
னகத்தி னாயிரங் கரங்களி னாயிர மாக
மிகைத்த வெங்கணை தெரிந்தொரு தொடையினில் விடுத்தான்.

(இ-ள்.) உலகங்களைப்படைத்த சண்முகப்பெருமானுக்குத் தம்பியாகவுள்ள வீரவாகுதேவர், அவ்வசுரனாகிய பாநுகோபனுடைய முகத்திலாயிரம், மார்பிலாயிரம், தோள்களினிடையிலாயிரம் ஆக மிகுதியான கொடிய அம்புகளை வைத்து ஒரு தொடுப்பிலேயே விட்டனர்.—எ-று. (உ௬எ)

விட்ட வாளிகள் சூர்மக னவயவம் விரவிப்
பட்டு மூழ்கலு மவசமாய்த் தளர்ந்தனன் பாணி
நெட்டி ருஞ்சிலை யூற்றமாய் வறியனாய் நின்றான்
றொட்ட தெண்கயத் தூறிமே லெழுந்தது சோரி.

(இ-ள்.) வீரவாகுதேவர்விட்ட அம்புகள் சூரபன்மனுடைய அவையவங்களிலே கலந்து உள்ளே அழுந்துதலும், பாநுகோபன் மூர்ச்சையுடனே தளர்ச்சியடைந்தனன். அப்பொழுது அவன்கையிலிருந்த வில்லுங் கேடாயது. அதனால் வறியவனைப்போலநின்றனன். உடனே தோண்டப்பட்ட தெளிந்த நீரினையுடைய தடாகத்தைப்போல இரத்தம் ஊறி மேலே தோன்றியது.—எ-று. (உ௬அ)

வநது வங்தெழு குருதிநீர் முழுதுடன் மறைப்பப்
புந்தி தன்னிடைச சீற்றமு மூண்டெழப் பொலிவான

செந்த ழற்பிழம் பானுயர் குன்றெனத் திகழ்ந்தா
னந்தி மேற்றிசை யெழிலியின் வண்ணமு மானான்.

(இ-ள்.) வந்து ஒழுகாநின்ற இரத்தவெள்ளம் உடன்முழுமையும் மறைப்ப மனதிற்கோப மதிகரிக்க விளங்குகின்ற பானுகோபன் செந்நிறமான தீயொடுவிளங்குகின்ற மலையைப்போல விளங்கினான். அல்லாமலும் அந்திப்போதின் மேற்குத்திக்கிற் காணப்படுகின்ற செவ்வானத்தின்வடிவமாகவும் விளங்கினான்.—எ-று. (உ௯௯)

ஆன போழ்தினி லவுணமாத் தலைவர்கள் யாரும்
பானு மாற்றலன் பொருவலி யின்மையைப் பாராச்
சேனை நாற்பெரும் பரவையி னோடுமுன் சென்று
மான வேற்படை வீரவா குவின்புடை வளைத்தார்.

(இ-ள்.) அப்பொழுது, தலைவர்களாகவுள்ள அசுரர்களனைவர்களும், பானுகோபன் போர்செய்தற்கு வல்லபமில்லாதவனாக நிற்றலைப்பார்த்து, சதுரங்க சைனியங்களாகிய பெரியகடலுடனேசென்று பெரியவேலாயுதத்தினையுடைய வீரவாகுதேவரைச்சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (௩00)

இலைபி றங்கிய சூலம்விட் டேறுதண் டெழுவ
முலைபி றங்கிய கணிச்சிநே மிப்படை யோங்குஞ்
சிலைபி றங்கிய பகழிகள் வீரன்மேற் செலுத்தி
மலைபி றங்கிய விரவிசூழ் திமிரென மறைத்தார்.

(இ-ள்.) தகட்டுவடிவமாக விளங்கிய சூலாயுதத்தை விட்டுப் பின்னும், உயர்ந்த தண்டங்களையும், எழுக்களையும், உலைக்களத்திற் செய்தமைத்த பிரகாசத்தினையுடைய கண்டகோடரிகள், சக்கராயுதங்கள், உயர்ந்த வில்லிலமைத்து விடப்பட்ட அம்புகள், முதலிய ஆயுதங்களையும், வீரவாகுதேவர்மீது பிரயோகித்து, உதயகிரியிலே விளங்கின சூரியனைச்சூழ்ந்த இருட்டைப்போல மறைத்தார்கள்.—எ-று. (௩0௧)

வேறு.

தொடைக்கல னிலவு மார்பிற் றெல்லசு ரேசர் கொண்ட
படைக்கல மான வெல்லாம் விடுத்தலுந் தனது பாணி
யிடைக்கலந் திருந்த வார்விற் குனித்தன னிடுக்கட் பட்டோ
ரடைக்கலம் புகுதும் வெள்ளி யருவரை யளித்த வண்ணல்.

(இ-ள்.) ஒன்றோடொன்று தொடுக்கப்பட்ட ஆபரணங்கள் விளங்குகின்ற மார்பினையுடைய பெரிய வசுரர்கள் வைத்திருந்த ஆயுதங்களாகவுள்ள வனைத்தையும் விடுதலும், துன்பமடைந்தவர்கள் அடைக்கலமாக வடைகின்ற அருமையான கைலாயமலையின் காவலராகிய வீரவாகுதேவர் தமது கையிலிருந்த நீளமான வில்லை வளைத்தனர்.

ஆயிர கோடி கோடி யடுசரந் தொடையொன் றாக
மாயிரும் புயத்து வள்ளல் வல்லையின் வலிது தூண்டித்
தீயவ ருடன்று விட்ட படையெலாஞ் சிந்த லூற்றான்
பாயிருட் படலங் கீறுஞ் செங்கதிர்ப் பரிதி யேபோல்.

(இ-ள்.) மிகவும் பெரிய தோள்களையுடைய வீரவாகுதேவர், பரவிய இருட்படலத்தைக் கிழிக்கின்ற செந்நிறமான கதிர்களையுடைய சூரியனைப்போல ஒவ்வொரு தொடையாக வாயிரங்கோடிகோடி கொல்லாநின்ற வம்புகளை விரைவாகவிட்டுக் கொடியவர்களாலே பகைத்துவிடப்பட்ட ஆயுதங்களனைத்தையும் அழித்தனர்.-எ-று. (௩0௩)

அவுணர்கள் யாருமுய்த்த வடுபடை மாரி சிந்திக்
குவவுறு விசயத் தோளான் கொடுஞ்சர மனந்த கோடி

தவறில வாக வுய்த்துத் தகுவர்தந் தானை முற்று
முவரியுண் வடவை போல வொல்லையின் முடிக்க லுற்றான்.

(இ-ள்.) எல்லாவசுரர்களாலும் விடப்பட்ட கொலைத்தொழிலினையுடைய பாண வருஷத்தை சிதறவடித்த தடித்ததோள்களையுடைய வீரவாகுதேவர், அநந்தங்கோடிக் கொடுமையான அம்புகளைத் தவறாவண்ணமாக விட்டு அசுரசேனைகளனைத்தையும் கடனீரையுண்ட வடவாக்கினியைப்போல விரைவிலழிக்கத் தொடங்கினார்.—எ-று (௩௦௪)

தோலினை யறுக்கும் வாளைத் துணித்திடுஞ் சோதி வில்லின்
காலினை யறுக்கும் வெய்ய கணிச்சியை யறுக்கும் வீசுங்
கோலினை யறுக்கு நேமிக் கொடும்படை யறுக்குங் காமர்
வேலினை யறுக்கு மம்மா விடலைதன் வீர வாளி.

(இ-ள்.) வீரவாகுதேவர்விட்ட வீரம்பொருந்திய வம்புகள், கேடகங்களை யறுக்கும், வாள்களையறுக்கும், ஒளிபொருந்திய விற்களின் கால்களையறுக்கும், கொடிய கண்ட கோடரிகளை யறுக்கும், வீசாநின்ற கோல்களையறுக்கும், கொடிய சக்கராயுதங்களை யறுக்கும், அழகியவேலாயுதங்களை அறுக்கும்.—எ-று. (௩௦௫)

வேறு.

உரந்துணிக்குங் கவசமிடு முரந்துணிக்கும் புயந்துணிக்கு மொன்னலார்தங், கரந்துணிக்கு மடல்புரிமோ கரந்துணிக்குங் கழறுணிக்குங் கணிச்சி கைத்தோ, மரந்துணிக்குங் குனித்தகொடு மரந்துணிக்கும் வாய்துணிக்கு மவுலி தாங்குஞ், சிரந்துணிக்கு மெறிந்திடும்வச் சிரந்துணிக்கு முரவோன்றன் செங்கை வாளி.

(இ-ள்.) பலசாலியான வீரவாகுதேவருடைய செவ்விய கையினின்றும் விடப்படுகின்ற அம்புகள் வீரர்களுடைய வலியைக்குறைக்கும்,கவசமிட்ட மார்பைத்துணிக்கும், தோள்களை யறுக்கும், பின்னும் அப்பகைவர்களுடைய கரங்களையறுக்கும், போர் செய்கின்ற உக்கிரத்தைக் கொடுக்கும், வீரக்கழலை யறுக்கும், கண்டகோடரிகளையும் கைவேல்களையும் அறுக்கும், வளைக்கப்பட்ட விற்களை அறுக்கும், வாய்களை யறுக்கும், மகுடங்களைச் சுமக்கின்ற சிரங்களையறுக்கும், எறியப்பட்ட வச்சிராயுதங்களை அறுக்கும்.—எ-று. (௩௦௬)

கதமறுக்கும் வதமறுக்குந் தூங்குபுழைக் கையறுக்குங் கபோலத் தூறு
மதமறுக்கு நுதலறுக்கும் வாயறுக்குஞ் செவியறுக்கும் வயிரக் கோட்டின்
விதமறுக்கும் வாலறுக்கு மெய்யறுக்குந் தலையறுக்கும் வேழஞ் செல்லும்
பதமறுக்கு முரணறுக்கு மரணறுக்கும் வீரன்விடு பகழி மாரி.

(இ-ள்.) வீரவாகு தேவரால் விடப்படுகின்ற அம்பு மழை யானைகளின் கோபத்தினையழிக்கும், எதிரிகளைக் கொலைசெய்தலையறுக்கும், தொங்குகின்ற துவாரத்தோடுகூடியதும்பிக்கையினை யறுக்கும், கபோலத்திலூறுகின்ற மதத்தினையறுக்கும், நெற்றியை யறுக்கும், வாயையறுக்கும், காதினையறுக்கும், வயிரம் பொருந்திய கொம்பின் வேறுபாடுகளை யறுக்கும், வாலினை யறுக்கும், யானைகளின் போகின்ற காலினையறுக்கும், வலியையறுக்கும், கோட்டையை உடைக்கும்.—எ-று. (௩௦௭)

ஆரறுக்குஞ் சகடறுக்கு மச்சறுக்கு நெடுந்துவச மறுக்குந் தேரின்
பாரறுக்குங் கூம்பறுக்கும் பாகறுக்கு மங்கணுறும் பதக ராவி
வேரறுக்கு மடியறுக்கும் விரிதருகொய் யுளையறுக்கும் விளங்குஞ் செம்பொற்
றாரறுக்கும் புரவிகளின் றலையறுக்கு நிலையறுக்குஞ் சரங்கண் மன்னோ.

(இ-ள்.) வீரவாகு தேவர் விடுகின்ற அம்புகள், தேரின் ஆரிணையறுக்கும், சகடங்களை யறுக்கும், அச்சுகளை யறுக்கும், நீண்டகொடிகளை யறுக்கும், அடிப்பரப்புகளையறுக்கும், கூம்புகளையறுக்கும், சாரதிகளைக் கொல்லும், அவ்விடத்திலிருக்கிற பாவிகளின் உயிரைவேரறுக்கும், அடிப்புறத்தை யறுக்கும், விரிந்துள்ள புறமயிரையறுக்கும், பிரகாசிக்கின்ற செவ்விய பொன்னாலாகிய கிங்கிணி மாலையை யறுக்கும், குதிரைகளின் தலைகளை யறுக்கும், நிற்கும் நிலைகளையு மறுக்கும்.—எ-று. (௩0அ)

கானோடும் வரையோடுங் கரையோடுந் திரையோடுங் கழியி னோடு
மீனோடுங் கடலோடும் விசையோடுந் திசையோடு மேக மோடும்
வானோடு நிலனோடு மிருகதிரின் மருங்கோடும் வானத் தோடுந்
தேனோடும் பூந்தாரான் சிலையோடு நெடும்பகழி சிந்துஞ் சென்னி.

(இ-ள்.) தேனொழுகாநின்ற பூமாலையணிந்த தோள்களையுடைய வீரவாகுதேவரது வில்லினின்றும்விடப்பட்ட அம்புகளால்அறுபட்ட தலைகள்: காட்டில் ஓடும், மலையிலோடும், கரையிலோடும், திரையிலோடும், கழியிலோடும், மீன்கள் ஓடாநின்ற கடலிலோடும், வேகத்துடனே திக்குக்களிலோடும், மேகத்தில் ஓடும், ஆகாயத்திலோடும், பூமியிலோடும், சூரியசந்திரர்களின் பக்கங்களில் ஓடும், சக்கரவாளகிரியில் ஓடும்.—எ-று.

வேறு.

பாயிரும் புனல்போ லோடிப் படியெனப் பரந்து நீடித்
தேயுவின் றிறன்மேல் கொண்டு சேணென முடிவின் றாகி
வாயுவின் விரைந்து சென்று வள்ளல்கை வாளி யொவ்வொன்
றுயிர கோடி சென்னி யறுக்கினும் வெறுக்கி லாவே.

(இ-ள்.) வீரவாகுதேவரது கைகளால் விடப்பட்ட ஒவ்வொரு அம்புகளும் பாயாநின்ற பெரிய வெள்ளத்தைப்போல வோடிப் பூமியைப்போலப்பரந்து நீண்டு அக்கினியினது வன்மையை மேற்கொண்டு ஆகாயத்தைப்போல அழிவில்லாததாய் வாயுவைப்போல விரைவாகச்சென்று ஆயிரந் தலைகளை அறுத்தாலும் வெறுப்பற்றனவாகவிருக்கின்றன.—எ-று. (௩௧0)

வரந்தனிற் றலைமை சான்ற வொருசில மான வீரர்
சிரந்தனைத் துணித்துக் கொண்டு சீர்கெழு சூரன் வைகும்
புரந்தனிற் கொடுபோ யன்னார் பொற்றொடி மடந்தை மார்தங்
கரந்தனி னுகுத்துச் செல்லுங் கந்தனுக் கிளவல் வாளி.

(இ-ள்.) சண்முகப்பெருமானுக் கிளையவராகிய வீரவாகுதேவரது அம்புகள் சிறந்த வரங்களைப்பெற்ற தலைமையின் மிக்க சில பெரிய வீரர்களுடைய தலைகளை அறுத்துக்கொண்டு சிறப்பு விளங்குகின்ற சூரபன்மன் வாழும் ஊருக்குட்கொண்டுபோய் அவர்களின் பொன்வளையலணிந்த பெண்களின் கைகளில் சிதறிச் செல்லாநிற்கும்.—எ-று. (௩௧௧)

புரண்டன வயவர் யாக்கை பொழிந்தன குருதித் தாரை
யுருண்டன மான்றே ராழி யுலவின பலவுங் கூளி
திரண்டன குணங்க ரீட்டஞ் செறிந்தன சேனம் பிள்ளை
யிருண்டன திசைகண் முற்று மிரிந்தன வொழிந்த தானை.

(இ-ள்.) வீரர்களின் உடலங்கள் புரண்டன, இரத்தவெள்ளந் தாரையாகப் பொழிந்தன, குதிரைகளோடுகூடிய தேர்களின் சக்கரங்கள் உருண்டன, கூளிகள் பலவும் உலாவின, பிசாசர்களின் கூட்டங்கள் திரண்டன, பருந்துகளுங் காக்கைகளும் நெருங்கின, திசைகளெல்லாமிருண்டன, இறவாதெஞ்சிய சேனைகளனைத்தும் விலகியோடின.—எ-று. (௩௧௨)

பட்டன புரவிப் பந்தி படிந்தன முடிந்த வேழங்
கெட்டன ரவுணர் யாருங் கிடந்தன வொடிந்த திண்டே
ரட்டன னொருவ னின்று னகலிரு விசும்பை வல்லே
தொட்டன பிணத்தின் பொம்மல் சோரியா றெழுகிற் றன்றே.

(இ-ள்.) குதிரைவரிசைகளிறந்தன, இறந்த யானைகள் கீழேவிழுந்தன, அசுரர்களெல்லாங் கெட்டார்கள், திண்ணிய தேர்களொடிந்து கிடந்தன, இவைகளையெல்லாம் கொன்ற வீரவாகுதேவரொருவரோ எஞ்சினவராக நின்றனர், இடமகன்ற பெரிய ஆகாயத்தை பிணத்தின் குவியல் விரைந்து தொட்டது, அதனின்றும் இரத்தவாறெழுகியது.—எ-று. (௩௧௩)

பாய்ந்திடு குருதி நீத்தம் படர்ந்தது புகுந்து பௌவஞ்
சேர்ந்தது சுறவு மாந்திச் செருக்கிய திறலோ னம்பால்
வீந்திடு மவுண ராவி விடுத்தனர் சென்று தந்தா
ளோய்ந்தனர் நடுவன் றூத ரொழிந்தன கழிந்த பூசல்.

(இ-ள்.) ஒழுகாநின்ற இரத்தவாறனது விரிவாகச்சென்று கடலையடைந்தது, அதனைச் சுறாமீன்கள் குடித்துச் செருக்கின, வீரவாகுதேவரம்பினால் இறந்த அசுரர்களின் உயிர்களைப் பிடித்துக்கொண்டுசென்று எமலோகத்தில் விடுதலினால் எமதூதர்களின் கால்களும் ஓய்ந்தன, சண்டையும் ஓய்ந்தொழிந்தன.—எ-று. (௩௧௪)

சிந்திய வவுணர் தானைச் செய்தியும் பரிதிக் கூற்ற
னொந்தனன் றமியனின்ற தன்மையு நோக்கி நோக்கி
நந்தம தண்ண றன்பா னண்ணுது மென்ன மீண்டு
வந்தன முந்து சாய்ந்த வயப்பெரும் பூத வெள்ளம்.

(இ-ள்.) அழிந்த அசுரசைனியங்களின் தன்மையும், பாநுகோபன் நொந்தவனாகத் தனித்து நிற்கும் வண்ணமும் பார்த்துப்பார்த்து, நமது இறைவனிடத்திற்குச் செல்வோமாகவென, முன்னம் பாநுகோபனம்பினால் பின்னிடைந்துசென்ற வெற்றியோடுகூடிய பெரிய பூதவெள்ளங்கள் திரும்பிவந்தன.—எ-று. (௩௧௫)

இரிந்திடு பூத வீரரி யாவரு மீண்டார் நின்று
வருந்திய தலைவர் தொல்லை வன்மிடல் பெற்றா ரங்க
ணருந்துய ருழந்து வீழ்ந்தா ராவியோ டெழுந்தா ரின்னோர்
பொருந்தனி வீர வாகுப் புடையுற வளைந்து புக்கார்.

(இ-ள்.) முன்னர் விலகியோடிய பூதவீரர்கள் யாவரும் திரும்பிவந்தார்கள்; ஓடிச்செல்லாநின்று வருந்திய தலைவர்களெல்லாம் பழய வன்மையை யடைந்தார்கள்; அவ்விடத்தில் அரிய துன்பத்தையடைந்து விழுந்தவர்களெல்லாம் உயிருடனெழுந்தார்கள்; இவர்களனைவர்களும் போர்புரிகின்ற வீரவாகுதேவரது பக்கமாகச்சுற்றிச் சூழ்ந்தார்கள்.—எ-று. (௩௧௬)

அங்கது போழ்து தன்னி னயர்வுயிர்த் துணர்வு தோன்றச்
செங்கதி ரோனைச் சீறுஞ் சேவகன் சுற்று நோக்கிச்
சங்கையி னிமிர்ந்த கொள்கைத் தன்பெருஞ் சேனை காணான்
கங்கமுங் கழுகு மார்க்குக் களேபரச் சூழல் கண்டான்.

(இ-ள்.) அப்பொழுது, இளைப்பாறி உணர்வுண்டாகச் செந்நிறமான கதிர்களையுடைய சூரியனைக்கோபித்த பானுகோபன் சுற்றிலும்பார்த்து, அளவில்லாமல் மிகுதியாகநின்றதென்று கூறப்படுகிற தனது பெரிய சைனியங்களை கண்டானில்லை;(பின்னை எதனைக்கண்டானென்னில்) பருந்துகளும் கழுகுகளும் ஆரவாரிக்கின்ற பிணக்குவியல்களைப் பார்த்தான்.—எ-று. (௩௧௭)

நேருறு தனிவில் லாளி நின்றது நோக்கி நம்பாற்
சாருறு மனிக மெல்லாந் தடிந்தன னிவனென் றுன்னி
யாரிடை யடங்கிற் றம்மா வாண்மைக்கு மவதி யுண்டோ
வீரன்மற் றிவனே யல்லால் வேறிலே போலு மென்றான்.

(இ-ள்.) முன்னந் தன்னோடெதிர்த்த ஒப்பற்ற வில்லாளியாகிய வீரவாகு தேவர் தன்னெதிரில் நிற்றலைக்கண்டு, நம்மிடத்திற்குவந்த சைனியங்களையெல்லாங் கொன்றவன் இவனேயென்று நினைத்து, ஆரிடத்திலடங்கி நின்றது வீரம் அம்மா! ஆண் தன்மைக்கும் கணக்குண்டோ? வீரன் இவனே யன்றி வேறே யாருமில்லை போலும் என்று கூறினான்.—எ-று. (௩௧௮)

இனையன வியந்து பின்னு மென்னெதிர் பொருத வீர
ரனைவரும் விளிந்தோ ரன்றி யடல்வலி படைத்தோ ரில்லை
குனிசிலை யொருவ னின்றான் கொற்றமுற் றிடுவ னம்மா
தினகரன் பகைஞ னாற்றல் சீரிது சீரி தென்றான்.

(இ-ள்.) இவைகளைக் கூறிப்புகழ்ந்து, பின்னும் என்னெதிரிற் போர்செய்த வீரர்களெல்லாம் இறந்தார்களேயன்றி மிக்க வன்மையை யடைந்தவர்களில்லை. வளைத்த வில்லினையுடைய இவ்வொருவனே நின்றான். இவனையும் வேல்லுவேன். அம்மா! பாநுகோபனுடைய பராக்கிரமம் நன்றாயிருக்கின்றது என்று தானே கூறினான்.-எ-று.

கன்னலொன் றளவை தன்னிற் கந்தவே ளொற்றன் யாக்கை
சின்னபின் னங்க ளாகச் செய்குவன் செய்தி டேனேற்
பின்னுயிர் வாழ்க்கை வேண்டேன் யான்பிறந் தேனு மல்லே
னென்னொரு சிலையும் யானு மெரிபிடைப் புகுவ னென்றான்.

(இ-ள்.) ஒருநாழிகைப் பொழுதுக்குள் கந்தவேளின் தூதனுடைய சரீரத்தை சின்ன பின்னங்களாகச் செய்குவேன். அவ்வாறு செய்யாமற்போனால் பின்னர் உயிர் வாழ்தலை விரும்பேன். நான் பிறந்தவனும் அல்லேன். எனது இந்த ஒரு வில்லும் நானும் அக்கினிப்பிரவேசம் செய்வேன் என்று கூறினான்.—எ-று. (௩௨௦)

வஞ்சின மினைய கூறி மாதிரக் கிழவன் மைந்த
னெஞ்சினில் வெகுளித் தீயு மானமு நீடி யோங்க
வெஞ்சலி லீசன் முன்ன மேகிய கொடுநஞ் சென்னச்
செஞ்சிலை வீரன் முன்னந் தேரொடுஞ் சென்று சேர்ந்தான்.

(இ-ள்.) இவ்வண்ணமான சபதங்களைக்கூறித் திக்குக்களுக்கெல்லா மிறைவனாகிய சூரபன்மனுடைய பிள்ளையாகிய பாநுகோபன் மனதில் கோபாக்கினியும் மானமும் அதிகமாக அழிவற்ற சிவசந்நிதானத்திற்சென்ற கொடிய விஷத்தைப்போல செவ்விய வில்லினையுடைய வீரவாகுதேவ ரெதிரிற் சென்றனன்.—எ-று. (௩௨௧)

கைத்தலத் திருந்த தொல்லைக் கார்முகம் வளைய வாங்கி
முத்தலைப் பகழி யங்கோ ராயிரம் விடுப்ப மொய்ம்ப
னத்திரத் தியன்ற வாளி யாயிரஞ் சிலையிற் பூட்டி
யுய்த்தன வறுத்துப் பின்னு மொராயிரஞ் சரங்கள் விட்டான்.

(இ-ள்.) கையிலிருந்த பழய வில்லினை வளையும் வண்ணம் வளைத்து, மூன்று தலைகளையுடைய ஆயிரமம்புகளை அதில் வைத்துவிட, வீரவாகுதேவர் அவ்வண்ணமான மூன்று தலைகளையுடைய ஆயிரம் அத்திரங்களையே வில்லிற்பூட்டி விடுத்து அவைகளை அறுத்துப் பின்னும் ஓராயிரம் அம்புகளை விட்டனர்.—எ-று. (௩௨௨)

அற்றது தெரிந்து தீயோ னுயிரம் விசிகந் தூண்டி
மற்றவை விலக்கிப் பின்னும் வாளியோ ரயுதந் தொட்டுக்
கொற்றவன் றேரும் பாகுங் குரகதக் குழுவு மாயச்
செற்றன னதனை நோக்கிச் சேணுளா ரலக்க ணுற்றார்.

(இ-ள்.) பாநுகோபனதனையுணர்ந்து, ஆயிரமம்புகளைவிட்டு வீரவாகுதேவர் முன்னம் விட்ட ஆயிரமம்புகளையும் தடுத்து பின்னும் பதினுயிரமம்புகளைவிட்டு வீரவாகுதேவருடைய தேரும் சாரதியும் குதிரைக்கூட்டங்களும் அழியவழித்தனன். அதனைக்கண்டு தேவர்கள் துன்பமடைந்தார்கள்.—எ-று. (௩௨௩)

வில்லொடும் வீர வாகு வேறொரு தேர்மேற் பாய்ந்து
வல்லிதி னூற்று நூறு வாளிக டொந்து வெய்யோன்
சில்லியந் தேரு மாவும் வலவனுஞ் சிலையும் வீழப்
பல்விருந் துண்டஞ் செய்தான் விண்ணவர் பண்ணை யார்ப்ப.

(இ-ள்.) வீரவாகுதேவர் வில்லுடன் வேறே ஓர் இரதத்திற்குதித்து விரைவாகப் பதினுயிரமம்புகளை விட்டுக் கொடியவனுகிய பாநுகோபனுடைய சக்கரத்தினையுடைய தேருங் குதிரையுஞ் சாரதியும் வில்லும் சிதைந்து விழும் வண்ணம், பல பெரிய துண்டுகளாகத் தேவர்கூட்டங்கள் ஆரவாரிக்கும் வண்ணம் செய்தனன்.—எ-று. (௩௨௪)

பூங்கழன் மிழற்ற வேறோர் பொன்னவாந் தேரின் மீப்போ
யாங்கொரு சாபம் பற்றி யவுணன்றன் செவியின் காறும்
வாங்கின னேழு நூறு வச்சிரப் பகழி பூட்டி
யோங்கலம் புயத்து வீர னுரத்திடைப் புகவுய்த் தார்த்தான்.

(இ-ள்.) அழகிய வீரகண்டை முழங்க, திருமகளும் விரும்பத்தக்க வேறே ஒரு தேரின்மீது பாய்ந்து ஒரு வில்லைப்பிடித்து அப்பாநுகோபன் தன் காது பரியந்தம் இழுத்து எழுநூறு வஜ்ரமுகாஸ்திரங்களை சந்தானித்து மலைபோன்ற தோள்களையுடைய வீரவாகுதேவருடைய மார்பிற்புதையும் வண்ணம் பிரயோகித்தான்.—எ-று. ()

ஆகத்திற் பகழி பாய வறுமுகன் றூதன் முன்னஞ்
சோகத்தை யுணர்கி லாதோன் றுயரத்தின் சுவையுங் கண்டு
மாகத்தி லிரவி தன்னை வன்சிறை பிணித்தோன் சென்னி
காகத்துக் கிடுவ னென்று வெகுண்டனன் காலன் போல்வான்.

(இ-ள்.) உடம்பில் அஸ்திரம் பிரவேசித்தவுடனே வீரவாகுதேவர் முன்னந் துன்பத்தை யனுபவித்து பரிசய மில்லாதவராதலால், தற்காலம் துன்பலக்ஷணத்தையு முணர்ந்து வானத்திலுலாவுகின்ற சூரியனை வலியசிறையிலடைத்த பாநுகோபனுடையதலையை காக்கைகளுக்கு இரையாக விடுவேனென்று எமனையொத்த அவ்வீரவாகுதேவர் கோபங்கொண்டனர்.—எ-று. (௩௨௬)

கறுத்திடு வீர னீரேழ் கங்கபத் திரங்க ளேவி
யறுத்தனன் சிலையைப் பின்னு மாயிரம் பகழி தூண்டி
நொறிற்பரி யிரதந் தன்னை நூறின னூறு கோலான்
மறுத்தெதிர் பொருத தீயோன் மருமத்தை வாயில் செய்தான்.

(இ-ள்.) கோபித்த வீரவாகுதேவர் பதினலு கங்கபத்திராஸ்திரங்களைவிட்டு வில்லினையறுத்து பின்னும் ஆயிரமம்புகளைவிட்டு வேகமாகச் செல்லுகின்ற குதிரைகளோடுகூடிய இரதத்தினை அழித்தனர். பின்னும் நூறம்புகளைவிட்டு எதிர்த்துப் போர்புரிந்த வக்கொடிய பாநுகோபனுடைய மார்பை வாயில்போலாக்கினர்.—எ-று. (௩௨௭)

வருந்தில னதற்கு மைந்தன் வயினுறு மிரத மொன்றின்
விரைந்துடன் புகலும் வீரன் விசிகமா யிரத்தைத் தூண்டி
யுரந்திறந் திட்ட வாற்ற லோச்சியே புறத்திற் றாங்கு
மரந்திகழ் பகழித் தூணி துணிபட வறுத்தா னன்றே.

(இ-ள்.) அவ்வரசகுமாரன் அதற்கு வருந்தாதவனுய் அருகினின்ற வேருெரு தேரின்மீது சீக்கிரமாகபிரவேசித்தலும், வீரவாகுதேவர் உடனே ஆயிரமம்புகளைவிட்டு மார்பைப்பிளந்த தன்மையைப்போலவே நின்று ஆயிரமம்புகளைவிட்டு முதுகிற் ருெங்குகின்ற அரத்தால் இராவப்பட்டு விளங்குகின்ற அம்புகளை அடைக்கப்பட்டுள்ள தூணியை அறுத்தனர்.—எ-று. (௩௨௮)

தூவுறு பகழி தூர்க்குந் தூணியிற் றிடலு நேமிக்
காவலன் றனய னம்மா கார்முக விஞ்சை தன்னுன்
மேவலன் வென்றி கோட லரிதெனு வினைய முன்னித்
தேவர்தே வுதவு மோகப் படையினைச் செங்கை கொண்டான்.

(இ-ள்.) பகைவர்மீது சிதருநின்ற அம்புகளை அடைக்கப்பட்ட தூணி அறுந்தவுடனே உலகாதிபனுகிய சூரபன்மனுடைய மைந்தனை பானுகோபன் அம்மா! வில்வித்தையினுல் இப்பகைவனை வெற்றிகொள்ளுதல் அருமையென்று ஒருதந்திரத்தையாலோசித்து தேவதேவனுல் அளிக்கப்பட்டுள்ள மோகனுஸ்திரத்தை செவ்விய கையிலெடுத்தனன்.—எ-று (௩௨௯)

சிந்தனை கவரு மோகத் தீம்படை யவுணன் செங்கை
வந்திட வனைய போழ்தின் மனத்தினுல் வழிபா டாற்றி
வெந்திற லனிகத் தோடு மேவலன் றன்னை யெய்திப்
புந்தியை யழித்து வீட்டி வருகெனப் புகன்று விட்டான்.

(இ-ள்.) மனத்தை அபகரிக்கின்ற கொடிய மோகனுஸ்திரம் பாநுகோபனுடைய கையிலானவுடனே யதனை மனத்தினுற் பூசைசெய்து, நீ மிக்க வல்லபத்தினையுடைய சைநியங்களுடன் நிற்கின்ற பகைவனுகிய வீரவாகுவையடைந்து அவன் மனதை அழித்துக்கெடுத்துவருவாயாகவென்று கூறிவிட்டனன்.—எ-று. (௩௩௦)

விட்டிடு மோக மென்னும் வியன்படை வெகுளி வீங்கித்
தட்டுடை நெடுந்தேர் வெய்யோன் றன்பெருஞ் சுடர்கண் மாற்றி
நெட்டிருட் படலை வீசி நிரந்தபல் லுயிரு மஞ்சி
யுட்டெளி வகன்று மாழ்க வொல்லெனப் பெயர்ந்த தன்றே.

(இ-ள்.) பானுகோபனுல் விடப்பட்ட மோகனமென்னும்பேருள்ள பெரியவம்பானது கோபமதிகரித்துத் தட்டுகளோடுகூடிய நெடியதேரிலிருக்கின்ற சூரியனுடைய பெரிய ஒளிகளையு மழுங்கச்செய்து நெடிய இருட்படலத்தை விசிறி உலகிற் பரந்துள்ள பலவகை உயிர்வர்க்கங்களும் மனத்தெளிவொழிந்து வருந்த விரைவாகச்சென்றது.—எ-று. (௩௩௧)

பெயர்ந்திடு மோக நாமப் பெரும்படை யூக்க நோக்கித்
துயர்ந்தனர் வெருவி யாற்றத் துளங்கினர் துணுக்கென் றுள்ள
மயர்ந்தனர் பூதர் யாரும் மவ்வவர் தலைவ ரானேர்
சயந்தனை யிழந்து நின்று சாம்பினர் தேம்பு கின்றூர்.

(இ-ள்.) வராநின்ற மோகனமென்னும் பேருள்ள நெடியவஸ்திரத்தின் வேகத்தைப்பார்த்துப் பூதர்களெல்லாந் துன்புற்றுப் பயந்து மிகவும் நடுங்கி துணுக்கென்று

மனவயர்ச்சி யடைந்தார்கள். அப்பூதர்களின் றலைவர்களாயுள்ளவர்களும் வெற்றியை யிழந்து நின்று வருந்தித் தேம்புகின்றார்கள்.—எ-று. (௩௩௨)

வேறு.

மோகப் படைசே றலுமுந் தெதிர்மா
றேகப் படையொன் றையுமே வுகிலார்
சேகப் படையத் தொடைசிந் தினரான்
மாகப் படைமொய்ம் புடைவள் ளல்பினோர்.

(இ-ள்.) மோகனாஸ்திரம் வருதலும் முன்னே யெதிர்த்துப் பதிலுக்குவிடவேண்டிய அந்தந்த ஆயுதமொன்றையும் விட்டார்களில்லை. அவையன்றியுள்ள வயிரம் பொருந்திய ஆயுதங்களனைத்தையும் தேவதாஸ்திரங்களையுடைய வீரவாகுதேவரின் இளையவர்கள் விட்டார்கள்.—எ-று. (௩௩௩)

அந்தத் திறல்வெம் படையாற் றலுடன்
வந்துற் றழிமே லவன்மற் றிதுதா
னெந்தப் படையா லழிவெய் துமெனாச்
சிந்தித் தனன்வே றொருசெய் கையிலான்.

(இ-ள்.) அந்த சாமர்த்தியத்தினையுடைய வெவ்விய ஆயுதமானது வன்மையுடன் வந்தவுடனே வீரவாகுதேவர் இவ்வாயுதம் எவ்வாயுதத்தால் அழியுமென்று வேறொருவழியு மில்லாதவராகச் சிந்தித்தனர்.—எ-று. (௩௩௪)

ஒன்றா முதலோ னிவையுன் னுதலு
மன்றா லம்வருந் திறனா மெனவே
சென்றா ருணர்வுஞ் சிதைவித் ததுபோர்
வென்றார் புகழ்மோ கவியன் படையே.

(இ-ள்.) ஏகராகிய வீரவாகுதேவர் இவ்வண்ண மெண்ணுதலும் முன்னாளில் ஆலாலம் வந்ததன்மையைப்போல போரில்ஜெயித்து புகழ்படைத்துள்ள பெரியமோகனாஸ்திரமானது சென்று அங்குள்ளவர்களுடைய அறிவையழித்தது.—எ-று. (௩௩௫)

இலக்கத் துடனெண் மருமே னையரு
மலக்கத் துடன்வீழ்ந் தனர்மாற் றலரூர்
கலக்குற் றிடுகா ளைகருத் தழியா
நிலக்கட் படுகந் தெனநின் றனனால்.

(இ-ள்.) இலக்ஷம்வீரர்களுடன் எட்டுவீரர்களும் மற்றவர்களும் துன்பத்துடன் விழுந்தார்கள். பகைவர் ஊரைக்கலக்கிய வீரவாகுதேவர் அறிவழிந்து பூமியில்நிற்குந் தூணைப்போல நின்றனர்.—எ-று. (௩௩௬)

நிற்கும் பொழுதத் தினினீ டகல்வா
னற்கும் பரிதிப் பகையங் கதுகண்
டெற்கின் றெதிரா யினர்யா வருளார்
நற்குன் னினனென் றுநகைத் தனனே.

(இ-ள்.) அவ்வாறு நின்றபொழுது நீண்ட அகன்ற ஆகாயத்திலிருக்கின்ற சூரியனுடைய பகைவனாகிய பானுகோபன் அதனைக்கண்டு எனக்கு எதிராகவுள்ளவர்கள் யாவர்கள் இருக்கின்றார்கள், நான் நல்லகாரியத்தை நினைந்தேன் என்றுகூறிச் சிரித்தனன்.—எ-று. (௩௩௭)

புகழுற் றிடுமே லவர்புந் தியின்மா
றிகழுற் றிடுபெற் றிதெரிந் தவுணன்

மகிழுற் றுநகைத் துவயம் புனையா
நிகழுற் றிடுசீ ரொடுநின் றனனே.

(இ-ள்.) கீர்த்திபொருந்திய உயர்ந்தவர்களாகிய வீரவாகுதேவராதியரின் மனத்தில் மயக்கம்பொருந்தி யிருக்குந்தன்மையைப் பானுகோபன் உணர்ந்து மகிழ்ந்து சிரித்து வெற்றியையடைதற்கு வேண்டிய போர்ச்சிறப்போடு நின்றனன்.—எ-று. (௩௩அ)

மல்வன் மைகொண்மொய்ம் பனுமற் றவருந்
தொல்வன் மையிலா துடல்சோர்ந் தனரால்
வில்வன் மையினு லிவர்வீ டுறவே
கொல்வன் கடிதென் றுகுறித் தனனே.

(இ-ள்.) மல்யுத்தத்திற்குரிய வன்மைபொருந்திய தோளினையுடைய வீரவாகுதேவரும் மற்றுள்ளவர்களும் பழையவன்மையில்லாமல் சோர்வடைந்தார்கள். ஆதலால் விரைவாக நான் என்வில்லின் வல்லபத்தால் இவர்களழியும்வண்ணம் கொல்லுவேன் என்று நினைத்தனன்.—எ-று. (௩௩௯)

வரிகின் றவில்வாங் கினன்வா லுணர்வு
திரிகின் றவன்மேற் சிலைவீ ரர்கண்மேல்
விரிகின் றகணப் படைமேல் விசிகஞ்
சொரிகின் றனன்யாக் கைதுளைத் தனனே.

(இ-ள்.) வரியப்பட்ட வில்லினை வளைத்து நல்லறிவு மழுங்கிநின்ற வீரவாகுதேவர்மீதும் மற்றைய வில்வீரர்கள்மீதும் மிகுதியான பூதப்படைகள்மீதும் அம்புகளை விட்டு உடம்புகளைத் துளைத்தனன்.—எ-று. (௩௪௦)

ஆங்கா கியவே லையிலா றுமுகன்
பாங்காம் விறலோ னொடுபா ரிடர்க
ணீங்கா மருண்மால் கொடுநே ரலனுற்
றீங்கா யினதன் மைதெரிந் தனனே.

(இ-ள்.) அவ்விடத்தில் அவ்வாறாகிய சமயத்திற் சண்முகப்பெருமான் தமது அருகில் நிற்பவராகிய வீரவாகுதேவருடன் பூதவீரர்களும் நீங்காதமயக்கம் பொருந்திப் பகைவனால் கெடுதியடைந்ததன்மையை உணர்ந்தனர்.—எ-று. (௩௪௧)

தெரிந்தான் முகமா றொடுசேர்ந் துயிர்தோ
றிருந்தா ரருள்செய் திடுமெம் பெருமான்
விரைந்தாங் கொரமோ கவியன் படையைப்
புரிந்தா னதனோ டுபுகன் றிடுவான்.

(இ-ள்.) ஆறுதிருமுகங்களுடன் உயிர்களுக்குட்பொருந்தி அரியதிருவருளினைச்செய்கின்ற எமதுகடவுள் சீக்கிரமாகவொரு ஆச்சரியகரமான அமோகஅஸ்திரத்தை உண்டாக்கி அதனைப்பார்த்துக் கூறுகின்றனர்.—எ-று. (௩௪௨)

நன்றே தெளிவுற் றெமர்நண் ணும்வகை
நின்றே திலன்விட் டநெடும் படைபாற்
சென்றே யதன்வன் மைசிதைத் திவணீ
வென்றே வருகென் றுவிடுத் தனனே.

(இ-ள்.) எம்மவர்கள் நன்றாகத்தெளிந்து எழுந்திருக்கச்செய்து, பகைவனாகிய பானுகோபன் விட்டநெடுமையான மோகஅஸ்திரத்தினிடஞ்சென்று அதன்வன்மையை யழித்து இவ்விடத்திற்கு நீவென்றுவரக்கடவையென்று கூறிவிட்டனர்.—எ-று. (௩௪௩)

எண்கொண் டசிவன் மகனே வுபடை
சேண்கொண் டெடர்ந் திருள்சிந் தையராய்த்
தூண்கொண் டிடுதோ ளவர்துன் னியதோர்
மாண்கொண் டசெருக் களம்வந் ததுவே.

(இ-ள்.) வன்மைபொருந்திய சிவகுமாரனாலனுப்பப்பட்ட அமோகனாத்திரம், ஆகாயமார்க்கமாகச்சென்று இருண்ட மனமுடையவர்களாய் தூணையொத்ததோள்களை யுடையவர்கள் நெருங்கியிருக்கின்ற ஒப்பற்ற மாக்ஷிமைபொருந்திய போர்க்களத்திற்கு வந்தது.—எ-று. (௩௪௪)

மிடல்கொண் டவமோ கவியன் படைசென்
றிடுகின் றழிவெய் யவனே வுபடை
யடல்கொண் டிடும்வீ ரரகத் திலிரு
ளுடையும் படிவல் லையினே டியதால்

(இ-ள்.) வலிமைபொருந்திய பெரிய அமோகனாத்திரமானது போனவுடனே கொடியவனாகிய பாநுகோபனாலனுப்பப்பட்ட மோகனாத்திரமானது போர்த்தொழிலினை யுடைய வீரர்களுடைய மனத்திலிருந்த மயக்கம் அழியும்வண்ணம் விரைவாக ஓடியது.

அசைகொண் டவுடுத் திரளா னவெலா
மிசைகொண் டவினன் வரவே கியபோற்
றிசைகொண் டிடுநம் மவர்சே னையொரீஇ
விசைகொண் டவுணன் படைமீண் டதுவே.

(இ-ள்.) அசைதலினையுடைய நக்ஷத்திரங்களெல்லாம், மேன்மைபொருந்திய சூரியன் உதயமானவுடனே (ஒளிமழுங்கிச்) சென்றாற்போல நிலைமையான நம்மவர்களாகிய சைனியங்களை விட்டகன்று பாநுகோபனுடைய அமோகனாத்திரம் வேகமாகத் திரும்பியது.—எ-று. (௩௪௫)

மோகத் தனிவெம் படைமொய்ம் பிலதா
யேகத் திறல்வா குவுமே னையரு
மாகத் தினின்மை யலகன் றமலன்
வாகைப் படைகண் டுமகிழ்ந் தனரே.

(இ-ள்.) ஒப்பற்றமோகனாத்திரம் வன்மையிழந்துசெல்லுதலும் வீரவாகுதேவரும் மற்றையோர்களும், உடம்புகளிலிருந்த மயக்கமொழிந்து, நிருமலராகிய குமரக்கடவுளின் வெற்றிபொருந்திய அமோகனாத்திரத்தைப் பார்த்துமகிழ்ந்தார்கள்.—எ-று.()

அழலுற் றதுபோ லவகன் மணியி
னிழலுற் றிடுதேர் மிசைநின் றவனு
மெழலுற் றிடுவீ ரர்கள்யா வர்களுந்
தொழலுற் றனர்நின் றுதுதித் தனரே.

(இ-ள்.) அக்கினியே உருக்கொண்டு நின்றாற்போல பெரியஅரதனங்களி னொளிபொருந்திய இரதத்தின்மீது நின்றவீரவாகுதேவரும், மயக்கநீங்கி எழுந்தமற்றையோரனைவரும், அமோகனாத்திரத்தையும், அதனையுடையபெருமானையும் வணங்கி (நின்றவிடத்திலேயே நின்று) துதித்தார்கள்.—எ-று. (௩௪௮)

செயிர்கொண் டகருத் தொடுசெற் றலர்தம்
முயிர்கொண் டிடுவோன் படையூற் றமெலா
மயிர்கொண் டிடவட் டதனுற்ற றெரீஇ
மயிர்கொண் டபொடிப் பொடுவாழ்த் தினரால்.

(இ-ள்.) கோபம்பொருந்திய மனத்துடன் பகைவருயிரை வாங்குவோனாகிய பாநுகோபனுடைய மோகனாஸ்திரத்தின் வல்லபமெல்லாம் தூளாகும்வண்ணம் அழித்த அமோகனாஸ்திரவன்மையையுணர்ந்து, அதனை ரோமாஞ்சிதத்துடன் வாழ்த்தினார்கள்.

தீயோன் படைசெய் தசெயற் கையில்யா
மாயோ மருளென் கையகத் தடையா
வாயோ டொவீ ரமறுத் தனரா
யேயோ வெனவெள் கினர்யா வருமே.

(இ-ள்.) நாமெல்லாம் கொடியவனான பாநுகோபனுடைய அம்புசெய்தவேலையினால் மனோமயக்கத்தையடைந்து வாயொடொக்கப்படுகின்ற வீரவசனங்களையும் விட்டவர்களாய் (ஆனோமென்று) ஏ ஓ வென்றுகூறி இகழ்ந்தார்கள்.—எ-று. (௬௫௦)

அண்டா தவனு ளெம்மகத் திலிரு
ளுண்டா கியதன் மையுணர்ந் தறிவன்
விண்டா னுறவிப் படைவிட் டனனென்
றெண்டா வுமுளத் திடையெண் ணினரால்.

(இ-ள்.) பகைவனாகிய பாநுகோபனால் எம்முடைய மனத்திலிருளுண்டான தன்மையை ஞானவடிவரான இறைவனுணர்ந்து அம்மோகனாஸ்திரங்கெட்டொழியுமாறு இவ்வஸ்திரத்தை விட்டனரென்று ஆலோசனையோடுகூடிய மனத்தினினைத்தனர்.

முந்நான் கெனுமொய்ம் புளமூர்த் திதனை
யுன்னா வருணீர் மையுளத் தடையா
வன்னார் தொழுதேத் தினரத் துணையின்
மின்னா மெனவப் படைமீண் டதுவே.

(இ-ள்.) பன்னிரண்டு திருத்தோள்களோடுகூடிய குமரக்கடவுளைநினைத்து அவருடைய கருணைத்திறத்தை மனதிலமைத்து அவர்கள்தொழுதுதுதித்தனர். உடனே மின்னலைப்போல அவ்வாயுதந்திரும்பியது.—எ-று. (௬௫௨)

மீண்டுற் றவமோ கவியன் படைபோய்த்
தூண்டுற் றருகன் புடைதுன் னியதா
லாண்டுற் றிடும்வீ ரர்களண் டலன்மேன்
மூண்டுற் றிடுபூ சன்முயன் றனரே.

(இ-ள்.) திரும்பிச்சென்ற பெரிய அமோகனாஸ்திரமானது சென்று தன்னை அனுப்பிய குமரக்கடவுளின் அருகிலடைந்தது; உடனே அங்கு போர்க்களத்தில்நின்ற வீரர்கள் பகைவனாகிய பாநுகோபன்மீது மேலும் மேலுமதிகரிக்கின்ற போர்புரிந்தார்கள்.—எ-று. (௬௫௩)

ஆங்குற் றிடுகா லையடுந் திறலின்
பாங்குற் றிடுமொய்ம் புபடைத் துடையோ
னீங்கற் கருமா னமுநீள் சினமு
மோங்குற் றெழவின் னதையுன் னினனே.

(இ-ள்.) போர்புரியும் பொருட்டாக அவ்விடத்தில் நிற்கின்ற சமயத்தில் பகைவர்களைக் கொல்லுமுறைகளையெல்லாம் உடைய வீரவாகுதேவர் நீங்குதற்கு அருமையான மானமும் மிகுந்தகோபமு மதிகமாக வுண்டாக விதனைநினைத்தனர். (௬௫௪)

அந்நே ரலனீண் டொரடற் படையான்
முன்னே மயல்செய் தமுரண் டொலைய

வின்னே யடுவே னெனவெண் ணமுறுக்
கொன்னே யரன்மாப் படைகொண் டனனே.

(இ-ள்.) அப்பகைவனுகிய பானுகோபன் இவ்விடத்திலொரு வலிமைபொருந்திய ஆயுதத்தினுல் நம்மை முதலில் மயக்கிய வன்மைகெட இவனே இன்றேகொல்லுகின்றேனென்று நினைத்து வீரவாகுதேவர் வலிமைபொருந்திய பெரிய சிவாஸ்திரத்தைக்கையிலெடுத்தனர்.—எ-று. (ருருரு)

அங்கத் துணைகண் டனனவ் வசுர
னெங்கட் கிறைவன் படையே கியதும்
வெங்கட் படுதன் படைமீண் டதுவுஞ்
செங்கட் டிறலண் ணல்செயற் கையுமே.

(இ-ள்.) அவரவ்வாறு சிவாஸ்திரத்தை யெடுத்ததையும், எங்களுக்கு இறைவராகிய குமரக்கடவுளின் ஞானஸ்திரந் திரும்பிச்சென்றதையும், கொடுமைபொருந்திய மோகனஸ்திரந் திரும்பிவந்ததையும், கோபத்தால் செந்நிறமடைந்த கண்களையுடைய வீரவாகுதேவருடைய தன்மையையும், அந்தப்பானுகோப னப்பொழுதே உணர்ந்தனன்.

வேறு.

இம்மெனச் சூர்மக னிவற்றை நோக்குறு
விம்மித மெய்தினன் வீர மொய்ப்புடைச்
செம்மலை யெதிர்ந்திலன் செருக்கு நீத்தனன்
கைம்மிகு துயரினன் கருதன் மேயினுன்.

(இ-ள்.) விரைவாகப் பானுகோப னிவைகளைப்பார்த்து ஆச்சரியமடைந்து வீரவாகுதேவருடன் எதிர்க்காமல் கர்வமிழந்து மிகுந்த துயரமுடையவனுய் எண்ணத்தொடங்கினுன்.—எ-று. (ருருஎ)

இவ்விடை யொன்னல ரெண்ணம் யாவையும்
வவ்வினன் மாநில வரைப்பின் வீட்டின
னுய்வகை பெற்றுட னுணர்ந்து தோன்றினுர்
செய்வதெ னையகோ கடவுள் செய்கையே.

(இ-ள்.) இவ்விடத்திற் பகைவர்களின் நினைவையெல்லாம் பெரிய நிலவுலகத்திலழித்தேன், அவர்கள் பிழைக்கும் வழியைக்கொண்டு பிழைத்து வெளிப்பட்டார்கள், இனிச்செய்வதென்ன? ஐயகோ! இவைகளெல்லாம் கடவுள்செயல். (என்று எண்ணினுன்.)—எ-று. (ருருஅ)

எடுத்தனன் மாற்றல னிறைவன் மாப்படை
தொடுத்திடு வானெனிற் றுன்னி யென்னுயிர்
படுத்திடும் யானது பரித்து வந்திலன்
விடுத்துட னப்படை விலக்கும் வண்ணமே.

(இ-ள்.) பகைவன் சிவனுடைய பெரிய அஸ்திரத்தைக் கையிலெடுத்தனன்; அதனை விடுவானுனுல் அது வந்து என்னுயிரை அழிக்கும்; பதிலுக்குவிட்டு அவ்வம்பினைத்தடுத்தற்கு நானச்சிவாஸ்திரத்தை எடுத்துக்கொண்டு வந்தேனில்லை.—எ-று. ()

வென்றிட லரிதினி வீர வாகுவைச்
சென்றனன் முதுநகர்த் தெய்வ தப்படை
மன்றவுந் தந்திவன் வன்மை மாற்றுவ
னின்றிடல் பழுதென நெஞ்சி னுன்னினுன்.

(இ-ள்.) இனி வீரவாகுவை வெல்லுதல் அரிது, ஆதலால் நான் இன்று நமது பெரிய நகரத்திற்குச்சென்று தேவாஸ்திரங்களை மிகுதியாக எடுத்துக்கொண்டு வந்து இவனுடைய வன்மையை நீக்குவேன் இனியிங்கு நிற்பது கூடாதகாரியம் என்றுதன் மனத்தில் நினைத்தனன்.—எ-று. (௩௬௦)

அயன்மகன் மதலைசே யருவ மாகியே
வியன்மிகு தனதுதேர் விடுத்து விண்ணெழீஇப்
பயனறு முகிலெனப் படர்ந்து வல்லையி
னயனுறு கடிமதி னகருட் போயினான்.

(இ-ள்.) பிரமபுத்திரனான காசிபனுடைய மகனாகிய சூரபன்மனுடைய பிள்ளையான பானுகோபன் அருவமாகி மிகவும் பெரிய தனதுதேரைவிட்டு ஆகாயத்திற்கிளம்பி நீரற்றமேகத்தைப்போல விரைந்துசென்று தனதரசாட்சியோடுகூடிய காவலினையுடைய ஊருக்குட்போயினன்.—எ-று. (௩௬௧)

கொற்றவன் மறைந்தகல் கொள்கை காண்டலுஞ்
சுற்றுறு தானவர் தொலைந்து போயினா
ரற்றது தெரிந்திடு மமரர் யாவரும்
வெற்றியின் றெமதென விளம்பி யார்த்தனர்.

(இ-ள்.) அரசனாகிய பானுகோபன் மறைந்துசென்ற கொள்கையைப் பார்த்தவுடனே அவனைச் சூழ்ந்தவர்களாக நின்ற அசுரர் விலகியோடினார்கள். நடந்த இந்தவிஷயத்தையுணர்ந்த தேவர்களெல்லாம் இன்றையவெற்றி எங்களது என்றுகூறி ஆரவாரித்தார்கள்.—எ-று. (௩௬௨)

மாயையி னருவமாய் வஞ்சன் மாநகர்
போயினன் காலையே புகுவன் போர்க்கினி
யாயவன் றனைவிரைந் தடுதி யென்றுபூத்
தூயினர் வீரன்மேற் சுரர்கள் யாவரும்.

(இ-ள்.) உடனே தேவர்களெல்லாம், வஞ்சகனாகிய பானுகோபன் மாயைவித்தையில்மறைந்து தனது பெரிய ஊருக்குப்போயினான்; போனவன் போருக்கு நாளையத்தினம் திரும்பிவருவான்; இனி அவனைச் சீக்கிரமாகக் கொன்றருள்வீராகவென்றுகூறி வீரவாகுதேவர்மீது பூமாரிபொழிந்தார்கள்.—எ-று. (௩௬௩)

தினகரன் மாற்றலன் செம்பொற் றேரொரீஇ
யினைவுட னருவமா யிரிந்து போதலை
வினையமொ டோர்வுறு வீர னின்றனன்
முனிவொடு பிழைபடு மூரி யானைபோல்.

(இ-ள்.) பிழையொடுதவறிய பெரியயானையைப்போல பானுகோபன் செவ்விய பொன்மயமான தேரைவிட்டு, துன்பத்துடனருவமாக விலகிச்செல்லுதலை விநயத்துடனுணர்ந்தவராக வீரவாகுதேவர் நின்றனர்.—எ-று. (௩௬௪)

விண்டிடு சூர்மகன் வெருவி வெந்நிடல்
கண்டனர் துணைவருங் கணத்தின் வீரருந்
திண்டிற விழுந்தனன் றீயன் பற்றிநாங்
கொண்டணை வாமெனக் கூறன் மேயினார்.

(இ-ள்.) போரிற் பின்னிடைந்த சூரபன்மனுடையபிள்ளையான பானுகோபன் பயந்து புறமுதுகிடுதலைக்கண்டு துணைவர்களும் வீரர்களும் இப்பொழுதுகொடியவனான

பாநுகோபன் தனதுவன்மையை இழந்தவனாக விருக்கின்றான். ஆதலால் நாம்சென்று பிடித்துக்கொண்டுவரலாமென்று கூறத்தொடங்கினார்கள்.—எ-று. (௩௬௫)

என்பது விளம்பியே யாரு மார்ப்பொடு
துன்புறு மவுணனைத் தொடர்ந்து பற்றுவான்
முன்பொடு முயறலுந் தெரிந்த மொய்ம்பினான்
றன்புடை யோர்க்கிது சாற்றன் மேயினான்.

(இ-ள்.) அவனைப் பிடித்துக்கொண்டு வரவேண்டுமென்பதைக்கூறி எல்லாரும் ஆரவாரத்துடன் துன்பம்பொருந்திய பாநுகோபனைத்தொடர்ந்து சென்று பிடித்தற்கு பலத்துடன் முயற்சித்தலும், அதனையுணர்ந்த வீரவாகுதேவர் தன்னருகிலுள்ளவர்களைப்பார்த்து இவ்வண்ணங் கூறத்தொடங்கினார்.—எ-று. (௩௬௬)

பேடியர் சிறுதொழில் பேணி யுள்வெரீஇ
யோடினன் போகிய வொன்ன லான்றனை
நாடிநா மடுவது நலத்தின் பாலதோ
சாடுவ னினிவரிற் சரதம் யானென்றான்.

(இ-ள்.) பேடியர்களாகவுள்ளவர்களின் சிறியதொழிலைவிரும்பி மனத்திற் பயங்கொண்டு ஓடிப்போன பகைவனை நாந்தேடிச்சென்று பிடித்துக் கொல்லுவது நன்மையொடுசேர்ந்ததோ! அல்ல; இனி யவன்வந்தால் உண்மையாக நானே கொல்லுவேன் என்றுகூறினார்.—எ-று. (௩௬௭)

என்றிவை வள்ளலு மியம்ப யாவரு
நன்றென விசைத்தலு மவற்றை நாடியே
குன்றுறழ் புயத்துணை கொட்டிக் குப்புறீஇ
வென்றிகொள் பாரிட வெள்ள மார்த்தவே.

(இ-ள்.) வீரவாகுதேவரும் இவைகளைக்கூறுதலும், அங்குநின்ற அனைவரும் நல்லதென்று ஒப்புக்கொண்டவுடனே, இவைகளை யுணர்ந்து மலைகளையொத்த இரு தோள்களைத்தட்டிக் குதித்து வெற்றிபொருந்திய பூதவெள்ளங்கள் ஆர்த்தன.—எ-று.

முற்றிய தமரினி முயல்வ தில்லையாற்
செற்றல னோடினன் றிரும்பும் வீரனு
நிற்றில னினியென நினைந்து நீங்குவா
னுற்றன னமென விரவி யோடினான்.

(இ-ள்.) போரும்முடிந்தது, இனி இன்று செய்யப்போகிறதில்லை, அது ஏனெனிற் பகைவன் ஓடிப்போய்விட்டான், வீரவாகுதேவரும் திரும்பப்போகின்றார், ஆதலால் இனி நானிங்கு நிற்கமாட்டேனென்று நினைத்து போதற்கெண்ணினவனைப்போல சூரியன் மேற்குத்திசைக்குச் சென்றான்.—எ-று. (௩௬௯)

செந்திரு மதுமலர் செறியப் பூத்துழி
முந்துறு நித்தில முழுது மொய்த்தென
வந்தர முழுவது மடைந்த செக்கரிற்
சுந்தர வுடுநிரை பலவுந் தோன்றிய.

(இ-ள்.) திருமகளுக்குரிய தேனோடுகூடிய தாமரைமலர் நெருங்கிப் பூத்தவிடத்தில் சிறந்த முத்துக்களெல்லாம் நிரம்பி மொய்த்தாற்போல, ஆகாயமுழுமையிலும் உண்டான செக்கர் வானத்தில் அழகு பொருந்திய நக்ஷத்திர வரிசைகள் பலவு முதித்தன.—எ-று. (௩௭௦)

குண்டுநீர்க் கனலொடு குலாவி மாலுளத்
தெண்டகு தமியரை யிகலி யாமதி
பண்டுள முனிவரர் பரமன்மேல்விடு
வெண்டலை யாமென விண்ணிற் றேன்றினான்.

(இ-ள்.) ஆழமான கடல் நீரிலுள்ள தீயோடு கலந்து, எண்ணத்தக்க காமமயக் கம்பொருந்திய மனத்தினையுடையவர்களாகிய தனிமையானவர்களோடு பகைத்துக் கொண்டு அழகிய சந்திரன் முன்னாளிலிருந்த இருடிகள் இறைவன்மீது விட்ட வெண் டலையைப்போல ஆகாயத்திலுதையமானான்.—எ-று. (ஙஎக)

இத்துணை வேலையி லிலக்கத் தெண்மரா
மெய்த்துணை யார்களும் வெய்ய பூதரு
மத்துணைப் படைகளு மயலிற் சென்றிட
மொய்த்துணை விறலுடை மொய்ம்பன் மீண்டனன்.

(இ-ள்.) இவ்வாறானபொழுது இலக்கத்தெண்மரென்னும் மெய்த்துணைவர்க ளும் வெவ்விய பூதர்களும் அந்தத்துணையான சேனைகளும் அருகில்வர வெற்றிபொருந் திய இரண்டு தோள்களையுடைய வீரவாகுதேவர் திரும்பினார்.—எ-று. (ஙஎஉ)

அந்தமில் கயிலையை யருளிற் போற்றிடு
நந்திதன் கணத்தரி னாத னாகியோன்
விந்தைகொள் செருநில மொருவி மீண்டுபோய்க்
கந்தவேள் பாசறைக் கண்ணு ணண்ணினான்.

(இ-ள்.) அழிவில்லாத கைலாயத்தை அன்புடன்காக்கின்ற நந்திகேசருடைய கணங்களில் தலைவராகவுள்ள வீரவாகுதேவர் வீரலட்சுமி வாசமான போர்க்களத்தை விட்டுத் திரும்பிச்சென்று குமரக்கடவுளின் பாடிவீட்டை யடைந்தனர்.—எ-று.(ஙஎங)

நண்ணிய திறலினா னான்முகன்முதற்
புண்ணிய மேலவர் போற்ற வாண்டுறு
கண்ணுத லருள்புரி கந்தன் முன்புபோய்த்
துண்ணென வணங்கினன் றுணைவர் தம்மொடும்.

(இ-ள்.) பாசறைக்குட்சென்ற வீரவாகுதேவர் பிரமன்முதலான புண்ணியரூபி களான தேவர்கள் துதிக்கத் தன்னிளையவர்களுடன் நெற்றிக்கண்ணினையுடைய கட வுள்பெற்ற மைந்தரான குமரக்கடவுளின் திருமுன்னர்ச்சென்று விரைந்துவணங்கினார்.

வணங்கின னெழுந்துபின் வள்ள றேர்ந்திட
விணங்கலன் றன்மக னெதிர்ந்து போர்செயா
வணங்குட னிரிந்தது மனைத்துஞ் செப்பலுங்
கணங்களின் முதல்வன்மேற் கருணை யாற்றினான்.

(இ-ள்.) வணங்கி யெழுந்து பின்னர்க் குமரக்கடவுளுணருமாறு, பகைவனான சூரபன்மனுடைய மகனாகிய பானுகோபன் எதிர்த்துப்போர்செய்து துன்பத்துடனே விலகிச்சென்றது முதலான எல்லாவற்றையுங் கூறுதலும், அக்குமரக்கடவுள் தமது கணங்களுக்குத் தலைவராகவுள்ள வீரவாகுதேவர்மீது கிருபை காட்டினர்.—எ-று. ()

நல்லருள் புரிந்தபின் னம்பி யிப்பகற்
றொல்லம ருழத்தலிற் றுன்பங் கூர்ந்துளா
யெல்லிது பொழுதுநின் னிருக்கை தன்னிடைச்
செல்லுதி துணைவரோ டென்று செப்பினான்.

(இ-ள்.) நல்ல அருளைக்காட்டிய பின்னர், ஆண்மகனிற்சிறந்த வீரவாகுவே நீ இன்று பகலிற் பெரிய போர்புரிந்தமையால் துன்பமடைந்திருக்கின்றாய் ஆதலால் இன்றிரவு நின்னிளையவர்களுடன் நின்வாசத்தலத்திற்குப் போகுதி என்று திருவாய் மலர்ந்தருளினார்.—எ-று. (௩௭௬)

செப்பலும் விடைகொடு செம்மல் பின்னவர்
மெய்ப்படு பாரிடம் விரவச் சென்றொரா
யொப்பருந் தனதுபே ருறையுள் வைகினன்
றப்புறு தானைக டொன்மை போலுற.

(இ-ள்.) குமரக்கடவுள் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளியவுடனே, வீரவாகு தேவர் விடைபெற்றுக்கொண்டு இளையவர்களும் பூதர்களும் கலந்துவரப்போய் ஒப்பற்ற தமது பெரிய இருப்பிடத்தை யடைந்து வன்மைபொருந்திய சைனியங்கள் முன்னிருந்த வண்ணமிருக்க விருந்தனர்.—எ-று. (௩௭௭)

சேயவன் விடுத்திடு சேனை பாசறை
போயது மிருந்ததும் புகலுற் றாமினி
மாயிரு வளங்கெழு மகேந்தி ரப்பதி
யாயிடை நிகழ்ந்தவா வறியக் கூறுவாம்.

(இ-ள்.) குமரக்கடவுளா லனுப்பப்பட்ட சேனைகள் பாசறைக்குச் சென்றதுவும் அன்றங்கு தங்கி இருந்ததுவுங் கூறினோம். இனி, மிகவும் பெரிய வளப்பம்பொருந்திய மகேந்திரபுரியாகிய அவ்விடத்தில் நடந்ததை நீங்களுணரும் வண்ணம் சொல்லுகின்றோம்.—எ-று. (௩௭௮)

ஆடுறு சமரிடை யழிந்து முன்னரே
யோடிய வவுணர்கோ னுள்ளந் தன்னிடைப்
பாடுறு துயரமும் பழியு மானமு
நீடினன் பெருமித நிலைமை நீங்கினான்.

(இ-ள்.) செய்துகொண்டிருந்த போரின் நடுவில் தோற்று முன்னமே ஓடின அசுராதிபனாகிய பானுகோபனுடைய மனத்தில், மிகுதியான துன்பமும் பழியும் மானமும் மிகுந்தவனாய தனது பெருமித நிலையினின்று நீங்கினான்.—எ-று. (௩௭௯)

கோனுறு மந்திரங் குறுகல் செய்திலன்
றானுறு திருநகர் தன்னி லேகியே
யூனம துடையர்போ லுயங்கி வைகினான்
பானுவின் பகைஞனென் றுரைக்கும் பண்பினான்.

(இ-ள்.) சூரியனுக்குப் பகைவனென்று கூறப்படுகிற கிரமத்தினையுடையவன் அரசனாகிய சூரபன்மன் வாழுகின்ற அரண்மனைக்குப் போகாதவனாய்த் தான் வசிக்கின்ற அழகிய அரண்மனைக்குச்சென்று ஊறு அடைந்தவர்களைப்போல வாட்டமுற்றிருந்தனன்.—எ-று. (௩௮0)

மந்திரக் கிளையொடு மருவ வேண்டலன்
றந்திரத் தமரொடுஞ் சார்தல் வேண்டலன்
சிந்துரத் தொல்பகைச் சென்னி போற்றிய
விந்திரப் பெருந்தவி சிருக்கை வேண்டலன்.

(இ-ள்.) அப்பானுகோபன், மந்திரிக்கூட்டத்தாருடனும் கூடியிருக்க விரும்பினானில்லை, தந்திரிகளாகிய சுற்றத்தினருடனும் கூடியிருக்க விரும்பினானில்லை, யானையின் பெரிய பகையான சிங்கத்தின் தலையால் சுமக்கப்பட்ட இந்திர சிற்பவிதிப்படி இயற்றப்பட்ட பீடத்திலிருத்தலையும் விரும்பினானில்லை.—எ-று. (௩௮௧)

ஆடு று மங்கைய ராடல் வெஃகலன்
பாடு று மங்கைய ரிசையிற் பற்றலன்
கூடு று மங்கையர் குழாமு நோக்கல
னூடு று மங்கையர் புணர்ப்புமுன் னலான்.

(இ-ள்.) அப்பானுகோபன் ஆடுகின்றபெண்களின் ஆட்டத்தையும் விரும்பினானில்லை, பாடுகின்ற பெண்களின் இசையிலும் பற்றுவைத்திலன், அணைகின்றமாதர்களின் கூட்டங்களையும் பார்க்கின்றானில்லை, ஊடியபெண்களின் தந்திரங்களையு நினைத்தானில்லை.—எ-று. (௫௮௨)

நிசாவது சென்றபின் னெடுஞ்செவ் வேலுடை
விசாகனை யவன்படை வீரர் தங்களை
யசாவுறு செருவில்வென் றுடல் கொள்வதற்
குசாவின னுளத்துட னூக்கம் வேறிலான்.

(இ-ள்.) வேறே எவ்வித முயற்சியுமில்லாதபானுகோபன் இவ்விரா போனவுடனே, நீண்ட செவ்விய வேலினையுடைய விசாகனையும் அவன்படைவீரர்களாக வுள்ளவர்களையும், நாசமில்லாத போரில் வென்று வெற்றியடைதற்குத் தன்மனத்துடன் ஆலோசித்தான்—எ-று. (௫௮௩)

**வேறு.**

ஆதவன் றன்புகை யவ்வழி யமர்தனு
மேதகுந் தொல்சமர் விளைவெலா நோக்கியே
மூதகுந் திருநகர் முழுமணிக் கோயிலிற்
றூதர்கை தொழுதுபோய்ச் சூரனுக் குரைசெய்வார்.

(இ-ள்.) சூரியன் பகைவனான பானுகோபனவ்விடத்திலிருக்க மேன்மையான பெரியபோரில் நடந்த எல்லாவிளைவுகளையும் தூதுவர்கள்பார்த்து, பழய தகுந்த அழகிய வீரமகேந்திரபுரியில் பூரண இலக்கணமமைந்த மணிகளாலிழைக்கப்பட்ட அந்தப்புரத்திற்குச்சென்று சூரபன்மனை வணங்கி சொல்லுகின்றார்கள்.—எ-று. (௫௮௪)

கேட்டியா லுன்மகன் கேடிலா வாகைசேர்
தோட்டுணை யானொடுந் தொல்சம ராற்றியே
யீட்டுபல் பூதரை யீறுசெய் திவ்விடை
மீட்டும்வந் தெய்தினான் வினையமுண் டாங்கொலோ.

(இ-ள்.) மன்னவனே கேட்பாயாக உன்மகன் பானுகோபன் கெடுதியில்லாத வெற்றிபொருந்திய வீரவாகுவுடன் பெரியபோர்புரிந்து பகைவர்களாற் சேகரிக்கப்பட்ட பலபூதர்களைக்கொன்று இவ்விடத்திற்குத் திரும்பிவந்திருக்கின்றான். அவ்வாறுவருவதற் கேதாயினுங் கட்டளையுண்டோ?—எ-று. (௫௮௫)

அன்னபண் புணர்கிலே மதனைமே லறிதியான்
மின்னுதண் சுடருடை வேலவன் றூதனும்
பன்னரும் படையொடும் பாசறைக் கேகினா
னின்னதால் விளைவெனா விவையெலாம் பகர்தலும்.

(இ-ள்.) அந்தக்கிரமத்தை உணர்ந்தேமில்லை, நீ யதனைப் பின்னருணர்வாய். இதுநிற்க, மின்னுகின்ற சீதளமான ஒளியோடுகூடிய வேற்படையினையுடைய குமரன் றூதனும் இவ்வளவென்று கூறுதற்கியலாத சைனியங்களுடன் பாசறைக்குப் போயினான், இது நடந்த விஷயம் என்றிவைகளனைத்தையுங் கூறுதலும்.—எ-று. (௫௮௬)

மாற்றலார் தமையட வலியில ஞகியே
யூற்றமா மைந்தன்வந் துற்றசொற் கேட்குமுன்
சீற்றமா யெரிவிழி சிதறவே வெய்துயிர்த்
தாற்றவு முறுவலித் தாசனென் றுரைசெய்வான்.

(இ-ள்.) பகைவர்களைக்கொல்லுதற்கு வல்லபமில்லாதவனும்பலம்பொருந்திய தன்மகன் திரும்பிவந்த சங்கதியைக் கேட்டற்குமுன்னே கோபங்கொண்டு கண்கள் தீப்பொறிகளைச்சிந்தப்பெருமூச்சுவிட்டுமிகவுஞ்சிரித்துச் சூரபன்மன் ஒன்றுகூறுகின்றான்.

மைந்தருந் துணைவரு மருவுபல் சுற்றமுந்
தந்திரத் தலைவருஞ் சமரினுக் கேகலர்
நந்தலில் படையொடு நாளைநான் சென்றுபின்
கந்தனைத் திறல்கொடே கடிதில்மீண் டிடுவனால்.

(இ-ள்.) புத்திரர்களும் சகோதரர்களும் பொருந்திய பல சுற்றமும் தந்திரத்தலைவர்களும் போருக்குப் போகாதேயுங்கள். அழியாத ஆயுதங்களுடன் நாளையதினம் நான்சென்று கந்தனைவென்று சீக்கிரந் திரும்பிவருவேன், என்று கூறினான்.—எ-று. ()

போதிரிப் பொழுதெனப் புகறலும் பணிகுறுத்
தூதுவர் போயினர் சூரனு மவுணர்கோ
னேதிலார் தம்மைவென் றிசைபுனைந் திடுதன்மேற்
காதலாய் வைகினன் யாவதுங் கருதலான்.

(இ-ள்.) நீங்களிப்பொழுது போங்கள் என்று கூறுதலும், அத்தூதுவர்களவனை வணங்கிச்சென்றார்கள்; பின்னர் சூரபன்மனாகிய அசுரராஜன் பகைவர்களைப் போரில்வென்று வெற்றியடைதலின்மேல் ஆசைகொண்டு வேறொன்றையும் எண்ணுமல் இருந்தனன்.—எ-று. (௩௮௯)

அடுபெரும் போரினை யாற்றியே யாற்றலான்
முடிவிலா விறல்கொள முன்னுவீ ரர்க்கெலா
நெடியளாய்த் திறலிலா நெஞ்சின ருக்கெலாங்
கடியளாய் வைகினள் கங்குலா நங்கையே.

(இ-ள்.) இருட்டென்னும் பெண்ணானவள், கொல்லாநின்ற பெரியபோரினைப் புரிந்து வலிமையினால் முடிவில்லாத வெற்றியை அடைய விரும்பும் வீரர்கட்கெல்லாம் நெடியவளாகவும், வன்மையிழந்த மனமுள்ளவர்களுக்கெல்லாம், குறுகினவளாகவும் இருந்தனள்.—எ-று. (௩௯௦)

பிரிகுவார் தங்களைப் பிரிகலா தேனையோ
ரருகுதா னிற்கலா தச்சநா ணின்றியே
விரகநோய் தெறுதலான் மிக்கதோர் தூர்த்தராய்த்
திரிகுவா ராமெனச் செல்லுமிவ் வெல்லியே.

(இ-ள்.) சிநேகஞ்செய்யாதிருக்க வேண்டியவர்களுடன் சிநேகஞ்செய்து, சிநேகிக்கவேண்டியவர்களான மற்றையோர்களுடன் சிநேகிக்காமல், அச்சமும் நாணமுமின்றிக்,காமநோயதிகமாகிறதினாலே மிகவுந் தூர்த்தராகத் திரிபவர்களைப்போல இவ்விரவானது செல்லாநிற்கும்.—எ-று. (௩௯௧)

பாடுசா றென்றிசைப் பார்புரந் திடுமிரா
வீடுசால் வெம்பக லெல்லொடும் வருவது
நேடியே மதியெனு நீள்குடை முன்செல
வோடல்போற் போயதா லுடுவெனும் படையொடும்.

(இ-ள்.) பெருமைமிக்க தென்திசைப்பூமியையாண்ட இராத்திரியானது வன்மைமிகுந்த வெவ்விய பகல் சூரியனுடன் வருதலைத்தெரிந்து சந்திரன் என்னும் நீண்ட குடைமுன்னே போக நட்சத்திரமென்னும் சைனியத்துடன் ஓடினாற்போலபோயது.

மையிருட் கலையினை மகிழ்நனு மதிநிலாக்
கையினு னீக்கியே கலவிசெய் தகனுழி
வெய்யவன் வருமெனு வெள்கியத் துகிலுடீஇ
யொய்யெனப் போயினள் கங்குலென் றுற்றுளாள்.

(இ-ள்.) இராத்திரி என்னும் பேரொவெந்த பெண்ணானவள், கரிய இருளென்னும் ஆடையை தனக்கு பர்த்தாவான சந்திரன் நிலாவென்னுங் கையினால் விலக்கிப் புணர்ந்து போனவுடனே (இனி)சூரியன் வருவானென்றுகருதி வெட்கங்கொண்டு அவ்வாடையைத்தரித்தவளாய்ச் சீக்கிரமாகப் போயினள்.—எ-று. (௩௧௩)

**முதனாட்பாநுகோபன்யுத்தப்படல முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம் - ௪௫௭.

# இரண்டாநாட்சூரபன்மன்யுத்தப்படலம்.

கங்குல்போந் திடுதலுங் கணபணப் பன்னக
நுங்குறு தகலவே நோற்றுமா லேந்திடுஞ்
சங்கமாய் மதிசெலச் சக்கரப் படையெனத்
துங்கமோ டெழுதல்போற் றோன்றினன் பரிதியே.

(இ-ள்.) இரவகலுதலும் கூட்டமான படங்களோடுகூடிய பாம்புண்ணுதுபோதற்குத் தவஞ்செய்து, திருமால்தாங்கிய சங்கமாகசந்திரனொளி மழுங்கிச்செல்ல அம்மாலின் சக்கராயுதத்தைப்போல வன்மையொடு சூரியன் உதையமானான்.—எ-று.
என - பாதபூரணம். (௧)

வேறு.

இரவி செல்லுமுன் னவுணர்கோன் றுயிலொரீஇ யெழுந்து
மரபி னிற்புரி நாட்கடன் முடித்துமன் றெய்தித்
திருவ ணிப்பெருந் தவிசிடை யிருந்துதன் சிறுவ
னொருந லுற்றிடும் வசையினை யுளத்திடை நினைந்தான்.

(இ-ள்.) சூரியனுதித்தற்கு முன்னே அசுராதிபனாகிய சூரபன்மன் நித்திரைவிட்டெழுந்து முறைப்படி செய்கின்ற நித்தியகருமங்களை நிறைவேற்றி, கொலுமண்டபத்தை யடைந்து அழகிய பெரியமணிகளிட்டிழைத்துள்ள பீடத்திலிருந்து தன்மகனான பாநுகோபன் நேற்றடைந்த வசையினை மனத்தினினைத்தனன்.—எ-று. (௨)

நினைத லுற்றுழி யுளத்திடைப் பெருஞ்சின நீட
வினிய மர்த்தொழிற் கியாரையும் விடுக்கிலன் யானே
யனிக மோடுபோய் மாற்றலர் வன்மையை யழித்துப்
புனைவன் வாகையென் றுன்னினு னழிவிலாப் புகழோன்.

(இ-ள்.) நினைத்தவுடனே மனத்திற் பெருங்கோபமுண்டாதலும், இனிச்சண்டைத்தொழிலுக்கு வேறேயாரையு மனுப்பமாட்டேன், நானே சேனையோடு சென்று பகைவர்களின் வன்மையையழித்து, வெற்றியடைவேனென்று அழிவற்றபுகழினையுடைய சூரபன்மன் எண்ணினான்.—எ-று. (௩)

செங்கண் வாளெயிற் றவுணனித் தன்மையைத் தேற்றி
வெங்க ணொற்றரி லளப்பிலர் தங்களை விளியா
வங்கண் மாநில முறைமுறை சூழ்தரு மளக்க
ரெங்க ணுஞ்செறி தானையைத் தம்மின்க ளென்றான்.

(இ-ள்.) செந்நிறமான கண்களையும் ஒளிபொருந்திய பற்களையும் உடைய அசுரனை சூரபன்மன் இதேவிஷயத்தை யுறுதிப்படுத்தி வெவ்விய கண்களையுடைய ஒற்றர்களில் அநேகர்களை அழைத்து இடமகன்ற பெரிய உலகங்களை வரிசைவரிசையாகச் சூழ்ந்துள்ள கடல்களினெவ்விடங்களிலும் நெருங்கி இருக்கின்ற சைநியங்களை அழைத்துக்கொண்டு வாருங்களென்று கூறினான்.—எ-று. (௪)

என்ற லுந்தொழு தாயிர கோடியோர் யாண்டுஞ்
சென்று சென்றுதம் மன்னவன் பணிமுறை செப்பத்
துன்று தேர்கரி பரிமிசைப் படர்ந்தனர் தொன்னாள்
வென்றி கொண்டநூ றாயிர வெள்ளத்தின் மிக்கோர்.

(இ-ள்.) சூரபன்மனவ்வாறு கூறுதலும் ஆயிரங்கோடித்தூதர்கள் அவனைவணங்கி எவ்விடங்கட்குஞ்சென்று தமதரசனுடைய கட்டளையைக் கூறுதலும் உடனே நெருங்கிய இரதகஜதுரகமென்னும் இவைகண்மீதேறி, முன்னாளிற் பகைவர்களை வென்ற இலக்கம்வெள்ளத்திற்கு அதிகமானவர்கள் பிரயாணமானார்கள்.—எ-று. (௫)

வேறு.

சூலமே கணிச்சி தண்டந் தோமரங் குலிசஞ் சாபங்
கோலவாள் பலகை வட்டங் குந்தம்வே லுஞ்சில் பிண்டி
பாலமே முசுண்டி சங்கம் பரிதியே யெழுவே தட்டி
பீலிவன் முசல மாதி பெரும்படை கொண்டு சென்றார்.

(இ-ள்.) அவர்கள்-சூலங்கள், கண்டகோடரிகள், தண்டங்கள், தோமரங்கள், வச்சிரங்கள், விற்கள், அழகிய வாட்கள், கேடகங்கள், வளைதடிகள், குந்தங்கள், வேல்கள், அலங்கள், பிண்டிபாலங்கள், முசுண்டிகள், சங்குகள், சக்கரங்கள், எழுக்கள், பலகைகள், பீலிகள், பெரியமுசலங்கள் முதலிய பெரிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு போனார்கள்.—எ-று. (௬)

எண்டகு மினைய வாற்றா லிலக்கம்வெள் ளத்தி னோருந்
திண்டிறன் மகேந்தி ரப்போர்த் திருநகர் சுற்றி யார்ப்ப
விண்டொடு சிகரி யென்னு மேருவி னுச்சி போகிக்
கண்டன னவுணர் மன்னன் கடற்பெருந் தானைச் சூழல்.

(இ-ள்.) இவ்வண்ணமாக எண்ணத்தக்க இலக்கம்வெள்ளஞ் சேனைகளும் மிகவும் அழுத்தமானதாகக் கட்டப்பட்டுள்ள அழகிய வீரமகேந்திரபுரியினைச் சூழ்ந்து ஆரவாரித்தலும் ஆகாயத்தை யளாவிய கோபுரமென்னு மலையின் உச்சியிற்சென்று அசுராதிபனாகிய சூரபன்மன் கடல்போன்ற அப்பெரிய சைனியங்களின் கூட்டங்களைக் கண்டனன்.—எ-று. (எ)

தேக்கினன் கதிருஞ் செல்லாச் செல்லுறழ் தானை யீட்ட
நோக்கினன் சிந்தை கொண்ட நோன்மைசார் துயரம் யாவு
நீக்கினன் வன்மை பெற்றா னேரலர்ப் பொருது வென்றி
யாக்கினன் போல நின்றா னறத்துட னருளைக் கொன்றான்.

(இ-ள்.) தருமத்துடன் இரக்கத்தையும் அழித்தவனாகிய சூரபன்மன் சூரியனுடைய நிறைந்த கதிருஞ் செல்லாவண்ணம் நெருங்கிய கருமேகம்போன்ற சேனைக்கூ

ட்டத்தைப்பார்த்து மனதிலிருந்த மிகுதியான துன்பமனைத்தையும் நீக்கி வலிபெற்றவனாய் பகைவர்களுடன் போர்புரிந்து அவர்களை வென்றுள்ளவனைப்போல நின்றனன்.

அழிந்திடு கின்ற காலத் தளக்கரி னூர்த்துச் சூழுங்
கழிந்திடு தானை கண்டோன் கடிதுபோர்க் கேக முன்னிச்
செழுங்கதிர் மதிய மாக்குந் திருமணிச் சிகரி நின்று
மிழிந்தனன் றலைமை நீங்கி யிழிதொழில் பயின்ற தீயோன்.

(இ-ள்.) உலகழியுங்காலத்திரைகின்ற கடலைப்போல விரைந்துகொண்டு ஊரைச்சூழ்ந்து நிற்கின்ற மிகுதியான சேனைகளைப் பார்த்தவன் விரைவாகப் போருக்குப்போகநினைத்துச் செழுமையான கிரணங்களையுடைய சூரியனைமதியமாகச் செய்கின்ற அழகிய மணிகளிட்டிழைத்துள்ள கோபுரத்தினின்றும் உயர்குணத்தையொழித்து இழிதொழில்பழகியுள்ள சூரபன்மன் இறங்கினான்.—எ-று. (௯)

எடுத்தனன் சிலையு மேனைப் படைகளு மிமையோர் தொன்னாட்
கொடுத்திடு படைகள் யாவுங் கொண்டனன் கரத்திற் கோதை
தொடுத்தனன் வெரிநிற் றாணி தூக்கினன் விரல்க டோறு
மடுத்தபொற் புட்டில் சேர்த்தா னண்டங்க ளனைத்தும் வென்றான்.

(இ-ள்.) எல்லாவண்டங்களையும் வென்றவனாகிய சூரபன்மன் வில்லும் மற்றுமுள்ள வாயுதங்களையும் எடுத்தனன்; தேவர்களாலே முன்னாளில் கொடுக்கப்பட்ட ஆயுதங்களையு மெடுத்துக்கொண்டனன்; கையில் நோலைக்கட்டினான்; பிடரியில் அம்பறாத்தூணியைத்தூக்கினான்; அழகிய உறைகளை விரல்கள்தோறும் பூட்டினான்.—எ-று.(௧௦)

குந்தளச் சுழியற் குஞ்சிக் கோலமா மௌலி தன்னிற்
சுந்தரத் துணர்மென் றும்பை தொடுத்திடு பிணையல் சேர்த்தி
மந்தரப் பொருப்பு மேரு வரையிதென் றையஞ் செய்யு
மிந்திரப் பெருந்தே ரொன்றி னேறின னிரவி யேபோல்.

(இ-ள்.) கடைகுழைந்த சுருண்டகேசத்தோடு கூடிய தலையிலணிந்துள்ள அலங்கரிக்கப்பட்ட பெரிய மகுடத்தின்மீது அழகிய கொத்தான தும்பைமலராற்றொடுக்கப்பட்ட மாலையையணிந்து மந்தரமலையோ அல்லதுமேருமலையோ என்று சந்தேகிக்கத்தக்க இந்திரசிற்பவிதிப்படி யமைத்துள்ள ஒருபெரிய தேரினிற் சூரியனைப்போல ஏறினான்.—எ-று. (௧௧)

பண்ணுலாம் புரவிப் பந்தி பருமிதக் களிற்றி னீட்ட
மெண்ணிலாப் புரவி மான்றே ரேமமாய்ப் பின்ன ரேக
வண்ணல்வா ளவுண வீர ரமைச்சர்க ளயலிற் செல்ல
விண்ணுலாம் புரிசைக் கோயில் வீதிகள் கடந்து சென்றான்.

(இ-ள்.) அலங்காரம் பொருந்திய குதிரைப்பந்திகளும் பெரியயானைக்கூட்டங்களும் அளவற்ற குதிரைகள் பூட்டப்பட்ட விரதங்களும் க்ஷேமமாகப் பின்புறத்தில் வர,தெய்வீகம்பொருந்திய வாட்படையினையுடைய வீரர்களாகிய அசுரர்களும்அமாத்தியர்களும் அருகிற் செல்லாநிற்க, ஆகாயத்தையளாவிய மதில்சூழ்ந்த அந்தப்புரத்தின் வீதிகளைக் கடந்து சூரபன்மன் சென்றனன்.—எ-று. (௧௨)

கோயிலி னெல்லை நீங்கிக் கோபுரங் கெழீஇய கொற்ற
வாயிலின் மருங்கு செல்ல மன்னவன் வரவு நோக்கிக்
காய்கதிர்த் தபனற் கண்ட கலிவிய னுலக மென்ன
வாயிர நூறு வெள்ளத் தவுணரும் புடைசூழ்ந் தார்த்தார்.

(இ-ள்.) சூரபன்மன் தன்னந்தப்புரத்தின் எல்லையைவிட்டுக் கோபுரங்களோடு விளங்குகின்றவெற்றிபொருந்திய தலைவாயிலின் அருகில் வருதலும் அவ்வரசனது வருகையைக்கண்டு எறிக்கின்ற கதிரினையுடைய சூரியனை சாக்கிராவஸ்தையில் ஆரவாரத்துடன் தரிசித்த ஒளியோடுகூடிய பெரிய பிரபஞ்சிகளைப்போல நூறாயிரம்வெள்ளம் அசுரர்களும் அவனருகிற் சூழ்ந்தாரவாரித்தார்கள்.—எ-று. (௧௩)

வேறு.

அன்ன காலையி லரிமுகன் சேய்தி சூரன்
றன்னு தாரகன் சுதனசு ரேந்திரத் தொல்லோ
னென்ன நின்றிடு மைந்தர்க ளிருவரு மேகி
மன்னர் மன்னனை யடைதலு மினையன வகுப்பான்.

(இ-ள்.) அப்பொழுது சிங்கமுகாசுரன் பிள்ளையான அதிசூரனும் தாரகாசுரனுடைய பிள்ளையான அசுரேந்திரனென்னும் சிறந்தவனும் என்று கூறப்படுகிற நெருங்கிய அவ்விருவர்களும் போர்க்கோலத்துடனணைந்து சூரபன்மனருகிற்சென்றார்கள். உடனே யவர்களைக்கண்ட விவனிவைகளைக் கூறுகின்றனன். (௧௪)

திரைகொள் வேலைபோ னிறைதரு கோட்டகஞ் சிறிதோர்
கரையி லாவழி யுடைந்திடு மன்னது கடுப்பப்
பொருதி றற்படை பலவுள வென்னினும் போற்று
மரச ரில்வழி நின்றிடா தன்னவை யழியும்.

(இ-ள்.) அலையினையுடைய கடலைப்போல நிறைந்த குளமானது சற்று ஒருகரையில்லாதபோழ்துடையும். அதைப்போல நமக்கு போர்செய்யத்தக்க சாமர்த்தியத்தினையுடைய பலசேனைகளிருப்பினும் அவைகளைக்காக்குந் தலைவனில்லாதவிடத்து நிலைபெற்று நிற்காமல் அவைகளழியும்,—எ-று. (௧௫)

ஆத லாலினி நீரிரு வீர்களு மமரின்
மேத கும்பெருஞ் சேனைக்கு முதல்வராய் மேவிப்
போதிர் முன்னுற வென்றலு நின்றிடு புதல்வ
ரீது நன்றென வணங்கியே யேகின ரிமைப்பில்.

(இ-ள்.) ஆகையால் இனி நீங்களிருவரும் போரிற்சிறந்த சைனியங்கட்குத் தலைவர்களாய் முன்னே செல்லுங்கள் என்று கூறினன். உடனே அவ்விருபுதல்வர்களும் இது நல்லதென்று அவன் வசனத்தை யங்கீகரித்து அவனை வணங்கி விரைந்துசென்றார்கள்.—எ-று. (௧௬)

தந்த மான்றடந் தேர்மிசை யேறியே சமரிற்
கொந்து லாமலர் வாகையை மிலைச்சிய குமரர்
வந்த நாற்பெரும் படையையு மணிபெற வகுத்து
முந்து தானையந் தலைவரா யேகினர் முறையால்.

(இ-ள்.) கொத்துக்களாக வுள்ள வாகைப்பூமாலைகளைப் பகைவரைவென்று சூடிய வவ்விரண்டசுரகுமாரர்களும் தங்கள் தங்கள் குதிரைகள் பூண்ட தேரின்மீதேறி அந்தச் சதுரங்கசேனைகளையும் அணியாகும்வண்ணம் வகுத்துச்சிறந்தசேனாதிபதிகளாக முறைப்படி சென்றார்கள்.—எ-று. (௧௭)

ஆகு மெல்லையி லங்கது நோக்குறு வடுபோர்
வாகை கொண்டநூ றாயிர வெள்ளத்து மறவோ
ரோகை யெய்தியே யமர்புரி பறந்தலை யுன்னி
யேகன் மேயினர் பணிகளுஞ் சேடனு மிரங்க.

(இ-ள்.) அவ்வாறான சமயத்திலதனைக்கண்டு கொல்லுகின்றபோரில் வெற்றியடைந்த நூறுயிரம்வெள்ளம் சேனைகளும் சந்தோஷமடைந்து போர்க்களத்தை யுத்தேசித்து சர்ப்பங்களுள் ஆதிசேஷனும் வருந்தும்வண்ணம் போகத்தொடங்கினர்கள்.

வேறு.

கடந்திகழ் கரிதேர் பாய்மாக் கலந்திடத் தானை வீரர்
படர்ந்திடு கின்ற காலைப் பருமணி வயிரத் தேர்மே
லடைந்திடு மவுணர் மன்ன னளக்கரில் வடவை சுற்ற
விடந்தனி நடந்த தென்ன விண்ணவர் மருளச் சென்றான்.

(இ-ள்.) மதநீரொடுவிளங்குகின்ற யானைகள், தேர்கள், குதிரைகள் என்னுமிவைகள் கலந்துவர, பதாதிகளாகிய வீரர்கள் செல்லுகின்ற சமயத்தில் பரியமணிகளாகிய வாயிரங்களிட்டிழைத்த தேரின்மீது செல்லாநின்ற சூரபன்மன் கடலில்வடவாக்கினி சூழ்ந்துகொள்ள ஆலாலமானது தனியேசென்றாற்போல தேவர்கள் மருட்சியடையும் வண்ணம் சென்றான்.—எ-று. (௧௯)

தொண்டகந் துடியே பம்பை தூரிய முருடு கோடு
திண்டிறற் படக மொந்தை திமிலையே தடாரி தக்கை
கண்டையா குளியே பீலி காகள முடுக்கை பேழ்வாய்
கொண்டதோர் பதலை சங்கங் குடமுழா வியம்பிற் றம்மா.

(இ-ள்.) தொண்டகங்களும் உடுக்கைகளும் பம்பைகளும் முரசமும் முருடுகளும் கொம்புகளும் மிகவும் அழுத்தமான பேரிகைகளும் ஒருகட்பறைகளும் தடாரிகளும் திமிலைகளும் தக்கைகளும் மணிகளும் ஆகுளிகளும் சின்னங்களும் காளங்களும் சிற்றுடுக்கைகளும் அகன்றவாயினையுடைய பறைகளும் சங்கங்களும் குழமுடாக்களும் முழங்கின.—எ-று. (௨௦)

தட்டுடை நெடுந்தே ரார்ப்புந் தந்தியி னார்ப்புஞ் சேண்போய்
முட்டுறு கொடிக ளார்ப்பு முரட்பரி யார்ப்பும் வீரர்
கட்டுறு கழலி னார்ப்புங் கணிப்பில்பல் லியத்தி னார்ப்பு
மெட்டுள திசையு மெல்லா வுலகுமுண் டெழுந்த வன்றே.

(இ-ள்.) தட்டுகளையுடைய நெடிய தேர்களின் முழக்கமும் யானைகளினார்ப்பும் வானத்திற்சென்று முட்டுகின்ற கொடிகளின் முழக்கமும் பலம்பொருந்திய குதிரைகளின் கனைப்பும் வீரர்கால்களிற் கட்டப்பட்ட கழல்களின் ஓசையும் அளவற்ற மேகங்களின் முழக்கமும் எட்டாகவுள்ள திசைகளையும் எல்லாவுலகங்களையும் விழுங்கி மேலேபோயின.—எ-று. (௨௧)

நீனிற முகில்போன் மேனி யவுணர்க ணீத்தஞ் செல்லக்
கானிறை பூழி யீட்டங் ககனமேற் செல்ல முன்னந்
தானுறு கின்ற காலைச் சசியெனத் தயங்கிப் பின்னர்
மீனெனக் கரந்தான் மேலாம் விரிகதிர் படைத்த வெய்யோன்.

(இ-ள்.) நீலநிறம்பொருந்திய மேகத்தைப்போன்ற சரீரத்தையுடைய அசுரசைநியங்கள் செல்லுதலால் அவர்களது கால்களினின்று முண்டாகிய புழுதிக்கூட்டங்கள் வானத்தின்மீது செல்ல முன்னே யாரம்பித்துச் சென்றபொழுது சிறப்பாக விரிந்த கதிர்களையுடைய சூரியன் ஒளிகெட்டுச் சந்திரனைப்போல விளங்கிப் பின்னர் நட்சத்திரத்தைப்போல மறைந்தனன்.—எ-று. (௨௨)

நேசமொ டென்பால் வைகு நெறியினர் தமக்கு வீடு
மாசறு பதங்கள் யாவும் வைகலும் புரிவே னென்னை

யேசுவர் போலுங் கீழென் றிகல்புரிந் திடுவ னென்னுத்
தூசிபார் விடுத்த தேபோற் றுறக்கமேற் சென்ற பூழி.

(இ-ள்.) விருப்பத்துட னென்னிடத்தில் வசிக்கப்பட்ட நல்லொழுக்க முடையவர்கட்கு முத்தியையும் குற்றமற்ற பதவிகளையும் எல்லாம் எப்பொழுதுங் கொடுப்பேன். அப்படிப்பட்ட வென்னைக்கீழென்று இகழ்வார்கள்போலும் நான்சென்று போர் புரிகின்றேனென்று தூசியைப் பூமியனுப்பினாற்போல சொர்க்கத்திற்குச் சென்றன புழுதிகள்.—எ-று. (உரு)

கன்னிறை யழித்த மொய்ம்பிற் கார்கெழு மவுண வெள்ளந்
துன்னுற நடப்பச் செல்லுந் தூளியின் படலைச் செய்கை
யென்னென வுரைப்ப னம்மா விந்திர னென்போன் வைகும்
பொன்னுல கதனை வல்லே பூவுல காக்கிற் றன்றே.

(இ-ள்.) கல்லின்றன்மையைக் கெடுத்த தோள்களையுடைய கருநிறத்தோடு கூடிய அசுர சைனியங்கள் நெருங்கி நடத்தலாலுண்டாகி மேலே செல்லுகின்ற புழுதிகளின்றன்மையை என்னென்றுரைப்பேன்! ஆச்சரியம் இந்திரனென்பவன் வாழ்கின்ற பொன்னுலகத்தைப் பூவுலகமாகச்செய்தது.—எ-று. (உச)

கண்ணகன் றடந்தேர் மீதுங் காய்சினக் களிற்றின் மீது
நண்ணிய கொடிகள் வான்போய் நளிர்புனற் கங்கை நக்கி
மண்ணுறச் சிதறி யாடி யலமரன் மகேந்தி ரத்தி
னண்ணலின் றழிவ னென்றே யழுதிறம் போலு மாதோ.

(இ-ள்.) விசாலமான பெரிய ரதங்களிலும் கொல்லத்தக்க கோபத்தையுடைய யானைகளின்மீதும் பொருந்தியுள்ள கொடிகள் மேலேசென்று குளிர்ந்த நீரினையுடைய ஆகாய கங்கையினளைந்து பூமியிற் பொருந்தும் வண்ணம் அந்நீர்த்துளிகளைச் சிதறிச் சுழன்றாடுதல் எதுபோலுமெனின், மகேந்திரபுராதிபனாகிய சூரபன்மன் இன்றிறப்பானென் றழுந்தன்மையைப்போலும்.—எ-று. (உரு)

திங்கள்வெண் குடையு நீலத் திருநிழற் கவிப்புஞ் செங்கேழ்ப்
பங்கய மலர்ந்த தன்ன பருமணிக் கவிகை முற்றுந்
தொங்கலின் றொகையும் வெய்யோன் றொல்கதிர் வரவு மாற்றி
யெங்கணுஞ் செறிவுற் றாழி யிருளினை விளக்கிற் றம்மா.

(இ-ள்.) வெள்ளிய சந்திரவட்டக்குடைகளும் நீலநிறம்பொருந்திய வழகிய நிழலைத்தருகின்ற மயிற்பீலிக்குடைகளும் செந்நிறம்பொருந்திய தாமரைமலர்ந்தாற் போலக் காணப்படுகின்ற பெரிய மணிகளிட்டிழைத்துள்ள குடைகளும் முற்றிலும் தொங்கல்களைவிட்டுள்ள குடைக்கூட்டங்களும் சூரியனதுபழைய கதிரின்வரவைமாற்றி எவ்விடங்களிலும் நெருங்கி பிரமனாயுள் முடிவில் உண்டாகின்ற பெரிய விருளினை யுண்டாக்கியது.—எ-று. (உசு)

வேறு.

ஆனவியல் பெய்தவவு ணப்படைக ளோடும்
வானெறிகொ டேயவுணன் வையமிசை செல்லத்
தானதுதெ ரிந்தமரர் தம்மிறைவ னோடிக்
கானமர்க டம்பனடி கைதொழுது சொல்வான்.

(இ-ள்.) அவ்வாறான தன்மைபொருந்த அசுரசைனியங்களுட னாகாயமார்க்கமாகச் சூரபன்மன் தேரின்மீது வருதலும் அதனையுணர்ந்த இந்திரன் ஓடிச்சென்று மணம்பொருந்திய கடப்பமாலையையணிந்த குமரக்கடவுளை வணங்கிக் கூறுகின்றான்.

அன்றுபுரி வேள்வியிடை யாதியருள் செய்த
துன்றுபடை யீட்டமொடு சூரனெனும் வெய்யோ
னின்றுபொரு வான்விரைவி னேகின னெதிர்ந்தே
சென்றவனை வென்றெமது சீரருளு கென்றான்.

(இ-ள்.) அந்நாளிற்செய்த யாகத்தில் சிவபெருமானளித்த நெருங்கிய சைனியங்களுடன் சூரபன்மனென்னும் கொடியவன் இன்று போர்புரிதற்கு விரைந்து வந்தனன். எதிர்ந்து சென்று அவனைவென்று எங்கள் செல்வங்களை எங்களுக்களித்தருளல் வேண்டுமென்று இந்திரன் குமரக்கடவுளை வணங்கிக்கூறினான்.—எ-று.

அவன் திக்குவிசையம் முதலியவைகளை யியற்றி பகைவரிடத்தினின்றும் அடைந்த சைனியங்களையும் இவன் பிரதாபங்களைக் கேட்டு இவனிடத்திற்கு வந்த சைனியங்களையுமன்றித் தானருமையாகத் தவஞ்செய்துபெற்ற சேனைகளையுடனழைத்துக் கொண்டு வருகின்றான் என்று அவனுடைய சைனியங்களினருமையை காட்டினனிந்திரன். (உஅ)

ஆம்பரிசு கூறவவ னுக்கருள் புரிந்தே
யேம்பலுறு கேசரியி னேற்றணையி னீங்கிப்
பாம்பின்வலி செற்றுலவு பாகுதனை நோக்கி
வாம்பரிகொ ணம்மிரதம் வல்லைதரு கென்றான்.

(இ-ள்.) அவ்வண்ண மிந்திரன் கூறுதலும் நீயஞ்சற்க என்று அவனுக்கருள் புரிந்து மகிழ்வைத்தருகின்ற சிங்காசனத்தினின்று மிறங்கி ஆதிசேடனது வல்லபத்தைக்கெடுத்தவனாக வுலாவுகின்ற வாயுவென்னும் சாரதியை நோக்கித் தாவுகின்ற குதிரைகளையுடைய நம்மிரதத்தை விரைவாகக் கொண்டுவரக்கடவை யென்றருள்புரிந்தனர்.—எ-று.

சிங்கமமைக்கவேண்டுமியல்பி லெள்ளத்தனையும் மாறுதியற்றப்பட்டுள்ளதாதலால் சிங்கத்திற்கு அடையாக 'ஏம்பல்' என்றார். (உகூ)

என்றிடலு நன்றென வெழுந்துலவை யண்ணல்
குன்றனைய தேரது கொணர்ந்துமுன முய்ப்ப
வென்றியயி லண்ணலதன் மீமிசை புகுந்தான்
மன்றன்மலர் சிந்தியயன் மாலொடு வழுத்த.

(இ-ள்.) குமரக்கடவுளிவ்வாறு திருவாய்மலர்ந்தருளினவுடனே வாயுதேவன் வணங்கிச்சென்று மலைபோன்ற தேரைக்கொண்டுவந்தெதிரில் நிறுத்துதலும் வெற்றி பொருந்திய வேற்படையினையுடைய குமரக்கடவுள் மணம்பொருந்திய மலர்தூவி அயனும் மாலும் துதிக்க அத்தேரின்மீதுளெழுந்தருளினார்.—எ-று.

கற்பகமலர்களை இறைத்தார்களென்பார் "மன்றன்" மலரென்றார். (௩௦)

செழுந்தருண மேதகைய தேரின்மிசை வானோர்
தொழுந்தலைவ னாகியமர் தொன்முருக னேறக்
கொழுந்தழன் முடித்தனைய குஞ்சிகெழு பூத
ரெழுந்தனர் தெழித்தன ரிருங்கடலு மஞ்ச.

(இ-ள்.) செழுமைவாய்ந்த செந்நிறம்பொருந்திய சிறந்த தேரின்மீது தேவர்கள் வணங்குந்தலைவனாகவுள்ள குமரக்கடவுள் ஏறியருளுதலும் கொழுவிய தழலை முடித்துக்கொண்டாற்போலக் காணப்படுகின்ற சிரோரோமங்களோடு பிரகாசிக்கின்ற பூதர்கள் பெரியகடலும் அஞ்சும்வண்ணம் ஆரவாரித்துக்கொண்டெழுந்தார்கள்.—எ-று.

செழுந்தருண மேதகைய தேரின்மிசை - என்பதை செழுமையும் புதுமையும் பெருமையும்பொருந்திய தேரின்மீது-என்னினுமாம். (௩௧)

நாட்டமொரு மூன்றுடைய நாதனருண் மைந்தன்
வாட்டமறு வெவ்வவுணர் மன்னன்வலி தன்னை
வீட்டும்வகை சென்றிடுதல் விண்ணவ ருரைப்பக்
கேட்டனிக பூதர்கள் கிளர்ந்துபடர் கின்றார்.

(இ-ள்.) மூன்றுகண்களையுடைய சிவபெருமானளித்த திருக்குமாரராகிய சண்முகப்பெருமான் வாடுதலில்லாத வெவ்விய வசுரர்களின் தலைவனாகிய சூரபன்மனதுவன்மையை யழிக்கும்பொருட்டு எழுந்தருளுதலைத் தேவர்கள் கூறக்கேட்டு சைனியங்களாகிய பூதர்கள் மகிழ்ந்துசென்றார்கள்.—எ-று.

உத்தமவீரர்களுக்குப் போர்புரியுந் தொழிலிருந்தால் மிகுந்த மகிழ்வாதலால் இங்கும் முழுவீரம்பொருந்திய பூதவீரர்களஞ்சாது சென்றார்களென்பார் "கேட்டனிக பூதர்கள் கிளர்ந்து படர்கின்றார்" என்றார். (௬௨)

பாரிடர்க ளாயறுமு கற்பரவு கின்ற
பாரிடர்ந டப்பவெழு பூழிபடர்ந் தின்றோர்
பாரிடர்பு ரிந்தனர் பரிக்குமெனை யென்னாப்
பாரிடம்விண் ணோடுபகர் த்றகெழுதல் போலும்.

(இ-ள்.) பூமியினிடத்தவர்களாய் அறுமுகப்பெருமானைத் துதிக்கின்ற பூதர்கள் செல்லாநிற்க அதனால் உண்டாகி மேலே கிளம்பின புழுதியானது சென்று இவர்கள் தங்களைச்சுமந்த வென்னைப் பரிய இடர்களைச் செய்தார்களென்று மண்ணுலகமானது விண்ணுலகத்துடன் கூறுதற்குச் செல்லுதலையொக்கும்.—எ-று. பாரிடர்-பூதர் (௬௩)

தக்கையொ டுடுக்கைதுடி சல்லரி தடாரி
தொக்குடைய தண்ணுமை துவைப்பின்மிகு பேரி
மெய்க்குடமு ழாப்படகம் வீணைகுழ லாம்பல்
கொக்கரை யியம்பினர்கள் கோடிகண நாதர்.

(இ-ள்.) தக்கை, உடுக்கை, துடி, சல்லரி, தடாரி, தோலிட்டிருக்கின்ற தண்ணுமை, அடித்தலின்மிக்கபேரி, குடவடிவமான வுருவத்தையுடைய முழா, படகம், வீணை, குழல், ஆம்பல், கொக்கரைமுதலிய வாத்தியங்களைக் கோடிகணநாதர்கள்வாசித்தார்கள்.—எ-று.

சல்லரி-திமிலை. "சல்லரிதிமிலை" இது பிங்கலம். தடாரி-பம்பை. "தடாரிபம்பைப்பறை." இதுமது தண்ணுமை-நிசாளம். "தண்ணுமை நிசாளம்." இதுமது. (௬௪)

நாடுதவ நாரதனு நல்லுவணர் தாமுங்
கேடிலிசை வல்லதொரு கின்னரரு மாகிப்
பாடினர்கு மாரனடி பன்முறை பணிந்தே
யாடினர்கள் விண்ணவரு மாசின்முனி வோரும்.

(இ-ள்.) எண்ணத்தக்க தவத்தினையுடைய நாரதனும், நல்லகருடர்களும், கெடுதலற்ற இசையில் வல்லுனராகிய கின்னரர்களும் கலந்து பாடினார்கள்; தேவர்களும் குற்றமற்ற முனிவர்களும் குமரக்கடவுளின் பாதங்களைப் பலமுறை வணங்கி யாடினார்கள்.

கின்னரர்-குதிரை முகமும் மனிதவுடலுமுடையவர்கள். இவர்கள் தேவ ஏகதேசிகள். (௬௫)

சண்முகனை தேவல்கொடு தாவிலிளை யோனு
மெண்மருமி லக்கர்களு மீண்டிய கணத்தின்
வண்மைகெழு மன்னவரும் வையமிசை யாகித்
திண்மைபடை யூக்கமொடு சேனையிடை சென்றார்.

(இ-ள்.) குமரக்கடவுளின் கட்டளையால் கெடுதலற்ற வீரவாகுதேவரும் அவர்தம்பியர்களான வீரகேசரியாதி யெட்டுவீரர்களும் இலக்கம்வீரர்களும் நெருங்கிவந்துள்ள பூதகணங்களின் வன்மையொடுவிளங்குகின்ற வசுரர்களும் இரதங்களின்மீதேறிக்கொண்டு பலம்பொருந்திய உறுதியுடன் சைனியங்களினடுவிற் சென்றார்கள்.—எ-று.

எவ்வகைய ஆயுதங்களாலும் அழிவற்று நிற்பவனென்றுணர்த்த வீரவாகுதேவரைத் தாவிலிளையோன் என்றார். (௩௬)

மொய்ம்மலி படைத்தலைவர் முந்தியுறு தானை
யிம்முறையி னெலொழுக வீசனருண் மைந்தன்
செம்மணியில் வீசியமர் தேரினிடை யேகிப்
பொம்மலுறு தானவர்கள் போர்முனை யடைந்தான்.

(இ-ள்.) மிகுந்த கூட்டமான தலைவர்களை முன்னேயுடைய சைனியங்களிவ்வண்ணமாகச் செல்ல, சங்கரதனையராகிய சண்முகர் மாணிக்கப்பிரகாசம் வீசுகின்ற சாசுவிதமான இதரரோகணராகச்சென்று அசுரசைனியங்கள் நெருங்கிநிற்கின்ற போர்க்களத்தையடைந்தனர்.—எ-று.

திரளும் யானையும் செருக்களமும் மொய் இது பிங்கலம். (௩௭)

அடைந்தபொழு திற்புவியு மந்தரமு மாகி
மிடைந்துவரு சூரனிகம் வெய்தென வளைந்த
தொடர்ந்துநுகர் தீவலிதொ லைத்துமென முந்நீர்
படர்ந்துபுடை சுற்றியிடு பான்மையது போல.

(இ-ள்.) சண்முகப்பெருமானிவ்வாறு சென்றவுடனே ஆகாயத்திலும் பூமியிலுமாகி நெருங்கிவருகின்ற சூரசைனியங்கள் தம்மைப்பற்றியுண்ணுகின்ற வடவாக்கினியின்வன்மையை யழிப்போமாகவென்று கடல்நீரானது சென்று அத்தியைச்சூழ்ந்துகொண்ட தன்மையைப்போல விரைவாக வளைத்தன.—எ-று.வெய்து-விரைவு. (௩௮)

வேறு.

வளைந்திடு காலையில் வயவெம் பூதர்கள்
கிளர்ந்தனர் தெழித்தனர் செழுவு தானவர்
தளந்தனை யடர்த்தன ரவருந் தாக்கினார்
விளைந்தது பெருஞ்சமர் விண்ட தண்டமே.

(இ-ள்.) அசுரசைநியங்கள் சூழ்ந்துகொண்டவுடனே வெற்றியும் வெவ்வியதன்மையும் பொருந்தினவர்களாகிய பூதர்கள் மேலெழுந்தவர்களாய் ஆரவாரத்துடன் இரைந்துகொண்டு, தம்பெருமானைச்சூழ்ந்த வசுரசைநியங்களை யுதைத்தார்கள். உடனே அவர்களு மிவர்களையுதைத்தார்கள். இதனால் பெரியயுத்தமுண்டாகியது. இப்போரால்அண்டம்பிளந்தது.—எ-று. (௩௯)

மாச்சினை மரங்களும் வரையுந் தண்டமுந்
தீச்சிகைக் கழுமுளுந் திகிரி நேமியு
மீச்செலுங் கவண்கலும் வேலு நாஞ்சிலு
மோச்சினர் பூதர்க ளொன்ன லார்கண்மேல்.

(இ-ள்.) பூதவீரர்கள் பகைவர்களாகிய அசுரர்கள்மீது பெரியகிளைகளையுடைய மரங்களையும் மலைகளையும் தண்டங்களையும் அக்கினிச்சுவாலையோடுகூடிய கங்கபத்திரங்களையும் வட்டமானசக்கரங்களையும் மேலேசெல்லாநின்ற கவண்கற்களையும் வேற்படைகளையும் அலாயுதங்களையும் பிரயோகித்தார்கள்.—எ-று.

கழுமுள்-கங்கபத்திரம் அல்லது கழுக்கடை-கழுக்கடை. "கழுமுட் கட்டுரையாகும்" இது பிங்கலம். (௪௦)

மெய்ப்படு மவுணர்கள் வெகுண்டு வில்லுமி
ழப்பொடு கணிச்சிதண் டாழி நாஞ்சில்வேன்
முப்புக ரிலைப்படை முசல முற்கரங்
கப்பணஞ் சிதறினர் கணங்க டம்மிசை.

(இ-ள்.) பூதர்கள் எறிந்தவைகள் மேலேபடுதலும் அசுரர்கள் கோபங்கொண்டு பூதர்கள்மீது வில்லினின்றும் விடப்படுகின்ற அம்புகளையும் கண்டகோடரிகளையும் தண்டங்களையும் சக்கரங்களையும் கலப்பைகளையும் வேற்படைகளையும் திரிசூலங்களையும் முசலங்களையும் கப்பணங்களையும் முஷ்கரங்களையும்விட்டார்கள்.—எ-று.

கப்பணம்-கைவேல். முற்கரம்-முசுண்டி. "கைவேல்விகற்பம் கப்பணந் தோமரம் தானைபடையே முற்கரமுசுண்டி" இது பிங்கலம். (௬௧)

பற்றுவர் கரிகளைப் பரியி னங்களை
யெற்றுவர் பார்தனி லெறிவர் மாதிரஞ்
சுற்றுவர் விண்ணிடைக் கிழிப்பர் துண்ணென
முற்றுட லெருத்தினை முரித்துச் சிந்துவார்.

(இ-ள்.) பூதவீரர்கள் யானைகளைப்பிடிப்பார்கள், பிடித்து அவைகளாற் குதிரைப்படைகளை அடிப்பார்கள்; பூமியிலெறிவார்கள் பின்னர் திக்குகடோறுஞ் சுழலுவார்கள். மேகமத்தியத்தைக் கிழிப்பார்கள். விரைவாக அவைகளினுடன் முழுமையிலுமுள்ள என்புகளை அல்லது பிடரிகளை ஒடித்துச் சிதறுவார்கள்.—எ-று. (௬௨)

இரதமொ ராயிர மெடுத்துச் செங்கையிற்
பொருகளி றுயிரம் புரள மோதுவர்
கரிகளோ ராயிரங் கரங்கொண் டெற்றியே
பரிபதி னுயிரம் பாரின் வீட்டுவார்.

(இ-ள்.) செவ்வியகைகளா லாயிரம்தேர்களையெடுத்து பொருகின்ற ஆயிரம் யானைகள் விழும்வண்ணம் அடிப்பார்கள்; ஆயிரம் யானைகளைக் கைளாலடித்துப் பதினுயிரங் குதிரைகளைப் பூமியிற்றள்ளுவார்கள்.—எ-று. (௬௩)

பாய்பரி யாயிரப் பத்துப் பாணிகொண்
டாயிர கோடியா மவுணர் தங்களைச்
சேயிரு நிலத்திடைச் சிதையச் சிந்துவார்
காய்கனல் சொரிதருக் கடுங்கட் பூதரோ.

(இ-ள்.) சுடுகின்ற தீப்பொறிகளைச் சிதறுகின்ற கண்களையுடைய பூதவீரர்கள் தாவுகின்ற ஆயிரங்குதிரைகளை கையிற்பிடித்து ஆயிரங்கோடியசுரர்களை செவ்விய பெரிய பூமியிற் சிதைந்து விழும்வண்ணம் சிதறுவார்கள்.—எ-று.

கோரத்தோடு நிற்குமவசர மாதலால் காய்கனலுமிழ்தரு கடுங்கட்பூதர்-என்றார்.

குரங்குளைப் புரவியர் குஞ்ச ரத்தின
ரிரங்குறு தேரினர் நிலத்தி னேகினோர்
வரங்கெழு மவுணர்கள் வளைந்து பூதரைச்
சரங்களிற் பிறவினிற் றடிதன் மேயினர்.

(இ-ள்.) அசைகின்ற புறமயிரினையுடைய குதிரைவீரர்களும் யானைவீரர்களும் முழங்குகின்ற தேர்வீரர்களும் காலாள்வீரர்களுமாகிய அசுரர் வளைந்துகொண்டு பூதவீரர்களை அம்புகளாலும் மற்றவைகளாலும் கொல்லத்தொடங்கினார்கள்.—எ-று. (௬௫)

யலைதனைச் சிந்துவர் மறங்கொள் பூதர்தா
ணிலைதனைச் சிந்துவர் நெடுங்கை சிந்துவர்

கொலைதனைச் சிந்துவர் கொய்வர் மொய்ம்பினைத்
தலைதனைச் சிந்துவர் தறுகட்டானவர்.

(இ-ள்.) அஞ்சாமையினையுடைய அசுரர்கள் மலைகளைச்சிதறுவார்கள், வீரம் பொருந்திய வீரர்களின் தாள்நிலைகளை சிந்துவார்கள்; நீண்டகைகளை அறுப்பார்கள். கொலைத்தொழிலையழிப்பார்கள். மார்பினையறுப்பார்கள். தலைகளையறுப்பார்கள்.—எ-று.

தாள்நிலை-காலடி. (௪௬)

இவ்வகை மாறுகொண் டிகல்செய் கின்றுழித்
தெவ்வடு பூதர்தஞ் சேனை மன்னர்க
ளவ்விடை யேன்றுநின் றமரி யற்றுழி
வெவ்வசு ரப்படை மிகவு மாய்ந்ததே.

(இ-ள்.) இவ்வண்ணம் பகைத்துப் போர்புரிகின்ற விடத்தில் பகைவர்களைக் கொல்லுகின்ற பூதர்களின் அரசர்களாகவுள்ளவர்கள் அவ்விடத்திலெதிர்த்து நின்று போர்புரிந்தவுடனே வெவ்விய அசுரசைனியம் மிகவும் இறந்தது —எ-று. (௪௭)

பொன்றிகழ் படையொடு புவியும் வானுமாய்
நின்றிடு மவுணர்க ணீடு தொல்பிணக்
குன்றுரு வாகியே குருதி யாற்றிடைச்
சென்றன ரளக்கரைத் திடர தாக்குவார்.

(இ-ள்.) பொன்மயமாக விளங்குகின்ற ஆயுதங்களுடனே பூமியிலும் ஆகாயத்திலுமாகநின்ற அசுரர்கள் நீண்ட பெரிய பிணமலையுருவமாகி இரத்தவாற்றிற் போகிக்கடலை மேடாக்குகின்றார்கள்.—எ-று.

இதனு லசுரவீரர்கள் அதிகமாக இறந்தார்களென்று அறியப்படுகின்றது. (௪௮)

நீடிய வேற்படை நிமலன் காணுற
வீடினம் யாமினி வெய்ய தோற்றமேற்
கூடுவ திலையெனக் குனிக்கு மாறுபோ
லாடிய வுடற்குறை யனந்த கோடியே.

(இ-ள்.) நாம் நீண்ட வேற்படையினையுடைய குமரக்கடவுளின் திருவிழிகளிற் காணும்வண்ணம் இறந்தேம் ஆதலாலினிக்கொடியபிறவி நமக்குண்டாகப்போகின்றதில்லை என்று கூத்தாடுவதைப்போல அநேகந்தலையில்லாவுடல்களாடின.—எ-று.

குமரனைக்கண்டவர்கள் பிறவாரொன்பதை இங்கும் விளக்க இவ்வண்ணம் உத்ப்ரேக்ஷித்தார் (௪௯)

வேறு.

மானப் படைசே ரவுணப் படையும் வயமான் றேர்ப்படையு
மேனைப் படையு முடிவுற் றிடவே யிவ்வா றிகல்செய்யுங்
கூனற் சடிலப் பூதப் படையின் கொற்றந் தனைநோக்கித்
தானைத் தலைவ னதிசூ ரனெனுந் தனயன் வெகுளுற்றான்.

(இ-ள்.) பெரியவாயுதங்களையுடைய வசுரசைனியமும் வெற்றிபொருந்திய குதிரைகள் பூட்டிய தேர்ப்படைகளும் மற்றைப்படைகளுமழியுமாறு இவ்வண்ணம் போர்புரிகின்ற சுருண்ட சடைகளையுடைய பூதசைனியங்களின் வெற்றியைக்கண்டு அசுரத்தலைவனுகிய அதிசூரனென்னும் அரசகுமாரன் கோபங்கொண்டனன்.—எ-று.

இவ்வதிசூரன் சிங்கமுகாசுரனுடைய மகன். (௫0)

தோரா யிரமா யிரமங் கொருபாற் சேமத் தொடுசெல்லக்
காரா யிரமுற் றனதன் படிவங் கதிர்கா ளிமைசார

வீரா யிரமா மிவ்வுளித் தொகைபூண் டீர்க்குந்தேர்மீதே
யோரா யிரமாங் கதிர்போ லழலா வுரனோ டுறுகின்றான்.

(இ-ள்.) அங்கொருபுறத்தி லாயிரந்தேர்கள் காவலுடன் செல்லாநிற்க, ஆயிரங் கருமேகங்களொன்று சேர்ந்து நின்றாற்போல காணப்படுகின்ற தன்னுடம்பிற் காரொளி வீசுதலைப்பொருந்த, இரண்டாயிரங்குதிரைகள் கட்டப்பட்டிழுக்கப்படுகின்றதேரின் மீது ஒரு ஆயிரமென்னு மெண்ணினையுடைய கதிர்களையுடைய சூரியனைப்போல சீற்றங்கொண்டு தைரியத்துடன் சென்றனன்.—எ-று.

ஓராயிரமாங் கதிர்போலென்பதை ஒப்பற்ற ஆயிரஞ்சூரியர்களைப்போல என்னலுமாம். (௫௪)

வார்வில் லதனை விரைவிற் குனியா வடிவாளிகள் போக்கிச்
சோர்வில் லவனு மெதிர்கின் றனரைத் துணிசெய் தனனிற்ப
வோர்வில் லொருவன் றனியே யிவண்வந் துறுபோர் புரிகின்றான்
போர்வில் லறிவ னிவனே யெனவே புகல்கின் றனர்பூதர்.

(இ-ள்.) வாரினையுடைய வில்லினை விரைவாக வளைத்து, கூரியபாணங்களை வைத்துவிட்டுச் சோர்வற்ற வவ்வதிவீரனும் எதிர்த்தவர்களை துண்டுபடுத்தினவனாக நிற்றலும், ஒருவில்லினையுடைய வொருவனிவன் றனியே இங்குவந்து போர்புரிகின்றான் அதனாலிவன் தனுர்வேதபண்டிதனே என்று பூதர்கள் கூறுகின்றார்கள்.—எ-று.

போர்புரிதலில் அதிக சாமர்த்தியமில்லாதவன் தனியே வாரான், அதினிலும் இவ்விடத்திற்கு வாரான்; இங்கு வந்தமையால் இவன் நல்லசாகஸி என்றார்கள் என்க.

ஓதக் கடல்போ லலமந் தலமந் துலையா விகல்செய்யும்
பூதர்க் கிறையுக் கிரனென் றொருவன் புகைதீ யுமிழ்கண்ணன்
மேதக் கசலந் தரனு ருடலம் வீழும் படிகீண்ட
சோதிக் கடவுட் படையுண் டுமிழுந் தொல்லோ னிகல்வல்லோன்.

(இ-ள்.) அலைவீசாநின்ற கடலைப்போல சுழன்று சுழன்று கெடாத போர்புரிகின்றவனும் பூதசேனாதிபனும் உக்கிரனென்று பேருள்ளவனும் புகையை முன்னே சிதறுகின்ற தீப்பொறிபறக்கின்ற கண்களையுடையவனும் சிறப்பினையுடைய சலந்தரனுடலத்தைக் கீழேவிழுமாறுபிளந்த வொளிபொருந்திய சக்கரப்படையை உண்டு பின்னர் உமிழுகின்ற பெரியவனும் போர்புரிதலில் வல்லவனும் ஆகிய ஒருவன்.—எ-று,

நூற்றெட்டுப் பூதராஜர்களிலிவனதிபலனாதலால் அவன் வண்மையை விளக்க விவ்வாறு கூறினர். (௫௫)

எண்டா னவருக் கிறைவன் குமர னிகல்செய் திடுமாறு
கண்டான் முனியா விரைவிற் படர்வான் காலன் றிறல்கொள்ளுந்
தண்டா னதுகொண் டவனோர் குறுகித் தடமார் பிடையோச்ச
விண்டா னிவனென் றவுணப் படையோர் வெருவா வலமர்ந்தார்.

(இ-ள்.) வலிமைபொருந்திய அசுராதிபன்மகனாகிய அதிசூரன் போர்புரிதலைக் கண்டு கோபித்து விரைந்து அவனெதிரிற் செல்பவன் எமனுடையவன்மையையு மபகரிக்கின்ற ஒருதண்டத்தைக் கையிற்கொண்டு சென்று அவ்வதிசூரன்மார்பிலெறிந்தான். அதனை அசுரசைனியங்கள் கண்டு இவனிறந்தானென்று கூறிவருந்தினார்கள்.—எ-று.

மாறா கியவுக் கிரனே வுதலும் வருதண் டவன்மார்பிற்
கூறா கியசா லிகைசிந் திடவே கொதியா வருகின்றான்
பாறா டுகளத் திடையீங் கிவனைப் பலியூட் டுவனென்னா
நூறா யிரமா சுகமோர் தொடையி னுய்த்திற் செலவுய்த்தான்.

(இ-ள்.) பகைவனுகிய உக்கிரனென்பவன் எறிதலால் வந்த தண்டமானது அவ்வதிசூரன் மார்பிலணிந்திருந்த அங்கமான கவசத்தை அழித்தது, அதனுல் மஹாகோபமுள்ளவனுக வருகின்றவவன் பருந்துகள் பறக்கின்ற போர்க்களத்தில் இங்கு இவனை (துர்க்கைக்கு) பூசையாகநிவேதிப்பேனென்று கூறிக்கொண்டு நூருயிர அம்புகளை ஒரே தொடையில் வைத்து விரைந்து செல்லுமாறு விட்டனன்.—எ-று.

சாலிகை-கவசம்-அரணஞ்சாலிகை சடாரியாசுகந்தளமேகண்டம் பருமமெய்யுறையே கச்சைபரம்பத்தும் கவசப்பல்பேர். இது சூடாமணி. (ருரு)

வெய்தா மயில்வா ளிகளுக் கிரன்மேல் விறல்சே ரதிசூர
னெய்தா னதுமற் றவன்மேற் படவே பெருவைப் பெருநீத்த
மெய்தான் முழுதும் பெருகுற் றிடலும் விழுமத் தொடுசெற்றஞ்
செய்தா னொருமால் வரைகொண் டவுணன் றேர்மேற் செலவுய்த்தான்.

(இ-ள்.) கொடிய கூரியவம்புகள் உக்கிரன்மீது வெற்றிபொருந்திய அதிசூரனென்பவனெய்தான். அவ்வம்புகளவன்மீது படுதலும் மிகுந்த இரத்தவெள்ளம் உடல் முழுவதிலும் பெருகுதலும் அவ்வுக்கிரன் துன்பத்தொடு கோபமும் பொருந்தினவனுகி யொருபெரியமலையையெடுத்து அவ்வசுரன் தேரின்மீது படுமாறு எறிந்தனன்.

விஷதயிலாதி சம்பந்தமுடையதா லம்புகளை வெய்தாமயில்வாளி என்ருர்.

அதிர்பொற் கழலான் விடுதிண் கிரியா லதிசூ ரன்மான்றேர்
பிதிர்பட் டிடலும் புவிமேற் படர்தல் பிழையா மெனவுன்னு
வுதயக் கிரிபோற் கனகத் தியலு மொருதேர் மிசைநீலக்
கதிருற் றெனவே கடிதிற் பாய்ந்தான் காலன் மிடறீர்ப்பான்.

(இ-ள்.) முழங்குகின்றதும் பொன்னுலமைந்ததுமாகிய வீரக்கழலணிந்த உக்கிரனுல் விடப்பட்ட அதிசூரனுடைய பெரியவிரதம் பலதுண்டுகளாகச் சிதறுதலும்பூமியிற் செல்லுதல் தவருகுமென்று நினைத்து உதையமலையைப்போல உன்னதமானதாய் பொன்னுலமைக்கப்பட்டதாகவுள்ள ஒருதேரின்மீது நீலநிறமான சூரியனேறினுற்போல எமன் வன்மையையுங் கெடுக்கத்தக்கவவ்வதிசூரன் விரைந்து பாய்ந்தேறினுன்.

வே று.

பாயும் வேலையப் பன்மணித் தேரினை
யேய வாற்றல்கொண் டீர்த்திடும் வாசிகண்
மாயும் வண்ணம றம்புரி யுக்கிரன்
சீய மாமெனச் சென்றுதைத் தானரோ.

(இ-ள்.) குதித்தேறினவுடனே பலமணிகளா லலங்கரிக்கப்பட்ட அவ்விரதத்தை பொருந்திய வன்மையுடன் இழுக்கின்ற குதிரைகள் இறக்குமாறு பகைவர்களைக் கொல்லுகின்ற உக்கிரன்சிங்கத்தைப்போல சென்று உதைத்தனன்.—எ-று (ருஅ)

உதைக்க வெய்யவ ஞெண்பரி பாரிடைப்
பதைத்து வீழ்தலும் பையுளின் மாழ்கியே
சிதைப்ப னிந்தச் சிறியனை யென்றுமெய்
புதைப்ப நூறு பொருசரந் தூண்டினுன்.

(இ-ள்.) உக்கிரனுதைத்தவுடனே கொடியவனுகிய அதிசூரனுடைய ஒள்ளிய குதிரைகள் பூமியிற்றுடித்துக்கொண்டு விழுதலும் அவன் துன்பத்தால் வருந்தி இச்சிறியவனைக் கொல்லுவேனென்று அவனுடன் மூடும்வண்ணம் நூறு ஒப்பற்ற அம்புகளை விட்டனன்.—எ-று. (ருக)

தூண்டு கின்ற சுடர்க்கணை யாவையு
மீண்டி யேதன் னெதிருறும் பெற்றியைக்
காண்ட லுங்கதை கைக்கொடவ் வுக்கிரன்
மீண்டி டும்படி வீசினின் றார்க்கவே.

(இ-ள்.) விடாநின்ற வொளிபொருந்திய வம்புகளனைத்தையும் கூட்டமாகத் தன்னெதிரோ வருந்தன்மையைப்பார்த்தவுடனே அவ்வுக்கிரன் ஒருகதையைக்கையிலெடுத்து அவைகள் தன்னையடையாமற் றிரும்புமாறு வீசினவனாக நின்று ஆரவாரித்தலும்.

வேறோர் தேரிடை வெய்தென வெய்தியே
யூறு நீங்கிய வுக்கிரற் கண்ணுறீஇ
மாறி றெய்வத மாப்படை தொட்டுனை
யீறு காண்ப னிறந்தனை நீயெனா.

(இ-ள்.) விரைவாக வேறேயொரு தேரிலேறி யாதொரூறுமடையாத வுக்கிரனைப்பார்த்து தவறாததேவதாஸ்திரத்தை விட்டு உனைக்கொல்லுவேன் இனி நீ இறந்தாய் என்றுகூறி.—எ-று.

இவைகள் சாமான்யமானவை இதற்குத்தப்பித்துக்கொண்டாய். தவறாத தேவாஸ்திரத்தை விட்டால் இறப்பாய் என்னும் அவன்-துணிவுபற்றி இறந்தனை என்றார். ()

முன்னு பூசை முதலிய யாவையு
முன்னி யேநின் றொருங்குடன் செய்தபின்
வன்னி மாப்படை வாங்கி வணங்கியே
மின்னு தண்சுடர் மீக்கொள வீசினான்.

(இ-ள்.) சிறந்தபூசை முதலியவைகளை மனத்தால் நின்று ஒன்றாய்ச் செய்தவுடனே அக்கினியாஸ்திரத்தை எடுத்துவணங்கி மின்னுகின்ற சீதளமான சுடரானது மேலே தோன்றவிட்டனன்.—எ-று.

நின்று-என்பதை நேராகநின்றெனினுமாம். (௬௨)

ஆசை தோறு மழல்சிந்த மாற்றலன்
வீசு வெம்படை வீரத்தை நோக்கியே
யீசன் மைந்த னிணைமலர்த் தாள்களை
நேச மோடு நினைந்தனன் போற்றினான்.

(இ-ள்.) திக்குகள்தோறும் தீப்பொறிபறக்கப் பகைவனால் விடப்பட்ட வெவ்விய ஆயுதத்தின் வீரத்தைப்பார்த்து சிவகுமாரனுடைய உபயபாதாரவிந்தங்களை விருப்பத்துடன் தியானித்துத்துதித்தனன்.—எ-று. நேசம்-அன்பு. (௬௩)

எவ்வெ வர்க்கு மிறையவ னாகியோ
னவ்வ ழித்தன் னருள்செய வுக்கிரன்
செவ்வி திற்செலுந் தீச்சரம் பற்றியே
கவ்வி நுங்கினன் கண்கனல் கான்றிட.

(இ-ள்.) யாவர்களுக்கு மிறைவனாகிய குமரக்கடவுள் அவ்விடத்தில் தமது திருவருளைச்செய்தலும் உடனே உக்கிரன் தன்னேரில் வந்த அக்கினியாஸ்திரத்தைப் பிடித்துக் கண்களில் தீப்பொறிபறக்கக் கடித்து விழுங்கினான்.—எ-று.

நுங்கல்-விழுங்கல் "விழுங்கலிசைதரு தொண்டனுங்கல்." இது சூடாமணி. ()

நுங்கு வான்றனை நோக்கி யரிமுகன்
றுங்க மாமகன் றொல்புனன் மாப்படை

பொங்கு சண்டப் பொருபடை யேவலு
மங்க வற்றையும் பற்றி யருந்தினன்.

(இ-ள்.) அவ்வண்ணம் உண்ணுகின்றவனைப் பார்த்த சிங்கமுகாசுரனுடைய சிறந்தமகனை அதிசூரன்பெரிய வருணாஸ்திரத்தையும், பிரகாசிக்கின்ற சண்டாஸ்திரத்தையும் விடுதலும், உக்கிரன்அவைகளையும் பிடித்துவிழுங்கினன்.—எ-று.

சண்டாஸ்திரம்-எமாஸ்திரம். சண்டன்-எமன். "சமனேசண்டன்" இது, பிங்கலம்.

காற்றின் வெம்படை யேவினன் கைதவ
னூற்ற னுக்கிர னன்னது நுங்கினன்
றேற்று கின்றுழிச் செய்தவ மன்றியே
யேற்ற மான விரும்பொருள் யாவதே.

(இ-ள்.) அவ்விழிஞன் வெவ்விய வாயுவாஸ்திரத்தை விட்டான் வல்லபசாலியான உக்கிரன் அதையும் விழுங்கினன். தீர்மானிக்குமிடத்துச் செய்யப்படுகின்ற தவத்தையன்றியிலே உயர்ந்த சிறந்த பொருள்யாவது.—எ-று. (௬௬)

மற்று மவ்வதி சூரன் மலரய
னொற்றை வெம்படை யோச்சலு முக்கிரன்
பற்றி நுங்கவப் பங்கயன் றுதைபாற்
பெற்றி ருந்த பெரும்படை யேவினன்.

(இ-ள்.) பின்னுமவ் வதிசூரன் தாமரைமலரிலிருக்கின்ற பிரமனுடைய ஒப்பற்ற வெவ்விய அம்பினைவிடுதலும், உக்கிரனதையும்பிடித்து விழுங்கினன்; பின்னு மவன்பிரமன்றந்தையான நாராயணனிடத்துப்பெற்றுள்ளதாகியபெரிய அஸ்திரத்தைவிட்டனன்.

ஒய்யெ னச்சென் றுருகெழு நாரணன்
பொய்யின் மாப்படை போந்திட வாங்கதுங்
கையில் வாங்கிக் கதுமென வாய்க்கொளா
வெய்ய வுக்கிரன் மேயின னென்பவே.

(இ-ள்.) விரைவாகப்போய் நிறம் விளங்குகின்ற நாராயணனுடைய தவறாத பெரிய வம்பு வருதலும், அதனையும் கையிற்பிடித்து விரைவாக வாயிலிட்டு வெவ்விய வுக்கிரன் விழுங்கி இருந்தனன்.—எ-று.

இதர அம்புகளைவிட்டால் நேரேவரும்; தேவாஸ்திரமானால் பலவிடங்களிற் சுழன்று விரைந்துவரும் அதனால் "ஒய்யெனச்சென்று போந்திட" என்றார். (௬௮)

ஆன காலை யரிமுகன் காதலன்
யானி னிச்செயி யற்கையென் னேயிவன்
றானவ் வீசன்கொல் கண்ணன்கொ றுமரை
மேனி லாவிய வேதன்கொ லோவென்றான்.

(இ-ள்.) அப்பொழுது, சிங்கமுகன் மைந்தனான அதிசூரன் நானினிச்செய்கின்ற இயல்பை என்னவென்று கூறுவேன்? இவன்தானோ, அந்தவீசனென்று கூறப்படுபவன்; அல்லது திருமாலோ? அன்றேல் மேன்மைபொருந்திய பிரமனோ? என்றான்.

மூவ ராகிய மூர்த்திக ளல்லதை
யேவ ரேமற் றிதுசெயும் பெற்றியா
ராவ னுவ னவர்க்கு ளிவனெனுத்
தேவர் மாற்றலன் பின்னருஞ் செப்பினன்

(இ-ள்.) திரிமூர்த்திகளல்லாமல் வேறே யாவர் இந்தச்செய்கையைச் செய்பவர்கள். ஆதலால் இவன் அம்மூவருளொருவனாகவே இருப்பான். இருப்பான் என்று அசுரனாகிய வதிசூரன் பின்னுங் கூறினான்.—எ-று. (௭௦)

சீற்றங் கொண்ட வவுணர் திரைக்கடற்
றோற்றங் கொண்டவச் சூர்கெழு முக்கிர
னேற்றங் கண்டழி யென்செய்து மென்றனர்
கூற்றங் கொண்ட வுயிரிற் குலைந்துளார்.

(இ-ள்.) கோபங்கொண்ட அசுரர்கள் அலைகளையுடைய கடலின்றன்மைபோன்ற அகாதமானசெய்கையினையுடைய வச்சத்தைத்தருகின்ற வுருவோடுவிளங்குகின்ற உக்கிரனுடைய பெருமையைப் பார்த்த உடனே எமனாற்பிடிக்கப்பட்ட வுயிரைப்போல நிலைகுலைந்தவர்களாகிய வவர்கள் என்செய்வோமென்று கூறினார்கள்.—எ-று. (௭௧)

அண்ணல் வாசவ னாதிய ராகிய
வெண்ணில் வானவர் யாவரு மிச்செயல்
கண்ணு ருவிகல் கண்டரு ளான்முகப்
பண்ண வன்முன் பணிந்தித கூறுவார்.

(இ-ள்.) தேவராஜனாகிய இந்திரன் முதலியவனைவரும் இச்செய்கையைப்பார்த்து, போரைப்பார்த்துக்கொண்டுநின்ற பிரமதேவன் முன்னர்ச்சென்று அவனைவணங்கி இதனைக் கூறுகின்றார்கள்.—எ-று. (௭௨)

எங்க ளால்வரு மெண்ணில் பெரும்படை
செங்க ணான்படை தீயநின் மாப்படை
யங்கி யாவு மணுகவிப் பூதர்கோ
னுங்கு மாறென் னுவனுதி யென்னவே.

(இ-ள்.) எங்களாலுண்டான அளவற்ற பெரியவாயுதங்களும், நாராயணனுடைய வாயுதமும் உன்னுடைய தீமயமான பெரியவாயுதமும் ஆகிய இவையெல்லாம் அவ்விடத்தில் வருதலும் அவற்றை இப்பூதசேனாதிபனான வுக்கிரன் உண்டுவிட்டானே இதென்ன காரணம் இதனைச் சொல் என்று கூறுதலும்.—எ-று. (௭௩)

இந்தி ராதியர் கேண்மின்க ளீங்கிவ
னந்தி வான்சடை யண்ணல் வரத்தினன்
கந்த னெந்தை கழலிணை போற்றியே
வந்து ளானெவ் வலியையு மாற்றுவான்.

(இ-ள்.) இந்திரன் முதலானவர்களே! கேளுங்கள் இவ்வுக்கிரன் செவ்வானம் போன்ற சடையினையுடைய இறைவன் வரத்தினையுடையவன் அன்றியும், எந்தையாகிய குமரக்கடவுளின் பாதங்களைத் தியானித்துக்கொண்டு வந்திருக்கின்றவன் அதனாலிவன் பகைவர்கள் விடுகின்ற எவ்விதமான ஆயுத வல்லபங்களையுந் தடுக்கவல்லவன்.

எம்மை யாளுடை யீச னருள்பெறுஞ்
செம்மை யானவன் செம்பொற் சிலம்படி
மும்மை யுந்தொழு முத்திபெற் றானிவ
னெம்மி னும்பெரி யானென்று மீறிலான்.

(இ-ள்.) எம்மை அடிமையாகவுடைய ஈசனருளைப்பெறுகின்ற ஒழுக்கத்தினையுடையவன் அவ்விறைவனுடைய செவ்விய பொன்னஞ்சிலம்படியை மூன்றுகாலமுந் தொழுது முத்தியைப்பெற்றவன்; இவன் எம்மைவிடப்பெரியவன்; என்றும் அழியாதவன்.—எ-று. (௭௪)

மைக்க ருங்கடல் வண்ணன்முன் னேவிய
சக்க ரந்துக ருநதவத் தோனினு
மிக்க வாற்றலன் வெற்றியின் மேலையா
னுக்கி ரன்னென் றுரைத்திடும் பேரினான்.

(இ-ள்.) இவன், மைபோலுங் கருமைநிறம்பொருந்திய கடல்நிறம்போன்ற நிறத்தினையுடைய திருமால் முன்னம்விட்ட சக்கரத்தையுண்ட தவத்தினையுடையமுனிவனைப் பார்க்கிலும் மிகவும் வலிமைபொருந்தினவன். சிறந்த வெற்றியினையுடையவன். உக்கிரனென்று கூறப்படுகின்ற சிறப்புப்பெயரினையுடையவன்.—எ-று. (எசு)

பண்டு நாமருள் பல்படை யாவையு
முண்ட தோவியப் பொல்லையி லெல்லையி
லண்ட முஞ்சிதைத் தாக்குவ னிங்கிவன்
கொண்ட தொல்புகழ் கூறத் தொலையுமோ.

(இ-ள்.) இவன், முன்னநாமதிசூரனுக்களித்த பலவிதமான வெல்லாவாயுதங்களையும் உண்டான்; இதுதானு ஆச்சரியம் இவன் வெகு விரைவாக அளவற்ற அண்டங்களையும் அழித்து வேறேயுண்டாக்குவான்; இவ்வுக்கிரனடைந்துள்ள பழையபுகழ்களைக் கூறினல் முற்றுப்பெறுமோ பெறா.—எ-று. (எஎ)

என்ன நான்முக னெண்ணி யியம்பலு
மன்ன கேட்டலு மண்டர்கள் யாவருந்
துன்னு சென்னி துளக்கிப் பெருந்திற
லின்னு மாக விவற்கென் றியம்பினர்.

(இ-ள்.) என்றிவைகளைப் பிரமதேவனலோசித்துக் கூறுதலும் அவைகளைக் கேட்டவுடனே தேவர்களனைவரும் நெருங்கியதலைகளையசைத்து இன்னுமதிகமான பராக்கிரம மிவனுக்குண்டாகட்டுமென்று கூறினார்கள்.—எ-று (எஅ)

வேறு.

வான மேலிது நிகழ்ந்துழி மாறிலா வவுணர்
சேனை காவலன் பூதனை நோக்கிநிற் சிதைப்ப
வூன மாகிய படையென வுன்னலை யுமைபான்
ஞான நாயகன் படைதொடு வேனென நவின்றான்.

(இ-ள்.) ஆகாயத்திலிதுநடந்தவுடனே, மாறுபாடில்லாத அசுரசேனாதிபனாகிய அதிசூரன் உக்கிரனைப்பார்த்து உன்னைக்கொல்லுவேன்; இது குற்றமான ஆயுதமென்று நினையாதே. உமையையொருபுறத்திலுடைய ஞானநாயகனாகிய சிவபெருபெருமானுடைய ஆயுதத்தை விடுவேனென்று கூறினான்.—எ-று.

அயனரியாதியர்போல் விளங்குமவர்க ளாயுதங்களழிந்தாலும் சிவபெருமான் பெயரால் விளங்குமாயுதங்களழியாது. அவர் ஆயுதமழியுமேல் அவரது கர்த்துருத்துவத்துக்குத் தோஷம் சித்திக்கும். ஆதலாலவ்வண்ணங் காலத்திலுயத்திலு நிகழாது என்னுந்துணிவுடையவனுதலால்,"நிற்சிதைப்பவூனமாகிய படையெனவுன்னலை"என்றான்.

மந்தி ரந்தனிற் பூசனை முதலிய வருத்துச்
சிந்தை மேலுறு வெகுளியோ டான்படை செலுத்த
வந்த மில்லதோ ருலகெலா முறுவலா லடர்க்கு
மெந்தை கொண்டதோ ருருவெனத் தோன்றிய திமைப்பில்.

(இ-ள்.) சிவாஸ்த்திரத்தை மந்திரத்தினற் பூசைமுதலியவைகளைச் செய்து மனத்திற்பொருந்திய கோபத்துடன் விடுதலும்' அளவற்ற உலகங்களனைத்தையும் புன்

யந்த மளாவிய புகழினையுடைய அசுராதிபனான அதிசூரன் பெற்றிருந்தமையால் இடபத்தையேறிநடாத்துகின்ற இறைவனிடத்திற்குச்சென்றது அவ்விறைவனளித்த ஆயுதம்.

ஆன பெற்றிகண் டிங்கிவன் சிவன்கொலென் றயிர்த்துச்
சேனை காவலன் றுளங்கினன் பூதர்கள் சிறந்தார்
வானு ளோர்மலர் மாரிக ணேர்த்தனர் மாறு
மேனை வீரர்கள் விழிபொழி தாரைகான் றிரிந்தார்,

(இ-ள்.) இவ்வாறான தன்மையைப்பார்த்து, இங்கு எம்மெதிரினிற்கின்றவிவன் சிவன்றானோவென்று சந்தேகித்து, சேனாநாயகனான அதிசூரன் நடுங்கினான். பூதர்கள் சிறப்படைந்தார்கள் (அப்பொழுது) தேவர்கள் புட்பவருஷம் பெய்தார்கள். பகையாகவுள்ள மற்றையவீரர்கள் கண்ணீரை யொழுகவிட்டுக்கொண்டோடினார்கள்.—எ-று. ()

நீங்கு கின்றதோர் தானவர் குழுவினை நீவி
ரோங்கு கின்றதை விடுமின்க ளென்றுதே ரிழிந்து
பாங்க ருற்றதோர் தண்டுகொண் டரிமுகன் பாலன்
வீங்கு தோளிடை யெற்றின னுக்கிரன் வெகுண்டான்.

(இ-ள்.) ஓடாநின்ற அசுரசைநியங்களை நீங்கள் ஏங்குவதைவிடுங்கள் என்று கூறித் தேரினின்றுமிறங்கி அருகிலிருந்த வொரு தண்டத்தினால் சிங்கமுகன் மகனாகிய அதிசூரன், உக்கிரனுடைய தடித்ததோளின்மீது அடித்தனன்; உடனே அவ்வுக்கிரன் சீற்றங்கொண்டனன்.—எ-று. (௮௬)

எற்று தண்டினை யங்கையா லுக்கிர னென்போன்
பற்றி வாங்கியே யவன்றன துரம்பதை பதைப்பத்
தெற்றெ னப்புடைத் திடுதலு நிலனிடைச் சேர்ந்தான்
மற்ற வன்றன துயிர்கொடு போயினன் மறலி.

(இ-ள்.) அடித்ததண்டத்தை உக்கிரனென்பவன் அழகிய கையினாலெட்டிப் பிடித்துவாங்கி அவ்வதிசூரனுடைய மார்பம் பதைபதைக்குமாறு திடீரென்றடித்தனன். உடனே அவன் கீழ்விழுந்தனன் அத்தருணத்திலவனுயிரை எமன்கொண்டுபோயினான்.

துஞ்சி வீழதி சூரனை நோக்கியே துகடீர்
மஞ்சு போலவே வருமசு ரேந்திரன் மனமு
நஞ்ச மாமெனக் கொதித்தன னழலெழ நகையா
விஞ்சு பூதர்தங் குழுவின்மேற் சென்றனன் விரைவின்.

(இ-ள்.) இறந்து விழுகின்ற அதிசூரனைப்பார்த்து, குற்றமற்ற மேகத்தைப் போலவந்த அசுரேந்திரன், மனமும் விடமென்று கூறுமாறு கொதிப்புற்று தீப்பறக்கச் சிரித்து மிகுதியாகநிற்கின்ற பூதர்கண்மீது விரைந்துசென்றனன்.—எ-று.

கோபத்தாற் சர்வாங்கமும் வெளியிற் சூடுண்டுநிற்றல் அனைவருக்கும் இயல்பு. இவனுக்கு அதிகமாக மனமுஞ் சுடுகின்றமையால் "மனமும்" என்றுகூறினார். (௮௮)

கடிது சென்றசு ரேந்திர னிந்திரன் கரத்தி
னெடிய வில்லினு மாயிரத் திரட்டிமே னிமிர்ந்த
கொடிய வார்சிலை வாங்கியே குணத்தொலி கொளுவப்
படியும் வானமுங் குலைந்தன வுயிரெலாம் பதைப்ப.

(இ-ள்.) அசுரேந்திரன் விரைந்துசென்று இந்திரன்கையிலுள்ள தனுசைவிட ஆயிரம்பங்கு பெரிய கொடிய நீண்ட வில்லைவளைத்து நாணோசைகொள்ளுதலும் உயிர்களனைத்துந் துடிக்குமாறு பூமியும் சுவர்க்கமுங்குலைந்தன.—எ-று. (௮௯)

பல்லினுற்கடித்துக் கொடிய இருண்மயமான கரியமேகம் பூமியிலிறங்கிவந்தாற்போல வந்தனன்.—எ-று. (௬௪)

இழிந்து மால்வரை யொன்றுகொண் டசுரரிந் திரனுங்
கழிந்த சீர்த்தியான் மீமிசை யோச்சலுங் கரத்தி
னழிந்த வில்லினை நீத்துவே றொருசிலை யதனைக்
குழிந்த கண்ணுடைப் பூதர்கள் வெருக்கொளக் குனித்தான்.

(இ-ள்.) தேரினின்றும் இறங்கி, பெரியமலையொன்றை யெடுத்து அசுரேந்திர னென்னும் அபகீர்த்தியுடையவன்மீ தெறிந்தனன். உடனே அவன் தன்கையிலிருந்த நாணற்ற தனுசை அகற்றி வேறேஒருவில்லையெடுத்து, குழிந்தகண்களையுடைய பூதர்கள் அஞ்சுமாறு வளைத்தனன்.—எ-று. (௬௫)

குனித்து நான்கிரு சுடுசரந் தொடுத்தறை கூவித்
தனித்து மேல்வருங் கனகனே வியகிரி சாய்த்துப்
புனிற்றி ளம்பிறை செக்கர்வா னுழைந்தெனப் புயங்கள்
பனித்தி டும்படி யழுத்தின னுயிரம் பகழி.

(இ-ள்.) வில்வளைத்து அதிலெட்டுச் சுடுசரங்களைவைத்துவிட்டு அறைகூவிக் கொண்டு தனித்தவனாக எதிரேவருகின்ற கனகனெறிந்தமலையை யழித்து, புதிய இளம்பிறையானது செவ்வானத்தில் நுழைந்தாற்போல ஆயிரமம்புகளை அவன்றோள் நடுங்குமாறு அழுத்தினன்.—எ-று. (௬௬)

அறைவகூவல், நீ யாண்மகனானால் என்னோடு பொரவருதி என்றழைத்தல், இதனை "அறைகூவலென்பது பொரவழைத்தலாகும்" என்னும் பிங்கலத்தாலுணர்க.

பகழி யாயிரம் படுதலு மாடகன் பையு
ணிகழ நிற்றலும் வேறொரு வலவனை நிறுவிப்
புகழி றானவன் றேர்கொடு பூதர்மேற் போத
வகழு மால்வரை யொன்றெறிந் துன்மத்த னார்த்தான்.

(இ-ள்.) ஆயிரமம்புகள் பட்டவுடனே கனகன் துன்பமடைந்தவனாக நின்றனன் உடனே வேறொருசாரதியை யமைத்துக்கொண்டு, அபகீர்த்தியினையுடைய அசுரேந்திரன் ரதாரோகணனாய்ப் பூதர்களின்மீது சென்றனன். அப்பொழுது தோண்டியெடுக்கப் பட்ட பெரியமலையொன்றை எறிந்து உன்மத்தன் ஆரவாரித்தனன்.—எ-று. (௬௭)

அவனெ றிந்திடும் பருப்பதம் விரைவில்வந் தடர்க்கக்
கவன வெம்பரி யாயின வுலந்தன காணாப்
பவன வேகத்தின் வேறொரு தேர்மிசைப் பாய்ந்தான்
புவன முண்ணிய நின்றதோர் கடவுளே போல்வான்.

(இ-ள்.) உன்மத்தனெறியப்பட்டமலை வந்துதாக்க வதனால் வேகமாகச்செல்லுகின்ற தேர்க்குதிரைகளிறந்ததைக்கண்டு வாயுவேகத்துடன் வேறேயொரு தேரின் மீது உலகங்களை யுண்ணுமாறுநின்ற கடவுளையொத்த அசுரேந்திரன் பாய்ந்தேறினன்.

முந்து வெங்கணை யுலப்பில தூண்டலு முந்நீர்
செந்து கிர்க்கொடி போர்த்தெனக் குருதிநீர் செறிய
வந்த முற்றிலன் புவிமிசை யிருந்தன னங்கே
மந்த னென்பவன் றூதகன் புதல்வனோர் வந்தான்,

(இ-ள்.) சிறந்த வெவ்விய அநேகமம்புகளை விடுதலும் உன்மத்தன் கடலானது பவளக்கொடியான் மூடப்பட்டு நின்றாற்போல உடன்முழுதிலும் இரத்தம்நெருங்க

இறவாதவனுகப் பூமியிலிருந்தனன், உடனே அசுரேந்திரனுடன் மந்தனென்பவனெதிர்த்தனன்.—எ-று. (௯௯)

வருத லோடுமாங் கவன்மிசை யையிரு வாளி
குருதி காலுற வழங்கலு மெரியெனக் கொதியாப்
பரிதி மேவரத் தகுவதோர் பருப்பதம் பறித்துக்
கருதி யேவின னவுணர்கோ னங்கது கண்டான்.

(இ-ள்.) மந்தன் வருதலும் அவன்மீது பத்து பாணங்களை இரத்தமொழுக விட்டனன் அதனாலவன் தீயைப்போல கோபித்து சூரியனுதயமாகத்தக்க ஒருமலையைப்பறித்து குறிப்புடனெறிந்தனன் மந்தன் எறிந்த மலைவருதலை யசுராதிபனுகிய அசுரேந்திரன் கண்டனன்.—எ-று. (௧௦௦)

சென்று மார்பெதி ரேற்றலும் வந்துழித் தெறித்துக்
குன்று மீண்டுமற் றவன்புடை போயது கொடியோ
னென்று போலிய வாயிரம் பகழிக ளுய்த்தா
னின்று மந்தனங் கயர்ந்தனன் சிங்கனு நேர்ந்தான்.

(இ-ள்.) மலையினெதிரிற்சென்று அதனை மார்பின்மீது தாங்கினுன் தாங்குதலுமது வந்தவழியே தெறித்து அம்மலைவிட்டவனெதிரிற்சென்றது; உடனே கொடியவனுகிய அசுரேந்திரன் சமானமான வாயிரமம்புகளை விட்டான்; அவைகளாலடிக்கப்பட்டு மந்தன் அயர்ந்து நின்றனன்; உடனே சிங்கனென்பவ னெதிர்ந்தான்.—எ-று. ()

எடுத்து மால்வரை யொன்றவ னுரத்தினே றெறியத்
தடுத்தொர் வாளியி னகற்றின னமரிடைத் தரியார்
விடுத்த தோர்கதை யெறிதலு மவனது விலக்கித்
தொடுத்து நூறுகோ லழுத்தினன் சிங்கனுந் தொலைந்தான்.

(இ-ள்.) ஒரு பெரிய மலையையெடுத்து அவ்வசுரேந்திரன் மார்பின்மீது படுமாறு எறிதலும்; அதனை அவன் ஒரு அம்பு தொடுத்து விலக்கினுன். உடனே சிங்கன் போரிற்பகைவர்க ளெறிந்த வொருதண்டத்தை யெடுத்தெறிந்தனன். அவனதனையுந் தடுத்து நூறம்புகளைத்தொடுத்துவிட்டு உடம்பிலழுத்தினுன் அதனுல் சிங்கனும் முதுகிட்டனன்.—எ-று. (௧௦௨)

ஒழிந்த சாரதத் தலைவர்க ளியாவரு முடன்றே
யழிந்து நின்றனர் தாரகன் குமரனு சுகங்கள்
பொழிந்து மற்றுள பூதரை முடித்திடும் போதிற்
கழிந்த துன்பொடு மிலக்கரிற் றண்டகன் கண்டான்.

(இ-ள்.) மற்றுமுள்ள பூதராசர்களனைவரும் போர்புரிந்து ஈடழிந்து நின்றூர்கள்; உடனே, தாரகன் பிள்ளையான வசுரேந்திரன் பாணவருஷம்பெய்து மற்றுள்ள பூதர்களை அழிக்கின்ற சமயத்தில் இதனை மிகுந்த துன்பத்துடன் இலக்கருள் தண்டகன் கண்டனன்.—எ-று. (௧௦௩)

தனது கார்முகம் வாங்கியே தண்டகப் பெயரோன்
முனையி ருங்கணை யாயிரங் கொடியவன் முகத்தி
னனிபு குந்திட விடுத்தலு நடலையுற் றிரங்கி
மனம்வெ குண்டுபின் றன்பெருஞ் சிலையினை வளைத்தான்.

(இ-ள்.) தண்டகனென்னும் பெயருள்ளவன் தனது வில்லை வளைத்து முனையோடு கூடிய பெரிய ஆயிரமம்புகளைக் கொடியவனுகிய அசுரேந்திரனுடைய முகத்தில் மிகவும் புகுமாறு விடுதலும் துன்புற்றுவருந்தி மனத்திற் கோபங்கொண்டு பின்னர் தனது பெரிய வில்லினைவளைத்தனன்.—எ-று. (௧௦௪)

வளைத்து நாவிரண் டம்பினைத் தண்டக மறவோன்
குளத்தின் மேற்பட விடுத்தலு மெழுந்தன குருதி
யிளைத்து நின்றனன் றேர்மிசை யன்னவற் கிளையோன்
கிளத்து சோமுகன் ருரகன் மகனெதிர் கிடைத்தான்.

(இ-ள்.) வில்லை வளைத்து அதில் எட்டம்புகளைவைத்துத் தண்டகவீரனுடைய நெற்றியிற் படும்வண்ணம் விடுதலும் அவைவந்துபட்டு இரத்தந்தோன்றினவதனல் அவன் தேரின்மீது இளைப்புற்றவனாக நின்றனன் உடனே அவனுக்கு இளையவனாகச் சொல்லப்படுகின்ற சோமுகனென்பவன் தாரகாசுரன் பிள்ளையான அசுரேந்திரன தெதிரிற்சென்ருன்.—எ-று. (௧௦௫)

எதிர்பு குந்தவ னகலமே லம்பதிற் றிரட்டி
கதிர்தெ றுங்கணை யவுணர்கோ னழுத்தலுங் கவலா
வதிர்த ருந்தன தொண்சிலை வாங்கியா யிரமா
நுதிகொள் வெஞ்சரந் தூண்டினன் சோமுக னொடிப்பில்.

(இ-ள்.) எதிரேசென்று அவன் மார்பில் சூரியப்பிரகாசத்தையும் மழுங்கச் செய்கின்ற நூறுபாணங்களை அசுரமன்னவனாகிய அசுரேந்திர னழுத்துதலு மதனல் வருத்தமடைந்து மணிகள் முழங்குகின்ற தனது ஒள்ளிய வில்லினை வளைத்துக்கூரிய வாயிரமம்புகளைச் சோமுகனனவன் விரைவில் விட்டான்.—எ-று. (௧௦௬)

பல்ல வங்களா யிரமுமத் தாரகன் பாலன்
சில்லி யந்தனித் தேரினை வலவனைச் சிதைப்ப
மெல்ல வேறொரு தேர்மிசைப் பாய்ந்துவே லொன்றை
யொல்லை யிங்கிவ னுயிரினை யுண்கென வுய்த்தான்.

(இ-ள்.) ஆயிரமம்புகளும் சென்று தாரகன் மைந்தனை வசுரேந்திரனுடைய சக்கரத்தினையுடைய வொப்பற்ற தேரினையும் சாரதியையுமழித்தலும் அவன் மெல்லெனவேறொரு தேரின்மீது குதித்து ஒருவேலினை யெடுத்து நீ இங்கிவனுயிரை யுண்பாயாகவென்று கூறிவிட்டனன்.—எ-று. (௧௦௭)

உய்த்த வேலவ னகலமேற் படுதலு முயங்கி
யெய்த்து மற்றவன் றேர்மிசை மயங்கின னிருப்ப
நித்தன் வேர்வுறு சோமுகற் கிளையவ னெடுமா
லொத்த வன்மையன் விசயனென் பவன்கடி தற்ருன்.

(இ-ள்.) அசுரேந்திரன்விட்டவேல் சோமுகன் மார்பிற்படலும், அதனல் வருந்தியிளைத்து அவன் தனது தேரின்மீது மயங்கினவனாக விருந்தனன். உடனே வேர்வையிற் பிறந்தவனும் அழியாதவனுமாகிய சோமுகனுக்குத் தம்பியும் திருநெடுமாலை யொத்த வன்மையை யுடையவனுமாகிய விசயனென்பவன் விரைந்து வந்தனன்.-எ-று.

விசய னங்கொரு கொடுமரம் வாங்கியே வெகுண்டு
நிசித வெங்கணை யாயிர முய்த்துநே ரில்லா
வசுர ரிந்திரன் வலவனைத் தடிந்துமற் றவன்கை
யிசையும் வில்லொடு நாரியைத் துணிபட விறுத்தான்.

(இ-ள்.) விசயனவ்விடத்தி லொரு வில்லைவளைத்துக் கோபங்கொண்டு கூரிய வெவ்விய ஆயிரமம்புகளை விட்டு ஒப்பற்ற வசுரேந்திரனுடைய சாரதியைக்கொன்று அவன்கையிற்பொருந்திய வில்லையும் அதன் நாணியையும் துண்டுபடுமாறு அறுத்தனன்.

முற்று நூலுணர் பாகுயி ருலத்தலு முனியா
விற்ற நாணொடு வார்சிலைத் துணியினை யேந்திக்

கொற்ற மாரசு ரேந்திரன் மத்திகை கொண்டு
பொற்றை யன்னதன் றேர்விடு வலவனிற் பொலிந்தான்.

(இ-ள்.) எல்லா நூல்களையுமுணர்ந்த சாரதி யிறத்தலும் கோபங்கொண்டு ஒடிந்த விற்றுண்டுடன் அதிற்றெங்கும் நாணியையுந் தாங்கினவனும் வெற்றிபொருந்திய வசுரேந்திரன் குதிரைச்சம்மட்டியைக் கையிற்றுங்கி தனது மலையனைய தேரை யோட்டுகின்ற சாரதியைப்போல விளங்கினன்.—எ-று.

எல்லா நூல்களையும் என்றது, அசுவ இலக்கணமுதலிய இரதசம்பந்தமான நூல்களனைத்தையுமென்க. (௧௧0)

தருவர் கோனொரு வலவனை நிறுவியோர் தண்ட
மிகலும் வன்மையா லெடுத்தன னவன்மிசை யெறியப்
புகுது மெல்லையிற் கண்டெதிர் விசயனும் புகழோன்
மிகவு மெல்லையில் சரங்களைத் தூண்டினன் விடுத்தான்.

(இ-ள்.) அசுரேந்திரன் வேறேயோர் சாரதியையமைத்துக்கொண்டு ஒரு தண்டத்தை வன்மையுடன் பகையோடுகூடவெடுத்து விசயன்மீதெறிதலும் அது வருதலைக்கண்ட கீர்த்திபொருந்திய விசயனென்பவனதன்றெதிரில் மிகவுமளவற்ற வம்புகளைத் தூண்டிவிட்டனன்.—எ-று. (௧௧௧)

தொட்ட தொட்டன கணையெலாந் துகள்படத் தொலைத்து
மட்டு லாந்தொடை விசயன்மார் பகத்திடை வந்து
பட்ட காலையி லவன்றன திரதமேற் பதைத்து
விட்ட வில்லொடு குருதியுந் தானுமாய் வீழ்ந்தான்.

(இ-ள்.) விசயனால் விடப்பட்டனவாகவுள்ள வம்புகளையெல்லாம் தூளாகும்படி துளைத்து அத்தண்டம் தேன்பொருந்திய மலர்மாலையினையுடைய விசயன் மார்பினிடத்து வந்து பட்டவுடனே அவன் தனது தேரின்மீது பதைபதைத்தவனும் கீழே விடப்பட்ட வில்லுடன் இரத்தமும் தானுமாக விழுந்தனன்.—எ-று. (௧௧௨)

விழுந்த காலையி லிலக்கரி லேனையோர் வெகுண்டு
பொழிந்த வாளியாற் றாரகன் மகனொடு பொருதே
யழிந்தி யாவரு மிரிந்தனர் போதலு மதுகண்
டுழந்த துன்பொடு வீரமொய்ம் பினன்விரைந் துற்றான்.

(இ-ள்.) விசயன் விழுந்தவுடனே இலக்கம் வீரர்களிலநேகர் கோபங்கொண்டு விடப்பட்ட வம்புகளால் அசுரேந்திரனுடன் போர்புரிந்து தோற்றவர்களாக யாவரும் விலகிச் செல்லுதலும் அதனைக்கண்டு துன்பம்பொருந்திய மனத்துடன் வீரவாகு தேவர் விரைவாக வந்தனர்.—எ-று. (௧௧௩)

வீர வாகுவே ளிணையடி போற்றியே வெகுண்டோர்
கோர வெஞ்சிலை வாங்கின னொலி கொளுவி
யாரும் வானவர் வியப்புற வவுணர்க ளயரத்
தார காசுரன் மதலையை மறைத்தனன் சரத்தால்.

(இ-ள்.) வீரவாகுதேவர் குமரக்கடவுளி னுபயபாதங்களைத் துதித்துக் கோபங்கொண்டு ஒருகோரமான வில்லினைவளைத்து நாணொலிகண்டு தேவர்களெல்லா மாச்சரியமடையவும் அசுரர்களெல்லாம் வருந்தவும் தாரகாசுரன்மகனாகிய வசுரேந்திரனை அம்புகளால் மறைத்தனர்.—எ-று. (௧௧௪)

மறைப்ப மெய்யெலாங் குருதிசொண் டிடலும்வல் லவுணன்
விறற்க டுஞ்சிலை யொன்றினை வளைத்தவன் மிசையே
பிறைத்த லைக்கணை யாயிர மழுத்தினன் பெரிது
முறைத்த செம்புன லிருவரு மிளங்கதி ரொத்தார்.

(இ-ள்.) அம்புகளால் மறைத்தவுடனே உடல் முழுமையும் இரத்தம் எழுதலும் வல்லபம் பொருந்திய வவ்வசுரேந்திரன் வெற்றிபொருந்திய ஒருகொடிய வில்லினைவளைத்து அவ்வீரவாகுதேவர்மீது ஆயிரம் பிறைமுகாஸ்திரங்களை யழுத்தினான். அதனாலிரத்தம் எழுந்தது. இரத்தமொழுகியதா லவ்விருவரும் இளஞ்சூரியனை யொத்தார்கள்.—எ-று. (௧௧௫)

தார கத்திற லான்மகன் றாண்டியேழ் சரத்தாற்
சூர ரித்திற லண்ணல்கைச் சிலைதனைத் துணிப்ப
வீரன் மற்றொரு கார்முகம் வாங்கியே விடங்கால்
கூர யிற்கணை யாயிரம் விடுத்தனன் குறியால்.

(இ-ள்.) பலம்பொருந்திய தாரகாசுரனுடைய பிள்ளையாகிய வசுரேந்திரன் ஏழு பாணங்களைவிட்டு அச்சத்தைத் தராநின்ற சிங்கத்தைப்போலும் சாமர்த்தியத்தையுடைய வீரவாகுதேவர் கையிலிருந்த வில்லை யொடித்தலும் அவர் வேறே யொருவில்லையெடுத்து வளைத்து விஷத்தைக் கக்குகின்ற கூரோடுகூடிய ஆயிரமம்புகளைக் குறிப்புடன் விட்டனர்.—எ-று. (௧௧௬)

ஏகும் வார்கணை தாரகன் மகன்சிலை யிறுத்துப்
பாக னாவியுண் டிரதமோ டயங்களைப் படுப்ப
வாகை யின்றியே வேறொரு தேர்மிசை வறியன்
போக லோடுமற் றன்னது கண்டனர் புலவோர்.

(இ-ள்.) செல்லாநின்ற நீண்ட வவ்வம்புகள் தாரகாசுரன் பிள்ளையாகிய அசுரேந்திரனுடைய வில்லை ஒடித்துச் சாரதியினுயிரையுண்டு தேருடன் குதிரைகளையுமழித்தலும் வெற்றியற்றவனாய் வேறேயோர் தேரின்மீது தேர் முதலியவற்றை இழந்தமையால் தரித்திரனென்று சொல்லப்படுகிற அசுரேந்திரன் செல்லுதலு மவன் செல்லுகையைத் தேவர்கள் கண்டார்கள்.—எ-று. (௧௧௭)

வெருவ ரப்பொருந் தாரகன் மதலையை வீரன்
பொருது வெற்றிகொள் வான்கொலா மினியெனப் புகழ்ந்தா
ரரிய வற்புத மோவவன் வென்றிட லவுணன்
கரித ருஞ்சுதன் சிம்புளின் சுதனிவன் கழறின்.

(இ-ள்.) நம்மவர்க ளஞ்சும்வண்ணம் போர்புரிகின்ற தாரகன் பிள்ளையையினி வீரவாகுதேவர் போர்புரிந்து வெற்றியடைவாராயிருக்கலாம் என்று கூறிப் புகழ்ந்தார்கள். இது ஒரு அருமையான வற்புதமோ! வீரவாகுதேவர் வெல்லுதல். இவ்வசுரன் யானையின்பிள்ளை, இவரோ சொல்லுமிடத்து சிம்புளின்பிள்ளை: (சிம்புள் = சரபம்)—எ-று.

மாறொர் தேரிடைப் பாய்ந்தவ னொருதனு வளைத்து
நூறு கோல்விடுத் தவனிர தத்தினை நூறச்
சீறி வானெழீஇ வீரவா குப்பெயர்த் திறலோ
னாறு மாமுக முதல்வனைப் பரவினின் றூர்த்தான்.

(இ-ள்.) அவ்வசுரேந்திரன் வேறேயோர் தேரின்மீது குதித்து வேறொரு வில்லினையெடுத்து வளைத்து நூறம்புகளை விட்டு, அவ்வீரவாகு தேவரின் தேரினையழித்த

லும் வீரவாகுதேவரென்னும் பேரினையுடைய வீரர் சீற்றங்கொண்டு வானத்திற்கிளம்பி ஆறுதிருமுகங்களையுடைய குமரக்கடவுளைத் துதித்து ஆரவாரித்தனர்.—எ-று.

இவனைக் கொல்லப்போகின்ற தருணமாதலால் ஆரவாரித்தனர். (௧௧௯)

உறைக ழித்துவா ளுருவியே யும்பரிற் படர்ந்து
சிறைக ழித்திடும் வரைபுரை யவுணர்கோன் றேர்மேற்
குறைக ழித்திடும் பணிகவர் மதியெனக் குப்புற்
றிறைக ழிக்குமுன் னவன்றனைக் கையிலொன் றெறிந்தான்.

(இ-ள்.) வாளை யுறையினின்று முருவியெடுத்து வானத்தின்வழியாகச்சென்று இறகு அறுக்கப்பட்ட மலையையொத்த அசுராதிபனுடைய தேரின்மீது இராகுக்கிரகத்தாற் பிடிக்கப்பட்ட சந்திரனைப்போலக் குதித்து க்ஷணநேரத்திற்குள் அவன்கைகளிலொன்றை வெட்டினர்.—எ-று.

"ஒல்லையேயிறையேயுற்ற சிறுவரையுடனிலேசம், வல்லைமாத்திரைகள்காலவினைவின்பேர்வகுக்கிலாரும்" இது சூடாமணி. இதனுலிறையென்றதை, காலவினைவென்றுகாட்ட க்ஷணமென்றும். (௧௨௦)

எறிந்த காலையி லிற்றதோர் கைத்தல மிறலுங்
குறைந்த கையிடைச் சலசல விழிவன குருதி
செறிந்த நீலவொண் கிரிதனக் கொருபுடை சென்றே
யுறைந்த தோர்கரும் பணியழன் மணியுமிழ்ந் தொப்ப.

(இ-ள்.) வெட்டினவுடனே அறுந்தகைத்தலம் கீழேவிழுதலும் வெட்டுண்டகையினின்றும் இரத்தஞ் சலசலவென் றொழுகியது எதுபோலுமெனில், ஒள்ளிய நீலகிரியினொருபுறத்திற்சென்று தங்கிய கரும்பாம்பு தீமயமான மணியை யுமிழ்ந்தாற்போலவிருந்தது.—எ-று. (௧௨௧)

கைய றுத்தலுந் தாரகன் றன்சுதன் கனன்று
மொய்யு டைக்கதை யொன்றெடுத் தவன்மிசை மோத
வொய்யெ னத்திரண் மொய்ம்பினன் வானெழுந் தொருதன்
செய்ய பொற்பதத் துதைத்தன னங்கவன் சிரத்தில்.

(இ-ள்.) கையை யறுத்தவுடனே தாரகன்பிள்ளையான வசுரேந்திரன் கோபங்கொண்டு பலம்பொருந்திய வோர்கதையையெடுத்து வீரவாகுதேவர்மீதெறிதலும், உடனே வீரவாகுதேவராகாயத்திற் கிளம்பி ஒப்பற்ற தனது செவ்விய பிரகாசம்பொருந்திய பாதத்தினல் அவன்றலையின்மீதுதைத்தனர்.—எ-று. (௧௨௨)

காமர் தாளினு லுதைத்துவிண் படர்தலுங் கண்டு
தூம மார்விழி யானசு ரேந்திரன் றொடர்ந்தோர்
சேம வாள்கொடு வானெழ மேலையோன் சீறி
யேம நாந்தகத் தாலவன் றலையற வெறிந்தான்

(இ-ள்.) அழகுபொருந்தியபாதத்தா லவன்றலையின்மீதுதைத்து வானத்திற்செல்லுதலும் அதனைக்கண்டு புகைபொருந்திய கண்ணேடுகூடிய வசுரேந்திரனென்பவன் பின்றொடர்ந்து உடைவாளை உருவிக்கொண்டு தானு மாகாயத்திற் கிளம்புதலும் வீரவாகுதேவர் சீற்றங்கொண்டு பொன்மயமான வாளினலவன்றலையறுமாறு வெட்டினர்.—எ-று. (௧௨௩)

எறிந்த சென்னியு மியாக்கையு மிம்பரின் வீழ்ந்து
மறிந்து மற்றவன் மன்னுயிர் போயது வான்மேற்

செறிந்த விண்ணவ ரார்த்தன ரின்னதோர் செய்கை
யறிந்த தானவக் கடலெலா மோடின வன்றே.

(இ-ள்.) வெட்டப்பட்ட தலையுமுடலும் பூமியில்விழுந்தன. அவனதுநிலைபெற்ற வுயிர் சுவர்க்கத்திற்குச்சென்றது. அங்கு நெருங்கிநின்ற தேவர்களாரவாரித்தார்கள். இச் செய்தியையுணர்ந்த வசுரசைனியமாகிய கடலனைத்து நில்லாதோடின.—எ-று.(கஉச)

மக்க ளாயின ரிருவரு மிறந்தது மலைந்து
பக்க மேயின தானைக ளிரிந்ததும் பாராத்
தொக்க பேரழ லுலகட வெழுந்ததோற் றம்போன்
மிக்க சீற்றமேற் கொண்டன னண்டங்கள் வென்றான்.

(இ-ள்.) பிள்ளைகளாகவுள்ள அதிசூரன் அசுரேந்திரனென்னும் இருவரும் இறந்ததையும் அருகிற்சூழ்ந்துநின்ற சைனியங்கள் விலகியோடியதையும் அண்டங்களைவென்ற சூரபன்மன்கண்டு நெருங்கிய வூழித்தீயானது உலகத்தினை அழிக்கும்வண்ணம் எழுந்ததன்மையைப்போல மிகுந்தகோபமுற்றவனாயினான்.—எ-று.

சகோதரபுத்திரராதலால் அவர்களை மக்கள் என்றார். (கஉரு)

சீற்ற மேதகு காசிபன் மதலைபோர் செய்யு
மாற்ற லார்தமை யடுவனால் விரைந்தென மதித்துக்
காற்றின் முந்துசெ றேரிடைக் கடிதுவந் தெய்திக்
கூற்றின் வெம்பசி தணிப்பதோர் சிலையினைக் குனித்தான்.

(இ-ள்.) மிகுந்த கோபத்தினையுடைய காசிபன்குமாரன் சண்டையிடுகின்ற பகைவர்களை சீக்கிரங்கொல்லுவேனென்று நினைத்து காற்றைவிட முன்னேசெல்லத்தக்க ரதத்தில் விரைவாகவந்து எமனுடைய வெவ்வியபசியைத் தணிக்கின்ற வில்லைவளைத்தனன்.—எ-று.

காசிபன்குமாரன் சூரபன்மன். (கஉசு)

வாணி போற்றிடு சயமகள் வீரமா மடந்தை
நீணி லைப்பட வேறுசோ பானத்தி னெறிபோற்
பூண ளாவிய பொன்னவாஞ் சிலைதனிற் புணர்த்த
நாணி னோதையைக் காட்டின னணிவிர னகத்தால்.

(இ-ள்.) கலைமகள் துதிக்கின்ற சயமகளாகிய வீரமாதானவள் நீண்ட மாளிகையிலேறுதற்கு அமைத்தபடிவழியைப்போல பூணொடுபொருந்தியதும் பொன்னொடு பொருந்தியதுமான நாணியின் ஓசையை விரனகத்தாற்றட்டிக்காட்டினன்.—எ-று. ()

கரங்கொள் வில்லொலி கேட்டலும் பாரிடக் கணங்கள்
மரங்கள் சிந்தினர் சிகரிகள் சிந்தினர் மலையு
முரங்கள் சிந்தினர் வீரமுஞ் சிந்தின ருடலுஞ்
சிரங்க ளானவும் பனித்திட வோடினர் சிதறி.

(இ-ள்.) கையிலிருக்கின்ற வின்னோசையைக் கேட்டவுடனே பூதகணங்கள் மரங்களைச் சிதறினர், கோபுரங்களைச் சிதறினர், போர்புரிகின்ற தைரியமிழந்தனர், வீரமுமிழந்தனர், உடலுந்தலையு நடுங்கிடச் சிதறியோடினார்கள்.—எ-று. (கஉஅ)

யாண்டு மாகியே யிரிந்தன ரல்லதிந் நிலத்தில்
வீண்டு ளார்சிலர் பதைத்துநின் றார்சிலர் வீழ்ந்து
மாண்டு ளார்சிலர் மயக்கமுற் றார்சிலர் மற்று
மாண்டு பன்னிரண் டொழிந்தில தவுணன்வில் லரவம்.

(இ-ள்.) எவ்விடத்திலுமாக வோடினவர்களையன்றி இந்நிலத்தில் விழுந்தவர்கள் சிலர், பதைத்துக்கொண்டு நின்றவர்கள் சிலர், விழுந்திறந்தவர்கள் சிலர், மயக்கமடைந்தவர்கள் சிலர், இதன்றியும் சூரபன்மனுடைய இவ்வில்லோசை பன்னிரண்டு வருஷம் இவ்வண்ணமாகவே இருந்தது.—எ-று. (௩௨௪)

வேத னஞ்சினன் மான்முடி துளக்கினன் விண்ணோர்
நாத னஞ்சினன் மறலியு மஞ்சின னடுங்கிக்
கோதி னல்லற மஞ்சின வைவகை கொண்ட
பூத மஞ்சின வுயிர்த்தொகை யஞ்சின பொருமி.

(இ-ள்.) பிரமன் பயந்தான், திருமால் தலையசைத்தனன், தேவரிறைவனஞ்சினான், எமனும் பயந்தான், நடுங்கிக் குற்றமற்ற நல்ல தருமமுமஞ்சியது, ஐந்து விதமாகக் கூறப்படுகிற பூதங்களஞ்சின, உயிர்வருக்கங்கள் பொருமி நடுங்கின.—எ-று. ()

வஞ்சன் வார்சிலை நாணொலி கேட்டலு மறத்தால்
விஞ்சு பூதமீ ராயிர வெள்ளமும் வெருவி
யெஞ்சி யேயவ ணின்றிடா திரிந்துள வென்று
லஞ்சு பூதங்க ளஞ்சுவ தற்புதத் தனவோ.

(இ-ள்.) வஞ்சகனாகிய சூரபன்மனுடைய நீண்ட வில்லினாணியினோசையைக் கேட்டவுடனே வீரத்தின் மிகுந்த இரண்டாயிரம் வெள்ளம் பூதங்களும் பயந்து இடைந்து அவ்விடத்தினிற்காமல் விலகியோடினவானால் அஞ்சுபூதங்களஞ்சுவது ஆச்சரியமோ.—எ-று.

வீரத்தின்மிகுந்த பூதங்களே அஞ்சுமானால் வெறும்பூதங்க ளஞ்சற்கென்ன தடை என்று குறிப்பிக்க விஞ்சுபூதமென்றும் அஞ்சுபூதமென்றும் கூறினார். (௩௯௧)

சூரன் விற்பெரு முழக்கினைக் கேட்டலுந் துளங்கிப்
பாரி டத்தொகை யழிதா வன்னது பார்த்துப்
போரி யற்படைத் தலைவர்நூற் றெண்மரும் புகுந்து
மாரி யிற்பொழிந் திட்டனர் வரைகளு மரமும்.

(இ-ள்.) சூரபன்மனுடைய வில்லின் பெரிய முழக்கத்தைக் கேட்டவுடனே நடுங்கி பூதகூட்டங்கள் விலகியோடின ; அதனைப்பார்த்து போர்த்திறம் பொருந்திய நூற்றெட்டுச் சேனாபதிகளும் அஞ்சாமலெதிரோசென்று மழை வருஷித்தாற்போல மரங்களையும் மலைகளையும் பொழிந்தார்கள்,—எ-று. (௩௯௨)

அன்ன வேலையிற் பத்துநூ றாயிர கோடி
பொன்னின் வெங்கணை யவுணர்கோன் முறைமுறை போக்கித்
தன்னு ழைப்புகும் வரையொடு தருக்களைத் தடிந்து
துன்னு பாரிடத் தலைவர்தம் யாக்கையைத் துளைத்தான்.

(இ-ள்.) அந்த சமயத்தில் பொன்மயமான வெவ்விய பத்துலட்சங்கோடி அம்புகளைச் சூரபன்மன் வரிசை வரிசையாக விட்டுத் தன்னிடத்திற்கு வருகின்ற மலைகளுடன் மரங்களைச் சிதறி நெருங்கிய பூதசேனாபதிகளின் உடம்புகளைத் துளைத்தான்.

முடிது ளைத்தனன் முகத்தினைத் துளைத்தனன் மொய்ம்பைத்
தொடையன் மார்பினைத் துளைத்தனன் பாணியைத் துளைத்தான்
கடிது ளைத்தனன் குறங்கினைத் துளைத்தனன் கழல்சே
ரடிது ளைத்தனன் பாரிடத் தலைவரு மயர்ந்தார்.

(இ-ள்.) முடியைத் துளைத்தனன், முகத்தினைத் துளைத்தனன், தோளினையும் மாலையினையுடைய மார்பினையுந் துளைத்தனன், கரங்களையுந்துளைத்தனன், கடிப்பிர

தேசங்களைத் துளைத்தனன், துடைகளைத் துளைத்தனன், கழலொடு பொருந்திய காலினைத்துளைத்தான், இதனாற் பூதவீரத்தலைவர்கள் இளைத்தார்கள்.—எ-று. (௩௬௪)

துளைத்து மெய்யினை வெஞ்சரம் போதலுந் துயர்கொண்
டிளைத்து நின்றன னதிபலன் வக்கிர னென்போன்
களைத்து வீழ்ந்தனன் வச்சிர னிரங்கினன் கபாலி
யுளத்தின் வன்மைய தழிந்தன னுன்மத்த னுலேந்தான்.

(இ-ள்.) சூரபன்மனுடைய வெவ்விய பாணமானது சரீரத்தைத் துளைத்துச் சென்றமையால் அதிபலன் துயரங்கொண் டிளைத்து நின்றனன். வக்கிரனென்பவன் களைத்து விழுந்தனன். வச்சிரனென்பவன் இரங்கினான். கபாலியென்பவன் மனோதிடமிழந்தனன். உன்மத்தனென்பவன் நடுங்கினான்.—எ-று. (௩௬௫)

நீடு குன்றினை யேந்தியே யச்சுத னின்றா
னோடு கின்றில னெதிர்ந்திலன் மாபல னுளைந்தான்
வாடு கின்றனன் மதிசயன் மேகனு மருண்டா
னாடு றுந்துய ரறிந்தன னண்டவா பரணன்.

(இ-ள்.) அச்சுதனென்பவன் நீண்ட மலையைச் சுமந்தவனாக நின்றனன்; மாபலனென்பவன் ஓடினானில்லை, எதிர்த்தானுமில்லை, சும்மாநின்று வருந்தினான். மதிசயன் என்பவன் வாட்டமுற்றனன். மேகனென்பவன் மருண்டனன். அண்ட ஆபரணனென்பவன் அசையாநின்ற துன்பமின்னதென்றுணர்ந்தனன்.—எ-று. (௩௬௬)

மேக மாலியுண் ணடுங்கினன் சுப்பிரன் மெலிந்தான்
காக பாதன்மெய் பதைத்தன னுதவகன் கவன்றா
னாகம் வீழ்ந்திடு குருதியு ளழுந்தின னசலன்
மாக வந்தனனுந் திரங்கின னத்திரி மறிந்தான்.

(இ-ள்.) மேகமாலியென்பவன் உள்ளே நடுங்கினான். சுப்பிரனென்பவன் மெலிந்தனன். காகபாதனென்பவன் உடல் துடித்தனன். உதவகனென்பவன் கவற்சியுற்றான். அசலனென்பவன் உடம்பினின்று மொழுகாநின்ற இரத்தவெள்ளத்தின் மூழ்கினன். பெரிய கவந்தனென்பவன் நோவுற்று வருந்தினான். அத்திரியென்பவன் விழுந்தான்.—எ-று. (௩௬௭)

பத்தி ரன்சிறி திடைந்தன னுடைந்தனன் பதும
னெய்த்த சைந்தனன் வியாக்கிரன் றனஞ்சய னிரிந்தான்.
மத்தன் வைதுவெய் துயிர்த்தனன் பிஞகிமெய் மறந்தான்
சித்தி ராங்கனுங் கனகனுந் துயர்க்கட லிளைத்தார்.

(இ-ள்.) பத்திரனென்பவன் சற்றே இடைந்தனன். பதுமனென்பவன் பின்னிடைந்தனன். வியாக்கிரனென்பவன் இளைத்து அசைந்தனன். தனஞ்சயனென்பவன் விலகியோடினான். மத்தனென்பவன் திட்டிக்கொண்டு ஊர்த்துவசுவாசம் விட்டனன். பிஞகியென்பவன் உடம்பை மறந்தான். சித்திராங்கனென்பவனுங் கனகனென்பவனுந் துன்பசமுத்திரத்தின் மூழ்கினார்கள்.—எ-று. (௩௬௮)

நெஞ்ச ழிந்தனர் மாலியு நீலனு நெடுங்கண்
பஞ்ச டைந்தனர் கும்பனு நிகும்பனும் பதைப்புற்
றஞ்சி யேங்கினர் சண்டியுந் தண்டியு மாவி
துஞ்சல் கூடினர் வாமனுஞ் சோமனென் பவனும்.

(இ-ள்.) மாலியென்பவனு நீலனென்பவனு நெஞ்சழிந்தார்கள். கும்பனென்பவனும், நிகும்பனென்பவனும், பெரிய கண்கள் பஞ்சடைந்தார்கள். தண்டியென்பவ

னும், சண்டியென்பனும் பதைப்புக்கொண்டு அஞ்சியேங்கினார்கள். வாமனென்பவனுஞ் சோமனென்பவனும் உயிர் ஒழிந்தவர்களானார்கள்.—எ-று. (௧௩௯)

வெங்க ணுக்கிர னெழுவதற் குரனிலன் வெருண்டான்
சிங்க னோய்ந்தனன் சுவேதசீ ரிடன்மறந் தீர்ந்தான்
சங்க பாலன்வீழ்ந் துருண்டன னந்தியுஞ் சலித்தான்
பிங்க லன்னுயிர்க் கின்றில னுரோமசன் பெயர்ந்தான்.

(இ-ள்.) வெவ்விய கண்ணினையுடைய உக்கிரனென்பவன் எழுதற்குச் சத்தியில்லாதவனாகக் கோபங்கொண்டனன். சிங்கனென்பவனோய்ந்தனன். சுவேதசீரிடனென்பவன் வீரமிழந்தனன். சங்கபாலனென்பவன் கீழேவிழுந்துருண்டனன். நந்தியென்பவன் சலிப்புற்றான். பிங்கலனென்பவன் மூச்சில்லாதவனானான். உரோமசனென்பவன் ஓடினான்.—எ-று. (௧௪௦)

இனைய தன்மையா லிவர்முத லானநூற் றெண்ம
ரனிக வேந்தர்கள் போர்வலி யின்றியே யழியத்
தினைய மற்றது கண்டுநூ றுயிரத் தொகையோர்
கணையும் வார்சிலை வாங்கியே தூர்த்தனர் சுணைகள்.

(இ-ள்.) இவ்வண்ணமாக இவர்கள் முதலிய நூற்றெட்டுச்சேனாபதிகள் பொருதற்கு வன்மையில்லாமல் அழிதலும்; விரைவாக வதனை யிலக்கம் வீரர்கள் பார்த்து சத்திக்கின்ற வாரிட்ட வில்லைவளைத்து அம்புகளை விட்டனர்.—எ-று. (௧௪௧)

தூர்த்து மற்றவர் மாறுகொண் டிடுவுழிச் சூரன்
வேர்த்து வெங்கணை மாரிதூ யனையன விலக்கி
யார்த்து வெஞ்சர மாயிர கோடிதொட் டங்கண்
மூர்த்த மொன்றினி லனையவர் சிலைகளை முரித்தான்.

(இ-ள்.) அம்புகளைவிட்டு அவ்விலக்கர்கள் போர்புரிகின்ற சமயத்தில் சூரபன்மன் கோபங்கொண்டு வெவ்விய அஸ்திரவருஷம்பெய்து அவைகளை விலக்கி ஆரவாரித்து ஆயிரங்கோடி வெவ்விய பாணங்களைவிட்டு அவ்விடத்தி லொருக்ஷணநேரத்தில் அவ்விலக்கர்களின் விற்களை யொடித்தான்.—எ-று. (௧௪௨)

முரித்து மற்றவர் வார்சிலை யெடுப்பதன் முன்னந்
திரித்து மாயிர கோடிவெங் கணையினைச் செலுத்திப்
பரித்தி றம்பல பூண்டிடுந் தேர்களைப் படுத்தி
யுரத்தி லன்னவர்க் கிலக்கமா யிரங்கணை யுய்த்தான்.

(இ-ள்.) விற்களையொடித்து அவர்கள் வேறே வில்லெடுத்தற்குமுன்னே பின்னுமாயிரங்கோடி வெவ்வியவம்புகளைவிட்டு பலவிதகுதிரைகளைப் பூட்டியுள்ள தேர்களை அழித்து, அவர்கள்மார்பில் ஒவ்வொருவருக் கிலக்கமாயிரங் கணைகளைவிட்டனன்.

இவர்கள் தொகையிலிலக்கராதலாலவனும் இலக்கமாயிரங்கணை விட்டனனென்றுணர்க. (௧௪௩)

உய்த்த வாளிக ணெஞ்சுபோழ்ந் திடுதலு முளைந்தே
யெய்த்து வீழ்ந்தன ரிலக்கரு மனையகண் டிரங்கி
வித்த கங்கெழு வீரமார்த் தாண்டனும் விடலை
கைத்த லங்கெழு சிலையொடு நேர்ந்தனன் கடிதின்.

(இ-ள்.) விட்டவம்புகள் மார்பைப்பிளத்தலும் வருந்தியிளைத்து இலக்கம்பேர்களும் விழுந்தார்கள்; அதனைக்கண்டு வருந்தி வீரமார்த்தாண்டனென்னும் வாலிபன் விரைவாகக் கைபிற்பிடித்தவில்லுட னெதிர்த்தனன்.—எ-று. (௧௪௪)

வாங்கு வில்லின னெறிந்தநா ணொலியன்வார் கடல்ச
ளேங்கு மார்ப்பின னவுணன்மேற் கணையெனு மெழிலி
தூங்கு வித்தலுஞ் சரங்கடு யன்னவை தொலைத்துத்
தீங்க டுங்கணை யாயிர நுதலிடைச் செறித்தான்.

(இ-ள்.) அவ்வீரமார்த்தாண்டன் வளைத்தவில்லினனும் தட்டப்பட்ட நாணோசையையுடையனும் பெரியகடல்களும் ஏங்கத்தக்க ஆரவாரத்தினை உடையவனுமாய்ச் சூரபன்மன்மீது அம்பு என்னும் மழையைப் பெய்வித்தலும் அவன் பதிலுக்கு அம்புகளைவிட்டு அவைகளையழித்து தீமையமான கொடிய ஆயிரமம்புகளை அவ்வீரமார்த்தாண்டனுடைய நெற்றியிலழுத்தினன்.—எ-று. (௧௬௫)

செறித்த காலையில் வீரருள் வெய்யவன் செயிர்த்து
மறித்தும் வெஞ்சரந் தூண்டவே யாயிரம் வாளி
குறித்து வீசியே யவன்விடு கணையொடுங் குனிவில்
லறுத்து ரம்பிளந் தம்புபெய் தூணியு மட்டான்.

(இ-ள்.) நெற்றியிலழுத்தினவுடனே வீரமார்த்தாண்டன் கோபித்துப் பின்னும் வெவ்விய அம்புகளைவிடுதலும் சூரபன்மன் பின்னுமாயிரமம்புகளை குறிப்பாகவிட்டு அவ்வீரமார்த்தாண்டன்விட்ட அம்புகளுடன் வளைந்தவில்லினையுமறுத்து மார்பையும்பிளந்து அம்பிடுகின்ற தூணியையு மறுத்தனன்.—எ-று. (௧௬௬)

அட்ட காலையில் வீரமார்த் தாண்டனுள் ளழுங்கிப்
பட்டு ளானென வீழ்ந்தனன் பரிசது நோக்கி
யொட்ட லான்வலி யடக்குவன் யானென வுருத்து
விட்ட தேரொடும் வந்தன னரக்கனும் விறலோன்.

(இ-ள்.) அழித்தவுடனே வீரமார்த்தாண்டன் மனம்வருந்தி இறந்தவனைப்போல விழுந்தனன்; அவனவ்வாறு விழுந்ததைப்பார்த்து இப்பகைவன் வல்லபத்தை நானடக்குகின்றேனென்று விடப்பட்ட தேருடனே வீரராக்ஷஸனெனன்பவன்வந்தான்.

வந்த வீரராக் கதனெனு நாமத்து வலியோன்
கொந்து லாந்தொடை தூங்குதன் கொடுமரங் குனியா
வைந்து நூற்றிரண் டடுசரந் தூரந்திட வதுகா
லுந்தி யார்த்தன னவுணர்கோ னொராயிரங் கணைகள்.

(இ-ள்.) சூரபன்மனைநோக்கிவந்த வீரராக்கதனென்னும்பேருள்ள பெரியவன் கொத்தாகப்பொருந்திய பூமாலைதொங்குகின்ற தன்வில்லினைவளைத்து கொலைபுரிகின்ற ஆயிரமம்புகளைவைத்துவிடுதலும், அதனை காற்றால் விலக்கி யாயிரமம்புகளைவிட் டாரவாரித்தனன்.—எ-று. (௧௬௮)

முட்டு வெங்கணை வீரராக் கதனெனு மொய்ம்பன்
றொட்ட வாளியை விலக்கியங் கவன்சிலை துணிக்க
நெட்டி ருஞ்சுடர் வாளமொன் றேந்திநீள் விசும்பி
லெட்டு மாதிரக் கரிகளும் வெருவவார்த் தெழுந்தான்.

(இ-ள்.) ஒன்றோடொன்று நெருங்கிச்செல்கின்றவம்புகள் வீரராக்கதனென்பவன்விட்ட வம்புகளைத்தடுத்து அவனுடைய வில்லையொடித்தலும், நெடிய பிரகாசத்தோடுகூடிய ஒரு வாட்படையேந்தி நீண்ட ஆகாயத்தில் எட்டுத்திக்குகளிலுமுள்ள யானைகளஞ்சும்வண்ணம் ஆரவாரித்துக்கொண்டெழுந்தனன்.—எ-று. (௧௬௯)

விண்ணெ ழுந்தவ னவுணர்கோ னின்றிடும் வியன்றேர்க்
கண்ணில்வாவியே யாங்கவன் கொண்டகார் முகத்தைத்

துண்ணெ னச்சுடர் நாந்தகத் தெறிதலுஞ் சூரன்
வண்ண வார்சிலை முடிந்தில தொடிந்தது மணிவாள்.

(இ-ள்.) ஆகாயத்திற்கிளம்பினவவன் அசுராதிபனுன சூரபன்மனிற்கின்ற பெரியதேரினிடத்திற்குதித்து அவன்பிடித்திருந்த வில்லினை ஒளிபொருந்திய வாளினுல் வெட்டுதலும் சூரபன்மனுடைய நிறம்பொருந்திய அழகிய வில்லொடிந்ததில்லை அழகிய வாளே ஒடிந்தது.—எ-று. (கஙo)

நெடிய வாட்படை யிற்றிட விறலுடை நிருதன்
றொடையன் மார்பகத் தெற்றுவான் முயறலுஞ் சூரன்
படை யிழந்திடு வலியிலற் கொல்வது பழியென்
றடியின் மேற்படுத் தெறிந்தன னண்டமேற் செல்ல.

(இ-ள்.) நீண்ட வாட்படையானது ஒடிதலும் வீரராக்ஷஸன் சூரனுடைய மாலையணிந்த மார்பின்மீது அடித்தற்கு முயற்சித்தலும் சூரபன்மன் ஆயுதமிழந்த அபலனைக்கொல்வதுபழியென்று அண்டத்தின் மேற்புறத்துச்செல்லுமாறு காலாற்றூக்கி யெறிந்தனன்.—எ-று. (கஙக)

அரக்கர் வீரனை யவுணர்கோ னெறிந்திட வலமந்
திரக்க மெய்தியே வீழ்ந்தனன் புவிமிசை யிதுகண்
டுரக்கடுங்கணை மாரிக ளொன்னலன் றேருங்
கரக்க வீசிவந் தேற்றனன் மகேந்திரன் கடியோன்.

(இ-ள்.) வீரராக்ஷஸனை அசுராதிபனுகிய சூரபன்மனெறிதலும் சுழன்று வருத்தத்துடன் பூமியில் விழுந்தனன். இதனைக்கண்டு வீரமகேந்திரனென்பவன் பலமான கொடிய அம்புகளை மழைபெய்தாற்போல பகைவனிரதமு மறையச் சிதறிக்கொண்டு வந்தெதிர்த்தனன்.—எ-று. (கஙஉ)

சூரனங்கது விலக்கியே கணமழை தூரப்ப
வீரன் மற்றது சிந்தினன் பகழிகள் வீசிச்
சாரி வட்டம தாய்வர வவுணனுந் தக்கோன்
றேனை வட்டணை வந்தனன் சிலீமுகஞ் சிதறி.

(இ-ள்.) சூரபன்மனதனைத்தடுத்து அம்புமழையை வருஷிக்க அதனை வீரமகேந்திரன் அம்புகளைவிட்டுச் சிதறிக்கொண்டு சாரிகைவட்டமாக வந்தமையினுலே சூரபன்மனுந் தகுந்த வவன்றேனை யம்புகளை யிறைத்துக்கொண்டு சுற்றிவந்தனன். எ-று.

திரியும் வட்டணை முறையினுற் சரமழை சிதறி
வருதி றத்தினு லையம தாவவர் வடிவை
யொருதி றத்தருந் தெளிகில ருணர்ந்திட வற்றோ
விருதி றத்தரும் வீரமா மகேந்திர ரென்றால்.

(இ-ள்.) சுழலாநின்ற வட்டணை முறையினுலே அஸ்திரவருஷங்களைப் பிரயோகித்து வராநின்ற தன்மையினுலே அவருருவங்களை எத்தகையோர்களும் உணர்கின்றாரில்லை. இரண்டுபேர்களும் வீரமாமகேந்திரர்களானுல் உணரக்கூடுமோ.—எ-று.

சூரபன்மன் வீரமகேந்திரமென்னும் ராஜநகரத்தையுடையவன் மற்றவன் வீரமகேந்திரனென்று பேருள்ளவன். (கஙச)

ஆள ரிக்குடன் வந்தவ னத்துணை யழன்று
கோள ரிக்குடன் வந்தவன் விடுசரங் குறைத்துத்
தாளின் முப்பது மருமமீ திருபது தடம்பொற்
றேளின் முப்பது கணைவிடுத் தவன்வலி தொலைத்தான்.

(இ-ள்.) சிங்கவேற்றினுடன்பிறந்த சூரபன்மன் அப்பொழுது கோபங்கொண்டு வீரகேசரியுடன் பிறந்தவன் விடுகின்ற வம்புகளைத்தடுத்து காலின்முப்பது, மார்பிலிருபது, விசாலமான பொன்னந்தோளின் முப்பது என்னுந் தொகைகளையுடைய அம்புகளைவிட்டு அவன்வன்மையையழித்தனன்.—எ-று. (கடுரு)

வலிதொ லைந்தவன் வீழ்தலு மாக்களின் றொகைமேற்
புலிய டைந்தென வவுணர்கோ னுரப்பினன் புகலு
மெலிவி லாற்றலன் வீரதீ ரன்னெனும் வெய்யோன்
சிலைகு னிந்திடப் பகழிவா னிமிர்ந்திடச் சென்றான்.

(இ-ள்.) வன்மையிழந்து வீரமகேந்திரன் விழுந்தவுடனே பசுக்களின் நடுவில் புலிசென்றாற்போல சூரபன்மன் உரப்பிக்கொண்டு பிரவேசித்தலும் மெலிவடையாத வன்மையினையுடையவன் வீரதீரனென்று பேருள்ள உக்கிரமானவன் வில்வளைய வம்புகள் ஆகாயத்தின்மேற் செல்லச்சென்றனன்.—எ-று. (கடுசு)

சென்ற வீரதீ ரன்விடு கணையொடு சிலையை
யொன்றொ ராயிரம் வாளியால் வீட்டியே யுயர்ந்த
குன்ற மன்னதோர் தேரையேழ் கணையினாற் குறைப்ப
நன்று நன்றெனாத் தண்டமொன் றெடுத்துமே னடந்தான்.

(இ-ள்.) எதிரில்வராநின்ற வீரதீரனென்பவன் விடுகின்ற அம்புகளுடன் வில்லினை, ஒரு ஆயிரம் அம்புகளாலழித்து உயர்ந்தமலைபோன்றதேரினை ஏழம்பினாலறுத்தலும், நல்லது நல்லதுஎன்று ஒரு தண்டத்தை யெடுத்துக்கொண்டு அவனெதிரே சென்றனன்.—எ-று. (கடுஎ)

நடத்த லாகிய வெல்லையிற் பகழியோர் நான்கு
தொடுத்து மற்றவ னேந்திய தண்டினைத் துணித்துத்
தடத்த மார்பினு மொய்ம்பினு மேழிரு சரங்கள்
விடுத்து மண்மிசை வீட்டினன் யாரையும் வென்றான்.

(இ-ள்.) வராநின்றசமயத்தில் நாலம்புகளைவிட்டு அவன்பிடித்திருந்த தண்டத்தையொடித்து விசாலமான மார்பிலுந்தோளிலும் படுமாறு பதினாலுபாணங்கள் விட்டு யாவரையும்வென்ற சூரபன்மன் வீரதீரனைக் கீழேதள்ளினான்.—எ-று. (கடுஅ)

ஆன காலையில் வீரமா மகேசனு மடலோன்
கூனல் வில்லினு லரிதிவன் றன்வலி கோடன்
மான மார்திறன் மொய்ம்பற்கு மெனமனம் வலியா
வூனுமாவியுங் கவர்வதோர் தெய்வவே லுய்த்தான்.

(இ-ள்.) அவ்வாறானசமயத்தில் பலம்பொருந்திய வீரமாமகேந்திரனென்பவன் வளைந்த வில்லினாலிவன் வன்மையை வாங்குதற்கு மானம்பொருந்திய வீரவாகுதேவருக்கும் அருமையான காரியமேயென்று மனந்துணிந்து பகைவர்களுடைய ஊனையும் உயிரையுமபகரிக்கின்ற ஒரு தெய்வீகமான வேலினை எடுத்துவிட்டனன்.-எ-று. (கடுகூ)

வேல்வி டுத்தலுழிக் கண்டவன் வெஞ்சிலை குனித்துக்
கோல்வி டுத்தலு மாயிர மன்னவை குறைத்துச்
சூல் விடுத்திடு மெழிலிபான் மின்வருந் தொடர்பின்
மால்வி டுத்திடா வவுணன்மார் புற்றதவ் வைவேல்.

(இ-ள்.) வேற்படையினை விட்டவுடனே அதனைக்கண்ட சூரபன்மன் தனது வெவ்விய வில்லினைவளைத்து ஆயிரமம்புகளை விட்டனன் அவைகளை அவ்வேல் ஒடித்தெறிந்து கருவொடுநின்று பெய்கின்ற மேகத்தினிடத்து மின்னல்வருந் தன்மையைப்போல மயக்கநீங்காத அசுரனுடைய மார்பில் வந்துபட்டது.—எ-று. (கசுo)

உற்ற தோரெலும் நுண்டுக ளாகிவிண் ணுலவிச்
சுற்று மாதிரஞ் சென்றது சூரன்மேல் வீரன்
மற்றொர் தண்டினை விடுத்திட வெடுக்குமுன் வல்லோர்
சொற்ற சாபத்தின் முந்துமேழ் கணையினைத் தொடுத்தான்.

(இ-ள்.) மார்பிற்பட்ட வேற்படையானது நுண்ணியதுகளாகி ஆகாயத்திற்ப றந்து சுற்றிலுமுள்ள திக்கிற்குச்சென்றது உடனே சூரபன்மன்மீது விடுதற்கு வீரமகேசன் வேறேயொரு தண்டத்தினை யெடுத்தற்குமுன்னே, வல்லவர்களாலே கூறப்படுகிற வில்லில் உயர்ந்த ஏழம்பினைவைத்துவிட்டனன்.—எ-று.

வல்லவர் சொற்ற சாபத்தின் முந்து மென்றதை தவத்தினுல் வல்லவர்களான முனிவர்களாலே கூறப்பட்ட சாபம் விரைந்து செல்லுமாபோல செல்லத்தக்க கணையினை விட்டான் என்க. (கசுக)

ஏழெ னப்படு பகழியு மகேசனு மேந்தல்
பாழி மொய்ம்பினைப் பாழிய தாகவே படுத்த
வீழ லுற்றதங் கவனுட லுணர்ச்சிகள் வீந்த
சூழு கின்றதோர் மன்னுயி ரடைந்தது துரியம்.

(இ-ள்.) ஏழென்றுகூறப்படுகின்ற வம்பும் வீரமகேசனென்னுந் தலைவனுடைய அகலமான மார்பினைக் குளமாகத்தோண்டுதலும் அவனுடலம் கீழேவிழுந்தது ஐம்புல வுணர்ச்சியுமழிந்தன உடம்பைச்சூழ்ந்து நிலைபெற்ற வுயிரானது துரியாவஸ்தையைய டைந்தது.—எ-று. (கசுஉ)

மகேச னென்பவன் மயங்கலு மற்றது நோக்கிக்
ககேசன் மேல்வரு மிராகுவி னவுணனைக் கனன்று
நகேசன் மங்கையோ டிகலிவேங் கடகிரி நண்ணுங்
குகேச னேவல்செய் வீரகே சரியெதிர் கொண்டான்.

(இ-ள்.) வீரமகேசனென்பவன் மயங்கினவுடனே அதனைக்கண்டு கருடன்மீ தெதிர்த்துச்சென்ற இராகுவைப்போல சூரபன்மனைக்கோபித்து, பார்வதியொடு பகைத்துத் திருவேங்கடகிரியையடைந்த குமரக்கடவுளுக்கு அடிமைத்தொண்டு செய்கின்ற வீரகேசரியானவன் எதிரேசென்றனன்.—எ-று. (கசுஙு)

எதிர்பு குந்தவன் வணக்கியே நாணொலி யெறிந்த
துதிகொள் வார்சிலை தன்னையேழ் கணையினுற் றுணியா
வதிர்கு ரன்மணித் தேரைநூ றம்பினு லறுத்து
நுதிநெ டுங்கணை யழுத்தினு னாயிர நுதலின்.

(இ-ள்.) சூரபன்மன் எதிர்த்துவந்த வீரகேசரி வளைத்து நாணோசைகண்ட கூரோடுகூடிய நீண்டவில்லினை ஏழம்பினுலொடித்து அதிருகின்ற ஓசையினையுடைய மணிகள்கட்டிய தேரினை நூறம்பினுல்அழித்து கூரொடுகூடிய ஆயிரம் அம்புகளை நெற்றியிலழுத்தினுன்.—எ-று. (கசுச)

ஆயி ரங்கணை நுதலிடை யழுத்தவம் புவியிற்
பாய்த ருங்குரு திப்பெரு நதியொடு பாய்ந்து
சேயி ருங்குவ டொன்றினைச் செங்கையாற் பறித்து
மாயை தந்திடு மதலைமேல் விடுத்தனன் மன்னோ.

(இ-ள்.) ஆயிரமம்புகளை நெற்றியிலழுத்துதலும் பூமியில் ஒழுகாநின்ற இரத்த வாற்றுடன் வீரகேசரிகீழே குதித்து செவ்விய பெரிய வொருமலையை கையாற்பிடுங்கி மாயைபெற்ற பிள்ளையான சூரபன்மன்மீது விட்டனன்.—எ-று. (கசுரு)

எறித்த ருஞ்சுடர்த் தபனனுஞ் சேடனு மிரங்கப்
பறித்தெ டுத்துமேல் வீசிய பாரையங் குன்றம்
வெறித்த ருந்தொடை யவுணர்கோன் விசிகமொன் றதனு
லறுத்து மார்பினு றயிற்கணை யழுத்தின னம்மா.

(இ-ள்.) அரிய சுடருடனே எறிக்கின்ற சூரியனும் ஆதிசேடனும் வருந்த பறித்தெடுத்து மேலே வீசியெறிந்த பரிய அரையினையுடைய அழகியமலையை மணம்வீசாநின்ற மலர்மாலையணிந்த அசுராதிபனாகிய சூரபன்மன் ஒரு அம்பினால் உடைத்தெறிந்து அதனைவிட்டவன்மார்பிலும் கூரியநூறம்புகளை அழுத்தினான்.—எ-று. (௧௬௬)

கரம்பு குந்திடுங் குனிசிலை யுமிழ்ந்திடுங் கணைக
ளுரம்பு குந்திட வீரகே சரிமன முளைந்து
பரம்பு குந்திடு மவுணர்கோன் றேர்மிசைப் பாயா
வரம்பு குந்தகுன் றன்னமார் பத்திடை யடித்தான்.

(இ-ள்.) கையிலிருக்கின்ற வளைந்தவில்லில்வைத்து விடப்படுகின்ற அம்புகள் மார்பிற் பிரவேசித்தமையால் வீரகேசரி மனம்வருந்தி கவசம்பூண்டுள்ள அசுரமன்னவனான சூரபன்மனுடைய தேரின்மீதுகுதித்து சிறப்புப்பொருந்திய மார்பினில் அடித்தனன்.—எ-று. (௧௬௭)

வடித்த விற்படை யவுணர்கோன் மருமத்தின் வலிதா
யடித்த காலையில் வீரகே சரிதன் றங்கை
வெடித்த தாமெனக் கீண்டது வீண்டது சோரி
துடித்து யிர்ப்பொடு தேரிடை மறிந்தனன் றுயரால்.

(இ-ள்.) இருபுறமுங் கூராக்கப்பட்ட வில்லாயுதத்தினையுடைய அசுராதிபனுடைய மார்பில் வன்மையாக வடித்தவுடனே வீரகேசரியென்பவனுடைய அகங்கையானது வெடித்தாற்போல பிளந்தது அதனால் இரத்தம் ஒழுகியது. அதனால் துடித்து ஊர்த்துவசுவாசத்துடன் தேரின்மீது துன்புற்று விழுந்தனன்.—எ-று. (௧௬௮)

வீர கோளரி பதைத்துமான் றேரிடை வீழச்
சூரன் மற்றிவற் கொல்வது பழியெனச் சூழா
வோர்கை யாலவன் றனையெடுத் தச்சுத னுறங்கும்
வாரி திக்கிடை யெறிந்தனன் விண்ணவர் மருள.

(இ-ள்.) வீரகோளரியென்பவன் துடித்தவனாகக் குதிரைகள்பூண்ட தேரின் மீது விழுதலும், சூரபன்மனானவன் கீழ்விழுந்த இவனைக்கொல்வது தப்பென்றாலோசித்து, ஒருகையினாலே அவனைத்தூக்கி நாரணன் கண்ணுறங்குகின்ற கடலினிடத்தில் தேவர்மருளுமாறெறிந்தனன்.—எ-று. (௧௬௯)

பரந்த பாற்கட லெறிதலும் வீழ்ந்தவன் பதைப்புற்
றரந்தை யெய்தியே யெழுந்துவிண் ணெறியின்மீண் டணுகி
முரிந்த தம்மினங் கூடின னங்கதன் முன்னம்
புரந்த ரப்பெயர் வாகையா னேற்றெதிர் புகுந்தான்.

(இ-ள்.) அகலமான பாற்கடலிலெறிதலும் அதில்விழுந்தவன் துடித்துந் துன்பமடைந்து பின்னரெழுந்து ஆகாயவழியாகத் திரும்பவந்து முதுகிட்டுநிற்கின்ற தமினத்தை யடைந்தனன். முன்னே வெற்றிபொருந்திய வீரபுரந்தரனென்பவன் எதிர்த்து நேரே சென்றனன்.—எ-று. (௧௭௦)

ஏற்றெ திர்ந்திடு வீரமா புரந்தர னென்பா
னூற்றல் வெங்கணை சொரிந்துபோர் செய்வனே லவற்றை

மாற்றி வென்றிடு மென்னையு மிவனென மதித்துக்
கூற்று வன்படை தொட்டன னவுணனைக் குறுக.

(இ-ள்.) எதிர்த்துச்சென்ற வீரமாபுரந்தரனென்பவன் வன்மைபொருந்திய வெவ்விய அம்புகளைவிட்டுப் போர்புரிவேனாஞல் அவற்றைநீக்கி என்னையும் இவன் வெல்லுவானென்று ஊகித்து, சூரபன்மனிடஞ்செல்லுமாறு எமாஸ்திரத்தை விட்டனன்.எ-று.

குறுகு மப்படை வரத்தினை நோக்கியே கொடியோன்
முறுவல் செய்தன னங்கதற் கெதிருற முரணு
லுறுவ தோர்படை தொட்டில னிகழ்ந்திட வுவன்மேன்
மறலி தன்படை பட்டுமாய்ந் திட்டது வரத்தால்.

(இ-ள்.) தன்னைநோக்கி வருகின்ற அவ்வெமாஸ்திரத்தின் வருகையைப்பார்த்து கொடியவனான சூரபன்மன் சிரித்தவனாய் அதற்கெதிரேசெல்ல பலத்தொடுபொருந்திய ஒரு அம்பினையும் விடாமலிகழ்ந்தனன் அவ்வாறிழந்த வவன்மீது எமாஸ்திரமானது வந்துபட்டு இறைவன்கொடுத்துள்ள வரத்தினால் அழிந்தொழிந்தது.—எ-று.(கஎஉ)

தண்ட கன்படை மாய்தலுஞ் சயங்கெழு மகவான்
முண்ட கன்படை யெடுத்தனன் றொடுப்பதன் முன்னங்
கண்ட கன்சிலை வாங்கிநூ றுயிரங் கணையை
விண்ட கன்பெரு மார்பகந் திறந்திட விடுத்தான்.

(இ-ள்.) எமாஸ்திரமழிதலும் வெற்றியொடு விளங்குகின்ற வீரபுரந்தரன் பிரமாஸ்திரத்தை எடுத்து விடுதற்குமுன்னே அசுரன் வில்வளைத்து நூறுயிரமம்பினை அகன்ற பெரிய மார்பிடந் திறக்குமாறு விட்டனன்.—எ-று. (கஎ௩)

நிறந்த ருஞ்சுடர்க் கணைபுகுந் துரத்தினை நெறியாத்
திறந்து போயின வீரமா புரந்தரன் செங்கை
யுறைந்த நான்முகப் படையொடுஞ் சோரிநீ ருமிழ்ந்து
மறிந்து மாய்ந்தனன் வந்தனன் வீரர்தம் மறலி.

(இ-ள்.) நன்னிறம்பொருந்திய சுடரோடுகூடிய அம்புபிரவேசித்து மார்பை வழியாகத்திறந்துசென்றது; அதனுல் வீரமாபுரந்தரன் செவ்வியகையிற்பொருந்திய பிரமாஸ்திரத்துடன் இரத்தவெள்ளத்தை கக்கிக்கொண்டு விழுந்தழிந்தனன். உடனே வீரராந்தகன் வந்தெதிர்த்தனன்.—எ-று. (கஎ௪)

தீர ராந்திற லவுணர்கள் பூதராஞ் சிதைவார்
சூர ராஞ்சிலை வல்லவர் நமரெலாந் தொலையு
நீர ராஞ்செருச் செயலிது நன்றெனா நிகழ்த்தி
வீர ராந்தகன் வந்தன னந்தகன் வெருவ.

(இ-ள்.) தீரர்களாகவுள்ளவர்கள் அசுரர்களாம் அழிபவர்கள் பூதர்களாம் சூரர்களாம், வில்வல்லவர்கள். நம்மவர்களனைவரும் அழியுந்தன்மையினை யுடையவர்களாம். சண்டைத்திறம் இது நன்றாயிருக்கின்றது என்றுகூறி எமனுமஞ்சுமாறு வீரராந்தகன் வந்தனன்.—எ-று. (கஎ௫)

சார்ங்க மன்னதோர் வலியதாய் மாமதன் றனுவா
மீர்ங்க ரும்பென வரிபடு சிலைகுனித் தேற்றுக்
கார்ங்க ரும்புய லாமென நாணொலி காட்டிக்
கூர்ங்கொ டுங்கணை சிதறிநின் றார்ப்பிசை கொண்டான்.

(இ-ள்.) சார்ங்கத்தைப்போல வல்லபமுள்ளதாய் மன்மதனுடைய வில்லாகிய குளிர்ந்த கரும்பைப்போல அரிகளொடுபொருந்திய வில்லைவளைத்து ஆணிடியினையு

டையதும் கார்காலத்துள்ளதும் கருநிறம் வாய்ந்ததுமான மேகத்தைப்போல நாணோசையைக்காட்டிக் கூரியகொடிய அம்புகளைவிட்டு ஆரவாரவோசை காட்டினான்.—எ-று.

ஆர்ப்பெ டுத்தலு மஞ்சினன் கதிரவ னங்கம்
வேர்ப்பெ டுத்தன ரமரர்கள் விஞ்சையர் விண்டார்
சீர்ப்பெ டைக்குல மலமரக் கின்னரஞ் சிந்திப்
பார்ப்பெ டுத்திரி கின்றன கேசரப் பறவை.

(இ-ள்.) கர்ச்சித்தவுடனே சூரியனஞ்சினன் தேவர்களுடல்வேர்த்தனர் வித்தியாதரர்கள் வீணைகளைச் சிதறவிட்டு விலகியோடினார்கள்; சிறந்த பெண்வண்டுகள் வருந்த இளவண்டுகளை எடுத்துக்கொண்டு ஆண்வண்டுகள் சிதறின.—எ-று (கஎஎ)

ஆன காலையில் வீரராந் தகன்விடு மம்பின்
சோனை மாரியைக் கணைகளால் விலக்கியே சூர
னூனு மாவியுங் கவருமா யிரங்கணை யுய்ப்பத்
தானு மாயிரம் பகழிதொட் டன்னதைத் தடுத்தான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் வீரராந்தகன் விடுகின்ற அம்பின் சோனமாரியை அம்புகளாலே தடுத்து, சூரபன்மன் ஊனையும் உயிரையு மபகரிக்கின்ற ஆயிரமம்புகளைவிடுதலும் தானும் ஆயிரமம்புகளைவிட்டு அவைகளைத் தடுத்தனன்.—எ-று. (கஎஅ)

தடுத்த காலையி லவுணர்கோன் சினவிமுத் தலைசேர்
வடித்த வச்சிரச் சிலீமுக மாயிரம் வல்லே
யெடுத்து விட்டிட வீரராந் தகன்றமக் கெதிரா
விடுத்த பல்லவம் யாவையுஞ் சிந்தியே விரைந்த.

(இ-ள்.) தடுத்தவுடனே சூரபன்மன் கோபித்து மூன்றுதலைகள் பொருந்திய வடிக்கப்பட்ட ஆயிரம் வச்சிராஸ்திரங்களை விரைவாக எடுத்துவிட அவை வீரராந்தகன் தமக்கெதிராக விட்ட அம்புகளையெல்லா மழித்துக்கொண்டே சென்றன.—எ-று. ()

விரைந்து போய்விற லந்தகன் றேரினை வீட்டிக்
கரந்த னிற்சிலை யொடித்துவீ ரத்தினைக் கலக்கி
தாரந்த னிற்புகுந் துணர்வுண்டு சோரிநீ ருகுத்துப்
புரந்த ரற்குளந் துணுக்குறப் போயது புறத்தில்.

(இ-ள்.) விரைந்துசென்று வீரராந்தகன் தேரினையழித்து கையிலுள்ள வில்லினை ஒடித்து வீரத்தினையுங்கலக்கி மார்பிற்புகுந்து அறிவையருந்தி இரத்தநீரைச் சிந்தி இந்திரற்கு மனந் திடுக்கிடுமாறு வெளியே சென்றது.—எ-று. (கஅ௦)

விறல்ப டைத்திடு மந்தகன் கணைபட வீழ்ந்து
மறல்ப டைத்திட வாங்கது நோக்கியே மனத்தி
னுறல்ப டைத்திடு செற்றமு மானமு முகைப்பத்
திறல்ப டைத்திடு மொய்ம்பினு னவுணன்மேற் சென்றான்.

(இ-ள்.) வெற்றியையடைகின்ற வீரராந்தகன் அம்புபட்டு வீழ்ந்து மறவியையடைய அதனைப்பார்த்து மனத்திற்பொருந்திய கோபமும் மானமும் பிடித்துத்தள்ள வீரவாகுதேவர் சூரபன்மன் எதிரிற் சென்றனர்.—எ-று. (கஅக)

அரிக ளச்சுறும் வீரவா குப்பெய ரறிஞ
னிரத மூர்ந்துவந் தேற்றலு மாங்கவ னெழில்சே
ருருவ நோக்குறு வொற்றனு மிவனென வுன்னிப்
பெரிது வெஞ்சின மெய்தியே யவுணர்கோன் பேசும்.

(இ-ள்.) பகைவர்களஞ்சுகின்ற வீரவாகுதேவரொன்னும் அறிவுடையவர் தேரோ திவந்தெதிர்த்தலும் அவருடைய அழகுபொருந்திய உருவத்தைப்பார்த்து இவன் தூதனே என்று எண்ணி மிகவுங்கோபங்கொண்டு அசுராதிபனாகிய சூரபன்மன் கூறுவானாயினன்.—எ-று. (௧அ௨)

எமது வீரமா மகேந்திரஞ் சாடியெண் ணில்லாத்
தமரை யட்டனை தானைக ளளப்பில தடிந்தாய்
குமரர் தங்களைக் கொன்றனை நின்னுயிர் கொண்டே
யமரி னாற்றலை யின்றுடே முடிக்குவ னம்மா.

(இ-ள்.) நீ எம்முடைய வீரமகேந்திரபுரியை அழித்து அளவற்ற எமது சுற்றத்தினரைக்கொன்றனை சைநியங்களையும் அளவற்றனவாகக்கொன்றனை பிள்ளைகளையுங்கொன்றாய் ஆதலால்உன்னுயிரைவாங்கி உன்போர்வல்லபத்தைஇன்றேடேஅழிக்கின்றேன்.

பற்று பட்டிமை பயிற்றியே யமைச்சரிற் பன்னி
யொற்ற னாகியே யின்னும்வந் தாயெனி னுய்தி
மற்ற தேகடன் வார்சிலை பிடித்தனை மாண்டா
யிற்றை வைகலோ நின்னுயிர்க் கிறைத்தநா ளென்றான்.

(இ-ள்.) பொருந்தியவஞ்சனைகளைப் பழக்கி மந்திரியர்களைப்போல கூறி தூதனாகவே இன்னமும் வந்தாயானல் பிழைத்தனை; உனக்கு அதுதான் முறைமை அதைவிட்டு வாரொடுகூடிய வில்லைப்பிடித்தனை இனி இறந்தாய் இத்தினந்தானே உன்னுயிர்க்கு முடிவேற்பட்டநாள் என்று கூறினான்.—எ-று. (௧அ௪)

தூது மாகுவ னமைச்சனு மாகுவன் றுன்னார்
மீது வெஞ்சம ராற்றுவ னின்னமும் வேலோ
னேதி டும்பணி யாவையுஞ் செய்குவ னுலகி
லேதும் வல்லன்யான் வேண்டுபோர் புரிதியா லென்றான்.

(இ-ள்.) தூதுமாவேன் அமைச்சனுமாவேன் பகைவர்மீது கொடும்போர்புரிவேன் இதுவன்றியும் வேற்படைக்கடவுளா லிடப்பட்ட பணிவிடைமுழுமையும் செய்குவன் உலகிலெல்லாம் வல்லவன்யான் உன்னிஷ்டம்போல நீ போர்புரிவாயாக.-எ-று.

என்று வீரனே திடுதலு மெரிந்தன நயனந்
தின்ற வாளெயி றிதழினை யுரோமங்கள் சிலிர்த்த
துன்று சீற்றமுள் ளெழுந்தது சூரனு மவுணன்
குன்ற மன்னவிற் குனித்தன னொலி கொண்டான்.

(இ-ள்.) என்றிவ்வாறு வீரவாகுதேவர் கூறுதலும் சூரபன்மனுக்கு கண்களெரிந்தன; ஒளிபொருந்திய பற்களால் இதழ்களை மென்றனன் உரோமங்கள் சிலிர்த்தன நெருங்கிய கோபமுள்ளே தோன்றியது, அதனால் மலைபோன்ற தன்வில்லினை வளைத்துநாணொலை கண்டனன்.—எ-று. (௧அ௬)

சிலைப னித்திடக் குனித்திடு காலையிற் செம்பொன்
மலைப னித்தன பாரகம் பனித்தன வான்றோ
யலைப னித்தன வண்டமும் பனித்தன வங்கட்
டலைப னித்தன னரவினுக் கிறையவன் றானும்.

(இ-ள்.) வில்லினை அசையுமாறு வளைத்தவுடனே செவ்விய பொன்மயமான மலைகள் நடுங்கின; பூமியினிடங்களும் நடுங்கின, மேகம்படிந்து கிடக்கின்ற கடலுநடுங்கின; அண்டங்களுநடுங்கின; அவ்விடத்திலுள்ள தலையை அரவாதிபனாகிய ஆதிசேடனுமசைத்தனன் .—எ-று. (௧அ௭)

அம்முறை வேலையி லாடல்கொண் மொய்ம்பிற்
செம்மற னுது செழுங்கர முற்ற
மைம்மலி வார்சிலை வன்மையின் வாங்கிக்
கொம்மென நாணொலி கொண்டன னார்த்தான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் தனது செழுமையான கையிலிருக்கின்ற மிகவுங்கரிய நீண்ட வில்லினைப் பலமாக வளைத்து விரைவாக நாணோசைகாட்டிக் கர்ச்சித்தனர்.—எ-று. (௧அஅ)

ஆர்த்திடு பேரொலி யாங்கவன் வாங்குஞ்
சீர்த்தனு வார்ப்பொடு சென்றிடு காலை
மூர்த்தம தொன்றினின் முச்சக வைப்பும்
பேர்த்தென வேபெயர் குற்றன வன்றே.

(இ-ள்.) கர்ச்சிக்கின்ற பெரியதொனியானது அவரால் வளைக்கப்பட்ட சிறந்த வில்லினோசையுடனே கலந்து சென்றபோழ்து ஒருமுகூர்த்தத்திற்குள்ளே மூன்றுலகங்களையும் பெயர்த்தெடுத்தாற்போல சென்றன.—எ-று. (௧அகூ

அங்கது காலையி லாயிர கோடி
துங்கநெ டுங்கணை தூர்த்தன னார்ப்பப்
புங்கவ னுக்கிளை யான்புய லென்ன
வெங்கணை வீசிவி லக்கின னின்றான்.

(இ-ள்.) அப்பொழுது சூரபன்மன் வெற்றிபொருந்திய ஆயிரங்கோடியம்புகளை விட்டு ஆரவாரித்தலும் உடனே தேவசேனாபதிக்கிளையவரான வீரவாகுதேவர் மேகத்தைப்போல அம்புகளைவிட்டு அவைகளையறுத்தனர்.—எ-று. (௧௯0)

விலக்கிய காலை வெகுண்டிவ னாவி
கலக்குவ னென்று கடுஞ்சரம் வெய்யோ
னிலக்கம் விடுத்திட வேந்த றடுத்தான்
கொலைக்கணை யாயிர கோடி தொடுத்தே.

(இ-ள்.) விலக்கியவுடனே கோபங்கொண்டு இவனுயிரை கலக்குவேனென்று கொடிய இலக்கம் அம்புகளை விடுதலும் அவைகளைக்கொலைத்தொழிலினையுடைய ஆயிரகோடியம்புகளை விட்டு வீரவாகுதேவர் தடுத்தனர்.—எ-று. (௧௯௧)

வெற்றிகொள் வான்பினும் வெங்கணை கோடி
செற்றமொ டேசெறி வித்திடு காலை
மற்றவை சிந்தினன் வாளிக ணூறு
நெற்றியில் விட்டன னீள்புய வீரன்.

(இ-ள்.) வெற்றியடையும்வண்ணம் பின்னரும் கோடி கொடியவம்புகளை கோபத்துடனே விடுதலும் அவைகளைத் தடுத்தவனாய் நீண்டதோள்களையுடைய வீரவாகுதேவர் நூறம்புகளை அவனெற்றியிற்படுமாறு விட்டனர்.—எ-று. (௧௯௨)

அச்சுத னாமவு ணன்குள மெய்தி
மெய்ச்சர நூறும் விளிந்துபின் விண்ட
வச்சிர மாகிய மால்வரை யொன்றி
னுச்சியி னுற்றபொன் னூசிக ளென்ன.

(இ-ள்.) அழிவற்றவனாகவுள்ள சூரபன்மனுடைய நெற்றியையடைந்து ஒரு பெரிய வச்சிரமலையின்மீது தைத்த பொன்னூசிகளைப்போல அந்நூறம்புகளும் அழிந்துவிழுந்தன.—எ-று. (௧௯௩)

நூறயில் வாளி நுதற் கிடைசென்று
மூறில னாகி யுறுந்திற னோக்கி
யாறுமு கேச னயிற்படை யல்லா
வீறுசெ யாதிவன் யாக்கையை யென்றான்.

(இ-ள்.) நூறு கூரியவம்புகள் நெற்றியில்வந்துபட்டும்ஊறற்றவனாகவிருக்குந் தன்மையைப்பார்த்து வீரவாகுதேவர் இவனுடம்பைச் சண்முகப்பெருமானுடையவேற் படையன்றி வேறொன்றும் அழிக்காது என்றனர்.—எ-று. (கக௪)

என்றிடும் வீர னிதற்பினும் வாளி
துன்றுபல் கோடி சொரிந்திட வெய்யோன்
வன்றிறல் வெங்கணை யாலவை மாற்றி
யொன்றுட னேழ்கணை யொண்புய முய்த்தான்.

(இ-ள்.) என்று கூறிய வீரவாகுதேவர் அதற்குப்பின்னருநெருங்கிய பலகோடி யம்புகளைவிட கொடிய சூரபன்மன் மிக்கவலிமையினையுடைய அம்பினாலே அவைகளைத்தடுத்து எட்டம்புகளை யொள்ளியதோளின்மீது விட்டனன்.—எ-று. (கக௫)

அம்பிரு நான்கு மணைந்துட னுடன்
மொய்ம்பினன் மொய்ம்புற மூழ்கியுள் ளூற்ற
செம்புன லுண்டு செழும்பிடர் போழ்ந்தே
யும்பர் வெருக்கொள வோடிய மாதோ.

(இ-ள்.) எட்டம்புகளும் வந்து வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவரின் தோளிற்பட்டு இரத்தத்தைப் பானஞ்செய்து செழுமையான பிடரியைப் பிளந்துகொண்டு தேவர்களஞ்சுமாறு சென்றன.—எ-று. (கக௬)

ஓடிய வேலையு ளைந்திடு நெஞ்ச
னுடல்கொண் மொய்ம்பின னவ்வசு ரேசன்
பாடுறு தேர்விடு பாகர்த மெய்யிற்
கோடிபல் கோடி கொடுங்கணை விட்டான்.

(இ-ள்.) ஓடியவுடனே வருந்தியமனத்தினையுடைய வீரவாகுதேவர் அச்சூரபன் மனுடைய பெருமைபொருந்திய தேரோட்டுகின்ற சாரதிகளுடம்பிற் பலகோடிக் கொடிய வம்புகளைவிட்டனர்.—எ-று. (கக௭)

அலகி னெடுங்கணை யாக மழுந்த
வலவர்க ளாற்ற வருந்தின ராகிப்
புலவொடு சோரி புறத்தில் விளங்க
விலவம லர்ந்தென யாரு மிருந்தார்.

(இ-ள்.) அளவற்ற நீண்ட வம்புகள் உடம்பிலழுந்தினமையால் சாரதிகள் மிகவும் வருத்த முற்றவர்களாய் மாமிசத்துடன் இரத்தமும் வெளியில்விளங்க இலவ மலர்ந்தாற்போல யாவர்களு மிருந்தார்கள்.—எ-று. (கக௮)

அங்கது நோக்கி யழன்றசு ரேசன்
செங்கணை யைம்பது தீயென வோச்சி
வெங்கண் விறற்புயன் மேதகு தேனாப்
பொங்குளை மாவொடு பொள்ளென வட்டான்.

(இ-ள்.) இதனைக்கண்டு கோபித்துச் சூரபன்மன் செவ்விய ஐம்பது பாணங்களைத் தீயைப்போலவிட்டு வைராக்கியத்தினையுடைய வீரவாகுதேவர் ஏறியிருந்த தேரினைப் பிரகாசிக்கின்ற புறமயிரோடுகூடிய குதிரைகளுடனே விரைவாக வழித்தனன்.

அட்டிடு காலை யடற்புய னுங்கோர்
வட்டணை யாழி கொள் வையம தேறி
நெட்டழல் வாயு நெடும்படை தன்னைத்
தொட்டன னுங்கது சூர னறிந்தான்.

(இ-ள்.) அழித்தவுடனே வீரவாகுதேவர் அவ்விடத்தி லொருவட்டத்தினையுடைய சக்கரங்களையுடைய தேரின்மீதேறி மிகுந்த தீயை கக்குகின்ற அக்கினியாஸ்திரத்தையும் நீண்டவாயுவாஸ்திரத்தையும் விட்டனர்; அதனைச்சூரபன்மனுணர்ந்தனன்.

வேறு.

வீறுகிய வசுரர்க்கிறை மிகமூரல் படைத்து
மாறுகவொர் படைதொட்டிலன் வரிவில்லொடு நிற்பச்
சூறுவளி யழன்மாப்படை சூரன்மிசை தாக்கி
யூறுயின நூறுயிர முதிராயின பிதிராய்.

(இ-ள்.) பெருமையினையுடைய அசுராதிபனான சூரபன்மன் மிகவுஞ் சிரித்து வேறேயொரு ஆயுதத்தினையும் விடாமல் வரியப்பட்ட வில்லுடனே நிற்றலும் தீமயமான அக்கினியாஸ்திரமும் வாயுவாஸ்திரமும் சூரபன்மன்மீதுபட்டு ஊறுகி நூறுயிரம் பிதிர்களாக வுதிர்ந்தன.—எ-று. (௨0௧)

காற்றின்படை கனலின்படை கண்டம்பல வாகக்
கூற்றின்படை கதிரின்படை கூடத்தொடுத் திடலுஞ்
சீற்றங்கெழு சூரன்மிசை சென்றேயவை தாமு
மேற்றந்தனை யிழந்தேகடி திறந்திட்டன வன்றே.

(இ-ள்.) வாயுவாஸ்திரமும் அக்கினியாஸ்திரமும் பலதுண்டுகளாக வாதலும் உடனே வீரவாகுதேவர் எமாஸ்திரத்தையும் சூரியாஸ்திரத்தையும் ஒன்றாக விடுதலும் அவைகளும் கோபத்தோடு நிற்கின்ற சூரபன்மன்மீது சென்றுபட்டு அழகழிந்து விரைவிலழிந்தன.—எ-று. (௨0௨)

அருணன்படை மறலிப்படை யழிவெய்தலு மம்மை
சரணந்தனில் வருசத்திக டருமைந்தரிற் றலைவன்
வருணன்படை நிருதிப்படை மகவான்படை மூன்று
முரணங்கொடு கொடியோனுர மொய்ம்பிற்புக விடுத்தான்

(இ-ள்.) சூரியாஸ்திரமும் எமாஸ்திரமும் அழிதலும் உமாபிராட்டியாருடைய திருவடி சம்பந்தமாக வுண்டான சத்திகளாலளிக்கப்பட்டவர்களில் முதல்வரானவர் வருணாஸ்திரம் நிருதியாஸ்திரம் இந்திராஸ்திரம் ஆகிய மூன்றினையும் வன்மையுடனே கொடியவனாகிய சூரபன்மனுடைய மார்பிற்படும்வண்ணம் விட்டனர்.—எ-று. (௨0௩)

ஏயுற்றவை யவுணர்க்கிறை யிருதோளுரமெய்தி
வீயுற்றன வதுகாலையில் வீரங்கெழு மொய்ம்பன்
மாயப்படை யவுணப்படை வல்லேசெல விடுப்பப்
போயப்படை யவன்மெய்யிடை புகுந்தேபொடி யான.

(இ-ள்.) சென்ற வம்புகள் அசுராதிபனுடைய இரண்டு தோள்களிலும் மார்புகளிலும் பட்டு அழிந்தன; அப்பொழுது வீரவாகுதேவர் மாயாஸ்திரத்தையும் அக்கினியாஸ்திரத்தையும் விரைவாகச் செல்லுமாறு விடுதலும் அவன்மார்பிற் சென்று பட்டு அவைகளும் பொடியாயின.—எ-று. (௨0௪)

விண்ணோர்படை யிவையாவையும் விளிவாதலும் வீர
னண்ணுன்பெரு விறல்கண்டன னனிவிம்மித னாகி

மண்ணோடுயிர்த் தொகையாவையும் வகுத்தோன்படை நளினக்
கண்ணோன்படை யொடுகூட்டுபு கடிதிற்செல விடுத்தான்.

(இ-ள்.) தேவதாஸ்திரங்களான இவைகளனைத்தும் அழிந்தவுடனே வீரவாகுதேவர் சூரபன்மனுடைய வன்மையைப்பார்த்து ஆச்சரியமடைந்தவராகி மண்ணுலகத்துட னுயிர்வருக்கங்களனைத்தையும் உண்டாக்கின. பிரமனஸ்திரத்தையும் நளினாட்சனாகிய நாராயணனுடைய அஸ்திரத்தையும் ஒன்றாய்ச்சேர்த்து விரைவாகச் செல்லுமாறு விட்டனர்.—எ-று. (உ0௫)

விடுக்குற்றிடு மயன்மால்படை விரைந்தேசினம் வீங்கி
யடுக்குற்றிடு முருமுப்புகை யழல்கால்பல படைகண்
மடுக்குற்றிடு புணரித்தொகை வகுத்தெவ்வகை யுலகு
நடுக்குற்றிட வவுணற்கெதிர் நடந்திட்டன மாதோ.

(இ-ள்.) விடப்பட்ட நான்முக நாராயணஸ்திரங்கள் விரைவாகச்சென்று கோபமதிகரித்து, அடுக்காகப்பொருந்திய இடியும் புகையும் அழலுமாகிய விவைகளை கக்குகின்ற பலவாயுதங்கள் நிறைந்தனவாகிய கடல்வருக்கங்களை உண்டாக்கி எப்படிப்பட்ட வுலகமும் நடுங்கும் வண்ணம் சூரபன்மனெதிரே சென்றன.—எ-று. (உ0௬)

ஆண்டேவரு பயன்மால்படை யவுணன்றட மார்பங்
கிண்டேகுது மென்றேயவன் கிளர்தாரக லத்தின்
மூண்டேசின மொடுதாக்கிய முழுமாமணி வயிரச்
சேண்டோய்கிரி துளைப்பான்முயல் சிறைவண்டின மெனவே.

(இ-ள்.) அவ்விடத்திற்குவந்த நான்முகன் நாரணன் என்பவர்களின் அம்புகள் நிறைந்த பெரிய மணிகளையுடையதும் மேகம்படிந்ததும் வச்சிரமயமானதுமான மலையைத்துளைத்தற்கு முயல்கின்ற இறகினையுடைய வண்டு கூட்டங்களைப்போல, அச்சூரபன்மன் மார்பிடத்தை பிளந்துகொண்டு செல்வோமாகவென்று விளங்குகின்ற மாலையணிந்த மார்பிற் கோபங்கொண்டு முட்டின.—எ-று. (உ0௭)

மாயோன்படை யுலகந்தரு மறையோன்படை யவுணத்
தீயோனுரந் தனிற்பாய்ந்து திருத்தொல்வலி சிந்தி
மீயோங்கிய வசுரேசரும் விண்ணோர்களு நோக்கி
யேயோவென வசையெய்தி யிரிந்திட்டன வன்றே.

(இ-ள்.) திருமாலினம்பும் உலகங்களைப்படைத்த பிரமனம்பும் அசுரனாகிய கொடியவனுடைய மார்பிற்பட்டுத் தமழகிய பழைய வலியிழந்து மிகவுமுயர்ந்த அசுராதிபர்களுந் தேவர்களும்பார்த்து ஏ ஒ என்று கூறுமாறு இழிவடைந்து விலகின.

மீளுற்றவை யிரியுஞ்செயல் விழிதியுற நோக்கி
நீளுற்றிடு திறன்மொய்ம்பின னிமலன்வர முன்னிக்
கோளுற்றிடு பெருவிம்மிதங் கொண்டுற்றிட வண்ட
மாளுற்றிடு மவுணர்க்கிறை நகைசெய்திவை யறைவான்.

(இ-ள்.) அவைகள் வன்மையற்றனவாகத் திரும்பிவருதல் நீண்ட வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் கண்களில் தீப்பொறிபறக்கப்பார்த்து மிகவும் ஆச்சரியமடைந்து நிற்றலும் அண்டங்களை ஆள்கின்ற அசுராதிபன் சிரித்துக்கொண்டு இவைகளைக் கூறுகின்றனன்.—எ-று. (உ0௯)

முத்தேவரின் முதலாகிய மூவாமுதல் வரத்தா
லெத்தேவர்கள் படையுய்க்கினு மெனைவெல்கில வெந்தப்

புத்தேள்படை விடினும்மெதிர் பொரவேயொரு படையு
முய்த்தேதடை வினைசெய்கில னவற்றின்வலி யுணர்வேன்.

(இ-ள்.) திரிமூர்த்திகளின் முதல்வனாகிய மூவாமுதல்வனுடைய வரத்தினால் எந்தத்தேவர்களின் அஸ்திரங்களைவிட்டாலும் அவைகள் என்னை வெல்லா; எந்தத் தேவர்களின் அம்புகளை விட்டாலும் அவைகளோடெதிர்த்துப் போர்புரிதற்கு எந்த ஆயுதத்தையும் விட்டுத் தடுக்கமாட்டேன், அவைகளின் வல்லபங்களை யான் உணர்வேன்.—எ-று. (௨௧௦)

ஊனீத்திடு தவவிண்ணவ ருலகம்புக ழயன்மா
ருனீத்துள படையென்னிடை சார்கின்றதொர் தன்மை
மாநீத்தமே லாமுண்டிடு வடைவைத்தழ லதனைத்
தேனீத்தொகை தசையீதெனச் சேருந்திறனன்றே.

(இ-ள்.) ஊனினை விரதத்தின்பொருட்டு வாட்டுகின்ற அல்லது தள்ளிய தவத்தினையுடைய தேவர்களும் சனங்களாலே புகழப்படுகின்ற அயன் அரி என்னும் இவர்கள் அளித்த ஆயுதங்களும் என்னிடத்திற்கு வருந்தன்மை மகத்தான கடல்நீரனைத்தையும் உண்கின்ற வடவாக்கினியை தேனீக்கூட்டங்கள் இது மாமிசமென்று செல்லுந் தன்மையைப்போலாம்.—எ-று. (௨௧௧)

தெரிந்திட்டனை நீயோச்சிய திறல்வெம்படை யென்பாற்
புரிந்திட்டதொர் வயமொன்றிலை பொள்ளென்றுர மேவி
முரிந்திட்டன மறிந்திட்டன முடிந்திட்டன பொடிந்தே
யெரிந்திட்டன கரிந்திட்டன வியைந்திட்டன வல்லால்.

(இ-ள்.) நீ விட்ட வெற்றியினையுடைய வெவ்விய வம்புகள் என்னிடத்திற்கு விரைவாகவந்து என்மார்பிற்பட்டு முரிந்தன மறிந்தன முடிந்தன பொடிந்து எரிந்தன கரிந்தன இடைந்தன ஆயினவேயன்றி என்னிடத்து அவைகள் நடத்திய வெற்றியொன்றுமில்லை. இதனை நீயே பார்த்தனை.—எ-று. (௨௧௨)

வில்வன்மைகொள் சரவன்மையும் விண்ணோர்படைக் கலத்தின்
பல்வன்மையும் பிறவாகிய படைவன்மையு மியல்பாந்
தொல்வன்மையுங் கண்டேயுனைத்தொலைவில்படை யொன்றாற்
கொல்வன்னெனக் காலந்தெரி கூற்றுமென நின்றேன்.

(இ-ள்.) நானுன்னுடைய வில்லின் வல்லமைபொருந்திய அம்பின்வல்லபத்தையும் தேவராயுதங்களின் பல வன்மைகளையும், அயலாகவுள்ள வாயுதங்களின் வன்மைகளையும், இயல்பாகவுள்ள உனதுபெரிய வல்லபத்தையும் பார்த்துப் பின்பு உன்றனை அழியாவொருவம்பினால்கொல்வேனென்று காலம்பார்க்கின்ற எமனைப்போலநின்றேன்.

என்னுவசு ரன்செப்பலு மிளையோனினி யொன்று
லொன்னார்களிற் றலைவன்வலி யுணர்வேனென வுன்னுத்
தொன்னாளெயின் மூன்றட்டருடேயோன்படைக் கலத்தை
மன்னாரருள் புரிசிந்தனை வழிபாட்டொடு விடுத்தான்.

(இ-ள்.) என்று சூரபன்பணிசைத்தலும், குமரக்கடவுளினிளையவன் இனி இவ்வொரு அம்பினால் பகைவர்களிற் சிறந்தவர்களது வல்லபத்தை அறிவேனென்று நினைத்து முன்னாளில் முப்புரங்களை யழித்தருளிய நின்மலனாகிய சிவபெருமானுடைய பெயரால் விளங்காநின்ற அம்பினை நிலைபெற்ற அருளினை அவ்விறைவன் தரத்தக்க வந்தனத்துடன் விட்டனன்.—எ-று. (௨௧௪)

விடுங்காலையி னிறைவன்படை விடம்வெங் கனலசனி
கொடுங்கா லிருள்கதிர் வெய்யவன்கூற் றம்பலகூளி
தொடுங்கார் முகச்சரமாரிகள் சூலம்புடை சுற்ற
வடுங்காலமி தெனவே நெடிதார்த்துற் றதையன்றே.

(இ-ள்.) விட்டவுடனே இறைவனுடைய அம்பானது விடத்தையும், வெவ்விய தீயையும், இடியையும், கொடிய காற்றினையும், இருளினையும், ஒளியினையுடைய சூரியனையும், எமனையும், பல கூளிகளையும், விடாநின்ற வில்லிற்பொருந்திய அம்பு மழையையும் சூலத்தையும் சுற்றிலுங்கொண்டு இது உலகத்தை அழிக்குங்காலமென்று கூறுமாறு மிகவும் ஆரவாரத்துடன் வந்தது.—எ-று. (உகரு)

உறுகின்றதொர் படைநோக்கின னுரமுற்றெனக் குடைந்தே
யிறுகின்றதொர் படைமற்றல வீசன்படை யீதாற்
பெறுகின்ற வப்படையாலிது பிழைசெய்குவ லென்னாச்
செறுகின்றதொ ரவுணர்க்கிறை சிவன்றொல்படை யெடுத்தான்

(இ-ள்.) பகைவர்களைக் கொல்லுகின்ற வொப்பற்ற குணத்தினையுடைய அசுராதிபனான சூரபன்மன், வராநின்ற அம்பினைப்பார்த்து இது மார்பிற்பட்டு எனக்குத் தோற்று அழிகின்ற ஆயுதமல்ல; இது சிவாத்திரம் நானவ்விறைவனிடத்துப்பெற்ற அவ்வம்பினாலேயே இதனைத் தடுப்பனென்று சிவாத்திரத்தை எடுத்தனன்.—எ-று. ()

ஊறேற்றிடு தன்சிந்தையி னுறுபூசனை நிரப்பி
யாறேற்றிடு சடிலத்தவ னடன்மாப்படை தொடுப்ப
நீறேற்றிடு மொய்ம்பன்விடு நிமலப்படை யெதிர்போய்
மாறேற்றமர் புரிந்திட்டது வையத்தவர் வெருவ.

(இ-ள்.) குற்றங்குடிகொண்ட தன்மனதினால் அம்புவிடுதற்கேற்ற அருச்சனைகளை நிறைவேற்றி கங்கையைத் தரித்துக்கொண்டிருக்கின்ற சடாபாரத்தினையுடையவனுடைய பலம்பொருந்திய பெரிய அம்பினை விடுதலும் அது விபூதியணிந்த தோள்களையுடைய வீரவாகுதேவர் விட்ட சிவாஸ்திரத்தினெதிரேசென்று பகையாக வெதிர்த்து உலகிலுள்ளவர்க ளஞ்சும்வண்ணம் போர்புரிந்தது.—எ-று. (உகஎ)

வேறு.

காண்டகு நுதல்விழிக் கடவுண் மாப்படை
யாண்டவை யிரண்டு நின்றுட லாற்றியே
மாண்டிடு முலகென வானம் போற்றிட
மீண்டன வொல்லையில் விட்டுளோர் கள்பால்.

(இ-ள்.) காணத்தக்க நெற்றிக்கண்ணினையுடைய இறைவனுடைய பெரிய வம்புகளிரண்டும் அவ்விடத்தில் நின்று போர்புரிந்து இதனாலுலகமழியுமென தேவர்கள் துதிக்க விரைவாகவிட் டவர்களை நோக்கித் திரும்பிவந்தன.—எ-று. (உகஅ)

அன்னது நோக்கியே யசுரர்மேலையோ
னின்னவை கொல்லுனக் கியன்ற வன்மைக
ளுன் னுயி ரின்னினி யொழிப்பன் காண்கெனாத்
தன்னெடுஞ் சிலைவளைச் சரங்கள் சிந்தினான்.

(இ-ள்.) அதனை அசுராதிபனாகிய சூரபன்மன் கண்டு இவைதானா உன்னிடத்தமைந்த வல்லபங்கள், இனி உன்னுயிரை வாங்கிவிடுகின்றேன் பாரென்று தனது பெரிய வில்லைவளைத்து அம்புகளை விட்டனன்.—எ-று. (உகக)

துன்புறு வடிக்கணை சூரன் சிந்தலுந்
தன்பெருஞ் சிலையினைத் தானும் வாங்கியே
முன்புற நெடுஞ்சர முகிலிற் றூவினான்
பொன்புனை யலங்கலம் புயத்து வள்ளலே.

(இ-ள்.) துன்பத்தைத்தராநின்ற வடிக்கப்பட்ட கணைகளைச் சூரபன்மன் விடுதலும், பொன்னாலியற்றப்பட்ட மாலையணிந்த தோள்களையுடைய வீரவாகுதேவராகிய வள்ளலும் தனது பெரிய வில்லினைத் தானும் வளைத்து எதிராக நீண்ட வம்புகளை மழையைப்போல விட்டனர்.—எ-று. (உஉ0)

அத்தகு மெல்லையி லவுணர்மன் னவன்
முத்தலை நெடுங்கணை மூவைந்தே வியே
வித்தக மொய்ம்புடை வீரவாகு வின்
கைத்தல வில்லினைக் கண்டமாக்கி னான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட சமயத்தில் அசுராதிபனாகிய சூரபன்மன் மூன்று தலைகளையுடைய நீண்ட பதினைந்தம்புகளை விட்டு ஆச்சரியத்தைத்தராநின்ற தோள்களையுடைய வீரவாகுதேவரின் கையினிடத்திருந்த வில்லினைத் துண்டமாகச்செய்தனன்.

சிலையது துணிதலுஞ் சீறி வீரனா
றிலையுடை வேலினை யெடுத்து வீசலுந்
தொலைவறு வரம்பெறு சூரன் மார்பெனு
மலையிடைக் குறுகியே மற்றதிற் றதே.

(இ-ள்.) வில்லொடிந்தவுடனே கோபித்து வீரவாகுதேவரொருதகட்டுவடிவமான வேற்படையினை எடுத்து விடுதலும், அது அழிவற்ற வரம்பெற்ற சூரபன்மனுடைய மார்பமென்று கூறப்படுகின்ற மலையிற்சென்று பட்டு அழிந்தது.—எ-று. ()

இற்றுழி யவுணர்க ளிறைவன் மா லயன்
மற்றுள கடவுளர் வலியுங்கொள்வ தோர்
கற்றையங் கதிர்மணிக் கதையொன் றேச்சினான்
வெற்றிகொண் டுலவிய வீரவாகு மேல்.

(இ-ள்.) வில்லொடிந்தவுடனே வெற்றிபொருந்தி யுலாவிய வீரவாகுதேவர் மீது சூரபன்மன், திருமால் பிரமன் மற்றைய தேவர்முதலியவர்களின் வன்மைகளையுமபகரிக்கின்ற வொப்பற்ற கூட்டமான மணிகளிழைத்த வொளியோடுகூடிய வொரு கதையினை எடுத்தெறிந்தனன்—எ-று. (உஉ௩)

திண்மைகொள் பஃறலைச் சேடன் பாங்குளா
ரெண்மரொ டொன்றியோ ரியற்கைத் தாகியே
யுண்மலி யார்ப்புட னுழுகிச் சென்றென
வண்மணி கறங்கிட மணித்தண் டுற்றதே.

(இ-ள்.) பலம்பொருந்திய பல தலைகளையுடைய ஆதிசேடன் அருகிலுள்ள அட்டநாகங்களுடன் கலந்து ஒரே தன்மைத்தாகி உள்ளே மிகுந்த ஆரவாரத்துடன் முறையாக நடந்துசென்றாற்போல வலிய மணிகள் முழங்க அழகிய தண்டமானது வந்தது.—எ-று. (உஉ௪)

வெங்கதை வருதலும் வீர வாகுவோர்
செங்கதை யெதிருறச் செலுத்தி நிற்றலு
மங்கதை நீறுசெய் தவன்றன் மார்பிடைத்
துங்கதை தன்னொடு துண்ணென் றெய்திற்றே.

(இ-ள்.) வெவ்விய தண்டம் வந்தவுடனே வீரவாகுதேவர் ஒரு செவ்விய தண்டத்தை எதிரேவிட்டு நிற்றலும், அக்கதையை நீருக்கி அவர் மார்பில் பெருமையுடன் சென்று திடீரென்று பட்டது.—எ-று. (உ௨௫)

மேக்குயர் பெருஞ்சின வீர வாகுவின்
மாக்கிள ரகலமேல் வயிர மாக்கதை
தாக்கலும் விண்டது தாரைச் செம்புனீர்
தேக்கிய நதிகளிற் றிரைத்துச் சென்றதே.

(இ-ள்.) மிகவும் உயர்ந்த கோபத்தினையுடைய வீரவாகுவின் அழகு விளங்குகின்ற மார்பில் வயிரம்பொருந்திய பெரிய கதைபடுதலும் மார்பு பிளந்ததுநேராக இரத்தமானது பிரவாகமான யாறுகளைப்போல திரைகளை வீசிக்கொண்டு சென்றது.—எ-று.

ஆழ்ந்திடு சோரிய னவுணன் றண்டினாற்
போழ்ந்திடு மார்பினன் புகையு நெஞ்சினன்
றாழ்ந்திடும் விறலினன் றளரும் யாக்கையன்
வீழ்ந்தன னமரர்கள் வெருவி யோடவே.

(இ-ள்.) முழுகாநின்ற இரத்தத்தினையுடையவனும் சூரபன்மன் கதையினால் பிளக்கப்பட்ட மார்பினையுடையவனும் புகைகின்ற நெஞ்சத்தினையுடையவனும், குறைந்த வலியினையுடையவனும் தளர்ந்தவுடலினனும் ஆக வீரவாகுதேவர் தேவர்கள் பயந்தோடும் வண்ணம் வீழ்ந்தனர்.—எ-று. (உ௨௭)

ஆற்றலின் றாகியே யண்ணல் வீழ்தலு
மேற்றிகழ் வலவனும் விசாலி யென்பவன்
றேற்றுறு பான்மையைச் சிந்தித் தோர்புடை
காற்றெனத் தேர்கொடு கடிது போயினான்.

(இ-ள்.) வன்மையிழந்து வீரவாகுதேவர் விழுதலும், தேரின்மீது விளங்கிய சாரதியாகிய விசாலியென்பவன் தேற்றத்தக்க வழியை எண்ணி வேறொரு புறத்தில் தேரை காற்றைப்போல வேகமாக வோட்டிக்கொண்டு விரைந்து போயினான்.—எ-று.

போந்திடு காலையிற் புலம்பிவீழ்ந் துளான்
மாய்ந்திடுஞ் சரதமா மென்று மாறிலா
னாய்ந்தனன் சிலைகுனித் தப்பு மாரிதூய்க்
காய்ந்தனன் சென்றனன் கணத்தின் றானைமேல்.

(இ-ள்.) செல்லாநின்ற சமயத்தில் புலம்பிவிழுந்தவன் இறப்பான்; இது நிச்சயம் என எதிரற்ற சூரபன்மன் ஆலோசித்து வில்லைவளைத்து அம்புமழையைப்பெய்து கொன்றுகொண்டு பூதசேனைகளின் மேற்சென்றனன்.—எ-று. (உ௨௯)

பொன்றிடா வரத்தினான் பூத சேனைமேற்
சென்றனன் கணைமழை சிதறிக் கோறலு
நின்றவை யிரிந்தன நெடிய தீங்கதி
ரென்றினை யடைந்திடு பனியி னீட்டம்போல்.

(இ-ள்.) அழியாத வரத்தினையுடைய சூரபன்மன் பூதசைனியங்கள் மீதுசென்று அஸ்திரவருஷம்பெய்து அவர்களைக்கொல்லுதலும் அப்பூதங்கள் நீண்ட உஷ்ணகிரணங்களையுடைய சூரியனை எதிர்த்த பனிக்கூட்டத்தைப்போல விலகியோடின.

தாக்கிகல் வீரருஞ் சயங்கொண் மொய்ம்பனு
நீக்கமி லிராயிர நீத்தத் தானையு

முக்கிய வலியழிந் துடைந்த தன்மையை
நோக்கினன் பன்னிரு நோக்கங் கொண்டுளான்.

(இ-ள்.) பகைவரை அடிக்கின்ற வன்மையினையுடைய வீரர்களும் வெற்றி பொருந்திய வீரவாகுதேவரும் விலகாத இரண்டாயிரம் வெள்ளஞ் சைநியங்களும் எதிர்த்த வலியிழந்து தோற்ற தன்மையை பன்னிரண்டு கண்களையுடைய குமரக்கடவுள் கண்டனர்.—எ-று. (உ௩௧)

ஆண்டது வேலையி லாறு மாமுகன்
பாண்டிலங் தேர்மிசைப் பாகை நோக்குறா
வேண்டகு சூரன்மே லிரத மொய்யெனத்
தூண்டுதி யென்றனன் சுரர்கள் போற்றவே.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் சிறந்த சண்முகப்பெருமான் சக்கரங்களையுடைய தேரின்மீது இருக்கின்ற சாரதியைப்பார்த்து வேண்டுதலை அகற்றிய சூரபன்மனெதிரே தேவர் துதிக்கும் வண்ணம் இரதத்தை விரைவாக தூண்டக்கடவை யென்றனர்.—எ-று. (உ௩௨)

வேறு.

இணையறு முருக னிவ்வா றிசைத்தலு மினைய தோரா
வுணர்வுறு பவன னென்னு மொருதனிப் பாக னுகர்
கணமணி செறிந்த பொற்பிற் காமரு கடவுட் டேரைத்
துணையறு சூரன் முன்னர்த் துண்ணெனத் தூண்டி யுய்த்தான்.

(இ-ள்.) ஒப்பற்ற குமரக்கடவு ளிவ்வண்ணம் கூறுதலும் இதனை யுணர்ந்து விவேகம்பொருந்திய வாயுவென்று கூறப்படுகின்ற ஒப்பற்ற சாரதியானவன் நாகர்களின் கூட்டமான மணிகள் நெருங்கி இருக்கின்ற அழகினைப்போல அழகுபொருந்திய தேவ இரதத்தை ஒப்பற்ற சூரபன்மன் எதிரே விரைவாக ஓட்டிக்கொண்டு சேர்த்தனன்.—எ-று. (உ௩௩)

ஆயது காலை தன்னி லவுணர்கோ னநந்த கோடி
ஞாயிறு திரண்டொன் றாகி ஞாலமே லிருளை யோட்டிச்
சேயுயர் விசும்பை நீங்கிச் செருநிலத் துற்ற தென்னத்
தூயதோர் குமரன் போரிற் றோன்றிய தோற்றங் கண்டான்.

(இ-ள்.) அப்பொழுது அசுராதிபன் அநேகங்கோடி சூரியர்கள் திரண்டு ஒன்றாகிப் பூமியிலுள்ள இருளினை ஒழித்து மிகவும் உயர்ந்த ஆகாயத்தைவிட்டு போர்க்களத்திற்கு வந்தாற்போல தூய்மையான திருமேனியினையுடைய குமரக்கடவுள் போர்க்களத்தில் வெளிப்பட்ட தோற்றத்தைக்கண்டனன்.—எ-று. (உ௩௪)

முண்டக மலர்ந்த தன்ன மூவிரு முகமுங் கண்ணுங்
குண்டல நிரையுஞ் செம்பொன் மவுலியுங் கோல மார்பு
மெண்டரு கரமீ ராறு மிலங்கெழிற் படைகள் யாவுந்
தண்டையுஞ் சிலம்பு மார்க்குஞ் சரணமுந் தெரியக் கண்டான்.

(இ-ள்.) தாமரைமலர்ந்தாற்போல ஆறுதிருமுகங்களும் கண்களும் குண்டல வரிசைகளும் செவ்விய பொன்னுலாகிய மௌலியும் அழகிய மார்பமும் எண்ணைத்தருகின்ற பன்னிரண்டு திருக்கரங்களும் விளங்காநின்றவழகினையுடைய எல்லாவாயுதங்களும் தண்டையும் சிலம்பும் முழங்குகின்ற சரணங்களும் ஆகிய இவைகளை நன்றாய்ப் பார்த்தனன்.—எ-று. (உ௩௫)

சூரெனு மவுணர் கோமான் றெல்லைநா ளேற்ற வாறும்
பாரிடை முடிவின் றாகிப் பல்லுக மிருந்த வாறு
மாரண மறித றேற்ற வாறுமா முகத்தெம் மையன்
பேரெழி லுருவ நோக்கிப் பெரும்பயன் கோடற் கேயோ.

(இ-ள்.) சூரபன்மனென்று கூறப்படுகின்ற அசுராதிபன் பூருவத்தில் தவஞ் செய்ததுவும் இவ்வுலகத்தில் அழிவில்லாமற் பலயுகமிருந்ததுவும் வேதங்களாலே அறிதற்குக்கூடாத சிறந்த ஆறுமுகங்களையுடைய எம்மையனது பெரிய அழகினையுடைய உருவத்தினைப்பார்த்து மிகுந்த பிரயோசனத்தை அடைதற்குத்தானோ?—எ-று. ()

எஞ்சலி லவுணர் செம்ம லிங்ஙன மமரா றாற்றித்
துஞ்சிலென் றோலவுற் றாலென் றாயமா லறிவின் மிக்கோர்
நெஞ்சினு மளத்தற் கொண்ணு நிருமலக் குமர மூர்த்தி
செஞ்சுடர் வடிவங் கண்டு தீவினை நீங்கி யுய்ந்தான்.

(இ-ள்.) அழிதலில்லாத அசுராதிபனாகிய சூரன் இவ்விடத்திற் போர்புரிந்து இறந்தாற்றானென்ன, தோற்றதினாற்றானென்ன, நின்மலமான நல்ல அறிவின்மிகுந்தவர்களுடைய மனத்தினாலும் அளந்தறிதற்குக்கூடாத நிருமலராகிய குமரக்கடவுளின் செவ்விய சுடர்மயமான திருவுருவத்தைத் தரிசித்து தீயவினையினின்றும் விலகி உய்ந்தனன்.—எ-று. (உ௩எ)

பூவுல கண்ட மெல்லாம் புரந்திடுஞ் சூரன் றன்னைத்
தீவினை யாள னென்றே செப்புவர் சிறப்பின் மிக்க
மூவிரு முகத்து வள்ளன் முன்னவர்ந் தெய்தப் பெற்று
னாவிவன் றவத்திற் கன்றி யறத்திற்கு முதல்வ னன்றோ.

(இ-ள்.) பிருதிவி அண்டங்களனைத்தையும் காக்கின்ற சூரபன்மனை தீவினையாளனென்றே கூறுவார்கள். மிகுந்த சிறப்பினையுடைய ஆறுதிருமுகங்களோடுகூடிய குமரக்கடவுள் எதிரேவந்துநிற்கப்பெற்றனன். ஆதலாலாச்சரியம்; இவன் தவத்திற்கு அல்லாமலும் தருமத்திற்கு முதல்வன் அன்றோ?—எ-று (உ௩அ)

இன்னமு முனிவர் தேவர் யாவரு மினைய னென்றே
யுன்னருந் தலைமைத் தாகு மொருதனிக் குமரன் றன்னைத்
தன்னிரு விழியாற் கண்டான் றனவர்க் கிறைவ னென்று
லன்னவன் றவத்தின் பேற்றை யாரறிந் துரைக்கற் பாலார்.

(இ-ள்.) இன்னமும் முனிவர்களும் தேவர்களுமாகிய அனைவரும் இப்படிப்பட்டவனென்று நினைத்தற்கரிய தலைமையினையுடைய ஒப்பற்ற குமரக்கடவுளை அசுராதிபனாகிய சூரன் தனதிரண்டு கண்களாலேயும் கண்டானானல் அவன்செய்த தவப்பேற்றினை யாவர் அறிந்துரைக்க வல்லுநர்.—எ-று. (உ௩௯)

பொருசமர் விளைப்பான் போலப் பொருக்கெனப் போந்து சூரனிரு விழி தன்னிற் காண்பா னெளிதுதன் வடிவங் காட்டி
யருளது புரிந்தா னென்னி னாதியங் குமரன் மாயத்
திருவிளை யாடல் யார்க்குந் தெரிகில போலு மன்றே.

(இ-ள்.) பொருகின்ற போரினையுடையவனைப்போல விரைவாகவந்து சூரபன்மன் இருவிழிகளாலே காணுமாறு இலேசாகத் தனது திருவுருவத்தைக்காட்டி அருள் புரிந்தானானல் ஆதிமூர்த்தியான குமரக்கடவுளின் திருவிளையாட்டின் மாயமானது ஒருவர்க்குந் தெரிந்ததில்லைபோலும்.—எ-று. (உ௪0)

சிந்தையா லறிதற் கொண்ணுத் திருவுரு விழியாற் கண்டு
முந்துதா னின்ற சூரன் முழுதுல கடுவா னின்றோன்
மைந்தனு மிவனென் றுன்னி மனத்தினில் வெகுளி தூண்டக்
கந்தவே டன்னை நோக்கி யினையன கழற லுற்றான்.

(இ-ள்.) மனத்தினாலே அறிதற்குக்கூடாத திருவுருவத்தைக் கண்ணுற்றறிசித்து எதிரினின்ற சூரன் எல்லாவுலகங்களையு மழித்தற்கிருக்கின்ற சிவபெருமானுடைய மகனே இவனென்று நினைத்து மனத்தினில் கோபமுண்டாகக் கந்தகடவுளைப் பார்த்து இவைகளைக் கூறத்தொடங்கினான்.—எ-று. (உசக)

வேறு.

சேனை யாய்நினைச் சூழ்ந்தவர் செருவலி யழிந்து
போன போனதோர் மாதிரந் தெரிந்தில பூத
மான வீரரு மழிந்தனர் சிலைத்தொழில் வல்ல
வேனை யோர்களு மென்னொடு பொருதன ரிறந்தார்.

(இ-ள்.) சைநியங்களாக வுன்னைச் சூழ்ந்துநின்றவர்கள் போர்புரிகின்ற வன்மையிழந்துபோன திசைகள் அறியப்படவில்லை, சேனாபதிகளாகிய பூதர்களும் அழிந்தார்கள், விற்போரிற் சாமர்த்தியர்களான மற்றைய வீரர்களும் என்னுடன் போர்புரிந்து இறந்தார்கள்.—எ-று. (உசஉ)

இற்ற நின்பெரும் படைக்கெலாந் தலைவனு யென்பா
லொற்று வந்துள வீரனும் பொருதுயி ரொழிந்தான்
மற்று நீயொரு பாலனே யென்னொடு மலைந்து
சொற்ற மெய்துதி நன்றுநன் றுன்னுளக் குறிப்பு.

(இ-ள்.) இறந்த நினது பெரிய சைநியங்களுக்கெல்லாம் தலைவனாய் என்னிடத்திற்குத் தூதனாகவந்த வீரனும் யுத்தஞ்செய்து பிராணனீங்கினான். இது நிற்க, நீ ஒருசிறுகுழந்தையோ என்னுடன்போர்புரிந்து வெற்றியடையப்போகின்றனை? உன் மனோவபிப்பிராயம் நன்றாக விருக்கின்றது.—எ-று. (உசந)

மேல தாகிய நின்னுடைத் தாதையும் விண்ணு
ஞால மும்புரிந் துதவிய நான்முகத் திறையு
மாலும் வெஞ்சமர் புரிதிறங் கருதிலர் மற்றோர்
பாலன் வல்லைகொ லென்னொடு போர்த்தொழில் பயில.

(இ-ள்.) மேன்மையினையுடைய நினது தந்தையும் சுவர்க்கத்தையும் பூமியையும் படைத்த சதுர்முகனாகிய பிரமனும் திருமாலும் வெவ்விய போரினை இயற்றுந்தன்மையை எண்ணார்கள்; பின்னர் ஒரு சிறுவனாகிய நீ என்னுடன் போர்த்தொழிலை இயற்றவல்லை கொல்.—எ-று. (உசச)

முந்தை நாள்வலி யில்லதோ ரடுக்கலு முன்யான்
றந்த செல்வத்தின் மயங்கிய தாரகா சுரனும்
புந்தி நீங்கிய வவன்படைத் தலைவரும் போல
மைந்த வென்னையு நினைந்தனை போலுநின் மனத்தில்.

(இ-ள்.) முன்னாளில் வன்மையில்லாத கிரவுஞ்சமலையையும் என்னாலளிக்கப்பட்டிருந்த செல்வத்தின்மயங்கி இருந்த தாரகாசுரனையும் புத்தி அற்ற அவன்படைத்தலைவர்களையும்போல சிறுவனே நின்மனத்தி லென்னையுநினைத்தனைபோலும்.—எ-று.

தேக்கு சீரினேன் வரத்திய லுன்னலை யடலின்
வாக்க முன்னலை பெருமிட லுன்னலை யடலின்

வீக்க முன்னலை படைத்திற முன்னலை வெம்போ
ரூக்க முன்னலை சிறுவநீ பெருஞ்சமர்க் குற்றாய்.

(இ-ள்.) நிரம்பிய செல்வத்தினையுடைய எனது வரத்தின்றன்மையை எண்ணினாயில்லை; அழியாத சம்பத்தினை எண்ணினாயில்லை; மிகுந்த வன்மையை எண்ணினாயில்லை; பலத்தின் மிகுதியை எண்ணினாயில்லை; படைகளின் திறங்களை எண்ணினாயில்லை; வெவ்விய போரினூக்கத்தை நினைத்தாயில்லை; ஏ சிறுவனே! பெரும்போருக்காக வந்தாய்.—எ-று. (உ௪௬)

கமல மேலுறை பகவனு மாயனுங் ககனத்
தமரர் செம்மலு மாதிரக் கிழவரு மழுங்கச்
சிமைய மங்கையு மிரங்குற வென்னொரு சிலையா
லிமையொ டுங்குமு னின்வலி யழிக்குவ னென்றான்.

(இ-ள்.) தாமரைமலரிலிருக்கின்ற பூச்சியனாகிய பிரமனும் திருமாலும் சுவர்க்கத்திலுள்ள தேவர்களினரசனும் திக்குபாலர்களும் வருந்தவும் இமையாசல தனயையாகிய பார்வதியும் இரங்க என்னொரு வில்லினால் இமைமூடித்திறக்குமுன்னே நினது வன்மையை அழிப்பேனென்று கூறினான்.—எ-று. (உ௪௭)

வேறு.

சூரனென் றுரைபெற் றுள்ள தொல்லையோ னினைய தன்மை
வீரமுந் திறனுஞ் சீரும் வெகுளியுங் கொண்டு செப்ப
வார்ரு ளுருவாய் நின்ற வாதியங் குமரன் கேளா
மூரலுஞ் சிறிது தோன்ற வித்திற மொழிய லுற்றான்.

(இ-ள்.) சூரபன்மனென்று பேருள்ள பழைமையானவனிவ்வண்ணமாக வீரமும் வெற்றியும் சிறப்பும் கோபமும் உடையவனாகக் கூறுதலும் அரிய அருளினுருவமாக இருக்கின்ற முதற்கடவுளாகிய சிவபெருமானுடைய அழகிய புதல்வன் கேட்டு சற்றே நகையுமுண்டாக இவ்வண்ணங்கூறுவாராயினார்.—எ-று. (உ௪௮)

வெற்றியு முடைய மாற்றன் மிகுதியு முடைய மேன்மை
பற்றியு முடைய மெண்ணில் படைகளு முடையம் வீயாப்
பெற்றியு முடையந் தானைப் பெருங்கட லுடைய மென்று
மற்றினி யகந்தை கொள்ளேன் மாற்றுதும் வல்லை மன்னோ.

(இ-ள்.) வெற்றியுமுடையேம் வன்மையு மிகுதியாகவுடையேம், மேன்மையும் பொருந்தியிருக்கின்றேம், அளவற்ற ஆயுதங்களையுமுடையேம், அழியாத தன்மையினையுமுடையேம், பெரிய சேனாசமுத்திரமுமுடையமென்று இனி நீ அகம்பாவம் கொள்ளவேண்டாம், அவைகளை விரைவாக அகற்றுகின்றோம்.—எ-று. (உ௪௯)

வரமிகு சிறப்பி னேமை மழவிளங் குமரன் கொல்லோ
பொருதுவென் றிடுவான் வல்ல னென்றுநின் புந்தி கொண்டாய்
பெரிதுநீ மடவை மாதோ பிரான்றனி நெற்றி நாட்டத்
தொருசிறு பொறியே யன்றோ வுலகெலா மடுவதம்மா.

(இ-ள்.) வரத்தான் மிக்க சிறப்பினையுடைய நம்மை மிகவும் இளம்பருவனாகிய ஒரு சிறுவனோ போர்புரிந்து வெல்லுதற்கு வல்லபமுள்ளவனென்று நின்மனத்தினினைத்தனை; நீ மிகவும் அறிவில்லாதவன் இறைவனுடைய ஒப்பற்ற நெற்றிக்கண்ணினின்றும் உண்டாகின்ற ஒரு சிறிய தீப்பொறியே யன்றோ உலகங்களனைத்தையும் அழிப்பது.—எ-று. (உ௫௦)

அறிவுடை முதிய ரென்று மாண்டிளை யோர்க ளென்றுஞ்
சிறியவர் பெரிய ரென்றுந் திருத்தகு வளத்தரென்றும்
வறியவ ரென்றும் வீரர் மதிக்கிலர் யாவ ரேனும்
விறல்வலி படைத்து நேரின் வெஞ்சமர் விளைப்ப ரன்றே.

(இ-ள்.) அறிவினையுடைய கிழவர்களென்றும் ஆண்டினாற்குறைந்தவர்கள் என்றும் சிறியவர்களென்றும் பெரியவர்களென்றும் திருத்தமான தகுதியோடுகூடிய வளப்பங்களையுடையவர்களென்றும், தரித்திரர்களென்றும் வீரர்கள் மதிக்கமாட்டார்கள். எத்தகையோரேனும் வெற்றியடையத்தக்க வன்மையையடைந்து வந்தெதிர்த்தால் கொடும்போர்புரிவார்கள்.—எ-று. (உ௫௧)

நூற்றுட னெட்ட தென்ன நுவலுறு முகத்தின் காறும்
பேற்றுட னினிது வைகும் பெரியநின் வலியை யின்னே
தேற்றம துறாத கொள்கைச் சிறியநம் வன்மை தன்னா
லூற்றுடைப் பாலிற் புக்க வுறையென வடுது மென்றான்.

(இ-ள்.) நூற்றெட்டு என்று கூறப்படுகின்ற யுககாலம் வரைக்கும் சகலபேறுகளுடனும் இனிமையாக வாழ்ந்திருக்கின்ற பெரிய நின்னுடைய வன்மையை இன்றையதினமே தேறுதலடையாத கொள்கையினையுடைய சிறிய நமது வன்மையினால் ஊற்றினையுடைய பாற்கடலிற்புகுந்த வுவர்நீர்போல அழிக்கின்றோம் என்று சுப்பிரமணியப்பெருமான் திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று. (உ௫உ)

வேறு.

என்னு முன்வெகுண் டவுணர்கோ னிருநிலந் தன்னை
முன்ன ளந்தவன் போலண்ட முகடுதோய் வுற்ற
கொன்னெ டுஞ்சிலை யொன்றினைக் கரத்தொடு குனிப்ப
வன்ன பான்மையைக் கண்டன னாதியங் குமரன்.

(இ-ள்.) என்று கூறுதற்கு முன்னே கோபங்கொண்டு அசுராதிபனாகிய சூரபன்மன் பெரிய உலகத்தை முன்னே அளந்தவனைப்போல அண்டத்தின் முகட்டினையடைந்துள்ள வலிய பெரிய வில்லொன்றினை அவன் கையுடன் வளைத்தனன். அத்தன்மையை ஆதிமுதல்வராகிய குமரக்கடவுள் பார்த்தனர்.—எ-று. (உ௫௩)

மால யன்சுரர் பல்லிய மியம்பிவாழ்த் தெடுப்ப
வால மார்வனத் தெம்பிரா னாடிய வந்நாண்
மேலை மூதண்ட முகடுற வெடுத்ததோர் வியன்றாட்
கோல மென்னவோர் நெடுஞ்சிலை யெடுத்தனன் குமரன்.

(இ-ள்.) திருமாலும் பிரமனும் தேவர்களும் பலவகை வாத்தியங்களை வாசித்து துதிக்க அரிய திருவாலங்காட்டிலே எமது சிவபெருமான் திருநடனம்புரிந்த அக்காலத்தில் மேலேயுள்ள பெரிய அண்ட முகட்டை அடையும் வண்ணந் தூக்கியருளிய ஒப்பற்ற பெரிய திருவடியின் வடிவத்தைப்போலவுள்ள வொருபெரிய தனுசை குமரப்பெருமானெடுத்தனர்.—எ-று. (உ௫௪)

அடற்பெ ருந்திறற் சண்டிதன் பெருமித மடக்கிப்
படித்த லந்தனை யருளுவா னாடல்செய் பரம
னெடுத்த சேவடி பகிரண்ட மட்டிடா வியல்பாற்
றடுத்த செங்கைபோற் குனித்தன னறுமுகன் றனுவை.

(இ-ள்.) வன்மையினையும் பெரிய திறலினையும் உடைய காளியின் செருவத்தை அடக்கி, உலகத்தை இரக்ஷிக்கும்பொருட்டு திருநடனம்புரிந்த கடவுள் தூக்கியரு

ளிய சேவடி பகிரண்டத்தை அழிக்காதிருக்கும் வண்ணமாகத் தடைபுரிந்த செவ்விய அத்தத்தைப்போல ஆறுமுகப்பெருமான் அவ்வில்லை வளைத்தனர்.—எ-று. (உ௫௫)

குனித்த வில்லிடைக் குமரவே ளொலி கொண்டா
னனைத்து மண்டங்க ளுடைந்தபே ரோதைபோ லவ்வான்
சினத்து மாறுதன் குணத்திசை யெடுத்தனன் செகத்திற்
பணித்த டங்கடல் யாவுமார்த் துடைந்திடும் பரிசின்.

(இ-ள்.) வளைத்த வில்லிற் குமரக்கடவுள் எல்லாவண்டங்களும் உடைந்த தன்மையைப்போல நாணோசைகண்டனர். உடனே சூரன் கோபித்து உலகிலுள்ள குளிர்ந்த பெரிய கடல்களனைத்தும் ஆரவாரித்துக்கொண்டுடைந்த தன்மையைப்போல அந்நாணோசைக்குப்பதிலாய் தன்னுணோசையைக் காட்டினன்.—எ-று. (உ௫௬)

அள்ளி லைப்படை யவுணர்கோ னடுசர மழைதூய்
வள்ள றன்னையுந் தேரையு முலகையு மறைப்பத்
தெள்ளி திங்கிவன் விஞ்சையென் றெந்தைசிந் தித்துக்
கொள்ளை வெங்கணை தூரந்தவை யாவையுங் குறைத்தான்.

(இ-ள்.) கூரிய தகட்டு வடிவமான ஆயுதங்களையுடைய சூரபன்மன் பகைவர்களைக் கொல்லுகின்ற அம்புகளைவிட்டுக் குமரக்கடவுளையும் அவரேறியிருந்த தேரையும் உலகத்தையும் மறைத்தலும், எமது தந்தையான குமரக்கடவுள் திருவுளத்தில் இவன் செய்கை நன்முக விருக்கின்றது என்று நினைத்து கொடிய வெவ்விய அம்புகளைக் கூட்டமாகவிட்டு அவைகளனைத்தையும் அறுத்தனர்.—எ-று. (உ௫௭)

குறைத்த காலையிற் சினவியே பின்னரும் கொடுநஞ்
சுறைத்த பொற்கணை பலதொட வாளிக ளோச்சி
யறுத்து மற்றவை குமரவே ளவுணர்கோன் றன்னை
மறைத்து விண்ணெறி மாற்றினன் பகழிமா மழையால்.

(இ-ள்.) கண்டித்தவுடனே கோபங்கொண்டு சூரபன்மன் பின்னருங் கொடிய விடத்தைப் பூசப்பட்டுள்ள பொன்மயமான வம்புகளை விட்டனன். உடனே குமரக்கடவு ளவைகளை அம்புகளைவிட்டு அறுத்து சூரபன்மனை மறைத்து ஆகாயமார்க்கத்தையும் பெரிய அஸ்திரவருஷத்தால் மறைத்தனர்.—எ-று. (உ௫௮)

ஆன பான்மைசேர் பகழியின் படலிகை யவுணன்
சோனை வாளியாற் றுணித்திடை வீட்டியே சூர்தஞ்
சேனை காவலற் கண்டனன் வினைத்தளை சிந்தி
ஞான நாயகத் தாணுவைக் காணுநற் றவர்போல்.

(இ-ள்.) அப்படிப்பட்ட வருஷமாகவந்த அம்பின்படலங்களை அவ்வசுரன் சோனையைப்போல வருஷிக்கப்பட்ட அம்புகளால் இடையிலேயே துண்டுபடுத்தி வினைகளினுலுண்டான பந்தங்களையொழித்து ஞானநாயகரான சிவபெருமானைத் தரிசிக்கின்ற நல்ல தவசியர்களைப்போல தேவசேனாபதியைக்கண்டான்.—எ-று (உ௫௯)

கண்டு தீயவன் பத்துநூ றாயிரங் கணைக
ளண்ட நாயகன் குமரன்மேல் விடுத்தலு மவற்றை
யெண்ட ருஞ்சர மாரியால் விலக்கியீ ரேழு
புண்ட ருங்கணை யுய்த்தன னுங்கவன் புயமேல்.

(இ-ள்.) கொடியவனாகிய சூரபன்ம னதனைக்கண்டு பத்துலக்ஷம் அம்புகளை தவநாயகரான சிவகுமாரன்மீது விடுதலும் அவைகளை புகழ்பொருந்திய அஸ்திரவரு

ஷத்தால் தடுத்து பகைவருடலிற் புண்ணினையுண்டாக்குகின்ற பதினுன்கம்புகளை அவன்தோண்மீதெய்தனர்.—எ-று. (௨௬0)

கயப்பொ ருப்பினை யுரித்தமால் வரைதரு காளை
வயப்பொ ருப்பினை யடுகணை சூரனும் வலியோன்
புயப்பொ ருப்பினை யெய்தியே துளைத்தில புரைதீ
ரயப்பொ ருப்பையுற் றடல்பெறு வழலவன் கதிர்போல்.

(இ-ள்.) மலைபோன்ற யானையையுரித்த பெரியமலைபோல்பவரான சிவபெருமானளித்தருளியவாலிபராகிய குமரக்கடவுள் வெற்றிபொருந்தியகிரவுஞ்சமலையையழித்த வம்புகள் சூரபன்மனுகிய வன்மையினையுடையவனுடைய புயமலையையடைந்து குற்றமற்ற இரும்புமலையையடைந்து வெற்றியடையாத சூரியனுடைய கிரணங்களைப்போல துளைத்ததில்லை.—எ-று. (௨௬௧)

மாயை தன்மகன் வச்சிர யாக்கையின் வலியை
நாய கன்றிரு மதலைகண் டழலெழ நகைத்துத்
தீய வன்பினும் விடுவதோர் சரமெலாஞ் சிந்தி
யாயி ரங்கணை யாலவன் சிலையினை யறுத்தான்.

(இ-ள்.) மாயையின்குமாரனுன சூரபன்மனுடைய வச்சிரசரீரத்தின் வன்மையை சிவகுமாரனுகிய சண்முகப்பெருமான்பார்த்து தீப்பறக்கச்சிரித்து கொடியவனுகிய வச்சூரபன்மனுலே மேலும்மேலும் விடப்பட்ட கணைகளையெல்லாம் கண்டித்து ஆயிரமம்புகளினுலே அச்சூரபன்மனுடைய வில்லினையொடித்தனர்.—எ-று. (௨௬௨)

சிலையி னைத்துணித் திடுதலு மவுணர்கோன் செயிர்த்து
மலையி னைத்தடிந் தவன்மிசை மலரயன் றந்த
விலைய யிற்படை யொன்றினை யெறிதலு மீரேழ்
கொலையு டைக்கணை தூண்டியே யன்னதைக் குறைத்தான்.

(இ-ள்.) வில்லினையொடித்திடுதலும் அசுராதிபனுகிய சூரபன்மன்கோபித்து கிரவுஞ்சமலையை யழித்தருளிய குமரக்கடவுளின்மீது, தாமரைமலரிலிருக்கின்ற பிரமதேவன்கொடுத்த இலைவடிவமான கூரியவேலாயுதத்தை யெறிதலும் குமரக்கடவுள் கொலைத்தொழிலினையுடைய பதினுன்கம்புகளைவிட்டு அவ்வாயுதத்தினை துண்டாக்கினுர்.—எ-று.

இலை அயிற்படை என்பதை, தகட்வடிவமான வோர்படையென்னினும் ஆம்.

ஏறு சேவகத் தவுணர்கோ னயிற்படை யிறலும்
வேறெர் கார்முகம் வாங்கினன் சரமழை வீசி
மாறு மாறவன் றெடுந்தொடுங் கணையெலா மாற்றி
யாறு மாமுகன் புயத்திலேழ் வாளிதொட் டார்த்தான்.

(இ-ள்.) மிகுந்த வீரத்தினையுடைய அசுராதிபனுடைய வேற்படை ஒடிதலும் வேறேயொரு விற்படையை வளைத்து அம்புமழையை வருஷித்து எதிரொதிராக வவன் விடுகின்ற அம்புகளையெல்லாந் தடுத்து சிறந்தவாறு திருமுகங்களையுடைய குமரக்கடவுளின் தேர்களில் ஏழுபாணங்களைவிட்டு ஆரவாரித்தனன்.—எ-று. (௨௬௪)

செங்க திர்ப்பகை தன்னைமுன் னுதவினுன் செலுத்தும்
வெங்க ணைத்தொகை பாஞ்சுட ருருவமாம் விமலன்
றுங்க மிக்கதோள் புக்குநுண் டுளிய தாகிப்
பொங்க னற்றிரட் பட்டதோர் பூளைபோன் றனவால்.

(இ-ள்.) செவ்விய கிரணங்களையுடைய சூரியனைப் பகைத்தவனாகிய பானு கோபனென்னும் பிள்ளையை முன்னம்பெற்ற சூரபன்மன் விடுகின்ற வெவ்விய அம்பு கூட்டங்கள் பரம்பொருள் வடிவமாகவுள்ள நிமலராகிய குமரக்கடவுளின் மிகவும் உயர்ந்த தோள்களிற்பட்டு நுண்ணிய புழுதியாகி பற்றியெரியாநின்ற அக்கினிப்பிழம்பிலகப்பட்ட ஒரு பூளைப்பஞ்சினை ஒத்தன.—எ-று. (உசரு)

மொய்யி ருங்கணை பட்டுநீ றாதலு முருகன்
வெய்ய சூர்வலி நன்றுநன் றுலென வெகுளா
வையி ரண்டுவான் பகழியா லவன்சிலை யறுத்துச்
செய்ய தேரையு மாயிரங் கணையினாற் சிதைத்தான்.

(இ-ள்.) நெருங்கிய பெரிய அம்புகள்பட்டு நீறாகியவுடனே, குமரக்கடவுள் கொடிய சூரபன்மனுடைய வன்மை நன்று நன்று என்று கோபித்து சிறந்த பத்தம்புகளால் அவன் வில்லினையொடித்து செவ்விய தேரினையும் ஆயிரங்கணையினால் சிதைத்தனர்.—எ-று. (உசசு)

ஆழி பூண்டிடு மிரதமு மங்கையிற் சிலையும்
பூழி யாதலு மரசனுக் கேமமாய்ப் போந்த
வேழி ரண்டுநூ றாயிரந் தேரையு மிமைப்பி
னூழி நாயகன் றன்சர மழையினா லொழித்தான்.

(இ-ள்.) சக்கரங்கள் பூட்டியுள்ள தேரும் கையிற்பிடித்திருந்த வில்லும் பூழியாதலும் அவ்வரசனுக்கு க்ஷேமமாக வந்துள்ள பதினாலிலக்கத் தேர்களையும் இமைப்பொழுதிற்குள் ஊழிமுதல்வராகிய குமரக்கடவுள் தனது சரவருஷத்தாலொழித்தனர்.

சேம மாகியே நின்றிடு தேரெலாஞ் செவ்வேள்
காமர் வாளியாற் சிதைத்தலு மன்னது கண்டான்
றாம வெங்கன றாண்டிய விழியுடைச் சூர
னேம மாகியே கொண்டிடு சூலமொன் றெறிந்தான்.

(இ-ள்.) க்ஷேமமாகநின்ற இரதமனைத்தையும் குமரக்கடவுள் அழகிய அம்பினால் அழித்தலும் அதனைப் புகையொடுகூடிய வெவ்விய தீப்பறக்கின்ற கண்களையுடைய சூரபன்மன்கண்டு தான் க்ஷேமமாக வைத்துக்கொண்டுள்ள ஒரு சூலத்தினை எறிந்தனன்.—எ-று. (உசஅ)

நண்ண லன்விடு முத்தலைப் படையைநாற் கணையாற்
பண்ண வன்றிரு மாமக னிருதுணி படுத்துத்
துண்ணெ னக்கணை யேழினா லவன்குடை துணியா
வண்ண லஞ்சுடர் முடியையோர் கணையினா லறுத்தான்.

(இ-ள்.) பகைவன்விட்ட மூன்று தலைகளையுடைய சூலத்தை நாலம்பினால் சிவபெருமானுடைய சிறந்த மைந்தர் இருதுண்டாக்கி விரைவாக ஏழம்பினால் அவனுடைய குடையைத் துணித்து தெய்வீகமான ஒளியினையுடைய மகுடத்தை ஒரு அம்பினாலறுத்தனர்.—எ-று. (உசகூ)

மணிப டுத்திய மவுலியை யறுத்தபின் வலியோன்
பணிப டுத்தமெய் யெங்கணும் பகழிகள் போக்கி
யணிப டுத்தியே புனைதரு மதாணிக ளனைத்துந்
துணிப டுத்தினன் மறைகளுந துணிந்திடற் கரியோன்.

(இ-ள்.) மணிகளிழைத்த மகுடத்தையுடைத்த பின்னர் வலியினையுடையவனாகிய சூரபன்மனுடைய ஆபரணமணிந்த அவயவமுழுமையும் அம்புகளைவிட்டு அழகு

படுத்தி அணிந்துள்ள மதாணிகளையெல்லாம் மறைகளாலும் துணிதற்கு அரியவரான குமரக்கடவுள் துண்டுபடுத்தினர்.—எ-று. (௨௭0)

ஆன காலையிற் சூரபன் மாவெனு மரசன்
மான வன்மையிற் குறைந்தது நோக்கிமா டுள்ள
சேனை காவலர் நாற்படை தன்னொடுஞ் சேர்ந்து
சோனை யாப்படை வழங்கியே குமரனைச் சூழ்ந்தார்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில், சூரபன்மனென்னுமரசன் பெரிய வன்மையிற்குறைந்ததைப்பார்த்து பக்கத்திலுள்ள சேனாபதிகள், சதுரங்கசைனியங்களுடனே கலந்து சோனையைப்போல ஆயுதங்களை விட்டுக்கொண்டு குமரக்கடவுளைச் சூழ்ந்து கொண்டார்கள்.—எ-று. (௨௭௧)

ஏழு நேமியு மெறிந்துமே ருவைவளைந் தென்னக்
கேழில் பல்படை வீசியே யார்த்துடன் கிளர்ந்து
சூழும் வெய்யவர் தானையைக் கண்டனன் றென்றாட்
பூழி யாகவே யவுணரூ ரட்டவன் புதல்வன்.

(இ-ள்.) ஏழுகடல்களும் அலைமோதிக்கொண்டு மேருமலையை வளைந்தாற் போல, ஒப்பற்ற பலவாயுதங்களை வீசி ஆரவாரித்துக்கொண்டு பிரகாசத்தோடு சூழா நின்ற அசுரசைநியத்தை, முன்னாளில் புழுதியாகுமாறு அசுரர்களின் புரங்களைச்சுட்ட சிவபெருமானுடைய திருக்குமாரராகிய குமரக்கடவுள் பார்த்தனர்.—எ-று. (௨௭௨)

குருதி வேற்படை கொண்டவன் றன்புடைக் குழுமிப்
பொருதி றற்பெருந் தானையைப் பொள்ளென வடுவான்
கருதி யாங்கொரு கரத்தினி லிருந்திடு கடவுட்
பரிதி யம்படை தொட்டன னிரவியிற் படர.

(இ-ள்.) இரத்தந்தோய்ந்த வேற்படையினையுடையவரான குமரக்கடவுள், தன்னருகிற்சூழ்ந்து நின்று போர்புரிகின்ற வன்மையினையுடைய பெரிய சைநியங்களை விரைந்து கொல்லும்பொருட்டுத் திருவுளங்கொண்டு, ஒருதிருக்கரத்திலிருந்த தெய்வீகம்பொருந்திய சக்கராயுதத்தைச் சூரியனைப்போல செல்லும் வண்ணம் விட்டருளினர்.—எ-று. (௨௭௩)

இலகும் வெய்யவ னடுவுநாள் யாமத்தி னேகி
யலகில் பேரிரு ளட்டென வாழிபோ யவுணர்
தலையு மாகமுங் கைகளு மடிகளுந் தடந்தோண்
மலையும் விசிய படைகளுந் துணித்தது மன்னோ.

(இ-ள்.) பிரகாசியாநின்ற சூரியன் பாதி இரவிற்சென்று அளவற்ற பெரிய இருட்டினை அழித்தாற்போல, சக்கரமானது அசுரர்களின் தலைகளும் உடல்களும் கைகளும் கால்களும் பெரிய தோள்களாகிய மலைகளும் விடாநின்ற அம்புகளும் அழியுமாறு துணித்தது.—எ-று. (௨௭௪)

மேணி லாவிய தேர்களைத் துணித்திடும் வெங்கண்
மான யானைக ளியாவையுந் துணித்திடும் வயமாத்
தானை யாவையுந் துணித்திடுஞ் சமரினைத் தாங்குஞ்
சேனை காவலர் யாரையுந் துணித்திடுந் திகிரி.

(இ-ள்.) அச்சக்கரப்படை, மேலே விளங்கிய தேர்களைத் துணிக்கும் வெவ்விய கண்களையுடைய பெரிய யானைகளையெல்லாம் துணியாநிற்கும்; வெற்றிபொருந்

திய குதிரைப்படைகளனைத்தையும் துணிக்கும்; போரினை நடத்துகின்ற சேனாதிபர்களனைவரையும் துணிக்காநிற்கும்.—எ-று. (உஎரு)

அரந்து ணித்தவா ளவுணர்க ளடுசம ருன்னி
னுரந்து ணித்திடு மிகழினுத் துணித்திடு முரப்பிற்
சிரந்து ணித்திடும் படைதொடு முயற்சிகள் செய்யிற்
கரந்து ணித்திடு மெதிர்ந்திடிற் றுணித்திடுங் கழல்கள்.

(இ-ள்.) அரத்தையு மழுங்கச்செய்கின்ற வாட்படையினையுடைய அசுரர்கள் கொல்லாநின்ற போர்த்தொழிலை நினைத்தால் மார்பைத்துணிக்கும்; இகழ்ந்தால் நாவினைத்துணிக்கும்; அதட்டினுல் தலையையறுக்கும்; ஆயுதங்களை விடுகின்ற பிரயத்தனங்களைச்செய்தால் கரங்களையறுக்கும்; எதிர்த்தால் கால்களையறுக்கும்.—எ-று. (உஎசு)

குடைது ணித்திடுங் கவரிக டுணித்திடுங் கொடியின்
றொடைது ணித்திடுந் தேர்நிரை பூண்டமான் றொகையி
னிடைது ணித்திடு மவுணர்தங் கரங்களி னிருந்த
படைது ணித்திடுந் துணித்திடும் பல்லியத் தொகையும்.

(இ-ள்.) (குமரக்கடவுளின் ஆழியம்படை), பகைவர்களின் குடைகளைத் துணிக்கும்;சாமரங்களையறுக்கும்; கொடிமாலைகளையறுக்கும்; தேர்வரிசைகளிற் கட்டப்பட்ட குதிரைகளின் நடுவையறுக்கும்; அசுரர்களின் கைகளிலிருந்த ஆயுதங்களைத் துண்டிக்கும்; எதிர்த்துவந்தால் கால்களை அறுக்கும்.—எ-று. (உஎஎ)

கொற்ற மிக்கதோர் கோல்கொடு வலியுடைக் குலாலன்
சுற்றி விட்டிடு திகிரியின் விரைவொடு சுழன்று
பற்ற லார்பெருந் தானையைப் பஃறுணி படுத்தி
யொற்றை நேமியம் பெரும்படை திரிந்ததா லுலவி.

(இ-ள்.) பலமான தண்டத்தைக்கொண்டு திடசரீரமுள்ள குயவன் சுழற்றிவிடுகின்ற சக்கரத்தைப்போல, விரைவாகச்சுழன்று பகைவர்களின் பெரியசைனியத்தை அனேகதுண்டுகளாகச்செய்து,ஒன்றாகிய போர்புரிகின்ற சக்கரமென்னும் ஆயுதமானது அப்போர்க்கள முழுதிலும் உலாவித்திரிந்தது.—எ-று. (உஎஅ)

போர ழிந்திடு மவுணர்த முடற்குறை புகையாச்
சோரி வன்னியா வதனிடைத் துணிந்துவீழ் பரியுந்
தேரும் யானையு மவிகளா வெம்பிரான் றிகிரி
வீர மாமக மொன்றியற் றுவதென விளங்கும்.

(இ-ள்.) போரிலழிந்த அசுரர்களின் துண்டுபட்ட கரிய உடல்கள் புகைகளாகவும், இரத்தமே அக்கினியாகவும், அதனடுவில் அறுந்துவிழுகின்ற குதிரைகளும் தேர்களும் யானைகளும் அவிசுகளாகவும் கொண்டு, எமதுபெருமானுடைய திருவாழிப்படை ஒரு வீரமஹாயாகத்தை இயற்றுவதைப்போல அப்போர்க்களம் விளங்காநிற்கும்.

வெஞ்ச மர்த்தொழில் புரிதரு மவுணரை வீட்டி
வஞ்ச கத்தொடு மாயமாம் பேரிருண் மாற்றி
யெஞ்ச லுற்றிடுங் குருதியம் பெருநிற மெய்திச்
செஞ்சு டர்க்கதி ராயதா லறுமுகன் றிகிரி.

(இ-ள்.) கொடியபோர்த்தொழிலைப்புரிகின்ற அசுரர்களைக்கொன்று வஞ்சகத்தையும் மாயமாகிய பெரியஇருட்டினையுமொழித்து மிகுதியாகவுள்ள இரத்தரூபமான பெரியநிறத்தையடைந்து, செந்நிறமான ஒளியினையுடைய சூரியனாக ஆறுமுகப்பெருமானுடைய திருவாழிப்படை யாகியது.—எ-று. (உஅ0)

நச்சு தன்னிடத் தமலையை யிருத்திய நம்ப
னிச்சு தன்றனி யாழிசென் றுடுறு மியல்பை
யச்சு தன்கரத் தேந்திய நேமிகண் டதனை
மெச்சு தன்மையிற் புகழ்ந்தது விம்மித மேவி.

(இ-ள்.) விரும்பாநின்ற தமதிடப்புறத்திற் பார்வதிதேவியாரை இருத்தியுள்ள சிவபெருமானுடைய இளையபிள்ளையின் ஒப்பற்ற சக்கரப்படைசென்று போர்புரிகின்ற தன்மையை, அந்தநாராயணன் கையிற்றாங்கி யிருக்கின்ற சக்கரமானது பார்த்து அதனை மெச்சுமாறுபோல ஆச்சரியமடைந்து புகழ்ந்தது.—எ-று. (உ௮௧)

தீர்த்த னுய்த்திடு நேமியம் பெரும்படை செருவி
லார்த்த தானை நூ றுயிர வெள்ளமு மடைய
மூர்த்த மொன்றினிற் றுணித்தது மூவிரு முகத்தோன்
வார்த்தை யாலவை முழுவது மாற்றிய வாபோல்.

(இ-ள்.) குமரக்கடவு ளனுப்பிய சக்கரம் என்னும் பெரியஆயுதமானது, போரிலாரவாரித்துக்கொண்டுவந்த நூறுயிரவெள்ளஞ் சேனைகளையும், ஒருமூர்த்தத்திற்குள் ஆறுதிருமுகங்களையுடைய பெருமான் திருவசனத்தினாலே அவையனைத்தையும் அழித்தாற்போல வெட்டிஎறிந்தது.—எ-று. (உ௮உ)

ஆட லுற்றவேற் பண்ணவ னலர்கதிர்ப் பரிதி
பாடு சுற்றிய வவுணர்கோன் றானையைப் படுத்து
மோடு பெற்றதொல் புகழொடு மீண்டது முளிபுற்
காடுமுற்றவுந் தனிபடர்ந் துண்டதோர் கனல்போல்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வேற்படையினையுடைய குமரக்கடவுளின் அலர்ந்த கிரணங்களையுடைய சக்கரப்படை, அருகிற் சூழ்ந்துநின்ற அசுராதிபனாகிய சூரபன்மனுடைய சைநியங்களைக்கொன்று, உயர்ந்த பெரியபுகழுடன் உலர்ந்தபுல்லினையுடைய காடனைத்துந் தானே புகுந்து உண்டு திரும்பிய அக்கினியைப்போலத் திரும்பிவந்தது.

கைம்ம லிந்திடு குடைபல காம்பிடை துணிந்து
மெய்ம்ம லிந்திடு விழுநிணச் சேற்றிடை வீழ்ந்து
பொம்மல் கொண்டுநிற் புறுவன பூவலர் தடத்திற்
செம்மல் கொண்டமர் தாமரைக் காடுபோற் றிகழும்.

(இ-ள்.) கைகளின் மலிவாகவிருந்த பல குடைகள் காம்பின் நடுவிலே துணிந்து உடம்பின் மிகுந்திருந்து ஒழுகிய மாமிசச்சேறுகளில் விழுந்து உயர்ச்சிகொண்டனவாக நிற்குந்தகைமை, புட்பங்கள் விரிகின்ற தடாகத்தில் பழம்பூவாகியவை உதிர்ந்திருக்கின்ற தாமரைவனத்தைப்போல விளங்கும்.—எ-று. (உ௮௪)

அழுங்கல் கொண்டதோர் கரிபரி யவுணர்பே ரனிகம்
வழங்க லின்றிவீழ்ந் தவிந்திடு களேவர மலித
றழங்கு தெண்டிரை யுலகுள சயிலங்க ளனைத்து
மொழுங்க தாகிவந் தாயிடைத் தொக்கவா றொப்ப.

(இ-ள்.) ஆரவாரத்தோடு கூடினயானைகளும் குதிரைகளும் அசுரர்களும் ஆகிய பெரிய சைநியங்கள் சஞ்சரித்தலின்றி விழுந்திறந்த பிரேதசரீரங்கள் நிறைந்திருத்தல், முழங்காநின்ற அலையினையுடைய கடல்சூழ்ந்த உலகத்திலுள்ள மலைகளனைத்தும் வரிசையாக வந்து அவ்விடத்தில் நெருங்கியதன்மையை ஒப்பன.—எ-று. (உ௮௫)

அகல்வி சும்புகா றோங்கிய களேவர மதன்பா
ஞெகிழி கொண்டவாய்ப் பேயின நிணனுண்டு சிரித்து

மிகவு மார்ப்பெடுத் தீண்டுவ மின்னியே யிடித்து
முகிலி ருங்கண முதுவரைச் சாரன்மொய்த் ததுபோல்.

(இ-ள்.) இடமகன்ற ஆகாயபரியந்தம் உயர்ந்துள்ள பிணங்களின்மீது பெரிய மேக கூட்டங்கள் பெரியமலையின் சாரல்களின் மொய்த்துக்கொண்டாற்போல,கொள்ளிவாய்ப்பேய்கள் பிணங்களையுண்டு சிரித்துமிகவும் ஆரவாரம்செய்துகொண்டு நெருங்குகின்றன.—எ-று. (உ௮௬)

மையல் யானையு மவுணர்த யியாக்கையு மற்று
மொய்யெ னக்கொடு குருதியம் பேரியா றெழுகல்
செய்ய தோர்பணி கருங்கடன் மறைத்தல்கிந் தித்து
வெய்ய நஞ்சுமிழ்ந் திருநிலம் படர்தல்போல் விளங்கும்.

(இ-ள்.) மதமயக்கம் பொருந்திய யானைகளும் அசுரர்களின் உடல்களும் இன்னமுள்ளவைகளையும் விரைவாகக்கொண்டு இரத்தமாகிய பெரிய ஆறெழுகுதல் (எதுபோலுமெனில்), செந்நிறமான ஒருபாம்பு கரிய கடலைமறைக்குமாறு நினைத்துக் கொடிய நஞ்சினைக் கக்கிக்கொண்டு பெரியபூமியிற் செல்லுதலையொக்கும்.—எ-று.(உ௮௭)

மாணி லைப்படு பேய்சில களேவர வரைபோய்ச்
சோணி தப்புன லாறுபாய்ந் திடவதன் றுவலை
சேணி லத்துளா ரரிவையர் புனைகலை தெறிப்ப
நாண லுற்றனர் பூப்பென நகைப்பரொன் றுன்னி.

(இ-ள்.) மாட்சிமைதங்கிய சிலபேய்கள், பிரேதமலையின்மீது சென்று இரத்த வெள்ளமாகிய ஆற்றிலே குதியாநிற்ப, அப்பாய்தலாலுண்டான நீர்த்துளிகள் சொர்க்க பூமியிலே யிருக்கின்ற பெண்களணிந்துள்ள ஆடையின்மீதுதெறிப்ப, அவர்க ளவைகளைப் பார்த்துக் கண்டவர் பூப்பென்று நகைப்பார்கள் என்று வெட்கமுற்றார்கள்.-எ-று.

சொல்ல ருந்திற லவுணரிற் சிலர்தலை துணிந்து
வல்லை யிற்கிளர்ந் தார்த்தலும் வலியினுற் றம்மை
யல்லல் செய்திடு கோளிரண் டல்லதை யவைபோ
லெல்லை யில்லவை வந்தவென் றிரியுமா் விரவி.

(இ-ள்.) சொல்லுதற்கரிய சாமர்த்தியத்தினையுடைய அசுரர்களிற் சிலர் தலையறுந்து விரைவாகக்குதித்து ஆரவாரித்தலும், வன்மையினுற் றங்களை வருத்துகின்ற இராகுகேதுக்களாகிய இரண்டுகிரகங்களையன்றி அவைகளைப்போல அளவற்றனவந்தன வென்று சூரியன் விலகியோடாநிற்பன்.—எ-று. (உ௮௯)

நீடி விண்படர் கொடிசில நிமிர்கவந் தத்தின்
காடு தன்னிடைப் புகுந்துதந் தலைமிசைக் காட்டி
யாடல் யானையின் களேவரங் குத்துவ வடுபோ
ரூடு காக்கையின் முகரும்வந் தார்கொலென் றுரைப்ப.

(இ-ள்.) கொல்லாநின்ற போரினையுடையகளத்திற்கு காக்கைமுகமுள்ளவர்களும் வந்தார்களோ என்று கூறும்வண்ணம், உயர்ந்து மேலேசென்ற சில காக்கைகள் மிகுதியாகவிருக்கின்ற கவந்தக்காடுகளிற்புகுந்து தமது தலைகளைவெளியே நீட்டி ஆடலினையுடைய யானையின்களேவரத்தைக்குத்துகின்றன.—எ-று. (உ௯0)

நீட லுற்றசீ ரவுணர்கோ ஞணையா னிலமேல்
வீட லுற்றிடு வயவர்க்குத் தம்முயிர் மீட்டுங்
கூட லுற்றிடு திறனெனக் கூளிகை கொட்ட
வாட லுற்றிடு முடற்குறை யநந்தகோ டிகளால்.

(இ-ள்.) மிகுந்த சிறப்பினையுடைய அசுராதிபனாகிய சூரபன்மனுடைய ஆக்கினையினாலே உலகில் நிறைந்த வீரர்களுக்கு அவர்களின் உயிர்திரும்பவும் சேர்ந்த தன்மையைப்போல பிசாசுகள்கைகொட்ட அநந்தகோடி உடற்குறைகள் ஆடாநிற்கும்.

இனைய வெல்லையி லெம்பிரா னெரிகதிர்ப் பரிதி
முனையில் வந்தடல் செய்ததை யுணர்ந்திலன் முன்சூழ்
கனையி ருங்கடற் படையெலாம் பட்டவா கண்டு
மனம ருண்டொரு தமியனாய் நின்றனன் வலியோன்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில், எம்பெருமானுடைய எரிகின்ற கதிரினையுடைய சக்கரப்படை போர்க்களத்தில்வந்து கொன்றதை, வன்மையினையுடைய சூரபன்மன் உணர்ந்தானில்லை; எதிரிலே சூழ்ந்திருந்த நெருங்கிய மிகுந்த சைநியங்கள் முழுமையும் அழிந்ததைப்பார்த்து மனமருட்சிகொண்டு ஒருதனித்தவனாக நின்றனன்.

நீண்ட தன்னொரு வேற்படை யுய்த்துநீக் கினனோ
பாண்ட ரங்கம தியற்றுவான் படையின்வீட் டினனோ
மாண்டு போகவென் றொருமொழி தன்னின்மாற் றினனோ
வீண்டு தானையை முடித்ததெவ் வாறிவ னென்றான்.

(இ-ள்.) இவன் நீளமான தனது ஒருவேற்படையைவிட்டு இச்சேனைகளை அழித்தானோ? பாண்டரங்கக்கூத்தாடுகின்ற பசுபதியினம்பினாலழித்தானோ? அழியக்கடவதென்று ஒருசொற்கூறி யழித்தானோ? இவ்விடத்திலிருந்த சைநியங்களை எவ்வாறழித்தனன் என்று (சூரபன்மன்) கூறினான்.—எ-று. (௨௬௫)

தேரி ழந்தனன் சிலையது மிழந்தனன் றிறல்சேர்
பேரி ழந்தனன் றானைக ளிழந்தனன் பெரும்பூ
ணேரி ழந்தனன் மவுலியுங் கவிகையு மிழந்தான்
பாரி ழந்திடு மன்னர்போ னின்றனன் படிமேல்.

(இ-ள்.) (சூரபன்மன்) தேரினையிழந்தனன்; வில்லுமிழந்தனன்; வெற்றிபொருந்திய பேரினையுமிழந்தனன்; சைனியங்களையுமிழந்தனன்; பெரிய ஆபரணங்களினழகையும் இழந்தனன்; மகுடமுங் குடையுமிழந்தனன்; (ஈற்றில்) பூமியை இழந்த மன்னவர்களைப்போல நின்றனன்.—எ-று. (௨௬௬)

நின்றி டுந்திற லவுணர்கோ னெடுஞ்சின நெஞ்சிற்
றுன்று மார்பகம் வியர்த்திட முடித்தலை துளக்கி
நன்று நன்றொரு பாலகன் வலியென நகையா
வென்றி நான்முகன் படைக்கல மெடுத்துமேல் விடுத்தான்.

(இ-ள்.) (இவ்வண்ணமனைத்தையுமிழந்து) நிற்கின்ற சாமர்த்தியத்தினையுடைய சூரபன்மன் மிகுந்த கோபம்பொருந்திய மார்பினிடமானது வியர்க்க முடியோடுகூடிய தலையையசைத்து, ஒருபாலகன் வன்மை நன்றாயிருக்கின்றது! நன்றாயிருக்கின்றது!! என்றுசிரித்து வெற்றிபொருந்திய பிரமாஸ்திரத்தை எடுத்துவிட்டனன்.—எ-று. (௨௬௭)

வேறு.

சூர்ப்புய லன்னதோர் சூரன் விடுக்கு
மாற்படு போதன் வயப்படை சென்று
பார்ப்படு மெல்லை பரஞ்சுடர் செங்கை
வேற்படை சென்று விழுங்கிய தன்றே.

(இ-ள்.) அச்சத்தைத்தரத்தக்க மேகத்தையொத்த சூரபன்மன்விட்ட பெருமைபொருந்திய பிரமாஸ்திரஞ்சென்று சமீபத்திலாகும்பொழுது பரஞ்சுடராகிய குமரக்

கடவுளின் செவ்விய திருக்கரத்திலிருக்கின்ற வேலாயுதமானது போய் அதனை விழுங்கியது.—எ-று. (உ௯௬)

விழுங்குதல் கண்டனன் வெய்யவ னெஞ்ச
மழுங்குதல் செய்தன னச்சுத மூர்த்தி
வழங்கிய தொல்லை வயப்படை யேந்தி
முழங்கழ லென்ன முனிந்துடன் விட்டான்.

(இ-ள்.) கொடியவச்சூரபன்மன், வேற்படை பிரமாஸ்திரத்தை விழுங்கிவிட்டதைக்கண்டு மனம்புழுங்கி, திருமால்கொடுத்த பழைய பெரிய ஆயுதத்தைக் கையிலெடுத்து முழங்குகின்ற தீயைப்போல கோபங்கொண்டவனாக விட்டனன்.—எ-று. (உ௯௭)

விட்டிடு மாயவன் வெம்படை யேகி
மட்டறு கண்ணர்த மாலுரு வீன்று
கிட்டிய காலை கிளர்ந்திடு மொள்வே
லட்டது தன்னையு மார்ந்தது மன்னோ.

(இ-ள்.) சூரபன்மன்விட்ட மாயவனுடைய வெவ்விய அஸ்திரமானது சென்று அளவற்ற நாராயணர்களின் பெரியவுருவங்களை யுண்டாக்கிக்கொண்டு நெருங்கிவந்த சமயத்தில் விளங்காநின்ற ஒள்ளியவேற்படையானது அந்நாராயணாஸ்திரத்தையு மழித்தருந்தியது.—எ-று. (உ௯௮)

சயம்புவை செம்மற் றூத்தரு ணீரா
லயன்படை தன்னுட னம்புவி கேள்வன்
வியன்படை தன்னையும் வேற்படை யுண்ணக்
கயம்படு சூரது கண்டுவிம் முற்றான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய தலைவனாகிய குமரக்கடவுளின் திருவருட்டன்மையால்,பிரமாஸ்திரத்துடன் பூமிகாந்தனுடைய பெரியஅஸ்திரத்தையும் வேலாயுதமானது உண்டுவிடுதலும், இழிவுபொருந்திய சூரபன்மன் அதனைக்கண்டு விம்முத லடைந்தான்.—எ-று. (உ௯௯)

கறுத்திடு கின்றதொர் கந்தர வள்ளல்
விறற்படை தன்னை விடுத்திடின் யாரே
மறுத்திடு வாரெனு தென்று மனத்திற்
குறித்தனன் மாயை கொடுத்தருள் கோமான்.

(இ-ள்.) கருமைபொருந்திய ஒப்பற்ற கண்டத்தினையுடைய சிவபெருமானுடைய வெற்றிபொருந்திய ஆயுதத்தைவிட்டால் யாவர்தடுக்கின்றவர்கள் என்று மனத்தில் நினைத்தனன்; (அவன் யாவனென்னில்) மாயையினாற் பெறப்பட்ட பிள்ளையான சூரபன்மன்.—எ-று. (௩00)

முப்புர நீறெழ மூரல் விளைத்தோன்
மெய்ப்படை தன்னை விடுப்பது தேற்றி
யப்படை யேந்தி யருச்சனை நீரா
லொப்பறு சீர்த்திய னுய்யென வுய்த்தான்.

(இ-ள்.) திரிபுரங்கள் நீறுரும்வண்ணம் புன்னகைகொண்டருளிய சிவபெருமானுடைய தவறாத வம்பினை விடுவதனைத்துணிந்து அவ்வாயுதத்தைஎடுத்து அருச்சிக்கின்ற முறைப்படி அருச்சித்து ஒப்பற்ற கீர்த்தியினையுடைய சூரபன்மன் விரைவாக விட்டனன்.—எ-று. (௩0௧)

அத்தகு வெம்படை யாட லியற்று
முத்தலை வேற்படை மூர்த்திகள் கோல

மெத்திசை தன்னினு மீண்டுற வார்த்து
மெய்த்தழல் வீசி விரைந்தது மாதோ.

(இ-ள்.) அந்தத் தகுந்த வெவ்விய அஸ்திரமானது திருநடனம் புரிகின்ற திரிசூலதரராகிய சிவபெருமானுடைய அனேகதிருவுருவங்கள் எவ்விடங்களிலும் நெருங்குமாறு ஆரவாரித்துத் தன்னிடம் முழுமையும் தீமயமாகவீசிக்கொண்டு விரைவாகவந்தது.

ஆடியல் யானைக ளாயின வெட்டும்
வீடிய வேயென வீழ்ந்தயர் வுற்ற
நீடிய நேமியி னின்றிடு செந்தீ
யோடிய சேடனு முட்கி யுலைந்தான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய அட்டகஜங்களும் இறந்தவைகளே என்று கூறுமாறு விழுந்தயர்ந்தன; நீண்டகடலினுள் நிற்கின்ற அக்கினியானது ஓடியது; பூமியைச் சுமக்கின்ற ஆதிசேடனும் பலமிழந்து நடுங்கினான்.—எ-று. (௩௦௩)

படித்தல நெக்கது பல்வகை மேக
மிடித்தொகை சிந்தி யிரிந்தன பானுத்
துடித்தது திங்கள் சுழன்றது மேரு
வெடித்த திடந்தொறும் விண்டதிவ் வண்டம்.

(இ-ள்.) பூமி நெக்கது; பலவகையான மேகங்களிடிக்கூட்டங்களைச் சிந்திக்கொண்டு சிதறின; பானுவுந்துடித்தது; சந்திரன் சுழன்றது; மேருமலைவெடித்தது; பலவிடங்களிலும் இவ்வண்டம் விண்டது.—எ-று. (௩௦௪)

இலக்கர் நடுங்கின ரேனைய வீரர்
கலக்க மடைந்தனர் காண்டகு பூதர்
மலக்கம தெய்தினர் மற்றிது தன்னை
விலக்கரி தாலென வோடினர் விண்ணோர்.

(இ-ள்.) இலக்கர் நடுங்கினார்கள்; மற்றுள்ள வீரர்கள் கலக்கமடைந்தார்கள்; பார்க்கத்தக்க பூதர்கள் மயக்கமடைந்தார்கள்; இதனைத் தடுக்கமுடியாதெனத் தேவர்களோடினார்கள்.—எ-று. (௩௦௫)

புடவி முதற்புவ னங்க ளனைத்து
நொடிவரை செல்லுமு னொய்தென மாய
முடிவ தியற்றிடு மூர்த்தித னும்ப
படைவர வன்னது பார்த்தனன் வள்ளல்.

(இ-ள்.) பிருதுவிமுதலிய புவனங்கள் எல்லாம் ஒரு நொடிப்பொழுதிற்குள் விரைவாக வழியும்படி சங்கரிக்கின்ற கடவுளின் பெயரினையுடைய ஆயுதமானது வருதலும், அதனை ஈகையாளராகிய குமரக்கடவுள் கண்டனர்.—எ-று. (௩௦௬)

எந்தைதன் மாப்படை யீதென வையன்
சிந்தை புரிந்தொரு செங்கையை நீட்டி
வந்திடு மப்படை பற்றினன் மாதோ
தந்தவன் வாங்கிய தன்மைய தென்ன.

(இ-ள்.) இது எம்பெருமானுடைய சிறந்த வம்பென்று எங்கள் ஐயன் திருவுளத்தில் நினைத்து ஒருகையைநீட்டி, கொடுத்தவன் வாங்கிக்கொள்ளுவதைப்போல வாராநின்ற அவ்வாயுதத்தினைப் பிடித்துக்கொண்டனர்.—எ-று. (௩௦௭)

பெற்றமு யர்த்த பெருந்தகை நாமக்
கொற்றநெ டும்படை யைக்குரு மோசன்

பற்றியோர் பாணி பரித்தன னின்றான்
மற்றது கண்டனன் மாயவண் மைந்தன்.

(இ-ள்.) இடபக்கொடியினையுடைய பெரியதன்மையினைவாய்ந்த இறைவன் திருப்பெயரால் விளங்குகின்ற வெற்றிபொருந்திய நெடிய அம்பினைக் குமரக்கடவுள் பிடித்து ஒருகரத்திற்றாங்கினவராக நின்றனர்; இதனை மாயாகுமரனாகிய சூரபன்மன் கண்டனன்.—எ-று. (௬௦அ)

வேறு.

விட்ட விட்டதோர் படைக்கெலாம் வேறுவே றென்று
தொட்டி லானத னாலது மாற்றுத றுணியான்
கிட்டு மெல்லையி லவையெலாங் கவர்ந்தனன் கேடி
லட்ட மூர்த்தியே யென்பது காட்டினன் னம்மா.

(இ-ள்.) இக்குமரன் என்னால்விடப்பட்ட ஒவ்வொரு அம்புகளுக்கும் பதில் அம்புகள் விட்டானில்லை; அன்றியும் அதனை அதனாலேனும் அழிக்குமாறு நினைத்தானில்லை; அருகில்சென்றவுடனே அவைகளை அபகரித்துக்கொண்டனன்; இதனாற் கெடாத அட்டமூர்த்தமான சிவன் என்று விளக்கினன் என்று சூரபன்மன் கூறினான்.

என்னொ டேபொரற் கிவனலால் வேறிலை யினையோன்
றன்னொ டேபொரற் கியானலா திலையிது சரத
மன்ன பான்மையி னெனக்குநே ராமிவ னலது
பின்னை யாருளர் தமியனுக் குவமையாப் பேச.

(இ-ள்.) என்னுடன் போர்புரிதற்கு இவனையன்றி வேறேயில்லை; இவனுடன் போர்புரிதற்கு என்னையன்றி வேறேயாருமில்லை; இது உண்மை. அந்தமுறைமையினாலே இவன் எனக்கு ஒப்பாவானே யன்றி பின்னை எனக்கு உவமைகூற வேறே யாரிருக்கின்றார்கள்?—எ-று. (௬௧௦)

மான வேற்படை வன்மையும் விற்றொழில் வலியு
மேனை யாயுள வன்மையுங் கண்டன னினிமேற்
பானல் வாய்மைந்தன் செய்வது பார்ப்பனென் றுன்னி
மோன மாகியே நின்றன னவுணர்கண் முதல்வன்.

(இ-ள்.) யான் பெரிய வேற்படையின் வன்மையையும், விற்றொழிலின் வல்லபத்தையும், இவையன்றியுள்ள வன்மைகளையும் பார்த்தேன்; இனிமேல் கருநெய்தல் மலர்போன்ற வாயினையுடைய இச்சிறுவன் செய்கின்றதைப் பார்க்கின்றேனென்று நினைத்து அசுராதிபனாகிய சூரபன்மன் மவுனமாக நின்றனன்.—எ-று. (௬௧௧)

பொருளி னீர்மையாற் புனைகலன் மாற்றலிற் புவிமே
லிருளி னீர்மையாய்த் தோன்றினோ னற்புத மெய்தி
மருளி னீர்மையா னின்றது நோக்கியே வள்ள
லருளி னீர்மையா லினையன மாற்றங்க ளறைவான்.

(இ-ள்.) இவ்வுலகத்தில் பொன்னின் சம்பந்தத்தால் இயற்றப்பட் டணிந்திருந்த ஆபரணதிகளை அகற்றுதலும் இருட்டின் தன்மையாகக்காணப்பட்ட வச்சூரபன்மன் ஆச்சரியமடைந்து மயக்கமடைந்த தன்மையனைப்போல நின்றதனைப்பார்த்து கருணைத்தன்மையால் குமரக்கடவுள் இத்தகையவசனங்களைக் கூறுவாராயினர்.—எ-று.

இந்தி ரன்றனி மதலையை யிமையவர் தம்மை
யந்த மில்பகல் சிறையிடைப் படுத்தனை யதற்கா

முந்தொ ரொற்றனை விடுத்தன மாங்கவன் மொழியுஞ்
சிந்தை கொண்டிலை விடுத்திலை யமரர்தஞ் சிறையும்.

(இ-ள்.) நீ இந்திரனுடைய ஒரேகுமாரனை சயந்தனையும், தேவர்களையும் அள வற்றதினங்கள் சிறையினில் அடைத்துவைத்தனை ; அதற்காக யாம் உன்னிடத்திற்கு முன்னே ஒருதூதனை அனுப்பினோம் ; அவன் வசனத்தையும் மனத்திற் கொண்டாயி ல்லை ; தேவர்களின் சிறையையும் விட்டாயில்லை.—எ-று. (௫௧௩)

அன்ன தன்மையா லீண்டியாம் வந்தன மமரிற்
றன்னை நேரிலா திருந்திடு தாரகன் றன்னை
முன்ன மட்டிடு முறையென நின்னையு முனிவா
லின்ன வைகலே யடுதுமென் றேகின மீண்டும்.

(இ-ள்.) அந்தக்காரணத்தினாலே நாமிவ்விடத்திற்கு வந்தோம் ; போரிற்றனக் கொப்பற்றவனாக விருந்த தாரகனை முன்னேகொன்ற முறைப்படி நின்னையும் கோபத் தினால் இத்தினமே கொல்லுதும் என்றுவந்தோம். வந்தும்,—எ-று. (௫௧௪)

ஈண்டு நின்புடை யீண்டிய விலக்கம்வெள் ளத்து
நீண்ட தானையு நின்சிலை வன்மையு நின்னாற்
றூண்ட லுற்றிடு தெய்வதப் படைகளுந் தொலைந்து
மாண்டு போயது கண்டனை வறியனாய் நின்றாய்.

(இ-ள்.) (எம்மால்) இவ்விடத்தி லுன்னருகில் நெருங்கிநின்ற இலக்ஷம்வெள்ள த்திற் கதிகமான சைனியங்களும், உனது விற்போர் வன்மையையும், உன்னால்விடப்ப ட்ட தேவாஸ்திரங்களும் அழிந்துபோனதை நீயே கண்டனை; இப்பொழுது தரித்திர னாக நின்றனை.—எ-று. (௫௧௫)

நெடிய தாரகற் செற்றவே லிருந்தது நின்னை
யடுத லிங்கொரு பொருளுமன் றரிதுமற் றன்றாற்
படையி ழந்திடு நின்னுயி ருண்டிடிற் பழியாய்
முடியு மென்றுதாழ்க் கின்றனந் தருமத்தின் முறையால்.

(இ-ள்.) நம்மிடத்து நெடிய தாரகாசுரனைக்கொன்ற வேலாயுதம் இருக்கின் றது; உன்னைக்கொல்லுதல் எமக்கு ஒருபொருளுமன்று; அருமையும் அல்ல. ஆயுதங் களை யிழந்து நிற்கின்ற நினது உயிரை வாங்கினால் தருமசாத்திரமுறைப்படி பழியாய் முடியுமென்று கருதித் தருமஞ்செய்கின்றோம்.—எ-று. (௫௧௬)

பன்னு கின்றதென் பற்பல விண்ணுளோர் பலருந்
துன்னு தொல்சிறை விடுத்தியே லுன்னுயிர் தொலையே
மன்ன தன்மையை மறுத்திடி னெல்லைநா மடுது
மென்னை கொல்லுன தெண்ணங்க ளுரைத்தியா லென்றான்.

(இ-ள்.) அநேகவிதமாகக் கூறுவதிற் பயனென்னை, நீ அநேகந்தேவர்கள் நெ ருங்கியிருக்கின்ற பழையசிறையினின்றும் அவர்களை விடுவாயானால், உன்னுயிரை நாம் அழிக்கமாட்டோம். அத்தன்மையை நிராகரிப்பாயானால், நாம் விரைவாக உன்னைக் கொல்லுவோம்; இதனி லுன்னபிராயங்களெவை அவைகளைக் கூறுவாயாக என்று குமா ரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௫௧௭)

வேறு வேறுநின் றுலகெலா மளிப்பது வெஃகி
யாறு மாமுகம் பன்னிரு செங்கைகொண் டருள்வோ
னூறு சேரவு ணன்றனக் கினையன வுரைப்ப
மாறொர் வாசகஞ் சொற்றில னுளத்திவை மதிப்பான்.

(இ-ள்.) வேறுவேறாக நின்று உலகங்களனைத்தையுங் காத்தலைவிரும்பிச் சிறந்த ஆறுதிருமுகங்களையும், பன்னிரண்டு செவ்விய திருக்கரங்களையுங்கொண்டெழுந்தருளியிருக்கின்ற குமரக்கடவுள் குற்றம்பொருந்திய சூரபன்மனுக்கு இவைகளைச் சொல்லவும், அவைகட்குப்பதிலாக வேறொருவசனத்தையும் உரைக்காதவனாகியவச் சூரபன்மன் தன்மனத்தி லிவ்வண்ணந் துணிந்தனன்.—எ-று. (ருகஅ)

படை யிழந்தன னிவனென வுன்னியே பால
னிடை தெரிந்தனன் போலவே யிமையவர் யாப்பை
விடுதி யென்னவும் வல்லனு யினன்கிளி வில்லே
னடலு மாற்றலுந் தெரிந்திலன் பிள்ளைமை யதனால்.

(இ-ள்.) இச்சிறுவன், இவனிப்பொழுது ஆயுதங்களை இழந்து நிற்கின்றனனென்று நினைத்து சமயமறிந்தவனைப்போல தேவர்களின் சிறையை நீ விட்டுவிடு என்று கூறுதற்கும் வல்லபமுள்ளவனாயினான்; (இவன்) சிறுபிள்ளைத்தனத்தினால் நாசரகிதானாகிய என்னுடைய வெற்றியையும், வன்மையையும் உணர்ந்தானில்லை.—எ-று.(ருகக)

மன்ற லந்தொடை யறுமுகன் வரம்பிலா வைக
னின்று போமர் புரியநான் வறிதுநின் றிடினுங்
கொன்றி டுந்தொழில் வல்லனே தந்தைமுன் கொடுக்க
வென்று மாய்ந்திடா வொருவரம் பெற்றிடு மென்னை.

(இ-ள்.) மணம்பொருந்திய மாலையணிந்துள்ள சண்முகன் அளவில்லாத தினம் என்னெதிரே நின்று பெரும்போர்புரிய, (அவனொடு பொருதலின்றி) நான் சும்மா நின்றாலும், இவன் தந்தையினாற் கொடுக்கப்பட்ட ஒருநாளும் அழியாதிருக்கும் வரம் பெற்ற என்றனை, இவன் கொல்லும் ஆற்றலுடையவனா?—எ-று. (ருஉo)

தொழுத குந்திரு மவுலியுங் கவிகையுந் துணிய
விழிவ தாகியே தமியனின் றமரியற் றிடினு
மழிவ தில்லையா லவ்வது மிலைபுக ழதனாற்
பழிய தொன்றுறு மங்கது பாதுகாத் திடுவேன்.

(இ-ள்.) வணங்கத்தக்க அழகிய மகுடமும் குடையும் அறுபட இழிவுபொருந்தினவனாக நானொருவனே நின்று போர்புரிந்தாலும் அழிவதில்லை; அழியாதுபோனாலும் அதனால் புகழுண்டாகப் போகின்றதில்லை; பின்னை என்னை யுண்டாகுமென்னிற் பழியே வந்து சேரும், அப்பழிவராமலினிப் பாதுகாத்துக்கொள்ளுவேன்.—எ-று.

வேற்று நீர்த்தடங் கொள்வதை யன்றிவெள் ளங்க
ளூற்று நீர்ப்பெரும் புணரியைக் கொள்வதற் குறுமோ
வேற்ற தானையைப் படைகளைத் தொலைப்பதே யின்றி
மாற்று மோவென தழிவுறு வரத்தையு மைந்தன்.

(இ-ள்.) பெருவெள்ளங்கள் வேறேயுள்ள நீர்த்தடங்களை அபகரிக்குமேயன்றி ஊற்று நீரினையுடைய பெரியகடலினைத் தன் வசப்படுத்தற்காகுமோ, அதனைப்போல இச்சிறுவன் எதிர்த்த சைனியங்களையும் ஆயுதங்களையும் அழிப்பதையல்லாமல் என்னுடைய அழிவற்ற வரத்தையும் மாற்றுவானோ?—எ-று. (ருஉஉ)

என்னை யங்கவன் முடித்திட லரியதா லியானு
மன்ன வன்றனை யித்துணை வெல்வது மனைத்தே
தொன்ன கர்ப்பெரு வளத்தொடும் படையொடுந் துன்னிப்
பின்னர் வந்தம ரியற்றியே பெருந்திறல் பெறுவேன்.

(இ-ள்.) என்னையும் அவன் கொல்லுதலரிதானகாரியம்; நானும் இப்பொழுது அவனை வெல்லுதலும் ஆகாத காரியந்தான். (ஆதலால் இப்பொழுது இங்கு நின்றுஞ் சென்று) பழைய நகரத்திலுள்ள வளப்பத்துடனும் செல்வத்துடனும் கலந்திருந்து பின்புவந்து போர்புரிந்து மிகுந்த வெற்றியையடைவேன்.—எ-று. (௩உ௩)

வசைய தன்றிது செருச்செய்வோர் பற்பகன் மலைந்து
விசைய மெய்தினு மேன்மையாம் வியப்புமா மேலுந்
திசை விளங்குறு புகழுமாம் யானுமிச் செய்கை
யிசைவு தேகட னறிஞர்தஞ் சூழ்ச்சியு மிஃதே.

(இ-ள்.) நானிவ்வாறு நினைத்தது வசையானகாரியமன்று; (எனெனில்) போர் செய்பவர்கள் அநேகதினம் போர்புரிந்து வெற்றியடைந்தாலும் மேன்மையேயாம்; அன்றியும் ஆச்சரியமுமாகும்; அல்லாமலும் திக்குகள்தோறும் விளங்குகின்ற புகழுமாகும். அதனால் நானும் இச்செய்கைக்குச் சம்பந்தப்படுவதே முறைமை; விவேகிகளின் ஆலோசனையும் இவ்வண்ணமேதான்.—எ-று. (௩உ௪)

என்று பற்பல சூழ்ச்சிகண் மனத்திடை யெண்ணி
யொன்றோர் மாயையின் மந்திரந் தன்னையுள் ளுறுத்தி
நின்ற மன்னவ னெல்லையின் மறைந்தவ ணீங்கிப்
பொன்றி கழ்ந்திடு மகேந்திரக் கோயிலுட் போனான்.

(இ-ள்.) என அநேகவிதமான தந்திரங்களை மனத்தினில் நினைத்து, பொருந்திய வொரு மாயாசொரூபமான மந்திரத்தை உள்ளே தியானித்து, அமர்க்களத்தில் நின்ற அரசன் விரைவாக மறைந்து, அவ்விடத்தினின்று நீங்கி பொன்விளங்குகின்ற மகேந்திரபுரியிலுள்ள தனது மாளிகைக்குட் போயினான்.—எ-று. (௩உ௫)

மறைந்து போயசூர் முயற்சியை மன்னுயிர் தோறு
முறைந்த நாயகன் கண்டன னொருதனிச் செவ்வே
லெறிந்து மற்றவ னுயிர்கொள நினைந்தில னின்னு
மறிந்து தீயவ னுய்யுமோ வெனுந்திரு வருளால்.

(இ-ள்.) மறைந்து சென்ற சூரபன்மனது முயற்சியை நிலைபெற்ற உயிர்கள் தோறும் எழுந்தருளியிருக்கின்ற இறைவன் கண்டு, இன்னும் திரும்பிக் கொடியவன் உய்வானோ என்னுந் திருவருளினால் ஒப்பற்ற செவ்விய வேலினைவிட்டு அச்சூரபன்மனுயிரை வாங்கும்வண்ணந் திருவுளங் கொளவில்லை.—எ-று. (௩உ௬)

வேறு.

ஆய வேலைதனி லாறுமு கன்பான்
மாயனும் மயனும் வானவர் கோவு
மேய தேவர்களும் யாவரு மெய்தித்
தூய வந்தனை யுடன்சொல லுற்றார்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில், சண்முகப்பெருமானருகில் திருமாலும், பிரமனும், தேவராஜனும், வேறே பொருந்திய வருணன் ஆதித்தியன் முதலிய தேவர்களும், இன்னமுமுள்ளவர்களுமாகிய அனைவருமடைந்து தூய்மையான வந்தனத்துடன் சொல்லத் தொடங்கினார்கள்.—எ-று. (௩உ௭)

என்று காசிப னிடந்தனில் வந்தா
னன்று தான்முத லாவசு ரேசன்
வென்றி யேகொடு வியப்பொ டிருந்தா
னுன்ற னோடுபொரு தோடின னின்றே.

(இ-ள்.) எந்நாளில் காசிபனிடத்தில் பிறந்தான், அந்நாள் முதற்கொண்டு அசுராதிபனாகிய சூரபன்மன் வெற்றியடைந்தவனாகவே ஆச்சரியத்துடனிருந்தனன்; இன்றையதினம் தேவரீருடன் போர்புரிந்து தோற்று ஓடினான்.—எ-று. (சுஉ அ)

நீடு சூரனுட னீயமர் செய்த
லாடலே யலதை யாங்கவ னாவி
கோடல் சிந்தையிடை கொண்டனை யென்னி
னோடுமோ பொருது முய்திற முண்டோ.

(இ-ள்.) உயர்ந்த சூரபன்மனுடனே தேவரீர் போர்புரிதல் விளையாட்டேயன்றி, அவனுயிரை வாங்கவேண்டுமென்று திருவுளத்தில் நினைத்தீராயில் ஓடுவானோ! அன்றியும் போர்புரிந்து அவன் பிழைக்குந் திறமுண்டோ?—எ-று. (சுஉக)

துங்க முற்றுடைய சூர்தனை வேலான்
மங்கு வித்திடுதி மற்றதன் முன்ன
மங்க வற்கெதி ரருஞ்சம ராற்ற
லெங்கண் வைத்துடைய வின்னரு ளன்றோ.

(இ-ள்.) வன்மைபொருந்திய சூரபன்மனை வேற்படையினைவிட்டு அழித்தருள்வீர்; அவ்வாறு செய்தற்கு முன்னே அச்சூராதிகளின் எதிரோ நின்று அரிய போரினை இயற்றுதல் எங்கள்மீது வைத்துள்ள இனிய கருணையன்றோ?—எ-று. (சுசு0)

என்றி யம்புதலு மெந்தை வினவி
நன்று நன்றென நகைத்தினி நம்முன்
சென்று நின்றுசமர் செய்திடின் வல்லே
வென்று சூர்முதலை வீட்டுது மென்றான்.

(இ-ள்.) என்று தேவர்கள் இவ்வாறு விண்ணப்பஞ் செய்துகொள்ளுதலும், அவைகளனைத்தையும் எம்பெருமான் கேட்டு, நல்லது! நல்லது!! என்று சிரித்து சூரனாகிய முதல்வன் இனி நம்மெதிரோ வந்து நின்று போர்புரிவானாயின், விரைவாக ஜயித்து அவனைக் கொல்லுகின்றோம் என்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று. (சுசுக)

ஆடல் சேருமவு ணன்சம ராற்றா
தோடி னாருமுறு கண்ணுள ராகி
வீடி னார்களென வீழ்ந்தயர் வாருங்
கூடி னார்குமர வேள்புடை வந்தார்.

(இ-ள்.) இது நிற்க, வன்மைபொருந்திய சூரபன்மனுடைய சண்டைக்குத் தாளாதவர்களாக வோடினவர்களும், துன்பம்பொருந்தினவர்களாய் இறந்தவர்களைப்போல விழுந்து, மயங்கினவர்களும் (எழுந்து) ஒன்றுசேர்ந்து குமரக்கடவுளின் அருகில் வந்தார்கள்.—எ-று. (சுசுஉ)

சங்க மாகியுறு சாரத ரானோ
ரெங்க ணாயகனை யெய்தி யிகற்சூர்
மங்குல் வானிடை மறைந்தது தேரா
வங்கண் ஞாலமலை வுற்றிட வார்த்தார்.

(இ-ள்.) கூட்டமாக நிற்கின்ற பூதர்களாக வுள்ளவர்கள் எங்கள் நாயகனான குமரக்கடவுளை யடைந்து போர்புரிந்த சூரபன்மன், மேகங்களையுடைய ஆகாயத்தில் மறைந்ததனை யுணர்ந்து இடமகன்ற உலகமானது மயங்கும்வண்ணம் ஆரவாரித்தார்கள்.—எ-று. (சுசுசு)

திகழ்ந்த பூதர்கள் செருத்தனி லெம்மை
யிகழ்ந்த சூர்நகரி னிம்மதில் வீட்டி
யகழ்ந்து கோபுர மகன்கட லிட்டு
மகிழ்ந்து மீண்டிடுதும் வம்மின மென்றார்.

(இ-ள்.) விளங்காநின்ற பூதர்கள் போரினில் எம்மை யிகழ்ந்த சூரபன்மனுடைய நகரத்திலுள்ள இந்த மதிலையிடித்துக் கோபுரத்தைத் தோண்டியெடுத்து அகலமான கடலிலே இட்டுச் சந்தோஷத்துடன் திரும்பி வரலாம் வாருங்கள் என்று கூறினார்கள்.

வம்மின் வம்மினென வல்லைவி ளித்துத்
தம்மி னங்களொடு சாரதர் மேலோ
ரம்ம கேந்திர மழுங்குற வார்த்திட்
டிம்மெ னக்கடி தெயிற்புற முற்றார்.

(இ-ள்.) வாருங்கள் வாருங்கள் என்று விரைவாக வழைத்துத் தமது இனங்களுடனே பூதராசர்கள் அந்த மகேந்திரபுரியிலுள்ளவர்கள் வருந்தும்வண்ணம் ஆரவாரித்துக்கொண்டு இம்மென்று விரைவாக மதிலின்புறத்தையடைந்தார்கள்.—எ-று. (௩௩௫)

உற்ற காலைதனி லொண்மதில் காக்குங்
கொற்ற வீரனதி கோரன் மருங்கிற்
சுற்று தானையொடு சோர்வில னின்றான்
செற்று பூதர்படை சென்றன கண்டான்.

(இ-ள்.) சென்றவுடனே அவ்வொள்ளிய மதிலினைக்காக்கின்ற வெற்றிபொருந்திய வீரனாகவுள்ள அதிகோரனென்பவன் அருகிற் சூழாநின்ற சைனியங்களுடனே சோர்வற்றவனாக நின்று எல்லைகடந்து பூதசைநியங்கள் உள்ளே புகுந்ததனைக்கண்டனன்.—எ-று. (௩௩௬)

கண்டு ளானனி கனன்றிதழ் கவ்வித்
திண்டி பேரிதி மிலைப்பறை யார்ப்பத்
தண்ட லின்றியமர் தானைக ளோடு
மண்டு போர்புரிய வந்தெதிர் புக்கான்.

(இ-ள்.) பார்த்தவன் மிகவுங் கோபித்து உதட்டைக்ககடித்து திண்டிமமும் பேரிகையும் திமிலையுமாகிய வாத்தியங்கள் முழங்கக் கெடாமற் பொருந்திய சைநியங்களுடனே நெருங்கிப் போர்புரிதற்காக எதிரே வந்து புகுந்தனன்.—எ-று. (௩௩௭)

எதிர் புகுந்திடலு மேற்றெதிர் சென்றா
ரதிர் புகுங்கழலி னுடுறு பூதர்
பொதிர் புகுந்தவிருள் போந்துழி பெண்ணில்
கதிர்பு குந்தனைய காட்சி படைத்தார்.

(இ-ள்.) எதிரே வருதலும் முழங்காநின்ற வீரகண்டையணிந்த காலுடனே போர்புரிகின்ற பூதர்கள் துவாரத்திற்குள்ளிருந்த இருள் வந்தவுடனே அளவற்ற ஒளிகள் உள்ளே புகுந்தாற்போலும் என்று கூறத்தக்க காக்ஷிபொருந்தினவர்களாய் எதிர்த்துக்கொண்டெதிரே சென்றார்கள்.—எ-று. (௩௩௮)

தோமரம் பரசு சூலமொ டெஃக
மேமருங் கதைக ளேவினர் கோரன்
மாமருங் கவுணர் மற்றிவர் குன்றங்
காமரம் படை கலந்து விடுத்தார்.

(இ-ள்.) அதிகோரனுடைய அருகினிற்கின்ற பெரிய அசுரர்கள் தோமராயுதங்களையும் பரசுகளையும் முசலங்களையும் வேல்களையும் துன்பம்பொருந்திய கதாயுதங்களையும் விட்டார்கள்; உடனே இந்தப்பூதர்கள் மலைகளையும் காமரங்களாகிய படைகளையுங் கலந்துவிட்டார்கள்.—எ-று. காமரம் – சோலை. (ருருக)

எடுத்து வேழநிரை யெற்றினர் தேரை
யொடித் தெறிந்தன ருகண்டுகள் பாய்மாப்
பிடித்தொர் கைகொடு பிசைந்தனர் வீரர்
துடித்தி டும்படி துகைத்தனர் பூதர்.

(இ-ள்.) பூதர்கள் வரிசையாக வருகின்ற யானைப்படைகளை வாரி ஒன்றின்மீதொன்றாக அடித்தனர்; தேர்களை யொடித்தெறிந்தனர்; வளைந்தோடுகின்ற குதிரைகளைப்பிடித்து ஒருகையினாற் பிசைந்தனர்; வீரர்கள் துடிக்கும்வண்ணம் காலினால் மிதித்தார்கள்.—எ-று. (ருசഠ)

எறிவர் பல்படையு மெய்குவர் வெங்கோல்
குறிய வீட்டிகொடு குத்துவர் வாளாற்
செறுநர் தங்களுடல் சிந்துவ ரிவ்வா
றறியும் வெஞ்சமரை யாற்றினர் தீயோர்.

(இ-ள்.) கொடியவர்களான அசுரர்கள் பலவாயுதங்களை வீசி யெறிவார்கள்; வெவ்விய அம்புகளை எய்வார்கள்; சிறிய ஈட்டிப்படைகளைக்கொண்டு குத்துவார்கள்; வாளினால் பகைவர்களி னுடலங்களை வெட்டிச் சிந்துவார்கள்; இவ்வண்ணமாகப் பழகியுள்ள கொடும்போரினைப் புரிந்தார்கள்.—எ-று. (ருசக)

சோரி பொங்கின சொரிந்தன மூளை
சாரு றுங் குடர் சரிந்தன சேனங்
காரி பம்பின கணங்களு மேனை
வீரரா மவுண ரும்பலர் வீந்தார்.

(இ-ள்.) இரத்தம் பொங்கினவாகிச் சொரிந்தன; மூளையொடு பொருந்திக் குடர்கள் சரிந்தன; பருந்துகளும் காக்கைகளும் நெருங்கின; பூதகணங்களும் அவர்களையன்றியுள்ள வீரர்களாகிய பல வசுரர்களும் இறந்தார்கள்.—எ-று. (ருசஉ)

ஈடு றுஞ்சம ரிழைத்துழி யிவ்வா
றுடல் வெங்கணவ ராற்றமு னிந்தே
சாடி வன்மையொடு தாக்கலு நில்லா
தோடி னாரவுண ராயுளர் முற்றும்.

(இ-ள்.) இவ்வண்ணஞ் சமானமான போரினை இயற்றியவுடனே வெற்றியினையுடைய வெவ்விய பூதவீரர்கள் மிகவுங் கோபங்கொண்டு எதிரே புகுந்து வன்புடனே உதைத்தலும், எதிர்த்து நில்லாமல் அசுரர்களாக வுள்ளவர்க ளனைவரும் ஓடினார்கள்.—எ-று. (ருசரு)

கோர மிக்கவதி கோரனெ னும்பேர்
வீரன் மற்றதனை நோக்கி வெகுண்டே
யோரொ ழுத்தனை யுரத்தொடு பற்றிச்
சாரதப் படைஞர் தம்மொடு நேர்ந்தான்.

(இ-ள்.) மிகுந்த கோரரூபனாகிய அதிகோரனென்று பேருள்ள வீரனானவன் இதனைக்கண்டு கோபங்கொண்டு ஒரு எழுவாயுதத்தை வன்மையுடன் பிடித்துக்கொண்டு பூதசைனியங்களுடன் எதிர்த்தனன்.—எ-று. (ருசச)

தலைத னிற்கரத லத்திளின் மொய்ம்பின்
மலையி னிற்பெரிய மார்பின் முகத்தி
ஞெலி கழற்கண முலைந்திட மோதிக்
கொலைவி னைத்தொருவ னேகுல வுற்றான்.

(இ-ள்.) தலைகளிலும் கைகளிலும் தோளிலும் மலையினும் பெரிய மார்புகளி லும் முகத்திலும் ஒலிக்கின்ற வீரக்கழலணிந்துள்ள கால்களையுடைய பூதகணங்கள் வருந்தும்வண்ணம் அடித்து கொலைத்தொழிலைச் செய்துகொண்டு அவ்வதிகோரன்தான் ஒருவனே உலாவினான்.—எ-று. (௩௪௫)

ஈடி லாததொ ரெழுப்படை பற்றா
வோடி யோடியுரு முற்றென மோதி
வீடு றாதமர் விளைத்திடு பூதர்
கோடி கோடியொ ரிமைப்பிடை கொன்றான்.

(இ-ள்.) ஒப்பற்றதாகவுள்ள எழுவாயுதத்தைப் பிடித்துக்கொண்டு ஓடியோ டிச்சென்று இடியிடித்தாற்போல அடித்து அழியாது போர்புரிகின்ற பூதர்களைக் கோடி கோடியாக ஒரு இமைப்பொழுதிற்குட் கொன்றனன்.—எ-று. (௩௪௬)

இந்த வாறவ னெழுக்கொடு தாக்க
முந்து தூசிமுரி வுற்றது கண்டான்
கந்த னேவல்செய் கணப்படை மன்னன்
சிந்து மேகன்முனி வோடெதிர் சென்றான்.

(இ-ள்.) இவ்வண்ணம் அவன் எழுவாயுதத்தைக்கொண்டடிக்க, முன்னே நின்ற தூசிப்படை பின்வாங்கியதனை குமரக்கடவுளின் ஊழியம்புரிகின்ற பூதசேனாதிபனாகிய சிந்துமேகனென்பவன் கண்டு கோபத்துடனே அவனெதிரோ சென்றனன்.-எ-று.(௩௪௭)

சென்ற பூதரிறை செங்கையில் வைகுங்
குன்ற மொன்றையதி கோரனெ னும்பேர்
வென்றி யான்மிசை விடுத்தலு நோக்கித்
தன்ற டக்கையெழு வாற்றகர் வித்தான்.

(இ-ள்.) எதிரோசென்ற பூதராஜனாகிய சிந்துமேகன் தனது செவ்விய கையி லிருந்த ஒருமலையை அதிகோரனென்று பேருள்ள வெற்றியினையுடையவன்மீது விடு தலும், அவனதனைக்கண்டு தனது பெரிய கையிலிருந்த அந்த எழுவினாலடித்துடை யுமாறு செய்தான்.—எ-று. (௩௪௮)

தகரு மெல்லைதரி யார்கடல் வற்ற
முகிலி னுண்டிடு முரட்பெய ரண்ணல்
வெகுளி யோடவுணர் வேந்தனை யெய்தி
யகல மீதினி லடித்தனன் மாதோ.

(இ-ள்.) உடைந்தவுடனே சத்துருக்களென்னும் சமுத்திரம்வற்ற மேகத்தைப் போல உண்ணுகின்ற வக்ரோத்திக்கேற்ற சிந்துமேகனென்று பேருள்ள வீரன் கோபத் துடன் அசுரராஜனாகிய அதிகோரனை யடைந்து அவன் மார்பின்மீது அடித்தனன்.-எ-று.

அடித்த லோடுமவு ணர்க்கிறை யானோ
னிடுக்க ணெய்தியிவ னுவியை யின்னே
முடிப்ப னென்றுமுச லங்கொடு மொய்ம்பிற்
புடைத்த னன்னுருமு வீழ்வது போல.

(இ-ள்.) அடித்தவுடனே அசுராதிபனாகிய அதிகோரன் துன்புற்று இவனுயிரை இன்றே அழிப்பேனென்று இருப்புலக்கையைக்கொண்டு இடிவிழுவதுபோல தொனியுண்டாகும்வண்ணம் அடித்தனன்.—எ-று. (௫௫௦)

பூதன் மொய்ம்பிடை புடைத்த வெழுத்தா
னேதமா முரிய வேற்றெதிர் தெவ்வைக்
காது கைகொடு கபோல மதன்கண்
மோத வேயவுண னாவி முடிந்தான்.

(இ-ள்.) பூதவீரனுடைய மார்பினிலடித்த முசலாயுதமானது வருத்தமுண்டாக ஒடிதலும், தன்னொடு எதிர்த்து நின்ற பகைவனை கொல்லுதற்குரிய கையைக்கொண்டு கபோலத்தில் அடித்தவுடனே அதிகோரனாகிய அசுரன் பிராணனைவிட்டனன்.

வாய்தல் போற்றிய வயப்படை வீரன்
சாத லுற்றுழி தலைத்தலை யார்த்துப்
பூதசே னையர்கள் பொம்மென வேகி
மூதெ யிற்றலை முதற்கடை சென்றார்.

(இ-ள்.) வாசலைக் காத்துக்கொண் டிருந்த வெற்றிபொருந்திய படைகளையுடைய அதிகோரனென்னும் வீரனானவன் இறந்தவுடனே, அவரவர்களும் ஆரவாரித்துக்கொண்டு பூதசைனியங்கள் விரைவாகச்சென்று பெரிய மதிலின் முன்னிடத்திலிருக்கின்ற முதல்வாசலை அடைந்தார்கள்.—எ-று. (௫௫௨)

ஆண்டி யோசனை யொராயிரம் வான்போ
யீண்டு செம்மணிக ளாலிய லுற்று
மாண்ட தீயவட வாமுக மேபோ
னீண்ட தோர்சிகரி நின்றது கண்டார்.

(இ-ள்.) அவ்விடத்தி லோராயிரயோசனை ஆகாயமளாவி நெருங்கிய மாணிக்கங்களாலியற்றப்பட்டு, மாட்சிமைதங்கிய தீமயமான வடவாமுகாக்கினியைப்போல நீளமான ஒரு சிகரியானது நின்றதனைக் கண்டார்கள்.—எ-று. சிகரி - கோபுரம். (௫௫௩)

கண்ட தோர்சிகரி கைகொடு தொட்டுத்
தெண்டி ரைக்கடலின் மேற்செல விட்டார்
மண்டு மேருவரை யின்குவ டேந்திச்
சண்ட வாயுவிடு தன்மைய தென்ன.

(இ-ள்.) நெருங்கிய மேருமலையின் சிகரத்தைச் சுமந்து பிரசண்டமாருதமானது (முன்னாளில்) கடலில் இட்ட தன்மையைப்போல, பார்த்த ஒப்பற்ற கோபுரத்தை கையினாற்பறித்து தெளிந்த திரையினையுடைய கடலின்மீது செல்லுமாறுவிட்டார்கள்.

அன்ன வேலையி லலைந்தது ஞாலம்
பன்ன கேசனு மிகப்பட ருற்றான்
மன்னு சூருறை மகேந்திர மூதூர்
துன்னு தானவர் துளங்கி யயர்ந்தார்.

(இ-ள்.) கோபுரங் கடலில் விழுந்த அப்பொழுது பூமி யலைந்தது; சர்ப்பராஜனாகிய ஆதிசேஷன் மிகவுந் துன்பமடைந்தனன்; நிலைபெற்ற சூரபன்மன் வாழ்கின்ற மகேந்திரமாகிய பெரிய நகரத்தில் வாழுகின்ற அசுரர்கள் நடுங்கி அயர்ந்தார்கள்.—எ-று.

ஈண்டு பூதரொ றி யுஞ்சிக ரந்தா
னாண்டவ் வேலையிடை யாழ்ந்தது தொன்னா

ணீண்ட மேனியிறை நின்றளி யாமுன்
மாண்டு சாய்ந்துவிழு மந்தர மென்ன.

(இ-ள்.) முன்னாளில் நெடிய திருமேனியினையுடைய நாராயணன், ஆமையுருவமாக நின்று காத்தற்கு முன்னே கடல்கடைந்த காலத்து அழிந்து சாய்ந்து விழுந்த மந்தரமலையைப்போல, இவ்விடத்தில் பூதர்களெறிந்த கோபுரமானது அவ்விடத்தி லக்கடலில் மூழ்கியது.—எ-று. (௩௫௬)

வேறு.

பொலங்கெழு சிகரியப் புணரி சேர்தலிற்
கலங்கின விரிதிரைக் கைய்ம றித்ததான்
மலங்கின மொடுசுறு வருந் திமிங்கில
கிலங்களு மிரிந்ததங் கிளைக ளோடுமே.

(இ-ள்.) பொன்மயமாக விளங்குகின்ற கோபுரம் அக்கடலின் மூழ்குதலால், அக்கடல் கலங்கினதாய் விரிந்த திரையாகிய கையை விரித்தது; அதில் வாழ்ந்த மலங்குகளுடன் சுறுக்களும், அரிய திமிங்கில கிலங்களும் தங்களினத்துடன் விலகியோடின.

மாதலம் புகுந்திடுஞ் சிகரி வாரியுட்
பூதரங் குய்த்திட விரைவிற் போவது
வேதமுன் கொணர்தரு மீனம் வேலையிற்
பாதலம் புகுந்திடு பான்மை போலுமே.

(இ-ள்) பெரிய பூமியிலிருந்த அக்கோபுரம் தத்காலம் கடனீருள் பூதர்கள் எடுத்தெறிய விரைவாகச்செல்லுவது, முன்னாளில் வேதத்தை சோமுகாசுரனிடமிருந்து பிடுங்கிக் கொண்டுவந்த மீனனது பாதலத்திற்குச் செல்லுகின்ற தன்மையையொக்கும்.

கழற்கறங் கியதெனுங் கண்ண ருந்திய
வழற்கொழுந் தாகிய சிகரத் தாய்மணி
நிழற்பொலிந் திடுவன நீல வேலையிற்
றழற்பரந் தெழுவதோர் தன்மை போலுமே.

(இ-ள்.) வீரக்கழலைப்போலும் சுழலுகின்ற கண்ணினராகிய பூதர்களால் எடுத்தெறியப்பட்ட மாணிக்கமயமாக விருத்தலால், அழலின்கொழுந்தாகவுள்ள சிகரத்தில் ஆய்ந்திழைக்கப்பட்ட மணிகளின் நிழல் விளங்குதல் நீலநிறமான கடலில் தீபரந்து எழுவதாகிய ஒரு தன்மையையொத்தது.—எ-று. (௩௫௧)

நாகர மணிவெயி னணுகும் வேலையிற்
சீகர மும்பர்போய்த் தெறித்து மீள்வது
சாகர முற்றது தழலென் றுன்னியே
மாகர வாரிநீர் வழங்கல் போலுமால்.

(இ-ள்.) நாகர்களின் அழகிய மணிகளின் வெயில் அடைந்த கடலில் அக்கோபுரம் விழுதலால், சிறிய துளிகள் மேலே சென்று தெறித்து திரும்பிவருவது, கடலிற் றீப்பிடித்தது என்று கருதி ஆகாயத்திலுள்ள மேகங்கள் நீரைச் சிதறுதலையொக்கும்.

காமரு சிகரியிற் கவைஇய மாமணி
யேமுற நிழற்றிய வெழிலை நோக்கியே
பூமது நுகர்தரு பொறிவண் டானவை
தாமரை வனமென வயிர்த்துச் சாருமால்.

(இ-ள்.) அழகினையுடைய சிகரத்தில் பொருந்திய சிறந்த மணிகள் இன்பமுண்டாக நிழற்றிய அழகைப்பார்த்து பூக்களிலுள்ள தேனினையுண்ணுகின்ற புள்ளிகளையுடைய வண்டுகள் (இது) தாமரைவனமென்று சந்தேகங்கொண்டு அருகில்வராநிற்கும்.

பங்கய மணிநிழற் பரப்பை நோக்கியே
யிங்கிவை தசையென வெண்ணிப் புட்குல
நுங்கிய செல்வன நொய்தி னெய்தியே
யங்கிகொ லெனச்சில வகன்று போயின.

(இ-ள்.) பதுமராகமணி நிழலின் விசாலத்தைப்பார்த்து பறைவைக்கூட்டங்கள் இவ்விடத்தி லிவைகள் மாமிசங்களே என்று கருதி உண்ணும்பொருட்டுச் செல்கின்றன. விரைவாகச்சென்று சில பறவைகள் இது நெருப்போ என்று விலகிச்சென்றன.

தெழித்திடும் வேலையிற் செய்ய சோதியாற்
றழற்பொலி கோபுரந் தரிப்பின் றேகலாற்
கிழித்தன புணிபதி கிளர்ந்து மற்றவர்
விழித்தன ருருமென வெருவி யோடினர்.

(இ-ள்.) முழங்காநின்ற கடலில் செந்நிறமான சோதியினாலே தழலைப்போல விளங்குகின்ற கோபுரமானது எங்குநில்லாமற் செல்லுதலால் பாதாளத்தைக் கிழித்தன. அதிலிருந்த நாகர்கள் இது இடியோசையென்று பயந்து ஓடினார்கள்.—எ-று.

பூதர்கள் யாம்விடு பொலங்கொள் கோபுர
மோதநெஞ் சடைதலு முதிரங் கான்றதாற்
சேதன மோவிது செப்பு மென்றனர்
மீறு கதிர்மணி வெயிலென் றுன்னலார்.

(இ-ள்.) பூதர்கள் (சொல்லுகின்றார்கள்) நாமெறிந்த அழகுபொருந்திய கோபுரம் கடலின்நடுவை யடைதலும் இரத்தங்கக்கியது. அவ்வாறு தோன்றுவது அக்கோபுரத்தின்மீதுள்ள ஒளிபொருந்திய செம்மணிகளின் பிரகாசமென்று கருதாதவர்கள், இதனாலிது உயிருடையதோ சொல்லுங்களென்கிறார்கள்.—எ-று. (ருசுசு)

பொற்பகல் சிகரியுட் பொருந்தி யாழ்பவ
ரற்பக னுகருமீ னவரை நுங்குமான்
முற்பக லோர்பழி முடிக்கின் மற்றது
பிற்பக றமக்குறும் பெற்றி யென்னவே.

(இ-ள்.) முன்றினத்தில் ஒருபழியை யியற்றினா லப்பழி பின்றினத்தில் தங்களுக்கு வருந் தன்மையைப்போல, அகன்ற அழகினையுடைய கோபுரத்தினுள்ளே பொருந்தி நீருண் மூழ்கினவர்கள் இரவும் பகலுந்தின்ற மீன்கள் இப்பொழுது அவர்களை விழுங்குகின்றன.—எ-று. (ருசுரு)

ஆனதோர் கோபுர மளப்பி லாதமர்
தானவர் கிளையொடும் வீழ்ந்த தன்மையான்
மீனுறு திரைக்கடல் வெள்ள மேற்செலா
மாநக ரெயிறனை வளைந்து புக்கதே.

(இ-ள்.) அப்படிப்பட்ட ஒரு கோபுரமானது அளவற்றவர்களாகத் தன்னிடத்திலே வாழ்கின்ற அசுரவருக்கத்துடன் விழுந்ததன்மையினால் மீன்பொருந்திய திரையொடுகூடிய கடனீரானது மேலேசென்று அப்பெரிய நகரத்தின் மதிலினை வளைத்துசென்றது.—எ-று. (சுசுசு)

காதிடு மியற்கையிற் கால்கொண் டேகலிற்
பூதலம் வெருக்கொளப் பொங்கு மார்ப்பினின்
மீதமர் காரினில் விமலன் விட்டிடும்
பூதனா நிகர்த்ததப் புரிசை சூழ்புனல்.

(இ-ள்.) அம்மதிலின் சூழலினின்ற கடல்வெள்ளம் கொல்லுகின்ற தன்மையினால் விருப்பத்துடன் செல்லுதலால், பூமியினிடம் அஞ்சுமாறு பொங்காநின்ற ஆரவாரத்தினால் மேலே பொருந்திய மேகத்தால் இறைவனனுப்பிய பூதர்களையொத்தது.--எ-று.

மைக்கடல் புவியினு மகேந்தி ரப்புர
மிக்கது போலுமென் றைய மேற்கொளா
விக்கண நாடுது மென்று சென்றபோற்
புக்கது நகரிடைப் புணரி நீத்தமே.

(இ-ள்.) கரிய கடலானது பூவுலகத்தைவிட மகேந்திரபுர மிகுந்ததுபோலு மென்று சந்தேகத்தை மேற்கொண்டு இப்பொழுது பார்ப்போமென்று சென்றதைப் போல கடனீராது ஊருக்குட்பிரவேசித்தது.—எ-று. (௬௬அ)

மீனெனு மைந்தரை மிசைந்த தானவர்க்
கானதொ ரிறுவரை யணுகிற் றிவ்விடை
யானவர்ப் பொருவனென் றெண்ணிச் சேறல்போற்
போனதப் பதியினுட் புணரி நீத்தமே.

(இ-ள்.) மீன்களென்னும் பிள்ளைகளைத்தின்ற வசுரர்களுக்கு ஆகிய முடிவு கால நெருங்கியது, இவ்விடத்தில் யானவர்களை எதிர்த்துப் போர்புரிகின்றேனென்று சென்றாற்போல அவ்வூருக்குட் கடனீர் புகுந்தது.—எ-று. (௬௬௯)

இவ்வகை நிகழ்ந்திட வெறிந்த கோபுரம்
பௌவமுற் றிடுதலும் பைம்பொன் மாமதில்
வெவ்வலி யரசர்கள் விளிய வீறிலாக்
கௌவைகொ டிருநகர்க் காட்சித் தாயதே.

(இ-ள்.) இவ்வண்ண நடக்கப் பூதர்களாலெறியப்பட்ட கோபுரம் கடலையடைதலும், பசிய பொன்மயமான பெரிய மதில் சீரதிடமுள்ள அரசர்கள் இறப்ப அதனால் அழிய அழகிய ஆரவாரத்தினையுடைய ஊரின் காக்ஷியினையுடையதாயது.—எ-று. (௬௭0)

எல்லைமற் றணையதி லீண்டு சாரதர்
மல்லலம் புரிசையின் வடாது பாங்கரை
யொல்லையிற் றம்பதத் துதைப்பச் சாய்ந்தது
செல்லுற வீழ்ந்திடு சிகர மேயென.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் நெருங்கிய பூதர்கள் வளப்பம்பொருந்திய மதிலின் வடக்குப்பக்கத்தை விரைவாகத் தமது காலினாலுதைப்ப, இடிவிழ அதனால் விழுகின்ற சிகரத்தைப்போல சாய்ந்தது.—எ-று. (௬௭௧)

மாமதில் சாய்தலும் வலிய பூதர்கள்
காமரு நகரினுட் கலந்து நண்ணினா
ரோமரு கடங்கலு ழிபங்க ளீண்டியோர்
தாமரை மலர்த்தடந் தன்னிற் புக்கபோல்.

(இ-ள்.) மயக்கம்பொருந்திய மதநீரொழுக்குகின்ற யானைகள் நெருங்கி மலர்ந்த தாமரைமலர்களையுடைய ஒருதடாகத்திற் புகுந்தாற்போல, பெரிய மதில் சாய்ந்தவுடனே வலியினையுடையவர்களான பூதர்கள் அழகுபொருந்திய ஊருக்குட் பிரவேசித்தார்கள்.—எ-று. (௬௭௨)

கானுறு பங்கயக் கடவுட் கிப்பகல்
போனதோர் காலையிற் புணரி யாவையு

மாநிலங் கொள்வது மானப் பூதவெஞ்
சேனைகண் மகேந்திர புரத்திற் சென்றவே.

(இ-ள்.) மணம்பொருந்திய தாமரைமலரிலிருக்கின்ற பிரமதேவனுக்கு நடக்கின்ற இத்தினம் போனவுடனே கடல்களனைத்தும் பெரிய பூமியை சூழ்ந்துகொள்வதையொப்ப, வெவ்விய பூதசைநியங்கள் மகேந்திரபுரத்திற் சென்றன.—எ-று. (கூஎக)

புக்கனர் வீரர்கள் புயலின் மேனியுஞ்
செக்கரங் குஞ்சியாந் தீயுங் கைகளாய்
மிக்கெழு புணரியும் வேறு வேறுரு
மைக்கட லுலப்பில வருவ போலவே.

(இ-ள்.) மேகத்தின் வடிவமும், செக்கர்வானம்போன்ற சிகையென்னுந் தீயும், கைகளாக மிகுதியுற்றெழுந்த அலைகளும் வேறே வேறே பொருந்தி அளவற்ற கருங்கடல் வருவனபோல பூதவீரர்கள் பிரவேசித்தார்கள்.—எ-று. (கூஎச)

துதித்திட வரியவ னகரிற் றுண்ணென
வெதிர்த்திடு தானவ ரினத்தை யொல்லையிற்
சிதைத்தனர் மாளிகை சிகரம் யாவையு
முதைத்தனர் வீட்டின ருயர்ந்த பூதரே.

(இ-ள்.) உயர்வுபொருந்திய பூதர்கள் துதித்தற்கரியவனான சூரபன்மனுடைய நகரத்தில் விரைவாக எதிர்த்த அசுரசைனியத்தைச் சீக்கிரமாக அழித்தனர்; மாளிகைகள் சிகரங்கள் முதலிய வனைத்தையும் உதைத்துத்தள்ளினார்கள்.—எ-று. (கூஎரு)

மதரொடு குறுகுமவ் வயவெம் பூதர்க
ளதிர்கழ லடிகளா லளப்பின் மாளிகை
பிதிர்பட வுந்தலும் பிறங்கு பூழிகள்
கதிருறு கதியினுங் கடந்து போனவே.

(இ-ள்.) மதத்துடன் சென்ற அந்த வெற்றிபொருந்திய வெவ்விய பூதர்கள் முழங்குகின்ற வீரவெண்டயமணிந்த கால்களால் அளவற்ற மாளிகைகளை சிதறும்வண்ணம் உதைத்தலும் அவைகளின்றுமுண்டான புழுதிகள் சூரியன் செல்லுகின்ற வழியையுந் தாண்டிச்சென்றன.—எ-று. (கூஎசு)

வேறு.

அங்கவ் வெல்லையிற் சாரத வேந்தர்க ளயில்வேற்
புங்க வன்றனை நீங்கியா மவுணர்கோன் புரத்து
ளிங்கி னிப்படர் கின்றது தக்கதன் றென்னாச்
செங்க ளந்தனின் மீண்டனர் சேனையுந் தாமும்.

(இ-ள்.) அவ்விடத்தி லப்படிப்பட்ட சமயத்தில் பூதசேனாபதிகள் கூரிய வேற்படையினையுடைய தேவனைவிட்டு நாம் அசுராதிபனாகிய சூரபன்மனுடைய பட்டினத்தில் இனிச்செல்லுதல் தகுதியானதல்லவென்று நினைந்து சைநியங்களுடன் தாங்களும் ரணகளத்திற்குத் திரும்பிவந்தார்கள்.—எ-று. (கூஎஎ)

ஆன காலையிற் பூதர்தஞ் செய்கைக ளனைத்து
ஞான நாயகன் காண்குறா நல்லருள் புரிந்து
மான வேற்படை வீராரு மமரரும் வழுத்தச்
சேனை யாவையுங் கொண்டுதன் பாசறை சேர்ந்தான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் பூதர்களின் செய்கைகள் அனைத்தையும் ஞாயகனான சண்முகப்பெருமான் கண்டு நல்ல திருவருளைச்செய்து பெரிய வாட்படை

களையுடைய நவ்வீரர்களும் தேவர்களும் துதிக்க சைநியங்க ளனைத்தையும் உடனழை த்துக்கொண்டு தமது படைவீட்டை யடைந்தனர்.—எ-று. (௩௪௮)

பாச றைப்புகு குமரவேள் பாரிடப் பகுதி
யாச றப்புனை யாவணச் சூழல்போ யமர
வாச வத்தனிக் கடவுளா தியர்புடை வழுத்த
வீச னிற்சிறந் தரியணை தன்னில்வீற் றிருந்தான்.

(இ-ள்.) பாசறையிற் புகுந்த குமாரசுவாமியார் பூதசைநியங்கள் குற்றமற வமைக்கப்பட்ட வீதியினிடங்களிற் சென்றிருக்க, இந்திரன் முதலான ஒப்பற்ற தேவர்கள் அருகிற் சூழ்ந்து துதிக்க, இறைவனைப்போல சிறப்புற்று சிங்கவாகனத்தில் எழுந்தருளியிருந்தனர்.—எ-று. (௩௪௯)

ஈண்டு தானவ ரிலக்கம்வெள் ளத்தரு மின்னே
மாண்டு போயின ரனையரை மலிகதிர்க் கரத்தாற்
றீண்டி வான்மையிற் குறைந்தன னென்றுசெஞ் சுடரோ
னுண்டு மூழ்குவான் புக்கென வளக்கரை யடைந்தான்.

(இ-ள்.) நெருங்கிய அசுரசைநியங்களான இலக்கம்வெள்ளஞ் சேனைகளும் இறந்து ஒழிந்தார்கள்; அவர்களை நான் இன்று நிறைந்த கிரகணங்கள் என்னுங் கைகளாற் பரிசித்துத் தேவத்தன்மையிற் குறைவுபட்டேனென்று செந்நிறமான சூரியன் (அப்புலையை யகற்றுமாறு) அவ்விடத்தி னீராடச் சென்றாற்போல சமுத்திரத்தை யடைந்தனன்.—எ-று. (௩௫௦)

வேறு.

புரந்தர னாதியர் புன்மை நீக்கியே
பெருந்திரு வுதவுவான் பிரான்றன் காதல
னிருந்தனன் பாசறை யீது நின்றிடத்
திருந்தலர் மாட்டுறுஞ் செய்கை செப்புவாம்.

(இ-ள்.) இந்திரன் முதலியவர்களின் பந்தங்களையொழித்து சிவபெருமான் திருமைந்தரான குமாரசுவாமியார் பாசறையிலிருந்தனர். இதுநிற்க, பகைவர்களிடத்தில் நடந்த செய்கைகளைக் கூறுகின்றோம்.—எ-று. (௩௫௧)

ஒருவரு முளத்தினு முணர்வு றுவகை
யருவம தாகியே யகன்று சூர்முதல்
பொருவரு மகேந்திர புரத்துக் கோயிலுட்
டிருமகண் மணமனைச் சேறன் மேயினான்.

(இ-ள்.) யாரு மனத்தினாலு மறியாதவண்ணம் சூரனாகிய முதல்வன் மறைந்து ஒப்பற்ற மகேந்திரபுரியிலுள்ள திருமகளின் கல்யாணமாளிகையைப்போல காணப்படுகின்ற மாளிகையையடைந்தனன்.—எ-று.

திருமகண்மணமனை என்பதை – திருமகளை யொத்தவளும், தன் மனைவியுமான பதுமகோமளையின் வீடு எனினுமாம். (௩௫௨)

பஞ்சடி நூபுரப் பதுமை கோயில்போ
யஞ்சிய லடுத்தமெல் லமளி மேலுறுத்
துஞ்சலன் யாரொடுஞ் சொல்லு மாடலன்
வெஞ்சமர் வினையமே யுன்னி மேவினான்.

(இ-ள்.) செம்பஞ்சூட்டப்பட்ட உள்ளடியினையும், நூபுரமணமணிந்த கால்களையுமுடைய பதுமகோமளையின் மாளிகைக்குச்சென்று ஐவகைத்தன்மைபொருந்திய

மெல்லிய வணையின்மீது அடைந்து நித்திரைசெய்தானில்லை, எவர்களுடனும் பேசவும் இல்லை; (பின் யாதுசெய்தானெனின்) வெவ்விய போருக்கு வேண்டிய தந்திரத்தை யே நினைத்துக்கொண்டிருந்தனன்.—எ-று. (ருஅரு)

ஆனதொ ரெல்லையி லரசன் போர்செயப்
போனதும் பொருததும் புறந்தந் தோமென
மாநக ரதனிடை வறியன் வந்ததும்
பானுவின் பகைஞனுக் கொற்றர் பன்னினர்.

(இ-ள்.) அப்படிப்பட்ட சமயத்தில் பானுகோபனுக்குத் தூதுவர்கள் மன்னவனாகிய சூரபன்மன் போர்செய்ய சென்றதுவும் சண்டைசெய்ததுவும் பின் முதுகாட்டினனென்று கூறுமாறு பெரியநகரத்திற்கு யாதொன்றுமில்லாமையால் தரித்தனாகிய வவனைப்போன்று வந்ததனையும் சொன்னார்கள்.—எ-று (ருஅச)

சொன்னடை மந்திரத் தொடர்பு மாயமுந்
தன்னுறு படைகளுஞ் சாதனஞ் செய்வோ
னன்னது கேட்டலு மலக்க ணெய்தியே
மன்னுறு கடிநகர் வல்லை யேகினான்.

(இ-ள்.) சொன்ன முறைப்படியே ஆலோசனைசெய்தலின் தொடர்புகளையும், மாயங்களையும், தனக்குப்பொருந்திய சைநியங்களையும் கருவிப்படுத்துவோனாகிய பாநுகோபன், (சூரபன்மன்) தோற்று வந்துவிட்டானென்னு மதனைக்கேட்டவுடனே துன்பமடைந்து அரசனிருக்கின்ற மாளிகையை அதிக விரைவாகவடைந்தனன்.—எ-று.

மணிநிரை யிகலியே மாறு வில்லுமி
ழிணையறு சின்கர மெய்திச் சேக்கைமேற்
றணிவறு சூழ்ச்சியோ டமர்ந்த தாதைதன்
றுணையடி வணங்கியே தொழுது கூறுவான்.

(இ-ள்.) அரதனங்கள் பகைத்தனவாய் ஒன்றொடொன்று முரணுகின்ற ஒளியை வீசுகின்ற சமானரகிதமான சயனத்தின்மீது மிகுந்த ஆலோசனையுடனேயிருந்த பிதாவாகிய சூரபன்மனுடைய இரண்டு கால்களையும் நமஸ்கரித்து எழுந்து கைகூப்பித் தொழுது (பின்னர்) சொல்லுகின்றான்.—எ-று. (ருஅசு)

மாற்றலர் யாவரு மறிய வல்லைபோ
ராற்றுதி யாலென வைய முற்பகல்
சாற்றினை விடுத்தனை தமிய னேகியே
யேற்றவர் தம்முட னிகல்செய் தேனரோ.

(இ-ள்.) பகைவர்களனைவரும் இறந்து போகும்வண்ணம் விரைந்துசென்று போர்புரியக்கடவை யென்று கழிந்ததினத்தில் சொல்லியனுப்பினை, அடியேன் சென்று அவர்களுடன் எதிர்த்துப்போர்புரிந்தேன்.—எ-று. (ருஅஎ)

உற்றில னறுமுக னொழிந்த வீரர்கள்
சுற்றிய படையொடு துவன்றிப் போர்செய்தார்
பற்றிய மோகமாப் படையைத் தூண்டியான்
மற்றவ ருணர்ச்சியும் வலியு மாற்றினேன்.

(இ-ள்.) அந்தபோரில் சண்முகனொருவன்மாத்திரம் வந்தானில்லை, அவனன்றியுள்ள வீரர்கள் சூழப்பட்ட சைனியங்களுடனே நெருங்கிவந்து போர்புரிந்தார்கள்; நான் வைத்திருந்த சிறந்த மோகனாஸ்திரத்தைவிட்டு அவர்களுடைய அறிவையும் வன்மையையும் அபகரித்தேன்.—எ-று. (ருஅஅ)

சென்றம ரியற்றிய செறுநர் யாரையும்
வென்றன னத்துணை விமலன் மாமக
ஞென்றொரு மாப்படை யுய்ப்ப வென்படை
வன்றிற னீங்கியே வருந்தி மீண்டதே.

(இ-ள்.) எதிர்த்துப் போர்புரிந்த பகைவர்களனைவர்களையும் செயித்தேன்; அப்பொழுது சிவகுமாரன் ஒரு சிறந்த அஸ்திரத்தினைவிட்டான். அதனால் எனதம்மோகஸ்திரம் தனது சாமர்த்தியமிழந்து துன்பமுற்றுத் திரும்பியது.—எ-று. (௫௮௯)

அன்னதோர் பான்மையா லனையர் யாவரும்
பின்னுணர் வெய்தியே பெயர்ந்து போயினு
ரென்னிது வெற்றியென் றியானு மீண்டன
னுன்னொடு முரைத்தில னுள்ளம் வெள்கினேன்.

(இ-ள்.) அப்படிப்பட்ட தன்மையினால் அவர்களனைவரும் பின்னர் உணர்ச்சியடைந்து (சண்டைக்குவராமல்) திரும்பச்சென்றனர். இதென்ன வெற்றியென்று நானுந் திரும்பிவந்தேன், வெட்கமுற்றயான் இதனை உன்னிடத்தில் கூறினேனில்லை.

நெற்றியங் கண்ணுடை நிமல னேனையோர்
முற்றரு படைகளான் முடிவின் மாயையாற்
பற்றலர் யாரையும் படுத்து நாளையே
வெற்றிகொள் குவனென நென்னன் மீண்டனன்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணினனாகிய சிவபெருமானும் மற்றைய தேவர்களும் முன்னே எனக்குத்தந்த ஆயுதங்களாலும், அழிவற்ற மாயையினாலும் பகைவரனைவரையுங்கொன்று நாளையத்தினமே ஜயம் பெறுவேனென்று நேற்றுத் திரும்பிவந்தேன்.

ஞாயிறு வந்தபி னண்ண லார்மிசைப்
போயம ரியற்றிடப் புறத்திற் சென்றன
னாயதன் முன்னரோ யனிகந் தன்னுட
னேயென வேகினை யெந்தை நீயென்றூர்.

(இ-ள்.) சூரியனுதித்தற்குப் பின்னர் பகைவர்கண்மீது சென்று போர்புரியும் வண்ணம் யான் வெளியே வந்தனன்; இதற்குள்ளேயே சைநியங்களுடனே எந்தையே நீ விரைந்து சென்றனை.—எ-று. (௫௯௨)

வரந்தனி லழிவுறு வள்ள லீண்டுறு
திருந்தல ருடனமர் செய்தற் காகவோ
ரருந்துணை வேண்டலை யதனை யுன்னிமீண்
டிருந்தன னிப்பக லீதென் செய்கையே.

(இ-ள்.) (இறைவனளித்த) வரத்தினால் நித்தியத்துவத்தை யடைந்துள்ள வள்ளலே! நீ இங்கு வந்திருக்கின்ற பகைவர்களுடன் போர்புரிதற்கு அருமையான துணையை விரும்புவாயல்லை; அதனை நினைத்து இத்தினந் திரும்ப வந்திருந்தேன். இது என்செய்கை.—எ-று. (௫௯௩)

ஓர்ந்திலை யித்திற முணர்வு ளாரொடுந்
தேர்ந்திலை யென்னையும் விளித்துச் செப்பிலை
சார்ந்திடு நாற்பெருந் தானை தன்னொடும்
பேர்ந்தனை யமர்க்கிது பெருமைப் பாலதோ.

(இ-ள்.) மன்னவனே! நீ போரியற்றச்செல்வதாகிய இந்த சங்கதியை ஆலோசித்தாயில்லை; (நீ யாலோசியாது விட்டாலும்) ஆலோசனை யுடையவர்களிடத்திலும் கேட்டுணர்ந்தாயில்லை; (இதுநிற்க) என்னையும் அழைத்துரைத்தாயில்லை; வந்திருக்கின்ற பெரிய சதுரங்க சைனியத்துடனே போருக்குச்சென்றனை. இவ்வாறு செய்தது நின்பெருமைக்குத்தக்கதோ?—எ-று. (௲௧௪)

அமரருக் காக்கமு மவுணர்க் கேக்கமு
மிமையவர் முதல்வனுக் கின்பு நல்கினை
குமரனைக் கணங்களைக் குறித்து மன்னநீ
சமரினுக் கேகுத றலைமை யாகுமோ.

(இ-ள்.) நீ சண்டைக்குச்சென்று தேவர்களுக்கு உற்சாகத்தையும், அசுரர்களுக் கேக்கத்தையும், தேவராஜனுக்குச் சந்தோஷத்தையும் அளித்தனை. மன்னவனே! நீ குமரனையும் பூதகணங்களையும் உத்தேசித்துப் போர்புரியுமாறு செல்லுதல் சிறப்பாகுமோ?—எ-று. (௲௧௫)

திகழ்ச்சிகொண் மேலவர் சிறியர் தம்மொடு
நிகழ்ச்சிகொள் போரிடை நேர்வ ரேயெனிற்
புகழ்ச்சிய தில்லையாற் பொருது வெல்லினு
மிகழ்ச்சியின் பாலதா மெவரொ வர்க்குமே.

(இ-ள்.) கீர்த்திபொருந்திய உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்களுடனே நடக்கின்ற சண்டையில் எதிர்ப்பார்களே ஆனால், (எப்படிப்பட்டவர்களுக்கும்) பொருதுவென்றாலும் (அவ்வெற்றியானது) அபகீர்த்திக்கே இடமாக நிற்கும்.—எ-று. (௲௧௬)

சென்றது கிடந்திடச் சிறிய னென்னினு
மொன்றிவண் மொழிகுவ னுள்ளங் கோடியா
லின்றிர வகன்றபின் னேகி யாரையும்
வென்றிகொண் டேகுவன் விடுத்தி யாலெனை.

(இ-ள்.) போனதுபோக (நான்) சிறியவனாக விருந்தாலும் இங்கே நானொன்று சொல்லுகின்றேன்; அதனை நீ மனத்திற் கொள்ளுதல் வேண்டும். அஃதியாதெனில், இன்றிரவு ஒழிந்தவுடனே யான் சென்று அனைவரையும் வென்றுவருவேன் என்னை அனுப்பக்கடவை.—எ-று. (௲௧௭)

கொற்றவை சிறுவனைக் கொற்றங் கொள்வதுஞ்
சுற்றுறு படையையான் றொலைக்குந் தன்மையு
மொற்றுவர் கண்டுமு னுரைக்க வெந்தைநீ
தெற்றென மகிழ்ச்சியிற் சிறந்து வைகுதி.

(இ-ள்.) எந்தையே! யான் கொற்றவையின் பிள்ளையான சண்முகனை வெல்வதையும், அவனைச் சூழ்ந்துள்ள சைனியங்களை அழிக்குந்தன்மையையும் தூதர்கள் பார்த்துவந்து சொல்ல, சீக்கிரம் சந்தோஷத்தின் மிகுந்து இருக்கப்போகின்றனை.—எ-று.

வேறு.

கூரிய வேற்படை கொண்டுடை யோனை
வீரர்க டம்மொடு வெற்றிகொ ளேனேல்
வாரல னீண்டு மகிழ்ந்திறை நல்கும்
பேரர சாட்சி பிடிக்கில னென்றான்.

(இ-ள்.) யான் கூறிய வேற்படையைத் தாங்கியிருக்கின்ற குமரனை அவனுக்குத் துணையாக வந்திருக்கின்ற வீரர்களுடனே வெற்றியடையாது போவேனாகில் இங்கே வரமாட்டேன். அன்றியும், இறைவனே! மகிழ்ச்சியா லுன்னாலளிக்கப்பட்ட பெரிய அரசாக்ஷியையும் கைக்கொள்ளேன் என்று கூறினன்.—எ-று. (௩௯௯)

என்பது கேட்டலு மெவ்வுல கிற்குந்
துன்பு புரிந்திடு சூரபன் மாவா
முன்பன் மகிழ்ந்து முகத்தெதிர் நிற்குந்
தன்புதல் வற்கிது சாற்றுத லுற்றான்.

(இ-ள்.) என்று கூறுவதனைக் கேட்டவுடனே அகிலலோகங்களுக்குந் துன்பத்தையே செய்கின்ற சூரபன்மனென்னு முதல்வன் மகிழ்ந்து முகத்தினெதிரே நிற்கின்ற தன்மகனுக்கிதனைக் கூறத்தொடங்கினன்.—எ-று. (௪00)

மூவர்க டாங்களு மூச்சக முள்ள
தேவரு மையிரு திக்குடை யோரு
மேவரு மேற்கினு மெம்பியை யட்ட
மேவல னாற்றலை வெல்லரி தம்மா.

(இ-ள்.) திரிமூர்த்திகளும், மூன்றுலகங்களிலுமுள்ள தேவர்களும், பத்துத் திக்கிலுள்ளவர்களும், இன்னமுள்ளவர்களும் ஒன்றாக வந்தெதிர்த்தாலும், எனது தம்பியைக்கொன்ற பகைவனுடைய வன்மையை வெல்லமுடியாது.—எ-று. (௪0௧)

பன்னிரு செங்கை படைத்துள சேயோன்
றன்னொ டெதிர்ந்து சமர்த்தொழில் செய்வா
ரொன்னல தில்லை யிவன்சிறி யோனென்
றுன்னலை வன்மையி னொப்பில னோகாண்.

(இ-ள்.) செவ்விய பன்னிரண்டு கைகளையுடைய அக்குமரனுடனே எதிர்த்துப் போர்புரிதற்கு என்னைவிட இன்னொருவன் கிடையாது; இவனைச் சிறியவனென்று கருதாதே, வன்மையிலொப்பற்றவனென்றுணர்தி.—எ-று. (௪0௨)

குன்ற மெறிந்திடு கூரிய வேற்கை
வன்றிற லாளனை வன்மையில் யானே
வென்றிடு கின்றனன் மேலது நிற்க
வொன்றுள தையவு ரைப்பது கேண்மோ.

(இ-ள்.) மலையைப்பிளந்த கூரிய வேற்படையைத் தாங்கிய கையினையுடைய மஹாபலசாலியான குமரனை சாமர்த்தியத்தினால் பின்னர் நானே ஜயிக்கின்றேன். அது நிற்க, சொல்லவேண்டியது ஒன்றிருக்கின்றது; அதனைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக.—எ-று. (௪0௩)

ஒற்றென வந்துநம் மூரலை வித்துப்
பற்றலர் நீடு படைக்கிறை யாகுங்
கொற்ற வனைத்தனி கூவி மலைந்து
செற்றனை யேகுதி சேனையொ டென்றான்.

(இ-ள்.) நீ சைனியங்களுடனே சென்று தூதனாகவந்து நமது நகரத்தை அலையுமாறு செய்து பகைவர்களின் மிகுந்த சைனியங்களுக் கிறைவனாகவிருக்கின்ற மன்னவனைத் தனியே அழைத்துப் போர்புரிந்து கொன்றுவரக்கடவை என்று கூறினன்.

தந்தை புகன்றிடு தன்மையை யோரா
வெந்தை பிராற்குள மித்திற மாமேன்

முந்திறை தன்னின் முடிப்பனி தென்ன
மைந்தனை நோக்கி மகிழ்ந்தனன் மன்னன்.

(இ-ள்.) தந்தையான சூரபன்மனுரைத்த தன்மையையுணர்ந்து எம்பெருமான் மனம் இவ்வண்ணமானால், வரும்க்ஷணத்திலேயே இதனை முடிக்கின்றேனென்று கூறினான். அதனை அரசனாகிய சூரபன்மன் கேட்டு மகனைப் பார்த்துச் சந்தோஷித்தனன்.

அடுசமர் செய்வகை யாங்கவ னேக
விடையது நல்கி வியத்தகு மன்ன
னிடையுறு சூழ்ச்சிக ளியாவு மிகந்து
மிடைதரு தொல்வள மேவி யிருந்தான்.

(இ-ள்.) கொல்லுகின்ற போர்புரியும்வண்ணம் அவ்விடத்திற்கு அப்பாநுகோபனைச் சொல்லும்வண்ணம் உத்தரவளித்து, புகழத்தகு மவ்வரசன் இடையிற்பொருந்திய ஆலோசனைகளனைத்தையும்விட்டு நெருங்கிய பழைய சம்பத்துடனே இருந்தனன்.

தாதைத னேவற லைக்கொடு சென்றே
யாதவன் மாற்றல னாகி யமைந்த
னேதமி றன்குல மேகலு மங்கட்
டூதுவர் பற்பலர் துண்ணென வந்தார்.

(இ-ள்.) பாநுவின் பகைவனாகிய வாலிபன் பிதாவின் வாக்கியத்தைத் தலைமேற் றாங்கிச்சென்று குற்றமற்ற தனது அரண்மனைக்குச்செல்லுதலும் அவ்விடத்திற்கு அநேகந் தூதுவர்கள் விரைவாக வந்தார்கள்.—எ-று. (௬0௭)

துங்கம துற்றுள சூர்தரு மைந்தன்
செங்கம லம்புரை சிறடி தன்னைத்
தங்கண் முடிக்கொடு தாழ்ந்தனர் நின்றே
யிங்கிவை கேட்க வெனமொழி குற்றார்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய சூரபன்மன் பெற்ற பிள்ளையான பாநுகோபனுடைய செவ்விய கமலமலரையொத்த சிறிய கால்களை தங்கள் தலைகளால் வணங்கி நின்று, மன்ன! இப்பொழுது இவைகளைக் கேட்கவேண்டும் என்று கூறுகின்றார்கள்.

வேறு.

மன்னவ னின்றுபோய் மலைந்து மீண்டபி
னென்னலன் மாட்டுறு முலப்பில் பூதர்க
ளிந்நகர் வடாதுசா ரெய்திக் காவலோன்
றன்னுயிர் கொண்டனர் தானை சிந்தினார்.

(இ-ள்.) நமது அரசன் இன்றுசென்று போர்புரிந்து திரும்பிவந்ததற்குப் பின்பு, பகைவனிடத்தி னிற்கின்ற அளவற்ற பூதர்கள் இந்த ஊரின் வடக்குப்பக்கத்தை யடைந்து அவ்விடத்துக் காவலனாகிய அதிகோரன் என்பவனையுங்கொன்று சேனைகளையுங்கொன்றனர்.—எ-று. (௬0௯)

தகுவர் தமாப்படை தலைய ழிந்தபி
னகலிரு விசும்பளந் தாண்டு நின்றிடு
சிகரியைக் கீண்டுதஞ் செங்கை யாலெடா
வெகுளியொ டளக்கரின் மீது வீசினார்.

(இ-ள்.) பகைவர்களின் மாயம்பொருந்திய சைநியங்கள் நிலைகெட்ட பின்னர், இடமகன்ற வானத்தையளாவி யவ்விடத்தில் நின்ற கோபுரத்தை தங்கள் செவ்விய கைகளினாலேயே தோண்டியெடுத்துக் கோபத்துடன் கடலின்மீதெறிந்தார்கள்.—எ-று

நீடிய சிகரிபோய் நேமி புக்கபின்
மாடுறு வடபுல மதிலை முற்றவுஞ்
சாடினர் மீண்டனர் தலைவ விந்நகர்
கோடில தாங்கடற் குட்டம் போன்றதே.

(இ-ள்.) நீண்ட கோபுரமானது சென்று கடலையடைந்தபின்பு, பக்கத்திலுள்ள மதின்முழுமையும் அழித்தவர்களாகத் திரும்பிச் சென்றார்கள். தலைவனே! இந்த நகரமானது கரையற்ற கடலைப்போலவாகியது. (தத்தளிக்கின்றது.)—எ-று. (சகக)

என்றலும் வினவியே யேந்த றன்புடை
சென்றிடும் வயவரிற் சிலரை நோக்கியே
வன்றிற லுடையநம் மரபிற் றச்சனை
யொன்றொரு கணத்தின்முன் னுய்த்தி ரென்னவே.

(இ-ள்.) என்று கூறுதலும், அவைகளைக்கேட்டு, பாநுகோபன் தனது அருகினின்று ஊழியம்புரிகின்ற வீரர்களிற் சிலவரைப்பார்த்து மிக்க சாமர்த்தியத்தினையுடைய நமது மரபுத்தச்சனை ஒருகணத்திற்குள் அழைத்துக்கொண்டு வாருங்கள் என்று கூறுதலும்.—எ-று. (சகஉ)

ஆயவர் விரைந்துபோ யவுணத் தச்சனை
மேயின ரிறைமகன் விளித்து ளானெனக்
கூயினர் வருகெனக் கொடுவந் துய்த்தனர்
மாயிருங் கதிரைமுன் வெகுண்ட மைந்தன்முன்.

(இ-ள்.) அவர்கள் விரைவாகச்சென்று அசுரதச்சனை அடைந்து இறைமகனழைக்கின்றானென்று கூறி விளித்துக்கொண்டு வந்து மிகவும் பெரிய கிரணங்களையுடைய சூரியனை முன்னே கோபித்த பாநுகோபனுக்கு முன்னே விட்டார்கள்.—எ-று.

தன்னடி வணங்கியே தச்ச னிற்றலு
மன்னவர் மன்னவன் மதலை வல்லைநீ
யிந்நகர் வடமதில் சிகரி யேனவுந்
தொன்னெறி யமைக்கெனச் சொற்றுத் தூண்டினான்.

(இ-ள்.) தனது கால்களை வணங்கித் தச்சனின்றவுடனே அரசர்க்கரசனாகிய சூரபன்மனுடைய பிள்ளையாவான் நீ விரைவாக இந்த ஊரின் வடபுறத்து மதில் கோபுரமுதலிய வினைத்தையும் பழையபடியே இயற்றக்கடவை என்றுகூறி எச்சரித்தனுப்பினான்.—எ-று. (சகச)

எல்லைமற் றன்னதி னெல்லை தன்பகை
கல்லுயர் மொய்ம்பன்மா கர்ய னென்பதோர்
வல்லவு ணன்றனை வருதி யென்றுகூ
யொல்லையி னினையதொன் றுரைத்தன் மேயினான்.

(இ-ள்.) அப்படிப்பட்ட சமயத்தில் பாநுகோபன் மலைபோலும் உயர்ந்த தோள்களையுடைய மாகாயனென்பவனாகிய ஒரு வலிய அசுரனை வருவாயாகவென்று அழைத்து விரைவாக இவ்வொரு சங்கதியைக் கூறினான்.—எ-று. (சகரு)

சேயுயர் வடமதற் சிகரி தன்னிடைப்
போயினை யங்கெறி புரத்தி யாலென
வாயிரப் பத்தெனு மனிக வெள்ளமோ
டேயினன் றுனுறு மிருக்கை யெய்தினான்.

(இ-ள்.) மிகவும் உயர்ந்த வடமதிலின் கோபுரத்தினிடஞ்சென்று அவ்வழியைக் காப்பாயாகவென்று பதினாயிரம்வெள்ளஞ் சைனியங்களுடனே அனுப்பிவிட்டுப் பின்னர் தான்வாழு மாளிகையை யடைந்தனன்.—எ-று. (சகசு)

அத்துணை யேகியே யவுணர் கம்மிய
னுத்தர நெடுமதி லோங்கு கோபுரஞ்
சித்திர வுறுப்பொடு சித்தத் துன்னியே
வித்தக வன்மையால் விதித்துப் போகவே.

(இ-ள்.) அப்பொழுது அசுரதச்சன் சென்று அந்நகரத்தின் வடபுறத்திலுள்ள மதிலினையும் உயர்ந்த கோபுரத்தையும் சித்திரங்களாகிய அங்கங்களுடனே மனதில் நினைத்து ஞானவன்மையினால் பழையவண்ணமாக வுண்டாக்கிச்சென்றனன்.—எ-று.

அடுகரி புரவிதே ரவுணர் தானையாங்
கடலுடன் சென்றுமா காய னென்பவன்
வடமதிற் சிகரியின் வாய்தல் போற்றியே
சுடர்கெழு திபிகை சுற்ற வைகினான்.

(இ-ள்.) மாகாயன் என்பவன் பகைவர்களைக்கொல்லுகின்ற யானைகளும் குதிரைகளும் அசுரர் சைனியமாகிய கடல்களும் உடன்வரச்சென்று வடக்குமதிலின் கோபுரவாசலைக் காத்துக்கொண்டு விளங்காநின்ற தீபங்கள் சுற்றிலுமிருக்க இருந்தனன்.

ஆயது நிகழ்வுழி யாழி வெற்பின்வாய்
ஞாயிறு நணுகநன் னிருளின் யாமினி
போயது மெய்ப்புலன் புந்தி சேர்வுழி
மாயைய தகன்றிடும் வண்ண மென்னவே.

(இ-ள்.) இந்தக்காரிய மிவ்வாறானவுடனே ஞானவுணர்ச்சி மனதிற்றங்கினால் மாயை நீங்குமாறுபோல, வட்ட வடிவமான மலையின்மீது சூரியன் உதயமாதலும் மிக்க விருளினையுடைய இரவானது நீங்கியது.—எ-று. (சகக)

கங்குலென் றுரைபெறு கடவுட் கற்புடை
நங்கையை மேவுவா னயப்பு மேற்கொளா
வங்கவளைத் தொடர்ந் தணுகு வானெனச்
செங்கதி ரண்ணல்கீழ்த் திசையி லெய்தினான்.

(இ-ள்.) இரவென்று கூறப்படுகின்ற தெய்வீகமான கற்பினையுடைய பெண்ணினை அணையவேண்டுமென்று மிக்க விருப்பங்கொண்டு அவளிருக்குமிடத்திற்கு அவளைத்தொடர்ந்து செல்பவனைப்போல சூரியன் கிழக்குதிக்கிலுதித்தனன்.—எ-று.

**இரண்டாநாட் சூரபன்மன் யுத்தப்படலம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம் – அஎஎ.

---

# மூன்றாநாட் பானுகோபன் யுத்தப்படலம்.

இரவிவந் துற்றுழி யெழுந்து சூர்மகன்
மரபுளி நாட்கடன் வழாம லாற்றியே
செருவினி லுடைந்திடு சிறுமை சிந்தியாப்
பொருவரு மாயையைப் போற்றன் மேயினான்.

(இ-ள்.) சூரியன் உதித்தவுடனே சூரபன்மனுடைய மகனாகிய பானுகோபன் நித்திரை நீங்கி யெழுந்து மரபின் வண்ணம் நித்தியகருமங்களைத் தவறாமற்செய்து முன் போரினிற் புறமுதுகுகாட்டிய சிறுமையை நினைத்து ஒப்பற்ற மாயை யென்பவளை துதிக்கத்தொடங்கினான்.—எ-று. (க)

போற்றினன் முன்னுறு பொழுதின் மாயவள்
கோற்றொழில் கன்றிய குமரன் முன்னரோ
தோற்றினள் ஆற்றலுந் தொழுத கையினன்
பேற்றினை முன்னியே யினைய பேசுவான்.

(இ-ள்.) துதித்து நினைத்தவுடனே மாயையானவள் கொடுங்கோன்மையினை யுடைய பானுகோபனெதிரில் வெளிப்பட்டு நிற்குதலும், தொழப்பட்ட கையினையுடையவனாய் அவளிடத்துத் தானடையவேண்டிய லாபத்தைக்கருதி இவைகளைக் கூறுகின்றனன்.—எ-று. (உ)

தாதைதன் அவ்வைகேள் சண்முகத் தவன்
றூதுவ னோடுபோர்த் தொழிலை யாற்றினே
னேதமின் மானமு மிழந்து சாலவு
நோதக வுழந்தன னாண்மை நீங்கினேன்.

(இ-ள்.) எனது தந்தையின் தாயே (பாட்டியே) கேட்பாயாக. ஆறுமுகங்களை யுடையவனுடைய தூதுவனுடனே போர்த்தொழிலைச் செய்தேன்; அதனால் குற்றமற்ற மானமும் இழந்து மிகவும் வருத்தமுற்றனன் வன்மையுமிழந்தேன்.—எ-று. (ங)

துன்னலரோடுபோர்த் தொடங்கி யீற்றினிற்
பின்னிடு வார்பெறும் பிழையும் பெற்றன
னென்னினி வரும்பழி யிதற்கு மேலென்றா
னன்னது மாயைகேட் டறைதன் மேயினாள்.

(இ-ள்.) பகைவர்களுடனே யுத்த மாரம்பித்துக் கடைசியில் பின்னிடுவோரடைகின்ற குற்றத்தையும் அடைந்தனன்; இதனைவிட இனி என்னபழி வரப்போகின்றதென்று பானுகோபன் கூறினான். அதனை மாயையானவள் கேட்டுச் சொல்லத்தொடங்கினாள்.—எ-று. (ச)

மறைநெறி விலக்கினை வானு ளோர்தமைச்
சிறையிடை வைத்தனை தேவர் கோமகன்
முறையினை யழித்தனை முனிவர் செய்தவங்
குறையுற வித்தனை கொடுமை பேணினாய்.

(இ-ள்.) நீ வைதிகமார்க்கத்தை அகற்றினாய்; அன்றியும் சுவர்க்கத்திலிருந்த தேவர்களை சிறையிலடைத்தனை; தேவராஜனுடைய முறைமைகளை அழித்தனை; முனிவர்கள் செய்கின்ற தவத்தினைக் குறையும்வண்ணஞ்செய்தனை; கொடுமையே உசிதமானதாகக்கொண்டனை.—எ-று. (ரு)

ஓவருந் தன்மையா னுயிர்கள் போற்றிடு
மூவரும் பகையெனின் முனிவர் தம்மொடு
தேவரும் பகையெனிற் சேணி னுற்றுளோ
ரோவரும் பகையெனி னெங்ஙன் வாழ்தியால்.

(இ-ள்.) கெடாத வண்ணமாக வுயிர்கள் போற்றுகின்ற திரிமூர்த்திகளும் பகையானால், முனிவர்களுடனே தேவர்களும் பகையானால், வானுலகத்தி லிருக்கின்ற அனைவரும் பகையானால் எவ்வண்ணம் வாழ்வாய்.—எ-று. (சு)

பிழைத்திடு கொடுநெறி பெரிதுஞ் செய்தலாற்
பழித்திறம் பூண்டனை பகைவ ரிந்நக
ரழித்தம ரியற்றிட வவர்க்குத் தோற்றனை
யிழைத்திடும் விதியினை யாவர் நீங்கினார்.

(இ-ள்.) பிழையான கொடுவழியையே மிகவும் இயற்றுதலால் பழியையண்டிநந்தனை; இதனால் சத்துருக்களிந்நகரத்தினுள் வந்து போர்புரிய வவர்கட்குத் தோற்றனை; அவனவன் செய்த விதியின்பயனை எவர்கள்தான் கடந்தார்கள்.—எ-று. (எ)

நூற்றிவண் பற்பல நுவலி னுவதென்
மாற்றருந் திறலுடை மன்னன் மைந்தநீ
சாற்றுதி வேண்டுவ தருவ னென்றலு
மாற்றவு மகிழ்சிறந் தனையன் கூறுவான்.

(இ-ள்.) வகுத்து வகுத்து இவ்விடத்தில் அனேகமாகப் பேசுவதனாலாகும் பயனென்னை? பிறரால் நீக்குதற்கரிய வெற்றியினையுடைய அரசர்க்கரசனாகிய சூரபன்மனுடைய மகனே! நீ உனக்கு வேண்டியவைகளைக் கேள் தருகின்றேன் என்று மாயை யுரைத்தலும், உடனே அப்பானுகோபன் மிகவுஞ் சந்தோஷமுற்றவனாகக் கூறத்தொடங்கினான்.—எ-று. (அ)

நின்றம ரியற்றியே னென்ன லென்றனை
வென்றன னேகிய வீர வாகுவை
யின்றனி கத்தொடு மீறு செய்திட
வொன்றொரு படையினை யுதவு வாயென்றான்.

(இ-ள்) எதிரில் நின்று போர்புரிந்து வென்று சென்ற வீரவாகுவை, நான் இன்று அவனை அவன் சைனியங்களுடனே அழிக்க ஒரு ஆயுதத்தினை அளிப்பாயாக வென்று கூறினான்.—எ-று. (கூ)

அடல்வலி பிழைத்திடு மவுணன் சொற்றன
கெடலரு மாயவள் கேட்டுத் தன்னொரு
படையினை விதித்தவன் பாணி நல்கியே
கடிதினி லொருமொழி கழறன் மேயினாள்.

(இ-ள்.) வெற்றியிலும் வன்மையிலும் பிழைத்தவனாகிய அசுரன் கூறியவைகளைக் கெடுதலற்ற மாயையானவள் கேட்டு, தனது ஒப்பற்ற ஆயுதத்தினை யுண்டாக்கி அவன் கரத்திலளித்து விரைவாக ஒருவசனங் கூறத்தொடங்கினாள்.—எறு. (க0)

மற்றிது விடுத்தியான் மறையிற் கந்தவே
ளொற்றனை பிறர்தமை யுணர்வை வீட்டியே
சுற்றிடும் வாயுவின் றொழிலுஞ் செய்யுமா
லிற்றையிற் சயமுன தேகு வாயென்றாள்.

(இ-ள்.) நீ இதனை மறைவாக நின்றுவிடக்கடவை; (விட்டாலிது) குமரவேளின் தூதனையும் மற்றையவர்களையும் அறிவையழித்து சுழலாநின்ற காற்றின்றொழிலினையும்இயற்றும்; இதனால் இன்றையவெற்றி உன்னது, போகுதி என்றுகூறினாள்.—எ-று.

உரைத்திவை மாயவ ளும்பர் போந்துழி
வரத்தினிற் கொண்டிடு மாய மாப்படை
பரித்தவ னொருநலிற் பழியை நீங்கியே
பெருத்திடும் பெருமிதப் பெற்றி கூடினான்.

(இ-ள்.) இவைகளை மாயையானவளுரைத்து வானத்திற் சென்றவுடனே, அவள் கொடுத்தவரத்தாற்பெற்ற மாயையென்னும் பெரிய வாயுதத்தை தாங்கிய வப்பானுகோபன்; நேற்றடைந்தபழியை ஒழிந்து மிகுதியானபெருமையின்றன்மையையடைந்தான்.

கூர்ப்புறு பல்லவங் கொண்ட தூணியைச்
சேர்ப்புறத் திறுக்கிமெய் செறித்துச் சாலிகை
கார்ப்பெருங் கொடுமரங் கரங்கொண் டின்னதோர்
போர்ப்பெருங் கருவிகள் புனைந்து தோன்றினன்.

(இ-ள்.) கூர்மையினையுடைய அம்புகள் பொருந்திய அம்புக்கூட்டினை சிறந்த பிடரியிற்கட்டி உடம்பிற் கவசமிட்டுக் கரிய பெரிய ஏனுசைக் கையிலெடுத்து இன்ன தன்மையவான மற்றையபோருக்கு வேண்டிய பெரிய வாயுதங்களை அணிந்துகாணப்பட்டான்.—எ-று. (௧௩)

காற்படை யழற்படை காலன் றெல்படை
பாற்படு மதிப்படை பரிதி யோன்படை
மாற்படை யரன்படை மலர யன்படை
மேற்படு சூர்மக னெடுத்தன் மேயினான்.

(இ-ள்.) வாயுவாஸ்திரம், அக்கினியாஸ்திரம், இருபுலைகளையுடைய சந்திராஸ்திரம், சூரியாஸ்திரம், நாராயணாஸ்திரம், ருத்திராஸ்திரம், மலரிருக்கின்ற பிரமனுடைய அஸ்திரம் முதலியவைகளைச் சூரகுமாரனை பாநுகோபன் எடுத்தனன்.—எ-று.

மேனவப் படைமதில் விரவு சாலையுள்
வானவப் படைகொடு வாய்தல் போந்தன
னூனவப் படைதரு மாடல் வில்லினன்
றானவப் படைஞர்க டொழுது தாழ்ந்திட.

(இ-ள்.) மேலே சிறந்த ஆயுதங்களினாலே அமைக்கப்பெற்ற மதில்பொருந்திய ஆயுதசாலைக்குளிருந்த தேவாஸ்திரங்களை எடுத்துக்கொண்டு அவ்வாயுதங்களினாலே தரப்பட்ட வெற்றியினையுடைய வில்லினையுடைய பாநுகோபன் அசுரர்களாகிய சைனியங்கள் வணங்கித் துதிக்கும்வண்ணம் வாசலுக்கு வந்தனன்.—எ-று. (௧௫)

சயந்தனைப் பொருதிடுந் தார்பெய் தோளினன்
சயந்தனைப் பொருதநாட் சமரிற் கொண்டதோர்
சயந்தனத் தேறினன் றகுவர் யாவருஞ்
சயந்தனைப் பெறுகென வாசி சாற்றவே.

(இ-ள்.) வெற்றிபொருந்திய மாலையணிந்த தோளினையுடைய பாநுகோபன் சயந்தனொடு போர்புரிந்த வந்நாளில், போரிலபகரித்த வொருதேரின்மீது அசுரர்களனைவரும் நீ வெற்றிபெறுவாயாகவென்று ஆசி கூற ஏறினான்.—எ-று. (௧௬)

ஒப்பறு செறுநர்மே லுருத்துப் போர்செயத்
துப்புறு சூர்மகன் றொடர்கின் றானெனச்
செப்புறு மொற்றர்க டெரிந்து போமென
வெப்புறத் தானையு மெழுந்து போந்தவே.

(இ-ள்.) ஒப்பற்ற பகைவர்மீது கோபங்கொண்டு போர்புரியும்வண்ணம் வன்மைபொருந்திய சூரபன்மன் பிள்ளையான பாநுகோபன் செல்லுகின்றானென்று சொல்லுகின்ற தூதர்கள் சமயமறிந்து செல்லுங்களென்று கூற, எந்தவிடங்களிலும் இருந்த சைனியங்கள் எழுந்துசென்றன.—எ-று. (௧௭)

பரிபதி னுயிர வெள்ளம் பாய்மத
கரிபதி னுயிர வெள்ளங் காமர்தே
ரொருபதி னுயிர வெள்ள மொப்பிலா
விருபதி னுயிர வெள்ள மேனையோர்.

(இ-ள்.) குதிரைகள் பதினுயிரவெள்ளம், மதமொழுகுகின்ற யானைகள் பதினுயிரவெள்ளம், அழகிய இரதங்கள் ஒரு பதினுயிரம்வெள்ளம், ஒப்பற்ற காலாட்படைகள் இருபதினுயிரம் வெள்ளம்.—எ-று. (கஅ)

நாற்படை யிவ்வகை நடந்து கோமகன்
பாற்பட விரவின பரவு பூழிகண்
மாற்படு புணரிநீர் வறப்பச் சூழ்ந்ததான்
மேற்படு முகிலின மிசைய வந்தென.

(இ-ள்.) இவ்வண்ணமாகச் சதுரங்கசைனியங்களுஞ் சென்று பானுகோபனுடைய பக்கமாகக் கலந்து நின்றன; உடனே பெருமையினையுடைய கடனீரானது வற்றுமாறு வானத்திற்பொருந்திய மேகங்கள் நீருண்ணவந்தாற்போல சூழ்ந்துகொண்டது.

திண்டிற லனிகமீச் சென்ற பூழிகண்
மண்டல முழுவதும் வரைகள் யாவையு
மண்டமும் விழுங்கியே யவைக ளற்றிட
வுண்டலி னடைத்தன வுவரி முற்றுமே.

(இ-ள்.) மிக்க வன்மையினையுடைய சைனியங்களால் மேலேசென்ற புழுதிகள் பூமி முழுமையும் மலைகள் முழுமையும் அண்டமுழுமையும் மூடிக்கொண்டு அவைகளில்லாது போகும் வண்ணம் உண்டமையால், மற்றைய புழுதிகள் கடலினிடங்கள் முழுமையுமடைத்தன.—எ-று. (உ0)

முரசொடு துடிகுட முழவஞ் சல்லரி
கரடிகை தண்ணுமை யுடுக்கை காகள
மிரலைக ளாதியா மியங்க ளார்த்தன
திருநக ரழியுமென் றரற்றுஞ் செய்கைபோல்.

(இ-ள்.) முரசினுடனே உடுக்கை, மத்தளம், சல்லரி, கரடிகை, தண்ணுமை, சிற்றுடுக்கை, காகளம், ஊதுகொம்பு முதலிய வாத்தியங்கள், இனி இவ்வழகிய நகரமழியுமென்று கூச்சலிடுந்தன்மையைப்போல முழங்கின.—எ-று. (உக)

உழையுடைக் கற்பின ருழையிற் சென்றிடா
தழையுடைப் பிடிக்குநீர் தணிக்கும் வேட்கையாற்
புழையுடைத் தனிக்கரம் போக்கிப் பொங்குசூன்
மழையுடைத் திடுவன மதங்கொள் யானையே.

(இ-ள்.) மதங்கொண்ட யானைகள் உழைத்தலினையுடைய கற்பிப்போர்களின் வழியே செல்லாதனவாகித் தழைத்தலினையுடைய பெண்யானைக்குண்டாயிருக்கின்ற நீர்த்தாகத்தைத்தணிக்கும் விருப்பத்தால், துவாரம்பொருந்திய ஒப்பற்ற கையை நீட்டி முழங்குகின்ற சூல்கொண்ட மேகங்களையுடைக்கின்றன.—எ-று. (உஉ)

கார்மிசைப் பாய்வன கதிர வன்றனித்
தேர்மிசைப் பாய்வன சிலையிற் பாய்வன
பார்மிசைப் பாய்வன பாரி டத்தவர்
போர்மிசைப் பாய்வன புரவி வெள்ளமே.

(இ-ள்.) வெள்ளக்கணக்கினவாகிய குதிரைகள் மேகங்களின்மீது பாய்கின்றன; சூரியனுடைய ஒப்பற்ற தேரின்மீது பாய்கின்றன; தனுவிராசியிற் பாய்கின்றன; பூமியின்மீது தாவுகின்றன; பூமியிலுள்ளவர் செய்யும் போரினிடத்துப் பாய்கின்றன.

அருளில ராகிய வவுணர் மாண்டுழித்
தெருளுறு மவ்வவர் தெரிவை மாதர்கண்
மருளொடு துன்புறும் வண்ணங் காட்டல்போ
லுருளுவ விரங்குவ வுலப்பி றேர்களே.

(இ-ள்.) இரக்கமற்றவர்களாகிய அசுரர்கள் இறந்தவுடனே தெருட்சியினையுடைய அவரவர்களின் மனைவியர்களான பெண்கள் மயக்கத்துடன் வருந்துகின்ற தன்மையைக் காட்டுதல்போல, அளவற்ற இரதங்கள் உருண்டு சத்திக்கின்றன.—எ-று.

கரிந்திடு மேனியுங் கணிப்பி றூனவர்
தெரிந்திடு மாலைசூழ் செய்ய பங்கியும்
விரிந்திடு நஞ்சுபல் லுருவ மேவுநீ இ
யெரிந்திடு மங்கிகான் றென்னத் தோன்றுமே.

(இ-ள்.) அளவற்ற அசுரர்களுடைய கரிநிறமான வுடம்புகளும், ஆராய்ந்தமைக்கப்பட்ட மலர்மாலையணிந்த செந்நிறமான சிகையும், மிகுதியான விடமானது பல வுருவத்தை யடைந்து எரியாநின்ற தீயை கக்கினாற்போலக் காணப்படும்.—எ-று. (உரு)

வேறு.

பொங்கு வெங்கதிர் போன்றொளிர் பூணினர்
திங்கள் வாளெயிற் றூர்முடி செய்யவர்
துங்க வற்புதர் பொன்புகர் தூங்குவே
லங்கை யாள ரசனியி னார்த்துளார்.

(இ-ள்.) (காலாட்படைகள் எத்தகையினர்) பிரகாசியாநின்ற சூரியனைப்போன்ற கிரணத்தினையுடைய ஆபரணங்களை யுடையவர்கள்; சந்திரனையொத்த ஒளிபொருந்திய பற்களையுடையவர்கள்; செந்நிறமான தலைமுடியையுடையவர்கள்; மிகவும் அற்புதமானவர்கள்; பொன்புள்ளிகள் பொருந்திய வேலினை அழகிய கையிலுடையவர்கள்; இடிபோல ஆரவாரிப்பவர்கள்.—எ-று. (உசு)

நீள மர்க்கு நெருநலிற் போந்துபின்
மீளு தற்குடைந் தார்தமை வீட்டுதும்
வாளி னுக்கிரை யாவென்று வாய்மையாற்
சூளி சைத்துத் தொடர்ந்தனர் வீரரே.

(இ-ள்.) வீரர்கள் பெரியசண்டைக்கு நேற்றுச்சென்று, பின்னர் திரும்பி வருமாறுடைந்தவர்களை, வாளினுக்கிரையாகக் கொல்லுவோம் என்று உண்மையாகச் சபதஞ்செய்து சென்றார்கள்.—எ-று. (உஎ)

ஓடு தேரினு வாக்களின் மானவர்
நீடு கையினி வந்துறு கேதன
மாடி விண்ணை யளாவுவ தாருவைக்
கூடவே கொல் கொடியெனுந் தன்மையால்.

(இ-ள்.) ஓடுகின்ற தேர்களிலும் யானைகளிலும் வீரர்களுடைய நீண்ட கைகளிலும் உயர்ந்து காணப்படுகின்ற கொடிகள், கொடி பின்னினால் மரத்தை யழிக்குமென்னுந் தன்மையினால் அசைந்துகொண்டாகாயத்தை யளாவுவன.—எ-று. (உஅ)

கோலி னோங்கு கொடியுங் கவிகையுந்
தோலு மீண்டலிற் சூழிரு ளாயின
மாலை சூழ்குஞ்சி மானவர் வன்கையில்
வேலும் வாளும் பிறவும்வில் வீசுமே.

(இ-ள்.) கோல்களிலே உயர்ந்து காணப்படுகின்ற கொடிகளும், குடைகளும், கேடகங்களும் நெருங்குதலால் சூழ்ந்த விருளுண்டாயின. பூமாலைகளைச் சுற்றியிருக்கின்ற வீரர்களின் பெரிய கைகளிலுள்ள வேலும் வாளும் முதலிய பலவும் ஒளிவீசுகின்றன.—எ-று. (௨௯)

இன்ன தன்மை யியன்றிடத் தானைக
டுன்னு பாங்கரிற் சூழ்ந்து படர்ந்திட
மன்னன் மாமகன் மாநகர் நீங்கியே
பொன்ன வாம்புரி சைப்புறம் போயினான்.

(இ-ள்.) அரசனுடைய சிறந்த மகன் (பாநுகோபன்) இவ்வண்ணமாகச் சைனியங்கள் நெருங்கிய பக்கங்களில் சுற்றிச் செல்ல, பெரிய நகரத்தைவிட்டு பொன் விரும்புகின்ற மதிலுக்கு வெளியே சென்றான்.—எ-று. (௩௦)

போய காலைப் புறந்தனில் வந்திடும்
வேயி னோர்களின் வெம்பரி மாமுக
மாயி ரங்கொ ளவுணனை நோக்கியே
தீய சூர்மக னின்னன செப்புவான்.

(இ-ள்) சென்றவுடனே அருகில் வருகின்ற வேவுகாரர்களில் கொடிய வாயிரங் குதிரைமுகங்களையுடைய அசுரனைப்பார்த்துக் கொடிய சூரபன்மனுடைய பிள்ளையானவன் இவைகளைக் கூறுகின்றான்.—எ-று. (௩௧)

ஈசன் விட்ட குமர னிருந்திடும்
பாச றைக்களந் தன்னிற் படர்ந்துநீ
மாசி லாவிறல் வாகுவைக் கண்ணுறீஇப்
பேச லாற்றுதி யின்னன பெற்றியே.

(இ-ள்.) நீ சிவனனுப்பிய சண்முகனிருக்கின்ற பாசறையினிடத்திற்குச் சென்று, குற்றமற்ற வெற்றியினையுடைய வீரவாகுவைப்பார்த்து, இவ்விதமான தன்மைகளை யுரைக்கக்கடவை.—எ-று. (௩௨)

மன்ன னாணையின் மண்டம ராற்றியே
தன்னை யின்று தடிந்திசை பெற்றிட
வுன்னி வந்தன னெல்லையி னேகுதி
முன்னை வைகலிற் போரொன்று முன்னலாய்.

(இ-ள்.) அரசனுடைய கட்டளையினாற் பெரும்போர் புரிந்து உன்னை இன்று கொன்று கீர்த்தியடைய நினைத்து பாநுகோபன் வந்திருக்கின்றான், விரைந்து வரக்கடவை; நீ இதனை நேற்றையதின நடந்த போரொன்று நினையாதே.—எ-று. (௩௩)

என்ற மாற்ற மெனதுரை யாகவே
வென்றி யோடு புகன்றனை மீள்கென
நின்ற தூதனை நீசன் விடுத்தலு
நன்றி தென்று நடந்துமுன் போயினான்.

(இ-ள்.) என்ற வாக்கியத்தை என்னுடைய சொல்லாக வெற்றியோடு கூறித் திரும்பி வருவாயாகவென்று அருகினின்ற தூதுவனை நீசனாகிய பாநுகோபன் அனுப்புதலும், அவ்வாறு செய்கின்றேனென்று கூறி அவன் முன்னே சென்றனன்.—எ-று.(ருச)

ஏம கூட மெனப்பெய ராகிய
காமர் பாசறைக் கண்ணகன் வைப்புறீஇ
நாம வேற்படை நம்பிக் கிளவலாந்
தாம மார்பனைக் கண்டிவை சாற்றுவான்.

(இ-ள்.) ஏமகூடமென்று பேருள்ள அழகிய இடமகன்ற பாசறையினிடத்தை யடைந்து பகைவர்களுக்கு அச்சத்தை யுண்டாக்குகின்ற வேலாயுதத்தினையுடைய சிறந்த குமாரசுவாமியார்க்குத் தம்பியாகிய மாலையணிந்த மார்பினையுடைய வீரவாகுதேவரைப்பார்த்து இவைகளைக் கூறுகின்றான்.—எ-று. (ருரு)

எல்லை தன்னை யிருஞ்சிறை விட்டிய
மல்ல லங்கழன் மன்னவன் மாமக
னெல்லை யிப்பக லுன்னுயிர் மாற்றுவான்
செல்லு கின்றனன் செப்பிய சூளினான்.

(இ-ள்.) சூரியனைப் பெரிய சிறையிலடைத்த வளப்பம்பொருந்திய வீரகண்டையணிந்த காலினையுடைய சூரபன்மனாகிய வரசனுடைய சிறந்த புத்திரனாகிய பாநுகோபன் விரைவாக விந்தப்பகலி லுனதுயிரை வாங்கும்வண்ணம் தான் சொல்லிய சபதத்தினால் வருகின்றனன்.—எ-று. (ருசு)

ஏவி னானெனை யித்திறங் கூறியே
கூவி நின்னைக் கொடுவரு வாயென
மேவ லாள விரைந்தமர்க் கேகுதி
நாவ லோயென வேநவின் றனரோ.

(இ-ள்.) என்னை நின்னொடு இந்த சங்கதியைச்சொல்லி நின்னை அழைத்துக் கொண்டு வரும்வண்ணம் அனுப்பினான்; பகைவனாகிய வாக்சாதுரியனே! நீவிரைவாகப் போருக்கு வருவாயாகவென்று கூறினான்.—எ-று. (ருஎ)

தூத னிவ்வகை சொற்றெதிர் நிற்றலு
மூதை குந்திறன் மொய்ம்பன கைத்தியா
னாதை வன்பகை யாருயி ருண்டிடப்
போது கின்றனன் போய்ப்புகல் வாயென்றான்.

(இ-ள்.) தூதுவ னிவ்வண்ணங்கூறி எதிரே நின்றவுடனே மிகவுந் தகுந்த சாமர்த்தியத்தினையுடைய வீரவாகுதேவர் சிரித்துக்கொண்டு நான் பாநுகோபனுடைய அரியவுயிரை உண்ணும்பொருட்டு வருகின்றேன், நீசென்று சொல் என்று கூறினார்.

ஒற்ற னித்திற மோர்ந்துடன் மீடலுஞ்
செற்ற மிக்க திறல்கெழு மொய்ம்பினான்
சுற்ற மோடு தலைவர்கள் சூழ்ந்திடக்
கொற்ற வேற்கைக் குமரன்மு னண்ணினான்.

(இ-ள்.) தூதுவ னிதனைக்கேட்டுத் திரும்புதலும், மிக்க கோபத்தினையுடைய சாமர்த்தியத்துடன் விளங்குகின்ற வீரவாகுதேவர் சுற்றங்களுடனே தலைவர்களுஞ்சூழ்ந்துவர வெற்றிபொருந்திய வேற்படைக் குமரவேளின் சன்னிதியையடைந்தனர்.—எ-று

எங்கு மாகி யிருந்திடு நாயகன்
பங்க யப்பொற் பதத்தினைத் தாழ்ந்தெழீஇச்
செங்கை கூப்பிமுன் னிற்றலுஞ் செவ்வியோ
னங்க ணுற்ற தறிந்திவை கூறுவான்.

(இ-ள்.) ஸர்வவியாபியாக விருக்கின்ற கர்த்தாவான குமரக்கடவுளின் தாமரைமலர்போன்ற அழகிய திருவடிகளை வணங்கி எழுந்து செவ்விய கையைக் குவித்துக்கொண்டு ஸன்னிதானத்தி னின்றவுடனே, அழகினையுடைய அக்குமரக்கடவுள் அவ்விடத்தில் நடந்த விஷயத்தை யறிந்துகொண்டு இவைகளைத் திருவாய் மலர்ந்தருளுகின்றனர்.—எ-று. (௬0)

நென்ன லோடு நிருதன் றனிமக
னுன்னை முன்னி யுரனொடு போந்துளான்
றுன்னு தானைத் துணைவர்க டம்மொடு
முன்னை வைகலி னேகுதி மொய்ம்பினோய்.

(இ-ள்.) வீரவாகுவே! நேற்றுத் தோற்று ஓடிய அசுரனுடைய பிள்ளையான பாநுகோபன் உன்னை யுத்தேசித்து இன்று தைரியத்துடன் வந்திருக்கின்றான். அதனால் நீ நெருங்கிய சைனியங்களாகிய துணைவர்களுடனே முன்றினத்திற்போல போகக்கடவை.—எ-று. (௬௧)

போ பெதிர்ந்து பொருதி படைகளா
யேய வற்றிற் கெதிரொதிர் தூண்டுதி
மாயை வஞ்சன் புரிந்திடின் வந்துநந்
தூய வேற்படை துண்ணென நீக்குமால்.

(இ-ள்.) நீ சென்று போர்புரியக்கடவை; அவன் ஆயுதங்களாக விடுபவற்றிற்கு எதிரொதிராகவுள்ள வாயுதங்களை விடக்கடவை; இதையன்றி, அவ்வஞ்சகன் மாயையைச் செய்வானானல், நமது தூய்மையான வேற்படையானது விரைந்து வந்து அம்மாயையை யழிக்கும்.—எ-று. (௬௨)

போதி யென்று புகன்றிட வப்பணி
மீது கொண்டு விடைகொண்டு புங்கவன்
பாதம் வந்தனை செய்து படர்ந்தனன்
றூது போயம ராற்றிய தொன்மையோன்.

(இ-ள்.) குமரக்கடவுள் நீ போகக்கடவையென்று கட்டளையிட்டவுடனே அந்தப் பணிவிடையை சிரஸாவகித்து, முன்னந் தூதுசென்று போர்புரிந்த பழையவரான வீரவாகுதேவர் உத்தரவு பெற்றுக்கொண்டு இறைவனுடைய திருவடிகளை நமஸ்கரித்து விடைபெற்றுச் சென்றனர்.—எ-று. (௬௩)

துணையு ளார்களுஞ் சுற்றமுள் ளார்களுங்
கணவர் தங்களிற் காவலர் யாவரு
மணிகொ டேர்புக வாடலந் தோளினா
னிணையி லாத்தன் னிரதத்தி லேறினான்.

(இ-ள்.) துணைவர்களாக வுள்ளவர்களும், சுற்றமாக வுள்ளவர்களும், கணங்களாக வுள்ளவர்களி லரசர்களாக வுள்ளவர்க ளனைவரும் அழகுபொருந்திய தேரிலேற வெற்றிபொருந்திய தோளினையுடைய வீரவாகுதேவர் ஒப்பற்ற தனது தேரிலேறினார்.

ஏறு மெல்லையி லிச்செய லோக்கியே
யூறில் பூதரொ ராயிர வெள்ளமு

மாறி லாதவ ளாயு மரங்களும்
பாறு லாவு படையுங்கொண் டெய்தினர்.

(இ-ள்.) ஏறுகின்ற சமயத்தி லிந்தச் செய்கையைப்பார்த்து குற்றமற்ற ஒராயிரம்வெள்ளம் பூதங்களும், மாறுபாடில்லாத மலைகளையும், மரங்களையும், பருந்துகள் மேலே பறக்கின்ற ஆயுதங்களையுங்கொண்டு உடன் சென்றார்கள்.—எ-று. (சரு)

சார தங்கெழு தானைக ளீண்டியே
காரி னங்களிற் கல்லென வார்ப்புற
வீர மொய்ம்பின் விடலையைச் சூழ்ந்தன
ராரும் விண்ணவ ராசி புகன்றிட.

(இ-ள்.) பூதரூபமாக விளங்குகின்ற சைனியங்கள் நெருங்கி மேகவினங்களைப் போல கல்லென்றொலிக்க தேவர்களெல்லாம் ஆசிமொழி கூற வீரவாகுதேவராகிய வாலிபனைச் சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (சசு)

மேன காலை விசயங்கொண் மொய்ம்பினுன்
றானை யான்வுந் தம்பியர் யாவரு
மேனை யோர்களு மீண்டச்சென் றெய்தினன்
பானுகோபன் படரும் பறந்தலை.

(இ-ள்.) வெற்றிபொருந்திய தோளினையுடைய வீரவாகுதேவர் போருக்குரிய அனைவரும் தன்னைச் சூழ்ந்துகொண்டவுடனே, சைனியங்களும் எல்லாத் தம்பிமார்களும் மற்றையவர்களும் நெருங்கிவரும்வண்ணம் பாநுகோபன் வருகின்ற போர்க்களத்திற்சென்று சேர்ந்தனர்.—எ-று. (சஎ)

வேறு.

தேர்த்திடும் பாரிடஞ் செறியும் வெள்ளமுங்
கார்த்திடு தானவக் கடலு நேர்புற்இ
யார்த்தன ரிகலின ராற்றல் கூறியே
போர்த்தொழின் முறையினைப் புரிதன் மேயினர்.

(இ-ள்.) போரிற் றேறியுள்ள பூதர்களாகவந்து நெருங்கிய சைனியங்களும், கருநிறம்பொருந்திய அசுரசைனியமும் எதிர்த்து பகைத்து ஆரவாரித்து வீரவசனங்களையுரைத்து போர்த்தொழிலினை இயற்றினார்கள்.—எ-று. (சஅ)

கோடுகண் முழங்கின குறுங்க ணுருளி
பீடுற விரட்டின பேரி யார்த்தன
மூடின வலகைகண் மொய்த்த புள்ளின
மாடின னடுவனு மமரர் நோக்கவே.

(இ-ள்.) அப்பொழுது கொம்புகள் முழங்கின; சிறிய கண்ணினையுடைய ஆகுளிகள் பெருமையுண்டாக முழங்கின; பேரிகள் ஆரவாரித்தன; அலகைகள் சூழ்ந்தன; புள்ளினங்கள் மொய்த்தன; தேவர்கள் காணும்படி எமனும் ஆடினான்.—எ-று. (சகூ)

இலையயி றோமர மெழுத்தண் டொண்மழு
வலமொடு வச்சிர மாழி மாப்படை
தொலைவறு முத்தலைச் சூல மாதிய
சிலைபொதி கணையுட னவுணர் சிந்தினர்.

(இ-ள்.) அசுரர்கள் வில்லில் வைத்து விடுகின்ற வம்புகளுடனே இலை வேல்களையும், தோமரங்களையும், எழுக்களையும், தண்டங்களையும், ஒள்ளிய மழுக்களையும், அலங்களையும், வச்சிரங்களையும், அழிவற்ற திரிசூலங்கள் முதலியவற்றையும் விட்டார்கள்.

முத்தலைக் கழுவொடு முசலம் வெங்கதை
கைத்தலத் திருந்திடு கணிச்சி நேமிகண்
மைத்தலைப் பருப்பத மரங்க ளாதிய
வத்தலைப் பூதரு மார்த்து வீசினர்.

(இ-ள்.) பூதர்களும் அவ்விடத்தில் மூன்று தலைகளையுடைய கழுமுட்களுடன் முசலங்களையும், வெவ்விய கதைகளையும், கையினிடத்திலிருக்கின்ற கோடரிகளையும், சக்கரங்களையும்,மேகங்களைத் தலையின்மீது தாங்கியுள்ள மலைகள் முதலியவைகளையும், மரங்கள் முதலானவைகளையும் ஆரவாரத்துடன் பகைவர்மீது செல்ல விட்டார்கள்.

பணிச்சுடர் வாளினாற் பாணி சென்னிதோ
டுணித்தனர் குற்றினர் சுரிகை யாதியாற்
குணிப்பறு மெழுக்கதை கொண்டு தாக்கினர்
கணப்படை யொடுபொரு மவுணர் காளையர்.

(இ-ள்.) பூதகணங்களான சைனியங்களுடனே போர்புரிகின்ற வாலிபர்களான வசுரர்கள், அரதன முதலியவைக ளிட்டிழைத்திருத்தலால், ஒளிவீசுகின்ற வாட்படையினால் கைகளையும் தலைகளையும் தோள்களையும் வெட்டினார்கள்; அன்றியும் உடைவாள் முதலியவற்றினால் குத்தினார்கள்; அளவற்ற எழுக்களினாலும் தண்டாயுதங்களினாலும் அடித்தார்கள்.—எ-று. (ருஉ)

பிடித்தன ரவுணரைப் பிறங்கு கைகளா
லடித்தனர் கிழித்தன ரணிய கந்தர
மொடித்தனர் மிதித்தன ருருட்டு கின்றனர்
புடைத்தன ரெழுக்களாற் பூத வீரரே.

(இ-ள்.) பூதவீரர்கள் அசுரர்களைப்பிடித்து விளங்காநின்ற கைகளா லடித்துக் கிழித்தார்கள்; ஆபரணங்களையுடைய கழுத்துக்களை ஒடித்தார்கள்; மிதித்துருட்டினார்கள்; எழுவாயுதங்களால் அடித்தார்கள்.—எ-று. (ருங)

வாசியும் வ்யவரு மாயச் சாரத
ராசறு கரங்களா லள்ளி யள்ளியே
காய்சின விபங்களிற் கணிப்பி றோர்களில்
வீசினின் றெற்றின ரவையும் வீழவே.

(இ-ள்.) பூதவீரர்கள் அசுரர்களுடைய குதிரைகளும் காலாட்படைவீரரும் இறக்கும்வண்ணம் குற்றமற்ற கைகளால் எடுத்தெடுத்து மிக்க கோபத்தினையுடைய யானைகளிலும் அளவற்ற தேவர்களிலும் அவைகள் அழியும்வண்ணம் வீசி அடித்தார்கள்.

ஓதவெங் கடல்களு மூழி வன்னியு
மேதகு வலிகொடு வெகுளி வீங்கியே
யாதியின் மாறுகொண் டமர்செய் தாலெனப்
பூதரு மவுணரும் பொருதிட் டாரரோ.

(இ-ள்.) அலைகளையுடைய வெவ்விய கடல்களும் பிரளயாக்கினியும் மிகுந்த பலம்கொண்டு கோபமதிகரித்து முதலிலுள்ள பகையினாற் போர்செய்தாற்போல, பூதவீரர்களும் அசுரவீரர்களும் போர்செய்தார்கள்.—எ-று. (ருரு)

குழகிய லவுணருங் கொடிய பூதருங்
கழகெனு முறைபெறு களத்திற் போர்செய
வொழுகிய சோரியா றானை வேட்டலாய்
முழுகிய காண்டம்விண் மொய்த்த புள்ளெலாம்.

(இ-ள்.) அழகுபொருந்திய அசுரர்களும், கொடிய பூதர்களும், கழகு என்று சொல்லப்படுகின்ற ரணகளத்திலே போர்புரிதலா லொழுகிய இரத்தவாற்றிலுள்ள மாமிசத்தை விரும்பி நீர்க்காக்கைகளும், ஏனைய வானத்தில் பறக்கின்ற பறவைகளு மொய்த்துக்கொண்டன.—எ-று. (ருகூ)

துணிந்தன கைத்தலந் துணிந்த தோட்டுணை
துணிந்தன சென்னிக டுணிந்த வாலுராந்
துணிந்தன கழலடி துணிந்த மெய்யெலாந்
துணிந்தன வலிசில பூதர் துஞ்சினர்.

(இ-ள்.) போரிற் சிலருக்குக் கைத்தலங்கள் துணிந்தன; சிலருக்கு உபயதோள்கள் துணிந்தன; சிலருக்கு தலைகளறுந்தன; சிலருக்கு மார்புகளறுந்தன; சிலருக்கு வீரகண்டை யணிந்த கால்கள் அறுந்தன; சிலருக்கு சரீரங்களனைத்துந் துணிந்தன; சிலருக்கு வன்மைகளும் அழிந்தன; இவ்வண்ணமாய்ச் சில பூதர்களிறந்தார்கள்.—எ-று

முடித்தொகை யற்றனர் மொய்ம்பு மற்றன
ரடித்துணை யற்றன ரங்கை யற்றனர்
வடித்திடு கற்பொடு வலியு மற்றனர்
துடித்தன ரவுணரு மநேகர் துஞ்சினர்.

(இ-ள்.) சிலர் முடிவரிசைக ளறுபட்டார்கள்; சிலர் தோள்களு மறுபட்டார்கள்; சிலர் துணையடிகளு மற்றார்கள்; சிலர் அகங்கைகளு மறுபட்டார்கள்; சிலர் நன்றாய் கற்கப்பட்ட கல்வியும் வன்மையு மிழந்தார்கள்; சிலர் துடித்தார்கள்; இவ்வாறாய் அசுரர்களிலும் அநேகரிறந்தார்கள்.—எ-று. (ருஅ)

வசையுறு மவுணரின் மன்னர் யாவரு
மிசைபெறு பூதரி னிறைவ ருங்கெழீஇத்
திசையொடு திசையெதிர் செய்கை போலவே
யசைவில ராகிநின் றமரா தாற்றினார்.

(இ-ள்.) குற்றமற்ற அசுரசைனியங்களின் தலைவர்களனைவரும் கீர்த்திபொருந்திய பூதர்களின் றலைவர்களுங்கலந்து திசையுடன் திசையெதிர்க்கின்ற செய்கையைப் போல, அசைவற்றவர்களாக நின்று போர்புரிந்தார்கள்.—எ-று. (ருகூ)

மால்கிளர் தீயவர் மலைகொள் சென்னியைக்
கால்கொடு தள்ளினர் களேவ ரந்தனைப்
பால்கிளர் பிலத்தினுட் படுத்துச் சென்றனர்
தோல்களை யுரித்தனர் சூல பாணிபோல்.

(இ-ள்.) சில பூதர்கள் மயக்கத்தோடு விளங்குகின்ற கொடியவர்களுடைய மலைபோன்ற தலையை காலினு லுதைத்துத் தள்ளினார்கள்; அன்றியும் உடம்புகளை பக்கத்திலே விளங்குகின்ற பிலங்களிலே தள்ளிச் சென்றார்கள்; சூலபாணியான வைரவனைப்போல யானைகளின் தோல்களை உரித்தார்கள்.—எ-று. (சுO)

அரித்திற லடக்கின ரவுண வீரர்தம்
வரத்தினை யொழித்தனர் மாய நூறியே
புரத்தினை யழித்தனர் போரின் மாதொடு
நிருத்தம தியற்றினர் நிமலன் போலவே.

(இ-ள்.) சில பூதர்கள் பகைவர்களாகிய அசுரர்களின் சிங்கம்போன்ற சாமர்த்தியத்தை யடக்கினார்கள்; அன்றியும் வரங்களையும் ஒழித்தார்கள்; அவர்களியற்று மாயங்களை அழித்து, அவர்களின் உடம்பை அறுத்து, காளியுடனே வாதுநடமாடின விறைவனைப்போல நடனமாடினார்கள்.—எ-று. (சுக)

கங்குலின் மேனிய ராழிக் கையினர்
துங்கமொ டவுணரைத் தொலைத்துத் துண்ணெனச்
சங்கம திசைத்தனர் தண்டந் தாங்குவார்
செங்கண்மால் பொருவினர் சிலவெம் பூதரே.

(இ-ள்.) சில வெவ்விய பூதர்கள் இருள்போன்ற கரிய மேனியினையுடையவர்களும், சக்கரந்தாங்கிய கையினையுடையவர்களும், வெற்றியுடனே அசுரர்களைக் கொன்று விரைவாக சங்குகளை யூதினவர்களும், தண்டங்களைத் தாங்கினவர்களுமாய்ச் செந்நிறமான கண்களையுடைய திருமாலை யொத்தவர்களானார்கள்.—எ-று. (சுஉ)

அயர்ப்புறு மால்கரி யரற்ற வேசுலாய்க்
குயிற்றிய மணிநெடுங் கோடு வாங்குவா
ருயற்படு கற்பமங் கொன்றி லேனத்தி
னெயிற்றினைப் பறித்திடுங் குமர னென்னவே.

(இ-ள்.) ஜீவித்திருந்ததாகிய முன்னொருகற்பத்தில் பன்றியின் கொம்பைப் பிடுங்கிய குமாரசுவாமியைப்போல, அயர்ச்சிபொருந்திய மதமயக்கத்தினையுடைய யானையானது வீறிடும்வண்ணம் சுழற்றி இயற்றப்பட்ட மணிகளையுடைய நீண்ட கொம்புகளைச் சிலபூதர்கள் பிடுங்குவார்கள்.—எ-று. (சுா)

கொலைபயில் கரிமுகங் கொண்டு பூதர்தம்
மலையிடை மறைந்தனர் மறித்துந் தோன்றியே
யலமரு சமர்புரிந் தவுண வீரரிற்
சிலர்சிலர் தாரகன் செயற்கை மேயினர்.

(இள்.) கொலைத்தொழிலைப் பழகியுள்ள யானைமுகத்துடன் பூதர்கள் தாங்கி நிற்கின்ற (அல்லது எறிந்து விழுந்துகிடக்கின்ற) மலையினிடத்தில் மறைந்து பின்னர் வெளிப்பட்டு சுழலாநின்ற போர்புரிந்து அசுரவீரர்களிற் சிலவர் தாரகாசுரனுடைய தன்மையை யடைந்தனர்.—எ-று. (சுச)

மாலொடு பொருதனர் மலர யன்றனைச்
சாலவும் வருத்தினர் சலதி வேலையின்
பாலர்க ளவுணரிற் பலர் சலந்தரன்
போலுடல் கிழிந்தனர் பூதர் நேமியால்.

(இ-ள்.) முன்னாளில் திருமாலொடு போர்புரிந்தவர்களும், மலரிலிருக்கின்ற பிரமனை மிகவும் வருத்தினவர்களும், சலத்தினையுடைய கடலினிடத்தவர்களும் ஆகிய அசுரர்களி லனேகர் சலந்தராசுரனைப்போல, பூதர்கள் விட்ட சக்கரங்களா லுடலம் கிழிந்தார்கள்.—எ-று. (சுரு)

போன்றவர் பிறரிலாப் பூத நாயகர்
மூன்றிலைப் படைகளின் மூழ்கித் தீமைபோய்
வான்றிசழ் கதியும்வா லுணர்வு மெய்தியே
தோன்றின ரந்தகா சுரனைப் போற்சிலர்.

(இ-ள்.) சமானரகிதர்களாகிய பூதராஜர்களின் இலைவடிவமான சூலப்படைகளின் முழுகிப் பாவமொழிந்து மேலே விளங்குகின்ற கதியையும் நல்லுணர்ச்சியையுமடைந்து அந்தகாசுரனைப்போல சில அசுரர்கள் காணப்பட்டார்கள்.—எ-று. (சுசு)

வேறு.

இலக்க வீரரு மெண்மரு மத்துணை
விலக்கில் வில்லுமிழ் வெங்கணை மாரிதூ

யொலிக்கொள் சூறையி னெல்லையிற் சுற்றியே
கலக்கி னார்க ளவுணக் கடலினை.

(இ-ள்.) அப்பொழுது அசுரசைனியமாகிய சமுத்திரத்தை எட்டுவீரரும் இலக்கம்வீரர்களும் தவறுதலில்லாத வில்லினின்றும் உமிழப்படுகின்ற அஸ்திரவருஷத்தை விட்டு சத்தத்தோடுகூடிய சுழற்காற்றைப்போல விரைவாகச்சுழன்று கலக்கினார்கள்.

வேறு.

மிடைந்தகண வீரர்களு மேலவரு மாக
வடைந்தம ரியற்றியவு ணப்படைகண் மாயத்
தடிந்தன ரொழிந்தன தடம்புனல் குடங்க
ருடைந்தவழி சிந்தியென வோடியன வன்றே.

(இ-ள்.) நெருங்கிய பூதகண வீரர்களும், அவர்களின் தலைவர்களாகவுள்ளவர்களுமாக நெருங்கி நின்று போர்புரிந்து அசுரசைனியங்கள் இறக்க அழித்தார்கள்; அதனால் அவர்கள் ஒழிந்தார்கள்; மிக்க நீரினையுடைய குடங்களுடைந்தவுடனே அந்நீர் சிந்தினாற்போல அழியாது நின்ற சேனைகள் ஓடின.—எ-று. (௬அ)

ஓடியது கண்டன னுயிர்த்துநகை செய்தான்
காடுகிளர் வன்னியென வேகனலு கின்று
ஞடல்செய முன்னியொ ரடற்சிலை யெடுத்தான்
ரேடுசெறி வாகைபுனை சூரனருண் மைந்தன்.

(இ-ள்.) தனது சைனியங்கள் ஓடியதனை இதழ்நெருங்கிய வாகைமலர்மாலையையணிந்த சூரபன்மன் பெற்ற பிள்ளையான பாநுகோபன் கண்டு பெருமூச்சுவிட்டுச் சிரித்துக் காட்டிலே பற்றியெரிகின்ற தீயைப்போல கோபித்தவனாய்ப் போர்செய்யுமாறு நினைத்து ஒரு வெற்றிபொருந்திய வில்லினை எடுத்தனன்.—எ-று. (௬௯)

வாகுபெறு தேர்வலவ னைக்கடிது நோக்கி
யேகவிடு கென்றிரவி தன்பகை யியம்பப்
பாகனினி தென்றுபரி பூண்டவிர தத்தை
வேகமொடு பூதர்படை மீதுசெல விட்டான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய தேரோட்டுகின்ற சாரதியை விரைந்துபார்த்து, தேரினை விரைவாகச் செல்லுமாறு விடக்கடவையென்று பாநுகோபன் கூற, அச்சாரதி உடனே அப்படியே நல்லதென்று குதிரைகள் பூட்டிய தேரினை விரைவாகப் பூதர்களாகிய சைனியங்கள்மீது செல்லுமாறு விட்டனன்.—எ-று. (எ0)

பாரிடர்கள் சேனையிடை பானுவரு மின்றோன்
சேருதலு மாங்கது தெரிந்துதிறல் வாகு
சாருறு பெருந்துணைவர் தம்மொடு விரைந்தே
நேரெதிர் புகுந்தொரு நெடுஞ்சிலை யெடுத்தான்.

(இ-ள்.) பூதசைனியங்களின் நடுவிற் பாநுகோபன் சேர்தலும், வீரவாகுதேவர் அதனையுணர்ந்து தம்முடன் வந்த பெரிய துணைவர்களுடன் விரைவாக நேரே அவனெதிரே சென்று ஒரு நெடியவில்லினை எடுத்தனர்.—எ-று. (எக)

எடுத்திடும்வில் வீரனை யெதிர்ந்தவுணன் மைந்தன்
வடித்திடு தடக்கைதனில் வார்சிலை வளைத்துத்
தடித்தன குணத்தொலி தனைப்புரிய வண்டம்
வெடித்தன முடித்தலை துளக்கினர்கள் விண்ணோர்.

(இ-ள்.) வில்லெடுத்த வீரவாகுதேவரை அசுரகுமாரனாகிய பானுகோபனெதிர்த்து தனது பெரிய கையிலிருந்த வடிக்கப்பட்ட வில்லினை வளைத்து பெருத்ததான நாணோசையை யுண்டாக்க, அதனால் அண்டமிடிந்தன; தேவர்கள் முடிகளையுடைய தலைகளை அசைத்தார்கள்.—எ-று. (எஉ)

எண்ணில்பல கோடியுரு மேறுருவ மொன்றாய்
வண்ணமிகு மின்னிடை மறைந்தொலிசெய் தென்ன
விண்ணுற நிவந்தவியன் மொய்ம்புடைய வீர
னண்ணலர் துணுக்கமுற நாணிசை யெடுத்தான்.

(இ-ள்.) அளவற்றனவாகிய பலகோடி ஆணிடிகள் ஒன்றாய் மிக்க வண்ணத்தினையுடைய மின்னலினிடையின் மறைந்து ஒலிசெய்தாற்போல, வானமளாவுமாறு உயர்ந்த பெரிய தோள்களையுடைய வீரவாகுதேவர் பகைவர்கள் நடுங்க நாணோசை காட்டினார்.

நாணொலி செவித்துளையி னஞ்சமென வெய்தத்
தூணிகலும் வாகுடைய சூர்மதலை சீறி
வாணிலவு கான்றபிறை வாளியுல வாமற்
சேணுநில னுந்திசைக ளுஞ்செறிய விட்டான்.

(இ-ள்.) நாணோசையானது கர்ணதுவாரத்தில் விஷம்புகுந்தாற்போலப் புக, தூணொடு பகைக்கின்ற தோள்களையுடைய சூரபன்மன் மகனாகிய பானுகோபன் கோபித்து வெண்ணிலவைக் கக்குகின்ற பிறைமுகாஸ்திரங்களைக் கெடாமல் ஆகாயமும் பூமியும் திக்குகளும் நெருங்கும்வண்ணம் விட்டான்.—எ-று. (எச)

மர்முருக வேளிளவன் மற்றது தெரிந்தே
காமர்பிறை போன்றுகதி ரொன்னவெயில் கான்று
தீமுகம தாமளவில் செய்யசர மாரி
தூமுகிலு நாணமுற வேநெடிது தூர்த்தான்.

(இ-ள்.) சிறந்த குமரக்கடவுளின் தம்பியான வீரவாகுதேவர் அதனை யறிந்து அழகியபிறையைப்போன்று சூரியனைப்போல ஒளியைக்கக்கித், தீயை முகத்திலுடையதான அளவற்ற செவ்விய சரமாரியைத் தூய்மையான மேகமும் வெட்கும்வண்ணம் மிகுதியாகவிட்டனர்.—எ-று. (எரு)

ஐயன்விடு வெஞ்சரமு மாதவனு மஞ்சும்
வெய்யன்விடு வெஞ்சரமு மேவியெதிர் கவ்வி
மொய்யுடைய நாகினமு னிந்திகலி வெம்போர்
செய்வதென மாறுகொடு சிந்துவன தம்மில்.

(இ-ள்.) வீரவாகுதேவர் விட்ட வெவ்விய அம்புகளும் சூரியனும் பயப்படுகின்ற பானுகோபன் விடுகின்ற கொடிய வம்பும் ஒன்றோடொன்று பொருந்தி எதிரே கவ்வி வன்மைபொருந்திய பாம்புக்கூட்டங்கள் கோபித்துப் பகைத்து வெவ்விய போரினைச் செய்தாற்போல பகைகொண்டு ஒன்றுக்கொன்று சிந்துகின்றன.—எ-று. (எசு)

வேறு.

கரிந்திடு மாமுகில் கடந்தன வானவர்
புரிந்திடு சேணெறி புகுந்தன மாலய
னிருந்திடு மூறையு மிகந்தன போயின
திரிந்தன சாரிகை சிறந்தவர் தேர்களே.

(இ-ள்.) சிறந்த அவ்விருவர்களின் தேர்களும் கரியநிறமான பெரிய மேகங்களின் மண்டலங்களைக் கடந்தன; தேவர்களிருக்கின்ற ஆகாயமார்க்கங்களை யடைந்தன;

திருமாலும் பிரமனும் இருக்கின்ற ஊர்களையுங் கடந்தன; இன்னும் பலவிடங்களிலும் சென்றன; அன்றியும் இடசாரி வலசாரியாகத் திரிந்தன.—எ-று. (எஎ)

தெண்டிரை நேமிகள் சென்றன சூழ்வன
வெண்டிசை மாநக ரெங்கணு மேகுவ
மண்டல மால்வரை மண்டியு லாவுவ
வண்டமு லாவுவ வங்கவர் தேர்களே.

(இ-ள்.) அப்போர்க்களத்தினில் நின்ற அவ்விருவர்களின் தேர்களும் தெளிந்த அலைகளையுடைய கடல்களுக்குட்சென்று உலாவுகின்றன; எட்டுத்திக்குகளிலும் உள்ள பெரிய எந்த நகரங்களிலுஞ்செல்லுகின்றன; மண்டலமான பெரிய மலைகளையடைந்து சஞ்சரிக்கின்றன; அண்டங்களிலும் உலாவுகின்றன.—எ-று. (எஅ)

மங்குலின் மேலதோ மண்டல மார்வதோ
செங்கண னூரதோ தெண்டிரை சேர்வதோ
விங்குள ரேறுதே ரெங்குள வோவெனுச்
சங்கையி னுடினூர் தங்களில் வானுளோர்.

(இ-ள்.) மேகமண்டலத்தின் மேலதோ? மண்ணுலகத்திற்குச் செல்வதோ? திருமாலினுலகத்ததோ? தெளிந்த கடலின் நீரை யடைவதோ? இங்கிருக்கின்ற இவர்கள் ஏறுகின்ற இரதங்கள் எவ்விடத்ததோவென்று தேவர்கள் தங்களுக்குட் சந்தேகத்தினுலே தேடினுர்கள்.—எ-று. (எகூ)

மன்னிய மாமுகில் வண்ணம தாயின
ரன்னதொல் வீரர்க ளண்மிய தேரவை
மின்னுவின் மேவுவ வெம்மையில் வீசிய
துன்னிய வாளிக டொன்மழை போல்வவே.

(இ-ள்.) அந்தப்பழையவீரர்கள் நிலைபெற்ற பெரிய மேகவண்ணங்களை யடைந்தனர்; அவர்களேறியிருக்கின்ற இரதங்கள் மின்னலைப்போல விளங்குவன; கோபத்துடனே வீசுகின்ற அம்புகள் பெரியமழை பெய்வனபோல்வன.—எ-று. (அ0)

ஆங்கவர் தேர்களி லாண்டுறு பாகர்க
ணேங்கலில் வாசிக ணுண்டிய மேலவர்
தீங்கதிர் வாளிகள் சேண்புடை சூழ்வுற
வேங்கின ரோடின ரீண்டிய வானுளோர்.

(இ-ள்.) அவ்விருவர்களின் இரதங்களிலும் இருக்கின்ற சாரதிகள் சோம்பலற்ற குதிரைகள் செல்லும்வண்ணம் ஒட்ட, தலைவராகிய வீரவாகுதேவர் பானுகோபன் என்னும் இவர்கள் விடுகின்ற அம்புகள் ஆகாயத்தைச்சுற்றிலும் சூழ்ந்துகொள்ள அங்குச் சண்டைகாண நெருங்கிநின்ற தேவர்கள் ஏங்கினவர்களாக ஓடினுர்கள்.—எ-று.

வேறு.

பூச லிவ்வகை புரிந்திடு கின்றுழிப் புரைதீர்
வாச வன்மகன் றனைச்சிறை செய்திடும் வலியோ
னாசு கங்களி லாசுக மாயிரந் தூண்டி
யீசன் மாமகன் சேனைநா யகனிறத் தெய்தான்.

(இ-ள்.) சண்டை யிவ்வண்ணமாகச் செய்கின்றசமயத்தில், குற்றமற்ற இந்திரகுமாரனுகிய சயந்தனைச் சிறையிலடைத்த வன்மையாளனுகிய பானுகோபன் காற்றைப்போல ஆயிரமம்புகளை விட்டுச் சிறந்த சிவகுமாரரான வீரவாகுதேவருடைய மார்பிற் படுமாறு எய்தனன்.—எ-று. (அஉ)

ஆக மீதிலோ ராயிரம் பகழிபுக் கழுந்த
வேக வீரனு மிளவலு முனிவுகொண் டேவி
வாகை வெங்கணை பத்துநூ றவுணர்கோன் மதலை
பாகு மாக்களு மிரதமு மொருங்குறப் படுத்தான்.

(இ-ள்.) தன் மார்பில் ஓராயிரம் அம்புகள் வந்து பட்டு அழுந்த ஒரோ வீரராகிய வீரவாகுதேவரும் கோபம்பொருந்தி வெற்றிபொருந்திய ஆயிர மம்புகளைவிட்டு அசுராதிபனாகிய சூரபன்மனுடைய பிள்ளையான பாநுகோபனுடைய சாரதியையும் குதிரைகளையும் தேரினையும் ஒன்றாகவழித்தனர்.—எ-று. (அரு)

படுக்க வெய்யவன் வேறொரு வையமேற் பாய்ந்து
தடக்கை வில்லினை வளைக்குமு னாயிரஞ் சரத்தைத்
தொடுக்க மற்றவ னுரந்தனைப் போழ்தலுந் துளங்கி
யிடுக்க ணெய்தின னார்த்தனர் பூதர்க ளெவரும்.

(இ-ள்.) வீரவாகுதேவ ரிவ்வாறனைத்தையும் அம்புகளாலழித்தவுடனே, கொடியவனான பாநுகோபன் வேறேயொரு தேரின்மீது குதித்துப் பெரிய கையிலிருந்த வில்லினை வளைத்தற்குமுன்னே ஆயிரமம்புகளை வீரவாகுதேவர் விட்டனர்; அவை அப் பாநுகோபனுடைய மார்பைப் பிளத்தலும், அதனால் அவன் நடுங்கித் துன்பமடைந்தனன்; அச்சமயத்தில் பூதர்களனைவர்களும் சந்தோஷத்தா லாரவாரித்தார்கள்.—எ-று.

பூத ரார்த்திடு துழனியைக் கேட்டலும் பொருமிக்
காதில் வெவ்விட மூய்த்திடு திறனெனக் கனன்றே
யேத மில்லதோர் பண்ணவப் படைகளா லிமைப்பிற்
றூத னாற்றலைத் தொலைக்குவன் யானெனத் துணிந்தான்.

(இ-ள்.) பூதர்களாரவாரிக்கின்ற சத்தத்தைக் கேட்டவுடனே விம்மிக் காதினிற் கொடிய விடத்தை ஊட்டினாற்போல கோபித்து இனி நான் குற்றமற்ற தேவாஸ்திரத்தால் ஒரு இமைநேரத்தில் தூதுவனுடைய வல்லபத்தை அழிப்பேனென்று துணிந்தனன்.—எ-று. (அ௫)

இணையில் சூர்மகன் வாருணப் படைக்கல மெடுத்துப்
பணிவு கொண்டகார் முகந்தனிற் பூட்டிநீ படர்ந்து
கணித மில்லதோர் நீத்தமாய்ச் சாரதர் கணத்தைத்
துணைவர் தங்களைத் தூதனை முடிக்கெனத் தொடுத்தான்.

(இ-ள்.) ஒப்பற்ற சூரகுமாரன் வருணாஸ்திரத்தை எடுத்து வளைவுபொருந்திய வில்லில் வைத்து நீ சென்று அளவற்ற ஜலரூபமாய் பூதகணங்களையும் தூதனையும் அவன் றுணைவர்களையும் அழிக்கக்கடவை யென்று கூறி விடுத்தனன்.—எ-று. (அசு)

தொடைப் பெரும்படை கடைமுறை யுலகெலாந் தொலைக்கு
மடற் பெருங்கட லேழினிற் பரந்துபோ யான்று
தடப் பெரும்புன னீத்தமாய் விசும்பினைத் தடவி
யிடிப் பெருங்குரல் காட்டியே யேகிய திமைப்பில்.

(இ-ள்.) மாலைபூண்ட வப்பெரிய வஸ்திரம் பிரளயகாலத்தி லுலகங்களை யெல்லா மழிக்கின்ற வன்மைபொருந்திய எழுவகைக் கடல்களைக்காட்டிலும் அகன்று சென்று விரிந்து விசாலமான பெரிய ஜலரூபமாய் ஆகாயத்தை யளாவிப் பெரிய இடியோசையைக் காட்டிக்கொண்டு விரைவாகச் சென்றது.—எ-று. (அஎ)

கண்ட வானவர் துளங்கினர் பூதருங் கலக்கங்
கொண்டு நின்றன ருணர்ந்திலர் துணைவருங் குலைந்தா

ரண்டர் நாயகற் கிளையவ னேக்கியே யகில
முண்டு லாவரு மங்கிமாப் பெரும்படை யுய்த்தான்.

(இ-ள்.) அதனைக்கண்ட தேவர்கள் நடுங்கினார்கள்; பூதர்களும் கலக்கமடைந்து நின்றார்கள்; தம்பிமார்களான எட்டு வீரர்களும் அதனை இன்னதென்று உணர்ந்துகொள்ளாமல் நிலைகுலைந்தார்கள்; தேவநாதரான குமரக்கடவுளுக் கிளையவராகவுள்ளவர் பார்த்து உலகத்தை உண்டுலாவுகின்ற பெரியஅக்கினியின் சிறந்த அம்பினைவிட்டனர்.

புகை யெழுந்தன வெம்மையு மெழுந்தன புலிங்கத்
தொகை யெழுந்தன ஞெகிழிக ளெழுந்தன சுடரின்
வகை யெழுந்தன பேரொலி யெழுந்தன வன்னிச்
சிகை யெழுந்தன செறிந்தன வானமுந் திசையும்.

(இ-ள்.) புகைதோன்றின; சூடுகையும் தோன்றின; தீப்பொறிகளின் தொகையெழுந்தன; கொள்ளிக்கட்டைகளெழுந்தன; சுடர்களின் வகைகளெழுந்தன; பெரியவொலிகளெழுந்தன; தீச்சிகை யெழுந்தன; அவை ஆகாயத்திலும் பூமியிலும் நெருங்கின.

முடிக்க லுற்றதீப் பெரும்படை செறியமு தண்டம்
வெடிக்க லுற்றன வற்றின கங்கைமீன் றொகுதி
துடிக்க லுற்றன சுருங்கின வளக்கர்தொல் கிரிகள்
பொடிக்க லுற்றன தளர்ந்துமெய் பிளந்தனள் புவியும்.

(இ-ள்.) உலகத்தை யழிக்கின்ற பெரிய அக்கினியாஸ்திரமானது நெருங்கிவர, பெரியவண்டம் வெடிக்கலுற்றன; கங்கை வற்றின; மீன் கூட்டங்கள் துடிக்கலுற்றன; கடல்கள் வற்றின; பெரிய மலைகள் பொடித்தன; பூமிதேவியும் தளர்வடைந்து உடல் பிளந்தனள்.—எ-று. (௯௦)

தீர்த்த னேவலோன் விடுபடை யின்னணஞ் சென்று
மூர்த்த மொன்றினில் வாருணப் படையினை முருக்கி
நீர்த்தி ரைப்பெரு நீத்தமு முண்டுமே னிமிர்ந்து
போர்த்த தாமெனச் சுற்றிய தவுணர்கோன் புறத்தில்.

(இ-ள்.) குமரக்கடவுளின் ஊழியரான வீரவாகுதேவர் விட்ட அக்கினியாஸ்திரமானது இவ்வண்ணம் சென்று ஒருமூர்த்தத்தில் அவ்வருணாஸ்திரத்தை அழித்து நீர் வடிவமான திரைகளையுடைய பெரிய வந்த பிரவாக முழுமையும் உண்டு மேலே கிளம்பி மூடிக்கொண்டதென்று கூறும்வண்ணம் அசுராதிபனாகிய பானுகோபனுடைய பக்கத்திற் சூழ்ந்துகொண்டது.—எ-று. (௯௧)

சுற்று கின்றவப் படையினைக் கண்டுசூர் புதல்வன்
செற்ற மேற்கொண்டு மாருதப் பெரும்படை செலுத்த
மற்ற தூழிவெங் காலுருக் கொண்டுமன் னுயிர்கண்
முற்று மண்டமுந் துளங்குறச் சென்றது முழங்கி.

(இ-ள்.) சுற்றுநின்ற அந்த வம்பினைப்பார்த்து சூரகுமாரனான பானுகோபன் மிகுந்த கோபம்பொருந்திப் பெரிய வாயுவாஸ்திரத்தை விடவும், அது ஊழிக்காற்றின் உருவத்தை யடைந்துகொண்டு நிலைபெற்ற உயிர்களும் அண்டமு நடுங்கும் வண்ணம் முழங்கிக்கொண்டு சென்றது.—எ-று. (௯௨)

மாரு தப்படை சென்றுதீப் படையினை மாற்றிச்
சார தப்படை மேலட வருதலுந் தடந்தோள்
வீரன் மற்றது கண்டுவெம் பணிப்படை விடுத்தான்
சூரி யத்தனிக் கடவுளுந் தன்னுளந் துளங்க.

(இ-ள்.) வாயுவாஸ்திரமானது சென்று அக்கினியாஸ்திரத்தை அழித்து பூதப் படைகளைக் கொல்லும்வண்ணம் வருதலும், பெரிய தோள்களையுடைய வீரன் அதனைப்பார்த்து வெவ்விய நாகாஸ்திரத்தை ஒப்பற்ற சூரியதேவனும் அஞ்சும்வண்ணம் விட்டனர்.—எ-று. (சங)

ஆயி ரம்பதி னுயிர மிலக்கமோ டநந்தந்
தீய பல்தலைப் பன்னகத் தொகுதியாய்ச் செறிந்து
காய மெங்கணு நிமிர்ந்துசெந் தீவிடங் கான்று
பாயி ருஞ்சுடர்க் கதிரையு மறைத்தது படத்தால்.

(இ-ள்.) அந்நாகாஸ்திரம் ஆயிரம் பதினாயிரம் இலக்கம் அனந்தம் என்னும் எண்களுக்குரிய கொடிய பலதலைகளையுடைய பாம்புக்கூட்டமாக நெருங்கி ஆகாயமெங்கணும் நிறைந்து செந்நிறமான தீயைப்போன்ற விடத்தினை கக்கிப் படங்களால்பரவிய பெரியகிரணங்களையுடைய சூரியனையும் மறைத்தன.—எ-று. (சச)

வெங்க ணுகங்க ளுமிழ்கின்ற வங்கியும் விடமு
மங்குல் வானமுந் திசைகளு மாநில வரைப்பு
மெங்கு மீண்டிய விரவினிற் புவியுளோர் யாண்டும்
பொங்கு தீச்சுட ரளப்பில மாட்டுதல் போல.

(இ-ள்.) இராத்திரியில் பூவுலகத்தவர்கள் பிரகாசியாநின்ற அநேக தீபச்சுடர்களை வைத்தலைப்போல, வெவ்விய கண்களையுடைய பாம்புகள் கக்குகின்ற நெருப்பும் விஷமும் மேகங்களையுடைய ஆகாயமும் திசைகளும் பெரியபூமியினிடமும் ஆகிய எவ்விடங்களிலும் பரவின.—எ-று. (சரு)

உலவை மாப்படை யுண்டிடு மங்கியை யொருங்கே
வலவை நீர்மையாற் றம்முழை வரும்படி வாங்கி
யலகில் வெம்பணி விடுத்தென வன்னவை யுமிழ்தீக்
குலவு கின்றன புகையெனக் கொடுவிடங் குழும.

(இ-ள்.) சிறந்த வாயுவாஸ்திரம் உண்ட நெருப்பினை சாமர்த்தியத்தன்மையால் தம்மிடத்திற்கு வருமாறு அழைத்து அளவற்ற கொடிய பாம்புகள் விட்டாற்போல, அப்பாம்புகள் கக்கிய நெருப்பு புகையைப்போல கொடியவிஷமானது எவ்விடத்திலும் சூழ்ந்துகொள்ள சூழ்ந்து விளங்குகின்றன.—எ-று. (சசு)

இனைய கொள்கையாற் பன்னகப் பெரும்படை யேகி
முன மெதிர்ந்திடு மாருதப் படையினை முனிந்து
துனைய வுண்டுதன் மீமிசைச் சேறலுந் தொன்னாட்
கனலி யைத்தளை பூட்டிய கண்டகன் கண்டான்.

(இ-ள்.) இப்படிப்பட்ட தன்மையாகப் பெரிய நாகாஸ்திரமானது சென்று முன்னே எதிர்த்த வாயுவாஸ்திரத்தைக் கோபித்து விரைவாக வுண்டு பின்னர் தன்னேரோ வருதலும், அதனை முன்னாளில் சூரியனைச் சிறையிலடைத்த அஞ்சாமையினையுடைய பாநுகோபன் பார்த்தான்.—எ-று. (சஎ)

இன்ன தேயிதற் கெதிரென வவுணர்கோ னெண்ணிப்
பொன்னி ருஞ்சிறைக் கலுழன்மாப் படையினைப் போக்க
வன்ன தேகலும் வெருவியே யாற்றலின் றாகிப்
பன்ன கப்படை யிரிந்தது கதிர்கண்ட பனிபோல்.

(இ-ள்.) அசுராதிபனாகிய பாநுகோபன் இதற்கிதுவே எதிரொன்று நினைத்து பொன்மயமான பெரிய இறகுகளையுடைய கருடாஸ்திரத்தைவிட, அது செல்லுதலும்

பயந்து சாமர்த்தியமிழந்து நாகாஸ்திரமானது சூரியனைக்கண்ட பனியைப்போல விலகி யோடியது.—எ-று. (௯௮)

ஆல வெம்பணிப் படைமுரிந் திடுதலு மார்த்துக்
கால வேகத்தி னுவணமாப் பெரும்படை கலுழன்
கோல மெண்ணில புரிந்துநேர் வந்திடக் குரிசின்
மேலை நந்தியந் தேவன்மாப் படையினை விடுத்தான்.

(இ-ள்.) விஷத்தினையுடைய வெவ்விய நாகாஸ்திரமானது அழிதலும், ஆரவாரித்து அதிகவேகத்துடன் பெருமையினையுடைய கருடாஸ்திரம் அநேக கருடர்களின் உருவங்களை அடைந்து எதிரே வருதலும், உடனே தலைவராகிய வீரவாகுதேவர் சிறந்த நந்தியஸ்திரத்தை விட்டனர்.—எ-று. (௯௯)

சீற்ற மாயண்ண னந்திதன் பெரும்படை செலுத்த
நூற்று நூறுநூ றுயிர கோடிநோன் கழற்கா
லேற்றின் மேனிகொண் டுலகெலா மொருங்குற வீண்டி
யாற்ற வெய்துயிர்த் தார்த்தது மூதண்ட மதிர.

(இ-ள்.) கோபத்துடனே வீரவாகுதேவர் பெரிய நந்தியாஸ்திரத்தைவிட, அது பதினுயிர லக்ஷங்கோடி பெரிய கழலணிந்த காலினையுடைய இடபவுருவத்தையடைந்து உலகமுழுமையிலும் ஒன்றாக நெருங்கிவர மிகவும் பெருஞ்சுவாசம்விட்டுப் பெரிய அண்டமும் அதிர ஆரவாரித்தது.—எ-று. (௧௦௦)

களனெனப்படு நூபுரங் கழலிடை கலிப்ப
வளவில் கிங்கிணித் தாமங்கள் கந்தரத் தார்ப்ப
வொளிறு பேரிமி லண்டகோ ளகையினை யுரிஞ்ச
வளரு நீண்மருப் புலகெலா மலைப்பவந் ததுவே.

(இ-ள்.) சமூகமானதென்று கூறப்படுகின்ற சிலம்புகள் காலினில் முழங்க, அளவற்றனவாகிய கிங்கிணிமாலைகள் கண்டத்தில் ஆரவாரிக்க விளங்காநின்ற பெரிய இமிலானது அண்டகோளகையைத்தொட வளராநின்ற நீண்டகொம்புகள் உலகமனைத்தையும் வருத்த நந்தியம்பானது வந்தது.—எ-று. (௧௦௧)

திரை யெறிந்திடு மளக்கருண் டுலவுசேண் முகிலி
னிரை யெறிந்தது பரிதிதே ரெறிந்தது நெடுதாந்
தரை யெறிந்தது திசைக்கரி யெறிந்தது தடம்பொன்
வரை யெறிந்தது குலகிரி யெறிந்தது மருப்பால்.

(இ-ள்.) கொம்பினால் அலைவீசாநின்ற கடலைக்குடித்துச் சஞ்சரிக்கின்ற வானத்திலுள்ள மேகங்களின் வரிசைகளை யழித்தது; சூரியனுடைய தேரினை உடைத்தது; நீண்ட பூமியை அழித்தது; திக்குயானைகளை முட்டியது; விசாலமான பொன்மலையைக் குத்தியது; அட்டகுலாசலங்களைப் பெயர்த்தது.—எ-று. (௧௦௨)

நந்தி மாப்படை யின்னண மேகியே நணுகி
வந்த காருடப் படையினை விழுங்கிமாற் றலனைச்
சிந்து கின்றன னென்றுசென் றிடுதலுந் தெரியா
வந்த கன்படை தொடுத்தன னவுணர்கட் கரசன்.

(இ-ள்.) சிறந்த நந்தியாஸ்திரம் இவ்வண்ணம் நடந்து சென்று, முன்னே எதிரியின் புறத்தினின்றும் வந்துள்ள கருடாஸ்திரத்தை விழுங்கிப் பகைவனைக்கொல்லுகின்றேனென்று செல்லுதலும், அதனைப்பார்த்து அசுரர்கட்கரசனாகிய பானுகோபன் எமாஸ்திரத்தை விட்டனன்.—எ-று. (௧௦௩)

தொடுத்த வந்தகப் படையையும் விடைப்படை தூங்து
படுத்து விட்டிய தன்னதன் மிடலினைப் பாராக்
கடித்து மெல்லித ழதுக்கியே யயன்படைக் கலத்தை
யெடுத்து வீசின னிந்திரன் பதிகனற் கீந்தோன்.

(இ-ள்.) அசுரன்விட்ட ஏமாஸ்திரத்தையும் இடபாஸ்திரமானது அழித்துக்கொன்றது; உடனே அவன் அவ்விடபாஸ்திரத்தின் வல்லபத்தைப்பார்த்து மெல்லிய இதழைக்கடித்ததுக்கி, பிரமாஸ்திரத்தை எடுத்து இந்திரநகரமான சுவர்க்கத்தை அக்கினிக்குணவாகவளித்த பாநுகோபன் விட்டனன்.—எ-று. (கOச)

வீசு நான்முகப் படைக்கலம் வெகுண்டுவிண் ணெறிபோ
யீச னூர்திதன் படையினைக் காண்டலு மிடைந்து
நீச னேவலின் வந்தன னின்வர வுணரேன்
காய் சினங்கொளே லெனத்தொழு துடைந்தது கடிதின்.

(இ-ள்.) பாநுகோபன் விட்ட பிரமாஸ்திரமானது கோபித்துக்கொண்டு ஆகாயவழியாகச் சென்று ஈசனுடைய வாகனமான நந்தியான அஸ்திரத்தைக் கண்டவுடனே பின்னிடைந்து யான் இழிந்தவனுன பாநுகோபனுடைய கட்டளையினுல் வந்தேன், நீ வந்ததை யறியேன், என்மீது பெருங்கோபங்கொள்ளாதே என்றுகூறிச் சமாதானஞ்செய்து விரைந்துடைந்து சென்றது.—எ-று. (கOரு)

நூன் முகத்தினில் விதித்திடு நூற்றித ழிருக்கை
நான் முகப்படை பழுதுபட் டோடலு நகைத்து
வான் முகத்தவ ரார்த்தன ரதுகண்டு மைந்தன்
சூன் முகக்கொண்டன் மேனியன் பெரும்படை தொடுத்தான்.

(இ-ள்.) சாத்திரங்களின் முன்னிடத்தில் விதித்திருக்கின்ற நூற்றிதழ்களையுடைய தாமரையாசனத்திலிருக்கின்ற பிரமாஸ்திரமானது பழுதடைந்து ஓடுதலும், அதனைக்கண்டு சிரித்து ஆகாயத்தினின்ற தேவர்கள் ஆரவாரித்தார்கள்; அதனைப் பாநுகோபன் பார்த்து சூல்கொண்ட மேகம்போன்ற சரீரத்தினையுடைய நாராயணனது பெரிய அஸ்திரத்தைவிட்டனன்.—எ-று. (கOசு)

ஊழி நாளினு முடிகிலா தவன்மக னுந்து
மாழி யான்படை யாண்டுமா வுருவமா யமைந்து
கேழி லைம்படை தாங்கிமா யத்தொடுங் கெழுமி
வாழி நந்திதன் படையெதிர் மலைந்தது மன்னே.

(இ-ள்.) ஊழிகாலத்திலுமழியாத சூரபன்மனுடைய பிள்ளையான பாநுகோபன்விட்ட சக்கரத்தினையுடைய நாராயணுஸ்திரமானது அவ்விடத்தில் நாராயணரூபமாகவமைந்து குற்றமற்ற பஞ்சாயுதங்களைத்தரித்து மாயத்துடன் கலந்து நந்தியாஸ்திரத்தினுடன் எதிர்த்துப் போர்புரிந்தது.—எ-று. (கOஎ)

நார ணன்படை நந்திதன் படைக்கெதிர் நணுகிப்
போரி யற்றியே நிற்புழி யதுகண்டு புனிதன்
சூர ரித்திறல் சிந்திடச் சிம்புளாய்த் தோன்றும்
வீர பத்திரப் படையினைத் தொழுதனன் விடுத்தான்.

(இ-ள்) நாராணுஸ்திரமானது நந்தியாஸ்திரத்தினருகிலடைந்து சண்டைசெய்துகொண்டு நிற்கின்றசமயத்தில் அதனைப் பரிசுத்தரான வீரவாகுதேவர் பார்த்து அச்சத்தைத்தருகின்ற நரசிங்கத்தின் வன்மையழிய சரபரூபமாக வெழுந்தருளிய வீரபத்திராஸ்திரத்தை வணங்கி விட்டனர்.—எ-று. (கOஅ)

ஏய தாகிய வீரபத் திரப்படை யெழுந்து
போய காலையி னந்தி தன் படையெதிர் பொருத
மாய வன்படை தொலைந்தது மதியொடு திகழ்மீ
னுயி ரங்கதி ரோன்வரக் கரந்தவா றதுபோல்.

(இ-ள்.) வீரவாகுதேவரால் விடப்பட்டதான வீரபத்திராஸ்திரமானது எழுந்து சென்றவுடனே நந்தியம்பின் எதிரே நின்று போர்புரிந்த நாராயணாஸ்திரமானது சந்திரனொடு விளங்குகின்ற நட்சத்திரங்கள் சகத்திரகிரணனாகிய சூரியன் உதித்தலும் மறைந்த தன்மையைப்போல அழிந்தது.—எ-று. (௧0௯)

செங்க ணயகன் படைதொலைந் திடுதலுந் தெரிவா
னங்க ணய்வுறு விமைப்பினி லகிலமு மழிக்கு
மெங்க ணயகன் படையினைத் தூண்டுதற் கெடுத்தான்
வெங்க ணயிரங் கதிரினைச் செயிர்த்திடும் வெய்யோன்.

(இ-ள்.) சகத்திரகிரணனாகிய சூரியனைக் கோபித்த வெங்கண்மையினையுடைய கொடிய பாநுகோபன் செந்நிறமான கண்களையுடைய இரக்ஷகர்த்தாவான நாராயணனுடைய அஸ்திரமானது அழிதலும், அதனை அவ்விடத்திற் பாநுகோபன்ஆராய்ந்து ஒரு இமை நேரத்தில் எல்லாவற்றையும் அழிக்கின்ற எங்கள் பெருமானுடைய அஸ்திரத்தை விடுதற்காகவெடுத்தனன்.—எ-று. (௧௧0)

எஞ்ச வில்லதோ ரெம்பிரான் றொல்படை யெடுத்து
மஞ்ச னங்கந்தந் தூபிகை மணிவிளக் கமுத
நெஞ்சி னிற்கடி துய்த்தனன் பூசனை நிரப்பி
விஞ்சு மன்பினுல் வழுத்தியே தொழுதனன் விடுத்தான்.

(இ-ள்.) குறைவற்ற எம்பெருமானுடைய பெரிய அம்பினையெடுத்து திருமஞ்சனம் கந்தம் தூபம் மணி விளக்கு அமிர்தம் முதலிய விவைகளை மனதினில் விரைவாக வுண்டாக்கிப் பூசையை நிறைவேற்றி அதிகமான அன்பினுல் வணங்கிவிட்டனன்.

தாதை யாயவன் படைக்கலம் விடுத்திடுந் தன்மை
காதன் மாமகன் கண்டனன் றனுமக் கணத்தி
லாதி நாயகன் படைதனை யெடுத்தன னளியாற்
போத நீடுதன் புந்தியா லருச்சனை புரிந்தான்.

(இ-ள்.) தந்தையாகிய சிவபெருமானுடைய அம்பினைவிடுகின்ற தன்மையை அவரதாசைமகனாகிய வீரவாகுதேவரும் பார்த்துத் தானு மதேக்ஷணத்தில் ஆதிமுதல்வனுடைய படையினை எடுத்து அன்புடன் ஞானநிறைந்த மனத்தினுல் அருச்சனை செய்தனர்.—எ-று. (௧௧௨)

வழிப டுந்தொழின் முற்றிய பின்னுற மதலை
யழித கன்மகன் விடுத்திடு படைக்குமா றுகி
விழுமி தாயிவண் மீளுதி யாலென வேண்டித்
தொழுதி யாவர்க்கு மேலவன் படையினைத் தொடுத்தான்.

(இ-ள்.) வழிபாடுசெய்கின்ற தொழிலானது நிறைவேறியபின்னர், அவர் மகனர், அழிந்த தன்மையினையுடைய சூரபன்மனுடைய பிள்ளையான பாநுகோபன்விட்ட அம்புக்கு விரோதமாய்ப் போர்புரிந்து சிறந்ததாக இங்கு திரும்பிவருவாயாகவென்று வேண்டிக்கோடலை யியற்றி வணங்கி அனைவருக்குங்கருத்தாவான சிவபெருமானுடைய அம்பினை விட்டனர்.—எ-று. (௧௧௩)

தூயன் விட்டிடு சிவன்படை யெழுதலுந் தொல்லைத்
தீயன் விட்டிடு பரன்படை யெதிர்ந்துநேர் சென்ற
தாய வப்படை யிரண்டுமொ ருகிய வழிக்கு
நாய கத்தனி யுருத்திர வடிவமாய் நண்ணி.

(இ-ள்.) தூய்மையினையுடையவரான வீரவாகுதேவர்விட்ட சிவாஸ்திரமானது மேலெழுந்து வருதலும், புராதனமான கொடிய தீக்குணங்களையுடைய பாநுகோபன் விட்ட சிவாஸ்திரமானது எதிர்த்து எதிரே சென்றது; அந்த இரண்டு அம்புகளும் ஒன்றுடன் ஒன்று பகைத்து உலகத்தை அழிக்கின்ற ஒப்பற்ற சங்கார கர்த்தாவின் உருவத்துடன் எதிர்த்தன.—எ-று. (கக௪)

ஊழிக் காலினை யொருபுடை யுமிழ்ந்தன வுலவாச்
சூழிப் பாய்புகை யொருபுடை யுமிழ்ந்தன தொலைக்கும்
பாழிப் பேரழ லொருபுடை யுமிழ்ந்தன பலவா
மாழித் தீவிட மொருபுடை யுமிழ்ந்தன வவையே.

(இ-ள்.) அவ்விரு சிவாத்திரங்களும் ஒருபுறத்தி லூழித்தீயையுமிழ்ந்தன; கெடாதுசூழ்ந்து பரவுகின்ற புகையை யொருபுறத்திலுமிழ்ந்தன; அன்றியும் சங்காரத்திற்குரிய பெரிய நெருப்பினை யொருபுறத்திலுமிழ்ந்தன; அநேக விதமான ஆழித்தீவிடத்தை ஒருபுறத்திலுமிழ்ந்தன.—எ-று. (கக௫)

கூளி மேலவர் தொகையினை யளித்தன கொடிதாங்
காளி மேலவர் தொகையினை யளித்தன கடுங்கண்
ஞாளி மேலவர் தொகையினை யளித்தன நவைதீ
ராளி மேலவர் தொகையினை யளித்தன வயலில்.

(இ-ள்.) அன்றியு மவ்வம்புகள் பக்கங்களில் எருதின்மீதுலாவுகின்ற உருத்திர கூட்டங்களை யுண்டாக்கின; கொடிய காளிகளாகிய சிறந்தவர்களை அளித்தன; கொடிய கண்களையுடைய நாயின்மீது வருபவர்களின் தொகைகளை யுண்டாக்கின; குற்றமற்ற யாளியின்மீது வருபவர்களை யுண்டாக்கின.—எ-று. (௧கசு)

பேயி னங்களை யொருபுடை யுமிழ்ந்தன பிறங்கி
மூய தொல்லிரு ளொருபுடை யுமிழ்ந்தன முழங்கு
மாயை தன்கண மொருபுடை யுமிழ்ந்தன மறலித்
தீயர் தங்குழு வொருபுடை யுமிழ்ந்தன செறிய.

(இ-ள்.) அவைகள் பிசாசவருக்கங்களை ஒருபுறத்தில் உமிழ்ந்தன; விளங்கி நெருங்கிய பெரியவிருளினை யொருபுறத்திலுமிழ்ந்தன; முழங்காநின்ற மாயையின் கூட்டங்களை ஒருபுறத்திலுமிழ்ந்தன; காலர் என்னுங் கொடியவர்களை நெருங்குமாறுகக்கின.—எ-று. (ககஎ)

எண்ட ருங்கட லளப்பில கான்றன வெரிகால்
கொண்ட வின்றுறைகை யளப்பில கான்றன கொலைசெய்
சண்ட வெம்பணி யளப்பில கான்றன தபன
மண்ட லங்களோ ரளப்பில கான்றன மருங்கில்.

(இ-ள்) பக்கங்களில் எண்ணைத் தருகின்ற அநேகங் கடல்களைக்கக்கின; தீமழை பெய்கின்ற மேகக்கூட்டங்களை அநேகமாக வுமிழ்ந்தன; கொலைதொழிலைச் செய்கின்ற வேகத்தினையுடைய கொடிய அனேகமான பாம்புகளைக் கக்கின; சூரியமண்டலங்களை அளவற்றனவாகக் கக்கின.—எ-று. (ககஅ)

அனந்த கோடியர் புட்கலே யிறைவரை யளித்த
வனந்த கோடியர் கரிமுகத் தவர்தமை யளித்த
வனந்த கோடிய ரரிமுகத் தவர்தமை யளித்த
வனந்த கோடியர் சிம்புண்மே னியர்தமை யளித்த.

(இ-ள்.) அநந்தங்கோடி புட்கலை காந்தர்களாகிய சாத்தர்களை உண்டாக்கின; அநந்தங்கோடி யானைமுகர்களான விநாயகர்களை யுண்டாக்கின; அநந்தங்கோடி நரசிங்கர்களையுண்டாக்கின; அநந்தங்கோடி சரபமூர்த்திகளை யளித்தன.—எ-று. (ககக)

ஏறு வெம்பரி வயப்புலி வல்லியம் யாளி
சீறு மால்கரி தேரொடு மானமேற் சேர்ந்து
மாறில் பல்படை சிந்தியே முனிந்துமேல் வருவான்
வேறு வேறெங்கு முருத்திர கணங்களை விதித்த.

(இ-ள்.) எருதுகள் வேகத்தினையுடைய குதிரைகள் வெற்றிபொருந்திய புலி வேங்கை யாளி பகைவரைச் சீறுகின்ற மதமயக்கம் பொருந்திய யானை தேர் விமானம் என்னும் இவைகளில் நெருங்கியிருந்து தவறாத பலவம்புகளை விட்டுக் கொண்டெதிர்த்து வரும்வண்ணம் வேறுவேறாக எவ்விடங்களிலும் உருத்திரகணங்களை யுண்டாக்கின.—எ-று. (கஉ0)

ஆர ணன்படை யளப்பில தந்தன வைவர்
சார ணன்படை யளப்பில தந்தன தந்த
வார ணன்படை யளப்பில தந்தன வளத்தின்
கார ணன்படை யளப்பில் தந்தன கடிதின்.

(இ-ள்.) அநேகம் பிரமாஸ்திரங்களை யுண்டாக்கின; பாண்டவதூதனாகிய நாராயணனுடைய அம்புகளை அநேகமாகவுண்டாக்கின; (நாலு) கொம்புகளையுடைய ஐராவதனாகிய இந்திரனுடைய அம்புகளை அனேகமாகவுண்டாக்கின; விரைவாகச் செல்வகாரணனாகிய குபேரனுடைய அம்புகளை அநேகமாக வுண்டாக்கின.—எ-று. (கஉக)

வாயு வின்படை யெண்ணில புரிந்தன மறலி
யாய வன்படை யெண்ணில புரிந்தன வளக்கர்
நாய கன்படை யெண்ணில புரிந்தன நகைசேர்
தீய வன்படை யெண்ணில புரிந்தன செறிய.

(இ-ள்.) அளவற்ற வாயுவாஸ்திரத்தை யுண்டாக்கின; எமனுடைய அம்புகளை அநேகமாகவியற்றின; சமுத்திரராஜனாகிய வருணனுடைய அம்புகளை அளவற்றனவாக வுண்டாக்கின; ஒளிபொருந்திய அக்கினியின் அம்புகளை அளவற்றனவாக எங்கு நெருங்க உண்டாக்கின.—எ-று. (கஉஉ)

கற்பொ ழிந்தன ஞெகிழிகள் பொழிந்தன கணக்கில்
செற்பொ ழிந்தன கணிச்சிகள் பொழிந்தன திகிரி
யெற்பொ ழிந்தன சூலம்வேல் பொழிந்தன வீண்டும்
விற்பொ ழிந்தன சரமழை பொழிந்தன விரைவில்.

(இ-ள்.) அன்றியும் அவை விரைவாக கற்களைப்பொழிந்தன; குறைக்கொள்ளிகளைச் சிதறின; அளவற்றனவாகிய மேகங்களைச் சிந்தின கண்டகோடரிகளை யுமிழ்ந்தன; ஒளிபொருந்திய சக்கரங்களைச் சிதறின; சூலங்களையும் வேல்களையும் பொழிந்தன; நெருங்கியவிற்களைச் சிந்தின; அம்பு மழைகளைப்பொழிந்தன.—எ-று. (கஉங)

வேறு.

இம்முறை யுருவ நல்கி யெம்பிரான் படையி ரண்டு
மைம்மலி கடலும் வானு மாதிர வரைப்பும் பாருங்
கொம்மென விழுங்கி யண்ட கோளகை பிளந்து மேல்போய்த்
தம்மின்மா றாகி நின்று சமர்த்தொழில் புரிந்த வன்றே.

(இ-ள்.) இவ்வண்ணமான,வனேகருபங்களை யுண்டாக்கி எம்பெருமானுடைய இரண்டு அம்புகளும் மேகங்கள் மிகுந்துகிடக்கின்ற கடலும் ஆகாயமும் திக்கினெல்லைகளும் பூமியும் விரைந்து விழுங்கி அண்டகோளகையைப் பிளந்து மேலேசென்று ஒன்றிற்கொன்று பகைத்து நின்று போர்புரிந்தன.—எ-று. (கஉச)

வற்றிய வளக்க ரேழும் வறந்தன வான்றோய் கங்கை
முற்றிய புறத்தி லாழி முடிந்ததவ் வண்டத் தப்பாற்
சுற்றிய பெருநீர் நீத்தந் தொலைந்தன வாண்டை வைப்பிற்
பற்றிய வுயிர்கள் யாவும் பதைபதைத் திறந்த வம்மா.

(இ-ள்.) இவ்விருபாணங்களும் எதிர்த்து நின்று போர்புரிதலினால் ஏழுகடல்களும் வற்றின; ஆகாயத்திற் படிந்துகிடக்கின்ற தேவகங்கை வற்றியது; பெரும்புறக்கடல்வற்றி அழிந்தது; அண்டத்தின் அப்புறத்தில் சுற்றிநின்ற பெரிய பிரவாகசலமானது தொலைந்தது; அவ்விடங்களிலிருந்த உயிர்களனைத்தும் துடிதுடித்து இறந்தன.

எரிந்தன நிலனும் வானு மிடிந்தன முடிந்து மேருப்
பொரிந்தன வுடுவின் சூழல் பொடிந்தன விரவி தேர்க
ணெரிந்தன வண்டம் யாவு நிமிர்ந்தன புகையி னீட்டங்
கரிந்தன கிரிக ளேழுங் கவிழ்ந்தன திசையில் யானை.

(இ-ள்.) பூமியும் ஆகாயமு மெரிந்தன; மேருவிடிந்து முடிந்தது; நக்ஷத்திரக் கூட்டங்கள் பொடிந்தன; சூரியனிரதங்கள் பொடிந்தன; அண்டங்களனைத்தும் நெரிந்தன; புகையின்கூட்டம் நிமிர்ந்தன, ஏழுமலைகளுங் கரிந்தன; திக்குயானைகள் கவிழ்ந்தன.—எ-று. (கஉரு)

அலைந்தன சூறை வெங்கா லவிந்தன வடவைச் செந்தீக்
குலைந்தன பிலங்க ளேழுங் குலுங்கின வண்டப் பித்தி
யுலைந்தன வுயிர்கள் யாவு முடைந்தனர் தெரிந்த வானோர்
தொலைந்தன கமட நாகஞ் சுருண்டன புரண்ட மேகம்.

(இ-ள்.) வெவ்விய சூறைக்காற்றானது வீசின; செவ்விய வடவாக்கினியானது அவிந்தன; ஏழுபாதாளங்களுங் குலைந்தன; அண்டச்சுவர்கள் குலுங்கின; உயிர்களனைத்தும் உலர்ந்தன; இவ்வியல்பைக்கண்ட தேவர்கள் உடைந்தார்கள்; ஆதிகூர்ம முதலிய ஆமைகள் தொலைந்தன; நாகங்கள் சுருண்டன; மேகங்கள் புரண்டன.—எ-று. (கஉஎ)

பூமகள் புவியின் மங்கை பொருமியே துளங்கி யேங்கித்
தாமரைக் கண்ணன் றன்னைத் தழுவின ரிருவ ரோடு
நாமகள் வெருவி யோடி நான்முகற் புல்லிக் கொண்டாள்
காமனை யிறுகப் புல்லி யிரதியுங் கலக்க முற்றாள்.

(இ-ள்.) திருமகளும் பூமிதேவியும் பொருமிநடுங்கி ஏங்கி நளினாட்சனாகிய நாராயணனைத் தழுவிக்கொண்டார்கள்; சாவித்திரி காயத்திரி என்னும் இருவர்களுடன் கலைவாணியானவள் பயந்து ஓடிச்சென்று பிரமனைத் தழுவிக்கொண்டாள்; இரதிதேவியும் மன்மதனை இறுகப்புல்லிக்கொண்டு கலக்கமடைந்தனள்.—எ-று. (கஉஅ)

மற்றுள முனிவர் தேவர் மடந்தையர் தம்மைப் புல்லி
நிற்றலு மாற்று ருய்யு நெறியுமொன் றில்லா ராயு
முற்றிடு மச்சந் தன்னு லோடினர் வனத்தீச் சூழப்
பெற்றிடும் பறழ்வாய் கவ்விப் பெயர்ந்திடும் பிணுக்க ளேபோல்.

(இ-ள்.) மற்றுள்ள முனிவர்கள் தேவர்கள் ஆகிய இவர்களின் பெண்கள் அவர்களைத்தழுவி நிற்கவுமாட்டார்கள்; வேறேபிழைக்கும் வழியுமொன்றுமிராது உண்டான அச்சத்தினுல் பெற்ற சிறுவிலங்குகளை வாயிற் கவ்விக்கொண்டு காடாக்கினி சூழ்ந்தவுடனே ஒடுகின்ற பெண் விலங்குகளைப்போல ஒடினுர்கள்.—எ-று. (கஉக)

திரண்டிடு பூத வீரர் தியங்கின ரிலக்க ராஞேர்
மருண்டனர் துணைவர் தாமு மயங்கினர் வீரற் சூழ்ந்தார்
புரண்டன ரவுணர் யாரும் பொடிந்தன படர்ந்த தேர்க
ளுருண்டன களிறு மாவு மொருவனே யவுண னின்றுன்.

(இ-ள்.) அங்குத்திரண்டு நிற்கின்ற பூதவீரர்கள் தியங்கினுர்கள்; இலக்கம் வீரர்கள் மயங்கினுர்கள்; தம்பிமார்களான எட்டுவீரர்களும் மருண்டார்கள்; வீரவாகுதேவரைச் சூழ்ந்து நின்றவர்களெல்லாம் மயங்கினுர்கள்; அசுரர்களனைவரும் புரண்டார்கள்; ஒடின தேர்கள் பொடிந்தன; யானைகளும் குதிரைகளும் உருண்டன.—எ-று. (கருo)

ஆழிசூழ் மகேந்தி ரத்தி லமர்தரு மவுணர் முற்றுஞ்
சூழுமித் திமை நோக்கித் துண்ணென வெருவி மாழ்கி
யேழிரு திறத்த வான வுலகங்க ளியாவு மாயு
மூழிநா ளிதுகொ லோவென் றுலைந்தனர் குலைந்த மெய்யார்.

(இ-ள்.) கடல்சூழ்ந்த மகேந்திரபுரியில் வாழ்கின்ற அசுரர்கள் அனைவரும் உண்டான இந்த தீமையைப்பார்த்து திடீரென்று பயந்து வருந்தி பதினுன்குவகையானதாகிய வுலகங்களனைத்தும் அழிகின்ற பிரளயகாலம் இதுதானே? என்று நடுங்கிய சரீரத்தினையுடையவர்களாய் வருந்தினுர்கள்.—எ-று. (கருக)

பேரொலி பிறந்த தண்டம் பிளந்தன வளைந்த சூறை
யாரழல் பரவிற் றம்மா வாதவன் விளிந்தா னந்த
மூருறை சனங்கள் யாவு முலைந்தன புகுந்த தென்னே
தேருதி ரென்று சூர னொற்றரைத் தெரிய விட்டான்.

(இ-ள்.) பெரிய வொலியானது உண்டாகியது; அண்டமும் பிளந்தன; சுழல்காற்றுப் பரவியது; அரிய தீப்பரவிற்று; சூரியன் இறந்தான்; நமது ஊரிலேவாழ்கின்ற சனங்களனைத்தும் வருந்தின; இங்கு உண்டானதென்னையோ? ஆராயுங்களென்று சூரபன்மன் ஒற்றர்களை அறிந்துவருமாறனுப்பினுன்.—எ-று. (கருஉ)

விட்டிடு கின்ற வொற்றர் செல்லுமுன் விரைந்து போரிற்
பட்டது தெரிந்து தூத ரொருசிலர் பனிக்கு நெஞ்சர்
நெட்டிரு விசும்பி னீந்து நெறியின ரிறைவன் றன்னைக்
கிட்டினர் வணங்கி நின்றுங் கினையன கிளத்த லுற்றுர்.

(இ-ள்.) அனுப்பிய தூதுவர்கள் போதற்குமுன்னே சீக்கிரமாகப் போரினில் நடந்ததனையுணர்ந்து நடுக்குகின்ற நெஞ்சத்தினையுடைய சிலதூதர்கள் நெடிய பெரிய ஆகாயவழியாக வரும் வழியினர்களாய் தங்களரசனை அடைந்து வணங்கிநின்று இவைகளைக் கூறத்தொடங்கினுர்கள்.—எ-று. (கருரு)

ஐயகே ளுனது மைந்த னலரிதன் பகைஞ னென்ன
லெய்திய தூத ஞேடு மிருஞ்சமர் விளைத்துப் பின்னர்த்
தெய்வதப் படைக ளுய்த்துச் செகமெலா மழிக்கு மேலோன்
வெய்யதோர் படையைத் தூண்ட வவனுமப் படையை விட்டான்.

(இ-ள்.) ஐயனே! கேட்பாயாக உனது பிள்ளையான பாநுகோபன் நேற்று இங்கு வந்த தூதனுடனே பெரும்போர்புரிந்த பின்னர், தெய்வாஸ்திரங்களைவிட்டு உலகங்களனைத்தையும்அழிக்கின்ற மேலோனுடைய கொடியதான வம்பினைவிடுதலும் அவனும் அவ்வாயுதத்தினை விட்டனன்.—எ-று. (கருச)

அப்படை யிரண்டு மாகி யகிலமு மொருங்கே யுண்ணு
மொப்பில்பல் லுருவ மெய்தி யுருகெழு செலவிற் ருகித்
துப்புட னண்ட முற்றுந் தொலைத்தமர் புரிந்த மாதோ
விப்பரி சுணர்ந்த தென்ரு ரிறையவன் வினவிச் சொல்வான்.

(இ-ள்.) அந்த இரண்டு அம்புகளுமொன்ருகி எல்லாவுலகங்களையும் ஒன்ருக வுண்ணுகின்ற ஒப்பற்ற பலவுருவத்தையடைந்து கோபித்துக்கொண்டு விளக்கமாகச் செல்லுந் தன்மையினையுடையதாய் வன்மையுடனே அண்டமனைத்தையும் அழித்துச் சண்டையிட்டன; இத்தன்மைதான் எங்களாலுணரப்பட்டன என்று கூறினுர்கள்; அதனை அரசன்கேட்டுச் சொல்லுகின்ருன்.—எ-று. (கருரு)

இரவியை முனிந்தோன் முக்க ணிறையவன் படையை யாரும்
வெருவர விடுத்து மின்னும் வென்றில னெற்றன் றன்னை
நெருநலிற் சிறிய ஞக் நினைந்தன மவனை யந்தோ
வுருவுகண் டெள்ளா தாற்ற லுணர்வதே யுணர்ச்சி யென்ருன்.

(இ-ள்.) பாநுகோபன் திரிநேத்திரராகிய கடவுளின் அம்பினை யாவர்களும் அஞ்சுமாறு விட்டும் இன்னந்தூதனை வென்ருனில்லை; நாம் அவனை நேற்று வெகுஅற்பனுகமதித்தோம். ஐயோ யாவனையும் உருவத்தைப்பார்த்து இகழாமல் அவனது வன்மையையுணர்வதே உணர்ச்சிக்கிலக்கணம் என்றுகூறினுன்.—எ-று. (கருசு)

வெருவரு மினைய பான்மை விளைந்திட வெம்பி ரான்றன்
பொருவரும் படைக டம்மிற் பொருதன வாட லுன்னி
யொருவரு நிகர்கா ணுத வூழியின் முதல்வன் ருனே
யிருபெரு வடிவ மாகி யிருஞ்சமர் புரிந்த தேபோல்.

(இ-ள்.) யாரும் ஒப்பில்லாத ஊழிமுதல்வனுன இறைவனே இரண்டு பெரிய வடிவங்கொண்டு பெருஞ்சண்டை செய்ததைப்போல அஞ்சத்தக்க இப்படிப்பட்ட தன்மை நடக்க வெம்பெருமானுடைய ஒப்பற்ற ஆயுதங்கள் வெற்றியைக்கருதிப் போர்புரிந்தன.—எ-று. (கருஎ)

இவ்வகை சிறிது வேலை யெந்தைதன் படைக்க லங்க
ளவ்விரு வோருங் காண வாடலா லமர தாற்றி
வெவ்வுரு வாகத் தம்பான் மேவர விதித்த வெல்லாஞ்
செவ்விதின் மீட்டு வல்லே திரும்பிய திறலோர் தம்பால்.

(இ-ள்.) இவ்வண்ணஞ் சற்றுநேரம் எம்பெருமானுடைய ஆயுதங்கள் அந்த இரண்டு வீரர்களும் பார்க்கும்வண்ணம் விளையாட்டாகச் சண்டையிட்டுக் கொடுமையாகத் தம்மிடத்துப் பொருந்துமாறு இயற்றியன வனைத்தும் முறையே கிரகித்துக்கொண்டு விரைவாகவிட்ட வீரர்களிடந் திரும்பிச்சென்றன.—எ-று. (கருஅ)

திரும்பிய படைக டங்கள் செய்கையாற் றிரிந்த வண்டம்
பெரும்புவி யகல்வா னேமி பிலம்வரை பிறவுந் தொல்லை
வரம்புறு மாறு நல்கி மாற்றவர் பக்க மல்லா
வரும்பெற லுயிர்கண் முற்று மருள்செய்து போன வன்றே.

(இ-ள்.) திரும்பிய வம்புகள் தங்கள் செய்கைகளாலே மாறுபட்ட வண்டம் பெரிய பூமி அகன்ற வாகாயம் சக்கரவாளம் பாதாளம் மலை முதலியமற்றையவையும் பழையவண்ணமே இருக்கச்செய்து பகைவரிடத்திலுள்ளதல்லாத பெறுதற்கரிய உயிர்களனைத்தையும் உண்டாக்கிச்சென்றன.—எ-று. (கருகூ)

திண்டிறன் மொய்ம்பன் விட்ட சிவன்படை மீட லோடு
மண்டலன் விடுத்த தொல்லைப் படையுமாங் கவனை நண்ணக்
கண்டன ரமர ரார்த்தார் கைதவ னிதினும் வெற்றி
கொண்டிலன் முடிவ னின்னே குறைந்ததெம் மிடரு மென்றார்.

(இ-ள்.) வீரவாகுதேவர்விட்ட சிவாஸ்திரம் திரும்பிவந்துவிடுதலும், பகைவனாகிய பாநுகோபன்விட்ட பழைய சிவாஸ்திரமும் அப்பாநுகோபனுடைய அருகிலடைதலைப்பார்த்தார்கள், தேவர்கள் பார்த்து ஆரவாரித்து இழிதகவினனாகிய பாநுகோபன் இச்சிவாஸ்திரத்தை விட்டும் ஜயம்பெற்றானில்லை; இன்றையதினமே அழிவான் இனி எமது துன்பமொழிந்தது என்றுகூறினார்கள்.—எ-று. (கசய)

பாங்கரி னிபங்கள் காணான் பாய்பரித் தொகுதி காணான்
றாங்கெழிற் றேர்கள் காணான் றானவப் படையுங் காணா
னாங்கவை முடியத் தானே யாயின தன்மை கண்டா
னேங்கினெ னவுணன் மைந்த னிரங்கிமற் றினைய சொல்வான்.

(இ-ள்.) பக்கங்களில் நின்ற யானைகளைக் கண்டானில்லை; தாவுகின்ற குதிரைக்கூட்டங்களைக் கண்டானில்லை; அழகுபொருந்திய தேர்களையுங் கண்டானில்லை; அசுரசைனியங்களையுங் கண்டானில்லை; அவ்விடத்திலிவையனைத்து மழியத் தான்மாத்திரமே நிற்குந்தன்மையைக் கண்டு அசுரகுமாரனான பாநுகோபன் வருத்தங்கொண்டு இதனைக் கூறுகின்றனன்.—எ-று. (கசக)

மூண்டொரு கணத்தி னெல்லா முடிப்பவன் படையு நேர்போய்
மீண்டுள தென்னி னம்மா விடுத்திட மேலொன் றுண்டோ
மாண்டன வனிக முற்றும் வறிபனுய்த் தமிய னின்றே
னீண்டினிச் செய்வ தென்னென் றெண்ணியோர் சூழ்ச்சி கொண்டான்.

(இ-ள்.) நெருங்கிச்சென்று ஒரு கணப்பொழுதிற்குள் அனைத்தையுமழிக்கின்ற சருவசங்காரமூர்த்தியின் அம்பும் எதிரேசென்று திரும்பிவந்ததாயின், இனிவிடுவதற்கு அதைவிடச் சிறந்ததொன்றிருக்கின்றதோ? எனது சைனியங்களனைத்தும் இறந்தன; தரித்திரனாக நானொருவனே நின்றேன், இவ்விடத்தி லினிச்செய்யப்போகின்றதென்னையென்று ஆலோசித்து ஒருதந்திரங் கருதினான்.—எ-று. (கசஉ)

மாயத்தா னெய்து நிற்கின் மலைவதுஞ் செயலன் றென்னா
மாயத்தா னருவங் கொண்டு வல்விரைந் தெழுந்து சென்று
காயத்தா னாகி நிற்பக் கைதவன் வெருவித் தோன்றாக்
காயத்தா னுடைந்தா னென்றே யார்த்தன கணங்க ளெல்லாம்.

(இ-ள்.) இங்கு நின்றால் சாகவேண்டிவரும்; எதிரே நின்று போர்புரிவதுந் தகுதியல்ல; என்று தான்பழகியுள்ள மாயாமந்திரத்தினால் அருவமானவனாய் அதிக விரை

வாக எழுந்துபோய் ஆகாயத்தினிடத்தனாக நிற்றலும், இதனை யுணராத கணங்களெல்லாம் இழிதகவினையுடைய பாநுகோபன் அருபியாய் மறைந்து முதுகிட்டானென்று கூறி ஆரவாரித்தார்கள்.—எ-று. (கசரு)

விடலையின் னெழுந்த காலை மேவலர் தொகையை யெல்லா
முடிவுசெய் சென்று வஞ்ச முரட்படை யவுணன் றாண்டி
னடுமது நமையு மென்னா வதற்குமுன் னளக்க ராற்றைக்
கடிதினிற் கடந்தான் போலக் கதிரவன் கரந்து போனான்.

(இ-ள்.) வாலிபனாகிய பாநுகோபன் ஆகாயத்தி லெழும்பியவுடனே பகைவர் கூட்டங்களை யெல்லாம் அழிக்கக்கடவையென்று வஞ்சனையுடைய வன்மையொடுகூடிய ஆயுதத்தினை விடுவானானால், அது நம்மையுங்கொல்லுமென்று கருதி அதற்கு முன்னே கடல்வழியை விரைவாகக் கடந்தவனைப்போல சூரியன் மறைந்துபோனான்.

மைப்புயன் மேனித் தீயோன் மறைந்தது வள்ளல் காணா
விப்பக லுனுங் கள்வனி றந்தில னிரிந்து வல்லே
தப்பின னினியான் செய்யத் தருவதென் னுரைத்தி ரென்ன
வொப்பருந் துணைவர் கேளா வொருங்குடன் றெழுது சொல்வார்.

(இ-ள்.) கரிய மேகம்போன்ற நிறத்தினையுடைய உடலோடு கூடிய கொடியவனான பாநுகோபன் மறைந்ததனை வீரவாகுதேவர்பார்த்து, இந்தத்தினத்திலும் அக்கள்வனான பாநுகோப னிறந்தானில்லை; விலகி விரைவாகத் தப்பித்துக்கொண்டான். இனி யான்செய்யவேண்டுவதென்னை சொல்லுங்கள் என்று வீரவாகுதேவர் கூறுதலும், அதனை ஒப்பற்ற தம்பிமார்கள் கேட்டு எல்லாருமாக வணங்கி இதனைக் கூறுவாராயினார்.—எ-று. (கசகு)

வந்தெதி ரவுணர் தானை மாண்டன தமிய னின்றான்
சிந்தினன் மறைந்து போனா னினிவருந் திறலோ ரில்லை
யந்தியு மணுகிற் றம்மா வனிகமு மியாமு மீண்டு
கந்தனை யிறைஞ்சிக் காலை வருவதே கடமைத் தென்றார்.

(இ-ள்.) வந்து எதிர்த்த அசுரசைனியங்கள் இறந்தன; பின்னர் அவனொருவனே நின்றான்; நின்றவன் உடைந்து மறைந்துசென்றான்; இன்று இனி எதிர்த்துவருந் தன்மையினையுடையவர்களில்லை; மாலைப்பொழுது வந்தது; ஆதலால் நாமுஞ் சேனைகளுமாகத் திரும்பி நம்பெருமானான கந்தக்கடவுளை வணங்கி நாளைக்காலையில் வருவதே முறைமை என்று கூறினார்கள்—எ-று. (கசசு)

வேறு.

இனிய தன்றுணைவ ரின்னன கூற
வினவி னேன்முருக வேளடி காணு
நினைவு கொண்டிடலும் விண்ணிடை நின்ற
தினகரன் பகைஞ னின்ன தெரிந்தான்.

(இ-ள்.) இனிமையான தனது துணைவர்கள் இவைகளைச்சொல்லக் கேட்ட வீரவாகுதேவர் குமரக்கடவுளின் திருவடிகளைத் தரிசிக்கவேண்டுமென்னும் எண்ணங்கொள்ளுதலும், ஆகாயத்தின் மறைந்துநின்ற பாநுகோபன் இவையனைத்தையும் உணர்ந்தனன்.—எ-று. (கசஎ)

முன்னை வைகலின் முரிந்தன னென்றே
பன்னு மோர்வசை பரந்தது மன்றிப்

பின்னு மிப்பகல் பிழைத்தன னென்று
லென்னை யாவர்களு மொள்ளுவர் மாதோ.

(இ-ள்.) நேற்றையதினம் விலகி யோடினேனென்று சொல்லுகின்ற சொல்லானது பரவியதுமன்றி, பின்னும் இந்தத்தினமும் பிழைத்தேனானால் என்னை எல்லாரும் இகழ்வார்கள்.—எ-று. (கசஅ)

தொக்க போரில் வெருவித் தொலைவோரைத்
தக்கதோர் துணைவர் தந்தையர் தாயர்
மக்கள் பெண்டிரு மறப்பர்க ளென்னின்
மிக்குளா ரிகழ்தல் வேண்டுவ தன்றே.

(இ-ள்.) பொருந்திய சண்டையில் பயந்து ஓடுபவர்களைத் தகுந்த துணைவர்களும் பிதாமாதாக்களும் மக்களும் பெண்டிரும் மறந்துவிடுவார்களானால், இவர்களன்றியுள்ள அயலார்கள் இகழ்வார்களென்பதைச் சொல்லவேண்டியதேயில்லை.—எ-று. கசகூ

இன்று நென்னலி னிரிந்துள னென்றால்
வென்றி மன்னனை வெகுண்டு துறக்குந்
துன்று பல்கதி ரினைச்சுளி தொல்சீர்
பொன்று மெந்தை புகழுந் தொலைவாமால்.

(இ-ள்.) இன்று நேற்றையப்போல விலகி யோடுவேனானால், வெற்றியோடு கூடிய அரசனும் என்னைக்கோபித்துத் தள்ளிவிடுவான்; அன்றியும் நெருங்கிய பலகிரணங்களையுடைய சூரியனைக் கோபித்த பழைய சிறப்பு மழியும்; அல்லாமலும் எனது தந்தையின் புகழுங் கெடும்.—எ-று. (கருo)

யாதொர் துன்னல ரெதிர்ந்திடி னின்று
காதலே வலி கடந்திடு சூழ்ச்சி
நீதி யன்றதுவு நேர்ந்தில தென்னிற்
சாதலே தகுதி சாய்ந்திட லன்றே.

(இ-ள்.) எந்தப்பகைவனெதிர்ந்தாலும் இன்றையதினங் கொல்லுதலே சாமர்த்தியம், அதைவிட்டு எதிர்க்காதுபோனால் நீதியாகாது; போரில் எதிர்ந்து ஜயமில்லாது போனாலும் இறத்தலே தகுதியானது; முதுகிடுதல் நல்லதோ?—எ-று. (கருக)

வருந்தி நின்றெதிர் மலைந்தன னின்று
மிரிந்து ளானிவ னெனும்பழி கோடல்
பொருந்த லன்றுபுணர் வென்னினு மாற்றி
விரைந்து மாற்றலரை வென்றிடல் வேண்டும்.

(இ-ள்.) வருந்திநின்று சண்டையிட்ட விவன், இன்றும் தோற்று ஓடினனென்னும் பழியையடைதல் கூடாத காரியம். ஆதலால், ஏதேனும் தந்திரத்தையாயினுஞ்செய்து பகைவர்களைச் சீக்கிரமாகக் கொல்லுதல் வேண்டும்.—எ-று. (கருஉ)

முன்ன நின்றொரு முரட்படை தன்னை
யின்ன லெய்தும்வகை யேவுது மென்னி
னன்ன தற்கெதி ரடும்படை தூண்டிச்
சின்ன மாகவது சிந்துவன் வீரன்.

(இ-ள்.) எதிரில் நின்று ஒரு வன்மையான அம்பினைப் பகைவர் வருந்தும்வண்ணம் விடுவோமானால், எதிரியாக வந்துள்ள வீரனானவன் அதற்கெதிராய் அதனை யழிக்கத்தக்க ஓரம்பினைவிட்டு அதைச் சின்னமாக வழிப்பான்.—எ-று. (கருந)

இறந்த னன்பொரு திரிந்தன னென்னப்
பறந்தலைச் செறுநர் பன்னுற வின்னே
மறைந்து நின்றொரு வயப்படை தூண்டிச்
சிறந்த வென்றிகொடு சென்றிடல் வேண்டும்.

(இ-ள்.) இறந்தனன் போர்புரிந்து முதுகிட்டேனென்று இரணகளத்தி னிற்கின்ற பகைவர் கூற, இப்பொழுதே யான் மறைந்துநின்று ஒரு வெற்றியைத் தரத்தக்க வம்பினைவிட்டுச் சிறப்பினையுடைய வெற்றியுடனே போதல்வேண்டும்.—எ-று. (௧௫௪)

தெய்வ தப்படை செலுத்துவ னென்னி
னவ்வ னைத்துமம ராற்றலர் தம்பாற்
செவ்வி துற்றுயிர் செகுத்திட வின்றே
வெவ்வு ருக்கள்கொடு மீளுவ தல்லால்.

(இ-ள்.) யான் தேவாஸ்திரங்களை விடுவேனானால், அவைகளனைத்தும் கொடிய வுருவங்களை யடைந்து திரும்பிவருதலேயன்றி, போர்புரியாதவர்களிடத்தில் நேரே சென்று அவர்களுயிரை வாங்காது.—எ-று. (௧௫௫)

பண்ண வப்படை படைத்திடு கோல
மெண்ண லன்றெரியி னேற்றன தூண்டித்
துண்ணெ னத்தொலைவு சூழ்த்திடும் யானும்
விண்ண கத்துறல் வெளிப்படு மாதோ.

(இ-ள்.) தேவாஸ்திரம் அடைந்துள்ள வடிவத்தை பகைவனுணர்வானானால், தகுந்த வம்பினைவிட்டு விரைவாக அழித்தலைச்செய்வான்; அன்றியும் யான் ஆகாயத்தி லிருப்பதும் வெளியாகிவிடும்.—எ-று. (௧௫௬)

வெளிப்படிற் செறுநர் விண்ணினும் வந்தே
வளைத்திகற் புரிவர் மாறமர் செய்தே
யிளைத்தனன் பொரவு மின்னினி யேலா
தொளித்து முற்பகலி னோடரி தாமால்.

(இ-ள்.) நான் நிற்பது வெளிப்பட்டால் பகைவர்கள் ஆகாயத்தினும் வந்து வளைத்துக்கொண்டு சண்டையிடுவார்கள்; (யானோ இப்பொழுது) பகைவரொடு பொருது இளைத்தனன்; இனி இன்று சண்டைசெய்யவும் இயலாது. இதுநிற்க, ஒளித்து நேற்றையத்தினம்போல ஓடவும் முடியாது. (௧௫௭)

ஏயெனச் செறுந ரீண்டுழி நண்ணி
யாய தொல்லுணர் வனைத்தையும் வீட்டி
வீயு மீற்றினை விளைத்திடு கின்ற
மாய மாப்படை விடுத்திடன் மாட்சி.

(இ-ள்.) இனி விரைவாகப் பகைவர் நிற்கும் இடத்தையடைந்து அவர்கட்குள்ள பழைய வறிவனைத்தையும் அழித்துச் சாகுமியல்பினை யுண்டாக்குகின்ற சிறந்த மாயாஸ்திரத்தை விடுவதே மாக்ஷிமை.—எ-று. (௧௫௮)

என்று சிந்தைதனி லின்னன வுன்னி
யன்று மாயவ ளளித்திடு கின்ற
வன்றிறற் படையை வல்லை யெடுத்தே
புன்றொழிற் குரிசில் பூசனை செய்தான்.

(இ-ள்.) என்று மனதினி லிவைகளை நினைத்து அத்தினத்திலேயே மாயையளித்த வலிய சாமர்த்தியத்தினையுடைய அஸ்திரத்தை விரைவாகவெடுத்து இழிந்த தொழிலினையுடைய அவ்வரசன் பூசனை செய்தனன் —எ-று. (கருகூ)

நெறிகொண் முப்புலனி னெஞ்சினில் யாரு
மறிவரும் பரிசி னண்டலர் தம்பாற்
குறுகிமெய் யுணர்வு கொண்டுயிர் மாற்றி
யெறிபுனற் கடலு ளென்று விடுத்தான்.

(இ-ள்.) முறைமையான முப்புலங்களாலும் மனதினாலும் யாவரு மறியாதவண்ணம் பகைவரிடத்திற்சென்று அவர்கள் மெய்யுணர்வை யபகரித்து உயிரை மாய்த்து நன்னீர்க்கடலி லெறிந்துவிடு என்று கூறி மாயாஸ்திரத்தை விடுத்தான்.—எ-று.(கசுO)

விடுதலுங் கொடிய வெம்படை தான்வந்
தடையும் வண்ணமறி தற்கரி தாகிக்
கடிது பாரிடை கலந்து கணத்தின்
படையை யெய்தியது பாவம தென்ன.

(இ-ள்.) பானுகோபன் மாயாஸ்திரத்தை விடுதலும்,அந்தக்கொடிய வெவ்விய அம்பானது வந்து சேருந் தன்மை யறிதற்கரிதாகி விரைவாகப் பூமியிலே கலந்து கணசேனைகளைப் பாவத்தைப்போல் வடைந்தது.—எ-று. (கசுக)

இருங்கணத் தரையி லக்கரை யொள்வாண்
மருங்கு சேர்த்திய வயத்துணை யோரை
நெருங்கு தார்ப்புய நெடுந்திற லோனை
யொருங்கு சூழ்ந்துணர் வொழித்தது மன்னோ.

(இ-ள்.) பெரிய கணத்தினர்களையும் இலக்கம்வீரர்களையும் ஒள்ளிய வாட்படையை அருகில் கட்டியிருக்கின்ற வெற்றிபொருந்திய வீரகேசரியாதி துணைவர்களையும் மாலை நெருங்கிய தோளினையுடைய வீரவாகுதேவரையும் ஒன்றாய் வளைத்துக்கொண்டு அறிவை யகற்றியது.—எ-று. (கசுஉ)

ஆன்றபொன் னகரி லண்டர்க ளஞ்ச
வூன்றும் வில்லிடை யுறங்கிய மால்போற்
றோன்று மாயைபடை தொல்லறி வுண்ண
மான்றி யாவரு மறிந்து கிடந்தார்.

(இ-ள்.) சிறந்த பொன்னுலகமான சுவர்க்கத்திலுள்ள தேவர் அஞ்சுதலடைய வூன்றிய வில்லின்மீது தூங்கிய திருமாலைப்போல காணப்பட்ட மாயாஸ்திரமானது பழைய அறிவை அருந்த வதனா லனைவரு மயங்கி மறிந்து விழுந்து கிடந்தார்கள்.

முன்னொருகாலத்தில், தேவர்கள் புகழைக்கருதி அரிய யாகமொன்று புரிந்தனர். அவ்வியாகத்தில், புகழ் பளிக்குமலையைப்போல வெண்ணிறமாகத் தோற்றியது. அதனைத் திருமால் அபகரித்துக்கொண்டு சென்றனர். அதனைக்கண்ட தேவர்கள் இது அனைவருக்கு முரித்தாயதாக விருக்க, அரிமாத்திரம எங்ஙனம் அபகரிக்கக்கூடுமென்றெண்ணிப் பின்றொடர்ந்தனர். அப்போது திருமால் தனது வில்லைவளைத்து அம்புதொடுத்துச் சண்டை செய்தமையால், அவர் வவ்விய புகழனைத்தும் அவர் முகத்தினின் வழியாமையாக வெளியே உதிர்ந்தன. உடனே அவர் கையிற்பிடித்த வில்லையே தலையணையாகக்கொண்டு, நின்று உறங்கினர். இது காஞ்சிப்புராணக்கதை. இது கருதியே ஆசிரியரும் இவ்வாறு கூறினர். (கசுரு)

மறிந்துளார் தமது மன்னுயிர் வவ்விச்
சிறந்த தன்வலி செயற்கரி தாக
வறிந்து மாயைபடை யாகுல மூழ்கி
யெறிந்து நேமியிட வெண்ணிய தன்றே.

(இ-ள்.) விழுந்தவர்களுடைய நிலைபெற்ற உயிரை அபகரித்துச் சிறந்த தனது சாமர்த்தியத்தை யியற்றுதற்கரிதாக நிற்றலை மாயாஸ்திரமானது உணர்ந்து துன்புற்று அடித்துக் கடலிற் றள்ளுதற்கு நினைத்தது.—எ-று. (௧௬௪)

ஓலமிட் டுலக முட்கிட வூழிக்
காலின் வெவ்வுருவு கைக்கொடு மாயக்
கோல வெம்படை கொடுந்தொழில் கொண்ட
வால காலமென வான்றுள தன்றே.

(இ-ள்.) ஓலமிட்டு உலகநடுங்கப் பிரளயவாயுவின் கொடிய வுருவத்தை யடைந்து மாயாகோலத்தினையுடைய வெவ்விய வவ்வம்பு கொடிய தொழிலினைத் தன்னிடத்திலுடைய ஆலகாலத்தைப்போல அகன்றுநின்றது.—எ-று. (௧௬௫)

வேறு.

வெள்ளமா யிரம தென்னும் வியனுரை படைத்த பூத
மள்ளரைத் தலைவர் தம்மை வயங்கெழு துணையி னோரை
நள்ளலர்க் கடந்த துப்பி னம்பியை யும்ப ராற்றுற்
பொள்ளென வெடுத்து மாயப் படைக்கலம் போயிற் றம்மா.

(இ-ள்.) ஆயிரம் வெள்ளங்களென்று கூறுகின்ற பெரிய சொல்லைப்பெற்ற பூதவீரர்களையும், அவர்களின் தலைவர்களையும்,வெற்றியொடு விளங்குகின்ற விரவாகுதேவரின் றுணைவராக வுள்ளவர்களையும், பகைவர்களை ஜயித்த வல்லபத்தினையுடைய வீரவாகுதேவரையும் விரைவாக வாரியெடுத்து ஆகாயத்தின் வழியாக மாயையின் ஆயுதமானது சென்றது.—எ-று. (௧௬௬)

போயது சூரன் மைந்தன் புந்தியிற் கதிமேற் கொண்டு
மாயிரு நேமி யாறும் வல்லையிற் றப்பி யப்பாற்
றூயதெண் புனலா யான்ற தொல்கட லுழுவ நண்ணி
யாயவர் தொகையை யிட்டே யகன்றிடா தோம்பிற் றன்றே.

(இ-ள்.) அதிக வேகத்தை மேற்கொண்டு சூரகுமாரனான பானுகோபனுடைய புத்தியைப்போல விரைவாகச்சென்று மிகவும் பெரியவான கடல்வழியையும் விரைவாகக்கடந்து அதற்கப்புறம் பரிசுத்தமான நன்னீராக வகன்று கிடக்கின்ற பழைய கடலின் நடுவையடைந்து தானெடுத்துச்சென்ற அவர்களின் தொகையை அதிலிட்டு விலகாமல் நின்று காத்தது.—எ-று. (௧௬௭)

நின்றிடு சூரன் மைந்த னிலைமைமற் றிதனை நோக்கிப்
பொன் றினன் வீரவாகு பூதரும் பிறரும் வீந்தார்
குன்றம தன்றுன் மீளக் குரைபுனல் வேலை யாழ்ந்தார்
நன்றுநஞ் சூழ்ச்சி யென்று நகையெயி றிலங்க நக்கான்.

(இ-ள்.) ஆகாயத்தில் மறைந்துநின்ற பானுகோபன் இத்தன்மையான காரியத்தைப்பார்த்து வீரவாகுவும் இறந்தான்; பூதர்களும் மற்றைய்வர்களும் இறந்தார்கள்; மதமடங்கப் போதாக்குறைக்குச் சத்திக்கின்ற நீரினையுடைய கடலில் முழுகினார்கள்; நமது தந்திர நன்றாயிருக்கின்றதென்று ஒளியினையுடைய பற்கள் விளங்கச் சிரித்தான்.

அண்டருங் களிப்பின் மேலோ னவ்விடை யகன்று வல்லே
விண்டொடர் நெறியிற் சென்று வியன்மகேந் திரத்தி னெய்தி
யெண்டிசை யுலகம் போற்ற விறைபுரி தாதை தன்னைக்
கண்டன னிறைஞ்சி நின்றாங் கினையன கழற லுற்றான்.

(இ-ள்.) அடைதற்கரிய சந்தோஷத்தின் மிக்கவனான பாநுகோபன் அவ்விடத்தை விரைவாகக்கடந்து வானசம்பந்தமான வழியே சென்று புகழத்தக்க மகேந்திர புரியையடைந்து எட்டுத்திக்குகளையுடைய உலகம் வணங்க அரசுபுரிகின்ற பிதாவான சூரபன்மனைக்கண்டு வணங்கி எதிரினின்று இவைகளைக் கூறத்தொடங்கினான்.—எ-று.

இன்றியான் சென்று பல்வே றிருஞ்சம ரியற்றிப் பின்னர்
வன்றொழில் புரிந்தவீர வாகுவை யவன்பா லோரை
யன்றியும் பூதவெள்ள மாயிரந் தன்னை யெல்லாம்
வென்றுயிர் குடித்தி யாக்கை வியன்புனற் கடலு ளுய்த்தேன்.

(இ-ள்.) யான் இன்று இங்குநின்றுஞ்சென்று அநேகவிதமான பெரும்போர்களைச்செய்து, பின்பு கொடுந்தொழிலியற்றிய வீரவாகுவையும், அவனருகில் வந்த வவன் துணைவர்களையும், அல்லாமலும் ஆயிரம்வெள்ளம் பூதசைனியங்களையும் எல்லாம் ஜயித்து உயிருண்டு உடலங்களை பெரிய நன்னீர்க்கடலினு ளிட்டேன்.—எ-று. (கள0)

சிறிதுநீ கவலை கொள்ளேல் சேனையும் யானு மேகி
மறிகட லெறியுங் கால்போல் வளைந்துபா சறையைச் சிந்தி
யறுமுகன் றனையும் வென்றே யரியய னோடும் விண்ணோ
ரிறைவனைப் பற்றி நாளை யீண்டுதந் திடுவ னென்றான்.

(இ-ள்.) தந்தையே நீ சற்றுங் கவலை யடையாதே, நானுஞ் சேனைகளுமாகச் சென்று அலைவீசுகின்ற கடலை யலைக்கின்ற வாயுவைப்போல சூழ்ந்துகொண்டு பாசறையை யழித்துச் சண்முகனையுஞ் சயித்து அரி அயர்களுடன் இந்திரனைப்பிடித்து நாளைய தினம் இவ்விடத்திற் கொண்டுவந்து தருவேனென்று கூறினான்.—எ-று. (களக)

வேறு.

என்னும் வேலையி லெழுந்தன வுவகையாப் புடைய
பொன்னி னங்கத மூட்டற நிமிர்ந்தன புயங்கண்
மின்னு மாமணிக் கடகங்க ணெரிந்துவீழ் கின்ற
துன்னு மாமயிர் பொடித்தன முறுவலோன் றியதே.

(இ-ள்.) பாநுகோபன் இவ்வண்ணங் கூறியவுடனே சூரபன்மனுக்குச் சந்தோஷமுண்டாகியது; அதனால் தோள்களில் கட்டப்பட்ட பொன்னாலாகிய வாகுவலயங்களின் கட்டுகள் நிமிர்ந்தன; ஒளிபொருந்திய அரதன கடகங்கள் கைபூரித்தமையால் நெரிந்து விழுந்தன; உடம்பில் நெருங்கிய பெரிய ரோமங்கள் பொடித்தன; சிரிப்பும் உண்டாக்கியது.—எ-று. (களஉ)

எழுந்து நின்றிடு மிரவிதன் பகைஞனை யிமைப்பி
லழுந்த மார்புறத் தழீஇக்கொடு மடங்கலே றற்றுஞ்
செழுந்த னிப்பெருந் தவிசிடை யேற்றியச் சேயைக்
குழந்தை நாளெனத் தன்னய லிருத்தினன் கொண்டான்.

(இ-ள்.) வணங்கி யெழுந்து நின்ற பாநுகோபனை விரைவாக மார்பி லழுந்துமாறு தழுவிக் கொடிய சிங்கவேற்றினால் சுமக்கப்படுகின்ற செழுமையான பீடத்தி லம்மகனையேற்றிக் குழந்தைப்பருவத்தில் வைத்திருந்தாற்போல வைத்துக்கொண்டனன்.

தந்தை யாயினோ ரினிதுவீற் றிருப்பது தமது
மைந்தர் தங்குடி பரித்தபி னன்றிமற் றுண்டோ
வெந்தை வந்துநந் தொன்முறை போற்றலால் யானுஞ்
சிந்தை தன்னிலோ ரெண்ணமு மின்றியே சிறந்தேன்.

(இ-ள்.) தந்தையர்களாயினோர் இனிமையாக வீற்றிருப்பது தங்கள் பிள்ளைகள் தங்கள் குடும்பங்களைத் தாங்கின பின்னன்றி யுண்டோ! இப்பொழுது என்னப்பன் வந்து நமது பழமையான முறைப்படி காத்தலால் நானு மனத்திலொரு எண்ணமும் இல்லாமல் சிறப்படைந்தேன்.—எ-று. (கஎச)

அன்று நோற்றதும் பற்பக லுண்டரோ வதற்காக்
கொன்றை வேணியன் கொடுத்தன னென்பது கொள்ளாச்
சென்ற வார்த்தைக ணிற்கவிவ் வரசுமித் திருவு
மின்று நீதரப் பெற்றன னையா னென்றான்.

(இ-ள்.) ஐயா யான் அந்நாளில் தவங்கிடந்ததும் அநேககாலம் ஆம். அதற்காக கொன்றைச்சடையிறை கொடுத்த திவ்வரசு என்னும் தொன்றுதொட்டுவரும் வாக்கியமிருக்க, இவ்வரசும் இச்செல்வமும் இன்று நீ எனக்குத்தர யான் உன்னிடத்துப் பெற்றேனென்று கூறித் தன்மகனை அதிகமாகப் புகழ்ந்தனன்.—எ-று. (கஎரு)

என்று பற்பல நயமொழி கூறுமுன் னிட்ட
வென்றி சேரணி மாற்றியே புதுவதா விளித்துத்
துன்று பொன்முடி யாதியா வார்கழற் றுணையு
நன்று தான்புனைந் தொருமொழி பின்னரு நவில்வான்.

(இ-ள்.) என்று அநேகவிதமான நயவசனங்களைக்கூறி அவன் முன்னே யணிந்திருந்த வெற்றிபொருந்திய வீரக்கழல்முடி முதலிய ஆபரணங்களை நீக்கிப் புதியனவாக வழைப்பித்து, நெருங்கிய சுவர்ணகிரீடம் முதலியனவும் வீரகண்டைத்துவயங்களையும் நன்றாகத்தானே அவனுக்கணிந்து பின்னரு மொருமொழி கூறுகின்றான்.—எ-று. ()

முன்ன நீசொற்ற தன்மையே மூவிரு முகத்தோன்
றன்னை வென்றுவெஞ் சாரதப் படையினைத் தடிந்து
பின்னர் நின்றிடு மமரரைச் சிறையிடைப் பிணித்தே
யென்னு டைப்பகை முடிக்குதி காலையே யென்றான்.

(இ-ள்.) மைந்த! நீ முன்னர்க் கூறியவாறே சண்முகனைவென்று, வெவ்விய பூதசைனியங்களைக்கொன்று, இவர்களன்றி நிற்கின்ற தேவர்களைச் சிறையிலடைத்து, நாளைக்காலையிலேயே எனது பகையை முடிப்பாயாகவென்றுகூறினான்.—எ-று. (கஎஎ)

என்ன வன்னது செய்குவ னத்தவென் றிசைப்ப
மன்னர் மன்னவன் சமரிடை நொந்தனை மைந்த
பொன்னு லாயநின் றிருமனைக் கேகெனப் புகலப்
பன்னெ டுங்கதிர் மாற்றலன் விடைகொண்டு படர்ந்தான்.

(இ-ள்.) இவ்வாறு சூரபன்மன் கூறுதலும்,அவன் தன் தந்தையைப்பார்த்து அத்தனே அவ்வண்ணமே செய்கின்றேனென்று கூறினான். உடனே அரசர்க்கரசனாகிய வவன் மகனே நீ இன்று போரின் மிகவும் வருந்தினை லட்சுமிவிலாசம்பொருந்திய அழகிய உனது மாளிகைக்குச் செல் என்று கூறுதலும், அநேகமான நெடிய கிரணங்களையுடைய சூரியனுக்குப் பகைவனான பானுகோபன் தந்தையினிடத்து விடைபெற்றுக்கொண்டு சென்றான்.—எ-று. (கஎஅ)

சூழி யானைதேர் வருபரி யவுணர்கள் சுற்ற
நாழி யொன்றின்முன் சென்றுதன் கோநகர் நண்ணி
வாழ்வின் வைகின னிதுநிற்க வன்புனற் கடலு
ளாழும் வீரர்க டேறியே யெழுந்தவா றறைவாம்.

(இ-ள்.) முகபடாமணிந்த யானைகளும் இரதங்களும் வராநின்ற குதிரைகளும் அசுரர்களாகிய காலாட்படைகளும் சூழ ஒருநாழிகைக்குள் தனது சிறந்த மாளிகையை அடைந்து பாநுகோபன் செல்வத்துடனிருந்தனன். இது இவ்வண்ணமாக வலிய நன்னீர்க்கடலுள் மூழ்கிய வீரவாகுமுதலிய வீரர்கள் தேறியெழுந்த தன்மையை யுரைக்கின்றோம்.—எ-று. (கஎக)

வடபெ ருங்கிரி சூழ்பவன் றொல்பகை மாயப்
படை விடுத்ததும் பூதருந் துணைவர்கள் பலருந்
தொடையல் வாகுடை வீரனு மயக்குறத் தூநீர்க்
கடலு ளிட்டது மாங்கனஞ் சுரரெலாங் கண்டார்.

(இ-ள்.) வடக்கிலுள்ள பெரிய மலையான மகமேருவைப் பிரதக்ஷணஞ் செய்கின்ற சூரியனுடைய பழைய பகையான பாநுகோபன் மாயாஸ்திரம் விட்டதும், அதனால் பூதர்களும் பல துணைவர்களும் மாலையணிந்த தோள்களையுடைய வீரவாகுதேவரு மயக்கமடைய நன்னீர்க்கடலிலிட்டதையும் அங்கு நின்ற தேவர்களெல்லாருங் கண்டார்கள்.

அண்ட ரங்கது நோக்கியே வெய்துயிர்த் தரந்தை
கொண்டு ளம்பதைத் தாவலித் தரற்றிமெய் குலைந்து
கண்டு ளித்திடக் கலுழ்ந்துநா வுலர்ந்துகைம் மறித்து
விண்டி டும்படி முகம்புடைத் தலமந்து வியர்த்தார்.

(இ-ள்.) அவ்வாறு நடந்ததனைத் தேவர்கள் பார்த்துப் பெருமூச்சுவிட்டுத் துன்பங்கொண்டு மனந்துடித்து இரைந்து உடனடுங்கிக் கண்ணீர் சொட்ட வழுது நாவறண்டு கையை விரித்துப் பிளக்கும்வண்ணம் முகத்தின் மோதிச் சுழன்று வியர்வடைந்தவர்களானார்கள்.—எ-று.

இவ்வியாப்பு முழுமையும் அவலச்சுவையே நிரம்பி நிற்றல் காண்க. (கஅக)

இன்ன வித்திற மாகியே யமரர்க ளிரிந்து
சென்னி யாறுடைப் பண்ணவற் குரைத்திடச் சென்று
ரன்ன தாகிய பரிசெலா நாடியே யவர்க்கு
முன்ன மேரடினன் முறைதெரி நாரத முனிவன்.

(இ-ள்.) இவ்வண்ணமாகத் துன்புற்றுத் தேவர்க ளவ்விடத்தினின்றும் விலகி ஓடி ஆறுதிருமுகங்களையுடைய தேவநாதருக்குரைக்குமாறு சென்றார்கள்;இவ்விடத்தில் நடந்த இவ்வெல்லா விஷயங்களையு முணர்ந்து எல்லாவருக்கு முன்னே சாத்திரமுறைகளை யுணர்ந்த நாரதமுனிவன் சென்றான்.—எ-று. (கஅஉ)

அம்பெ னும்படி கால்விசை கொண்டுபோ யறிவ
னிம்ப ராகிய பாசறைக் கண்ணுறு மெந்தை
செம்ப தங்களை வணங்கினின் றஞ்சலி செய்தே
யும்பர் கோமகன் றன்மனந் துளங்குற வுரைப்பான்.

(இ-ள்.) அம்பென்று கூறுமாறு வாயுவேகமாகச்சென்று விவேகியான நாரதமுனிவன் இவ்விடத்திலுள்ளதாகிய பாடிவீட்டி லெழுந்தருளியிருக்கின்ற எனது தந்தையான குமரக்கடவுளின் செவ்விய பாதங்களை வணங்கி எதிரினின்று அஞ்சலிசெய்து தேவராஜனுடைய மனம் திடுக்கிடுமாறு கூறுகின்றான்.—எ-று. (கஅங)

சூரன் மாமகன் கரந்துமா யப்படை துரந்து
வீரவா குவுந் துணைவரும் வெங்கணத் தவரு
மாரு மால்கொள வீட்டியே யன்னதா லவரை
வாரி நீர்க்கட லுய்த்தனன் சூழ்ச்சியின் வலியால்.

(இ-ள்.) (எம்பெருமானே!) சூரபன்மனுடைய சிரேட்டபுத்திரனுன பாநுகோபன் மறைந்துநின்று மாயாஸ்திரத்தைவிட்டு வீரவாகுவுந் துணைவர்களும் வெவ்விய கணங்களாக வுள்ளவர்களும் ஆகிய அனைவரும் மயக்கமடையக்கொன்று அவ்வம்பினுலேயே அவர்களை நன்னீர்க்கடலில் தனது தந்திரவன்மையா லிட்டனன்.—எ-று. (கஅச)

என்று நாரத முனிவரன் புகறலு மிமையோர்
சென்று சென்றுவேள் பதங்களை யிறைஞ்சியே திருமு
னின்று வீரர்க ளழிந்திடு செயன்முறை நிகழ்த்த
வென்றி வேலினை நோக்கியே யெம்பிரான் விளம்பும்.

(இ-ள்.) இவ்வண்ணமாக முனிச்சிரேஷ்டனுன நாரதன் கூறுதலும், தேவர்கள் ஒருவர்பின்னெருவராகச் சென்றுசென்று குமரவேளின் பாதங்களை வணங்கித் திருமுன்னர் நின்று வீரர்களழிந்த தன்மைகளை யுரைக்க,எம்பிரான் உடனே தமது வெற்றிபொருந்திய வேற்படையைப்பார்த்து இவ்வாறு திருவாய்மலர்ந்தருளுகின்றுர்.—எ-று.

கங்கை யன்னதோர் வாலிதா கியபுனற் கடற்போ
யங்கண் வைகிய மாயமாப் படையினை யழித்து
வெங்கண் வீரர்மா லகற்றியே யனையவர் விரைவி
லிங்கு வந்திடத் தந்துநீ செல்கென விசைத்தான்.

(இ-ள்.) கங்கையையொத்த வெண்மையினதாகிய நன்னீர்க்கடலுக்குச்சென்று அவ்விடத்திலிருக்கின்ற பெரிய மாயாஸ்திரத்தை யழித்து, வெவ்விய தன்மையினையுடைய நமது வீரர்களின் மயக்கத்தை யொழித்து, அவர்கள் விரைவாக விங்கு வருமாறு செய்து பின்னர் நீ உன்னிஷ்டம்போல செல். என்று திருவாய் மலர்ந்தருளினுர்.—எ-று. (கஅரு)

செய்ய வேலினுக் கின்னதோர் பரிசினைச் செப்பி
யைய னவ்விடை விடுத்தலு நன்றென வகன்று
வெய்ய தீங்கதி ராயிர கோடியின் விரிந்து
வைய மேலிருண் முழுதுண்டு வல்விரைந் ததுவே.

(இ-ள்.) செவ்விய வேற்படைக்கு இவ்வாருன ஒரு கிரமத்தைக் கட்டளையிட்டு இறைவன் அவ்விடத்தி லனுப்புதலும், நல்லதென்று அவ்விடத்தினின்றும் விலகி உஷ்ணகிரணங்களையுடைய ஆயிரங்கோடி சூரியர்களைப்போல விரிந்து உலகின்மீது அந்நாட்பரந்த இருளனைத்தையும் அருந்தி அதிக விரைவாகச் சென்றது.—எ-று. (கஅஎ)

அரவு மிழ்ந்தது கொடுவிட முமிழ்ந்ததா லடுகூற்
றுருவு மிழ்ந்தது செல்லின முமிழ்ந்ததெவ் வுலகும்
வெருவு பல்படைக் கலங்களு முமிழ்ந்தது மிகவுங்
கருநெ டும்புகை யுமிழ்ந்ததங் குமிழ்ந்தது கனலே.

(இ-ள்.) அவ்வேலானது நன்னீர்க்கடலை நோக்கிச் செல்லும்பொழுது பாம்புகளைக் கக்கியது; கொடிய விஷத்தைக் கக்கியது; கொல்லுகின்ற அநேக எமரூபங்களையுமிழ்ந்தது; மேகக்கூட்டங்களைக் கக்கியது; எந்த வுலகங்களும் அஞ்சுகின்ற பல ஆயுதங்களை யுமிழ்ந்தது; மிகவுங் கரிய நெடிய புகையை யுமிழ்ந்தது; தீயைக் கக்கியது.—எ-று.

மின்னல் பட்டன முகிலிருள் பட்டன விசும்பிற்
றுன்னல் பட்டன காரிருள் பட்டன துன்று
ரின்னல் பட்டிடு மெய்யிருள் பட்டன வெரிமுன்
பன்னல் பட்டன நேமிசூழ் தனியிருட் படலம்.

(இ-ள்.) மின்னல்களையுடைய கரிய இருண்ட மேகங்கள் அழிந்தன; வானத்தில் நிறைந்திருந்தனவாகிய கரிய இருள்பட்டன; பகைவர்களுடைய துன்பம்பொருந்திய உடலம் இருளடைந்தன; கடலைச்சூழ்ந்திருந்த தனித்த இருட்படலமானது தீமுன்னடைந்ததனை யனையதாயின.—எ-று. (௧௮௯)

எரிந டுங்கிய தனிலமு நடுங்கிய தெண்பாற்
கரிந டுங்கிய வளக்கரு நடுங்கிய கனக
கிரிந டுங்கிய தரவின நடுங்கிய கிளர்தே
ரரிந டுங்கிய திந்துவு நடுங்கிய தம்மா.

(இ-ள்.) தீயு நடுங்கியது; காற்று நடுங்கியது; எட்டுத்திக்குகளிலுமுள்ள யானைகளு நடுங்கின; கடல்களு நடுங்கின; பொன்மலையான மேருவு நடுங்கியது; நாகங்களின் இனங்களு நடுங்கின; விளங்காநின்ற தேரினையுடைய சூரியனு நடுங்கினான்; சந்திரனு நடுங்கினான்.—எ-று. (௧௯௦)

அங்கி தன்படை கூற்றுவன் றன்படை யனிலன்
றுங்க வெம்படை யளக்கர்கோன் றன்படை சோமன்
செங்கை வெம்படை மகபதி பெரும்படை திருமால்
பங்க யன்படை யாவையுந் தொழுதுடன் படர.

(இ-ள்.) அக்கினியின் ஆயுதம், எமனுடைய ஆயுதம், வாயுவினுடைய பெரிதாகிய கொடியஅஸ்திரம், கடலரசனாகிய வருணனுடையஅஸ்திரம், குபேரனுடைய கையிலிருக்கின்ற வெவ்விய அஸ்திரம், இந்திரனுடைய பெரிய ஆயுதம், திருமாலினதும், பிரமனுடைய ஆயுதம் ஆகிய இவையனைத்தும் வணங்கிவர.—எ-று. (௧௯௧)

அடிகள் விட்டிடும் வேற்படை யெனப்படு மலரி
கடிது சேறலும் வானவர் வதனமாங் கமல
நெடிது மாமகிழ் வெய்தியே மலர்ந்தன நெறிதீர்
கொடிய தானவர் முகமெனுங் கருவிளங் குவிய.

(இ-ள்.) இறைவனா லனுப்பப்பட்ட வேலாயுத மெனப்படுகின்ற சூரியன் விரைவாக வருதலும், ஒழுக்கமற்ற கொடிய அசுரர்களின் முகங்களென்னுங் கருவிளமலர்கள் குவியத் தேவர்களுடைய முகங்களாகிய தாமரைகள் மிகவும் அதிகமான சந்தோஷத்தை யடைந்து விகசித்தன.—எ-று. (௧௯௨)

இரிந்த தானவர் நாளையா மிறத்துமென் றிருக்கை
பொருந்தி மாதரை முயங்கினர் கங்குலும் புலர
விரைந்து ஞாயிறு வந்ததென் றேங்கமின் னாரைப்
பிரிந்த வானவர் யாவருஞ் சிறந்தனர் பெரிதும்.

(இ-ள்.) விலகியோடின அசுரர்கள் நாளைபதினம் யாம் இறப்போமென்று வீட்டையடைந்து, பெண்களைக் கலந்தார்கள். உடனே இருளு நீங்கச் சூரியன் சீக்கிரமாக வுதித்தானேயென்று ஏக்கங்கொள்ள, பெண்களைப்பிரிந்த தேவர்களனைவரும் மிகவுஞ் சிறப்படைந்தார்கள்.—எ-று (௧௯௩)

இத்தி றத்தினு லயிற்படை முப்புரத் திறைவ
னுய்த்த தீநகை போலவே வல்விரைந் தோடி

முத்தி றத்திரு நேமியும் பிற்பட முந்திச்
சுத்த நீர்கடல் புகுந்தது விண்ணுளோர் துதிப்ப.

(இ-ள்.) இவ்வண்ணமாக வேலாயுதம் திரிபுரத்திலே இறைவனனுப்பிய தீச்சிரிப்பைப்போல விரைந்துசென்று அறுவகைப்பட்ட கடல்களும் பின்னுமாறு முந்தி, ஆகாயவாசிகளான தேவர்கள் துதிப்ப நன்னீர்க்கடலை யடைந்தது.—எ-று. (கசுச)

செய்ய வேற்படை யாயிடை புகுதலுந் தெரிந்து
வெய்ய மாயவள் படைக்கல மாற்றவும் வெருவி
மையல் வீரரை நீங்கியே தொலைந்துபோய் மறிந்து
மொய்யி ழந்தது தன்செய விழந்தது முடிந்தே.

(இ-ள்.) செவ்விய வேலாயுதமானது அவ்விடத்தில் வருதலும், கொடிய மாயையென்பவளுடைய ஆயுதமானது மிகவும் பயந்து, மயங்கிக்கிடந்த வீரர்களைவிட்டு விலகிச்சென்று வன்மையழிந்து தன்செய்கையு மழிந்து முடிந்தது.—எ-று. (கசுரு)

ஆய காலையி லெந்தைதன் படைக்கெதி ரடைந்து
தூய தெண்கட லிறையவன் வெருவியே தொழுது
நேய நீர்மையான் மும்முறை வணங்கிமுன் னின்று
காய முற்றவும் வியர்ப்பெழ வொருமொழி கழறும்.

(இ-ள்.) அப்பொழுது எந்தைபெருமானுடைய வேற்படைக் கெதிரடைந்து தூய்மையான தெள்ளிய கடலுக்கிறைவன் பயந்து வணங்கி விருப்பமான ஒழுக்கத்துடன் மூன்றுதரம் தொழுது எதிரேநின்று உடன்முழுதும் வியர்வைதோன்ற ஒருவசனங் கூறுவான்.—எ-று. (கசுசு)

வேறு.

அந்த மில்வர மடைந்திடு சூரன்
மைந்தன் மாயவள் வயப்படை தூண்டி
நந்தம் வீரர்கண நாதரை யெல்லாம்
புந்தி மேன்மயல் புணர்த்தின னம்மா.

(இ-ள்.) அழிவற்ற வரம்பெற்ற சூரபன்மனுடைய பிள்ளையான பாநுகோபன் வெற்றிபொருந்திய மாயாஸ்திரத்தைவிட்டு நமது வீரர்களையும் கணநாதர்களையும் எல்லாம் மனதினில் மயக்கத்தினை உடையவர்களாகச் செய்தான்.—எ-று. (கசுஎ)

முன்னு ணர்ச்சிமுடி வோர்தன்மை மற்றென்
றன்னி டத்திலிடு தன்மை புரிந்தா
னன்ன தத்துணையி லப்பணி யாற்றி
யென்னி டத்தினி லிருந்துள தன்றே.

(இ-ள்.) நினைக்கு நினைப்பற்றவர்களாக வுள்ளவர்களைப் பின்னரொன்னிடத்திலிமொறு புரிந்தான்; அவ்வம்பு அப்பொழுது அத்தொழிலைப்புரிந்து என்னிடத்தி லிருந்தது.—எ-று. (கசுஅ)

இருந்த மாயைபடை யெம்பெரு மானீ
மருந்து போலிவண் வழிப்படல் காணூஉ
வரந்தை யெய்தியடல் வீரரை நீங்கி
முரிந்து வீழ்ந்திவண் முடிந்தது மன்னே.

(இ-ள்.) இங்கிருந்த மாயாஸ்திரமானது எம்பெருமானே! நீ மருந்துபோல (அருமையாக) இவ்விடத்தில் வருதலைக்கண்டு துன்புற்று வல்லவர்களான வீரர்களை விட்டுமுரிந்து இவ்விடத்தில் விழுந்தழிந்தது.—எ-று. (கசுகூ)

தொடையல் வாகைபுனை சூரருண் மைந்தன்
விடவ ரும்படையின் வெவ்வலி சிந்தி
யடவும் வன்மையி லனங்கவ ராலே
யிடர்ப டுஞ்சிறிய னென்செய்வ னம்மா.

(இ-ள்.) தொடுக்கப்பட்ட வாகைமலர்மாலையையணிந்த சூரபன்மன் பெற்ற பிள்ளையான பானுகோபன் விடவந்த அம்பின் வெவ்விய வன்மையை யழித்துக்கொல்லுதற்கு ஆற்றலற்றவனாக விருக்கின்றேன்; அந்த அசுரர்களாலே துன்பமநுபவிக்கின்ற சிறியவ னென்னசெய்வேன்.—எ-று. (௨௦௦)

வெந்தி றற்பகைஞர் மேலமர் செய்ய
வந்த வீரரு மறிந்துணர் வற்று
நொந்த வேலையெழு வாரிவ ரென்றே
புந்தி நோய்கொடு புலம்பினன் யானும்.

(இ-ள்.) கொடுந்தன்மையினையுடைய பகைவருடன் போர்புரிதற்கு வந்த வீரர்களும் விழுந்து அறிவழிந்தார்கள்; இனி இவர்கள் எப்பொழுது எழுவார்களென்று நானும் மனவருத்தத்துடன் புலம்பினேன்.—எ-று. (௨௦௧)

முறுவ லாற்புர முடித்தவ னல்கு
மறுமு கேசனசு ரத்தொகை யெல்லா
மிறையின் மாற்றுமம ரொண்ணிய தாடற்
றிறம தென்றுநனி சிந்தனை செய்தேன்.

(இ-ள்.) புன்னகையினால் முப்புரங்களையழித்த விறைவனளித்த ஆறுமுகக்கடவுள் அசுரவருக்கங்களனைத்தையும் ஒருகணத்தி லழிப்பார்; அவர் போரைக்கருதியது விளையாட்டின் தன்மையென்று நான் மிகவு நினைத்தேன்.—எ-று. (௨௦௨)

வள்ள லாயிடை வதிந்து கணத்தின்
வெள்ள மோடுவிடு வீரர்க டம்மை
நள்ள லான்மக னலிந்திட லன்னாற்
குள்ள மாங்கொலென வுன்னி யயர்ந்தேன்.

(இ-ள்.) குமரக்கடவுள் அங்குப் பாசறைக்கண் எழுந்தருளியிருந்து பூதசேனைகளுடன் விட்ட வீரர்களை, பகைவனாகிய சூரபன்மனுடைய மகன் வருத்துதல் அப்பெருமானுக்குத் திருவுளச்சம்மதமாக விருக்குமோ? என்று நினைந்து வருந்தினேன்.—எ-று.

ஆதி மைந்தனசு ரத்தொகை தன்னைக்
காதி னுய்குவ னெனக்கரு துற்ற
பேதை யேன்புரி பிழைப்பிவ ணுண்டோ
வேது மில்லைமுனி யேலலை யென்றான்.

(இ-ள்) சிவகுமாரன் அசுரகூட்டத்தினைக் கொன்றால் நான் பிழைப்பேன் என்று நினைத்த அறிவிலியாகிய யானியற்றிய குற்றம் இவ்விடத்திலுண்டோ? யாதொன்றுங் கிடையாது; ஆதலால் என்னைக் கோபிக்கப்படாது என்று கூறினான் —எ-று. ()

வாழு நேமியிறை மற்றிது கூறித்
தாழு மெல்லைதள ரேலினி யென்னா
ஆழி யின்முதல்வ னுய்த்திடு மொள்வே
லாழு நீரனா யடைந்தது நண்ணி.

(இ-ள்.) வாழாநின்ற கடலரசன் இவைகளை யுரைத்து வணங்கினவுடனே, நீ இனி அஞ்சாதேயென்று கூறி, ஊழிமுதல்வராகிய குமாரசுவாமியார் விட்ட வொள்ளிய வேற்படை அங்குநின்றுஞ் சென்று கடனீரின் மூழ்கியுள்ள வீரவாகு தேவராதியரை யடைந்தது.—எ-று. (உ0ரு)

வேறு.

அடைதரு கின்ற முன்ன ரவருணர் வுண்ட மாயப்
படையது நீங்கிற் றுகப் பதைபதைத் துயிர்த்து மெல்ல
மடிதுயி லகன்று தொல்லை வாலறி வொருங்கு கூடக்
கடிதினி லெழுந்தா ரங்க ணுதித்திடு கதிர்க ளென்ன.

(இ-ள்.) வேற்படை யவ்விடத்திற்குச்சென்று சேருதற்கு முன்னரே அவ்வீரர்களின் அறிவையழித்த மாயாஸ்திர முற்றிலும் விட்டுவிலகியது; உடனே அவர்கள் மெல்லெனச் சோம்பலோடுகூடிய தூக்கத்தினின்று நீங்கிப் பண்டைய நல்லறிவுண்டாக அக்கடனீரிலுதயமான சூரியர்களைப்போல விரைவாகவெழுந்தார்கள்.—எ-று. (உ0சு)

புழையுறு மெயிற்றுப் பாந்தள் பொள்ளெனச் செயிர்த்துக் கான்ற
வழல்படு விடமீச் செல்ல வலமந்து வியர்த்து மாழ்கிக்
கழிதுயி லடைந்தோர் வல்லோன் காட்சியா லதுமீண் டேக
வெழுவது போல வன்னோர் யாவரு மெழுத லுற்றார்.

(இ-ள்.) துவாரம்பொருந்திய பற்களையுடைய பாம்பானது கோபங்கொண்டு விரைவாகக் கக்கிய தீயின் குணம்பொருந்திய விடமானது மேலேசெல்ல, சுழன்று வியர்த்து வருந்தி மிகவு மூர்ச்சிதர்களானவர்கள் (கருடத்தியானத்தில்) வல்லவனாக வுள்ளவனது பார்வையினால் அவ்விடம் அகல, அதனால் மூர்ச்சைதெளிந் தெழுமாறுபோல அனைவரு மெழுந்தனர்.—எ-று. (உ0எ)

சாரதக் கணத்து ளோருந் தலைவரு மிலக்கத் தோரும்
யாரினும் வலிய ரான வெண்மரு மெவர்க்கு மேலாம்
வீரனு மெழுந்து வேலை மீமிசை பெயர்ந்து செவ்வேள்
சீரடி மனங்கொண் டேத்தித் தொழுதனர் சிறந்த வன்பால்.

(இ-ள்.) பூதசேனைகளும், அவர்கள் தலைவர்களும், இலக்கம்வீரர்களும், எல்லாரினும் வன்மையாளர்களான எண்மர்களும், எல்லாருக்கும் மேலானவராகிய வீரவாகு தேவருமெழுந்து கடலின் மேற்புறத்திற்கு வந்து குமரக்கடவுளின் சிறப்புப்பொருந்திய திருவடிகளை மனத்திலே கொண்டு தியானித்துத் துதித்து சிறந்த அன்பினாற் றொழுதார்கள்.—எ-று. (உ0அ)

வீடின வவுணன் மாயை விளிந்தன பவத்தி னீட்டம்
பாடின சுருதி முற்றும் படிமக ளுவகை பூத்தா
ளாடிய தறத்தின் றெய்வ மாரத்தன புவனம் யாவு
நாடிய முனிவர் தேவர் நறைமலர் மாரி தூர்த்தார்.

(இ-ள்.) அசுரனாகிய பாநுகோபன் விட்ட மாயையழிந்தது; அதனால் பாவக் கூட்டங்கள் அழிந்தன; வேதங்கள் முற்றிலும் பாடின; பூமிதேவி மகிழ்ச்சியடைந்தனள்; அறத்தேவதை யாடியது; உலகங்களனைத்து மாரவாரித்தன; இதனை யுணர்ந்த முனிவர்களுந் தேவர்களும் மதுமலர்மழையை வருஷித்தார்கள்.—எ-று. (உ0கூ)

அன்னதோ ரமைதி தன்னி லாறுமா முகத்து வள்ளன்
மின்னிவர் குடுமிச் செவ்வேல் விண்ணிடை வருதல் காணூஉப்

பன்னரு முவகை பொங்கப் பன்முறை பணிந்து போற்றிச்
சென்னியிற் றொழுத கையா ரெதிர்கொடு சென்று சூழ்ந்தார்.

(இ-ள்.) அவ்வாறானசமயத்தில், சிறந்த ஆறுதிருமுகங்களையுடைய கடவுளின் ஒளி விடுகின்ற சிகைகளையுடைய செவ்வியவேற்படை ஆகாயமார்க்கமாக வருதலைப்பார்த்து, கூறுதற்கரிய சந்தோஷம் அதிகரிக்கப் பலதரம் வணங்கித் துதித்து தலையிற் குவித்து வணங்கப்பட்ட கைகளையுடையவர்களாக எதிரேசென்று (வீரவாகு தேவராதியர்) சுற்றிக்கொண்டார்கள்.—எ-று. (உசo)

சூழ்ந்திடு கின்ற காலைச் சூர்மகன் மாயை தன்னாற்
றாழ்ந்துணர் வழிந்த வாறுந் தடம்புனற் புணரி யுய்ப்ப
வீழ்ந்தது மையன் வேலான் மீண்டதும் பிறவு மெல்லா
மாழ்ந்ததொல் லறிவாற் றேறி யறிஞர்க்கு மறிஞன் சொல்வான்.

(இ-ள்.) சுற்றிக்கொண்டவுடனே, பானுகோபனுடைய மாயையினால் நிலைகெட்டு நின்றதுவும், பின்னரும் அது மிக்க நீரினையுடைய கடலிற்றள்ளவதனில் விழுந்ததுவும், பின்னர் இறைவன் விட்ட வேற்படையினால் திரும்ப எழுந்து வந்ததுவும், மற்றையவைபு மனைத்தும் ஆழமான தனது பழய உணர்வினாலுணர்ந்து அறிஞர்களுக்கும் அறிஞராகிய வீரவாகுதேவர் சொல்லுகின்றனர்.—எ-று. (உசக)

அந்தமி லொளியின் சீரா லறுமுகம் படைத்த பண்பா
லெந்தைக ணின்றும் வந்த வியற்கையாற் சத்தி யாம்பேர்
தந்திடும் பனுவல் பெற்ற தன்மையாற் றனிவேற் பெம்மான்
கந்தனே யென்ன நின்னைக் கண்டுளக் கவலை நீத்தேம்.

(இ-ள்) அழிவற்ற வொளியினையுடைய சிறப்பினாலும், ஆறுதிருமுகங்களைப் பெற்றிருக்குந் தன்மையாலும், எம்பெருமான்கணின்றும் வந்த இயல்பினாலும், சத்தியென்னும்பெயரை உரையாநின்ற வேதவசனத்தைப்பெற்ற தன்மையினாலும் ஒப்பற்ற வேற்கடவுளே! நின்னைக் கந்தக்கடவுளைப்போல தரிசித்து மனோதுக்கத்தை யொழித்தேம்.—எ-று. (உசஉ)

நண்ணலன் பிணித்த மாய நலிந்திட யாங்க ளெல்லாந்
துண்ணென வறிவின் றாகித் தொல்புனற் கடலுட் பட்டே
மெண்ணரும் படைகட் கெல்லா மிறைவநீ போந்த வாற்றா
லுண்ணிக ழுணர்ச்சி தோன்ற வுய்ந்தன முயிரும் பெற்றேம்.

(இ-ள்.) பகைவனாலே கட்டப்பட்ட மாயையானது வருத்த நாங்களெல்லாம் விரைவாக வறிவின்றிப் பெரிய நீர்க்கடலுள் மூழ்கினேம், நினைத்தற்கரிய ஆயுதங்களுக்கெல்லாம் தலைவனே! நீ இங்குவந்ததன்மையால் உள்ளே நிகழுகின்ற உணர்ச்சியுண்டாக உயிரும் பெற்றுப் பிழைத்தனம்.—எ-று. (உசங)

குன்றிடை யெம்மை விட்டிக் கொடியவன் புணர்ப்புச் செய்த
வன்றும்வந் துணர்வு நல்கி யளித்தனை யதுவு மல்லா
தின்றும்வந் தெம்மை யாண்டா யாதலின் யாங்க ளுய்ந்தே
முன்றனக் குதவுங் கைம்மா றுண்டுகொ லுலகத் தென்றான்.

(இ-ள்.) கொடியவனான தாரகன் மலையி லெங்களையடைத்து வஞ்சனைசெய்த வந்நாளிலும் அங்குப்போந்து நல்லுணர்வளித்துக் காத்தனை; அஃதன்றியும் இன்றும் இவ்விடத்திற்கு வந்து எங்களை யாட்கொண்டனை; ஆதலாலே நாங்கள் பிழைத்தேம்;

இவ்வாறு புரிந்தவுனக்கு எங்களாற் செய்யத்தக்க பிரதியுபகாரமும் இவ்வுலகத்திலிருக்கின்றதோ? என்று வீரவாகுதேவருரைத்தனர்.—எ-று. (உகச)

தூயவ னனைய மாற்றஞ் சொற்றலு மயில்வேல் கேளா
நீயிர்கள் விளிந்த தன்மை நேடியே நிமல னென்னை
யேயின னதனால் வந்தேன் யான்வருந் தன்மை நாடி
மாயம திறந்த தங்கண் வருதிரொன் றுரைத்த தன்றே.

(இ-ள்.) பரிசுத்தரான வீரவாகுதேவ ரிவ்வண்ணங்கூறுதலும், அதனைக்கூரிய வேற்படையானது கேட்டு நீங்கள் அறிவிழந்த தன்மையை நிமலன் உணர்ந்து என்னை அநுப்பினான்; அதனால் வந்தேன். நான் வருந்தன்மையையுணர்ந்து பாநுகோபனுடைய மாயமானது அழிந்தது; இனி நீங்களங்கு வாருங்களென்றுரைத்தது.—எ-று.

அங்கென்றது – சண்முகசந்நிதானத்தை. (உகரு)

நன்றெனத் தொழுது வீர னகையொளி முகத்த னாகிப்
பின்றொடர் துணையி னோரும் பெருங்கணத் தவருஞ் சூழச்
சென்றன னனைய காலைச் சிறந்தவேற் படைமுன் னேகி
வென்றிகொள் குமரன் செங்கை மீமிசை யமர்ந்த தன்றே.

(இ-ள்.) உடனே வீரவாகுதேவர் அவ்வாறே செய்கின்றேனென்று கூறி வணங்கிப், பிரகாசிக்கின்ற முகத்தினையுடையவராகவாயினவராய் பின்னே தொடர்ந்துவராநின்ற துணைவர்களும் பெரிய கணத்தலைவர்களுஞ் சூழப்போயினர். அப்பொழுது சிறந்த வேலாயுதமானது முன்னேசென்று வெற்றிபொருந்திய குமரக்கடவுளின் திருக்கரத்தின்மீ திருந்தது.—எ-று. (உகசு)

மூன்றநாட் பானுகோபன் யுத்தப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – க,௦கசு.

## நகர்புகுபடலம்.

முன்னுறச் செவ்வே லேக மூவிரு முகத்து வள்ள
றன்னடிக் கமல முன்னித் தரங்கநீ ருவரி வைப்பின்
மின்னெனக் கடிது போந்து விறன்மிகு தடந்தோ ளண்ண
றொன்னிலைத் திருவின் மேவுஞ் சூரன்மூ தூரைக் கண்டான்.

(இ-ள்.) முன்னாகச் செவ்விய வேற்படைசெல்லப் பின்னர் வீரவாகுதேவர் ஆறுதிருமுகங்களையுடைய எம்பெருமானுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டு அலைகளையுடைய லவணசமுத்திரத்தினிடத்து மின்னலைப்போல விரைவாகவந்து புராதனமான செல்வத்துடன் சூரபன்மன் வாழ்கின்ற பெரிய நகரத்தைக் கண்டனர்.—எ-று.

கண்டலு மெயிற்றின் மாலை கல்லெனக் கலிப்பக் கண்கள்
மண்டுதீப் பொறிகள் கால வாய்புகை யுமிழ நாசித்
துண்டம துயிர்ப்ப மார்பந் துண்ணென வியர்ப்புத் தோன்றத்
திண்டிறன் மொய்ம்பின் மேலோன் செயிர்த்திவை புகல லுற்றான்.

(இ-ள்.) கண்டவுடனே பல்வரிசைகள் கல்லென்று கலிப்பவும், கண்கள்நெருங்கிய தீப்பொறிகளைக் கக்கவும், வாய்புகையை யுமிழவும், நாசித்துளைகள் மூச்செறியவும், மார்பந்துண்ணென்றிடிப்பவும், வியர்வை தோன்றவும் மிக்க வன்மையினையுடைய வீரவாகுதேவரென்னுஞ் சிறந்தவர் கோபித்து இவைகளைக் கூறத்தொடங்கினர்.-எ-று.

வெஞ்சமர்க் காற்ற லின்றி வெருவிப்போய் விண்ணி னின்று
வஞ்சனை புரிந்து நம்மை மாயத்தால் வென்று மீண்டு
முஞ்சன னிருந்த கள்வ னுயிர்குடித் தன்றி யையன்
செஞ்சர ணதனைக் காணச் செல்லுவ தில்லை யானே.

(இ-ள்.) வெவ்விய போரினுக்கு எதிரில் நிற்கச் சத்தியின்றி அஞ்சிச்சென்று ஆகாயத்தின் மறைந்து நின்று வஞ்சனைசெய்து நம்மை மாயத்தினால் வென்று திரும்பியும் பிழைத்திருந்த வஞ்சகனுடைய உயிரையுண்டல்லது யான் இறைவனுடைய செவ்விய சரணயுகளங்களைத் தரிசிக்கப்போவதில்லை.—எ-று. (ரு)

நன்னக ரழிப்ப னின்று நண்ணலன் மதலை நேரி
னன்னவன் றனையும் யானே யடுவனு லகுதி லேனேற்
பின்னுயிர் வாழ்க்கை வேண்டேன் யான்பிறந் தேனு மல்லே
னென்னொரு சிலையும் யானு மெரியிடைப் புகுவ னென்றான்.

(இ-ள்.) இந்த நல்ல நகரத்தினை இன்று அழிப்பேன்; அப்பொழுது பகைவனாகிய சூரபன்மனுடைய பிள்ளையான பாநுகோபன் எதிர்த்தால், அவனையும் யானே கொல்லுவேன்; கொல்லேனாகில், பின்னர் உயிர்வாழ்க்கையை விரும்பேன்; நான் பிறந்தவனுமல்லேன்; என்னுடைய இந்த ஒப்பற்ற வில்லும் யானும் தீயில் விழுந்து இறப்பேன் என்று வீரவாகுதேவர் கூறினார்.—எ-று. (சு)

சூளிது முதல்வன் கூறத் துணைவரும் பிறருங் கேளா
வாளரி யனைய வீர வசையலர்க் கழிந்தேம் வாளா
மீளுதல் பழியி தாகும் வென்றிகொண் டல்லா லெந்தை
தாளிணை காண்ப துண்டோ சரதமே யிதுமற் றென்றார்.

(இ-ள்.) இவ்வாறு சபதத்தை வீரவாகுதேவர் கூற, அதனைத் துணைவர்களும் மற்றவர்களுங் கேட்டு சிங்கவேறுபோன்ற தலைவனே! பகைவர்களுக்குடைந்த யாம் இன்று சும்மாதிரும்புதல் பழியாம்; வெற்றிபெற்றன்றி எம்பெருமானுடைய திருவடியைக் காணுதலுண்டோ? இது உண்மையென்று கூறினார்கள்.—எ-று (எ)

நும்மனத் துணிவு நன்றா னெறில்படைக் கணத்தோ டேகி
யிம்மெனச் செறுநர் மூதூ ரெரியினுக் குதவி நேர்ந்தார்
தம்மையட் டவுணன் மைந்தன் றன்னையுந் தடிதும் யாரும்
வம்மெனப் புகன்றா னென்ப வாகையம் புயத்து வள்ளல்.

(இ-ள்.) அதனைக்கேட்டு வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் அவர்களைப்பார்த்து உங்கள் மனதிலுண்டான துணிவு நன்றாகவிருக்கின்றது நாம் விரைவாகச் செல்லும் சைனியங்களுடன் சென்று சீக்கிரம் பகைவர்களின் பெரிய நகரத்தை அக்கினிக்களித்து எதிர்த்தவர்களைக்கொன்று பாநுகோபனையுங்கொல்வோம் எல்லாரும் வாருங்கள் என்று கூறினார்.—எ-று. (அ)

ஆரியன் றனது மாற்ற மனைவரும் வியந்து செல்ல
வோரிமை யொடுங்கு முன்ன முவரியி னடுவ ணுனை
வீரமா மகேந்தி ரத்தின் மேற்றிசை வாயில் போந்தான்
பாரிடர்க் கணங்க ளார்த்த பரவைக ளழிந்த தேபோல்.

(இ-ள்.) விவேகியான வீரவாகுதேவர் தாம்கூறிய வசனத்தை யனைவரும் புகழ்ந்து உடன்வர, ஒரு இமையொடுங்கு நேரத்திற்குள் கடனடுவிலுள்ள வீரமாமகேந்திரபுரியின் மேற்றிசைவாசலை அடைந்தனர்; உடனே கடல்களுடைந்தாற்போல பூதகணங்களார்த்தன.—எ-று. (எ)

ஆர்த்தன வவுணர் கேளா வற்புத நிகழ வான்போய்ப்
பார்த்தனர் சிலவ ருள்ளம் பதைத்தனர் சிலவர் யாக்கை
வேர்த்தனர் சிலவ ரீது மேவலர் துழனி யென்னுச்
சீர்த்தனர் சிலவ ரம்மா செருவெனக் கிளருந் தோளார்.

(இ-ள்.) கணங்களார்த்த தொனியை யசுரர்கேட்டு இஃதென்னவென்று ஆச்சரியமுண்டாக ஆகாயத்திற்சென்று பார்த்தார்கள் சிலவர் உள்ளம் பதைபதைத்தனர். வேறு சிலவர் உடல் வேர்த்தனர்; சண்டையென்றபோதே தோள் பூரிக்கின்ற வேறுசிலவர் ஈது பகைவர் செய்யு மாரவாரம் என்று கோபமுற்றனர்.—எ-று. (அ)

வேறு.

வேழத் தின்றொகை வெம்பரி வெய்யோ
ராழித் தேர்க ளளக்கரி னீண்ட
வூழித் தீச்செறி வுற்றன வேபோற்
பாழித் தீபிகை பற்பல மல்க.

(இ-ள்.) யானைத்தொகைகளும், வேகமாகச்செல்லுங் குதிரைகளின் றொகைகளும், வீரர்களும், சக்கரங்களையுடைய தேர்களும் கடலைப்போல நெருங்கவும், பிரளயாக்கினி நெருங்கினாற்போல அநேகம் அகலமான விளக்குகள் நெருங்கவும்.—எ-று.()

வானு ருங்குட வாய்தலின் வைகி
யானு தென்று மளித்திடு கின்றோன்
மேனுண் மாயை விதித்திடு மைந்த
னூனுர் செம்புன லுண்டுமிழ் வேலோன்.

(இ-ள்.) ஆகாயத்தை யளாவிய மேல்வாசலிலிருந்து நீங்காதெப்பொழுதுங் காப்பவனும், முன்னாளில் மாயையினாற் பெறப்பட்டவனும், மாமிசத்தோடு பொருந்திய இரத்தத்தை உண்டுமிழ்கின்ற வேற்படையினை யுடையவனும்.—எ-று. (௧௦)

அரணங் கொண்டதன் ஞணை கடந்த
முரணுங் கூற்றுவன் முத்தலை வேலும்
வருணன் பாசமும் வன்மையின் வாங்கி
யிரணங் கொண்டு வியன்சிறை செய்தோன்.

(இ-ள்.) மதிலைக்காக்குந் தனதாக்கினைக்கு மீறி நடந்த வன்மைபொருந்திய கூற்றுவன் கையிலிருந்த மூன்றுதலைகளையுடைய சூலத்தையும், வருணன் பாசத்தையும் பலாத்காரமாக வாங்கிக்கொண்டு அவர்களைத் துன்பப்படுத்திப் பெரிய சிறையிலடைத்தவனும்.—எ-று. (௧௧)

விண்ணிற் றீச்சுடர் போன்மிளிர் மெய்யான்
வண்ணப் பல்பொறி மாமுக முள்ளா
னண்ணற் சீயவ ரித்தவி சின்க
ணண்ணுற் றுனட னஞ்சினும் வெய்யோன்.

(இ-ள்.) வானத்திலுள்ள தீச்சுடர்போன்று விளங்குகின்ற உடம்பினையுடையவனும், அழகிய பல புள்ளிகளையுடைய புலிமுகமுள்ளவனும், பெருமைபொருந்திய சிங்காதனத்தின்கணிருந்தவனும், வன்மைபொருந்திய விடத்தைவிடக் கொடியவனும் ஆகிய காவற்றலைவன்.—எ-று. (௧௨)

சேனுர் மாமுகில் செல்லொடு சிந்த
மானுர் பூத வயப்படை யார்த்தே

யேனார் வீரரோ டெய்திய தன்மை
காணா நின்று கனன்றெழ லுற்றான்.

(இ-ள்.) வானிற்பொருந்திய பெரிய மேகங்கள் இடிகளுடன் சிதற மாட்சிமையும் வெற்றியும்பொருந்திய பூதசைநியங்கள் பலசாலிகளான வீரர்களுடன் ஆரவாரித்துக்கொண்டு வருதலைப்பார்த்துக் கோபித்துச் சண்டைக்காக வெழுந்தனன்.—எ-று.

தன்கண் ணின்றிடு தானைக ளெல்லா
முன்கண் சென்றிட மொய்ம்புட னேகிப்
புன்கட் டயவ னேற்றெதிர் புக்கான்
வன்கட் பூதர்கள் வந்து மலைந்தார்.

(இ-ள்.) தன்னருகினிற்கின்ற சைனியங்களனைத்தையும் முன்னே போகும்வண்ணம் உறுதியாக வனுப்பி இழிதொழிலினையுடைய அக்கொடியவன் நேரே பூதசைனியங்களின் எதிரே சென்றனன்; உடனே அஞ்சாமையினையுடைய பூதர்கள் இவனெதிரே வந்து எதிர்த்துப் போர்புரிந்தார்கள்.—எ-று. (௧௪)

வில்லுண் வாளிகள் வேன்மழு நேமி
யல்லுண் மெய்யவு ணப்படை தூர்த்த
கல்லும் மாமர முங்கதை யாவுஞ்
செல்லென் றுய்த்தனர் சீர்கெழு பூதர்.

(இ-ள்.) உடனே வில்லினிற்பொருந்திய அம்புகளையும், வேற்படைகளையும், மழுப்படைகளையும், சக்கரங்களையும் இருள்பொருந்திய சரீரத்தினையுடைய அசுரசைனியங்கள் விட்டன; அவ்வசுரர்கட்கெதிராகக் கற்களையும், பெரிய மரங்களையும், கதைகளாக வுள்ளனவற்றையும் சிறப்பொடு விளங்கும் பூதர்களும் போ என்றனுப்பினார்கள்.

முட்டா வெஞ்சின மூண்டிட வின்னோர்
கிட்டா நின்று கிளர்ந்தம ராற்றப்
பட்டார் தானவர் பாரிடர் பல்லோர்
நெட்டா றுத்து நிமிர்ந்தது சோரி.

(இ-ள்.) இவர்கள் ஒருவருக்கொருவர் நெருங்கிய வெவ்விய கோபம் அதிகரிப்பச் சமீபித்து நின்று வீரவசனங்களைப் பேசிக்கொண்டு போர்செய்ய, அசுரர்களிலும் பூதர்களிலும் பலபேரிறந்தார்கள். அதனால் பெரிய யாற்றைப்போல இரத்தம் பிரவாகமாக வோடியது.—எ-று. (௧௬)

கண்டா ரன்னது காவலர் சீற்றங்
கொண்டார் தாமெதிர் கொண்டமர் செய்ய
வண்டார் நின்றில ராவியு லந்தே
விண்டா ரோர்சிலர் மீண்டுதொ லைந்தார்.

(இ-ள்.) அவ்வாறிருபுறத்திலும் சைனியங்கள் இறத்தலைப் பூதசேனாபதிகள் பார்த்துச் சீற்றங்கொண்டு அசுரர்களோடு எதிர்த்துப் போர்புரிந்தமையாற் பகைவர்களாகிய வசுரர்களிற் சிலர் ஈடு நிற்காமற் பிராண னழிந்தழிந்தார்கள்; வேறு சிலர் முதுகு காட்டியோடினார்கள்.—எ-று. (௧௭)

இடித்தார் தேரினை யெற்றினர் மாவை
யடித்தார் தந்திக ளானவை சிந்த
முடித்தா ரொன்னலர் மூளையி னின்றே
நடித்தார் பூதர்க ளாரதர் பாட.

(இ-ள்.) பூதர்கள் பகைவர்களின் தேர்களை இடித்தார்கள்; குதிரைகளை வாரியடித்தார்கள்; யானைகளழியும்வண்ணம் மோதினார்கள்; அன்றியும் பகைவர்களைக் கொன்று அவர்கள் மூளையினின்று நாரதர் பாட நடனம் புரிந்தார்கள்.—எ-று. (கஅ)

முன்சூழ் தானை முடிந்தது கண்டான்
மன்சூழ் வெம்புலி மாமுக வீர
னென்சூழ் விங்கினி யென்று நினைந்தோர்
கொன்சூ லப்படை கொண்டு நடந்தான்.

(இ-ள்.) தலைவனாக வந்துள்ள வெவ்விய புலிமாமுகவீரன் தன்னெதிரிற் சூழ்ந்துநின்ற சைனியங்கள் அழிந்ததனைப்பார்த்து, இனி யென்ன தந்திரமென்று நினைந்து ஒரு பெரிய சூலாயுதத்தை யெடுத்துச் சென்றான்.—எ-று. (கசு)

நடக்கின் றானை நலிந்து கணத்தி
லடக்கின் றாமென வார்த்தெதிர் நண்ணிக்
கடக்குன் றங்கள் கணிப்பில வைகுந்
தடக்குன் றம்பல சாாத ருய்த்தார்.

(இ-ள்.) போரைக்குறித்துவரு மப்புலிமுகனை வருத்தி யொருகணப்பொழுதிற்குள் அடக்கிவிடுகின்றோமென்று பூதவீரர்கள் ஆரவாரித்துக்கொண் டெதிரேசென்று மதமலைகளான யானைக ளனேகமாக வசிக்கின்ற அநேகம் பெரிய மலைகளைப் பறித்து எறிந்தார்கள்.—எ-று. (உ0)

சாலங் கொண்டிடு சாரத ருய்த்த
நீலங் கொண்ட நெடுங்கிரி யாவுஞ்
சூலங் கொண்டுபஃ றுண்டம தாக்கி
யாலங் கொண்ட வளக்கரி னார்த்தான்.

(இ-ள்.) கூட்டமாக நிற்கின்ற பூதவீரர்களனுப்பிய நீலநிறமான பெரிய மலைகளனைத்தையும் அப்புலிமுகன் சூலத்தைக்கொண்டு பல துண்டங்களாகச்செய்து ஆலத்தைப்போல ஆரவாரித்தனன்—எ-று. ஆலம் – நீர். (உக)

அந்நேர் கொண்டவ னாற்றலை நோக்கி
யென்னே நிற்பதி யாமிவ ணென்னா
முன்னே நின்ற முரண்கெழு சிங்கன்
மின்னே யென்ன விரைந்தெதிர் சென்றான்.

(இ-ள்.) அவ்வித வியல்பினையுடைய புலிமுக னதாற்றலைப்பார்த்து நாமென்னை இங்கு சும்மா நிற்கின்றோமென்று எதிரினின்ற வல்லபம் விளங்குகின்ற சிங்கனென்பவன் மின்னலைப்போல விரைவாக அப்புலிமுகன் எதிரே சென்றான்.—எ-று. (உஉ)

வேறு.

வயமிகு பூதரின் மடங்கற் பேரினோன்
வெயிலுமிழ் முத்தலை வேலொன் றேந்தியே
குயவரி முகமுடைக் கொடியன் முன்புபோய்ப்
புயலின மிரிந்திடத் தெழித்துப் பொங்கினான்.

(இ-ள்.) வன்மைமிக்க பூதர்களுக்குட் சிங்கனென்று பெயருள்ளவன் பிரகாசிக்கின்ற மூன்று தலைகளையுடைய ஒரு சூலப்படையை யேந்தி வளைந்த புள்ளிகளையுடைய முகத்தினையுடைய கொடிய அசுரனுடைய எதிரிற்சென்று மேகசாலங்கள் பின்னிடக் கோபித்து ஆரவாரித்தனன்.—எ-று. (உங)

அத்துணை வேலையி லவுணர் காவலன்
முத்தலை வேலினன் முந்துசிங் கன்மேற்
குத்தின னணையனுங் கொடியன் மார்பிடைக்
கைத்தல மிருந்ததன் கழுமு ளோச்சினன்.

(இ-ள்.) அப்பொழுது அசுரசேனாதிபனாகிய புலிமுகன் மூன்று தலைகளையுடைய சூலாயுதத்தா லெதிர்த்த சிங்கன்மீது குத்தினன்; உடனே அச்சிங்கனும் அக்கொடியவனுடைய மார்பில் தன் கையிலிருந்த சூலத்தினாற் குத்தினன்.—எ-று. (உச)

செறித்திடு சூலவேல் செருவின் மேலவர்
புறத்தினிற் போயின பொழிந்த செம்புன
னெறித்தரு பகலவ னின்ற குன்றினு
மெறித்தரு மிளங்கதி ரென்னச் சென்றதே.

(இ-ள்.) சொருகிய சூலவேற்படைகள் போர்புரிகின்ற சிறந்த அவ்விருவர்கள் முதுகின்வழி சென்றன; வானவழியே செல்லும் பரிதி தானுதித்து நின்ற மலையினின்றெறிக்கு மிளங்கதிரைப்போ லிரத்தம் ஒழுகியது.—எ-று. (உரு)

ஆங்கவர் முறைமுறை யயில்கொள் சூலவேல்
வாங்கின ரிடந்தொறு மற்று மோச்சுவ
ரீங்கிது போலநின் றிகலிப் போர்செய்தார்
நீங்கருந் தளைபடு நெறிய ரென்னவே.

(இ-ள்) அவ்விடத்தி லவ்விருவர்களுங் கூரிய சூலவேல்களைப் பின்னும் வீசினவர்களாக அங்கங்கள்தோறுங் குத்துவர்; இவ்வண்ணமாகப் பகைத்துநின்று விடாத விலங்கிற்பட்ட தன்மையினரைப்போல போர்புரிந்தார்கள்.—எ-று. (உசு)

அற்றது காலையி லணையர் கைத்தலம்
பற்றிய முத்தலைப் படைக ளானவை
யிற்றன வொருதலை யிரண்டும் வீழ்தலு
மற்றொழில் புரிந்தன ரிகரில் வன்மையார்.

(இ-ள்.) அப்பொழுது அவர்கள் கையிற் பிடித்திருந்த மூன்றுதலைகளையுடைய சூலாயுதங்கள் அழிந்தனவாக ஒன்றாக விழுதலும், நிகரற்ற வன்மையினையுடைய வவர்கள் பின்னர் மல்யுத்தஞ் செய்தார்கள்.—எ-று. (உஎ)

புலிமுக னவ்வழிப் புரிந்து மற்றொழில்
வலியினை யிழந்தனன் மைய லெய்தினன்
றலமிசை வீழ்தலுந் தனது தாள்கொடே
யுலமுறழ் தோளின னுதைத்து ருட்டினன்.

(இ-ள்.) புலிமுகாசுரனப்பொழுது மல்லயுத்தஞ்செய்து வன்மையிழந்து மயக்கமடைந்து பூமியில் விழுந்தனன்; உடனே திரண்ட கல்போன்ற தோள்களையுடைய சிங்கன் அவனைக் காலாலுதைத்துத் தள்ளினன்.—எ-று. (உஅ)

ஒலிகழன் மேலவ னுதைத்த வன்மையா
லலமரு தீயவ னாவி நீங்கினன்
மலர்மழை தூவினர் வானு ளோரரி
புலிதனை வெல்வது புதுமைப் பாலதோ.

(இ-ள்.) சத்திக்கின்ற வீரகண்டையணிந்த காலினையுடைய சிறந்த வச்சிங்கன் உதைத்த வன்மையினாலே சுழற்சியடைந்த கொடிய வப்புலிமுகன் இறந்தனன்;

உடனே ஆகாயவாசிகள் புட்பமாரி பெய்தார்கள். சிங்கம் புலியைவெல்வ தாச்சரியமான காரியமோ?—எ-று. (௨௯)

சூர்கொளு முத்தலைச் சூல வேல்கொடு
நேர்கொளும் புலிமுக னிறந்த நீர்மைகண்
டார்கலி யாமெனப் பூத ரார்த்தனர்
வார்கழல் வீர னு மகிழ்ந்து நோக்கினன்.

(இ-ள்.) தெய்வீகம்பொருந்திய முத்தலைச்சூல வேலைக்கொண்டு எதிர்த்த புலிமுகனிறந்த தன்மையைப்பார்த்துப் பூதர்கள் கடலினொலியைப்போல ஆரவாரித்தார்கள்; அதனை வீரகண்டையணிந்த வீரவாகுதேவரும் மகிழ்வுடன் பார்த்தனர்.—எ-று. (௩௦)

கழிந்தன தானைகள் காவல் வீர னு
மழிந்தனன் மேற்றிசை யரணம் வீட்டியே
செழுந்திரு நகரிடைச் சேறும் யாமென
மொழிந்தனர் பூதர்கண் முரணின் முந்தினர்.

(இ-ள்.) சைனியங்களொழிந்தன; சேனாதிபதியும் அழிந்தனன்; ஆதலால் நாம் இனி மேற்குத்திக்கிலுள்ள மதிலையுடைத்துச் செழுமையான திருமகள் விலாசம்பொருந்திய ஊருக்குட் பிரவேசிப்போமென்று வன்மையின் முற்பட்ட பூதவீரர்கள் கூறினார்கள்.—எ-று. (௩௧)

முந்திய பூதர்கண் முனிந்து மேற்றிசை
யுந்திய புரிசையை யொல்லை சேர்வுறுத்
தந்தம தடிகளாற் றள்ளிப் பொள்ளெனச்
சிந்தினர் பறித்தனர் சிகரி தன்னையும்.

(இ-ள்.) முற்பட்ட பூதர்கள் கோபித்து மேற்புறத்திலுள்ள உயர்ந்த மதிலினருகில் விரைவாகச்சென்று தங்கள் தங்கள் கால்களாலே அதனை விரைவாகத்தள்ளி யழித்து அத்திசையிலிருந்த கோபுரத்தையும் பறித்தெடுத்தனர்.—எ-று. (௩௨)

பொலம்படு சிகரியைப் பறித்துப் பூதர்க
ணலம்படு மகேந்திர நகருள் வீசியே
யுலம்பின ரவுணர்க ளுலைந்து சிந்தினார்
கலம்பகிர் வுற்றிடக் கடலுற் றோர்கள்போல்.

(இ-ள்.) பூதர்களழகுபொருந்திய கோபுரத்தைப்பறித்து நலமெலாம்பொருந்திய மகேந்திரபுரிக்கு ளெறிந்து ஆரவாரித்தனர்; உடனே கப்பலுடைந்தபோழ்து அதனிலிருந்து கடலில் விழுந்தவர்களைப்போல அசுரர்கள் கெட்டுச் சிதறினார்கள்.—எ-று.

முகுந்தனை வென்றிடு முரண்கொள் பூதர்கள்
புகுந்தனர் மகேந்திர புரத்து ளுள்ளவிற்
றொகுந்தொகு மவுணரைத் தொலைத்துச் சென்றனர்
தகுந்தகு மிவர்க்கென வமரர் சாற்றவே.

(இ-ள்.) முகுந்தனை வெல்லத்தக்க வன்மைபொருந்திய பூதர்கள் மகேந்திரபுரியின் வீதிகளிற் பிரவேசித்தார்கள்; பிரவேசித்துத் தகுந்தகு மிவர்கட் கிவையென்று தேவர்கள் சொல்லும்வண்ணம் அங்கங்கே கூட்டங் கூட்டமாகவிருந்த வசுரர்களை அழித்துச் சென்றார்கள்.—எ-று. (௩௪)

நீக்கமின் மாளிகை நிரைகள் யாவையு
மேக்குயர் பூதர்கள் விரைந்து தம்பதத்

தாக்கினி லழித்தனர் தவத்தின் மேலவர்
வாக்கினி லகற்றிய வண்ண மேயென.

(இ-ள்.) தவத்திற் சிறந்த முனிவர்கள் வாக்கினு லகற்றிய தன்மையைப்போல, பூதர்கள் மேலே யுயர்ந்து நெருங்கி நிற்கின்ற மாளிகை வரிசைகளனைத்தையும், விரைவாகத் தங்கள் காலுதைப்பினு லழித்தார்கள்.—எ-று. (௬௫)

ஆர்த்திடு கரிபரி யவுண ராயினோர்
தேர்த்தொகை மாளிகை சிகர மாய்ந்திடக்
கூர்த்திடு நெடுங்கணை கோடி கோடிக
ளேர்த்தனர் சென்றனர் துணைவ ராயினோர்.

(இ-ள்.) துணைவர்களாகிய வீரகேசரியாதியர் சத்திக்கின்ற யானைகளுங் குதிரைகளும் அசுரர்களும் தேர்க்கூட்டங்களும் மாளிகைகளின் சிகரங்களும் அழியுமாறு கூர்மையான நெடிய வம்புகளைக் கோடிகோடியாக விட்டுக்கொண்டு சென்றனர்.-எ-று.

அன்னதோ ரமைதியி னுடன் மொய்ம்பினுன்
வன்னியின் படையொடு மருத்தின் மாப்படை
பொன்னெடுஞ் சிலைதனிற் பூட்டி நீவிர்போ
யிந்நக ரழித்திரென் றிமைப்பி லேவினுன்.

(இ-ள்.) அப்படிப்பட்ட சமயத்தில் வீரவாகுதேவர் அக்கினியாஸ்திரத்துடன் சிறந்த வாயுவாஸ்திரத்தையும் எடுத்துப் பொன்மயமான நெடிய வில்லிற்பூட்டி நீங்கள் சென்று இந்த நகரத்தை யழியுங்களென்று விரைவாக விட்டனர்.—எ-று. (௬எ)

ஏவிய வப்படை யிரண்டு மொன்றியே
மூவுல கிறுதியின் முடிக்குந் தம்முரு
மேவின நகரெலாம் விரவிச் சூழ்ந்தன
தீவிழி யவுணரு மிரிந்து சிந்தவே.

(இ-ள்.) வீரவாகுதேவரால் விடப்பட்ட வவ்வம்புகளிரண்டு மொன்றாகக் கலந்து மூன்றுலோகங்களையும் பிரளயகாலத்தி லழிக்கின்ற தங்கள் நிச உருவங்களுடன் தீவிழிகளையுடைய அசுரர்களும் அஞ்சும்வண்ணம் அவ்வூர் முழுதிலும் பரவிச்சுற்றின.

ஒட்டலர் நமையினி யுருத்துச் செய்வதென்
விட்டன னிங்குளன் வெருவ லேமெனு
நெட்டழல் கொளுவியே நிலவி மாநகர்
சுட்டன வுடுநிரை பொரியிற் றுள்ளவே.

(இ-ள்.) பகைவர்கள் நம்மீது கோபித்து நம்மை இங்கென்ன செய்யப்போகின்றார்கள், விட்டவன் இங்கேயே இருக்கின்றான்; அதனால் நாமஞ்சோமென்று பேருருவொடு விளங்கி அந்தப் பெரியநகரத்தில் நெடிய வழலைப் பற்றவைத்து நட்சத்திரவரிசைகள் பொரியைப்போல் துடிக்கும் வண்ணஞ் சுட்டன.—எ-று. (௬௯)

எரிந்தன சில்லிடை யிறந்து பூழியாய்
விரிந்தன சில்லிடை வெடித்த சில்லிடை
கரிந்தன சில்லிடை கனலி சூழ்தலாற்
பொரிந்தன சில்லிடை புகைந்த சில்லிடை.

(இ-ள்.) அக்கினி சூழ்ந்துகொண்டமையால் சிலவிடங்களெரிந்தன; சிலவிடங்கள் அழிந்து புழுதியாக வழிந்தன; சிலவிடங்கள் வெடித்தன; கரிந்தன சிலவிடங்கள்; சிலவிடங்கள் பொரிந்தன; சிலவிடங்கள் புகைந்தன.—எ-று. (௭0)

எப்புவ னங்களு மிறைஞ்சு சூர்நகர்
வெப்புறு கனல்கொள விளிந்து போயதா
லப்புறழ் செஞ்சடை யமலன் மூரலான்
முப்புர மானவை முடிந்த தேயென.

(இ-ள்.) கங்கையுலாவுகின்ற செந்நிறமான சடையினையுடைய சிவபெருமானுடைய புன்னகையினுற் திரிபுரங்களானவை எரிந்தவாறுபோல, பிருதுவிசம்பந்தமான சகலபுவனங்களிலேயும் வாழுமவர்களாலே வணங்கப்பெற்ற சூரபன்மன் வாழுகின்ற நகரம் சுடுகையினையுடைய அக்கினிபற்றிக்கொள்ள எரிந்துபோகியது.—எ-று. (சுக)

இன்னண மிந்நக ரெரிமி சைந்துழி
யன்னவை யொற்றர்க ளறிந்து வல்லைபோய்ப்
பொன்னிவர் கடிநகர் புகுந்து வாய்வெரீஇ
மன்னவர் மன்னனை வணங்கிக் கூறுவார்.

(இ-ள்.) இவ்வண்ண மிவ்வூரை யக்கினியருந்தியபோழ்து அவைகளைத் தூதுவருணர்ந்து விரைவாகச்சென்று, திருமகளுலாவுகின்ற காவலோடுகூடிய அரசமாளிகைக்குட்புகுந்து, வாய்த்தடுமாற்றத்துடன் அரசர்க்கரசனுன சூரபன்மனை வணங்கிச் சொல்லத்தொடங்கினுர்கள்.—எ-று. (சுஉ)

காய்கதி ரண்ணலைக் கனன்ற நின்மகன்
மாயவெம் படையினுன் மலைந்து ளார்தமைத்
தூயதோர் புனற்கட றுன்ன வுய்த்தன
னீயது தெரிந்தனை நிகழ்ந்த கேட்டிமேல்.

(இ-ள்.) காய்கின்ற கதிர்களையுடைய பாநுவைக்கோபித்த நின்மகன் இன்றைய தினம் எதிர்த்துப் போர்புரிந்தவர்களை வெவ்விய மாயாஸ்திரத்தால் கட்டித் தூய்மையான ஒப்பற்ற நீர்க்கடலில் அடையும்வண்ணம் இட்டனன், அதனை (முன்னரோ) நீ யுணர்ந்தனை; பின்னர் நடந்ததனைக் கேட்பாயாக.—எ-று. (சுங)

அங்கிவை நாரத னறையக் கந்தவேள்
செங்கையில் வேற்படை செலுத்த வன்னது
பொங்குறு தெண்புனற் புணரி சேறலு
மங்கிய தோடிய மாயை தன்படை.

(இ-ள்.) அங்குப் பாசறையிலிருக்கின்ற குமாரவேளிடம் இவைகளை நாரதன் சென்று கூறுதலும், அக்குமரவேள் உடனே தனது செவ்விய கையிலிருந்த வேற்படையை அநுப்ப வப்படை பொங்குகின்ற நன்னீர்க்கடலையடைதலும், மாயையின் அஸ்திரம் நிலைகெட்டு ஓடியது.—எ-று. (சுச)

வஞ்சனி தன்படை மாண்டு போந்துழித்
துஞ்சுத லொழிந்தனர் தொன்மை போலவே
நெஞ்சினி லுணர்வெலா நிகழ யாவரு
முஞ்சன ரொழுந்தன ருப்ப ரார்த்திட.

(இ-ள்.) மாயையி னம்பானது வன்மைகெட்டு விலகிச் சென்றவுடனே, அவ்வெதிரிகள் தூங்கிக்கிடத்தலை விட்டார்கள்; முன்போலவே மனவுணர்ச்சி யனைத்துந் தோன்ற அமரர்கள் ஆரவாரிக்கும்வண்ணம் பிழைத்தெழுந்தார்கள்.—எ-று. (சுரு)

மாற்படு புந்திதீர் மறவர் தாமுறு
பாற்பட வருவது பார்த்துக் கைதொழு

தேற்பொடு பணிதலும் யாரும் வம்மெனு
வேற்படை முன்னுற விரைந்து மீண்டதே.

(இ-ள்.) மயக்கமொழிந்த புத்தியினையுடைய வவ்வீரர்கள் தாமிருக்குமிடநோக்கி வேற்படை வருதலைக்கண்டு கைகுவித்து முறைப்படியே வணங்குதலும், நீங்களனைவரும் வாருங்களென்று அவ்வேற்படை முன்னதாய் விரைவாகத் திரும்பிச்சென்றது.()

மேனிகழ் நெறிகொடு மீண்ட செய்யவே
லானது குமரவே ளங்கை போந்ததா
லூனமின் மாற்றல ரொல்லை வந்துநம்
மாநகர் மேற்றிசை வாயி லண்ணினார்.

(இ-ள்.) வானத்தில் வழங்கும் வழியையே வழியாகக்கொண்டு திரும்பிய செவ்விய வேற்படையானது, குமாரவேளின் அகங்கையிற் சென்றிருந்தது; பின்னர் ஊறற்ற பகைவர்கள் விரைவாகவந்து நமது பெரிய நகரத்தின் மேற்புறவாசலை யடைந்தார்கள்.

மேற்றிசை வாய்தலில் வீரர் சேறலு
மேற்றனன் றனையோ டிருந்த காவல
னாற்றினன் சிறிதம ரவன தாவியை
மாற்றின ரனிகமு மாண்டு போயதே.

(இ-ள்.) மேற்புறவாசலிலே வீரர்களான பகைவர்கள் வந்தவுடனே அங்குக் காவலாகவிருந்த புலிமுகன் சைனியங்களுடன்சென்று அவர்களை யெதிர்த்துச் சற்றே போர்புரிந்தனன், அவர்க ளவனுயிரை மாய்த்துவிட்டார்கள்; அதனால் சைனியங்களும் இறந்தொழிந்தன.—எ-று. (௪அ)

குடதிசை யெயிலினைக் கொடிய பூதர்க
ளடிகொடு தள்ளின ராண்டு நின்றிடு
படியறு சிகரியைப் பறித்து மாநகர்
நடுவுற வீசினர் நமர்கண் மாயவே.

(இ-ள்.) மேற்றிசையிலுள்ள மதிலினைக் கொடிய பூதர்கள் காலாலுதைத்துத் தள்ளினார்கள்; பின்னர் ஒப்பற்ற கோபுரத்தைப்பறித்து நம்மவர்கள் இறக்கும் வண்ணம் இப்பெரிய நகரத்தின் நடுவே எறிந்தார்கள்.—எ-று. (௪௯)

சோர்வறு பூதருந் துணைவ ராகிய
வீரருந் தலைவனும் வீர வாகுவுஞ்
சீரிய நகரிடைச் சென்று மேற்றிசை
யாரழல் கொளுவிநின் றழித்தன் மேயினார்.

(இ-ள்.) தளர்வில்லாத பூதர்களும், துணைவர்களாகிய வீரர்களும், இவர்களுக்கெல்லாந் தலைவனாகவுள்ள வீரவாகுவும், சிறந்த இந்நகரத்தின் உட்புறத்தையடைந்து மேற்புறத்தை அரிய தீயிட்டுக்கொளுத்தி அழிக்கத்தொடங்கினார்கள்.—எ-று. (௫௦)

அண்டலர் வன்மையா லயுத யோசனை
யுண்டது கொழுங்கன லுண்ட வெல்லையுங்
கண்டன மிதனைநீ கருத்தி லையமாக்
கொண்டிடன் மன்னவென் றொற்றர் கூறினார்.

(இ-ள்.) பகைவர் திறமையால் பதினாயிரம்யோசனை யளவுண்டு, கொழுவிய தீயினா லுண்ணப்பட்டவிடம் இதனை நாங்கள் கண்ணாரக்கண்டோம். ஐயனே! ஆதலால் நீ நின்கருத்தி லிதனைச் சந்தேகமாக நினையாதே என்று தூதுவர் கூறினார்கள்.—எ-று.

வேறு.

ஒற்ற ரிவ்வகை யுரைத்தலு மவுணர்கோ னுளத்திற்
செற்ற மிக்கன நெறித்தன வுரோமங்கள் சிலிர்த்த
நெற்றி சென்றன புருவங்கண் மணிமுடி நிமிர்ந்த
கற்றை வெங்கனல் கான்றனசுழன்றன கண்கள்.

(இ-ள்.) தூதுவர்க ளிவ்வண்ணங் கூறுதலும், அசுராதிபனான சூரபன்மனுடைய மனத்தில் கோபமதிகரித்தன; நெறித்தனவாகிய வுரோமங்கள் சிலிர்த்தன; புருவங்கள் நெற்றியை நோக்கிச்சென்றன; மணிகளிட்டிழைத்த முடி நிமிர்ந்தன; சுழன்றனவாகிய கண்கள் கற்றையாகிய வெவ்விய கனலைக்கான்றன.—எ-று. (௫உ)

கறங்கு சிந்தனைச் சூரனித் தன்மையிற் கனன்று
மறங்கொள் சாரணர் தங்களை நோக்கிநீர் வான்போய்ப்
பிறங்கு மூழியி னுலகெலா மழித்திடப் பெயர்வா
னுறங்கு மாமுகில் யாவையுந் தருதியென் றுரைத்தான்.

(இ-ள்.) சுழலுகின்ற மனத்தினையுடைய சூரபன்மன் இவ்வண்ணமாகக் கோபித்து வீரம்பொருந்திய சாரணர்களைப்பார்த்து, நீங்கள் ஆகாயத்திற்குச்சென்று விளங்காநின்ற பிரளயத்தில் உலகனைத்தையும் அழிக்கும்வண்ணம் செல்லும்பொருட்டு உறங்குகின்ற பெரிய மேகங்களனைத்தையும் அழைத்துக்கொண்டு வாருங்களென்று கூறினான்.—எ-று. (௫௩)

அயலி னிற்புறு தூதுவர் வினவியே யைய
வியலு மிப்பணி யெனத்தொழு தும்பரி னேகிப்
புயலி னத்தினைக் கண்டுதம் பாணியாற் புடைத்துத்
துயிலெ ழுப்பியே விளித்தன னிறையெனச் சொற்றார்.

(இ-ள்.) அருகில் நின்ற தூதுவர்கள் அம்மொழிகளைக்கேட்டு, ஐயனே! தக்கதேயிப்பணிவிடையென்று கூறி அவனைவணங்கி ஆகாயத்திற்குச்சென்று மேகவினங்களைக்கண்டு தங்கள் கைகளாலடித்துத் துயிலெழுப்பி உங்களை இறைவனழைத்தானென்று கூறினார்கள்.—எ-று. (௫௪)

எழுவ கைப்படு முகில்களும் வினவியே யேகி
விழுமி தாகிய மகேந்திரத் திறைவன்முன் மேவித்
தொழுது நிற்றலு மித்திரு நகரினைத் தொலைக்கு
மழலி னைத்தணி வித்திடு வீரென வறைந்தான்.

(இ-ள்.) ஏழுவிதமான மேகங்களும் அம்மொழியைக்கேட்டுச் சென்று சிறந்ததாகிய மகேந்திரபுரியிலிருக்கின்ற அரசனாகிய சூரபன்மன் முன்னேயடைந்து வணங்கி நின்றவுடனே, அவனவைகளைப்பார்த்து இந்த அழகிய நகரினை அழிக்கின்ற தீயைத் தணிவித்திடுங்கள் என்று கூறினான்.—எ-று. (௫௫)

அறைபு மெல்லையி னன்றென வெழிலிக ளகன்று
செறித ரும்புகை யுருக்கொடு விண்மிசைச் சென்றோ
ரிறையி லெங்கணும் பரந்தன மாவலி யிடைபோய்க்
குறிய மாயவ னெடியபே ருருவுகொண் டதுபோல்.

(இ-ள்.) அவ்வாறு கூறியவுடனே மேகங்கள் சொன்னவண்ணமே செய்கின்றோமென்று கூறி யவ்விடத்தினின்றுஞ்சென்று நெருங்கிய புகைரூபத்தை யடைந்து,

யடைந்து சிறிய வாமனன் விரைவிற் பெரிய வுருவடைந்ததைப்போல ஒரு கணப்பொழுதிற்குள் எவ்விடங்களிலும் பரந்தன.—எ-று. (இசு)

கருமு கிற்கண முறைமுறை மின்னின ககனத்
துருமி டிக்குல மொராயிர கோடியை யுகுத்த
பருமு டிக்குல கிரியொடு மேருவும் பகிர்ந்த
திருமு டித்தலை துளக்கியே வெருவினன் சேடன்.

(இ-ள்.) கரிய மேககூட்டங்கள் வரிசைவரிசையாக மின்னின; அவ்வானத்தில் அவை ஒரு ஆயிரகோடி இணிடிக்கூட்டங்களை யுகுத்தன; அதனால் பெரிய சிகரங்களையுடைய குலாசலங்களுடன் மேருமலையும் பிளந்தன; ஆதிசேடனுந் தனது அழகிய முடித்தலையை அசைத்தனன்.—எ-று. (இஎ)

விண்டு லாமதிற் கடிநகர் தன்னைவெங் கனலி
யுண்டு லாவுறு தன்மையு மவுணர்தம் முலைவுங்
கண்டி யாமிது தொலைத்திடி னீண்டொரு கணத்தி
லண்டர் நாயகன் றூனைமன் னவனெமை யடுமால்.

(இ-ள்.) மேகங்களுலாவுகின்ற பிரகாசம்பொருந்திய மதில்சூழ்ந்த காவலினையுடைய அந்நகரத்தை வெவ்விய அக்கினி உண்டு திரியுந்தன்மையையும், அசுரர்களின் கேட்டையும் பார்த்து நாமிந்நெருப்பை யவிப்போமானால், இவ்விடத்திலொரு கணப்பொழுதில் தேவநாதனாகிய சண்முகப்பெருமானுடைய சேனாபதியான வீரவாகுதேவர் எம்மைக் கொல்லுவர்.—எ-று. (இஅ)

நீட்ட மிக்கவித் திருநகர் புகுந்துநீ ருக்கி
வாட்டும் வெந்திற லெரியினை யகற்றிலம் வறிது
மீட்டு மேகுது மென்றிடி னவுணர்கோன் வெகுண்டு
பூட்டும் வன்றளை செய்வதென் னென்றன புயல்கள்.

(இ-ள்.) மிகுந்த நீளமான விந்த வழகிய நகரத்திற்புகுந்து நீருக்கி வாட்டாநின்ற வெவ்விய திறலினையுடைய அக்கினியை அகற்றாமற் சும்மா திரும்பிச் செல்வோமானால், அசுராதிபன் கோபித்து வன்மையான விலங்கைப்பூட்டுவன்; இதற்கினி நாமென்செய்வது என்றன மேகங்கள்.—எ-று. (இகூ)

தொல்லை மாமுகி லிவ்வகை யுன்னியே சூர
னெல்லை யில்பக லிட்டிடு முவளகத் தெய்தி
யல்ல லுற்றிடு கின்றதி னுடலம் புயத்தோன்
கொல்ல நம்முயிர் வீடினு மினிதெனக் குறித்த.

(இ-ள்.) பழைய பெரிய மேகங்கள் இவ்வண்ண நினைத்துச் சூரபன்மன் அளவற்றகாலம் இட்டுவைக்கின்ற சிறையையடைந்து துன்பமநுபவிப்பதைக் காட்டிலும், வீரவாகுதேவர் கொல்ல நம்முயிர் அழியினும் நல்லதென்று தீர்மானித்தன.—எ-று. ()

புந்திமே லிவை துணிபென நாடியே புயல்கள்
சிந்து துள்ளியொன் றிபத்துணை யளவையிற் செறிய
முந்தி யோரிறை பொழிந்தன பொழிதலு முடிந்த
வந்த மாநகர் மேற்றிசை பொடித்திடு மழலே.

(இ-ள்.) நம்மனத்திற் கிவையே தீருமானமென்று ஆலோசித்து மேகங்கள் சிதறுகின்ற ஒவ்வொரு நீர்த்துளிகள் யானையின் பரிமாணமாக நெருங்க எதிர்ப்பட்டு

ஒருகணநேரம் பெய்தன; பெய்தலும் அவ்வூரின் மேற்குத்திசையை அழித்த அக்கினி உடனே அழிந்தது.—எ-று. (௬௧)

ஆய தன்மையை நோக்கினு ளாறிரு தடந்தோ
ளாய கன்படைக் கிறையவ னழலெழ நகைத்துத்
தீயி னாற்றலை யழித்தன மேகமோ செறுநர்
மாய மேகொலோ வென்றுதேர் வுற்றனன் மனத்தில்.

(இ-ள்.) அவ்வாறானதனை ஆறிரண்டு திருத்தோள்களையுடைய எம்பெருமான் றன் சேனைகளுக்கு அதிபதியான வீரவாகுதேவர் பார்த்துத் தீப்பறக்கச்சிரித்துத் தம் மனத்தில் அக்கினியின் வன்மையை யழித்தன மேகமோ? அல்லது பகைவர்களின் மாயமோ? என்று ஆலோசித்தனர்.—எ-று. (௬௨)

தேருகின்றுழி நாரதன் விண்ணிடைச் சென்று
வீர கேளிவை யூழிநாண் முகிலினம் வெய்ய
சூர னாணையால் வந்தன வடவையந் தொல்லோன்
மூரி வெம்படை தொடுத்தியால் விரைந்தென மொழிந்தான்.

(இ-ள்.) ஆலோசிக்குமிடத்து நாரதமுனிவன் ஆகாயத்திற்சென்று வீரனே! இவைகளைக் கேட்பாயாக; பிரளயகாலத்து மேகங்கள் கொடிய சூரபன்மனுடைய கட்டளையால் வந்தன; ஆதலால் நீ புராதனனாகிய (ஊழி) வடவாக்கினியின் பெரிய அம்பினை விரைவாக விடக்கடவை என்று கூறினான்.—எ-று. (௬௩)

விண்ணில் வந்திவை நாரத னுரைத்தனன் மீட்டுந்
துண்ணெ னச்செல வினவியே வாகையந் துணைத்தோ
ளண்ண லூழிநா ளனற்படை தூண்டினன் அதுபோய்க்
கண்ண கன்முகி லினத்தினைச் சூழ்ந்தது கணத்தில்.

(இ-ள்) நாரதமுனிவன் ஆகாயத்தில் வந்திவைகளைக்கூறித் திரும்பி விரைந்து செல்ல, அதனைக்கேட்டு வீரவாகுதேவர் ஊழித்தீயி னம்பினை விட்டனர்; அதுசென்று விசாலமாகப் பரவிய மேகவினங்களைக் கணப்பொழுதில் சூழ்ந்தது.—எ-று. (௬௪)

சூழல் போகிய வெழிலிகள் யாவையுஞ் சுற்றி
யூழி மாப்படை யவற்றிடைப் புனலெலா முண்டு
வாழி மொய்ம்பனை யடைந்தது மற்றது காலை
யாழி மால்கடற் றிரைகையென வீழ்ந்தன வவையே.

(இ-ள்.) சுற்றிலுஞ்சென்ற அம்மேகங்க ளனைத்தையுஞ் சூழ்ந்து அப்பிரளயாக்கினி அஸ்திரமானது அவைகளிலிருந்த நீரனைத்தையு முண்டு வீரவாகுதேவரிடந் திரும்பி வந்தது; அப்பொழுது அம்மேகங்கள் வட்டமான பெரிய கடலினங்களைப்போற் கீழ்விழுந்தன.—எ-று. (௬௫)

மறிந்த வெல்லையி லாறுமா முகமுடை வள்ளல்
சிறந்த வாறெழுத் துண்மையை விதிமுறை செப்ப
விறந்த தொன்மிடல் வருதலு முய்ந்துட னெழுந்து
புறந்த ருங்கட லதனிடை யோடின புயல்கள்.

(இ-ள்.) அம்மேகங்கள் விழுந்தவுடனே, சிறந்த ஆறுதிருமுகங்களையுடைய வள்ளலின் உயர்ந்த சத்தியரூபமான சடாக்ஷரங்களை முறைப்படி செபிக்கவும் கழிந்த பழைய வன்மையுண்டாகியது; உடனே அவைகள் பிழைத்தெழுந்து பெரும்புறக்கடற்கோடின.—எ-று. (௬௬)

விழுந்து கொண்டல்க ளிரிதலும் பாரிட வெள்ள
மெழுந்து துள்ளியே யார்த்தன மலர்மழை யிமையோர்
பொழிந்து வானிடை யாடினா ரிவைகண்டு பொரும
லுழுந்து கண்ணடி செல்லுமுன் போயின ரொற்றர்.

(இ-ள்.) மேகங்கள் விழுந்தெழுந் தகலுதலும், உடனே பூதசைனியங்கள் எழுந்து துள்ளியார்த்தன; தேவர்களாகாயத்தில் புட்பவருஷம்பெய்து ஆடினார்கள்; இவைகளைப்பார்த்து மனம் பொருமலுழுந்து கண்ணடியின் மேற்புறத்தினின்றும் கீழ்ப்புறத்திற்கு உருண்டு வருதற்குமுன்னே தூதுவர்கள் சென்றார்கள்.—எ-று. (சஎ)

வேறு.

கொற்றவை யாடுறு கோநகர் நண்ணி
யற்றமின் மன்ன னடித்துணை மீது
தற்றுறு பூமுடி தாழ விறைஞ்சி
மற்றிது கேண்மிய வென்று வகுப்பார்.

(இ-ள்.) வீரலட்சுமிவிலாசம்பொருந்திய அரசமாளிகையை யடைந்து அழிவற்ற அரசனுடைய உபயபாதங்களில் அசைகின்ற பூமாலையணிந்த தலைபடுமாறு வணங்கி இதனைக் கேள் என்று கூறத்தொடங்கினார்கள்.—எ-று. (சஅ)

ஊழி புகுந்துழி யுற்றிடு கொண்மூ
வேழும் விரைந்துநின் னேவலின் விண்போய்
வீழ்புனல் சிந்துபு மேற்றிசை தன்னிற்
சூழுறு மங்கி யவித்தொலை வித்த.

(இ-ள்.) பிரளயம் வருங்காலத்துச் செல்லும் மேகங்களேழும் நினது ஏவலினால் விரைவாக ஆகாயத்திற்சென்று ஒழுகாநின்ற நீரைச்சிதறி இவ்வூரின் மேற்புறத்தில் சூழ்ந்திருந்த அக்கினியை அவித்தன.—எ-று. (சகூ)

மாற்றலர் தூதுவன் மற்றது காணூஉ
வீற்றுறு தீப்படை யேழ்முகின் மீது
மாற்றலின் விட்டிட வன்னவை வீழ்ந்து
மேற்றிசை வாய்தலில் வேலை புகுந்த.

(இ-ள்.) பகைவர்களின் தூதுவனான வீரவாகு வதனைக்கண்டு ஊழிகாலத்தில் வெளிப்படுகின்ற அக்கினியின் அம்பினைச் சத்தமேகங்களின்மீதும் வன்மையுடன் விட, அவை அதனால் விழுந்து மேற்குத்திக்கு வாசலின்வழி கடலிற் புகுந்தன.—எ-று.

வன்னி செறிந்தன மாய்ந்தன வென்றே
யுன்னலை பூத ரொழிந்திடும் வீர
ரன்னத னெண்மையி னாடுறு கின்றா
ரிந்நக ரென்றலு மேந்தன் முனிந்தான்.

(இ-ள்.) நெருங்கியிருந்த தீ யவிந்தனவென்று கருதாதே, பூதர்களும் மற்றுள்ள வீரர்களும் இப்பொழுது இந்நகரினின்று அதனைவிட எண்மடங்காகப் போர்புரிகின்றார்கள்; என்று கூறுதலும், அதனைக்கேட்டு மன்னவன் கோபித்தனன்.—எ-று. (எக)

வேறு.

மயிர்ப்புறம் பொடித்திட வரைகொண் மார்பகம்
வியர்ப்புற வெரிதழல் விழிகள் சிந்திட

வுயிர்ப்பிடை புகைவர வுருமுக் கான்றெனச்
செயிர்த்திடு மன்னவ னிதனைச் செப்பினான்.

(இ-ள்.) உரோமகூர்ச்சிதமுண்டாக மலைபோல வகன்ற மார்பினிடம் வியர்வையடைய,எரிகின்ற தழலினைக் கண்கள் சிதறச் சுவாசத்திற் புகைதோன்ற இடியிடித்தாற்போல கோபிக்கின்ற அரசனிதனைக் கூறினான்.—எ-று. (எ௨)

போரினை யிழைத்துவெம் பூதர் தங்களை
வீரர்க டொகையினை வீட்டிப் பின்னுறச்
சாருறு சிவன்மகன் றன்னை வென்றிவட்
சேருதுங் கொணர்திர்நந் தேரை யென்றனன்.

(இ-ள்.) நாம் சென்று போர்புரிந்து வெவ்விய பூதர்களையும் வீரக்கூட்டத்தினையும் கொன்று பின்னாக வந்திருக்கின்ற சிவகுமாரனைவென்று இவ்விடத்திற்கு வருகின்றோம்; நீங்கள் நமது இரதத்தைக் கொண்டுவாருங்கள் என்று கூறினான்.—எ-று. (எ௩)

நகர்புகுபடல முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - க,கசுசு.

---

# இரணியன்யுத்தப்படலம்.

ஒற்றரை நோக்கியே யுணர்வின் மன்னவன்
சொற்றது கேட்டலுந் துளங்கி யேங்கினான்
மற்றவ னளித்திடு மதலை மாரிநாட்
புற்றுறை யரவெனப் புழுங்கு நெஞ்சினான்.

(இ-ள்.) தூதுவர்களைப்பார்த்து அறிவிழந்த வவ்வரசன் கூறிய வதனைக் கேட்டவுடனே நடுங்கி யேங்கினான்; அவன் யாவனென்னில், இவன் மகன்; மழைக்காலத்துப் புற்றிலிருந்து வருந்துகின்ற அரவத்தைப்போல புழுங்குகின்ற மனத்தினையுடையவன்.

ஆயிர மறையுணர்ந் தான்ற கேள்வியான்
றூயநல் லறத்தொடு முறையுந் தூக்கினோன்
மாயமும் வஞ்சமு மரபிற் கற்றனன்
றீயதோ ரவுணருட் டிறலும் பெற்றுளான்.

(இ-ள்.) இன்னமவன் எத்தகையனென்னில், ஆயிரவேதங்களை யுணர்ந்து விரிந்த கேள்வியினையுடையவன்; தூய்மையான நல்ல தருமத்துடனே இருக்கு முயர்வினையுடையவன்; மாயத்தையும் வஞ்சனையையும் முறைப்படி கற்றவன்; கொடிய அசுரர்களுக்குள் வெற்றியும் பெற்றுள்ளவன்.—எ-று. (௨)

தரணியின் கீழுறை யரக்கர் தங்கண்மேல்
விரணம தாகிமுன் வென்று மீண்டனன்
முரணுறு சென்னியோர் மூன்று கொண்டுளா
னிரணிய னென்பதோ ரியற்கைப் பேரினான்.

(இ-ள்.) முன்னே பாதலத்தில் வசிக்கின்ற அசுரர்கள்மீது பகையாகச்சென்று வென்று திரும்பினவன் வன்மைபொருந்திய மூன்று தலைகளையுடையவன்; இரணியன் என்று அழைக்கப்படுகின்ற இயற்கைப்பெயரினையுடையவன்.—எ-று. (௩)

இருந்தன னொருபுடை யெழுந்து தாதைதன்
றிருந்தடி யிணையினைச் சென்னி சேர்த்திடாப்
பொருந்துவ தொன்றுள புகல்வன் கேளெனாப்
பரிந்துநின் றினையன பகர்தன் மேயினான்.

(இ-ள்.) ஒருபுறத்தில் இருந்தனன்; அவன் எழுந்து தன் றந்தையின் செவ்விய விரண்டு கால்களையுந் தலைமீது வைத்து வணங்கிப் பொருந்தத்தக்கதாக வொன்றிருக்கின்றது, சொல்கின்றேன் கேள் என்று பரிவுடனெதிரினின்று இவைகளைக் கூறுவானாயினான். (௪)

தேவரை நாஞ்சிறை செய்த தன்மையா
லாவது பாவமே யாக்கம் வேறிலை
யாவையு முணர்ந்திடு மிறைவ திண்ணமே
போவது நம்முயிர் திருவும் பொன்றுமால்.

(இ-ள்.) நாம் தேவர்களைச் சிறையிட்ட தன்மையால் உண்டாவது பாவமேயன்றி, அதனால் யாதொரு ஆக்கப்பாடுமுண்டாவதில்லை. சகலத்தையும் உணர்ந்த மன்னவனே! நமது உயிர் இதனால் போவது நிச்சயம் இந்தச்செல்வமும் அழியும். (௫)

சூருடைக் கானகந் தோற்றும் புன்மைபோய்ப்
பாரிடைப் புவனமோர் பலவும் போற்றியே
சீருடைத் தாகியித் திருவின் வைகுத
லாரிடைப் பெற்றனை யதனைத் தேர்திநீ.

(இ-ள்.) அச்சம்பொருந்திய காட்டிற்பிறந்த இழிவு நீங்கி உலகிலுள்ள பல புவனங்களும் வணங்கி சிறப்புப்பொருந்தினதாயிருக்கின்ற செல்வத்துடன் வாழ்தற்கு நீ இவைகளையெல்லாம் யாவரிடத்துப்பெற்றனை, நீ அதனை உணர்தி.—எ-று. (௬)

மாலைமுன் வென்றது மலர யன்றனை
யேலுறு முனிவரை யேவல் கொண்டது
மேலுய ரமரரை விழுமஞ் செய்தது
மாலமர் கடவுட னுற்ற லாலன்றோ.

(இ-ள்.) நீ முன்னந் திருமாலை வென்றதுவும், மலரிலிருக்கும் அயனாகிய பிரமனையும், தகுதியினையுடைய முனிவர்களையும்,ஏவல்செய்ய வைத்துக்கொண்டதும்,உயர்வுடன் சுவர்க்கத்திலே வாழ்ந்த தேவர்களை துன்புறுத்தியதுவும் (ஆகிய வினைத்தும்) கல்லாலநிழலி லெழுந்தருளியிருக்கும் தட்சணாமூர்த்தியான சிவபெருமானுடைய திருவருள் வன்மையாலன்றோ?—எ-று. (எ)

அரிபொர வருவனே லமரர் கோனொடும்
பிரமன்வந் தேற்குமேற் பிறர்க ணோர்வரோ
பொருவதும் வெல்வதும் புறத்தைக் கண்டுபின்
வருவது மெளிதரோ கடனு மற்றதே.

(இ-ள்.) திருமால் போர்புரியவரினும் தேவராஜனுடனே பிரமதேவன் வந்தெதிர்க்கினும், இவர்களன்றி வேறுள்ளவர்கள்வந்து எதிர்த்தாலும் அவர்களுடன் போர்புரிவதுவும், அவர்களை வெல்வதுவும், அவர்களை முதுகிடச்செய்து மீளுதலும் எளிதான காரியம் முறைமையு மவ்வண்ணமேயாம்.—எ-று. (அ)

நோற்றிடு தவத்தினை நோக்கி யெண்ணிலாப்
பேற்றினை யுதவிய பிரானொர் தீமையான்

மாற்றிட வுன்னுமேல் வணங்கி மாறொரீஇப்
போற்றுத லன்றியே பொரவுஞ் செய்புமோ.

(இ-ள்.) செய்யப்பட்ட தவத்தினைப்பார்த்து அளவில்லாத பேறுகளை யளித்த இறைவன் நாம் செய்த ஒரு குற்றத்தைக்கருதி நமது சம்பத்துக்களை அழிக்குமாறு நினைப்பாராயின், அவரை நாம் வணங்கிப் பகையைவிட்டுத் துதிப்பதையன்றிப் போர் புரிதலுங் கூடுமோ? (கூடாதே.)—எ-று. (கூ)

ஒன்றொரு பயன்றனை யுதவி னோர்மனங்
கன்றிட வொருவினை கருதிச் செய்வரேற்
புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே
கொன்றிடு மல்லது கூற்றும் வேண்டுமோ.

(இ-ள்.) ஏதாயினும் ஒரு உபகாரத்தை ஒருவனுக்கு இயற்றினவர்களின் மனங் கன்றும்வண்ணம் உபகாரத்தை ஏற்றுக்கொண்டார்கள் செய்வார்களானால், இழிதொழிலினையுடைய அவர்களைக் கொல்லுதற்கு எமனும் வேண்டுமோ? அவர் செய்த தீவினையே அவர்களைக் கொன்றுவிடும்.—எ-று. (க0)

கந்தனை யருள்புரி கடவு ளாணையைச்
சிந்தையின் மாறுகொள் சிறியர் யாவரு
மந்தம தடைந்தன ரன்றி வன்மையா
லுய்ந்தன ரிவரென வுரைக்க வல்லமோ.

(இ-ள்.) சுப்பிரமணியனை மகனாக வளித்தருளிய கடவுளின் கட்டளையை மனதின்மதி யாது விரோதமாகக்கருதிய வினைவரும் அழிந்தொழிந்தார்களேயன்றித் தமது சாமர்த்தியத்தினாற் பிழைத்தவர்கள் இவர்களென்று நாம் கூறுதற்கு வல்லபமுடையேமோ? இல்லையே.—எ-று. (கக)

கட்டுசெஞ் சடைமுடிக் கடவுள் காமனைப்
பட்டிட விழித்ததும் பண்டு மூவெயில்
சுட்டது மந்தகன் சுழலச் சூலமே
லிட்டதுங் கேட்டிலை போலு மெந்தைநீ.

(இ-ள்.) கட்டப்பட்ட செந்நிறமான சடைமுடையினையுடைய கடவுளானவர் மன்மத னழியும்வண்ணம் நெற்றிக்கண்ணைத் திறந்ததும், முன்னர்த் திரிபுரங்களை அழித்ததும், அந்தகாசுரனனைவன் சூலத்தின்மீது சுழலும்வண்ணம் அவனைச் சூலத்தின்மீ தேற்றியதும்.—எ-று. (கஉ)

காலனை யுதைத்ததுங் கங்கை யென்பவண்
மேல்வரு மகந்தையை வீட்டிக் கொண்டது
மாலய னமரர்க ளிரிய வந்ததோ
ராலம துண்டது மறிகி லாய்கொலோ.

(இ-ள்.) எமனை யுதைத்ததுவும், கங்கையென்பவளுடைய மிகுதியான செருக்கினையடக்கித் தன்றலைமீதாகக்கொண்டதுவும், திருமால் பிரமன் இந்திரன் தேவர்கள் முதலானவர் விலகி யோடுமாறு தோன்றிவந்த ஒப்பற்ற விஷத்தைப் பானஞ்செய்ததுவும் நீ அறியாயோ?—எ-று. (கங)

அண்டரா யோரரி யலைப்ப வன்னது
கண்டநஞ் சுடையவன் கருதி வீரனாற்

றண்டம திழைத்ததுந் தக்கன் வேள்வியை
விண்டிடு வித்ததும் வினவி லாய்சொலோ.

(இ-ள்.) மன்னவனே! நீ தேவர்களை யொரு சிங்கமானது உபத்திரவிக்கவும், அதனைக்கண்ட விஷத்தினையுடைய கண்டத்தோடுகூடிய இறைவன் ஆலோசித்து வீரபத்திரனாற் றண்டித்ததுவும், தக்கனுடைய யாகத்தை அழிப்பித்தவும் நீ யாவரையுங் கேட்டு அறிந்திலையோ?—எ-று: (௧௪)

கடிமலர் மேலவ னிகழக் கண்ணுதல்
வடுகனை யேவிவன் ளுகிரி னன்னவன்
முடிகளை வித்தது முகுந்தன் றன்னிடை
யடைதரு வித்தது மறிகி லாய்கொலோ.

(இ-ள்.) மணம்பொருந்திய தாமரைமலரை ஆசனமாகக்கொண்டிருக்கின்ற பிரமன் இகழ்தலும், இகழ்ந்த அவன்றலையை வைரவனை அநுப்புவித்துக் கூரிய நகத்தினைக்கொண்டு கிள்ளி எடுப்பித்ததுவும், திருமாலினிடத்து அவ்வைரவனை அநுப்பிவைத்ததனையும் நீ அறியாயோ?—எ-று. (௧௫)

முந்தொரு மகபதி மொய்ம்பை யட்டது
மைந்திய லரக்கரை யழித்த செய்கையுந்
தந்தியை யுழுவையை யுரித்த தன்மையு
மெந்தைநிற் குணர்த்தின ரில்லை போலுமால்.

(இ-ள்.) முன்னே ஒரு இந்திரனுடைய புஜத்தை ஒடித்ததுவும், பஞ்சராவணர்களைக் கொன்றதன்மையும், யானையையும் புலியையும் உரித்ததன்மையும், எனது தந்தையே நினக்கு யாவரும் கூறினார்களில்லைபோலும்.—எ-று. (௧௬)

ஏழற வுலகடு மேனக் கொம்பினை
யாமையி னோட்டினை யணிந்த தன்மையும்
பூமலர் மிசையவன் முதல புங்கவர்
மாமுடி யணிந்தது மதிக்கி லாய்கொலோ.

(இ-ள்.) துன்ப முலகத்திற் குண்டாகுமாறு உலகத்தினை அழித்த பன்றியின் கொம்பினையும், யாமையினோட்டினையும், அணிந்த முறைமையும் பூத்த தாமரைமலரிலிருக்கின்ற பிரமன்முதலான தேவர்களின் பெரிய தலைகளை ஆபரணமாக வணிந்ததனையும் எண்ணினாயில்லையோ?—எ-று. (௧எ)

கதித்திடு முனிவரர் கடிய வேள்வியி
னுதித்திடு முயலக னொல்லென் றார்த்தெழப்
பதத்தினி னுதைத்தவன் பதை பதைத்திட
மிதித்ததும் பிறவுநீ வினவிற் றில்லையோ.

(இ-ள்.) கன்மத்தையன்றி கருத்தாவில்லையென்று இறுமாந்திருந்த தாருவன முனிவர்களுடைய கொடிய யாகத்திற் றோன்றின முயலகனானவன் ஒல்லென்று ஆரவாரஞ் செய்துகொண்டு போதரத் தமது திருவடியாலுதைத்து அம்முயலகன் துடிக்குமாறு மிதித்தருளியதையும், இன்னமுள்ளவைகளையும் நீ கேட்டதில்லையோ?—எ-று ()

ஒன்னலர் தன்மைபூண் டுற்று ளோர்தமைத்
தன்னிக ரில்லவன் றண்டஞ் செய்தன
வின்னமோர் கோடியுண் டிருந்தி யானிவட்
டன்னினு முலப்புறு செல்லும் பல்லுகம்.

(இ-ள்.) ஒப்பாரும் மிக்காருமில்லா இறைவன் பகைவர் தன்மையையடைந்து இருந்துள்ளவர்களை தண்டித்திருத்தலை எண்ணினால் அவைகள் இன்னம் ஒரு கோடியிருக்கின்றன. அவைகளையெல்லாம் யான் இவ்விடமிருந்து கூறுவேனாயினும், அவை முற்றுதலடையா பலயுககாலஞ் செல்லாநிற்கும்.—எ-று. (கசு)

வேறு.

ஆதலா லீசன் றன்னை யடைந்தவ ருய்வ ரல்லாப்
பேதையர் யாவ ரேனும் பிழைக்கல ரினைய வாய்மை
வேதநூல் பிறவுங் கூறும் விழுப்பொரு ளாகு நீயு
மேதமா நெறியி னீங்கி யிப்பொரு ளுணர்தி யெந்தாய்.

(இ-ள்.) ஆதலினாலே, சிவபெருமானை அடைந்தவர்கள் உய்வார்கள்; அல்லாத பேதைகள் எவர்களாயினும் உய்யார்கள். இவ்வுண்மை வேதசாத்திரங்களும், மற்றையவைகளுங் கூறாநிற்கும் சிறந்த பொருளேயாம். அதனால் என் றந்தையே! நீயும் குற்றமான வழியைவிட்டு இந்தப்பொருளை உணர்வாயாக.—எ-று. (உ0)

இன்னமொன் றுரைப்ப னீமு னிருந்தவ மியற்ற விந்த
மன்னிலை புரிந்த மேலோன் மாற்றவும் வல்ல னாமா
லன்னவன் குமரன் றன்னோ டமர்செய்வ தியல்போ வைய
தன்னினு முயர்ந்தா ரோடு பொருதிடிற் சயமுண் டாமோ.

(இ-ள்.) யானின்னமொன்று கூறுகின்றேன். அது யாதென்னில், நீ முன்னம் பெருந்தவஞ்செய்ய இந்த அரசுநிலைமையை யுனக்களித்த பெரியவன் அவ்வரசுநிலைமையினின்றும் உன்னை நீக்குவதற்குந் தக்கவனாகவே இருக்கிறான். ஆதலால் அவன் மகனாகிய குமரனுடன் போர்புரிதல் இயல்பாகுமோ? ஐயனே! தன்னைக்காட்டிலும் சிறந்தவர்களுடன் போரியற்றினால் வெற்றியுண்டாகுமோ? உண்டாகாதே.—எ-று. (உக)

பூதல வளைப்பும் வானுந் திசைகளும் புணரி வைப்பு
மேதகு வரையுந் தொன்னாள் வேறுபா டுற்ற நோக்கி
யீதென மாயங் கொல்லென் றெண்ணின மனைய வெல்லா
மாதிதன் குமரன் செய்த வாடலென் றுரைத்தா ரன்றே.

(இ-ள்.) பூலோகப்பிரதேசங்களும், சுவர்க்கமும், திக்குக்களும், கடல்களினிடங்களும், மேன்மைபொருந்திய மேருமலையும், முன்னாளில் மாறுபாடடைந்ததைப் பார்த்து இது என்னமாயமோவென்று நினைந்தேம்; அவைகளனைத்தும் சிவகுமாரன் இயற்றிய விளையாட்டென்று கூறினார்கள்.—எ-று. (உஉ)

அண்ணலங் குமர னாட லறிகிலர் மருளுங் காலைக்
கண்ணிடை யன்னான் மற்றோர் வடிவினைக் காட்டி நிற்ப
விண்ணவர் பலருஞ் சூழ்ந்து வெகுண்டனர் வெம்போ ராற்றத்
துண்ணென வவரை யட்டாங் கெழுப்பினன் றாயோ னென்பர்.

(இ-ள்.) சிவகுமாரன் விளையாடுகின்றதை உணராது யாவரும் மயங்கிநின்ற அந்நாளில், அச்சிவகுமாரன் தேவர்கள் கண்ணெதிரே ஒருவடிவத்தைக்காட்டி நின்றான்; உடனே தேவர்களெல்லாம் ஒன்றாகச்சேர்ந்து கோபித்து வெவ்விய போர்புரிந்தனர்; அப்போரில் அத்தூய்மையினையுடைய குமரன் என்று கூறுகின்றார்கள்; விரைவாக அவர்களைக்கொன்று மீட்டும் எழுப்பினான்.—எ-று. (உ௩)

எண்டொகை பெற்ற வண்டம் யாவையும் புவன வைப்பு
மண்டுபல் வளனு மேனை மன்னுயிர்த் தொகுதி முற்று

மண்டரு மூவர் தாமு மனைத்துமா கியதன் மேனி
கண்டிட விமையோர்க் கெல்லாங் காட்டினன் கந்த னென்பர்.

(இ-ள்.) கந்தனென்பவன் பல்லாயிரங்கோடி யென்னும் எண்பொருந்திய அண்டம் அனைத்தும், அவ்வண்டங்களிலுள்ள தானங்களான புவனங்களும், அவைகளில் நெருங்கியிருக்கின்ற பலவகைச்செல்வங்களும், அன்றியுள்ள பலவகையான உயிர்வருக்கங்களனைத்தும் தேவர்களும் திரிமூர்த்திகளும் இன்னமுள்ள சகலமானவைகளுந் தனது திருமேனியாகக்கொண்ட அவ்விசுவரூபத்தைத் தேவர்களெல்லாங் காணுமாறு காட்டினனென்று கூறுவார்கள்.—எ-று. (உ௬)

மறைமுத லவனை முன்னோர் வைகலின் வல்லி பூட்டிச்
சிறையிடை வைத்துத் தானே திண்புவி யளித்து முக்க
ணிறையவன் வேண்ட விட்டா னென்பரா லினைய வாற்று
லறுமுகன் செய்கை கேட்கி னற்புத மாகு மன்னோ.

(இ-ள்.) முன்னொருநாள் வேதமுதல்வனாகிய பிரமனை விலங்கிட்டுச் சிறையிலடைத்துத் தானே பெரிய வுலகாதிகளைப்படைத்து மூன்று கண்களையுடைய கடவுள் வேண்டிக்கொண்டமையினால் விட்டனனென்று கூறுகின்றார்; இத்தன்மையவான காரியங்களால் சண்முகனுடைய செய்கைகள் கேட்குங்காலத் தற்புதமாக விருக்கின்றன.()

அங்கண்மா ஞாலந் தன்னை மேலினி யகழு மோட்டுச்
செங்கண்மா லேன யாக்கை யெயிற்றையோர் சிறுகை பற்றி
மங்குல்வா னுலகிற் சுற்றி மருப்பொன்று வழுத்த வாங்கித்
தங்கணா யகற்குச் சாத்தச் சண்முக னளிக்கு மென்பர்.

(இ-ள்.) இடமகன்ற பெரிய வுலகத்தை இனிமேற் றோண்டப்போகின்ற பெரிய செந்நிறமான கண்களையுடைய திருமாலி னுருவமான பன்றியின் கொம்பை ஒரு சிறிய கையினாற் பிடித்து மேகமுலவு மாகாய வுலகங்களிற் சுற்றி அப்பன்றி துதிக்க, அதன் ஒருகொம்பினை பிடுங்கித் தமது தலைவனாகவுள்ள சிவபெருமா னணிந்துகொள்ளும்வண்ணம் அளிப்பானென்று கூறுகின்றனர்.—எ-று. (உ௬)

நேரலர் புரமூன் றட்ட நிருமலக் கடவுண் மைந்த
னாரினும் வலியோ னென்கை யறைந்திட வேண்டுங் கொல்லோ
பாரினை யளந்தோ னுய்த்த பரிதியை யணியாக் கொண்ட
தாரகன் றன்னை வெற்பைத் தடிந்தது சான்றே யன்றே.

(இ-ள்.) பகைவர்களுடைய முப்புரங்களை அழித்த நிருமலனான கடவுளின் பிள்ளையான சண்முகன் எல்லாரைக்காட்டிலும் வன்மையாளனென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? (வேண்டாவே. ஏனென்றால்) பூமியை யோரடியாக வளந்த திருமால் விட்ட சக்கரத்தை ஆபரணமாகக்கொண்ட தாரகாசுரனையும் கிரவுஞ்சமலையையும் அழித்தது சாக்ஷியன்றோ?—எ-று. (உஎ)

அறுமுகத் தொருவ னுகு மமலனை யரன்பால் வந்த
சிறுவனென் றிகழன் மன்னா செய்கையாற் பெரியன் கண்டா
யிறுதிசேர் கற்ப மொன்றி னீறிலா தவன்பாற் றோன்று
முறுவலி னழலு மன்னோ வுலகெலா முடிப்ப தம்மா.

(இ-ள்.) ஆறுதிருமுகங்களையுடைய நின்மலனை, அரசனே! சிவபெருமானிடத்துதித்த சிறுவனென்று கருதாதே, அவன் செய்கையினாற் பெரியவன்; முடிவுநாளான

கற்பகாலமானது உண்டானால் அவ்வழிவற்ற சிவபெருமானிடத் துதிக்குஞ் சிரிப்பினிடத்திலுண்டாகும் அக்கினியும் அன்றோ உலகங்களனைத்தையும் அழிப்பது.—எ-று.

வாசவன் குறையு மந்தண் மலரயன் குறையு மற்றைக்
கேசவன் குறையு நீக்கிக் கேடிலா வெறுக்கை நல்க
வாசிலோர் குழவி போலா யறுமுகங் கொண்டா னெண்டோ
ளீசனே யென்ப தல்லாற் பிறிதொன்றை யிசைக்க லாமோ.

(இ-ள்.) இந்திரனுடைய குறையையும், அழகிய தண்ணிய தாமரைமலரிலிருக்கின்ற பிரமனுடைய குறையையும், மற்றைய நாராயணனுடைய குறையையும் ஒழித்துக் கெடுதியற்ற செல்வங்களை அவர்களுக்கு அளிக்கும்வண்ணம் குற்றமற்ற ஒரு குழந்தையைப்போல எட்டுத்தோள்களையுடைய ஈசனே ஆறுமுகங்களையடைந்து இருக்கின்றான் என்று கூறுவதையன்றி வேறொருவிதமாகவுங் கூறுதல் கூடுமோ?—எ-று. (உகூ)

கங்கைதன் புதல்வ னென்றுங் கார்த்திகை மைந்த னென்றுஞ்
செங்கண்மான் மருக னென்றுஞ் சேனையின் செல்வ னென்றும்
பங்கயன் முதலோர் தேறாப் பரஞ்சுடர் முதல்வன் றன்னை
யிங்கிவை பலவுஞ் சொல்வ தேழைமைப் பால தன்றோ.

(இ-ள்.) கங்காதேவியின் மகனென்றும், கார்த்திகையின் பிள்ளையென்றும், செந்நிறமான கண்களையுடைய நாராயணனுக்கு மருமகனென்றும், சேனாபதியென்றும் பிரமன் முதலிய தேவர்களாலே அறிதற்குக்கூடாத சிவபரஞ்சுடராகிய தலைவனை நாம் இவ்விடத்தில் இவ்வண்ணமாகப் பலவேறுவிதங்களாக இசைத்தல் ஏழைமைத்தன்மையேயாம்.—எ-று. (கூ௦)

பன்னிரு தடந்தோள் வள்ளல் பரிதியம் பகைவன் சூழ்வாற்
றன்னுறு படைஞர் மாய்ந்த தன்மையை வினவித் தாழா
தன்னவர் மீளு மாற்றா லக்கர்மேல் விடுத்த வேலை
யிந்நகர் தன்னிற் றூண்டின் யாரிவ ணிருத்தற் பாலார்.

(இ-ள்.) பன்னிரண்டு பெரிய தோள்களையுடைய வள்ளலாகிய சிவசண்முகன் பானுகோபனுடைய தந்திரத்தினால் தனது சைனியங்கள் இறந்ததன்மையைக்கேட்டுக் காலதாமதஞ்செய்யாமல் அவர்கள் திரும்பி வரும்வண்ணம் கடன்மீது விட்ட வேற்படையை இந்த ஊரின்மீது விட்டால் அவ்வேற்படையைத் தடுப்பவர் யாவர்?—எ-று. ()

தாரகற் செற்ற தென்றாற் றடவரை பொடித்த தென்றால்
வார்புனற் கடலு ளுய்த்த வலியரை மீட்ட தென்றாற்
கூருடைத் தனிவேல் போற்றிக் குமரன்றாள் பணிவ தல்லாற்
போரினைப் புரிது மென்கை புலமையோர் கடன தாமோ.

(இ-ள்.) அவ்வேல் தாரகாசுரனை அழித்ததானால், பெரிய கிரவுஞ்சமலையைப் பொடித்ததானால், ஒழுகுகின்ற நன்னீர்க்கடலில் இட்ட வல்லமைசாலிகளான வீரர்களை மீட்டதானால், நாம் அந்தக் கூரிய ஒப்பற்ற வேற்படையைத் துதித்து, அவ்வேலினை விட்ட குமரக்கடவுளின் பாதத்தை வணங்குவதையன்றி போர்புரிதுமென்று கருதுதல் அறிவுடையவர்களின் கடமையாகுமோ?—எ-று. (கூஉ)

அரனிடைப் பிறந்த வண்ண லாணையால் வந்த தூதன்
றிருநக ரழித்தான் முன்னஞ் சேனையுந் தானு மேகி
யொரு பகற் பானுகோப னுலைவறப் பொருது வென்று
கருதரு மவுணர் தானைக் கடலையுங் கடந்து போனான்.

(இ-ள்.) சிவபெருமானிடத்து அவதரித்த அண்ணலாகிய குமரக்கடவுளின் கட்டளையால் இங்குவந்த தூதன் இந்த அழகிய நகரத்தை யழித்தான்; பின்னரொருநாளிங்குச் சேனைகளுடன் வந்து பானுகோபன் வருந்தும்வண்ணம் போர்புரிந்து அவனை வென்று நினைத்தற்கு அருமையான மிகுதியினதாகிய அசுரசைனியங்களையும் வென்றுச் சென்றான்.—எ-று. (௩௩)

இப்பகல் வந்து வீர னிருஞ்சம ரியற்ற வெம்முன்
றப்பினன் மறைந்து மாயைப் படைதொட வுணர்ச்சி தள்ளி
யப்புன லளக்க ருய்ப்ப வறுமுகன் வேலான் மீண்டுன்
மெய்ப்பதி யடுவா னென்று லவனையார் வெல்லற் பாலார்.

(இ-ள்.) இன்றையதினம் அவ்வீரவாகு விங்கு வந்து பெரும்போர்புரிய, என்றமையன் அவன் கையிற் றப்பி மறைந்து நின்று மாயாஸ்திரத்தைவிட்டு அறிவழித்து அந்த நன்னீர்க்கடலுள் தள்ளப் பின்னர் அறுமுகனுடைய வேற்படையினுற் றிரும்பி வந்து உன்னுடைய நகரத்தை அழிப்பானுனல் அவனை யாவர் வெல்லவல்லுநர்.—எ-று.

இறுதியு மெய்தா னென்னி னேற்றதொல் லுணர்ச்சி மாய்ந்து
மறியினு மெழுவ னென்னின் மாயையுந் தொலையு மென்னிற்
செறியும்விண் முதல்வர் தந்த படைக்குநேர் செலுத்து மென்னி
னறிஞர்க ளவன்மேற் பின்னு மமர்செயக் கருது வாரோ.

(இ-ள்.) அவன் சாதலையுமடையானுனல், தகுந்த பெரிய அறிவு அழிந்து விழினும் உயிர்பெற்றெழுவானுனல்,நாமனுப்பிய மாயையும் தொலையுமானுல்,நெருங்கிய தேவர்கள் அளித்த படைகளைவிட்டால் அவைகளுக்கு எதிரம்புகளை நேராக விடுவானுனல், விவேகிகள் அவ்வீரவாகுவின்மீது பின்னும் போர்புரிதற்கு நினைப்பார்களோ?—எ-று.()

தூதென முன்னர் வந்தோ னொருவனுற் றொலையு மிந்த
மூதெயி னகர முற்று மவுணரு முடிவ ரென்னி
னாதியு முடிவு மில்லா வறுமுக னடுபோ ருன்னிப்
போதுமே லிமைப்பி னெல்லாப் புவனமும் போன்றி டாவோ.

(இ-ள்.) இவ்விடத்திற்குத் தூதனுக முன்னேவந்த ஒருவனுலேயே பெரிய மதில்சூழ்ந்த இந்த நகரமுழுமையும் அழியும்;அன்றியும் அசுரர்களும் அழிவார்களானுல், பின்னை ஆதியும் முடிவும் இல்லாத சண்முகன் கொல்லுதற்குரிய போரினை உத்தேசித்து வருவானுனல், ஒரு இமைநேரத்தில் அனைத்து லோகங்களும் அழிந்துபோகாதோ?

கரங்கள்பன் னிரண்டு கொண்ட கடவுள்வந் தெதிர்க்கி னந்தம்
வரங்களும் படைகள் யாவு மாயையுந் திறலுஞ் சீரு
முரங்களுந் திருவு மெல்லா மூழிநா யகன்முன் னுற்ற
புரங்களு மவுண ரும்போற் பூழிபட் டழிந்தி டாவோ.

(இ-ள்.) பன்னிரண்டு திருக்கரங்களையுடைய இறைவன் வந்து எதிர்த்தால் நாம் பெற்றிருக்கும் வரங்களும், சகல வாயுதங்களும், மாயையும் வன்மையும் செல்வமும் ஊக்கங்களும், சம்பத்துக்களும் ஆகிய வனைத்தும் ஊழிநாயகனுன சிவஸன்னிதானத்தையடைந்த முப்புரங்களையும் அசுரர்களையும்போல புழுதியாகி அழியாதோ?—எ-று.

ஒற்றனை விடுத்து நாடி யும்பரை விடாமை நோக்கி
மற்றிவட் போந்து நம்மேல் வைகலும் வந்தி டாது
சுற்றுதன் றூனையோடுந் தூதனைத் தூண்டி யங்க
ணிற்றையி னளவு நம்பாற் கருணைசெய் திருந்தா னையன்.

(இ-ள்.) தூதனை அநுப்பிப்பார்த்து நாம் தேவர்களை விடாமையையறிந்து பின்ன ரிவ்விடத்திற்குவந்து நம்மீது தினமும் போருக்கு வராமல் சூழப்பட்ட தனது சைனியங்களுடனே தூதனை அனுப்பி அவ்விடத்தி லின்றுகாறும் நம்மீது கருணை வைத்து ஐயன் இருந்தனன்.—எ-று. (௩௮)

கருணைகொண் டிருந்த வள்ளல் கருத்திடைத் தொலைவில் சீற்றம்
வருவதன் முன்ன மின்னே வானவர் சிறையை மாற்றி
யுரியநந் தமரும் யாமு மொல்லையி னேகி யையன்
றிருவடி பணிந்து தீயேஞ் செய்தன பொறுத்தி யென்று.

(இ-ள்.) நம்மீது கருணைகொண்டவராக வெழுந்தருளியிருக்கின்ற குமாரசுவாமியாரது திருவுளத்தில் அளவில்லாத கோபம் உதித்தற்குமுன்னே இப்பொழுதே தேவர்களின் சிறையையொழித்து நமக்குரிய சுற்றத்தினருடன் நாமும் விரைவாகச் சென்று, அவ்வையனுடைய திருவடியை வணங்கி கொடியவர்களாகிய நாங்கள் செய்தவற்றை பொறுத்தருளவேண்டும் என்று.—எ-று. (௩௯)

பணிந்துழி யமல மூர்த்தி பலவுநாம் புரிந்த தீமை
தணிந்தருள் செய்து தானுந் தணப்பிலா வரங்க ணல்கி
யணிந்ததன் றானை யோடு மகனுமா லுய்தும் யாமுந்
துணிந்திது புகன்றே னீதே துணிவென மதலை சொற்றான்.

(இ-ள்.) வணங்கினவுடனே நிமலரூபியானவர் நாம் செய்த குற்றத்தை மன்னித்து அருள்புரிந்து தானும் கெடாத வரங்களைக்கொடுத்து போரலங்காரத்தோடு வந்துள்ள தனது சைநியங்களுடன் திரும்பச் செல்லுவாரதனுல் நாமும் பிழைப்போம், இதனை யான் தீர்மானித்துக் கூறினேன்; இதுவே துணிபு என்று கூறின், இரணியன்.

வேறு.

பரிந்துதனக் குறுதியிவை தெருட்டுதலு மதுகேளாப் பகுவாய் கால
விரிந்தபுகைப் படலிகைபோய்த் திசையனைத்தும் விழுங்கியிட வெகுளி மூளக்
கரிந்ததன துடல்வியர்ப்ப வுயிர்ப்புவர விதழ்துடிப்பக கண்கள் சேப்ப
வெரிந்துமனம் பதைபதைப்பவுருமெனக்கை யெறிந்துநகைத் தினையசொல்வான்.

(இ-ள்.) இரணியனுனவன் பரிவுடையவனுய் இவைகளைத் தனக்கு உறுதிகளாகக்கூறுதலும், அதனைக்கேட்டுப் பிளக்கப்பட்ட வாயினின்றும் உண்டான புகைப்படலமானது சென்று எல்லாத் திக்குக்களையும் மூடிக்கொள்ளுமாறு கோபமதிகரிக்க, அதனுல் கரிந்த தனதுடலம் வியர்ப்பவும், பெருமூச்சுண்டாகவும், இதழ் துடிப்பவும், கண்கள் செந்நிறமடையவும், மனம் எரிந்து பதைபதைக்கவும் இடியிடித்தாற்போல கைகொட்டிச் சிரித்து இவைகளைக் கூறுகின்றான்.—எ-று. (௪௧)

தூவுடைய நெடுஞ்சுடர்வே லொருசிறுவ னாற்றறனைத் தூதாய்வந்த
மேவலன்றன் வலியினையும் யான்செய்யப் படுவனவும் விளம்பா நின்று
யேவருனக் கிதுபுகன்றார் புகன்றாரை யுணர்வேனே லின்னே யன்னோ
ராவிதனைக் களைந்திடுவே னுங்கவர்தொல் குலங்களெலா மடுவன் யானே.

(இ-ள்.) நெடியதும், சுடர்மயமானதும், ஊனளைந்ததும், ஆன நெடிய வேற்படையினையுடைய ஒரு சிறுவனுடைய ஆற்றலையும், அவன் தூதனுக வந்துப் போந்த பகைவனுடைய வலிமையையும், யான் செய்யவேண்டுவனவற்றையும் கூறினுய்; உனக்கிதனை யாவர்சொன்னவர்?சொன்னவர்களை நானுணர்ந்தால்,இப்பொழுதே அவர் பிராணனை நீக்கிவிடுவேன்;அன்றியும்அவர்களுடைய குலங்களனைத்தையும் நானேகொல்வேன்.

ஞாலமெலா முன்படைத்த நான்முகனோந் தியலங்க நவின்று போவா
னாலமிசைத் துயில்கூவா னென்னிளவ றனக்குடைந்தா னமரர் கோமான்
வேலைதனின் மீன்முழுது மெனபணியிற் றந்தனனால் வெள்ளி வெற்பி
னீலமிடற் றவன்மகனே தொலைவறுமென் பேராற்ற னீக்கு கின்றான்.

(இ-ள்.) உலகங்களையெல்லா முன்னே படைத்த நாலுமுகங்களையுடைய பிரமன் நமக்குப் பஞ்சாங்கம் பகர்ந்து போவான்; ஆலிலையிலுறங்குபவனென்னு மாயன் என் றம்பிக்குத் தோற்றான்; தேவராஜன் எனது கட்டளையினால் கடலிலுள்ள மீன்களை எல்லாம் கொண்டுவந்து கொடுத்தான்; இவ்வாறெல்லாமிருக்க வெள்ளிமலையிலிருக்கின்ற நீலகண்டனான சிவபெருமானுடைய மைந்தனான சண்முகனே அளவில்லாத வென்னுடைய பெரிய வன்மையை அழிக்கின்றவன்.—எ-று. (௪௩)

அரியயனும் புரந்தரனும் விண்ணவர்க ளெல்லோரு மகிலந் தன்னின்
விரவுகணத் தவரொவரும் யார்க்குமுத லாகுமுக்கண் விமலன் றானும்
பொருசமரி னேற்றிடினு மெனக்கழிவ தன்றிவென்று போவ துண்டோ
வொருசிறிதும் புந்தியிலா மைந்தாயான் பெற்றவர முணர்கி லாயோ.

(இ-ள்.) திருமாலும், பிரமனும், இந்திரனும், மற்றுள்ள தேவர்களனைவரும், உலகத்தில் நெருங்கியிருக்கின்ற சகல கணங்களும், யாவரினும் முதன்மையானவனாகி யிருக்கின்ற மூன்று கண்களையுடைய சிவபெருமானும் பொராநின்ற போரிலெதிர்த்தாலும் எனக்குத் தோற்பார்களே யன்றி சயம்பெற்றுப் போவதுண்டோ? புத்தியென்பதொரு சற்றும் இல்லாத மகனே, நான் பெற்றிருக்கின்ற வரங்களை அறிகிலாயோ?-எ-று. (௪௪)

வேறு.

ஆற்றல் விட்டனை குலமுறை பிழைத்தனை யரசி
னேற்ற நீங்கினை யொன்னலர்க் கஞ்சினை யிசைத்தாய்
மாற்ற மொன்றினி யுரைத்தியே லுன்றனை வல்லே
கூற்று வன்புரத் தேற்றுவன் யானெனக் கொதித்தான்.

(இ-ள்) நீ வன்மையை யிழந்தாய், குலாசாரவழியையும் பிழைத்தாய், அரசினுயர்வையும் ஒழிந்தாய், பகைவர்களுக்குப் பயந்தாய், அதனால் இவ்வண்ணங் கூறினாய்; இனி இவ்வாறான எதாயினும் ஒருவாக்கியத்தை உரைப்பாயானால், உன்னை கணப்பொழுதிற்குள் யான் எமநகரத்திற்கு அநுப்பிவைப்பேனென்று கூறிக் கோபித்தனன்.-எ-று.

கொதித்த வேலையின் மைந்தனு நம்முரை கொடியோன்
மதித்தி லன்னிவன் மாய்வது சாதமே வான்மே
லுதித்த செங்கதிர்ப் பரிதியங் கடவுள்சூ ழுலகில்
விதித்தி றந்தனை யாவரே வன்மையால் வென்றோர்.

(இ-ள்.) சூரபன்ம னிவ்வண்ணங் கோபித்தவுடனே, இரணியனாகிய மகனும் (தன்னுக்கு ளிவ்வண்ணம் நினைத்தனன்.) நமது வாக்கியத்தை இக்கொடியவன் பொருளென்று மதித்தானில்லை; இனி, இவன் சாவது நிச்சயம். ஆகாயத்திலுதித்த செங்கதிர்களையுடைய சூரிய தேவனுலவும் உலகங்களிற் பிறந்தவர்களுள் விதியின் றன்மையை எவன் தனது வல்லபத்தினால் வென்றவன்.—எ-று. (௪௬)

இறுதி யாகிய பருவம்வந் தணுகிய திவனுக்
குறுதி யாம்பல கூறினென் பயனென வுன்னா
வறிவ னீசில வறிந்தனன் போலநிற் கறைந்தேன்
சிறுவ னாதலிற் பொறுத்தியென் றூற்றினன் சீற்றம்.

(இ-ள்.) இவனுக்கு நாசகாலம் கிட்டிவிட்டது, அதனால் பல உறுதியாகிய மொழிகளைக்கூறுதலினாலே என்னபிரயோசனம் என்று இரணியன் நினைத்து (சூரபன் மனைப்பார்த்து) நீ மஹாஞானி - நான் சிறுவனாதலால் (அச்சமின்றி) அறிந்தவனைப் போல சிலவிஷயங்களைச் சொன்னேன் (தெரியாதுரைத்த என்குற்றத்தைப்) பொறுக்கக்கடவை என்றுரைத்துக் கோபத்தையகற்றினன்.—எ-று. (௪எ)

வெஞ்சி னந்தனை யாற்றியித் தாதைதான் விரைவிற்
றுஞ்சு முன்னர்யா னிறப்பது நன்றெனத் துணியா
வெஞ்ச லில்லவன் றாளிணை வணங்கிநீ யிசைத்த
வஞ்சி னந்தனை முடிப்பன்யா னென்றனன் மைந்தன்.

(இ-ள்.) இரணியன் தன்னுக்குள் ளிவ்வண்ணம் நினைந்தனன். இம்மன்னவன் கடுங்கோபத்தையே பாராட்டி விரைவாக இறத்தற்கு முன்னே நானிறந்துபடுவது நல்லது என்று கருதி, அழிவற்ற வச்சூரபன்மனுடைய உபயபாதங்களை வணங்கி நான் நீ கூறிய சபதத்தை நிறைவேற்றுவேனென்று கூறினான்.—எ-று. (௪அ)

அனைய வேலையி லையநீ மாற்றலர்க் கஞ்சி
வினையம் யாவுமுன் னுரைத்தனை யவர்கள்பால் வீரம்
புனைய வுன்னிய தென்கொலோ வென்றலும் பொன்னோ
னுனது மைந்தன்யா னஞ்சுவ னோவென வுரைத்தான்.

(இ-ள்.) அப்பொழுது சூரபன்மன் இரணியனைப்பார்த்து, ஐயனே! நீ பகைவர்களுக்குப் பயந்து அநேக விநயங்களை எல்லாம் முன்னே உரைத்தனை; இப்பொழுது அதற்கு மாறாய் அவர்களோடு போர்புரிந்து வெற்றியுறக் கருதியதென்னை என்று கேட்டான். உடனே இரணியன் உனது பிள்ளையான நான் பகைவர்களுக்கு அஞ்சுவேனோ என்றுகூறினான்.—எ-று. (௪௯)

தாதை யன்னதோர் வேலையின் மைந்தனைத் தழீஇக்கொண்
டீது நன்றுநன் றுன்பெருந் தானையோ டெழுந்து
போதி யென்றலும் விடைகொடு புரந்தனிற் போந்து
மாதி ரம்புகழ் கின்றதன் றுறையுளில் வந்தான்.

(இ-ள்.) அப்பொழுது தந்தையான சூரபன்மன் தன் மகனை கட்டித்தழுவிக்கொண்டு இது நல்லது, இது நல்லது, இனி உனது பெரிய சைனியங்களுடனே நீ பிரயாணமாகிப் போகக்கடவை என்று கூறுதலும், அவனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்து திக்குக்களிலுள்ளவர்கள் புகழ்கின்ற தனது அரண்மனைக்குச் சென்றான்.—எ-று (௫௰)

நிறங்கொண் மேருவை நிலாக்கதி ருண்டநீர் மையைப்போன்
மறங்கொள் சூர்மக னுடக மெய்யில்வச் சிரத்தின்
றிறங்கொள் சாலிகை கட்டினன் றூணிபின் செறித்தான்
பிறங்கு கோதையும் புட்டிலுங் கைவிரற் பெய்தான்.

(இ-ள்.) பிரகாசம்பொருந்திய மேருமலையை நிலாவின் கதிர் மூடிக்கொண்ட தன்மையைப்போல வீரம்பொருந்திய இரணியன் தனது பொன்வண்ணமான மார்பில் வைரமணியினாலாகியதென்று கூறத்தக்க கவசமணிந்தனன்; அதன்பின்னர் அம்பறாத்தூணியை பின்னே கட்டினான்; அன்றியும் விளங்காநின்ற கோதையையும் புட்டிலையும் கைவிரல்களில் தரித்தான்.—எ-று. (௫௧)

அடங்க லர்க்குவெங் கூற்றெனு மாடல்வில் லொன்றை
யிடங்கை பற்றினன் வலங்கையிற் பலபடை யெடுத்தான்
றடங்கொண் மோலியிற் றும்பையஞ் சிகழிகை தரித்தான்
மடங்க லாயிரம் பூண்டதேர் புக்கனன் வந்தான்.

(இ-ள்.) பகைவர்களுக்கு வெவ்விய எமனாகவுள்ள ஒரு போர்வில்லினை இடது கையிற் பிடித்தான்; வலது கையில் பலவாயுதங்களை யெடுத்துக்கொண்டான்; பெரிய மகுடத்திற் றும்பைமலர்மாலையை யணிந்தான்; பின்னர் ஆயிரஞ் சிங்கங்களைப் பூட்டியுள்ள ஒருதேரின்மீதேறிப் பிரயாணமாயினன்.—எ-று. (௫௨)

ஆற்றன் மிக்குறு துணைவரா யிரவரு மனிகம்
போற்று மன்னரா யிரவரும் போரணி புனைந்து
காற்றெ னப்படர் கவனமான் றேரிடைக் கலந்து
நாற்றி றற்படை தன்னொடு புடைதனி னடப்ப.

(இ-ள்.) மிக்க வன்மையாளர்களாகிய ஆயிரந்துணைவர்களும், சேனைகளைக் காக்கின்ற சேனாதிபதிகள் ஆயிரம்பேர்களும், போர்க்கோலங்கொண்டு வாயுவைப்போல விரைவாகச் செல்லுகின்ற கவனத்தினையுடைய தேரின்மீதேறி வெற்றியினையுடைய சதுரங்க சேனைகளுடன் மிகவும் அருகில் வாராநிற்ப.—எ-று. (௫௩)

நூறெ ட்டேயெழு நூறுவெள் ளங்நொறி லுடைத்தேர்
சீறும் யானையு மத்தொகை யவுணர்தஞ் சேனை
யாறு நூற்றிரு வெள்ளத்த பரிகளு மனைத்தே
சூறை மாருத மாமென வவன்புடை சூழ்ந்த.

(இ-ள்.) வேகமாகச் செல்லத்தக்க எட்டுநூறுவெள்ளந் தேர்களும், பகைவர் மீது சீற்றங்கொள்ளுகின்ற எண்ணூறுவெள்ளம் யானைகளும், ஆயிரத்திருநூறுவெள்ளம் அசுரசைனியங்களும், ஓராயிரத்திருநூறு வெள்ளங் குதிரைகளும் ஆகிய இவைகள் சுழற்காற்றைப்போல அவனருகிற் சூழ்ந்தன.—எ-று. (௫௪)

துடிக றங்கின கறங்கின பேரிதுந் துபிப்பே
ரிடிக றங்கின வலம்புரி கறங்கின வெடுக்குங்
கொடிக றங்கின தானைகள் கறங்கின குணித்துக்
கடிக றங்கின கறங்கின கழுகொடு காகம்.

(இ-ள்.) உடுக்கைகள் முழங்கின; பேரிகைகளும் துந்துபிகளுமாகிய பெரிய இடிகள் முழங்கின; வலம்புரிச்சங்கங்கள் முழங்கின; மேலே யெடுத்துப்பிடிக்கின்ற கொடிகள் சுழன்றன; சேனைக ளாரவாரித்தன; கூத்தாடிக்கொண்டு பிசாசுகள் சுழன்றன; கழுகுகளும் காகங்களும் சுழன்றன.—எ-று. (௫௫)

வசலை மென்கொடி வாடிய தன்னநுண் மருங்கிற்
கிசலை யம்புரை சீறடிக் கிஞ்சுகச் செவ்வாய்ப்
பசலை சேர்முலை மங்கையர் விழிக்கணை பாய
வசலை மங்கைதன் மெய்த்தனு வளைத்திட வகன்றான்.

(இ-ள்.) அவன் மெல்லிய வசலைகொடி வாடினாற்போல விளங்குகின்ற நுண்ணிய விடையினையும், தளிர்போன்ற சிறிய காலினையும், செம்முருக்கமலர்போன்ற செந்நிறமான வாயினையும், தேமல் பொருந்திய தனபாரத்தினையுமுடைய பெண்களுடைய கூரிய கண்களாகிய அம்புகள் தன்மீதுபட பூமிதேவியினுடலம் நெளியச்சென்றான்.()

அறந்த லைப்படு மிரணிய னனிகால் வகையும்
புறந்த லைப்படத் துயரமுந் தலைப்படப் போந்து
மறந்த லைப்படு பூதர்க ளார்ப்பொலி வழங்கும்
பறந்த லைக்களம் புக்கன னமரர்மெய் பனிப்ப.

(இ-ள்.) (அசுரனுக விருப்பினும்) தருமவழியிலே நிற்கும் இரணியன் தனது சேனைகள் நால்வகைகளும் புறத்தின் முந்திச்செல்ல, துக்கமு மதிகமாகச்சென்று வீரத்தின்மிக்க பூதர்கள் ஆரவாரஞ்செய்கின்ற போர்க்களத்தில் தேவர்களினுடல் நடுங்கப் புகுந்தனன்.—எ-று. (ருஎ)

விண்ணு ளோர்களும் பிறருமவ் வியனகர் நோக்கித்
துண்ணெ னத்துளங் குறுவதுங் கண்டனன் றென்னுண்
மண்ணி னுள்ளபா ரிடமெலாம் வல்லைவந் தழித்து
நண்ணு கின்றதுங் கண்டன னன்றென நக்கான்.

(இ-ள்.) தேவர்களு மற்றையர்களும் அப் பெரியநகரத்தைப் பார்த்து துண்ணென்று நடுங்குவதையுங் கண்டனன்; முன்னே மண்ணுலகிலிருந்த பூதக்கூட்டங்களனைத்தும் விரைவாகவந்து நகரத்தை அழித்துக்கொண்டு நிற்றலையும்பார்த்து இது நன்று என்றுகூறிச் சிரித்தான்.—எ-று. (ருஅ)

தனது மாநக ரழிந்தது கண்டனன் றணியா
முனிவு கொண்டனன் வெய்துயிர்த் தனனுடன் முற்று
நனி வியர்ப்புள தாயினன் மருங்குற நணுகு
மனிக வேந்தரைத் துணைவரை நோக்கியீ தறைவான்.

(இ-ள்.) இரணியன் தனது பெரியநகரம் அழிந்ததைப்பார்த்து குறையாத கோபங்கொண்டு பெருமூச்சுவிட்டுச் சரீரமுழுமையும் மிகவும் வியர்வை யுள்ளவனாய் அருகாக வருகின்ற சேனுபதிகளையும் துணைவர்களையும்பார்த்து இதனைக் கூறுவான். ()

ஆயிரம் வெள்ள மோரொரு திசையினி லாக்கி
நீயிர் யாவரு நால்வகைத் தாகியே நீங்கி
மாயி ருந்திறற் சாரத வீரரை வளைந்து
போயெ திர்ந்துவெஞ் சமர்புரி வீரெனப் புகன்றான்.

(இ-ள்.) ஒவ்வொரு திசைக்கு ஆயிரம்வெள்ளமாகப் பகுத்து நான்குதிசைகளுக்கும் அநுப்பி நீங்களனைவரும் நான்கு பாகமாகப்பிரிந்து மிக்க சாமர்த்தியத்தினையுடைய பூதவீரர்களைச் சூழ்ந்துசென்று எதிர்த்துக் கொடும்போர்செய்யுங்களென்று கூறினான்.—எ-று. (கூ0)

அக்க ணந்தனிற் றுணைவரு மனிகமன் னவருந்
தக்க தேயென விரணியன் மொழிதலைத் தாங்கித்
திக்கி லாயிரம் வெள்ளமாச் சேனையைக் கொண்டு
தொக்க பாரிட வெள்ளமேற் போயினர் சூழ.

(இ-ள்.) அப்பொழுது துணைவர்களுஞ் சேனுபதிகளும் நல்லதென்று இரணியனுடைய வாக்கியத்தைத் தலைமேற்கொண்டு ஒருதிசைக்கு ஆயிரம்வெள்ளமாக அழைத்துக்கொண்டு அங்கு நெருங்கி நிற்கின்ற பூதசேனைகள்மீது சூழ்ந்து சென்றார்கள். ()

தானை மன்னருந் துணைவருந் திசைதொறுந் தழுவிப்
போன காலையி லாடகன் குடபுலம் புகுதுஞ்

சேனை முன்கொடு சென்றன னின்னதோர் செய்கை
மான வேற்படைக் காவலன் கண்டனன் மன்னோ.

(இ-ள்.) சேனாபதிகளுந் துணைவர்களும் திக்குகள்தோறும் கலந்துபோயின வுடனே, இரணியன் மேற்றிசைக்குச் சைனியத்தை முன்னிலையாகக்கொண்டு சென்றான்; இந்தச் செய்கையைப் பெரிய வேற்படையினையுடைய சேனாபதியான வீரவாகு தேவர் கண்டனர்.—எ-று. (சுஉ)

வீர மொய்ம்பின னதுகண்டு வெஞ்சமர்க் குறுவான்
சூரன் மைந்தரு ளொருவனோ சுற்றமா யினனோ
வாரி வன்கொலென் றையுறு காலையி னயலே
நார தன்னெனு முனிவரன் வந்திவை நவில்வான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் அதனைப்பார்த்து வெவ்விய போருக்கு வருபவன் சூரன் பிள்ளைகளி லொருவனோ? அல்லது அவன் சுற்றத்தினர்களிலொருவனோ? இவன் யாவன் என்று சந்தேகிக்கின்ற சமயத்தில், நாரதன் என்னும் முனிசிரேஷ்டன் அவ்விடத்திற்கு வந்து இவைகளைக் கூறுகின்றனன்.—எ-று. (சுஙு)

இரணி யன்னெனு மைந்தனைச் சூரனிங் கேவ
வருண னென்னவந் தடைந்தன னம்படை யலைப்ப
வருண னிந்திரன் மந்திரி மறலிமா திரத்தின்
முரணு றும்படை நான்கையு முன்னுறச் செலுத்தி.

(இ-ள்.) சூரபன்மன் இவ்விடத்திற் கிரணியன் என்னும் பிள்ளையை அனுப்ப அவன் வருணாஸ்திரத்தையும், இந்திராஸ்திரத்தையும், குபேராஸ்திரத்தையும், எமாஸ்திரத்தையும், திக்குகளி லிம்மாறுபாடுபொருந்திய நான் அஸ்திரங்களையும் முன்னே செலுத்திப் பின்னால் இவ்விடத்திற்கு நமது சேனையை வருத்தும்வண்ணம் அருணனைப்போல் வந்து சேர்ந்தனன்.—எ-று. (சுச)

மாயை வல்லவன் படைபல பரித்தவன் வஞ்ச
மாய சூழ்ச்சிகள் பற்பல தெரிந்தவ னவனை
நீய லாதுவெல் கின்றவ ரில்லையா னினக்கிங்
கேய தன்மையி னமர்தனைப் புரிதியா லென்றான்.

(இ-ள்) அவ்வாறு வந்த இவன் மாயைகளில் வல்லவன்; பல வாயுதங்களைத் தாங்கினவன்; வஞ்சனையோடுகூடிய பல மாயாமயமான அநேக தந்திரங்களை யுணர்ந்தவன்; ஆதலால் அவ்விரணியனை உன்னை அன்றி வெல்பவர்களில்லை; இனி உனக்கு எவ்வண்ணஞ் சம்மதமோ அவ்வண்ணம் போர்புரியக்கடவை என்று கூறினான்.—எ-று. சுரு

என்று கூறியே நாரதன் விண்மிசை யேக
நன்று நன்றென வன்னதை வினவியே நகைத்துத்
துன்று பாரிடத் தலைவரைச் சுற்றமா யுளரை
வென்றி மொய்ம்புடை யாண்டகை நோக்கியே விளம்பும்.

(இ-ள்.) என்றுரைத்த நாரதமுனிவன் ஆகாயத்திற் செல்லுதலும், வீரவாகு தேவ ரதனைக்கேட்டுச் சிரித்து நெருங்கிய பூதராசர்களையும், சுற்றத்தினரான வீரகேசரி யாதியரையும் பார்த்து மேல்வருமாறு கூறுகின்றனர்.—எ-று.. (சுசு)

ஏற்ற தானையை நமையெலாஞ் சூழ்ந்திட வேவி
மாற்ற லன்மகன் குறுகுவா னீவிரும் வல்லே

நாற்றி சைக்கணுஞ் சாரதப் படையொடு நடந்து
வீற்று வீற்றுநின் றமர்புரி வீரென விளம்பி.

(இ-ள்.) தகுந்த சைனியங்களைப்பகுத்து நம்மனைவரையும் சூழ்ந்துகொள்ளு மாறு அனுப்பிப் பகைவனாகிய சூரபன்மனுடைய பிள்ளையான இரணியன் வருகின்றான்; அதனால் நீங்களும் விரைவாக நான்கு திக்குக்களிலும் பூதசைனியங்களுடன் சென்று வரிசைவரிசையாக நின்று போர்புரியுங்களென்றுரைத்து.—எ-று. (சுஎ)

வீர ரெண்மரை யிலக்கரை வியன்கணத் தவரைப்
பாரி டங்களை நால்வகைப் படும்வகை பகுத்தே
யீரி ரண்டுமா திரத்தினுஞ் சென்றிட வேவிச்
சூரன் மாமகன் வருதிசைப் படர்ந்தனன் றோன்றல்.

(இ-ள்.) எட்டுவீரர்களையும், இலக்கர்களையும், சிறந்த கணத்தவர்களையும், பூத சேனைகளையும் நான்குபாகமாகுமாறு பகுத்து நான்குதிசைகளிலுஞ் செல்லும்வண்ணம் அனுப்பித் தலைவராகிய அவ்வீரவாகுதேவர் சூரபன்மனுடைய சிறந்தமகனான இரணியன் வருந்திசையை நோக்கிச்சென்றனர்.—எ-று. (சுஅ)

காலை யாங்கதி னவுணமாப் பெரும்படை கடிதி
னாலு மாதிரந் தன்னினு நரலைசூழ்ந் தென்ன
வோல மோடுவந் தணுகலு முருத்துவெம் பூத
சாலம் யாவையு மேற்றன சமரினைப் புரிய.

(இ-ள்.) அப்பொழுது மிகவும் பெரிய அசுரசைனியங்கள் விரைவாக நான்கு திசைகளிலும் கடல் சூழ்ந்தாற்போல ஆரவாரத்தோடு வந்துசேருதலும், உடனே கோபங்கொண்டு கொடிய பூதக்கூட்டங்கள் அனைத்தும் போர்புரியுமாறு நெருங்கின.()

மற்ற வேலையி லவுணர்கண் மழுப்படை நாஞ்சில்
கற்றை யஞ்சுடர்ப் பரிதிவார் சிலையுமிழ் கணைகள்
கொற்ற மிக்குறு தோமரந் தண்டெழுக் குலிச
மொற்றை முத்தலை வேன்முதற் படையெலா முய்த்தார்.

(இ-ள்.) பூதர்களெதிர்த்து வந்த அந்தசமயத்தில், அசுரர்கள் மழுவாயுதங்கள், கலப்பைகள், கூட்டமான கிரணங்களையுடைய சக்கரங்கள், நீண்ட விற்கள், கக்குகின்ற அம்புகள், மிக்க வெற்றிபொருந்திய தோமரங்கள், தண்டங்கள், எழுக்கள், குலிசங்கள், திரிசூலங்கள் முதலான எல்லாவாயுதங்களையும் விட்டார்கள்.—எ-று. (எ0)

தோடு சிந்திய தேனறு மராமரத் தொகையின்
காடு சிந்தினர் கதைகளுஞ் சிந்தினர் கணிச்சி
நீடு சிந்துரப் பருவரை சிந்தினர் நேமி
மாடு சிந்தினர் சிந்தினர் பூதரில் வலியோர்.

(இ-ள்.) பூதர்களில் வல்லபசாலிகளான பலர், இதழ்களாற் சிதறப்படுகின்ற தேன் நீங்காத மராமரவிருக்கங்களின் காடுகளைப் பகைவர்கண்மீது வீசினார்கள்; அன்றியும் கதைகளையும் பிரயோகித்தார்கள்; கண்ட கோடரிகளை எறிந்தார்கள்; அன்றியும் உயர்ந்த யானைகளையுடைய பெரிய மலைகளைச் சிதறினார்கள்; சக்கரங்களை அருகே விட்டார்கள்.—எ-று. (எக)

தலையி ழந்தனர் கரங்களு மிழந்தனர் தாளி
னிலையி ழந்தனர் சாரத ரவுணரு நெடுங்கை

மலையி ழந்தனர் தேர்பரி யிழந்தனர் மறவெங்
கொலையி ழந்தனர் மடிந்தனர் குருதியுட் குளித்தார்.

(இ-ள்.) பூதர்கள் தலைகளை இழந்தார்கள்; கைகளை இழந்தார்கள்; பாதங்களி னடிப்புறங்களை இழந்தார்கள்; அசுரர்களும் நீண்ட கைகளாகிய மலைகளை இழந்தார்கள்; தேர்களையுங் குதிரைகளையும் இழந்தார்கள்; மறத்தொடு பகைவரைக் கொல்லுகின்ற வெவ்விய கொலைத்தொழிலை இழந்தார்கள்; இறந்தவர்களாய் இரத்தநீருண் மூழ்கினார் கள்.—எ-று. (எ௨)

வசையில் பூதரு மவுணரு மிவ்வகை மயங்கித்
திசைதொ றும்பொரு கின்றுழித் தனித்தனி சேர்ந்து
விசைய மொய்ம்பினுன் விடுத்திடு வீரரும் விறல்சே
ரசுர வேந்தரும் வெஞ்சமர் விளைத்தன ரன்றே.

(இ-ள்.) வசைமொழியற்ற பூதர்களும் அசுரர்களும் இவ்வண்ணமாகக்கலந்து திக்குகடோறும் போர்புரிகின்ற சமயத்தில், தனியே தனியே எதிர்த்து வீரவாகுதேவ ரால் விடப்பட்ட வீரர்களும், வெற்றிபொருந்திய அசுரமன்னவர்களும் கொடும்போர் புரிந்தார்கள்.—எ-று. (எ௩)

அனைய வெல்லையின் வீரவா குப்பெய ரறிஞன்
கனகன் முன்வருஞ் சேனைமாப் பெருங்கடல் கண்டு
முனிவு கொண்டுதன் பாணியின் மூரிவெஞ் சிலையைக்
குனிவு செய்தன னறத்தனிக் கடவுளுங் குனிப்ப.

(இ-ள்.) அப்பொழுது வீரவாகு தேவனென்னுந் திருநாமம்பெற்ற ஞானியான வர் இரணியனுக்கு முன்னே வருகின்ற பெரிய சேனாசமுத்திரத்தைப்பார்த்துக் கோப ங்கொண்டு தனது கையிலுள்ள பெரிய வெவ்விய வில்லினை ஒப்பற்ற எமதருமதேவ னுங் கூத்தாட வளைத்தனர்.—எ-று. (எச)

மலைவ ளைத்திடு தன்மைபோல் வானுற நிமிர்ந்த
சிலைவ ளைத்தன னொலி யெடுத்தனன் றெழித்தா
னலைவ ளைத்திடு கடலெலா நடுங்கிய வனந்தன்
றலைவ ளைத்தன னெண்டிசை நாகமுஞ் சலித்த.

(இ-ள்.) மலையை வளைக்குமாறுபோல வானளாவ வுயர்ந்திருந்த ஒரு வில்லினை வளைத்து நாணொலிகாட்டிக் கர்ச்சித்தனர். உடனே அலைகளையுடைய கடல்களனைத்து நடுங்கின; அனந்தனெனவன் தலையை வளைத்துக்கொண்டனன்; எட்டுத்திக்குக்களுஞ் சலி த்தன.—எ-று. (எரு)

காலை யங்கதின் வீரமொய்ம் புடையதோர் காளை
கோலொ ராயிரப் பத்தினைக் குனிசிலைக் கொளுவி
மேல தாகிய கானிடைப் பொழிதரு மேக
சால மாமெனப் பொழிந்தன னவுணர்தா னையின்மேல்.

(இ-ள்.) அப்பொழுது வீரம்பொருந்திய தோள்களையுடைய வாலிபராகிய வீர வாகுதேவர் பதினாயிரம் அம்புகளை, வளைத்த வில்லினில் வைத்து மரங்களாலுயர்வுபொ ருந்திய காட்டிற்பெய்கின்ற மேகக்கூட்டங்களைப்போல அசுரசைனியங்கண்மேற் பெய் தனர்.—எ-று. (எசு)

பிடிகு றைந்தன களிற்றினங் குறைந்தன பிடிக்குங்
கொடிகு றைந்தன கொய்யுளைப் புரவிதேர் குறைந்த

வடிகுறைந்தன தலைகளுங் குறைந்தன வம்பொற்
றொடிகுறைந்தன குறைந்தன வவுணர்தந் தோள்கள்.

(இ-ள்.) பெண்யானைகள் குறைபட்டன; யானைக்கூட்டங்கள் குறைந்தன; பிடிக்கப்படுகின்ற கொடிகள் குறைந்தன; பிடரியிலு ரோமங்களையுடைய குதிரைகளும் தேர்களும் அழிந்தன; இவையன்றி, கால்களறுபட்டன; தலைகளும் அறுபட்டன; அழகிய பொன்னாலாகிய தோள்வளைகள் அறுந்தன; அவைகளுடன் அசுரர்களின் தோள்களுங் குறைந்தன.—எ-று. (எள)

எறித லுற்றிடு சூறையாற் பல்கவ டிற்று
முறித லுற்றுவீழ் பொதும்பர்போன் மொய்ம்பன்வா ளியினாற்
செறித லுற்றதம் வடிவெலாஞ் சிதைந்துவே றாகி
மறித லுற்றன நால்வகைப படைகளு மயங்கி.

(இ-ள்.) வீசுகின்ற சுழற்காற்றினால் பலகிளைகளொடிந்து முறிந்து விழுகின்ற சோலையைப்போல வீரவாகுதேவர் விட்ட அம்புகளால் சதுரங்கசேனைகளும் நெருங்கிய தமது வடிவங்கண் முற்றிலும் சிதைந்து வேறாகி மயங்கி விழுந்தன.—எ-று. (எஅ)

வேறு.

ஆரியன் விட்ட வயிற்கணை பாய
மூரி மதக்கரி முற்றுயர் யாக்கை
சோரி யுகுப்பன தொல்பக லின்கண்
மாருத முய்த்திடு வன்னியை யொப்ப.

(இ-ள்.) அழகாளராகிய வீரவாகுதேவர் விட்ட கூரிய வம்புகள்பட நிமிர்ந்த மதத்தினையுடைய உயர்ந்த யானைகளின் உடலங்கள் உச்சிப்போதிற் காற்றினாற் சிதறிவிடப்பட்ட தீயைப்போல இரத்தமொழுக்குவன.—எ-று. (எகூ)

விறல்கெழு மொய்ம்பன் விடுத்திடு கின்ற
பிறைமுக வாளி பெருங்கரி யின்கை
யறைபுரி கின்றவ ராத்தொகை தன்னைக்
குறைமதி சென்று குறைப்பன போலாம்.

(இ-ள்.) வெற்றியொடு விளங்குகின்ற தோள்களையுடைய வீரவாகுதேவர் விடுகின்ற அர்த்தசந்திராஸ்திரங்கள் பெரிய யானையின் கைகளை, அரவக்கூட்டங்களைக் குறைமதிசென்று குறைக்குமாறுபோல அறுக்கின்றன.—எ-று. (அ0)

வித்தக வீரன் விடுங்கணை வேழ
மத்தக முற்றிட மற்றவை போழ்ந்தே
முத்த முகுப்ப முகந்திடு கும்ப
முய்த்திடு நல்லமு தச்சுதை யொக்கும்.

(இ-ள்.) ஞானியான வீரவாகுதேவர் விடுகின்ற அம்புகள் யானைகளின் மத்தகங்களை அடைய, அதனாலவைகள் பிளந்து முத்துக்களைச் சிந்துகின்றன; அவைகளைவைகளைப்போல வென்னின், அமிர்தத்தை முன்னே உட்கொண்டிருந்த குடங்கள் நல்ல அமிர்தச்சுதைகளை பின்னர்க் கீழே சிதறுதலை யொக்கும்.—எ-று. (அக)

கரம்பட ருங்கவி கைத்தொகை தேரி
னுரம்படு கால்க ளுலம்புரை தோளான்
சரம்பட விற்ற தலைத்தலை யுற்ற
வரம்பின் மதிக்குறை மல்கிய வென்ன.

(இ-ள்.) கரங்களில் விரிவாகப்பிடித்திருந்த குடைக்கூட்டங்களும், இரதங்களின் வன்மைபொருந்திய கால்களும், திரண்ட கல்லினையொத்த தோளினையுடைய வீரவாகுதேவர் விட்ட அம்புகள்பட அறுபட்டனவாய் இடங்கள்தோறும் இடங்கள்தோறும்அளவற்ற சந்திரதுண்டங்கள் நெருங்கிக் கிடந்தாற்போலக்கிடந்தன.—எ-று (அஉ)

மேக்குயர் மொய்ம்பன் விடுங்கணை யாற்பாய்
மாக்க டணிந்து மறிந்து கிடந்த
தேக்கிய தெண்கட லிற்றிரை முற்றுந்
தாக்கிய சூறை தனக்கழிந் தென்ன.

(இ-ள்.) மேலே உயர்ந்து விளங்குந் தோளினையுடைய வீரவாகுதேவர்விட்ட அம்பினால் நிறைந்த தெளிந்த தண்ணிய கடலிலுள்ள அலைகண்முழுமையும் அடித்த சுழல்காற்றிற்கு அழிந்தாற்போல குதிரைகள் வெட்டுண்டு விழுந்துகிடந்தன—எ-று.()

பெருந்தகை விட்ட பிறைத்தலை வாளி
திருந்தலர் தோலுறு செங்கை துணிப்ப
வருந்திட மாமதி வெளவும ராவைத்
துரந்திடு கின்றதன் சுற்றம தென்ன.

(இ-ள்.) பெருந்தகமையினையுடைய வீரவாகு தேவர்விட்ட அர்த்தசந்திரனை ஒத்த அம்புகள் வருந்தும் வண்ணம் பூரணசந்திரனைப் பிடிக்கின்ற யாம்பினை ஒட்டுகின்ற அச்சந்திரனுடைய இனத்தைப்போல பகைவர்களுடையதுவும், மலைப்பாம்பைப்போல காணப்படுவதுமான யானைகளின் தும்பிக்கைகளை அறுக்கின்றன.—எ-று. (அச)

வேறு.

தக்க வன்மையாற் சிறந்துளோர் தமதுமாற் றலர்மேன்
மிக்க வெஞ்சினத் தேகல்போ லனிகவெள் ளத்திற்
றொக்கு வந்துவந் திழிந்தசெஞ் சோரியின் வெள்ள
மைக்க ருங்கடல் வெள்ளத்தி னூடுபோய் மடுத்த.

(இ-ள்.) தகுந்த வலிமையிற் சிறந்தவர்களாக வுள்ளவர்கள் தம் பகைவர்மீது மிகுந்த கோபத்துடன்செல்லுமாறுபோல, சேனைவெள்ளத்திற் பொருந்தி வந்து வந்து ஒழுகுகின்ற செந்நிறமான இரத்தவெள்ளங் கரிய கடல்வெள்ளத்தின்மீது சென்று கலந்தன.—எ-று. (அரு)

குரைத்தி டும்பெரு ஞாளியுங் குறுநரிக் குழாமு
நிருத்த மேயின கவந்தமு நிணனுண்டு செருக்கி
யுருத்த குந்திறற் காளியுங் கூளியு மொருசார்க்
கிருத்தி மங்களுந் தலைத்தலை மயங்கின செழுமி.

(இ-ள்.) குரைக்கின்ற பெரிய நாய்களும், குள்ளநரிக்கூட்டங்களும், ஆடாநின்ற கவந்தங்களும், நிணங்களையுண்டு செருக்குற்று அஞ்சத்தக்க வியல்பொடுநிற்கின்ற காளிகளும் கூளிகளும், ஒருசார்பினவான பூதகணங்களும் இடங்கள்தோறும் இடங்கள் தோறும் நெருங்கி மயங்கின.—எ-று. (அசு)

சிலையின் வல்லவ னிவ்வகை கணைமழை சிதறி
நிலைய வெல்லையின் மலைந்திடுந் தானவர் நீத்த
முலைப டுங்கனன் முன்னுறு மிழுதென வுடைந்து
குலைகு லைந்துதம் முயிருடன் யாக்கையுங் குறைந்த.

(இ-ள்.) விற்போரில் வல்லுநராகிய வீரவாகுதேவர் இவ்வண்ணம் மழைபோல கணைகளைவிட்டு நின்றவுடனே, போர்புரிந்த அசுரசைனிய வெள்ளங்கள் உலைக்களத்திற் பொருந்திய தீயின்முன்னரான வெண்ணெயைப்போல உடைந்து நிலைகுலைந்து தங்களுயிர்களுடன் உடலங்களுங் குறைந்தனவாயின—எ-று. (அஎ)

ஆளி யாயிரம் பூண்டதேர் மிசைவரு மவுணர்
மீளி யாயது கண்டன னெடுத்ததோர் வில்லின்
வாளி யாயிர மொருதொடை தூண்டியே மறவெங்
கூளி யாயிர கோடியோ ரிமைப்பினிற் கொன்றான்.

(இ-ள்.) ஆயிரம் யாளிகளைப் பூட்டியுள்ள இரதத்தின்மீது வாராநின்ற அசுரவிடலையான இரணியன் அதனைக் கண்டு ஒரு வில்லினை எடுத்து நாணியேறிட்டு அதனில் ஆயிரம் அம்புகளைவைத்து ஒரு தடவையாக விட்டு மனமும் வெவ்விய தன்மையையும் உடைய ஆயிரங்கோடிக் கூளிகளைக் கண்ணிமைப்பொழுதிற்குள் கொன்றனன்.()

கொன்ற காலையிற் பூதவெம் படைகளுங் குலைந்து
சென்ற மாதிரந் தெரிந்தில தழல்விடந் தெறக்கண்
டன்று போகிய தேவரோ யாயின ரதனை
நின்ற தானையந் தலைவரிற் கண்டன னீலன்.

(இ-ள்.) இரணியனிவ்வண்ணம் பூதர்களைக்கொன்றவுடனே வெவ்விய பூதப்படைகளும் நிலைகுலைந்து திசைதெரியாமலோடி மறைந்தனவாய் முன்னர் ஆலகாலந் தோன்றிய ஞான்று ஓடிய தேவர்களைப்போலவாயின. இவ்வண்ணம் பூதர்கள் நிலைகுலைந்தோடியவதனை அங்குநின்ற சேனாதிபர்களுள் நீலனென்பவன் கண்டான்.—எ-று.

கண்ட நீலனு மிறுதிநா ளழலெனக் கனன்று
திண்டி றற்கெழு மன்னவன் மதலைமுன் சென்றே
யண்ட முந்தலை பனித்திட வுருமென வார்த்தா
னுண்டு போரினி யென்றன ரமரரா யுள்ளோர்.

(இ-ள்.) அதனைக்கண்ட நீலனும் ஊழிநாளிற்றோன்றும் தீயைப்போல கோபங்கொண்டு மிக்க வன்மையினையுடையவனான சூரபன்மனுடைய பிள்ளையான இரணியன் எதிரேசென்று அண்டமு நடுநடுங்க இடிஇடித்தாற்போல ஆரவாரித்தனன்; இத்தொனியைக்கேட்ட தேவர்களாகவுள்ளவர்கள் இனிப் போருண்டு என்று கூறினார்கள்.

காலை யன்னதி லவுணர்த மிறைமகன் கனன்று
வேலை தொன்றினை யாகமூழ் குற்றிட விடுப்ப
நீலன் வன்மைபோய் நின்றிலன் சென்றன னெடிய
சால மொன்றுகொண் டவன்றடந் தேரினைத் தடிந்தான்.

(இ-ள்.) அப்பொழுது அசுராதிபனாகிய இரணியன் சீற்றங்கொண்டு ஒருவேலினை உடம்பிற்பமொற விடுதலும், அந்நீலன் அதனால் வன்மையழிவுற்று நில்லாமல் விரைந்து சென்று ஒருபெரிய மரத்தினை பறித்துக் கொண்டுவந்து அவ்விரணியனிருந்த பெரிய தேரினை அடித்து ஒடித்தான்.—எ-று. (கூக)

வைய மங்கழி வெய்தலு மவுணர்கோன் மற்றோர்
செய்ய தேரிடை வல்லையிற் றாவிநாண் செறித்துக்
கையில் வாங்கிய சராசனத் திடையுறக் கடைநாட்
பொய்யின் மாமுகி லாமெனச் சுடுசரம் பொழிந்தான்.

(இ-ள்.) இரதமழிந்தவுடனே அசுராதிபனாகிய இரணியன் வேறேயொரு செவ்விய இரதத்தில் விரைவாகக்குதித்து வில்லில் நாணேற்றிக் கையாற்பிடித்த வில்லினின்றும் ஊழிக்காலத்துத் தவறாது பெய்கின்ற சிறந்த மேகங்களைப்போல சுடுசரங்களை விட்டான்.—எ-று. (௬௨)

பொழிந்த வார்கணை முழுவது மவனுரம் புகவு
மழிந்தி லன்சிறி தஞ்சிலன் குலகிரி யன்றி
யொழிந்த குன்றெலாம் பறித்தனன் விசியே யுடலத்
திழிந்த சோரிநீர் சொரிதர நின்றன னிமையான்.

(இ-ள்.) இரணியன்விட்ட நீண்ட அம்புகள் முழுமையும் அந்நீலனுடைய மார்பிற்சென்று புகுதலும், அதற்காக வவன் அழிந்தானில்லை; சற்றேனு மஞ்சினனு மதுவும் இல்லை. பின்னர் குலமலைகளை யன்றியுள்ள மலைகளையெல்லாம் பறித்தெறிந்து தன்னுடலினின்றும் இழியாநின்ற இரத்தநீர் ஒழுக விமையாதவனாக நின்றனன்.—எ-று.()

நிருப னாகிய வாடகன் றன்னெதிர் நீலன்
மாரபி னூக்கிய வரையெலாஞ் சரங்களான் மாற்ற
விரைவி னோடுபோ யவன்படந் தேரினை வெகுளா
வொருகை யாலெடுத் தெறிந்தன னமரரு முலைய.

(இ-ள்.) அரசனாகிய இரணியன் எதிரில் நீலன் முறையேவிட்ட மலைகளனைத்தையும் அம்புகளாலுடைத்து விலக்குதலும், பின்னர் நீலன் வேகமாகச்சென்று அவ்விரணியனேறியிருந்த பெரிய தேரினை ஒருகையினாலெடுத்துக் கோபத்துடன் தேவர்கள் உடலம் நடுங்குமாறு மேலே எறிந்தனன்.—எ-று. (௬௪)

ஆற்ற லந்தடந் தேரினை வீசிட வதுவுங்
காற்று லாய்நிமிர் விண்ணுறப் போயது காளை
மாற்றோர் வையமேற் பாய்ந்திட வுன்னினன் வரவு
மேற்றெ ழுந்தெதிர் புக்கன னீலனு மிகலோன்.

(இ-ள்.) அழுத்தமான இயல்பினதாக வமைக்கப்பெற்றுள்ள பெரிய இரதத்தை நீலனெடுத்தெறிதலும், அவ்விரதம் காற்றுயர்ந்துலாவுகின்ற வானத்தின்மேலே சென்றது; உடனே அதனிலிருந்த வாலிபனான இரணியன் அதனினின்றும் விலகி வேறேயொரு தேரின்மீது ஏறுவான் வருதலும், அதனைக்கண்ட நீலனாகிய வன்மையாளனும் மேலே வந்துகொண்டிருக்கு மவனெதிரே தானும் ஆகாயத்திற் சென்றனன்.—எ-று.

நிற்றி நிற்றிநீ யென்றுகொண் டேகியே நீல
னெற்றி னானவ னுரத்திடை யவுணனு மிவனைப்
பற்றி வீசினன் பூதனு மீண்டுதன் பதத்தாற்
செற்ற மோடுதைத் துருட்டிவா னுருமெனத் தெழித்தான்.

(இ-ள்.) நீ நில்நில் என்று கூறிக்கொண்டு சென்று நீலனானவன் இரணியனுடைய மார்பினிலடித்தான்; உடனே அவ்விரணியனும் இவனைப் பிடித்தெறிந்தான்; உடனே பூதனான நீலன் திரும்ப வவனெதிரிற் சென்று கோபத்தினால் அவனை உதைத்துத் தள்ளி பேரிடியைப்போல ஆரவாரித்தனன்.—எ-று. (௬௬)

நெறிந்த பங்கிசேர் நீலனங் குதைத்திட நிருதர்
முறிந்து நீங்கிய களத்திடை வழுக்கிவீழ் முகில்போன்
மறிந்து வீழ்தரு மவுணன்மேற் பாய்ந்தனன் மகவா
னெறிந்த வச்சிரப் பெரும்படை யிதுவெனாவென் றிசைப்ப.

(இ-ள்.) நெறித்த குஞ்சியினையுடைய நீலனென்பவன் உதைக்கவும், அசுரர்கள் உடைந்தோடின போர்க்களத்தினில் ஆகாயத்தினின்றும் தவறிவிழுகின்ற மேகத்தைப்போல மறிந்துவிழுகின்ற இரணியாசுரன்மீது இந்திரனெறிந்த வச்சிராயுதமோ என்று கூறுமாறு பின்னும் மந்நீலன் பாய்ந்தனன்.—எ-று. (௯௭)

வீழ்ந்த காளையைத் தன்பெருந் தாள்களான் மிதிப்பக்
கீழ்ந்து போயது மாநில மவன்முடி கிழிந்த
போழ்ந்த தாகமும் வாய்வழி குருதிநீர் பொழிய
வாழ்ந்து வெந்துய ருழந்தனன் செய்வதொன் றறியான்.

(இ-ள்.) கீழே விழுந்த இரணியனைத் தனது பெரியகால்களால் உதைத்தனன்; அதனாற் பெரிய பூமி கிழிந்தது; அவனுடைய தலையும் கிழிந்தது; மார்பும் பிளந்தது; வாயின்வழி இரத்தநீரொழுக அவ்விரத்தத்தின் முழுகிக் கொடிய துன்பத்தை இன்னது செய்வது என்று உணராத இரணியன் அநுபவித்தனன்.—எ-று. (௯௮)

திறல ழிந்தனன் சீற்றமு மழிந்தனன் செங்கோன்
மறலி கொள்வதற் கணியனே யாதலு மனத்தி
லிறுதி யெய்திய தீங்கினிச் செய்வதெ னெமக்கோ
ருறுதி யாதென வுன்னினன் பின்னரொன் றுணர்ந்தான்.

(இ-ள்.) சாமர்த்தியமுமிழந்து கோபமுமிழந்து இனித் தான் செங்கோலினையுடைய எமனாற் கைக்கொள்ளுதற்கு சமீபித்தவனே ஆதலும், தன்மனத்தினில் இவ்வண்ண நினைத்தான் நமக்கோ முடிவுகாலங் கிட்டிவிட்டது; இனி இங்கென்ன செய்யப்போகின்றோம். இனி நமக்குத்தகுந்த ஒருறுதி என்னையென்று ஆலோசித்துப் பின்னர் இவ்வொன்றினை உணர்ந்தனன்.—எ-று. (௯௯)

மாய மொன்றினைப் புரிகுதும் யாமென வல்லே
யாய மந்திரம் புகன்றனன் பூசனை யனைத்துந்
தூய சிந்தையா னிரப்பினன் வேண்டியு துணியா
வாய தெய்வத முன்னின னன்னதோ ரெல்லை.

(இ-ள்.) இவ்விடத்தில் நாமொரு மாயவித்தையைச் செய்வோமெனத் தீர்மானித்து விரைவாக அப்பாயத்திற்காகவேண்டிய வொருமந்திரத்தைச் செபித்து அதற்குரிய பூசைமுழுமையும் நிருமலமான மனநிறைவியற்றினன். பின்னர் வேண்டியதனைத் தீர்மானித்து அம்மந்திரத்தின் அதிதேவதையை நினைத்தனன்; நினைத்தவப்பொழுது.

வேறு.

தன்போலொரு வடிவன்னதொர் சமரின்றலை யணுகா
மின்போலொளிர் தருபல்படை விரவும்படி பரியா
வென்போலெவர் பொருகின்றவ ரெனவீரம துரையா
வன்போரது புரியும்படி வலிகொண்டுமுன் வரலும்.

(இ-ள்.) தன்னையொத்த வொருவடிவம் அந்தப்போர்க்களத்தினில் மின்னலைப்போல விளங்குகின்ற பலவாயுதங்களைப் பொருந்துமாறு தாங்கிக்கொண்டு, என்னைப்போல யாவன் போர்புரிகின்றவன் என்று வீரவசனங்களை யுரைத்துக்கொண்டு வன்மையான போரினைப் புரியும்வண்ணம் பலத்துடனெதிரே வருதலும்.—எ-று. (௧௦௧)

கண்டானது வருகின்றது கடிதேயெதிர் நடவா
வெண்டானவ ரமரின்றலை யிட்டேகிய தொருபொற்
றண்டானது கொண்டேபதன் றலைமோதின னிமையோர்
விண்டானிவற் கழிந்தானென நீலன்றனை வியந்தார்.

(இ-ள்.) நீலனைப்போலியுருவம் வருவதைக்கண்டான், உடனே எதிரே நடந்து சென்று புகழத்தக்க வசுரர்கள் போரிலிட்டகன்ற வொருதண்டத்தைக் கையிலெடுத்து அம்மாயவுருவத்தின் தலைமீது மோதினன்; அப்பொழுது தேவர்களச்செய்கையைப் பார்த்து இவனுக்கு அவன் தோற்றானென்றுரைத்து நீலனைப் புகழ்ந்தார்கள்.—எ-று.

வியக்கும்பொழு தினிலன்னவன் விடுமாயமும் விசையா
லுயக்குற்றவ ரெனவிண்மிசை யுயர்கின்றது காணாத்
துயக்குற்றிடு நீலன்னது தொடர்ந்தான்கரந் திடலு
மயக்குற்றன னெடிதுன்னினன் மண்மீதுறக் கண்டான்.

(இ-ள்.) தேவர்கள் நீலனைப்புகழ்ந்தவுடனே அவ்விரணிய னனுப்பியமாயமும் மிகவும் வருத்தமுற்றவர்களைப்போல ஆகாயத்திற் கிளம்பிப்போவதைக்கண்டு, (நெடு நாழிகையாகப் போர்புரிதலினால்) இளைப்புற்ற நீலன் அதனைப் பின்பற்றிச்சென்றான்; செல்லுதலும், அவ்வுருவம் டீடிரென்று மறைந்தது; உடனே நீலன் மதிமயங்கிநெடிது நேரம் இங்குநின்ற இரணிய னெங்குப் போயிருப்பானென்று ஆலோசித்தான்; ஆலோசித்தவவன் பின்னர்க் கீழேபார்த்தவுட னதனை அங்கு நிற்பக்கண்டான்.—எ-று.(க0ங)

காணுவல மருவானிது கரவாமென வுணரா
னாணுன்மிகு சீற்றத்தொடு நணுகுற்றன னதுவுந்
தூணூர்தடந் தோள்கொண்டமர் தொடங்குற்றது தொடங்கிச்
சேணுகிய தணித்தாயது திசையெங்கணுந் திரியும்.

(இ-ள்.) அவ்வுருவத்தைக்கண்டு மனக்கவலையுடனின்று தேடின நீலனதனை மாயவுருவமென வுணராதவனாய், நாணத்தாலுண்டான மிகுந்த கோபத்துடன் அது நிற்கும் இடத்திற்கு வந்தான்; அதுவும் உடனே தூண்போன்ற பெரிய தோளினால் போர்புரிய வாரம்பித்தது; ஆரம்பித்துத் தூரத்தகன்றது; அன்றியும் சமீபத்திலாகியது அல்லாமலும் திக்குகளிலெல்லாம் திரியாநிற்கும்.—எ-று. (க0ச)

பாரிற்புகும் விண்ணிற்புகும் பரிதிச்சுட ரெனவே
தேரிற்புகு மாவிற்புகுஞ் சிலையிற்புகுந் திரைமுந்
நீரிற்புகும் வடவாமுக நெருப்பிற்புகு நீலக்
காரிற்புகு நிரயத்திடை கடிதிற்புகு மெழுமே.

(இ-ள்.) அவ்வுருவம் பூமியிற் பிரவேசிக்கும், ஆகாயத்திற் பிரவேசிக்கும், சூரியப்பிரகாசத்தைப்போல தேரிற் பிரவேசிக்கும், யானையின்மீது ஏறும், மலைகளிற் புகும்,அலைகளையுடைய கடலில் புகும்,வடவாமுகாக்கினியிற் பிரவேசிக்கும்,நீலநிறமான மேகத்திற் பிரவேசிக்கும், விரைவாக நரகலோகத்திற் புகும், மீட்டும் வரும்.—எ-று. ()

முன்னேவரு மிடத்தேவரு முதுவெம்பிடர் தழுவிப்
பின்னேவரும் வலத்தேவரும் பெரும்போரினைப் புரியும்
பொன்னேகரு தியமங்கையர் புலனுமெனத் திரியு
மென்னேயத னியல்யாவையும் யாரேபுகல் வாரே.

(இ-ள்.) அது அந்நீலனுடைய முன்புறத்தில் வரும், இடது புறத்தில் வரும், முதிய வெவ்விய பிடரியைத் தழுவிப் பின்னே வரும், வலதுபுறத்தே வரும், பெரிய போரினைச்செய்யும், பொன்னைக்கருதிய கணிகை மங்கையர்களின் புலன்களைப்போல திரியாநிற்கும், என்னை அதன் தன்மை முழுமையும் யாவர் கூறவல்லுநர்—எ-று.(க0சு)

மாலுந்திற மிதுபெற்றியின் வருகின்றதொர் மாயக்
கோலந்தனி தொடராவலி குறைந்தான்றிரிந் துலைந்தான்

காலுந்தளர் கின்றனவன் கல்வித்திறம் புகழா
மேலென்செய லெனவுன்னி வெகுண்டானடல் வீரன்.

(இ-ள்.) இவ்வண்ணமாக நீலன் மயங்குமாறு வராநின்ற ஒப்பற்ற வந்த மாயா ரூபத்தை மிகவுந்தொடர்ந்து வலிமைகுறைந்தவனாய் திரிந்துலைந்து காலுந் தளர்வுற்றவன் அவ்விரணியனுடைய வித்தியாசாமர்த்தியத்திற்காக வவனைப்புகழ்ந்து இனி என் செய்வது என்று கருதி வன்மையாளனாகிய நீலன் மிகவுஞ்சீற்றங்கொண்டனன்.—எ-று.

வென்றார்புகழ் தருவீரனும் வினையந்தனை யுன்னி
நின்றானது காலந்தனி னிருதன்றன துருவ
மொன்றாயது பலவாயுல கெல்லாமொருங் குறலா
னன்றாமிது மாயம்மென நாணத்தொடு நவின்றான்.

(இ-ள்.) பகைவர்களை வென்ற வீரர்கள் புகழுகின்ற வீரனாகிய நீலனும் இனியாகவேண்டிய வினையத்தைக்கருதி நின்றான்; உடனே அவ்விரணியனுடைய ஒரு உருவானது அநேக உருவங்களாய் உலகங்களிலெல்லாம் ஒன்றாக நின்ற அதனைக்கண்டவந்நீலன் நன்று நன்று இது மாயமென்று நாணத்துடனே கூறினான்.—எ-று. (௧0௮)

திண்டோளுடை நீலன்னிது தெளிகின்றுழி யவனாற்
புண்டோய்தரு குருதிப்புனல் புடைபோதரப் புவிமேல்
விண்டோனென மறிகின்றவன் மிடல்பெற்றெழுந் திதனைக்
கண்டோர்தடந் தேரேறினன் மாயத்தொடு கலந்தான்.

(இ-ள்.) திண்ணிய புயங்களையுடைய நீலனென்பவன் இதனை மாயமென்று தெளிகின்றசமயத்தில், முன்னே அந்நீலனால் புண்ணினின்றும் ஒழுகும் இரத்தநீர் அருகிலோடப் பூமியில் இறந்தவனைப்போல விழுந்துகிடந்த இரணியன், வன்மைபொருந்தியெழுந்து இதனைக்கண்டு ஒரு இரதத்திலேறித் தனது மாயத்தொடு கலந்தனன்.-எ-று.

கலந்தானொரு சிலைவாங்கினன் கனல்வாளிக டெரியா
வலந்தானுறழ் தருமெய்யிடை யுய்த்தானுவன் பொங்கா
மலர்ந்தாலென வுரம்புண்பட வடிவாளிகள் படநின்
றலந்தான்மன மெலிந்தான்பொரு தலுத்தான்மிகச் சலித்தான்.

(இ-ள்.) மாயையொடுகலந்து ஒரு வில்லினைவளைத்து அக்கினிமயமான வஸ்திரங்களை வைத்து உருண்ட கல்லினையொத்த தோளின்மீது விட்டனன்; அவைபட்ட வவன் பூத்த சோலையைப்போல மார்பம் புண்ணாகக் கூரிய அம்புகள்பட்டு நின்று அலைந்து மனமெலிந்து பொருதலுத்து மிகச்சலித்தனன்.—எ-று. (௧௧0)

வேறு.

ஈண்டு சீர்த்தி யிரணியன் மாயமு
மாண்டு நீல னயர்வது நோக்குறாப்
பூண்ட வாகைப் புயத்தவன் சீறியே
தூண்டு தேரொடு துண்ணென நண்ணினான்.

(இ-ள்.) இவ்விடத்திற் புகழினையுடைய இரணியனது மாயமும் அவ்விடத்தில் நீலன் வருந்துவதையும் பார்த்து, வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் கோபங்கொண்டு ஓட்டாநின்ற இரதத்துடன் விரைவாக அவ்விடத்திற் சென்றனர்.—எ-று. (௧௧௧)

தாங்கு கின்றதன் றாழ்சிலை தோள்கொடே
வாங்கி நாணியின் வல்லிசை கோடலும்

வீங்கு மொய்ம்பின் விறல்கெழு தானவ
ரோங்கி யாரு மிரிந்தனர் போயினர்.

(இ-ள்) தமது கையிற்பிடிக்கப்பட்ட வளைந்த வில்லினைத் தோளால் வளைத்து நாணியேறிட்டு அந்நாணியின் வலிய ஓசையைக்காட்டுதலும், தடித்த தோள்களையும் வெற்றியினையுமுடைய அசுரர்கள் அனைவர்களும் ஏக்கமுற்று விலகிச்சென்றார்கள்.

சோதி நெற்றிச் சுடர்த்தனி வேலினன்
பாத மெய்த்துணை பன்முறை போற்றிடா
வாத ரத்தி னருச்சனை யாற்றியே
சேத னப்படை செங்கையின் வாங்கினன்.

(இ-ள்.) இறைவனுடைய நெற்றிச்சுடர் விழியிற்றோன்றினவரான ஒப்பற்ற வேற்படையினையுடைய குமரக்கடவுளின் உபயபாதங்களையும் பலதரம்வணங்கி அன்போடு பூசைசெய்து ஞானஸ்திரத்தை செவ்விய கையாலெடுத்தனர்.—எ-று. (கக௩)

தூய போதகத் தொல்படை யன்னவன்
மாயை மேல்விட மற்றதன் பட்டிமை
யாயி ரங்கதி ராதவ னோர்புறப்
போய கங்கு னிசியெனப் போந்ததே.

(இ-ள்.) பரிசுத்தமான ஞானஸ்திரத்தை அவ்விரணியனுடைய மாயையின் மீது விட்டவுடனே, அதன் வஞ்சனை ஆயிரங்கதிர்களையுடைய சூரியன் எதிரேவர அகன்ற கரிய இரவைப்போல வகன்றது.—எ-று. (கக௪)

போந்த காலைப் புலம்புறு தானவ
ரேந்த லேத மியாக வெரியெனக்
காந்தி நின்றவன் காமர்வில் வாங்கியே
யாய்ந்து தீங்கணை யாயிரந் தூண்டினன்.

(இ-ள்.) ஞானஸ்திரம் வந்தவுடனே துன்புற்ற அசுராதிபனாகிய இரணியனொருவனே தனித்தவனாகவாதலும், கோபித்துநின்று அவ்விரணிய னழகிய வில்லினை வளைத்துக் கொடிய ஆயிரமம்புகளைத் தெரிந்தெடுத்துவிட்டனன்.—எ-று. (கக௫)

தூண்டு கின்ற சுடுகணை வீரமார்த்
தாண்டன் முன்னவன் றன்வரை மார்புறா
மீண்டு நுண்டுக ளாதலு மேலது
காண்ட வுஞ்சுரர் கையெடுத் தார்த்தனர்.

(இ-ள்.) இரணியன் விட்ட சுடுகணைகள் வீரமார்த்தாண்டனுக்கு மூத்தவரான வீரவாகுதேவருடைய மார்பிற்சென்று பட்டு நுண்ணியதுகளாகவாதலும், உடனே அவ்வாறனதைக்கண்ட தேவர்கள் கையெடுத் தாரவாரித்தார்கள்.—எ-று. (கக௬)

பொறுத்த வாகைப் புயன்வலி வெவ்விட
நிறத்த நூறு நெடுங்கணை தூண்டியே
யெறித்த சீர்த்தி யிரணியன் கேதன
மறுத்து வில்லொ டரணமுஞ் சிந்தினன்.

(இ-ள்.) வீரவாகுதேவர் வன்மையையும் வெவ்விய விடம்போன்ற நிறத்தினையுமுடையனவாகிய நூறு நீண்ட அம்புகளைவிட்டு விளங்காநின்ற கீர்த்தியினையுடைய இரணியனுடைய கொடியையும் வில்லினையும் கவசத்தையும் அழித்தனர்.—எ-று. (ககஎ)

பொருவிற் சாலிகை போதலுஞ் சூர்தருந்
திருவிற் கோமகன் செங்கரந் தன்னில்வே
றொருவிற் கொள்ளவொ ராயிரம் வெங்கணை
விரைவிற் றூண்டின னல்விறன் மொய்ம்பினன்.

(இ-ள்.) ஒப்பற்ற கவசம் அழிதலும், சூரபன்மன் பெற்ற அழகினையுடைய இரணியன் தனது செவ்விய வத்தத்தில் வேறேயொரு வில்லினை எடுத்தனன்; உடனே விரைவாக வீரவாகுதேவர் ஓராயிரம் வெவ்விய அம்புகளை விட்டனர்.—எ-று (கசஅ)

விடுத்த வாளிகள் வெவ்விற லாடக
னெடுத்த வாளி யிருஞ்சிலை பின்னுறத்
தொடுத்த தூணிமுன் றூண்டிய பாகுதேர்
படுத்து மார்பகம் பலதுளை செய்தவே.

(இ-ள்.) விட்டவம்புகள், மிக்க வெற்றியினையுடைய இரணியனெடுத்த வம்பு, பெரிய வில், பின்புறத்திற் கட்டியுள்ள தூணீரம், எதிரிலிருந்து தேரோட்டுகின்ற சாரதி, இரதம் என்னு மிவையனைத்தையு மழித்து மார்பினையும் பல துளைகளாகச் செய்தன.()

செய்ய வேறொரு தேர்மிசைச் சூரருள்
வெய்யன் வாவலும் வீரருள் வீரனு
மையன் வாளிகொண் டன்னது மட்டிட
மைய லெய்தி யிழந்தனன் வன்மையே.

(இ-ள்.) வேறே யொரு செவ்விய தேரின்மீது சூரபன்மன் பெற்ற வெய்யவனாகிய இரணியன் றாவுதலும், அத்தேரினையும் வீராதிவீரரான வீரவாகுதேவர் அம்புகளை விட்டழித்தனர்; அதனால் அவன் மயக்குற்று வன்மையிழந்தவனாயினன்.—எ-று.()

வேறு பின்னரு மேதகு சூர்மக
னேறு தேர்க ளியாவையுஞ் செல்லுமுன்
னூறு நூறு கணைகளி னூறியே
யீறு செய்தலு மேங்கியி தெண்ணினன்.

(இ-ள்.) மேன்மைபொருந்திய சூரபன்மனுடைய பிள்ளையான இரணியன் வேறேயுள்ள தேர்களிற் பாய்தற்கு முன்னே அவைகளனைத்தையும் ஒவ்வொன்றை நூறுநூறு அம்புகளாலழித்து நாசமாக்குதலும், எக்கங்கொண்டு இதனை நினைத்தனன்.

இந்த வேலை யிடர்ப்படு மென்றனக்
கந்த மெய்திய தன்னவ னுலுயிர்
சிந்து மென்னொடு தீர்வது வோவினித்
தந்தை யாரு மிறத்தல் சரதமே.

(இ-ள்.) இப்பொழுது துன்பமநுபவிக்கின்ற எனக்கு முடிவுகாலங்கிட்டியது; அவனு லுயிர்தொலையும், நான்மாத்திரமோ இறக்கப்போகின்றேன், இனி எனது தந்தையாரும் இறத்தல் உண்மையேயாம்.—எ-று. (கஉஉ)

இற்ற காலை யிருங்கடன் செய்திட
மற்றி யாவரு மில்லையிம் மாநகர்ச்
சுற்ற மானவ ருந்தொலைந் தாரினி
யுற்று ளோரு மிறப்பரி துண்மையே.

(இ-ள்.) என்றந்தை இறந்தவுடனே, அவனுக்குச் செய்யவேண்டிய பெரிய அந்தியகடனைச் செய்தற்கு வேறே யொருவருங்கிடையார்; இப்பெரிய நகரத்திலிருந்த

சுற்றத்தினரும் அழிந்தார்; இறவாசெஞ்சி இருப்பவர்களும் இனி இறப்பார்கள்; இது உண்மையேயாம்.—எ-று. (கஉ௩)

உறுதி யாவ துரைக்கவு மாங்கது
வறிது மோர்கிலா மன்னவன் மாயுமு
னிறுவ தேகட னிற்றில னேயெனி
னுறுவ தோவென்ன கத்திட ராயினும்.

(இ-ள்.) நான் உறுதியாக வுள்ளனவற்றைக் கூறினேன்; கூறியும் என்னாற் கூறப்பட்டவைகளைச் சற்று மெண்ணாத மன்னவனிறப்பதற்கு முன்னே இறந்துபடுவதே கடனும். அவ்வாறு இறந்து படாதுபோனால், என்மனத்திலுண்டாகின்ற துன்ப மொழியுமோ? ஆயினும்.—எ-று. (கஉ௪)

ஒய்யெ னச்சுர ரோடவென் கண்டவென்
னையன் மற்றினித் துஞ்சின நுங்கடன்
செய்வ தற்கொரு சேயுமின் றுலெனின்
வைய கத்தில் வசையது ண் டாகுமே.

(இ-ள்.) தேவர்கள் திடீரென்று ஓடும்படி முதுகிடுவித்த என் தந்தை இனிமேலிறந்தால் அவனுக்குச் செய்யவேண்டிய அருமையான கடன்களைச் செய்வதற்கு ஒரு பிள்ளையும் இல்லையானால், உலகத்தில் (இவ்வளவு சிறப்போடு வாழ்ந்த சூரபன்மனுக்குக் கடைசியில் கொள்ளிக்குக்கூட ஒருபிள்ளை யில்லாமற்போயிற்றே என்று பரிகசித்தலான) வசைமொழி யுண்டாகுமே.—எ-று. (கஉ௫)

மைந்த ரைப்பெறு கின்றது மாசிலாப்
புந்தி யன்பொடு போற்றி வளர்ப்பதுந்
தந்தை மாண்டுழித் தம்முறைக் கேற்றிட
வந்த மில்கட னாற்றுதற் கேயன்றோ.

(இ-ள்.) பிள்ளையைப் பெறுகின்றதும், குற்றமில்லாத புத்தியுடனும் அன்புடனும் சீராட்டிவளர்ப்பதுவும், தந்தையானவ னிறந்தவுடனே அவனது சாதியாச்சிரமங்களின் முறைகளுக்குத் தக்கவண்ணம் அழிவற்ற உத்தரகிரியையைச் செய்தற்காகவே அன்றோ?—எ-று. (கஉ௬)

அசைவி லாத வமரிடைத் துஞ்சிடி
னிசைய தாகுமி றந்தில னேயெனிற்
றசையு லாமுட றுங்கியுய்ந் தானெனு
வசைய தாகுமென் வன்மையுந் துஞ்சுமே.

(இ-ள்.) கெடுதலில்லாத போர்க்களத்திலிறந்தால் கீர்த்தியுண்டாகும்; அவ்வாறு போரிலிறவாமற்போனால் ஊன்பொருந்திய உடலைச்சுமந்து (சண்டையிலோடிப்) பிழைத்தானென்று பிறர் கூறுதற்கேற்ற வசையாகும்; அன்றியும் எனது வன்மையும் அழியும்.—எ-று. (கஉ௭)

என்னை யெய்து மிசையது வேயெனின்
மன்னை யெய்தும் வசையுறா யாங்கதன்
றென்னை யெய்தினு மெய்துக தந்தைபா
லன்ன தாத லழகிதன் றுலென.

(இ-ள்.) நான் போரிலிறந்தாலென்னைக் கீர்த்தியடையும்; நா னவ்வண்ணம் போரிலிறந்து கீர்த்தியையடைந்தால், மன்னவனைப் பிள்ளையில்லாதவனென்ற வசை

மொழிசாரும்; இதுநிற்க, என்னை வசைமொழியடையினும் அடையட்டும்; என்றந்தையி னிடத் தவ்வசைமொழியடைதல் நன்றானதன்று.—எ-று. (கஉஅ)

ஆவ துன்னியென் னாருயிர் போற்றியே
போவதே கட னென்று பொருக்கெனத்
தாவி வான்முகி றன்னிடைப் போயொரு
தேவு மந்திரஞ் சிந்தையி லுன்னினான்.

(இ-ள்.) இவ்வண்ணமான காரியங்களை நினைத்து எனது அரிய உயிரைக் காப் பாற்றிக்கொண்டு இவ்விடத்தினின்றும்போவதே கடனாகுமென்று விரைவாகக் கெடாத ஆகாயத்திற் படிந்துகிடக்கும் மேகமண்டலத்திற்குட்சென்று ஒரு தெய்வ மந்திரத்தை மனதி னினைத்தான்.—எ-று. (கஉகூ)

உன்ன லோடு முருவரு வர்தலுந்
தன்னை யாருந் தெரிவருந் தன்மையாற்
பொன்னு லாய புணரியுட் போயினான்
மின்னு தண்சுடர் மீனுரு வாகியே.

(இ-ள்.) நினைத்தவுடனே தன்னுருவ மருவமாகியது; அப்பொழுது தன்னைப் பிறர் யாரும் உணராத வண்ணமாக மின்னுகின்ற தண்ணிய சுடரினையுடைய மீனுருவத் தை அடைந்து அழகுபொருந்திய கடனீரினுட் போயினான்.—எ-று (கநo)

ஆண்டு போன வவுணனம் மாநகர்
மீண்டு செல்கிலன் மேல்விளை கின்றன
காண்டு நந்தங் கடன்முடிக் குந்துணை
யீண்டு வைகுது மென்றவண் மேவினான்.

(இ-ள்.) கடலினுட்சென்ற அசுரனான விரணியன் அந்த மகேந்திரபுரியென் னுந் தன்னகரத்திற்குத் திரும்பச்செல்லாமல் இனிமேலும் நடப்பனவற்றைக் காண் போம், நமது கடனை நாம் நிறைவேற்றுங்காறும் இவ்விடத்திலேயே இருக்கலாம் என்று தீர்மானித்து அவ்விடத்திலேயே இருந்தனன்.—எ-று. (கநக)

ஆய காலையி லாடகன் செய்திடு
மாயை யாமெனக் கங்குலு மாய்ந்திடத்
தூய போதகத் தொல்படை தோன்றல்போற்
சேயி ருங்கதிர்ச் செல்வன்வந் தெய்தினான்.

(இ-ள்.) அப்பொழுது இரணியன்செய்த மாயைப்போல இருளகலத் தூய்மை யான ஞானஸ்திரந் தோன்றினாற்போல செவ்விய பெரிய கிரணங்களையுடைய சூரியன் உதையமாகினான்.—எ-று. (கநஉ)

ஆங்கு வெய்யவ னப்படை போலெழ
நீங்கு மாயையி னீணில வற்றிட
வேங்கி யோடு மிரணிய னாமென
வோங்கு திங்க ளுததியிற் போயினான்.

(இ-ள்.) அவ்விடத்திற் சூரியன் அந்த ஞானஸ்திரத்தைப்போல வுதிக்க வொ ழிந்த மாயையைப்போல,நீண்ட நிலவு அழிய வேங்கியோடின இரணியனைப்போல உய ர்ந்த சந்திரன் கடலின் முழுகினான்.—எ-று. (கநந)

நீங்கு சூர்மக னீர்மையை நோக்கியே
வீங்கு தோளுடை வீரனம் மாற்றல

ஞேங்கு மாழியு ளோடினன் றேற்றெனு
வேங்கு சங்க மெடுத்திசைத் தானரோ.

(இ-ள்.) போர்க்களத்தினின்று நீங்கிய சூரபன்மனுடைய பிள்ளையான இரணியனுடைய தன்மையைப்பார்த்து,வீரவாகுதேவர் நமது பகைவன் உயர்ந்த கடலிலோடியொளித்தானென்று முழங்காநின்ற சங்கத்தை எடுத்தூதினர்.—எ-று. (கருச)

சங்கம் வாயிடைக் கொண்டுதன் சீர்த்தியை
யெங்கு ளோருந் தெளிய விசைத்துழிப்
பொங்கு பூதர் புகழ்ந்தனர் வாழியென்
றங்கண் வானவ ராசிசெய் தார்க்கவே.

(இ-ள்.) சங்கத்தை வாயில்வைத்துத் தமது புகழை எவ்விடங்களிலு முள்ளவர்களுந் தெளியும் வண்ணம் ஊதினவுடனே, அழகிய கண்களையுடைய தேவர்கள் ஆசிமொழிகூறி யாரவாரிக்க, ஆரவாரத்தினையுடைய பூதர்கள் வாழியென்று கூறிப் புகழ்ந்தார்கள்.—எ-று. (கருரு)

நின்ற வீரர்க ணோரலர் சேனையைப்
பொன்று வித்தனர் போரிடைத் தூதுவர்
சென்று காலொடு சிந்தையும் பிற்பட
மன்றன் மாநகர் மந்திர மெய்தினர்.

(இ-ள்.) போர்க்களத்தி னின்ற வீரர்கள் பகைவர் சேனைகளைப் போரினிற் கொன்றார்கள்; உடனே தூதுவர்கள் காற்றும் மனமும் பிற்படச்சென்று கல்யாணகரமான நகரத்திலுள்ள அரசாக்ஷிமண்டபத்தை அடைந்தார்கள்.—எ-று. (கருசு)

மந்தி ரத்துறை மன்னனை வணங்கிநீ
தந்த வக்கும ரன்சமர்க் காற்றல
னுய்ந்தி டக்கொலு வனையொர் சூழ்ச்சியாற்
சிந்தி டக்கொல் கன்றனன் சிந்துவில்.

(இ-ள்.) அரசாக்ஷிமண்டபத்திலிருக்கின்ற அரசனாகிய சூரபன்மனை வணங்கி, மன்னவனே! நீ பெற்ற மகனான அந்த இரணியன் போருக்காற்றாதவனாய்த் தப்பிப் பிழைத்தற்கோ? அல்லது இவர்களை யொரு தந்திரத்தால் உயிரை யகற்றற்கோ? அதையறியோம்; கடலுட்புகுந்தான்.—எ-று. (கருஎ)

என்று தூத ரிசைத்தலு மன்னவன்
குன்றி வெள்கிக் கொடுஞ்சினங் கொண்டிடா
வொன்று மாற்ற முரைத்தில னவ்வழிச்
சென்ற னன்கனன் மாமுகச் செம்மலே.

(இ-ள்.) என்று தூதுவர்கள் கூறுதலும், அதனைக்கேட்ட மன்னவன் குன்றி வெட்கிக் கொடுஞ்சினங்கொண்டு அவ்விடத்தி லொருபேச்சும் பேசாமல் இருந்தனன்; அப்பொழுது அவ்விடத்திற்கு அக்கினிமுகாசுரனென்னும் பிள்ளையானவன் வந்தான்.()

இரணியன்யுத்தப்படலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – க,௯0௪.

---

# அக்கினிமுகாசுரன் வதைப்படலம்.



எட்டாசையு ளோர்களை யெண்கரியைக்
கட்டாவுறு சில்கதி ரைப்பரியை
முட்டாவரு தேரினை முன்கொணரா
வட்டாடிய தோர்வலி பெற்றுடையான்.

(இ-ள்.) அவ்வக்கினிமுக னெத்தகையனென்னில், எட்டுத்திக்குகளிலுள்ளவர்களையும், அட்டகஜங்களையும், கூட்டமாகவிருக்கின்ற ஒளிப்பொருள்களையும், உச்சைசிரவமுதலிய குதிரைகளையும், தவறுமலோடுகின்ற பாநுவிரத முதலியவைகளையும் எதிரே கொண்டுவந்து வட்டாடல் பழகிய ஒப்பற்ற வல்லபம் பெற்றுள்ளவன்.—எ-று.

கட்டாவுறுசில்கதிரைப்பரியை - முட்டாவருதேரினை - என்பதனை, கட்டாகச் சில்லுகளோடு பொருந்தின கதிர்களையும், பரிகளையும், தடையாகவருகின்ற இரதத்தையும் என்னினும் ஆம். வட்டாடல் - அது ஒருவகையான விளையாட்டு; சூதாடல் என்றுங் கூறுவர். (க)

கருவாயுறு கின்றதொர் காலைமுதற்
றிருமாதுடன் முற்றழல் சிந்திடலும்
பெருமாயவள் வந்துபி றந்திடுவோ
னெரிமாமுக னென்ற வியற்பெயரான்.

(இ-ள்.) இவன் கருவாயிருந்த காலமுதல் பதுமகோமளை தன்னுடன் முற்றிலும் தீயைச்சிந்தினாள்; அப்பொழுது அவ்விடத்திற்குப் பெரிய மாயையென்பவள் வந்து, (நீ இவ்வாறு தீயைச் சிதறுதற்குக் காரணம் இப்பொழுது நின் வயிற்றிலிருப்பவனும்,) இனிப் பிறக்கப்போகின்றவனுமாகிய இவன் அக்கினிமுகனென்று கூறினாள். அதனையே இயற்பெயராகக்கொண்டவன்.—எ-று.

இயற்பெயர் - சுபாவமான பெயர்; இடுகுறியெனினுமாம். (உ)

பன்னாக மிசைத்துயில் பண்ணவனூர்
பொன்னார்சிறை கொண்டதொர் புள்ளினுட
னந்நான்முக னூர்தியு மாடுறுவான்
முன்னாட்கொடு வந்ததொர் மொய்ம்புடையான்.

(இ-ள்.) இவன் பாம்பின்மீது கண்ணுறங்குகின்ற திருமாலின் வாகனமான பொன்மயமான விறகுகளையுடைய கருடனையும், அந்தச் சதுர்முகனுடைய வாகனமான வன்னத்தையும் விளையாடும்வண்ணம் முன்னாளிற் பிடித்துக்கொண்டுவந்த வன்மையினையுடையவன்.—எ-று. சதுர்முகன் - பிரமன். (ங)

முன்னுற்றவன் வானெழு மொய்கதிரோன்
றன்னைச்சிறை யிட்டது தான்வினவா
மன்னுற்றிடு சோமனை வைகல்பல
வின்னற்பட வேசிறை யிட்டுடையான்.

(இ-ள்.) தனக்கு முன்னே பிறந்தவன் ஆகாயத்திற் றோன்றுகின்ற நெருங்கிய கிரணங்களையுடைய சூரியனைச் சிறைப்படுத்தியதனை வினவி, அவ்வானத்திலே உதையமாகின்ற சோமனை அநேகநாள் அவன் றுன்புறுமாறு சிறையில் வைத்துள்ளவன்.—எ-று.

இவன் தன்றமயனைப்போல ஆகவேண்டுமென்றே சூரியனுக்குப் பதிலாகச் சந்திரனைச் சிறைப்படுத்தினனென்க. இதனாலிவன் பரமதுட்டன் என்றறியப்படுகிறான்.

தெய்வப்படை தாங்கிய செங்கையினு
னைவர்க்குள தாகிய வாற்றலுளான்
மைமைவைத்திடும் வஞ்சனை மாயம்வலா
னெவ்வெப்படை தன்னையு மீறுசெய்வான்.

(இ-ள்.) தேவதாத்திரங்களைப் பரித்துக்கொண்டிருக்கின்ற செவ்விய வத்தங்களையுடையவன் பஞ்சமூர்த்திகளிடத்திலு முள்ள வன்மையனைத்தும் ஒன்றுபட்டுத் தோன்றினவன்; களங்கம்பொருந்திய வஞ்சனைகளிலேயும் மாயங்களிலேயும் வல்லவன்; எவ்வண்ணமான வாயுதங்களாகவிருக்கினு மவைகளை அழிக்கும்ஆற்றலுள்ளவன்.-எ-று.

அந்தார்முடி கொண்டிடு மையன்முனம்
வந்தானடி தன்னை வணங்கியிவ
ணெந்தாய்மெலி வுற்றனை யென்னெனலுஞ்
சிந்தாகுல மோடிது செப்பிடுவான்.

(இ-ள்.) அழகிய மலர்மாலையணிந்த மகுடத்தினையுடைய தந்தையான சூரபன்மனெதிரேவந்து அவன் கால்களை வணங்கி, எந்தையே! நீ இவ்விடத்தில் மெலிவுற்றிருக்கின்றனையே அது என்னவிடயம் என்று கேட்டான்; உடனே அவன் மனோவியாகூலத்துடன் இதனைக் கூறுவானாயினான்—எ-று. (சு)

உண்ணுடிய மாயைகொ டொற்றுமையால்
விண்ணுடர் பொருட்டிவண் மேவியுளான்
கண்ணுறெயில் வேலி கடந்துநமை
யெண்ணுது புரத்திடை யேகினனல்.

(இ-ள்.) தேவர்களினிமித்தம் முன்னரிவ்விடத்தில் உள்ளே நாடிய மாயையுடன் ஒற்றனாக வந்தவன்; இப்பொழுது பெருமைபொருந்திய வேலியாகிய மதிலைக் கடந்து நம்மை மதியாமல் இந்நகரத்தினுள் வந்திருக்கின்றான்.—எ-று. (எ)

ஏகுந்தொழில் வெய்யவ னிந்நகரம்
வேகும்படி செந்தழல் வீசிடலு
மாகொண்டல்க ளேவினன் மற்றவைமா
ருகும்புனல் சிந்திய வித்தனவே.

(இ-ள்.) இங்கு வருதலாகிய கொடுந்தொழிலினையுடைய அவன் இவ்வூரழியுமாறு செவ்விய அக்கினியாஸ்திரத்தை விடுதலும்,யான் அதனைமறுக்கப் பெரிய மேகங்களை அனுப்பினேன்; அவைகள் சென்று தீக்கு விரோதமாக நீரை விட்டவித்தன.—எ-று.

அவன் அக்கினியம்பை விட்டான்; யானதனை யழிக்க வம்பை விடாமல் மேகங்களை விளித்தனுப்பினேன்; அவைகள் ஏராளமான மழையை வருஷித்து அத்தீயை யவித்தன என்றான் என்க. (அ)

மடல்கொண்டிடு தாரினன் மற்றதுகண்
டுடல்கொண்ட சினத்தொ டொருங்குலகங்
கடைகொண்டிடு கின்ற கனற்படைதொட்
டடல்கொண்ட முகிற்றிற லட்டனனே.

(இ-ள்.) இதழ்கள் பொருந்திய மலர்மாலையணிந்த வீரவாகு வதனைக்கண்டு பகைக்கின்ற கோபத்துடன் உலகங்களை ஒன்றாக வழிக்கின்ற அக்கினியாஸ்திரத்தை விட்டு வன்மைபொருந்திய மேகங்களின் வன்மைகளை யழித்தனன்.—எ-று. (கூ)

அட்டானது கேட்டன மாடகனே
விட்டாமனி கத்தொடு வெஞ்சமர்செய்
தொட்டார்வலி நோக்கி யுடைந்தவனு
நெட்டாழி புகுந்து நிமிர்ந்தனனுல்.

(இ-ள்.) அவன் மேகங்களை யழித்தான், அதை நாம் கேழ்வியுற்றோம்; பின்னர் இரணியனைச் சைனியங்களுட னனுப்பினேம், அவன்சென்று கொடிய போர்புரிந்தனன்; பின்னரவனும் பகைவர்களை வெல்லுந் திறமின்றி அவர்கள் வன்மைக்கஞ்சி நெடிய கடலிற்புகுந்து மறைந்து சென்றான்.—எ-று. (௧0)

நங்கொற்ற மிகுத்திடு நாற்படையு
மங்குற்றிடு கின்றன மாநகரை
யுங்குற்றிடு தூத னொறுத்தனனு
லிங்குற்ற நிகழ்ச்சியி தென்றனனே.

(இ-ள்.) நமது வெற்றிமிகுந்த சதுரங்கசேனைகளும் அவ்விடத்திலிருக்கின்றன; அவ்வண்ணமிருந்தும் பெரிய நகரத்தை இங்கு வந்துள்ள தூதனழித்தனன்; இது இங்கு நிகழ்ந்த நிகழ்ச்சி என்று சூரபன்ம னுரைத்தனன்.—எ-று. (௧௧)

செங்கோன்முறை கோடிய தீயவுண
னங்கோதிய கேட்டலு மாரழல்கால்
வெங்கோரமு கத்து வியன்புதல்வன்
றங்கோமுக மாவிது சாற்றிடுவான்.

(இ-ள்.) கொடுங்கோலனுகிய கொடிய சூரபன்மன் கூறியவற்றை அரிய அழலைக் கக்குகின்ற செவ்விய கோரமான முகத்தினனை வக்கினிமுகனென்னும் சிறந்த புதல்வன் கேட்டு, தனதரசனை சூரபன்மன் முன்னிலையி லிதனைக்கூறுகின்றான்.-எ-று.

மன்னர்க்கிறை யாகிய மன்னவநீ
யுன்னூற்றுள மீதி லுருத்திடநீவ
முன்னூற்றிடு தூதுவன் மோய்ம்பினனோ
வென்னுக்கவ னூற்றலை யெண்ணுதிநீ.

(இ-ள்.) அரசர்க்கரசனாகிய அரசனே! நீ இதனை எண்ணி யுன்மனத்திற் சீற்றங்கோடற்கு முன்னிங்கு வந்த தூதுவன் சிறந்தவனோ? அன்றே, நீ எதற்காக வவன் வன்மையை (ஒரு பெரிதானதாகக்கருதி) ஆலோசிக்கின்றனை —எ-று. (௧௩)

மிடல்கொண்டிடு தூதனை மிக்கவனைப்
புடைகொண்டமர் செய்திடு பூதர்தமை
யடல்கொண்டிவ ணின்னை யடைந்திடுவன்
விடைதந்தரு ளென்று விளம்பினனே.

(இ-ள்.) வன்மைபொருந்திய தூதுவனையும் அன்றியுள்ள சிறப்பினர்களையும், அவனருகிற்சூழ்ந்து நின்று நம்மவர்களோடு யுத்தஞ்செய்கின்ற பூதர்களையும் யான் வென்று இங்கு மீண்டு வருவேன் எனக்கு விடையளித்தருள்க என்று அக்கினிமுகன் உரைத்தனன்.—எ-று. (௧௪

நன்றேயிது செப்பினை நண்ணலனை
வென்றேவரு கென்று விடுத்திடலு
நின்றேதொழு தவ்விடை நீங்கினனாற்
குன்றேநிகர் தோள்வலி கொண்டுடையோன்.

(இ-ள்.) உடனே சூரபன்மன் அவ்வக்கினிமுகனைப்பார்த்து,மகனே! நீ கூறிய விது நல்லதே; நீ சென்று பகைவனை வென்றுவரக் கடவை என்று கூறுதலும், அவனெதிரில் வணங்கி விடைபெற்றுக்கொண்டு அவ்விடத்தினின்றும் மலையை யொத்த தோளினையுடைய அக்கினிமுகன் சென்றான்.—எ-று. (கரு)

கார்க்கோலமும் வெய்ய கருங்கடலி
னீர்க்கோலமு மன்னவ னீடிபதன்
சீர்க்கோநக ரத்திடைச் சென்றனனுற்
போர்க்கோல மமைந்து புறம்படர்வான்.

(இ-ள்.) கருநிறமான மேகத்தின் றன்மையையும், வெவ்விய கருகிய கடனீரின் றன்மையையும் ஒத்த நிறத்தினையுடைய அக்கினிமுகன் போரலங்காரம்செய்துகொண்டு வெளிப்படும் வண்ணம் சிறந்த தனது பெரிய மாளிகைக்குட் சென்றான்.—எ-று.(கசு)

மைக்கொண்டல் படர்ந்திடு மால்வரைபோன்
மொய்க்கொண்டிடு சாலிகை முன்னுறவே
மெய்க்கொண்டணி புட்டில் சுவற்பரியாக்
கைகொண்டனன் விண்ணவர் கைப்படையே.

(இ-ள்.) கரியமேகத்தாற் சூழப்பெற்ற பெரிய மலையைப்போல வன்மைபொருந்திய (இரும்பாலாகிய) கவசம் மார்பிற்பொருந்த அணிந்து அழகிய விரலுறைகளான புட்டில்களை விரல்களி லணிந்து தேவாஸ்திரங்களாகத் தன்னிடத்துள்ளன வனைத்தும் எடுத்துக்கொண்டனன்.—எ-று. (கஎ)

தன்றாதையி னைத்தரு தாயுதவும்
பொன்றாழ்சிலை கைக்கொடு பொள்ளெனவே
யொன்றாகிய தேரிடை யொல்லைபுகாச்
சென்றான்விழி யிற்கனல் சிந்திடுவான்.

(இ-ள்.) தன்றந்தைக்கன்னையான மாயையென்பவ ளளித்த பொன்மயமான வளைந்த வில்லினை எடுத்துக்கொண்டு விரைவாக கண்களிற் றீப்பொறி சிதறுகின்ற அவ்வக்கினிமுகன் ஒரு தேரின்மீது சீக்கிரம் எறிச்சென்றனன்.—எ-று. (கஅ)

அறமற்றிடு தீயன கன்றுநகர்ப்
புறமுற்றன னங்கது போழ்துதனிற்
றிறமற்றது தூதுவர் செப்புதன்முன்
மறமுற்றிடு தானைகள் வந்தனவே.

(இ-ள்.) தருமமென்பதில்லாத கொடியவனான அக்கினிமுகன் அரண்மனைக்கு வெளியே வந்தனன்; உடனே அவன் வருவதைத் தூதுவர்கள் சென்று கூறினவுடனே, வீரம்பொருந்திய சேனைகள் போர்க்கோலங்கொண்டு வந்தன —எ-று. (கக)

ஓராயிர வெள்ள மொருத்தலினந்
தேரானவு மத்தொகை திண்டிறன்மா
வீராயிர வெள்ள மியாவர்களு
மாராய்வரி தாலவு ணக்கடலே.

(இ-ள்.) அங்குவந்த சேனைகளி லானைகள் ஒரு ஆயிரவெள்ளம் இரதங்களாக வுள்ளனவும், அவ்வோராயிரவெள்ளமே வன்மையும் திண்மையும்பொருந்திய இராயிர வெள்ளங்கள் குதிரைப்படைகள் பதாதிகளான வசுரசேனையாகிய அலைகடலை யாவராலும் ஆராய்தற்கே யியலா.—எ-று.

அவுணக்கட லாராய்தற்கரியது அசுரசேனு சமுத்திரம் கடல்போல மிகுதியானது என்றுணர்க. (உ0)

வேறு.

ஆன காலையி லங்கி முகாசுரன்
மான மேற்கொண்டு மாற்றலர் யாரையும்
யானோர் கன்னன்மு னீறுசெய் வேனெனுச்
சேனை தன்னொடுஞ் சென்றிடன் மேயினன்.

(இ-ள்.) அப்பொழுது அக்கினிமுகாசுரன் அபிமான மிகுதியினல் பகைவரனைவரையும் யான் ஒரு நாழிகை நேரத்திற்குள் அழிப்பேன் என்று சபதங்கூறினவனுகச் சைனியங்களுடன் போகத்தொடங்கினன்.—எ-று. (உக)

நல்கு மாறின்றி நாள்பல நீங்கியே
மல்கு காதலர் வந்து கலந்துழிப்
பில்கு காமத்துப் பெய்வளைப் பேதைய
ரல்கு லென்ன வசைந்தகல் வுற்றதேர்.

(இ-ள்.) அக்கினிமுகனுடன் சென்ற இரதங்கள் நெருங்கிய காதலர்போகநுகர்ச்சியை யடைதலின்றி நெடுநாள் ஓதற்பிரிவு முதலிய பலபிரிவுகளால் விலகிநின்று அவை முடிந்தபின், இல்லமடைந்து தம்பிரிவாலேக்கமுற்றிருந்த வளையலணிந்த வத்தங்களேயும் முதிராநலத்தினையுமுடைய கற்புடைப் பெண்டீரொடு றைந்தவர்கள் காமநலனுண்ணுங் காலன்னோர் தங்கடி தடமசையுமாபோல வுசைந்துசென்றன.—எ-று. ()

அருத்தி மெல்லிய ராதரங் கொண்டுழல்
விருத்தர் கூட்டம் வெறுத்திடு மாறுபோ
லெருத்த மீதி லிடிப்பவர் தம்முனைக்
கருத்தி னிற்கில காய்சின வேழமே.

(இ-ள்.) காமநலனுண்ணு மாசையினையுடைய பென்மைவடிவினையும் இளமையினையுமுடைய இளம்பெண்டாட்டியர் தம்மீது ஆசைபூண்டொழுகும் கிழவர் குழுக்களை வெறுக்குமாறுபோல, பிடரியிலிருந்து இடித்துரைப்பவர்களாகிய பாகர்களின் மனம்போல செல்லாது முரணிச்செல்கின்றன காய்கின்ற சினத்தினையுடைய யானைகள்.—எ-று. (உங)

மண்ணிற் பாய்வன மாதிரஞ் சூழ்வன
விண்ணிற் றாவுவ வீதியிற் செல்வன
வெண்ணிற் பல்பொரு ளிச்சைகொள் வேசியர்
கண்ணிற் கொப்பன கந்துக ராசியே.

(இ-ள்.) மண்ணுலகிற் பாய்வனவும், திக்குக்களிற் சுழல்வனவும், விண்ணுலகிற் றாவுவனவும், ஆகச்செல்லுங் குதிரைக்கூட்டங்களை எப்படிப்பட்டதென்று எண்ணுங்கால் பலவிதமான பொருள்களி லாவல்கொள்கின்ற வேசையர்களின் கண்களையொப்பன.—எ-று. (உச)

வஞ்ச நீடி யருளற்று மாயமே
யெஞ்ச லின்றி யிருள்கெழு வண்ணமாய்
விஞ்சு தம்மல்குல் விற்றுணு மங்கையர்
நெஞ்ச மொத்தனர் நீள்படை வீரரே.

(இ-ள்.) நீளமான வாயுதங்களையுடைய வீரர்கள் வஞ்சனை மிகுந்து அருளுமற்றுக் குறைவுபடாத மாயம்பொருந்தி இருண்டு விளங்குந் தன்மையே தன்மையாய்

(அடிக்கடி) உயருகின்ற தமது அல்குலை விற்றுண்ணுகின்ற வேசைமங்கையரின் நெஞ்சத்திற்கு ஒத்தவர்களானார்கள்.—எ-று. (உரு)

தார்த்த டம்புயத் தானவர் பல்லிய
மார்த்த வோதை யகிலமும் புக்கதாற்
றூர்த்த மங்கையர் சோர்வினிற் செய்பழி
வார்த்தை யெங்கணும் வல்லையிற் சேறல்போல்.

(இ-ள்.) தூர்த்தைகளான பெண்கள் சோரத்தனமாகச் செய்யும் பழியான காரியத்தின் வசனங்கள் எவ்விடங்களிலும் விரைவாகச்சென்று சேருமாறுபோல, மாலையணிந்த பெரிய தோளினராகிய அசுரர்கள் அடித்த பல தோற்கருவிகளினோசை எவ்விடங்களிலும் பரவியது.—எ-று. (உசு)

சோதி மெய்யெழிற் றூயன மாற்றியே
மீது செல்லரும் வெவ்விரு ளுய்த்தலா
லேதின் மாதரை யெய்திடும் புன்மையோர்
காதல் போன்ற கடிதெழும் பூழியே.

(இ-ள்.) இவர்கள் செல்லுஞ் செல்கையால் விரைவாக வுண்டான புழுதி சோதியினுடைய உடலழகிற் றூய்மையானவற்றை யொழித்து மேலே போகவொட்டாமல் வெவ்விய இருளிலுய்த்தலால், அயன்மாதரை அணைகின்ற இழிஞர்களின் ஆசையையொத்தது.—எ-று.

அயன்மாதரைப் புணர்பவர்கள் தன்னுடனிறமழுங்கி அனுசாரமடைந்து சுவர்க்கமன்றி நரகமேயடைவார்கள். இப்புழுதியும் அவ்வண்ணமாயதென்க. சோதி-சூரியன். ஏதின்மாதர் - சேரிப்பரத்தையராகி வெறுக்கத்தக்க மாதர், அயலார் மனைவியர் எனினுமாம். (உஎ)

பீட்டின் மிக்க பெரும்பணை தாங்கிய
மோட்டி னொட்டக முந்திய கந்தர
நீட்டி வாங்குவ நேர்ந்தவர் முன்றலை
காட்டி வாங்குங் கணிகையர் போலவே.

(இ-ள்.) பெருமையிற்சிறந்த பெரிய வாச்சியங்களைச் சுமந்து உயர்ந்துநிற்கும் ஒட்டகங்கள்,எதிர்ப்பட்டவர்கள்முன் றலையை நீட்டி உள்ளே இழுத்துக்கொள்ளுகின்ற கணிகைமாதர்களைப்போல தமது நீண்ட கழுத்துக்களை நீட்டி வாங்குகின்றன.—எ-று.

சீறு மால்கரி தேர்மிசைப் பூண்டுவிண்
ணூற ளாவின் றுடுவ கேதன
மூறு காத லொருவன்கண் வைகினாள்
வேறு ளாரையும் வெஃகிவி ளித்தல்போல்.

(இ-ள்.) மேலும் மேலும் சுரக்கின்ற காதலினையுடைய ஒருவனிடத்தில் வாழ்பவள் அயலாரையும் விரும்பி யழைக்குமாறுபோல பகைவரைச் சீறுகின்ற மதமயக்கம் பொருந்திய யானைகண்மீதும் இரதங்களின்மீதும் பொருந்திநின்று வானவழியைத் தொடர்ந்து ஆடாநிற்பன கொடிகள்.—எ-று. (உகூ)

வீழு மும்மத வேழங்கண் மத்தகஞ்
சூழி காலி னசைதொ றுந் தோன்றுவ
மானுழ நோக்கியர் மைந்தர்க்கு மாலுறக்
காழ கத்தனங் காட்டிம றைத்தல்போல்.

(இ-ள்.) மாவடுப்போலுங் கண்ணினராகிய பெண்கள் வாலிபர்கட்கு மோகமுண்டாக ஆடையுள்ளுறை தனங்களைக்காட்டி மறைக்குமாறுபோல வொழுகாநின்ற மும்மதங்களையுடைய யானைகளின் மத்தகங்கள் அவைகண்மீ தணியப்பட்டுள்ள முகபடாம் காற்றினு லசையுந்தோறும் வெளியே தோன்றுகின்றன.—எ-று. (ரு௦)

தோம ரஞ்சிலை சூல மழுப்படை
நாம வெங்கதை நாஞ்சின் முசலம்வே
னேமி தானவர் நீள்கரஞ் செல்வன
காமர் மங்கையர் கட்டொழி ருங்கியே.

(இ-ள்.) அழகிய பெண்களின் கண்ணின்றொழிலைக் கைக்கொண்டு தோமரங்களும், விற்களும், சூலங்களும், மழுப்படைகளும், அச்சத்தை யளிக்கும் வெவ்விய கதைகளும், கலப்பைகளும், உலக்கைகளும், வேற்படைகளும், சக்கரங்களும் அசுரர்களின் நீண்ட கைகளிற் றங்கிச் செல்கின்றன.—எ-று. (ருக)

வேறு.

எற்றின பறையின் வீழ்ந்த வெழிலிக ளெழுந்த பூழி
சுற்றின வான மீப்போய்த் தூர்த்தன கங்கை நீத்தம்
வற்றின படையும் பூணும் வயங்கின மயங்கி யெங்குஞ்
செற்றின பதாகை யீட்ட மிருண்டன திசைக ளெல்லாம்.

(இ-ள்.) இவர்களடித்த பறையோசையா லெழுமேகங்களும் வீழ்ந்தன; எழுந்த புழுதி சுழன்று ஆகாயத்திற்சென்று கங்கையாற்று நீரைத் தூர்த்தன; அதனு லந்நீர் வற்றின; ஆபரணங்களும் ஆயுதங்களும் விளங்கின; கொடிக்கூட்டங்கள் எங்கு மயங்கி நெருங்கின; திக்குக்களெல்லாம் இருண்டன.—எ-று. (ருஉ)

சோமகண் டகனே சோமன் சூரியன் பகைஞன் மேகன்
காமர்பிங் கலனே யாதிக் கடிகெழு தானை வீரர்
மாமருங் கதனிற் செல்ல மன்னவர் மன்னன் மைந்த
னேமரு பூத சேனைக் கெதிருற வெய்தி னானால்.

(இ-ள்.) சந்திரகண்டகன், சோமன், சூரியவைரி, மேகன், அழகிய பிங்கலன் முதலிய புதுமை விளங்குஞ் சேனாபதிகள் அருகில் வராநிற்க, அரசர்க்கரசனான சூரபன்மனுடைய பிள்ளையான அக்கினிமுகன் சந்தோஷமடைந்து நிற்கின்ற பூதசைனியங்களி னெதிரிற் சென்றான்.—எ-று. (ருரு)

எதிர்ந்தனர் பூதர் தாமு மவுணரு மிடிப்பிற் பேரி
யதிர்ந்தன துடியுஞ் சங்கு மார்த்தன வண்ட மீன்க
ளுதிர்ந்தன வினையர் கூடி யுடன்றுபோர் புரிய வையம்
பிதிர்ந்தன பொதிந்த வண்டப் பித்திகை பிளந்த தன்றே.

(இ-ள்.) உடனே அசுரர்களும் பூதர்களும் எதிர்த்துப் போர்புரிந்தார்கள்; இடி இடித்தாற்போல பேரிகைக ளதிர்ந்தன; துடிகளுஞ் சங்குகளும் ஆர்த்தன; ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்க ளுதிர்ந்தன; இவர்கள் கைகலந்து போர்புரிய உலகம் பிதிர்ந்தன; அண்டத்தைப் பொதிந்துநின்ற அண்டச்சுவரும் பிளந்தது.—எ-று. (ருச)

தொட்டனர் வேலும் வாளுந் தூண்டினர் பகழி மாரி
விட்டனர் பிண்டி பாலம் வியன்மழுத் தண்ட மோச்சிக்
கிட்டினர் சூலம் வீசிக் கிளர்ந்தன ரவுணர் பூதர்
பட்டன ரளப்பி லோர்கள் பரந்தன குருதி நீத்தம்.

(இ-ள்.) அசுரர்கள் வேற்படைகளையும் வாட்படைகளையும் தொட்டார்கள் அம்புகளை மழையைப்போலத் தூண்டினார்கள்; பிண்டிபாலங்களை விட்டார்கள்; பெரிய மழுக்களையுந் தண்டங்களையும் வீசிக்கொண்டு நெருங்கினார்கள்; சூலங்களை வீசிக்கொண்டு விளங்கினார்கள்; இதனாற் பூதர்க ளளவில்லாதவர்கள் இறந்தார்கள்.—எ-று. (ருரு)

முத்தலைக் கழுவைத் தண்டை முசலத்தை நேமி தன்னைக்
கைத்தலத் திருந்த கூர்வாய்க் கணிச்சியைப் பிறங்க றன்னை
யெத்திறத் தவரும் பூத ரெறிந்தன ரெறிந்த காலை
யத்தலை யவுண வீர ரளப்பிலர் பட்டா ரம்மா.

(இ-ள்.) பூதர்கள் மூன்று தலைகளையுடைய கழுமுட்களையும், தண்டங்களையும், முசலங்களையும், சக்கரங்களையும்,கைகளிலிருந்த கூரியவாயினையுடைய கண்டகோடரிகளையும்,மலைகளையு மனைவருமாக வெறிந்தார்கள்; எறிந்தவுடனே அவ்விடத்தி லளவில்லாத அசுரவீரர்கள் இறந்தார்கள்.—எ-று. (ருசு)

தறிந்தன புரவித் தாளுந் தலைகளுந் தடந்தே ரச்சு
முறிந்தன துவச மற்ற மும்மதக் கோட்டு மாக்கண்
மறிந்தன வுடலம் வேறு மடிந்தனர் வயவ ரெங்குஞ்
செறிந்தன கழுகு காகந் திரண்டன கூளி திண்பேய்.

(இ-ள்.) குதிரைகளின் கால்களும் தலைகளுந் தறிபட்டன; பெரிய இரதங்களின் அச்சுகளும் முறிந்தன; துவசங்களும் அற்றன; மும்மதங்களையும் கொம்புகளையுமுடைய யானைகள் விழுந்தன; வீரர்கள் எவ்விடங்களிலும் உடல் வேறுபட்டு விழுந்து இறந்தார்கள்; இதனால் எவ்விடங்களிலும் கழுகுகளுங் காகங்களும் நெருங்கின; கூளிகளுந் திண்ணியபேய்களும் திரண்டன.—எ-று. (ருஎ)

இருபெரும் படையு மிவ்வா றேற்றிகல் புரியும் வேலை
வெருவரு வேற்கண் மாதர் வியர்ப்பின்வந் துதித்த வீரர்
பொருவருஞ் சிலைகள் வாங்கிப் புங்கவம் பொழிந்து சூழ
வொருவரு மவுணர் நில்லா தோடின ருடைந்து போனார்.

(இ-ள்.) மிகுதியான இரண்டு சைனியங்களும் இவ்வண்ணமாக எதிர்த்துப் போர்புரிகின்றசமயத்தில், நவசத்திகளின் வியர்வைகளிற்றோன்றின பகைவர்களுக்கு அச்சந்தரத்தக்க வுருவினராகிய இலக்கம் வீரர்களும் ஒன்றாக வொப்பற்ற விற்களை வளைத்து அம்புகளைவிட்டுச் சூழ்ந்துகொண்டார்கள்; உடனே அசுரர்கள் யாவரும் எதிரினில்லாம லுடைந்தோடிப் போனார்கள்.—எ-று. (ருஅ)

உடைதலு மவுணன் மைந்த னொல்லென விடுப்ப மேகன்
கடுமுரட் சோமன் சோம கண்டகன் முதலா வுள்ள
படையுறு தலைவர் பல்லோர் பகழியின் மாரி தூவி
யடுசிலை வீரர் மேற்சென் றமரினை யிழைத்தா ரன்றே.

(இ-ள்.) அசுரசைனியங்க ளுடைந்து ஓடினவுடனே, சூரபன்மன் மகனான வக்கினிமுகன் விரைவாக மேகனையும்,கடிய முரணின சோமனையும்,சோமகண்டகன்னன முதலானவர்களையும் அநுப்ப, அப்படைத்தலைவ ரனேகர் அம்புமழை பெய்துகொண்டு கொல்கின்ற போருக்குரிய விற்களையுடைய இலக்கம் வீரர்களெதிரேசென்று போர் புரிந்தார்கள்.—எ-று. (ருக)

இழைத்திட வதனை நோக்கி யிலங்கெழிற் றுளில் வீரக்
கழற்புனை கின்ற வீர புரந்தரன் கடிய சீற்றத்

தழற்கெருங் கடவுள் போல்வா னசனியே றஞ்ச வார்க்கு
முழக்கின ஞெருதன் சேனை முன்னுறக் கடிது வந்தான்.

(இ-ள்.) அசுரசேனுபதிக ளிவ்வண்ணம் போர்புரிதலை விளங்குகின்ற வழகிய காலில் வீரக்கழலணிந்தவனும், கோபத்திற்பெரிய தழற்கடவுளைப் போல்பவனும், இடியேறும் அஞ்சும்வண்ணம் ஆரவாரிக்கின்ற ஆரவாரத்தினையுடையவனுமாகிய வீரபுரந்தரன் கண்டு விரைந்து ஒப்பற்ற தனது சைனியங்களின் முன்னே வந்தான்.—எ-று.()

வந்தன னங்கைச் சாபம் வாங்கினன் வாளி மாரி
சிந்தினன் றலைவர் தேரைச் சிதைத்தனன் சென்னி தள்ளி
யிந்துகண் டகனை வானி லேற்றின னேனை வீர
ருந்திய சேமத் தேர்மே லுற்றிகல் புரிந்து சூழ்ந்தார்.

(இ-ள்.) சேனைகளின் முன்னேவந்து அழகிய கையிலுள்ள வில்லைவளைத்துச் சரங்களை வருஷம் பொழிவதைப்போலவிட்டு அவ்வெதிரியின் சேனைத்தலைவர்களின் றேர்களைச் சிதைத்தனன்; அன்றியும் சோமகண்டகன் றலையையறுத்து அவனை வானுலகத்திற் குடியேற்றினுன்; உடனே மற்றைய சேனுபதிகள் ஓட்டாநின்ற தேர்களில் இருந்து போர்புரிந்தவர்களாகச் சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (௬௧)

சுற்றினர் வீரன் மேனி சோரிநீ ரொழுகு மாற்ருன்
முற்றுறு பகழி தூவ முழங்கழ லென்னச் சீறி
மற்றவர் சிலையுந் தேரு மண்மிசை விட்டி வல்லே
நெற்றியி னுரத்திற் றோளி னெடுங்கணை பலவு முய்த்தான்.

(இ-ள்.) சூழ்ந்துகொண்ட மேகன் முதலியோர் வீரபுரந்தரனுடலிற் குருதி நீரொழுகும்வண்ணம் குறைவில்லாத அம்புகளைவிட்டார்கள்; உடனே அவ்வீரபுரந்தரன் முழங்குகின்ற அழலைப்போல சிற்றங்கொண்டு விரைவாக வவர்களேறியிருந்த விரதங்களையும் விற்களையும் பூமியிற்றள்ளித் துரிதமாக நெற்றிகளிலும் மார்புகளிலும் தோள்களிலும் படுமாறு நீளமான பல வம்புகளை விட்டனன்.—எ-று. (௬௨)

உய்த்தனு மவுணர் வேந்தற் குற்றுழி யுதவ நின்ற
மெய்த்திற லாற்ற லாளன் மேகனென் பவனோர் தண்டங்
கைத்தல மிசையி லேந்திக் கணப்படை வீரன் றேர்மேன்
மத்திகை முட்கோல் கொண்ட வலவனை மோதி யார்த்தான்.

(இ-ள்.) அம்புகளை யிவ்வண்ணம் விட்டவுடனே, அசுரமன்னவனுக்குச் சமயம்போல வுபகரிப்பதற்காக நின்ற சரீரவன்மையினையுடைய மேகனென்பவன் ஒருதண்டாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு சிவகணப்படை நாயகனுன வீரபுரந்தரனுடைய இரதத்திலிருந்து மத்திகையோடு கூடின முட்கோலைத்தாங்கின சாரதியை யடித்து ஆரவாரித்தான்.—எ-று. (௬௩)

மோதலுந் தனது பாகன் முடிந்திடு தன்மை காணூஉ
மேதகு தலைவன் வீர புரந்தான் வேலொன் றேந்தி
யீதினின் முடிதி யென்றே யேவின னேவ லோடும்
பூதல மிசையே வீழாப் பொன்றினன் புயலின் பேரோன்.

(இ-ள்.) தண்டினுலடித்தவுடனே தனது சாரதி இறந்ததன்மையைப்பார்த்து மேன்மைபொருந்திய தலைவனுன வீரபுரந்தரன் ஒருவேற்படையைக் கையிலெடுத்து நீ இதனுலழியக்கடவை என்று கூறிவிட்டனன்; விட்டவுடனே அவ்வேற்படை அவனுயிரைவாங்கியது; அதனுல் அம்மேக நாமன் தரையில் விழுந்திறந்தனன்.—எ-று. (௬௪)

புயலுறு நாமத் தண்ணல் பொன்றலு மதனை நாடி
யயலுறு தானை வீர ரஞ்சின ரகன்று போக
வியலது தன்னை நோக்கி யெரிமுக னெரியிற் சீறிப்
பயிலுறு சிலையொன் றேந்திப் படையொடுங் கடிது வந்தான்.

(இ-ள்.) (புயலின் நாமமான) மேகன் என்னும் பெயரினனாகிய சேனாபதியானவன் இறத்தலும், அதனைக்கண்டு அருகினின்ற மற்றைய சேனாபதிகள் பயந்து விலகிச்சென்றார்கள்; உடனே அத்தன்மையைப்பார்த்து அக்கினிமுகன் அக்கினியைப்போல சீற்றங்கொண்டு முன்னம் பழகியுள்ள ஒரு வில்லினையெடுத்து மற்றையவாயுதங்களோடும் விரைவாக வந்தான்.—எ-று. (சரு)

வேறு.

வளைத்தான்றனிப் பெருவில்லினை மருவார்மனம் வளைய
விளைத்தானவட் சிறுநாணொலி மிகவார்த்தனன் விண்மேன்
முளைத்தார்தரு பிறைபோல்வதோர் முனைவாளிக டெரியாக்
கிளைத்தார்தரு பூதப்படை கேடுற்றிடப் பொழிந்தான்.

(இ-ள்.) வந்த அந்த வக்கினிமுகன் றனது பெரிய வில்லினை பகைவர் மனம் வளையவளைத்து நாணியோசைகாட்டி மிகவு மாரவாரித்து வானத்தில் முளைத்திருக்கின்ற பிறைபோன்ற கூரிய வாளிகளைத் தெரிந்தெடுத்து மிகுதியாக வங்குப்பொருந்திய பூதசைனியங்கள் அழியும்வண்ணம் விட்டனன்.—எ-று. (சசு)

தலையற்றனர் கரமற்றனர் தாளற்றனர் தோளா
மலையற்றனர் மார்பற்றனர் வாயற்றனர் செய்யுங்
கொலையற்றனர் செவியற்றனர் கூறுற்றிடு நாவி
னிலையற்றனர் படையற்றனர் நெடும்பூதர்க ளெவரும்.

(இ-ள்.) அக்கினிமுகாசுரன் விடுகின்ற பாணவருஷங்களாற் பூதர்களெல்லாம் தலையறுபட்டுக் கரமறுபட்டுத் தாளறுபட்டு மலைகளையொத்த தோள்களறுபட்டு மார்பறுபட்டு வாயறுபட்டுச் செய்யாநின்ற கொலையுமறுபட்டுச் செவியறுபட்டுக் கூறாநின்ற நாவின் நிலையும் அறுபட்டு ஆயுதங்களைத் தாங்குநிலைமையும் அறுப்பட்டவர்களாகவாயினார்கள்.—எ-று. (சஎ)

ஆரிற்றன சகடிற்றன வச்சிற்றன கிடுகி
னேரிற்றன கொடியிற்றன முடியிற்றன வீர்க்கு
மூரிப்பரி மாவிற்றன முருகன்படை வீரர்
தேரிற்றன படையிற்றன செருவிற்றன வன்றே.

(இ-ள்.) அக்கினிமுகாசுரன் பொழிந்தவம்பினால் தேர்களின் ஆர்களொடிந்தன; அன்றியும் அச்சுகளொடிந்தன; சகடங்களொடிந்தன; கிடுகுகளி னழகுகளழிந்தன; கொடிகளழிந்தன; முடிகளறுபட்டன; தேரிழுக்கின்ற வன்மைபொருந்திய குதிரைகளழிந்தன; அன்றியும் முருகவேளின் படைவீரர்களின் தேர்களழிந்தன; படைகளு மழிந்தன; போருமழிந்தன.—எ-று. (சஅ)

ஓடுற்றன குருதிப்புன லுலகச்சுற வொலியா
வாடுற்றன கவந்தக்குறை யலகைக்குல மிகவே
பாடுற்றன ஞமலித்தொகை பரவுற்றன கொடிமேற்
கூடுற்றன பாறுற்றன குறுகுற்றன கழுகே.

(இ-ள்.) அப்போர்க்களத்தில் இரத்தவெள்ளமோடின; கவந்தக்குறைகளுலகமஞ்சும்வண்ணம் ஆரவாரித்துக் கொண்டாடின; பிசாசுக்கூட்டங்கள் மிகவும் பாடின;

நாய்க்கூட்டங்கள் பரவின; காக்கைகள் மேற்புறங்களிற் கூடின; பருந்துகளுற்றன; கழுகுக ளுற்றன.—எ-று. (௪௯)

அக்காலையி னதுகண்டன னழல்கான்றிட நகையா
மைக்காலனும் வெருவுற்றிடு வலிசேர்திறன் மகவான்
கைக்கார்முகந் தனைவாங்குபு கணைமாரிகள் சொரியாப்
புக்கானவு ணனுமாங்கெதிர் பொழிந்தான்சர மழையே.

(இ-ள்.) அப்பொழுது அதனைக்கண்டு கருநிறம்பொருந்திய காலனும் அஞ்சுகின்ற வன்மைபொருந்திய வீரபுரந்தரன் தன் கையிலிருந்த வில்லினைவளைத்து அம்புமழையைப் பெய்துகொண்டு எதிரேசென்றான்; உடனே அக்கினிமுகாசுரனும் அவனெதிரி லம்புமழையைப் பெய்துகொண்டு சென்றான்.—எ-று (௫0)

கரவன்விடு நெடுவாளிகள் கந்தன்படை ஞன்மேல்
வருகின்றன வுறுகின்றன மன்னன்மகன் முன்னம்
பொருகின்றநம் வீரன்விடு புகர்வெங்கணை பலவு
மிரிகின்றன படுகின்றன விருவோர்பக ழியுமே.

(இ-ள்.) கந்தனுடைய படைவீரனான வீரபுரந்தரன்மீது சோரனான அக்கினிமுகன் விடுகின்ற நெடியவாளிகள் வருகின்றன; படுகின்றன; அரசனான சூரபன்மனுடைய மகனான அக்கினிமுகன் முன்னம் போர்புரிகின்ற நமது வீரன் விடுகின்ற புள்ளிகளையுடைய வெவ்விய வம்புகள் பலவும் அவன்மீது படாமல் விலகுகின்றன;அவ்விருவரம்புகளும் ஒன்றோடொன்று படுகின்றன.—எ-று. (௫௧)

போரிவ்வகை புரிகின்றுழிப் புரைதீர்விறன் மகவான்
றேரும்மொரு சிலையுங்கணை செறியாவமுஞ் சிதையா
வீரைம்பது சாமார்புற வெய்தேயிக் லவுண
ராரும்படி புகழும்படி யார்த்தானறம் பேர்த்தான்.

(இ-ள்.) இவ்வண்ணம் போர்புரிகின்றசமயத்தில், குற்றமற்ற வெற்றியினையுடைய வீரபுரந்தரன் ஏறியிருந்த தேரினையும், போர்புரிகின்ற வில்லையும், அம்புகள் நெருங்கியிருந்த ஆவநாழிகையையும் அழித்து, நூறம்புகளை மார்பிற் படுமொறெய்து வலியாளராகிய அசுரரனைவரும் உலகமும் புகழுமாறு தருமபேதகனாகிய அக்கினிமுகன் ஆரவாரித்தனன்.—எ-று. (௫௨)

மாறாகிய வவுணர்க்கிறை வலியுந்திறன் மகவான்
வீறானவை யிழந்திட்டதும் விழிதீயுற நோக்கிச்
சீறாச்சிலை வலையாக்கணை சிதறாவசை பலவுங்
கூறாவெதிர் புகுந்தாரவன் றுணையாமெழு குமரர்.

(இ-ள்.) பகைவனும் அசுராதிபனுமாகிய அக்கினிமுகனுடைய வன்மையும், வன்மையினையுடைய வீரபுரந்தரன் வீறழிந்ததுவும், கண்களிற் றீப்பறக்கப்பார்த்துச் சீறிக்கோபித்து விற்களைவளைத்து அம்புகளைச்சிதறிப் பலவசை மொழிகளைக் கூறிக்கொண் டவ்வீரபுரந்தரனுக்கு சகோதரர்களான ஏழுவீரர்கள் எதிரேசென்றார்கள்.--எ-று.

இடிகாலுறு முகிலாமென வெழுவீரரு மேகிக்
கடிதேமுனி வொடுசிந்திய கணையாவையும் விலக்கா
விடமாகிய வெரிமாமுகன் விறலோர்புய வரைமேல்
வடிவார்கணை பலசிந்துபு மழையாமென மறைத்தான்.

(இ-ள்.) இடியைக் கக்குகின்ற மேகத்தைப்போல ஏழுவீரர்களுஞ்சென்று விரைவாகக் கோபத்துடன் விட்ட வம்புக ளனைத்தையும் விலக்கி, விடம்போன்ற அக்

கினிமுக னவ்வீரர்கள் புயமலைகண்மீது வடிக்கப்பட்ட நீண்ட பலவம்புகளை விட்டு மழையைப்போல மறைத்தனன்.—எ-று. (௫௪)

சகத்தானவர் புகழப்படு தலைவன்மகன் சரங்கண்
மிகத்தான்விட மெலிவுற்றிடு மெழுவீரரும் வெய்யோன்
முகத்தாயிரங் கரத்தாயிர முரத்தாயிர மொய்ம்பி
னகத்தாயிரங் கணைபாய்ச்சின ரவன்றேரையு மறுத்தார்.

(இ-ள்.) உலகத்திலுள்ள வசுரர்களாற் புகழப்படுகின்ற தலைவனாகிய சூரபன்மனுடைய பிள்ளையான அக்கினிமுகன் சரங்களை மிகுதியாகவிட வதனால் மெலிவடைந்த எழுவீரர்களும் திரும்ப வக்கொடியவனுடைய முகத்திலாயிரமும், கரத்திலாயிரமும், மார்பிலாயிரமும், தோள்களி னகத்தாயிரமுமாக வம்புகளைப் புகுத்தினார்கள்; அன்றியும் அவன்றேரையு முடைத்தார்கள்.—எ-று. (௫௫)

வேறு.

அறுத்திடு மெல்லையி னழலின் மாமுகன்
மறித்துமோர் தேரிடை வாவி வல்லைபோ
யெறித்தரு கதிருடை யெழுவர் தம்மையுஞ்
செறுத்தெரி விழித்திவை செப்பன் மேயினான்.

(இ-ள்.) அறுக்கப்பட்ட சமயத்தில் அக்கினிமுகன் பின்னுமொரு தேரிற்குதித்து விரைவாகச்சென்று எறிக்காநின்ற கதிரினையுடைய வெழுவர்களையும் மடக்கித் தீப்பறக்கப்பார்த்து இவைகளைக் கூறுவானாயினான்.—எ-று. (௫௬)

ஒன்றொரு படையினா லுங்க ளாவியைத்
தென்றிசை மறலியார் தெவிட்ட நல்கியே
வென்றிகொண் மொய்ம்புடை விடலை தன்னையுங்
கொன்றிடு கின்றன னென்று கூறினான்.

(இ-ள்.) ஒரு ஆயுதத்தினா லுங்களுயிரைத் தென்றிசையிலுள்ள எமன் உண்ணக்கொடுத்துப் பின்னர் வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுவையும் கொல்லுகின்றே னென்று கூறினான்.—எ-று. (௫௭)

கூறுபோ தத்தினிற் குமரன் றுணையோர்
வேறுவே றடுகணை வீசி வெய்யவ
னேறுதேர் தன்னையு மிவுளி தன்னையு
நூறினா ரவனுட னூறழை யாக்கினார்.

(இ-ள்.) இவ்வண்ண மவ்வக்கினிமுகன் கூறு மப்போழ்து சண்முகசைனியங்களான வவர்கள் தனியே தனியே கொலைத்தொழிலினையுடைய பாணங்களைவிட்டு அக்கொடியவனேறிய இரதத்தையும் உடைத்து அவனுடலையும் பொத்தலாக்கினார்கள். ()

ஆயது காலையி லவுணன் வேறொரு
பாயிருந் தேரிடைப் பாய்ந்து கண்ணுதற்
றாயவன் படையினை யெடுத்துத் துண்ணென
நேயமொ டருச்சனை நிரப்பித் தூண்டினான்.

(இ-ள்.) அப்பொழுது மகேந்திரபுரியி னரசனான சூரபன்மனுடைய பிள்ளையான அவ்வசுரன் வேறேயொரு பரவிய பெரிய தேரினிற் குதித்துக் கண்ணுதலாகிய தூயவனுடைய அம்பினை எடுத்து விரைவாக விருப்பத்துட னருச்சனை செய்துவிட்டான்.—எ-று. (௫௯)

அடலெரி முகத்தின னாதி நாயகன்
படைதொட வன்னது படியும் வானமு
வடவையி னுருவமாய் வரலு மச்செயல்
விடலைக ளெழுவரும் வெகுண்டு நோக்கினர்.

(இ-ள்.) வன்மையாளனாகிய அக்கினிமுகன் முழுமுதற்கடவுளி னம்பினைவிட, அது பூமியந்தரங்களிலொன்றாய் வடவாக்கினி சொரூபமாய் வருதலும், அவ்வாறு வருஞ் செய்கையை வாலிபர்களான ஏழுபேர்களுங் கோபித்துப்பார்த்தார்கள்.—எ-று. (சுO)

அனற்படை யன்னதா லதற்கு மாறதாப்
புனற்படை விடுக்குவ மென்று புந்திகொண்
டினப்படு துணைவர்கள் யாரும் வாருண
முனைப்படை தூண்டினர் முடியுஞ் செய்கையார்.

(இ-ள்.) அதோ வருவது அக்கினியாஸ்திரமாம்; ஆதலா லதற்கு மாறாக வருணாஸ்திரத்தை விடுவோமென்று மனதினினைத்து, ஒரு கூட்டமாக நின்ற வவ்வேழு துணைவர்களும் மரணமடையுஞ் செயலினராய் வருணாஸ்திரத்தை விட்டார்கள்.—எ-று.

தூண்டிய வாருணத் தொல்லை மாப்படை
சேண்டொடர்ந் திடுதலுந் தேவன் றீப்படை
யாண்டெதி ராகியே யவற்றை நுங்கிற்று
வீண்டொரு முனிகட லேழு முண்டென.

(இ-ள்.) இவர்களால் விடப்பட்ட பெரிய சிறந்த வருணாஸ்திரம் வானவழியாய்ச்செல்லுதலும், மகாதேவனுடைய அக்கினிரூபமான வஸ்திரம் அவ்விடத்தி லெதிரேசென்று இவ்விடத்திலொருமுனியான வகத்தியனெழுகடலையும் உண்டவாறுபோல, அவ்வேழு வருணாஸ்திரத்தையும் விழுங்கியது.—எ-று. (சுஉ)

சலபதி படைகளைத் தடிந்து வாய்மடுத்
துலகுளோர் வெருவர வூழி யான்படை
வலியுட னேகியேழ் வயவர் தம்மையு
மெலிவுசெய் துயிர்கொடு மீண்டு போயதே.

(இ-ள்.) அப்பிரளய காலாக்கினி யுருத்திராஸ்திரம் வருணனுடைய அம்புகளை யழித்துண்டு, உலகவாசிகள் அஞ்ச வன்மையுடன் சென்று அவ்வேழுவீரர்களையும் துன்புறுத்தி அவர்களுயிரை வாங்கிக்கொண்டு திரும்பிச்சென்றது.—எ-று. (சுஙு)

மீண்டது போதலும் வீர ரவ்விடை
மாண்டனர் கயிலையின் மருங்கு போயினர்
மூண்டிடு பெருங்கனன் முகத்தன னங்கது
காண்டலு மார்த்தனன் களிப்பி னும்பரான்.

(இ-ள்.) அவ்வூழிநாயகனம்பு திரும்பிச் சென்றவுடனே, எழுவீரர்களும் அவ்விடத்தி லிறந்து கயிலையினிடத்திற் சென்றார்கள்; பற்றியெரியாநின்ற அக்கினி உருவமான முகத்தினையுடைய அவ்வசுரன் அதனைக்கண்டு மிக்க சந்தோஷத்தினை யுடையவனாய் ஆரவாரித்தனன்.—எ-று. (சுசு)

ஒருங்குற வீரர்க ளுலந்து வீடலு
மருங்குற நோக்கிய வயவெம் பூதர்கள்
கரங்களை மறித்தனர் கலங்கி வாய்புடைத்
திரங்கினர் வெருவின ரிரிந்து போயினர்.

(இ-ள்.) ஒன்றாக வவ்வேழுவீரர்களும் இறந்துபடுதலும், அதனை அருகினின்று கண்டு வெற்றியும் வெவ்விய தன்மையுமுடைய பூதர்கள் கரங்களை விரித்து கலக்கமுற்று வாயிலடித்து இரங்கிப்பயந்து விலகிச்சென்றார்கள்.—எ-று. (சுரு)

நெற்றியில் வீரர்தம் விளிவு நீங்கலா
துற்றிடு பூதர்க ளுலேந்து சாய்வதுந்
தெற்றென நோக்கினன் செயிர்த்து விம்மினன்
வெற்றியின் கிழவனும் வீர வாகுவே.

(இ-ள்.) முன்னிடத்தில் எழுவீரர்களின் மரணமும் விடாமல் பூதவீரர்கள் நிலைகுலேந்தோடுவதும், வெற்றித்தலையனாகிய வீரவாகு விரைவாகப்பார்த்து கோபங்கொண்டு விம்முதலடைந்தனன்—எ-று. (சுசு)

வீரமொய்ம் புடையவன் வெருவ லீரெனப்
பாரிடக் கணங்களைப் பாணி யாலமைத்
தேரிறை முன்னரோ யொருதன் றேரொடு
மாரழன் முகத்தன்மு னணுகப் போயினன்.

(இ-ள்.) வீரவாகுதேவன் ஓடுமவர்களைப்பார்த்து நீங்களஞ்சாதேயுங்களென்று கரத்தாலமைத்து ஒரு கணப்பொழுதிற்குள் ஒப்பற்ற தனதிரதத்துடன் அக்கினிமுகனெதிரிலாமாறு சென்றான்.—எ-று. (சுஎ)

போய்க்குறு குற்றுழிப் பொருநர்த் தேய்த்தலின்
வீக்கிய கனைகழல் வீர வாகுவைத்
தாக்கெரி முகமுடைத் தறுகண் வெய்யவ
னேக்கினன் வெகுண்டிவை நுவறல் செய்குவான்.

(இ-ள்.) சென்று சேர்ந்தவுடனே பகைவர்களைக் கொன்றமையால், பற்றியெரிகின்ற தீவடிவமான முகமுள்ள அக்கினிமுகக்கொடியவன் கட்டப்பட்ட வீரக்கழலினையுடைய வீரவாகுவைப்பார்த்துக்கோபித்து இவைகளைக்கூறுவானாயினன்.—எ-று. (சுஅ)

வேறு.

எதிரா கியபூ தரையே னையரை
மதியே னினையே யடவந் தனனீ
யதுகா லையினிங் ஙனடைந் தனையால்
விதியே யுனையென் முன்விடுத் ததுவே.

(இ-ள்.) எதிராகவந்த பூதர்களையும் மற்றையவர்களையும் யான் மதியேன், நின்னையே கொல்லுமாறு வந்திருக்கின்றேன், அந்த சமயத்திலேயே நீயும் இவ்விடத்திற்கு வந்தனை, உன்றலைவிதியே யுன்னை என்னெதிரிற் கொண்டுவந்து விட்டது.—எ-று. ()

கொன்றாய் பலரைக் கொடுவெஞ் சமரின்
வென்றாய் பலரை மிகைசெய் தனையாய்
நின்றாய் வருவாய் நினதா ருயிருக்
கின்றா குவதோ விறுதிப் பகலே.

(இ-ள்.) நீ பலரைக்கொன்றனை; கொடிய வெவ்விய போரினிற் பலரை வென்றனை; பலரைத் துன்புறுத்தி நின்றனை; ஆதலால், நீ வாழ்நின்னரியவுயிருக் கின்றுதானோ? முடிவுகாலம்.—எ-று. (எ0)

முன்னர்ப் பொருதே முரிவுற் றவர்போ
லென்னைக் கருதே லினியோ ரிறையி

லுன்னைத் தலைகொய் தொருசென் னியையு
மன்னர்க் கிறைசே வடிவைத் திடுவேன்.

(இ-ள்.) முன்னே போர்புரிந்து முதுகிட்டவர்களைப்போல நீ என்னை நினையாதே, இனியொரு கணப்பொழுதில் நான் உன்றலையையறுத்து அரசர்க்கரசனாகிய சூரபன்மனுடைய செவ்விய காலடியில் வைப்பேன்.—எ-று. (எக)

பூண்பான் முலைமா தர்புணர்ச் சியெனு
மாண்போர் தனிலே வலியற் றழியு
மாண்பா லொருவ னவனே யலனோ
வேண்பா லுனையா னிவண்வென் றிலனேல்.

(இ-ள்.) யான் வன்மைபொருந்திய வுன்னை இவ்விடத்தில் வெல்லாது போவேனால், பூணணிந்த பால்முலைமாதர்களின் புணர்ச்சியென்று கூறப்படுகிற ஆண்போரினில் வன்மையற்று அழிகின்ற ஆண்மகனி லொருவனன்றோ?—எ-று. (எஉ)

என்னு வெதிரா விவையொப் பனசொற்
சொன்னா னதுகேட் டிடுதோல் விறலோன்
பொன்னார் தருசெங் கைபுடைத் துநகைத்
தொன்னான் முகநோக் கியுரைத் திடுவான்.

(இ-ள்.) எதிரேவந்து இவ்வாறான பல சொற்களைச் சொன்னான்; உடனே அதனைக்கேட்ட வீரவாகுதேவன், பொன்னணியணிந்த செவ்விய கையொடு கையைப் புடைத்துச் சிரித்துப் பகைவனான அக்கினிமுகனுடைய முகத்தைப் பார்த்துக் கூறுவானாயினான்.—எ-று. (எங)

முளையார் தருபொன் னவன்முந் துசமர்
விளையா வடிவந் தனைவிட் டகலா
வளையார் புனல்புக் கனன் னவனுக்
கிளையா யொருநீ யெவணுய் குதியோ.

(இ-ள்.) தண்டதரனான இரணியன் உயர்ந்த போர்புரிந்து உருமாறிச்சென்று சங்குகள் பொருந்திய கடனீரிற் புக்கொளித்தனன்; இனி அவனுக்கிளையவனான நீ எங்கே பிழைக்கப்போகின்றனை.—எ-று. (எச)

மூண்டா ரமர்செய் திடுமொய்ம் பரொலா
மாண்டார் கதிரோன் பகைமற் றொருவன்
மீண்டா னவனும் விளிவுற் றிடுநீ
யீண்டா ருயிர்தோற் றிடவே கினையோ.

(இ-ள்.) நெருங்கின்று பெரும்போர் புரிந்த வீரர்களெல்லாம் இறந்தார்கள்; பானுகோபன் ஒருத்தன்மாத்திரம், திரும்பச்சென்றான், அவனும் இறப்பான்; இவ்விடத்தி லிப்பொழுது நீயு முயிரைத்துறக்க வந்தனையோ?—எ-று. (எரு)

வீடிச் செருவில் விளிவா குதியோ
பேடித் தொழில்கற் றிடுபிள் ளையென
வோடிக் கடல்புக் குயிருய் குதியோ
நாடிக் கடிதொன் றைநவிற் றுதியே.

(இ-ள்.) நீ இப்போரிலிறந்தொழிதியோ? அல்லது பேடித்தொழிலைப்பழகிய இரணியனைப்போல ஓடிக் கடலிற்புகுந்து பிராணனைக்காப்பாற்றிக் கொள்ளுவையோ? ஆலோசித்து விரைவாக வெதையாயினு மொன்றைக் கூறக்கடவை.—எ-று. (எசு)

பார்காத் திடினும் பலதா னவரு
நேர்காத் திடினு நிலைபெற் றழியாச்
சூர்காத் திடினுந் தொலைவில் விறலோ
ரார்காத் திடினு மடுவே னுனையே.

(இ-ள்.) இந்தவுலகி லுள்ளவர் காத்தாலும், அன்றிப் பலவசுரர்களும் ஒன்றுக வந்து நேரேநின்று காத்தாலும், நிலைபெற்று அழியாதிருக்கின்ற சூரபன்மன் காத்தாலும், கெடாத வெற்றியினையுடையவர்கள் யாவர் காத்தாலும் உன்னை யான் கொல்லுவேன்.

என்றிங் கிவைவீ ரனிசைத் திடலுங்
குன்றன் னசினத் தழல்கொம் மெனவே
சென்றுள் ளமலைத் துழிதீ முகவன்
வன்றிண் சிலையொன் றைவளைத் தனனே.

(இ-ள்.) என, விதனை வீரவாகுதேவன் கூறுதலும், அதனைக்கேட்டு மலைபோன்ற கோபாக்கினி விரைவாகச்சென்று மனநிலையை யழித்தவுடனே, அக்கினிமுகன் வலிய திண்ணிய ஒருவில்லினை எடுத்து வளைத்தனன்.—எ-று. (எஅ)

வேறு.

நடுத்தானகன் றிடுசூர்மக னுணைதையைச் சிலைநின்
றெடுத்தானெடுத் தலும்வெய்யவ னிரவோனுட னிரிந்தா
னுடுத்தா னுதிர்ந் தனசேடனு முலைந்தா னுலக னைத்துங்
கெடுத்தானிவ னெனவானவர் கிளையோடின வன்றே.

(இ-ள்.) பொதுமையற்ற சூரன் மகனுன வக்கினிமுகன் வில்லிலுள்ள நாணோசையைத் தட்டிக்காட்டினவுடனே வவ்வோசையைக்கேட்டுப் பயந்து சூரியன் சந்திரனுடனே விலகிச்சென்றுன்; நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன; ஆதிசேஷனும் உலைந்தான்; தேவர்கூட்டங்கள் இவன் உலகனைத்தையும் கெடுத்தானென்று கூறிக்கொண்டோடின.—எ-று. (எக)

அக்காலையின் முகமாறுடை யமலன்றனக் கன்பன்
கைக்கார்முக மிருகால்வளைத் தொருகாலொலி காட்டத்
திக்கானன முடையான்முதற் றேவாசுரர் துளங்கி
யிக்காலம தோபார்முழு திறுங்காலம தென்றார்.

(இ-ள்.) அப்பொழுது நின்மலனுகிய சண்முகனுடைய அன்பனுன வீரவாகு தேவன் தன் கையிலுள்ள வில்லினை யிருபுறமும் வளையவளைத்து நாணியேற்றிட்டு ஒருமுறை நாணியோசையைக்காட்டுதலும், திக்குகடோறும் முகமுடையவனுகிய பிரமன் முதலிய தேவர்களும் அசுரர்களும் நடுங்கி இந்தக்காலந்தானே உலகமெல்லா மழியுங் காலமென்று கூறினார்கள்.—எ-று. (அ௦)

என்னுவிசைத் திடுமெல்லையி லெரிமாமுக னீரேழ்
கொன்னூர்கணை விடுத்தார்த்தனன் குறுகுற்றது வருமுன்
மின்னுமெனப் பதினுற்கணை விடுத்தேயவை விலக்கிப்
பொன்னூர்தரு திறன்மொய்ம்பினன் புயலேறெனத் தெழித்தான்.

(இ-ள்.) என்று அவர்கள் கூறுகின்றசமயத்தில், அக்கினிமுகாசுரன் வன்மை பொருந்திய பதினுலுபாணங்களைவிட்டு ஆரவாரித்தனன்; அவ்வம்புகள் வருதற்கு முன்னே மின்னலென்று கூறுமாறு பதினுலுபாணங்களை பொன்னுபரணமணிந்த வெற்றி

பொருந்திய வீரவாகுதேவன் விட்டு மேகங் கர்ச்சித்தாற்போல கர்ச்சித்துக்கொண்டு அவன் விட்ட பதினாலுபாணங்களையும் விலக்கினான்.—எ-று. (அக)

செஞ்ஞாயிறு கதிர்கான்றெனத் தீமாமுகத் தவுண
னெஞ்ஞான்கெனுந் தொகைபெற்றிடு மயில்வெங்கணை தொடுப்ப
வெஞ்ஞான்றுமுற் றிடுசீர்த்திய னிருபான்கணை துரந்து
மைஞ்ஞான்றிடு முகின்மேற்செலு மருத்தாமெனத் தடுத்தான்.

(இ-ள்.) செந்நிறமான ஞாயிறு கதிரைக் கான்றதுபோல, அக்கினிமுகாசுரன் இருபது என்னும் எண்பொருந்திய கூரிய வெவ்விய வம்புகளை விட்டனன்; உடனே எவ்விடத்திலும் பொருந்திய கீர்த்தியினையுடைய வீரவாகுதேவன் இருபதம்புகளை விட்டு கருமைதங்கிய மேகத்தின்மீது செல்லாநின்ற வாயுவைப்போலத் தடுத்தனன்.

கண்டங்கது கனன்மாமுகன் கணையாயிரந் துரந்து
புண்டங்கிய தனிவேலுடைப் புனிதன்றன திளவன்
முண்டம்புக வுய்த்தேதிறன் முதுவால்வளை யதனை
யண்டங்கிழி படவூதின னவுணப்படை புகழ.

(இ-ள்.) அதனை அக்கினிமுகாசுரன் பார்த்து ஆயிரமம்புகளைவிட்டு புண்பொருந்திய ஒப்பற்ற வேற்படையினையுடைய நின்மலனான குமரக்கடவுளின் இளையவனான வீரவாகுவின் நெற்றியிற் புகுமாறுவிட்டு வெள்ளிய பெரிய வெற்றிச்சங்கத்தை எடுத்து அசுரசைனியங்கள் மகிழுமாறு அண்டங்கிழிய வூதினான்.—எ-று. (அரு)

ஆராரும் வியக்குந்திற லடன்மொய்ம்பின னங்க
ணோராயிரம் வடிவாளிக ளொருங்கேதொடுத் துய்த்துச்
சூராகிய வவுணன்றரு தொல்லைத்தனி மைந்தன்
றேரானதும் பரியானதுஞ் சிலையானதுஞ் சிதைத்தான்.

(இ-ள்.) அனைவரு மாச்சரியப்படத்தக்க வன்மையாளனான வீரவாகுதேவன் அவ்விடத்தி லோராயிரங் கூரிய வம்புகளை யொன்றாகத் தொடுத்துவிட்டுச் சூரனாகிய அசுரன் பெற்ற ஒப்பற்ற பிள்ளையான அக்கினிமுகனுடைய தேரினையுங் குதிரைகளையும் வில்லினையும் அழித்தனன்.—எ-று. (அச)

சிதையும்பொழு தயல்வேறொரு தேரின்மிசைப் பாயாக்
கதையொன்றினை விடுத்தானெரி கனன்மாமுக னதன்மேற்
குதையொன்றினைத் துரந்தேயருட் குமரேசனுக் கிளையோன்
சுதையொன்றியக் களத்தேவிழத் துண்டம்பல கண்டான்.

(இ-ள்.) தேர் உடைந்தவுடனே வேறேயொரு தேரின்மீது குதித்து அக்கினிமுகாசுரன் ஒரு கதாயுதத்தை விட்டான்; அக்கதையின்மீது அதற்கெதிராய் ஒரு அம்பினை குமரக்கடவுளி னிளையவரான வீரவாகுதேவர் விட்டு அக்கதை யக்களத்திலேயே விழுந்து பல துண்டமாகுமாறு செய்தனர்.—எ-று. (அரு)

மாற்றோர்சிலை யினைவாங்கி வளைத்தேகனன் முகத்தோன்
காற்றோன்படை துரக்கின்றுழி யிவனும்மது கடவக்
கூற்றோன்படை தொடுத்தானவன் குமரன்றனக் கிளையோன்
வேற்றோர்படை துரந்திட்டில னதுவேசெல விட்டான்.

(இ-ள்.) அக்கினிமுகன் வேறேயொரு வில்லினை வளைத்து வாயுவினம்பினை விடும்பொழுது, வீரவாகுவும் அந்த வாயுவாஸ்திரத்தினையே விட்டனன்; உடனே அவன்

எமாஸ்திரத்தை விட்டனன்; அதற்குச் சண்முகசோதரன் வேறொரம்பினை விடாமல் அவ்வெமாஸ்திரத்தையே விட்டனன்.—எ-று. (அசு)

மாகத்துறு கதிர்வெம்படை மன்னன்றரு மதலை
வேகத்தினில் விடவாங்கது விடுத்தேயது விலக்கி
நாகத்தமர் கறைநீவிய நனிகூரிய கணைநூ
ருகத்திடை படவேதுரந் தடன்மொய்ம்பின னார்த்தான்.

(இ-ள்.) வானிற்பொருந்திய சூரியனுடைய வெவ்விய வம்பினைச் சூரன் பிள்ளையான அக்கினிமுகன் விரைவாக விடுதலும், அதனையழித்தற்கு, அந்தச் சூரியாஸ்திரத்தையே விட்டு அதனை விலக்கி பாம்பிற்பொருந்திய விடத்தை யெடுத்துத் தடவியுள்ளதும், மிகவுங் கூரியதுமான நூறுபாணங்களை அவன் மார்பிற் படுமாறு விடுத்து வீரவாகுதேவ னாரவாரித்தனன்.—எ-று. (அஎ)

தருமத்திய னிறுவுற்றிடு தக்கோன்விடு சரங்கண்
மருமத்தினிற் படுகின்றுழி வானோரமு தருந்துங்
கருமத்தினில் விரவிக்கடல் கடையக்கவிழ்ந் திட்ட
பெருமத்தென நிலைசோர்ந்துதன் பெருந்தேர்மிசை வீழ்ந்தான்.

(இ-ள்.) தருமவியலை நிலைநாட்டுகின்ற தகுதியாளனான வீரவாகுதேவன் விட்ட வம்புகள் மார்பிற் பட்டவுடனே, தேவர்கள் அமுதுண்ணும்பொருட்டுக் கடலைக்கடையவப்பொழுது கவிழ்ந்த பெரிய மத்தான மந்தரமலையைப்போல அக்கினிமுகன் நிலைதளர்ந்து தன்னுடைய தேரின்மீது விழுந்தனன்.—எ-று. (அஅ)

விழுகின்றதொ ரெரிமாமுகன் வியன்மார்பெனும் வரைநின்
றிழிகின்றன நதியாமென வெருவைப்புன லுயிரு
மொழிகின்றது வருகின்றது லாவுற்றது தேற்ற
மழிகின்றது வருமந்தக னச்சுற்றன னணுக.

(இ-ள்.) கீழ்விழுந்த அக்கினிமுகனுடைய பெரிய மார்பாகிய மலையினின்றும் இரத்தம் ஆற்றைப்போல வொழுகியது; இவன் பிராணனும் போவதும் வருவது முலவுவதுவுமாக விருந்தது; மனவுணர்ச்சியுமழிகின்றது; இவனுயிரை வாங்க வந்த எமனும் அருகிற்செல்ல அஞ்சினன்.—எ-று. (அகூ)

விளிந்தானென மயங்குற்றவன் வெஞ்சூருரு மேற்று
னெளிந்தாடர வசைந்தாலென நெடுந்தேர்மிசைப் பெயராத்
தெளிந்தாயிடை யிரங்கிப்பொரு திறல்வன்மைய திலனா
யெளிந்தானெளி திடுகிறவ னித்தன்மைசிந் தித்தான்.

(இ-ள்.) இறந்தவனைப்போல மூர்ச்சித்தவனாய் வவ்வக்கினிமுகன் கொடுந் துன்பத்தைச்செய்கின்ற பேரிடியினாற் பாம்பு நெளிந்தாற்போல, நெடிய தேரின்மீது புரள்பவனாய்க்கிடந்து தெளிந்து அவ்விடத்திற் சற்றேவருந்திப் பொருதற்கேற்ற திறலும் வன்மையும் இல்லாதவனாய்த் தாழ்வடைந்தனன்; அவ்வாறு இழிவுற்ற வவன் இவண்ணமாக நினைத்தனன்.—எ-று. (கூ0)

மொழிபட்டிடு திறன்மாற்றலர் முனைவெஞ்செருத் தனில்யா
னழிபட்டிடின் வருவாயென வந்நாட்சிறு காலைப்
பழிபட்டிடும் வெறியாட்டினைப் பயின்றேபலி யூட்டி
வழிபட்டதன் னகர்க்காளியை மனத்தின்மிசை நினைத்தான்.

(இ-ள்.) கூறுகின்ற வெற்றியினையுடைய பகைவர்களுட னெதிர்த்து நின்று செய்கின்ற கொடியயுத்தத்தில் நானழிந்தால் எனக்குப் படைத்துணையாக வரக்கடவை என்று முன்னாளில் சிறிதுகாலம் பழிபொருந்திய வெறியாட்டு நடத்திப் பலியளித்து வழிபாடுசெய்த தனது நகரத்திலுள்ள காளியை மனதினினைத்தனன்.—எ-று.

இவன் சிறுவனாக விருந்த வந்நாளில் தன்னகரத்திலுள்ள காளியை இழிவு பொருந்திய ஆடு பன்றி கோழியாதிகளால் பூசித்தான்; பூசித்த ஞான்றவ ளவனெதிரே தோன்றி எதற்காக வென்னைப் பூசித்தனை யென்றனள். அதற்கவன் யான் என்று போரிலிளைத்தவனாக வுன்னை நினைக்கின்றேனோ அன்றுன்னை நினைப்பேன், அப்பொழுது நீ எனக்குப் படைத்துணையாக வரவேண்டும் என்றனன்; அதற்கவளும் அவ்வாறேயாகுகவென்று கூறி மறைந்தனள். அவளை இங்குநினைத்தான் என்க. (கக)

வேறு.

விஞ்சுத் தொல்விறன் மேவு சூர்தரு
மைஞ்சன் றன்னை மனத்தி லுன்னலு
நஞ்சுந் துண்ணென நண்ணு காளிதன்
னெஞ்சந் தன்னி னினைத்தன் மேயினாள்.

(இ-ள்.) மிகவு மதிகமான வெற்றியினையுடைய சூரபன்மன் பெற்ற பிள்ளையான அக்கினிமுகன் தன்னை மனதில் நினைத்தவுடனே, விடமும் திடுக்கிட வராநின்ற காளி தன் மனத்தி னினைத்தவுடன் வந்தாள்.—எ-று. (கஉ)

சூலங் கொண்ட லமர்ந்து தோன்றுவாள்
சூலங் கொண்ட லமந்த தோளினாள்
கோலம் பெற்ற குலிங்க வேணியாள்
கோலம் பெற்ற குறுங்கொ லைக்கணாள்.

(இ-ள்.) சூலினையுடைய மேகத்தைப்போலக் கருநிறமெய்திக் காணப்படுவாள்; அன்றியும் சூலத்தைச்சுமந்து அலமராநின்ற தோளினையுடையவள்; நிறம்பொருந்திய இங்குலிகம்போலுஞ் சடையினையுடையவள்; மைக்கோலம் பொருந்தியதுவும், குறுகியதுவும், கொலைத்தொழிலினையுடையதுவுமான கண்களையுடையவள்.—எ-று ()

போதங் கொன்று பொறுமை மிக்குளாள்
போதங் கொன்று பொலஞ்செய் தாளினா
ளேதந் தீர்ந்திடு மெண்ண லார்சிர
மேதந் தீர்ந்திடு மேம வாளினாள்.

(இ-ள்.) ஞானவுணர்ச்சியையழித்த பொறுமையை மிகுதியாகவுடையவள்; மலர்போன்ற அழகுபொருந்திய காலடிகளையுடையவள்; இன்பமொழிந்த பகையாளர்களின் தலைகளையேபற்றி யறுக்கின்ற பொன்மயமான வாட்படையினையுடையவள். ()

சங்கா ரத்தணி தாங்கு கொங்கையாள்
சங்கா ரத்தணி தந்த செங்கையா
ளுங்கா ரத்தி னுரத்த வாடையா
ளுங்கா ரத்தி னுரப்பு மோதையாள்.

(இ-ள்.) சங்கங்களீன்ற முத்தாபரணங்களையணிந்த கொங்கையினையுடையவள்; கொலையினழகையே காட்டாநின்ற கையினையுடையவள்; அழுத்தமான கஞ்சுளியாடையினையுடையவள்; உங்காரத்தொனியுடன் உரப்புகின்றஓசையினையுடையவள். ()

ஞாலத் தேவரு நாகர் வேந்தரு
ஞாலத் தேவரு மேத்த நண்ணுவாள்
காலத் தீயர்க ளிற்றின் மேலையோர்
காலத் தீயர் கலங்கு காட்சியாள்.

(இ-ள்.) மறையவர்களும், நாகராசர்களும், உலகிலுள்ள வனேவர்களும் வணங்கும்வண்ணம் வருபவள்; காலத்தீயர்களும், யானைவாகனரான ஐயனார் முதலியவர்களும், எமன்முதலிய கொடியவர்களும் கலங்கத்தக்க காட்சியினையுடையவள்.—எ-று. (கூசு)

அஞ்சத் தானடி யான வானவ
ரஞ்சத் தானடி பேர்த்து லாவுவா
ணஞ்சத் தானவர் நைய வெம்மைசெய்
நஞ்சத் தானவர் சுற்ற நல்குவாள்.

(இ-ள்.) அன்னவாகனனான பிரமன்முதலிய தேவர்கள் பயமுறுமாறு கால்தூக்கிவைத்துலாவுவாள்; நம்முடைய சத்தாகவுள்ள தேவர்கள் வருந்தத் துன்புறுத்துகின்றவிடமாகவுள்ள அந்த அசுரர்களின் சுற்றங்களை இரக்ஷிப்பவள்.—எ-று. (கூஎ)

அங்கத் தன்மை யளாய மர்ந்திடு
மங்கத் தன்மை யளாய காளிமால்
சிங்கத் தேறிய செல்வன் மைந்தன்முன்
சிங்கத் தேறினள் செல்லன் மேயினாள்.

(இ-ள்.) அவ்விடத்தி லவ்வண்ணமாக விருக்கின்ற உபாய விலக்கணங்களையுடைய காளியானவள், பெரிய சிங்கத்திலேறிய செல்வனான சூரபன்மனுடைய பிள்ளையான அக்கினிமுகனெதிரே சிங்கத்தின்மீதேறிச் செல்லுவாளாயினாள்.—எ-று. (கூஅ)

வில்லுச் சூலம் வியன்ம ழுக்கதை
யெல்லைப் பல்படை யாவை யுங்கொளா
மல்லற் காளிகண் மாப்பெ ரும்படை
செல்லக் கூளி செறிந்து சூழ்தர.

(இ-ள்.) வில்லுஞ் சூலத்தையும், பெரிய மழுவாயுதத்தையும், கதையையும், அளவற்ற மற்றைய எல்லாவாயுதங்களையும் எடுத்துக்கொண்டு மிகுதியான காளிகளான பெரிய சைநியங்கள் செல்லாநிற்பவும், கூளிப்படைகள் நெருங்கிச்சூழவும்.—எ-று. (கூகூ)

மூதக் கார்ப்பொடு விண்ணை முட்டுற
வேதக் கூளிக ளேறு கேதனம்
மூதச் சங்க மொழிந்த பல்லிய
மேதக் கோசை மிகுத்து மேவவே.

(இ-ள்.) பிறருக்குத் துன்பத்தைச் செய்கின்ற கூளிகளால் ஏறப்பெற்ற கொடிகள் மிக்க வாரவாரத்துடன் ஆகாயத்தை யளாவவும், சங்கங்களும் அன்றியுள்ள பலவகை வாத்தியங்களும் முழக்குவதான் மிக்க வோசை யதிகரித்துக்கொண் டுடன்வாராநிற்பவும்.—எ-று. (சOO)

வேறு.

விரைவொடு பறந்தலை மேவி வீழ்ந்தய
ரெரிமுக மதலையை யெய்தி நோக்கியா
னுரமிகு மொன்னல ருயிரா யுண்பனீ
பரிவுற லென்றன ளமைத்த பாணியாள்.

(இ-ள்.) விரைவாகப் போர்க்களத்தை யடைந்து வீரவாகுதேவன் விட்ட வம்புகள்பட்டு மயங்கிக்கிடக்கின்ற அக்கினிமுகாசுரனை யடைந்து பார்த்து நான் வன்மை பொருந்திய பகைவர்களுயிரை யுண்பேன்; இனி நீ துன்புறுதே என்று அமைக்கப்பெற்ற கையினையுடையவள்.—எ-று. (௧0௧)

இவ்வகை யருளியே யிளவல் பாற்படுந்
தெய்வதப் பூதர்தஞ் சேனை மேற்செலாக்
கவ்வைகொள் செருத்தொழில் கருதி யார்த்தன
ளவ்வகைப் பூதமு மச்சங் கொள்ளவே.

(இ-ள்.) இவ்வண்ணமாக வருளிச்செய்து, குமரக்கடவுளி னிளையவரான வீரவாகுதேவ ரருகினிற்கின்ற தெய்வீகம்பொருந்திய பூதசேனைகள்மீது சென்று ஆரவாரத்தினையுடைய போர்த்தொழிலைக்கருதி பஞ்சபூதங்களு மஞ்சும்வண்ணம் ஆரவாரித்தனள்.—எ-று. (௧0௨)

ஆர்த்திடு மெல்லையி லளக்கர் சூழ்ந்தென
வார்த்திடு மெல்லையி லடல்வெம் பூதரும்
வேர்த்தன ரழுங்கினர் மேற்சென் றேற்றனர்
வேர்த்தன ரழுங்கினர் விண்ணு ளோரெலாம்.

(இ-ள்.) ஆரவாரிக்கின்றசமயத்தில், வன்மையாளரான வெவ்விய பூதர்களும் கடல் சூழ்ந்தாற்போல, உடல் வேர்த்து ஆரவாரித்துக்கொண்டு மேல்விழுந் தெதிர்த்தார்கள்; இதனைக்கண்டு தேவர்களெல்லாம் வியர்வை யடைந்து துன்புற்றார்கள்.-எ-று.

காளிகள் சூலம்வேல் கணிச்சி கார்முகம்
வாளிகள் சிந்தினர் வரை நெடுந்தரு
நீளிக ளெழுக்கதை நேமி யின்னன
கூளிகள் வீசினர் குறுகிப் போர்செய் தார்.

(இ-ள்.) காளிகள் சூலங்களையும், வேல்களையும், கண்ட கோடரிகளையும், விற்களில் வைத்து விடுகின்ற அம்புகளையும் விட்டார்கள்; உடனே கூளிகள் மலைகளையும், நெடிய மரங்களையும், நீளமான தண்டமுதலியவைகளையும், எழுக்களையும், கதைகளையும், சக்கரமுதலியவைகளையும் விட்டு நெருங்கிப் போர்புரிந்தார்கள்.—எ-று. (௧0௪)

அத்திற னோக்கியே யாடற் பூதர்க
ளத்திறத் தவரையு மீறு செய்கெனுக்
கைத்தலத் திருந்ததோர் கழுமுள் வீசினுள்
பத்திரை தன்னருள் படைத்த காளியே.

(இ-ள்.) காளிகளுங் கூளிகளும் இவ்வாறு போர்புரிதலைப்பார்த்து வெற்றியினையுடைய பூதர்கள் அனைவரையும் நீ நாசமாக்கக்கடவை என்று பத்திரகாளியின் அருளைப் பெற்றுள்ள அசுரகாளியானவள் ஒரு சூலாயுதத்தை எறிந்தனள்.—எ-று. (௧0௫)

வீசிய முத்தலை வெய்ய வேற்படை
காய்சின வெரிபுகை சான்று காளிகண்
மாசக லுருப்பல வகுத்துப் பாரிடர்
பாசன மருளுறப் படர்த லுற்றதே.

(இ-ள்.) அவளெறிந்த மூன்றுதலைகளையுடைய கொடிய வச்சூலம் சுடுகின்ற தீயையும் புகையையுங் கக்கிக்கொண்டு குற்றமற்ற வனேகங் காளிக ளுருவங்களை யுண்டாக்கிப் பூதசைனியங்கள் மயங்கும்வண்ணம் சென்றது.—எ-று. (௧0௬)

சண்டிகை விடுபடை தனது வன்மையைக்
கண்டன னிளையவன் கணங்க ளாருயி
ருண்டிடு மிஃதென வுன்னி யேழிரு
புண்டரு சிலீமுகம் பொள்ளென் றேவினான்.

(இ-ள்.) காளியினால் விடப்பட்ட சூலத்தின் வன்மையைப்பார்த்து, இது பூதருயிரை யருந்துமென்று கருதி, வீரவாகுதேவர் புண்ணைத்தருகின்ற பதினாலுபாணங்களை விரைவாக விட்டனர்.—எ-று. (௧௦௭)

தீக்கனும் வேலினான் செலுத்து மாசுக
மேக்குறு முத்தலை வேலை நுண்டுக
ளாக்கிய தாக்கலு மனைய தன்மையை
நோக்கினள் காளியென் றுரைக்கு நோன்மையாள்.

(இ-ள்.) தீப்பொறிகளைக் கக்குகின்ற வேற்படையினையுடைய வீரவாகுதேவர் விட்ட வம்புகள் உயர்வுபொருந்திய வேற்படையை நுண்ணியதுகளாகச் செய்தது; அவ்வாறு நுண்ணியதுகளாகச் செய்தலும், அந்தத்தன்மையை வன்மைபொருந்திய காளியென்று கூறப்படுவள் கண்டாள்.—எ-று. (௧௦௮)

துண்ணென யான்விடு சூலந் தன்னையு
மண்ணலம் பகழியா லறுத்தென் னாற்றலை
யெண்ணல னிற்பனா லின்னு மங்கவ
னுண்ணிக ழுயிரினை யுண்குவே னென்றாள்.

(இ-ள்.) விரைவாக வென்னால் விடப்பட்ட சூலாயுதத்தையும், தெய்வீகம் பொருந்திய அம்பினால் அறுத்து எனது வன்மையை எண்ணாதவிவன் நிற்கின்றனன்; இவனுள் நிகழாநின்ற உயிரினை நானுண்கின்றேன் என்று கூறினாள்.—எ-று. (௧௦௯)

என்றிடு காளியோ ரிமைப்பின் முந்துற
நின்றிடு சேனையங் கடலை நீக்கியே
வென்றிடு வயப்புலி மிசைக்கொண் டார்த்திடாச்
சென்றனள் வீரன்முன் செப்பன் மேயினாள்.

(இ-ள்.) என்று கூறிய வக்காளி ஒரு இமைப்பொழுதிலும் விரைவாக தன்னைச் சூழ்ந்துநின்ற சேனாசமுத்திரத்தை விலக்கி வென்றிபொருந்திய சிங்கத்தின்மீதேறி ஆரவாரித்துக்கொண்டு வீரவாகுதேவ ரெதிரேசென்று சொல்லத்தொடங்கினாள்.

முன்னுற யான்விடு மூவி லைப்படை
தன்னைவெங் கணைகளாற் றடுத்து நின்றனை
யின்னுமோர் சூலமுண் டெறிவன் வீகுதி
யன்னது காத்திட லரிது காணென்றாள்.

(இ-ள்.) முன்னே என்னால் விடப்பட்ட திரிசூலத்தை வெவ்விய வம்புகளாற் றடைசெய்து நின்றாய், என்னிடத்தி லின்னம் வேறேயொரு சூலம் இருக்கின்றது, அதனை உன்னால் காக்கமுடியாது; அதனால் நீ இறந்துபடுவாய் என்று கூறினாள்.—எ-று.

என்றலு முறுவல்செய் திலங்கு சூலமாங்
கொன்றல வாயிர மொருங்கு வீசினு
நின்றவை முழுவது நீறுசெய் வனென்
வன்றிற றெரிந்திலை மாதுநீ யென்றான்.

(இ-ள்.) காளி இவ்வண்ணங் கூறியவுடனே சிரித்துக்கொண்டு விளங்காநின்ற ஒரு சூலமல்ல வாயிரஞ்சூலங்களை நீ விட்டாலும், அவைகளையெல்லாம் யான் நீறுசெய்வேன்; நீ பெண்ணானதால் எனது சாமர்த்தியத்தை யுணர்ந்தாயில்லை என்று வீரவாகுதேவருரைத்தனர்.—(எ-று.) (௧௧௨)

கொற்ற மொய்ம்பின னிவைகூறக் கேட்டுளஞ்
செற்றம தாகியே தெழித்துச் சண்டிகை
மற்றுமோர் சூலவேல் வல்லை வீசினள்
சுற்றிய பாரிடத் தொகுதி யுட்கவே.

(இ-ள்.) வீரவாகுதேவ ரிவைகளைக் கூறுதலும், அவைகளைக்கேட்டுச் சண்டிகை மனத்திற் கோபமூண்டு பின்னுமொரு சூலவேற்படையை எடுத்துச் சூழ்ந்துநிற்கும் பூதகூட்டத்தினர் அஞ்சவண்ணம் விரைவாக விட்டனள்.—எ-று. (௧௧௩)

அருந்திற லமரர்க ளதுகொ லாலமென்
றிரிந்தனர் பணிபெனு வினனு மிந்துவும்
வருந்தினர் சூலமுன் வந்த தன்மையைத்
தெரிந்தனன் வீரமொய்ம் புடைய செம்மலே.

(இ-ள்.) அருமையான வன்மையாளரான தேவர்கள் இது ஆலாலவிடமோவென விலகிச்சென்றார்கள்; சூரியசந்திரர்கள் இது பாம்பென்று பயந்து வருந்தினர்; இவ்வாறிவன்விட்ட சூலமெதிரில் வந்ததன்மையை வீரம்பொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவர் உணர்ந்தனர்.—எ-று. (௧௧௪)

எட்டுட னிரண்டுநூ றெனுந்தொ கைப்படு
நெட்டிரும் பகழிக ணிகரத் தூண்டியே
யட்டனன் றுணிபட வரியின் மேலவ
டொட்டிட வருவதோர் சூலந் தன்னையே.

(இ-ள்.) சிங்கத்தின்மீதிருக்கின்ற காளியினால் விடப்பட்ட சூலாயுதத்தை, ஆயிரம் நெடிய பெரிய வம்புகளை ஒரே வரிசையாகவிட்டு அழித்தனன்; (குமரக்கடவுளினிளையவனும் சேனாபதியுமான வீரவாகுதேவன்.)—எ-று. (௧௧௫)

எறித்தரு சூலம திற்று வீழ்தலுஞ்
செறுத்தன ளிங்கிவன் சிரத்தை வாளினா
லறுத்துதி ரப்புனல் சுவைத்திட் டாவியைப்
பறித்திடு வேனெனப் பகர்ந்திட் டாளரோ.

(இ-ள்.) தானெறிந்த சூலவேல் வீரவாகுதேவர் விட்ட வம்பினால் அறுபட்டு விழுதலும், அக்காளி சிற்றங்கொண்டு இவன் தலையை வாளினாலறுத்து இரத்தவெள்ளத்தைக் குடித்து உயிரை வாங்குவேனென்று கூறினள்.—எ-று. (௧௧௬)

நாலிரு தோளுடை நங்கை தோன்றன்முன்
வாலுளை மடங்கலி னிருத்தன் மாண்பொரீஇப்
பாலுறு திரைக்கடற் பரப்பை விட்டக
லாலம தாமென வார்த்திட் டேகினள்.

(இ-ள்.) எட்டுத்தோள்களையுடைய வக்காளி புறமயிரினையுடைய சிங்கத்தின் மீது இருத்தலாகிய மாட்சிமையைவிட்டு, பால்பொருந்திய அலையினையுடைய அகன்ற கடலினிடத்தைவிட்டு இவ்விடத்திற்கு வந்த ஆலாலமே என்று கூறுமாறு கர்ச்சனை செய்துகொண்டு சென்றனள்.—எ-று. (௧௧௭)

ஆர்த்திடு சண்டிகை யங்கை தன்னிலோர்
கூர்த்திடும் வாட்படை கொண்டு கொம்மெனத்
தீர்த்தனுக் கினியதோர் செம்ம னிற்புறுந்
தார்த்தடந் தேர்மிசைத் தனிவந் தெய்தினாள்.

(இ-ள்.) ஆரவாரிக்கின்ற வக்காளி அழகிய கையிலொரு கூரிய வாளாயுதத்தினை எடுத்துக்கொண்டு விரைவாக குமரக்கடவுளுக் கினியவரான வீரவாகுதேவர் நிற்கின்ற மாலை தொங்குகின்ற பெரிய தேரின்மீது தனியேவந்து சேர்ந்தனள்.—எ-று.கக அ

நோக்கினன் மொய்ம்பினு னொன்மை பூண்டுளான்
றாக்கணங் காமிவ டன்னை தாவியை
நீக்குதல் செய்வது நீர்மைத் தன்றெனத்
தூக்கின னவள்வலி தொலைக்க வுன்னுவான்.

(இ-ள்.) வன்மையாளரான வீரவாகுதேவர் அவள் தன்றேர்மீது வந்ததைப் பார்த்தார்; பார்த்து இவள் தாக்கணங்கு இவளைக் கொல்லுதல் ஒழுக்கமான காரியமல்ல என்று இவளது வன்மையை எவ்வண்ண மழிப்பதெனச் சற்று ஆலோசித்தனர்.-எ-று.()

இடித்தென வுரப்பின னெண்கை தன்னையு
மொடித்தன னுமென வொருகை யாலுறப்
பிடித்தனன் மற்றொரு பெருங்கை யாலுரத்
தடித்தனன் காளிவீழ்ந் தவச மாயினாள்.

(இ-ள்.) ஆலோசித்து இடி இடித்தாற்போல அதட்டி அவள தெட்டுக் கைகளையுந் தனதொரு கையினாற் பிடித்து, மற்றொரு பெரிய கையினா லவள் மார்பின்மீது ஓங்கியடித்தனர்; அவ்வடிபட்ட காளி கீழேவிழுந்து மூர்ச்சையாயினாள்.—எ-று. (கஉ0)

கரங்கொடு சேவகன் கல்லென் றெற்றலு
முரங்கிழி வுற்றன ளுமிழ்ந்த சோரிநீர்
தரங்கம தெறிகட றன்னைப் போன்றுலா
யிரங்கிய தவடுயர் யாவர் கூறுவார்.

(இ-ள்.) கையினால் வீரவாகுதேவர் கலீரென் றொலியுண்டாக வடித்தலும், அக்காளி மார்பு கிழிபட்டனள்; அதனு லிரத்தமொழுகியது; அவ்விரத்தம் அலைவீசுகின்ற கடலைப்போல இரங்கியது;அதனால் அவளடைந்த துன்பமிவ்வளவு என்று யாவர் கூறுநர்.

எண்கையு மொருகையா லேந்தல் பற்றியோ
ரொண்கையி னீவித னுரத்தி லெற்றலு
மண்கிழி வுற்றன வரைகள் கீண்டன
விண்கிள ரண்டபித் திகையும் விண்டதே.

(இ-ள்.) அக்காளியி னெட்டுக்கைகளையும் ஒருகையினால் வீரவாகுதேவன் பிடித்து, ஒரு ஒள்ளிய கையினு லவளது மார்பினி லடித்தலும், அடித்த வோசையினால் மண்கிழிவுற்றன; மலைகள் பிளந்தன; வானத்தையளாவிய வண்டபித்திகையும் பிளந்தது.—எ-று. (கஉஉ)

திரைபெறு கடலெனக் கான்ற செம்புனல்
வரைபெறு தனதுமெய் மறைத்த லாற்றுயர்க்
கரைபெற வில்லவள் காளி யென்றும்முன்
னுரைபெறு பெயரையு மொழிவுற் றாளரோ.

(இ-ள்.) அலையொடுபொருந்திய கடலைப்போல இரத்தமொழுகியது; வாயை யுடைய தனதுடலும் குருதியான் மூட்டப்பட்டமையான் றன்பத்துக்கு ஒருமுடிவு காணாத வக்காளி(கருநிறமாக விருத்தலால்)காளியென்னும் காரணக்குறியான நாமத்தையும் தொலைத்தனள்.—எ-று. (௧௨௩)

இவ்வகை யவசமா யிம்பர் வீழ்ந்தபி
னைவகை யுணர்ச்சியு மனாதி யானவுஞ்
செவ்விது தொன்மைபோற் சேரச் சூர்மகள்
வெவ்வலி யிழந்துகண் விழித்து விம்மினாள்.

(இ-ள்.) இவ்வண்ணம் மூர்ச்சையாகி இவ்விடத்தில் விழுந்தபின்னர், பழமையான ஐம்புலவுணர்ச்சிகள் பழயபடியே தோன்றுதலும், அக்காளி வெவ்விய தனது வன்மையை யிழந்து கண்ணைத் திறந்துபார்த்து விம்முதலடைந்தனள்.—எ-று. (௧௨௪)

ஆண்மையின் மேலவ னகலத் தெற்றிட
வேண்மையும் வீரமு மிழந்து வீழ்ந்தது
நீண்மய லானது நினைந்து நெஞ்சிடை
நாண்மலி வுற்றன ணடுங்கு மாவியாள்.

(இ-ள்.) ஆண்மகனிற் சிறந்தவனான வீரவாகு மார்பிலடிக்கப் போரும் வீரமும் இல்லாது கீழே மயங்கிவிழுந்ததும், மிகுந்த மயக்கங்கொண்டதும், எண்ணி நடுங்குகின்ற உயிரினையுடைய அக்காளி மிகுந்த வெட்கமுடையவளாயினாள்.—எ-று. (௧௨௫)

அந்தமி லறுமுகத் தமல னேவலால்
வந்தவ னொடுபொரின் வாகை யெய்துமோ
புந்தியி லாதிவட் புக்க னன்னெனாச்
சிந்தைசெய் தெழுந்தனள் வன்மை தீர்ந்துளாள்.

(இ-ள்.) அழிவற்ற ஆறுதிருமுகங்களையுடைய அமலனான குமரக்கடவுளின் கட்டளையால் வந்த வீரவாகுதேவனுடன் போர்புரிந்தால் வெற்றியுண்டாகுமோ? நான் புத்தியில்லாம லிங்கே வந்தேனென்று நினைத்து, வீரவாகுவின் அடியா லாற்ற லிழந்த காளியானவள் கிடந்த விடத்தைவிட் டெழுந்தனள்.—எ-று. (௧௨௬)

இகழ்ந்தவ ருரத்தினை யிகழ்ந்து கூர்நகத்
தகழ்ந்து யிருண்டிடு மணங்கு தேர்மிசைத்
திகழ்ந்தன னின்றிடு திறலி னுன்றனைப்
புகழ்ந்தன ளினையன புகல்வ தாயினாள்.

(இ-ள்.) தன்னை ஆற்றலற்றவளென்று கூறும் பகைவர்கண் மார்பைப்பிளந்து இகழ்ந்து கூரிய நகத்தினால் பிளந்து உயிரை உண்ணுகின்ற அக்காளியானவள், தேர்மீது பிரகாசித்துக்கொண்டு நிற்கின்ற வீரவாகுதேவனை இவ்வண்ணம் புகழ்ந்து கூறுவாளாயினாள்.—எ-று. (௧௨௭)

கன்றிய கற்புடைக் கனலி மாமுக
னின்றெனை யருச்சனை யியற்றி யேத்தியே
யொன்றல வுயிர்ப்பலி வுதவி வேண்டினா
னன்றிய தயர்த்தில னினிங் கெய்தினேன்.

(இ-ள்.) சாமான்ய பரிசயத்தினையுடைய அக்கினிமுகன் இன்று என்னை அருச்சித்துத் துதித்து அநேக வுயிர்ப்பலிகளை யளித்து வேண்டிக்கொண்டான்; அதனை மறவாத நான் அவன்பொருட்டு இங்குப்போந்தேன்.—எ-று. (௧௨௮)

உன்னுடை வன்மையு முன்து வீரமுஞ்
சின்னமு முணர்ந்திலன் செருவின் முந்துறீஇ
நின்னுட னிகலியிந் நிலைமை யாயின
னின்னினி யேகுவ னிருந்த தொல்லிடை.

(இ-ள்.) நான் உனது வன்மையையும், உனது வீரத்தையும், உனது அடையாளமான ஆடையாபரணங்களையும் உணர்ந்தேனில்லை; உணராமல் போரிலெதிர்த்து இவ்வாறுயினேன்; இனி நானிருந்த பழயவிடத்திற்குப் போகின்றேன்.—எ-று.

அடையாளங்களாவன, இவ்வெல்லோருக்குந் தலைவனென்று குறிப்பிக்க வணியுமணியாதியவென்க.

நீ எனது எட்டுக்கைகளையும் ஒருகையினுற் பிடித்துக்கொண்டு மற்றொரு கையினுல் யான் மூர்ச்சையாகுமாறு உதைப்பாயென்பதை உணராதவளாகவிருந்தேன் என்பான் நின்னுடைய வன்மையும் என்றுள். (கஉகூ)

கறுத்தினி வல்லையிற் கனன்மு கத்தனை
யொறுத்துயி ருண்குதி யொழிந்து ளாரையு
மறுத்தனை நிற்குதி யலரி தன்னைமுன்
செறுத்தவன் றன்னையு மடுதி செம்மலே.

(இ-ள்.) இனி நீ விரைவாகக் கோபங்கொண்டு அக்கினிமுகனைச் சிக்ஷித்து அவன் உயிரை அருந்துதி. செம்மலே! மற்றையோர்களையும் அழிக்கக்கடவை; முன்னுளிற் சூரியனுெடு பகைத்தவனையும் (பாநுகோபனையும்) கொல்லக்கடவை.—எ-று.

கொல்லுந்தொழிலுக்குரியகுணஞ் சீற்றமாதலால் கறுத்தினி என்றுள். (கருO)

அடையலர் தம்மைவென் றுறு மாமுக
முடையவன் கருணைபெற் றுவகை மேவுதி
நெடிதுபல் லூழியு நீடி வாழ்தியாற்
கடைமுறை யிவையெலாங் காண்டி நீயென்றுள்.

(இ-ள்.) நீ பகைவர்களை வென்று பின்னர் ஆறுதிருமுகங்களையுடையவனது கருணையையடைந்து சந்தோஷத்தை அடைவாய்; நெடிய பல ஊழிகாலம் உயர்விற் குறையாது வாழக்கடவை; அண்ணலே! யான் கூறியவனைத்தையுந் தவறுது பின்னர்க் காண்குவை.—எ-று.

தான் மஹாதேவியின் அமிசம் பெற்றவளென்றும், தன்சொற் றவறுதென்றும் குறிப்பிக்க "கடைமுறையிவையெலாங் காண்டி" என்றுள் என்க. (கருக)

இத்திறம் யோகினி யிசைத்து வெஞ்சமர்
வித்தகன் விடைகொடு மீண்டு கோளரிச்
சித்திர வெருத்தமேற் சேர்ந்து தொல்படை
மொய்த்திடப் போயினண் முந்து வந்துழி.

(இ-ள்.) அசுரகாளி இவ்வண்ணங்கூறி வெவ்விய போர்வீரனுகிய வீரவாகுதேவனிடம் விடைபெற்றுக்கொண்டு திரும்பி, சிங்கத்தி னழகிய பிடரியிலேறிப் பழைய யோகினிப்படைக ளருகிற் சூழ்ந்துவர, தான் முன்னே எவ்விடத்திநின்றும் வந்தாளோ அவ்விடத்திற்கே சென்றனள்.—எ-று. (கருஉ)

வேறு.

சண்டிகை போந்த காலைத் தழன்முக னனைய வெல்லாங்
கண்டனன் வெகுண்டு நன்றிக் கள்வன தாற்ற லென்னுத்

திண்டிற லாற்றல் சான்று சேண்கிடந் துருமுக் கான்று
கொண்டல தெழுந்தா லென்னக் கொம்மென வெழுந்து சொல்வான்.

(இ-ள்.) அசுரகாளி அகன்று சென்றவுடனே (அக்காளி சென்றதனையும் இருமுறை சூலமோச்சி வீரவாகுவின் கையாலெற்றுண்டு மூர்ச்சித்துவிழுந்து எழுந்து அவ்வீரனைப் புகழ்ந்து மீண்டு சென்றது முதலிய) அனைத்தையும் அக்கினிமுகன் பார்த்துக் கோபித்து இச்சோரனது வன்மை நன்றாயிருக்கின்றது என்றுரைத்துத், திண்ணிய திறமையினையுடைய ஆற்றலில் மிகுந்து சேணிற்கிடந்து இடியை கக்கிக்கொண்டு (சூல்) மேக மெழுந்தாற்போல் விரைவிலெழுந்து கூறுவானாயினன்.—எ-று. (கருங)

கொன்றுயிர் பலவு நுங்கிக் குருதியும் வடியு மாந்தி
யொன்றுதன் னகடு தூரா துலப்புறாப் பசிநோய் மிக்குச்
சென்றிடு காளி யாலோ தெவ்வர்தஞ் செருவை யான்முன்
வென்றனன் சூரன் சேய்க்குத் துணைகளும் வேண்டு மோதான்.

(இ-ள்.) பலவகையினவாகிய வுயிர்களைக்கொன்று தின்று இரத்தத்தையும் கள்ளையுங் குடித்துப் பொருந்திய தனது வயிறுநிரம்பாது கெடாத பசியென்னு நோயதிகமாய் (வருத்தச்) செல்லாநிற்கும் காளியாலோ (இதற்குமுன்) பகைவர்களுடைய போரினை யான் வென்றேன்; சூரன்மகன் யான், எனக்குப் படைத்துணையும் வேண்டுமோ? வேண்டாம்.—எ-று.

தான் மிகுந்த சம்பன்னனென்றும், காளி அஃதில்லாதவள் என்றும், பசிமுதலியவைகளாற் பீடிக்கப்பட்டவளென்றும் உணர்த்த "உலப்புறாப்பசிநோய்மிக்குச் சென்றிடுகாளியாலோ" என்றான் என்க. (கருச)

சூலமுந் தண்டும் வாளுஞ் சுடர்மழுப் படையுஞ் சீற்றக்
கோலமுங் கொண்டு பாங்கிற் கூளிகள் சூழ வைகு
நீலிதன் வன்மை காண்பா னினைந்திவண் விளித்த தன்றி
வேலவன் படையை யன்னாள் வெல்லுமென் றுளங்கொண் டேனோ.

(இ-ள்.) சூலமுந் தண்டாயுதமும் வாளாயுதமும் ஒளிவீசுகின்ற கண்டகோடாரியென்னு மாயுதமும் கோபம்பொருந்திய வடிவமும்பொருந்தி அருகினில் கூளிகளென்னும் பிசாசசாதிகள் இருக்க விருக்கும் நீலியென்பவளுக்குள்ள வல்லபத்தைக் காணுமாறு எண்ணி (அவளை) இவ்விடத்திற் கழைத்ததேயன்றி, (இப்பொழுது நமது பகையாகவந்துள்ள வேற்படையினையுடைய சண்முகனுடைய சைநியங்களை இக்காளி வெல்வாளென்று நான் மனத்தி னினைத்தேனோ?—எ-று.

இக்காளி ஆயுதபாணியாகவிருக்கின்றாளே, இவளுக்கிருக்கும் ஆற்றலெவ்வளவு, அதனைப் பார்ப்போம் என்று அவளை யேவினேனேயன்றி வேறில்லையென்றானென்க.

வாவியுங் குளனும் பொய்தீர் நதிகளு மற்று மெல்லாந்
தாவுநுண் பனியா லன்றே துளும்புவ வஃதே போலத்
தேவரை யேவல் கொண்ட சிறப்புடைத் தமியே னிங்ஙன்
மேவிய காளி யாலோ வெய்துவன் வீரத் தன்மை.

(இ-ள்.) (இஃதென்னை புதுமை! காணப்படு மிவ்வுலகத்திலுள்ள) வாவிகளும், குளங்களும், பொய்யை நீக்குகின்ற யாறுகளும், இன்னமுள்ள மற்றை நீர்நிலைகளுமாகிய வனைத்தும் (காலையில் வானஞ் சிதறுகின்ற நுண்ணிய பனியினாலல்லவா நிறைகின்றது; (இஃதுண்மையாதல்) தேவர்களை ஏவலாளராகக்கொண்டுள்ள சிறப்பினையுடைய யானும் இப்போர்க்களத்தில் (வந்த காளியென்பவளால்) வெற்றியடைவேன்; அதுவு மின்மை. மிதுவுமின்மை.—எ-று.

பனிபெய்து ஏரி நிரம்புமா என்ப துலகர்மொழி. (கருரு)

இன்னினிக் கணமதொன்றி னிளவலா ருயிரை வௌவி
முன்னுற வகன்ற வொற்றன் முரண்வலி யதனைச் சிந்தி
யன்னவ னுவி கூற்றுக் கடிசிலா வளிப்ப னல்லான்
மன்னன்முன் போவ தில்லை வஞ்சின மிஃதே யென்றான்.

(இ-ள்.) நான் இனி ஒரு கணப்பொழுதில் (வாலிபனாக விங்குவந்து) என்னிளையவனை வச்சிரவாகுவின் உயிரை வாங்கி முன்னே சென்ற தூதவனுடைய மாறுபாடான சாமர்த்தியத்தை யகற்றி அவனுயிரை எமனுக்கு உணவாகக் கொடுப்பேன்; (இவ்வாறு செய்யாது போவேனாகில் யான்) என்றந்தையும் மன்னவனுமாகிய சூரபன்மனெதிரிற் செல்லேன்; இது என்னாற் செய்யப்பட்ட சபதம் என்று அக்கினிமுக னுரைத்தான்.—எ-று.

வீரத்தன்மையான பிரதிக்கினைக்குச் சபதமென்று பெயர்.	(கருஎ)

கனன்முக னினைய மாற்றங் கழறியே யவுணத் தொல்பே
ரணிகம்வந் தயலி னீண்ட வாழியந் தேரிற் சென்று
வனைதரு சிலையொன் றேந்தி வன்மையால் வாங்கி நூறு
முனையிரும் பகழி வீர மொய்ம்பன்மேற் றூண்டி யார்த்தான்.

(இ-ள்.) இத்தகைய சபதமொழியை அக்கினிமுகன் உரைத்துப் பின்னர் பெரிய அசுரசைனிய மருகிற் சூழ்ந்துவரச் சக்கரங்களையுடைய தேரின்மீதேறிச் சென்று அலங்கரிக்கப்பட்ட வொருவில்லினையெடுத்து வலிமையாக வளைத்துக் கூரினையுடைய பெரிய நூறுபாணங்களை அதனில் வைத்து வீரவாகுதேவர்மீது விட்டு ஆரவாரஞ் செய்தனன்.—எ-று.

மிகவுஞ் சிறந்த அம்புகளை விட்டான் என்பான் முனையிரும்பகழி என்றார்.(கருஅ)

கொடுந்தொழி லாளன் செய்கை குரைகழல் வீரன காணா
முடிந்திட வந்தாய் போலு முயற்சியீ தழகி தென்னா
நெடுந்தனிச் சிலைகா லூன்றி நெரேலென வளைத்துத் தானு
மடுந்திறற் கணைநூ றேச்சி யறுத்தன னவுணன் வாளி.

(இ-ள்.) கொடிய தொழிலினைவாய்ந்த அக்கினிமுகனுடைய செய்கையை வீரவாகுதேவர் பார்த்து நீ இங்குச் சாகவந்தனையோ! நீசெய்யு முயற்சி நன்றாகவிருக்கின்றது என்று நெடிய ஒப்பற்ற வில்லினைக் காலினிலழுத்தி நெரேலென்று வளைத்துத் தாமும் கொல்லுந் திறமுள்ள நூறம்புகளைவிட்டு அக்கினிமுகன் விட்ட வம்புகளைத் தடுத்தனர்.—எ-று.

நெரேலென்பது விரைவாக என்று பொருள்.	(கருகூ)

வேறு.

அறுத்தபொழு தத்திலவு ணர்க்கரசன் மைந்தன்
மறத்தினொடு நூறுசரம் வாலியன பூட்டிச்
சிறப்புடைய செம்மலுறு தேரினை யழித்துக்
குறித்தவிறல் கொண்டு சமர் வால்வளை குறித்தான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் நூறம்புகளைவிட்டுத் தன்னம்புகளை அறுத்தவுடனே, அசுராதிபனாகிய சூரபன்மனுடைய பிள்ளையான அக்கினிமுகன் சாணைபிடித்திருத்தலாலும், தைலலேபனஞ்செய்தலினாலும் என்றும் வெண்ணிறமானதாகவே இருக்கின்ற நூறம்புகளை எடுத்து வீரத்துடன் வில்லில்வைத்து விடுத்துச் சிறப்பினையுடைய தலைவனை வீரவாகுதேவரிருந்த இரதத்தினை அழித்துத் தான் எண்ணிய எண்ணத்திற்குப் பழுதில்லாமல் வெற்றியடைந்து வெற்றியடைந்தா லூதுகின்ற வெள்ளிய சங்கத்தை முழக்கினன்.—எ-று.	(கசா0)

தேரழித லும்வெகுளி செய்திளவ லீரேழ்
கூரிய நெடும்பகழி கொம்மென விடுத்தே
யாரழன் முகத்தவுண னங்கையிடை கொண்ட
மூரிவரி வெஞ்சிலை முரித்தமர் விளைத்தான்.

(இ-ள்.) தானேறியிருந்த தேர் அழிந்தவுடனே, கோபங்கொண்டு வீரவாகு தேவனும் பதினாலு கூரிய நெடிய வம்பினை விரைவாக விட்டு அரிய அழல்போலு முகத்தினையுடைய அசுரன் தனது அழகிய கையிற் பிடித்திருந்த பெரிய வெவ்விய வில்லினை ஒடித்துப் போர்புரிந்தனன்.—எ-று. (கசசக)

வில்லது முரிந்திடலும் வேறோர்சிலை வாங்கிக்
கல்லென வெயிற்றணி கறித்திவனை யின்னே
கொல்வனெனும் வெய்யமொழி கூறிமண நாறு
மல்லிமல ரோன்படையை யண்ணன்மிசை யுய்த்தான்.

(இ-ள்.) வில்லானது ஒடிந்தவுடனே அக்கினிமுகவசுரன் வேறே யொரு வில்லினை எடுத்துக் கலீரென்றொலிக்குமாறு பல்வரிசையைக் கடித்துக்கொண்டு இவனை இன்றே கொல்வன் என்னும் கொடிய மொழியை உரைத்து மணம் வீசுகின்ற அகவிதழினையுடைய தாமரையாசனனான பிரமனுடைய அம்பினை அண்ணலான வீரவாகுதேவன்மீது விட்டனன்.—எ-று. (கசசஉ)

அத்தகைமை நோக்கின னயன்படையை யானு
முய்த்திடி னெனக்குவரு மூதியமெ னென்னாச்
சித்தமுறு பூசனை செலுத்திவிறல் வீர
பத்திர நெடும்படையொர் பாணிகொடு விட்டான்.

(இ-ள்.) வீரவாகுதேவர் அக்கினிமுகன் பிரமாத்திரத்தைத் தன்மீது விட்டதனைக்கண்டு நானும் அந்தப்பிரமாஸ்திரத்தை விடுவேனானால், எனக்கு வரும் இலாபமென்னையோவென்று நெடிய வீரபத்திராத்திரத்தை எடுத்து ஒருகையிற்பிடித்து மனதார அதற்குச் செய்யவேண்டிய பூசையைச்செய்து அக்கினிமுகன்மீது விட்டனன். ()

வாரிதிவ ளாகமனை மாத்திரையி னுண்ணும்
வீரனெடு வெம்படை விரைந்துபடர் காலை
நாரணன் மகன்படை நடுங்கினனி தாழா
யாருநகை செய்திட விரிந்துளதை யன்றே.

(இ-ள்.) கடல்புடைசூழ் அவனிதல மனைத்தையும் அரைமாத்திரைப்பொழுதிற்குள் உண்ணு மாற்றலினையுடைய வீரனுடைய நெடிய வெவ்விய அத்திரம் விரைவாகச் செல்லுங்காலையில், (இதனது வருகையைக்கண்டு) நாராயணன் மகனான பிரமனுடைய அத்திரம் நடுங்கி மிகவுந் தாழ்ந்து கண்டோரனைவரும் நகைக்குமாறு விலகிச் சென்றது.—எ-று. (கசசச)

அன்னமிசை யோன்படை யழிந்திடலும் வீரன்
றன்னது நெடும்படை தடுப்பில்வகை யேகி
வன்னிமுக னுயிர்கொடு மாமுடிக டள்ளி
மின்னுமென வீரனிடை மீண்டுபடர்ந் தன்றே.

(இ-ள்.) கமலாசனனாகிய பிரமதேவனுடைய அத்திரமழிந்தவுடனே வீரபத்திரனுடைய நெடிய வம்பு தடையில்லாமற் சென்று அக்கினிமுகாசுரன் உயிரை வாங்கிக்கொண்டு அவனுடைய சிறந்த முடிகளைத்தள்ளி மின்னலைப்போல வீரவாகுதேவனிடம் திரும்பிவந்தது.—எ-று. (கசசரு)

வேறு.

வெய்யவக் கனன்முகன் விளிந்து வீழ்ந்தன
னெய்யென வச்செய லும்பர் நோக்குறா
வையனை வாழ்த்திநின் றலரின் மாரிதூய்
மெய்யணி துகிலெலாம் வீசி யாடினர்.

(இ-ள்.) கொடியவனான அந்த அக்கினிமுகாசுரன் திடீரென்று வீரபத்திராஸ்திரம் பட்டு இறந்து விழுந்தனன். விழுந்தவுடனே அவன் விழுந்ததனைப் பார்த்துத் தேவர்கள் மலர்மாரி பெய்து நமதையனான வீரவாகுதேவரை வாழ்த்தி யுடலிலணிந்திருந்த துகிலனைத்தையும் மேலே வீசினவர்களாக ஆடினார்கள்.—எ-று.

இத்தேவரிந்நாளில் சுவர்க்கம் புகாதவர்களாதலால் மலர்மாரியென்றதைக் கற்பக மலர்மாரி யென்னாது மலர்மாரியென்றும். (கசசு)

புறந்தரு கலிங்கமும் பூணு நாணமுந்
துறந்தன ருவகையாற் சொல்லு மாடலர்
சிறந்துட னார்த்தனர் தேவ ரற்றைநாட்
பிறந்திடு மைந்தர்தம் பெற்றி யெய்தினார்.

(இ-ள்.) இடையிற் சுற்றியிருந்த ஆடைகளையும், உடம்பிலணிந்திருந்த ஆபரணங்களையும், வெட்கத்தையும் விட்டவர்களாகத் தேவர்கள் மிகுந்த சந்தோஷத்தினால் வார்த்தையும் பேசாதவர்களாய் உவகைமீதூர்ந்து ஆரவாரித்தார்கள். அன்றியும் அன்றுபிறந்த சிறுவரியல்பினர்களாகவுள்ள தன்மையை யடைந்தார்கள்.—எ-று. (கசஎ)

எரிமுக னவ்விடை யிறப்ப வாங்கவன்
பொருபடை வீரர்கள் புலம்பி யாமெலா
மொருசிறு தூதனுக் குடைது மோவெனாச்
செருவினைக் குறித்தன ருலப்பி றீமையோர்.

(இ-ள்.) அக்கினிமுகன் அப்போர்க்களத்தி லிறத்தலும், கெடாத கொடுமையினையுடைய அவனுடைய போர்புரிகின்ற படைவீரர்கள் புலம்பி நாமெல்லா மொரு சிறிய தூதுவனுக்கு உடைந்தோடுவமோ என்று அவ்வக்கினிமுகன் இறந்துபோனதற்காக விசனித்துப் போர்புரிய வாரம்பித்தார்கள்.—எ-று (கசஅ)

முற்படுந் தலைவர்கண் மூவெண் ணாயிரர்
பொற்புடை யிளையவன் புடையிற் சுற்றிடாக்
கப்பணந் திகிரிகோல் கணிச்சி வேல்கதை
சொற்படு படையெலாஞ் சொரிந்து போர்செய்தார்.

(இ-ள்.) முதன்மைபொருந்திய சேனாதிபதிகளாகவுள்ளவர்கள் இருபத்து நாலு ஆயிரம்பேர்கள் அழகுபொருந்திய வீரவாகுதேவருடைய அருகிற் சூழ்ந்துகொண்டு கைவேல்களையும், சக்கரங்களையும், குந்தங்களையும், கண்டபரசுகளையும், வேலாயுதங்களையும், தண்டாயுதங்களையும் இன்னம் சொல்லப்பட்ட மற்றைய எல்லா வாயுதங்களையும் சொரிந்து போர்புரிந்தார்கள்.—எ-று. (கசக)

செய்தது நோக்கியே செயிர்த்துச் சேவகன்
கைதனி லிருந்ததோர் கார்முகம் வளைஇ
நொய்தினி லாயிர நூறு கோடிகோ
லெய்தனன் றெழித்தன னவுண ரேங்கவே.

(இ-ள்.) அவ்வாறு போர்செய்ததனைப்பார்த்துப் போர்வீரனாகிய வீரவாகுதேவர் சீற்றங்கொண்டு தனது கையிலிருந்த வில்லினை வளைத்து விரைவாக நூறாயிரங்கோடி அம்புகளை அசுரர்கள் ஏக்கமுறுமாறு விட்டு ஆரவாரித்தனன்.—எ-று. (கருo)

இத்திறங் கணமதொன் றிடையறாமலே
கைத்தனு வுமிழ்ந்திடுங் கணையின் மாமழை
யுய்த்தனன் றிரிந்தன னுலகம் பேர்த்திடு
மெய்த்திறன் மருத்தினும் விரைவின் மேவியே.

(இ-ள்.) இவ்வாறாக வொருகணநேரம் தவறாமல் கையிலுள்ள வில் கக்குகின்ற அம்புகளாகிய சிறந்த மழையை வருஷித்துக்கொண்டு மிக்க சாமர்த்தியத்தினையுடைய வாயுவைவிட விரைவாகச் சுழன்றுலாவினான்.—எ-று. (௧௫௧)

எறிந்திடு படைகளு மெய்த கோல்களு
முறிந்தன துணிந்தன மொய்ம்பு மார்பமுஞ்
செறிந்திடு கரங்களுஞ் சிரமுந் தாள்களுந்
தறிந்தன வவுணர்தந் தலைவர் வீடினார்.

(இ-ள்.) எறிந்த குந்த முதலிய ஆயுதங்களும், எய்த அம்புமுதலிய ஆயுதங்களும் முறிந்தன; துணிந்தன; தோள்களும் மார்புகளும் நெருங்கிய கைகளுந் தலைகளும் கால்களும் தறிந்து அசுரர்தலைவர்களான சேனாபதிகள் இறந்தார்கள்.—எ-று. (௧௫௨)

வேழமும் புரவியுந் துணிந்து வீழ்ந்தன
வாழியந் தேர்நிரை யனைத்து மிற்றன
சூழுறு மவுணருந் தொலைந்து போயினார்
பாழியந் தோளினான் பகழித் தன்மையால்.

(இ-ள்.) பெரிய அகலமான தோள்களையுடைய வீரவாகுதேவன் விட்ட அம்புகளின் தன்மையால் யானைகளுங் குதிரைகளுந் துணிந்து விழுந்தன; சக்கரங்களையுடைய தேர்வரிசைகளனைத்தும் உடைந்தன; சுற்றிநின்ற அசுரர்களும் இறந்துபோயினார்கள்.—எ-று. (௧௫௩)

பாறெழுக் குற்றன ககனம் பார்மிசை
வீறெழுக் குற்றதொல் படைகள் வீந்திடச்
சேறெழுக் குற்றன தசைகள் செம்புன
லாறெழுக் குற்றதா லமர்செ யாறெலாம்.

(இ-ள்.) போர்புரிந்த இடங்களிலெல்லாம் ஆகாயவீதிகளில் பருந்துகள் வரிசையாக நிறைந்தன; பூமியில் இறுமாப்புப்பொருந்திய பெரிய சைனியங்களிறக்க, அதனால் சேறாக ஆயின; எவ்விடங்களினும் மாமிசங்கள் சிதறின; இரத்தவெள்ளம் ஆறாக வொழுகியது.—எ-று. (௧௫௪)

பலவுடை நெடுந்தலைப் பதகர் துஞ்சலு
நிலவுடை யெயிற்றிடை நிவந்த தீக்கனல்
புலவுடை விழுநிணம் புழுக்கல் செய்ததாற்
கலிகெழு கொடியொடு கணமுந் துய்க்கவே.

(இ-ள்.) நெடிய பலதலைகளையுடைய அசுரர்கள் இறத்தலும், நிலவினையனைய வெள்ளிய தந்தங்களினின்றும் உண்டாகின்ற சுடுகின்ற அக்கினி புலால் நாற்றத்தினையுடையதாக வப்போர்க்களத்தில் விழுந்து கிடக்கின்ற நிணங்களை (மாமிசங்களை) அவ்விடத்தி லாரவாரத்தோடு வந்து நெருங்கியுள்ள காகங்களும் பிசாசுகளு முண்ணுமாறு வேகச்செய்தது.—எ-று. (௧௫௫)

மாமையிற் செறித்தன வடிவின் மால்கரி
தாமயிர்ப் புறவடி தடக்கை வன்றலை

யேமயிர்த் தோகையோ டிற்று நீங்குற
வாமையிற் போவன குருதி யாற்றினே.

(இ-ள்.) அழகுடையனவாக வங்குப் போர்புரியுமாறு கொண்டுவந்திருந்த மத மயக்கம்பொருந்திய யானைகள், உரோமங்களையுடைய புறவடிகளும், பெரிய கைகளையும், வலிய தலைகளும், உரோமங்களையுடைய வால்களும் அறுபட்டகலப் பின்னர் அரத்தவாற்றில் உறுப்புக்களையுள்ளடக்கினதாகச் செல்லும் ஆமைகளைப்போலச் செல்லுகின்றன.—எ-று. (கருசு)

கார்கெழு மவுணருட் கலந்த சோரியின்
ரூரைக ணீத்தமா யெழுந்து தக்கவர்
பேருட லுட்கொடு பெயர்ந்த பின்னுற
வாரிதி வடவையுண் டிலவு மாண்பென.

(இ-ள்.) கருநிறம்பொருந்திய அசுரர்களை உள்ளே கொண்டுவருகின்ற இரத்த தாரைகள் பின்னர்ப் பிரவாகமாகத்தோன்றித் தகுதியானவர்களின் உடல்களை உள்ளே கொண்டு கடலிலுள்ள வடவாக்கினியை உண்டுலவுந் தன்மையைப்போல சென்றன.—எ-று.

கரிய நிறம்பொருந்திய அசுரர்களினுடலிற் கலந்திருந்த இரத்தமாகிய சிறிய தாரைகள் (அநேக தாரைகள் ஒன்றாகக்கலந்துப்) பிரவாகங்களாகி அசுரர்களினுடலங்களை யுள்ளே கொண்டு, ஊழியாகிய பின்னாளில் கடலானது வடவாக்கினியை யுண்டுலாவுமாட்சிமையைப்போல சென்றன என்னினுமாம். (கருஎ)

கரியினும் பரியினுங் கால்கொண் டோங்கிய
குருதியம் புனன்மழை குலாவும் வைகலின்
வரைதொறும் வரைதொறு மாறு மாறெழா
வருவிகள் சென்றென வழுங்கிச் செல்லுமால்.

(இ-ள்.) யானைகளினின்றும் குதிரைகளினின்றும் கால்கொண் டெயர்ந்துவராநின்ற அழகிய இரத்தமாகிய வெள்ளமானது விளங்குகின்ற மழையொடு கூடிய நாளில் மலைகள்தோறும் மலைகள்தோறும் வேறுவேறாகத்தோன்றி யருவிகள் சென்றாற்போல, ஆரவாரித்துக்கொண்டு செல்லாநிற்கும்.—எ-று. (கருஅ)

மீளிகள் குருதிநீர் வெள்ள மாயதில்
வாளுறு வேல்களும் வாளு மற்றவுங்
கோளுறு மயிலையிற் குலவக் கண்டுதங்
கேளிரொன் றெதிர்வன கெழும வேலைமீன்.

(இ-ள்.) வீரர்களுடைய இரத்தவெள்ளத்தில் ஒளிபொருந்திய வேல்களும், வாள்களும், மற்றையவைகளும் தாமிருக்கு மிடத்திற்பொருந்திய மீனைப்போல விளங்கப்பார்த்து கடலிலுள்ள மீன்கள் (இவ்வாயுதங்களைத் தங்களினமாகக்கருதி) எதிரே செல்வன.—எ-று. (கருகூ)

அழல்பொரு செக்கர்வா னகத்தின் மாமதிக்
குழுவினர் சேர்ந்துறக் குலவுங் கொள்கைபோ
னிழல்பொதி கவிகைதந் நெடிய தாளற
வொழுகிய குருதியி னொருங்கு செல்வவே.

(இ-ள்.) தீநிறமான செவ்வானத்தினிடத்தில் பெரிய சந்திரக் கூட்டத்தினர் சேர்ந்து விளங்குகின்ற தன்மையைப்போல, நிழலைப்பொதிந்த குடைகள் தந்நெடுமையான கால்களற்று ஒழுகாநின்ற இரத்தவெள்ளத்திலொன்றாகச் செல்லுகின்றன.—எ-று.

அலைகெழு குருதியா றழுங்குற் றேகலாற்
றலைகளு முடல்களுந் தசையும் வாரிடக்
கொலைபுரி மறவர்தங் குடரிற் பின்னியே
வலையெறிந் தீர்த்தனர் வயவெம் பூதரே.

(இ-ள்.) வெவ்விய தன்மையும் வெற்றியும்பொருந்திய பூதர்கள் அலைகளோடு விளங்குகின்ற இரத்த வாறுக ளாரவாரித்துக்கொண்டு செல்லுதலால், அவைகளிற் செல்லுகின்ற தலைகளையு முடல்களையும் தசைகளையும் வாருதற்குக் கொலைத்தொழிலிற் சிறந்த வீரர்களின் குடர்களாற் பின்னி யியற்றிய வலைகளை வீசி இழுத்தனர்.—எ-று.

ஞாளிக டிரிவதோர் மருங்கு நாமவெங்
கூளிக டிரிவதோர் மருங்கு கூளியா
மீளிக டிரிவதோர் மருங்கு வென்றிடுங்
காளிக டிரிவதோர் மருங்கு கண்ணெலாம்.

(இ-ள்.) அப்படுகளத்தின் பலவிடங்களிலும் ஒருபக்க நாய்களுலாவு மிடம்; மற்றொருபுறம் அச்சத்தைப் பார்ப்பவர்களுண்டாக்கத்தக்க தோற்றத்தினையுடைய கூளிகள் திரியாநிற்குமிடம்; கூளிகளென்னும் பூதவீரர்கள் சஞ்சரிப்பது வேறொரிடம்; அன்றியும் வேறொருபுறம் வெல்லப்படுகின்ற காளிகள் திரியுமிடம்.—எ-று. (கசுஉ)

தேரிடை யுலந்தவன் சிரத்துந் துஞ்சிய
சாரதி தலையினும் புரவி தம்மினுஞ்
சோரிக ளிழிவன தொலைந்த வையமு
மாருயி ரெய்தியாங் கதுபெற் றென்னவே.

(இ-ள்.) அழிந்துபோன விரதமும் மீண்டு முயிரைப்பெற்று அவ்விடத்தி லவ்விரத்தத்தையடைந்து நின்றாற்போல தேரின்மீது இறந்தவனுடைய தலையிலும், இறந்துபோன தேர்ப்பாகனுடைய தலையிலும், குதிரைகளிலும் இரத்தங்களொழுகுவன.()

சினவலி யவுணர்தந் திகிரி பூண்டிடு
துனைவரு கேசரி துஞ்சச் சோரிநீர்
கனைகட லிடைசெலக் கண்டு தேரைதம்
மினமென வெதிர்தழீஇ யிரங்கு கின்றவே.

(இ-ள்.) மிக்க வன்மையினையும் சினத்தினையுமுடைய அசுரர்களுடைய தேர்களிற் கட்டப்பட்டிருந்த விரைவாகச் செல்லவல்ல குதிரைகளிறக்க, அவைகளினின்று முண்டான இரத்தவெள்ளம் முழங்குகின்ற கடலினிடஞ் செல்லாநிற்ப, அக்கடனீர் இவ்விரத்தநீரை எதிரே கண்டு கலந்து தேரையினத்தைப்போல அவ்விருநீரு முழங்கின.—எ-று.

தேரை - ஒன்றையொன்று கண்டு கத்துமாறுபோல ஒலித்ததென்க. (கசுச)

விரிந்தவித் திறமியல் வெங்க ளத்திடை
யிரிந்திடு தானவ ரிறந்து நீங்கினர்
கருந்தலை யடுக்கலிற் கழல்க டாக்குறத்
திரிந்தன ரயர்ந்தனர் சிலவர் துஞ்சினர்.

(இ-ள்.) மிகுதியான வித்தகைய வியல்களையுடைய வெவ்விய போர்க்களத்தில் விலகியோடின; அசுரர்கள் (விலகியோடினர்கள்) இறந்துபட்டார்கள்; வேறு சில வீரர்கள் கரிய தலைகளாகிய மலைகளிற் கால்கள்பட அலைந்து திரிந்து அயர்ந்து இறந்தார்கள்.—எ-று. (கசுரு)

மழுக்களு மயில்களும் வாளு முத்தலைக்
கழுக்களுங் கால்படக் கவலுற் றூர்சிலர்
விழுக்கொடு வள்ளுரம் விராய பூழியி
லிழுக்கின ரழுந்தின ரிறந்துற் றூர்சிலர்.

(இ-ள்.) கண்ட பரசுகளும் வேற்படைகளும் வாட்படைகளும் மூன்று தலைகளையுடைய கழுமுட்களும் கால்களிலேபட, அதனாற் சிலர் வருத்தமுற்றூர்கள்; கிணமுமிறைச்சியும் (புலாலும்) கலந்த சேற்றிற் சறுக்கிவிழுந்து அழுந்தி இறந்தொழிந்தார்கள் சிலவசுரவீரர்கள்.—எ-று.

இதனு லாயுத விசேஷத்தையும் இரத்தப்பெருக்கையும் விளக்கினூர். (கசுசு)

பாய்ந்திடு குருதியம் பரவை யாற்றிடை
நீந்தின ரொருசிலர் நீந்திக் காலெழா
தோய்ந்தன ரொருசில ரோடி னூர்சிலர்
மாய்ந்தன ரொருசிலர் மாய வீரரே.

(இ-ள்.) ஒழுகாநின்ற பரவிய இரத்தமாகிய வாற்றினில் ஒரு சிலவர் நீந்தி நீந்துவான் காலெழாமல் ஓய்ந்து ஒழிந்தார்கள்; ஒரு சிலவர் ஓடினூர்கள்; சில மாயவீரர்கள் அவ்வாற்று நீரில் விழுந்திறந்தார்கள்.—எ-று.

மாயவீரர்கள் – மாயஞ்செய்வதில் வல்லவீரர்கள்; வீரர்-வைரமுள்ளோர். (கசுஎ)

காண்டொறுங் காண்டொறு மவுணர் கண்ணிடை
யீண்டிய வெள்ளிடை யிளவன் மேனியாய்
நீண்டதோர் பையுளாய் நிகழ வேங்கியே
மாண்டனர் சிலர்சிலர் வாய்வெ ரீஇயினூர்.

(இ-ள்.) அசுரர்கள் கண்ணெதிரே காணுந்தோறும் காணுந்தோறும் நெருங்கிய வெளியிடங்கள் வீரவாகுதேவனுருவமே யுருவமாய் மிகுதியான வொரு அச்சமாய் இருக்க, வேக்கமுற்றுச் சிலர் இறந்தார்கள்; சிலர் வாய்தடுமாற்றமடைந்தார்கள்.

இதனில் அசுரரடைந்த எளிமையும், வீரவாகுதேவர்க்குள்ள பெருமையும் விளங்கிற்று. (கசுஅ)

துப்புறு பூதர்பின் றொடர்த் தாடொழா
மெய்ப்படை முழுவதும் வீசி யாயிடைத்
தப்பின ரிறுதியிற் சாய்ந்து மாய்ந்தவர்
கைப்படை வாங்கியே கடிதுற் றூர்சிலர்.

(இ-ள்.) அசுரர் தங்களை வன்மைபொருந்திய பூதர்கள் பின்னே தொடர்ந்துவரக் கண்டு அவர்கள் கால்களை வணங்கித் தங்கள் உடம்பிலுள்ள ஆயுதங்கள் அனைத்தையும் கழற்றி வீசி, அவ்விடத்திற் றப்பித்துக்கொண்டார்கள்; வேறுசிலர் முடிந்துவிழுந்திறந்தவர்களுடைய கைகளிலுள்ள ஆயுதங்களை வாங்கிக்கொண்டு விரைவாகச்சென்றூர்கள்.

ஆயுதபாணிகளையன்றி நிராயுதபாணிகளைக் கொலைபுரியும் வழக்கம் போர்வீரர் மாட்டின்மையை யுணர்ந்த அசுரர்கள் தங்களைப்பிடித்து ஊறுபுரிய வருகின்ற பூதர்களைக்கண்டு, ஐயோ நாம் ஆயுதபாணிகளாக விருந்தா லிவர்கள் நம்மைக் கொலைபுரிவார்களென அவர்களைக் கண்டவுடனே உடைவாள் முதலிய வனைத்தையும் நீக்கி வெறுங்கையர்களாகச் சென்றூர்கள். சி இவர்கள் படைக்கலந் தாங்காதேங்கிய பதகரென அப்பூதர் விட்டகன்றவுடனே, இனிப் பகைவர் நம்மைப் பின்பற்றி வாரொன்று தெரிந்து

கொண்டு, ஓடும்வழியில் இறந்துகிடப்பவர்களுடைய ஆயுதங்களை எடுத்துத் தரித்தவர்களாகச் சென்றார்களென்க.

(௧௬௯)

எண்ணமில் படைக்கலம் யாவும் வீசியே
தண்ணுமை வரிதுடி தக்கை பேரியாம்
பண்ணமை யியம்பல பற்றி யார்த்திடா
நண்ணினர் நடுவனை நடுக்குந் தானவர்.

(இ-ள்.) அளவற்றனவாகிய ஆயுதங்களனைத்தையும் எறிந்து தண்ணுமைவரி துடி தக்கை பேரிகைமுதலிய இசைபொருந்திய பலவகை வாச்சியங்களை எடுத்து ஆரவாரித்துக்கொண்டு எமனையு நடுங்கச்செய்கின்ற அசுரர் சிலர் வந்தார்கள்.—எ-று.

போர்வீரர்களையன்றி வாச்சிய முழக்குவோர்களை வீரன் கொல்லானென்று கருதி ஆயுதங்களை இவை நம்மிடமிருந்தால் இவைகளால் நம்முயிர்க்குக் கெடுதி உண்டாகுமென்று கருதி அவைகளை யெறிந்து மேளங்களை முழக்கிக்கொண்டு தப்பித்துச்சென்றார்கள் சில அசுரர்கள் என்க.

(௧௭௦)

பரிக்குவை யரிக்குவை படைத்த தாமுகத்
திரக்கமி லவுணர்க ளிரத்தத் திற்றம
நெருக்குறு சிரத்தொகை நீட்டி மெய்யெலாங்
கரக்குந ரொருசில ருயிரின் காதலார்.

(இ-ள்.) குதிரைக்கூட்டங்கள் சிங்கங்கள் என்னும் இவைகளின் முகங்களையொத்த முகங்களையுடைய இரக்கமற்ற சில அசுரர்கள் இரத்தவெள்ளத்தில் தங்கள் நெருக்கமான தலைக்கூட்டங்களைமாத்திரம் வெளியே நீட்டிக்கொண்டு உடம்பனைத்தையும் உள்ளே மறைத்தவர்களாக உயிரின்மீதுள்ள ஆசையாளர்களாய் இருந்தார்கள்.

போர்வீரராவார் தம்முயிரைச் சிறுதுரும்பினுந் தாழ்ந்ததாகக் கருதுவார்கள். இங்குப் போர்புரிந்த அசுரரிற்பலர் வீரரன்மையா லுயிரின்மீது ஆசைகொண்டு பிணக்குவியலு ளொளித்தாரென்க.

(௧௭௧)

சூளுறு போரிடைத் தொலைந்து போகியே
நீளிக ளுறுகிலா நிருதர் சம்புவா
யாளுடை வயவரு ணருந்த வாயிடை
ஞாளிகள் கவர்தலு நடுக்குற் றார்சிலர்.

(இ-ள்.) சபதஞ்செய்து செய்கின்ற சண்டையில் முதுகுகாட்டிச்சென்று பெரும்போர் புரியாத சிலவசுரர்கள் நரிகளாய் ஆளுடைவீரர்களினூனைத்தின்னுதலும். அவ்விடத்திலிவர்களை நாய்கள் கடிக்க இனி என்செய்வதென்று நடுக்கமுற்றார்கள்.—எ-று.

நின்னைக் கொல்கின்றேன்; கொல்லாது போவேனாகின், மீண்டு செல்லேன், இனி வில்லெடேன், உயிரொடு வாழேன். என்பனவாதி சபதமொழிகளை யிசைத்துப் போர்புரிந்து, நிற்கு மாற்றலின்றி நாம் நமது சொந்த வுருவத்துடன் சென்றால், நம்மைப் பகைவர் ஊறுபுரிவார்கள். ஆதலால் வேற்றுருவடைந்து செல்வோமெனக்கருதி குள்ள நரியின் உருவங்கொண்டு தப்பிப்பிழைக்கலாமென்று சிலரோடினார்கள். அவ்வுருவடைந்து சென்று இறந்தவரூனைத் தின்று இளைப்பாறுங்காலங் குள்ளநாய்கள் கடிக்க, அதனாற் சிலர் துன்புற்றார்; இதனால் எவ்வண்ணமுறினும் வினைவிடாது என்றுணர்க.

(௧௭௨)

தீயினை முருக்குறுந் திறல்வெம் பூதர்க
டாயினர் தொடர்தலுஞ் சாய்ந்து ளோர்சிலர்

நாயின் றுருக்கொடு நடக்க ஞாளிக
ளாயின வடர்த்தலு மஞ்சி னார்சிலர்.

(இ-ள்.) அக்கினியையும் வருத்தத்தக்க சாமர்த்தியத்தினையுடைய பூதவீரர்கள் தம்மொடு போர்புரிந்தோடும் சிலவசுரர்களைத் தொடர்தலும், ஓடிய சிலவர் இனியென்செய்வதென்று நாயின் உருவமாக மாறிச்சென்றார்கள்; இப்புதிய நாய்களை அங்கு மாமிசத்தைக் கருதி வந்துள்ள யதார்த்தமான நாய்கள் பார்த்துச் சூழ்ந்துகொண்டு கடிக்கவும், இதென்னை சங்கடமாகவிருக்கின்றதே என்று சிலரஞ்சினார்கள்.—எ-று.

தீயைக்காட்டிலும் கொடிய பொருள் இன்னொன்றிரா; அதனருகி லெவனுஞ் செல்லானென்பது கூறாதே அமையும்.

பூதர் அத்தீயையு முருக்குமாற்றலினர் என்றால், எத்தகைய பகைவராயினும் அஞ்சாது எதிர்த்துப் போர்புரிபவர் என்று கருத்து. இதனாற் பூதர்வீரம் விளங்கியது.

விசையொடு சாரதர் விரவ வேற்றுரு
விசைகில ரிறந்தவ ரினத்துண் மேயினார்
தசைகவர் ஞமலிக டலைச்சென் றீர்க்கவு
மசைவில ராகியே யழுங்கி னார்சிலர்.

(இ-ள்.) தங்களைப் பிடிக்கும்வண்ணம் பூதவீரர்கள் பின்றொடர்ந்து வருதலும், வேறுருவத்தை யடையாமற் சில அசுரர்கள் செத்தவர்கள் கூட்டத்தில் விழுந்து செத்தவர்களைப்போல கிடந்தார்கள்; அங்குப் புலாலருந்தவந்த நாய்கள் இப்போலிப் பிணங்களின் றலைகளைப் பிடித்து இழுத்தலும், அவர்கள் (இதென்ன சங்கடமென்ன) அசையாதவர்களாய்க் கிடந்து வருந்தினார்கள்.—எ-று.

பூதர் நெருங்கிவந்துவிட்டமையால் வேற்றுருவடையக் காலம் போதாதாயிற்று. அதனால் பிணம்போல பிணங்களுடன் விழுந்துகிடந்தார்கள். (வேற்றுருவடையக் காலதாமதமாவது) அவ்வுரு வருதற்கேற்ற மாயாமந்திரத்தைச்செபிக்கவேண்டிய காலவளவு என்றறிக. (கஎச)

புண்டரு குருதிநீர் புறத்துச் சிந்திட
மண்டமர் தன்னிடை மாண்ட கேள்வரைக்
கண்டிலர் சிரந்தெரீஇக் கவன்ற ரற்றிய
வொண்டொடி மாதரி னுலவி னார்சிலர்.

(இ-ள்.) புண்ணினின்றும் ஒழுகாநின்ற இரத்தவெள்ளம் வெளியே சிதற நெருங்கிய போரினில் இறந்த தங்கணவரைக்காணமல் அவர்தலையைத் தேடி கவற்சியுற்றுக் கதறிய வொள்ளிய வளையலணிந்த மாதர்களைப்போல சிலருலாவினார்கள்.—எ-று.

சில வசுரர் பகைவரான பூதருக்கஞ்சிப் பெண்ணுருவங்கொண் டுலாவினார்கள் என்க. ஒண்டொடிமாதர் – மங்கலமகளிர். (கஎரு)

சூர்த்திடு நோக்கொடுந் துண்ணென் றெய்தியே
யார்த்திடு பூதர்வந் தணுக வாய்வெரீஇ
வேர்த்துடல் பனிப்பவீழ்ந் துதைத்தும் வெய்யதாள்
பேர்த்திட லின்றியும் பேதுற் றார்சிலர்.

(இ-ள்.) காண்பவர்களுக் கச்சத்தைத்தராநின்ற பார்வையுடன் விரைவாகச் சென்று ஆரவாரஞ்செய்கின்ற பூதவீரர் எதிரேவரக்கண்டு வாய்வெருவுதலுடன் வியர்வையடைந் து உடல்நடுங்கக் கீழேவிழுந்து உதைத்துக்கொண்டும், வெவ்விய காலைப் பெயர்த்தலில்லாமலும் சிலவசுரர்கள் மதிமயங்கினார்கள்.—எ-று.

இதனில் பூதர்கட்கும் அசுரர்கட்கு முள்ள தாரதம்மியம் ஊகித்துணர்க. (கஎசு)

அழிதரு வோர்தமை யவரின் முன்னரோ
கழிதரு முயிரினர் கணங்க ளாகிவிண்
வழிதரு செலவினில் வந்து பற்றியெம்
பழிதரு வீரெனப் பணிக்கின் றார்சிலர்.

(இ-ள்.) அவ்விடத்தி லிறப்பவர்களைத் தற்காலமிறப்பவர்களைவிட முன்னே இறந்த சிலவசுரர்கள் கணங்களாய் வானவழியேவரு மற்றவர்களை வந்து பிடித்துக்கொண்டெமது பழியைத் தருவீர்களாக என்று கூறுகின்றார்கள்.—எ-று.

முன்னுடலி லசுரர்களாகவிருந்து இறந்தவர்கள் பின்னுடலில் தேவர்களாகத் தோன்றுதலால், முன்னே நண்பாகவிருந்த அசுரர்களையே பின்னர் விரோதிகளாகக் கருதவேண்டியவர்களாகின்றார்கள். அதனால் தேவரூபமடையாத அசுரர்களைக் கணரூபமடைந்த அசுரர் எதிர்த்துப் பழிதாருங்களென்றனர் என்க. (கஎஎ)

வல்விரை பறவையை நோக்கி மற்றவட்
செல்லுதிர் பூதர்க டெரியக் கண்டிரோ
லில்லையிந் நெறிதனி லிறந்து ளோரெனச்
சொல்லுதிர் நீரெனத் தொழுகின் றார்சிலர்.

(இ-ள்.) சிலர் விரைவாகப் பறந்து செல்லும் பறவைகளைப்பார்த்து நீங்களங்குச்செல்கின்றீர்கள், சென்றால் (எங்களை நாடிவரும்) பூதர்களைக் காண்பீர்களானால் இவ்வழியில் இறந்தோரொருவரும் இல்லையென நீங்கள் கூறுங்கள் என்றுரைத்துப் பறவைகளைச் சிலர் தொழுகின்றார்கள்.—எ-று.

சோக மேலிட்டமையால் இன்னவையுட னிதனை யுரைக்கலாமென்னும் பகுப்பை விட்டுக் கேவலயான பறவைகளுடனும் உரைத்தாரென்க. (கஎஅ)

காசினி யதனிடைக் கவிழ்ந்த கேள்வரை
யாசையி னொடுதழீஇ யலமந் தேங்கிய
பாசிழை மாதரிற் பரவப் பூதர்க
ணாசியீர்ந் திடுதலு நாணுற் றார்சிலர்.

(இ-ள்.) போரிற் பூமியில் விழுந்திறந்த நாயகர்களை ஆசையுடனே கலந்து அலமந்து ஏக்கமுற்ற பசிய ஆபரணங்களையணிந்த பெண்களைப்போலதுதிக்க, உடனே பூதர்கள் மூக்கினைக்கடித்திழுக்க வதனால் வெட்கமுள்ளவர்களாகவானார்கள் —எ-று.

தங்களைத் துரத்தினதைக்கண்டு பூதர்களை நண்புபாராட்டிக் கட்டி மெல்லெனத் தழுவின அசுரர்களைப் பகைபாராட்டிய பூதர்கள் மூக்கைக் கடித்தெடுத்து விட்டார்கள் என்க. (கஎக)

அடல்கெழு தூதனு லவுணர் யாவருங்
கெடுவது திண்ணம்யாங் கெடுகி லோமெனாக்
குடர்கெழு சோரியங் குடினைக் கண்ணுறீஇக்
கடலுறு வரையினுட் கலந்து ளார்சிலர்.

(இ-ள்.) சிலர் வன்மைவிளங்குகின்ற தூதனால் அசுரரனைவரும் இறப்பது நிச்சயம்; யாம் இறவோமெனக் குடர்கள் விளங்குகின்ற அரத்தவாற்றின்கண்ணே குதித்துக் கடலினுட்சென்று அங்குள்ள மலைக்குகைக்குள் கலந்திருந்தார்கள்.—எ-று.

இத்தூத னிவ்வண்ணம் போர்புதலினால் இவன் பகைவரான எந்த அசுரரு மிராரொன்று வீரவாகுதேவன் அப்பொழுதுபுரிந்த போரினைக் கண்டஞ்சிய அசுரர் கூறிச்சென்று முழுகிப்போய்ப் புகுந்து மறைந்தாரென்க. (கஅ0)

சாரதர் குழுவினைத் தப்பித் தத்தம
தாருயி ருய்ந்தபி னங்கண் மாண்டவர்
சோரிய துரமிசை துதையப் பூசியே
வீரர்க ளிவரென மேவு வார்சிலர்.

(இ-ள்.) பூதவீரர்கட்குத் தப்பித்துக்கொண்டு தங்கள் தங்கள் அரிய உயிர்கள் நிலைபெற்றவுடனே அப்போர்க்களத்தி லிறந்தவர்க ளுதிரத்தையுடன் முழுதிலும் அழுந்தப் பூசிக்கொண்டு பார்த்தவர்கள் இவர்களே வீரர்களென்று கூறுமாறு சிலவசுரர்கள் வருவார்கள்.—எ-று.

இவர்களைத்தான் போலிவீரரென்றுரைப்பது.　　(கஅக)

இவ்வகை துஞ்சின ரன்றி யெண்ணிலர்
வெவ்வலி யவுணர்கள் வெருவி யோடலு
மைவரு நெறிமுயன் மகேந்தி ரப்புரங்
கௌவையி னரற்றின கடலு டைந்தபோல்.

(இ-ள்.) இந்தவிதமாக விறந்தவர்களன்றி அளவற்ற வெவ்விய வலிமையாளரான அசுரர்கள் அஞ்சி யோடுதலும், களங்கமடையத்தக்க இயல்புக்கேற்றகாரியங்களையே செய்துகொண்டிருக்கின்ற வீரமகேந்திரபுரமானது கடலுடைந்தாற்போல ஆரவாரித்தன.—எ-று.

புரம் ஆரவாரித்தன என்பதை, புரத்திலுள்ள சனங்கள் ஆரவாரித்தார்கள் என்றுணர்க.　　(கஅஉ)

அங்கது பொழுதினி லாடன் முற்றியே
செங்கள நடுவுறு செம்ம றன்புடை
யெங்கணு நீங்கிய விலக்க வேந்தருஞ்
சங்கையில் பூதருந் தலைச்சென் றீண்டினார்.

(இ-ள்.) அப்பொழுது போர்முடிந்து படுகளத்தினடுவினிற்கின்ற வீரவாகுதேவ ரருகில் எவ்விடங்களிலுமாகப் போரின்பொருட்டு விலகிச்சென்ற இலக்கம் வீரர்களும், அளவற்றவர்களாகவுள்ள பூதர்களும் வந்து நெருங்கினார்கள்.—எ-று.

சங்கையில் பூதரென்பதை போர்புரிவதிற் சந்தேகமில்லாத பூதரென்னினுமாம்.

எரிந்திடு கனன்முக னெய்த வெஞ்சர
முரந்தனை யகழ்ந்திட வொருதன் வன்மைபோ
யரந்தையின் மூழ்கியே யழிந்த வீரமா
புரந்தர னெழுந்தொரு புடையி லெய்தினான்.

(இ-ள்.) எரியப்பட்ட தீயையொத்த அக்கினிமுகன் எய்த கொடிய வம்பு மார்பைப்பிளக்க, அதனால் ஒப்பற்ற தனது வன்மையிழந்து துன்பத்தின் முழுகிய வீரமாபுரந்தரன் என்பவனெழுந்து ஒருபுறத்தில் வந்துநின்றான்.—எ-று.

வீரமாபுரந்தரன் இதுகாறு மூர்ச்சிதனாகக் கிடந்தானென்றறிக.　　(கஅச)

புண்டர நீறணி புனிதன் பாங்கரின்
மிண்டின ரிவரொலா மேவி நிற்றலு
மெண்டகு மிளையவ ரெழுவர் தம்மையுங்
கண்டிலன் கவன்றனன் கழறன் மேயினான்.

(இ-ள்.) விபூதியாலாகிய திரிபுண்டரமணிகின்ற நின்மலனான வீரவாகுதேவனருகில் வன்மையாளரான விவரனைவரும் வந்து நெருங்கிநிற்றலும், தகுந்த புகழினை

யுடைய அநுஜர்களான வேழுவீரர்களையுங் கண்டானில்லை. அதனாற்றுன்புற் றுரைப்பானுயினன்.—எ-று.

புண்டரநீறணி - விபூதியை இரேகையாக வணிகின்ற வெனினுமாம். (கஅ௫)

ஆண்டகை வீரர்க ளுடைய லார்க்கெதிர்
மூண்டம ரியற்றிய மூவர் நால்வரு
மாண்டன ரோகொலோ மயங்கி னர்கொலோ
யாண்டவர் கிடந்தன ரியம்பு வீரொன்றான்.

(இ-ள்.) ஆண்டன்மையிற் சிறந்த வீரர்களும், பகைவர்களெதிரே சென்று நின்று போர்புரிந்தவர்களுமான எழுவீரர்களும் பகைவன் கையம்பினு லிறந்துபோனுர்களோ? அல்லது மூர்ச்சித்தார்களோ? அவர்களெங்கே கிடக்கின்றார்கள் சொல்லுங்கள் என்று கூறினன்.—எ-று.

ஆண்தன்மையிற் றகுந்தவன் - ஆண்டகை. (கஅ௬)

என்றலு முக்கிர னென்னுஞ் சாரத
னுன்றுணை யார்களை யொன்ன லன்மகன்
கொன்றன னவருயிர் கூற்றும் வௌவினன்
பொன்றிய வைப்பினைப் புகலக் கேட்டியால்.

(இ-ள்.) வீரவாகுதேவ னிவ்வண்ண முரைத்தவுடனே, உக்கிரன் என்னும் பூதவீரன் உனது இளையவர்களைப் பகைவன் மகனுன அக்கினிமுகன் கொன்றான்; அவனுயிரையும் எமன் அபகரித்தான்; இவர்களிறந்தவெல்லையைக்கூறுகின்றேன்கேட்பாயாக.

அவருயிரை எமன் வவ்வக்கூடாதவனுக விருந்தும், அவன் இன்று வவ்வினன் என்பான், "அவருயிர் வௌவினன்" என்றான். சிவசம்பந்தமானவர்களி னுயிரை இது காறும் வவ்வும் வழக்கமில்லையே, எமன் செய்தது நியாயவிரோதம் என்று குறித்தான் என்க.

(கஅ௭)

இம்பரின் முன்னுற வியம்பும் யோசனை
யைம்பதிற் றிரண்டின்மே லால மொன்றுள
தும்பருஞ் சிறிதென வோங்கு மாயிடைத்
தம்பியர் மாய்ந்தனர் சரத மேயென்றான்.

(இ-ள்.) இவ்விடத்தில் முன்னுதாகவுரைக்கு மியோசனை நூறுகழிந்தா லாங்கோ ராலமரமொன்றுள்ளது, அது வானமுஞ் சிறிதாக வளர்ந்து நிற்கும், அவ்விடத்தில் உன்னிளையவர்களிறந்தார்கள்; இஃதுண்மையென்றுரைத்தான்.—எ-று. (கஅஅ)

உக்கிர னினையன வுரைப்ப யாரினு
மிக்கவன் வினவியே விழும நோயுறீஇப்
பக்கய தாயினர் படர வேகினன்
றெக்குறு மிளைஞர்க டுஞ்சு மெல்லைவாய்.

(இ-ள்.) உக்கிரனென்னும் பூதவீரன் இவைகளைக் கூறுதலும், அவைகளைக் கேட்டு யாவரினுமிக்க வீரவாகுதேவன் துன்பமடைந்து, நெருங்கிய இளையவர்கள் இறந்த இடத்திற்கு அருகினிற்பவர்களுடன் வரச்சென்றான்.—எ-று. (கஅக)

வேறு.

ஓசனை நூறு நீங்கி யொலிகழல் வீர னெய்தப்
பாசிலை வடத்தின் பாங்கே பரிவுடைத் தம்பி மார்கள்
காய்சின வங்கி செங்கண் கான்றிடக் களேவ ரத்து
வாசமென் பள்ளி மீது மாய்ந்தனர் கிடப்பக் கண்டான்.

(இ-ள்.) ஒரு நூறுயோசனை வழிகடந்து வீரவாகுதேவன் செல்லுதலும், பசிய இலைகளையுடைய ஆலின் அருகில், தன்மீதன்புள்ள தம்பிமார்கள் காய்கின்ற கோபத் தீயைச் செவ்வியவிழிகள் கக்காநிற்ப, பிணங்களாலாகிய வாசனைபொருந்திய மெல்லிய பிணவணையின்மீது இறந்துகிடத்தலைக் கண்டனன்.—எ-று.

சயனமென்றதற்கேற்ப வாசனை என்றுரைொன்க. (ககூ0)

கண்டனன் விழிகள் செந்நீர் கான்றிட வீழ்ந்து புல்லிக்
கொண்டன னிளைஞர் தம்மைக் கூவின னரற்றிச் செவ்வாய்
விண்டன னுயிர்த்து மேனி வியர்த்தனன் வீர னாவி
யுண்டில தென்னச் சோர்ந்தா னுணர்ந்துபின் னிரங்க லுற்றான்.

(இ-ள்.) வீரவாகுதேவன் இளையவீரர்க ளிறந்துகிடப்பதைக் கண்டனன், கண்டு கண்களில் இரத்தநீரொழுக அவர்கண்மீது விழுந்து கட்டிக்கொண்டு அவர்களைச் செவ்விய வாயைத்திறந்து கூவியழைத்துப் பெருமூச்சுவிட்டு உடம்பில் வியர்வைபொருந்தி உயிருண்டோ வில்லையோவென்று கூறுமாறுசோர்ந்து உணர்ந்து பின்னர் புலம்புவானாயினான்.—எ-று. (ககூக)

தம்பிமீர் தம்பி மீரென் றுரைத்திடுந் தழுவிக் கொள்ளீ
ரெம்பிமீ ரென்னு மையோ வெங்ஙனஞ் சென்றீ ரென்னும்
வெம்பினே னென்னு மென்னை விட்டகன் றீரோ வென்னு
நம்பினே னும்மை யென்னு நானுமக் கயலோ வென்னும்.

(இ-ள்.) வீரவாகுதேவன் தம்பிமார்களே தம்பிமார்களே என்றுரைப்பான், என் றம்பிமார்களேஎன்னைத்தழுவிக்கொள்ளுங்கள், ஐயகோஎங்கேபோயினீர்கள்என்பான்; நான் மிகவும் வெம்புதலடைந்தேனென்பான்; என்னைவிட்டுச் சென்றீர்களேஎன்பான்; நான் உங்களையே நம்பினேன் என்பான்;நானுங்களுக்கு வேறானவனோஎன்பான்.-எ-று.

அங்கிமா முகனே நும்மை யடல்செய வல்லா னென்னு
மிங்குநீர் முடிந்தீ ரென்றா லென்செய்வன் றமியே னென்னுந்
துங்கவெம் படைக ளேந்திச் சூழ்ந்துடன் றுணையாய் வந்த
வுங்களைத் தோற்றி யானே யுய்ந்தனன் போலு மென்னும்.

(இ-ள்.) அக்கினிமுகனோ உங்களை கொல்லுதல்புரிய வல்லவன் என்பான்; இங்கே நீங்களிறந்தீர்களானால் தனித்தவனான நானென்செய்வேன் என்பான்; பெரிய வெவ்விய ஆயுதங்களைத் தாங்கி யெனக்குத் துணையாகவந்த உங்களைத் தோற்று நானே பிழைத்தேன்போலும்.—எ-று. (ககூ௩)

அம்மவோ விதியே யென்னு மாதகா துனக்கி தென்னு
மிம்மெனச் செல்லா தின்னு மிருத்தியோ வுயிரோ யென்னுஞ்
செம்மைகொள் குணத்தா ரோடு பிறப்பரோ சிலரிங் கென்னு
மெம்மையா ளுடைய வள்ளற் கென்னினி யுரைக்கே னென்னும்.

(இ-ள்.) ஐயோ விதியே என்பான்; ஆ இது உனக்குத் தகாது என்பான்; என் னுயிரோ நீவிரைந்து செல்லாது இன்னம் இருக்கின்றனையோ என்பான்; சிலரிச் செம்மைபொருந்திய குணமுடையாரோடு பிறப்பரோ என்பான்; எம்மையாளாகவுடைய வள்ளலான குமரக்கடவுளுக்கென்ன வினி உரைக்கப்போகின்றே னென்பான்.—எ-று. ()

சீரிள மைந்தர் துஞ்சச் சிலையொடு திரிவே னென்னி
னானைக் கொப்புண் டம்மா வழகிதென் னாற்ற லென்னுஞ்
சூரர்தங் கிளையை யெல்லாந் துண்ணெனச் சென்று சுற்றி
வேரொடு முடித்தா லன்றி யகலுமோ வெகுளி யென்னும்.

(இ-ள்.) சிறப்பினையுடைய எனது இளையதம்பிமார்கள் இறப்ப, யான்மாத்திரம் விற்பிடித்தவனாக வுலாவுவேனானால், எனக்கியாவன் இணையானவன் அம்ம என்னாற்றலழகிது என்பான்; சூரபன்மனுடைய வங்கிசமனைத்தையுஞ்சென்று சுற்றிப் போர்புரிந்து கொன்றாலல்லது என்னிடத்துண்டான கோபம் நீங்குமோ? என்பான்.—எ-று. ()

துப்புடை வில்லின் கல்வித் துணைவர்க ளீண்டு துஞ்ச
வெப்படை தூண்டி னானோ வெரிமுகத் தவுண னென்னு
மப்படை நல்கு தேவ ரார்கொலோ வறியே னென்னு
மெய்ப்படை வேலி னாருக் கடியரோ விளையே மென்னும்.

(இ-ள்.) வன்மைபொருந்திய வில்வித்தையினையுடைய துணைவர்கள் இவ்விடத்திலிறக்க, அக்கினிமுகாசுரன் எந்த அம்பினைவிட்டானோ என்பான்; அவனுக்கவ்வாயுதத்தைக் கொடுத்த தேவர் யாவரோ யானறிகின்றே னில்லை என்பான்; பகைவர்மீதே வினால் இளைக்குந்தன்மை பொருந்தாத உண்மையானதன்மை பொருந்தின வேற்படை வீரனுக்கு நாமெல்லாம் அடிமையா ? என்பான்.—எ-று. (கககூ)

அடுவனோ வவுணர் சூழ்வை யென்றிடு மனலி யுண்ண
விடுவனோ விவ்வூ ரென்னு மெந்தைதன் படையைச் சூர்மேல்
விடுவனோ வென்னு மந்தோ வஞ்சினே னேலுக் கென்னும்
படுவனோ துயரத் தென்னுஞ் செய்வதென் பாவி யெனனும்.

(இ-ள்.) யான் அசுரர்கூட்டத்தைக் கொல்வேனோ? என்பான்; இந்த வீரமகேந்திராபுரியை அக்கினி உண்ணும் வண்ணம் விடுவேனோ? அல்லது என்றந்தையான சிவபெருமானுடைய அஸ்திரத்தை இந்த ஊரின்மீது விடுவேனோ என்பான்; நான் ஐயோ? வேற்படைக் கஞ்சினேனென்னும் இத்துன்பத்திற்படுவேனோ? என்பான்; பாவியான் என்செய்வேனென்பான்.—எ-று. (ககஎ)

ஒன்றிய துணைவர் தம்மை யொருங்குடன் படுத்த நீரா
லின்றமர் செய்து பட்ட வெரிமுகன் றன்பா லன்றோ
வென்றிய தென்னு மென்றன் வீரமா சுண்ட தென்னும்
பொன்றில னளியன போலப் புலம்பினன் வறிதே யென்னும்.

(இ-ள்.) என்னுடன் பொருந்திய துணைவர்களை ஒன்றாகக்கொன்ற தன்மையினால் இன்றையவெற்றி இன்று போர்புரிந்திறந்த அக்கினிமுகனிடத்தன்றோ? இதனால் எனது வீரம் மாசுண்டது என்பான்; இறவாமல் இரக்கமுள்ளவனைப்போல வீணே புலம்புகின்றேனென்பான்.—எ-று. (ககஅ)

வில்லினைப் பார்க்குஞ் செங்கேழ் வேலினைப் பார்க்கு மேனை
மல்லலம் படையைப் பார்க்கும் வாளியைப் பார்க்கும் வீரச்
சொல்லினைப் பார்க்கும் வந்து சூழ்தரு பழியைப் பார்க்குங்
கல்லென வெயிற்றின் பந்தி கறித்திடுங் கவலு மன்றே.

(இ-ள்.) வில்லினைப்பார்ப்பான்; செந்நிறமான வேற்படையைப் பார்ப்பான்; மற்றைய வலிமையான ஆயுதங்களைப்பார்ப்பான்; அம்புகளைப்பார்ப்பான்; வீரவசனங்களைப் பார்ப்பான்; தன்னை வந்து சூழ்ந்துள்ள பழியைப் பார்ப்பான்; கலீரென்று பல்வரிசைகளைக்கடிப்பான்; கவற்சியடைவான்.—எ-று. (ககக)

அருந்துய ரெய்தி யிவ்வா றழுங்கினோ னெளிய னாகி
யிருந்தன னல்ல னேங்கி யாதுமோர் செயலு மின்றி
வருந்தின னல்லன் கானின் மருந்தினுக் குழன்றா னல்லன் [டான்.
விரைந்துதன் னிளையர் தம்மை யெழுபபவோர் வினையங் கொண்

(இ-ள்.) அருமையான துன்பத்தை யடைந்து இவ்வண்ணம் வருந்திய வீரவாகுதேவன், இனி என்செய்வது என்று இரக்கமுற்றவனாக இருந்தானில்லை; ஏங்கி யாதொருசெயலில்லாமல் வருந்தினனல்லன்; காட்டிலுள்ள மருந்தின்பொருட்டுத் தேடியலைந்தானில்லை; விரைவாகத் தன்னிளையவர்களை எழுப்புதற்கு ஒருதந்திரத்தை உட்கொண்டான்.—எ-று. (உ00)

நாற்றலை யுடைய வண்ண னாரணன் முதலோர் நல்க
வேற்றிடு படையி லொன்றை யிளையர்க ளெழுவர் மீது
மாற்றலன் விடுத்தா னென்னின் மற்றவ ராவி யுண்டோன்
கூற்றுவ னன்றோ வென்னாக் குறித்திவை கூற லுற்றான்.

(இ-ள்.) நாலுதலைகளையுடைய பிரமதேவன் நாராயணன் முதலிய சாமான்ய தேவர்களளித்த ஆயுதங்களிலொன்றினைப் பகைவன் விட்டால், அவ்வம்பின் வழியாக இவர்களுயிர்களைக் கைப்பற்றினவன் எமனன்றோ என்று ஆலோசித்து இவைகளைக் கூறுவானாயினன்.—எ-று. (உ0க)

வேறு.

ஊனோ டாவிக் கின்பம் விரும்பி யுழல்கின்ற
வானோ ரேபோற் றானவ ரேபோல் வழிசெல்லா
வேனோ ரேபோ லெண்ணின னேகொல் லெமராவி
தானோ வுண்பான் கூற்றுவ னென்னுந் தமியோனே.

(இ-ள்.) ஊனினையுடைய உடலினையும், அதனுளிருக்கும் உயிரினையும் விரும்பித்திரிகின்ற தேவர்களைப்போலவும், அசுரர்களைப்போலவும், முறையே நடவாத மற்றையர்களைப்போலவும் நினைத்தானோ? எம்மவர்களினுயிரைக் கூற்றுவனென்னுந் தனியானவனோ உண்பவன்.—எ-று. (உ0உ)

விரியுமு ணர்ச்சியை மாற்றுவ தல்லால் விண்ணோர்க
ளொருபடை தானு நங்க ளினத்தை யுயிருண்ணா
தெரிமுக னென்பா னட்டன னன்றே யிளையோரைத்
தரியல னாகிக் கொன்றவ னம்மா தானன்றோ.

(இ-ள்.) தேவர்களி னெந்தவத்திரங்களும் எங்களினத்தின்மீது விட்டாலவை விரிந்த உணர்வை யழித்து மூர்ச்சையாக்குமேயன்றிக் கொல்லாது; அவ்வாறிருக்க, அக்கினிமுகனென்பவன் விட்டவம்பின் வழியாய் என் இளையவர்களுயிரை உண்டவனவ் வெமனன்றோ?—எ-று. (உ0ங)

போதத் துக்கோர் வைப்பிட மாயோர் பொறியாகி
மூதக் கோரெண் டாரக மூல மொழிகேட்டு
வேதத் தோனை வெஞ்சிறை பூட்டி விதியாற்று
மாதித் தேவன் றம்பிய ரென்ப தறியானோ.

(இ-ள்.) ஞானத்திற்கு இருப்பிடமான இவர்களை, அக்கினிப்பொறிகளாகத் தோன்றி மிகவும் மேலான நிலைமையினிற்பவர்கள், தியானிக்கின்ற தாரகமந்திரத்தின் பொருளைப் பிரமனைக்கேட்டு அவனுரையாமையாலவனை வலிய சிறையிலிட்டுப் பின்னர் அப்பிரமன்செய்த சிருட்டியைத் தானே நடத்தின முழுமுதற்கடவுளாகிய ஸ்ரீ சண்முகப்பெருமானுடைய இளையவர்களென்று அறியானோ?—எ-று. (உ0ச)

ஆறுட் பட்ட வையிரு காலத் தானுமங்
கூறிட் டோவாச் சேயுயிர் வவ்வக் குறுகுங்காற்

சீறித் தாளாற் றுக்கிய சின்னஞ் சிறிதுந்தான்
மாறிற் றில்லைக் கூற்றது தானு மறந்தானே.

(இ-ள்.) இவ்வந்தகன் பதினாறுட்டைப் பிராயத்தனும், தன்னை யந்தகன் தொடாதிருக்கவேண்டுமென்று அபிப்பிராயமுள்ளவனுமான மார்க்கண்டமுனிவன், ஈசனுடைய திருநாமமான ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைத் தியானித்துக்கொண்டிருக்க, அவனுயிரை யபகரிக்கவேண்டும் என்னும் எண்ணத்துடன் சென்ற வப்பொழுது,(இறைவனிவனைச்) சீற்றங்கொண்டு தனது திருவடியா லுதைத்த தழும்பு சற்றேனும் மறையவில்லை; இதற்குள் அதனையு மறந்தானோ?—எ-று.

மார்க்கண்டமுனிவன் சரிதம் முன்னுரைத்த அசுரகாண்டத்துக்காண்க.(௨0௫)

சீலந் தன்னு லோர்விழு போதைச் சிவனுக்கென்
றோலங் கொண்டே விண்ணிடை புக்கோ னுயிர்வெளவிச்
சூலந் தனனிற் கண்ணுத லேற்றச் சுழலுற்றுக்
காலன் பன்னாட் டேங்கிய வண்ணங் காணுனே.

(இ-ள்.) காலனென்பவன் நின்மலசிந்தையால் விழாநின்ற வொருமலரை இது சிவனுக்கர்ப்பணம் என்றுரைத்துச் சுவர்க்கத்திற்சென்றவ னுயிரை யபகரித்து, அதனல் சூலத்தில் முக்கண்ணனை இறைவனேற்றித் தண்டிக்க, அதனிற்கிடந்து அனேககாலந் தூங்கியதைக் கண்டானில்லையோ?—எ-று.

கொலையும் புலையும் களவு மிகுந்த காமியான வொரு நீசமறையோன் தங்கலவிமாதர்பொருட்டுத் திருடும் புட்பங்களி லொன்றினைத் தவறவிட்டவன் சிவார்ப்பணமென்றான்; பின்னர் மரணகாலத்தி லவனைவந்து பற்றிய எமபடர்களைத் தண்டித்து, அவனைச் சிவலோகவாழ்வுடையவனாக விறைவன் செய்தனன்; இதனை வேறிடத்து விரித்துரைப்பாம். இதுவும் இப்புராணத்திலுள்ள சரிதமே. (௨0௬)

நஞ்சிற் றீயஞ் வேட்டுவ னன்றோர் நாண்முற்றுந்
துஞ்சற் றாணற் றரன்மிசை வில்வந் தூர்த்தோனை
வெஞ்சொற் கூறிப் பற்றலும் யாங்கண் மிகவெற்ற
வஞ்சித் தன்றூ தாயினர் போன தறியானே.

(இ-ள்.) விடத்தைவிடக் கொடியவனான வொருவேடன் ஒருநாள் முழுமையும் ஊணும் உறக்குமின்றியிருந்து சிவன்மீது வில்வவிலையைத்தூர்த்தான், அவனைக் கொடுஞ்சொற்கூறிப் பிடித்தலும் நாங்கள் மிகவுமுதைக்க அஞ்சுதலடைந்து தனது தூதுவர்களாகவுள்ளவர்கள் சென்றதனை யுணரானோ?—எ-று. (௨0௭)

அக்கா லத்தி னெல்லையின் மைந்தற் கரவென்றே
முக்கா லோதித் தீமை குறித்தே முடிவோனை
மெய்க்கா லன்றூ தாயினர் பற்ற விடுவித்தே
யிக்கால் கொண்டே யவரை யுதைத்தோன் யானன்றோ.

(இ-ள்.) அம்மரணகாலத்தின் சமயத்தில், மக்களாக வுள்ளவர்கட்கு அரவென்று மும்முறையோதிக் கொடுமையைக்குறிப்பித்து இறந்தவனைக் காலன் றூதுவர்களாகவுள்ளவர் பிடிக்க, அவனை விடுவித்து அத்தூதுவர்களை இந்தக் காலினாலுதைத்தவன் யானன்றோ?—எ-று.

ஒரு வேடன் திருடியுண்பதையே தொழிலாகக்கொண்டிருந்தான், அவன் மரணதசையி லவன் பிள்ளைகளவனைப்பார்த்து அப்பா! நாங்களெவ்வண்ணம் பிழைப்போமென்றார்கள். அதற்கவன் தன் பரிசயத்தொழில்களையே தம்மக்களுக்கு முணர்த்தக்

கருதி, ஆகர சங்கர பிரகர என்று கூறி மாண்டான். இம்மகாபாவியையும் எமபடர் பிடித்தார்கள்; அவர்களை விலக்கிச் சிவகணங்கள் அவனைக் கைலாயத்திற் சேர்த்தார்கள். இதில் சங்கர என்றமொழி சிவநாமம்; இதனு லிவன்செய்த பாவமொழிந்தது. இதுவு மிப்புராணத்திலுள்ளதே. (உ0அ)

மெய்ச்சியல் கொள்ளாத் துன்மதி யாலு மிகவெய்ய
துச்சக னாலு மேனைய ராலுந் தொன்னாளி
னிச்சக மாற்றுந் தன்னிறை நீங்கி யிடரெய்தி
யச்ச முழந்தே பட்டது சண்ட னயர்த்தானோ.

(இ-ள்.) மெச்சத்தக்கவியலினையடையாத துன்மதியென்பவனாலும், மிகவுங் கொடிய துச்சகனென்பவனாலும், மற்றுள்ளவர்களாலும் முன்னாளில் இந்தவுலகத்தைச் சங்கரிக்கின்ற தனது அரசுமுறைமையினின்றும் ஒழிந்து துன்புற்று அச்சமடைந்து பட்டதை அவ்வேமன் மறந்தானோ?—எ-று. (உ0க)

நீறு முகத்தார் கண்டிகை பூண்டார் நிமலன்பேர்
கூறு முகத்தார் தம்புடை செல்லக் குலைகூற்ற
னாறு முகத்தா னடியவ ராவி யலைத்தானே
சேறு முகத்தாழ் கரியை யடாதோ சிறுபுள்ளும்.

(இ-ள்.) நெற்றியில் நீறணிந்தவர்கள், உருத்திராக்கவடந் தரித்தவர்கள், சங்கர நாமத்தை உச்சரிக்கு மியல்பினையுடையவர்கள் என்னு மிவர்களருகிற்செல்ல அஞ்சுகின்ற எமன் சண்முகப்பெருமானுடைய அடியவர்களுயிரை வருத்தினனே; சேற்றிலமுழ்ந்திய யானையைச் சிறிய குருவியுங் கொல்லாதோ?—எ-று.

யானை மிகவும் வன்மையுடையதாயினும், சேற்றிற்புதைந்தாற் சிறுகுருவியுங் கொத்திக்கொல்லுமென்ப துலகர்மொழி.

இறந்த எழுவீரர்களும் நேரே சண்முகனடியவராக அவர்களை எமன் கைப்பற்றிய தாச்சரியமாதலால், "ஆறுமுகத்தானடியவராவி அலைத்தானே" என்றான். (உக0)

வேறு.

என்னு மாற்றங்க ளியம்பியே யினையவ னெழுந்து
பின்னர் யாத்திடு தூணியி லொருசரம் பிடுங்கித்
தன்ன கங்கொடே யன்னதன் றலைதனிற் றரும
மன்னர் மன்னவன் கண்டிட வித்திறம் வரைவான்.

(இ-ள்.) என்று இதுகாறுங்கூறியனவாதி வாக்கியங்களைக் கூறிய வீரவாகு தேவன் எழுந்து பிடரியிற் கட்டியிருக்குந் தூணியினின்றும் ஒரு அம்பினை இழுத்தெடுத்துத் தனது நகத்தினுல் அவ்வம்பின்றலையில் தருமராஜாதிராஜன் காணுமாறு இவ்வண்ண மெழுதுவானாயினன்.—எ-று. (உகக)

வேலு டைத்தனி நாயகற் கிளையவன் விடுத்தேன்
கால நாடுறு கூற்றுவ னென்பவன் காண்க
கோல வெஞ்சிலைத் துணைவர்த மாருயிர் கொண்டாய்
வாலி தோவிது விடுக்குதி கடிதென வரைந்தான்.

(இ-ள்.) (இவ்விலிகிதம்) வேற்படையினையுடைய ஒப்பற்ற கர்த்தாவான சண்முகதேவருக்கிளையவனான வீரவாகுவென்னும் யான் எழுதியனுப்பினேன், அதனைக் கால நாட்டில் வாழுகின்ற கூற்றுவனென்று கூறும் பெயரினோன் காண்க. நீ எமதழகிய தம்பியர்களான விற்படைவீரர்களின் உயிரை கைக்கொண்டனை; இது நியாயமான நல்ல காரியமோ? அன்று; அதனுல் அவர்களை விரைவில் விடுவையாக என்று எழுதினன்.

செந்ந லங்கிளர் தன்னகத் தின்னவா தீட்டிப்
பொன்னெ டுஞ்சிலை வாங்கியப் பகழியைப் பூட்டிப்
பன்னி ரண்டுதோள் விமலனை மனங்கொடு பரவி
மின்னெ னச்சென்றி யமபுரம் புகும்வகை விடுத்தான்.

(இ-ள்.) செவ்விய தன்மையினையுடைய தனது நகத்தினால் இவ்வண்ணமெழுதி அழகிய நெடிய வில்லினை வளைத்து அதனிலவ்வம்பினை வைத்துப் பன்னிரண்டு திருத்தோள்களையுடைய சண்முகப்பெருமானை மனத்திற்கொண்டு துதித்து மின்னலைப்போற்சென்று இயமபுரம் அடையுமாறு விடுத்தனன்.—எ-று. (உகங)

கரந்தை சூடுவான் றிருமகற் கிளையவன் கணைமுன்
விரைந்து தெண்கட லேழையுங் கடந்துவிண் ணோங்கி
யிருந்த மானசோத் தரகிரித் தென்புறத் தியம
புரந்த னிற்சென்று மறலிதன் முன்புபோந் ததுவே.

(இ-ள்.) கரந்தைப்பூவணியும் இறைவன் மகனில் இளையவனாகவுள்ள வீரவாகுதேவனது அம்பு விரைவாகச்சென்று தெள்ளிய எழுகடல்களையுங் கடந்து வானமளாவியிருந்த மானசோத்தரகிரிக்குத் தென்புறத்திலுள்ள இயமபுரத்தையடைந்து எமனெதிரடைந்தது.—எ-று. (உகச)

தொடுத்த வக்கணை யந்தகன் முன்புதுன் னெனப்போ
யடுத்து வீழ்தலும் விம்மித மெய்தியே யவன்சென்
றெடுத்து நோக்கினன் வீரவா குப்பெய ரிளவல்
விடுத்த தாகவு முற்றுற வுணர்ந்தனன் விரைவில்.

(இ-ள்.) விட்ட வவ்வம்பு அந்தகனெதிரில் விரைவாகச்சென்று அவனருகில் விழுதலும், அதனைக்கண்டு அவன் ஆச்சரியம் அடைந்து அதனருகிற்சென்று அதனை எடுத்துப்பார்த்தான்; அது வீரவாகுவென்று பெயருள்ள வாலிபன் விடுத்ததாகவுணர்ந்து விரைவாக வதனை முற்றிலு முணர்ந்தனன்.—எ-று. (உகரு)

அயினெ டுங்கணைப் பாசுரத் தகலமு துணர்ந்து
துயரு ழந்தஞ்சி யீண்டில ரிளையவன் றுணைவர்
பயில வெங்ஙனஞ் சென்றனர் ரோவெனப் பார்த்தான்
கயிலை யேகியே யிருப்பதா வுணர்ச்சியிற் கண்டான்.

(இ-ள்.) கூரிய நெடிய வவ்வம்பிலுள்ள பாசுரத்தின் பொருள்களனைத்தையு மாய்ந்து துன்புற்று அஞ்சி அவ்வீரவாகுவின் இளையவர்கள் இவ்விடத்திலில்லை, அவர்கள் எவ்விடத்தி லிருக்கும்பொருட்டுச் சென்றார்கள் என்று பார்த்தான்; பார்த்தவன் அவர்கள் கைலாயத்திற்குச் சென்று அங்கிருப்பதாகத் தன்னுணர்ச்சியிற் கண்டான்.

கண்டு தேறினன் கடாமிசை யேறினன் கடுங்கால்
கொண்ட தானைகள் சூறையங் காலெனக் குழுமப்
பண்டு தானுறை பதியினை நீங்கினன் படரா
வண்டர் நாயகன் கயிலையஞ் சாரலை யடைந்தான்.

(இ-ள்.) கயிலையிலிருப்பதாகக் கண்டுதெளிந்து தனது வாகனமான எருமையேற்றிலேறி அதிகவேகமாக நடக்கின்ற சேனைகள் சூறைக்காற்றைப்போல அருகிற்சூழ்ந்துவர, முன்னே தானிருந்த நகரத்தைவிட்டுச்சென்று தேவதேவனை சிவபெருமான் எழுந்தருளியிருக்குங் கயிலாயத்தின் சாரலையடைந்தான்.—எ-று. (உகள)

ஆன காலையி லாயிடைப் பொதுப்பரோன் றதனின்
மான வேற்படை யவுணர்தம் படைகளின் மாண்ட

சேனை வீரர்கள் சூழ்தர வெழுவருஞ் சிறந்து
கான விஞ்சையர் பாடல்கேட் டிருப்பது கண்டான்.

(இ-ள்.) இவன் சென்றவப்பொழுது அவ்விடத்தில் ஒரு சோலையிற் பெரிய வாயுதங்களையுடைய அசுரர்கள்விட்ட அம்புமுதலியவைகளாலிறந்த சேனைவீரர்கள் சூழ்ந்திருக்க, எழுவீரர்களுஞ் சிறப்புற்றுக் கானத்தினையுடைய வித்தியாதரர்களின் இசைப்பாட்டைக் கேட்டுக்கொண்டிருத்தலைக் கண்டான்.—எ-று. (உகஅ)

தொழுது மற்றவர் முன்னுற மறலிபோய்த் துன்னி
முழுது ணர்ந்துளீர் நுங்களை நாடுவான் முன்னோ
னழகி தென்றிவ ணிருப்பதென் னென்னையு மயிர்ப்பா
னெழுவி ருங்கடி தெழுவிரிப் பூதரோ டென்றான்.

(இ-ள்.) எமன் அவர்களெதிரை யடைந்து வணங்கி எல்லாம் அறிந்தவர்களே, உங்களை உங்கள் முன்னவன் தேடுவான்! இது நல்ல அழகு என இங்கு இருப்பது என்னை? நீங்கள் விரைந்து செல்வீராயின் என்மீதுஞ் சந்தேகங்கொள்ளுவான், இப்பூதர்களுடன் நீங்களேழுபேர்களும் விரைந்தெழுந்து வாருங்கள் என்று கூறினான்.—எ-று.

என்ற காலையி னெழுவரு மெழுந்திரு மருங்கு
நின்ற பூதர்கள் யாவரும் போந்திட நீங்கி
யொன்றோர் மாத்திரை யொடுங்குமுன் னவுணர்கோ னுறையு
மன்றன் மானக ரடுகளம் புக்கனர் மன்னோ.

(இ-ள்.) எமன் இவ்வண்ணங் கூறியவுடனே, அவ்வேழுவீரர்களும் அங்கிருப்பதை விட்டெழுந்து இருபுறங்களிலும் நின்ற பூதர்கள் அனைவரும் உடன்வர கயிலைச்சாரலை விட்டு நீங்கி ஒருமாத்திரைப்பொழுதிற்குள் அசுராதிபனான சூரபன்மனிருக்கின்ற மங்கலகரம் பொருந்திய வீரமகேந்திரபுரியிலுள்ள படுகளத்தை யடைந்தார்கள்.

புக்க காலையி னெழுவருந் தம்முடல் புகுந்தார்
மிக்க பாரிடத் தலைவர்கள் யாவரும் விரைவிற்
றொக்கு வீழ்தரு மியாக்கைக ளுற்றனர் சுரர்க
ளக்கணந் தனிற் பூமழை தூவினின் றார்த்தார்.

(இ-ள்.) சென்றவுடனே எழுவீரர்களும் தமது பழைய உடலங்களிற் புகுந்தார்கள்; மிகுதியான பூதவீரர்களனைவரும் அங்கு நெருங்கிக்கிடந்த தங்களுடலங்களிற் பிரவேசித்தெழுந்தார்கள்; அப்பொழுது தேவர்கள் மலர்மழைபொழிந்து ஆரவாரித்தார்கள்.

இன்ன வேலையி னெழுவரும் பதைபதைத் தெழுந்து
முன்ன வன்றன தடிக்கம லங்களை முறையாற்
சென்னி தாழ்வுற வணங்கினர் செங்கையா லெடுத்துப்
பொன்னின் மார்புறப் புல்லின னெல்லைதீர் புகழோன்.

(இ-ள்.) இவ்வாறானசமயத்திலேழுவீரர்களும் துடிதுடித்தெழுந்து மூத்தவனான வீரவாகுதேவனுடைய சரணகமலங்களை முறைப்படி தலையைவளைத்து வணங்கினார்கள். உடனே அளவற்ற கீர்த்தியாளனான வீரவாகுதேவன் அவர்களை வாரியெடுத்துப் பொன்மயமான மார்பொடு பொருந்தக் கட்டியணைத்தனன்.—எ-று. (உஉஉ)

புல்லி னானிள வீரரைப் புயங்கமுண் டுமிழ்ந்த
வெல்லி னானென விளங்கினா னவுணனா யினிநான்
வில்லின் வலடல் செய்வதோ வரிதெனா விறலுஞ்
சொல்லினன் மகிழ் வாயினன் புன்கணுந் தொலைந்தான்.

(இ-ள்). இளையவீரர்களைத் தழுவின வீரவாகுதேவன், பாம்பு உண்டு உமிழ்ந்த சூரியனைப்போல பிரகாசித்தான். இனி நான் அசுரர்களை வில்லினாற் கொல்லுவதோ வொருகடினம் என வீரவசனமும் கூறி மகிழ்வடைந்து துன்பத்தினின்று நீங்கினன்.

எண்ட ருந்திற லெழுவரும் பிறருமுய்ந் தெழுதல்
கண்டு வீரமா புரந்தர னுங்கணத் தவருந்
திண்டி றற்புனை யிலக்கரு முவகையிற் சிறந்து
கொண்டல் கண்டிடு சாதகம் போலுளங் குளிர்ந்தார்.

(இ-ள்.) எண்ணத்தகுந்த சாமர்த்தியர்களான எழுவீரர்களும் மற்றையர்களும் பிழைத்தெழுதலைப்பார்த்து, வீரமாபுரந்தரனும் சிவகணத்தவர்களும் மிக்க வன்மைபொருந்திய இலக்கம்வீரர்களும் உவகைமீதூர்ந்து பெய்முகிலைக்கண்ட சாதகப் பறவையைப்போல உள்ளங்குளிர்ந்தார்கள்.—எ-று. (உஉச)

அன்ன தாகிய வெல்லையிற் கூற்றனு மனிகந்
துன்ன வாயிடை வந்தன னிளவலைத் தொழுது
மின்னு லாவிய வேலினாய் தமியனை வெகுண்டாய்
முன்னி கழ்ந்திடு வரன்முறை கேளென மொழிவான்.

(இ-ள்.) அனைவருமெழுந்த வப்பொழுது, எமனுந் தனது சைநியங்களுட னவ்விடத்திற்கு வந்து வீரவாகுதேவனை வணங்கி வீரவிலக்குமி வாசம்பொருந்திய வேலோய்! நீ என்னைக் கோபித்தனை, முன்னே நடந்த வரலாற்றைக் கேள் என்று கூறுவானாயினன்.—எ-று. (உஉரு)

எழுதி றத்தரு மிங்ஙனந் தம்முடல் விட்டுக்
குழுவி னோடுபோய்க் கயிலையஞ் சாரலிற் குறுகி
வழிப டுஞ்சில பூதருஞ் சுற்றிட வதிந்தா
ரழிபெ ருந்துய ருழத்தலிற் றெரிந்திலை யதனை.

(இ-ள்.) எழுவீரர்களும் இவ்விடத்தில் தங்களுடலை விட்டுக் கூட்டமாகச் சென்று கயிலைமலைச்சாரலையடைந்து தங்களை வணங்குஞ்சில பூதர்களுஞ் சூழவிருந்தார்கள்; நீ இவர்களிறந்துபட்டார்களே என்று மிகுந்தபெருந்துயர்க்கடலின் மூழ்கினமையா லதனை யுணர்ந்தாயில்லை.—எ-று. (உஉசு)

அங்க மீதினி னீறுகண் டிகையிவை யணிந்தார்
தங்கள் பாலினுஞ் செல்லுதற் கஞ்சுறுந் தமியே
னிங்கு நின்னிளை யாருயிர் கொள்வனோ வெவரும்
வெங்க னற்பொறி யுண்பரோ பசிப்பிணி மிகினும்.

(இ-ள்.) தன்னுடம்பில் விபூதிருத்திராக்கங்களை யணிந்தவர்களிடத்திலும் செல்லுதற்கு அஞ்சுகின்ற யான் இங்கு நினதிளையவர்களுயிரை வாங்குவனோ? ஐயா! பசிப்பிணி யதிகமாயிற்றென்று எவனேனும் வெவ்விய தீப்பொறிகளை யுண்பானோ?

வினைய முன்னிநீ விடுகணை நோக்கியான் வெள்ளித்
தனிவ ரைப்பெருஞ் சாரலிற் போந்துசா ரதரோ
டுனது தம்பியர் தங்களை விளித்திவ ணுய்த்தேன்
முனிவு கொள்ளலை யையவென் னிடையென மொழிந்தான்.

(இ-ள்.) நீ தந்திரமாகக் கருதிவிட்ட வம்பினை யான் பார்த்தவுடனே, ஒப்பற்ற ஸ்ரீகைலாசத்தின் தாழ்வரையையடைந்து அங்கிருந்த பூதர்களுடன் உனது தம்பிமார்களையும் அழைத்துக்கொண்டுவந்து இங்குச் சேர்த்தேன், ஐயனே! என்னிடத்துக் கோபங்கொள்ளாதே என்று எமதருமன் கூறினன்.—எ-று. (உஉஎ)

அந்த கன்மொழி வினவலு மையனுக் கிளவ
னந்து யர்க்கடல் சுவற்றினைக் கயிலையி னமர்கள்
வந்த தன்மையைத் தேற்றில மயங்கியீண் டுற்றும்
புந்தி கொள்ளலை யாவது நீயெனப் புகன்றான்.

(இ-ள்.) எமனுரைத்த வாசகங்களைக் கேட்டதும், சண்முகனுக்கிளைய வீரவாகு தேவன் நீ நமது துயர்க்கடலை வற்றச்செய்தனை; நம்மவர்கள் கைலைக்குச் சென்றதன்மை நாம் அறிந்தோமில்லை; மயங்கியிருந்தோம்; நீயொன்றையும் மனதிற்கருதாதே என்று கூறினன்.—எ-று. (உஉக)

புகல லுற்றபின் விடைகொண்டு கூற்றெனும் புத்தே
ளுவகை தன்னொடு தன்புரத் தேகின னென்னா
ரிகலை வெஃகியே பூதருந் துணைவரு மேத்த
நிகரி லாதவ னன்னதோர் களத்திடை நின்றான்.

(இ-ள்.) (வீரவாகுதேவன் நீயொன்றையு மனதிற் கருதாதே என்று) கூறியவுடனே அந்தகனென்றுரைக்குங் காலதேவன் (இனி நமக்கிடரில்லையென்று) சந்தோஷத்துடன் விடைபெற்றுக்கொண்டு தன்னூருக்குச்சென்றான்; பின்னர் பகைவர்களின் போரைக்கருதிப் பூதர்களும் இளையவர்களும் துதிக்க ஒப்பற்ற வீரவாகுதேவன் அப்போர்க்களத்தினின்றான்.—எ-று. (உஙO)

நின்று மற்றிவை நாடிய வொற்றர்கீ ணகரிற்
சென்று சூரனைத் தொழுதுநின் மதலைபோர் செய்து
வென்றி மொய்ம்பினன் விடுத்திடு வீரன்மாப் படையாற்
பொன்றி னான்பொடி யாகிவீழ்ந் தனனெனப் புகன்றார்.

(இ-ள்.) (இதுநிற்க) போர்க்களத்தில் நின்று இவை யனைத்தையும் பார்த்துணர்ந்த தூதுவர்கள், பெரிய அரண்மனைக்குட்சென்று (எவ்வாறோ என்றெண்ணிக்கொண்டிருக்கும்) சூரனைவணங்கி (அண்ணலே) நின்மகனை அக்கினிமுகன் போர்புரிந்து வீரவாகு என்றவன் விட்ட வீரபத்திராத்திரத்தால் இறந்து சாம்பராகிவிழுந்தனன் என்று கூறினார்கள்.—எ-று. (உஙக)

வேறு.

அக்கா லைதனி லவுணர்க் குளெலா
மிக்கான் புவியின் மிசைவீழ்ந் தயரா
வெக்கா துழுறா தவிடர்க் கடலுட்
புக்கான் மெலிவோ டுபுலம் புறுவான்.

(இ-ள்.) (தூதுவர்கள் மன்னவ! நின்மகனை வீரவாகு வீரபத்திராத்திரத்தாற் கொன்றான். அவனும் சாம்பராகி விழுந்தான் என்று கூறிய) அப்பொழுது, அசுராதிபனை சூரபன்மன் பூமியில் விழுந்து புத்திரசோகத்தாலயர்ந்து என்றும் அடையாத துன்பசமுத்திரத்தின் முழுகி மனவாட்டத்துடன் புலம்புவானாயினன்.—எ-று. (உஙஉ)

உண்ணே ய்மதா முயிரோ யுறவே
கண்ணே மணியே கனன்மா முகனே
விண்ணே கினையோ விவண்மீள் கிலைபா
லெண்ணே னுயிர்வாழ்க் கையையிங் கினியே.

(இ-ள்.) என்மனத்துக்கியைந்த உயிரோ! எனது உறவே! என் கண்ணே! என்கண்ணின்மணியே! அக்கினிமாமுகனே! நீ என்னைவிட்டு வீரசுவர்க்கமடைந்தனையோ? இனி இங்கு வாராய், இதனா லினியான் உயிர்வாழ எண்ணேன்.—எ-று. (உஙங)

எந்தைக் கிளையான் றனையிந் நகரின்
வந்துற் றதொர்தூ தன்மலைந் திடலா
னுந்துற் றனைமெய் யுநுடங் கிளையா
லந்தத் துயரிங் ஙனமா றியதோ.

(இ-ள்.) என்னப்பனே! நின்னிளையவனை வச்சிரவாகுவென்பவனை இவ்வூருக்குள் வந்த ஒரு தூதன் போர்புரிந்து கொல்லுதலால், (என்றம்பியையும் ஒருதூதன் கொன்றனே) என்று வருந்தியிருந்த வவ்வருத்தம் இங்கு நீங்கியதோ?—எ-று. (கஙச)

தேறு விகல்செய் திடுதே வரொலா
மாறு மகிழ்வுற் றிடவைத் துமனத்
தாறு விடரொன் வயினுக் கிளையாற்
கூறு யிதுவுங் குமரற் கியல்பே.

(இ-ள்.) மகனே! நீ நல்ல பரிசயமின்றிப் போர்புரியுந் தேவரனைவரும் நீங்காத மகிழ்சியையடையும்வண்ணம் செய்து, என்னுடைய மனதிற்காறுத துன்பத்தை உண்டாக்கினை: நீயே சொல், (இவ்வாறு பகைவர்களுக்கு மகிழ்ச்சியையும் எனக்குத் துன்பத்தையுந் தருதல்) பிள்ளையாக வுள்ளவனுக்கழகோ?—எ-று. (உஙரு)

கரோ திமருங் குளகா ரணனோ
சீரோ திமனோ திருமா லவனோ
நேரோ தியவொற் றடநீ முடிகென்
றுரோ தினரோ வதறிந் திலனே.

(இ-ள்.) மகனே! இந்தத்தூதுவன் கொல்லச் சாகக்கடவையென்று கரிய கூந்தலினையுடைய உமையை ஒருபுறத்திலுடைய இறைவனோ? அன்றேல், சிறப்புப்பொருந்திய அன்னத்தை வாகனமாகவுடைய நான்முகனோ? அன்றேல் அழகிய மாலென்று கூறப்படுமவனோ? (இவர்களில்) எவன் நின்னைச் சபித்தவன், நான் அறிகின்றேனில்லையே.—எ-று. (உஙசு)

பொய்விட் டிடுதூ துவர்போ ரிடைநீ
மெய்விட் டனையென் றுவிளம் பினரா
னெய்விட் டவயிற் படைநே ரலன்முன்
கைவிட் டெனையே குவதுன் கடனே.

(இ-ள்.) (என்னரியமகனே! அக்கினிமுகனே! நீ) என்னிடத்து உண்மையுரைப்பவர்களான தூதுவர்கள் நீ போர்க்களத்தி லுடல் துறந்தனை என்று கூறினார்கள். (அப்பனே) நெய் பூசிய கூரிய வேலாயுதத்தினையுடைய சண்முகனாகிய பகைவனெதிரில் என்னைவிட்டுச் செல்லுவது மகனாகிய நினது கடனோ?—எ-று. (உஙள)

தூதா னவன்வா ளிதுணித் திடவிண்
மீதே கினையென் றுவிளம் பினரப்
போதே யதுணர்ந் துபொறுத் தனனு
லேதே துபொறு தினமென் னுயிரே.

(இ-ள்.) மகனே! நின்னைத் தூதனு வந்தவனது அம்பானது துணிக்க நீ சுவர்க்கம்புக்கனை என்று கூறினார்கள். அப்பொழுதே அதனைக் கேட்டுணர்ந்து பொறுத்தேன்; இன்னம் என்னுயிர் எது எதுகளைப் பொறுக்காது.—எ-று. (உஙஅ)

ஆவா தமியே னயர்வுற் றிடவே
மூவா விளமைந் தமுடிந் தனையே

யோவா துமக்கப் பெறவோங் குதவத்
தேய்வார் களுமுண் டுகொலின் னமுமே.

(இ-ள்.) அந்தோ தமியேன் வருந்த மிகவுஞ் சிறியமைந்தனே, நீ இறந்தனையே மகனே கெடாது பிள்ளையைப்பெற வுயர்ந்ததவத்திற் பொருந்தினவர்களும் இன்னமிருக்கின்றார்களோ ?—எ-று. (உகக)

எல்லே யுனை நம் புவதென் னகல்வாய்
சொல்லே துமுரைத் திலைதுன் புறுவேன்
கல்லே புரைநின் கவின்மார் பதனை
வல்லே தழுவிக் கொளவந் தருளே.

(இ-ள்.) எல்லே மகனே யுனை நம்புவதென்னை நீ அகன்றனை என்னைவிட்டு அகன்ற நீ ஒருசொல்லு முரைத்தாயில்லை, யான் துன்பத்தை அநுபவிக்கின்றேன், கல்லினையொத்த நினது அழகிய மார்பத்தை விரைவாக யான் தழுவிக்கொள்ளும்வண்ணம் வருவாயாக.—எ-று.

எல்லே என்ற திரக்கக்குறிப்பு. (உஅ0)

செய்யாய் கரியாய் திருவே சிறுவா
மெய்யா ருயிரோ விடலா யடல்வேற்
கையா யரசே களிறே தமியேற்
கையா வெனைநீ யுமயர்த் தனையோ.

(இ-ள்.) மகனே! செய்யவனே, கரியவனே, திருவே, சிறுவனே உண்மையான எனது அரிய உயிரோ, விடலையே, வன்மைபொருந்திய வேற்படைதாங்கிய கையினையுடையாய், அரசே, களிறே, என்னப்பனே என்னை நீயும் அயர்த்தனையோ ?—எ-று.

என்றின் னனபன் னியிரங் குதலு
நன்றன் னையதோர்ந் துநடுக் கமுறுத்
துன்றுந் துயரக் கடறுன் னினளா
லன்றந் நகரிக் கதழுங் குரலே.

(இ-ள்.) என்று இவைகளைக் கூறியிரங்குதலும், அதனை இறந்த அக்கினிமுகனுக்கன்னையான பதுமகோமளை யென்பவள் கேட்டு நடுக்கங்கொண்டு நெருங்கிய துன்பசமுத்திரத்தின் மூழ்கினாள்; உடனே அந்த வீரமகேந்திரபுரத்திலும் அன்று அழுகுரல் மிகுதியாகியது.—எ-று. (உஅஉ)

அக்கினிமுகாசுரன்வதைப்படலமுற்றிற்று.
ஆக திருவிருத்தம் - க,ருசசு.

---

# மூவாயிரர்வதைப்படலம்.

ஆயதோர் காலைமூ வாயி ரத்தொகை
மேயின மைந்தர்கள் வினவி யீதெலா
மாயிரு விசும்பினை யளாவு மன்னவன்
கோயிலை யடைந்தனர் குழுவொ டேகினர்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் மூவாயிரமென்னும் எண்ணுப்பொருந்திய புத்திரர்கள் இவைகளையெல்லாம் கேள்விப்பட்டுக் கூட்டமாகச்சென்று அரசனாகிய சூரபன்மன் வாழ்கின்ற அரண்மனையாகிய கோயிலையடைந்தார்கள்.—எ-று. (க)

துன்னுறு பழியெனுஞ் சூறை யெற்றிட
வின்னலந் தெண்டிரை யெறிய வைகிய
மன்னிய னேக்கியே வணக்கஞ் செய்தெழீஇ
முன்னர்நின் றினையன மொழிதன் மேயினர்.

(இ-ள்.) அவர்கள் நெருங்கிவராநின்ற பழியென்னும் சுழல்காற்று மோதத் துன்பமெனும் ஒள்ளிய அலையானது வீச, சோகசாகரத்தில் அழுந்தியிருந்த மன்னவனது இயல்பினைப்பார்த்து அவனை வணங்கியெழுந்து எதிரினின்று இவைகளைக் கூறுவாராயினர்.—எ-று. (உ)

உரமிகு மிலக்கரு மொழிந்த வெண்மரும்
பெருவிறன் மொய்ம்பனும் பிறரு முற்றுழி
யெரிமுக னொருவனை யேவி னுயவன்
செருவினை யவரொடு செய்ய வல்லனே.

(இ-ள்.) தந்தையே! வன்மையாளர்களாகிய இலக்கர்களும், அவரன்றியுள்ள வெண்மர்களும், மிக்க விறலினையுடைய வீரவாகுதேவனும், இன்னம் பலரும் நெருங்கிநிற்கும் போர்க்களத்திற்கு நீ அக்கினிமுகனொருவனைமாத்திரமனுப்பினுய் ஏகனுகச் சென்றவவன் அவ்வத்தனைபேர்களுடனும் போர்செய்தற்குவல்லவனே ?—எ-று. (௩)

வலியவர் தம்மையும் வரம்பின் மிக்குறின்
மெலியவ ராயினும் வென்று போவரா
லுலகினில் வழக்கமீ துணர்ந்தி லாய்கொலோ
கலைபயில் கற்புடைக் காவன் மன்னனே.

(இ-ள்.) வன்மையாளர்களா யுள்ளவர்களையும் பயிலப்பட்ட கலையின் திறத்தினையுடைய காவன்மன்னவனே! வரம்புகடந்து விடுமாயின் மென்மையாளர்களாக வுள்ளவர்களாயினும் வென்று போவார்கள்; இஃதுலகவழக்கமென்பதனை நீ யுணர்ந்தாயில்லையோ ?—எ-று. (௪)

ஒட்டலர் குழுவினு ளொருமகன் றனை
விட்டனை மேல்வரும் வினைய மோர்ந்திலை
யட்டுறு தாரின யமரி லங்கவன்
பட்டன னென்றிடிற் பரிதற் பாலையோ.

(இ-ள்.) மன்னவனே! நீமிகுதியான பகைவர்களின் நடுவில் ஒருபிள்ளையான அக்கினிமுகனை யனுப்பினுய், மேல்வரும் காரியத்தை யெண்ணினுயில்லை; மதுமலர் மாலையணிந்த அரசே! போரிலவனிறந்தானென்று தூதர் கூறில் அதற்காக துன்புறற்பாலையோ.?—எ-று. (௫)

தீமுக னொருவனுக் கிரங்கித் தேம்பலை
யாமுள மிரணிய னின்னு முற்றுளன்
றூமனா மகிழ்நனைத் தளைப டுத்திய
கோமக னுளனொரு குறையுண் டாகுமோ.

(இ-ள்.) நீ, இறந்த ஒரு அக்கினிமுகன்பொருட்டு இரங்கித் தேம்பாதே; நாங்கள் மூவாயிரம்பேர்களிருக்கின்றோம். அன்றியும் இரணியனின்னு மிருக்கின்றான். பதுமநண்பனுகிய பானுவைச் சிறையிலடைத்த மன்னவனுகிய பானுகோபன் இருக்கின்றான் ஆதலால் உனக்கொரு குறையுமுண்டோ ?—எ-று. (௬)

நண்ணல ராயினோர் நலிந்து செற்றிடக்
கண்ணகன் றேர்பரி களிறு தானவ

றெண்ணில் மாய்ந்தவென் றிறையு மாகுலம்
பண்ணலை யையவப் பரிசு கேட்டிநீ.

(இ-ள்.) பகைவர்களாக வுள்ளவர்கள் துன்புறுத்திக்கொல்ல அளவற்றனவாகிய இரதங்களும், குதிரைகளும், யானைகளும், காலாட்படைகளும் அழிந்தனவென்று சற்றேனும் வியாகூலமடையாதே. ஐயனே அவ்வியலைக்கேட்பாயாக.—எ-று. (எ)

எழெனும் கடல்வறந் திடினு நின்னடி
சூழ்தரு படைக்கொரு தொலைவு மில்லையா
லூழியு மழிகுறு வொருவ நீயிவட்
பீழையி னுறுவதும் பெருமைப் பாலதோ.

(இ-ள்.) எழென்னுந் தொகையினையுடைய கடல்கள் வற்றினாலும் நின்னடியைச் சூழ்ந்துள்ள சேனைகளுக்கோ ரழிவுங் கிடையாது. ஊழிகாலத்துமழியாத வொருவனே! நீ இவ்விடத்தில் இப்பொழுது துன்புடையவனாக விருத்தலும் பெருந்தகைமைக்கழகோ.—எ-று. (அ)

நின்றுவா னளவெலா நிவந்த மேருவாங்
குன்றினோர் தினைத்துணை குறைந்த தன்னதாற்
றுன்றுநந் தானையுட் டுன்ன லார்பொர்
வின்றுகா றுகவே யிறந்த சேனையே.

(இ-ள்.) பூமியினின்றுமேல் வெளியிடமனைத்தும் நெருங்கியிருக்கின்ற மேருவாகிய மலையில் ஒரு தினையளவு குறைந்தாற்போல நெருங்கிய நமது சைனியங்களுள் பகைவர்கள் போர்புரிய இந்நாள்வரைக்கு மிறந்த சேனைகள் குறைந்தன.—எ-று. (௯)

சிறந்திடு தலைமையுந் திறனு மாக்கமு
மறந்தனை யாகியே வலிய னாகுநீ
யிறந்தவர் தமைநினைந் திரங்கற் பாலையோ
புறந்தரு கின்றதோ ரமரர் போலவே.

(இ-ள்.) வன்மையாளனாகிய நீ சிறப்புப்பொருந்திய தலைமையும் வெற்றியும் செல்வமுமாகிய விவைகளை மறந்தவனாய்ப் படுகளத்திலிறந்தவர்களைக்கருதி பகைவரொதிரினில்லாது புறங்காட்டி யோடுமமரர்களைப்போல இரங்கற்பாலையோ ?—எ-று.(௧௦)

அண்டர்த முதல்வனை யயனை மாயனைச்
சண்டனைப் பவனனைத் தழலை யாரையும்
விண்டொடர் செலவினில் விரைந்து பற்றியே
கொண்டணை கின்றனங் குறிப்ப தாகுமேல்.

(இ-ள்.) நினக்கபிப்பிராயமாக விருந்தால் தேவர்களரசனாகிய விந்திரனையும் பிரமனையும் திருமாலையும் இயமனையும் வாயுவையும் அக்கினியையும் இன்னமுள்ளவர்களையும் வானத்தை நோக்கிப்போகும் போக்கிலேயே விரைவாகப் பிடித்துக்கொண்டு வருவேம்.—எ-று. (௧௧)

விண்ணினை யலைக்கவு மேரு வெற்பொடு
மண்ணினை மறிக்கவும் வடவை மாற்றவு
மெண்ணினை யென்னினும் யாங்க ளெந்தைநின்
னுண்ணினை வின்படி முடித்து மொல்லையில்.

(இ-ள்.) சுவர்க்கத்தை வருத்தவும், மேருமலையுடன் மண்ணினை மறிக்கவும், வடவாக்கினியை யழிக்கவும் எந்தையே! நீ நினைத்தாயாயின் நாங்கள் உன்னெண்ணப்படி விரைவின் முடிப்போம்.—எ-று. (௧௨)

பன்னுவ தென்பல பணித்தி யாங்கள்போய்
முன்னுறு பூதரை முரண்கொள் வீரரைப்
பின்னுறு கந்தனைப் பிறரை யீண்டொரு
கன்னலின் வென்றுநின் கழல்கள் காண்டுமால்.

(இ-ள்.) பலவகையாகக் கூறுவதிற் பயனென்னை? நீயெங்கட்குத்தரவளித்தாலியாங்கள் சென்று முன்னேவரும் பூதர்களையும் வன்மையாளர்களாகிய வீரர்களையும் இவர்கட்கெல்லாம் பின்னே நிற்குங் கந்தனையும் மற்றையர்களையும் இவ்விடத்திற்கு ஒருகணப்பொழுதிற்குள் பிடித்துக்கொண்டு வருவேம் என்று கூறினார்கள்.—எ-று.

என்றிவை புகறலு மிடுக்க ணீங்கியே
நன்றிது மைந்தர்கா ணடமின் போர்க்கென
வன்றிறன் முதல்வனை வணங்கிக் கைதொழா
நின்றவ ரோவரு நீங்கி னாரரோ.

(இ-ள்.) என்று அவர்கள் இவைகளைக் கூறலும், அசுரமன்னவன் துன்பமொழிந்து மக்களே! இதுவே நல்லது நீங்களனைவரும் இப்பொழுதே போர்புரியச் செல்லுங்கள் என்று கூறினான்; உடனே அம்மூவாயிரவர்களும் வலிய திறலாளனாகிய வனை வணங்கிக் கைதொழுது எதிரினின்று விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள்.—எ-று.

வேறு.

வன்னச் சிலைகொண் டனர்வான் கவசந்
துன்னுற் றிடுவித் தனர்தூ ணியினை
வெந்னிற் செறிவித் தனர்வெவ் விரலிற்
பொன்னுற் றிடுபுட் டில்புனைந் தனரால்.

(இ-ள்.) சென்ற வவர்கள் வலிய விற்களை யெடுத்தார்கள்; பெரிய கவசங்களை மார்பிலணிந்தார்கள்; தூணீரங்களை முதுகிற் கட்டினார்கள்; பொன்மயமான விரலுறைகளைத் தரித்தார்கள்—எ-று. (௧௫)

சீர்புக் குறுகைப் படைசெங் கைகொளாத்
தார்புக் கமர்தும் பைதனைத் தரியா
மார்புக் கலமாக் கலன்வர்க் கமிடாத்
தேர்புக் கனர்வந் தனசே னைகளே.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய கையிலெடுக்கத்தக்க வாயுதங்களை கைகளிலெடுத்துக்கொண்டு மாலையாகக் கட்டப்பட்ட தும்பையை மகுடத்திற்சூடி மார்பிற்பொருந்துமாறு ஆபரணவருக்கங்களைத் தரித்துத்தேரிலேறினார்கள்; உடனே சைனியங்களெல்லாம் வந்தன.—எ-று. (௧௬)

சங்கங் கண்முழங் கினதண் ணுமைகோ
டெங்கெங் குமியம் பினவெண் படகந்
துங்கங் கெழுபே ரிதுவைத் தனவா
லங்கங் குருமுற் றனவா மெனவே.

(இ-ள்.) அவ்வவவிடங்களில் இடியிடித்தாற்போல, சங்கங்கள் முழங்கின; மத்தளங்களும் கொம்புகளு மெங்கு முழங்கின; வெண்படகங்களும் பெருமை விளங்குகின்ற பேரிகைகளும் அடிக்கப்பட்டன.—எ-று. (௧௭)

அவுணப் படையெண் ணிலவாற் றன்மிகுங்
கவளக் கரியெண் ணிலகா மருசீ

ரிவுளித் தொகையெண் ணிலவிட் டமுரு
வவணுற் றிடுதே ருமுலப் பிலவே.

(இ-ள்) அசுரசைனியங்கள் அளவற்றன; வன்மைமிக்க கவளமுண்ணும் யானைப்படைகள் அளவற்றன; அழகுபொருந்திய குதிரைப்படைகள் அளவற்றன; கூட்டமாக வராநின்ற இரதப்படைகள் அளவற்றன.—எ-று. (கஅ)

முழங்குற் றனபல் லியமும் மதமாத்
தழங்குற் றனதே ரொலிதந் தனவா
லழுங்குற் றனவாம் பரியாங் கவைகள்
விழுங்குற் றனபா ரொடுவிண் ணிணையே.

(இ-ள்.) பல்லியங்கள் முழங்கின; மூன்றுமதங்களையுடைய யானைகள் கெர்ச்சித்தன; தேர்கள் ஒலித்தன; தாவுங்குதிரைகள் கனைத்தன; இவ்வகைய ஓசைகளனைத்து மொன்ருய்ச்சேர்ந்து பூமியந்தரங்களை விழுங்கின.—எ-று. (கக)

நீடுற் றிடுதேர் களினீ டுவச
மாடுற் றனதா ரிலளித் தொகுதி
பாடுற் றனவெங் கொடிபா றுமிசை
கூடுற் றனகூ ளிகுனித் தனவே.

(இ-ள்) உயரமான தேர்களில் நீளமான கொடிகள் ஆடாநின்றன; மாலைகளில் வண்டுகூட்டங்கள் பாடாநின்றன; வெவ்விய காகங்களும் பருந்துகளும் மேலிடங்களிற் கூடின; பிசாசுகள் குதித்தன.—எ-று. (உ0)

தொகையானைகடம் மொடுசூழ் கரியின்
றகையா யினதா னவர்தம் முருவஞ்
சிகையா ரழலா யினசென் னியெழும்
புகையா னதுவா னெழுபூ ழியதே.

(இ-ள்.) கூட்டமாக நிற்கும் யானைப்படைகளுடன் அசுரர்களின் பெரிய வுருவங்களும் கலந்து சூழப்பட்ட கரிகளாக வாயின; அசுரர்களின் செந்நிறமான சிரோரோமங்கள் அரிய தீயாகவாயின; மேலெழும்புழுதிகள் புகையாக வாயின.—எ-று. (உக)

இப்பான் மையதா கியெழுந் துபடை
யப்பால் விரவுற் றுழியன் னதுகண்
டொப்பா ருமில்சூ ரனுகந் தருள்கூர்
மெய்ப்பா லகர்சென் றனர்வெய் தெனவே.

(இ-ள்.) இத்தன்மையனவாகிய சைநியங்கள் எழுந்து கலந்து சென்றவுடன் அதனை ஒப்பற்ற சூரபன்மன் மகிழ்ந்து கருணைசெய்கின்ற புத்திரர்களான மூவாயிரவர்கள் கண்டு விரைவாகச் சென்ருர்கள்.—எ-று. (உஉ)

மூவா யிரர்தா னைகண்முந் துசெல
வேவா மெனவெம் மைகொடே குதலுந்
தேவா னவர்கண் டனர்சிந் தைவெரீஇ
யாவா வெனவஞ் சியழுங் கினரோ.

(இ-ள்.) சைனியங்கள் முன்னேசெல்ல சூரன் பிள்ளைகளான மூவாயிரம்பேர்களும் அம்பைப்போலப் பின்னே வேகமாகச்செல்லுதலும், அதனைக்கண்டு தேவர்களனைவர்களும் மனநடுக்குற்று ஆவாவென்றுரைத்து அஞ்சி வருந்தினுர்கள்.—எ-று. (உங)

அக்கா லையின்மூ வகையா யிரரு
மெய்க்கார் புவிசென் றுவிரைந் தனபோற்
றொக்கா டல்புரிந் திடுதொன் னிலமேற்
புக்கா ரதுகண் டனர்பூ தர்களே.

(இ-ள்.) அப்பொழுது மூவாயிரம் வீரர்களும் கரிய மேகங்கள் உலகத்தில் நெருங்கிவந்தாற்போல, ஒன்றுசேர்ந்து போர்புரியும் பழய படுகளத்திற்கு வந்தார்கள்; அவர்கள் வருதலைக் குமரக்கடவுளின் சைனியங்களான பூதவீரர்கள் கண்டார்கள்.—எ-று.

எதிர்கின் றனர்பூ தர்களேற் றனரான்
முதிர்கின் றசினங் கெழுமொய் யவுண
ரதிர்கின் றனபே ரிகளண் டமெலாம்
பிதிர்கின் றனநே மிபிளந் ததுவே.

(இ-ள்.) பூதர்களெதிர்த்தார்கள்; உடனே முதிராநின்ற சினத்தொடு விளங்குகின்ற வன்மைபொருந்திய அசுரர்களும் எதிர்த்தார்கள்; அப்பொழுது பேரிகைகள் முழங்கின; அதனால் அண்டங்களெல்லாம் பிதிர்கின்றன; சக்கரவாளகிரியும் பிளந்தது.

வாள்கொண் டெறிகின் றனர்வல் லெழுவுத்
தோள்கொண் டிடுவெங் கதைதூண் டினராற்
றுள்கொண் டசிலை கணைதான் சொரிவார்
நீள்கொண் டலையன் னநிசா சரரே.

(இ-ள்.) நீண்ட மேகத்தை யொத்த நிசாசரர்கள் வாள்கொண்டு வெட்டுவார்கள். வலிய வெழுக்களையொத்த தோளிற் சுமந்துகொண்டிருக்கின்ற வெவ்விய தண்டாயுதங்களை விட்டார்கள். வன்மைபொருந்திய விற்களில் பூட்டப்பட்டுள்ள அம்புகளை விடுவார்கள்.—எ-று. (உசு)

சூலப் படைவிட் டனர்தொல் பரிதிக்
கோலப் படைவிட் டனர்குந் தமுட
னாலப் படைவிட் டனரா டுகுறட்
சாலப் படைநின் றுதளர்ந் திடவே.

(இ-ள்.) போர்புரிகின்ற மிகுதியான பூதப்படைகள் அதிகமாக நின்று தளர்ச்சியடையுமாறு அசுரர்கள் சூலப்படைகளை விட்டார்கள். அழகிய சக்கரப்படைகளை விட்டார்கள்! குந்தப்படைகளுடன் மழுப்படைகளையும் விட்டாரகள்.—எ-று. (உஎ)

அடுகுற் றிடுசூ லமடற் கதைக
டொடுகுற் றனர்நே மிகடுண் டிடுவார்
விடுகுற் றனர்வெற் பினைவெவ் வசுரர்
படுகுற் றனரார்த் தனர்பா ரிடரே.

(இ-ள்.) ஆரவாரஞ்செய்தவர்களாகிய பூதவீரர் தன்னைகொல்லுகின்ற சூலப்படைகளையும் வன்மைபொருந்திய தண்டாயுதங்களையும் விட்டார்கள், சக்கரப்படைகளை விட்டார்கள், மலைகளை யெடுத்தெறிந்தார்கள், இவைகளால் அசுர வீரர்களிறந்தார்கள்.—எ-று. (உஅ)

வீழ்கின் றனபட் டிடும்வீ ரருடற்
றாழ்கின் றனசெம் புனல்சாய்ந் தனவா
லாழ்கின் றனவே லையிலங் கதன்வாய்
மூழ்கின் றனபேய் கொடிமொய்த் தனவே.

(இ-ள்.) இறந்த வீரர்களி னுடலங்கள் கீழேவிழுகின்றன; அவைகளினின்றும் இரத்தங்கள் கீழேவடிகின்றன; அவை கடனீரில் விழுகின்றன, அவைகளில் பேய்களும் காகங்களும்மொய்த்தன.—எ-று. (௪௯)

மறக்குஞ் சரமா யினவாம் பரிதேர்
சிறக்கின் றனபட் டனதீ யவுணர்
துறக்கின் றனரா விதொலைந் திடுவா
ரிறக்கின் றகணங் களுமெண் ணிலவே.

(இ-ள்) வீரம்பொருந்திய யானைகளாகவுள்ளவைகளும், தாவுகின்ற குதிரைகளாகவுள்ளவைகளும், இரதங்களும், சிறப்புப்பொருந்தினவாக வுள்ளன வழிந்தன, உயிர் தொலைந்தவைகளாக அசுரர்கூட்டங்களு மநேகமிறக்கின்றன, அளவற்றனவாகிய பூதக்கூட்டங்களு மனேக மிறக்கின்றன.—எ-று. (௫0)

வேறு.

காணுவது மூவாயிரர் கனல்வெஞ்சினந் திருகிக்
கோணுகம தெனவேவபடுங் கொடும்பூதரைக் குறுகி
நீணுகம தெனவிண்டொட நிமிர்வெஞ்சிலை குனியா
வேணுர்குணத் தொலிகொண்டன ரிதுகொல்லுரு மெனவே.

(இ-ள்.) அதனைக்கண்டு மூவாயிரர்களாக வுள்ளவர்கள் தீமயமான கடுங்கோபங்கொண்டு கொடிய பாம்பைப்போல சீறிப் பகைவர்களைக் கொல்லுகின்ற கொடிய பூதர்களை யடைந்து நீண்ட மலையைப்போல வானமளாவி நிமிர்ந்த வெவ்விய விற்களைவளைத்து இவைதானேயிடியோசைகளென்று கூறுமாறு வன்மைபொருந்திய நாணோசையைக் காட்டினார்கள் —எ-று. (௫௧)

வாங்குற்றிடு சிலைதன்னிடை வல்லேசர மாரி
தூங்கிற்றிடு புயலாமெனச் சொரிந்தார்சொரிந் திடலு
மேங்குற்றன பூதப்படை யிரிகின்றன வதுகண்
டாங்குற்றிடு கணவீரர்க ளவுணர்க்கெதிர் புகுந்தார்.

(இ-ள்.) வளைக்கப்பட்ட வில்லில் விரைவாக அம்புகளை வைத்து மழைபெய்கின்ற மேகத்தைப்போல சொரிந்தார்கள்; சொரிதலும் பூதசைன்னியங்கள் ஏக்கமுற்றனவாக விலகியோடின, அதனைக்கண்டு அங்குநின்ற கணவீரர்கள் அசுரர்களினெதிரே சென்றார்கள்.—எ-று. (௫௨)

தண்டத்தவர் தடந்தேரினைத் தகர்ப்பார் சிலர் தருவின்
றுண்டத்தவர் பரிமான்றொகை தொலைப்பார்சிலர் பாகன்
கண்டத்தலை யுருளும்படி யுதைப்பார்சிலர் கரத்தா
லண்டத்தினி லவர்தேரொடுத் தெறிவார்சில ரம்மா.

(இ-ள்.) பூதர் தண்டங்களினால் அவர்களுடைய பெரிய தேரினை உடைப்பார்கள்; சிலர் மரக்கிளைகளா லவர்களுடைய குதிரைக்கூட்டங்களைத் தொலைப்பார்கள்; சில பூதவீரர்கள் சாரதிகளின் கண்டத்தோடு பொருந்தின தலைகளை யுருளுமாறு உதைப்பார்கள்; சிலர் கைகளால் அண்டத்திற்செல்லுமாறு அவர்கள் தேரையெடுத்து எறிவார்கள்.—எ-று. (௫௩)

எழுக்கொண்டவர் தடமார்பினி லெறிவார் சில ரெரிவாய்
மழுக்கொண்டவர் சிலையிற்றிட வெறிவார்சிலர் வரையின்
குழுக்கொண்டவ ரனிகந்தனைக் கொல்வார்சிலர் வார்விற்
பழுக்கொண்டிடு கவடாமெனப் பறிப்பார்சிலர் முறிப்பார்.

(இ-ள்.) சிலபூதர் எழுவென்னும் ஆயுதத்தைக் கொண்டு அவர்களுடைய பெரிய மார்பம் பிளக்கும்வண்ணம் எறிவார்கள்; சில பூதர்கள் கண்டகோடரிகளைக்கொண்டு அவர்கள் வில்லொடியுமாறு வெட்டுவார்கள்; சில பூதர்கள் மலைக்கூட்டங்களைகொண்டு அவர்கள் சைனியங்களைக் கொல்லுவார்கள்; சில பூதவீரர்கள் நீண்டவிற்களைப் பூமரக்கிளைப்போல் முறிப்பார்கள்.—எ-று. (ருச)

தாவாதுயர் கணவீரர்கள் சமரிவ்வகை புரிய
மூவாயிர ரெனுமைந்தர்கண் முனியாச்சிலை குனியா
வோவாதுக முடிவெல்லையி னுருமுச்செறி வனபோற்
றீவாயுமிழ் கனல்வாளிகள் சொரிகின்றனர் தெரிந்தே

(இ-ள்.) கெடாமலுயர்ந்த சிவகணவீரர்கள் இவ்வண்ணம் போர்புரியவும், உடனே மூவாயிரம் பிள்ளைகளென்பவர்கள் கோபங்கொண்டு வில்லை வளைத்து கெடாமல் உலகமுடியுநாளில் இடிக்கூட்டங்கள் நெருங்கினாற்போல, தீப்பொறிகளைக் கக்குகின்றவாயினையுடைய அக்கினிமயமானவம்புகளைப் பரீக்ஷித்தெடுத்துவிட்டார்கள். ()

நேர்புற்றமர் புரிகின்றவர் நெடுந்தீவடிக் கணைகண்
மார்புற்றிடத் தடந்தோளெனும் வரையுற்றிட முகத்தின்
சார்புற்றிடக் கரமுற்றிடத் தாளுற்றிடச் சென்னீர்
சோர்வுற்றிடத் தளர்ந்தே மனந் துயருற்றிட நின்றார்.

(இ-ள்.) எதிர்த்து நின்று போர்புரிபவர்கள்விட்ட தீரமானதும் தீமயமானதும் கூரினையுடையதுவுமான வடிக்கணைகள் பூதவீரர்களின் மார்பங்களிற்பட விசாலமான தோள்களென்னு மலைகளிற்பட முகத்தினிடம்பொருந்த கரங்களிற்பட, கால்களிற்பட இரத்தமொழுக மனந்தளர்ந்து துயருற நின்றார்கள்.—எ-று (உசு)

கலக்கித்தட மலர்சிந்திடு களிறுமென வடல்செய்
விலக்கற்கரு மூவாயிரர் வில்லாண்மையும் வல்லா
ரலக்கட்படு கணவீரர்க ளழிகின்றது நோக்கி
யிலக்கத்தரி லோராயிர ரெரியாமெனச் செயிர்த்தார்.

(இ-ள்.) தடாகத்தைக்கலக்கி மலர்களைச்சிதைத்த யானையைப்போல எதிரிகளால் கொல்லுதற்கருமையான மூவாயிரம் வில்வீரர்களும் விடுமெம்புகளால் துன்புறுகின்ற பூதர்கள் நிலைத்து நில்லாமல் தோற்றோடுவதைப்பார்த்து இலக்கம் வீரரிலோராயிரம் வீரர்கள் தீயைப்போல கோபித்தார்கள்.—எ-று. (உஎ)

குன்றேயென மிசைபோகிய கொற்றப்புயத் தவன்முன்
சென்றேதொழு திப்போரினைச் சிறியேங்களுக் கருண்மோ
வென்றேயுரைத் தனர்வேண்டலு மினையோனதற் கிசையா
நன்றேயமர் செயநீவிர்க ணடமின்னென வகன்றார்.

(இ-ள்.) மலைபோல வுயர்ந்த தோளினனான வீரவாகுதேவனெதிரேசென்று வணங்கி இந்தச்சண்டையைச் சிறியவர்களாகிய எங்களுக்கு அருளவேண்டும் என்று கூறி வேண்டிக்கொள்ளுதலும் வீரவாகுதேவனதற்குச் சம்மதனாய் நல்லது அவர்களுடன் போர்புரிய நீங்களே போங்களென்று கூறப்போயினார்கள்.—எ-று. (உஅ)

விசயன்சய னிடபன்கர வீரன்னதி கோர
னசலன்னதி குணன்வாமன னந்தன்னக ளங்கன்
வசையில்புக ழனகன்சத வலிமாருதன் வருணன்
சுசிகண்டகன் முதலாயிரர் சமரின்றலை புகுந்தார்.

(இ-ள்.) விசயன், சயன், இடபன், கரவீரன், அதிகோரன், அசலன், அதிகுணன், வாமனன், அனந்தன், அகளங்கன், வசையற்ற புகழினையுடைய அனகன், சதவலி, மாருதன், வருணன், சசிகண்டகன் முதலிய ஆயிரம்பேர்கள் போர்க்களத்திற்புகுந்தார்கள்.—எ-று. (ருகூ)

முந்துற்றிடு மவர்யாவரு மூவாயிர ரொதிர்போய்க்
கந்தக்கட வுளையன்பொடு கருத்திற்றொழு தேத்தி
மைந்துற்றிடு தங்கார்முகம் வளையாவடி வாளி
யந்தத்தினின் முகிலாமென வவர்மேற்சொரிந் தார்த்தார்.

(இ-ள்.) முந்துற்றிடுமவர் அனைவரும் மூவாயிரர்களின் எதிரிற் சென்று கந்தக்கடவுளை விருப்பத்துடன் மனதாரத் துதித்துவணங்கி வன்மைபொருந்திய தமது விற்களைவளைத்து வடிக்கப்பட்ட அம்புகளை மாரிக்கால மேகங்கள் பெய்யுமழையைப்போல அவர்கள் மீதுசொரிந்தார்கள்.—எ-று. (சுo)

ஆர்க்கின்றதொர் பொழுதத்தினி லவர்வில்வலி தன்னை
மூர்க்கன்றரு மறமைந்தர்கண் மூவாயிரர் காணுக்
கூர்க்கின்றதொர் நெடுவாளிகள் குணிப்பில்லன பூட்டிச்
சூர்க்கொண்டல்க டம்மோடமர் புரிந்தாலெனச் சொரிந்தார்.

(இ-ள்.) ஆரவாரஞ்செய்யுஞ் சமயத்தில் அவர்களுடைய விற்சாமர்த்தியத்தை மூர்க்கனாகவுள்ள சூரபன்மன் பெற்ற வீரம்பொருந்திய பிள்ளைகளான மூவாயிரர்கள் கண்டு கூர்மைபொருந்திய நெடியவம்புகளை அளவற்றனவாக விற்களிற்பூட்டிச் சூன்மேகங்களுடன் போர்புரிந்தாற்போல போர்புரிந்தார்கள்.—எ-று. (சுக)

மூவாயிரர் விடும்வாளிகள் முடுகிக்கடி தேகித்
தாவாவிற லோராயிரர் தம்வாளியை யடுமான்
மேவார்புகழ் விறன்மைந்தர்கள் வெவ்வாளிக ளவுண
ரேவானவை துணியும்படி யெதிர்சிந்திடும் விரைவில்.

(இ-ள்.) மூவாயிரர்கள் விடுகின்ற அம்புகள் நெருங்கி விரைவாகச்சென்று கெடாத வெற்றியினையுடைய ஓராயிரவீரர்கள் விடுமம்புகளை அழிக்கின்றன; பகைவர்கள் புகழுகின்ற சாமர்த்தியத்தினையுடைய ஆயிரவர்கள்விடுமம்புகள் அசுரர்கள்விடும் அம்புகளழியும்வண்ணம் எதிரேசென்று விரைவாக வழிக்கும்.—எ-று. (சுஉ)

இவ்வாறமர் புரிகின்றுழி யிலக்கத்தவர் தேரைத்
தெவ்வாகிய மூவாயிரர் சிதைவித்தனர் சரத்தா
லவ்வாறுதெ ரிந்தேயம ரவுணன்றரு மைந்தர்
கைவார்சிலை யொடுதேரினை யழித்தார்களை தூண்டி.

(இ-ள்.) இவ்வண்ணமாகப் போர்புரிகின்ற சமயத்தில், இலக்கம் வீரர்களில் ஆயிரம் வீரர்களாகவுள்ளவர்களினிரதங்களைப் பகைவர்ளாகிய மூவாயிரர்கள் அம்பினுற்சிதைத்தார்கள். உடனே, இலக்கரில் ஆயிரவர்கள் சூரன்பெற்ற பிள்ளைகளான மூவாயிரவர்களின் கையிற்பொருந்திய நீண்டவிற்களுடன் அவர்களேறியிருந்த இரதங்களையும் அம்புகளைவிட்டழித்தார்கள்.—எ-று. (சுங)

இலக்கத்தவ ரொதிர்கின்றவ ரேமப்படு தேரைச்
சிலைக்கட்படு நெடுவெங்கணை சிந்திச்சிதை வித்தே
நிலக்கட்பட மூவாயிரர் தொகைதன்னையு நிறுவி
மலைக்கட்படு மரிபோற்புடை வருதேரிடைப் புகுந்தார்.

(இ-ள்.) இலக்கம் வீரர்கள் தம்மொடு எதிர்த்தவர்களின் பொன்மயமான இரதங்களை வில்லில்வைத்துவிடப்படுகின்ற நெடிய வெவ்விய அம்புகளைவிட்டு அழியச்செய்து, மூவாயிரமொன்னுங்கூட்டத்தினைப் பூமியில்நிற்குமாறுநிறுத்தி, மலையிற் பொருந்திய சிங்கங்களைப்போல அருகில்வரும் சேமரதங்களிற் புகுந்தார்கள்.—எ-று.

சிலைபோய்க்கட விச்சென்றிடு தேர்போயடல் செய்யுங்
கொலைபோயனி கம்போயுளங் கொள்ளும்பெரு மிதத்தி
னிலைபோய்வெகு ளுற்றேபுவி நின்றோர்தமைப் பிணித்த
வலைபோகிய மானேயென வளைத்தார்வய மைந்தர்.

(இ-ள்.) விற்களும் போய் ஓட்டிக்கொண்டுசெல்லும் இரதங்களும் போய், அடுதலைச்செய்கின்ற கொலையும்போய், சைனியங்களும்போய், மனதிற்றங்கியிருந்த பெருமிதத்தின் நிலையும்போய் கோபங்கொண்டு பூமியில் நின்றவர்களைக் கட்டிய வலையினின்றுந் தவறிச்சென்ற மானைப்போல வளைத்துக்கொண்டார்கள் வெற்றி வீரர்கள்.—எ-று. (சகு)

வேறு.

பொலம்படு தேரொடு பொன்ற வன்மைபோய்த்
தலம்படு மவுணர்க டளர்தன் மேயினா
ரிலம்படை வந்துழி யீதல் சான்றவர்
குலம்படு துயரொடு குறையுந் தன்மைபோல்.

(இ-ள்.) தரித்திரம் வந்தவுடனே கொடையிற்சிறந்தவர்கள் கூட்டமாகவுண்டாகின்ற துன்பத்துடனே தாழுந்தன்மையைப்போல, அழகுபொருந்திய இரதத்துடன் வன்மையுங்கெட்டழியப் போர்க்களத்திற்பொருந்திய அசுரர்கள்தளர்ந்தார்கள்.

பறித்தனர் வரைகளைப் பழும ரம்பல
முறித்தனர் வியப்புறு மொய்ம்பர் தம்மிசைச்
செறித்தன ரண்டமுந் திசையு ஞாலமு
மறைத்தன ரமரரு மருட்கை யெய்தினார்.

(இ-ள்.) மலைகளைப்பிடுங்கினார்கள்; பலஆலமரங்களை முறித்தார்கள்; சீற்றத்தால் வியர்வையிற்பிறந்த இலக்கவீரர்கண்மீது அவைகளைவிட்டார்கள்; அண்டங்களையும் திசைகளையும் பூமிகளையும் மறைத்தார்கள்; இவைகளைக்கண்டுதேவர்களுமயக்கமடைந்தார்கள்.—எ-று. (சஎ)

தெவ்வரா யாகிய சிறார்க டொன்மரங்
கைவரை வீசலுங் கணைக ணேண்டியே
யிவ்வரை யெனுங்கணத் திறுத்து வீட்டினா
ரைவரை வென்றிகொ ளனிக வீரரே.

(இ-ள்.) பகைவர்களாகிய சிறுவர்கள் பழுமரங்களையும் கைம்மலைகளையும் எறிதலும் அம்புகளைவிட்டு இவ்வரை யென்று கூறுமாறு நின்ற கணப்பொழுதிற்குள் ஐவர்களையும் வெல்லத்தக்க சேனாதிபதிகள் அழித்தொழிந்தார்கள்.—எ-று.

அனிகவீரர் - இலக்கரில்ஆயிரவர். கைம்மலை-யானை; அல்லது கையிலெடுத்த மலை. (இவ்வரை என்றுரைப்பது, இவ் என்று கூறுமளவுமுள்ள காலவினாவு) இவ்வரை - இந்த அரை எனினுமாம். (சஅ)

அட்டடல் கொண்டிடு மவுண ரிவ்வகை
விட்டென கிரியெலாங் கணையின் வீட்டியே
நெட்டழற் பகழிக ணிறத்தின் மூழ்குறத்
தொட்டன ருறுப்பெலாந் துளைத்தன் மேயினர்.

(இ-ள்.) பகைவர்களைக்கொன்று வெற்றியடைகின்ற அசுரர்கள் இவ்வண்ணம் விட்டனவாகிய மலைகளனைத்தையும் அம்புகளால் நாசஞ்செய்து நெடிய தீமயமானவம்புகளை யவர்கள் மார்புகளிற் பமொறுவிட்டு உறுப்பனைத்தையுந் தொளைப்பாராயினர்கள்.—எ-று. (சுக)

துளைத்திடு கின்றுழிச் சோரி சாய்ந்திட
விளைத்தன ரொருசில ரிரிந்திட் டார்சிலர்
களைத்தன ரொருசிலர் கனன்று நின்றுபோர்
விளைத்தன ரொருசிலர் பிறங்கல் வீசுவார்.

(இ-ள்.) துளைக்கும்பொழுது இரத்தமொழுக ஒருசிலர் இளைத்தவர்களாக விலகியோடினர்கள். வேறுசிலர்களையுற்றார்கள் வேறுசிலர் கோபங்கொண்டெதிர்த்து நின்று போர்புரிந்தார்கள்; வேறு சிலர் மலைகளை எடுத்தெறிந்தார்கள்.—எ-று. (ரு0)

தேவரை வென்றுளார் சிலவர் மால்வரைக்
காவலர் தேரினைக் கரங்க ளாலெடா
மேவரும் புணரியுள் வீசி யார்த்தன
ரோவென வமரர்கள் புலம்பி யோடவே.

(இ-ள்.) அம்மூவாயிரவரில் தேவர்களை வென்றவர்களாகவுள்ள சிலர் ஸ்ரீகைலாயமலையின் காவலாளரான இலக்கரில் மூவாயிரவர்களின் இரதங்களைக்கைகளாலெடுத்து தேவர்கள் ஓவென்றிரைந்து ஓடும்வண்ணம் சாமானியமாகப் புகுதற்கரிய கடலுள்வீசி யாரவாரித்தார்கள்.—எ-று. (ருக)

நீசர்க் ளொருசிலர் நேமி சென்றிட
வீசிய தேரினும் விரைவி னீங்குறுக்
காசினிப் பாலராய்க் கார்மு கம்வளை இ
யாசுக மழைசொரிந் தார்த்துப் பொங்கினர்.

(இ-ள்.) நீசர்களாகிய சிலர் கடலிற்புகுமாறு எறிந்த தேர்களினின்றும் பூமியிற் இலக்கரிலாயிரவொன்பார் குதித்து வில்லைவளைத்து அம்புமழையைச் சொரிந்து ஆரவாரஞ்செய்து சீறினர்கள்.—எ-று. (ருஉ)

மீண்டிடு பொருநர்கள் விசிக மாமழை
தூண்டிட வவுணர்க டொகையிற் பற்பலர்
காண்டலும் வடவையின் கணத்திற் சீறியே
யாண்டெதிர் புகுந்தன ரசனி யார்ப்பினர்.

(இ-ள்.) கடலிற்குப்புகுமல் விலகித் திரும்பப் போர்க்களத்திற்கு வந்த பொருநர்கள் அம்பு மாமழையைத் தூண்ட அசுரக்கூட்டத்திலனேகர் இதனைக் கண்டவுடனே வடவைக்கணத்தைத்போல சீற்றங்கொண்டு இடிபோலும் ஆரவாரத்தினையுடையவர்களாய் அவ்விடத்தில் எதிரே சென்றார்கள்.—எ-று. (ருரு)

மறத்தொடு மருத்தின மரங்கள் கொம்பரை
யிறுத்திடு தன்மைபோ லெந்தை பின்வரு
திறத்தவர் சிலைகளைச் செங்கை வன்மையாற்
பறித்தனர் முறித்தனர் படியில் வீசினர்.

(இ-ள்.) வீரத்துடன் வாயுக்கூட்டங்கள் மரங்களின் கிளைகளை ஒடிக்குந்தன்மையைப்போல, எந்தையான குமரக்கடவுளி னிளையவர்களான இலக்கர்களின் கைகளிலிருந்த விற்களை வலித்துப்பிடுங்கி ஒடித்துப் பூமியில் வீசினர்கள்;—எ-று. (ருச)

பற்றலர் கொடுமரம் பறித்துச் சிந்துழிச்
செற்றமொ டெம்பிரான் சேனை வீரர்கண்
மற்றவ ரும்பதை பதைப்ப மாண்கையா
லெற்றின ரனையரு மிடியிற் றாக்கினர்.

(இ-ள்.) பகைவர்கள் விற்படைகளைப் பறித்துச் சிதறினவுடனே கோபங் கொண்டு எம்பெருமானுடைய சேனைவீரர்கள் தங்கள் விற்களைப் பறித்தவர்களுந் துடிதுடிக்க அடித்தார்கள். உடனே அவர்களும் இடி இடித்தாற்போல இவர்களை இடித்தார்கள்.—எ-று. (ருரு)

பரவிய வுவரியும் பாலின் வேலையுந்
திரைகளை யெதிரெதிர் சிதறி யார்த்தெழீஇப்
பொருதிற மேயெனப் பொருவின் மற்றொழி
லிருதிற வயவரு மிகலி யாற்றினர்.

(இ-ள்.) பரப்பினையுடைய கருநிறமான உப்புக்கடலும் பாற்கடலும் அலைகளை யெதிரே யெதிரேசிதறிக்கொண்டு ஆரவாரித்தெழுந்து பொருமாறுபோல,ஒப்பற்ற மல்யுத்தத்தை இருதிறத்துவீரர்களும் இயற்றினார்கள்.—எ-று. (ருசு)

கொடுந்தொழி லாரொடு கொற்ற வீரர்க
ளடைந்தன ரிவ்வகை யாண்மைப் போரினைத்
தொடர்ந்துநின் றியற்றியே தொல்லை வன்மைபோ
யுடைந்தனர் விசயனங் கொருவ னன்றியே.

(இ-ள்.) கொடிய தொழிலினையுடைய அசுரவீரர்களுடன் வெற்றிபொருந்திய இலக்கவீரர்கள் நெருங்கி நின்று இவ்வண்ணம் ஆண்மையினாற் செய்யும் போராகிய மல்யுத்தத்தைத் தொடர்ந்து நின்று செய்து பழையவன்மையிழந்து விசயனொருவனன்றியுள்ள மற்றனைவரும் உடைந்தார்கள்.—எ-று. (ருஎ)

இசையுறு தமரெலா மிரிந்து போதலும்
விசயனே யெனப்படும் வீரன் சீறியே
வசையுறு மவுணர்கோன் மகாரைக் கூற்றுவன்
றிசையுறு நகரிடைச் செலுத்து வேனென்றான்.

(இ-ள்.) கீர்த்திபொருந்திய தம்மவரனைவரும் விலகிச்செல்லுதலும், விசயன் என்று கூறப்படுகிற வீரனைவன் சீற்றங்கொண்டு வசையுற்ற அசுராதிபனான சூரபன்மனுடைய பிள்ளைகளை எமதிசையிலுள்ள நகரத்திற்குச் செலுத்துவேன் என்று கூறினான்.—எ-று. (ருஅ)

வேணியின் மதியுடை விமல னல்கிய
வேணுறு வரிசிலை யிறி லாதது
தூணியி னிடையுறத் துன்னிற் றன்னதைப்
பாணியி லெடுத்தனன் சமரிற் பாணியான்.

(இ-ள்.) சந்திரனைச்சடையிலணிந்த நிமலனாகிய சிவபெருமானளித்த வன்மை பொருந்தியதும் வரியப்பட்டதும் அறியாததுமான வில்லானது அம்பறாத்தூணிக்குளிருந்தது; அதனை போரிற் பின்னிடையாதவிசயன் கையிலெடுத்தனன்.—எ-று. (ருகூ)

கரதலத் தெடுத்திடு கார்மு கந்தனை
விரைவொடு கோட்டியே விசய னென்பவ
னொருதனி மாருதத் தோடிச் சூழ்வுறாச்
சரமழை பொழிந்தன னவுணர் தங்கண்மேல்

(இ-ள்.) கையினிடத்திலெடுத்த வில்லினை விசயனென்று கூறப்படுபவன் சீக்கிரமாக வளைத்து ஒப்பற்றகாற்றைப்போல வோடி அவர்களை வளைத்துக்கொண்டு அம்மூவாயிரரான அசுரர்கள்மீது அம்புமழையை வருஷித்தான்.—எ-று. (௬0)

கரங்களை யறுத்தனன் கழல்க ளீர்ந்தன
னுரங்களை யறுத்தன னுயர்திண் டோளொடு
சிரங்களை யறுத்தனன் சிலரைக் கானிடை
மரங்களை யறுத்திடும் வண்ண மென்னவே.

(இ-ள்.) சிலரை காட்டிலுள்ளமரங்களையறுக்கின்ற தன்மையைப்போல, கைகளையறுத்தான்; கால்களை அறுத்தனன்; மார்புகளைச்சிதைத்தான்; உயர்ந்த திண்ணிய தோள்களுடன் தலைகளையறுத்தனன்.—எ-று. (௬௧)

அற்றனவுறுப்பெலா மணுகித் தம்மில்வந்
துற்றன கூடிய வுணர்வு மாவியு
மற்றவ ரெழுந்தனர் வாகை வீரன்மேற்
பொற்றைக ளாயின பொழிந்து போர்செய்தார்.

(இ-ள்.) அறுபட்டனவாகிய உறுப்புக்களெல்லாம் ஒன்றோடொன்று பொருந்தின; உணர்ச்சியும் உயிரும் உற்றன; அதனாலவர்கள் எழுந்து வெற்றிவீரனாகிய விசயன்மீது மலைகளைப் பறித்தெறிந்து போர்புரிந்தார்கள்.—எ-று. (௬௨)

தலையொடு கரங்களுந் தாளுந் தோள்களு
மெலிவொடு துணிந்தவர் மீட்டுங் கூடினா
ரலர்தரு பங்கயத் தண்ண றன்னிடை
வலிதவர் பெற்றிடு வரத்தின் றன்மையால்.

(இ-ள்.) விரியப்பட்ட தாமரைமலரிலிருக்கின்ற பிரமதேவனிடம் பெற்ற வரத்தின் தன்மையாலிறந்த அவர்கள் தலைகளுடன் கைகளும் கால்களுந் தோள்களும் மெலிவுடனே துணிபட்டவர்கள் பின்னும் அவைகள் கூடப்பெற்றார்கள்.—எ-று.

கண்டமு மொய்ம்புநங் கழலும் வாளியாற்
றுண்டம தாயினர் தொக்கு மேயினார்
சண்டவெங் கால்பொரத் தணந்து சிந்திய
தெண்டிரை நெடும்புனன் மீட்டுஞ் சேர்தல்போல்.

(இ-ள்.) பிரசண்டவாயு மோத விலகிச்சிந்திய கடலிலுள்ள நெடிய நீர் திரும்பவுஞ்சேருமாறு போல, கண்டங்களும் தோள்களும் கால்களும் அம்புகளால் துண்டுபட்டவர்கள் அவைகள் பழையவண்ணமே பொருந்தப்பெற்றார்கள்.—எ-று. (௬௪)

பன்னருந் திறலினான் பகழி பாய்தொறு
மன்னவன் மைந்தர்கண் மாண்டு தோன்றுவார்
மின்னது வந்துழி விளிந்து வெவ்விரு
டொன்னிலை யெய்தியே தொடர்ந்து தோன்றல்போல்.

(இ-ள்.) வெவ்விய விருளானது மின்னல் தோன்றியவுடனழிந்து அதுபோனவுடன் அவ்வெவ்வியவிருள் பழைய தன்மையையடைந்து பின்னும் வருதலைப்போல கூறுதற்கரிய சாமர்த்தியத்தினையுடைய விசயன் விடும்அம்புகள் படுந்தோறும் அசுரமன்னவனுடைய பிள்ளைகளான மூவாயிரர்களும் இறந்து உயிர்பெற்றெழுகின்றார்கள்.

கையொடு சென்னியுங் கழலு மார்பமுங்
கொய்யுமுன் றொன்மைபோற் கூட மைந்தர்க

ளொய்யென வெழுந்தன ருலகிற் றேர்வுறிற்
செய்யுறு தவத்தினுஞ் சிறப்புண் டாங்கொலோ

(இ-ள்.) கைகளுடன் தலைகளும் கால்களும் மார்பங்களும் அறுக்குமுன் பழையவண்ணமே பொருந்த அசுரமைந்தர்கள் விரைவாக வெழுந்தார்கள். ஆராயுமிடத் திவ்வுலகத்தில் செய்யப்பட்ட தவத்தைவிடச் சிறப்பானது இருக்கின்றதோ?

கண்டனன் விசயனுங் காளை யாவிபோய்த்
துண்டம தாகியே துஞ்சினு ரெழீஇ
மண்டமர் புரிவது மனத்தின் விம்மிதங்
கொண்டனன் பொருதிறல் குறைந்து நின்றனன்.

(இ-ள்.) விசயனென்னும் வாலிபன் உயிர்துறந்து இறந்தவர்களெழுந்து நெருங்கிய போர்புரிவதைக் கண்டு மனத்திலாச்சரியங்கொண்டு போர் செய்கின்ற வன்மையுங்குறைந்து நின்றனன்.—எ-று. (சுஎ)

அகத்திடை விம்மித மடைந்து நின்றுளான்
றிகைத்தனன் வரங்கொலிச் செய்கை யென்றனன்
புகைத்தென வுயிர்த்தனன் பொங்கு கின்றன
னகைத்தன னிவர்செய னன்று நன்றெனு.

(இ-ள்.) மனதிலாச்சரியமடைந்து நிற்கின்ற விசயன் திகைப்புற்று இச்செய்கை வரங்கொலோ வென்முன். இவர்களதிச் செய்கை நன்றாகவிருக்கின்றது என்று நகைத்து புகையைப்போல சுவாசம் விட்டனன்.—எ-று. (சுஅ)

தொட்டிடும் பகழியாற் றுணிந்து போரிடைப்
பட்டவ ரொழுந்தனர் பகழி பின்னரும்
விட்டிடி லுவதென் மேவ லார்தமை
யட்டிட லின்றெனக் கரிது போலுமால்.

(இ-ள்.) விடப்பட்டவம்பினால் துண்டாகிப் போரிலே இறந்தவர்கள் எழுந்தார்கள். இனி மேலும் மேலும் அம்புகளை விடுவதனுலாவதென்னை? இப்பகைவர்களைக் கொல்லுதல் இன்று எனக்கு அரிதுபோலு மென்முன்.—எ-று. (சுகு)

அன்னவர் தமையட லரிய தாமெனி
னென்னலர் படையொடு மொன்றிச் சுற்றியே
பன்னெடு நாளமர் பயின்று நிற்பினு
மென்னுயிர் கொள்வது மெளிதன் றுலரோ.

(இ-ள்) அந்த மூவாயிரம்பேர்களையுங் கொல்லுதலருமையான காரியமாகவாகுமானல் அப்பகைஞர் தஞ்சேனைகளுட னொன்றுசேர்ந்து வளைந்துகொண்டு பலநெடியகாலம் அவர் போர்புரிந்து நின்முலும் என்னுயிரை வாங்குவது அவர்கட்கு இலேசானகாரியமன்று.—எ-று. (எ0)

வென்றில னிவர்தமை வென்றி லேனெனிற்
சென்றெதிர் மாற்றலர் செருவில் வன்மைபோய்ப்
பொன்றுதல் பெற்றிலன் பொருதுவ னோர்மகன்
கொன்றிடு மூலவையின் கொள்கை யாயினேன்.

(இ-ள்.) இதுகாறுமிவர்களை வெல்லாது நிற்கும் யான் இனி இவர்களை வெல்லாதுபோனல் பகைவரொதிரிற்சென்று அவர் போரில் வன்மையிழந்து இறக்கவேண்டும். அவ்வாறுஞ் செய்யாமல் இடைக்குலமகனெருவன் வெட்டிய மரக்கிளைபாதி

யீரமும் பாதிபச்சையுமாக நின்றவாறுபோல அதுவுமின்றி இதுவுமின்றி இடைப்படு மியலினேனாயினேன்.—எ-று. (எக)

பற்றலர் தங்களைப் படுப்பன் யானென
வெற்றிகொள் வானென் விளம்பி வந்தயான்
செற்றில னாகியே சிலையுங் கையுமாய்க்
கொற்றவ னோடுபோய்க் கூட லாகுமோ.

(இ-ள்.) யான்பகைவர்களைக் கொல்லுவேன் என்று வெற்றியடைபவனைப் போல கூறிவந்த யான் கூறியவண்ணம் பகைவர்களைக் கொல்லாது வில்லுங்கையுமாய் தலைவனுடன் சென்று சேருதல் கூடுமோ ?.—எ-று. (எஉ)

மாற்றலர் வரத்தினர் மாயப் பான்மைய
ராற்றவும் வலியரொன் றறைந்து மீள்வனேற்
றோற்றன னென்றெமர் துறப்ப ரன்றியும்
போற்றலர் விடுவர்கொல் புறந்தந் தேகவும்.

(இ-ள்.) பகைவர்களாகிய விவர்கள் வரம்பெற்றவர்கள் மாயைத்தன்மைபொருந்தி இருந்தவர்கள் மிகவும் வன்மையாளர்கள் என்றுரைத்துத் திரும்பி வருவேனானால் என்னை எம்மவர்கள் தோற்றவனென்று தள்ளிவிடுவார்கள் அல்லாமலும் இப்போரைவிட்டு விலகிச்செல்லுதற்குப் பகைவர்கள் விடுவார்களா ?.—எ-று. (எங)

பித்தரின் மயங்கில னுணர்வும் பெற்றுளே
னெய்த்திலன் வலியொடு மின்னு நின்றனன்
வைத்திலன் புகழினை வசையொன் றெய்துவேன்
செத்தில னிருந்தனன் செயலற் றேனென்றான்.

(இ-ள்.) பித்தம்பிடித்தவர்களைப்போல மயங்கிலேன். உணர்வுமுடையவனாக விருக்கின்றேன். இளைத்தேனுமல்லேன். இன்னம் வன்மையாளனாகவே யிருக்கின்றேன். கீர்த்தியையடைந்தேனில்லை. அபகீர்த்தியையே யடைந்தேன்யாதொரு செய்கையுமற்றவனாகச் சாகாதவனாகவிருக்கின்றேன்.—எ-று. (எச)

விண்டினை மாறுகொள் விசய னிவ்வகை
யண்டருந் துன்புகொண் டகத்தி னுன்னுழி
யுண்டொரு செய்கையா னுய்யு மாறெனக்
கண்டனன் றுயர்க்கடல் கடக்கும் பெற்றியான்.

(இ-ள்.) மலையொடு மாறுகொளத்தக்க விசய னிவ்வண்ணம் அடைதற்கரிய துன்பமுடையவனாக மனத்திலிதனை நினைத்தவுடனே இனியானுய்யும் வண்ணம் ஒரு செய்கையிருக்கின்றதென்று ஒன்றைக்கண்டான்; துன்பக்கடலைக் கடக்கத்தக்க தன்மையைப்பெற்றவன்.—எ-று. (எரு)

ஆறுமா முகப்பிரா னன்றி யிவ்விடை
வேறொரு துணையிலை மெய்ம்மை யீதெனத்
தேறின னவனடி சிந்தை செய்தனன்
மாறிழி யருவிநீர் வழியுங் கண்ணினான்.

(இ-ள்.) ஆறுதிருமுகங்களையுடைய எம்பெருமானையன்றி இவ்விடத்தில் வேறெயொருதுணைகிடையாது, இது உண்மையென்று துணிந்துஅக்கடவுளின் பாதங்களை அருவி ஆற்றைப்போல மாறாக வொழுகாநின்ற கண்ணீருடையவனாகத் தியானித்தான். எ-று. (எசு)

அண்ணலங் குமரனை யகத்துட் கொண்டுழி
யெண்ணிய வெண்ணியாங் கெவர்க்கு நல்குவோன்
விண்ணிடை யொல்லையின் விசய னென்பவன்
கண்ணிடைத் தோன்றியே கழறன் மேயினன்.

(இ-ள்.) பெருமைபொருந்திய குமரக்கடவுள் தன்னை மனத்தி னினைத்தவுடனே எண்ணினவைகளை எண்ணினபடியே எவர்க்குமளிக்கு மிறைவன் ஆதலால் ஆகாயத்தில் விசயன் கண்ணெதிரே தோன்றிக் கூறுவானாயினன்.—எ-று. (எஎ)

வேறு.

கேளிது விசய வொன்னார் கிளையினை முடிப்பா னுன்னித்
தாளொடு முடியுங் கையுந் தடிந்தனை தடிந்த தெல்லா
மீளவுந் தோன்றிற் றன்றே மேவலர் பெற்ற தோராய்
நீளமர் வயமின் றாகி நின்றனை தளரே னெஞ்சம்.

(இ-ள்.) விசயனே இதனைக்கேட்பாயாக: நீ பகைவர்கூட்டங்களையழிக்குமாறு கருதி அவர்களுடைய தோள்களுடன் முடிகளையும் கைகளையும் அறுத்தனை; அறுத்தவனைத்தும் பின்னரும் உண்டாயிற்றன்றோ? பகைவர்கள்பெற்றிருக்கும் வரத்தினையுணர்ந்தாயில்லை; அதனால் நீ இந்தப்பெரியபோரில் வெற்றி அடையாதவனாகி நின்றனை; மனந்தளராதே.—எ-று. (எஅ)

ஏற்றபல் படைக டம்மா லிவர்தமைப் பன்னா ளின்று
வீற்றுவீற் றடுவ ரேனும் விளிகில ரொருங்கு வல்லே
யாற்றல்சேர் படையொன் றுய்க்கி னனைவரு முடிவ ரீது
நாற்றலை யுடையோன் றென்னா ணல்கிய வரம தென்றான்.

(இ-ள்.) தகுந்த பலவகையினவாகிய வாயுதங்களால் இவர்களைப்பலநாள் நின்று வேறுவேறாகக் கொல்வாராயினும் இறவார்கள். விரைவாக வொரேயம்பினா லிவ்வெல்லாரையும் கொல்லுமாறு வன்மைபொருந்திய ஒரு ஆயுதத்தினைவிட்டால் அனைவரும் இறப்பார்கள். இது சதுர்முகப்பிரமன் முன்னாளில் அவர்களுக்களித்தவரம் என்றுரைத்தான்.—எ-று. (எகூ)

என்றிவை யுரைத்து வள்ள லிம்பரை யளித்தோன் சென்னி
பொன்றினை வாங்கி யேனோ ருளமயக் கற்று மெந்தை
வென்றிகொள் படையை நல்கி விசையனுக் களித்துமேவார்
பொன்றிட விதனை யின்னே விடுகெனப் புகன்று போனான்.

(இ-ள்.) என விவைகளைக்கூறி குமரக்கடவுள் இவ்வுலகைப்படைத்தவன்றலையைந்திலொன்றினைக் கிள்ளியெடுத்து மற்றையவர்களின் மனமயக்கத்தையொழித்த எந்தையான வைரவனுடைய வெற்றிபொருந்திய அம்பினை உண்டாக்கி விசயனுக்குக்கொடுத்து பகைவரிறக்கவிதனை இப்பொழுதே விரைவாக விடக்கடவை என்று திருவாய்மலர்ந்தருளி எம்பெருமான் எழுந்தருளினன்.—எ-று. (அ0)

தேர்ந்தனன் முருகன் வாய்மை சிறந்தனன் மகிழ்ச்சியுள்ளங்
கூர்ந்தனன் ஞமலி யூர்தி கொற்றவெம் படையை வாங்கி
யார்ந்தநல் லன்பிற் பூசை யாற்றின னதனை யெல்லா
மோர்ந்தன னவுணர் தம்மு ளொருவனுன் மத்த னென்போன்.

(இ-ள்.) விசயன், குமாரப்பெருமான் திருவாய்மலர்ந்த வனைத்தையும்நன்றாய்த்தேர்ந்தான். தேர்ந்து, சிறப்புற்று மனமகிழ்ச்சிபடைந்து வைரவனுடைய வெற்றி

பொருந்திய அம்பினையெடுத்து பொருந்திய நல்ல அன்புடனே பூசைசெய்தனன் இவன் பூசைசெய்தன்முதலிய வனைத்தையும் அம்மூவாயிரம் அசுரருள் உன்மத்தனென்பவன் உணர்ந்தான்.—எ-று. (௮௧)

ஈண்டிவ னமர்க ளெல்லா மிசைவரப் படைய தொன்றான்
மாண்டிட வடுவான் போலு மற்றதன் முன்னர் மாயம்
பூண்டிடு படையா லின்னோற் கிறுதியைப் புரிவ னென்னு
வாண்டுதன் னுளத்தி லுன்னி யவுணனப் படையை விட்டான்.

(இ-ள்.) இவ்விடத்திலிவன் நம்மவர்களெல்லாம் ஒன்றாய்ச்சேர ஒரு அம்பினால் மாளுமாறு கொல்வான்போலும். அதற்கு முன்னே மாயம் பொருந்திய வம்பினாலிவனுக்கு மரணத்தையுண்டாக்குவேனென்று அவ்விடத்தில் தன்மனதினினைத்து அவ்வுன்மத்தனென வசுரன் அம்மாயாத்திரத்தை விட்டான்.—எ-று (௮௨)

மாயவன் படையை முன்னம் விடுதலும் வள்ள னோக்கித்
தீயுமிழ் கின்ற காரி திண்படை செலுத்தச் சென்று
பாயிருள் பரந்து நேரும் படையினைத் தடிந்து முப்பா
லாயிரர் தமையுஞ் சுற்றி யடல்செய்து மீண்ட தன்றே.

(இ-ள்.) இவ்வுன்மத்தன் முன்னே வன்மையான மாயாத்திரத்தை விடுதலும் வள்ளலாகிய விசயன் அதனைப்பார்த்து தீப்பொறி கக்குகின்ற வைரவனுடைய திண்ணிய அம்பினை விட்டான். உடனே அதுசென்று பரவியவிருளை விரவச்செய்துகொண்டு வருகின்ற மாயாத்திரத்தை அழித்து மூவாயிரம் அசுரர்களையுஞ்சூழ்ந்து கொன்று திரும்பியது.—எ-று. (௮௩)

ஒருகணப் பொழுதின் முன்ன ரோராயிர முப்பா லோருஞ்
செருநிலத் தவிந்தா ரன்ன செய்கையை விசயன் காணு
முருகனைப் பரவி நின்றான் முழுமதி தன்னைக் கண்ட
பொருதிரைப் புணரி யென்ன வார்த்தனர் பூத ரெல்லாம்.

(இ-ள்.) ஒரு கணப்பொழுதிற்குள் மூவாயிரமசுரர்களும் போர்க்களத்திலிறந்தார்கள். அந்தச்செய்கையை விசயன் கண்டு குமரக்கடவுளைத் துதித்தான். உடனே பூதரனைவரும் பௌர்ணமியன்றைய சந்திரனைக்கண்ட அலைவீசுகின்ற கடலைப்போல வாரவாரித்தார்கள்.—எ-று. (௮௪)

ஏழுறு மவுணர் தானை யிறந்திடா தெஞ்சிற் றெல்லாங்
காமரு திசைகண் முற்றுங் கதுமென விரிந்து போன
மாமலர் பொழிந்தார் விண்ணோர் மற்றிவை யனைத்து நாடிக்
கோமகன் முன்பு சென்றார் குலாகழ லவுணத் தூதர்.

(இ-ள்.) துன்பமநுபவிக்கின்ற அசுரசைநியங்களுட் சாகாது மிகுந்திருந்தன வனைத்தும் அழகுபொருந்திய பலதிசைகளிலும் விரைவாக விலகிச்சென்றன. தேவர்கள் சிறந்த மலர்களை வருஷித்தார்கள். இவையனைத்தையும் பார்த்துச்சத்திக்கின்ற வீரகண்டையணிந்த காலினரான அசுரதூதர்கள் சூரபன்மன் இருக்குமிடத்திற்குச் சென்றார்கள்.—எ-று. (௮௫)

வெய்யவன் பகைவன் றாதை வியன்கழல் பணிந்து தூத
ரையநின் மைந்தர் முப்பா லாயிரர் தம்மை யெல்லா
மொய்யெனு விலக்கர் தம்மு ளொருவனே முடித்தா னீது
பொய்யல சரத மென்னப் பொருக்கெனப் புலம்பி வீழ்ந்தான்.

(இ-ள்.) தூதுவர்கள் பாநுகோபனுக்குத் தந்தையான சூரபன்மனுடைய பெரிய கால்களை வணங்கி ஐயனே! நினது பிள்ளைகளான மூவாயிரம் வீரர்களையும் விரைவாக விலக்கர்களு ளொருவனே கொன்றான். இது பொய்யன்று உண்மையேயென்றுரைத்தலும், அதனைக்கேட்டுச் சூரபன்மன் விரைவாக மூர்ச்சித்து விழுந்தான்.—எ-று.

வீழ்ந்தனன் பதைத்துச் சோர்ந்து வெய்துயிர்த் தசைந்து விம்மிப்
போழ்ந்திட நிலத்தைக் கையாற் புடைத்தனன் புரண்டு வெற்பிற்
றாழ்ந்திடு மருவி யென்ன விழிபுனற் றாரைபொங்கச்
சூழ்ந்தவ ரரற்ற மன்னன் றுன்பமேற் றுன்பம் வைத்தான்.

(இ-ள்.) விழுந்துபதைத்துச்சோர்ந்து பெருமூச்சுவிட்டு அசைந்து விம்முதலடைந்து பூமிபிளக்கக் கையினாலடித்தனன். புரண்டு மலையி லொழுகுகின்ற அருவியைப்போல கண்ணீர் ஒழுக அருகிற்சூழ்ந்து நிற்பவர்கள் அழ அரசன் துன்பத்தின் மீதுதுன்பம்வைத்தவனானான்.—எ-று. (௮௭)

அன்னதோ ரெல்லை மைந்த ரனைவரு முடிந்த தோரா
மன்னவ னிசைமை நீங்கி மாயிருந் தவிசிற் றப்பி
யின்னலின் மறிந்த தென்ன விரவியங் கடவுண் மேல்பாற்
பொன்னெடுங் கிரியி னெய்தி யொளியிலன் புணரி வீழ்ந்தான்.

(இ-ள்.) அப்பொழுது (சூரபன்மன்) மக்களனைவரும் இறந்ததனைக் கேள்வியுற்று அரசன் தானிருந்த வாசனத்தினின்றும் துன்பத்தாற் றவறி விழுந்தாற்போல அழகிய தெய்வமான சூரியன் பொன்மயமானதும் நெடியதுவுமான அத்தமன மலையை யடைந்து ஒளியற்றவனாகவாகிக் கடலில் விழுந்தான்.—எ-று. (௮௮)

மூவாயிரர்வதைப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௬௯௪.

---

## தருமகோபன்வதைப்படலம்.



முடிவுறு புதல்வரை முன்னி முன்னியே
யிடரினை யுழந்திடு மிறைவன் றன்முனம்
படியறு நல்லறப் பகைஞன் போந்திடா
வடிமுறை பணிந்துநின் றறைதன் மேயினான்.

(இ-ள்.) சிறந்த பிள்ளைகளை நினைத்து நினைத்துத்துன்பமனுபவிக்கின்ற அரசனெதிரில் ஒப்பற்ற நல்ல தருமகோபனென்னு மந்திரியானவன் வந்து சூரபன்மனுடைய கால்களை முறையேவணங்கி நின்று கூறுவானாயினான்.—எ-று. (௧)

மன்னவர் மன்னனீ மனத்தி லிவ்வகை
யின்னல்செய் தாற்றவு மிரங்கு வாயெனிற்
றுன்னலர் மகிழுவர் சுரர்கள் யாவரும்
நன்னகை செய்குவர் நமரும் வெள்குவார்.

(இ-ள்.) ஓ அரசர்க்கரசனே! நீ இவ்வண்ணம் துன்பங்கொண்டு மிகவும் அழுவாயானால் பகைவர்கள் சந்தோஷமடைவார்கள். தேவர்கள் அனைவரும் நகைப்பார்கள் நம்மவர்களும் வெட்கமடைவார்கள்.—எ-று (௨

முந்துறு மாற்றலர் முனைவெம் போரிடைத்
தந்தையர் விளியினுந் தமர்கண் மாயினு
மைந்தர்கள் விளியினு மான வீரர்கள்
சிந்தைகொள் வன்மையிற் சிறிதுந் தீர்வரோ.

(இ-ள்.) பகைவர் முற்பட்டுநின்று போர்புரிகின்ற போர்க்களத்தில் தந்தையர்கள் இறந்தாலும், சுற்றத்தினர்களாக வுள்ளவர்கள் இறந்தாலும், பிள்ளைகளாகவுள்ளவர்கள் இறந்தாலும் மானத்தினையுடைய வீரர்கள் மனதிற்பொருந்திய வன்மையிற் சற்றும் நீங்குவார்களோ?.—எ-று. (௩)

ஏற்றிகல் புரிந்திடு மெமரை வௌவிய
கூற்றுளன் றொன்மைபோற் படைத்துக் கூட்டுவா
னாற்றிசை முகனுள னுமு ளோநம
தாற்றலு மிருந்துள வயர்வும் வேண்டுமோ.

(இ-ள்.) எதிர்த்துநின்று போர்புரிகின்ற எம்மவர்களை அபகரித்த எமன் இருக்கின்றான். பழையபடியே படைத்துச்சேர்த்தற்கு நான்குபுறங்களிலும் முகங்களையுடைய பிரமனிருக்கின்றான். நாமிருக்கின்றோம். நமதுவன்மையும் இருக்கின்றது இவ்வாறிருக்கத் துன்பமும்வேண்டுமோ?—எ-று. (௪)

அந்தமில் வெறுக்கையு மழிவி லாயுளு
நந்தலில் வன்மையு நடாத்து மாணையு
மிந்திர ஞாலமு மிருக்க வெந்தைநீ
புந்தியி லமரர்போற் புலம்ப லாகுமோ.

(இ-ள்.) அளவற்றனவாகிய செல்வமும் அழிவற்றவாயுளும் கெடாதவன்மையும் நடாத்தப்பட்ட ஆக்கினையும் இந்திரஞாலத்தேரும் இருக்க எந்தையே நீ புத்தியற்றதேவர்களைப்போல புலம்புதல்கூடுமோ.—எ-று. (௫)

விண்ணவர் சிறையினை விடாது வைத்திடக்
கண்ணிய விரதமுங் கழிந்த மானமு
நண்ணலர் தங்களை நலியுந் தன்மையு
மெண்ணலை யிடையறு திடுக்கண் போற்றுமோ.

(இ-ள்.) தேவரையிட்டசிறையை நீக்காமல் வைக்குமாறு எண்ணியவிரதமும் மிகுந்தமானமும் பகைவர்களை வருத்தவேண்டிய தன்மையையும் நினையாது சதாகாலமும் இவ்வண்ணமே துன்பம் அநுபவிப்பதோ?—எ-று. (௬)

மாற்றல ராகிய வமரர் மானவர்
கோற்றொடி மடந்தையர் குழவிப் பாலக
ராற்றிடு துயருனக் காவ தன்றெனத்
தேற்றின னமைச்சருட் டிமை மிக்குளான்.

(இ-ள்.) பகைவர்களாகவுள்ள தேவர்கள் மனிதர்கள் அழகிய வளையலணிந்த கரங்களையுடைய பெண்கள் குழமக்கள்முதலிய இவர்கள் அநுபவிக்கின்றதுன்பம்நீ அநுபவிக்கதன்று என்று தேற்றினான் மந்திரிமார்களிற் கொடுமைமிகுந்தவனான தருமகோபன்.—எ-று. (௭)

ஆற்றிடு தருமகோபன் நீத்த வமைச்சன்வந் தினைய வாற்றாற்
றேற்றிடு கின்ற காலைச் சிறிதுதன் னவல நீத்துக்

கூற்றென யானே சென்று கூடலர் தொகையை விண்மே
லேற்றுவ னென்று சீறி யவுணர்கோ னெழுந்து சென்றான்.

(இ-ள்.) செய்யப்பட்ட தருமத்தைவிட்ட மந்திரியான தருமகோபன்வந்து இவ்வண்ணமாக தேற்றியபோழ்து, சற்றே தனதுதுன்பநீங்கி அசுராதிபனுனசூரபன்மன் யானே எமனைப்போலச்சென்று பகைவர்கூட்டத்தை வீரசுவர்க்கத்துக் கனுப்புவேனென்று சீற்றங்கொண்டு இருந்தவிடத்தினின்றும் எழுந்துசென்றான்.—எ-று.

சென்றிடு மன்னர் மன்னன் சேவடி முறையிற் றாழா
வின்றிவ ணிருத்தி யானு மனிகமு மின்னே யேகி
வன்றிறற் பகைஞர் தம்மை வளைத்துவல் விரைந்து சாடி
வென்றியுற் றிடுவ னென்ன வேண்டின னமைச்சர் மேலோன்.

(இ-ள்.) அவ்வண்ணஞ் செல்லாநின்ற அரசர்க்கரசனுடைய செவ்வியகால்களை முறையேவணங்கி நீ இன்று இங்கிருப்பாயாக. சேனைகளும் யானுமாக இப்பொழுதேசென்று மிகுந்த சாமர்த்தியத்தினையுடைய பகைவர்களை வெல்கின்றேனென்று கூறி முதன்மந்திரியான தருமகோபன் வேண்டிக்கொண்டான்.—எ-று. (கூ)

அறந்தவி ரமைச்சன் வேண்ட வவுணர்கண் முதல்வன் மீண்டு
சிறந்திடு மடங்க லாற்றுஞ் செம்பொன்செய் பீட மேவி
யுறைந்தன னனைய காலை யொல்லையில் விடைகொண் டேகிப்
புறந்தனில் வந்து வல்லே போர்ப்பெருங் கோலங் கொண்டான்.

(இ-ள்.) தருமகோபனுகிய மந்திரி வேண்டிக்கோடலும் அசுரர் முதல்வனுன சூரபன்மன்றிரும்பி சிறப்புப்பொருந்திய சிங்கங்களாற் சுமக்கப்படுகின்ற செவ்விய பொன்னாற்செய்த பீடத்திற் சென்றிருந்தனன். அப்பொழுது முதன்மந்திரி விடைபெற்றுக்கொண்டு வெளியேவந்து (தன்னிருப்பிடமடைந்து) பெரிய போர்க்கோலங் கொண்டான்.—எ-று. (க0)

போதகத் தரசு தம்முட் புண்டரீ கப்பேர் பெற்ற
மாதிரக் களிற்றை யன்னோன் வல்லையிற் கொணர்தி யென்னத்
தூதுவர்க் குரைத்த லோடுந் தூண்டென வனைய ரோடி
மேதகு நிகள நீக்கி விடுத்துமுன் னுய்த்து நின்றார்.

(இ-ள்.) அத்தருமகோபன் அரசுவாக்களுட் சிறந்த திக்குயானையான புண்டரீகத்தை விரைவாகக் கொண்டுவாருங்களென்று தூதுவர்கட்குரைத்தவுடனே அவர்கள் விரைவாகச்சென்று மிகுந்த காற்சங்கிலிக்கட்டைப்பேதித்து எதிரே கொண்டுவந்து நிறுத்தினர்கள்.—எ-று. (கக)

புந்தியிற் குறிப்பிற் செல்லும் புண்டரீ கப்பேர் பெற்ற
தந்தியந் தலைவன் மீது தருமத்தை வெகுளும் வெய்யோ
னந்தமில் படைகளேந்தி யமைச்சர்கள் பலருஞ்சூழ
விந்திர னிவன்கொ லென்ன வேறின னெழிலி போல்வான்.

(இ-ள்.) புத்தியின் வழியும் குறிப்பின் வழியும் செல்லுகின்ற புண்டரீகமென்று பெயருள்ள கஜசிரேஷ்டத்தின்மீது மேகவண்ணனுகிய தருமகோபனென்னுங் கொடியவன் அளவற்ற ஆயுதங்களைத் தாங்கி மற்றைய மந்திரியர் பலரும்உடன் சூழ்ந்துவர கண்டவர்கள் இவன் இந்திரனே என்று கருதுமாறு ஏறினன்.—எ-று. (கஉ)

அறைந்தன படகம் பேரி யார்த்தன விரலை தீபஞ்
செறிந்தன கரிதேர் வாசி தெழித்தன வவுணர் தானை

நிறைந்தன பதாகை யீட்ட நெருங்கிய கவிகை வான
மறைந்தன வெழுந்த பூழி மாதிர மிருண்ட வன்றே.

(இ-ள்.) உடனே படகங்களும் பேரிகைகளும் அறைந்தன; கொம்புகள் முழங்கின; தீபங்கள் நெருங்கின; யானைகளும் குதிரைகளும் தேர்களுந் தெழித்தன; அசுரசைநியங்கள் நிறைந்தன; கொடிக்கூட்டங்கள் நெருங்கின; குடைகளால் ஆகாய மறைபட்டன; புழுதியெழுந்தன; அதனால் திக்குக்கள் இருண்டன.—எ-று. (கங)

எண்ணிலா வெள்ள மாவு மிபங்களு மிவுளித் தேரும்
வெண்ணிலா வெயிற்றுச் செங்கண் வீரரும் புடையிற் சுற்றப்
புண்ணுலா முகத்துப் பேழ்வாய்ப் புண்டரீ கத்தை யூர்ந்தே
யண்ணன்மா நகர நீங்கிப் போயின னறத்தை நீத்தோன்.

(இ-ள்.) அளவற்ற வெள்ளக்கணக்கான குதிரைப்படைகளும் யானைப்படைகளும் குதிரைகளையுடைய இரதப்படைகளும் வெள்ளிய நிலாப்போன்ற தந்தத்தினையும் செந்நிறமான கண்களையும் உடைய பதாதி வீரர்களும் அருகிற் சூழப் புண்பொருந்திய முகதந்தங்களையுடைய புண்டரீகத்தை நடாத்தி அரசநகரத்தைக் கடந்து தருமகோபன் சென்றான்.—எ-று. (கச)

அண்டர்மற் றிதனை நோக்கி யம்மவோ வறத்தை நீத்த
கண்டகன் சிலையொன் றேந்தி மாதிரக் களிறு தன்னுட்
புண்டரீ கத்தை யூர்ந்து பொருமெனி லிவனை யாற்றல்
கொண்டிட லரிதா மென்ன விரங்கினர் குலைந்த மெய்யார்.

(இ-ள்.) இவனிவ்வாறு வருதலைத் தேவர்கள் பார்த்து ஐயகோ தருமகோபனென்னுங் கண்டகன் வில்லொன்றை யெடுத்து திக்குயானைகளுள் புண்டரீகத்திலேறிவந்து போர்புரிவானானால் இவனை வெல்லுதலரிதான காரியமென்று நடுங்கிய உடலினராகக் குலைந்தார்கள்.—எ-று, (கரு)

ஆவண மனந்த நீங்கி யனிகமுந் தானு மேகி
மூவிரு முகத்து வள்ளன் முழுதருள் பெற்ற சேனை
காவலன் வெகுண்டு நின்ற களத்திடை யணுகலோடு
மேவல ரெதிர்ந்தா ரென்னு வியன்கழற் பூத ரார்த்தார்.

(இ-ள்.) அனேகம் வீதிகளைக்கடந்து சைனியமுந் தானுமாகச்சென்று ஆறுமுகப்பெருமானுடைய பூரணகடாக்ஷம்பெற்ற சேனாதிபனான வீரவாகுதேவன் சீற்றங்கொண்டு நின்ற போர்க்களத்திற்குச் செல்லுதலும், பகைவர்கள் வந்தார்கள் என்று பெரியவீரக்கழலணிந்த காலினரான பூதர்கள் ஆரவாரஞ்செய்தார்கள்.—எ-று. (கசு)

பொற்றைகளேந்தி யார்க்கும் பூதரை யிலக்கர் தம்மைச்
சுற்றறு துணையி னோரைத் தொல்லைநா ளகரஞ் செற்ற
கொற்றவன் றன்னை யன்னோர் வலியினைக் கொடியோ னோக்கி
யிற்றது கொல்லோ நந்தம் வாழ்க்கையென் றிரங்கிச் சொல்வான்.

(இ-ள்.) மலைகளைச் சுமந்துகொண் டாரவாரிக்கின்ற பூதர்களையும் இலக்கர்களையும் சூழ்ந்துநிற்குந் துணைவர்களையும் முன்னாளில் ஊரினையழித்த தலைவனாகிய வீரவாகுதேவனையும் அவர்கள் வன்மைகளையுங் கொடியவனானவன் பார்த்து நமது செல்வமழிந்ததோ என்றிரங்கிக்கூறுவான். (கஎ)

வேறு.

பகைஞர்க ளாயினோர் பரவித் தன்மிசை
யிகல்செய வருவரோ விரங்கி யேங்குதன்

மிகுபழி யிங்கிது வினவின் மானவர்
நகைசெய்வர் பொருவதே நன்று போலுமால்.

(இ-ள்.) பகையாளர்களாகவுள்ளவர்கள் மிகுதியாகத் தன்மீது போர்புரிய வருவார்களே யானால் அவர்களைப்பார்த்து இரங்கி ஏங்குதல்மிக்கபழியேயாம்; நாமிவ் வண்ண மிவ்விடத்தில் வருந்துதலைக்கேட்டால் இந்த மானவர்கள் நகைப்பார்கள் ஆதலால் போர்புரிதலே நல்லதாம்.

மானவர் - வீரர். (கஅ)

எச்சமில் சேனையும் படையு மீண்டிய
கைச்சிலை யிருந்தது கரியு மொன்றுள
தச்சுறு கின்றதெ னுவ தாகுமாற்
பொச்சையர் கடனனி பொருமல் கொள்வதே.

(இ·ள்.) இங்குக் குறைவற்ற சைனியங்களும் ஆயுதங்களும் வந்திருக்கின் றன; கையினிலோ வில்லிருக்கின்றது யானையும் ஒன்றுளது. ஆதலால் ஏனச்சமடை தல்வேண்டும் ஆவது ஆகட்டும் மிகவும் புலம்பி வருந்துவதனைத்தும் பயனற்ற வியல்பி னர்கடமையேயாம்.—எ-று. (கசு)

வெல்லினுஞ் செறுநர்முன் வெரிந தீயினு
மல்லது விளியினு மாக யானினி
மல்லலம் படையொடு மாற்ற லார்மிசைச்
செல்லுவ தன்றியே யிரங்கல் சீரிதோ.

(இ-ன்.) வென்றாலும், பகைவரெதிரே முதுகுகாட்டினும், இவ்விரண்டுமென்றி இறந்தாலும்சம்மதமே. இனியான் மிக்க சைனியங்களுடன் பகைவர்மீது போருக்கு ச்செல்லுதலைவிட்டு துன்புற்றிருத்தல் சிறப்பான காரியமோ?—எ-று. (உ0)

வேறு.

கண்ணுறு படையை நோக்கிக் கருத்திடைக் கவலை யெய்தி
யெண்ணிநின் றயர்தல் வீர ரியற்கைய தாமோ பின்னர்
நண்ணிய வாறு நண்ண நானினித் தளரே னென்னுத்
துண்ணெனத் தேறிச் சென்றான் சூரனுக் கமைச்ச னானோன்.

(இ-ள்.) எதிரிற் கண்முன்னேநிற்கின்ற சைனியங்களைப்பார்த்துக் கருத்திற் கவலையடைந்து இனியென்செய்வதென்றெண்ணி நின்றயர்தல் வீரபுருடர்களின் இல க்கணமாகுமோ; இனி ஆனவாறுக; நான் தளர்ச்சியடையேன் என்று சூரபன்மனு க்கு முதன்மந்திரியான தருமகோபன் விரைவிற்றெளிவடைந்து சென்றான்.—எ-று.

இங்கிது பொழுது தன்னி லெங்கணு மிருட்கு ழாஞ்சூழ்
கங்குலும் பகலு மாலைக் காலமுங் கலந்த தென்ன
வங்கவன் றானை வெள்ளத் தவுணரும் பூதர் தாமும்
பொங்கொலிக் கடல்போ லார்த்துப் பொள்ளென வமரி லேற்றார்.

(இ-ள்.) இவ்விடத்தில் இவ்வாறாகிய சமயத்தில் எவ்விடங்களிலும் இருட்கூ ட்டங்கள்சூழ இரவும்பகலும் மாலைக்காலமும் கலந்தாற்போல அத்தருமகோபனுடைய வெள்ளக்கணக்கான சேனைகளாகிய அசுரர்களும் பூதர்களும்பொங்குகின்ற கடலைப் போல விரைவாக ஆரவாரித்துப் போரில் எதிர்த்தார்கள்.—எ-று. (உஉ)

தலைப்பட வெழுக்களிற் றண்டிற் றாக்கினு
ரிலக்குற நேமிகள் கணிச்சி யேவினார்

மலைக்குவை யெறிந்தனர் மரங்கள் வீசினர்
சிலைத்தனர் வயிர்துடி செறிவெம் பூதரோ.

(இ-ள்.) (நெருங்கியவெவ்வியபூதர்கள்) முதன்மையாகியஎழுக்களினாலும் தண்டங்களாலும் மோதியடித்தார்கள். குறிப்பிற்படிமொறு சக்கரங்களையும் கண்டகோடரிகளையும் ஏவினார்கள். கூட்டமானமலைகளை யெறிந்தார்கள்; மரங்களை வீசினார்கள்; கொம்புகளையும் உடுக்கைகளையும் முழக்கினார்கள்.—எ-று. (உரு)

வில்லுமிழ் சரத்தினில் வேலில் வாளினிற்
கல்லினி னுஞ்சிலிற் கழுமு ளாயதில்
வல்லையந் தனினுடை வாளில் வச்சிரச்
செல்லினி னுதிகெழு திகிரி நேமியில்.

(இ-ள்.) வில்லினாலுமிழப்படும் சரங்களாலும் வேல்களாலும் வாள்களாலும் கற்களினாலும் கலப்பைகளாலும் கழுமுட்களாலும் வல்லயங்களாலும் உடைவாட்களாலும் வச்சிரவேற்படைகளாலும் கூர்விளங்குகின்ற சக்கரங்களாலும்.—எ-று. (உசு)

தண்டினிற் றோமரந் தன்னிற் சங்கினிற்
பிண்டிபா லத்தினி லாற்றப் பீடுமேல்
கொண்டதோ ரெழுவினிற் பிறவிற் கொட்புறா
வண்டரு மவுணரு மணிந்து போர்செய்தார்.

(இ-ள்.) தண்டங்களாலும் தோமரங்களாலும் சங்கங்களாலும் பிண்டிபாலங்களாலும் மிகவும் பெருமைபொருந்திய எழுக்களாலும் மற்றையவைகளாலும் சூழ்ந்து நின்றுகொண்டு அசுரவருக்கத்தினரும் தேவர்களும் போர்புரிந்தார்கள்.—எ-று. (உரு)

அயர்ப்புறு தானவ ரமைச்சர் யாவரும்
வியர்ப்பினில் வந்திடு வெங்கண் வீரரும்
வயப்பெருஞ் சிலையினை வணக்கி வாளிதூய்ப்
புயற்படு பெயலெனப் பொழிந்து போர்செய்தார்.

(இ-ள்.) தேவசேனைகளைக்கண்டு அயர்ச்சியடைந்த அசுரமந்திரியர்களனைவரும் வியர்வையிலுதித்த அஞ்சாமையினையுடைய இலக்கர்களும் வெற்றியைத் தருகின்ற பெரிய விற்களை வளைத்து அம்புகளை மழைக்காலத்து மேகம் மழை பெய்யுமாறுபோல விட்டுப்போர்செய்தார்கள்.—எ-று. (உக)

பெய்வதெனத் தெங்கணும் பெரிதும் வீழ்தலா
லுய்வதெத் தன்மையென் றுலக மச்சுற
விவ்வகைத் திறத்தின ரிரண்டு சாரினுந்
தெய்வதப் படைகளு மரபிற் சிந்தினர்.

(இ-ள்.) மழைபெய்வதையொத்து எவ்விடத்திலும் அம்புகள் மிகுதியாக வீழுதலால் இனி எவ்வாறு உய்வது என்று உலகம் அஞ்ச வித்தன்மையானவிவர்கள் இருபுறங்களிலும் தேவதாத்திரங்களை முறையே விட்டார்கள்.—எ-று. (உஎ)

மாய்ந்தனர் பூதரும் வரம்பி றானவர்
சாய்ந்தனர் கரங்களுந் தலையுஞ் சிந்தினர்
வீந்தன கரிபரி விளிந்த தேர்நிரை
பாய்ந்தன செம்புனல் பரந்த கூளியே.

(இ-ள்.) அவ்வாறு நடந்த சண்டையில் பூதர்களும் இறந்தார்கள்; அளவற்ற அசுரர்களும்இறந்தார்கள்; கைகளும் தலைகளுஞ்சிதறுண்டார்கள்; யானைகளும்குதிரைகளுமிறந்தன; தேர்வரிசைகள் அழிந்தன; இரத்தநீர்களொழுகின; பிசாசுகள் பரவின.

நொந்தன ரிலக்கரு நோன்மை நீங்கினார்
முந்துறு மமைச்சர்போர் முயன்று நின்றன
ரந்திலவ் வேலையி லதனை நோக்கியே
வெந்திறல் வெய்யவன் வெகுண்டு சென்றனன்.

(இ-ள்.) இலக்கம் வீரர்களும் அமைச்சர்களுடனின்று போர்புரிய ஆற்றலின்றி நொந்து வன்மையிழந்தார்கள்: முற்பட்ட அமைச்சர்கள் போரில் முற்பட்டு நின்றார்கள். அப்பொழுது அதனைப்பார்த்து மிக்க வீரத்தினையுடைய வீரவாகுதேவன் சீற்றங்கொண்டெதிரேசென்றனன்.—எ-று. (௨௯)

இடித்தென வுரப்பின னிமைப்பி லெய்திமுன்
வடித்திடு சிலயினை வாங்கித் தானவர்
முடித்தலை பனித்திட முழுதும் யாக்கைகள்
பொடித்தென வழுத்தினன் புங்க வாளியே.

(இ-ள்.) இடி இடித்தாற்போல அதட்டினவனும் இமைப்பொழுதிற்குள் சென்று முன்னே வடித்த வில்லினை வளைத்து அசுரர்களுடைய முடித்தலைகள் நடுங்குமாறு அவர்களுடம்பில்உரோமகூர்ச்சிதமுண்டானதுபோல அம்புகளாலழுத்தினான். ()

நீண்டதோர் சிலீமுக நெடிது மேலவன்
றூண்டிய காலையிற் றுணிந்த கையினர்
கீண்டிடு தலையினர் கிளிந்த மெய்யினர்
மாண்டன ரமைச்சர்கள் வறந்த தானையே.

(இ-ள்.) நீளமான ஒப்பற்ற அம்புகளை மிகவுஞ்சிறந்த வீரவாகுதேவன் விட்டவுடனே துணிபட்ட கைகளை யுடையவர்களும் பிளக்கப்பட்ட தலைகளையுடையவர்களும் அழியப்பட்ட உடலினையுடையவர்களும் ஆகி அமைச்சர் இறந்தார்கள்; சைனியங்களுங் குறைந்தன.—எ-று. (௩௧)

துறக்கம தலைத்திடு தொலைவி றானவர்
மறுக்கமுற் றசைந்தனர் வந்து போர்செய
விறற்படு சாரதர் வெகுண்டு மேற்செலா
விறப்புறு வரைபல வெடுத்து வீசினார்.

(இ-ள்.) சுவர்க்கத்தை அழித்த அழிவின்றிய அசுரர்கள் நெருக்கம்பொருந்தி அசைந்தவர்களாகவந்து போர்புரிதலும் வெற்றிபொருந்திய பூதர்கள் கோபித்துமேலேறிச்சென்று மிகுதியான பலமலைகளை எடுத்து எறிந்தார்கள்.—எ-று. (௩௨)

வீசிய வேலையில் வெதும்பி விம்மியே
மாசுறு தானவர் வாகை சிந்தியே
யாசறு போனகத் தட்டில் சூடுறு
பூசைய தாமென வுடைந்து போயினார்.

(இ-ள்.) எறிந்தவுடனே மாசுபொருந்திய அசுரர்கள் வெதுப்புற்று விம்முதலடைந்து வெற்றியழிந்து ஆசாரமான சமையல்வீட்டினுட் சென்றமையாற் சூடுண்டபூனையைப்போல உடைந்துபோனார்கள்.—எ-று. (௩௩)

இடைந்தன ராகியே யவுணர் யாவரு
முடைந்தனர் போதலு முலப்பில் பூதர்கள்
படர்ந்தனர் தெழித்தனர் பையுண் மாலையிற்
றொடர்ந்தனர் பற்றினர் தொலைத்தன் மேயினார்.

(இ-ள்.) பின்னிடைந்தவர்களாக வசுரர்கள் அனைவரும் உடைந்துபோதலும் கெடுதலில்லாத பூதர்கள்சென்று ஆரவாரித்துப் பையுண்மாலையிற்றொடர்ந்து பிடித்து அழிக்கத்தொடங்கினார்கள்.—எ-று.

பையுண்மாலை - சிறிய பூமாலை. (ருச)

கண்டன னுங்கவை யறத்தைக் காய்பவன்
புண்டிகழ்ந் தனையகட் பூதர் மேற்செலா
விண்டொடர் பெருந்தனு வாங்கி வெவ்வுயி
ருண்டிடு சரந்தெரீ இயுலப்பின் றேவினன்.

(இ-ள்.) அமைச்சருமசுரரு மோடுவதையும் பூதர் தன்புறத்துவதையும்கண்டு தருமகோபன் புண்போலும் விளங்குகின்ற கண்களையுடைய பூதர்மீது (சீற்றங்கொண்டு) சென்று வானமளாவிய பெரியவில்லினை வளைத்து வெவ்விய உயிரினை வாங்கத்தக்க வம்புகளைத் தேடியெடுத்து அளவற்றனவாகவிட்டான்.—எ-று.

புண்டிகழ்ந்தனை யகண் - செங்கண். (ருரு)

ஏவிய நேர்ங்கணை யாவு மேன்றெழு
தீவிழிப் பூதர்பாற் சேற லிந்திரன்
வாவிய வூர்திகள் வாரி நேமியிற்
றாவிய துள்ளியின் றோற்றம் போன்றதே.

(இ-ள்.) விட்ட வரியவம்புகளனைத்தும் எதிர்த்துவராநின்ற தீவிழிப்பூதர்களை நாடிச்செல்லுதல் இந்திரனேறிய வாகனமான மேகங்கள் நீரினையுடைய கடலில் சிதறிய நீர்த்துளியின் றோற்றத்தை யொத்தது.—எ-று. (ருசு)

கைச்சிலை யுகைத்திடு கணைகள் யாவையு
நச்சென விடுத்தலு நடுங்கிப் பூதர்க
ளச்சுற மெலிந்தன ரமரர் கோமகன்
வச்சிர மெய்திய வரைகண் மானவே.

(இ-ள்.) கையிலுள்ள வில்லினின்றும் இழுத்து விடப்பட்ட வம்புகள் அனைத்தையும் விடத்தைப்போல விடுத்து அதனைக்கண்டு பூதர்கள் நடுக்கமுற்று தேவராஜனுடைய வச்சிரத்தின் வருகையைக்கண்டு (நடுங்கிய) மலைகளைப்போல அச்சமுற்று மெலிந்தார்கள்.—எ-று. (ருஎ)

வேறு.

வானவர்கள் கோமகன் வயக்களிறி தென்னத்
தானவர்கள் போற்றுதரு மப்பகைஞ னூர்ந்த
வானையது பூதர்தமை யங்கையொடு வாரி
யூனொடுயிர் சிந்திட வுடற்றியதை யன்றே.

(இ-ள்.) தேவர்கட் கரசனான இந்திரனேறி நடாத்துகின்ற வெற்றிபொருந்திய ஐராவதமென்னுங் களிறே யிக்களிறு என்று கூறுமாறு அசுரர்கள் துதிக்கின்ற தருமகோப னென்பவனேறி நடாத்திய ஆனையானது பூதர்களை அழகிய கையினால் வாரியெடுத்து ஊனும் உடலுஞ் சிதறப் போர்புரிந்தது.—எ-று. (ருஅ)

கோடதொரு நான்குகொடு குத்தியது தாளி
னூடுறமி தித்தவனு ழக்கியது வாலாற்
பாடுற வெறிந்தது பணைக்கைய துகொண்டே
வீடுறமு னெற்றியது வீரர்படை தன்னை,

(இ-ள்.) அவ்வியானை வீரர்களாகவுள்ள வீரவாகுதேவராதியரின் சைனியங்களைத் தனக்குள்ள நான்கு கொம்புகளாற்குத்தியது ; அன்றியும் காலிற்குட்டன்ளி மிதித்துத் தேய்த்தது ; வாலினு லழியுமாறு வீசியது ; தும்பிக்கையினுற் சாகுமாறு பிடித் தெதிரிலடித்தது.—எ-று. (௩௯)

மாறகனும் வெங்கரியிவ் வாறடல்செய் காலை
வீறுகெழு சாரதர்கள் வெற்புமிசை வீசி
யூறுசெய வங்கதினு லப்பில்கணை யோச்சி
நாறுநடு வார்தொகையி னண்ணினர்கள் வீரர்.

(இ-ள்.) எதிரற்ற அவ் வெவ்விய யானை இவ்வண்ணம் போர்புரிந்த காலத்தில் பெருமைவிளங்குகின்ற பூதர்கள் மலைகளை எடுத்து எறிந்து ஊறு புரியாநிற்ப அளவற்ற அம்புகளை விட்டுக்கொண்டு நாறு நடுபவர்களைப்போல வீரர்கள் எதிர்த்து வந்தார்கள்.—எ-று. (௪0)

காயமுழு தொன்றிய கணக்கில்படை யாவு
மூயதவ ளக்களிறு முற்றுமெழு சோரி
பாயவணை கிற்பது பணிக்குழுவு கவ்வச்
சேயபணி சுற்றமறை திங்கள்படர்ந் தென்ன.

(இ-ள்.) உடன்முழுதிலும் பொருந்திய அளவற்றனவாகிய ஆயுதங்களெல்லா மூடிய அவ்வெண்ணிறமான யானை உடன் முழுமையிலும் இரத்த மொழுகாநிற்பப் பகைவர்மீது எதிர்த்துவருதல் சர்ப்பகூட்டங்கள் கவ்விக்கொள்ளவும் செம்பாம்பு சூழவுநின்றமையால் மறைவுற்ற சந்திரன் சென்றாற்போல இருந்தது.—எ-று. (௪௧)

வெந்திறல்கொள் புண்டரிக வேழமிது தன்மை
நொந்தநெனி னுந்தனது நோன்மையழி யாதாய்
முந்தியிடு சேனையை முருக்கவது நோக்கித்
தந்திநிரை சாரதர் தமைத்தடித ழற்ற.

(இ-ள்.) வெவ்விய திறலினையுடைய புண்டரீகமென்னும் யானை இவ்வண்ணமாக நொந்தாலும் தனது வன்மை யழியாதாய் எதிரினின்ற சைனியங்களைக் கொல்லுதலும் அதனைபபார்த்து மற்றைய யானைகள் பூதர்களைக் கொலைசெய்தன.—எ-று.

கண்டைகெழு தாரினொலி கல்லென விரைப்ப
வண்டமுடைந் தென்னநனி யார்த்தவுண னூரும்
புண்டரிக வெங்களிறு போர்த்தொழி லியற்ற
வுண்டைகெழு பூதநிரை யொய்யென வுடைந்த.

(இ-ள்.) மணிகளொடு விளங்குகின்ற கிங்கிணி முதலிய மாலைகளின் ஓசைகள் கலீரென்று முழங்க அண்டமிடிந்தாற்போல மிகவும் ஆரவாரித்துக்கொண்டு தருமகோபனுன அசுரனேறிநடாத்திய புண்டரீகமென்னும் வெவ்விய யானை போர் புரியாநிற்பப் படைவகுப்பாக விளங்கிய பூதகூட்டங்கள் விரைவாக முதுகிட்டன.

தண்டமுடை கின்றசெய றன்னைவிறல் வெய்யோன்
கண்டன னழன்றுதன கார்முகம தொன்று
கொண்டன னெடுத்தது குனித்தழலின் வாளி
யண்டர்பகை யூர்தியி னடைச்சிநனி யார்த்தான்.

(இ-ள்.) சைனியங்கள் முதுகிடுந் தன்மையை வீரமார்த்தாண்டன் கண்டு சீறித் தனது ஒரு வில்லினை எடுத்து வளைத்துஅதனிற் றீமயமான அம்பினை வைத்து

விட்டு தேவ வைரியான தருமகோபனுடைய வாகனமானபுண்டரீகத்தின்மீது அழுத்தி ஆரவாரித்தனன்.—எ-று. (சுச)

ஆர்த்தடரும் வேலையி லடற்களிறு மங்கோர்
மூர்த்தமயர் வுற்றது முனிந்தவுணர் கோமான்
பார்த்திறையி னூறுகணை பாலமிசை யோச்சச்
சேர்த்துலவு சோரியொடு தேர்மிசை யிருந்தான்.

(இ-ள்.) வீரமார்த்தாண்ட னரவாரித்துக்கொண்டு சமீபத்தில் வருங்காலத்தில் அம்புபட்ட வன்மைபொருந்திய அவ்வியானையும் ஒரு முகூர்த்தநேரம் மூர்ச்சித்து இருந்தது. இதன் செய்கையைக்கண்ட அசுரமந்திரியான தருமகோபன் விரைவாக நூறம்புகளை எடுத்து வில்லில்வைத்து வீரமார்த்தாண்டனுடைய நெற்றியிற் படுமாறு விடுதலும் அவை வந்துபட அதனாலுண்டாகித் தெளிவாயொழுகாநின்ற இரத்தப்பெருக்குடன் அவ்வீரமார்த்தாண்டன் இரதத்தின்மீது இருந்தனன்.—எ-று.(சுரு)

இருந்ததிற லோன்மிசையொ ரெஃகமது வாங்கி
விரைந்துதரு மப்பகை விடுத்திடலு நோக்கி
மருந்தெனமுன் வந்துதிறல் வாசனவ் வைவேன்
முரிந்துதுணி யாகவொர் முரட்கணை தொடுத்தான்.

(இ-ள்.) அவ்வா றிரத்தமொழுகவிருந்த வீரமார்த்தாண்டன்மீது விரைவாகத் தருமகோபன் ஒரு வேலினை எடுத்து விடுதலும் அது வருதலைப்பார்த்து அமிர்தம் போல அவ்வேற்படையினெதிரே வீரபுரந்தரன் வந்து அக்கூரிய வேற்படை ஒடிந்து தூளாக ஒருவன்மையான அம்பினை விடுத்தான்.—எ-று. (சுசு)

மத்தகய மன்னதிறல் வாசவன் விரைந்தே
பொத்திரம தொன்றுகொடு போரயின் முருக்கிக்
குத்திரம தொன்றவுணர் கூவிவெருக் கொள்ள
வத்திரமென் மாரிகொட வன்றனை மறைத்தான்.

(இ-ள்.) மதித்த யானைபோன்ற வீரபுரந்தரன் விரைவாக ஒரு அம்பினைக் கொண்டு போர்வேலினை நாசஞ்செய்து வஞ்சககுணமுள்ள அசுரர்கள் கூச்சலிட்டு அஞ்சுதலடைய சரவருஷமென்னும் மழையினால் அந்தத்தருமகோபனை மறைத்தான்.

மறைத்தலு மறப்பகைஞன் வாளிமழை தூவிக்
குறைத்தன னளப்பில்கணை யேனவை குழீஇப்போய்ச்
செறுத்தவன தாகமிசை சென்றுசெருக் கின்றி
விறற்கவச நக்குபுவி ளிந்துபுடை வீழ்ந்த.

(இ-ள்.) வீரபுரந்தரன் பாணவருஷங்களால் தனதுடலை மறைத்தலும் தருமகோபன் தானும் பாணங்களை வருஷம்பொழிவதைப்போல சிதறி அநேகமம்புகளைக் குறுக்கேவிட்டுதடுத்தான்; மற்றையவை நெருங்கிச்சென்று சீற்றங்கொண்டவனுடலிற்புக்கு வன்மைபொருந்திய கவசத்தின் செருக்கில்லாதொழிய வதனை யழித்து அத்துடன் தாமும் விழுந்தன.—எ-று. (சுஅ)

வேறு.

மீண்ட வேலையின் வெய்ய சூழ்ச்சியோன்
மாண்டு ளானென வாகை வீரன்மேற்
பூண்ட யங்குறு பொன்னந் தண்டமொன்
றீண்ட வீசினான் யாரு மஞ்சவே.

(இ-ள்.) பின்னருமப் பொழுதக்கொடிய வமாத்தியனான தருமகோபன் வெற்றிபொருந்திய அவ்வீரன் இறந்தானென்று கூறும்வண்ணம் பூண்களோடு விளங்குகின்றவொரு பொன்னந்தண்டினை அனேவரு மஞ்சுமா றெடுத்தெறிந்தினன்.—எ-று.

எழுவி னீள்கதை யிமைப்பிற் சென்றவன்
பழுவின் மார்பகம் பட்ட வேலையின்
விழும நோயுறு விம்மி னானரோ
வழுவை மேலையோன் வயத்தின் மேவவே.

(இ-ள்.) எழுவினுலாகிய நீளமான தண்டாயுதம் இமைநேரத்திற் சென்று பழுவொடு கூடிய மார்பிற் பட்டவுடனே யானையின்மீதிருக்கின்ற தருமகோபன் வெற்றியுடனிருக்க மிகுந்த துன்பமுற்றுத் தேம்பினன்.—எ-று. (௫0)

கருத்தி னல்லறங் காய்ந்த வன்செய
றெரித்து நின்றிடுந் திறல்கொள் வாகினு
னுருத்து நோக்கியே யுரையுந் தன்னுளக்
கருத்தும் பிற்படக் கடிது செல்லுவான்.

(இ-ள்.) மனப்பூர்வமாக நல்ல தருமவிரோதியான அசுரமந்திரி செய்யுஞ்செய்கைகளைக்கண்டு நின்ற வீரவாகுதேவர் உருத்துப் பார்த்து சொல்லும் தன் மனக்கருத்தும் பிறபட விரைந்து அவனெதிரே செல்வாராயினர்.—எ-று. (௫க)

நின்னி லையநின் னேர லன்புயந்
தன்னை யாத்துநிற் றருவம் யாமெனப்
பன்னு மானவர் பௌவ நீத்தொராய்
முன்னு தானவர் முதல்வு னேர்புக.

(இ-ள்.) ஐயனே! நீ போகவேண்டாம் நில் நில் நின்பகைவனான தருமகோபனுடைய தோள்களைப்பிடித்துக்கட்டி நாங்கள் கொண்டுவந்து தருகின்றோமெனக் கூறுநின்ற வீரர்களாகிய கடலைக் கடந்து சென்று தான் கருதிய அசுரத்தலைவனெதிரே செல்லுதலும்.—எ-று. (௫உ)

எதிரி லாமையால் யாரு மஞ்சவே
யதிரு நோன்கழ லாடன் மொய்ம்பனை
மதியி லானவன் மழைகண் மீன்குழுச்
சிதறி யென்னத்தீச் சிந்த நோக்கினன்.

(இ-ள்.) தனக்கெதி ரொருவரு மின்மையால் எப்படிப்பட்டவர்களும் அஞ்சுமாறு அணிந்த பெரிய வீரக்கழலினையும் வெற்றியினையுமுடைய வீரவாகுதேவனைப் புத்தியில்லாத அவ்வசுரன் மேகங்கள் மின்னற்கூட்டங்களைச் சிதறினாற்போல தீப்பொறி பறக்கப் பார்த்தான்.—எ-று. (௫௩)

நோக்கி நீகொலோ நோன்மை யோடெனைத்
தாக்கு மாறுவந் தனையை யானுனை
யாக்கை சிந்திய வமைந்து நின்றனன்
காக்க வல்லையேற் காத்தி நீ யென்றான்.

(இ-ள்.) பார்த்து நீதானோ? வன்மையுடனென்னை யடிக்குமாறு வந்தாய்; நான் உன்னுடலை யழிக்குமாறு சித்தமாக நிற்கின்றேன்; நீ உன்னைக் காத்துக்கொள்ள வன்மையுள்ளவனானல் காத்துக்கொள்வாய் என்றுவீரவாகுதேவ னுரைத்தான்.

மொழியு மாடல்சேர் மொய்ம்பன் கேட்டிது
விழுமி தாரினும் வெற்றி பெற்றன
னழிவனே நினக் காடல் கொள்வன்யான்
கழியை நீந்துதல் கடலிற் பாடதோ.

(இ-ள்.) இவ்வாறு கூறுவதை வீரவாகுதேவன் கேட்டு இது ஆச்சரியமான தே. யாவரிடத்திலும் வெற்றியே பெற்றுள்ளேன். (அற்பனான) நினக்குப் பின்னிடு வேனோ? கடலைக்கடந்தவற்கு (ச்சிறிய) கழியைக் கடத்தல் கட்டமோ? அது கடலினும் பெரிதோ? இன்றேல் அதனால் சிறந்தவர்களை வென்றயான் அற்பனாகிய நின்னையும் வெல்வேன்.—எ-று. (ருரு)

மற்றுன் வன்மையு மதர்ப்பு நின்பெருங்
கொற்ற மானதும் வரத்தின் கொள்கையு
மிற்றை வைகலே யீறு செய்வனீ
கற்ற போரினைக் கடிது செய்கென.

(இ-ள்.) இதுநிற்க உனது வன்மையும், இறுமாப்பும், நினது பெரிய வெற்றியும், நீ பெற்றுள்ள வரங்களின்றன்மைகளும் இன்றைய ஒரு பொழுதிலேயே நாசஞ்செய்துவிடுவேன்; நீ கற்றுள்ள போரினை விரைந்து செய்வாயாக என்று வீரவாகு தேவன் கூறுதலும்.—எ-று. (ருசு)

வேறு.

கானக்களி வரிபம்பிய கமழ்தார்புனை யகல
வானக்கிறை தனதூர்திகண் மரபோடுசென் றிசைக்குந்
தீனக்குர லெனநாணொலி திசையெங்கணுஞ் செல்லக்
கூனற்சிலை தனையொல்லையிற் றருமப்பகை குனித்தான்.

(இ-ள்.) இசையினையும், களிப்பினையும், புள்ளிகளையுமுடைய வண்டுகள் மொய்த்த மணம் பொருந்திய மாலையணிந்த மார்பினையுடைய தேவராசனது வாகனங்கள் வரிசையாகச்சென்று முழக்குகின்ற குரூரமான முழக்கத்தைப்போல நாணோசை யெவ்விடங்களிலுஞ் செல்லும் வண்ணம் தருமகோபன் தனது வளைந்த வில்லை விரைவில் வளைத்தனன்.—எ-று.

வானக்கிறை தனதூர்திகள்-மேகங்கள். (ருஎ)

மற்கொண்டிடு மிடன்மொய்ம்புள மதியில்லவ னொருபா
லெற்கொண்டெழு களிற்றின்மிசைச் சிலைவாங்கின னிருத்தல்
கற்கொண்டதோர் வெள்ளிக்கிரி மிசைகாணிய கணைதூய்
விற்கொண்டொரு பசுங்கார்முகின் மேவுற்றென லாமால்.

(இ-ள்.) மல்யுத்தத்திற்குரிய வன்மைபொருந்திய தோள்களையுடைய புத்தியற்ற தருமகோபனென்பான் ஒருபுறத்தில் ஒளிபொருந்திய யானையின்மீது வளைத்த வில்லுடனிருத்தல் கற்கள் பொருந்திய வெள்ளிமலையின்மீது பிரத்தியக்ஷமாக அம்புகளை விட்டுக்கொண்டு வில்லைத்தாங்கி ஒரு பசிய கரியமேகம் தங்கியிருத்தல்போலாம்.—எ-று. (ருஅ)

அதுவன்றியு மவனூர்திய வடுவெங்களி றலர்தண்
கதிரின்குழு முழுதொன்றுபு ககனந்தனி லெழுசெம்
மதியந்தன தொருபங்கையொர் வயவெம்பணி நுகரப்
புதிதொண்பிறை யதுவொன்றிடை புகநின்றது பொருவும்.

(இ-ள்.) அதுவல்லாமலும் அவன் ஏறி நடாத்திய பகைவர்களைக் கொல்லுகின்ற வெவ்விய யானை அலர்ந்த தண்ணிய கிரணகூட்டங்கள் பூரணமாகப் பொருந்தி ஆகாயத்திலுதயமாகின்ற செந்நிறமான சந்திரனின் ஒரு பாகத்தை வெற்றியையும் வெவ்விய தன்மையையுமுடைய ஓர் பாம்பு உண்ண புதிய ஒள்ளியவொரு பிறையிடையிற்றோன்ற நின்றதை யொக்கும்.—எ-று. (௫௯)

முந்தேயவ னெடுக்கின்றதொர் முரண்வெஞ்சிலை குனியாக்
கந்தேயென நிமிர்தோளுடைக் கடுஞ்சூழ்ச்சிய னெழுகுஞ்
செந்தேனுறழ் குணத்திற்சரஞ் செலுத்தாத்திறன் மாயம்பற்
கந்தேயுமெய் வெளியின்றென வவணைக்கர தார்த்தான்.

(இ-ள்.) தூண்போலு முயர்ந்த தோள்களையும் பொல்லாத தந்திரங்களையுமுடைய தருமகோபன் முன்னமே கையிலெடுத்துள்ள ஒப்பற்ற வெவ்விய வலிய வில்லை வளைத்து செந்தேனெழுகுவதைப்போலக் காணப்படுகின்ற நாணியில் அம்புகளை வைத்து வீரவாகுதேவர்க்கு அந்தளவும் உடலில் வெளியிடமின்றென்று கூறுமாறு விட்டு மறைத்து ஆரவாரித்தனன்.—எ-று.

அந்து - ஒரு சிறுபூச்சி. (௬௦)

கரக்கின்றவன் விடுவாளிகள் கந்தன்படை ஞன்மெய்
யரக்குன்றுபட் டயின்மாய்ந்தவை யயல்வீழ்ந்தன கண்டா
னிரக்கின்றவர்க் குதவான்கரந் தீதறகாத்திரு வினர்பாற்
பரக்குமபொரு ளுகுத்தன்னதிற் பயன்பெற்றில னெனவே.

(இ-ள்.) உடலை மறைக்கின்ற தருமகோபன் விட்ட அம்புகள் குமரக்கடவுளின் சேனபதியான வீரவாகுதேவரின் உடம்பான அரமலையிற் பட்டுக் கூர் மழுங்கி அருகில் விழுந்தனவற்றைப் பார்த்தான் இரக்கின்றவர்களுக் குதவாமல் மறைத்து வைத்து (கடைசியில்) அயோக்கியமான சம்பன்னரிடத்தில் தமது மிகுந்த பொருளை இறைத்து அவ்வண்ணமிறைத்ததில் பிரயோசனமடையாவாறுபோலத் தானும் பிரயோசனமற்றவனாயினன்.—எ-று. (௬௧)

அயிலசிந்திட முரண்வெங்கணை யயல்வீழ்தலு மடுபோர்
முயலுந்திறல் மகழுமொய்ம்பனை முனாநமதல்கமொன் றெடுத்துப்
புயலன்னதொர் வடிவத்தவன் பூணுநெஞ் செறியச்
செயலன்னது கண்டானெதிர் தீவாளிக ளுய்த்தான்.

(இ-ள்.) கூர்மழுங்க வன்மைபொருந்திய வவ்வம்பு அருகே விழுதலும், பகைவரைக் கொல்லும் போரினைச்செய்கின்ற வெற்றி விளங்குகின்ற வீரவாகுதேவன் சீற்றங்கொண்டு ஒரு வேற்படையை யெடுத்து மேகம்போலக் கறுத்த வுருவினனான தருமகோபனுடைய ஆபரணம் பொருந்திய மார்பிற் படுமாறெறிதலும், அச்செய்கையை அவன் கண்டு அவ்வேலின் எதிரே தீமையமான அம்புகளை விட்டான்.—எ-று

உய்க்குஞ்சுடர் வடிவாளிக ளொருங்கேதவ முருக்கி
மைக்கொண்டலை நிகர்மேனியன மனநதுண்ணென வணுகி
மெய்க்கொண்டதொர் நெடுஞ்சாலிகை விளியும்படி வீட்டிப்
புக்குள்ளுற மூழ்கித்தனி புறம்போந்தது விரைவேல.

(இ-ள்.) அவ்வேல் அவன் விடுகின்ற ஒளிபொருந்திய அம்புகளை முறையே கெடுமாறு அழித்து கரிய மேகத்தையொத்த வவனது மனந் திடுக்கிடுமாறு உடலிலணிந்திருந்த பெரிய கவசத்தை அழியும்படி அழித்து உள்ளே புகுந்து முழுகி விரைவாகத் தனியே வெளியேவந்தது.—எ-று. (௬௩)

புறம்போதலு மிகன்மந்திரி பொருமிப்புகை யுயிர்த்து
நிறம்போகிய செந்நீரொடு நினைகின்றி லனிருப்ப
மறம்போகிய தனிவெங்கரி மகிணன்செய லோரா
வறம்போகிய மனத்தான்றனை யடவுற்றதை யன்றே.

(இ-ள்.) மார்பைத்துளைத்து வெளியே வேற்படைபோதலும் வன்மையாளனான தருமகோபமந்திரி விம்முதலடைந்து புகைவரப்பெருமூச்சுவிட்டு மார்பிலொழுகாநின்ற இரத்தவெள்ளத்துடன் நினைவற்றவனாக இருத்தலும் மிக்க வீரத்தினையும் ஒப்பற்ற தன்மையினையும் வெவ்விய இயல்பினையும் உடைய அந்தப் புண்டரீகமென்னும் யானை தன் தலைவன் செய்கையையுணர்ந்து தருமநூலைக் கற்றறிந்த மனத்தினையுடைய வீரவாகுதேவரைக் கொல்லுமாறு சென்றது.—எ-று. (சுச)

முந்துற்றிடு கரிதிண்டிறன் மொய்ம் பன்னி ரதத்தைத்
தந்தத்தொகை கொடுதாக்குபு சமரத்திடை யிட்ட
கந்தொத்ததொ ரெழுவொன்றது கைக்கொண்டவன் வலவன்
சிந்தப்புடைத் ததுகாண்டலுஞ் செந்தீயெனக் கனன்றான்.

(இ-ள்.) எதிரில்வந்த யானை மிக்க வன்மையினையுடைய வீரவாகுதேவருடைய இரதத்தைத் தனது கொம்புகளைக்கொண்டு முட்டிப் போரியற்றினவரிட்ட தூணமனைய ஒரு எழுவாயுதத்தைக்கொண்டு அவ் வீரவாகுதேவருடைய சாரதியானவன் சாக அடித்தது. அதனைக் கண்டவுடனே செந்நிறமான தீயைப்போல வீரவாகுதேவர் சீற்றங் கொண்டனர்.—எ-று. (சுரு)

வையந்தன தீருதலும் வறிதேயயல் பாயா
மெய்யங்கைய தொன்றாலவன் மேல்வந்திடும் வேழக்
கையங்குறப் பற்றுக்கடங்க லுழுங்கவுண் மோதி
யொய்யென்றெடுத் தப்பாலையி னுலகம்புக வுய்த்தான்.

(இ-ள்.) தன்னிரத மழிதலும் சும்மா பக்கத்திற் குதித்து தன் னுடலிலுள்ள ஒரு அழகிய கையினால் தன்மீது எதிர்த்துவராநின்ற யானையின் கையைப்பிடித்து மதமொழுகாநின்ற கவுளிலடித்து விரைவாகவெடுத்து வேறான மேலுலோகத்திற்குச் செல்லும்வண்ணம் எறிந்தான்.—எ-று. (சுசு)

எறிந்தானெடுத் ததுகாலையி லிபம்விண்ணிடை யேகிப்
பிறிந்தாகவ மியற்றெல்லையிற் பெயர்காலையி னமைச்ச
னறிந்தான்கய மிழந்தேன்கொலென் றயராவத னோடு
மறிந்தான்புனை கலந்தன்னொடு மணிமாமுடி சிந்த.

(இ-ள்.) எடுத்து எறிந்தவுடனே அவ்வியானை ஆகாயத்தினிடைச்சென்று திரும்பவும் போர்புரியுமிடநோக்கிவருங்காலையில் அதனைத் தருமகோப னுணர்ந்து யான் யானையை இழந்தேனே என்று அயர்ந்து யானையுடன் தரித்துள்ள ஆபரணங்களும் மகுடமுஞ் சிதற விழுந்தான்.—எ-று. (சுஎ)

வீழ்கின்றதொர் களிறுற்றவும் வெருவிப்பதை பதைத்து
மாழ்கின்றது புடையோகிய மதியில்லவ னெழுந்தே
காழ்கொண்டதொர் கதையொன்றுதன் கைக்கொண்டுரத் தெறியத்
தாழ்கொண்டதொர் கரத்திற்கடுத் தலைகொண்டது தறித்தான்.

(இ-ள்.) விழாநின்ற ஒப்பற்ற அப்புண்டரீக யானை மிகவும் பயந்து துடிதுடித்து வருந்தியது; அவ் யானையுடன் சென்ற புத்தியற்ற தருமகோபனெழுந்து வ

யிரம்பொருந்திய ஒரு தண்டாயுதத்தினை எடுத்துத் தன் பகைவன் மார்பிற் படுமாறு எறிதலும் அவன் அதனை நீண்ட தனது கையிலிருந்த வாட்படையினால் துண்டமாக வெட்டினான்.—எ-று. (சுஅ)

வலிகொண்டதோர் தனித்தண்டது மடிவாதலு மற்றோர்
குலிசந்தனை விடவாங்கெதிர் குறுகக்கரம் பற்றிப்
புலிகண்டதோர் கலைமானெதிர் புக்காலென வவுணர்
தலைவன்றனை யடன்மொய்ம்பினன் றடமார்பிடைப் புடைத்தான்.

(இ-ள்.) வன்மை பொருந்திய ஒப்பற்ற தண்டமானது அழிதலும் பின்னுமொரு வச்சிரப்படையினை விட்டான். அது அவ்வீரவாகுதேவனெதிரே வர அதனைக் கையிற் பிடித்துப் புலியானது கண்டவொரு கலைமானெதிரே சென்றாற்போலச் சென்று அசுரர்தலைவனை தருமகோபனுடைய வன்மை பொருந்திய மார்பிலடித்தனன்.

மூளாவுருத் தறைகின்றுழி முதலற்றிடு தருப்போல்
வாளாபுவி மிசைவீழ்தலும் வயமிக்கவ னொருகாற்
றாளாலுதைத் தனனத்துணை தருமப்பகை விளிந்தான்
கேளாகிய வவுணப்படை கெட்டோடிய தன்றே.

(இ-ள்.) கோபமூண்டடித்தவுடனே அடியற்ற மரம்போல சும்மா பூமியில் விழுதலும், வெற்றிமிக்க வீரவாகுதேவன் தனதொரு காலடியினாலுதைத்தனன். அப்பொழுது தருமகோபமந்திரி இறந்தான். உடனே அவனுக்குத் துணையாக வந்திருந்த அசுரசைனியங்கள் தோற்றோடின.—எ-று. (எ0)

விழுந்தயர் புண்டரீக வெங்கரி யுயிர்த்து மெல்ல
வெழுந்தது தரும கோப னிறந்தபா டதனை நோக்கி
யழுந்திடு மின்னல் வேலைக் கரைகண் கிடைத்தா லென்னத்
தொழுந்திறல் வீரவாகுத் தலைவனை நேர்ந்து சொல்லும்.

(இ-ள்.) (வீரவாகுதேவனெடுத்தெறிந்தமையால் மேலேசென்று கீழே) விழுந்து மயங்கிய புண்டரீகமென்னும் வெவ்விய யானை (மூர்ச்சைதெளிந்து) மூச்சு விட்டுக்கொண்டு மெல்லென எழுந்து தருமகோபன் இறந்ததன்மையைப் பார்த்து தான் முழுகிக்கிடந்த துன்பசமுத்திரத்திற் கொரு பெரிய கரை கிடைத்தாற்போல வணங்கத்தக்க வன்மையாளனை வீரவாகுதேவனையடைந்து உரையாநிற்கும்.—எ-று.

செய்பலை வெகுளி யெந்தாய் சிறியனை யருளிக் கேண்மோ
பொய்யன நினையல் வாழி புண்டரீ கப்பே ருள்ளேன்
வையகம் போற்றுஞ் சீரோன் மாதிரங்காவல் கொண்டேன்
கையனித் தரும கோபன் கடுஞ்சிறைப் பட்டேன் பன்னாள்.

(இ-ள்.) எந்தைபெருமானே ! சிறியேன்மீது கோபங்கொள்ள வேண்டாம். அருள்செய்து கேட்கவேண்டும். யான் புண்டரீகமென்று பேருள்ளவன். உலகம்போற்றுஞ் சிறப்பினேன். திக்கைக்காக்கு மியல்பையுடையேன். (அப்படிப்பட்ட யான்) கீழ்மகனான இத்தருமகோபனுடைய கொடிய சிறையி லனேககாலமாகச் சிக்கிக்கிடக்கின்றேன்.—எ-று. (எஉ)

வன்றளை மூழ்குந் தீயென் மதியிலா வமைச்சற் போற்றி
யின்றுகா றார்திப்பானே னேவின பலவுஞ் செய்தே
னென்றுநான் மறுத்த துண்டே னுயிர்குடித்தானும் வல்லை
தின்றிடு மென்றே யஞ்சித் திரிந்தனன் செயல் வேறில்லேன்.

(இ-ள்.) (அண்ணலே!) இத்தருமகோபனுடைய கொடிய சிறையிலகப்பட்ட தீயவனுகிய யான் புத்தியற்ற வம்மந்திரியைத் துதித்து, இந்நாள்வரைக்கு மவனுக்கு வாகனமாகவிருந்தேன், அன்றியும் அவனிட்ட பல வேலைகளையும் செய்தேன். அவனிட்ட வேலைகளி லெதையேனும் ஒன்றை யான் செய்யமாட்டேனென்று தடுத்திருப்பேனுனல் உடனே, வேறுகதியற்ற என்னைக் கொன்று என் ஊனையும் தின்றுவிடுவானென்று பயந்துலாவினேன்.—எ-று. (எரு)

எட்டுள திசையில் வைகு மரக்கர்தன் னிகழ்ந்தா ரென்று
மட்டறு வெகுளி வீங்கி மற்றெனை யூர்ந்து தொன்னுட்
கிட்டின னவரை யெல்லாங் கிளையொடு முடித்தோன் றன்னை
யட்டனை நீயே யல்லா லவனையா ரடுதற் பாலார்.

(இ-ள்.) இத்தருமகோபன் அட்டதிக்குகளிலும் வாழ்கின்ற அசுரர்கள் தன்னை இகழ்ந்தார்களென்று அளவற்ற கோபங்கொண்டு என்னை வாகனமாகக்கொண்டு என்மீதேறிச்சென்று முன்னுளில் அவர்க ளிருப்பிடங்களை யடைந்து அவர்க ளனைவரையும், அவர்களுடைய பந்துவருக்கங்களுடன் கொன்முன். அவ்வாறு கொன்றவனை (எம்பெருமானே) நீ கொன்றனை ; நின்னையன்றி அவனைக் கொல்லவல்லுநர் யாவர்.

புந்தியி லறத்தைக் காயும் புரைநெறி யமைச்சன் றன்னை
வந்துநீ யடுத லாலே வானவர் கவலை தீர்ந்தா
ருய்ந்தனன் சிறந்தே னெற்கு மூதிய மிதன்மே லுண்டோ
முந்துறு தளையி னீங்கி முத்திபெற் றுரை யொத்தேன்.

(இ-ள்.) மனப்பூர்த்தியாகத் தருமத்தைச் சீறுகின்ற ஒழுக்கமற்ற மார்க்கத்தினையுடைய அமாத்தியனுன தருமகோபனைத் தேவரீர்வந்து இன்றுகொலைசெய்தமையால் தேவர்களவனுலடைந்த துன்பத்தினின்றும்விடுபட்டார்கள். யானுஞ்சிறப்படைந்து உய்ந்தேன் இனி எனக்கும் இதனைவிட லாபம் வேறே யுளதோ (தருமகோபனைவிட்டுவிலகியான்) முற்பட்ட பாசத்தினின்றும் ஒழிந்து முத்திபெற்றவர்களை ஒத்தவனுயினேன்.—எ-று. (எசு)

தீதுகொள் பவத்தி னீரா லவுணர்தஞ் சிறையிற் புக்கேன்
மாதவஞ் செய்தேன் கொல்லோ மற்றுனை யெதிரப் பெற்றே
னுதலி னுய்ந்தே னென்ற னுசையை யளிக்கு மாற்றுற்
போதுவன் றமிய னென்று தொழுதது புண்ட ரீகம்.

(இ-ள்.) தீமைபொருந்திய பாவத்தின் தன்மையால் அசுரரிட்ட சிறையிற் கிடந்தேன். என்னமகத்தானபுண்ணியஞ்செய்தேனே? உன்னை அடையப்பெற்றேன். ஆதலால் உய்ந்தேன். இனி அடியேன் எனது திசையைக் காக்கும் வண்ணம் செல்கின்றேனென்று புண்டரீகமென்னும் யானை வீரவாகுதேவரை வணங்கியது.—எ-று.

புண்டரீ கத்தின் வாய்மை பொருக்கென வினவு வீர
னண்டரு முவகை பொங்க வகலுதி யிருக்கைக் கென்ன
விண்டொடர் நெறியிற் சென்றுங் கவுணர்க்கு வெருவ லின்றிப்
பண்டமர் திசையி னண்ணிப் பரிவற வைகிற் றன்றே.

(இ-ள்.) புண்டரீகமென்னும் யானை கூறிய வனைத்தையும் விரைவாகக்கேட்டுணர்ந்த வீரவாகுதேவர் அடைதற்கரிய மகிழ்ச்சிதோன்ற அவ்யானையைப்பார்த்து நீ நின்னிருப்பிடத்திற்குச் செல்வாயாக என்றுரைத்தலும், அது ஆகாயமார்க்கமாகச்சென்று முன்னுளில் இடையூறுகண்ட அசுரருக்குப் பயப்படவில்லாமல் தான் முன்னிருந்த திசையையடைந்து துன்பமின்றி இருந்தது. எ-று. (எஎ)

மாதிரங் காவல் பூண்டமதக்களிற் றரசுசெல்ல
வாதியி லறத்தைக் காயு மழிதக னிறுதி நோக்கிப்
பூதர்க ளார்த்து வீரன் புயவலி புகழ்த லுற்றார்
தூதவ ரதுகண் டோடிச் சூரனைத் தொழுது சொல்வார்.

(இ-ள்.) அக்கினி திக்கினைக் காக்குமியல்பினைக் கைக்கொண்டுள்ள புண்டரீகப்பெயரினையும் மதம்பொருந்திய தன்மையினையுமுடைய களிற்றரசு தன்னிடஞ் செல்ல, முன்னாளில் அறத்தைக்காய்ந்த அழிதகவினனான தருமகோபன் இறந்துபட்டதனைப் பூதர்கள்பார்த்து ஆரவாரஞ்செய்து வீரவாகுதேவருடைய புயபலபராக்கிரமங்களைப் புகழ்ந்தார்கள். அதனைத் தூதுவர்கண்டு ஓடிச்சென்று சூரபன்மனை வணங்கி கூறுகின்றார்கள். எ - று. (எஅ)

தண்டக முதல்வ கேண்மோ தானையுந் தானு மேகி
மண்டமர் புரிந்து வீரவாகுவா லமைச்சன் மாய்ந்தா
னுண்டைய தழித லுற்ற வுங்குவ னூர்ந்து சென்ற
புண்டரீ கப்பேர் பெற்ற தந்தியும் போய தென்றார்.

(இ-ள்.) சைனியங்களையுடைய மன்னவனே! கேட்பாயாக நின் மந்திரியான தருமகோபன் சேனைகளுடன் தானுஞ்சென்று நெருங்கிய போர்புரிந்து வீரவாகுவினால் இறந்தான். சேனைகளுமழிந்தன; அவனேறிச்சென்ற புண்டரீகமென்று பெயருள்ள யானையுந் தன்னிருப்பிடஞ்சென்றது என்று கூறினார்கள். எ - று. (எகூ)

பழுது டைத் திறன் மந்திரி பட்டசொல் வினவி
முழுது சுற்றிய வின்னலம் புணரியின் மூழ்கி
யழுது யிர்த்து மெய் யுயிர்பதை பதைத்திட வங்க
ணெழுது சித்திரப் பாவைபோ லுணர்வுபோ யிருந்தான்.

(இ - ள்.) குற்றம்பொருந்திய சாமர்த்தியத்தினையுடைய தருமகோப மந்திரி இறந்ததைக்கேட்டு சூரபன்மன் முற்றிலுஞ் சூழ்ந்துகொண்ட துன்பசமுத்திரத்துண்மூழ்கி அழுது பெருமூச்சுவிட்டு உடலுமுயிருந்துடிக்க அவ்விடத்திலெழுதிவைத்த சித்திரத்தைப்போல அறிவு அழிந்திருந்தான். எ - று. (அ0)

தருமகோபன் வதைப்படலம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம்-கஎகச.

---

# பானுகோபன்வதைப்படலம்.

எள்ளல் செய்தெனைப் பற்றியே சிறையகத் திட்ட
கள்வ னிப்பகன் முடிந்திடு மன்னது காண்பான்
பொள்ளெ னப்படர் வேனெனப் புந்திகொண் டவன்போ
லொள்ள ழற்கதிர் வீசியே யிரவிவந் துதித்தான்.

(இ-ள்.) என்னை இகழ்ந்து பிடித்துச் சிறையிலடைத்த கள்வனான பானுகோபனித்தினஞ்சாவான்; அவன்சாதலைக் காண்டற்கு விரைவாகச்செல்வேனென்று மனதினினைத்தவனைப்போல சூரியன் ஒள்ளிய அழற்கதிர்களை வீசினவனாக வுதையமாயினான்—எ-று. (க)

சுருதி நீங்கிய வவுணர்கோ னித்திறந் துயரம்
பெரிது மெய்தியே யிருந்துழிக் கண்டனர் பெயர்ந்து
குருதி நோக்குடை யொற்றரி லொருசிலர் குறுகிப்
பரிதி தன்பகை யடிபணிந் திணையன பகர்வார்.

(இ-ள்.) வேதவொழுக்கத்தைவிட்ட அசுராதிபனான சூரபன்மன் இவ்வண்ணம் மிகவுந்துன்பமடைந்திருத்தலைக்கண்டு அவ்விடத்தினின்றும் குருதிபோலுஞ் செந்நிறமான கண்ணினரான தூதுவர்களிற் சிலர் சென்று பாநுகோபனை அடைந்து அவன்கால்களைவணங்கி இவைகளைக் கூறுவாராயினர்.—எ-று. (உ)

முன்ன மாயமாப் படைக்கலந் தூண்டியே மொய்ம்பு
பன்னி ரண்டுளான் றூதனைப் படையொடும் படுத்துத்
தொன்னெ டுங்கட லிட்டனை யிட்டதைச் சூர்க
ளன்ன காலையே விளம்பின ரறு முகத் தவற்கே.

(இ-ள்.) அரசனே! நீ முன்னஞ், சிறந்த மாயாஸ்திரத்தைவிட்டுப் பன்னிரண்டு தோள்களையுடைய சண்முகன் றூதனை அவனுடன்வந்த சேனைகளுடன்கொன்று பழயநெடிய கடலினகத்திட்டனை; இடுதலும் அதனைத் தேவர்களாறுமுகனுக்கு சென்றுரைத்தார்கள்.—எ-று. (ங)

வெங்கண் மால்கரிக் கிளையவ னுங்கது வினவி
செங்கை வேலினை யாயிடை யிருந்தனன் செலுத்த
வங்க தொல்லையின் மூவிரு புணரிக ளகன்று
பொங்கு தூயநீ ரளக்கரி னடுவுபுக் கதுவே.

(இ-ள்.) வெவ்வியகண்களையுடைய பெரிய யானைத்தலையனான விநாயகனுக் கிளையவனதனையறிந்து அவ்விடத்திலிருந்தபடியே தனதுகையிலுள்ள வேலாயுதத்தை அநுப்ப அது விரைவாக அறுவகைகடல்களையும்கடந்து பொங்குகின்ற பரிசுத்தமான நன்னீர்க்கடலின் நடுவிற்புகுந்தது.—எ-று. (ச)

புக்க வேலையின் மாயமாப் பெரும்படை புறந்தந்
தக்க ணந்தொலை வெய்திய தயர்வு யிர்த் தறிந்து
தொக்க பாரிடர் யாவரும் வீரர்தந் தொகையு
மிக்க திண்டிறல் வாகுவு மெழுந்திவண் மீண்டார்.

(இ-ள்.) அவ்வேலங்குச் சென்றவுடனே நினது மாயமாப்படையானது பின்னிடைந்து அப்பொழுதே தொலைந்தது. தொலைதலும், உடனே அங்கு நெருங்கிக்கிடந்த பூதர்கூட்டமும் வீரர்கூட்டமும்,மிகுந்த திண்ணியதிறலாளனான வீரவாகுவும் சோகநீங்கித் தெளிவுகொண்டவர்களாய் அவ்விடத்தினின்று மெழுந்து நமது இந்நகரினை அடைந்தார்கள். எ-று. (ரு)

ஆண்டவ் வெல்லைவந்தி றுத்திடும் வேற்படை யருளி
மீண்டு கந்தவே ளிருந்துழிப் போந்தது விரைவா
லீண்டிம் மாநகர் சுற்றியே செறுநர்களிகலின்
மூண்டு போர்செய்வான் புரிசையுட் புகுந்தனர் முரணால்.

(இ-ள்.) அவ்விடத்திலப்பொழுது அவ்வேலாயுதம் அவர்களிடத்தருளைக் காட்டி விரைவாகத்திரும்பிக் கந்தவேளிருக்குமிடத்தை அடைந்தது. பின்னர் இவ்விடத்திற் பகைஞர் இந்தப் பெரியநகரத்தை வளைந்துகொண்டு வன்மையொடு போர் செய்யும்வண்ணம் மதிலுக்குட் பிரவேசித்தார்கள். எ-று. (சா)

அரண முற்றுளா ரிந்நக ரலைத்தலு மவற்றைத்
தரணி காவலன் வினவியே தன்னய னின்ற
விரணி யன்றனைக் கனன் முகத் தண்ணலை யேனை
முரணின் மக்களை யமைச்சனை விடுத்தனன் முறையால்.

(இ - ள்.) கோட்டையையடைந்த பகைவர் இவ்வூரை அக்கினியாஸ்திர முதலியவைகளால் வருத்துதலும் அவைகளை உலகாதிபனுன நின்றந்தை கேள்வியுற்று தனதருகினின்ற இரணியனையும் அக்கினிமுகவரசனையும் மாறுபாடற்ற மற்றைய மூவாயிரம் பிள்ளைகளையும் மந்திரியான தருமகோபனையு முறையே அனுப்பினான். எ - று. (எ)

ஆன காலையில் வந்துவந் தடுசம ராற்றி
மான வேற்படைப் பண்ணவன் றூதனுன் மற்றை
யேனை யோர்களான் முத்திற வீரர்களிறந்தார்
மீனமாய்க்கடல் புகுந்தன னிரணியன் வெருவி.

(இ - ள்.) அப்பொழுது அவர்கள் வந்து வந்து கொலைத்தொழிலான போர் புரிந்து வன்மைபொருந்திய வேற்படையினையுடைய குமாரசுவாமியின் தூதவனாலும் மற்றவர்களாலும் அக்கினிமுகன் மூவாயிரர் தருமகோபன் என்னும் முத்திறத்தினரான வீரர்கள் இறந்தார்கள். இரணியன் என்பவன்மாத்திரம் பயந்து மீனுருவடைந்து கடலுட்புகுந்தான். எ - று. (அ)

மன்னர் மன்னவ னிவைபெலாம் வினவியே மனத்தி
னுன்ன ருந்துயர் வேலைபுக் காற்றலா துழந்தா
னிந்ந கர்ப்படை யாவையும் வறந்தன வின்னுந்
துன்ன லாரிவ ணின்றன ரென்றிவை சொற்றார்.

(இ - ள்.) இவையனைத்தையும் அரசர்க்கரசன்கேட்டு மனத்தில் நினைத்தற்கரிய துன்பக்கடலின் முழுகி சகிக்கமாட்டாமல் வருத்தமுற்றான். இந்த நகரத்திலிருந்த சைனியங்களனைத்தும் அழிந்தன. இவ்வளவு செய்தும் பகைவர் இவ்விடத்திலேயே தங்கி இருக்கின்றார்கள். எ - று. (கூ)

சொற்ற வாசகம் வினவலுஞ் சூரியன் பகைஞ
னிற்ற வேகொலா நம்பெரும் வாழ்க்கையென் றிரங்கிச்
செற்ற மோடுதுன் பெதிரொதிர் மலைந்திடச் செங்கேழ்ப்
பொற்றை யன்னதன் னிருக்கையை யொருவினன் போந்தான்.

(இ - ள்.) பாநுகோபன் தூதுவர்கூறிய வாசகங்களைக் கேட்டவுடனே நமது பெரியவாழ்க்கைக ளழிந்தனவோவென்று வருந்திக் கோபமும் துன்பமும் ஒன்றுக்கொன்று (நான்முன்னே நான்முன்னே) என்று போர்புரியாநிற்பச் செந்நிறமான மலையான மேருவினையொத்த தனது மாளிகையைவிட்டு (விரைந்து) சென்றான். (கo)

போந்து கோநக ரணுகியே துன்பொடு புணர்ந்த
வேந்தன் மாமல ரடிகளை யுச்சியின் மிலைச்சி
யாந்த ரங்கமா மளியொடு முந்துநின் றவுண
ரேந்த லிம்மொழி கேண்மியா நன்கென விசைப்பான்.

(இ-ள்.) சென்று இராஜமாளிகையையடைந்து பாநுகோபன் துன்பத்தான் அரசனான சூரபன்மனுடைய சிறந்த மலரனைய பாதங்களைத் தலையிற்சூடி (வணங்கி)

மூடப்பட்ட அந்தரங்கமான அன்புடனே அவனெதிரே நின்று அசுரமன்னவனே! இவ்வசனத்தைநன்றாகக்கேள் என்று கூறுகின்றான். எ - று. (கக)

மாயை தந்ததொல் படையினாற் செறுநரை மயக்கித்
தூய நீர்க்கட லிட்டனன் சுரரது புக்ல
வாய காலையில் வேல்விடுத் தவர்தமை மீட்ட
சேயை வெல்வது கனவினு மில்லையாற் றெரியின்.

(இ - ள்.) எனக்கு மாயைப்பாட்டியளித்த பெரிய ஆயுதத்தால் நான் பகைவர்களை மயங்கச்செய்து நன்னீர்க்கடலிலிட்டேன்; அதனைத் தேவர்கள் சென்றுரைக்க உடனே தனது வேற்படையினைத்தூண்டி அவ்வீரர்களைத் திரும்ப வழைத்துக்கொண்ட குமரனை வெல்வதை ஆலோசிக்குமிடத்தில் சொப்பனத்திலும் முடியாத காரியம். எ - று. (கஉ)

தெரிந்த மற்றுனக் குரைப்பதென் முற்பகற் செல்வேல்
பொருந்து கைத்தலத் தாறுமா முகனொடு பொருது
வருந்தி வன்படை யாற்றலு மிழந்தனை வறிதா
யிரிந்து மற்றிவண் வருதலா லுய்ந்தனை யெந்தாய்.

(இ - ள்.) எல்லாமுணர்ந்த உனக்கின்றெந்தையே யான் எடுத்துக் கூறத்தக்க தொன்றுமின்றாம். கழிந்த தினத்தில் செவ்விய வேற்படையினையுடைய கைத்தலத்தோடுகூடின சிறந்த ஆறுமுகனொடு போர்புரிந்து துன்பமடைந்து பெரும் படையாற்றலுந் தொலைந்து சும்மா தோற்றுவிலகி இங்கு வந்தமையாற் பிழைத்தனை. எ - று. (கங)

ஏற்ற தோர்சிலை யிழந்தனை மானமு மின்றித்
தோற்று வந்தனை தொல்வரத் தியற்கையுந் தொலைந்தாய்
சீற்ற முற்றிலன் முருகவே ளவன்சினஞ் செய்யி
னாற்று மோவெலா வண்டமும் புவனங்க ளனைத்தும்.

(இ - ள்.) தகுந்ததான ஒரு விற்படையையும் இழந்து மானமுமில்லாமல் தோற்றுவந்தாய் அன்றியும் பழைய வரத்தின்றன்மையும் இழந்தாய். உன்னொடு போர் புரிந்தகுமாரவேள் கோபங்கொண்டானில்லை. அவன் கோபங்கொண்டிருப்பானாயின் சகலாண்ட புவனங்களும் இதுகாறுந் தரித்திருக்குமோ? (இரா). எ-று. (கச)

ஆர ணன்றனை யுலகொடு முண்டுமுன் னளித்த
கார ணன்றனி யாழியைக் களத்திடை யணிந்த
தார கன்றனை நெடியமால் வரையொடுந் தடிந்த
வீர வீரனை யாவரோ வன்மையால் வெல்வார்.

(இ-ள்.) ஐய! பிரமனையவன்படைத்த உலகத்துடன் விழுங்கிப் பின்னும அவைகளையெல்லாம் பழையபடியே படைத்துவைத்த காரணனான நாரணனுடைய ஒப்பற்ற சக்கரப்படையினை கண்டத்திலாபரணமாக அணிந்த தாரகாசுரனை நெடிய பெரிய கிரவுஞ்சமலையுடனே அழித்த வீராதிவீரனான குமரனை எவர்கள்தான் தங்கள்வன்மையினால் வெல்வார்கள்.—எ-று. (கரு)

புல்லி தாகிய விலங்கினைப் படுப்பவர் புதனுள்
வல்லி யந்தனக் குண்டியாய் மாய்ந்திடுங் கதைபோ
லெல்லை யில்பக லமரனா யலைத்திடும் யாமுந்
தொல்லை நாள்வலி சிந்தியே குமரனாற் றொலைந்தோம்.

(இ-ள்.) இழிவுபொருந்திய விலங்குகளைக்கொல்பவர்கள் புதரினுள் பெரும் புலிக்கு இரையாக இறப்பார்களென்றுகூறுங் கதையைப்போல அளவற்றகாலம் தேவர்களை வருத்தின யாமும் முன்னுளிலிருந்தவன்மைகளையிழந்து குமரனாலழிந்தோம்.

கோட லுஞ்சுனைக் குவளையுங் குளவியுங் குரவு
மேட லர்ந்திடு நீபமும் புனைந்திடு மிளையோன்
பாட லந்திற னுரைப்பதென் னுங்கவன் பணித்த
வாட லம்புயத் தண்ணலை வெலலவது மரிதால்.

(இ-ள்.) கோடன்மலரையும் சுனைக்குளவிகளையும் இதழ்விரிந்த கதம்பத்தையும் தரியாநின்ற குமரனுடைய பெரிய அழகியதிறமையை என்னென்று கூறப்போகின்றோம் இதுநிற்க. வெற்றிபொருந்திய தோளினனான வீரவாகுவை வெல்வதும் அரிதேயாம்.—எ-று. (கஎ)

நெடிது பற்பகல் செல்லினு நிரம்புவ தொன்றை
யிடைவி டாமலே முயன்றுபெற றிடுகின்ற தியற்கை
யுடல்வ ருந்தியுந் தங்களான் முடிவுறு வொன்றை
முடியு மீதெனக் கொள்வது கயவர்தம் முறையே.

(இ-ள்.) மிகவும் நீண்டகாலமானாலும் சாத்தியமாகின்ற ஒருகாரியத்தை இடையில்விடாமல் முயற்சித்து அதனை அடைதல் (நல்லவர்கட்கு இயற்கையாம். இவ்வாறன்றி, சரீரகட்டமுண்டாகியுந் தங்களான் முடியாத வொருகாரியத்தை இது முடியுமென்றுகொண்டு அதனை இயற்றுவது மூடர்களியற்கை.—எ-று. (கஅ)

ஆற்றன் மைந்தரை யிழந்தனை நால்வகை யனிகத்
தேற்ற மற்றனை யென்னுட னொருவனீ யிருந்தாய்
மேற்றி கழ்ந்தநின் குலத்தினை வேரொடு வீட்டக்
கூற்றம் வந்தது முணர்கிலை யிகலைமேற் கொண்டாய்.

(இ-ள்.) நீ மிக்கவன்மையாளரான மக்களனைவரையும் இழந்தனை; சதுரங்க சேனைகளையுடையானென்னும் உயர்வும் இல்லாதவனாகினை; என்னொடு ஒருத்தன் நீ இருக்கின்றாய் மேலாகவிளங்கிய நினதுகுலத்தை வேருடனழிக்க எமன் வந்திருத்தலையும் உணர்கின்றாயில்லை பகையையே மேற்கொண்டிருக்கின்றனை.—எ-று. (கக)

வெஞ்ச மஞ்செய வல்லவர் கிடைத்திடின் மிகவு
நெஞ்ச கந்தளிர்ப் பெய்துவ னேரலர் சமருக்
கஞ்சி னேனென்று கருதலை யரசநீ யின்னு
முஞ்சு வைகுதி யோவெனு மாசையா லுரைத்தேன்.

(இ-ள்.) வெவ்விய போர்புரிதற்கேற்றவர் கிடைத்தால் மிகவும் மனமகிழாநிற்பேன் யான் இன்றுபகைவர் போருக்கஞ்சினேனென்று கருதாம்த ; மன்னவனே ! நீ இன்னம் அநேககாலம் உய்ந்திருப்பையோ என்னும் ஆசையினால் உரைத்தேன்.

உறுதி யொன்றினி மொழிகுவன் பொன்னக ருள்ளார்
சிறைவி டுக்குதி நம்மிடைச் செற்றம தகற்றி
யறுமு கத்தவன வந்துழி மீண்டிடு மதற்பி
னிறுதி யில்பக னிலைக்குநின் பெருவள மென்றான்.

(இ - ள்.) இனி ஒரு உறுதி கூறுகின்றேன். நீ பொன்னுலகினரான தேவர்களுடைய சிறையை விட்டுவிடு (நீ அவ்வாறு செய்தால்) அறுமுகன் நம்மிடத்தில் வைத்திருந்த கோபத்தைவிட்டு தான் வந்த இடத்திற்குத் திரும்பச்செல்வான். அதற்

குப்பின் அழிவற்றகாலம் நின் பெருஞ்செல்வ நிலைத்திருக்கும் என்று பாநுகோபனுரைத்தான். எ - று. (௨௧)

வெம்பு தொல்கதிர் வெருண்டவ னுரைத்தசொல் வினவித்
தும்பை யந்தொடை மிலைச்சிய மணிமுடி துளக்கி
மொய்ம்பு மார்புங் குலுங்கிட முறுவலித் துயிர்த்து
நம்பி மந்திரச் சூழ்ச்சிநன் றெனெ நவில்வான்.

(இ-ள்.) சுடுகின்ற பெரிய உட்டினகிரணங்களை யுடைய சூரியனைக்கோபித்த பாநுகோபன் கூறிய வாக்கியத்தைக்கேட்டு தும்பைமலர் மாலையையணிந்த மணிமகுடத்தையசைத்துத் தோளு மார்புங் குலுங்கச்சிரித்துப் பெருமூச்சுவிட்டு நம்பி, நின் மந்திராலோசனை நன்றாயிருக்கிறது என்றுரைத் துரைப்பானாயினன். எ-று. ()

என்னிவை யுரைத்தாய் மைந்த வின்றியா னெளிய னாகிப்
பொன்னுல குள்ள தேவர் புலம்புகொள் சிறையை நீக்கின்
மன்னவர் மன்ன னென்றே யாரெனை மதிக்கற் பாலா
ரன்னது மன்றி நீங்கா வசையுமொன் றடையு மாதோ.

(இ - ள்.) மகனே! நீ என்னை இவ்வண்ணமுரைத்தனை; நீ சொன்னவண்ணமே யான் இன்று எளிமையானவனாய் பொன்னாட்டிலுள்ள தேவர்களின் துன்பகரமானச் சிறையை விடுவேனானால் என்னை இவனரசர்க்கரசனென்று யாவர்மதிக்கப்போகின்றார்கள். அதுவுமல்லாமல் நீங்காத வொருவசைமொழியு மெனக்குண்டாகும்.

கூனொடு செவிடே பங்கு குருடுபே ருமை யானோ
ருனம தடைந்த புன்மை யாக்கையோ டொழியு மம்மா
மானம தழிந்து தொல்லை வலியிழந் துலகில் வைகு
மேனையர் வசையின் மாற்ற மெழுமையு மகல்வ துண்டோ.

(இ - ள்.) கூனும் செவிடும் முடமும் குருடும் பேருமையும் ஆகிய இவைகளொருவனுக்கு உண்டான இகழ்ச்சியாயினும் அவை அவனதவ்வுடம்போடழியும். இதுநிற்க, மானமழிந்து முன்னுள்ள வன்மையும் இழந்து உலகினில் வாழுகின்ற மற்றையர்களின் வசையின்றன்மை எழுபிறப்பிலுமகலுமோ? (அகலாவே.) எ - று.

தேவரு மலர்மே லோனுஞ் செங்கண்மான் முதலா வுள்ள
வேவரு மாணை போற்ற விருந்தர சியற்ற லுற்றேன்
மூவரின் முதலா முக்கண் மூர்த்திதன் வரங்கொண் டுள்ளேன்
மேவலர் சிறையை யின்று விடுவனோ விறலி லார்போல்.

(இ-ள்.) தேவர்களும் கமலாசனனான பிரமனும் செங்கண்மால்முதலிய வனைவரும் என்னாணைப்படி நடக்குமாறாக இருந்து அரசுசெய்கின்றேன்; அன்றியுந் திருமூர்த்திபரான சிவபெருமானிடத்தில் வரமும் பெற்றிருக்கின்றேன் அவ்வண்ணமிருக்க இன்று வன்மையிழந்தவர்களைப்போல யான் பகைவர்சிறையை விடுவேனோ?—எ - று.

பேரெழி லிளமை யாற்றல் பெறலருஞ் வெறுக்கை வீர
நேரறு சுற்றம் யாக்கை யாவையு நிலைய வன்றே
சீரெனப் பட்ட தன்றோ நிற்பது செறுநர் போரி
லாருயிர் விடினும் வானோ ரருஞ்சிறை விடுவ துண்டோ.

(இ-ள்.) மிக்கவழகும் இளமையும் ஆற்றலும் கிடைத்தற்கரிய செல்வமும் வீரமும் ஒப்பற்ற சுற்றமும் உடலும் ஆகிய எவையும் நிலையானதன்றே புகழென்னுமொன்றுமாத்திரமன்றோ அழியாதுநிற்பது ஆதலால் யான் பகைவர்போரி லரிய உயிரை விட்டாலும் தேவர்களினரியசிறையை விடுவேனோ.—எ-று. (௨௬)

இறந்திட வரினு மல்லா லிடுக்கணொன் றுறினுந் தம்பாற்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரியரானோர்
சிறந்திடு மிரண்டு நாளைச் செல்வத்தை விரும்பி யானுந்
துறந்திடேன் பிடித்த கொள்கைசூரனென் றொருபேர் பெற்றேன்.

(இ-ள்.) சாகவந்தாலும் அன்றித் துன்பநேர்ந்தாலும் பெரியவர்கள் தம்மிடத்துண்டான மானத்தைவிடமாட்டார்கள். சிறந்திடுமிரண்டுநாளைய இந்தச்சம்பத்தைக் கருதி யானும் என்பிடிவாதத்தைவிடேன் சூரனென்று ஒருபெயர் பெற்றுள்ளேன்.

இன்னுமோ ரூழி கால மிருக்கினு மிறப்ப தல்லாற்
பின்னுமிங் கமர்வ துண்டோ பிறந்தவ ரிறக்கை திண்ண
மின்னெனும் வாழ்க்கை வேண்டி விண்ணவர்க் கஞ்சி யிந்த
மன்னுயிர் சுமக்கி லேன்யான் மாயவன் றனையும் வென்றேன்.

(இ-ள்.) இன்னுமொரு ஊழிகாலமிருந்தாலும் இறந்துபோவதே அன்றிப் பின்னருமிங்கே வாழ்வதுண்டோ பிறந்தவர்சாதல் நிச்சயம் மின்னலனைய வாழ்க்கையைவிரும்பி இத்தேவர்கட்குப்பயந்து இந்த உயிரைச் சுமவேன் யான் திருமாலையும் வென்றேன்.—எ-று. (௨௮)

அஞ்சினை போலு மைந்த வளியநின் னிருக்கை போகித்
துஞ்சுதி துஞ்ச லில்லா வரத்தினேன் றொலைவ தில்லை
நெஞ்சிடை யிரங்கி யாது நினையலை நேர லார்மேல்
வெஞ்சமர் புரியப் போவே னென்றனன் வெகுளி மேலான்.

(இ-ள்.) மகனே நீ பயந்தனைபோலும் குளிர்ச்சி பொருந்திய நின் மாளிகையையடைந்து தூங்கக்கடவை, அழிவற்ற வரத்தினை யுடைய யான் அழியமாட்டேன் நீ இதற்காக ஒன்றும் நினையாதே, பகைவர்மீது கொடும்போர்புரியச் செல்கின்றேன் என்று கூறினன் கோபமிக்க சூரபன்மன். எ-று. (௨௯)

இவ்வகை தாதை கூற விரவிதன் பகைஞன் கேளா
வுய்வகை யில்லைபோலு முணர்ந்தில னுரைத்த தொன்று
மெய்வகை விதியை யாரோ வென்றவர் வினையிற் கேற்ற
செய்வகை செய்வே னென்னச் சிந்தைசெய் தினைய சொல்வான்.

(இ-ள்.) இவ்வண்ணந் தந்தையான சூரபன்மனுரைக்க அதனைப் பானுகோபன் கேட்டு உய்யும்வகையில்லையாக விருக்கலாம் யான் கூறியவை எதனையும் உணர்ந்தானில்லையாக விருக்கலாம் யான் கூறியவை யெதனையும் உணர்ந்தானில்லை; உண்மையான விதியினை யாவர் வென்றவர் வினைக்கேற்ற செய்கையைச் செய்கின்றேனென்று மனதிலெண்ணி யிதனைக் கூறுகின்றான்.—எ-று. (௩௦)

அறிவொரு சிறிது மில்லே னடியனேன் மொழிந்த தீமை
யிறையது முள்ளங்கொள்ளா தெந்தைநீ பொறுத்தி கண்டாய்
சிறியதோர் பருவப் பாலர் தீமொழி புகன்றா ரேனு
முறுவல்செய் திடுவ தன்றி முனிவரோ மூப்பின் மேலோர்.

(இ-ள்.) அறிவென்பது சற்றுமில்லாத அடியேன் கூறிய கொடுமொழிகளைக் கொஞ்சமேனு மனதில் வையாமல் எனது தந்தையே! நீ பொறுக்கவேண்டும். சிறிய பருவத்தினை யுடைய பாலர்கள் கொடுமொழி கூறினர்க ளாஞலும் அதனைக் கேட்டு அறிவின் மிக்கவர்கள் சிரித்துவிடுவார்களே யன்றி கோபங் கொள்வார்களோ? (இல்லை).—எ-று. (௩௧)

அத்தநீ வெகுள னம்மூ ரலைத்திடுங் கணங்க டம்மை
வித்தக வன்மை சான்ற விறற்புய ேனாடு மட்டுன்
சித்தமு மகிழு மாறு செய்குவன் விடுத்தி யென்னுக்
கைத்தல முகிழ்த்துத் தீயோன் கழலிணை பணிதல் செய்தான்.

(இ-ள்.) என்னத்தனே! நீ சிற்றங்கொள்ளாதே நமதிந்த நகரத்தை வருத்திய கணங்களை தூதுபோந்திறத்தில் வன்மையாளனுன சிறந்த வீரவாகுவுடனே கொன்று நின்மனமு மகிழுமாறு செய்வேன் என்னை அனுப்பக்கடவை என்று கைகளைக் குவித்துக் கொடியவனுன சூரபன்மனைப் பாநுகோபன் வணங்கினுன்.—எ-று. (௬௨)

பணிந்திடு கின்ற காலைப் பதுமைதன் கேள்வன் செற்றந்
தணிந்தன னுவகை பெற்றுன் றனயநின் னுள்ளம் போர்மேற்
றுணிந்தது போலு நன்றுற் றுன்னலார் தம்மை வெல்வா
னணிந்திடு தானை யோடு மகனுதி யைய வென்றுன்.

(இ-ள்.) வணங்கினவுடனே பதுமகோமளையின் மணுளனுன சூரபன்மன் கோபநீங்கிச் சாந்தமடைந்தவனுய்ப் பாநுகோபனைப்பார்த்து மகனே நின்மனம் போர்புரியச் செல்லுதற்குத் துணிந்ததா நல்லது, ஐயனே நீ பகைவர்களை வெல்லுமாறு அலங்கரிக்கப்பட்ட சைனியங்களுடனே போகக்கடவை யென்று கூறினுன்.—எ-று. (௬௩)

தொடையசை காமர் பொற்றேட் சூரிது புகல மைந்தன்
விடையது பெற்று மீண்டு மேதகு துயரி னேடு
கடிதுதன் கோயில் புக்குக் கடவுளர் பலருந் தந்த
வடனெடும் படைக ளெல்லா மாய்ந்தன னெடுத்தா னன்றே.

(இ-ள்) மாலைகளசைகின்ற சுவர்ணமயமான புயங்களையுடைய சூரபன்மன் இதனை யுரைத்தலும் அவன் மகனுன பாநுகோபன் விடைபெற்றுத் திரும்பி மிக்க துன்பத்துடன் விரைவாகத் தனதரண்மனையை யடைந்து தனக்கு முன்னுளில் தேவர்களிற் பலர் கொடுத்த வெற்றியும் நெடுமையுமுள்ள ஆயுதங்களனைத்தையுந் தேடியெடுத்தனன்.—எ-று. (௬௪)

மையுறு தடங்கண் மாதர் வனமுலை திளைக்கு மார்பின்
மெய்யுறை யொன்று வீக்கி விரன்மிசைப் புட்டில் சேர்த்திக்
கையுற வொருவில் லேந்திக் கைப்புடை கட்டி வாளி
பெய்யுறு மாவ நாழி பின்னுற வீக்கி யாத்தான்.

(இ-ள்.) மைதீட்டிய நெடிய கண்ணினரான பெண்களி னழகிய தனபாரங்களழுந்திய மார்பினிற் கவசமொன்று தரித்துக் கைவிரல்களுக்கெல்லாம் உறையிட்டுத் தன் கையாற்பொருந்த ஒரு வில்லினை யெடுத்துக்கொண்டு கைகளுக்குங் கவசமணிந்து அம்புகளை அடைத்துவைக்கின்ற அம்புக்கூட்டினை பிடரியில்வைத்துக் கட்டினுன்.

சேமமா யுள்ள வெண்ணில் படைகளுந் தேருஞ் சுற்றத்
தாமநீள் கவிகை வேந்தன் றனிமகன் கடையிற் சென்று
காமர்சூழ் கனக வைய மொன்றின்மேற் கடிது புக்கா
னேமமால் வரையி னும்ப ரொழிலியே றணைந்த தேபோல்.

(இ-ள்.) வைப்பாகவுள்ள அளவற்ற படைகளும் இரதங்களுந் தன்னைச் சூழ்ந்துவரத் தொங்கவிட்ட மணிமாலைகளையுடைய குடையினனுன அரசனதொப்பற்ற மைந்தனுன பாநுகோபன் கடைவாயிலை யடைந்து அழகுபொருந்திய பொன்மயமான தேரின்மீது பெரிய பொன்மலையின்மீது சிறந்த கரிய மேகமேறினுற்போல விரைந்தேறினுன்.—எ-று. (௬௬)

மற்றது காலை தன்னில் வாம்பரி நிரையுந் தேருங்
கொற்றவெங் களிறும் வீரர் குழாங்களுங் குணிப்பில் வெள்ளஞ்
சுற்றிய வியங்கண் முற்றுந் துவைத்தன துவச கோடி
செற்றின விரவி செல்லுந் தேயம தடைத்த வன்றே.

(இ-ள்.) அப்பொழுது தாவாநின்ற குதிரைக்கூட்டங்களும் இரதங்களும் வெற்றியும் வெங்கண்மையும் பொருந்தின யானைகளும் வீரர்கூட்டங்களும் கணக்கற்றனவாகிய வெள்ளங்கள் சூழ்ந்தன. உடனே வாச்சியங்களாகவுள்ளன வனைத்தும் முழக்கப்பட்டன; அநேககோடி கொடிகள் நெருங்கின! அதனால் சூரியனுலாவு மிடம் அடைபட்ட.—எ-று. (கூஎ)

தேரிடைப் புகுந்து நின்றோ னிப்பெருஞ் சேனை வெள்ளம்
பாரிடைக் கொண்டு நின்ற புணரியிற் பாங்கர் சூழச்
சூரிடைக் கொண்ட வன்புந் துயரமு முளத்தை யுண்ணப்
போருடைத் திசையை நோக்கிப் பொள்ளெனப் போத லுற்றான்.

(இ-ள்.) தேரின்மீதேறி நின்ற பாநுகோபன் இந்தப் பெரிய வெள்ளக்கணக்கான சேனைகள் பூமியினிடத்துநின்ற கடலைப்போல அருகிற் சூழச் சூரபன்மனைக் குறித்தவனிடத்துத் தான் வைத்த அன்பும் அந்த அன்புவிக்கினத்தாற் கெடுகின்றதே என்றுண்டான துன்பமும் மனத்தை யுண்ணப் போர்புரியும் இடத்தைப்பார்த்து விரைவாகச் சென்றான்.—எ-று. (கூஅ)

வேறு.

மாவாழ் தெருவு பலகோடிகள் வல்லை நீங்கி
மேவார் பொருத களத்தெல்லை விரைந்து நண்ணி
மூவா யிரரும் பிறரு முடிவான நோக்கி
யாவா வெனவே யிரங்கிக்கலுழ்ந் தல்லல் செய்வான்.

(இ-ள்.) திருமகள் விலாசம்பொருந்திய பல கோடிவீதிகளை விரைவாகக் கடந்து பகைவர்கள் போர்புரிந்த போர்க்களத்தைச் சீக்கிரமாகஅடைந்து அவ்விடத்தில் மூவாயிரவரும் மற்றையவர்களும் இறந்துகிடத்தலைப்பார்த்து ஆவா என்றுரைத்து இரங்கி அழுது துன்புற்றான்.—எ-று. (கூகூ)

தாளாண்மை மிக்க வசுரன்மகன் றூங்கல் செல்லா
நீளா குலத்தி னழிகின்றத னெஞ்சு தேற்றிக்
கேளார் தொகைமேற் பெருஞ்சீற்றங் கிளர்ந்து செல்லச்
சூளா வினைய தொருவாசகஞ் சொல்ல லுற்றான்.

(இ-ள்.) மிகுந்த முயற்சியினையுடைய சூரபன்மனுக்கு மகனான பாநுகோபன் அதிகமான துன்பத்திலழிகின்ற தனது மனத்தை ஒருவாறுதேற்றிப் பகைவர்மீது மிகுந்த கோபமானது அதிகமாகவராநிற்பச் சபதமாக விவ்வாறான ஒருமொழியை யுரைத்தான்.—எ-று. (சு0)

மாசாத்த ரன்ன வயப்பூதரை மாய வாட்டித்
தேசார்க்கும் வேலோற் கிளையோனைச் செகுத்தி டேனேற்
காசாற் பொலியு மகலல்குலின் காமம் வெஃகி
வேசாக்கள் பின்செல் வறியானில் விளங்க யானே.

(இ-ள்.) மகத்தான சாத்தர்களையொத்த வெற்றிபொருந்திய பூதர்களைச் சாகவடித்து, ஒளிபொருந்திய வேலாயுதனுக்கிளையவனான வீரவாகுவைக்கொல்லாதுபோவே

னுல் யான் பொன்னணிகளால் விளங்குகின்ற அகன்ற அல்குலின் காமத்தை விரும்பி வேசைகள் பின்னே செல்கின்ற தரித்திரனைப்போல விளங்கக்கடவேன். (சுக)

என்னு வொருசூ ளிசையா வவனேக லோடு
மன்னன் வரவு தனைநோக்கி யவுணர் தங்கண்
மன்னகு நின்ற மகனகு மலைவதற்குப்
பின்னர் வருவா ரெனப்பூதர்கள் பேச லுற்றார்.

(இ-ள்.) என்று இவ்வண்ணமான ஒருசபதவாக்கியத்தை யப்பாநுகோபனுரைத்துச் செல்லுதலும் அவனது வருகையைப்பார்த்துப் பூதர்கள் இதோ வருபவன் அசுர அரசனான சூரபன்மனே, அல்லது இறவாதெஞ்சிநின்ற மகனான பாநுகோபனே வேறே யாவர் வரப்போகின்றார்கள் என்று கூறினார்கள்.—எ-று. (சுஉ)

பேசுற்ற காலை யவுணப்படை பேர்ந்து சென்றாங்
காசற்ற பூதப்படை தம்மெதி ரார்த்து நேரப்
பூசற் பறைக ளியம்புற்றன பூழி பொங்கி
மாசற்ற வானத் திசையோடு மறைத்த தன்றே.

(இ-ள்.) இவ்வாறு பேசுகின்ற சமயத்தில் அசுர சைனியங்கள் நடந்து சென்று அங்குப் போர்க்களத்தில் நின்ற குற்றமற்ற பூதப்படைகண்மீது ஆரவாரித்துக் கொண்டெதிர்த்தலும் உடனே போர்ப்பறைகளடிக்கப்பட்டன. புழுதியானது பொங்கிக் களங்கமற்ற ஆகாயத்தைத் திசையோடு மறைத்தது.—எ-று. (சுங)

ஆர்த்தார் கிடைத்தா ரடற்பூத ரடுக்கன் மாரி
தூர்த்தார் படைகள் சொரிந்தார் மரந்தூவ லுற்றார்
பார்த்தா ரவுண ரெழுநாஞ்சில் பாசு தண்டஞ்
சீர்த்தாகிய வில்லுமிழ் வாளி செலுத்தி விட்டார்.

(இ-ள்.) அந்தசமயத்தில் வன்மைமிக்கபூதர்கள் ஆரவாரஞ்செய்துகொண்டு நெருங்கிவந்து மலைகளைப்பெயர்த்தெடுத்து மழை பெய்வதைப்போற் பெய்தார்கள். அன்றியும் ஆயுதங்களை விட்டார்கள். மரங்களைப் பறித்தெறிந்தார்கள். (இவர்களிவ்வண்ணஞ் செய்தலை) அவுணர்கள் கண்டு எழுக்களையும் கலப்பைகளையும் கண்ட கோடரிகளையும் தண்டங்களையும் கீர்த்திபொருந்திய விற்களில்நின்றும் உமிழாநின்ற அம்புகளையும் செலுத்திவிட்டார்கள்.—எ-று. (சுச)

வேறு.

பொங்கு வன்மைகொள் பூதரும்
வெங்கொ டுந்தொழில் வினையரு
மிங்கிவ் வாறெதி ரேற்றிடா
வங்கண் வெஞ்சம ராற்றினர்.

(இ-ள்.) மேலும்மேலு மதிகரிக்கின்ற வன்மைபொருந்திய பூதர்களும் வெவ்விய கொடிய தொழிலினையுடைய அசுரரும் இவ்விடத்தி லிவ்வண்ணம் எதிர்த்து மிகவும் பெரியதான போர் புரிந்தார்கள்.—எ-று. (சுரு)

அரிய வொண்பக லல்லொடே
பொருது பார்மிசை புக்கபோ
லிருதி றத்தரு மிகலியே
விரவு பூசல் விளைத்தனர்.

(இ-ள்.) அருமையான ஒள்ளிய பகற்காலமானது இராக்காலத்துடனே போர் புரிந்துகொண்டு பூமியில்வந்தாற்போல சூரபன்மன்மைந்தனான பாநுகோபன் சைனி

யங்களும் குமரக்கடவுளின் சேனநாயகனன வீரவாகுவின்சைனியங்களும் பகைத்துக்கைகலந்துசண்டை செய்தார்கள்.

உரங்கொள் பாரிட ருய்த்திடு
மரங்கள் குன்றுகண் மாண்டிட
நெருங்கி நேர்ந்த நிசாசரர்
சரங்கள் கொண்டு தடிந்தனர்.

(இ-ள்.) வன்மைபொருந்திய பூதவீரர்கள் அசுரவீரர்கண்மீது விடுகின்ற பலவகையான மரங்களும் மலைகளும் அழியும்வண்ணம், பகைவர்களான பூதவீரர்கண்மீது நெருங்கி எதிர்த்தஅசுரர்களான போர்வீரர்கள், அம்புகளாலடித்தழித்தார்கள்.—எ-று.

விற்கொ ளம்பினை வேலினை
யெற்கொ ளுஞ்சி லெழுக்கதை
வர்க்க மானதை வன்கணர்
கற்களாற்றுகள் கண்டனர்.

(இ-ள்.) பாநுகோபனுடைய சேனைவீரர்கள்விட்ட வில்லிற்பொருந்திய அம்புகளும் வேற்படைகளும் ஒளிபொருந்தின நாஞ்சில்களும் கலப்பைகளும் எழுக்களும் தண்டங்களும் ஆதியகூட்டங்களை (எதிர்த்து நின்று அங்குப் போர்புரிந்த) அஞ்சாமையினை யுடைய பூதவீரர்கள்மலைகளினல் தூளாகச்செய்தார்கள்.—எ-று. (சஅ)

சிவந்த பங்கிகொள் சென்னிக
ணிவந்த மொய்ம்பு நிலத்துகக்
கவிழ்ந்து ருண்டு களத்திடை
யவிந்த பூத மனந்தமே.

(இ-ள்.) இவ்வாறு நடந்த அந்தப் பெரியபோரில் செந்நிறமான உரோமங்களையுடைய தலைகளும் உயர்ந்த தோள்களும் பூமியில்விழக்கவிழ்ந்து விழுந்து உருண்டு அப் போர்க்களத்திலிறந்த பூதங்களனேகங்கள்.

நெஞ்ச மொய்ம்பு நெடும்பதஞ்
செஞ்செ வித்தலை சிந்தியே
யெஞ்சு தானவ ரெண்ணிலார்
துஞ்சி னூர்பழி துஞ்சவே.

(இ-ள்.) நெஞ்சமும் மார்பும் நெடியகாலும் செவ்விய செவியுந் தலையுஞ் சிதறியிருந்த அசுரர்களிலு மனேகர் பழிக்குப் பழிநீங்க (வீரவாகுதேவனும் மகேந்திரபுரிக்கிளவரசனன பாநுகோபனும் நிற்கும் அப்போர்க்களத்தில்) விழுந்து இறந்தார்கள்.

பாய்ந்த வாசிகள் பாரிடங்
காய்ந்த யானைகள் காசினி
யேய்ந்த தேர்க ளியாவையு
மாய்ந்து பாரின் மறிந்தவே.

(இ-ள்.) பூதர்களும் அசுரர்களுமான இருதிறத்தருஞ் செய்த தொந்தயுத்தத்தில் பகைவர்மீது பாய்ந்த குதிரைகள் இறந்து பூமியில் விழுந்தன; பூதங்கள் சீறியடித்த வடிபட்ட யானைகள் பூமியில் விழுந்திறந்தன; தேர்களனைத்தும் பூமியில் விழுந்தழிந்தன.—எ-று. (௫௧)

சோரி தூங்கிய தொல்பிண
மேரு விண்ணை விழுங்கின

காரி யூர்தி கருங்கொடி
யோரி கங்க முலாயவே.

(இ-ள்.) இரத்தம்வடிகின்ற பெரிய பிணமலை வானைமூடின; அப்படி விழுந்திறந்து பிணங்கள் மலைபோல குவிந்துகிடக்கின்ற அவ்விடத்திற் பிணவூன்களையுண்ணுமாறு வைரவன் வாகனமென்னும் நாய்களும் கரியகாகங்களும் ஓரிகளும் பருந்துகளுமுலாவின. (ருஉ)

இந்த வாறிரு பாலரும்
வந்து நேர்ந்து மலைந்திடப்
புந்தி நோவரு பூதர்தம்
முந்து தூசி முரிந்ததே.

(இ-ள்.) அந்தப் பெரிய போர்க்களத்தில் இவ்வண்ணம் பிணங்கள்விழ நாய் கழுகு பூதம் பருந்து முதலியன மொய்க்க விருபுறத்தவர்களும்வந்து எதிர்த்துப் போர்புரிய வீரவாகுவின்மனைவியாதியற்றபூதர்களதுமுன்னேநின்ற தூசிப்படைமுரிந்தது.

தாழு மொன்னலர் தாக்கலர்
னீள்கொ டிப்படை நெக்கிடக்
கூழை நின்றிடு கூளிக
ளாழி யென்ன வடுத்தவே.

(இ-ள்.) பிறப்பொழுக்கங் குடிமை முதலியவைகளிற் றாழ்வடைந்த அசுரசைனியங்கள் முயற்சித்து நின்று போர்புரிதலால் தங்களுடைய நீண்ட கொடிப்படையான பூதப்படைபின்னிடக் கூழைப்படையில் நின்ற கூளிப்படைகள் கடலுடைந்தாற்போல ஆரவாரித்துக்கொண்டு நெருங்கி வந்தன.—எ-று. (ருச)

புடைநி ரம்பிய பூதர்வந்
திடைவி டாதெதி ரேற்றிடா
வடவின் மேதகு மவுணமாக்
கடலை நின்று கலக்கினர்.

(இ-ள்.) அருகிற் கூழைப்படையில் நெருங்கிநின்ற (குமாரக்கடவுளி னிளையவரான வீரவாகுதேவருடைய சேனையான) பூதர்கள் வந்து இடையில் விடாமற்சென்றெதிரேயெதிர்த்து வன்மையின் மிக்கு நின்ற பெரிய அந்த அசுர சைனியமாகிய கடலினைக் கலக்கினர்கள்.—எ-று. (ருரு)

ஒடிந்த தேர்க ளுலந்துபார்
கிடந்த யானை கிளர்ந்தமா
மடிந்த தானவர் மாப்படை
தடிந்து லாயினர் சாரதர்.

(இ-ள்.) பூதர்கள் முயற்சித்து நின்று போர்புரிந்தமையால் எதிரிகளின் தேர்களொடிந்தன; யானைகள் தமது மதவன்மை முதலிய நீங்கி இறந்து பூமியிற் கிடந்தன; ஓடுதன் முதலியவற்றிற் சிறந்த குதிரைகளிறந்தன; அன்றியு மற்றுள்ள பெரிய காலாட்படையான அசுரசைனியங்களையும் கொன்றுலாவினர்கள்.—எ-று. (ருசா)

வேறு.

அதிருங் கழல்சேரவுணப் படைகண்
முதிருங் குறளெற் றமுடிந் திடலு

மெதிருஞ் சமரத் திடையெய் தியதோர்
சுதிரின் பகையங் கதுகண் டனனே.

(இ-ள்.) சத்தியாநின்ற வீரகண்டையணிந்த காலினவான அசுரசைனியங்கள் முதிர்ந்த பூதப்படைகள் அடிக்க அதனாலிறத்தலும் இருதிறத்தினரு மெதிர்த்து நின்று போர்புரிகின்ற போர்க்களத்திற்கு வந்த பாநுகோப னதனைப்பார்த்தான்.—எ-று.

சிந்தாய் வருமிச் சிலசா ரதரே
நந்தா னையெலா நலிகின் றனரோ
வந்தா வினிதென் றடுதேர்கடவா
வந்தான் விரைவா விமையோர் மறுக.

(இ-ள்.) சிறிய வுருவினவாகவந்த விந்தச் சிலபூதர்களா? நமது சைனியங்களை யெல்லாம் கொல்கின்றனர். ஓ அந்தா! நன்றென்று அமைக்கப்பட்ட இரதத்தினை ஓட்டுவித்துக்கொண்டு தேவர்களஞ்சும் வண்ணம் விரைவாக வந்தான்.—எ-று. (ருஅ)

கடிதாய் வருகாலொடுகா ரெழிலி
படிமே லுறவே படர்கின் றதுபோற்
கொடிதா கியவிற் குனியா முனியா
வடிவா ளிகடு யவுணன் வரலும்.

(இ-ள்.) வேகமாக வருகின்ற காற்றினுடன் கரிய மேகம் பூமியின்மீது செல்லுமாறுபோல அசுரனான பாநுகோபன் கொடியதான தனது வில்லினைவளைத்து (நாணியேற்றிக் குணத்தொனிகண்டு)ச் சீறிக்கூரிய அம்புகளை விட்டுக்கொண்டு வந்தான்.—எ-று. (ருகூ)

வண்டார் தெரியல் வலியோன் வரவைத்
தண்டா தமர்செய் திடுசா ரதர்கள்
கண்டா ரெதிரே கடிதே நடவா
வண்டார் தொகையச் சுறவார்த் தனரே.

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கின்ற மலர்மாலையணிந்த வன்மையாளனான பாநுகோபனுடைய வருகையைத் தடையின்றி நின்று போர்புரிகின்ற பூதவீரர்கள்பார்த்து அவனெதிரே விரைவாக நடந்து சென்று பகைவர்கூட்டங்க ளஞ்சுமாறு ஆரவாரித்தார்கள்.—எ-று. (சூ0)

தருவுங் கதையுந் தருசூ லமுமால்
வரையுங் கொழுவு மழுவு மெழுவுஞ்
சொரிகின் றனர்பல் வளனுந் தொலையா
வெரியின் மிசையே யிடுமந் தணர்போல்.

(இ-ள்.) தம்மதான சகலபதார்த்தங்களையும் வேண்டாமென்றுவெறுத்துத் தீயிலிட்டெரிக்கும் விரத்தரான வந்தணரைப்போல மரங்களையும் தண்டங்களையும் சூலங்களையும் பெரிய உலக்கைகளையும் கொழுக்களையும் மழுக்களையும் எழுக்களையும் பாநுகோபன்மீதுவிடுகின்றார்கள்.—எ-று. (சூக)

தொடுகின் றகழற் றொகுசா ரதர்கள்
விடுகின் றவெலா மிசைவந் திடலு
மடுகின் றசினத் தவுணன் றழலிற்
படுகின் றசரம் பலதூண் டினனே.

(இ-ள்.) கட்டிய கழலினராகக் கூடிநின்ற பூதவீரர்கள் விட்டனவாகிய மலைமரமம்பு முதலியவனைத்தும் தன்மீது வருதலும் பகைவர்களைக் கொல்லுகின்ற சீற்

நத்தினையுடைய அசுரனான பாநுகோபன் அக்கினியைப்போல சென்றுபடத்தக்க வெவ்விய அக்கினியாஸ்திரங்களை விட்டனன்.—எ-று. (சூஉ)

பணிபட் டசனற் படைதூண் டுதலுந்
திணிபட் டகணத் திறலோர் வரைக
ளணிபட் டதருக் குலமா தியெல்லாந்
துணிபட் டனவே துகள்பட் டனவே.

(இ-ள்.) போர்புரியுந் தொழிலமைந்த கனற்படையைப் பாநுகோபன் விடுதலு ம்நெருங்கிநின்ற திறலாளரான கணங்கள் விட்ட மலைகளும் அழகுபொருந்திய மரவரி சைகளும் முதலிய வனைத்தும் பல துணிகளாகிப் பின்னர்த்துகளாகவாயின.—எ-று. †

கல்லுந்தருவுங் கதையும் பிறவுஞ்
சொல்லுந் திறலுந் துகள்பட் டிடலும்
வெல்லுந் தகுவன் மிகுசா ரதாமேற்
செலலும் படிவெங் கணைசிந் தினனே.

(இ-ள்.) கற்களு மரங்களும் தண்டங்களு மற்றை யவைகளும் சொல்லாநின்ற மற்றைய வன்மைகளும் அழிதலும் பகைவர்களைப் போரில்வெல்கின்ற அசுரனான பா நுகோபன் மிக்க பூதர்மீது செல்லுமாறு வெவ்விய வம்புகளைப்பின்னும் விட்டனன்.

சிந்துற் றிடுசெங் கனல்வெங் கணைகள்
பொந்துற் றிடுகின் றபுயங் கமெனா
வந்துற் றுடன்முற் றும்வருத் துதலா
னொந்துற் றனரற் றனர்நோன் மையெலாம்.

(இ-ள்.) சிதறுகின்ற செங்கனன்மயமான வெவ்வியவம்புகள் மரப்புடவிற் பொருந்திய பாம்பைப்போல விரைந்துவந்து உடன்முழுமையும் வருத்துதலால் வரு த்தமுற்று (தைரியத்தோடு நின்று போர்புரிந்த பூதவீரர்கள்) வன்மையை யெல்லாம் இழந்தார்கள்.—எ-று.

விடுகின் றகனற் கணைவெந் திறலோ
ருடலம் புழைசெய் திடவுற் றனராற்
படருங் குறியோன் கதைபக் றுளையா
வடுதொல் கிரவுஞ் சமதா மெனவே.

(இ-ள்) பாநுகோபன் விடுகின்ற அக்கினியாஸ்திரம் வெவ்விய தன்மையினை யுடைய பூதர்களி னுடலங்களைப் பல நூறு துளைகளாகச்செய்ய வவர்கள் கையிலினி ன்றும் பொதிகைக்குச் சென்ற அதித்திய முனிவனுடைய கைத்தண்டமானது பல தொளைகளாகச் செய்த கிரவுஞ்சமலையைபோல நின்றார்கள்.—எ-று. (சூசு)

தெரிகுற் றகனற் கணைசென் றுபுகப்
பொருகொற் றமகற் றியபூ தர்மிசைப்
பெருகுற் றதுசோ ரிபெருங்கருவிண்
டுருகுற் றிடுசெம் பொழுகும் படிபோல்.

(இ-ள்.) பெரிய மூசையானது உடைந்து உருகிய செம்புநீரானது ஒழுகிய தனைப்போல பாநுகோபன் தேடி யெடுத்துவிட்ட அக்கினியாஸ்திரமானது போர்புரி யாநின்ற வீரமிகுத்த பூதர்கள்மீது சென்றுபட அவர்களுடலங்களினின்றும் இரத்தம் பெருகியது.—எ-று. (சுஎ)

கதிருங் கனல்வெங் கணைசா ரதர்மெய்
புதைகின் றழிசெம் புனல்வந் தெழுவ
வுதிரம் பிறவுற் றிடுதீ யுறவா
யெதிர்வந் தவைதன் னிடனுய்ப் பதுபோல்.

(இ-ள்.) ஒளிவீசாநின்ற அக்கினியாஸ்திரம் பூதர்கள்மீது பட்டவுடனே இரத்தம் தோன்றுநிற்பன எதுபோலுமெனின் இரத்தமானது பொருந்தியதீக்கு நேசமாதலால் தன்னை நாடிவந்த அதனைத் தாமெதிரேற்குமாறுபோலவாம்.—எ-று. (சுஅ)

விடமெய்க் கணைமா ரிகடம் மிசையே
படவெய்த் தனர்சிந் தைபதைத் திடுவார்
கடவுட் கதிரைக் கனலுங் கொடியோற்
குடைவுற் றனரா லுறுபூ தரெலாம்.

(இ-ள்.) விட்ட வவ்வம்புமழைகள் தங்கள்மீது பட அதனால் இளைத்து மனந்துடித்துத் தெய்வரூபமான சூரியனைக் கோபித்த கொடியவனான பானுகோபனுக்கு உடைந்தவர்களானார்க ளங்குநின்ற பூதர்களெல்லாம்.—எ-று. (சுக)

வேறு.

நிலைய ழிந்து நெடுங்கடற் பாரிடந்
தொலைய முன்னந் தொலைந்திடு தானவர்
வலிதெரிந்து வயம்புனை தானவர்
தலைவன் முன்வந்து சார்ந்தன ரென்பவே.

(இ-ள்.) நெடிய கடல்போன்ற பூதசேனைகள் நிலைமைகெட்டு முதுகிட முன்னிரிப் பூதர்களால் தோற்று ஓடின அந்த அசுரர்கள் தம் பக்கம் வன்மையுற்றிருத்தலைப் பார்த்து வெற்றிபொருந்தியவனான பானுகோப னெதிரேவந்து சேர்ந்தார்கள்.

ஆய காலை யழிந்துவெம் பூதர்கள்
போய வாறும் புரையறு சூர்தரு
சேய வன்திறற் செய்கையு நோக்கினன்
காயும் வெவ்வெரி கான்றிடு கண்ணினன்.

(இ-ள்.) அப்பொழுது வெவ்விய பூதர்கள் தோற்றுச்சென்ற வண்ணமும் உயர்வற்ற சூரபன்மன்பெற்ற பிள்ளையாகிய பானுகோப னென்பவன் றன்னுடைய அக்கினியாஸ்திரத்தால் போர்புரிந்து வென்று நிற்றலையும் கோபத்தினால் வெவ்விய தீப்பொறிகக்குகின்ற கண்களையுடைய வீரவாகுதேவன் கண்டனன்.—எ-று. (எக)

மலைக்கு லக்கொடி வாமத்தன் மைந்தரா
மிலக்க வீரு ளேனைய மைந்தருட்
டலைக்க ணின்ற சயங்கெழு மொய்ம்பினன்
விலக்கி றேரொடும் வெய்தென வேகினன்.

(இ-ள்.) இமையமலையின் சிறந்த மகளான கொடிபோலும் இடையுள்ள உமாதேவியை யொருபுறத்திலுள்ள இறைவனுக்குப் பிள்ளைகளாகவுள்ள இலக்கம்வீரர்களினும் மற்றைய வீரர்களினும் முதன்மைப்பட்டுநின்ற வெற்றிபொருந்திய தோள்களையுடைய வீரவாகுதேவன் பகைவர்களால் அழித்தற்கு முடியாத இரதத்துடன் விரைவாகப் பானுகோபனெதிரேசென்றான்.—எ-று. (எஉ)

ஆதி தந்த வறுமுகத் தெம்பிரான்
பாத முன்னிப் பரவிக் கடிதுபோய்

மேத குங்கதிர் வெம்பகை தானையா
மோத முட்கக் குனித்தன ஞோர்சிலை.

(இ-ள்.) முழுமுதற் கடவுளான பரமேசுவரன் பெற்ற ஆறு திருமுகங்களையுடைய எம்பெருமானரது திருவடியுகளங்களை நினைத்துக்கொண்டு வீரவாகுதேவன் விரைவாகச்சென்று உயர்வுபொருந்திய சூரியனுக்குக் கொடும்பகையாளனான பாநுகோபனுடைய சைனியமான கடனடுங்க வொருவில்லினை வளைத்தனன்.—எ-று. (எரு)

காமர் மொய்ம்பினன் கைத்தனுக் கோட்டலுந்
தாமு னிந்து தருவர்தந் தானைக
டோம ரங்கதை சூலம்வை வாளிவே
னேமி யாதி நெருக்குற வீசினர்.

(இ-ள்.) அழகிய வீரவாகுதேவன் தன்கையிலுள்ள வில்லினை வளைத்தலும் அசுரசைனியங்கள் கோபங்கொண்டு தோமராயுதங்களையும், தண்டாயுதங்களையும், சூலாயுதங்களையும், கூரிய அம்புகளையும், வேலாயுதங்களையும், சக்கராயுதங்களையும் இவையன்றியுள்ள மற்றைய ஆயுதங்களையும் நெருக்கமாகவிட்டார்கள்.—எ-று. (எசு)

வீசு கின்ற வியன்படை மாய்ந்துகத்
தேசு லாவு திறலுடை மொய்ம்பினு
ஞேசை கொண்டதன் சாப முமிழ்ந்தென
வாசு கங்க ளளப்பில தூண்டினன்.

(இ-ள்.) விட்டனவாகிய பெரிய அஸ்திரங்களெல்லாம் அழிந்தொழிய ஒளியும் வெற்றியும் பொருந்திய வீரவாகுதேவன் தனது ஒலிபொருந்திய விற்படை கக்கியதைப்போல கணக்கற்றனவாகிய அம்புகளை எதிரிகள்மீது விட்டனன்.—எ-று.

தூண்டும் வாளி துணிபடச் செய்தலு
மாண்டு போயின மற்றவர் வெம்படை
யீண்டு தானவர் யாரு மறைந்திட
மீண்டும் வார்கணை வீசினன் வீரனே.

(இ-ள்.) எதிரிகளால் விடப்பட்ட அம்புகள் துண்டாமாறுசெய்தலும் அந்த எதிரிகளின் வெவ்விய படைகள் மாண்டொழிந்தன; பின்னரும் வந்த சைநியங்கள் அனைவருமறையுமாறு பின்னரும் வீரனான வீரவாகுதேவன் நீண்டவம்புகளை விட்டனன்.—எ-று. (எசு)

கற்றை வார்சடைக் கண்ணுத லோன் சுதன்
கொற்ற வில்லுமிழ் கூர்ங்கணை விட்டன
பற்ற லார்மெய் படுதலு மன்னவர்க்
கிற்ற தான்முடி தோள்புயம் யாவுமே.

(இ-ள்.) கற்றையான சடாபாரத்தினை யுடைய நெற்றிக்கண்ணனான சிவபெருமானுக்கு மைந்தனான வீரவாகுதேவனது வெற்றிபொருந்திய வில்லானதுமிழ்ந்த கூரியவம்புகள் பகைவர்களான அசுரசைனியங்களினுடல்கண்மீதுபடுதலும் அவர்கட் கறப்பட்ட காலுந் தலையும் முடியுந் தோளும் புயமுமாதிய யாவையும் வேறுபட்டுவிழுந்தன.—எ-று. (எஎ)

ஆர ழிந்தன வாழி யழிந்தன
தேர ழிந்தன திண்பரிகைமுகக்
கார ழிந்த கடுந்தொழிற் றூனவர்
போர ழிந்த புகுந்தன சோரியே.

(இ-ள்.) இரதங்கள் ஆர்களுஞ் சக்கரங்களும் அழிந்தனவாகியழிந்தன; திண்ணிய குதிரைகளும் கரியமேகங்களையனைய யானைகளும் அழிந்தன; பார்ப்போருக்கச் சந்தரத்தக்க கொடிய செய்கைகளையுடைய பதாதிகளான அசுரர்களின் போர்த்தொழிலுமழிந்தன; இவையால் இரத்தவெள்ளம் பெருகின.—எ-று. (எஅ)

மற்ற வெல்லை வலியநந் தானைக
ளிற்ற வேகொல் லிவன்சிலை யாலெனுச்
செற்ற நீரொடு செங்கதிர் மாற்றல
ஞெற்று தேர்வல வற்கிவை யோதுவான்.

(இ-ள்.) அவ்வாறான சமையத்தில் கோபம்பொருந்திய உள்ளத்தோடு செவ்விய கிரணங்களையுடைய சூரியனுக்குப் பகைவனான பாநுகோபன் (தன்னுக்குள்) இன்று இவன் வில்லினால் நமது வலிய சைனியங்களழிந்தனவோ என்றுரைத்தவனாய்த் தேரோட்டுந் தொழிலிற் சிறந்த சாரதிக்கு இவைகளைக் கூறுவான்.—எ-று. ()

அடுத்து நம்படை யட்டவன் முன்னுற
விடுத்தி தேரை வலவவெ வெய்தென
வடித்த விஞ்சையன் வன்மயி னன்னதேர்
நடத்தி யார்த்தன னுசுர் நடுங்கவே.

(இ-ள்.) நெருங்கிவந்து நமது சைனியங்களைக் கொன்றவனெதிரே சாரதி! நமதிரதத்தை விரைவாகவிடக்கடவை என்று கூறினான். உடனே தேரோட்டுந் தொழிலாகிய வித்தையில் மிகவுந்தேர்ந்த சாரதியும் தேவர்கள் நடுங்கும்வண்ணம் தன் சாமர்த்தியங்காட்டித் தேரையோட்டி யாரவாரித்தனன்.—எ-று. (அ௦)

மாண்ட கொள்கை யவுணன் வலவன்முன்
றூண்டு தேர்மிசைத் துண்ணென நண்ணியே
பூண்ட தன்சிலை கோட்டிப் பொருஞ்சின
மூண்டு மேலவன் முன்னிது கூறுவான்.

(இ-ள்.) கெட்ட கொள்கைகளையுடைய அசுரனான பாநுகோபன் சாரதியோட்டிய இரதத்தில் விரைவாகச்சென்று தான் கையிற்பிடித்திருந்த தனது வில்லை வளைத்துப் போர்புரிதற்கு மிக்க சீற்றங்கொண்டு உயர்வுடையோனான வீரவாகுதேவனெதிரே நின்று இவ்வண்ணங்கூறினான்.—எ-று. (அக)

எஞ்ச வின்றிய வென்பெருந் தானைக
டுஞ்சும் வண்ணந் தொலைத்தனை நீயினி
யுஞ்சு போகரி துன்றனை யட்டிட
வஞ்சி னங்கொடு வந்தனன் யானென்றான்.

(இ-ள்.) கெடுதலற்ற எனது பெரிய சைனியங்கள் அழியுமாறழித்தாய் அவ்வாறழித்த நீ பிழைத்துப்போதற்கு முடியாது இப்பொழுதிங்கு உன்னைக் கொல்லும்பொருட்டு யான் சபதஞ்செய்துவந்திருக்கின்றேன் என்று வீரவாகுதேவனைப்பார்த்துப் பாநுகோபனுரைத்தனன்.—எ-று. (அஉ)

என்ற லோடு மிருந்திறன் மொய்ம்பினன்
பொன்று வோரையும் போர்த்தொழில் செய்துபின்
வென்று ளோரையும் விண்ணவர் காண்குவர்
நின்று தாழ்க்கலை நேருதி போர்க்கென்றான்.

(இ-ள்.) என்று கூறினவுடனே மிக்கவன்மையினையுடைய வீரவாகுதேவன் பாநுகோப! இறப்பவர்களையும் போர்புரிந்து எதிரியைக்கொன்று செயம்பெற்றவர்க

ளையும் பொதுவாக நின்று போர்த்திறங்காணுந் தேவர்கள் காண்பார்கள் நீ இங்கு நின்று காலதாமதஞ் செய்யாதே போருக்கு வரக்கடவை என்றுரைத்தனன்.—எ-று.

விளைத்த சீற்றத்து வெந்திறற் சூர்மகன்
வளைத்த வில்லிடை வார்கணை யாயிரந்
தளைத்த பூந்தொடை வாகையன் றன்னுரந்
துளைத்தி டும்படி பூட்டுபு தூண்டினான்.

(இ-ள்.) உண்டான பெருங்கோபத்தினையுடைய மிக்கவன்மையோடு கூடிய சூரபன்மனுக்கு மகனான பானுகோபன் தான்வளைத்த தனது வில்லில் ஆயிரம் நீண்ட வம்புகளை வைத்து, கட்டப்பட்ட பூமாலையணிந்த தோளினனான வீரவாகுதேவனுடைய மார்பைத் துளைக்குமாறு விட்டான்.—எ-று. (அச)

ஆகமூழ்கி யடற்கணை போழ்ந்துபின்
னேக வென்று மிளையவன் பின்னவன்
சோக மோடுதன் றொல்சிலை வாங்கியே
நாகர் போற்றிட நாணொலிக் கொண்டனன்.

(இ-ள்.) அவன்விட்ட வன்மைபொருந்திய வவ்வம்பு மார்பிற் புகுந்து துளைத்து முதுகின்வழி செல்ல என்றுங்குமரனாகவே யிருக்கும் நங்குமாரப்பெருமானுக்குத் தம்பியான வீரவாகுதேவன் சோகத்துடன் தனது பெரிய வில்லினைவளைத்துத் தேவர்துதிக்கக் குணத்தொனிகண்டனன்.—எ-று. (அரு)

நாணொ லிக்கொடு நஞ்சழல் கான்றெனத்
தூணி யுற்ற சுடுசர மாயிரம்
வேணு வுய்த்து விரைவினிற் றூண்டினா
னேணு டைக்கொடி யோன்புயத் தெய்தவே

(இ-ள்.) நாணோசையான துண்டாகத் தட்டிப்பார்த்து அவ்வில்லானது விஷாக்கினியைக்கக்கினதுபோல அம்புக்கூட்டிற்பொருந்தின ஆயிரஞ்சுடுசரங்களை எடுத்து வில்லில்வைத்து வன்மையாளனான பானுகோபனுடைய மார்பிற்படுமாறு விரைவாக விட்டான்.—எ-று. (அசு)

ஆயி ரங்கணை யம்புய மூழ்கலு
நோயு ழந்துள நொந்து நொடிப்பினிற்
றீய வன்மகன் செஞ்சா றூற்றினாற்
றூய வன்விற் றுணிபடுத் தானரோ.

(இ-ள்.) ஆயிரமம்புகள் அழகிய புயங்களிற் படுதலும் நோயுற்று மனநொந்து விரைவாகக் கொடியவனான சூரபன்மனுடைய பிள்ளையான பானுகோபன் செவ்விய நூறம்புகளைவிட்டுப் பரிசுத்தனான வீரவாகுதேவனுடைய வில்லினைத்துண்டுபடுத்தினன்.—எ-று. (அஎ)

திண்டி றற்புயன் செஞ்சிலை யிற்றிட
வண்ட ரஞ்சின ரன்னவ னோரயில்
கொண்டு ருத்துக் கொடுந்தொழிற் சூர்மகன்
முண்ட நெற்றியின் மொய்ம்புடன் வீசினான்.

(இ-ள்.) மிக்கவன்மையினையுடைய வீரவாகுதேவனுடைய செவ்விய வின்முறிய அதனைக் கண்டு தேவர்கள் அஞ்சினார்கள். உடனே அவ்வீரவாகுதேவன் ஒரு வேற்படையைச்சீற்றத்துடனெடுத்துப் பொல்லாத தொழில்களைச்செய்கின்ற சூரன்பிள்ளையான பானுகோபனுடைய நெற்றியிற் சென்று படுமாறு வன்மையோடெறிந்தான்.

வீசு வெம்படை வெய்யவற் சிறிய
நீசன் மாண்டகு நெற்றியுட் சேறலு
மாசில் வான்மிசை வந்தெழு செக்கர்போ
லாசில் செம்புன லாறெனச் சென்றதே.

(இ-ள்.) வீரவாகுதேவனெறிந்த கொடிய அந்தவேலாயுதம் சூரியனைச் சீறிய நீசனான பாநுகோபனுடைய நெற்றியிற்படுதலும் களங்கமற்ற ஆகாயத்திலுண்டாகின்ற செக்கரைப்போல நல்லவிரத்தம் ஆறுபோலச் சென்றது.—எ-று. (அகூ)

சென்ற காலையிற் றீயவ னோரிறை
நின்று தேரி னினைவில னாகியே
பின்றை முன்னுணர் வெய்தப் பெருந்தகை
யொன்றொர் வெஞ்சிலை யொல்லையில் வாங்கினான்.

(இ-ள்.) அவ்வண்ணம் இரத்தமானது ஆறுபோலவோடியபோழ்து கொடியவனான பாநுகோபனொருகணநேரம் நினைவற்றவனாகத் தனது இரதத்தில்நின்று பின்னர் பழையவுணர்ச்சியுண்டாக (அதனைக்கண்டு) பெரிய தகைமையினையுடைய வீரவாகுதேவன் ஒப்பற்ற ஒருவில்லினை விரைவாக எடுத்து வளைத்தனன்.—எ-று. (கூ0)

வாங்கி வாயுவின் மாப்படை தூண்டலு
மாங்கவ் வெய்யனு மப்படை யேவியே
தாங்கி வன்மை தணித்தலுந் தாவிலோன்
றீங்க னற்படை யுய்த்தனன் சீறியே.

(இ-ள்.) வளைத்துச் சிறந்த வாயுவாஸ்திரத்தை விடுதலும், (வீரவாகுதேவன் விட்டது வாயுவாஸ்திரமென்றுணர்ந்து) அக்கொடியவனான பாநுகோபனும் வில்வளைத்து அதனில் அந்த வாயுவாஸ்திரத்தையே வைத்து விட்டு வீரவாகுதேவன் விட்ட வாயுவாஸ்திரத்தின் வன்மையை யழித்தனன்; உடனே கெடாத வீரவாகுதேவன் சீற்றங்கொண்டு தீய அக்கினியாஸ்திரத்தை விட்டனன்.—எ - று. (கூக)

மாரியன்னகை மன்னவர் கோமக
னாரழற்படை யவ்வழி தூண்டலும்
வீர வாகு விடுத்திடு தீப்படை
போரி யற்றிப் பொருக்கென மீண்டதே.

(இ-ள்.) மழையனைய கரதலத்தனான மன்னவனுடைய சிறந்த மைந்தனான பாநுகோபன் அரிய அக்கினியாஸ்திரத்தை அப்பொழுது விடுதலும் வீரவாகுதேவன் விட்ட அக்கினியாஸ்திரம் பாநுகோபன் விட்ட அஸ்திரத்துடன் போர்புரிந்து வீரவாகுதேவனிடம் விரைவாகத் திரும்பிச்சென்றது.—எ - று. (கூஉ)

சுடுக னற்படை போந்திடச் சூர்மகன்
கடிது பின்னுங் கதிர்ப்படை தானெடா
வடுதி யன்னவ னுவியை நீயெனா
விடுத லோடும் விரைந்தது சென்றதே.

(இ-ள்.) வீரவாகுதேவன்விட்ட சுடுகின்ற அக்கினியாஸ்திரம் வருதலும் சூரன்மகனான பாநுகோபன் பின்னும் விரைவாகச்சூரியாஸ்திரத்தை எடுத்து நீயவனுயிரை வாங்கிவிடக்கடவை என்று விட்டவுடனே அது விரைவாக வீரவாகுதேவனை நாடிச்சென்றது.—எ - று. (கூரு)

விரைந்து சென்றதை வீரமொய்ம் புள்ளவன்
றெரிந்து சேணிடைச் செங்கதி ரோன்படை

துரந்து நீக்கலுஞ் சூர்மகன் பங்கயத்
திருந்த வன்படை யேவின னென்பவே.

(இ-ள்.) விரைந்துவருதலை வீரவாகுதேவன் உணர்ந்து தானும் வானிலுலாவுகின்ற சூரியனுடைய செவ்விய அஸ்திரத்தை எடுத்து விடுத்துப் பாநுகோபன்விட்ட பாநுவஸ்திரத்தை அழித்தனன். உடனே பாநுகோபன் தாமரைமலரிலிருந்த பிரமதேவனுடைய அம்பினை எடுத்து விட்டனன்.—எ - று. (கசு)

தேன்மு கத்துத் திருமல ரோன்படை
வான் முகத்து வருதலு மாங்கவ
னூன்மு கப்படை யொய்யெனத் தூண்டினு
னுன்மு கத்த னடற்கண நாயகன்.

(இ-ள்.) தேனைத் தன்னிடத்துக்கொண்டுள்ள அழகிய தாமரைமலரிலிருக்கின்ற பிரமதேவனுடைய அம்பு ஆகாயவழியாக வருதலும் வீரவாகுதேவனும் அந்தப் பிரமாஸ்திரத்தையே பதிலுக்குப்பதிலாக விட்டனன்.—எ - று. (கரு)

தூண்டு வேதன் படைக்கலஞ் சூர்மக
னுண்டு தொட்ட படையை யகற்றியே
மீண்டு வந்திட வெய்யவன் வீரன்மே
னீண்ட மாய னெடும்படை வீசினன்.

(இ-ள்.) வீரவாகுதேவன் விட்ட பிரமாஸ்திரம் சூரகுமாரனான பாநுகோபன் விட்ட அம்பினை விலக்கித்திரும்பாது தன்னை நோக்கி வருதலும் அதனைக்கண்ட கொடியவனான பாநுகோபன் வீரவாகுதேவன்மீது நெடியோனாகிய திருமாலினம்பினைவிட்டான்.—எ - று. (கசு)

வீசு மப்படைதன்னை விலக்கினன்
கேசவன்படை யாற்கிளர் மொய்ம்புடை
மாசில் கேள்வியன் மற்றது நோக்கியே
னீசன் மாமக னுள்ள நினைகுவான்.

(இ-ள்.) தான் விரைந்துவிட்ட அந்த நாராயணாஸ்திரத்தை விளங்காநின்ற தோளினனும் குற்றமற்ற நூற்கேள்வியினையுடையவனுமாகிய வீரவாகுதேவன் தானும் அந்தநாராயணாஸ்திரத்தையே விடுத் தடுத்தனன். அதுகண்டுஇழிந்தசூரனுக்கு மகனான பாநுகோபன் இவ்வண்ணம் தன்னுளத்தில் நினைகுவான்.—எ - று. (கஅ)

தொட்ட தொட்ட படைக டொலைவுற
விட்ட னன்படை மேனிலி யாவையு
மட்டு நல்கு மரன்படை தூண்டுறி
னொட்ட லன்கரத் துண்டது கண்டதே.

(இ-ள்.) நாம் விட்டவிட்ட அம்புகளனைத்தும் அழிய அவனும் நான்விட்ட கணைகளையே விட்டனன். இனி நான் யாவற்றையுஞ் சங்கரித்துப்படைக்கின்ற அரனுடைய அஸ்திரத்தை விடுவேனானல் பகைவனிடத்தும் அந்தப்பாசுபதாஸ்திரம் உள்ளதே இதனை நாங்கண்டே இருக்கின்றோம்.—எ - று. (கஅ)

ஆதலாவியா னப்படை தூண்டிட
லூதி யத்தை யுடைத்தன்று மாயையா
லேதி லானை யினியடல் செய்வதே
நீதியென்று நினைந்தன னேரலன்.

(இ-ள்.) ஆகையால் யான் எல்லாவுலகங்களையும் சங்கரித்து மீட்டும்படைக்கின்ற இறைவனுடைய அந்தச் சர்வசங்காராத்திரமான பாசுபத அஸ்திரத்தை விடுதலில் இலாபமில்லை. இனி இப்பகைவனை நாங்கற்ற மாயையினாலேயே கொல்லவேண்டுமென்று பகைவனாகிய பானுகோபன் நினைத்தனன்.—எ - று. (கூகூ)

விஞ்சை மாய வியன்முது மந்திர
நெஞ்சமீது நெறிப்பட வெண்ணியே
செஞ்சு டர்க்கதி ரைச்சிறை செய்திடு
வஞ்ச மைந்தன் மறைந்தனன் றேரொடும்.

(இ-ள்.) பெரிய வொரு மாயைவித்தைக்குரிய மந்திரத்தைத் தனது மனதிற் செபிக்கவேண்டிய முறைப்படி தியான நியாஸாதிகளோடு நினைத்துச் செந்நிறமான கிரணக்கதிர்களையுடைய பானுவைச் சிறைவைத்த வஞ்ச மகனான பானுகோபன் தனது இரதத்துடன் மறைந்துபோயினான்.—எ - று. (௬00)

பாங்கு முன்னரும் பின்னரும் பாய்கதிர்
தூங்கு தேரொடு துன்னல னேகுறு
வீங்கு மாற்றல் விறலுடை மொய்ம்பன்மேல்
வாங்கு விற்கணை மாரி வழங்கினான்.

(இ-ள்.) பக்கங்களிலும் முன்புறங்களிலும் பின்புறங்களிலும் பாய்கின்ற ஒளி பொருந்திய இரதத்துடன் பகைவனான பானுகோபன் சென்று மிகுந்த வன்மையும் வெற்றியுமுள்ள வீரவாகுதேவன்மீது வளைத்த வில்லிற் பதித்துவிடுகின்ற அம்புமழையைப் பெய்தான்.—எ-று. (௬0௧)

சூறை யென்னத் திரிபவன் றூண்டிய
மாறில் வாளிப டப்பட வள்ளன்மெய்
யூற தாகி யுலப்பறு செம்புன
லாற தென்ன வழிக்கொண்ட தாலரோ.

(இ-ள்.) சுழற்காற்றைப்போல சுற்றுபவனான பானுகோபன் விட்ட தவறாத அம்புகள் வந்து படப்பட இரப்போருக்கீயுமுயர் குணம்வாய்ந்த வீரவாகுதேவனுடலம் காயமடைந்து கெடாத இரத்தவெள்ளம் ஆற்றைப்போல வோடியது.—எ-று.

அண்டர் நோக்கி யழிந்தனர்பாரிடர்
தண்ட மோடு தளர்ந்தனர் சார்பினோர்
விண்டு விண்டு வெருவின ரச்செயல்
கண்டு வீரன் கனலெனச் சீறினான்.

(இ-ள்.) இவ்வாறு பானுகோபன் மறைந்துநின்று அம்புவிடுதலையும் அதுவந்து படுதலையும் பட்டபட்டவிடங்களில் இரத்தமொழுகுவதையுங்கண்டு தேவர்கள் ஆவோ இது என்னை இவ்வண்ணமாகியது என்று நிலையழிந்தார்கள். பூதராசர்கள் சைனியங்களோடு தளர்ந்தார்கள். அனுக்கத்துணைவரான வீரபுரந்தராதியர் இதென்னை இதென்னை என்று கூறிக்கூறிப் பயந்தார்கள். இவைகளனைத்தையும் வீரவாகுதேவன் கண்டு தீயைப்போல சீற்றங்கொண்டனன்.—எ-று. (௬0௩)

வேறு.

ஒன்றொரு மாயை தன்னா லுய்ந்துமுன் வென்று போனா
னின்றுமத் துன்னி னானே யினியது முடிக்க வற்றோ
நன்றிது நன்றி தம்மா நானிவன் றன்னை யின்னே
கொன்றிடு கிற்பே னென்னாக் குறித்தனன் குமரன் பின்னோன்.

(இ-ள்.) இவன் முன்னர்த் தன்னிடத்துப் பொருந்திய மாயையினால் வென்று சென்றான். இன்றுமவ்வாறே நினைத்தானோ இனியவன் அதனை நிறைவேற்றுந் தரமுள்ளவனோ நல்லது நல்லது. அம்மா இன்றுநான் இவனைக் கொல்வேனென்று குமரப்பெருமானுக்கிளைய வீரவாகுதேவ னினைத்தனன்.—எ-று. (கO௪)

ஈதுதன் புந்தி தேற்றி யீங்கிவன் சூழ்ச்சி மாய்ந்து
போதரு கின்ற வாறு புரிகுவன் விரைவி னென்னாச்
சேதனங் கொண்ட துப்பிற் றெய்வதப் படையைப் போற்றி
மேதகு வழிபா டாற்றி யவுணனைக் குறித்து விட்டான்.

(இ-ள்.) இவ்வண்ணந் தனது மனதிற் றீருமானஞ் செய்துகொண்டு இப்பொழுதிவன் செய்கின்ற மாயமழிந்துபோமாறு விரைந்துசெய்வேனென்று ஞானவன்மை பொருந்திய தேவாஸ்திரத்தை யெடுத்துத் துதித்து மேன்மையான வணக்கம்புரிந்து பாநுகோபனைக்குறித்து விட்டான்.—எ-று. (கOரு)

பொருவருந் திறலோன் விட்ட போதகப் படையே பானு
விருளினை யிரியல் செய்யு மிரவிபோற் சேற லோடும்
விரைவொடு விஞ்சை மாயம் விளிந்தது வேந்தன் மைந்த
னொருபெருந் தேருந் தானு மாகியே யும்பர் நின்றான்.

(இ-ள். ஒப்பற்ற வன்மையாளனான வீரவாகுதேவன் விட்ட ஞானாஸ்திரமானது பாநிசாளிரவினை ஓட்டுகின்ற சூரியனைப்போல செல்லுதலும் சீக்கிரமாக அசுரமைந்தனியற்றிய மாயைவித்தை அழிந்தது. உடனே அசுரகுமாரனாகிய பாநுகோபன் தனதிரதத்துடன் ஆகாயத்தில் (யாவருங்காண) நின்றான்.—எ-று. (கOசு)

தோன்றியே விண்ணி னின்ற சூர்மகன் றொலைவி லாற்றல்
சான்றதன் மாயம் போன தன்மையுந் தடந்தோள் வீர
னான்றநல் வலியு நோக்கி யயர்ந்தன னயர்ந்து முன்ன
மான்றிடு மமரர் யாரு மனமகிழ் சிறந்து நின்றார்.

(இ-ள்.) மாயை தொலைந்து பலருங் காணுமாறு ஆகாயத்தில் நின்ற பாநுகோபன் கெடாத வன்மையினையுடைய தனது மாயந் தொலைந்ததுவும் வீரவாகு தேவனுடைய உயர்ந்த வன்மையும் பார்த்து மனஞ் சோர்ந்தான். உடனே, இவன் செய்த கொடுமையால் முன்ன மனமயர்ந்து நின்ற தேவர்களெல்லாம் மனமகிழ்வடைந்து நின்றார்கள்.—எ-று. (கOஎ)

அவ்வழி வீரமொய்ம்ப னந்தரவழிக்க ணின்ற
மைவழி சிந்தை மைந்தன் மாண்பினை நோக்கி வஞ்ச
வெவ்வழி யினிநீ போதி யானிவ ணடுவ னென்னாக்
கைவழி வரிவில் வாங்கித் தேரொடுங் ககனஞ் சென்றான்.

(இ-ள்.) அப்பொழுது வீரவாகுதேவன் அந்தரமார்க்கத்தில் நின்ற களங்கம் பொருந்திய மனத்தினனான பாநுகோபனுடைய மாண்பினைப்பார்த்து வஞ்சகனே! நீ இனி எந்தமார்க்கமாகச் செல்வாய்? உன்னை இப்பொழுதுயானிவ்விடத்திற்கொல்வேனென்று தன்கையிலுள்ள வில்லினைவளைத்துத் தேருடன் ஆகாயத்திற்குச்சென்றான்..

விண்ணிடைப் புகுந்த வீரன் வெலற் கருஞ் சூரன்மைந்தன்
கண்ணுற முன்பு நேர்ந்து கணைபல கோடி தூர்த்தா
னண்ணல னவனுஞ் சீறி நவின்றதோர் சாபம் வாங்கித்
துண்ணென விசிக மாரி சொரிந்தனன் சுரர்க ளஞ்ச.

(இ-ள்.) ஆகாயத்திற்குச்சென்ற வீரவாகுதேவன் பிறரால் வெல்லுதற்கரிய சூரகுமாரனான பானுகோபனுடைய கண்காணும்படி அவனெதிரேசென்று நின்று அநேகங்கோடி கணைகளை அவன்மீது விட்டான். பகைவனான பானுகோபனும் சீற்றங்கொண்டு சிறந்ததென்று கூறப்பட்ட தனது ஒப்பற்ற வில்லினை வளைத்து, தேவர்களஞ்சும்வண்ணம் விரைவாக அஸ்திரவருஷம் பெய்தனன்.—எ-று. (கoக)

நீரொடு கனலு மாருய் நெடுஞ்சினந் திருகி நின்று
போரினை யிழைப்ப தென்ன விருவரும் பொருது நின்று
ரோரிறை யளவை தன்னி லோராயிர நூறு கோடி
சாரிகை திரிந்த வம்மாவ னையவர் தடம்பொற் றேர்கள்.

(இ-ள்.) அப்புபூதமும், அக்கினிபூதமும் ஒன்றேடொன்று பகைத்து மிக்க கோபம்பொருந்தி நின்று சண்டையைச் செய்வதைப்போல வீரவாகுதேவனும் பானுகோபனும் போர்புரிந்தார்கள். அப்பொழுது ஒரு கணப்பொழுதிற்குள் அவ்விருவருமேறியிருந்த விசாலமான பொன்னந்தேர்கள் ஆயிரநூறுகோடிச்சாரிகை சுற்றின.

ஏற்றிகல் புரியும் வீர ரெதிரெதிர் துரக்கும் வாளி
நாற்றிசை கொண்ட வண்டப் பித்திகை காறு நண்ணி
மேற்றிகழ் பரிதிப் புத்தேள் வியன்கதிர் வரவு தன்னை
மாற்றியெவ் வுலகு ளோர்க்கு மலிதுயர் விளைத்த வன்றே.

(இ-ள்.) எதிர்த்துநின்று போர்புரிகின்ற வீரர்கள் எதிரே எதிரே விட்ட வம்புகள் நாலுதிசைகளிலும் பொருந்திய அண்டச்சுவரளவும்சென்று வானத்தில் விளங்குகின்ற சூரியனுடைய சிறந்த கிரணங்களின் வருகையைத் தடுத்து எந்த உலகத்திலுள்ளவர்கட்கும் மிகுந்த துன்பத்தை யுண்டாக்கியது. (கக௧)

செற்றமொ டிவர்கள் வீசுந் திருநெடுங் கணைகள் யாண்டு
முற்றிடு கின்ற காலத் துகுவன கவன மான்றே
ரற்றன புரவி மாலை யவிந்தன களிற்றி னீட்ட
மிற்றன வவுணர் சென்னி யிறுவன பூதர் யாக்கை.

(இ-ள்.) கோபத்துடனிவர்கள் விடுகின்ற அழகிய நெடிய அம்புகள் எவ்விடத்திலும் புகுஞ்சமயத்தில் வேகமாகச்செல்லுங் குதிரைகள் கட்டிய இரதங்கள் சிதைந்தன; அசுவவரிசைகளுமறுபட்டன; யானைக்கூட்டங்களும் அழிந்தன; அசுரர்கள் தலைகளறுபட்டன; பூதர்களினுடலங்களுமழிகின்றன.—எ-று. (கக௨)

கிட்டுவ சேணிற் செல்வ கிளருவ கிடைத்துப் பின்னு
முட்டுவ வொன்றை யொன்றை யிடம்வல முறையிற் சூழ்ந்து
வட்டணை புரிவ வானோர் மதிக்கவு மரிய வல்லே
யெட்டுள திசையும் விண்ணுந் திரிவன விருவர் தேரும்.

(இ-ள்.) இருவரிரதமும் ஒன்றேடொன்று நெருங்குவ; தூரத்திற்செல்வ; விலங்கிநிற்ப; அருகில் வந்து பின்னு முட்டுவ; ஒன்றையொன்று முறையே முறையே இடம் வலமாகச் சூழ்ந்து வட்டணைபுரிவ; தேவர்களாலு மதித்தற்கரிய,விரைவாக அட்டதிக்குக்களிலும் வானத்திலும் உலாவுவ.—எ-று. (ககங)

இகழுவர் முனிவர் வெஞ்சூ ளியம்புவர் வன்மை நோக்கிப்
புகழுவ ருரப்பி வீரம் புகன்றெடு த்தழைப்பர் பூசன்
மகிழுவர் நகைப்பர் வெற்றி வால்வளை முழக்கஞ் செய்து
திகழுவர் கணையின் மாரி சிந்துவர் தெழித்துச் செல்வர்.

(இ-ள்.) இருவரும் ஒருவருக்கொருவர் இகழுவார்கள், கோபித்துக்கொள்வார்கள், வெவ்விய சபதமொழிகளைப் பேசிக்கொள்வார்கள், வன்மையைப் பார்த்துப் புகழுவார்கள், உரப்பி வீரவசனம்பேசி மேலிட்டழைப்பார்கள், சண்டையைப்புகழுவார்கள், சிரிப்பார்கள், வெற்றிபொருந்திய வெவ்விய சங்கங்களை முழக்கி விளங்குவார்கள், அஸ்திரவருஷம் பெய்வார்கள்; கர்ச்சித்துக்கொண்டு செல்வார்கள்.—எ-று. (கககச)

புரந்தனை யட்ட செல்வன் புதல்வனு மவுணன் சேயும்
விரைந்தெதிர் மலைந்த காலை முறைமுறை வெகுண்டு விட்ட
வரந்தெறு பகழி மாரி யகிலமும் விரவிச் செல்லக்
கரந்தன னிரவி திங்கள் கலைகளுங் குறைந்த தன்றே.

(இ-ள்) திரிபுரத்தை யழித்த சம்பன்னனான சிவபெருமானுடைய மைந்தனை வீரவாகுதேவனும், அசுரன் மகனான பாநுகோபனும் விரைந்து எதிர்ந்து போர்புரிந்த சமயத்தில், ஒருவருக்கொருவர் முறையே முறையே கோபித்துவிட்ட அரத்தை யழிக்கும் வன்மைபொருந்திய அம்புமழை உலகெங்கும் பரவிச்செல்ல அதனாற் சூரியன் மறைந்தான்; சந்திரனுக்குக் கலைகளுங் குறைந்தன.—எ-று. (கககரு)

**வேறு.**

காலொப்பன கூற்றொப்பன கனலொப்பன கடுவின்
பாலொப்பன வுருமொப்பன பணியார்புரம் பொடித்த
கோலொப்பன கதிரொப்பன குன்றந்தனைக் கொன்ற
வேலொப்பன விருவீரரும் விடுலுற்றிடு விசிகம்.

(இ-ள்.) இரண்டு வீரரும் விடுகின்ற அம்புகள் வாயுவை யொப்பன, எமனை யொப்பன, விடத்தின்றன்மையை யொப்பன, இடியையொப்பன, பகைவர்களிருந்த திரிபுரங்களை யழித்த வம்பினை யொப்பன, சூரியனுக்குச் சமானமாவன; அன்றியும் கிரவுஞ்சமலையைப் பிளந்த வேலாயுதத்தை யொப்பன.—எ-று. (ககசா)

வரைபுக்கன புயல்புக்கன வான்புக்கன மறிதெண்
டிரைபுக்கன கடல்புக்கன திசைபுக்கன திசைசூழ்
தரைபுக்கன வண்டத்துழை தனிற்புக்கன பிலத்தி
னிரைபுக்கன விளையோனுட னவுணன்விடு நெடுங்கோல்.

(இ-ள்.) வீரவாகுதேவனுடன் பாநுகோபன் விடுகின்ற அம்புகள் மலைகளில் நுழைந்தன, மேகங்களினுழைந்தன, கடல்களில் நுழைந்தன, திக்குக்களிற் புகுந்தன, திக்குக்களைச்சூழ்ந்த பூமிகளில் புகுந்தன, அண்டங்களினிடத்திற் புகுந்தன; பிலவரிசைகளிற் புகுந்தன.—எ-று. (ககஎ)

திரிகின்றன விருவோர்விடு தீவாளியு மவைபட்
டெரிகின்றன புயலின்குல மிருநாற்றிசைக் கரியுங்
கரிகின்றன புவிவிண்டன கடல்வற்றின வுடுமீன்
பொரிகின்றன வுலகெங்கணும் புகைவிம்மிய தன்றே.

(இ-ள்.) இருவர்களும் விடுகின்ற தீவாளிகள் எவ்விடங்களிலுஞ் சஞ்சரிக்கின்றன, அவைகள் பட்டு மேககூட்டங்கள் எரிகின்றன, அட்டதிக்கு யானைகளும் கரிகின்றன, பூமிகள் வெடித்தன, கடல்கள் வற்றின, நட்சத்திரங்கள் பொரிகின்றன; இதனால் உலகி லெவ்விடங்களிலும் புகை நெருங்கியது.—எ-று. (ககஅ)

பொடியோங்கிய திறன்மொய்ம்புடைப் புலவன்விடு சரத்தை
வடியோங்கிய கணைமாரியி னருக்கன்பகை மாற்றுங்

கொடியோன்மகன் விடுவாளியைக் குதைவெங்கணை மழையா
னெடியோன்றனித் துணையானவ னறுத்தேயுட னீக்கும்.

(இ-ள்.) விபூதிப்பொடி மிக்குவிளங்குகின்ற வீரவாகுதேவன் விட்ட அம்பினை வடிக்கப்பட்ட உயர்ந்த அம்புகளாற் பாநுகோபன் அழிப்பான்; கொடியவனுன சூரபன்மன் மகனுன பானுகோபன் விடுகின்ற அம்புகளைக் குதையொடுகூடிய அம்புகளாகிய வெவ்விய கணைமழையினல் நெடியவனுக்கு ஒப்பற்ற துணையாகவுள்ள வீரவாகுதேவன் உடனே அறுத்துத் தொலைப்பான்.—எ-று. (௧௧௯)

போரிவ்வகை யிருவீரரும் பொரவுற்றிடு பொழுதிற்
பாரின்றலை நின்றோர்களு மிமையோர்களும் பார்த்தா
ராரிங்குள ரிவரோவென வமர்செய்தவ ரடுபோர்
வீரந்தனி லெவரோயிவர்க் கிணையென்று வியந்தார்.

(இ-ள்.) வீரவாகுதேவனும் பாநுகோபனுமாகிய இரண்டு வீரர்களும் இவ்வண்ணம் போர்புரிகின்றசமயத்தில், அதனைப் பூமியினிடத்தில் நின்றவர்களும் தேவர்களும் கண்டார்கள்; கண்டு இவ்விடத்தி லிவர்களைப்போல போர்புரிந்தவர்கள் யாவ ரிருக்கின்றார்கள்? அன்றியும் வீரத்தினிலும் இவர்களுக் கிணையானவர்கள் யாவர் என்று புகழ்ந்தார்கள்.—எ-று. (௧௨௦)

அவ்வேலையி னூறுயிர மடுவெங்கணை யதனுன்
மைவேலையில் வருபானுவைத் தளைபூட்டிய மைந்தன்
செவ்வேலவன் றிருத்தூதுவன் றேரைப்பொடி படுத்தி
யெவ்வேலையும் வெருக்கொண்டிட விடியேறென வார்த்தான்.

(இ-ள்.) அப்பொழுது ஒரு நூறுயிரங் கொலைத்தொழிலினை யுடைய வெவ்விய அம்புகளால் கருங்கடலிலுதிக்கின்ற சூரியனைச் சிறையிலிட்ட பாநுகோபன், செவ்விய வேற்படையினை யுடைய குமரக்கடவுளின் திருத்தூதுவனுன வீரவாகுதேவனுடைய இரதத்தைப் பொடியாகப்பொடித்து எவ்வித கடல்களும் பின்னிடையும்படி ஆணிடியைப்போல கர்ச்சித்தான்.—எ-று. (௧௨௧)

ஆர்க்கின்றுழி விறன்மொய்ம்புடை யறிவன்சினந் திருகிச்
சீர்க்கின்றவிண் மிசைநின்றுதன் சிலைகாலுற வாங்கிக்
கூர்க்குங்கணை யோராயிரங் கொளுவித்துரந் திட்டுக்
கார்க்கின்றமெய் யவுணர்க்கிறை கடுந்தேர்துகள் கண்டான்.

(இ-ள்.) ஆரவாரஞ் செய்கின்ற சமயத்தில், வெற்றி பொருந்திய புயங்களையுடைய வீரவாகுதேவனுனஞானி கோபங்கொண்டு சிறப்புப்பொருந்திய ஆகாயத்தில் நின்று தனது வில்லினைக் காலாற் பொருந்த வளைத்துக் கூரிய ஓராயிர மம்புகளைவிட்டுக் கரிய உடலினனுன பாநுகோபனுடைய விரைவாகச்செல்லு மிரதத்தைத் துகளாகச்செய்தான்.—எ-று. (௧௨௨)

வையந்துக ளாயிற்றிட வானத்திடை நின்ற
வெய்யன்பெருஞ் சினஞ்செய்துவில் வீரன்றன துரத்தி
னையஞ்சுநஞ் சயில்வாளிபுக் கழுந்தும்படி தூண்டிச்
சையந்தனைக் கடந்தேவளர் தடந்தோள்புடைத் தார்த்தான்.

(இ-ள்.) இரதந் தூளாகி அழிய ஆகாயத்தில் நின்ற கொடியவனுன பாநுகோபன் பெருங்கோபங்கொண்டு வில்வீரனுன வீரவாகுதேவனுடைய மார்பிற்சென்று படும்படி இருபத்தைந்து கூரிய அம்புகளை அழுந்தும்வண்ணமாக விட்டு மலையினும் பெரிதாக வளர்ந்துள்ள பெரிய புஜங்களைத்தட்டி ஆரவாரித்தான்.—எ-று. (௧௨௩)

உரத்திற்புகு நெடுவாளியி னுளநொந்திடு முரவோன்
கரத்திற்சிலை தனிலேழிரு கணைபூட்டினன் செலுத்தி
வரத்திற்றனக் கிணையில்லதொர் மன்னன்மகன் றனது
சிரத்திற்பொலி மகுடந்தனைச் சிந்தித்துகள் செய்தான்.

(இ-ள்.) மார்பிற்பட்ட நீண்ட வம்புகளால் மனநொந்த வன்மையாளனான வீரவாகுதேவன் தனது கையிலுள்ள வில்லிற் பதினான்கு பாணங்களை வைத்து விட்டு வரம் பெற்றவர்களுக்குள் தனக்கொப் பொருவரு மில்லாத அசுரனான சூரபன்மனுடைய பிள்ளையான பானுகோபனுடைய தலையில் விளங்கிய மகுடத்தையுடைத்துத் தூளாக்கினான்.—எ-று. (கஉச)

மாண்கொண்டிடு முடிசிந்திட வறியானெனத் திகழு
மேண்கொண்டிடு சூரன்மக னேழ்கணை தூண்டித் [த
தூண்கொண்டிடு திறன்மொய்ம்புடைத் தொல்லோனுரம் பிணித்
நாண்கொண்டிடு கவசந்தனை நடுவேதுணித் திட்டான்.

(இ-ள்.) மாட்சிமை பொருந்திய மகுடமழிய தரித்திரனைப்போல விளங்குகின்ற வன்மை பொருந்திய சூரன் பிள்ளையான பாநுகோபன் பதினாலம்புகளைவிட்டுத் தூணம்போன்ற தோளினனான வீரவாகுதேவனுடைய மார்பிலணிந்துள்ள சரடுகளோடு கூடின கவசத்தை நடுவிலறுத்தான்.—எ-று. (கஉரு)

ஆகம்படு நெடுஞ்சாலிகை யழிவெய்தலு மழல்கா
னாகம்படு சடையோன்சுத னன்றீதென நகையாப்
பாகம்படு பிறைபோலெழு பகுவாய்க்கணை செலுத்தி
மேகம்படு மணிமேனியன் வில்லைத்துணி படுத்தான்.

(இ-ள்.) உடம்பிற்பொருந்திய கவசமழிதலும், அழலினைக் கக்குகின்ற நாகம்பொருந்திய சடையாளனான இறைவனுக்கு மகனான வீரவாகுதேவன் இது நல்லதென்று சிரித்துக்கொண்டு இரண்டாகப் பிளந்த சந்திரனைப்போன்ற அகன்ற வாயினையுடைய அர்த்தசந்திரபாணத்தைவிட்டு மேகம்போன்ற கரிய வுடலினனான பாநுகோபனுடைய வில்லினை யொடித்தான்.—எ-று. (கஉசு)

வில்லொன்றிரு துணியாதலும் வெங்கூற்றினும் வெகுளா
வல்லொன்றிய மனத்தீயவ னயன்முன்கொடுத் துள்ள
வெல்லொன்றிய தனிவேலினை யெடுத்தீங்கிவன் றன்னைக்
கொல்லென்றுரைத் துரவோன்மிசை குறித்துச்செல விடுத்தான்.

(இ-ள்.) ஒரு வில் இரண்டு துண்டாக ஒடிதலும், வெவ்விய எமனைப்போலச் சீறி இருள்பொருந்திய மனக்கொடியவனான பாநுகோபன் தனக்குப் பிரமதேவன் முன்னாளில் அளித்திருந்த ஒளிபொருந்திய ஒப்பற்ற வேலினை எடுத்து இவ்விடத்திலிவனைக் கொல் என்று உரைத்துக் குறிபார்த்து வன்மையாளனான வீரவாகுதேவன்மீது செல்லுமாறு விட்டனன்.—எ-று. (கஉஎ)

வேறு.

விடுத்த காலையி னித்திறந் தெரிந்திடும் விறலோ
னடற்பெருங்கணை யாயிர கோடிக ளதனைத்
தடுத்திடும்படி செலுத்தின னவையெலாந் தடிந்து
வடித்த வேற்படை வான்வழிக் கொண்டுவந் ததுவே.

(இ-ள்.) பாநுகோபன் வேலினைவிட்டவுடனே, அதனையுணர்ந்த வீரவாகுதேவன் வன்மை பொருந்திய ஆயிரகோடியம்புகளை அவ்வேலினைத் தடுக்குமாறு விடுத்த

னன். உடனே அவ்வேலாயுதம் வீரவாகுதேவன்விட்ட அம்புகளனைத்தையும் நாசஞ்செய்துகொண்டு ஆகாயவழியாக வீரவாகுதேவனை நாடிவந்தது.—எ-று. (கஉஅ)

வந்த காலையி லதன்வலி நோக்கியே வள்ள
லிந்து சேகர னுதவிய நாந்தக மெடுத்துக்
கந்த வேளடி வழுத்தியே கருதலன் விடுத்த
குந்த வெம்படை யிருதுணி பட்டிடக் குறைத்தான்.

(இ-ள்.) அந்த வேலாயுதம் வந்தவுடனே அதனுடைய வன்மையைப் பார்த்து வள்ளலான வீரவாகுதேவன் வன்மைபொருந்திய ஆயிரகோடி யம்புகளை எடுத்து அவ்வேலினைத் தடுக்குமாறு விடுத்தனன்; உடனே அவ்வேலாயுதம் அவ்வம்புகளனைத்தையும் நாசஞ்செய்து ஆகாயவழியாக வீரவாகுதேவனை நாடிவந்தது.—எ-று. (கஉக)

குறைத்த காலையி லமரர்க ளாடினர் கொடியோன்
றிறத்த ராகிய வவுணர்க ளேங்கியே திகைத்தா
ரறத்தை யாற்றிடு மிளையவ னங்கது நோக்கி
யெறித்த ருஞ்சுடர் வாளினை யுறையகத் திட்டான்.

(இ-ள்.) வெட்டினவுடனே தேவர்கள் மகிழ்ந்து கூத்தாடினார்கள்; கொடியவனான பாநுகோபன் பக்கத்தினரான அசுரர்கள் ஏங்கித் திகைத்தார்கள்; இதனை அறமியற்றும் வீரவாகுதேவன் பார்த்து ஒளிவீசுகின்ற வாட்படையினை உறையிலிட்டனன்.

அள்ளி லைத்தனி வேற்படை யிறுதலு மதனைக்
கள்ள விஞ்சைகள் பயின்றிடு சூர்மகன் காணுத்
தெள்ளி தம்மவோ வென்படை வலியெனச் செப்பிப்
பொள்ளெ னக்கர வாளமொன் றெடுத்தனன் பொருவான்.

(இ-ள்.) கூரிய தகட்டுவடிவமான வேலாயுதம் அழிதலும், அதனை பொய்வித்தைகளைக்கற்றுள்ள பாநுகோபன் பார்த்து, அம்ம! ஒ என்னுடைய ஆயுதத்தின் வன்மை தெள்ளிது என்றுரைத்து விரைவாகக் கரவாளமொன்றைப் போர்புரியுமாறெடுத்தனன்.

கருமு கிற்புரை மேனியன் கரத்தில்வாள் பற்றி
விரவு மின்னுவின் கொடியென விதிர்த்துமுன் வீசி
யுருமி டிக்குலத் தாவலங் கொட்டியார்த் துருத்துச்
செருமு யற்சியாற் சீரிளங் கோவின்முன் சென்றான்.

(இ-ள்.) கரிய மேகத்தினையொத்த உடலினனான பாநுகோபன், தன் கையில் வாளைப்பிடித்து நெருங்கி வராநின்ற மின்னற்கொடியைப்போல விதிர்த்து முன்னே வீசிக்கொண்டு ஆணிடிக்கூட்டங்களைப்போல வாயினு லாரவாரஞ்செய்தவனுய்ச் சிறிப் போர்புரிவான் முயன்றவனுகச் சிறந்த வீரவாகுதேவ னருகிற் சென்றனன்.—எ-று.

சென்ற காலையி லிளையவன் றன்பெருஞ் சிலைகா
லொன்ற வாங்கியே பகழிபல் லாயிர முய்த்து
வென்றி வாட்படை யானுரங் கிழித்திட விடர்செய்
குன்றில் வீழ்தரு மருவிபோல் வீழ்ந்தது குருதி.

(இ-ள்.) சென்றவுடனே, வீரவாகுதேவன் தனது பெரிய வில்லினை இருதலையும் வளைய வளைத்துப் பல்லாயிரமம்புகளைவிட்டு வெற்றிபொருந்திய வாட்படையினையுடைய வீரவாகுதேவனுடைய மார்பு பிளக்குமாறு பிளக்க, இரண்டாகப்பிளந்த மலையினின்றும் விழு மருவியைப்போல அவன் மார்பினின்றும் இரத்த மொழுகியது.—எ-று.

பரிதி மாற்றலன் மிசைவரு பகழியும் பாரான்
குருதி வீழ்வது முரம்பகிர் வுற்றதுங் குறியா

ஞெருதன் மானமுந் தானுமா யோடினன் குறுகிச்
சுருதி யன்னவன் சிலையினை வாளினாற் றுணித்தான்.

(இ-ள்.) பாநுகோபன் தன்மீது வராநின்ற அம்புகளையும் பாராதவனாய் இரத்த மொழுகுவதையும் மார்பு பிளந்ததையுங் கருதானாய்த் தன்னிடத்துண்டான மானமுந் தானுமாக விரைந்துவந்து வேதம்போல்பவனான வீரவாகுதேவன் பிடித்திருந்த வில்லினை வாளினால் வெட்டினான்.—எ-று. (கூ௬௪)

வில்லி றுத்திடு விறலினோன் மிசைபடக் கிளர்ந்து
செல்லெ னத்தெழித் தொருதன்வாள் வீசினன் றிரிய
வல்ல லுற்றிடு மிமையவ ரங்கது நோக்கி
யில்லை மற்றிவ னிறந்தபின் னமரொன்ப தென்றார்.

(இ-ள்.) வில்லினையொடித்த வெற்றியாளனான பாநுகோபன் மேலேகிளம்பி மேகம்போல கர்ச்சித்து ஒப்பற்ற தனது வாட்படையை வீசினவனாக வுலாவுதலும், துன்புற்ற தேவர்க ளதனைப்பார்த்து இவன் இறந்தபின்பு, இவனால் இனிப் போரில்லை என்றார்கள்.—எ-று. (கூ௬௫)

அங்க வெல்லையில் வீரவா குப்பெய ரறிஞன்
றிங்கள் சூடிய வுலகடுந் தாதையிற் சீறித்
துங்க மிக்கதன் வாளுரீஇக் கறங்கெனச் சுற்றி
யெங்க ணேகுதி யென்றுபோ யவுணனை யெதிர்ந்தான்.

(இ-ள்.) அப்பொழுது அறிஞனான வீரவாகுதேவன், சந்திரசேகரனான சங்கார மூர்த்தியைப்போல சீற்றங்கொண்டு உயர்வுமிக்க தனது வாட்படையை உருவி கறங்கைப்போல சுழன்று நீ எங்குபோகின்றனை என்று பாநுகோபனை எதிர்த்தான்.—எ-று.

ஏற்றெ திர்ந்திடு மெல்லையி னிரவியம் பகைஞன்
காற்றெ னச்சென்று நேர்ந்தன னிருவருங் கலந்து
சீற்ற நீர்மையால் வாளம ருழந்தனர் செங்கட்
கூற்று மங்கியுஞ் சமர்புரி கின்றகோட் பென்ன.

(இ-ள்.) வீரவாகுதேவன் சென்றெதிர்த்த சமயத்திற் பாநுகோபன் காற்றைப் போல வந்தெதிர்த்தான்; உடனே இருவருங்கலந்து கோபத்துடனே செந்நிறமான கண்களையுடைய எமனும் அக்கினியும் எதிர்த்துப் போர்புரிந்தாற்போல போர்புரிந்தார்கள்.

மாறு மாறுசென் றடிமுத லுறுப்பினை வாளால்
வேறு செய்திட வெறிகுவ ரன்னது விலக்கி
யூறு செய்திற நாடுவ ரிடைதெரிந் துருமற்
சூறை யாமெனச் சுற்றுவர் வட்டணை சூழ்வார்.

(இ-ள்.) எதிர்த்தெதிர்த்துச் சென்று கால்முதலிய உறுப்புகளை வேறு வேறாக ஆக்கும்வண்ணம் வெட்டுவார்கள், அவைகளைத் தடுத்து காயப்படுத்துந்தன்மையை ஒருவருக்கொருவர் நாடுவார்கள், காலம்பார்த்து அருகிற்செல்லாமற் சூறைக்காற்றைப்போல சுற்றுவார்கள்; வட்டணை வருவார்கள்.—எ-று. (கூ௬அ)

இன்ன தன்மையி லிருவரும் வாளம ரியற்றி
மன்னு காலையிற் சூர்மகன் விஞ்சையின் வலியாற்
றன்னை நேரிலா விளையவன் றடக்கைவா ளகற்றி
யன்ன வன்றிருத் தோண்மிசை யெறிந்தன னன்றே.

(இ-ள்.) இவ்வண்ணமாக இருவரும் வாட்போர்புரிகின்றசமயத்திற் பாநுகோபன் தன் வித்தியாசாமர்த்தியத்தினால் ஒப்பற்ற வீரவாகுதேவனுடைய கைவாளினை விலக்கி அவ்வீரவாகுதேவனுடைய தோளின்மீது வெட்டினான்.—எ-று. (கூ௬௯)

மாற்ற லன்கர வாளினு லெறிதலும் வள்ள
லாற்றன் மொய்ம்பிடைக் குருதியா றிழிதர வதுகண்
டேற்ற மெய்தினன் சூர்மக னிவன்றனக் கிளையோன்
றோற்றி டுங்கொலென் றிரங்கினர் வானவர் துளங்கி.

(இ-ள்.) பகைவன் வாளினால் வெட்டுதலும், வள்ளலாகிய வீரவாகுதேவனுடைய வன்மையான புயத்தில் இரத்தம் ஆறுபோலொழுக, அதனைக்கண்டு பாநுகோபன் மகிழ்ந்தான்; உடனே இப்பாநுகோபனுக்கு வீரவாகுதேவன் தோற்பானோ? என்னமோ என்று தேவர்கள் நடுங்கி யிரங்கினார்கள்.—எ-று. (௧௭௦)

அன்ன காலையி லிளையவ னறுமுகத் தமலன்
பொன்னின் சேவடி புந்தியி லுன்னியே புகழ்ந்து
மின்னு வானதன் வாட்படை வீசியே விரைந்து
துன்ன லன்வலத் தோளினை வலியொடு துணித்தான்.

(இ-ள்.) அப்பொழுது வீரவாகுதேவன், நிமலனாகிய ஆறுமுகப் பெருமானுடைய பொன்மயமான செவ்விய பாதங்களை மனதினினைத்துப் புகழ்ந்து மின்னலனைய தனது வாளாயுதத்தைச் சுழற்றிக்கொண்டு விரைவாகச்சென்று பகைவனுடைய வலது தோளினை வன்மையுடனறுத்துத் தள்ளினான்.—எ-று. (௧௭௧)

துணித்த காலையில் வலதுகை தன்னொடு தொடர்ந்த
பணித்த ணிச்சுடர் வாளினை யிடக்கையாற் பறித்து
மணித்த சும்புகொண் மொய்ம்புடை யவுணர்கோன் மற்றுந்
தணிப்ப ருஞ்சினந் தன்னொடு முயன்றனன் சமரே.

(இ-ள்.) வெட்டினவுடனே வலதுகையொடுசென்ற வேலைத்திறமமைந்த ஒளி பொருந்திய ஒப்பற்றவாளினை இடது கையினாற் பறித்துக் கரிய வழவழப்பான நிறத்தினையுடைய மார்பொடு கூடின அசுராதிபன் பின்னும் தணிவற்ற கோபத்துடனே போர் செய்தனன்.—எ-று. (௧௭௨)

தீய வன்றனி முயற்சியை நோக்கியே திறலோன்
றூய வாள்கொடே யன்னவ னிடக்கையைத் துணிப்ப
மாயை தொல்படை விடுத்திடு வேனென மதித்தா
னாய காலையி லறிஞனு மவன்றலை யறுத்தான்.

(இ-ள்.) கொடியவனான பாநுகோபனது முயற்சியைப்பார்த்து, வீரவாகுதேவன் தூய்மையான வாளினால் அவனதிடதுகையினை வெட்ட, உடனே அவன் நானிப்பொழுது பெரியமாயாஸ்திரத்தை விடுவேனென்று மதித்தனன்; அப்பொழுது வீரவாகுதேவனும் அவனுடைய தலையை வெட்டினான்.—எ-று. (௧௭௩)

வாளி லங்கவ னடுதலுஞ் சென்னியும் வரைநேர்
தோளும் யாக்கையும் வீழ்ந்தன சூரியன் பகைஞ
னாளு லந்தன னவனுயிர் வெளவியே நடுவ
னாளி மொய்ம்பனை வழுத்தியே தென்புலத் தடைந்தான்.

(இ-ள்.) வாட்படையினால் வீரவாகுதேவன் கொல்லுதலும், தலையும் மலையனைய புயமும் உடலும் விழுந்தன; உடனே பாநுகோபன் வாழ்நாளொழிந்தனன்; அவனுயிரை அபகரித்தவனாக, எமன் சிங்கம்போன்ற வன்மையாளனான வீரவாகுதேவனைப் புகழ்ந்து தனதுலகஞ் சென்றான்.—எ-று. (௧௭௪)

சூரன் மாமகன் முடிந்தது முனிவருஞ் சுரரு
மாரு நோக்கியே யாடினர் பாடின ரார்த்தார்.

வீர வீரனீ யாமெனா விளவலை வியந்து
மாரி யாமென வவன்மிசை பொழிந்தனர் மலர்கள்.

(இ-ள்.) சூரனுடைய சிறந்த மைந்தனான பாநுகோபனிறந்தது, முனிவர்களும் தேவர்களுமாகிய யாவரும் பார்த்து ஆடினார்கள், பாடினார்கள், ஆரவாரித்தார்கள்; நீயே வீர வீரனென்று வீரவாகுதேவனைப் புகழ்ந்து மழையென்று கூறுமாறு அவன்மீது மலரிறைத்தார்கள்.—எ-று. (௧௪௫)

நுவல ருந்திறற் சூர்மகன் பட்டது நோக்கி
யவல மெய்தியே யழிந்திடு பூதர்க ளார்த்துத்
தவல ருந்திறல் வீரனை வழுத்தினர் தனது
கவலை நீங்கியே களித்தனன் செங்கதிர்க் கடவுள்.

(இ-ள்.) சொல்லுதற்கரிய ஆற்றலினையுடைய சூரபன்மன் பிள்ளையானவனிறந்ததைப்பார்த்து, அவனால் துன்புற்றழிந்த பூதர்கள் ஆரவாரித்துக் கெடுதலற்ற வெற்றியினையுடைய வீரவாகுதேவனைத் துதித்தார்கள்; சூரியனுந் தனது கவலைநீங்கிக் களிப்படைந்தனன்.—எ-று. (௧௪௬)

அன்ன காலையில் வீரவா குப்பெய ரறிஞன்
றன்னு ளஞ்சிறந் தகலிரு விசும்பினைத் தணவா
விந்நி லத்திடை வந்துதன் றுணைவர்தம் மினத்தைத்
துன்னி யாங்கவர் புகழ்ந்திட வினையன சொல்வான்.

(இ-ள்.) அப்பொழுது ஞானியான வீரவாகுதேவன் தன் மனமகிழ்ந்து அகன்ற ஆகாயத்தை விட்டு நீங்கி இந்தப்பூமியில்வந்து தனது துணைவர் இனத்தை அடைந்து, அவர்கள் தன்னைப் புகழ இவைகளைக் கூறுவான்.—எ-று. (௧௪௭)

ஆன தொல்பெரு மாயையா னம்மைமுன் னலைத்த
பானு கோபனை யட்டனம் பகர்ந்தசூ ளுறவு
தானு முற்றிய தாலினி யெம்பிரான் றன்முன்
சேனை தன்னொடு மேவுதுஞ் செல்லுதி ரென்றான்.

(இ-ள்.) தனக்குப் பரிசயமான பழைய பெரிய மாயையால் நம்மை முன் வருத்தின பாநுகோபனைக் கொன்றோம்; அதனால் நாம் கூறிய சபதமு நிறைவேறியது; ஆதலால் இனி நாம் எம்பெருமானெதிரே சைனியத்துடன் போவோம்; போங்கள் என்றுரைத்தான்.—எ-று. (௧௪௮)

மிக்க வீரனித் தன்மையை யுரைத்தலும் வினவி
முக்க ணாயகன் குமரவே ளிணையடி முன்னம்
புக்கு நென்னலுந் தொழுதில நன்றுநீ புகன்றாய்
தக்க தேயிது வென்றனர் றுணைவராந் தலைவர்.

(இ-ள்.) சிறந்த வீரனான பாநுகோபன் இம்மொழிகளை யுரைத்தலும், அவைகளைக்கேட்டு மூன்று நேத்திரங்களையுடைய இறைவனுடைய குமாரனான சண்முகப்பெருமானது உபயபாதங்களை நேற்றும் வணங்கினோமில்லை; நீ நல்லதே கூறினாய், இது தகுந்ததே என்று துணைவர்களாகிய தலைவர்களுரைத்தார்கள்.—எ-று. (௧௪௯)

ஆங்கவ் வெல்லையி னம்பிதன் னிளைஞரு மடுபோர்
தாங்கு பூதருந் தானையந் தலைவருந் தழுவிப்
பாங்கர் வந்திடப் பொருகள மொருவியே படர்ந்து
பூங்கி டங்குசூழ் பாசறை யிருக்கையுட் புகுந்தான்.

(இ-ள்.) அவ்வாறாகியசமயத்தில், வீரவாகுவி னிளையோர்களும் கொலைத்தொழிலினையுடைய போர்த்தொழிலினை மேற்கொண்ட பூதர்களும் சேனாதிபதிகளும் கலந்தருகில்வர, போர்க்களத்தை நீங்கிச்சென்று வீரவாகுதேவன் அழகிய வகழ்சூழ்ந்த படைவீட்டிருக்கையி னுட்சென்றான்.—எ-று. (கருO)

சோதி நீடிய பாசறை புகுந்திடு தூயோன்
பூதர் தம்மொடுந் துணைவர்க ளெம்மொடும் போந்து
காத லாகியே யறுமுகத் தையனைக் கண்டு
பாத பங்கயந் தன்னிடைப் பன்முறை பணிந்தான்.

(இ-ள்.) மிகுந்த வொளியினையுடைய படைவீட்டிற்குள் புகுந்த வீரவாகுதேவன் பூதர்களுடனும் இளையவர்களுடனும் சென்று, ஆசையுட னறுமுகப்பெருமானைத் தரிசித்து அவரது பாதபங்கயங்களிற் பலதரம் வணங்கினான்.—எ-று. (கருக)

பரிந்து பன்முறை வணங்கியே யெழுதலும் பகவன்
றெரிந்து நோக்கிநீ சூர்மக னோடுபோர் செய்து
வருந்தி யாங்கவற் செற்றனை யாதலின் மகிழ்ந்தாம்
விரைந்து கேண்மதி நல்குதும் வேண்டுவ தென்றான்.

(இ-ள்.) வீரவாகுதேவன் விரும்பிப் பலதரம் வணங்கியெழுதலும், இறைவன் உற்றுநோக்கி நீ சூரன்மகனோடு போர்புரிந்து வருந்தி அவனைக்கொன்றனை, ஆகையால் மகிழ்ந்தோம்; நீ உனக்கு வேண்டியவற்றை விரைவாகக்கேள் தருகின்றோம் என்று திருவாய்மலர்ந்தருளினான்.—எ-று. (கருஉ)

என்று மூவிரு முகமுடைப் பண்ணவ னியம்ப
நன்று போற்றிடு மிளையவ னெம்பிரா னின்னை
யன்றி யான்செய்த செயலிலை யாயினு மடியேற்
கொன்று மற்றிவ ணருளிய வேண்டுமென் றுரைப்பான்.

(இ-ள்.) என்று ஆறுதிருமுகங்களையுடைய இறையவன் திருவாய்மலர்ந்தருள, இறைவனெதிரே நின்று வணங்குகின்ற வீரவாகுதேவன், இறைவனைப்பார்த்து எம்பெருமானே! நின்னையன்றி யான் செய்த செயலொன்றுமில்லை; ஆனாலும் அடியேற்கு ஒருவர மருளவேண்டும் என்று கூறுவானாயினான்.—எ-று. (கருங)

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை யிந்திர னரசினைக் கனவினும் வெஃகேன்
மால யன்பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் றமியேன்.

(இ-ள்.) அழகுமிக்க குபேரனுடைய வாழ்க்கையும் கருதேன், அன்றி சுவர்க்கவரசனான இந்திரன் சம்பத்தைக் கனவினும் விரும்பேன், மாலும் அயனும் பெற்றுள்ள பதவிகளையும் பொருளென்று மதியேன்; மிகவு நின் திருவடிக்கன்பொன்றையே அடியேன் விரும்புவேன்.—எ-று. (கருச)

அந்த நல்வர முத்தியி னரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும் பெறுகிலர் சிறியே
னுய்ந்தி டும்வகை யருள்செய வேண்டுமென் றுரைப்ப
வெந்தை கந்தவே ளுனக்கது புரிந்தன மென்றான்.

(இ-ள்.) அந்த நல்லவரமானது முத்தியைக்காட்டிலும் அருமையானது; அதனைக் கருதுகின்ற தவத்தர்களும் அடையார். சிறியேன் உய்யுமா றவ்வரமளித்தல் வே

ண்டும் என்று கூற, எந்தையான கந்தவேள் உனக்கதனை அளித்தோமென்று திருவாய் மலர்ந்தனர்.—எ-று. (கருரு)

உடைய தொல்விறல் வீரவாகுவுக் கிவ்வர முதவிப்
புடையி னிற்றொழு துணைவர்க்கு நல்லருள் புரியா
வடைய மற்றவ ரிருக்கைகள் வைகுவா னருளி
விடைபு ரிந்தனன் யாவர்க்கு மேலதாம் விமலன்.

(இ-ள்.) மிகுந்த திறலாளனை வீரவாகுதேவனுக்கிந்த வரத்தினை யளித்து அருகில் வணங்கிநின்ற அவன் றுணைவர்கட்கும் நல்ல அருளைப்புரிந்து எல்லாரையும் அவர்கள் இருப்பிடங்களுக்குச் செல்லும்வண்ணங் கட்டளையருளி எல்லாரிலுஞ்சிறந்த இறைவன் விடையளித்தனன்.—எ-று. (கருசு)

செங்க திர்ப்பகை யட்டவன் முதலிய திறலோர்
புங்க வன்றனைத் தொழுதுதம் மிருக்கையிற் போனா
ரிங்கு மற்றிது நின்றிட வவுணர்தம் மிறைவற்
கங்க ணுற்றிடு செய்கையை மேலினி யறைவாம்.

(இ-ள்.) பாநுகோபனைக் கொன்ற வீரவாகுதேவன் முதலியவீரர்கள் இறைவனை வணங்கித் தங்களிருப்பிடங்களுக்குச் சென்றார்கள். இது இவ்வண்ணமிருக்க அசுராதிபனான சூரபன்மனுக்கு அங்கு நடந்தசெய்கையை இனிக் கூறுவாம்.—எ-று. ()

வேறு.

ஈதிவர் புரிந்ததே யிறைவன் றன்னையுங்
காதுவ ரென்பது கருத்துட் கொண்டெழா
வாதுவர் கவனமா வழிக்கொண் டாலெனத்
தூதுவ ரோடினர் துளங்கு நெஞ்சினர்.

(இ-ள்.) இது இவர்கள் செய்ததானால் இனி நமதரசனையுங் கொல்வார்களென்று மனத்தினினைத்துக் குதிரைப்பாகர் குதிரையின்மீது விரைந்து சென்றாற்போல தூதுவர்கள் நடுக்கம்பொருந்திய மனமுடையவராக ஓடினார்கள். (கருஅ)

மதிதொடு கடிமதின் மகேந்திரப் புரத்
ததிர்தரு முரசொலி யவிந்து துன்பினான்
முதிர்வுறு மழுகுரன் முழங்கும் வீதிபோய்க்
கதுமென வரசவைக் களத்து ளேகினார்.

(இ-ள்.) அத்தூதுவர்கள், சந்திரமண்டலத்தையளாவிய காவலோடுகூடின வீரமகேந்திரபுரத்தில் என்றும் முழங்குகின்ற முரசவாச்சிய ஓசையொழிந்து துன்பத்தினான் மிக்க அழுகுரலோசையினையுடைய வீதியின்வழியாகச்சென்று சீக்கிரமாக அரசன் கொலுவிருக்கின்ற சபாமண்டபத்திற்குச் சென்றார்கள்.—எ-று. (கருகூ)

துன்னிய பெரும்புன றாண்டு கண்ணின
ருன்னருந் துயரின ருயிர்க்கு நாசியர்
மன்னவ னிணையடி வணங்கி யுன்மகன்
முன்னுறு தூதனான் முடிவுற் றானென்றார்.

(இ-ள்.) தூதர்கள், நெருங்கிய மிகுதியான நீர்தாளும்பாநின்ற கண்களையுடையவர்களும், நினைத்தற்கரிய துன்பமுள்ளவர்களும், பெருமூச்சுவிடுகின்ற மூக்கினையுடையவர்களும் ஆகச்சென்று, அரசனுடைய இரண்டு கால்களையும் வணங்கி, மன்னவ! உனது மகன் முன்னரிங்குவந்த தூதனால் இறந்தானென்று கூறினார்கள்.—எ-று. ()

79

தாழ்ந்தவர் மொழிந்திடு தன்மை கேட்டலுஞ்
சூழ்ந்திடு திருவுடைச் சூர னென்பவ
னாழ்ந்திடு துயர்க்கட லழுந்தி யோவென
வீழ்ந்தனன் புரண்டன னுயிர்ப்பு வீங்கினன்.

(இ-ள்.) அந்தத்தூதுவர்கள் வணங்கி உரைத்த உரையினைக்கேட்டவுடனே செல்வத்தாற்சூழப்பெற்றவனான சூரபன்மனென்பவன் ஆழமானதுன்பசமுத்திரத்தின்முழுகி ஓவென்று கதறிக்கீழேவிழுந்து பெருமூச்சுண்டாகப் புரண்டனன்.—எ-று. (௧௯௧)

நக்குறு சுடரென நடுக்க முள்ளுற
மிக்கெழ குருதிநீர் விழிகள் கான்றிடத்
தொக்குடல் வியர்ப்பொடு துளக்கங் கொண்டிட
வக்கண மயங்கின னறிவு சோர்ந்துளான்.

(இ-ள்.) அறிவு சோர்ந்த அச்சூரபன்மன் ஒளிவிட்டு விளங்காநின்ற தீச்சுடரைப்போல உள்ளே மிகுதியான அசைவோடுகூட அதிகமாக உண்டாகா நின்ற நீரினைக்கண்கள் பொழியாநிற்ப, உடலில் நடுக்கத்துடன் வியர்வையுமுண்டாக அதனால் (முன்னிலும்) அதிக மயக்கமடைந்தான்.—எ-று. (௧௯௨)

தளர்ந்துடல் வெதும்புறத் தன்கண் சோர்வுற
வுளந்திரி வுறவுயி ரூச லாடிட
விளிந்தவ ராமென வீழ்ந்து மான்றவன்
றெளிந்தன னிரங்கின னினைய செப்பினன்.

(இ-ள்.) உடல் தளர்ந்து வெதும்பவும், தனது கண்கள் சோர்வடையவும், மனநிலை மாறுபடவும், பிராணன் ஊஞ்சலாடவும், இறந்தவர்களைப்போல மயங்கிக் கீழே விழுந்த சூரபன்மன் மயக்கநீங்கி (எழுந்து) அழுதுகொண் டிவ்வண்ணம் கூறுகின்றான்.

வேறு.

மைந்தவோ வென்றன் மதகளிறே வல்வினையேன்
சிந்தையோ சிந்தை தெவிட்டாத தெள்ளமுதோ
தந்தையோ தந்தைக்குத் தந்தையிலான் கொன்றனனே
வெந்தையோ நின்னை யிதற்கோ வளர்த்தனனே.

(இ-ள்.) என் மகனே! எனது மதயானையே! எனது மனந்தெவிட்டாத தெள்ளமுதமே! நின்னைத் தன் தந்தைக்குத் தந்தையில்லாதவனான வீர வாகுகொன்றானே? என்னைப்பெற்ற அப்பனே! இதற்காகத்தானே உன்னை யான் வளர்த்தேன்.—எ-று. ()

வன்னச் சிறுவர்பலர் மாய்ந்தா ரவர்மாய்ந்து
முன்னைத் துணையென் றுளங்கொண் டிருந்தனனா
லென்னைத் தனியேவைத் தெந்தையுமே குற்றனைமேற்
பின்னைத் தமியேன் பிழைக்கும்படி யுண்டோ.

(இ-ள்.) அழகிய பிள்ளைகள் அநேகர் இறந்தார்கள்; அவர்களெல்லாம் இறந்தும் நான் உன்னையே நினைத்து நீயே எனக்குத்துணை என்று கருதி இருந்தேனே. அவ்வண்ணம் நான் நினைத்துக்கொண்டிருக்க என்னைத் தனியே இங்கே வைத்துவிட்டு என்னப்பனே! நீயும் போனயானல் பின்னரிந்த யான்பிழைக்குமாறுமுண்டோ?—எ-று.

ஒன்னார் சிறையைவிடி னுய்வுண்டா மென்றுமுனஞ்
சொன்ன யதுவுமிகழ்ந் துன்னைத் தோற்றனனா

லென்று மினியதனை யெண்ணுவதி யாவருக்குந்
தன்னால் வராத வினையுளதோ தக்கோனே.

(இ-ள்.) தகுதியினையுடைய என்மகனே! பகைவர் சிறையைவிட்டால் நமக்கு உய்வு உண்டாகுமென்று முன்னுரைத்தனை; நீ கூறிய அம்மொழியையும் இகழ்ந்து உன்னைத்தோற்றேன்; இனி யதனை எண்ணுவதனாலென்னலாபம்? எப்படிப்பட்டவர்கட்கும் தன்னால் வராத வினையும் உளதோ?—எ-று. (கசுசு)

நன்றீத லசமர்க்கு நண்ணுவது நண்ணலர்மே
லென்றீர மாகவிசைத் தாயா னேகாமற்
சென்றீ யெனவே செலுத்தியுனைப் போக்கினனா
லொன்றீங் குளதோ பிழையுன் மிசையையா.

(இ-ள்.) என்னப்பனே! நாம் பகைவர்மீது போருக்கேகுதல் நல்லது அல்ல என்று நீ எனக்கு வெகு குளிர்ச்சியாக முன்னே உரைத்தாய், (அவ்வாறு கூறிய உன்னை நிறுத்திவிட்டு) யான் போகவேண்டும்; அவ்வண்ணம் போகாமல் நீயே போ என்று உன்னை அநுப்பினேன், இதனால் அப்பனே நின்மீது என்ன குற்றமுளது. ஒன்றும் இல்லையாம் என்றபடி.—எ-று. (கசுஎ)

கைப்போது கொண்டு கடவுளர்க ளெல்லோரு
முப்போதும் வந்து முறையால் வழிபடுவா
ரொப்போதலில்லா வுனதுமே லுள்ளபகை
யிப்போ துடனீங்கி யேமுற் றிருந்தாரோ.

(இ-ள்.) என்னருங்குழந்தாய்! உன்னைத் தங்கள் கரகமலங்களைக்கொண்டு தேவர்களெல்லாரும் மூன்றுகாலங்களிலும் வந்து முறைப்படி வணங்குவார்கள். சமானமாக வுரைத்தற்கு வேறொருவரும் கிடைக்காத உன்மீது அவர்கள் வைத்திருந்த விரோதம் இப்பொழுது உன் மரணத்துடன் நீங்கி இன்பமுற்றிருந்தார்களோ?—எ-று.(கசுஅ)

உன்னுணைக் கஞ்சி யுறங்கா துழன்றிடுமோ
லிந்நாடனி னீயிறந்தா யென மகிழ்ந்து
பன்னகப் பாயல் படுத்திருவர் கால்வருடத்
தொன்னு ளெனவே கவலையின்றித் துஞ்சானோ.

(இ-ள்.) அப்பனே! உனது ஆக்கினைக்குப்பயந்து தூங்காது சஞ்சரித்த நாராயணன் இத்தினத்தில் நீ செத்தனை என்று கேள்வியுற்றுச் சந்தோஷித்து அரவணையிற் கிடந்து திருமகளும் பூமகளும் கால்பிடிக்க, நின்னதிகாரமுண்டாதற்கு முன்னுளிற் போல கவலையில்லாது கண்ணுறங்கானோ? (கண்ணுறங்குவான்).—எ-று. (கசுகூ)

நந்தா னவர்குலத்து நாயகமே நண்ணினக்கோர்
சிந்தா மணியே திருவேயென் றெள்ளமுதே
யெந்தாய் தனியேபோ யெங்கிருந்தா யங்கேயான்
வந்தாலு முன்றன் மதுரமொழி கேட்பேனோ.

(இ - ள்.) நமது அசுரகுலத்திற்கு ஒரு தலைவனாக உள்ளவனே! அடைந்தவர்க்கிடைந்திடாதளிக்கும் இயல்பிற்குறையாத சிந்தாமணியே! திருவே! எனது தெளிந்த அமிர்தமே! எந்தையே! நீ தனியே சென்றெங்கிருந்தனை யவ்விடத்திற்கு யான் வந்தாலும் உன்னுடைய மாதுர்யமான வாக்கியத்தைக் கேட்பேனோ?—எ-று.

நீ இருக்கும் இடத்திற்கு யான் வந்தாலும், நீ வேறு சரீரமுள்ளவனாக இருந்தால் நின் சொல் எனக்கெவ்வண்ணந்தெரியும்? தெரியாதே என்றான் என்க. (கஎ0)

சோராத சூழ்ச்சித் துணைவர்சிறு றொல்லாருஞ்
சேரார் பொருதலைப்பச் சென்றொழிந்து போயினரா
லாராய்ந் தெனதுதுய ராற்றுவதற் காருமிலை
வாராய் புதல்வா கடிதோடி வாராயே.

(இ-ள்.) என் மகனே! கெடாத எனது மந்திரியர்களும் மக்களும் மற்றவர்களும் பகைவர் போர்செய்தழிக்க அழிந்தொழிந்தார்கள் அதனால் இவ்விடத்தில் ஆலோசனைசெய்து எனது துன்பத்தை நீக்குதற்கு எவரு மில்லை. நீ இப்பொழுது வருவாயாக. விரைந்தோடி வருவாயாக.—எ-று.

அரசகாரியம் ஆலோசனையின்றி முடியாதாதலால், ஆலோசனை செய்ய நீ ஓடி வாவென்றான் என்க. (௧எ௧)

நீடித் திகழ்கதிராற் றீண்டி நினதுசிறை
வீடிச் சதுர்முகத்தோன் வேண்டிடநீ விட்டபின்னர்
வாடித் தளர்ந்து வசைபடைத்த வெய்யவனு
மோடிக் ககனத் துளமகிழ்ந்து செல்லாமோ.

(இ-ள்.) நீண்டு விளங்குகின்ற கிரணக்கதிரினால் நின்னைத்தொட்டு நினது சிறைக்குள்ளிருந்து பின்னர் பிரமன் வந்து கேட்டுக்கொள்ள நீ விட்டதற்குப் பின்னர் வாடித் தளர்ந்து வசைபெற்ற சூரியன் (இப்பொழுது நீ இறந்ததை உணர்ந்து) ஆகாயத்தில் மனமகிழ்ச்சியுட னோடிச்செல்லானோ? செல்வானென்றபடி.—எ-று. (௧எ௨)

பற்று ரடித்தொண்டு பேணிப் பரந்துழலு
மொற்று னவனோ வுனைத்தா னடவல்லா
னற்றார் தமதுடலுக் காவியாய்ச் சென்றிடவே
கற்றாயே லென்னை மறந்திடவுங் கற்றாயோ.

(இ-ள்.) என் பகைவரது அடிமைத் தொண்டினை அங்கீகரித்து அங்கும் இங்கும் ஓடித் திரிகின்ற தூதுவனானவனோ வுன்னைக் கொல்லவல்லவன் பகைவருடலுக் குயிராய்ச் செல்லக்கற்றனையேயானால் மகனே! என்னை மறக்கவும் கற்றனையோ?எ-று.

மாகொற்ற மைந்தன் மடிந்தா னெனக்கேட்டு
மேகிற்றிலையா லிருக்கின்ற தின்னு முயிர்
வேகுற்ற துள்ள மிகுதுயரம் வந்தவழிச்
சாகுற்ற தோர்வரமுஞ் சங்கரன்பாற் பெற்றிலனே.

(இ-ள்.) மிகவுஞ் சிறந்த வெற்றிபொருந்திய பிள்ளை யிறந்தானென்று கேள்வியுற்றும் போகாததாக இன்னம் என்னுயிர் இருக்கின்றது, மனம் வேகின்றது, மிகுந்த துன்பம் உண்டானவுடனே இறக்கின்ற ஒரு வரமும் யான் முன்னே சிவனிடத்துப்பெறாதுபோயினேன்.—எ-று.

எஞ்ஞான்றும் தனதுடல் இந்நிலையாவே அழியாதிருக்கும் என்பது அவன் துணிபாதலால், நான் இறக்க வரம்பெற்றிலேனே என்றான் என்க. (௧எ௪)

வெற்றி யுளமதலை வீந்தால் விளியாமன்
மற்று மெனதுயிரும் வைகும் வலிதாகச்
செற்றிடலு மாகா தென்செய்கே னழியாமற்
பெற்ற வரமும் பிழையாய் முடிந்ததுவே.

(இ-ள்.) வெற்றிபொருந்திய பிள்ளை இறந்தா லவனுடன் இறவாமல் இன்னும் என் உயிரும் கடினமானதாக இருக்கின்றதே. அதனைக் கொல்லவுமாகாது; என்னசெய்வேன்; ஒருநாளும் அழியாதிருக்கப்பெற்றவரமும் பிழையாய் முடிந்ததுவே.—எ-று

ஆவியே கண்ணே யரசே யுனைச்சமருக்
கேவியே யிவ்வா றிரங்குதற்கோ விங்கிருந்தேன்
கூவியே கொண்டுசெலுங் கூற்றுவனெற் றூேவறியேன்
பாவியே னிந்தப் பதிபுகுந்த தூதுவனே.

(இ-ள்.) என்னுயிரோ! என்கண்ணே! என்னரசே! யுன்னைச் சண்டைக்குப்போகச்செய்து இவ்வண்ணம் வருந்துதற்கோ இங்கே இருந்தேன்; உன்னை அழைத்துக் கொண்டு போகவந்த எமனுடைய அந்தத் தூதுவன்றானே? பாவியாகிய எனனுடைய இந்த ஊருக்குட் பிரவேசித்த தூதுவன்.—எ-று. (களசு)

கூற்றூ னகரிற் குறுகினையோ வன்னதன்றேல்
வேற்றூ ரிடந்தன்னின் மேவினையோ யாதொன்றுந்
தேற்றேன் றனியே தியங்குகின்றே னித்துயர
மாற்றே னரசேயென் னுருயிரோ வாராயோ.

(இ-ள்.) நீ எமனூருக்குச் சென்றனையோ? அவ்விடத்தன்றாகில் வேறொரு விடத்துச் சென்றனையோ? ஒன்றும் யான் உணரேன். தனித்தவனாக மயங்குகின்றேன், இந்தத்துன்பஞ் சகியேன் அரசே! எனது அரிய உயிரோ! நீ இங்குவாராயோ?—எ-று. ()

என்னா விரங்கி யிறைவன் வருந்துதலு
மன்னா னுழையி லவுணர் சிலரோடித்
துன்னார் களத்திற் றுணிவுற்ற சீர்மதலை
பொன்னா ருடலங் கொடுபுலம்பிப் போந்தனரால்.

(இ-ள்.) என்று கூறியழுது அரசனான சூரபன்மன் துன்பமடைதலும் அவனருகில் நின்ற ஊழியர்கள் சிலரோடிச்சென்று பகைவர்கள் நிற்கும் போர்க்களத்தி லிறந்த சிறப்பினையுடைய பிள்ளையான பாநுகோபனுடைய பொன்மயமான சரீரத்தை எடுத்து புலம்பினவர்களாக வந்தார்கள்.—எ-று. (களஅ)

வேறு.

சேந்த குஞ்சிச் சில்தர்செஞ் ஞாயிறு
பாய்ந்த வண்ணல் படிவ மிசைக்கொளா
வேந்தன் முன்னுற வுய்த்து விளாந்தவன்
பூந்தண்சேவடி பூண்டு புலம்பினார்.

(இ-ள்.) செந்நிறமான சிரோரோமத்தினையுடைய தூதுவர்கள் செந்நிறமான சூரியனுடலிற் பாய்ந்த அரசிளங்குமாரனுடலைச் சுமந்து விரைவாக அரசனெதிரிற் கொண்டுவந்துவைத்து அவ்வரசனுடைய அழகிய தண்ணிய செவ்விய காற்கீழ் வீழ்ந்து புலம்பினார்கள்.—எ-று. (சஎகூ)

அண்டர் தம்மை யருஞ்சிறை வீட்டியே
தண்டகஞ் செய் தனிக்குடை மன்னவன்
துண்ட மாகிய தோன்றறன் யாக்கையைக்
கண்ட ரற்றிக் கலுழ்ந்து கலங்கினன்.

(இ-ள்.) தேவர்களை அரிய சிறையிலிட்டுத் தண்டித்த ஏகசத்திராதிபனாகிய சூரபன்மன் என்னும் அரசன் துண்டாகிய தன் மகனுடலைப்பார்த்து அழுது கூச்சலிட்டு மனங் கலங்கினன்.—எ-று. (கஅ0)

அற்ற மைந்தன் சிரத்தினை யங்கையாற்
பற்று நல்லெழில் பார்த்திடுங் கண்களி

லொற்று முத்த முதவு முரனிலாப்
புற்ற ராவி னுயிர்க்கும் புரளுமால்.

(இ-ள்.) சகத்திராட்டாண்டாதிபனுகிய சூரபன்மன் இறந்த மகனுடைய தலையை அழகிய கையினுல் எடுப்பான், அதன் நல்ல அழகைப் பார்ப்பான், கண்களில் ஒற்றுவான் முத்தங் கொடுப்பான்; வன்மையற்ற புற்றரவத்தைபபோல மூச்சுவிடுவான் புரளுவான்.—எ-று. (கஅக)

துஞ்ச லாகித் துணிவுற்றுந் தெவ்வர்மே
னெஞ்சு கொண்ட நெடுஞ்சினந் தீர்கிலை
விஞ்சு மானமும் வீரமும் வன்மையு
மெஞ்சு மேகொலினி யுன்னெ டென்னுமால்.

(இ - ள்.) அடா மகனே! நீ வெட்டுண்டு இறந்தும் பகைவர்மீது மனத்திற் கொண்ட பெருங்கோப நீங்கினுயில்லை; இனி உன்னுடன் மிகுதியான மானமும் வீரமும் வன்மையும் அழிந்தொழியுமோ? என்று மிகவும் போர்புரிந்திறந்த பாநுகோபனுன மகனைப்பார்த்துச் சூரபன்ம னுரைத்தான்.—எ-று.

வெட்டுண்ட தலையினும் வீரம் விளங்கலா லவ்வாறு கூறினுனென்க. (கஅஉ)

கையி லொன்றைக் கதுமெனப் பற்றிடாச்
செய்ய கட்படு செம்புன லாட்டியே
வெய்ய வற்கொடு விண்ணினு தைந்தகை
யைய வீதுகொ லோவென் றரற்றுமே.

(இ - ள்.) அச்சூரபன்மன் இறந்த பாநுகோபனுடைய அத்தங்களிலொன்றினை விரைவாக எடுத்துத் தனது செவ்விய கண்களிற்பொருந்திய இரத்த நீரினுல் கழுவிச் சூரியனை ஆகாயத்தினின்றும் பிடித்துக் கொண்டுவந்த கை என்னையனே! இதுதானே என்றுரைத்தழுவான்.—எ-று. (கஅ௩)

வாள ரம்படு வாளிகண் மூழ்கலிற்
சாள ரங்க ளெனப்புழை தங்கிய
தோளை மார்பினை நோக்குந் தொலைவிலா
வாளை நீயல தாருள ரோயெனும்.

(இ - ள்.) ஒளிபொருந்திய அரத்தாலராவப்பட்ட அம்புகள் படுதலினுற் சாளரங்களைப்போல துவாரம்பொருந்திய தோள்களையும் மார்பினையும் பார்ப்பான்; மகனே! அழியாத ஆளாக உள்ளவன் நின்னைவிட வேறு யாவன் என்றுரைப்பான்—எ-று. (கஅச)

பாறு லாய பறந்தலை தன்னிடை
வேறு வேறது வாகநின் மெய்யினைக்
கூறு செய்தவ னுவி குடித்தலா
லாறு மோவென் னகத்துய ரொன்றிடும்.

(இ - ள்.) பருந்துகளுலாவாநின்ற போர்க்களத்தில் நின்னுடலை வேறுவேருகக் கூறுபடுத்தப்பட்டவன் உயிரைக்குடித்தல்லது என்னுள்ளத்திற் பொருந்தியுள்ள துன்ப மொழியுமோ என்றுரைப்பான்.—எ-று. (கஅரு)

மூண்ட போர்த்தொழின் முற்றிய வென்மக
னீண்டு வந்ததொர் தூதுவ னெற்றிட
மாண்டு ளானென் றுரைத்திடின் மற்றியா
னுண்ட பேரா சாற்றனன் றேயெனும்.

(இ - ள்.) மூண்டுவந்த போர்த்தொழிலிலெல்லாம் வெற்றிபெற்று முதிர்வடைந்த என்மகன் இங்கே வந்த ஒரு தூதுவனடிக்க இறந்தானென்றுரைத்தால் இதுகாறும் யான் ஆண்ட பெரிய அரசாட்சியின் வன்மை நன்றாயிருக்கின்றது என்றுரைப்பான்.

சிரத்தை மார்பினைச் செங்கையைத் தொன்மைபோற்
பொருத்தி நோக்கிப் புரளுமென் புந்தியை
வருத்து மாகுல மற்றது கண்டுநீ
யிருத்தி யோவுயி ரோயின்னு மென்றிடும்.

(இ-ள்.) சூரபன்மன் பாநுகோபனுடைய தலையையும் மார்பினையும் செவ்விய கைகளையும் முன்னிருந்ததுபோல பொருத்திப்பார்த்துப்புரளுவான்; எனது புத்தியை வருத்துகின்றஆகுலத்தைப்பார்த்து இன்னும் என்னுயிரோ நீ இருக்கின்றனையோ? என்றுரைப்பான்.—எ-று. (கஅஎ)

மருளு மங்கை மறிக்கு மதலையை
யருளி னோக்கி யழும்விழுஞ் சோர்வுறும்
புரளும் வாயிற் புடைக்கும் புவியிடை
யுருளு நீட வுயிர்க்கும் வியர்க்குமே.

(இ - ள்.) இதுவுமன்றி, அச்சூரபன்மன் மருட்சியடைவான், அழகிய கையை மறிப்பான், தன்மகனை யருளினாற்பார்த்து அழுவான், விழுவான், சோருவான், புரளுவான், வாயிலடித்துக்கொள்ளுவான், பூமியிலுருளுவான், மிகவும் பெருமூச்சுவிடுவான்.

மன்னர் மன்னவன் மற்றிது பான்மையா
லின்ன லெய்தி யிரங்கலு மச்செயல்
கன்னி மாநகர்க் காப்பினுள் வைகிய
வன்னை கேட்டன ளாகுல மெய்தினாள்.

(இ - ள்.) அரசர்க்கரசனான சூரபன்மனிவ்வண்ணம் துன்பமடைந்து அழுதலும் அச்செய்கையைச் சிறந்த காவலினையுடைய கோவிலுள்ளிருந்த பாநுகோபனுடைய தாயான பதுமகோமளை யென்பவள் கேட்டு துன்புற்றாள்.—எ-று. (கஅக)

நிலத்தில் வீழ்ந்து சரிந்து நெடுமயிர்
குலைத்த கையள் குருதிபெய் கண்ணின
ளலைத்த வுந்திய ளாற்றருந் துன்பினள்
வலைத்த லைப்படு மஞ்ஞையி னேங்கினாள்.

(இ - ள்.) துன்பமடைந்த வப்பதுமகோமளை பூமியில் விழுந்து நீண்ட கூந்தலை அவிழ்த்த கையினளாய், இரத்தக்கண்ணீ ரொழுகவிட்டவளாய், வயிற்றிலடித்துக்கொண்டவளாய், துன்பமுடையவளாய், வலையிலகப்பட்ட மயிலைப்போல அழுதாள். ()

அல்லல் கூர்ந்த வவுணன்றன் காதலி
தொல்லை வைகிய சூழலை நீங்கியே
யில்லை யாகிய வென்மகற் காண்பனென்
றெல்லை யாவலித் தோடின ளேகினாள்.

(இ - ள்.) துன்பமடைந்த அசுரனான சூரபன்மனுடைய மனைவியான பதுமகோமளை முன்னிருந்த இடத்தைவிட்டு இறந்துபட்ட என்மகனைப்பார்ப்பேனென்று விரைவாக விருப்பங்கொண்டோடிச்சென்றனள்.—எ-று. (ககக)

மாவ லிக்கு மடங்கலொப் பான்றனிக்
காவ லிக்குத் துயர்வந்த கன்னிமீர்

நாவ லிக்கண நண்ணுதி ரென்றுகூ
யாவ லித்தன ராயிழை மாரெலாம்.

(இ - ள்.) மிகுந்த வன்மையிற் சிங்கமொத்த அரசனுக்கு மனைவியான பதுமகோமளையார்க்குத் துன்பமுண்டாயது ஆதலாற் பெண்களே! நீவிருந் துன்பமுள்ளவராதிரென்று உரைத்து பெண்களெல்லாம் ஒன்றுகூடிக் கூறியழுதார்கள்.—எ-று.

அரண்மனை வெள்ளாட்டியர் துன்பமில்லாது போனாலும் ஒன்றுசேர்ந்து துன்பங்கொண்டாடவேண்டியவர்களாதலால், பெண்களே! அரசி அழுகின்றாள், நாமு மழுவோமென்றனர் என்க. (கசுஉ)

வாங்கு பூநுதன் மன்னவன் றேவிதன்
பாங்கர் மங்கையர் பற்பல ருங்குழீஇக்
கோங்க மன்ன முலைமுகங் கோட்டியே
யேங்கி யேதுய் ரெய்தி யிரங்கினார்.

(இ - ள்.) வளைந்த அழகிய நெற்றியினையுடைய சூரபன்மனை அரசனுக்குப் பட்டத்தரசியான பதுமகோமளையினருகில் அநேகம்பெண்கள் ஒன்றாகச்சேர்ந்து கோங்கரும்பனைய குவிந்த தனப்பிரதேசத்தி லடித்துக்கொண்டு ஏங்கித் துன்புற்றழுதார்கள்.

இந்தி ரைக்கு நிகர்வரு மேந்திழை
யந்த மில்லதொ ராயிழை மாரொடு
முந்தி யேகி முடிந்து துணிந்திடு
மைந்தன் மீமிசை வீழ்ந்து மயங்கினாள்.

(இ-ள்.) திருமகளுக்குச் சமானமான பதுமகோமளை அளவற்றவர்களான பெண்களுடனே முற்பட்டுச்சென்று வெட்டுண்டிறந்து கிடக்கின்ற மகனை பானுகோபன் மீது விழுந்து மயங்கினாள்.—எ-று. (கசுச)

மயங்கி னாள்பின் மனந்தெளி வெய்தினா
ளுயங்கி னாண்மிக வோவென் றரற்றினா
டியங்கி னாளுரு மேறு திளைத்திடு
புயங்க மென்னப் புரண்டு புலம்பினாள்.

(இ-ள்.) அப்பதுமகோமளை மயக்கமுற்றாள், பின்னர் மனத்தெளிவடைந்தாள், துவண்டாள், மிகவும் ஓ கோ! என்று கதறினாள், தியக்கமுற்றாள். ஆணிடிவிழுந்த நாகத்தைப்போற் கீழே புரண்டு புலம்பினாள்.—எ-று. (கசுரு)

வேறு.

வெய்யோ னென்றாழ் தீண்டுத லோடும் விண்ணிற்போய்க்
கையோ டன்னாற் பற்றினை வந்தென் கண்முன்ன
மொய்யோ டன்று வெஞ்சிறை செய்த முருகாவோ
வையோ கூற்றுக் கின்றிரை யாவ தறியேனே.

(இ - ள்.) சூரியனுடைய கிரணம்பட்டவுடனே ஆகாயத்திற்சென்று கையோடு அவனைப் பிடித்துக்கொண்டுவந்து என் கண்ணெதிரே வன்மையுடனே அவ்விளமைப் பருவத்தில் வெவ்விய சிறைப்படுத்திய முருகனே! ஐயோ! நீ இன்று எமனுக்கிரையாவது அறியேனே.—எ-று. (கசுசு)

பண்டே வானஞ் செந்தழன் மூட்டிப் பகைமுற்றுங்
கொண்டே சென்று யப்பக லுன்றன் கோலத்தைக்

கண்டே னின்றே யிக்கிடை தானுங் காண்பேனோ
விண்டே னல்லே னிவ்வுயிர் தன்னை வினையேனே.

(இ-ள்.) முன்னாளில் நீ சுவர்க்கத்தைச் செவ்விய தீயிட்டுக்கொளுத்திப் பகைவரனைவரையுங் கொண்டுவந்தனை அந்நாளிலுனது கோலத்தைக்கண்ட யான் இத்தினம் இத்தன்மையான கோலத்தையும் காண்பேனோ பாவியாகிய என் இந்த உயிரைப் போக்கிக்கொண்டேனில்லை.—எ-று. (கசஎ)

செந்தேன் மல்கும் பூமகள் செங்கைக் கிளிபொன்று
முந்தே நின்னை வேண்டிட மொய்ம்பா லதுவாங்கித்
தந்தாய் நோந்தேற் கின்றொரு மாற்றந் தருகில்லா
யந்தோ வந்தோ செய்வகை யொன்று மறியேனே.

(இ-ள்.) செவ்விய தேன் நிறைந்து விளங்குகின்ற தாமரைமலரிலிருக்கின்ற திருமகளது கையிலிருந்த ஒரு கிளியினை முன்னாளில் யானுன்னைக்கேட்க, வன்மையினால் அதனை வாங்கியளித்தனை; வருந்திய எனக்கு இன்றொரு மொழிகூடப் பதில் தருகின்றாயில்லை; ஐயோ! ஐயோ! செய்யுந் திறமொன்றும் அறிகின்றேனில்லையே.—எ-று.

இப்பதுமகோமளை திருமகளத்தத்திருந்த கிள்ளையை வாங்கியளிக்குமாறு கூற முன்னாளி லிவனவளை அச்சுறுத்தி அதனை வாங்கி இவட்களித்தான். அது இவளுக்கொரு பெரியவிஷயமாக இருந்தமையா லிங்கு இவ்வருமையான காரியத்தை எண்ணிப்புலம்பினளென்க. பாநுகோபனுடைய பராக்கிரமத்திற்கு இது ஒரு அற்பவிஷயமாதலால் ஆசிரியரிதனை வேறாக வுரைத்திலர் என்க. (கசஅ)

பாபத் தாலோ விண்ணவ ரானோர் பலர்கூறுஞ்
சாபத் தாலோ யாரினு மேலாந் தனிமூவர்
கோபத் தாலோ வெவ்வகை யாலோ குறியேன்யான்
சோபத் தீயால் வாடின னின்னைத் தோற்றேனே.

(இ-ள்.) என்மகனே யான் நான்செய்த பாவத்தாலோ, அல்லது என் பகைவர்களாகிய பல தேவர் உரைத்த சாபத்தினாலோ, தேவர்முதலியயாவரினும் மிக்கஅயன் அரி அரன் என்னும் திரிமூர்த்திகளின் கோபத்தாலோ, அல்லது வேறே எந்தவிதத்தாலோ உணர்கின்றேனில்லை, நின்னை இழந்தேன் இழந்ததுன்ப நெருப்பால் வாடினேன்.

பொன்போன் மேனிக் கந்தனை யிவ்வூர் புகுவித்துக்
கொன்போர் மூட்டி மைந்தரை யெல்லாங் கொல்வித்துத்
துன்போ டிந்நா ளீயு மிறப்பச் சூழ்ந்தாரே
யென்போ லாக வானவர் மாத ரெல்லோரும்.

(இ-ள்.) தேவர்கள், பொன்போன்ற உருவினனான கந்தனை இந்தவூரிற் புகுமாறு செய்து பெரியதான சண்டையை உண்டாக்கி என்மக்களனைவரையுங் கொல்வித்து, அதுவும் போதாமலித்தினம் நீயுந் துன்பத்தோடு இறந்து படும்வண்ணம் செய்தார்களே இதனால் தேவமாதரனைவரும் பின்னாளில் என்னைப்போல ஆவார்களாக.—எ-று.

பெண்களிலநேகர் என்னைப்போல அவளுமாகாளா வென்றுரைக்கும் உலகவழக்கம் இதில் விளங்குதல் காண்க. (உ00)

வான்று வுற்ற வச்சிர மொய்ம்பன் வடவைத்தீக்
கான்று லிக்கும் வன்னி முகத்துக் கழல்வீரன்
மூன்று நூற்றுப் பத்தினர் யார்க்கு முதல்வந்த
தோன்று லென்றே நின்னை யிறைஞ்சிச் சூழ்ந்தாரோ.

(இ-ள்.) என்மகனே பானுகோபா நீ இவ்வுடலம்விட்டு அங்குச் சென்றவுடனே நின்னைக்கண்டு, முன்னே விண்ணுலகஞ்சென்ற வச்சிரவாகுவும், வடவாக்கினியைக்கக்கி யசைகின்ற அக்கினிமுகனாகிய கழற்கால் வீரனும் மூவாயிரம் வீரர்களும் முதலிய அனைவரும் நின்னை நமக்கெல்லா முன்னேவந்த தமையன் என்று வணங்கி உன்னைச் சூழ்ந்துகொண்டார்களோ?—எ-று. (உ0க)

துன்றேர் பெற்ற மெய்யொடு புந்தி துணிவாகச்
சென்றே வானிற் புக்கனை நின்பாற் செலும்வண்ண
மொன்றே யுள்ளந் தான்றுணி யாதா லுலேவெய்து
நன்றே நன்றே சிந்தையும் யானு நண்பம்மா.

(இ-ள்.) நெருங்கிய அழகு பொருந்திய சரீரத்துடன் மனத்துணிவுண்டாக வானுலகிற் சென்று புகுந்தனை, நீ இருக்கும் இடத்திற்கு வருமாறு என்மனமொன்றாகத்துணியாது அலையாநிற்கும் என்மனதுடன் யான்கொண்ட நேச நன்றாகவிருக்கின்றது. நன்றாகவிருக்கின்றது.—எ-று. (உ0உ)

கருந்தேன் மொய்த்த வண்டென மின்னார் கட்கெல்லாம்
விருந்தே யாகு நின்னடை காணும் விதியற்றேன்
மருந்தே யன்னாய் நின்னை யிழந்தேன் மற்றிங்ங
னிருந்தே னல்லேன் றுஞ்சின னன்றோ வினியானே.

(இ-ள்.) மிகுதியான தேனிற்பொருந்திய வண்டைப்போல பெண்களின் கண்களுக்கெல்லாம் விருந்தாகவுள்ள நினது நடையைக் காணுகின்ற ஊழில்லாதவளாயினேன். மருந்துபோல்பவனே நின்னையிழந்தேன் இப்பொழுது இருந்தேனாவேனோ இனியான் இறந்தவளோடு சேர்க்கையானவள்தானே.—எ-று. (உ0ங)

நையா நிற்குந் தேவர் தமக்கு நனிதுன்பஞ்
செய்யா நிற்ற னன்றல வென்றே னதுதேரா
தையா நின்னைத் தோற்றனன் மன்ன னவனுந்தா
னுய்வான் கொல்லோ தன்னுயிர் தானு மொழியாதே.

(இ-ள்.) அப்பனே! நொந்துகிடக்குந் தேவர்களுக்கு மிகவுந் துன்பஞ்செய்தல் நன்று அன்று என்று உன்றந்தையோடன்று கூறினேன் அவர் அதனை உணராதுபோயினமையால் என்னையனே இப்பொழுது உன்னைத்தோற்றேன் இனி என்மன்னவனும் தனது பிராணனை விடாது இருப்பானோ.—எ-று. (உ0ச)

வேறு.

என்றிவை பன்னித் தேவி யிரங்கின ளிரங்க லோடு
நின்றிடு துணைவி மாரு நீடுதொல் கிளைஞர் யாருங்
கன்றொழி புனிற்றா வென்னக் கதறினர் காமர் மூதூர்
வென்றியை நீங்கி யந்நாள் விழுமநோய் மிக்க தன்றே.

(இ-ள்.) என்றிவ்வண்ணமான வசனங்களை யுரைத்துப் பட்டத்தரசியான பதுமகோமளை அழுதலும், அங்கு அவளருகில் நின்ற அவள் தங்கைமார்களும் மிகுந்த பெரிய சுற்றத்தினரும் கன்றிறந்த அல்லது காணாதுபோன தலையீற்றுப்பசுவைப்போலக்கதறினார்கள் அப்பொழுது அந்தஅழகிய புராதனநகரமானது வெற்றியில்லாது துன்பநோயினால் மிகுதியானதாகியது.—எ-று. (உ0ரு)

அன்னது காலை தன்னி லவுணர்கோ னிரக்க நீங்கிப்
பன்னருஞ் சிறப்பின் மிக்க பதுமையே முதலோர் தம்மைத்
தொன்னிலை யிருக்கை யுய்த்துத் துண்ணெனச் சீற்றங் கொண்டு
தன்னுழைத் தொழுது நின்ற தானவர்க் கிதனைச் சொல்வான்.

(இ-ள்.) அப்பொழுது அசுராதிபனான சூரபன்மன் துன்பநீங்கி, கூறுதற்கரிய சிறப்பின் மிகுந்த பதுமகோமளை முதலியோர்களை அவரவர்களிருப்பிடங்களான பழய இடங்களுக் கனுப்பி, பின்னர் விரைவாகக் கோபங்கொண்டவனாய்த் தனது அருகில் வணங்கி நிற்கின்ற அசுரர்களைப் பார்த்து இவ்வண்ணமுரைப்பானாயினன்.—எ-று. ()

மாற்றலர் தொகையை யெல்லாம் வல்லையி லின்றே செற்றுச்
சீற்றமாய்க் குருதி வீட்டித் தீமக மொன்றை யாற்றி
யீற்றுறு மைந்தன் றன்னை யெழுப்புவ னிந்தமெய்யை
வீற்றொரு சாரி னிட்டு விடாதுபோற் றிடுதி ரென்றான்.

(இ-ள்.) அடா அசுரர்களே நான் இன்று பகைவர்கூட்ட மனைத்தையும் விரைவாகக்கொன்று கோபத்துடன் அவர்களிரத்தத்தைச் சிதறி அக்கினிசம்பந்தமான ஒரு யாகத்தைச்செய்து இறந்துபட்ட வென்மகனை எழுப்புவேன் ஆதலால் இந்தப் பாநுகோபனுடலினை வேறேயோரிடத்தில்வைத்துத் தவறாமற் காக்கக்கடவீரென்றான்.

மந்திரயோனியை அங்கீகரித்தவனாதலால் மந்திரவழியால் மகனை எழுப்புகின்றேன் என்றான் என்க. (உ0எ)

அன்னது பலருங் கேளா வழகிதென் றெடுத்து மைந்தன்
பொன்னுட லொருசா ருய்த்துப் போற்றினர் போற்ற லோடு
மன்னவன் வெகுண்டு நந்தமாற்றலர் தொகையை யெல்லா
மென்னிளை யோனுக் கூணா வளிப்பனென் றெண்ணங் கொண்டான்.

(இ-ள்.) அதனை அசுரர் பலருங்கேட்டு அவன் மொழிப்படி அவன் மகனான பாநுகோபனுடைய அழகிய உடலினை வேறொருபுறத்திற்கொண்டிட்டுக் காத்துக்கொண்டிருந்தார்கள். அவ்வண்ணம் காத்துக்கொண் டிருந்ததற்குப் பின்பு அரசன் சீற்றங்கொண்டு பகைவர்களது கூட்டமனைத்தையும் நமது தம்பியாகிய சிங்கமுகனுக்கு உணவாகக் கொடுக்கின்றேனென்று எண்ணினன்.—எ-று. (உ0அ)

தும்பையஞ் சுழியல் வேய்ந்த சூர்முத லிவ்வா றுன்னிச்
செம்புன லொழுகு பைங்கட் டூதரிற் சிலரை நோக்கி
யம்புதி வடாது பாங்க ராசுரத் தரசு செய்யு
மெம்பியை வல்லை யோடிக் கொணருதி ரீண்டை யென்றான்.

(இ-ள்.) தும்பைமலர்மாலையணிந்த சூரனாகிய முதல்வனிவ்வாறு நினைத்துச் செந்நீரொழுகும் பைங்கண்ணினரான தூதுவரிற்சிலரைப்பார்த்து அடா தூதுவர்களே! நீங்கள் இக்கடலின் வடபுறத்திலுள்ள ஆசுரநகரத்தமர்ந்து அரசுபுரியும் என்றம்பியை விரைவாக அழைத்துக்கொண் டோடிவாருங்கள் என்றுகூறினன்.—எ-று. (உ0கூ)

பாநுகோபன்வதைப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - க,கூஉரு.

---

# சிங்கமுகாசுரன்வதைப்படலம்.

என்னலு மொற்றர் கேளா விறைவனை யிறைஞ்சி யேகி
யுன்னுறு நினைப்பின் முந்தி யுத்தரத் தளக்கர் நண்ணி
மன்னகர் புகுந்து ஞெள்ளல் கடந்துமந் திரத்துட் புக்குச்
சென்னியா யிரங்கொண் டுள்ள சிங்கமா முகவற் கண்டார்.

(இ-ள்.) சூரபன்மனிவ்வாறு கூறுதலும் அதனைத் தூதுவர்கள் கேட்டு அரசனை வணங்கிச்சென்று நினைக்கப்படும் நினைவைவிட வேகமாகச் சென்று வடகடலையடைந்து ஆசுரமாகிய அரசநகரத்தையடைந்து வீதிகளைக் கடந்து அரசமாளிகைக்குட் புகுந்து ஆயிரந்தலைகளோடு கூடின சிங்கமுகனைக் கண்டார்கள்.—எ-று. (க)

களித்தனர் மகிழ்ந்து தூதர் கான்முறை வணங்கி நிற்ப
வளித்திடு மரசின் வைகு மரிமுகன் வந்த தென்னை
கிளத்திடு வீர்க ளென்னக் கேடிலா வவுணர் மேலோன்
விளித்தன னைய நின்னை விரைந்தனை வருக வென்றார்.

(இ-ள்.) அரசனைக்கண்டமையான் மகிழ்ச்சிகொண்டு களிப்படைந்தவர்களாகிய தூதுவர்கள் அவ்வரசனுடைய கால்களை வணங்க வேண்டியமுறைப்படி வணங்கினவர்களாக நிற்றலும் ஆட்சிபுரியாநின்ற அரசுமுறைமையிலிருந்த சிங்கமுகவசுரன் அவர்களைப்பார்த்து நீங்களெதற்காக வந்தீர்களுரைமின்கள் என்று கூறுதலும் அவர்கள் ஐய நின்னை நாசமற்ற அசுராதிபனான சூரபன்மனழைத்தனன் விரைவாக வருவாயாக என்றார்கள்.—எ-று. (உ)

வேறு.

சரத்தினுங் கடியவ ரினைய சாற்றலு
மரித்திறன் முகத்தவன் வினவி யாயிடை
விருத்தமுண் டேலது விளம்பு வீரென
வுரைத்தன னன்றென வொற்றர் கூறுவார்.

(இ-ள்.) சரவேகத்தினும் அதிவேகமாகச் செல்லத்தக்க தூதுவர்கள் இவ்வாறு கூறுதலும் அதனை வெற்றிபொருந்திய சிங்கமுகன் கேட்டு அடா தூதர்களே! அவ்விடத்திலேதாயினும் வேறுபாடு நடந்ததுண்டானு லதனைச்சொல்லுங்கள் என்று கூறினான். அதுகேட்ட தூதுவர்கள் நல்லதென்று சொல்லத்தொடங்கினார்கள்.—எ-று. (ங)

நும்பியை வரையொடு நுதிகொள் வேலினு
லம்புவி வரைப்பில்வந் தட்ட கந்தவே
ளம்பதி முன்னவ னகர்வந் தெய்தினன்
செம்பது மன்முதற் றேவர் சூழவே.

(இ-ள்.) அண்ணலே நினதிளையவனான தாரகனைக் கிரவுஞ்சமலையொடு கூரிய வேற்படையினால் இவ்வுலகத்தில் வந்தழித்த குமரக்கடவுள் செங்கமலாசனனான பிரமன் முதலிய தேவர்கள் தன்னைச் சூழ்ந்துவர நமது அரசனான சிறந்த சூரபன்மனுடைய வீரமகேந்திரபுரிக்கு வந்திருக்கின்றான்.—எ-று. (ச)

வந்திடு மெல்லைபோய் மலைந்து பையயப்
புந்திகொ ளமைச்சருஞ் சிறாரும் பொன்றினு
ருய்ந்தன னிரணிய னுததி யோடினு
னெந்தையங் கிருந்தனன் புதுமை யீதென்றார்.

(இ-ள்.) அவன் வந்துதங்கின இடத்திற்குச்சென்று சண்டைசெய்து மெல்லென மெல்லெனப் புத்தியினையுடைய மந்திரிமார்களும் புத்திரர்களும் இறந்தார்கள். இரணியனொருவன்மாத்திரந் தப்பித்துக்கொண்டு பிழைத்துக் கடலிலொளித்துக்கொண்டான். எந்தையான அரசனங்கிருக்கின்றான். இதுதான் நடந்த புதுமை என்றுரைத்தார்கள்.—எ-று. (ரு)

தொழுந்துணைக் கையுடைத் தூத ரின்னண
மொழிந்தது வினவலு முனிவு மானமு

மழுந்திடு துயரமு மாகம் போழ்ந்திட
வெழுந்தன னவுணரோ டேகன் மேயினான்.

(இ-ள்.) வணங்கப்பட்ட இரண்டு கைகளையுடைய தூதுவர்கள் இவ்வண்ணம் கூறியதனைக் கேட்டவுடனே சிங்கமுகன் கோபமும் மானமும் உள்ளேயழுந்திய துன்பமும் உடலைப்பிளக்கத் தானிருந்த ஆசனத்தினும் எழுந்து தன்னை நாடிவந்த தூதுவர்களுடன் போகுவானாயினான்.—எ-று. (சு)

முன்புறு கடையுறு மொய்த்த தூதரை
யென்பெருஞ் சேனையைக் கொணர்தி ரீண்டெனத்
தென்புலக் கோமக னேற்றிற் செப்பலு
மன்பெருந் தானைகள் வல்லை வந்தவே.

(இ-ள்.) சென்ற சிங்கமுகன் முதற்கடை வாசலையடைந்து அருகில் நெருங்கி நின்ற தூதர்களைநோக்கி நீங்கள் எனது பெரிய சைனியங்களை இங்கழைத்துக்கொண்டு வாருங்களென்று தென்புலக்கோமகனை சூரபன்மனுடைய தூதுவராலுரைத்தலும் உடனே நிலைபெற்ற மிகுதியான சைநியஙகள் விரைவாக வந்தன.—எ-று.

இச்சிங்கமுகன் வடகடலிடையுறு மாசுரத்து வாழ்பவனாதலால், தென்புலக்கோமகனென்றதைச் சூரபன்மனென்னும். (எ)

தூசிகொ ணூற்படை துவன்றிச் சேர்தலு
மாசுறு மரிமுகத் தண்ணல் கண்ணுறீஇப்
பாசன மன்னவர் பாங்கர் சுற்றிடத்
தேசுடை மணிநெடுந் தேரொன் றேறினான்.

(இ-ள்.) முன்னணிகளோடு கூடின சதுரங்கசேனைகளும் நெருங்கிவந்து சேருதலும் கவசமணிந்த மார்பினனான சிங்கமுக னதனைப்பார்த்துத் தீயைப்போன்ற அநேகமசுரர்கள் அருகிற் சூழ்ந்துவர ஒளிமயமான மணிகளிட்டமைத்த ஒரு நெடிய தேரிலேறினான்.—எ-று. (அ)

தாரொலி செய்தன தாள்வ யப்பரி
பேரொலி செய்தன பிறங்கு பூட்கைசேர்
காரொலி செய்தன கண்டை யார்த்தன
தேரொலி செய்தன தெழித்த சில்லியே.

(இ-ள்.) சிங்கமுகன் தேரிலேறினவுடனே அவன் சேனைகளாரவாரித்தன, முயற்சியினையுடைய வெற்றியோடுகூடின குதிரைகள் பேரொலிசெய்தன. அன்றியும் விளங்காநின்ற துவாரம்பொருந்தின கைகளையுடைய கார்போன்ற யானைகள் வீறிட்டன; மணிகள் முழங்கின; இரதங்கள் கிறிச்சலிட்ட; சில்லுகள் முழங்கின.—எ-று. (கூ)

முரட்டுடி சல்லிகைமுரசங் காகள
முருட்டுறு சுரிமுக முடுக்கை துந்துபி
திரட்டுறு தண்ணுமை திமிலை யாதிக
ளிரட்டிய கேதன மெங்கு மீண்டிற்றே.

(இ-ள்.) இவன் பிரயாணமானவுடனே, வன்மைபொருந்திய துடிகளும், சல்லிகை-முரசம்-காகளம்-உருட்சியான சங்கு-உடுக்கை-துந்துபி - திரட்சியான தண்ணுமை - திமிலை முதலிய வாச்சியங்களும் முழங்கின; கொடிகளு மெவ்விடங்களிலு நெருங்கின.

தழங்குரன் மால்கரி புரவி தானவ
ரழுங்குறு தேர்நிரை யனிகம் வானமே
வழங்குறு நெறியதா வலிதிற் சென்றன
முழங்கில பெயர்கில முகில்க ளஞ்சியே.

என்ன னு மவுணர்கோ னிளைய வன்றனை
முன்னுற விருத்தியே முரணின் மேலையோ
யென்னிடை யுற்றன விசைப்பன் கேளெனு
வன்னவ னுணர்வகை யறைதன் மேயினுன்.

(இ-ள்.) என்று கூறிய உடனே அசுராதிபனுகிய சூரபன்மன் தனது தம்பியை எதிரிலிருக்கச்செய்து, வன்மையின் மிக்க என்றம்பியே! என்னிடத்தில் நடந்தனவற்றைக் கூறுகின்றேன் கேளென்று கூறி, அவனறியுமாறு நடந்தவையனைத்துங் கூறுவானுயினுன்.—எ-று. (கஎ)

அன்றுநீ போந்தபின் னயில்கொள் வேலினுற்
குன்றினை யெறிந்திடு குமர னென்பவன்
றன்றுணைச் சேனையுந் தானு மிந்நகர்
சென்றனன் பாசறை சேர்ந்து வைகினுன்.

(இ-ள்.) இளையோய், நீ அன்றுவந்து போனதற்குப்பின்பு, கூரிய வேற்படையினைக்கொண்டு கிரவுஞ்சமலையினை உடைத்த குமரனென்பவன் தனது சேனைகளும் தானுமாக இந்த ஊருக்குவந்து பாசறையை அடைந்திருந்தான்.—எ-று. (கஅ)

மற்றவன் சேனைகண் மலைய மைந்தர்க
ளிற்றன ரமைச்சனு மிறந்து போயினு
னற்றன தானையு மாட கப்பெய
ருற்றவ னிரிந்தன னுததி யோடினுன்.

(இ-ள்.) அக்குமரனுடைய சைநியங்கள் போர்புரிய அதனுல் எனது பிள்ளைகள் இறந்தனர்; பிரதான மந்திரியான தருமகோபனும் இறந்துபோயினுன். சேனைகளும் அழிந்துபோயின; இரணியனும் ஒடிப்போயினுனுய்க் கடலிற்புகுந்தான்.—எ-று.

பொங்குளை யரிமுக புகுதி யின்னதாற்
சங்கையில் படையொடு சமரி னேகியே
யங்கவன் வலியினை யடர்த்து மீளுதி
யிங்குனை விளித்தன னிதனுக்கா வென்றுன்.

(இ-ள்.) விளங்காநின்ற புறமயிரினையுடைய சிங்கத்தின் முகம்போன்ற முகமுடையாய் இதுநடந்தவிஷயம் ஆதலால் நீ அளவற்ற சேனைகளுடன் போருக்குச்சென்று அந்தக்குமரனை வென்று மீண்டுவருவாய் இதற்காகத்தா னுன்னை யழைத்தேன் என்றுரைத்தனன்.—எ-று. (உ0)

எஞ்சலில் சூரன்மற் றிதனைச் செப்பலும்
வெஞ்சின வரிமுக வீரன் றேர்வுரு
நெஞ்சினி லாகுல நிகழ முன்னவன்
செஞ்சரண் வீழ்ந்துநின் றிதனைச் செப்புவான்.

(இ-ள்.) அழிவற்ற சூரபன்மன் இதனைக் கூறுதலும் மிக்க கோபத்தினையுடைய வீரனுன சிங்கமுகன் கேட்டுணர்ந்து, மனத்திற் றுன்பமுண்டாகத் தன் றமையனுன சூரபன்மனுடைய செவ்விய கால்களை வணங்கி நின்று இதனைக் கூறுகின்றுன்.—எ-று.

மல்லலம் புயமுடை மைந்தர் தங்களைத்
தொல்லையி லமைச்சரைச் சுற்றத் தோர்களை
யெல்லவர் தம்மையு மிழந்து வைகினுய்
புல்லிது புல்லிதுன் புந்தி யெண்ணமே.

(இ-ள்.) வளமையான புயங்களையுடைய புத்திரர்களையும் நெடுநாளாக இருந்த மந்திரிமார்களையும் உறவினர்களையும் மற்றுமுள்ள அனைவரையும் இழந்திருக்கின்றாய் உன் மனதின் எண்ணமானது அற்பமானது அற்பமானது.—எ-று. (௨௨)

மூலமு முடிவுமில் லாத மூர்த்தியைப்
பாலனென் றெண்ணினை படுவ தோர்ந்திலை
யாலம தானதே யைய வென்மொழி
மேலையின் விதியையார் வெல்லு நீரினார்.

(இ-ள்.) ஆதி அந்தமில்லாத இறைவனைப் பாலனென்று நினைத்தனை அவ்வாறு நினைத்து இப்பொழுது இவைகளை அநுபவிப்பதனை அறிகின்றிலை; ஐயனே எனது வசனம் உனக்கு விஷமாக ஆயிற்றே மேனுள்விதியை யாவர் வெல்லுந்தன்மையினர்.

சென்றிடு புனலினைச் சிறைசெய் தாவதென்
னின்றினி யேகியே யெண்ண லாமொனத்
துன்றிய குழுவெலாந் துடைத்து நுங்கியே
நின்றிடு கின்றனன் னீயுங் காண்டியால்.

(இ-ள்.) அணைகடந்து ஓடாநின்ற நீரினைத் தடைசெய்வதனுற் பிரயோசனமென்னை இனி அவைகளை எல்லாம் விசாரித்தென்ன பிரயேரசனம், பிரயோசனமில்லை; அதனல்யா னின்றுசென்று பகைவரொன்றுவந்த கூட்டமனைத்தையும் துடைத்து விழுங்கிவிடுகின்றேன் நீ பார் என்று கூறினன்.—எ-று (௨௪)

கந்தனு மொருவனைக் கடக்கப் பெற்றிடின்
வந்துனைக் காண்பனுன் மற்ற தில்லையே
லந்தம தடைவரா லாரு மையநீ
புந்தியி னினைந்தன புரிதியா லென்றான்.

(இ-ள்.) யான் கந்தனென்றுகூறு மவ்வொருவனை வெல்லப் பெறுவேனுனல் உன்னை மீண்டுவெந்துகாண்கின்றேன். அவ்வண்ணங்கந்தனை வெல்லாதுபோனல் எல்லாரும் இறந்துபடுவோர்களென்பது நிச்சயம் ஐயனே இனி நீ நின்மனத்திற்குத் தோன்றியவாறு செய்யக்கடவை.—எ-று. (௨௫)

என்றுகை தொழுதுபின் னிறையு மவ்விடை
நின்றிலன் விடைகொடு நிருத னேகியே
துன்றிய தானைகள் சூழ மற்றவ
ணென்றுதன் மந்திரத் துறையு ளெய்தினன்.

(இ-ள்.) அசுரனுன சிங்கமுகன் இவ்வண்ணமுரைத்துப் பின்னர் ஒருகணநேரமேனு மங்குநில்லாது. உடனே திரும்பி நெருங்கிய சைனியங்கள் சூழ்ந்துவரா நிற்பத் தனது நகரத்திலுள்ள தனதிருப்பிடத்தை அடைந்தான்.—எ-று. (௨௬)

போனக மேருவும் புடையிற் சூழ்வரு
மூனெனும் வரைகளு முலப்பில் சோரிநீர்
தேனெடு பாறயிர் தேற லாதிக
ளானபல் கடல்களு மயிறன் மேயினன்.

(இ-ள்.) அவ்வாறு சென்ற சிங்கமுகன் உணவாகிய மேருமலையையும் அதனருகிற் சூழ்ந்துகிடந்த மாமிசங்களான மலைகளையும் அளவற்றனவாகிய இரத்தநீர் தேன் பால் தயிர் மதுமுதலியவான பலகடல்களையும் உண்ணத்தொடங்கினன்.—எ-று.

உணவு - சோறு. (௨௭)

வாசநீர் தோய்ந்திடு நரந்த மான்மதம்
பூசினன் பாளித மிசைபு னைந்தனன்
வீசுபன் மதுமலர் மிலைச்சு கின்றனன்
காசினி வரைப்பெலாங் கந்தஞ் சூழ்தர.

(இ-ள்.) நிலவலையமனைத்தும் பரிமளம் சூழ்ந்துகொள்ளும்படி வாசனைபொருந்திய பன்னீரொடுகலந்த கஸ்தூரி முதலியவற்றையும் கர்ப்பூராதிகளையும் உடலிற்பூசினன் அன்றியும் மணம் வீசாநின்ற பலவித மதுமலர்மாலைகளைச்சூடினன்.—எ-று.

"மான்மதந்துருக்கநரந்த நானங்கத்தூரி, என்று பிங்கலநிகண்டுரைத்தல்காண்க. இதனுல் நரந்த மான்மதமென்பதைக் கத்தூரி என்றும். மான்மதமென்பது கத்தூரிக் கன்றி புழுகுக்கின்மையா லவ்வண்ணமுரைத்தாம். கத்தூரி என்பது ஒருவிலங்கின் பெயர் அப்பெயரதனிலுண்டாகிய வாசனைப்பொருளுக்காகின்றது, கத்தூரியென்பது வாசனைப்பொருளே அன்றி பூசத்தக்ககளிப்பாகவிராது அதனை வாசனையுள்ள நீரிற் கலந்தணிந்தானென்பார். வாசநீர் தோயந்திடு நரந்த மான்மதம் என்றார். "பாளிதங்கருப்பூரம், இது பிங்கலம்" முன்னே கத்தூரியை பனிநீரொடு கலந்து பூசிப் பின்னரவ்வீரம்புலருவான் கர்ப்பூரசுண்ணத்தை மேலே அப்பினனென்பார் "புனைந்தானென்றார்" பலவகை வேறுபாட்டினவான மலர்களாற் சமைக்கப்பட்ட பலவகைய வானமாலைகளை யணிந்தானென்பார் "வீசுபன்மதுமலர் என்றார். (உ அ)

களைந்தனன் பழையன கவினப் பூண்டனன்
வளந்தரு கின்றதோர் யாணர் மாண்கலன்
மிளிர்ந்திடு தினகரர் புணரி வீழ்ந்துழி
யொளிர்ந்துடன் பலகதிரு திக்கு மாறுபோல்.

(இ-ள்.) அச்சிங்கமுகன் முன்னணிந்திருந்தனவாகிய பழய ஆபரணங்களைக் கழற்றி எறிந்து வளப்பம்பொருந்திய அழகிய மாட்சிமையான புதிய ஆபரணங்களை விளங்காநின்ற சூரியர்கள் அத்தமனமாஞல் உடனே வேறுசூரியர்கள் உதிக்குமாறுபோலத்தரித்தனன்.—எ-று.

பழயனவென்றது இப்போர்க்கோலங் கொள்ளுதற்கு முன்னரணிந்தவைகளை, அவன் கழற்றி எறிந்தனவும், உயர்வுடையனவே என்று குறிப்பிக்க. "மிளிர்ந்திடு தினகரர் புணரிவீழ்ந்துழி யொளிர்ந்துடன் பல்கதிருதிக்குமாறுபோல் என்றுவமையிட்டுரைத்தார், அவன் அநேகமணி யணிகளை யணிந்திருந்தமையாலும், அவைகளை விலக்கிப் புதியனபூண்டபோதும் அநேகமே யணிந்தமையாலும் அநேக சூரியர்களை உவமையாக வுரைத்தனரென்க. (உகூ)

படிதவிர் பருப்பதம் பத்து நூற்றினின்
முடிதொறு மிளம்பிறை முளைத்த வாறுபோ
னெடுமைகொ ளரிமுக னெற்றி தோறும்வெண்
பொடிதனை யணிந்தனன் புனித மாயினன்.

(இ-ள்.) ஒப்பற்ற ஆயிரமலைகளின் சிகரங்களின் உச்சிகள்தோறும் இளஞ்சந்திரர்கள் உதயமானவாறுபோல உயர்ச்சிபொருந்திய சிங்கமுகன் தனது ஆயிரநெற்றிகளிலும் வெள்ளிய திருநீறுதரித்துப் பரிசுத்தனுயினன்.—எ-று.

படிதவிர் என்பதை இவ்வுலகிலில்லாத எனினும் ஆம்.

ஆயிரமலைகளிருக்கினும் அவை யொன்றேடொன் றெவ்வாதனவாகி நிற்கும். இவை யவ்வணமன்று, ஆயிரமுமொன்றேடொன் றெத்தே நிற்பன வதனுல் ஒப்பின்றென்பார். "படிதவி"ரென்றார். பரிசனவேதி தன்னுற் றெடப்பட்ட உலோகங்களைப்

பத்தரை மாற்றுப் பசும்பொன்னுக்குமாறுபோல திருநீறும் "பேணியணிபவர்க்கெல்லாம் பெருமைகொடுப்பது நீறு" என்று திருநெறித்தமிழ்வேதமுரசு முழங்கு முறைப்படி இதனையணிதற்குமுன்ன மிழிதகவினனாகி நின்ற இவ்வரசன் இதனைத் தரித்துப் பரிசுத்தனாயினனென்பார். "நெற்றிதொறும்வெண்பொடிதனை அணிந்தனன்புனிதமாயினன்" என்றார். அணிந்தனன்-முற்றெச்சம். (௬0)

தண்டமு நேமியுஞ் சங்க ரன்றரக்
கொண்டதோர் சூலமுங் குலிச மேமுத
லண்டர்தம் படைகளு மன்னை யீந்திடு
திண்டிறற் பாசமுஞ் செங்கை பற்றினான்.

(இ-ள்.) சிங்கமுகன் தண்டாயுதமும் சக்கராயுதமும் சிவபெருமான் அளிக்கப் பெற்றுக்கொண்ட சூலமும் வச்சிரமுதலிய தேவாஸ்திரங்களும் தன்னைப்பெற்ற மாதாவான மாயை யென்பவள் கொடுத்த மிக்க வன்மையோடு கூடினபாசத்தையும் கையிலெடுத்துக்கொண்டனன்.

இச்சிங்கமுகன் கையிற்றாங்கிய சூலம் ஏனையர்தாங்கியுள்ள சூலங்களைவிட மிகுந்த ஆற்றலுடையதென்று விளக்க. அதனை அவனுக்களித்த அளவிலாற்றலரான இறைவர் திருநாமத்தை விளக்கி "சங்கரன்றரக்கொண்டதோர் சூலமும்" என்றார். சங்கரன்-இன்பமளிப்போன் சம் - இன்பம் கரன் - அளிப்பவன். (௬க)

கைத்தலம் யாவையுங் கதிர்கள் கான்றிட
வெத்திறப் படைகளும் பின்ன ரேந்துறாப்
பத்துநூ றுயிரம் பரிகள் பூண்டதோர்
சித்திர மணிநெடுந் தேரி லேறினான்.

(இ-ள்.) கையினிடங்களெல்லா மொளிவீசாநிற்ப மற்றைய எவ்வித ஆயுதங்களையும் பின்னரொடுத்துக்கொண்டு பத்துநூறாயிரங்குதிரைகள் கட்டிய ஒப்பற்ற சித்திரமயமானதும்மணிகளசைவதும் உயர்ந்ததுமாகிய ஒருதேரினில் ஏறினான்.—எ-று.

பிரதானவாயுதங்களை எடுத்தவன் மற்றைய வாயுதங்களையும் எடுத்தானென்பார் "எத்திறப்படைகளும் பின்னரொந்துறா" என்றார். பின்னரொன்பதை பின்புறத்திலென்றுகொள்ளின் அவ்வாறு அநுட்டானமின்மையாலும் இவனுக்கிரண்டாயிரம் கைகளிருக்கின்றமையாலும் பொருந்தாதென்க. பின்னர் கைத்தலம் யாவையும் கதிர்கள்கான்றிட எத்திறப்படைகளு மேந்துறா, என்று அந்வயஞ் செய்துகொள்க. மணி நெடுந்தேர் என்பதை அரதநங்களிட்டிழைத்த நெடிய தேரொன்னினுமாம், இரதங்களி லசையு மணிகள் கட்டுவதுவழக்கமாதலால் அவ்வாறுரைத்தாம். அவனதுருவுக்கேற்ற இரதமென்பார் நெடுந்தேரொன்றார். (௬உ)

தந்திரத் தலைவருந் தனயர் யாவருஞ்
சிந்துரத் தொகுதியுந் தேரு மாக்களு
மிந்திரப் பெருவளம் யாவுஞ் சூழ்தர
மந்திரத் திருநகர் வாயி லெய்தினான்.

(இ-ள்.) இச்சிங்கமுகன் தேரிலேறினவுடனே இவனுடைய சேனைத்தலைவர்களும், இவன் மைந்தர்களாகவுள்ளவர்க ளனைவரும் யானைக்கூட்டங்களும், இரதங்களும், குதிரைகளும், அன்றியுள்ள இந்திரப்பெருஞ் செல்வங்களுமெல்லாம் உடன் சூழ்ந்துவர அழகிய தனது நகரவாயிலையடைந்தான்.—எ-று.

எவ்வளவு மிகுந்த சம்பத்தொருவனுக் கிருக்கினும் இந்திர சம்பத்தென்பது வழக்கமாதலால், ஆசிரியரும், 'இந்திரப்பெருவளம்' என்றார். இவ்விடத்திந்திரப் பெருவள

மென்றது - கொடி, குடை, சாமரமாதிய அரச சின்னங்களை என்க; மந்திரத் திருநகரொன்பதை, மந்திரத்தினையுடைய அழகியநகரம் என்னினுமாம், மந்திரம் இராசமாளிகை.

மேற்படு கேசரி வெம்முக வீரன்
மாற்படு கோநகர் வாய்தலின் மேவ
நாற்படை யானவு நண்ணின வெம்போ
ரேற்புடை வெள்ளமி லக்கம தன்றே.

(இ-ள்.) விலங்குகளிற் சிறந்த சிங்கத்தின் வெவ்வியமுகம்போன்ற முகமுள்ள வீரனுணவன் பெருமைபொருந்திய தனது நகரவாசலையடைதலும் உடனே, அவனுடன் போருக்குச்செல்லவேண்டிய சதுரங்கசேனைகளும்வந்தன; அவை எவ்வளவு என்னில் வெவ்விய போருக்குரிய அவைகள் ஒரு நூறாயிரவெள்ளமாம்.—எ-று.

விலங்கான சிங்கத்தின் முகமுடையவனுனாலும் உயர்வுடையவனென்று குறிப்பிக்க, மேற்படு கேசரிவெம்முகவீரனென்றார், கோநகர், இராசநகர், இவன் நகரவாசலையடைந்ததற்கும் சதுரங்க சைநியங்கள் வந்ததற்கும் ஒத்திருந்ததென்பார். மேவ நாற்படையானவு நண்ணின என்றார். உம்மை முற்றும்மை. (௬௪)

வானவ ரேற்றமு மண்ணவர் வாழ்வுந்
தானவ ரின்னலு நீக்கிய தக்கோ
ரூனமில் செய்கைய ரொள்ளெரி யுண்ணுங்
கானமெ னப்பொலி காட்சியின் மிக்கோர்.

(இ-ள்.) வந்த அந்த சேனைவீரர்கள் எப்படிப்பட்டவர்களென்றால், வீரத்திற் குற்றமற்ற தோற்றத்தினர் ஒள்ளிய தீப்பற்றி எரிகின்ற வனம்போன்ற காட்சியினர் அன்றியும் தேவர்களுக்கிருந்த உயர்வுகளையும், மண்ணுலகவாணரின் வாழ்வுகளையும் அசுரர்கட்கிருந்த துன்பங்களையும் நீக்கியதகுதியாளர்.—எ-று.

தக்கோரென்பதை ஒவ்வொரு பதத்தொடு மொட்டுக. இவர்கள் பிறத்தற்குமுன்னே தேவர்கள் சிறந்திருந்தார்கள் இவர்கள் சிறப்படைந்த பின்னர் தேவர் இழிநிலையடைந்தமையாலும் மனிதர் முதலிய மண்ணுலகினர் இவர்கள் செய்யுங் கொடுமைகளால் மழையாதியின்றி வறுமைப்பட்டு வாழ்விழந்தமையாலும் இவர்கள் பிறத்தற்குமுன்இழிவடைந்து கிடந்த அசுரர் உயர்வடைந்தமையாலும் இம்மூவகைய காரியங்களுக்குங் காரணம் இவ்வசுரராதலா லிவர்களைச் சுட்டி நீக்கியவரென்றார் என்க. (௬௫)

கார்பயில் கின்ற கருத்தினர் காமன்
கூர்பயில் கின்ற கொடுங்கணை யுண்ணுந்
தார்பயி றோளர் சமர்த்தொழில் செய்தே
மார்பக மன்றி வடுப்புனை யாதோர்.

(இ-ள்.) இன்னும் அச்சேனைவீரர் எத்தகையரென்னில் நல்ல எண்ணமான வெண்மையின்றிக் கெட்ட எண்ணமான கருமைபொருந்திய மனத்தினையுடையவர்கள் அன்றியும் கூர்மையான அம்புகள் படுகின்றனவும், மாலைகள் பொருந்தியனவுமாகவுள்ள தோள்களையுடையவர்கள்; போர்புரிந்த காலங்களிற் பகைவர்விட்ட ஆயுதங்கள் பட்டு வடுப்பட்டதையன்றி வேறுவடுக்களில்லாமார்பினர்.—எ-று.

பாவத்தொழிலிலேயே பயின்று கிடக்கு முள்ளத்தினரென்பார் "கார்பயில் கின்ற கருத்தினரென்றார் கூர்பயில்கின்ற கொடுங்கணை யுண்ணும் தார்பயிறோளர்-என்பதை கூர்மையான கொடியவம்பாக (மன்மதனுக்கு) ஆகின்ற மலராற் கட்டப்பட்டமாலையணிந்த தோளினர்" எனினுமாம் உயிர்விட வரினும் போரிற்புறங்கொடாதவரென்பார் மார்பகமன்றிவடுப்புனை யாதோர் என்றார். (௬௬)

எண்ணமி றொல்லுயிர் யாவு மலைக்கு
மண்ணலை யன்னவ ராரழல் காலுங்
கண்ணினர் வார்கழல் கட்டிய தாளார்
விண்ணினை யேனும் விழுங்கவும் வல்லோர்.

(இ-ள்.) அளவற்றனவாகவுள்ள அநாதியான உயிர்வருக்கங்களனைத்தையும் அழிக்கின்ற இறைவனையொத்தவர்கள் இன்னமெத்தகையோரென்னில் அரியதீப்பொறி பறக்குங்கண்களையுடையவர்கள் அல்லாமலும் கால்களில் வீரகண்டைதரித்துள்ளவர்கள் பிறரால் விழுங்கமுடியாத ஆகாயத்தைக்கூட வேண்டுமானால் விழுங்கத்தக்க தன்மையினையுடையவர்கள்.—எ-று.

உயிர்வருக்கங்களளவற்றனவாயும் அநாதியாயும் உள்ளன என்பார் "எண்ணமில் தொல்லுயிர்யாவும்" என்றார் வீராதி வீரர்களுள் சிறந்தவிவர்கட்கு ஒப்பற்ற பிரளயகால வுருத்திரமூர்த்தியன்றி வேறொருவரும் ஒப்பாகாரென்பார் "யாவுமலைக்கும் அண்ணலை" என்றார், சாமான்னியமான தீப்பொறிகளிலும் இவர்கள் கண்களினின்றுமுண்டாகும் தீப்பொறிகள் சுடுந்தன்மையின் மிக்கன வென்பார் "ஆரழல்" என்றார் முன்னையே பலரையும் வென்றவரென்று குறிப்பிப்பான் "வார்கழல் கட்டியதாளர்" என்றார். (௬எ)

நேருதி ரென்றெதிர் நேர்ந்தவ ராகங்
கூர்நுதி வேல்கொடு கூறுப டுத்துப்
பேருதி ரந்தசை பெய்துநி ரம்பா
வாரிதி யென்ன வகுத்திடும் வாயார்.

(இ-ள்.) இவர்கள் இன்னம் எப்படிப்பட்டவர்கள் என்றால் எதிர்ப்பீர்களாக என்று கூறி எதிர்த்தவர்களின் உடலங்களைக் கூரிய நுனியினையுடைய வேற்படையினாற் பிளந்து அவ்வுடலங்களின்றும் வராநின்ற மிகுதியான இரத்தங்களையும் மாமிசங்களையும் இட்டும் இக்கடல்களுக்கிவை போதாதவை என்று கூறத்தக்கதாகப் பிளக்கப்படுகின்ற வாயினையுடையவர்கள்.—எ-று.

இவர்களது ஆற்றலை யுணராது வந்தெதிர்த்தவர்களைக்கொன்று தின்பவர் என்பார் "நேர்ந்தவராகங் கூர்நுதிவேல்கொடு கூறுபடுத்து - பேருதிரந்தசைபெய்து நிரம்பா-வாரிதியென்ன வகுத்திடும் வாயார்" என்றார் இவர்களைப்பேருடலினரென்று குறிப்பிக்க உடலிலுள்ள வோர் சிறியவுறுப்பானவாயினை "வாரிதியென்ன வகுத்திடும் வாயார்" என்றார். (௬அ)

தண்டம ழுப்படை தட்டை முசுண்டி
விண்டுயர் கொல்சிலை வேலெழு நாஞ்சி
லெண்டகு பல்படை யாவையு மேந்தி
யண்டமு டைந்த திரும்படி யார்த்தார்.

(இ-ள்.) மேற்கூறிய இயல்புகளையுடைய அந்தச் சேனைவீரர்கள் தண்டாயுதங்களையும்; மழுவாயுதங்களையும்; தட்டை என்று கூறுமாயுதங்களையும்; முசுண்டி என்னும் ஆயுதங்களையும் மூங்கிலினாலாகிய உர்ந்த கொலைத்தொழிற்குரிய விற்படைகளையும்; வேற்படைகளையும்; எழுப்படைகளையும் அலாயுதங்களையும் இன்னமுள்ள எண்ணத்தக்க மற்றைய பலவகையான ஆயுதங்களையுந் தாங்கினவர்களாய் அண்டமானது உடைந்து அதிர்ந்துபோமாறு ஆரவாரித்தார்கள்.—எ-று.

மழு-கண்ட கோடரி; தட்டை-ஓர்வகையாயுதவிசேடம்; முசுண்டி-ஓர்வகையாயுத விசேடம்; விண்டுயர் கொல்சிலை யென்பதை விண்டு, உயர், கொல்சிலை யென்பதாய்ப்பிரித்து மலையும உயர்ந்த கொலைத்தொழிற்குரிய வில்லும் என்னினுமாம். அசுரர்தங்

கைப்படைகளையிழந்தபின் பன்றி மலைகளை யாயுதங்களாகக் கொள்ளும் இயல்பினரன் மையான் விண்டென்பதை யிவண் மூங்கிலென்றும், அதிருதல்-நடுங்குதல். (௩௯)

அந்தர மாமுகி லாமென வார்க்குந்
தந்திகள் வீழ்ந்துறு தானம தோடி
யுந்திக ளாயுல வைக்கதி கொண்டு
முந்திய தூசியின் முன்னுறு கின்ற.

(இ-ள்.) இவ்வாறான இச்சேனைகளுக்குள் ஆகாயத்திலுலாவுகின்ற பெரியமேகங்களைப்போல சத்திக்கின்ற யானைகளொழுகவிட்ட மதசலமானது ஓடிக் கடல்களாகப்பெருக வாயுவேகத்துடன் முற்பட்ட தூசிப்படையின்முன்னேசெல்கின்றன.-எ-று.

அந்தரமாமுகிலென்பதை ஆகாயத்திலுண்டாகின்ற பெரியமேகங்கள் எனினுமாம். உந்திகளாய் என்னுமிடத்தில் பெருகவென்பதை வருவித்தாம் இதனை வேறொருவிதமாகவும் உரைக்கலாம் யானைகளினின்றும் வீழ்ந்து பொருந்திய மதவெள்ளங்கள் சிறிது சிறிதாகப்பெருகிக் கால்கொண்டோடி ஒன்றுசேர்ந்து கடல்போலவாகிப் பின்னர் வாயுவேகமாய் முற்படச்செல்லாநின்ற தூசிப்படைகளைக்காட்டிலும் விரைந்து முன்னேசெல்கின்றனவென்பதாம். ஆசிரியர் யானையின் செல்கையையன்றி மதநீரின் செல்கையைக் கூறினரில்லையென்று ஒழுக்கமுறைமையா னறியப்பட்டமையா னவ்வாறுகூறிலேம். (௪0)

வேலைய தன்னவி லாழிய மின்னுக்
கோலம தான குரங்கொள் பதத்த
கால்விசை கொண்ட னகந்துக ராசி
மாலுறு பூழியின் வான்புவி செய்வ.

(இ-ள்.) யானைகள் இவ்வண்ணமாகச் சென்றன; குதிரைகளோவென்னில் கடல்போன்ற விலாழி நீரினையுடையன; தீயின்கோலமாகவுள்ள குரங்களையுடைய காலின் வாயுவைப்போன்ற வேகத்தினையுடையன; இவைகள் தங்கள்செல்கையாலுண்டான மிகுதியான புழுதியினால் சுவர்க்கத்தைமண்ணுலகமாகச் செய்வன.—எ-று.

குதிரைகள் வேகமாசச்சென்றனவென்றும் குரங்களைத் தரையிற் புதையவைத்தனவென்றும் கூறுவார் "கால்விசைகொண்டனகந்துகராசி மாலுறுபூழியின்வான்புவி செய்வ" என்றார். புவிமண்ணுலகம் என்றும், வானுலகைப் பொன்னுலகமென்றும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலும் ஆகமம் பிரமாணத்தாலும் உடன் பட்டுள்ளவராதலால் துணிந்து மாலுறுபூழியின் வான்புவிசெய்வ என்றார். (௪௧)

சூழ்வரு தேரிடை துன்றுப தாகைக்
காழ்வரு கோனுதி கார்முகி லுந்தி
போழ்வன வாடுறு பூந்துகி லங்க
ணாழ்வரு பூழைய டைத்தன வன்றே.

(இ-ள்.) குதிரைகளின் செல்கை இவ்வண்ணமானவை, இரதங்களின் செல்கை எப்படிப்பட்டது என்னில், சுற்றிவராநின்ற இரதங்களிற் கட்டியுள்ள நெருங்கிய கொடியாடைகளிற்பூட்டியுள்ள வயிரமான கோல்களின் நுனிகளால் கரியமுகில்களைக்குத்தியுயர்த்திப் பிளப்பன; அவ்வண்ணம் பிளந்த மேகங்களின் துவாரங்களை அசைகின்ற கொடிச்சீலைகள் அடையா நிற்பன.—எ-று.

ஒவ்வொரு இரதங்களும் அதிக உன்னதமானவையென்பார் கோனுதி கார்முகிலுந்தியென்றும், பூந்துகில் பூழையடைத்தனவென்றும் கூறினார். தேர்ப்படை அரசன் தேரொடு கிட்டிவருவன வாதலால் சூழ்வரு தேரென்றார். (௪௨)

வரங்கெழு சூர்துணை மாய்ந்திடு மென்றே
யுரங்கொடு முன்ன முணர்ந்தன கொல்லோ
துரங்கம முங்கின தோல்புலம் புற்ற
விரங்கின பல்லிய மேங்கின தேர்கள்.

(இ-ள்.) வரத்தொடு விளங்குகின்ற சூரபன்மனுக்குத் தம்பியான சிங்கமுகவசுரனிறப்பானென்று தம்மறிவைக்கொண்டு முன்னே அறிந்தனவோ (போருக்குச் செல்லும்) குதிரைகள் துன்புற்றழுதன; இவைகளேயன்றி யானைகளும் அழுதன; வீரக்குறியாக முழங்கவேண்டிய பலவகை வாச்சியங்களும், இரக்கமான ஒலியுடன் முழங்கின; இளைச்சலிடுகின்ற இரதங்கள் ஏக்கமாக ஒலித்தன.—எ-று.

குதிரைகள் கனைப்பனவும், யானைகள் பிளிறினவும், பல்லியமுழங்கினவும், தேர்களிளைந்தனவும், அழுதனபோலவும் புலம்பினபோலவும் இரங்கினபோலவும் ஏங்கினபோலவும் இருந்தமையான் இக்குறிசாக்குறியென்றும், இக்குறியால் தலைவன் இறந்துபடுவானென்றும் நிமித்தமுணர்ந்தார்க்கு விளக்கினமையின் இவைமுன்னரோ உணர்ந்தனவோவென்று ஐயத்தாலுரைத்தார், ஒகாரம் ஐயப்பொருளது- உரம் - அறிவு. (சுங)

கட்புல ஞசிக வின்செவி துன்னப்
பட்டன பூழிப தாகையு மற்றை
யொட்டலர் விண்செல வொட்டல ரென்ன
விட்டனர் தூக்கம் விரைந்தனர் வெய்யோர்.

(இ-ள்.) நமக்குக் கண்களிலும் மூக்குகளிலும் அழகிய காதுகளிலும் புழுதி வந்து நெருங்கின; கொடிகளுமவ்வண்ணமே உயர்ந்திடிக்கின்றன; இதனால் பகைவர் நம்மை ஆகாயமார்க்கமாகச் செல்லவொட்டார்களென்று ஆதித்தியர்கள் வானத்தின் மெல்லெனச்செல்வதை ஒழித்து விரைந்து சென்றார்கள்.

அதிதிமைந்தர் ஆதித்தியர் இவர்கள் தேவர்களில் முற்பட்டவர் இவர் பன்னிருகோடியர்.

வெய்யோர் நமக்கிவ்வழி இன்று மந்தகமனத்திற்கு சிதமானதன்று, இன்று இவ்வழியில் நம்பகைவரானதானவர் வருகின்றனர் அவர்கள் வருகையை நாம் புழுதியாலும் கொடிக்கோல்களாலும் உணர்ந்தோம். இனி மெல்லெனச் செல்வோமாயின் நமக்குப் பகைவரால் தீங்குநேரிடுமென்றாலோசித்து முடித்தவர்களாய் மிகவும் விரைந்துசென்றார் என்பார் "ஒட்டலர்விண்செல வொட்டலர் என்னவிட்டனர் தூக்கம்விரைந்தனர் வெய்யோ" ரென்றார். (சுச)

தேரின ரோர்பலர் திண்டிறல் வாசி
யூருந ரோர்பல ரோங்கிய வேழம்
பேருந ரோர்பலர் பேரடல் கொண்டு
பாரின ரோர்பல ராற்படை மன்னர்.

(இ-ள்.) போர்வீரர்களிலநேகர்களாகிய இரதவீரர்களிற் பலரும் மிக்கவன்மையினையுடைய குதிரையேறிச்செல்பவர்களிற் பலரும் உயர்ந்த யானைகளிலேறி யுலாவுவோர்பலரும் வானத்திலிடமின்மையால் மிக்க வன்மையுடன் பூமியின்மார்க்கமாகச் சென்றார்கள்.—எ-று.

வானவழியிற்செல்ல விடமின்மையால் தரைவழியிலும் சென்றாரென்பார் "பாரின ரோர்பலராற் படைமன்னர்" என்றார். (சுரு)

துங்கமில் சூர்துணை தொல்படை மன்ன
னங்கவ னென்னவு ரித்தலை கொண்டான்

மங்கல மாயவண் மாமக னாடற்
சிங்க னெனப்படு சீர்ப்பெய ருள்ளான்.

(இ-ள்.) உயர்வற்ற சூரபன்மனுக்கிளையோனான சிங்கமுகனுடைய பெரிய சேனைகளுக்கரசனாகவுள்ளவன் அரசனாகிய சிங்கமுகனைப்போல சிங்கத்தலையுள்ளவன் மங்கலகளையான மாயையென்பவள்பெற்ற சிறந்த மகன் வெற்றிபொருந்திய சிங்கனென்று கூறப்படுகின்ற சிறந்த பெயரினையுடையவன்.—எ-று.

நல்லொழுக்கமற்றவனாதலால் சூரனை உயர்வற்றவன் என்றும்.

சூரபன்மனுக்குச் சகோதரனே சிங்கமுகனுக்குச் சேனாபதியென்றுவிளக்குவான் "மங்கலமாயவண்மாமகன் என்றார். இச்சேனாதிபன் பேராற்றலினன் என்பான். ஆடற் சிங்கன் என்றார். "மீளமற்றவர்தம்மையுநிறுவிவேறுள்ள, சூளிகைப்பெருமண்டபந்தொறுந்தொறுமேகி, யாளிவல்லியம்புரவிமானேரியெண்கேனம், கூளியாதியாம் விலங்கின துருவெலாங் கொண்டார், என்றும், இறுதியில்லாதோர் விலங்கினதுருவு கொண்டிரவின், புறமதாகியபுலரிசேர்வைகறைப்பொழுதின், முறையின்மாயையும் முனிவனுமேமுயங்கி, அறுபதாயிரவெள்ளமாமவுணரையளித்தார் என்றும், அசுரகாண்டத்திலிருத்தலால் சூரபன்மன் சிங்கன் தாருகன் அசமுகியென்னும் நால்வர்களையும்; நான்கியாமங்களிற்புணர்ந்து பெற்ற காசிபனும் மாயையும் வைகறைப்பொழுதில் பலவிலங்குகளினுருக்கொண்டு பலவிதமாகப் புணர்ந்தபொழுது தோன்றின அசுரர்களிலிச் சேனாபதியான சிங்கனும் ஒருவனென்றுணர்க. (௬௬)

போர்ப்படை கொண்டு புறம்படர் கின்ற
தேர்ப்படை காற்படை சிந்துரம் வாசித்
தார்ப்படை கொண்டு தடங்கட லென்ன
வார்ப்படை நெற்றிய னாகி யகன்றான்.

(இ-ள்.) அந்தச் சிங்கனென்னுஞ் சேனாபதியானவன் போருக்குரிய ஆயுதங்களைச் சுமந்துகொண்டு வெளியே வந்த தேர்ப்படைகளும் காலாட்படைகளும் யானைப்படைகளும் ஒழுங்காகச் செல்கின்ற குதிரைப்படைகளும் ஒன்றாய்க் கடலைப்போல ஆரவாரிக்கின்ற இடத்தில் அவைகளின் படைவகுப்பின் முதலில் நிற்பவனாகிச் சென்றான்.

சேனாபதியானவன் சேனைகளுக்கு முன்சென்றானென்பார், நெற்றியனாகிய கன்றான் என்றார். முன்னேசெல்லினும் சேனைகளையுடன் கொண்டு சென்றான் என்பார். தார்ப்படைகொண்டு என்றார். (௬௭)

நீள்வயிர் பேரி நிசாள முடுக்கை
தாளம் வழிப்படு தண்ணுமை தக்கை
காளம் வலம்புரி கைத்துடி யாதி
யாளி முகன்மு னளப்பில வார்ப்ப.

(இ-ள்.) நீளமான கொம்புகளும் பேரிகைகளும் நிசாளங்களும் உடுக்கைகளும் தாளங்களும் ஒழுங்கான தண்ணுமைகளும் தக்கைகளும் காளங்களும் வலம்புரிகளும் சிற்றுடுக்கைகளும் முதலியவைகள் சிங்கமுகனெதிரிலநேகமாக முழங்கின.—எ-று.

நிசாளமுதலியவை அந்நாளிலுள்ள வாச்சிய விசேஷங்கள்- (௬௮)

ஆகிய தால மரைதென யாமு
மேகுது முண்டி யெமக்குள தென்னா
மாக நெருங்கின வன்கழு கீட்டங்
காகம் வருந்திய காளிகள் கூளி.

(இ-ள்.) விரைந்து சண்டை நடக்கப்போகின்றது, நாமும் போவோம், அங்கு உணவு எமக்குண்டு என்று வலிய கழுகுப்பறவைகளின் கூட்டங்கள் ஆகாயத்தில் நெருங்கின; உணவின்றி வருந்திக்கிடந்தனவாகிய காளிகளும் கூளிகளும் (அவைகளுடன்) நெருங்கின. எ-று.

காளிகளும் கூளிகளுமாதிய தேவசாமான்ய சன்மங்கட்குப் பசிப்பிணி முதலிய அதிகமாயிருத்தலோடு துர்மாம்சாதி நீசவுணவுகளிலேயே விருப்பமதிகமாதலாலும் அவைகள் எங்குக்கிடைக்குமென ஏங்கிக்கிடப்பனவாதலாலும் அவைகளின் இயல்புகளை விளக்க "வருந்தியகாளிகள் கூளிகள்" என்றார். பைசாசப்பிறப்பு ஆசார ஈனமான மந்திரசெபம் சுத்தமின்றிச்செய்யும் சிவபூசை முதலியவைகளால் உண்டாவனவாம்.

ஆழியை யொத்துய ரம்பொற் றேர்களி
லாழியை யுண்டெழு புயல்வந் தார்த்தன
வாழிய நிலத்துருண் டழிதி யோவெனு
வாழியை வினவியே யமர்தல் போலுமால்.

(இ-ள்.) மலைகளைப்போல உயர்ந்த அழகிய பொன்னந்தேர்களில் அவைகளை மலைகளென்று கருதிக் கடனீரைக் குடித்தெழு மேகங்கள் சென்று படிந்து முழங்கின; எதுபோலுமெனின், அசைவற்றுக்கிடந்த நீ இன்று பூமியிலுருண்டு அழிகின்றனையோ என்று அம்மலைகளைக் கேட்டுக்கொண்டிருத்தலைப்போலும்.—எ-று.

மேகங்க ளிரதங்களை மலைகளென்று கருதிவந்து தங்கி இரைந்தனவவை அபசகுனமென்க. இரதங்களில் மேகங்கள் வந்துதங்கி யார்த்தல் அபசகுனமென்று குறிப்பிக்க அழிதியோவென வாழியை வினவியே யமர்தல்போலும் என்றார். (௫௦)

இவ்வகை சேனைகன் யாவு மேழ்பெரும்
பவ்வமு மொருவழிப் படர்ந்த தேயென
வவ்வயிற் போந்திட வமரை முன்னியே
தெவ்வடு மரிமுகன் சேறன் மேயினன்.

(இ-ள்.) இவ்வண்ணமாக எல்லாச்சைநியங்களும் பெரிய எழுவகைக் கடல்களும் ஒருவழியாகச் சென்றாற்போல அவ்விடத்தில் வராநிற்பப் போரை யுத்தேசித்து, பகைவர்களைக் கொல்கின்ற சிங்கமுகன் சென்றான்.—எ-று.

இங்குரைத்தது அரசனை சிங்கனை என்க.

எல்லாச்சேனைகளும் ஒன்றாகச் சேறலை யுவமிப்பார்; எழுகடல்களும் ஒன்று கூடுவதுபோல என்றார். மிகுதிபற்றி எழ்கடலுவமை கூறினர் என்க. (௫௧)

சேரல ராவிகொள் சீய முகத்தோன்
பேரனி கத்தொடு போர்ந்திடல் காணூஉ
வாரிச மேலவன் வாசவன் வானோ
ராரும் வெரீஇயின ரச்ச மடைந்தார்.

(இ-ள்.) பகைவருயிரை வாங்குகின்ற சிங்கமுகாசுரன் மிகுந்த சைனியங்களோடுஞ் செல்லுதலைப்பார்த்து தாமரைமலரின்மீதிருக்கும் பிரமனும் இந்திரனும் மற்றைய தேவரனைவரும் பயந்தவர்களாக அச்சமடைந்தார்கள்.—எ-று.

பகைவரை யொருநாளும் உயிரோடு விடாதவனென்பார் 'சேரலராவிகொள் சிங்கன்' என்றார். இவன் கொடுமையை விளக்குவார் வாரிசமேலவன் வாசவன் வானோராரும்வெரீஇயனரச்சமடைந்தார், என்றார். (௫௨)

செய்ய கரத்தினர் சிந்தை வியர்த்தே
மெய்யல சுற்றிட மேற்றுகில் சோர
வையுறு மெல்லியி லாக மிரைப்ப
வொய்யென யாவரு மோடினர் போனார்.

(இ-ள்.) செவ்விய ஒளியினையுடைய வத்தேவர்கள் மார்பில் வியர்வை யுடைய வர்களாய் உடலம் அலச உத்தரீயஞ்சோர அளவற்ற பேரழகினையுடைய சரீரம் இளை ப்புவாங்க விரைவாக எல்லாருமாக ஓடிச்சென்றார்கள்.—எ-று.

செவ்விய கைகளையுடையவர்களும் சிந்தைவியர்த்து உடலம் துன்புற்றவர்களும் உத்தரீயம் சோர்ந்தவர்களும் சிலேத்மத்திற்கு இருப்பிடமான இதையத்தானமானது இளைச்சலிடப்பட்டவர்களும் ஆகி விரைவாக மேற்கூறினோரனைவர்களும் சென்றார்கள் எனினும் ஆம், ஐ, சிலேத்துமம். எல்லை-இடம். (நூ)

ஆவதொர் பாசறை யாலய வைப்பிற்
றேவர்க ளீண்டுறு சிற்சபை தன்னின்
மேவரு வேற்படை விண்ணவன் முன்போய்ப்
பூவடி தாழ்ந்து புகன்றிடு கின்றார்.

(இ-ள்.) அப்பொழுது அவ்விடத்தில் விசுவகன்மனு லமைக்கப்பட்டிருக்கின்ற படைவீடென்னும் ஆலயத்தில் தேவர்கள் நெருங்கி யிருக்கின்ற சிற்சபையில் எழுந்த ருளியிருக்கின்ற பாவிகளாலடையப்படாத வேலாயுதனாகிய முதல்வனெதிரே சென்று மலர்போன்ற திருவடிகளை வணங்கிக் கூறுவாராயினர்.—எ-று.

தேவர் பயந்து அடைந்து வணங்கி யுரைப்பாராயினரென்க. பாசறை-போர்புரி யச்செல்வோர் தங்குமிடம். எம்பெருமான் பாவிகள் கண்களுக்குப் புலப்படாதவனாதலால் மேவரும் என்பதற்கு-பாவிகளாலடையப்படாத என்றும். பூவடி-உவமத்தொகை. சிற்சபை - பிரகாசமான சபை; சித்-பிரகாசம். (நூச)

ஆயிர மான வகன்றலை கொண்டா
னாயிர மாயிர மங்கை படைத்தா
னாயிர மேற்படு மண்டமும் வென்றா
னாயிரம் யோசனை யாவுயர் மெய்யான்.

(இ-ள்.) அண்ணலே! இதோ வருகின்ற சிங்கமுகன் பெரிய ஆயிரந்தலைகளையு டையவன்; அன்றியும் இரண்டாயிரமான அழகியகைகளை யுடையவன்; ஆயிரத்தெட்ட ண்டங்களையும் வென்றவன்; ஆயிரம் யோசனை யுயரமான சரீரத்தினையுடையவன்.

தேவர்கள் சிங்கமுகவசுரனைக்கண்டு பயந்தமையால், உரைக்கு முறையே உரை யாது அச்சிங்கனுடைய உறுப்புமுதலியவற்றை உரைத்தனரென்று விளக்க ஆசிரியரும் அதற்கேற்றவாறு சுவைதோன்றச் செய்யுளமைத்தனரென்க. (நூரு)

நெஞ்சி லெவர்க்கு நினைப்பரி தாகும்
வஞ்சமு மாயையின் வன்மையும் வல்லோ
னெஞ்சலில் வன்மைய னிவ்வுல கெல்லாந்
துஞ்சினு மாருயிர் துஞ்சுத லில்லோன்.

(இ-ள்.) மனதினால் எப்படிப்பட்ட இழிஞர்களாலும் நினைத்தற்குக்கூடாத வஞ்சனைகளும் மாயாவல்லபங்களும் செய்யவல்லவன்; அன்றியும் குறையாத வன்மை யினையுடையவன்; இவ்வுலகமனைத்தும் அழிந்தாலும் அழியாதஆயுளுடையவன்.-எ-று

மற்றைய வசுரர்களும் மாயை, வஞ்சம் முதலியன உள்ளவர்கள் தானே என்று கருதி இவனைச் சாமான்யமானவனாகக் கருதாதவண்ணம் பிறரா லெண்ணக்கூட முடியாத மாயைகளையும் வஞ்சனைகளையும் உடையவர்களென்றார் என்பார். "நெஞ்சிலெவர்க்கு நினைப்பரிதாகும் - வஞ்சகமும்மாயையின்வன்மையும்வல்லோ" னென்றார் என்றார்.

ஓங்க லினங்க ளுவாத்தொகை நாகம்
பாங்கம ராமை பரித்திடன் மாற்றி
யீங்குல கங்க ளெவற்றையு மோர்நா
ளாங்கொரு செங்கையி லாற்றிய தொல்லோன்.

(இ-ள்.) இவன் அட்டகுலாசலங்கள், அட்டகசங்கள், அட்டநாகங்கள் முறைமையாகப்பொருந்திய கூர்மம் என்னும் அவைகளா லொன்றுக்கொன்று ஆதாரமாகச் சுமக்கப்படுகின்ற இந்த உலகங்களை ஒருநாளிவன் அவைகளனைத்தையும் விலக்கி, தனதொரு செவ்விய கையில் வைத்துச் சுமந்த பெரியவன்.—எ-று.

காணப்படு மிவ்வுலகங்களை இவ்வண்ணம் இவைகள் சுமக்கின்றதை விவரமாக வண்டகோசபடலத்துக் காண்க. (௩௭)

பாந்தள் புனைந்த பராபர மூர்த்தி
யீந்தது மாற்றல ரெல்லையி லோரைக்
காய்ந்துயி ருண்டு கறைப்பெரு நீத்தந்
தோய்ந்திடு கின்றதொர் சூல மெடுத்தான்.

(இ-ள்.) இவன் அரவமணிந்த பராபரனுன இறைவன் அளித்ததுவும் அநேகம் பகைவர்களைக்கொன்று உயிருண்டு மிகுந்த இரத்தவெள்ளத்தின் முழுகியதுமான ஒரு சூலாயுதத்தினைக் கையிலெடுத்துள்ளவன்.—எ-று.

முடிவிலாற்றலரான முதல்வனளித்தசூலந் தவறாது பகைவர்களைக் கொல்வதாதலாலும் அதனைத்தடுத்தற்கேற்ற ஆயுதம் வேறொன்றும் என்று மின்மையாலும் அதற்கஞ்சத் தக்கதென்று குறிப்பிப்பார் "பாந்தள் புனைந்த பராபரமூர்த்தியீந்தது, சூலமெடுத்தானென்றார் என்றார். (௩௮)

எண்டிசை மேதினி யேழ்பில மேனை
விண்டல மன்னதன் மேற்படு மெல்லை
யண்டம னைத்து மொரங்கையில் வாரி
யுண்டுமிழ் கின்றதொர் வன்மையு முள்ளோன்.

(இ-ள்.) இவனின்ன மெத்தகையோனென்னில்: எட்டுத்திக்குகளையும், உலகங்களையும், எழுவகைய பாதாளங்களையும், இவையன்றியுள்ள சுவர்க்காதி மேலிடங்கள் முதலியவனைத்தையும், மற்றை யண்டங்கண் முழுமையும் ஒரு உள்ளங்கையிலெடுத்து விழுங்கிக் கக்குகின்ற ஒப்பற்ற வன்மையும் உடையவன்.—எ-று. பிலம் - பாதாளம்.

எண்டிசைகளாவன - இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசான்யன் என்பவர்களா லாளப்படுகிற பூமிகட்கு பெயர். எழுவகைப்பிலங்களான - அதலம், விதலம், சுதலம், மஹாதலம், ரஸாதலம், தராதலம், பாதாளம் என்பன்வாகிய கீழ்நிலங்களாம். விண்டலமென்பது - பைசாசபுவன முதலியவை; பைசாசபுவனம், வித்தியாதரபுவனம், காந்தருவபுவனம், தேவபுவனம், இருடிபுவனம், உடுபுவனம், பிரமபுவனம் ஆதியவாம். அன்னதன்மேற்படு மண்டங்களாவன - இவ்வண்டங்களின்மே லடுக்கடுக்காவிருக்கும் பிறவண்டங்களை. இவை ஒன்றின்மேலொன்று அடுக்காவிருத்தலை அண்டகோசபடலத்நுரைத்தாம். இவன் இவ்வண்டமுதலிய அனைத்தையும் ஒரு அகங்கையின் வைத்துண்டு மிழுமாற்றலோடு மேற்கூறியவைகளு முடை

யோன் என்பார். "வன்மையும்" என்முர். உம்மை இறந்ததுதழீஇயது. இதனு லிவன் பேராற்றலினென்பது விளங்கிற்று. (ருக)

தூக்கொரு பால்வலி தூங்குற வோர்பான்
மேக்குயர் கோலென மேதினிப் பாங்கர்
தேக்கெறி வேலைகள் சிந்தி விசும்பிற்
ருக்குற வேநடை தந்திடு தாளான்.

(இ-ள்.) இவன் நிறுத்தெடுத்தற்கு வைத்த பண்டங்கள் உயர்ந்த ஒருபுறத்தில் வன்மையாகப்பொருந்த, உடனே வேருெருபுறத்தின் மேலே உயர்ந்த துலாக்கோலைப் போல, உலகினருகில் அலைவீசாநின்ற கடல்கள் சிதறி ஆகாயத்திற்படுமொறு நடக்கின்ற கால்களையுடையவன்.—எ-று.

துலாக்கோல் - தராசு. நிறுத்தலளவைக் கருவியான தராசி ஞெருதட்டின்மீது நிறுத்தற்கமைந்த பொருள்களை வைத்து மறுதட்டி லதனிறைக்கேற்ற மற்றொருபொருளை வையாதுபோனுல் வெறுந்தட்டு உயர்ந்து காட்டுமாறுபோல, உலகமென்னுந் தராசிற் சிங்கமுகனுடைய கால்களென்னும் பண்டங்கள் பொருந்தினவுடனே அது கீழே அழுந்துதலால், கடலென்னு மறுதட்டு இவைகளையொத்த பொருள்கள் தன்னிடத்தின்மையால் மேற்சென்றது என்று விளக்க. துலாக்கோலை யுவமையிட்டுரைத்தார் என்க. முன்ன ரிவன் கையின்பெருமையை விளக்கின வர்கள், பின்னர் காலின்பெருமையை விளக்கினுர்களென்பார். "தேக்கெறிவேலைகள் சிந்திவிசும்பிற் ருக்குறவேநடைதந்திருதாளான்" என்முர். (சுo)

தண்ட மிதென்று தருக்கி னெடுத்தே
யண்ட கடாக மதன்புடை மோத
நுண்டுக ளாதலு நொய்திது வென்றே
விண்டொடு மேருவை மீளவும் வைத்தோன்.

(இ-ள்.) இவன் ஆகாயத்தையளாவின மேருமலையை இதுவொரு தண்டமென வன்மையுடனெடுத்து அண்டகாடத்திலடிக்க நுண்ணியதுகளாகவாதலும், உடனேஇது இலேசானது என்று அதனைப் பின்னரும் இருந்த இடத்தில் வைத்தவன்.—எ-று.

மகாமேரு ஓரிலக்கம்யோசனை யுயரத்தையும் அநேகமாயிரம் கொடுமுடிகளையும் மிகவும் பெரியதான தோற்றத்தினையும் உடையது. அத்தகைய மேருவை இச்சிங்கமுகன் இஃதொரு கைக்கோலென்று எடுத்து அண்டகடாகத்தி லடித்துப்பார்த்துப் பிதிர்தலைக்கண்டு இது சொத்தைக்கோலெனப் பின்னும் இருந்த இடத்திலேயே வைத்தான் என்றமையான், அவனுக்கு மேருமலையும் கைத்தண்டமாக இருத்தற்குதவாத அப்பிரயோசனமானது என்முயிற்று. இதனுல் இவனுற்றலித்தகையது என்று விளங்கும்; மேருவின் உயர்வை விளக்க "விண்டொடர்மேரு" என்முர். (சுக)

மாசறு நேமி வடாது புலத்தி
னுசுர மென்னு மகன்பதி வாழ்வோன்
வீசிடி னெவ்வுல கத்தையும் வீக்கும்
பாச மிரண்டு பரித்திடு கையான்.

(இ-ள்.) இவன் களங்கமற்ற வடகடலிலுள்ள ஆசுரம் என்று பெயருள்ள பெரிய நகரத்தில் வாழ்பவன் விசிறுவானுனு லெந்தவுலகத்தையுஞ் சுற்றிக் கட்டத்தக்க இரண்டு பாசங்களைத் தாங்கிய கைகளை யுடையவன்.—எ-று.

தெளிந்த நீரினையுடைய கடலென்பார்; 'மாசறுநேமி' என்முர். இவன்தன்மைக்கேற்ற நகரம் அது என்று குறிப்பிப்பான். "அகன்பதி" என்முர். மற்று எவரிடத்தி

லும் இல்லாத நீளமான பாசமுடையவனென்பான்; வீசிடினெவ்வுலகத்தையும் வீக்கும் பாசம் என்றார். (௬௨)

துங்கம தாகிய சூர்துணை யானோ
னங்கவ னிற்பெரி தாற்றல் படைத்தோ
னங்களி னங்களை நாளு நலிந்தோன்
சிங்கமு காசுர னாகிய தீயோன்.

(இ-ள்.) சிங்கமுகாசுரனென்னும் இக்கொடியவன் உயர்ச்சி பொருந்திய சூரபன்மனுக்கு உற்ற துணைவனாகவுள்ளவன், அந்த சூரபன்மனைவிட மிகவும் வன்மை பொருந்தினவன், எங்களினத்தவர்களை எந்நாளும் உபத்திரவித்தவன்.—எ-று.

இவ்விடத்தி லமரர்கள் இறைவனிடம் அசுரர்களின் பெருமையைக் கூறுதலால், துங்கமதாகிய சூர்துணை என்பதற்கு - உயர்ச்சிபொருந்திய சூரபன்மனுக்குத் துணை என்றும். சூரபன்மன் முன்னிகழ்ந்த சண்டையில்ஆயுதவாகனாதிகளை இழந்து தோற்று ஓடினானே, அவ்வண்ணம் இவன் போவானென்று நினைக்கப்படாது என்று குறிப்பிக்க, "அங்கவனிற்பெரிதாற்றல் படைத்தோன்" என்றார் என்றார். இவனவனிற் கொடியனென்றும், இவன் கொடுமைகளால் நாங்களே மிகவும் துன்பமனுபவித்தவர்களென்றும் கூறினானென்பார். "நங்களினங்களை நாளுநலிந்தோ" னென்று வைத்தார். (௬௩)

அந்தமி லாவ னிகக்கடல் சூழ
வெந்திற லோடு வியன்சம ராற்ற
வந்தனன் மற்றவன் மன்னுயிர் மாற்றி
யெந்தை யளித்தரு ளெங்களை யென்றார்.

(இ-ள்.) இவ்வசுரன் அளவற்றனவாகவுள்ள சேனைக்கடல் தன்னைச் சூழ்ந்து வராநிற்ப, மிக்க வன்மையுடனே பெரும்போர் புரியும்வண்ணம் வந்தான். அதனால் அவனுடைய நிலைபெற்ற உயிரை நீக்கி எங்களை எங்கள் தந்தையே இரக்ஷிக்கவேண்டும் என்று கூறினார்கள்.—எ-று.

எந்தைபெருமானே! இவனே மகா கொடியவன்; இவன் அளவற்ற சேனைகளோடு வந்திருக்கின்றான்; இவனைக்கொன்று லெங்கள் துன்ப மொழியுமென்றார் என்பார். அளித்தருளென்றார் என்றார். ஆன்மா அநாதிநித்தமானதாதலால், மன்னுயிரென்றதை நிலைபெற்ற உயிரென்றும். நிலைபெற்றதானு லழியுமோ என்னில், அழியாதென்றே பதிலுரைப்போம். இங்கு உயிர்மாற்றி என்றது-இந்தச் சிங்கமுக சரீரத்தினின்றும் உயிரை நீக்கி எங்களை இரக்ஷிக்கவேண்டுமென்றாரென்று ஊகித்துக்கொள்க. (௬௪)

அன்னதை யோர்தலு மாறு முகேசன்
றன்னய னின்றிடு தாவறு மோதை
மன்னனை நோக்கிநம் வாலிய தேரை
முன்னிவ ணுய்க்குதி யென்று மொழிந்தான்.

(இ-ள்.) தேவர் கூறிய வதனைக் கேட்டவுடனே சண்முகப்பெருமான் தனது அருகினின்ற கெடுதியற்ற வாயுதேவனைப் பார்த்து நமது நின்மலமான இரதத்தை விரைவாக நம்மெதிரே கொண்டுவரக்கடவை என்று திருவாய்மலர்ந்தருளினான்.—எ-று.

எம்பெருமானுக்குச் சாரதி வாயுதேவனாதலால் அவனை நோக்கி யுரைத்தனனென்க. குமரப்பெருமானிவரு மிரதம் எல்லாம்வல்ல இறைவனான ஸ்ரீகண்டபரமேசுவரனுடைய திருவுளக்கருணையினா லுண்டானதாதலால், இவ்விரதத்தை வாலிய விரதமென்றார் என்க. முன்னிவணுய்க்குதி என்றதை - நீ இரதத்தை முன்னே கொண்டுவா, பின்னர் மற்றைய காரியங்களைச்செய் என்று போருக் கெழுந்தருளவேண்டிய விரைவைக் குறிப்பிப்பான். 'தேரை முன்னிவணுய்க்குதி' என்றார் என்றார். (௬௫)

தீட்டிய வேற்படை செங்கை படைத்தோன்
மாட்டுற நின்ற வயம்புனை மொய்ம்பன்
கேட்டன னெந்தை கெழீஇயின முன்போய்த்
தாட்டுணை வீழ்ந்திது சாற்றுத லுற்றான்:

(இ-ள்.) தீட்டப்பட்ட வேலாயுதத்தினைத் திருக்கரத்திற்றாங்கிய குமரப்பெருமான் அருகில்நின்ற வெற்றிபொருந்திய தோளினனான வீரவாகுதேவன் இதனைக்கேட்டு எம்பெருமானுடையவிளங்காநின்ற எதிரிற்சென்று உபயபாதங்களில்விழுந்து வணங்கி இதனைக்கூறுவானாயினான்.—எ-று.

எம்பெருமானது திருக்கரத்திருக்குந் திருவுடம்பிடிப்படை பிறரது பிறவாயுதங்களைப்போல பலமுறையும் ஒருமுறையும் கூர்மழுங்கவும் மழுங்காது. தீட்டும் வேலையும் அதனைக்குறித்து வேண்டுவதில்லை; அது இறைவ னிவரிடமளிக்கும்போதே தனது அருள்வலியாற் கூராக்கிக் கொடுத்துள்ளதாதலால், அதற்கு மழுக்கமின்றென்று குறிப்பிக்க. "தீட்டியவேற்படை" என்றார். கேட்டனன் என்றது - முற்றெச்சம். (சுசு)

தந்நிக ரற்ற சயம்புனை வீரர்
முன்னுறு தானைகண் மொய்த்திட யான்போ
யொன்னல னாவியை யுண்டிவண் மீள்வ
னென்னை விடுக்குதி யெந்தையை யென்றான்.

(இ-ள்.) தனக்குவேறொருவரும் ஒப்பாக வுரைத்தற்கில்லாத வெற்றிபொருந்திய வீரர்களும் முற்பட்டசைனியங்களுமுடன்வர யான்சென்று பகைவனுயிரை யுண்டு இங்குத்திரும்பி வருவேன் எந்தைபெருமானே என்னை அனுப்பக்கடவை என்றுரைத்தான்.—எ-று.

எம்பெருமானே! நினக்கு அவனெம்மாத்திரம் இத்தேவர்களா லுனைக்கப்பெற்ற பேராற்றன் முதலிய மலிந்த அச்சிங்கனிலும் சிறந்தோர் இவ்விடத்து நினது திருவடித்தொழும்பரிற் பலருளர் யானுமிருக்கின்றேன்; அவனுடைய சேனைகளினும் முற்பட்ட சேனைகளு மீண்டுள வாதலால், அவ்விழிஞன் நிமித்தம் திருவடிபெயர்த்தல் வேண்டுவதின்று அடியேனைக் கடைக்கணித்தால் மேற்கூறியவர்களுடன் சென்று பொருது அவனுயிரை உண்டுவருகின்றேன் விடையருள்க என்பனவாதிய பொருள்கள் தொனித்தல் காண்க. ஐ - சாரியை. (சுஎ)

ஆண்டகை யூரலோ டம்மொழி கேளா
மாண்டிட வந்திடு மாற்றலன் வெம்போர்
வேண்டினை நன்று விடுத்தன முன்னீ
யீண்டுள தானையொ டேகுதி யென்றான்.

(இ-ள்.) ஆண்டன்மையிற்சிறந்த குமரப்பெருமான் வீரவாகு தேவனுரைத்த அந்த வசனத்தைக்கேட்டு மந்தஹாஸத்துடன் அவ்வீரவாகுதேவனைப்பார்த்து இறந்துபடுமாறு வந்த பகைவனோடு வெவ்விய போரினை விரும்பினை நல்லது. அநுப்பினோம் முன்னே நீ இங்குள சைநியங்களுடனே போகக்கடவை என்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று.

சொல்லிலங்கிளிபோலுற்ற வல்லிதன்கொழுநனான குமரப்பெருமான் வீரவாகு தேவன் தனது திருவுளக்கருத்தை யறியாது சிங்கன் போரை யிரந்தமையால், புன்னகையொடு திருவாய்மலர்ந்தருளினனென்க. இன்று இச்சிங்கமுகன் அழிந்தொழியுமாறே வந்திருக்கின்றான். அவனோ எம்மாலன்றி நின்போன்ற பிறராலிறவான்; ஆயினும் நீ யவனொடு போர்புரியு மாற்றலமைந்தவனாதலால், சேனைகளோடு முன்னே சென்று

போர்புரிதி. நின்ஞு லவனைவெல்லமுடியாது; நாம் நீ சென்றபின்பு வந்து அவனைக்கொல்கின்றோம் என்று குறிப்பிக்க, "மாண்டிடவந்திடு மாற்றலன்வெம்போர்" என்றும், "முன்னீயீண்டுளதானையோடேகுதி" என்றும் திருவாய்மலர்ந்தருளினவொன்க. (௬௮)

என்றலும் வீர னெழுந்துகை கூப்பி
வென்றிகொள் சாரதர் மெய்க்கிளை சூழ
மன்றம கன்று மணிக்கடை நண்ணி
யொன்றுதன் மாளிகை யூடு புகுந்தான்.

(இ-ள்.) எந்தைபெருமானிவ்வாறு கூறியவுடனே வீரவாகுதேவன் எழுந்து கைகளைக்குவித்து இறைவனை வணங்கி வெற்றிபொருந்திய பூதசைனியங்கள் உடன் சூழ்ந்துவராநிற்ப, சபாமண்டபத்தைவிட்டு அழகிய கடைவாயிலையடைந்து தான்வாழு மாளிகைக்குட் சென்றனன்.—எ-று.

வீரவாகுதேவனுக்குச் சிங்கமுகனோடு போர்புரியவேண்டுமென்று பேரவாமிகுந்திருந்ததென்பதைக் குறிப்பிக்க, உடனே போயினனென்னும் பொருள்தோன்ற, "என்றலும் அகன்றுபுக்கான்" என்றார். மணிக்கடை என்பதை - நாழிகை மணிகட்டிய முதல்வாசல் என்னினுமாம். (௬௯)

நேர்முக மான நிசாசரர் தம்மேற்
கூர்முக வாளி குணிப்பில கோடி
யோர்முக மாயுல வாதுமிழ் நீராற்
கார்முக மாயதொர் கார்முகங் கொண்டான்.

(இ-ள்.) எதிர்த்துவந்தவர்களான அசுரர்கள்மீது கூரிய நுனியினையுடைய அளவற்ற கோடியம்புகளை ஒரேதன்மையாக விடாதுமிழத்தக்க தன்மையாகவுள்ள ஒரு விற்படையை எடுத்தான்.—எ-று.

உமிழ்நீரால் என்றதற்கேற்ப கார்முகமாயதோர் கார்முகம் என்றார் - மேகமாகவுள்ளதென்று கூறுமாறான ஒருவில் என்றுபொருள். (௭௦)

போதுற ழங்குலி புட்டில்செ றித்தான்
கோதைய தொன்று கொடுங்கை பிணித்தா
னேதமில் சாலிகை யாக்கையி னிட்டான்
மேதகு தூணி வெரிந்புடை யாத்தான்.

(இ-ள்.) நாளரும்பினையனைய அங்குலிகளிற் புட்டில் களைத்தரித்தான் வளைவு பொருந்திய கையின் முன்னிடத்தில் தோற்கட்டொன்று தரித்தான் குற்றமற்ற கவசத்தை உடலிலணிந்தான் உயர்வுபொருந்திய அம்புக்கூட்டினைப் பிடரியிற் கட்டினன்.

காந்தண்மலரின் போதுபோல விரல்கள் விளங்குவதால் போதென்றதை நாளரும்பென்றும். புட்டிலென்பது-விரலுறை. தோற்கட்டுக்கட்டும் முன்கை வளைவுடையதாதலால் கொடுங்கை என்றதை வளைந்த கை என்றும். எவ்விதமான அத்திர சத்திரங்களாலும் பேதிக்கப்படாத ஆற்றலுள்ளதாதலால் கவசத்தை "ஏதமில்சாலிகை" என்றார். வரத்தாற்பெற்ற அம்பறாத்தூணியென்று விளக்குவான் "மேதகுதூணி" என்றார். அம்புக்கூட்டினை பிடரியிலன்றி வேறெங்கும் தரித்தலில்லையென்று விளக்க இடங்காட்டி "வெரிந்புடை" என்றார். பிடரி முற்றிலும் ஆக அம்புக்கூட்டினை அணிவதில்லை என்பார். "புடை" என்றார். (௭௧)

மிக்குறு தெய்வ வியன்படை முற்றுந்
தொக்குற வேகொடு தும்பை தரித்துச்

செக்கரின் விஞ்சிய செய்யதொர் வையம்
புக்கனன் வல்லை புறங்கடை வந்தான்.

(இ-ள்.) அவன் உயர்ந்துவிளங்குகின்ற தேவர்களுடைய சிறந்த ஆயுதங்களனைத்தையும் பொருந்தும்படி எடுத்துக்கொண்டு தும்பைமலர்மாலை யணிந்து செவ்வானத்தினும் உயர்ந்த செந்நிறமான ஒரு தேரிலேறி விரைவாக வெளிவாசலுக்கு வந்தான்.

மனிதராலாக்கப்பட்டு விளங்கும் ஆயுதங்களைப் போன்றனவற்றென்று குறிப்பிப்பான். "மிக்குறுதெய்வவியன்படை" என்றார். அவைகளை ஒன்றொழியாமற் கொண்டானென்பார். "முற்றும் என்றார். வேறுவேறிடங்களிலன்றி ஒருவிடத்தே வைத்தானென்பார். "தொக்குறவேகொடு" என்றார். இவன் அணிந்து செல்லுஞ்செல்கை "மைந்துபொருளாக வந்தவேந்தனை சென்றுதலையழிக்குஞ் சிறப்பிற்றென்ப என்னும் இலக்கணத்தது என்று குறிப்பிக்க "தும்பைவேய்ந்து" என்றார். மாணிக்கக்கற்களும் சாம்பூநத தங்கமுமே மிகுதியாக விட்டியற்றப்பட்ட இரதமென்று குறிப்பிக்க "செக்கரின் விஞ்சிய செய்யதோர்வையம்" என்றார்.

புக்கனன் - என்றது முற்றெச்சம். (எ௨)

எண்ம ரிலக்கர்க ளிச்செயல் காணு
வண்மை தரும்படை மாட்சிமை யெய்தித்
திண்மை யுறுந்தம தேர்களி லேறி
யண்மினர் வீரனை யார்ப்பொடு சூழ்ந்தார்.

(இ-ள்.) இவனிவ்வாறு வருதலை நவவீரர்களில் வீரவாகுதேவனொழிய உள்ள எட்டு வீரரும் இலக்கம் வீரரும் கண்டு வளப்பத்தைத் தராநின்ற படைகளோடுகூடின மாட்சிமையைஅடைந்து வன்மையானவையான தமதிரதங்களிலேறி நெருங்கினவர்களாய் வீரவாகுதேவனை ஆரவாரத்தோடு சூழ்ந்தார்கள்.—எ-று.

எண்மரிலக்கர்கள் எ-து-உம்மைத்தொகை ஆயுதவல்லபத்தினாலேயே போரில் வெற்றியென்று குறிப்பிக்க "வண்மைதரும் படைமாக்ஷி என்றார். போருக்கேற்றதேனென்பார். "திண்மையுறுந்தேர்" என்றார். ஆர்ப்பு வீராவேசத்தாலுண்டான சத்தம். வீரங்குன்றா வியல்பினராகிச் சென்றானொன்று குறிப்பிக்க "ஆர்ப்பொடு" என்றார். (எ௩)

மேனிக ழாயிர வெள்ளம தாகுஞ்
சேனை யெழுந்து செறிந்து பிறங்கல்
வானுயர் தாரு வயப்படை பற்றித்
தானவர் கேசரி தன்புடை வந்த.

(இ-ள்.) முன்னமே வீரவாகுதேவனொடு சென்று பகைவரோடு போர்புரிதற்கென்று அமைந்து நின்ற ஓராயிரம் வெள்ளஞ் சேனைகளும் பிரயாணமாகிநெருங்கி மலைகளையும் ஆகாயத்தை யளாவின மரங்களாகிய ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு அசுரர்களாகிய யானைகளுக்குச் சிங்கமாகவுள்ள வீரவாகுதேவனருகிற் சென்றன.

படையென்றஃறிணையாய் உரைத்தமையான் வந்தவென்றம் முடிபாலுரைத்தனர். (எ௪)

எறிந்தன பல்லிய மீண்டிய தானை
செறிந்தன மாண்கொடி செற்றின பூழி
யிறந்தலை நின்றவ னன்னது நோக்கிப்
பறந்தலை யொல்லை படர்ந்திட லுற்றான்.

(இ-ள்.) நெருங்கிவந்த வச்சேனைகள் பலவகையவான தோற்கருவிகளை முழக்கினவையாக வந்தன; மாட்சிமையான பலவகைய கொடிகள் நெருங்கின; இவைகளின்

செல்கையால் புழுதி எவ்விடத்திலும் நெருங்கின; தருமவழியே யொழுகும் வீரவாகு தேவ னதனைப்பார்த்துப் போர்புரியுமிடத்திற்கு விரைந்துசென்றான்.—எ-று.

எறிதலென்ப திரட்டலாதலால் பல்லியமென்பதை தோற்கருவியென்றும் தன்னுயிர்போகவரினும் நீதிகுன்றா வியல்பினனாதலால் வீரனை "அறந்தலை நின்றவன்" என்றார். (எ௫)

ஆரும்வி யப்புறு மாயிர வெள்ளம்
பாரிடர் தானை படைக்கிறை யானோர்
சாருறு கேளிர்க டன்னொடு செல்ல
வீரன டைந்தனன் வெஞ்சம ரெல்லை.

(இ-ள்.) எத்தகைய வீரர்களும் புகழத்தக்க ஆயிரம்வெள்ளஞ் சேனைகளான பூதவீரர்களுக் கிறைவர்களாக வுள்ளவர்கள் தம்முடன் வராநின்ற தமது துணைவர்களுடன் வராநிற்ப வெவ்விய போர்க்களத்திற்கு வீரவாகுதேவனெய்தினான்.—எ-று.

எத்தகைய வீரரும் ஆச்சரியமடையத்தக்க பேராற்றலினர் பூதரென்பார் "ஆரும்வியப்புறு மாயிரம்வெள்ளமென்றார் இன்னசேனையென்று விளக்கும்வண்ணமும் அசுரசேனையோ தேவசேனையோ என்றெண்ணுவா ரதையத்தையறுக்கவும் "பாரிடர்தானை" என்றார். சேனாபதிகளுக்குக் கேளிராவார் தன்னையொத்தவர்களாகவுள்ள சேனாபதிகளும் தங்கீழிலமர்ந்துள்ளவர்களும் என்க. (எசு)

ஆனதொர் காலையி லாளரி வெய்யோன்
சேனையும் வந்து செறிந்தது பூதர்
தானையு மங்கெதிர் சார்ந்தது கங்கை
வானதி சேர்தரும் வாரிதி யேபோல்.

(இ-ள்.) இவ்வாறு சென்றசமயத்தில் ஆண்மகனுடலமும் சிங்கம்போன்ற தலையும் வெவ்விய தன்மையும் உள்ளவனான சிங்கமுகாசுரனுடைய சேனையும் எதிரே வந்து நெருங்கியது உடனே பூதசேனையும் தேவகங்கைகடலி னெதிரி லடைந்தாற்போல எதிரே சென்றது.—எ-று

அவுணர் மிகுதியாகக் கருநிறவுடலினராதலாலும் ஒரு இலக்கம் வெள்ளத்தினர் வருதலாலும் மிகுதியையும் நிறத்தையும் கருதிக் கடலென்றும் பூதர் செம்மை வெண்மையாதி நிறங்களுடையவாரா யிருத்தலுடன் விபூதியால் வெண்ணிறத்தையும் ஒராயிரம் வெள்ளம் என்னும் குறைந்த தொகையினையும் உடையவராதலாலும் தேவகங்காநதியாகவும் உரைத்தனர் என்க. அசையாமனின்ற சேனைகளான அசுரரெதிரே அதிவேகமாக வெள்ளியபூதர் சென்றாரென்பார் "கங்கைவானதிசேர் தரும்வாரிதிபோல்" என்றார். (எஎ)

கோடு புலம்பின கொக்கரை யார்த்த
மோடுகொள் பேரி முழங்கின பீலிக்
காடு தழங்கின கண்டை கலித்த
வாடுப தாகைக ளார்த்தன வன்றே.

(இ-ள்.) கொம்புகள் முழங்கின; கொக்கரைக ளாரவாரித்தன; அடிப்புறமுயர்ந்து காணப்படுகிற பேரிகைகள் முழங்கின; சிறு சின்னக்கூட்டங்கள் முழங்கின; மணிகள் முழங்கின; அசையாநின்ற விருதுக்கொடிகள் காற்றினாலசைந்தொலித்தன.—எ-று.

கொம்பு-ஊதுகொம்பு; அது பறையர்முதலியோ ரிக்காலத்திலூதுவதாம். கோடென்பதை சங்கெனினும் இழுக்காது; கொக்கரையென்பது - ஒருவகைச் சங்கு,

யானை, முதலியவைகளின் முதுகிலிட்டு வாசிக்கும் பெரும்பறையென்று குறிப்பிக்க "மோடுகொள்பேரிகை" என்றார். பீலிமயிற்றோகைகளுக்குப் பெயரேனும் இவ்விடத்தி லவைவேண்டாமையா லுசிதமான சிறுசின்னங்களென்றும். (எஅ)

தேரொலி செய்தன திண்டிறன் மாவின்
றாரொலி செய்தன தந்தியி னீட்டம்
பேரொலி செய்த பெருங்கட லோடுங்
காரொலி செய்திடு காட்சிய தென்ன.

(இ-ள்.) இருவகைச்சேனையும் ஒருமித்த உடனே தேர்களொலித்தன; மிக்க வன்மையனவான குதிரைகளின் கழுத்துகளி லணிந்துள்ள சிறு சதங்கையாதியுமுழங் கின; யானைகளின் கூட்டங்கள் மிகுதியாகப் பெரிய கடலுடனே மேகமுங் குமுறுந் தோற்றம்போல ஒலிசெய்தன.—எ-று.

தேரினோசையினும் திண்ணிய குதிரையினோசையினும் யானையின் பிளிறல் பெரியதாமென்று குறிப்பிக்க ஈரடையாகிய வுவமைகாட்டிப் பெருங்கடலோடு காரொ லிசெய்திடு காக்ஷியதென்ன என்றார். கடல் பலபொருளொருமொழி யாதலால் பசு முத லிய பிறவற்றை விலக்கப் "பெருங்கடல்" என்றார். பாய்மாவென்றாற்போல.—எ-று.

வே று.

அந்த வேலையின் முருகவே ளானையோ ரணுகி
முந்து வெஞ்சமர் முயன்றன ரதுகண்டு முனிந்து
சுந்த ரந்திகழ் சிங்கமா முகன்படைத் தொல்லோர்
தந்தி தேர்பரி யணியொடும் போர்தரச் சார்ந்தார்.

(இ-ள்.) இவ்வண்ண மிருபுறச்சேனைகளும் போர்க்களத்தைக் கிட்டியவுடனே முருகவேளின் சேனைகளாகவுள்ளவர்கள் சென்று முற்பட்ட வெவ்விய போரினைப் புரிவான் முயற்சித்தனர் அப்பொழுது அதனைக்கண்டு கோபித்து அழகொடு விளங்கும் சிங்கமுகனுடைய சேனைகளாகவுள்ளவர்களும் அதிகநாள் வாழ்ந்தவர்களுமான அசுரவீர ர்கள் யானை தேர் குதிரை முதலிய அணிவகுப்புகளுடன் போர்புரியுமாறு வந்தார்கள்.

வேளென்பான் முருகின்மதனுமாதலால், அவனை யொழித்து நிறுத்த "முருக வேளென்றார். முருகு-இளமை. சிங்கமுகனுக்குள்ள அழகு செயற்கையழகென்று குறி ப்பிக்க, சுந்தரந்திகழ்" என்றார். இச்சிங்கமுகன் இன்று நல்ல ஆபரணாதிகளாற் றன்னை மிகுதியாக வலங்கரித்துள்ளானென்பதை முன்னமே விளக்கினும். நூற்றெட்டுகங்களா க வுயிர்வாழ்வோராதலால் சிங்கமுகன் சேனைவீரரை "தொல்லோர்" என்றார். பெரியோ ரென்பதவருக்குப்பொருந்தாமையால் அதிக ஆயுளினரொன்றுரைத்தாம். (அ0)

தண்ட மோச்சினர் கணிச்சிக ளோச்சினர் தடக்கைப்
பிண்டி பாலங்கள் வீசினர் தோமரம் பெய்தார்
கொண்ட லாமெனத் தனித்தனி வார்சிலை குனித்துத்
துண்ட வெங்கணை துரந்தனர் தானவத் தொகையோர்.

(இ-ள்.) இருவகைப்பொருநருள் அசுரவீரர்களாகிய கூட்டத்தினர் தண்டங் களை எறிந்தார்கள்; கண்டகோடரிகளால் வீசினார்கள்; பெரியகைகளிலிருந்த பிண்டி பாலங்களை வீசினார்கள்; தோமரங்களை விட்டார்கள்; அன்றியும், தனியே தனியே விற் களை வளைத்து அர்த்தசந்திரபாணங்களை வைத்துவிட்டு எங்கும் நிரப்பினார்கள்.—எ-று.

பிண்டிபாலம் ஒருவகையாயுதவிசேஷம். தோமரம், கைவேல். ஒவ்வொருவரும் அகணிதமான பாணப்பிரயோகஞ் செய்தாரென்பார், "கொண்டலாமென" என்றார்.

இருபிளவாகவுள்ளது அர்த்தசந்திர பாணமாதலால் துண்டமென்பதை அர்த்தசந்திர பாணமென்றும். (அக)

விரைகள் வீசிய மலர்த்தரு வீசிய விண்டோய்
வரைகள் வீசிய தண்டெழு வீசிய மழுவி
னிரைகள் வீசிய நேமியி னிரந்தபல் வளனுந்
திரைகள் வீசிய தாமெனப் பூதர்தஞ் சேனை.

(இ-ள்.) அசுரசைநிய மிவ்வண்ணம் போர்புரிந்தவுடனே பூதர்சேனைகள் கடலிற் பரவிக்கிடக்கின்ற பல வளப்பங்களையும் அலைகள் வீசினாற்போல, மணம் வீசாநின்ற மலர்களையுடைய மரங்களை வீசின; ஆகாயத்தை யளாவிய மலைகளை வீசின; தண்டங்களையும், எழுக்களையும் வீசின; மழுக்களை வரிசையாகச் சிந்தின.—எ-று.

மிக்க பிரவாகமாகிய கடனீர் தனது சிறியவலையினாற் தம்மிடத்திற் பரவிக்கிடக்கும் பலபொருளிற் சிலவற்றைக் கரையிலிறைக்கினும் குறைவாகாவாறுபோலவிச் சேனையாகிய சமுத்திரமும் ஆதலால் "நேமியனிரந்தபல்வளனுந்திரைகள்வீசியதாமென" என்றார். கடலென்னும் புருடற்கலையே கரமாதலாற் திரைகள்வீசியதாமெனவென்றார்.

வரங்கள் சிந்தினர் வன்மைகள் சிந்தினர் வயத்தாள்
கரங்கள் சிந்தினர் புயமலை சிந்தினர் கலன்சே
ருரங்கள் சிந்தினர் மணிமுடி சிந்தின ருருளுஞ்
சிரங்கள் சிந்தின ரவுணரும் பூதரிற் சிலரும்

(இ-ள்.) இவ்வாறு நடந்தபோரில் அசுரரிற் பலரும் பூதரிற்சிலரும் வரங்கள் சிந்துற்றார்கள்; வன்மைகளை யிழந்தார்கள்; வெற்றிபொருந்திய கால்களும் கைகளும் சிந்தினார்கள்; புயங்களாகிய மலைகள் சிந்துற்றார்கள்; ஆபரணம்பொருந்திய மார்பறுபட்டார்கள்; மணிகளிட்டிழைத்த முடிகள் சிந்தினார்கள்; அசைகின்றதலைகளறுபட்டார்கள்.

வெகுகாலமுயிர்வாழ்தல் பகைவரை வேறன் முதலியவைகளுக்காகப் பெற்றிருந்த வரங்கள், இருவகையரிலுஞ் சிலருக்கிருக்கலாம். அத்தகையோரின்று படுகளத்துயிரிழந்தவரானமையால் "வரங்கள் சிந்தினர்" என்றார். கலன் என்பதையீண்டு கவசமெனினும் ஒவ்வும் இடநோக்கியுருள்தலை அசைதலென்றும். (அரு)

வருதி நீயெனத் தனித்தனி யிகல்செயு மறவோர்
கருதி யேயடுங் களத்தினி லவருடற் காலுங்
குருதி யோடியே யெங்கணும் பரத்தலிற் கொடுந்தேர்ப்
பரிதி யோடிய குடதிசை நிகர்த்தது படியே.

(இ-ள்.) நீ என்னொடுபொர வருதிஎன்று கூறித் தனியே தனியே நின்று போர்புரியும் வீரர்கள் ஒருவரையொருவர் குறித்து நின்று கொல்கின்ற போர்க்களத்தில் அவர்களுடலங்களி னின்றும் ஒழுகாநின்ற இரத்தவெள்ளமோடி எவ்விடத்திலும் பரந்துகிடத்தலால் போர்புரியும் அப்படுகளத்தி னந்தப்பூமியெல்லாம் விரைந்து செல்லும் இரதத்தினையுடைய சூரியன் சென்ற மேற்றிசையையொத்தது.—எ-று.

ஒத்தவீர ரொருவரையொருவர் வீரவாது கூறியழைத்தே போர்புரிவதுவழக்கம். அம்முறைப்படி நின்று பொருவோர் வெல்லுமாறு ஆலோசனையோடும் போர்புரிவர். அம்முறையைவிளக்க ஆசிரியரும் "கருதியேயடுகளமென்றார்" பரிதிபுகுந்த மேற்றிசை இயனிற நீங்கிச் செந்நிறமடையுமாபோல இரத்தந்தோய்ந்த விரணகளமும் ஆயதென்பார் "கொடுந்தேர்ப்பரிதியோடிய குடதிசையொத்ததுபடி" என்றார். (அச)

கொலைசெ யிந்திடும் பூதரு மவுணருங் கொடும்போர்
நிலைசெ யிந்திடு களத்திடை நீடுசெந் நீரி

னலைசெ றிந்தவூன் செறிந்தன வடுகளே வரத்து
மலைசெ றிந்தன செறிந்தன கழுகுடன் மண்ணே.

(இ-ள்.) கொலைத்தொழிலின் மிக்க பூதர்களும் அவுணர்களும் கொடிய போர் செய்யு நிலைமையாக நெருங்கியிருக்கின்ற போர்க்களத்தினில்மிகுதியாக ஒழுகி நிற்கின்ற இரத்தவெள்ளத்தில் அலைகளுண்டாகி நெருங்கின; இறைச்சிகளும் நெருங்கின கொல்லப்பட்ட சரீரங்களாலாகிய மலைகள் நெருங்கின; அன்றியும் கழுகுகளும் பேய்களும் நெருங்கின.—எ-று.

பலிகொள்ளுமியல்பினராதலாலும் போரிலஞ்சாது பகைவரைக் கொல்பவராதலாலும் பூதரை "கொலைசெறிந்திடுபூதர்" என்றார். கொஞ்சங் கொஞ்சமாகச்சேர்ந்த சோரியே பின்னர் மிகுந்துநிற்றலால் அலை இடையிற்றோன்றியதென்றாம். கழுகு ஒரு பறவைவிசேடம். மண்ணை-ஒருவகைப்பேய். (அரு)

வேறு.

வெற்புறழ் தகுவர் சேனை வெள்ளமுங் கணத்து ளாருந்
தற்பமொ டெதிர்ந்தில் வாறு சமர்புரிந் திட்ட வெல்லை
வற்புட னவுணன் றானை மள்ளர்வந் தடர்ப்ப மாய்ந்து
முற்படு கின்ற தூசிப் பூதர்கண் முரிய லுற்றார்.

(இ-ள்.) மலையனைய சரீரிகளான அசுரர்சேனைகளின் வெள்ளமும் பிரமதகணத்திலுள்ளவர்களும் அகங்காரத்துடனெதிர்த்து இவ்வண்ணம் போர்புரிந்தபொழுது வன்புடனே அசுரனான சிங்கமுகனுடைய சேனைகள் முற்பட்டுவந்து பொருதமையால் பூதவீரரில் முன்னேநின்ற தூசிப்படையினர் அழிந்து பின்னிட்டார்கள்.—எ-று.

இவ்வாறு சமரென்றது - தொந்த யுத்தத்தை. தற்பம்-கர்வம். பூதர்முயன்று நின்று பொராது சும்மாபொருதாரென்றும் முயன்றுபொருவரோலசுரரோ முதுகிடுவரென்றும் தொனிக்குமாறு வன்புடனவுணன்றானை மள்ளர் என்றனர். (அசு)

செல்லுறழ் பகுவாய் வீரர் சிதைந்துழிப் பூதர் தம்முட்
கல்லுறழ் மொய்ம்பிற் சிங்கன் கனன்றொரு தண்ட மேந்திப்
பல்லுறு தலைகள் சிந்தப் படிமிசை வீட்டிப் பாதி
னல்லுறு மதிபோ னேரு மவுணரை யடர்த்துச் சென்றான்.

(இ-ள்.) இடியிடித்தாற்போல முழக்கங்காட்டத்தக்க பிளந்தவாயினரான வீரர்கள் பின்னிடைந்தவுடனே பூதவீரர்களுட் கல்லனைய தோளினனான சிங்கனென்பவன் கண்டு சீற்றங்கொண்டு ஒருதண்டத்தைத்தாங்கிப் பற்கள்பொருந்திய தலைகள் சிதறப் பூமியிலடித்ததன்றிப் பாதியிரவிற்றோன்று மதிபோல வசுரரைப் பொருதுவென்று பின்னுமேற்சென்றான்.—எ-று.

ஆரவாரஞ்செய்வதிற் சிறந்தோரென்று குறிப்பிக்க "செல்லுறழ்பகுவாய்வீரர்" என்றார். கல்லென்பது இவ்விடத்து மலையெனினுமாம். பல்லுறு என்பதை பலவென்பதின் ஈறுகெட்டதாகக்கொண்டு அநேகமானவெனினுமாம். சிங்கன் வெண்ணிறமுடையோனாதலால் அவனை மதியென்றும் அசுரர்காருடலினரும்மிகுதியினருமாதலா லவர்களை இரவென்றும் கூறினர். பூதர்களுடைய தூசிப்படையினர் முரிந்தவுடனே அசுரப்படையினர் எங்குமிகுந்து பரவிப் பொருதனரென்றும் அன்னோர் இச்சிங்கனொடு பொருது பொருது இறந்தாரென்றும் இதனில் விளங்கிக்கிடத்தல் காண்க. மதியந்தோன்றின விருள் நில்லாவாறுபோல சிங்கனது செல்கையா லசுரர் நில்லாரென்று பொருள்.

அங்கவன் செல்லும் வேலை யவுணரி லொருவ னேமி
சங்கொடு தரித்தோ னன்னான் றசமுக னென்னும் பேரோ

னெங்குநீ போதி நில்லென் றெதிருறச் சென்று வாகைச்
செங்கைவார் சிலையைக் கோட்டித் திருந்துநா ணொலிசெய் திட்டான்.

(இ-ள்.) பூதரிற்சிங்கனிவ்வண்ணஞ் செல்லும்பொழுது அசுரருக்குளொருவன் சங்குசக்கரங்களைத் தரித்த திருமாலையொத்தவன் தசமுகனென்று பெயருள்ளவன் அச்சிங்கனெதிரே சென்று நீ எங்குப்போகின்றனை நில் என்றுரைத்துத் தனதுசெவ்வியகையிலுள்ள வெற்றிபொருந்திய நீண்ட வில்லினைவளைத்து நாணோசைகண்டான்.—எ-று.

இவன் பெயராற் றசமுகன் வன்மையா லரியையொப்பான் என்க. அசுரர்களிற் சிறந்தவர்களாக வந்துள்ளவர்களில் இத்தசமுகனும் ஒருவன், என்றால் சேனபதிகளிலிவனொருவன் என்றுணர்க. (அஅ)

வேறு.

விட்டனன் மழையென விசிக மாங்கவை
பட்டிடத் தண்டினாற் படியில் வீட்டியே
யட்டுபூந் தாரினா னடியொன் றாலவ
னிட்டதோர் கவசமு மிறுத்து நீக்கவே.

(இ-ள்.) வில்லினை வளைத்தவ னதனிலம்புகளை வைத்து மழைபெய்வதைப் போலவிட்டனன் உடனே அவை சிங்கன்மீதுசென்று படுதலும் அவைகளைத் தண்டத்தாற் பூமியிற்றள்ளி இயற்றப்பட்ட மாலையினையுடைய வச்சிங்கன் ஒரு அடியினாலத் தசமுகனணிந்திருந்த கவசத்தையும் உடைத் தகற்றுதலும்.—எ-று.

அளவற்ற அம்புகளை விட்டானென்பார் "மழையென"வென்றார். அடுதல் செய்தல். நீக்கவே என்பது கீழ்ப்பாட்டிலுள்ள வீழ்ந்ததே என்பதோடு முடிந்தது. (அகூ)

கூற்றுறழ் தசமுகன் கொடிய னாவியை
மாற்றுவ னிவணென வலிதி னோர்கதை
யாற்றலின் விடுத்தலு மரியின் பேரினா
னேற்றனன் மார்புதண் டிற்று வீழ்ந்ததே.

(இ-ள்.) எமனையொத்த தசமுகனென்பவன் இவ்விடத்தி லிக்கொடியவன் பிராணனை யான் நீக்கிவிடுகின்றேனென்று விரைவாக ஒரு தண்டாயுதத்தை வன்மையோடு விட்டான். விடுதலும் அதனைச் சிங்கனென்பவன் மார்பிலேற்றனன். உடனே அத்தண்டாயுதம் ஒடிந்து கீழேவிழுந்தது.—எ-று.

கொலைபுரிவதி லஞ்சாதவனென்பார். "கூற்றுறழ் தசமுகன்" என்றார். முயற்சித்தெறிந்தானென்பார் ஆற்றலின் என்றார். இதனாற் பூதனான சிங்கனுடைய பராக்கிரமம் நன்கு விளங்குதல்காண்க. (கூ௦)

வீண்டது நோக்கியே வீர வீரனு
மீண்டிவ னேகொலென் றெண்ணி யாமினிக்
காண்டரும் வல்லையேற் காத்தி யீதெனா
வாண்டொரு கணிச்சியை யவுண னேச்சினன்.

(இ-ள்.) தண்டாயுதமொடிந்து கீழேவிழுந்தவுடனே சிங்கனென்பவனைப்பார்த்துத் தசமுகன் வீராதிவீரனென்பவனிவன்தானோ என்று நினைத்து இந்த உண்மையை இனி நாம் காணத்தகும் என்றுதுணிந்து அவ்விடத்திலொருகணிச்சியை எடுத்து நீ இதனைத்தடுக்க வாற்றலுள்ளவனானால் தடு என்றுகூறிவிட்டான்.—எ-று.

கணிச்சி என்றது மழுவை. தண்டினு மழு சிறந்ததாதலால் அதன்பின்னிதனை விட்டானென்க. (கூக)

மாலொடு கடவுளர் மறுகத் தீயழற்
காலொடு போந்திடுங் கடுவின் வெம்மைபோன்
மேலுறு கணிச்சியை வீரன் செங்கையின்
பாலுறு தண்டினாற் படியில் வீட்டினான்.

(இ-ள்.) முன்னாளில் திருமாலுடன் தேவர்களஞ்சும்வண்ணம் தீயமான அழலைக்கக்குகின்ற தன்மையுடனேவந்த ஆலாலத்தின் வெம்மையைப்போல மேலே வராநின்ற கண்டகோடரியை வீரனான சிங்கபூதன் தனதுகையினிடத்துள்ள தண்டத்தினாற் பூமியில்விழுமாறு அடித்துத்தள்ளினான்.—எ-று.

திருமாலினும் இப்பூதன் மறுகாமையினையுடையனென்று குறிப்பிக்க மான்மறுகியதை விதந்தார். (௯௨)

நீக்கினன் கணிச்சியை நெடிய தோர்கதை
போக்கினன் றன்னொடு போர்செய் கின்றவன்
றாக்கணங் கமர்சிலை தன்னைச் சின்னமே
யாக்கின னவுணர்க ளலக்க ணெய்தினார்.

(இ-ள்.) தசமுகன்விட்ட கண்டகோடரியை விலக்கினான். பின்னர் ஒரு நெடியதண்டாயுதத்தை எடுத்தெறிந்து தன்னொடு போர்புரிகின்றவனுடைய வீரலட்சுமிவாசம்பொருந்திய வில்லினைத் துண்டுபடுத்தினான் உடனே இதனைக்கண்ட வசுரர்கள் துன்பமடைந்தார்கள்.—எ-று.

மழுவினைத்தடுத்தவன் கதையைவிட்டுப் பகைவன்வில்லை யொடித்தானென்க. ஆயுதங்களிலெல்லாம் வாழுமதிதெய்வம் தாக்கணங்காதலால் தாக்கணங் கமர்சிலையென்றதை வீரலட்சுமிவிலாசம் என்றும். (௯௩)

சீலமி றசமுகன் செயிர்த்துக் காய்கனற்
கோலம தாகிய குந்த மொன்றினை
யாலம தெனவிட வரியின் பேரினன்
மேலுற வருவதை விரைந்து நோக்கினான்.

(இ-ள்.) சீலமென்பதில்லாத தசமுகனென்பவன் உடனே கோபங்கொண்டு பற்றியெரியாநின்ற கனலின்கோலமாக விளங்கும் ஒருகுந்தப்படையை கண்டவர்கள் இது ஆலமென்றுகூறுமாறுவிட அது சிங்கன்மீது வருதலும் அதனை அவன் விரைவாகப் பார்த்தான்.

சீலம், விதிநூல்களிற்கூறும் அறவொழுக்கம். அவ்வொழுக்கம் அசுரரிடத்திலின்மையாலித்தசமுகனைச் "சீலமிறசமுக" னென்றார்.

கனற்கோலமதாகியகுந்தம், காண்போர்கண்களுக்கிது தீயோ என்றெண்ணுமாறுள்ள பேரொளியோடுகூடிய குந்தமென்க. குந்தம் ஒருவகை ஆயுதவிசேஷம். சோம்பலின்றிநின்று போர்புரிபவன் சிங்கனென்பார். "விரைந்துநோக்கினான்" என்றார். ()

பூங்கழல் புனைகழற் பூத நாயக
னாங்கது காலையோ ராழி மாப்படை
யோங்கிய பரிதிபோ லுருட்டி னனரோ
பாங்குறு சாரதர் பலரும் போற்றவே.

(இ-ள்.) அழகிய கழலென்னும் வீரகண்டையணிந்த காலினனான சிங்கபூதன் எதிரியால்விடப்பட்ட குந்தப்படையை விரைந்துபார்த்தவுடனே சிறந்த ஒரு சக்கரப்படையை எடுத்து அருகினிற்கும் பூதர் பலரும் துதிக்கும்வண்ணம் உயர்ந்த பாநுமண்டலமென்று கூறுமாறுவிடுத்தனன்.—எ-று.

எதிரிவிட்ட குந்தப்படையினும் சிங்கன்விட்ட சக்கரப்படை ஒளியுடையதென்பார். "ஒங்கிய பரிதிபோல்" என்றார். மேகமுதலியவைகளாற் றடைபடாத பரிதிமண்டலமென்பது குறிப்பு. வருங்குந்த மென்செய்யுமோவென் றஞ்சினாரிவன்செய்கையால் இனி அஃதொன்று மியற்றாதென்று அறிந்தமையால் மகிழ்ந்தனரொன்றுகுறிப்பிக்க 'போற்ற' என்றார். (கூரு)

விடுத்திடு கின்றதோர் வேலை யாழிபோய்ப்
படுத்தது தசமுகப் பதகன் றண்டமொன்
றெடுத்தது வீசலு மிமைப்பி லெய்தியே
யடற்புனை கழலினா னாகத் துற்றதே.

(இ-ள்.) தசமுகனென்னு மசுரன் விட்ட குந்தப்படையைச் சிங்கன்விட்ட சக்கரப்படைசென்றழித்தது. உடனே அதுகண்ட தசமுகனான கீழ்மகன் தண்டாயுதத்தை எடுத்து வீசுதலும் அது விரைவாகச்சென்று வெற்றிபொருந்திய வீரக்கழலணிந்த சிங்கனது மார்பிற் பட்டது.—எ-று.

கின்று-நிகழ்காலவிடைநிலை. வேலென்பது வாளும் வில்லுமம்புமாதிய எல்லாவாயுதங்களையுங் குறிக்கும் பொதுப்பெயராதலா லிவண் வேலென்றதைச் சந்தர்ப்பநோக்கிக் குந்தப்படை என்றாம்.

தசமுகனென்பவன் இழிதொழில் புரியுமவனென்று குறிப்பிக்கப் பதகன் என்றடையொடுகூறினார். இச்சிங்கன் முன்னரும் பலரை வென்றவனே என்று குறிப்பிக்க அவனது வீரத்தையும் உயர்தொழிலையும் விளக்குவார் அடற்புனை கழலினனென்றார்.

ஆகமே லடைதலு மரியின் பேரினான்
சோகமேல் கொண்டுசெஞ் சோரி சோர்தர
மாகமேற் செம்புனன் மாரி கான்றிடு
மேகமே யாமென விளங்கி னானரோ.

(இ-ள்.) தசமுகனெடுத்தெறிந்த தண்டமானது மார்பில் வந்து பட்டவுடனே சிங்கன்சோகமதிகரித்துச் செந்நிறமான இரத்தம் வடிய வானத்தின்மீது நின்று இரத்த மழை பெய்கின்ற மேகமென்று கூறுமாறு பிரகாசித்தான்.—எ-று.

ஆகமென்பது மார்பையும் உடலையுங் குறிக்கும், இருபொருளொருமொழி யாதலால் இவ்விடத்து உசிதமானபடி மார்பென்றாம் உருவாலன்றிப் பெயரால் சிங்கனதலால் ஹரியின் பெயரினனென்றார்.

வானின் மேகங்கள் இரத்தமழைபொழிதல் பகைவர்க்கிடையூறடுத்த நாளிலன்றிப் பிறநாளிலிரா. இச்சிங்கனது மார்பிலொழுகிய இரத்தம் அவனுக்கு எதிரியான தசமுகனென்பவனது மரணத்திற்கு ஒரு காரணமாகவுள்ள அவசகுனமென்பதற்குப் பதில் 'மாகமேற்செம்புனன்மாரிகான்றிடு மேகமேயாமெனவிளங்கினானென்றார்' மேகமிரத்தமழைபெய்வதைப் பாரதம் விராடபருவம்.

" அம்பரமதிர்ந்தனவருந்திசைகடோறுங்
கம்பிதமிகுந்தனகழிந்தபகல்விண்மீன்
செம்புனல்சொரிந்தபுயறேற்றலுமிழ்மாலை
வெம்பியபுலால்வெறிமிகுந்ததெவர்மாட்டும்" என்னும் பாட்டாலுணர்க. (கூஎ)

பரந்திழி குருதிநீர்ப் பருப்ப தத்திடைப்
பிரிந்திடு நதியெனப் பெருக வோடியே
யருந்திறற் றசமுக னாகத் தோர்கையால்
விரைந்தனன் புடைத்தலும் வீழ்ந்து பொன்றினான்.

(இ-ள்.) அகலமாக ஒழுகாநின்ற இரத்தவெள்ளமானது மலையில் நின்றும் ஒழுகும் ஆற்றைப்போல பெருகாநிற்பச்சிங்கன் விரைவாக ஓடிச்சென்று மிக்க வன்மையாளனுன தசமுகனுடைய மார்பி லொருகையினால் வேகமாக அடித்தனன். உடனே தசமுகன் கீழ்விழுந்து இறந்தான்.—எ-று.

சிங்கன்மார்பிற் றண்டம்பட்டுச் சோகமுற்றானேனும் பேராற்றலினனாதலால் அயர்ந்துகிடவாதும் நில்லாதும் உடனே ஓடிச்சென்று பகைவனை ஒருபொருட்டாக மதியாமல் ஒரு கையினாலடித்து அவனைக்கொன்றனன் என்க.

சிங்கனுடலின் பெருமையையும் ஒழுகிய இரத்தத்தின் மிகுதியையுங் குறிப்பிப் பார் பரந்திழிகுருதிநீர்பருப்பதத்திடை பிரிந்திடுநதியென என்றார். (௯௮)

ஐந்திரு தலையுடை யவுணன் மாய்தலுந்
தந்திர வவுணர்தந் தானை யாவையுங்
கந்தடு தோளுடைக் கணங்கண் மேற்செலா
முந்துறு பேரமர் முயல்வ தாயினார்.

(இ-ள்.) பத்துத்தலைகளையுடைய தசமுகனென்னும் அசுரனிறந்ததும் தந்திரத்தினையுடைய அசுரசைநியங்களனைத்தும் திரண்ட தூணினையும் அழிக்கும் திரட்சியும் வன்மையும்பொருந்திய தோளினரான பூதகணங்கள்மேற் சென்று எதிர்த்து முற்பட்ட பெரும்போர் புரிவாராயினார்.—எ-று.

அசுரர் உபாயத்துடன் போர்புரிபவராதலால் தந்திரவவுணர்தந்தானை என்றார். தந்திரவவுணர்தந்தானையென்றதனை - கூட்டமாக நிற்கும் அசுரர்களின் சேனைகள் எனினுமாம்.

கந்தடுதோள் - தூணைப்பழிக்குந்தோள் - இங்குபழித்தல் அழகழித்தல். (௯௯)

அவ்வழி யிலக்கரி லநக னென்பவன்
மைவழி சிந்தையன் மடித்த வாயினன்
கைவழி வில்லினன் கடியன் சேனையை
யெவ்வழி போதிரென் றெதிர்ந்து தாக்கினான்.

(இ-ள்.) அசுரசைநியங்கள் பூதசைநியங்களோடு எதிர்த்து நின்று போர்புரிகின்ற அப்பொழுது இலக்கம் வீரரில் அநகனென்பவன் சீற்றம்பொருந்திய சிந்தையினையும், மடிக்கப்பட்ட வாயினையும், கையிற்பொருந்திய விற்படையினையும் உடையவனாய் விரைவாகச் செல்லுஞ் செல்கையுடன் பூதகணங்கண்மேற் செல்லும் அசுரசேனைகளைக் குறுக்கே தடுத்து நீங்களெந்தவழியே போகப்போகின்றீர்கள் என்றுரைத்து எதிர்த்துப் போர்புரிந்தனன்.—எ-று.

கோபமுடையார்மனத்தைக் கறுத்த மனமாகவுரைத்தல்வழக்காதலால் மைவழி சிந்தையென்பதைச் சீற்றம்பொருந்திய சிந்தையென்றாம். உள்ளங்கறுத்தான்-என்பது போன்றதிது. கடியன் சேனையை என்பதைக் கொடியவனான சிங்கமுகனுடைய அசுர சேனையை எனினுமாம்.

அநகன் சீற்றமுடையவனாய் அசுரரைக் குறுக்கே தடுத்து நீங்கள் என்னைத் தள்ளி எந்தவழியே போகப்போகின்றீர்கள் என்றுரைத்துத்தடுத்தானென்க. (௧௦௦)

வெலற்கரும் வில்லுமிழ் வெங்கண் வாளியா
லலைக்குந ராகியே யடல்செய் மள்ளர்தந்
தலைக்குவை சிந்தியே தரையில் வீட்டியே
கலக்கினன் றிரைக்கடல் கடைந்த மாலென.

(இ-ள்.) வெல்லுதற்கரிய வில்லானதுமிழுகின்ற வெங்கண்மை பொருந்திய அம்புகளால் வருத்துபவர்களாய்ப் போர்புரிகின்ற வீரர்களின் தலைக்குவைகளை அறுத்

துத் தனையிற்றள்ளி அலைகளோடு கூடின பாற்கடலைக் கடைந்த திருநெடுமாலைப்போல பகைவர் சேனைகளைக் கலக்கினன்.—எ-று.

வயிரமானதும் வாரிட்டுச்சுற்றப்பட்டதும் உறுதியானதுமான வில் என்பார். குறிப்பாக வெலற்கரும்வில் என்றுபசரித்தார்.

அநகன் கடல்கடைந்தமாலைப்போல அசுரசைநியங்களைக் கலக்கினன். (௧0௧)

ஆடிய ருனையா னநக னென்பவன்
சாடினன் றிரிதலுந் தகுவர் யாவரு
மோடின ரன்னதை யுருத்து நோக்கினன்
பீடுறு துன்முக னென்னும் பேரினன்.

(இ-ள்.) போர்புரிகின்ற சைநியங்களையுடைய அநகனென்பவன் இவ்வண்ணம் பகைவர்களைக் கொன்றுலாவுதலைக்கண்ட மற்றைய வசுரரெல்லாம் ஓடினர். உடனே அதனைப் பெருமைபொருந்திய துன்முகனென்று பெயருள்ளவன் கோபத்தொடு கண்டான்.—எ-று.

அநகன் சேனைகளுக்குள் ஒரு தலைவனானதுபோல அவனொடு எதிர்க்கவருந் துன்முகனுமொரு சேநாபதியேயாம் என்பார் பீடுறுதுன்முகனென்றார். (௧0௨)

வேறு.

தன்மு னோடிய வவுணரை நோக்கினீர் தளரேன்
மின்மி னிக்குலங் கதிரினை வெல்லுமோ வெகுளி
யென்மு னிற்பரோ பூதர்கள் செருத்தொழி லிழந்தார்
நின்மி னின்மினென் றுரைக்கவு மிறையுநின் றிலரால்.

(இ-ள்.) அத்துன்முகன் தன்னெதிரே ஓடிவருகின்ற அசுரர்களைப்பார்த்து நீங்கள் தளராதேயுங்கள் மின்மினிக்கூட்டங்கள் சூரியனை வெல்லுமோ கோபமுறுவேனுற் பூதர்களென்னெதிரே நிற்பார்களோ போரிலாற்றலிழந்த நீங்களெல்லாம் ஓடாமல் நில்லுங்கள் நில்லுங்கள் என்று கூறவும் சற்றேனும் நின்றாரில்லை.—எ-று.

ஓடியவசுரரைத் துன்முகன் தன்பெருமைகூறித் தடைசெய்தும் சேனையோர் அவன் மொழியை நம்பாமலோடினரென்க.

மின்மினிகளநேகமாக விருந்தாலும் ஏகனான சூரியனுதித்தால் மழுங்குமேயன்றி யவைகளினொளி நில்லா அதுபோல என்முன் பகைஞருமெனத் தன்னைப்புகழ்ந்தனன்; துணிவுபற்றி இழப்பாரென்னற்பாலதை-இழந்தாரென்றான். ஏல் என்னும் முன்னிலையேவன்மறை விகுதி. இங்குப் பன்மைப்பொருளில் வந்தது (௧0௩)

தானை பட்டன நோக்கினன் றுன்முகன் றழன்மே
லானெய் பட்டென முனிந்தனன் பூதர்க ளந்தோ
சேனை பட்டதென் றலமரக் குனித்தனன் சிலையைச்
சோனை பட்டன வாமென வடிக்கணை சொரிந்தான்.

(இ-ள்.) அத்துன்முகன் தனது சேனைகளழிந்ததனைக்கண்டு எரியு நெருப்பிற் பசுவின் நெய்பட்டாற்போல கோபித்தான் கோபித்துத் தனது வில்லினைப் பூதர்கள் ஐயோ நமது சேனைகள் இனி இறந்தனவென்று கூறுமாறு வளைத்துச் சோனைமழையைப்போல கூரிய வம்புகளை விட்டனன்.—எ-று.

தன் மொழிகளை ஒருபொருளாகவும் மெய்யாகவு மதியாமற் சேனைகளழிந்ததனைக்கண்டு பெருங்கோபங் கொண்டானென்பார்-தழன்மேனெய்யப்பட்டென முனிந்தனன் என்றார். அளவற்ற அம்புகளை ஓயாமல் விட்டானென்பார். சோனைபட்டனவாமென என்றார் சோனை - சிறுதுளியாகவிடாதுபெய்யுமழை. (௧0௪)

சொரிந்த காலையிற் பூதரும் போமர் தொடங்கி
விரிந்த வெற்பொடு தருக்களும் படைகளும் விடுப்ப
வெரிந்துபோயின சிற்சில விற்றவுஞ் சிலவா
ணெரிந்து போயின சிற்சில வெதிரெதிர் நெருக்க

(இ-ள்.) துன்முகனென்போ னம்புகளைச் சோனமேக வருஷத்தைப்போல விட்ட உடனே பூதர்களும் அவனொடு பெருப்போர்புரிய உத்தேசித்து பெரியமலைகளையும் மரங்களையும் மற்றைய ஆயுதங்களையும் எடுத்தும் பறித்தும் விடுதலும், அவைகள் அவ்வம்புகளினெதிரே சென்று முட்டின; அதனால் அவைகளிற் சில எரிந்தழிந்தன. சில ஒடிந்தழிந்தன. சிலநெரிந்தழிந்தன.—எ-று.

பூதர்விட்ட மலைகள் மரங்கள் முதலியவைகளால் துன்முகன் விட்ட அம்புகள் இரிதல்-எரிதல்-அழிதல் முதலியவாகத் தொலைந்தனவென்க.

பூதர்விட்ட மலையாதியவே எதிரெதிர்நெருக்குண்டு எரிந்தவண்ணமாகச் சிலசென்றன; உடைந்துசென்றன சிற்சில; நெரிந்துசென்றன சிற்சில; என்பாருமுளர். ()

ஈறு செய்தில கணைமழை யிவரொடும் யானே
மாறு கொள்வதுந் தனிமையி லரிதென வலியோ
னூறுசேர்தரு மாயையா லொவ்வொர்பூ தர்க்கு
நூறு நூறுருக் கொண்டுதாக் குற்றன னொடிப்பில்.

(இ-ள்.) நாம்விட்ட அம்புமழை பூதர்விட்ட மலை முதலியவைகளை அழிக்கவில்லை, (அதனால் நாம் இனி இப்பூதரொடும்) தனித்து நின்று போர்புரிவது அரியகாரியமென்று நினைத்து வன்மையாளனான அத்துன்முகன் துன்பத்தைத் தன்னிடத்திலுடைய, ஒரு மாயையினால் ஒவ்வொரு பூதர்க்கு நூறு நூறு உருக்கொண்டு விரைவாகப் போர்புரிந்தனன்.—எ-று.

மாயையானது, தன்னை நம்பினவனை முழுதுங்காத்து நில்லாமல் இடையே கெடுந்தன்மையினையுடையதாதலால் அதனை "ஊறுசேர்தருமாயை" என்றார். (௧௦௬)

ஆய காலையிற் றுன்முகன் வடிவமு மடருந்
தீயெ னக்கிளர் சாரத ரொடுசெருச் செய்யு
மேய கொற்றமு நோக்கினன் விம்மினன் வெருண்டான்
மாயை கொல்லென வுன்னினன் வாகையங் கதிரோன்.

(இ-ள்.) அப்பொழுது துன்முகன்கொண்ட மாயாமயமானவுருவங்களையும், நெருங்கிவராநின்ற தீயைப்போல விளங்கும் பூதர்களோடு எதிர்த்து அவன் போர்புரிகின்ற வெற்றியையுங் கண்டு, வீரவாகுதேவன் இவன்செய்யும் இது மாயையோ? என்று விம்மிச் சிறிநினைத்தனன்.—எ-று.

ஒருவனாகநின்று பொருதிடையே நின்றவன் அநேகனாய்நின்று விரைந்துபொருத லைக்கண்டு, அசுரர்தமக்குநிலைகுலை வுண்டாங்காலத்துபயோகப்படுத்துகின்ற மாயையை இவனும் உபயோகப்படுத்தினனென்று துணிந்தாரென்பார். "மாயையோ" என்று அழுத்தியுரைத்தார். உச்சரிப்பின் வேறுபாட்டினலோ காரம் துணிபில் வந்ததென்றறிக. ()

மாற்று கின்றதெப் படைக்கல மோவென மதியாத்
தேற்று கின்றதோர் போதகப் பெரும்படை செலுத்தக்
காற்றின் முன்னுறு பூளையி னுருவெலாங் கரப்பக்
கூற்ற மன்னதோர் துன்முக னொருவனாய்க் கொதித்தான்.

(இ-ள்.) இவனது மாயையை ஒழிப்பது எந்த ஆயுதமோ? என்று சற்றுநேரம் நினைத்து, தேறுதலைத்தருகின்ற ஒப்பற்ற பெரிய ஞானஸ்திரத்தை விடுதலும் உடனே

காற்றினெதிரிற் பொருந்திய பூளைப்பஞ்சைப்போல மாயவுருவங்களனைத்தும் மறைய எமனையொத்த துன்முகனொருவன்மாத்திரம் நின்று கொதித்தனன்.—எ-று.

பஞ்சினுட்பூளைப் பஞ்சானது தன்னிற்பிறிதொரி லேசற்றதாதலானும், காற்றானது வன்மையேயுடைய பொருள்களுள் முற்பட்டதாதலானும் ஞானஸ்திரத்திற்கு வாயுவினையும், மாயவுருவங்கட்குப் பூளைப்பஞ்சினையுமுவமைகாட்டி வீரவாகுதேவருடைய வன்மையையும் துன்முகனுடைய மென்மையையும் விளக்குவார். "காற்றின்முன்னுறு பூளையினுருவெலாங்கரப்ப" என்றார்.

"கொலைக்கஞ்சானென்பார் கூற்றமன்னதோர்துன்முகன்" என்றார். (௧௦௮)

கொதித்த துன்முகன் றன்பெருஞ் சிலையினைக் கோட்டி
நுதித்த னிக்கணை யாயிர மொருதொடை நூக்க
மதித்து வீரன்றன் னொருபெருஞ் சிலையினை வாங்கிக்
கதித்த நோன்கணை யாயிரஞ் சிதறினன் கடிதில்

(இ-ள்.) சீற்றங்கொண்ட துன்முகனென்பவன் தனது பெரிய வில்லினைவளைத்துக் கூரிய ஒப்பற்ற ஆயிரமம்புகளை ஒரே தொடையாகவிடுதலும் எதிரியானவன் விட்ட அம்பின் றன்மையை இவ்வளவு என்று மதித்து, வீரவாகுதேவன் தனது ஒப்பற்ற பெரிய வில்லினை வளைத்து விரைவாகப் பெரிய வன்மைபொருந்திய ஆயிரமம்புகளைப் பகைவன்விடுத்த அம்புகளையழிக்குமாறு விட்டனன்.—எ-று.

எதிரியினம்புகளைப்பொருட்படுத்தாமல் விட்டானென்பார் "சிதறினன்" என்றார்.

ஆயி ரஞ்சரத் தாலவன் விட்டகோ லறுத்துத்
தீய வன்றனிச் சிலையை யேழ் வாளியாற் சிந்தி
மேய சாலிகை தன்னையோர் பகழியால் வீட்டிக்
காயமெங்கணு மழுத்தின னளவைதீர் கணைகள்.

(இ-ள்.) ஆயிரமம்பினு லவ்வெதிரியான துன்முகன்விட்ட அம்புகளைத் துண்டித்துப் பின்னர் அக்கொடியவனுடைய வில்லினை எழம்புகள்விட்டு ஒடித்து அவனணிந்திருந்த கவசத்தையும் ஓரம்பினுல் அழித்து அளவற்ற வம்புகளைவிட்டு உடல் முழுமையும் அழுத்தினன்.—எ-று. (௧௧௦)

வேறு.

அழுந்திடு வடிக்கணை யாகம் போழ்தலு
மெழுந்திடு குருதிநீ ரிரைத்துச் சென்றிடக்
கொழுந்தழல் புரைவதோர் கொடிய துன்முகன்
விழுந்தனன் மயங்கினன் விளிந்து ளானென.

(இ-ள்.) அழுந்திய கூரிய வம்புகள் உடலைப்பிளக்கவும் அப்பிளவுகளினின்றும் ஒழுகிய இரத்தவெள்ளம் இரைச்சலிட்டு ஓடாநிற்பவும் கொழுவிய தீயைப்போன்ற கொடிய துன்முகன் இறந்தவனைப்போல மயங்கி விழுந்தனன்.—எ-று. (௧௧௧)

ஊறிய குருதிய னுறுக ணெய்துவான்
றேறின னெல்லையிற் செருவி னோர்துமே
லீறினி வந்திடு மிரிந்திட் டுய்வதே
யாறென வுன்னின னமருக் கஞ்சுவான்.

(இ-ள்.) ஊறுகின்ற இரத்தவெள்ளத்தினை யுடையவனும் துன்பமநுபவிப்பவனும் வீரவாகுதேவனோடு போர்புரிவதற்கு அஞ்சுபவனுமாகிய துன்முகன் என்பான் மயக்கந்தெளிந்து எழுந்து இனி நாமிவனொடு போர்புரிவமேல் நமக்கு மரணமுண்

டாகும்; அதனால் விரைவாக இங்குநின்றும் நாம் விலகிப்பிழைப்பதே முறைமை என்று தன்னுள் நினைத்தனன்.—எ-று. (கக உ)

சிந்தையின் வழிபடல் செய்து மாயையின்
மந்திர மொன்றினை மரபி னுன்னுறு
வெந்திரத்தேரினு மெழுந்து துன்முக
னந்தரத் தாற்றினு லருவிற் போயினான்.

(இ-ள்.) அவ்வாறு பலவிதமான ஆலோசனையினை யுடைவனாகநின்ற துன்முகன் மாயாமந்திரமொன்றினை மனதினாற்சிந்தித்து, அதன்தேவதையைத் தியானித்து முறைப்படி செபித்துக்கொண்டு சக்கரமுதலிய உறுப்புகளையுடைய இரதத்திலிருப்பதை விட்டெழுந்து ஆகாயவழியாக அரூபியாகச்சென்றான்.—எ-று.

திரஸ்கரணம் என்னும் மாயாமந்திரமானது உருமறைத்தலை யுடையதென்று மந்திரநூல்கள் கூறுகின்றன. இவனும் உருமறைத்துப்போதற்கே மாயையின் மந்திரஞ் செபித்துச்சென்றனன். அதனால்திரஸ்கரணியைசெபித்திருப்பானென்றுகருதுகின்றாம்.

ஆயின காலையி லடல்வெம் பூதரிற்
றீயினை முருக்குறுஞ் சீற்றத் தோர்சிலர்
மாயையின் வலியினன் வஞ்சன் வல்லையிற்
போயினன் பற்றுதும் போதுவீ ரென்றார்.

(இ-ள்.) அப்பொழுது மிக்க திறலாளரான பூதரிற் றீயையும் சுடுகையிற் குறைந்ததாக்கி அவிக்கத்தக்க கோபிகளான சிலர் மாயாவல்லவனான துன்முகவஞ்சகன் போர்களத்தினின்று போர்புரியாமல் மறைந்து விரைவாகச்சென்றான். அவனை நாம் பின்றொடர்ந்து சென்றுப்பிடிப்போம் வாருங்கள் என்றனர்.—எ-று.

பூதரைக் கடுங்கோபிகளென்பார். "தீயினைமுருக்குறு சீற்றதோர்" என்றார்.

ஆங்கது கேட்டிடு மாடல் வெய்யவ
னீங்கிது தவிருதி ரிகலுக்கஞ்சியே
நீங்கின னொருவனை நெருக்கி யாருயிர்
வாங்குதல் புகழதோ வலியின் பாலதோ.

(இ-ள்.) அவர்களவ்வண்ண முரைத்த வசனைக்கேட்ட வீரவாகுதேவன் நீங்கள் வாடியோடிய துன்முகனை நாடிப்பிடிக்கவேண்டுமென்றுகருதிய இத்தொழிலை விட்டுவிடுங்கள் ஏனென்றால், போர்புரியப்பயந்து ஓடின ஒருவனைச்சென்றுபிடித்து அவனரிய உயிரைவாங்குதல் புகழோ? வன்மையின்பாற்பட்டதோ? அன்றே, என்றுரைத்தனன்.—எ-று. (ககரு)

ஓடினர் தம்மையு முற்றுத் தாண்மலர்
சூடினர் தம்மையுந் தொழுத கையராய்
வாடினர் தம்மையும் வலியி லோரையுஞ்
சாடின ரல்லரோ நவைக்கட் டங்குவார்.

(இ-ள்.) போருக்காற்றாது முதுகுகாட்டி ஓடினவர்களையும், இனி யாமுங்களோடுபோர்புரியேம் என்றுகூறினவர்களாய்த் தமது வின்முதலிய ஆயுதங்களைச்சாய்த்துப்பிடித்தவர்களாய் எதிரிலடைந்து கான்மலரில் விழுந்தவர்களையும், எம்மைக்காறன்மின் என்று தொழுதகையினராய் வாட்டமுற்றவர்களையும் போரிலிளைத்துக்களைத்து வன்மையற்றவர்களையும் கொன்றவரன்றோ போர்க்களத்தியற்றிய குற்றத்துட்படுவோர்.

பகைவராயாயினும் நீதிநூற்குமாறாகத் துன்புறுத்தினோர் எத்தகையோராயினும் எல்லாம் வல்லவிறைவன்முன்னங் குற்றவாளிகளாக நிறுத்தப்பட்டுத் தண்டிக்கப்படுவார்களென்பதை விளக்குவான். 'நவைக்கட்டங்குவார்' என்றார். (ககசு)

வீரரை யல்லரை வெகுளலீ ரெனப்
போரடல் வெய்யவன் பேச வன்னது
காரிய மேயெனக் கருத்தி லுன்னியே
சாரதர் தொடர்ந்திடுந் தன்மை நீங்கினார்.

(இ-ள்.) ஆதலிற் பூதர்காள்! நீவிர் நம்மொடு பொரவரும் வன்மையாளரை யன்றிப் பிறரைச் சீறுதீர்களென்று மிக்க வன்மையினையுடைய வீரவாகுதேவருரைக்க அவர் கூறியவது நியாயமே என்று மனத்தினினைத்துப் பூதர் துன்முகனைப் பிடிக்கச்செல்வதை நிறுத்தினார்கள்.—எ-று.

இகபரவிரோதமானகாரியமே, அஞ்சியபகைவரை அடர்த்தலென்று பூதர் துணிந்துநின்றனர் என்பார், "அன்னதுகாரியமேயெனக்கருத்திலுன்னியே சாரதர்தொடர்ந்திடு தன்மைநீங்கினார்" என்றார். (௧௧௭)

வேறு.

அந்நேர் காணுவாளரி மாமுக வடல்வெய்யோ
னின்னே நந்தந் தானைக ளெல்லா மிரிவாகும்
பின்னே நிற்ற லாவதெ னென்னாப் பெயர்குற்றே
முன்னே சென்றான் பூதரை நோக்கி முனிகின்றான்.

(இ-ள்.) அவ்வாறு நடந்தவதனை நேரிற்கண்டு, நரசரீரத்தையும் சிங்கமுகத்தினையும் உடைய வன்மையாளனான கொடியவன் (நாமிவ்வாறு சும்மாவிருந்தால்) இப்பொழுதே நமது சைநியங்களனைத்தும் அழிந்தொழியும் சேனைகளை முன்புறத்தில்விட்டு நாம் பின்புறத்தில் நிற்பதினாலாகவேண்டுவதென்னை என்று தான்நின்ற இடத்தினின்றும் முன்னோக்கிச்சென்றவன் தன்னைக்கண்டு போர்புரிதற்காக எதிர்ப்பட்டபூதரைப்பார்த்துச் சீற்றங்கொண்டான்.—எ-று. (௧௧௮)

நந்தா வாற்றற் சிங்கமு கத்தோ னவனம்முன்
வந்தான் யாமே மாற்றுது மன்னான் வலியென்னாக்
கொந்தார் தாருச் சூழலும் வெற்புங் கொண்டேகி
முந்தா நின்ற பூதர்கள் வெம்போர் முயல்கின்றார்.

(இ-ள்.) எத்தகையோரொதிர்த்து எவ்வண்ணமாகப் போர்செய்யினும் கெடாத ஆற்றலினையுடைய சிங்கமுகனானவன் இப்பொழுது நமது எதிரே வந்தான் அநனுலவன் வன்மையை நாமே போர்புரிந்தழிப்போமென்று மனதினினைத்தவர்களாய் முற்படுகின்றபூதர்கள் மலர்க்கொத்துகள்பொருந்திய மரநிரைகளையும் மலைகளையுங்கொண்டு சென்று வெவ்விய போர்புரிவாராயினார்.—எ-று.

ஆயிரந்தலைகளையும் இரண்டாயிரங்கைகளையும் உடையவனாயினும் அவனைப்பூதர் சற்றுமதித்திலர் என்று குறிப்பிக்க. "அன்னான்வலிநாமே மாற்றுதுமென்றார்" என்றார்.

அவன் நந்தாவாற்றற் சிங்கமுகத்தோன் என்னினுமாம். (௧௧௯)

மட்டார் தொங்கற் சிங்கமு கன்மேன் மதிதோய்வா
னெட்டா நின்ற வெற்புள யாவு மெறிகின்றார்
விட்டார் தாருச் சூழல் கணிச்சி வீசுற்றார்
தொட்டார் சூலந் தண்டெழு நாஞ்சில் சொரிகின்றார்.

(இ-ள்.) பூதர்கள் மணம்பொருந்திய மலர்மாலையணிந்த சிங்கமுகன்மீது சந்திரமண்டலத்தோடுகூடின ஆகாயபரியந்தமுயர்ந்த மலைகளாகவுள்ளன வனைத்தையும் எடு

த்து எறிந்தார்கள். அன்றியும் மரங்களையும் பறித்தெறிந்தார்கள்; கண்டகோடரிகளையும் வீசி எறிந்தார்கள். சூலாயுதங்களையும் விட்டார்கள். தண்டங்களையும் எழுக்களையும் நாஞ்சில்களையும் சொரிந்தார்கள்.—எ-று. (கஉ0)

சொரியுங் காலைத் தீயெழ நோக்கிச் சுடர்வேலோ
னெரியுங் காலுங் கால வுயிர்ப்ப வெதிர்செல்லாக்
கரியுந் தீயும் பூழிய தாகுங் ககனத்தே
திரியும் மீளும் மப்படை செய்யுஞ் செயலீதால்.

(இ-ள்.) பூதர்களிவ்வண்ணஞ் சொரியும்பொழுது அவர்கள்விட்ட மலைகளும் மரங்களுஞ்செய்யுமச்செய்கையைத் தீப்பொறி பறக்கப்பார்த்து ஒளிபொருந்திய வேற்படையினையுடைய சிங்கமுகன் தீயுங்காற்றும் மூண்டாகும்வண்ணம் ஒரு பெருமூச்சுவிட்டனன்; தீயோடுகூடிய வக்காற்று எதிரேசென்றமையால் பூதர்கள்விட்ட மலைமுதலிய ஆயுதங்கள் எரியாநின்றன; தீயாநின்றன; புழுதியாயின; அந்தரத்தே சுழன்றன; திரும்பிவராநின்றன இதுவே அப்பூதர்களின் ஆயுதங்கள் சிங்கமுகனெதிரிற் செய்யுஞ்செய்கைகளாகவிருந்தன.—எ-று.

மலைகளும் மரங்களும் ஆயுதங்களும் ஆதிய தன்னை ஒன்றும் செய்யாதென்று துணிந்து அவைகளை நொய்யபொருள்களாக எதிரிகட்குக்காட்டுவான் வேண்டியே மூச்சுவிட்டனன், என்பதனைவிளக்க "தீயெழநோக்கி உயிர்ப்ப" என்றார். (கஉச)

அன்னோ வன்னோ நம்படை யெல்லா மடல்வீரன்
முன்னோ செல்லா தீயவுயிர்ப்பின் முடிவாமாற்
பின்னே செய்வ தொன்றிலை யாம்பேரமர்செய்வ
தென்னோ வென்னோ யாரினுமேலா னிவனென்றார்.

(இ-ள்) ஐயோவய்யோ நமது ஆயுதமனைத்தும் வன்மையாளனான சிங்கமுகவீரனுடைய எதிரிலேயோ செல்லமாட்டாது; சென்றால் அவன் அவைகளை அழிக்குமாறு விடுகின்ற கொடிய சுவாசத்தால் அழிந்தொழியும்; அதனால் இனி நாம் செய்யத்தகுவதொன்றுமில்லை; ஆதலின் எண்ணுங்கால் இனி இவனோடு நாம் என்ன பெரும்போர் புரியப்போகின்றோம் இவன் அசுரர் அனைவரிலும் சிறந்தவன்போலும் என்றுரைத்தனர்.—எ-று.

பூதர் தங்களால் எவ்வளவுசெய்யக்கூடுமோ அவ்வளவையும் செய்தவர்களாதலால் முன்செய்த போரன்றி வேறின்னம் எதனைச்செய்யப்போகின்றோமென்று ஆச்சரியமாகக் கருதினார்களென்பார். "யாம்பேரமர்செய்வ தென்னோ வென்னோ வென்றார்" என்றார். (கஉஉ)

என்றார் பூதர் சீற்றம் விளைத்தார் யாரும்போய்க்
குன்றா யங்கணுற்றன யாவுங் குழுவுற்ற
வன்றா ருக்க ளானவு மாண்கைக் கொடுதொட்டுச்
சென்றா ரார்த்தார் சீயமு கன்மேற் செலவுய்த்தார்.

(இ-ள்.) இவன் அசுரருட் சிறந்தவன்போலும் என்றுரைத்த பூதர்கள் முன்னினும் அதிக கோபமுடையவர்களாய் எல்லாருமாகச்சென்று மலைகளாக அவ்விடங்களிலிருந்தன எவ்வளவுண்டோ அவ்வளவையும், கூட்டமான வலியமரங்களையம் பெரிய கைகளாற் பறித்தெடுத்துக்கொண்டு சென்று ஆரவாரத்துடன் பின்னும் சிங்கமுகன் மீதுசென்று படுமாறு எறிந்தார்கள்.—எ-று.

குன்றுவைரங்கொண்டுபொருதாரென்பார், சென்று ஆர்த்து உய்த்தாரென்றார்.

வேறு.

கைக்கொடு சாரத கணங்க ளார்த்துட
னுய்க்குறு வரையெலா மொருங்கு சென்றிடாத்
திக்குள வ்வரைப்பெலாஞ் செறிந்து ஞாயிறு
மெய்க்கதிர் வழங்குறும் விசும்பு தூர்த்தவே

(இ-ள்.) பூதகணங்கள் தங்கைகளாற் பறித்தெடுத்து ஆரவாரத்துடனெறிந்த மலைகளும் மரங்களும்ஆகிய வனைத்தும் ஒன்றாகச்செல்லாநின்று பூமியின் பலதிக்குக்களிலு நெருங்கி, சூரியனுடைய சரீரத்திலுள்ள கிரணங்கள் வழங்கும் ஆகாயத்தை மூடின.—எ-று.

வழங்குதல் - சஞ்சரித்தல். (கஉச)

கல்லகத் தொகுதிகள் ககனந்தூர்த்துழி
யெல்லுடைச் செங்கதி ரிரவி மாய்ந்திட
வொல்லெனத் திமிரம்வந் துறலு நோக்கியே
யல்லெனக் குடம்பையு ளடைவ புள்ளெலாம்.

(இ-ள்.) பூதர்களெறிந்த மலைக்கூட்டங்கள் கூட்டமாக ஆகாயத்தை மூடிக்கொண்டவுடனே ஒளிபொருந்திய செவ்விய கிரணங்களையுடைய சூரியன் மறைய அதனால் விரைவாக இருள்வந்து பொருந்துதலும் இருளுண்டானதைப்பார்த்துப் பறவைகளெல்லாம் தற்போதை இருட்போதென்றுகருதித் தங்கள் தங்கள் கூடுகளிற் பிரவேசியாநின்றன.—எ-று. (கஉரு)

வெற்பின நிரத்தலும மறைய வெய்யவ
னெற்படு முன்னரே யிரவி யோடினு
னற்புத மற்புத மடைந்த தம்புயன்
கற்பமென் றறிஞருங் கலக்க மெய்தினர்.

(இ-ள்.) ஆகாயத்தினெவ்விடங்களிலும் பூதரெறிந்த மலைகள் நிறைந்து நின்றவுடனே சூரியன் மறைந்தான் சூரியன் திடீரென்று மறைந்ததனைப்பார்த்து இத்தினம் பொழுதுபோகுமுன்னமே சூரியன் மறைந்தமையால் ஆலோசிக்குமிடத்து இந்த நிகழ்ச்சி ஆச்சரியமானதாகவே இருக்கின்றது, ஆச்சரியமானதாகவே இருக்கின்றது இதனை ஆலோசிக்குமிடத்து உலகமுடிவானபிரமப்பிரளயம் இன்றுவந்துவிட்டதென்று விவேகிகளும் நிகழ்ச்சியைமறந்து கலக்கமடைந்தார்கள்.—எ-று.

அறிஞரில்வந்த உம்மை சிறப்பும்மை.

அறிஞராயுள்ளார்க்குக் கலக்கம்வருதல் அபூர்வநிகழ்ச்சியாதலின் அறிஞருமென்றார். அறிஞரொன்றதீண்டு - காலஞானியரை. (கஉசு)

போற்றலன் றன்மிசைப் பூதர் தூண்டிய
மாற்றரும் பதலைகண் மலிந்து வான்பட
ராற்றினை யடைத்தலு மஞ்சி நின்றனன்
காற்றினும் விரைந்துசெல் கதிரின் பண்ணவன்.

(இ-ள்.) பகைவனான சிங்கமுகன்மீது பூதர்கள்விட்ட நீக்குதற்கரிய மலைகள் மிகுந்து நெருங்கிவராநின்று ஆகாயமார்க்கத்தை அடைத்தலும், வழிஅடைபட்ட அதனைக்கண்டு வாயுவினும் அதிவேகமாய்ச் செல்லும் இரதத்தினையுடைய சூரியன் பயந்து இது என்னசங்கதியோவென அஞ்சி நின்றனன்.—எ-று.

சூரியன் ஒருநொடிப்பொழுதில் ஒரு இலக்கத்தெண்பத்தாறாயிரம்யோசனை செல்பவனென்றுரைப்பது வழக்கமாதலின், "காற்றினும் விரைந்து செல்கதிரின் பண்ணவன்" என்றார்.

வாயுவானது விரைவினையுடையதேனும், சூரியன் கீழ்த்திசை மண்டலத்திலுதித்தவுடனே அவனுடையகிரணக்கதிர் உலகமுழுமையும் விரைந்து வியாபித்தலால் வாயுவின்வேகத்தினும் சூரிய கிரணவேகம் மிகுந்தது என்றறியப்படுகின்றது அதனாற் காற்றினும் விரைந்து செல்கதிரின்பண்ணவன் என்பதனை - வாயுவைவிட விரைவாகச்செல்கின்ற கிரணக்கதிரினையுடைய சூரியன் என்னினும் ஆம். (கஉஎ)

இன்றுகா றவுணரா லிடருழந்தன
மன்றியும் பூதரீண் டடுக்கல் வீசினார்
நின்றிடின் வருந்துது நிகழ்ச்சி தேரலாஞ்
சென்றிட றுணிவெனத் தேவ ரோடினார்.

(இ-ள்.) நாமிதுவரைக்கும் அசுரராற்றுன்பமநுபவித்தோம்; அதுவன்றியும் இப்பொழுது பூதர்களிவ்விடத்தின் மலைகளை விசிறினார்கள்; இங்கு நிற்போமானால் துன்பப்படுவோம் இனி நாம் இங்கு நடப்பதைப் பின்னருணரலாம்; சண்டைத்திறத்தைப் பார்ப்பதையொழித்துப் போதலே துணிவு என்று கருதினவர்களாகத் தேவர்களோடினார்கள்.—எ-று. (கஉஅ)

செருவலி வீரர்கள் செலுத்தச் சேண்படர்
பருவரை யிடையிடை பயின்று சுற்றிய
கருமுகி லுண்டநீர் கான்று தம்வயி
னுருமிடி யெங்கணு முகுத்து வீழ்ந்தவே.

(இ-ள்.) போர்புரிகின்ற வீரர்கள் எடுத்தெறிய ஆகாயத்திற்சென்றபெரியமலைகளினிடையேயிடையேபொருந்தி யுலாவியகரியமேகங்கள் தாம் உண்ட நீரைக்கக்கி தம்மிடத்திலுள்ள உருமிடிகளையெவ்விடங்களிலுஞ் சிதறிக்கொண்டு தாமும் கீழ்விழுந்தன.—எ-று.

பெருமழையினையும் பேரிடியினையும் வெளிப்படுத்தினவைகளாக மேகங்கள் கீழ்விழுந்தன என்க. (கஉகூ)

வெதிர்படு சிலம்பினும் வழுக்கி வீழ்ந்திடு
மதிர்குர லரியின மண்டச் செற்றின
வெதிருறு தகுவனை யினமென் றுன்னியே
முதிர்தருகாதலான் முன்னுற்றாலென.

(இ-ள்.) பூதர்களாலெறியப்பட்டு, ஆகாய வீதியில் நெருங்கிநின்ற மூங்கில்களையுடைய மலைகளினின்றும் தவறிவிழுகின்ற அதிர் குரலினவான சிங்கங்கள் எதிரில் நிற்கின்ற சிங்கமுகவசுரனை முகத்தாற் நம்மினமென்று நினைத்து, மிகுதியாக உண்டாகின்ற ஆசையினால் எதிரே சென்றாற்போல அவனருகில் அடைய விழுந்துநெருங்கின.

மைம்மலை யிடைவிராய் வதிந்த மோட்டுடைக்
கைம்மலை யாற்றியே கவிழ்வகாசிபன்
செம்மலை யரியென நோக்கித் தேம்பியே
விம்மலை யெய்தியே வீழ்வ தென்னவே.

(இ-ள்.) காசிபமுனிவன் குமாரனான சிங்கமுகவசுரனைப் பார்த்து யதார்த்த சிங்கமென்று கருதி விம்முதலடைந்து, பூதர்களெறிந்த மேகங்களையுடைய அம்மலைகளினிடங்களில் வாசஞ்செய்த யானைகள் இரைச்சலிட்டுக்கொண்டு மறிந்து விழுகின்றன.—எ-று.

மைம்மலை என்பதை கரியமலை என்னினுமாம். (கஙக)

பொற்றையின் மரங்களிற் பொதிந்த கேசரம்
வெற்றிகொ ளரிமுகன் றொடையின் மேவின
விற்றவர் தம்மைவிட் டேதி லார்தமைப்
பற்றொடு கலந்திடு பரத்தை மாதர்போல்.

(இ-ள்.) பூதர்களெடுத்தெறிந்த மலைகளிலுள்ளமரங்களிற்சூழ்ந்துகிடந்தவண்டு கூட்டங்கள், தமக்குக்கொடுத்தற்குத் திரவியமுதலியவின்றி நிலைகுலைந்தவர்களை வெறுத்தகற்றி அவரன்றியுள்ள திரவியங்கொடுக்கத்தக்க அன்னியரை விருப்பத்துடனணைகின்ற சேரிப்பரத்தையரைப்போல பிறவிடங்களில் வெற்றிபெற்ற சிங்கமுகனுடைய மாலையிற்சென்று தங்கின.—எ-று.

பரத்தையராவார் பொருளீவோரிடத்தன்றிப் பிறரிடத்திற்கலந்திராரென்பதனை.
"ஆணமிலெஞ்சத்தணிநீலக்கண்ணார்க்குக்
காணமிலாதார்கடுவனையர்—காணவே
செக்கூர்ந்துகொண்டானுஞ்செய்தபொருளுடையா
ரக்காரமன்னாரவர்க்கு." என்னு நாலடியானுணர்க. இதனானன்றே யிவரைப் பொருட்பெண்டிரென்றார் பெரியோர். (௬௨)

எறிந்திடு வரைகடந் தம்மி லெற்றிடச்
செறிந்திடு தீங்கனல் சென்ற திக்கெலாம்
பொறிந்தன புகைந்தன பொரித லுற்றன
மறிந்தன வுலந்தன மன்னு யிர்த்தொகை.

(இ-ள்.) சிங்கமுகன்மீது சென்றுபடும்வண்ணம் பூதர்கள் எடுத்தெறிந்த மலைகள் ஒன்றோடொன்றுமோத, அம்மோதுதலாலுண்டான அக்கினிப்பொறிகள் திக்குகள் தோறும் பொறிகளாக அடைந்தன; அதனால் நிலைபெற்ற உயிர்வருக்கங்கள் புகைந்தனவும் பொரிந்தனவும் மறிந்தனவுமாகவாகி அழிந்தன.—எ-று. (௬௩)

ஆயின பல்லிய லடையப் பூதர்க
ளேயின குன்றமுந் தருவு மேகியே
சீயமா முகமுடைச் செல்வற் சேர்ந்தன
தூயவன் கயிலையைச் சூழ்ந்த கொண்டல்போல்.

(இ-ள்.) இவ்வண்ணமான பல வியல்புகளுண்டாகப் பூதர்கள் அனுப்பின மரங்களும் மலைகளுஞ்சென்று நின்மலனான சிவபெருமானெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ கைலாய மலையைச்சூழ்ந்த மேகங்களைப்போல வெள்ளிய நிறத்தினையும் சிறந்த சிங்கமுகத்தினையும் உடைய அரசனை அடைந்தன.—எ-று.

கைலைமலையைச்சூழ்ந்த மேகங்களைப்போல் சிங்கமுகனை மலைகள் சூழ்ந்தன என்க. இதனாற் சிங்கமுகன் வெண்ணிறமுள்ளவனாக அறியப்படுகின்றான். (௬௪)

செடித்தலை யரயினரிற் றிகழுமாயிர
முடித்தலை யான்மிசைப் பட்ட வொய்வரை
பொடித்தில விற்றில பூழி யாய்த்தில
படித்தலம் வீழ்ந்தன நொய்ய பான்மையால்.

(இ-ள்.) பாலைநிலமாக்களான செடித்தலைவேடரின்றன்மையாய்விளங்கும்ஆயிரமுடிகளோடுகூடிய சிங்கமுகன்மீது பட்டவப்பெரியமலைகள் பொடியுமாகாமல் இறுதலுமில்லாமற் புழுதியுமாகாமல் இலேசானபொருள்களைப்போல பூமியினிடத்தில் விழுந்தன.—எ-று.

பரியேபன்னல் கார்ப்பாசம்பருத்தி என்பது பிங்கலமாதலிற் பன்னலைப் பருத்திப்பொதி என்றும்.

வேடர் தலைகளைப்போல சிங்கமுகனுடைய தலைகள் புல்லியமயிர்களா லலங்கோலமானவை ஆதலின் செடித்தலை வேடரை யிவன்றலைகளுக் குவமையாக வுரைத்தனர். செடித்தலை-செடிபோலுந்தலை-பதனழிதலை என்பனவாம்; இவற்றில் உசிதமானதைக்கொள்க. செடித்தலை என்பதிலும்மை விகாரத்தாற் றொக்கதென்க. (கருரு)

வேறு.

துன்னற் பட்டகுன்றெவை யுஞ்சூர் துணையானோன்
மின்னற் பட்ட மெய்யிடை பட்டே வெற்பின்கட்
பன்னற் பட்ட தாமென வீழ்கின் றதுபாரா
வின்னற் பட்டார் பூதர்கள் வானோ ரேங்குற்றார்.

(இ-ள்.) பூதர்களாலெடுத்தெறியப்பட்டு நெருங்கினவாகச் சென்றமலைகளெல்லாம் சூரபன்மனுக்கிளையவனான சிங்கமுகனுடைய ஒளிபொருந்திய சரீரத்திற்பட்டு மலையின்மீது பருத்திப்பொதி விழுந்தாற்போல ஊறுபுரியாமல் கீழ் விழுந்ததனைக்கண்டு பூதவீரர்கள் துன்பமடைந்தார்கள். தேவர்கள் ஏக்கமுற்றார்கள்.—எ-று.

பல மலை வீழினும் நிலைதளராப் பேராற்றல் வாய்ந்த வுடலினனென்பதை விளக்குவான் "மெய்யிடைப்பட்டே வெற்பின்கட் பன்னற்பட்டதாமெனவீழ்கின்றது" என்றார். (கருசு)

சீலம் புக்க பாரிடர் வெம்போர் செயல்காணூஉக்
கோலம் புக்க தேரிடை நின்றான் குப்புற்று
ஞாலம் புக்கான் பூதர்க டம்மை நலிதற்கோ
ராலம் புக்கா லென்ன நடந்தா னடல்செய்வான்.

(இ-ள்.) இஃதிவ்வாறாக, நல்லொழுக்கம்பொருந்திய பூதர்கள் வெவ்வியபோர் புரிதலைக்கண்டு அழகுபொருந்திய இரதத்திலிருந்த சிங்கமுகன் குதித்துப் பூமியிலிறங்கிப் பூதர்களை வருத்துவதற்கு ஆலகாலம் சென்றாற்போல அவர்களோடு போர் புரியச் சென்றான்.—எ-று.

பூதர்கள் போர்புரிதல் ஊணுண்டன் முதலிய வுடையரேனும் ஒழுக்கத்தவறற்றவர்கள் என்பதை விளக்குவான் "சீலம்புக்க பாரிடர்" என்றார்.

யானை, யாளி, சிங்கம், மலர்மாலை, சடைமாலை முதலிய செயற்கைச் சித்திர வுருவங்களா லலங்கரிக்கப்பட்ட விரதமென்பதை விளக்குவான் "கோலம்புக்க தேர்" என்றார்.

பண்டு பாற்கடலிற்பிறந்து பரமன்களத்தமைந்த விடமன்றிது வென்பதை உணர்த்த "பூதர்கடம்மை நலிவதற்கோராலம்புக்காலென்ன" என்றார். (கருஎ)

பார்மே லெற்றுஞ் சிற்சிலர் தம்மைப் பகைவிண்ணோ
ரூர்மே லெற்றுஞ் சிற்சிலர் தம்மை யுயர்பானுத்
தேர்மே லெற்றுஞ் சிற்சிலர் தம்மைத் திரைசேர்முந்
நீர்மே லெற்றுஞ் சிற்சிலர் தம்மை நெடிதோச்சும்.

(இ-ள்.) இரதத்திலிருந்திறங்கிச்சென்ற அச்சிங்கமுகன் சில பூதர்களை வாரிப் பூமியிலடிப்பான்; வேறு சிற்சிலபூதர்களை வாரித்தனது பகைவரான தேவர்களின் வாழ்க்கைக்குரிய சுவணவுலகிலெறிவான்; வேறு சிற்சில பூதர்களைப்பிடித்து உயர்ந்த சூரியனுடைய இரத்தின்மீது அடிப்பான்; வேறு சிற்சில பூதர்களைப்பிடித்து அலைகளோடு கூடின கடன்மீது எறிவான்; வேறு சிற்சில பூதர்களை மிகவும் மேலே போமாறு எறிவான்.—எ-று.

முந்நீரொன்பதை பண்டைப்புலவருட்பலர் ஆக்கல் காத்தலழித்தற்கு காரணமாக நிற்குமியல்பினை யுடையதாதலால் மூன்று இயல்பினையுடைய நீரொன்பதனை விளக்க முந்நீரொன்று கடனீர்க்குப் பெயரிடப்பட்டதென்றனர். மற்றுஞ்சிலர் ஆற்றுநீரும் மழைநீரும் ஊற்றுநீருமாகிய மூன்றுபிரிவினதாகிய நீரொன்றுணைக்கின்றனர். ஆக்கலும் காத்தலும்அழித்தலுமாகியவிவைக்குக் கடனீரையன்றிப் பிறவும் வேண்டற்பாலதாதலானும், மழையின்றே லூற்றின்மையானும், மழையும் மேகங் கடனீரையுண்ணுதேல் பெய்யாதாதலானும், யாறு-ஊற்று-மழை யென்னும் இவைகளாலுண்டாநீர் மூன்று தன்மையினதாக வேறுபடாமையினுனும் அவ்வீருரையும் நிலைபெறுமையையுடையன. முதியோர்வழக்காதலினவை யிற்றை அங்கீகரிக்கின்ரும்.

றன்னகரமானது தன்னகரமாக இனவொற்றுமைபற்றித் திரிந்து தந்நகரமாகி முன்னீரொன்பது முந்நீரொன்ருயிருக்கலாம் என்றும் கருதுவாருளர்.

பிரளயத்தின்பின்னர் நீருண்டாகி நீரில் நாராயணன்ருேன்றினுனென்றும், நாராயணன்பால் நான்முகன் பிறந்தானென்றும், நான்முகனு லுண்டாகிய துலகமென்றும் கூறப்படுதலாலும், பின்னரப்பிரளயசலமே கடனீராகக் குறுகிநின்றதென்று கூறப்படுதலாலும், முதலிலுண்டான நீரொன்பதை விளக்க முன்னீர் என்று கோடலமையுமென்பாருமுளர். (௬௯௮)

பற்று நிற்குஞ் சிலவரை மூரற் பகுவாயிற்
குற்று நிற்குஞ் சிலவரை வாரிக் குழுவோடுஞ்
சுற்று நிற்குஞ் சிலவரை யண்டச் சுவரின்க
ணெற்று நிற்குஞ் சிலவரை யள்ளி யெறிகிற்கும்.

(இ-ள்.) அச்சிங்கமுகன் சில பூதர்களைப் பிடித்து அவர்களுடைய பற்களோடு கூடின பிளந்த வாயிற் குத்துவான்; வேறு சில பூதர்களைக் கூட்டமாக வாரிச் சுற்றுவான்; வேறு சில பூதர்களைப் பிடித்து அண்டச்சுவரில் அடிப்பான்; வேறுசிலவரை வாரியெறிவான்.—எ-று.

மனிதர் கைக்குச் சிறுவெண்கடுகின் குவியலைப்போல சிங்கமுகன் கைக்குப் பூதர் கூட்டமென்பதனை, 'அள்ளி எறிகிற்கும்' என்பதனுலுணர்க. (௬௯௯)

புண்ட ரிகன்கட் சிலவரை வீசும் பொருசெங்கைத்
தண்ட தரன்கட் சிலவரை வீசுஞ் சதவேள்வி
யண்டம தன்கட் சிலவரை வீசு மகிலஞ்சூ
ழெண்டிசை யின்கட் சிலவரை வீசு மிகல்பேசும்.

(இ-ள்.) சிங்கமுகன் சில பூதர்களைப்பிடித்துப் பிரமனிடமானசத்திய வுலகத்திற் சென்றுவருமாறு எறிவான்; வேறு சிலரைப் போர்புரிதற்குரியதண்டத்தைச் செவ்விய அத்தத்திலுடைய காலனூரிற்செல்ல எறிவான்; வேறுசிலரை சதகிருதுவான இந்திரனுடைய உலகத்தினை அடைய எறிவான்; வேறு சிலரை உலகினைச் சூழ்ந்தஅட்டதிக்குகளிற் சென்றுவிழ எடுத்தெறிவான்; வீரவசனங்கூறுவான்.—எ-று.

சதவேள்வி - சதமென்னு மெண்ணினையுடைய வேள்வியினை யுடையவன் என்று விரிக்கப்படுதலா லன்மொழித்தொகை. வில்லி - என்பதிற்போல தொழிற்பெயர் விகுதியான இகரம் புணர்ந்து கெட்டதென்று கொள்ளினுமாம். (௭௦௦)

மாலெரி வைப்பிற் பலர்தமை வீசும் வானத்திற்
காலெறி வைப்பிற் பலர்தமை வீசுங் கனாதீர்ந்த
வேலைகண் முற்றும் பலர்தமை வீசும் வியன்மிக்க
ஞால மனைத்தும் பலர்தமை வீசு நனிதூர்க்கும்.

(இ-ள்.) வீரவசனங்கூறுமச் சிங்கமுகன் பெரிய அக்கினியின்றிசையிற் பலரை எடுத்தெறிவான்; ஆகாயத்திலுள்ள வாயுமண்டலத்திற் பலரை எடுத்தெறிவான்; எல்லையற்ற கடன்முழுவதிலும் பலரை எடுத்தெறிவான்; மிகவும் பெரிய உலகமுழுவதிலும் பலரை எடுத்தெறிவான்; அன்றியுமற்றுமுள்ள எவ்விடங்களிலும் இவர்களை எறிந்து மேடாக்குவான்—எ-று.

மாலெரிவைப்பென்பதனை-பெரிய அக்கினிமண்டலமென்று கொள்ளினுமாம்.

சிங்கங் கொண்ட மாமுகன் வீசுஞ் செறிவாலே
துங்கங் கொண்ட பார்முதல் விண்ணின் றுணையுந்தா
னெங்கும் பூத மாயின வம்மா விதுகொண்டோ
வங்கங் கெல்லாம் பூதம தென்று ரறிவுள்ளார்.

(இ-ள்.) சிங்கத்தின் முகம்போன்ற சிறந்த முகத்தினையுடைய அசுரனெடுத்தெறியும் பூதர்களின் நெருக்கத்தால் உயர்ச்சிபொருந்திய பிருதிவிமுதல் ஆகாய பரியந்தமுள்ள எவ்விடங்களிலும் பூதங்களாகவே ஆயின ; இதனாற்றானே ஞானிகள் அவ்விடங்களிளெல்லாம் பூதங்களென்று சொல்லினார்கள்.—எ-று.

அறிவுள்ளார், நியாயநூலுணர்ந்த தத்துவஞானிகள். (கசஉ)

மிதித்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை மிசையுந்திப்
பதத்திற் கொல்லுஞ் சிற்சிலர் தம்மைப் படிவத்தைச்
சிதைத்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மைச் செல்லென்ன
வுதைத்துக் கொல்லுஞ் சிற்சிலர் தம்மை யுலவுற்றே.

(இ-ள்.) அச்சிங்கமுகன் அங்குமிங்குமாக வுலாவிச் சிலபூதர்களை மிதித்துக் கொல்வான்; வேறுசில பூதர்களைக் காலினாலுதைத்து மேலே தூக்கி யெறிந்துகொல்வான் ; வேறுசில பூதர்களை உருவத்தைச் சிதைத்துக்கொல்வான் ; வேறுசில பூதரை இடியிடித்தாற்போல இடித்துக்கொல்வான்.—எ-று. (கசரு)

அலட்சியமாகப் பொருதானென்று குறிப்பிக்க "உலவுற்று" என்றார்.

விள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி விரன்மேலாற்
றள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி தாமுற்றக்
கிள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி கிளையோடு
மள்ளா நிற்குஞ் சிற்சிலர் சென்னி யடுகிற்கும்.

(இ-ள்.) அச்சிங்கமுகன் வேறுசில பூதர்களின்தலைகளைப் பிளப்பான் ; வேறுசிலர் தலைகளைக் கைவிரலினால் தட்டித்தள்ளுவான் ; வேறுசில பூதர்களின் றலைகளை அடியோடுகிள்ளுவான்; வேறுசில பூதர்களின்றலைகளை அடியோடும் அள்ளி எடுப்பான்; வேறுசில பூதர்கள் தலைகளை யறுப்பான்.—எ-று.

சிறுபொருள்களை விரல்களாலுந்தித் தெறிக்குமாறு இவனும் பூதர்கள்தலைகளைப் பொருட்படுத்தாமற் சிதைத்தான் என்பார். "சென்னி,விரல்மேலாத் தள்ளாநிற்கும்" என்றார். (கசச)

தாக்கிற் கொல்லு மொருசிலர் தம்மைத் தடிகின்ற
வூக்கிற் கொல்லு மொருசிலர் தம்மை யுருமொத்த
வாக்கிற் கொல்லு மொருசிலர் தம்மை மருளுற்ற
நோக்கிற் கொல்லு மொருசிலர் தம்மைநொடிதன்னில்.

(இ-ள்.) இவ்வசுர னொருகணப்பொழுதில் ஒரு சில பூதர்களைத் தாக்கினாற் கொல்லுவான் ; வேறுசிலரை அயலாரைக் கொல்லுகின்ற அதட்டலாற் கொல்லுவான் வேறுசில பூதர்களை இடிமுழக்கம்போன்ற தனது அட்டகாசமான வாக்கினாற் கொல்லுவான்; வேறுசிலரை மருட்சியான பார்வையினாற் கொல்லுவான்.—எ-று.

தடிகின்ற ஊக்காவது - பகைவனைக் கொல்லும்போழ்துண்டாகின்ற அதட்டலோடுகூடிய விரைவு. சோம்பலின்றிப் பொருதானென்பார் "நொடிதன்னில்" என்றார்.

வாரா நிற்கும் பாரிட ராசியை வாரிப்பின்
சேரா நிற்கும் வாய்தொறு மீண்டச் சேர்த்திட்டே
யாரா நிற்கு மார்ந்தபி னாக வகன்மோட்டைத்
தூரா நிற்குந் தூர்த்தபி னூடற் றொழில்செய்யும்.

(இ-ள்.) அச்சிங்கமுகன் பூதர்கூட்டங்களை வாருவான்; வாரினபின்பு ஒன்றுசேர்ப்பான்; ஒன்றுசேர்த்தவைகளை வாய்கள்தோறும் நெருங்கவிட்டு மென்று உள்ளே இறக்குவான்; இறக்கினபின்பு அகன்ற வயிற்றினை நிரப்புவான்; வயிற்றினை நிரப்பினதற்குப்பின்பு போர்த்தொழிலைச்செய்வான்.—எ-று.

பூதராசியை வாரிச்சேர்த்து எடுத்து இட்டு ஆர்ந்து தூர்த்துப் போர்புரிந்தானென்க. (கசரு)

எழுவிற் கொல்லு மொருசிலர் தம்மை யெரிகூர்வாய்
மழுவிற் கொல்லு மொருசிலர் தம்மை வயநாஞ்சிற்
கொழுவிற் கொல்லு மொருசிலர் தம்மைக் கூர்சூலக்
கழுவிற் கொல்லு மொருசிலர் தம்மைக் கடிதோடி.

(இ-ள்.) சிங்கமுகன் சில பூதர்களை எழுவாயுதத்தாற் கொல்லுவான் தீமயமான கூரிய வாயினையுடைய மழுவாயுதத்தாற் சிலரைக் கொல்லுவான்; வெற்றிபொருந்திய அலாயுதத்தின் கொழுவினாற் சிலவரைக்கொல்லுவான்; கூரிய சூலமான கழுவினுலொருசில பூதரை விரைந்தோடிக் கொல்லுவான்.—எ-று.

நாஞ்சிலென்பது - உழுங்கலப்பையின் வடிவமான ஒரு ஆயுதம். (கசஎ)

கரத்திற் கொல்லுஞ் சிலவரை நோன்கார் முகமுய்க்குஞ்
சரத்திற் கொல்லுஞ் சிலவரை யம்பொற் றண்டத்தி
னுரத்திற் கொல்லுஞ் சிலவரை யங்க ணுசிக்கின்ற
மரத்திற் கொல்லுஞ் சிலவரை மண்மீ தினில்வீட்டும்.

(இ-ள்.) இச்சிங்கமுகன் சிலவரைக் கையினாற் கொல்லுவான். வேறு சில பூதரை வலிய விற்படையில் வைத்துவிடுகின்ற அம்பினாற் கொல்லுவான். வேறு சில பூதரை அழகிய பொன்மயமான தண்டாயுதத்தின் வன்மையினாற்கொல்லுவான். வேறு சில பூதரை அவ்விடத்திலொடிக்கின்ற மரங்களினாற் கொல்லுவான். வேறுசில பூதரை மண்மீதினிற் றள்ளிக் கொல்லுவான்.—எ-று. (கசஅ)

தேர்மே லானோ விண்ணுல கானோ திசையானோ
பார்மே லானோ வார்கட லானோ பதுமத்தோ
னூர்மே லானோ மேருவி னானோ வுயர்பூதர்
போர்மே லானோ தீயவ னென்றார் புலவோர்கள்.

(இ-ள்.) தேவர்கள் இச்சிங்கமுகனை இக்கொடியவனிப்பொழுது இரதத்தின் மீது இருக்கின்றானோ அல்லது விண்ணுலகிலிருக்கின்றானோ அல்லது திக்குகளிலிருக்கின்றானோ அல்லது பூமியின்மீது நிற்கின்றானோ அல்லது நீண்ட கடலினடுவிலிருக்கின்றானோ அல்லது பிரமனுலகிலிருக்கின்றானோ அல்லது மேருவிலிருக்கின்றானோ அல்லது உயர்ந்த பூதருடன் போர்புரிகின்றானோ? என்று கூறினார்கள்.—எ-று.

இவன் அதிக விரைவாக வெங்குமுலாவிக் கொடும்போர் புரிந்தானென்றும், இவன் இவ்விடத்தில் நின்று பொருதானென்று கண்டறிதற்குக் கூடாமையாக விருந்ததென்றும் விளக்குவான் புலவர்கள் ஐயுற்று, தீயவன்போர்மேலானோ, விண்ணுலகானோ, திசையானோ, பார்மேலானோ, வார்கடலானோ, பதுமத்தோனூர் மேலானோ, மேருவினானோ, உயர் பூதர் போர்மேலானோ-என்றார் என்றார். (கசகூ)

அற்றார் தாள்கள் கைக ளிழந்தா ரடுதிண்டோ
ளிற்றார் சென்னி சிந்தினர் துண்ட மிலரானார்
பொற்றார் மார்பம் விண்டனர் வீழ்ந்து புரள்கின்றார்
செற்றார் தம்மை யட்டிடு பூதத் திறல்வீரர்.

(இ-ள்.) பகைவரைக் கொல்லுமாற்றலின் மிக்க பூதவீரர்களி லநேகர் சிங்கமுகன் செய்த கொடும்போரினாற் கைகளறுபட்டார்கள். அநேகர் பகைவரைக் கொல்கின்ற திண்ணியதோள்க ளறுபட்டார்கள். அநேகர் தலைகள் சிதறினார்கள். அநேகர் காதற்றவராயினார்கள். அநேகர் பொன்தார் மாலையணிந்தமார்பம் பிளந்து கீழே விழுந்து புரள்கின்றார்கள்.—எ-று.

பகைவரைக்கொன்ற ஆற்றலின் மிக்கவரேனும் பூதர்கள் சிங்கமுகனால் அழிந்தனரொன்றும் சிங்கமுகன் வன்மையற்றவர்களைக் கொன்றானில்லையென்றும் விளக்குவான் பூதரையுயர்த்தி "செற்றார்தம்மையட்டிடுபூதத்திறல்வீரர்" என்றார். (சுருO)

சொரியா நின்ற சோரிய ராற்றத் துயர்மேலார்
மரியா நின்றா ரெண்ணில ரான்மற் றவர்தம்முட்
பிரியா நின்ற சென்னியர் பல்லோர் பெயர்வெய்தித்
திரியா நின்றா ராடுறு கின்ற செயல்கொண்டார்.

(இ-ள்.) அநேகம் பூதர்கள் ஒழுகாநின்ற இரத்தவெள்ளத்தினராய் மிகுதியான துன்பமுடையவராயினார்கள். அநேகம் பூதர்கள் இறந்துபட்டார்கள். அவ்வாறிறந்தவருக்குள் உடலினின்றும் வேறுபட்ட தலையினரான பூதருட்பலர் கவந்தமாகி அங்குமிங்குமுலாவிக் கூத்தாடிகளின் தொழிலைச்செய்தார்கள்.—எ-று.

வெட்டுப்பட்டுவிழுந்த தலைகளையுடைய உடலங்கள் தம்மிடமுள்ள தத்துவங்களகலுங்காறு மியங்குமியல்பின. போர்க்களத்தில் நின்றபடி தலையிழந்த வுடலங்கள் துள்ளித்துள்ளிகுதிக்குமென் றுணர்க. (சுருக)

கருவந் தெய்து மாருயிர் முற்றுங் கவிழ்கின்ற
பருவந் தன்னிற் றீயவ னுண்ணும் படியேபோற்
செருவந் துற்ற சீயமு கத்துத் திறன்மேலோ
னொருவன் றானே நின்றடு கின்றா னுலவாதான்.

(இ-ள்.) கருவில் வந்து பிறந்த உயிர்களனைத்தும் அழிகின்ற ஊழிக்காலத்தில் அவ்வுயிரனைத்தையும் பிரளய காலாக்கினியானது உண்ணுமாறுபோல போர்புரிவான்வந்து நின்ற ஒப்பற்ற வன்மையாளனான அழியாத சிங்கமுகனொருவனே (பூதரனைவரையும் கொன்றான்.—எ-று. (சுருஉ)

அந்நீ ராகிப் பூதரை வெய்யோ னடுகாலைச்
செந்நீர் நீத்த மாயிடை தோறுஞ் சென்றீண்டித்
தொன்னீர் வேலை புக்குவர் நீக்கித் துவராக்கி
முந்நீ ரென்னுந் தொன்மையை வேறாய் முடிவித்த.

(இ-ள்.) அவ்வண்ணமாகக் கொடிய சிங்கமுகன் பூதர்களைக் கொல்கின்ற சமயத்தில் இரத்தவெள்ள மவ்விடத்திலெல்லாஞ் சென்று நெருங்கி மிக்க நீரினையுடைய கடலிற் புகுந்து உவரை மாற்றிச் செந்நிறமாகச்செய்து முந்நீரென்னும் பழையதன்மையை வேறாகச்செய்த.—எ-று. (சுருரு)

ஆடா நின்றா னித்திறம் வெய்யோ னளவில்லார்
வீடா நின்றார் கண்டனர் வெம்பூ தர்க்கெல்லாங்
கேடா நின்றா னிங்கிவ னென்னாக் கிளையோடு
மோடா நின்றார் வானவ ரெல்லா முலைவுற்றார்.

(இ-ள்.) கொடிய சிங்கமுகனிவ்வண்ணம் போர்புரிந்தான்; அவன் செய்த போரினால் அநேகர் இறந்தார்கள். அவர்களிறந்ததனைத் தேவர்கள் கண்டு இவ்விடத்தி லிச்சிங்கன் வெவ்விய பூதர்கட்கெல்லாங் கேடாக நின்றான் என்றுரைத்துவருத்தத் துடன் ஓடினார்கள்.—எ-று. (௧௫௪)

துன்று நின்ற தொன்மரம் வெற்பின் றொகைவீசி
முன்று குற்ற பூதர்கள் யாரு முடிவாகக்
கொன்றார் சிங்க மாமுக னட்டே குலவுற்று
மின்னார் செம்பொன் மேருவெ னுந்தேர் மிசைபுக்கான்.

(இ-ள்.) நெருங்கிய பெரிய மரங்களையும் கூட்டமான மலைகளையும் பறித் தெறிந்து போர்புரிந்தவர்களா யெதிரில் வந்த பூதரனைவரும் இறக்கும்படி வன்மை பொருந்திய சிங்கமுகன் கொன்று அங்குமிங்கு முலாவிப் பின்னர் தனது ஒளிபொருந் திய செவ்விய மகமேருவென்று பார்த்தவர்களுரைக்கின்ற இரதத்திற்புகுந்தனன்.-எ-று.

சிங்கமுகவசுரனது பெருந்தோற்றத்தைக்குறிப்பிக்க. அவனிரதத்தை மலைகளி லெல்லாமுயர்ந்ததுவும் பெரியதுவுமான மகமேரு என்று கூறத்தகுந்தது என்று, "மின் னார்செம்பொன் மேருவெனுந்தேர்மிசைப்புக்கான்" என்றார். (௧௫௫)

வேறு.

அவ்வேலையன் றனமர் செய்வினை யாடல் பாரா
மைவேலைபோல் வானழற் கண்ணன் மனங்கனன்று
செவ்வேயெதிர் புக்கரி மாமுகற் சீறி வெய்யோ
யிவ்வேலை யுன்னை முடிப்பன் னிகன்முற்றி யென்றான்.

(இ-ள்.) அப்பொழுது அச்சிங்கமுகன் போர்புரிதலைப்பார்த்து நிறத்தாற் கருங்கடல்போல்பவனும் அழற்கண்ணனென்று பெயராலவனும் ஆன ஒரு பூத அரசன் மனங்கனன்று நேரே யெதிரேசென்று சிங்கமுகனைப்பார்த்துக் கோபித்துக்கொடி யோய் யான் இப்பொழுதுபோர்புரிந்து உன்னைக்கொல்வேனென்றுரைத்தனன்.-எ-று.

என்றங்குரை செய்திடு பூதனை யேந்த னோக்கி
யொன்றுஞ் சிறி துன்னலை யச்சமு முற்றி லாதாய்
நின்றிங்கிது கூறினை யென்னி னினக்கு நேரார்
நன்றுன்வலி யென்றுந கைத்தன னாக ரஞ்ச.

(இ-ள்.) என்றிவ்வாறு கூறிய அழற்கண்ணனென்னும் பூதனை அரசனை சிங்க முகன் பார்த்து நீ ஒன்றினையும் சிறிது மாலோசித்தாயில்லை, அச்சமுமடைந்தாயில்லை என்னெதிரே நின்று இதனை யுரைத்தனையானால் உன்னையொத்தவர் எவருளர் நன்றாயி ருக்கின்ற துனதாற்றல் என்றுரைத்துத் தேவராயினரஞ்சும் வண்ணம் நகைசெய்த னன்.—எ-று.

சிங்கமுகவசுரன் பூதர்களை அநேகமாகக்கொன்றுலாவியதனைக் கண்டிருக்கும் இவ்வழற்கண்ணன் அஞ்சாது யானிப்பொழு துன்னைக் கொல்வேனென்றசொல் சிங்க முகவசுரனுக் கச்சத்தினையுண்டாக்காமல் நகைப்பினையுண்டாக்கியது. இதனால் அழற்க ண்ணன்மொழியை சிங்கமுகன் இளஞ்சிறுவர்கூறுஞ் சீற்றமொழியைப்போல பொருட் செய்தானில்லை என்க. (௧௫௭)

அன்னானகை செய்தது காண்டலு மாழி நாப்பட்
கொன்னார்தழ லென்னவெ குண்டனன் கூளி வேந்த
னின்னுடலை நீக்குவன் காணுதி நீயு மென்றோர்
மின்னார்கழு முட்படை யாங்கவன் மீது விட்டான்.

(இ-ள்.) சிங்கமுகன் நகைசெய்ததனைப்பார்த்தவுடனே கடலினடுவிலுள்ள வன்மைபொருந்திய வடவாக்கினியைப்போல பூதவரசன் கோபங்கொண்டு யான்

உனது வெற்றியை யொழிக்கின்றேன், நீ பாரென்று கூறி, ஒரு ஒளிபொருந்திய சூலமென்னும் ஆயுதத்தினை எடுத்து அச்சிங்கமுகன்மேற்சென்று படுமாறு விடுத்தனன். —எ-று.

சிங்கமுகன் தன்வீரவசனத்தினைப் பொருட்படுத்தாமல் நகைத்தவுடனே தன்னை மிகுந்தவன்மையாளனாகவும் எதிரியைத் துரும்பாகவும் மதித்துள்ளவனாதலின், பெருஞ்சீற்றங்கொண்டானென்பார் "ஆழிநாப்பட்கொன்றார்தழலென்ன வெகுண்டனன்கூளிவேந்தன்." என்றார். கூளி - ஒருசாதிப்பூதம்.

நின்றுடலைநீக்குவன் - என்பதனை, நீ இப்பொழுதுரைத்த வசனத்தினை யான் அழிக்கின்றேன் என்றும், காணுதிநீயும் - என்பதனை, பிறர்கண்டு தேறுமாறுபோல நீயுங்காணக்கடவை என்றும் உரைத்துக்கொள்ளினுமாம். (கருஅ)

கூற்றானவ னேவவ ரும்படைக் கொள்கை நோக்கி
மாற்றானவ னோர்படை யும்வழங் காது நின்றான்
றோற்றானென வானவ ரார்த்தனர் சூல மார்பி
னேற்றான்வரை மேற்படு கண்டகத் திற்ற தன்றே.

(இ-ள்.) பகைவர்க்கு யமனான வழற்கண்ணன்விடவருகின்ற சூலப்படையின் றன்மையைப்பார்த்து அந்தப் பகைவனான சிங்கமுகனொரு ஆயுதத்தினையும் அதற்குப்பதிலாக விடாது நின்றனன், அவனதச்செய்கையினைப் பார்த்துத்தேவர்கள் சிங்கமுகன் தோற்றானென்றுரைத்து ஆரவாரித்தனர். உடனே சிங்கமுகன் அவ்வந்த சூலத்தினை மார்பினி லேற்றுக்கொண்டனன். ஏற்றவுடனே அது கன்மலைமீது பட்ட முள்ளினைப்போல முனை ஒடிந்தழிந்தது. —எ-று.

இவ்வழற்கண்ணன் என்மொழியினுண்மையை நீயும் பாரென்றுகூறியும் அவன் மொழியினை பொருட்செய்தானில்லை சிங்கமுகன் என்பதனைப் பின்னும் விளக்கவும் அவன்விடுமெத்தகைய வாயுதத்தினாலும் இவனுக்குக் கேடின்றென்றென்பதை இவன் உணர்ந்திருக்கலாமென்பதனையுணர்த்தவும் "வரும்படைக்கொள்கைநோக்கிமாற்றானவனோர்படையும்வழங்காதுநின்றான்" என்றும், மார்பினிலேற்றானென்றும் கூறினார். ()

உறுகின்றசூ லப்படை யூற்றமு மோங்கன் மார்பத்
திறுகின்றது மங்கவ னின்றதும் யாவு நோக்கிப்
பெறுகின்றவ ரிலிவன் பெற்றது பேற தென்னா
மறுகின்றநெஞ் சனொரு தண்டினை வல்லை யுய்த்தான்.

(இ-ள்.) தன்னால் விடப்பட்டுச் சென்ற சூலாயுதத்தினுடைய வன்மையும் அது சென்று அச்சிங்கமுகனுடைய மலைபோன்ற மார்பினிற் பட்டழிந்ததும் அப்பொழுதச் சிங்கமுகவன்நின்ற நிலைமையுமாதி யவனைத்தினையும்பார்த்துப்பேறுபெற்றவர்களுக்குள் இவன் பெற்றதே பேறு என்று மறுக்கப்பட்ட மனதினையுடைய அழற்கண்ணன் பின்னுமொரு தண்டத்தினை யெடுத்து விரைவாகச் சிங்கமுகன்மீது படுமாறு எறிந்தனன். —எ-று. (கசுo)

வேறு.

உய்த்தது மனையதண் டுருமுற் றாலென
வத்தலை யரிமுகத் தவுணன் சாரதி
மெய்த்தலை கோடலும் வெகுண்டு நோக்கியே
கைத்தல மிருந்ததோர் கதையை யேவினான்.

(இ-ள்.) அழற்கண்ணன் விட்ட வுடனே அத்தண்டாயுதமானது இடி விழுந்தாற் போல திடீரென்று சென்று விழுந்து அவ்விடத்திற் சிங்கமுகனுடைய தேர்ப்பாகன் தலையை வாங்கியது. சாரதி தண்டத்தினால் தலையிழந்ததனை கோபத்தோடு பார்த்துச் சிங்கமுகனும் தன் கரத்திலிருந்த வொரு தண்டத்தினை அழற்கண்ணன் மீது விட்டனன். —எ-று. (கசுக)

மாவலி சேர்தரு மடங்கன் மாமுக
னேவிய வெங்கதை யிமைப்பிற் பூதர்கள்
காவல னகலமேற் கலந்து தாக்கிற்று
லோவென வனையனு ளம்வருந்தவே.

(இ-ள்.) மிகுந்த வன்மை பொருந்திய சிறந்த சிங்கமுகவன் விடுத்த வெவ்விய தண்டாயுதம் இமைப்பொழுதிற்குள் பூதர்களரசனுன அழற்கண்ணனுடைய மார்பினை யடைந்து அவனும் ஓ என்று மனம் வருந்தும் வண்ணம் மோதியது.--எ-று. (கசு௨)

செயிரறத் திருத்திய செம்பொற் குன்றின்மேல்
வயிரமெய்ப் படையது வந்தற் றுதனு
மயிருறப் புனைகல னுகங் கீண்டிட
வுயிரினுக் கவ்வழி யுலைவு மிக்கதே.

(இ-ள்.) குற்றமறவமைக்கப்பெற்ற செவ்விய பொன் மலையின் மீது வச்சிர மென்னுமாயுதம்வந்து விழுந்தாற்போல அழற்கண்ணனுடைய நுண்மையாக வணியப் பெற்ற அணிகளையுடைய மார்பினைப் பிளத்தலும் அவனுயிரினுக்கவ்வழியாகக் கெடுதி மிகுதியாக உண்டாகியது.—எ-று. (கசுந)

தாக்கிய வேலையிற் றழலி னுட்டத்தான்
மூக்கினின் மார்பினின் முழங்கு வாயினிற்
றேக்கிய குருதிநீர் சிந்து கின்றது
மேக்குயர் கனன்மழை விரித்த தாரைபோல்.

(இ-ள்.) தண்டாயுதம் பட்டவுடனே அக்கினிக் கண்ணனுடைய மூக்கு மார்பு முழக்கம் பொருந்திய வாய் என்னும் இவைகளின் வழியாய் மேற்புறமாக வுயர் தலையன்றிக் கீழ்ப்புறமாகத் தாழாத அக்கினி மழையானதுபெய்த தாரையைப்போல இரத்த வெள்ளமொழுகியது.— எ-று. (கசுச)

மறந்தனன் றெல்லுணர் வெனினும் வன்றிற
றுறந்திலன் வெவ்வழல் சொரியுங் கண்ணினன்
சிறந்திடு மூசலிற் றிரிந்த தன்னுயி
ரிறந்தில னவற்கொரு கூற்ற மின்மையால்.

(இ-ள்.) வெவ்விய தீப்பொறி பறக்குங்கண்ணினனுன அவ்வழற்கண்ணன் சிங்கமுகன் சீற்றத்தோடெடுத்தெறியவந்துள்ள தண்டந்தாக்கத் தனது பழைய உணர்ச்சியை மறந்தானுயினும் தனது வலிய வீரத்திற்குறைந்தானில்லை. தன்னைப்பிடித்தற்கு யமனின்மையால் இறந்துபட்டானில்லை.—எ-து.

சிங்கமுகன்விட்ட தண்டம்பட்டுக் கீழ்விழுந்த அழற்கண்ணனென்பவன் பஞ்சகிருத்தியம்புரியும் பரமேசுவரனுடைய அடியவர்களுள் சிறந்த ஒருவனும் அப்பரமேசுவரசன்னிதானத்தை அணுகித்தொழும் அரும்பேறுபெற்றவனும் நித்தியமான வுடல்வாழ்க்கையினையுடையவனும் ஆதலாலவனை யமன் தொடருதற் கதிகாரமற்றவனுகின்றுன். சிவனடியவரை யமன் தொடரானென்பதனை முன்னுரைத்த மார்க்கண்டேயபடலத்தாலும் வரப்போகின்ற உபதேசகாண்டத்தாலுமுணர்க. (கசுரு)

ஆரழன் முகத்தவ னயர்வுற் றவ்வழிச்
சோர்வொடு நிற்றலுஞ் சூரன்பின் வரும்
வீரம துடையவன் வேறெர் பாகனைத்
தேரிடை நிறுவினன் சேறன் மேயினன்.

(இ-ள்.) அரிய அழன்முகத்தினனுன் அக்கினிக்கண்ணன் அயர்ந்து அவ்விடத்திற் சோர்வோடு நின்றனன். உடனே சூரபன்மனுக்கிளைய வீரத்தினையுடைய சிங்க

முகன் வேறொரு சாரதியைத் தனது தேரினில் இருத்தி அவனாலோட்டப்பட்ட இரதத்தினில் வந்தனன்.—எ-று. (கசுசு)

வேறு.

மூண்ட மரியற்றச் சீய முகத்தவன் வரலு நோக்கித்
தூண்டிய வெகுளி மேலோன் சுமாலியென் றுரைக்குந் தொல்லோ
னீண்டிடு மேரு வென்ன நிவந்ததோ ரடுக்க றன்னைக்
கீண்டரி முகன்மேற் செல்லக் கிளர்ந்தனன் வீசி யார்த்தான்.

(இ-ள்.) நெருங்கிப் போர்புரிதற்குச் சிங்கமுகவசுரன் வருதலும் அவனுடைய வருகையைப்பார்த்து மேலு மேலுமுண்டாகப் பெற்ற கோபத்தினையுடைய சுமாலியென்றுரைக்கும் பழைய பூத வரசன் நீளப்பெற்ற மேருவினைப்போல வுயர்ந்து நிற்கின்ற வொரு மலையினைத் தோண்டி யெடுத்து நிமிர்ந்து ஆரவாரஞ் செய்துகொண்டு சிங்கமுகன் மீது வீசியெறிந்தனன்.—எ-று. (கசுஎ)

மற்றவன் விடுத்த குன்றை வாளரி முகத்து வீரன்
பற்றின னொருதன் கையாற் பந்தென மீட்டு முந்தப்
பொற்றட மார்பிற் றாக்கப் புலம்பியே சுமாலி யென்பான்
செற்றமுந் தானு மாகச் செயலற்று நிலத்த னானான்.

(இ-ள்.) ஒளி பொருந்திய சிங்கமுகத்தினையுடைய வீரனான அசுரவரசன் சுமாலியால் விடப்பட்ட மலையினை ஒருவனெறியும் பந்தினைப்பிடித்து எறிந்தவனை திரிலெறியும் பந்து விளையாடுபவனைப்போல ஒருகையினாற்பிடித்துத் திரும்ப வெறிய வது சுமாலியினுடைய பொன்மயமான அகன்ற மார்பினில் வந்துதாக்க அதனாற் புலம்பிக்கொண்டு தனது கோபமுந் தானுமாகக் கீழ்விழுந்தனன்.—எ-று. (கசுஅ)

நிலந்தனிற் சுமாலி வீழ நெடுஞ்சினந் திருகி யங்கைத்
தலந்தனிற் கதையொன் றேந்தித் தண்டிபோ யவுணன் றேரிற்
கலந்தவ னுரத்திற் செல்லப் புடைத்தலுங் காமந் தன்னிற்
புலந்தவன் றனக்குக் காட்டு முணர்வெனப் பொடித்த தன்றே.

(இ-ள்.) சுமாலி யென்னும் பூத வரசன் பூமியில் விழுந்த வுடனே பெருங் கோபத்துடன் தண்டி யென்னு மற்றொரு பூதவரசன் கையினிலொரு தண்டாயுதத்துடன் சென்று சிங்கமுகனுடைய இரதத்தினிற் புகுந்து அவன் மார்பினிற் படும் வண்ணம் அடித்தலும் அடித்த அக்கதாயுதமானது காமத்தில் வருந்தினவனுக்குள்ள அறிவினைப்போல வழிந்தது.—எ-று.

"காமந்தன்னில் புலந்தவன்றனக்குக்காட்டுமுணர்வெனப்பொடித்தது" என்பதற்கு மாதர்போகமாதிய விச்சைகளிலழுந்தி அவையே பொருள் என மயங்குற்று அஞ்ஞானத்தினால் வருந்துதலையே சுகமாகவெண்ணிய அபக்குவனான வொருவனுக்கு மாதர் போகமாதியவற்றால் வருமின்பம் இன்பமன்று பந்த நிவிர்த்தியை அடைந்து பரமேசுவரனை ஆராதித்தலே இன்பமென்று பிரபலசுருதிப்பிரமாணங்களுடன் ஞானோபதேசஞ்செய்தாலும் அவன் காதினுளவையேறுது அவலமாகியழிதலைப்போல வழிந்தது என்க.

"தீமையுள்ளனயாவையுந்தந்திடுஞ்சிறப்புந்
தோமில்செல்வமுங்கெடுக்குநல்லுணர்வினைத்தொலைக்கு
மேமஞ்ன்னெறிதடுத்திருளுய்த்திடுமிதனாற்
காமமன்றியேயொருபகையுண்டுகொல்கருதில்." என்றிந்நூலினும்,
காமங்கெட்டதென்பதனை, "காமமேகன்றிநின்றகழுதை" என்றும்,
"ஈமஞ்சேர்மாலைபோலவிழித்திடப்பட்டது" என்றும் சிந்தாமணியிலும்,

"தூமகேதுபுவிக்கெனத்தோன்றிய - வாமமேகலைமங்கையரால்வருங்
காமமில்லையெனிற்கடுங்கேடெனு - நாமமில்லைநரகமுமில்லையே." என்றிராமாயணத்திலும், வருதலாலுணர்க. (சசுக)

பொடித்தலும் வயிரத் தண்டம் பூதரின் முதல்வன் பொங்கிக்
கொடித்தடந் தேர்மே னின்ற கோளரி முகத்தன் றன்மே
லிடித்தெனக் கையா லெற்ற வெரியெழ நகைத்துத் தன்றே
ரடித்தலங் கொண்டு தள்ளி யமரர்கள் வெருவ வார்த்தான்.

(இ-ள்.) வச்சிரம்போன்ற கதாயுதம் அழிந்தவுடனே அதனையத்தண்டி யென்னும் பூதவரசன் பார்த்து முன்னிலுமிகுந்த கோபங்கொண்டு கொடிகள் கட்டிய அகன்ற இரதத்தில் நின்ற சிங்கமுகவனை இடி இடித்தாற்போல கையினுன் மோதி அறைந்தனன். உடனே சிங்கமுகன் தீப்பறக்கச் சிரித்து, தனது ஒரு காலினுலவனை யுதைத்துக் கீழே தள்ளித் தேவர்களும் அஞ்சும் வண்ணம் ஆரவாரஞ் செய்தனன் - எ-று.

தாளினு லுந்தி விட்ட தண்டிசே ணெழுந்து மெல்ல
மீளுவா னடுவ னென்னும் வெகுளியா னுயிர்ப்பு வீங்கி
யாளிசேர் வதனத் தண்ண லாடக வயிரக் குன்றத்
தோளின்மேற் குப்புற் றேறதன் னடிகொடு துகைக்க லுற்றான்.

(இ-ள்.) சிங்கமுகன் காலினுலுதைத்தெறிந்த தண்டி யென்னும் பூதவரசன் ஆகாயத்திலெழுந்து திரும்பிவருபவன் இவனைக் கொல்வேனென் றுண்டாகும் கோபத்தினின் மிகுந்து பெருமூச்சுடன் சிங்கமுகவரசனுடைய பொன்மயமான வயிரமலை போன்ற தோளின்மீது குதித்துத் தனது காலினுன் மிதித்துத் துவைத்தனன்.—எ-று.

ஆடிய றனை மன்ன னுயிரத் திரட்டி தோளு
மோடினன் றுகைத்துத் தாளு மோய்ந்தன னவற்றை நோக்கி
நாடினன் றிரியா நின்று னாகநீள் குடுமிக் குன்றிற்
கோடுயர் பொதும்பர் தன்னிற் பாய்ந்திடுங் குரங்கு போல்வான்.

(இ-ள்.) போர்புரிகின்ற சேனைகளையுடைய சிங்கமுகவரசனது இரண்டாயிரந்தோள்களிலும் ஓடி ஓடி மிதித்தனன் மிதித்துக் காலுமோய்ந்து, ஆகாயத்தையளாவிய சிகரங்களையுடைய மலைகண்மீதுள்ள கிளைகளுயர்ந்த சோலைகளிலங்குமிங்குந் தாவுங் குரங்குபோன்ற வத்தண்டி அவன் றோள்களை எவ்வளவினவென்று பார்த்துக் கொண்டுலாவினுன்.—எ-று. (சஎஉ)

குரங்குலைக் குடுமிச் சூட்டுக் கோளரி முகத்து வெய்யோன்
கரங்களிற் பாயு மங்கட் கலந்திடு படையிற் பாயுஞ்
சிரங்களிற் பாயு மீளச் செவிதொறும் பாயும் பூந்தண்
மரங்களிற் பாய்ந்து செல்லு மணிச்சிறை வண்டும் போன்றான்.

(இ-ள்.) அத்தண்டி அசைகின்ற புறமயிரோடுகூடின சிங்கமுகத்தினையுடைய கொடியவனதுகைகளிற்பாய்வான், அக்கைகளிற் பொருந்திய ஆயுதங்களிற்குதிப்பான், தலைகளின் மீது தாவுவான், பின்னும் காதுகள் தோறும் தாவிக்குதிப்பான் இவனதிச் செயலினுல் இவன் மரங்களிற் பாய்ந்து செல்லுகின்ற கரிய இறகினையுடைய வண்டினையும் ஒத்தவனுனுன்.—எ-று. (சஎரு)

செறிந்திடு கரமுந் தோளுஞ் சென்னியும் பூதன் செல்வ
தறிந்திலன் சிறியன் போலு மரிமுகத் தவுண னம்மே
லெறிந்துல வுற்றுச் சூழு மீகொலென் றுருதன் கையாற்
சொறிந்தனன் சிறிது பின்னர்த் தண்டியைத் துடைத்து விட்டான்.

(இ-ள்.) நெருங்கியுள்ள கைகளிலும் தோள்களிலும் தலைகளிலும் பூதவரசனை தண்டியுலாவுதலைச் சிங்கமுகன் அறிந்தானில்லை. இதனை அறிதற்குச் சிறிய வருவினனோ? பின்னரிச் சிங்கமுகன் நம்மீது பறந்துலாவுகின்ற ஒரு ஈயோ? இது என்று தனது ஒரு கையினாற் சிறிது நேரம் சொறிந்து அத்தண்டியைத் துடைத்துத் தள்ளினன்.—எ-று. (கஎச)

ஒருதனிக் கரத்தாற் றீயோ னுருட்டினன் றுடைப்பத் தண்டி
பெரிதுநொந் தாற்றல் போகிப் பின்றினன் பெயர்ந்து போனான்
றெரிதரு பூத ரஞ்சிச் சிந்தினர் செயலொன் றில்லா
ரரிதுசெய் தவமே யல்லா லாற்றல்பெற் றிடுவ துண்டோ.

(இ-ள்.) கொடுமையாளனான சிங்கமுகன் தனது ஒப்பற்றகையினால் உருட்டித் துடையாநிற்பத் தண்டியரசனதனால் மிகவுநொந்து வன்மையிழந்து விலகிப் பெயர்ந்து சென்றான். இதனைக்கண்ட மற்றைய பூதர்கள் அஞ்சி வேறு செயலற்றவர்களாகி விலகியோடினார்கள். ஆராயுமிடத்து அருமையாகச் செய்யுந் தவமன்றி வன்மையுடையது வேறொன்றுளதோ?—எ-று.

தவத்தினிற்சிறந்ததொன்றின்றென்பதனை,

"தவத்தினில்சமர்புரிசமனைவெல்லலாம்
தவத்தினிலெழுகடறனையுமுண்ணலாம்
தவத்தினில்வடவரைகளேந்துதாங்கலாந்
தவத்தினிலனலமுந்தரிக்கலாகுமே."

என்னுங் கூவத்துப்புராணத்தாலுணர்க. (உஎரு)

பூதர்க ளிரிவு நோக்கிப் பொருதிற விலக்கத் தெட்டு
மேதகு வீரர் யாரும் வெய்யதேர் கடாவிச் சென்று
தீதறு சிலைகள் வாங்கிச் சீயமா முகவற் சுற்றித்
தாதவிழ் மலர்பெய் தென்னச் சரமழை பொழித லுற்றார்.

(இ-ள்.) பூதர்கள் விலகியோடுவதனைக்கண்டு போர்புரியுந் திறலினரான உயர்ந்த விலக்கத்தெட்டு வீரர்களும் வேகமாகத் தங்களிரதங்களை யோட்டிக்கொண்டு சென்று குற்றமற்ற விற்களை வளைத்துச் சிங்கமுகனைச் சூழ்ந்துகொண்டு தாதினையுதிர்க்கின்ற மலர்மழையைப் பெய்தாற்போல சரமழையைப் பொழிந்தார்கள்.—எ-று. (கஎசு)

பொழிந்திடு பகழியெல்லாம் புகுந்திடு சுவடின் றாகி
யழிந்தது மின்றி முன்போ லவன்புடை வீழ நோக்கி
யொழிந்ததெம் மாற்ற லென்னா வுட்கினா ரொருதன் றேரி
னிழிந்தன னவுணர் கோமா னிடிபடத் தெழித்துச் சென்றான்.

(இ-ள்.) இவர்கள் விட்டவம்புகளனைத்தும் உட்புகுதற்கு மார்க்கமின்றிக்கெடாது விட்டவண்ணமே அவனெதிரில் விழுதலும், அதனைப்பார்த்து எமது வன்மையொழிந்தது என்று வருந்தினார்கள். இஃதிங்ஙனமாகச் சிங்கமுகன் ஒப்பற்ற தனது இரதத்தினின்றும் இறங்கி இடி இடித்தாற்போல ஆரவாரஞ்செய்துசென்றனன்.-எ-று.

எடுத்தனன் சிலவர் தேரை யெறிந்தன னொன்றொ டொன்றி
னடித்தனன் சிலவர் தேரை யள்ளின னங்கை தன்னா
லொடித்தனன் சிலவர் தேரை யுதைத்தனன் சிலவர் தேரைப்
பொடித்தனன் சிலவர் தேரைப் புதைத்தனன் சிலவர் தேரை.

(இ-ள்.) இரதத்தினின்றும் இறங்கிச்சென்ற சிங்கமுகன் சிலவர் தேர்களை எடுத்து ஒன்றின்மேலொன்றாக அடித்தனன், சிலவர் தேர்களை அகங்கையினாலெடுத்து ஒடி

த்தனன், சிலவர் தேனை யுதைத்தான், சிலவர் தேனைப் பொடியாக்கினுன், சிலவர் தேர்களை பூமியிற் புதைத்தான்.—எ-று. (கஎஅ)

இத்திற மடங்கல் வீர னடுதலு மிலக்கத் தெண்மர்
சுத்தம துயிரே தாங்கித் தனுவொடு படைகண் மான
மெய்த்திறல் சிந்திச் சாய்ந்தார் மேவலன் றேர்மேற் புக்கா
னத்தலை நின்ற வீர வாகுமற் றதனைக் கண்டான்.

(இ-ள்.) சிங்கமுகவசுரன் இவ்வண்ணம் இரதங்களை அழித்தவுடனே இலக்கத்தெட்டு வீரர்களும் தங்கள்தங்கள் உயிரினைமாத்திரஞ் சுமந்துகொண்டு விற்களுடன் அம்புகளும் பிறவாயுதங்களும் மானமும் சரீரவன்மையுமிழந்து முதுகிட்டனர். இதனை அப்போர்க்களத்தில் நின்ற வீரவாகுதேவர் கண்டனர்.—எ-று. (கஎகூ)

ஆளரி யனைய வீர னதுகண்டு பூதர் தம்முட்
கோளரி முகத்து வெய்யோன் கொன்றதோர் பாதி யுண்டாற்
ருளுடை வில்லி ஞருஞ் சமரிடத் தழிந்தா ரிந்த
நாளினின் முடியும் போலு நம்பெரும் படையு மென்ருன்.

(இ-ள்.) நரசிங்கம் போன்ற வீரவாகுதேவ னதனைப்பார்த்து, சிங்கமுகனை கொடியவன் கொன்ற பூதர்கள் நமது சேனையிற்பாதி இருக்கலாம். அவர் போக நின்ற நாணிபூட்டப்பட்ட விற்படைவீரர்களும் போரிலழிந்தார்கள். நமது பெரிய மற்றைய சேனையும் இந்நாளிலழியும்போலும் என்று வீரவாகுதேவ ருரைத்தனர்.—எ-று. (கஅ0)

அடல்பெறு புயத்து வள்ள லாடக வரைபோ லுள்ள
கொடுமர மான தொன்றைக் கோட்டினன் சினமேற் கொண்டான்
விடமுறு தறுகட் கேது விரைந்தொரு பாங்கர் புக்கு
நடுவெலாங் கவரத் தோன்று நாகிளங் கதிரே போல.

(இ-ள்.) வன்மை பொருந்திய வீரவாகுதேவன் மேருமலைபோன்ற ஒரு பெரிய வில்லினை விடத்தினையும் அஞ்சாமையினையும் உடைய கேதுவானது விரைவாக வொருபுறத்திற் புகுந்து தன்னொளியைக் கவரநின்ற இளஞ்சூரியனைப்போல தோன்றுமாறு வளைத்து மிகுந்த கோபங்கொண்டு நின்றனன்.—எ-று. (கஅக)

வாங்கிய சிலையிற் பூட்டி வடிக்கணை யநந்த கோடி
தூங்கலின் மழைகான் றென்ன வுலப்புறுன் சொரிந்து நிற்ப
வாங்கெதி ரடர்த்துப் போர்செ யவுணர்தந் தலைகள் பாறத்
தாங்கிய படைகள் சிந்தித் தரைமிசைத் துணிந்து வீழ்ந்தார்.

(இ-ள்.) வளைக்கப்பெற்ற வில்லில் வைத்துக் கூரிய அநந்தகோடி அம்புகளைத் தூங்கலாக மழை பெய்தாற்போல விடாமற் சொரிந்துகொண்டு நின்றவுடனே அவ்விடத்தி லெதிரேநின்று போர்புரிந்த அசுரர்கள்தந் தலைகளுடைந்து தாஞ்சுமந்துநின்ற ஆயுதங்களுமிழந்து துண்டுபட்டுப் பூமியில் விழுந்தார்கள்.—எ-று. (கஅஉ)

பரித்தொகை முழுதும்பட்ட பாழியந் தேர்கள் பட்ட
வொருத்தலும் பிடியும் பட்ட வுலப்பிலா வவுணர் பட்டார்
பெருத்தன பிணத்தின் குன்றம் பிறங்கின பேய்கண் மொய்த்த
திரைத்தெழு சோரி நீத்தந் தெண்டிரை மடுத்த தம்மா.

(இ-ள்.) வீரவாகுதேவன் விட்டவம்புகளால் குதிரைக்குழாங்கள் முழுமையும் இறந்தன, அகன்ற பெரியவிரதங்களழிந்தன, ஆண்யானைகளும் பெண்யானைகளு மழிந்தன, கணக்கிலாத அசுரர்களும் மாண்டார்கள், பிணமலைகள் மிகுதியாயின, விளங்காநின்ற பிசாசுகள் நெருங்கின, அலைகளோடுகூடின இரத்தவெள்ளம் தெள்ளிய திரையினையுடையகடலினை அடைந்தன.—எ-று. (கஅங)

தேரெனப் பட்ட வீரர் திறமெனப் பட்ட மாவின்
பேரெனப் பட்ட யானைப் பெருக்கெனப் பட்ட தம்முட்
போரிடைப் படாத வெல்லாம் பொருதிரைக் குருதி வாரி
வீரனுக் குதவி யாக வேலையு ளுய்த்த தன்றே.

(இ-ள்.) இரதங்களென்று சொல்லப்பட்டனவும் வீரர் கூட்டமென்று சொல்லப்பட்டவர்களும் குதிரைகளென்று கூறப்பட்டனவும் யானையின் பெருக்கமென்று கூறப்படுவனவும் விரைவாக வழிந்தன. தமக்குட் போர்புரியாது நின்ற மற்றைய வனைத்தையும் ஒன்றோடொன்று மோதுகின்ற அலைகளையுடைய ரத்தவாறானது வாரியெடுத்து வீரவாகு தேவனுக்குச்சகாயமாகக் கடலிற்றள்ளியது.—எ-று. (கஅச)

பேரியி னொலியுந் தீய வவுணர்கள் பிடித்த வில்லி
ஞரியி னொலியுஞ் சூழு நாற்படை யொலியு மாண்ட
காரியி னொலியு மோட்டுக் கணங்களி னொலியுஞ் செந்நீர்
வாரியி னொலியுமாகி யடுகள மலிந்த வன்றே.

(இ-ள்.) பேரிகை வாத்தியத்தினோசையும், கொடியவசுரர்கள் கைகளிற் பிடித்துள்ள விற்களின் நாணிகளிலுண்டாகின்ற ஓசையும், சுற்றி நிற்கின்ற சதுரங்கசேனைகளினோசையும், மிகுதியாக வந்து நெருங்கிய காகங்களினோசையும், உயர்ந்த பூதகணங்களினோசையும், இரத்தவெள்ளத்தினோசையும் ஆகி அப்போர்க்களம் ஓசைமயமாய் நிறைந்து நின்றது.—எ-று. (கஅரு)

மலைகளை யறுக்கும் வேலை வாள்களை யறுக்குஞ் செங்கைச்
சிலைகளை யறுக்கும் வெய்யோர் திண்டிறல் கொண்ட தோளி
னிலைகளை யறுக்கு மார்பி னிரைகளை யறுக்குங் கோடி
தலைகளை யறுக்கு மம்மா விளையவன் சரம தொன்றே.

(இ-ள்.) வீரவாகுதேவன் விட்ட ஓரம்பானது மலைகளை அறுக்காநின்றன; வேற்படைகளையும் வாட்படைகளையும் அறுக்காநின்றன; செவ்விய கைகளிற் பிடித்துள்ள விற்படைகளை அறுக்காநின்றன; கொடியவர்களின் திண்ணிய திறமை பொருந்திய புயங்களின் நிலைகளை அறுக்காநின்றன; மார்பின் வரிசைகளை அறுக்காநின்றன; கோடி தலைகளை அறுக்காநின்றன. அம்மா! இதுவென்ன ஆச்சரியம்.—எ-று. (கஅசு)

காழுறு மவுணர் சென்னி கரதல நெடுந்தோண் மார்பம்
வாழிய முருகன் றூதன் வாளிகள் வெளவி யேகி
யேழுள கடலு நீங்கி யெண்டிசைக் கிரிக டாவி
யாழியங் கிரிபோழ்ந் தப்பா லண்டமும் பிளந்து செல்லும்.

(இ-ள்.) வயிரம்பொருந்திய அசுரர்களுடைய தலைகள், கைகள், நெடிய தோள்கள், மார்புகள் ஆகிய இவைகளைக் குமாரசுவாமியின்தூதுவனான வீரவாகுதேவனுடைய அம்புகள் வாரிச்சென்று சத்தசமுத்திரங்களையுங்கடந்து, அஷ்டகுலாசலங்களையுந்தாண்டிச், சக்கரவாளகிரியைப்பிளந்து, அப்புறத்தண்டத்தினையுங்கிழித்துச் செல்லாநிற்கும்.

காரண்டம தான செந்நீ ராற்றிடைக் கவிழ்ந்து மூழ்கித்
திரண்டவூன் வெளவி மீண்டு சிறகரை யுதறு கின்ற
முரண்டரு வீரர் சென்னி மூளைபுக் கலைந்து வாரிக்
குரண்டமீ தென்ன லான கருநிறக் கொடிக ளெல்லாம்.

(இ-ள்.) இரத்தவாற்றினில் கரண்டமென்னும் நீர்க்காகங்கள் தாழ்ந்து மூழ்கி அதனுள் திரண்டு கிடக்கின்ற மாமிசங்களை வாரிக்கொண்டு திரும்பிக் கரையை அடைந்து இறகுகளை உதறுகின்றன; இவையன்றியும், கருநிறமான காகங்களெல்லாம் வன்

மைமிக்க வீரர்களுடைய மண்டைச்சோற்றிற் புகுந்து குடைந்து அவைகளை வாரிக் கொண்டு வெண்ணிறத்துடன் வெளித்தோன்றி, காண்போர் இவை கொக்குகள் என்று கூறுமாறு நின்றன.—எ-று. (௧அஅ)

இவ்வகை யவுணர் தானை யிறந்திட வீரவாகு
வவ்வயி னின்று சென்றாங் கடுதலு மதனைக் கண்டார்
தெவ்வரை முருக்கும் வைவேற் சீயமா முகத்தன் மைந்த
ரைவரை வெல்லு மாற்ற லம்பதிற் றிருவ ரென்பார்.

(இ-ள்.) இவ்வண்ணமாக வீரவாகுதேவன் அசுரசேனைகள் இறக்கும் வண்ணம் அவ்விடத்தினின்றுஞ்சென்று கொல்லுதலும், அதனைப் பகைவரைக் கொல்லுகின்ற கூரிய வேற்படையினையுடைய சிங்கமுகாசுரனுடைய மைந்தர்களானவர்களும், பஞ்ச மூர்த்திகளையும் வெல்லவல்ல பேராற்றல்பெற்றவர்களும் ஆன சதவீரர்களென்பவர்கள் கண்டார்கள்.—எ-று. (௧அ௯)

சினத்தன ரிதழைப் பல்லாற் றின்றனர் நம்முன் வெம்போர்
வினைத்தொழி லியற்று வானை வெய்தென வடுது மென்னா
வினத்தொடு தேர்க டாவி யேகியே வீரன் றன்மேற்
றனித்தனி வார்விற் கோட்டிச் சரமழை சிதற லுற்றார்.

(இ-ள்.) அந்த நூறுபேர்களுங் கோபங்கொண்டு பற்களாலுதடுகளை மென்றவர்களாய், நமதெதிரே கொடிய போர்த்தொழிலினைப் புரிபவனை விரைவாகக் கொல்வோமென்று கூறிக் கூட்டமாகத் தேரோட்டிச் சென்று, ஒவ்வொருவரும் தனியே தனியே நீண்ட விற்படைகளை வளைத்து வீரவாகுதேவன்மீது அம்புமழையை வருஷித்தார்கள்.—எ-று. (௧௯௦)

நூற்றுவ ரொருங்கு நேர்ந்து நோன்றலைச் சிலைகள் வாங்கி
மேற்றிகழ் முகில்கா னென்ன விசிய விசிகந் தன்னை
யாற்றல்சேர் வீரன் காணா வயிற்கணை யநந்த கோடி
காற்றெனத் தூர்ந்து மாற்றிக் கடவுளர் புகழ வார்த்தான்.

(இ-ள்.) நூறசுரர்களும் ஒன்றாக வெதிர்த்து வன்மை பொருந்திய நீண்ட விற்களைவளைத்து மேலே விளங்குகின்ற மேகங்கள் மழை பெய்தாற்போல விட்ட வம்புகளை வன்மை பொருந்திய வீரவாகு தேவன் பார்த்து அநேக கோடி கூரிய வம்புகளைவிட்டுக் காற்றைப்போல செல்லுமாறு செலுத்தி அவர்கள் விட்ட வம்புகளை அகற்றித் தேவர்கள் தன்னைப் புகழும் வண்ணம் ஆரவாரித்தனன்.—எ-று. (௧௯௧)

தொலைவுறு மவுணன் மைந்தர் துண்ணெனக் கனன்று பின்னுங்
கொலையுடை நெடுங்கூர் வாளி கோடிகோ டிகணின் றுய்ப்ப
வலியுடை வீர வாகு மற்றவை மாற்றி யன்னோர்
சிலையொடு தேர்க டம்மைச் செஞ்சரந் தூண்டி வீழ்த்தான்.

(இ-ள்.) இறந்துபடுஞ் சிங்கமுகவசுரனுடைய பிள்ளைகள் பின்னுந்திடீரென்று சீறி கொலைத் தொழிற்குரிய நெடிய கூரிய அம்புகளைக் கோடி கோடிகளாக விட வன்மையாளனான வீரவாகுதேவன் வெகு விரைவாக அவர்கள் விட்ட வம்புகளை விலக்கி, அந்நூற்றுவர்களின் விற்படைகளோடு இரதங்களையும் செவ்விய அம்புகளைவிட்டு அழித்தனன்.—எ-று. (௧௯௨)

தேரொடு சிலைகண் மாயச் சீயமா முகத்தன் மைந்தர்
வீரனை யெதிர்ந்து வில்லால் வென்றிட லரிது போலுங்

கூருடை நுதிவாட் போரிற் கொல்லுது மிவனை யென்னுப்
பாரிடை வந்தோர் சூழ்ச்சி வகையினுற் பகர்த லுற்ருர்.

(இ-ள்.) எறிய இரதங்களுடன் விற்படைகளுமழிய, சிங்கமுகன் பிள்ளைகள் வீரவாகுதேவனை எதிர்த்து வில்லினுல் வெல்லுவதரிதாகும் ஆகலால், இவனைக் கூரிய நுதியினையுடைய வாட்போரிற் கொல்வோமென்று பூமியில் வந்து ஒரு தந்திரமுறையினுற் வீரவாகுதேவனைப்பார்த்து இவ்வாறு கூறத்தொடங்கினுர்கள்.—எ-று. (கககூ)

காட்புடைச் சிலையின் விஞ்சை கற்றதே யன்றி யெம்போல்
வாட்படை பயின்றி லாய்கொல் வல்லையே லப்போர் செய்யச்
சேட்படை யன்றி யெம்முன் சேர்தியால் வீர வென்னுத்
தோட்புடை கொட்டி யார்த்தார் கூற்றனுந் துளக்க மெய்த.

(இ-ள்.) வீரனே! நீ வன்மைபொருந்திய விற்போர்புரியக்கற்றதேயன்றி எங்களைப்போல வாட்போர்புரியக் கற்ருயில்லையோ? கற்றிருப்பாயேயானுல் வாட்போர்புரிதற்குத் தூரத்தினிற்காம லெம்மெதிரே வரக்கடவை என்று இருதோள்களைக் கொட்டி எமனு நடுங்குமாறு ஆரவாரித்தார்கள்.—எ-று. (ககூச)

வன்றிற லவுணன் மைந்த ருரையினை வள்ளல் கேளா
நன்றிது புகன்றீ ரென்னு நகைசெய்து நாதன் றந்த
மின்றிகழ் சுடர்வாள் கொண்டு விரைந்துகீழ்த் தலத்திற் பாய்ந்து
சென்றன னதனை நோக்கித் தேவரு மிடுக்கண் செய்தார்.

(இ-ள்.) மிகுந்த வன்மையாளனுன சிங்கமுகவசுரனுடைய பிள்ளைகளான அந்நூற்றுவர்கூறிய வசனங்களை வீரவாகுதேவன் கேட்டு நன்று இது கூறினீர்களென்று நகைசெய்து சிவபெருமானளித்த ஒளிவீசுகின்ற சுடர்வாளினை எடுத்துக்கொண்டு விரைவாகப் பூமியிற்குதித்துச்சென்றனன் இதனைக்கண்டு தேவர்களும் வருந்தினுர்கள்.—எ-று. (ககூரு)

வார்ந்திடு கழற்கால் வீரன் வாள்கொடு வரலு நோக்கித்
தீர்ந்தன னுவி யின்னே செகுக்கலா மிவனை யென்னுக்
கூர்ந்திடு நாந்த கங்க டெரித்தனி கொண்டு சென்று
நேர்ந்தனர் வளைந்து கொண்டார் மதியைச்சூழ் நிசியை யொப்பார்.

(இ-ள்.) கட்டப்பட்ட வீரக்கழலினையுடைய காலோடுகூடின வீரவாகுதேவன் வாளெடுத்துக்கொண்டுவருதலும் உயிரிழந்தானிவன் இனி இவனை இவ்விடத்திலேயே கொல்லலாமென்று கூரியவாட்படைகளை ஒவ்வொருவரும் ஏந்திப்போய் சந்திரனைச் சூழ்ந்த இருளைப்போல எதிர்த்து வளைத்துக்கொண்டார்கள்.—எ-று.

சந்திரனைச்சூழுமிருள் சந்திரனையணுகவணுக அபாவப்படுமாறுபோல இவர்களும் வீரவாகுதேவனை நெருங்கநெருங்க இறந்துபட்டின்மையையடைவார்கள் ஆதலின் "மதியைச்சூழ்நிசியையொப்பார்" என்ருர். (ககூசு)

வளைந்தனர் வீரன் ருேளின் மாற்பினிற் கரத்தின் மொய்ம்பிற்
களந்தனிற் சென்னி தன்னிற் கருதின ரிலக்க நாடிக்
கிளர்ந்திடு நாந்த கத்தாற் கிட்டின ரெறித லோடு
முளந்தளர் வில்லோன் மேனிக் கூற்றில சிறிது மூறு.

(இ-ள்.) வளைந்தவர்கள் வீரவாகுதேவனுடைய மார்பிலும் தோளிலும் கைகளிலும் கழுத்திலும் தலையிலும் வெட்டுமாறு குறிபார்த்து இலக்குவைத்து விளங்காநின்ற வாட்படைகளால் நெருங்கிவெட்டுதலும் அதனுல் மனத்தளர்ச்சியற்ற வீரவாகுதேவனுடைய உடம்பிற்கொன்று மிடையூறுண்டாகவே இல்லை.—எ-று. (ககூஎ)

ஊறிலாத் தன்மை நோக்கி யுவனை யாம்பற்றி மெல்லக்
கோறலே கரும மென்னக் குழுவொடு மவனைப் புல்லச்
சீறினன் றன்வா ளோச்சிச் சிறிதுமெய் தெரியா வண்ண
நூறினன் கொல்லோ வென்ன நூற்றுவர் தமையுமட்டான்.

(இ - ள்.) அழியாததன்மையைப்பார்த்து இவனை நாம்மெல்லெனப்பிடித்துக் கொல்லுதலே தகுதியென்று கூட்டமாகச்சென்று அவ்வீரவாகுதேவனைப்பிடித்தார்கள்; உடனே வீரவாகுதேவன் சீற்றங்கொண்டு தனதுவாட்படையினால்வீசி அவர்களினுடம்புகளினுறுப்புக்கள் தெரியாதவண்ணம் அழித்தானோ என்றுரைக்கும்வண்ணம் அந் நூறுபேர்களையுங்கொன்றான்.—எ-று.

ஒவ்வொருவனையும் பல்லாயிரஞ்சிறுதுண்டுகளாக வெட்டினனென்பார் "சிறிது மெய்தெரியாவண்ண நூறினன்கொல்லோவென்ன நூற்றுவர்தமையுமட்டான்." என்றார். இதனால் வீரவாகுதேவனது வாட்போர் ஒப்புயர்வற்றதென்றறியப்படுகின்றது. ()

அட்டிடு கின்ற வீர னமரர்கள் வழுத்த மீண்டு
தட்டுடை நெடுந்தேர் புக்கான் றன்மனக் கினிய மைந்தர்
பட்டிடு தன்மை நோக்கிப் பாடுறு மவுணர் கோமான்
மட்டறு துயரின் மூழ்கி மானத்தா லிரக்க முற்றான்.

(இ-ள்.) அவ்வாறுகொன்ற வீரவாகுதேவன் தேவர்கள்துதிக்குமாறு திரும்பித் தனது தட்டமைந்த நெடியதேரிற்புகுந்தான். அப்பொழுது தனதுமனத்திற்கு இனிய மைந்தரானவர்கள் இறந்ததனைக்கண்டு பெருமைபொருந்திய அசுராதிபனான சிங்கமுகன் அளவற்ற துன்பத்தின்மூழ்கி மானத்தால் வருந்தினான்.—எ-று. (கசுகு)

கோளுண்ட வரிமான் றப்பிற் குமரரை யொருவன் கொண்ட
வாளுண்ட தென்று நெஞ்சம் வசையுண்டு வருந்தன் மன்னோ
தாளுண்டு பரித்து நிற்கத் தலைகளுண் டெண்ணி லாத
தோளுண்டு கரங்க ளுண்டு சுமக்கலாம் போலு மன்றே.

(இ-ள்.) குற்றமற்ற சிங்கம்போன்ற வன்மையினரான எனது மைந்தர்களை ஒருவன்கையிற்பிடித்த வாளழித்ததென்று என்மனமே ! நீ வசையடைந்து வருந்தாதே; இரண்டுகால்களிருக்கின்றன இவ்வனைத்தையும் சுமந்துநிற்றற்கு அளவற்றதலைகளுமிருக்கின்றன; கைகளுமிருக்கின்றன; இவைகளனைத்தையும் நானொருவன் சுமக்கலாம்போலும்.—எ-று. (உ௦௦)

என்னுடைய மைந்தர் தம்மை யாவருங் காண வீண்டென்
முன்னுற வொருவ னேதான் முடித்துயிர் கொண்டு நிற்பான்
பின்னினி யிதற்கு மேலும் பெற்றிடும் வசையொன் றுண்டோ
வொன்னலர் தங்கட் கெல்லா மொருநகை விளைத்தே னன்றோ,

(இ-ள்.) என்னுடையபிள்ளைகளை அனைவருங் காணும்வண்ணம் இவ்விடத்தில் என்கண்ணெதிரே ஒருவனே கொன்றுநிற்பவன்பின்னர் இனி இதனைக்காட்டிலும் அடையத்தக்க அபகீர்த்தியும் இருக்கின்றதோ? நான் பகைவருக்கெல்லாம் ஒருநகைப்பை யுண்டாக்கினேனன்றோ?—எ-று. (உ௦க)

பொன்றினர் தம்மை யுன்னிப் பொருமியே புன்கணெய்தி
நின்றிடி னவ துண்டோ நேரலர் தொகுதி யெல்லாங்
கொன்றொரு கணத்தின் முன்னர்க் குழுவொடும் வாரி வாரித்
தின்றுதேக் கிட்டா லன்றித் தீருமோ வெனது சீற்றம்.

(இ-ள்.) யான் இனி இறந்தவர்களை நினைத்துப் பொருமிவருந்தி இங்கு நின்றிடலாவதுண்டோ ? பகைவர்கூட்டமனைத்தையும் ஒருக்ஷணநேரத்திற்கொன்று கொன்றவர்களைக் கூட்டங்கூட்டமாக வாரித்தின்று தேக்கினாலன்றி இப்பகைவர்பொருட்டுண்டான எனதுகோபந்திருமோ.—எ-று.

தேக்குதல் - வயிறுநிறைந்தபின்னரும், எதனையேனுமருந்தினால் உண்டாகும் ஒக்காளித்தல். (உ0உ)

மேவல ராகு மின்னோர் குழுவினை விரைவி னட்டுத்
தாவறு சுடர்வேல் கொண்ட காவலன் றனையும் வென்று
தேவர்க ளெனப்பேர் பெற்றோர் யாரையு மின்றே செற்று
மூவுல கினையும் யானே முடிக்குவன் விரைவி னென்றான்.

(இ-ள்.) பகைவர்களாகிய இவர்கள் கூட்டத்தினைச் சீக்கிரமாகக் கொன்று, குற்றமற்ற ஒளி பொருந்திய வேற்படை தாங்கிய குமாரனையும் வென்று, தேவர்களென்று பேர்பெற்றவர்களனைவரையும் இன்றே நாசமாக்கி, விரைவாக மூன்றுலோகங்களையும் யானே அழிக்கின்றேன் என்றுரைத்தான்.—எ-று.

மூன்றுலகங்களையும் அழிக்குமவன் அழித்தவற்றை மீட்டு முண்டாக்கவல்ல சங்காரகருத்தாவான அரனையன்றி வேறொருவருமில்லாதிருக்க, இவன் கோபத்தினால் தன்னிலையைமறந்து அகம்பாவங்கொண்டு மூன்றுலகங்களையும் அழிப்பேனென்று கூறினனென்பார் ஏகாரங்காட்டி "மூவுலகினையும் யானே முடிக்குவன் விரைவி னென்றான்" என்றார். (உ0ஙு)

என்னவித் திறங்கள் பன்னி யெரியுமெய் விதிர்ப்பச் சீறித்
தன்னுறு தடந்தே ருய்க்குஞ் சாரதி தன்னை நோக்கிக்
கொன்னுனை யயில்வாட் செங்கைக் குமரர்தங் குழுவைக் கொன்றான்
முன்னுறக் கடவு கென்ன நன்றிது முதல்வ வென்றான்.

(இ-ள்.) அச்சிங்கமுகவசுரன் என்றிவ்வாறான மொழிகளைக் கூறிக்கொண்டு முன்னரே எரியா நின்ற உடலந்துடிக்கச் சீற்றங்கொண்டு தானேறியிருக்கின்ற பெரிய தேரினை நடத்துகின்ற பாகனைப்பார்த்து, நீ கொலைத் தொழிலுக்குரிய கூரியவாட்படையினையுடைய செவ்விய அத்தத்தோடுங்கூடின எமது புதல்வர் கூட்டங்களைக் கொன்றவனெதிரில் தேரினைவிடுவாயாகவென்றுகூறுதலும் (பாகனும் அவனைவணங்கி) தலைவனே அவ்வண்ணமே செய்கின்றேனென்றான்.—எ-று.

எரியுமெய்விதிர்ப்பச்சீறி - என்பதற்கு அக்கினிதேவனும் உடல்நடுங்கும் வண்ணங்கோபித்து என்றுகொள்ளினுமாம். (உ0சு)

பாகுநூ லுணர்ந்து வல்லோன் பரியினை யெழுப்பிப் பண்ணி
மாகநீ டடந்தேர் தூண்ட வரிமுகன் வருத லோடு
மேகநா யகனு மூர்த்தி யேவலா னதனை நோக்கி
யோகையாற் றனது மான்றே ரதனொடு மொல்லை நேர்ந்தான்.

(இ-ள்.) தேர் விடுதற்கமைந்துள்ள சாத்திரங்களைக் கற்று வல்லவனாகவுள்ள வச்சாரதியானவன் குதிரைகளைத்தட்டி யெழுப்பி ஆகாயமளவுமளாவிய பெரிய விரதத்தைவிட அதனிற் சிங்கமுகன் (வீரவாகு தேவரைக் குறித்து) வருதலும் நாயகத் தன்மையில் சிறப்புடைய குமாரப் பெருமானுடைய திருவடித்தொண்டனாகிய வீரவாகு தேவன் இவனது வருகையைக்கண்டு (உண்டான) சந்தோஷத்தினால் தனது குதிரைகளாலிழுக்கப்படு மிரதத்தை விரைவாக எதிரியினிரதத்திற்கு நேராக விட்டுச் சென்றனன்.—எ-று.

"பண்ணி மாகநீ டடங்தேர்" என்பதனை அலங்கரிக்கப்பெற்று ஆகாயமளாவிய இரதத்தை என்னினுமாம்.

பாகுநூல்கள் - அசுவபரீட்சை, இரதபரீட்சையாதி நூல்கள். (உ0௫)

நேர்ந்திடு கின்ற காலை நிரைபடு விழிக டோறுஞ்
சார்ந்தழல் சிதற நோக்கித் தளைபடு தறுகட் சீய
மார்ந்திடு பகைகண் டென்ன வாற்றவுஞ் சினமீக் கொண்டு
சேர்ந்திடு வானை நோக்கிச் சிங்கமா முகத்தன் சொல்வான்.

(இ-ள்.) எதிரேவருகின்ற சமயத்தில் வரிசையாகவுள்ள கண்கள் தோறும் தீப்பொறிகள் பொருந்திச் சிதறுவண்ணம் பார்த்துக் கட்டப்பட்டுக் கிடக்கின்ற அஞ்சாமையினையுடைய சிங்கமானது தனதெதிரே வராநின்ற பகையைக் கண்டாற்போல மிகுந்த கோபத்துடன் வராநின்ற வீரவாகுதேவனைப்பார்த்துச் சிங்கமுகவசுரன் சொல்வானாயினன்.—எ-று.

சிங்கமுகவசுரனுக்குக் கண்கள் இரண்டாயிரமாதலின் "நிரைபடுவிழிகள்" என்றார்.

கூட்டினுள் அடைபட்டுக் கிடக்கின்ற சிங்கத்திற்கு மற்றைய சிங்கங்களைப் போலன்றி அவசரமதிகமாதலால் 'தளைபடுசீய' மென்றார். (உ0௬)

ஆதிதந் தருளுமைந்த னறுமுக னவனீ யல்லை
யேதிலா விலக்க ரென்றே யிசைத்திடு வோர்க டம்மு
ளாதனோ வெண்மர் தம்மு ளொருவனோ நம்மூர் வந்த
தூதனோ வினையர் தம்முள் யாரைநீ சொல்லு கென்றான்.

(இ-ள்.) முதல்வனான சிவபெருமானாலளித்தருளப்பட்ட குமாரனாகிய சண்முகன் நீயல்லை; அவனன்றி வேறாகவுள்ள இலக்கம் வீரரென்று சொல்லப்படுமவர்களில் சிறந்த தலைவனோ? அல்லது எட்டுப்பேர்களிலொருவனோ? அல்லது நமதூருக்கு வந்த தூதுவனோ? நீ யாவன் கூறக்கடவையென்று கூறினான்.—எ-று.

சிவகுமாரனுக்கு முகங்கள் ஆறு என்றுகேட்டுள்ளவண்ணம் நினக்கின்மையால், நீயவனல்லையென்றானென்க.

இலக்கரிலொருவனன்று நீ ஏற்றமுந் தோற்றமுமுடையவனாகவிருத்தலால் அவ்விலக்கர்களுக்கு எசமானோ? இலக்கரினுமுயர்ந்தராக வுரைக்கப்படுவோரெட்டுப்பேர் உண்டென்று கூறக்கேட்டுள்ளேன் அவர்களில் நீயொருவனோ? எமதூருக்குவந்த தூதுவனைச் சிறந்தவனாகச் சொல்லுகின்றார்கள் அவனோ, இக்கூறிய வின்னவருள் நீயாவன் என்றான் என்க. (உ0௭)

அல்லுமுறழ் கண்டன் றந்த வறுமுகற் கடிய னேனேன்
றெல்லைநும் மூதூ ரட்டுத் தூதனு மாகி மீண்டே
னெல்லையி னுமரை யெல்லா மீண்டொரு கணத்தி னட்டு
வெல்லுவ தமைந்து நின்றேன் வீரவா கென்பே ரென்றான்.

(இ-ள்.) இருள்போலுங் கரிய ஸ்ரீகண்டத்தினையுடைய சிவபெருமானளித்தருளிய சண்முகப் பெருமானுக்கடியேனாகவுள்ளேன். முன்னர் உங்களுடைய பழைய நகரத்தை யழித்துத் தூதனுமாகித் திருப்பிவந்தேன். அளவற்ற நும்மினத்தினரையெல்லாம் இவ்விடத்திலொருகணத்திற்கொன்று வெற்றியடையுமாறு பொருந்திநிற்கின்றேன் என் பெயர் வீரவாகு என்று கூறினன்.—எ-று.

நீ கூறியபலருள்ளும் யான் சண்முகதூதன் என்றறிதி என்றான் என்க. (உ0அ)

வேறு.

திண்டிறற் சேவகன் செப்பு மிம்மொழி
விண்டிடு செவிதொறும் விடம்பெய் தாலெனக்
கொண்டனன் வெகுண்டொரு கூற்றங் கூறினு
னுண்டிடு மசனிக ளுமிழ்ந்திட் டாலென.

(இ-ள்.) மிக்க வன்மையாளனான வீரவாகுதேவனுரைத்த விந்த வசனத்தைத் (சிங்கமுகாசுரன்) அகலமான கன்னத்துவாரங்களில் விடத்தையூற்றினாற்போல கட்டமாக ஏற்றுக்கொண்டு மேகங்கள் தாமுண்டிருந்த இடிகளைக்கக்கியவாறுபோல பேரொலியுடன் கோபங்கொண்டு ஒரு மொழியுரைத்தான்.—எ-று.

சிங்கமுகன் பேருருவமுடையவனாதலால் அவனதுகன்னத்துவாரத்தை "விண்டிடுசெவி" என்றார்.

சிங்கமுகன் இடியை உணவாக வுண்டவனன்று அவன் மொழிகள் இடி இடித்தாற்போன்றிருந்தமையால் அவ்வாறு அபூதமாக உரைத்தனரென்க. (உ0க)

உறுபடை யுழப்பினை யுணர்கு றுதலைதார்
சிறுவரை வெல்வதுந் திருந்து மாநக
ருறைதரு மெளியரை யுடன்று கொல்வது
மறிகுதி யிதுமோ ராண்மைப் பாலதோ.

(இ-ள்.) போரின் பொருட்டுப் பொருந்திய ஆயுதங்களை எடுத்து சண்டை செய்ய அறியாத சிறுகுழந்தைகளை வெல்வதும் செவ்விய பெரிய நகரத்தில் வாசஞ்செய்யும் எளியவர்களை யெதிர்த்துப் போர்புரிந்து அவர்களைக்கொல்வதுந்தான் நீ அறிந்திருக்கின்றாய் இதுவும் ஒரு ஆண்டன்மையைச்சேர்ந்ததோ ?—எ-று.

ஆயுதமெடுக்கவுணராரொடு பொருதலும் எளியாரொடுபொருதலும் வீரமுடையார் புரியார், நீ வீரமற்றவனாதலி னவ்வாறு புரிந்தனை என்று இகழ்ந்தனன் சிங்கமுகனென்க. (உக0)

நூற்றியற் குமரரை நொய்திற் கொன்றநின்
னாற்றலைக் கெடுக்குவ னாவி வாங்கியே
கூற்றுவற் குண்டியாக் கொடுப்பன் மெய்யினைப்
பாற்றினுக் குதவுவன் பாலன் காணவே.

(இ-ள்.) நூறென்னும் எண்ணினராகவிருந்த எனதூர குமாரர்களை வெகுவிரைவிற்கொன்ற நினது வன்மையை அழிப்பேன்; அன்றியும் நினதுயிரை எமனுக்குணவாகவளிப்பேன்; நினது உடலினை (நினது தலைவனுஞ் சிறுவனுமான) குமரன் காணும்வண்ணம் பருந்துகட்குணவாகவளிப்பேன் என்றான் சிங்கமுகன்.—எ-று.

நீ இறந்துபட்டபின்னர் நின்னுடற்செய்கையை நீ யுணராய்; ஆதலின் நின்னிறைவன் காணவளிக்கின்றேனென்னும் பொருள்தோன்ற உரைத்தானென்பார். "மெய்யினைப் பாற்றினுக்குதவுவன் பாலன்காணவே" என்றான் என்றார். (உகக)

உன்னுடை வன்மையு முனது நாயகன்
றன்னுடை வன்மையுந் தானை வன்மையும்
பின்னுடை யமரர்கள் பெற்ற வன்மையு
மென்னுடை வன்மையா லிறைபி னீக்குவேன்.

(இ-ள்.) உனது வன்மையும் உன்னுடைய தலைவனான குமரனுடைய வன்மையும் இச்சேனைகளின் வன்மையும் உங்களை முன்றள்ளிப் பின்னே நிற்கின்ற

இந்திராதிதேவர்கள்பெற்ற வன்மையும் ஆகிய விவ்வன்மைகளனைத்தும் அழியும் வண்ணம் என்னுடைய வன்மையினால் இறையென்னும் காலவளவைக் குண்மாற்றுவேன் என்றான் —எ-று.

இறை - அதிகவிரைவான காலவளவு. (உசஉ)

வானவர் சிறையினை மாற்ற வுன்னியே
தானையோ டேகியென் றன்முன் னெய்தினீ
ரூனுயிர் வாழ்க்கையு மொல்லை தீர்திரா
லானதொ ரூதிய மழகி தாற்றவே.

(இ-ள்.) நீவிர் தேவர்கட்குண்டாயிருக்குஞ் சிறையினை மாற்றுவான் கருதிச் சேனைகளுடனே வந்து என்றன்முன்னரடைந்தளீர், தேவர் சிறையை நீக்கக்கருதிய நீவிரென்முனடைந்தமையால் உடலினுயிர்வாழ்தலையும் விரைவிலகலுவீர்கள்; உங்களுக்குண்டான இந்தலாபம் மிகவும் அழகானதேயாம் என்றான்.—எ-று.

உங்களெண்ணம் இவ்விடத்தில் நிறைவேறாது என்று குறிப்பித்தான் என்க. (உசஙு)

மூண்டதொல் விதியினான் முடிந்த மன்னுயிர்
மீண்டுதம் மியாக்கையுண் மேவுமென்னினு
மீண்டெனை மாறுகொண் டிகல்செய் கின்றவர்
மாண்டிடு மாறலான் மற்று முய்வரோ.

(இ-ள்.) போகூழினாலுபகரிக்கப்பட்ட தத்தங் கருமவினைவால் இறந்துபட்ட மன்னுயிர்கள் பின்னரும்தமது பழையசரீரத்தை அடையுமாறினும் இவ்விடத்திலென்னுடன் பகைத்துப் போர்புரிபவர்கள் இறந்துபடுவரேயன்றி வேறுவழியினாலும் உய்ந்து போவார்களா மாட்டார்கள்.—எ-று.

இறந்தவர் பின்னர் முன்னையவுடலை அடையார் என்பது துணிவுமுண்மையுமாதலால் அதனை யுறுதிப்படுத்தி, அபூர்வமாக ருச்சகமுனிவன் விருத்தையென்னும் மங்கையை முன்னுடலிற்புகுத்தி எழுப்பியதுபோல எங்கேனு நிகழினும் என்னொடு பொருதார் பிழையாரொன்றானென்க. (உசச)

என்றிதை யரிமுக னியம்ப வெம்பிரா
னன்பெருந் தூதுவ னகைசெய் தங்கையின்
மன்பெருஞ் சிலையினை வணக்கி வாளியோ
ரொன்பதொ டொன்பதை யுரத்திற் றூண்டினான்.

(இ-ள்.) என்றிவ்வண்ணமானவைகளை யெடுத்துச் சிங்கமுகனுரைக்க விவனுரைத்தனவனைத்தையுங் கேட்ட எம்பெருமானது நல்ல பெரிய தூதுவனான வீரவாகுதேவன் அச்சிங்கமுகவனுரைத்தனவற்றைக்கேட்டு அச்ச முதலிய வடையாமல் அவனை அவமதித்ததைக் குறிப்பிக்கப் புன்னகைசெய்துகொண்டு தனது அகங்கையிற்சேர்த்துப் பிடித்துள்ள பெரிய வில்லினை வளைத்து அதனில் பதினெட்டம்புகளை வைத்து அவன் மார்பிற்படுமாறு விட்டனன்.—எ-று. (உசரு)

விரைந்திடு செலவினால் விசிக மேவலா
னுரந்தனிற் படுதலு மொசிந்து வீழ்ந்தன
விரந்திடு தொழிலவ ரின்மை யாளர்போற்
கரந்தவ ரியற்கையைக் கருதி மீள்வபோல்.

(இ-ள்.) விரைவாகச் செல்லுஞ் செல்கையால் அப்பதினெட்டம்புகளும்பகைவனாகிய சிங்கமுகவசுரனுடைய மார்பிற்சென்று படுதலும் அவை அவன் மார்பைத் தொளைபுரியாமற்றளர்ந்து இரப்பாளிகள் ஈவார் வீடென்று கருதிச்சென்றவிடத்து இல்லத்

தோ ருலோபகுணத்தால் ஒளித்துக்கொண்டால் ஒய்ந்து திரும்புமாபோல கீழே விழுந்தன.—எ-று. (உகசு)

முருகன தேவலான் முன்னம் விட்டிடு
பொருகணை யகலமேற் புகாது வீழ்தலு
மரிகெழு முகமுடை யவுணர் நாயகன்
கரமிசை யிருந்ததோர் கதையொன் றேவினன்.

(இ-ள்.) குமாரசுவாமியினுழியனுன வீரவாகுதேவன் முன்னே விட்ட போர் புரியுமம்புகள் தனது மார்பினுனுழையாது ஒடிந்து விழுதலும் சிங்கத்தின் முகம் போலும் விளங்கா நின்ற முகத்தினையுடைய வசுராதிபன் வீரவாகு தேவன்மீதுபின் னுந் தனது கையிலிருந்த வொப்பற்றவொரு தண்டத்தினை யேவினன்.—எ-று. (உகஎ)

ஏவிய தண்டினை யேந்த லீரிரு
தூவயில் வாளியாற் றுண்டஞ் செய்திடா
வோவரும் பான்மையா லொராயி ரங்கணை
தேவரை யலைத்தவன் சிரத்தி லோச்சினன்.

(இ-ள்.) சிங்கமுகாசுரன் விட்ட தண்டத்தை வீரவாகுதேவன் தூய்மையும் கூர்மையும் வாய்ந்த நான்கம்புகளாற்றுண்டாக்கிப் பின்னர் கெடுதலில்லாதவண்ணமாய் ஒரு ஆயிரமம்புகளைத் தேவர்களைத் துன்பப்படுத்திய சிங்கமுகாசுரனுடைய தலைகளிற் படும் வண்ணம் விட்டனன்.—எ-று. (உசஅ)

சிரம்படு கின்றதோர் செய்ய வாளிகள்
பரம்படு பலதுணி பட்டு வீழ்ந்தன
வுரம்படு மவுணர்க ளுறைதற் கொத்தமுப்
புரம்படு கின்றதோர் பூழி யாமென.

(இ-ள்) வன்மைபொருந்திய அவுணர்கள் வாசஞ்செய்தற்கு உசிதமாயிருந்த திரிபுரங்க ளழிந்த காலத்திலுண்டான புழுதியைப்போல சிங்கமுகாசுரனுடைய சிரங் களிற்பட்ட செவ்விய வம்புகள் கனமற்ற பலதுண்டுகளாக வொடிந்துவிழுந்தன.-எ-று.

வீரவாகுதேவன்விட்ட அம்புகள் வெகுவிரைவிற் சிறுதுண்டுகளாகவாகி யழிந்ததென்பார் முப்புரம் படுகின்றதோர் பூழியாமெனப் "பரம்படு பலதுணிப்பட்டு வீழ்ந் தன" என்றார்.

பரம் - பாரம். படுதல்-கெடுதல். பலதுணி-அநேகவணுப்பொடி. (உசகூ)

பொன்றிகழ் வடிக்கணை பொடிப்ப வின்னுமுன்
னின்றமர் புரியுமோ நென்னற் றூதுவ
னன்றெென வரிமுக னகைத்துத் தன்கையின்
மின்றிகழ் சூலவே றிரித்து வீசினன்.

(இ-ள்.) பொன்மயமாகவிளங்கும் வடிக்கப்பட்டவம்புகளழிந்தபின்னும் நேற்று வந்த தூதுவனாகிய இவன் இன்ன நமதெதிரே யஞ்சாது நின்று போர்புரிவானே? நல் லது என்று நகைத்தவனாய் சிங்கமுகவசுரன் தன்கையிலிருந்த ஒளிவிளங்குகின்ற சூல வேற்படையைச்சுழற்றி வீரவாகுதேவன்மீது படும்வண்ணம் எறிந்தனன்.—எ-று.

வடிக்கணைகள் பொடிக்கப்பட்ட சிறுதுண்டுகளாகவாயினமையைக் கண்டவுட னேயே போர்க்களம்விட்டகலவேண்டியவிவன் இன்னம் இங்கு நிற்கின்றானே இனி இவன்நின்றுபொருதலைக் காண்கின்றேனென்றான் என்பார் "பொன்றிகழ் வடிக்கணை பொடிப்ப வின்னுமுன் னின்றமர் புரியுமோ நென்னற் றூதுவ னென்றான்" என்றார்.

காசினி யெரிகிளர் காட்சித் தாலென
வாசினி தனில்வரு சூலத் தாற்றலுந்
தேசுடை நிலைமையுந் திறனு நோக்கியே
விசின னெதிருற விசிக மாயிரம்.

(இ-ள்.) உலகில் தீப்பற்றியெரிந்த தன்மையைப்போல ஆகாயவீதியில் வராநின்ற சூலத்தின் வன்மையும் அதனிற்பொருந்திய அக்கினிச்சுவாலையின் நிலையும் வன்மையும் ஆதிய அனைத்தையும்பார்த்து அதனை அழிக்கும்வண்ணம் அதற்கெதிராய் ஆயிரமம்புகளை விட்டனன்.—எ-று.

பெருந்தீயினையுடையதச்சூலம் என்று விளக்குவான் "காசினி யெரிகிளர் காட்சித்தாலென" என்றார். (உஉ௧)

நெட்டிலைச் சூலவே னிமலற் கன்பினோன்
விட்டிடு பகழியை விட்டு மேற்செலப்
பட்டது நோக்கினன் பரிந்து பின்னருந்
தொட்டன னாயிரஞ் சுடர்கொள் வான்கணை.

(இ-ள்.) நெடிய நுனியிலைவடிவமானதுமான சூலவேற்படையானது நின்மலரான குமாரசுவாமிக்கன்பனான வீரவாகுதேவன்விட்ட அம்புகளாயிரத்தையுமழித்துத் தன்னெதிரோவராநிற்பதைப்பார்த்துப் பரிந்து பின்னரும் ஒளிபொருந்தியதும் உயர்ந்ததுமான ஆயிரமம்புகளை விட்டனன்.—எ-று.

தான்விட்ட ஆயிரம் அம்புகளையும் அழித்து எதிர்நோக்கிவரும் சூலப்படைக் கஞ்சாதும் மனமிடையாதும் ஊக்கங்கொண்டுநின்று பின்னுமம்புகளைவிட்டுப் பொருதானென்பார். பரிந்து - என்றார். பரிதல் - விருப்பங்காட்டல். (உஉஉ)

ஏவிய வெல்லையி லெதிரும் வாளியைத்
தூவுறு கொன்னுனைச் சூலஞ் சிந்தியே
மேவலர் பரவுறும் வீர வாகுமேற்
றேவரு மருளுறக் கடிது சென்றதே.

(இ-ள்.) சிங்கமுகாசுரன் விட்டவுடனே தன்னெதிரில் வராநின்ற அம்புகளை, ஊனளாவிய வலிய நுதியினையுடைய சூலமழித்து, பகைவர் புகழும் வீரவாகுதேவன் மீது தேவர்களுமருட்சியடையும்வண்ணம் விரைவாகச்சென்றது.—எ-று.

அழிவற்றவன், சிவகுமாரன், பேராற்றலினன் என்னுமித்தகையதன்மைகளை வீரவாகுதேவன்பாலுணர்ந்திருந்தும் இச்சூலமிவனைக் கொல்லுமோ என்று ஐயுற்றனரென்பார் தேவருமருளுற - என்றும்மைகொடுத்துக்கூறினர். தேவரில் வந்த வும்மை சிறப்புப்பொருளது. (உஉ௩)

இலக்கரு நடுங்கின ரெண்ம ரேங்கியே
கலக்கம தடைந்தனர் கணங்கள் யாவரு
மலக்கணுற் றிரங்கின ரமர ரிப்படை
விலக்கரி தேகொலென் றுயிர்த்து விம்மினர்.

(இ-ள்.) அச்சூலஞ்செல்வதைக்கண்டு இலக்கம் வீரர்களும் நடுங்கினர்கள், எண்மர்களும் இதென்னசெய்யுமோவென்றேங்கிக் கலக்கமடைந்தார்கள், கணங்களெல்லாந் துன்புற்றிரங்கினர்கள், தேவர்கள் இச்சூலப்படை பிறவாயுதங்களால் விலக்கக்கூடாமையானதுகொல் என்று கூறிக்கொண்டு பெருமூச்சுவிட்டு விம்மினர்கள்.-எ-று.

போர்புரிதற்குரிய எல்லாவாயுதங்களையு நிரம்பவுடையவன் வீரவாகுதேவன் என்பதை அறிந்துள்ளவராதலால் தேவர் "இப்படை விலக்கரிதேகொல் என்றார்" என்றார். (உஉ௪)

வேறு.

கோள்கொண்ட பகழிகளின் கொலைகொண்டு நிலைகொண்ட
தோள்கொண்டு செல்லவருஞ் சூலத்தின் றிறநோக்கி
நீள்கொண்ட லன்னதொரு நீலமிடற் றவன்தந்த
வாள்கொண்டு குறைத்திட்டான் வலிகொண்ட தகலாதான்.

(இ-ள்.) சொல்லுந்தொழிலைத் தன்னிடத்திலுள்ள அம்புகளின் கொலையைக் கொண்டுசெல்லுமாறு வருகின்ற சூலவேற்படையின் றன்மையைப்பார்த்து வன்மையானதாகக் கொள்ளப்பட்ட வியல்புகளினின்றும் இடையில் விலகாத வீரவாகுதேவன் நீளுகின்ற கரிய மேகநிறம்போலும் கருநிறம்வாய்ந்த சிகண்டத்தினையுடைய பரமேசுவரன் றனக்களித்துள்ள வாட்படையையெடுத்து அதனை இரண்டு துண்டாக வெட்டினான்.—எ-று. (உஉரு)

சூலம்போ யிற்றடலுந் துணைவர்களா யுள்ளோரு
ஞாலஞ்சேர் பூதர்களு நனிமகிழ்வு சிறந்தனரா
லாலம்போந் தடர்த்திடலு மமலனுண்டு தமைக்காத்த
காலம்போ லமரரெலாந் துயரம்போய்க் களிசிறந்தார்.

(இ-ள்.) வீரவாட் படையினால் வெட்டப்பட்டுச் சூலமானது இரண்டுதுண்டு பட்டழிதலும் அதனைக்கண்ட துணைவர்களாகவுள்ளவர்களும் பூவுலகத்தையடைந்த பூதவீரர்களும் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள். தேவரனைவரும் தங்களை முன்னாளில் ஆலகாலவிடமானது வந்து வருத்துதலும் அதனைச் சிவபெருமானுண்டு தங்களைக்காத்தருளிய காலத்திற்போல துன்ப நீங்கிக் களிப்பின் மிக்கவர்களாயினார்கள்.—எ-று.

சூலமிருதுணிப்பட்டவுடனே தேவர்களடைந்த மகிழ்ச்சிக் களவில்லை என்பார், "ஆலம்போந் தடர்த்திடலு மமலனுண்டு தமைக்காத்த - காலம்போலமரரெல்லாந் துயரம்போய்க்களிசிறந்தார்" என்றார். (உஉசு)

அக்காலை வெள்ளிமலை யளிக்குநந்தி கணத்திறைவன்
மெய்க்கால வடவையினும் வெகுளியுறு பெற்றியனா
யிக்காலை யிவனுயிரை யானேயுண் குவனென்னா
மைக்காலன் றனைமுடித்த வள்ளறனிப் படைகொண்டான்.

(இ-ள்.) சூலவேற்படை இருதுணியாகிய அப்பொழுது வெள்ளிமலையைக் காக்கின்ற நந்தி கணங்களுக் கிறைவனாகிய வீரவாகு தேவன் பிரளயகாலத்திற் சீறியெழுகின்ற வடவைத்தீயினும் சீற்றமதிகரித்த தன்மையுடையவனாகி, இப்பொழுது இவனுயிரினை யானே யுண்கின்றேனென்று கரிய நிறவடிவினனான காலனென்பவனைக்கொன்ற வள்ளலான சிவபெருமானுடைய ஒப்பற்ற ஆயுதத்தினைக் கையினிலெடுத்தான்.—எ-று.

கரியகாலனைக் கொன்றவனாயினும் தன்னை அடைந்த அன்பர்கள் விரும்பியவைகளை உடனே அளிப்பவனென்றும் இறந்துபட்டகாலனையும் திருமாலாதியரின் வேண்டுகோட்கிரங்கி மீட்டுமுயிர்ப்பித்த தயாளகுணசீலனென்றும், ஆய்வார்க்குச் சிவபெருமானுடைய தன்மைவிளங்கும்வண்ணமும் கொலையாளியல்லன் என்னும் வண்ணமும் விளக்குவான் "மைக்காலன்றனைமுடித்த வள்ளல்" என நயம்படவுரைத்தனரென்க.

எந்திரித்த விருக்கைதனி லிருத்தியே கருவிகளான்
மந்திரத்தின் விதிமுறையின் மனப்படுபூ சனையியற்றி
யந்தரத்தி லிமையவர்க்கு மரியயற்கும் வெலற்கரிய
சுந்தரத்தோ ளரிமுகனை யடுதியெனத் தொழுதுய்த்தான்.

(இ-ள்.) தானெடுத்த வச்சிவாஸ்திரத்தினை அதனதிதேவதைக்குரிய எந்திரமெழுதி அதன்கண் அதனை வைத்து உபகரணங்களாலும் மந்திரத்தினாலும் விதிவழியாய் மனசம்பந்தமான பூசையைச்செய்து ஆகாய வாசிகளான தேவர்களுக்கும் அரியயர்களுக்கும் வெல்லுதற்கு அருமையான பேராற்றலினனான அழகிய தோள்களையுடைய சிங்கமுகாசுரனென்பவனைக் கொல்லுவாயாகவென்றுவணங்கி யுரைத்துவிட்டனன்.—எ-று.

எந்திரம், பஞ்சாட்சரயந்திரம். கருவிகள், பத்திர புட்பங்கள், பழங்கள், ஆர்க்கிய பாத்தியாசமனீயபாத்திரங்களாகிய. யந்திரம் உபகரணமுதலியவைகளை மானதமாகவமைத்து மானதபூசை செய்தானேயன்றி வெளிப்பூசை செய்தானில்லை என்பார் "மந்திரத்தின் விதிமுறையின் மனப்படுபூசனை யியற்றி" என்றார். (உஉஅ)

உய்ப்பதொரு படையழல்கான் றுலகம்வெருக் கொளவரலு
மெப்படையோ வீதென்று னிமையவர்தம் படைவென்றான்
றுப்படையுஞ் செஞ்சடிலத் தோன்றல்படை யெனத்தெரியா.
வப்படையோ வடுவதென வண்டம்வெடி படநகைத்தான்.

(இ-ள்.) வீரவாகுதேவனால் விடப்பட்ட சிவாத்திரமானது அக்கினியைக் கக்கிக்கொண்டுலகமனைத்தும் அஞ்சுமாறு வருதலும் அதனைக்கண்டு தேவாத்திரங்களனைத்தையும்வென்ற சிங்கமுகன் இது எந்தப்படையோ? என்று கூறினவன் இது மேன்மைபொருந்திய செவ்விய சடாபாரத்தினையுடைய சிவபெருமானுடைய அத்திரமென்று தெரிந்துகொண்டு நம்மை அவ்வாயுதமோ கொல்வது என அண்டம் வெடிபடும் வண்ணம் சிரித்தான்.—எ-று.

சிவாத்திரமானது கொல்லவல்லதேனும் தன்னையது கொல்லாதென்றும் தன்னைக் கொல்வது வேற்படையேயென்றும் வருஞ்சிவாத்திரத்தைத் தடுக்கத் தானுஞ் சிவாத்திரமுடையவனாகவிருத்தலை யுணராது பகைவன் வாளாவிதனைவிட்டான் என்றும் கருதிப் பரியாசமாகச் சிரித்தானென்பார். "அப்படையோவடுவதென வண்டம்வெடிபட நகைத்தான்" என்றார். (உஉகூ)

அற்பட்ட புலனுடைய வரிமுகத்தன் றுரனேற்று
முற்பட்ட பகற்கொண்ட முக்கணான் றனதுபடை
யெற்பட்ட மணிக்கடகத் தொருகரத்தி லிருந்ததனைச்
சொற்பட்ட மந்திரத்தால் வழிபட்டுத் தூண்டினனால்.

(இ-ள்.) இருளடைந்த வறிவினனான சிங்கமுகனென்பவன் தானே தவஞ்செய்து முன்னாளில் பெற்றுள்ள திரிலோசனரான சிவபெருமானுடைய அஸ்திரமாய் ஒளிபொருந்திய மணிகளழுத்தியுள்ள கடகமணிந்த வொருகையிலிருந்ததனைப் புகழ்பொருந்திய மந்திரத்தால் வழிபாடு செய்றுவிட்டனன்.—எ-று. (உ௩௦)

தூண்டலுறு பான்படையுந் தொல்லைவரு மப்படையு
மீண்டியெதி ரெதிர்துன்னி யிணைகொண்டோ ரிருதலைவர்
காண்டகைய கேண்மையினாற் கடிதுவந்து கலந்தேபின்
மீண்டிடுவ தேபோல விடுத்தவர்பான் மேவினவால்.

(இ-ள்.) சிங்கமுகாசுரன்விட்ட வத்திரமும் இவன் விடுதற்குமுன்னே வீரவாகுதேவனால் விடப்பெற்ற அம்பும் நெருங்கி ஒன்றற்கொன்று எதிரெதிராகி சமானமான இரண்டு தலைவர்கள் ஒருவரையொருவர் காணவேண்டுமென்னுநேயத்தால் விரைந்துவந்து கலந்து திரும்பிப்போமாறுபோல விட்டவிருவரிடமே திரும்பிச் சென்றன.—எ-று. (உ௩க)

வேறு.

தன்படை மீடலுஞ் சயங்கொண் மொய்ம்பினன்
றுன்புடை மனத்தனுய்ச் சூர னென்பவன்
பின்புடை யானொடு பேசப் பின்னொரு
முன்புடை யாரிலை யென்று முன்னினான்.

(இ-ள்.) தனது சிவாத்திரந் திரும்ப வந்தவுடனே வீரவாகுதேவன் துன்பம் பொருந்திய மனதுடையவனுய் சூரபன்மனென்றுரைக்கு மவனது தம்பியான இச்சிங்க முகனொடு போர்புரிதற்கு இனி ஒரு முற்பட்டவர் எவருமில்லை என்று கருதினான்.—எ-று. (உகூஉ)

ஆற்றலிற் குறைவில னழிவுறு தமர்
பேற்றினிற் குறைவிலன் பிறரை யட்டிடு
கூற்றினிற் குறைவிலன் கோடி கூற்றுவ
ரேற்றெதிர் மலையினு மிமைப்பிற் சொல்வனால்.

(இ-ள்.) இவன் வன்மையிற் குறைவில்லாதவன், அழிவில்லாமல் நீடுழி வாழத் தக்க பேற்றினிற் குறைவில்லாதவன், பிறரைக் கொல்லுகின்ற எமனைக்காட்டிலுந் தாழ்ந்தவனல்லன், இவனொடு பகைத்து ஒரு கோடிக் கூற்றுவர்கள் எதிர்த்துப் போர் புரியினும் இவனவர்களை ஒரு கணநேரத்திற்கொல்லுவான்.—எ-று.

ஒருகூற்றுவனே மூன்றுலகங்களினு முள்ளவர்களைக் கொலைபுரிபவன். இவனோடு கோடிகூற்றுவர்கள் போர்புரியினும் அவர்களை யிவன் அலட்சியமாக வதைப்பானென்று சிங்கமுகனுடைய பேராற்றலினை வீரவாகுதேவன் உள்ளபடி புகழ்ந்தது காண்க. கூற்றுவன் - யமன். (உகூகூ)

அவன்பெரு முயற்சியே யாற்றலா மென்கோ
தவங்களின் வன்மையே வன்மைதா னென்கோ
சிவன்புரி வரமதே சீரிதா மென்கோ
வெவன்பெரி தென்றியா னிசைக்க வல்லனே.

(இ-ள்.) இவனடைந்துள்ள முயற்சியே இவன் வன்மையென்று கூறுவேனோ அதுவல்ல, இவன் முயன்றுசெய்த தவங்களின் வன்மையே வன்மைதானென்று கூறுவேனோ, சிவபெருமான் இவனுக்களித்த வரத்தினாலேயே இவனுக்கு இச்சீர் என்று கூறுவேனோ, இவைகளில் யாதினைப்பெரியது என்று யான் கூறுமாறு வல்லபமுள்ளவனாவேன்.—எ-று.

என்னா லொன்றுமுரைக்க வியலாதென்று கூறினான் என்க. (உகூச)

விடலுறு பகழியான் மெய்யி லூறிலா
னடலுறு படையினு மழிவு பெற்றிலான்
கொடியதோ ரரிமுகன் குமரன் செங்கையிற்
படைகளி னன்றியே படுகி லானரோ.

(இ-ள்.) என்னால் விடப்பட்ட வம்பினால் தன்னுடலிலொருசிறிது மூறுபாடில்லாதவன் இதுநிற்க, தடையின்றிக் கொல்லுஞ் சிவாத்திரத்தினாலும் அழிவினை யடைந்தானில்லை. ஆதலால் கொடியவனாகிய விச்சிங்கமுகன் குமாரப்பெருமானது செவ்விய திருக்கரத்திலுள்ள திருவுடம்பிடிமுதலியவாயுதங்களாலன்றியழியான்—எ-று.

எப்படையினுஞ் சிறந்தது சிவாத்திரமென்று விளக்குவான் "அடலுறுபடை" என்றார். (உகூரு)

தீயவ னவியைச் சிந்தல் கூடுறு
தாயினும் வெஞ்சம ராற்றி யிங்கிவன்

சேயுயர் தேரினைப் படையைச் சேனையை
மாய்வுறு விப்பனல் வல்லையா னென்றான்.

(இ-ள்.) இக்கொடியவனதுயிரினை என்னாற் சிதைத்தற்கியலாது, ஆயினும் யான் இவனொடு கொடும்போர்புரிந்து இவ்விடத்தி லிவனுடைய செவ்வியவுயர்ந்த இரதங்களையும் ஆயுதங்களையும் சைநியங்களையும் விரைவிலழிப்பேனென்று கூறினான்.—எ-று.

இவனைக் கொலைசெய்தல் என்னாலாகாதெனினும் இவன் மனதிற்குத் துன்பத்தினை உண்டாக்குதற்கு என்னாலாமென்று கூறினனென்று குறிப்பாலுணர்க.(உ௬௬)

இத்திற மிளையவ னியம்பி யேழிரு
பொத்திரந் தூண்டியே பொருவில் கேசரி
வத்திர முடையவன் வைய முந்துவான்
சித்திர நெடுந்தலை சிந்தி நீக்கினான்.

(இ-ள்.) என்னாலிவனை யழிக்கமுடியாதேனும் இவனுடைய யானை சேனையாதிகளை விரைவிலழிக்கின்றேனென்று இவ்வண்ணம் வீரவாகுதேவன் உரைத்துப் பதினான்கு அம்புகளைத் தனது வில்லில்வைத்து விடுத்து ஒப்பற்ற சிங்கமுகமுடையவனது இரத நடாத்துஞ் சாரதியின் அழகிய நெடிய தலையை அறுத்தகற்றினான்.—எ-று. ()

சாரதி தலையது தரையில் வீழுமுன்
சூரொடு தோன்றினன் சுளிந்தொர் தண்டினை
யோரிமை யொடுங்குமு னுருமி னுய்த்தனும்
வார்கழ லிளையவன் மருமம் பாய்ந்ததே.

(இ-ள்.) சாரதியின் தலையானது அறுபட்டுத் தரையில் விழுதற்கு முன்னே சூரபன்மனுடன் பிறந்த சிங்கமுகவசுரன் கோபங்கொண்டு ஒரு தண்டாயுதத்தை எடுத்து ஒரு இமைப்பொழுதிற்குள் இடி இடித்தாற்போல ஆரவாரத்துடன் விடுதலும் அத்தண்டம்வார்ந்த கழலணிந்த வீரவாகுதேவனுடைய மார்பிற்சென்றுபட்டது.—எ-று.(உ௬அ)

விடலருந் திறலுடை வீர வாகுவின்
றடமிகு முரம்புகு தண்டஞ் சாளரத்
திடையிடை கதிர்வரு மெல்லை காணுறும்
பொடியென லாகியே புகையிற் போயதே.

(இ-ள்.) விடுதற்கரிய வாற்றலினையுடைய வீரவாகுதேவனது மிகுந்த விசாலமான மார்பிற்புகுந்த தண்டாயுதமானது சாளரங்களினிடைவெளிகளிற் சூரியனொளி பாயுங்காற் காணப்படுகின்ற சிறிய அணுப்பொடிகளைப்போல சிதைந்து புகைபோலவாகி யகன்றது.—எ-று.

சிங்கமுகன்விட்ட தண்டாயுதத்தினால் வீரவாகுதேவன் சிறிதுமூறு அடைந்தானில்லை யென்பார் "உரம்புகுதண்டம் சாளரத்திடையிடை கதிர்வருமெல்லைகாணுறும் பொடியெனலாகிப் புகையிற்போயது" என்றார். (உ௬௯)

தோட்டுணை வாகையான் சுளிந்து துண்ணென
வோட்டுறு நெடுங்கணை யுய்த்தொ ராயிர
மோட்டுடை விறலரி முகத்த னேறிய
சேட்டுடை மணிநெடுந் தேரை வீட்டினான்.

(இ-ள்.) பின்னர் வீரவாகுதேவன் சீற்றங்கொண்டு விரைவாகச் செல்லுகின்ற நெடிய அம்பினை விட்டு உயர்ந்த ஆயிரமுகங்களையுடைய வெற்றிபொருந்திய சிங்கமுகவசுரனேறிய அழகு பொருந்திய மணியயமான நெடிய இரதத்தினையழித்தான்.—எ-று.

தோழிந் திடுதலு மார்த்துச் சிங்கனை
யாருயிர் கொள்ளுது மற்ற மீதெனுப்
பாரிடர் வரைகளும் படையும் வீசியே
சாருற வளைந்தனர் சமரின் முந்தினர்.

(இ-ள்.) வீரவாகுதேவன் விட்ட ஆயிரமம்புகளால் இரதமழிந்தவுடனே பூதர்கள் ஆரவாரஞ் செய்துகொண்டு சிங்கமுகாசுரனைக் கொல்லுதற்கிதுதான் தருணமென்று மலைகளையும் மரங்களையு மாயுதங்களையுமெறிந்து போரின்முற்பட்டு அவனருகினராக வளைந்துகொண்டார்கள்.—எ-று.

எப்பொழுது தருணமென வெதிர்பார்த்த பூதருக்குத் தேரழிந்ததருணமே சிங்கமுகனைக் கொல்லவல்ல சமயமாகத் தோற்றியதென்பார். 'அற்ற' மென்னுமொழியால் நயம்பட விளக்கினர். அற்றம் என்பதற்குக் கடைசியென்றுகொண்டு இவனைக்கோறற்கிதுவே கடைசிக்காலம் என்று கருதினரென்று கோடினுமிழுக்காது. (உசுக)

வெய்யவ னங்கது வெகுண்டு நோக்கியே
செய்யதோர் மணிநெடுஞ் சேமத் தேர்புகா
வையிரு நூறுவில் லதனை யாயிரங்
கையினி லெடுத்தனன் கடிதின் வாங்கினன்.

(இ-ள்.) கொடியவனாகிய சிங்கமுக னவர்கள் தன்னைவளைந்துகொண்டதைப்பார்த்து, செவ்விய ஒரு நெடிய மணிமயமான தேரிற்புகுந்து ஆயிரம்விற்களை ஆயிரங்கைகளிலெடுத்து விரைவாக வளைத்தனன்.—எ-று.

"வெய்யவனங்கது வெகுண்டு நோக்கி" என்பதற்கு இவர்கள் எண்ணிவந்த வதனையும் போர்புரிவதனையும் சூழ்ந்துகொண்டதனையும் கோபத்தோடு பார்த்து என்று விரிக்கினும் ஆம். (உசுஉ)

கருமணி வரைபுரை காமர் வில்லெலா
மரவுழற் குணங்கள்கொண் டவுணன் கையுற
திருமுடி பலவுடைக் கிரியிற் செல்லின
முருகெழு மின்னொடு முறுவ போன்றவே.

(இ-ள்.) கரிய மணிமயமான வரையனைய அழகிய வில்லனைத்தும் அரவங்களையொத்த நாணிகளா லிறுக்கிக் கட்டப்பட்டு அசுரனான சிங்கமுகனுடைய கைகளிலமர்ந்திருத்தல் அழகிய பல சிகரங்களையுடைய மலையில் மேககூட்டங்கள் நீளம் விளங்காநின்ற மின்னற்கூட்டங்களுடனே தங்கியிருத்தலை யொத்தன.—எ-று. (உசுங)

பிடித்திடும் விற்களிற் பிறங்கு நாணொலி
யெடுத்தன னெடுத்தலு முயிர்கள் யாவையுந்
துடித்தன வண்டமுந் துளக்க முற்றன
முடித்தலை பனித்தனன் முளரித் தேவனும்.

(இ-ள்.) பிடித்துள்ள விற்படைகளினின்றும் விளக்கமாக உண்டாகாநின்ற நாணோசையை யுண்டாக்கினன். உண்டாக்குதலும் உயிர்களனைத்தும் துடித்தன; அண்டமுநடுங்கின; பிரமதேவனும் தனது முடித்தலைகளை நடுங்கவிட்டனன்.—எ-று.

முடித்தலை-மகுடமணிந்த சிரசு. முளரித்தேவனென்பதனை அக்கினிதேவ னென்னினும் ஆம். (உசுச)

வணக்கிய விற்களின் மடங்கன் மாமுகன்
கணக்கில வாகிய கடல்கள் வானெழீஇத்

தணக்கில பொழிந்தெனச் சரங்கள் சிந்தலும்
பிணக்குவை யாயினர் பெயர்ந்த பூதர்கள்.

(இ-ள்.) வளைத்த விற்களில்வைத்து சிங்கமுகாசுரன் சணக்கற்றனவாகிய கடல்கள் ஆகாயவீதியிலெழுந்து விடாமல் மழைபொழிந்தாற்போல அம்புக்குவியல்களைச் சிதறுதலும், அவைகளால் அவனைக் கிட்டிப் போர்புரிந்த பூதர்கள் பிணக்குவியல்களாக வாயினர்.—எ-று.

ஊழிகால மேகங்களின் வருஷதாரைகளினும் அதிகமாகவிருந்தது சிங்கமுகனுடைய அஸ்திரவருஷ மென்பார் "கணக்கிலவாகிய கடல்கள் வானெழீஇத் தணக்கில பொழிந்தென" என்றார். (உசரு)

தாள்களுங் கரங்களுந் தலையுஞ் சிந்தினர்
கோளுறு தசையொடு குருதி சிந்தினர்
மூளைகள் சிந்தினர் முடியுங் கால்பொரப்
பூளைகள் சிந்தின போலப் பூதர்கள்.

(இ-ள்.) சிங்கமுகாசுரன் விட்ட அம்புக்கூட்டங்களால் ஊழிக்காற்றினுன்மோதப்பட்டுச் சிதைந்தழிந்த பூளைமலர்களைப்போல் பூதர்கள் கால்களுங் கைகளும் தலைகளுஞ் சிந்தினர், குற்றம் பொருந்திய ஊனுடனே இரத்தமுஞ்சிந்தினர், மூளைகளுஞ் சிந்தினர்.—எ-று. (உசசு)

தருப்பயில் பாற்கட றனது சீகரந்
திரைப்பெருங் கரங்களாற் சிந்தல் போன்றதா
லரிப்பெரு முகத்தவ னாயி ரங்கையாற்
றுரப்புறு கணைகளைத் தூண்டு கின்றதே.

(இ-ள்.) சிங்கமுகாசுரன் தனது ஆயிரங்கைகளால் பகைவரைத் துரத்துகின்ற அம்புகளை விடுவது மரங்களைத் தன்னிடத்துக்கொண்டு நின்ற திருப்பாற்கடலானது தனது திவலைகளை அலைகளாகிய பெரிய கைகளாற் சிந்துதலை யொத்தது.—எ-று.

கற்பகாதி மரங்களை யநேககாலந் தன்னுட்கொண்டு கிடந்ததாதலால் பாற்கடலைத் "தருப்பயில் பாற்கட" லென்றார். (உசஎ)

மண்டல நிரந்தன வானந் தூர்த்தன
வெண்டிசை மறைத்தன கிரிக ளீண்டுவ
தெண்டிரை யெங்கணுஞ் செறிவ வப்புறத்
தண்டமும் போவன வவுணன் வாளிகள்.

(இ-ள்.) அசுரனாகிய சிங்கமுகனால் விடப்பட்ட அம்புகள் மண்ணினிடங்களில் நிரந்தன, ஆகாயத்தைத் தூர்த்தன, எட்டுத்திசைகளையு மறைத்தன, அட்டதிசைகளிலுமுள்ள மலைகளை யடைவன, தெள்ளிய திரைகளையுடைய எக்கடல்களினும் நெருங்குவன, அடுத்த அண்டங்களினும் செல்வன.—எ-று. (உசஅ)

மருப்புயர் திசைக்கரி மருமம் பாய்வன
பருப்பத மேழையும் பகிர்வ மேருவாம்
பொருப்பையும் போழ்வன புணரி தோறமர்
நெருப்பையுந் தணிப்பன நீசன் வாளியே.

(இ-ள்.) நீசனான சிங்கமுகன்விட்ட அம்புகள் உயர்ந்த கொம்புகளையுடைய திசையானைகளின் மார்புகளிற் பாய்வன; சத்தகுலாசலங்களையும் பிளப்பன; மேருவாகிய மலையையும் பிளப்பன; கடல்கள்தோறும் இருக்கின்ற வடவை என்னும் நெருப்பையும் தணிப்பன.—எ-று. (உசக)

மாறுபட் டவன்விடும் வாளி மாரியா
லீறுபட் டிடாததோ ருயிரும் யாக்கைகள்
கூறுபட் டிடாததோ ருயிரும் கொம்மென
ஆறுபட் டிடாததோ ருயிரு மில்லையே.

(இ-ள்.) தேவரொடு பகைத்த சிங்கமுகாசுரன்விட்ட அளவில்லாதனவும் மழை போல்வனவுமான அத்திரவருஷத்தால் அழியாத சீவகோடிகளும் உடல்கூறுபடாதபிராணிகளும் கொம்மென்று கூறுபடாததான வுயிர்களும் பூமியந்தரமாதிய எவ்விடங்களிலும் இன்றும்.—எ-று. (உ௫0)

எண்படு மரிமுக னெடுத்த வில்லுமிழ்
புண்படு கணைமழை பொதிந்து போகுரு
விண்படு நெறியெலாம் விலக்கி மாற்றியே
யொண்புவி யாக்கிய துலகம் யாவையும்.

(இ-ள்.) புகழ்பொருந்திய சிங்கமுகாசுர னெடுத்துப்பிடித்துள்ள விற்களுமிழுகின்றனவும் புண்ணை யெதிரிகளுக்குண்டாக்குகின்றனவும் ஆன அம்புமழை நெருங்கி மூடிக்கொண்டு ஆகாயமார்க்க மனைத்தையுந் தடுத்துப் பழைய வியல்பினின்றும் மாற்றி உலகமனைத்தையும் ஒள்ளிய பூமியாகச் செய்தன.—எ-று. (உ௫க)

தாக்குறு மரிமுகன் சரங்கள் பாரிடர்
யாக்கைக ளுருவியே யெடுத்து நொய்தெனப்
போக்குறு கின்றன புலாவின் சூட்டினைக்
கோக்குறு சலாகையின் குழுவு போலவே.

(இ-ள்.) போர்புரியாநின்ற சிங்கமுகாசுரனுடைய அம்புகள் சூட்டிறைச்சியைக் கோத்துள்ள சலாகைக்கூட்டங்களைப்போல பூதர்களுடலிற்பட்டுருவி வன்மையும் திண்மையும் பெருமையும் வாய்ந்த பூதவீரர்களை அலட்சியமாக மேலெடுத்து மெல்லெனத் தள்ளுகின்றன.—எ-று.

ஒரு அம்பு அநேகம் பூதர்களைக் குத்தி எடுத்துச்சென்றது என்பார் "புலாவின் சூட்டினைக் கோக்குறுசலாகையின் குழுவுபோலவே" என்றார். (உ௫உ)

மெய்ந்நெறி யுணர்கிலார் வெறுக்கை பெற்றது
துன்னிய கிளைக்கொரு துன்ப மாதல்போ
லொன்னலன் விடுங்கணை யுலப்பின் றோடலாற்
றன்னுறு படைகளைத் தானுங் கொன்றவே.

(இ-ள்.) நன்மார்க்கங்களையறியாத மூடர்கள் செல்வமடைவார்களானால் அச்செல்வம் அவர்களைச் சூழ்ந்துள்ள உறவினருக்குத் துன்பமாக முடிதலைப்போல பகைவனான சிங்கமுகாசுரன்விட்ட அம்புகள் அளவற்றனவாக வோடுதலால் அவை அச்சிங்கமுகனுடைய படைகளான வசுரர்களையுங் கொன்றன.—எ-று.

நன்னெறி யுடையார் மாட்டெய்துஞ் செல்வமு மொருகாலத்திற் றுன்பம் விளைக்குமானால், தீநெறியுடையாரிடைப்படுசெல்வம் துன்புறுத்தாது விடுமோ விடா இதனை - "அறியாமையோடிளமை கூடுவதாமாங்கே - செறியப்படுவதாஞ் செல்வஞ்- சிறிய-பிறைபெற்ற வாணுதலாய் தானே யாடும்பேய்-பறைபெற்றாலாடாதோ பாய்ந்து" என்னும் பழமொழியாலுணர்க. (உ௫௩)

தீந்தொழி லரிமுகன் செறித்த வாளிகள்
வாய்ந்திடு சேணெறி மாற்றும் பான்மையாற்

காய்ந்திடுஞ் செங்கதிர்க் கடவுண் மேற்றிசைப்
போந்திலன் மீண்டிலன் புலம்பி நின்றுளான்.

(இ-ள்.) கொடிய செய்கையினனான சிங்கமுகன்விட்டவம்புகள்பொருந்திய ஆகாயமார்க்கத்தை அடைக்குந்தன்மையால் எறிக்காநின்ற செவ்விய கதிர்களையுடைய சூரியன் மேற்றிசைக்குச் சென்றானில்லை திரும்பக் கீழ்திசைக்குஞ் சென்றானில்லை, (பின்னை யாது செய்தானெனின்) இதுவென்னை யென்று புலம்பிக்கொண்டு நின்றனன்.—எ-று.

இடையே ஊடுருவிச்சென்றால் கேடு விளையுமென்னும் அச்சத்தால் போகாது நின்றான் பரிதி என்க. (உ௫௪)

கொம்பொடு பேரியுங் குணிலு மேனைய
வெம்படை யாவையும் விரவி மேற்செலக்
கம்புளுங் காண்டமுங் கனைந்து சுற்றிடச்
செம்புனல் கரும்புன லளக்கர் சென்றதே.

(இ-ள்.) கொம்புகளுடன் பேரிகைகளும் குறுந்தடிகளும் இவையன்றியுள்ள வெவ்விய எப்படைகளும் கலந்து மேலேசெல்லாநிற்பவுஞ் சங்குகளும் காண்டங்களும் இரைந்துகொண்டு சூழாநிற்பவும் இரத்தவெள்ளம் கரும்புனலினையுடைய கடலினை யண்டந்தது.—எ-று.

குணில் - ஒருசாதிப்பறைஎன்னினுமாம். காண்டம்-ஒருபறவை விசேடம். ()

இத்திற மரிமுக னியற்றும் போரினை
மெய்த்திறன் மொய்ம்புடை வீரன் காணுறாச்
சித்திரத் தவனெதிர் சென்று வாங்கினான்
கைத்தலத் திருந்ததன் கடவுள் வில்லினை.

(இ-ள்.) இவ்வண்ணஞ் சிங்கமுகன் செய்யும் போரினை உண்மையான வாற்றலினையுடைய வீரவாகுதேவன் பார்த்து ஆகாயமார்க்கமாக இரதத்திலச்சிங்கமுகனெதிரேசென்று கையிலிருக்கின்ற தனது தெய்வீகம்பொருந்திய வில்லினை வளைத்தனன்.—எ-று. (உ௫௬)

வாக்கிய சிலைதனில் வறிது நாணொலி
யாக்கின னுக்கலு மலைந்த தண்டமுந்
தீக்கிளர் குஞ்சியர் செருச்செய் தானவ
ரேக்கம தடைந்தன ரிரிந்து போயினர்.

(இ-ள்.) வளைத்த வில்லினில் சும்மா நாணோசையை யுண்டாக்கினனுண்டாக்குதலும் அண்டமு மலைந்தது; அக்கினி மயமாக விளங்குகின்ற சிரோரோமத்தினையுடையவரும் போர்புரிபவர்களுமான அசுரர்களும் ஏக்கங்கொண்டு விலகிப்போயினர்கள்.—எ-று. (உ௫எ)

மாக்களி னிருந்தவர் மதங்கொள் வெங்கரி
மேக்குற வைகினோர் தேரின் மேவினோர்
தாக்குறு படைகளுஞ் சயமுஞ் சிந்தியே
யாக்கைக ணடுக்குற யாரும் வீழ்ந்தனர்.

(இ-ள்.) வீரவாகுதேவனுடைய விண்ணோசையால் குதிரைகள்மீது இருந்தவர்களும் மதங்கொண்ட வெவ்விய யானைகண்மீதிருந்தவர்களும் இரதங்களிலிருந்தவர்களும் (ஆகிய இவர்கள்) பகைவர்மீது விடுகின்ற ஆயுதங்களும் வெற்றியுமிழந்து உடல்கள் நடுக்கங்கொள்ள அனைவருங் கீழ்விழுந்தனர்.—எ-று. (உ௫அ)

வேறு.

அவ்வ ழிப்பட நாஞெலி யுறுத்தியே யடலோன்
கைவ ழிப்படு சிலையினிற் கணைமழை சிதறித்
தெவ்வ ழிப்படு சீயமா முகத்தவன் செலுத்து
மெவ்வ ழிப்படு பகழியு மறுத்தன னிமைப்பில்.

(இ-ள்.) அவ்விதமாக அசுராதியர் மயங்கிவிழும் வண்ணம்காஞ்சையை யுண்டாக்கி வன்மையாளஞன வீரவாகுதேவன் கையினிடத்திற் பொருந்திய வில்லினில் அம்பு மழையைச்சிதறி, பகைவஞக வந்து நின்றுள்ள சிங்கமுகன் விடுகின்ற எவ்வித மான அம்புகளையும் இமைப்பொழுதிற்குள் வெட்டி யெறிந்தனன்.—எ-று. (உ௫௧)

பிரம ரெண்ணிலர் பயந்திடு முயிர்களைப் பின்ஞ
ளொருவ ஞகிய சண்ணுத ஞெலைக்குமா றெப்பச்
செருவ லாளஞ மிளையவன் பகழிகள் சிதறி
யரியின் மாமுகன் விடுகணைத் தொகையெலா மறுத்தான்.

(இ-ள்.) அளவற்றவர்களாகிய பிரமர்களாற் படைக்கப்பட்டுள்ள வுயிர்களைச் சங்காரகாலத்தி ஞெருவஞன சிவபெருமான் அழிக்குந்தன்மையைப்போல போரில் வல்லாளஞன வீரவாகுதேவன் அம்புகளைவிட்டு, சிங்கத்தின் சிறந்த முகம்போன்ற முக த்தினஞன சிங்கமுகாசுரன்விட்ட அம்பு கூட்டங்க ளனைத்தையும் அறுத்தனன்.-எ-று.

பிரமஞெருவன் நாராயணஞெருவன் என்று கொண்டுள்ளார் மதம் பாழ்பட. அளவற்ற பிரமர்கள் உண்டாக்கிய உயிர்களை ஏகஞகிய அரனே அழிக்குமாறுபோல என்ருர். பிரமநாராயண வுருத்திராதியர்கட் கிறைவஞன துரியப்பொருளே சிவபெருமானென் றுணர்க. இதனை வருந்தக்ஷகாண்டத்து விளக்குது மாண்டுக்காண்க. (உ௬0)

மிக்க நேமியிற் புவனியி னகலிரு விசும்பிற்
றிக்கின் மேருவின் வரைகளிற் றீயவன் பகழி
புக்க புக்கதோ ரிடங்களிற் றன்கணை பூட்டி
யக்க ணந்தனி லவன்விடு வாளிக ளறுத்தான்.

(இ-ள்.) சிறந்த கடலிலும் உலகத்திலும் அகன்ற பெரிய ஆகாயத்திலும் திக்குகளிலும் மலையிலும், அட்டகுலாசல முதலிய மலைகளிலும் பிறவிடங்களிலுமாகக் கொடிய சிங்கமுகாசுரனுடைய அம்புகள் சென்று புக்க ஒவ்வொருவிடங்களிலும் வீரவாகுதேவன் தனதம்புகளை விட்டு அந்தக் கணநேரத்திலேயே அச்சிங்கமுகன் விட்ட அம்புகளனைத்தையும் அறுத்தனன்.—எ-று. (உ௬௧)

புறத்த ராமென மன்னுயிர்க் கின்னலே புரியுந்
திறத்தன் வாளியை மைந்தனின் றட்டது தேவர்
குறித்து நோக்கியே சூர்முதற் கிளையெலாங் குமர
னறுத்த நாள்வரு மகிழ்ச்சியைக் கிடைத்துநின் ருர்த்தார்.

(இ-ள்.) பகைவர்களைப்போல நிலைபெற்ற ஆன்மகோடிகளுக்குத் துன்பத்தையே செய்யுந்தன்மையினஞன சிங்கமுகாசுரன் விட்ட வம்புகளை வீரவாகுதேவன் நின்றழித்ததனைத் தேவர்கள் ஆய்ந்துகண்டு சூரஞகிய முதல்வனுடைய பந்துவருக்கங்களனைத்தையும் குமரப்பெருமான் அழித்தருளிய (பின்ஞளில்) தினத்திலுண்டாகு மகிழ்ச்சியை யடைந்து ஆகாயத்தினின்று ஆரவாரித்தார்கள்.—எ-று. (உ௬உ)

அகழி யார்கலி சூழ்சிகரு முதுகரக ரடர்த்தோன்
றிகழி யானைகள் வெருவரு மரிமுகத் திறலோன்

பகழி யாவையு மட்டதோ வங்கவன் படைத்த
புகழி யாவையு மட்டதன் றேவெனப் புகன்றார்.

(இ-ள்.) அகழியாகிய கடலினை வளைந்த மதிலினையுடைய புராதனநகரமான வீரமகேந்திரபுரியை அழித்த வீரவாகுதேவன் (வன்மையினையுடைய யானைகள் அஞ்சுகின்ற சிங்கமுகாசுரனாகிய வீரனுடைய அம்புகளனைத்தையுமோ அழித்தது, அன்றும் பின்னெதனையெனின் அவ்விடத்தில் நிற்கும் அவ்வசுரனிதுகாறும் அடைந்துள்ள புகழனைத்தையும் அழித்தது அன்றோ? என்று வீரவாகுதேவனைப் புகழ்ந்தும் சிங்கமுகாசுரனை யிகழ்ந்தும் பேசினார்கள்.—எ-று.

வீரமகேந்திரபுரத்திற்குக் கடலே அகழன்றி வேறகழின்மையால் "அகழியார் கலிநொச்சி" என்றார். (உசுரு)

அள்ளல் செற்றிய வளக்கர்சூ ழாசுரத் தரசன்
றள்ள லுற்றிடு பகழியைத் தனதுகைச் சரத்தால்
வள்ள லத்துணை யறுத்தன னகற்றமற் றதனைக்
கள்ள லைத்ததா ரரிமுக மேலையோன் கண்டான்.

(இ-ள்.) சேறுசூழ்ந்த நீரினையுடைய கடலாற் சூழப்பெற்ற ஆசுரமென்னும் பெயரினையுடைய நகரத்தினையுடைய வசுரனான சிங்கமுகன்விட்ட அம்புகளை வீரவாகு தேவன் அப்பொழுதே தனது கையம்பினால் அறுத்தழித்தகற்றலும் அச்செய்கையைத் தேன்றுளிகளைச் சிதறாநின்ற மலர்மாலையணிந்த தோள்களையுடைய சிறந்த சிங்கமுகாசுரன் கண்டனன்.—எ-று.

கள்ளலைத்த தாரென்பதனை - வண்டுகள் குடைகின்ற மாலை என்று கொள்ளினுமாம். (உசுசு)

வில்லெ டுத்தது நின்பொருட் டாகுமால் விரைவின்
மல்லெ டுத்தநின் மொய்ம்பினைக் கரங்களை மார்பைப்
பல்லெ டுத்திடு தலையினை நாசியைப் பதத்தைச்
சொல்லெ டுத்திடு நாவினைச் சரங்களாற் றுணிக்கேன்.

(இ-ள்.) யானிப்பொழுது வில்லெடுத்தது உன்பொருட்டேயாம் இனி அதிக சீக்கிரத்தில் மற்போருக்குரியதாக வுயர்ந்துள்ள உன்னுடைய தோள்களையும் கைகளையும் மார்பினையும் பல்லென்பதனையகற்றி ஒன்றாக நிற்குந்தலையினையும் நாசியையும் கால்களையும் சொற்களைச் சொல்லாநின்ற நாவினையும் அம்புகளாலறுப்பேன்.—எ-று.

பல்லெடுத்திடுதலை என்பதனை - பற்களோடு கூடிய தலை என்னினுமாம். பற்கள் தலையொடு பொருந்தாமல் வேறுநிற்பனவாதலால் யாம் பல்லெடுத்திடுதலை யென்பதற்கு பற்களொழிந்ததலை என்றாம். (உசுஎ)

திரண்ட கையுளேன் சிலைத்தொழில் காட்டுறு செருவி
லிரண்டு கையுடை நீகொலா மென்முனை மேற்பாய்
முரண்ட னிச்சிலை தொட்டநின் கையினை முடித்துக்
கரண்ட முண்ணிய புரிகுவன் முந்துநீ காண.

(இ-ள்.) யான் நின்னைப்போலவன்றி அதிகமான வத்தங்களையுடையேன் விற்றொழிலைக் காட்டாநின்ற சண்டையில் இரண்டு கைகளையுடைய நீதானா என்னெதிரே வந்து எதிர்ப்பாய் வன்மையினையும் ஒப்பின்மையினையும் அல்லது ஒன்றாயுமுள்ள வில்லினைப்பிடித்த நினது கையினை நின்முன் நீ காணும்வண்ணம் காகங்கள் உண்ணுமாறு செய்வேன் என்றான்.—எ-று.

கையறுபட்டவனுக் குயிர்போகா தென்பதனை எண்ணி நின்னெதிரே நீ காணுமாறு நின் கையை வெட்டுவேனென்றான் என்க. (௨௬௬)

எமரி ருக்குறு மகேந்திர நகர்தனி லீண்டுஞ்
சமர கத்தினி லென்பெருந் தானைக டம்மிற்
குமரர் தங்களிற் கொற்றமாக் கொண்டன முற்று
முமிழு விக்குவ னுன்னுயிர் தன்னையா னுண்பேன்.

(இ-ள்.) எம்மவர்கள் வாழாநின்ற மகேந்திரபுரியில் நடந்த சண்டையில் எனது பெரிய சைநியங்களுள் குமரர்களாகவுள்ளவர்களில் நீ வெற்றியாகக்கொண்டன வனைத்தையும் கக்குவிப்பேன் அன்றியும் என்மக்களுயிரையுண்ட உனதுயிரையும் யானுண்பேன்.—எ-று.

நீ வெற்றியாக வுட்கொண்டனவற்றைக் கக்கவைப்பதுடன் நின்னுயிரை யானுண்டு பழிக்குப்பழி வாங்குவேன் என்றான் என்று சேர்த்துரைக்க. (௨௬௭)

என்னு மாற்றங்க ளரிமுக னிசைத்தலு மேந்தல்
பன்னு கின்றதென் பற்பல நினக்குள படையத்
துன்னு தானைகள் யாவையுஞ் செற்றுனைத் தூப்பே
னென்னு டைச்சிலை வன்மையைப் பார்த்தியா லென்றான்.

(இ-ள்.) என்பன வாதிய வசனங்களைச் சிங்கமுகனுரைத்தலும் அவைகளைக் கேட்ட வீரவாகு தேவனவனைப் பார்த்து நீயேன் அநேக விதமாகப் பேசுகின்றனை? இத்தகைய வசனங்களாற் பயனென்னை? யான் நின்னைச் சேர்ந்ததாகவுள்ள ஆயுதங்களை யேந்திய சேனைகளனைத்தையும் கொன்று உன்னையுமோட வடிப்பேன் என்னுடைய விற்போரின் வன்மையை இனி நீ காணக்கடவை என்றுரைத்தனன்.—எ-று. (௨௬௮)

சொற்ற மாத்திரத் தவுணனு ரழல்விழி தூண்டக்
கொற்ற வெஞ்சிலை பத்துநா றுருதலை குனித்துப்
பொற்றை யீர்ங்கணை யாயிரத் தாயிரம் பூட்டி
வெற்றி மொய்ம்புடை யொருவன்மேற் சென்றிட விடுத்தான்.

(இ-ள்.) வீரவாகு தேவனிவ்வண்ண முரைத்தவுடனே சிங்கமுகாசுரன் கண்களி லரிய தீப்பொறி சிதற சீற்றங்கொண்டு வெற்றிபொருந்திய வெவ்விய ஆயிரம்விற்களை ஏககாலத்தில் வளைத்து அவைகளில்பொன்றகடுகளழுத்திய சீதளமான ஆயிரமம்புகளை ஆயிரம் விற்களிலும் வைத்து ஒப்பற்ற வீரவாகுதேவன்மீது சென்று படும்படிவிட்டனன்.—எ-று.

பொன்றை எனற்பாலது எதுகை நோக்கிப் பொற்றை என நின்றது.
இது வலிக்குமிடத்து வலித்தல். (௨௬௯)

சீற்ற மிக்கநம் மிளையவன் சிலையெனக் கொண்ட
கூற்றை வாங்கியே பத்துநா றுயிரங் கொடுங்கோ
லாற்றன் மிக்கன தூண்டியே மேலவை யறுத்து
வீற்று மாயிர மாயிரம் பகழிகள் விட்டான்.

(இ-ள்.) உடனே சிங்கமுகனது செய்கையைக்கண்டு கடுங்கோபங்கொண்ட நமது வீரவாகுதேவன் தான் வில்லாகக்கொண்டுள்ள யமனை வளைத்து அதனிற்கொடிய பத்துநூறாயிரமம்புகளை வன்மைமிகுந்தனவாகவைத்துவிட்டுச் சிங்கமுகன் முன் விட்ட வம்புகளை அறுத்து பின்னும் பத்துநூறாயிரமம்புகளை விட்டனன்.—எ-று.

பகைவரையெஞ்ஞான்றுங் கொல்லுமியல்பினையுடைய வில்லென்று விளக்குவான் "சிலையெனக்கொண்ட கூற்று" என்றார். (௨௭௦)

நம்பி தொட்டிடு கணையினை மகேந்திர நகரோன்
றம்பி பத்துநா றுயிரங் கணைகளாற் சாய்த்து
வெம்பி யாயிர கோடிவெவ் வாளிகள் விடுப்ப
வெம்பி ராற்கிளை யோனுமக் கணையினை யெய்தான்.

(இ-ள்.) ஆண்மக்களிற்சிறந்த வீரவாகுதேவனால் விடப்பட்ட அம்புகளை வீர மகேந்திரபுரியையுடைய சூரபன்மனுக்கிளையவனான சிங்கமுகவசுரன் பத்திலக்கமம்புகளாலழித்துச்சிறி ஆயிரங்கோடி வெவ்வியவம்புகளை விடுப்ப, உடனே எம்பெருமானுர்க்கிளைய வீரவாகுதேவனும் அதே தொகையான பத்திலக்கமம்புகளை யெய்தனன்.—எ-று. (உஎக)

சூராவ ணிந்திடு குமரனுக் கிளையவன் கொடுங்கோல்
பராவ லன்விடு பகழியைப் பாரிடைப் படுத்தக்
கராச லங்களை யடுமுக னதற்குமுன் கணைக
ளிராயி ரந்தொடுத் தண்ணறன் சிலையினை யிறுத்தான்.

(இ-ள்.) சூரவமலர்மாலை யணிந்த குமரப்பெருமானுக்கிளையவனான வீரவாகுதேவன் விட்ட கொடியவம்புகள் வணங்கலனான சிங்கமுகனுடைய அம்புகளைக் கண்டதுண்டமாக்கிப் பூமியிலாக்கின உடனே யானைகளைக் கொல்லுகின்ற சிங்கத்தின் முகமுள்ள வசுரன் இரண்டாயிரமம்புகளை விட்டு வீரவாகுதேவனுடைய விற்படையை ஒடித்தனன்.—எ-று.

கராசலம் - ஆரியம். (உஎஉ)

மாறில் வெஞ்சிலை யிற்றுழி யிளையதோர் வள்ளல்
வேறோர் கார்முகம் வாங்குமுன் னகலத்தில் வெய்யோ
னூறு கோடி புங்கவங்களை யழுத்தலு நொய்தி
னூறு கோடியொத் திழிந்தன வகலிருங் குருதி.

(இ-ள்.) தவழுதலற்ற வெவ்விய வில்லொடிந்தவுடனே குமாரப்பெருமானுக்கிளையவனும் வள்ளலுமான வீரவாகுதேவன் வேறேயொரு வில்லெடுத்து வளைத்தற்கு முன்னே வீரவாகுதேவனுடைய மார்பில் கொடியவனான சிங்கமுகாசுரன் நூறுகோடியம்புகளை யழுத்துதலும், அகன்ற மிகுந்த இரத்தவெள்ளம் விரைவாகக் கோடியாறுகளைப்போல விழிந்தன.—எ-று. (உஎங)

குருதி யாகத்தி னிழிந்திடத் தன்சிலை குனித்துப்
பரிதி யொண்கதி ரென்னநூ றுயிரம் பகழி
கருதி விட்டிடக் கருதல னங்கது காணு
விருது நாண்முகி லாமென வவைதொடுத் திறுத்தான்.

(இ-ள்.) இரத்தம் மார்பினின்று மொழுகாநிற்பவும், அதற்கிளைக்காமல் வீரவாகுதேவன் தனது வில்லினை வளைத்துச் சூரியனுடைய ஒள்ளிய கதிர்களைப்போல நூறுயிரமம்புகளைக் குறிப்புடன் விடாநிற்ப, அதனைப் பகைவனான சிங்கமுகாசுரன் கண்டு, மழைக்காலத்து மேகம் மழையைப் பொழிவதனைப்போல அந்நூறுயிரமம்புகளையே விட்டு வீரவாகுதேவன் விட்ட அம்புகளை அழித்தனன்.—எ-று. (உஎச)

அல்லி னோர்மதி யெழுந்தென வவுணரு ளுதித்த
மல்லல் வாலிய வரிமுகன் றொடுகணை மாரி
யொல்லென் வாளியான் மாற்றியா யிரங்கணை யுந்திச்
சில்லி யாழிக ளறுத்தவன் றேரினைச் சிதைத்தான்.

(இ-ள்.) இரவிலொரு சந்திரனுதித்தாற்போல அசுரர்களுட் பிறந்த வளப்பமும் வெண்மையும் பொருந்தின சிங்கமுகன் விடுகின்ற வஸ்திரவருஷத்தை விரைந்துசெல்

லுமம்புகளால் தடுத்து ஆயிரம் அம்புகளைவிட்டுச் சில்லுகளையுடைய சக்கரங்களை நாசஞ் செய்து அச்சிங்கமுக னேறியிருந்த இரதத்தினை வீரவாகுதேவன் அழித்தான்.—எ-று.

அசுரர்குலத்தினரில் வெண்ணிறமுடையார் சுருக்கமாதலின் அவர்களை இருளென்றும், சிங்கமுகன் வெண்ணிறமுடையவனாதலின் அவனை இருணடுவிலுதித்த சந்திரனென்றும் கூறினார். (உஎரு)

ஏறு தேரழிந் திடுதலும் மரிமுக னிமைப்பின்
மாறோர் வையமேற் பாய்ந்தனன் வார்சிலை வளைப்ப
வாறு மாமுகற் கிளையவன் கணைகளா லவுண
னூறு பத்தெனுஞ் சிலையையு மறுத்தன னொடிப்பில்.

(இ-ள்.) ஏறியிருந்த தேர் அழிந்தவுடனே விரைவாகச் சிங்கமுகன் வேறோர் இரதத்திற்பாய்ந்து நீண்ட விற்களை வளைப்ப, அதனைக்கண்ட சிறந்த ஆறு திருமுகங்களையுடைய குமாரப்பெருமானுக் கிளையவனான வீரவாகுதேவன் அம்புகளினால் அவ்வசுரனுடைய ஆயிரமென்று சொல்லப்படுகின்ற விற்களையும் நொடிப்பொழுதிற்குள் அறுத்தனன்.—எ-று.

அறுத்தல் - ஒடித்தல். (உஎசு)

வில்லி ழந்தனன் மானமு மிழந்தனன் வீரச்
சொல்லி ழந்தனன் பெருமித மிழந்தனன் றொல்சீ
ரெல்லி ழந்தனன் பெருமையு மிழந்தன னிலங்கும்
பல்லி ழந்திடு விடவரா வொத்தனன் பதகன்.

(இ-ள்.) வீரவாகுதேவன் விட்ட அம்புகளால் விற்படைகளை இழந்த பதகனான சிங்கமுகன் அவ்விற்களை யிழந்ததுடன் மானத்தையும் இழந்தனன். வீரவசனங்களையுமிழந்தனன்; பெருமிதத்தையு மிழந்தனன்; புராதனமான சிறப்பினையுடைய கீர்த்தியையுமிழந்தனன்; பெருமையையு மிழந்தனன்; விளங்காநின்ற பற்களையிழந்த விட வரவத்தைப்போல வாயினன்.—எ-று.

பாம்பிற்கு வன்மையாகவுள்ளவை பற்களேயாம்; அவைகளைப் பாம்பிழக்குமேல் எதுஞ்செய்ய வியலாவாறுபோல தற்போது சிங்கமுகனுக்கு வன்மையாக விருந்தன விற்கள். அவைகளை வீரவாகுதேவன் ஏககாலத்திலொடித்தமையால் வன்மையையிழந்தவனாகிப் பல்லிழந்த பாம்பிற் குவமையாயினா னென்க. (உஎஎ)

ஏதி லானொருங் காயிரஞ் சிலைகளு மிழந்து
மாது யர்ப்படு நிலைமையை நோக்கியே மறங்கொள்
பூத ரார்த்தன ரமரர்க ளார்த்தனர் புரைதீர்
வேத ரார்த்தனர் முகுந்தரு மார்த்தனர் விண்மேல்.

(இ-ள்.) பகைவனாகிய சிங்கமுகன் ஒன்றாக ஆயிரம் விற்களையு மிழந்து துயரப்படுகிறதன்மையைப்பார்த்து மறம்பொருந்திய பூதர்கள் ஆரவாரஞ்செய்தனர்; ஆகாயத்தில் தேவர்க ளாரவாரித்தனர்; குற்றமற்ற பிரமர்கள் ஆரவாரித்தனர்; நாராயணர்களுமாரவாரித்தனர்.—எ-று.

இச்சிங்கமுகன் ஒரு அண்டத்திற்கன்றி ஆயிரத்தெட்டண்டங்களுக்குத் துன்பம் உண்டாக்குவோனாதலால், இவனது சண்டையைக்காண அண்டங்கள்தோறுமுள்ள பிரமவிட்டுணுக்கள் ஆகாயத்தில் வந்திருந்தார்களென்பதனை விளக்க "வேதரார்த்தனர் முகுந்தருமார்த்தனர்" என்றார். (உஎஅ)

ஆயி ரஞ்சிலை யொருதலை துணித்தது மமரர்
நாய கன்றனக் கடியவன் விற்றொழி னலனு

மாய னாதிய ரிகழ்ச்சியும் பூதர்தம் வலியுங்
சாயு நெஞ்சுடை மடங்கன்மா முகத்தவன் கண்டான்.

(இ-ள்.) ஆயிரம்விற்க ளேககாலத்தின் முறிந்ததும் தேவநாயகனான குமரக்கடவுளி னடியவனான வீரவாகுதேவனுடைய விற்போரின் நற்றிறமும் தன்னைக்கண்டு மாயவனான நாராயணன் முதலியோர் செய்யு மிகழ்ச்சியும் பூதர்களின் வல்லவமும் சீற்றம் பொருந்திய சிந்தையினையுடைய சிங்கமுகாசுரன் கண்டான்.—எ-று. (உஎக)

தேவ ரார்ப்பையு மிந்திர ரார்ப்பையுந் திசையின்
காவ லாளர்த மார்ப்பையு மெமையடக் கருது
மூவ ரார்ப்பையுஞ் சாரத ரார்ப்பையு முனிவோ
ரேவ ரார்ப்பையுந் துன்பினுக் குதவுவ னென்றான்.

(இ-ள்.) தேவர்கள் செய்யும் ஆரவாரத்தையும் இந்திரர்கள்செய்யு மாரவாரத்தையும் திக்குகாவலர்களி னாரவாரத்தையும் எம்மை அடிமொறுகருதியுள்ள மூவர்கள் செய்யு மாரவாரத்தையும் சாரதர்களி னாரவாரத்தையும் எல்லா முனிவர்களினாரவாரத்தையும் இப்பொழுது யான் துன்பத்திற்கு அளிக்கின்றேன் என்று சிங்கமுகவசுரனுரைத்தான்.—எ-று.

என் கைவிற்க ளழிந்தமைக்காக இவ்வளவு ஆர்வாரஞ் செய்யுமிவர்கள் எனதெதிரியான வீரவாகிற்குண்டாகுந் தோல்வியாதிகளுக்காகத் துன்பமடையாதிரார். இதனையுணரா திங்ஙனமிரையுமிவரை, வீரவாகுவைத் துன்புறுத்தி அழவைக்கின்றேனென்று விரிக்குமாறு நயம்பட "ஏவரார்ப்பையுந் துன்பினுக்குதவுவனென்றான்" என்றார்.

அடுதல் - சொல்லுதல். (உஎ0)

வேறு.

தீயா ருக்கோ ரெல்லை பதானன் றிறன்மேலான்
றாயா ருக்கே யின்னல்பு ரிந்தான் றொலைவில்லான்
ருயாய் முந்தே தம்மை யளித்தா டருகின்ற
மாயா பாசந் தன்னையெ டுத்தான் மறமிக்கான்.

(இ-ள்.) கொடிய செய்கைசெய்யும் அசுராதியர்களுக்கொரு எல்லையாகவுள்ளவன் திறலில் மிக்கவன் தூய்மையான குணமுடையவர்கட்கே துன்பஞ்செய்தான் எவ்வித வாயுதங்களாலும் அழிவில்லாதவன் மறத்தின் மிக்கவன் என்றுரைக்கப்படுகின்ற சிங்கமுகவசுரன் தன்னை முன்னே தாயாகவிருந்துபெற்ற சுரசையென்னும் இயற்பெயரினாள் தனக்களித்துள்ள மாயாபாசமென்னும் ஆயுதத்தினைக் கையிலெடுத்தனன்.—எ-று.

மாயை யென்பவள் தவத்திற்சிறந்த விசுவாமித்திர இருடியைப்போல புதிய பொருள்களைப் படைக்குமாற்றலைத் தவவன்மையால் உடையவள். இவள் தன் பெயராலொரு பாசத்தை யுண்டாக்கி அதற்கநேக சத்திகளையமைத்து இச்சிங்கமுகனுக்குக் கொடுத்திருக்கின்றாள் என்றறிக. (உஎக)

ஒட்டிப் போர்செய் மாற்றலர் தம்மை யொருபாலாற்
கட்டிக் கொள்ளா வாருயி ருண்டு கடிதேகிக்
கிட்டித் தொல்லை ஞாயிறு தோன்றுங் கிரியுய்த்து
விட்டுப் போதா தாண்டுறை கென்று விசுற்றான.

(இ-ள்.) பிராணனுக்கொட்டிப் போர்புரிகின்ற பகைவர்களை ஒரு சார்பாகக் கட்டிக்கொண்டு அவர்களினரிய வுயிர்களையுண்ணக்கடவை விரைவாய்ச்சென்று அடைந்து பழமையான சூரியனுதிக்கின்ற மலையின்மீது கொண்டுவைத்து அவ்விடத்திலவர்

களை வைத்துவிட்டுத் திரும்பாமல் அவ்விடத்திலேயே இரு என்று கூறி அந்த மாயா பாசத்தை எறிந்தான்.—எ-று.

நின்னைப் பகைவருணராவண்ணம் மறைந்துசென்றவனைக்கட்டென்பான் "ஒரு பாலால் கட்டிக்கொள்ளா" என்றான். (உஅஉ)

மறியா நிற்குந் தெண்டிரை யேழும் வந்தொன்றாய்ச்
செறியா நிற்குங் கொல்லிது வென்னத் திசைசூழ்போ
யெறியா நிற்கும் பாசமி ருட்கோ ரிடமாகிப்
பொறியா நிற்குந் தீயழல் சிந்திப் புகுந்தன்றே.

(இ-ள்.) சிங்கமுகாசுரனால் எறியப்பட்ட மாயாபாசமானது திசைமுற்றிலுஞ் சூழ்ந்துகொண்டு இருட்டிற்கோ ரிருப்பிடமாகிக் கண்டவர் ஊழிகாலத்திற் கரைபுரள் பனவும் அலை வீசாநிற்பனவுமான எழுகடல்களும் இப்பொழுது ஒன்றாக வந்து நெருங் கியுள்ளதோ இது என்று கூறுமாறு பொறியுருவமானதாகவுள்ள சுடுகின்ற தீப்பொறி களைச் சிதறிக்கொண்டு புகுந்தது.—எ-று.

இருளினையும் தீப்பொறியினையும் ஒரேகாலத்தி லுண்டாக்கிக்கொண்டு சென்றதென்றுணர்க. (உஅ௩)

சேணு டெற்றோர் யாரு மிரிந்தார் செருவாற்றல்
பூணு நிற்கும் பூதரும் யாரும் பொருளுற்றா
ராணு யுற்றோர் யாரினு மேலோ னதுதன்னைக்
காணு விதோர் மாயைகொ லென்றே கருதுற்றான்.

(இ-ள்.) இதன் வருகையைக்கண்டு பயந்த அந்தரவுலகவாசிகளான தேவர்களனைவரும் விலகியோடினார்கள், போரில் வன்மைபொருந்திய எல்லாப்பூதர்களும் (இஃதென்ன விளைவு என்று) பொருமினார்கள், ஆண்மக்களாகவுள்ளோ ரனைவரினும் சிறந்த வீரவாகுதேவன் அதனைப்பார்த்து இது சிங்கமுகனாலியற்றப்பட்ட ஒரு மாயையோ என்று கருதினான்.—எ-று.

கொல்லென்பதை அசையாக்கி மாயை என்றே கருதுற்றான் என்க. ஏகாரம்-தேற்றப்பொருளது. (உஅ௪)

ஆர்ப்பா யுற்ற தெண்டிரை கொல்லோ வஃதன்றேற்
போர்ப்பான் வந்த பாயிருள் கொல்லோ புவிக்கி
யீர்ப்பா னுற்ற நாணது கொல்லோ யாதேனுந்
தீர்ப்பேன் வல்லே யென்று நினைந்தான் திறல்வாகு.

(இ-ள்.) வன்மைபொருந்திய வீரவாகுதேவன் அதனையுற்றுப்பார்த்து இது ஆரவாரத்துடன் வராநின்ற கடலோ? அஃதல்லாதுபோனால் இவ்விடமுழுமையும் மூடிக்கொள்வான் வருகின்ற பரவிய இருட்டோ? அல்லது இங்குள்ளாரது தோள்களைக் கட்டியிழுத்துச் செல்லுமாறு வந்த நாணோ? எதுவாகவிருக்கினும் யானதனை யழிப்பேனென்று நினைத்தனன்.—எ-று.

கடலாயினும் இருளாயினும் பாசமாயினுமாகுக "யானிதை அழிப்பேன்" என்றான் என்க. (உஅ௫)

ஆற்றான் மற்றிவ் வாறுதெ ரிந்தே யதுதீர்ப்பான்
மாற்று கின்ற தொல்படை தன்னை வாங்காமுன்
கூற்றாய் நின்றோன் வீசிய பாசங் குழுவோடுங்
காற்றாய் வந்திங் கியாவரை யுங்கட் டியதன்றே.

(இ-ள்.) சிங்கமுகனதிந்தச் செய்கையினுன் மனந்தாளாமையினையுடைய வீரவாகுதேவன் இவ்வண்ணம் நினைத்து அம்மாயாபாசத்தை யழித்தற்கு அதற்கு மாறுன பழைய அம்பினை எடுத்தற்கு முன்னே பகைவர்க்கெமனுய் நின்ற சிங்கமுகன் வீசிய பாசம் கூட்டத்துடனே வாயுரூபமாக வந்து இவ்விடத்தில் நின்ற பூதராதிய அனைவரையும் கட்டியது.—எ-று.

இப்பாசம் மாயாபாசமாதலால் பல நிலையற்ற வுருவினவாகி ஈற்றிற்காற்றுருவாகி வந்து வளைந்ததென்றறிக. (உஅசு)

பல்லோ ராகிப் போர்புரி பூதப் படையோரும்
வில்லோ ராகு மெண்மரு மேனை விறலோருந்
தொல்லோர் கூறு மாடல்கொண் மொய்ம்பிற் றுணையோனு
மெல்லோர் தாமும் வீக்குறு பாசத் திடையுற்ருர்.

(இ-ள்.) அநேகர்களாக நின்று போர்செய்த பூதசேனைகளும், வில்வீரரான எட்டு வீரரும், மற்றைய வீரர்களும் புராதனர் புகழ்கின்றவனும், போர்புரிதற்குரிய தோளாற்றலினனுமான வீரவாகுதேவனும் ஆகிய அனைவரும் கட்டப்பட்ட பாசத்திற்குள் அகப்பட்டுக்கொண்டார்கள்.—எ-று. (உஅஎ)

மேற்ருே னெய்தி வீக்கிய பாச மிடல்வீரர்
மாற்ரு நிற்பர் தொல்லுணர் வோடு மலிவாரே
லாற்ரு ரென்னச் செய்குவன் யானென் றவர்புந்தி
தேற்ரு வண்ணஞ் செய்துள தம்மா சிறுபோழ்தின்.

(இ-ள்.) மேற்சென்றனைவரையும் கட்டிய பாசமானது வன்மையாளரான வீரர்கள் தமது பழையவறிவுடனே இருப்பார்களாயின் என்னை யழித்துவிடுவர் இவர்களை யவ்வண்ணஞ் செய்யாதவர்களாக யான் செய்வேன் என, அவர்கள் மனம் தெளிவுடையதாகவிராதபடி சிறிதுநேரத்திற்குள் செய்தது.—எ-று.

பார்த்சற்குப் பாசமாகவிருப்பினும் மாயையென்பவளின் தவத்தாலாகியதாதலால் அறிவுடையதாக விருந்தது என்றுணர்க. இப்பாசம் மற்றைய பாசங்களைப்போல சடரூபமானதல்ல என்றுணர்க. பாசம் - கயிறு. (உஅஅ)

வேறு.

தொன்னிலை யுணர்வு மாழ்கித் தொல்வலி சிந்திச் சோரு
மன்னவர் தொகையை யெல்லா மந்தர நெறிக்கொண் டேகி
மின்னென வளக்கர் வாவி மேருமால் வரைபோ னின்ற
பொன்னவி ருதய மென்னும் பொருப்பிடைப் புகுந்த தன்றே.

(இ-ள்.) தமது பழைமையான அறிவு கெட்டு மயங்காநிற்கும் அவர்கள் கூட்டமனைத்தையும் ஆகாயவழியாகக் கொண்டுசென்று மின்னலைப்போல விரைவில் கடலைக்கடந்து பெரிய மேருமலைபோல நின்ற சூரியனுதிக்கின்ற உதையமென்னும் மலையிடைப் புகுந்தது.—எ-று.

பிறராலரிதினும் கடக்கமுடியாக் கடலை எளிதிற் கடந்ததென்பார் "மின்னென" என்ருர். "பொன்னவிர் உதையம்" என்பதற்கு பொன்னொளி வீசுகின்ற உதையகிரி என்னினுமாம். (உஅகூ)

கதிபடர் கின்ற காலிற் கருத்தினிற் கடிதி னேகித்
துதியுறு திருவின் கேள்வன் றுயில்புரி கடலிற் றுஞ்சு
முதயமால் வரையி னெய்தி யுயிர்ப்பிலா துறங்கு கின்ற
மதவலி வீரர் தம்மை வைத்துட னிருந்த தன்றே.

(இ-ள்.) வேகமாகச்செல்லும் காற்றினையும், மனத்தினையும் பின்னிடச்செய்து விரைவாகச்சென்று பத்தர்கள் துதிக்கின்ற திருமகள் மணவாளனான நாராயணன் கண்ணுறங்குகின்ற திருப்பாற்கடலிலுள்ள உதையமென்னும் பெரியமலையையடைந்து மூச்சுவிடுதலின்றித் தூங்குகின்ற மதமும் வன்மையும் பொருந்திய வீரர்களை வைத்து அவர்களுடனே அம்மாயாபாசம் இருந்தது.—எ-று.

உலகின்கண்ணுள்ளோர் மூச்சுவிட்டுக்கொண்டு தூங்குவது வழக்கமாக இம்மாயாபாசத்தின் வஞ்சனையால் நம்மவர் மூச்சிலாது தூங்கினரொன்றுணர்க. மயங்கிக்கிடக்கின்றனரோயன்றி இறந்துபட்டவரல்லரொன்று குறிப்பிக்க "உயிர்ப்பிலாதுறங்குகின்ற மதவலிவீரர்" என்றார்.　　　(உகo)

விழுமிய பூதர் யாரும் வீரரும் விளிந்து வெய்யோ
னெழுதரு முதயம் புக்கா ரென்பது தெரிந்து நோக்கிக்
குழுவொடு பொருது ளாரைக் கொன்றுயிர் குடித்தேன் வல்லே
யழுங்கிதென் றூற்ற லென்று னமரரை யலக்கண் கண்டான்.

(இ-ள்.) சிறந்த பூதரனைவரும் வீரர்களும் இறந்து, சூரியனுதயமாகின்ற மலையை யடைந்துள்ளாரொன்பதனைப் பார்த்துணர்ந்து கூட்டமாக நின்று போர்புரிந்தவர்களைக்கொன்று அவர்களுயிரை விரைவாக வருந்தினேன்; என்வன்மை நன்றாகவிருக்கின்றதுஎன்று தேவர்களை வருத்தின சிங்கமுகனுரைத்தான்.—எ-று.

வீரவாகுவாதியர் அழியா நிலையினரொன்பதை அறியாதவனாதலால், சிங்கமுகவனவர்களை இறந்தவர்களாகக் கருதினனென்க.　　　(உகக)

ஓடினன் கொல்லோ போர்க்கென் றுற்றது மில்லையோ வெங்குந்
தேடினேன் காண்கிலேனால் யாண்டையான் சிறுவ னம்மா
சாடினன் சாடி னானென் றுரைப்பது சழக்கோ தம்பி
வீடின னல்ல னேயென் றண்டங்கள் வெடிக்க வார்த்தான்.

(இ-ள்.) இவர்களனைவருக்குந் தலைவனாக வந்தானென் றுரைத்த சிவகுமாரன் ஓடிப்போய்விட்டானோ? அல்லது அவன் போருக்காக இங்கே வந்ததே இல்லையோ? நான் அவனை இப்போர்க்களத்தி னெவ்விடங்களிலும் தேடினேன்; தேடியும் எங்குங் கண்டிலேன்; வேறே எங்குளான்; அவன் பகைவரைக் கொன்றான் கொன்றானென் றுரைப்பது பொய்யோ? தம்பியான தாரகாசுரன் இறந்தவனலனோ என்றுரைத்துக் கொண்டு அண்டங்கள் பிளக்கும் வண்ணம் ஆரவாரஞ்செய்தான்.—எ-று.　　　(உகஉ)

கேசரி முகனிவ் வாறு கிளத்தின னார்க்கு மெல்லைத்
தூசியின் முந்து போன தூதுவ னொருவ னண்ணி
யாசறு பூத வெள்ள மாயிரத் தோடு செவ்வேள்
பாசறை யிருந்தான் யானும் பார்த்தனன் வந்தே னென்றான்.

(இ-ள்.) சிங்கமுகாசுர னிவ்வண்ண முரைத்தவனாக ஆரவாரிக்கின்ற சமயத்தில் படையினின்றும் முன்னேசென்ற ஒரு தூதுவன் திரும்பிவந்து செவ்வேள் குற்றமற்ற ஆயிரம் பூதவெள்ளங்களுடன் பாசறையி லிருந்தான்; யானும் பார்த்துவந்தேன் என்று கூறினான்.—எ-று. செவ்வேள் - நல்லழகுடையோன்.　　　(உகங)

ஓற்றன துரையைக் கேளா வொள்ளெயி றிலங்க நக்குப்
புற்றுறை யரவ மென்னப் புதல்வனெற் பொருவா னஞ்சி
மற்றவ ணுறைந்தான் கொல்லோ வல்லையில் யானே யேகி
யிற்றையோர் கணத்தி லன்னா னிருஞ்சமர் முடிப்ப னென்றான்.

(இ-ள்.) தேரேறிப் போர்முனை நோக்கிச்செல்லும் கார்த்திகேயரைச் சூழ்ந்து செல்லும் பூதர்களில் அளவற்ற பூதர்கள் போர்புரியுங்காலத்திலடித்தற்குரிய ரணபேரி கைமுதலிய பறைகளை யடித்தார்கள், சங்கங்களை யூதினார்கள், சகத்ஸ்வாமியான குமார ப்பெருமானுடைய கீர்த்திகளைப் படித்தார்கள், அருகி லெவ்விடங்களிலும் பல மணிம யமான கவிகைகளையும் ஆலவட்டங்களையும் பிடித்தார்கள், தமது வீரத்திறங்களைப் பே சினார்கள், இமிலேறுன இடபவுருவங்கள் எழுதியுள்ள கொடித்தொகைகளை அநந்த கோடிகளாக மேற்பிடித்தார்கள்.—எ-று.

இச்சண்டையிலுண்டாகும் ஜயாபஜயங்களாலான கீர்த்தியபகீர்த்திகட்குரிய முதன்மைத்தலைவர் சிவபெருமானே ஆதலால் அவர் திருவாணைதாங்கிய பூதர்கள் சைவ க்கொடியான இடபக்கொடிகளைத் தூக்கிப்பிடித்தனரென்க. (கூ0உ)

மூவர்கண் முதல்வன் வந்தான் முக்கணான் குமரன் வந்தான்
மேவலர் மடங்கல் வந்தான் வேற்படை வீரன் வந்தா
னேவருந் தெரித றேற்ரு திருந்திடு மொருவன் வந்தான்
றேவர்க டேவன் வந்தா னென்றன சின்ன மெல்லாம்

(இ-ள்.) பூதர்கள் ஊதுஞ் சின்னங்கள் மூவர்கள் முதல்வன் வந்தான், முக்க ணான் குமரன் வந்தான், பகைவர்களாயின யானைகளுக்குச் சிங்கம்போல்பவன் வந்தான், வேற்படை வீரன் வந்தான், எவராலுமுணர்தற்குக் கூடாதவனாக விருக்கும் ஒப்பற்ற சாட்குண்ணிய பரிபூரணனான சண்முகப்பெருமான் வந்தான், தேவர்கள்தேவன் வந் தான் என்று முழங்கின.—எ-று. (கூ0௩)

ஆசறு பூதர் சூழ வமரர்வாழ்த் தெடுப்ப வையன்
பாசறைக் களத்தை நீங்கிப் பறந்தலை நிலத்தி னெல்லை
வீசுறு மருத்து மின்னும் வெள்குற நொடிப்பிற் செல்லக்
கேசரி முகத்தி னானுங் கிளர்படை யோடு நேர்ந்தான்.

(இ-ள்.) குற்றமற்ற பூதர்கள் சூழ்ந்துவரவும், தேவர்கள்வாழ்த்துக்கூறவும், நமது சாமியான குமாரதெய்வம் பாசறையினிடத்தை நீங்கிப்போர்க்களத்திற்கு வீசாநிற்குங் காற்றும் மின்னலும் வெட்கமடையும் வண்ணம் நொடிப்பொழுதிலெழுந்தருளுதலு மப் பொழுது விளங்குகின்ற சைனியங்களுடனே எதிரியான சண்முகனெங்கேயெங்கே என்றுதேடிககொண்டு வராநின்ற சிங்கமுகாசுரனும் எதிர்ப்பட்டான்.

குமரப்பெருமான், தம்மைக்காணாமையால் அவமதிப்பாக எதிரி மதியாதிருக்க வும், மாயாபாசத்திற் சட்டுண்ட வீரவாகாதியரை எதிரியினெதிரிலேயே விடுவிக்கவும் இறைவன் அளித்த வாணாள் சிங்கமுகனுக்கு ஒழியுங்காலமடுத்தமையை யுணர்ந்தும் படுகளம் வெறுங்களமாகிப்போமாறு சிங்கமுகன்செய்ததையுணர்ந்து தேவர்கள் என்னு வோ? என்றுகொண்டகவலையை விரைந்தொழிக்கவும் விரைந்துசென்றாரென்க. (கூ0௪)

பருப்புறு மெழுவும் வான்றோய் பழுவமு ம்பாசுந் தண்டு
நெருப்புமிழ் சூல வேலு நேமியுங் கொழுவுங் குன்றும்
பொருப்புறழ் பூதர் வீசிப் பொருக்கென வவுணர் தம்மை
மருப்புயர் களிற்றை மாவை வையத்தை யடுத லுற்றார்.

(இ-ள்.) கங்காகுமாரரான சண்முகப்பெருமானும் மாயாகுமாரனான சிங்கமுக னும் எதிரெதிரே நெருங்கினவர்களாதலும் எதிரியின் வருகையைக்கண்ட பருவதாகிரு தியான தேகங்களையுடைய பூதர்கள் பருமனான எழுக்களையும், வானத்தை யளாவியமர ங்களையும், சண்டகோடரிகளையும், தண்டங்களையும், நெருப்பினைக் கக்குகின்ற சூலவே ற்களையும்,சக்கரங்களையும், கொழுக்களையும், மலைகளையும்எறிந்து விரைவாக அசுரர்களை

யும், அவர்களேறிவந்த உயர்ந்த கொம்புகளையுடையயானைகளையும், குதிரைகளையும், இரதங்களையும் அழித்தார்கள்.—எ-று.

எதற்கும் அஞ்சாத வன்மையினையுடையார் பூதர் என்பார் "பொருப்புறழ்பூதர்" என்றார். (௫௦௫)

குந்தமு மழுவுந் தண்டுங் குலிசமு மெழுவுங் கோலு
முந்திய கழுமுள் வேலு முசலமுங் கொழுவுஞ் சங்கு
மெந்திரக் கவண்வீழ் கல்லு மெஃகமும் பிறவு மெல்லாஞ்
சிந்தினின் றவுணர் பூதப் படையினைச் செறுத்த லுற்றார்.

(இ-ள்.) பூதர்களிவ்வண்ணம் மலைமரமழுவாதிய வாயுதங்களைக்கொண்டு தங்களுடன் போர்புரிந்தமையால் அசுரர்களும் குந்தங்களையும் மழுக்களையும் தண்டங்களையும் வச்சிரங்களையும் எழுக்களையும் அம்புகளையும் முற்பட்ட கங்கபத்திரங்களையும் வேலாயுதங்களையும் உலக்கைகளையும் கொழுக்களையும் சங்கங்களையும் எந்திரங்களில் வைத்து எறிகின்ற கவண்கற்களையும் கைவேல்களையும் இன்னமுள்ளனவாகிய மற்றனைத்தையும் விட்டவர்களாக நின்று போர்புரிந்து பூதசேனைகளை அழித்தார்கள்.—எ-று.

சங்கம் - ஒரெறியாயுதம். அது சங்கின் வடிவாகவுள்ளது. (௫௦௬)

இருதிறப்படைக டம்மி லித்திறம் பொருத வெல்லைக்
குருதிவந் தலைப்ப மார்பு சென்னிதோள் குறைந்து வேறாய்த்
தரையிடை மறிந்தார் பல்லோர்சங்கரன் விடுத்த மூரல்
விரிகனல் சிதறிப் பற்ற வெந்துவீழ் புரம தேபோல்.

(இ-ள்.) இரண்டுவகையினரான சேனைவீரர்கள் ஒருவரோடொருவர் இவ்வண்ணம்தத்தம் ஆயுதங்களை விட்டுப் போர்புரிந்தகாலத்தில் முன்னாளில் சிவபெருமான் நகைத்தருளிய நகைப்பிலுண்டான தீயினின்றும் விரிந்த அக்கினியானது சிதறிப் பற்றிக்கொள்ள அதனால் வெந்துவிழுந்த திரிபுரத்தைப்போல இருபடைகளிலும் அநேகர் இரத்தவெள்ளம் அலைதலைச்செய்ய மார்பு, தலை, தோள்முதலிய உறுப்புக்கள்குறைந்து வேறுவேறாகப் பூமியில்விழுந்தார்கள்.—எ-று.

விரைந்திறந்தார் என்பார் "வெந்துவீழ்புரமதேபோல்" என்றார். (௫௦௭)

கண்டன னனைய செய்கை கனல்பொழி பரிதிக் கண்ணான்
மண்டமர் புரியா நிற்கு மாற்றலர் தம்மை வாரி
யுண்டன னெனது சீற்ற மொழிக்குவ னொல்லை யென்னா
வண்டமுந் திசையுந் தானே யாகவோர் வடிவங் கொண்டான்.

(இ-ள்.) இவ்வண்ணம் பூதசேனைகளும் அசுரசேனைகளும் கைகலந்து சண்டைசெய்வதனைத் தீப்பொறி சிதறுநின்ற வட்டமான கண்களையுடைய சிங்கமுகவசுரன் பார்த்து இனி, நெருங்கி நின்று போர்புரிகின்ற இப்பகைவர்களை வாரியுண்டு எனது கோபத்தை விரைவிற் போக்கிக்கொள்வேனென்று தன்னுள் ஒரு தீர்மானஞ் செய்துக்கொண்டு அண்டமும் திசையுமாகிய எவ்விடத்தினும் தானே யாகநிற்கத்தக்கவொரு பெரிய மாயவுருவத்தை யடைந்தான்.—எ-று.

சிங்கத்திற்குக் கண்வட்டமானதாதலால், பரிதிக்கண்ணனென்று சிங்கமுகனையுரைத்தனர்.

பகைவரின்றேல் அவர்பொருட்டுண்டாகும் கோபமுமில்லையாகும்; இப்பகைவரை நெடுநாழிகை நின்று பொருது இன்மையாக்கிக் கோபத்தை ஒழித்துக்கொள்வதினும் வாரித்தின்று கோபத்தினை அகற்றிகொள்ளுகிறேனென்று எண்ணினான் சிங்கமுகனென்பார் "ஒல்லை" என்றார். (௫௦௮)

ஆயிர முடியின் மௌலி யண்டத்தின் முகட்டை நக்கப்
பாயிருங் கரங்க ளண்டப் பாங்கரை யலைப்பப் பாருட்
போயின பதங்க ளண்டத் தடியினைப் பூழை செய்ய
மாயையா லினைய வாறோர் வடிவுகொண் டார்த்து வந்தான்.

(இ-ள்.) அச்சிங்கமுகனுடைய ஆயிரந்தலைகளிலுமுள்ள மகுடங்கள் அண்டமுகட்டை யுரிஞ்சவும் பரவிய பெரியநீண்ட கைகள் அண்டத்தின் பக்கத்தை அலைப்பவும் பூமியின் கீழேசென்ற கால்கள் அண்டத்தி னடிப்புறத்தினைத் துவாரமாக்கவும் சிங்கமுகன் தனது மாயா வல்லபத்தால் இத்தன்மையாகவொரு மாயப்பேருருவத்தைக் கொண்டாரவாரித்தவனாக வந்தான்.—எ-று.

அசுரன் தன்சாதிக்குரியதான மாயையாலிற்றிய உருவினனாகிவந்தானென்பார் "மாயையாலினையவாறோர்வடிகொண்டார்த்துவந்தான்" என்றார். (௬0௯)

வந்திடு சீற்றத் துப்பின் மடங்கலின் றோற்ற நோக்கி
யந்தக னசைந்து நின்றா னுதவ னிரிய லானா
னிந்திரன் றுளக்க முற்றா னெரிபதை பதைத்துச் சோர்ந்தான்
சிந்தையின் மருட்கை யுற்றார் திசைமுகன் முதலாந் தேவர்.

(இ-ள்.) இவ்வண்ணம் மாயவுருவங்கொண்டு வராநின்ற மிகுந்த கோபத்தினையும் வன்மையினையும் உடைய சிங்கத்தின் தோற்றத்தைப்பார்த்து அச்சங்கொண்டு எமனசைவற்று நின்றனன்; சூரியன் இங்கு நின்றால் நம்மை யிவனென்செய்வானோ வென்று விலகிப்போயினான்; இந்திரன் நடுக்கமடைந்தான்; அக்கினி பதைபதைத்துச் சோர்ந்தான்; பிரமன் முதலிய தேவர்கள் மனமருட்சி யடைந்தார்கள்.—எ-று.

தோற்றம் - முன்கண்டிராத பெரிய உருவம். (௬௧0)

வேறு.

அன்னதோ ரெல்லையி லாளி முகத்தோன்
முன்னுறு பூத முழங்கொலி நீத்த
மென்னது மங்கை யிராயிர மோச்சி
யுன்னுமுன் வாரின னுண்டல் பயின்றான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்திற் சிங்கமுகாசுரன் தன்னெதிரிலுள்ள பூதசேனையென்னும் முழங்குகின்ற ஒலியோடுகூடின நீரனைத்தையும் தனது பெரிய மாயவுருவத்திற் பொருந்திய இராயிர மகங்கைகளையும் நீட்டி இந்நீட்டிய கைகளா லிங்கிவன் என்ன செய்யப்போகின்றான் என்று நினைத்தற்கு முன்னே வாரியுண்ணுதலைச் செய்தான்.—எ-று.

விரைந்து வாரியுண்டனனென்பார் "உன்னுமுன் வாரியுண்டல் பயின்றான்" என்றார். (௬௧௧)

ஈட்டுறு பூதரிருங்குழு வத்தை
மோட்டுறு சிங்கமு கன்கர முற்று
நீட்டின னள்ளுத லேனமிகண் மாறாய்
மாட்டுறு கொண்டல்கள் வாருவ போலும்.

(இ-ள்.) போரினிமித்தந் தொகுக்கப்பெற்ற பெரிய பூதகூட்டத்தினை உயர்ந்த மாயாமயமான உருக்கொண்டு நிற்கின்ற சிங்கமுகவசுரன் தனது கைகள் அனைத்தையும் நீட்டி அள்ளுதல் எதனையொக்குமெனின் கடல்களுக்குமாறாய் அவைகளிற் கிடக்கும் மேகங்கள் அக்கடனீரினைக் கவருதலை யொக்கும்.—எ-று. (௬௧௨)

ஆயிர கோடியொ ரங்கையி னுகப்
போயின பாணிகள் பூதரை யள்ளச்
சீய முகங்கெழு செம்ம லகன்பேழ்
வாய்களி லிட்டு விழுங்கினன் மன்னோ.

(இ-ள்.) மாயப்பேருருவங்கொண்டு நிற்கின்றவனும் பிரகாசம்பொருந்திய சிங்கமுகமுடையவனுமாகிய அசுரன் தான் பூதர்களை வாரியுண்ணும் வண்ணம், நீட்டிய இரண்டாயிரம் பெரியகைகளில் அகன்ற ஒரு கைக்கு ஆயிரங்கோடிபூதர்கள் அகப்படுமாறு நீட்டிய கைகள் அள்ளாநிற்ப. அவ்வண்ணம் எடுத்தவர்களை தனதகன்ற பெரியவாயிலிட்டு விழுங்கினன்.—எ-று.

ஒருகைக்காயிரங்கோடிப்பேர் பிடிபடுவரானல் பூதர்கள் அவன் கைக்கு எவ்வளவு சிறியபொருளாக இருந்திருப்பார்களென்றுரைக்கலாம்? உரைத்தற்கே இயலாது.

மீனம தாக வியன்படை யங்கைக்
கானுறு குன்று கறித்திற னாக
வானபல் பூதரை யட்டிடு சாலைப்
போனக மாமிசைந் தான்புகை வாயான்.

(இ-ள்.) கோபமிகுந்தமையால் புகைகின்ற வாயினனான சிங்கமுகாசுரன் வில் தண்டம்வாள் கேடகம்முதலிய பெரிவாயுதங்களைத் தனக்குரிய உணவாகிய மீன்களாகவும் அகங்கைகளிற் பொருந்தின காடுகளோடு கூடினமலைகளைப் பருப்பு கூட்டமுது முதலிய கறிவருக்கங்களாகவும் கொண்டு தன்கைக்குட்சிக்கினவர்கள் ஆகிய பலபூதங்களைச்சமைத்தமைத்த அன்னசாலைகளிலுள்ள அன்னங்களைப்போல தின்றனன்.—எ-று.

கறி என்றதீண்டு சாகமூல பலங்களான உபகரண உணவினை. சாகம்—கீரை.

அண்டமோ ராயிர மாங்கொரு பாங்கர்
விண்டுவெவ் வேறு விளங்குவ போலுங்
கண்டகன் வெய்யக ணங்களை யெல்லா
முண்டிடு கின்ற வுலப்பில பேழ்வாய்.

(இ-ள்.) பகைவர் மீது நீங்காத வைரம் வைத்துப் போர்புரியும் கண்டகனான சிங்கமுகாசுரன் வெவ்விய பூத கணங்களையெல்லாம் வாரி வாரி விழுங்குகின்ற அளவற்றனவாகிய பிளந்தவாய்கள் எவைகளை யொத்தன என்னில் ஓராயிரமண்டங்கள் அங்கொருபுறத்தில் பிளந்து வேறுவேறாக விளங்குவனவற்றை யொத்தன. (காணப்படுகின்றன.)—எ-று.

அவன்கொண்ட பெருந்தோற்றத்திற்கேற்ப, அவன்வாய்களைப் பிரமாண்டங்கள் பிளந்தாற்போன்றன என்றார் என்க. (ந௧௫)

செப்பரும் வென்றிகொள் சீயமு கத்தோன்
கைப்புகு பூதக ணத்தினர்யாரு
மப்பெரு வாய்களி னாற்றுறு மாக்க
ளுப்பிடை சென்றென வுற்றன ரன்றே.

(இ-ள்.) இன்ன வியல்பினது என்று அறைதற்கரிய வெற்றிபொருந்திய சிங்கமுகவசுரனுடைய கையிற் புகுந்த பூதகணத்தினரெல்லாம் அந்தப் பெரிய ஆயிரம் வாய்களில் ஆற்றுநீரிலகப்பட்ட மனிதர்கள் பல வேறு வழியாக உருண்டு புரண்டுசென்றாலும் கடைசியில் ஒன்றாகக் கடலினிடத்தடைந்தாற்போல அவனதகன்ற ஒன்றான வயிற்றிற்குட் போயினர்.—எ-று.

அநேகயாறுகளின் வழியாகச் செல்லும் நீரனைத்தும் கடைசியில் ஒரே கடலை யடைந்தாற்போல அநேக வாய்களின்வழித்தாகச் சென்ற பூதர்களும் வயிறான ஒரு விடத்தினை அடைந்தார்கள் என்பார். "ஆற்றுறுமாக்கள் உப்பிடைசென்றென வுற்றன ரன்றே" என்றார். (௲கசு)

தானவ னங்கை தனிற்படு பூதர்
மேனிகழ் வாய்தொறு மேவரு பான்மை
யூனமில் விண்ணவ ரூர்தொறு மிம்பர்
மானவ ரியாரும் வழிக்கொளல் போலும்.

(இ-ள்.) அசுரனுடைய அழகிய கைகளிலகப்பட்டுக்கொண்ட பூதர்கள் மேலே விளங்காநின்ற வாய்கள்தோறும் அவனெடுத்து விழுங்குங்கால் மேனோக்கி மடையுந் தன்மை குற்றமற்ற தேவரூர்தொறும் இவ்வுலகிலுள்ள மனிதரனைவரும் வழிக்கொண்டு சென்றாற்போலும்.—எ-று.

மனிதருலகமான மண்ணில் நின்ற பூதர்கள் தேவருலகமான விண்ணையடைய வெய்து மனிதரைப்போல அவன் வாய்களைக் கருதிக்கொண்டு போகப்பட்டார்க ளென் றமையால், அவனுடைய வாய் சுவர்க்கசமீபத்ததாக வுள்ளது என்று குறிப்பித்தார். இதனால் அவ்வுருவின் உயரம் விளங்குதல் காண்க. (௲கஎ)

மண்ணிது வன்றெனின் வானவர் வைகும்
விண்ணிது வன்றெனின் வெவ்வசு ரேசர்
நண்ணுல கிதென நாடினர் தீயோன்
கண்ணகன் வாயது கண்டிடு பூதர்.

(இ-ள்.) கொடிய சிங்கமுகனுடைய இடமகன்ற வாய்களைக் கண்ட பூதர்கள் இது மனிதர் வாழும் மண்ணுலகமன்றெனில் தேவர்கள் வாழாநின்ற சுவர்க்கமுமிது வன்றெனில் இது வெவ்விய அசுரர்கள் இருக்கும் உலகமே என்று எண்ணினார் கள்.—எ-று.

பூவுலகமும் பொன்னுலகமும் நாங்கண்டிருக்கின்றோம்; அவைபோன்றதன்றிது. ஆதலால் இது அசுரர் வாழும் உலகமாகவிருக்கலாம் என்று பூதர்கள் கருதினார் கள் என்க. (௲கஅ)

வாய்க்கொளு மெல்லை மடங்கன் முகத்தோன்
மூக்குட னஞ்செவி மூலமும் வல்லே
நோக்கின ரிங்கிது நூழைகொ லென்னா
வூக்கொடு சிற்சில ரோடினர் போனார்.

(இ-ள்.) சிங்கமுகன் பூதர்களைப் பிடித்து வாயிலிட்டு விழுங்கும்பொழுது சில பூதர்கள் அவனுடைய மூக்கினையும் அழகிய காதினையும் விரைவாகப் பார்த்து இவ்விடத்திலிவை சுருங்கைவழிகள் போலுமென்று விரைவாகச் சிலர் அவ்வழிகளில் உள்ளே ஓடினார்கள்.—எ-று. (௲கக)

அந்தமில் சீய னகன்பெருவாய்போய்க்
கந்தர நீங்கினர் நெஞ்சுகடந்தா
ருந்திபு குந்தன ரொண்புவி யுள்ளோர்
சிந்துறு கீழ்நிலை சென்றுறு மாபோல்

(இ-ள்.) அழிவற்ற சிங்கமுகனுடைய அகன்ற பெரிய வாயின்வழியாகச் சென்று ஒள்ளிய பூமியின்கண்ணுள்ளவர்கள் யாறுகளையுடைய கீழேழு நிலத்தைச் சென்றுறுமாபோல கண்டத்தைக் கடந்து நெஞ்சினைத் தாண்டி வயிற்றிற்புகுந்தனர்.—எ-று.

"அந்தமில்சீயன்" என்பதற்கு அழகற்ற விரூபமான சொரூபத்தினை யுடைய சிங்கமுகாசுரன் என்னினுமாம். (௬௨௦)

சீயமு கங்கெழு செம்மனு யிர்ப்பிற்
போயின ருந்தி புகுந்தவர் சில்லோ
ராயிரம் யோசனை யந்தர மீண்டு
மேயின ரங்கவன் மீண்டவு யிர்ப்பால்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற சிங்கமுகத்தினையுடைய அரசனுடைய சுவாசத்தில் முன்னே யுண்ணப்பட்டு வயிற்றிற்குட் புகுந்த சில பூதர்கள் மேலே அந்தரத்தில் ஆயிரம் யோசனை போயினவராகித்திரும்பி அவன் உள்ளிழுப்பாகவிட்ட மூச்சுக்காற்றினல் பழையவிடத்தில் வந்து சேர்ந்தார்கள்.—எ-று.

பூதர் சிங்கமுகனுடைய மூச்சுக்காற்றிற்கும் ஈடாகாதாரொன்றிக்கவி குறிப்பித்திருத்தலைக்காண்க. (௬௨௧)

வெவ்விட மென்ன விளங்கசு ரேசன்
றவ்விட வேயக டுற்றிடு தொல்லோ
ரவ்விடம் யாவினு மாதியை யுன்னற்
கிவ்விட மேயினி தென்றனர் சில்லோர்.

(இ-ள்.) வெவ்விய விடத்தைப்போல விளங்குகின்ற அசுராதிபனுகிய சிங்கமுகாசுரன் உண்ணவே வயிற்றினுட் புகுந்த பழைய பூதர்கள் அப்பூமியிலுள்ள நதி தீரம்கிரிசிகரமுதலிய மற்றெவ் விடங்களையும் விட சிவபெருமானை நினைத்தற்கு இவ்வசுரனுடைய உதரமான இவ்விடமே இனிமையான இடமென்று கூறினார்கள்.—எ-று.

இல்லிலன்றி வனத்திற்செல்லினும் வண்டுங்குயிலும் வானம்பாடியுங் கிளியுமாதியவற்றின் மெல்லோசையாதியவற்றாற் பஞ்சேந்திரியக் கவற்சிக்கிடமுளது; வேறிடங்களினு மவ்வண்ணமே; இச்சிங்கமுகனுடைய மாயவயிறனது இதர வஸ்துக்களெவைகளையும் தன்னுட்கொண்டிலாது விசாலமாய் நிச்சலமாய் இருந்தமையால் இந்திரியக்கவற்சிக்கிடமின்றாயிற்று. அதனுனே சிவத்தியானத்தின்மிகுந்த சிலபூதர் "அவ்விடம்யாவினும் ஆதியையுன்னற்கிவ்விடமேயினிதென்றனர்" என்றாராசிரியர். (௬௨௨)

வேறு.

களித்தவன் மடியுறு கணவ ராயிடைக்
கிளைத்தனர் கைகளிற் படையிற் கீறினர்
துளைத்தனர் கெடாமையிற் றொல்லை வன்மைபோ
யிளைத்தன ரொருசிலர் யாது செய்வரால்.

(இ-ள்.) மதத்தவனான சிங்கமுகனுடைய வயிற்றிற் பொருந்திய பூத கணங்களிலொரு சிலர் வெளியில் வருமாறு கருதி அவ்விடத்திற்றங் கைகளாற் கீண்டனர். வேறு சில பூதர்கள் அன்றியுங் கைகளிலிருந்த ஆயுதங்களால் கீறினார்கள். மற்றுஞ் சில பூதர்கள் துளைத்தார்கள் இவ்வாறு எத்தனை விதமான காரியங்களைச் செய்தும் சிங்கமுகனுடைய வயிறு முதலிய எவ்வுறுப்பும் கெடாமையினல் தமக்கிருந்த பழைய வன்மையையிழந்து இளைத்தார்கள். இளைக்காமல் அவ்விடத்தில் வேறென் செய்ய வல்லுநராவர்.—எ-று.

"களித்தவன்மடியுறுகணவர்" என்பதற்கு—அவன்-அச்சிங்கமுகனுடைய, மடியுறு-வயிற்றிற்பொருந்திய, களித்தகணவர்-சந்தோஷமிகுதியினை எப்பொழுதுமுடைய பூதர்கள் என்னினுமாம், (௬௨௩)

ஆயிர வெள்ளமா மாடற் பூதரை
வாயிடைப் பெய்துதன் னகட்டில் வைத்துள
சீயமாமுகத் தவன் செயலைப் பற்பக
லோய்வற மொழியினு மொழிதற் பாலதோ.

(இ-ள்.) குமாரப் பெருமான் போர்க்களத்திற் கெழுந்தருளுங் காலவருடன் வந்து தன்னோடு போர்புரிந்த ஆயிரம் வெள்ளம் பூதர்களையும் சிற்றுண்டிகளைப் போல கருதி வாரி வாயிலிட்டுத் தனது வயிற்றிற்குள் வைத்திருக்கிற சிங்கமுகாசுரனுடைய போர்த்திறம் மாயாவல்லவம் முதலிய செய்கைகளை அநேகதினம் ஒய்வில்லாதுரைத்தாலும் அது ஒழிதற்பாலதோ.—எ-று.

பலநாள் விடாது கூறினு மொழியாதவிவன் புகழினை ஒருமுறை யுரைத்தமை யாலொழியாதென்பார். "சீயமாமுகத்தவன் செயலைப் பற்பக லோய்வற மொழியினு மொழிதற்பாலதோ" என்றார். (௬௨௪)

இத்திற நிகழ்ந்திட விண்டுபோரிடர்
பத்துநூ றெனப்படும் பரவை நீத்தமுங்
கைத்தலம் வாரினன் கயவன் மோட்டினுள்
வைத்தலுங் கண்டனர் வானு ளோரெலாம்.

(இ-ள்.) இவ்வண்ணம் நடக்கும் வண்ணம் போர்க்கோலங்கொண்டு நெருங்கி வந்தவாயிரம்வெள்ளமென்னும் பூதசேனைகளையும் கையினால் வாரி எடுத்துக் கீழ்மகனை சிங்கமுகாசுரன் வயிற்றிலடைத்து வைத்துக்கொள்ளுதலும் அக்கொடிய செய்கையை அந்தரத்தில் நின்ற தேவர்கள் கண்டார்கள்.—எ-று. (௬௨௫)

எண்கெழு பூதரை நுங்கி னானினி
மண்கெழு பொருளெலாம் வாரி நுங்குமால்
விண்கெழு நம்மையும் விரைவிற் பற்றியே
யுண்குவ னெனமருண் டும்ப ரோடினார்.

(இ-ள்.) மாயப் பேருருவங்கொண்ட நமது பகைவனான சிங்கமுகவசுரன் புகழ்பொருந்திய பூதர்களை அள்ளி விழுங்கினான்; இனி மண்ணிலுள்ள பொருளனைத்தையும் வாரி யுண்ணுவான். அதுவு நிறைவேறிய பின் ஆகாயத்தில் விளங்குகின்ற நம்மையும் விரைவாகப் பிடித்து உண்குவானென்று மயங்கித் தேவர்களோடினார்கள்.—எ-று.

"உம்பரோடினார்" என்பதற்கு, தேவரை வருவித்து, மருண்ட தேவர் இன்னும் மேற்புறமாக ஓடினார்கள் என்னினுமாம். (௬௨௬)

நேடிய வொற்றுவர் நின்றி லார்விரைந்
தோடின ரவுணர்கோ னுபயத் தாண்மலர்
சூடினர் சென்னியிற் றொழுத கையினர்
மாடுறு பலசன மகிழக் கூறுவார்.

(இ-ள்.) இஃதிங்ஙனமாக, சிங்கமுகனதிச்செயல்களைப் பார்த்துணர்ந்த தூதுவர் நிற்காதவர்களாக விரைவாக வோடிச்சென்று அசுராதிபனான சூரபன்மனைக் கண்டு அவனது இரண்டு பாதமலர்களிற்றாழ்ந்து தலைமேற் குவித்த கையினராய் அவ்வரசனருகினிற்கும் பல சனங்களுங் கேட்டு மகிழுமாறு சொல்லுவார்.—எ-று. (௬௨௭)

ஏதமி லரிமுகத் திளவல் கந்தவே
டேனைப் பிறர்தமைத் தொலைவில் பூதரிற்
பாதியை நாண்வலைப் படுத்து வீட்டியே
யாதவ னெழுகிரி யகத்த ராக்கினான்.

(இ-ள்.) ஐயனே! எவ்விதமான துன்பமுமில்லாத வுமது செல்வத் தம்பியானவர் இப்பொழுது நடந்த சண்டையில் கந்தவேளின் தூதனான வீரவாகுதேவனையும் அவனன்றியுள்ள எட்டு வீராதிய மற்றையோர்களையும் அழிவற்ற பூதர்களிற் பாதியையும் மாயா பாசத்தை விட்டுக் கட்டி யிறுக்கிச் சூரியனுதயமாகிற மலையினகத்திலாக்கினார்.—எ-று. (௩உஅ)

ஈங்கிது வினவியே யீசன் றன்மகன்
றாங்கிய வேலொடு சமரி னேற்றிட
வோங்குமோர் வடிவுகொண் டுனது பின்னவ
னாங்கெதிர் பூதரை யள்ளி நுங்கினான்.

(இ-ள்.) மாயாபாசத்தால் கட்டுண்ட வீரவாகுமுதலியோர் உதயகிரியையடைந்த இதனை வாயுதேவனுரைக்கக் கேட்டு, இவ்வனைவருக்குந் தலைவனாக வந்துள்ள சிவனுடைய குமாரனான சண்முகன் தாங்கப்பட்ட வேலாயுதத்துடன் இரதமேறிவந்து போரிலெதிர்த்தனன்; உடனே ஒரு பெரிய வடிவங்கொண்டு தேவரீர் திருத்தம்பியானவர் அவ்விடத்திலெதிர்த்த சண்முகசேனைகளான பூதர்களை அள்ளி விழுங்கினார்.—எ-று.

இவ்வரை நிகழ்ந்தன வினைய வித்துணை
மைவரு மிடற்றினன் மதலை யோடுபோர்க்
கவ்வையை யியற்றிடுங் கன்ன லொன்றினிற்
றெவ்வர்க ளிலரெனச் செய்து மீளுமால்

(இ-ள்.) தேவரீர் திருத்தம்பியாரால் இதுகாறு நடந்தனவிவை; இப்பொழுது அவர் பின்னும் நீலகண்டனுடைய குமாரனான சண்முகனுடனே போராரவாரத்தினைச் செய்திருப்பார். இனி ஒரு நாழிகைக்குள் நமக்குப் பகைவர்களென்போர் எவரும் இலர் என்று கூறுமாறு பகைவரனைவரையும் அதஞ்செய்து திரும்புவார்.-எ-று.

பிறர்புரியும் போரினைப்போன்றதன்று சிங்கமுகன் போர், என்று குறிப்பிக்க, போர்க்கவ்வை என்றார் தூதர் என்க. (௩௩௦)

என்னலு மரியணை யிகந்து போய்த்தழீஇ
நன்னய மொழிபல நவின்று தூதுவ
ருன்னினர் விழைந்தசீ ருதவி மன்னவன்
றன்னுழை யொருவனை நோக்கிச் சாற்றுவான்.

(இ-ள்.) என்றுகூறியவுடனே அரசனான சூரபன்மன் அடங்காமகிழ்ச்சியினால் தன்னிலைமையினை மறந்தவனாய் சிங்காதனத்தினின்றும் எழுந்து சென்று தூதுவர்களைக் கட்டித்தழுவிக்கொண்டு அவர்கள் மனத்திற் கினிமை தோன்றுமாறு நல்ல நயமான பலவினிய வசனங்களையுரைத்து, அவர்கள் விரும்பினசிறப்பனைத்தையும் அவர்கட்களித்துப் பின்னர் தன்னருகினின்ற வேறொருவனைப்பார்த்து மேல்வருமாறு கூறினான்.—எ-று.

தம்பியடைந்த வெற்றியைக் கேட்டவுடனே யுண்டான சந்தோஷமிகுதியால் முறையை மறந்து தூதுவர்களைக் கட்டித்தழுவினானென்க. (௩௩க)

கந்தனொ டரிமுகன் கனன்று போர்செய்வான்
முந்துள தானையின் முடியும் பற்பல
விந்தநன் னகருறை படைகள் யாவையு
முந்துதி யாயிடை யொல்லை நீயென்றான்.

(இ-ள்.) சிங்கமுகனான நமதிளவல் சீற்றங்கொண்டு கந்தனொடு எதிர்த்து நின்று போர்புரிதற்கு அவனிடத்து முன்னேயமைந்துள்ள சேனைகள் போதுமா போ

தாறு. ஆதலின் இந்த நல்ல நகரத்தில் காப்பாகவிருக்கின்ற சேனைகளனைத்தையும் அவ்விடத்திற்கு விரைந்து நீ அனுப்பக்கடவை என்று கூறினான் சூரபன்மன்.—எ-று.

எதிரியான கந்தப்பெருமானை நன்குமதித்து, குறைந்த சேனைகளோடு நின்று போர்புரிந்தால் தம்பக்கத்திற்கு வெற்றி விரைந்துண்டாகாதென்று கருதி மிகுந்தசேனையை அநுப்ப ஆக்கியாபித்தான் சூரபன்மனென்க. (௲௨)

சாற்றிய வுரைகொடு தாழ்ந்து கம்மியன்
காற்றென வேகியே கறங்கு தானையுட்
போற்றல னமரிடைப் போமின் போமினென்
றேற்றுரி முரசினை யெறிவித்தானரோ

(இ-ள்.) சூரபன்மனுரைத்த சொல்லைக்கேட்ட ஏவலாளன் அவ்வண்ணமே செய்கின்றேனென்றுரைத்து வணக்கம்புரிந்து காற்றைப்போல விரைந்துசென்று முரசம் முதலிய வாச்சியங்களை விடாமல் முழக்குகின்ற சேனைகளி னிருப்பிடத்தை அடைந்து நீங்கள் பகைவனுடன் போர்புரிதற்கு இரணகளத்திற்குச் செல்லுங்கள் இரணகளத்திற்குச் செல்லுங்கள் என்று இடபத்தோலாற் பொதியப்பட்ட பேரிகையை யடிப்பித்தான்.—எ-று. (௲௩)

பணையொலி கேட்டலும் பதியுள் வைகிய
விணையறு தானைகள் வெள்ளம் யாவையு
மணிசெழு வகுப்புட னார்த்துச் சென்றுசூர்த்
துணையவ னமர்புரி சூழல் புக்கவே.

(இ-ள்.) போருக்குச் செல்லுமாறெச்சரிப்புடனடித்த பேரிகையோசையைக் கேட்டவுடனே அந்நகருக்குள் வசித்த சௌரிய தைரியாதிகளில் ஒப்பற்ற சேனைவெள்ளங்களனைத்தும் விளங்காநின்ற அணிவகுப்புடனும் ஆரவாரத்துடனும் சூரபன்மன் தம்பியான சிங்கமுகாசுரன் போர்புரிகின்ற இடத்தினையடைந்தன.—எ-று. (௲௪)

அம்புதி யாமென வணிகஞ் சென்றுழித்
தும்பையஞ் சிகழிகைச் சூர னென்பவ
னெம்பிதன் போர்வலி காண்பன் யானெனாச்
செம்பொனந் தவிசினுந் தீர்ந்து போயினான்.

(இ-ள்.) கடலின் போக்கேயென்று கூறுமாறு சேனைகள் சென்றவுடனே தும்பைமலர் மாலையணிந்த சூரபன்மனென்பவன் யான் எனதுதம்பியின் போர்வன்மையைச் (சென்று) காண்குவேனென்று செவ்விய பொன்னாலாகிய அழகிய தவிசில் நின்றும் எழுந்து சென்றனன்.—எ-று.

தவிசு=சிங்காசனம். (௲௫)

தன்பெரு மந்திர நடுவட் டங்கிய
கொன்பெருஞ் சிகரியா மேருக் குன்றின்மே
லின்புறு திருவொடு மேறி னானரோ
பொன்புனை யுதயமே லிரவி புக்கென.

(இ-ள்.) தான்வசித்தற்குரித்தாய் விசுவகன்மனென்பவன் முன்னாளிலமைத்த ராசமாளிகையான தனது பெரியமந்திரத்தினடுவிலுள்ள வலிய பெரியசிகரமான மேருமலையின்மேல் சந்தோஷத்தையளிக்குஞ் செல்வகரத்துடன் பொன்னாலலங்கரிக்கப்பெற்ற உதயமலையின்மீது சூரியனேறினாற்போல ஏறினான்.—எ-று.

கொன்பெருஞ் சிகரியென்றது - கோபுரத்தினை. (௲௬)

தாதவிழ் தார்முடித் தம்பிகொண்டதோர்
மேதகு வடிவமுந் தமியன் வேளுறப்
பூதர்க ளுண்டியாய்ப் போன தன்மையுங்
காதலி னவுணர்கோன் கண்ணி னோக்கினான்.

(இ-ள்.) அசுராதிபனான சூரபன்மன் மகரந்தத்துடன் விரிந்த மலர்மாலை யணிந்த முடிகளோடுகூடின தன்தம்பி தற்போதுகொண்டுள்ள ஆச்சரியமான பெரிய வுருவத்தையும் தன்பகைவனான குமரவேள் தனித்தவராகவாக வவர்சேனைகளிவனுக்கு உணவாகவாய்விட்ட தன்மையையும் மிகுந்த வாசையுடனே கண்ணினாற் பார்த்தான்.—எ-று.

சிங்கமுகனுடைய போர்த்திறம் சூரபன்மனுக்கு வெற்றியைக் காட்டுவதாதலால் முன்னமே மனமகிழ்ச்சியையுடையனாக விருந்தானென்பார் காதலினென்றார். (௩௩௭)

வருமித மென்றுமன் னுயிர்கட் கல்லல்செய்
கருமித வழிக்கொரு கனலிற் றோன்றினான்
பெருமிதம் விம்மிதம் பெரிது மெய்தினா
னுருமித மாமென நகைக்கு மோதையான்.

(இ-ள்.) இவ்வண்ணம் செய்வதனால் நமக்கு மிகுந்த சுகமுண்டாகுமென்று கருதி உலகில் நிலையுற்று வாழுகின்ற மன்னுயிர்கட்குத் துன்பத்தைச்செய்கின்ற பாவ வழிக்கொரு தீயைப்போல பிறந்துள்ளவனும் இடியிதனோடு நட்பாகியது என்று கூறுமாறு சிரிக்கின்ற பேரோசையினையுடைய அட்டகாசத்தினை யுடையவனுமாகிய சூரபன்மன் இவ்வினைத்தையும் பார்த்துப் பெருமிதமும் விம்மிதமும் மிகுதியாக அடைந்தனன்.—எ-று.

ஆன்மாக்களைத் துன்புறுத்தலென்னும் கெட்டவழிக்கொரு தீபோல்வன் சூரபன்மன் என்றறிக. (௩௩௮)

இங்கிவ னின்றிட விதற்கு முன்னரே
சங்கையில் பாரிடத் தானை முற்றவுஞ்
சிங்கமா முகத்தவ னுகருஞ் செவ்வியி
னங்குறு மறுமுக னதனை நோக்கினான்.

(இ-ள்.) இவ்விடத்தில் சூரபன்மன் இவ்வண்ணம் சந்தோஷத்துடனிருக்க, இதற்குமுன்னமே அளவற்ற பூதசேனைகள்முழுமையும் சிறந்த சிங்கமுகாசுரனுண்ணும்பொழுது அதனை அவ்விடத்திற்கு எழுந்தருளியுள்ள குமாரப்பெருமான் திருக்கண்சாத்தி அருளினார்.—எ-று. (௩௩௯)

ஒருத்தனை யாகியே யுலகெ லாமடு
நிருத்தன தருண்மக னோர லாரொடுஞ்
செருத்தொழில் புரிவதோர் சிறிய வாடலைக்
கருத்திடை யுன்னினன் கணிப்பி லாற்றலான்.

(இ-ள்.) தானொருவனாகியே நின்று எல்லாவுலகங்களையு மழிக்கின்ற நடராஜனான சிவபெருமானுடைய அருட்குமாரரும் அளவற்ற பேராற்றலினருமாகிய கந்தப்பெருமான் பகைவர்களுடனே போர்புரிதலாகிய ஒரு சிறிய திருவிளையாடலைத் தமது திருவுளத்தி னினைத்தருளினார்.—எ-று.

அநேகராலாகாத சங்காரகாரியத்தைத் தானொருவனாக நின்று எளிதாக முடித்தானென்பார். ஒருத்தன்-என்றும் அண்ணலியற்றும் சங்காரகருமம் அனைத்துயிர்களினிளைப்பை யொழித்தற்கேயன்றி-உயிர்கண்மீது தாங்கொண்ட வஞ்சத்தாலன்றென்

பார், நிருத்தன்-என்றும். நிர்விகாரியான பரமேசுவரன் சங்கரித்தல் தனது சத்தியைக் கொண்டன்றித் தன்முகமாகவன்றென்பார் நிருத்தன் என்றும், அன்றியும் அழித்த தாமே திரும்ப ஆக்குமியல்பினராதலைக் குறிப்பிக்க நிருத்தன் என்றும்விளக்கினர். அன்றியும், ஒருத்தனையாகியே யுலகெலாமடுநிருத்தன்-என்பதற்கு பிறனொருவனது சகாயமின்றித் தானொருவனாகவே நின்று வைகுந்தமுதலிய லோகங்களையு மவைகளிலுள்ளாரையு மழிக்கின்ற திருவிளையாட்டினரான சிவபெருமான் என்னினுமாம். அளவற்ற பேராற்றலினராதலால் சண்முகப்பெருமானை எணிப்பிலாற்றலான் என்றார். (௩௬௦)

வேறு.

செய்ய தாமரை வனங்களுஞ் செங்கதிர்த் தொகையு
மைய சேயொளி யீன்றிருந் தென்னவா றிரண்டு
கையு மூவிரு முகங்களு முடையவன் காலோன்
வைய முந்திட வடுதொழி லியற்றுவான் வந்தான்.

(இ-ள்.) செந்நிறமான தாமரைவனங்களும் செவ்விய சூரியர் குழுக்களும் அழகிய செவ்விய ஒளியை யுண்டாக்கிக்கொண்டிருந்தாற்போல பன்னிரண்டு திருக்கரங்களையும் ஆறுதிருமுகங்களையுமுடைய எம்பெருமானரான குமாரசுவாமியார் வாயுதேவனிரதமோட்டாநிற்ப, சங்காரகிருத்திய மியற்றுவானெழுந்தருளினர்.-எ-று. (௩௬௧)

வந்திடு கின்ற காலை வயப்பெரும் பூதர் யாரு
மந்தமுற் றதனை யோரா வடுகரி பரிதேர் செற்ற
வெந்திற லவுணர் கோன்றன் மேதகு படைஞர் முற்றுங்
கந்தவே டன்னைச் சூழ்ந்தார் கனலிசூழ் கடலே யென்ன.

(இ-ள்.) எம்பெருமானெழுந்தருளுகின்ற சமயத்தில் வெற்றிபொருந்திய வலிய பூதரனைவரும் இறந்துபட்டதனை ஓர்ந்து கொலைபுரிகின்ற யானைகளாலும் குதிரைகளாலும் இரதங்களாலும்நெருங்கப்பெற்ற கொடிய செய்கையாளனான அசுராதிபனுடைய மேன்மைபொருந்திய சேனைவீரர்களனைவரும் வடவாக்கினியைச்சூழ்ந்தகடலைப்போல குமரக்கடவுளைச்சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று.

கடனீரைக்குடிப்பது வடவாக்கினியாதலால் அக்கினியென்றதற்கு வடவாக்கினி என்றாம். (௩௬௨)

சூழ்தரு மவுண வீரர் தொலைவிறம் படைகண் முற்று
மூழ்தரு முருமிற் பெய்ய வுலகுடை முதல்வன் காணுக்
காழ்தரு மேரு வன்ன கார்முக மொன்று வாங்கி
வீழ்தரு மருவி போலும் வியன்குணத் தோதை கொண்டான்.

(இ-ள்.) தன்னைச் சூழ்ந்துகொண்ட அவுண வீரர்கள் தொலை வில்லாத தமது ஆயுதங்கள் முழுமையையும் உலகமுடிவில் மேகங்கள் சிதறுகிற இடிக்குழாங்களைப் போன்று பெய்யாநிற்ப அவர்களினச் செய்கையை உலகாதிபனான நமது முதல்வன் பார்த்து வைரமான மேருவைப்போன்ற ஒரு வில்லினை வளைத்து மலையினின்றும் விழுகின்ற அருவியைப்போல காணப்படுகின்ற நாணியைப்பூட்டி அதன் ஓசையைக் காட்டியருளினர்.—எ-று.

வில்லின் பருமையும் நாணின் சிறுமையும் விளக்குவான், மேருவன்ன கார்முகமென்றும் வீழ்தருமருவிபோலும் வியன்குணம் என்றுங் காட்டினர் என்க. (௩௬௩)

ஆயிர கோடி ஞாலத் தண்டங்கள் வெடித்த மற்றைப்
பாயிரும் புனலி னண்டப் பத்திகள் பகிர்ந்த பாங்கர்

தீயழ் லண்டங் கீண்ட செறிமருத் தண்டம் விண்ட
மீயுயர் வெளிமு தண்டம் வெய்தென வுடைந்த வன்றே.

(இ-ள்.) நமது குலதெய்வமான கந்தப் பெருமான் விண்ணோசையைக் காட்டியருளலும் அவ்வோசைக்காற்றாது பிருதிவியண்டங்கள் ஆயிர கோடிகள் வெடித்தன. இன்னமுள்ள பரவியபெரிய புனலின் அண்டப் பத்திகள் வெடித்தன. அருகிலுற்ற சுடுகின்ற அக்கினி அண்டங்கள் பிளந்தன. நெருங்கின வாயுவண்டங்கள் விண்டன. இவையும் அன்றிமேலே யுயர்ந்த வெளியிலுள்ள அண்டங்களும் திடீரென உடைந்தன.—எ-று. (௲௪௪)

அப்பெரு நாணி னோதை யரிமுகன் றானை மள்ளர்
செப்புறு கேள்வி யாற்றுஞ் செவிப்புலம் புகுத லோடுங்
கைப்படை சிந்தி வீழ்ந்தார் கவிழ்ந்தன களிறு மாவு
மொப்பில்சீ ருருளித் தேர்க ளொல்லென வுடைந்த வன்றே.

(இ-ள்.) அந்தப்பெரிய நாணியின் ஒசையானது சிங்கமுகனுடைய சேனை வீரர்களின் சொல்லா நின்ற சொற்களைக் கேட்கின்ற காதுகளிற் சென்று படுதலும் அவர்கள் தங்கைகளிற்பிடித்திருந்த ஆயுதங்களைச் சிதறினவர்களாக வீழ்ந்தார்கள். இவரன்றியுள்ள யானைகளுங் குதிரைகளும் மறிந்து விழுந்தன. ஒப்பற்ற சிறந்த உருளிகளையுடைய இரதங்களும் ஒல்லெனோசையுடன் உடைந்தன.—எ-று. (௲௪௫)

மூரிவிற் கொண்ட நாணின் முழக்கினை வினவி யற்றாற்
பாரிடைக் கவிழ்ந்த தானைப் பரப்பையு நோக்கி நின்றா
னாரிதைப் புரியு நீரா ரான்மக னிவனு முன்னந்
தாரகற் கடந்தா னென்கை சரதமே போலு மென்றான்.

(இ-ள்.) பெரிய வில்லிற்பொருந்திய நாணியோசையைக் கேட்டுத் தான்கேட்டதுபோல அந்நாணியோசையைக் கேட்டுத்தனது சேனைவீரர்களும் யானை குதிரையாதிகளும் மயங்கிப் பூமியில் விழுந்த தன்மையையும் பார்த்துச் சிங்கமுகன் இதனைச் செய்பவர் யாவர், இவ்வாறு புரியும் இவனே சிவ குமாரனாகவிருக்கலாம். இவனது வில்லோசையே இவ்வாறாகவிருத்தலால் இவன் முன்னே தாரகனை வென்றானென்பது உண்மையாகவே இருக்கலாம் என்று கூறினான்.—எ-று.

சிறுகுழந்தையாகவுள்ளவர் குமரப்பெருமான் என்று கேட்டுள்ளவனாதலால் மிகுந்தவயதினன தாரகனைக்கொல்லும் ஆற்றல் அவரிடம் இராது என்று முன்னே கருதிய சிங்கமுகனுக்கு விண்ணோசை அவரது திருவாற்றலைவிளக்கிக்காட்டியது அதனால் தாரகனைக் கொன்றது ஒருவேளை உண்மையாகவே இருக்கலாம் என்றுகருதினானென்க. கொல் - ஐயப்பொருளது. (௲௪௬)

வாலுளை யலங்கு நெற்றிமடங்கலோ னினைய கூறிப்
பாலகன் வன்மை யானே படுத்தனன் மீள்வ னென்னாக்
காலுடை நெடுந்தே ரோடுங் கையனோர் கணத்தி னேர்ந்து
வேலுடை யண்ண றன்னை நோக்கினன் விளம்ப லுற்றான்.

(இ-ள்.) வெள்ளிய உரோமங்கள் அசைகின்ற நெற்றியினையுடைய சிம்மகனான சிங்கமுகாசுரன் இவைகளையுரைத்துப் பின்னர் இச்சிறுவனது வன்மையை நானே சென்று அழித்துத் திரும்புகிறேனென்று சபதமுரைத்துக்கொண்டு கால்களையுடைய நெடியதேருடனே ஒரு கணநேரத்திலடைந்தெதிர்த்து வேலாயுதத்தினையுடைய குமாரசுவாமியைப் பார்த்துக் கூறத்தொடங்கினான்.—எ-று. (௲௪௭)

கண்ணுதன் முதல்வன் மைந்த கழறுவ னென்று கேண்மோ
வெண்ணலர் வலியை மாற்ற லிறையவர் கடனே யற்றால்
விண்ணவர் தமைத்தண் டித்தோ மவர்க்குளு மல்லே வேறோர்
நண்ணல னெமருக் கில்லை நடந்ததென் னமருக் கென்றான்.

(இ-ள்.) நெற்றிக் கண்ணுளராகிய முதல்வருடைய மைந்தனே! யானொன்று ரைக்கின்றேன் அதனைக் கேட்பாயாக, பகைவர்கட்குள்ள வன்மையைமாற்றுதல் அரசர்கட்கு முறைமையேயாம் ஆதலால் நாங்கள் எங்கள் பகைவரான தேவர்களைத் தண்டித்தோம். நீயோ எங்களால் தண்டிக்கப்பெற்ற தேவர்களு ளொருவனல்லை, இத்தேவரையன்றி வேறேயொரு பகைவருமெமக்கில்லை, அவ்வண்ணமாக, நீ எங்களொடு போருக்கேன் இங்கு வந்தனை என்று கேட்டான்.—எ-று. (௩௪அ)

உறைதரு மளியன் றன்னை வலியவ னொறுக்கி னாடி
முறைகெழு தண்ட மாற்றி யண்டங்கண் முழு துவக்கு
மிறையினைப் புரிது மற்றா னீவிர்க ளிமையோர்க் கிட்ட
சிறையினை யகற்றவந்தேஞ் செருவுமத் திறத்துக் கென்றான்.

(இ-ள்.) இவ்வண்ணம் சிங்கமுகனுரைத்தனவற்றைத் திருச்செவியிலேற்றருளிய எமது இறைவன் அவனைப்பார்த்துச் சிங்கமுகனே கேள்: உலகில் வாழாநின்ற ஏழையான ஒருவனை வன்மையுள்ளவன் தண்டித்தால் நாம் அவனை முறைமையாக விளங்குகின்ற தண்டனை செய்து எல்லா அண்டங்கட்கும் அரசினைச் செய்கின்றோம் ஆதலால் நீங்கள் தேவர்கட்கிட்ட சிறையினை யகற்றுமாறு வந்தேம் இப்பொழு திவ்விடத்திற் போர்புரிவதுவும் அதன்பொருட்டேயாம் என்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று.

அரசர், பகைவரை ஒறுப்பது முறைமையேனும் எளியரை ஒறுப்பது முறைமை அன்றாம். நீவிர் நும்பகைவரல்லா வெளியவரான தேவர்களைச்சிறைப்படுத்தித் துன்பப்படுத்துகின்றீர்கள், அது அநீதியானகாரியமேயாம் ஆதலின், நீதியற்ற வுங்களைத் தண்டிக்கவும் எளியவர்களாகிய தேவர்களை விடுவிக்கவுமே வந்தேம். என்வந்தியொன்னின் நாமே சகலாண்டங்களுக்குங் கர்த்தா, அதனால் வந்தாம். என்றாரிறைவர் என்னும் பொருள் தொனித்தல் காண்க. (௩௪௯)

எங்களு யகமா யுள்ள விறையவ னினைய கூறச்
சிங்கமா முகத்து வீர னுருமிடி திளைத்த தொப்ப
வங்கைபோ டங்கை தாக்கி யண்டமுங் குலுங்க நக்குப்
பொங்குவெஞ் சீற்ற மேலா னிங்கிவை புகல லுற்றான்.

(இ-ள்.) எங்கள் கருத்தாவாகவுள்ள சண்முகப்பெருமான் இவ்வண்ணந் திருவாய்மலர்ந்தருளுதலும் அவரதத்திருவாய்மொழிகளைக் கேட்ட சிங்கமுகாசுரன் இடியுமிடியு மோதினாற்போல அகங்கையுட னகங்கையையறைந்து அண்டமுங் குலுங்குமாறு சிரித்துப் பொங்காநின்ற வெவ்விய கோபத்தின் மிகுந்தவனாகி இவ்விடத்திலிவைகளை யுரைக்கத்தொடங்கினான்.—எ-று. (௩௫௦)

ஈங்கெமர் தமையும் வென்று யிமையவர் சிறையு மின்றே
நீங்கின ராவர் நீயு நீக்குதி போலும் போலு
நாங்களு மளியர் தாமே நன்றுநின் சூழ்வே யாற்ற
லோங்கிய துனது மாட்டே யுண்மையி தன்றி யுண்டோ.

(இ-ள்.) குமாரனே! இனிநீ இவ்விடத்தி லெம்மவர்களையும் வென்றனை. தேவர்களும் இந்நாளிலேயே சிறை நீங்கினவர்களாக வாவார்கள், நீயும் அச்சிறையைநீக்கு

வாய்; நீக்குவாய்; நாங்களும் ஏழைகள்தானே நினதாலோசனை நன்றாகவிருக்கின்றது; உன்னிடத்தில் ஆற்றல் அதிகமாக விருக்கின்றது இதனைவிட உண்மை வேறேயுண்டோ?—எ-று.

நீ மிகவும் சிறியன் இளவயதினனான நினக்கென்ன வன்மை இருக்கப்போகின்றது என்று குறிப்பிப்பான் ஆற்றலோங்கியதுனது மாட்டே என்றான் என்றார். (௫௫க)

இந்திர குமரன் றன்னை யிமையவர் குழுவை வாரி
வெந்தளை மூழ்கு வித்து விட்டிய சிறையு நீக்கல்
சந்திர மௌலி யண்ண றன்னினு முடியா தென்றான்
மைந்தநீ யொருவன் சொல்லோ முடித்திட வல்ல மன்னோ.

(இ-ள்.) இந்திரகுமாரனான சயந்தனையும் தேவர்களையும் ஒன்றுபடுத்தி வெவ்விய விலங்கிட்டு அடைக்கப்பட்ட சிறையை நீக்குதற்கு, சந்திரமௌலீசுவரரான சிவபெருமானாலேயும் முடியாதானால் குழந்தையான நீயொருவனோ மேற்சொன்ன காரியத்தை நிறைவேற்றவல்லவன்.—எ-று.

நின்னைப்பெற்றுவளர்த்து நினக்கு வேலுமிரதமுஞ் சேனையுமளித்து நின்னையனுப்பிய நின்றந்தையாலும் இமையவர் சிறைவிடுபடாதனால் நீயோ விடுப்பாய் என்றான் சிங்கமுகனென்க. (௫௫உ)

கண்ணுத லுனக்குத் தந்த காமரு சுடர்வே லாற்ற
லெண்ணலன் மறலி யாகி யிகழ்ந்துபோ ரியற்றி னானை
யுண்ணிக ழாவி கொண்டா யோடினு முய்தி யீண்டு
நண்ணிய தன்மை யெங்க ணல்வினை தந்த தன்றே.

(இ-ள்.) கண்ணுதலாகிய சிவபெருமானுனக்களித்த அழகுபொருந்திய ஒளியோடுகூடிய வேலாயுதத்தின் வன்மையை மதியாது பகைவனாகி இகழ்ந்து எதிர்த்துப் போர்புரிந்தவனது உள்ளேபொருந்திய உயிரைக்கொண்டோய்! ஓடினாயாகி லுய்வாய் நீ இவ்விடத்திற்கு வந்தது எங்கள் புண்ணியத்தின் பயனளித்ததேயாம்.—எ-று.

உனது தன்மையை மதியாது இகழ்ச்சிகூறிப்பொருத பகைவனுயிரை வாங்கின சண்முகனே! யான், நெற்றிக்கண்ணுளரான சிவபெருமான் பகைவரை வெல்லும் வண்ணம் உனக்களித்துள்ள அழகும் ஒளியும் பொருந்தின வேலாயுதத்தின் தன்மையை (மதிப்பவர்கள் மதிக்கட்டும்) யான் மதியேன்; நீ இங்கு நில்லாது ஓடிப்போவையாகிற் பிழைப்பாய்; (ஆலோசிக்குமிடத்தில்) ஓடிப்போகாமல் நீ இவ்விடத்திலேயே நிற்குந் தன்மையானது உன்னுடையகுற்றமன்று; நீ ஓடியே போயிருப்பாய்; உன்னைப்போரில் வென்றடையும் கீர்த்தியைத்தரநின்ற எங்கள் புண்ணியமானது உன்னை இங்குநிறுத்தியது என்றான் என்னினுமாம்.

உனதுவருகை எங்கள் கெட்டகாலத்தின் விளைவேயாமென்றான் சிங்கமுகன் என்றும் பொருள்படுமாறு "நல்வினை தந்ததன்று" என்றார். எங்கள் நல்வினை என்றது-அசுரகுலத்தோ ரனைவருஞ்செய்த புண்ணியத்தினை. (௫௫௩)

கடம்பமர் கண்ணி யாய்கேள் கடவுள்வேல் கொண்ட வாற்ற
றிடம்படு நினது வன்மை யாவையுந் தெரிதந் துள்ளேன்
றடம்படு குவவுத் திண்டோட் டாரகன் போல ஞாட்பின்
மடம்படு கின்ற தில்லை வல்லைபோர் புரிதி மாதோ.

(இ-ள்.) கதம்ப மலர்களையமர்த்திக் கட்டப்பட்ட மாலையினையுடையோய் கேட்பாயாக. கடவுளளித்த வேற்படையைக்கொண்டுள்ள வன்மையும் திடம்பொருந்திய உனது வன்மை முதலியவனைத்தையும் அறிந்திருக்கின்றேன். அகற்சி பொருந்திய

இருண்மயமாகித் தற்போது விளங்குகின்ற மனத்தினையுடைய கொடியவனான சிங்கமுகன்பார்த்துக் கோபித்து தனது கையைக்கொண் டந்தவழியை மூடிக்கொண்டு கந்தக்கடவுண்மீது ஒருதண்டாயுதத்தினை எடுத்தெறிந்தனன்.—எ-று.

எங்ஙனம் வெளியே செல்வேம், யாண்டும் மார்க்கத்தினைக் காணேமே என்று கருதி சிறைப்பட்டுக்கிடந்த பூதங்கள் சிறை நீங்கினவையாயின. ஆதலின் "உய்குறு கணங்கள்" என்றார். (௬௬௧)

அண்டம்விண் டதுகொ லென்ன வணிமணித் தொகுதி யார்ப்பத்
தண்டம்வந் திடுத லோடுந் தன்னிக ரில்லா வண்ணல்
கண்டன னிமைப்பி னன்கு கணைதொடக் கதையைச் சிந்தி
யொண்டிறற் சூரன் பின்னோ னெற்றிபுக் கொளித்த வன்றே.

(இ-ள்.) அண்டந்தான் பிளந்ததோ என்று கூறுமாறு அழகிய மணிக்கூட்டங்கள் சத்தியாநிற்கச் சிங்கமுகவசுரன்விட்ட தண்டாயுதம் தன்னெதிரே வருதலும் தனக்கிணை தானேயான சண்முகப்பெருமானார் அதன் வருகையைத் திருவிழிகளாற் கண்டு அதனை அழிக்கும்வண்ணம் இமைப்பொழுதில் நாலம்புகளைவிட அவைசென்று அத்தண்டாயுதத்தையழித்து ஒள்ளிய திறலினனான சூரபன்மனுக்கிளைய சிங்கமுகனுடைய நெற்றியிற்புகுந்து மறைந்தன.—எ-று.

தண்டத்தின் பெருமையை விளக்குவான் "அண்டம்விண்டதுகொலென்னவணிமணித்தொகுதியார்ப்ப" என்றார். குமாரப்பெருமானை ஒப்புயர்வற்ற பெருங்கடவுள் என்பார் "தன்னிகரில்லாவண்ணல்" என்றார். (௬௬௨)

ஒளித்திடு கின்ற சாலை யுருகெழு மடங்கற் பேரோன்
களித்திட லொருவி மேலைக் கடுஞ்சினக் கோட்புச் சிந்தித்
தெளித்திடு முணர்வு மின்றிச் செய்யகோல் செலுத்து மன்ன
னளித்திட லொழிந்த காலத் துலகம்போ லழுங்கி நின்றான்.

(இ-ள்.) சிவகுமாரன்விட்ட நாலம்புகளும் சென்று சிங்கமுகனுடைய நெற்றியிற்பட்டு மறைந்தவுடனே கண்டோர் அஞ்சத்தக்க பாய உருவத்துடன் போர்க்களத்தில் விளங்காநின்ற சிங்கமுகாசுரன் மதத்துநிற்றலைவிட்டு முன்னிருந்த கடியகோபத்தின் கோட்பாட்டையும் விட்டு, தெளிவுபொருந்திய அறிவுமில்லாமல், செங்கோல் செலுத்துமரசன் காத்தலைவிட்டவுடனே அவனுளுகைக்குட்பட்ட உலகந் தத்தளித்தலைப்போல வருந்திநின்றான்.—எ-று.

நெற்றியிற்பட்ட நான்கம்புகளால் சீர்குலைந்து தத்தளித்தானென்பதை விளக்குவான் "செய்யகோல்செலுத்துமன்ன னளித்திட லொழிந்தகாலத் துலகம்போலழுங்கி நின்றான்" என்றுவமையிட்டுரைத்தார். தெளித்திடுமுணர்வென்றது-புத்தியை. (௬௬௩)

வேறு.

பேர்ந்திடு முணர்வொடும் பிரிவி றுன்பொடும்
சேர்ந்திடு மரிமுகத் தீய னின்றுழி
வார்ந்திடு குருதிதோய் வாயின் மூடுகை
சோர்ந்தன வருள்வரத் தொலைந்த மாயைபோல்.

(இ-ள்.) நீங்கப்பட்ட வறிவுடனும் பிரிவற்ற துன்பத்துடனும் பொருந்திய கொடிய சிங்கமுகாசுரன் தன்னியலைமறந்து மயங்கிநின்றபொழுது ஒழுகாநின்ற இரத்தந் தோய்ந்த வாயிலை மூடியிருந்த அவன் கைகள் அருட்சத்தி பதிந்தவுடனே அழிந்த மாயையைப்போல சோர்ந்தன.—எ-று.

திருவருட்சத்தி பதிந்தவுடனே உறங்குவோன் கைப்பாக்கென்ன ஒய்ந்தகலா நிற்கு மாயாமலமானது அதனைப்போல சிங்கமுகன் கரங்களுஞ் சோர்ந்தனவென்க.

ஆன்மாவானது பல்லூழிகாலம் மாயையால் மயக்கப்பட்டுக் கிடக்கினும் அருட்சத்தி பதிந்தவுடனே மாயை அகலும் ஆதலின் "அருள்வரத்தொலைந்தமாயைபோ" லென்றார். இதனை "ஈசனருளுதயகாலத்திறக்குமிது - பேசுவா மாயைப் பெயர்" என்னும் சித்தாந்ததெரிசனத்தாலுணர்க. (கூகூ௪)

அறந்தவிர்ந் தொழுகினோ னாகந் தன்னிடைத்
திறந்திடு நெறிகளாற் சிறையின் வைப்பொரீஇப்
பறந்திடு புள்ளெனப் படர்ந்து கந்தவேள்
புறந்தனில் வந்தன பூதம் யாவுமே.

(இ-ள்.) அதர்மமாக நடந்துள்ள சிங்கமுகாசுரனுடையமார்பினில் திறக்கப்பட்ட வழிகளால் மனிதர் முதலியவர்களாற் பிடித்தடைத்துவைக்கப்பெற்ற கூடு முதலிய சிறைகளில் நின்றும் தப்பித்து ஒடுகின்ற பறவைகளைப்போல பூதங்களனைத்தும் அந்தரமார்க்கமாக வெழும்பிச்சென்று கந்தக்கடவுளின்சுற்றிலும் நெருங்கிச்சூழ்ந்தன.—எ-று.

புறம் - பக்கம். (கூகூ௫)

அன்றரி முகத்தவ னலைத்து நுங்கின
கொன்றன வெறிந்தன கூளி யாவையும்
வென்றிகொள் வேற்படை விமல னாணையாற்
றுன்றிவந் தடைந்தன தொன்மை கூடியே.

(இ-ள்.) அத்தின நடந்த சண்டையில், சிங்கமுகாசுரன் வருத்தி விழுங்கினவும் கொன்றனவும் எறிந்தனவும் ஆகிய பூதங்களனைத்தும் பொருந்திய வேற்படையினையுடைய விமலனது திருவாணையாற் பழய தன்மையையடைந்து முன்போல வந்து சேர்ந்தன.—எ-று.

இயல்பாகவே பாசமில்லாதவன் எம்பெருமானென்பார் "விமல" னென்றார்.()

வேறு.

அன்னதொரு காலை யறுமா முகக்கடவு
டன்னிகரி லாததனக் கிளையோர் தங்களையுந்
துன்னலுறு பூதத் தொகையோர்கள் யாவரையு
முன்னியவர் தன்பா லொருகோ றொடுத்தனனே.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் ஆறுதிருமுகங்களையுடைய கடவுள் தனக்கொப்பற்றவர்களும் தம்பிளையவர்களும் ஆனவீரவாகுதேவராதியரையும் நெருங்கியிருக்கின்ற பூதகூட்டத்தினரனைவரையும் விடுவிக்கவேண்டுமென்று திருவுளத்தில் நினைத்து அவர்களிடத்திற்கு ஒரு அம்பினைவிட்டருளினார்.—எ-று. (கூகூஎ)

உந்தும் பகழி யுததி பலகடந்து
முந்துங் கதிருதய முன்னுற்று மொய்ம்பர்தமைப்
பந்தங் கொடுசூழ்ந்த பாசவலை சிந்திடலுங்
கந்தன் றனதருளாற் கண்டுயில்வார் போலெழுந்தார்.

(இ-ள்.) குமரக்கடவுள் விட்ட அம்பு பல கடல்களையுந் தாண்டி முற்பட்ட கதிரின் உதயத்தின் முன்னருற்று வீரர்களைக்கட்டாகக்கொண்டு சுற்றியுள்ள மாயாபாசவலையை யறுத்தது உடனே கந்தக்கடவுளின் திருவருளால் கண்டுயின்றவர்களைப்போல அவரனைவரும் எழுந்தார்கள்.—எ-று.

"முந்துங்கதிருதயமுன்னுற்று" என்பது சூரியனுதயமாகின்ற உதயகிரியை. ()

பாசத் தளையிற் படுவா ரதுநீங்கி
மாசற்ற நல்லுணர்வு வந்தெய்த வுய்ந்தனராய்ப்
பேசற்கரிய வின்பம் பெற்றோர்க டாமாகிப்
பீசற் கினியா னிணையடிகள் வாழ்த்தெடுத்தார்.

(இ-ள்.) மாயாபாசமாகிய தளையிலகப்பட்டுக்கொண்ட வீரவாகுதேவர் முதலியவர்கள் அப்பாசத்தளையினின்றும் குமரக்கடவுளின் திருவருளினால் விலகிக் களங்கமற்ற நல்லறிவு வந்துதயமாக உய்ந்தவர்களாய் வாக்கினாற் கூறுதற்கியலாத இன்பம் பெற்றவர்களாய் சிவபெருமானுக்கு மகிட்சியையளிக்கின்ற வவரது செல்வக்குமாரரான சண்முகக்கடவுளினுபயசரணாரோருகங்களைக்குறித்து எங்களை மாயாபாசத்தினின்றும் விடுவித்த இறைவனடிமலர்கள் நீடூழி வாழ்க என்று வாழ்த்தினார்கள்.—எ-று.

இத்திருவிருத்தத்தில், பக்குவமுறையாற் பந்தமொழிந்து பேரின்பவாழ்வினை உறுவோர்க்குள்ள வியல்பினை இஞ்ஞான்று வீரவாகாதியருமடைந்தனரென்று குறித்திருக்கின்றனர். இதனை ஊன்றியுணர்க. (௫௬௯)

ஆங்கதுகா லத்தி லறுமுகவே ளுய்த்தகணை
பூங்கமலத் தோனுதவு புட்பகத்தின் மாட்சியதாய்த்
தீங்கிலிள மைந்தர்தமைச் சேனை பொடுமுகந்து
தாங்கி விசும்பின் நெறிக்கொண்டு சென்றதுவே.

(இ-ள்.) அப்பொழுது ஆறுமுகப்பெருமான் விட்ட அம்பு, அழகிய தாமரை மலரிலிருக்கின்ற பிரமனளித்த புட்பகவிமானத்தின் தன்மையாய், குற்றமற்ற வீரவாகு தேவராதிய இளங்குமாரர்களைச் சேனையோடு வாரிச் சுமந்துகொண்டு ஆகாயமார்க்கமாகக் குமரக்கடவுளினிருப்பிடத்தைக்குறித்துச் சென்றது.—எ-று.

பிரமனையன்றிப் பிறராரும் புட்பகமென்னும் விமானத்தை இயற்றினாரில்லை ஆதலின் "பூங்கமலத்தோனுதவுபுட்பகம்" என்றார். அது தன்மீதிவர்வோரளவினதாக அகன்றுஞ்சுருங்கியு நிற்குந் தகுதியினையுடையது. (௫௭௦)

என்று திகழ்வெற்பை யிகந்தேழ் கடனீங்கிச்
சென்று கடிது செருநிலத்திற் சேனையொடு
நின்ற குமர னெடுந்தாண் முனமுய்த்துத்
துன்று கணைபொதிந்த தூணியிடைப் புக்கதுவே.

(இ-ள்.) சிங்கமுகனுடைய மாயாபாசத்தின் வன்மையைக் கெடுத்து வீரவாகு தேவராதியர்க்கிருந்த மயக்கத்தினை யகற்றிப் பூங்கமலத்தோனுண்டாக்கிய புட்பகம் போல வுருக்கொண்டு, மேற்குறித்தவர்களைத் தன்மீதேற்றிச் செல்லும் விசித்திரமான செய்கைகளையுடைய அவ்வம்பு, சூரியனுதிக்கின்ற உதயமென்னும் வெற்பினைக்கடந்து அதற்கிப்பாலுள்ள க்ஷீராப்தி முதலிய எழுகடல்களையுந்தாண்டி கடிதுசென்று போர்க்களத்திற் சேனைகளுடனே எழுந்தருளிநின்ற குமரக்கடவுளின் நெடிய திருவடிக்கெதிரே விடுத்து நெருங்கிய அம்புகளாற்பொதியப்பெற்ற அம்புக்கூட்டிற்புகுந்தது.—எ-று.

அந்த வமையத்தி லடல்வீர மொய்ம்பினனு
மிந்திரனும் போற்று மிலக்கருட னெண்மர்களு
மந்தமிலாப் பூத வணிகங்களு மளியாற்
கந்த னிணையடிகள் கைதொழுது தாழ்ந்தனரே.

(இ-ள்.) அப்பொழுது, வெற்றிபொருந்திய வீரவாகுதேவரும் இந்திரனுந் துதிக்கின்ற இலக்கர்களுடனே எட்டுவீரர்களும் அழிவற்ற பூதசேனைகளும் அன்பினால் கந்தக்கடவுளினிணையடிமலர்களைக் கைகளாற்றொழுது வணங்கினார்கள்.—எ-று. (௫௭௨)

நீக்கம்பெ றாதுயிர்க்கு ணின்றானைத் தொல்வறிஞ
ராக்கம்பெற் றென்ன வடிவணங்கிப் போற்றுதலு
வீக்குங் கனைகழற்கால் வீரர் தமை நோக்கித்
தேக்குங் கருணையினா லீதொன்று செப்பினனால்.

(இ-ள்.) பெத்தம் முத்தி யென்னும் இருவித காலங்களிலும் நீக்கமில்லாமல் உயிருக்குள் உயிராய் நின்றருளின நமது சண்முகப்பெருமானைத் தரிசித்து நெடுநாளாக வறியனாகவே இருப்பவன் செல்வமடைந்தாற்போல திருவடிகளை வணங்கித் துதித்தலும், அக்கடவுள், கட்டப்பட்ட சத்திக்கின்ற வீரகண்டையணிந்த காலினரான அவ் வீரர்களைத் திருநயனங்களாற் பார்த்து, அவர்கண்மீது நிறைந்த கருணையினா லிதுவொன்றைத் திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று.

பதியாகிய குமரப்பெருமான் பெத்தமுத்திகளிலும் உயிர்களொடு பிரியாமல் நிற்பவனாதலால் "நீக்கம்பெறா துயிர்க்குள்நின்றான்" என்றார். இதனை, "ஆருயிரினுள் ளிருந் தாங்காங்கறிவிப்பா ராருயிரோயேனியவர்க்கு" என்னுஞ் சித்தாந்ததெரிசனத்தா லுணர்க.

மகிழ்ச்சிகளுளெல்லாம் மிக்கது தரித்திரனுக்கு மிகுந்த திரவியம் ஏககாலத்திற் கிடைத்தவுடனே யவனடையு மகிழ்ச்சியாதலால் இவரும் வீரவாகாதியர் அடைந்த மகிழ்ச்சிக்குதாரணமாக "தொல்வறிஞ ராக்கம் பெற்றென்ன" வென்றார். (ஙஎங)

தொக்கீ ரவுணன் றொடுமாயைச் சூழ்வலையிற்
புக்கீர் புலர்ந்தீர் புலனழிந்தீர் யாப்புறவுந்
தக்கீ ருதயந் தனிற்புகுந்தீ ரிவ்வாறு
மிக்கீரு நொந்தீர்கள் போலு மிகவென்றான்.

(இ-ள்.) உயர்ந்தவர்களாகிய நீங்கள் அசுரன் அனுப்பிய மாயாபாசவலையிலகப் பட்டுக்கொண்டு வருந்திப் புலனழிந்து ஒற்றுமையுமற்று உதையகிரியிற்புகுந்து இவ் வண்ணம் மிகவும் வருத்தமடைந்தீர்களென்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று.

யாப்புறவுந்தக்கீர் - என்பதற்கு, கட்டுப்படவுந் தகுந்தவர்களா தகாதவர்களா யிற்றே என்று கொள்ளினுமாம். போலுமென்பது வாளாவந்த உவமையுருபு.

மிகக்கிரும் என்பதற்கு, எல்லாருமென்று பொருள் கொள்ளினுமாம். (ஙஎச)

முந்தை யுணர்வு முடிந்தாலென் னாருயிர்போ
யந்த நிரயத் தழுந்தி யயர்ந்தாலென
வெந்துயரா மூழ்கி வினைப்பிறவி புக்காலென்
னெந்தை யருளுண்டே லெமக்கென் குறையென்றார்.

(இ - ள்.) இவ்வண்ணம் எம்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய விதனைக் கேட்ட வீரவாகாதியரனைவரும் மிகுந்த ஆனந்தாம்புதியில் அழுந்தினவர்களாய் எம் பெருமானைப்பார்த்து எங்கள் பெருமானே அடியோங்கட்கு முன்னிருந்த அறிவு கெட் டால்தானென்ன, அரிய உயிர் நீங்கி அந்த நரகத்தில் விழுந்தழுந்தி வருந்தினால்தானெ ன்ன, வெவ்விய துயரத்தின்முழுகி வினைப்பிறவியிற் புகுந்தாற்றான் என்ன, எந்தை பெருமானுடைய திருவருளுண்டானால் எங்களுக்கென்ன குறைவு என்று பதிலுரைத் தார்கள்.—எ-று.

எங்குச்சென்று எத்தகைய துன்பமுறினும் எங்கள் தந்தையாகிய தேவரீர் திரு வருள் உள்ளநாள்வரைக்கும் அத்துன்பங்களெங்களை வருத்தா. யாங்களும் குறையுடை யேம் ஆகி இரேம் என்றார் என்பான், "எந்தையருளுண்டே லெமக்கென் குறையென் றார்" என்றார். (ஙஎரு)

ஆங்காகு மெல்லை யருமறையுந் தேறரிய
வோங்கார மூலத் துணர்வா யுறைபகவ
னீங்கா நெறியா னிறைபே ரருள்புரியப்
பாங்காக் நின்ற பரிசனர்கள் போற்றினரே.

(இ-ள்.) எந்தையருளுண்டே லெமக்கென்குறையென்று வீரவாகுதேவராதியர் எம்பெருமானைத் துதித்தசமயத்தில் அரிய வேதத்தினாலும் அறிதற்கரிய பிரணவமூலத்தினில் உணர்பொருளாக எழுந்தருளி இருக்கின்ற பகவானான கந்தப்பெருமானார் வீரவாகுதேவராதியரைக்குறித்து என்றும் நீங்காத வண்ணமாக நிறைந்த பேரருளினைக் காட்டியருளினார். உடனே அவர் அருகில் நின்ற பரிசனங்கள் அவ்வெம்பெருமானைத் துதித்தார்கள்.—எ-று.

ஓங்காரமூலத்தின் உணர்வாகவுள்ளது சிவம். அச்சிவமே இக்குமாரசுவாமியார் ஆதலின் "ஓங்காரமூலத்துணர்வு" என்றார். ஓங்காரமானது அகர உகர மகரமாகிய மூன்றுவர்ணங்களாலுறழப்பெற்ற ஒருமொழி. இதில் அகரமே சிவன்; உகரமே சத்தி; மகரமே ஆன்மா என்பது சுருதி. (௬எசு)

வேறு.

அன்னதொ ரமைதியி லண்ணல் வார்சிலை
துன்னுறு நாணொலி கேட்டுச் சோர்வுறா
முன்னுற வீழ்படை முதல்வ னாடலை
யுன்னுறு செய்கையா லெழுந்த வொல்லையில்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் இறைவனுடைய நீண்ட வின்னாணோசையைக் கேட்டுச் சோர்ந்து இக்காரிய நிகழ்வதற்கு முன்னே மயங்கிவிழுந்த சிங்கமுகனுடைய சேனைகளை நங்கடவுள் எழுந்தியங்குமாறு திருவுளத்தில் நினைத்த நினைப்பினால் விரைவிலெழுந்தன.—எ-று.

இறைவன் போர்புரிய வேண்டுமென்று திருவுளத்திற் கருதாவிடில் மயங்கி வீழ்ந்த அசுரசேனைகள் எழுந்திரா என்னும் பொருள் எதிர்மறையாய் கேட்கப்படுதலுண்டாமாறு நயம்பட "முதல்வனாடலையுன்னுறு செய்கையா லெழுந்த" என்றனர். ஆடல்-திருவிளையாடல், அல்லது சண்டை. (௬எஎ)

ஈங்கிவ னொருமக னெமையெ லாஞ்சிலை
தூங்கிய நாணினாற் றொலைக்குங் கொல்லெனாத்
தாங்கிய படையுடைத் தகுவர் தானைக
டீங்கனல் பரந்தெனச் சினங்கொண் டார்த்தவே.

(இ-ள்.) இவ்விடத்திலிவனொருமகன் எம்மனைவரையும் ஒருவேளை வில்லிற் றூங்குகின்ற நாணியினால் அழித்துவிடுவானோ? என்று நினைத்துக்கொண்டு சுமக்கப் பெற்ற ஆயுதங்களையுடைய அசுரசேனைகள் கொடிய அக்கினி பரவினாற்போல சீற்றங் கொண்டு ஆரவாரித்தன.—எ-று.

அசுரசேனைகள் குமரக்கடவுளை மதியாது பேசின என்பார் "இவனொருமகன்" என்றார் என்றார். தொலைக்குங்கொல் என்பதற்குத் தொலைப்பானோ என்று கொள்ளினுமாம். (௬எஅ)

ஆழிமால் கடல்புரை யவுண மாப்படை
காழுலாம் பலபடைக் கலமுஞ் சிந்தியே
யூழிநா ளெல்லையி னுலகெ லாமடுங்
கேழிலான் மதலையைக் கிளர்ந்து சூழ்ந்தவே.

(இ-ள்.) சக்கராயுதத்தினையுடைய திருமாலினிருப்பிடமான திருப்பாற்கடலைப்போல மிகுதியாக வந்துள்ள சிறந்த அசுரசேனைகள் வயிரம்பொருந்தின பலவிதமான ஆயுதங்களைச் சிதறிக்கொண்டு பிரளயகாலத்தில் உலகமனைத்தையு மழிக்கின்ற ஒப்பற்ற சிகண்ட பரமேசுவரனுடைய பிள்ளையான சிவசண்முகப்பெருமானை ஆரவாரத்துடனே சூழ்ந்தன.—எ-று.

ஆழிமால்கடலென்பதற்கு, உலகினை வட்டமாக வளைந்த கடல் என்னினுமாம். சிந்துதல் - விடுதல். (௩எக)

சுற்றிய வேலையின் முறுவ ரோன்றிட
நெற்றியங் கண்ணுடை நிமலன் மாமகன்
கொற்றவெஞ் சிலையினைக் குனித்துப் பூட்டியே
செற்றிய கணைமழை சிதறி னானரோ.

(இ-ள்.) அசுரர்கள் சூழ்ந்துகொண்டவுடனே நெற்றிக்கண்ணினையுடைய மலரகிதரான சிவபெருமானுடைய சிறந்த விளையகுமாரரான மேன்மைபொருந்திய சண்முகப்பெருமானார் குறுநகையரும்பாநிற்ப வெற்றிபொருந்திய தமது வெவ்விய வில்லினை வளைத்து நாணேற்றி நெருங்கிய அம்புமழையை அவர்கள்மீது பெய்தருளினார்.—எ-று.

இங்ஙனங்கூடிய அசுரரைப் பொருட்படுத்தாது விளையாட்டாகப் போர்புரிந்தாரென்பார், "முறுவரோன்றிட" என்றார். அம் - சாரியை. (௩அ0)

அங்கியின் வடிவின வாலம் போல்வன
கங்குலை நிகர்ப்பன காலற் கொப்பன
பொங்கிய வெஞ்சினப் புயங்க நேர்வன
செங்கதிர் மலைவன செம்மல் வாளியே.

(இ-ள்.) நமது தலைவரான குமாரசுவாமியார் விடுத்தருளிய அம்புகள் அக்கினிவடிவமாயுள்ளன அநேகம், விடத்தையொப்பன அநேகம், இருளையொப்பன அநேகம், எமனையொப்பன அநேகம், பொங்குகின்ற வெவ்விய கோபத்தினையுடைய பாம்புகளை யொப்பன அநேகம், செவ்விய கிரணங்களையுடைய சூரியனை ஒப்பன அநேகம்.—எ-று.

"துணைப்பமலையத்தூக்கெசெத்தொடு கெழுதேர்நகைமிகு சிவணிகரின்னவுமின்னபிறவும் எய்துதலுரிய" என்னுமிலக்கணவிளக்கத்தால்,'மலைவன' வென்றதை உவமையுருபாகக்கொண்டு ஒப்பன என்றாம். (௩அக)

மின்னினுஞ் சுடரின வுருமின் வெய்யன
பொன்னுறழ் நிறத்தன மணியின் பொற்பின
மன்னிய வானவின் மாறு கொள்வன
பன்னிறம் படைத்தன பகவன் வாளியே.

(இ-ள்.) சாட்குண்ணிய பரிபூரணரான ஸ்ரீ கந்தசுவாமியார் விடுத்தருளின அம்புகள் மின்னலைக்காட்டினும் அதிகமான சுடரினையுடையன, இடியைக்காட்டினும் கொடியன, பொன்னையொத்த நிறத்தினையுடையன, மணியைப்போலும் அழகினையுடையன, ஆகாயத்திற்பொருந்திய இந்திரவில்லினும் சிறந்தன, அன்றியும் பலவேறுவகையான அநேக நிறங்களையுடையன.—எ-று. (௩அ௨)

வேறு.

சூலம் போல்வன தோமரம் போல்வன சுடர்வா
யாலம் போல்வன நாந்தகம் போல்வன வடல்வேற்
கோலம் போல்வன கழுமுளும் போல்வன குலிச
சாலம் போல்வன வாறுமா முகன்விடு சரங்கள்.

(இ-ள்.) சிறந்த ஆறு திருமுகங்களையுடைய குமரக்கடவுள் விட்ட அம்புகள் சூலாயுதங்களைப்போல்வன, தோமராயுதங்களைப்போல்வன, ஒளிபொருந்திய மழுப் படைகளையொப்பன, வாட்படைகளையொப்பன, வன்மைபொருந்திய வேலின்வடிவத்தை யொத்தன, கங்கபத்திரங்களையும் ஒத்தன, வச்சிரகூட்டங்களையும் ஒத்தன.—எ-று.

அறத்தை நல்கலி னந்தணன் போல்வன வகிலத்
திறத்தை யன்பொடு போற்றலிற் செங்கண்மால் போல்வ
வொறுத்து மன்னுயி ருண்குறு மவுணரை யொருங்கே
யிறுத்தல் செய்திடுந் தன்மையா லீசனே போல்வ.

(இ-ள்.) எங்கள் பெருமானுன குமரக்கடவுள் விடுமம்புகள் அழிந்ததருமத்தை யுண்டாக்குதலால் உலகத்தைப் படைக்குந் தொழிலாளியான பிரமதேவனையொத்தன, அகிலலோகங்களையும் அன்புடனே பாதுகாக்கின்றமையால் உலகத்தினைக் காக்குந் தொழிலினையுடைய செங்கண்மாலையொப்பன, உலகிலுள்ள நிலைபெற்ற உயிர்வருக்கங்களைத் துன்புறுத்தி யுயிர்களை யுண்ணுகின்ற அசுரர்களையொன்றாக நாசஞ்செய்யுந் தன்மையினால் சங்காரகருத்தாவான ஈசனையொப்பன.—எ-று.

நல்குதலா லயனையும், காத்தலால் மாலையும், அழித்தலா லரனையும், தொழின் முறைமையா லவ்வம்புக ளொத்தன ஆயின. (௩அ௪)

காற்றிற் செவ்விதிற் செல்வன சுறங்குவ கடுங்கட்
கூற்றிற் கொப்பன மனத்தினுங் கடியன கொடுந்தீ
நூற்றுக் கோடிக ளானுகினும் விசையிற்று னெய்தின்
மாற்றத் தக்கன குமரவேள் விடுத்திடும் வாளி.

(இ-ள்.) குமரப்பெருமான் விட்டருளிய அம்புகள் வாயுவைக்காட்டினும் செவ்வனே செல்வன, சுழலாநிற்பன, கொடிய கண்களையுடைய எமனையொப்பன, மனதினும் அதிக வேகமாகச்செல்வன, கொடிய நூறுகோடி அக்கினிகள் எதிர்த்தாலும் தமது வேகத்தாலவைகளை எளிதாக மாற்றத்தக்கன.—எ-று.

செல்லுஞ் செல்லுகையிலும், சுழல்வதிலும் காற்றினை வென்றன. கொல்லுந் தொழிலி லெமனை யொப்பன. வேகத்தில் மனோவேகத்தினுஞ் சிறந்தன. எத்தகைய பேரழலினையுந் தமது விசைக்காற்றினால் இலேசாக அழிக்கவல்லன குமரவேளின் அம்புகள் என்றறிக. (௩அ௫)

ஒன்று தொட்டிடிற் கோடியா மொல்லையி லவையுந்
துன்று கோடிமேற் கோடியா மேலுமத் தொகையே
யன்றி யாரதற் கெண்கொடுத் துரைப்பவ ரநந்த
மென்று சொல்வதே முருகவே ளொடுங்கணைக் கிலக்கம்.

(இ-ள்.) ஒன்றைவிட்டால் அது ஒருகோடியாம், விரைவிலக்கோடியும் நெருங்கிய கோடிக்குமேற் கோடியாம், பின்னுமத்தொகையேயல்லாமல் அதற்கெவர் எண்ணிக்கை கொடுத்துச்சொல்பவர்கள்; இனி, குமரக்கடவுளின் அம்பிற்கு கணக்கு அநந்தமென்பதேயாம்.—எ-று.

ஓரம்பே எண்ணிறந்தவம்பாக விரிந்துசெல்லுமென்றுணர்க.
கணக்கிற் கடங்காதனவென்பார். "அநந்த"மென்றார். (௩அ௬)

கார்பி ளந்திடு மளக்கரை யுண்டிடுங் கதிரோன்
றேர்பி ளந்திடும் வடவையை விழுங்குறுந் தேவ
ரூர்பி ளந்திடு மேருவைப் பிளந்திடு முலவாப்
பார்பி ளந்திடு ஞானநா யகன்விடும் பகழி.

(இ-ள்.) ஞானாதிபரான குமாரக்கடவுள் விடுத்தருளுகின்ற அம்புகள், மேகங்களைப் பிளக்கும், கடல்நீரை யுண்டிடும், சூரியனுடைய இரதத்தைப் பிளந்திடும், வடவாக்கினியை யுண்டிடும், தேருருள்களைப் பிளக்கும், மேருவைப் பிளந்திடும், கெடாத பூமியைப் பிளந்திடும்.—எ-று.

போரினை அன்றி அம்புகள் அநேக காரியங்களை இயற்றுநின்றன என்றறிக. ()

வரைகி ழிப்பதும் புவியினைப் பிளப்பதும் வரம்பி
றிரைக டற்குடித் திடுவதும் பிறவுமோர் சிறப்போ
வரிய வாயிர கோடியண் டங்களா மனைத்து
முருவி நிற்கில பின்னரு மோடுமென் றுரைக்கின்.

(இ-ள்.) தேவசேனாகாந்தருடைய கரபல்லவங்களா லுந்தப்பெற்ற அருமையான அம்புகள் அருமையான ஆயிரங்கோடியண்டங்களாகிய எல்லாவற்றையும் ஊடுருவியும் நில்லாமல் பின்னையும் ஓடுமென்று சொல்லப்படுமானால், மலையைப்பிளப்பதும் பூமியைப் பிளப்பதும் அளவற்ற அலையினையுடைய கடல்களைக் குடிப்பதும் மற்றையவையுமொரு சிறப்பான விடயமோ?—எ-று.

கூறப்படாத பெருஞ்சிறப்பின வவ்வம்பின் செயல்கள் என்று அறிக. (ருஅஅ)

தொடுநெ டுங்கணை யிவ்வகை செறிதலுஞ் சூழ்வா
ரடிது ணிந்தன கைத்தலந் துணிந்தன வணிதோண்
முடிது ணிந்தன வுரந்துணி வுற்றன முகிறோய்
கொடிது ணிந்தன விரதமுந் துணிந்தன குலைந்தே.

(இ-ள்.) குமரப்பெருமான் விட்ட அம்புகள் இவ்வண்ணம் நெருங்குதலும் அருகிற் போரின்பொருட்டுச் சூழ்ந்தவர்களின் கால்களறுந்தன, கையினிடங்கள் துணிந்தன, அழகிய தோள்களும் முடிகளும் துணிந்தன, மார்புகளறுபட்டன, மேகமண்டலத்தை யளாவிய கொடிகள் துணிந்தன, தேர்களுஞ் சீர்கெட்டுக் குலைந்தன.—எ-று.

கரைகள் பட்டென வவுணர்கள் பட்டனர் கடலி
னிரைகள் பட்டெனக் களிறுகள் பட்டன நிரந்த
திரைகள் பட்டெனப் புரவிகள் பட்டன செறிந்த
வரைகள் பட்டெனப் பட்டன வளவைதீர் மான்றேர்.

(இ-ள்.) எமது குலதெய்வமான கந்தப்பெருமான் விடுத்தருளிய அற்புத விசித்திரம் பொருந்திய அம்புகள் சென்று பட்டமையால் கடல்களின் கரைகளழிந்தாற்போல சிங்கமுகனுடைய சேனாசமுத்திரத்திலுள்ள அசுரர்கள் இறந்தார்கள்; கடல்வரிசைகள் அழிந்தாற்போல யானைகள் அழிந்தன, அக்கடல்களில் வரிசையாக வருகின்ற அலைகளழிந்தாற்போல குதிரைகளழிந்தன, நெருங்கின மலைகளழிந்தாற்போலஅளவற்ற குதிரைகள் பூண்டிருக்கும் இரதங்களழிந்தன.—எ-று.

யானைகள் குதிரைகள் இரதங்களென்னுமிவைகளை யுட்புறத்தாக்கிப் பதாதிகள் அவைகளைச்சூழ்ந்துநிற்பனவாதலால் அவைகளழிந்தமையைக் கடலின்கரைகளழிந்தாற்போலும் என்றார். யானைப்படைகள் பெருந்தோற்றத்தினவாதலினவைகளினழிவைக் கடல்களினழிவாக வுவமித்தனர். யானைகளினுஞ் சிறியனவு மெப்பொழுதும் யானைப்படையாதியின் இடையே இடையே செல்லு மசைவினவாகவு நின்றனவாதலாற் குதிரைப்படைகளின் நாசத்தை, கடலலைகளழிந்தாற்போல வென்று "நிரந்ததிரைகள் பட்டெனப் புரவிகள் பட்டன" என்றார். இரதங்கள், கொடிகள் குடைகள் சாய்மரைகள் வாழைமரங்கள் பாக்குமரங்கள் கரும்புகள் பூமாலைகள் முதலியவைகளொடுயர்ந்தனவாய், பருவதாகிருதியாய் இருப்பனவாதலால், அவைகளின் கெடுதலைக்குறித்து "அளவைதீர் மான்றேர் - செறிந்த வரைகள் பட்டெனப்பட்டன" என்றார். (ருகூ0)

ஒப்புக் கொண்டிடா மேலையோ னொன்றை யொன்றாக்குந்
துப்புக் கொண்டிடு மற்புத முணர்ந்தவன் றென்னுள்
வைப்புக் கொண்டபா ரண்டங்கண் முழுவதும் வரம்பி
லப்புக் கொண்டதோ ரண்டமே யாக்கிய வதனால்.

(இ-ள்.) தன்னிகரில்லாத்தலைவரான குமாரசுவாமியார் ஆதிகாலத்தில் சிருட்டிகர்த்தாவினலாக்கப்பட்டு நிலைபெற்று விளங்கும் பிருதிவி அண்டங்கள் அனைத்தையும் அளவற்ற நீரினாற் சூழப்பெற்ற அப்புவண்டங்களாக வாக்கியவதனால் ஒன்றை மற்றொன்றாக மாற்றுகின்ற கீர்த்திபொருந்திய ஆச்சரியகரமான செய்கையை யுணர்ந்தவரேயாம்.—எ-று.

தண்டுலம், மாவாகவும் அன்னமாகவும் பொரியாகவும் கஞ்சியாகவுந் திரிந்து நின்றாலும், உண்மையில் தண்டுலம் தண்டுலமே. தண்டுலமானது - தோரை முதலிய வேறு வஸ்துவாக ஆகாது. மண், குடமாதியவாக மாறுபடினும், மண் மண்ணேயாம் என்பர் நையாயிகர். இம்முறையால் ஒன்று மற்றொன்றாக வாகாது. அவ்வண்ணமாகுமானலது நியாயநூலுணர்ச்சிக்கு மேற்பட்ட செய்கையேயாம். இவ்வண்ணம் ஒரு வஸ்துவினை மற்றொரு வஸ்துவாக மாற்றுவோன், இக்குமாரக்கடவுளையன்றி முக்காலங்களினும் வேறெவருமின்மையால், அவரை "ஒப்புக்கொண்டிடா மேலையோன்" என்றார். பிருதிவி அண்டங்களை அப்பு அண்டங்களாகச் செய்தது மிகவும் அபூர்வநிகழ்ச்சியேயாம் என்பார். "ஒப்புக்கொண்டிடா மேலையோனொன்றை யொன்றாக்குந் - துப்புக் கொண்டிடு மற்புதமுணர்ந்தவன்" என்றார். இவ்வற்புத வுணர்ச்சி ஸாமான்யமான தன்றென்பார் அதனையுயர்த்தி "துப்புக்கொண்டிடுமற்புதம்" என்றார். (௩௬௧)

செப்பு றத்தகும் விம்மித மன்றிது தேவ
ரொப்பு றத்தருங் காண்கிலா ரெம்பிரான் கணைக
ளொப்பு றத்தரு மண்டத்தின் றொகையெலா முரீ இப்போ
யப்பு றத்தினி விடுவன வவுணர்தந் தலைகள்.

(இ-ள்.) இது கூறத்தக்கவற்புத காரியமன்று; இதனைத் தேவர்களும் மற்றெந்த விடத்திலுள்ளவர்களுங் காணமாட்டார்கள். அதுயாதெனில்எம்பெருமானரான குமாரசுவாமியார் விடுகின்ற அம்புகள் ஒன்றின்மீது ஒன்று வரிசையாக இருக்கின்ற அண்டகோடிகளையெல்லா மூடுருவிச்சென்று அவைகட்கப்புறத்தினி லசுரர்தலைகளை கொண்டிடுகின்றன.—எ-று.

முன்னும்பின்னு மிவ்வண்ணமாக வம்புகள் பகைவர் தலைகளை அண்டகோளங்களைக் கடந்துசென்று அப்புறத்திலிடுதலில்லை. இத்தேவஸேநாபதியி னம்புகளே அவ்வண்ணஞ்செய்தன. ஆதலால், இந்த ஆச்சரியகரமான காரியத்தை யுயர்த்திச் செப்புறத்தகும் விம்மிதமன்றிது என்றார். ஒன்றின்மீது ஒன்றாக இருப்பனவாதலால் அண்டங்களை "ஒப்புறத்தருமண்டங்கள்" என்றார். (௩௬௨)

மூரி யண்டலர் யாக்கைக ளெடுத்துடன் முடுகிப்
பாரி யண்டங்க ளாயிர கோடியும் பகிர்ந்து
வாரி யண்டங்க ளிடையிடை சிந்திமற் றவற்றைச்
சோரி யண்டங்க ளாக்குவ வண்ணறல் கணைகள்.

(இ-ள்.) இறைவன் விடுகின்ற பழமையான அம்புகள் வன்மைபொருந்திய பகைவர் உடல்களை யெடுத்துக்கொண்டு விரைவாகச் சென்று பெரிய ஆயிர கோடியண்டங்களையும் பிளந்து இரத்த நீரினை அவ்வண்டங்கள் தோறுஞ் சிதறி அவைகளை இரத்த அண்டங்களாகச்செய்கின்றன.—எ-று.

அண்ணலின் தொல்கணைகள் பொன்வண்ணமான பிருதிவியண்டங்களை அவை களினிறங்களை மாற்றி இரத்த நிறமானவைகளாகச் செய்தனவென்க. பகைவர் சமா ன்னியமானவரல்லர் என்பார், மூரியண்டலர் என்றார். வாரியென்ற - நீண்டு இரத்த நீரை. இவ்வாறன்றியும், அண்ணலின் தொன்மையானவம்புகள் பெரிய பகைவருடலங் களை யெடுத்து, பருமையான பிருதிவியண்டங்களாயிரங் கோடிகளையும் பிளந்து விரை வாகச் சென்று அவைகளுக்கப்பாலுள்ள ஆயிரங்கோடிகளான அப்புவண்டங்களினி டையே இடையே இட்டு அவைகட்கு வாரியண்டங்களென்றிருந்த பேரினைமாற்றி, சோரியண்டங்களென்னும் பெயருண்டாமாறு செய்வன. இரத்தங்களை அந்நீரினுட் சிதறி என்று கொள்ளினுமாம். இங்ஙனங் கொள்ளுங்கால் வாரியண்டங்களை அப்பு வண்டங்களென்று கொள்க. (௫௬௩)

ஒண்டு ளிப்படு குருதியு மவுணர்க ளுரமுங்
கண்ட துண்டமுஞ் சென்னியுந் தோள்களுங் கரமு
முண்ட மாங்கரி பரிகளும் விளிந்ததேர் முற்று
மண்ட மெங்கணுஞ் செறிந்தன வட்டிய திறம்போல்.

(இ-ள்.) இவ்வண்ணம் நடந்தபோரினால் ஒள்ளியதுளியாக விழுகின்ற இரத்த மும் அசுரர்களின் மார்பங்களும் கண்டதுண்டங்களுந் தலைகளும் தோள்களும் கைக ளும் முண்டங்களாக ஆகிய யானைகுதிரைகளும் அழிந்தனவாகிய இரதங்களும் என் னும் இவைகளைப் பரப்பிவைத்த தன்மைபோல அண்டங்களினெவ்விடங்களிலும் விழுந்து நெருங்கின.—எ-று.

எம்பெருமானுடைய அம்புகள் நடத்திய போர்த்திறத்தினால் இரத்தமாதிய எங்கு நெருங்கினவென்க. கண்டதுண்டமென்பதற்கு-கண்டங்களின் துண்டங்களும் என்று கொள்ளினுமாம். கண்டம்-கழுத்து. (௫௬௪)

புள்ளு லாவுவே லறுமுகன் பகழிபோர் புரிந்த
மள்ளர் மாப்படை யழிப்பதோ வரிதுவல் விரைவா
லள்ளல் வாரிசூ ழாயிர கோடியண் டத்தி
னுள்ள தானவர் தம்மையு முடிவுசெய் துலவும்.

(இ-ள்.) பறவைகள் மாமிசங்களைக் குறித்துச் சூழ்ந்துலவுகின்ற வேற்படை யினையுடைய ஆறுமுகப்பெருமானுடைய அம்புகள், போர்புரியாநின்ற வீரர்களின் சிற ந்த சேனைகளை யழிப்பதோ ஒரு அரிய காரியம், அஃதோரரியகாரியமன்றாம். ஏனெ னிலவை அதிக விரைவாக, சேறொடு கூடியகடல் புடைசூழ்ந்த ஆயிரகோடி யண்டங் களிலுமுள்ள தானவர்களையும் சங்கரித்துலவாநிற்கும்.—எ-று.

மலர்மாலை யணியப்பெற்று விளங்குந் தெய்வவேலாதலால் புள்ளுலாவுவேல் என்பதற்கு, தேனினை யுத்தேசித்து வண்டுகளுலாவுகின்ற வேற்படை என்று கொள் ளினுமாம். சண்முகப்பெருமானுடைய அம்பிற்கு சிங்கமுகன் சேனைகள் எம்மாத்திர மென்பார் "வல்விரைவா லள்ளல் வாரிசூ ழாயிரகோடி யண்டத்தினுள்ள தானவர் தம்மையும் முடிவுசெய்துலவும்" என்றார். (௫௬௫)

குமர நாயகன் றொடுசர நிரத்தலுங் குளிர்ந்த
கமல மாமலர் முகைபொரு முகத்தினர் கரத்தர்
தமர நேமிகொள் புகழ்ச்சியர் வணங்குறு தலைய
ரமரர் யாவரும் வானிடைப் பிழைத்துநின் றார்த்தார்.

(இ-ள்.) குமரநாதன் விடுகின்ற அம்புகள் எவ்விடத்திலும் பரவுதலும் தேவ ரனைவரும் வானத்திற் பிழைத்து நின்று குளர்ச்சி பொருந்திய தாமரையின் மலரினை யும் அரும்பினையும் ஒத்த முகத்தினையுடையவர்களும் கரத்தினையுடையவர்களும் கட

லொலிபோன்ற புகழ்ச்சியின் ஆரவாரத்தினையும் வணக்கப்பட்ட தலையினையுமுடையை வர்களாகி ஆரவாரஞ் செய்தார்கள்.—எ-று.

தேவர்கள், குமரநாயகனுடைய விசித்திர விநோத வம்புகள் ஆகாயமெங்கும் பரவுதலைக் கண்டு மிகுந்த சந்தோஷமடைந்தாரென்றும், அவைகளை விருப்பத்துடன் வணக்கம் புரிந்தாரென்றும், விளக்குவான் அத்தேவர் முகத்திற்கு விரிந்த தாமரை மலரையும் அவர்களினஞ்சலியத்தங்கட்கு தாமரையரும்புகளையும் உவமையாக்கி, "கமலமாமலர் முகைபொருகரத்தினர்." என்றார். (ருகசு)

கங்க முற்றன கொடிபிற வுற்றன கவந்த
சங்க முற்றன குணங்கரு முற்றன தகுவ
ரங்க மிற்றன கரிபரி யிரதமிற் றனவாற்
சிங்க மாமுக னொருவனு நின்றனன் செருவில்.

(இ-ள்.) குமரப்பெருமான் விட்ட அம்புபட்டிறந்தவர்களின் உடலங்களைத் தின்னக்கருதிப் பருந்துகள் வந்து நெருங்கின; காக்கைகள் வந்து நெருங்கின; கவந்த கூட்டங்களு நெருங்கின; பிசாசுகளு நெருங்கின; அசுரர்களினங்கங்கள் அறுபட்டன. யானை, குதிரை, தேர் என்னும் இவைகள் அழிந்தன. இவ்வண்ணமாகச் சதுரங்க சேனைகளுமழிந்த அந்தப் போர்க்களத்தில் சிறந்த சிங்கமுகனொருவன் மாத்திரம் இறவாது எஞ்சி நின்றனன்.—எ-று.

வந்தன பருந்துங் காகமாதியவும் பிசாசுகளும், எஞ்சி நின்றன கவந்தங்களும் பேய்களும், அழிந்தன விரதகஜங்களுந் துரகபதாதிகளும், என்றுணர்க. (ருகஎ)

மீயு யர்ந்துரு முண்டத்தி னளவெலாம் விரவ
மாய வன்மையிற் கொண்டிடு பெருந்தகை வடிவந்
தூயன் வாளிகள் பட்டுணர் வழிதலாற் றொலைந்து
சீய மாமுகன் றொன்மைபோ னின்றனன் றேர்மேல்.

(இ-ள்) மேலேயுயர்ந்து விளங்காநின்ற அண்டத்தினளவனைத்தும் பொருந்தும் வண்ணம் மாயாவல்லவத்தாற்கொண்டுள்ள பெரிய தன்மையினையுடைய அந்த உருவம், நிருமலனாகிய குமரக் கடவுளின் அம்புகள் பட்டறிவழிந்தமையால் நீங்கிப் பழைய தன்மையாகவாகிச் சிங்கமுகன் இரதத்தின்மீது நின்றான்.—எ-று.

இச்சிங்கமுகனுக்கு இயல்பாக அவ்வளவு பெரிய உருவத்துடன் இருக்கும் ஆற்றலில்லையென்றும், அவன்கொண்டபேருருவம் உண்மையானதன்றென்றுங் குறிப்பிப்பார் "மாயவன்மையிற் கொண்டிடு பெருந்தகை வடிவம்" என்றார். (ருகஅ)

நின்ற தீயவன் றனுறு மயர்ச்சியை நீங்கிச்
சென்ற தன்படை யாவையுங் கண்டிலன் சிறுவன்
கொன்று வீட்டின னென்பது தெரிந்துளங் கொதியா
வொன்று போலவோ ராயிரஞ் சிலைகள்கொண் டுற்றான்.

(இ-ள்.) மாயவுருவமாறி நின்ற கொடிய சிங்கமுகன் தானடைந்திருந்த மயக்கமொழிந்து குமரக்கடவுண்மீது போருக்குச்சென்ற தனது சேனைகளனைத்தையுங் காணுதவனாகி, நமது சேனைகளை யெல்லாம் இச்சிறுவன் கொன்றொழித்தானென்றுணர்ந்து உள்ளக்கொதிப்படைந்து ஒரே தன்மையவான ஓராயிரம் விற்களை யெடுத்துக் கொண்டு போர்புரியுமாறு நின்றனன்.—எ-று.

மயங்கிக்கிடந்தபோது தன்னுடைய சேனைகளழிந்ததனை "மயக்கந்தெளிந்தபின்பு உணர்ந்தானென்பார்" சென்றதன்படையாவையுங் கண்டிலன் சிறுவன் கொன்றுவீட்டினனென்பது தெரிந்து என்றார். (ருகக)

அலைவ ளைந்தபாற் கடன்மிசைப் பத்துநூ றம்பொன்
மலைவ ளைந்தமர் தன்மைபோன் மன்னன்மாட் டன்றித்
தலைவ ளைந்திடா வரிமுகன் றனதுகைத் தலத்தாற்
சிலைவ ளைந்திடக் குனித்தனன் சுடுசரந் தெரிந்தான்.

(இ-ள்.) அலைகளாற் சூழப்பெற்ற பாற்கடன்மீது ஆயிரம் பொன் மலைகள் வளைந்து பொருந்தியிருக்குந் தன்மையைப்போல அரசனுன சூரபன்மனிடத்திலல்லா மற் சிரம்வணங்காத சிங்கமுகாசுரன் தனது கையினுல் விற்களை வளையும் வண்ணம் வளைத்து அவைகளில் வைத்துவிடுமாறு சுடுசரங்களைப் பார்த்து எடுத்தனன்.—எ-று.

வெண்ணிறமுடையான் சிங்கமுகனென்பார் அவன் சரீர நிறத்தைக் குறித்து "அலைவளைந்த பாற்கடல்" என்றார். பொன்னிறமான பெரியவிற்களை யேந்திஞனென் பார் "பத்து நூறம்பொன் மலைவளைந்தமர் தன்மைபோ" லென்றார். தமையனையன்றி யெவரையுமதியாவியல்பினனென்பார் "மன்னன்மாட்டன்றித் தலைவளைந்திடாவரிமுக" னென்றார். (சூ00)

வேறு.

சீய மாமுகன் செஞ்சிலை பூட்டிநூ
றுயி ரப்பத் தடுசர மேவலு
நாய கன்னது கண்டு நகைப்புறு
வோய்வில் வாளியொ ராயிரந் தூண்டினுன்.

(இ-ள்.) சிங்கமுகாசுரன் தற்போது வளைத்த செவ்விய ஆயிரம் விற்களிலும் வைத்துப் பத்திலக்கம் கொலையம்புகளை விடுதலும், அவனதச் செய்கையைக் குமரப் பெருமான் பார்த்துக் குறுநகை புரிந்தவராய் அவைகட்குப் பதிலாக ஒய்வற்ற ஓராயிரம் அம்புகளை விட்டருளினர்.—எ-று.

ஆயிரம்விற்களி லநேகமாயிர மம்புகளைவைத்து விட்டானுயினும் அவை தம் மாட் டவலமானவையாமென்பதனைத் திருவுளத்துக்கொண்டவராதலால் அச்செயற்குச் சீற்றங்கொள்ளாது நகைத்தனரென்று குறிப்பிப்பார், "நாயகன்னதுகண்டு நகைப்புறு" என்றார். (சூ0க)

ஆற்றன் மேதகு மாயிரம் வாளியான்
மாற்ற லன்கணை மாரி விலக்கியே
சாற்று தற்கரி தாகிய தன்மையான்
வீற்று மாயிரம் வெங்கணை யுந்தினுன்.

(இ-ள்) குமரப்பெருமானுர், வன்மைமிக்க ஆயிரமம்புகளால் சிங்கமுகனுகிய பகைவன் விட்ட கணை மழையை விலக்கி உரைத்தற்கரிய தன்மையினையுடைய வும்பர் பிரானுர் பின்னும் ஆயிரமம்புகளை அவன் மீது விட்டருளினர்.—எ-று.

பத்திலக்கமம்புகளை ஆயிரமம்புகள் அழித்தமையா லவ்வம்புகளின் வன்மையை விளக்குவான் "ஆற்றன்மேதகு மாயிரம்வாளி" என்றார். (சூ0உ)

உந்து கோலையொ ராயிரம் வாளியாற்
சிந்தி யேதிறற் சிங்கமு காசுர
னைந்து நூறிரண் டாயிரம் வெங்கணை
யெந்தை மேல்வர வேவின னென்பவே.

(இ-ள்.) வெற்றியினையுடைய சிறந்த சிங்கமுகாசுரன் குமரப்பெருமான் விட் டருளிய அம்புகளை ஓராயிரம் அம்புகளால் சிதறவடித்துப்பின்னும் கொடிய பத்திலக்கம் அம்புகளை எம்பெருமான்மீது சென்று படுமாறு ஏவினன்.—எ-று. (சூ0ங)

பதகன் வாளிகள் பத்திலக் கத்தையு
நுதிகொள் வெங்கணை நூறுபத் தாயிரங்
கதுமெ னத்தொடுத் தேமறை காண்கிலா
வதிர்க ருங்கழ லண்ண லகற்றினன்.

(இ-ள்.) கீழ்மகனான சிங்கமுகாசுரன் விட்ட பத்திலக்கம் அம்புகளையும் கூர்மையும் வெவ்விய தன்மையும் பொருந்திய ஓரிலக்கம் அம்புகளை விரைவாகத் தொடுத்து விட்டு வேதங்கள் கண்டறியாதவரும் முழங்காநின்ற வீரக்கழலணிந்த திருவடியினையுடையவருமான குமரக்கடவுள் விலக்கியருளினர்.—எ-று.

பதகன்-பாதகனென்பதின் குறுக்கமென்று கொண்டிடினுமாம். விசாரணைசெய்யுங்கால் வேதங்களாலு மறியப்படாதவனென்று சண்முகப்பெருமானுடைய பெருமையை விளக்குவார் "மறைகாண்கிலாவதிர்கருங்கழலண்ணல்" என்றார். (௬0௪)

திருத்த குந்திறற் சீய முகத்தினு
னுருத்து வாளியொ ராயிரந் தூண்டுறுப்
பரத்தின் மேற்படு பண்ணவன் றேர்விடு
மருத்தின் மார்புற வல்லை யழுத்தினன்.

(இ-ள்.) தக்க சிறப்பினையுடைய வன்மையாளனான சிங்கமுகாசுரன் சீற்றங்கொண்டு ஓராயிரமம்புகளை விண்ணுணில்வைத்து விட்டு, பரத்தினும் உயர்ந்த பரமேசுவரரான குமரக்கடவுளின் திருத்தேரினை ஓட்டுகின்ற வாயுதேவனுடைய மார்பிற்சென்று படுமாறு பிரயோகித்தான்.—எ-று.

பரம்-சிவம்-சிவத்தினுங் குமரப்பெருமானுயர்ந்தவரென்று உபசாரமாக உரைத்தன ரென்க. சிவபெருமானுக்குத் தாரகமந்திரோபதேசஞ்செய்த குருபரன் என்று கூறி அதனால் அவ்விறைவரினு மிவர் மேற்பட்டவரென்னலாமேயென்னில் அஃதிந்நூலுடையார்க் குடன்பாடன்மையாலது சரியன்றென்று வெறுக்க. பரம்-அன்னியம். தன்னிலுஞ் சிறந்தவரொருவருமில்லாதவர் குமரப்பெருமானென்பார் "பரத்தின்மேற்படு பண்ணவன்" என்றார். (௬0௫)

ஆர ழற்சினத் தாளரி மாமுகன்
கூரு டைக்கணை நெஞ்சு குளித்திட
மாரு தப்பெய ரோன்வலி சிந்திடாச்
சோரி மிக்கெழத் துன்புற வெய்தினன்.

(இ-ள்.) அரிய தீயைப்போலும் சீற்றத்தினையுடைய நரவடிவத்தையுஞ் சிங்கமுகத்தினையுமுடைய அசுரன் விட்ட கூர்மையான அம்புகள் மார்பினிலழுந்துதலும் மாருதன் என்று பெயருள்ள வாயுதேவன் தனது வன்மையையிழந்து மிகுந்த இரத்தம் ஒழுகாநிற்பத்துன்ப மடைந்தனன்.—எ-று. (௬0௬)

பாகு பட்ட பருவர லுேக்கியே
வாகை யண்ணல் வரிசிலை கால்வளை இ
யேக நூறு பகழிதொட் டெண்ணலன்
சேகை மாண்கொடித் தேரினை வீட்டினன்.

(இ-ள்.) சாரதியான வாயுதேவனடைந்த துன்பத்தைப் பார்த்துவெற்றிபொருந்திய நமது குமரகுருநாதனர்வரியப்பட்ட வில்லினை இருதலையும் வளைத்து ஒருநூறம்புகளைச் செலுத்திப் பகைவனுடைய வயிரம் பொருந்திய மாட்சிமையான கொடிகளையுடைய இரதத்தினை யழித்தருளினர்.—எ-று. (௬0௭)

தேர ழிந்திடத் தியரிற் றீயவ
னூர ழிந்த வுடுபதி போன்றுளான்
கார ழிந்திடக் கல்லென வார்ப்புறுப்
பாரி ழிந்தனன் பல்கணை வீசினான்.

(இ-ள்.) இரதமழிந்தவுடனே கொடியவருளெல்லாங் கொடியவனை சிங்கமுகாசுரன் விமானமழிந்த நட்சத்திராதிபனை சந்திரனைப்போன்றவனாகி மேகத்தொனியுமழிந்துபோமாறு பெருந்தொனியுடன் சிங்கநாதஞ் செய்தவனாய்ப் பூமியிலிறங்கிக் கந்தக்கடவுண்மீதுசென்று படுமாறு பல கணைகளை விட்டனன்.—எ-று. (சு0அ)

வீசு கின்ற வியன்கணை யாவையு
மாசில் காட்சியன் வாளியின் மாற்றிடா
வாசில் வெஞ்சர மாயிரந் தூண்டியே
நீசன் விற்களை நீணிலஞ் சேர்த்தினான்.

(இ-ள்.) சிங்கமுகன் பூமியில் நின்றுகொண்டு விடாநின்ற பெரிய அம்புகளனைத்தையும் குற்றமற்ற திருவுருவினரான குமாரசுவாமியார் தமது அம்புகளினாலகற்றிக் களங்கமற்ற வேகமான ஆயிரமம்புகளை விட்டு நீசனை சிங்கமுகன் கைகளிலிருந்த ஆயிரம் விற்களையும் நீண்ட பூமியில் விழுமாறு செய்தருளினார்.—எ-று. (சு0கு)

அண் டலன் கொண்ட வாயிரஞ் சாபமுந்
துண் ட மாகித் தொலைந்து நிலம்புக
விண்டு நான்முகத் தோனும் விண்ணோர்களும்
கண்டு நின்று கரமெடுத் தார்த்தனர்.

(இ-ள்.) பகைவனை சிங்கமுகனது கைகளிற் பிடித்திருந்த ஆயிரம் விற்களும் துண்டாய் ஒடிந்து பூமியில்விழ, அதனைத் திருமாலும் பிரமனும் தேவர்களும் கண்டுத் தங்கைகளை மேலாகத்தூக்கி (மகிட்சியினால்) ஆரவாரித்தனர்.—எ-று. (சுக0)

கோலு மிழ்ந்த குனிசிலைக் கூட்டறக்
கால வெவ்வழ லென்னக் கனன்றுளான்
சூல மொன்று துளக்கினன் வீசினா
னால காலம ளக்கருய்த் தாலென.

(இ-ள்.) அம்புகளை யுமிழ்ந்துகொண்டிருந்த வளைக்கப்பட்ட விற்கள் எமது இறைவனார் விடுத்தருளிய அம்புகளால் கட்டற்றமையால் பிரளயகாலத்திலுண்டாகின்ற வெவ்விய தீயைப்போல சீற்றங்கொண்ட சிங்கமுகாசுரன் ஒரு சூலாயுதத்தையெடுத்து அசைத்து, கடலானது ஆலகாலவிஷத்தை யளித்தாற்போல நங்குமரப்பெருமான்மீது வீசி எறிந்தனன்.—எ-று. (சுகக)

துன்ன லன்விடு சூலத்தை யேழிரு
கொன்னு னைக்கணை தூண்டிக் குறைத்திடாப்
பின்னு மாயிரம் பேரழற் புங்கவ
மின்னெ னத்தூரந் தானடல் வேலினான்.

(இ-ள்.) பகைவன் விட்ட சூலாயுதத்தை வெற்றிபொருந்திய வேற்படையினையுடைய குமரப்பெருமானார், கொலையை நுனியிலுடைய பதினாலு பாணங்களை விட்டுத் துண்டித்துப் பின்னும் மிகுந்த அழன்மயமான ஆயிரமம்புகளை சிங்கமுகன்மேற்சென்று படும்வண்ணம் மின்னலைப்போல செல்லுமாறு விடுத்தருளினார்.—எ-று. (சுகஉ)

கொண்ட வேற்கைக் குமரன் சரங்களைக்
கண்டு தீயன் கனன்று கரந்தனிற்
றண்ட மொன்றிற் றடைபடச் சிந்தியே
யண்டம் விண்டிட வார்த்தன னேகினன்.

(இ-ள்.) வேலாயுதத்தினைத் திருக்கரத்திலேந்தியுள்ள குமரப்பெருமானுர் விடுத்தருளிய அஸ்திரங்களைப் பார்த்துச் சீற்றங்கொண்டு அவைகளை ஒரு தண்டத்தைக் கையிலெடுத்து மோதித் தடையிலாமாறு அடித்தகற்றி அண்டம் பிளந்துபோமாறு ஆரவாரித்துக்கொண்டு எம்மிறைவனைக்குறித்து அவரெதிரே சென்றனன்.—எ-று. ()

விடுத்த வாளி பொடித்ததும் வெவ்வியோன்
பிடித்த தண்டொடு பேர்வதுங் காண்குரு
வடித்த வேழ்கணை தூண்டினன் வன்கதை
யெடுத்த கையை யிருநிலஞ் சேர்த்தினன்.

(இ-ள்.) நங்குமாரப்பெருமானுர் தாம் விடுத்தருளிய அம்புகளைத் தண்டாயுதத்தினுல் பொடி செய்ததும் கொடியவச்சிங்கமுகன் கையிற்பிடித்த தண்டாயுதத்துடன் வருவதனையுங் கண்டு வடிக்கப்பட்ட ஏழுகணைகளைவிட்டு வன்மையான தண்டாயுதத்தினைத் தாங்கிவந்த கையைப் பெரியபூமியி லறுத்துத்தள்ளியருளினர்.—எ-று. (உகச)

சேர்த்து முன்னுறத் தீயவன் றோளினும்
பேர்த்து மாங்கொர் பெருங்கை புறப்படப்
பார்த்த லம்புகு தண்டினைப் பற்றியே
யார்த்து வீசின னாதியந் தேவன்மேல்.

(இ-ள்.) பூமியிலறுத்துத்தள்ளுதற்குமுன்னே யமைக்கப்பட்டிருந்த வக்கொடியவனுடைய தோளை விடப்பின்னு மவ்விடத்தினிலேயே வேறேயொரு பெரியகை தோன்றியது தோன்றியவுடனே முன்னரறுபட்டுப்பூமியில் விழுந்த தண்டாயுதத்தினைப் பின்னும் சிங்கமுகாசுரன் எடுத்து ஆதிபரமனுன குமாரப்பெருமான்மீது ஆரவாரத்துடனே வீசியெறிந்தனன்.—எ-று. (உகரு)

ஒட்ட லன்தொட வுற்றதண் டத்தின்மே
னெட்ட ழற்கு நிகர்கணை யாயிரம்
விட்ட றுத்தனன் மேல்வரு பாந்தளை
யட்டி டுங்கதி ராதவ னென்னவே.

(இ-ள்.) பகைவன் எடுத்தெறியவந்த தண்டாயுதத்தின்மீது நெடிய அக்கினிக்கு இணையான ஆயிரமம்புகளை விட்டு, தன்மீது வராநின்ற கேதுவென்னும் பாம்பினைக் கொல்லுகின்ற கிரணங்களையுடைய சூரியனைப்போல அழித்தருளினர்.—எ-று.(உகசு)

அண்டர் நாயக னுயிரம் வாளியாற்
தண்டம் வீழத் தடிதலு மாற்றலன்
கண்டு சீறிக் கடுந்திறற் கூற்றிடைப்
பண்டை நாட்கொண்ட பாசத்தை வீசினன்.

(இ-ள்.) தேவசேனுதிபதியார் ஆயிரமம்புகளால் தண்டாயுதங் கீழேவிழுமாறு செய்தலும் அதனைப் பகைவனுன சிங்கமுகன்பார்த்துக் கோபித்து மிகுந்த பராக்கிரமத்தினையுடைய எமனிடத்தினின்றும் தான்முன்னே பெற்றுள்ளபாசத்தினைஎடுத்து எம்மிறைவன்மீது வீசினன்.—எ-று. (உகஎ)

சுற்று பாசத் தொடர்ச்சியை நோக்கிவேள்
செற்றொ ராயிரந் தீக்கணை தூண்டலும்
வற்றன் மாண்கொடி வன்னியின் றீச்சுட
ருற்ற தாமென வொண்பொடி யாயதே.

(இ-ள்.) பகைவர்மீது சுற்றிக்கொள்கின்ற பாசத்தின் வருகையை குமாரக் கடவுள் திருக்கண் சாத்தியருளி நெருங்கிய கொடிய ஓராயிரம் தீமயமான அம்புகளை விடுதலும், உலர்ந்த மாட்சிமை பொருந்திய கொடியின்மீது ஒளிவீசாநின்ற அக்கினி சென்று பற்றிக்கொண்டாற்போல அப்பாசம் பற்றியெரிந்து நுண்மையான சாம்பலாக வாகியது.—எ-று. (சகஅ)

வேறு.

நாணற் றதுகண் டனனு றுவா
னேனுற் றிடுசே னையிரா யிரமாம்
பாணித் தொகையைக் கொடுபற் றிடுவான்
பேணிச் சினமோ டுபெயர்ந் தனனே.

(இ-ள்.) தான்விட்ட பாசமெரிந்து சாம்பராகி யழிந்ததனைக்கண்டு வெட்கமடைந்த சிங்கமுகாசுரன் பலம்பொருந்திய குமாரக்கடவுளை, தனது கூட்டமான இரண்டாயிரம் கரகூட்டங்களைக்கொண்டு பிடிக்குமாறு கருதிக் கோபத்துடனே சென்றான்.—எ-று. (சகக)

சிங்கத் திறலோன் வருசெய் கைதனை
யெங்கட் கிறைநோக் கியிரா யிரமாம்
வெங்கட் கணையா யினவிட் டவுண
னங்கைத் தொகையா வுமறுத் தனனே.

(இ-ள்.) வன்மையாளனான சிங்கமுகாசுரன் புதிதாகமுளைத்த கையில் தண்டம் பிடித்தவனாக வருகின்ற தன்மையை எங்கள் பெருமானாகிய குமரப்பெருமானார் பார்த்து, கொடுந்தன்மையினையுடைய ஓராயிரம் அம்புகளை விட்டு அவ்வசுரனுடைய அழகிய கைகளனைத்தையும் அறுத்தருளினார்.—எ-று. (சஉ0)

கொற்றங் கெழுவுற் றருகன் கணையாற்
செற்றந் திகழா ளரிசெய் யகர
மற்றம் புவிவீ ழுமுனங் கைநிரை
முற்றும் புதிதா கமுளைத் தனவே.

(இ-ள்.) வெற்றி பொருந்திய குமரக்கடவுளின் அம்பினால் நன்றாய் விளங்கப்பெற்ற கோபத்தினையுடைய சிங்கமுகாசுரனுடைய செவ்விய கைகள் அறுபட்டுப் பூமியில் விழுதற்கு முன்னே அவனுக்குப் பழைய வண்ணமாகவே அறுபட்ட அழகியகரவரிசைகள் அனைத்தும் புதியனவாகவுண்டாயின.—எ-று. (சஉக)

அற்றுப் புவிவீழ் தருமங் கைகளை
மற்றத் துணைவந் தெழுமாண் கைகளாற்
பற்றிச் செலவன் னதுபார்த் தனனு
னெற்றிக் கணளித் திடுநீள் சுடரோன்.

(இ-ள்.) அறுபட்டுப் பூமியில்விழுந்த அழகிய கைகளைப் பின்னும் அவ்வண்ணமாகவுண்டாகாநின்ற மாட்சிமையான அத்தங்களால் எடுத்துக் கொண்டு வராநிற்ப,

அதனை சிகண்ட பரமேசுவரருடைய திருமுகங்களிலுள்ள லலாட நேத்திரங்களின் வழியாகத் திருவவதாரஞ் செய்தருளிய சிவசண்முகப் பெருமானார் திருக்கண் சாத்தியருளினார்.—எ-று. (௬௨௨)

ஓரா யிரம்வா ளிகளுய்த் தவுண
ேனாரா யிரநீண் முடியொல் லையறு
வீரா யிரம்வெஞ் சரமே வியவ
னீரா யிரமொய்ம் புமிறுத் தனனால்.

(இ-ள்.) சண்முகப்பெருமானார் ஒரு ஆயிரமம்புகளை விட்டு அவ்வசுரனுடைய ஒரு ஆயிரமான நீண்ட தலைகளையும் விரைவிலறுத்தருளிப் பின்னரும் இரண்டாயிரம் வெவ்விய அம்புகளை விட்டு அவனுடைய இரண்டாயிரம் தோள்களையும் அறுத்தருளினார்.—எ-று. (௬௨௩)

அன்பிற் றவன்மொய்ம் புகளற் றனகண்
டின்புற் றனர்வா னவரீண் டியவை
முன்புற் றதுபோ லமுளைத் தெழலுந்
துன்புற் றனர்யாக் கைதுளங் குறுவார்.

(இ-ள்.) அன்புற்ற சிங்கமுகனுடைய தோள்களறுபட்டனவற்றைத் தேவர்கள் பார்த்து மகிழ்ந்தார்கள். நெருங்கினவாகவத்தலைகளுந் தோள்களும் முன்னிருந்தனபோலவே பின்னரு முளைத்தெழுதலும், அதனைப்பார்த்துத் துன்பம் பொருந்தியுடல் நடுங்கினவர்களானார்கள்.—எ-று. (௬௨௪)

கண்டா னிதுவிண் ணவர்காண் பரியோன்
பண்டா லவனத் திடைபா ணிசிரந்
தண்டா தழல்கொய் திடுதன் மையினா
லுண்டா கியவா றெனவுன் னினனே.

(இ-ள்.) அறுபட்ட தலைகளுந் தோள்களு மீட்டும் முளைத்தலாகிய இந்த ஆச்சரியமான செய்கையைத் தேவர்களாலுங் காணுதற்கரிய குமரப்பெருமானார் திருக்கண் சாத்தியருளி இது முன்னாளில் ஆலவனத்தினில் யாகஞ்செய்தகாலத்தி லிச்சிங்கமுகன் தனது கையினால் தனது தலைகளைவிடாது ஓமத்தியிலறுத்திட்ட தன்மையினாலுண்டாகியவாறு என்று திருவுளத்திலெண்ணியருளினார். —எ-று. (௬௨௫)

உன்னும் பொழுதத் தினிலும் பரெலா
மென்னிங் கிவன்மாய் வதெனத் தளர
முன்னம் பெயர்சிங் கமுகன் முனியாச்
செந்நின் றிஃதோர் மொழிசெப் பினனால்.

(இ-ள்.) அவ்வாறு நினைத்த சமயத்தில் இந்திரநாராயணாதிய தேவரனைவரும் இவன் எவ்வண்ணமிறந்தொழிவான் என்று தளராநிற்ப, குமரப்பெருமானெதிரே செல்லாநின்ற சிங்கமுகன் முன்னிலு மதிக கோபமுடையவனாகி நேராக நின்று இந்த ஒரு வசனத்தை யுரைத்தனன்.—எ-று.

இறைவனெதிரே வணக்கமின்றி யிறுமாந்து நின்று பேசினான் சிங்கமுகனென்பான் "செந்நின்றிஃதோர் மொழிசெப்பினனால்" என்றார். (௬௨௬)

உளைக்குங் கணைதள் ளியுகம் பலநீ
கிளைக்குந் தலைமொய்ம் புகெடுத் திடினு
முளைக்கின் றதலான் முடிவுற் றிடுமோ
விளைக்கின் றனைநீ கொலெனைப் பொருவாய்.

(இ-ள்.) சிவகுமாரனே, நீ புதிதுபுதிதாக முளைத்துக்கொண்டேயிருக்குமெனது தலைகளை வருத்தாநின்ற அப்புகளைவிட்டு அநேகயுககாலம் அழித்தாலும் பின்னும் பின்னும் அவை முளைக்கின்றனவே அன்றி நினக்குப்பயந்து முளையாது நின்றுவிடுமோ? நில்லா. என்னோடு போர்புரிந்து இளைக்கின்றவனாகிய நீதானா என்னோடு போர்புரிபவன்.

எவர்மீது படினும் நோய்புரிவதாதலால் "உளைக்குங்கணை" என்றார். (சஉஎ)

மொய்யுந் துதவத் தியன்முன் னலைநின்
னையன் றருமாற் றலறிந் திலைபோர்
செய்யும் படிவந் தனைசே யொருநீ
யுய்யும் படியன் றுனதூக் கமுமே.

(இ-ள்.) சிறுவனாகிய ஒரு நீ வன்மையிலுயர்ந்த எனதருமையான தவத்தியல்பினை நினைத்தாயில்லை; அதனை நினையாவிடினும் உனது தந்தையாலளிக்கப்பட்ட ஆற்றலினையேனு மறிந்திருக்கவேண்டும், அதன் றன்மையையும் இன்னவண்ணமானதென்று அறிந்தாயில்லை; அவ்விரண்டினையு முணராமையினாலென்னொடு போர்புரியுமாறு வந்தாய். இத்தகைய வியல்பினால் இங்குப்போரிற்குவந்த நினதுமுயற்சியும் முற்றுப்பெறு நிலையது அன்றாம் —எ-று.

எவற்றினுஞ்சிறந்த வன்மையுடையது தவமாதலால் "மொய்யுந்து தவத்தியல்" என்றார். எவராலுமழிக்கப்படாத வரமுடையவனாதலை நாங்களெல்லாமறிவேம், நீயறிந்தாயில்லைகொல் என்று கேட்டானென்பான் "ஐயன்றரு மாற்ற லறிந்திலை" என்றான் என்றார். நீ சிறுபிள்ளையாதலா லென்னொடு பொரவந்தனை என்பான் "சேயொருநீ" என்றான் என்றார். (சஉஅ)

மாண்டே வர்தமைப் புரிவன் சிறைபோ
யாண்டே வருகின் றதுமாற் றலுளே
னீண்டே யழிகின் றதுமில் லையிவண்
மீண்டே குதிநின் னுயிர்விட் டனனால்.

(இ-ள்.) மாட்சிமையினையுடையாரொன் றுரைக்கப்பெற்ற தேவர்கள் நாங்களிட்டிருக்கின்ற சிறையினைக்கடந்து திரும்பி அவ்விடத்திற்கு வருதலும், வன்மையாளனாகிய யான் இவ்விடத்திலிறந்து படுதலும் இல்லை, ஆதலால் யான் உன்னுயிரை யழிக்காதுவிட்டேன், நீ திரும்பிப்போவாயாக.—எ-று.

இனியொருநாளு மச்சுவர்க்கதலத்தைத் தேவரடையாவொன்று எண்ணுந் திடமுடையவனாதலால் "மாண்டேவர்தமைப்புரிவன்சிறைபோ யாண்டேவருகின்றதுமிலை" என்றான் என்றார். நினது வன்மையினு மெனதுவன்மை மேற்பட்டதாதலின் நின் கையால் யானிறவேனென்று உரைத்தானென்பார் "ஆற்றலுளேனீண்டே யழிகின்றதுமில்லை" என்றான் என்றார். (சஉகூ)

வேறு.

என்னலு மதனை யோரா வெம்பிரான் குமரன் சொல்வா
னுன்னுயி ரிழைத்த வெல்லை யொழிந்தது கூற்றும் வந்து
பின்னுற நின்றா னென்னீ பிதற்றுதி யுணர்வி லாதாய்
முன்னொரு கணத்தி னின்னை முடிக்குவன் காண்டி யென்றான்.

(இ-ள்.) சிங்கமுகாசுரன் உன்னுயிரை யுனக்கேயளித்தேன், நீ உன்னிருப்பிடத்திற்குச்செல் என்று கூறுதலும், அம்மொழியினை எம்பெருமானாகிய குமரக்கடவுள் கேட்டு அவனைப்பார்த்து இங்ஙனந்திருவாய்மலர்ந்தருள்வாராயினர். உனதுயிர் நிலைத்தி

ருக்கும் வண்ணம் நீயியற்றிய தபோபலம் ஒழிந்தது; உன்னுயிரை அபகரித்தற்கு காலனும் உனது பின்புறத்தில் வந்து நின்றான்; உணர்வற்றவனே, நீ என்னை பிதற்றுகின்றனை. நினைக்கப்படுகின்ற ஒரு கணநேரத்தில் உன்னைச் சங்கரிக்கின்றேன் என்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று.

நீ கூறியவண்ணம் எனது தந்தையாரால் நினக்களிக்கப்பட்டுள்ளது நூற்றெட்டு யுகமே; அதுவும் இற்றைக்குமுன்னையே ஒழிந்தது; அதனை நாமறிவேம்; நீ அறிந்தயில்லை. நின் பிடரிப்புறமாக நிற்கும் மிருத்துவை நீ காணுமையே சான்றும் என்றிறைவனர் திருவாய்மலர்ந்தருளினரென்க. (சகo)

படைப்பவன் குரவ னீது பகர்தலு மவுணர் கோமா
னிடிப்பென வார்த்துக் குன்ற மிராயிரம் பறித்து வீச
நொடிப்பினி லவற்றை வாளி நூற்றினுண் டுகளா தாக்கித்
தடப்பெரு மருமமூழ்கச் சரங்களா யிரத்தை யுய்த்தான்.

(இ-ள்.) பிரமனுக்காசிரியராகிய குமரப்பெருமானு ரிதனை யுரைத்தருளுதலும், அத்திருவாய் மொழிகளைக்கேட்டு அசுராதிபனுகிய சிங்கமுகன் இடி இடித்தாற்போல ஆரவாரஞ்செய்து இரண்டாயிரம் மலைகளை வேரோடு பறித்துக் குமரக்கடவுளின்மீது வீசுதலும், குமரப்பெருமான் அவைகளை ஒருநொடிப்பொழுதில் ஆயிரமம்புகளால் நுண்ணிய துகளாகச் செய்து, பின்னு மாயிரமம்புகளை அவனது விசாலமான மார்பிற்புகுமாறு விட்டருளினர்.—எ-று.

வாளாகூறாது பட்டாங்கிலுள்ளபடியே கூறினரென்று இறைவருடைய அகண்ட ஞானத்திறத்தினை விளக்குவான் "படைப்பவன் குரவன்" என்றார். (சகக)

மாயிரு நெடுங்கண் வாளி மார்பத்தை யகழ்ந்து துன்னக்
காயெரி கனுழுங் கண்ணான் கைகளா லளவை தீர்ந்த
பாயிருங் குன்ற நாடிப் பறித்தலுங் கண்டு செவ்வே
ளாயிரங் கணைதொட் டன்னா னணிமுடித் தொகையை வீழ்த்தான்.

(இ-ள்.) மிகவும் பெரிய அகன்ற ஆயிரமம்புகளும் மார்பினை நெருங்கித் துளையாநிற்ப, சீற்றத்தாற் சுடுதீ உமிழாநின்ற கண்களையுடைய சிங்கமுகன் தனதத்தங்களாலளவற்றனவாகிய அகன்ற பெரிய மலைகளைத் தேடிப் பறித்தலும், அதனைக் குமரக்கடவுள் பார்த்து ஆயிரமம்புகளை விட்டு அவனதழகிய தலைக்கூட்டங்களை அறுத்தருளினர்.

மகுடமுதலிய ஆபரணங்களை அணிந்த சிரமென்பார் "அணிமுடித்தொகை" என்றார். (சகஉ)

அறுத்திடு தலைகள் வீழ வாயிரஞ் சென்னி வல்லே
மறித்தும்வந் தெழுத லோடு மடங்கல்மா முகத்தன் முன்னம்
பறித்திடு குன்றம் வீசிப் பருவலித் தடந்தோள் கொட்டி
யெறித்தரு கதிரும் விண்ணோர் யாவரு முட்க வார்த்தான்.

(இ-ள்) அறுக்கப்பட்ட தலைகள் கீழே விழுந்தவுடனே வேறே ஆயிரந்தலைகள் விரைவாகப் பின்னுந் தோன்றுதலும், சிங்கமுகன் முன்னே எறிதற்குப் பறித்த மலைகளைக் குமரக்கடவுண்மீது எறிந்து, பெரிய வலிய விசாலமான தோள்களைத் தட்டிக்கொண்டு, வெயிலெறிக்காநின்ற சூரியனும் தேவர்களனைவரும் மனமிடையும் வண்ணம் அட்டகாசஞ்செய்தான்.—எ-று.

அதிக விரைவாக முளைத்தன தலைகளென்பார் "வல்லே" என்றார். (சகங)

ஆர்த்திடு காலைச் செவ்வே ளாயிரத் திரட்டி கொண்ட
கூர்த்திடு பகழி தூண்டிக் குன்றங்கள் செற்று வெய்யோன்
றோர்த்தட மொய்ம்பு முற்றுந் தள்ளினன் றள்ளு முன்னர்ப்
பேர்த்துமவ் தெழுந்த வம்மா தவத்தினும் பெரிதொன் றுண்டோ.

(இ-ள்.) சிங்கமுகன் மலைகளை வீசி அட்டகாசஞ்செய்தவுடனே குமரக்கடவுள் கூரிய இரண்டாயிர மம்புகளை விட்டு அவனெறிந்த மலைகளை அழித்து, அக்கொடியவனுடைய மாலையணிந்த தோள்களனைத்தையும் அறுத்தெறிந்தனர். அங்ஙனம் அவைகள் அறுபட்டுக் கீழ்விழுதற்குமுன்னே பின்னுமவைகள் முன்போலவே உண்டாயின. அம்மா! இங்கு நிகழ்ந்த விச்செய்கையை நினைக்குங்கால் ஒருவனுக்குத் தவத்தினை விடப் பெரியபொருள் ஒன்று வேறே இருக்கின்றதோ? இன்றும்.—எ-று.

"வேண்டியவேண்டியாங்கெய்தலாற்செய்தவ.மீண்டுமுயலப்படும்" என்று நாயனாருரைத்தாங்கு, தவமெத்தகைப்பொருளையுமீவதாதலால் "அம்மா தவத்தினும் பெரிதொன்றுண்டோ" என்றார். அறுபட்ட தலையுந்தோளும் முளைத்த தாச்சரியகாரியமாதலால் "அம்மா" வென்றார். (சுகூசு)

அத்திறங் காணு வீதோ ராடலா வுன்னி நூற்றுப்
பத்துட னெட்டின் காறும் பரஞ்சுட ருருவாய் நின்றோன்
மொய்த்திடு பகழி மாரி முறைமுறை தூர்ந்து மொய்ம்பன்
கைத்தலஞ் சென்னி முற்றுங் கண்டதுண் டங்கள் செய்தான்.

(இ-ள்.) அவ்வாறு அவைகள் முளைத்தலைக்கண்டு அவன்றலைகளையுங் கைகளையு மறுத்தலை ஒரு திருவிளையாடலாகக்கருதி நூற்றெட்டுத்தரம் பரஞ்சுடர் உருவமான குமரக்கடவுள் நெருங்கிய அம்புகளை வரிசை வரிசையாக விட்டு வன்மையாளனை சிங்கமுகனுடையகைகள் தலைகள் என்னும் இவ்வனைத்தையும் கண்டதுண்டங்களாகச் செய்தருளினர்.—எ-று.

வேதமானது "சுப்ரமண்யோம்" என்றுரைக்கின்றமையானும், ஸன்மார்க்கமுறையா லிறைவனை யாராய்வார்க்குத் தான் பதிப்பொருளாக அநுபவநிலையில் நிற்பவனாதலானும் இறைவனை "பரஞ்சுடர் உருவாய் நின்றோன்" என்றார் என்க. இறைவனாகிய பரமேசுவரன் "ஐந்துமுகத்தோடதோமுகமுமொன்றாகி" என்றபடி, உண்மையிலாறு திருமுகங்களையும், பன்னிரண்டு திருத்தோள்களையும் உடையவனாதலாலும், அப்பரமேசுவரனுடைய உண்மை உருவமே இத்திருவுருவமாதலானும், குமரக்கடவுளை "பரஞ்சுடருருவாய் நின்றோன்" என்றார் என்றுமுரைக்கலாம். (சுகூடு)

திசைகளிற் போகு நேமித் திறங்களிற் போகும் வெற்பின்
மிசைகளிற் போகும் பாரின் மீதினிற் போகு மாந்தர்
நசைகளிற் போகும் விண்ணோர் நாட்டிடைப் போகுஞ் சிங்க
னிசைகளிற் போகு மெங்கு மிற்றிடு சிரமுங் கையும்.

(இ-ள்.) அறுபட்ட தலைகளும் கைகளும் திக்குகளிற் செல்லும், கடலிடங்களிற் போகும், மலைகள்மீது செல்லும், பூமியின்மீது செல்லும், மனிதர்களின் விருப்பவஸ்துக்களிற் செல்லும், தேவர்நாடுகளிற் செல்லும், எவ்விடங்களினுமுள்ள சிங்கமுகனுடைய கீர்த்திகளிற் செல்லும்.—எ-று.

சிங்கமுகனுடைய இசையாவன: அசுரர்வாழுமிடங்களி லவர்கட்கவன் செய்த வுபகாராதிகளைக்குறித்து அசுரர் புகழ்கையாதிய. (சுகூசு)

அகரம தாதி யான வெழுத்தெலா மாகிப் பின்னர்
மகரமு மான மேலோன் வடிக்கணை துணித்து வீசுஞ்
சிகரமுந் துகர முற்றுஞ் சேணிடைச் சென்று மாயோ
னகரமுந் தாவி யண்ட கோளகை நண்ணு கின்ற.

(இ-ள்.) அகரமுதலான எழுத்துக்களெல்லாமாகிப் பின்னர் மகரமீனுருவமு மான குமரக்கடவுளின் வடிக்கப்பட்ட அம்புகள் துணித்து எறிகின்ற சிங்கமுகனுடைய தலைகளும், உயர்ந்த தோள்களுமாகிய அனைத்தும் ஆகாயத்தினிடைச்சென்று, நாராய ணனுடைய நகரத்தையுங்கடந்து அண்டகோளகையை அடைகின்றன.—எ-று.

அக்ஷரங்கள் மந்திரரூபமானவை யென்றும், ஸகல மந்திரஸொரூபராக வுள்ளவர் சண்முகப்பெருமானுர் என்றும் குறிப்பிப்பார் "அகரமதாதியான வெழுத்தெலாமாகி" என்றார்.

"மகரமுமான மேலோன்" என்பதற்கு "மகரமீனுருக்கொண்ட விறைவனார்" என்ற பொருள்தோன்றுமாறு இந்நூல் மூலமச்சிட்டவர் "திருவுத்தரகோசமங்கையிலே தாம் உமாதேவியாருக்கு உபதேசஞ் செய்தருளியபொழுது அவரளகத்தில் வண்டுருக் கொண்டொளித்திருந்து கேட்ட முருகக்கடவுளை மகரமீனுகும்வண்ணஞ் சபித்தருளி னார். இச்சரித்திரத்தைத் திருவுத்தரகோசமங்கைப்புராணத்துப் பதினோராவது வலை வீசிய வத்தியாயத்துக் காண்க" என்று குறிப்பிட்டு எழுதியிருந்தவண்ணம் எழுதினும்.

இனி மகரமுமானமேலோன் என்பதற்கு, இந்நூலுடையார் சோதிடமுதலிய பல கலைகளையு நன்குணர்ந்தவராதலால் ஸங்கியாநாமபதங்களாதிகளை இடையே இடையே உபயோகப்படுத்துகிறார். அசுரகாண்டத்து மார்க்கண்டேயப்படலத்து நூற்றெண்பத் தாறுவதுசெய்யுளில் "தபனனேமுதலாவுள்ளவேனையர்முனிவர்நாகரிடந்தொறுமிருப்ப மன்னோ" என்று சங்கியாநாமத்தால் ஏழாமிடத்தை முனிவரென்றும், சமிக்ஞாநாமத்தால் பத்தாமிடத்தை நாகர் என்றுங்காட்டியிருக்கின்றார். அம்முறையிலிங்கு "மகரமுமான மேலோன்" என்பதற்கு மகரமென்பது மேற்குறித்தபடி லக்கத்தாலைந்தாதலால் மந்திர மாக நின்றானன்றியும் மந்திராதி தேவதைகளான பஞ்சமூர்த்திகளாகவும் இருக்கும் பெரியோன் என்றுகொள்ளினும், அல்லது "அகரமதாதியானவெழுத்தெலாமாகிப் பின் னர் மகரமுமானமேலோன்" அகரமுதலிய அக்ஷரங்களாயும், பின்னர் அவற்றுட்சிறந்த பஞ்சாக்ஷரரூபமாயும் இருக்கின்ற மேலோன் என்று கொள்ளினும், மகரமென்பதற்கு விருப்பமென்று பொருளிருத்தலால், அக்ஷரசொரூபியாகவிருத்தலுடன் பின்னரவ்வக்ஷ ரங்களாலான கலைஞானங்களைக் கேட்கும் விருப்பமுள்ளவனாகி நின்ற மேலோனென்று கொள்ளினும், தாமே அகாராதி அக்ஷரசொரூபியாயும், அவ்வக்ஷராதிதேவதைகளால் விரும்பப்படும் பரம்பொருளாயும் நின்ற இறைவனார் என்று கொள்ளினும் இழுக்காது. ஆயினும், முன்னோர் முறையைப் பின்பற்றிப்போதல் நலமென்று கருதி மகரமீனாகவு மாகிய மேலோனென் றுரையெழுதினும். (௪௬௭)

தூவுடை நெடுவே லண்ணல் சுடர்க்கணை துணித்து வீச
மேவலன் றனது சென்னி மெல்லித ழதுக்கி விண்மே
லாவலங் கொட்டிச் செல்ல வச்சமுற் றங்க ணின்ற
தேவர்கண் மயக்க மெய்தித் திருநில வரைப்பின் வீழ்ந்தார்.

(இ-ள்.) பரிசுத்தமான நெடிய வேற்படையினையுடைய குமரக்கடவுள் விடுத் தருளிய ஒளிபொருந்திய அம்புகள் அறுத்து வீசுகின்ற பகைவனான சிங்கமுகனுடைய தலைகள் மெல்லிய இதழினை அதுக்கினவையாய் ஆகாயத்தின்மீது ஆவலங்கொட்டிக்

கொண்டு செல்லாநிற்ப, அவ்விடத்தினின்ற தேவர்க ளவைகளைப்பார்த்து அச்சமடைந்து மயக்கங்கொண்டு, செல்வகரத்தினையுடைய பூமியில் விழுந்தார்கள்.—எ-று.

பிறருடைய வேற்படைகளைப்போல சடரூபமானதன்மையானும், எங்கேனும் எம்பெருமானுற் பகைவர்மீ தேவப்படுமாறு லவர்களைச் சங்காரம் புரிந்தபின்னர் ஆகாய கங்கையிலேயே சென்று குளித்துத் தூய்மையாகி வந்து இறைவனுர் திருக்கரத்தைச் சார்ந்து நிற்பதாதலானும், "தூவுடைநெடுவேல்" என்பதற்கு, மாமிசந்தோய்ந்த அல்லது பொருந்திய நீண்டவேலென்னுது பரிசுத்தமான நெடிய வேலென்றும்.

ஆவலங்கொட்டல் - வாயாலார்த்தாடல். (௩௯௮)

வஞ்சரை வஞ்சஞ் செய்யும் வள்ளலார் குமரன் ரூட்ட
செஞ்சர மநந்த கோடி சென்றுசென் றறுத்து வீட்ட
வெஞ்சலி லவுணன் மொய்ம்புந் தலைகளும் யாண்டுஞ் சிந்தி
விஞ்சைய ரமர்தற் கொத்த வரைகளின் மேவ லுற்ற.

(இ-ள்.) வஞ்சகர்களாக வுள்ளவர்களை வஞ்சிக்கின்ற வள்ளலாரான சிவபெருமான் அளித்த குமரக்கடவுள் விட்டருளிய செவ்விய அனந்தகோடி அம்புகள் சென்று சென்று அறுத்துத்தள்ள, கெடாத அவ்வசுரனுடைய தோள்களுந்தலைகளும் எவ்விடங்களிலுஞ்சிதறி வித்தியாதரர்கள் வசித்தற்கேற்ற மலைகளைப்போல பொருந்தின.—எ-று.

சுருதி ஸ்மிருதி புராணேதிகாசாகமாதி யநேக சாஸ்திரராய்ச்சியால் சிவமே பசுபதி என்றுணர்ந்தும், துரபிமானத்தால் அன்னியமான அபரத்துவ தேவர்கட்குப் பரத்துவங் கற்பித்து அவரடிமைகளாக நடித்தொழுகும் வஞ்சகர்களையும் தனக்குமேற் பிரமமான பசுபதி வேதவேதாந்தங்களா லிருக்கின்றானென்று கேட்டிருந்தும் அவனைத் தேடியடையாது தன்னையே பிரமமாக வாளாகூறும் வஞ்சகர்களையும் அவர்களெண்ணம்போல நின்று நரகாதிகளிலிட்டு வருத்தி யிறுதியில் தன்னடித்தொண்டராகச் செய்யும் வஞ்சனையினை யுடையவரோனும், ஆன்மகோடிகளின் நன்மையைக்கருதியே அவ்வாறு செய்பவராதலால், இறைவரை "வஞ்சரை வஞ்சஞ்செய்யும் வள்ளலார்" என்றார்.

தூயவன் விடுத்த வாளி துணித்திடு மொவ்வோர் சென்னி
வாயினை யடுபோர் தன்னில் வந்தசில் கணங்க ணோக்கி
யாயிர கோடி கொண்ட களேபர மதற்கு ளிட்டு
மாயிருஞ் சிகர மாட மற்றிதென் றுற்ற வன்றே.

(இ-ள்.) தூய்மையாளனான குமரக்கடவுள் விடுத்தருளிய அம்புகள் துணிக்கின்ற ஒவ்வொரு தலைகளின் வாயினிடத்தைக் கொல்லாநின்ற போர்க்களத்திற்கு மாமிசவுணவைக் கருதிவந்த பிசாசுகளுள் சில பார்த்து, ஆயிரகோடியாகக் கிடக்கின்ற பிரேதங்களின்மீது இட்டு இது நமக்கு மிகவும் பெரிய சிகரத்தினையுடைய மாளிகையென்று அதனுளேறிக் குடியிருந்தன.—எ-று.

இயல்பாகவே பாசத்தினின்றும் நீங்கினவராதலால், இறைவரை "தூயவன்" என்றார். (௩௩௦)

பாடுறு சிரத்தி லொன்று பதைத்துவாய் பகிர வங்க
ணாடுறு மலகை கோடி யகன்பிணக் குவைக ளுய்த்து
மாடமீ தென்று புக்கு மற்றது கடிதின் மூட
வோடியுள் ளலைந்த தக்கன் வேள்வியி லுற்று ளார்போல்.

(இ-ள்.) சிங்கமுகனுடைய அறுபட்ட தலையினிலொன்று துடித்து வாய்பிளக்க, அவ்விடத்தில் விளையாடிக்கொண்டிருந்த பிசாசுக்கூட்டங்கள் மிகுதியான சவக்குவியல்

களை அவ்வாய்க்குளிட்டு இதொரு மாளிகையென்று அதனுட்புகுந்து, அத்தலை விரைந்து வாய்மூடிக்கொள்ள, தக்கனுடைய யாகசாலையிலிருந்தவர்களைப்போல ஓடி ஓடி உள்ளே வழியின்றி யலைந்தன.—எ-று.

தக்கனுடைய யாகசாலையின் வாயிலிற் காளியாதியரால் தடைபுரியப்பட்டமையால் வீரபத்திரப்பெருமானைக்கண்டஞ்சி வெளிப்பட்டார்க்கு வெளிவரமுடியாமையை இனிவருந் தக்ஷகாண்டத்தாலுணர்க. (சசக)

மன்புரி யவுணர் தோன்றல் வாய்பொதி சென்னி புக்குத்
துன்புறு மலகை துண்டஞ் செவிநெறி துருவிப் போன
முன்பொரு முனிவ னில்லை முயங்குவா னுறையுள் புக்கோ
னின்பொடு வன்மை சிந்தி நூழையா லிரிந்த வாபோல்.

(இ-ள்.) முன்னுளில் ஒரு முனிவன் மனைவியை அணைவான் அம்முனிவனுடைய ஆச்சிரமத்தினுட் புகுந்தவன் பின்பு இன்பமும் வன்மையுமிழந்து நூழையின் வழியாகத் தப்பித்துக்கொண்டு வெளியே வந்தாற்போல, அரசுபுரிகின்ற அசுராதிபனுன சிங்கமுகனுடைய வாய்மூடிக்கொண்ட தலைக்குள் வாய் திறந்திருந்தபோது புகுந்து வருந்துகின்ற பிசாசுகள் அத்தலையின் மூக்கின்துவாரம் காதின்துவாரம் என்னும் இவற்றின் வழியாய்ச் சென்றன.—எ-று.

ஒருமுனிவன்-கௌதமன். இல்-அகலிகை. முயங்குவானுறையுள்புக்கோன்-இந்திரன். நூழை-சலதாரை அல்லது தூம்பு.

பிரமாவானவர் சிர்த்தோஷமான சரீரத்தினையும் யௌவனத்தினையும் உடைய ஒரு பெண்ணினைப் படைத்து, தோஷமற்றவளென்னும் பொருள் விளங்க அவளுக்கு அகல்யா என்று பெயரிட்டு, இம்மாதை மணம்புரிந்துகொள்ள விருப்பமுள்ள புருஷன் ஆயிரம்யாண்டு நீரினுண்முழுகி அருந்தவஞ்செய்து முடிக்கவேண்டுமென்று விளம்பரப்படுத்தினர். இதனையறிந்த பலருள் கௌதமனென்பவர் இவ்வகலிகையை மணஞ்செய்துகொள்ளும்பொருட்டு, சடனீருண்முழுகி ஆயிரம் யாண்டு தவஞ்செய்துமுடித்து அகலிகையை மணமுறையால் மனைவியாகப் பிரமனளிக்கப்பெற்றுத் தபோவனமடைந்து சதானந்தர் முதலிய பிள்ளைகளைப்பெற்று கிரகஸ்தராக வாழ்ந்துவந்தனர். இத்தகைய விம்முனிவரது தருமபத்தினியான அகல்யையின்மேலடங்காக் காதலினை நெடுநாளாகக்கொண்டு கிடந்த இந்திரன், ஒருநாளிரவில் கோழியாக நின்று கூவி முனிவனை நீராடச்செல்லுமாறு செய்து, அம்முனிவனுடைய வுருவத்தினைத் தானடைந்து, அகலிகையிடஞ்சென்று அவளைக் கூடிக்கலந்து அநுபவித்துத் திரும்புதற்குமுன்னே நீராடச்சென்ற முனிவன் நள்ளிரவாயிருத்தலை யுணர்ந்து திரும்ப ஆசிரமவாசலையடைந்து கதவினைத் தட்டினன். உடனே உள்ளிருந்த இந்திரன் வெளியே போதற்கு வழியின்றித் தமொறி நீர்த்தூம்பின் வழியாய்ப் பூனையினுருவங்கொண்டு நுழைந்து சென்றான். அங்ஙன நுழைந்தகாலத் தவ்விந்திரனுக்கு அகலிகையி னாலிங்கனத்தாலுண்டான சுகமாதிய மகிழ்வனைத்தும் அகன்றொழிந்த தன்மையாதலால் "இன்பொடுவன்மைசிந்தி" என்றார். (சசஉ)

ஒன்னலன் றனது மொய்ம்பு முருமெகழு சிரமும் வீழ்ந்து
பன்னெடுங் கிரிக ளாக வவற்றிடைப் பலசூர்ப் போய்த்
துன்னுறு கொடியுஞ் சூழ்வ தொல்லையிற் பொறிக ளிங்க
முன்னவள் பதாகை யோடு முறையில்வந் துற்ற வாபோல்.

(இ-ள்.)பகைவனுன சிங்கமுகனுடைய புயங்களும், பெருந்தோற்றமாக விளங்குகின்ற தலைகளும் விழுந்து அநேக நெடிய மலைகளாகவாயின. அவ்வாறுயின அம்மலை

கண்மீது அச்சத்தைத் தராநின்ற பல பேய்களும் நெருங்கிய காகங்களும் சூழ்ந்திருப்பன எதுபோலுமென்னில், இவனிடத்து முன்னுளிருந்த இலக்குமிகள் நீங்க, மூத்தவளான மூதேவி தனது கொடிகளுடன் விரைவாக வந்து சேர்ந்தாற்போலும்.—எ-று.

அச்சந்தரும் பேய்களுங் காகங்களு நெருங்கியிருத்தல் தனலட்சுமி தானியலட்சுமியாதி அஷ்டலட்சுமிகளும் விலகியகாலத்து மூதேவியானவள் தன் கொடிகளுடனுற்றிருத்தலை யொக்குமென்க. கொடிகள் - காகங்கள். சூர்ப்பேய்கள் - மூதேவிகள் என்றுணர்க. மூதேவிக்கு காகமே கொடி. இதனை, "கழுதையூர்தி காக்கைக்கொடியாண்முகடிதௌவைகலதிமூதேவி" என்னும் பிங்கலத்தாலுணர்க. (சசரு)

அரண்டருங் கழலா னிவ்வா றறுத்தலு மவுணர் கோமான்
முரண்டகு சிரமுந் தோளும் பின்னரு முளைப்ப நோக்கித்
திரண்டபல் கணைக ளோச்சிச் சென்னியி லொன்றுங் கையி
லிரண்டுமே நிறுவிப் பின்னர் யாவையுந் தடிந்தா னன்றே.

(இ-ள்.) அழகுபொருந்திய வீரக்கழலினையுடைய குமரப்பெருமானார் இவ்வண்ணம் பலமுறை அறுத்தலும், அசுராதிபனான சிங்கமுகனுடைய வன்மையான தகுந்த தலைகளுந் தோள்களும் பின்னுமுளைத்தலைப்பார்த்தருளி, இனிமேலவ்வண்ணம் முளைக்காதிருக்கும் வண்ணம் திரட்சியான பல கணைகளை விட்டு அவன் தலையிலொன்றையும் கையிலிரண்டையும் நிறுத்தி, மற்றையவைகளையெல்லாம் அறுத்தருளினர்.—எ-று. ()

நீளுறு பதலை சிந்தி நின்றம ரியற்று கின்ற
கோளரி முகத்து வீரன் குறைந்திடு முடியு மிற்ற
தோள்களு முன்ன ரேபோற் றோன்றிடப் புகுது மெல்லை
யாளுடை முதல்வ னாகு மறுமுக னதனைக் கண்டான்.

(இ-ள்.) உயர்ச்சிபொருந்திய மலைகளைப் பிடுங்கி யெறிந்து நின்று போர்புரிகின்ற சிங்கமுகவீரனுடைய அறுக்கப்பட்ட தலைகளும், வெட்டுண்ட தோள்களும் முன்போல முளைக்கப்புகுங்காலத்தில், ஆளுடைமுதல்வனான ஆறுமுகப்பெருமானதனைக் கண்டருளினர்.—எ-று.

அத்து - சாரியை. (சசநு)

நாற்றிசை முகத்தி னானு நாகரும் பிறரு முட்கச்
சீற்றம தௌன்போ லையன் சிறிதவ னுரப்ப லோடு
மாற்றல னாகி நின்ற மடங்கன்மா முகத்தன் றன்பாற்
றோற்றிடு சிரமுந் தோளுந் துளங்கிமீண் டொளித்த வன்றே.

(இ-ள்.) பூர்வ தக்ஷிண பச்சிம உத்தரமென்னும் சதுர்திசைகளிலும் நான்கு முகமுடையவனாதலால் சதுர்முகனென்னும் காரணவிடுகுறிப்பெயருள்ள பிரமதேவனும் தேவர்களும் மற்றையோரும் அஞ்சும்வண்ணம் பெருங்கோபம்பொருந்தினாைப் போன்று நமது குமரகுருபரசுவாமியார் சற்றே உங்காரஞ்செய்தருளுதலும், உடனே பகைவனாகி நின்ற சிங்கமுகனிடத்தில் உண்டாகாநின்ற தலைகளும் கைகளும் நடுங்கித் திரும்ப உள்ளே ஒளித்துக்கொண்டன.—எ-று.

இச்சிங்கமுகனொடு முருகப்பெருமானார் நெடுநேரநின்று போர்புரிதல் திருவிளையாட்டாகவும், சிங்கமுகனுடைய வன்மை இத்தகையதென்று விளக்கவுமேயன்றி வேறன்று. அன்றியும் பூதகாலத்திலும் வர்த்தமானகாலத்திலும் அருந்தவஞ்செய்துள்ளவன் சிங்கமுகன். அருந்தவஞ்செய்துள்ளவர்களிடத்தில் அந்தரங்க நேசமுடையவர் கந்தப்பெருமானார். இம்முறையாலிவனிடத்து மந்தரங்கநேயமுடையவரேயாம். சூரபன்மாதிகளினும் தெளிந்த ஞானமுடையோனாய் எம்பெருமானை நன்குணர்ந்துள்ள

வன் சிங்கமுகன். இத்தகையமுறைகளா லெம்பெருமானுக்குச் சீற்றம் சிங்கன்மீதுண்டாகாது. ஆயினும் போர்முகத்திலாதலால் நடிப்பாகச் சீற்றங்காட்டியருளினர் என்பார் "சீற்றமதுளன்போலையன் சிறிதவனுரப்பலோடும்" என்றார். (சசசு)

ஐயன துங்கா ரத்தா லரிமுகன் சிரமு மொய்ம்பு
மெய்யிடை யொடுங்கிற் றம்மா மேவினர் தம்மை நோக்கி
மையுறு கருந்தா தன்ன வன்புறக் கமடஞ் சென்னி
யொய்யென யாக்கை தன்னி னொளித்திடுந் தன்மை யேபோல்.

(இ-ள்.) தன்னருகில் வராநின்றவர்களைக்கண்டு கருமை பொருந்திய இரும்பினையொத்த வலியமுதுகினையுடைய வாமையானது விரைவாக உடற்குட்டன்றலையை ஒளித்துக்கொள்ளுந் தன்மையைப்போல, நமது குமாரவேலாயுதப்பெருமானர் திருவிளையாட்டாகச்செய்த உங்கார சத்தத்தால் சிங்கமுகனுடைய தலைகளுங் கைகளும் முளைத்தலை யொழிந்து வந்தவழியே திரும்ப அவனுடம்பினில் ஒடுங்கின.—எ-று.

வெளியே தோன்றிய தலைகளுங் கைகளும் எங்ஙனமீட்டுமுள்ளே யொளித்தனவென்று ஆராய்வார்க்கு உலகபிரசித்தமான கமடதிட்டாந்தமிட்டு "மேவினர்தம்மைநோக்கி-மையுறுகருந்தாதன்னவன்புறக்கமடஞ்சென்னி-யொய்யெனயாக்கைதன்னிலொளித்திடுந்தன்மையேபோல்" என்றார். கூர்மத்திற்கு முதுகு வன்மையுடையதாதலால் "மையுறுகருந்தாதென்ன வன்புறம்" என்றார். கருந்தாது - இரும்பு. (சசஎ)

குன்றினை யெறிந்த வைவேற் குமரவேள் கணையா லிற்ற
தன்றலை பாணி தோன்றாத் தன்மையை யவுணன் பாரா
வொன்றற முந்து பன்னா ளுணர்ந்திடு விஞ்சை முற்று
மன்றிடை யயர்த்தோ னென்ன மானமுற் றழுங்கி நின்றான்.

(இ-ள்.) கிரவுஞ்சமலையைப்பிளந்த கூரிய வேற்படையினையுடைய அழகிய சண்முகப்பெருமான் விடுத்தருளிய அம்புகளாலழிந்த தனது தலைகளுங் கைகளுந் திரும்ப முளையாத தன்மையை அசுரனான சிங்கமுகன் பார்த்து, முன்னே அநேககாலம் கற்ற வித்தைகள் அனைத்தையும் ஒன்றுகூட இன்றி, புலவனொருவனோடெதிர்த்து வாதுபுரியுங்கால் வாதத்திற்குபயோகமின்றி அரங்காகிய கழகத்திலயர்வடைந்தவனைப்போல அவமானமடைந்து வருந்திநின்றனன்.—எ-று.

நெடுநாள் இரவும் பகலுமாக வருந்திக் கற்றகல்வியை நம்பி அரசசபையாதிகளிற்சென்று தன் புலமையைக்காட்டிப் பரிசுபெறவான் புகுந்து, வாதுகூறும் புலவனையுமெதிரே வைத்துப் பலசனங்களின் நடுவில் கேட்ட கேள்விகட்குத் தகுந்த விடையைக் கூறுதற்கு முன்னர்ப் பழகியிருந்தும் தற்போது ஒன்றுந்தோன்றாமையால் மிரளமிரள விழிப்பானானல், அவனுக்கிருக்கும் அவமானத்தைப்போல பிறவிஷயங்களில் எவர்க்குமிராவென்ப துண்மையாதலால், இவருமிதற்கிதுவே தகுந்த உதாரணமென "வொன்றற முந்துபன்னா ளுணர்ந்திடு விஞ்சை முற்று-மன்றிடை யயர்த்தோனென்ன மானமுற்றழுங்கி நின்றான்" என்றார். (சசஅ)

அங்கது கண்டு செவ்வே ளருள்புரி கின்றா னந்தம்
வெங்கணை பலவுஞ் சென்று வீட்டிய தலையு முன்றன்
செங்கையுந் தோன்றிற் றில்லை யெழுகெனச் செப்பு கைய
விங்குநீ பட்ட பின்சொன் முளைத்திட விருந்த தென்றான்.

(இ-ள்.) அவ்விடத்திலதனைக்கண்டு நங்குமரப்பெருமான் சிங்கமுகனைப்பார்த்து நமது வெவ்விய அம்புகள் பலவுஞ்சென்று அறுத்தெறிந்த தலைகளும், உன்னுடைய செவ்விய அறுபட்ட கைகளும் திரும்ப முளைக்கவில்லை. ஐய, அவைகளை எழுக

என்று சொல்லுக. அப்ப! இவ்விடத்தில் நீ இறந்தபின்னரோ அவை முளைத்தற்கிருந்தன என்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று.

"உளைக்குங்கணைதள்ளியுகம்பலநீ-கிளைக்குந்தலைமொய்ம்புகெடுத்திடினு-முளைக்கின்றதலான் முடிவுற்றிடுமோ" என்று இறுமாப்பொடு கூறிய சிங்கமுகனுடைய சொற்கள் இப்பொழுது பயனற்றவை யானமையை இறைவனர் தாமே நேரில் நின்று விளக்கியருளினர் என்பார் "அருள்புரிகின்றான்" என்றார். அறுபட்ட தலையாதிய என்றும் முளைத்துக்கொண்டேயிருத்தல் நமததிகாரத்தால் மாறியது. உனக்கு வன்மையிருந்தாலவைகளை முளைக்கச்சொல் என்று இடித்துரைத்தனரென்பார் "நந்தம்-வெங்கணை பலவுஞ்சென்று வீட்டியதலையு முன்றன்-செங்கையுந் தோன்றிற்றில்லை யெழுகெனச்செப்புகைய-விங்குநீபட்டபின்கொல் முளைத்திட விருந்ததென்றான்" என்றார். ()

இருதலை யயில்வே லண்ண விற்றன சிரந்தோ ளென்றே
கருதலை யென்பே ராற்றல் கடவுளர் யாருந் தேர்வ
ரொருதலை யிருகை கொண்டே யுலகெலாந் தொலைப்ப னென்னுப்
பொருதலை யுன்னி யாங்கோர் பொருப்பினைப் பறித்து விட்டான்.

(இ-ள்.) இருபுறமுங் கூர்மையான வேற்படையினையுடைய அண்ணலே! எனக்கு அநேகமாகவிருந்த சிரங்களுந் தோள்களும் அழிந்துபோயின என்று கருதாதே. எனது பேராற்றலினைத் தேவரனைவருமுணர்வார்கள். இனியான் இந்த ஒருதலையையும் இரண்டு கைகளையுங்கொண்டே உலகமனைத்தையும் அழிப்பேனென்று கூறிக்கொண்டு, போர்புரிதலைக்குறித்து அவ்விடத்திலொரு மலையினைப் பறித்து எறிந்தனன்.—எ-று.

வாட்படை முதலியவை ஒருபுறங் கூராயிருத்தலைப் போலாது இருபுறமுங் கூரியதாதலால் வேற்படையினை "இருதலையயில்வேல்" என்றார். தான் குமரக்கடவுளாலிறந்தொழிதலை உண்மையாக நெஞ்சுள் நினைப்பவனாயினும் முன்னிருந்த பெருங்கோபம் பேரட்டகாசம் முதலிய சிறிதே குறைந்தவனாயினனென்பதை அண்மைவிளியானது விளக்குதல் காண்க. நீண்ட வயதுடைய தேவர்களெனது பேராற்றலினை யுணர்வர், நீ அற்பவயதினை யுடையை; அதனாலெனதாற்றலினை யுணராது என்னை இடித்துரைக்கின்றனை என்பான் "இருதலையயில்வேலண்ண லிற்றனசிரந்தோளென்றே கருதலையென்பேராற்றல் கடவுளர்யாருந்தேர்வர்" என்றான் என்றார்.

அண்ணல் - அண்மைவிளி. (சருO)

விட்டிடு பிறங்க றன்னை விரிஞ்சனுக் காசான் காணூஉ
நெட்டிலை வாளி யொன்றா னீறுசெய் திடுத லோடும்
பட்டது தெரிந்து மாய்வோ னமரிடைப் பாணி யோடு
மிட்டிடு தண்ட மொன்றை யெடுத்துநின் றிதனைச் சொற்றான்.

(இ-ள்.) யான் ஒருகணநேரத்திலுலகமனைத்தினையும் அழிப்பேனென்று கூறிக்கொண்டு சிங்கமுகன் பறித்தெறிந்த மலையினை, பிரமகுரவரான குமரப்பெருமான் திருக்கண்சாத்தியருளி நெடிய இலைவடிவமான ஒரு அம்பினால் நீறாகச்செய்திடுதலும், அம்மலை யழிந்ததை யுணர்ந்து, சிங்கமுகன் போரினில் முன்னே கையுடனிடப்பட்ட ஒரு தண்டத்தை எடுத்துக்கொண்டு நின்று இதனையுரைத்தான்.—எ-று. (சருக)

வேலினா லெறியு மாறும் வெஞ்சிலை வளைய வாங்கிக்
கோலினால் விடுத்த தொன்றைக் குறைத்திடு மாறு மல்லாற்
பாலநீ படைகள் வேறு பயின்றதொன் றிலைகொ லென்னு
மூலகா ரணமாய் நின்ற முதல்வன்மேற் கதையைத் தொட்டான்.

(இ-ள்.) ஓ பாலகனே, நீ வேற்படையினுலெறிதலேயும், வெவ்விய வில்லினைக் குழைய வளைத்து அதனில் வைத்து விடுகின்ற அம்பினுல் எதிரியால் விடப்பட்ட எதனையேனுமொன்றினை அழிப்பதனையுமன்றி வேறே ஒரு எவ்வித ஆயுதமுமெடுத்துச் சண்டையிடப் பழகினுய் இல்லையொலென்று கூறிக்கொண்டே மூலகாரணரான குமார முதல்வனுர்மீது சென்று படும்வண்ணம் கதாயுதத்தினைவீசி எறிந்தனன்.—எ-று. (௪௫௨)

வெஞ்சின வவுணன் சொற்ற தன்மையும் விடுத்த தண்டுஞ்
செஞ்சுடர் மேனி வள்ளல் சிந்தையின் மதித்து நோக்கிக்
கஞ்சம தனைய வோர்கைக் காமரு குலிசந் தன்னை
வஞ்சக னுயிருண் டொல்லை வருகென விடுத்தான் மன்னோ.

(இ-ள்.) மிகுந்த சீற்றத்தினையுடைய சிங்கமுகனுரைத்த தன்மையும், அவனுலேவப்பட்ட தண்டத்தையும் செவ்விய சுடரினையுடைய திருமேனியாளரான வள்ளல் திருவுள்ளத்தில் சற்றே நிதானித்துத் தமது செந்தாமரைமலர்போன்ற ஒரு திருக்கரத்திலிருந்த அழகிய வச்சிரப்படையைப்பார்த்து, நீ அவ்வஞ்சகனுடைய உயிரினை விரைந்துண்டு வருவாயாகவென்று திருவாய்மலர்ந்து விடுத்தருளினுர்.—எ-று. (௪௫௩)

விடுத்திடு குலிச மேகி விரைந்தெதிர் தண்டந் தன்னைப்
பொடித்தது போலு மென்னப் பூழிசெய் தடுக்கல் செல்லு
மிடித்தொகை யென்ன மார்பத் தெய்தியே யவுண னாவி
குடித்தது புறத்துச் செந்நீர் சொப்பளித் தேகிற் றன்றே.

(இ-ள்.) குமரப்பெருமானுர் நீசென்றவ்வஞ்சகனுடைய வுயிரினையருந்தி விரைந்து வரக்கடவை யென்று திருவாய்மலர்ந்தருளி விடுத்தருளிய வச்சிராயுதஞ்சென்று விரைவாகவெதிர்த்து வாராநின்ற தண்டாயுதத்தினைப் பொடித்ததுபோலப் புழுதியாகவாக்கி, மலையின்மீது செல்லுகின்ற இடிக்கூட்டங்களைப்போல பெருந்தொனியுடன் அச்சிங்கமுகனுடைய மார்பத்தையடைந்து அவனுயிரையுண்டு வெளியே இரத்தத்தைக் கக்கிக்கொண்டு திரும்பச்சென்றது.—எ-று. (௪௫௪)

வேறு.

தூண்டா விடுகுலிசந் துண்ணென்ற கன்மார்பங்
கீண்டாவி கொண்டு கிழித்துவெரிந் சென்றிடலும்
வீண்டான் பதைபதைத்தான் வீழ்குருதி நீரலைப்ப
மாண்டான் கிடந்தான் மடங்கன்முக வெய்யோனே.

(இ-ள்.) குமரப்பெருமான் நீ சென்றிவனுயிரை யுண்டுவருவாயாகவென்று தூண்டிவிட்ட வச்சிராயுதம் மலையின்மீது விழுமிடியைப்போல பேரோசை காட்டினதாய் திடீரென்று அகன்ற மார்பினைப்பிளந்து அவனுயிரை வாங்கிக்கொண்டு முதுகைப்பிளந்து வெளியே போதலும், மார்பம் பிளவுபட்டுத் துடிதுடித்து வீழாநின்ற இரத்த வெள்ளம்அலைமோதச் சிங்கமுகனுகிய கொடியவன்இறந்துகிடந்தனன்.—எ-று. (௪௫௫)

அங்கப் பொழுதி லடற்குலிசம் வான்போகிக்
கங்கைப் புனலாழ்ந்து காமருபூந் தாதாடிச்
சங்கத் தவர்க்குட் டலையார் தமிழ்ப்புலவன்
செங்கைக் குள்வந்து சிறப்புற் றிருந்துளதால்.

(இ-ள்.) அப்பொழுது வன்மையின்மிக்க வச்சிராயுதமானது ஆகாயமார்க்கத்திற்சென்று அங்குள்ள தேவகங்காநதியின்மூழ்கி கற்பகக்காவிற் பொருந்திய பூந்தாதிற் படிந்து சங்கத்தவர்களுள் தலைமைத் தமிழ்ப்புலவரான குமரக்கடவுளின் செவ்விய திருக்கரத்தில் வந்து சிறப்புடனிருந்தது.—எ-று. (௪௫௬)

பார்த்தாரிந் நீர்மைதனைப் பங்கயத்த ஞாதிவிண்ணோ
ரார்த்தார் முறுவலித்தா ராடினார் பாடிமலர்
தூர்த்தார் மகிழ்ந்தார் தொழுதாரெங் கோன்புடையிற்
போர்த்தார் வணக்கம் புரிந்தார் புகழ்ந்திட்டார்.

(இ-ள்.) வச்சிராயுதமானது மலைமீது விழுமிடியைப்போல சிங்கமுகனுடைய மார்பின்மோதி அவனுயிரை யுடலினின்றுமகற்றி வானவழியாய்ச்சென்று தேவகங்கையின்முழுகிக் கற்பகப்பூந்தாதிற்படிந்து கந்தப்பெருமானுருடைய திருக்கரத்தில் வந்திருந்த இந்தத்தன்மையை ஆகாயத்தில் நின்ற பிரமன் முதலிய தேவர்கள் கண்டு ஆரவாரித்து நகைத்து ஆடிப்பாடி மலர்மாரி பொழிந்து மகிழ்வடைந்து தொழுது, எம்பெருமானை குமரக்கடவுளினருகிலாகிச் சூழ்ந்துகொண்டு வணங்கிப்புகழ்ந்தார்கள்.—எ-று.

என்னா யகனவ் விமையோர்க ளெல்லோர்க்குந்
தன்னா ரருள்செய்து சாரதவெள் ளத்தினொடு
மின்னார் புகரயில்வேல் வீரரொடு மீண்டனனாற்
பொன்னா டெனவே புனைந்தபொலன் பாசறையில்.

(இ-ள்.) எனது பெருமானா ரரிப்பிரமேந்திராதிய தேவரனைவருக்கும் தமதரிய திருவருளைச்செய்து பூதவெள்ளங்களுடனேயும், ஒளிபொருந்திய புள்ளிகளையுடைய கூரிய வாட்படையினையுடைய நவவீரர்களுடனேயும், கண்டவர் இது சுவர்ணஉலகமென்று கூறுமாறலங்கரித்துள்ள அழகிய பாசறைக்குப் போர்க்களத்தினின்றும் எழுந்தருளினார்.—எ-று. (௬௫௮)

பாசறையின் கண்ணேகிப் பாரிடத்தோர் சூழ்போத
வாசவனு நான்முகனு மற்றோரும் பாங்காகக்
கேசரிக டாங்குங் கிளர்செம்பொற் பீடிகைமே
லீச னெனவே யினிதருள்செய் துற்றனனே.

(இ-ள்.) பாசறையினிடஞ்சென்று பூதர்களப்பாசறையினுற்புறங்களிலுந் தங்கியிருப்ப, இந்திரனும் பிரமனும் மற்றையோரும் அருகில் வராநிற்ப, அந்தப்புரத்திற்கெழுந்தருளி சிங்கங்களாற் சுமக்கப்படுகின்ற கிளர்ச்சியினையுடைய பொன்பீடத்தின்மீது ஈசனைப்போல இனிமையாக அருள்செய்துகொண்டெழுந்தருளி இருந்தனன்.—எ-று.

வெற்றிநெடு வேலோன் வியன்பா சறையிருப்ப
மற்றவனொ டாடி மடங்கன் முகத்தவுணன்
செற்றுகொடி யுண்ணச் செருநிலத்தின் மாய்ந்ததனை
யொற்றர்தெரி குற்றே மகேந்திரத்தி லோடினரால்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய நெடிய வேற்படையினையுடைய குமரக்கடவுள் ஆச்சரியப்படத்தக்க அலங்காரத்தினையுடைய பாசறையி லெழுந்தருளியிராநிற்ப, அப்பெருமானொடு முன்னே போர்புரிந்து சிங்கமுகத்தசுரன் நெருங்கி காகங்களுண்ணும் வண்ணம் போர்க்களத்தி லழிந்ததனை ஒற்றர்களுணர்ந்து மகேந்திரபுரத்திற்கோடினார்கள்.—எ-று. (௬௬௦)

ஆட லிளையோ னவண்வீழ்ந் ததுநோக்கி
வீடினனோ மான்றனனோ வென்றைய மேல்கொண்டு
நீடு சிகரியிடை நின்றோன் பதங்கண்முடி
சூடி யவலித்துத் தொழுதித்னைச் சொல்லினரால்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய தனதிளையவனான சிங்கமுகாசுரன் அப்போர்க்களத்தில் விழுந்ததனைப்பார்த்து இறந்தானோ? அல்லது மயங்கினனோ? என்று மிகுந்த

சந்தேகமுடையவனாய், உயர்ந்த சிகரத்தின்மீது நின்ற சூரபன்மனுடைய கால்களைத் தலைமேலணிந்து துன்பமுற்று வணங்கி இதனையுரைத்தார்கள்.—எ-று. (௬௬௧)

குன்றம் பிளந்த குமரேசன் வச்சிரத்தா
லுன்றம்பி யாவி யொழிந்தா னவன்மிசையப்
பொன்றுங் கணத்தோர் பொருப்புற்று ரெல்லோருஞ்
சென்றுய்ந் தனரீது திண்ணமெனச் செப்பினரோ.

(இ-ள்.) அண்ணலே! கிரவுஞ்சமலையைப் பிளந்த குமரேசன் விட்ட வச்சிராயுதத்தினால் உனது தம்பியான சிங்கமுகாசுரன் உயிரிழந்தனன். அன்னான் உண்ண இறந்தவர்களும் உதயகிரியிலிருந்தவர்களுமாகிய அனைவரும் போய்ப் பிழைத்தார்கள். இது உறுதியென்று கூறினார்கள்.—எ-று. (௬௬௨)

வேயுற் றவர்சொல் வினவியுரோ மங்களெலாந்
தீயப் பொறிதுரப்பச் செங்கட் புனல்பெருக
வாயிற் புகைசெல்ல வாடிப் பதைபதைத்து
நோயுற்று வெங்கனலை நுங்கினர்போல் வீழ்ந்தனனே.

(இ-ள்.) வேவு சென்று வந்தவர்களுரைத்த சொற்களைக் கேட்டுச் சூரபன்மன் உரோமங்களனைத்துங் கரியவும், தீப்பொறி சிதறவும், செந்நிறமான கண்களில் இரத்தம் பெருகவும், வாயிற்புகையுண்டாகவும் வாட்டமுற்றுப் பதைபதைத்துத் துன்புற்று வெவ்விய தீயை யருந்தினவர்போல வீழ்ந்தனன்.—எ-று. (௬௬௩)

வண்ணச் சிகரம் வழுவுற்றுக் கீழ்த்தலத்திற்
கண்ணிற் பொழிந்த கடலினிடை வீழ்ந்தன
லொண்ணுற்ற காஞ்சி யுமையவள்கோட் டத்தினின்றுந்
தண்ணுற்ற நேமித் தடத்திடையே வீழ்பவர்போல்.

(இ-ள்.) ஒண்மை பொருந்திய காஞ்சிபுரத்திலுள்ள ஸ்ரீ காமகோட்டத்தின் மேனிலையினின்றும் குளிர்ச்சி பொருந்திய சக்கர தீர்த்தத்தில் விழுபவர்களைப்போல அழகிய சிகரத்தினின்றுந் தவறிக் கீழிடத்தில் தம்பி யிறந்தானென்று கேட்ட துன்பத்தால் கண்ணினின்றும் ஒழுகிய நீர்க்கடலினிடத்தில் சூரபன்மன் வீழ்ந்தனன்.—எ-று.

ஸ்ரீ காமக்கோட்டத் தெம்பெருமாட்டியின் திருக்கோயின் முற்றத்துள்ள தீர்த்தத்திற்கு சக்கரதீர்த்தமென்று பெயர். இதற்கே பஞ்சதீர்த்தமென்றும் உலகாணிதீர்த்தமென்றும் வேறிரண்டு நாமங்களுள. காமாக்ஷியாலயத்தின் மேன்மாடியிலிருந்து உலகாணித்தீர்த்தத்தில் தலைகீழாகவும் கான்மேலாகவும் ஆமாறு விழுதற்கு கருமாறிப்பாய்தலென்று பெயர். இந்நூலாசிரியர்காலத் திக்காரியம் நடந்துவந்தமையா லிதனை யுவமையிட்டுரைத்தனர். இக்காலத்திது காமகோட்டத்தில் நடத்தும் வழக்கமின்று. இங்ஙனங் கருமாறிப் பாய்பவர் கோவிலடிமைகளான பெண்கள் என்று கேள்வி. (௬௬௪)

மங்கு லெனவீழ்ந்து மறிந்து நிலமிசையே
யங்கை புடைத்திட் டலமந்து தொல்வலியுந்
துங்க விறலு நலனுந் தொலைவெய்தப்
பொங்கு துயர்க்கடலின் மூழ்கிப் புலம்புறுவான்.

(இ-ள்.) சூரபன்மன் கரிய மேகத்தைப்போல கீழேவிழுந்து புரண்டு பூமியின் மீது அகங்கையினாலடித்துச் சுழன்று பழையவன்மையும் உயர்ந்த வெற்றியும் நன்மைப் பாடும் கெட மேலும் மேலும் உண்டாகாநின்ற துன்ப சமுத்திரத்தின் முழுகிப் புலம்புவானாயினன்.—எ-று. (௬௬௫)

என்னையோ வென்ற னிளவலோ தாரகற்கு
முன்னையோ சிங்க முகத்தவோ தானவர்க
ளன்னையோ வென்ன வருள்புரியு மாண்டகையோ
வுன்னையோ தூதர் விளிந்தனையென் றோதியதே.

(இ-ள்.) என் ஐயனே! ஓ! எனது இளவல்! ஓ! தாரகற்கு மூத்தவனே! ஓ! சிங்கமுகத்தனே! அசுரர்கள் எம்மன்னையே என்றழைப்ப அவர்கட்கு அருள்புரிந்த ஆண்டகையே! உன்னைத்தானா தூதுவர் இறந்தனையென்று கூறினர்.—எ-று. (சசுரு)

அன்று மகவான் முதலா மமரர்தமை
வென்று தமியேற்கு விசயந் தனையளித்தா
யின்று சமரி லிளம்பா லகனொருவன்
கொன்றனனோ வுன்னுயிரைக் கூற்றுவனுங் கொண்டானோ.

(இ-ள்.) என்னரியவிளவலே! நீ, அந்நாளிலிந்திரன்முதலான தேவர்களைவென்று எனக்கு வெற்றியினை அளித்தனை. இதுநிற்க. இன்று நடந்த போரில் இளைய சிறுவனொருவன் நின்னைக்கொன்றனனோ? உனதுயிரினை எமனுங்கைப்பற்றினனோ?—எ-று.

உண்டுபோ ரென்னி னுளங்களிக்கு முன்னுயிரைக்
கொண்டுபோ னின்று கூற்றனென வேகேட்கிற்
றண்டுழாய் மாலுஞ் சதுர்முகனு மிந்திரனும்
பண்டுபோற் றத்தம் பதியாளப் போகாரோ.

(இ-ள்.) சண்டையுளதென்றால் மனமகிழுகிற உனது பிராணனைக் கொண்டு சென்றான் எமன் என்று கேள்வியுற்றால் தண்ணிய துளவமலர்மாலையணிந்த நாராயணனும் பிரமதேவனும் தேவேந்திரனும் முன்னாளிற்போல தத்தமது பதிகளை ஆளுதற்குச் செல்லார்களோ? செல்வார்களே.—எ-று. (சசுஅ)

பொன்னை நிலந்தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை யெல்லாம் பெறலாகு
மென்னை யுடைய விளையோனே யிப்பிறப்பி
னுன்னை யினிப்பெறுவ துண்டோ வுரையாயே.

(இ-ள்.) பொன்னினையும் பூமியையும் பிள்ளைகளையும் இன்னம் இவையன்றியுள்ள பொருள்களனைத்தையும் அடையலாம் என்னையுடைய எனது தம்பியே இந்தச் சனனத்தில் உன்னை இனி அடைவதுண்டோ உரைப்பாயாக.—எ-று. (சசுகூ)

அண்டார் தமக்கோ ரரியே யரிமுகனே
விண்டா னடைந்தா யெனவே விளம்புகின்றார்
தண்டா ரகலத்துத் தாரகனை மக்களுடன்
கண்டாயோ யானிங் குறுதுயரங் காணாதாய்.

(இ-ள்.) பகைவரென்னும் யானைகளுக்கொரு சிங்கமே! சிங்கமுகனே! உன்னை விண்ணுலகமடைந்தனையென்று இவர்கள் கூறுகின்றார்கள். அங்குச்சென்று நீ தண்ணிய மலர்மாலையணிந்த மார்பினனான தாரகனை நம்மக்கண்மாருடன் கண்டனையோ யானிவ்விடத்திலடையுந் துன்பத்தைக்காணாதவனே.—எ-று. (சஎ0)

உண்டிக் கடனு மொருவயிற்றோர் செய்கடனு
மெண்டிக்கும் போற்றியிட வின்றுகழித் தேகினைநீ
யண்டத் தவரை யலைத்துவரு முன்றிறலைக்
கண்டுற் றிடவே கடனற்றேன் றீயேனே.

(இ-ள்.) செஞ்சோற்றுக்கடனும் சகோதரர்கள் செய்யவேண்டிய கடமையும் எட்டுத்திக்கினரும் போற்றுநிற்ப நீ இன்றுகழித்துச்சென்றனை. தேவர்களைத் துன்புறுத்திவராநின்ற உனது சாமர்த்தியத்தை கண்டிருக்குங்கடனைத் தீமையாளனான யான் அற்றவனாயினேன்.—எ-று. (சஎக)

உற்றதுணை நீயென் னுயிர்நீ யுணர்ச்சியுநீ
சுற்றமுநீ தாதையுநீ யென்னிளைய தோன்றலுநீ
நற்றவமு நீயென்று நானினைந்தே னீயதனைச்
சற்றுநினை யாமற் றனித்திருக்கக் கற்றாயோ.

(இ-ள்.) எனதரிய இளவலான சிங்கமுகனே! எனக்கு உற்றதுணையும் நீ, என்னுயிரும் நீ, என்னுணர்வும் நீ, சுற்றமும் நீ, தாதையு நீ, எனக்கிளைய தம்பியு நீ, எனது நல்லதவமு நீ என்று நான் கருதினேன்; நீயதனைச் சற்றும் எண்ணாமல் என்னைவிட்டுத் தனித்திருக்கக் கற்றனையோ.—எ-று. (சஎஉ)

பொற்றைக் கயலிருந்த பூட்கைமுகன் றுஞ்சியபின்
ஞெற்றைப் புயம்போ யுளந்தளர்ந்து வைகினன்யா
னிற்றைப் பகனீ யிறந்தா யரிமுகனே
மற்றைப் புயமு மிழந்தேன் வறியேனே.

(இ-ள்.) கிரவுஞ்சமலைக் கருகிலிருந்த துவாரம்பொருந்திய தும்பிக்கையினையுடைய யானைமுகனான தாரகனிறந்தபின்பு யான் ஒருதோளினை இழந்துமனந்தளர்ந்து வைகினேன். ஓ! சிங்கமுகனே இன்றுபகலில் நீ இறந்தனை அதனால் வறுமையாளனான யான் மற்றைப்புயமும் இழந்தனன்.—எ-று. (சஎங)

என்னத் தனதண்ட மெங்குஞ் செவிடுபடத்
தன்னத் தனியோ னரற்றுமொலி தாங்கேளா
நன்னத் தவனு நளினத் தினிலுதித்த
வன்னத் தவனு மகத்தவனு மார்த்தனரே.

(இ-ள்.) என்று தன தண்டமெல்லாஞ் செவிடாகத்தன்னந்தனியனான சூரபன்மன் அரற்றாநின்ற ஒலியினைக் கேட்டு தங்களுக்குண்டான மகிழ்ச்சியினால் நல்ல பாஞ்சஜன்னியமென்னும் சங்கத்தினையுடையவரியும், தாமரைமலரிற்பிறந்த அன்னவாகனனான பிரமனும், யாகாதிபனான இந்திரனும் ஆரவாரித்தனர்.—எ-று. (சஎச)

இத்தன்மை மன்ன னிரங்கித் தெளிந்தெழுந்தே
யுத்துங்க மிக்க வொருதன் றவிசேறி
நித்தன் குமர னுடனேர்போய்ச் சமரியற்றச்
சித்தந் தனிலே நினைந்துசினஞ் செய்தனனே.

(இ-ள்.) இவ்வண்ண மரசனான சூரபன்மனிரக்கமுற்றுத் தெளிவடைந்தெழுந்து, உயர்ச்சிபொருந்திய ஒப்பற்ற தனது சிங்காசனமேறி, அழிவற்ற சிவகுமாரனுடனே நேராகச்சென்று போர்புரிதற்கு தன்மனதினினைந்து சீற்றங்கொண்டனன்.-எ-று.

சிங்கமுகாசுரன் வதைப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - உருகூஅ.

---

உ

முருகன்றுணை.

# சூரபன்மன் வதைப்படலம்.

வேறு.

கொற்ற வேற்படை பரித்திடு மாயிர கோடி
யொற்றர் தங்களை நோக்கியே சூரனு முரவோன்
மற்றெ னாட்சியா மண்டங்க ளெங்கணும் வைகிச்
சுற்று தானையைத் தம்மினோ கடிதெனச் சொன்னான்.

(இ-ள்.) வன்மையாளனான சூரபன்மன், வெற்றிபொருந்திய வேலாயுதங்களை யேந்தியுள்ள ஆயிரகோடி ஒற்றர்களைப்பார்த்து நீவிர் மற்றெனது ஆட்சியாகவுள்ள அண்டங்களெவ்விடத்தினும் தங்கியிருந்து சுற்றுநின்ற சேனையை விரைவாக அழைத்துக்கொண்டு வாருங்கள் என்று கூறினான்.—எ-று.

அண்டங்கள் இவனதாட்சிக்குட்படாதனவாகவும் எண்ணிறந்தன வுளவாதலால் பிரித்து "எனாட்சியாமண்டங்கள்" என்றான் என்க.

நிலையாக ஓரிடத்திருத்தலும் அவ்விடத்தைச்சூழ்ந்த பிறவிடங்களைச்சுற்றிக் காத்தலும் சைனியங்கட்குள்ள தொழிலாதலின், இவனும் "வைகிச்சுற்றுதானையை" என்றான். மற்றும், ஓவும் அசைகள். (க)

சொன்ன காலையி னன்றென வணங்கியே தூதர்
பன்ன ருங்கதி கொண்டனர் விண்டனர் படர்ந்து
பொன்னின் மேதகு மண்டங்க ளிடைதொறும் புகுந்து
மன்னர் மன்னவன் றன்பணி முறையினை வகுத்தார்.

(இ-ள்.) சொன்னவுடனே அவ்வண்ணமே செய்கின்றோமென்றுரைத்துத் தூதுவர்கள், கூறுதற்கரிய வேகத்துடன் பலபிரிவாகப் பிரிந்துசென்று பொன்வண்ணமாக வுயர்ந்த அண்டங்களிடமெல்லாம் புகுந்து அரசர்க்கரசனாகிய சூரபன்மனிட்ட கட்டளையினை யுரைத்தார்கள்.—எ-று.

பிருதிவி - பொன்வண்ணமானதாதலால் பிருவிதியண்டங்களை "பொன்னின் மேதகுமண்டங்கள்" என்றார்.

"பொன்னின்மேதகும்" என்பதற்கு பொன்னினுஞ்சிறந்த என்றுமுணாக்கலாம்.

வகுத்த காலையி லாண்டுறை யவுணமன் னவர்க
டொகுத்த நாற்பெருந் தானையங் கடலொடுந் துவன்றி
மிகுத்த வண்டத்தின் புடைதொறும் புடைதொறு மேனாட்
பகுத்து வைத்திடும் வாயிலி னெறிகளாற் படர்ந்தார்.

(இ-ள்.) தூதுவர் கூறினவுடனே அவ்வவ்வண்டங்களில் வசிக்கின்ற அசுரராஜர்கள் தொகுக்கப்பெற்ற சதுரங்கசேனைகளாகிற சமுத்திரங்களுடனே நெருங்கி மிகுதியான அண்டங்களி னிடங்கள்தோறும் முன்னாளிற் பகுத்துவைத்துள்ள வாயில்களின் வழிகளால் சென்றார்கள்.—எ-று.

மேனாளென்றது - சூரபன்மனுடைய அரசாட்சியின்முதற்காலத்தினை.

ஒவ்வொரு அண்டத்தின் பிரதானவிடத்திலும் சூரபன்மனுக்குக் கீழ்ப்படிந்த அசுர அரசர்கள் சூரபன்மனால் முதல்நாளிலேயே அமைக்கப்பெற்றிருக்கின்றார்களென்பதனை அசுரகாண்டத்தில் முன்னமே விளக்கியுள்ளமையா லீண்டு விளக்காதுவிட்டனம்.

முந்தை யண்டத்தி னெறிதனின் முழங்கிருஞ் சேனை
வந்து வந்திவட் செறிவன விதியொடு மாறாய்ச்
சுந்த ரங்கெழு மாயனிவ் வுலகுயிர் துய்ப்ப
வுந்தி யின்வழி யங்கவை தோன்றுமா றொப்ப.

(இ-ள்.) பழைய அண்டச்சுவர்களின் வழியாக ஆரவாரத்துடன் வராநின்ற சேனைகள் இங்கே நெருங்குவன எவைபோலுமெனின், பிரமனுக்குபகையாய் அழகு விளங்காநின்ற திருமால் இவ்வுலகிலுள்ள உயிர்களை உண்ண, அவைகள் அவனது நாபியின்வழியாக உண்டாதலை யொப்பன.—எ-று.

மாயவன் பிரமனையும் உலகினையும் ஒருங்கே படைத்தானென்பதனை, "மகிழ்ந்தனன்பின்னர் மதிமுகி ழணிந்தோன் மணிநிற மாயனுக்கன்பால், திகழ்ந்திடப்படைக்கும் வகையெலாமறியத் தெருட்டினன் றெருட்டலு மறிவா, லகைந்தபூர் தளப மாலைதாழ் மோலி யண்ணலுமகமகிழ்ந்தன்றே, முகைந்தலர்விரிந்த மலரவனோடு முலகெலாமுறையினிற் படைத்தான்" என்னும் வாயுசங்கிதையாலுணர்க. (சு)

பூதம் யாவையு முயிர்களும் புவனமுள் ளனவும்
பேத நீங்கிய சுருதியா கமங்களும் பிறவு
மாதி காலத்தி னநாதியா மெம்பிரா னளப்பில்
பாத பங்கயத் துதிப்பவும் போன்றன பகரின்.

(இ-ள்.) சொல்லுமிடத்தில் பூதங்களனைத்தும் உயிர்க்கூட்டங்களும் புவனங்களாக வுள்ளவைகளும் பேதமற்ற வேதாகமங்களும் மற்றையவைகளும் பிரதமமஹா சிருட்டிகாலத்தில் அநாதியாகவுள்ள எம்பெருமானுடைய அளவற்ற திருவடித்தாமரைகளின் வழித்தாய் பிறத்தலையும் ஒத்தன அசுரசேனைகளின் செல்கை.—எ-று. (ரு)

இனைய தன்மையா லண்டத்தி னெறிதனி லேகும்
வனைக ருங்கழ லவுணர்தம் படையிவண் வரலுங்
கனலி தன்சுடர் மறைந்தன நடுங்கினன் கனலு
மனிலன் றானுமெய் வியர்த்தன னெருக்கமுற் றயர்வான்.

(இ-ள்.) இவ்வாறான தன்மையினால் அண்டவாயிலின் வழியாகச் செல்லுகின்ற கட்டப்பட்ட பெரிய வீரக்கழலினையுடைய அசுரசேனைகள் இவ்விடத்தில் வருதலும் அவ்வருகையால்சூரியனுடைய கிரணங்கள் மறைந்தன. அக்கினி நடுக்கமடைந்தனன். நெருக்கமுற்றயர்ச்சியடைந்த வாயுதேவனும் உடல்வியர்வையுடையவனாயினன்.—எ-று. கனலி - சூரியன்.

பலவண்டங்களிலிருந்த சேனைகள் இந்த ஒரு அண்டத்தில்வந்து நெருங்கினமையால் இந்தவண்டத்திற்கு மிகுந்த நெருக்கமுண்டாயிற்று. அங்ஙனமுண்டாகிய நெருக்கத்தால் சூரியனுடைய கதிர்கள் மறைந்தன என்றனர். வெளிச்சமான இடத்திலன்றிச் சூரியனுடைய கதிர் ஒளிராதாதலால், மனிதர்முதலிய பிராணிகட்குள்ள நடுக்கத்தை ஒழிக்குமக்கினி நெருக்கத்தால் தானும் நடுங்கினனென்பார் "நடுங்கினன் கனலும்" என்றார். எத்தகையோருடைய இளைப்பையும் வியர்வையையுமொழிக்கும் வாயுவானவன் இச்சேனையின் நெருக்கத்தால் வருத்தமுற்று வியர்வை அடைந்தனனென்பார் "அனிலன்றானுமெய்வியர்த்தனன்நெருக்கமுற்றயர்வான்" என்றனர். இவர்கூறிய விச்செயல்களால் சேனைகளின் பெருக்கமித்துணையவென்று கூறப்படா வியல்பின என்று குறிப்பினால் அறிக. (சா)

ஆர்த்த வோசையா லகிலமுந் துளங்கிய வவுணர்
கார்த்த மெய்யொளி கதுவலா லிருண்டன ககனந்
தூர்த்த பூழியா லாழிகள் வறந்தன துணைத்தாள்
பேர்த்து வைத்திடு தன்மையா லண்டமும் பிளந்த.

(இ-ள்.) பிறவண்டங்களினின்றும் வருகின்ற சேனைகள் ஆரவாரஞ்செய்த ஓசையினால் எல்லாவுலகங்களுங் நடுங்கின, அசுரர்களின் கரிய சரீர ஒளி கதுவுதலால் ஆகாயம் இருண்டன, தூர்க்கப்பட்ட புழுதியினால் கடல்கள்வறண்டன, இரண்டு கால்களையும் பெயர்த்துவைக்கின்ற தன்மையால் அண்டமும் பிளந்தன.—எ-று. (எ)

கூடு மிப்பெருந் தானையை நோக்கிமெய் குலைவுற்
றோடு தற்கிட மின்றிநின் றிரங்கின ரும்பர்
வீடி னானென்ன வாசவன் மருண்டனன் விதியு
நீடு மாயனு முடிவதென் னோவென நினைந்தார்.

(இ-ள்.) இவ்வண்ணமாக வந்து நெருங்குகின்ற அசுரசேனைகளைப் பார்த்து உடனடுங்கி, ஓடிப்பிழைத்தற்கு வழியின்றித் தேவர்கள் நின்றார்கள். உயிரிழந்தவனைப் போல விந்திரன் மூர்ச்சிதனானான். அயனும் அரியும் எவ்வாறாக முடியுமோ என்று தம் மனத்தினு ளெண்ணினார்கள்.—எ-று. (அ)

பூத லந்தனி லப்பா னெறிதனிற் புடைசூழ்
மாதி ரங்களி லளக்கரில் வரைகளின் வழியிற்
பாத லங்களிற் பிறவினி லவுணர்தம் படைக
ளேதும் வெள்ளிடை யின்றியே சென்றன வீண்டி.

(இ-ள்.) அசுரர்தஞ் சேனைகளெல்லாம் பூமியிலும், ஆகாயமார்க்கத்திலும், புடைசூழ்ந்துள்ள திக்குக்களிலும், கடல்களிலும், மலைகளிலும், வழியிலும், பாதாளங்களிலும், மற்றுள்ள இடங்களிலும், வெற்றிடமின்மையாகும்வண்ணம் நெருங்கிச்சென்றன.—எ-று. (கூ)

மலர யன்பத மால்பத முனிவர்கள் வைகு
முலகம் வாசவன் றொன்னக ரேனையோ ருறையு
ளலரி யாதியர் செல்கதி பிலங்களி லனிகம்
பலவு நின்றன செல்லிடம் பெறுதபான் மையினால்.

(இ-ள்.) வேறு போக்கிடமில்லாத தன்மையினால் தாமரைமலரிலிருக்கின்ற பிரமதேவனுடைய உலகத்திலும், திருமாலின் உலகத்திலும், முனிவர் வாசஞ்செய்கின்ற உலகங்களிலும், இந்திரனுடைய பழைய நகரங்களிலும், மற்றையவர்களினிருப்பிடங்களிலும், சூரியன் முதலியோர் செல்கின்ற மார்க்கங்களிலும், பிலங்களிலும் ஆகச்சேனைகள் பலவு நின்றன.—எ-று. பிலங்களென்பன - பாதாளங்கள். (கய)

மாறி லாதன தொல்லையண் டங்களின் வந்த
வீறி லாததோர் தூசிகள் படர்ந்திடு மெல்லை
நூறு கோடியோ சனைகளென் றறிஞர்க ளுவன்றார்
வேறு பின்வருந் தானையின் பெருமையார் விதிப்பார்.

(இ-ள்.) கெடாத பழைய அண்டங்களினின்றும் வந்த எண்ணிக்கையற்றவும் ஒப்பிலாதவும் ஆன முன்னணிப்படைகள் செல்லாநிற்கு நிலவளவினை விவேகிகள் நூறுகோடியோசனையின என்று சொன்னார்கள், வேறே பின்னே வாராநின்ற சேனையின் பெருக்கத்தை இவ்வளவினதென்று யாவர் எடுத்துக் கூறுபவர்கள்? கூறார்கள்.—எ-று. கூறார்கள் என்பது குறிப்பெச்சம். (கக)

குறுமை யாமுயிர் வாழ்க்கையர் கொண்டதொல் வளம்போற்
சிறுமை யோவிது விரித்திட வவுணர்கோன் சேனை
யறிஞர் கூறிய பெருந்தொகை தன்னினு மடங்கா
பிறிது மற்றிதற் குவமையு மொன்றிலை பேசின்.

(இ-ள்.) அசுராதிபனான சூரபன்மனுடைய சேனைகளை இவ்வளவினதென்று கூறுதற்கு விவேகிகளால் முன்னே பெரியதாகக் கூறப்பட்டுள்ள கணக்கிலுமடங்கா; அதுவுமன்றிக் கூறுமிடத்தி விதற்குவமையும் வேறே கிடையாது. சிற்றுயிர் வாழ்க்கையினை யுடையவர்கள் கொண்டுள்ள பழைய வளத்தைப்போல இவனுடைய செல்வம் சிறுமையானதோ?—எ-று.

மனிதர்முதலியவர்களி னுயிர்வாழ்க்கையினு மதிகமான நூற்றெட்டுகங்கள் உயிர்வாழப்பெற்றவனாதலால் சூரபன்மனை, நெடுமையாமுயிர்வாழ்க்கையனென்று குறிப்பிக்க, அவனன்றிய பிறரை "குறுமையா முயிர்வாழ்க்கையர்" என்றார். (கஉ)

அஞ்சு பட்டிடு பூதங்கள் பல்லுரு வமைந்து
நெஞ்சு பட்டிடு முயிர்கொடு நேருமே னிகரு
மஞ்சு பட்டிடு பொருப்பெலாஞ் சூறைமுன் மயங்கும்
பஞ்சு பட்டிட நடந்திடு தூசிமுற் படையே.

(இ-ள்.) ஐந்தாகப் பகுக்கப்பட்டுள்ள மகாபூதங்கள் பலவுருவங்களை யடைந்து மனதில் பொருந்திய உயிருடனே வருமாயி னொப்பாகும். அது எது எனில், சூரபன்மனுடைய சைனியங்களில் மேகந்தவழு மலையெலாஞ் சூறைக்காற்றிற்கு முன்னே மயங்குகின்ற பஞ்சு படும் பாட்டினையடைய நடக்கின்ற தூசியாகிய முன்னணிப் படை.—எ-று.

உயிர்நிலைக்கு இருபுருவக்கூட்டு, கண்டம், நாபி இவ்விடங்களைத்தானமாக வைதிகநூல்களுரைக்கின்றன. மரமுதலியவை யுயிரேனு மவைகட்கந்தக்காரணங் குறைவாதலால் பகுத்தறிவாதிய குறைந்தன. மனிதராதியர் அந்தகரணமானமனமுடைய உயிராதலால் பகுத்தறிவாதிய மிகுந்தன. ஆதலின் மகாபூதங்கள் பகுத்தறிவுடைய பிராணிகளாக உருக்கொண்டு தோன்றுமாயி னொக்குமென்பார் "அஞ்சுபட்டிடு பூதங்கள் பல்லுருவமைந்து னெஞ்சு பட்டிடு முயிர்கொடு தோன்றுமே நிகரும்" எனரூர் இங்ஙனம் பொருளுரைக்குங்கால், "நெஞ்சுபட்டிடு" மென்பதற்கு "மனதொடுபொருந்திய" என்று கூறுக. (கூ)

அந்த மின்றியே யகன்புவி கொண்டவண் டத்தில்
வந்தி டுந்திறற் படைகளின் பெருமையார் வகுப்பார்
முந்து தூசிகண் மகேந்திரப் பெருநகர் மூடி
யிந்த வண்டத்தி னிடமெலா நிறைந்தன விமைப்பில்.

(இ-ள்.) முன்சென்ற தூசிப்படைகள் மகேந்திரமென்னும் பெரிய நகரமுற்றினு நிறைந்து இமைப்பொழுதிற்குள் இந்த அண்டத்தினிடமெலா நிறைந்தன. ஆதலின் முடிவிலலாமல் அகன்ற பூமியினால் கொள்ளப்பட்ட வண்டத்திலநின்றும் வராநின்ற வன்மையினையுடைய சேனையின் பெருமையை யாவர் இவ்வளவினவென்று வகுப்பவர்கள்.—எ-று. பெருமையென்றதீண்டு மிகுதியை.

தூசி என்பதை புழுதி என்று பொருள் கொள்வாருமுளர். அஃதீண்டைக்குப் பொருந்தாமை யுணர்க. (கசு)

ஆன காலையி லொற்றர்போய்ச் சூரனை யடைந்து
பானன் மெல்லடி கைதொழு தையநீ படைத்த

சேனை வந்தய னின்றன தூசிமுற் சென்று
வானு லாவுபே ரண்டத்தை நெருக்கின மன்னோ.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் தூதுவர்கள் சூரபன்மனிருப்பிடத்திற்குச் சென்று அவனது கருநெய்தல்மலர்போன்ற நிறம்வாய்ந்த மெல்லிய அடிகளை வணங்கி ஐயனே! நின்னதாகவுள்ள சேனைகள் புறவண்டங்களில் நின்றும் வந்து அருகிற்சூழ்ந்து நின்றன. அச்சேனைகளின் தூசிமுன்னே சென்று ஆகாயவீதியிற் பொருந்திய பிரமாண்டத்தை நெருக்கின.—எ-று. (கசு)

என்னு மெல்லையி னன்றென வவுணர்கோ னெழுந்து
தன்ன தாகிய வுறையுள்போய்த் தடம்புன லாடித்
துன்னு மைவகை யுணவுட னறுசுவை தொடர்ந்த
வன்ன முண்டன னஞ்சுகொன் மருந்துகொ லதுவே.

(இ-ள்.) என்று கூறியவுடனே நல்லதென்று அசுராதிபனான சூரபன்மன் எழுந்து தனதாகவுள்ள இருப்பிடத்திற்குச் சென்று மிகுந்த நீரின்முழுகி நெருங்கிய ஐவகையான உணவுடனே அறுசுவைகள் பொருந்திய அன்னத்தினை யருந்தினன். அங்ஙனம் அவனுண்டது விஷமோ? அமிர்தமோ?—எ-று.

பலருங்காண வரசுவீற்றிருக்கு மத்தாணி மண்டபத்தை விட்டு அரண்மனைக் குட் போயினனென்பார் "தன்னதாகிய வுறையுள்போய்" என்றார்.

ஒருவனுண்ணு மன்ன முடலை வளர்ப்பதாக, இவனுணவு இன்றோடிவனுடலைக்கெடுப்பது நிச்சயமாதலின் அவனுண்டியை "நஞ்சுகொல்மருந்துகொலது" என்றார்.

நீற ணிந்தன னெற்றிமெய்ந் நிறைவிரை களபச்
சேற ணிந்தனன் பூந்தொடை பங்கியிற் செறித்தான்
மாறில் பொற்சுடர்க் கலையுட னணிகலன் மாற்றி
வேறு வேறுநன் கினியன புனைந்தனன் விரைவில்.

(இ-ள்.) போசனஞ் செய்தாயின பின்பு விரைவாக நெற்றியில் விபூதிதரித்தான். உடன்முழுமையும் மணமபொருந்திய சந்தனக்குழம்பினைப்பூசினன். பூமாலையை பங்கியிலணிந்தனன். மாறுபடாத பொன்னஞ்சுடரினையுடைய வஸ்திரங்களுடனாபரணங்களை யெல்லாமொழித்து வேறே புதியனவாக நல்லவினியவைகளை யணிந்தனன்.—எ-று.

நித்தியகர்மானுஷ்டானங்களை முறையேசெய்பவனல்லன் என்று விளக்குவான் போசனானந்தரம் நீறணிந்தனன் என்றார். ஒழுக்கமுடையவனானால் நீராடியவுடனே நீற்றை நீரிற்குழைதது் தரித்திருப்பான் இவனவ்வண்ணஞ் செய்தானென்று கேட்கப்படாமையால், நித்தியகர்மங்களை முறையே செய்பவனல்லனென்றும். (கஎ)

ஈசன் மாப்படை யேனையோர் பெரும்படை யாவு
மாசி லாயிர கோடிதேர் செலுத்தியே யவையுங்
கேச ரித்திறல் யானமுங் கேடில்பொற் றேரும்
பாச னத்திற லவுணர்கொண் டேகுவான் பணித்தான்.

(இ-ள்.) சிவபெருமான் தனக்களித்துள்ள சிறந்த ஆயுதங்களும் மற்றைத் தேவர்கள்பெயரால் விளங்கும் பெரிய ஆயுதங்களும் ஆகிய எல்லாத் தேவதாஸ்திரங்களையும் இக்குற்றமற்ற ஆயிரகோடி ரதங்களில்வைத்து அவைகளையும் அவைகளுடன் வெற்றிபொருந்திய சிங்கவாகனத்தினையும் கெடுதலற்ற இந்திரஞாலமென்னும் அழகிய இரதத்தினையும் பரிசனத்தன்மையினையுடைய அசுரர்களை உடன்கொண்டுவருமாறு கட்டளையிட்டனன்.—எ-று.

இவைகளை இவைகளைக்கொண்டு வாருங்களென்று ஊழியர்கட்குக் கட்டளையிட்டானென்க.

பாசுபதம், வீரபத்திரம், சருவசங்காராத்திரம் முதலியவை சிவாத்திர மென்றுணர்க. (கஅ)

ஆங்க வெல்லையிற் சூரபன் மாவெனு மவுணன்
பாங்கர் வந்திடு வலவர்தந் தொகையினைப் பாரா
வோங்கு மோர்தடந் தேரினைக் கொணர்திரென் றுரைப்பப்
பூங்க ழற்றுணை வணங்கியே நன்றெனப் போனர்.

(இ-ள்.) அப்பொழுது சூரபன்மனென்னுமசுரன் தன்னருகில் வராநின்ற தேரோட்டுபவர்களின் கூட்டங்களைப் பார்த்து அலங்காராதி சிறப்புக்களால் உயர்ந்த ஒரு இரதத்தினைக் கொண்டுவாருங்களென்று திட்டஞ்செய்தலும் அவர்கள் அவனது அழகிய காலினை வணங்கி அவ்வண்ணமே செய்கின்றேமென்று சென்றார்கள்.—எ-று.

வாட்டு கேசரி யெழுபதி னாயிரம் வயமாக்
கூட்ட மங்கதே ழெழுபதி னாயிரங் கூளி
யீட்ட மாகிய தெழுபதி னாயிர மீர்ப்பப்
பூட்டி நன்குறப் பணணின ராங்கொரு பொலன்றேர்.

(இ-ள்.) சென்றவர்கள் இரதசாலைக்குட்புகுந்து அங்கு நிறுத்தியுள்ள உயர்ந்த இரதங்களில் ஒரு பொன்னந்தேரினில் அதனை இழுத்துச்செல்லும்வண்ணம் இதர மிருகங்களை வருத்துகின்ற எழுபதினாயிரம் சிங்கங்களையும், வெற்றிபொருந்திய எழுபதினாயிரம் குதிரைக்கூட்டங்களையும், எழுபதினாயிரம இடபக்கூட்டங்களையும் பிணித்து பின்னுமத்தேரினை நன்றாக அலங்கரித்து அமைத்தார்கள்.—எ-று. (உ௦)

மண்ட லத்தினு மான்றபே ரிடத்தது மருங்கிற்
றெண்டி ரைக்கட லாமென வார்ப்பது செறிந்த
வண்ட மாயிர கோடியுந் தன்னிடத் தாற்றிக்
கொண்டு நின்றிடும் வலியது மடங்கலங் கொடித்தேர்.

(இ-ள்) சிங்கக் கொடியினையுடைய அவ்வழகிய இரதமானது எத்தகையது என்றால் மண்ணினிடத்தினை விடவும் அகலமான இடத்தினையுடையது, இருபுறங்களிலும் தெள்ளிய திரைகளையுடைய கடலைப்போல கட்டப்பட்ட மணிகளால் ஆரவாரஞ்செய்வது, நெருங்கிய ஆயிர கோடியண்டங்களையும் தன்னிடத்து வைத்துக்கொண்டு நிற்கத்தக்க வன்மையினையுடையது —எ-று. (உக)

முடியு மெல்லையி லெழுதரு மருத்தினு முந்திக்
கடிது செல்வது சென்றிடு விசையினாற் ககுபத்
தடநெ டுங்கிரி யலமரத் தபனருங் குளிர
வடவை யங்கிகள் விளிந்திடப் புரிவதம் மான்றேர்.

(இ-ள்.) சிங்கம் குதிரை இடபமென்னும் விலங்குகளாலிழுக்கப்படுகிற அவ்விரதமானது உலகமழியுங் காலத்திலுண்டாகின்ற வாயுவினும் விரைந்து வேகமாகச் செல்லாநிற்பது, தான் செல்லாநின்ற வேகத்தினால் திக்குகளிலுள்ள பெரிய அகன்ற மலைகளையும் சுழலச்செய்வது, சூரியர்களையும் குளிர்ச்சியடையச்செய்வது, வடவாக்கினிகளையும் கெடச்செய்வது.—எ-று. (உஉ)

எழு நேமியு மிடைப்படு தீபமும் யாவுஞ்
சூழு கின்றபே ரடுக்கலு மொன்றிய தொடர்பிற்

கேழில் பன்மணி யோவியப் பத்திகள் கெழுவு
மாழி தாங்கிய வண்டமொத் திலங்கிய தகன்றேர்.

(இ-ள்.) அகலமான அவ்விரதமானது ஏழுகடல்களும் அவைகளினிடையே உள்ள தீபங்களும் கிரகங்கள் முதலிய அனைத்துஞ் சுற்றுகின்ற பெரிய மலையாகிய மஹாமேருவும் பொருந்திய தன்மையைப்போல வமைக்கப்பெற்ற நிறம் பொருந்திய பல மணிகளாலாகிய சித்திர வரிசைகள் பொருந்திச் சக்கரவாளகிரியாற் சூழப்பெற்ற அண்டத்தையொத்து விளங்கியது.—எ-று.

ஒவ்வொரு கடல்களி னக்கரைகளிலும் ஒவ்வொரு தீபங்கள் இருத்த லுண்மையாதலால் "ஏழு நேமியும் இடைப்படு தீபமும்" என்றார் தீபம் என்பது உலகத்தை.

தொழுத குந்திற லவுணர்கோன் வேள்வியிற் றுஞ்சி
யெழுவ தாகிய வெல்லையிற் றோன்றிய தெதிர்ந்தார்
குழுவி ரிந்திடத் துரப்பது நான்முகக் குரிசி
லழியு நாளினு மழிந்திடா திருப்பதவ் வகன்றேர்.

(இ-ள்.) அந்த அகன்ற இரதம் வணங்கத்தக்க திறலாளனான அசுராதிபன் முன் செய்த யாகத்திலிறந்து எழுந்த சமயத்தில் உண்டாகியது. எதிர்ந்த பகைவர்களுடைய கூட்டம் விலகியோடும்வண்ணம் துரத்துவது; நான்முகப்பிரமன் அழியுந் தினத்திலும் அழியாமலிருப்பது.—எ-று. (உ௪)

கண்ண கன்படை யளப்பில பரித்தது காமர்
விண்ண வர்க்குள வலியெலாங் கொண்டது மேலை
யண்ண னல்கிய விந்திர ஞாலமு மனைய
தெண்ணின் மேற்படு மியாணர்பெற் றுடையதவ் விரதம்.

(இ-ள்) அந்த இரதம் மிகுதியான அளவற்ற ஆயுதங்களைச் சுமந்துகொண்டுள்ளது, அழகிய தேவருக்குள்ள வன்மையனைத்தையுங் கொண்டுள்ளது, முன்னாளில் இறைவனளித்த இந்திரஞாலத்தினையும் ஒத்தது, அளவிற்கு மேற்பட்ட அழகினையடைந்துள்ளது.—எ-று. (உ௫)

அனைய தாகிய தேரினை வலவர்கொண் டணைந்து
தினக ரன்றனை வெகுண்டவன் றாதைமுன் செலுத்தத்
துனைய மற்றதி லிவர்ந்தன னிவர்தலுந் தொழுது
புனைதி வாகையென் றவுணர்கள் பூமழை பொழிந்தார்.

(இ-ள்.) அவ்வண்ணமான இரதத்தினைச் சாரதிகள் கொண்டுபோந்து சூரியன் மீது சீற்றங்கொண்ட பானுகோபன் தந்தையான சூரபன்மனெதிரிற் நிறுத்துதலும் அவன் விரைவாக வதனிலேறியிருந்தனன் ஏறி இருத்தலும் அசுரர்கள் அவனை வணங்கி நீயே வெற்றிபெறக்கடவை என்று புட்பங்களை வாரி இறைத்து வாழ்த்தினர்கள்.—எ-று. (உ௬)

பொழிந்த காலையில் வலவர்க ளங்கதிற் புக்குக்
கழிந்த சீர்த்தியா னணையாற் றேரினைக் கடவத்
தழிந்த ழிமெனப் பல்லிய மியம்பின சகங்க
ளழிந்த நாளெழு கடலென வவுணர்க ளார்த்தார்.

(இ-ள்.) பூமழை பெய்த உடனே சாரதிகளவ்விரதத்திற் புகுந்து அகன்ற கீர்த்தியினையுடையவனது கட்டளையால் இரதத்தினைச் செலுத்தாநிற்றலும் உடனே தழிந்தழிம் எனப் பலவகைமேளங்கள் முழங்கின. அப்பொழுது பிரளய காலத்திலுண்டாகின்ற கடலோசையைப்போல அசுரர்கள் ஆரவாரஞ் செய்தார்கள்.—எ-று. (உ௭)

போலத், தமனியந் தகர்த்த சுண்ண மொருவர்மே லொருவர் வீசத், தமனியச் சுண்ண மெங்கும் பரந்தன தவழ்த லாலே, தமனிய வுலகந் தன்னை யசிப்பன தடந்தேர் வீதி" என்னுங் காஞ்சிப்புராணத்தாலுமுணர்க. (௫௬)

திண்டிறற் கரிகளிற் றேரில் வெண்கொடி
மண்டுறு பூழிதோய் வானிற் செல்வன
கொண்டலி னிருதுவிற் கொக்கின் மாலைக
டண்டுளி யுறைப்புழிப் படருந் தன்மைபோல்.

(இ-ள்.) கார்ப்பருவத்தில் கொக்குப் பறவைகளின் வரிசைகள் தண்ணிய நீர்த்துளி தம்மீது படுந்தோறும் மேலெழுந்து செல்லுந் தன்மையைப்போல காணப்படுகின்றன; திண்ணிய திறலினையுடைய யானைகண்மீதும் இரதங்கண்மீதும் நாட்டப்பட்டுள்ள வெள்ளைக்கொடிகள் நெருங்கிய புழுதியினூற்றோயப்பெற்ற ஆகாயத்திற் செல்வன.—எ-று.

மாரிக்காலத்துக் கொக்குப்பறவைகள் வரிசை வரிசையாகப் பறத்தல் வழக்கமாதலின் இவரும் "கொண்டலினிருதுவிற் கொக்கின்மாலைகள்" என்றார்.

இதனை "காரொனும்பெயர்க்கரியவன்மார்பினிற்கதிர்முத்-தாரமென்னவும் பொலிந்தனவளப்பருமளக்கர்-நீர்முகந்தமாமேகத்தினருகுற நிரைத்துக்-கூரும்வெண்ணிறத்திரையெனப்பறப்பனகுரண்டம்" என்றும், "மருவிநீங்கல்செல்லாநெடுமாலையவானிற்-பருவமேகத்தினருகுறக்குருகினம்பறப்ப-திருவிளையகனிவனெனத்தேமறைதெரிக்கும்-ஒருவன்மார்பினினுத்தரீயத்தையுமொத்த" என்றும் வருமிராமாயணக்கவிகளாலுணர்க.

படைவகை திசையெலாம் படரப் பாயிரு
ளடைவது சூரறிந் தண்டம் யாவினு
மிடைதரு கதிர்களை விளிக்க வந்தெனக்
குடைநிரை யெங்கணுங் குழுமு கின்றவே.

(இ-ள்.) சேனைக்கூட்டங்கள் திக்குகள்தோறும் பரவாநிற்ப அதனால், பரவிய இருள் வருதலைச் சூரபன்மன்கண்டு அவ்விருளினை அகற்றுவான் தனது அண்டங்களனைத்திலும் நெருங்கியுள்ள சூரியர்களையழைக்க வவர்கள் வந்தாற்போல குடைவரிசைகள் எவ்விடங்களிலும் நெருங்குகின்றன.—எ-று.

குடைகள், வயிரம் முத்து முதலிய மணிகளாலமைக்கப்பட்டனவாதலி னிருளினை விலக்குகின்றன வென்க. (௫௭)

வெம்பரி கரியுமிழ் விலாழி மாமத
மிம்பரி னகரெலாம் யாற்றி னேகலா
லும்பர்மற் றல்லதை யொருவன் றானைக
ளம்புவி சென்றிடற் கரிய தானதே.

(இ-ள்.) வேகத்தினையுடைய குதிரைகளும் யானைகளும் உமிழுகின்ற விலாழி நீரும் மிகுந்த மத நீரும் இவ்விடத்தில் ஊர்முழுமையும் யாற்றைப்போல செல்லுதலால் ஆகாயத்திலல்லாமல் ஒப்பற்ற சூரபன்மனுடைய சேனைகள் பூமியில் நடத்தற்கரியதாயின.—எ-று.

நீர்ப்பெருக்கால் நடத்தற்குக் கூடாமையாயினவென்பார் "அம்புவிசென்றிடற் கரியதானது" என்றார். (௫௮)

இவ்வகை தானைக ளீண்டிச் சென்றிடத்
தெவ்வலி யவுணர்கோன் செம்பொற் றேரின்மேன்

மைவரை மேருவின் வருவ தாமெனக்
கவ்வையி னமர்புரி களரி யேகினன்.

(இ-ள்.) இவ்வண்ணம் சேனைகள் நெருங்கிச் செல்லாநிற்ப, பகைவர்களை வெல்லும் வன்மையினையுடைய அசுராதிபன் செவ்விய பொன்மயமான தேரினில் பொன்மயமான மேரு மலையின்மீது நீல மலை யேறிவந்தாற்போல மேள முதலிய வற்றின் ஆரவாரத்துடன் போர் செய்கின்ற களத்தை அடைந்தனன்.—எ-று.

பெருந்தோற்றத்தினையும் திட்பத்தினையுமுடைய சூரபன்மனுடைய உடலின் பெருக்கத்தினையும் நிறத்தினையும் விளக்குவான் "மைவரை மேருவின் வருவதாமெனக், கவ்வையி னமர்புரி களரி யேகினன்" என்றார். மிகவும் பெரியதுவும் முழுமையும் பொன்னினாலேயே அமைக்கப்பெற்றதுவும் ஆகிய இரதமென்பார். அவ்விரதத்திற்குப் பொன்மலையான மேருவினை உவமையாக்கினார். (௩௧)

பூசலி னெல்லையிற் புரவ லன்செலத்
தூசிய தாகியே தொடர்ந்த தானைக
ளீசன தருண்மக னினிது வைகிய
பாசறை சூழ்ந்தன படியும் வானுமாய்.

(இ-ள்.) சண்டைத்தலத்திற்கு அரசனான சூரபன்மன் போர்க்கோலங்கொண்டு செல்லாநிற்ப அவனுடைய முன்னணிப்படையாகச் சென்ற அசுரசேனைகள் சிவபெருமானுடைய அருட்குமாரரான சிவசண்முகப்பெருமானார் இனிமையாக எழுந்தருளி இருக்கின்ற பாசறையைப் பூமியிலும் ஆகாயத்திலுமாகச் சூழ்ந்துகொண்டன.—எ-று.

உரற்றிய கணமழை யும்பர் சூழ்ந்தென
விரற்றொடு சூழ்படை யீட்ட நோக்கியே
மரற்றுறு பலங்களில் வாரி கண்வர
வரற்றினர் வெருவின ரமரர் யாவரும்.

(இ-ள்.) முழங்காநின்ற கூட்டமான மேகங்கள் வானத்திற் சூழ்ந்தாற்போல சத்தத்துடனே சூழாநின்ற சேனைக் கூட்டத்தைப் பார்த்து மரற் செடியினெருங்கிய பழத்தைப்போல கண்களில் நீர் ததும்ப தேவர் அனைவரும் அரற்றுதலுடனே பயந்தவர்களாகவானார்கள்.—எ-று.

"மரற்றுறுபலங்கள்" என்பதனை மீன்றவ்வொடு பொருஉம் என்ற விதியைக் கொண்டு மரன்றுறுபலங்கள் என்று கொள்ளினுமாம். மரனில் வந்த இன் எழுத்துப் போலி. (௪௧)

அழுங்கினன் புரந்தர னகிலம் யாவையும்
விழுங்குறு மிருவரும் விம்மி னாருளம்
புழுங்கினர் வீரர்கள் பூத ரேங்கினார்
கொழுங்கன லிடைப்படு விலங்கின் கொள்கைபோல்.

(இ-ள்.) இந்திரன் வருந்தினான். உலகமனைத்தையும் முன்னொருகாலத்தில் விழுங்கிய பிரமவிட்டுணுக்களாகிய இருவர்களும் இதென்ன விபரீதமென்று விம்முதலடைந்தனர். நவவீரர்கள் மனம் புழுங்கினார்கள். பூதர்கள் கொழுவிய கனலின் நடுவே அகப்பட்டுக்கொண்ட விலங்கின் தன்மையைப்போல ஏங்கினார்கள்.—எ-று.

நாலுபக்கங்களிலும் நெருப்புப் பற்றிக்கொள்ள வதனடுவிலகப்பட்டுக்கொண்ட காட்டுமிருகத்திற்குத் தப்பியோட வழியின்றி அது தவிக்குமாறுபோல மேற்குறித்தவர்கள் தவித்தனரென்க. (௪௨)

ஆவதோர் காலையி லரியு நான்முகத்
தேவனு மேனைய திசையி னோர்களு
மூவிரு முகமுடை முதல்வன் றன்னிரு
பூவடி பணிந்திவை புகறன் மேயினர்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் திருமாலும் நான்முகனான பிரமனும் மற்றுமுள்ள திக்குப்பாலகர்களும் ஆறு திருமுகங்களையுடைய முதல்வனுடைய மலரடிகளை வணங்கி அவர் சன்னதியில் நின்று இவைகளைச் சொல்லத் தொடங்கினார்கள்.—எ-று.

புரந்தரன் அழுங்குதலையும் அகிலம் யாவையும் விழுங்கினோர் விம்முதலையும் வீரர்கள் புழுங்குதலையும் பூதர்கள் ஏக்கத்தினையும் உடையராகி நின்றபொழுது என்பான் "ஆவதோர்காலை" என்றார். (சங)

வேறு.

அந்தமி லாத வண்ட மாயிரத் தெட்டுத் தன்னில்
வந்திடு தானை யோடு மாபெருஞ் சூர பன்ம
னுந்திய தேரின் மேலா னுறுசமர் புரிவான் போந்தான்
முந்திய தூசி நந்தம் பாசறை மொய்த்த தென்றார்.

(இ-ள்.) அழிவற்றனவாகவுள்ள ஆயிரத்தெட்டண்டங்களில் நின்றும் வாராநின்ற சேனைகளுடனே மகா பெரிய சூரபன்மன் விடாநின்ற இரதத்தின் மீது ஏறினவனாய்ப் போர்புரிவான் வந்தனன். அவனுடைய முன்னணிப்படையானது நமது பாசறையைச் சூழ்ந்துகொண்டது என்று அரிபிரமேந்திராதியர், எமது தேவசேனாகாந்தருடைய திருமுன்னர் நின்றுரைத்தார்கள்.—எ-று.

ஊழியினன்றி இடையில் அழியாத இயல்பினை உடையனவாதலால் "அந்தமிலாதவண்ட" மென்றார். (சச)

என்னலு முறுவல் செய்தாங் கிலங்கெழிற் றவிசின் வைகும்
பன்னிரு கரத்து வள்ளல் பவனனைக் குறிப்பி னோக்க
முன்னம துணர்ந்து வல்லே முளவுகோல் கயிறு பற்றிப்
பொன்னவிர் மனவே கப்பேர்ப புரவிமான் றேர்மு னுய்த்தான்

(இ-ள்.) தேவர்களிவ்வாறு கூறியவுடனே நவரத்தினகசிதமாய் விளங்காநின்ற அழகிய சிங்காதனத்தெழுந்தருளியிருக்கும் பன்னிரண்டு திருத்தோள்களையுடைய குமரப்பெருமானார் வாயுதேவனைக்குறிப்பாக திருக்கண்சாத்தியருளினார். அருளுதலும் உடனே அக்கடாக்ஷத்தின் குறிப்பினையறிந்த வாயுதேவன் விரைவாக முளவுகோலினையும் கயிற்றினையும் எடுத்துக்கொண்டு பொன்போல விளங்காநின்ற மனோவேகமென்னும் பெயரினையுடையதும் குதிரைகளைப்பிணித்துள்ளதும் ஆகிய இரதத்தினைத் திருமுன்னர்க் கொண்டுவந்து நிறுத்தினன்.—எ-று. (சரு)

உய்த்திடு கின்ற காலத் தொய்யென வெழுந்து சாமர்
புத்தலர் நீபத் தாரான் புகர்மழுக் குலிசஞ் சூலஞ்
சத்திவாள் பலகை நேமி தண்டெழுச் சிலைகோல் கைவேல்
கைத்தலங் கொண்டா னென்னி னவன்றவங் கணிக்கற் பாற்றோ.

(இ-ள்.) கொண்டுவந்து நிறுத்தினவுடனே விரைவாக எழுந்து அழகிய புதிய அலர்ந்த கடம்ப மாலையினையுடைய குமரப்பெருமான் புள்ளிகளையுடைய வச்சிரம் சூலம், சத்தி, வாள், கேடகம், சக்கரம், தண்டம், எழு, வில், கோல், வேல் என்னும்

இவைகளைத்திருக்கரங்களிலெடுத்தருளினர். இவரிவ்வண்ணம் ஏந்துவாராஞல் இவரைக்காணநின்ற அவனுடைய தவத்தினை இவ்வளவினதென்று கணக்கிடக்கூடுமோ?-எ-று.

நமது குமரப்பெருமானைத் தரிசனஞ்செய்யத் தகுந்தவர்கள் புண்ணியசீலர்களே யாமென்பதை விளக்கவும், பாவிகட்கவன்தரிசனங் கிட்டாதென்பதைக் காட்டவும், துவாதசாயுதங்களுடனவனது தரிசனங்கிடைத்தல் மிகவுமருமையென்று விளக்கவும் அவன்றவங் கணிக்கற்பாற்றே வென்றூர். (சகு)

மாறிலா வருக்க ஞைப்பண் வைகிய பரம னேபோ
லாறுமா முகத்து வள்ள லலங்குளைப் புரவி மான்றே
ரேறினன் வீர வாகு விலக்கரோ டெண்ம ராகும்
பாறுலாங் குருதி வேலார் பாங்கராய்ப் பரசி வந்தார்.

(இ-ள்.) மாறுபாடற்ற சூரியனுடைய நடுவண் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானைப்போல ஆறுதிருமுகங்களையுடைய குமரப்பெருமான் அசையாநின்ற புறமயிரினையுடைய இரதத்தின்மீது ஏறியருளினர். உடனே வீரவாகுதேவரும் அவர் தம்பியரான எண்மர்களென்னும் பருந்துலவுமாறு குருதிபடிந்த வேற்படையினையுடையவர்களும் அருகிற்சூழ்ந்துவந்தார்கள்.

சூரியனுடைய நடுவணென்றது சூரியமண்டலத்தினடுவை என்றறிக. (சஎ)

இராயிர வெள்ள மாகு மெண்டொகைப் பூதர் யாரு
மராமரம் பிறங்க லீட்டம் வரம்பறு படைகள் பற்றி
விராவினர் சூழ்ந்து சென்றூர் விரிஞ்சனே முதலோர் யாரும்
பராவொடு புடையி னின்று பனிமலர் மாரிதூர்த்தார்.

(இ-ள்.) இரண்டாயிரம் வெள்ளமாக எண்ணப்படுகின்ற பூதரனைவரும் மராமரங்களையும், மலைக்கூட்டங்களையும், அளவற்ற மற்றைய ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு நெருங்கினவர்களாகச்சூழ்ந்துசென்றூர்கள். அப்பொழுதுபிரமன்முதலியவர்களெல்லாம் வணக்கத்துடன் அருகில் நின்று பனிமலர்மாரி பொழிந்தார்கள்.—எ-று.

மராமரமென்றது ஆச்சாமரத்தை. இதனை "சாலமராமரமாச்சா" என்னும் பிங்கலத்தாலுணர்க. (சஅ)

தூர்த்திடு கின்றகாலைச் சுருதியின் றெகைக்கு மெட்டாத்
தீர்த்தன்மான் றேர்மே லாகித் திண்புவி யண்டந் தன்னிற்
பேர்த்திடு முயிர்கண் மாற்றப் பின்னுறு முன்னேன் போல
வார்த்திடு தானை வெள்ளத் தவுணர்கண் மீது போனன்.

(இ-ள்.) மலர்மாரி பொழிந்த சமயத்தில் வேதக்குழாங்களுக்கு மெட்டாத அழிவற்ற குமரப்பெருமானுடைய இரதம் மேலேகிளம்பி திண்மையினையுடைய பிரிதிவியண்டத்துள் பேர்க்கப்படுகின்ற உயிர்களை அழித்தற்கு பின் செல்லும் முதல்வனைப்போல ஆரவாரியாநின்ற அசுர சேனை வெள்ளத்தின்மீது சென்றருளினர்.—எ-று.

ஊழிகாலத்திறைவன் உயிர்வருக்கங்களை அழிப்பான் சேறலுண்மை யாதலின் "உயிர்கண்மாற்றப் பின்னுறுமுன்னேன்போல" வென்றூர். (சகூ)

ஆங்கது காலை தன்னி லாறிரு தடந்தோ ளையன்
பாங்குறு பூதர் யாரும் பாரொடு திசையும் வானு
நீங்குத லின்றிச் சூழு நேரலன் படையை நோக்கி
யேங்கினர் தொல்லை வன்மை யிழந்தன ரினைய சொற்றூர்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் பன்னிரண்டு திருத்தோள்களையுடைய குமரப்பெருமானது அருகில் நிற்கும் பூதரனைவரும் பூமியந்தரதிசாதிகளில் நீக்கமில்லாமல் சூழ்ந்துநிற்கின்ற பகைவனுடைய சேனையைப் பார்த்து ஏக்கங்கொண்டு பழைய வன்மையை யிழந்து இவ்வண்ணங் கூறினார்கள்.—எ-று. (௩௦)

தீயன புரியுஞ் சூரன் செய்திடு தவத்தாற் பெற்ற
வாயிர விருநான் கண்டத் தவுணரும் போந்தா ரன்றே
யேயதோ ரண்ட மொன்றி விருந்தன ரிவர்மற் றன்றான்
மாயிருந் திசையும் விண்ணும் வையமுஞ் செறிந்து நின்றார்.

(இ-ள்.) கொடியனவாகிய காரியங்களைச் செய்கின்ற சூர்பன்மன் தான் செய்த தவத்தினாலடைந்த ஆயிரத்தெட்டண்டங்களிலும் உள்ள அசுரர்களும் வந்தார்களல்லவா இவர்கள் இங்குப் பொருந்திய இந்த ஒரு அண்டத்திலிருந்தவர்களல்லர். இவர்கள் மிகவும்பெரியதிசைகளிலும் ஆகாயத்திலும் பூமியிலும் நெருங்கிநின்றார்கள்.எ-று.

வரத்தினிற் பெரியர் மாய வன்மையிற் பெரியர் மொய்ம்பி
னுரத்தினிற் பெரியர் வெம்போ ரூக்கத்திற் பெரியரெண்ணில்
சிரத்தினிற் பெரியர் சீற்றச் செய்கையிற் பெரியர் தாங்கும்
கரத்தினிற் பெரியர் யாருங் காலனிற் பெரிய ரம்மா.

(இ-ள்.) இவர்கள் வரத்தினிற் பெரியவர்கள் மாய வன்மையிலும் பெரியவர்கள் தோள்களிலும் மார்புகளிலும் பெரியவர்கள் வெவ்விய போர் புரிகின்ற முயற்சியிலும் பெரியவர்கள் அளவற்றனவாகியதலைகளிலும் பெரியவர்கள் கோபத்தன்மையிலும் பெரியவர்கள் தாங்காநின்ற கரங்களிலும் பெரியவர்கள் இவ்வனைவரும் காலனிலும் கொடியவர்கள்.—எ-று. (௩௨)

மாகத்தின் வதிந்த வானோர் வன்மையும் வளனும் வவ்விச்
சோகத்தை விளைத்து வெம்போர் தொடங்கியே தொலைவு செய்தோர்
மோகத்தின் வரம்பாய் நின்றோர் முழுதுயிர்க் கடலுண் வேட்கை
மேகத்தின் வலிந்த தீயோர் விரிஞ்சனைற் றிடினும் வெல்வோர்.

(இ-ள்.) வானுலகத்தில் வாழ்ந்த தேவர்களுடைய வல்லவங்களையும் அவர்களுடைய சம்பத்துக்களையும் அபகரித்து அவர்கட்குச் சோகத்தை யுண்டாக்கி வெவ்விய போரினை ஆரம்பித்து அவர்களை அழித்தவர்கள் ஆசைக்கு எல்லையாக நின்றுள்ளவர்கள் சகல வுயிர்களுமாகிய கடலினை யுண்ணுகின்ற விருப்பத்தினையுடைய மேகத்தின் றன்மையாகக் கூறத்தக்க கொடிய தீயர்கள் பிரமனெதிர்த்தாலும் வெல்பவர்கள்.—எ-று

கூற்றெனு நாமத் தண்ணல் கொண்டிடு மரசுஞ் செங்கேழ்
நூற்றிதழ்க் கமல மேலா னுனித்தனன் விதிக்கு மாறு
மாற்றிடுஞ் செய்கை வல்லோர் மாநில முழுதுண் டாலு
மாற்றரும் பசிநோய் மிக்கோ ரண்டங்க ளலைக்குங் கையோர்.

(இ-ள்.) கூற்றென்று கூறப்படுகின்ற பெயரினையுடைய அரசன் கொண்டுள்ள அரசும் நூற்றிதழ்த் தாமரைமலரிலிருப்பவனான பிரமன் எண்ணிப் படைக்குந் தன்மையும் நீக்கத்தக்க செய்கையில் வல்லவர்கள். மகத்தான பூமி முழுமையும் உண்டாலும் நீக்குதற்கரிய பசி நோயின் மிகுத்தவர்கள் அண்டங்களை அலைக்கின்ற கைகளையுடையவர்கள்.—எ-று. (௩௪)

வெங்கனல் சொரியுங் கண்ணர் விரிகடற் புரைபேழ் வாயார்
புங்கமில் வயமேற் கொண்டோர் பவத்தினுக் குறையு ளானோர்

செங்கதிர் மதியந் தோயுஞ் சென்னியர் செயிர்தீ ராற்ற
லங்கத விறையும் போர வடிபெயர்த் துலவும் வெய்யோர்.

(இ-ள்.) வெவ்விய தீப்பொறி சிதறுகின்ற கண்களையுடையவர்கள் அகன்ற கடலினை யொத்த பிளந்த வாயினையுடையவர்கள் பங்கமற்ற வெற்றியை மேற்கொண்டுள்ளவர்கள் பாவத்தினுக்கிருப்பிடமாக உள்ளவர்கள் சூரிய சந்திர மண்டிலங்களை அளாவுகின்ற தலையினையுடையவர்கள் குற்றமற்ற பேராற்றலினையுடைய அரவராசனும் பெயரும் வண்ணம் காலெடுத்துவைத்துலவாநின்ற கொடியவர்கள்.—எ-று. (ருரு)

அங்கிமா முகத்தி னான்போ லடைந்தனர் பல்லோர் யாளித்
துங்கமா முகத்தி னான்போற் றோன்றினர் பல்லோர் சூழி
வெங்கைமா முகத்தி னான்போன் மேயினர் பல்லோர் மேலாஞ்
சிங்கமா முகத்தி னான்போற் றிகழ்ந்தனர் பல்லோ ரன்றே.

(இ-ள்.) இவர்களிலநேகர் அக்கினிமுகாசுரனைப்போன்றவர்களாக வந்திருக்கின்றனர். உயர்ந்த யாளிமுகனைப்போல அநேகர் காணப்படுகின்றனர். முகபடாமணிந்த துதிக்கையினையுடைய கயமுகாசுரனைப்போல அநேகர் வந்திருக்கின்றார்கள். மேலான சிங்கமாமுகனைப்போல பலர் விளங்குகின்றார்கள்.—எ-று. (ருசு)

மதுவொடு கைட பன்போல் வந்தனர் பல்லோர் யாருந்
துதியுறு புகழ்ச்சுந் தோப சுந்தரிற் செறிந்தோர் பல்லோ
ரதிர்கழற் சலந்த ரன்போ லார்த்தனர் பல்லோ ராற்ற
முதிர்சின மகிடன் போல மொய்த்தனர் பல்லோ ரம்மா.

(இ-ள்.) மதுவுடனே கைடபனைப்போல பலர் வந்தார்கள், யாருந்துதிக்கின்ற சுந்தோபசுந்தர்களைப்போல நெருங்கினவர்கள் அநேகர், அதிராநின்ற கழலினையுடைய சலந்தரனைப்போல ஆரவாரிக்கின்றவர்கள் பலர் மிகவும் முதிர்ந்த சீற்றத்தினையுடைய மகிடாசுரனைப்போல நெருங்கினவர்கள் பலர்.—எ-று. (ருஎ)

அரன்படை பரித்தோர் பல்லோ ரம்புயத் தவிசின் மேவும்
வரன்படை பரித்தோர் பல்லோர் மழுவொடு தண்டந் தாங்குங்
கரன்படை பரித்தோர் பல்லோர் கால்படை பரித்தோர் பல்லோர்
முரன்படை படுத்த கொண்டன் முதுபடை பரித்தோர் பல்லோர்.

(இ-ள்.) பலர் அரனுடைய ஆயுதத்தினைச் சுமந்துள்ளவர்கள், பலர் கமலாசனத்திலிருக்கின்ற சிறந்த பிரமனுடைய ஆயுதங்களைச் சுமந்தவர்கள். அநேகர் மழுவுடனே தண்டத்தைத் தரிக்கின்ற கையினையுடையகாலனது ஆயுதங்களைத்தரித்தவர்கள். பலர் வாயுவின் ஆயுதங்களைத் தரித்தவர்கள். அநேகர் முரனுடைய சேனைகளை அசஞ்செய்த முராரியின் முதிய ஆயுதங்களைத் தரித்தவர்கள்.—எ-று.

"மழுவொடு தண்டந்தாங்கும் கரன்படை" என்றது, காலனுடைய ஆயுதங்களை. காலன் தண்டத்துடன் மழுவினையும் ஆயுதமாக வுடையவனுதலாலென்றறிக. (ருஅ)

ஆனதொ ரவுண வெள்ள மநந்தகோ டியதா மென்றே
தானுரை செய்வ தல்லாற் சாற்றவோ ரளவு முண்டோ
வானமு நிலனு மேனை மாதிர வரைப்பு மெங்குஞ்
சேனைக ளாகிச் சூழின் யாமென்கொல் செய்வ தம்மா.

(இ-ள்.) அப்படிப்பட்ட அசுரவெள்ளம் அநந்தகோடியாமென்று கூறுவதையன்றி கூறுதற்கு வேறே ஓரளவும் இருக்கின்றதோ ஆகாயமும் பூமியும் இன்னமுள்ள

திசையினிடங்களாகிய எவ்விடங்களிலும் சேனைகளாகச் சூழ்ந்திருந்தால் நாமென்னை கொல் செய்வது.—எ-று. (நிக)

ஓரண்டத் தவுணர் போரா லுலைந்தயா மொருங்கே யெல்லாப்
பேரண்டத் தோருந் தாக்கிற் பிழைப்புறு பரிசு முண்டோ
காரண்ட வளக்கர் சாடிக் கனவரை யெறியுங் கால்க
ளோரண்டச் சூழல் புக்கா லவைபின்னு மிருக்க வற்றோ.

(இ-ள்.) ஒரு அண்டத்திலுள்ள அசுரர்கள் செய்யும் போரினால் உலைவடைந்த நாம் ஒன்றாக எல்லாப் பெரிய அண்டத்திலுள்ளவர்களும் போர் புரிந்தால் பிழைக்கத் தக்க தன்மையுமுண்டோ? அழகிய அண்டங்களிலுள்ள கடல்களை யழித்துப் பெரிய மலைகளைப் பேர்த்தெறிகின்ற காற்றுக்கள் ஆமணக்குச் செடிகளிருக்கும் இடத்தை அடைந்தால் அவைகள் பின்னரும் பிழைத்திருக்குந் தன்மையினதோ?—எ-று. (சுo)

ஒருவரே யெம்மை யெல்லா முரப்பியே துரப்பர் பின்னை
யிருவரே சென்று தாக்கின் யாரிவ ணுய்ய வல்லார்
துருவரே யனைய துப்பிற் சூழுறும் மவுணர் யாரும்
பொருவரே யென்னி னேர்போய்ப் பூசலார் தொடங்கற் பாலார்.

(இ-ள்.) எம்மனைவரையும் ஒருவரே அதட்டியோட்டுவோர்கள். அது நிற்க, இருவர் சென்று மோதினால் இவ்விடத்தில் யாவர் உய்யத்தக்கவர்கள். திரிமூர்த்திகளைப்போன்ற பேராற்றலினையுடையவர்களாகச்சூழாநின்ற இவ்வசுரர்கள்எல்லாம் போர் புரிவார்களே ஆனால் அவர்களெதிரே சென்று யாவர் போர்புரியத்தக்கவர்கள்.—எ-று.

துருவசத்தம் மும்மூர்த்திகட்கு முரித்தாதலால் துருவரென்றதற்கு திரிமூர்த்திகள் என்றாம். (சுக)

எல்லையி லாற்றல் கொண்ட வெம்முடைத் தலைவர் யாரு
மல்லன வீரர் தாமு மவுணரை யெதிர்க்க லாற்றார்
கல்லொடு மரத்தால் யாமோ வவர்திறல் கடக்க வல்லே
மொல்லைநம் முயிரு மின்றே யொழிந்தன போலு மன்றே.

(இ-ள்.) அளவற்ற பேராற்றலினையுடைய எம்முடைய தலைவரெல்லாரும் அவரன்றியுள்ள மற்றைய வீரர்களும் இவ்வசுரர்களை எதிர்த்தற்குப் போதாதவர்கள் கற்களாலும் மரங்களாலும் நாமோ அவர்கள் திறமையைக் கடக்கவல்லோம் விரைவாக இன்றே நமதுயிரும் ஒழிந்தன போலும்.—எ-று. (சுஉ)

நாற்படை யவுணர் தாக்கி னாமெலாம் விளிதும் வீரர்
காற்படு பூளை யேபோற் கதுமென விரிவர் வாகைப்
பாற்படு திறலோ னிற்கிற் பழிபடு மினைய ரோடும்
வேற்படை யொருவ னன்றி வேறியா ரெதிர்க்க வல்லார்.

(இ-ள்.) சதுரங்க சேனையினையுடைய அசுரர்கள் போர் புரிந்தால் நாமெல்லாம் இறப்போம். வீரர்களோ காலிற்பட்ட பூளைப் பூவைப்போல விரைவாக விலகியோடுவார்கள். இதுகாறும் வெற்றியடைந்துள்ள வீரவாகுதேவன் நின்றால் பழியுண்டாகும். இவர்களுடனே வேலாயுதனொருவனே அல்லாமல் மற்றியாவரெதிர்க்க வல்லுநர்.—எ-று. (சுரு)

நீடுறு திசையும் வானு நிலனும்வெள் ளிடைய தின்றிப்
பாடுற வளைந்து கொண்டார் பற்றலர் ரதனால் யாமு
மோடியு முய்ய லாகா வொல்லுமா றவரைத் தாக்கி
வீடுத லுறுதி யென்றே விளம்பிமேற் சேற லுற்றார்.

(இ-ள்.) பகைவர்கள் நீட்சி பொருந்திய திக்கும் ஆகாயமும் பூமியும் ஆகிய இவ்விடங்களில் வெற்றிடமில்லாமல் மிகுதியாக வளைந்துகொண்டார்கள். அதனால் நாம் ஒடியும் பிழைத்தற்காகாது; ஆதலினால் நம்மாற்கூடியவளவு இவர்களுடன் போர் புரிந்து சாதலேயுறுதியென்று கூறிக்கொண்டு அவ்வசுரசேனைகள்மீது எதிர்த்துச்சென்றார்கள்.—எ-று.

இங்குநின்றாலெவ்விதத்தும் அபாயமுண்டாகும் ஓடியகலுவதற்கோ வேறுவழி எவ்விடத்தினுமின்று; அங்ஙனமாக, சோம்பிகளைப்போல நின்று இறப்பதினும் போர் புரிந்து இறந்தால் சுவர்க்கங் கிடைத்தலுடன் வீரக்குறைவுமுண்டாகாதென்று துணிந்தனரென்பார் "ஒடியு முய்ய லாகா தொல்லுமா றவரைத் தாக்கி, வீடுதே லுறுதி யென்றே விளம்பிமேற் சேற லுற்றார்" என்றார். (௬௪)

மற்றது காலை தன்னின் மாபெரும் பூத சேனைக்
கொற்றவர் பலரு மேனை வீரர்தங் குழுவி னோரும்
வெற்றிகொண் மொய்ம்பன் றானு மிடைந்துசூழ் படையை நோக்கி
யிற்றன கொல்லோ நந்தம் வன்மையென் றெண்ண முற்றார்.

(இ-ள்.) பூதசேனைகள் இவ்வண்ணமுறைத்து மேற்சென்றபொழுது மகத்தான பெரியவச்சேனைத்தலைவர்கள் பலரும் மற்றுமுள்ள பூதவீரர்களின் கூட்டத்தினர்களும், வீரவாகுதேவனும் நெருங்கிச் சூழ்ந்துள்ள சூரபன்மனுடைய சேனையைப்பார்த்து நமது வன்மை யிழந்தனவோ? என்றெண்ணினார்கள்.—எ-று. (௬௫)

அண்டர்கண் முதல்வன் றானு மமரரு மகில மெங்குந்
தண்டுத லின்றிச் சூழுந் தானவ ரனிக மெல்லாங்
கண்டனர் துளங்கி யஞ்சிக் கவன்றன ரவருட் காரி
வண்டுளப வலங்கற் சென்னி வானவர்க் கினைய சொல்வான்.

(இ-ள்.) தேவராசனும் தேவர்களும் உலக முழுமையையுங் கெடுதலின்றிச் சூழ்ந்த அசுரசேனைகளனைத்தினையும் கண்டு நடுங்கி யஞ்சிக் கவற்சியுற்றார்கள். அவர்களுள் இந்திரனானவன் வளவிய துளவமலர்மாலையணிந்த தலையினையுடைய திருமாலைப்பார்த்து இவைகளை யுரைப்பானாயினான்.—எ-று. (௬௬)

ஆண்டகை முருகன் றன்மே லாயிர விருகா லண்டத்
தீண்டிய தானை யெல்லா மிறுத்தன விவற்றி னோடு
மூண்டம ரியற்றி வெல்ல வூழிநாண் முடியு மென்றான்
மாண்டிடு கின்ற தெங்ங னவுணர்கண் மன்னன் மன்னோ.

(இ-ள்.) ஆண்டன்மையிற் சிறந்த குமரக் கடவுளொடு போர்புரிதற்கு ஆயிரத்தெட்டண்டங்களிலுநெருங்கியிருந்த சேனைகளனைத்தும் வந்து நெருங்கின. இவைகளுடனே எதிர்த்து நின்று போர்புரிந்து வெற்றி பெறுதற்கு பிரளயகாலபரியந்தம் ஆகுமானால் அசுரர்கள் அரசன் இறப்பது எவ்வண்ணம்.—எ-று.

அசுரர்களை நம்மிறைவன் கொல்வதும் வெல்வதும் உண்மையாயினும் அவர்கள் மிகுந்த கூட்டமாக வந்திருத்தலால் நமதாயுட் காலத்திலேயே இது நிறைவேறாது. சேனைகளின் சண்டையே நமது ஆயுட்காலத்திற்கு மிகவுமதிகமான ஊழிகாலவளவு ஆகுமானால் நம்மை வருத்துகின்ற சூரனெப்படி இறப்பான். அவனிறவாவிட்டால் நமது துயரமெங்ஙனமகலும் என்றானென்னும் பொருள்தொனித்தல் காண்க. (௬௭)

அடுதிறல் வலிபெற் றுள்ள வவுணராம் பானுட் கங்குல்
விடிவது மமரர் தங்கள் வெஞ்சிறை விடு மாறு

நெடியதொல் வெறுக்கை தன்னை நீங்கிய நமது துன்ப
முடிவது மில்லை கொல்லோ மொழிந்தருண் முதல்வ வென்றான்.

(இ-ள்.) கொல்லுந்தன்மைக்கேற்ற வன்மைபெற்றுள்ள அசுரர்களாகிய பாதி நாளிரவு விடிவதும் தேவர்களடைந்துள்ள கொடிய சிறை நீங்குந்தன்மையும் நெடிய பழய சம்பத்தினை இழந்த நமது துன்பம் தொலைவதுமில்லையோ? முதல்வனே உரைத் தருள்வாயாக என்று கூறினான்.—எ-று.

இரக்கமற்ற கொடியரென்று விளக்க அசுரர்களை "அடுதிறல் வலிபெற்றுள்ள அவுணராம் பானுட்கங்குல்" என்றார். நள்ளிரவுமென்மையான குணமுடையவர்களை அச்சுறுத்து மியல்பினதாதலால் தங்களை யச்சுறுத்துகிற அசுரர்களை 'பானுட்கங்குல்' என்றான் என்க. (சுஅ)

இந்திர னினைய தன்மை யிசைத்தலு மிலங்கை காத்த
வைந்திரு சென்னி யானை யடுதிறல் கொண்டு நின்ற
செந்திரு மருமத் தண்ண றேவரை யளிக்குந் தொல்லோன்
புந்திகொள் கவலை நாடி யினையன புகலா நின்றான்.

(இ-ள்.) இந்திரனிவ்வண்ணமான தன்மைகளை யெடுத்துக் கூறுதலும் இலங்கையை யாண்ட இராவணனைக்கொல்லுமாற்றல் கொண்டுநின்ற சீவற்சத்தினையுடைய திருமார்பினனான திருமால் தேவர்களை அரசுமுறையிற் காக்கின்ற இந்திரனுடைய மனக்கிடக்கையை யுணர்ந்து அக்கவலையை ஒழிப்பான் அவனைப்பார்த்து இவைகளை யுரையாநின்றான்.—எ-று. (சுகூ)

காலமாய்க் கால மின்றிக் கருமமாய்க் கரும மின்றிக்
கோலமாய்க் கோல மின்றிக் குணங்களாய்க் குணங்க ளின்றி
ஞாலமாய் ஞால மின்றி யநாதியாய் நங்கட் கெல்லா
மூலமா யிருந்த வள்ளன் மூவிரு முகங்கொண் டுற்றான்.

(இ-ள்.) காலமாகவும், காலமன்றிக் கருமமாகவும், கருமமன்றி உருவமாகவும், உருவமன்றிக் குணங்களாகவும்; குணங்களன்றி உலகமாகவும், உலகமன்றி அநாதியாய் நமக்கெல்லாம் மூலகாரணனாக விருந்த கடவுளே ஆறுதிருமுகங்களுடன் எழுந்தருளி வந்திருக்கின்றான்.—எ-று.

காலமாதிய வனைத்திற்கும் மூலகாரணமாயுள்ள பதிப்பொருளென்றும் அப்பதியே இக்குமரப் பெருமானென்றும் விளக்கினதென்க. இப்பாடற்கு விசேஷமாகவுரை எழுதக்கூடுமாயினும், அடுத்த தக்ஷகாண்டத்தி லிதேவிஷயத்தை வெகு விரிவாக எழுதியிருத்தலால் அங்கெழுது முரையிலிவைகளை எல்லாம் விளக்குதும். (எ0)

குன்றுதொ றாடல் செய்யுங் குமரவேண் மேரு வென்னும்
பொன்றிகழ் வெற்பின் வந்து புவனங்கண் முழுது மங்கட்
சென்றுறை யுயிர்கண் முற்றுந் தேவருந் தன்பாற் காட்டி
யன்றொரு வடிவங் கொண்ட தயர்த்தியோ வறிந்த நீதான்.

(இ-ள்.) மலைகளின்மீதெல்லாஞ்சென்று விளையாடுகின்ற குமரக்கடவுள் மேருவென்று கூறப்படும் பொன்மயமாக விளங்குகின்ற மலையின்கண்வந்து உலகங்கண் முழுமையும் அவ்வுலகங்களிற் சென்று வாழ்கின்ற உயிர்களனைத்தினையும் தேவர்களையும் தனது திருமேனியிற்காட்டி அன்றொரு வடிவங்கொண்டு நின்றதனை ஐய நீ மறந்தனையோ அதனையறிந்துள்ள நீ!—எ-று.

பருவனாயுலகமான குறிஞ்சிக்குத் தெய்வமாதலாற் குமரவேளை 'குன்றுதோறாடல்செய்யுங் குமரவேள்' என்றார். இவன் விசுவரூபியாதலால் விசுவத்தின்கண் கிடக்குமனைத்தும் இவனையன்றி யின்மையாலிவனவைகளை எவ்வாறு வேண்டுமோனாலும் செய்வான். அதனைப் பண்டு நீ கண்ட விவனது விசுவரூபத்தை நன்றாக இன்று நினைவிற்குக் கொண்டுவராமையினாலறிகின்றாயில்லை. இவன் பேராற்றலினனென்றுணர்தி என்றான் என்க. (எக)

பொன்னுரு வமைந்த கஞ்சப் புங்கவ னாகி நல்கு
மென்னுரு வாகிக் காக்கு மீசன்போ லிறுதி செய்யு
மின்னுரு வென்ன யார்க்கும் வெளிப்படை போலு மன்னான்
றன்னுரு மறைக ளாலுஞ் சாற்றுதற் கரிய தன்றே.

(இ-ள்.) பொன்னுருவமாக விளங்குகின்ற தாமரை யாசனனான பிரமனாகி இவ்வுலகங்களைப்படைப்பான்; என்னுருவத்தையடைந்து உலகினைக்காப்பான்; ஈசனைப்போல அழிப்பான்; மின்னலினுருவத்தைப்போல எல்லாருக்கு மவனுருவம் வெளிப்படையோ அன்றே அவன்றனது நிசரூபத்தைக்குறித்து வேதங்களாலும் ஒன்றுமுரைத்தற்கியலாது.—எ-று.

இவனது திருவிளையாட்டின் இரகசியாதிகளை என்னைப்போல சிலரன்றிப் பலரறிந்திராரொன்றானென்க. பதிலக்ஷணத்தை யுள்ளபடி யுரைக்கின்ற வேதங்களு மிவனுருவத்தைச் சரியாக வுரைக்க வரியவையாகுமானால் இவனெவ்வளவு நுண்மையானவனென்றுணரக்கலாம் என்று கூட்டியுரைக்க. (எஉ)

பாயிருங் கடலிற் சூழ்ந்த பற்றலர் படையை யெல்லா
மேயெனு முன்னம் வீட்டுஞ் சிறுவனென் றெண்ண லைய
வாயிர கோடி கொண்ட வண்டத்தி னுயிர்கட் கெல்லா
நாய கனவன்கா ணஞ்செய் நல்வினைப் பயனால் வந்தான்.

(இ-ள்.) பரவிய பெரிய கடலைப்போல சூழ்ந்துள்ள பகைவர் சேனைகளையெல்லாம் ஏயென்றுரைக்கும் காலவளவைக்குள் அழிப்பான்; ஐயனே! நீ யவனைச் சிறுவனென்று கருதாதே; ஆயிரகோடியாகவுள்ள அண்டங்களிலுள்ள உயிர்களனைத்திற்கும் நாயகனவனே அவன் இங்குநாஞ்செய்த நல்வினையின் பயனால் வந்தான்.—எ-று.

என்போல் வாரைப்போன்று சிற்சிலருக்கு நாயகனல்லன் பொதுவாக எனக்குமுனக்கும் இங்கு நிற்குமிவ்வசுரர்கட்கும் நாயகன் இக்குமரக் கடவுளையன்றி வேறெவரும் இன்றென்றுணர்தி யென்பான். "ஆயிரகோடிகொண்ட வண்டத்தி னுயிர்கட்கெல்லாம்" நாயகன் என்றான். (எங)

சூரனே முதலோர் தம்மை யிமைப்பினிற் றொலைச்க வுன்னின்
மூரலா லடுவன் கொண்ட முனிவினா லடுவன் வாய்மைச்
சீரினா லடுவ னாட்டச் செய்கையா லடுவ னென்றா
னேரிலா முதல்வன் வன்மை யாவரே நிகழ்த்தற் பாலார்.

(இ-ள்.) சூரபன்மன் முதலானவர்களை இமைப்பொழுதிற்குள் அழிக்க நினைத்தால் புன்னகையினாலேயே கொல்லுவான்; அல்லது தான்கொண்ட கோபத்தினாலுங் கொல்லுவான்; சிறந்த வாய்ச்சொல்லினாலுங் கொல்லுவான்; பார்க்கும் பார்வையாலுங் கொல்லுவான் என்றால் இவ்வொப்பற்ற முதல்வனது வன்மையை யாவர் எடுத்துக்கூற வல்லுநர்.—எ-று.

பிறராலுரைத்தற்கியலாத பேராற்றலின னென்றுணர்க என்று குறிப்பித்தான்.

பாரிடர் சேனை யோடு படர்ந்தது மிலக்கத் தொன்பான்
வீரர்கள் புடையிற் போற்ற மேயதும் படைகள் பற்றிச்
சூரனை யடுவான் வந்த சூழ்ச்சியுந் தூக்கின் மாதோ
வாரண முதலா மேலோற் கனைத்துமோ ராட லேகாண்.

(இ-ள்.) பூதசேனையினுடனே வந்ததும், இலக்கத்தொன்பது வீரர்கள் அருகில் போற்றிவராநிற்ப எழுந்தருளியதும், ஆயுதங்களை யேந்தி சூரபன்மனைக்கொல்லுதற்கு வந்த சூட்சியும் தூக்கி நோக்குங்கால் வேதமுதல்வனாகிய அவற்கிவ்வனைத்து மொரு திருவிளையாட்டேயாம்.—எ-று.

மூரலினும் முனிவினும் வாய்மைச் சீரினும் நாட்டச்செயலினும் பகைவரை யடு மியல்பு படைத்தவண்ணல் பூதாதிகளுடனெழுந்தருளியது விளையாட்டேயன்றி வேறன்றென்றுணர்க என்றான் என்க. காண்-முன்னிலையசை. (எரு)

துய்யதோர் குமா னேபொற் றோன்றிய முதல்வன் சூழ்ந்த
வெய்யதா னவரை யெல்லாம் விரைந்துட னறுத்து நீக்கிக்
கையில்வே லதனாற் சூா னாற்றலுங் கடக்கும் யாது
மையுறல் காண்டி யென்றா னறிதுயி லமர்ந்த பெம்மான்.

(இ-ள்.) தூய்மையான ஒரு சிறுவனைப்போல தோன்றியருளிய முதல்வன் சூழ்ந்துள்ள கொடிய அசுரர்களையெல்லாம் விரைவாக அறுத்தகற்றி, திருக்கரத்திலுள்ள வேற்படையினால் சூரபன்மன்மனுடைய வன்மையையு நீக்குவான் நீ ஒன்றிற்கும் அஞ்சாதே என்றான் அறிதுயிலமர்ந்த திருநாராயணன்.—எ-று.

வருங்காலவியல்பனைத்தினையும் உணர்ந்தவர் திருமாலென்பார் 'அறிதுயிலமர்ந்த பெம்மா' னென்றார்.

அறிதுயிலமர்ந்த பெம்மான் என்பது தமிழ்மொழியில் நாராயணன் பெயர்களு ளொன்று. (எசு)

மாலிவை பலவுங் கூறி மகபதி யுளத்தைத் தேற்றி
போலமொ டவுண வெள்ள மும்பருஞ் செறிந்த செவ்வேள்
பாலுற நின்று போரின் பரிசினைப் பார்த்து மென்றே
வேலுடை முதல்வன் பாங்கா விண்ணவ ரோடும் போந்தான்.

(இ-ள்.) திருமாலிவை பலவற்றையுமுரைத்து இந்திரனுடைய மனத்தைத் தேற்றி சத்தத்துடன் அசுரசைனியம் ஆகாயத்திலு நெருங்கின; அதனால் நாமனைவரும் குமரக்கடவுளினருகில் நின்று போரின்தன்மையைப் பார்த்துமென்று வேற்படையினையுடைய குமரக்கடவுளினருகில் தேவர்களுடனே சென்றனன்.—எ-று.

பூமியினிற்றற்கிடமின்மையையும் உடன் விளக்குவான் உம்மை கொடுத்து உம் பருமென்றா னென்க. (எஎ)

வேறு.

அன்ன தன்மைகண் டறுமுகன் முறுவல்செய் தடுபோ
ருன்னி யேகலும் வானமும் வையமு மொன்றாத்
துன்னு தானவப் பெருங்கட லார்த்தமர் தொடங்க
முன்ன மேகிய பாரிடர் யாவரு முரிந்தார்.

(இ-ள்.) அவ்வாறான தன்மையைப் பார்த்து ஆறுமுகப்பெருமான் புன்னகை செய்தருளி, கொலைசெய்யாநின்ற போரினைக்கருதி எழுந்தருளுதலும் உடனே ஆகாயமும் பூமியும் ஒன்றாக நெருங்கிக்கிடக்கின்ற அசுரசேனைகள் ஆரவாரித்துக்கொண்டு

போர்செய்யவாரம்பித்தன. உடனே போர்புரியக்கருதி முன்னே சென்ற பூதரனைவரும் பின்னிட்டனர்.—எ-று.

தேவர்களெண்ணிய வெண்ண மாதிய வனைத்தினையும் உணர்ந்து அவர்களி னறியாமைக்காக நகைத்தானென்பார் "அன்ன தன்மைகண் டறுமுகன் முறுவல் செய்து" என்றார். (எஅ)

முரிந்த காலையிற் பூதரின் முதல்வர்கண் முரட்போர்
புரிந்து சாய்ந்தன ரிலக்கரோ டெண்மரும் பொருதே
யிரிந்து நீங்கின ரின்னதோர் தன்மைக ளெல்லாந்
தெரிந்து திண்டிறன் மொய்ம்பினோன் சிலைகொடு சேர்ந்தான்.

(இ-ள்) சேனைகள் பின்னிடைந்தவுடனே பூதராசர்கள் வலியபோரினை அசுரர் களுடனே செய்து பின்னிடைந்தனர்; இலக்கர்களுடனே எண்மர்களும் போர்புரிந்து விலகி யோடினார்கள். இத்தகைய காரியங்களனைத்தையும் உணர்ந்து திண்ணிய திற லினையுடைய வீரவாகுதேவன் விற்படைகொண்டு போர்புரியுமாறு சென்றனன்.-எ-று.

சேர்பு தன்சிலை வாங்கியே சரமழை சிதறி
நேர்பு குந்திடு மவுணர்க ணெடுந்தலை புயங்கண்
மார்பு வெங்கரங் கழலடி வரைகளாய் வீழ
வீர்பு நின்றம ரியற்றினன் சிறுவரை யிகலி.

(இ-ள்.) சென்று தனது வில்லினை வளைத்து சற்றுநேரம் பகைத்து நின்று அம்புவருஷம் பெய்து, எதிரேவராநின்ற அசுரர்களின் நெடிய தலைகள், புயங்கள், மார் புகள், வெவ்விய கைகள், கழலினையுடைய கால்கள் முதலிய இவைகள் மலைமலையாக விழுமாறு செய்து போர்புரிந்தனன்.—எ-று.

பூதராஜரினும் இலக்கத்தெண்மரினும் உயர்ந்தவனாதலாலும், வீரங் குன்றா விபுதனாதலாலும், அவன் வன்மையை விளக்க "சிறுவரையிகலி" என்றார். (அ௦)

மாக மேனிமி ராயிர கோடிமா கடலு
ளாக மொன்றுசென் றலைத்தென நண்ணல ரெதிர்போ
யாக வம்புரிந் தலைப்புறாத் தன்மைகண் டழுங்கி
யேக நாயகன் றனதுபால் வந்தன னிளவல்.

(இ-ள்.) வீரவாகுதேவன் வானத்தின்மீது பொங்கியெழாநின்ற ஆயிரகோடி மகாசமுத்திரங்களும் கலங்க அவைகளின் நடுவுகளில் ஒரு யானை சென்று கலக்கினாற் போல பகைவரெதிரே சென்று போர்புரிந்து அச்சேனைகள் கெடாத தன்மையைப் பார்த்துவருந்தி முழுமுதற்கடவுளான குமரக்கடவுளினருகிற்சென்றுசேர்ந்தனன்.எ-று.

நாகமென்பதை மலையென்று கூறுவாறுமுளர். அது பொருந்தாது மலைகடலைத் தானாகக் கலக்குமியல்பினையுடைய தன்றாதலால் என்க. சேனையின் மிகுதியை விளக்க ஆயிரகோடிமாகடல்களையும், வீரவாகு தேவனுடைய பெருந்தோற்றத்தினை விளக்க யானையையும் உவமையாக்கி யுரைத்தனர் என்க. (அக)

காலை யங்கதி லவுணர்தந் தானையோர் கணத்தின்
சால மோடின பூதரிற் றலைவருஞ் சாய்ந்தார்
கோல வெஞ்சிலை வீரரு முரிந்தனர் குழவிப்
பால னேயிவண் வருமெனச் சூழ்ந்தனர் பலரும்.

(இ-து.) வீரவாகுதேவன் குமரக்கடவுளி னருகாகிய பின்னர் தம்மொடு பொ ருவாரொருவரையுங்காணாத அசுரசேனைகள் இப்பொழுது பூதகணங்களோடின; பூதர்க

ளிற்றலேவர்களுஞ் சாய்ந்தார்கள்; அழகிய வெவ்விய விற்படையினரான வீரர்களும் பின்னிட்டார்கள் ஆதலால் இனி இளம்பாலனான குமரனே இங்கு வருவான் என்று நினைத்தார்கள்.—எ-று. (அ௨)

தண்டு நேமியுங் குலிசமுஞ் சூலமுந் தனுக்க
ளுண்டு மிழ்ந்திடு வாளியு முடம்பிடித் தொகையும்
பிண்டி பாலமுங் கணிச்சியும் பாசமும் பிரிவு
மண்டர் தந்திடு படைகளுஞ் சொரிந்துநின் றார்த்தார்.

(இ-ள்.) அசுரர்கள் தண்டாயுதங்களையும், சக்கராயுதங்களையும், வச்சிராயுதங்களையும், சூலாயுதங்களையும், விற்கள் உண்டுமிழாநின்ற அம்புகளையும், வேற்கூட்டங்களையும், பிண்டிபாலங்களையும், கண்டகோடரிகளையும், பாசங்களையும், இவையன்றி யுள்ள வாயுதங்களையும், தமக்குத் தேவர்களளித்த ஆயுதங்களையும் சொரிந்துநின்று ஆரவாரித்தனர்.—எ-று. (அ௩)

பாரி டங்களின் படையெலா நெக்கதும் பாங்கர்
வீர மொய்ம்பனு மிளைஞரும் வருந்திமீண் டதுவுங்
காரி னம்புரை யவுணர்தஞ் செய்கையுங் காணு
மூரல் செய்தன னெவ்வகைத் தேவர்க்கு முதல்வன்.

(இ-ள்.) எத்தகைய தேவர்கட்கு முதல்வரான குமரப்பெருமான் பூதசேனைகளின் ஆயுதங்களெல்லாம் அழிந்ததும், வீரவாகுதேவனும் இளையோர்களும் வருந்தித் திரும்பியதும், மேகம்போன்ற கரியவுடலினரான அசுரர்கள் செய்கைகளும் ஆகிய இவைகளனைத்தையும் பார்த்துப் புன்னகை செய்தருளினார்.—எ-று. (அ௪)

நாட்ட மூன்றுடைத் தாதைபோற் சிறிதிறை நகைத்து
நீட்ட மிக்கதோர் சிலையினை நெடுங்கரம் பற்றிக்
கோட்டி நாணொலி கொண்டிட வண்டருங் குலைந்தா
ரீட்ட மிக்கபல் லுயிர்களுந் துளக்கமெய் தினவே.

(இ-ள்.) மூன்று கண்களையுடைய தனது தந்தையைப்போல சிறிது நகை செய்து நீளமிகுந்த ஒரு வில்லினை நெடியகையிற்பிடித்து வளைத்து நாணொலிகாட்ட அவ்வோசையைக்கேட்ட தேவர்களும் மனம் குலைந்தார்கள் நெருங்கிய பலவுயிர்களும் நடுக்கமுற்றன,—எ-று.

அண்டர் வெற்றியின் பொருட்டே இறைவன் விண்ணொலி கொண்டானாகவும், அவ்வொலி அத்தேவர்களைக் குலையச்செய்தது வியப்பென்பார். உம்மை காட்டி அண்டரும் என்றார். (அ௫)

வேறு.

முக்கண னுதவிய திருமுருகன் முரணுறு வரிசிலை முதிரொலிபோய்த்
தொக்கன செவிதொறு நுழைதலுமே தொலைவறு மவுணர்க டொகைமுழுது
நெக்கன பகிர்வன விரதமெலா நிரைபட வருபரி புரள்வனவே
மைக்கரி தரைமிசை விழுவனவான் மதிதொடு நெடுவரை மறிவனபோல்.

(இ-ள்.) மூன்று கண்களையுடைய சிவபெருமான் அளித்த அழகிய முருகக் கடவுளின் வன்மைபொருந்திய வரியப்பட்ட வில்லின் முதிர்ந்த ஓசைசென்று பொருந்திய காதுகள்தோறும் நுழைந்ததும் தொலைவற்ற அசுரர்களின் தொகைமுழுமையும் உடைந்தன, தேர்களெல்லாம் பிளந்தன, வரிசையாக வராநின்ற குதிரைகள் புரண்டன, வெள்ளிய சந்திரமண்டலத்தை யளாவிய நீண்ட மலைகள் நிலைபெயர்ந்து விழுமாபோன்று கரிய யானைகள் பூமியின்மீது விழுந்தன.—எ-று. (அ௬)

மாசறு மறைகளின் மறையதனை மலைமுனி யுணர்வகை யருள்புரியுந்
தேசிக முதலவன் வரிசிலையிற் செறிமுகி லுறைவகை சிதறுவபோ
லாசுக மளவில கட்வினனு லடல்செழு மவுணர்கள் புடைவளையுங்
காசினி யகலமும் விரிகடலுங் ககனமு மிடைவன கணையெனவே.

(இ-ள்.) வன்மை பொருந்திய அசுரர்கள் சூழ்ந்துள்ள பூமியின் விரிந்த இடமும். அகலமான சமுத்திரமும் ஆகாயமுமாகிய இடங்களிலெல்லாம் நெருங்குவன அம்புகள் என்று கூறுமாறு குற்றமற்ற வேதங்களினிரகசியங்களைப் பொதிகைமுனிவரான அகஸ்தியர் உணரும்வண்ணம் திருவருள்புரியும் ஆசிரிய சிரேட்டரான குமரக்கடவுள் வரியப்பட்ட வில்லில் நெருங்கிய மேகங்கள் மழைத்துளிகளைச் சிதறுமாறுபோல அளவற்ற அம்புகளை வைத்து விட்டருளினர்.—எ-று. (அஎ)

கொடிகளை யடுவன வளவிலவே குடைகளை யடுவன வளவிலவே
படைகளை யடுவன வளவிலவே பரிகளை யடுவன வளவிலவே
கடகரி யடுவன வளவிலவே கனையொலி யிரதமொ டவுணர்கடம்
முடிகளை யடுவன வளவிலவே முழுதுல குடையவன் விடுசரமே.

(இ-ள.) எல்லா வுலகங்களையும் உடைய எமது இறைவன் விடுகின்ற அம்புகளில் அளவற்றனவாகிய அம்புகள் கொடிகளையழிக்கின்றன, குடைகளை யளவற்றன அழிக்கின்றன, படைகளை அளவற்றன அழிக்கின்றன, குதிரைகளை யழிப்பன அளவற்றன, மதம்பொருந்திய யானைகளைக் கொல்வன அளவற்றன, மேகத்தொனி போன்ற தொனியினையுடைய இரதத்துடன் அசுரர்களுடைய தலைகளை அனேகங்கள் அறுக்கின்றன.—எ-று. (அஅ)

பரவிய தருவின மெனவவுணப் படைநிரை விழுவன தொடுகடலிற்
றிரையென விழுவன புரவியினந் திருநெடு வரைகளின் விழுவனதேர்
கருமைகொண் மணிமுகி லினமெனவே கடகரி விழுவன கனவரைசூ
ழிரவியு மதியமும் விழுவனபோ லெழுவன கவிகையும் விழுவனவே.

(இ-ள.) பரப்பான மரவினங்களைப்போல அசுரர்சேனை வரிசைகள் இறந்து விழுகின்றன; தோண்டப்பட்ட கடலிலுண்டாசாநின்ற திரைகளைப்போல குதிரைஇனங்கள் இறந்துவிழுகின்றன; அழகியநெடியமலைகள் விழுந்தாற்போல இரதங்கள் விழுகின்றன; கரியவழகிய மேகங்களைப்போல மதயானைகள் விழுகின்றன; பொன்மலையைச் சூழ்ந்து செல்கின்ற சூரியசந்திரர்கள் விழுந்தாற்போல மேலெடுத்த குடைகளும் விழுகின்றன.—எ-று. (அகூ)

செல்லுறு தாள்களு மடுபடைகள் சிந்திய செங்கைக ளுந்திறலே
சொல்லிய வாய்களும் விம்மலுறுந் தோள்களு நோக்குறு துணைவிழியுங்
கல்லென வார்த்திடு கந்தரமுங் கவசமும் வீரக டுவசமுட
னெல்லையி லாதமர் தனிமுதல்வ னெய்திடும் வாளிகள் கொய்திடுமே.

(இ-ள்.) நடத்தற்குரிய கால்களும், கொலைசெய்கின்ற ஆயுதங்களைச் சிந்தின செவ்விய கைகளும், வீரப்பிரதாபங்களை யுரைக்கின்ற வாய்களும், தடித்தலினையுடைய தோள்களும், பார்க்கும்படியான துணைவிழிகளும், கலீரென்றொலிக்கின்ற கழுத்துகளும், கவசங்களும் கொடிகளும் ஆகிய இவைகளை அளவற்றவனுக விளங்குகின்ற ஏகமுதல்வன் எய்கின்ற வாளிகள் கொய்யாநிற்கும்.—எ-று. (கூ0)

வேறு.

வட்டணை கொண்டிடு மால்வரையு
மெட்டெனு மோங்கலும் யானைகளும்

பட்டுரு விக்கணை பாறினவா
லொட்டலரெங்ஙன முய்குவதே.

(இ-ள்.) வட்டமாகவுள்ள பெரிய மலையாகிய மகாமேருவும் அதுவன்றியுள்ள எட்டென்னும் மலைகளும் அட்டகசங்களும் ஆகிய இவைகளின்மீது பட்டுருவி குமரக்கடவுள் விட்டவம்புகள் வெளியே சென்றன; இங்ஙனமாகுமானால் பகைவரெவ்வண்ணம் இவ்வம்புகளுக்குத் தப்பிப் பிழைப்பது?—எ-று. (௯௧)

பொன்னுல கெல்லைபு குந்துலவு
மன்னமு யர்த்திடு மண்ணல்பதந்
துன்னுறு மச்சுதர் தொல்லுலகின்
மின்னென வேசெலும் வேள்கணையே.

(இ-ள்.) குமரவேள் விட்ட அம்புகள் பொன்னுலகினெல்லைகளிற் புகுந்து உலவும் அன்னக்கொடியினனான பிரமதேவனுடைய பதத்திலடையும் அச்சுதர்களின் பழய உலகங்களில் மின்னலைப்போல விரைந்து செல்லாநிற்கும்.—எ-று.

பொன்னுலகென்றது சுவர்க்கத்தை. அன்னமுயர்த்திடு மண்ணல் பதமென்றது சத்தியலோகத்தை. அச்சுதர் தொல்லுலகென்றது வைகுந்தாதிகளை. அண்டங்கள்தோறும் வேறு வேறு நாராயணர்களிருத்தலால் அச்சுதர் என்றார். (௯௨)

மேதினி கீண்டுவி ரைந்துபுகும்
பாதல மூடுப ரந்துசெலு
மூதகு மண்டமு கட்டுருவு
மாதிர மேகுறும் வள்ளல்சரம்.

(இ-ள்.) தம்மையடைந்த அன்பர்கள் விரும்பின வனைத்தையும் வரையாதளிக்கும் முதல்வள்ளலாகிய குமரக்கடவுள் தமது திருக்கரங்களா லுந்திவிடுமம்புகள் பூமியைப் பிளந்து விரைந்து செல்லும் பாதலத்தினில் பரந்து செல்லும் மிகவுமுயர்ந்த அண்டமுகட்டிலுருவும், திக்குக்களினிடங்களிற் செல்லும்.—எ-று. (௯௩)

மூவிரு செய்யமு கத்தொருவ
னேவிய செஞ்சர மெங்குமுறு
மேவலர் தங்களை வீட்டிடும்வே
றேவர்கள் கண்ணுமி றுத்திலவே.

(இ-ள்.) செவ்விய ஆறு திருமுகங்களையுடைய ஒப்பற்ற குமரக்கடவுள் விட்டவிடைதலந் தோய்த்தல் கழுகிறகு பூட்டன் முதலிய காரியங்களாற் செவ்விய அம்புகள் பூமி யந்தர சுவர்க்காதிகளாகிய எவ்விடங்களிலுஞ் சென்று ஆங்காங்கு நிற்குந் தமது பகைவர்களை மாத்திரம் அழியாநிற்கும், மற்றியாவரிடத்தும் சென்றில.—எ-று.

ஆனன் மாறுள வண்ணல்சரந்
தானவர் சென்னிக டள்ளுதலும்
வானிடை போயின மாண்கதிர்கண்
மேனிம றைப்புறும் வெய்யவர்போல்.

(இ-ள்.) மாட்சிமை பொருந்திய ஆதித்தியர்களின் உடலங்களை மறைக்கிற கொடிய மாந்தேகாதியரைப்போல ஆறு திருமுகங்களையுடைய குமரவேள்விட்ட அம்புகள் தானவர்களின் தலைகளை அறுத்துத் தள்ளுதலும் ஆகாயத்திற் சென்றன.—எ-று.

சூரிய மண்டலத்திற்கெதிரில் மாந்தேகரென்னும் ஒரு ஜாதி யசுரர் நின்று சூரியனுடைய பிரகாசத்தை மறைத்துக்கொண்டு சூரியனுடனே சண்டை செய்வார்கள்.

அங்ஙனஞ் சண்டைசெய்ய வருபவர்களை, சூரியனுடைய தேர்த்தட்டிலிருக்கும் வால கில்லியரென்னும் முனிசிரேஷ்டர்கள் மந்திரித்துவிடும் சலமானது அம்புகளினுருவமா கச்சென்று அவர்கள் தலைகளை அறுக்கும் அறுத்தவுடனுண்டாகும் இரத்தத்துளிகளில் துளி ஒன்றிற்கு ஒவ்வொரசுரராகத்தோன்றி அநேகராகிப் பின்னும் சண்டை செய்வார் கள். இங்ஙனம் நாள்தோறும் நடத்தல் வழக்கமாதலிற் குமரக்கடவுளினம்புகள் அறுத்த தலைகள் மேற்செல்லுந் தன்மைக்கதனையுவமையாக்கி யுரைத்தனர் என்னினுமாம். (கரு)

வாளெழு வேல்பிற வாங்கினர்தந்
தோள்களை வாளிது ணித்தெறிய
நீளிடை சென்றுநி ரந்திடுதங்
கேளிரை யட்டன கீழ்மையர்போல்.

(இ-ள்.) வாள்களையும் எழுக்களையும் வேல்களையும் மற்றைய எறியாயுதங் களையும் உறையில் நின்றுங் கையிலெடுத்தவர்களுடைய தோள்களை அம்புகள் அறுத் தெறிய அவை நெடுந்தூரஞ் சென்று அவ்விடத்தில் நின்ற தமது உறவினரை இழிகுல மக்களைப்போல கொல்லா நின்றன.—எ-று.

"தேர்ந்துகண் ணோடாது தீவினையு மஞ்சலராய்ச்
சேர்ந்தாரை யெல்லாஞ் சிறிதுரைத்துத் - தீர்ந்த
விரகர்கட் கெல்லாம் வெறுப்பன செய்யு
நரகர்கட் கில்லையோ நஞ்சு." என்ற பழமொழிப்பாட்டின்படி தம்மையடு த்தா ரனைவரையும் மிழிவுபடுத்தும் தொழிலினையுடைய கீழ்மையோரைப்போல அசு ரர் கைகளும் தம்மினத்தினருக்குத் தீங்கு இழைத்தன ஆதலின் ஆசிரியரும் "தோள் களைவாளி துணித்தெறிய, நீளிடைசென்று நிரந்திடுதங், கேளிரையட்டன கீழ்மையர் போல்" என்றார். (கசு)

மாசகல் வானக மாதிரவாய்
காசினி வேலைக ளத்தினகம்
பாசறை சுற்றிய பாடியெலா
மாசற வட்டன னற்புதனே.

(இ-ள்.) ஆச்சரியகரமான செய்கையினையுடைய குமரப்பெருமான் மேகபடல மின்றி வெண்ணிறமாகக் காணப்படுகின்ற ஆகாயத்திலும் திக்குக்களிலும் பூமியிலும் கடல்களிலுங் களத்தினகத்திலும் பாசறைகளிலும் அவைகளைச் சுற்றிய பாடிகளிலும் திரிந்து குற்றமற அசுரர்களைக் கொன்றருளினார்.—எ-று.

மேகபடலங்களால் மறைக்கப்படாதுநின்ற ஆகாயமாதலால் மாசகல் வானெ ன்றார். அசுரர்கள் ஆகாயம், திக்கு, பூமி, கடல், போர்க்களம், படைவீடுள் முதலிய இடங்களில் நெருங்கி நின்றமையால் தேவராதிய நல்லோர்கட்கு இடஞ்சல் அதிகமா யின அதனால் அவர்களினிறைவைக் குறித்து ஆசு என்றும் அங்ஙனம் பலவிடங்களிலு முண்டாகிய ஆசினை ஒரேகாலத்தி லகற்றுதல் அவ்வசுரரைக்கொல்லும் பேராற்றலி ரான இக்குமார தெய்வத்தினிடத்தன்றி பிறரிலிடத் தின்றென்றும், இவரதிச்செயலாச் சரியகரமானதென்றும் விளக்குவான். "எலா மாசற வட்டன னற்புதனே" என்று இறைவனை அற்புதனென்று விளக்கினரென்க. ஆசு-குற்றம், மாசகல் வானக மென்பத ற்கு-களங்கமில்லாத பொன்னுலகு என்று முரைக்கலாம். (கஎ)

அட்டிடு கின்றுழி யம்புயன்மா
லொட்டுறு வாசவ னுண்மகிழாக்
கெட்டனர் தானவர் கேடிறுயர்
விட்டன மென்று விளம்பினரே.

(இ-ள்.) இவ்வண்ணஞ் சங்கரிக்கின்ற சமயத்தில் பிரமனும் திருமாலும் படையணியினருகில் நிற்கின்ற இந்திரனும் ஆதிய இவர்கள் உள்ளே மகிழ்ச்சிகொண்டு இனி அசுரர்கள் கெட்டார்கள். நாம் இது காறுங் கெடாதிருந்த துன்பம் விட்டவர்களானேமென்று கூறினர்கள்.—எ-று.

ஒட்டென்னும் பல பொருளொருசொல், படையணியென்னும் பொருளினையுமுடையதாதலால் ஒட்டுறுவாசவன் என்பதற்குப் படையணியினருகில் நிற்கின்ற இந்திரனென்றும். ஒட்டு என்பதைப் பெருமிதமாக்கிப் பெருமிதமுடைய இந்திரனேன்பாருமுளர். அது கிராமியம். ஆதலிற் சிறக்காதென்க. இருமுறை வந்த அசுரர்களையுமிறைவன் ஒருகண நேரத்திலழித்தொழித்தமையால் இனி எத்தனை முறைவரினும் அழித்தே ஒழிப்பன். ஆதலால் துன்பத்தினை யநுபவிக்கமாட்டோமென்னுந் துணிவுடையராகி அரிபிரயாதியர் நின்றாரென்பார். "அம்புயன்மாலொட்டுறு வாசவனுண் மகிழாக் கெட்டனர் தானவர் கேடில் துயர்விட்டனமென்று விளம்பினரே" என்றார். ஏகாரம் ஈற்றசை. (கூஅ)

அடைந்தனர் விம்மித மாங்கவுணர்
மிடைந்தது நோக்கினர் வேற்படையோன்
றடிந்தது காண்கிலர் தாரணிமேற்
கிடந்தது கண்டனர் கேசரரே.

(இ-ள்.) இவ்வாறு நடந்த போரினைக் கண்டு வித்தியாதரர்கள் ஆச்சரியமடைந்தார்கள். அப்போர்க் களத்தில் அசுரர்கள் வந்து நெருங்கி யதனைக் கண்டார்களில்லை: அசுரர்களிறந்து தரைமேற்கிடந்ததனைக் கண்டார்கள்.—எ-று.

வித்தியாதரராவார் தேவர் பகுதியருள் கல்வியறிவின் மிகுந்தவர்களும் போர்வீரர்களுமாகவுள்ளவர்கள். பிறரினுமிவர் போர்த்திறவாராய்ச்சியுடையராதலின் ஆசிரியரும் வித்தியாதரர்களைச் சுட்டி கேசரர் "அடைந்தனர் விம்மிதம்" என்றனர். பலவிடங்களினும் நடக்கும் போர்த்திறங்களை ஆகாயத்தில் நின்று கண்டு கண்டுள்ள இக்கேசரர் இத்தகைய போரினை என்றுங் காணுதவராதலினுச் சரியமடைந்தனரென்பார்." அடைந்தனர் விம்மிதமென்று விம்மிதத்தினை முன்னுமவர் பெயரினைப் பின்னுமாக வைத்தனரென்க. வித்தியாதரரே பெரும்பாலும் போர்த் திறங்காண் போரென்பதனை "நால்வகை நிலையினுற் பயிலு நாமவில், வேல்வகை பலகை வாள்கற்கும் விஞ்சையர், கோலவான் விஞ்சையர் குழாங்க ளுக்குபு, சால்பினை வியத் தருதலைமைப் பாலரே" என்னும் காஞ்சிப்புராணத்தாலுணர்க. (கூகூ)

அலமரு பாரிட ரவ்வவர்தந்
தலைவர்க ளேனையர் தானவர்தம்
மலிபடை சாய்த்துவ யப்புனைவிற்
புலவனை யார்ப்பொடு போற்றினரே.

(இ-ள்.) இனி என்செய்வோமென்று தத்தளித்துக்கொண்டிருந்த பூதர்களும் அந்தந்தப் பூதர்களின் தலைவர்களும் மற்றுள்ளவர்களும் அசுரர்களுடைய மிகுந்த சேனைகளைக் கொன்று வெற்றியடைந்த வில் வீரனை குமரக்கடவுளை ஆரவாரத்தொடு துதித்தார்கள்.—எ-று.

இனி நமக்குத் துன்பமில்லையென்று மகிழ்ந்தனர் பூதாதியரென்பார். "தானவர் தம் மலி படைசாய்த்து வயம்புனைவிற் புலவனை யார்ப்பொடு போற்றினரே என்றார். (௪00)

வள்ளல்ச ரம்பட வான்முகடு
கொள்ளுறு தானைகு ழாந்தொலைய

வெள்ளிடை யாயின விண்ணவர்தம்
முள்ளக மாற்றவு வப்புறவே.

(இ-ள்.) தேவர்கள் மன மிகவு மகிழ்வடையும் வண்ணம் இறைவன் விட்ட அம்புகள் தைத்து ஆகாயமுகடு பரியந்தம் நெருங்கியிருந்த சேனைக்கூட்டந் தொலைதலும் அசுர சைநியங்கள் நெருங்குகின்ற அவ்விடமனைத்தும் உடனே வெள்ளிடமாக வாயின.—எ-று.

அசுரசேனைகள் மிகுதியாகப் பூமியந்தர திசாதிகளில் நெருங்கி நின்றமையால் அந்தரவாசிகள் நிற்றற்கு மிடமின்றித் தவித்தார்கள். அத்தவிப்பு ஆதிமுதல்வரான தேவசேனாபதியார் விட்ட அம்புகள் பட்டு அசுரரனைவரு மழிந்தமையால் இன்மையாயினது. அதனால் இனி நமக்குத் துன்பமில்லை என்று மிகவும் மகிழ்வடைந்தனர் தேவசாதியினர் என்பார், "வெள்ளிடையாயின விண்ணவர்தம் முள்ளகமாற்ற வுவப்புறவே" என்றார். (௧0௧)

அண்டக டாகம தப்புறமாய்க்
கொண்டிடு தானவர் கொள்கையிது
கண்டிறை வன்கழல் காணநெறி
யுண்டினி யென்றன ருண்மகிழ்வார்.

(இ-ள்.) அண்டகடாகத்திற் கப்புறத்தில் நெருக்கங்கொண்டு நிற்கின்ற அசுரர்கள் இவ்வண்ணம் எவ்விடங்களும் வெளியாயினமையைக்கண்டு மனமகிழ்ச்சியுடையராய் இனி நாம் நம்மிறைவன் கழல்களைக் காணுதற்கு வழியுண்டு என்று கூறினார்கள்.

வெற்றிடமாக ஆகாயவெளி முதலிய இடங்களாயின கண்டு மகிழ்வுற்ற தேவர்களைப்போல அசுரர்களும் மகிழ்வடைந்தார்கள். காரணம், தமதரசனைக் காணுதற்கு வழியேற்பட்டமை. (௧0௨)

காற்றென வண்டக டாகநெறி
தோற்றிய வாயிற்று டார்ந்துபுகா
மேற்றிகழ் தேர்கரி வெம்பரியி
னேற்றமொ டொல்லென வேகினரால்.

(இ-ள்.) அசுரசேனாவீரர்கள் காற்றினைப்போல அண்டகடாக மார்க்கத்தில் உள்ள வழியின் வழியாகப் புகுந்து மேலே விளங்காநின்ற இரதங்கள் யானைகள் குதிரைகளின் மிகுந்த கூட்டங்களென்னு மிவைகளுடன் குமரப்பெருமானும் ஆயிரத்தெட்டண்டங்களுக் கரசனான சூரபன்மனும் எதிர்த்துநின்று போர்புரிகின்ற போர்க்களத்திற்கு விரைவாகச் சென்றார்கள்.—எ-று. (௧0௩)

அந்நெறி யேகியிவ் வண்டமெலாந்
துன்னினர் வான்புவி சூழ்ந்துவெளி
யென்னது மில்லென வீண்டினரான்
முன்னுற வந்துமு டிந்தவர்போல்.

(இ-ள்.) அவ்வழியாகச்சென்று இவ்வண்டமெலா நெருங்கினார்கள்; அன்றியும் ஆகாயத்திலும் பூமியிலும் சூழ்ந்து முன்னே வந்து இறந்தவர்களைப்போல இடைவெளி எவ்வளவும் இல்லையென்னுமாறு வந்து நெருங்கிச் சூழ்ந்தார்கள்.—எ-று.

அந்நெறியென்றது அண்டகடாகமார்க்கத்தினை. (௧0௪)

சூர னெனப்படு தொல்லிறைவன்
பேரம ராற்றிடு பெற்றியினாற்
றேரிடை வந்துறு செய்கைதெரீஇ
யார்வமொ டேநெடி தார்த்தனரே.

(இ-ள்.) அசுரர் நூற்றெட்டுகெங்களாகத் தங்களை யாளுகின்ற சூரபன்மனென்றுரைக்கப்படுகின்ற பழய அரசன் குமரப்பெருமானுடன் எதிர்த்துநின்று பெரிய போர் புரியவேண்டியதற்காய் இரதத்தின்மீது வந்து நிற்கின்ற செய்கையையுணர்ந்து விருப்பத்துடனே மிகவும் ஆரவாரித்தனர்.—எ-று. (௧0௫)

ஆர்த்தனர் தம்முன னைடந்துளர்தாம்
பேர்த்திடு கின்ற பிணக்கிரியா
யீர்த்திடு சோரியி டைப்படுதல்
பார்த்தனர் சிந்தை பரிந்தனரே.

(இ-ள்.) தமதரசனான சூரபன்மனென்போன் குமரப்பெருமானோடு போர் புரியுமாறு வந்து நிற்றலைக் கண்டு ஆரவாரித்த அவ்வசுரர்கள் போர்களத்திற் புகுந்து தங்கட்கு முன்னே அணி வகுப்புடன் போர்புரிவான் வந்தவர்கள் சிறு காலவளா நின்று போர்புரியுமாற்றலு மில்லாதவர்களாய்ப் பெயர்க்கப்படுகின்ற பிணமலையாய் இழுக்கப்படுகின்ற இரத்தத்தினடுவிற் கிடத்தலைப்பார்த்து நமது கதியும் இப்படித்தான் ஆய்விடுமோ என்று கருதி மனமுடைந்தனர்.—எ-று. (௧0௬)

பரிந்தனர் நம்படை பட்டிடவே
புரிந்திடு வானொடு போர்புரியா
விரைந்து வயங்கொடு மீடுமெனுத்
தெரிந்தனர் சிந்தனை தேற்றினரே.

(இ-ள்.) இறந்தவர் பொருட்டிரங்கிய அவ்வசுரர்கள் நமது சேனைகளிறக்குமாறு போர்புரிபவனுடனே நாமெதிர்த்து நின்று சண்டைசெய்து விரைவாக மாற்றலனை முதுகிடச் செய்து வெற்றி பெற்று நமதிருப்பிடத்திற்குத் திரும்புவோமாக என்று தம்மனத்தினுளாலோசித்துத் தீர்மானித்தவர்களாக மனதைத் தேற்றிக்கொண்டனர்.—எ-று. (௧0எ)

தேற்றிடு கின்றுழி தேவரெலாம்
போற்றிட வீரர்பு டைக்கணுற
வாற்றல்கொள் பூதர்க ளார்த்திடவெ
தோற்றின னீறொடு தோற்றமிலான்.

(இ-ள்.) அசுரர்கள் இவ்விதமாக ஆலோசனை செய்து தீர்மானிக்குங்கால் தேவரெல்லாம் துதிக்க வீரவாகு தேவராதிய நவவீரர் அருகில் வராநிற்ப ஆற்றலினையுடைய பூதர்கள் ஆரவாரிக்க மரணமும் பிறவியுமற்ற நங்குமரகுருநாதன் அவ்வந்த ஆயிரத்தெட்டண்டங்களிலும் உள்ள அசுரர்களெதிரே எழுந்தருளினான்.—எ-று.(௧0அ)

சேயுரு வாகிய சீர்முதல்வன்
மேயது கண்டுமி கச்சிறியன்
பாய்பரி யானைப டைத்துமிலா
னேயிவ னோநம தெண்ணலனே.

(இ-ள்.) குழந்தையுருவமாக விளங்குகின்ற சிறப்பினையுடைய சகலலோக கர்த்தாவான குமரப்பெருமான் தங்களெதிரே எழுந்தருளியதைப்பார்த்து அவ்வசுரர்கள் இவன் மிகவுஞ் சிறியன் இவனோ தாவுங் குதிரைப்படைகளையும் யானைப்படைகளையும் உடையவனாகவும் இல்லை. ஏ இவனோ? நமது பகைவன்.—எ-று.

'கண்டு' என்பது மூன்றாவது பாடலிலுள்ள 'இயம்பினர்' என்பதைக் கொண்டு முடிந்தது. ஏ. என்றது இகழ்ச்சிக்குறிப்பு (௧0௯)

இதுமுதல் மூன்று பாட்டுங் குளகம்.

ஆண்டகை மைந்தனிவ் வண்டமெலா
மீண்டிய தானையி மைப்பொழுதின்
மாண்டிட வட்டனன் மற்றிதுதா
னீண்டிடு மற்புத நீர்மையதே.

(இ-ள்.) ஆண்டன்மையினையுடைய இச்சிறுவன் இவ்வண்டமுழுமையும் வேற்றண்டங்களினின்றும் வந்து நெருங்கிய சேனைகளை ஒரு கணநேரத்தில்மாளும் வண்ணமாகக் கொன்றனன் இது நமது மனதிற்குப் புதிதாகவந்து பொருந்துகின்ற ஆச்சரியமாக இருக்கின்றது.—எ-று. (கக0)

அன்னது நின்றிட வங்கவன்மேன்
மன்னவர் மன்னவன் வந்துபொரு
முன்னம ராற்றிமு டிக்குதும்யா
மென்னவி யம்பினர் யாவருமே.

(இ-ள்.) இதுநிற்க, நமது சேனைகளைக்கொன்ற குமரன்மேல் அரசர்க்கரசனான சூரபன்மன் வந்து போர்புரிதற்கு முன்னே நாமிவனொடு போர்புரிந்து இவனை முடிப்போம் என்று அசுர சேனாவீரர்கள் அனைவர்களும் உரைத்தார்கள்.—எ-று (ககக)

தற்பமொ டின்னன சாற்றியவண்
முற்படு தானவர் முக்கணுடைத்
தற்பர னல்கிய சண்முகனை
வற்புட னார்த்துவ ளைந்தனரால்.

(இ-ள்.) அகம்பாவத்துடனே இன்னவைகளையுரைத்துக்கொண்டவ்விடத்தில் முற்பட்டு வந்த சேனாவீரர்கள் சோமசூரிய அக்கினி யென்னும் மூன்று கண்களையுடைய சதா சிவப்பெருமானளித்த ஆறுமுகப் பெருமானை வன்மையுடனாரவாரித்துக் கொண்டு சூழ்ந்தார்கள்.—எ-று.

மாற்றான்வலியுணரா மடவோரென்பார் 'தற்பமொடு' என்றார். (ககஉ)

வளைந்திடு காலையில் வானவர்க
ளுளைந்தனர் பூதர்க ளுட்கிமனந்
தளர்ந்தனர் வீரர்ச லித்தனரால்
விளைந்தது பேரமர் மீட்டுமெனா.

(இ-ள்.) குமரப்பெருமானைப் புதிய சேனைகள் சூழ்ந்தபொழுது அதனைக் கண்டு பின்னும் சண்டைமூண்டுகொண்டது என்று தேவர்கள்வருந்தினார்கள், பூதர்கள் உட்குதலடைந்து மனமுடைந்தார்கள், வீரகேசரியாதி வீரர்கள் சலித்தார்கள்.—எ-று.

தேவர், பூதர், வீரர் என்னு மூவினத்தினருட்டேவர்க்குத் துன்பமதிகமாதலைக்குறிக்க உளைந்தனரென்றும், அவரிற்குறைந்த துன்பத்தினராதலிற் பூதரைச் சுட்டி உட்கி மனந்தளர்ந்தனர் என்றும், என்னையோ மீட்டும் மீட்டும்வருகின்றனரோ என்றுநினைத்தனராதலிற் வீரரைச்சுட்டி சலித்தனரென்றும் முறையே நயங்காட்டி யுரைத்தனரென்க.

முன்னரழிந்தொழிந்தாரா லுண்டான கவலை அகன் றின்னஞ் சிறிதுநாழிகையுமாகவில்லையே இதற்குட் பின்னரும் அசுரசேனைகள் வந்து நிறைந்தனவே. இவைகளின் நிறைவால் முன்னரினுமதிக கவலை நமக்குண்டாயிற்றே என்று வீரவாசாதிய அனைவரு மனநிலையிழந்தனர், உளைந்தனர், உட்கி மனந் தளர்ந்தனர் என்பார் 'சலித்தனரால்' என்றார். என்றுரைக்கலாம். (ககந)

வேறு.

ஐயன்ம ருத்தினை யத்துணை நோக்கிக்
கையணி நெற்றிக டைக்குழை யாகி

வெய்யவர் தானைகண் மேவுழி யெல்லாம்
வையம்வி டுக்குதி வல்லையி லென்றான்.

(இ-ள்.) இவ்வாறான சமயத்தில் குமரக்கடவுள் தமது சாரதியான வாயுதேவனைப் பார்த்து நீ கொடிய அசுரர்களின் சேனைகள் இருக்குமிடங்களிலெல்லாம் கை, அணி, நெற்றி என்னும் படைவகுப்புக்களுக்கருகாமையாக விரைந்திரதத்தினை ஓட்டக் கடவையென்று திருவாய் மலர்ந்தருளினர்.—எ-று. (கக௪)

அட்டுறு நீபவ லங்கல் புனைந்தோன்
கட்டுரை கொண்டு கரந்தொழு காலோ
னெட்டுறு நண்ணல ருற்றுழி காணு
விட்டன னம்ம விறற்பரி மான்றேர்.

(இ-ள்.) கட்டப்பட்ட கதம்ப மலர் மாலையணிந்த குமரப்பெருமான் உரைத்தருளிய கட்டுரையை எற்றுக்கொண்டு கை குவித்து வணங்கிய வாயுவாகிய சாரதி ஒருவரோடொருவர் சம்பந்தமாகப் பகைவர் நிற்கும் இடத்தைப் பார்த்து வெற்றிபொருந்திய குதிரைகளையுடைய இரதத்தினை அவர்கள் பக்கமாக விட்டான்.—எ-று. (ககரு)

மண்ணிடை சென்றிடு மாதிர நீந்தும்
விண்ணிடை சூழ்தரும் வேலையின் மீதாங்
கண்ணுறு மெப்படி கைதொழும் வானோ
ரெண்ணினு நாடரி தெந்தைபி ரான்றேர்.

(இ-ள்.) எம்பெருமானுன குமரக்கடவுளெழுந்தருளியிருந்த அவ்விரதம் மண்ணினிடத்திற் செல்லும் திக்குகளிற் செல்லும் ஆகாயத்திற் சுற்றும் கடலின்மீதே ஆகச்செல்லும் எண்ணப்படுகின்ற எந்த உலகமும் வணங்குகின்ற திருமால் முதலிய தேவர்களுடைய மனதினுலும் நாடமுடியாது.—எ-று. (கக௬)

சேயது சாலைதி றத்திற மாகி
மூயின தானவர் மொய்ம்புறு தானை
சாய்வுற வோர்தொடை தன்னில நந்த
மாயிர கோடிக ளாக்கணை தொட்டான்.

(இ-ள்.) மண்ணுலகும் விண்ணுலகும் திக்குக்களும் சமுத்திரங்களுமாகிய எவ்விடங்களிலுமாக இரதம் சுழலாநிற்கும் அப்பொழுது குமரப் பெருமான் திறந்திறமாக நெருங்கின அசுரர்களுடைய வன்மை பொருந்திய சேனைகள் அழியும் வண்ணம் ஒரு தொடையில் அநந்தகோடி கணைகளாக வின்னுணியில் வைத்துவிட்டனர்.—எ-று. ()

பரிந்தன சூழ்ந்தவர் பாணிகண் மொய்ம்பு
சிரந்துணி வுற்றன செம்புன லாழி
சொரிந்தபி ணக்கிரி துற்றிய வற்று
னெரிந்தது வைய நெளிந்தது நாகம்.

(இ-ள்.) சுற்றிக்கொண்ட அசுரர்களுடைய கைகளும் தோள்களும் வேறுபட்டன, தலைகளறுபட்டன, இரத்தம் கடல் மடை திறந்தாற்போற் சொரிந்தன, பிண மலைகள் நெருங்கின, அதனுல் பூமி நெரிந்தது. அப்பூமியைச் சுமக்கின்ற ஆதிசேடனென்னு மரவமும் சுமையாற்ருது உடல் நெளிந்தது.—எ-று. (ககஅ)

பொய்கொலை யாற்றிய பூரிய ருக்கார்
செய்குவர் நன்மை செறிந்துள ரோனுங்
கைகெழு ஞாளிக ளேகறித் துண்ட
மைகெழு தானவர் மாண்டிடும் யாக்கை.

(இ-ள்.) நெருங்கினவர்களாகப் பலர் இருப்பினும் பொய்யுங் கொலையும் செய்துள்ள கீழ் மக்கட்கு யாவர் நன்மை செய்பவர்கள். கரிய நிறம் விளங்குகின்ற அசுரர்கள் உடல்களை இழிந்த தன்மை விளங்குகின்ற நாய்களே கடித்துத் தின்றன

"இந்நோய் நமக்குண் டென்னுதே யெவ்வுயிரு
முன்னேவக் கொன்றுண்ணு மூர்க்கர்தா - மெந்நோவும்
பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென்
றெண்ணப் படுவா ரிசைந்து" என்றார் தாம் பாடிய பாரதத்துப் பெருந்தேவனார். ஆதலின் கொலைத்தொழில் கொடிதினுங் கொடிதேயாம். அத்தகைய கொலையுடன் பொய்யுமுடைய அசுரர்மெய்களை, எவருமெடுத் தடக்கஞ் செய்திலரென்றும் பாவவடிவமான வுடலினருக் கெவரும் உதவி செய்யாரென்றும் இதோபதேசஞ் செய்வார் "மைகெழு தானவர் மாண்டிடு யாக்கை, கைகெழு ஞாளிக ளேகறித் துண்ட" என்றார். (௧௧௯)

ஒன்னலர் மீதி னுயிர்க்குயி ரானோன்
மின்னென வீசிய வெஞ்சர மாரி
பின்னுற முந்துபெ யர்ந்திடு மென்று
லன்னவன் றேர்விரை வார்கணிக் கின்றார்.

(இ-ள்.) உயிர்க்குயிராகவுள்ள குமரப்பெருமான் பகைவர் மீது வீசிய வெவ்விய சரமாரி பின்னிற்க முன்னே செல்லுமானால் அக்குமரகுருநாதனுடைய இரதத்தின் வேகத்தை யாவர் இன்னவிதமான வேகமுடையதென்று கணக்கிட வல்லுநர்.—எ-று.

பரத்தினு மேதகு பண்ணவன் வார்விற்
கரத்தினை யும்விரை வாற்கரந் தூண்டுஞ்
சரத்தினை யுந்தடந் தேரினை யுங்கா
லூரத்தினை யும்புகழ் வார்புடை யுள்ளார்.

(இ-ள்.) அருகினிற்பவர்கள் பரத்தினுஞ் சிறந்த குமரக் கடவுளின் நீண்ட விற்பிடித்த கரத்தினையும் விரைவாகக் கையினால் விடப்படுகின்ற அம்பினையும் விசால இரதத்தினையும் அவ்விரதத்தினை ஒட்டுகின்ற சாரதியான வாயுதேவனுடைய வன்மையையும் புகழ்வார்கள்.—எ-று. (௧௨௧)

வெவ்விச யப்படை வீட்டிடும் வாளிச்
செவ்விசை தேர்விசை நாடினர் செவ்வேள்
கைவிசை யோநெடுங் கால்விசை தானோ
வெவ்விசை யோவிசை யென்றனர் வானோர்.

(இ-ள்.) கொடிய வெற்றியினையுடைய அசுர சைனியங்களைச் சங்கரிக்கின்ற அம்பின் நேரான வேகத்தினையும் நம்பெருமானேறியுள்ள இரதத்தின் வேகத்தையும் கண்ட தேவர்கள் குமரப்பெருமானுடைய கையின் வேகமோ நெடிய காற்றின் வேகமோ இதில் எந்த வேகம் அதிக வேகமாகவுள்ளது என்று கூறினார்கள்.—எ-று. (௧௨௨)

துய்யவன் வாளி துணித்திட வீரர்
கையொடு வானிடை செல்வ கணிப்பி
லையிரு வட்டம ராப்புடை பற்ற
வெய்யவர் பற்பலர் விண்ணெழல் போலும்.

(இ-ள்.) தூய்மையாளனான குமரக்கடவுளின் அம்புகள் அறுக்க வீரர்கள் கைகளுடனே ஆகாயத்தினிடத்திற் செல்வனவற்றை எண்ணுமிடத்தில் அரவமானது அழகிய பெரிய பரிவேடத்தினருகைப் பிடிக்க அநேகஞ் சூரியர்கள் வானத்திலெழுதலை யொக்கும்.—எ-று.

துய்யவன் விட்ட அம்புகள் முன் றுணிக்கப்பெற்ற வீரர் கைகளுடனே பின்னும் பகைவரைத் துணித்தற்கு ஆகாயவீதியிற்போதல் அநேகஞ் சூரியர்கள், பரிவேடத்தினை அரவமானது ஓரத்திற் கௌவிக்கொள்ள ஆகாயவீதியில் காணப்படுதலை ஒக்கும் என்று கொள்ளுதலு மினிதேயாம். (கஉ௩)

காலொரு பாங்கர் கழுத்தொரு பாங்கர்
வாலொரு பாங்கர் மருப்பொ டெருத்த
மேலொரு பாங்கர் வியன்கையொர் பாங்காத்
தோலின மிவ்வகை யேதுணி கின்ற.

(இ-ள்.) நம்பெருமானேவிய அம்புகளாற் கால்கள் ஒரு புறத்திலும் கழுத்துக்கள் ஒரு புறத்திலும் வால்கள் ஒரு புறத்திலும் கொம்புகளுடனே முதுகின் புறங்களொரு புறத்திலும் தும்பிக்கைகள் ஒரு புறத்திலுமாக யானைகள் இவ்வண்ணம் அறுபடுகின்றன.—எ-று. (கஉ௪)

பல்லண மற்றன பன்முழு தற்ற
செல்லுறு தாளொடு சென்னியு மற்ற
வொல்லொலி யற்றவு ரந்துணி வுற்ற
வல்லமர் நீந்துறு மாத்தொகை முற்றும்.

(இ-ள்.) பகைவராற் புரியப்படுகின்ற வலியபோரினைக் கடக்கின்ற குதிரைகளனைத்தும் எமதிறைவனுரேவிய அம்பின் கூட்டங்களால் கல்லணைகளற்றன. பற்கள் முழுமையு மறுபட்டன. செல்லாநின்ற கால்களுடனே தலைகளும் அற்றன. ஒல்லென்னும் ஒலியுமற்றன. மார்புந் துணிவுற்றன.—எ-று. (கஉ௫)

மாழைகொள் வையம டிந்திட நேமி
யாழிகொள் சோரியி னாழ்வன மேருச்
சூழுறும் வெய்யவர் தொல்புவி கிண்டே
கீழுறு மெல்லை கெழீஇயின போலும்.

(இ-ள்.) அழகு பொருந்திய இரதங்கள் அழிய அவைகளின் சக்கரங்கள் கடல் போன்ற இரத்தநீரின் மூழ்குவன. மேருமலையைச்சுற்றி வருகின்ற சூரியர்கள் பழய பூமியைக் கீறிக்கொண்டு கீழேஉள்ள நிலவெல்லையை அடைந்ததனை யொக்கும்.-எ-று.

'மாழைகொள் வையம்' என்பதனை சுவர்ணகசிதமான இரதம் என்னினு மிழுக்காது. 'ஆழிகொள் சோரி' என்பதற்கு வட்டமாகப்பொருந்திய இரத்தவெள்ளம் என்று கூறினும், ஆழ்தலை தன்னிடத்துக்கொண்ட சோரி என்னினும் பொருந்தும். (கஉ௬)

ஏறிய தேர்களும் யானைகள் யாவுஞ்
சூறைகொள் வாசிக ளுந்துணி வுற்றே
வீறகல் வீரர்மி சைப்பட வீழ்ந்த
மாறவை யாற்றிடும் வல்வினை யேபோல்.

(இ-ள்.) உயர்ந்த இரதங்களும் யானைகளும் சூறைக்காற்றைப்போல வேகமாகச் செல்லுகின்ற குதிரைகளும் துணிபட்டுக் கூட்டமாக நிற்கின்ற வீரர்மீது நீதிக்கு விரோதமானவற்றை இயற்றுகின்ற தீவினையைப்போல வீழ்ந்தன.—எ-று.

வீறென்னும் பலபொருளொருமொழி தனிமை பெருமிதமாதி பலபொருள்களை யுடையதேனும் ஈண்டைக்கு தனிமை என்னும் பொருளே பொருத்தமுடையதாதலின் 'வீறகல்' என்றதற்கு தனிமையற்ற என்னும் பொருள் தோன்றக் கூட்டமாக நிற்கின்ற வீரர் என்றாம். 'வீறகல் வீரர்' மிகுந்த பெருமிதம் பாராட்டுவோரான வீரர் என்னினுமாம். 'வீறற்றவீரர்' என்னில் வீரத்தன்மைக்குக் குறைவுபாடுண்டாகும். ஆதலாது பொருந்தாது. (கஉ௭)

ஞாலமும் வானமு நண்ணல ராவி
மாலொடு வாரி மடங்க லுலைந்தான்
சாலுமி வற்கிது தாள்வலி யாற்கொல்
காலனெனப்புகல் கட்டுரை பெற்றான்.

(இ-ள்) யமனானவன் பூமியிலும் ஆகாயத்திலுநெருங்கிநின்று போர்புரிந்த பகைவர்களான அசுரர்களுயிரை விருப்பத்துடன் வாருதலைச் செய்து வருந்தினான் இவனுக்கிது தகுதியேயாம். இன்னோன் காலனென்னுமொரு கட்டுரையினை பெற்றிருக்கின்றானே அது இவன் கால்வன்மை பொருந்தியவனாதலாற்றானுண்டாயிற்றோ? அறிகிலேம்.

எறிபடை யாவையு மேமம தாகச்
செறிபடை யாவையுஞ் சேயவ னேவான்
முறிபடு கின்ற முனிந்துவ ணப்புட்
கறிபட மெய்துணி கட்செவி யேபோல்.

(இ-ள்) சீற்றங்கொண்டு கருடப்பறவை கொத்தித் துண்டுபடுத்த உடலந்துணிகின்ற அரவங்களைப்போல பகைவர்கள் விடுத்த ஆயுதங்களனைத்துஞ் சாம்பராக எம்பெருமானாரான குமாரசுவாமி விடுத்தருளிய அம்பினால் முறிந்து ஒடுகின்றன.—எ-று. செறிபடை என்பதற்கு நெருங்கிய சைனியங்கள் என்று கூறினுமாகும். (சஉக)

முன்னுறு வார்கண் முரட்படை தூவிப்
பின்னுறு வார்பெய ராதுபு டைக்கட்
டுன்னுறு வார்க ளெலாந்துணி வாக
மின்னென வெங்கணும் வேள்கணை தூர்த்தான்.

(இ-ள்) வன்மைபொருந்திய அம்புமுதலிய ஆயுதங்களை விடுத்துப் போர்புரிபவர்களாய் எதிரே நிற்பவர்களும் அங்ஙனமே பின்னே வருபவர்களும் விலகாமலிருபுறங்களிலும் நெருங்குபவர்களுமாகிய பகையசுரர்களனைவரும் அழிந்தொழியும் வண்ணம் மின்னலைப்போல விரைவாய் குமரப்பெருமானார் அம்புகளை விடுத்தருளினார்.—எ-று.

சூலம தேகொல் கணிச்சிகொ லன்றேல்
மாலெறி நேமிகொல் வச்சிர மேகொல்
காலொடு சென்றக னற்குழு வேகொல்
வேலது கொல்லென வேள்கணை விட்டான்.

(இ-ள்) பகையசுரர்மீது இது சிவபெருமானுடைய திருக்கரத்திலிருந்த சூலாயுதமோ அன்றேல் அவர் திருக்கரத்துள்ள பரசாகிய கண்டகோடரியோ அல்லது பழைய நாராயணன் விடுகின்ற சக்கரப்படையோ அல்லது இந்திரனுடைய வச்சிராயுதமோ அல்லது பிரசண்ட வாயுவுடன் சென்ற பிரளயாக்கினியோ என்று கருதுமாறு குமாரசுவாமியார் அம்புகளை விடுத்தருளினார்.—எ-று. (கஙக)

வேறு.

மறைத்திடு மெய்யுடை மாற்றலர்க
ளிழைத்திடு மாயவி யற்கைகளும்
விழுத்தக வீசும் விறற்படையும்
பிழைத்தன தாங்கள்பி ழைத்திலரால்.

(இ-ள்) தழைந்திருக்கின்ற வுடலினரான பகைவர்கள் செய்கின்ற மாயச்செயல்களும் புகழும் வண்ணமாக விடுகின்ற வெற்றிபொருந்திய வாயுதங்களும் பிழைத்தன,

அவ்வசுரர்களிலெவரும் எம்பெருமானுன சண்முகனுர் விடுத்தருளுகின்ற அம்பிற்குத் தவறிப் பிழைத்தார்களில்லை.—எ-று.

பிழைத்தல் தவறுதல் சாதல் - விறற்படையாதிய பிழைத்தன, அசுரர் இறந்தனர் என்றறிக. (கஙஉ)

முக்கணன் மாமகன் மொய்கணைக
டொக்கவர் யாக்கை துணித்திடலு
மெய்க்கிடு பல்கலன் மீன்விழல்போற்
றிக்குல விப்படி சிந்தினவே.

(இ-ள்.) திரிநேத்திரரான சிவபெருமானுடைய சிறந்த புதல்வனுன குமரக்கடவுளின் நெருங்கிய அம்புகள் அங்கு நெருங்கினவர்களின் உடலங்களைத் துண்டுபடுத்துதலும் அவர்களுடலங்களி லணியப்பட்டிருந்த பலவகையினவான ஆபரணங்கள் நட்சத்திரங்களுதிர்வனபோல திசைகள்தோறும் சிதறி பூமியில் விழுந்தன.-எ-று.

முக்கணன் காரண விடுகுறிப்பெயர். அணிகள்பதுமராக முதலிய சிறந்த மணிகளாலும் சாம்பூநத முதலிய மாற்றேறிய பொன்னினுலும் செய்யப்பட்டவை யாதலின் அவைகளின் வீழ்ச்சியை வான்மீன் வீழ்ச்சிக் குவமையிட்டுரைத்தனர். (கஙங)

அண்ணல்ச ரங்க ளறுத்திடலு
மெண்ணலர் யாக்கைக ளிற்றவைதா
மண்ணைய ளந்தயின் மாலெனவே
விண்ணை யளந்துவி ழுங்கினவே.

(இ-ள்.) தன்னடிமலர்களை யுன்னுந் தேவர்கள் முதலிய தொண்டர்களுள்ளக் கருத்தினை யுணர்ந்து அவர்களபீஷ்டங்களை எளிதாக நிறைவேற்றுகின்ற முதல்வனுன குமரக்கடவுளின் அம்புகள் அறுத்தவுடனே அறுபட்ட பகைவருடலங்களாயின பூமியை யளந்துண்ட திருமாலைப்போல ஆகாயத்தை அளந்து அதனை விழுங்கிவிட்டன.—எ-று. (கஙச)

சூழுறு தானை துணிந்தவுட
லேழெனு நேமியு மெண்டகுபே
ராழியும் விண்ணு மடைத்திமையோர்
வாழுல கங்களை வௌவினவே.

(இ-ள்.) குமரப்பெருமானை வளைந்து நின்றனவும் அப்பெருமான் விடுத்தருளின அம்புக்கூட்டங்களால் இவ்விரண்டு முதலியவைகளாக அறுபட்டவுமான சேனைகளின் உடலங்கள் ஏழென்று சொல்லப்படுகின்ற கடல்களும் எண்ணத்தகுந்த பெரும் புறக்கடலும் ஆகாயமுமாகிய இவைகளை மூடித் தேவர்கள் வாழும் உலகங்களை வவ்வின.—எ-று. (கஙரு)

காடியி ழந்து கவந்தமதா
யாடின வெள்ளமு மாயிரமா
கோடிய துண்டு குகன்கணையால்
வீடின வெல்லைவி திக்குநர்யார்.

(இ-ள்) மூளை யிழந்து கவந்தங்களாக ஆடின சேனுவெள்ளங்களும் ஆயிரகோடியாகுமாதலால் குமரப்பெருமான் விடுத்தருளின அம்புகள் பட்டிறந்த அசுரசேனைகளின் தொகையை இவ்வளவினவென்று கணக்கிட்டுக் கூறுநர் யாவர்.—எ-று. (கஙசு)

வீழுறு மாற்றலர் மெய்க்குருதி
யாழிக ளாகி யகன்புவியிற்
பூழைக ளோடு புகுந்துபில
மேழுள வெல்லையு மீண்டியதே.

(இ-ள்.) குமரப்பெருமான் விடுத்தருளும் அம்புகள் பட்டு இறந்துவிழுகின்ற பகைவருடலங்களினின்றும் ஒழுகும் இரத்தவெள்ளம் பல கடல்களாகி இடமகன்ற பூமியிலுள்ள பிலத் துவாரங்களின் வழியாகச்சென்று ஏழாகவுள்ள பாதலவெல்லை முழுமையும் நெருங்கியது.—எ-று. (கநஎ)

வேறு.

பாதல வெல்லை பரந்திடு சோரி
பூதல மீண்டு புகுந்து பராவி
யோத நெடுங்கட லோங்கிய வாபோன்
மாதிர மெங்கு மறைத்தன வன்றே.

(இ-ள்.) பாதாள எல்லைமுழுமையுஞ்சென்று பரந்த இரத்தவெள்ளம் திரும்பிப் பூமியையடைந்து பரந்து ஓசையினையுடைய நெடிய கடல் உலகமழிகின்ற ஊழிகாலத்தில் அளவுகடந்து பொங்கினாற்போல திக்குகளனைத்தையும் மறைத்தன.—எ-று. ()

மீனுடு வாக விளங்கிய திங்கள்
பானு மலர்ந்திடு பங்கய மாகச்
சோனைகொண் மாமுகி ரோணிய தாக
வானிமிர் செம்புனன் மாகட லொக்கும்.

(இ-ள்.) மீன்கள் நட்சத்திரங்களாகவும் பிரகாசியாநின்ற சந்திரனும் சூரியனும் விரிந்து விளங்குகின்ற வெண்டாமரைசெந்தாமரைகளாகவும் சோனைப்பெயலையுடைய சிறந்த மேகங்களே தோணிகளாகவும் கொண்டு ஆகாயத்தையளாவிய இரத்தவெள்ளம் பெரியசமுத்திரத்தினையொத்து விளங்கும்.—எ-று. (கநகூ)

மாசறு கூற்றனு மற்றுளர் தாமுங்
கேசர ராகிய கிங்கரர் யாரும்
பாசம லைத்திடு பல்பிணி பற்றா
வீசின ராருயிர் மீன்கள் கவர்ந்தார்.

(இ-ள்.) மேலுரைத்த சூரியசந்திரர்களாகிய செந்தாமரை வெண்டாமரைகளையும் நட்சத்திரங்களாகிய மீன்களையும் உடைய இரத்தக்கடலில் மாசற்றயமனும் மற்றுள்ளவர்களும் கேசரர்களாகவுள்ள கிங்கரர்களும் ஆகிய அனைவரும் வலைகளசையாநின்ற பலபிணையல்களைக் கைகளில் எடுத்து விசிறி அரிய உயிர்களாகிய மீன்களைப் பிடித்தார்கள்.—எ-று. (கசo)

பாலுறு கின்ற பணிக்கின்ற நாப்பண்
மாலரு ளிற்றுயின் மாட்சிமை யென்ன
நீலுறு திங்க ளிணங்கெழு செந்நீர்
வேலையின் மீது விளங்கிய தம்மா.

(இ-ள்.) நீலநிறமான களங்கத்தினை நடுவிலுடைய சந்திரன் மாமிசத்துடனே விளங்குகின்ற இரத்தக்கடலின்மீது பிரகாசித்தது எதுபோலுமென்னின் பாற்கடலின் நடுவிற் கிடக்கின்ற வெண்ணிற வடிவினனும் அரவவரசனுமான ஆதிசேடனுடைய உடலடுவில் கருநிறம் பொருந்திய வடிவினனான திருமால் அருளுடனே கண்ணுறங்குகின்ற மாட்சிமையைப்போலும்.—எ-று. (கசக)

மட்டறு செம்புனல் வாரிதி நீந்தி
யொட்டலர் யாக்கையி னோங்க லறுத்துத்
தட்டுறு செங்கதிர் சண்முக மேலோன்
விட்டிடு நேமியின் விண்மிசை செல்லும்.

(இ-ள்.) தேர்த்தட்டிலிருக்கின்ற செவ்விய கிரணங்களையுடைய சூரியன் மேலோனாகிய சண்முகப்பெருமான் பகைவர்மீது விடுகின்ற சக்கரப்படையைப்போல அளவற்ற இரத்தக்கடலைக் கடந்து பகைவருடலங்களாகிய மலைகளையறுத்துக்கொண் டாகாய வழியாகச் செல்லாநிற்கும்.—எ-று. (சுசஉ)

சிறைப்புற வுக்கருள் செய்திட மெய்யூ
னறுப்பவ னென்னவ டைந்தனர் விண்ணி
னெறிப்படு வானவர் நேரலர் யாக்கை
யுறப்படு சோரிமெய் யுற்றிடு நீரால்.

(இ-ள்.) ஆகாயவழியே செல்லாநின்ற தேவர்கள் பகைவருடலங்களினின்றும் வெளிப்படுகின்ற இரத்தத்துளிகள் உடம்பிற்படப்பட்ட தன்மையால் இறகினையுடைய புறவினுக்கு அருள்செய்யும் வண்ணம் தன்னுடலிலுள்ள ஊனினையறுத்த சிபிச்சக்கரவர்த்தியைப்போல ஆகிச் சென்றார்கள்.—எ-று.

சேம்மலான சிபிச்சக்கரவர்த்தி சிறைப்புறவுக் கருள்புரிந்த வரலாறு.

சூரியவங்கிசத் தரசருட் சிறந்த சிபிச்சக்கரவர்த்தி நெடுநாளரசுபுரிந்து அரசில் வெறுப்புண்டான வுடனே மகனுக் கரசினைக்கொடுத்துக் காட்டினை யடைந்து சிவகாருணியம் தேவபத்தி முதலிய சத்காரியங்களை யுடையவனாய் அருந்தவஞ் செய்தான். இங்ஙன மருந்தவஞ்செய்யும் இவனைப் பரீட்சிக்க வேண்டுமென்னு மெண்ணத்தினால் தேவராசனான இந்திரன் அக்கினிதேவனையழைத்து நான் சிபியைப் பரீட்சிக்கப் போகின்றேன் நீ புறவுருவங்கொண் டவனிட மடைக்கலமாகச் சென்று புகக்கடவை யான் ஒரு வேட்டுவனாகி வருகின்றேனென்று கூறினான். இந்திரனுரைத்தவண்ணமே அக்கினிதேவன் புறவினுருவங் கொண்டான் இந்திரனும் பீலி முதலியவைகளாலலங்கரிக்கப்பெற்ற சிரமுடையவனாகி கையில் வில்லேந்தி தோலுடுத்து வேடனானான். இருவரு முருவமாறி சிபி தவஞ்செய்யுமிடத்தினை யடைந்தார்கள். அவர்களில் அக்கினிதேவன் மன்னவனே நானுன்னடைக்கலமென நீட்டப்பெற்ற அரசனுடைய கையிற் சென்றிருந்து தன்னைக் கொலைபுரியவருகின்ற பகைவனுக்காக மிகவும் பயந்தவனைப் போல வாங்கு நடித்தான்.

இங்ஙனம் புறா நடுங்குதலைக்கண்டு சிபியானவன் அஞ்சாதே என்னையடைந்த நினக்கு யாதொரு துன்பமு முண்டாகாது எனப்பனவாதி நன்மொழிகளாற் புறாப்பறவைக்குத் தேறுதல் கூறிக்கொண்டிருந்தான். அப்பொழுது புறவினைத்தேடிவந்த வேடுவன் சிபியைப்பார்த்து என்னம்பினாலடிபட்டுவந்த புறாவினை நீ என் கையில் வைத்திருக்கின்றாய் எனதில்லத்திலுள்ள எனது மனைவிமக்களாதியர் பசியினால் வருந்துகின்றார்கள் புறவினைக் கொடு நான் போதல்வேண்டும் என்று கூறினான். இம்மொழிகளைக் கேட்ட அரசன் வேடனைப்பார்த்து கிராதகுலத்தனே இப்புறா வென்னிடம் அடைக்கலமாகவந்து புகுந்தமையால் இதனை யான் தருதற்கிசையேன் நீ வேறெவற்றையேனுங்கேள் தருகின்றேனென்றான். உடனே அவ்வேடன் கோபமுடையவனாய் ஒருவன் பசிக்குத்தேடின வுணவை மற்றொருவன் பிடுங்கிக்கொள்வதென்றால் உசிதமாகுமா? என்றான். உடனே மன்னவன் நின்னுணவை யானபகரித்தேனல்லேன், நின்னுண

வென நீ கூறு மிப்புறுவே அடைக்கலமென வலியவந்தமையால் இவ்வொரு புறுவன்றி நீ விரும்புகிற எவ்வித வுணவுகளையேனும் உனக்குத் தரச் சித்தமாக விருக்கின்றேன் இப்புறவின்பொருட்டு என்னுடலுயிர்களைக் கேட்டாலும் அளிக்கச் சித்தமாக விருக்கின்றேன் என்று வேடனிடமுரைத்தான். அதற்கு வேடன் மன்னவனே! எவ்விதமான மிருகபக்ஷிகளினூன்களை நீயளிக்கினும் அவைகளை நான் பெற்றுக்கொள்ள விரும்பேன், இப்புறவினை ஒரு தட்டிலிட்டு மற்றொரு தட்டில் நின்னுடற்றசையை யறுத்திட்டு நிறுத்தளிப்பாயானால் நான் பெற்றுப்போகின்றேனென்றான். இம்மொழியைக் கேட்ட சிபி சாலவுவந்து துலைநாட்டி புறவினை ஒரு தட்டினிலிட்டு வாளாயுதத்தால் மிகுந்த மகிழ்வுடன் தன்னுடற்றசையை அறுத்தறுத்துத் தராசிலிட்டனன். எவ்வளவிட்டும் புறவிற்குச் சமானமாகத் தன்னுடலூன் நிற்காமையால் தானே தராசிலேறி நின்றான். உடனே தராசும் நிமிர்ந்து நின்றது. அரசன் வேடனைப்பார்த்து என்னை நீ கொண்டுசென் றுன்பசியை யகற்றிக்கொள் என்றான். இங்ஙன மரியபெரிய காரியத்தினைச்செய்த சிபிக்காக புறவும் வேடனும் முன்னுருவடைந்து அன்புகாட்டி நின்னையொத்தவர்க ளெங்கிலத்தினுமில்லை நின்னுடைய உயர்ந்த குணங்களை பரீக்ஷிக்க வந்தனமென்றனர். உடனே அரசனவர்களை வணங்கினான் அவர்களு மிவன் விரும்பின வரங்களை யளித் துடலினையு முன்போல செய்து சென்றார்கள் என்பதேயாம். இதனை,

“ மாத வற்கெலா மாரிய னிவ்வுரை வகுப்பான்
பேத மற்றவன் சிபியெனும் பெயருடை யரசன்
தீத றத்தவம் புரியுநா டேவர்நா யகனு
மோது செந்தழற் கடவுளு முளந்தெரி வாராய்.

வெங்க போதநல் லுருக்கொடு விளங்கழற் படாத
தங்கு வெஞ்சிலை வேடனாய் மகபதி சார்ந்தான்
செங்க திர்க்குல நாயகன் செழுந்தவ மியற்றும்
புங்க வான்பொழிற் புகுந்தது புண்படு கபோதம்.

நடுங்கி நாயகா சரணென வடைதலும் ஞால
மடங்க வும்புரந் தளிப்பவ னகங்கையா லேந்தித்
தொடங்கி நின்னையார் தொடரினு முயிர்தொலைந் திடினு
மிடஞ்செ லாவகை காப்பனீ யஞ்சலென் றிசைத்தான்.

அணிந்த பீலியும் பசுந்தழையாடையு மம்பாற்
றிணிந்த தூணியுஞ் செஞ்சிலை வனைந்தசெங் கரமு
மிணைந்த வெங்கொடும் பார்வையும் விளங்கவந் தெதிர்ந்தான்
றணிந்த வெஞ்சின வேடனாய் விண்ணவர் தலைவன்.

இல்லின் மக்களு மனைவியு மிரும்பசி யதனாற்
சொல்லு தற்கருந் துயருழன் றிருந்தனர் துரந்த
வில்லி னிற்கணை பட்டுனை திடைவரு விகங்க
மொல்லெ னக்கடி துதவுகென் றரசனுக் குரைத்தான்.

உயிரை நல்கினு மனைவியை நல்கினு மொருவர்
வயின டைந்தவர் தமைவிடுத் திடுவரோ வாரா
யியலி னும்பசி தவிருமா றிசைத்ததே தேனு
மயலின் மென்றசை யுதவுவன் கோடியென் றறைந்தான்.

எடுத்து ரைத்தமே தைகளெலாந் தருகினு மிதைப்போ
லடுத்த நாவினுக் கருஞ்சுவை தருவதின் றுமாற்

கொடுக்க வல்லையே லதனிடை நினதுடற் கொய்து
தடுத்த ளிக்குதி தசையெனத் தராபதி மகிழ்ந்தான்.
அரிந்து ரந்தனிற் றசையெலாந் தராசுசெய் தமைத்தே
திருந்து வண்கபோ தத்தையோர் தட்டினிற் செறித்தான்
சொரிந்த சோரியன் றூக்கினன் றுலைநிக ரின்றிப்
பரிந்த மென்றசைத் தட்டுமேற் செல்வது பார்த்தான்.
துலைபு குந்துதான் வேடனைத் தூக்குதி யெனலு
நிலைகொள் வேடனுந் தூக்கின னிகருறல் நோக்கிச்
சிலைவ லாயெனைக் கொண்டுசென் றுன்பசி தீரேன்
றிலைகு லாவுவே னரபதி மொழிந்திட விசைந்தான்.
கருணை கண்டவன் றரிக்கலன் கடவுளு யகனு
மருண்டு வெங்கனற் செல்வனு மாகிமுன் னடைந்தே
பொருணன் மாமகிழ் பொருந்திடப் புயமுறத் தழுவித்
தெருண நல்லறி விறைவனே திறலுனக் கென்றுன்.
வேந்த னன்னவர் தாள்விழ விழிப்புன லாட்டி
யாய்ந்த பேறெலா மளித்துமீண் டனரென வறைந்தே
போந்து வேறொரு சூழலைக் காட்டியே புகன்றுன்
சேந்த கண்ணுடைத் தருமனுக் கருந்தவஞ் சிறந்தோன்.”

என்னு மாபாரதச் செய்யுட்களா லுணர்க. (௧௪௩)

ஆனதொ ரெல்லையி லண்ட நிறைந்த
சேனைகள் வீழ்ந்தன செம்பல் சாத்தா
லூனுயிர் பூதமொ ழிந்தன முக்கண்
வானவன் மூரலின் மாய்ந்திடு மாபோல்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் ஊனினையுடைய உடலங்களும் உயிர்களும் பூதங்களும் இவையன்றியுள்ள மற்றவைகளும் பிரளயகாலத்தில் மூன்று கண்களையுடைய சிவபெருமானுடைய புன்சிரிப்பினால் அழிந்தொழியுந் தன்மையைப்போல இவ்வண்டத்தில் நிறைந்திருந்த அசுரசேனைக ளனைத்தும் குமரக்கடவுளின் அம்புகளால் அழிந்து விழுந்தன.—எ-று. (௧௪௪)

வேறு.

அண்ட மீங்கிது முற்றொருங் கீண்டிய வவுணர்
தண்ட மாய்தலு மேனைய வண்டங்க டம்மிற்
கொண்ட தானைகள் பின்னரும் வந்திடக் குமரன்
கண்டு மற்றவை தொலைத்தனன் செலுத்திடு கணையால்.

(இ-ள்.) இவ்வண்ட முழுமையும் ஒன்றாக நெருங்கியிருந்த அசுரசேனைகள் இறந்து படுதலும் மற்றையவண்டங்களில் நிறைந்து நின்ற சேனைகள் பின்னும் வந்து நெருங்காநிற்ப, குமரக்கடவுள் அவர்களின் வருகையைப் பார்த்துப் பின்னரும் அம்புகளை விடுத்து வாராநின்ற வச்சேனைகளை யழித்தனர்.—எ-று. (௧௪௫)

அறுத்து வெம்முனைத் தானையை யாண்டுசெல் லனிக
மறித்தும் வந்துவந் தடைதரு மிவணென மனத்துட்
குறித்து வெங்கணை மாரியா லண்டகோ ளகையி
னெறித்த ரும்பெரு வாயிலை யடைத்தன னிமலன்.

(இ-ள்.) நிமலனான குமரக்கடவுள் வெவ்விய போர்முனையிற் புகுந்த சேனைகளை அம்புவிட்டழித்தும் அவ்வண்டங்களில் இறவாது நெருங்கி நிற்கின்ற எஞ்சிய சேனைகள் பின்னும் பின்னும் இவ்விடத்திற்கு வந்துகொண்டே இருக்கும் என்று திருவுள்ளத்திற் கருதி வெவ்விய அஸ்திரவருஷத்தால் அண்டகோளகையிலுள்ள மார்க்கமான பெரியவாசலை அடைத்தருளினார்.—எ-று. (கசசு)

ஆண்டு சென்னெறி மாற்றியே யண்ணல்வெங் கணையான்
மாண்ட தானைகள் சோரியுங் களேவர மலிவு
நீண்ட பாதலங் கடற்புவி கொண்டுவா னிமிர்ந்தே
யீண்டு கின்றதுங் கண்டனன் வரைபக வெறிந்தோன்.

(இ-ள்.) கிரவுஞ்ச மலை பிளவுபடுமாறு வேலாயுதம் விடுத்தருளிய குமரப்பெருமான் பெருமை பொருந்திய வெவ்விய அம்புகளால் அவ்வண்டங்களினின்றும் இவ்வண்டத்திற்கு வராநின்ற வழியை யடைத்து தன்னம்பினால் இறந்துபட்ட சேனைகளுடைய வுடலங்களினின் றொழுகுகின்ற இரத்தமும் பிரேதக் குவியல்களும் நீட்சியான பாதலங்களிலும் கடல் புடையுடுத்த நெடுநில வரைப்புகளிலும் நிறைந்து ஆகாயத்தை யளாவி நெருங்கிக் கிடப்பதனைத் திருக்கண் சாத்தியருளினான்.—எ-று. (கசஎ)

நெற்றி நாட்டத்தி னுலகெலா மட்டிடு நிமலன்
பெற்ற மாமகன் பன்னிரு விழிகளும் பிறங்கு
கற்றை வெஞ்சுடர் வடவைபோ லாக்கியக் கணத்தி
லுற்று நோக்கின னெரிந்தன களேவரத் தோங்கல்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணினால் உலகனைத்தையும் அழிக்கின்ற நின்மலனான சிவபெருமான் பெற்ற சிறந்த இளையகுமாரனான சண்முகப்பெருமான் தனது பன்னிரண்டு திருக்கண்களையும் விளங்காநின்ற கூட்டமான வெவ்விய தீச்சுடரினையுடைய வடவாக்கினியைப்போல செய்து அப்பொழுதே உற்றுப்பார்த்தனன் ; பார்த்தவுடனே பிணமலைகள் எரிந்தன.—எ-று. (கசஅ)

வெந்து நுண்டுகள் பட்டன களேவரம் விசும்பி
னுந்து சோரிநீர் வறந்தன மூவகை யுலகு
முந்து போலவே யமைந்தன முளரியான் முகுந்த
னிந்தி ரர்திய ரார்த்தனர் குமரனை யேத்தி.

(இ-ள்.) பிணத்தொகைகள் வெந்து நுண்ணிய தூளாகவாயின; ஆகாயத்தை யளாவிய இரத்தவெள்ளம் வற்றின; மூவகையினவான வுலகங்களென் றுரைக்கப்படுகின்ற சுவர்க்க மத்திய பாதாளங்களும் முன்போலவே இருந்தன; இவ்வதிசயத்தைப் பார்த்துத் தாமரைமலரிலிருக்கின்ற பிரமனும், திருமாலும், இந்திரன் முதலானவர்களும் குமரக்கடவுளைத் துதித்து ஆரவாரித்தனர்.—எ-று. (கசகூ)

பாறு லாவரு களேவரத் தமலையும் படிமேல்
வீறு சோணித நீத்தமும் வேவுற விழித்து
நீற தாக்கினன் சூரனை யட்டில னின்று
மாறு மாமுக னுடலை யுன்னின னங்கொல்.

(இ-ள்.) பருந்துகளுலாவுகின்ற பிணக்குவியல்களும், பூமியில் மிகுதியாகப் பரந்த இரத்தவெள்ளமும் வெந்தொழியும்வண்ணம் திருக்கண்களை நன்றாயுருட்டிப் பார்த்துச் சாம்பராகச் செய்தான், சூரனைக் கொன்றானில்லை. நமதாறுமுகப்பெருமான் அவனொடு போர்புரிதலாகிய திருவிளையாடலைக் கருதினனாயிருக்கலாம்.—எ-று. (கஞ0)

ஆகு மெல்லையி னெல்லையி னடுகளத் தடைந்த
சேகு நெஞ்சுடைச் சூரனித் திறமெலாந் தெரிந்து
மாக நீடுநந் தானையை யலைத்தமாற் றலனை
நாகர் தம்மொடு முடிக்குவன் யானென நவின்றான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் விரைவாகப் போர்க்களத்தை யடைந்த வைரம் பொருந்திய மனத்தினையுடைய சூரபன்மன் இத்தன்மையாக இவ்விடத்தில் நடந்த இவையனைத்தையுமுணர்ந்து சுவர்க்கபரியந்த நெருங்கி வந்த நமது சைனியங்களைக் கொன்ற விப்பகைவனைத் தேவர்களுடனே யான் அழிப்பேன் என்றுகூறினான்.எ-று.

மாற்ற மித்திற மிசைத்திடு மவுணர்கோன் மனத்திற்
சீற்ற மூண்டிட வமர்வினை குறித்தனன் றிகிரிக்
காற்றி னெல்லைவந் தேற்றனு மருத்துவன் கடவிப்
போற்று தேர்மிசை முருகனுஞ் சென்றெதிர் புகுந்தான்.

(இ-ள்.) யான் எனது சேனைகளையழித்த பகைவனை அவனுடன்வந்த தேவர்களுடனே அழிப்பேனென விவ்வண்ணமுரைத்த வசுராதிபனான சூரபன்மன் மனத்திற் கோபமிகுதியாக மேலும் மேலும் உண்டாகப் போர்த்தொழிலைக்கருதி வாயுவேகத்தினும் அதிகமான வேகத்துடன் இரதத்தில் விரைந்துவந்து எதிர்த்தலும், வாயுவான இரதிகன் ஒட்டித் துதிக்கின்ற இரதத்தின்மீது குமரக்கடவுளும் சென்று அவனெதிரே புகுந்தனர்.—எ-று. (கஙூஉ)

புக்க காலையி லறுமுகன் றோற்றமும் புடையின்
மிக்க பன்னிரு கரங்களும் வியன்படைக் கலனுந்
தொக்க வீரமும் வன்மையு நோக்கியே தொல்லைத்
தக்க னேயென வவுணர்கோ னின்னன சாற்றும்.

(இ-ள்.) குமரப்பெருமான் தன்னெதிரில் வந்தவுடனே அவ்வாறுமுகப் பெருமானுடைய பொலிவும் இரு புறங்களிலும் பொருந்திய உயர்ந்த பன்னிரண்டு திருத்தோள்களும் சிறந்த ஆயுதங்களும் இயற்கையாயமைந்த பராக்கிரமமும் வன்மையுமாகிய இவைகளைப் பார்த்து முன்னுளிலிருந்த தக்ஷப்பிரஜாபதியைப்போல அசுராதிபனான சூரபன்மன் இவைகளை யுரைப்பான்.—எ-று. (கஙூக)

சிறந்த வான்மதி மிலைச்சினோ னருள்புரி செயலா
லிறந்தி டேனியா னென்றுமிப் பெற்றியா யிருப்பேன்
மறந்து மென்னொடு பொருதிலர் தேவரு மலைந்தே
யிறந்து ளார்பல ருணர்ந்திலை போலுநீ யிதுவே.

(இ-ள்.) சிறப்புப் பொருந்திய வெள்ளிய சந்திரனை யணிந்த சிவபெருமான் இறவாதிருத்தி என அருள் புரிந்துள்ள தன்மையால் யான் நின்னோடு போர்புரியினும் இறவேன் எந்நாளிலும் இதே தன்மையினனாகவே இருப்பேன் நாராயணாதி தேவர்களும் மறவியினாலேனும் என்னுடன் ஒருகாலத்திலும் போர்புரிந்தார்களில்லை என்னாற்றலை யறியாது என்னுடன் பொருது இறந்தவர்களோ? ஒருவரிருவரல்லர் அநேகர் நீ இதனை யுணர்ந்தாயில்லை போலும்.—எ-று. (கஙூச)

உள்ள நொந்துநொந் தென்பணி யாற்றியே யுலைந்து
தள்ளு றுஞ்சுரர் மொழியினைச் சரதமென் றுன்னிப்
பிள்ளை மென்மதி யாலிவண் வந்தனை பெரிது
மள்ள லுற்றுழிப் புகுந்திடுங் கயமுனி யதுபோல்.

(இ-ள்.) நீ மிகுதியான சேறு நிறைந்த பள்ளத்திற் சென்று விழுந்த யானைக் கன்றைப்போல மனநொந்து நொந்து எனதூழியங்களைச் செய்து வருந்தியகற்றப்பட்ட தேவர்களுரைத்த வார்த்தையை யுண்மையானதென்று கருதி இளம்பிராயத்தாலுண்டான சிறிய புத்தியினாலிவ்விடத்திற்கு வந்தனை இனிஎவ்விதந் தப்பித்துக்கொண்டு போவாய் என்று கூறினான். போதற் கியலாதென்ப தவன் பக்ஷம்.—எ-று. (௧௫௫)

உடைப்பெ ரும்படை செறுத்தனை பாலனென் றுன்னை
விடுப்ப தில்லையால் வெரிநது கொடுக்கினும் விரைவிற்
படுப்பன் வானவர் தொகையுடன் பாரிடர் தமையுங்
கெடுப்ப னென்றனன் றன்பெருங் கிளையுடன் கெடுவான்.

(இ-ள்.) சிறுவ! நீ இப்போர்க்களத்திற்கு வந்து போர்புரிந்த என்னதாகவுள்ள மிகுந்த சேனைகளை யழித்தனை; அதனால் உன்னை இனிச் சிறுவனென்று விடுகின்றதில்லை. போர்புரியு மாற்றலின்றி நீ புறமுதுகிட்டாலும் உன்னை விரைவாக ஓடிப்போகாமற் பிடித்துக்கொள்ளுவேன்; அன்றியும் உனக்குத் துணையாகவந்த தேவர்களுடன் பூதர்களையும் இப்பொழுதே அழிப்பேன் என்று கூறினான். அவன் யாவனென்னின் தனது புத்திர பௌத்திர மித்திர பந்துவாதியர்களுடன் கொத்தாக வழிவோனாகவுள்ள சூரபன்மன் எனவறிக.—எ-று.

சிவகுமாரனான சிவசண்முகப்பெருமானுக்கு மரணமின்மையை யவனுணர்ந்துள்ளவனாதலின் கொல்வேனென்றிலனாயான். கோபமுடையாருக்குண்டாகுங் குணக்கேட்டை யிவனுமடைந் தங்ஙனங் கொல்வேனென்று கூறினான் எனக்கருதுதல் உண்மைக் கடவுளிடத் தொவ்வாவிடயமாதலின், "விரைவிற்படுப்பன்" என்றதற்கு விரைந்துபிடிப்பேனென்றானென்று பொருளுரைத்தாமென்க. (௧௫௬)

வெம்பு ரைத்தொழிற் கொருவனுங் கயவநீ வெறிதே
வம்பு ரைத்தனை யாவதொன் றில்லைநின் மார்பஞ்
செம்பு ரைப்பட யாம்விடு கின்றதோர் திறல்வா
யம்பு ரைத்திடு மாறுனக் கென்றன னமலன்.

(இ-ள்.) இவ்வாறு வெரிநதுகொடுக்கினும் நின்னைப் படுப்பனென்றும் வானவர்தொகையுடன் பாரிடர்தமைக்கெடுப்பனென்றும் உரைத்த சூரபன்மனைப்பார்த்து வெவ்விய குற்றமான இழிதொழிற்கு வேறொரும் ஒப்பாகாவாறு விளங்குகின்ற கயவனே? நீ வீணாகப் பயனற்ற வசனங்களையுரைத்தனை. அவைகளாலாவன வொன்றுமில்லை. நினது மார்பினிடம் செவ்விய புரைபடும்படி யாம் விடுகின்ற அம்பு நீ இதுகாறு முரைத்த மொழிகளுக்குத் தகுந்த வண்ணம் உனக்குப் பதிலுரைக்கும் என்று நின்மலரான குமரக்கடவுள் கூறியருளினார்.—எ-று.

வெம்புரைத்தொழிலாகிய பரதாரகவன முதலிய கீழ்நடைகளில் இவன் மிகவும் கொடியவனாதலானும் இந்திராணியை விபசரிக்கவிரும்பியகுற்றமே இவனைப்போர்க்களத்திற்கிழுத்தது ஆதலானும் இவைகளைக்கருதியே எம்பெருமானும், "புரைத்தொழிற் கொருவனுங் கயவநீ" என்றனர் என்க. (௧௫௭)

ஆரு நேரிலாப் புங்கவன் சேயின தறையச்
சூர னாகிய வவுணர்கோன் றுண்ணெனச் செயிர்த்து
மேரு நேர்வதோர் வரிசிலை யெடுத்துவிண் ணிழியும்
வாரிபோன் றிடு நாணினை யேற்றியே வளைத்தான்.

(இ-ள்) எவருந் தமக்கொப்பானவ ரல்லாதவராக விளங்கும் சிவபெருமானுடைய திருக்குமாரர் இதனை யுரைத்தலும் அதனைக்கேட்ட சூரபன்மனாகிய அசுராதி

பன் திடரென்றுசீறி மேருவினையொத்த வரியபட்ட ஒரு வில்லினையெடுத்து ஆகாயத்தினின்றும் ஒழுகிய கங்கையைப்போன்ற ஒரு நாணியை எடுத்து வில்லிற்பூட்டி வளைத்தனன்.—எ-று.

தம்மையன்றி யுள்ளவைகளனைத்தும் தமதாணைவயத்ததாக நிற்பனவான பசுக்களேயாகத்தான் அப்பசுக்களுக்குப் பதியாகவுள்ளவராதலே விளக்க ஆசிரியர் இறைவனைச்சுட்டி "ஆருநேரிலாப்புங்கவன்" என்றார். (௩௫௮)

வளைத் தடங்கிரி புரைவதோர் சிலையினை வயத்தால்
வளைத்த செய்கையைக் காண்டலும் பாரிடர் வானோர்
வளைத் தடங்கடல் வந்திடு நஞ்சொடு மலைவான்
வளைத்த தன்மைபோல வுணர்த முதல்வனை வளைத்தார்.

(இ-ள்) இயல்பாகச் சற்றேவளைந்துள்ள பெருமலைபோன்ற வில்லினை சூரபன்மன் வன்மையினால்வளைத்த தன்மையைக் காணுதலும் குமாரசைநியங்களான பூதர்கள் தேவர்கள் முன்னாளி லமிர்த மதனத்தின்பொருட்டு வளைந்து திருப்பாற்கடலிலுண்டான ஆலகாலவிஷத்துடனே போர்புரிதற்கு அவ்விஷத்தைச் சூழ்ந்துகொண்ட தன்மையைப்போல அசுரர் கட்குத் தலைவனான சூரபன்மனை வளைத்துக்கொண்டார்கள்.—எ-று.

வளைத்தடங்கிரி என்பதற்கு - வளைகளையுடைய பெரியமலை என்னினுமாம். வளைகள் - குலைகள். அமரராவருந்திய ஆலாலவிஷத்தைப்போல மிகவுங் கொடியவனாதலால் சூரனை நஞ்சிற்குவமையிட்டுரைத்தனரென்க. (௩௫௯)

சிலையை வீசினர் கொடுமரம் வீசினர் செறிமூ
விலையை வீசினர் படையெலாம் வீசின ரெதிர்ந்தா
ருலைய வீசியே யடல்செயு மும்மதத் துவாவை
வலையை வீசியே பிணித்திட மதித்துளா ரென்ன.

(இ-ள்.) எதிர்த்தவர்கள் கெடும்வண்ணம் தும்பிமுதலியவைகளை வீசிப் போர்புரிகின்ற மும்மதத்தினையுடைய யானையை வலையைவீசிப் பிடித்தற்கு எண்ணுவாரைப்போல பூதர்கள் சூரபன்மன்மீது கற்களையெடுத் தெறிந்தனர். கொடுமரங்களை வீசினார்கள் நெருங்கிய திரிசூலங்களை வீசினார்கள் இன்னமுள்ள எறியாயுதங்களனைத்தையும் எறிந்தார்கள்.—எ-று.

யானையை வலைவீசிப்பிடிக்க முயல்வோர் எண்ணம் நிறைவேறாமல் இழிக்கப் படுமாறுபோல பூதவீரர்கள் செயலும் இவ்விடத்துப் பயனற்றதென்று உணர்த்துவான் "எதிர்ந்தாருலையவீசியே யடல்செயு மும்மதத்துவாவை, வலையைவீசியே பிணித்திட மதித்துளாரென்ன" எதிர்ந்தார் என்றார். (௩௬௦)

கண்டு மற்றதைய வுணர்கோன் வில்லுமிழ் கணையாங்
கொண்ட லுண்டுளி சிதறியே கணங்கள் கூட்டறுத்து
விண்டு லாவா வரக்கினுற் குயின்றதோர் வெற்பைச்
சண்ட வெங்கன லுடைப்பது போலவே தடிந்தான்.

(இ-ள்.) அசுராதிபனான சூரபன்மன் பூதர்கள்செய்யும் இந்தச் செய்கையைப் பார்த்து தன்கைவில்லாகியமேகமுமிழுகின்ற அம்பாகிய நுண்ணியதுளிகளைச் சிதறி பூதகணங்களின் கூட்டங்களை அழித்து ஆகாயமளாவுமாறு அரக்கினாலியற்றிய ஒருமலையை உக்கிரமான வெவ்வியபெருந்தீ யுடைப்பதைப்போல அப்பூதவியூகத்தினை அழித்தான்.—எ-று.

மேகமானது ஒரேகாலத்தில் பலகோடிநீர்த்துளிகளைச் சிதறியாங்கு ஒருவில்லிலொரு தொடையிலெண்ணிறந்த அம்புகளை விட்டானெனன்பார், "வில்லுமிழ்கணையாங்

சொண்டனுண்டு ளிசிதறி'' என்றார். மிகுந்தகூட்டமாகநின்ற பூதசேனைகள் விரைவிற் கூட்டங்கலைந்தகன்றன என்பார் பூதர்களை அரக்குமலையாகவும் சூரபன்மனுடைய சரமாரியை பெருந்தீயாகவும் உரைத்தனர். (கசுக)

வீடி னார்களும் புயங்கரந் துணிந்திட மெலிந்து
வாடி னார்களு மயங்கிவீழ்ந் தார்களும் வல்லே
யோடி னார்களு மோடவும் வெருவிவேற் றுருவங்
கூடி னார்களு மாயினர் பாரிடக் குழாத்தோர்.

(இ-ள்.) இவனிங்ஙனம் அப்புமாரிபொழிந்த உடனே பூதகூட்டத்தினர்கள் இறந்தவர்களும் தோளுங்கையு மறுந்துவிழ வதனால் வருந்தி வாடினவர்களும் மயங்கி விழுந்தவர்களும் விரைந்து ஓடினவர்களும் ஒடுதற்கும்பயந்து வேற்றுருவத்தை யடைந்தவர்களுமாக வாயினார்கள்.—எ-று.

இக்கவியில் ஒருவனாகிய சூரபன்மனுடைய வன்மையும் அநேகர்களாகிய பூதர்களுடையமென்மையும் விளங்குதல்காண்க. (கசுஉ)

பூதர் சாய்ந்துழி இலக்கரோ டெண்மரும் பொருவில்
வேத நாயகன் றாதனுஞ் சூழ்ந்துடன் மேவிக்
கோதை தூங்கிய கொடுமர மாயின குனித்துச்
சோதி வான்கணை மாரிக ளவுணன்மேற் சொரிந்தார்.

(இ-ள்.) பூதர்கள் இறந்துமழிந்தும் மாறுவேடம்பூணடும் பின்னிடைந்ததனைப்பார்த்து இலக்கர்களுடனே எண்மர்களும் ஒப்பற்ற வேதநாயகனான குமரக்கடவுளின் தூதுவனான வீரவாகுவும் ஒன்றாகச் சூழ்ந்துநின்று கோதைதொங்குகின்ற விற்களை வளைத்து ஒளிபொருந்திய வுயர்ந்தஅம்புகளை அசுரன்மீது விட்டனர்.—எ-று.

பொருவில் வேதநாயகன் - என்பதற்குப் போர்புரிதற்குரிய விற்படையினையுடைய வேதநாயகனென்றுகூறலாமாயினும் வேதநாயகனென்பதனை யொட்டிநிற்கும் பொருவில் என்பதற்கு ஒப்பற்ற என்றும். வேதநாயகன் - வேதத்தாற் புகழப்படும் உண்மைத்தலைவன், வேதம் உண்மையாகப் புகழ்ந்துரைக்கும் முழுமுதற்கடவுள் சண்முகப்பெருமானாதலால், ஆசிரியரும ''பொருவில் வேதநாயக'' னென்றார். (கசுரு)

சொரிந்த வெங்கணை யெங்கணும் வருதலுஞ் சூரன்
றெரிந்து வாளிதொட் டறுக்கல னின்றதோர் செவ்வி
விரைந்து வந்தவை யாங்கவன் மெய்ப்பட விளிந்து
பரிந்து போயின செய்ததொன் றில்லை யப்பகழி.

இ-ள்.) இவ்வனைவருமாகவிட்ட வெவ்விய அம்புகள் எவ்விடங்களிலுமாகி வருதலும் அவைகளின் வருகையைச் சூரபன்மன்கண்டு பதிலம்பு விட்டு அவைகளைத் தடுக்காம னின்றகாலத்தில் அவ்வம்புகள் விரைவாகவந்து அவனுடலிற் பட்டு அவனை யொன்றுஞ்செய்யாமல் ஒடிந்துவிழுந்தன.—எ-று.

வீரர்கள்விட்ட அம்புகள் கூரியனவேவிட தயிலம் பூசப்பெற்றனவே ஆயினும் அவை பிறனையன்றி இவனை ஒன்றுஞ் செய்யாமைகொண்டு புகழ்ச்சியுறுவண்ணம் 'வெங்கணை' என்றார். (கசுச)

பரப்பி னீண்டிய வீரர்தஞ் சூழ்ச்சியைப் பாரா
வுரப்பி யாவலங் கொட்டியே வெகுளிகொண் டொருதன்
பொருப்பு நேர்சிலை குனித்துவெஞ் சிலீமுகம் பொழிந்து
திருப்பெருந் தடந் தேரோடுஞ் சாரிகை திரிந்தான்.

(இ-ள்.) இங்ஙனம் அம்புகளால் யாதொரூறுமடையாத சூரபன்மன் பரவுதலாகச்சூழ்ந்த வீரவாகு வாதிவீரர்களின் தந்திரத்தைப் பார்த்து அதட்டி வாயாலார்த்தாடிச் சீற்றங்கொண்டு ஒப்பற்ற தனது மலைபோன்ற வில்லினை வளைத்து வெவ்விய அம்புகளை விட்டுக்கொண்டு அழகிய பெரிய இரதத்துடனே சாரிகையாக வுலாவினன் —எ-று. ()

விரைந்துபொரு தானென்பார் ஊக்கம்விளங்க "தடந்தேரொடுஞ் சாரிகைதிரிந்தான்" என்றார். சாரிகை-வட்டயாகசுற்றுதல். ஆவலங்கொட்டல் - வாயாலார்த்தாடல்.

நூறு கோடிவெஞ் சரமொரு தொடையுற நூக்கிச்
சூறை யாமென வட்டணை திரிந்துளான் சூழ்வோர்
மாறு தூண்டிய சரங்களைத் துணித்து மற்றவர்க
ளேறு தேருடன் பிடித்திடு சிலைகளை யிறுத்தான்.

(இ-ள்.) ஒருநூறுகோடி வெவ்விய அம்புகளை ஒருதரந்தொடுக்குந் தொடையில் வைத்துவிட்டுச் சூறைக்காற்றைப்போல சுழன்றுவருகின்ற வவன் தன்னைச்சூழ்ந்துள்ள பகைவர் தனக்குப் பகையாகவிடுகின்ற அம்புகளைக் கண்டித்து அவர்களேறியுள்ள இரதங்களுடன் அவர் கைகளிற் பிடித்துள்ள விற்களையும் அறுத்தகற்றினன்.—எ-று.

தூக்கல்-விசிதல், சூறை-சுழல்காற்று, வட்டணை - சுழற்சி. (கசுசு)

வையம் வில்லுட னிற்றபின் மற்றவர் மலைவு
செய்ய வுன்னுமுன் மொய்ம்பினு முரத்தினுஞ் சிரத்துங்
கையினுங் கணை யாயிர மாயிரங் கடுந்தீப்
பெய்யு மாரிபோற் செறித்தனன் செம்புனல் பெருக.

(இ-ள்.) இரதங்களும் விற்களும் அழிந்தவுடனே எண்மர் இலக்கர் என்னும் பகுதியினரான வவர்கள் வேறிரதமேறி வேறு விற்பிடித்துப் போர்புரியக் கருதுமுன் அவர்களுடைய தோள்களிலும் மார்புகளிலும் தலைகளிலும் கைகளிலும் சென்று படும் வண்ணம் சூரபன்மன் ஆயிரமாயிர மம்புகளைக் கொடிய அக்கினியை வருஷிக்கின்ற மழையைப்போல இரத்தவெள்ளம்பெருகும்வண்ணம் விட்டனன்.—எ-று. (கசுஎ)

புரந்த னிற்செறி உறையினர் புலம்புகொண் மனத்தா
ருரந்த ளர்ந்துளார் வில்வலி யிழந்துளா ரொருங்கே
யிரிந்து நீங்கின ரிலக்கரோ டெண்மரு மிளவ
றிருந்தலன் றடந் தேர்மிசைப் பாய்ந்தனன் சினத்தால்.

(இ-ள்.) உடலிற்பொருந்திய நெருங்கிய இரத்தத்தினை யுடையவர்களும் அச்சம்பொருந்திய மனத்தினை யுடையவர்களும் வலிமை யிழந்தவர்களும் அப்பொழுது அவனுடன் விற்போற்புரிதற்கு ஆற்றலற்றவர்களும் ஆகி இலக்கம் வீரர்களுடன் எட்டு வீரர்களும் ஏககாலத்தில் புறமுதுகிட்டனர். உடனே கோபத்தால் வீரவாகுதேவன் பகைவனான சூரபன்மனுடைய இரதத்திற் பாய்ந்தனன்.—எ-று. (கசுஅ)

புலம்புதல் - துன்பத்தால் உள்ளே முறுமுறுத்தல் என்னலாம், அது நன்மைக்குதவாதாதலிற்புலம்புகொள்மனம் என்பதற்கு அச்சம்பொருந்திய மனம் என்றும். ()

பாய்ந்து திண்டிறன் மொய்ம்பினன் பரமன்முன் னளித்த
நாந்தகந் தனையுரீஇக்கொடு நண்ணலர்க் கிறைவ
னேந்து வில்லினைத் துணித்தனன் றுணித்தலு மெரிபோற்
காய்ந்து வெய்யவன் புடைத்தன னுபத்திலவர் கரத்தால்.

(இ-ள்.) திண்ணிய திறலினையுடைய வீரவாகுதேவன் சூரனுடைய இரதத்திற்றாவி தனக்கு முன்னாளிற் சிவபெருமான் அளித்த வாளாயுதத்தினை உறையினின்றும்

எடுத்து பகைவர்களான அசுரர்க்கரசனான சூரபன்மன் கையிற் பிடித்துள்ள வில்லினை இருதுணியாக வெட்டினன் வெட்டுதலும் அக்கொடியோன் நெருப்பைப்போற் சீறி ஒரு கையினால் வீரவாகுவின் மார்பினி லடித்தனன்.—எ-று.

மிகுந்த சீற்றமுடையவனானானென்பார் "எரிபோற்காய்ந்து" என்றார். (௧௬௯)

அங்கை கொண்டுசூ ரொருபுடை புடைத்தலு மகலும்
பொங்கு சோணிதம லைத்திட வாகையம் புயத்துச்
சிங்கம் வீழ்ந்தயர் வுற்றிடத் தூதனைச் செகுத்த
லிங்கெ னக்கடா தென்றெடுத் தும்பரி னெறிந்தான்.

(இ-ள்.) சூரபன்மன் அகங்கையினால் ஒரு அறை அறைதலும் மார்பிற் பொங்காநின்ற இரத்தமொழுக வாகைமலர் மாலையணிந்த தோளினனான வீரவாகுவென்னும் சிங்கம்போல் வான் கீழே விழுந்தயர்ச்சியடைதலும் அதனைக் கண்டு இங்கு எனக்குத் தூதனைக்கொல்லுதல் கூடாத காரியமென்று கையினாலெடுத்து மேலே போமாறு எறிந்தனன்.—எ-று.

தூதுவந்தவர்களைக் கொல்லுதல் எத்தகைய கொடிய அரசரிடத்து மின்றாதலாலும் அதனால் பழியேயன்றிப் புகழ்வராதாதலாலும், கொல்லாது வீரவாகுதேவரை தூரவெடுத் தெறிந்தன னென்பார் "தூதனைச்செகுத்த லிங்கெனக் கடாதென் றெடுத் தும்பரினெறிந்தா" னென்றார். (௧௭௦)

எறிந்த காலையில் விண்ணிடைப் படர்ந்திடு மேந்த
லறிந்து மீண்டுசென் றாறுமா முகன்புடை யடைந்தான்
றறிந்து போகிய சிலையினைத் தரைமிசை யிட்டுச்
சிறந்த தோர்தனு வெடுத்தனன் றீயரிற் றீயோன்.

(இ-ள்.) தூதனைக் கொலைபுரிதல் நமக்கழகன்றென நினைத்து வீரவாகுதேவனை கையாலெடுத்து எறிந்தவுடனே ஆகாயவழியாகச் செல்கின்ற அவ்வீரவாகுதேவன் அயர்ச்சியொழிந்து அந்த சங்கதியையுணர்ந்து திரும்பிவந்து ஆறுமுகப்பெருமானுடைய அருகிலடைந்தனன். உடனே, கொடியரிற்கொடியனான சூரபன்மன் அறுபட்ட வில்லினைக்கீழே எறிந்து வேறே ஒரு சிறப்பான வில்லினை எடுத்தனன்.—எ-று.

அயர்வுற்ற வீரவாகுதேவர்க்குண்டானவயர்சி சூரனாலெறியப்பட்டு மேற்செல்லுதலான்று நீங்கியதென்பார் "அறிந்து" என்றார். (௧௭௧)

அத்த மேல்கிரி யுதயமால் வரைத்துணை யான்று
நித்தலும் பிறர்க்கிடர் செய்து மேருவி னீண்டு
கொத்து நீடுபல் குவடுடைத் தாகியே குமரன்
சத்தி யாலட நின்றவெற் பனையதத் தனுவே.

(இ-ள்.) அச்சூரபன்மனெடுத்த அந்தவில் மேற்புறத்திலுள்ள அத்தமனகிரியும் கீழ்ப்புறத்திலுள்ள உதயகிரியுமாகிய இரண்டினளவாக அகன்று தினந்தோறும் நமக்கிடர்செய்து மேருமலையினும் நீண்டு நீண்ட கொத்தாகவுள்ள பல குவடுகளையுடையதுவாகிக் குமாரக்கடவுள் தமது வேற்படையனா லழிக்குமாறு நின்ற கிரவுஞ்சமலையை ஒத்தது.—எ-று.

சூரபன்மன் எடுத்த வில்லிற்குப் பிறமலைகள் தோற்றத்தா லொப்பாமாயினும் பிறரைத் துன்புறுத்தும் விடயத்தில் ஒப்பாகாமையால் மலையுருவத்துடனிருந்து பிறருக்கிடர் விளைத்த கிரவுஞ்சமலை தோற்றத்திற்குங் கொடுமைக்கு மூவமையாதல்கொண்டே ஆசிரியர் "குமரன் சத்தியாலட நின்றவெற்பனையதத் தனுவே" என்றார். (௧௭௨)

வனை கருங்கழ லவுணனக் கார்முகம் வளைத்துப்
புனலு மங்கியுங் காலுட னொலிப்பது புரைய
வெனைவ ருந்துளக் குறும்வகை நாணொலி யெடுத்தா
னனைய பெற்றியை யறிந்தன னமரரை யளித்தோன்.

(இ-ள்.) கட்டப்பட்ட பெரிய வீரக்கழலினையுடைய சூரபன்மன் அந்த வில்லினைவளைத்து தீயுநெருப்புங்காற்றுடன் கலந்து ஆரவாரிப்பதைப்போல எத்தகையோரு நடுக்கமடையும் வண்ணம் நாணோசை கண்டான் அவனதவ்வாறான செய்கையை தேவர்களை இரக்ஷித்தருளிய குமரப்பெருமான் திருக்கண்சாத்தியருளினன்.—எ-று.

பேரோசை யுண்டாமாறு நாணோசை காட்டினன் என்பார் "ஒலியுடைப்பொருளான புனலுமங்கியும் காலுடன்கலந் திரைதலைப்போல இரைச்சலுண்டாமாறு நாணொலி எடுத்தா" னென்றார். "புனல்" என்றது ஈண்டு ஊழிகாலத்துப் பொங்குங் கடனீரை. "அங்கி" என்றது-பிரளயாக்கினியை. "கால்" என்றது—ஊழிக்காற்றினை. (கஎ௩)

புயலின் மேனியன் புவிநுகர் காலையும் போதன்
றுயிலு மாலையுந் துஞ்சிய வேலையுந் தொலையா
தியலுமண்டத்தி னடிமுடி யுருவிநின் றிலங்குங்
கயிலை போல்வதோர் நெடுஞ்சிலை யெடுத்தனன் கந்தன்.

(இ-ள்.) மேகவண்ணனான திருமால் இவ்வுலகத்தினையுண்ட காலத்திலும் பிரமன்கண்ணுறங்குகின்ற அவனதந்திப்பொழுதாகிய தினப்பிரளயத்திலும் அவனதுமரணகாலமான மஹாப்பிரளயகாலத்திலும் அழியாது நிற்கும் அண்டத்தினடியும் முடியும் கடந்துநின்று விளங்கும் கைலையை ஒத்த ஒரு நெடிய வில்லினைக் கந்தக்கடவுள் எடுத்தனன்.—எ-று. (கஎ௪)

வாரி யாலுல கழிந்திடு மெல்லையின் மருங்கின்
மேரு வாதியாம் வரைகளுங் கிரிகளும் விசும்பிற்
காரு மேலுள வுலகமு மமரருங் கயிலைச்
சாரல் சூழ்தல்போல் விரவியார்ப் புடையதத் தனுவே.

(இ—ள்.) அப்புபூதமானநீரினால் உலகமழிகின்றகாலத்தில் அருகிலுள்ளமேரு முதலிய மலைகளும் மற்றயமலைகளும் வானத்திலுலாவுகின்ற மேகங்களும் மேலேயுள்ள லோகங்களும் தேவர்களும் கைலாயச்சாரலை யடைந்து நிற்பதுபோல் கலந்தாரவாரியா நிற்பது அந்தவில்.—எ-று. (கஎ௫)

நீட்ட மிக்கதோ ரப்பெருஞ் சிலையினை நிமலன்
றோட் டுணைக்கொடு வாங்கியேழ் வகையினுற் றோன்று
மீட்ட மிக்கபல் லுயிர்களும் வானுரு மேற்றின்
கூட்ட மாகியே யார்த்தெனக் குணத்தொலி கொண்டான்.

(இ-ள்.) மிகுந்த நீளமுள்ள அந்த வில்லினை இறைவன் தனது இருதோள்களால் வளைத்து ஏழுவகையினவாகிப் பிறக்கின்ற நெருக்க மிகுந்த பலவுயிர்களும் வானிலுள்ள உருமேற்றின் கூட்டங்களாகி ஆரவாரித்தாற்போல நாணோசை எழுப்பினன்.—எ-று. (கஎசு)

குணங்கொள் பேரொலி கோடலு மிரலையூர் கொற்றத்
தணங்கு லாவரு கார்முகங் குழைத்துளை யவதி
யிணங்க வாங்கியே பத்துநூ றுயிரத் திரட்டி
கணங்கொள் வெஞ்சர முகைத்தனன் கூற்றினுங் கடியோன்.

(இ-ள்.) நாணியிற்பொருந்திய ஓசையை யுண்டாக்குதலும் பின்னர் மானினை வாகனமாக வேறி நடாத்துகின்ற வீரலட்சுமியானவ ளுலாவுகின்ற விற்படையினைக் காதளவும் பொருந்த இழுத்து இருபது இலக்கமென்னும் கூட்டமான வெவ்விய அம்புகளை எமனினுங் கொடிய சூரபன்மன் விட்டனன்.—எ-று. (கஎஎ)

வான்ம றைத்தன மாதிர மறைத்தன மதிதோய்
மீன்ம றைத்தன கதிர்வெயின் மறைத்தன வேலை
தான்ம றைத்தன வசுமதி மறைத்தன தருவார்
கான்ம றைத்தன வரைகளை மறைத்தன கணைகள்.

(இ-ள்.) சூரபன்மன்விட்ட அம்புகள் ஆகாயத்தைமறைத்தன: இந்திராதி திக்குகளை மறைத்தன சந்திரனை யணைகின்ற அசுவனியாதி நட்சத்திரங்களை மறைத்தன: கதிரினையுடைய வெயிலினை மறைத்தன: கடலினையும் மறைத்தன: பூமியைமறைத்தன: மரங்கள் பொருந்தின காடுகளைமறைத்தன: மலைகளை மறைத்தன.-எ-று. (கஎஅ)

காற்றிற் செல்வன வங்கியிற் படர்வன கடுங்கட்
கூற்றிற் கொல்வன வேலைவெவ் விடத்தினுங் கொடிய
பாற்றுத் தொல்சிறை யுள்ளன பலேறலை படைத்த
நாற்றிக் கும்புக ழவுணர்கோ ளுணையி னடப்ப.

(இ-ள்.) அவ்வம்புகள் காற்றைப்போல உகள்வன: தீயைப்போலபடர்வன: கொடியகண்ணினையுடையகூற்றனைப்போல கொல்வன கடலிலுண்டான கொடியவிடத்தினும்கொடியன: பருந்தின்பழைய இறகுகளையுடையன: அநேகந்தலைகளையுடையன: திசைநான்கும் புகழ்கின்ற அசுராதிபனுடைய கட்டளைப்படி செல்லாநிற்பன:—எ-று.

தீ படர்ச்சியாகப்போதலும் காற்று நேரிற்போதலும் வழக்கமாதலின் "காற்றிற் செல்வன" வென்றும், "தீயிற்படர்வன" வென் றுங் கூறினார். (கஎகூ)

பருமி தத்தன மேருவைத் துளைப்பன பாங்கர்
வரைகி ழிப்பன வண்டமும் பொதுப்பன வான்றோ
யுருமி டிக்குலம் பொருவன விடத்தையுண் டுமிழ்வ
கருமை பெற்றன சேயன தீயவன் கணைகள்.

(இ-ள்.) கொடிய வச்சூரபன்பனுடைய அம்புகள் பெரிய வடிவத்தினை யுடையன; மேருமலையைத் துளைப்பன; அருகிலுள்ள மலைகளைக் கிழிப்பன; அண்டத்தையும் பொத்தலாக்குவன; வானிற்பொருந்திய உருமிடிக் கூட்டங்களை யொப்பன; விடத்தினை யுண்டு கக்குவ; கருமைநிறம்பெற்றன; செந்நிறமுள்ளன.—எ-று. (கஅ௦)

துண்ட வெண்பிறை வாளெயிற் றவுணர்கோன் றூரப்ப
மிண்டு வெங்கணை யெங்கணுஞ் செறிந்திட விண்ணோர்
கண்டு கண்ணனை யணுகியே கைகுலைத் தையா
வுண்டு கொன்னமக் கொளிப்பதோ ரிடமென வுரைத்தார்.

(இ-ள்.) துண்டமான வெள்ளிய பிறைபோன்ற ஒளிபொருந்திய வக்கிரதந்தங்களை யுடைய அசுராதிபனுனசூரபன்மனால் விடப்பட்டமிண்டினையுடைய வெவ்விய அம்புகள் எவ்விடத்திலும் நெருங்க அதனைத் தேவர்கள்கண்டு திருமாலிடஞ் சென்று கைகளை இருபுறமாக விரித்து ஐயனே! இன்று சூரபன்மனுடைய அம்பிற்குத் தப்பிப் பிழைத்து நிற்றற்கு நமக்கோரிடமுண்டோ என்று கேட்டார்கள்.—எ-று.

கைகுலைத்தல் மிகுந்த ஆபத்திலாதலால் தேவர்கள் மிகவும் பயந்தவர்களானார்கள் என்பார் "கைகுலைத்து" என்று கூறினார். (கஅக)

உரைத்து ளார்க்குமான் மாறுரை வழங்குமுன் னொள்வேல்
காத்தி லேந்திய குமரவே ளின்னது கண்ணுற்
றெரித்து வெங்கனல் விடுத்திடு மூதைபோற் சிலதன்
சாத்தி னலவன் றூண்டிய கணையெலாந் தடிந்தான்.

(இ-ள்.) அவ்வண்ணங்கூறிய அவர்கட்குத் திருமால் பதிலுரை யுரைத்தற்கு முன்னே ஒள்ளிய வேற்படையினைத் திருக்கரத்தி லேந்தியுள்ள குமரப்பெருமான் இத னைக் கண்ணுற்கண்டு வெவ்விய தீயினை முற்படத் தள்ளுகின்ற காற்றினைப்போல தனது சில அம்புகளைவிட்டு அச்சூரபன்மன் விட்ட அம்புகளையெல்லா மழித்தனன்.

மடிந்தி டும்படி மாற்றலன் சரங்களை வள்ள
றடிந்த தன்மைகண் டமரர்க ளுவகையிற் றழைத்தார்
படர்ந்து நீடிய கங்குலின் பாயிருள் புலா
விடிந்த காலையி னெழுங்கதிர் கண்டமே தினிபோல்.

(இ-ள்.) அழிந்துபோமாறு பகைவனுடைய அம்புகளைக் குமரப்பெருமான் அழித்த தன்மையைப்பார்த்து, பரந்து மிகுந்த இரவின்பரவிய இருள்கெட பொழுது விடிந்தகாலத்தில் உதையமாகின்ற சூரியமண்டலத்தைக் கண்ட உலகத்தைப்போல தேவர்கள் சந்தோஷத்தில் மிகுந்தவர்க ளானார்கள்.—எ-று. (கஅரு)

வேறு.

அங்க வெல்லை யவுணர்கோ
னெங்க ளாத னெதிருற
மங்குல் போல்வ ரம்பிலாச்
செங்கண் வாளி சிதறினன்.

(இ-ள்) தேவர்கள் அஞ்சுதலுடன் திருமாலையடைந்து நமக்கினியிடமுமுளதோ விற்றற்கு எனக் கைக்குலைவுடன் கேட்டதனை யறிந்த சண்முகப்பெருமான் சில அம்பு களைச்செலுத்தி சூரபன்மன் உலகமுழுமையும் பரவுமாறு விடுத்த அம்புக்கு வியலினைத் தினையும் அழித்தருளிய அந்த சமயத்தில் ஆயிரத்தெட் டண்டங்களில் வசிக்கும் அசுர சாதியின ரனைவருக்கு மதிபனை சூரபன்மன் என்பான் பின்னரும் தம்மை வணங்கும் எங்களுக்குக் கர்த்தாவான சிவ சண்முகப்பெருமானெதிரே செல்லுமாறு சூல்கொண்ட மேகத்தைப்போல அளவற்ற செங்கணம்புகளைச் சிந்தினன்.—எ-று. (கஅசா)

ஆய காலை யறுமுகன்
றீய னுந்து செறிகணை
மாய வாளி மாமழை
யேயெ னுமுன் னேவினன்.

(இ-ள்.) சூல்கொண்ட மேகங்கள் விடாதுபெய்த மழைத் தாரையைப்போல தனது வில்லாகிய மேகத்தினின்றும் அம்புகளாகிய வருஷதாரைகளை சூரபன்பன் பின் னரும் உண்டாக்கினன் . அப்பொழுது சண்முகப்பெருமான் தேவர்களைச் சிறைபிடித் தன் முதலிய துர்ச்செயல்களால் கொடியவனான சூரபன்மன் விட்ட அம்புகள் அழியு மாறு ஏ என்னுமுன்னம் சிறந்த அம்புமழையினை வருஷித்தனன்.—எ-று. (கஅகு)

எங்க ளாத னேவிய
துங்க வாளி சூர்விடும்
புங்க வங்க ளைப்புரத்
தங்கி போல றுத்தவே.

(இ-ள்.) எங்கட்கிறைவனுன ஞானசண்முகப்பெருமான் விடுத்தருளிய உயர்ச்சிபொருந்திய அம்புகள் சூரபன்மன் விடுத்த அம்புகளை தாருகாக்ஷன் கமலாக்ஷன் வித்துன்மாலி என்னும் அசுரர்களுடைய நகரங்களான பறக்குமியல்பினையுடைய திரிபுரத்திற்குச்சென்ற சிவபெருமானுடைய புன்னகையிலுண்டான தீயைப்போல ஒரு கணப்பொழுதிற்குள் அறுத்தன.—எ-று. (கஅசு)

அறுத்த பின்னு மறனிலான்
மறுத்தும் வாளி மாமழை
கறுத்த கண்டர் காளைமேற்
செறுத்து வல்லை சிந்தினன்.

(இ-ள்.) தான் விட்ட அம்புகளை திரிபுரர்கண்மீது சிவபெருமானுடைய புன்னகையைப்போல அம்புகளைவிட்டு அறுத்தற்குப்பின்னும் தருமவழியே நடவாத சூரனென்னு மசுராதிபன் மிகுந்த அம்பு மழையினை நீலகண்டரான சிவபெருமானுடைய இளையமைந்தனுன குமாரசுவாமியின்மீது சீற்றங்கொண்டுவிரைவாக விட்டனன்.

சிந்து கின்ற செஞ்சரம்
வந்து ருமுன் வந்தெனக
கந்த னூறு கணைதொடா
வந்தில் பூழி யாக்கினன்.

(இ-ள்.) மழைபெய்தாற்போல சூரபன்மன் விடுகின்ற தைலலே பனமாதிகளால் செவ்விய தன்மையினுடைய அம்புகள் தன்னிடத்திற்கு வருவதற்கு முன்னமே தன்னருகில் வந்தாற்போல கருதினவராய் கந்தப்பெருமானுர் நூறம்புகளைவிட்டு அவ்விடத்திலேயே புழுதியாகச் செய்தனர்.—எ-று. (கஅஅ)

பூழி செய்து பொள்ளென
வூழி நாத னெஞ்சர
மேழு நூற தேவினன்
சூழு மாயை தோன்றன்மேல்.

(இ-ள்.) சூழாநின்ற மாயையென்பவளுடைய குமாரனுன சூரபன்மனென்பவன்விட்ட வம்புகளைப் புழுதியாக்கி விரைவாக ஊழிநாதனுன குமரப்பெருமான் பின்னும் அவன்மீது ஒள்ளிய எழுநூறம்புகளை விடுத்தனன்.—எ-று.

அரியயர்களின் மரணகாலமான பிரளயகாலங்களிலும் அழியாதிருக்கும் நித்தியத்துவமுடையவ ராதலால் குமரப்பெருமானை ஊழிநாதன் என்றூர். (கஅகூ)

மாயை மைந்தன் மற்றதை
யாய வாளி யாலறுத்
தேயி னுனி ராயிரஞ்
சேயின் முன்சி லீமுகம்.

(இ-ள்.) அவ்வண்ணங் குமரப்பெருமான் விடுத்தருளிய எழுநூறம்புகளையும் மங்கலகேசி என்னும் அசுராதி பன்மகளான சுரசையென்னு மியற்பெயரினையுடைய மாயையின்குமாரனுன சூரபன்மன் அத்தொகையான எழுநூறு அம்புகளாலேயே அறுத்துப் பின்னுங் குமரப்பெருமானெதிரில் இரண்டாயிரம் அம்புகளைவிட்டனன்.—எ-று.

வேறு.

விட்டதனை யத்தொகை விறற்பகழி தன்னு
லட்டுவிளை விற்கடவு ளாயிர விரட்டி
கட்டழலை யொத்துள கடுங்கணைக டம்மைத்
தொட்டனன் வருத்தமொடு சூர்கிளை துளங்க.

(இ-ள்.) அவ்வண்ணம் விட்ட அம்புகளை அந்தத்தொகையினையுடைய வெற்றி பொருந்திய அம்புகளால் அறுத்து விளைவாக குமரக்கடவுள் இரண்டாயிரம் கூட்டமான தீயினையொத்த கொடிய அம்புகளை வருத்தத்துடனே சூரபன்மனுடைய பந்து வருக்க மெல்லா நடுங்குவண்ணம் விடுத்தனன்.—எ-று. (ககக)

மூராரியுத வுஞ்சுதனை முந்துதளை யிட்டாண்
டோராயிர மளித்தபர னுய்த்தகணை செல்ல
விராயிர நெடும்பகழி யேவியவை நீக்கி
யராவிறையும் வையமு மழுங்கவுற வார்த்தான்.

(இ-ள்.) முராரியான திருமாலளித்த புதல்வனான பிரமதேவனைச் சிறையிலடைத்து ஓராயிரவருடம் சிருட்டித்தொழில் புரிந்த பரமனான குமரன்விட்ட அம்புகள் செல்லாநிற்ப அவைகளைப்பார்த்து சூரபன்மன் இரண்டாயிரம் நீண்ட அம்புகளை விட்டு அவ்வம்புகளை விலக்கி உலகத்தினைச்சுமக்கின்ற அரவவரசனான ஆதிசேடனும் அவனாற் சுமக்கப்படுகின்ற உலகமு நடுங்குவண்ணம் ஆரவாரஞ்செய்தனன்.—எ-று. (ககஉ)

ஆர்த்தவன் விடுங்கணை யனைத்தினையு முக்கண்
மூர்த்திதரு கான்முளை செலச்செல முடித்தான்
கார்த்தெழு புகைப்படலை கான்றுமிர் செந்தீச்
சேர்த்தினவை யாவையு மிசைந்திடு திறம்போல்.

(இ-ள்.) கருமையாகி யெழாநின்ற புகைப்படலங்களைக் கக்கிக்கொண்டு மேற்கிளம்பாநின்ற செவ்விய அக்கினியானது தன்னிடத்திலிடப்பட்ட மனைத்தையும் உண்ணுந் தன்மையைப் போல அசுராதிபனான சூரபன்மன் ஆரவாரத்துடனே விட்ட அம்புகளனைத்தினையும் மூன்று கண்களையுடைய பரமேசுவரனளித்த குமரப்பெருமான் வரவர அழித்தனன்.—எ-று. (ககங)

ஐயன்விடு வாளிகளை யவ்வசுர னீக்கும்
வெய்யன்விடு வாளிகளை வேள்கடி தறுக்கு
மெய்யுநெடு வெம்பகழி யிற்றவைகள் சிந்தி
வையமிசை போகியன வானமணித் தென்ன

(இ-ள்.) குமரக்கடவுள்விடுகின்ற அம்புகளை அந்த அசுரன் அழிப்பான். கொடிய வவ்வசுரன் விடு மம்புகளை குமரக்கடவுள் சீக்கிரம் துண்டுபடுத்துவார். இதனால் எய்யாநின்ற நெடிய வெவ்விய ஒடிந்தஅம்புகள் சிதறி உலகத்தில் குவிந்து ஆகாயவுலகமு மருகினதாகுமாறு ஆயின.—எ-று.

அந்த அசுரனென்றது சூரபன்மனை (ககச)

முற்றிய வமர்த்தலை முனிந்திவர் செலுத்துங்
கொற்றநெடு வாளிகள் குறைந்துழி யெழுந்தீப்
பற்றியது பாரிடை பகிர்ந்தவளா முற்றும்
வற்றிய் வளக்கரும் வறந்துளது கங்கை.

(இ-ள்.) முதிர்ந்த போரினில் கோபங்கொண்டு இவர்கள் விடுகின்ற வெற்றி பொருந்திய நெடியவம்புகள் ஒடிந்தவுடனே எழாநின்ற தீயானது பற்றிக்கொண்டது.

பூமியில் அதனால் மலைகளனைத்தும் பிளந்தன. கடலும் வற்றியது. ஆகாய கங்கையும் வற்றியது.—எ-று. (கசூஇ)

தார்கெழுவு வேற்படை தடக்கையுடை யோனுஞ்
சூரனு மிவாறமரி யற்றுதொழில் காணூ
வீரமட மாதுளம் வியந்திவர் தமக்கு
ளாரிடை நடத்துமென வையமொடு நின்றாள்.

(இ-ள்.) மாலை விளங்காநின்ற வேற்படையினை விசாலமான அத்தத்திலுடைய குமரக்கடவுளுஞ் சூரபன்மனு மிவ்வண்ணம் போர்செய்கின்றதொழிலினைக்கண்டு இளமைபொருந்திய வீரலட்சுமியானவள் இருவரையுஞ் சமர்த்தரென் றுள்ளத்தி லாச்சரியமாக நினைத்து நாமிவ்விருவருள் எவரிடத்திற்குச் செல்வது என்று சந்தேகத்தொடு நின்றனள்.—எ-று. (கசூசு)

ஆளரிதன் முன்னிளவ லானைவத னத்துக்
காளைமகிழ் பின்னிளவல் கார்முக முகைக்கும்
வாளிமழை யேயலது மற்றவர்க டம்மை
நீள்விழியி னாற்றெரிகி லார்புடையி னின்றோர்.

(இ-ள்) சிங்கமுகாசுரனுக்கு மூத்தவனும் வாலிபனுமான சூரபன்மனும் யானைமுகத்தினையுடைய விநாயகப்பெருமானுக்கு மகிழ்ச்சியைக்கொடுக்குந் திருத்தம்பியாரான குமரக்கடவுளுமென்னு மிருவர்களின் விற்பலகைகள் சிதறுகின்ற அம்பு மழைகளையேயன்றி அவ்விருவர்களையும் அருகினின்றவர்கள் நீண்ட விழிகளாற் காணாதவர்களானார்கள்.—எ-று. (கசூஎ)

நீடுசம ரின்னண நிகழ்ச்சியுறு மெல்லை
பேடமிசை யூர்பரன் விடுத்தகணை யெல்லா
மீடுபட நூறியவ னேறிவரு மான்றே
ராடுறு பதாகையை யறுத்துவிரைந் தார்த்தான்.

(இ-ள்) மிகுதியான போரிவ்வாறு நடக்கின்ற சமயத்தில் ஆட்டுக்கடா வாகனத்தின்மீது எழுந்தருளியிருந்து உலாவருகின்ற பரமேசுவரான குமரப்பெருமானர் விடுத்தருளிய அம்புகளெல்லாம் சமமாக அம்புகளை விடுத்தகற்றி அக்குமரப்பெருமான் ஏறிவராநின்ற குதிரைகள் பூட்டிய தேரிலாடாநின்ற கொடியை விரைவாக அறுத்துச் சூரபன்மன் ஆரவாரஞ்செய்தனன்.—எ-று (கசூஅ)

ஆர்த்துவிறல் வால்வளையை யம்பவள வாயிற்
சேர்த்தியிசைத் தான்றனது சீர்த்தியிசைத் தென்ன
மூர்த்தமது தாழ்க்கிலன் முனிந்துகணை பின்னுந்
தூர்த்துமுரு கன்றனது தோற்றமறைத் திட்டான்.

(இ-ள்) ஆரவாரஞ்செய்து வெற்றிபொருந்திய வெள்ளிய சங்கத்தினை அழகிய பவளம்போலும் வாயில்வைத்து தனது பிரதாபத்தினை யெடுத்துரைத்தாற்போல ஊதினான். பின்னரொரு முகூர்த்த நேரங்கூட தாமதஞ்செய்யாதவனாய்ச் சீற்றங்கொண்டு பின்னரும் அம்புகளைவிட்டு முருகபெருமானுடைய தோற்றத்தை மறைத்தனன். ஈண்டு மூர்த்தமென்றது - ஒரு கணப்பொழுதியேயாம். (கசூகூ)

மறைத்தபக ழித்தொகையை வாளியமை தன்னாற்
குறைத்தவுண னூர்ந்திடு கொடிஞ்சிநெடு மானடுறர்
விறற்கொடி தனைக்கொடிய வெஞ்சரமொ ரேழா
லறுத்துமுரு கன்பரவை யாழ்கடலி னிட்டான்.

(இ-ள்) மறைக்கப்பட்ட அம்பு கூட்டங்களை அஸ்திர வருஷத்தினல் குறைவுபடுத்தி அசுரனேறி நடாத்துகின்ற கொடிஞ்சியினையுடையதும் நெடிய குதிரைகளா லிழுக்கப்பட்டதுமான இரதத்திற் கட்டப்பட்டிருந்ததுமான வெற்றிக்கொடியினைக் குமரக்கடவுள் கொடுமையான வெவ்விய ஏழம்பினுல் அறுத்து அகன்றதும் ஆழமானதுமானகடலிலிட்டனன்.—எ-று. (உ௦௦)

தான வர்க்குத் தலைவன்ற னிக்கொடி
மீன வேலை யிலற்றுடன் வீழ்ந்துழிப்
பானு கம்பனென னப்படு பாரிடர்
சேனை காவலன் றெற்றென நோக்கினன்.

(இ-ள்) அசுராதிபனுன சூரபன்மனுடைய ஒப்பற்ற வெற்றிக்கொடியானது அறுபட்டு மீன்களையுடைய கடலில் விழுந்தவுடனே அதனை விரைவாக கணத்தலைவருளொருவனுன பாநுகம்ப னென்பவன் கண்டனன்.—எ-று. (உ௦க)

கண்டு சிந்தை களித்துப் பெருமிதங்
கொண்டு குப்புற் றிசைத்துக் குனித்திடா
வண்டர் போற்றத்தன் னுயிரம் வாயினு
மொண்டி ரட்சங்க மொல்லைவைத் தூதினன்.

(இ-ள்) கொடியறுபட்டுக் கடலில் விழுந்ததனைக்கண்டு மனமகிழ்ச்சிகொண்டு பெருமையடைந்து குதித்து பாடி யாடிப் பாநுகம்பன் தேவர்கள் துதிக்கும் வண்ணம் தனது ஆயிரம் வாய்களிலும் விரைவாக ஒள்ளிய திரட்சியான சங்கங்களை வைத்தூதினன்.—எ-று. (உ௦உ)

கானு கம்படு கந்துகத் தேருடைப்
பானு கம்பன் பனிமதி யாயிர
மானு கம்பவை வாய்வைத் திசைத்தலுந்
தானு கம்பல தங்கிற்றவ் வோசையே.

(இ-ள்) கால்கள் நுகத்தடியிற் சென்று படுமாறு செல்லுகின்ற குதிரைகளையுடைய இரதத்தினையுடைய பானுகம்பனென்னும் பூதர்கள் தலைவன் குளிர்ச்சி பொருந்திய ஆயிரஞ் சந்திரர்களையொத்த சங்கங்களை வாய்களில்வைத்தூதுதலும் அவ்வோசை அநேக யுககாலம் இவ்வுலகத்திற் றங்கியது.—எ-று. (உ௦௩)

பாய்பெ ருப்புகழ்ப் பானுகம் பன்வளை
யாயி ரங்களு மார்த்திட வண்டர்த
நாய கன்றன் விறல்கண்டு நாரணன்
றூய சங்கு முழங்கிற்றுத் துண்ணென.

(இ-ள்) பரவிய மிகுந்த புகழினையுடைய பானுகம்பனுனவன் ஆயிரஞ் சங்கங்களை வாயில்வைத்தூதுதலும் அவ்வோசையால் தேவநாதனுன குமரப்பெருமானுடைய வெற்றியை யுணர்ந்து விரைவாக நாராயணனுடைய தூய்மையான சங்கமு முழங்கியது.—எ-று. (உ௦௪)

போத மங்கதிற் புங்கவர் யாவருஞ்
சோதி வேற்பண்டைத் தூயவ னேறுதேர்
மீது கேதன மில்லை வியன்கொடி
யாதி நீயென் றழலினை யேவினர்.

(இ-ள்) இவ்வண்ணமான சங்கத்தொனிகளுண்டாகாநிற்குங் காலத்தில் தேவர்கள் அனைவர்களுமாக அக்கினிதேவனைப்பார்த்து ஓ அக்கினிதேவனே! ஒளிபொரு

ந்திய வேலாயுதத்தினையுடைய தூய்மையாளனான குமரப்பெருமான் எழுந்தருளியிருக்கின்ற இரதத்தின்மீது கொடியில்லை ஆதலால் நீ அவனுக்குக் கொடியாக இருக்கக்கடவை என்றுரைத்து அக்கினிதேவனை அனுப்பினார்கள்.—எ-று. (உ0ரு)

ஏவ லோடு மெரிதழற் பண்ணவன்
வாவு குக்குட மாண்கொடி யாகியே
தேவ தேவன் றிருநெடுந் தேர்மிசை
மேவி யார்த்தன னண்டம் வெடிபட.

(இ-ள்) அனுப்பினவுடனே எரியாநின்ற தழல்வடிவனான தேவன் தாவாநின்ற மாட்சிமைபொருந்திய கொழிக்கொடியாகி தேவதேவனான குமரப்பெருமானுடைய அழகிய நெடிய இரதத்தின்மீது சென்றுநின்று அண்டம் வெடிபடும்வண்ணம் கூவினான்.—எ-று. (உ0சு)

படியி லாதமர் பண்ணவன் றேர்மிசைக்
கொடிய தாய்நின்று குக்குடங் கூயது
கடிய தானவர் கங்குல்பு லர்ந்திடும்
விடியல் வைகறை வேலையைக் காட்டல்போல்.

(இ-ள்) ஒப்பில்லாது விளங்காநின்ற தேவதேவனுடைய அழகிய இரதத்தின்மீது நின்றுகொண்டு கொழியினுருவங்கொண்ட அக்கினி கூவியது எதுபோலுமெனின் கொடிய அசுரர்களான இராத்திரிக்கு அழிவினைத்தராநின்ற விடியற்காலத்திலுள்ள வைகறைப்பொழுதினைக் காட்டுதலை யொத்திருந்தது.—எ-று. (உ0எ)

சங்க மோடுத பனனு மார்த்தனு
மங்குல் வண்ணத்து மாயவ னார்த்தனன்
பங்க யாசனப் பண்ணவ னார்த்தனன்
றிங்க ளார்த்தது செங்கதி ரார்ப்பவே.

(இ-ள்) பானுகம்பன் தனதாயிரம் வாய்களிலும் வைத்தூதிய சங்கத்துடனே கோழியான அக்கினிதேவனும் ஆரவாரஞ்செய்ததும் இத்தொனிகளைக் கேட்டு மேகம்போலும் திருமேனியினையுடைய திருமாலும் ஆரவாரித்தனன் கமலாசனனான பிரமதேவனும் ஆரவாரித்தனன் திங்களும் ஆரவாரித்தது சூரியனும் ஆரவாரித்தனன்.—எ-று.

மறலி யார்த்தனன் மாருதங் கட்கெலா
மிறைவ னார்த்தன னிந்திர னார்த்தன
னறைகட லற்கர சானவ னார்த்தனன்
குறைவில் செல்வக் குபேரனு மார்த்தனன்.

(இ-ள்) எமன் ஆரவாரித்தனன் வாயுக்களுக்கெல்லாம் தலைவனாகவுள்ள மஹாவாயுவானவன் ஆரவாரித்தனன் இந்திர னாரவாரித்தனன் கரையை மோதாநின்ற கடற்கிறைவனான வருண னாரவாரித்தனன் குறைவற்ற செல்வத்தினையுடைய குபேரனும் ஆரவாரித்தனன்.—எ-று. (உ0க)

ஆர்த்த வோசைபோ யண்டத்தை முட்டியே
சூர்த்த நோககுடைச் சூரபன் மன்செவிச்
சேர்த்து ளைக்குட் செறிதலுந் தேவனாப்
பார்த்த னன்கடு வுண்டன்ன பான்மையான்.

(இ-ள்) இவ்வண்ணம் இவர்கள் ஆரவாரியாநின்ற ஓசையானது சென்று அண்டத்தினை முட்டி, சீறிய பார்வையினையுடைய சூரபன்மனுடைய சிறப்புப்பொருந்திய

கர்ணதுவாரத்தினுள் நுழைதலும் அவன் அவ்வோசையை விடத்தினைப் பானஞ்செய்வதுபோலக் கருதித் தேவர்களைப்பார்த்தனன். (உ௦௰)

மாறி லென்முன் வருவதற் கஞ்சியே
பாறு போன்று பழுவத்து லைந்துளார்
தேறி வந்து தெழித்தன ரென்முனு
மாறு மாமுக னாற்றல்கொண் டேகொலாம்.

(இ-ள்) எதிரற்ற எனது எதிரே வருதற்குப்பயந்து கழுகுகளைப்போற் காட்டிலுலாவிய இவர்கள், சண்முகனுடைய ஆற்றலைக்கருதிப்போலும் அச்சத்தினைவிட்டு என்னெதிரிற் தேறுதலுடன் போந்து ஆரவாரித்தனர்.—எ-று. (உகக)

நன்று நன்றிது நான்முக னாதியா
நின்ற தேவர் நிலையழித் தொல்லையிற்
கொன்று பின்னர்க் குமரனை வெல்வனா
லென்று சீறினன் யாரையு மெண்ணலான்.

(இ-ள்) எத்தகையோரையும் பொருளாக மதியாத சூரபன்மன் இது நன்று நன்று நான் பிரமன் முதலியோராக இங்கு நிற்குந் தேவர்கள் நிலைமைகளைக்கெடுத்து விரைவாகக்கொன்று பின்னர் குமரனை வெல்வேன் என்று கூறிக்கொண்டு மிகுந்த கோபமுடையவனாகினான்.—எ-று. (உகஉ)

இருக்க மைந்தனி கலிவண் விண்ணிடைச்
செருக்கு தேவர் திறலினைச் சிந்துவா
னருக்க னோடிய வந்தரத் துயக்குதி
தருக்கு தேரினைச் சாரதி நீ யென்றான்.

(இ-ள்) இவ்விடத்தி லிக்குமரனோடு செய்யாநின்ற போர் நிற்கட்டும் சாரதி! நீ சூரியனுலவாநின்ற ஆகாயத்தில் செருக்கடைந்த தேவர்களை யழிக்கும்பொருட்டு தருக்கினையுடைய நமதிரதத்தினை யோட்டக்கடவை என்றான்.—எ-று. (உகங)

மற்றிவ் வாறு வலவனை நோக்கியே
சொற்ற காலைத் தொழுதெந்தை நன்றெனா
பொற்றை போலும் பொலன்மணித் தேரினை
வெற்றி யாகென விண்மிசைத் தூண்டினான்.

(இ-ள்) இவ்வண்ணஞ் சாரதியைப்பார்த்து சூரபன்மன் உரைத்தவுடனே அச்சாரதி வணங்கி எம்பெருமானே நல்லது என்று மலைபோன்றதும் அழகிய மணிகளையுடையதுமான இரதத்தினை வெற்றியுண்டாகுக என்று கூறி ஆகாய வீதியி லோட்டினான்.—எ-று. (உகச)

பாகன் றூண்டிய பாண்டிலந் தேரெழீஇ
மேகங் கீண்டு மிசைப்படு சூறையி
னாகங் கீறி யமரர்க ளீண்டிய
மாகஞ் சென்றது வானிழிந் தென்னவே.

(இ-ள்) சாரதியோட்டிய வட்டவடிவமான இரதமானது ஆகாயத்திற்கிளம்பி மேகமண்டலத்தினைப் பிளந்து அதற்குமேலுள்ள சூறைக் காற்றினூடலைக் கிழித்து தேவர்கள் நெருங்கிநிற்கின்ற ஆகாயவீதியில் வானினின்றும் இறங்கினதுபோல அடைந்தது.—எ-று. (உகரு)

சென்ற தேரொடு சேணிடைப் புக்குளான்
குன்ற மன்ன கொடுஞ்சிலை கோட்டியே
துன்று தேவர் தொகையிரிந் தோடுற
மன்ற வாளி மழைகளை வீசினன்.

(இ-ள்) சாரதியா லோட்டப்பட்டுச்சென்ற இரதத்துடனே ஆகாயத்திற் புகுந்து சூரபன்மன் மலைபோன்ற வளைவான வில்லினை வளைத்து நெருங்கி நிற்கின்ற தேவர்கூட்டம் விலகி யோடுமாறு அம்புமழை பெய்தனன்.—எ-று. (உசசு)

வீசுகின் றுழி விண்ணவர் மேற்சர
நீசன் விட்டிடு நீர்மையை நோக்கியே
யீசன் மாமக னீண்டுநின் றெண்ணிலா
வாசு கங்களுய்த் தங்கவை சிந்தினன்.

(இ-ள்) தேவர்கண்மீது அம்புமழையினை சூரபன்மன் வருஷிக்கின்றகாலத்தில் சிவபெருமானுடைய திருக்குமாரனான சண்முகப்பெருமான் இழிஞனான அசுரன் தேவர்கண்மீது அம்புவிடுதலைப்பார்த்து இவ்விடத்திலேயே நின்றுகொண்டு அளவற்ற அம்புகளைவிட்டு அவைகளை யழித்தினன்.—எ-று.

இவ்விடத்தி லென்றுரைத்தது தான் நின்று போர்புரிந்த போர்க்களத்தினை.

வேறு.

மற்றவை துணித்தபின் வடிக்கயிறு முட்கோல்
பற்றிய தடக்கையுளபாகுதனை நோக்கிக்
கொற்றவயி றாண்டியொரு குன்றைமெவளி கண்டோன்
றெற்றெனவிண் மேனமது தேர்விடுதி யென்றான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வேற்படையினை விடுத்து கிரவுஞ்சமலையைப் பிளந்த குமரப்பெருமான் சூரபன்மன் வானத்தினின்று விட்ட அம்புகளைத்தான் பூமியிலிரதத்தினின்று அழித்ததற்குப்பின்னர் வடிக்கயிற்றினையும் உளவுகோலினையும் பிடித்திருக்கின்ற விசாலமான கையினையுடைய வாயுவான சாரதியைப்பார்த்து நமதிரதத்தினை விரைவாக ஆகாய வீதியில் விடக்கடவை என்றனன்.—எ-று. (உசஅ)

என்னலு மிறைஞ்சியிர லைப்பரியின் மேலோன்
பொன்னுலகு பாருலகு புக்கெழுவ தென்ன
மின்னின்மிளிர் தேரதனை விண்மிசைக டாவி
நன்னெறி செலாவவுணர் நாயகன்மு னுய்த்தான்.

(இ-ள்.) என்று திருவாய் மலர்ந்தருளிய உடனே மான்வாகனத்தினையுடைய வாயுபகவான் வணங்கி பொன்னுலகமான சுவர்க்கத்திற்குப் பூவுலகமான மத்தியலோகம்போமாறெழுந்தாற்போல ஒளியொடு விளங்குகின்ற இரதத்தினை ஆகாயத்தின்மீது ஓட்டி நன்மார்க்கப்படி நடவாத கொடிய அசுராதிபனான சூரபன்மனெதிரே விட்டனன்.—எ-று. (உசகூ)

வையநெடு வானமிசை வல்லைபுகு மெல்லை
யையனிமை யோர்களயர்ந் தோடுவது நோக்கி
நையலிர் புலம்பலிர் நடுங்கலிர்க ளென்றோர்
செய்யகர மேந்திமுரு கன்கருணை செய்தான்.

(இ-ள்.) இரதமானது நீட்சியினையுடைய ஆகாயத்தில் விரைவாகப் புகும்பொழுது நமதிறைவனான குமரப்பெருமான் தேவர்கள் அயர்ச்சியடைந்து ஓடுவதனைப்

பார்த்து தேவர்களே நீங்கள் நையாதேயுங்கள் புலம்பாதேயுங்கள் நடுங்காதேயுங்கள் என்றுகூறி ஒரு செவ்விய திருக்கரத்தினை மேலெடுத்துத் தனது கருணைத்திறத்தினைக்காட்டினன்.—எ-று. (உ௨0)

கந்தன்மொழி வானவர்க ணத்தவர்கள் கேளா
வெந்தையிவண் வந்திடலின் யாமுயிர் படைத்தே
யுய்ந்தன மெனுவிரைவி லோடுவது நீங்கிச்
சிந்தைமகிழ் வத்தொடு திகந்தமுற நின்றார்.

(இ-ள்.) அஞ்சாதேயுங்களென்ற குமரக்கடவுளின் திருவாக்கினை தேவகணத்தவர்கள் கேட்டு இவ்விடத்திற்கு எம்பெருமான் வருதலால் நாம் உயிர்பெற்றுப் பிழைத்தோமென்று விரைவாக ஓடுதலை நிறுத்தி மனமகிழ்ச்சியுடன் திசைதங்களிற்பொருந்துமாறு நின்றார்கள்.—எ-று. (உஉக)

நின்றிடலும் வெவ்வவுண னீர்மையது நோக்கிப்
பின்றிடுவ ராம்பிரம னேமுதல தேவ
ரொன்றொர்சிறு வன்கொலெனை யுற்றெதிரு நீரா
னன்றிதென வேவெகுளி கொண்டுநகை செய்தான்.

(இ-ள்.) இவ்வாறு நிற்றலும் கொடிய வவ்வசுரன் அவைகளைப்பார்த்து பிரமன் முதலிய தேவர்கள் பிறகிடுவார்களாம் ஒரு சிறியவனும் என்னை அடைந்து எதிர்க்குந் தன்மையினையுடையவன் இது நன்று என்று கூறி கோபமுடையவனாகி நகை செய்தனன்.—எ-று. (உஉஉ)

காய்சின மிகுந்தவுணர் காவல னநந்த
மாசுகம் விரைந்துபட ராசுகம தென்ன
வீசுதலும் வாளிபல விட்டவை விலக்கி
யீசனருண் மாமதலை யேற்றிகல் புரிந்தான்.

(இ-ள்.) மிகுந்த கோபங்கொண்டு அசுரநாயகனான சூரபன்மன் அநந்தம்அம்புகளை விரைவாகச் செல்கின்ற வாயுவினைப்போல விடுதலும் சிவபெருமாளளித்த சிறந்த குமரப்பெருமான் பல்அம்புகளைவிட்டு அவைகளை கண்டித்து அவனெதிரிற்புகுந்து போர்புரிந்தனன்.—எ-று. (உஉங)

சுறுக்கொள மயிர்ப்பொடி யுயிர்ப்புவிடு சூரன்
கறைக்கதி ரயிற்பொலி கரத்தனிவர் தம்மிற்
செறுத்துடன் வடிக்கணை செலுத்திய கல்வான
மறைப்பது மறுக்குவது மாகிமலை வுற்றார்.

(இ-ள்.) சிறிய ரோம கூட்டங்கள் சுறுநாறும் வண்ணம் சுவாசம் விடுகின்ற சூரபன்மனும் இரத்தந்தோய்ந்த ஒளிபொருந்திய வேற்படையேந்திய அத்தத்தினையுடைய குமரப்பெருமானும் ஒருவருக்கொருவர் எதிர்த்துவடிக்கணைகளைவிட்டு அகலமான வானவெளியினைமறைப்பதும் அறுப்பதுமாக நின்றுபொருதார்கள்.—எ-று. (உஉச)

வேறு.

விரைந்திரு வோர்களும் வியன்கணை மாரிகள்
சொரிந்தனர் பேரமர் தொடர்ந்துசெய் போழ்தினி
லெரிந்தது மாதிர மிரங்கினர்பாருளர்
திரிந்தன சாரிகை சிறந்தவர் தேர்களே.

(இ-ள்.) குமரப்பெருமான் சூரபன்மன் என்னும் இருவரும்விரைந்து பெரிய பெரிய அம்புகளாகிய மழைகளைப்பெய்துகொண்டு பெரும்போரினை விடாமற் செய்கின்றகாலத்தில்திக்குகள் எரிந்தன. பூவுலகவாசிகள் வருந்தினார்கள் இருவரிர தங்களும் சாரிகையாகச் சுழன்றன.—எ-று. (உஉரு)

கறங்கினம் போல்வன கலஞ்செய்கு லாலன
திறங்கொளு மாழிகடி ரிந்தன மானுவ
மறங்கெழு சூறைகண் மயங்கின போல்வன
துறுங்கணை மாரிகள் சொரிந்தவர் தேர்களே.

(இ-ள்.) நெருங்கிய அஸ்திர வருஷங்களைப் பெய்கின்ற குமரப்பெருமான் சூரபன்மன் என்னும் இருவருமேறியுள்ள இரதங்கள் கறங்கினங்களைப் போல்வன. மட்பாண்டங்களை யியற்றுகின்ற குலாலர்களுடைய சக்கரஞ்சுழலுமாறுபோல சுழலாநிற்குந்தன்மையின ; மறம்பொருந்திய சுழற்காற்றுகளொன்றோடொன்று மயங்கினாற்போல்வன.—எ-று. (உஉசு)

பாதல மூழ்குவ பாரிடை சூழ்குவ
மாதிர மோடுவ வாரிதி சேர்குவ
பூதர மேவுவ பூமல ரோனகர்
மீதினு மேகுவ மீளுவ தேர்களே.

(இ-ள்.) அவ்விருவரிரதங்களும் பாதலத்தில் மூழ்குவன. பூமியிற்சுற்றுநிற்கும் திக்குகளிலோடாநிற்பன; கடலினிடத்தையடையா நிற்பன; மேருமுதலிய மலைகளிற் சேர்குவன விரிந்ததாமரை மலரிலிருந்த பிரமதேவனுடைய உலகத்திலுஞ் செல்வன ; முன் நின்ற இடத்திற்கே திரும்பிவருவன ஆயின. எ-று. (உஉஎ)

எண்டிசை சூழுமிருங்கடல் பாய்வன
விண்டொடு நேமி வியன்கிரி வாவுவ
கொண்டலி னிருள் கொண்டுழி போகுவ
வண்டமு மேகுவ வங்கவ ரேறுதேர்.

(இ-ள்.) அவ்விடத்திலவர்கள் ஏறியுள்ள இரதங்கள் எட்டுத்திக்குகளிலும் சூழ்ந்துள்ள பெரிய கடல்களிற்பாயா நிற்கின்றன; ஆகாயத்தையளாவிய பெரிய சக்கரவாளகிரியைத்தாண்டுவன; மேகங்களைப்போல அரிய இருள்பொருந்திய இடங்களுட்செல்வன. அன்றியும் நெருங்குமாறு ஒன்றுக்கொன்று செல்லாநிற்பன.—எ-று. (உஉஅ)

பெயர்ந்திடு தேருறு பிழம்பவை காணுபு
தியங்கினர் நான்முகர் தெரிந்திலர் சீருரு
மயங்கின ராதவர் மருண்டனர் வானவ
ருயங்கினர் பாருள ருலைந்தனர் நாகரே.

(இ-ள்.) செல்லாநின்ற இரதங்களிற் பொருந்திய பிரகாசத்தைப் பார்த்து பிரமர்கள் தியக்கமுற்றார்கள் சூரியர்கள் தங்கள் சிறந்த உருவங்களைக் காணாதவர்களாக மயங்கினார்கள். தேவர்கள் மருட்சியடைந்தார்கள். பூமியிலுள்ளவர்கள் துவட்சியடைந்தார்கள் நாகலோகவாசிகள் உலைவுற்றார்கள்.—எ-று. (உஉகூ)

முதிர்ந்திடு போரினர் முழங்கிய தேர்செல
வதிர்ந்தது பாருல கலைந்தன வேலைகள்
பிதிர்ந்தன மால்வரை பிளந்தது வான்முக
டுதிர்ந்தன தாரகை யுகுந்தன கார்களே.

(இ-ள்.) முதிர்ச்சியுற்ற போரினையுடையராகிய சிவசண்முகப்பெருமானும் சூரபன்மனும் ஏறியுள்ள முழக்கத்தோடும் கூடின இரதங்கள் செல்லாநிற்ப அவைகளின் செல்கையால் பூவுலமதிர்ந்தது; கடல்கள் கொந்தளித்தன. பெரியமலைகள் பிளவுபட்டு விழுந்தன; வானமுகடு பிளந்தது; நட்சத்திரங்க ளுதிர்ந்தன; மேகங்கள் சிதறிவிழுந்தன.

தேரிவை யிரண்டு மாகித் திகழுமூ தண்டமெங்குஞ்
சாரிகை வருதலோடுஞ் சண்முகன் மீது செல்லச்
சூரெனு மவுணர் கோமான் றொலையுரா ளெழிலி பொங்கி
யாரழன் மழைகான் றென்ன வடுசரமாரி தூர்த்தான்.

(இ-ள்.) சூரபன்மனதும் குமரப்பெருமானதுமாகிய இந்த இரண்டு தேர்களும் விளங்காநின்ற மூதண்டத்தினெவ்விடங்களிலும் சாரிகை வருதலும் சண்முகன்மீது செல்லுமாறு சூரபன்மனென்னு மசுராதிபன் உலகம் அழியுங்காலத்தில் மேகங்கள் மேற்கிளம்பி அரிய அக்கினிமழையைப் பொழிந்தாற்போல கொல்லாநின்ற அம்புமழையைத் தூர்த்தனன்.—எ-று. (உருக)

மழுப்படை யநந்த கோடி வச்சிரந் திகழ்மூச் சென்னிக்
கழுப்படை யநந்தகோடி கப்பண மநந்த கோடி
கொழுப்படை யநந்தகோடி குலிசவே லநந்தகோடி
யெழுப்படை யநந்தகோடி யிடையிடை யிடிபோ லுய்த்தான்.

(இ-ள்.) மழுவாயுதங்கள் அநந்தகோடி வச்சிரங்களும் விளங்காநின்ற மூன்று தலைகளையுடைய கங்கபத்திரங்களும் அநந்தகோடி, கப்பணங்கள் அநந்தகோடி, அலாயுதங்கள் அநந்தகோடி, குலிசங்களும் வேலாயுதங்ளும் அநந்தகோடி; எழுவாயுதங்கள் அநந்தகோடி என்னுமாறாய் இடையே இடையே இடியைப்போல விட்டனன்.—எ-று.

கூற்றுயிர் குடிக்குந் துப்பிற் கொடும்படை மாரி தன்னை
யாற்றலி னவுணர் கோமான் விடுத்தலு ழி யவற்றை யெல்லாங்
காற்றெனப் பகழி தூண்டி முறைமுறை கடிதிற் சிந்தி
மாற்றினன் றிரிந்தா னையன் மூதண்ட வரைப்பு முற்றும்.

(இ-ள்.) எமனுடைய உயிரினைக் குடிக்கின்ற பலம்பொருந்திய கொடுமையான அஸ்திரவருஷத்தை வன்மையுடனே அசுராதிபனான சூரபன்மன் விட்டவுடனே அவைகளனைத்தையும் வாயுவைப்போல அம்புகளை வரிசைவரிசையாக விரைவாகவிட்டு அழித்தவனாக அண்டமுகடுவரைக்கும் முருகையன் உலாவினான்.—எ-று. (உருரு)

இத்திறந் திரிந்த செவ்வே ளிடைதெரிந் தேழொ டேழு
பொத்திரந் தன்னைத் தூண்டிப்புகழுறு மவுணர் செம்மல்
சித்திரத் தேரு மாவின் றொகுதியுஞ் சிந்தி நீக்கக்
கைத்தனு வோடுந் தீயோன் கதுமெனப் புவிக்க ணுற்றான்.

(இ-ள்) இவ்வண்ணமுலாவின குமரக்கடவுள் சமயம்பார்த்து பதினாலம்புகளை விடுத்துப் புகழ்ச்சிபொருந்திய அசுரராஜனான சூரபன்மனுடைய அழகிய இரதத்தினையும் குதிரைக் கூட்டங்களையும் அறுத்தொழித்தலும் அக்கொடியவன் அவ்விடத்தினை விட்டு கையிற்பிடித்த விற்படையுடனே விரைவாகப் பூமியை யடைந்தான்.—எ-று. ()

நாணுடை வரிவில் வாங்கி நண்ணல னஞ்சு பில்கு
மேணுடை வயிர வாளி யெண்ணில தூண்டி யேற்பத்
தாணுவின் மதலை கண்டு தன்பெருஞ் சிலையைக் கோட்டித்
தூணிகொள் கணையின் மாரி தொடுத்தவை துணித்து விட்டான்.

(இ-ள்) வரியப்பட்ட நாணோடு கூடிய விற்படையினை வளைத்துப் பகைவனான அசுரன் வன்மைபொருந்திய வயிர அம்புகளை அளவற்றனவாக விட்டு எதிர்த்தலும் அதனை, சிவகுமாரனான சண்முகப்பெருமான் பார்த்துத் தமது பெரிய விற்படையை வளைத்து அணிரதத்திற் பொருந்திய அம்பின்மழையைத் தொடுத்து அவைகளைத் துண்டுபடுத்தியருளினான்.—எ-று. (உகூ)

துணிப்புறு மெல்லை வல்லேசூ டார்க்கணை யநந்த கோடி
தணப்பற விடுத்த லோடுஞ் சண்முக னவற்றை யெல்லாங்
கணைப்பெரு மழையான் மாற்றிக் காசிபன் றனது செம்ம
லணிப்படு தோண்மேற் பின்னு மாயிரம் பகழி யுய்த்தான்.

(இ-ள்) துண்டுபடுத்துங்காலையில் விரைவாகச் சூரபன்மன் ஒளிபொருந்திய அநந்தகோடி யம்புகளை நீக்கமின்றி விடுதலும் அவைகளை யெல்லாம் சண்முகப்பெருமான் மிகுந்தகணைமழையினாலகற்றி, காசிபவிருடிகுமாரனான சூரபன்மனுடைய அழகு பொருந்திய தோள்கண்மீது பின்னருமாயிர மம்புகளை விட்டனன்.—எ-று. (உகூசு)

ஊழியின் முதல்வன் மைந்த னோராயிரங் கணையுஞ் சூரன்
பாழியம் புயத்து மீது படுதலுங் கடிதே யிற்றுச்
சூழுறச் சிதறிற் றம்மா தொலைவிலா வயிரங் கொண்ட
காழ்கிளர் வரைமேல் வீழ்ந்த கன்மழைத் தன்மை யேபோல்.

(இ-ள்) ஊழியின் முதல்வனான சிவபெருமான் பெற்ற திருக்குமாரனான சண்முகப்பெருமான் விடுத்தருளிய ஓராயிர மம்புகளும் சூரபன்மனுடைய அகன்ற தோள்கண்மீதுபடுதலும் விரைவாக ஒடிந்து சுற்றிலுமாகச் சிதறின. அது எதுபோலுமெனில் கெடாதவைரம்பொருந்திய காழொடு விளங்கும் மலையின்மீது விழுந்த கன்மழைத்தன்மையைப்போலு மிருந்தது.—எ-று. (உகூஎ)

அந்தமில் வன்மை சான்ற வவுணன்மற் றதனை நோக்கி
முந்துறு வெகுளி தூண்ட முறுவலு முயிர்ப்புந் தோன்ற
வெந்தைதன் மொய்ம்பிற் செல்ல விராயிரம் பகழி வாங்கிச்
சிந்தையிற் கடிது தூண்டித் தேவரு மருள வார்த்தான்.

(இ-ள்) அளவற்ற வன்மையின் மிகுந்த அசுரனான சூரபன்மன் அதனைப்பார்த்து முற்படாநின்ற கோபமானது முன்னே தள்ளவும் புன்னகையும் பெருமூச்சுமுண்டாகவும் எம்பெருமானுடையதோள்களிற்படுமாறு இரண்டாயிரம்அம்புகளை எடுத்து மனோவேகத்திலும் அதிவேகமாகச் செல்லும்வண்ணம் விடுத்து தேவர்களு மருட்சியடையும்படி ஆரவாரஞ்செய்தனன்.—எ-று. (உகூஅ)

உட்டெளி வுற்றோர் காணு மொப்பிலா முதல்வன் றோண்மேல்
விட்டிடு பகழி முற்றும் வெந்துவெந் துகள தாகிப்
பட்டன திசைகண் முற்றும் பரந்தன பரத்தின் மேலோன்
கட்டழ லதனான் மாய்ந்த காமவேள் யாக்கை யேபோல்.

(இ-ள்) உள்ளே தெளிவு பொருந்தினவர்கள் காணுகின்ற ஒப்பற்ற முதல்வனான குமாரக்கடவுளின் தோள்கண்மீதுபடுமாறு சூரபன்மன் விடுத்த அம்புகளனைத்தும் வெந்து வெவ்வியதுகளாய் திசைகள்தோறும் சென்று பரந்தன. அது எதுபோலுமெனின் பரத்திற்சிறந்த பரமனுடைய நெற்றிக்கண்ணெருப்பால் இறந்து பட்ட மன்மதனுடைய சரீரத்தைப்போல.—எ-று. (உகூகூ)

ஆங்கது காலை தன்னி லறுமுக னம் படைத்த வைய
னீங்கரு நெறியா னுய்த்த நெடுஞ்சர மனைத்து மாற்றிப்

பாங்கமர் வயவர் மீதும் பாரிடப் படைகண் மீதுந்
தீங்கணை யழுத்த லுற்றான் றேவரை யிடுக்கண் செய்தான்.

(இ-ள்) அவ்வாறான சமயத்தில் ஆறு திருமுகங்களையுடைய நம்துபெருமான் விலகாத வழியாக விடுத்தருளிய கொடிய அம்புகளனைத்தினையும் விலக்கித் தேவர்கட்குத் துன்பத்தினைச்செய்த சூரபன்மன் குமரப்பெருமானுடைய அருகினிற்கின்ற வீரர்கண்மீதும் பூதப்படைகண்மீதும் படுமாறு கொடுமையான அம்புகளை விடுத்தான்.-எ-று.

தன்னிணை தானே யாகி நின்றிடுந் தனிவேல் வீர
னன்னதோர் தன்மை கண்டோ ராயிரம் பகழி பூட்டித்
துன்னலன் குனித்த சாபந் துணித்தனன் றுணியா முன்னம்
பின்னுமோர் சிலையை யேந்திப் பெருமுகி லிரிய வார்த்தான்.

(இ-ள்) ஒப்பாரு மிக்காருமற்றவனாகி நிற்கின்ற ஒன்றான வேற்படையினையுடைய வீரனான குமரக்கடவுள் அந்த சூரபன்மனுடைய செய்கையைப்பார்த்து ஓராயிரம் அம்புகளை வில்லிற்றொடுத்துவிட்டுப் பகைவன் வளைத்த வில்லினை ஒடித்தனன். அவ் வில்லொடிதற்கு முன்னமே அதனை நிலத்திலிட்டு வேறே யொருவில்லினை யெடுத்துக் கொண்டு பெரிய மேகமும் பின்னிடத்தக்க பெருந்தொனியுடனாரவாரித்தனன்.—எ-று.

இம்பரின் மலைந்த சூர னிம்மென வெருக்கொண் டேகி
யம்பரத் திடையே தோன்ற வன்னது குமரன் காணு
வும்பரிற் சென்று தாக்க வோரிறை யெதிர்ந்து நின்று
நம்பியொ டாடல் செய்வா னவிலரு மாயை சூழ்வான்.

(இ-ள்) இவ்விடத்தினின்று போர்செய்த சூரபன்மன் திடீரென்று அஞ்சினவனாகச் சென்று ஆகாயவெளியில் நிற்க, அவனதச் செய்கையைக் குமரக்கடவுள்பார்த்து ஆகாயத்திற்சென்று அவனுடன் போர்செய்தலும் ஒருக்ஷணநேரம் எதிர்த்து நின்று போர்புரிந்து பின்னர் ஆண்மகனிற்சிறந்த குமரப்பெருமானோடு போர்புரிதற்குக் கூறுதற்கரிய மாயையைச் செய்வானாயினன்.—எ-று. (உ௪உ)

விண்ணிடை நின்ற சூரன் விரைந்துடன் கரந்து சென்று
மண்ணிடை மீட்டுஞ் செல்ல மாநில வரைப்பிற் செவ்வே
டுண்ணென வந்து வெம்போர் தொடங்கலுந் தோற்ற மாற்றிக்
கண்ணகன் றாய நீத்தக் கனைகட னடுவ ணானான்.

(இ-ள்.) ஆகாயத்தில் நின்ற சூரபன்மன் விரைவாக மறைந்துசென்று பூமியிற் பின்னும் வராநிற்ப அவன் நின்ற அந்த பூமியில் குமரக்கடவுள் விரைவாக வந்து கொடும் போர் புரிதலும் அவ்விடத்தினின்றும் உருவமறைந்து இடமகன்றதாய்மையான தண்ணீர்க்கடல் நடுவுள் ஆயினன்.—எ-று. (உ௪௩)

ஆயிடை முருக வேள்சென் றடுசம ரியற்று மெல்லை
மாயையின் மறைந்து சூரன் மாதிர முடிவிற் றோன்ற
வேயென வாண்டுஞ் செவ்வே ளேகியே நெடும் போராற்றக்
காய்கன லுமிழும் வேலான் கரந்துபா தலத்தி னின்றான்.

(இ-ள்.) அவ்விடத்திற்கு குமரக்கடவுள் சென்று கொலைக்குரிய போர் புரிகின்ற பொழுது பின்னும் சூரபன்மன் மாயையினால் மறைந்து திகந்தத்திற்சென்று வெளிப்படையாகநின்றனன்; அவ்விடத்திற்கும் குமரப்பெருமான் ஏ என்றுரையாநின்ற காலவளவைக்குட்சென்று நெடியபோர் புரிதலும் சுடுகின்றதீப்பொறிகளைக் கக்குகின்ற வேற்படையினையுடைய சூரபன்மன் பின்னுமறைந்து பாதாளலோகத்திற்குட் போயினன்.—எ-று. (உ௪௪)

ஆறிரு தடந்தோள் வள்ள லதுகண்டு பிலத்து ளேகி
மாறமரி யற்று மெல்லை வல்லைதன் னுருவ மாற்றி
வீறுள சிமையச் செம்பொன் மேருவின் குவட்டி னிற்ப
வேறுடை முதல்வன் மைந்த னிம்மென வங்கட் சென்றான்.

(இ-ள்.) பன்னிரண்டு திருத்தோள்களையுடைய குமரப்பெருமான் சூரபன்மன் பாதாளத்திற்கு சென்றவதனைக்கண்டு அவ்விடத்திற்குச் சென்று மாறான போர்புரிகின்ற காலத்தில் விரைவாகத்தனது உருவத்தை மறைத்து உயர்ச்சி பொருந்திய பொன் மயமான கொடுமுடிகளையுடைய மேருமலையின் சிகரத்திற்சென்று நின்றான். உடனே அதனைக்கண்டு இடபக்கொடியினையுடைய முதல்வனான சிவபெருமானுடைய செல்வக் குமாரனான குமரப்பெருமான் விரைவாக அவ்விடத்திற்குச் சென்றனன்.—எ-று. ()

மேருவின் சிகர நண்ணி வேலுடைத் தடக்கை வீரன்
பேரமரி யற்றத் தீயோன் பின்னரு மாண்டு நீங்கி
நாரண னுலகிற் றோன்ற நம்பியுந் தொடர்ந்து போந்து
சூரெனு மவுண னோடு தொல்சம ராற்றி நின்றான்.

(இ-ள்.) மேருமலையின் சிகரத்திற்குச்சென்று வேற்படையினையுடையவீரனான குமரக்கடவுள் பெரும்போர் புரிதலும், கொடியவனான சூரபன்மன் பின்னும் அவ்விடத்தினின்றும் விலகி நாராயணனுடைய உலகத்திற்சென்று நிற்க, குமரக்கடவுளும் அவ்விடத்திற்கு பின்றொடர்ந்து சென்று சூரனென்னும் அசுரனுடனே பெரும்போர் புரிந்தனன்.—எ-று. (உசசு)

ஆற்றிடு கின்ற காலத் வுணர்கோ னண்ட கோள
மேற்றிகழ் வாயில் செல்ல விமலனு மங்க ணேகி
யேற்றெதிர் மலையா வன்னா னேறிய விவுளித் தேரைக்
கூற்றுறழ் பகழி தன்னா லட்டனன் கொற்றங் கொண்டான்.

(இ-ள்.) இவ்வண்ணம் பலவிடங்களிலும் சென்று போர்புரிகின்ற காலத்தில் அசுரமன்னவனான சூரபன்மன் அண்டகோளத்தின்மீது விளங்குகின்ற வாசலிற்குட் சென்றான். குமரக்கடவுளுமவ்விடத்திற்குச் சென்று எதிர்த்துப் போர்புரிந்து அவனேறியிருந்த குதிரைகள் பூட்டியுள்ள இரதத்தினை கூற்றனையொத்த அம்பினால் அழித்து வெற்றியடைந்தனன்.—எ-று. (உசஎ)

கந்துக விசய மான்றே ரிற்றலுங் கடுங்கோன் மன்ன
னிந்திர ஞால மென்னு மெறுழ்மணித் தடந்தேர் தன்னைச்
சிந்தனை செய்த லோடுஞ் சேண்கிளர் செலவிற் றாகி
வந்திட வதன்மே லேறி வல்லைபோர் புரித லுற்றான்.

(இ-ள்.) குதிரைகள் பூண்ட இரதமழிதலும் கொடுங்கோலரசனான சூரபன்மன் இந்திரஞாலமென்கின்ற வன்மையுடன் மணிகள் பொருந்திய பெரிய இரதத்தினை நினைத்தனன் நினைத்தலும் அது வானில் விளங்காநின்ற வருகையினையுடையதாய்வருதலும் அதன்மீது ஏறிக்கொண்டு விரைவாகப் போர்புரிந்தனன். (உசஅ)

மண்டமர் புரியு மெல்லை வள்ளறன் பகழி தன்னா
லண்டம தடைந்த வாயி லடைத்தது மப்பா லுள்ள
தண்டம தெல்லாஞ் செல்லாத் தன்மையுந் தகுவர் கோமான்
கண்டன னன்று நன்றென் னிறைத்தொழிற் காவ லென்றான்.

(இ-ள்.) நெருங்கி நின்று போர்புரிகின்ற காலத்தில் குமரக்கடவுள் தன் அம்பினால் அண்டத்திலுள்ள வழியினை அடைத்ததும் அடுத்த அண்டத்திலுள்ள சேனையினை

த்தும் வராமல் நின்ற தன்மையும் அசுராதிபன் கண்டு நல்லது நல்லது யான் அரசுசெலுத்துந் திறம் என்று கூறினன்.—எ-று. (உசஃ)

இறைத்தொழி லவுணர் செம்ம லேந்துதன் சிலையை வாங்கித்
திறத்தொடு மநந்த கோடி செஞ்சரந் தூண்டி யண்ட
நெறிப்படு வாயில் பொத்து நெடுங்கணைக் கதவ முற்று
மறுத்துநுண் டூளி யாக்கி யம்பரஞ் சுழல விட்டான்.

(இ-ள்.) இறைமைத்தொழிலினையுடைய அசுராதிபன் தான் பிடித்துள்ள அழகியவிற்படையினைவளைத்து, திறமையுடனே செவ்விய அநந்த அம்புகளைவிட்டு அண்டமார்க்கத்திலுள்ள வழியினைத்துளைத்து நெடிய கணைகளாகிய கதவங்கள் முழுமையும் அறுத்து நுண்ணிய தூளியாகச் செய்து ஆகாயத்திற்சுழலும் வண்ணம் விடுத்தனன்.

காவல னண்ட வாயிற் கணைகளின் கபாட நீக்கி
மாவொடு களிறுந் தேரும் வயவரும் வரம்பின்றாகி
யோவரு நெறியி னப்பாலுற்றதன் றானை தன்னைக்
கூவினன் வருக வென்று குவவுத்தோள் கொட்டியார்த்தான்.

(இ-ள்.) அரசனாகிய சூரபன்மன் அண்டவாயிலிலுள்ள கதவுகளைத்திறந்து குதிரைகளுடன் யானைகளும் இரதங்களும் காலாட்படைவீரர்களும் அளவு இல்லாமல் கெடுதலற்றதன்மையாக மறுபுறத்திலிருந்தனவாகிய தனது சேனைகளை வாருங்களென்று கூவினவனாய்த் திரண்ட தோள்களைக்கொட்டி ஆரவாரித்தனன்.—எ-று. (உஙச)

ஆர்த்திடு கின்ற காலத் தண்டத்தி னப்பா னின்ற
தேர்த்தொகை களிற்றி னீட்டந்திறல் கெழுமிவுளிப் பந்தி
சூர்த்தடு மவுண வெள்ளந் துண்ணென விண்டையேகிப்
போர்த்தொழின் முயன்றுசெவ்வேள் புடையுறத்தெழித்துச்சூழ்ந்த.

(இ-ள்.) ஆரவாரஞ்செய்தவுடனே அண்டத்தினப்புறத்தில் நின்றதேர்த்தொகைகளும் யானைக்கூட்டங்களும் வன்மைபெற்று விளங்குகின்ற குதிரைப்பந்திகளும் அச்சம்பொருந்திய அசுரவெள்ளங்களுந்திடீரென்று இவ்விடத்திற்கு வந்து போர்த்தொழிலின் முயற்சித்துக் குமரவேளின் சுற்றிலுமாக நெருங்கிச் சூழ்ந்தன.—எ-று.

நீணுதல் விழியின் வந்த நிருமலக் கடவு டன்னை
யேனொடு மண்டத் தப்பா லிருந்திடு தானை சுற்றச்
சேணுறு நெறிக்க ணின்ற திசைமுகன் முதலாந் தேவர்
காணுத லோடு முள்ளங் கலங்கிமற் றினைய சொல்வார்.

(இ-ள்.) சிவபெருமானுடைய நீட்சியான நெற்றிவிழிகளின் வழியாகத் திருவவதரித்த நின்மலனான குமரக்கடவுளை வன்மையுடனே அண்டத்தினப் புறத்திலிருந்த சேனைகள் சூழ்ந்துகொள்ளுதலும் ஆகாயமார்க்கத்தில் நின்ற பிரமன்முதலிய தேவர்கள் அச்சேனைகளின் சூழ்ச்சியைக் கண்டவுடனே உள்ளங்கலங்கி இதனை யுரைப்பாராயினர்.

காலமோ டுலக முண்ணக் கனன்றெழு கரிய தீயின்
கோலமோ வண்டத் தப்பாற் குரைபுன னீத்தந் தானோ
வாலமோ வசனிக் கொண்மூ வாயிர கோடி சூழ்ந்த
சாலமோ யாதோ வென்று தலைபனித் திரியல் போனார்.

(இ-ள்.) ஊழிகாலத்துடனே உலகத்தினை யுண்ணும்வண்ணம் சீறி எழாநின்ற கரிய தீயின் கோலமோ அண்டத்தின் அப்புறத்தில் நின்றுள்ள சத்தத்தோடு கூடின சலப்பிரவாகமோ விஷமோ இடிகளுடனே அநேகமாயிரமாகச் சூழ்ந்த மேகசாலமோ யாதோ என்றுரைத்தவர்களாய் தலைநடுக்கங்கொண்டு விலகிப்போனார்கள்.—எ-று.

ஆயின காலை தன்னி லண்டங்க டோறு நின்ற
மாயிருந் தகுவன் றானை வந்துதன் மருங்கு சுற்றிப்
பாய்புனன் முகில்கான் றென்னப் படைத்தொகை வீசி யார்ப்பத்
தீயுரு வான செம்மல்சி றிதுதன் னாட்டம் வைத்தான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமயத்தில் அண்டங்கள்தோறும் நின்றுள்ள மிகவும் பெரிய அசுரனான சூரபன்மனுடைய சேனைகள் வாராநின்று தனதருகிற் சூழ்ந்துகொண்டு பாயாநின்ற நீரினை மேகஞ்சிதறினாற்போல ஆயுதவகைகளைவீசி ஆரவாரித்தலும் தீமயமான திருமேனியினனான குமாரசுவாமி அவ்வாறு செய்கின்ற அவர்கள்மீது தமது திருக்கண்பார்வையைச் சற்றே வைத்தருளினார்.—எ-று. (௨௫௫)

அடலையி னலத்தை வீட்டி யரும்பெற லாக்கஞ் சிந்தி
யடலையி னுணர்வின் றாகு மவுணர்கோன் றானை முற்று
மடலையி னெடுவே லண்ண லழலெழ விழித்த லோடு
மடலையி னுருவா யண்டத் தொல்லுரு வழித்த மன்றே.

(இ-ள்.) வன்மைபொருந்திய நெடிய வேற்படையினையுடைய குமரக்கடவுள் கண்களைத்திறந்துதீப்பொறிபறக்கப்பார்த்தவுடனே அப்பார்வையிலுண்டான தீப்பொறிகள்காணவொட்டாமற் கெடுக்கின்ற பூதவிருளின்றன்மையைப்போல மெய்ப்பொருளையுணர்தற்கு ஏற்ற ஞானவுணர்ச்சியற்ற அசுராதிபனான சூரபன்மனுடைய சேனைகளனைத்தும் அழிதலற்ற நன்மையை யிழந்து கிடைத்தற்கரிய செல்வத்தையும் இழந்து சாம்பரின் வடிவமாமாறு அவைகளின் பழைய உருவங்களை அழித்தன.—எ-று. (௨௫௬)

முற்படு மனிக முற்று முடிதலு முடித லின்றி
யெற்படு மண்டத் தப்பா லீண்டிய பதாகினிக்குட்
பிற்பட வளப்பில் சேனை பெயர்ந்துமற் றீண்டை துன்னிச்
சிற்பரன் குமரன் றன்பாற் படைமுறை சிதறிச் சூழ்ந்த.

(இ-ள்.) எதிரினின்ற சேனைகளனைத்தும் அழிதலும் அழிதலில்லாமல் ஒளிபொருந்திய அண்டத்திற்கப்புறத்தி னெருங்கிய சேனைகளுக்குள் பின்னரும் அளவற்ற சேனைகள்வந்து இவ்விடத்தில் நெருங்கி சிற்பரனாகிய சிவபெருமான் அளித்தருளிய குமரக்கடவுளின் முன்னே ஆயுதவகைகளை விட்டுக்கொண்டுவந்தன.—எ-று. (௨௫௭)

பரப்பொடு மிடைந்த தானைப் பரவையை நோக்கி யைய
னெருப்புமிழ் தன்மைத் தென்ன நெட்டுயிர்ப் பனில முந்தி
யுரப்பினன் சிறிதே யற்றா லும்பரிற் குவிந்த பூளைப்
பொருப்பிடை யழல்புக் கென்னப் பூழியா யுலகம் போர்த்த.

(இ-ள்.) பரவுதலாக நெருங்கிய சேனாசமுத்திரத்தைப்பார்த்து நமது சுவாமியானவர் தீயை யுமிழ்ந்ததன்மையைப்போல நெடுமூச்சான வாயுவினைவிட்டு சற்றே யுரப்பினர்; அவ்வுரப்புதலினால் வானமளாவக் குவிந்துகிடந்த பூளைப் பஞ்சுமலையினில் தீப்பிடித்தாற்போல அச்சேனை கண்முழுமையும் புழுதியாகி உலகத்தினை மூடிக்கொண்டன.—எ-று. (௨௫௮)

மாட்சியி னுலவு சேனை வடிவெலாம் விடுத்துத் தொல்லை
மாட்சியி னுயிரே தாங்கி மலைதுமென் றுன்னிப் பின்னுஞ்
சூட்சியின் வளைந்த வாபோற் சோதிவேற் குமரன் றன்பாற்
சூட்சியின் மேவிற் றம்மா தூயநுண் டுகளி னீட்டம்.

(இ-ள்.) மாட்சிமையாக வுலவாநின்ற சேனைகள் தம் பழய வடிவமனைத்தினையும் விட்டு பழைமையான மாட்சிமைபொருந்திய உயிரினை மாத்திரங் கைக்கொண்டு போர்புரிவோமென்று கருதி பின்னரும் தந்திரத்துடனே வளைந்துகொண்டாற்போல ஒளிபொருந்திய வேற்படையினையுடைய குமரக்கடவுளினிடத்தில் சூட்சுமரூபத்துடனே வந்து சேர்ந்தன தூய்மையும் நுண்மையும் பொருந்தியதுகளின் கூட்டம்.—எ-று.

அந்தமி ருனை முற்று மத்தனோ ருங்கா ரத்தால்
வெந்துக ளாகப் பின்னு மேலையண் டத்து னின்ற
தந்தியும் பரியுந் தேருந் தானவப் படையு மார்த்து
வந்துவந் தயலிற் சூழ வரம்பிலா முதல்வன் கண்டான்.

(இ-ள்.) அளவற்றனவாகிய சேனைகள் முழுமையும் செவ்வொளி பொருந்திய திருமேனியினையுடைய குமரப்பெருமான் செய்த ஒரு உங்காரத்தொனியினால் வெவ்வியதுகளாகுதலும் பின்னரும் மேலண்டத்தினின்ற யானையும், குதிரையும், இரதமும் அசுரசேனையும் ஆரவாரஞ் செய்துகொண்டுவந்து அருகிற் சூழ்ந்துநிற்ப அதனை வரம்பறு பெருங்குணத்து வள்ளலாகிய குமாரமுதல்வன் கண்டனன்.—எ-று. (உசுο)

ஆதிநா யகன்விட் டுள்ள படையெலா மநந்த கோடி
சோதியார் கதிருந் தீயும் பணிகளும் போலத் தோன்றி
யேதிலா னனிக மாகி யிம்பருற் றனவி மைப்பின்
பாதியின் முன்ன மட்டுப் பெருவிறல் படைத்த மன்னோ.

(இ-ள்.) முழுமுதற்கடவுளான குமரப்பெருமான் விடுத்தருளிய படைகளெல்லாம் அநந்தகோடி ஒளிபொருந்திய சூரியர்களையும் அக்கினிகளையும் அரவங்களையும் போல உருக்கொண்டு பகைவனுடைய சேனையாக இவ்விடத்திலிருந்தனவற்றை அரை இமைப்பொழுதிற்கு முன்னரே கொன்று பெரிய வெற்றியை அடைந்தன.—எ-று.

திருத்தமிழ் மதுரை தன்னிற் சிவன்பொரு ளிறுக்கு மாற்று
உருத்திர சருமனாகி யுற்றிடு நிமலன் வெய்போ
ருருத்திகொள்கணிச்சி சூல மாழிதண் டெழுவதாகுங்
கரத்தினிற் படைக டம்மை நோக்கியேக பூறலுற்றான்.

(இ-ள்.) திருமிகுந்த தமிழினையுடைய மதுராநகரத்தில் சிவபெருமானாலுரைக்கப்பெற்ற பொருளிலக்கண நூலினுரையையளந்து காணுமாறு உருத்திரசருமனாக வுறுகின்ற நிமலனான குமாரசுவாமி வெவ்வியபோரினின் விருப்பம்பொருந்திய கண்ட கோடரி சூலம், சக்கரம், தண்டம், எழு என்கின்ற தங்கரவாயுதங்களைப் பார்த்துரையாநின்றான்.—எ-று. (உசுஉ)

வென்றியம் படைகாள் கேண்மோ விரைந்துடன் றழுவி நம்பார்
சென்றிடு மனிகந்த னனைச் சென்னெறி பெறுமு லப்பா
னின்றிடு படையை யெல்லா நீவிர்பல் லுருக்கொண் டேகிக்
கொன்றிவண் வருதி ரென்று கூறிமற் றிவற்றைத் தொட்டான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய ஆயுதங்களே கேளுங்கள், விரைவாக ஒரு கூட்டமிறந்து பட்டவுடனே பின்னும் முன்னிருந்தன போலவே நம்மிடத்திற்கு வராநிற்கின்ற சேனைகள் இன்னொருமுறை நம்மிடத்தி லடையாத மார்க்கத்தினை யுடையனவாக நீங்கள் பலவுருவங்களைக்கொண்டு சென்று மறு அண்டங்களில் நிற்கின்ற சேனைகளனைத்தையும் கொலைசெய்து பின்னர் இவ்விடத்திற்கு வாருங்களென்று திருவாய்மலர்ந்தருளி அவ்வாயுதங்களை விடுத்தருளினன்.—எ-று. (உசுஙு)

ஆதிநா யகன்விட் டுள்ள படையெலா மநந்த கோடி
சோதியார் கதிருந் தீயும் பணிகளும் போலத் தோன்றி
யேதிலா னனிக மாகி யிம்பருற் றனவி மைப்பின்
பாதியின் முன்ன மட்டுப் பெருவிறல் படைத்த மன்னோ.

(இ-ள்.) முழுமுதற்கடவுளான குமரப்பெருமான் விடுத்தருளிய படைகளெல்லாம் அநந்தகோடி ஒளிபொருந்திய சூரியர்களையும் அக்கினிகளையும் அரவங்களையும் போல உருக்கொண்டு பகைவனுடைய சேனையாக இவ்விடத்திலிருந்தனவற்றை அரை இமைப்பொழுதிற்கு முன்னரே கொன்று பெரிய வெற்றியை அடைந்தன.—எ-று.

தூயதோர் குமரற் சூழ்ந்த படையைமுன் றொலைத்து வீட்டி
யேயின படையோ ரைந்து மிம்பரே யொழிய நின்ற
வாயிரத் தோரே ழண்டத் தகலமுஞ் சென்று சென்றாங்
கோய்வற வெழுந்த தானை முழுதுமட் டலைவு கின்ற.

(இ-ள்.) தூய்மையாளனை குமரக்கடவுளைச் சூழ்ந்துநின்ற சேனைகளை முன்னே அழித்தொழித்து அக்குமரக் கடவுளா லனுப்பப்பட்டுச் சென்ற ஐவகைய வாயுதங்களும் இவ்விட நீங்கலாக விருக்கப்பட்ட ஓராயிரத்தேழண்டப்பரப்புகளிலும் சென்று சென்று அவ்விடங்களி லோய்வின்றி எழுந்த சேனைகளையெல்லாம் கொன்றுலவாநின்றன.—எ-று. (உசுச)

ஐவகைப் படைகண் முற்று மண்டங்க டோறு நின்ற
வெவ்விய வவுணர்த் தேய்த்து விரைவொடு திரித லோடுந்
தெவ்விய லவுணர் மன்னன் செயிர்த்துமற் றிதனை நோக்கி
யிவ்வொரு கணத்தின் முன்ன மிவனுயி ருண்ப னென்றான்.

(இ-ள்.) மழு, சூலம், சக்கரம், தண்டம் எழு என்னும் ஐவகைய ஆயுதங்களும் ஒவ்வோரண்டங்களிலும் நின்றுள்ள கொடிய அசுரர்களைக்கொன்று விரைவுடனே யுலாவுதலும் பகையாளனாக நிற்கின்ற அசுராதிபன் சீற்றங்கொண்டு இச்செய்கையைப் பார்த்து இந்த ஒரு கணப்பொழுதிற்குள்ளேயே இவனுயிரை உண்கின்றேன் என்று கூறினான்.—எ-று. (உசுரு)

சாற்றியித் தன்மை தன்னைத் தானவர்க் கரசன் முன்னங்
கூற்றுயிர் குடித்த நோன்றாட் பண்ணவன் கொடுப்பக் கொண்ட
மாற்றருந் திகிரி தன்னை வாங்கினன் வழிபட் டேத்திக்
காற்றினுங் கடிது செல்லக் கந்தவேண் மீது விட்டான்.

(இ-ள்.) அசுராதிபனான சூரபன்மன் இவ்வண்ணமுரைத்து முன்னாளில் எமனை யுதைத்து அவனுயிரைக் குடித்த வன்மைபொருந்திய திருவடியினையுடைய சிவபெருமானளிக்கப்பெற்ற மாற்றுதற்குக்கூடாத சக்கரத்தினை எடுத்து வணங்கித் துதித்து வாயுவினும் அதிக விரைவாகச் செல்லும் வண்ணம் கந்தக்கடவுண்மீது விடுத்தான்.-எ-று.

நோன்மை - வன்மை. (உசுசு)

விட்டிடு திகிரி யாரும் வெருக்கொள விரைந்து சென்று
கிட்டிய காலைச் செவ்வேள் கிளர்ந்ததோர் பாணி நீட்டி
வட்டணை நேமி தன்னை வருதியா லென்று பற்ற
வொட்டல னதனை நோக்கி யுளந்தளர்ந் துயிர்த்து நின்றான்.

(இ-ள்.) சூரபன்மன் விடுத்த சக்கரப்படையானது யாவரும் பயப்படும்படி விரைவாகச்சென்று நெருங்கியவுடனே குமரக்கடவுள் விளங்காநின்ற ஒருகையினைநீட்டி

வட்டணைபுரிந்துகொண்டு வராநின்ற வச்சக்கரப்படையினை வரக்கடவை யென்றனைத்துப் பிடித்தலும் அதனைப் பகைவனான சூரபன்மன் பார்த்து மனந்தளர்ந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு நின்றனன்.—எ-று. (௨சுஎ)

உண்ணிலா மாயை வல்ல வொருதனித் தேர்மே னின்றோ
னெண்ணிலா வுருவங் கொண்டே யிருங்கணை மாரி தூர்ப்பத்
தெண்ணிலா மௌலி யண்ண லுதவிய செம்ம லோக்கி
நண்ணலா னொருவன் மாய நன்றுநன் றென்று நக்கான்.

(இ-ள்.) உள்ளே பொருந்திய மாயையின் வல்லமையுள்ளதான ஒப்பற்ற இந்திரஞாலத்தின்மீது நின்றவன் எண்ணற்ற உருவங்களையடைந்து பெரிய சரவருஷத்தினைப் பொழியாநிற்ப, அதனை, தெள்ளிய நிலவினையணிந்த மௌலியினையுடைய இறைவன் அளித்த குமரக்கடவுள் பார்த்து பகைவனான இவ்வொருவனுடைய மாயம் நன்றாகவிருக்கின்றது நன்றாகவிருக்கின்றது என்று திருவாய்மலர்ந்து நகைத்தருளினன்.—எ-று.

சிறுநகை செய்து மேலாஞ் சேதனப் பகழி பூட்டி
யறுமுக னவுணர் செம்ம லாற்றிடு மாய முற்று
மிறைதனின் முடித்தி யென்றே யேவலும் விரைவி னேகி
முறைநெறி பிழைத்தோன் மாய முற்றொருங் கட்ட தன்றே.

(இ-ள்.) மேலோனான சிவசண்முகப்பெருமான் புன்னகை செய்தருளி மேன்மைபொருந்திய ஞானஸ்திரத்தினை வில்லிலேற்றி அசுராதிபனியற்றிய மாயையினைத்தையும் நொடிப்பொழுதி லழிப்பாயாகவென்று விடுத்தருளுதலும் அது விரைவாகச்சென்று நியாயமார்க்கத்தினின்றுந் தவறியுள்ள சூரபன்மனுடைய மாயையினைத்தையும் ஏககாலத்தி லழித்தது.—எ-று. (௨சுகூ)

மாயையி னுருவ நீங்க வலியழிந் துள்ள மாழ்கித்
தீயவ னொருவ னாகிச் சேணுயர் தேரி னின்று
ளயது தெரிந்து வானோ ரறுமுகத் தவனைப் போற்றிப்
பாய்புனற் கடலி னார்த்துப் பனிமலர் மாரி தூர்த்தார்.

(இ-ள்.) மாயாரூபங்களொழிய அசுரன் வலியழிந்து மனநிலைசோர்ந்து கொடிய தானொருவனேயாகி ஆகாயத்தைபளாவிய இரதத்தில் நின்றனன்; அந்தச்செய்கையைத் தேவர்களறிந்து சண்முகப்பெருமானைத்துதித்து, பரவிய நீர்க்கடலைப்போல ஆரவாரித்துக்கொண்டு குளிர்ச்சிபொருந்திய புட்பவருஷம் பெய்தார்கள்.—எ-று. (௨எ0)

தூர்த்தனுந் தேருந் தானுந் துண்ணெனக் கரந்து சூரன்
பேர்த்திடு மண்ட கூடப் பித்திகை வாயி லெய்தி
யார்த்தறை கூவிப் புக்காங் கப்புறத் தண்டஞ் செல்லத்
தீர்த்தனு மதனை நோக்கித் தீயனைத் தொடர்ந்து போனான்.

(இ-ள்.) தேவர்கள் புட்பவருஷம் பெய்தலும் சூரபன்மன் இரதமுந் தானுமாக விரைவாக மறைந்து திறந்துவைக்கப்பட்டுள்ள அண்டகூடத்தின் சுவர்வாசலையடைந்து ஆரவாரஞ் செய்துகொண்டறைகூவினவனாகப் புகுந்து அப்புற அண்டத்திற்குச் செல்லாநிற்ப அதனை அழிவற்ற குமரப்பெருமானும் கண்டருளி அக்கொடியனைத் தொடர்ந்துபோயினன்.—எ-று. (௨எக)

தொடர்ந்துதன் மனத்திற் செல்லுந் தொல்லைமா விரதத் தோடுங்
கடந்தபே ராடன் மிக்க காசிபன் றனய னின்ற
விடந்தலைப் படலு மன்னா னெந்தையோ டிகற்போ ராற்றி
யடுந்திறன் மாயை நீரா லப்புறத் தண்டம் போனான்.

(இ-ள்.) சண்முகப் பெருமான் தன் மனம்போற் செல்லும்படியான பழய பெரிய இரதத்துடனே கடக்கப்பெற்ற பெரும்போரினையுடைய காசிப குமாரனை சூரபன்மன் நின்ற இடத்திற் சேருதலும், உடனே அவன் எம்பெருமானோடு வன்மைபொருந்திய பெரும்போர் செய்து அழிக்கத்தக்க திறலினையுடைய மாயையின்தன்மையினால் அப்புறத்தண்டத்திற்குச் சென்றனன்.—எ-று. (உஎஉ)

இந்நிலை யவுணர் கோமா னிருநிலத் தண்ட முற்று
மின்னெனப் படர்ந்து தோன்றி வெய்யபோர் விளைத்து நின்று
பின்னரும் கரந்து செல்லப் பிரானுமவ் வண்டந் தோறுந்
துன்னலன் றனைவி டாது தொடர்ந்தம ரியற்றிப் போனான்.

(இ-ள்.) இவ்வண்ணமாக அசுராதிபன் பெரிய பூமியினண்டங்கண் முழுதிலும் மின்னலைப்போல சென்று காணப்பட்டு அவ்வவ்விடங்களிலும் நின்று கொடும் போர்புரிந்து பின்னையும் மறைந்துசெல்ல நங்கடவுளுமந்த வண்டங்கள் தோறும் பகைவனை விடாது பின்பற்றிச்சென்று போர்புரிந்துகொண்டே சென்றனர்.—எ-று. (உஎ௩)

வேறு.

ஆய காலை யயன்முதற் றேவர்க
ளேய மிக்க குரவரை நீங்கிய
சேயி னோர்களிற் றேம்பித் திருமக
னாய கன்றனை நோக்கி நவிலுவார்.

(இ-ள்.) எம்பெருமானான சிவசண்முகப் பெருமானும் அவன் பகைவனான சூரபன்மனும் வேறு வேறு அண்டங்களிற்சென்று போர்புரிகின்ற அந்த சமயத்தில் பிரமன் முதலிய தேவர்கள் மிகுந்த வன்புள்ள தாய்தந்தையர்களை விட்டு விலகியிருக்கின்ற சிறுமைந்தர்களைப்போல தேம்புதலடைந்து திருமகள் மணாளனைப் பார்த்துரைக்கின்றனர்.—எ-று. (உஎச)

வலங்கை வாளுடை மாயைதன் மாமகன்
பொலன்கொ ளண்டப் புரைதனுட் போயினா
னிலங்கு வேற்படை யெந்தைதன் போரிடை
விலங்கி னானல னென்றும் விளிகிலான்.

(இ-ள்.) வலதுகையில் வாளினையுடைய மாயையின் முதற்குமாரனான சூரபன்மன் பொன்மயமான அண்டவழியாகச் சென்றான். என்றுமழியாத அச்சூரன் விளங்காநின்ற வேற்படையினையுடைய எம்பெருமானுடைய போரினில் இறந்தகன்றானில்லை.—எ-று.

பொலன்கொள் என்பதற்கு அழகுபொருந்திய என்று முரைக்கலாம். (உஎரு)

மாயை யாற்றவும் வல்லவ னீண்டொரீஇப்
போய தன்மை புணர்ச்சிய தேயலா
லாயின் வேறிலை யா றிரு மொய்ம்புடைத்
தூயன் மற்றது சூழ்ந்திலன் போலுமால்

(இ-ள்.) மாயைகளைச் செய்தற்கும் வல்லவனாகிய சூரபன்மன் இவ்விடத்தை விட்டுச்சென்றதன்மை தந்திரமேயன்றி ஆராயுமிடத்தில் வேறேஇல்லையாம். இந்தத்தன்மையினை பன்னிரண்டு தோள்களையுடைய நம்பெருமான் கருதினானில்லையாயிருக்கலாம்.—எ-று.

மாயையின்வல்ல சூரன்பின்னே அவனைத் தொடர்ந்து சென்றாலும் அவனாற்றலினும் இவனாற்றல் அதிகமாதலின் தீங்கடையான் என்பதை விளக்குவான் "ஆறிரு மொய்ம்புடைத்தூயன்" என்றார்.

கபடம் முதலிய இழிகுணங்களில்லானென்பார் "தூயன்"என்றார். (௨எசு)

வாடி னானென மாற்றல னைத்தொடர்ந்
தோடி னானெந்தை யொல்லையிற் சூரனைக்
கூடி னான்கொல் குறுகல னாகியே
நாடி னான்கொ லறிகில நாமெலாம்.

(இ-ள்.) பகைவனிளைத்தானென்று அவனைப் பின்பற்றி யெம்பெருமானோடினான்; ஓடிய பெருமான் விரைவாகச் சூரபன்மனையடைந்தானோ அடையாமலவனெங்குளானென்று தேடினானோ நாமெல்லாம் அந்த விஷயத்தை அறிகின்றோமில்லை.—எ-று.

எனவென்பதை எச்சமாக்காது உவமையுருபாக்கிற் பொருள்சிறவாமை காண்க.

மாக மேனிமிர் மற்றையண் டத்தினுஞ்
சேகு லாவிய சிந்தையன் றன்னுட
னேகி னானைய னென்னினித் தான்விளை
வாகு மோவென் றுமஞ்சுது மேழையேம்.

(இ-ள்.) வானத்திலுயர்ந்துள்ள மற்றை அண்டத்திலும் வைரம்பொருந்திய மனத்தினையுடைய சூரபன்மனுடன் நமதையன் சென்றனன்; இதனாலினியென்ன வுண்டாகுமோ என்றும் எழைகளாகிய நாங்கள் அஞ்சுகின்றனம்.—எ-று.

தீராக் கடுங்கோபமுள்ள சிந்தையனாதலிற் சூரபன்மனை "சேகுலாவிய சிந்தையன்" என்றார். (௨எஅ)

என்ற காலையி லங்கெழிற் பூவைபோ
னின்ற மாயவன் னீண்மல ரோன்முதற்
றுன்றும் வானவர் சூழலை நோக்கியே
யொன்று மன்பொ டுளப்பட வோதுவான்.

(இ-ள்.) என்று கூறியவுடனே விளங்காநின்ற காயாமலர்போலும் நிறமுடையானாக நின்றுள்ள மாயவன், நீளமான இதழ்களையுடையதாமரை மலரிலிருப்பவனான பிரமன் முதலிய தேவர்களைப் பார்த்துப் பொருந்திய அன்புடனே அவர்கள் மனதிற் பதியுமாறுரைப்பானாயினன்.—எ-று.

மாயவன் நீலமணி போன்ற திருவுருவினனாதலி னவனை நிறையப்பூத்த காயாவுக்குவமையாக வுரைத்தனர். காயா-ஓர் மரம். (௨எகூ)

வேறு.

வஞ்ச மேதகு மவுணர்கோ னாற்றலை மதித்தீண்
டஞ்சி யஞ்சியே யிரங்கலி ராறுமுகத் தொருவன்
செஞ்சி லைத்தனி வன்மையும் வீரமுந் தெரிந்து
நெஞ்ச கத்திடை யையுறு கின்றது நெறியோ.

(இ-ள்.) மிகுந்த வஞ்சனையாளனான அசுராதிபனுடைய வன்மையை மதித்து இவ்விடத்திற் பயந்து பயந்து வருந்தாதேயுங்கள்; ஆறு திருமுகங்களையுடைய ஒப்பற்ற பெருமானுடைய செவ்விய வில்லின் எதிரற்ற தன்மையும் வீரமும் தெரிந்திருந்தும் மனதினிடத்தில் சந்தேகமடைதல் முறைமையோ?—எ-று. (௨அ0)

ஓதி யாகியு முணர்ந்தவர்க் குணரவு மொண்ணு
நீதி யாகியு நிமலம தாகியே நிகழுஞ்
சோதி யாகியுந் தொழுதிடு மெம்மனோர்க் கெல்லா
மாதி யாகியு நின்றவ னறுமுக னன்றே.

(இ-ள்.) ஞானரூபமாகியும் ஞானத்தினையுணர்ந்த ஞானிகளால் அறிதற்கும் கூடாத நீதியாகியும் நின்மலமாக விளங்குகின்ற சோதிரூபமாகியும் வணங்காநின்ற எம்போல்வார்க்கெல்லாம் முதல்வனுகியும் நின்றவன் சண்முகப்பெருமானன்றே ?—எ-று.

அசத்தான பாசத்தினும் சதசத்தான பசுவினும் வேறான பதியென்பார் "ஓதியாய்" என்றார்.

சோதனையில் இரந்தொழியாத சருவகருத்துத்துவம் உடையவனே இவன் என்பார் "உணர்ந்தவர்க்குணரவுமொண்ணு நீதியாகியும்" என்றார்.

"உணரவுமொண்ணு நீதி" என அவனது நுண்மையை விளக்கினவர் அவனுடைய அருள்பெற்றாருக்கவன் ஒழியாப் பெருஞ்சோதியா யுற்றிருத்தலை விளக்குவான் "நிமலமதாகியே நிகழுஞ் சோதியாய்" என்றார். (உஅக)

ஈறி லாதமர் பரமனே குழவியி னியல்பா
யாறு மாமுகங் கொண்டுதித் தானென்ப தல்லால்
வேறு செப்புதற் கியையுமோ மேலவன் றன்மை
தேறி யுந்தெளி கின்றில வுமதுசிந் தையுமே.

(இ-ள்.) அழிவற்றவனுக விளங்காநின்ற பரமேசுவரனே குழந்தையின் வடிவமாய் ஆறு திருமுகங்களைக் கொண்டு வந்தானென்பதை யன்றி வேறே யுரைத்தற்குக் கூடுமோ ? மேலோனுகிய அவனுடைய தன்மையை உணர்ந்திருந்தும் உங்கள் மனம் தெளிவடையக்காணேன்.—எ-று. (உஅஉ)

ஐய மெய்தலி ராயிர கோடி யண்டத்தும்
வெய்ய னேகினுந் தொடர்ந்துபோய் வெஞ்சம ரியற்றிச்
செய்ய வேலவன் றுரந்துவந் திடுந்தினைத் துணையிற்
கையி னெல்லிபோற் காட்டுவ னீவிருங் காண்டீர்.

(இ-ள்.) சந்தேகமடையாதேயுங்கள் ; ஆயிரங்கோடி யண்டங்களிலும் கொடியவனன சூரபன்மன் சென்றாலும் அவனைத் தொடர்ந்துசென்று கொடும்போர்புரிந்து செவ்விய வேற்படையினையுடைய பெருமான் துரந்துகொண்டு வருவான். தினைப்பொழுதிற்குள் கையில்வைத்த நெல்லிக்கனியைப்போல யானுங்காட்டுவேன், நீங்களுங் காண்பீர்கள்.—எ-று. (உஅங)

என்று மாயவன் கழறலு மயன்முத லெவரு
நன்றெ னத்தெளி வுற்றன ரவ்வழி நண்ணு
ரொன்றி ருயிர கோடியண் டத்தினு மோடி
நின்று நின்றம ராடின னெந்தையை நேர்ந்து.

(இ—ள்.) என் றிவ்வண்ணந் திருமாலுரைத்தலும், பிரமன் முதலிய அனைவரும் நல்லதென்றுகூறித் தெளிவடைந்தார்கள்; அப்பொழுது பகைவனன சூரபன்மன் ஓராயிரகோடி அண்டங்களினும் ஓடியோடிச் சென்று நின்று எம்பெருமானேடெதிர்த்துப் போர்புரிந்தனன்.—எ-று. (உஅச)

வெந்தி றற்சம ராற்றியே யவுணர்கோன் மீட்டு
மிந்த வண்டத்து மகேந்திர வரைப்பில்வந் திறுத்தான்

முந்து நீழலை விடாதுசெல் வோரென முனிந்து
கந்த னுந்தொடர்ந் தவனொடு போந்தனன் கடிது.

(இ-ள்.) திறமையும் வெங்கண்மையும் வாய்ந்த கொடும்போரினைச் செய்து அசுராதிபன் திரும்பவும் இந்த வண்டத்திலுள்ள மகேந்திரபுரத்தில் வந்து நின்றனன். முன்னே செல்லாநிற்கு நிழலினைப் பின்றொடர்ந்து செல்பவர்களைப்போன்ற கந்தப் பெருமானும் சீற்றங்கொண்டு விரைவாக வவனுடனே அவ்விடத்திற்கு வந்தருளினான்.—எ-று. (உஅ௫)

வேறு.

போந்திடு தன்மை நோக்கிப் புராரிதன் புதல்வ னங்க
ளேந்தலைத் தொடர்ந்தா னென்னு விம்பரி லவுணர் தானை
தீந்தழ லென்னப் பொங்கிச் செங்கையிற் படைகள் வீசி
யாய்ந்திடு முணர்வின் மேலா மாதிதன் புடைசூழ்ந் தார்த்தார்.

(இ-ள்.) வராநின்ற தன்மையினைப் பார்த்து புராரியான சிவகுமாரன் நமது தலைவனைத்தொடர்ந்து வந்துளானென்று இவ்விடத்திலிருந்த அசுரசேனைகள் சுடாநின்ற தீயினைப்போல பொங்கி செவ்விய கரங்களிலிருந்த ஆயுதங்களை விட்டு, ஆராய்ந்தறியவேண்டிய ஞானவுணர்ச்சிக்கு மேற்பட்ட முதற்கடவுளான குமரப்பெருமானுடைய அருகிற்சூழ்ந்து ஆரவாரித்தார்கள்.—எ-று. (உஅ௬)

நாத்னு மதனை நோக்கி நன்றிவர் முயற்சி யென்னு
வோதினன் முறுவல் செய்ய வொன்னலன் றனை தொன்னுண்
மூதெயி லென்ன நீறாய் வெந்துடன் முடிந்த தம்மா
தாதைதன் செய்கை மைந்தன் செய்வது தக்க தன்றே.

(இ-ள்.) அந்த செய்கையை நமது கர்த்தாவும் பார்த்து, இவர்கள் செய்கின்ற முயற்சி நன்றாயிருக்கிறதென்று கூறினவனாகத் திருநகை கொள்ளுதலும் பகைவனுடைய சேனைகள் முன்னாளிற் றிரிபுரத்தைப்போல நீறாகி வெந்து ஒன்றாக அழிந்தது. தந்தையின் செய்கையை மைந்தன் செய்தது தகுதியானதேயாம்.—எ-று.(உஅ௭)

ஆனதோர் காலை தன்னி லறுமுகம் படைத்த வண்ண
றானகை யங்கி செல்லத் துண்ணெனப் பதைத்து வீழ்ந்து
தானவ ரனிகம் வெந்த சாம்பரின் குன்றை நோக்கி
வானவர் மகிழ்ந்து பூத்தூய் வள்ளலை வழுத்தி நின்றார்.

(இ-ள்.) அவ்வாறு நடந்த சமயத்தில் ஆறு திருமுகங்களையுடைய பெருமான் நகைத்த நகையிலுண்டான தூய்மையான அக்கினி செல்லுதலும் திடீரென்று பதைத்து விழுந்து அசுரர் சேனைகள் வெந்த சாம்பன்மலையைப்பார்த்து தேவர்கள் மகிழ்ச்சியடைந்து புட்பங்களை இறைத்துக் கடவுளைத் துதித்து நின்றார்கள்.—எ-று. (உஅ௮)

முருகவிழ் தொடைய லான்றன் முறுவலா னனிக முற்றும்
விரைவினுண் டுகள தாகி வீழ்தலு மவுணர் வேந்த
னொருவனுந் தமிய னின்றா னெண்டமிழ் முனிவ னுண்ணத்
திரைகட லின்றித் தோன்றுந் தீப்பெருங் கடவு ளொத்தான்.

(இ-ள்.) மணம் வீசாநின்ற மலர்மாலையணிந்த குமரக்கடவுளின் புன்னகையினால் சேனைகள் முழுமையும் விரைவாக நுண்ணிய தூளாகி விழுதலும் அசுராதிபனான சூரபன்மனொருவனுமே தனித்தவனாக நின்றனன். அது எதுபோலுமெனின் ஒள்ளிய தமிழ்முனிவனாகிய அகத்திய பகவானால் உண்ணப்பட்ட அலையினையுடைய கடலில்லாமல் தனியே காணப்பட்ட பெரிய தீக்கடவுளான வடவையைப்போலும்.-எ-று.

முன்படை குமர னங்கண் முறுவலித் திட்ட வாறுந்
தன்படை யழிந்த வாறுந் தமியன்ரு னின்ற வாறுங்
கொன்படை வீர ரோடு குறட்படை யார்க்கு மாறுந்
துன்படை யவுணன் கண்டாங் குளத்தொடுஞ் சொல்ல லுற்ருன்.

(இ-ள்.) தன்னெதிரே தோன்றிய குமரக்கடவுள் அவ்விடத்தில் புன்னகை செய்த தன்மையும் தனது சேனைகள் அழிந்த தன்மையும் தான் தனித்தவனாக நிற்குந் தன்மையும் வன்மைபெற்ற வீரர்களுடனே பூதப்படைகள் ஆரவாரிக்குந் தன்மையும் துன்பம் பொருந்திய சூரபன்மன் கண்டு தன் மனத்தினுட னுரைப்பானாயினான்.—எ-று. (உ௲௦)

பின்னுறு துணைவர் மைந்தர் பேரிய லமைச்ச ரேனோர்
முன்னுற முடிந்தா ரின்று முடிவுருத் தானை முற்றும்
பன்னிரு கரத்து மைந்தன் படுத்தனன் றமிய னானே
னென்னிவண் செய்வ தென்னா வுயிர்த்தன னெண்ண மிக்கான்.

(இ-ள்.) எண்ணத்தின் மிகுந்த சூரபன்மன் இவ்வண்ணம் நினைக்கலாயினான்: எனது பின்னே பிறந்த துணைவர்களும் பிள்ளைகளும் பெரிய தன்மையினையுடைய மந்திரிமார்களும் மற்றையோர்களும் முன்னே இறந்தார்கள். அழியாதிருந்த சேனைகளனைத்தினையும் இன்று பன்னிரண்டுகைகளையுடைய இச்சிறுவன் அழித்தனன்; தனித்தவனாய் விட்டேன்; இனி இவ்விடத்தில் யான் செய்வது யாது என்று கருதிப் பெருமூச்சு விட்டனன்.—எ-று. (உ௲க)

மாயவ டன்னை மன்னன் மனத்திடை நினைத்த லோடு
மாயவள் வந்து தோன்றி யரும்பெற லாற்றன் மைந்த
நீயொரு தமிய னாகி நின்றுளந் தளர்ந்தே யென்னைக்
கூயினை முன்னிற் றென்னை தெரிவுறக் கூறு கென்ருள்.

(இ-ள்.) இங்ஙனம் நினைத்து, தனது அன்னையான மாயையென்பவளை அவ்வரசன் மனதினிடத்தில் நினைத்தான்; நினைத்தவுடனே அம்மாயை அவ்விடத்திருற்வந்து அவனெதிரே நின்று பெறுதற்கரிய பேராற்றலினையுடைய மகனே! நீயொரு தனித்தவனாக நின்று மனத்தளர்ச்சியடைந்து என்னை விளித்தனை, நீ கருதியது என்னை? யானறியும் வண்ணம் உரைக்கக்கடவை என்றனள்.—எ-று. (உ௲உ)

அறிந்திடு மாயை யிவ்வா றறைதலுங் குமரன் போரின்
மறந்தகு துணைவர் மைந்தர் மந்திரி தானை முற்று
மிறந்திட வெஞ்சி னேன்யா னியாவரு மெழுதற் கொத்த
திறந்தனை யருண்மோ வென்ன நகைத்தவள் செப்ப லுற்ருள்.

(இ-ள்.) நடந்தனவற்றை யெல்லாம் அறிந்துள்ள மாயையானவள் இவ்வண்ணம் உரைத்தலும், அவள் மைந்தனான சூரபன்மன் அன்னையே! தகுந்த வீரத்தினையுடைய தம்பிமார்களும் பிள்ளைகளும் மந்திரிமார்களும் சேனைகளுமெல்லாம் அழிய, யானொருவன்மாத்திரம் அழியாது மிகுந்துநின்றேன். இனி இறந்தவனைவரும் எழுதற்கொத்த ஒரு மார்க்கத்தினை உரைப்பாயாக வென்றலும் அதனைக் கேட்ட அவள் நகைத்தவளாக வுரைப்பாளாயினள்.—எ-று. (உ௲௩)

உறுபடை சுற்றந் துஞ்ச வொருவனே யாயும் விண்ணோர்
சிறைவிடுத் துய்யு மாறு சிந்தனை செய்தி லாய்நீ
யறுமுகன் றன்னோ டின்னு மமர்செயக் குறித்தி யாயி
னிறைபெருஞ் செல்வ வாழ்க்கை நீங்கினை போலு மன்றே.

(இ-ள்.) மைந்தனே! நீ யுனக்குள்ள சேனைகள் சுற்றத்தினர் என்னும் அனைவரும் இறக்க தனித்தவனாகியும் தேவர் சிறையைவிடுத்து உய்யும்வண்ணம் எண்ணினாயில்லை. இன்னம் சண்முகனுடனே போர்புரியக் கருதுவாயானால் நிறைந்த பெரிய செல்வத்தினை இழந்தவனாகின்றனை.—எ-று. (உ௬௪)

பன்னிரு தடந்தோள் கொண்ட பகவனைப் பால னென்றே
யுன்னலை யவன்கை வேலா லொல்லையிற் படுதி கண்டா
யின்னுயிர் துறக்க நின்றா யென்மொழி கேட்பா யன்றே
சென்னியில் விதியை யாவ ராயினுந் தீர்ந்தா ருண்டோ.

(இ-ள்.) விசாலமான பன்னிரண்டு திருத்தோள்களையுடைய பகவானைச் சிறுவனென்று நினைக்காதே; அவன்கையிலுள்ள வேற்படையினால் விரைவாக இறக்கின்றனை. இனியவுயிரினை இழக்க நின்ற நீயெனது வாக்கியத்தினை கேட்கமாட்டாய்; தலைவிதியை யெவரேனும் கடந்தவர்களுண்டோ? இன்று.—எ-று. (உ௬௫)

நின்றிட வனைய தன்மை நின்னுள மகிழு மாற்றாற்
பொன்றின ரெழுதல் வேண்டிற் புறக்கடற் கொருசா ராக
மன்றல்கொ ளமுத சீத மந்தர கூட மென்றோர்
குன்றுள ததனை யீண்டே கொணருதி கூடு மென்றாள்.

(இ-ள்.) இவைகள் நிற்க, நின்னகமகிழும் வண்ணம் செத்தவர்கள் எழுதல்வேண்டுமானால் பெரும் புறக்கடற் கொருபுறமாக மங்கலகரம் பொருந்திய அமுதசீத மந்தரகூடமென ஒரு மலையுளது. அம்மலையை இவ்விடத்திற்குக் கொண்டுவரக்கடவை உன்னெண்ணம் நிறைவேறும் என்றனள். (உ௬௬)

இவ்வகை யுரைத்து மாயை யேகின ளேக லோடு
மைவரை யென்ன நின்ற மன்னவர் மன்னன் கேளா
வவ்வைதன் சூழ்ச்சி நன்றா லடுகளத் தவிந்தோர் யாரு
முய்வகை யிதுவே யென்னா வுன்னின னுவகை மிக்கான்.

(இ-ள்.) இவ்வாறாக உரைத்து மாயையென்பவள் போயினள்; போதலும் அவள்மொழியை நீலமலைபோல நின்ற அரசர்க்கரசன் கேட்டு, நந்தாயானவளுரைத்த ஆலோசனை நல்லதேயாம். படுகளத்தி லிறந்தவர்க ளெல்லாம் பிழைத்தற்கு மார்க்கம் இதுவே என்று நினைத்து மிகுந்த மகிழ்ச்சியுடையவனாயினன்.—எ-று. (உ௬௭)

ஆவகை யுவகை கொள்ளா வமுதமந் தரங்கொண் டேக
வேவரை விடுத்து மென்றே யிறைப்பொழு தவுணர் தங்கள்
காவலன் முன்னி மாயக் கடுமுரண் டேரி னீங்கித்
தேவிய லரிமா னேற்றுத் திறலுடை யெருத்தம் புக்கான்.

(இ-ள்.) அவ்வண்ணம் சந்தோஷமடைந்து அமிர்த மந்தரத்தினைக் கொண்டு வருதற்கு எவர்களை யனுப்புவதென்று அசுரர்கள் தலைவன் சற்றே ஆலோசித்து, மாயத்தினையும் கடுமையினையும் வன்மையினையும் உடைய இரதத்தினின்றும் இறங்கி விலகி தெய்வீகம்பொருந்தின சிங்க வேற்றினுடைய வன்மைபொருந்தின முதுகின்மீதேறிக் கொண்டான்.—எ-று. (உ௬௮)

இந்திர ஞாலந் தன்னை யிறையவன் விளித்து நீயென்
புந்தியின் விரைந்து சென்று புறக்கடன் மருங்கின் மேவி
யந்தம தடைந்தோர்க் காவி யளித்திடு மமுதங் கொண்ட
மந்தர கிரியைக் கீண்டு மற்றிவட் கொணர்தி யென்றான்.

விழுமிய மாய மான்றேர் வினவியோர் கணத்தின் முன்ன
மெழுகட லினுக்கு மப்பா லிருந்திடு கடலின் சார்போ
யழிவுறு தங்க ணின்ற வமுதமந் தரத்தைக் கொண்டு
வழிபடர் கதியின் மீண்டு மகேந்திரம் புக்க தன்றே.

(இ-ள்.) சிறந்த மாயத்தினையுடைய பெரியவவ்விந்திரஞாலமென்னும் இரதமானது சூரபன்மனுரைத்ததனைக்கேட்டு ஒருகணப்பொழுதிற்குள் சத்தசமுத்திரங்களுக்கு மப்புறம் இருக்கின்ற பெரும்புறக்கடலினருகிற்சென்று, அழிவடையாது அவ்விடத்து நின்ற அமிர்தமந்தரமலையைப்பெயர்த்துத் தன்னிடத்துவைத்துக்கொண்டு சென்றவழியே திரும்பி விரைவாக மகேந்திர நகரத்தினை யடைந்தது.—எ-று. (௩௦௦)

வேறு.

அக்காலையி லிரதந்தரு மமுதத்தனி வரையின்
மெய்க்கால்வர வந்நாள்வரை வெம்பூச லியற்றி
மைக்காலன்மெய் யுயிருண்டிட மறியும்படை முழுது
தொக்காலம தெழுந்தாலெனத் துண்ணென் றெழுந்தனவே.

(இ-ள்.) அப்பொழுது இந்திரஞாலத்தேர் கொண்டுவந்த ஒப்பற்ற அமுதமந்தரத்தின் உருவிற்பட்ட காற்றுனதுவீச அத்தினம்வரைக்கும் வெவ்வியபோர்புரிந்து கரிய யமன் உயிரையுண்ண இறந்துவிழுந்த சேனைகளனைத்தும் நெருங்கி விரைவாக ஆலகாலந்தோன்றினாற்போல உயிர்த்தெழுந்தன.—எ-று. (௩௦௧)

பரியின்றொகை முழுதுய்ந்தன பனைபோலிய நெடுங்கைக்
கரியின்றொகை முழுதுய்ந்தன கடுந்தேர்த்தொகை யீர்க்கு
மரியின்றொகை முழுதுய்ந்தன வவுணப்படை யாகி
விரியுந்தொகை முழுதுய்ந்தன மெய்யூறது நீங்கி.

(இ-ள்.) அமிர்தமந்தரத்தின் மெய்க்காற்று உடலிற்பட்டமையால் குதிரைக் கூட்டங்கள் முழுதும் பிழைத்தெழுந்தன: பனைபோன்ற நீண்டதுதிக்கையினையுடைய யானைக்கூட்டங்கள்முழுதும் பிழைத்தன: வேகத்தினையுடைய இரதக்கூட்டங்களை இழுத்துச்செல்லுகின்ற சிங்கக்கூட்டங்களெல்லாம் பிழைத்தன: உடலிலுண்டான இரணங்களெல்லாமொழிந்து மிகுந்த அசுரசேனைகளின் கூட்டங்களனைத்தும் எழுந்தன.-எ-று.

வடிவற்றுட லழிந்திட்டிடு முயிரானவு மரும
மடிகைத்தல முடிதோண்முத லங்கங்கள் குறைந்தே
முடிவுற்றிடு முயிரானவு முளரிக்கன லுண்ணப்
பொடிபட்டிடு முயிரானவு மெழுந்திட்டன புவிமேல்

(இ-ள்.) வடிவங்களற்று உடலங்களழிந்த உயிர்களும், மார்பம், கால்கள், கரங்கள், தலைகள், தோள்கள்முதலிய அவயவங்கள் குறைந்து அழிந்த உயிர்களும், அக்கினியினு லுண்ணப்பட்டு சாம்பராகிய உயிர்களும் அப்போர்க்களத்தில் உயிர்பெற்றெழுந்தன.—எ-று. (௩௦௩)

மிண்டிக்கடி துயிர்பெற்றெழு வெஞ்சூர்முத லனிக
மெண்டிக்கொடு புவிபாதல மிருநாற்கட லெங்கு
மண்டிக்கக னத்தேழ்வகை யுலகங்களு மல்கி
யண்டத்தனி முடிகாறும டைந்திட்டன மிடைந்தே.

(இ-ள்.) நெருங்கி விரைவாக உயிர்பெற்றெழுந்த வெவ்வியசூரனாகிய முதல்வனதுசேனைகள் எட்டுத்திக்குகளுடன் பூமி பாதாளம் எட்டான கடல்களுமாகிய எவ்வி

டங்களிலும் அடைந்து ஆகாயத்திலுள்ள புவர்லோக முதலிய ஏழுலோகங்களிலுஞ் சென்று நெருங்கி அண்டத்தின் ஒப்பற்ற முகடுவரைக்கும் நின்றன.—எ-று.
கடல்களேழுடன் பெரும்புறக்கடலையுமுடன்சேர்த்து எண்கடலென்றார். (௬௦௪)

மாதண்ட மெழுத்தோமரம் வயிரப்படை வாள்கோல்
கோதண்ட முதற்பல்படை கொடுதானவ ரனிகம்
வேதண்ட மெனச்சேனுயர் வேழம்பரி நிரைகண்
மூதண்டம் வெடிக்கும்படி முழங்குற்றன வன்றே.

(இ-ள்.) மகத்தான தண்டங்களையும் எழுக்களையும் தோமரங்களையும் வச்சிராயுதங்களையும் வாட்படைகளையும் அம்புகளையும் விற்படைகளையும் இன்னுமுள்ளபலவகையினவான ஆயுதங்களையும் தாங்கிக்கொண்டு நிற்கின்ற அசுரசேனைகளும், மலையைப்போல வானமளாவிய யானைகளும், குதிரைநிரைகளும் ஆக ஒன்றுசேர்ந்து பெரிய அண்டம் வெடிக்குமாறு ஆரவாரித்தன.—எ-று. (௬௦௫)

எழுந்தான்வயப் புலிமாமுக னிரவிப்பகை யெழுந்தா
னெழுந்தானெரி முகவெய்யவ னிளமைந்தனு மெழுந்தா
னெழுந்தானறத் தினைக்காய்பவ னிருபாலரு மெழுந்தா
ரெழுந்தாரொரு மூவாயிர ரேனோர்களு மெழுந்தார்.

(இ-ள்.) சிறந்த சிங்கமுகாசுர னெழுந்தான், பானுகோபனெழுந்தான், அக்கினிமுகனாகிய கொடியவனெழுந்தான், இளங்குமாரனான வச்சிரவாகுவும் எழுந்தான், தருமகோபனுடைய இரண்டு பிள்ளைகளு மெழுந்தார்கள், மூவாயிரம் வீரர்களு மெழுந்தார்கள், மற்றுமுள்ளவர்களும் எழுந்தார்கள்.—எ-று. (௬௦௬)

சூர்க்கின்றதொல் வடிவங்கொடு துண்ணென்றெழு கின்றோர்
பார்க்கின்றன ரனிகங்களைப் பகுவாய்திறந் திடிபோ
லார்க்கின்றனர் தமதாடலை யறைகின்றனர் நம்மேற்
போர்க்கின்றுவந் தனர்யாரெனப் புகல்கின்றன ரிகலால்.

(இ-ள்.) பார்ப்பவர் கண்ணுக் கச்சந்தரத்தக்க வடிவங்களுடன் விரைந்தெழுமவர் பகைமேலீட்டினால் பூதசேனைகளை யுற்றுப்பார்க்கின்றார்கள். தம் பிளந்த வாயைத்திறந்தாரவாரிக்கின்றனர். தம் வெற்றியை யுரைக்கின்றனர். நம்மீது இன்று போர்க்கு வந்தவர் யாவரென்று கூறுகின்றனர்.—எ-று. (௬௦௭)

ஈடுற்றிடு சமரெல்லையி லிடையுற்றிடு படைக
ளூடுற்றிவ ணெடுத்திட்டனர் நறையுற்றிடு தும்பை
சூடுற்றிடு மணிமாமுடிச் சூரன்புடை தன்னிற்
கூடுற்றனர் வெம்போர்செயுங் குறிப்புற்றன ரன்றே.

(இ-ள்.) ஒருவர்க்கொருவர் சமானமாக நின்று போர்புரியத்தக்க இரணக்களத்தில் கிடைக்குமாயுதங்களைத் தேடி யெடுத்தவர்களாய், தேன்பொருந்திய தும்பைமலர்மாலையணிந்த சூரபன்மனுடைய அருகிலடைந்து வெவ்விய போர்புரிகின்ற வெண்ணமுடையவர்களாயினார்கள்.—எ-று. (௬௦௮)

வேறு.

உய்ந்திவர் யாவரு மொல்லை யெழுந்தே
யந்தமில் சேனையொ டார்த்திடு காலை
யிந்திர ஞால மெனப்படு மான்றேர்
வந்தது தானவர் மன்னவன் முன்னம்.

(இ-ள்.) இவர்களனைவரும் விரைவாகப் பிழைத்தெழுந்து அளவற்ற சேனைகளுடன் ஆரவாரம் செய்கின்ற சமயத்தில், குதிரைகள் பூட்டிய இந்திரஞாலமென்னு மிரதம் அசுராதிபனாகிய சூரபன்மன் எதிரில் வந்தது.—எ-று. (௩௦௯)

பொற்றையி னோடு பொலன்கெழு மான்றே
ருற்றது மன்பின ருய்ந்தெழு மாறு
மிற்றப டாதியி ரைத்தெழு மாறுந்
தெற்றென மாயவள் செம்மலெ ரிந்தான்.

(இ-ள்.) பொன்னொளி வீசாநின்ற பெரிய விரதம் அமிர்த மந்தரத்துடனே தன்னெதிரில் வந்ததுஉம், தன்னிடத்தன்புள்ள சிங்கமுகன் முதலியோர் பிழைத்தெழுந்ததுஉம், இறந்துபட்ட காலாட்படைகள் இரைச்சலிட்டுக்கொண்டெழுவதுஉம் மாயாகுமாரனான சூரபன்மன் அப்பொழுது பார்த்தான்.—எ-று. (௩௧௦)

மகிழ்ந்தன னார்த்தனன் வானவர் தம்மை
யிகழ்ந்தனன் விம்மித மெய்தினன் யாயைப்
புகழ்ந்தனன் மேனி பொடித்தன னெஞ்சந்
திகழ்ந்தன னன்னகை செய்தன னன்றே.

(இ-ள்.) இச்செய்கையைக்கண்டமையா லிவன் மகிழ்ச்சியடைந்தான், ஆரவாரம் செய்தான், இந்திராதி தேவர்களை யிகழ்ந்தான், ஆச்சரியமடைந்தான், தன்னைப் பெற்ற தாயைப்புகழ்ந்தான், புளகாங்கித மடைந்தான், மனமகிழ்ச்சியுற்றான், சிரித்தான்.—எ-று. (௩௧௧)

உந்திநி ரப்புறு முண்டிய தின்றி
முந்திநி ரப்பிடை மூழ்கின னவ்வோ
வெந்திற லாளி வியன்றவி சேறி
யிந்திர னல்வள மெய்திய தொத்தான்.

(இ-ள்.) வயிற்றை நிரப்பத்தக்க வுணவில்லாமல் தரித்திரத்தின் மூழ்கினவன் விரைவாக வெவ்விய தன்மையினையும் வன்மையினையுமுடைய புகழத்தக்க சிங்காதனமேறி நல்ல விந்திரசம்பத்தினையடைந்தாற்போல உயிர்த்தெழுந்த பரிவாரங்களால் சூரபன்மனாயினான்.—எ-று. (௩௧௨)

ஓங்கிய சென்னி யுயர்ந்தன மொய்ம்பு
வீங்கிய தாளுடன் மிக்கும தர்ப்புத்
தேங்கிய சிந்தை சிலிர்த்த வுரோம
மாங்கவ னெய்திய தாரறை கிற்பார்.

(இ-ள்.) தலை மேலேயுயர்ந்தது, தோள்கள் பூரித்தன, உடல் விம்மிதமடைந்தது, மதர்ப்பென்னுங் குணமிகுந்தது, தனது சிந்தை சந்தோஷத்தாற்பூரணமாகியது, உரோம கூர்ச்சிதம் உண்டாகியது, இறந்துபட்டோ ரெழுந்தமையான் அவனடைந்த மகிழ்ச்சி வேறியாவரடைவார்கள்.—எ-று. (௩௧௩)

வஞ்ச னிதந்திடு மைந்தனிவ் வாற்று
னெஞ்ச மகிழ்ந்தவ ணின்றிடு காலை
நஞ்ச மெழுந்திடு நாள்கொலி தென்றே
யஞ்சி நடுங்கின ரண்டர்க ளெல்லாம்.

(இ-ள்.) வஞ்சனையே வடிவமான மாயையென்பவள் பெற்ற சூரபன்ம னிவ்வண்ணம் மனமகிழ்ச்சியடைந் தங்கு நிற்கின்ற காலத்தில், இது ஆலகாலவிஷம் எழுந்த நாள்தானோ வென்று தேவர்கள் எல்லாம் அஞ்சி நடுக்கமடைந்தார்கள்.—எ-று. (௩௧௪

பொன்னகர் வாழ்க்கை புவித்திசை வாழ்க்கை
பின்னுறு கின்ற பெரும்பத வாழ்க்கை
யெந்நகர் வாழ்க்கையு மெய்திய வின்னே
யொன்னலர் கொல்லுமுன் னேடுது மென்றார்.

(இ-ள்.) சுவர்க்க வுலக வாழ்வும், பூமியின்கண்ணுள்ள திக்குகளின் வாழ்வுகளும், இவையன்றியுள்ள வேனைய பெரும்பத வாழ்க்கைகளும் மற்றைய எந்த நகர் வாழ்க்கைகளும் இன்றே கிடைத்தன; இனி நாம் பகைவர்கள் கொல்லுமுன்னம் ஓடுவோமென்றார்கள்.—எ-று.

நமது எண்ணங் கைகூடாதொழிந்தது என்று குறிப்பாலுரைத்தார்கள் தேவர்கள் என்பார் "எந்நகர் வாழ்க்கையு மெய்திய வின்னே" என்றார். (௩௧௫)

ஊர்ந்திடு மூர்திக ளோர்புடை தம்பாற்
சார்ந்தவ ரோர்புடை தாமொரு பாலாய்ச்
சேர்ந்திடு கைப்படை சிந்திவிண் ணோர்கள்
பேர்ந்திரி கின்றனர் பின்னது நோக்கார்.

(இ-ள்.) தேவர்கள் பின்னால் நடக்கும் காரியத்தை யுணராதவர்களாய் தாமேறி நடாத்தும் வாகனங்கள் ஒருபுறமாகவும், தம்மைச்சார்ந்தவர்க ளொருபுறமாகவும், தாமொருபுறமாகவும், தம்மிடத்திற்பொருந்திய கையாயுதங்களனைத்தையும் சிதறவிட்டவர்களாய் விலகி ஓடுகின்றனர்.—எ-று. (௩௧௬)

கிள்ளைபு றுமயில் கேழ்கிள ரன்னம்
பிள்ளைம ணிக்குயில் பேரிசை யாந்தை
கள்ளுணும் வண்டுக ரண்டம தாதிப்
புள்ளுரு வங்கொடு வானவர் போனார்.

(இ-ள்.) தேவர்கள் இறந்தெழுந்த வசுரசேனைகளுக்கஞ்சி, கிளிகள், புறாக்கள், மயில்கள், நிறம்விளங்காநின்ற வன்னங்கள், காக்கைகள், கருங்குயில்கள், பெரிய வோசையினையுடைய ஆந்தைகள், மதுவருந்தும் வண்டுகள், நீர்க்காகங்கள் முதலிய பறவைகளி னுருவங்களைக்கொண்டு பறந்து மறைந்தோடினார்கள்.—எ-று. (௩௧௭)

அங்கது நோக்கி யடற்கண வீரர்
மங்கிய தானையு மாண்டுளர் யாரு
மிங்கெழு கின்றனர் யாமிவண் வீந்தாஞ்
சங்கையி லென்று தளர்ந்தலை வுற்றார்.

(இ-ள்.) அவ்வாறெழுந்த அசுரர்களைப்பார்த்து வன்மைபொருந்திய பூதகண வீரர்கள், போரினில் மங்குதலடைந்த சேனைகளும் இறந்துபட்ட மற்றையோரும் மீட்டுமுயிர்பெற்றெழுகின்றனர்; ஆதலின் சந்தேகமில்லாம லிவ்விடத்தில் நாமிறந்தோம் என்றுரைத்துத் தளர்ச்சியடைந்தலைந்தார்கள்.—எ-று. (௩௧௮)

இலக்கரு மெண்மரு மேந்தலு நோக்கி
யலக்கணு மச்சமு மற்புத நீருங்
கலக்கமும் வெய்ய கடுஞ்சின முங்கொண்
டுலைக்கன லன்ன வுயிர்ப்பொடு நின்றார்.

(இ-ள்.) இலக்கம் வீரர்களும், எட்டு வீரர்களும், அவர்கட்கெல்லாம் தலைவனாகிய வீரவாகுவும், இறந்தோரெல்லாம் மீட்டு மெழுந்த விவ்வதிசயத்தைப் பார்த்து, துன்பமும் அச்சமும் அற்புதத்தன்மையும் கலக்கமும் மிகவும் கொடிய கோபமும் பொருந்தினவர்களாய் உலையிலெரியாநின்ற கனலைப்போல பெருமூச்சுடன்நின்றார்கள்.—எ-று.

வே று.

வென்றி கொண்டவேற் குமரனிவ் விளைவெலா நோக்கி
நின்ற வொன்னலன் சூழ்ச்சியும் வலவைசொன் னெறியுங்
குன்றின் வன்மையு முய்ந்தெழு பரிசனர் குழுவு
நன்று நன்றெனக் கையெறிந் தழலெழ நகைத்தான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வேற்படையினை யுடைய குமரப்பெருமான் இங்கு நிகழ்ந்த இந்நிகழ்ச்சி யனைத்தையும் பார்த்து எதிரில் நின்ற பகைவனான சூரபன்மனுடையவாலோசனையும், வல்லவளான மாயை கூறிய மார்க்கமும், அவள்கூறிய மார்க்கத்தால் வந்த அமிர்த மந்தரத்தின் வன்மையும், அதனால் பிழைத்தெழுந்த பரிவாரங்களின் கூட்டமும் பார்த்து நல்லதுநல்லது என்று கையோடு கைதட்டி தீப்பரக்க நகை புரிந்தனன்.—எ-று. (௯௨0)

ஆன காலையி லரிமுக னலரிதன் பகைஞ
னேனை மைந்தர்க ளறத்தினை வெருண்டிடு மேந்தல்
சேனை காவலர் யாவருஞ் சூரன்முன் சென்று
மான வீரமோ டிறைஞ்சிநின் றினையன வகுப்பார்.

(இ-ள்.) அப்பொழுது சிங்கமுகன், பானுகோபன், மற்றைய வச்சிரவாகு முதலிய பிள்ளைகள், தருமகோபன், சேனாதிபர்கள்முதலிய அனைவரும சூரபன்மன் எதிரிற் சென்று மகத்தான வீரமுடையவர்களாக வணங்கி அவன் எதிரில் நின்று இவைகளை யுரையாநிற்பர்.—எ-று.

மானம் என்பதற்கு அபிமானமென்றும் உரைக்கலாம். (௯௨௧)

எந்தை நீயிவ ணிற்குதி யாமெலா மேகிக்
கந்த வேளுட னவன்படை வீரரைக் கடிந்து
சிந்த ராகிய பூதர்தந் தொகையையுஞ் செகுத்து
வந்து நின்னடி வணங்குதும் வல்விரைந் தென்றார்.

(இ-ள்.) எம்பெருமானே! நீ யிவ்விடத்தில் நிற்பாயாக: நாங்களனைவரும் சென்று கந்தவேளான குமாரனுடன் அவனுடைய சேனைவீரர்களனைவரையும் கொன்று குறுகிய வடிவினர்களாகிய பூதர்களின் கூட்டங்களையுமழித்து அதிக விரைவாக வந்து நும் கால்களை வணங்குகின்றோமென்றனர்.—எ-று. (௯௨௨)

கொற்ற வீரர்க ளிவ்வகை யுரைத்தலுங் கொடியோன்
மற்றிவ் வாசக நன்றெனப் போற்றுவான் வந்தீர்
பற்ற லன்பெரு வன்மையும் வீரமும் படுத்து
வெற்றி யின்றெனக் கருளுதி ராலென விடுத்தான்.

(இ-ள்.) வெற்றி பொருந்திய வீரர்கள் இவ்வாறு கூறுதலும், கொடியவனான சூரபன்மன் அவர்களைப்பார்த்து நீவிர் உரைத்த விவ்வாசகம் நல்லதே; என்னை வணங்குமாறுவந்த நீங்கள் பகைவனது பெரிய வன்மையையும் வீரத்தையுமழித்து வெற்றியை யெனக்கின்று அளிப்பீர்களாகவென் றுரைத்தனுப்பினான்.—எ-று. (௯௨௩)

விடுத்த காலையில் விடாதுசூ ழனிகங்கள் விரவி
யடுத்து வந்திடப் பொள்ளென வேகியே யார்த்துப்
பிடித்த பல்வகைப் படைகளு முருமெனப் பெய்து
வடித்த வேற்படை நம்பியை யன்னவர் வளைத்தார்.

(இ-ள்.) வெற்றியளிப்பீர்களாகவென் றுரைத்தனுப்பியவுடனே விடாமற்சூழ்ந்து வராநின்ற சேனைகள் தம்முடன் கலந்தடுத்து வராநிற்ப விரைந்து சென்று ஆர்

வாரம்செய்து தத்தம் கைகளில் பிடித்திருந்த பலவகையினவாகிய வாயுதங்களையும் இடிவிழுந்தாற்போ லோசையுண்டாமாறு விட்டுக்கொண்டு வடிக்கப்பட்ட வேலாயுதத்தினையுடைய ஆண்மக்களிற் சிறந்த குமரப்பெருமானை யவர்கள் சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (௩௨௪)

தீங்க னற்பெருங் கடவுள்பாற் செறியிருட் டொகைபோல்
வாங்கு விற்கரத் தையனை யவுணர்கள் வளைப்ப
வேங்க லுற்றனர் பாரிட ரேனையோ ரெம்மாற்
றுங்கு தற்கரி திப்பெரும் படையெனத் தளர்ந்தார்.

(இ-ள்.) வெப்பத்தினையுடைய பெரிய தீக்கடவுளின் எதிரில் நெருங்கிச்செலலும் இருட்கூட்டங்களைப்போல வளைக்கப்பெற்ற வில்லினை திருக்கரத்திற் பிடித்துள்ள நம்பெருமானை அசுரர்கள் சூழ்ந்துகொள்ளுதலும், அச்செய்கையைக்கண்டு பூதர்கள் ஏக்கமடைந்தார்கள்; மற்றையோர்கள் இப்பெரிய சேனைகள் எம்மால் தாங்கும் திறத்தனவல்ல என்றோதித் தளர்ச்சியடைந்தார்கள்.—எ-று. (௩௨௫)

விறலு டைப்பஃ றானையும் வெய்யவர் தொகையு
நொறிலு டைக்கதி கொண்டுசூழ் வுற்றது நோக்கி
யறுமு கத்தனிப் பண்ணவ னுயிர்த்தொகை யனைத்து
மிறுதி யைப்புரி கடவுண்மாப் படையினை யெடுத்தான்.

(இ-ள்.) வெற்றியினையுடைய பலவகையினவான சேனைகளும், அச்சேனைகட்குத் தலைவரான வசுரர் கூட்டத்தினரும் வேகமான நடையுடன்வந்து தன்னைச் சூழ்ந்துகொண்டதனை ஒப்பற்ற ஆறு திருமுகங்களையுடைய நம்பெருமான் பார்த்து, உயிர்வருக்கங்களனைத்தையும் சங்கரிக்கின்ற சருவசங்காரமூர்த்தியின் அத்திரத்தினைத் திருக்கரத்தில் எடுத்தருளினான்.—எ-று. (௩௨௬)

அங்கை யிற்கொடு சிந்தையால் வழிபட லாற்றிச்
சிங்க மாமுக னாதியா மவுணர்தந் திறத்தைச்
சங்கை யின்றியே நின்றிடு தானைக டம்மை
யிங்கு வல்லையி லடுதியா லெனவிடுத் திட்டான்.

(இ-ள்.) அகங்கையில் வைத்துக்கொண்டு அதற்குச் செய்யவேண்டும் பூசையாதிகளை மானதமாகச்செய்து முடித்து, சிறந்த சிங்கமுகன் முதலிய வசுரர் கூட்டத்தினர்களையும் அஞ்சுதலின்றி எதிர்வந்து நிற்கின்ற சேனைகளையும் இவ்விடத்தில் விரைவாக நீ கொல்லக்கடவை யென்று திருவாய்மலர்ந்து விடுத்தருளினான்.—எ-று. (௩௨௭)

விடுத்த காலையிற் கட்செவி நிரைகளும் விடமு
மிடிக்கு ழாங்களு முருத்திர ருருக்களு மெரியுங்
கடற்பெ ருங்கணத் தொகுதியு மளவிலாக் கடவுட்
படைக்க லங்களு மாய்விரிந் ததுசிவன் படையே.

(இ-ள்.) விடுத்தருளினவுடனே பாம்புக்கூட்டங்களும்,விடமும், இடிக்கூட்டங்களும், உருத்திரர்களினுருவங்களும், அக்கினியும், கடல்போலும் பெரிய பூதகணக்கூட்டங்களும், அளவற்றனவாகவுள்ள தேவராயுதங்களும் ஆக சிவபெருமானுடைய வவ்வாயுதம் விரிந்தது.—எ-று. (௩௨௮)

இன்ன தன்மைபா லரன்படை மூதண்ட மெங்குந்
துன்னி யார்த்தெழீஇத் துண்ணெனச் சென்றுசூழ் வுற்று
முன்ன ருய்ந்தெழு மவுணர்தம் படையெலா முருக்கி
யொன்ன லன்றமர் யாரையு மொருங்குகொன் றதுவே.

(இ-ள்.) இவ்வண்ணமாக சிவாஸ்திரமானது பெரியவண்டப்பரப்பின் எவ்விடங்களிலும் நெருங்கி ஆரவாரித்தெழுந்து திடீரென்று சேர்ந்து சூழ்ந்துகொண்டு முன்னர் அமிர்தமந்தரத்தாற் பிழைத்தெழுந்த வசுரசேனைகளனைத்தையு மழித்து, பகைவனான சூரபன்மனுடைய சகோதரர்களான சிங்கமுகன் முதலிய பந்துக்கள் அனைவரையும் ஒன்றாகக் கொன்றது.—எ-று. (௩௨௯)

முந்து வெய்யசூர்ப் பரிசனத் தொகையெலா முருக்கி
யிந்தி ரப்பெரு ஞாலமாந் தேர்மிசை யிருந்த
மந்த ரப்பெருங் கிரியினைத் துகளெழ மாய்த்துக்
கந்த வேள்புடை மீண்டது சிவன்படைக் கலமே.

(இ-ள்.) சிவாஸ்திரமானது முற்பட்ட வெவ்விய சூரபன்மனுடைய பரிசனத் தொகைகள் அனைத்தையுமழித்து, பெரிய இந்திரஞாலமென்னு மிரதத்தின்மீதிருந்த பெரிய வமிர்தமந்தரம் என்னும் மலையினைத் தூளாம்படியழித்து குமரக்கடவுளிடத்துத் திரும்பி வந்தது.—எ-று. (௩௩௦)

அரிமு கத்தவ னுதவன் றனைமுன மழன்றோ
னெரிமு கத்தவன் வச்சிர மெய்ம்பனூற் றிருவர்
முரண்மி குத்தமூ வாயிர ரறப்பகை முதலோர்
விரிக டற்படை வெற்பொடு முடிந்தவண் வீழ்ந்தார்.

(இ-ள்.) சிங்கமுக வசுரன், முன்னாளிற் சூரியனைக் கோபித்த பானுகோபன், அக்கினிமுகன், வச்சிரவாகு, நூற்றிருவர், மிக்க வன்மையாளரான மூவாயிரவர்கள், தருமகோபன்முதலியவர் அசலமான கடல்போலும் சேனைகளுடனும் தம்மனைவரையும் எழுப்பிய அமிர்த மந்தரமலையுடனும் அழிந்து அவ்விடத்திலேயே விழுந்தனர்.—எ-று.

தன்மை யங்கவை யாவையுங் கண்டனன் றளர்ந்தான்
வன்மை நீங்கினன் கவன்றன னிரங்கிமெய் மறந்தான்
புன்மை யாயின னுயிர்த்தனன் செயிர்த்தனன் புலர்ந்தான்
றொன்மை போலவே தமித்தனன் றுணையிலாச் சூரன்.

(இ-ள்.) வேறு துணையற்றசூரபன்மன் அவ்விடத்தில்நடந்த அத்தன்மைகளனைத்தையுங்கண்டு தளர்ச்சியுற்று வன்மையையிழந்து கவற்சியடைந்து துன்பங்கொண்டு உடல்மறந்து இழிவுற்று பெருமூச்சுவிட்டு கோபித்து மனம்வாடி முன்னின்ற வண்ணமே தனித்தவனாகி நின்றனன்.—எ-று. (௩௩௨)

கண்ட கன்படை முற்றொருங் கிறந்தது காணூ
வெண்டொ கைப்படு பூதரு மேனைவீ ரர்களு
முண்ட கந்தனி லிருந்திடு புங்கவன் முதலா
மண்டர் யாவருந் துயரொரீஇ யுவகைபெற் றார்த்தார்.

(இ-ள்.) சூரபன்மனுடைய சேனைகள் முழுமையும் ஒன்றாயிறந்ததனைக்கண்டு நூற்றெட்டு என்னும் தலைவர் தொகைக்குள்ளடங்கிய இரண்டாயிரம் வெள்ளம் என்னும் பூதர்களும் இவரன்றியுள்ள மற்றைய வீரர்களும் தாமரைமலரிலிருக்கின்ற பிரமன் முதலிய தேவர்கள் அனைவரும் துன்பம்நீங்கி இன்பமடைந்து ஆரவாரித்தார்கள்.-எ-று.

அழுந்து மாரிரு ளொருவிவிண் மிசைதனி லடைவோர்
கழிந்த தோரிடை யூற்றினன் மீட்டுமக் கதியில்
விழுந்த தேயெனத் துன்பொடு நின்றனன் விளிவுற்
றெழுந்த தானையை யிழந்திடு மவுணருக் கிறைவன்.

(இ-ள்.) இறந்தெழுந்தசேனைகளைப் பின்னருமிழந்த வசுராதிபனாகிய சூரபன் மன் தாம் மூழ்கிக்கிடந்த அரிய நரகினின்று நீங்கி சுவர்க்கத்திற்குச்செல்வோர் இறந்த காலத்திற்செய்துள்ள ஒருபாவத்தால் பின்னரும் அந்நரக கதியிலேயே விழுந்தாற்போலத் துன்பத்துடன் நின்றனன்.—எ-று. (௩௩௪)

அனைய தன்மையி னின்றிடு மவுணர்கோ னுற்றச்
சினம தெய்தியென் படையெலாஞ் சிதைத்தபா லனையுந்
தனிமை செய்துபின் வெல்வனென் றுளங்கொடு தழற்கண்
முனைவ னல்கிய தேரினை நோக்கியே மொழிவான்.

(இ-ள்.) அத்தகையநிலைமையில் நின்றுள்ளவசுராதிபன் மிகவும் கோபங்கொண்டு யான் என்சேனைகளையழித்த சிறுவனையும் என்னைப்போலத் தனித்தவனாகச்செய்து பின்னரவனை வெல்வேனென்று தன்மனதில் நினைத்துக்கொண்டு அக்கினிக்கண்ணினை யுடைய ஆதிமுதல்வன் அளித்த இந்திரஞாலத் தேரினைப்பார்த்து உரைப்பானாயினன்.—எ-று. (௩௩௫)

கொச்ச கத்தியற் குதலைவாய் மதலைபாற் குழீஇய
வச்சி ரத்தெயி றுடையவெம் பூதரை வயின்சூழ்
கைச்சி லைத்திறல் வீரரைக் கவர்ந்துபோ யண்டத்
துச்சி யிற்கொடு வைத்தனை யிருத்தியென் றுரைத்தான்.

(இ-ள்.) நீ கொச்சகத்தன்மைபொருந்திய குதலைவாயினையுடைய இச்சிறுமதலையினருகிற்சூழ்ந்துள்ள வச்சிரம்போன்ற பற்களுடைய வெவ்வியபூதர்களையும் அருகிற் சூழ்ந்தநிற்கின்ற வன்மைபொருந்திய கைவிற்படைகளையுடைய வீரர்களையும் வாரிச் சென்று அண்டமுகட்டில் கொண்டுவைத்து அங்கு காவலாக இருக்கக்கடவை யென்று கூறினன்.—எ-று. (௩௩௬)

உரைத்த காலையி னன்றெனா வினவியே யோடித்
திருத்த குந்திறல் வாகுவை முதலினோர் திறத்தைக்
கிருத்தி மப்பெருந் தானையைக் கிளையொடும் வாரிக்
கருத்தை மாமயல் செய்தது கைதவன் கடுந்தேர்.

(இ-ள்.) கீழ்மகனான சூரபன்மனுடைய வேகத்தினையுடைய வத்தேர் அவன் அவ்வண்ணம் உரைத்தவுடனே அவன்மொழியை நல்லதென்று கேட்டுக்கொண்டு ஓடிச் சென்று தக்க திறலாளனான வீரவாகுமுதலியோர்களையும் பெரிய பூதசேனைகளையும் கிளையுடனேவாரி அவர்கள்மனத்தை மிகுந்த மயக்கத்திற்குள்ளாக்கியது.-எ-று.(௩௩௭)

கையர் தன்மையிற் கடற்படை முழுவதுங் கவர்ந்து
மையல் சிந்தையிற் செய்துதன் வயினிடைத் தாங்கி
பொய்யெ னச்சென்று மூதண்ட கோளகை யுழிப்போய்
வெய்ய வன்பணி யாற்றியாண் டிருந்தது வியன்றேர்.

(இ-ள்.) இழிஞரின் தன்மையாய் பெருமைவாய்ந்த வவ்விரதம் கடல்போன்ற சேனைகளனைத்தையும் வாரிக்கொண்டு அவர்கள்மனத்திற்கு மயக்கத்தையு முண்டாக்கி தன்னிடத்திற் சுமந்துகொண்டு விரைவாகச்சென்று பெரிய அண்டகோளத்தினையடைந்து கொடிய சூரபன்மனுடைய கட்டளைக்குப் பிறழாமல் அவன் உத்திரவின்படி காவலாக அவ்விடத்தில் இருந்தது.—எ-று. வயின்-வயிறுமாம். (௩௩௮)

நிமல னவ்வழித் தானையம் பெருங்கட னீங்கத்
தமிய னின்றன னங்கது தகுவர்கோன் காணு
நமது தேர்வலி நன்றெனு வுவகையா னகைத்தா
னமர ரச்செய னோக்கியே பின்னரு மயர்ந்தார்.

(இ-ள்) அப்பொழுது நின்மலனாகிய குமரப்பெருமான் பெரியசேனாசமுத்திரம் விலக, தனித்தவனாக நின்றருளினான் அதனை யசுராதிபன்கண்டு நமது தேரின்வன்மை நன்றாயிருக்கிறதென்றுரைத்துச் சிரித்தனன். இச்செய்கையைத் தேவர்கள்பார்த்து பின்னரும்அயர்ச்சி யடைந்தார்கள்.—எ-று. (௩௩௯)

சூரி டத்துறு சூழ்ச்சியுந் துணைவர்க டம்மைப்
பாரி டத்தொடு முகந்தெழீஇ மாயையிற் படர்ந்த
தேரி டத்தியல் வன்மையு மாங்கனந் தெரிந்தா
னேரி டப்பி றரின்றியே தமியனு நேடியோன்.

(இ-ள்.) ஒப்பிடுவதற்குப் பிறரொருவரும் இல்லாது தனித்தவனாகி நிற்கும் எம்பெருமான் சூரபன்மனிடத்துள்ள வாலோசனையும் மாயைத்திறத்தினால் பூதகூட்டங்களுடன் துணைவர்களாயுள்ளவர்களை வாரியெடுத்துக்கொண்டு மேலெழுந்து, சென்ற தேரினிடத்திற் பொருந்திய வன்மையையும் அங்குணர்ந்தனன்.—எ-று. (௩௪௦)

கண்டு சிறியோர் கார்முகம் வாங்கியே கடிதோர்
திண்டி றற்கணை பூட்டிநஞ் சேனையைப் பற்றி
யண்ட கோளகை புக்குறு மடுமுரண் டேரைக்
கொண்டு வல்லையின் வருகென விடுத்தனன் குமரன்.

(இ-ள்.) குமரப்பெருமான், அத்தேரின் செயலைக்கண்டு சீற்றங்கொண்டு ஓர் வில்லினை வளைத்து அதனில் விரைவாக ஒரு திண்ணிய திறம்வாய்ந்த அம்பினைவைத்து நம் சேனைகளை வாரிக்கொண்டு அண்டகோளகையிற் புகுந்திருக்கின்ற வன்மையினைச் செய்கின்ற இரதத்தினை விரைவிற்கொண்டுவரக்கடவையென்றுரைத்து விடுத்தருளினான்.

விடுந்த னிக்கணை வேலெனச் சென்றுவில் வீசி
யிடந்தி கழ்ந்திடு மேழ்வகை யுலகமு மிமைப்பிற்
கடந்து மற்றுள பதங்களு நீங்கியோர் கணத்திற்
றொடர்ந்து மூதண்ட கோளகை புகுந்தது துன்னி.

(இ-ள்.) குமரப்பெருமான் விட்ட அவ்வொப்பற்ற வம்பு வேலாயுதத்தைப் போற்சென்று ஒளிவீசிக்கொண்டு விசாலமாகி விளங்காநின்ற எழ்வகைலோகங்களையும் மற்றுமுள்ள பதங்களையும் கடந்து ஓர் கணப்போழ்தில் பெரிய வண்டகோளகையைத் தேடிக்கொண்டு அவ்விடத்திற்குத் தொடர்ந்து சென்றது.—எ-று. (௩௪௨)

துன்னி வெஞ்சர மாயமான் றேர்வலி தொலைச்சி
யன்ன தைக்கொணர்ந் தொல்லையின் மீண்டுளதம்மா
மின்னு லாய்கிமி ரெழிலியை விண்ணினும் பற்றி
யிந்நி லத்தினிற் கொடுவரு மாருதத் தியல்போல்.

(இ-ள்.) மின்னலொடு பொருந்தி வானத்தில் உலாவுகின்ற மேகத்தினைப்பிடித்து இந்த பூமியிற் கொண்டுவரும் வாயுவின் றன்மையைப்போல வெவ்விய வவ்வம்பு அண்டகோளகைக்குட்சென்று மாயத்தினையுடைய பெரியதேரின் வல்லபத்தைக்கெடுத்து அதனை எடுத்துக்கொண்டு விரைவாகத் திரும்பிவந்தது.—எ-று. (௩௪௩)

வேறு.

வெந்திற னெடுங்கணை மீண்டு ஞாலமே
லிந்திர ஞாலமா மிரதத் தைக்கொடு
கொந்தவிழ் மாலைவேற் குமரன் றன்முனம்
வந்தது வானவர் வழுத்தியார்ப்பவே.

(இ-ள்.) வெவ்விய தன்மையினையுடைய திறல்வாய்ந்த நெடிய அவ்வம்பு திரும்பி பூமியில் இந்திரஞாலமென்னும் தேரினை எடுத்துகொண்டு தேவர்களெல்லாந் துதித்து ஆரவாரிக்கும் வண்ணம் கொத்தாகவிரிந்த மலர்களாற் கட்டப்பட்ட மாலையினையணிந்த குமரக்கடவுளின் எதிரில் வந்தது.—எ-று. (௲௪௪)

முப்புர முடித்தவன் முருகன் றன்கணை
யிப்புவி வருதலு மிலக்கத்தெண்மரு
மொப்பறு மிளவலு மொல்லென் பூதருங்
குப்புற னுற்றனர் கொடியன் றேரினும்.

(இ-ள்.) முருகக்கடவுளினதான முப்புரசங்காரி யினம்பானது இவ்வுலகத்திற்கு வந்தவுடனே ஒப்பற்ற வீரவாகு தேவனும் ஒல்லென்றொலிக்கின்ற பூதர்களும் கொடியவனான சூரபன்மனுடைய இரதத்தினின்றும் குதித்தார்கள்.—எ-று. (௲௪௫)

குதித்தனர் புடவியிற் குமர வேளிரு
பதத்திரு மலர்தனைப் பணிந்து பன்முறை
துதித்தனர் புடைபராய்த் துன்னி நின்றனர்
கதித்திடு பேரருட் கடலின் மூழ்கியே.

(இ-ள்.) பூமியிற் குதித்தவர்கள் குமரவேளின் உபய திருவடித் தாமரைகளை வணங்கி அநேக முறை அவரைத் துதித்து அருகிற்சென்று நெருங்கி நின்று பெருத்த பேரருட்கடலின் மூழ்கினார்கள்.—எ-று. (௲௪௬)

ஆவதோர் காலையி லகிலம் யாவுமாம்
மூவிரு முகனுடை முக்க ணன்மகன்
வாவியல் வனப்புடை மாயத் தேர்தெரீஇத்
தேவர்கள் பரசுற வினைய செப்புவான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் உலகமுழுமையுமாக வியாபித்து நின்ற ஆறுதிருமுகங்களையுடைய சிவகுமாரன் தாவுகின்ற இயல்பினையுடைய மாயா இரதத்தைப்பார்த்துத்தேவர்கள் துதிக்கும்வண்ணம் இவைகளையுரையாநிற்பான்.—எ-று (௲௪௭)

தொல்லையில் வரம்பெறு சூரன் றன்புடை
செல்லலை யாங்கவன் முடிகை திண்ணமான்
மல்லலந் திருவுடை மாயத்தேரைநீ
நில்லிவ ணென்றன னிகரி லாணையான்.

(இ-ள்.) ஒப்பற்ற ஆணையினையுடைய குமரப்பெருமான் இந்திரஞாலத்தினைப் பார்த்து வளமும் செல்வமுமுடைய மாயாவிரதமே நீ இங்குநில் முன்னாளில்; வரம்பெற்றுள்ள சூரபன்மனிடத்திற்குச்செல்லாதே அவன்இறந்துபடுதல்நிச்சயம். என்று திருவாய் மலர்ந்தருளினான்.—எ-று. (௲௪௮)

ஆண்டது வினவுறு வவுணர் கோன்புடை
மீண்டிட லஞ்சியே மேலை வன்மைபோய்
மாண்டிடல் பிறப்பிலான் மதலை மாடுறப்
பாண்டிலந் தேரது பணியின் நின்றதே.

(இ-ள்.) பாண்டிலினையுடைய அவ்விரதம் அவ்விடத்திலதனைக் கேட்டு அசுராதிபனிடத்திற்குத் திரும்ப வருவதற்குப் பயந்து முன்னிருந்த வன்மையிழாது இறத்தல் பிறத்தலற்ற பரமேசுவரனுடைய இளங்குமாரனான குமாரசுவாமியின் அருகாக அவர் கட்டளைப்படி நின்றது. எ-று. (௲௪௯)

அண்டம தடைந்ததே ரையன் வாளியான்
மண்டல மிழிந்து தன்மருங் குறுதது
மெண்டகு பூதரும் யாரு மீண்டதுங்
கண்டன னவுணர்கோன் கனலிற் சீறினன்.

(இ-ள்.) அண்டமுகட்டையடைந்த இரதமானது ஐயனாகிய குமரக்கடவுளின் அம்பினால் பூமியிலிறங்கியதும் அது திரும்பத்தன் பக்கத்தில் வராததும் புகழ்பொருந்திய பூதவீரர்கள் முதலிய அனைவரும் திரும்பவந்ததும் சூரபன்மன் கண்டு தீயைப் போல சீற்றங்கொண்டனன். எ-று. (ருஙo)

அன்னது காண்டலு மவுண னுங்கொரு
கொன்னெடுஞ் சிலையினைக் குனித்து வல்லையிற்
பன்னிரு கரமுடைப் பண்ண வன்மிசை
மின்னிகர்பகழிகண் மீட்டும் வீசினன்.

(இ-ள்.) அதனைக் கண்டவுடனே சூரபன்மனவ்விடத்திலொரு வலிய நெடிய வில்லினை வளைத்து விரைவாக, துவாதச அத்தங்களையுடைய குமரக்கடவுண்மீது மின்னலையொத்த அம்புகளைப் பின்னும் விடுத்தனன்.—எ-று. (ருஙக)

மாசறு கங்கைதன் மதலை யவ்வழிக்
காயசினங் கொண்டொரு கார்முகம் வளைஇ
யாசுக மாரிபெய் தவுணர் கோமகன்
வீசியகணையெலாம்விலக்கி னனரோ.

(இ-ள்.) குற்றமற்ற கங்காதேவியின் திருக்குமாரனான கந்தவேள் அப்பொழுது மிகுந்த கோபங்கொண்டு ஒரு வில்லினை வளைத்து அம்புகளைவிடுத்து அசுர அரசன் விடுத்த அம்புகளையெல்லாம் விலக்கினன்.—எ-று. (ருஙஉ)

கையனுமத்துணை காய்சினங் கொளீஇ
யொய்யென வெந்தைதே ருய்க்கும் வன்மையோன்
மெய்யிட மெங்கணும் வெளியு றுவகை
செய்யன பகழிகள் செறித்துப் போர்செய்தான்.

(இ-ள்.) உடனே அசுரனும் அவ்வளவு சீற்றங்கொண்டு விரைவாக எம்பெருமானுடைய இரதத்தினை யோட்டுகின்ற வாயுதேவனுடைய சரீரமுழுமையும் வெள்ளிடையில்லாதவண்ணம் செவ்விய அம்புகளை விட்டுப் போர்புரிந்தனன்.—எ-று. (ருஙங)

பொருந்தலன் கணைபடப் புலம்பிக் காற்றினோன்
வருந்தி னன் மயங்கினன் மாக்க டேண்டல
னிருந்தனன் வறிதவ னியற்கை யாவையுந்
தெரிந்தனன் குமரவே ளருளின் செய்கையான்.

(இ-ள்.) பகைவனான சூரபன்மன் விடுத்தஅம்புகள்பட அதனால் வாயுபகவான் புலம்புதலடைந்து வருந்தி மயங்கி இரதத்திலுள்ள குதிரைகளை ஓட்டாமலிருந்தனன் இவனதித்தன்மையை அருளே வடிவமான குமரப்பெருமான் திருக்கண் சாத்தியருளினன்.—எ-று. (ருஙச)

கண்டிடு முருகவேள் கணைக ளாயிரம்
விண்டொடர் செலவினால் விடுத்து வெய்யசூர்
கொண்டிடு சிலையினைக் குறைத்துப் பல்பெருந்
துண்டம தாக்கின னமரர் துள்ளவே,

(இ-ள்) பார்த்தருளிய குமரப்பெருமான் ஆயிரமம்புகளை வான் வழியாகச் செல்லுமாறு விடுத்துக்கொடிய சூரபன்மன் கையிற் பிடித்திருந்த வில்லினை ஒடித்து பல பெரியதுண்டுகளாக தேவர்கள் கண்டு மகிழ்ச்சியாற் குதித்துக்கூத்தாடுமாறு செய்தருளினன்.—எ-று. (௩௯௫)

வேறு.

கைச்சிலை முரியச் சூரன் கண்ணுதற்பெருமான் றந்த
முச்சிகைப் படையொன் றேந்தி முடங்குளை யூர்தி தன்னை
யுச்சியி னீபஞ் சூடு முலகுடை யொருவ னூர்ந்த
வச்சுறு தடந்தேர் முன்ன ரூறுறத் தூண்டிச் சென்றான்.

(இ-ள்.) கையிலிருந்த வில் ஒடிதலும் சூரபன்மன் தனக்கு நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானளித்த மூன்று சிகையினையுடைய ஒரு சூலாயுதத்தினையெடுத்து வளைந்த புறமயிரினையுடைய சிங்கவாகனத்தினை தலையினில் நீபமலர்மாலையணிந்த உலகநாதனுடைய அச்சினையுடைய பெரிய இரதத்தினருகாக ஓட்டிக்கொண்டு சென்றனன்.—எ-று. (௩௯௬)

தூண்டிய வரிமா னேறு சூரன துளத்திற் போந்து
மாண்டகு தனது தீய வள்ளுகிர்க் கரத்தா லெந்தை
பாண்டிலந் தேரை யாற்றும் பரித்தொகை பதைப்ப மோதி
யாண்டய னின்ற பூத ரலமர வார்த்த தன்றே.

(இ-ள்.) தான் ஏறி நடாத்திச்சென்ற ஆண்சிங்கமானது சூரபன்மனுடைய மனதைப்போல விரைவாகச்சென்று மாட்சிமைபொருந்திய தனது கொடிய கூரிய நகத்தினால் எம்பெருமானுடைய வட்டமான இரதத்தினைச் சுமக்கின்ற குதிரைக்கூட்டங்கள் துடிக்கும் வண்ணம் அடித்து அவ்விடத்திலருகில் நின்ற பூதங்கள் மனத்தளர்ச்சி அடையும் வண்ணம் ஆரவாரித்தது.—எ-று.

மாண்டகு என்பதற்கு, கெட்டொழிகின்ற என்றுங் கூறுப. (௩௯௭)

அன்னது பொழுது தன்னி லரிமிசைச் சென்ற சூரன்
றன்னுடை வலங்கை கொண்ட தனிப்பெருஞ் சூலந் தன்னைப்
பன்னிரு தடந்தோள் கொண்ட பகவன்மேற் றிரித்து வீச
மின்னென நிலவு கான்று விண்வழிப் படர்ந்த தன்றே.

(இ-ள்.) அப்பொழுது சிங்கவேற்றின்மீது சென்ற சூரபன்மன் தனது வலது கையில் வைத்திருந்த ஒப்பற்ற பெரிய சூலாயுதத்தினை விசாலமான பன்னிரண்டு திருத்தோள்களையுடைய முருகக்கடவுண்மீது சுழற்றியெறிய அது மின்னலைப்போல ஒளி வீசிக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் சென்றது.—எ-று. (௩௯௮)

நீடிய சூலஞ் செல்ல நிமிர்ந்தன வெழுந்து செந்தீக்
கூடின வசனி யீட்டங் குழீஇயின படையின் கொள்ளை
யாடியல் கணங்க ளீண்டி யார்த்தன வதனை நோக்கி
யோடின ரமர ரானோ ருலகெலாம் வெருவிற் றம்மா.

(இ-ள்.) நீளம் பொருந்திய சூலமானது செல்லாநின்ற சமயத்தில் அதினின்றும் நிமிர்ந்தனவாகவுள்ள செந்தீப்பொறிகள் கூடின; இடிக்கூட்டங்கள் நெருங்கின; ஆயுதக் கூட்டங்களையுடைய கணங்கள் நெருங்கி ஆரவாரித்தன. அதனைப்பார்த்து தேவர்களெல்லாம் ஓடினார்கள். உலகங்களெல்லாம் பயம் அடைந்தன.—எ-று (௩௯௯)

அண்ணலு மதனை நோக்கி யாயிர கோடி வாளி
கண்ணகன் சிலையிற் பூட்டிக் கதுமென வெதிர்தந் துய்ப்பத்

துண்ணென வவற்றை யெல்லாஞ் சூலவே றுணித்து வீட்டி
நண்ணலன் வெகுளித் தீயி னுருவென நடந்த தன்றே.

(இ-ள்.) குமரக்கடவுளும் அதனைப்பார்த்து விரைவாக விசாலமான வில்லினில் ஆயிரகோடி அம்புகளை யெதிராக விடுப்ப அவ்வேல் அவற்றை யெல்லாம் துண்டித்தொழித்து, பகைவனாகிய சூரபன்மனது கோபத்தீயின் உருவத்தைப் போலச் சென்றது.—எ-று. (௩௬௦)

நடத்தலு முகமா றுள்ளோன் ஞானநா யகனீங் குள்ள
படைத்திறல் வன்மை யுன்னிப் பாணியொன் றதனின் மேவி
யடுத்திடு குலிசந் தன்னை யடையல னுய்த்த சூலம்
பிடித்தனை வருதி யென்று பேசினன் செல்ல விட்டான்.

(இ-ள்.) எதிர்வந்தவுடனே ஆறுமுகப்பெருமான் ஞானநாயகனாகிய சிவபெருமான் சூரபன்மனுக்களித்தருளிய ஆயுதத்தின் திறமையான வன்மையைப்பார்த்து தமது திருக்கரமொன்றினில்பொருந்தியிருந்த வச்சிராயுதத்தினைப்பார்த்து நீ பகைவ னனுப்பிய சூலாயுதத்தினைப்பிடித்துக்கொண்டு வரக்கடவையென்று திருவாய் மலர்ந்து விடுத்தருளினன்.—எ-று. (௩௬௧)

விட்டிடு கின்ற வெல்லை வியன்பெருங் குலிச மேகி
நெட்டழற் சிகைமீக் கான்று நிமிர்ந்திடு சூலந் தன்னைக்
கிட்டுத லோடும் பற்றிக் கிளர்ந் தமுத் தலையுங் கவ்வி
யொட்டலன் சிந்தை யுட்க வொய்யென மீண்ட தன்றே.

(இ-ள்.) விடுத்தருளினவுடனே மிகவும் பெருமைவாய்ந்த வச்சிராயுதமானது சென்று மிகுந்த அக்கினிச் சுவாலையை வீசிக்கொண்டு நிமிர்ந்து வாராநின்ற சூலாயுதத்தினை யடுத்துப் பிடித்து அதன் மூன்று தலைகளையும் கௌவிக்கொண்டு பகைவனது மனம் இடியுமாறு விரைவாகத்திரும்பி வந்தது.—எ-று. (௩௬௨)

முத்தலைப்படையைக் கொண்டு முரண்மிகு குலிசஞ் செவ்வேள்
கைத்தல முய்த்துத் தானுங் கதுமென விருந்த தம்மா
பைத்தலைப் பாந்தள் போற்றும் பருவரைச் சிகர மூன்று
மித்தலப் புணரி தன்னி விடுமருத் தியற்கை யேபோல்.

(இ-ள்.) படப்பையினையுடைய ஆதிசேடனால் காக்கப்பட்ட பெரிய மேருமலையின் மூன்று சிகரங்களையும் இப்பூவுலகத்திலுள்ள கடலில் விட்ட வாயுதேவனது தன்மையைப்போல மூன்றுதலைகளையுடைய சூலாயுதத்தினைக் கௌவிக்கொண்டு வன்மைமிகுந்த வச்சிரமானது குமரக்கடவுளின் திருக்கரத்திலளித்து தானும் விரைவாக முன்னிருந்த வண்ணமாகவே யிருந்தது. (௩௬௩)

ஆண்டது காலை தன்னி லறுமுகத் தையன் கையிற்
றூண்டிய குலிசத் தோடு சூலமும் வருத லோடுங்
காண்டகு மமர ரெல்லாங் கரதல முச்சி கூப்பி
யீண்டிவன் றன்னை யட்டே யெமையளித் திடுதி யென்றார்.

(இ-ள்.) அவ்வாறாகிய வப்பொழுது சண்முகப்பெருமானது திருக்கரத்தில் நின்றும் விடுத்தருளிய வச்சிரப்படையுடன் பகைவனால்விடப்பட்ட சூலப்படையும் வந்து சேருதலும் அதனைக் கண்ட தேவர்கள் அனைவரும் கைகளைத்தலைகளின்மீது குவித்துக் கொண்டு எம்பெருமானே இவ்விடத்தில் இவனைக்கொன்று எங்களை இரக்ஷிப்பாயாக என்றனர்.—எ-று. (௩௬௪)

என்னலு மெந்தை கேளா விராயிரம் பகழி பூட்டி
யொன்னல னூர்ந்து செல்லு மொருபெரு மடங்க லேற்றின்
சென்னியி லெழுந்த வோடுஞ் சேண்கிளர்ந் தரற்றி வீழ்ந்து
தன்னுயி ரொல்லை வீந்து தரையிடைப் பட்ட தன்றே.

(இ-ள்.) இவ்வாறு தேவர்கள் உரைத்தலும் அதனை யெம்பெருமான் கேட்டு இரண்டாயிரம் அம்புகளைப்பகைவன் ஏறி நடாத்துகின்ற ஒப்பற்றபெரிய ஆண் சிங்கத்தின் தலையிலழுத்த தலும் அதுமேலே குதித்து கூச்சலிட்டுக்கொண்டு கீழேவிழுந்து தனது உயிர் விரைவில லழிந்து பூமியிற் கிடந்தது.—எ-று. (நகூ0)

ஊர்திய திறந்து வீழ வொருதனிச் சூரன் காணாப்
பார்தனிற் பாய்ந்து நின்று பராபரன் செம்மல் கையிற்
கூர்தரு சூலம் போன கொள்கையுந் தெரிந்து பின்னுட்
சேர்தரு வடவை யென்னச் செயிர்த்திவை சிந்தை செய்வான்.

(இ-ள்.) வாகனமான சிங்கமானது இறந்து வீழ்தலும் அதனை ஒப்பற்ற சூரபன்மன் கண்டு தரையிற்குதித்து, பராபரனை சிவகுமாரனது கையில் தான்விட்ட சூலம் சென்றிருந்த தன்மையு முணர்ந்து பிரளய காலத்தில் உலகத்தை நோக்கி வாராநின்ற வடவாக்கினியைப் போலச் சீறி இவைகளை யெண்ணு வானாயினன்.—எ-று. ()

தேரொடு படையை வௌவித் திறலுடை மடங்கல் சிந்தி
நேரலன் வலிய னேபோ னின்றன னனையன் றன்னைச்
சாரதர் தொகையை யேனைத் தலைவர்க டம்மை யெல்லா
மொருருக் கொண்டி யானே விழுங்குவ னெல்லை யென்றான்.

(இ-ள்.) எனது தேரினுடன் சூலப்படையினையும் அபகரித்துக்கொண்டு பெலம் பொருந்திய சிங்கத்தையும் கொன்று பகைவனாகிய இவன் வன்மை யாளனைப் போல நின்றனன். அவனையும் பூதர் கூட்டத்தினரையும் மற்றுள்ள தலைவர்களையுமெல்லாம் யானே ஓர் உருவம் கொண்டு விரைந்து விழுங்குவன் என்றெண்ணினன்.– எ-று.

என்றிவை மனத்தி னுன்னி யிணையறு மாயை நீரா
னின்றுள வவுணர்செம்ம லேமியம் புள்ளே போல
வொன்றொரு வடிவமெய்தி யொலிதிரைக் கடலி னார்த்துத்
தன்றுணைச் சிறகர்பெற்ற தனிப்பெருங் கிரிபோ லுற்றான்.

(இ-ள்.) என இவைகளை மனதில் நினைந்து ஒப்பற்ற மாயைத் தன்மையால் பூமியில் நின்ற அசுராதிபனாகிய சூரபன்மன் சிம்புட் பறவையைப்போன்ற ஓ ருருவத்தையடைந்து ஒலியினையும் திரையினையுமுடைய கடலைப்போல ஆரவாரஞ்செய்துகொண்டு தனது இரண்டு இறகுகளையும் அடைந்த பெரிய மலையைப்போல நின்றனன்.

கறையடித் தந்திசிந்துங் காய்சினவரி மேனுய்க்கு
நறையடிக் கமலத்தையை ஞாட்பிடை யாடற்கொத்த
பறையடித் திட்டதேபோற் படிமக ளுடலம் விள்ளச்
சிறையடிக் கொண்டுதீயோன் சேணிடை யெழுத லுற்றான்.

(இ-ள்.) உரல்போலும் கால்களையுடைய யானைகளை யழியாநிற்கும் சீற்றத்தினையுடைய சிங்கத்தினையேறி நடாத்து கின்றதேன் பொருந்திய தாமரை மலர்களைப் போன்ற கால்களையுடைய வீரலட்சுமியானவளபோர்க்களமாகிய நாடகசாலையில் வீரநடனமாடுதற் கேற்றபறையினை முழக்கினாற்போல பூமிதேவியின்சரீரம் பிளக்கும்படி சிறகுகளையடித்துக்கொண்டு கொடிய சூரபன்மன் வானத்திற் பறந்து சென்றான்.—எ-று.

மண்ணிடை வரைப்பு முற்றுமணிச் சிறைபதனுன் மூடி
விண்ணிடைப் பரிதியொள் வாள்விலக்கியே சுழலும் வேலைக்
கண்ணிடைப் பெருமீன் குப்பை கவர்ந்திட வூக்கிற்றென்னத்
துண்ணெனப் பூதர்தானைச் சூழல்புக் கெறியு மாதோ.

(இ-ள்.) பூமியின் இடை வெளிகள் முழுமையும் கரிய இறகினுன்மூடி ஆகாயத்திலுள்ள சூரியனது ஒள்ளிய ஒளியினைத் தடுத்து வட்டமிட்டுச் சுழலாநிற்கும். அன்றியும் சமுத்திரத்தினிடத்துள்ள பெரியமீன் கூட்டங்களைக்கவரும் பொருட்டடித்தாற் போலத் திடீரென்று பூதசேனைகள் நிற்கும் மிடங்களிற் சென்று இறகாலடியா நிற்கும்.

அடித்திடுஞ் சிறகர்தன் னுலளவையில் பூதர்தம்மைப்
பிடித்திடும் புலவுநாறும் பெருந்தனி மூக்கிற் குத்தி
மிடற்றிடைச் செறித்து மெல்லவிழுங்கிடும் விறல்வே லண்ணல்
கொடித்தடந் தேரைச் சூழுங்கொடிய புள்வடிவக் கூற்றம்.

(இ-ள்.) வெற்றி பொருந்திய வேற்படையினையுடைய குமரப்பெருமானுடைய கொடிகள் பொருந்திய இரதத்தினைச்சுற்றி வருகின்ற கொடிய சிம்புள் உருவத்தினையுடைய கூற்றமானது அடியாகின்ற சிறகினுல் அளவற்ற பூதர்களைப் பிடியாநிற்கும். புலால் நாற்றம் வீசுகின்ற பெரிய மூக்கினுல் கொத்தி கண்டத்திலடக்கி மெல்லென விழுங்காநிற்கும்.—எ-று. (௩௭௧)

சுற்றிடுங் குமரன் றேரைத் தூண்டிய வலவன் றன்னை
யெற்றிடுங் கொடிஞ்சி யெஞ்சவிறுத் திடும்பரி கடம்மைக்
குற்றிடு மூக்கிற் சென்னி கொய்திடுங் குழீஇய வீரர்ப்
பற்றிடும் படைகண் முற்றும் பறித்திடு முறித்து வீசும்.

(இ-ள்.) சுழன்றோடாநின்ற குமரக்கடவுளின் இரதத்தை யோட்டுகின்ற சாரதியை யிறகினுலடிக்கும். கொடிஞ்சி கெடுமாறு ஒடிக்கும். குதிரைகளைக்கொத்தும். மூக்கினுல் தலைகளை யறுக்கும், நெருங்கிய வீரர்களைப்பிடித்து அவர்கள் கையாயுதங்கள் அனைத்தையும் முறித்து எறியாநிற்கும் —எ-று. (௩௭௨)

இத்திற மவுணர்செம் மலிருஞ்சிறைப் புள்ளதாகி
யத்தலைக் கறங்கி வீழ்வுற்றந் தரந்திரித லோடு
முத்தியை யுதவுநோன் றாண்மூவிரு முகத்தன் காணுக்
கைத்தலம் புடைத்து நக்குநன் றிவன் கற்பிதென்றான்.

(இ-ள்.) இவ்வண்ணம் அசுராதிபன் பெரிய இறகினையுடைய சிம்புட் பறவையாய் அவ்விடத்திற் சுழன்று விழுந்து ஆகாயத்திலு லாவுதலும் முத்தியருளா நின்ற வன்மை யினையுடைய திருவடியையுடைய சண்முகப்பெருமான் பார்த்து கைகொட்டிச்சிரித்து இவன் கற்றுள்ளது நன்றாயிருக்கிறதென் றுரைத்தருளினுன்.—எ-று. ()

எறித்தரு சுடர்வே லண்ண லிம்மென வெகுண்டு போரி
னிறுத்திய மேருவென்ன நிமிர்ந்ததோர் வரிவில் வாங்கி
விறற்கணைய நந்தகோடி மிசைமிசைக் கடிது பூட்டித்
திறத்தியல் புள்ளாய்ச் சூழு மவுணன் மேற்செல்ல வுய்த்தான்.

(இ-ள்.) சுடர் வீசாநின்ற வேற்படையினையுடைய குமரப்பெருமான் திடீரென்று சீற்றங்கொண்டு சண்டையில் நிறுத்திவைத்த மேருமலைபோன்ற உயர்ந்த ஒப்பற்ற வாரிட்டிறுக்கிய வில்லினைவளைத்து அதனில வெற்றிபொருந்திய அநந்தங் கோடி யம்புகளை ஒன்றின்பின்னென்றாக விரைந்து பூட்டி வன்மையொடு விளங்காநின்ற சிம்புட்பறவைமீது விடுத்தருளினன்.—எ-று. (௩௭௪)

நெறித் திகழ்பகழி மாரிநிமலன் விட்டிடலும் வெய்யோன்
சிறைப்புடைக் கொண்டு பாங்கிற் சிந்திட வவற்றை மோதிக்
குறைததிடுந் துண்டந் தன்னுற் கொய்திடுந் தாளிற்பற்றி
முறித்திடுங் கிளர்ந்து வானமுழு வதுஞ் சுழன்று செல்லும்.

(இ-ள்.) ஒழுங்காக விளங்காநின்ற அம்புகளைமழைபொழிந்தாற்போலநின்மலனுகிய குமாரப்பெருமான் விடுத்தலும் கொடியவனுகிய சூரபன்மன் இறகினையடித்தலைக்கொண்டு அருகிற் சிதறி விழுமாறு அவைகளை யடித்தொடிப்பான் மூக்கினுலும் அறுத்தெறிவான். காலிற் பிடித்தும் ஒடிப்பான். ஆகாயமுழுமையும் பரந்து விளக்கமாகச் சுழலாநிற்பான்.—எ-று. (௩௭௫)

வேலைக ளெல்லை முற்றும் படர்ந்திடும் விராவி மேவு
ஞாலம தகலமுற் றும்படர்ந்திடு நாகர் வைகும்
வாலிய வுலகமுற் றுபபடர்ந்திடும் வந்துபூத
சாலம தெறிந்து கவ்வித் தலைத்தலை மயங்கிச் செல்லும்.

(இ-ள்.) கடலின் எல்லை முழுமையும் செல்லாநிற்கும். சென்று திரும்பிவராநிற்கும். உலகத்திலகலம் எவ்வளவுண்டோ அவ்வளவுஞ் செல்லும், நாகர்கள் வசிக்கின்ற தூய்மையான பாதலலோக முழுமையும் செல்லாநிற்கும். பின்னும் திரும்ப வந்து பூத கூட்டங்களை யிறகாலடித்து வாயாற்கௌவிக்கொண்டு இடங்கள் தோறுஞ் சுழலாநிற்கும்.—எ-து. (௩௭௬)

சூரன்மற் றினையவாற் றுற்சுலாய்க் கொடுதிரித லோடும்
பூரண னதனைக் காணுப் புள்ளெனப் பெயர்வான் றன்னைத்
தேரொடுந் தொடர்ந்து கோறல் பழியெனச் சிந்தைசெய்து
வாரண முயர்த்தோன் றன்னை நோக்கினன் வானோர் தம்முள்.

(இ-ள்.) சூரபன்மன் இவ்வண்ணம் சிம்புளுருவமாகச் சுழன்றுலாவுதலும் பூரணனுன நம் பெருமானதனைக்கண்டு புள்ளுருவங்கொண்டு செல்லாநிற்பவனைத் தேரோடு பின்பற்றிச் சென்று கொல்லுதல் பழியாக வாருமென்று திருவுளத்திற் கருதி தேவர் குழாத்துள் வாரணக்கொடியினனுகிய இந்திரனைக் கடைக்கணித்தருளினர்.-எ-று.

வாரணம்=ஐராவதம்.

இந்திர னனையகாலை யெம்பிரான் குறிப்புந் தன்மே
லந்தமி லருள்வைத்துள் ளதன்மையு மறிந்து நோக்கிச்
சுந்தர நெடுங்கட்பீலித் தோகைமா மயிலாய்த் தோன்றி
வந்தனன் குமரற்போற்றி மரகத மலைபோனின்றுன்.

(இ-ள்.) அப்பொழுது இந்திரனுனவன் எம்பெருமானது திருவுளக்கருத்தும் தன்மீது அளவற்ற அன்புவைத்துள்ள தன்மையுமுணர்ந்துஆலோசித்து அழகிய நெடிய கண்களையுடைய பீலிகளோடு கூடிய சிறந்த மயிலுருவங்கொண்டு எம்பெருமானெதிரிலடைந்து வணங்கி மரகதமலைபோல நின்றனன்.—எ-று. (௩௭௮)

நின்றிடு மஞ்ஞைப்புத்தே ணெடுநிலங் கிழியமேருக்
குன்றமும் புறஞ்சூழ்வெற்புங் குலைந்திடக் கரிகள்வீழ
வன்றிரை யளக்கர்நீத்தம் வறந்திடப் பணிகளஞ்சத்
தன்றுணைச் சிறகான்மோதி யினையன சாற்றலுற்றுன்.

(இ-ள்.) குமாரக்கடவுளின் எதிரில் வந்து நின்ற மயிலுருவங் கொண்ட இந்திரன் நெடிய பூமிகிழியவும் மேருமலையும் அதனருகிற் சூழ்ந்துள்ள மற்றமலைகளும் நிலைகுலையவும் திக்கியானைகள் சோர்ந்து விழவும் வலிய திரைகளையுடைய கடனீர் வறறவும் அரவங்கள் அஞ்சவும் தனது இரண்டு இறகுகளையு மடித்துக்கொண்டு இவைகளை உரைக்கலாயினுன்.—எ-று. (௩௭௯)

ஐயகே ளமரரெல்லாம் வழிபட வளியன் றன்பாற்
செய்யபே ரருளை வைத் தாயாதலிற் சிறுமை தீர்ந்தே
னுய்யலா நெறியுங்க ண்டே னுன்னடி பரிக்கப்பெற்றேன்
பொய்யுலா மாயவாழ்க்கைப் புன்மையும கல்வன் மன்னோ.

(இ-ள்.) என்னையனே கேட்பாயாக, தேவர்களெல்லாம் வணங்க ஏழையாகிய என்மீது செவ்விய பெரிய அருளினை வைத்தனை. ஆதலால் சிறுமையினின்றும் நீங்கி னேன் உய்யத்தக்க மார்க்கத்தையு முணர்ந்தேன். உனது திருவடிகளையும் சுமக்கப்பெ ற்றேன், பொய்யொடு கலந்த மாயவாழ்க்கையாகிய இழிவும் இதனால் ஒழிவேன்.—எ று.

அருள்-கருணை.

அல்லல் செய்தெமரை யெல்லா மருஞ் சிறைப்படுத்தி வீட்டிப்
பல்வகை யுலகையாண் டவவுணர் கோன் பறவையாக்கை
செல்லுழிச் சென்று சென்றுசெரு வினையிழைத்து வெல்வா
னெல்லையி லடியேன் றன்மே லேறுதி யூர்தற்கென்றான்.

(இ-ள்.) எம்மவர்களையெல்லாம் துன்பப்படுத்தி அரிய சிறையிலடைத்துக் கெடு த்து, பலவகையினவான உலகங்களையாண்ட அசுராதிபனுடைய சிம்புட்பறவை உருவ மான உடலானது போமிடத்திற்கெல்லாம் போய்ப்போய் போர்புரிந்து வெல்லுதற்கு விரைவாக அடியேன்மீது ஏறியருள்வாயாக.—எ-று. (ரு அக)

என்னலு முளத்திற் செல்லு மிவுளிமான் றேரினீங்கிப்
பன்னிருநாட் டத்தண்ணல் படர்சிறை மயூரமாகி
முன்னுறு மகவான் றன்மேன் மொய்ம்புடன் புக்குவைகி
யொன்னலன் செலவுநோக்கி யும்பரி லூர்த லுற்றான்.

(இ-ள்.) என்று கூறியவுடனே மனோவேகம்போல செல்லாநிற்கும் இவுளிகளெ ன்னும் குதிரைகளைப்பூட்டியுள்ள இரதத்தினின்றும் இறங்கி பன்னிரண்டு திருக்கண் களையுடைய குமரப்பெருமான் அகலமான இறகுகளையுடைய மயிலாய் எதிரில் வந்து நிற்கின்ற இந்திரன்மீது வன்மையுடன் புகுந்திருந்து பகைவனுடைய செல்கையைப்பார் த்து ஆகாயவீதியில் மயிலினை ஓட்டினான்.—எ-று. (ரு அ௨)

ஆறுமா முகத்தெம் மண்ண லசனிபோ லகவியார்க்கு
மாறிலா மயூரமென் னும்வயப் பரிதனை நடாத்தி
யீறுசேர் பொழுதிற் சூழுமெரி யினையடுவான் முன்னிச்
சூறைமா ருதஞ்சென் றென்னவ வுணனைத் தொடர்ந்து சூழ்ந்தான்.

(இ-ள்.) சிறந்த ஆறுதிருமுகங்களையுடைய எமது கடவுள் இடியைப்போல ஆரவாரித்து எவர்க்கு மாறுபாடில்லாத மயிலென்னும் பரியினை நடாத்தி பிரளயகாலத் தில் உண்டாகின்ற அக்கினியை அவிக்கும்பொருட்டு ஊழிச் சூறைக்காற்றுச் சென் றாற்போல அசுரனைப் பின்பற்றிச் சென்று வளைத்துக்கொண்டனன்.—எ-று. (ரு அ௩)

ஆகிய பொழுது தன்னிலா ழியம்புள் ளாய்த்தோன்றி
மாகம துலவுகின்ற மாற்றல னதனைநோக்கிச்
சீகர வளக்கரென் னத்தெழித்து மேற்சென்று தாக்கக்
கேகய வரசன் றானுங் கிடைத்தமர் புரிதலுற்றான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் சிம்புட் பறவையாய் உருக்கொண்டு ஆகாயத் திற் பறந்துலவுகின்ற பகைவன் அதனைக்கண்டு அலைகளையுடைய கடலினைப்போல ஆர வாரித்து எதிரிற்சென்று போர்புரியாநிற்ப அப்பொழுது மயிலரசனும் எதிர்த்து நின்று போர்புரிந்தனன்.—எ-று. (ரு அச)

நிறங்கிளர் பசலைத் துண்டநீட்டியேயாக் கைமுற்று
மறங்கொடு கீண்டுசெந் நீர்வாய்ப் படக்கவ்வி வாங்கிப்
புறங்கிளர் சிறைகடம் மாற்புடைத்து வெங்கா விற்றாக்கிப்
பிறங்கு புள்ளுருவ மானோ ரிவ்வகை பெரும்போர் செய்தார்.

(இ-ள்.) நிறம் விளங்குகின்ற பசுமையான மூக்கினைநீட்டிச் சரீர முழுமையும் மறத்தினாற் கிழித்து இரத்தத்தினை வாயிற் பொருந்துமாறு கவ்வி இழுத்து வெளியே விளங்காநின்ற இறகுகளால் அடித்துக் கொடியகாலினால் மோதி விளங்காநின்ற பறவையினுருவங் கொண்டவர்கள் இவ்வண்ணம் பெரியபோரினைப் புரிந்தார்கள்.—எ-று.

இத்திறம் பொருதகாலைப் பிணிமுகத் தேந்தறன்னைப்
பைத்தலை யுடைய தூவி பறித்திடா வதன முற்றுங்
குத்திவெங் குருதிவிட் டிக்குரு மணிக்கலாப மீர்த்து
மெய்த்துயர் புரிந்தானே யிப்புள்ளுருக் கொண்ட வெய்யோன்.

(இ-ள்.) இவ்வண்ணம் போர்புரிந்தவுடனே சிம்புள் உருவங்கொண்ட கொடியவனான சூரபன்மன் மயிலுருவனான வீந்திரனது பசிய தலையிலுள்ள தூவிகளையெல்லாம் பறித்து முகமுழுமையிலும் குத்தி வெவ்விய இரத்தத்தை இறைந்து நிறம் விளங்காநின்ற கரியதோகையை இழுத்துச் சரீரத்திற்குத் துன்பத்தினையுண்டாக்கினான்.—எ-று.

அச்செயன் முருகன் காணுவா ரழலென்ன நக்குக்
கைச்சிலை யதனைவாங்கிக் கடுந்தொழி லவுணர்மன்ன
னுச்சியின் முகத்திற் காலினுரத்தினிற் சிறைக டம்மில்
வச்சிர நெடுங்கண் வாளிவரம் பிலதொடுத்துவிட்டான்.

(இ-ள்.) அவனதந்தச்செய்கைகளைக் குமரக்கடவுள் பார்த்து அரிய தீயைப்போல சிரித்து கையிலிருந்த வில்லினை வளைத்து பொல்லாத செய்கைகளையுடைய அசுராதிபனுடைய உச்சியிலும் முகத்திலும் காலிலும் மார்பிலும் இறகுகளிலும் வயிரமான கொடிய அம்புகளை அளவற்றனவாகத் தொடுத்து விடுத்தருளினான்.—எ-று (௫௮௭)

விட்டிடு கின்றவாளி வெய்யவ னங்கமெங்கும்
பட்டிடு கின்ற காலைப் பதைபதைத்து தறிச்சிந்தி
யெட்டுள திசையும் வானுமிருங் கடலுலக மெங்குங்
கட்டழல் சிந்திச் சீறிக்கறங்கெனத் திரியா நின்றான்.

(இ-ள்.) குமரப்பெருமான் விடுத்த அம்புகள் கொடிய சூரபன்மனுடைய உடலினெவ்விடங்களிலும் பட்டவுடனே பதைபதைத்து உதறிச்சிதறி எட்டாகவுள்ள எத்திசைகளிலும் ஆகாயத்திலும் பெரிய கடல்சூழ்ந்த உலகத்தினெவ்விடங்களிலும் கண்களிலுண்டாகின்ற அக்கினிப் பொறிகளைச் சிதறிக்கொண்டு காற்றாடியைப்போல அலைந்துலாவினான்.—எ-று. (௫௮௮)

திரிந்திடுகின்ற காலைச்செஞ் சுடர்த்தனிவே லண்ணல்
புரந்தர னுருவாய்நின்ற பொறிமயி னடாத்தியேகி
யரந்தெறு கணைகடெண்டி யகிலமு மவுணன் றன்னைத்
துரந்தம ரிழைக்கலுற் றான்விண்ணவர் தொழுது போற்ற.

(இ-ள்.) திரிகின்றகாலத்தில் செவ்விய ஒளிபொருந்திய ஒப்பற்ற வேற்படையினையுடைய பெருமான் இந்திரரூபமாகிய புள்ளிவாய்ந்த மயிலினை நடத்திச்சென்று அரத்தாற் கூர்மையாக்கப்பட்ட அம்புகளைவிட்டு, தேவர்கள் துதிக்கும் வண்ணம் எவ்விடங்களிலும் அசுரனைத் துரத்திப் போர்புரிந்தனன்.—எ-று. (௫௮௯)

அத்தருமெல்லை தன்னின வுணர்க ளெவர்க்கு மேலோ
னெய்த்துள மெலிந்து சாலவிட ருழந்திரக்க மெய்தி
மெய்த்தழ லென்னச் சீறிவேற்படை கொண்ட செம்மல்
கைத்தலத் திருந்தவில்லைக் கறிப்பது கருதி வந்தான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் எல்லா வசுரர்கட்கு மேலானவனாகிய சூரபன்மன் மிகவும் மனந்தளர்ந்து துன்பெய்தி இரங்கி தீயைப்போல சீற்றங்கொண்டு வேலாயுதத்தினை யேந்தியுள்ள பெருமான் திருக்கரத்திற் றங்கிநிற்கின்ற விற்படையினை கொத்தி யொடித்தலை யுத்தேசித்து வந்தான்.—எ-று. (௩௯0)

வருவது நிமலன் காணாமலர்க் கரமொன்றில் வைகு
மொருதனி யொள்வாள் வீசியொன் னலன்பறவை யாக்கை
யிருதுணி யாகிவீழ வெறிந்தன னெறிதலோடு
மரியயன் முதலாந் தேவரனைவரு மாடல் கொண்டார்.

(இ-ள்.) அங்ஙனம் கைவில்லினைக் கறித்தெறியுமாறு வருதலை நின்மலனான குமரக்கடவுள் பார்த்து கமலமலர்போன்ற ஒரு திருக்கரத்திலிருக்கின்ற ஒப்பற்ற ஒள்ளிய வாட்படையினால் வீசி பகைவனுடைய பறவையுடலினை இருதுண்டாகி விழுமாறு வெட்டியருள்தலும் அரியயன் முதலிய தேவர்களெல்லாம் அதனைக்கண்டு சந்தோஷத்தாற் கம்பிதமானார்கள்.—எ-று. (௩௯௧)

ஆடல் கொண்டார் என்பதற்கு=நடனஞ் செய்தார்கள் எனினுமாம்.

வேறு.

தாரார் வாகைசூடிய வேலோன் றன்கையிற்
கூரார் வாளாற் புள்ளுருவத்தைக் குறைவிக்கச்
சூராம் வெய்யோ னண்டமுகட்டைத் தொடவோங்கிப்
பாராய் நின்றான் விண்ணவர் யாரும் பரிவெய்த.

(இ-ள்.) வாகைமலர் மாலையணிந்த வேலாயுதப்பெருமானுடைய திருக்கரத்தில் இருந்த கூரினையுடைய வாட்படையினால் சிம்புளுருவத்தை வெட்டுதலும் உடனே சூரனாகிய கொடியவன் தேவர்களெல்லாம் துன்பமடையும் வண்ணம் அண்டமுகட்டினைத்தொடும் வண்ணம் உயர்ந்து பூமியாக நின்றனன்.—எ-று. (௩௯௨)

ஏழுட் பட்டவாழ் திரைநேமி யிடைதூர்த்துத்
தாழ்விற் செல்லுமாதவர் தேரைத்தடைசெய்து
சூழிக்கால்கள் வானெறி செல்லுந் துறைமாற்றிப்
பாழித்திக்கை மூடினனின் றன்படி யானோன்.

(இ-ள்.) உலகுருவமாக நின்ற சூரபன்மன் ஏழென்னும் எண்ணுட்பட்டனவும் ஆழமானவையுமாகிய கடல்களை இடையே தவிர்த்து, தனது உயர்ச்சிக்குக் கீழினராகச் செல்லுகின்ற சூரியர்களினிரதங்களைத் தடைசெய்து, வாயுக்கள் ஆகாயத்திற் போகின்ற மார்க்கத்தினைத் தடுத்து, அகன்ற திசைகளை மூடினவனாக நின்றனன்—எ-று. (௩௯௩)

ஆறார் சென்னிப் பண்ணவன் மைந்தனது காணாச்
சீறுநன் றூர்சூர் புரியமாயத்திற னென்னாக்
கூறுவங் கைச்செஞ்சிலை தன்னைக் குனிவித்தே
யூறார் வெங்கோ லேழுதோடுத் தேயுரை செய்வான்.

(இ-ள்.) சூரபன்மன் மண்ணுருவமாக நிற்றலை ஆற்றினையணிந்த திருமுடியினையுடைய சிவபெருமானுடைய திருக்குமாரரான சண்முகப்பெருமான் திருக்கண்சாத்திய

ருளி சீற்றங்கொண்டு சூரபன்மனலியற்றப்பட்ட மாயவித்தை வெகு நன்றாகவிருக்கின்றதுஎன்று திருவாய்மலர்ந்துரைத்து அழகிய திருக்கரத்திருந்தவில்லினை வளையச்செய்து ஊறுபொருந்திய வெவ்விய எழம்புகளைத்தொடுத்து அவைகளைநோக்கி இவ்வாறு உரைத்தருள்வான்.—எ-று. (௩௯௪)

நெடுவா னத்தின் காறுமெழுந்தே நிமிர்வெய்தி
முடிவான் வெய்யோன் பாரகமா யென்முன் னின்றான்
கடலே ழென்னுந் தன்மையி னீவிர்கடி தேகி
யடுவீரென் றேவிட்ட னன்யார்க் குமறி வொண்ணான்.

(இ-ள்.) நெடிய ஆகாய பரியந்தம் எழுந்து நிமிர்ந்து இறந்து படுவான்கொடிய சூரபன்மன் என்னெதிரே மண்ணுருவமாக நின்றனன். ஆதலால் நீங்கள் எழு கடல்கள் என்று கூறுமாறான நீருருவத்துடன் விரைந்துசென்று அவனை அழியுங்களென எவராலும் அறிதற்கரியவனான குமரப்பெருமான் விடுத்தருளினான்.—எ-று. (௩௯௫)

ஒற்றைச் செவ்வே லோன்விடு வாளியுல கெல்லாஞ்
சுற்றிக்கொண்டே யுண்டிடு நேமித்தொகை போலாய்ச்
செற்றத் தோடுமார்ப் பொடுமே கித்திரை வீசி
மற்றச்சூ ரன்றன் னுருவத்தை வளைவுற்ற.

(இ-ள்.) ஒன்றாகிய செவ்விய வேற்படையினையுடைய குமரப்பெருமான் விடுத்தருளிய அம்புகள் உலகளைத்தையும் ஊழிகாலத்தில் வளைந்துண்ணுகின்ற கடற்கூட்டங்களைப்போல சீற்றத்துடனும் ஆரவாரத்துடனும் சென்று அலைவீசிக்கொண்டு சூரபன்மன் கொண்டுள்ள மண்ணுருவத்தினைச்சூழ்ந்துகொண்டன.—எ-று. (௩௯௬)

ஏனையர் தாங்கியுள்ள வேற்படைபோல வழிதலுங் கூர்மழுங்குதலுந் திருவேறுதலும் தைலத்திற் றோய்தலும் கெடுதலுமின்றித் துணையற்றதுந் தேவுருவானதுமாயுள்ளதுமென்பார். "ஒற்றைச்செவ்வேல்" என்றார்.

வளையா வெஞ்சூர் மாயிருஞா லவடிவத்தைக்
களையா வுண்டே யின்மைய தாக்கிக் கணையேழுந்
திளையார் நீத்தத் தொல்லுரு நீங்கிச் செருவின் கண்
விளையா டுற்றவெம் பெருமான் பான்மீண்டுற்ற,

(இ-ள்.) எவர்க்கும் வணங்கா வியல்பினையுடைய வெவ்விய சூரபன்மன்கொண்ட மண்ணுருவத்தினை உண்டு இல்லாமையாகச்செய்து அவ்வேழம்புகளும் திளைத்தலினையுடைய நீரின் பழயவுருவத்தைவிட்டு போர்க்களத்தில் நின்று சண்டையிடுகின்ற விளையாட்டினைச்செய்கின்ற எம்பெருமானிடத்திற்குத் திரும்பிவந்தன. எ-று.—(௩௯௭)

சூரனொடு பொருதல் பிறர்க்கரிதேனும் இவர்க்கெளிதாமென்பார். விளையாடுற்ற என்றார்.

காணா வெய்யோன் பாருரு நீங்கக்கடலெல்லா
மூணா வையம் வானொடு முண்டற் கெழுமாபோ
லேனோர் நீத்தத் தோர்வடி வாகியிறை முன்ன
நீணா கத்தின் காறுநிமிர்ந்தே நின்றிட்டான்.

(இ-ள்.) அதனைக் கொடிய சூரபன்மன்பார்த்து மண்ணுருவத்தினையொழித்து கடல்களனைத்தும் ஊணாகவுலகத்தினையும் வானத்தினையும் உண்ணுதற்கு எழுந்தவர்தாற்போல வன்மைபொருந்திய நீரின் வடிவத்தினையடைந்து நமதிறைவனெதிரே நீண்ட ஆகாயபரியந்தமாக எழுந்து வளர்ந்து நின்றனன்.—எ-று. (௩௯௮)

நேரான் மாயத்தொல் லுருவத்தினிலைநோக்கிக்
கூரார் வாளிநூறு தொடுத்தே கொடியோன்பாற்
சேரா வூழித் தீயியல்பாகிச்செறி வுற்றுப்
பேரா தட்டே வம்மென் விட்டான் பெயர்வில்லான்.

(இ-ள்.) பகைவனான சூரபன்மனுடைய பெரிய மாயவுருவத்தின்நிலைமையைப் பார்த்து கூர்மையான நூறம்புகளை விற்கிலவைத்து நீங்கள் கொடியவனான சூரபன்மனிடத்திற்கு ஊழித்தீயின் வண்ணமாக நெருங்கிச்சென்று தவறாமல் அழித்துத் திரும்பவருவீர்களென்று அசைவற்ற வெம்பெருமான் உரைத்து விடுத்தருளினான்.—(எ-று.)

அவ்வா றுகவா ளிகணூறு மருணீரால்
வெவ்வா யங்கிப்பே ருருவாகி விரவிப்போய்த்
தெவ்வாய் நின்றோ னீத்தமதா குஞ்செய னீங்க
வெவ்வா யுஞ்சென் றுண்டன வம்மா விறைதன்னில்.

(இ-ள்.) அந்நூறம்புகளும் அவ்வண்ணமே இறைவனிட்ட கட்டளைப்படி கொடியதன்மையினையுடைய தீயின் வடிவமாய்க்கலந்து சென்று ஒருகணப்பொழுதில் பகைவன் கொண்டு நின்ற நீர்வடிவமழிய எப்புறங்களிலும் சென்றுண்டன.—எ-று. (சOO)

தண்டா தார்க்குநீத் தவியற்கை தனையெல்லா
முண்டா வித்தேவா ளிகண்மீண்டே யுறுகாலைக்
கண்டான் மாயத்தன் மைபடைத்தோன் கனன்மேனி
கொண்டா னண்டங் காறு நிமிர்ந் தேகுல வுற்றான்.

(இ-ள்.) விடாமல் ஆரவாரிக்கின்ற நீரின் வடிவமனைத்தையும் உண்டு மகிழ்ந்து அம்புகள் திரும்ப வருகின்றகாலத்தில் அவைகளினச்செயல்களை உபாயச்செய்கைகளையுடைய சூரபன்மன் கண்டு அக்கினியுருவத்தினையடைந்து அண்டகோளகை அளவும் உயர்ந்து விளங்கினான்.—எ-று. (சOக)

குலவுங் காலைக் கண்டு நகைத்தே கூற்றென்ன
நிலவுஞ் செங்கோ லாயிரம் வாங்கா நீடூழி
சுலவுஞ் சண்டச் சூறையினேகிச் சூர்மாயம்
பலவுஞ் செற்றே வம்மென வுய்த்தான் பரமானோன்.

(இ-ள்.) தீயினுருவமாக விளங்காநின்ற சமயத்தில் அதனை பரம்பொருளான குமரப்பெருமான் பார்த்து நகைசெய்து எமனைப்போல தொழிலாற் பிரகாசிக்கின்ற செவ்விய ஆயிரமம்புகளை எடுத்து நீங்கள் நீண்ட ஊழிக்காலத்திற் சுழன்று வீசுகின்ற பிரசண்டவாயுவைப்போல சென்று சூரபன்மனுடைய பலமாயங்களையும் அழித்து வாருங்கள் என்று திருவாய் மலர்ந்து விடுத்தருளினான்.—எ-று. (சO௨)

உய்க்குங் காலத்தொய் யெனவே கியுலகெங்குந்
திக்கும் வா னுஞ் சூழுமருத் தின்றிற னெய்தி
மைக்குந் தூமம்போல் பவன் மெய்த் தீவடி வெல்லாம்
பொய்க்கும் வண்ணஞ் சாடின வையன் புகர்வாளி.

(இ-ள்.) விட்டவுடனே விரைந்து சென்று உலகமுழுதிலும் திக்குகளிலும் ஆகாயத்திலும் சூழ்ந்துள்ள வாயுக்களினுருவங்களையடைந்து கரிய புகைவடிவாளனான சூரபன்மனுடைய உடம்பிலுள்ள தீவடிவ முழுமையும் பொய்யாமாறு அழித்தன நமதையனுடைய ஒளிபொருந்திய அம்புகள்.—எ-று. (சOங)

வேறு.

வண்டுலா வருவா கையந் தாரினன்
கொண்டெழுந்த கொழுந்தழல் யாக்கையை
யுண்டுவா ளிகளோய் யெனமீண் டொரா
யண்டர்நா யகன்பாங் கரணைந்தவே.

(இ-ள்.) வண்டுகள் உலாவுகின்ற வாகைமலர் மாலையணிந்த சூரபன்மன் கொண்டிருந்த கொழுவிய தழலுருவத்தினை அம்புகள் வாயுவுருவத்துடன் சென்றழித்து விரைந்து திரும்பித் தேவநாயகனுடைய அருகில் வந்தன,—எ-று. (௪௦௪)

ஆங்கவெல்லையி லவ்வடிவத்தினை
நீங்குமாற் றலனீள் சினமேற்கொளா
வோங்கு மோதை யுருவுகொண் டார்தலு
ஞாங்க ரெந்தை நகையொடு நோக்கினன்.

(இ-ள்.) அப்பொழுது அந்தத்தீயுருவத்தினை யகன்ற பகைவனான சூரபன்மன் மிகுந்த கோபத்தினை மேற்கொண்டவனாகி உயர்ந்து வாயுரூபமாக நின்று ஆரவாரித்தலும் அதனை அருகில்நின்ற எம்பெருமான் நகைத்தலுடன்பார்த்தருளினன்,எ-று (௪௦௫)

சூரனது மாயச்செயலை மதியாது பார்த்தானென்பார்—"நகையொடுநோக்கினன்" என்றார்.

ஆய்ந்து வாளியொ ராயிர நூற்றினை
வாய்ந்த கைக்கொடு மாற்றலன் வன்மையைப்
பாந்தளா கிப்படுத்து வம்மோவெனு
வேந்தல் கூறியிமைப் பினிற் றாண்டினன்.

(இ-ள்.) அதனை இன்னதென்று ஆராய்ந்தறிந்துகொண்டு ஒரு நூறாயிரமம்புகளை பொருந்திய கையிலெடுத்து நீங்கள் பகைவனுடைய வல்லபத்தினை பாம்புருவங்கொண்டு அழித்து வாருங்கள் என்று எவர்க்குந்தலைவனான குமரப்பெருமானுரைத்தருளி விரைவாக விடுத்தருளினன்,—எ-று. (௪௦௬)

அவ்வயிற் கணையந் தரத்திற் செலாச்
செவ்விதிற் கிளர்செந் தழல்போ லெழீஇப்
பைவிரித் தபஃறலைப் பன்னக
வெவ்வுருக் கொடுசூர் மிசைமேயதே.

(இ-ள்.) அந்தக்கூரிய அம்புகள் ஆகாயத்திற்சென்று செவ்வையாக விளங்குகின்ற செந்தீயினைப்போல விடப்பைகளை விரிக்கப்பட்ட கொடிய பாம்புருவத்தினை எடுத்து மேலெழுந்து சூரபன்மன்மீது சென்றன.—எ-று. (௪௦௭)

கூற்ற மன்னகொடுந் தொழின் மன்னவன்
காற்றின் யாக்கை கரப்ப மிசைந்திடா
வாற்றன் மேவியணைந் துடன் மீண்டன
வேற்றடக் கைவிம லன்புடைதனில்.

(இ-ள்.) யமனைப்போன்ற கொடிய தொழிலாளனான அவ்வரசனுடைய வாயு உருவான சரீரமழியுமாறுண்டு வன்மைபெற்றனவாகித் திரும்பி வேலினையேந்தியுள்ள விசாலமான அத்தத்தினையுடைய குமரக்கடவுளினருகில் திரும்பி வந்தன.—எ-று.

இன்ன தன்மையி லீரிருநாள்வரைத்
துன்னலன்றெலையா தமராற்றியே

பின்னு மாயையின் பெற்றியைப் புந்தியு
ளுன்னியே பல்லுருக் கொடுதோற்றினன்.

(இ-ள்.) இவ்வண்ணமாக நான்குதினம் வரைக்கும் பகைவன் விடாது போர் புரிந்துபின்னரும் வேறுவித மாயைத்தன்மைகளை மனதினினைத்து பலவுருவங்களைக் கொண்டு வந்தனன்.—எ-று. (௬0௯)

வேறு.

ஓவா வியல்புரி மூவரிலொருசார் வருமொழியுந்
தேவா சுரர்பிறரா மெனவொரு சார்வருஞ் சேணுள்
கோவாமென வொருசார் வருமொரு சார்வருங் குறள்போ
லாவாவெனக் கொடுங்கூற் றெனவொரு சார்வரு மன்றே.

(இ-ள்.) அவனதம்மா யாவுருவங்கள் கெடாத முத்தொழிலின ருருவங்களுடன் ஒருபுறத்தில் வராநிற்கும் அவரன்றியுள்ள தேவர் அசுரர் பிறர் என்றுரைக்கு மித்தகை யுருவங்களுடன் ஒருபுறத்தில் வராநிற்கும் ஆகாய வுலக வரசனைப்போல ஒரு புறத்தில் வராநிற்கும்; பூதம்போல ஒருபுறத்தில் வரும். ஆவாவென்றுரைத்துக்கொண்டு எமனைப்போல ஒருபுறத்தில் வராநிற்கும்.—எ-று. (௬௧0)

பேயாமென வொருபால் வரும்பிறழ்வெம் புகைப்படலைத்
தீயாமென வொருபால் வருந்திசை யெங்கணுஞ் சுழலு
மோயாமருத் தினமாமென வொருபால்வரு மகிலம்
பாயாவெழுதிரை யாழியி லொருபால் வரும்பரவி.

(இ-ள்.) ஒரு புறத்திற் பேயைப்போல வருவான் பிறழுகின்ற வெவ்விய புகைப் படலங்களையுடைய தீயினைப்போல ஒரு புறத்தில் வருவான் எத்திசைகளிலும் விடாது சுழலுகின்ற வாயுக்களின் கூட்டங்களைப்போல ஒருபுறத்தில் வருவான். அகன்று உலகினைநோக்கித் தாவுகின்ற திரைகளையுடைய கடலைப்போல ஒருபுறத்தில் வருவான்.—எ-று. (௬௧௧)

ஒருசார்விட மெனவந்திடு மொருசார்வரும் பணிபோ
லொருசார்முகி லெனவந்திடு மொருசார்வரும் வரைபோ
லொருசாருரு மெனவந்திடு மொருசார்வரும் வரைபோ
லொருசார்தன துருவாய்வரு மொருசார்வருங் கதிர்போல்.

(இ-ள்) ஒருபுறத்தில் விடத்தினைப்போல வருவான். ஒருபுறத்தில் பாம்பினைப் போல வருவான். ஒருபுறத்தில் மேகங்களைப்போல வருவான். ஒருபுறத்தில் இருளினைப் போல வருவான். ஒருபுறத்தில் இடியைப்போல வருவான். ஒருபுறத்தில் மலையைப்போல வருவான், ஒருபுறத்தில் தனது உருவத்துடன் வருவான், ஒருபுறத்தில் சூரியனைப் போல வருவான்.—எ-று. (௬௧௨)

தொக்கார்பல படையாமென வொருசார்வருஞ் சூழுந்
திக்கார்களிற் றினமாமென வொருசார்வருஞ் சினத்தா
னக்கார்தரு மரியேறென வொருசார்வரு நலிவா
னக்கால்வரு தனிப்புள்ளென வொருசார்வரு மன்றே.

(இ-ள்.) நெருங்கிப் பொருந்திய பலவகையினவான சேனைகளைப்போல ஒருபுறத்தில் வருவான், உலகினைச்சூழ்ந்துள்ள திக்குக்களிற் பொருந்தின ஐராவத முதலிய யானையினினங்களைப்போல ஒருபுறத்தில் வருவான் சீற்றத்தினால் நகைத்துக்கொண்டு வருகின்ற சிங்க வேற்றினைப்போல ஒருபுறத்தினில் வருவான். ஒருபுறத்தினில் முன்னர் வருத்துவான்வந்த சிம்புட்பறவையைப்போல வருவான்.—எ-று. (௬௧௩)

கரியின்முகத் துணைவன்னென வொருசார்வரும் கடுங்க
ணரியின்முகத் திளையோனென வொருசார்வரு மளக்கர்ப்
பரியின்முகத் தினில்வந்திடு பாழிக்கனல் படுக்கு
மெரியின்முகத் தனிமைந்தனி லொருசாரிடை யேகும்.

(இ-ள்.) தன்றுணைவனான யானைமுகத்தினையுடைய தாரகனைப்போல ஒருபுறத்தினில் வருவான், சீறிய பார்வையினையுடைய கண்கள்வாய்ந்த சிங்கமுகனைப்போல ஒருபுறத்தில் வருவான், கடலினில் பெட்டைக்குதிரை முகத்தினுடனிருக்கும் வடவையென்னும் தீயையும் அழிக்குமாற்றலினான அக்கினி முகனெனும் ஒப்பற்றபிள்ளையைப் போல ஒருபுறத்தினில் வருவான்.—எ-று. (௬௪௪)

எல்லோன்றனை வெருண்டோனென வொருசார்வரு மேனைச்
சொல்லோங்கியதிறன் மைந்தரிலொரு சார்வருஞ் சூழ்ச்சி
வல்லோனென வொருசார்வரு மானப்படை மள்ளர்
பல்லோர்களுஞ் செறிந்தாலென வொருசாரிடைப் படரும்.

(இ-ள்.) சூரியனைச் சீறிய மைந்தனான பானுகோபனைப்போல ஒருபுறத்தில் வருவான். மற்றையபுகழ் மிகுந்தவன்மையாளரான பிள்ளைகளான மூவாயிராதிகளைப் போலவும் ஒருபுறத்தினில்வருவான். முதல் மந்திரியான மந்திராலோசனையின்மிகுந்த தருமகோபனைப்போல ஒருபுறத்தில் வருவான். வீரம்பொருந்திய பலசேனாதிபதிகள் ஒன்றாய்நெருங்கி வந்தாற்போல ஒருபுறத்திற் செல்லாநிற்பான்.—எ-று (௬௪௫)

இத்தன்மையி லவுணர்க்கிறை யாண்டுஞ் செறிவாகி
யத்தன்றனைப் புடைசூழ்தலு மவைநோக்கிய விமையோர்
சித்தந்தளர்ந் திரிகுற்றனர் திரிகுற்றன ரம்மா
கத்துங்கடற் புவிமாய்ந்திடு காலத்துயி ரெனவே.

(இ-ள்.) இவ்வண்ணமாக அசுராதிபன் எவ்விடத்திலும் நெருங்கி நமது பரம தந்தையாகிய குமாரப்பெருமானைச் சூழ்ந்துகொள்ளுதலும் அவைகளைக்கண்ட தேவர்கள் மனந்தளர்ந்து முழங்காநின்ற கடலாற் சூழப்பெற்ற வுலகமானது அழியுங்காலத்து அதனிலுள்ள உயிர்கள் துன்புறுமாறுபோல விலகியோடினார்கள்.—எ-று. (௬௪௬)

வேறு.

அங்கத னிலைமைநோக்கி யாயிரகோடி வாளி
செங்கையில் வாங்கிவாங்குந் திருநெடுஞ் சிலையிற் பூட்டி
யிங்குள வமரர்தங்க ளிருஞ்சிறை யகற்ற வந்து
பங்கயற் சிறைசெய்திட்ட பகவன்மற் றிதனைச் சொல்வான்.

(இ-ள்.) இங்கு வந்துள்ள தேவர்களடைந்துள்ள பெரிய சிறையினை அகற்றுமாறு திருவவதரித்துப் பிரமனைச் சிறையிலிட்ட பூசிதனான குமாரப்பெருமான் அம்மாய விசித்திரத்தின் நிலைமையைப்பார்த்து தமது செவ்விய திருக்கரத்தினால் ஆயிரகோடி யம்புகளை யெடுத்து அவைகளைப்பார்த்து இதனை யுரைத்தருள்வானாயினான்.—எ-று.

தெவ்வடு பகழியென்னுந் தேவிர்கா ணீவிரேகி
மெய்வலி படைத்துநின்ற மேவல னொருவன் கொண்ட
வவ்வுரு வனைத்துமெய்தி யாங்கவன் மாயமுற்று
மிவ்விடை யட்டுநீக்கி யேகுதிரென்று விட்டான்.

(இ-ள்.) பகையைப்பழிக்கின்ற அம்பென்னுந் தேவர்களே நீங்கள் சென்று சரீரவன்மையினைப் பொருந்திநிற்கின்ற பகைவனான சூரபன்மன் ஒருவன் எடுத்துள்ள

அந்த உருவங்களனைத்தையும் அடைந்து அவனுடைய மாயை முழுமையும் இவ்விடத்திலேயே கெடுத்து நீக்கக்கடவீர்கள் என்றுரைத்து விடுத்தருளினன்.—எ-று. (௬௪௮)

விட்டிடுசிலீ முகங்கள் விரைந்து போய்வெ குளிநீங்கி
யொட்டலன்கொண்ட வொவ்வொன் றுருவினுக் கெழுமையாகி
யெட்டுள புலமும் வானுமிருநிலவரைப் புமீண்டி
யட்டடல் பெற்றவம்மாவனை யவன் மாயந்தன்னை.

(இ-ள்.) குமரப்பெருமான் விடுத்தருளிய அம்புகள் விரைவாகச்சென்று பகைவன் கொண்டுள்ள ஒவ்வோருருவினுக்கு எவ்வெழாகி எட்டாகவுள்ள திக்குகளிலும் ஆகாயத்திலும் பெரிய பூமியினிடத்திலும் நெருங்கி அவனுடைய மாயங்களை அழித்து வெற்றிபெற்றது.—எ-று. (௬௪௯)

உடல்சின மோடுசூர னொருவனு யங்கணின்று
னடல்வலி கொண்டவாளி யந்தரநெறி யான்மீண்டு
புடையுறு சரங்களோடு பொள்ளெனத் தூணிபுக்க
சுடர்நெடுந் தனிவேலண்ண லவன்முக நோக்கிச் சொல்வான்.

(இ-ள்.) மாறுபாடான கோபத்துடனே சூரபன்மன் ஒருவனாகி அப்போர்க்களத்தில் நின்றனன் அப்பொழுது கொலைத்தொழிலில் வன்மைமிக்க அம்புகள் ஆகாய வழியாகத் திரும்பி அருகிலுண்டான அம்புக்கூட்டிற்புகுந்தன உடனே ஒளியோடு கூடிய நெடிய வேலாயுதத்தினையுடைய தலைவன் அவனது முகத்தைப்பார்த்து கூறியருளுவான்,—எ-று. (௬௫௰)

வெம்புய லிடையிற்றோன் றி விளிந்திடு மின்னுவென்ன
விம்பரி லெமதுமுன்ன மெல்லையி லுருவங் கொண்டா
யம்பினி லவற்றையெல்லா மட்டன மழிவிலாத
நம்பெரு வடிவங்கொள்வ நன்றுகண் டிடுதி யென்றான்.

(இ-ள்.) விருப்பத்தினைத்தருகின்ற மேகத்தின் நடுவிலுண்டாகின்ற மின்னலைப்போல இவ்விடத்திலெமது எதிரில் அளவற்ற உருவங்களைக்கொண்டனை நாம் அவைகளனைத்தையும் அழித்தேம் இனி அழிவற்ற நமது பெரியவடிவத்தினை (விசுவரூபத்தினை)க் காண்பாயாக என்று திருவாய்மலர்ந்தருளினன்.—எ-று. (௬௫௧)

கூறிமற் றினையதன்மை குரைகட லுலகந் திக்கு
மாறிலாப் புவனமண்டம் வானவ ருயிர்கள் யாவு
மாறுமா முகத்துவள்ளன் மேனியி லமைந்ததன் றி
வேறிலை யென்னவாங்கோர் வியன்பெரு வடிவங் கொண்டான்.

(இ-ள்.) இத்தன்மையான வசனத்தினையுரைத்து, முழங்காநின்ற கடல் உலகம் திக்கு, மாறுபாடற்ற புவனம் அண்டம் தேவர்கள் உயிர்கள் ஆதிய அனைத்துமாகியவை சிறந்த ஆறு திருமுகங்களையுடைய எம்பிரமானுடைய திருமேனியில் அமைந்தனவே அன்றி வேறொன்றுமில்லை என்று கூறும்வண்ணம் ஒரு பெரிய உருவத்தினை எம்பெருமான் கொண்டருளினன்.—எ-று. (௬௫௨)

உள்ளடி வரைகள்யாவு மொண்புற வடியினீத்தம்
வள்ளுகிர் விரல்கண்முற்றும் வானுரு மேறுநாள் கோ
ளெள்ளரும் பரடுதன்னி லிரும்புனற் கிறைவன் சோம
னள்ளிரு ளனையமேனி நிருதியோ டரக்கர் நண்ண.

(இ-ள்.) மலைகளனைத்தும் உள்ளடிகளிலும் நீர் நிலைகள் முழுமையும் புறவடிகளிலும் கூரிய நகங்களையுடைய விரல்கள் முழுமையும் ஆகாயத்திலுள்ள இடியேறுகளும் நாள்களும் கோள்களும் ஆகவும் இகழ்ச்சியற்ற பரடுகளில் பெரிய நீர்க்கிறைவனை வருணனும் சோமனும் நசிசிபோன்ற கரிய உடலினனான நிருதியுடனே அரக்கர்களும் பொருந்தி நிற்கவும்.—எ-று. (௬உ௩)

அடிதிரள் கணைக்காறன்னி லாரிடர் மணிகள் சானு
வடிவமை முழந்தாள்விஞ்சை வானவ ராதியானோர்
தொடைதனின் மகவான்மைந்தன் றொடைமுத னடுவன் காலன்
கடிதடத் தசுரர்பக்கங் கடவுளர் யாருநிற்ப.

(இ-ள்.) அடியிற் றிரட்சியான கணைக்கால்களில் சிறந்த முனிவர்களும், வடிவமைந்த முழங்கால்களில் வித்தியாதராதியரும் தொடைகளில் இந்திரனும் அவன் மகனும் தொடைகளினடிப் பிரதேசங்களில் யமனும் கடிதடத்தில் அசுரர்களும் பக்கங்களில் ஏனைய தேவர்களனைவரும் நிற்பவும்.—எ-று. (௬உ௪)

இருப்பினி னுகர்கோச வெல்லையின் மருந்தே யுந்திக்
கருப்படு முயிர்கண்மார்பிற் கலைகண்முந் நூலிற்போத
மருப்பயி லுரோமத்தண்ட மங்கையி லகிலபோகந்
திருப்பெருந் தடந்தோள் வைப்பிற் செங்கண்மால் விரிஞ்சன்மேவ.

(இ-ள்.) இருப்பிடத்தில் நாகங்களும் கோசப்பிரதேசத்தில் அமிர்தமும் உந்தியில் கருவிற்பொருந்துகின்ற உயிர்களும், மார்பினிற் கலைக்கியானங்களும் முந்நூலில் ஞானமும், சிறிதாகப்பொருந்திய உரோமங்களில் அண்டங்களும் அகங்கையில் அகில போகங்களும், மிகுந்த திருவினையுடைய விசாலமான புயங்களில் செவ்விய கண்களையுடைய மாலும் பிரமனும் பொருந்திநிற்கவும்.—எ-று. (௬உ௫)

மெல்லித ழனையசெங்கை விரன்மிசை யணங்கி னல்லா
றொல்லொலி யங்கிகண்ட மொப்பிலா மணிவாய் வேதம்
பல்லிடை யெழுத்துநாவிற் பரமவா கமத்தின் பேத
நல்லிதழ் மனுவின்விஞ்சை நாசியிற் பவனன் மன்ன.

(இ-ள்.) மேன்மையான பூவிதழனைய செவ்விய திருகரத்துவிரல்களில் தேவமாதர்களும் ஒல்லென்றொலிக்கின்ற அக்கினி கண்டத்திலும் அழகியவாயில் வேதமும் பற்களி லெழுத்துக்களும் நாவினில் சிறந்த ஆகமபேதங்களும் நல்ல இதழினில் மனுவின் விஞ்சைகளும் மூக்கினில் வாயுதேவனும்.—எ-று.

மனுவின்விஞ்சை - ஸ்மிருதி. (௬உ௬)

கருணைகொள் விழியிற்சோமன் கதிரவன் செவியிற் றிக்குத்
திருநுதற் குடிலைவைப்புச் சென்னியிற் பரமவான்மா
மரபினின் மேவித்தோன்ற மாறிலா திருக்குந் தொல்லை
யொருதன துருவங்காட்டி நிற்றலு மும்பர் கண்டார்.

(இ-ள்.) கிருபைபொருந்திய கண்களில் சந்திர சூரியகளும் காதுகளில் திக்குகளும் அழகிய நெற்றிப்பிரதேசத்தில் குடிலையும் தலையிற் பரமான்மாவும் முறைமையாகப்பொருந்திக் காணப்பட மாறுபாடின்றி விளங்குகின்ற தமது ஒப்பற்ற உருவத்தினைக்காணும் வண்ணமாகச் செய்துகொண்டு நின்றருளினன் அவனதந் நிலைமையினைத் தேவர்கள் கண்டார்கள்.—எ-று. (௬உ௭)

செஞ்சுட ரநந்தகோடி செறிந்தொருங் குதித்ததென்ன
விஞ்சிய கதிர்கான் றுள்ள வியன்பெரு வடிவைநோக்கி
நெஞ்சகந் துளங்கிவிண்ணோர் நின்றனர் நிமலமூர்த்தி
யஞ்சன்மி னஞ்சன்மின் னென்றருளினன் மைத்தகையான்.

(இ-ள்.) தேவர்கள் செவ்விய சுடரினையுடைய அநேகங்கோடி சூரியர்கள் நெருங்கி ஒன்றாக வுதித்தாற்போல மிகுந்த பிரகாசம் வீசுகின்ற சிறந்த பெரிய திருவுருவத்தினைப்பார்த்து மனங்கலங்கிநின்றார்கள். அப்பொழுது நின்மலனான குமரப்பெருமான் அபயாத்தமுடையவனாய் அஞ்சாதீர்கள் என்று கூறியருளினன். எ-று.—(சஉஅ)

அண்டர்கள் யாருமெந்தை யருண்முறை வினவி யுள்ள
முண்டிடு விதிர்ப்புநீங்கி யுவகையாற் றொழுது நின்றார்
தண்டுளி வரையதென்னத் தணப்பறச் சிதறுமூழிக்
கொண்டலின் றோற்றநோக்கிக் குலவுறு மஞ்ஞையேபோல்.

(இ-ள்.) தண்ணியதுளிகளை மலையைப்போன்று விடாமற்சிதறுகின்ற ஊழிமேகத்தின் தோற்றத்தினைக்கண்டு மகிழ்ச்சியடைகின்ற மயிலினைப்போல தேவர்களனைவரும் எம்பெருமானுடைய அருளின் முறைமையினைக்கேட்டு தங்கண் மனதிற் பொருந்திய நடுக்கமொழிந்து சந்தோஷத்துடன் வணங்கி நின்றார்கள்.—எ-று. (சஉக)

இறுதியு முதலுமில்லா விப்பெருவடி வந்தன்னைக்
கறைவிட முறழுஞ்சூரன் கண்டுவிம் மிதத்தி னிற்ப
வறிவரு முணர்தறேற்றா வாறுமா முகத்துவள்ளல்
சிறிதுநல் லுணர்ச்சிநல்க வினையன செப்பலுற்றான்.

(இ-ள்.) அந்தமுமாதியுமில்லாத இந்தப்பெரிய வுருவத்தினை களங்கமான விடத்தினையொத்த சூரபன்மன் பார்த்து ஆச்சரியத்துடன் நிற்க, ஞானிகளாலும் உணர்தற்கரிய சிறந்த சண்முகவள்ளல் அவனுக்குச்சற்று நல்லறிவினை யளித்தனன் அளித்தவுடன் இவைகளையுரைப்பானாயினன்.—எ-று. (சஙo)

எண்ணிலா வவுணர்தானை யாவையு மிமைப்பிற் செற்று
விண்ணுலா வண்டந்தோறும் வியன்சம ராற்றி யென்பா
னண்ணினர் தம்மையெல்லா நாமறத் தடிந்து வீட்டி
வண்ணமான் றேருமீண்டு வராநெறி தடுத்தான் மன்னோ.

(இ-ள்.) அளவற்ற அசுரசேனைகள் முழுமையும் இமைப்பொழுதிற் கொன்று வானத்திற்பொருந்திய அண்டங்கள்தோறும் வந்து பெரிய போரினைச்செய்து என்னிடத்திற்பொருந்தி இருந்தவர்கள் அனைவரையும் பெயரே இல்லாமற் கொன்றொழிந்து அழகிய எனது குதிரைபூண்ட இந்திரஞால இரதத்தினையும் திரும்பி என்னிடம் வாராத வண்ணம் செய்தனன்.—எ-று. (சஙக)

திண்டிற லுடையேன் றாண்டுந் திறற்படை யாவுநீக்கிக்
கொண்டவென் மாயமுற்றுங் கொடுஞ்சர மதனான் மாற்றி
யண்டமும் புவனம்யாவு மமரரும் பிறவுந்தன்பாற்
கண்டிடும் வடிவமொன்று காட்டியென் கண்முனின்றான்.

(இ-ள்.) மிகுந்த வன்மையினையுடைய என்னால்விடப்பட்ட வெற்றியினையுடைய எல்லாவித ஆயுதங்களையும் அகற்றிப் பின்னர் யான்கொண்டிருந்த மாயவுருவங்களைக் கொடிய அம்புகளால் ஒழித்து அண்டமும் எல்லாப் புவனங்களும் தேவர்களும் இன்னமுள்ளவைகளும் தன்னிடத்திற் காணத்தக்க உருவத்தினை இப்பொழுது காட்டி எனது கண்ணெதிரே நின்றனன்.—எ-று. (சஙஉ)

கோலமா மஞ்ஞைதன்னிற் குலவிய குமரன் றன்னைப்
பாலனென் றிருந்தேனந்நாட் பரிசிவை யுணர்ந்திலேன்யான்
மாலயன் றனக்குமேனை வானவர்தமக்கும் யார்க்கு
மூலகாரணமாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றே.

(இ-ள்.) சிறந்த அழகிய மயிலினில் விளங்கிய குமரனை அக்காலத்தில் பாலகனென்று கருதியிருந்தேன்; இவனதித்தகைய தன்மையினை யான் அறிந்திலேன். ஆராயுமிடத்து தேவரிற் சிறந்த நாராயண விரிஞ்சர்கட்கும் இவரன்றியுள்ள தேவர்கட்கும் இன்னமுள்ளவர்கட்கும் முதற்காரணமாக நின்றுள்ள முதல்வன் இம்முதல்வன் அன்றோ?—எ-று. (சஙஙு)

ஒற்றென முன்னம்வந்தோ னொருதனி வேலோன் றனைப்
பற்றிக லின்றிநின்ற பராபர முதல்வ னென்றே
சொற்றனன் சொற்றவெல்லாந் துணிபெனக் கொண்டிலேனு
விற்றையிப் பொழுதிலீச னிவனெனுந் தன்மைகண்டேன்.

(இ-ள்.) தூதவனாகி முன்னே வந்தவன் ஒப்பற்ற வேற்படையினையுடைய இவனைவிருப்பு வெறுப்பற்ற பராபரமுதல்வனென்று கூறினான், அந்நாளிலவனுரைத்தனவெல்லாம் உண்மையானவையென்று யான் உட்கொண்டேனில்லை. இப்பொழுது இவனே ஐசுவரியயுக்தனான இறைவனென்றுள்ள தன்மையைக் கண்டனன்.—எ-று. (சஙச)

மீயுயர் வடிவங்கொண்டு மேவிய தூதன்சொற்ற
வாய்மைகள் சரதமம்மா மற்றியான் பெற்றவண்ட
மாயவை முழுதுமற்று மறுமுகம் படைத்தசெம்ம
றூயபொற் பதரோமத்திற் றோன்றியே நிற்குமன்றே.

(இ-ள்.) மிகவும் உயர்ந்த வுருவங்கொண்டு நம்மிடத்திற்குவந்த தூதனுரைத்த உண்மைமொழிகள் சத்தியமானவையே; யான் தவஞ்செய்து பெற்றனவாகவுள்ள அண்டங்கள் முதலிய பிறவுமெல்லாம் ஆறு திருமுகங்களைப்பெற்ற தலைவனுடைய தூய்மையான அழகிய கால்களிலுள்ள ரோமங்களிலுண்டாகி நிற்கும்.—எ-று. (சஙடு)

அண்டர்கண் முனிவரேனோ ரகிலமுங் காட்டியண்ணல்
கொண்டிடு படிவமுற்றுங் குறித்தியார் தெரிதற்பாலா
ரெண்டரு விழிகள்யாக்கை யெங்கணும் படைத்தோர்க்கேனு
கண்டிட வநந்தகோடி கற்பமுங் கடக்கு மன்றே.

(இ-ள்.) தேவர்களும் முனிவர்களும் மற்றுமுள்ளவர்களும் உலகமாகிய எல்லாவிதப் பொருள்களும் காட்டி இத்தலைவன் கொண்டுள்ள உருவமெல்லாம் உற்றுப்பார்த்து எவர்கள் அறியத்தக்கவர்கள் புகழ்பொருந்திய கண்களையுடல் முழுமையும் பெற்றவர்கட்காயினும் பார்த்தற்கு அநந்தகோடி கற்பகாலத்திற்கு மேலும் ஆகும்.—எ-று.

சீர்க்கும ரேசன்கொண்ட திருப்பெரு வடிவந் தன்னி
லேர்க்குறு மொளியுஞ்சீரு மிளமையு மெழிலுமெல்லா
மார்க்குள வுலகிலம்மா வற்புதத்தோடும் பல்காற்
பார்க்கினுந் தெவிட்டிற்றில்லை யின்னுமென் பார்வைதானும்

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய குமரேசன் கொண்ட செல்வமான பெரிய வடிவத்தில் பொருந்தியுள்ள ஒளியும் சீரும் இளமையும் அழகுமெல்லாம் உலகினில் எவர்க்குளது அம்மா ஆச்சரியத்துடனே பலமுறைபார்த்தாலும் இன்னம் என் கண்களுக்கும் தெவிட்டுதல் உண்டாகவில்லை.—எ-று. (சஙஎ)

நேரிலனாகி யீண்டே நின்றிடு முதல்வ னீடும்
பேருரு வதனைநோக்கிப் பெரிதுமச் சுறுவதல்லா
லாரிது நின்றுகாண்பா ரமரரி லழிவிலாத
சீரியவரங் கொண்டுள்ளே னாதலிற் றெரிகின்றேனால்

(இ-ள்.) ஒப்பற்றவனாய் இவ்விடத்தில் நிற்கின்ற தலைவனுடைய நீண்ட பெரிய உருவத்தினைப்பார்த்து மிகவும் அச்சமடைவதேயன்றி எவர்கள் இதனை நின்று காண்பவர்கள் யான் தேவராலிறவாத சீரிய வரம்பெற்றவனாக விருக்கின்றேன் ஆதலால் பார்க்கின்றேன்.—எ-று. (சுஙஅ)

ஆயிரகோடிகாம ரழகெலாந் திரண் டொன்றாகி
மேயினவெனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னிற்
றூயநல் லெழிலுக்காற்ற தென்றிடி னிணைய தொல்லோன்
மாயிரு வடிவிற்செல்லா முவமையார் வகுக்க வல்லார்.

(இ-ள்.) ஆயிரகோடி காமர்களின் அழகெல்லாந் திரண்டு ஒரு உருவமாகிப் பொருந்தினவானாலும் இக்குமரவேளின் நின்மலமான பாதத்திலுள்ள தூய்மையான நல்ல அழகினுக்கு ஒவ்வாதானால் இப்புராதன புருடனுடைய மிகவும் பெரிய உருவினுக்கெல்லாம் எவர் உவமை வகுப்பவர்கள்.—எ-று. (சுஙக)

இங்கென துயிர்போ லுற்ற விளவலு மிளைய சேயுஞ்
செங்கையில் வேலோன்றன்னைச் சிறுவனென் றெண்ணல் கண்டாய்
பங்கயன் முதலோர்காணப் பரமனே யாகுமென்றா
ரங்கவர் மொழிந்தவாறுஞ் சரதமே யானதன்றே.

(இ-ள்.) இவ்விடத்தில் எனதுயிரினைப்போலவிருந்த தம்பியான சிங்கமுகனும் இளையமகனான இரணியனும் செவ்விய கையினில் வேற்படையினையுடைய இவனை நீ சிறுவன் என்று கருதாதே இவன் பிரமன்முதலிய தேவர்களுமறியாத பரமனேயாகுமென் றுரைத்தார்கள் அவர்கள் உரைத்தனவும் உண்மையாகவே ஆயின.—எ-று. ()

அண்ணலார் குமரன்மேனி யடிமுதன் முடியின் காறு
மெண்ணிலா வூழிகால மெத்திற நோக்கினாலுங்
கண்ணினா லடங்கா துன்னிற் கருத்தினா லடங்கா தென்பா
னண்ணினா னமருக்கென்கை யருளென நாட்டலாமே.

(இ-ள்.) தெய்வீகம்பொருந்திய குமரவேளின் திருமேனியில் அடிமுதல் முடிவரைக்கும் அளவில்லாத ஊழிகாலம் அவ்விதமாகப் பார்க்கினும் கண்ணினால் அடங்காது நினைத்தற்கோ மனதினாலும் அடங்காது இத்தகைய தன்மையினையுடைய இவன் போரிற்கு வந்தது அருளினாலேயே என்றுரைக்கலாம்.—எ-று. (சுசக)

திருகிய வெகுளிமுற்றுந் தீர்ந்தன செருவி னூக்க
மருகிய துரோமம்புள்ளி யாயினவிழியிற் றாநீர்
பெருகிய திவண்பா லன்புபிறந்தன தமியேற்குள்ள
முருகிய தென்புதானு முலைமெழுகாகு மன்றே.

(இ-ள்.) மாறுபாடாகவுண்டாகிய சீற்றமுழுமையு மகன்றன. போர்செய்யு முயற்சியுங் குறைந்தது. உரோமங்கள் சிலிர்த்தன. கண்களில் தூய்மையான நீருறியது. அடியேனுக்கு இவனிட மன்புமிருந்தது. மனம் உருகியது. எலும்பும் உலையிலிட்ட மெழுகுபோல இளகியது.—எ-று.

அன்று ஏ-இரண்டும் அசைகள். (சுசஉ)

போயின வகந்தைபோதம் புகுந்தன வலத்ததான
தூயதோர் தோளுங்கண்ணுந் துடித்தன புவனமெங்கு
மேயின பொருள்கண்முற்றும் வெளிப்படுகின்ற விண்ணோர்
நாயகன்வடி வங்கண்டே னற்றவப்பய னீதன்றே.

(இ-ள்.) அகந்தை விலகின. ஞானம் புகுந்தன. வலதுபுறத்திலுள்ள தூய்மையான தோளுங் கண்ணுந் துடித்தன. உலகமுழுதிலும் பொருந்தின பொருள்கள் எல்லாம் வெளிப்படுகின்றன. தேவநாயகனுடைய திருவுருவத்தினைக்கண்ட வென்னுடைய நல்ல தவப்பயன் இது அல்லவோ?—எ-று. (சசங)

சூழுதல் வேண்டுந்தாள்க டொழுதிடல் வேண்டு மங்கை
தாழுதல்வேண்டுஞ் சென்னி துதித்திடல் வேண்டுந்தாலு
வாழுதல் வேண்டுந்தீமை யகன்றுநா னிவற்காளாகி
வாழுதல் வேண்டுநெஞ்சந் தடுத்தது மானமொன்றே.

(இ-ள்.) இவனை வலமாக எனதுகால்கள் சுற்றுதல்வேண்டும் அகங்கைகள் தொழுதல் வேண்டும். தலை வணங்குதல் வேண்டும். நாம் துதிசெய்தல்வேண்டும். தீமைகளினின்றும் நீங்கி வாழவிரும்பிய யான் இவற்கு அடிமையாக வாழ்தல்வேண்டும். அவ்வாறு செய்தற்கு எழுந்த எனது மனதினைத்தடுத்தது மானமென்னும் ஒன்றேயாம். ()

ஒன்னலர் பொருட்டாலேகி யுறுசமரிழைத்த செம்மல்
றன்னுரு வதனைக்காண்கின் முனிவதே தகுதியாகும்
வன்னிகொள் வெண்ணெயேபோல் வலியழிந் துருகிற் றென்று
லென்னுடை வயத்தவன்றே வுணர்ச்சியு மியாக்கை முற்றும்.

(இ-ள்.) பகைவர் நிமித்தமாக இங்குவந்து போர்புரிந்த இத்தலைவனுடைய உருவத்தினைக்கண்டால் கோபங்கொள்ளுதலே தகுதியானதாம். இதுநிற்க, இதற்கு மாறாக தீயிலிட்ட வெண்ணெயினைப்போல வன்மையையிழந்து உருகிற்றுனால் இவ்வுடலும் இதனிலுள்ள அறிவும் என் வசப்பட்டு நிற்பது அல்லவோ? (சசசு)

ஏடவி ழலங்கன்மார்ப னென்னுட னிந்நாள்காறு
நீடிய விகற்போராற்றி நீங்கலா னின்றதெல்லா
மாடலி னியற்கையென்றே யறிந்தன னஃதான் றன்னோன்
சாடிய வேண்டுமென்னின் யாரதுதாங்கற் பாலார்.

(இ-ள்.) இதழ்விரிந்த மலரினுற் கட்டப்பட்ட மாலையணிந்த மார்பினையுடைய இம்முருகன் இதுகாறும் என்னுடனே மிகுந்த பகைபாராட்டிப்பெரும் போர்புரிந்து நின்றதெல்லாம் திருவிளையாட்டின் தன்மையொன்று அறிந்துக்கொண்டேன் அஃதன்றி அவன் என்னைவதைக்கவேண்டுமானுல் அதனை யாவர் தடுக்க வல்லுநர்.—எ-று. (சசகு)

ஏதமி லமரர்தம்மை யான்சிறை செய்த தெல்லாந்
தீதென வுரைத்தார் பல்லோ ரன்னதன் செயற்கையாலே
வேதமு மயனுமேனை விண்ணவர்ப லருங்காணு
நாதனிங் கணுகப்பெற்றே னன்றதே யானதன்றே

(இ-ள்.) குற்றமற்ற தேவர்களை யான் சிறைசெய்ததனைக்குறித்து அநேகர் அது கொடிய காரியமென்று கூறினர்கள் இது நிற்க, அச்சிறையிடுதல் காரணமாக வேதமும் பிரமனும் பல தேவர்களுங் காணுத இறைவனிங்கு வரப்பெற்றேன் அச்செயல் நல்லதாகவே ஆயிற்று.—எ-று.

அன்றும் ஏயும் அசைகள். (சசஎ)

ஒன்றொரு முதல்வனாகி யுறைதரு மூர்த்தி முன்ன
நின்றமர் செய்தேனிந்நா ணெஞ்சினித் தளரேனம்மா
நன்றிதோர் பெருமைபெற்றேன் வீரனுநானே யானே
னென்றுமிப் புகழேநிற்கு மிவ்வுடனிற்ப துண்டோ.

(இ-ள்.) ஏகமுதல்வனாக எழுந்தருளியிருக்கின்ற குமரக்கடவுளின் எதிரில் இத்தினம் போர்புரிந்தேன் அதனால் இனி யான் மனத்தளர்ச்சி அடையேன் இந்த நல்லவொரு பெருமையைப் பெற்றேன். இதனால் வீரபுருஷனும் நானே ஆயினேன். நான் அடைந்த இப்புகழே நிற்கும் இந்த வுடலம் அந்தப் புகழினைப்போன்று நிற்குமோ? நில்லாது.—எ-று. (சஎஅ)

வானுளோர் சிறையைநீக்கி வள்ளலை வணங்கி யிந்த
வூனுலா முயிரைப்போற்றி யளியர்போ லுறுவ னென்னி
னானதோ வெனக்கிதம்மா வாயிரகோடி யண்டம்
போனதோர் புகழும்வீரத் தன்மையும் பொன்றிடாவோ.

(இ-ள்.) தேவர்களின் சிறையை அகற்றி இந்தக் குமாரவள்ளலை வணங்கி இந்த ஊனுடன் பொருந்திய உயிரினைக் காப்பாற்றிக்கொண்டு ஏழைகளைப்போன்று இருப்பேனானால் இது எனக்குத் தகுதியான காரியமோ? நான் இவ்வாறு செய்தால் ஆயிரகோடி யண்டங்களிலும் சென்று பொருந்தியுள்ள எனது புகழும் வீரத்தன்மையும் அழிந்து போகாதோ?—எ-று. (சஎக)

என்னவித்தகையபன்னிநிற்றனுமெவர்க்குமேலோ
னுன்னருந்தகைத்தாய்நின்றவொருபெருந்தோற்றநீத்து
மின்னிவர்கலாபமூர்ந்தவிய னுருக்கொண்டுநண்ணித்
துன்னலன்போதமாற்றித்தொன்மைபோலாகச்செய்தான்.

(இ-ள்.) என்று இவ்வண்ணமான வசனங்களை யுரைத்துக்கொண்டு நின்றனன் உடனே யாவர்க்கு முதல்வனான குமரப்பெருமான் நினைத்தற்கரிதானதாக நின்ற தனது ஒப்பற்ற வடிவத்தினை அகற்றி ஒளிபொருந்திய சிறந்த மயிலேறிய திருவுருவத்துடன் எழுந்தருளி பகைவனிடத்திருந்த ஞானவுணர்ச்சியை யகற்றி முன்னிருந்த வண்ணமாகவே இருக்கச் செய்தான்.—எ-று. (சஅ0)

காரணனாகித்தானேகருணையாலெவையுநல்கி
யாருயிர்முழுதுமேவியனைத்தையுமியற்றிநிற்கும்
பூரணமுதல்வன்மைந்தன்போதகமளித்துமாற்றிச்
சூரனைமயக்கஞ்செய்யுஞ்சூழ்ச்சியோவரியதன்றே.

(இ-ள்.) உலகமுதலியவைகளைப் படைப்பான் தானே நிமித்த காரணனாகி, பசுக்கள்மீதுள்ள கருணையினாலனைத்தையும் படைத்து அரிய உயிர்கள்தோறும் பொருந்தி எல்லாக் காரியங்களையுஞ் செய்தருளுகின்ற பூரணமுதல்வனாகிய சிவபெருமானுடைய திருக்குமாரனாகிய குமரக்கடவுள் ஞானவுணர்வினை அளித்துப் பின்னரதனை நீக்கிச் சூரபன்மனை மயக்குகின்ற தந்திரமொரு பெரியதோ அன்றெனக.—எ-று.

தந்தைக்குள்ள திறமெல்லாம் மைந்தற்கு முளதாதலின் இச்செயல் வியப்பின்றென்பது குறிப்பு. (சஅக)

அத்தகு காலைதானே யவுணர்கோ னுணர்ச்சி நீங்கிச்
சித்தம திடையே தொல்லைச் சீற்றமு மிகலு முற்ற
மெய்த்தகு குழவித் திங்கள் விண்ணெறி செல்லச் செல்லு
மெத்திசை யிருளுமன்ன தகன்றுழி யெழுந்த தேபோல்

(இ-ள்.) இளமதியானது வானவழியிற் செல்லா நிற்பத்திசைகள் தோறும் அகலுமிருளானது அம்மதிய கன்றவுடனே மீட்டு முலகினிற் பரவினாற்போல, அப்பொழுது சூரபன்மன் அறிவு நீங்க அவன்மனதினில் கோபமும் பகையுந்தோன்றின. ()

பிணிமுக முயர்த்துநின்ற பெருந்தகை தோற்றங் காணூஉத்
தணிவருஞ் சினமேற்கொண்டு சமரின்மே லூக்கஞ் சேர்த்தி
யணியதென் றிண்மையென்னு வங்கையோ டங்கை தாக்கி
மணிமுடி துளக்கிநக்கு மற்றிவை புகலலுற்றான்.

(இ-ள்.) மேற்றூக்கப்பட்ட கோழிக்கொடியினையுடைய பெருந்தகையான குமரப்பெருமானுடைய தோற்றத்தினைப்பார்த்து அடங்காத கோபமிகுந்து போர்புரிவதனில் ஊக்கத்தினைவைத்து இவன் வந்தது எந்தவிதமான வன்மையினாலென்று அகங்கையுடனே அகங்கையினைமோதி மணிமுடியினை யசைத்து எச்சரித்துப்பின்னர் இவைகளையுரைப்பானாயினான்.—எ-று. (சுருங)

சேயுரு வமைந்த கள்வன் செருவினை யிழைக்க லாற்றான்
மாயையி னொன்றுகாட்டி யெனையிவண் மையல் செய்தா
னயது துடைத்தே னென்று லாரெனக் கொப்புண் டென்றுங்
காயமத ழிவிலாதேன் கருத்தழி கின்ற துண்டோ.

(இ-ள்.) சிறுவன தருவங்கொண்டு நின்ற இம்மாயாவி, போர்புரிதலைச் செய்யாதவனாய் தன்மாயையில் ஒன்றினைக்காட்டி இவ்விடத்தில் என்னை மயக்கினான் அவன் காட்டிய மாயைக்கு மயங்காது அதனை அழித்தேனானால் எனக்கு எவர் ஒப்பாகுவோர் யானே என்று மழியாத உடலினையுடையேன் அத்தகைய என்னுடைய மனநிலை தளர்வதுண்டோ? (ஒருகாலும் தளராது)—எ-று. (சுஙச)

குன்றினை யெறிந்தவேற்கைக் குமரனோடமர தாற்றி
வென்றிடு கின்றேன் மெல்ல மேலது நிற்கவிந்த
வன்றிறற் சமரைமூட்டிநின்றவா னவரை யெல்லாந்
தின்றுயிர் குடித்து முன்னென் சினஞ்சிறி தகல்வ னென்றான்.

(இ-ள்.) கிரவுஞ்சமலையினைப்பிளந்த வேலாயுதத்தினை யேந்திய அத்தத்தினையுடைய குமரனுடனே போர்புரிந்து மெல்லெனவெல்கின்றேன். பின்னர் நிற்க, எனக்கும் இவனுக்கும் இந்த வலிய திறலினையுடைய போரினையுண்டாக்கிவிட்டு ஆகாயத்தில் நிற்கின்ற தேவர்களையெல்லாம் தின்று அவர்களுயிரைக்குடித்து முதலில் இது விஷயமாக எனது கோபத்தினைச் சிறிது அகற்றிக்கொள்வேன்.—எ-று. (சுஙரு)

ஆய்து துணிவாக்கொண்ட வவுணர்கண் மன்னன்பின்னுந்
தீயதோர் தொல்லைமாயச் சீர்கொண்மந் திரத்தைப் பன்னி
ஞாயிறு மருட்கைகொள்ள ஞாலமுங் ககன முற்று
மாயிரு ளுருவங் கொண்டு மறைந்து நின் றார்க்கலுற்றான்.

(இ-ள்.) அவ்வாறு செய்வதனையே உறுதியாகக்கருதிய அசுராதிபன் பின்னும் கொடிய ஒரு மாயமந்திரத்தினைச் செபித்து சூரியனு மயங்க உலகமும் ஆகாயமுமிகுந்த இருளுருவத்தினைஅடைந்து மறைந்து நின்றாரவாரிக்கத் தொடங்கினான்.—எ-று.

சூரியனையுடைய பகற்போதில் பரவப்பட்டு நிற்கு மிருளானது தோன்றி நிற்பதனைக்கண்டு என்னைகொலொ வீதெனச்சூரியனு மயங்கினன் என்பார் ஞாயிறு மருட்கைகொள்ள என்றார். (சுஙசு)

தெண்டிரை நேமிதன்னிற் றீவிடமெழுந்த தென்ன
வெண்டிசை யெல்லைமுற்று மிருநில வரைப்பு மெல்லா
வண்டமு மாகியீண்டு மாரிருள் வடிவை வானோர்
கண்டன ரவுணன்மாய மீதெனக் கலக்க மூற்றார்.

(இ-ள்.) தெள்ளியதிரையினையுடைய கடலில் கொடிய விடந்தோன்றினாற் போல் எட்டுத்திக்குகளின் எல்லைகள் முழுதிலும் பெரிய பூமியிலும் எல்லா அண்டங்களிலுமாகி நெருங்கிய அரிய இருள்வடிவத்தினை தேவர்கள்பார்த்து இது சூரபன்மனுடைய மாயச்செயலாலுண்டானது. என்று கலக்கமடைந்தார்கள்.—எ-று. (சுஙள)

அத்துணை யவுணர் மன்ன னவ்விரு ளிடையே பாய்ந்து
பத்திகொள் சிகரமன்ன பல்தலை யளவை தீர்ந்த
கைத்தல முளதோர் யாக்கை கதுமெனக் கொண்டு விண்ணோர்
மெய்த்தொகை நுகர்வா னுன்னி விண்ணிடைக் கிளர்ந்து சென்றான்.

(இ-ள்.) அப்பொழுது சூரபன்மன் அந்த இருட்டின் வழியாகப் பாய்ந்து பத்தியாகப் பொருந்தின மலைச்சிகரங்களைப்போன்ற பல தலைகளையும் அளவற்ற கைகளையும் உடைய உடலினை விரைவாக உண்டாக்கிக்கொண்டு தேவர்களுடைய உடற்கூட்டங்களை உண்ணுவான் கருதி ஆகாயத்தி லுயர்ந்து போயினான்.—எ-று. (சுஙஅ)

ஆடியல் கொண்டசூர னந்தரத் தெழலும் வானோர்
கூடிய வோதிதன்னாற் குறிப்பினாற் றெரிந்து நம்மைச்
சாடிய வருவனென்னாத் தலைத்தலை சிதறி நில்லா
தோடினர் கூற்றைநேர்ந்த வுயிரென விரங்க லுற்றார்.

(இ-ள்.) போராடுதலைக் கருதிய சூரபன்மன் ஆகாயத்திலெழுதலும் தேவர்கள் தம்மிடத்திற்பொருந்திய ஞானத்தினாலும் குறிப்பினாலும் தெரிந்துகொண்டு இவன்நம்மை கொல்லவருவானென்று இடங்கள்தோறும் சிதறி நிற்காம லோடினவர்களாய் யமனெதிர்ப்பட்ட உயிரினைப்போல வருந்ினார்கள்.—எ-று. (சுருக)

நண்ணினர்க்கி னியாயோலஞான நாயகனே யோலம்
பண்ணவர்க் கிறையே யோலம்பரஞ் சுடர்முத லேயோல
மெண்ணுதற் கரியாயோலம் யாவையும் படைத்தாயோலங்
கண்ணுதற் பெருமானல் குங்கடவுளே யோல மோலம்.

(இ-ள்.) அடைந்தவர்கட் கினிமையானவனே ஓலம் ஞானநாயகனே ஓலம் முனிவர் முதல்வனே ஓலம் பரஞ்சுடர் முதல்வனே ஓலம் நினைத்தற்கரியவனே ஓலம் சகலத்தையும் படைத்தவனே ஓலம் நெற்றிக் கண்ணினையுடைய நிமலனளித்த கடவுளே ஓலம் ஓலம்.—எ-று. (சுகூ0)

தேவர்கடேவே யோலஞ் சிறந்த சிற்பரனே யோலம்
மேவலர்க்கி டியேயோலம் வேற்படைவி மலாவோலம்
பாவலர்க் கெளியாயோலம் பன்னிரு புயத்தாயோல்
மூவருமாகி நின்ற மூர்த்தியே யோலமோலம்.

(இ-ள்) தேவர்கட்குத் தேவனே ஓலம் சிறப்புப்பொருந்திய சிற்பரனே ஓலம் பகைவர்களுக்கு இடியாகவுள்ளவனே ஓலம் வேலாயுதத்தினையுடைய விமலனே ஓலம் பாவலர்கட்கெளிமையானவனே ஓலம் பன்னிரண்டு தோள்களையுடையாய் ஓலம் திரிமூர்த்திகளுமாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்.—எ-று. (சுகூக

கங்குலி னெழுந்த கார்போற்கனையி ருண்மறைவி னேகி
நுங்கிய செல்வான் சூரனேடவு நோன்மையில்லே
மெங்சினியுய்வ மையவிறையுநீ தாழ்க்கல் கண்டா
யங்கவ னுயிரை யுண்டெம் மாவியையருளு கென்றார்.

(இ-ள்.) சூரனென்பவன் இரவிலெழுந்த மேகத்தினைப்போல நெருங்கிய இருளின் மறைவில் வந்து உண்ண வருவான் நாங்கள் ஓடவும் வன்மையற்றவர்களாகவிருக்கின்றோம். ஐயனே, இதனால் இனி நாங்களெவ்விடத்திற் பிழைப்போம் கணப்பொழுதுந் தாழ்வுசெய்யாமல் அவனுயிரை உண்டு எங்களுயிரை காக்கவேண்டும் என்று கூறினார்கள்.—எ-று. (சகூஉ)

தேற்றலே போனுமீது சிறிதுநீ பாணிப்பாயே
லாற்றலின் மறைந்து நின்றே யகிலமுந் தானேயுண்ணு
மாற்றல னுவிதன்னை வாங்குதி வல்லையென்னுப்
போற்றினன் முதல்வன்றன்னை மயூரமாய்க் கொண்டபுத்தேள்.

(இ-ள்.) இறைவனே இதனை நீ எண்ணியிது இத்தகையது என்று தெளிந்தாயில்லை. நீ சற்றுநேரம் தாமதமாக இருப்பாயானால் பகைவன் இருளின் மறைந்துநின்று அனைத்தையும் தானே உண்பான் ஆதலால் பகைவனுயிரினை விரைவில் வாங்குவாயாகவென்று குமர முதல்வனை மயிலாக நின்று சுமக்கின்ற இந்திரனுரைத்துத் துதித்தனன்.—எ-று. (சகூஙு)

அங்கவர் மொழியும் வெய்யோ னாற்றலுந் தெரிந்து செவ்வேள்
செங்கைய தொன்றில் வைகுந் திருநெடு வேலை நோக்கி
யிங்கிவ னுகம்போழ்ந்தே யேகுதி யிமைப்பி னென்னுத்
துங்கம துடைய சீர்த்திச் சூரன்மேற் செல்லத் தொட்டான்.

(இ-ள்.) அங்கு அத்தேவர்க ளுரைக்கு முரையையும் கொடிய சூரபன்மனுடைய வன்மையையும் உணர்ந்து குமரப்பெருமான் செவ்விய ஒரு திருக்கரத்தி லெழுந்தருளி இருக்கின்ற அழகிய நெடிய வேலாயுதத்தினைப் பார்த்து நீ இங்கு இவனுடைய உடலத்தினை பிளந்து விரைந்து வருவாயாக வென்று உயர்ச்சிபொருந்திய கீர்த்தியினையுடைய சூரபன்மன்மீது செல்லுமாறு கட்டளையிட்டு விடுத்தருளினன்.—எ-று. (சகூச)

ஏயென முருகன்றெட்ட விருதலை படைத்தனாங்க
ராயிர கோடியென்னு மருக்கரிற் றிகழ்ந்துதோன்றித்
தீயழற் சிகழிகான்று சென்றிட வவுணன்கொண்ட
மாயிரு ளுருவமுற்றும் வல்விரைந் தகன்றதன்றே.

(இ-ள்.) விரைவாக முருகப்பெருமான் விடுத்தருளிய இரண்டுதலைகளையுடைய வேற்படையானது அருகில் ஆயிரகோடி யென்னுந் தொகையினையுடைய சூரியர்கள் உதித்தாற்போல பிரகாசித்துடன் வெளிப்பட்டு சுடுகின்ற அக்கினிமயமான அம்புகளை உண்டாக்கிக்கொண்டு செல்லுதலும் அசுரன்கொண்டிருந்த பெரிய இருளுருவ முழுமையும் அதிகவிரைவாக நீங்கியது.—எ-று. (சகூரு)

அன்னவன் றனதுமாய மழிந்தது மையன்வைவேன்
முன்னுறு மாறுநோக்கி முடிவிலா வரத்தினேனை
யெனனிவட் செய்யுமம்மா விவன்விடு மெஃகமென்னு
வன்னினன் முறுவலெய்தி வுருகெழு சீற்றங் கொண்டான்.

(இ-ள்.) அச் சூரபன்மன் தனது மாயமழிந்ததையும் இறைவனுடைய கூரிய வேற்படை எதிர்ப்பட்டு வருதலையும் பார்த்து அழிவற்ற வைரத்தினையுடைய என்னை இவன் விடுத்த வேற்படை இவ்விடத்தில் என்னசெய்யுமென்று நினைத்துச் சிரித்து அச்சம் விளங்கத்தக்க கோபமுடையவனாகினான்.—எ-று. (சசுசு)

வாரிதி வளாகந்தன்னை மாதிரவரைப்பை மீக்கீழ்ச்
சேருறுநிலையந் தன்னைத் திசைமுகன் முதலாவுள்ள
வாருயி ரோடும்வீட்டி படுவன்மே லிதனையென்னாச்
சூரெனு மவுணன் மற்றைத் தொடுகட னடுவணுற்றான்.

(இ-ள்.) கடல் நிலவரைப்பினையும் திசைகளி னெல்லைகளையும் மேலும் கீழுமாகப் பொருந்திய மற்றைய சுவர்க்க பாதாளங்களையும் பிரமன்முதலாகவுள்ள அரியஉயிர்களுடனே சேர்த்தழித்துப் பின்னர் இதனை அழிப்பேனென்று சூரபன்மனாகிய அசுரன் தோண்டப்பட்ட கடலின் நடுவிலாயினான்.—எ-று. (சசுஎ)

வன்னியி னலங்கல்கான்று வான்றழை புகையினல்கிப்
பொன்னென விணர்களீன்று மரகதம் புரையக் காய்த்துச்
செந்நிற மணிகளென்னத் தீம்பழங்கொண்டு கார்போற்
றுன்னுபல் கவடுபோக்கிச் சூதமா யவுணனின்றான்.

(இ-ள்.) அவ்வசுரன் கடலின் நடுவில் தீயைப்போன்ற தளிர்களையீன்றும் உயர்ந்த தழையினைப் புகையைப்போல அமைத்து பொன்னைப்போல பூங்கொத்துக்களையுண்டாக்கி மரகதத்தை யொப்பக் காய்த்து செந்நிறமான மணிகளைப்போல இனிமையான பழங்களைக்கொண்டு மேகத்தினைப்போல நெருங்கிய பல கவடுகளை விட்டுக்கொண்டு மாமரமாக நின்றனன்.—எ-று. (சசுஅ)

மாசறு ககனகூட வரம்பத னளவுமேல்போ
யாசையி னெல்லைகாறு மளவைதீ ருலவை யோச்சிக்
காசினி யகலந்தாங்குங் கச்சபத் துணைத்து ரோட்டிப்
பாசடை பொதுளிவெஞ்சூர் பாரரைமால் வரையினின்றான்.

(இ-ள்.) களங்கமற்ற ககனகூடவரம்பி னளவிற்கும் மேலேசென்று திக்குகளின் எல்லைகள் வரைக்கும் அளவற்ற கிளைகளைநீட்டி பூமியினிடத்தைச் சுமக்கின்ற ஆதிகூர்மபரியந்தம் அடிவேரினையோட்டி பசியஇலைகள் தழைந்து வெவ்விய சூரபன்மன் மாமரமாகி பரிய அரையினையுடைய பெரிய மலையைப்போல நின்றனன்.—எ-று. (சசுகு)

ஓராயிர நூறதென்னு யோசனை யளவையான்ற
பாரரைமா வுருவமாகிப் பலவுடைச் சினைமாண் கொம்பர்
விராவிய சூழ்ச்சிதன்னால் வேலைகண் முழுதும் விண்ணுந்
தராதல வரைப்புமெல்லாந் தண்ணிழல் பரப்பிநின்றான்.

(இ-ள்.) ஒரு நூறாயிரமென்னும் யோசனையினளவாக அகன்ற பரிய அரையினையுடைய மாமரவுருவமாய் அநேகமாகவுள்ள கிளைகளோடுகூடி கொம்புகள் கலந்து நிற்கின்ற சூழ்ச்சியினால் கடல்முழுமையும் ஆகாயமும் பூமியும் ஆகிய இவ்விடங்களிலெல்லாம் தண்ணிய நிழலினைப் பரப்பிக்கொண்டு நின்றனன்.—எ-று. (சஎ0)

நெடுங்கலை முயன்மான் கொண்டு நிலவுமம் புலியுநீத்த
மடுங்கதிர் படைத்தகோவு மளகையை யாளிதானுங்
கடங்கலுழ் கின்றவாசைக் கரிகளுங் கடாவிற்செல்லு
மடங்கலும் வெருவச்சூரன் மாவுருக் கொண்டு நின்றான்.

(இ-ள்.) நெடிய கலையினுடன் முயன்மானினைக்கொண்டு விளங்குகின்ற அம்புலியாகிய சந்திரனும் நீரினை கிரகிக்கின்ற கிரணங்களையுடைய கோவான சூரியனும் அளகையையாளியான குபேரனும் மதமொழுக்குகின்ற திக்குயானைகளும் கடாவில் செல்லுகின்ற மடங்கலான யமனும் அஞ்சும்வண்ணம் சூரபன்மன் மாமரவுருவங்கொண்டு நின்றனன்.—எ-று. (சஎக)

மிக்குய ருவணமன்ன மிசைப்படு மெகினப் புள்ளு
மைக்குயில் சேவலாகி மயூரமாம் வலியன் றானும்
புக்கமர் தெரிக்குமாடற் பூவையுங் கொடிய தான
குக்குட முதலுமஞ்சக் கொக்குருவாகி நின்றான்.

(இ-ள்.) மிகவும் உயர்ந்த கருடனும் அன்னமும் மேற்பொருந்திய எகினப்புள்ளான திருமாலும்கரியகுயிலும் சேவலும் மயிலும் ஆன வலிபனான இந்திரனும் புகுந்து போரினைவிளக்குகின்ற பூவையான வீரலட்சுமியும் கொடியாகவுள்ள குக்குடமுதலான அக்கினியும் அஞ்சுமாறு கொக்கென்னும் மாமர வுருவங்கொண்டு சூரபன்மன் நின்றனன்.—எ-று. (சஎஉ)

காலெனு மொய்ம்பனுட்கக் கட்செவி கவிழ்ந்து சோர
வாலிய வசுக்களேங்கி மலர்க்கர மறிக்க வெய்யோன்
பாலர்மெய் வியராநிற்பப் பணைமுலை யரிவை மார்கள்
சேலெனும் விழிகள் பொத்தச் சேகரமாகி நின்றான்.

(இ-ள்.) வாயுவென்றுரைக்கின்ற வன்மையாளன் அஞ்ச ஆதிசேடாதி அரவங்கள் தலைகவிழ்ந்து சோர்வடைய தூய்மையாளரான வசுக்கள் ஏக்கமுற்று மலர்போலும் கரங்களைவிரிக்க சூரியகுமாரரான சனி யமன் முதலியோர் உடல் வியர்வையடைய பணைத்த கொங்கைகளையுடைய சத்தமாதர்களென்னும் பெண்கள் சேலென்றுரைக்கத் தக்க கண்களை மூடாநிற்ப மாமரமாகி நின்றனன்.—எ-று. (சஎங)

அத்தியி னரசுபேர வாலமுந் தெரிக்கி லேங்க
மெய்த்திறல் வாகைவன்னி மெலிவுற வீரை யாவுந்
தத்தம திருப்பை நீங்கத் தாதவிழ் நீபத்தாரோ
னுய்த்திடு தனிவேன்முன்ன ரொருதனி மாவாய் நின்றான்.

(இ-ள்.) யானைகளுக்கு அரசான ஐராவதம் நிலைவிட்டுப் பெயரவும் ஆலமென்னும் விடமும் விளக்குமிடத்து ஏக்கங்கொள்ளவும் சரீரவன்மையினையும் வாகையென்னும் வெற்றியினையும் உடைய வன்னியென்னும் அக்கினி மெலிவடையும் கடல்களெல்லாம் தத்தம் இருப்பிடத்தில்நின்றும் நிலைபெயரவும் மகரந்தங்களை அவிழ்கின்ற வெண்கடப்ப மலர் மாலையினையுடைய பெருமானது வேற்படையினெதிரில் சூரபன்மன் ஒப்பற்ற ஒரு மாமரமாகி நின்றனன்.—எ-று. (சஎச)

நிலமிசை யினையவாறோர் நெடும் பெருஞ் சூதமாகி
யுலவையின் செறிவுதன்னா லும்பருந் திசையு மெற்றித்
தலைமுத லடியின்காறுஞ் சாலவுந் தளர்ந்து தள்ளுற்
றலமரு வாரிற்றானே யசைந்தன னசைவிலா தான்.

(இ-ள்.) உலகத்தி லித்தன்மையான ஒருநெடிய பெரியமாமரமாகி கிளைகளின் நெருக்கத்தினால் ஆகாயத்திலும் திக்களிலும்மோதி தலைமுதல் அடிவரைக்கும் மிகவும் தளர்ந்து தள்ளப்பட்டு அசையுமவர்களைப்போல அசைவற்ற சூரபன்மன் தானாகவே அசைந்தனன்.—எ-று. (சஎரு)

பைவிரி பாந்தட் புத்தேள் பரம்பொறு தழுங்கப் பாரின்
மைவிரி படிவச்சூறை மாருத மெறிய மாழை
மெய்விரி குடுமிக் கோட்டு மேருவெற் பசைந்தா லென்ன
மொய்விரி யவுணன் யாக்கை யலைத்தனன் முடிவதோரான்.

(இ-ள்:) விடப்பையினை விரிக்கின்ற அரவ விறையான சேடன் சுமை பொறுக்காமல் வருந்தவும் உலகத்தில் கருமை விரிந்த உருவத்தினையுடைய சுழற்காற்று வீசவும் உடல் முழுமையும் பொன்னொளி விரித்து நிற்கின்ற சிகரங்களையுடைய மேருமலை யசைந்தாற்போல மிகுந்த வன்மையினையுடைய சூரபன்மன் தானிறப்பதையுணராதவனாய் தனது உடலத்தினை யசைத்தனன்.—எ-று. (சுஎசு)

இடிந்தன சரிந்தஞால மேழ்வகைப் பிலங்கண் முற்றும்
பொடிந்தன கமடநாகம் புரண்டன புழைக்கை மாக்கண்
முடிந்தன மறிந்தவேலை முழுவது மொன்று குற்ற
மடிந்தன வுயிரின் பொம்மல் வரைக்குல மறிந்த வன்றே.

(இ-ள்.) உலகங்கள் இடிந்தனவாகிச் சரிந்தன எழ்வகையனவான பிலங்கள் முழுமையும் பொடிந்தன ஆதிகமடமும் நாகங்களும் புரண்டன துவாரம் பொருந்திய தும்பிக்கையினையுடைய யானைகள் இறந்தன. கடல்கள் மறிந்தனவாகி எல்லாம் ஒன்றுயின உயிர்க்கூட்டங்கள் இறந்தன மலைக்கூட்டங்கள் மறிந்தன.—எ-று (சுஎஎ)

தாரகை யுதிர்ந்தகோளுந் தலைபனித் திரிந்த வெய்யோன்
தேரொடு மாவுந்தானுந் தியங்கினன் றிங்கட் புத்தேள்
பேருறு மானநீங்கிப் பெயர்ந்தன னேனை வானோர்
மேருவுங் கயிலைவெற்பும் புக்கனர் வெருவு நீரார்.

(இ-ள்.) நட்சத்திரங்கள் உதிர்ந்தன கோட்களும் தலைகலங்கி விலகியோடின சூரியனுவன் இரதத்துடனே குதிரையுந் தானுமாகத் தியங்கினன் சந்திரதேவன் தான் எறிச்செல்கின்ற விமானத்தினை விட்டுச் சென்றான் மற்றுள்ள தேவர்கள் பயந்தவர்களாகி மேருமலையிலும் கைலைமலையிலுமாகப் புகுந்தார்கள் —எ-று. (சுஎஅ)

ஏற்றமில் சுவர்க்கமுற்று மிற்றன வதற்கு மப்பான்
மேற்றிகழ் முனிவர்வைகு முலகமும் பகிர்ந்து வீழ்ந்த
நாற்றிசை முகத்தன் மாயோ னண்ணிய வுலகுமற்றே
சாற்றுவ தென்கொலண்டச் சூழலுந் தகர்ந்த தன்றே.

(இ-ள்.) தன்னினும் உயர்ந்த தொன்றில்லாத சுவர்க்க முழுமையும் அழிந்தன அதற்கு மப்பால் மேலேவிளங்குகின்ற முனிவர் பதங்களும் பிளந்து விழுந்தன பிரமன் திருமால் என்னும் இவர்களுலகங்களு மிவ்வண்ணமே ஆயின ! இனி யுரைப்பதென்னை யண்டப்பித்திகையுந் தகர்ந்தது.—எ-று. (சுஎகூ)

தெண்டிரை நடுவணின்ற தீயவன் செயலு மன்னோன்
கொண்டிடு முருவுமுள்ளக் கொள்கையும் வலியுஞ் சீரு
மண்டர்க ளெவர்க்குமேலா மாதியம் பகவன் றொட்ட
விண்டொடர் தனிவேல்காண வெஞ்சினம் விளைத்த தன்றே.

(இ-ள்.) தெள்ளிய திரைகளையுடைய கடலின் நடுவில் நின்ற கொடியவனுடைய செய்கையும் அவன் கொண்டுள்ள உருவமும் அவன் மனக்கிடக்கையும் வன்மையும் செல்வமும் ஆகிய இவைகளையெல்லாம் எல்லாத் தேவரினும் உயர்ந்த ஆதிபகவனான

குமரவேள் விடுத்தருளிய ஆகாயமளாவிய ஒப்பற்ற வேற்படை பார்த்து மிகுந்த கோபங் கொண்டது.—எ-று. (சஅ0)

தேயுவி னெடுத்த வண்டத் திறங்களும் பிறங்கு ஞாலத்
தாயிரகோடி யண்டத் தங்கியு மொன்றிற் றென்ன
மீயுயர்ந் தொழுகியான்றோர் வெருவருந் தோற்றங் கொண்டு
நாயகன் றனதுதெய்வப் படைக்கல நடந்த தன்றே.

(இ-ள்.) தேயு பூதத்திலுள்ளனவாக வுரைக்கப்படுகின்ற அண்டகோடிகளும் விளங்காநின்ற பிருதிவி அண்டத்திலுள்ள ஆயிரகோடி யண்டங்களிலுள்ள அக்கினிகளும் ஒன்றாகக்கலந்தாற்போல மிகவுமுயர்ந்து நீண்டு உயர்ந்தவர்கள் அஞ்சத்தக்க உருவத்தினையடைந்து நமது குமரநாயகனுடைய தெய்வீகமான வேலாயுதமானது சென்றது. (சஅக)

வயிர்த்திடு நிலைமைசான்ற வன்கணு னுயிரை வௌவச்
செயிர்த்திடுந் தெய்வச் செவ்வே றிணிநில வரைப்பிலண்ட
மயிர்த்தொகை யாகவேனைப் பூதமு மழியவங்க
ணுயிர்த்தொகை முருக்கத்தோன்று மொருவனிற் சென்ற தன்றே.

(இ-ள்.) சீற்றம்பொருந்தியநிலைமையின் மிகுந்த அஞ்ஞானத்தினையுடைய சூரபன்மனது உயிரினை வவ்வுதற்கு கோபிக்கின்ற தெய்வமான செவ்வியவேற்படையானது அழுத்தமான நிலவரைப்பினிலுள்ள அண்டங்கள் உரோம கூட்டங்களாக மற்றைய பூதங்களு மழிய அவ்விடத்தில் உயிர் வருக்கங்களும் அழியுமாறு வெளிப்படுகின்ற ஒப்பற்ற பிரளயகால வுருத்திரனைப்போல சென்றது.—எ-று. (சஅஉ)

மாறம ருழந்து பன்னாள் வரம்பறு பிரம மாவார்
வேறிலை யாமேயென்ற விருவரும் வெருவி நீங்க
வீறொடு முதலுமின்றி யெழுகிரி விலக்கி விண்மேற்
சேறலி னிலைமை காட்டிப் படர்ந்தது கடவுட் செவ்வேல்.

(இ-ள்.) பகையாக நின்று போர்புரிந்து அநேக காலம் அளவற்ற பிரமமாக உள்ளவர் வேறே இல்லை யாமே என்றுரைத்த அரிபிரமர்களாகிய இருவரும் அஞ்சியகல அந்தமுமாதியு மில்லாமல் தோன்றிய மலையானது இருவர் போரினையும் அகற்றி ஆகாயத்திற்செல்லுதலினுடைய நிலைமையைக்காட்டிச் சென்றது தெய்வ வேலாயுதம்.—எ-று.

வேதனை யகத்தராகும் விண்ணவர் படைக ட்ம்முள்
யாதனை யிதற்குநேரா வியம்புவ தெரியிற் றோன்றிப்
பூதனை யுயிருண் கள்வன் புண்டரீ கத்தன் வன்மை
சோதனை புரிந்த மேலோன் சூலமே யென்ப தல்லால்.

(இ-ள்.) தீயைப்போன்ற உருவத்துடன் வெளிப்பட்ட பூதனையின் உயிரினையுண்ட திருமாலினதும் பிரமனதும் வன்மையைச் சோதனைசெய்த மேலோனுடைய சூலத்தினை ஒத்தது என்றுரைப்பதல்லால் பிரமனை யுள்ளிட்ட தேவர்களின் ஆயுதங்களில் எதனை இதற்கு நேராகக் கூறுவது. (சஅச)

மண்டல நிலத்தின் வைப்பும் வாரிதி யேழுமற்றைத்
தெண்டிரைக் கடலும்வானுஞ் சேணுப்பர் பிறங்கன் முற்று
மெண்டிசைப் புறமுமண்டத் தேணியின் பரப்பு மீண்ட
வொண்டழற் சிகையின் கற்றை யுமிழ்ந்ததா லொருங்கு ஞாங்கர்.

(இ-ள்.) மண்டலாகாரமான பூமியினிடமும் எழுகடல்களும் மற்றைய தெள்ளிய திரையினையுடைய கடல்களும் ஆகாயமும் வானிலுயர்ந்த எல்லா மலைகளும் அட்டதிக்கின் புறங்களும் அண்டவேணிகளின் பரப்புகளும் நெருங்கும் வண்ணம் ஒள்ளிய தழற் சிகையின் கற்றைகளை ஒன்றுக அருகிலுமிழ்ந்தது.—எ-று. (௬௮௫)

பற்றிய ஞெகிழிபாரிற் படர்ந்தன பௌவம் யாவுஞ்
சுற்றிய திசையும் வானுஞ் சூழ்ந்தன சோதிவைகும்
பொற்றையதொன்றேயல்லாப்பொருப்பெலாஞ்செறிந்த பொன்றோய்
கற்றையங் கதிரினண்டச் சூழலுங் கதுவ லுற்ற.

(இ-ள்.) பற்றி எரிகின்ற கொள்ளிகள் உலகிற் படர்ந்தன கடல்களிலும் சுற்றியுள்ள திசைகளிலும் ஆகாயத்திலும் சூழ்ந்தன சிவபெருமான் எழுந்தருளி இருக்கின்ற மலையொன்றல்லாத மலைகளிலெல்லா நெருங்கின பொன்னொளி பொருந்திய கற்றையான கதிரைப்போல அண்டச் சூழலிலும் நெருங்கின.—எ-று. (௬௮௬)

விடம்பிடித் தமலன் செங்கண் வெங்கன லுறுத்திப்பாணி
யிடம்பிடித் திட்டதீயிற் றோய்த்துமுன் னியற்றி யன்ன
வுடம்பிடித் தெய்வமிவ்வா றுருகெழு செலவினேகி
மடம்பிடித் திட்டவெஞ்சூர் மாமுத றடிந்த தன்றே.

(இ-ள்.) சிவபெருமான் தமது திருக்களத்திலுள்ள விடத்திற் றோய்த்து செவ்விய நெற்றியிலுள்ள வெவ்விய கண்ணெருப்பில் வைத்து இடது அத்தத்திற் பிடித்துள்ள தீயினிற்றோய்த்து முன்னேசெய்தாற்போல வேற்றெய்வமானது இவ்வண்ணம் அச்சந்தரத்தக்க தோற்றத்துடன்சென்று அறியாமையினையுடைய சூரபன்மன் கொண்ட மாவுருவத்தினை அடியில்வெட்டி யழித்தது.—எ-று. (௬௮௭)

ஆடல்வே லெறிதலோடு மாமிர வடிவா யண்ட
கூடமு மலைத்தகள்வ னரற்றொடு குறைந்து வீழ்ந்தும்
வீடில னென்பமன்னோ மேலைநாள் வரத்தி னென்றூற்
பீடுறு தவமேயன்றி வலியது பிறிதொன் றுண்டோ.

(இ-ள்.) போர்புரிகின்ற வேற்படை வெட்டியழித்தலும் மாமரவடிவமாகி அண்டகூடத்தினையும் அழித்த வஞ்சகன் சத்தத்துடனே அறுபட்டு விழுந்தும் இறந்தானில்லை முன்னம்செய்த தவத்தினால் என்று கூறுவார்களானால் பெருமைபொருந்திய தவமே யல்லாமல் வன்மையுடையது அதனைவிட வேறொன்றுண்டோ.—எ-று. (௬௮௮)

கிள்ளையின் வதனமன்ன கேழ்கிளர் பசுங்காய் தூங்கித்
தள்ளரு நிலைத்தாய் நின்ற மாவுருச் சாய்தலோடு
முள்ளுறு சினமீக்கொள்ள வொல்லைதொல் லுருவமெய்தி
வள்ளுறை யுடைவாள் வாங்கி மலைவது கருத்தி யார்த்தான்.

(இ-ள்.) கிளியின்முகம்போன்ற நிறம் விளங்குகின்ற பசியகாய்கள் தொங்கி தள்ளுதற்கரிய நிலைமையினுடையதாக நின்ற மாமர வுருவம் சாய்ந்தவுடனே உள்ளே பொருந்திய கோபமதிகரிக்க விரைவாக பழயவடிவத்தினையடைந்து கூரிய உடைவாளினை உறையினின்றும் எடுத்து வீசிப் போர்புரிவதனையுத்தேசித்து ஆரவாரித்தனன்.—எ-று. (௬௮௯)

செங்கதி ரயில்வாள் கொண்டு செருமுயன் றுருமினார்த்துத்
துங்கமொ டெதிர்ந்துசீறுஞ் சூரூரங் கிழித்துப் பின்னு

மங்கம திருகூறுக்கி யலைகடல் வரைப்பில் வீட்டி
யெங்கணு மறைசளார்ப்ப வெஃகம் வான்போயிற் றம்மா.

(இ-ள்.) செவ்விய ஒளியினையும் கூரினையும் உடைய வாட்படையினைக்கொண்டு போருக்காரம்பித்து இடிபோல கர்ச்சித்து வன்மையுடனே எதிர்த்து சிறுகின்ற சூரபன்மனுடைய மார்பினைப்பிளந்து பின்னரும் அவனுடலினை இரண்டு கூறாகச்செய்து அலைகளையுடைய கடலினிடத்தில் அழித்து எவ்விடங்களிலும் வேதங்கள் முழங்க வேற்படையானது ஆகாயத்திற் சென்றது.—எ-று. (சகூ0)

புங்கவர் வழுத்திச் சிந்தும் பூமழை யிடையி னேகி
யங்கியின் வடிவநீங்கி யருளுருக் கொண்டு வான்றோய்
கங்கையிற் படிந்துமீண்டு கடவுள ரிடுக்கண் டீர்த்த
வெங்கடம் பெருமான் செங்கை யெய்திவீற் றிருந்த தவ்வேல்.

(இ-ள்) தேவர்கள் துதித்துச் சிந்துகின்ற புட்பவருஷத்தினிடையே சென்று தீயினுருவத்தினை யொழித்து அருள்வடிவமடைந்து ஆகாயத்திற்பொருந்திய கங்கையின் முழுகி திரும்பி தேவர்களுடைய துன்பத்தினை யொழித்த எங்கள் பெருமானது செவ்விய திருக்கரத்தினை அடைந்து அவ்வேலாயுதமானது இருந்தது.—எ-று. (சகூக)

தாவடி நெடுவேன் மீளத் தற்பரன் வரத்தால் வீடா
மேவல னெழுந்து மீட்டு மெய்பகி ரிரண்டு கூறுஞ்
சேவலு மயிலுமாகிச் சினங்கொடு தேவர்சேனை
காவலன் றன்னைநாடி யமர்த்தொழில் கருதி வந்தான்.

(இ-ள்.) போர்புரிந்த நெடிய வேலாயுதமானது திரும்பிவந்துவிட பரமசிவன் அளித்த வரத்தினால் அழியாதபகைவ னெழுந்து பின்னரும் தன்னுடலம் பிளந்த இருபிளவும் கோழியும் மயிலுமாக உருக்கொண்டு கோபமுற்று தேவசேனாபதியைக்குறித்துப் போர்த்தொழிலைக் கருதிவந்தான்.—எ-று. (சகூஉ)

மணிகிளர் வரையதொன்று மரகதப் பிறங்க லொன்றுந்
துணையடி சிறகர்பெற்றுச் சூற்புய லழிய வார்த்துத்
திணிநில விசும்பின் மாட்டே சென்றெனச் சேவலோடு
பிணிமுக வுருவாய்வந்து பெருந்தகை முன்னம் புக்கான்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற ஒரு மாணிக்கமலையும் மரகதமலையும் இருபுறத்திலும் இறகினைப்பெற்று கருவினையுடைய மேகமழியும் வண்ணம் ஆரவாரித்து திண்ணிய நிலத்திலும் ஆகாயத்திலும் சென்றாற்போல கோழியுடனே மயிலுருவங்கொண்டு வந்து பெரிய தகைமையினையுடைய இறைவனெதிரேவந்து நின்றனன்.—எ-று. (சகூ௩)

ஆட்படு நெறியிற் சேர்த்து மாதியி னூழ்தந் துய்க்கத்
தாட்படை மயூரமாகித் தன்னிக ரில்லாச் சூரன்
காட்படை யுளத்தனாகிக் கடவுள ரிரியல் போக
ஞாட்பியல் செருக்கில் வந்தான் ஞானநா யகன்றன் முன்னம்.

(இ-ள்.) நம்மிறைவனுக்காட்படுகின்ற மார்க்கத்திற் புகுத்து முன்னூழானது கூட்டிவைக்க கோழியு மயிலுமாகி தனக்கு ஒப்புவேறெவருமில்லாத சூரபன்மன் வயிரம் பொருந்திய மனதுடையவனாய் தேவர்கள் விலகியோடுமாறு போர்புரிய வேண்டுமென்னும் செருக்குடனே ஞானநாயகனான குமரப்பெருமானெதிரே வந்தனன்.—

மருள்கெழு புள்ளே போல வந்திடு சூர னெந்தை
யருள்கெழு நாட்டஞ் சேர்த்த வாங்கவ னிகலே நீங்கித்
தெருள்கெழு மனத்த னாகி நின்றனன் சிறந்தார் நோக்கா
லிருள்கெழு கரும்பொன் செம்பொன் னாகிய வியற்கை யேபோல்.

(இ-ள்) சிறந்தவர்களின் கட்பார்வையினால் கருமைநிறமான இரும்பு செந்நிறமான பொன்னானாற்போல வெருட்சி விளங்காநின்ற பறவையைப்போல வந்த சூரபன்மனை எம்பெருமானுடைய அருள்விளங்கும் கண்மலரினால் பார்த்த உடனே அவன் பகையையொழித்து தெருட்சிபொருந்திய மனமுடையவனாகி நின்றனன்.—எ-று. ()

தீயவை புரிந்தா ரேனுங் குமரவே டிருமு னுற்றூற்
றாயவ ராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை
யாயவும் வேண்டுங் கொல்லோ வடுசம ரிந்நாட் செய்த
மாயையின் மகனுமன்றே வரம்பிலா வருள்பெற் றுய்ந்தான்.

(இ-ள்.) கொடிய செய்கைகளைச் செய்தவர்களாக விருந்தாலும் குமரக்கடவுளின் திருமுன்னரெய்தினால் தூய்மை யுடையவராகி மேன்மையான பழய கதியினை அடைவார்களென்றுரைத்தல் ஆராயவும் வேண்டுமோ? கொலைக்குரிய போரினை இதுகாறுஞ் செய்தமாயையின் மகனுமல்லவோ அளவற்ற அருளினை அடைந்து உய்ந்தனன்.

அக்கண மெம்பிரான் றனருளினா லுணர்வு சான்ற
குக்குட வுருவை நோக்கிக் கடிதினீ கொடியே யாகி
மிக்குயர் நமதுதேரின் மேவினை யார்த்தி யென்னத்
தக்கதே பணியி தென்னா வெழுந்தது தமித்து விண்மேல்.

(இ-ள்.) அப்பொழுது எம்பெருமானுடைய திருவருளினால் அறிவு மிகுந்த கோழியினுருவத்தினைப்பார்த்து நீ விரைவாகக் கொடியினுருவாகி மிகவும் உயர்ந்த நமது தேரிற்பொருந்தி ஆரவாரிப்பாயாக என்றுரைத்தலும் உடனே இது நல்ல தொழிலென்று தனியே ஆகாயத்தி லெழுந்தது.—எ-று. (சகஎ)

தன்னொரு கூற்றில் வந்த மயிலைவிடுத்துச்சென்ற தென்பார் எழுந்தது தமித்து விண்மேல் என்றார்.

செந்நிறங் கெழீஇய சூட்டுச் சேவலங் கொடியொன்றாகி
முன்னுறு மனத்திற் செல்லுமுரண்ட குதடந்தேர் மீப்போ
யிந்நில வரைப்பி னண்டமிடிபட வுருமே றுட்க
வன்னியும் வெருவ வார்த்து மற்றவ ணுற்ற தன்றே.

(இ-ள்.) செந்நிறம் பொருந்திய உச்சிக்கொண்டையினையுடைய ஒரு கோழிக் கொடியினுருவமாகி முற்பட்ட மனத்தினும் அதிவேகமாகச் செல்கின்ற வன்மை மிகுந்த பெரியதேரின்மீது சென்று இந்த பிருதிவி அண்டம் இடிபடவும் உருமேறு உட்கவும் அக்கினி அஞ்சவும் ஆரவாரித்துக்கொண் டவ்விடத்தி லிருந்தது.—எ-று. (சகஅ)

தனக்கு முன்னர், குமரப்பெருமான் றிருத்தேரில் கோழிக்கொடியுருவமாக இருந்து கூவுவோன் அக்கினியாதலின் இனி நாமிங்கிருந்து பயனில்லை யென நழுவுமாறு கூவினனென்பார் "வன்னியும் வெருவவார்த்து" என்றார்.

சீர்திகழ் குமர மூர்த்தி செறிவிழி கொண்ட தொல்லை
யூர்தியி னிருக்கை நீங்கி யுணர்வுகொண் டொழுகி நின்ற
சூர்திகழ் மஞ்ஞையேறிச் சுமக்குதி யெம்மை யென்னப்
பார்திசை வானமுற்றும் பரியென நடாத்த லுற்றான்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்தி விளங்குகின்ற குமரப்பெருமான் நெருங்கிய கண்களையுடைய இந்திரனாகிய பழைய மயிலினின்றும் இறங்கி நல்லுணர்ச்சி பொருந்தி வழிபட்டு நின்ற சூரனாகிய பிரகாசிக்கின்ற மயிலின்மீது ஏறிக்கொண்டு எம்மைச்சுமக்கக் கடவையென்று பூமி திக்கு ஆகாயமாதிய எவ்விடங்களினும் பரியைப்போல் நடத்தினான்.—எ-று. (சுகக)

தடக்கட லுடைய மேருத் தடவரையிடிய மற்றைப்
படித்தலம் வெடிப்பச் செந்தீப் பதைபதைத் தொடுங்கச்சூறை
துடித்திட வண்ட கூடந்துளக் குறக்க லாபம் வீசி
யிடித்தொகை புரள வார்த்திட் டேகிற்றுத் தோகை மஞ்ஞை.

(இ-ள்.) பெரிய கடல் உடையவும் விசாலமான மேருமலை இடியவும் மற்றைய பூப்பிரதேசம் வெடிப்பவும் செந்நிறமான தீயானது துடிதுடித்து ஒடுங்கவும் சூறைக்காற்றானது துடிக்கவும் அண்டகூடம் நடுங்கவும் இறகினைவீசி இடிக்கூட்டங்கள் புரளும் வண்ணம் ஆரவாரஞ்செய்துகொண்டு சென்றது தோகையினையுடைய மயிலானது.—எ-று.

ஆண்மயிலென விளக்குவான் தோகை மஞ்ஞை என்றார்.

படத்தினி னுலகம் போற்றும்பணிக்கிறைபதைப்பப் பாங்க
ரடுத்திடு புயங்கமுற்றுமலமர வ்வனிகேள்வ
னிடத்தமர்கின்ற பாம்புமேங் குறவிசும்பிற் செல்லு
முடற் குறையரவு முட்க வுலாயது கலாப மஞ்ஞை.

(இ-ள்.) படத்தினால் உலகத்தினைக்காக்கின்ற அரவவிறையான வாசுகியும் துடிப்ப அருகிற் பொருந்திய மற்றைய அரவங்களெல்லாம் சுழலா நிற்ப பூமிநாதனாகிய நாராயணனிடத்திற் பொருந்திய அரவமான ஆதிசேடனும் எக்கங்கொள்ள ஆகாயத்திற் செல்லுகின்ற குறையுடலினதான அரவமென்னும் இராகுவும் அஞ்ச கலாபத்தினையுடைய மயில் உலாவியது. (௫0க)

பாரொடு விரிஞ்சன் றன்னைப் படைத்திடப் பன்னாண் மாயன்
காரென வந்து முக்கட் கடவுளைப் பரித்த தேபோல்
வீரருள் வீரனாகும் வேலுடைக் குமரன் றன்னைச்
சூருரு வாகி நின்ற தோகைமேல் கொண்ட தம்மா.

(இ-ள்.) பூமியுடனே பிரமனையும் படைக்கும் வண்ணம் அநேக காலம் திருமால் மேகமாக நின்று முக்கண்களையுடைய கடவுளைச் சுமந்தாற்போல வீரருக்குள் வீரனை வேலாயுதத்தினையுடைய குமாரசுவாமியை சூரனுருவமான மயில் தன்மீது சுமந்து நின்றது.—எ-று. (௫0உ)

வெயில்விடு மநந்த கோடி வெய்யவர் திரண்டொன் றாகிப்
புயறவழ் கடவுள் வானிற் போந்திடு தன்மை யேபோ
லயிலினை யுடைய செவ்வேண்மரகதத் தழகுசான்ற
மயிலிடை வைகி யூர்ந்தான் மாகமுந் திசைகண் முற்றும்.

(இ-ள்.) வெயில் வீசுகின்ற அநேகங்கோடி சூரியர்கள் திரண்டு ஒன்றாகி மேகமுலாவுகின்ற தெய்வீகம்பொருந்திய ஆகாயத்தில்வந்த தன்மையைப்போல வேலினையுடைய குமரக்கடவுள் மரகதம்போலும் அழகுமிகுந்த மயிலின்மீது எழுந்தருளி அதனை ஆகாயத்திலும் பூமியிலுள்ள திசைகளிலும் நடாத்தினான்.—எ-று. (௫0௩)

நேமிகளேழு மொன்றாய்ந்நிமிர்ந் தெழும் வடவை முற்றுந்
தாமொரு வடிவா யங்கட் சார்ந்திடு நிலைமை யென்ன

மாமயி லுபர்த்துச் சென்ற வாகைவேல் வீரன் மீண்டு
தீமைகொள வுணன்மூதூர் செருநிலத் தெல்லேபுக்கான்.

(இ-ள்.) கடல்கள் ஏழும் ஒன்ருகியுயர்ந்த வடவாக்கினி முழுமையும் தாமோருருவங்கொண்டு, அவ்விடத்தில் வந்த தன்மையைப்போல சிறந்த மயிலினை மேலெழுப்பிச் சென்ற வெற்றி பொருந்திய வேற்குமரன் பின்னரும் திரும்பி தீமைபொருந்திய அசுரனுடைய பெரிய நகரத்திலுள்ள போர்க்கள வெல்லேயுட்புகுந்தனன்.—எ-று. ()

புக்குள குமர மூர்த்தி பொறிமயி லுருவ மாயுங்
குக்குட மாயு நின்ற வமரரைக் குறித்து நோக்கி
மிக்கநும் மியற்கை யாகி மேவுதிர் விரைவி னென்ன
வக்கணமவருந் தொல்லே வடிவுகொண் டடியில் வீழ்ந்தார்.

(இ-ள்.) செருநிலத் தெல்லேயிற்புகுந்த குமரப்பெருமான் புள்ளிகளேயுடைய மயிலினுருவமாயும் கோழியினுருவமாகியும் நின்ற தேவர்களேயுற்றுப்பார்த்து நீவிர்விரைவாக வுயர்ந்த உங்களுருவங்களேயடைந்து நில்லுங்கள் என்று திருவாய் மலர்ந்தருளுதலும் அப்பொழுதே அவர்களும்தம்பழயஉருவங்களேயுடையவர்களாகி திருவடிகளில்விழுந்தனர்.—எ-று. (௯0௫)

வள்ளலே வணங்கிப் பல்கால் வழுத்தியே தொழுது தத்த
முள்ளமும் புறத்தி லென்பு முருகிடவிழியிற் றாநீர்
தள்ளுற வுரைகண் முற்றுந்த வறிடப் பொடிப்ப யாக்கை
கள்ளுண வுற்றவண்டிற் களிமகிழ் சிறந்துநின்றார்.

(இ-ள்.) நமது குமாரவள்ளலே வணங்கிப் பலமுறை துதித்து தத்தம் உள்ளமும் புறத்திலுள்ள எலும்பும் உருக கண்களி லானந்த பாஷ்ப மொழுக சொற்களெல்லாந் தடுமாற உரோமகூர்ச்சிதமுண்டாகத்தேன் என்னும் உணவினையுண்ட வண்டினைப் போல மிகுந்த மகிழ்ச்சியடைந்து நின்றார்கள்.—எ-று. (௯0௬)

வீசுறு சுடர்வே லேயன் வெய்யசூர் முதலேச் சாடித்
தேசுறு மஞ்ஞை யூர்ந்து வந்தது தெரிந்துபோர்செய்
காசினி யிடையேநின்ற கணங்களும் வீரர்யாரு
மாசறு மிளவலுஞ் சென்றடி தொழுதரர்த்துச் சூழ்ந்தார்.

(இ-ள்.) சுடர் விடுகின்ற நெடிய வேற்படையினையுடைய இறைவன் கொடிய சூரபன்மனுகிய முதல்வனே அழித்து ஒளிபொருந்திய மயிலிலேறிவந் ததனையுணர்ந்து போர்புரிகின்ற இடத்தில் நின்ற கணங்களும் வீரர்களும் குற்றமற்ற இளவலான வீரவாகுதேவனும் ஆகிய அனைவருமாகச்சென்று திருவடிகளே வணங்கி ஆரவாரஞ்செய்து சூழ்ந்து நின்றார்கள்.—எ-று. (௯0௭)

சூரபன்மன் வதைப்படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - உ,கூ0௯.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தேவர்கள் போற்று படலம்.

நேரொரு சிறுதுமில்லா நின்மலன் றனது வேலாற்
சூருடல் பிளந்தியாணர் மஞ்ஞையிற் றோன்று காலைப்
பாருல கயின்ற கண்ணன் பங்கய னமரர் கட்கோ
ராரமிர் தெய்திற் றென்ன வன்னது கண்டே யார்த்தார்.

(இ-ள்.) ஒப்பென்பது சிறிதுமில்லாத நின்மலனாகிய குமரக்கடவுள் தமது வேலாயுதத்தினால்சூரபன்மன் உடலம் பிளந்து அழகிய மயிலி லெழுந்தருளிபவுடனே பூவுலகத்தினையுண்ட கண்ணனும் பிரமனும் தேவர்களுமாகிய இவர்கட்கெல்லாம் அரிய அமிர்தங்கிடைத்தாற்போல அவ்வற்புதக் காட்சியைக்கண்டு ஆரவாரித்தனர்.—எ-று (க)

ஆர்த்தன ரெழுந்து துள்ளி யாடினர் பாடா நின்றார்
போர்த்தனர் பொடிப்பின் போர்வை பொலங்கெழு பூவின்மாரி
தூர்த்தன ரருளை முன்னித் தொழுதனர் சுடர்வேல் கொண்ட
தீர்த்தனை யெய்திச் சூழ்ந்து சிறந்து வாழ்த்தெடுக்க லுற்றார்.

(இ-ள்.) ஆரவாரஞ் செய்தார்கள்; எழுந்து குதித்து ஆடினார்கள்; பாடினார்கள்; புளகப்போர்வை மூடினார்கள்; பொன் வண்ணமாக விளங்குகின்ற புட்பவருஷம் பெய்தார்கள். அருளை முன்னிட்டு வணங்கினார்கள். ஒளிபொருந்திய வேற்படையினையுடைய தூய்மையாளனை குமரக்கடவுளை யடைந்து சூழ்ந்து நின்றுகொண்டு சிறப்புப் பொருந்திய வாழ்த்தினால் வாழ்த்தினார்கள்.—எ-று. (உ)

தெய்வப்பூவான கற்பக மலரிறைத்தாரென்பார் பொலங்கெழு பூவின்மாரி தூர்த்தனர் என்றார்-

வேறு.

கார்தடிந்து துய்க்குங் கனைகடலி னீர்வறப்பப்
போர்தடிந்து செல்லும் புகர்வே றனைவிடுத்துச்
சூர்தடிந்தா யன்றே தொழுமடி யேம் வல்வினையின்
வேர்தடிந்தாய் மற்றெமக்கு வேறோர் குறை யுண்டோ.

(இ-ள்.) மேகங்கள் மின்னிக்குடிக்கின்ற ஆரவாரத்தினையுடைய கடல் நீரானது வற்றுமாறு செல்லாநின்ற புள்ளிகளையுடைய வேற்படையினை விடுத்துப் போரினைக்குறைத்துச் சூரபன்மனைக்கொன்றனை. நீ அவ்வண்ணஞ்செய்தது தொழுமடியவர்களான வெங்களுடைய தீவினையின்வேரினை யறுத்ததேயாம். நீ இங்கு இவ்வண்ணம் செய்தமையால் எங்கட்கு இனி நிரம்ப வேண்டியதாக வேறுயாதேனுங் குறையுளதோ? இன்றென்பது கருத்து.—எ-று. (ங)

மாறு முகங்கொண்டு பொருவல்ல வுணர் மாளாம
லூறு முகமெட்டு நோதக் கன புரியத்
தேறு முகமின்றித் திரிந்தே மையாள வன்றோ
வாறு முகங்கொண்டே யவதரித்தா யெம் பெருமான்.

(இ-ள்.) எம்பெருமானே! மாறுபாடான முகத்தினையுடையவர்களாய் நின்று போர்செய்கின்ற வலிய அசுரர்கள் நூற்றெட்டுயுகம் எங்கட்குத் துன்பமுண்டாகத்தக்க காரியங்களை செய்யாநிற்ப அவர்களியற்றும் துன்பத்தினை நீக்க மார்க்கமில்லாமற் பற்பல விடங்களிலுமாக வுழன்றுலாவிய வெங்களைத் துன்பத்தினின்றும் நீக்கி ஆளும்பொருட்டன்றே சண்முகத்துடன் திருவவதரித்தனை.—எ-று. (ச)

நீதி முறையதனி னில்லா வசுரர் புரி
தீது பலவுளவுந் தீர்ந்தோம் பழிய கன்றோம்
வேதநெறி தொல்லை வெறுக்கை யொடு பெற்றனமா
லேது மிலையா லெமக்கோர் குறை யெந்தாய்.

(இ-ள்) எங்கள் பெருமானே நீதிமார்க்கத்தினை அநுஸரித்தொழுகாத அசுரர்கள் செய்த பலவகையான துன்பங்களினின்றும் இன்றுவிடுபட்டோம் இழிஞர்க்கூழியம் புரிவோரென்னும் பழியும் அகன்றேம் வேதமார்க்கத்துடனே எங்கள் புராதன செல்வங்களையும் அடைந்தேம் நாங்கள் பெறவேண்டியவற்றைப் பெற்று ஒழிக்கவேண்டியவற்றை ஒழித்துள்ளோமாதலின் யாதொருகுறைவுபாடு மில்லாதவர்களாக வாயினேம்.

மன்ற வவுணர் வருத்திட விந்நாள் வரையும்
பொன்றி னவரென்னப் புலம்பித் திரிந்தனமா
லின்று பகைமாற்றி யெமக்கருணீ செய் கையினாற்
சென்ற வுயிர்மீண்ட திறம் பெற்றன மையா.

(இ-ள்) ஐயனே இதுகாறும் அசுரர் துன்புறுத்தினமையான் மயங்கி புலம்புதலுடன் செத்தாரை யொத்துலாவினேம் இத்தினம் எங்கள் பகைவர்களை அழித்து எமக்கு அருள் செய்தமையினால் இறந்த உயிர்திரும்ப அடைந்த தன்மையினை அடைந்தேம்.—எ-று. (சு)

செய்யு மவனும் புலனுஞ்செய் வித்து நிற்போனு
மெய்தவரும் பொருளுநம் யாவையு நீயே யென்கை
யையவடி யேங்க ளறிந்தனமா லன்ன தனால்
வெய்ய பவமகன்று வீடு மினிக்கூடுது மால்

(இ-ள்.) ஐயனே அடியோங்கள், செய்பவனும் அறிவும் ஏவுதற்கருத்தாவாக இருப்பவனும் அடையப்படும்பொருளும் அனைத்தும்நீயே என்பதனை அறிந்தேம் அதனால் கொடியபிறவியினும் ஒழிந்து வீட்டினையும் இனி அடைவேம்.— (எ)

ஈண்டே யெமருக் கிடர்செய வுணரெலா
மாண்டே விளியும் வகைபுரிந்து காத்தனையால்
வேண்டே மினியாது மேலாய நின்கழற்கே
பூண்டேந் தொழும்பு புகழேம் பிறர்தமையே.

(இ-ள்.) இவ்விடத்தி லெம்மவர்கட்குத் துன்பம்புரிந்த அசுரர்களெல்லாம் இறந்து கெடுந்தன்மையைச்செய்து எங்களைக்காத்தருளினாய் அதனால் நாங்கள் இனி வேறொன்றினையும் கருதேம் மேன்மைபொருந்திய உனது திருவடிக்கே அடிமையாக வாயினேம் அதனாற்பிறரை வணங்கேம்.—எ-று (அ)

என்னா வியம்பி யெவருமினி தேத்துதலுங்
கொன்னா ரயில்வேற் குமரனது கேளா
வந்நா ரணன் விரிஞ்ச னாதியாம் வானோர்க்குத்
தன்னா ரருளின் றலைமை புரிந்தனனே.

(இ-ள்.) என்றுரைத்துத் தேவர்களெல்லாம் நன்றாகத்துதித்தலும் அதனை வன்மையுங் கூர்மையும் பொருந்திய வேற்படையினையுடைய குமரக்கடவுள் கேட்டு நாராயணன் பிரமன் முதலிய தேவர்கட்குத் தனது தலைமையான திருவருளின்றன்மையைக்காட்டினான்.—எ-று. (கூ)

தேவர்கள்போற்றுபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் — உ,கூகச.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இரணியன் புலம்புறுபடலம்.

அதுநிகழ்ந்துழிய கன்பதி யவுணர்க ளொரு சில்லோர்
கதுமெனச் சென்று காவலன் கந்த வேளுய்த்திட்ட
நுதிகொள் வேலினுன் மாய்ந்தன னென்பதை நுவலுற்றார்
பதுமை யம்மொழி கேட்டனள் றுணைவியர் பலரோடும்.

(இ-ள்.) இவ்வண்ணம் சூரபன்மன் இறந்துபட்டவுடனே இடமகன்ற மகேந்திரபுரியிலுள்ள சில அசுரர்கள் விரைவாகச்சென்று நமதரசன் கந்தவேளினால் விடப்பட்ட கூர்மைபொருந்திய வேற்படையினுலிறந்தன னென்பதனைக் கூறினார்கள். அவர்களுரைத்த வசனத்தினை பல பெண்களுடனிருந்து இறந்த சூரபன்மனுடைய பட்டத்தரசியானபதுமகோமளை யென்பவள் கேட்டனள்.—எ-று. (க)

காவன் மன்னவ னிறந்தன னெனுமுரை கன்னத்துண்
மேவுமெல்லை யிலசனி யேறுண்ட வெம்பணி யேபோற்
றேவியாகிய பதும கோமளை யெனுந் திருமங்கை
யாவிநீங்கின டலையளி யாகிய தது வன்றே

(இ-ள்.) பிருதிவி அண்டத்துள் ஆயிரத்தெட்டினை ஆண்டமன்னவனை சூரபன்மன் இறந்தானென்னுஞ் சொல் காதினுட்சென்று பதிம்பொழுது அவன் மனைவியான பதுமகோமளை என்னும் அழகிய பெண்மணி இடியேறுபட்ட வெவ்விய அரவத்தினைப்போல உயிர்விட்டனள்; அதுவன்றோ தலையளியென்றுரைப்பது.—எ-று (உ)

எவ்வெவர்க்கு மேலாகிய வவுணர் கோற் கில்லாகி
யவ்விடத் துறைதுணை வியர் வயிறலைத் தழுங்குற்று
வெவ்வழற் பெருங்குண்ட மொன்றுக்கி யேவிளி வுற்ற
தெய்வ தப்புனைவன் மகள் யாக்கை முன்செல வுய்த்தார்.

(இ-ள்.) எப்படிப்பட்டவர்கட்கும் மேலானவனுக விருந்த அசுராதிபனுக்கு மனைவியாய் அவ்விடத்திலிருந்த அவன் மனைவிமார்கள் வயிறுகளின் மோதிக்கொண்டழுது கொடிய ஒரு தீப்பெருங் குண்டத்தினை யுண்டாக்கி இறந்துபட்ட தேவதச்சன் மகளான பதுமகோமளையின் உடலினை முன்னே கொண்டிட்டனர்.—எ-று. (௩)

மான்கிளர்ந்தன வரிமதர் மழைக்கண் மெல்லிய ரெல்லாம்
வான்கிளர்ந் தெழுகின்ற தோர்மா பெருங்கன லூடே
கான்கிளர்ந் திடமலர் தருந் தாமரைக் கானத்திற்
றேன்கிளர்ந்து தம்மினத் தொடும் புகுந்தெனச் செல்லுற்றார்.

(இ-ள்.) மான்பிறழ்ந்தாற் போலுஞ் செவ்வரிபரந்த மதர்த்த நீர்த்துளியினையுடைய கண்ணினரான பெண்களனைவரும் ஆகாயத்தைநோக்கி எழாநின்ற ஒப்பற்ற பெருந்தீயினில்மணம்வீசுமாறு விரிகின்ற தாமரைக்காட்டினில் வண்டுகளாரவாரித்துக் கொண்டு தமது இனத்துடன் புகுந்தாற்போல குதித்துச்சென்றார்கள்.—எ-று. (௪)

செல்லல் போதுமென் றெழிந்திட வரற்றினோர் செந்தீயிற்
செல்லல் போதுநாண் மாலையு மங்கியிற் சேர்ந்தோங்கு
மல்லல் போதுமுனின் றிடுநிசி யெலா மகன்றென்ன
வல்லல் போதுமா நகர்த் திருவேகி னளதுகாலே.

(இ-ள்.) அந்நாள் மாலைப்போதும் அம்மாலைப்பொழுதி லசுரமடவியருண்டா க்கிய தீயினிற்றேன்றிய வெளிச்சமான பகற்போதுமென்னு மிவைகளி னெதிரே நின்ற இருட்குழா முழுமையும் விலகிச்சென்றாற்போல தீக்குழியைச் சூழ்ந்து நின்றவர் களும் சூரபன்மனிறந்துபட்டதற்காக அழுதவர்களுமான (கரிய அசுர மடவார்கள்) அர க்கியர் அழுத தித்துடன் போதுமென்று தைரியத்தினு லகலாநிற்பப்பற்றியெரிகின்ற செவ்விய அக்கினியிற் புகுந்தார்கள். அது பொழுது அந்நகரவாவிகளான மற்றை அசு ராதிகட்குத் துன்பமுண்டாகும் வண்ணம் அந்நகர தெய்வமான திருமகள் அந்நகரத்தி னின்றும் விலகிச்சென்றனள்.—எ-று. (ரு)

இந்தவா றி வரங்கி யுண் மாண்டன ரிதுநிற்கத்
தந்தை பட்டதுஞ் சேவலு மஞ்ஞையுந் தானுகிக்
கந்தவேள் புடை வந்ததுங் கண்டனன் கலங்குற்றுப்
புந்தி நொந்துபின் றிரணியன் வானிடைப் புலம்புற்றான்.

(இ-ள்.) இவ்வண்ண மிவர்கள் தீயில் விழுந்திறந்தனர்; இது நிற்க, பிதாவான சூரபன்மன் இறந்ததுவும் ஆண்கோழியும் மயிலுமாகத் தானே ஆகி கந்தப்பெருமானரு கில் வந்ததுவும் பார்த்து மனக்கலக்க மடைந்து புத்தி வருந்தி ஆகாய வீதியில் நின்று இரணியனென்பவன் புலம்பினான்.—எ-று. (சு)

வேறு.

நன் றென்பதை யுணராய் நானுரைத்த வாசகங்க
ளொன்றுஞ் சிறிது முறுதி யெனக் கொண்டிலையே
பொன்றும் படிக்கோ பொருதாய் புரவலனே
யென்றுன்னை முன்போ லிருந்திடநான் காண்பதுவே

(இ-ள்.) ஆயிரத்தெட்டண்டங்களுக் கதிபனே நீயோ நன்று என்பது இன் னது என்று உணராதவனுக விருக்கின்றனே, நீ யானந்நாளிற் கூறிய வெதனையும் சற்றே னுமுறுதியானதாகக் கருதினுயில்லையே, இறக்கும் வண்ணங்கருதியே இவ்விதம்போர்பு ரிந்தனையோ? இனி எந்நாள் நான் நீ முன்போல பேரரசனுகவிருக்கக்காண்பேன்.—எ-று

அன்புடையன் கொல்லென்ற யலா ரெடுத் துரைப்பத்
துன்புடையேன் போலத் துயரா வயர் கின்றே
னென்புடையே முன்ன ரெனதுயிர் கொண் டேகினனு
னின்புடையே நின்று நெடும் பழியி னீங்காதேன்.

(இ-ள்.) இவன் பெற்ற தந்தையினிடத்தில் பட்சமுள்ளவனு? என்று அந்நியர் எடுத்துக் கூறுகிற்பத் துன்பமுடையவனைப்போல வருந்தி வாடுகின்றேன். நின்னரு கில் நின்று போர்புரிந்து உயிரினை விட்டு நெடிய பழியில் நின்றும் விலகிக்கொள்ளாத யான் என் சார்பாக விருந்து எனதுயிரை பகைவரிடத்தினின்றும் தப்பித்துச்சென் றேன்.—எ-று. (அ)

மாற்றார் வலிகண்டு மற்றுன்னை வன் செருவிற்
போற்றா தொளித்த பொறியிலி யேன்றன் முன்னந்
தோற்றாம லெங்கொளித்தாய் சொல்லாய் சுதன் போலஃ
கூற்றா னவனை யின்னுங் கூடமனங் கொள்ளுதியோ.

(இ-ள்.) பகைவர்க்கிருக்கும் வன்மையினையுணர்ந்து உன்னை கொடிய போரினிற் பாதுகாவாது மறைந்த அறிவற்ற எனது எதிரில் வெளிப்படாமல் எங்கு மறைந்தனை கூறுதி பிள்ளையைப்போற்றேன்றி யமனாக நின்ற என்னை இன்னஞ் சேருதற்கு மனங்கொள்வாயோ? (கொள்ளாயோ.)—எ-று. (கூ)

கையா ரழலேந்துங் கண்ணு தலோன் றந்தவர
மெய்யா மொருகாலும் வீடா யஃ தெல்லாம்
பொய்யாகும் வண்ணம் புதல்வ னெனவந் துதித்தே
னையா வுனக்கோ ரருங்கூற்ற மாயினனே.

(இ-ள்.) ஐயனே? திருக்கரத்திலரிய அக்கினியை ஏந்தி நிற்கின்ற நெற்றிக் கண்ணினரான சிவபெருமா னளித்தவரம் சத்தியமானதே அவ்வரத்தின் வண்ணம் ஒருகாலும் இறவாய் ஆனாலவ்வனைத்தும் பொய்யாகுமாறு உனக்கும் பிள்ளையெனப் பிறந்தயான் உனக்கே அரியயமனாக வாயினேன்.—எ-று. (௧0)

நில்லா வுடலை நிலையா மெனக் கருதிப்
பல்லாருங் கண்டு பழிக்கும் படி யுனக்குஞ்
சொல்லாத கன்றேனீ துஞ்சிய பின் வந்தனனு
னல்லார் களிற் றேரினனே தலை யன்றே.

(இ-ள்.) நிலையற்ற சரீரத்தினை நிலையுடையதென்று நினைத்து பலரும்பார்த்துப்பழிக்குமாறு உனக்கு முரையாமலுன்னை விட்டுப்பிரிந்தேன். இப்பொழுது நீஇறந்த பின்புவந்தேன் ஆலோசிக்குமிடத்தில் நல்லவர்கட்குண் முதன்மையானவன்யானன்றோ? (கெட்டவர்களுள் முதன்மையானவனென்று கருத்து.) எ-று. (௧௧)

அத்திரநேர் கூறு மவுணர் தமக்குண் மிக்க
குத்திரனே யாருங் கொடி யேனீ துஞ்சியபின்
மித்திரனே போன் றிரங்கி மீண்டே னுனக்கென்னைப்
புத்திரனே யென் கைபுவிக்குப் பொறை யன்றே.

(இ-ள்.) கழுதைக்கே யொப்பாக வுரைக்கின்ற அசுரர் தங்களுக்குள் மிகுந்த வஞ்சனையாளனாகவேயுள்ள கொடுமையாளனானயான் நீ இறந்தபின்பு உனது நண்பனைப்போல இவ்விடத்தி லழுதுகொண்டு திரும்பினேன் ஐயனே என்னை உனக்கு மகனென்றுரைத்தல் இப்பூமிக்குப் பாரமான வசனமன்றோ.—எ-று. (௧௨)

ஆழியான் வேத னமரர்க் கிறை முதலோர்
வாழியா யென்று வழுத்தியிட வைகியநீ
பூழியார் மேனிப் புராரி சிறுவன் றேரிற்
கோழியாய் நின்று விலாவொடியக் கூவுதியோ.

(இ-ள்.) சக்கரபடையினை யுடைய திருமால் பிரமன் இந்திரன் முதலியவர்கள் வாழ்வாயாகவென்று மங்கலவாழ்த்துரைத்துத் துதியாநிற்ப அரசிலிருந்த நீ விபூதி யணிந்த திருமேனியினையுடைய திரிபுரஹரனை சிவபெருமானுடைய இளையமகன் இரதத்தில் கோழியாகநின்று விலாப்புறமொடியக் கூவுகின்றனையோ?—எ-று. (௧௩)

ஓகையா லண்டத் துயிர்க ளெலாம் வந்திறைஞ்சச்
சேகையாய் மல்குந் திருத்தாள் கொண் டுற்றிடுநீ
வா கையார் கின்ற வடிவேற் கரத்தோனைத்
தோகை யாய் நின்று சுமக்குதியோ தோன்றலே

(இ-ள்.) ஆயிரத்தெண்டங்களிலுமுள்ள உயிர்களனைத்தும் சந்தோஷித்து வந்துவணங்கச் சேக்கையாய்விளங்கிய திருவடிகளையுடையையாக விருந்தநீவெற்றி பொருந்திய வடிவேற்கரத்தினையுடைய பெருமானை என்னிறைவனே மயிலாகநின்று சுமக்கின்றனையோ?—எ-று. (கச)

மேற்றான் விளையு மிஃதென்றே வினயமுட
னாற்றான் மொழிந்தே னது சிறிதுங் கேட்டிலையே
மாற்றா னெனவந்த மைந்தனுடன் போர் செய்தே
தோற்றாயே யற்றான் மயிலாய்ச் சுமக்குதியோ.

(இ-ள்.) வருங்காலத்திலிது நடக்குமென்று விநயத்துடன் உரைக்கவேண்டு மார்க்கப்படியுரைத்தேன் நானுரைத்த அதனை நீ சற்றுங்கேட்டா யில்லையே பகைவனென்றுரைக்குமாறு வந்த சிவகுமாரனுடனே போர்புரிந்தே தோற்றனையே அதனால் அவனை மயிலாகிச்சுமக்கின்றனையோ?—எ-று. (கரு)

மாறுற்றிடாத் தொல் வடிவந் தனை யிழந்து
வேறுற்ற புள் வடிவாய் மேவினை யாங்கதனு
லீறுற்றனை யன்றே யென் செய்கை செய்வதற்கும்
பேறுற்றி லன்வாளா பேணினே னிவ் வுயிரே.

(இ-ள்.) கெடாத பழையவடிவத்தினை யிழந்துவேற்றுருவமான பறைவையின் உருவமாக இருந்தனை அதனால் நீ இறந்து பட்டாயன்றே தந்தைக்கு மைந்த னியற்று மந்திரியேட்டியாதிகளைச்செய்தற்கும்யான்புண்ணியஞ் செய்திலேன்இவ்வுயிரை வீணே சுமந்து நிற்கின்றேன்.—எ-று, (கசு)

பிள்ளைப்பிறை புனைந்த பிஞ்ஞகன் றன் காதலனைப்
புள்ளிக் கலாபப் பொறி மயிலாய்ப் போற்றுமெல்லை
யெள்ளற் பொருட்டா லியான் முன்னுரைத்த வற்றை
யுள்ளத்திடை யெந்தா யுன்னு தியோ வுன்னுயோ.

(இ-ள்.) இளம்பிறையணிந்த தலைக்கோலத்தினை யுடைய சிவபெருமானுடைய மைந்தனான குமாரவேளினைப் புள்ளிகளுடைய தோகைமயிலாகச் சுமக்குமிந்நாளில் நீ இகழும் வண்ணம் நின்மகனாகிய யான்நினக்கு முன்னாளிலுரைத்தநீதிமொழிகளை இஞ்ஞான்றேனும் அவை மெய்யானவை என்று கருதமனதினில் எனது தந்தையே நினைக்குதியோ? நினையாயோ?—எ-று. (கஎ)

பொங்குற்ற சீற்றம் பொரும் போரிக லுள்ளந்
தங்குற்ற மானஞ் சயமகந்தை வன்மை யெலா
மங்குற்ற நின்னை யடைந்த திலையவ்வனைத்து
மெங்குற்ற தையா வியம்பா யெனக் கதுவே.

(இ.ள்.) மிகுதியாக வுண்டான கோபம் போர்புரியுந் திறத்திலுண்டான வன்மை, மனதிற்பொருந்தியஅபிமானம், வெற்றி அகங்காரம், வன்மைஎன்னும் இவையனைத்தும் அவ்விடத்தில் மயிலாக விருக்கின்ற நின்பாலெய்தினவில்லை, என்னையாவே அவைகளெல்லாம் எங்கேபோயின எனக்கதனை உரைப்பாயாக.—எ-று. (கஅ)

என்று கனக னிரங்கி நெடுஞ் சேணி
னின்று தளர்ந்து நெடி துயிர்த்துப் பூதரெனைத்
தின்று சினந்தீர்வர் தெரியினெனச் சிந்தைசெய்து
துன்றுதிரை வேலையிடைத் தொன்மைபோற் புக்கனனே.

(இ-ள்) என்றிவ்வண்ணமாக இரணியன் நெடிய ஆகாயத்தில் நின்று தளர்ந்து பெருமூச்சுவிட்டு என்னைப்பூதர்கள் கண்டால் தின்று கோபமகல்வார்களாதலின் இங்கு நான் வெளிச்சமாக நிற்றலடாது என்று நினைத்து முன்போல நெருங்கிய அலைகளையுடைய கடலின் நடுவிற்புகுந்தனன்.—எ-று. (கக)

புக்க கனகன் புலர்ந்து புக ரோன்பா
லக்கணமே யெய்தி யழிவுற்ற தந்தை யர்க்குந்
தக்க துணைவர்க்குந் தாயர்க்கு மேனை யர்க்கு
மிக்க கடன்கள் விதி முறையே செய்தனனே.

(இ-ள்·) கடனீருள் மறைந்து சென்றஇரணியன் பின்னும் வருந்தித்தம்புரோகிதனுன சுக்கிரனிடத்திற்கு அப்பொழுதே சென்று இறந்துபட்டதாரகாதியரான தந்தையர்கட்கும் தகுந்த பானுகோபனாதிய துணைவர்களுக்கும் மற்றுமுள்ளவர்கட்கும்செய்யவேண்டிய சிறந்த கடன்களை விதிப்படியே செய்தனன்.--எ-று. (உ0)

தாக்கிச்சமர் மலைந்த தானவர்க்குச் செய் பரிசே
தூக்கிப் புரிந்து துயரினுக் கோர் வித்தென்றே
யாக்கத்தினை வெறுத்தே யாதிப் பிரானை யுள்ளே
நோக்கிக்கதி யடைவா னோற் றொருசா ருற்றனனே.

(இ-ள்.) அம்பு முதலியவைகளை விட்டுப் போர்செய்து இறந்த அசுரர்கட்குச் செய்யவேண்டியனவற்றைச் செய்யவேண்டிய முறைப்படியே செய்து சம்பத்தானது துன்பம் என்னும்(முண்மரத்தை யுண்டாக்குகின்ற) வித்தாமென அதனை வேண்டாமென்று வெறுத்துக் கதியடையும் பொருட்டு ஆதி முதல்வனை சிவபெருமானைக் குறித்து ஒருபுறத்திலிருந்து அருந்தவஞ் செய்துகொண்டிருந்தனன். (உக)

இரணியன் புலம்புறுபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். உ,கஙரு.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மீட்சிப்படலம்.

மற்றது காலத்து மணிதூங்கிய பசும்பொற்
பொற்றைபுரையும் பொறிமஞ்ஞை மீதுவைகும்
வெற்றிநெடுவேற்கை விமலன் விறலோனைப்
பற்றினொடு நோக்கி யினைய பகர்கின்றான்.

(இ-ள்.) அப்பொழுது மணிதங்கிய பசிய பொன்மலையையொத்த புள்ளிகளையுடைய மயிலின்மீதெழுந்தருளியிருக்கும் வெற்றிபொருந்திய நெடிய வேற்படையேந்திய விமலனான குமாரசுவாமி வீரவாகுதேவனை விருப்பத்துடன் பார்த்து இவைகளைத் திருவாய்மலர்ந்தருளினான்.—எ-று. (க)

கேட்டியிதுவீர கெடலுற்ற வெஞ்சூர
னீட்டு திருவென்ன விருஞ்சிறையின் முன்வைப்ப
வாட்ட முறுசயந் தன்வானோர் தமையெல்லா
மீட்டு வருதியெனவே விளம்பினனால்.

(இ-ள்.) வீரவாகுவே இதனைக்கேட்பாயாக அழிந்த கொடிய சூரனுடைய சம்பாதிக்கப்பட்ட செல்வம்போல பெரிய சிறையின் முன்னரே வைக்கவருந்திய சயந்தனையும் மற்றைத் தேவரனைவரையும் மீட்டுவரக்கடவை யென்று திருவாய்மலர்ந்தருளினான்.—எ-று. (உ)

குன்ற மெறிந்த குமரனிது கூறுதலு
நன்றி தெனவே தொழுது நனிமகிழ்ந்து
வென்றி விடலை விடை பெற்றுப் போர்க்களத்தி
னின்று மவுண னெடு நகரத் தேகினனால்.

(இ-ள்.) கிரவுஞ்சமலையைப் பிளந்த குமரக்கடவுளிதனையருளிச்செய்தலும் வெற்றிபொருந்திய வீரவாகுதேவன் நல்லதெனவணங்கி விடைபெற்றுப் போர்க்களத்தை விடுத்துச் சூரனுடைய நெடிய நரத்துக்குச்சென்றனன்.—எ-று. (ங)

மீதுபடு திண்டோள் விடலை யறந்திறம்புங்
கோது படுதீயோர் குழீஇய நகருட்புக்குத்
தாதுபடு தண்டார்ச் சயந்தன மரருடன்
றீதுபடு வெய்யசிறைக் களத்துச் சென்றனனே.

(இ-ள்.) மேலேயுயர்ந்ததிண்ணிய தோளினனான வீரவாகுதேவன் தருமவழி நீங்கிய குற்றம்வாய்ந்த பொல்லாத வசுரரிருந்த நகருட்புகுந்து தாதுபடு தண்ணிய தாரினையுடைய சயந்தனென்பான் தேவர்களுடன் வருந்திக்கிடக்கின்ற கொடிய சிறைக் களத்துச் சென்றான்.—எ-று. (ச)

செல்லும் விறலோன் றிறத்தை நனிநோக்கி
யல்லலகலுமரி சுதனும் வானோர்க

ளெல்லவரு மற்புதநீ ரெய்திப் பதம்பூட்டும்
வல்லி பரிய மலர்க்கை குவித்தனரே.

(இ-ள்.) அங்ஙனம் சென்ற வீரவாகு தேவனுடைய தன்மையைப்பார்த்து, துன்பநீங்கிய விந்திரகுமாரனை சயந்தனும் தேவரனைவரும் ஆச்சரியமுற்று கால் விட்ட விலங்கினைத்தடவியகைகளைக்குவித்து வணங்கினர்.—எ-று. (ரு)

செங்கை குவித்தே திறலோய் சிறைப்பட்ட
நங்கடு யரகற்ற நண்ணினையோ நீயென்றே
யங்கவர்க ளெல்லோரு மார்த்தெழுந்து கூறுதலு
மெங்கள் பெருமா னிளவலிது புகன்றான்.

(இ-ள்.) செவ்விய கைகளைக்குவித்து வீரவாகுவே சிறைப்பட்ட எங்கள் துன்ப நீக்கவெய்தினையோ நீயென்று அவ்வனைவரும் ஆரவாரித்தெழுந்து கூறுதலும் அவர் களைப்பார்த்து எங்கள் பெருமான் இளையவன் இது கூறினான்.—எ-று. (சு)

வம்மின்கள் வம்மின்கள் வானத்தீ ரெல்லீரு
நும்மை யயர்வித்த நெறிப்பரித்தேர் வெஞ்சூரை
யம்ம வவுண ரனிகத் துடனெங்கோ
னிம்மெனவே வேலா லிதுபோழ் தெறிந்தனனே.

(இ-ள்.) தேவரனையரும் வருவீராக வருவீராக உங்களை வருத்திய வேகம் வாய்ந்த குதிரைபூட்டிய தேரினையுடைய வெவ்விய சூரனை அவன் சேனைகளுடனே எங்கோன் இம்மென வேற்படையா லிப்பொழு தழித்தனன்.—எ-று. (எ)

என்றுங் கிசைப்ப விமையோ ரதுகேளாப்
பொன்றாது முத்தி புகுந்தோ ரெனமகிழ்ந்து
வன்றாண் மிசைப்பிணித்த வல்லிகளின் மூட்டறுத்துச்
சென்றா ரவுணன் றிரு நகர நீங்கினரே.

(இ-ள்.) என்றுகூற வதனைத் தேவர்கள் கேட்டு இறவாது முத்தியுற்றாரென மகிழ்ச்சியுற்று வலிய கால்களில் கட்டிய விலங்குகளின் பொருத்தறுத்து அசுரனை சூரபன்மனுடைய அழகிய நகர நீங்கிச் சென்றார்கள்.—எ-று. (அ)

வேறு.

நுணங்கு நூலுடை யிளையவன் முன்செல நொய்தென்ன
வணங்கி னோருடன் சயந்தனுந் தேவரு மவணீங்கிக்
குணங்க ரீண்டிய களத்திடை நணுகியே குமரன்றாள்
வணங்கி மும்முறை புகழ்ந்தனர் திகழ்ந்தனர் மகிழ்வுற்றார்.

(இ-ள்.) துவளாநின்ற முப்புரிநூலணிந்த வீரவாகுதேவன் முன்செல்ல விரை வாகத் தேவமாதருடன் சயந்தனுந் தேவர்களும் அவ்விடத்தைவிடுத்துப் பிசாசுகள் நெருங்கிய களத்தினிற் சென்று குமரக்கடவுளின் திருவடிகளை மும்முறை வணங்கிப் புகழ்ந்து விளங்கி மகிழ்வுற்றனர்.—எ-று. (கூ)

குன்றெ றிந்தவ னமரர்பாற் பேரருள் கொடு நோக்கி
நன்றி யில்லவன் சிறையிடைப் பலபக னணுகுற்றீர்
துன்று பேரிடர் மூழ்கினீ ரீங்கினித் துயரின்றி
யென்றும் வாழ்குதிர் துறக்கமேல் வெறுக்கையி லிருந்தென்றான்.

(இ-ள்.) குன்றமெறிந்த குமரவேள் தேவர்களைப் பெரிய கருணையுடன்பார்த்து நன்றியற்ற சூரனுடைய சிறையகத்துப் பலதினம் இருந்தீர்கள் பொருந்திய பெரிய துன்பத்துண்மூழ்கினீர்கள் இனித் துன்பமின்றிச்சுவர்க்கத்தில் செல்வத்துடனென்று மிருந்து வாழ்வீராக என்றருளிச் செய்தனன்.—எ-று. (௧0)

கந்தனிம் மொழிவழங்க லுங்கடவு ளர்களிப் பெய்தி
யுய்ந்தனம் மெனப்பின் னரும்வணங் கினருந்துகாணு
முந்துதொல் லிடர்நீங்கியே புந்தியின் முதமெய்தி
யிந்திரன் றிருப்பெற் றிடுஞான்றினு மினிதுற்றான்.

(இ-ள்.) இவ்வசனத்தினைக் கந்தக்கடவுள் உரைத்தவுடனே தேவர்கள் மகிழ்ச்சி அடைந்து இனி நாம் பிழைத்தோமென்று பின்னும் வணங்கினார்கள். அவர்கள் பின்னும் வணங்கிய வதனைப்பார்த்து முன்னிருந்த பழைய துன்பமொழிந்து மனத்தின் மகிழ்ச்சி அடைந்து இந்திரனானவன் தனது செல்வத்தினைத் தான் அடைந்த நாளினும் மிகுந்தமகிழ்ச்சியை அடைந்தனன். எ-று. (௧௧)

கண்டனன் றெழுமைந் தனைப்புல் லினன்களிப் புள்ளங்
கொண்டனன் புறநீவி னன்பல்லுகங் கொடியோன்செய்
யொண்டளைப் புகுந்தெய்த் தனைபோலு மென்றுரை செய்யா
வண்டர் யாரையு முறைமுறை தழிஇயின னமரேசன்.

(இ-ள்.) தேவராசன் தன்னை வணங்கிய மகனான சயந்தனைப்பார்த்து அணைத்து மனமகிழ்ச்சிகொண்டு முதுகினைத்தடவி அநேகயுககாலம் நீ கொடிய சூரபன்மனமைத்த வொள்ளியசிறைச்சாலையுட்புகுந்து வருந்தினையன்றோ வென்றுரைத்து மற்றைய தேவர்களையும் முறையே முறையே தழுவினான்.—எ-று. (௧௨)

செற்றமே தருமவுணர் தங்காவலன் செருவத்தி
லற்றை காறுமாவி ளிந்திடுபூதர் தமணிகங்கண்
முற்றுமாயிடைவரும் வகைமுருக வேண்முன் னுற்றான்
மற்றவெல்லை யிற்றுஞ்சி யகணமெலாம் வந்திற்ற.

(இ-ள்.) மிகுந்த கோபத்தினையுடைய அசுரர்கட்கதிபன்செய்த போரினில் அத்தினம் வரைக்கும் இறந்துள்ள பூதர்களுடைய சேனைகள் முழுமையும் அவ்விடத்திற்கு வரும் வண்ணம் குமாரக்கடவுள் திருவுளத்தில் நினைத்தனர். அவர் நினைத்த அப்பொழுதே இறந்த பூதகணமனைத்தும் உயிர்த்தெழுந்து வந்தன.—எ-று. (௧௩)

முஞ்சுதானை களார்ப்பொடு குழீஇக்குழீ இமுருகேசன்
செஞ்சரண் முனம்பணிந்து தம்மினத் தொடுஞ் செறிகின்ற
வெஞ்சலில் லதோ ரெல்லைநீர்ப் புணரியி லெண்ணில்லா
மஞ்சுகான் றிடுநீத்தம் வந்தீண்டிய மரபென்ன.

(இ-ள்.) இறந்த பூதசேனைகள் உயிருற்று ஆரவாரத்துடன் கூட்டங்கூட்டமாக வராநின்று குமரக்கடவுளின் செவ்விய திருவடிகளில் வணங்கிக்கெடாத வளவினையுடைய நீர்க்கடலில் அளவற்ற மேகங்கள் வருஷித்த பிரவாக சலம் வந்து புகுந்தாற்போலத் தமது இனத்துடன் சென்று நெருங்கின.—எ-று. (௧௪)

கருணையங் கடலாகி யோன்கனை கடற்கிறை யாகும்
வருணன் மாமுக நோக்கியே வெய்யசூர் வைகுற்ற
முரணுறு ந்திறன் மகேந்திரநகரினை முடிவெல்லைத்
தரணியா மெனவுண் குதியொல்லை யிற்றடிங்கென்றான்.

(இ-ள்.) இருபைக்கடலாகிய குமரப்பெருமான் ஒலியினையுடைய கடலுக்கிறைவனான வருணனுடைய சிறந்த முகத்தினைப்பார்த்துக் கொடிய சூரபன்மனிருந்த வன்மையுந்திறனுமுடைய மகேந்திரபுரியினை ஊழிகாலத்துப்பூமியைப்போலவிரைவாக அழித்துண்ணக்கடவை என்றருளிச்செய்தனன்.—எ-று. (கரு)

என்றமாத் திரைச்சல பதிவிழுமி தென்றிசை வுற்றுத்
துன்றுபல் லுயிர்தம்மொடு மகேந்திரத் தொல்லூரை
யன்றுவன் மைசேர் புணரியுளழுத்தி னனவனிக்கீழ்
நின்றுமா யவனடி வுலகுண்டிடு நெறியேபோல்.

(இ-ள்.) என்று திருவாய்மலர்ந்தருளியவுடனே கடலரசனான வருணன் நல்லதென்றங்கீகரித்து நெருங்கிய பலவகைய வுயிர்களுடனே பழையமகேந்திரபுரியினை அந்நாளில் மாயவன் பாதாளத்தில் நின்று மத்திய வுலகத்தை வுண்டிடுந்தன்மை போல வன்மைபொருந்திய கடலினு ளிருத்தினன்.—எ-று. (கசு)

ஆனகாலையி லறுமுகன் முகுந்தனு மலரோனும்
வானுளோர்களு மிறைவனும் வழுத்தினர் மருங்காக
வேனைவீரர்கள் யாவரும் புடைவர விகற்பூதத்
தானையார்த் துடன்சென் றிடச்செரு நிலந்தணப் புற்றான்.

(இ-ள்.) அப்பொழுது சண்முகப்பெருமான் திருமாலும் பிரமனும் தேவர்களும் இந்திரனும் துதிபுரிந்து கொண்டருகில் வராநிற்பவும் மற்றைய வீரர்களெல்லாம் அருகிற் சூழ்ந்து வரவும் வன்மைபொருந்திய பூதசேனைகள் ஆரவாரஞ்செய்து கொண்டு உடன்வராநிற்பவும் போர்க்களத்தினின்றும் எழுந்தருளினான்.—எ-று. (கஎ)

கலங்கல் கொண்டிடு மகேந்திரவரைப் பிணைக்கடந்தேபின்
னிலங்கை மாநகரொரு வியேயளக் கரையிகந்தேகி
நலங்கொள் சீருடைச் செந்தியிற் றெல்லைமா நகரெய்தி
யலங்கலஞ் சுடர்மஞ்ஞை நின்றிழிந்தன னயில்வேலோன்.

(இ-ள்.) கலங்கலினையுடைய கடல் நீரினால் மூடிக்கொள்ளப்பெற்ற வீரமகேந்திரபுரியின் எல்லையைக்கடந்து பின்னர் அதற்குத் தெற்கிலிருந்த சிறந்த இலங்காநகரத்தினையும்கடந்துகடலையுங்கடந்து சென்றுநன்மை பொருந்தியசிறப்பினையுடைய செயந்திபுரமென்னும் திருச்செந்தூரினை அடைந்து அசைகின்ற அழகிய சுடரினையுடைய மயிலினின்றும் கூரிய வேற்படையினை யுடைய குமரப்பெருமான் இறங்கியருளினான்.—எ-று. (கஅ)

கேகயத்தி னின்றிழிந்து தொல்சின கரங்கிடைத் திட்டுப்
பாகசாத னாதியா மமரர்கள் பணிந்தேத்த
வாகைசே ரரித்த விசின்மேல் வதனமூ விரண்டுள்ள
வேகநா யகனுலகருள் கருணையோடினிதுற்றான்.

(இ-ள்.) மயிலினின்றும் இறங்கித் தமது பழைய ஆலயத்தினை அடைந்து இந்திரன் முதலிய தேவர்கள் வணங்கித் துதிபுரிய வெற்றிபொருந்திய சிங்காசனத்தின்மீது ஆறு திருமுகங்களையுடைய முழுமுதற்கடவுள் உலகினைக்காத்தலாகிய கருணையின் காரியமாக இனிது எழுந்தருளி இருந்தனன்.—எ-று. (கக)

வேறு.

ஈண்டிது நிகழ்ந்த வெல்லை யிப்பக லவுணராகி
மாண்டவர் நமர்க ளன்றே மற்றவர் படிவமுற்றுந்

தீண்டினங்கதிர்க்கை யாலுந் தீர்விதற்கிதுவென் பான்போற்
பூண்டகு தடந்தேர் வெய்யோன் புனற்பெருங் கடலுட்புக்கான்.

(இ-ள்.) இவ்விடத்திலிது நடந்ததற்குப்பின்னர், இத்தினம் அசுரர்களாகி இறந்தவர்கள் நம்மவர்களென்று நாம் அவ்விறந்தவர்களினுடலமுழுமையும் கதிர்க்கைகளாற் றீண்டினோம். இனி இத்தீட்டிதனாற்றொழியவேண்டுமென்று கருதினவனைப்போல தகுந்த பூண்களையுடைய இரதாரூடனான சூரியன் மிகுந்த நீரினையுடைய கடலுள் முழுகினான்.—எ-று. (உ௦)

வேலையி னடுவுபுக்கு மேவரும் வடவைச்செந்தீக்
காலம திறுதியாகக் கடிதெழீஇக் ககன நக்கிப்
பாலுற விரிந்தியாண்டும் படர்ந்துகொண் டென்னவந்தி
மாலையம் பொழுதிற் செக்கர்வான் முழுதீண்டிற்றன்றே.

(இ-ள்.) கடலின் நடுவேட்புகுந்து பிறராலடைதற்கரிய செவ்விய வடவாக்கினியானது உலகமுடிவுகாலமானது நெருங்க விரைந்தெழுந்து ஆகாயத்தை யளாவிப் பக்கங்களிற் படர்ந்து எவ்விடங்களிலும்பரவிச்சூழ்ந்துகொண்டாற்போல அந்திமாலைப்பொழுதினிற் செக்கர்வானம் எவ்விடத்திலும் பரவியது.—எ-று. (உக)

வேறு.

அன்னதொரு போழ்துதனி லாறிரு தடந்தோண்
முன்னவனை நான்முகவ னேமுதல தேவர்
சென்னிகொடு தாழ்ந்துசிறி யேங்களிவ ணுன்றன்
பொன்னடி யருச்சனை புரிந்திடுது மென்றார்.

(இ-ள்.) அப்பொழுது விசாலமான பன்னிரண்டு தோள்களையுடைய முதல்வனை குமரப்பெருமானைப் பிரமன் முதலிய தேவர்கள் தலையால்வணங்கி இறைவனே சிறியோங்கள் உன்னுடைய பொன்போலும் பாதங்களை இவ்விடத்தில் அருச்சனை செய்கின்றோ மென்று கூறினார்கள்.—எ-று. (உஉ)

என்றுரை செய்காலை யெமையா ளுடையவண்ண
னன்றென விசைந்திட நறைகொள் புனல் சாந்தந்
துன்றுமலர் தீபமவி தூபமுத லெல்லா
மன்றொரு கணத்தின் முனமைத்தனர் களங்கன்.

(இ-ள்.) என்று கூறியவுடனே எமையாளாகவுடைய இறைவன் நல்லது அவ்வண்ணமே செய்யுங்கள் என்றுரைத்தருளுதலும் அத்தேவர்களப்பொழுது ஒரு கணநேரத்தில் மணம்பொருந்திய நீர் சந்தனம் நெருங்கிய புஷ்பம் தீபம்அவிசு தூப முதலிய பூசா திரவியமனைத்தினையும் அழைப்பித்தார்கள்.—எ-று. (உங)

எந்தையுமை தேர்ந்திட வியம்பிய குமார
தந்திர நெறிப்படி தவாதறு முகற்கு
முந்திய குடங்கர் முதன் மூவகையிடத்தும்
புந்திமகிழ் பூசனை புரிந்தனர் பரிந்தே.

(இ-ள்.) எம்பெருமான் உமாதேவியாருணரும் வண்ணம் உபதேசித்தருளிய குமார தந்திரநூற்படி தவறுதலில்லாமல் சண்முகப்பெருமானுக்கு முற்பட்ட கும்ப முதலிய மூவகையவிடங்களிலும் அன்புடனே மனமகிட்சியைத் தாாநின்ற பூசனைச் செய்தார்கள். எ-று.

முற்பட்ட மூவிடங்களாவன, கும்பம் அக்கினி விம்பமாகிய திருமேனிகள். (உச)

எஞ்சலி லருச்சனை யியற்றியிணையில்லோன்
செஞ்சர ணினைத்தமது சென்னிகொடுதாழா
வஞ்சலி செய்தேத் திடலுமரங் கவரை நோக்கி
நெஞ்சுறு மகிழ்ச்சி யொடு நீடருள் புரிந்தான்.

(இ-ள்.) கெடாத அருச்சனையைச்செய்து ஒப்பற்ற வப்பெருமானுடைய பாத யுகளங்களைத் தமது தலையால் வணங்கி அஞ்சலிசெய்து துதித்தலும்அவ்வாறு செய்த அவர்களைப்பார்த்து திருவுளத்திற்பொருந்திய களிப்புடனே மிகுந்த அருளினைச்செய்த னன்.—எ-று. (உ௫)

நீண்டவருள் செய்திடு நெடுந்தகை நமக்கு
வேண்டுகுறையுண் டெனின்விளம் புதிர்களென்னக்
காண்ட கையசூர் முதல்களைந் தெமையளித்தா
யீண்டு னருள்பெற் றனமியாது குறைமாதோ

(இ-ள்.) மிகுதியான அருளினை அவர்கட்குச்செய்த நெடிய தகைமையினையு டைய குமரப்பெருமான் தேவர்களைப்பார்த்து உங்களுக்கேதேனும் குறைவுபாடிரு ந்தா லதனை யுரையுங்களென்று திருவாய்மலர்ந்தருள அதற்கவர்கள் எம்பெருமானே கொடுமையினையுடையானென்று குறித்துணர நின்ற சூரனாகிய முதல்வனை அழித்து எம்மனோரைக்காத்தனை அன்றியும் இவ்விடத்தில் உனதருளினைப்பெற்றனம் அதனால் எங்கட்கு குறையாதுளது.—எ-று. (உ௬)

ஒன்றினி யளிப்பதுள துன்னடி யம்யாக்கை
நின்றிடு பகற்றுணையு நின்னிரு கழற்கண்
மன்றதலை யன்புறவ ரந்தருதியெந்தா
யென்றிடலு நன்றென விரங்கியருள்செய்தான்.

(இ-ள்.) எம்பெருமானே! நீ அளிக்கத்தக்க வரம் ஒன்றுளது அது யாதெனின் உனது அடியேமாகிய வெங்களுடைய சரீரமிருக்கு நாளளவும் உனது சரணயுகளங் களில் முதன்மையன்பிருக்கும்வண்ணம் வரந்தந்தருள் என்றனர் உடனே எம்பெரு மானும் அவ்வாறே யாகுகவென்று இரக்கங்காட்டித்திருவருள்புரிந்தனன்.—எ-று.

வேறு.

மலரய னாதியாம் வரம்பிலோரெலாம்
பலர்புகழ் குமரனைப் பரவி வைகினா
ருலகினில் யாரையு மொறுத் ததானவர்
குலமென மாய்ந்தது கொடிய கங்குலே.

(இ-ள்.) பிரமன் முதலிய அநேகமான தேவர்களெல்லாம் பலரும் புகழுங் குமரப்பெருமானை வணங்கி இருந்தனர் உலகினிலுள்ள யாவரையும் வருத்தியதானவர் குலமழிந்தாற்போல கொடிய இரவு ஒழிந்தது.—எ-று. (உ௮)

கங்குலுந் தாரகா கணமு மாய்ந்திடப்
பொங்கொளி வீசியே பொருவி லாதவ
னிங்குள வுலகெலா மீறுசெய் திடுஞ்
சங்கர னாமெனத் தமியன் றோன்றினன்.

(இ-ள்.) இரவும் இரவில் விளங்கிய நட்சத்திரக்கூட்டங்களு மொழிதலும் ஒப் பற்ற சூரியன்பிரகாசிக்கின்ற கிரணக்கதிர்களை வீசிக்கொண்டு இவ்விடத்திலுள்ள வுலகங்களை யழிக்கின்ற சங்காரமூர்த்தியான சிவபெருமானைப்போல ஏகனாக வுதித் தனன்.—எ-று. (உ௯)

குணதிசை யமர்புரி கொடிய ருய்த்திடுங்
கணையென விரிகதிர் காட்டி யங்கவை
யணைதலுங் குருதிநீ ரடைந்த தன்மைபோ
லிணையறு செக்கர் பெற்றிரவி தோன்றினன்.

(இ-ள்.) கீழ்த்திசையிற் போர்புரிகின்ற கொடிய மாந்தேயர் விடுத்த அம்புகளைப்போல விரிந்த கதிர்களைக்காட்டி அவ்வம்புகள்வந்து பட்டவுடனே இரத்தவெள்ளம் பிரவகித்து வருந்தன்மையைப்போல ஒப்பற்ற செவ்வொளியுடையனாகிச் சூரியனுதயஞ் செய்தனன்.—எ-று. (௩0)

அப்பொழு தவ்விடை யமரர் கம்மியன்
கைப்படு செய்கையாற் கந்தவேளொரு
செப்பரு நிகேதனஞ் செய்வித்தீசனை
வைப்புறு தாணுவில் வருவித்தானரோ.

(இ-ள்.) அப்பொழுது அவ்விடத்தில் தேவதச்சன் கையினாலமைக்கப்பெற்ற வேலைப்பாட்டினால் ஒரு ஆலயத்தினைக் குமரப்பெருமானமைப்பித்து அவ்வாலயத்தில் சிவபெருமானை நிலைநிறுத்தப்பெற்ற விலிங்கவுருவமாகப் பிரதிட்டித்தனன்.

ஆமய முதலிய வைந்து கந்திகண்
மாமலர் மஞ்சன மமிர்தம் வான்றுகி
றாமணி விளக்கொடு தூபங் கண்ணடி
சாமரை யாதிகளமரர் தந்திட.

(இ-ள்.) கோமயம் முதலிய பஞ்சகவ்வியங்களையும், வாசனைத் திரவியங்களையும் சிறந்தமலர்களையும் திருமஞ்சனத்தினையும் அமிர்தத்தினையும் உயர்ந்த வாடைகளையும் தூய்மையான மணியினையும் தீபதூபங்களையும் கண்ணாடி வெண்சாமரை முதலியவைகளையுந் தேவர்கள் கொண்டுவந்து கொடாநிற்ப.—எ-று. (௩௨)

முழுதொருங் குணர்ந்திடு முருகன் யாவருந்
தொழுதகு மிறைவ னூற்றொடர்புநாடியே
விழுமிய கண்ணுதல் விமலன் றண்மலர்
வழிபடல் புரிந்தனன் மனங்கொள் காதலால்.

(இ-ள்.) முற்றுணர்ச்சியினையுடையகுமரப்பெருமான் யாவராலும்தொழத்தக்க சைவாகம முறைமையையாராய்ந்து உயர்ந்த திரிநேத்திரரான சிவபெருமானுடைய திருவடிமலர்களை மனதிற் பொருந்திய அன்பினாற் பூசைபுரிந்தனன்.—எ-று. (௩௩)

மீட்சிப்படல முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - உகசுஅ.

யுத்தகாண்டம் முற்றுப்பெற்றது.

ஆ. காண்டம் - நான்குக்கு திருவிருத்தம், எஅ௩அ.

கச்சியப்ப சிவாசாரியர் திருவடிவாழ்க.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

சிவசண்முகன்றுணை.

ஐந்தாவது

# தேவகாண்டம்.

---

## திருப்பரங்குன்று சேர்படலம்.

இன்னபண்பினாற்சிவனடி வழிபடலியற்றி
யந்நிலைக்களநீங்கியேயமரர்கண்முனிவர்
தன்னதானையந்தலைவர்கள்புடைதழீஇச்சாரப்
பொலன்னின்மஞ்ஞையினெருத்தமேல்கொண்டனன்புனிதன்.

(இ-ள்.) இவ்வாறாகச் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி அவ்விடத்தினைவிடுத்துத் தேவர்களும் முனிவர்களுந் தனது சேனாவீரர்களும் புடைசூழ்ந்துவரப் பொன்மயமான மயிலின் முதுகிற் புனிதனான குமரப்பெருமா னெழுந்தருளினான்.—எ-று. (௧)

சீர்தங்கியமயூரமேலமர்தருஞ்செவ்வேள்
சார்தலுற்றிடுமாலயன்மகபதிதம்மை
நேர்தலில்படைவீரரைநோக்கியேநீவி
ரூர்திமேலராய்வம்மினம்புடையெனவுரைத்தான்.

இ-ள்.) சிறப்புப்பொருந்திய மயிலின்மீது ஆரோகணித்தருளிய குமாரசுவாமியானவர் அருகிற் சூழ்ந்து நிற்கின்ற அரிவிரிஞ் சேந்திராதிகளையும் ஒப்பற்ற சேனைவீரர்களையும் பார்த்து நீங்களெல்லாம் நமதருகில் உங்களுங்கள் வாகனரூடராய் வரக்கடவீர்கள் என்று திருவாய் மலர்ந்தருளினார்.—எ-று. (௨)

வேறு.

மற்றதுகாலையில்வண்டுழாய்முடிக்
கொற்றவன்முதலியகுழுக்கொடேவரும்
வெற்றிகொள்வீரரும்வேறுதத்தமக்
குற்றிடுமூர்திமேலொருங்குற்றீண்டினார்.

(இ-ள்.) எம்பெருமா னவ்வண்ணம் கட்டளை யளித்தவுடனே, வளவியதுளவமலர்மாலை யணிந்த முடியினனான திருமான்முதலிய கூட்டமானதேவர்களும் வெற்றிபொருந்திய வீரர்களும் வேறுவேறாகத் தங்கள் தங்களுக்குள்ள வாகனங்களிலேறி நெருங்கிச் சென்றார்கள்.—எ-று. (௩)

ஞாயிறுகறங்கெனநணுகும்பொன்முடிக்
கோயிலின்பருங்கினிற்குழீஇக்குழீஇயிரண்

டாயிரவெள்ளமாமடல்வெம்பூதரு
மேயெனவெழுந்தனரெழுந்தபூழியே.

(இ-ள்.) சூரியனொளி கறங்கினைப்போன்று சுழலுகின்ற பொன்சிகரத்தினையுடைய கோயிலின் பக்கத்தில் கூட்டங் கூட்டமாகச்சேர்ந்து இரண்டாயிர வெள்ளமென்றுரைக்குந் தொகையினரான பூதர்களும் திடீரென்று பிரயாணமாயினார்கள் அவர்களதசெல்கையாற் புழுதிமேற்கிளம்பிச் சென்றது.--எ-று. (ச)

மிக்குயரறிஞரைமேவிற்கீழ்மைசெய்
மக்களுமேனெறியடைதல்வாய்மையே
தக்கதொல்பூதர்கள்சரணந்தோய்தலிற்
புக்கதுபொன்னகர்புவியும்பூழியாய்.

(இ-ள்.) மிகவும் உயர்ந்த அறிவினையுடையாரை யடைந்தால் தாழ்மையான காரியங்களைச்செய்கின்ற கீழ்மக்களும் உயர்ந்த நெறியினையடைதல் உண்மையேயாம். (எதனாலென்னின்) தகுதியினையுடைய பழமையாளரான பூதர்களின் கால்களிற் பட்டமையால் பூமியும் புழுதியினுருவாகிப் பொன்னுலகத்தினை யடைந்தது-எ-று.

அழற்றியபல்கதிராதபத்திர
நிழற்றியவிண்ணளாய்நிமிர்ந்தகேதனங்
குழுத்தியதுளைவயிர்கோடுகாகள
மிழற்றியபேரிகைமிகவுமார்த்தவே.

(இ-ள்.) சுடுகின்ற பல கிரணங்களையுடைய சூரியனுடைய வெப்பத்தினைத் தணிக்கின்ற குடைகளை மேற்றூக்கிப்பிடித்து நிழலினையுண்டாக்கினார்கள். ஆகாயத்தினை அளாவுமாறு கொடிகள் உயர்ந்தன. ஊதுகொம்புகளும் கொம்புகளும் சத்தித்தன. காகளங்கள் மிழற்றின; பேரிகைகள் மிகவும் முழங்கின.—எ-று. (சு)

மேக்குயர்வட்டமும்விளங்குகாம்புமாய்
நீக்கமில்கவிகைகணிழற்றிமல்குவ
மாக்கிளர்பஃறொடைவானக்கம்பலந்
தூக்கியதிறனெனத்தோன்றுகின்றவே

(இ-ள்.) மேற்புறமாக விளங்குகின்ற வட்டமும் பிரகாசிக்கின்ற காம்பும் ஆகவுள்ள குடைகள் நெருங்கி மிகுந்து காணப்படுவன மிகவும் விளங்குகின்ற பல தூக்குமாலைகளையுடைய வானக்கம்பலத்தினை எடுத்து நாட்டியதிறம்போல காணப்படுகின்றன. எ-று. (எ)

மேற்றலைகடவியவெய்யன்வெம்மையா
னேற்றலையெய்திவானுணங்கநோன்றிரை
யாற்றலைமுயன்றெனவனிகவேலையுட்
கோற்றலையசைவவெண்கொடியின்கானமே.

(இ-ள்.) தன்னிடத்தின் மேற்புறமாக விரதமோட்டிச்செல்லுஞ் சூரியனுடைய வெப்பத்தினால் வருந்தி அவ்வெப்பத்தினை யொழித்தற்குத் தவஞ்செய்துகொண்டு ஆகாயமானது வருந்த அதன் தவத்திற்கிரங்கிப் பெரியகடலானது மேற்சென்று அதன் வெப்பத்தினை நீக்கமுயன்றாற்போல சேனைக்கடலினிடத்திற் கோல்களின் தலைகளிற் கொடிகள் கூட்டமாக வசைகின்றன.—எ-று. (அ

பாங்கமைபதலேயேமுதலபல்லிய
மாங்கொலிவழங்குவவவுணத்தியரைத்
தாங்கினையென்றிறைதண்டஞ்செய்திட
வாங்கியதிரைக்கடல்வாய்விட்டொக்குமால்.

(இ-ள்.) அருகிற் பொருந்திய வாயகன்ற பறைகண் முதலியபலவகையான வாச்சியங்கள் அவரது செல்கையா லவ்விடத்து ஒலி வழங்காநிற்பன. கடலே நீ கொடியவர்களாகிய அசுரர்களை சுமந்து நின்றனை யென்று நமதிறைவன் தண்டனைபுரியாநிற்ப உட்சுழித்து வாங்காநின்ற திரைகளையுடைய கடலானது வாய்திறந்த லறியது போலாம்.—எ-று, (கூ)

காந்தளஞ்சென்னியன்கடவுமாமயில்
கூந்தொறுங்கூந்தொறுங்குலேந்துபஃறலைப்
பாந்தளங்கசைதலும்பசலைமூக்கினு
லாய்ந்திடுகின்றனவகிலங்குத்தியே.

(இ-ள்.) காந்தண் மலரணிந்த திருமுடியினரான குமரப்பெருமான் எறி நடாத்துகின்ற சிறந்த மயிலானது கூவுந்தோறுங் கூவுந்தோறும் பலதலைகளையுடைய அரவமானது அசைதலும் பசியமூக்கினல் பூமியைக் குத்தியாராய்கின்றது அம்மயில்.

மூக்குடையலகினுன்முகிலேக்கீறியே
யூக்கொடுபரலெனவுருமுப்பற்றுமாற்
றீக்கிளர்வன்னதோர்செய்யசூட்டுடைக்
கூக்குரல்வாரணங்கொடியதாகையால்.

(இ-ள்.) தீயின் கிளர்ச்சிபோன்ற செந்நிறமான வுச்சிப்பூவினையுடையதும் கூக்குரலிடுவதுமான கோழியானது கொடியதாக நிற்றலால் தனது மூக்கென்னுமாயுதத்தினல் மேகத்தைப்பிளந்து வன்மையுடன் சிறியபருக்கைக்கல்லைப்போல இடியினை வாயாற்கவ்வி யெடாநிற்கும்.—எ-று. (கக)

இந்நிகழ்வுற்றிடவெழுந்ததானைகண்
முன்னயல்கடைக்குழைமொய்த்துச்சென்றிடப்
பன்னிருமொய்ம்புடைப்பகவர்மேலவ
னந்நகரத்தினுமகன்றுபோயினன்.

(இ-ள்.) இத்தகைய நிகழ்ச்சி நடவாநிற்க, பிரயாணமாகிய சேனைகள் முன்னிடத்திலும் அயிலிடத்திலும் பின்னிடத்திலும் நெருங்கிச் செல்லாநிற்ப, பன்னிரண்டு திருக்கரங்களையுடைய தேவர் பெருமான் அத்திருச்செயந்தி புரத்தினின்றும் விலகிச் சென்றனர்.—எ-று. (க௨)

பொரியரைவிளவுகால்புனிற்றுத்தீங்கனி
வருபயன்கொண்டுதாம்வறிதுவீழ்த்தெனக்
கரியினம்பாரிடக்கணங்களார்ப்பினல்
வெருவினவுணர்விலமயங்கிவீழ்ந்தவே.

(இ-ள்.) பொருக்கைகளையுடைய அரையினவான விளாமரங்கள் தாம்பெற்ற வினிய பழங்களை பிறர்க்கீதலாலுண்டாரும் பிரயோசனத்தை யறிந்து தாமே சும்மா வீழ்த்தியவாறுபோல பூதகணங்களின் ஆரவாரத்தினல் யானைகள் பயந்து உணர்வற்று மயங்கி விழுந்தன.—எ-று. (கங)

சாற்றிடிற்றம்வினை தம்மைச்சூழுமா
லாற்றலில்பெற்றமதலைக்கும்வல்லிய
மாற்றருந்துப்புடைவயவர் தானையு
ளேற்றுரிமுரசினுக்கிடைந்தழிந்ததே.

(இ-ள்.) சொல்லுமிடத்து அவரவர் செய்தவினை அவரவரையே சுற்றிக்கொள்ளும் அது எங்ஙனமென்னின் வன்மையற்ற பெற்றங்களை வருத்துகின்ற பெரும் புலிகள் நீக்குதற்கரிய வன்மையினையுடைய வீரர்கள் சேனையினுண் முழக்கா நின்ற பெற்றங்களின் தோல்களாலாகிய முரசவாச்சியங்களி னோசைக்கிடைந்தழிந்தன.—எ-று. (கச)

குஞ்சரமெறிந்திடுங்கொலைவல்கோளரி
யெஞ்சலில்கயமுகமெண்ணில்பூதர்கள்
விஞ்சியபிளிறொலிவினவிமெய்பனித்
தஞ்சினநஞ்செழவயர்ந்ததேவர்போல்.

(இ-ள்.) யானைகளையடிக்கின்ற கொலைத்தொழிலின் மிக்க சிங்கங்கள்கெடுதலற்றயானைமுகங்களையுடைய அளவற்ற பூதர்களின் மிகுந்த பிளிறோசையைக்கேட்டு ஆலகாலவிஷம்பிறந்தநாளில் அஞ்சிய தேவர்களைப்போல உடனடுங்கிஅஞ்சின.—எ-று.

உரங்குறைபோழ்தில்யாரொடுங்கலில்லவர்
வரங்குறைமான்முகவயவரோதையாற்
கரங்குறைவின்றிநீள்கடுங்கண்யாளிபோய்க்
குரங்குறைசூழலுட்குலைந்துபுக்கவே.

(இ-ள்.) வன்மை குறைந்த போழ்து யாவர் தாம் ஒடுக்கமற்று நிற்பவர் இச்சைகுறைந்த மான்முகரான பூதவீரர்களினோசையினால் குறைவற நீண்டகையினையுடையவும் சீற்றநோக்குடையவுமான யாளிகள் சென்று குரங்குகள் வாழுமிடங்களில் நிலைகுலைந்து புகுந்தன —எ-று. (கசு)

வசைபடுபாரிடம்வழுக்கலில்வகை
மிசைபடுமூற்றமாய்மேற்கொண்டுற்றன
விசைபடுபாரிடமிடிக்குக்கொட்பினு
லசைபடுகின்றனவடுக்கலானவே.

(இ-ள்.) இழிவற்ற வுலகம் நிலைகுலையாதவண்ணம் மேற்கொண்டு நின்ற அழுத்தமான மலைகளெல்லாம் வேகமாகச்செல்லுகின்ற பூதர்கள் இடிக்கும் கொட்பினலசைகின்றன.—எ-று. (கஎ)

உரகமுமடங்கலுமொடுங்கியுட்கியே
வரைகளின்முழைபுகவானத்தார்ப்பன
வரிமுகவீரர்தம்மரவத்தன்மையா
லிரிவனபுரள்வனவெழிலியேறெலாம்.

(இ-ள்.) வெள்ளிய சங்குகள் அரவங்களும் சிங்கங்களும் ஒடுங்கி மனமிடைந்து மலைமுழைகளிற் புகுமாறுமுழங்கின. இச்சங்கொலியன்றிச் சிங்கம்போன்ற முகத்தினரான வீரர்களி னாரவாரத்தினால் எழிலியேறனைத்தும் விலகியோடுவனவும் புரள்வனவுமாக வாயின—எ-று. (கஅ)

காட்டகவெயினர்தங்கல்லென்சும்மையாற்
கூட்டுறைபுட்குலங்குலைவுற்றாலெனத்
சூட்டுடைவாரணந்தோகையார்ப்பது
கேட்டுளநடுங்கினர்கிலேசங்கொண்டுளார்.

(இ-ள்.) காடுகளில் வாழுகின்ற வேடர்களின் கலீரென்னு மோசையினாற் கூடுகளில் வாழும் பறவைகள் சிலைகுலைந்தாற்போல உச்சிப்பூவினையுடைய கோழியும் மயிலும் சத்தித்தலைக்கேட்டு மனநடுங்கினர் துன்பமுற்றவர்கள்.—எ-று. (கூகூ)

அரங்குறுமதலைமேலாடுநீரரின்
மரங்களையலைத்திடுகடுவன்மந்திகள்
கரங்குலைவோடுபற்காட்டிவாய்வெரீஇ
யிரங்கினசேவலங்கொடியிடிப்பினால்.

(இ-ள்.) நாட்டிய சாலைகளிலுள்ள தம்பங்களின்மீதேறி யாடுகின்ற கூத்தியர்களைப்போல மரங்களை அசைக்கின்ற ஆண்குரங்குகளும் பெண்குரங்குகளும் கோழிக்கொடியின் கூவுதலான ஆரவாரத்தினைக்கேட்டுக்கைகளை நடுங்கவிட்டு பல்லுமொன்றோடொன்று கிட்டிக்கொள்ள வாய் நடுச்குற்று வருந்தின—எ-று. (உ0)

ஆரணமுழங்கொலியமரர்வாழ்த்தொலி
சீரணவியவொலிசேனைப்பேரொலி
காரணமில்லவன்கடவுமாமயில்
வாரணவொலிகளான்மறைதலுற்றவே.

(இ-ள்.) வேதங்களை யுச்சரித்த லாலுண்டாகின்ற ஓசையும் சிறப்புப்பொருந்திய மேளவாத்தியங்களினோசையும் சேனைகளின் பெரிய வோசையும் தமக்கு மேலொரு காரணனில்லாத கந்தப்பெருமானேட்டுகின்ற சிறந்த மயிலினதும் கோழியினதுமான ஓசைகளான் மறையப்பட்டன—எ-று (உக)

இடனுறுகுறிஞ்சியிலினையதன்மையா
னடவைகொள்பெரும்படைநடுவணேகியே
சுடர்பொழிவேலினான்றூயகூடலின்
குடதிசையமர்பரங்குன்றையெய்தினான்.

(இ-ள்) விசாலமான குறிஞ்சி நிலத்தின்வழி இந்தவிதமாகச் செல்லாநின்ற சேனைகளின் நடுவே எழுந்தருளி ஒளிவீசாநின்ற வேற்படையினையுடையகுமரப்பெருமான் தூய்மையான மதுரையின் மேற்புறத்திலிருக்கின்ற திருப்பரங்குன்றத்தினை அடைந்தனன்—எ-று. (உஉ)

ஆவதோர்பொழுதினிலங்கண்முன்னுறை
மூவிருதவத்தருமுளரியான்முத
லேவருமெந்தையையிறைஞ்சியிவ்விடை
மேவுதிசிறந்ததிவ்வெற்பென்றோதினார்.

(இ-ள்.) இவ்வண்ணங் குமரப்பெருமான் திருப்பரங்குன்றத்திற்கெழுந்தருளிய உடனே முன்னாளிலேயே அவ்விடத்தில் வசித்திருந்த பராசர குமாரரான ஆறு முனிவர்களும் பிரமன் முதலாகவுள்ள மற்றையோர்களும் எம்பெருமானை வணங்கி இம்மலை சிறந்தது அதனுலிங்கெழுந்தருளி இருப்பாயாக என்று கூறினார்கள்—எ-று.

என்றலுமுருகவேள்யாமுமிவ்வரைச்
சென்றிடநினைந்தனமதனைச்செப்பினீர்
நன்றுமதெண்ணமுநமதுசிந்தையு
மொன்றியவேயெனவுவப்பிற்கூறினன்.

(இ-ள்) பிரமாதிய ரிவ்வண்ண முரைத்தவுடனே குமாரக்கடவுளும் நாமும் இம்மலைக்குப்போகும் வண்ணம் நினைத்தேம் நீவிரு மதனையே உரைத்தீர்கள் உங்களெண்ணமு நன்றாகவே இருக்கின்றது எமதுமனமும் உமதெண்ணப்படியே ஒத்திருக்கின்றது என்று திருவுள மகிட்சியுடனே உரைத்தருளினன்—எ-று. (உச)

மைம்மலைதுமுனியும்வடிவும்பெற்றுடைக்
கைம்மலைபொழிதருகடாங்கொள்சாரலி
னம்மலையேறினனமலைதன்னொரு
செம்மலையாகிவந்துதித்தசிற்பரன்.

(இ-ள்.) உமாபிராட்டியாரது திருக்குமாரனாக வந்தவதரித்த சிற்பரனைசண்முகப்பெருமான் மேகங்கள் தம்மினமோ என்று மயங்குமாறுன ஒலியும் நிறமும்பெற்றுள்ள யானைகள் பொழிகின்ற மதநீர் பொருந்திய தாழ்வரைகளையுடைய அத்திருப்பரங்குன்றின்மீது எழுந்தருளினன்—எ-று. (உரு)

வற்றருந்திரைக்கடல்வடாதுமாதிரப்
பொற்றையைநுகர்ந்தெனப்பூதசேனைகள்
கொற்றவன்வருபரங்குன்றின்சாரலைச்
சுற்றியமிசையினுந்துவன்றிப்புக்கவே.

(இ-ள்.) வற்றுதலில்லாத அலைகளையுடைய கடலானது வடதிசையிலுள்ள மகமேருவை மூடிக்கொண்டாற்போல பூதசேனைகள் குமாரக்கடவுள் வந்திறங்கிய திருப்பரங்குன்றி னடிப்புறத்தினைச் சூழ்ந்துகொண்டன மேற்புறத்திலும் நெருங்கி புகுந்தன—எ-று. (உசு)

காலையங்கதுதனிற்கடவுட்கம்மியன்
மாலுறுகிரிதனில்வரம்பில்வீதியுங்
கோலநற்றெய்வதக்குலமுங்கோயிலுஞ்
சோலையும்வாவியுந்துவன்றநல்கினன்.

(இ-ள்.) இவ்வண்ண மெம்பெருமானெழுந்தருளிய உடனே தேவதச்சன் பெருமை பொருந்திய அம்மலையில் அளவற்ற வீதிகளையும் அழகிய நல்ல தேவகோட்டங்களையும் சண்முகாலயத்தினையும் சோலைகளையும் வாவிகளையும் நெருக்கமாக உண்டாக்கினன்.—எ-று. (உஎ)

அத்துணையெம்பிரானமரர்கம்மியன்
கைத்தொழினோக்கியேகருணைசெய்துபோய்ச்
சித்திரமறுகிடைச்சேனைவீரரை
வைத்தனன்மந்திரவரைப்பையெய்தினன்.

(இ-ள்) அப்பொழுது எம்பெருமான் தேவதச்சனுடைய கைத்தொழிலினைப் பார்த்து அவன்மீது அன்புகாட்டிச்சென்று அழகிய வீதிகளிற் சேனைவீரரை இருத்தித் திருக்கோவிலுள் எழுந்தருளினன்.—எ-று. (உஅ)

ஏயினமஞ்ஞைநின் றிழிந்துநான்முகன்
மாயவன்மகபதிவயவர்மற்றையோ
ராயினர்புடைவரவவையி னூடுபோய்ச்
சீயமெல்லணைமிசைச்சிறப்பின் வைகினன்.

(இ-ள்.) ஏறி நடாத்தியருளிய மயிலினின்றும் இறங்கிப் பிரமனிந்திரன் திருமால் நவவீரர் இலக்கம் வீரர் முதலிய மற்றையவர்களாயுள்ளார் அருகிற் சூழ்ந்து வரா நிற்பச் சபையினிடத்திலெழுந்தருளி சிங்கந்தாங்கு மெல்லிய ஆசனத்தின்மீது சிறப்புடனே இருந்தருளினன்—எ-று. (உகூ)

பரீஇயயல்வந்திடுபங்கயன்முதன்
மரீஇயினர்தமையெலாம்வயின்வயின்றொறு
மொரீஇயினனமரரையொல்லையேவினன்
பொரீஇயினரில்லதோர்புனிதமேலையோன்.

(இ-ள்.) மிகுதியாக அருகில் வராநின்ற பிரமன் முதலியவர்களையெல்லாம் இடங்கள்தோறும் இடங்கள்தோறும் நிறுத்தி தேவர்களையும் விரைவாக அங்குத்தகுந்த இடத்திலிருக்கும் வண்ணம் அருளிச்செய்தனன் தமக்கொருவரு நிகரில்லாத நிருமலனை மேன்மையினையுடைய குமரப்பெருமான்—எ-று. (௩0)

குலக்கிரிபொருவியகுறளின்வேந்தரும்
வெலற்கருந்திறலுடைவீரமொய்ம்பனு
மிலக்கருமெண்மரும்யாருமெந்தைதன்
மலர்க்கழறொழுதனர்மருங்கினீண்டினார்.

(இ-ள்.) அப்பொழுது சிறந்த மலைகளையனைய பூதவரசர்களும் பிறரால் வெல்லுதற்குக்கூடாத வன்மையினையுடைய வீரவாகு தேவனும் இலக்கம் வீரர்களும் எட்டு வீரர்களும் ஆகிய இவர்கள் குமரவேளின் சமல மலர்போலும் பாதங்களை வணங்கி அணுக்கர்களாக இருந்தார்கள்,—எ-று. (௩க)

ஏவலினியன் றனரினையர்நின் றிட
மூவிருபாராசரமுனிசிறார்களுஞ்
சேவலையுயரியதேவநாயகன்
பூவடியருச்சனைபுரிந்துபோற்றினார்.

(இ-ள்.) இவர்களிவ்வண்ணம் ஊழியம்புரிபவர்களாக நிற்கப் பராசரமுனி குமாரர் அறுவர்களும் அப்பொழுது கோழிக்கொடியினை யுயர்த்த தேவ தேவனது திருவடித் தாமரைகளை அருச்சனைசெய்து துதித்தார்கள்—எ-று. (௩௨)

வழிபடுமுதல்வர்கள்வழுத்திநின் றுழி
யுழுவலன்போடுகண்ணோடிச்செஞ்சடைக்
குழவிவெண்பிறையினன் கூறுந்தொல்லருண்
முழுவதுநினைந்தனன் முற்றுணர்ந்துளான்.

(இ-ள்.) தம்மை வழிபாடு செய்கின்ற பராசரமுனி புதல்வர்கள் அங்ஙனம் வணங்கித்துதிபுரிந்து எதிரினின்றவுடனே நீங்காத பேரன்புடனே அவர்களைத்திருக் கண்களால் பார்த்தருளி சருவஞானோத்தமரான எம்பெருமானார் இவர்கள் பொரு

ட்டு முன்னாளில் இனிமையான வெள்ளிய சந்திரகலையினை அணிந்துள்ள சடாபாரத்தினையுடைய சிவபெருமானார் திருவாய்மலர்ந்தருளியுள்ளன வனைத்தையும் திருவுள்ளத்தி னினைத்தருளினார்.—எ-று. (நடந)

சலம்புரியும்பராசரனெனும்முனி
குலம்புரிதவமெனுங்குமரர்தேர்வுறப்
புலம்புரிபோதகப்பொருண்மையாவையு
நலம்புரிகுமரவேணவின்றுவைகினான்

(இ-ள்) தான்பெற்ற மக்கண்மீது தீராப்பெருங்கோபங்காட்டிய பாரசரனென்னும் முனிவனது குலஞ்செய்த தவமென்று கூறத்தக்க நல்லொழுக்கம் வாய்ந்த பிள்ளைகளுணருமாறு நல்லறிவைத்தருகின்ற ஞானார்த்தங்களனைத்தையும் ஆன்மாக்களுக்கு நன்மையே செய்தருளுகின்ற குமாரக்கடவுள் உபதேசித்துக்கொண்டெழுந்தருளி இருந்தனர்—எ-று. (நடச)

பொருவருமகேந்திரபுரத்தைநீங்கியே
தரணியில்வந்தவாசாற்றினாமினிப்
பெருமைகொளிந்திரன்பெண்ணையெம்பிரான்
றிருமணஞ்செய்திடுஞ்செய்கைசெப்புவாம்.

(இ-ள்.) குமரவேள் சூரசங்காரஞ் செய்தபின்னர் ஒப்பற்ற மகேந்திரபுரத்தை விடுத்துப் பூவுலகில் வந்தவாறுரைத்தாம். இனி அவ்வெம்பெருமான் பெருமைவாய்ந்த இந்திர குமாரியான தெய்வயானையம்மையைத் திருமணஞ்செய்யுஞ் செயலினை உரைக்கின்றேம்.—எ-று. (நடு)

திருப்பரங்குன்று சேர்படல முற்றிற்று.

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# தெய்வயானையம்மை திருமணப்படலம்.

காய்ந்திடுதம்பகைகடந்துபொன்னகர்
வேந்தியன்முறையருள்வேற்கைவீரற்குக்
கூந்தலஞ்சிறுபுறக்குஞ்சரந்தனை
யீந்திடமகபதியிதயத்தெண்ணினான்.

(இ-ள்.) இந்திரன் தம்மை வருத்திய பகைவர்களை வென்று சொர்க்கவுலக வரசுமுறையை தனக்களித்த வேற்படையேந்திய திருக்கரத்தினையுடைய குமரக்கடவுட்குப் பின்றாழ்ந்த கூந்தலினையுடைய தெய்வயானை அம்மையை மணவாட்டியாக அளிக்கத் தனது மனதினினைத்தனன்.—எ-று.

பிறபிடியானையை யகற்றற்குத் தெய்வயானையம்மையைக் கூந்தலஞ்சிறுபுறக் குஞ்சரமென்றார். (க)

விருத்தமதாகுமிவ்விழைவையிந்திரன்
றிருத்தகுமாலயன்றேவர்தேர்வுற
வுரைத்தனன்வினவலுமுவகைபெற்றுநின்
கருத்துநன்றுலெனக்கழறன்மேயினார்.

(இ-ள்.) புதிதாகத் தோன்றின இவ்விச்சையைத் தேவராசன் திருமகளைத் தகுதியாகவுடைய நாராயணனும் பிரமனுந் தேவர்களும் அறியுமாறுகூறி இவ்வாறு செய்தல்கூடுமோ என்று கேட்டவுடனன்னோர் சந்தோடமுற்றவர்களாய் நின் எண்ணந் தகுதியானதே என்று சொல்லத் தொடங்கினர்.—எ-று (உ)

பன்னிருமொய்ம்புடைப்பகவன்பாற்படப்
பின்னலஞ்சுரிகுழற்பிடியும்பொய்கைவாய்
முன்னுறவருந்தவமுயன்றுவைத்தன
ளின்னுழியதன்பயனெய்திற்றேகொலாம்.

(இ-ள்.) பன்னிரண்டு திருத்தோள்களையுடைய சாட்குண்ணிய பரிபூரணரான சிவசுப்பிரமணியப் பெருமானைக் கணவனாக அடைதற்கு, பின்னப்பட்ட சுருண்ட கூந்தலினையுடைய தெய்வயானையம்மையும் பண்டு சரவணப் பொய்கையில் அரிய தவத்தினைச்செய்து முடித்துள்ளாள். இவ்விடத்திலத்தவத்தின்பயன் அவ்வம்மைக்குக் கிடைத்ததாயிருக்கலாம்.—எ-று. (ந)

கயலுறழ்விழியுடைக்கடவுள்யானையை
வியல்வரையெறிந்திடுவேற்கையண்ணலுக்
கியல்புளிவதுயாலீதற்கிவ்விடை
முயலுதிகடிதெனமொழிந்துவைகினார்.

(இ-ள்.) தேவர்கள் விசாலமான தோற்றத்தினையுடைய கிரவுஞ்சமலையைப் பிளந்த வேற்படையேந்திய திருக்கரத்தினையுடைய குமாரப்பெருமானுக்குப் சேல்மீன் போன்ற கண்களையுடைய தெய்வயானையம்மையை திருமணமுறைப்படி அளித்தற்கு வேண்டு முயற்சிகளை விரைவாகச்செய்து முடிப்பாயாக என்று கூறி இருந்தார்கள். ()

மற்றதுபோழ்தினின்மகத்தின்செம்மலோ
ரொற்றனைநோக்கியேயொல்லைமேருவாம்
பொற்றையின்மனைவியைப்புதல்விதன்னுட
னிற்றையில்விளித்தனையேகுநீயென்றான்.

(இ-ள்.) தேவர்கள் இவ்வாறொருங்குரைத்தவுடன் யாகாதிபனான இந்திரன் ஒரு தூதனைப் பார்த்து நீ விரைவாக மேருமலைக்குச் சென்று அங்கிருக்கும் எனது மனைவியை என்மகளான தெய்வயானையுடன் இன்றே அழைத்துவருதி என்று கூறினான்.—எ-று. (ச)

என்றலுந்தூதுவனிசைந்துமேருவிற்
சென்றனன்புலோமசைத்தெரிவைமுன்புபோய்
நின்றனன்வணங்கினனினதுசிந்தைபோ
லொன்றியகேளெனவுரைத்தன்மேயினான்.

(இ-ள்.) இந்திரனிவ்வாறு கூறியதற்கிசைந்த தூதன் மேருமலைக்குச்சென்று புலோமசையான இந்திராணியினெதிரே சென்று வணங்கிநின்று அம்மணி நின் நினைவின் வண்ணம் அனைத்தும் முடிந்தன. யான் வந்த காரியத்தினைக் கேளென்று கூறத்தொடங்கினான்.—எ-று. (௬)

மாண்டனன்வெய்யசூர்மதலைதன்னொடு
சேண்டொடரமரருஞ்சிறையினீங்கின
ராண்டலையுயர்த்தவனனிகந்தன்னொடு
மீண்டனன் திருப்பரங்குன்றமேயினன்.

(இ-ள்.) தன் மகனான பானுகோபன் முதலியவர்களுடன் கொடிய சூரபன் மன் இறந்தான். சுவர்க்கவாசிகளான தேவர்களுஞ் சிறையினின்றும் விடுபட்டனர் கோழிக்கொடியினையுடைய குமரப்பெருமான் தமதுபூதசேனைகளுடன் திரும்பித் திரு ப்பரங்குன்றினி லெழுந்தருளி இருக்கின்றார்.—எ-று.

மதலை தன்னொடு என்பதற்கு நின்மகனான சயந்தனுடன் சேண்டொடரமர ருஞ் சிறையினீங்கின ரென்னினுமாம். (எ)

நின்றிடவனையதுநினதுநாயக
னுன்றனைமகளொடுமொல்லையிற்பரங்
குன்றிடையிருக்கையிற்கொண்டுசெல்கென
வின்றெனைவிடுத்தனனேகுநீயென்றான்.

(இ-ள்.) இச்செயலிவ்வாறிருக்க உனது கணவனான இந்திரன் உன்னைப் புத்திரியுடனே விரைவாகத் திருப்பரங்கிரியிலுள்ள தனதிருக்கைக் கழைத்துவரும் வண்ணம் என்னை அனுப்பினன் ஆதலின் என்னுடன் இப்பொழுதே வருவாயாக என்று கூறினன்.—எ-று. (அ)

அம்மொழிவினவலுமணங்கினல்லவள்
விம்மிதமுற்றனள்விழுமநீங்கின
ளெம்மையுமில்லதோரின்பமெய்தினள்
கொம்மெனவெழுந்தனள்குமரிதன்னொடும்.

(இ-ள்.) தேவமாதருட்சிறந்த இந்திராணி அம்மொழியைக் கேட்டவுடனே ஆச்சரியமடைந்து துன்பமொழிந்து என்றுமில்லாத சந்தோடத்தினை அடைந்தாளாய் விரைவாக மகளான தெய்வயானையம்மையுடன் எழுந்தனள்.—எ-று. (கூ)

புடையுறவணங்கினர்போற்றிமேருவி
னிடையுறுபுலோமசையேமமாகியே
யடலயிராவதவானைமேற்கொடு
மடமகடன்னொடும்வானத்தேகினள்.

(இ-ள்.) அருகினிற் தேவமாதர் சூழ்ந்து காவல்புரியாநிற்ப மேருமலையிலிருந்த இந்திராணி மகிழ்ச்சியுடையவளாய்த்தனது இளமகளான தெய்வயானையம்மையுடன் வன்மையான ஐராவதமென்னும் யானையின்மீது ஏறி ஆகாய வழியாகத் திருப்பரங் குன்றை நோக்கிச் சென்றாள்.—எ-று (க0)

பொருப்பினுண்மேலதாய்ப்புவியிற்பேர்பெறுந்
திருப்பரங்குன்றிடைச்சென்றுதேவர்கோ
னிருப்பதோர்மந்திரத்தெய்திவைகினண்
மருப்பிரண்டுடையதோர்வாரணத்துடன்.

(இ-ள்) இந்திராணிமலைகளுக்குளுயர்ந்ததாய் உலகினிற் பிரசித்தியுற்ற திருப் பரங்குன்றத்திலெய்தித் தேவராசனிருக்கும் ஒப்பற்றமாளிகையையடைந்து கொங்கை களாகிய இரண்டுகொம்புகளையுடைய தெய்வயானையம்மையுடன் இருந்தனள்.—எ-று.

தேவராசன் மனைவியான இந்திராணி நான்குமருப்பினையுடைய ஐராவதமேறி வந்தாளாதலின் உடனிருக்குந் தெய்வயானையை விளக்குவான் இருமருப்புடையவாரணமெனக் கூறினர். (கக)

உறையுமவ்வெல்லையினுயர்மகேந்திரச்
சிறையினுமகன்றிடுதெய்வத்தையலா
ரிறைவியைப்பெற்றனமியாமுய்ந்தோமென
முறைமுறைவணங்கினர்முகிழ்த்தகையினர்.

(இ-ள்.) அவ்வாறு திருப்பரங்கிரியிலிருந்தகாலத்து, உயர்ந்த மகேந்திரபுரியிலிருந்த சிறைக்களத்தினின்றும் வெளிப்பட்ட தேவமாதர்கள் இந்திராணியையடைந்து குவிக்கப்பெற்ற கைகளையுடையவராய் எமதரசியையு மடைந்தோம் யாமும் உய்ந்தேம் என்று கூறி வரிசைவரிசையாக வணங்கினர்கள்.—எ-று.

தமதுய்தி யினுமிறைவியைப் பெறுதல் மிக்கதாதலின் தமதுய்தியினுஞ் சிறந்ததாக மகிழ்வுற்றனரென்பார். "இறைவியைப்பெற்றனம் யாமுமுய்ந்தோமென" என்றார். (கஉ)

சேணுறுமெழிலிவாய்திறந்தமின்னுவைக்
காணுறுகின்றதோர்கலாபமஞ்ஞைபோன்
மாணுறுபுலோமசைவரலு மாதரா
ரேணுறுகின்றனரேமம்பெற்றுளார்.

(இ-ள்.) மாட்சிமைபொருந்திய இந்திராணி வருதலும், வானத்துலவு மேகத்தினிடத்து வெளிப்பட்ட மின்னற்கொடியைக்கண்ட தோகைகளையுடைய மயிற்குழாங்களை யொப்ப அவளைச் சூழ்ந்து தெய்வப்பெண்கள் இன்பமுற்றா ராயினர்.—எ-று.

எழிலி சேணிலுறினும் அது தந்த மின்னுக்கொடியால் தமக்கின்பகாலஞ் சமீபித்ததென வறிந்து குழுமி மகிழும் மஞ்ஞையனையராய் இந்திரபோகத்துக் கிந்திராணியின் காட்சி அறிகுறியாதலின் மாதரார் மஞ்ஞைபோல் ஏணுறுகின்றனரென்றார்.

கண்டனண்மதலையைக்கருணையாற்றழீஇக்
கொண்டனண்மகிழ்ந்தனள்கொங்கைபாலுக
விண்டனள்கவற்சியைவெறுமையுற்றுளோர்
பண்டுளபெருநிதிபடைத்தன்பான்மைபோல்.

(இ-ள்.) தரித்திரமடைந்தவர்கள் தாம் முன்னிழந்த பெருஞ்செல்வத்தினைப் பெற்றாங்கு இந்திராணி தனது மகனைக்கண்டு அவன்மீதுள்ள அன்பினால் மகிழ்ச்சியுற்று அம்மகிழ்ச்சியுற்றதற் கறிகுறியாகத் தனங்களில் பால்சுரக்கநின்று கவலைமுற்றிலும் நீங்கினவளாயினள்.—எ-று. (கக)

ஆடுறுபசியினோராக்கங்கண்டுழி
நீடுறுமுவகையானிறைவுபெற்றென
மாடுறுபுலோமசைவடிவங்காண்டலுங்
கூடினர்தன்மையுங்குரிசிலெய்தினன்.

(இ-ள்.) அலையாநின்ற பசியினால் வருந்துபவர்கள் பசியை யொழிக்கத்தக்க செல்வத்தைத் தரிசித்தவுடன் மிகுதியாக உண்டாகாநிற்கும் மகிழ்ச்சியினால் பூரிப்படைந்தாங்கு இந்திரன் தனதருகினை விடாதிருந்து சூரபன்மனால் விலகி மறைந்திருந்த இந்திராணியின் உருவத்தினைக் கண்டவுடன் தலைவியைக்கூடிய தலைவர் தன்மையை அடைந்தான்,—எ-று, (கரு)

வேறு.

அப்போதுவானோர்குழுவோடபிராணிகேள்வன்
செப்போதுகொங்கைமகடேபணஞ்செப்பன்முன்னி
யொப்போதுநீர்மையிலதாமொருவன்கழற்கே
கைப்போது தூவிப்பணிந்தேத்திக்கழறலுற்றான்.

(இ-ள்.) இங்ஙன மனைவியு மகனுந் தானும் பிறரும் உவகையுற்றாராய்ப் பின்னர் இந்திராணிக்கு நாயகனான இந்திரன் தேவர் குழாத்துடன் சென்று செப்பனைய கொங்கைகளையுடைய தெய்வயானை அம்மையாரது திருமணத்தினை உரைப்பான் கருதி ஒப்புரைக்குந் தன்மைக்கேற்ற பொருளற்ற குமாரசுவாமியாரின் திருவடிகளிற் கரத்தில் வைத்திருந்த மலர்களா லருச்சித்து வணங்கித் துதித்துச் சொல்லத் தொடங்கினான்.—எ-று. (கசு)

கன்னின்றமொய்ம்பினவுணக்களைகட்டல்செய்தா
யிந்நின்றதேவர்சிறைமீட்டனையென்றனக்கு
முன்னின்றதொல்சீர்புரிந்தாயதுமுற்றுநாடிச்
செய்ந்நன்றியாகச்சிறியேன்செயத்தக்கதுண்டோ.

(இ-ள்.) எம்பெருமானே! தேவரீர் மலையனைய தோளினரான அவுணர்களென்னும் பகையை அழித்து எதிரேநிற்கு மித்தேவரின் சிறையையுமொழித்து அடியேனுக்கு முன்னிருந்த இந்திரசெல்வத்தினை அளித்தீர் இச்செயலனைத்தையு மெண்ணித் தேவரீருக்குப் பிரதியுபகாரமாகச் சிறியேனாற் செய்யத்தக்கதுளதோ (இல்லையென்று குறிப்பு.)—எ-று. (கஎ)

முந்தேதமியேன்பெறுமங்கையிம்மொய்வரைக்கண்
வந்தேயமர்வாளவடன்னைவதுவைசெய்து
கந்தேபுரைநின்பெருந்தோளிற்கலத்தியாங்க
ளுய்ந்தேபிறவிப்பயன்பெற்றனமோங்கவென்றான்.

(இ-ள்.) நாங்கள் உய்தியுற்றுப்பிறந்த பிறப்பாலாய பயனையெய்தி உயர்வடையுமாறு, முன்னரே இம்மலைக்கண் அடியேன் பெற்ற மகளான தெய்வயானை வந்திருக்கின்றாள் அவளைத் திருமணஞ்செய்து பொற்றூண்களை யொப்ப விளங்குந் திருத்தோள்களில் அணைப்பீராக என்று கூறினான்.—எ-று. (கஅ)

என்னுந்துணையிலமரேசனையெந்தைநோக்கி
யந்நங்கைதானுமிகநோற்றனளாதலானீ
முன்னும்படியேமணநாளைமுடித்துமென்னத்
தன்னுங்கடந்தமகிழ்வெய்தித்தருக்கிநின்றான்.

(இ-ள்) இவ்வாறு கூறுங்காலத்து எமது குமரக்கடவுள் இந்திரனைப்பார்த்து நீ கூறும் அம்மாதும் நம்மை யடைதற்கு மிகவுந் தவஞ்செய்தனளாதலால் நீ கருதிய வண்ணமே நாளை மணஞ்செய்து கொள்வேமென்று திருவாய்மலர்ந்தருளுதலும் இந்திரன் தன்னிலு மிகுந்த மகிழ்வடைந்து இறுமாந்து நின்றனன்.—எ-று.

தன்னையுங் கடந்த மகிழ்வெனற்பாலது எதுகைநயநோக்கித் தன்னுங் கடந்த என்றாயது. (ககூ)

வடிக்கொண்டவொள்வேற்படைநம்பிதன்வார்கழற்கான்
முடிக்கொண்டடியேஞ்சிறந்தேங்கண்முதல்வவென்னாக்
கடிக்கொண்டவாய்தற்புடைவந்துகணிப்பில்காத
நொடிக்கொண்டபோழ்திற்படர்தூதரைநோக்கினானால்.

(இ-ள்.) வடிக்கப்பட்ட வொள்ளிய வேற்படையினையுடைய ஆண்மகனிற் சிறந்த குமரப்பெருமானுடைய ஒழுகிவிளங்குகின்ற வீரக்கழலணிந்த திருவடிகளிற் தலைபட இந்திரன் வணங்கி முதல்வனே! அடியோங்கள் சிறப்புடையோ மாயினோம் என்று கூறிக் காவலினையுடைய வெளிவாசலினிடத்தை அடைந்து அளவில்லாத காவத தூரங்களைக் கைந்நொடிப்பொழுதி னுட்கடந்து செல்லும் வேகநடையினரான தூதர்களைப் பார்த்தான்.—எ-று. (உ0)

முன்னாகியுள்ளபலதூதர்முகத்தைநோக்க
வன்னாரெவருந்தொழுதேபொன்னடிவணங்கி
யெந்நாயகனேதமியேஞ்செய்வதென்கொலென்னப்
பொன்னாடுடையானிஃதொன்றுபுகலலுற்றான்.

(இ-ள்.) எதிரினின்ற பல தூதர்களின் முகங்களை இந்திரன் உற்றுப்பார்த்தவுடனே அவரனைவரும் அவன் பொன்னடிகளை வணங்கித்தொழுது எங்கள் பெருமானே! அடியோங்களா லாகவேண்டுவதென்னை யென்றனர்; உடனே பொன்னுலகிற் கிறைவனான இந்திரன் இன்னதொன்றை உரைத்தனன்.—எ-று. (உக)

மூவர்க்குண்மேலோன்கிரிசேர்முசுகுந்தனாதிக்
காவற்கடவுட்டலைவர்க்குங்ககனமேவுந்
தேவர்க்குமேனைத்திசையோர்க்குமுனிவராயோ
ரேவர்க்குமெந்தைமணநாளையெனச்சொல்வீரால்.

(இ-ள்.) திரிமூர்த்திபரனான சிவபெருமானெழுந்தருளியிருக்கும் திருக்கைலையையடைந்த முசுகுந்தன் முதலிய தெய்வீகம்பொருந்திய காவற்றலைவரான அரசர்கட்கும் வானுலகில்வாழுகின்ற தேவர்கட்கும் மற்றைத் திக்குப்பாலர்கட்கும் முனிவராயுள்ளா ரனைவருக்கும் எம்பெருமானின் திருமணம் நாளையென் றுரையுங்கள் என்றான்.—எ-று. (உஉ)

கந்தக்கடவுண்மணத்தன்மைகழறிவல்லே
யிந்தப்பொருப்பினிடையாவருமீண்டும்வண்ணந்
தந்திட்டிடுங்களெனவாசவன்சாற்றலோடு
மந்தக்கணத்திற்றொழுதொற்றரகன்றுபோனார்.

(இ-ள்.) கந்தக்கடவுளின் *திருமணத்தன்மையை யுரைத்து விரைவாக இம்மலையினிடத்தில் அனைவரும் வந்து சேரும்வண்ணம் செய்யுங்களென்று இந்திரனுரைத்தவுடனே அப்பொழுதே அவனை வணங்கி அத்தூதுவர்கள் திருமணத்திறஞ்செப்பச் சென்றார்கள்.—எ-று. (உ௩)

வேறு.

போனபொழுதிற்புலவர்செம்மல்புலன்மிக்க
வானவர்கள்கம்மியனைவல்லையில்விளித்துக்
கானமர்கடம்புபுனைகாளைதன்மணத்துக்
கானசெயன்முற்றுறவமைத்தியிவணென்றான்.

(இ-ள்.) தூதர் சென்றவுடனே தேவராசன் அறிவின் மிகுந்த தேவர்கள் தச்சனை விரைவாக வழைத்து மணம்பொருந்திய கடம்பலர் மாலையணிந்த குமரப்பெருமானின் திருமணத்துக்காக வேண்டுங் காரியங்களை இவ்விடத்துச் செய்யக்கடவையென்று கூறினான்.—எ-று. (உச)

புலவனதுளங்கொடுபொருப்பினொருசாரி
னிலமிசைவரைப்பகனிதிக்கொடுவிதித்துக்
குலமணிகுயிற்றிநனிகோலமதியற்றி
வலனுயர்சிறப்பினொருமண்டபமமைத்தான்.

(இ-ள்.) தெய்வத்தச்சன் அம்மொழியை உள்ளத்திற்கொண்டவனாய் அம்மலையினொருபுறத்திற் பூமியில் அளவற்ற பொன்னினாலிடமமைத்து சிறந்தச் மணிகளால் வேலைப்பாடுறச்செய்து அழகுறுத்தி வெற்றியின் மிக்க சிறப்புவாய்ந்த ஒரு திருமண மண்டபம் இயற்றினான்.—எ-று. (உ௫)

மேலைநிலமுற்றுறவிதானவகைபோக்கி
மாலையொடுபல்கவரிவான்றுகில்கடேக்கி
யாலயநனந்தலையிலாறுமுகன்வைக
நூலின்முறைநாடியொருநோன்றவிசமைத்தான்.

(இ-ள்.) மேற்புறமுழுதும் பட்டுவிதானங்கள் செய்து பூமாலைகள் பலவன்னச்சாமரங்கள் உயர்ந்த சித்திரவஸ்திரங்கள் முதலியன தொங்கவிடுத்து அம்மணமண்டபத்தின் மத்தியில் சண்முகப்பெருமானெழுந்தருளி இருத்தற்குச் சிற்பநூன்முறையை ஆராய்ந்து ஒரு பெரிய பீடமொன்றமைத்தனன்.—எ-று. (உ௬)

வேதநெறிதந்திடுவிசாகனயல்வந்த
மாதவன்விரிஞ்சன்முதல்வானவர்கள்யாரு
மெதிலரும்வைகவியல்கின்றவிடைதோறு
மாதனம்வரம்பிலவமைத்தனனிமைப்பில்.

(இ-ள்.) வைதீகமார்க்கத்தினை உலகினிலுண்டாக்கிய குமரப்பெருமானுடன் வந்துள்ள திருமகள் கணவனான விண்டுமூர்த்தி பிரமதேவன் முதலிய தேவர்கள் அனைவரும் பிறரும் இருத்தற்குத் தகுந்த இடங்கள்தோறும் அளவற்ற ஆசனங்களை விரைவிலுண்டாக்கினான்.—எ-று. (உ௭)

மன்றல்பயில்கின்றவதுவைக்களன்மருங்கிற்
குன்றுபுரைபல்சிகரகோபுரம்வகுத்தா
னன்றிமணிமண்டபமளப்பிலவமைத்தா
னின்றியமையாப்பொதுவுமெண்ணிலவிழைத்தான்.

(இ-ள்.) திருமண நடக்கும் அம்மணப்பந்தரின் பக்கத்தில் மலையனைய பல சிகரங்களையுடைய கோபுரங்களை உண்டாக்கினான். அவையன்றியும் அளவற்ற அரதன மண்டபங்களை இயற்றினான். இவையன்றி இருந்தே தீரவேண்டிய பொதுமண்டபங்களையும் அளவற்றனவாக இயற்றினான்.—எ-று. (உ௮)

காலம்வரையாதுகருதுற்றபொழுதெல்லாஞ்
சாலவெவர்கண்ணுநனிதம்பயன்வழங்குஞ்
சோலைமலர்வாவிகள்சுனைத்தொகைதொகுத்தா
னேனும்வதுவைக்குரியவேண்வுமளித்தான்.

(இ-ள்.) விரும்புவோர்க்குக் கொடுக்கத் தரவேண்டுங்காலம் இன்ன தென்பதனைக்குறியாது நினைத்தபொழுதெல்லாம் எவ்விடத்திலும் மிருதியாகத்தனது பலவிதப் பொருள்களையுமளிக்கின்ற சோலைகள், மலர்வாவிகள், சுனைத்தொகைகள் முதலிய ஒருங்கே அமைத்தனன். அன்றியும் பொருந்திய அத்திருமணத்துக்கு வேண்டுவன அனைத்தையும் உண்டாக்கினான்.—எ-று. (உ௯)

அவ்வகையெலாம்புலவனங்ஙனம்வகுப்புச்
செவ்விதுதெரிந்துவகைசெய்தமரர்செம்மன்
மெய்வதுவையாற்றும்வழிவேண்டுகரணங்க
ளெவ்வெவையுமங்கணொரிமைப்பில்வருவித்தான்.

(இ-ள்.) அவ்வாறெல்லாம் தெய்வத்தச்சன் அவ்விடத்திற் செய்யாநிற்ப முறையே அவைகளைக்கண்டு தேவராசன் மகிழ்வுற்று உண்மையான திருமண நடத்துங்காலத்து வேண்டிய உபகரணங்க ளனைத்தினையும் அவ்விடத்துக்கொரு இமைப்பொழுதில் அழைப்பித்தான்.—எ-று. (௩௦)

தேவர்கள்முதல்வன்றனதுசெய்கையிதுநிற்க
வேவலரிசைத்திடலுமிவ்வதுவைகாணக்
கோவியல்புரிந்தமுசுகுந்தனெனுநேமிக்
காவலன்வரும்பரிசுகட்டுரைசெய்கிற்பாம்.

(இ-ள்.) திருமண நிமித்தம் மண்டபமாதிய முயன்றமைப்பித்த தேவராசனுடைய இச்செய லிவ்வாறிருக்கத்தூதர்சென்று கூறியவுடனே இத்திருமண தரிசனஞ்செய்வான் உலகில் அரசுமுறை செலுத்திய ஆக்கிஞ சக்கரத்தினையுடைய முசுகுந்தனென்னும் அரசன் வருந்தன்மையை உரைப்போமாக.—எ-று. (௩௧)

கல்லருவிதூங்குகயிலைப்பொழிலின்மேனா
ளல்லுறழ்மிடற்றவனுமம்பிகையுமாக
வெல்லையின்மகிழ்ச்சியொடிருப்பமுசுவீட்டம்
வில்லுவமரந்தொறும்வியன்சினையிலுற்ற.

(இ-ள்.) கல்லெண ஒலிக்கும் அருவிஒழுகுகின்ற கைலாய மலைச்சோலையின் முன்னாளில், இருளனையகரிய கண்டத்தினையுடைய சிவபெருமானும் உமாதேவியாருமாக அளவற்ற மகிழ்ச்சி யுடனெழுந்தருளி யிருந்தார்கள் அக்காலத்தில் முசுஎன்னும் ஒருவகைக்குரங்கின் கூட்டங்கள் ஆங்குள்ள வில்லுவமரங்களின் பெரியகிளைகளிலிருந்தன.—எ-று. (௩௨)

முற்றுணர்கருத்தின்முனிவோர்களெனமுள்காந்
துற்றிடுமுசுக்கலையுளொன்றிருவர்மீது
மற்றொருவில்வத்திலைவரம்பிலபறித்துத்
தூற்றிடுவதென்னநனிதூர்த்துளதையன்றே.

(இ-ள்.) அனைத்து முணர்ந்த உள்ளத்தினரான முனிவர்களை யொப்பமுட்கள் விளங்கும் வில்வமரத்தினிலிருந்த முசுக்குழாத்துளொன்று சிவபெருமானும் உமாதேவியாருமாகிய இருவர்மீதும் அளவற்ற வில்வத்திலைகளைப்பறித்துத் தூர்த்து நிறைக்குமாறுபோல மிகவுந் தூர்த்தன. எ-று, அன்று-ஏ-அசைகள்.—எ-று. (௩௩)

தூர்த்ததொருகாலைதனிற்சுந்தரிபொறுளாய்ச்
சீர்த்திடலுமாங்கவள்செயற்கைதனையண்ணல்
பார்த்துநமையீண்டுவழிபட்டுளதுதன்னை
வேர்த்திடுவதென்னிதுவிடுத்தியினியென்றான்.

(இ-ள்.) அங்ஙனம் வில்வவிலைகளைத் தூர்த்தவுடனே உமாதேவியார் திருவுளத்துப் பொறுமையுடனிராமற் கோபங்கொள்ளுதலும் அவ்வுமாதேவியாரின் அச்செயலினைச் சிவபெருமான் திருக்கண்சாத்தி அருளி, நம்மை இவ்விடத்து அருச்சனைபுரிந்த அம்முசுவின்மீது கோபங்கொள்ளுவதென்னை இனிஅக்கோபங்கொள்ளுதலை நிறுத்துகென்றருளிச் செய்தனர்.—எ-று. (௩௪)

என்றிடலுமப்பிகையிகற்சினமிலாளாய்
நன்றருள்புரிந்திடலுஞானவடிவானோன்
வன்றிறன்முசுக்கலைமனத்திருளகற்றி
யொன்றியமர்வாலுணர்வொருங்குதவினானல்.

(இ-ள்.) என்று திருவாய் மலர்ந்தருளிய உடனே உமாதேவியார் பகையுங் கோபமுமின்றிச் செவ்வனே கருணைகாட்டினார். அப்பொழுதுஅறிவேவடிவான சிவபெருமான் வன்மையின் மிக்க அம்முசுச்சாதி ஆண்குரங்கின் மனதின்கண் அமைந்துகிடந்த அஞ்ஞான இருளினை ஒழித்துப் பொருந்தியிருக்கின்ற நல்லுணர்ச்சியை உடனே கொடுத்தருளினார்.—எ-று. (௬௫)

மெய்யுணர்வுசேர்தலும்வியன்சினையினின்று
மொய்யெனவிழிந்துமுசுவுட்குவரலெய்தி
யையனையுமாய்தனையுமார்வமொடுதாழ்ந்து
பொய்யடியனேன்பிழைபொறுத்திரெனலோடும்.

(இ-ள்.) உண்மை யுணர் வுண்டான வுடனே அம்முசுக்கலை அச்சத்துடன் பெரிய அவ்வில்வக் கிளையினின்றும் விரைந்திறங்கி அப்பனும் அம்மையுமான சிவபெருமானையும் உமாதேவியாரையும் அன்புடன் வணங்கிப் பொய்யடியனான என்னுடைய குற்றத்தினை மன்னித்தருள்வீராக என்றிரந்து வேண்டிக்கொள்ளுதலும் எ-று.

பிழையிதெனவச்சமொடுபேசலெமையீண்டே
விழுமியதொர்கூவிளையின்மெல்லிலைகளிட்டு
வழிபடல்புரிந்தனைமனுக்குலமுதித்து
முழுதுலகையாளுகெனமுன்னவன்மொழிந்தான்.

(இ-ள்.) இம்மொழிகளைக்கேட்ட முதல்வரான சிவபெருமான் அம்முசுவைக் கடைக்கணித்து நீசெய்தது தவறென அச்சத்துடன்பேசாதே நீ இவ்விடத்திலெங்களை உயர்ந்த வில்வபத்திரங்களா லருச்சித்துப் பூசித்தனை ஆதலின் மனுவமிசத்திற்பிறந்து உலகமுழுமையும் அரசாள்வாயாக எனச்சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளினர், எ-று.

வேறு.

அம்மொழிதேர்தலுமாயதொர்கள்வன்
கைம்மிகலுற்றகலங்களுரெய்தி
விம்மியிரங்கிவிதிர்ப்பொடெழுந்தே
யெம்மிறைவற்றொழுதிவ்விவைசெப்பும்.

(இ-ள்.) அத்திருவாணையைக்கேட்ட வுடனே அம்முசுக்கலை அளவற்றபெருந்துன்பத்தினதாய் விம்மி நடுக்கத்துடன் எழுந்து எமதிறைவனான சிவபெருமானை வணங்கி இவ்வாறுரையா நிற்கும்.—எ-று. (௬அ)

நுங்களைவைகலுநோக்கியுவப்பா
யிங்குறைகின்றதிகந்துநிலம்போய்
மங்குறுசெல்வவலைப்படுவேனே
லெங்கள்பிரான்பினையெங்ஙனமுய்கேன்.

(இ-ள்.) நாடோறு முங்களைத் தரிசித்துச் சந்தோடத்துடன் இவ்விடத்தில் வாசஞ் செய்வதை விடுத்துப் பூமியிற்சென்று மழுங்கி அழிகின்ற செல்வமாகிய வலையில் அகப்பட்டுக்கொள்வேனானல் எங்கள் பெருமானே பின்னர் எங்ஙனம் உய்வேன் என்று கூறியது. எ—று. (௬௯)

என்னனுமன்னதையெம்மிறைகேளா
நின்னுளநன்றுநிலத்திடைவைகிப்
பின்னிவண்மீள்குதிபேதுறலெய்தி
முன்னலையாதுமுசுக்கலையென்முன்.

(இ-ள்) என்று முசுவுரைத்ததனை எம்பெருமான்கேட்டு முசுக்கலையே நின துளம் நல்லது. நீ பூமியிற்சென்றிருந்து பின்னரிங்கு வரக்கடவை, கலக்கமுற்று வருந் தாதை? என்று திருவாய் மலர்ந்தருளினர்.—எ-று. (௪0)

பொய்ம்மறையானபுலாலுடல்போற்றி
யம்மையில்வாழ்விடையற்றமுறுமே
யிம்முகனேடுறவெற்கருளென்னு
மெய்ம்முசுவின்கலைவேண்டியதன்றே.

இ-ள்.) அவ்வாணையைக்கேட்ட முசுக்கலை எம்பெருமானைப்பார்த்து உண்மை யற்ற பொருளுக் கொளிப்பிடமான புலாலுடலினைக் காத்துக்கொண்டு அப்பிறப்பின் வாழ்வில் அழிந் தொழியாமல் இம்முசு முகத்துடன் பிறந்திருத்தற்கு அடிமைக்கருள் புரிதல் வேண்டும் என்று கேட்டது.—எ-று. அன்று-ஏ அசைகள். (௪௧)

அற்றமிலவ்வரமையனளிக்கப்
பெற்றருள்கொண்டுபெருங்கயிலாயப்
பொற்றையகன்றுபொருக்கெனவிம்பர்
மற்றொர்கணத்தினில்வந்ததுமன்னே.

இ-ள் அழிவற்ற அவ்வரத்தினைச்சிவபெருமா னவ்வாறே யாகுக வென்றளிக் கப்பெற்று அருள்கொண்டு பெரிய கைலாயமலையை விடுத்து விரைவாக ஒருகணத்தி னுள் இவ்வுலகின்கண் அம்முசுகலைவந்தது.—எ-று. மன்-ஓ-அசைகள். (௪௨)

ஆரஞர்மூழ்கியுமாக்கமிழந்தும்
வாரிசுருங்கியும்வாய்மைநிறுத்தித்
தாரணியாளரிச்சந்திரனென்போ
னோர்மருமானெனவேயுதித்தன்றே.

(இ-ள்.) மிக்க துன்பமடைந்தும் தனமிழந்தும் தானியமிழந்தும் சத்திய வசனத்தை நிலைநாட்டி உலகினையாண்ட அரிச்சந்திரனென்பானுடைய ஒப்பற்றவழித் தோன்றலாய் அம்முசுக்கலை பிறந்தது.—எ-று. (௪௩)

மாமுகமேமுசுமற்றுளவெல்லாங்
காமரிலேர்தருகாட்சியதாகிக்
கோமுறைசேர்முசுகுந்தனெனுவோர்
நாமவியற்பெயர்நண்ணியதன்றே.

(இ-ள்.) சிறந்த முகமொன்று மாத்திரம் முசுமுகமாக மற்றனைத்துறுப் பும் மன்மதரிலும் சிறந்த தோற்றத்தினதாகவிளங்கி அரசுமுறை பொருந்தியமுசுகுந்த னென்று இயற்பெயரினை அம்முசுக்கலை யடைந்தது.—எ-று. (௪௪)

ஆயவழிப்படுமம்முசுகுந்தன்
றாயபொலன்முடிதொன்முறைசூடி
மாயிருஞாலவளாகமதுள்ள
தேயமெலாமொர்செகிற்கொடுகாத்தான்.

(இ-ள்.) அவ்வரிச்சந்திரன் வழிவந்த வந்த முசுகுந்தனென்பான் பரிசுத்தமான அழகிய முடியினை முன்னோர் முறைப்படி தரித்து மிகப்பெரிய வுலகின்கண்ணுள்ள தேயமனத்தினையும் ஒரு தோண்மீது கொண்டு காத்தனன்.—எ-று. (சரு)

ஓவறுசீர்க்கருவூரிடைமேவிக்
கோவியலோம்புறுகொள்கையனாகித்
தேவரையேவல்கொள்சீர்கெழுசூரன்.
காவலினாணைகடக்கலனுற்றான்.

(இ-ள்) கெடுதலற்ற சிறப்பினையுடைய கருவூரையடைந்து அரசுமுறை நடத்துங் கொள்கையனாய்த் தேவர்களை யேவல்கொண்ட சிறப்பு மிக்க சூரபன்மன் அரசுமுறையில் அவனாணையைக் கடவாதவனாகி இருந்தான்.—எ-று. (சசு)

சொற்றிறன்மேதகுசூரெனும்வெய்யோ
னுற்றிடும்வைப்பினிலோரிடைதன்னின்
மற்றொரிளம்பிறைவைகியவாபோற்
கொற்றவனாமுசுகுந்தனிருந்தான்.

(இ-ள்.) சொல்லின் திறத்தில் மிக்க சூரபன்மனென்னுஞ் சூரியன் இருந்த இடத்தில் ஒரு பாகத்தில் இளம்பிறை இருந்தாங்கு அரசனாகிய முசுகுந்தன் இருந்தனன்.—எ-று.

சூரனரசினெதிரே முசுகுந்தனரசு சிறியதென்று குறிப்பார் "இளம்பிறை" என்றார். (சஎ)

சூரனையெந்தைதொலைத்ததுகேளா
வாரனார்நீங்கியருஞ்சிறைபெற்ற
மேருவதென்னவியன்மிடல்பெற்றுச்
சீரிறைமாட்சிசெலுத்தியமர்ந்தான்.

(இ-ள்.) சூரபன்மனை எம்பெருமானாகுமரக்கடவுள் அழித்ததனைக் கேள்வியுற்றுத் தானவனாற் பொருந்தி இருந்த துன்பமொழிந்து அழகிய இறகினைப்பெற்ற மேருமலையைப்போல மிக்க வன்மை யெய்திச் சிறப்புடன் அரசுமுறையை நடத்தி இருந்தனன். எ—று. (சஅ)

வேறு.

அமருமெல்லையினரசன்முன்னரே
யிமையவர்க்கிறையேவுதூதர்போய்க்
கமலமன்னபொற்கழல்கள்வாழ்த்தியே
தமதுவன்மையாற்சாற்றன்மேயினார்.

(இ-ள்.) இவ்வாறு முசுகுந்தன் இருக்கின்ற காலத்து அவ்வரச னெதிரிற் தேவர்கட்கரசனான இந்திரனனுப்பிய தூதுவர் சென்று கமலமலர்போன்ற பொன்னங் கழல்களை வாழ்த்தித் தமது வல்லவத்தால் உரைக்கத் தொடங்கினார்கள். எ-று.

உனதுநண்பனாயுறுபுரந்தரன்
றனதுதூதர்யாந்தாவில்சீர்பெறீஇ
நினதுசுற்றமுநீயும்வாழிகே
ளினிதுமங்கலமிசைப்பவெய்தினேம்.

(இ-ள்.) உனது சினேகிதனான இந்திரனுடைய தூதர்கள் நாங்கள் கெடாத சிறப்பு வாய்ந்த உனது சுற்றத்தினரும் நீயும் வாழ்வாயாக. உனக்கு நாங்களினிமையான சுபசோபன முரைக்க வந்துளேம்.—எ-று. (ருo)

அடாததீமைசெய்தமரர்தஞ்சிறை
விடாதசூரனைவீட்டிவேலவன்
வடாதுபூமிவாய்வந்துகூடலின்
குடாதுசேர்பரங்குன்றில்வைகினான்.

(இ-ள்.) தகாத தீமைசெய்து தேவர்கள் சிறையை விடாதிருந்த சூரபன்மனைக் கொன்று வேற்படையாளரான குமரப்பெருமான் மகேந்திரபுரியின் உத்தரபூமியை அடைந்து மதுரையின் மேற்புறத்திலுள்ள திருபரங்குன்றத்தி லெழுந்தருளி இருக்கின்றனர்.—எ-று. (ருக)

கொற்றவேற்படைக்குமரற்கிந்திரன்
றெற்றெனத்தருந்தெய்வயானையை
யிற்றைசென்றபினீகின்றானிது
சொற்றிடும்படி தூண்டினனைமை.

(இ-ள்.) வெற்றி பொருந்திய வேற்படையினையுடைய குமரக்கடவுளுக்குத் தேவராசனான இந்திரன் தனது மகளான தெய்வயானையை இன்று கழிந்தபின் மண மகளாகக்கொடுக்கின்றான் இதனைஉன்னிட முரைக்குமாறெம்மை யனுப்பினான். எ-று.

மாறிலாதவவ்வதுவைகாணநீ
யீறில்சேனையோடெழுந்துதென்றமிழ்க்
கூறுசீர்ப்பரங்குன்றந்தன்னிடைச்
சேறியாலெனச்சிலதரோதினர்.

(இ-ள்.) தவறுதலற்ற வத்திருமண தரிசனத்துக்கு நீ அளவற்ற சேனைகளுடன் பிரயாணமாகி அழகிய தமிழ்வழங்குகின்ற சிறப்புவாய்ந்த திருப்பரங்குன்றத்தை அடைவாயாக வெனத் தேவராசனான இந்திரனனுப்பிய தூதவருரைத்தனர். எ-று

ஓதவன்னவனுவகைசிந்தையின்
மீதுபொங்குறமெய்பனித்தெழீஇத்
தூதரைத்தழீஇச்சோபனம்மிதற்
கேதுமில்லையாவீயுமாறென்றான்.

(இ-ள்.) தேவதூதர்கள் இவ்வாறு கூறுதலும் அச்சோபன மொழிகேட்ட முசுகுந்த மன்னவனுக்குச் சந்தோடமானது சிந்தையின் மேலாகத் தோன்ற சிற்ப உடல் புளக முற்றெழுந்து தூதுவர்களைத் தழுவி இச்சுபசோபனத்தினை உரைத்த உங்களுக் களிக்கத்தக்கது எதுவு மின்றென்று கூறினான்.—எ-று. (ருச)

ஈண்டைமாநிதியாவுநல்குகோ
காண்டகுங்குடைகவரிநல்குகோ
வாண்டிருந்தவென்னரசுநல்குகோ
வேண்டுகின்றதென் விளம்புவீரென்றான்.

(இ-ள்.) இவ்விடத்திலுள்ள சிறந்த நிதியனைத்தையும் அளிக்கவோ, காணுதற் குத்தகுந்த குடையுங் கவரியுமளிக்கவோ? ஆண்டுகொண்டிருந்த எனதரசினை அளிக்கவோ? உங்களுக்கென்னவேண்டுமோ அதனையுரையுங்களென்று கூறினான்.—எ-று.

கோதில்சீர்முசுகுந்தனிந்தவா
றோதுமெல்லையிலுவகையுற்றவ
ணுதாத்தினதளவைநோக்கியே
தூதராயினோர்வியந்துசொல்லுவார்.

(இ-ள்.) குற்றமற்ற சிறப்பினையுடைய முசுகுந்தமன்னன் இவ்வாறு கூறுங்காலத்து மகிழ்வுற்று அவனதாசையினளவைப்பார்த்த தேவதூதராயுள்ளார் அவனைப்புகழ்ந்துரைக்கின்றனர்.—எ-று. (௩௬)

சொல்வினைப்படுந்தூதர்க்கிவ்வெலா
மொல்வதன்றிவையுதவிற்றெக்குமால்
வல்விரைந்துநீவாசவன்முனஞ்
செல்வதேயெனச்செப்பிப்போயினர்.

(இ-ள்.) ஒருவர் கூறியவைகளை அவராற் குறிக்கப்பட்டாரிடஞ் சென்று தவறுதகூறுந்தொழிலினையுடைய தூதுவர்கட்கு நின்னால் அளிக்கவிரும்பும் ஈண்டைமாநிதியும் காண்டகுங்குடையுங் கவரியுமரசுமாதிய பொருத்தமானவையன்றாம் நீ அதிக விரைவாக இந்திரன் எதிரேசெல்லுதலே இவையனைத்தும் எங்களுக்குத் தந்ததற்கு ஒப்பு என்று கூறிச்சென்றனர்.—எ-று. (௩௭)

போயதூதுவர்புவியின்மன்னவ
ராயினோர்க்கெலாமாறுமாமுகச்
சேயவன்மணஞ்செப்பிமாதிர
மேயினோர்க்குமிங்கிதுவிளம்பினர்.

(இ-ள்.) சென்றதேவதூதர்கள் பூவுலகவரசராயினார்க்கெலாம் ஆறுதிருமுகங்களையுடையகுமார சுவாமியின் திருக்கல்யாண மகோச்சவத்தினை உரைத்து திக்குகளில் வாழ்வாருக்கும் இத்திருமணத்திறங்கூறினர்.—எ-று. (௩௮)

அகல்விசும்பிடையல்கலும்படர்
பகலவன்முதற்பகவர்யாவர்க்கு
மிகலின்மாதவரெவர்க்குமிச்செயல்
விகலமின்றியேவிளம்பியேகினர்.

(இ-ள்.) விசாலமான வானத்தில் நாள்தோறுஞ் சஞ்சரிக்கின்ற சூரியன் முதலிய தேவரனைவருக்கும் மாறுபாடான பகைக்குணமற்ற சிறந்ததவமுடையாரனைவருக்கும் இத்திருமணச் செயலினை முற்றிலுமுரைத்துச் சென்றனர்.—எ-று. (௩௯)

வேறு.

ஆயகாலையின்முசுகுந்தனப்பதிதன்னின்
மேயினர்களுந்தன்பெருஞ்சேனையும்வேற்கை
நாயகன்மணங்காணியமுன்னரேநடப்பான்
பாய்மதக்கரிமிசைமுரசறைந்திடப்பணித்தான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் முசுகுந்தன் தனது நகரத்தில் வாழ்வோரும் தன்னுடைய பெரிய சைனியமும் வேற்படையேந்திய திருக்கரத்தினையுடைய குமரவேளின்திருமண தரிசனத்தின் பொருட்டுமுன்னரே செல்லுதற்கு மதமொழுகுகின்ற சுவட்டினையுடைய யானையின்மீது முரசேற்றிப் பறைசாற்றுமாறு கட்டளையிட்டனன்.

அந்தநீர்மையைவள்ளுவன்கருவூரிற்
றந்தியின்மிசையேறியேதனிமுரசறைந்து
முந்துசேர்க்கமலாலயத்தரன்விழாமொழிந்தே
யிந்திரன்பிரிந்திடுதல்போற்றிரிந்தனனிசைத்தான்.

(இ-ள்.) திருமணங்காணச் செல்லுமச்செயலினை வள்ளுவன் பெரியகருவூரெ ன்னுநகரில் யானைமீதேறி ஒப்பற்றமுரசறைந்து முற்பட்ட சிறப்பினையுடைய திருவா ரூரிற் சிவபெருமானின் திருவிழாவையுரைத்து இந்திரன் திரிந்தாங்குத் திரிந்து கூறி னான்.—எ-று, (௬௧)

வேறு.

ஆனதோர்பொழுதிலந்நகரின்மாக்களுஞ்
சேனையின்வெள்ளமுந்திசைகளின்புறம்
போனதோர்பெரும்புறப்புணரிக்கேகுறு
மேனையகடலெனவெழுதலுற்றவே.

(இ-ள்.) பறையறைந்துரைத்த மொழிகேட்ட வப்பொழுதே அக்கருவூரில்வா ழுஞ்சனங்களும் சேனையின் கூட்டமும் திசைகளின் வெளிப்புறத்திலுள்ள பெரும் புறக்கடலுக்குச் செல்லும் மற்றைக்கடல்களையொப்பச் செல்லத்தொடங்கின.—எ-று.

எண்டிசையாற்றுவவிபங்களாதலி
னண்டமுந்தாங்குவானயன்படைத்தென
விண்டொடநின்றிடும்வேழமெண்ணில
கொண்டல்கள்சூழ்பிபோற்குலவச்சென்றவே.

(இ-ள்.) அட்டதிசைகளையுஞ் சுமந்துநிற்பன யானைகளாதலின் அண்டத்தினை யுந்தாங்கு மாறுபிரமனால் படைக்கப்பட்டாற்போல வானமளவுயர்ந்துநின்ற அளவற்ற யானைகள் மேகங்கள் முகபடாம்போல விளங்கச்சென்றன.—எ-று. (௬௩)

வால்கிளர்கற்றையுமதர்வைநோக்கமும்
பால்கிளர்செவிகளும் பழிப்பில்சென்னியுங்
கால்கிளர்செலவுமாய்க்கால்கள்சென்றென
மேல்கிளர்புரவியின்வெள்ளஞ்சென்றவே.

(இ-ள்.) வாற்புறத்து விளங்காநின்ற கவரிக்கற்றையும் மதர்த்தபார்வையும் பக்கங்களில் விளங்காநின்ற காதுகளும் பழிப்பற்றதலையும் கால்தூக்கிவைத்துச் செல் லுஞ் செல்கையுமாகி வாயுக்கள் சென்றாற்போல உயர்ந்து விளங்குகின்ற குதிரைக் கூட்டங்கள் சென்றன.—எ-று. (௬௪)

ஐயிருதிசையினுமணிந்துசெல்வன
கொய்யுளைவயப்பரிக்குழாங்கள்பூண்டன
வெய்யவருதித்தெனவிளங்குகாட்சிய
வையமெண்ணில்லனவையம்போந்தவே.

(இ-ள்.) பத்துத்திசைகளினும் அலங்கரித்துச் செல்வன; புறமயிரினையுடைய வெற்றிக் குதிரைக்கூட்டங்களைக் கட்டப்பட்டன; சூரியபருதித்தாற்போல பிரகாசி யா நிற்குங் காட்சியின வாகிவிளங்கும் அளவற்ற இரதங்கள் பூமியிற்சென்றன.—எறு.

வலிபுணர்யாக்கையர்வயங்கொள்வாகையர்
கொலைகெழுபல்படைக்கூட்டுண்வாட்கையர்
புலியுறழ்மானவப்பொருநராயினர்
தலைவர்கடம்மொடுதழுவிப்போயினர்.

(இ-ள்.) வன்மை பொருந்திய உடலினையுடையாரும் வெற்றியாலணிந்த வா கையினையுடையாருங்கொலைத்தொழில் விளங்குகின்ற பலவாயுதங்களுடன் வாளேந் திய கையினையுடையாரும் ஆகிய புலிபோலும் மனிதப்போர் வீரராயுள்ளார் தமது சேனாதிபதிகளுடன் கலந்துசென்றனர்.—எ-று. (௬௬)

அடல்வலிமானவரங்கையேந்திய
படைவகைமின்னுவபல்லியங்களு
மிடியொலிகாட்டுவவீண்டுதானையுட்
கொடிநிரைவிசும்புதோய்கொண்டலாயவே.

(இ-ள்.) மிக்க வலியினையுடைய போர்வீரர் அழகியகைகளிற் றாங்கிய ஆயுத வகைகள் மின்னலென மின்னுநிற்பன. பலவகை வாத்தியங்களும் இடிமுழக்கத்தினை க்காட்டுவன ஆதலின் நெருங்கிவராநின்ற சேனைகளினுட்புறத்துவிளங்குங் கொடிவரிசைகள் வானிற்படிந்து கிடக்கும் மேகங்களாக ஆயின.—எ-று. (கூஎ)

தாளுறுகழலினர்சரம்பெய்தூணியர்
தோளுறுவில்லினர்தொடையற்குஞ்சியர்
வாளுறுதடங்கணார்மருங்குமன்மத
வேளெனவொருசிலவீரரேகினார்.

(இ-ள்.) காலிற்கட்டிய கழலினராய் அம்புநிறைந்த தூணியினராய் தோளிலிடப்பட்டவில்லினராய்ப் பூமாலையணிந்த சிகையினையுடையராய்வாள்போலுமகன்றகண்களையுடைய பெண்களினருகில் மன்மதனை வேளையொப்ப ஒப்பற்ற சிலவீரர்கள் சென்றார்கள்.—எ-று. (கூஅ)

கறுத்திடுபலகைவாட்கையர்சாலிகை
பொறுத்திடுமெய்யினராகிப்போகுவார்
மறுத்தவிர்மதிமுகமாதர்நாட்டவே
லொறுத்திடுநம்மையென்றுன்னினார்கொலோ.

(இ-ள்.) கருநிறமான கேடகமும் வாளுமேந்திய கையினரும் கவசமிட்ட உடலினருமாகிச் செல்பவர்கள் களங்கமற்ற சந்திரவதனியர்களான பெண்களின் கண்களாகிய வேலாயுதங்கள் நம்மைவருத்துமென் நினைத்தார்களோ?—எ-று. (கூகூ)

அடைந்திடுதுன்பெலாமாற்றியம்புவி
மடைந்தைமுன்செய்திடுமாதவத்தினாற்
றொடர்ந்திடுபிடியினந்தொலையப்பூமிசை
நடந்தனர்வரம்பிலாநகைமென்கொம்பனார்.

(இ-ள்.) தம்மையடைந்த துன்பமனைத்தையுஞ் சகித்துப் பூமிதேவி முன்னர்ச் செய்த தவத்தினாற் றொடர்ந்து வராநின்ற பெண்யானைகள் பின்னிடப்பூமிசைநடந்தனர் அளவற்ற அலர்ந்த பூங்கொம்பனைய மடந்தையர்.—எ-று. (எ0)

ஏரகன்மணந்தனக்கெய்துமாசையால்
வாரகமுலையுடைமடந்தைமார்பலர்
பாரகமலிதரப்பரவிப்போயினார்
தாரகைவிண்ணெறிபடருந்தன்மைபோல்.

(இ-ள்) அழகு மிகுந்ததிருமணத்துக்குப் போகவேண்டுமென்னும் விருப்பத்தினால் கச்சிட்டார்த்த கனதன பாரத்தினையுடைய பலபெண்கள் நட்சத்திரங்கள் வானவழியிற்சென்றாங்கு பூமியினிடமெல்லா நிறையப்பரவிச் சென்றனர்.—எ-று. (எக)

இடையிடைகால்களும்யாறுஞ்சேர்தலிற்
படிமிசைநடந்திடுபாவைமார்களை
விடலைகளேந்தியேமெல்லவேகினார்
கடலினும்பெரியதாங்காமமூழ்குவார்.

(இ-ள்.) கடலினும் பெரியதான காமத்தின் முழுகிக்கிடக்கும் வாலிபர்களிற் பலர் இடையே இடையே வாய்க்கால்களும் ஆறுகளும் இருத்தலாற் பூமியின்நடக்கும் பெண்களைத் தோளிற்சுமந்தவர்களாக மெல்லெனச் சென்றார்கள்.—எ-று. (எ௨)

தந்திகளின்மிசைத்தையலாருடன்
மைந்தர்களேகினார்மாநிலந்தனி
லந்தமில்சீரயிராணிதன்னொடு
மிந்திரர்போவதோரியற்கைபோலவே.

(இ-ள்.) பெரியவிந்தப்பூமியில் அளவற்ற இந்திராணியருடன் இந்திரர்சென்றாங்கு கொம்புகளையுடைய ஆண் யானைகண்மீது பெண்களுடன் புருடர்கள் சென்றார்கள்.—எ-று. (எ௩)

அதிர்குரற்றேர்களிலரிவைமாருடன்
கதுமெனப்போயினர்கணிப்பில்காளையர்
மதிமுகத்தாருடன்வரம்பில்வெய்யவர்
முதுவரைச்சிகரமேன்முடுகிச்சென்றென.

(இ-ள்.) அதிருகின்ற குரலினவான இரதங்கண் மிசை சந்திர வதனியர்களான அனேகம்பெண்களுடன் அனேகம் சூரியர்கள் சென்றாற்போல அனேகம் பெண்களுடன் புருடர்கள் சென்றார்கள்.—எ-று. (எ௪)

கூற்றினைவென்றிடுங்கொலைக்கணார்சில
ரேற்றமில்பிடிமிசையேறிப்போந்தன
ராற்றலதின்மையாலவர்நடைக்குமுன்
றோற்றனநாணியேசுமத்தல்போன்றவே.

(இ-ள்) எமனைவெல்லுகின்ற கொலைத்தொழிலினையுடைய கண்களினரான பெண்கள் சிலர் உயர்ச்சியற்றபிடி யானைகண்மீது ஏறிச்சென்றனர். வன்மையின்மையால் அவர்நடைக்கு முன்னரேதோற்று நாணமுற்று அவர்களைச் சுமப்பனபோன்றன அவ்யானைகள்.—எ-று. (எ௫)

காமருகொங்கையாற்கரிமருப்பினை
யேமுறவென்றுளர்யானைக்கோடுகண்
மாமருங்கடைதலுமருண்டங்கோடினார்
தாமுதற்செய்வினைதம்மைச்சூழ்ந்தென.

(இ-ள்.) அழகு பொருந்திய கொங்கைகளால் யானைக்கொம்பினை இன்பமுண்டாகவென்ற பெண்கள் யானைகளின் கொம்புகள் அருகில் வருதலும் மருட்சியுற்றுத் தாம் முன்னர்ச் செய்தவினை தம்மையே சூழ்ந்தாங்கு ஓடினார்கள்.—எ-று. (எ௬)

விரிதருசேனையில்விண்ணிற்பாய்தரு
பரிகளின்மடந்தையர்பலரங்கேகினார்
கரையறுமமரர்கள்கடைந்தபாற்கடற்
றிரைதனில்வருபலதிருவைப்போலவே.

(இ-ள்.) அளவற்ற தேவர்களாற் கடையப்பெற்ற பாற்கடலின் அலைகளிற் தோன்றிய பலதிருமாதரையொப்ப அகன்றசேனை சமுத்திரத்தில் வானத்தினைநோக்கித்தாவுகின்ற குதிரைகண்மீது அனேகம் பெண்கள் ஏறிச்சென்றனர்.—எ-று. (எஎ)

மேகமதுற்றிடுமின்னின்மீமிசைப்
போகியசிலையொடும்போந்ததன்மைபோற்
பாகினையன்னசொற்பாவைமார்நர
வாகனமவைகளின்மருவியேகினார்

(இ-ள்.) மேகங்கள் தம்மிடத்திற்பொருந்திய மின்னலின்மேற்புறத்துத்தோன்றிய இந்திரதனுசுடன் காணப்பட்டாற்போல வெல்லப்பாகுபோன்ற சொல்லினராகிய பெண்கள் நரவாகனங்களான மேனா பல்லக்கு முதலியவைகளிலேறிச் சென்றனர்.—எ-று. (௭௮)

அவிகையின்முழுமதியளிப்பபல்பொறி
குவிகையிலம்புயங்குலவிச்சென்றெனக்
கவிகையிலாதபங்கரப்பமூடுபொற்
சிவிகையிலேகினார்தெரிவைமார்சிலர்.

(இ-ள்) கெடாதபூரண சந்திரர்களாற் காக்கப்பட்ட அனேகம் இலக்குமிகள் விரிந்தகமலமலர்மீது விளங்கியிருந்து சென்றாற்போல சந்திரவட்டக் குடையினால் வெயின்மறைய மூடப்பெற்ற பொன்னஞ்சிவிகைகளிற் சிலபெண்கள் சென்றார்கள்.—எ-று. (௭௯)

வேறு.

பரதனங்கவருமல்குற்பரத்தையர்தம்மைப்பாரா
விரதநன்முனிவர்தாமும்வேதியர்பலருமீண்டிச்
சுரதநண்புடையராகுங்கணிகையர்தோளாற்றாளா
லுரதனந்தன்னாற்றாக்கவுளைந்துளைந்தொதுங்கிப்போனார்.

(இ-ள்.) அயலாருடைய செல்வங்களை அபகரிக்கின்ற அல்குலினையுடைய சேரிப்பரத்தையர்களைக் கண்ணாலும் பாராத விரதத்தினையுடைய நல்லமுனிவர்களும் பிராமணர்கள் பலரு நெருங்கிச்சுரதத்தில் விருப்பமுள்ள கணிகையர்களின் தோள்களாலும் தாள்களாலும் தாக்குதலுற வருந்தி வருந்தி விலகிச் சென்றனர்.—எ-று, ()

வேண்டியமாற்றங்கொள்ளாள்வெகுண்டுசென்றிடுவாண்முன்ன
மாண்டொருமதமால்யானையடர்த்துவந்திடலுமஞ்சிப்
பூண்டிடுபுலவிநீங்கக்கணவனைப்புல்லிக்கொண்டா
ளீண்டருதோளினானுமிபத்தினைத்தொழுதுநின்றான்.

(இ-ள்) தன்னால்உசிதமானதாக உரைக்கப்பெற்ற சொல்லினைகேளாளாய்க் கோபங்கொண்டு செல்வாளாகிய மாதொருத்தியி னெதிரில் ஒரு மதமயக்கமுடைய யானை நெருங்கி வருதலும் அதனாற் பயந்து தான் கொண்டிருந்த பிணக்கினை விடுத்துத்தனது நாயகனைக்கட்டி யணைத்துக்கொண்டாள். அதுகண்ட தூணனைய தோளினையுடைய அவள் கணவனும் அவ்யானையை வணங்கி நின்றான்.— எ-று. (௮௧)

ஏமருங்கலாபமஞ்ஞையினமெனச்செல்லுமாதர்
மாமருங்கிறுங்கொலிற்றான்மதனரசிறக்குமென்றே
காமருங்கவற்சிகொள்ளக்கரத்தினாலவரைப்புல்லித்
தாமருங்காகப்போனார்தார்முடியிளையரானோர்.

(இ-ள்.) மிக்க களிப்புற்ற தோகையினையுடைய மயிலின் கூட்டத்தை யொப்பச்செல்லாநின்ற பெண்களின் சிறந்த இடை யொடியுமோ ஒடிந்தால் மன்மதனுடைய அரசழியும் என மன்மதர்களுங் கவற்சியுறுமாறு மாலையணிந்த முடியினையுடைய வாலிபர்கள் கைகளாலும் மாதர்களை அணைத்தவர்களாகச் சென்றார்கள். (௮௨)

கணவன்றன்பிழையையுன்னிக்கனன்றிடுங்கணவன்றேளை
யணைவுறுநீர்மையுன்னியழுங்குறுமமலமூர்த்தி
மணவினைதன்னையுன்னிமகிழ்ந்திடுமிவ்வாறுகிப்
புணர்கயிற்றாசல்போலும்புந்திகொண்டொருத்திபோனுள்.

(இ-ள்.) தனது நாயகனது குற்றத்தினை நினைத்துச் சீற்றங்கொண்டாளாயும் கணவனுடைய தோள்களைச் சேரப்படாத தன்மையை நினைத்து வருந்துவாளாயும் நின்மல சொரூபரான குமார சுவாமியின் திருக்கலியாண மகோற்சவ தரிசனத்தைக் குறித்து மகிழ்ச்சியுற்றவளாயும் இவ்வண்ணம் பின்னப்பட்ட ஊசற்கயிறுபோல நிலையற்ற உள்ளத்தினளாகி ஒரு மாது சென்றனள்.—எ-று. (அஙு)

கையிலார்கைகள்பெற்றுங்காலிலார்கால்கள்பெற்று
மொய்யிலார்மொய்கள்பெற்றுமூங்கைகண்மொழியப்பெற்று
மையல்சேர்குருடராஞேர்வாள்விழிபெற்றுஞ்சென்று
ரையன்மேலுள்ளம்வைத்தார்க்கனையதோவரிதுமாதோ.

(இ-ள்.) கையில்லாதவர்கள் கைகளைப்பெற்றும் கால்கள் இல்லாதவர்கள் கால்களை உடையராகியும் வன்மை யற்றவர்கள் வன்மையுடையவர்களாகியும் ஊமைகள் பேச்சுடையவர்களாகியும் மயக்கம்பொருந்திய குருடர்கள் ஒளிபொருந்திய கண்களுடையராகியுஞ் சென்றார்கள். சுவாமியான குமரக்கடவுண் மீதுள்ளம் வைத்தவர்களுக்கு அவையோ அரியவானவை.—எ-று. (அச)

விடந்தருவேற்கணல்லாள்வெளிப்படுகொங்கைதன்னைப்
படந்தனின்மறைத்தலோடும்பாங்கிலோர்காளைபாராத்
தொடர்ந்தனனவள்பின்போனுன்றுணைமுலைப்படத்திற்சிக்கிக்
கிடந்ததன்மதியைமீட்கக்கிலேசமோடேகுவான்போல்.

(இ-ள்.) விடதைலம் பூசப்பெற்ற வேற்படையனைய கண்களையுடைய ஒரு மாது வெளியே காணநின்ற தனங்களை ஆடையுண் மறைத்தலும் அதனை அருகிற் சென்ற ஒரு இளைஞன் பார்த்து அவள் பின் இணைமுலையாடையுட் சிக்கிக்கிடந்த தன் மனத்தினைத்திருப்பிக் கொள்ளுதற்கு வருத்தத்துடன்போவானையொப்பத்தொடர்ந்து சென்றான்.—எ-று. (அரு)

நெய்தலுங்கமலப்போதுநீலமுநெடுநீர்ப்பொய்கை
கொய்தனர்குமரராஞேர்கொடுங்குழைமடந்தைமார்தங்
கைதனிற்கொடுத்துச்செல்வார்கன்னிமீரிவையோநுங்கண்
மைதிகழ்விழிக்குத்தோற்றமலரெனக்காட்டுவார்போல்.

(இ-ள்.) நெய்தன்மலரும் தாமரைமலரும் நீலோற்பலமும் மிக்கநீரினையுடையபொய்கைகளினின்றுங்கொய்து இளைஞராஞேர் பெண்காள் இவைகள்தாமே உங்களுடைய ஒளிவிளங்குகின்ற கண்களுக்குத்தோற்ற மலரென்று காட்டுவாரையொப்ப வளைவான குழையென்னுங் காதணிஅணிந்த பெண்களின் கைகளிற் கொடுத்துச் செல்லாநிற்பர்.—எ-று. (அசு)

அரிசனமேனிநல்லாளணிதுகிலசைவின்சிராற்
கரிசனமன்னகொங்கைகாண்டலுந்தளர்ந்தோர்காளை
தெரிசனந்தன்னிலீதென்சிந்தையைப்பிணித்ததென்றுற்
பரிசனந்தனிலென்னுமோவென்றுயிர்பதைத்துநின்றான்.

(இ-ள்.) மஞ்சட் பூச்சினையுடைய ஒருமாதின் அணியப்பட்ட மேலாடையின் அசைவினல் யானைக்கோடுபோன்ற கொங்கைகள் காணப்படுதலும் தளர்வுற்று ஒருவா

ியன் தெரிசனத்தினாலேயே இக்கொங்கையானது என் சிந்தையைத் தன்வசமாகக் ட்டிக்கொண்டதாலுல் பரிசிப்பதனுல்யாதாமோ என்றுஉயிர்பதைப்புற்றுநின்றனன்.

கற்பகவல்லியன்னாளொருத்திதன்காதன்மூழ்கி
யற்பகலேவல்செய்வானுங்கவள்செல்லும்போதிற்
பொற்புறுபடாத்தினீங்கிப்பூண்முலைசிறிதுதோன்றப்
பற்பகனோற்றுவேண்டும்பரிசில்பெற்றாரையொத்தான்.

(இ-ள்.) காமவல்லிக்கொடி போன்ற அழகிய வுருவினளான ஒரு மாதின் மூசையினுன் மயங்கி இரவும்பகலும் அவளுக்கே ஏவல்செய்பவன் அவள் போகுங்கால து அழகுபொருந்திய ஆடையினின்றும் விலகி இளமுலைகள் சிறிதே வெளிப்படுத யும் அனேககாலந்தவஞ்செய்து தாம்விரும்பிய பொருளினை அடைந்தவர்களையொத்த னுன்.—எ-று. (அஅ)

ஒப்பிலாவொருவேற்காளையொள்ளெயிற்றாறுதாங்கித்
துப்புறுபவளச்செவ்வாய்திறக்கலள்சொல்லுமாடா
ளெப்படியொருத்திசெல்லவநங்கவேளமுதம்வைத்த
செப்பினிற்குறியுண்டாங்கொறிறக்கலீர்சிறிதுமென்றான்.

(இ-ள்.) ஒப்பற்ற வேற்படைதாங்கிய ஒரு வாலிபன் தனது ஒள்ளிய பற் நறிபட்டுச் செந்நிறமான பவளம்போலும் சிவந்தவாய் திறவாளாய்ப் பேசுதலும் இல் லாளாய் ஒருமாது செல்லாநிற்ப மன்மதனுடைய அமுதம் வைத்துள்ள செப்பினில் முத்திரைகளுளவோ சற்றுந்திறவாதீர் என்று கூறினான்.—எ-று. (அகூ)

புடைதனிலொருத்தல்புல்லப்போவதோர்பிடியின்மேவு
மடவரல்வெருவலோடுமற்றதுகண்டோர்வள்ள
லிடையகறேருமாவும்யானையும்படையுங்கொண்டீர்
கடகரியொன்றற்கஞ்சுங்காரணம்யாதோவென்றான்.

(இ-ள்.) அருகில் ஆண்யானைகளுடன்வரச்செல்லும் பெண்யானைமீது சென்ற ஒரு இளமாது ஆண்யானையைக் கண்டஞ்சுதலும் அதனைக்கண்டஒரு வள்ளலான புருடன் அப்பெண்மகளைப்பார்த்து நடுவகன்ற தேரும் குதிரையும் யானையும் வில்ல ம்பு முதலிய ஆயுதமும் கொண்டுள்ளநீவிர் ஒரு மதயானைக்கஞ்சும் காரணமென்னை யோ வென்றான்.—எ-று. (கூ0)

ஆழியிலமுதம்பொங்கியலையெறிந்தொழுகிற்றென்ன
வேழிசைநரம்புகொண்டமகரயாழிசையப்பண்ணி
வேழமுந்தேருமூர்ந்துவிறலியரோடுபாணர்
நீழலும்பருந்துமென்னநெறிப்படவிசைத்துப்போனார்

(இ-ள்.) பாலாழியில் அமுதமானது பொங்கி அலைவீசி யொழுகினாற்போல ஏழிசைநரம்புகளையுடைய மகரயாழினைப்பொருந்து மாறமைத்துயானையுந்தேருமேறி ப் பாடன்மகளிருடன் பாணர்கள் பருந்து மதன்நிழலும்போல முறைப்படி விரை வாகச் சென்றார்கள்.—எ-று. (கூக)

வெங்கரிநுதலிலப்பும்வீரசிந்துரம்வில்வீச
மங்கையர்மைந்தர்பூணும்படைகளுநம்வயங்கமாடே
தொங்கலுங்கவிகைக்காடுந்துவசமுமிருளைச்செய்யக்
கங்குலும்பகலுமாலைக்காலமும்போலுமாதோ.

(இ-ள்.) வெவ்வியயானையின் நெற்றியிலப்பியுள்ள இங்குலிகக் குழம்பு செவ்வொளிகாட்டவும் பெண்களும் புருடர்களும் அணிந்த ஆபரணங்களும் ஆயுதங்களும் விளங்காநிற்பவும் பக்கங்களில் பீலிக்குடைகளும் வெள்ளைக்குடைகளும் கொடிகளும் இருளைச்செய்யவும் இரவும் பகலும் மாலைக்காலமும்போல விளங்கியது மணங்காணியசெல்வார் செல்லுநெறிகள்.—எ-று. (௬௨)

கொக்கரைபடகம்பேரிகுடமுழாக்கொம்புகாளந்
தக்கைதண்ணுமைதடாரிசல்லரிநிசாளந்தாள
மெய்க்குழறுடியேபம்பைவேறுபல்லியமுந்தாங்கி
மைக்கடல்வாய்விட்டென்னவரம்பிலோரியம்பிப்போனார்.

(இ-ள்.) சங்கங்கள் படகங்கள் பேரிகள் குடமுழாக்கள் கொம்புகள் காளங்கள் தக்கைகள் தண்ணுமைகள் தடாரிகள் சல்லரிகள் நிசாளங்கள் தாளங்கள் குழல்கள் துடிகள் பம்பைகள் முதலியவும் இவையன்றியுள்ள பிறவாத்தியங்களையும் கருங்கடல் இரைந்தாலொப்ப அளவில்லாதவர்கள் முழக்கிச்சென்றார்கள்.—எ-று. (௬௩)

ஆரணமுனிவர்தாமுமமரருமகல்வான்செல்வார்
சீரணிமுசுகுந்தன்மேற்றிருமலர்சிதறலுற்றார்
காரணமில்லாவள்ளல்கடிமணந்தாமுங்காண்பான்
றாரணிதன்னிற்செல்லுந்தாரகாகணங்கொலென்ன:

(இ-ள்.) அகன்ற வானவழியே செல்வாராகிய வேதமுணர்ந்த முனிவர்களும் தேவர்களும் காரணமற்ற வள்ளலான குமரக்கடவுளின் திருமணத்தினைத் தாமுங் காணுதற்குப் பூமியிலிறங்கிச்செல்லு நட்சத்திரகூட்டங்களையொத்து விளங்குமாறு சிறப்பினையுடைய முசுகுந்த மன்னன்மீது அழகியமலர்களை இறைத்தனர். எ-று. (௬௪)

இன்னனசனங்களீண்டியெங்குமாயேகுமெல்லைத்
தன்னுறகிளைஞர்தாமுந்தந்திரக்கிழவர்யாரு
முன்னெடுபின்னும்பாங்குமொய்த்துடன்செல்லத்தானோர்
பொன்னெடுந்தேர்மேல்கொண்டுமுசுகுந்தன்போதலுற்றான்.

(இ-ள்.) இவ்வாறு சனங்கள் நெருங்கி எங்குமாகச்செல்லுங்காலத்துமுசுகுந்த மன்னன் தனது உரிமைச்சுற்றத்தினரும் சேனாபதிகளாவாரனைவரும் முன்னும் பின்னும் பக்கமும்நெருங்கி உடனவரா நிற்பத்தானொரு பொன்னாலாகிய அழகிய இரதத்தின்மீது சென்றனன்.—எ-று. (௬௫)

வேறு

அடவியுமிகந்தனன்கணிநாட்டிடை
னிடையிடையடுக்கலும்யாறுநீங்கினன்
படர்தலுமவன்வழிப்பரிதிநாயக
னடுவுறுமுச்சிமேனண்ணினனரோ.

(இ-ள்.) அம்முசுகுந்த மன்னவன் காடுகளையும் மருத நிலங்களையுடைய நாடுகளையும் இடையேஇடையே காணப்படுகிற மலைகளையும் யாறுகளையுங்கடந்து செல்லுதலும் அவ்வரசன் வங்கிச முதல்வனான சூரியன்வான நடுவதான உச்சிக்காலத்தினை அடைந்தனன்.—எ-று. (௬௬)

அண்ணலம்படைகளுமளப்பின்மாக்களு
முண்ணெகிழுவகையொடொல்லைவந்திடத்
தண்ணிழல்வெண்குடைத்தரணிகாவலன்
பண்ணவன்மேவுறுபரங்குன்றெய்தினான்.

(இ-ள்.) பெருமைவாய்ந்த சேனைகளும் கணக்கற்ற பிறமனிதர்களும்உள்ளே விளங்காநின்ற சந்தோடத்துடன் உடன்வரா நிற்பக் குளிர்ந்த நிழலைத்தருகின்றவெள்ளிய குடையினையுடைய முசுகுந்த மன்னவன் குமரப்பெருமானெழுந்தருளிஇருக்கும் திருப்பரங்கிரியை அடைந்தனன்.—எ-று. (கூள)

முசுமுகமுடையவன்முன்னர்வந்துழி
வசுமதியிறைபுரிமன்னரேவரு
மசைவறுதிருவொடுமணிகந்தன்னொடுந்
திசைதொறுந்திசைதொறுஞ்சென்றங்கெய்தினர்.

(இ-ள்.) முசுகுந்த மன்னவன் முன்னர் வந்தவுடனே பூமியையாளும் மற்றைய அரசரெவரும் கெடாதசெல்வத்துடனும் சேனைகளுடனும் நாலுதிசைகளின் வழியாகச்சென்று அப்பரங்கிரியை அடைந்தனர்.—எ-று. (கூஅ)

முறைநெறியாற்றிடுமுசுகுந்தன்முத
லிறையவர்யாவருமீண்டுதானையுங்
குறைதவிர்சனங்களுங்குன்றஞ்சூழ்ந்துற
நிறுவினரொன்றியநெஞ்சங்கொண்டுளார்.

(இ-ள்.) அரசுமுறையை நடத்துகின்ற முசுகுந்தன் முதலிய அரசரனைவரும் அன்னோருடன் நெருங்கிவந்த சேனைகளும் குறைவறவந்த மற்றைச்சனங்களும் சிநேக பாவம் மாறாதமனதினராய் அம்மலையைச் சூழத்தங்கினார்கள்.—எ-று. (கூகூ)

புழையுறுகரங்களாற்போதகஞ்சில
வுழையவருபிடிதனக்கும்பர்தாருவின்
குழைகளைமுறித்தனகொடுத்துக்கோட்டினான்
மழைமுகில்கிழியேவாரிநல்குவ,

(இ-ள்.) துவாரம் பொருந்திய துதிக்கையினாற் சிலயானைகள் அருகில்வரா நின்ற பெண்யானைகட்கு உயர்ந்த மரங்களின் இளந்தளிர்களை ஒடித்துக்கொடுத்துக் கொம்புகளான் மேகங்களைக்கிழித்து நீர் கொடுப்பன.—எ-று. (௯00)

படர்சிறைநீங்கியபராரைவெற்பெலா
மடிகளினூற்றியேயசைந்துபோந்தெனக்
கடிகமழ்மும்மதக்கரிகளோர்சில
விடலருந்தளையொடுமெல்லச்சென்றவே.

(இ-ள்.) அகன்ற இறகுகளை யிழந்தபெரிய அரையினவான மலைகளனைத்தும் கால்களால் நடந்துவந்தாற்போல மும்மதமணநாறுகின்ற சிலயானைகள் நீக்குதற்கரிய கால்விலங்குகளுடன் மெல்லெனச்சென்றன.—எ-று. (௯0க)

மூடுறுகணமுகின்முழக்கறுதறோர்
மாடுயர்குன்றினைக்குறித்துநோக்கியே
யீடுறுதிசைக்கரியீதென்றுன்னியே
யோடுவததன்மிசையொன்றோர்யானையே.

(இ-ள்.) மூடப்பெற்ற கூட்டமான மேகங்களின் கர்ச்சனைநீங்காத சிகரமுயர்ந்தஒருமலையை உற்றுப்பார்த்துப் பெருமைவாய்ந்ததிக்கு யானை இதுஎன்று கருதி ஒரு யானையானது அம்மலைமீது ஓடாநின்றது.—எ-று. (௯0௨)

வேறு.

கலையகலல்குலார்பாற்காதலான்முயங்கிவல்லே
யுலைவுறுசேக்கைப்போரினுடைந்திடுகுமரரேபோன்
மலைபொருபிடிகளோடுமலைந்துதம்மதநீர்சிந்தி
நிலையழிவெய்திவெள்கிநின்றதோர்நெடுநல்வேழம்.

(இ-ள்.) ஆடைநீக்கிய அல்குலினையுடைய மாதரிடத்து ஆசையாற்கலந்து விரைவாக இணைவிழைச்சின் உடைந்த வாலிபரையொப்ப மலையனைய பெண்யானைக ளோடு எதிர்த்து மதநீர்சிந்தி நிலையழிந்து வெள்குற்றுநின்றது ஒரு நெடிய நல்ல யானை.—எ-று. (௧0௩)

உடம்பிடிபுரையுமொண்கண்மோகினியொருத்திக்காகத்
திடம்படுமவுணர்யாருந்திரண்டுடன்சென்றவாபோன்
மடம்படுபிடியொன்றேகமையன்மேல்கொண்டுமாடே
கடம்படுமொருத்தல்வேழங்கணிப்பிலபடர்ந்தவன்றே.

(இ-ள்.) வேற்படையனைய ஒள்ளியவிழியாளான மோகினியொருத்தியின் நிமித்தம் வன்மைதங்கிய அவுணரனைவரும் திரண்டொருசேரச்சென்றாற்போல இள ம் பிடியொன்று செல்லக் காமயக்கங்கொண்டு பக்கத்தில் மததாரைகளையுடைய ஆண் யானைகள் அளவற்றன சென்றன.—எ-று. (௧0௪)

காழுற்றதந்தமின்னக்கபோலத்துமதநீர்வீழ
ஆழிப்பேருருமுத்தன்ணையுமிழ்ந்தெனவொலிமீக்கொள்ளக்
கேழுற்றமணிவில்லென்னக்கிளர்நுதலோடைபொங்க
வேழத்தினிரைகளெல்லாமேகம்போலுலாவுகின்ற.

(இ-ள்.) வைரம்பொருந்திய கொம்புகள் பிரகாசிக்கவும் கபோலத்தில் மத நீ ரொழுகவும் ஊழிக்காலத்துப் பேரிடியை இடித்தாற்போல பேரொலி அதிகரிக்கவும் நிறம்விளங்காநின்ற இந்திரவில்லினை யொப்பநெற்றிப்பட்டம் பிரகாசிக்கவும்யானைக் கூட்டங்களனைத்தும் மேககூட்டங்களை யொப்பச்சென்றன.—எ-று. (௧0௫)

இருநெடுவிசும்பிற்செல்லுமெழிலியையெயிற்றாற்பாய்ந்து
சொரிதருபுனலைவாரித்துதிக்கையால்வீசுகின்ற
பருமணியோடையானைபாய்திரைப்பரவையேழுங்
கரதலமெடுத்துச்சிந்துங்கண்ணுதற்களிறுபோலும்

(இ-ள்.) மிகப்பெரிய வானத்திற்செல்லுகின்ற மேகங்களைத்தந்தங்களாற்குத் திக்கிறி அவையினின்று மொழுகுநீரை வாரித்துதிக்கையால் வீசுகின்ற பரியமணிகளி ட்டிழைத்த முகபடாமணிந்த யானையானது அலைவீசுகின்ற எழுகடல்களையுந் துதிக் கையாலெடுத்துச் சிந்துகின்ற நெற்றிக்கண்ணினையுடைய விநாயகப் பெருமானை யானையை ஒக்கும்,—எ-று. (௧0௬)

கன்றொடுபிடிகள்சூழக்கடாம்படுகைம்மாவொன்று
நின்றிடுகந்திற்சேர்ந்துநிகளத்தோடமர்ந்தநீர்மை
குன்றுகள்புடையிற்சுற்றக்குருமணிநீலப்பொற்றை
யொன்றொருதமியதாகியுற்றவாறொத்ததம்மா.

(இ-ள்.) கன்றுகளுடன் பெண்யானைகள் சூழ்ந்துவர மதம்பொருந்தியயானை யொன்று நிற்கின்ற கட்டுத் தறியிற்பொருந்திக் கால்விலங்குடன் நின்றதன்மை மலை பல வருகிற்சூழ நிறம்வாய்ந்த நீலமலையொன்று தனியாக நின்ற தன்மையை யொத் தது. எ—று.. (௧0௭)

எருத்தமேலிடிக்கும்பாகரிசைக்குறிகொள்ளாதாகி
மருத்தினும்விசைமேற்கொண்டுவன்கரித்தண்டநோக்கி
யுருத்திடுகொடுஞ்சொற்றாயரொறுக்கவுமொருவன்மாட்டே
கருத்துறுகணிகைநெஞ்சிற்போவதோர்கடுங்கண்வேழம்.

(இ-ள்.) சீற்றம் பொருந்திய விழியினையுடைய ஒருயானைபிடரியி லங்குசத்தா லிடிக்கின்ற பாகரின் சொற்குறிப்பின்படி செல்லாதாய் வாயுவினும் வேகமாய்ப்பெரிய யானைபோகும் வழியைப்பார்த்துச் சீறியுரைக்குங் கொடிய சொற்களையுடைய அன்னையர் தண்டிக்கவும் அவர் தண்டனையை ஒரு பொருளாக வெண்ணாது ஒருவனிடத்திலேயே நினைவைச்செலுத்துகின்ற கணிகையின் சிந்தையை யொப்பச்சென்றது. எ—று.

தூவகங்கொண்டசெங்கேழங்குசந்தூண்டுபாகர்
நாவகங்கொண்டசொல்லானவிற்றுமந்திரத்தால்வாக்காற்
பாவகங்கொண்டபைங்கட்பாரிடம்வழிப்பட்டாங்குச்
சேவகங்கொண்டபொங்கர்சேர்ந்தனசிலகைம்மாக்கள்.

(இ-ள்.) ஊனினை உள்ளிடத்துக்கொண்ட செந்நிறம் வாய்ந்த தோட்டியால் எச்சரிக்கின்ற பாகர்களின் நாவினிடம் பொருந்திய சொல்லினாற் சிலயானைகள் சொல்லப்பட்ட மந்திரத்தாலும் வாக்கினாலும் பாவகங்கொண்டுள்ள பசிய விழியினவான பூதங்கள் வசப்பட்டார்போல படுக்கை இடத்தினை அடைந்தன.—எ-று. பாவகங்கோடல் தியானத்துக்கு வசப்பட்டு நிற்றல். (கOகூ)

அந்தமிலாதசெல்வத்தவுணருக்கரசன்முன்னம்
வெந்திறற்கால்கடம்மைவியன்சிறைப்படுத்தியென்னக்
கந்திடைப்பிணிக்கப்பட்டகடுநடைப்புரவியெல்லாம்
பந்தியிலொழுங்குகொண்டுநின்றனபாங்கரெங்கும்.

(இ-ள்.) அளவற்ற செல்வத்தினையுடைய அசுராதிபனான சூரபன்மன் முன்னாளில் மிக்கவேகத்தினை யுடைய வாயுக்களைப் பெரிய சிறையிலடைத்தா லொப்பக்கட்டுத் தறிகளிற் கட்டப்பட்ட வேகமான நடையினையுடைய குதிரைகள்பக்கங்களிலெவ்விடங்களிலும் பந்திகளில் வரிசைவரிசையாக நின்றன.—எ-று. (ககO)

வீரவேற்றடக்கைவள்ளல்விழாவினைக்காணவிண்ணோ
ரூரொடுதிசையுமேனையுலகமுமொருங்குற்றென்னக்
காரினுமொலிமேற்கொண்டகலினவாம்புரவிபூண்ட
தேர்நிரையநந்தகோடிசெறிந்தனதிசைகளெங்கும்.

(இ-ள்.) வீரவேற்படையேந்திய வள்ளலாரான குமாரப்பெருமானுடையதிருமணதரிசனத்துக்காகத் தேவருலகத்துடன் மற்றையுலகமு மொன்றாகவந்தாற்போல மேகங்களினுமதிகமான ஒலியினையுடைய கலினமிட்ட தாவுங் குதிரைகள் பூட்டிய அநந்தங் கோடித்தேர் நிலைகள் திசைகளெங்கும் நெருங்கின.—எ-று. (கக௧)

விடங்கெழுவேற்கணாரும்வெலற்கரும்வீரர்தாமுந்
தடங்கெழுதானைவெள்ளத்தலைவருமேனையோரு
மிடங்கெழுதுளைத்துன்னூசியிழைதொடுத்திசைக்கப்பட்ட
படங்கெழுமாடகூடத்தாவணம்பரவிப்புக்கார்

(இ-ள்.) விடம் விளங்குகின்ற வேற்படையனைய கண்ணினாரான பெண்களும் வெல்லுதற்கரிய வீரர்களும் மிகுதியாகவந்துள்ள சேனைவெள்ளத்தின் அதிபர்களும் பிறரும் இடம் விளங்குகின்ற துளையினையுடைய ஊசியால் சரடோட்டப்பட்டி

சைத்துள்ள படங்களால் விளங்குமாட கூடங்களில் வீதி வீதிதோறும் விரவிப் புகுந்தனர்.—எ-று.

படமாடம்-கூடாரம். (கக௨)

கன்னெடுந்தாரைகான்றகார்முகில்வளைப்பச்செங்கண்
முன்னவனிரையைக்காத்தமுதுவரைநிலையதென்னப்
பன்னிறப்பசுங்காய்சிந்தும்பழுமரக்காமர்காவுட்
பொன்னிவர்புனைமாண்கோயில்புரவலற்கமைந்ததன்றே.

(இ-ள்.) கல்லாகிய நெடியதாரையை விடுத்தகரியமுகிலாற் சூழப்படச் செங்கண்களையுடைய திருமால் பசுநிரையைக் காத்தபெரியமலையின் நிலையையொப்ப பலநிறமான பசுங்காய்களை உதிர்க்கின்ற ஆலமரங்களையுடைய அழகியசோலையிற்பொன்மயமாக இயற்றப்பட்ட மாட்சிமையான படமண்டபம் அரசனான முசுகுந்தனுக்கமைந்தது.—எ-று. (ககங)

முத்தமுந்துகிரும்பொன்னுமுழுமணிக்கலனுஞ்சந்துஞ்
சித்திரப்படமுமற்றுந்தெற்றிமேனிரைத்துச்சீர்சா
லுத்தமவணிகருற்றுருணர்ச்சியுங்கற்புந்தூக்கி
யத்தகுபொருளையார்க்குமளித்திடுங்கொடையினர்போல்.

(இ-ள்.) நூலுணர்ச்சியுங் கற்புமாராய்ந்து அந்தத்தகுந்தபொருளை எவர்க்குமளிக்குங் கொடையாளரையொப்ப, விற்பனைக்காக முத்தும் பவளமும் பொன்னும் முற்றிலும் மணியிட்டிழைத்த ஆபரணங்களும் சந்தனமும் சித்திரவத்திரங்களும் இவைகளுடன் பிறபொருள்களையுந் திண்ணைகண்மீது வரிசையாக வைத்துக்கொண்டு சிறப்பின் மிக்க உத்தமவணிகர்கள் இருந்தார்கள்.—எ-று. (ககச)

மடப்பிடிமான்றேர்நீங்கிவானிடைத்தவறிமின்னின்
கொடித்திரள்செல்லுமாபோற்குவலயம்படர்ந்துபொங்க
ரிடத்தினிலொதுங்கிவெற்பினெதிரெதிர்கூவிமஞ்ஞை
நடித்திடுமாடனோக்கித்திரிந்தனர்நங்கைமார்கள்.

(இ-ள்.) பெண்கள் இளம்பிடியானைகளையும் குதிரைபூண்ட தேர்களையும் விடுத்துப்பூமியில் மேகத்தினின்றுஞ் சிதறிமின்னற் கொடிக்கூட்டங்கள் படர்ந்து சென்றாற்போல நடந்து சென்று சோலையினிடைத்தங்கி மலையெதிர் கூவிமயிலாடு மாடல்கண்டு திரிந்தார்கள்.—எ-று. (ககரு)

கோலொடுவில்லும்வாளுங்குந்தமும்தயங்கப்பாத
சாலமுங்கழலுமார்ப்பத்தபனியமணித்தார்தாழச்
சோலையினுலவிச்சாரலருவியுஞ்சுனையுங்கண்டு
மால்கரிமலைவுநோக்கிமடங்கலிற்றிரிந்தார்மைந்தர்.

(இ-ள்.) அம்பும் வில்லும் வாளும் குந்தமும் விளங்கப் பாத சாலமுங்கழலுமாரவாரிக்கப் பொன்மணி மாலைகள் தொங்கச் சோலையிலுலாவியுந் தாழ்வரைகளிலுள்ள அருவிகளையும் சுனைகளையும்பார்த்தும் மால்யானைகள் பொருதலைப்பார்த்தும்சிங்கவேறனைமைந்தருலாவினார்கள்.—எ-று. (ககசு)

தாரிடைப்படிந்தவண்டுதடமலர்க்குவளைசேர
வாரிடைப்படிந்தகொங்கைமாதருமைந்தர்தாமு
மூரிடைப்படிந்தசெங்கேழாதவனுருப்பந்தீர
நீரிடைப்படிதல்வேட்டுநெடும்புனற்றுறையில்வந்தார்.

(இ-ள்.) மாலைகளிற்பொருந்திய வண்டுகள் சுனைக்குவளையலர்களையடையக் ச்சிடைப்பதிந்த கொங்கையினரான மாதர்களும் மைந்தர்களும் ஊர்கோளின் நடு ற்பொருந்திய செந்நிறம்வாய்ந்த சூரியனுடைய வெப்பமொழிய நீரின்முழுகுதலை ரும்பி நெடிய நீர்த்துறைகளை யடைந்தனர்.—எ-று. (கசஎ)

வெண்ணிறமுகிலினும்பர்விஞ்சையர்வேந்தர்தாமு
மொண்ணுதலணங்கினேருமொருங்குடன்றிரண்டதென்னக்
கண்ணகன்றடாகம்புக்ககனங்குழைமகளிர்மைந்தர்
தண்ணுறுபுனல்பாய்ந்தாடித்தலைத்தலைதிரிதலுற்றார்.

(இ-ள்.) வெள்ளிய மேகமண்டலத்தின் மேற்பாகத்தில் வித்தியாதரவரசர் ளும் ஒள்ளிய நெற்றியினரான வித்தியாதரமாதரும் ஒன்றாய்க்குழுமிநின்றாற் போல டமகன்ற தடாகங்களிற்புகுந்த பொற்குழையணிந்த மாதரும் ஆடவரும் குளிர்ச்சி வாய்ந்த புனலிற்பாய்ந்து விளையாடி இடங்கள் தோறுந்திரிந்தனர்.—எ-று. (கசஅ)

கழியுண்டவுவரிக்கானற்கடைசியர்நாட்டமஞ்சிப்
பழியுண்டுமறைந்தவாபோலொருசிறைபயிலுநெய்தற்
குழியுண்டபோதைநோக்கிக்குரைபுனற்றடத்துக்கம்மா
விழியுண்டுகொல்லோவென்றேகொழுநரைவினவுகின்றார்.

(இ-ள்.) சிலமாதர் கழிகளாற் சூழப்பட்டவுவரோடு கூடியநெய்தல் நிலத்தி னரான கடைசியர்களின் கண்களுக்கிணையாகாமையால் அச்சமெய்திப்பழிப்புற்று மறைந்தாற்போல ஒரு புறத்திற்பொருந்திய பள்ளத்திற்காணப்படுகின்ற குவளை மலர் களைப்பார்த்து இரையுநீரினையுடைய இத்தடாகத்துக்குக் கண்களுமுண்டு கொலென் றுதந்நாயகர்களைக் கேட்கின்றார்கள்.—எ-று. (கசகூ)

பங்கயம்வதனமென்பார்பாசியைக்கூந்தலென்பார்
செங்கிடையதரமென்பார்புள்ளொலிசெப்பலென்பார்
சங்கினைக்களமேயென்பார்தடாகமுமொருத்தியல்ல
மங்கையர்பலரேயென்பார்திரைகளைமணித்தாசென்பார்.

(இ-ள்.) பெண்கள், அலர்ந்ததாமரைகளை முகமென்று கூறுவர் பாசியைக் கூந் தலென்றுகூறுவர். செங்கிடைகளை அதரமென்பர். பறவைமளியொலியைவசனங்களெ ன்பார். சங்குகளைக் கழுத்தென்பர். தடாகமுமொருத்தியல்ல, பலமங்கையரேயென் பார். அலைகளையாடைகளென்று கூறுவர்.—எ-று. (கஉ0)

தத்தையையனையசொல்லாளொருத்திதன்னிழறன்னை
யத்தடந்தன்னினோக்கியளியனையறியாதீண்டோர்
மைத்தடங்கண்ணினாளைமருவினையென்றுகேள்வன்
கைத்தலந்தன்னைவிட்டுவெருண்டனள்கரையிற்போனாள்.

(இ-ள்.) கிளிமொழிபோலு மொழியாளான வொருமாது தனதுநிழலினை யத் தடாகத்திற் பார்த்து என்னையறியாதிவ்விடத்தில் ஒரு மையணிந்த அகன்ற கண்களை யுடையவளை அணைந்தனை யென நாயகன் கரத்தினை விடுத்து வெருண்டு கரையிற் செ ன்றனள்.—எ-று. (கஉக)

குளத்திடைப்புனல்வாய்ப்பெய்துகொப்பளித்திடுவான்றன்மே
லுளத்திடைவெகுளியெய்திபூடினளொருத்தியேகி
முளைத்திடுகமலக்காளின்முகமலாவுறப்புமுற்று
மொளித்தனனிற்பநாடிக்காண்கலனுலைதலுற்றான்.

(இ-ள்.) குளத்திலுள்ள நீரைவாயிற் பெய்து தன்மீது கொப்பளித்த ஒருவன் மீது உள்ளிற்சீற்றங்கொண்டு ஊடினவளான ஒருமாது அவனைப்பிரிந்து போய் விரிந்த தாமரையலர்களின் கானத்துட்புகுந்து முகமன்றியுள்ள உறுப்புக்களை ஒளித்துநின்றனள் அவளைத்தேடினவ வளதந்நாயகன் காணதுவருந்தினன்.—எ-று. (க௨௨)

தாம்பெறுகொழுநர்தம்மைதத்தமக்குரியபுத்தே
ளாம்பரிசன்றுந்தன்மையையமதில்லையென்னக்
காம்புறழ்தடந்தோளல்லார்கணவர்மேற்கரத்தாலள்ளிப்
பூம்புனல்வீசுகின்றார்பூசனைபுரிகுவார்போல்.

(இ-ள்.) தாம் அடைந்த கணவர்களை தத்தமக்குரிய தேவர்களாகநினைத்தலிற் சந்தேகமில்லை யென்று மூங்கிலனைய அகன்ற தோளினரான பெண்கள் நாயகர்கள் மீதுகையினால் அழகியநீரை அள்ளிப்பூசை செய்வாரையொப்ப இறைத்தனர்.—எ-று.

ஞெண்டொடுவராலுஞ்சேலும்யாமையுநிலாவெண்சங்கும்
புண்டரீகத்தடாகங்குடைந்திடும்பூசலஞ்சித்
தெண்டிரையமுதச்சொல்லார்சிற்சிலவுறுப்புத்தன்னைக்
கண்டுகண்டிரிவதென்னத்திரிவனகலக்கமெய்தி

(இ-ள்.) ஞெண்டுகளுடனே வரான்மீன்களும் சேன்மீன்களும் யாமைகளும் நிலவனைய வெள்ளியசங்கும் மாதரும் ஆடவரும் புண்டரீகத்தடாகத்தில் குளிப்பதாலுண்டான ஆரவாரத்தால் அச்சமுற்று, தெள்ளியதிரையினையுடைய கடலிற்பிறந்த அமுதம் போன்ற சொல்லினையுடைய மாதரின் சிலசில உறுப்புக்களைப் பார்த்துப் பார்த்து அஞ்சியோடினாற்போல கலங்கித்திரிந்தன.—எ-று. (க௨௩)

ஏந்திழைமகளிர்தாமுமைந்தருமிருநீர்தன்னுட்
பாய்ந்தனராடுமெல்லைப்பங்கயவிலைகடோறுஞ்
சேர்ந்திடுதிவலையீட்டஞ்சிறந்தவர்சேர்தலாலே
பூந்தடம்பொய்கையாக்கைபொடித்தனபோலுமன்றே.

(இ-ள்) . ஆபரணமணிந்த பெண்களும் புருடர்களும் பிரவாகமான நீரினிற் குதித்து விளையாடுங் காலத்துத் தாமரை இலைகள்தோறுஞ் சேர்ந்தநீர்த்துளிகள் தக்கவர்கள் தன்னிடம் வந்தமையாற் பூவினையுடைய விசாலமான அத்தடாகமானது தன்னுடலிற்புளகங் கொண்டதுபோல விளங்கியது.—எ-று. (க௨௫)

நோக்கினுநுழைகுறுதநுண்டுகின்மறைத்தவல்கு
றேக்குதண்பொய்கையாடுஞ்செவ்வியிற்றெரியத்தோன்ற
நீக்கரும்பெருநாண்கொண்டுநின்றிடாதொருத்தியோடித்
தாக்கணங்கென்னப்போய்த்தன் கொழுநனைத்தழுவிக்கொண்டாள்.

(இ-ள்.) கட்பார்வையாலு முட்புகுதப்படாத நுண்ணிய ஆடையால் மறைக்கப்பட்ட அல்குலானது நிறைந்த குளிர்ந்த பொய்கைநீரிற் குளித்தகாலத்து நன்குவெளிப்பட, விலக்குதற்கரிய மிகுந்த வெட்கமெய்தி நிற்கமாட்டாமல் ஒருமாதுஓடிச்சென்றுதாக் கணங்கைப்போல தனது கணவனைத் தழுவிக்கொண்டாள்.—எ-று. (க௨௬)

உட்டெளிவில்லாநங்கையொலிபுனற்றடத்தினுடுங்
கட்டழகுளதோர்காளைகவிரிதழ்வெளுப்புநோக்கிக்
கிட்டியானிற்கவுன்றன்கேழ்கிளரதரத்தெச்சி
லிட்டனள்யாரிங்கென்னுவெகுளிகொண்டிகலிப்போனாள்.

(இ-ள்.) மனத்தெளிவற்ற ஒருமாது, ஒலியினையுடைய தடம்புனலில்முழுகுகின்ற கட்டழகுடைய ஒருவாலிபனது முருக்கலர்போன்ற அதரத்தின் வெளுப்பி

னைப்பார்த்து யான் நெருங்கி உன்னருகில் நிற்கவும் உனது நிறம் விளங்குகின்ற அதரத்து எச்சிலுண்டாக்கியவள் யாரென்று கோபங்கொண்டு பகைத்துச்சென்றனள்.எ-று

வேறு.

வெளுத்தனசேயிதழ்விழிசிவந்தன
வளித்தொகையெழுந்தனவளகஞ்சோர்ந்தன
குளித்திடுமலர்த்தடங்கொடியனார்க்கெலாங்
களித்திடுகணவருங்கள்ளுமொத்ததே.

(இ-ள்.) செந்நிற விதழ்கள் வெண்ணிற மடைந்தன. கண்கள்சிவந்தன. வண்டுகள் ஆரவாரித்து மேலெழுந்தன. அளகங்கள் சோர்ந்தன. ஆதலின் மலரினையுடைய தடாகமானது தன்னிடமுழுகிய பூங்கொடியனையமாதரனைவருக்கும் மகிழ்வைத்தருங் கணவரையுங் கள்ளினையுமொத்தது.—எ-று. அளகம்-கூந்தல். (௧௨௮)

பையரவல்குலார்படியும்பான்மையாற்
றுய்யதோர்குமிழிகள்செறிந்துதோன்றுவ
வையபூந்தடமெலாமவரைநோக்குவான்
மெய்யலாம்விழிகளாய்விழித்தல்போன்றவே.

(இ-ள்.) விடப்பையினையுடைய அரவபடம்போலும் அல்குலினரான மாதர்கள் முழுகிய தன்மையால், தூய்மையான அப்பூந்தடமுற்றிலும் குமிழிகள் நெருங்கிக் காணப்படுகின்றன; அவை அம்மாதரைப் பார்த்தற்கு உடம்பனைத்துங் கண்களாக விழித்தலையொத்தன.—எ-று. (௧௨௯)

மன்னருமகளிரும்படிந்தவாசநீர்
செந்நிறக்குங்குமநானஞ்சேர்தலான்
மின்னொடுகூடியமுகிலுமெல்லியற்
பொன்னொடுகூடியமாலும்போலுமால்

(இ-ள்.) அரசருமாதருமுழுகிய நீரிற் செந்நிறமான குங்குமமும் கருநிறமான கத்தூரியும் கலந்திருத்தலால் மின்னலொடு பொருந்திய மேகத்தினையும் திருமகளோடு கலந்தமாயவனையும் ஒத்தது.—எ-று. ஆல்-ஆசை. (௧௩௦)

வேறு.

பூசுசாந்தமுநான்மும்பொய்கையில்
வாசநீரெங்குமாகிமணங்கமழ்ந்
தாசையெங்குமுலாவியவ்வானவர்
நாசியூடுமடுத்துநடந்தவே.

(இ-ள்.) ஆடவரும் மாதரும் பூசியிருந்த சந்தனமும் கத்தூரியும் வாசனை பொருந்திய பொய்கை நீரிலெவ்விடத்திலுமாகி மணம்வீசித் திக்கனைத்து முலாவி அத்தேவர்களின் நாசியிலுமடுத்து நடந்தன.—எ-று. (௧௩௧)

இன்னதன்மையிலேர்கெழுமைந்தரு
மன்னமென்னடையார்களுமத்தடந்
தன்னின்றுடித்தடங்கரையேறியே
பொன்னின்மாண்கலைபூணொடுதாங்கினார்.

(இ-ள்.) இவ்வாறாக அழகுவாய்ந்த புருடர்களும் அன்னப்பறவை போலும் மெல்லிய நடையினரான மாதரும் அத்தடாகத்திற்குளித்து அகன்ற கரையிலேறிப் பொன்னிழைகலந்த மாட்சிமையான ஆடைகளை ஆபரணங்களுடன் அணிந்தனர். ()

வெளிறுமென்னகைமெல்லியன்மாதரு
மொளிறுமேனியுவாக்களுமொன்றியே
பிளிறுமையற்பிடியும்பெருமதக்
களிறுமென்னக்கடிபொழிலேகினர்.

(இ-ள்.) வெண்ணிறம்வாய்ந்த மெல்லிய நகையினையும் மெல்லியஇயலினையும் உடையமாதர்களும் விளங்காநின்ற மேனியினரான புருடர்களும் ஒன்றாகக்கலந்து பிளிறுகின்ற காமமயக்கம் பொருந்திய பெண்யானையும் மிக்க மதத்தினையுடைய ஆண்யானையும்போல வாசனைபொருந்திய பூம்பொழிலிற் புகுந்தனர்.—எ-று. (கரு௩)

ஏகினர்க்கவ்விரும்பொழின்மீச்செறி
மேகசாலமுமீன்றொகையீண்டிய
மாகநாடுமெவ்வானவர்வந்துசேர்
போகபூமிப்பொதும்பரும்போன்றதே.

(இ-ள்.) அங்ஙனஞ்சென்ற அவர்க்கு அப்பெரியசோலையின் மேற்புறத்துநெருங்கிக்கிடக்கின்ற மேககூட்டங்களும் நட்சத்திரங்கள் பொருந்திய வானுலகும் அவ்வானுலகினரான தேவர்கள்வந்து சேர்கின்ற போகமிப்பூச்சோலையும் ஒத்தது.—எ-று.

பளிங்கடுத்திடுபொங்கரின்வேங்கைவீ
விளங்குசாயையைமெய்யெனநோக்கியிக்
குளங்கொள்பூமலர்கொய்துநல்கீரெனுத்
தளர்ந்தொருத்திதலைவனைவேண்டினாள்.

(இ-ள்.) பளிக்குச்சிலைகள் பொருந்திய இடங்களில் வேங்கையலர்களின் நிழல்காணப்படுதலை மெய்யெனக்கருதி இக்குளத்திற் காணப்படுகின்ற பூமலர்களைக் கொய்து தருவீராக என்று மிகத்தளர்ச்சியுடன் ஒருமாது தனதுகணவனை வேண்டினாள்.—எ-று. (கரு௫)

அங்கொருத்தியைநோக்கியொரண்ணலுன்
கொங்கையொத்திடாக்கோங்கலர்கொள்கென
வெங்கைதன்முலைக்கொப்பதென்றெண்ணியோ
செங்கையாற்பறித்தீரென்றுசீறினாள்.

(இ-ள்.) ஒருதலைவன் ஒருதலைவியைப் பார்த்து உனது தனங்களுக்கிணையாகாத கோங்கலரினைக் கொள்கஎன்று கூறுதலும் அன்னாள் எனதினையாள் தனத்துக்கிணையென்று கருதியோ இதனைச் செவ்வியகையினாற் பறித்தனிரென்று கோபங்காட்டிக் கூறினாள்.—எ-று. (கருசு)

வேறு.

மலர்ந்தவாண்முகமங்கையர்நோக்கலும்வறிதாய்ப்
புலர்ந்துநின்றிடுதருக்களும்பொலிவினையெய்தி
யலர்ந்தவேயெனினுடவர்தங்களையன்னார்
கலந்தபோதுறுமின்பமார்கட்டுரைத்திடுவார்.

(இ-ள்.) விகசிதமான ஒளிபொருந்திய முகத்தினையுடைய பெண்கள்பார்த்தவுடனே வறுமையுற்று வாடிநின்ற மரங்களும் வாட்டநீங்கிப் பொலிவுற்று அலர்ந்தனவானால் புருடர்களை யம்மாதர் அணைந்தகாலத்துண்டாகு மின்பத்தினை எவரே உறுதியுற உரைக்கவல்லுநர்.—எ-று. (கருஎ)

மேற்றலத்தெழுதாரகைமேதினிவரைப்பிற்
றோற்றுகாட்சியோவிங்கிவையென்னவோர்தோன்றல்
கூற்றமன்னவேற்கண்ணிநின்கூரெயிற்றிற்குத்
தோற்றமுல்லையினரும்புகாணிவையெனச்சொன்னான்.

(இ-ள்.) ஒருமாது முல்லையரும்புகளைப்பார்த்து வானத்துதிக்கு நட்சத்திரங்கள் பூமியினிடத்துத் தோற்றுந்தன்மையோ இவையென ஒருதலைவன், யமனுடைய செயல்போலுஞ் செயலினையுடைய வேல்விழியாய் இவை நினது கூரியபற்களுக்குத் தோற்றமுல்லையினரும்புகள் என்று கூறினான்.—எ-று. (கஙௌ)

மலையும்வேற்கணுளொருத்திசொல்வினவிமற்றொருத்தி
முலையின்மேல்விழிவைத்தவன் முறிகளுமுகையு
மலையுமாப்பறித்துதவலுமுமக்குமாலீந்தா
டலையின்மேலிவைசூட்டுமென்றெறிந்தனடரியாள்.

(இ-ள்.) போர்புரியும் வேல்போலுங் கண்ணிணையுடைய ஒருமாதுகூறியதனைக்கேட்ட மற்றொருமாது தனது தனபாரத்தில் நயனங்களைவைத்த தலைவன் தளிருமரும்பும் இலையுமாகப்பறித்துக் கொடுத்தலும் இவைகளை உமக்கு மோகமளித்தவள் தலையிற்சூட்டுவீராகவென்று மனந்தாளாதவளாக எறிந்தனள்.—எ-று. (கங௬)

காதன்மங்கைபால்வைத்தசிந்தையன்கரவீரப்
போதுகொய்யலனிலைகொய்துபொற்கரத்தளிப்ப
வேதிலாளநிற்சேர்தலினிங்கிவைநுகர்ந்து
சாதலேதலையெனச்சினந்தாளொருதையல்.

(இ-ள்.) மோகத்தினை ஒருமாதின்மீது வைத்த சிந்தையானாகிய ஒருவன் அலரிமலரைக்கொய்யாது அதனிலையைக்கொய்து அவள் அழகிய கரத்திலளிக்க அவள் ஓ பகைவனே உன்னைக்கலத்தலினும் இவ்வலரி யிலையைத்தின்று சாதலேமுதன்மையானதெனச் சீறியுரைத்தனள்.—எ-று. (கசா0)

வேறு.

இங்குன்முலைநேர்குரும்பையிவையாய்குயம்போற்
றங்கும்மிளநீருவையன்னவடன்னையீன்றாள்
கொங்கைநிகருமடற்பாளைக்குழுவிதென்றோர்
மங்கைநகைப் பவவைகாட்டியொர்வள்ளனின்றான்.

(இ-ள்.) இவை உன்தன மனைய குரும்பைகள், அவைகள் நின்னன்னையின் தனங்களை யொப்ப விளங்கு மிளநீர்கள் உவை அவளை பெற்றவளின் கொங்கைகளையொத்த வன்மைபொருந்திய பாளைகளின் கூட்டங்கள் என ஒரு மாது சிரிக்கும் வண்ணம் அவைகளைக்காட்டி யொரு வள்ளலானவன் கூறி நின்றான்.—எ-று. (கசக)

ஓவாததெங்கினிளம்பாளையினொன்றுதன்னைத்
தாவாதொருவன்கொடுதந்தொருதையன்முன்போய்ப்
பாவாய்தமியேனுயிரேநின்பணைமுலைக்காங்
கோவாதமுத்தத்தொடையிங்கிதுகொள்கவென்றான்.

(இ-ள்.) நீங்காத தெங்கினிளம்பாளையை ஒருவன் கொண்டு வந்து ஒருமாதின் எதிரேசென்று பாவாய் என்னுயிரனையாய் நினது பணைத்த கொங்கைகளுக்கிசைந்த கோவாத முத்துமாலையிது இதனை வாங்கிக்கொள் என்று கூறினான்.—எ-று.

மின்னார்தமக்கோரரசேவெறிவேங்கைவீயும்
புன்னாகவீயுங்கொணர்ந்தேன்புனைகிற்றியென்ன
மன்னாவுனக்குப்பலருண்டுகொன்மாதரென்னாத்
தன்னாவியன்னான்றனைச்சீறியொர்தையல்போனாள்.

(இ-ள்.) ஒருவன் மாதர் தம்முள் அரசியாயுள்ளாய் மணம்வீசும் வேங்கையலரும் புன்னாகமலரும் கொண்டுவந்தேன் தரித்துக்கொள் என்று கூறினான் உடனே அதுகேட்ட மாதொருத்தி மன்னவனே உனக்குப்பலமாதர்க ளிருக்கின்றார்களோ என்று தனதுயிர்போல் வான்மீது கோபங்கொண்டவளாய்ச் சென்றனள்.—எ-று.

பொன்பெற்றமார்பனொருவன்சிலபோதுகொய்து
கொன்பெற்றவேற்கண்மடவார்கைக்கொடுத்தலோடும்
பின்பெற்றநங்கைவெகுண்டாள்பழுதென்றுபேசி
முன்பெற்றவளுமவைசிந்திமுனிந்துபோனாள்.

(இ-ள்.) பொன்னாபரணமணிந்த மார்பினனான ஒருவன் சில மலர்களைக் கொய்து அச்சந்தரும் வேல்போலுங் கண்ணினரான மாதர்கையில் கொடுத்தவுடனே பின்னர்ப்பெற்ற மாதானவள் கோபமுற்றனள் நீசெய்தது குற்றமென்றுகூறி முன் பெற்றவளும் அம்மலர்களைச்சிந்திக்கோவித்துச்சென்றனள்.—எ-று. (கசச)

அப்பூர்விழியாளொருமூவகைத்தாயபூவு
மைப்பூங்குழலிற்புனைந்தாளதொர்வள்ளனோக்கி
மெய்ப்பூவையன்னாய்மருங்குன்முடிவெய்தமென்கார்
முப்பூவிளைந்தபடியென்கொன்மொழிகவென்றான்.

(இ-ள்) நீரோடுங் கண்ணுளாகிய ஒருமாது ஒரு மூவகையலர்களையும் கரிய அழகிய கூந்தலிற் சூடினள். அங்ஙனந் தரித்ததனை ஒரு வள்ளல்பார்த்து மெய்யாற் பூவையொத்தாய் இடைஇறமெல்லிய காரின் முப்பூவிளைந்ததென்னை உரைத்தி என்று கூறினான்.—எ-று. (கசரு)

இத்தன்மைமைந்தர்பலரும்மிகல்வேற்கணாரு
மெய்த்தண்மலர்க்காவுலவாவிளையாடிமீண்டு
தத்தம்படமாளிகைபுக்கனர்தானுமாங்கே
யத்தம்மயவெற்படைந்தான்கதிராயிரத்தோன்

(இ-ள்.) இவ்வாறு பல மைந்தர்களும் போர்புரிகின்ற வேல்போலுங் கண்ணினையுடையாரும் குளிர்ந்த மலர்ச்சோலையிற் சஞ்சாரஞ்செய்துவிளையாடித் திரும்பி அவரவர்களின் படமாளிகைகளிற் புகுந்தார்கள் அப்பொழுது ஆயிரங்கிரணங்களையுடைய சூரியன் அத்தமயகிரியை யடைந்தான்.—எ-று. (கசசு)

வேறு.

ஏலக்காவின்மாக்கள்புகுந்தேயினிதாடுங்
கோலச்செவ்விநோக்கினனாங்கொல்குடபாலின்
மாலைச்செக்கர்வானமதாகுமலிதண்பூஞ்
சோலைக்குள்ளேதானுமடைந்தான்சுடர்வெய்யோன்.

(இ-ள்.) ஒளியினையுடைய சூரியன் மணம்பொருந்திய சோலையில் மனிதர் புகுந்து விளையாடுகின்ற அழகினைப்பார்த்தானாயிருக்கலாம் மேற்றிசையிற் காணப்படுகின்ற மாலைக்காலத்துச் செக்கர்வானமாகிய மிகுந்த பூஞ்சோலைக்குள் தானுஞ் சென்றனன்.—எ-று. (கசஎ)

முந்தைச்செக்கராகியபுத்தேண்மொய்ம்பிற்சூழ்
தந்திப்போர்வைபோலிருளீட்டஞ்சார்வெய்த
வந்தத்தேவன்மீமிசையண்டத்தவர்வீசுங்
கந்தத்தண்போதொப்பனதாராகணமெல்லாம்.

(இ-ள்.) முதன்மையான செவ்வானமென்னும் இறைவனுடைய தோளி லணிந்த யானைத்தோற் போர்வையையொப்ப இருட்சூழாஞ் சாராநிற்க அத்தேவன் மீது தேவர்கள் வீசிய மணமுங் குளிர்ச்சியும் வாய்ந்த நாளரும்பென விளங்கின நட்சத்திரக்கூட்ட மனைத்தும்.—எ-று. (கசஅ)

படையாநேமிப்பண்ணவனூர்பாற்கடலுக்கோர்
தடையாயுற்றாரென்றிமையோர்தண்டயிர்வேலை
கடையாநிற்பவேதிரள்வெண்ணெய்கடிதேவந்
தடையாநிற்றல்போலவுதித்திட்டதுதிங்கள்.

(இ-ள்.) சக்கரப்படையினையுடைய திருமால்பாற் கடலுக்கொரு தடையாக விருக்கின்றாரெனத் தேவர்கள் தண்ணிய தயிர்க் கடலினைக்கடைதலும் அதனிற் றிரண்ட வெண்ணெயானது விரைவாக வந்தொருபுறமொதுங்கினாற்போல சந்திரோதய முண்டாகியது.—எ-று. (கசக)

காணப்பட்டான்விண்மதியென்னக்காமத்திற்
பூணப்பட்டமாமதிதோன்றப்புலர்வெய்தி
யாணர்க்கிண்ணத்துண்ணிறைதேறலினிதட்டிப்
பாணிக்கொண்டேமேவுதலுற்றார்பலமாதர்.

(இ-ள்.) பலமாதர்கள் வானத்திற் சந்திரனாகிய மதிகாணப்பட்டானெனக் காமத்திற் பொருந்திய புத்தியாகிய மதியும் தோன்றாநிற்ப வதனால் வருந்தி அழகிய கிண்ணத்தினுள்மதுவினை இனிதாக விடுத்துக் கையிலெடுத்துச்சென்றார்கள்.—எ-று.

வேறு.

தூயதன்றாகியபுனலெலாநல்கியேசூழ்ந்தெதெங்கின்
காயின்வந்திடுபயன்கொள்ளுவார்போற்சிலகாளைமார்க
ளாயதண்டேறலையரிவைமார்றுகருவானருளியன்னார்
வாயின்வந்தூறுமெல்லமிர்தினைக்கொள்வதற்குள்ளம்வைத்தார்.

(இ-ள்.) தூய்மையற்ற நீரனைத்தும் விடுத்துத் தென்னையிற் சுற்றிக்காய்க்கப் பெற்ற காயிலுண்டான நீரினை கிரகிப்பார்போன்று சில வாலிபர்கள் அங்கு குடித்தற் கென வைத்திருந்த தண்ணியமதுவினை மாதரையருந்துமாறு செய்து அவர்களின் வாயில் ஊறுநின்ற மெல்லிய அமிர்தினை அதரபானத்தாற் கிரகித்தற்கு எண்ணங்கொண்டனர்.—எ-று. (கருக)

தெள்ளுபேரமிர்தநேர்சொல்லினார்தேறல்பெய்கின்றவெள்ளி
வள்ளமானவையெலாம்பொலிவனவானகத்திடையுதித்த
வொள்ளிதாகியமதியொன்றினைநோக்கிப்பொண்புவியினூடே
கொள்ளையாய்மதிபலமாறுமாறாயெழுங்கொள்கைபோலும்.

(இ-ள்.) ஆகாயத்திலுதித்த வொள்ளிய வொரு மதியினைப்பார்த்துப் பிரகாசிக்கின்ற பூமியிற் கூட்டங் கூட்டமாக அநேக சந்திரர் தோன்றியதனையொக்கும், தெளிந்த சிறந்த அமிர்தம்போன்ற சொற்களையுடைய மாதர்கள் கள்ளூற்றிவைத்த பாத்திரங்களெல்லாம் விளங்குவன,—எ-று. (கருஉ)

அளியினுக்குணவதாந்தேறல்வாய்க்கொண்டதோரரிவையாற்றக்
களிமயக்கெய்துவாளிந்துவைநோக்கியிக்கடியதேறற்
றுளியினைக்கோடியேலுனதுமாசுள்ளதுந்தொலையுமின்னு
மொளியினைப்பெறுதிநின்னூனமுந்தவிர்தியென்றுரைசெய்கின்றாள்

(இ-ள்.) வண்டுகளுக்குணவாகவுள்ள கள்ளினைக்குடித்த ஒருமாது மிகவுங் களிமயக்குற்றுச் சந்திரனைப்பார்த்து இம்மணம்பொருந்திய கள்ளின் துளியினை உட்கொள்ளுவாயானால் உன்னிடத்திலுள்ள களங்கமான தொழியும் இன்னமதிக வொளியினைப்பெறுவாய் நினது குற்றமுமொழிவாய் என்று கூறினாள்.—எ-று. (கடுரு)

கருதியானுண்டிடுநறவினைக்கண்டுகாமித்துநாளுந்
திரிதியான்மதியமேநாணமுற்றாய்கொலோசெப்புகில்லாய்
பரிதியார்தம்மின்வீறெய்துவாயன்னதைப்பகிர்வனிங்ஙன்
வருதியாலென்றனடேறலாற்றெளிவிலாமையல்பெற்றாள்.

(இ-ள்.) மது வருந்தினமையால் ஒரு மாது சந்திரனைப்பார்த்து மதியமே என விளித்து, யான் தக்கதெனக் கருதிப் பருகிய கள்ளினைப்பார்த்து அதன்மீதாசைகொண்டு தினமுமிது கிடைக்குமெனச் சுற்றுகின்றனை. கிடைக்கவில்லையென வெட்கமுற்றாயோ பேசாதிருக்கின்றனையே சூரியனிலும் ஒளிமுதலியவற்றாலுயர். வெய்துவை நீ விரும்பிய அம்மதுவினைப் பகிர்ந்தளிக்கின்றேன் இங்ஙன் வருதி என்று கூறினாள்.—எ-று. (கடுச)

என்னுடேதோன்றினுயானெனுந்தன்மையாயாதும்வேண்டாய்
பின்னருமுன்னுமாய்வைகலுந்திரிகுவாய்பிரிகிலாதா
யின்னறாவுண்கெனவுதவினுங்கொள்கிலாயென்றொருத்தி
தன்னதாநீழலோடூடினாள்வாடினாடளர்தலுற்றாள்.

(இ-ள்.) கள்ளுண்டதனால் வெறி மிக்காளான ஒருமாது, தனது நிழலொடு பகைத்து, என்னுடன் பிறந்தனை யானெனுந் தன்மையால் எதுவும்விரும்பாய் பின்னுமுன்னுமாக நாடோறுந்திரிகின்றனை என்னைப்பிரியாத நிழலே இனி மதுவினையருந்தென வளிக்கினு முண்கின்றாயில்லை என்றுகூறிவாடி வருந்தித்தளர் வுற்றனள்.-எ-று.

அங்கைவள்ளந்தனின்மதுவையுண்டயருவாளன்னதற்குட்
செங்கயல்விழியையும்வாலிதழ்ப்பொலிவையுந்தெரியநோக்கி
யிங்கெனைக்கூடியேகணவர்போயினர்கொலாமென்றொருத்தி
பொங்குசீற்றத்தளாயோடினாளூடினாள்புலர்தலுற்றாள்.

(இ-ள்.) அகங்கையில் வைத்திருந்த கிண்ணத்திலிருந்த மதுவினையுண்டு மயக்குற்றவள் அக்கிண்ணத்தினுட் செவ்விய கயல்போலுங் கண்களையும் இதழின் வெண்ணிறப்பொலி வினையும்பார்த்து என்னை இவ்விடத்து மணந்து எனது காதலர் போயினர்போலும் என்றொருமாது மேலுமேலு மெழாநின்ற கோபமுடையவளாய் ஓடி நாடி வருந்தினாள்.—எ-று. (கடுசு)

வேறு.

திருந்திழைமார்சிலர்செவ்வித்தேறலை
யருந்தினர்வெறுத்தனரமுதந்தன்னையும்
பொருந்திடுகணவரைப்புணருமாசையால்
வருந்தினர்தழலெனமதியையுன்னுவார்.

(இ-ள்.) திருத்தப்பட்ட ஆபரணமணிந்த சில பெண்கள் மதுரமானகள்ளினைக் குடித்து அமுதத்தினையும் வெறுத்துத் தம்முடன் பொருந்திய கணவர்களைப் புணரவெழுந்த இச்சையினால் வருந்தினாராய்ச்சந்திரனைத் தீயெனக்கருதுகின்றனர்.—எ-று,

வாடுகின்றார்சிலர்மகிழ்நர்வந்திட
வூடுகின்றார்சிலருவக்கின்றார்சிலர்
பாடுகின்றார்சிலர்பணிகின்றார்சில
ராடுகின்றார்சிலர்நறவமார்ந்துளார்.

(இ-ள்.) கள்ளருந்திய மாதரிற் பலர் தந்நாயகர்கள் வந்தவுடனே சிலர் வாடு கின்றார்கள் சிலர் ஊடுகின்றார்கள் சிலர் உவக்கின்றார்கள் சிலர் பாடுகின்றார்கள் சிலர் பணிகின்றார்கள் சிலர் ஆடுகின்றார்கள். (கடுஅ)

அந்தரப்புள்ளோடுமளிகடம்மொடும்
வந்தடுத்தவரொடுமடந்தைமார்சிலர்
சுந்தரத்தேறலைத்துய்த்துவாமமாந்
தந்திரக்கிளைஞர்போற்றம்மிலீண்டினர்.

(இ-ள்.) அந்தரப்புட்களுடனும் வண்டுகளுடனும் அருகில் வந்தாருடனும் சிலமாதர் அழகிய மதுவருந்தி வருந்தி வாமாகமக்கூட்டத்தினரை யொப்பக் கூட்டமாகச் சேர்ந்தனர்.—எ-று. (கடுகூ)

விள்ளுறுநாணினர்வீழுந்தூசின
ருள்ளுறுகளிப்பினருரைமயங்கினர்
தள்ளுறுதம்முணர்வின்றிச்சாம்பினர்
கள்ளினுமுளதுகொல்கருத்தழிப்பதே.

(இ-ள்.) விலகிய வெட்கத்தினையுடையவரும் வீழப்பெற்ற ஆடையினையுடையவரும் உள்ளிற் பொருந்திய களிப்பினையுடையவர்களும் தள்ளப்பெற்ற உணர்வினையின்றி வருந்தினார்கள் கருத்தழிக்குந் திறங்கள்ளினு முள்ளது போலும்.—எ-று.(கசுo)

இத்திறமதுவினையினிதின்மாந்தினோர்
மத்தரின்மயங்கினர்மனந்தெளிந்துழித்
தத்தமதிறைவருந்தாமுங்கூடியே
யத்தலைமுயங்கினரார்வமிக்குளார்.

(இ-ள்.) இவ்வாறு கள்ளினை விருப்பத்துடன் குடித்தவர்கள் உன்மத்தரையொப்ப மயக்கமெய்தி மனத்தெளிவுண்டானவுடனே தத்தந்தலைவர்களுந் தாமுமாகக் கலந்து அவ்விடத்திலாசை மிகுந்தாராய்க்கூடினர்.—எ-று. (கசுக)

ஏயுறுபரிசனமினையதன்மையான்
மேயினவிங்கிதுவிளம்பினுமினி
யாயிடைவந்திடுமரசர்செய்கையு
நாயகன்வதுவையுநவிலுவாமரோ.

(இ-ள்.) ஆண்டுப்பொருந்திய பரிசனங்கள் இவ்வாறாக விருந்தனர். இதனையுரைத்தாம். இனி, ஆண்டுப்போந்துள் ஐஅரசரின் செய்கைகளையும் முதல்வரான குமரவேளின் திருமணத்திறனையும் உரைப்பாம்.—எ-று. (கசுஉ)

கொன்னுனைவேன்முசுகுந்தனாதியா
மன்னவர்யாவரும்வையநீங்கியே
தன்னிகரிலாதவோர்தலைவன்மேவிய
பொன்னிவர்குடுமியம்பொருப்பிலேறினார்

(இ-ள்.) கொலைவல்ல நுதியினுடைய வேற்படையாளரான முசுகுந்தன் முதலிய மன்னவரனைவரும் இரதங்களினின்றும் இறங்கித் தனக்கு நிகரெவருமில்லாத தலைவன் பொருந்திய பொன்மயமான சிகரத்தினையுடைய மலைமீதேறிச் சென்றனர்.

ஏறினர்வெற்பின்மேலெவருந்தெய்வத
நூறெறிகம்மியனுனித்துச்செய்திடு
மாறகறிருநகர்வளங்கண்டிந்திரன்
சாறயர்வதுவையஞ்சாலேநண்ணினர்.

(இ-ள்.) அனைவரும் மலைமீதேறிச் சிற்பநூலணர்ந்த கம்மியனு லாலோசனையுடன் செய்யப்பட்ட எதிரின்றி விளங்கும் அழகிய நகரின் வளங்களைப்பார்த்து இந்திரன் விழவுகொண்டாடுகின்ற திருமணச்சாலையை யடைந்தார்கள்.—எ-று. (௧௬௪)

அம்முசுகுந்தனே யாதியாகிய
வெம்முடிமன்னருமிமையவர்க்கிறை
செம்மலரடிகளைச்சென்னிசேர்த்தினர்
கைம்முறைதொழுதனர்களிப்பின்மிக்குளார்.

(இ-ள்.) அந்த முசுகுந்தன் முதலிய எந்த முடிமன்னர்களும் தேவராசனுடைய செவ்விய மலரடிகளைத் தலைமீது சேர்த்தினார்கள். களிப்பின் மிக்க அவர்கள் கைகளாலும் வணங்கினார்கள்.—எ-று. (௧௬௫)

கயமலர்குவளையிற்கண்கண்மிக்குளா
னயனுறுமரசருக்கருளியாங்கவர்
செயன்முறைவினவியேசிறப்பினுகிய
நயமொழிபலவுடனவின்றுமேவினன்.

(இ-ள்.) கயத்தின்மலர்ந்த கருங்குவளை யலர்களையொப்ப மிகுந்த கண்களையுடையவனாய் நின்ற இந்திரன் அருகில் வணங்கிநின்ற அரசருக்கருள்புரிந்து அன்னவரின் செயன் முறைகளைக் கேட்டுச் சிறப்புவாய்ந்த பல நயமொழி கூறி இருந்தனன்.

மேதகுகதியராவிசும்பிற்சென்றிடு
மாதவன்மதிமுதலமரர்யாவரு
மாதிரவிறைவருமாதவத்தரும்
பாதலவாணரும்பரங்குன்றெய்தினர்.

(இ-ள்.) மிகுந்த வேகமுடையாராக வானிற் சஞ்சரிக்கின்ற சூரியன் சந்திரன் முதலிய தேவரனைவரும் திக்குப்பாலர்களும் மிகுந்த தவமுடைய இருடியரும் பாதலலோக வாசிகளான நாகராதியரும் திருப்பரங்கிரியை அடைந்தார்கள்.—எ-று.

விண்டொடர்பிறங்கலின்மிசையிவர்ந்துபோ
யண்டரும்பிறருமாயமரர்கோன்றனைக்
கண்டனர்தொழுதனர்களிப்பின்மாதவ
ரெண்டகுமாசிகளியம்பியெய்தினர்.

(இ-ள்.) வானமளவிய அப்பரங்குன்றிலேறிச்சென்று தேவரும் பிறருமாகத் தேவராசனைக்கண்டு வணங்கினார்கள். சந்தோஷத்துடன் புகழத்தக்க முனிவர்கள் ஆசிகூறி அடைந்தனர்.—எ-று. (௧௬௮)

விறல்வரைமாதரும்விண்ணின்மாதருஞ்
செறிபுனன்மாதருந்திசையின்மாதரு
முறுதவமாதருமுரகமாதரு
மறுவகல்புலோமசைவயின்வந்தீண்டினர்.

(இ-ள்.) வெற்றிபொருந்தியவரையரச மகளிரும் வானுலகமாதரும் நெருங்கிய நீரரமகளிரும் திக்குக்களில் வாழ்மாதர்களும் பொருந்திய தவமாதரும் நாகலோகமாதரும் முதலிய இவர்கள் குற்றமற்ற இந்திராணியை வந்தடைந்தனர்.—எ-று. (௧௬௯

சூரரமங்கையர்தொல்லைவிண்ணவர்
பேரரசியற்றியபிரான்றன்காதலி
சீரடிவந்தனைசெய்துதெய்வத
வாரணமென்பவண் மருங்கிலெய்தினார்.

(இ-ள்.) சூரரமகளிராயுள்ளா ரனைவரும் முன்பு தேவரையாளுதலாகிய பெரிய அரசினை நடத்திய இந்திரனுடைய மனைவியான இந்திராணியின் சிறந்த கால்களை வணங்கித் தேவயானையினருகி லெய்தினார்கள்.—எ-று. (௧௭௦)

தெய்வதயானைகேடீயசூருயிர்
வவ்வியவேலினான்மனைவியாதியா
லெவ்வுலகிற்குநீயிறைவியாமென
வவ்வவரடிபணிந்தன்பொடேத்தினார்.

(இ-ள்.) தெய்வயானையம்மையே நீ கேட்பாயாக கொடிய சூரபன்மனுயிரை வவ்விய வேற்படையினையுடைய சுப்பிரமணியப் பெருமானுக்கு மனைவியாதி, ஆதலின் எவ்வுலகிற்கு நீயே இறைவியென்றுரைத்து அவரவர்களும் அவ்வன்னையின் பாதங்களை வணங்கி அன்போடு துதித்தனர்.—எ-று. (௧௭௧)

கயற்புரைநோக்குடைக்கடவுள்யானைபா
லியற்படுதிருநலனிருக்கப்பின்னருஞ்
செயற்படுகோலமுஞ்சிறிதுசெய்திட
மயற்படவுன்னினர்மடநல்லாரெல்லாம்.

(இ-ள்.) சேலனையகண்ணியான தெய்வயானையம்மையிடத்து இயற்கையழகு முற்றிலும்பொருந்தி இருக்கவும் செயற்கையழகுஞ் சிறிதியற்றல்வேண்டுமென்று மயக்கமுண்டாக நினைத்தனர் மடமைக்குணம் வாய்ந்த மாதரனைவரும்.—எ-று. (௧௭௨)

பொன்னகமதனிடைப்புராரிசேயினைத்
தன்னகமிசைகொடுதவத்தையாற்றினாள்
பின்னகமயிர்முடிப்பிணையற்சூழலை
மென்னகவிரல்களான்மெல்லநீக்கினார்.

(இ-ள்.) பொன்மலையான மகாமேருவிற் புராரி குமாரரான செவ்வேளினைத் தன தகத்தேகொண்டு தவஞ்செய்த தெய்வயானையம்மையின் பின்னலினையுடைய கூந்தற்கற்றையை மெல்லிய நகத்தினையுடைய விரல்களால் மெல்லென நீக்கினார்கள்.

காசறைவிரவியகடிமென்கூந்தலிற்
பூசினர்நாவிநெய்புதியசாந்தமு
மாசறுபளிதமுமற்றுநீவியே
நேசமொடொண்பனிநீர்கொண்டாட்டினார்.

(இ-ள்.) மயிர்ச்சாந்துதோய்ந்த மணம்பொருந்திய கூந்தலிற் புனுகு நெய்யினையும் புதிய சந்தனத்தினையும் பூசினார்கள் குற்றமற்ற கற்பூரமும் மணம்பொருந்திய பிறபொருள்களையும் பூசினார்கள் பின்னர் விருப்பத்துடன் ஒள்ளிய பனிநீரினைக்கொண்டபிஷேகஞ் செய்துவைத்தனர்.—எ-று. (௧௭௩)

சேந்ததோர்வெம்பணிசீற்றத்தாற்கரும்
பாந்தளைவாய்க்கொடுபற்றுமாறெனப்
பூந்துகிற்கிழிகொடுபுனல்வறந்திடக்
கூந்தலையொற்றினர்குழைமென்கொம்பனார்.

(இ-ள்.) செந்நிறமான ஒரு வெவ்விய பாம்பு கோபத்தாற் கரும்பாம்பினை வாயாற் பிடிக்குமாறுபோல அழகிய வொற்றுடையால் நீர் வற்றும்படி கூந்தலை யொற்றினர், குழையினையுடைய மெல்லிய கொம்புபோலுமாதர்.—எ-று. (கஎ௫)

மாந்தளிரேயெனவனப்புமென்மையுங்
காந்தியுமெய்தியேகடவுட்டன்மையாற்
றோய்ந்திடலின்றியுந்துப்பின்வண்ணமாம்
பூந்துகிலொன்றினைப்புனைந்துடீஇயினர்.

(இ-ள்.) மாந்தளிரைப்போன்ற அழகும் மென்மையும் பிரகாசமும் பொருந்தித் தெய்வத்தன்மையால் எந்தச் சாயத்திலுந் தோயாதிருந்தும் பவளவன்னமாக விளங்கும் ஒரு அழகிய சேலையைக் கொய்து தரித்தனர்.—எ-று. (கஎசு)

ஈராறுகதிர்களுமிம்பர்சேர்தலி
னாரிருள்யாவையுமஞ்சியவ்வைதன்
வாரொலிகூந்தலின்மறைபுக்காலெனக்
காரகினறும்புகைகமழவூட்டினார்.

(இ-ள்.) பன்னிரு சூரியர்களும் இங்குச் சேர்ந்திருத்தலால் அரிய இருள் முழுதும் அச்சமுற்றுத் தெய்வயானையம்மையின் நீண்டுதழைத்த கூந்தலினிடம் அடைக்கலம் புகுந்தாற்போல கரியவகிலின் நறிய புகையை மணம்வீசுமாறு ஊட்டினார்கள்.

பொலம்புரியுத்தியும்பொருதமஞ்ஞையும்
வலம்புரிமகரமுமரபில்வானவர்
குலம்புரிதவம்புரைகொம்பின்கூழையி
னலப்புரிமங்கலநவின்றுசாத்தினார்

(இ-ள்.) அழகினைத் தருகின்ற உத்தியென்னும் ஆபரணமும் எதிர்முகமஞ்ஞையென்னுந் தலைக்கோலமும் வலம்புரியென்னும் அணியும் மகரப்பருவாயென்னும் அணியும் முறையாகத் தேவகுலத்தாற்செய்த தவம்போன்ற பூங்கொம்பனைய தெய்வயானை அம்மையின் கூந்தலில் நன்மையைத் தருகின்ற மங்கலங்கூறி யணிந்தார்கள்.

விரியிணர்க்கோங்கமும்வெட்சியுஞ்செரீஇ
மருமலரிடையிடைவைத்துவாசமார்
தெரியலுந்தொடையலுஞ்செறியச்சூட்டியே
சுரிகுழன்முடித்தனர்சுழியத்தன்மையால்.

(இ-ள்) விரிந்த கொத்தினையுடைய கோங்கலரும் வெட்சியலருந்தரித்து மணம்பொருந்தியமலர்களை இடை இடையே சொருகிக்கட்டிய வாசனைபொருந்திய தெரியலென்னுமாலைகளும் தொடையலென்னுமாலைகளும் நெருங்கவணிந்து சுரிகுழலினை சுழியற்கொண்டையாக முடித்தனர்.—எ-று. (கஎகூ)

ஒருமுயன்முழுமதியுள்புக்காலென
விருவிழிபுருவமாமினையவற்றொடு
கருநிறங்கண்டிடக்காமர்சாந்தினாற்
றிருநுதலதனிடைத்திலகந்தீட்டினார்.

(இ-ள்.) ஒரு முயலான களங்கமானது பூரணசந்திரனுட் புகுந்தாற்போல இருவிழிபுருவமென்னு மிவைகளுடன் கருநிறங்காணுமாறு அழகிய கரியசாந்தினாற் திருநுதற் றிலதந் தீட்டினார்கள்.—எ-று. (கஅ௦)

ஊட்டியநறும்புகையோதிநின்றெரீஇத்
தீட்டியதிருநுதற்றிலகஞ்சேர்தரப்

பூட்டினர்சுட்டியைப்புயங்கமொன்றுநா
நீட்டிநஞ்சுமிழ்தருநிலைமையீதென.

(இ-ள்.) ஊட்டிய நல்ல புகையானது கூந்தலினின்றும் விலகி எழுதப்பெற்ற திருநுதற்றிலதத்தோடு பொருந்த ஒரு பாம்பு நாவினைநீட்டி நஞ்சினையுமிழ்ந்தாங்கு நெற்றிச்சுட்டியை யணிந்தார்கள்.—எ-று. (கஅக)

கோல்வளையநலார்குழையில்வல்லியஞ்
சூல்வளைமிடற்றினிற்றொடையன்முத்தணி
கால்வளைகஞ்சநேர்கரத்துந்தோளினும்
வால்வளைதொடியிவைவயங்கச்சேர்த்தினர்.

(இ-ள்.) அழகிய வளையலணிந்த மாதர்கள் காதுகளில் வல்லிகை யென்னும் பெயர்வாய்ந்த காதணிகளையும் கருத்தங்கிய சங்கனைய கண்டத்தில் மாலையாகப் பின்னப்பட்ட முத்தாபரணங்களையும் தாள்வளைந்த தாமரையலர்போன்ற கரங்களினும் தோள்களினும் வெள்ளிய வளையல்களையும் விளங்குமா றணிந்தார்கள்.—எ-று. (கஅஉ)

"வல்லிகை கொட்டங்கடிப்பங்காதணி" என்பது பிங்கலம்.

கொட்டினர்கலவைகள்கொங்கையின்மிசை
மட்டிமிர்பிணையலுமணியின்கோவையு
மட்டினர்படாமுமொன்றதன்கட்சேர்த்தின
ரிட்டிடையிடைதனக்கிரக்கம்வைக்கிலார்.

(இ-ள்.) தனபாரங்களின்மேல் கூட்டுவெருக்கச் சந்தனக்குழம்பினைப் பூசினார்கள். தேன்ததும்புகின்ற பின்னன் மாலைகளையும் அரதனவடங்களையும் அணிந்தார்கள், சிறிய இடைக்கு வருத்தம் நேருமே என இரக்கங்கொள்ளாத மாதர்கள் ஒரு ஆடையையும் அத்தனங்கண் மீதணிந்தனர்,—எ-று. (கஅ௩)

மாடகயாழ்புரைமழலைப்பெண்பிள்ளை
யாடகவிரைமலரனையதாள்களிற்
பாடகம்பரிபுரம்பாதசாலங்கள்
சூடகமுன்கையார்தொழுதுசூழ்வித்தார்.

(இ-ள்.) முறுக்காணிகளையுடைய வீணையினோசைபோன்ற மழலைச்சொல்லினையுடைய தெய்வயானையம்மையின் பொன்னலரனைய திருவடிகளில் பாடகம்பரிபுரம் பாதசாலம் முதலியவைகளைச் சூடகமென்னு மணியணந்த முன் கையினையுடைய பெண்கள் வணங்கி அணிவித்தனர்.—எ-று, (கஅச)

தெய்வதமடந்தையர்திருவின்செல்விபா
லிவ்வகையொப்பனையியற்றியேத்தலு
மைவிரிகுவளைநேர்வடிவக்கண்ணினா
னவ்விடைசெய்திடுமமைதிகூறுவாம்.

(இ-ள்.) தேவமாதர்கள் திருமகள் குமாரியான தெய்வயானையம்மையினிடத்து இவ்வாறலங்காரங்களைச்செய்து வணங்குதலும் கருமைமிகுந்த குவளைமலர்போலுங் கண்களையுடைய தேவராசன் அவ்விடத்துச் செய்தஅமைதிகளையுரைக்கின்றேம்.—எ-று. (கஅரு)

வேறு.

மேலைவானவர்க்கிறையவன்விரிஞ்சனைநோக்கிச்
சாலையாகியதவ்வெலாத்தேவருஞ்சார்ந்தார்
மாலைதாழ்முடியெம்பெருமுதல்வற்குமணஞ்செய்
காலைநாடியேயிஃதெனக்கழறுதியென்றான்.

(இ-ள்.) சுவர்க்கவாணர்களான தேவர்களின் அரசனான இந்திரன் பிரமதேவனைப் பார்த்துக் கலியாணமண்டபம் முடிந்தது அனைத்துத்தேவர்களும் வந்திருகின்றனர் மலர்மாலைதொங்குகின்ற திருமுடியினையுடைய எமதுபெரிய முதல்வரான குமாரசுவாமியாருக்குத் திருமண நடத்தற்கேற்ற சமயத்தினையாராய்ந்து இதுசமயமென உரைப்பாயாக என்றுகூறினன்.—எ-று. (௧௮௬)

அப்புரந்தரன்மொழிதனையம்புயன்வினவிச்
செப்புகின்றதென்னறுமுகப்பரன்மணஞ்செய்தற்
கெப்பெரும்பகலாயினுமினியதேயெனினு
மொப்பகன்றிடுமுகூர்த்தமிவ்வெல்லையென்றுரைத்தான்.

(இ-ள்.) அந்த இந்திரனுடைய வாய்மொழியைப் பிரமதேவன்கேட்டு, உரைப்பதென்னை, சண்முகப்பரமன் திருமணஞ்செய்தற்கு எந்தப்பெரிய தினமும் இனிமையானதேயாயினும் இந்நேரம் ஒப்பற்ற சுபமுகூர்த்த மேயாமென்று கூறினன்.—எ-று.

ஈவதேமுறையாயுளாயிப்பகல்சிறந்த
தாவதேயெனின்யான்பெறுமணங்கையீண்டளிப்பான்
றேவதேவனுமறுமுகச்செம்மலைக்கொணரப்
போவதேகடனெமக்கெனப்புரந்தரன்புகன்றான்.

(இ-ள்.) படைத்தலையே முறையாக வுடையாய் இத்தினமே சுபதினமென்று கூறினை ஆதலினால் நான்பெற்ற மகளை இவ்விடத்தில் மணஞ்செய்தளிப்பான் தேவதேவரான ஆறுமுகக்கடவுளை அழைத்து வருதற்குச் செல்வதே எமக்குக் கடமை என்று இந்திரனுரைத்தான்.—எ-று. (௧௮௮)

அனையகாலையிலச்சுதக்கடவுளுமயனு
மினிதுபோதுமென்றிந்திரன்றன்னொடுமெழுந்து
முனிவர்யாவருந்தேவருஞ்சூழ்ந்துமுன்படரப்
புனிதநாயகனாலயநோக்கியேபோனார்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்திற் திருமாலும் பிரமனும் நன்றுசெல்வாமென இந்திரனுடனெழுந்து அனைத்து முனிவரும் அனைத்துத் தேவருஞ்சூழ்ந்து முன்னே செல்லாநிற்ப நின்மலவுருவரான சுப்பிரமணியக்கடவுளின் ஆலயத்தைச்சுட்டிச்சென்றனர்.—எ-று. (௧௮௯)

போந்துமற்றவர்பொலன்மணிக்கோயிலுட்புக்குச்
சேந்தன்மாமலரடிகளைமுடிகளிற்சேர்த்திக்
காந்தண்மெல்விரன்மடந்தைபாற்கடிமணப்புரிய
வேந்தனீயவண்வந்திடவேண்டுமென்றிசைத்தார்.

(இ-ள்.) அத்தேவராதியரனைவரும் பொன்னுமணியுமிட்டிழைத்துள்ள ஆலயத்துட்சென்று சேந்தன் என்னுந்திருப் பெயரினையுடைய குமாரசுவாமியின் திருவடிகளைத் தலையால்வணங்கி எம்பெருமானே காந்தண்மலர்போன்ற மெல்லிய விரல்களையுடைய தெய்வயானையம்மையிருக்குமிடத்துக்குத் திருமணமியற்றுதற்குத்தேவரீர் எழுந்தருளுதல் வேண்டுமெனக்கூறினார்கள்.—எ-று. (௧௯௦)

இன்னவாசகம்வினவலுமிராறுதோளுடையோ
னன்னதாகவென்றருள்செய்துமடங்கலேற்றும்
பொன்னின்மாமணியணையினும்பொருக்கெனவெழுந்தான்
றன்னுவீரரும்பாரிடமுதல்வருந்துதிப்ப.

(இ-ள்.) பன்னிரண்டு திருத்தோள்களையுடைய சிவசண்முகப்பெருமான் இவ் வசனத்தினைக்கேட்டவுடனே அவ்வாறேசெய்வோமென வருளிச்செய்து அருகினொரு ங்கிஇருந்துள்ள பூதவீரரும் பிறரும் துதிக்கும்வண்ணம் சிங்கங்களாற்சுமக்கப்படுகின்ற பொன்னுஞ்சிறந்த மணிகளும் இட்டிழைத்துள்ள ஆசனத்தினின்றும் விரைவாக எழுந்தனர்.—எ-று. (௧௯௧)

எழுந்துமுன்னுறுமஞ்ஞையஞ்சேவன்மே லேறிச்
செழுந்தனிக்கமலத்தயனாதியாந்தேவர்
விழுந்துமுன்பணிந்தேத்தியேவிரைமலர்மாரி
பொழிந்துபாங்கராய்வந்திட வீதிவாய்ப்போந்தான்

(இ-ள்.) சிங்காதனத்தினின்றும் எழுந்து எதிரேநின்ற மயிலினுன்னை சூரா ன்மீது எழுந்தருளிச் செழுமைவாய்ந்த ஒப்பற்ற தாமரையாசனத்தினனான பிரமன் முதலிய தேவர்கள் எதிரில் விழுந்து வணங்கித்துதித்து மணம்பொருந்திய மலர்களை இறைத்து அருகில்வராநிற்ப வீதியினிடத்துக்கு எழுந்தருளினர் —எ-று. (௧௯௨)

கொற்றவெண்குடையெடுத்தனர்குளிர்பனிக்கவரிக்
கற்றைவீசினராலவட்டங்கள்காலசைத்தா
ரொற்றைவாட்படையேந்தினருடுபதிக்கடவுண்
மற்றையாதவன்மருத்துவன்சலபதிமறலி.

(இ ள்.) எம்பெருமான் மஞ்ஞையஞ் சேவன்மீது திருவீதியிலெழுந்தருளிய வுடனேசந்திரன் சூரியன் வாயு வருணன் யமன் என்பவர்கள் முறையே வெண்கொற் றக்குடைபிடித்தும் குளிர்ச்சியைத்தருகின்ற கவரிகளை வீசியும் ஆலவட்டத்தாற் காற்றுண்டாக்கியும் ஒற்றைவாட் படையேந்தியும் வந்தார்கள்.—எறு. (௧௯௩)

ஆழிமாலயனுவணமுமன்னமுமழியா
வூழிநாயகனூர்தியினொலிகொலென்றுட்கக்
கேழிலாமலர்க்கிஞ்சுகச்சூட்டொடுங்கிளர்ந்து
கோழிநீள்கொடியார்த்ததெவ்வண்டமுங்குலுங்க.

(இ-ள்.) சக்கரப்படையினையுடைய திருமாலின் கருடக் கொடியும் பிரமனு டைய அன்னக்கொடியும் அழியாத ஊழிநாயகனுடைய வாகனத்தினொலியோவென்று அஞ்சுமாறு நிறத்தொடு பொருந்திய முண்முருக்கலரையொப்ப விளங்கும் உச்சிப்பூவு டனே விளங்கிய கோழியாகிய நீண்டகொடியானது அண்டமுங்குலுங்குமாற வாரித் தது.—எ-று. (௧௯௪)

வேதரார்த்தனர்வேதமுமார்த்தனவிண்ணோர்
மாதரார்த்தனர்மாதவரார்த்தனர்வயவெம்
பூதரார்த்தனர்பூதமைந்தார்த்தனபுடவி
நாதரார்த்தனர்நாதமிக்கார்த்தனநகமே.

(இ-ள்.) பிரமர்கள் ஆரவாரித்தனர் வேதங்கள் ஆரவாரித்தன, தேவமாதர்கள் ஆரவாரித்தனர் சிறந்த முனிவர்கள் ஆரவாரித்தனர், வெற்றியும் வீரமுமுடைய பூதர் கள்ஆரவாரித்தனர் ஐம்பூதங்களுமாரிவாரித்தன;பூமிநாதர்களாரவாரித்தனர் இதனாலம் மலைபேரோசை மிக்கு எதிரொலிகாட்டியது.—எ-று, (௧௯௫)

திண்டிபேரிகைதண்ணுமைசல்லரிதிமிலை
பண்டியிற்பெயர்குடமுழாக்காகளம்படகந்
தொண்டகந்துடிதுந்துபிவலம்புரித்தொகுதி
யண்டம்விண்டிடவியம்பினர்பூதரிலநேகர்.

(இ-ள்.) பூதரிலனேகர் திண்டி, பேரிகை, தண்ணுமை, சல்லரி, திமிலை, வண்டிகளிலிழுத்துச் செல்லுகின்றகுடமுழா, காகளம் படகம்தொண்டகம் துடி, துந்துபி, வலம்புரிச்சங்கின் கூட்டமாதிகளை அண்டம்வெடி படுமாறு முழக்கினர்.—எ-று. ()

அஞ்சிலோதியின்மேனகையுருப்பசியரம்பை
கிஞ்சுகச்செவ்வாய்த்திலோத்தமைமுதலினோர்கெழுமி
மஞ்சமீதினுமானத்துநின்றுவாள்விழிக
ணஞ்சுமிழ்ந்திடவமுதெனப்பாடியேநடித்தார்.

(இ-ள்.) அழகியதகட்டணியணிந்த கூந்தலினளான இனியமேனகையும் உருப்பசியும் அரம்பையும் முருக்கலர்போன்ற செவந்தவாயினளான திலோத்தமையு முதலியதேவதாசியர் நெருங்கி மஞ்சங்களினும் விமானங்களினு நின்றுவாளனையகண்கள்மோகமாகிய நஞ்சினையுமிழாநிற்ப அமுதம்போலப் பாடியாடினர்.—எ.-று (கூகஎ)

யாணர்வண்டினஞ்சுரும்புடனலமரும்யாழும்
வீணையுங்கரம்பற்றியேவிஞ்சையர்முதலோர்
சேணரம்பையர்தனிநடத்தோடுசேர்தூக்கும்
பாணியும்மிசைவுற்றிடவிசைத்தனர்பாடல்.

(இ-ள்.) அழகிய ஆண்வண்டுகள் பெண்வண்டுகளுடனே சுழலுகின்ற மலர்மாலையணிந்த யாழ்களையும் வீணைகளையுங் கைகளிலேந்தினராய் வித்தியாதரர் முதலியவர்கள் சுவர்க்கத்தவரான அரம்பையரின் நடனத்துடன் பாட்டொலியும் தாளமும் பொருந்தும் வண்ணம் பாடல்களைப் பாடிச்சென்றனர்.—எ-று. (கூகஅ)

பொருவில்வீரரும்பூதரும்புரந்தரன்முதலாஞ்
சுரருமாதவர்யாவரும்பிறருமாய்த்துன்னி
யொருவர்மெய்யினையொருவர்மெய்நெருக்கவுற்றிடலாற்
றெருவுமுற்றமுமிடம்பெறுவாயினசிறிதும்.

(இ-ள்.) ஒப்பற்ற போர்வீரர்களும் இந்திரன் முதலிய தேவர்களும் சிறந்த தவத்தினரனைவரும் பிறர்களுமாக நெருங்கி ஒருவருடலினை ஒருவர்நெருக்கச் செல்லுதலால் தெருக்களுமுற்றங்களுஞ் சிறிதும் இடம்பெறுதனவாயின.—எ-று. (கூகூ)

வேறு.

இன்னதன்மைகளியலவெல்லைதீர்
பொன்னின்வீதிவாய்ப்போந்துபுங்கவர்
மன்னனுற்றியமணத்தின்சாலையின்
முன்னர்வந்தனன்முடிவின்முன்னையோன்.

(இ-ள்.) இவ்வாறான செயல்கள் நிகழாநிற்ப அளவற்ற பொன்மயமான வீதிவழியே சென்று தேவராசனியற்றியுள்ள திருமணச்சாலையின் எதிரே எழுந்தருளினார் அழிவற்ற முதல்வரான குமரக்கடவுள்.—எ-று. (௨௦௦)

ஆவதாகியவண்ணநன்மிசைத்
தாவில்கும்பமேற்றருப்பைதோய்த்தநீர்
தூவியாசிகள்சொற்றுயாதவ
ரேவருந்திரண்டெதிர்கொண்டேத்தினர்.

(இ-ள்.) அவ்வாறெழுந்தருளிய சுவாமியின்மீது கெடாதபூரணகும்பங்களின் மீது வைத்துள்ள தருப்பையிற் றோய்க்கப்பட்ட நீரினை இறைத்து ஆசீர்வசனமொழிந்து சிறந்த தவசிகளனைவரும் ஒருங்குகுழுமியெதிர்கொண்டு துதித்தனர்.—எ-று. ()

செங்கைதன்னிடைத்தேவர்மாதவர்
நங்கைமாரெலாநாலிரண்டெனு
மங்கலங்களுமரபினேந்தியே
யெங்கணுயகற்கெதிர்ந்துபோற்றினர்.

(இ-ள்.) செவ்வியகரங்களிற் தேவர்கள் மாதர்களும் முனிவர் மாதர்களும் ஆகிய அனைவரும் அட்டமங்கலங்களை முறைப்படி தாங்கினவர்களாய் எங்கள் தலைவரான குமாரசுவாமியின் எதிரேசென்று துதித்தார்கள்.—எ-று. (உ0உ)

பஞ்சிதூயநெய்பளிதநாவிபாய்
விஞ்சுதீஞ்சுடர்மிளிர்பொற்றட்டைக
ளஞ்சிலோதியரங்கையேந்தியே
செஞ்செவ்வேண்முனஞ்சிறப்பித்தாரரோ.

(இ-ள்.) பஞ்சியுந்தூய நெய்யும் கருப்புரமும் புனுகுநெய்யுங்கலந்துயர்ந்து விளங்குகின்ற தீபச்சுடர்கள் பிரகாசிக்கின்ற பொன்தட்டங்களை அழகியசில்லணிந்த கூந்தலினரானமாதர் அகங்கைகளிலேந்திச் செவ்விய குமரவேளின் எதிரே சிறப்பித்தனர்.—எ-று. (உ0௩)

காலையங்கதிற்காலையங்கதிர்
மேலைவிண்முகில்விட்டகன்றெனக்
கோலஞ்செய்யநங்குமரநாயக
னீலமஞ்ஞைமேனின்றுநீங்கினன்.

(இ-ள்) உதயகாலத்தில் இளஞ்சூரியன், மேலுள்ள மேகத்தினை விட்டகன்றாற்போல வடிவஞ் செவ்விதாகவுள்ள நமது குமரவேள் நீலநிறமான மயிலினின்றும் இறங்கியருளினர்.—எ-று (உ0௪)

ஏயமஞ்ஞைநின்றிழிந்துவேள்வியெய்
கோயின்முன்கடைக்குமரன்சேர்தலு
மாயபோழ்தினிலரம்பைமாரொடுந்
தூயதோர்சசிதொழுதங்கெய்தினள்.

(இ-ள்.) தாமேறி நடாத்தியமயிற் பரியினின்றும் இறங்கித்திருக்கல்யாணநடக்கவேண்டிய மண்டபத்தின் தலைவாசலிற் குமரக்கடவுள் எழுந்தருளுதலும் அப்பொழுது அரம்பை மாதர்களுடன் தூய்மைவாய்ந்த இந்திராணி வணக்கத்துடன் அங்கு வந்தனள்.—எ-று. (உ0௫)

எதிர்புகுந்திடுமிந்திராணிதன்
புதியதோர்பசுப்பொழிந்ததீயபா
னிதியின்கொள்கலநிரப்பிவந்துவேள்
பதயுகங்களிற்பரிவொடாட்டினள்.

(இ-ள்.) எதிர்கொண்டுசென்ற இந்திராணியானவள்தனது பசுவானகாமதேனுவானது புதிதாகப் பொழிந்தபாலினை மாணிக்கக்கலசத்துள் நிறைத்துவந்துகுமரக்கடவுளின் உபயசரணார விந்தங்களில் விருப்பத்துடன் அபிஷேகஞ் செய்தனள்-எ-று.

ஆட்டித்தீம்பயனலருங்கண்ணியுஞ்
சூட்டிமெல்லடிதொழுதுபல்சுடர்
கூட்டிவைத்ததோர்கொள்கலந்தனைக்
காட்டிமும்முறைகடவுட்சுற்றினள்.

(இ-ள்.) காமதேனுவின் இனியபாலினால் அபிஷேகஞ்செய்து பூவுமாலையு மிட்டுத் திருவடிமலர்களை வணங்கிப்பலதீபங்களை அமைத்துவைத்த பாத்திரத்தினை யெடுத்துமூன்று முறைதீபாராதனை செய்தனள்.—எ-று. (௨0எ)

இனையதன்மைகளியற்றியிந்திரன்
மனைவிவெள்கியேமடமின்னாரொடுந்
தனதுமந்திரந்தன்னிற்போதலு
மனகன்கண்டதற்கருள்செய்தேகினான்.

(இ-ள்.) இவ்வாறான செயல்கள் செய்து இந்திரன்மனைவியான இந்திராணி வெட்கமுற்று உடன்வந்த இளமாதர்களுடன் தனது மாளிகைக்குச் சென்றனள் அவளதச்செயலினைக்கண்டு அனகரான குமரக்கடவுள் கருணைசெய்து சென்றனர்.—எ-று.

கோலமாமணிகுயிற்றிப்பொன்னரி
மாலைநாற்றியேவனப்புச்செய்திடுஞ்
சாலைபுக்கனன்றனக்குவேறொரு
மூலமில்லதோர்முதலின்வந்துளான்.

(இ-ள்.) அழகியசிறந்த மணிகளாலமைக்கப்பெற்று பொன்னரிமாலைகளைத் தொங்கவிட்டு அலங்கரிக்கப்பட்ட மணமண்டபத்துட் புகுந்தனர் காரணரகிதரான சிவபெருமானளித்தருளிய குமாரசுவாமியார்.—எ-று. (௨0௯)

வேறு.

பக்கமாயரிபங்கயனாதியோர்
தொக்குவந்திடத்தொன்மணிமண்டபம்
புக்குநம்பிபுரந்தரனுய்த்திடு
மிக்கபீடத்தில்வீற்றிருந்தானரோ.

(இ-ள்.) அருகில் இந்திரன் முதலியதேவர்கள் நெருங்கிவாநிற்பப்புராதன மணிகளாலமைக்கப்பட்ட மண்டபத்துட்புகுந்து இந்திரனாலிடப்பட்ட உயர்ந்தபீடத்தில் எழுந்தருளியிருந்தனர்.—எ-று. (௨௧0)

வீற்றிருந்தபின்வேதனுமாயனுந்
தேற்றமிக்கமுனிவருந்தேவரு
மாற்றல்வீரருமண்ணறனேவலா
லேற்றவேற்றவிடந்தொறும்வைகினார்.

(இ-ள்.) இவ்வாறெழுந்தருளி இருந்தவுடனே பிரமனுந்திருமாலும் வேதாகமத்தேர்ச்சியின் மிக்கமுனிவர்களும் தேவர்களும் வன்மைவாய்ந்த நவவீராதியரும் குமரக்கடவுளின் கட்டளையாற் தகுந்த தகுந்த இடங்கள் தோறும் இடங்கள்தோறும் இருந்தார்கள்.—எ-று. (௨௧௧)

அந்தவெல்லையவனியில்வாழ்முசு
குந்தனேமுதற்கொற்றவர்யாவரும்
வந்துவந்துவணங்கிவழுத்திடக்
கந்தனெந்தைகருணைசெய்தானரோ.

(இ-ள்.) அப்பொழுது மண்ணுலகில் வசிக்கின்ற முசுகுந்தன் முதலியஅரசரனைவரும் வந்து வந்து வணங்கித்துதிக்க எமது தந்தையான கந்தக்கடவுள் கருணை செய்தனர்.—எ-று. (௨௧௨)

ஆனகாலையரியயனொடு
ஞானநாயகனங்கையுந்தானுமோர்

மானமேல்கொண்டுமா யிருஞ்சாரதர்
சேனைசூழ்தரச்சேணிடைத்தொன் றினன்.

(இ-ள்.) இவ்வாறான சமயத்திற் பிரமவிஷ்ணுக்களால் அறிதற்கரியஞானமூர்த்தியானசிவபெருமான் உமாதேவியாருடன் ஒரு பெரிய விமானத்தின் மிகப்பெரிய பூதசேனைகள் சூழ்ந்து வாராநிற்பவானத்தில் எழுந்தருளினார். — எ-று. (உகரு)

அம்மையுந்தன தத்தனும்வந்தது
செம்மல்கண்டுசிறப்புடையோகையாய்
விம்மிதங்கொண்டுமேதகுமன்பினு
லிம்மெனக்கடிதேயெழுந்தானரோ.

(இ-ள்.) குமரவேள்தமதன்னையும் அத்தனுமான உமாதேவியாரும் சிவபெருமானும் எழுந்தருளியதனைப்பார்த்து மிக்கசந்தோட முடையவராய் ஆச்சரியமடைந்து மிகவுயர்ந்த அன்பினால் விரைந்தெழுந்தனர்.—எ-று. (உகசு)

கண்ணனாதிக்கடவுளர்யாவரு
மெண்ணிலாமுனிவோர்களுமெம்பிரா
னண்ணினானிங்குநாமுய்ந்தனமெனத்
துண்ணெனாவெழுந்தார்கைதொழுதுளார்.

(இ-ள்.) கிருட்டினன் முதலிய தேவர்களனைவரும் அளவற்ற முனிவர் கூட்டமும் இங்கு எம்பெருமான் எழுந்தருளினார் அதனால் உய்ந்தேமெனக் கைதொழுதவர்களாக விரைந்தெழுந்தனர்.—எ-று. (உகஎ)

அனையகாலையிலாதியம்பண்ணவ
னினிதுமானத்திழிந்துகணத்துடன்
புனிதநீடுபொலன்மணிச்சாலையுள்
வனிதையாளொடும்வந்துபுக்கானரோ.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் முழுமுதற்கடவுளான சிவபெருமான் விமானத்தினின்றுஞ்செவ்வனே இறங்கிப்பூதகணங்களுடன் நின்மலமான வுயர்ந்தபொன்னுமணியுமிட்டிழைத்த திருமணச்சாலையினுள் உமாதேவியாருடன் எழுந்தருளினார் ()

வேறு

அதுகண்டுநடந்தறுமாமுகவ
னெதிர்கொண்டுவிரைந்திருவோர்பதமு
முதிரன்பொடுதன்முடிசூடினனாற்
கதிருங்கமலங்களுமேவியபோல்.

(இ-ள்.) அங்ஙனஞ் சிவபெருமானெழுந்தருளியது கண்டு, சிறந்தசண்முகப்பெருமான் விரைவாக எதிர்கொண்டு சிவபெருமான் உமாதேவியாராகிய இருவர்திருவடிகளையும் சூரியனுந்தாமரை மலருமொன்றுபட்டாங்குத்தமது திருமுடியிற் சூடியருளினார்.—எ-று. (உகஎ)

வந்தஞ்சலிசெய்துவணங்கியதோர்
கந்தன்றனையங்கவர்கைகொடெடாத்
தந்தம்முரனாடுதழீஇமுறையே
முந்தன்பொடுயிர்த்தனர்முச்சியையே.

(இ-ள்.) விரைந்து வந்து வணங்கிய கந்தக்கடவுளை அவ்விருவருந்திருக்கரங்களாலெடுத்துத்தத்தம் மார்பிற் பொருந்த வணைத்து மற்பட்ட அன்பினாற் உச்சியை மூகர்ந்தனர்.—எ-று. (உகஅ)

முதுவானவரும்முனிவோரெவரும்
மதசூதனனும்மலர்மேலயனுஞ்
சதவேள்வியனுஞ்சகமீன்றவர்தம்
பதமீமிசைவந்துபணிந்தனரால்.

(இ-ள்.) முதிர்ந்த தேவர்களும் எல்லாமுனிவர்களும் திருமாலும் தாமரையாசனத்தையுடைய பிரமதேவனும் சதக்கிருதுவான இந்திரனும் உலகினையீன்றபார்வதிபரமேசுவரர்களின் திருவடிகளில் வந்து வணங்கினார்கள்.—எ-று. (உகக)

தாழ்வுற்றிடுவோருமைசங்கரனைச்
சூழ்வுற்றுவலஞ்செய்துசூழ்வினையூ
டாழ்வுற்றிடுபுன்மையகன்றடியேம்
வாழ்வுற்றனமென்றுவழுத்தினரால்.

(இ-ள்.) அவ்வாறு வணங்கிய தேவர்கள் உமாதேவியாரையுஞ் சிவபெருமானையும் சுற்றிவலம்வந்து எங்களைச்சூழ்ந்த வினையிலழுந்தி நின்ற இழிவுநீங்கி அடியோங்கள் வாழ்ந்தோமெனக் கூறித்துதித்தனர்.—எ-று. (உஉ0)

உன்னற்கரிதாகியுயிர்க்குயிராய்
மன்னுற்றவனைமலைமங்கையுடன்
பொன்னிற்புனையும்புதுமன்றன்மனை
தன்னிற்குமரன்கொடுசார்ந்தனனால்.

(இ-ள்.) நினைத்தற்கரிதாகி உயிருக்குயிராய் நிலைபெற்ற சிவபெருமானைப் பார்வதிதேவியுடன் பொன்னாலியற்றப்பட்ட புதிய திருக்கல்யாண மண்டபத்தினுள் குமரக்கடவுள் அழைத்துச்சென்றனர்.—எ-று. (உஉக)

வேறு.

ஆகியதொர்போழ்துதனிலாணைமுறைதன்னான்
மாகநெறிவந்தொருமணித்தவிசுநண்ணத்
தோகையுடைமஞ்ஞையுறழ்மதொற்றமுடைமாதோர்
பாகமுறவாயிடைப்பராபரனிருந்தான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் இறைவனுடைய கட்டளை வழியாய் வானவழியாக ஒரு அரதனவாதனம் அங்குவராநிற்பப் பீலியினையுடைய மயில்போலும் சாயலினையுடைய உமாதேவியார் ஒரு புறத்திலெழுந்தருளிஇருப்ப அவ்விடத்திலவ்வாசனத்தில் பராபரரான சிவபெருமான் எழுந்தருளியிருந்தனர்.—எ-று. (உஉஉ)

மங்கையுமையுஞ்சிவனும்வள்ளறனைநோக்கி
யிங்குவருகென்றுபினெடுத்தினிதுபுல்லித்
தங்கள்வயின்வைத்துநனிதண்ணளிபுரிந்தா
ரங்கதுதெரிந்துதொழுதம்புயனிசைப்பான்.

(இ-ள்.) உமாதேவியாரும் சிவபெருமானும் குமரக்கடவுளைப்பார்த்து இங்கு வருக என்றருளிச்செய்து பின்னரெடுத்துச்செவ்வனே அணைத்துத்தங்கள் அருகிலிருத்திமிகுந்த கருணைசெய்தனர் அந்தச் சமயமுணர்ந்து பிரமதேவன் சொல்லத்தொடங்கினன்.—எ-று. (உஉங)

முன்னமொருவைகறனின்மூவிருமுகத்தோன்
றன்னையசுரப்படைதடிந்திடவிடுத்தா
யன்னபரிசேயவுணராயுளரைவீட்டி
நென்னலிமையோர்சிறையுநீக்கியருள்செய்தான்.

(இ-ள்.) முன்னரொருதினத்திற் சண்முகப்பெருமானை அசுரசேனைகளை அழித்தருள விடுத்தருளினீர்கள் அவ்வாறே அசுரசேனைகளையழித்து நேற்றுத்தேவர் சிறையையு நீக்கி அருள்செய்தனர்.—எ-று. (உஉச)

நன்றியிதனைக்கருதி நாங்கள்புரிகைம்மா
றொன்றுமிலையென்னினுமுளத்தெழூம்விருப்பால்
வென்றியசுரேசர்கிளைவீட்டுகுமரேசற்
கின்றுமகவான்மகளையீந்திடநினைந்தான்.

(இ-ள்.) இந்த நன்றியைக்குறித்து நாங்கள் செய்யப்போகின்ற பிரதியுபகார மொன்று மில்லையாயினும் உள்ளத்திலெழாநின்ற இச்சையினால் வெற்றியுடனிருந்த அசுரர்கிளைகளையழித்த குமாரசுவாமிக்கு இந்திரன் இன்று தன்மகளைக் கொடுக்க வெ ண்ணினான்.—எ-று. (உஉரு)

அற்றமிலிரக்கமுடனாருயிர்கண்முற்று
நிற்றனுமளித்தருளுநேரிழையுநீயு
மற்றிதுபகற்பொழுதில்வந்தனிர்களென்றாற்
சிற்றடியரேங்கள்செயல்சீருளதையன்றோ.

(இ-ள்.) அழிவற்றகருணையுடன் அரியஉயிர் வருக்கங்களை நாடொறுங் காத் தருளுகின்ற உமாபிராட்டியாரும் எம்பெருமானும் அத்தகைய திருமணமகோச்சவ காலமான இப்பகற்பொழுதில் இங்கெழுந்தருளினீர்களானால் சிற்றடியேங்களின் தொழிலனைத்துஞ் சிறப்புடையனவன்றோ.—எ-று. (உஉசு)

என்றினையநான்முகனிசைத்திடலுமீச
னன்றெனமகிழ்ச்சிகொடுநாமுமிதுகாண்பான்
மன்றன்மலர்கூந்தன்மலைமங்கையுடனிங்ஙன்
சென்றனமிதற்குரியசெய்கவினியென்றான்.

(இ-ள்.) என்றிவ்வாறு பிரமனுரைத்தலும் சிவபெருமான் நன்றெனமகிழ்வுற றுநாமும் இத்திருக்கலியாணத்தினைக் காணுதற்கு மணமலரணிந்த கூந்தலாளான பார்வதியுடனிவ்விடத்திற்கு வந்தேம் இனியதற்கு வேண்டியன செய்யுங்கள் என்று திருவாய் மலர்ந்தருளினார்.—எ-று. (உஉஎ)

நாதனிவைகூறுதலுநன்குமகிழ்வெய்தி
மாதவனுநான்முகனும்வாசவனைநோக்கி
வேதமுறையான்முருகன்வேட்டருளவுன்றன்
கோதைதனையன்பொடுகொணர்ந்திடுதியென்றார்.

(இ-ள்.) சிவபெருமானிவ்வாறருளிச்செய்தவுடனே நன்றாய்மகிழ்வுற்றுத்திரு மகள் கொழுநனான திருமாலும் சதுர்முகனாகிய பிரமனும் இந்திரனைப்பார்த்து வேத விதிப்படி குமரவேள் திருமணஞ் செய்துகொள்ளுதற்கு, உனது மகளை அன்புடன் அழைத்து வருதிஎன்று கூறினார்கள்.—எ-று. (உஉஅ)

அந்தவமையந்தனிலதற்கிசைவுகொண்டே
பைந்தொடிநல்லார்களமர்பாங்கர்தனிலேகி
நந்தமையளித்தருளுநங்கைவருகென்னா
விந்திரன்விளித்திடலுமேந்திழையெழுந்தாள்.

(இ-ள்.) அப்பொழுததற்குச் சம்மதமுற்றவனாய்ப் பசியவளையலணிந்தமாதரி ருக்கும் இடத்திற்குச்சென்றுநம்மைக்காத்தருளுகின்ற தெய்வயானையம்மையை வருக வென்று இந்திரனழைத்தவுடனே தெய்வயானையம்மையார் எழுந்தனர்.—எ-று. ()

கல்லுயர்பொருப்பினிடைகாமரடிசெல்ல
வல்லனகொலென்றுமணிநூபுரமரற்ற
மெல்லிடைவருந்துமெனமேகலையிரங்க
வெல்லவருமுண்மகிழவெம்மனைநடந்தாள்.

(இ-ள்) பாரைகள் உயர்ந்தமலையின்மீது அழகியதிருவடிகள் செல்லத்தக்கனவோவென அரதனநூபுரம் அரற்றுகிற்பவும் மெல்லிய இடைவருந்துமென மேகலைவருந்தவும் மனமகிழுமாறு எமதன்னை நடந்துசென்றனள்.—எ-று. (உருo)

பஞ்சிதனின்மெல்லடிபனிப்பவரையின்பாற்
குஞ்சரிநடந்தசெயல்கூறுபுதுமைத்தோ
செஞ்சுடர்வைவேலுடையசெம்மலடிதீயே
னெஞ்சகவடுக்கலினுநின்றுலவுமென்றால்.

(இ-ள்.) செவ்வொளியினையும் வடிக்கப்பட்ட தன்மையினையும் உடையவேற்படைதாங்கிய குமரக்கடவுளின் திருவடிகள் கொடியவ எனது மனமாகிய மலையினுநின்றுலாவுமாயின் பஞ்சினுமெல்லிய திருவடிகள் பதைப்புறமலையின் பக்கத்திற்றெய்வயானையம்மையார் நடந்தசெயல் கூறுதல் ஓராச்சரியமோ.—எ-று. உருக)

தந்திமுன்வளர்ப்பவருதையன்மிகநொய்ய
செந்தளிரொதுங்கமிளிர்சிறடியொதுங்கி
யிந்திரையுநாமகளுமேனையருமேத்தப்
புந்திகளிகூர்தருபுரந்தரன்முன்வந்தாள்.

(இ-ள்.) வெள்ளையானையினால் வளர்க்கும் வண்ணம் வந்ததெய்வயானையம்மையார் மிகமென்மையான செவ்வியதளிர்கள் பின்னிடவிளங்குகின்ற சிறியதிருவடிகளால் நடந்து திருமகளுங்கலைமகளுந் துதிப்பமன மகிழ்வுற்றுநிற்கின்ற இந்திரனெதிரே வந்தனள்.—எ-று.
(உருஉ)

வேறு.

இன்னவெல்லையிலிந்திரன்றெய்வதக்
கன்னிதன்னைக்கடிமணச்சாலையின்
முன்னருய்ப்பமுனிவருந்தேவரு
மன்னைவாழியென்றேயடிபோற்றினர்.

(இ-ள்.) இங்ஙனந்தெய்வயானை யம்மையார் எதிரேவந்தவுடனே இந்திரன் அத்தேவகன்னியைத் திருமணமண்டபத்தினெதிரேயழைத்துச் சென்றான் உடனே முனிவர்களுந்தேவர்களும் அன்னையேவாழி என்று கூறித்திருவடி மலர்களை வணங்கினார்கள்.—எ-று.
(உருரு)

கணங்கொள்பேரவைகைதொழவாண்டுறு
மணங்குதன்னுடனுதியந்தேவனை
வணங்கிவேலுடைவள்ளலைநோக்கியே
சுணங்குசேர்முலைதுண்ணெனவெள்கினள்.

(இ-ள்.) தெய்வயானையம்மையார் கூட்டத்தினையுட்கொண்ட அப்பெரிய சபையானது வணங்காநிற்பச் சபையினிலெனெழுந்தருளி இருக்கின்ற உமாதேவியாருடன் சிவபெருமானைவணங்கி வேற்படையாளரான குமரக்கடவுளைக்கண்டு விரைவில் நாணமுடையாராயினர்.
(உருச)

மங்கைதாழ்தலும்வாலிதிநேக்கியே
யங்கணுதனருள்செயவண்ணலைக்
கொங்கையாற்குழைவித்தவள்கோல்வளைச்
செங்கையோச்சிச்சிறுபுறநீவினள்.

(இ-ள்.) தெய்வயானையம்மையார் வணங்கியவுடனே அழகிய நெற்றித்திருக் கண்ணுளரான சிவபெருமான் நன்றாய்க்கடாட்சித்து நீசிறுபுறநீவெனச் சிவபெருமானைத்தனங்களாற் குழைவித்த உமாதேவியார் அழகியவளையலணிந்த திருக்கரங்களை நீட்டிச் சிறிய பின்புறத்தினைத் தடவியருளினர்.—எ-று. (உருரு)

திருத்தகுந்திறற்சேயையுஞ்சேண்மிசை
யருத்திபெற்றவணங்கையுமுற்படும்
பெருத்தபொன்மணிப்பீடிகைமீமிசை
யிருத்திவைத்தனள்யாவையுமீன்றுளாள்.

(இ-ள்.) அனைத்துப்பொருள்களையு மளித்தருளிய உமாதேவியார் தக்கசிறப்பினையும் வெற்றியினையுமுடைய குமரக்கடவுளையும் பொன்னுலகத்தாரிடமன்புள்ள தெய்வயானையம்மையையும் எதிரிலிருந்த பொன்னுமணியு மிட்டிழைத்த பீடத்தின் மீது எழுந்தருளி இருக்கச்செய்தனர்.—எ-று. (உருசு)

வேறு.

அதிர்கழலீசனொடம்மையிருந்தாங்
கெதிரெதிர்விம்பமிலங்கியவாபோல்
வதுவையணிந்திடுமைந்தனுமாதுங்
கதிர்மணிதோய்கனகத்தவிசுற்றார்.

(இ-ள்.) முழங்கா நின்ற வீரக்கழலணிந்த சிவபெருமானுடன் உமாதேவியார் எழுந்தருளி இருந்தாற்போலவும் எதிரெதிரே பிரதிவிம்பம் விளங்கினார்போலவும் திருமணக்கோலங்கொண்டுள்ள சுப்பிரமணியப்பெருமானும் தெய்வயானையம்மையும் ஒளிவாய்ந்த மணிகளிழைத்த பொன்னாசனத்திலெழுந்தருளி இருந்தனர். (உருஎ)

தெய்வதமாதொடுசெங்கதிர்வேலோன்
வெவ்வரியேற்றணைமேவுதல்காணு
வெவ்வவருந்தொழுதேத்தினரீன்ற
வவ்வையுமத்தனுமாரருள்செய்தார்.

(இ-ள்.) தெய்வானையாருடன் செவ்வியகதிர் வேலினையுடைய குமாரக்கடவுள் வெவ்விய சிங்காசனத்தி லெழுந்தருளியிருத்தலைப்பார்த்து அனைவருந்தொழுது துதித்தார்கள் அப்பொழுது அன்னையுமப்பனுமான பார்வதி பரமேசுவரர்கள் அரிய திருவருள் புரிந்தனர்.—எ-று. (உருஅ)

அண்டர்தமக்கிறையாங்கவர்கோலங்
கண்டுபுகழ்ந்துகரந்தொழுதுச்சி
கொண்டுமிளிர்ந்துகுளிர்ந்திடுதேற
லுண்டசுரும்பினுமுண்மகிழ்வுற்றான்.

(இ-ள்.) தேவராசன் அங்ஙனஞ்சிங்காதனத்திலிருந்த இருவரின் அழகைத் தரிசித்துப் புகழ்ந்து கரங்களாற் தொழுது தொழுதகரங்களைத் தலைமீது குவித்து விளங்கிக் குளிர்ச்சிவாய்ந்த தேனுண்ட வண்டினும் மனமகிழ் வெய்தினன்.—எ-று.

நெஞ்சமகிழ்ந்தநெடுந்தகைசொல்லான்
மஞ்சனமாமலர்மற்றுளமுற்று
மெஞ்சலிலாவகையேந்தியவைக்க
ணஞ்சமுமஞ்சவருஞ்சசிவந்தாள்.

(இ-ள்.) மனமகிழ்ந்த இந்திரனுடைய கட்டளையாற் திருமஞ்சனம் சிறந்தமலர் இவையன்றியும் வேண்டிய பிறபொருள்கள் முதலியவைகளைக் குறைவறக்கொண்டு சபையினிடத்து அன்னபப்பறவையும் அஞ்சுமாறு நடந்து அரிய இந்திராணிவந்தனள்.

அன்னதொர்காலையிலந்தரநாதன்
பன்னிருமொய்ம்புபடைத்திடுபுத்தேண்
முன்னரிருந்துமுறைப்படவன்னான்
பொன்னடிபூசைபுரிந்திடலுற்றான்.

(இ-ள்.) அப்பொழுது இந்திரன் பன்னிரு திருத்தோள்களையுடைய குமாரக் கடவுளின் எதிரிலிருந்து முறையாக அக்கடவுளின் பொன்னடிகளைப் பூசை செய்யத் தொடங்கினன். (உசக)

சொல்லருநாணொடுதோகைமடந்தை
நல்லதொர்கன்னனறும்புனலுய்ப்ப
வெல்லவரும்புகழிந்திரனையன்
மெல்லடிபற்றிவிளக்கினனம்மா.

(இ-ள்.) உரைத்தற்கரிய வெட்கத்துடனே மயிலனைய இந்திராணி நல்ல ஒப்பற்ற கரகத்திலிருந்த நீரினை லபிஷேகஞ்செய்ய அனைவரும் புகழுகின்ற இந்திரன் குமாரசுவாமியின் மெல்லிய திருவடிகளைத் தொட்டு விளக்கினன்.—எ-று. (உசஉ)

செம்மல்பதங்கள்செழும்புனலாட்டிக்
கைம்மலியுங்களபந்தனையூட்டி
யம்மலர்சூட்டியகிற்புகைகாட்டி
நெய்ம்மலிபூஞ்சுடர்நீட்டினனன்றே.

(இ-ள்.) குமாரசுவாமியின் திருவடிகளைச் செழுமைவாய்ந்த நீரினால் அபிஷேகஞ்செய்து கைகளில் நிறையவிருந்த சந்தனக்குழம்பினைப் பூசி அழகிய மலர்தரித்து அகிற்புகைகாட்டி நெய்யின் மிக்க அழகிய தீபத்தால் ஆராதனை செய்தனன்.—எ-று.

இவ்வகைபூசையியற்றுதலோடு
மவ்வயிராணியயிற்படையோன்றாள்
செவ்விதினாட்டியதீர்த்திகைதன்னைக்
கைவகையேந்தியொர்காப்பிடையுய்த்தாள்.

(இ-ள்.) இவ்வண்ணம் பாதபூசை செய்தவுடனே அவ்விந்திராணியானவள் வேலாயுதக்கடவுளின் திருவடிகளுக் கபிடேகஞ்செய்த தீர்த்தத்தினை எடுத்து ஒரு பாத்திரத்தில் வைத்தனள்.—எ-று. (உசச)

அன்னுழியிந்திரனாறுமுகேசன்
றன்னொருகையிடைதந்தியைநல்கி
நின்னடியேனிவணேர்ந்தனனென்னாக்
கன்னலுமிழ்ந்தகடிப்புனலுய்த்தான்.

(இ-ள்.) அப்பொழுதிந்திரன் சண்முகப்பெருமானுடைய ஒரு அத்தத்தில் தெய்வயானை அம்மையை யளித்து நினதடியேன் இவளை யளித்தேனென்றுகூறிக் கமண்டலம் விடுத்த வாசனைபொருந்திய நீரினைத்தாரையாக விடுத்தான்.—எ-று. (உசரு

மருத்துவன் மாமறைமந்திரநீரா
லொருத்திபொருட்டினிலொண்புனலுய்ப்பக்
கரத்திடையேற்றனனற்கழல்சேர்ந்தார்க்
கருத்திகொண்முத்தியுமாக்கமுமீவோன்.

(இ-ள்.) இந்திரன் சிறந்த வேதமந்திர முறையினாற் தெய்வயானையம்மை யின்பொருட்டு ஒள்ளிய நீரினால் தாரைவார்க்கத் தமதடி மலர்களையடைந்தவர்கட்கு விருப்பமுள்ள மோட்சத்தினையும் செல்வத்தினையும் அளித்தருளும் குமரப்பெருமான் திருக்கரத்தா லேற்றருளினர்.—எ-று. (உசசு)

செங்கமலத்திறைசிந்தையினாற்றி.
யங்கையினீந்திடவாண்டகைகொண்ட.
மங்கலநாணமணிக்களமார்த்து,
நங்கைமுடிக்கொர்நறுந்தொடைசூழ்ந்தான்.

(இ-ள்.) செந்தாமரை மலரை இடமாகவுடைய பிரமதேவன் மனதினாலுண் டாக்கி அழகிய திருக்கரத்திலளியாநிற்பக் குமரப்பெருமானால் வாங்கிக்கொள்ளப்பட்ட மங்கல சூத்திரத்தினை அழகிய தெய்வயானையம்மையார் கண்டத்திலணிந்து திருமுடியிலொரு நல்ல மலர்மாலையையுஞ் சூட்டியருளினர்.—எ-று. (உசஎ)

மாவொடுவாழைவருக்கைகொள்பைங்காய்
தீவியகன்னல்செறிந்திடுசெந்தே
னாவருள்பாலிவையண்டர்கள்செம்மன்
மூவிருமாமுகனை நுகர்வித்தான்.

(இ-ள்.) அப்பொழுது மாம்பழம், வாழைப்பழம், பலாப்பழம், இனிய கரும்பு, செந்தேன் காமதேனுவளித்த பால் இவைகளைத் தேவராசன் சிறந்த ஆறுமுகப்பெருமானுக்கு நிவேதனஞ் செய்தனன்.—எ-று. (உசஅ)

வார்த்தொகைசூழ்தருமத்தளிதக்கை
பேர்த்தவலம்புரிபேரிகலித்த
வார்த்தனர்வீரருங்கணநாதர்
தீர்த்தனைவந்தனைசெய்துகளித்தார்.

(இ-ள்.) வாரின் தொகைகளாற் சூழப்பட்ட மத்தளங்கள், தக்கைகள், வலம்புரிச்சங்குகள் பேரி முதலிய வாத்தியங்கள் முழங்கின. நவவீரர்களுங் கணநாதர்களும் ஆரவாரஞ் செய்துகொண்டு குமரக்கடவுளை வணங்கி மகிழ்ந்தனர்.—எ-று.

தண்டுளவண்ணல்சரோருகமேலோ
னெண்டிசைபாலகரிந்திரனென்போ
னண்டர்களேனையராங்கவர்கோலங்
கண்டுசிறந்ததுகட்புலமென்றார்.

(இ-ள்.) தண்ணிய துளவமணிந்த திருமால் கமலாசனனான பிரமன் அட்ட திக்குப்பாலகர் இந்திரனென்பவன் பிறதேவர்கள் மற்றுள்ளவர் அனைவரும் அவ்விடத்தி லவ்விருவரின் திருக்கோலத்தினைத் தரிசித்து நமது கண்களாகிய புலன் இவ்வரிய காட்சியைக்கண்டு சிறந்தது என்று கூறினார்கள்.—எ-று. (உருo)

ஆயதுபோழ்தினிலம்புயமுற்றோன்
காயெரிதந்துகலப்பைகள்கூவித்
தூயமணம்புரிதொன்முறைவேள்வி
நாயகனைக்கொடுநன்றுசெய்வித்தான்.

(இ-ள்.) அப்பொழுது தாமரைமலரிலிருந்த பிரமன் எரியுந் தீயினையும் உபகரணங்களையும் அழைப்பித்து, குமரக்கடவுளைக்கொண்டு தூய்மையான திருமணஞ் செய்துகொள்ளுகிற பழைய முறைப்படி வேள்வியைச் செய்வனே செய்வித்தனன். ()

உலகருள்காரணனொண்ணுதலோடும்
வலமுறையாகவயங்கனல்சூழ்ந்து
சிலையிடையன்னவள்சீறடிதந்தான்
மலரயனுச்சியின்மேலடிவைத்தான்

(இ-ள்.) உலகங்களை யளித்த காரணரான குமரவேள் ஒள்ளிய நுதலாளான தெய்வயானையம்மையுடன் விளங்காநின்ற அங்கியைப் பிரதட்சணஞ்செய்து கமலாசனனான பிரமன் தலையிற் றிருவடிவைத்த வச்சுவாமியார் அம்மியின்மீ தவ்வெம்பெருமாட்டியின் சிறிய திருவடிகளை வைத்தருளினார்.—எ-று, (உ௫உ)

மாலினிகாளிகண்மாமலராட்டி
பாலினிறத்திபராயினர்சூழச்
சாலினிமங்கலைதன்னொடுகண்டான்
வேலினின்மாவினைவீழவெறிந்தோன்.

(இ-ள்,) மாலினிகள் காளிகள் கமலாசனையான இலக்குமி பால் வண்ணத்தாளான சரசுவதி யாதியர் வணங்கிச் சூழாநிற்ப வேற்படையினாற் சூரனாகிய மாவினை இருபிளவாக வீழுமாறு எறிந்தருளிய குமரக்கடவுள் அருந்ததியைத் தெய்வயானையம்மையுடன் பார்த்தருளினார்.—எ-று. (உ௫௩)

இவ்வகைமன்றலியற்றியபின்னைத்
தெய்வதமாதொடுசெங்கதிர்வேலோ
னவ்வையொடத்தனையன்பொடுசூழ்ந்து
செவ்விதின்மும்முறைசேவடிதாழ்ந்தான்

(இ-ள்.) இவ்வாறு திருமணமுடித்த பின்னர் தெய்வயானையம்மையுடன் செவ்வொளிவாய்ந்த வேற்படையேந்திய குமரவேள் அன்னை தந்தையர்களான பார்வதிபரமேசுவரர்களை அன்புடனே பிரதட்சணஞ்செய்து முறையாக மூன்றுதரந்திருவடிகளை வணங்கியருளினார்.—எ-று. (உ௫௪)

வேறு.

அடித்தலத்தில்வீழ்மக்களையிருவருமார்வத்
தெடுத்தணைத்தருள்செய்துதம்பாங்கரிலிருத்தி
முடித்தலத்தினிலுயிர்த்துமக்கெம்முதன்மை
கொடுத்துமென்றனருவகையான்மிக்ககொள்கையினார்.

(இ-ள்) திருவுள மகிழ்வினால் மிகுந்த கொள்கையினையுடைய சிவபெருமானும் உமாதேவியாரும் திருவடிகளில் விழுந்து வணங்கிய மகனையும் மருமகளாரையும் இருவரும் அன்புடன் எடுத்தணைத்து அருள்செய்து தமதருகிலிருத்தி உச்சிமுகர்ந்து உமக்கெமது முதன்மையைக்கொடுத்தேமென்று உரைத்தருளினார்.—எ-று. (உ௫௫)

மலைமடந்தையுமிறைவனுமைந்தற்குமகட்குந்
தலைமைசெய்தருள்புரிதலுஞ்சாலையுளிருந்த
வலரவன்முதலமரருமுனிவருமணங்கின்
குலமடங்கலுமவரடிமுடிமிசைக்கொண்டார்.

(இ-ள்.) பார்வதிதேவியாரும் சிவபெருமானும் மகனாருக்கும் மருமகளார்க்கும் தலைமையளித்தருள்செய்தலுந் திருமணச்சாலையுளிருந்த தாமரையாசனனானபிரம

தேவன் முதலிய தேவர்களும் முனிவர்களும் தெய்வயானையம்மையின் வமிசத்தின ரனைவரும் அவர்கள் திருவடிகளைத் தலைமீதுகொண்டு வணங்கினார்கள்.—எ-று. ()

அறுமுகன்றனையணங்கினையவையுளோரெவரு
முறையில்வந்தனைசெய்தலுமுழுதருள்புரிந்து
கறைவிளங்கியகண்டனுங்கவுரியுங்கடிதின்
மறைதலுற்றனர்பரிசனந்தன்னொடுமன்னோ.

(இ-ள்.) சண்முகப்பெருமானையும் தெய்வயானையம்மையையும் திருமணமண்டபத்திலிருந்த அனைவரும் முறையாக வணங்குதலும் அவரனைவருக்கும் அருள்புரிந்து உடன்வந்த பரிசனங்களுடன் நீலகண்டரான சிவபெருமானும் உமாதேவியாரும் விரைவாக மறைந்தனர்.—எ-று. (உருஎ)

மறைந்தகாலையில்விம்மிதராய்மணச்சாலை
யுறைந்ததேவருமுனிவருமுயிர்களுக்குயிராய்
நிறைந்தமேலையோர்நிலைமையைநினைந்துதம்வாயா
லறைந்துகைதொழுதவர்பெயரெடுத்தெடுத்தார்த்தார்.

(இ-ள்.) மறைந்தவுடனே ஆச்சரியமுள்ளவர்களாய்த் திருமணச்சாலையிலிருந்த தேவர்களும் முனிவர்களும் உயிருக்குயிராய் எங்குநிறைந்த அப்பெரியவர்களின் தன்மையை எண்ணித் தம்வாய்களால் அவர்கள்திருநாமங்களை உரைத்தாரவாரித்தனர். ()

வரைபடைத்தவர்மறைந்துழிவானவர்பலரு
நிரைபடைத்துளமுனிவருங்கவன்றதுநீத்தார்
திரைபடைத்துளவாழ்கடற்பட்டுளோர்சிறந்த
கரைபடைத்தெனவணங்கொடுகுமரனைக்கண்டு.

(இ-ள்.) வரையாகிய முங்கிலானும் இமயமாமலையானும் மக்களாகப்பெறப்பட்ட சிவபெருமானும் உமாதேவியாரும் மறைந்த உடனே பலபகுதியினரான தேவர்களும் வரிசையாக விருந்த முனிவர்களும் கரைகளையுடைய ஆழமான கடலினுள கப்பட்டு வருந்துவோர் கரையை யடைந்தெனத் தெய்வயானையம்மையாருடன் குமார சுவாமியைத் தரிசித்து கவற்சியி னீங்கினார்கள்.—எ-று. (உருகூ)

உமையுமீசனுமிருந்திடுபீடிகையும்பர்க்
குமரநாயகன்றெய்வதக்களிற்றொடுங்கூடி
யமரவன்னதுகாண்டலுமகிழ்சிறந்தன்னார்
கமலமெல்லடிதொழுதனர்வழுத்தினர்களிப்பால்.

(இ-ள்.) உமாதேவியாரும் சிவபெருமானும் எழுந்தருளி இருந்த பீடத்தின் மீது குமரக்கடவுள் தெய்வயானையம்மையாருடன் எழுந்தருளி இருக்க அச்செயலினைக்கண்டு அவ்விருவரின் கமல மலரனைய மெல்லடிகளை மகிழ்ச்சியால் வணங்கித் துதித்தனர்.—எ-று. (உகூ0)

இனையகாலையிலரியணைப்பீடநின்றிழியா
வனைவருந்தொழுதுடன்வரவாறுமாமுகத்துப்
புனிதநாயகன்மங்கலவிசையொடும்போந்து
தனதுகோயிலுட்புக்கனனிறைவியுந்தானும்.

(இ-ள்.) இவ்விதமாக அனைவரும் வணங்கி வாழ்த்தியவுடனே சிங்காதனத்தினின்றும் இறங்கி அனைவரும் தொழுதுடன் வராநிற்பச் சிறந்த சண்முகங்களையுடைய நின்மலரான குமரவேள் மங்களவாத்தியங்களுடன் சென்று தெய்வயானை அம்மையாருடன் தமது திருக்கோயிலை அடைந்தனர்.—எ-று. (உகூக)

வேலையன்னதிற்குமரவேள்வேள்விநாயகற்கு
மாலயன்முதலமரர்க்குமற்றுளார்தமக்கு
மேலவேவிடைதந்துதன்பரிசனமெவையு
மாலயந்தனிற்கடைமுறைபோற்றுமாறளித்தான்.

(இ-ள்.) அப்பொழுது குமரக்கடவுள் இந்திரனுக்கும் திருமால் பிரமன் முதலிய தேவர்கட்கும் பிறருக்கும் தக்கவாறு விடைகொடுத்துத் தமது பரிசனங்களனைத்தினையும் ஆலயத்தின் வெளிப்புறத்தில் முறையே காவல்செய்யும் வண்ணம் திருவருள்புரிந்தனர்.—எ-று. (உகூஉ)

இன்னதன்மையதாகவேயெம்மையீன்றெடுத்த
வன்னைதனுடனறுமுகனுறையுளினடைந்து
பொன்னின்மஞ்சமேற்படுத்துமெல்லமளியிற்புவன
மன்னுயிர்த்தொகையுய்ந்திடமுயங்கினைவகினனால்.

(இ-ள்) இவ்வாறாக எம்மைப்பெற்றெடுத்த அன்னையான தெய்வயானை அம்மையாருடன் சண்முகப்பெருமான் இருப்பிடத்தினை யடைந்து பொன்னாலாகிய மஞ்சத்திலமைந்துள்ள சயனத்தில் உலகங்களிலுள்ள நிலைபெற்ற உயிர்வருக்கங்கள் உய்யுமாறு கலந்திருந்தனர்.—எ-று (உகூரு)

சேணுதித்திடுதெய்வதக்களிற்றினைச்செவ்வே
ணணிநிற்கட்டிநகரிடைத்தந்துநற்கலன்கள்
பூணுதற்றுமங்குசங்கைக்கொடுபுயமாந்
தூணுறப்பிணித்தனனருளெனுந்தொடரால்.

(இ-ள்.) வானத்திற்பிறந்த தெய்வயானையைக் குமரவேள் மங்கல சூத்திரத்தாற் கட்டி நகரினிடத்துக்கொண்டுவந்து நல்ல ஆபரணங்களை அணிந்து வளைத்தலாகிய தோட்டியைக்கைக்கொண்டு புயமென்னுந்தூணில் அன்பென்னுஞ்சங்கிலியாற் கட்டியருளினர்.—எ-று. (உகூச)

மருந்துபோன்மொழிக்குமரியுங்குமரனைமணந்தாங்
கிருந்தவெல்லையில்விரிஞ்சனுமாலுமேனையரும்
விரைந்துதத்தமக்கியன்றதொல்லிருக்கையின்மேவப்
புரந்தரன்பரிசனரொடுந்தன்மனைபுக்கான்.

(இ-ள்.) அமிர்தமனைய மொழியினையுடைய தெய்வயானை யம்மையாரும் குமரக்கடவுளும் கலந்திருந்த காலத்திற் பிரமனும் விட்டுணுவும் பிறரும் விரைந்து அவரவர்க்காக வமைந்த பழைய இருப்பிடங்களை யடையாநிற்ப விந்திரனானவன் பரிசனங்களுடன் தனது மாளிகையை யடைந்தான்.—எ-று. (உகூரு)

முகிலுயர்த்தவன்முசுகுந்தனேமுதலுள்ள
வகிலமன்னர்க்குந்தேனுவின்பலபயனருத்தித்
துகிலுமாரமுமணிகளுமிருநிதித்தொகையும்
விகலமின்றியேகொடுத்தனன்யாரையும்விடுத்தான்.

(இ-ள்.) மேகவாகனனான இந்திரன் முசுகுந்தன் முதலிய எல்லாவரசர்கட்கும் காமதேனுவினாற் கொடுக்கப்பட்ட பலவகை உணவுகளை உண்பித்து ஆடைகளும் ஆரங்களும் ஆபரணங்களும் மிக்க அரதனக் கூட்டங்களும் குறைவறக்கொடுத்து அனைவரையும் போகச்செய்தனன்.—எ-று. (உகூசு)

எல்லையன்னதின்முசுகுந்தனாதியாமிறைவர்
கல்லகந்தனிலிழிந்துதஞ்சேனையின்கடலை

யொல்லைகூடியேவேறுபல்புலந்தொறுமொருவித்
தொல்லையூர்புகுந்திருந்தனர்வீடுறுந்தொடர்பால்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் முசுகுந்தன் முதலிய அரசர்கள் திருப்பரங்கிரியினு மிறங்கித்தமது சேனாசமுத்திரத்தை யடைந்து பலவேறு வழிகளிற் சென்று தத்தம் பழையநகரங்களையடைந்து வீட்டையுந்தொடர்புடையராக விருந்தனர் -எ-று.

மன்னர்யாவரும்விடைகொடுபோதலுமகவான்
றன்னதாகியகடிமனைக்கிழத்தியுந்தானு
மின்னறீர்தருபோகமதாற்றினனிருந்தா
னன்னபான்மையிற்சிலபகலகன்றனவன்றே.

(இ-ள்.) அரசரனைவரும் விடைபெற்றுச்சென்ற பின்னர் இந்திரன் தன்னுடைய மணமகளான இந்திராணியுடன் தானும் துக்கமற்ற சையோகசுகத்திலழுந்தி இருந்தனன் அவ்வாறாகச் சில நாட்களகன்றன.—எ-று. (உசுஅ)

தெய்வயானையம்மை திமணப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௯0௯.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# விண்குடி யேற்றுப்படலம்.

ஆனசிற்சிலவைகல்சென்றிடுதலுமணங்குந்
தானுமுற்றிடுமுறையுளையொருப்கற்றணந்து
வானவர்க்கிறைவினைக்குறைநிரப்புதல்வலிந்துக்
கோனகர்ப்பெரும்புதவினில்வந்தனன்குமரன்.

(இ-ள்.) இவ்வாறு சிலநாட்கள் கழிந்தவுடனே ஒருதினம் தேவயானையம்மையுந் தாமும் எழுந்தருளியிருந்த இடத்தினை விடுத்துத் தேவராசனுடைய வினையின் குறையைப் பூர்த்தியாக்குதலைத் திருவுளத்தில் நினைத்து அரசநகரின் பெரிய கதவருகிற் குமரவேள் எழுந்தருளினார். (க)

உவாவின்மாதுடனுவாவினுக்கிளையவனுவாவிற்
றிவாகரன்மதியாமெனவருதலுந்தெரிந்து
தவாதவன்புடையவருஞ்சாரதரெவரு
மவாவொடன்னவரடிமுறைவணங்கிநின்றார்த்தார்.

(இ-ள்.) தெய்வயானையம்மையாருடன் கணேசப்பெருமானுக்கிளைய குமரவேள் அமாவாசையிற் சூரிய சந்திரர்களை யொப்ப எழுந்தருளுதலும் அதனைக்கண்டு கெடாத அன்பினையுடைய வீரர்களும் பூதரனைவரும் விருப்பத்துடன் அவ்விருவர்களின் திருவடிகளை முறையாக வணங்கி நின்று ஆரவாரித்தனர்.—எ-று. (உ)

அணிகமார்த்திடல்செவிப்புலம்படர்தலுமடல்வேற்
புனிதநாயகன்போந்தனன்போந்தனனென்று
வனசமேலவன்மாலவன்மகபதிவானோர்
முனிவர்யாவருமெழுந்தனர்விரைசெலன்முன்னி.

இ-ள்.) சேனைகள் ஆரவாரஞ்செய்தல் காதுகளிற்பட்டவுடனே வெற்றிவேலேந்திய நின்மலரான குமரவேள் வெளியே எழுந்தருளினுரெனக் கமலாசனனுன பிரமன் திருமால் இந்திரன் தேவர்கள் முனிவர் முதலிய அனைவரும் விரைந்து செல்லுதலைக்கருதி பிரயாணமாயினர் —எ-று. (ரு)

வேறு

எழுதருகின்றவர்யாருமோரிமைப்
பொழுதுறுமளவையிற்போந்துமன்னுயிர்
முழுதருள்புரிதருமுதல்வன்சேவடி
தொழுதனரிறைஞ்சினர்சூழ்ந்துபோற்றலும்.

(இ-ள்.) அவ்வாறெழுந்த அனைவரும் ஒரிமைப்பொழுதிற்குட் சென்று நிலைபெற்ற உயிர் வருக்கங்களை யளித்தருளிய முதல்வரான குமரக்கடவுளின் செவ்விய பாதங்களைத் தொழுதுவணங்கிச் சூழ்ந்து துதித்தலும். (சு)

கொந்தவிழலங்கலங்குவவுத்தோளினுன்
வந்துவந்தனைபுரிவதனைநோக்கியே
நந்தனியூர்தியைநடாத்திச்செல்கெனச்
சிந்தையில்விரைதருதேர்கொண்டேகினுன்.

(இ-ள்.) கொத்தாக மலர்ந்த மலர்களாலமைக்கப்பெற்ற மாலையணிந்த திரண்டதோளினரான குமரப்பெருமான் வாயுதேவன் வந்து வணங்குதலைப்பார்த்து நமது ஒப்பற்ற வாகனத்தினைக் கொண்டுவருக என்றருளிச்செய்தவுடனேமனோவேகத்தினுஞ் சிறந்த வேகத்தினையுடைய இரதத்தினைக்கொண்டு சென்றனன்.—எ-று. ()

ஆசுகனுய்த்திடுமம்பொற்றேர்மிசை
வாசவனருள்புரிமடந்தைதன்னுடன்
றேசுடையறுமுகச்செம்மல்கண்ணுத
லீசனுங்கவுரியுமென்னவெய்தினுன்.

(இ-ள்.) வாயுதேவனுற்கொண்டு வரப்பட்ட அழகிய இரதத்தின்மீது இந்திரனளித்த தெய்வயானை அம்மையுடன் ஒளிபொருந்திய திருமேனியாளரான குமரக்கடவுள் சிவபெருமானும் உமாதேவியும்போல வேறியருளினுர்.—எ-று. (சு)

சூரினேடுதுணைபரித்தேர்மிசைச்
சூரினேடுதுணைவன்வந்தெய்தலும்
வாரிவீசினர்மாமலர்பன்முறை
வாரிவீசினர்வானவர்யாருமே.

(இ-ள்.) தெய்வத்தன்மையுடன் விரைந்து வாநின்ற இரதத்தின்மீது தெய்வயானை யம்மையுடன் குமரக்கடவுள் எழுந்தருளுதலும் தேவரனைவரும் கடல்போல அகன்று நின்றாராய்ச்சிறந்த புஷ்பங்களை வாரிப் பன்முறை இறைத்தனர்.—எ-று. (எ)

பூதவீரரும்போர்ப்படைமள்ளரு
மூதுணர்ந்தமுனிவன்சிறாருங்
கோதைவேலுடைக்கொற்றவற்காம்பணி
யேதுமாற்றியினிதயல்சுற்றினர்.

(இ-ள்.) பூதவீரர்களும் சண்டைக்குரிய ஆயுதங்களை யேந்திய நவவீரராதியரும் பேரறிவுபெற்ற பராசரன் புதல்வர்களும் மாலைவாய்ந்த வேற்படையேந்தியகுமரவேட்கு ஆன ஊழியங்களை முற்றிலுஞ் செய்துகொண்டு செவ்வனே அருகிற் சூழ்ந்தார்கள்.—எ-று. (அ)

மாகர்யாரும்வணங்கவவரவர்
சேகரத்தினிற்சேவடிசூட்டியே
தோகைமாமயிரேறன்றன்முன்னின்றதா
லாகையாற்றதவமாற்றலதேயன்றோ.

(இ-ள்.) தேவரனைவரும் வணங்க அவர்கள் தலையிற்செவ்வியதிருவருடியைச் சூட்டித்தோகையினையுடைய சிறந்தமயிலானது குமரவேளின் எதிரேநின்றது ஆதலிற் தவஞ்சிறந்ததன்றோ?—எ-று. (கூ)

பூவினன்முதற்புங்கவர்யாரையு
மூவிரண்டுமுகத்தவன்கண்ணுறீஇ
நீவிரெல்லிருநேர்ந்தநும்மூர்தியின்
மேவியெம்மொடுசெல்லுமின்விண்ணென்றான்.

(இ-ள்.) பிரமன் முதலிய தேவரனைவரையும் சண்முகப்பொருமான்பார்த்து நீவிரனைவிரு நுமக்குள்ள வாகனங்களிற்பொருந்தி எம்முடன் சுவர்கத்துக்கு வாருங்கள் என்றருளிச்செய்தனர்.—எ-று. (க0)

என்னலோடுமினிதெனநான்முக
னன்னமீதினுமச்சுதப்பண்ணவன்
பன்னகேசன்பகைஞன்றன்மீதினு
முன்னரேறிமுதல்வனையெய்தினர்.

(இ-ள்.) என்று கூறியருளியவுடனே நன்றென்று சதுர்முகப்பிரமன் அன்ன வாகனத்திலும் அச்சுதனென தேவன் சர்ப்பராசன் பகைவனென கருடன்மீதும் முன்னே ஏறிமுதல்வரான குமரக்கடவுளை அடைந்தனர்.—எ-று. (கக)

மாறில்வெள்ளிமலைப்படுதெண்கயத்
தூறுநீத்தத்தொழுக்கெனமும்மதத்
தாறுபாயுமடலயிராவதத்
தேறிவந்தனனிந்திரனென்பவன்.

(இ-ள்.) மாறுபாடற்ற வெள்ளிமலையிலுள்ள தெளிந்த கயங்களி லூறுகின்ற நீரினொழுக்கைப்போல மும்மதமான ஆறுபாய்கின்ற வன்மைதங்கிய ஐராவதமென்னும் யானையின்மீதேறி இந்திரனென்பவன் வந்தான்.—எ-று. (கஉ)

மற்றுநின்றுளவானவர்யாவரு
முற்றுணர்ந்தமுனிவருந்தத்தமக்
குற்றவூர்திகளூர்ந்தெம்மிறைவனைச்
சுற்றிநின்றுதுதித்துடன்மேயினர்.

(இ-ள்.) இவர்களன்றி நின்றுள்ள தேவரனைவரும் முழுதுணர்ந்த முனிவர்களும் தத்தமக்குள்ள வாகனங்களிலேறி எமதிறைவனைச்சுற்றிநின்று துதித்துடன்சென்றனர்,—எ-று. (கங)

வள்ளலித்துணைவானுலகத்திடைப்
பொள்ளெனப்புகப்போதுகின்றனெனக்
கொள்ளையிற்பலர்கூறலுங்கூளியின்
வெள்ளமுற்றும்விரைந்தெழுந்திட்டவே.

(இ-ள்.) வள்ளலான குமரவேள் இப்பொழுது சுவர்க்கவுலகத்திற்குவிரைந்து போகப்போகின்றனரென்று கூட்டமாகப் பலர் உரைத்தவுடனே பூதசேனைகள் முழுதும் விரைந்தெழுந்தன.—எ-று. (கச)

குடமுழாப்பணைகொக்கரைதண்ணுமை
படகமாதியபல்லியமாற்றியே
புடைநெருங்கியபூதரிலெண்ணிலா
ரிடிமுழங்கியதென்னவியம்பினர்.

(இ-ள்.) குடமுழா, பணை, கொக்கரை, தண்ணுமை படகம்முதலியவாத்தியங்களை எடுத்துக்கொண்டு இடி இடித்தாற்போல அருகிற்சுற்றிய பூதரிலனேகர் முழக்கினார்கள்.—எ-று. (கரு)

ஈங்கித்தன்மையினீண்டுபரிசனம்
பாங்குற்றேகப்பரஞ்சுடர்ப்பண்ணவ
னோங்கற்கொண்டவொருதனிக்கோநகர்
நீங்கிச்சேணினெறிப்போயினன்

(இ-ள்.) இங்கிவ்விதமாக நெருங்கிய பரிசனங்கள் அருகிற்பொருந்திச் செல்லப்பரஞ்சுடர்த் தேவரான குமரவேள் திருப்பரங்கிரியிலுள்ள தமது ஒப்பற்றதிருநகரியை விடுத்துவானினீண்ட வழியேசென்றனர்.—எ-று. (கசு)

அந்தரத்திமைருலகந்தனைக்
கந்தனங்கொருகன்னலினீங்கியே
இந்திரப்பெயரெய்தியமாதுலன்
முந்திருந்தமுதுநகர்மேவினன்

(இ-ள்.) வானிலுள்ள தேவலோகத்தினைக் கந்தக்கடவுள் ஒருகடிகையிற் கடந்து இந்திரனென்னும் பெயருள்ளமாமன் முன்னிருந்த பழயஅமராவதி நகரியையடைந்தனர்.—எ-று. (கஎ)

வேறு.

விண்டொடர்பொன்னகர்மேலைச்சூர்மக
னுண்டுகள்செய்திடநொய்தினுற்றது
மண்டர்களிறையவனகங்கொள்வேட்கையுங்
கண்டனன்குமரவேள்கருணையாழியான்

(இ-ள்.) கருணைக்கடலான குமரக்கடவுள் வானிலுள்ள பொன்னுலகத்தினை முன்னிருந்த சூரன்பிள்ளையான பானுகோபன் நுண்ணியதுகளாகச் செய்ய அதனுலஃதி லேசுபட்டுக் கிடப்பதுந் தேவராசனுள்ளிலிருக்கும் விருப்பமும் தெரிந்துகொண்டனர்.—எ-று. (கஅ)

வீக்குறுகனைகழல்விமலநாயக
னூக்கமில்விண்ணுலகளிக்கும்பெற்றியாற்
றேக்கியவிஞ்சையின்றெய்வத்தச்சனை
நோக்கினனிளையனநுவறன்மேயினன்

(இ-ள்) ஒலியினையுடைய வீரக்கழலணிந்த நிமலரான குமாரசுவாமியார் செல்வமிழந்த பொன்னுலகத்தினை முன்போல வுண்டாக்க வேண்டிய முறைமையாற் சிற்பநூல்வித்தை நிறைந்த தெய்வத்தச்சனை திருக்கண்சாத்தியருளி இவ்வாறுதிருவுளம் பற்றுவாராயினர்.—எ-று. (கக)

செல்லலையகன்றிடுதேவர்மன்னவ
னெல்லையில்வளனொடுமிருக்கும்பான்மையாற்
றொல்லையதாமெனத்துறக்கநல்குதி
வல்லையிலென்றனும்வணங்கிப்போயினன்.

(இ-ள்.) துன்பமொழிந்த தேவராசன் அளவற்ற செல்வத்துடன் இருக்குமுறைமையாக முன்னிருந்ததேயென்று கூறும் வண்ணம் சுவர்க்கத்தினை விரைவாபுண்டாக்கக்கடவை என்று திருவாய் மலர்ந்தருளுதலும் அவ்வாறேயெனத் தெய்வத்தச்சன் வணங்கிச் சென்றனன்.—எ-று. (உ0)

வேறு

நூறெறிந்திடுகோன்மையோன்
மாறில்பொன்னகர்மாடுற
வீறுமாமதில்விண்ணுலா
மாறுபாயவமைத்தனன்.

(இ-ள்.) சிற்பநூலினைமுறையே உணர்ந்த வலியோனான தேவதச்சன் மாறுபாடற்ற அமராவதி நகரினருகில் வானிலுலாவும் யாறுபோமாறு உயர்ந்த சிறந்தமதிலினை இயற்றினன்.—எ-று. (உக)

ஆயிரம்மலரம்புயன்
சேயவாய்கடிறந்தெென
ஞாயின்மாமதினள்ளுற
வாயினான்குவகுத்தனன்.

(இ-ள்.) ஆயிரவிதழ்களையுடைய தாமரை மலரை இடமாகவுடைய பிரமன் தனது நான்கு வாய்களையுந் திறந்தாற்போல உறுப்பினையுடைய பெரியமதிலின் நடுவிடத்தில் நான்கு வாசல்களை அமைத்தனன்.—எ-று. (உஉ)

நாற்றிசைக்கணநாதரு
மாற்றவேயரிதாமென
வேற்றகோபுரமேழ்நிலை
வீற்றுவீற்றுவிதித்தனன்.

(இ-ள்.) நான்குதிசைகளிலுள்ள கணநாதர்களாலும் சுமத்தற்கே முடியாதென்று கூறுமாறு ஏழ்நிலைகளையுடைய கோபுரங்களை வரிசைவரிசையாக வுண்டாக்கினன்.—எ-று. (உ௩)

வண்ணமாமதில்வைப்பினு
ளண்ணலங்கிரியாழிசூழ்
கண்ணகன்புவிக்காட்சிபோ
லெண்ணில்வீதியியற்றினான்.

(இ-ள்.) அழகிய சிறந்த அம்மதிலின் உள்ளிடத்திற் பெருமைவாய்ந்த சக்கரவாளகிரியினாற் சூழப்பட்ட இடமகன்றபூவுலகின் றோற்றம்போல கணக்கற்றவீதிகளையமைத்தனன்.—எ-று. (உ௪)

பூவின்மேல்வருபுங்கவத்
தேவுநாணுறுசெய்கையிற்
காவன்மாநகரத்திடைக்
கோவிலொன்றுகுயிற்றினான்.

(இ-ள்.) கமலமலர்மீது தோன்றிய பிரமதேவனும் வெட்குமாறான செய்கையால்காவலினையுடைய சிறந்த அந்நகரின்நடுவண் இராசமாளிகையொன்றுசெய்தனன்.

தேவுகாமுறுசெய்வரை
காவிமல்குகயத்தொடு
வாவிபொய்கைவரம்பில
வோவில்பான்மையினுதவினன்.

(இ-ள்.) இந்திரன் விரும்பி யனுபவிக்கத்தக்க கட்டுமலைகளையும் செங்கழு நீர்மலர்மலிந்த கயங்களையும் இவையன்றியுள்ள வாவிகளையும் பொய்கைகளையும் அளவற்றனவாகக்கெடாத வண்ணமாய் இயற்றினன்.— எ-று. (உசு)

மாடமாளிகைமண்டப
மீடுசேரரியேற்றணை
பாடுசேர்தருபாழிக
ளூடியோர்தரநல்கினன்.

(இ-ள்.) மாடங்கள் மாளிகைகள் மண்டபங்கள் ஒன்றற்கொன்று சமானமான சிங்காதனங்கள் அகலமான தேவாலயங்கள் முதலியவைகளை ஆலோசனை செய்து அழகுற உண்டாக்கினன்.—எ-று. (உஎ)

வேறு.

ஏறுசீரிந்திரனிருக்குங்கோயிலு
மாறுமாமுகப்பிரானமருங்கோட்டமு
மாறிலாமாலயன்மந்திரங்களும்
வேறுளாரிருக்கையும்விதித்திட்டானரோ.

(இ-ள்.) சிறப்பு மிக்க இந்திரனிருக்கும் கோவிலும் சிறந்த சண்முகப்பெருமானெழுந்தருளி இருக்கும் ஆலயமும் மாறுபாடற்ற திருமால் பிரமனென்பாரின் கோவில்களும் மற்றும் பிறரிருக்கைகளும் செய்தனன்.—எ-று. (உஅ)

கூன்முகவால்வளைக்குரிசிலூரினு
நான்முகனூரினுநலத்ததென்றிட
வான்முகவியனகர்வளமைசான்றிட
னூன்முகநாடியேநுனித்துநல்கினன்.

(இ-ள்.) சுரிக்கப்பட்ட முகத்தினையுடைய சங்கேந்திய திருமாலின் நகரான வைகுந்தத்தினும் சதுர்முகனான பிரமன்நகரான மனோவதியினும் சுவர்க்கத்திலுள்ள இவ்வமராவதி நகரம் வளமுடையதென்று கூறுமாறு சிற்ப நூலையாராய்ந் தாலோசித்துச் செய்தனன்.—எ-று. (உகூ)

வேறு.

பொன்னினுக்குப்புகலிடமாகவான்
மன்னினுக்குச்செய்மாநகர்வண்மையை
யென்னினுக்குமியம்பவற்றோகலை
மின்னினுக்கும்விதிப்பருந்தன்மையே.

(இ-ள்.) பொன்னுக்கே இடமாமாறு வானுலக வரசனுக்குச்செய்த சிறந்த அமராவதி நகரின் தன்மையை என்னாலுமுரைக்க முடியுமோ கலைமகளாலுமுரைக்க முடியாத தன்மையினதாம்.— எ-று. (௩௦)

இனைத்தியாவுமிமைப்பிடைச்சிந்தையி
னினைப்பிற்செய்தநிலைமையைநோக்கியே
நனைத்துழாய்முடிநாரணனுன்முகன்
மனத்தினூடுமகிழ்ச்சியைமேவினர்.

(இ-ள்.) இவ்வாறனைத்தும் கண்ணிமைப் பொழுதினுள் மனநினைவின் நிலைமையாற்செய்த தன்மையைப்பார்த்துத் தேன்மலிந்த துளவமணிந்த முடியினையுடைய நாராயணன் பிரமன் என்பார் தம்மனத்துள் மகிழ்ச்சியை யடைந்தனர்.—எ-று. ()

வல்லைவேதன்வருப்பதுமற்றுனக்
கில்லைநேரென்றினிதுபுகழ்ந்திட
வல்லநீரமரர்க்கிறைகாண்குறீஇப்
புல்லினனப்புனைவினையென்பவே.

(இ-ள்.) பிரமன் தெய்வத் தச்சனைப்பார்த்து நீ வல்லவமுடையாய் நினக்கு நிகராக நகராதிகளைப்படைப்பவ ரெவருமிலர் என்று செவ்வனே புகழ்ந்தனன் இதனைத் துன்பமகன்ற இந்திரன்கண்டு தெய்வத்தச்சனைக்கட்டி அணைத்தனன்.—எ-று.

அணங்குசால்புரமவ்வகைநல்கியே
நுணங்குநூலவன் சண்முகனேன்கழல்
வணங்கிநிற்பவருள்செய்துமாடுறு
கணங்களோடுகெதுமெனப்போயினன்.

(இ-ள்.) அழகு மிகுந்த நகரத்தினை இவ்வாறமைத்து நுண்ணிய நூலராய்ச் சியினையுடைய தெய்வத்தச்சன் ஆறுமுகப்பெருமானுடைய பெருமைவாய்ந்த திருவடிகளை வணங்கி நின்றனன் உடனே அவனுக்கருள்புரிந்து பூதகணங்களுடன் விரைந்தங்கெழுந்தருளினர்.—எ-று. (௩௩)

அன்னகாலையரம்பையரோடொரு
பொன்னின்மானம்புகுந்துபுலோமசை
கன்னலொன்றினிற்காமருபொன்னர்
மன்னன்மந்திரம்வந்தடைந்தாளரோ.

(இ-ள்.) அப்பொழுது அரம்பை மாதர்களுடன் பொன் விமானத்திலேறி இந்திராணியென்பாள் ஒரு நாழிகையுள் அழகிய சுவர்க்க வுலகத்தரசனுடைய மாளிகையை யடைந்தனள்.—எ-று. (௩௪)

அடையுமெல்லையறுமுகப்பண்ணவ
னிடைநிலைப்படுமிந்திரன்கோநகர்க்
கடைமுதற்செலக்கஞ்சனையாதியோ
ருடையதத்தமதூர்தியினீங்கினர்.

(இ-ள்.) அவ்வாறு செல்லும்பொழுது சண்முகப்பெருமான் நடுநிலையாகப் பொருந்திய இந்திரன் மாளிகையின் தலைவாசலையடையப் பிரமனையுள்ளிட்டார் தத்தம் வாகனங்களினின்றும் இறங்கினார்கள்.—எ-று. (௩௫)

அக்கணந்தனிலணடர்கள்யாவருந்
தொக்குடன்வரத்தோகையன்னளுடன்
செக்கர்மாமணித்தேரினுந்தீர்ந்தொராய்ப்
புக்குமேயினன்பொன்புனைமன்றமே.

(இ-ள்.) அப்பொழுது தேவரனைவரும் நெருங்கிவராநிற்ப மயில்போலுஞ் சாயலினையுடைய தெய்வயானை அம்மையுடன் மாணிக்கமணிமயமான இரதத்தினின்றும் இறங்கிப் பொன்னாலியற்றிய சபையிற் சென்றிருந்தனர்.—எ-று. (௩௬)

வேறு.

தன்றுணைமஞ்ஞையாகித்தாங்குதறெறிந்தியானு
மின்றிவற்பரிப்பனென்னுவிளவலுமமைந்ததென்ன
மன்றிடையிருந்ததெய்வமடங்கலந்தவிசினும்பர்
வென்றியந்தனிவேலண்ணல்வீற்றிருந்தருளினனே.

(இ-ள்.) தனது துணைவனான சூரபன்மன் மயிலுருவங்கொண்டு சுமந்து நி றலையறிந்து அவன் தம்பியான சிங்கமுகாசுரனும் இக்குமரவேளைத்தாங்குவனென்று நின்றாற்போல அச்சபையிலிருந்த தெய்வீகம்வாய்ந்த சிங்காதனத்தின்மீது வெற்றிவா ய்ந்த ஒப்பற்ற வேற்படையேந்திய குமாரசுவாமியார் எழுந்தருளி இருந்தனர்.-எ-று

அன்னதோரளவைதன்னினறுமுகனலரிப்புத்தேண்
முன்னவர்தம்மையெல்லாமுழுதருள்புரிந்துநோக்கி
யிந்நகரரசுபோற்றவிமையவரிறைவற்கின்னே
பொன்னணிமவுலிதன்னைப்பொள்ளெனப்புனைதிரென்றான்.

(இ-ள்.) அவ்வாறெழுந்தருளி இருந்த உடனே சண்முகப்பெருமான் கமலா சனனான பிரமன் முதலியவர்களைப் பூரணமான கருணையுடன் பார்த்தருளி இந்நகரி லிருந்தரசு செய்தற்கு, தேவராசனுக்கிப்பொழுதே பொன்னாலலங்கரிக்கப்பட்ட மகு டத்தினை விரைந்து சூட்டுங்கள் என்று திருவாய் மலர்ந்தருளினார்.—எ-று. (ருஅ)

என்றிவைகுமரன்கூறவினிதெனவிசைவுகொள்ளா
வன்றொருகணத்தின்முன்னரட்டமங்கலமுந்தந்து
மன்றல்கொள்கவரியொள்வாண்மணிமுடிகவிகையோடு
நின்றுளவுறுப்புமேனைப்பொருள்களுநெறியினுய்த்தார்.

(இ-ள்) என்றிவ்வாறு குமரவேள் கட்டளையிட்டவுடனே நன்றெனச் சம்ம தித்து ஒரு கணப்பொழுதினுள் அட்டமங்கல முதலியவைகளைத் தருவித்து கல்யாண கரமான கவரி ஒள்ளியவாட்படை மணிமுடி வெண்கொற்றக்குடை முதலியவைக ளுடன் இவையன்றியுள்ள பிற உறுப்புக்களையும் பிறபொருள்களையும் முறைப்படி கொண்டு சேர்த்தனர்.—எ-று. (ருகூ)

அரசியலுரிமைத்தெல்லாமாவங்கரமைத்துக்கங்கைத்
திரைசெறிதெண்ணீராட்டிச்செழுந்துகில்கலன்கள்சாந்தம்
விரைசெய்தார்புனைந்துசீயவியன்பெருந்தவிசினேற்றி
வரிசையோடிந்திரற்குமணிமுடிசூட்டினாரால்.

(இ-ள்.) அரசியலுக்குரிமையான வினைத்தையும் அவ்விடத்திற் கத்தேவரமைப் பித்து அலை நெருங்கிய கங்கையாற்றின் தெளிந்த நீராலபிஷேகஞ்செய்து செழுமை வாய்ந்த ஆடைகள் ஆபரணங்கள் சந்தனங்கள் மணம்வாய்ந்த மலர்மாலைகள் முதலிய வினைத்தும் அணிந்து பெருமைவாய்ந்த சிங்காதனத்திலேற்றி இருத்தி முறைமை யுடன் இந்திரனுக்கு மகுடஞ் சூட்டினார்கள்.—எ-று. (சா0)

சுடர்த்தனிமவுலிதன்னைச்சூட்டலுந்துறக்கத்தண்ண
லடித்துணைபணிந்தார்வானோரனைவருமாகித்தன்னை
யெடுத்தெடுத்தியம்பலுற்றாரிருடிகளரம்பைமாதர்
நடித்தனர்விஞ்சைவேந்தர்நல்லியாழ்நவின்றிசைத்தார்.

(இ-ள்.) ஒளிபொருந்திய மகுடத்தினைத் தரித்தவுடனே சுவர்க்காதிபனான இந்திரனுடைய உபயபாதங்களைத் தேவர்கள் வணங்கினார்கள் இருடிகளாவார் ஆசி மொழியை எடுத்தெடுத்துக் கூறினர் அரம்பையர் நடனஞ் செய்தனர் வித்தியாதரர் நல்ல யாழினைப் பாட்டுடன் வாசித்தனர்.—எ-று. (சாக

இந்திரனனையகாலையெம்பிரான்முன்னரேகி
வந்தனைபுரிந்துபோற்றிவளமலிதுறக்கநாடு
முந்துளவரசுஞ்சீருமுழுமைதாருங்களித்தியெந்தா
யுய்ந்தனனிதன்மேலுண்டோவூதியமொருவர்க்கென்றான்.

(இ-ள்.) இந்திரனப்பொழுது எம்பெருமானை எதிரேசென்று வணங்கித் துதித்து எம்பெருமானே வளமலிந்த சுவர்க்கநாட்டினையும் பழய அரசினையும் பிறசிறப்புக்களையும் எல்லாம் ஒன்றாக அளித்தனீர் இதனால் உய்ந்தேன் ஒருவர்க்கிதனினும் அடையத்தக்க இலாபமுளதோ என்று கூறினான்.—எ-று. (சஉ)

என்றலுமருள்செய்தண்ணலிந்நகரரசுபோற்றி
நன்றிவணிருத்தியென்னநாகர்கோன்றன்னைவைத்து
நின்றுளவமரர்தம்மைநிலைப்படுமிருக்கைக்கேவித்
தன்றுணையணங்குந்தானுந்தன்பெருங்கோயில்போந்தான்.

(இ-ள்.) இந்திரனவ்வாறு கூறியவுடனே குமரக்கடவுள் அவனுக்குக் கருணைசெய்து இந்நகரத்தினை யாண்டு செவ்வனே இருப்பாயாக என்றிந்திரனை அவ்விடத்திலிருத்திப் பிறதேவர்களை அவர்கள் நித்தியவாசஞ் செய்யுமுறுதியான அவரவரிடங்களுக்குச் செல்லுமாறனுப்பித் தமது துணைவியரான தெய்வயானையம்மையுந் தாமுந் தமது பெரிய கோவிலை யடைந்தனர்.—எ-று. (சங)

குறிநெடிலளவுசான்றகூளியும்வயவர்யாரும்
வறியதோரணுவுஞ்செல்லாமரபினல்வாயில்போற்ற
வுறையுளினிருக்கைநண்ணியொருபெருந்தலைவியோடு
மறுமுகவள்ளல்பல்வேறாடல்செய்திருந்தானன்றே.

(இ-ள்.) குறுமையினும் நெடுமையினும் அளவின் மிக்க பூதங்களும் அனைத்துவீரர்களும் வறுங்காலஞ் சிறிதும் போகாதவண்ணம் முறைப்படி வாயில்காப்ப இருப்பிடத்தின் உள்ளிடத்தையடைந்து ஒப்பற்ற பெரிய தலைவியான தெய்வயானையம்மையாருடன் ஆறுமுகப்பெருமானாரகிய வள்ளலார் பலவேறு வகைப்பட்ட திருவிளையாடல்களைச் செய்திருந்தனர்.—எ-று. (சச)

தூவியந்தோகைமேலோன்றுணைவியோடிருந்தகாலைப்
பூவினன்முதலோர்தத்தம்புக்கிடமமர்ந்தாரன்றே
மேதவர்களிறைவன்றானுஞ்சேயிழைச்சசியுமாக
மேவினனின்பந்துய்த்துவிண்ணுலகரசுசெய்தான்.

(இ-ள்.) தூவிகளையுடைய மயில்வாகனத்தின்மீதெழுந்தருளுஞ் சண்முகப்பெருமான் தமது நாயகியாருடன் எழுந்தருளி இருந்தகாலத்துப் பிரமன்முதலியோர் தத்தம் விடுதிகளிருந்தனர். தேவராசனும் அவன் மனைவியான இந்திராணியுடன் பொருந்தியிருந்து சுகமனுபவித்துச் சுவர்க்கத்தினை யாண்டனன்.—எ-று. (சரு)

இனைத்தியல்கின்றவெல்லையிந்திரவளனேயன்றி
யனைத்துலகத்துமுள்ளவாக்கமுந்தாம்பெற்றென்ன
மனத்திடையுவகைகொண்டுமாநகரிருக்கைபுக்குத்
தனித்தனியமரரெல்லாஞ்சாறயர்ந்தமர்தலுற்றார்.

(இ-ள்.) இங்ஙனம் இவை நடக்கின்றகாலத்து இந்திரசெல்வ மாத்திரமன்றி எல்லாவுலகங்களிலுமுள்ள எல்லாச்செல்வங்களையுந் தாமடைந்தாற்போல மனதினிற் சந்தோடங் கொண்டு சிறந்த வச்சுவர்க்க நகரத்திலுள்ள தத்தம் இருப்பிடங்களையடைந்து ஒவ்வொரு தேவரும் உச்சவங் கொண்டாடியுற்றனர்.—எ-று. (சசு)

விண்குடியேற்றுப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ருசகூ.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கந்தவெற்புறு படலம்.

இப்படிசிலநாளே கவிதன்மிசைவைகலொன்றி
லொப்பருங்கந்தவெற்பி னுறைவதுகருதிச்செவ்வேள்
செப்புறழ்கொங்கையோடுஞ்சினகரந்தணந்துசெல்ல
வப்பரிசுணர்ந்துவேதாவாதியர்யாரும்போந்தார்.

(இ-ள்) இவ்வாறு சிலநாட்கள் செல்லாநிற்பப் பின்னர் ஒருநாளில் ஒப்பற்ற கந்தமாதனத்தில் எழுந்தருளி இருத்தலை நினைத்துக் குமரக்கடவுள் செப்பனைய கொங்கையாளான தெய்வயானையம்மையுடன் ஆலயத்திலிருந்து வெளியே எழுந்தருளுதலும் அச்செய்தியை அறிந்து பிரமன் முதலிய அனைவரும் வந்தார்கள்.—எ-று. (க)

பெருந்தகையனையகாலைப்பிரமன்மான்முதலோர்யாரும்
விரைந்துதம்பதங்கள்செல்லவிடைபுரிந்தங்கண்வானத்
திருந்தரசியற்றவிண்ணோர்க்கிறைவனைநிறுவித்தெய்வத்
திருந்திழையணங்கினோடுஞ்சென்றுதன்றேரிற்புக்கான்.

(இ-ள்.) அப்பொழுது பெருந்தகையான குமரப்பெருமான் அயன் அரி முதலிய தேவரனைவரையும் விரைவாகத் தத்தம் பதவிகளை யடையுமாறு விடையளித்திந்திரனை யச்சுவர்க்கத்திலிருந்து அரசுசெய்யும்வண்ணம் அமைத்து நிறுத்திச் செவ்விய பூணணிந்த தெய்வயானையம்மையுடன் சென்று தமதிரதத்திலேறி யருளினார். ()

தேரிடைப்புகுந்தலைவன்றிறலுடைமொய்ப்பன்பாகாய்ப்
பாரிடைச்சென்றுமுட்கோல்பற்றினன்பணியானுய்ப்பப்
போருடைச்சிலைவல்லோரும்பூதர்தங்கடானுஞ்சுற்றக்
காருடைக்களத்துப்புத்தேள்கைலைமால்வரையிற்போந்தான்.

(இ-ள்.) சண்முகப்பெருமான் இரதத்திலேறிய உடனே அவரது கட்டளையால் வீரவாகுதேவர் அகன்ற வத்தேரிலேறி உளவுகோலேந்தி இரத நடத்தப் போர்ச்சிலையேந்திய வீராதியரும் பூதசமுத்திரமும் சூழ்ந்துவராநிற்பக்கரிய கண்டத்திளையுடைய சிவபெருமான் எழுந்தருளி இருக்குந் திருக்கைலைமலையை அடைந்தனர்.—எ-று. (ங)

போனதோர்காலைவையம்பொள்ளெனவிழிந்துமுக்கண்
வானவன்றனையாயோடடிகளைவணக்கஞ்செய்து
மேனதோர்கருணையோடும்விடைபெறீஇவிண்ணுளோர்கள்
சேனையந்தலைவன்கந்தச்சிலம்பினிற்கோயில்புக்கான்.

(இ-ள்.) அவ்வாறு சென்ற சமயத்தில் இரதத்தினின்றும் விரைந்திறங்கித் திரிலோசனரான சிவபெருமானை உலகமாதாவான உமாதேவியாருடன் வணங்கி மேன்மையான அவர்களின் கருணையுடனே விடைபெற்றுத் தேவசேனாபதியான குமரக்கடவுள் கந்தகிரியிலுள்ள தமதாலயத்தை அடைந்தனர். (ச)

புக்கதோர்குமரமூர்த்திபொருதிறல்வயவர்யாருந்
தொக்கனர்பணியினிற்பத்தொல்படைக்கணங்கள்போற்ற
மைக்கருங்குவளையொண்கண்மடவரலோடுமேவி
மிக்குயர்மணிப்பீடத்தில்வீற்றிருந்தனினனே.

(இ-ள்.) ஆலயத்துட்சென்ற குமரக்கடவுள் போர்வீரர்களானோ ரனைவரும் நெருங்கித் தமதடித்தொண்டினிற்கப் பழய சேனைகளான பூதங்கள் துதியா நிற்ப மையணிந்த கருநெய்தன் மலர்போன்ற ஒள்ளிய கண்ணினரான தெய்வயானை அம்மையாருடன் பொருந்தி மிக உயர்ந்த அரதன பீடத்திலெழுந்தருளி இருந்தனர்.—எ-று.

துய்யதோர்மறைகளாலுந்துதித்திடற்கரியசெவ்வேள்
செய்யபேரடிகள்வாழ்கசேவலுமயிலும்வாழ்க
வெய்யசூர்மார்புகீண்டவேற்படைவாழ்கவன்னான்
பொய்யில்சீரடியார்வாழ்கவாழ்கவிப்புவனமெல்லாம்.

(இ-ள்.) தூய்மைவாய்ந்த வேதங்களாலுந் துதித்தற்கரிய குமரக்கடவுளின் செவ்விய பேரடிகள் வாழ்க. அவர்க்குக் கொடியும் பரியுமாகியுள்ள கோழியும் மயிலும் வாழ்க. வெவ்விய சூரன் மார்பைப் பிளந்த வேற்படைவாழ்க. அப்பெருமானுடைய உண்மையடியவர்கள்வாழ்க. இவ்வுலகமெல்லாம் வாழ்க.—எ-று. (கூ)

கந்தவேற்புறுபடல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௫௫.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இந்திரபுரிப்படலம்.

காசினிவியத்தகுங்கந்தவெற்பிடைத்
தேசுடைமுருகவேள்சேர்ந்தசெய்கையைப்
பேசினனிங்கினிப்பிறங்குபொன்னகர்
வாசவனியற்கையுமற்றுங்கூறுகேன்.

(இ-ள்.) உலகம் புகழுங் கந்தகிரியில் ஒளிபொருந்திய குமரக்கடவுள் எழுந்தருளிய தன்மையை உரைத்தேன் இனி சுவர்க்கவாசியான இந்திரன் செயலும் பிறவும் கூறுகின்றேன்.—எ-று. (க)

துண்ணெனவவுணரைத்தொலைத்தவேற்படைப்
பண்ணவனருளினாற்பலரும்போற்றிட
விண்ணரசியற்றியவேந்தனோர்பக
லெண்ணினனுளந்தனிலிவையநீரதே.

(இ-ள்.) அசுரரை விரைவிலழித்த வேற்படை இறைவரான குமரக்கடவுளின் கருணையால் பலருந் துதிக்கும் வண்ணம் விண்ணுலகினையாண்ட இந்திரனானவன் ஒருதினம் தனதுள்ளத்தில் இவ்வாறு நினைத்தனன்.—எ-று. (உ)

பற்றலர்சிறுதொழில்பலவுமாற்றியே
யுற்றதுமளப்பிலாவுகமொளித்தது
மற்றதனிடையிடைவந்ததீமையும்
பெற்றிடுதுன்பமும்பிறவுமுன்னினான்.

(இ-ள்) பகைவரிடத்து மீன் சுமத்தல் முதலிய பல இழிதொழில்களைச் செய்திருந்ததும் அளவற்ற யுகங்கள் மூங்கிலுருவமாகச் சீகாழியிலொளித்திருந்ததும் அவ்வாறு ஒளித்திருக்குங்கால் இடையே இடையே உண்டான துன்பமும் பிறவும் நினைத்தான்.—எ-று. (ந)

மறுத்தனன்சசியுடன்வைகும்வாழ்க்கையை
வெறுத்தனன்வெறுக்கையைவேந்தியற்கையுஞ்
செறுத்தனன்றவத்தினாற்சேர்வன்வீடெனாத்
துறத்தலையுன்னினன்றுறக்கமேயினான்.

(இ-ள்.) சுவர்க்கத்தைக் குமரக்கடவுளாற் கொடுக்கப்பெற்ற இந்திரன் இவ்வாறு நினைத்து இந்திராணியுடன்வாழும் வாழ்க்கையை வெறுத்தனன் செல்வத்தை வெறுத்தனன் அரசர் தன்மையையும் வேண்டாமென்று தடுத்தனன் இனித் தவத்தினால் முத்தி அடைவேனென்று துறவடைதலைக்கருதினான்.—எ-று. (ச)

இந்திரனியற்கையையெண்ணிவானவர்
மந்திரியாகியுமன்னனாகியு
மந்தணனாகியுமமரும்பொன்னவன்
புந்தியிலீதொருபுணர்ப்பையுன்னினான்.

(இ-ள்.) இந்திரனது தன்மையை நினைத்துத் தேவமந்திரியாகியும் மன்னவனாகியும் புரோகிதனாகியும் அந்தணனாகியும் இருக்கின்ற வியாழன் தனது மனதினிலின்னதொரு வஞ்சனையை நினைத்தனன்.—எ-று. (ரு)

உன்னியமேலவனும்பருக்கெலா
மன்னவனுழைதனில்வந்துவைகியே
கொன்னவில்வச்சிரங்கொண்டபாணியா
யின்னனக்கேளெனவியம்பன்மேயினான்.

இ-ள்.) இவ்வண்ணம் ஆலோசனைசெய்த வியாழன் தேவரனைவருக்கும் அரசனை இந்திரனிடத்துத் தனியே வந்திருந்து வன்மையுடையதென வுரைக்கப்படும் வச்சிரமேந்திய கையினையுடையாய் இவைகளைக் கேட்பாயாகவென்று கூறத் தொடங்கினான்.—எ-று. (சு)

புன்றொழிலாகியபொய்யும்வாய்மையா
மொன்றொருபெரும்பயனுதவுமாயிடி
னென்றனர்சுரகுருவிந்திரன்பத
நின்றிடவீதொருநிகழ்ச்சிகூறுவான்.

(இ-ள்.) இழிதொழிலாகிய பொய்யும் உண்மையாம் அதுவுமொரு பிரயோசனத்தினை அளிக்குமாயின் என்று கூறினோர்கள் அதற்கிணங்க வியாழன் இந்திரபதவி நிலைநிற்குமாறு இன்னதொரு உண்மையற்ற சங்கதியை யுரைத்தனன். —எ-று.

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்" என்றார் வள்ளுவர். (எ)

வேறு.

அன்புநீங்கியவவுணருக்கரசனாற்பட்ட
துன்பமான்றையுன்னியேதுறக்கமேலரசு
மின்பவாழ்க்கையும்வெறுத்தனையிவைவெறுத்தனையேற்
பின்புகோற்றுநீயாற்றலாற்பெறும்பயன்யாதோ.

(இ-ள்.) அன்பற்ற அசுராதிபனென சூரனாலடைந்த துன்பத்தினை நினைந்து சுவர்க்கத்தி னரசும் இன்பவாழ்வும் வெறுத்தனை இவைகளை வெறுத்தனையானாற் பின்னர் நீ தவஞ்செய்து பெறும்பயனென்னை?—எ-று. (அ)

சிந்தைவெந்துயருழந்தவரல்லரோதிருவு
மந்தமில்பெருவாழ்க்கையுமெய்துவராதுதான்
மைந்தவாழிகேணின்னளவன்றுகாண்மதிக்கி
னிந்தமூவுலகந்தனில்வழங்கியவியற்கை.

(இ-ள்.) மனோதுன்பத்தினை மிகுதியாக அடைந்தவர்களன்றோ செல்வங்களையும் அளவற்ற பெரியவாழ்க்கையையும் அடைவார்கள் அதுவும் இந்திரனே! நின்னளவன்று ஆலோசனை செய்யும் இடத்து இந்த மூன்றுலகங்களினும் வழங்கிய தன்மையென்றறிக.—எ-று. (கூ)

ஓவருந்தவமியற்றியமுனிவரினுலகத்
தேவர்தங்களிற்பாதலத்தோர்களிற்சிறந்த
மூவரென்றுபேர்பெற்றிடுமுதல்வர்கடம்மி
லேவர்மங்கையர்முலைத்தலைப்போகம்விட்டிருந்தோர்.

(இ-ள்.) கெடாத தவஞ்செய்த முனிவரில் உலகத்திலுள்ள தேவர்களில் பாதாளவாசிகளில் சிறந்த மூவரென்று பேர்பெற்ற முதல்வருக்குள் எவர் பெண்களின் தனதடத்துச்சை யோகத்தினை விடுத்திருந்தவர்கள்.—எ-று. (கо)

போனதுன்பினுக்கஞ்சியேபுகுந்தவித்திருவை
யூனமாமெனத்துறந்துநீதமியைநோற்றுழலி
னானபோதுறுந்துயரினுக்கவதியுமுண்டோ
கானனீந்திடவெருவியேகடல்புகவற்றோ.

(இ-ள்.) சென்றொழிந்த துன்பத்துக்குப் பயந்து இப்பொழுது கிடைத்த இந்தச்செல்வத்தினைக் குற்றமானதெனவெறுத்து நீ தனித்தவனாகத் தவஞ்செய்து திரிந்தால் அப்பொழுதுண்டாகுந் துன்பத்திற்கெல்லையும் உளதோ கானனீரைக்கடத்தற்குப் பயந்து கடலுட்புகுதலாமோ?—எ-று. (கக)

ஆகநோவுறவருத்தியேயைம்புலனவித்து
மோகமாதியாமூவிருகுற்றமுமுருக்கி
யோகுசெய்திடுமேலையோர்பெரும்பயனுரைக்கிற்
போகமன்றியொன்றில்லைகாணெல்லைதீர்புகழோய்.

(இ-ள்.) உடலோ வடைய வருத்தி ஐம்புலன்களை யடக்கி மோகமுதலிய அறுகுணங்களையுங் கெடுத்து யோகஞ்செய்கின்ற பெரியவர்கள் அடைகின்ற பெரிய பிரயோசனத்தினை யுரைக்குமிடத்து அளவற்ற புகழினையுடையாய் போகத்தினை யன்றி மற்றொன்று மின்றென்றுணர்க.—எ-று. (கஉ)

காண்டகும்புலனொடுங்குமாங்கரணமுமிலையாம்
பூண்டசெய்கையுமொழியுமாமியாக்கையும்போமா
மாண்டோர்பேரின்பமுண்டென்பரதனையாரறிந்தா
ரீண்டுகண்டதேமெய்யென்பருலகுளோர்யாரும்.

(இ-ள்.) பேரின்பத்தில் காணத்தக்க ஐம்புலன்களும் ஒடுங்குமாம் மனமுதலிய அந்தக்கரணங்களும் இல்லையாம் கைக்கொண்டிருந்த செயல்களும் ஒழியுமாம் உடலும் போகுமாம் இத்தகைய திறத்தில் அங்கொரு பேரின்ப முண்டெனக் கூறுவர்

அதனை யெவரே கண்டவர் ஆதலின் இங்குக்கண்டதே உண்மையென உலகினரனை வரு முரைப்பர்.—எ-று. (௧௩)

பொய்மையுற்றிடுகானலைப்புனலெனவிரும்பிக்
கைம்மிசைக்கொண்டவமிர்தினைக்கமருகுத்தாங்கு
மெய்ம்மையிற்சிலருண்டெனும்வீடுபேறுன்னி
யிம்மையிற்பயனிழக்குதிநன்றுநின்னெண்ணம்.

(இ-ள்.) பொய்த்தோற்றமான கானனீரை மெய்யான நீரெனக்கருதி விரும்பிக் கைம்மிசை இருந்த அமுதத்தினை விடரில்விடுத்தாற்போல உண்மைபோலச் சிலர் உண்டெனக்கூறும் வீடுபெறுதலைக்கருதி இம்மைப்பயனை இழக்கின்றனை நின்னெண்ணம் நன்றாக விருக்கின்றது.—எ-று. (௧௪)

மங்கைமாரிடத்தின்பமேயின்பமற்றவரோ
டிங்குவாழ்வுறும்வாழ்க்கையேயியல்புறும்வாழ்க்கை
யங்கவர்ப்பெறுசெல்வமேசெல்வமாங்கவர்தங்
கொங்கைபுல்குறுவறுமையேகொடியதோர்வறுமை.

(இ-ள்.) பெண்களிடத்துள்ள இன்பமே இன்பம் அப்பெண்களுடன் இங்கு வாழ்கின்ற வாழ்க்கையே முறைமையான வாழ்க்கை அப்பெண்களை யடைதலான செல்வமே செல்வம் அப்பெண்களின் தனங்களை யணையாதவறுமையே கொடியதான வறுமை.—எ-று. (௧௫)

மறுவிலாதவாண்மதிமுகமடந்தையர்புணர்ப்பைச்
சிறியவின்பமென்றுரைசெய்வரன்னதன்சிறப்பை
யறிவரேயெனினுங்கதேபேரின்பமாகு
மிறைவநீயதுகேட்டியேன்மொழிகுவனென்றான்.

(இ-ள்.) களங்கமற்ற ஒளிபொருந்திய சந்திரவதனியரான பெண்களின் சேர்க்கையைச் சிற்றின்பமென்று கூறுவார்கள் அச்சிற்றின்பச்சிறப்பினை அறிந்திருப்பாராயின் அதுவே பேரின்பமாகும் மன்னவனே நீ யதனைக்கேட்பாயானல் உரைக்கின்றேன் என்று கூறினன்.—எ-று. (௧௬)

ஏமஞ்சான்றிடுகுரவன்மற்றிவையிவையிசைப்ப
நாமஞ்சான்றிடுகுலிசமாப்படையினன்னகையா
வோமஞ்சான்றிடுதீமுன்னரிழுதெனவுடைந்து
காமஞ்சான்றிடுமுளத்தனுயினையனகழறும்.

(இ-ள்.) இன்பமிகுந்த ஆசிரியன் இவ்வாறு கூறுநிற்ப அச்சத்தினை மிகுதியுந் தருகின்ற வச்சிரபாணியான இந்திரன் கேட்டு நகைத்து ஓமத்தில் விடுகின்ற நெய்யை யொப்ப உள்ளுடைந்து காமத்தின் மிகுந்த உள்ளத்தினை உடையவனாய் இவை யுரைத்தனன்.—எ-று. (௧௭)

பொருந்துமாசினையகற்றிநற்காட்சியைப்புரியு
மருந்துபோலுறுகுரவநீமடந்தையர்சிறப்புந்
திருந்துகாமநல்லின்பமுமெனக்கருள்செய்யா
திருந்தகாரணமென்கொலோவின்றுகாறென்றான்.

(இ-ள்.) உடலிற் பொருந்திய மாசினையொழித்து நல்ல தோற்றத்தினைத் தருகின்ற மருந்துபோல உள்ள குரவனே நீ பெண்களின் சிறப்பும் திருந்திய நல்ல காமவின்பமும் எனக்கு இதுகாறும் சொல்லாமலிருந்த காரண மென்னை சொல் என்று வினவினன் இந்திரன்.—எ-று. (௧௮)

வேறு.

வெற்றுடலத்தில்விழித்தொகைபெற்ற
சிற்றறிவோனிவைசெப்புதலோடு
மற்றிவனுள்ளமயங்கினனென்னுக்
கற்றுணர்மந்திரிகட்டுரைசெய்வான்.

(இ-ள்.) வெற்றுடலில் விழியின் தொகையைப்பெற்ற சிறியவறிவாளனான இந்திரன் இவ்வாறு கூறுதலும் கற்றுணர்ந்த வியாழன் இவனிப்பொழுது மனமயங்கி நிற்கின்றானென்று கூறத் தொடங்கினான்.—எ-று.

மாதர் போகத்தின் மயங்கிப்பொய்விழி பெற்ற விழிஞனென்று குறிப்பிப்பான் வெற்றுடலத்தில் விழித்தொகைபெற்ற சிற்றறிவோனென்றார். (கக)

மாதர்கண்மேன்மைகண்மன்மதனன்னா
லோதிடுமுண்மையையோர்ந்துணர்கின்ற
காதலிலாவழிகட்டுரைசெய்யா
ராதலினையவறைந்திலனிந்நாள்.

(இ-ள்.) ஐயனே! பெண்களினுயர்ச்சிகளைக் காமாகமமானது சொல்லுகின்ற உண்மையை ஆராய்ந்தறியத்தக்க விருப்பமில்லாத காலத்துச் சொல்லார் ஆதலின் இந்நாள் காறும் நினக்குரைத்தேனில்லை.—எ-று. (உ0)

கோண்மதியேகுடையாவருகோன்றன்
மாண்மதிநூலெனும்வான்கடன்முற்று
நீண்மதியாலுணர்ந்தேனதனீர்மை
கேண்மதியென்றுகிளத்திடுகின்றான்.

(இ-ள்.) நவகோளுளொன்றான மதியையே குடையாகவுடைய மன்மதனுடைய மாட்சிமை யமைந்த நூலென்று கூறும் பெரியகடன் முழுமையும் நீண்டபுத்தியினாலறிந்தேன் அதன் தன்மையை கேட்பாயாகவெனச் சொல்லத் தொடங்கினான்.

ஈறிலவென்றுமியம்பினர்பத்தே
நூறுடனெட்டெனுநூலுநுவன்றார்
வேறுமிசைத்தனர்மெய்ச்சமயந்தா
னாறெனவோதினராங்கவைதம்முள்.

(இ-ள்.) உண்மைச் சமயங்களை அளவற்றனவென்று கூறினார்கள் ஆயிரத்தெட்டெனு நூல்களையு முரைத்தார்கள் வேறுங்கூறினார்கள் ஆறென்றுங் கூறினார்கள் அவைகளுள்.—எ-று. (உஉ)

சுதையமுதேயெனத்துய்த்திடுநீரார்க்
கிதமிகநல்குவதிம்மையின்முத்திக்
கதியருள்கிற்பதுகாமருலோகா
யதமெனவேநெறியொன்றுளதன்றே.

(இ-ள்.) வெள்ளிய அமுதத்தினையொப்ப அனுபவிக்குந்தன்மையினை யுடையார்க்கு இன்பத்தை மிகவுங் கொடுப்பதாய் இம்மையிலே மோட்சகதியருள்வதுமாகி அழகிய உலோகாயதமென ஒரு சமய~~ங்க்க~~முளது.—எ-று. (உங)

அச்சமயத்தலையாற்றிடைநின்றே
யெச்சமில்வீடுபெற்றின்புறுகின்றோர்
மெச்சியலாடவர்மேலதையீவோர்
நச்சுறுகூர்விழிநாரியர்தாமே.

(இ-ள்.) அந்தச்சமயத்தின் வழி நின்று குறையாத வீட்டினைப்பெற்று இன்பமனுபவிப்பவர்கள் மெச்சத்தக்க விலக்கணம்வாய்ந்த புருடர்கள். அவ்வீட்டின்பத்தினைக்கொடுப்பவர்கள் விடந்தங்கிய கூரிய விழியினரான பெண்கள்.—எ-று. (உச)

அம்மடவாரியலானவுமன்னோர்
தம்மையடைந்திடுதன்மையுமேவுஞ்
செம்மைகொளாடவர்செய்கையுமெல்லா
மெய்ம்மையதாகவிளம்பிடும்வேனூல்.

(இ-ள்.) அப்பெண்களின் தன்மையும் அவர்களை யடையுந் தன்மையும் புணருகின்ற புருடர்களின் செவ்வையான தன்மையும் ஆகிய வனைத்தும் மன்மதாகமமானது உண்மையாக உரையா நிற்கும்.—எ-று. (உரு)

சாதியியற்கைகடத்துவமாந்தர்
தீதில்குணத்தொடுதேசமவத்தை
போதுகருத்திவையாதியபோர்வேள்
வேதமுரைக்கும்விழுப்பொருள்மாதோ.

(இ-ள்.) அக்காமாகமம் போர்புரியு மன்மதனுக்குரிய வேதமுரைக்குஞ் சிறந்தபொருளாவன, சாதிகளின் தன்மைகளும் தத்துவங்களும் ஆடவர்களின் குற்றமற்ற குணங்களும் தேசங்களும் அவத்தைகளும் காலங்களும் எண்ணங்களுமாம்.—எ-று.

விசைதவிர்மானினிமாலவடைவைப்பே
ரிசையினியத்தினியேந்திழையோர்க்கா
மசைவறுதொன்மரபாடவர்யார்க்குஞ்
சசனிடபன்னசுவன்னிவைதாமே.

(இ-ள்.) பெண்கள் மான்சாதியரான மானினியர் பெட்டைக்குதிரைச்சாதியரான வடவையர் அல்ல தசுவனியர் பெண்யானைச்சாதியரான அத்தினியர் என்று மூவகையினராவர் ஆடவர் குற்றமற்ற முசல் சாதியர் இடபசாதியர் அசுவசாதியர் என மூவகையினராவர். (உஎ)

முன்னமுரைத்திடுமும்மரபுக்குட்
கன்னியராடவர்காமர்குறிக்கு
மன்னியவாழமுநீளமுமற்று
மின்னனவென்றிடவேற்பதியற்கை.

(இ-ள்.) முன்னருரைத்த மூவகைச்சாதியினுள் பெண்களினுடையவும் ஆண்களினுடையவும் அழகிய குறிகட்குப்பொருந்திய ஆழமும் நீளமும் இவ்வளவினவென்று நிர்ணயிப்பது இலக்கணம்.—எ-று. (உஅ)

அந்தமிறேவரருந்தவர்நாகர்
கந்தருவத்தர்கணங்கெழுபூதர்
முந்துமரக்கரியக்கர்முரட்பேய்
தந்திறனுவதுதத்துவமாமே.

(இ-ள்.) நாசமற்ற தேவர்கள் அரிய தவசிகள் நாகர்கள் கந்தருவர்கள் கூட்டமாகவுள்ள பூதர்கள் முற்பட்ட அரக்கர் இயக்கர் வன்மைவாய்ந்த பிசாசுகள் என்னும் இவைகளின் தன்மைவாய்ந்து நிற்றலே தத்துவமென்பது.—எ-று. (உகூ)

எண்மைகொடத்துவமாற்றிடைநின்ற
பெண்மையரைவளிபித்தென்வோதும்
வண்மைகொண்முக்குணமன்னினர்மற்றவ்
வுண்மைபடைத்திடலொண்குணனுமே.

(இ-ள்.) எட்டிவிதமாகவுள்ள தத்துவ வழியினின்ற பெண்கள் சிலேத்துமம் வாதம் பித்தமென்று கூறும் வளப்பங்கொண்ட இம்முக்குணங்களைக்கொண்டவராவர். இத்தகைய வுண்மையைப்பெற்று நிற்றல் குணமென்பதாம்.—எ-று. (கூசி)

வேறு.

உருவும்வண்ணமுமோங்குசெயற்கையு
மரிவைமார்கடநாளுமனையவுந்
தெரியநாடித்தெளிந்தறிகிற்பரான்
மரபுதான்முதல்வான்குணத்தீறுமே

(இ-ள்.) உருவமும் நிறமும் உயர்ந்த செயற்கையும் பெண்களுடைய நாளும மற்றும் பிறவும் அறியும் வண்ணம் ஆராய்ந்தறிவார்கள் மரபுமுதல் குணம் வரைக்கும்.

ஏறுதேசந்தொறீண்டியமாதர்தம்
மூறுநீதியுமுள்ளமுஞ்செய்கையும்
வேறுவேறுவினவியெல்லோர்களுந்
தேறநிற்பதுதேசவியற்கையே.

(இ-ள்.) உயர்ந்த தேசங்கள் தோறும் பொருந்திய பெண்களின் நகக்குறியாதி ஊறுபாடுகளும் நீதிகளும் மனோபாவமும் வேறுவேறாகக் கேட்டு அனைவருமறியுமாறு நிற்றலே தேசவியற்கை என்பது.—எ-று. (கூஉ)

தரித்தவாலைதருணிபிரவுடை
விருத்தையாகும்வியன்பருவங்களி
னுரைத்தகாலமுமுள்ளத்தின்வேட்கையும்
பிரித்தறிந்திடப்பெற்றதவத்தையே.

(இ-ள்.) அவத்தை யென்பது பொருந்திய வாலை தருணி பிரவுடை விருத்தையென்னும் பெரிய பருவங்களின் சொல்லப்பட்ட காலங்களும் மனோவிருப்பமும் பிரித்தறிதலேயாம்.—எ-று. (கூக)

கோலமாமுக்குணத்தர்முப்பான்மையார்
நால்வரெண்மராநாரியர்பற்றுற
வேலுமாடவரெய்துதற்கேற்றபல்
காலமுந்தெரிகிற்பதுகாலமே.

(இ-ள்.) காலமென்பது, அழகிய முக்குணத்தினர் மானுதி முப்பகுதியர் பதுமினியாதி நால்வர் தேவதத்துவமாதி எண்வகை தத்துவத்தர் என்னும் பகுதியினரான பெண்கள் விரும்பத் தகுதியாய்ப்புருடர் அவர்களைச் சேரத்தக்க பலவகைக்காலங்களையும் அறிதலேயாம்.—எ-று. (கூச)

மக்களகாமம்வடிவினில்வைகலும்
பக்கந்தோறுமிழிந்துயர்பான்மையாற்
புக்கதோரிடைநாடிப்புரையொரீஇத்
தக்கசெய்வதுஞ்சாற்றியமேலதே.

(இ-ள்.) அன்றியும் மனிதரின் காமம் உடம்பில் நாடோறும் கிருட்டின சுக்கிலபக்கங்களில் இறங்கியும் ஏறியு நிற்குந் தன்மையால் அக்காமமிருக்கு மிடத்தைத் தேடிக் குற்றம்விட்டுத் தகுந்தனதைச்செய்தலும் முன்னுரைத்தகாலத்தின் பாற்பட்டதேயாமென்க.—எ-று. (கூரு)

பற்றுளோரையும்பற்றிலர்தம்மையு
முற்றுளோரையுமுற்றிலர்தம்மையு

மற்றுளோரையுமாந்தர்கடேற்றுமா
றுற்றசெய்கையுளங்கொள்கருத்ததே.

(இ-ள்.) இச்சையுள்ளவர்களேயும் இச்சையில்லாதவர்களேயும் அடைந்தவர்களேயும் அடையாதவர்களேயும் இவரல்லாதாரையும் ஆண்மக்கள் தெரிந்துகொள்ளும் வண்ணம் பொருந்திய செயல்களை உள்ளத்திற் கொள்ளுதலே கருத்தென்பதாம். ()

வேறு.

இங்கிவையாடவரியல்புஞ்சால்புறு
மங்கையர்பான்மையும்வகுத்ததன்னவர்
பொங்கியபுணர்வகைபுணர்ச்சிக்கேற்பதோ
ரங்கிதம்பிறவுமேலறையநின்றவே.

(இ-ள்.) இங்குரைத்த இவை ஆடவரின் தன்மையும் சிறப்புவாய்ந்த மங்கையர்தன்மையும் வகுக்கப்பட்டதாம். அவ்வாண்பெண் பகுதியினர் உச்சாகத்துடன் புணரும் புணர்ச்சியின் தன்மையும் புணர்ச்சிக்கேற்ற அங்கித முதலிய பிறவுமே இனி உரைக்க வேண்டுவன.—எ-று. (௩எ)

புல்லுதல்சுவைத்திடல்புணர்நகக்குறி
பல்லுறன்மத்தனம்பயிலுந்தாடன
மொல்லொலிக்கரணமோடுவகையாதிய
வெல்லேயில்புணர்நிலைக்கியைந்தவென்பவே.

(இ-ள்.) ஆலிங்கனஞ்செய்தல் சும்பனஞ்செய்தல் பொருந்திய நகக்குறி தந்தக்குறி மர்த்தனம் பழகியுள்ள தாடனம் விரைவிற்காட்டும் புட்குரல் கரணங்கள் உல்லாச முதலியன அளவற்ற புணர்ச்சித்தன்மைக்குப் பொருந்தியுள்ளன.—எ-று. (௩அ)

வேறு.

விரைதலேசமந்தூக்கென்னும்வேகமுமுச்சநீசம்
புரைதவிர்சமமென்றேதும்பொருண்மையுங்குணத்திற்பற்றிப்
பரவுமைவகையிலீரைம்பகுதியாற்பிறவாற்சேர்ந்
துரைதருபுணர்ச்சியாகுமுபரியுமனையதொன்றே.

(இ-ள்.) சண்டவேகம் மத்திமவேகம் சமவேகம் என்னும் வேகங்களும் உச்சம் நீசம் குற்றமற்ற சமமென்று கூறும் பொருள்களும் குணங்களோடு பொருந்தி விரிந்த ஐவகையான ஆலிங்கனாதிகளாலும் தத்துவங்களான பத்திலக்கண முறைப்படியும் பிறமுறையாலும் அணைதலே உரைக்கப்பட்ட புணர்ச்சியாகும். உபரிசுரதமும் அவைகளுளொன்றேயாம்.—எ-று. (௩௯)

உறுத்தலேநெருக்கன்மெல்லவுரோசுதலுறுதன்முன்னு
மறுத்தவிர்தருவுசூழ்ந்தவல்லியேமரமேற்கோடல்
செறித்தவெள்ளரிசிபாலார்தீம்புனல்செயிர்தீர்காட்சிப்
புறத்திலோருறுப்புறுத்தல்புணர்ச்சியிற்புல்லற்பால.

(இ-ள்.) உறுத்துதலும் நெருக்குதலும் மெல்லென உரோசுதலும் ஆகிய இவை முன்னாகக் குற்றமற்ற மரத்தைச்சூழ்ந்த கொடிபோன்று புல்லுதலும் நெருங்கிய வெள்ளரிசியும் எண்ணும்போலப் புல்லுதலும் பாலு நீரும்போலப் புல்லுதலும் குற்றமற்ற காட்சியினையுடைய வெளி யங்கங்களிற் பொருந்துமாறு புணர்ச்சியிற் புல்லுதல் வேண்டும்.—எ-று. (௪0)

வைத்தலேதுடித்தலொற்றுமரபொப்புவிலங்குசுற்றே
யுத்தரமதுக்கனுள்ளீடோங்குசம்புடாதிதன்னுற்
பத்துடனென்றுமேனைப்பல்வகையுறுப்புநாடி
முத்திறத்தமிர்தமுண்டன்முன்மொழிசுவைத்தலாமே.

(இ-ள்.) வைத்தல் துடித்தல் ஒற்றுதல் இரண்டுஞ் சமமுற நிற்றல் விலகிநிற்றல் சுற்றுதல் மேலுதடதுக்கல் முதலியவையா யுயர்ந்த சம்புடாதிகளால் பதினொன்றும் பிறவுமான உறுப்புக்களை ஆராய்ந்து மூன்றுவகை யியல்பின் அமிர்த மருந்துதல் முன்னருரைத்த சும்பனமென்றறிக. (சுக)

சுரிதகமெண்ணுட்டிங்கடயமண்டலமேமஞ்ஞை
நிரலடிமுயலின்புன்காலெய்தலினிதழேவேங்கை
யுருகொழுநகவிரேகையுருவிலேழுறுப்பிலெங்கும்
வரன்முறைநகத்தாற்றீட்டல்வள்ளுகிர்க்குறியதன்றே.

(இ-ள்.) சுரிதகமும் அட்டமி சந்திரனும் தூயமண்டலமும் மயிலின் வரிசையான காலடியும் முயலின் சிறிய காலடியும் நெய்தற்பூவின் இதழும் வேங்கையின் நகமும்போன்று நிறம்விளங்குகின்ற நகரேகை உடலின் எழுவகை உறுப்புக்களின் எவ்விடங்களினும் கிரமமாக நகத்தினெலெழுதுதல் கூறிய நகக்குறியாம்.—எ-று.
அன்று - ஏ - அசைகள். (சுஉ)

துவர்படுபவளமாலைசுனகமூடிகமேயேனக்
கவரடிமணிபோழ்வட்டக்கடிகண்டப்பிரதமுற்று
மிவையலபிறவும்போலவின்னமுதுண்டதான
மவைதமினெறியாற்றந்தமழுத்தல்பற்குறியதம்மா.

(இ-ள்.) செந்நிறமான பிரவாளபிந்து நாய்க்கால், எலிக்கால், பன்றியினகன்ற வடி மணிபிந்து கண்டப்பிரத முதலியவும் இவையலாதபிறவும்போல இனிய அமிர்தம் உண்ட இடங்களில் முறையே தந்தம் அழுத்துதலே பற்குறியாம்.—எ-று. (சுங)

உரமுதலைந்திலைம்பாலுணர்தொழின்முறையாலேற்பப்
பொருவறுபுணர்ச்சிவேலைபுடைத்திடல்புடைப்பதாகுங்
கரிகரமாதியாயகனங்குழைமகளிர்வெஃக
மருவியவழிபாடன்றேமத்தனமென்பவல்லோர்.

(இ-ள்.) மார்பு முதலிய ஐந்திடங்களில் ஐவகையாக வுணர்ந்த தொழின் முறைப்படி பொருந்துமாறு ஒப்பற்ற புணர்ச்சிகாலத்தில் தட்டுதலே தாடனமாகும் பொற்குழையணிந்த மாதர்விரும்பும்வண்ணம் கரிகரலீலை முதலியவையாய்ச் செய்யுந் தொழில்களை மர்த்தனமென்று காமாகம வல்லவர் கூறுவர்.—எ-று. (சுச)

மயில்புறவன்னங்காடைவண்டுவாரணஞ்செம்போத்துக்
குயிலெனவிசைக்குமெட்டின்குரலினைப்பயின்றுகாம
ரியலுறுமகளிர்பாங்கரெய்துழியிவையில்வேண்டுஞ்
செயல்வகைபுரியுமாறுசிறந்தசீற்காரமாமே.

(இ-ள்.) மயில் புறவு அன்னம் காடை வண்டு கோழி செம்போத்து குயில் என்று கூறும் எண்வகைப் புள்ளொலியைப் பழகி அழகுபொருந்திய மடவார் மாட்டுச் சென்றவுடனே இவற்றுள் வேண்டிய செய்கை வகையைச்செய்தலே சிறந்த சீற்கார மாம்.—எ-று. (சுரு)

பாரியல்கிராமியஞ்சீர்பவுத்திகநாகபாச
மேரியனகரிகமிந்திராணிகமேகூர்மஞ்
சாரிதமாய்தமூர்த்தஞ்சங்கிராணிகமேகூர்மஞ்
பாரிசம்பிடிதஞ்சூலஞ்சுரும்பிதம்பதுமபீடம்

(இ-ள்) உலகிற் பொருந்திய கிராமியம் சிறந்த பவுத்திகம் நாகபாசம் அழகு வாய்ந்த நாகரீகம் இந்திராணிகம் கூர்மம் சாரிதம் ஆய்தம் மூர்த்தம் சங்கிராணிகம் மண்டேகம் பாரிசம் பிடிதம் சூலம் சுரும்பிதம் பதுமபீடம்.—எ-று.

இதுமுதல் நான்குபாடல் குளகம். (சசு)

எண்டகுஞ்சம்புடம்வேட்டிதம்விசும்பிதமுற்புல்லம்
பிண்டிதம்பீடிதம்மேபிரேதுகையநுபாதந்தான்
பண்டதங்கடகமத்தபத்மவாசனஞ்சமூர்த்தந்
தண்டகம்பளிதம்வேணுச்சாரிதஞ்சமவேசன்னம்.

(இ-ள்.) எண்ணத்தக்க சம்புடம் வேட்டிதம் விசும்பிதம் உற்பல்லம் பிண்டிதம் பீடிதம் பிரேதுகை அநுபாதம் பண்டதம் கடகம் அர்த்தபத்ம வாசனம் சமூர்த்தம் தண்டகம் பளிதம் வேணுசாரிதம் சமவேசன்னம்.—எ-று. (சஎ)

ஆடவஞ்சமபுடத்தோடமர்பரிவத்தகஞ்சங்
காடகந்தேனுகம்மற்கடகமைம்பதமேசானு
மாடமர்துகிலம்பீனமாத்திகமேகூர்ப்பன்னம்
பீடிதோருகம்பீதம்பீடிகையோடுபின்னும்.

(இ-ள்.) ஆடவம்சமபுடத்துடன் பொருந்திய பரிவர்த்தகம் சங்காடகம் தேனுகம் மற்கடம் ஐம்பதம் சானுவினருகிற் பொருந்திய துகிலம் பீனம் ஆத்திகம் கூர்ப்பன்னம் பீடிதம் ஊருகம் பீதம் பீடிகை பின்னம் அன்றியும்.—எ-று. (சஅ)

எட்டுவிக்கிரமமோகயூதகமென்னுநாற்பா
னெட்டுளதிறத்தினுமிவையலபிறவாற்றானு
மட்டமர்குழலினார்கண்மகிழ்தரமதனூறேறுஞ்
சிட்டர்கள்புணரும்பான்மைசித்திரக்கரணமாமே.

(இ-ள்.) பொருந்திய விக்கிரமம் கோயூதகம் என்றுரைக்கும் நாற்பத்தெட்டுத் திறங்களானும் இவை யல்லாதுள்ள பிறவாற்றானும் மணந்தங்கிய கூந்தலினையுடைய மாதர்கள் சந்தோட மடையும்வண்ணம் மதனநூலை நன்குணர்ந்த சிரேட்டர்கள் புணருந்தன்மையே அழகிய கரணமாம்.—எ-று. (சக)

திணைநிலமகளிர்தத்தந்திறங்களுஞ்சேர்தன்மாண்பு
முணர்குவரெனினுமற்றவொண்குழுவதனுணின்ற
கணிகையிற்பரத்தைகாமக்கன்னியரொழிந்தோர்தம்மைப்
புணர்கையும்பிறவுந்தேர்தல்புலமையோர்கடனுமன்றே.

(இ-ள்.) குறிஞ்சியாதி நிலத்திணைகளிலுள்ள மாதர்களின் தன்மைகளும் அணைதன்முறையும் அறிந்திருப்பரேனும் மற்றை ஒள்ளிய கூட்டத்துள் நின்ற கணிகையிற் பரத்தை காமக்கன்னியரன்றி உள்ளாரைப் புணர்தலும் பிறவும் ஆராய்தலும் அறிவுடையோர்க்குக் கடனும்.—எ-று. (ருo)

முன்னுறமதனநூலின்முன்றயெலாந்தொகையிற்கூறி
யன்னதன்வகையுங்கூறியகலமுமெடுத்துக்கூறிப்
பொன்னவனிருத்தலோடும்புரந்தரனவற்றையோர்ந்து
கன்னியைப்புணருங்காமக்கவலைமேற்கருத்தைவைத்தான்.

(இ-ள்.) முன்னர் மதனநூலின் முறையனைத்தும் தொகையாக வுரைத்து அதன் வகைகளையும் உரைத்து அதன் விரிவையு மெடுத்துரைத்து வியாழ னிருந்த வுடனே இந்திரன் அவைகளை ஆராய்ந்து இந்திராணியைப் புணருகின்ற காமத் துன்பத்தில் மனத்தினைச் செலுத்தினன்.—எ-று. (௫௧)

கொற்றவெங்குலிசவள்ளல்குரவனை இறைஞ்சியெந்தை
சொற்றிடுபான்மையெல்லாந்துணிவதுவாகக்கொண்டேன்
மற்றொருபொருளும்வெஃகேன்வரம்பிலாவின்பந்தன்னைப்
பெற்றனன்போலுமென்னப்பெருமகிழ்வெய்திப்போனான்.

(இ-ள்.) வெற்றியினையுடைய வெவ்விய வச்சிராயுதத்தை யேந்திய இந்திரன் வியாழனை அடிபணிந்து எந்தை நீ உரைத்த முறையனைத்தையும் உறுதியாக உட்கொண்டேன் வேறொரு பொருளும் விரும்பேன் அளவற்ற இன்பத்தினை அடைந்தேனென்று கூறி மிக்க மகிழ்வுற்றுச் சென்றான்.—எ-று. (௫௨)

வேறு.

திரைசெறிகடலெனத்திளைக்குமின்பநூ
லுரைசெய்துபொன்னவனுவப்பிற்போந்திட
விரைசெறிதொங்கலான்மேலைப்பொன்னக
ரரசினைமதலைபாலாக்கினானரோ.

(இ-ள்) அலைநெருங்கிய கடலைப்போல அனுபவிக்கும் காமநூலினையுரைத்து வியாழபகவான் சந்தோஷத்துடன் செல்லாநிற்ப வாசனை பொருந்திய மலர்மாலையினையுடைய இந்திரன் மேலுலகிலுள்ள சுவர்க்க உலக அரசினை மைந்தனான சயந்தனிடஞ் சேர்த்தான்.—எ-று. (௫௩)

விண்ணுலகாளுறும்வேந்தியற்கையை
யண்ணலஞ்சயந்தனுக்கருளியிந்திரன்
றண்ணுறுசசிமுகச்சசியைக்கூடியே
யெண்ணரும்போகமுற்றினிதுவைகினான்.

(இ-ள்.) சுவர்க்கத்தினை ஆளுகின்ற அரசு முறைமையைப் பெருமைவாய்ந்த சயந்தனுக்களித்து நின்ற இந்திரன் குளிர்ச்சிவாய்ந்த முகத்தினையுடைய இந்திராணியைச்சேர்ந்து நினைத்தற்கரிய போகத்தினை அனுபவித்துக்கொண்டு சுகமாக இருந்தனன்.—எ-று. (௫௪)

அலைகடலமிர்தினைவெறுக்குமாயிழை
யிலவிதழமுதமேயினிதென்றுண்டிடுங்
கொலையயிராவதந்துறக்குங்கோல்வளை
முலையயிராவதமுயங்கிமேவுமே.

(இ-ள்.) அலையினையுடைய கடலிற் பிறந்த அமுதத்தினை வெறுப்பான் இந்திராணியின் இலவ வலரிதழ்போன்ற இதழிலூறும் அமுதத்தினை இனிமையான தென உண்பான் கொலைத்தொழிலையுடைய ஐராவதத்தினை வெறுப்பான் அழகிய வளையலணிந்த கையினளான இந்திராணியின் தனங்களாகிய ஐராவதத்தினிற் கலந்து பொருந்துவான்.—எ-று. (௫௫)

வெல்குறும்வலியுடைவிருத்திரன்மிசைச்
செல்குறுந்தெய்வதத்தேரைச்சீறிடு
மொல்குறுநுசுப்பினையுடையமங்கைத
னல்குலந்தேர்மிசையசைந்துவைகுமே.

(இ-ள்.) வெல்லத்தக்க வன்மையினையுடைய விருத்திரன்மீது விடுத்த தெய் வீகம்வாய்ந்த இரதத்தினைக்கோபித்து வெறுப்பான் துவளுகின்ற இடையினளான இந்திராணியின் அல்குலாகிய தேரின்மீது அசைந்திருப்பான்,—எ-று. (ருசு)

கருங்கடல்சூழ்புவிகவிழ்ந்து துன்புற
விரங்கியவிடிக்கொடியிகழ்ந்துகாய்ந்திடும்
பொருங்கணைவிழியுடைப்புலோமசைத்திரு
மருங்குன்மின்கொடியின்மேன் மகிழ்ச்சிகொள்ளுமே.

(இ-ள்.) கரிய கடல்சூழ்ந்த உலகத்தில் விழுந்து துன்பமுண்டாக்க நின்ற இடிக்கொடியை இகழ்ந்து காய்கின்ற போர்புரிகின்ற அம்பனைய கண்களையுடைய இந்திராணி என்பவளின் இடையாகிய மின்னற் கொடிமீது மகிழ்ச்சி கொள்ளு வான்,—எ-று. (ருஎ)

இயற்படுதவமுனியாக்கையென்பினுற்
செயற்படுவச்சிரஞ்செங்கைநீத்திடு
மயிற்பெடையன்னதோர்மடைந்தைகண்ணெனு
மயிற்படைசேர்ந்திடவதனைத்தாங்குமே.

(இ-ள்.) நல்லிலக்கணமமைந்த தவத்தினையுடைய ததீசி முனிவனுடைய என் பினுற் செய்த வச்சிராயுதத்தைச் செவ்விய கையினின்றும் விடுத்து மயிற்பெடைபோ லும் சாயலினளான இந்திராணியின் கண்ணென்னும் வேற்படை யெய்த வதனை யே ந்திநிற்பான்.—எ-று. (ருஅ)

இருணிறவிசும்பினிலிடையறுமலே
வருசிலையிரண்டையுமறக்குமாமலர்த்
திருநிகர்வனப்புடைத்தெய்வமங்கைதன்
புருவவெஞ்சிலைகளேபொருளென்றுன்னுமால்.

(இ-ள்.) இருண்ட நிறமுடையவானத்தில் இடைவிடாது தோன்றுகின்ற இருசிலைகளையும் மறப்பான் சிறந்த தாமரை மலரிலிருக்கும் திருமகளையொத்த அழ கினையுடைய இந்திராணியின் விருப்பத்தைத் தரும் புருவங்களாகிய சிலைகளே பொ ருளாயுள்ளன என்று நினைப்பான்.—எ-று. (ருகூ)

ஏந்தலம்புயலினையிகழுமேந்திழை
கூந்தலம்புயன்மிசையுவகைகூர்ந்திடும்
பூந்தருவல்லியைமுனியும்பூண்முலை
வாய்ந்திடுமுரோமமாம்வல்லிபுல்லுமே.

(இ-ள்.) பெருமைவாய்ந்த மேகத்தினை இகழுவான் இந்திராணியின் கூந்த லாகிய மேகத்தின்மீது மகிழ்ச்சிகொள்ளுவான் அழகிய மலர்களையுடைய கற்பகமரத் தைச் சூழ்ந்த காமவல்லியை இகழுவான் ஆபரணத்தொடு பொருந்திய தனபாரமளவு மெய்திநிற்கும் உரோமவல்லியைப் புல்லுவான்.— எ-று. (சுo)

இத்திறமிந்திரனிந்திராணிபால்
வைத்திடுமுளத்தினன் மறுமைமெய்தினுங்
கைத்திடுகருத்தினன்காமத்தின்பமே
துய்த்தனன்மதனநூற்றுணிபுநாடியே.

(இ-ள்.) இவ்வண்ணம் இந்திரன் இந்திராணியிடத்தில் வைக்கப்பட்ட மனத் தினையுடையவனாய் மறுமைகிடைக்கினும் கசக்குமுள்ளத்தினையுடையவனாய் மதன னூன்முடிபினை யாராய்ந்து காமவின்பத்தினையே அநுபவித்தனன்.—எ-று. (சுக)

வேறு.

அன்னதோர்நாளிலோர்நாளமரர்கோனாணைபோற்றிப்
பொன்னகர்செங்கோலோச்சிப்புரந்திடுசயந்தனென்போன்
றன்னயல்வந்துவைகுந்தாபதரமரர்தம்முண்
முன்னுறுகின்றவாசான்முகனெதிர்நோக்கிச்சொல்வான்.

(இ-ள்.) அத்தகைய நாள்களுள் ஒருதினம் இந்திரனளித்த ஆணையைக்காத்துச் சுவர்க்கத்தைச் செங்கோல்செலுத்தி அரசாளுகின்ற சயந்தனென்பவன் தனதருகில்வந்திருந்த முனிவருள் எதிரிலிருந்த வியாழனுடைய முகத்தினெதிரே பார்த்து உரைக்கின்றான்—எ-று. (கூஉ)

எந்தைகேண்மலரோனாதியியம்பியவமரர்யாரு
மந்தமின்முனிவர்யாருமாற்றல்வெஞ்சூரன்றன்னால்
வெந்துயருழந்துதொல்லைமேன்மையுமிழந்துதாழ
வந்தகாரணமதென்கொலென்றலுமறையோன்சொல்வான்.

(இ-ள்.) எந்தையே கேட்பாயாக பிரமன் முதலியவர்களாக உரைக்கப்பெற்ற தேவரனைவரும் அழிவற்ற முனிவரனைவரும் வன்மையினையுடைய வெவ்விய சூரபன்மனாற் கொடிய துன்ப மநுபவித்துப், பழய மேன்மையையும் இழந்து இழிவுற்று நிற்க வந்த காரணமென்னை சொல்லென்று கேட்டவுடனே அந்தணனான வியாழனுரைக்கின்றான். (கூ௩)

விண்ணவராயினோர்க்குமேதகுமுனிவர்யார்க்கு
மெண்ணமில்சூரன்றன்னாலெய்தியதீமையெல்லா
நண்ணலர்புரமூன்றட்டநாதனையன்றித்தக்கன்
பண்ணியமகத்திற்புக்கபாவத்தால்விளைந்ததென்றான்.

(இ-ள்.) தேவராயுள்ளார்க்கும் உயர்வினையுடைய எல்லா முனிவர்க்கும் மதிப்பற்ற சூரனால் உண்டான தீமையனைத்தும் பகைவரின் முப்புரங்களை அழித்த சிவபெருமானையின்றித்தக்கன்செய்த யாகத்திற்சென்ற பாவத்தாலுண்டாகியதென்று கூறினான்.

என்றலுஞ்சயந்தன்கேளாவீதுகாரணமேலந்தப்
புன்றொழிற்றக்கன்வாழ்க்கைபுரமெரிபடுத்ததேவை
யன்றியேசெய்தவேள்வியாயிடைநிகழ்ச்சியாவு
மொன்றறவுரைத்தல்வேண்டுஞ்சிறியனேனுணர்தற்கென்றான்.

(இ-ள்.) வியாழனிவ்வாறு கூறியவுடனே அதனைக்கேட்ட சயந்தன் இதுகாரணமானால் இந்த இழிதொழிலினையுடைய தக்கன் வாழ்க்கையும் அவன் திரிபுரதகனரான சிவபெருமானை இன்றிச்செய்த யாகமும் அவ்வியாகசாலையில் நடந்த அனைத்தும் சிறியேனறியும் வண்ணம் விடாமலுரைக்க வேண்டுமென்று கூறினான்.—எ-று.

சயந்தனென்றுரைக்கும்வள்ளல்சாற்றியதுணராவாற்ற
வயந்தனையெய்திவாழிமதலைகேளிதனையென்னா
வியந்திடுமகந்தைதன்னான்மிக்குறுதக்கன்காதை
நயந்தருமொழியாலாசானித்திறநவிலலுற்றான்.

(இ-ள்.) சயந்தனென்று கூறப்படும் கொடையாளனால் உரைக்கப்பட்டதைக் கேட்டுக் குழந்தாய் நீ மிகவும் வெற்றியையடைந்து வாழக்கடவை இதனைக்கேளென்று வியக்கப்பட்ட அகங்காரத்தால் மிகுந்த தக்கனுடைய சரிதத்தினை நயந்தருஞ் சொல்லினால் தேவகுரவன் இவ்வாறுரைப்பானாயினன்.—எ-று. (கூசு)

இந்த்ரபுரிப்படல முற்றிற்று.

---

ஆகத் திருவிருத்தம் சஉக.
தேவகாண்டமுற்றிற்று.
ஆககாண்டம் ஐந்துக்குத் திருவிருத்தம் அஉஎகூ.
கச்சியப்ப சிவாசாரியார் திருவடி வாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிவசண்முகன் துணை.

ஆறாவது

# தக்ஷகாண்டம்.

## உபதேசப்படலம்.

மாயையின் வலியோனாகிமான்முதலோரைவென்றே
யாயிரத்தோரெட்டண்டமரசுசெய்துகநூற்றெட்டுக்
காயமதழிவின்றாகிக்கடவுளர்க்கலக்கண்செய்த
தீயசூர்முதலைச்செற்றகுமரன்றாள்சென்னிவைப்பாம்.

(இ-ள்.) மாயை செய்வதின் வன்மையாளனாய்த் திருமான் முதலியவர்களை வென்று ஆயிரத்தெட்டண்டங்களை அரசுசெலுத்தி நூற்றெட்டு யுகம் உடலழிவின்றி இருந்து தேவர்கட்குத் துன்பஞ்செய்த கொடிய சூரனை தலைவனைச் சங்கரித்த குமரக்கடவுளின் திருவடிகளைத் தலைமேற் கொள்ளுவாம்.—எ-று. (க)

உலகினும்மேலதாகியோங்குபேரொளியாய்வான்மேற்
றலைமையதாகிவைகுஞ்சத்தியவுலகந்தன்னிற்
புலனுணர்முனிவர்தேவர்புதல்வர்கள்புடையிற்போற்ற
மலரயன்றனதுகோயின்மன்றில்வீற்றிருந்தானன்றே.

(இ-ள்.) உலகங்களுள் மேற்பட்டதாய் உயர்ந்த பேரொளியுடையதாய் ஆகாயவுலகின் முதன்மையானதாய் இருக்குஞ் சத்திய உலகத்தில் ஐம்புலங்களை யுணர்ந்த முனிவர் தேவர்கள் உபப்பிரமர்கள் முதலியோர் அருகிற் சூழ்ந்து துதிக்கக் கமலாசனனை பிரமன் தனது ஆஸ்தான மண்டபத்தில் வீற்றிருந்தான்.—எ-று. (உ)

இருந்திடுகாலைவேதாயாவையுமளிப்பமேனாட்
டெரிந்தருள்பதின்மராகுஞ்சீர்கெழுகுமரர்தம்முட்
பொருந்தியதக்கனென்னும்புந்தியின்மேலோன்முன்செய்
யருந்தவநெறியாலீதொன்றையனைவினவலுற்றான்.

(இ-ள்.) அயனவ்வாறிருந்த காலத்து அனைத்தும் படைப்பான் தான் முன்னருண்டாக்கிய பதின்மரான சிறப்புவாய்ந்த புதல்வருட் பொருந்திய தக்கனென்னும் அறிவிற்சிறந்தவன் முன்னர்ச்செய்த அரிய தவவழியா லின்னதொன்றைத் தனது தந்தையை வினவினன்.—எ-று. (ந)

தேவரின்முதல்வராகிச்சிற்குணத்தலைவராகி
மூவரினுயர்ந்தோராகிமுடிவிலாவொருவராகி
யோவறவுயிர்கடோறுமுயிரெனவுறைவோராகி
மேவினர்தம்மைத்தேறவிளம்புதிமேலோயென்றான்.

(இ-ள்.) தேவருந் தலைமையாளராய் ஞானகுணத்தின் முதன்மையாளராய் திருமூர்த்திகளினின்றும் மேற்பட்டவராய் அழியாத ஒருவராய்க் கெடாமல் உயிர்கள் தோறும் உயிரென இருப்பவராய் இருப்பாரை யானுணருமாறு மேலோய் உரைப்பாயாக என்றான்.—எ-று. (ச)

என்றுதன்மைந்தனிவ்வாறியம்பலுமலரோன்கேளா
நன்றிதுபொழிவன்கேட்டிநாரணன்றானும்யானு
மன்றமரியற்றுமெல்லையழலெனவெழுந்துவானிற்
சென்றதோர்சிவனேயார்க்குமேலவன்றெளிநீயென்றான்.

(இ-ள்.) இவ்வாறு தன் புதல்வனான தக்கன் வினவியதனைப் பிரமன்கேட்டு நல்லது இதனை உரைக்கின்றேன் கேட்பாயாக நாரணனும் யானும் அன்று போர்புரிந்தகாலத்துத்தீயாகவெழுந்துவானத்திற்சென்ற சிவபெருமானே யாவர்க்கும் உயர்ந்தவன் நீ யுணரக்கடவை யென்று கூறினான்.—எ-று (ரு)

தருசெயல்வல்லோனீதுசாற்றலுஞ்செயலோர்மூன்றி
னிருசெயல்புரியுநீவிரேதிலராகப்பின்ன
ரொருசெயல்புரியுமீசனுங்களுக்கிறைவனாகி
வருசெயலென்னேசிந்தைமயக்கறவுரைத்தியென்றான்.

(இ-ள்.) சிருட்டித்தொழிலில் வல்லவனாகிய பிரமன் இதனை உரைத்தலும் மூவகைத்தொழிலில் இருதொழில் புரியு நீங்கள் தலைமையற்ற வேற்றோராக ஒருதொழில்செய்யும் ஈசன் உங்களுக்குத் தலைவனாகிவந்த காரணமென்னை மனமயக்கம் ஒழியுமாறு கூறுதல்வேண்டும் என்று வினவினான்.—எ-று. (சு)

தற்புகழ்கருத்தின்மிக்கதக்கனீதுரைத்தலோடுஞ்
சிற்பரனிலைமையன்னானருளினாற்றெரிந்தவேதாச்
சொற்படுமறைகண்முன்னீதுகளறக்கற்றுத்தூய
நற்பொருடெரிந்தவாறுநன்றுநன்றென்னநக்கான்.

(இ-ள்.) தன்னைப்புகழுங் கருத்திலுயர்ந்த தக்கனிதனை உரைத்தவுடனே சிவபெருமானது தன்மைகளை அப்பரமன் கருணையாலுணர்ந்த பிரமன் தக்கனைப்பார்த்துச் சத்த வுருவமான வேதங்களை முன்னர் நீ குற்றமறக்கற்று அவையிலுள்ள தூய்மையான நற்பொருளையாராய்ந்த தன்மைநன்று நன்றெனக்கூறிச் சிரித்தனன்.-எ-று.

பின்னுறமுடிப்பான்றன்னைப்பிரானெனத்தேற்றுந்தன்மை
யென்னெனவுரைத்திமைந்தவெங்களைச்சுரரையேனைத்
துன்னியவுயிர்கடம்மைத்தொலைவுசெய்திடுவனீற்றி
லன்னவனென்னின்முன்னமளித்தவனவனேயன்றோ.

(இ-ள்.) பின்னர் அனைத்தையும் அழிப்பவனைத் தலைமைத் தேவனென உணர்த்துமாறு எவ்வாறு எனக்கூறினை மகனே எங்களையும் தேவர்களையும் மற்றும் பிறநெருங்கிய உயிர்களையும் முடிவிலழிப்பான் அவனே யானால் முதலி லனைவரையும் படைத்தவனவனன்றோ?—எ-று. (அ)

அந்தநாளொருவனாகியாருயிர்த்தொகையைத்தொன்னாள்
வந்தவாறொடுங்கச்செய்துமன்னியேமீட்டுமன்னை
தந்தையாயுயிர்கட்கேற்றதனுமுதலளிக்குமுக்க
ணெந்தைதன்செய்கைமுற்றுமினையதென்றிசைக்கற்பாற்றோ.

(இ-ள்) அந்தக்காலத்தி லேகனாய் அரிய உயிர்த்தொகையை முன்னர் வந்த வழியே ஒடுங்கச்செய்து நிலைபெற்றுப் பின்னரும் மாதாபிதாக்களாய் உயிர்கட்கேற்ற

உடன் முதலிய அளிக்கும் முக்கண்ணரான எம்பெருமானுடைய செயலனைத்தும் இத்தகையதென உரைக்க முடியுமோ.—எ-று. (கூ)

செங்கண்மாறன்னையென்னைத்திண்டிறன்மொய்ம்பினல்கி
யங்கண்மாஞாலங்காப்புமளிப்பதுமுதவியாமு
முங்கள்பாலிருத்துமென்றெம்முயிருணின்றியற்றுநின்று
னெங்களான்முடியுஞ்செய்கையாவதுமில்லைகண்டாய்.

(இ-ள்.) செங்கண்களையுடைய திருமாலையும் என்னையும் திண்ணிய வன்மை வாய்ந்த புயங்களா லளித்து அழகிய இடமகன்ற உலகினை இரட்சித்தலும் படைத்தலும் அளித்து நாமும் உங்கள் பக்கத்தில் இருப்போமென எமதுயிரின்கண் நின்று சிருட்டியாதிய செய்கின்றான்; அவனையன்றி எங்களால் முடியுஞ் செயல் யாதொன்றுமில்லை.—எ-று. கண்டாய் முன்னிலை அசை. (கo)

உயிருணின்றியற்றலன்றியுற்றநஞ்சிந்தையுள்ளு
மியன்முறைவழாதுகாப்போனிருவிழியகத்துமானுன்
மயலுறுபொழுதுமெம்பால்வந்தருள்செய்வன்றூனோர்
செல்புரிகின்றான்போலவெம்மொடுசெறிவனன்றே.

(இ-ள்.) எமதுயிருணின்று சிருட்டியாதிய செய்தலையன்றியும் பொருந்திய நமது சிந்தையினுள்ளும் இயல்பான முறைப்படி யிருந்து தவறாது காப்பவன். இருவிழியுள்ளுமாயினுன் மயக்கமுறுங்காலத்தும் எம்மிடத்தில் வந்தருள்புரிவன். தான் சங்காரமாகிய ஒருதொழிலைச் செய்வானையொப்ப எம்மொடு பொருந்துவன்.—எ-று.(கக)

எள்ளுறுமெண்ணெயென்னவெறிமணியரவமென்னக்
கள்ளுறுபோதுகான்றகடியெனச்சலாகைதன்னிற்
றள்ளுறவரியசோதிதானெனவுலகமெங்கு
முள்ளொடுபுறமுமாகியொருமையாற்பரவுமன்றே.

(இ-ள்.) எண்ணிற்பொருந்திய நெய்யைப்போலவும் ஒளிவிடுகின்ற மணியும் அரவமும்போலவும் தேன்பொருந்திய வலர்வீசிய நறுமணம்போலவும் சலாகையில் நீங்கமுடியாதிருக்கும் அரிய சோதியைப்போலவும் உலகத்திலெங்கும் உள்ளும் புறம்புமாகி ஒன்றாகி வியாபித்து நிற்பன்.—எ-று. (கஉ)

வேதமேமுதலாவுள்ளவியன்கலையனைத்துந்தொன்னு
ளோதினுனவனேயெங்கட்குரைத்திடவுணர்ந்தாமன்றே
யீதுநீயவற்றிற்காண்டியாருமொன்றாகக்கொண்டாய்
பேதையோபெரிதுமென்னபிதாமகனினையசொற்றான்.

(இ-ள்.) வேத முதலிய பெரியகலைகளனைத்தையும் முன்னாளில் உரைத்தவனவனே அவன் எங்களுக்குரைக்க நாங்களுணர்ந்தோம் இதனை நீ அவ்வேதங்களுட் காணக்கடவை அனைவரையு மொன்றாகக்கருதுகின்றனை நீ மிகவும் பேதையே என்று பிரமன் இவ்வாறு கூறினான்—எ-று. (கங)

அவனிதுபுகறலோடுமருண்மகனிசைப்பான்மேலாஞ்
சிவனருள்வேதம்பூதத்திறத்தையுமுயிர்களோடு
மெவரையும்பிரமமென்றேயிசைப்பதென்னெனதுநெஞ்சங்
கவலுறுகின்றதெந்தைகழறுதிகடிதினென்றான்.

(இ-ள்.) அப்பிரமனிவ்வாறு கூறியவுடனே அவன்பெற்ற மைந்தனான தக்கனிவ்வாறு கூறுகின்றான். சிவனுரைத்த வேதமானது பூதங்களையும் இவர்களுடன் எவரையும் பிரமமென்றே உரைப்பதென்னை எனது மனங்கவற்சியுறுகின்றது எந்தையே விரைவாகப் பதிலுரைப்பாயாக என்று கூறினான்.—எ-று. (கச)

என்னனுங்கமலத்தண்ணிலியாவருந்தெரிதறேற்று
வுன்னரும்பெற்றியீதென்றுணர்தரக்கேட்டியன்னுன்
சொன்னதோர்மறைகடம்மிற்றுணிபுகேளிறுதியில்லா
முன்னவற்காதனுண்மையொழிந்தனமுகமனுமால்.

(இ-ள்,) என்று கூறியவுடனே கமலாசனனான பிரமன் எவரானும் உணர்தற்கு முடியாத நினைத்தற்கரியதன்மை இதுவென்றறியக்கேட்பாயாக அச்சிவபெருமானுரைத்த வேதங்களுட்கூறும் உறுதிமொழியைக்கேள் நாசமற்ற சிவபெருமானைக்குறித்துரைப்பதனைத்தும் உண்மை மற்றையவை அனைத்தும் உபசார மொழியென்றுணர்க.—எ-று. (கடு)

ஆதலாலீசனல்லாவனைவர்க்குமுயிர்க்குமைந்தாம்
பூதமானவைக்குமேற்றம்புகலுதன்முகமனாகு
மோதலாமேலதாகவொருபொருள்புகழவேண்டின்
வேதபாரகரையன்றோயானெனவிளம்புகின்றார்.

(இ-ள்.) ஆதலாற் சிவபெருமானை யன்றியுள்ள அனைவர்க்கும் சீவர்கட்கும் ஐந்தாகிய பூதங்களுக்கும் தலைமை கூறுதல் உபசாரமேயாம். ஒரு பொருளைப்புகழவேண்டுமானால் மேலானதாக அப்பொருளைக் கூறலாம் வேதமுணர்ந்த பார்ப்பாரையன்றோ யானென்று கூறுகின்றனர்.—எ-று. (கசு)

யாதொருபொருளையாவரிறைஞ்சினுமதுபோய்முக்க
ணாதியையடையுமம்மாவங்கதுபோலத்தொல்லை
வேதமதுரைக்கநின்றவியன்புகழனைத்துமேலா
நாதனையணுகுமெல்லாநதிகளுங்கடல்சென்றென்ன.

(இ-ள்.) எந்தப்பொருளை எவன் வணங்கினாலும் அவ்வணக்கஞ்சென்று மூன்றுகண்களையுடைய சிவபெருமானை அடையும் அதுபோல பழையவேதமுரைக்க நின்ற பெரிய புகழனைத்தும் அனைத்து நதிகளுங் கடலையடைந்தா லொப்ப முதல்வனான சிவபெருமானை யடையும்.—எ-று. (கஎ)

கேளினிமைந்தவேதக்கிளையெலாமியம்புகின்ற
சூளுரைசிவனேயெல்லாந்தோற்றுவித்தளித்துமாற்றி
மீளவுந்தருகின்றானும்விய னுயிர்க்கருளைநல்கி
யாளுநாயகனுமாதியந்தமிலோனுமென்னும்.

(இ-ள்.) மகனே கேட்பாயாக வேத சாகைகளனைத்தும் உரைக்கின்ற ஆணைமொழி சிவபெருமானே அனைத்தினையும் படைத்து அளித்து அழித்துப் பின்னரும் படைப்பானும் பெரிய உயிருக் கருளையளித்து ஆட்கொள்ளுமுதல்வனும் ஆதியந்தமற்றவனும் என்று கூறும்.—எ-று. (கஅ)

அத்தனும்பகவன்றானுமருவமுமுருவுமாகுஞ்
சுத்தனுமுணர்தற்கொண்ணுச்சோதியுமியாண்டுமேவுஞ்
சித்தனுமநாதிதானுந்தேவர்கடேவுமென்று
நித்தனுமுயிர்க்குணீங்காநிருத்தனுமவனேயென்னும்.

(இ-ள்,) அத்தனும் பகவனும் அருவமும் உருவமும் ஆகும் சுத்தனும் அறிதற்கரிய சோதியும் எங்கும் பொருந்திய சித்துருவானானும் அநாதியும் தேவ தேவனும் என்று நித்தனும் உயிருக்குள்நீங்காதிருக்கும் நிருத்தனும் அச்சிவபெருமானே என்று கூறும்.—எ-று. (கக)

மூன்றெனுமுலகந்தன்னின் முளைத்திடுபொருளையெல்லா
மீன்றருள் புரியுந்தாதையெனுந்திரயம்பகனும்யார்க்குஞ்
சான்றெனநிற்கின்றோனுந்தாணுவும்பரனுந்தன்னைப்
போன்றவருயர்ந்தோரில்லாப்புங்கவன்றானுமென்னும்.

(இ-ள்.) மூன்றெனக் கூறும் உலகத்துள் உண்டாகும் பொருளனைத்தையும் படைத்தளிக்குந் தந்தையான திரயம்பகனும் எல்லார்க்குஞ் சாட்சியாய் நிற்பானும் தாணுவும் பரனும் தன்னை யொத்தாரும் தன்னிலுயர்ந்தாருமில்லாத தேவனும் சிவபெருமானே என்று கூறும்.—எ-று. (உ0)

அண்ணலுமேகன்றானுமளப்பருங்குணத்தினானுங்
கண்ணனுமயனுந்தம்மாற்காணியநில்லான்றானும்
பெண்ணொடாணலியதென்னும்பெற்றியிலோனும்யாரு
மெண்ணியவெண்ணியாங்கேயீபவன்றானுமென்னும்.

(இ-ள்.) அண்ணலும் ஏகனும் அளத்தற்கரிய குணமுடையவனும் கண்ணனும் அயனுந் தம்மாற் காணுமாறு நில்லாதவனும் பெண் ஆண் அலி என்னும் தன்மையிலாதவனும் எவரும் நினைத்தவைகளை நினைத்தவண்ணமே அளிப்பவனும் சிவபெருமானே என்று கூறும்.—எ-று. (உக)

விதிமுதலுரைக்கநின்றவியனுயிர்த்தொகைகட்கெல்லாம்
பதியெனவருளுந்தொன்மைப்பசுபதிதானுமன்னோர்க்
கதிகனென்றெவருந்தேறவாங்கவர்துஞ்சவெந்த
பொதிதருபலியுமென்பும்புனைந்தவன்றானுமென்னும்.

(இ-ள்.) பிரமனை முதலாகக்கொண்டு கூறநின்ற பெரிய உயிர்க்கூட்டமனைத்துக்கும் பதியென அருளுகின்ற பழைய பசுபதியும் அப்பிரமன் முதலியருக்கு உயர்ந்தோ னென்றே வருந்தேறுமாறு அப்பிரமாதியர் இறக்க அவர்களின் உடலைச்சுட்ட சாம்பலும் எலும்பும் தரிப்பவனும் சிவபெருமானே என்று கூறும்.—எ-று. (உஉ)

ஊன்புகுமெவரையுந்தன்னொண்குணத்தொடுக்கித்தானே
வான்புகலாகிநின்றுமற்றவர்குணங்களூடு
தான்புகலில்லாதோனுந்தன்னியலினையதென்றே
யான்புகலரியதேவுமீசனுமவனேயென்னும்.

(இ-ள்.) ஊனுலாகிய உடலிற்புகுந்தாரெவரையும் தனது ஒள்ளிய குணத்தினுல் ஒடுக்கித் தானே சிறந்த அடைக்கலமாக நின்று பிறரின்குணங்களோடு கலவாதிருப்பவனும் தனது தன்மை இன்னதென என்னாலுரைக்கப்படாத தெய்வமும் ஈசனும் அச்சிவபெருமானே என்று கூறும்.—எ-று. (உ௩)

அன்றியுமொன்றுகேண்மோவம்புயனாதியாகி
நின்றவர்தம்மையெல்லாநீக்கியச்சிவனென்றுள்ள
வொன்றொருமுதல்வன்றானேயுய்த்திடுமுத்திவேண்டி
னென்றுமஃதியம்பிற்றென்னின்யாவரோதேவராவார்.

(இ-ள்.) அல்லாமலும் ஒன்றுகேள் பிரமன் முதலாகி நின்றாரனைவரையும் நீக்கி அச்சிவனென நின்ற ஏகமுதல்வனே மோட்சம் விரும்பினல் அளிப்பானென்றும் அவ்வேதங் கூறிற்றானல் மற்றெவரோ தலைமைத் தேவராவார்.—எ-று. (உச)

பரசிவனுணர்ச்சியின்றிப்பல்லுயிர்த்தொகையுமென்றும்
விரவியதுயர்க்கிறெய்திவீடுபேறடைதுமென்ற
லுருவமில்விசும்பிற்றோலையுரித்துடுப்பதற்கொப்பென்றே
பெருமறையியம்பிற்றென்னிற்பின்னுமோர்சான்றுமுண்டோ.

(இ-ள்.) பரம்பொருள் சிவபெருமானே என்னும் உணர்ச்சி இல்லாமற் பலவகை உயிர்வர்க்கங்களும் எந்நாளும் பொருந்திய துன்பத்தின்முடிவை யடைந்து வீடுபேற்றை அடைவோமென்று கூறுதல் உருவமற்ற ஆகாயத்தின் றோலுரித்துடுப்பதற்கொப்பெனப்பெரியவேதம் உரைத்ததானுல் வேறே யொருசாட்சியும் உளதோ.—எ-று.

இன்னமும்பலவுண்டன்றேற்கியம்பியமறையின்வாய்மை
யன்னதையெனக்குமுன்னியவறையொணுதறைவனென்னிற்
பன்னெடுங்காலந்தேயும்பகரினுமுலவாதென்பான்
முன்னமீதுணர்ந்தாயேனுமோகமுற்றுய்கொலையா.

(இ-ள்) இவையன்றியும் பலவுள அச்சிவபரஞ்சுடரைச் சுட்டிக்கூறும் உண்மை வசனங்கள் அவைகளை என்னுலும் நினைத்துரைக்கமுடியாது கூறுவேனுனல் பலநெடுங்காலஞ்செல்லும் சொன்னுலும் முடியாது என்னிடத்தின் முன்னரே இச்சிவஞானத்தினை உணர்ந்திருந்தும் ஐயனே மயக்கங்கொண்டனையோ?—எ-று. (உசு)

காரெழில்புரையுமேனிக்கண்ணனையென்னைப்பின்னை
யாரையும்புகழும்வேதமரன்றனைத்துதித்ததேபோ
லோருரைவிளம்பிற்றுண்டோவுரைத்ததுமுகமனென்றே
பேருலகறியமுன்னும்பின்னரும்விலக்கிற்றன்றே.

(இ-ள்.) மேகவண்ணனை திருமாலையும் என்னையும் மற்றுள்ள பிறரெவரையும் புகழும் வேதம் சிவபெருமானைத் துதித்ததுபோல ஒருவசனம் உரைத்ததுண்டோ பிறரைச் சுட்டிக்கூறிய வனைத்தும் உபசாரமென முன்னரும் பின்னரும் விலக்கியது.

நான்மறைதனிலோர்பாகநாரமார்கடவுட்சென்னி
மேன்மையியம்புமெம்மைவிண்ணவர்தம்மையேனைப்
பான்மைகொள்பூதந்தன்னைப்பலபொருடனையும்பாதி
தான்மொழிந்திடுமாலீதுதவறலவுணர்திதக்கோய்.

(இ-ள்.) நான்கு வேதங்களுள் ஒருபகுதி கங்காதரரான சிவபெருமானுடைய பரத்துவநிலையைக்கூறும் எம்மையும் பிறதேவர்களையும் மற்றைய முறைமைவாய்ந்த பூதங்களையும் அன்றியுள்ள பலபொருள்களையும் பாதிவேத முறையாநிற்கும் இது தவறன்று தக்கோய் நீயே வேதத்து ஞற்றுப்பார்.—எ-று. (உஅ)

நம்மையும்பரமென்றுன்னிநாதனிற்சிறப்புச்செய்யும்
வெம்மைகொணெஞ்சர்தீராவிழுமவெந்நிரயம்வீழ்வர்
தம்மையஃதெடுத்தல்செய்யாசமமெனப்புகல்கிற்போர்க
ளெம்மையுந்துயரமென்னுமிருங்கடற்படுப்பரன்றே.

(இ-ள்.) நம்மையும் பரமென்று நினைத்துத் தலைவனைப்போலச் சிறப்புச்செய்கின்ற கொடுமைவாய்ந்த மனதினையுடையார் நீங்காத துன்பந்தருகின்ற வெவ்விய நரகத்தில் விழுவார்கள் அங்ஙனம் விழுந்தவர்களை அந்நரகம் கரையேற்றவே யேற்றுது எம்மையவனேடு சமமென்று கூறுவோர் எம்மையும் துன்பமென்னும் பெரிய கடலுக்குள் தள்ளுவோராவார்.—எ-று. (உகூ)

கானுறுபுலித்தோலாடைக்கண்ணுதற்கடவுட்கன்ப
ரானவரென்றுமன்னுற்கடித்தொழில்புரிந்துவாழும்
வானவரென்றுமெம்மைவழுத்தினர்க்கருள்வோமல்லா
வேனையர்தம்மைத்தெவ்வென்றெண்ணியேயிருத்தும்யாமே.

(இ-ள்.) வனத்தில் வாழும் புலியின் றோலையாடையாக வுடைய நெற்றிக்கண்ணுளரான சிவபெருமானுக் கன்பராயுள்ளாரெனவும் அச்சிவபரஞ்சுடர்க்கு அடித்

தொண்டுசெய்து வாழுந்தேவர்களெனவும் எம்மைத் துதித்தார்க்கு யாம் அருள்செய்வோமன்றி வேறாக நினைக்கும் பிறரை நாங்கள் எங்கள் பகைவரென்றே கருதி இருக்கின்றேம்.—எ-று. (௩0)

பதியரன்பாசந்தன்னிற்பட்டுழல்பசுநாமென்றே
விதியொடுமறைகள்கூறுமெய்மையைத்தெளியவேண்டி
னிதுவெனவுரைப்பன்யாங்களிவ்வரசியற்றவீச
னதிர்கழலருச்சித்தேத்துமாலயம்பலவுங்காண்டி.

(இ-ள்.) பதி சிவபெருமானே பாசத்திற் பட்டுழலுகின்ற பசுநாமென்று விதியுடன் வேதங்கள்கூறும் உண்மையைத்தெளிந்துகொள்ளவேண்டுமானல் இதுவென்று கூறுவேன் நாங்கள் இந்த அரசினைச் செலுத்துதற்குச் சிவபெருமானுடைய முழங்குகின்ற வீரகண்டையணிந்த திருவடிகளை யருச்சித்துத் துதித்த ஆலயங்களைக்காண்பாயாக.—எ-று. (௩௧)

அவனருள்பெறாதுமுத்தியடைந்தனரில்லையல்லா
லவனருளின்றிவாழுமமரரும்யாருமில்லை
யவனருளெய்தினெய்தாவரும்பொருளில்லையாணை
யவனலதிறைவனில்லையவனைநீயடைதியென்றான்.

(இ-ள்.) அச்சிவபெருமானுடைய அருளைப்பெறாமல் மோட்சமடைந்தவர்களே இல்லை. அன்றியும் அச்சிவபெருமானுடைய அருளின்றி வாழுகின்ற தேவரும் எவரும் இல்லை. அவனருள் கிடைத்தாற் கிடைக்காத அரியபொருளே இல்லை. ஆணையிட்டுரைக்கின்றேன் அவனையே நீ அடைவாயாக அவனினும் உயர்ந்த தலைவன் இல்லை என்று கூறினான்.—எ-று. (௩௨)

உபதேசப்படலம் முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தக்கன்றவஞ்செய்படலம்.

தந்தையிவ்வகையுரைத்தலுங்கேட்டுணர்தக்கன்
முந்துவீடுசேர்நெறியினைமுன்னலன்முக்க
ணெந்தையாலபன்முதலவர்தம்மினும்யானேற்
றந்தமில்வளம்பெறுவனென்றுன்னினனகத்துள்.

(இ-ள்.) பிதாவான பிரமன் இவ்வாறு கூறியவுடனே அவைகளைக்கேட்டுணர்ந்த தக்கன் முதன்மையான வீட்டினை யடையும் மார்க்கத்தினை நினைத்தானலன். மூன்றுகண்களையுடைய எம்பெருமானாற் பிரமன் முதலியவர்களினும் யான் தவஞ்செய்து அளவற்ற வரத்தினை அடைகின்றேனென்று தன் மனதுள் நினைந்தான்.-எ-று.

ஏதவல்வினையுழந்திடுமேழினுலிதனைக்
காதலோடுனித்தந்தையைவணங்கிநீகழறு
மாதிதன்னையான்பரமெனவறிந்தனனவன்பான்
மாதவத்தினாற்பெற்றிடவேண்டினன்வளனே.

(இ-ள்.) துன்பத்தினைத் தருந்தீவினையால் உண்டான தீயூழினால் இதனை விருப்பத்தோடு நினைத்துப் பிதாவை வணங்கி நீ உரைக்கின்ற ஆதிமுதல்வனான சிவபெருமானை நான் பரம் என்றறிந்து கொண்டேன் அவனிடத்தில் வரங்களைச் சிறந்த தவத்தாற் பெற விரும்பினேன்.—எ-று. (உ)

கணிப்பின்மாதவம்புரிதரவோரிடங்கடிதிற்
பணித்துநல்குதிவிடையெனநான்முகப்பகவ
னிணைப்பிலாததன்மனத்திடைத்தொல்லைநாளெழுந்த
மணிப்பெருந்தடத்தேகெனவிடுத்தனன்மன்னோ.

(இ-ள்.) அளவற்ற சிறந்த தவத்தினைச் செய்தற்கு ஒரு விடத்தினைவிரைவிற் குறித்து விடையளிப்பாயாக எனக்கேட்டவுடனே சதுர்முகப்பிரமன் இணையற்ற தனது மனதில் முன்னாளிலுண்டான மானசசரோவரமான அழகிய தடத்துக்குச் செல் என்று விடைகொடுத்தனுப்பினான்.—எ-று. (ந)

ஈசனல்லருளன்னதோர்மானதமென்னும்
வாசநீர்த்தடம்போகியோர்சாரிடைவைகி
வீசுகான்மழையாதபம்பனிபடமெலியாப்
பாசநீக்குநராமெனவருந்தவம்பயின்றான்.

(இ-ள்.) ஈசனுடைய நல்ல வருளினைய ஒப்பற்ற மானசமென்னும் பெயரினையுடைய வாசனைபொருந்திய தடத்துக்குச்சென்று அதன் ஒரு புறத்திலிருந்து வீசுகின்ற காற்று, மழை, வெயில், பனி முதலிய தன்மீது படமெலிந்து பாசமொழிப்பாரையொப்ப அரிய தவத்தினைச் செய்தான்.—எ-று. (ச)

காலைநேர்பெறவோட்டியேகனலினைமூட்டிப்
பாலமார்பயன்வீட்டியேதன்னுறுபடிவத்
தேனுமன்பினின்மஞ்சனமாட்டியேயிறைக்குச்
சீலமாமலர்சூட்டியுட்பூசனைசெய்தான்.

(இ-ள்.) பிராணவாயுவை நேராக ஓட்டி மூலாக்கினியையெழுப்பி உலகபோகங்களை வெறுத்துத் தன்னுருவிற் பொருந்துமாறு அன்புடன் அபிடேகஞ்செய்து சிவபெருமானுக்கு ஆசாரம் பொருந்திய அலர்சூட்டி மானத பூசனை செய்தனன்.—எ-று. (ரு)

சுத்தநீடியதன்னுளமொருமையிற்றொடர
வித்திறத்தினுலெம்பிராற்கருச்சனையியற்றிச்
சித்தமேலவனுமமும்விதிமுறைசெப்பிப்
பத்துநூறியாண்டருந்தவம்புரிந்தனன்பழையோன்.

(இ-ள்.) புராதனனான தக்கன் தூய்மையின் மிக்க தன்னுள்ளம் ஒருமையிற் றொடராநிற்ப இம்முறையாக எம்பெருமானுக் கருச்சனைசெய்து உள்ளத்தின்மீது அவன் பெயரையும் விதிப்படியுரைத்து ஆயிரம்வருடம் அரிய தவத்தினைச் செய்தனன்.

அன்னமூர்திசேயன்னமாதவஞ்செயுமதனை
முன்னிநல்வளனுதவுவான்மூரிவெள்ளேற்றிற்
பொன்னின்மால்வரைவெள்ளியங்கிரிமிசைப்போந்தா
லென்னவந்தனனுமையுடனெம்மையாளிறைவன்.

(இ-ள்.) பிரமன் மகனான தக்கன் அவ்வாறு தவஞ்செய்யும் அதனை நினைத்து நல்ல வளப்பத்தினைக் கொடுப்பான் பெரிய வெள்ளிய இடபத்திற் பொன்னாலாகிய பெரியமலை வெள்ளி மலைமீது வந்தாற்போல உமாதேவியாருடன் எம்மையாளிறைவரான சிவபெருமான் எழுந்தருளினார்—எ-று. (எ)

வந்தசெய்கையைத்தெரிதலும்விரைந்தேழீஇமற்றென்
சிந்தையெண்ணமுமுடிந்தனவாலெனச்செப்பி
யுந்துகாதலுங்களிப்புமுள்புக்குநின்றுலவ
வெந்தைதன்னடிபரவுவல்யானெனவெதிர்ந்தான்.

(இ-ள்.) சிவபெருமான் எழுந்தருளிய தன்மையை உணர்ந்தவுடனே விரைவாக வெழுந்து எனது சிந்தையிலிருந்த எண்ணமும் நிறைவேறியதெனக் கூறிக்கொண்டே உயர்ந்த ஆசையும் களிப்பும் உள்ளேநின்றுலவ எந்தையின் அடிமலர்களைத் துதிப்பேனென எதிரே வந்தான்.—எ-று. (அ)

சென்றுகண்ணுதலடிமுறைவணங்கியேசிறப்பித்
தொன்றுபோலியவாயிரந்துதிமுறையுரையா
நின்றகாலையிலுன்செயன்மகிழ்ந்தனநினக்கென்
னின்றுவேண்டியதியம்புதியாற்கடிதெனலும்.

(இ-ள்.) எதிரேசென்று நெற்றிக்கண்ணுளரான சிவபெருமானுடைய திருவடிகளை முறையாகவணங்கிப் புகழ்ந்து சமானமாகவுள்ள ஆயிரந்தோத்திரங்களை யுரைத்து நின்ற சமயத்திற் சிவபெருமான் தக்கனே நின்செயலுக்கு மகிழ்ந்தனம் உனக்கிப்பொழுது வேண்டியவைகளை விரைவாக உரைசெய்வாயாக என்று திருவாய்மலர்ந்தருளுதலும்.—எ-று. (கூ)

ஆற்றுதற்கருநோன்மையனுகியோனமலன்
பேற்றின்வேண்டுவகொள்கெனவிசைத்தலும்பிறவி
மாற்றுமுத்தியிரந்திலன்றொல்விதிவழியே
யேற்றபுந்தியுஞ்சேறலின்மயங்கியீதிசைப்பான்.

(இ-ள்.) சிவபெருமான் நீ பெற்றுக்கொள்ளவேண்டியவைகளைக் கேளென்று கட்டளை யிடுதலும் செய்தற்கரிய தவத்தினையுடைய அத்தக்கன் பிறவியை யொழிக்கும் முத்தியை இரந்தானில்லை. முன்னைய விதிவழியே பொருந்திய புந்தியும் அவ்வாறு நிற்றலின் இவ்வாறு கூறுகின்றான்.—எ-று. (கo)

வேறு.

நீணிலப்பெருவைப்புநிகரிலா
வீணைவல்லவரேனையர்மேவிய
சேணுமாலயனூருந்திசையுமென்
ஞணைசெல்லவளித்தருள்செய்தியால்.

(இ-ள்.) அகன்ற பூமியினிடமும் ஒப்பற்ற வீணை வல்லவர்களான காந்தருவர் முதலியர் பொருந்திய மேலுலகமும் அரியயர்களினுலகங்களும் அட்டதிசைகளிலும் எனதாணை செல்லுமாறளித் தருள்செய்வாயாக.—எ-று. (கக)

உன்னைவந்துவழுத்துமுயிரெலா
மென்னைவந்துவழுத்தவும்யானினி
நின்னையன்றிநெஞ்சாலும்பிறர்தமைப்
பின்னைவந்தியாப்பெற்றியுமீதியால்.

(இ-ள்.) உன்னை வந்து வணங்கும் உயிரனைத்தும் என்னையடைந்து துதிக்கவும் யான் பின்னர் நின்னையன்றி மனதினாலும் பிறரை வணங்காத தன்மையும் அளிப்பாயாக.—எ-று. (கஉ)

ஆயதேவரவுணர்கள்யாரும்யா
னேயசெய்கையியற்றவுமெற்குநற்
சேயினோர்களுஞ்சிற்றிடைமாதரு
மாய்வில்கொள்கையின்மல்கவுநல்குதி.

(இ-ள்.) அத்தேவர்களும் அவுணர்களும் யான் கட்டளை இட்டவைகளைச் செய்யவும் எனக்கு நல்ல பிள்ளைகளும் சிற்றிடையினரான பெண்களும் இறவாதவண்ணம் வளருமாறும் அருள்புரிவாயாக.—எ-று. (கந)

ஆதியாகியனைத்தையுமீன்றநின்
பாதியானபராபரையான்பெறு
மாதராகமறையவனாகிநீ
காதலாகக்கடிமணஞ்செய்தியால்.

(இ-ள்.) முதல்வனாக விருந்து அனைத்தையும் படைத்த நினது பாதியுருவமான பராபரையானவள் நான் பெற்றமகளாகவர, நீ பிராமணனாகிவந்து விருப்பத்துடன் கல்யாணஞ்செய்யவேண்டும்.—எ-று. (கச)

என்றுதக்கனியம்பலுமிங்கிது
நன்றனக்கதுநல்கினநன்னெறி
நின்றியென்னினிலைக்குமிச்சீரெனா
மன்றுளாடியவானவன்போயினான்.

(இ-ள்.) என்று தக்கனுரைத்தலும் இது நல்லது இவ்வரமுனக்களித்தேம் இச்சீரனைத்தும் நீ நன்மார்க்கத்தில் நிற்பாயானல் நிலைக்கும் என்று கூறி அம்பலத்திலாடிய இறைவனார் எழுந்தருளினார்.—எ-று. (கரு)

ஈசனவ்வரமீந்தனனேகலு
நேசமோடவனீர்மையைப்போற்றியே
தேசின்மிக்கசிறுவிதியாரினும்
பேசொணாதபெருமகிழ்வெய்தினான்

(இ-ள்.) சிவபெருமானவ்வரங்களை அளித்துப்போதலும் விருப்பத்துடன் அவன் தன்மையைத்துதித்து அழகிற்சிறந்த தக்கன் எவரினும் உரைத்தற்கரிய மிக்க மகிழ்ச்சியையடைந்தான்.—எ-று. (கசு)

ஓகைமேயவனோதிமவூர்திமே
லேகுமையனையெண்ணலுமச்செய
லாகமீதுகண்டன்னவன்மங்கையோர்
பாகனீந்தபரிசுணர்ந்தானரோ.

(இ-ள்.) மகிழ்வடைந்தவத்தக்கன் அன்னவாகனத்திலுலவுந் தனது தந்தையான பிரமனை நினைத்தவுடனே அவன் நினைவை உள்ளத்தாலுணர்ந்து அப்பிரமன் உமாதேவியை ஒருபுறத்திலுடைய சிவபெருமான் வரமளித்த தன்மையை அறிந்துகொண்டான்.—எ-று. (கஎ)

வேறு.

பெற்றிடுமதலையெய்தும்பேற்றினைபவன்பான்மேல்வந்
துற்றிடுதிறத்தைதயெல்லாமொருங்குறவுணர்வானாடித்
தெற்றெனவுணர்ந்துதக்கன்சிவனடியுன்னிப்பன்னா
ணற்றவம்புரிந்தவாறுநன்றெனவுயிர்த்துநக்கான்,

(இ-ள்.) தான்பெற்ற மகளுன தக்கன் அடைந்த பேற்றினால் அவனிடத்திற் பின்னர் வந்து சேருகின்ற தன்மைகளனைத்தும் ஒன்றுக அறிவாலாராய்ந்து விரைவாகவறிந்து தக்கனென்பான் சிவபெருமானுடையதிருவடிகளைநினைத்துப் பலகாலம் நல்ல தவஞ்செய்த தன்மை நல்லதெனப் பெருமூச்சு விடுத்து நகைத்தனன்.—எ-று.

முப்புரமுடியமுன்னுண்முனிந்தவனிலைமையான
மெய்ப்பொருள்பகர்ந்தேன்மைந்தன்வீடுபெற்றுய்யவன்று
ணிப்பரிசானனந்தோவென்னினிச்செய்கேனிம்பங்
கைப்பதுபோமோநாளுங்கடலமிர்தூதவினுலும்.

(இ-ள்.) என்மகன் முத்தியடைந்துய்தற்குத்திரிபுரங்கள் அழிய முன்னளிற் சிறிய சிவபெருமானுடைய நிலைமையான உண்மைப்பொருளையுரைத்தேன் அவன் இவ்வண்ணமாயினன் அந்தோ இனியென்ன செய்வேன் தினந்தோறுங் கடலிலுண்டான அமிர்தத்தினை நீராக விடுத்தாலும் வேம்பு கசப்பதினின்றும் நீங்குமோ.

ஆலமார்களத்தோன்றனேயாதியென்றுணர்ந்துபோந்து
சாலவேயிந்நாள்காறுந்தலையதாந்தவத்துட்டங்கி
ஞாலமேலென்றுநீங்காநவையொடுபதமும்பெற்றான்
மேலைநாள்வினைக்கீடேற்றவிதியையார்விலக்கவல்லார்.

(இ-ள்.) விடம்பொருந்திய கண்டத்தரான சிவபெருமானே முழுமுதற் பொருளென வறிந்து மானச சரோவரத்துக்குச்சென்று இதுகாறுந் தலைமையான தவத்தினை மிகவுஞ் செய்திருந்து உலகத்திலென்று மழியாத குற்றத்துடன் பிறவியையும் உடையனுயினன் மேலைநாளுண்டான வினையொடு பொருந்திய விதியையாவரே விலக்க வல்லுநர்.—எ-று. (உ0)

செய்வதென்னினியானென்னுச்சிந்தையினலஞ்செய்து
மைவளர்தீயபுந்திமைந்தனையடைந்துவல்லே
மெய்வகையாசிகூறிமேவலும்வெய்யதக்க
னிவ்விடைநகரமொன்றையியற்றுதியையவென்றான்.

(இ-ள்.) இனியான் செய்வதென்னை யென்று மனத்திற் றுன்பமுடையவனுய் மயக்கம் வளருகின்ற கொடியபுத்தியினையுடைய புதல்வனுன தக்கனை விரைவாக வடைந்து உண்மையான வாசிகூறி யிருத்தலும் கொடிய தக்கனென்பான் ஐயா இவ்விடத்தொரு நகரினை உண்டாக்குவாயாக என்று கூறினன்.—எ-று. (உக)

என்னவத்தக்கன்கூறவிமைப்பினிலமைப்பனென்றே
கொன்னுறுகமலத்தண்ணல்குறிப்பொடுகரங்களாலே
தன்னகரென்னவொன்றுதக்கமாபுரியீதென்றே
பொன்னகர்நாணுக்கொள்ளப்புவியிடைப்புரிந்தானன்றே.

(இ-ள்.) என்று அத்தக்கனுரைத்தவுடனே அவ்வாறே இமைப்பொழுதிற் செய்வேனென்று வன்மைவாய்ந்த கமலாசனனுன பிரமன் குறிப்புடன்கைகளால் தன்னுடைய நகரத்தைப்போல ஒன்று இது தக்கமாபுரியெனப் பொன்னகரம் வெட்கமுற மண்ணுலகிலியற்றினன்.—எ-று. (உஉ)

அந்தமாநகரந்தன்னிலருந்தவத்தக்கன்சென்று
சிந்தையுளுவகைபூத்துச்சேணகர்தன்னுளொன்று
மிந்தவாறணியதன்றுலிணையிதற்கிஃதேயென்னுத்
தந்தைபாலன்புசெய்துதன்பெருங்கோயில்புக்கான்.

(இ-ள்) அந்தச் சிறந்த நகரத்தினை அரிய தவஞ்செய்த தக்கனென்பவன் சென்று கண்டு மனதினிற் சந்தோஷமுற்று வானுலக நகரங்களிலெவையும் இந்தவிதமான அழகினதன்று இதற்கிதுவே இணையானதென்று பிதாவினிடத்தி லன்புகாட்டித் தனது பெரிய மாளிகையை அடைந்தான்.—எ-று. (உங)

தன்பெருங்கோயிலெய்தித்தவமுனிவரர்வந்தேத்த
மன்பெருந்தன்மைகூறுமடங்கலந்தவிசினும்ப
ரின்புறுதிருவினோடுமினிதுவீற்றிருந்தானென்ப
பொன்புனைகிரியின்மீதுபொலஞ்சுடர்க்கதிருற்றென்ன.

(இ-ள்.) தனது பெரிய மாளிகையை யடைந்து தவத்தினையுடைய முனிவரர்வந்து துதிக்க நிலைபெற்ற பெருந்தன்மையைக்காட்டுஞ் சிங்காசனத்தின்மீது பொன்றுலாகிய மேருவின்மீது அழகிய கிரணங்களையுடைய சூரியனிருந்தாற்போல மகிழ்ச்சியைத்தாராநின்ற செல்வத்துடன் இனிமையாக ஏறி இருந்தனன்.—எ-று. ()

கேசரியணையின்மீதுகெழீஇயினதக்கனெண்டோ
ளீசனல்வரம்பெற்றுள்ளவியற்கையையேமஞ்சான்ற
தேசிகனுரும்பொன்போய்ச்செப்பலுந்துன்பமெய்தி
வாசவன்முதலாவுள்ளவானவர்யாரும்போந்தார்.

(இ-ள்,) சிங்காசனத்திற் பொருந்தி இருந்த தக்கனென்பான் அட்டபுயங்களையுடைய ஈசனிடத்தில் நல்ல வரம்பெற்றுள்ள தன்மையை மிகுந்த துன்பத்தினையுடைய வியாழன் சென்று உரைத்தவுடனே நடுக்கமடைந்து இந்திரன் முதலிய தேவரனைவரும் அவனிடத்துக்கு வந்தார்கள்.—எ-று. (உரு)

வானவர்போந்தபான்மைவரனமுறைதெரிந்துமற்றைத்
தானவர்குரவனோன்றயித்தியர்க்கிறையைச்சார்ந்து
போனதுன்னவலமஞ்சேல்புரந்தரன்றனக்குத்தக்க
ஞனவன்றலைவனானன்னவற்சேர்தியென்றான்.

(இ-ள்.) தேவர் சென்ற தன்மையை நன்றாயறிந்து அசுரகுரவனான சுக்கிரன் அசுராதிபனையடைந்து உன்துன்பமொழிந்தது. அஞ்சற்க இந்திரனுக்குத் தக்கனென்பவன் தலைவனானான். அத்தக்கனை நீ யடையக்கடவை என்று கூறினான்.—எ-று.

சேருதியென்னுமாற்றஞ்செவிதளிர்ப்பெய்தக்கேளா
வாரமிர்தருந்தினன்போலகமுறமுவகைபொங்க
மேருவினொருசார்வைகும்வெந்திறலவுணர்கோமான்
காரெனவெழுந்துதொல்லைக்கிளைஞரைக்கலந்துபோந்தான்.

(இ-ள்.) தக்கனை அடையக்கடவையென்ற சொல் காதுகுளிரக்கேட்டு அரிய அமிர்தத்தினை உண்டவனைப்போல உள்ளிற் சந்தோடந்ததும்ப மேருவினொருபுறத்திலிருந்த வெவ்விய திறலாளனான அசுராதிபன் கரிய மேகம்போலெழுந்து தனது பழய சுற்றத்தினரைக் கலந்து அவர்களுடன் தக்கனை யடைந்தான்.—எ-று. (உஎ)

ஆளரியேறுபோதுமவுணர்கோன்சேறலோடும்
வாளுறுகதிர்ப்புத்தேளுமதியுமமற்றுமுள்ள
கோளொடுநாளுமேனைக்குழுவுறுகணத்தினோரு
நீளிருந்தடந்தேர்மீதுமானத்துநெறியிற்சென்றார்.

(இ-ள்.) நரசிங்கம்போன்ற அசுரர் தலைவன் வருதலும் ஒளிபொருந்திய சூரியனும் சந்திரனும் மற்றுமுள்ள கோள்களுடன் நாள்களும் மற்றைக்கூட்டமான கணங்களாயுள்ளாரும் நீண்ட பெரிய அகன்ற தேர்மீதும் விமானத்தின்மீதும் வழியே சென்றனர்.—எ-று. (உஅ)

மங்குறேய்விண்ணின்பாலார்மாதிரங்காவலோர்க
ளங்கதநிலயத்துள்ளாரனையவர்பிறருமுற்று
ரிங்கிவர்யாருந்தக்கனிணையடிவணங்கிஈசன்
பொங்குபேரருளினாற்றல்புகழ்ந்தனராகிநின்றார்.

(இ-ள்.) மேகம்படிந்த வானிலுள்ளார் திசைகாவலர் அரவங்களையுடைய பாதலத்தார் முதலிய அனைவர்களும் வந்தார்கள். இவ்வனைவருந் தக்கனுடைய உபய பாதங்களை வணங்கிச் சிவபெருமானுடைய உயர்ந்த பேரருளின் தன்மையைப் புகழ்ந்தாராகி நின்றனர்.—எ-று. (உகூ)

அவ்வகைமுளரியண்ணலாதியாமமரர்தத்தஞ்
செய்வினையாகவுன்னிவைகலுஞ்செறிந்துபோற்ற
மெய்வகையுணராத்தக்கன்வியன்மதிக்குடையுங்கோலு
மெவ்வகையுலகுஞ்செல்லவிருந்தரசியற்றல்செய்தான்.

(இ-ள்.) இவ்வாறு பிரமன் முதலிய தேவரனைவரும் தத்தஞ்செய்தொழிலாக நினைத்துத் தினமுநெருங்கித்துதிக்க உண்மையை உணராத தக்கனென்பான் பெரிய வெண்கொற்றக்குடையுஞ் செங்கோலும் எவ்வகை உலகத்திலுஞ் செல்லுமாறிருந்த ரசு செய்தனன்.—எ-று. (௩௦)

தக்கன்றவஞ்செய்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் சுஉ.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தக்கன் மகப்பெறு படலம்.

ஆங்கவன்றேவியானாளருந்ததிக்கற்பின்மிக்காள்
வாங்கியநுசுப்பினல்லாண்மறைக்கொடியெனுநாமத்தாள்
பூங்கமலத்துப்புத்தேள்பொன்னடிதன்னுள்வந்தா
ளோங்குதொல்லுலகுக்கெல்லாமொருதனிமுதல்வியானாள்.

(இ-ள்.) கமலாசனனான பிரமதேவனுடைய காலடியிற் பிறந்தவளும் துவளு மிடையினையுடைய நல்லவளும் வேதவல்லியென்று பெயருள்ளவளும் அருந்ததியினுங் கற்பிற்சிறந்தவளுமானமாது அத்தக்கனுக்கு மனைவியானாள் அதனாலவள் உயர்ந்த புராதனமான உலகமனைத்துக்கும் ஒப்பற்ற ஏகமுதல்வியானாள்.—எ-று. (க)

வேறு.

சேயிழையவளொடுசெறிந்துபுல்லியே
மீயுயர்கமலமேல்விரிஞ்சன்காதலன்
மாயிரும்பணிபதிமணிகளீன்றெனா
வாயிரமைந்தனையருளினனரோ.

(இ-ள்.) அவ்வேதவல்லி யென்பவளுடன் பொருந்திப்புணர்ந்து மிகவுயர்ந்து விளங்கும் கமலாசனத்திலிருக்கும் பிரமபுத்திரனான தக்கன் சிறந்த பெரிய சர்ப்பராசன் மணிகளைப்பெற்றாற்போல ஆயிரம் புதல்வரைப் பெற்றனன்.—எ-று. (உ)

அப்பெருமைந்தர்களாயினோர்க்கெலா
முப்புரிநூல்விதிமுறையினாற்றியே
செப்பருமறைகளின் றிறமுமீந்துபின்
னிப்பரிசொன்றினையிசைத்தன்மேயினான்.

(இ-ள்,) அந்தப்பெரிய புதல்வராயுள்ளாரனைவருக்கும் முப்புரிநூலணிதலாகிய சடங்கினை முறைப்படிசெய்து உரைத்தற்கரிய வேதங்களையோதுந் தன்மைகளையுமளித்துப் பின்னர் இவ்வாறென்று கூறினான்.—எ-று. (ந)

நல்லதோர்மானதநணுகிநீவிர்க
ளெல்லிருமீசனையெண்ணிநோற்றிரீ இப்
பல்லுயிருந்தரும்பரிசுபெற்றிவட்
செல்லுதிராலெனச்செப்பியேவினான்.

(இ-ள்) நீங்கள் நல்ல மானச சரோவரத்துக்குச்சென்று அனைவரும் சிவபெருமானைக்குறித்துத் தவஞ்செய்திருந்து பலவுயிர்களையும் படைக்குந்தன்மையைப் பெற்றிங்கு வாருங்கள் என்று கூறி அனுப்பினான்.—எ-று. (ச)

ஏயினகாலையிலிறைஞ்சிமைந்தர்கள்
போயினர்மானதப்பொய்கைபுக்கன
ராயிடைப்படிந்தனரரனையுன்னியே
மாயிருநோன்பினையியற்றிவைகினார்.

(இ-ள்.) அவ்வாறனுப்பிய உடனே அப்புதல்வர்கள் அவனைவணங்கி மானசசரோவரத்தையடைந்து அந்நீரின் முழுகிச் சிவபெருமானை நினைந்து மிகப்பெரிய தவத்தினைச்செய்து இருந்தனர்.—எ-று. (ரு)

நேரவின்னணநெடிதுநோற்புழி
நாரதனென்பவனண்ணியாயிடை
வாரியுளாற்றவும்வருந்துகிற்றிராற்
காரியம்யாவதுகழறுவீரென்றான்.

(இ-ள்.) தக்கன் புதல்வர் எண்ணியவற்றையடைய இவ்வாறு நெடுங்காலந் தவஞ்செய்த காலத்து அவ்விடத்துக்கு நாரதமுனிவன்சென்று நீரிற்கிடந்து மிகவருந்துகின்றீர்கள் இவ்வருத்தத்தால் நீங்களடையும் பிரயோசனம் என்னை என்று வினவினான்.—எ-று. (சு)

என்னனுமுனிவகேளியாங்கணல்கிட
முன்னுறநல்குவான்முயன்றுமுக்கணான்
றன்னடியுன்னியேதவத்தையாற்றுது
மன்னதுமெந்தைதன்னாணையாலென்றார்.

(இ-ள்.) என்று கேட்டவுடனே அத்தக்கன் சிறுவர்கள் எங்கள் தந்தையின் கட்டளையால் நாங்கள் உயிர்களைப்படைக்கின்ற தொழிலினைப்பெறுவான் மூன்று கண்ணுளரான சிவபெருமான் திருவடிகளை நினைந்து தவஞ்செய்கின்றோம் என்று கூறினார்கள்.—எ-று.

நல்கிடும் என்றும் பாடம். (எ)

அறிந்திடுமுனிவரனதனைக்கேட்டலுஞ்
செறிந்திடுகரத்தொடுசெங்கைதாக்குற
வெறிந்தனனகைத்தனனிதுகொலீசனாற்
பெறும்பரிசேயெனப்பின்னுங்கூறினான்.

(இ-ள்.) சிவஞான முணர்ந்த நாரதன் அம்மொழியைக்கேட்டவுடனே நெருங்கிய கையுடன் கைபொருந்தக்கொட்டி நகைத்து இதுதானோ சிவபெருமானாற் பெறும் தன்மையது என்று பின்னரும் இவ்வாறு கூறினான்.—எ-று. (அ)

ஈசனையேநினைந்திறைஞ்சியேத்தியே
பேசருமருந்தவம்பிடித்துமூவகைப்
பாசமதகனெறிபடரச்சிந்தியீ
ராசுறுபடைப்பினுக்கார்வஞ்செய்திரோ.

(இ-ள்.) சிவபெருமானை நினைந்து வணங்கித்துதித்து உரைத்தற்கரிய அரிய தவத்தினைச்செய்து மூவகைப் பாசவழிகளுந் தொலைய எண்ணுகின்றிலீர் குற்றந் தரும்படைப் பினுக்கிச்சைகொள்ளுகின்றீர்களோ?—எ-று. (கூ)

சிறப்புளவருந்தவஞ்செய்துநீரினி
யுறப்படுகதிமுறையுரைப்பக்கேட்டிராற்
பிறப்புளதிடருளதன்றிப்பின்னரு
மிறப்புளததுநுமக்கினியதாகுமோ.

(இ-ள்.) சிறப்புவாய்ந்த அரிய தவத்தினைச்செய்து நீங்கள் அடையத்தக்க கதிமுறையை உரைக்கின்றேன் கேட்பீர்களாக பிறப்புளது துன்பமுளது அன்றியும் பின்னரும் மரணமும் உளது நீங்கள் விரும்பிய படைப்புத்தொழில் ஆதலினது உங்களுக்கினியதாகுமோ?—எ-று. (க0)

இன்றுநீர்வெஃகியதியற்றுநான்முகன்
றன்றலையைந்தினிலொன்றுசங்கரன்
பொன்றிகழ்கரங்கொளப்புகுந்ததீமையு
நின்றதோர்பழியையுநினைக்கிலீர்கொலோ.

(இ-ள்.) இப்பொழுது நீங்கள் பெறவிரும்புஞ் சிருட்டித்தொழிலினையுடைய பிரமனுடைய ஐந்துதலைகளி லொன்றினைச் சிவபெருமான் பொன்போல விளங்கும் கையிலேந்த உண்டான தீமையும் அதனால் பிரம்மனிடநின்ற பழியையும் எண்ணினீரில்லைபோலும்.—எ-று. (கக)

என்னலதிறையவரில்லையார்க்குமியான்
முன்னவனென்றுநான்முகத்தன்மாலொடு
பன்னெடுநாளமர்பயின்றுசோதிகண்
டன்னமதானதுமறிந்திலீர்கொலோ.

(இ-ள்.) என்னையலது தலைவரென்பாரிலர் எவர்க்கும் யானே முன்னவன் என்று பிரமன் திருமாலுடன் பல நெடுங்காலம் போர்செய்து சோதியைக்கண்டு அன்னவுருவமானதும் அறிகிலீர் போலும்.—எ-று. (கஉ)

நேயமெண்ணுற்றெனநிறைந்த கண்ணுத
ஞயகன்விதித்திடநம்மியல்யாவையு
மாயவென்றகந்தையுற்றமர்வனன்னவன்
மாயமென்றுரைத்திடுந்தளையின்வன்மையால்.

(இ-ள்.) நெய்யானது எள்ளில் நிறைந்து நிற்பதுபோல அனைத்திலு நிறைந்து நிற்கு நெற்றிக்கண்ணரான சிவபெருமான் அனைத்தையும் படையாநிற்ப மாயையென்னும் பாசத்தின் வன்மையால் நம்மிலனைத்து முண்டாயின என்று அகந்தைகொள்ளுவன் அப்பிரமன்.—எ-று. (கங)

பற்றேடுமுழுதுயிர்படைக்கும்பான்மையாற்
பெற்றிடுபயனவன்பெருமையல்லது
நற்றவமுனிவிர்காணன்கிதென்றொரு
பொற்றளைதம்பதம்பூட்டலாகுமோ.

(இ-ள்.) நல்ல தவமுடைய முனிவர்களே விருப்பத்துடன் அனைத்துயிர்களையும் படைக்குந் தன்மையாற் பெருமையை யல்லது அடையும் பயனென்னை? நன்றாயிருக்கின்றதென் ஒரு பொன் விலங்கினைக் காலிலணிதல் கூடுமோ?—எ-று. (கச)

எத்துணையெத்துணையின்பம்வேண்டுநர்க்
கத்துணையலக்கண்வந்தடையுமாங்கது
மெய்த்திறநீவிரும்விதியினிற்றிரேற்
கைத்துறுதுயரெனுங்கடலிற்சார்திரால்.

(இ-ள்.) எவ்வளவுக்கெவ்வளவு இன்பத்தினை விரும்புகின்றார்களோ அவ்வளவுக் கவ்வளவு துன்பம் வந்து சேரும் இஃதுண்மை நீங்களும் படைக்குந் தொழிலினிற் றிரானல் வெறுக்கத்தக்க துன்பமென்னுங் கடலிலாதிர்.—எ-று. (கரு)

அன்றியுமீசனையயர்த்தியாமிறை
யென்றுளமுன்னுதிரிசைவிறிவினை
மன்றவுமாற்றுதிர்மயக்கங்கொள்ளுதி
ரொன்றியபேருணர்வொருவிப்போதிரால்.

(இ-ள்.) அல்லாமலும் சிவபெருமானை மறந்து நாம் பிரமமென்று மனதினினைத்திர் பொருத்தமற்ற கொடிய வினைகளை மிகவுஞ் செய்வீர் மயக்கமடைதிர் பொருந்திய பேரறிவு நீங்கிப்போதிர்.—எறு. (கசு)

வீட்டிடுமிச்செயல்வீடுசேர்தர
மோட்டுறுநிலைகொடுமுயன்றுகூடுதி
ரீட்டிடுநன்னெறிக்கியைவதொன்றினைக்
காட்டியேயினைத்தெனக்கழறலாகுமோ.

(இ-ள்.) இப்படைப்புத் தொழிலினைவிட்டு விடுங்கள். முத்தியடைதற்கு உயர்ந்த நிலைமையினின்று அதனை யடையுங்கள் சேர்க்கத்தக்க நன்மார்க்கத்துக்குப் பொருந்துவ தொன்றைக்காட்டி இவ்வாறெடுத்துகூற முடியுமோ.—எ-று. (கஎ)

அற்றமிறவம்புரிந்தரியவீட்டினைப்
பெற்றவரளப்பிலர்பெறுவதாகியே
யுற்றவரளப்பிலருலகிற்சிற்சில
மற்றவர்தமதியல்வகுப்பக்கேண்மினோ.

(இ-ள்.) அழிவற்ற தவத்தினைச்செய்து அரியமோட்ச வீட்டினைப்பெற்றவர்கள் அநேகர்கள் பெறுவதற்காக முயற்சியிலுற்றாரள வற்றவர் உலகில் அருமையான அவர்களின் செயல்கள் சிற்சில வகுத்துரைக்கின்றேன் கேட்பீராக.—எ-று. (கஅ)

சுற்றமதரனடித்தொண்டரல்லது
மற்றிலரவனடிமலர்களேயலாற்
பற்றிலர்சாலவுமினியபண்பினர்
குற்றமதகன்றதோர்கொள்கைமேயினர்.

(இ-ள்.) சுற்றமாயுள்ளார் சிவபெருமானுடைய அடித்தொண்டரையன்றி வேறெவருமிலர் அச்சிவபெருமான் திருவடிமலர்களை யன்றி பற்றில்லாதார் மிகவு மினிய தன்மையர் குற்றமற்ற கோட்பாட்டை பொருந்தினவர்கள்.—எ-று. (கக)

நேசமுற்றடைபவர்நினைப்பினீக்கரு
மாசறுத்தருள்பொழியறிவின்மேலையோ
ரீசனைக்குறுகியெஞ்ஞான்றும்வாழ்பவர்
பேசுதற்கரியதோர்பெருமையெய்தினர்.

(இ-ள்.) பத்திபொருந்தி அடைவோரும் நினைப்பினால் நீக்குதற்கரியமாசினை யறுத்து அருளைப்பொழிகின்ற அறிவிலுயர்ந்தோரும் ஈசனை அடைந்து எக்காலத்தும் வாழ்வோரும் இவர்களே: உரைத்தற்கரிய பெருமை யடைந்தவர்கள் இவர்களே.-எ-று.

ஆதலினவரெனவவாவின்றற்றிடு
மேதகுநெறியுறீ இவீடுசேருதி
ரேதமில்வெறுக்கைபெற்றெண்ணந்தீர்ந்திடுந்
தாதைதன்பணியினைத்தவிர்திரென்னவே.

(இ-ள்.) ஆதலால் அவர்களைப்போல ஆசையின்றி இருக்கின்ற உயர்ந்த மார்க்கத்தை அடைந்து முத்தியடைதிர். குற்றமற்ற செல்வத்தினை அடைந்து நல்லெண்ணத்தினை விடுத்த பிதாவின் எண்ணத்தை விட்டு விடுங்கள் என்றுகூறுதலும்.-எ-று.

அந்தமில்வீடுபேறடையுமூழுடை
மைந்தர்களோர்புடைவந்துதேர்வுறுத்
தந்தைசொல்லினுமிதுதக்கதேயெனப்
புந்திகொண்டடிகளைவணங்கிப்போற்றினர்.

(இ-ள்.) அழிவற்ற முத்தியடைதற்குரிய ஊழினையுடைய பிள்ளைகளனைவரும் ஒருபுறத்தை அடைந்து ஆலோசித்துணர்ந்து தந்தையின் சொல்லினும் இச்செயல் நல்லதே என்று மனதிற்கொண்டு நாரதனடிகளை வணங்கித்துதித்தனர்.—எ-று. ()

வேறு.

போற்றுமைந்தரைப்பெரும்புறங்கழீ இயரன்புகழ்
சாற்றிவீடுவெஃகுறுந்தவத்தினோர்கணிலையினைத்
தேற்றிமந்திரங்களுஞ்செயற்கையும்புணர்த்தியே
மாற்றினன்றொல்லுணர்வுதன்னைமற்றொருண்மையுதவினன்.

(இ-ள்.) தன்னைத்துதித்த தக்கன் மக்களின்புறந்தழீ இச்சிவபெருமானுடைய புகழினை உணர்த்து முத்தி வீட்டினை விரும்புகின்ற தவத்தினையுடைய நிலையைத் தெளிவித்து அதற்குரிய மந்திரங்களையும் அதன்செய்கைகளையுங் கூறிப்பழக்கிப் பண்டைய வுணர்ச்சியை மாற்றி ஒப்பற்ற முத்திநிலையுண்மையை உபதேசித்தனன்.—எ-று

வேறொருண்மையுதவல்செய்துவிதியினாடிவேதநூல்
கூறுகின்றமுறைபுரிந்துகுமரர்யாருமின்னண
மீறின்மாதவங்களாற்றியெல்லைதீர்ந்தமுத்தியிற்
சேறிரென்றுமுனிவனெல்லைசேணெழுந்துபோயினன்.

(இ-ள்.) மற்றொருண்மையை யுபதேசித்து முறைப்படி ஆராய்ந்து வேதசாஸ்திரங்கூறுகின்ற முறையைச்செய்து தக்கன்மக்களை இவ்வண்ணம் அழிவற்ற சிறந்த தவங்களைச்செய்து எல்லையற்ற முத்தியை அடையுங்கள் என்றுகூறி எழுந்து நாரதன் விரைவாக வானவழியே சென்றனன்.—எ-று. (உ௭)

போகுநாரதற்புகழ்ந்துபொன்னடித்தலத்தின்மே
லோகையோடுதாழ்ந்துமுன்னுணர்த்துபான்மையுன்னியே
மோகமாதியானதீமைமுழுதுமாற்றிமோனிக
ளாகிமைந்தரெவருமங்கணுற்றிரருந்தவம்.

(இ-ள்.) செல்லாநின்ற நாரதனைத் தக்கன் மைந்தர்ப்புகழ்ந்து அவன் பொன்னடிகளில் மகிழ்வுடன்வணங்கி அவன் முன்னருப்பதே சித்ததன்மையை நினைத்து மோக முதலிய தீமைகளனைத்தையு நீக்கி மௌனவிரதமுடையவர்களாகி அவ்விடத்திலிருந்து அரிய தவத்தினைச் செய்தனர்.—எ-று. (உரு)

அருந்தவங்கள்பலவுமாற்றியவர்கள் வீடுசேர்தலு
மிருந்தவம்புரிந்ததக்கனிளைஞர்பெற்றிபின்னமுந்
தெரிந்ததில்லையென்றுசிந்தைசெய்துபோதவுணர்வினாற்
பொருந்தநோக்கலுற்றவட்புகுந்தபான்மைகண்டனன்.

(இ-ள்) அரிய தவங்கள் பல வற்றையுஞ்செய்து அவர்கள் மோட்சமடைதலும் பெரிய தவங்களைச்செய்த தக்கனென்பவன் மைந்தர் தன்மை இன்னமுந் தெரியவில்லையே யென்று நினைத்து ஞானவுணர்ச்சியினாற் தகுமாறு பார்த்து அங்கு நடந்தவைகளைக் கண்டான்.—எ-று. (உசு)

மானதத்தடத்தினூடுமாற்றருந்தவத்தராய்
மோனமுற்றசிறுவர்பாலின்முன்னிவந்துநாரதன்
ஞானமுற்றுமோதியென்சொனவையதென்றுமாற்றியே
மேனிலைக்கணுய்த்துமீண்டுவிண்படர்ந்துபோயினான்.

(இ-ள்.) மானதத்தடத்தில் நீக்குதற்கரிய தவஞ்செய்வாராய் மௌனநிலையிலிருந்த என்னிளமைந்தர்களிடம் வேண்டுமென்னு மெண்ணத்துடன் நாரதன் அடைந்து ஞானநூல் முழுதுமவர்க்குபதேசித்து, யானவர்க்குபதேசித்திருந்த என்சொல்லனைத்தையும் குற்றமென்று விலக்கி உயர்ந்த முத்திநிலைக்கண் அவர்களைச் சேர்த்துப் பின்னர் வானின் வழிச்சென்றான்.—எ-று. (உஎ)

மிக்கமைந்தரவனுரைத்தவிதியினின்றுவீடுபே
றொக்கலோடுமேயினார்களொருவரின்றியெற்கினி
மக்களின்றெனத்தெரீஇவருத்தமுற்றிருந்திடுந்
தக்கன்மற்றுமாயிரந்தவச்சிறாரையுதவினான்.

(இ-ள்.) அந்நாரதனுரைத்த வழியினின்று எனது சிறந்த மைந்தர்கள் சுற்றத்துடன் அனைவரும் வீடுபேற்றை அடைந்தார்கள் ஆதலின் எனக்கு இனி மக்களெவருமிலர் என்றுணர்ந்து துன்பங்கொண்டிருந்த தக்கனென்பான் பின்னரும் தவத்துக்குரிய ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றனன்.—எ-று. (உஅ)

பெற்றமைந்தரைத்தழீஇப்பிறங்குகாமர்மீச்செல
வற்றமில்சிறப்பின்வேதமறிவுறுத்தியாதியா
நெற்றியங்கணனையுன்னிநீவிர்யாவுநல்குவா
னற்றவஞ்செய்தணைதிர்மானதத்தடத்திலென்னவே.

(இ-ள்.) பெற்ற பிள்ளைகளைத்தழுவி விளங்காநின்ற அழகு வளரக் கெடாத சிறப்புடன் வேதங்களை யுணர்த்தி நீவிர் முதல்வனான நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானை நினைத்து மானதத்தடாகத்தி லிருந்து நல்ல தவஞ்செய்து வாருங்கள் என்று கூறுதலும்.—எ-று. (உகூ)

கேட்டமைந்தர்தாதைதாள்தொழீஇபதங்கள்சென்னியிற்
சூட்டியேவல்போற்றியன்னதூமலர்த்தடத்திடை
யீட்டமோடுசென்றிருந்திருந்தவம்புரிந்தனர்
காட்டிஉள்ளகயமுனிக்கணங்களங்கணுற்றென.

(இ-ள்.) இவ்வாறு தக்கனுரைத்தவைகளைக்கேட்டமைந்தர் பிதாவின்முன்னர் நெருங்கிய தங்கள் தலைகளிற் சூட்டி அவனுரைத்தவைகளை அங்கீகரித்துத் துதித்து அவனுரைத்த பரிசுத்தம்வாய்ந்த மானதத்தடத்தில் வனத்திற் சஞ்சரிக்கும் யானைக்கன்றுகளனைத்தும் ஒருசேர அவ்விடத்துவந்தாற்போல கூட்டத்துடன் சென்றிருந்து பெரியதவத்தினைச் செய்தனர்.—எ-று. (ந0)

வே று.

ஆனகாலையிலனையமைந்தர்க
ளூனமின்றிநோற்றொழுகமுன்னரே
போனநாரதன்புணர்ப்பொன்றோர்ந்திடா
மானதத்தடமருங்கிலெய்தினன்.

(இ-ள்.) அவ்வா றத்தக்கன் மைந்தர்கள் தவறுதலின்றித் தவஞ்செய்யாநிற்க முன்னர் வந்துசென்ற நாரத முனிவன் தந்திரமொன்றை மனதிற் கருதிட்டபின்னரும் மானதத் தடத்தி னருகில் வந்தான்.—எ-று. (நக)

எய்தியாவர்நீர்யாருமாதவஞ்
செய்திரெப்பொருள்சேர்தல்வெஃகினீர்
நொய்திலன்னதுநுவலவேண்டுமாற்
கைதவம்பெறுக்கருத்தினீரென.

(இ-ள்.) தக்கன் மைந்தர் தவஞ்செய்யும் இடத்தையடைந்து வஞ்சனையற்ற உள்ளத்தினை யுடையீர் நீவிர்யாவர் நீவிரனைவிரும் சிறந்த தவஞ்செய்கின்றீர்களே இத்தவத்தால் எந்தப்பொருளை அடைய விரும்பினீர்கள் அதனைவிரைவில் உரைத்தல் வேண்டும் என்று கேட்க.—எ-று. (நஉ)

தந்தையாகியோன்றக்கனுங்கவற்
கந்திவண்ணனாருளும்பேற்றினால்
வந்தமைந்தரேம்யாங்கண்மற்றவ
னிந்தவான்றடத்தெம்மையேவினன்.

(இ-ள்.) நாங்கள் தக்கனென்பானுக்கு அந்திவண்ணனான சிவபெருமானருளியவரத்தினாற் பிறந்த பிள்ளைகள் ஆதலின் எங்கள் தந்தை தக்கன் அவன் இந்தப் பெரிய தடாகத்துக்கு எங்களை அனுப்பினன்.—எ-று. (நந)

தேவதேவனைச்சிந்தையிற்கொடே
யாவியோடுடலல்சநோற்றிரீஇ
யோவில்பல்லுயிருதவல்பெற்றிட
வேவினனெமையென்றுசொற்றனர்.

(இ-ள்.) எங்களை எங்கள் தந்தை தேவதேவனான சிவபெருமானை நினைவிற்கொண்டு உயிருடன் உடலும் வருந்தத் தவஞ்செய்திருந்து கெடாதபல வுயிர்களையும் படைக்குந் திறத்தினைப்பெறுமாறு அநுப்பினன் என்று கூறினார்கள்.—எ-று. (நச)

சொற்றகாலையிற்றுகளிறாயவ
னற்றவஞ்செய்வீர்நாதன்றாளையே
பற்றதாவுளீர்பயனென்றுன்னலீர்
குற்றம்யாவரேகுறுகலார்களே.

(இ-ள்.) தக்கன் மைந்தர்கள் இவ்வாறுரைத்தவுடனே குற்றமற்ற தூய்மையாளனான நாரதன் நல்ல தவஞ்செய்பவர்களே நீங்கள் சிவபெருமான் திருவடிகளை பற்றிக்கொண்டிருக்கின்றீர்கள் அதுவே பிரயோசனமென்று கருதுகின்றிலீர் குற்ற

மான தன்மை எவரும் அடைவார். (குற்றமில்லாத தன்மையை அடைதலன்றோ சிறப்பு.)—எ-று. (௩௫)

நோற்றியாவையுநோக்கிச்செய்வினைப்
பேற்றையெய்துவீர்பிறப்புமாய்வது
மாற்றுவீரலீர்மயக்கந்தீர்திரோ
வேற்றமென்கொனீரீகின்றீரினும்.

(இ-ள்.) தவஞ்செய்து அனைத்துயிர்களேயும் பார்த்துப் படைப்புத்தொழிலாகிய பேற்றினை அடைய நிற்பவர்களே நீங்கள் சனனமரணங்களை நீக்கிக்கொள்ளுவோராகக்காணேம் அஞ்ஞானமயக்கம் ஒழிவீர்களோ இப்பொழுது படைப்பவரினும் நீங்கள் என்ன அதிகமாகப் படைக்கப்போகின்றீர்கள்.—எ-று.

பிரமன் வழிப்படைப்பாளர் உபப்பிரமர் முதலிய பலராதலை விளக்குவான் ஈகின்றினும் என்றார். (௩௬)

மேயமாசுதோய்விழைவின்மெய்யினர்
தூயதோர்தடந்துறையையெய்தியுஞ்
சேயசேதகந்திளைத்தல்போலுமா
னீயிர்கொண்டதோர்நிலைமைதானுமே.

(இ-ள்.) பிறர்பழிக்குமாறு விருப்பமற்ற அழுக்கடைந்த உடலினையுடையார் நன்னீரினையுடைய ஒரு பெரிய நீர்த்துறையையடைந்தும் அங்குள்ள செந்நிறச்சேற்றினை அல்லது அருகிற்கிடந்த சேற்றினைப் பூசிக்கொண்டதற் கிணையாகும் நீங்கள் கொண்ட நிலைமை.—எ-று. (௩௭)

தலையதாகியதவந்தனக்குநீர்
விலையதாப்பெறும்விதியின்செய்கையுஞ்
நிலையதாகுமோநீடுநாளோடே
யுலகமீதுசீருறுவதன்றியே.

(இ-ள்.) முதன்மையாகச் செய்யுந் தவத்துக்கு நீங்கள் விலையாகப்பெறுகின்ற சிருட்டித்தொழிலானது வெகுகாலம் இவ்வுலகத்திற் சிறப்புற்று வாழ்தலேயன்றி நிலையானதாகுமோ.—எ-று. (௩௮)

வேறு.

போவதும்வருவதும்பொருமலுநன்குமின்
றுவதோர்கதியதேயாருயிர்க்குறுதியா
நீவிரக்கதியினைநினைகிலீரிறுதியு
மோவரும்பிறவியுமும்மைவிட்டகலுமோ.

(இ-ள்.) இறந்துபோதலும் பிறந்து வருதலும் துன்பமுறுதலும் இன்பமடைதலும் இல்லாததான அரிய முத்தியே உயிருக்குறுதியாகவுள்ளது நீங்களந்தக்கதியை எண்ணுகின்றீரில்லை அதனை அடைதற்கு முன்னர் மரணமும் கெடாத பிறவியு நும்மை விட்டுப்போகுமோ.—எ-று. (௩௯)

சிறுவர்தம்முள்ளமுஞ்சேயிழைமகளிர்தம்
மறிவுமாலெய்தினோர்சிந்தையுமானவா
று[...]வதோர்பனுவலுமுற்றிடும்பெற்றியே
பெறுவதாமன்றியேபின்னரொன்றாகுமோ.

(இ-ள்.) இளையோர் மனமும் செவ்விய அணி அணிதற்குரிய மாதர்கள் அறிவும் மயக்க முற்றுர் எண்ணமும் போலவாயின நுமதெண்ணமும். ஒருவன் அடையுங் கல்வியும் அவனடைந்த ஆசிரியன் வழியைப்பற்றி நிற்குமேயன்றி வேறொருவிதமாக ஆகாதென்க.—எ-று. (௬0)

ஆதலா லுங்களுக்க ருள்செயுந்தன்மையான்
றாதையாகின்றதோர் தக்கனேயெனினவன்
பேதையாமீசனுற்பெருவளம்பெற்றவன்
பாததாமரையினிற்பரிவுறுநெறிமையால்.

(இ-ள்.) ஆதலின் உங்களுக் குபதேசம்புரிந்த தகுதியாளன் பிதாவான தக்கனேயாளுல் அவன் அறிவிலியே எதனுலென்னிற் சிவபெருமானுற் பெரிய தானவளத்தினைப்பெற்றும் அச்சிவபெருமானுடைய திருவடித் தாமரையில் அன்புவையாத தன்மையாலென்க.—எ-று. (௬௧)

ஆங்கவன்மையலோனுதலாலவனரு
ணீங்களுமனையரோநெறிதருந்தேசிகன்
றீங்கெலாநீக்கியேசிவகதிப்பாற்பட
வோங்குபேரருளொடுமுணர்த்துவானல்லனோ

(இ-ள்.) அத்தக்கன் மயக்கவுணர்வுடையனுதலின் அவன்பெற்ற நீங்களும் அத்தகையமையலுடையோரே ஞானமார்க்கத்தினை உபதேசிக்குந் தேசிகனுவான் குற்றமானவனைத்தையு மொழித்துச் சிவகதியையடைய உயர்ந்த பெரிய அருளுடனே உணர்த்துவோ னல்லனோ?—எ-று. (௬௨)

முந்துமாயிரவருமுன்பரிப்பொய்கைவாய்த்
தந்தைதன்பணியின்மூதாதைபோனல்கவே
வந்துளார்நோற்றுழிமயலறத்தேற்றியே
யந்தமாநெறிநிறீ இயரியவீடருளினும்.

(இ-ள்.) நும் முன்னோராயிருந்த ஆயிரம் பேர்களும் தந்தையின் கட்டளையாற் பிரமனுன பாட்டனைப்போலப் படைப்புத்தொழிலைப்பெறுதற்கு இத்தடாகத்தில்வந்து தவஞ்செய்த ஞான்று நாமெய்தி அன்னாரின் அஞ்ஞானமயக்க மொழியுமாறு ஞானோபதேசஞ்செய்து முடிந்த முத்திமார்க்கத்தி லவர்களை நிறுத்தி அரிய முத்தியை அளித்தேம்.—எ-று. (௬௩)

என்னலுநாரதனெழின்மலர்த்தாளிணை
சென்னிமேற்சேர்த்தியேசிறியரேமுய்யவே
யுன்னியீண்டேகினீருணர்த்துமெய்ந்நெறியினை
யின்னதென்றுணர்கிலேமெமக்கருள்புரிதிரால்.

(இ-ள்.) என்றுரைத்த வுடனே அன்னோர் நாரதனுடைய அழகிய திருவடித் தாமரைகளைத் தலைமீதுக்கொண்டு சிறியேங்கள் உய்தற்காக நினைத்து இவ்விடத்துக் குவந்து நும்மாலுரைக்கப்பட்ட உண்மை மார்க்கத்தினை இன்னதென்றுணராதவர்களாக இருக்கின்றேம் எங்களுக் கருள்வீராக என்றனர்.—எ-று. (௬௪)

என்பவர்க்கருள்புரிந்தெண்ணிலார்வத்தொடு
நன்பொருட்காட்சியைநானுமக்குதவியே
வன்புலத்தாறுபோய்மதிமருண்டின்பமுந்
துன்புமுற்றுழல்பவந்தொலைவுசெய்திடுவனால்.

(இ-ள்.) என்றுரையா நின்றார்க்குக் கருணைசெய்து அளவற்ற விருப்பத்துடன் நல்லவத்து தரிசனத்தினை நானுங்களுக்களித்து வலிய ஐம்புலவழியே சென்று புத்திகலங்கி இன்பமுந் துன்பமுமுற்றுச் சுழலுகின்ற பிறவியை ஒழிக்கின்றேன்.

ஆதியார்தாளிணையருளொடேவழிபடு
நீதியாநீரினர்நிலைமையாய்நின்றிடும்
பாதநான்கவர்பெறும்பலமுநான்கதனுளே
யோதியார்பெறுவதோருயர்பெருங்கதியதே.

(இ-ள்.) சிவபெருமான் திருவடிகளை அருளுடன் வழிபடுகின்ற முறையான நன்மார்க்கத்தினை யுடையார் உறுதியாக நிற்கும் பாதங்கள் நான்கேயாம். அன்னாரடையும் பதமு நான்கு. அந்நான்கனுள் ஞானத்தினையுடைய பெரியோரடைவது ஒரு உயர்ந்த பெருங்கதி.—எ-று.

பிறகதிகளினின்றும் விலக்குதற்கே முத்தியை ஓர் உயர்பெருங்கதி என்றார்.

முத்தியென்றிடுவதேமொழிவதோர்நாமமா
மத்திறங்கடவுளர்க்காயினுந்தெரிவதோ
நித்தனன்புறுவதோர்நெறியராயிருவினை
யொத்தபண்போர்களாலுணரலாமல்லதே.

(இ-ள்.) முத்தியென்று கூறப்படுவதே அதனைக்குறித்துரைக்கும் பெயராம். அம்முத்தித்திறந் தேவரானு மறிந்துகொள்ள முடியுமோ முடியாது. பின்னை வெயரோ உணர்ந்தாரென்னிற் சிவபெருமானிடத் தன்புவைத்த சன்மார்க்கராய் இருவினையொப்புற்ற தன்மையாளரா லுணர்தல் கூடும்.—எ-று.

முத்தியின்ப முங்கதிவழியா லடையவேண்டுவதென்பார். "உயர் பெருங்கதி" என்றார்.

(சஎ)

அந்நிலைக்கண்ணுளாராதியார்தாளடைந்
தின்னலுக்கிடையதாமிப்பெரும்பிறவியுட்
பின்னருற்றிடுகிலர்பேசுதற்கரியதோர்
நன்னலத்தொடுகெழீஇநாளுமின்புறுவரே.

(இ-ள்.) அந்தச் சன்மார்க்கத்தினிற்பார் சிவபெருமான் திருவடியை யடைந்து துன்பத்துக்கிடமான இந்தப்பெரிய பிறவியினிற்பின்ன டையார்; உரைத்தற்கரிய பேரின்பத்தோடு கலந்து என்றுஞ் சுகானுபவமெய்தி இன்பமுறுவார்கள்.-எ-று.

ஆதலானீவிருமந்நெறிப்பாலுறீஇ
மேதைசால்யோகினால்வீடுசேருதிரென
வாதியாமிறைவனாலறையுமுண்மைகளெலா
நாதனாருளினாரதனுரைசெய்தான்.

(இ-ள்.) ஆதலால் நீங்களும் அந்த மார்க்கத்தினின்று ஞானமிக்க சிவயோகத்தால் முத்தி அடைவீராக என்று முழுமுதற்கடவுளான சிவபெருமானுடைய வேதாகமங்களுரைக்கும் உண்மைகளனைத்தினையும் சிவபெருமானுடைய கருணையால் நாரதமுனிவன் உபதேசித்தனன்.—எ-று.

(சக)

அன்றுநாரதமுனியவரெலாமவ்வழி
நின்றிடும்படிநிறீஇநெறிகொள்வானுலகமேற்
சென்றனன்பின்னரச்சிறுவராயிரவரு
மொன்றுசிந்தனையினாலுயர்தவத்தொழுகினர்.

(இ-ள்.) நாரத முனிவன் அன்று அவரனைவரும் அவ்வாறு நிற்கும் வண்ணம் நிறுத்தி நல்லொழுக்கம் வாய்ந்த சுவர்க்க உலகத்திற்குப் போயினன். பின்னர் அத் தக்கன் மைந்தர் ஆயிரவர்களும் ஏகாக்கிரசித்த முடையராய் உயர்ந்ததவநிலையி னின்றனர்.—எ-று. (ரு௦)

உயர்தவக்கிழமையிலொழுகியேயுற்றுளோர்
மயறுலைத்தருள்சிவன்மன்னுபேரருளினால்
வியனெறிப்பாலதாம்வீடுபேறெய்தினா
ரயன்மகற்கினிமைகூராயிரங்குமரரும்.

(இ-ள்.) பிரமபுத்திரனை தக்கனுக்குப் பிரியமான ஆயிரம் மைந்தர்களும் உயர்ந்த தவமார்க்கத்தினை அநுட்டித்து நின்று அஞ்ஞானமயக்கம் நீக்கியருளுகின்ற சிவபெருமானுடைய நிலைபெற்ற கருணையாற் பெருமைவாய்ந்த வீடுபேற்றை அடைந்தனர்.—எ-று. (ருக)

உங்ஙனநாரதனோதியதுணர்வுறா
விங்ஙனம்வீடுபேறெய்தலுஞ்சிறுவர்க
ளெங்ஙனம்போயினரின்னும்வந்திலரெனா
வங்ஙனஞ்சிறுவிதியயருவானாயினன்.

(இ-ள்.) இங்ஙனம் நாரதன் உபதேசித்ததனை யுணர்ந்து இவ்வாறு வீடுபேற்றை யுறுதலும் இதனை யறியாத தக்கன் என் மைந்தர் எங்குச்சென்றார்கள் இன்னமும் வந்தாரில்லை யென்று அயற்சி யுற்றான்.—எ-று. (ருஉ)

வேறு

போதத்துணர்வாலவர்க்கண்ணுறும்போழ்துதன்னின்
மேதக்கமைந்தர்தமைநாரதன்மெவிமேலா
மோதித்திறமுள்ளனகூறவுணர்ந்துநோற்றுத்
தீதற்றுவீடுபுகுதன்மைதெரிந்ததன்றே.

(இ-ள்.) ஞான திருஷ்டியால் அவர்களை யாராய்ந்த காலத்தில் மேன்மை வாய்ந்த புதல்வர்களை நாரதன் அடைந்து உயர்ந்த சிவஞானமார்க்கமாயுள்ளவைகளை உரைக்க அவர்கள் அவைகளை அறிந்து தவஞ்செய்து குற்றநீங்கி முத்தியடைந்த தன்மைதெரிந்தது.—எ-று. (ருரு)

தெரிகின்றவேலைக்கிளர்கின்றதுசீற்றமுள்ளம்
பரிகின்றதாவிபதைக்கின்றதுபையுண்மாலை
விரிகின்றதம்மாவியர்க்கின்றதுமேனிவிண்ணின்
றிரிகின்றதுகோளிரங்குற்றதுஞாலமெல்லாம்.

(இ-ள்.) தக்கனிவ்வாறு ஞானதிருட்டியா லறிந்தபொழுது அவனிடத்திற் கோபமதிகரித்து உள்ளம் பரிதாபமுற்று ஆவிபதைத்தது. துன்பவரிசை விரிந்தது. மேனிவியர்த்தது. வானத்தினின்றும் நவகோட்களும் விலகியோடின உலகமுழுமையும் இரங்கி நின்றன.—எ-று. (ருச)

தன்பாலகர்தஞ்செயல்கண்டுதளர்ந்துசோரும்
வன்பாலினனாகியதக்கன்வரத்தைவேண்டி
மென்பாலரென்பாலிலதாக்கினனெண்ணமிக்கு
நன்பானுலகத்துழல்வானினிநாளுமென்றான்.

(இ-ள்.) தனது குமாரர்களின் செய்கையைப்பார்த்துத் தளர்வுற்று கொடுந் தன்மையாளனான தக்கன் வரத்தை விரும்பித்தவஞ்செய்த என்மக்களை என்னிடத்தி

வில்லாமற்செய்து நின்ற நாரதன் நினைவே மிகுதியுமுடையவனாய் இனி இந்த நல்ல உலகத்திற் சஞ்சரிப்பானாக என்று சாபமிட்டான்.—எ-று. (ருரு)

மேனாரதன்செய்புணர்ப்புன்னிவெகுண்டுதக்க
னேனுதுசாபநுவன்றேநனிநோற்கமைந்த
ரானுரைநல்கேன்மகப்பெற்றதமையுமென்னு
மானார்தமையேபுரியத்தன்மனம்வலித்தான்.

(இ-ள்) முன்னர் நாரதன் செய்த தந்திரத்தை உத்தேசித்துக் கோபங்கொண்டு தக்கன் பொறுமை கொள்ளாது சாபமிட்டு, இனித்தவம் புரிதற்கு மக்களைப் பெறேன் ஆண்மக்களைப்பெற்றது போதுமென்று பெண்மக்களையே பெறுதற்குத் தன் மனத்தினினைந்தான்.—எ-று. (ருசு)

வேறு.

இருபதின்மேலுமூவரேந்திழைமாரைநல்கிப்
பெருமைகொடக்கன்றன்மன்பிருகுமேவமரீசியென்போன்
கருணைகொள்புலத்தியன்னங்கிராப்புலகன்வசிட்டன்
மிரிவிலத்திரிதீவேள்விசிர்ப்பிதராவுக்கீந்தான்.

(இ-ள்.) பெருமை பொருந்திய தக்கன் இருபத்து மூன்று பெண்களைப் பெற்று அவர்களைத்தருமன், பிருகு, மரீசியென்போன், இரக்கமுடைய புலத்தியன், அங்கிரச, புலகன், வசிட்டன், கெடாத அத்திரி, அக்கினிகாரியத்தினையுடைய சிறந்த பிதரா, என்பவர்களுக்களித்தான்.—எ-று. (ருஎ)

துய்யதோர்சுபுத்திபுத்திசுரசையேதிருதிதுட்டை
செய்யநற்கிரியைகீர்த்திசிரத்தையேயடிலச்சைமேதா
மைவிழிக்கத்திசாந்தைவபுவைமுன்றருமன்வேட்டுப்
பொய்தவிரிருபானேழுபுதல்வரையளித்தான்மன்னோ.

(இ-ள்.) தூய்மைவாய்ந்த சுபுத்தி, புத்தி, சுரசை, திருதி, துட்டை, செவ்விய நல்லகிரியை, கீர்த்தி, சிரத்தை, இலச்சை, மேதா, கரியவிழியினளான கத்தி, சாந்தை வபுவை, என்பாரைத் தருமன் மணந்து சத்தியசந்தரான இருபத்தேழு புதல்வர்களைப் பெற்றான்.—எ-று. மன்-ஓ-அசைகள். (ருஅ)

கேதமில்பிருகுவென்பான்கியாதியைக்கொண்டுபுல்லி
யேதமில்விதாதாத்தாதாவென்றிருசிறாரையீன்று
சீதளவனசங்கொண்டசெந்திருவையுமுன்றந்து
மாதவன்றனக்குநல்கிமாதவத்திருந்தான்மாதோ.

(இ-ள்.) குற்றமற்ற பிருகு வென்பவன் கியாதி யென்பவளை மணந்து கலந்து துன்பமற்ற விதாதா தாதா என்னும் இரண்டு சிறுவர்களைப்பெற்றுக் குளிர்ந்த தாமரை மலரையிடமாகக்கொண்ட திருமகளையும் முன்னரேபெற்றுத் திருமாலுக்குக்கொடுத்துச்சிறந்த தவத்தி லிருந்தான்.—எ-று. (ருக)

தாரணிபுகழ்மரீசிசம்பூதிதன்னைவேட்டாங்
கீரிருபிணுக்களீந்தானிவர்வழிப்பிறந்தார்பல்லோர்
போரியல்புலத்தைவென்றபுலத்தியமுனிவனென்பா
னரிசன்னதியைவேட்டுநன்மகார்பலரைத்தந்தான்.

(இ-ள்.) உலகம் புகழும் மரீசி என்பவன் சம்பூதியை மணந்து நான்கு பெண்களைப் பெற்றான். இந்நால்வர்வழியாகப் பலர்பிறந்தனர். போரிடுகின்ற ஐம்புலங்

ளைவென்ற புலத்திய முனிவனென்பவன் சன்னதியென்னும் பெண்ணை மணந்துநல்ல பலசந்ததியை அளித்தனன்.—எ-று. (௯௦)

அங்கிராமிருதியென்னுமாயிழைதனை மணந்து
பங்கமிலங்கிதிரன்பரதனுமகாரைப்பெற்று
மங்கையர்நால்வர்தம்மைமகிழ்ந்துடனளித்தானன்னோர்
தங்குடிப்பிறந்தமேலைத்தவத்தருமளப்பிலோரால்.

(இ-ள்.) அங்கிராவென்பான் மிருதி யென்பவளை மணந்து குற்றமற்ற அங்கிதிரன் பரதன் என்னும் பிள்ளைகளைப்பெற்று மகிழவுடன் நான்கு பெண்களைப்பெற்றனன் அவர்கள் குடிவழிப்பிறந்த உயர்ந்த தவமுடையாரும் அநேகர்.—எ-று. (௯௧)

பெருமைகொள்புலகனென்போன்பிருதியைக்கொண்டுதத்தாத்
திரிதனைப்பயந்தானன்னோன்சீர்வழிக்கும்பன்போந்தா
னொருமைசேர்வசிட்டனென்போனூற்சையைமணஞ்செய்தாங்கோர்
தெரிவையைநல்கிமைந்தரெழுவரைச்சிறப்பிற்றந்தான்.

(இ-ள்.) பெருமைவாய்ந்த புலகனென்பவன் பிருதி யென்பவளை மணந்து தத்தாத்திரி யென்பானைப்பெற்றான் அத்தத்தாத்திரி வழிகும்பனென்பான் பிறந்தான் ஒருமை வாய்ந்த வசிட்டனென்பவன் ஊற்சை யென்பாளை மணந்து ஒரு பெண்ணைப் பெற்றுப்பின்னர் எழு ஆண்மக்களைப் பெற்றான்.—எ-று. (௯௨)

அத்திரியென்னுமேலோனனசூயைதன்னைவேட்டுச்
சத்திநேத்திரனேதிங்கள்சனிசங்கதானனென்னும்
புத்திரர்தம்மைத்தந்தான்பொங்குதீச்சுவாவைவேட்டு
மெய்த்திறல்படைத்தமைந்தர்மூவரைவிரைவொடீந்தான்.

(இ-ள்.) அத்திரியென்னும் உயர்ந்தோன் அனசூயை என்பாளை மணந்து சத்திநேத்திரன் சந்திரன் சனி சங்கதானனென்னும் பிள்ளைகளைப் பெற்றான். வீசாநின்ற அக்கினி சுவாகையென்பவளை மணந்து சரீர வன்மை வாய்ந்த மூன்று பிள்ளைகளைப் பெற்றான்—எ-று. (௯௩)

கவிபுகழ்கிரதுவானோன்கமைதனைமணத்திற்கூடி
யுவகையின்மூன்றுபாலருதவினன்பிதராவென்போன்
சுவதையென்றிசைக்கநின்றதுடியிடைதன்னைவேட்டுத்
தவலருஞ்சிறப்பின்மேனைதரணிமங்கையரைத்தந்தான்.

(இ-ள்.) கவிந்த புகழினையுடைய கிருதுவென்போன் கமையென்பாளை மணவழியாகக் கலந்து மகிழ்வுடன் மூன்று பிள்ளைகளைப்பெற்றனன் பிதராவென்பவன் சுவதை யென்றுகூற நின்ற துடியிடையாளை மணந்து கெடாத சிறப்பினையுடைய மேனை, தரணியென்னும் பெண்களைப்பெற்றான்.—எ-று. (௯௪)

அந்தநன்மேனைதன்னையார்வமோடிமவான்கொண்டான்
முந்துறுதரணிதன்னைமுறையினன்மேருவேட்டு
மந்திரகிரியைநல்கமற்றதுநோற்றுமுக்க
ணெந்தைதன்னிடத்தென்ஞான்றுமிருந்திடப்பெற்றதன்றே.

(இ-ள்.) அந்த நல்ல மேனையென்பவளை விருப்பத்துடன் இமவானென்பான் மணந்தான் முற்பட்ட தரணியென்பவளை முறைப்படி மேரு மணஞ்செய்து மந்தரகிரியைப்பெற்றான் அம்மந்தர மலைதவஞ்செய்து முக்கண்ணரான எம்பெருமான் தன்னிடத்தி லெப்பொழுதும் இருக்கப்பெற்றது.—எ-று. (௯௫)

விண்ணுயர்மேருப்பின்னர்வேலையென்பவளைநல்கித்
தண்ணுறுகடற்குநல்கச்சரவணியென்னவாங்கோர்
பெண்ணினையனையன்பெற்றுப்பெரும்புகழ்ப்பிராசினப்பே
ரண்ணலுக்குதவவன்னுனையிருமகாரைத்தந்தான்.

(இ-ள்.) வானமளாவிய மேருவானது பின்னர் வேலையென்பவளைப்பெற்றுச் சீதளம்வாய்ந்த வருணற்களிக்க அன்னோன் சரவணி யென்னுமொரு பெண்ணினைப்பெற்று பெருத்த புகழினையுடைய பிராசீனனென்னும் பெருமையிற் சிறந்தானுக் களிக்க அவன் பத்து மைந்தரைப்பெற்றான்.—எ-று. (சுசு)

தக்கன் மகப்பேறுபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கஉஅ.

—-—

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சந்திரசாபப் படலம்.

இன்னபல்கிளைகண்மல்கவிருந்திடுந்தக்கன்பின்னர்த்
துன்னியநாண்மீனத்துட்டொகைபெறுமிருபானேழு
கன்னியர்தம்மைநல்கிக்கடிமணவிதியினீராற்
றன்னிகரில்லாப்பொற்பிற்றண்மதிக்கடவுட்கீந்தான்.

(இ-ள்.) இவ்விதமான பல கிளைகள் பெருக இராநின்ற தக்கன் பின்னர் நெருங்கிய நாண்மீன்களென்னு நட்சத்திரங்களுள் இருபத்தேழென்னுந் தொகையுள்ள பெண்களைப்பெற்றுக் கல்யாணவிதிப்படி தனக்கு நிகரற்ற அழகினனான குளிர்ச்சிவாய்ந்த சந்திரதேவனுக்களித்தான்.— எ-று. (க)

ஈந்தபின்மதியைநோக்கியார்க்குமோர்பெற்றித்தாக
வாய்ந்திடுமார்வமுய்த்துமருவுதிசிலர்பாலன்பிற்
றேய்ந்தொருசிலரையெள்ளிச்சுளிகிற்பாயல்லையென்று
வாய்ந்திவைபுகன்றுதேற்றியணையரோடேகச்செய்தான்.

(இ-ள்.) அங்ஙனங்கொடுத்தபின்னர்ச் சந்திரனைப்பார்த்து அனைவர்க்குமொருதன்மையாகப் பொருந்திய ஆசையைச்செலுத்தி இருக்கக்கடவை, சிலரிடை அன்பிற்பொருந்தி சிலரை இகழ்ந்து கோபிப்பா யல்லையென்று பொருந்துமாறிவைகளைக் கூறித்தெளிவித்து அவர்களுடன் போகுமாறு செய்தனன்—எ-று. (உ)

ஏகியகடவுட்டிங்களிலங்கெழின்மானத்தேறி
மாகநீணெறியிற்போந்துமடந்தையரவரையெல்லா
மோகையான்மேவுந்னியோர்பகற்கொருவர்பாலாய்ப்
போகமாரின்பமாற்றிவைகலும்புணர்ச்சிசெய்தான்.

(இ-ள்) சென்ற சந்திரதேவன் விளங்காநின்ற அழகிய விமானத்திலேறி வானிலுள்ள உயர்ந்த வழியே சென்று மனைவியரான அனைவரையும் விருப்பத்துடன் அணையக்கருதி ஒருதினத்துக்கொருத்தி பக்கல் இன்பபோக மனுபவித்து நாள்தோறும் புணர்ச்சி செய்தனன்.—எ-று. (ங)

இன்னணம்புணர்ச்சிபோற்றியேகியதிங்கட்புத்தேள்
பன்னியரனையர்தம்மிற்பழுதிலாவாரருனும்
பின்னவடானுமாற்றப்பேரெழிலுடையராக
வன்னவர்திறத்துமேலாமார்வமோடணுகலுற்றான்.

(இ-ள்.) இவ்வாறு புணர்ச்சி நடத்திச்சென்ற சந்திரதேவன் அம்மனைவியரிற் குற்றமற்ற கார்த்திகையும், உரோகணியும் மிகவும் பெரிய அழகினையுடையாராக அவர்களிடத்து மிகுந்த ஆசையுடன் பொருந்தி இருந்தான்.—எ-று. (ச)

ஏனையர்தம்பாற்சேரானிருதுவின்வேலைபூத்த
தேனிமிர்சொல்லார்மாட்டுச்சேருறுக்கணவரேபோல்
வானிடைமதியப்புத்தேண்மறுத்தனன் திரியும்வேலை
யானதோர்பான்மைநோக்கியவரெலாமுனிந்துபோனார்.

(இ-ள்.) மற்றை மாதரிடத்து அணையான் இருது காலத்திற் தேன்போலுஞ் சொல்லினை யுடையாரிடத்துச் சேராதகணவரையொப்ப வானத்திற் சந்திரதேவன் மறுத்துத் திரியுங்காலத்தவன் தன்மையைக்கண்டு மற்றை மாதரனைவரும் கோபித்துச் சென்றனர்.—எ-று. (ரு)

போந்தனர்தக்கன்றன்பாற்பொருமியேபொலம்பூட்கொங்கை
யேந்திழைமாதர்தங்கள்கேள்வனதியற்கைகூறக்
காந்தியவுளத்தனகிக்கனன்றவன்கலைகளெல்லாந்
தேய்ந்திலவாகவென்றுதீமொழிச்சாபஞ்செய்தான்.

(இ-ள்.) அழகிய அணிமலிந்த தனபாரத்தினரான அம்மாதர் தக்கனையடைந்து தமது கணவனுடைய தன்மையை உரையா நிற்ப அதுகேட்ட தக்கன் எரியுமுளமுடையனாய்க்கோபித்து அச்சந்திரனுடைய கலைகளனைத்தும் தேய்ந்து இல்லாது போக என்று கொடிய மொழியாற் சாபமிட்டனன்.—எ-று. (சு)

செப்பருந்திருவில்வைகுஞ்சிறுவிதியென்பான்சொற்ற
விப்பெருஞ்சாபந்தன்னாலென்றுமெஞ்சாததிங்க
ளொப்பருங்கலைகள்வைகற்கோரொருகலையாயஃகாப்
பொய்ப்பெருஞ்செல்வம்பெற்றோன்புகழெனக்குறைந்தவன்றே.

(இ-ள்.) உரைத்தற்கரிய செல்வத்திலிருக்கின்ற தக்கன் என்பவன் கூறிய இந்தப்பெரிய சாபத்தால் என்றுங்குறையாத சந்திரனுடைய ஒப்பற்றகலைகள் நாளொன்றுக்கு ஒவ்வொருகலையாய்க்குறைந்து பொய்யாகிய பெரியசெல்வத்தினையுடையான் புகழெனக்குறைந்தன.—எ-று. (எ)

மூன்றுறழைந்துவைகன்முடிந்துழிமதியமென்போ
னன்றதண்கலையின்மூவைந்தழிதலுமவனேயென்னச்
சான்றுரைசெய்தல்போலோர்தண்கலையிருத்தலோடு
மான்றனன்மெலிந்துவெள்கிவானவர்கோனையுற்றான்.

(இ-ள்.) பதினைந்துநாள் சென்றவுடனே சந்திரனென்பான்சிறந்தகுளிர்ந்த கலையிற் பதினைந்துகெடுதலும் அச்சந்திரனே இவனென்று சான்று கூறவிருந்தாற்போல ஒருதண்ணியகலை இருத்தலும் மயங்கிமெலிந்து வெள்கித்தேவராசனை அடைந்தான்.

தக்கனென்பவன்சாபத்தாற்றண்கலையனைத்தும்போகி
யிக்கலையொன்றுநின்றதீதுமின்றிறக்குமென்னின்
மிக்கவென்னியல்புங்குன்றும்வியன்பெயர்தொலையும்யாண்டும்
புக்கதொல்புகழும்போகும்புகல்வகையாகுமன்றே.

(இ-ள்.) தக்கனென்பானிட்ட சாபத்தாற் குளிர்ந்தகலையனைத்து மொழிந்து இந்த ஒருகலைநின்றது இதுவுமின்றழியுமாயின் உயர்ந்த எனது தன்மையுங்குறையும் எனது பெரிய பெயருந்தொலையும் எங்கும் பரவியிருந்த பழயபுகழும் ஒழியும் வசைச்சொல் உண்டாகும்.—எ-று. (கூ)

ஈங்கினிச்செய்வதென்னேவுணர்கிலேனெற்கோர்புந்தி
தீங்கறவுரைத்தியென்னச்செப்பினனிரங்கியேங்கித்
தாங்கரும்பையுள்வேலைசார்தலுந்தழுவியெற்கோர்
பாங்கனையஞ்சலென்னுவிவைசிலபகர்தலுற்றான்.

(இ-ள்.) இனிநானிங்குச் செய்யவேண்டுவதென்னை அறிகிலேன்எனக்கொரு புத்தியைக் குறைவற உரைப்பாயாகவென்று கூறியிரங்கியேங்கித்தாங்குதற்கரிய துன்பக்கடலுள் முழுகுதலும் அவனையணைத்து எனக்கொரு தோழனே அஞ்சாதேயென்றுஇவைசில கூறுவானாயினன்.—எ-று. (க0)

எந்தைவாழ்கயிலைதன்னிலிபமுகன்முதிரையாவுந்
தந்தபேரகடுமங்கைச்சகுலியுநோக்கிநக்கா
யந்தநாளனையான்சீறியாருநிற்காணாராகி
நிந்தைசெய்தகலவேநீசிரிற்றிகழ்தியென்றான்.

(இ-ள்.) எம்பெருமானிருக்குந் திருக்கைலை மலையில் விநாயகப் பெருமானுடைய கடலைமுதலிய உணவுகளைக்கொண்டபெரிய வயிற்றினையும் அழகிய கையிலிருந்த மோதகத்தையும் பார்த்துச் சிரித்தனை அந்த நாளில் அவ்விநாயகப்பெருமான் கோபங்கொண்டு எவரு நின்னைத் தரிசியாமல் நிந்தைசெய்து செல்லாநிற்பச் நீசனைப்போல விளங்கக்கடவையென்று சாபமிட்டனன்.—எ-று. (கக)

என்றவச்சாபந்தன்னலியாவருமிறப்பவெள்ளி
யன்றுதொட்டுனைநோக்காராயகலநீவெள்கிவிண்மேற்
சென்றிலையொடுங்கனுடித்திசைமுகன்முதலோர்வெள்ளிக்
குன்றிடையேகிமுன்னோன்குரைகழல்பணிந்துசொல்வார்.

(இ-ள்.) என்று கூறிய அந்தச் சாபத்தால் யாவரு மிகவும் இகழ்ந்து அன்றுதொட்டுன்னைப் பாராதவர்களாய் அகல நீ வெட்கமுற்று வானிற்செல்லாது ஒடுங்கிக்கிடத்தலைக்கண்டு பிரமன் முதலியவர்கள் வெள்ளிய மலையான கைலாயத்துக்குச் சென்று மூத்தபிள்ளையாரின் முழங்காநின்ற வீரகண்டையணிந்த திருவடிகளை வணங்கி இவ்வாறு கூறினர்கள்.—எ-று: (கஉ)

காண்டகுநினதுமேன்மைகருதிடானிகழ்ந்துமாசு
பூண்டனனதனுற்றிங்கள்பொருமலுற்றொடுங்குமன்னோன்
வேண்டுமிவ்வுலகிற்கெந்தைவிதித்திடுசாபத்தன்மை
யாண்டொருவைகல்போற்றவருள்புரிந்தளித்தியென்றார்.

(இ-ள்.) தெரிசிக்கத்தக்க உன்னுடைய மேன்மையைக்கருதாது இகழ்ந்து சந்திரன் இழிவுற்றனன் அதனால் வருந்தி யொடுங்குகின்றான் அந்தச்சந்திரன் இந்த உலகத்துக்கு வேண்டியவனாக விருக்கின்றான். ஆதலின் எந்தையே நீ விதித்த சாபத்தின் தன்மை ஒருவருடத்துக்கொருமுறை அநுட்டிக்க அருள்செய்து அவனை இரட்சித்தல் வேண்டும் என்றார்கள்.—எ-று. (கங)

ஐங்கரனதனைக்கேளாவவ்வகையருளவெய்யோன்
றிங்களின்முதலாம்பாலிற்செல்லுறுநாலாம்வைகன்
மங்குல்சூழுலகநோக்காமரபினல்வதிந்தாய்மற்றப்
புங்கவற்கந்நாண்மிக்கபூசனைபுரியமேலோர்.

(இ-ள்.) ஐந்து கரங்களையுடைய விநாயகப்பெருமான் அம்மொழியைக் கேட்டு அவ்வாறே ஆகுகவென்றருள்புரியச் சூரியனுடைய மேடவீதியிலுள்ள ஆவணி மாதத்துச் சுக்கிலபட்சத்துச் சதுர்த்தியில் மேகந்தவழுமலையாதியவுடைய வுலகங் களுத்முறையாக அந்நாளிலவ்விநாயகப்பெருமானுக்கு மிகுந்த பூசனை நடக்குமாறிருந்தனை.—எ-று. (கச)

இதுபழியொன்றுநிற்கவின்றுநீதக்கன்றன்னாற்
புதியதோர்குறையும்பெற்றாய்பொலிவொடுதிருவுந்தீர்ந்தாய்
மதியினைமதியதற்றாய்மற்றினிவல்லைசென்று
விதியொடுபகர்திசேயைவேண்டியீதகற்றுமென்றான்.

இடபஞ்சிங்க மிதுனங்கடக மினைய நான்கு மேடவீதி, என்பது பிங்கலம்.

(இ-ள்.) இந்த ஒருபழி நிற்க நீ இன்று தக்கனாற் புதியதொரு குறையும் பெற்றனை அதனாலழகுடன் திருவுமிழந்தனை மதியினையுடைய நீ புத்தியை யிழந்தனை ஆதலின் விரைந்துசென்று பிரமனிட முரைத்தி அவன் மகனிட முரைத்திச் சாபத்தினை ஒழிப்பான்.—எ-று. (கரு)

வச்சிரமெடுத்தசெம்மன்மற்றிவைபுகனுமெல்லை
யிச்செயலினிதுவல்லேயேகுவலவ்வாறென்னு
வச்செனவெழுந்துதிங்களவன்பணிதலைக்கொண்டேகி
முச்சகந்தன்னின்மேலாமுளரியானுலகம்புக்கான்.

(இ-ள்.) வச்சிராயுதந்தாங்கிய கடவுள் இதனை உரைத்தவுடனே இச்செயல் மிகவும் இனியதே விரைவாக அவ்வாறே செல்லுகின்றேனென்று அவ்விந்திரன் பணியைத் தலைமேற்கொண்டு சந்திரன் விரைவாக எழுந்துசென்று மூன்றுலகங்களினு முயர்ந்த பிரமனுலகினை அடைந்தனன்.—எ-று. (கசு)

தாமரையென்னுந்தண்பூந்தவிசிடைத்திகழ்ந்தவண்ணன்
மாமலரடியின்வீழாமாதுலன்வெகுண்டுசொற்ற
திமொழியுணர்த்தியுன்றன்சேயினைத்தெருட்டித்தீயேன்
றேமுறுகவலைமாற்றித்துடைத்தியிச்சாபமென்றான்.

(இ-ள்) கமலமென்னுந் தண்ணியமலராசனத்தில் விளங்காநின்ற பிரமனுடைய சிறந்த திருவடிக்கமலங்களின் வீழ்ந்து மாமனை தக்கன்கோவித்துரைத்ததனையுரைத்து உன்மகனுக்கு குணர்த்தி தீயேன் வருந்தியனுபவிக்குங் கவலையையொழித்து இச்சாபத்தினை நீக்குவாயாக என்று வேண்டிக்கொண்டனன்.—எ-று. ()

அன்னதுமொழிந்ததிங்கட்கம்புயன்மொழிவானீண்டுத்
தன்னுளநெறிப்பாலன்றிச்சார்கிலன்றக்கனென்பா
னென்னுரையிறையுங்கொள்ளான்யானவன்மாட்டுஞ்செல்லேன்
முன்னுளனல்லன்யார்க்குமுதல்வனேயாகினின்றான்.

(இ-ள்.) அதனை யுரைத்த சந்திரனுக்குப்பிரமன் சொல்லுகின்றான் இப்பொழுது தக்கனென்பவன் தனதுமனம்போனவாறே யன்றி வேறுவிதமாக ஒழுகான். எனது மொழியை ஒரு சிறிது மங்கீகரியான் இதன்பொருட்டு யானவனிடத்துக்குப்போகேன் முன்னிருந்த நிலையையுடையனல்லன் இப்பொழுது தன்னை அனைவருக்கு முதல்வனென்று கருதி இருக்கின்றான்.—எ-று. (கஅ)

சொல்லுவபிறவென்வேறுதொல்லைநாள்யானேகூற
வல்லுறழ்கண்டத்தெந்தையரும்பெருந்தன்மையாவு
மொல்லையிலுணர்ந்துபன்னாளுழந்ததோர்தவத்தாலிந்த
வெல்லையிற்றிருவின்வைகியிறையுமங்கவனையெண்ணான்.

(இ-ள்.) வேறென்ன வுரைக்கப்போகின்றேன் முன்னாளில் நானேசொல்ல இருளனைய கண்டத்தினையுடைய எம்பெருமானுடைய அரிய பெரிய தன்மை யனை த்தும் விரைவிலறிந்து பலகாலஞ்செய்த தவத்தினுலிந்த அளவற்ற செல்வத்திலி ந்து இப்பொழு தொருசிறிதும் அச்சிவபெருமானை நினையாதவனுக விருக்கின்றான். (

வேறு.

செக்கரிற்படர்சடைத்தீயின்றேற்றமா
முக்கணுயகனெதிர்மொழிந்துவேண்டலா
மெக்குறையாயினுமெவருமீண்டையிற்
றக்கன்முன்னேருரைசாற்றலாகுமோ.

(இ-ள்.) செவ்வானம்போலும் விரிந்த சடையினையும் தீயனையவண்ணத் தினையும் உடைய மூன்றுகண்ணுளரான சிவபெருமானிட முரைத்து எந்தக்குறை யாயினுங் கேட்கலாமேயன்றி எவருமிப்பொழுது தக்கனெதிரிற் சென்று கூறமுடியு மோ முடியாதே.—எ-று. (உ0)

அண்ணலந்திருவிடையமுந்தியாரையு
மெண்ணலன்செந்நெறியியற்றவோர்கிலன்
கண்ணிலன்மதியிலன்களிப்பினேர்மகன்
மண்ணிடைவிரைவொடும்வழிக்கொண்டாலென.

(இ-ள்.) கண்ணும் புத்தியுமற்ற களிப்பினையுடைய வொருவன் பூமியில்விரை வாக நடந்தாலெனப் பெருமைவாய்ந்த செல்வத்திலமுந்தி எவரையு நினையாதவனுய் நன்மார்க்கத்தினை இயற்ற எண்ணுதவனுய் இருக்கின்றான்.—எ-று. (உக)

களியுறுபெற்றியன்கறுவுசிந்தைய
னளியறுமுகத்தினனருளில்வாய்மையன்
றெளிதருமுணர்விலன்சிதைந்துமேலிவன்
விளிவுறுபொருட்டினிம்மேன்மைபெற்றுளான்.

(இ-ள்.) இத்தக்கன் பின்னர்க்காலத்து அழியும்பொருட்டு களியுறுமனதினை னும் கறுவுசிந்தையனும் தயவற்ற முகத்தினனும் இரக்கமற்ற வாய்மையையுடையவ னும் தெளிந்த உணர்வற்றவனும் ஆகி மேன்மை பெற்றிருக்கின்றான்.—எ-று. (உஉ)

ஈண்டிவன்விளிதலுமின்றியெம்மனோர்
பூண்டநன்னிலைகளும்போக்கல்சிந்தியா
னீண்டசெஞ்சடைமுடிநிமலனன்னவன்
வேண்டியவரமெலாம்விரைவினல்கினன்.

(இ-ள்.) இங்கு இவன் இறத்தலுமில்லாமல் எம்மவர்கள் பொருந்திய நல்ல நிலைகளும் போக்குதலை யெண்ணுராய் நீண்ட செஞ்சடை முடியினையுடைய சிவபெரு மான் அத்தக்கன் விரும்பிய வரமனைத்தினையும் விரைவி லளித்தருளினர்.—எ-று. ()

அன்னதுநிற்கயாமவனைவேண்டுவ
மென்னினுமுனிவுறுவிகழுமெம்மையு
நின்னுறுசாபமுநீக்கலானினிப்
பின்னெருநெறியுளபேசக்கேண்மியா.

(இ-ள்.) அது இருக்க, நாமே அவனைச்சென்று இரந்து கேட்பேமாயினும் கோபித்து எம்மையும் இகழ்ச்சிசெய்வான் நினக்குற்ற சாபத்தையும் ஒழியான் ஆத லின் மற்றொரு மார்க்கமுளது அதனை யுரைக்கின்றேன் கேட்பாயாக.—எ-று. மியா- அசை. (உச)

செய்யனைக்கண்ணுதற்சிவனையெம்மனோர்க்
கையனையடிகளையமலனாகிய
மெய்யனையடைந்துநின்மேனிமாசினை
யொய்யெனவகற்றிலையுணர்விலாய்கொலோ.

(இ-ள்.) நீ செய்ய நிறத்தினரை நெற்றிக்கண்ணுளரை சிவபெருமானை எம்ம னோர்க்குத் தலைவராயுள்ளாரைச் சுவாமியை நின்மலரான உண்மையாளரை அடைந்து நின்னுடற் குற்றத்தினை விரைவாக நீக்கிக்கொண்டாயில்லை சிவபெருமாண்நிறத்தினை எண்ணினு யில்லைகொல்.—எ-று. (உ௫)

ஈதவன்முன்புசென்றிசைக்கநீக்குநின்
பேதுறவனையதுபேசல்வேண்டுமோ
மேதகுமிருளினால்விளங்கிடாதவை
யாதவன்காட்டுதற்கையஞ்செய்வரோ.

(இ-ள்.) இச்சாப வரலாற்றினைச் சிவபெருமானிடஞ் சென்று கூற நீக்கியரு ளுவார் நினது அறியாமையை உரைக்கவும் வேண்டுமோ மிகுதியான இருளினால் விள ங்காத பொருள்களைச் சூரியன் விளக்கிக்காட்டுதற்குச் சந்தேகங் கொள்ளுவார்களோ?

சிறுரெனநமையெலாஞ்சிறப்பினல்கிய
விறல்புரைசடைமுடியெந்தைக்கன்பரா
யுறுதவர்தம்மையுமுற்றபான்மையர்
பெறுதவோர்பொருளையும்பேசவல்லமோ.

(இ-ள்.) நம்மனைவரையும் மைந்தரையொப்பச் சிறப்பாகவளித்த இருல் போ லுஞ் சடைமுடியாளரான எம்பெருமானுக்கன்பராய் உறுதாரையும் அன்பராயடைந் தார் அடையாத பொருளையும் உரைக்க வல்லுநராவமோ ? -எ-று. (உஎ)

தெருளொடுதன்னடிசேருந்தொண்டினோர்
பருவரலொழித்திடும்பான்மைக்கல்லவோ
விரிசுடர்கெழுவியவெள்ளியோங்கலி
னருளுருவெய்தியேயமலன்மேயதே.

(இ-ள்.) அறிவுடனே தமது திருவடிகளையடையுந் தொண்டினையுடையாரின் துன்பத்தினை ஒழிக்குந் தன்மைக்கன்றோ விரிந்த சுடர் நெருங்கிய வெள்ளிமலையில் அருளுக்கொண்டு நின்மலரான சிவபெருமான் எழுந்தருளி இருக்கின்றனர்.—எ—று.

இடுக்கணங்கொருவர்மாட்டெய்திடினெந்தைதன்
னடித்துணையரணமென்றடைவரேயெனிற்
றுடைத்தவர்வினைகளுந்தொலைக்குமிப்பொருள்
பிடித்திலையாற்றவும்பேதைநீரைநீ.

(இ-ள்.) ஒருவரிடத்துத் துன்பமுண்டாயின் எமது தந்தையாரான சிவபெரு மானுடைய அடித்துணைகளை அடைக்கலம் என்றடைவார்களேயானால் இடுக்கணையு மொழித்து அவர் வினைகளையுந் தொலைத்தருளுவர். மிகவும் பேதையான நீ இப்பொ ருளினை உறுதியெனப் பிடித்தாயில்லை.-எ-று. (உக)

அந்தியஞ்சடைமுடியண்ணறன்னடி
சிந்தைசெய்தடைந்திடுசிறுவன்மேல்வரு
வெந்திறனடுவனைவிலக்கியன்றுமுன்
வந்தருள்புரிந்ததுமறந்திபோலுமால்.

(இ-ள்.) செவ்வானம் பொருந்திய அந்திக்காலம்போல விளங்குஞ் சடைமுடியினையுந் திருமேனியையுமுடைய சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தனையிற் கொண்டிருந்த மார்க்கண்டன்மீது வந்த கொடிய செயலினையுடைய எமனைத்தடுத்து அன்று அவனெதிரே வந்ததனை மதியே மறந்தனைபோலும்.—எ-று. (ரு௦)

விஞ்சியதிரைகெழுவேலைதன்வயி
னஞ்சமன்றெழுதலுநடுங்கிநாமவன்
றஞ்செனவடியிணைசாரத்தான்மிசைந்
தஞ்சலென்றருளியதயர்க்கலாகுமோ.

(இ-ள்.) மிக்க திரைகளோடு விளங்குங்கடலில் அன்று விடந்தோன்றுதலும் நாம் அச்சிவபெருமான் திருவடிகளை யடைக்கலமெனவடையத் தாம் அதனை உண்டு அஞ்சாதீர் என்றுகூறி யதனை மறத்தல் கூடுமோ.—எ-று. (ருக)

வார்த்தனவுமையவண்மலர்க்கைத்தோன்றியே
யார்த்தெழுகங்கையிவ்வகிலமெங்கணும்
போர்த்திடவெருவியாம்போற்றச்சென்னியிற்
சேர்த்தியன்றளித்ததுந்தேற்றிலாய்கொலோ.

(இ-ள்.) கச்சணிந்தகன தனத்திதினையுடைய உமாதேவியின் மலர்போலுங் கரத்திலுண்டாகி ஆரவாரித்தெழுந்த கங்கையானது இவ்வுலகமுழுமையும் மூடிக்கொள்ள அதற்குப்பயந்து நாம் துதிக்க அதனைத்தலையில் வைத்து அந்நாளில் நம்மைக்காத்ததுந் தெளிந்தாயில்லையோ.—எ-று. (ருஉ)

அளப்பருங்குணத்தினெம்மண்ணலன்பராற்
கொளப்படும்பேரருள்கூற்றின்பாலதோ
கிளத்திடவரியதேற்கேடில்பல்பக
லுரைப்பன்னினைமுலவிற்றுருகுமோ.

(இ-ள்.) அளவிடுதற்கரிய குணத்தினையுடைய வெமது சுவாமி அன்பர்களாற் கொள்ளப்பட்ட பேருளின்தன்மை சொல்லளவுட்பட்டதோ சொல்லமுடியாதாயினும் கெடாதபலதினம் மனதிற்பொருந்த நினைத்தாலும் முடிந்ததாகுமோ. ஆகாதென்றபடி.—எ-று. (ருரு)

ஆதலினீண்டுநின்றாதிநாயகன்
காதலின்மேயவக்கயிலையுற்றவன்
பாதமிங்கரணெனப்பற்றிவல்லைநின்
பேதுறலொழிமதிபெருந்தண்மாமதி.

(இ-ள்.) ஆதலா லிங்கு நின்றும் ஆதிநாயகரான சிவபெருமான் விருப்பத்துடன் வாழுந்திருக்கைலை மலையையடைந்து அவரது திருவடிகளை அடைக்கலமாக அடைந்து விரைவாகப் பெரிய தண்ணிய சிறந்த மதியமே நினது துன்பத்தினை நீக்கிக்கொள்ளுவாயாக.—எ-று. ஒருமதி-அசை. (ருச)

என்றலுமயன்பதத்திறைஞ்சியெம்பிரா
னன்றிவைபுகன்றனைஞானமூர்த்திபாற்
சென்றடைவேனெனச்செப்பிவெள்ளியங்
குன்றினையணைந்துபொற்கோயின்மேயினன்.

(இ-ள்.) பிரமனிவ்வாறு கூறியவுடனே எம்பெருமானே! நல்லதை உரைத்தனையென அவன் கால்களை வணங்கி அறிவுருவரான சிவபெருமானிடஞ் செல்கின்றேனென்று கூறி அழகிய கைலாயமான வெள்ளிமலையை கடைந்து இறைவனெழுந்தருளி இருக்கும் பொன்னாலயத்துட் சென்றான்.—எ-று. (ருரு)

தன்னுறுபருவரல்சாற்றக்காவலோன்
மன்னருணிலையொடுமரபினுய்த்திடப்
பொன்னவிர்செஞ்சடைப்புனிதநாயகன்
முன்னுறவணங்கினன்முடிவிலன்பினுல.

(இ-ள்.) தனக்குற்ற குற்றத்தினை உரைக்கவாசற் காவலன் இறைவனுடைய கட்டளையின் வண்ணம் முறைப்படி உள்ளனுப்பக் கெடாத அன்பினுல் உட்சென்று பொன்னென விளங்குகின்ற செவ்விய சடையினையுடைய நின்மலரான சிவபெருமானெதிரே விழுந்து வணங்கினுன்.—எ-று. (௩௬)

மேற்றிகழுபநிடவேதவாய்மையாற்
போற்றனும்வந்ததென்புகறியாலெனச்
சாற்றினனுயிர்தொறுந்தங்கித்தொல்வினை
தேற்றுபுவினைமுறைசெலுத்துந்தொன்மையோன்.

(இ-ள்.) உயர்ந்து விளங்காநின்ற உபநிடதத்தினையுடைய வேதங்களின் சத்தியவசனங்களாற் துதித்தலும் இறைவனுர் எங்குவந்தனை உரைத்தியென, உயிர்தொறும் பொருந்திய பழவினைகளைஉணர்த்தி இருவினைகளை முறையே நடத்தும்புராதனரான சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளினுர்.—எ-று. (௩௭)

நங்களையலைத்திடுநண்ணலன்றனை
யிங்கிவணடுதுமென்றிருட்கள்சூழ்ந்தென
மங்குலினிறங்கொடுவடிவம்வேறதாந்
திங்கணின்றெம்பிராற்கினையசெப்புவான்

(இ-ள்.) நம்மைவருத்துகின்ற பகைவனை இங்கு இவ்விடத்திற் கொல்வோமென இருட்குழாஞ் சூழந்தாங்கு கருமைபொருந்தி வடிவம் வேறுபட்ட சந்திரன் எம்பிரானெதிரில் நின்று இவ்வாறு கூறத்தொடங்கினுன்.—எ-று. (௩௮)

வன்றிறற்றக்கன்முன்வழங்குதீச்சொலாற்
றன்றிருங்கலையெலாந்தொலைந்துபோந்திட
வொன்றிவணிருந்ததாலுதுவுந்தேய்ந்திடு
மின்றினிவினையினேனியாதுசெய்வதே.

(இ-ள்.) வலியதிறலியினையுடைய தக்கனுரைத்த கொடுமொழியால் நெருங்கிய சிறந்தகலையனைத்தும் அழிந்துசெல்ல ஒரு கலை இருந்தது இதுவுமின்று தேய்ந்தொழியும் இனிப்பாவியான யான் என்னசெய்யப்போகின்றேன்.—எ-று. (௩௯)

எஞ்சியவிக்கலையிருக்கத்தேய்தரு
விஞ்சியகலையெலாமேவநல்குதி
தஞ்சநின்னலதிலையென்னத்தண்மதி
யஞ்சலையென்றனனருளினுழியான்,

(இ-ள்.) மிகுந்துநின்ற இவ்வொருகலை இருக்கத்தேய்ந்தொழிந்த மற்றைக் கலையனைத்தும் பொருந்த அருள்புரிதல் வேண்டும் உன்னையன்றி வேறுதஞ்சமெனக்கில்லை என்று கூறுதலும் கருணைக்கடலான சிவபெருமான் தண்ணியமதியே அஞ்சாதே என்று திருவாய் மலர்ந்தருளினுர்.—எ-று. (௪௦)

தீர்ந்தனவன்றியேதிங்கடன்னிடை
யார்ந்திடுகலையினையங்கையாற்கொளா
வார்நதிடுசடைமிசைவயங்கச்சேர்த்தினுன்
சார்ந்திலதவ்வழித்தக்கன்சாபமே.

(இ-ள்.) சந்திரனிடத்திலிருந்து ஒழிந்துபோனதுபோக எஞ்சிநின்ற ஒருகலையினை அழகிய திருக்கரத்தாலெடுத்துத் தொங்கி விளங்காநின்ற சடையின்மீது விளங்குமாறணிந்தருளினார் அவ்விடத்துக்குத் தக்கன்சாபஞ்சென்றடையவில்லை.—எ-று.

மேக்குயர்தலைவராம்விண்ணுளோர்கள்பாற்
றுக்குறுவினையையுஞ்சாபம்யாவையு
நீக்கியதலைவனிந்நிலவின்சாபத்தைப்
போக்கினனென்பதுபுகழின்பாலதோ.

(இ-ள்.) மிகவும் உயர்ந்ததலைவர்களான தேவர்களிடம் பொருந்திய தீவினைகளையும் சாபமனைத்தையும்நீக்கியருளிய தலைவரான சிவபெருமான் இச்சந்திரனுடைய சாபத்தை நீக்கியருளினாரென்று கூறுதல் கீர்த்தியின்பாற் பட்டதோ.—எ-று. (௪௨)

நெற்றியங்கண்ணுடைநிமலத்தெம்பிரா
னுற்றவர்க்கருள்புரிகின்றவுண்மையைத்
தெற்றெனவுணர்த்தல்போற்றிங்களின்கலை
கற்றையஞ்சடைமிசைக்கவின்றுபூத்ததே.

(இ-ள்.) நெற்றிக்கண்ணினையுடைய நின்மலரான எம்பெருமான் அடைந்தாருக்கருள்புரிகின்றவுண்மையை விரைவாக விளக்குதல்போல சந்திரகலையானது அழகியசடைக்கற்றையின்மீது அழகுகாட்டி நிலவுபூத்தது.—எ-று. (௪௩)

வேறு.

எந்தையவ்வழிமதியினைநோக்கிநீயாதுஞ்
சிந்தைசெய்திடேலெம்முடிச்சேர்த்தியசிறப்பா
லந்தமில்லையிக்கலையிவணிருந்திடுமதனால்
வந்துதோன்றுநின்கலையெலாநாடொறுமரபால்.

(இ-ள்.) எமதுதந்தையாரான சிவபெருமான் அப்பொழுதுசந்திரனைப்பார்த்துநீ ஒன்றும் எண்ணாதே நினதுகலையை எமது முடியிற் சேர்த்திய சிறப்பினால் அழியாமலிக்கலை இவ்விடத்திலிருக்கும் அதனால் நின்கலையனைத்தும் முறைப்படி நாள்தோறும் வந்து தோன்றாநிற்கும்.—எ-று. (௪௪)

நின்னதொல்கலையைந்துமுப்பகலிடைநிரம்பிப்
பின்னரவ்வழிதேய்ந்துவந்தோர்கலைபிரியா
தின்னபான்மையேநிகழுமெக்காலமுமென்றான்
முன்னையாவிதோறிருந்தெலாமியற்றியமுதல்வன்.

(இ-ள்) பழய உயிர்கடோறுமிருந்தனைத்துஞ் செய்யுஞ் சிவபெருமான்சந்திரனைப் பார்த்து நினதுபழயகலைகள் பதினைந்து தினங்களுள் நிரம்பிப்பின்னர் வளர்ந்தவண்ணமே குறைந்துவந்து ஒருகலைநின்று இவ்வண்ணமே என்று நடைபெறுமென்றுதிருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௪௫)

முதல்வனிவ்வகையருள்புரிந்திடுதலுமுளரிப்
பதயுகங்களில்வணங்கினன்விடைகொடுபடரா
மதியவானவனுலகடைந்துதொன்மரபிற்
கதிகொள்செய்வினைபுரிந்தனன்வளர்ந்தனகலையே.

(இ-ள்.) முதல்வரான சிவபெருமான் இவ்வாறருள் புரிதலும் அவரது கமலசரணயுகளங்களில் வணங்கி விடைகொண்டுசென்று சந்திரன் தனதுலகினையடைந்து பழயமுறைப்படி சஞ்சரித்தலாகிய தனது தொழிலினைச்செய்தனன் அப்பொழுது குறைந்த கலைகள் வளர்ந்தன.—எ-று. (௪௬)

ஒன்றுவைகலுக்கோர்கலையாய்நிறைந்தோங்கி
நின்றதொன்னிலைநிரம்பியேபின்னுறநெறியே
சென்றுதேய்ந்துவந்தொருகலைசிதைவுறாதாகி
யென்றுமாவதுமழிவதும்போன்றனனிரவோன்.

(இ-ள்.) சந்திரன் ஒருதினத்துக்கு ஒரு கலையாக நிறைந்துயர்ந்து முன்னின்றபழைய நிலையில் நிரம்புதலுற்றுப் பின்வர் முறைப்படி சென்று தேய்வுற்று ஒருகலை அழியாததாகி என்றும் பிறத்தலும் இறத்தலும் போலவாயினன்.—எ-று. (சஎ)

செங்கணான்முதலனைவருமம்மதித்திறத்தை
யங்கணுடியேதக்கனுலிவன்கலையனைத்து
மங்குமாறுமேல்வளர்வதுமியற்கையாவகுத்தா
னெங்கணாயகன்செய்கையாரறிந்தவரென்றார்.

(இ-ள்.) செவ்விய கண்ணனான திருமால் முதலிய அனைவரும் அச்சந்திரனுடைய தன்மையை அவ்விடத்திற் பார்த்துத் தக்கனால்இவனுடைய கலையனைத்தும் கெடவும் பின்னர் அவைவளரவும் இயற்கையாக வமைத்தனர் எமது தலைவரான சிவபெருமானுடைய தன்மையை எவரறிந்தவர் என்று கூறினார்கள்.—எ-று. (சஅ)

செக்கர்வானமேற்கிளர்ந்தெழுதிங்களின்செயலை
யொக்கநாடியசிந்தையாந்தூதினாலுணர்ந்து
தக்கனென்பவன்கனன்றியானுரைத்தசாபத்தை
நக்கனேகொலாந்தடுக்கவல்லானெனநகைத்தான்.

(இ-ள்.) செவ்வானத்தின்மீது விளங்கியெழாநின்ற சந்திரனுடைய தன்மையை ஆலோசனையாகிய தூதினால் முற்றுமறிந்து தக்கனென்பவன் கோபித்து யானுரைத்த சாபத்தை நக்கனேகொல் தடுக்கவல்லவன் என்று கூறி நகைத்தான்.—எ-று.

எந்தைதன்றந்தையாவருமருகனுக்கியான்முன்
றந்தவாய்மையைவிலக்கிலர்விலக்கவென்றன்முன்
வந்தும்வேண்டிலரச்சமுற்றிருந்தனர்மற்றத்
தந்தைதாயிலாவொருவனுமென்னுரைதடுப்பான்.

(இ-ள்.) மருகனாகிய சந்திரனுக்குள்ள கலைகள் தேய்ந்திறுகவென யானிட்ட சாபத்தினை என்றந்தையான பிரமனும் அவன் தந்தையான திருமாலும் மற்றெவருந் தடுத்திலர் சாபத்தினை ஒழிக்கும் வண்ணம் என்னெதிரிலடைந்தும் வேண்டினாரல்லர் அச்சமுற்றிருந்தனர். அங்ஙனமாகவும் தந்தையும் தாயுமில்லாதவனோ எனது சொல்லைத் தடைசெய்பவன்.—எ-று. (கூ0)

நன்றுநன்றியாம்பரம்பொருணான்முகன்முதலாந்
துன்றுதொல்லுயிர்யாவையுமழித்துமைந்தொழிலு
நின்றுநாம்புரிகின்றனமெங்கணுநீங்கா
மென்றுதன்மனத்தகந்தையுற்றான்கொலோவீசன்

(இ-ள்.) நாமே பரம்பொருள் பிரமன்முதலிய நெருங்கிய பழயஉயிரனைத்தையும் சங்கரித்துப் பின்னர் ஐந்தொழிலையும் நாமேசெய்கின்றோம் எங்குநீங்காதிருக்கின்றோம் என்று தன் மனத்திலகங்காரங் கொண்டானோ அவ்வீசனென்பான் நன்று நன்று.—எ-று. (கூக)

அன்னதன்றியேயின்னமொன்றுண்டுபாரகத்திற்
றன்னையேநிகர்தக்கனுநோற்றிடுதவத்தா
னென்னலித்திருவுதவினமென்பதைநினைந்தோ
வென்னதாணையையிகழ்ந்தனனித்திறமிழைத்தான்.

(இ-ள்.) அஃதன்றியும் இன்னமொன்றுளது இவ்வுலகத்திற் றனக்குத்தானே நிகரான தக்கனென்பவனும் செய்ததவத்தினல் நேற்றுச்செல்வமவனுக் களித்தேமென்பதைக் கருதியோ எனது ஆணையை இகழ்ந்து இவ்வாறுசெய்தனன்.—எ-று

செய்யதோர்பரம்பொருளியாமென்பதுதெளிந்தும்
வையமீதிலித்திருவெலாம்பெற்றுநம்மலர்த்தாள்
கையினுற்றெழானென்றுகொன்முன்னியான்கழறும்
வெய்யவாய்மையைவிலக்கினன்சிவனெனவெகுண்டான்.

(இ-ள்.) செவ்விய ஒப்பற்ற பரம்பொருள் நாமென்பது தெளிந்தும் உலகத்திலிச்செல்வமனைத்து நம்மிடத்திலேயேபெற்றும் நமது மலரடிகளைக் கையினுல்வணங்கான் என்று தானே நானுரைத்த கொடியசாபத்தினைச் சிவன் விலக்கினன் என்று கோபமுற்றனன்.—எ-று. (௫௩)

தகவுமீரமுநீங்கியபுரைநெறித்தக்கன்
புகனும்வாய்மையைத்தேர்ந்துழிப்புலகனென்றுரைப்போ
னிகரில்கண்ணுதற்கடவுளையெள்ளலைநின்னை
யிகழ்வர்யாவருமெஞ்சுமுன்வெறுக்கையுமென்றான்.

(இ-ள்.) தகுதியும் இரக்கமும் விடுத்த குற்றமான மார்க்கத்தினையுடைய தக்கனென்பவன் கூறும் மொழிகளையுணர்ந்தவுடனே புலகனென்று கூறு முனிவன் ஒப்பற்ற கண்ணுதற் கடவுளை இகழாதே இகழின் நின்னை அனைவரும் இகழுவார்கள் உன் செல்வமுங்கெடும் என்று கூறினன்.—எ-று. (௫௪)

என்றவன்முகநோக்கியேதவத்தினலென்க
ணின்றவித்திருநீங்குமோநெடியமான்முதலோ
ரென்றுமென்பணிமறுத்திலரெள்ளுவதுண்டோ
நன்றுநன்றுநின்னுணர்வெனச்சிறுவிதிநக்கான்.

(இ-ள்) என்று கூறிய புலகனுடைய முகத்தைப்பார்த்து தவஞ்செய்ததால் என்னிடத்தில் நிலைபெற்று நின்ற இச்செல்வம்போகுமோ நெடியமால் முதலானவர்களும் எனது கட்டளை முதலியவற்றையும் மறுத்திலர் இகழுவதுமுளதோ நினதுணர்ச்சி நன்றாயிருக்கின்றது நன்றாயிருக்கின்றது என்று கூறித் தக்கன் சிரித்தனன்.-எ-று.

முறுவலித்திடுதக்கனைக்கண்ணுறீஇமுனிவன்
பிறரிழிப்புரைகூடுறுதென்னினும்பெருஞ்சீர்
குறைவுபெற்றிடாதென்னினுநினக்கருள்கொடுத்த
விறைவனைப்பழித்திடுவதுதகுவதோவென்றான்.

(இ-ள்.) இகழ்ச்சிக்குறியாக நகைத்த தக்கனென்பவனைப்பார்த்துப் புலக முனிவன் நின்மாட்டு அயலாரின் இழிமொழி சேராதாயினும் பெரிய செல்வம் குறைவுபடாதாயினும் நினக்கருளளித்த இறைவனைப்பழித்திடுவது தகுதியோ என்று கேட்டனன்.—எ-று. (௫௬)

புலகனென்றிடுமுனிவரனிணையனபுகல
விலகுதீநெறியாற்றியசிறுவிதிவினவி
யலகிலாததன்னுற்றனும்பெருந்திருவனைத்து
முலகினீங்குவான்பெருமிதங்கொண்டிவையுரைப்பான்.

(இ-ள்.) புலகனென்றபெயருள்ள முனிசிரேட்டனிவ்வாறு கூற விலங்கா நின்ற தீயமார்க்கத்தினை அநுட்டிக்கின்றதக்கன் அவைகளைக்கேட்டுக் கெடாதனது

வன்மையும் பெரிய செல்வ முழுமையும் உலகிற் கெடுமாறு இறுமாப்புக்கொண்டிவை களை யுரைத்தனன்.—எ-று. (டுஎ)

நல்லாரிடைப் பொருந்தாதகலு நெறியாதலிற்தீ நெறியை விலகுதீநெறி என்றார்.

நோற்றுமுன்னியான்பெற்றவித்திருநுகர்ந்திடுமுன்
மாற்றுவானலன்செய்வினைமுறையலால்வலிதி
னேற்றமாகவொன்றிழைக்கலனுதலாலென்பா
லாற்றலாலரன்செய்கின்றதென்னெனவறைந்தான்.

(இ-ள்.) யான் தவஞ்செய்து முன்னர்ப்பெற்ற இச்செல்வத்தினை அநுபவித்த தற்கு முன்னர் நீக்குவானலன் ஒருவன் கன்மத்துக்கேற்ற முறைப்படியன்றி அதிகமாக ஒன்றுஞ் செய்யான் ஆதலால் என்னிடத்தில் வன்மையால் அரன்செய்வது என்னை என்று கூறினான்.—எ-று. (டுஅ)

அறைதலோடுமெப்புலகனென்றுரைப்பவனனைத்தே
யுறுதியாயினுமீசனையிகழ்ந்தவருய்யார்
மறையெலாமவைசொற்றதுமற்றவன்றன்னை
யிறையுமெள்ளலைமனங்கொடுபரவுதியினிநீ.

(இ-ள்.) இவ்வாறு கூறியவுடனே அப்புலகனென்று கூறப்படு முனிவன் நீ சொன்னவையே உறுதியாயினும் சிவபெருமானை இகழ்ந்தவர்கள் உய்யமாட்டார்கள் வேதங்களனைத்தும் அவைகளை யுரைத்தன ஆதலின் அச்சிவபெருமானைச் சிறிதும் இகழாதே இனி நீ அப்பெருமானடி மலர்களை மனத்திற்கொண்டு துதிப்பாயாக என்று கூறினான்.—எ-று. (டுகூ)

தன்னடைந்தவராகுலமாற்றியேதகவா
லென்னதோர்பொருள்வெஃகினுமீகின்றதியற்கை
யன்னவற்கதுமதிதெரிந்தடைதலுமவன்பா
னின்னினுற்றசாபத்தினைநீக்கினனெறியால்.

(இ-ள்.) தன்னை அடைந்தவர்களின் துன்பத்தினை யொழித்து, முறைப்படி எந்த ஒரு பொருளை விரும்பினாலும் கொடுத்த லச்சிவபெருமானுக்கியற்கை அதனைச் சந்திரனறிந்தடைதலும் அவனிடத்து நின்றுற் சென்று பொருந்திய சாபத்தினை முறைமையாக நீக்கினன்.—எ-று. (சுo)

கற்றைவான்கலைநிறைந்தபின்முன்னநீகனன்று
சொற்றவாய்மையுநிறுவினனுடொறுஞ்சுருங்கச்
செற்றமென்னினித்திங்கணின்மருகனச்சிவனும்
பெற்றமூர்தியுமம்முறையாவனுற்பின்னுள்.

(இ-ள்.) கற்றையாயும் உயர்வாயும் உள்ள கலைகள் நிறைந்தபின்னர் முன்னர் நீ கோபித்துரைத்த சாபமொழியையும் நிலைக்கச்செய்தனன். வளர்ந்த கலைகளைமீட்டுந் தேயச்செய்து உறுதிப்படுத்தினான் இனி கோபமெதற்காக சந்திரனே நினது மருகன் இடபத்தினைவாகனமாகவுடைய சிவனும் பின்னால் நினக்குமருகனேயாகப்போகிறான்.

என்னவித்திறமொழிதலுஞ்சினமகன்றிமையோ
ரன்னமூர்த்தியோன்யாவரும்புகழ்தரவனையான்
பன்னெடும்பகலரசின்வீற்றிருந்தனன்பரையாங்
கன்னிமற்றவன்மகண்மையாய்வருதல்கட்டுரைப்பாம்.

(இ-ள்.) என்றிவ்வண்ணம் உரைத்தலும் கோபநீங்கித் தேவரும் அன்னவாக னனான பிரமனும் புகழாநிற்ப அத்தக்கன் பல நெடுங்காலம் அரசுமுறையில் வீற்றிருந் தனன் பரையாகிய கன்னி அத்தக்கனுடைய மகளாய் வருதலைக்கூறுவாம்—எ-று.

சந்திரசாபப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம். ககo.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உமைகயிலை நீங்குபடலம்.

கமலமூர்த்தியுங்கண்ணனுங்காண்கிலா
வமலமேனியையன்பினர்காணுற
நிமலமாகியநீள்கயிலாயமேல்
விமலநாயகன்வீற்றிருந்தானரோ.

(இ-ள்.) பிரமதேவனுந் திருமாலும் காணாத அமலமான அருட்டிருமேனியை அன்பினையுடையார் தரிசிக்கும் வண்ணம் நிமலமான நீண்ட கைலாய மலையின்மீது விமல நாயகரான சிவபெருமான் எழுந்தருளி இருந்தனர்.—எ-று. (க)

வீற்றிருந்தவன்மெல்லடிகைதொழூஉப்
போற்றியுன்றன்பொருவருமெய்ம்மையைச்
சாற்றுவாயெனச்சங்கரிவேண்டலு
மாற்றவன்புசெய்தாங்கருள்செய்குவான்.

(இ-ள்.) உமாதேவியார் அங்ஙனமெழுந்தருளி இருந்த சிவபெருமானுடைய பொன்னடிகளை வணங்கித்துதித்து உனது ஒப்பற்ற உண்மை நிலையை உரைப்பாயாக என்று வேண்டிக்கொள்ளுதலும் அவ்வம்பிகையின்மீது மிகுந்த அன்புவைத்து உரைக்கத்தொடங்கினர்.—எ-று. (உ)

வேறு.

உருவொடுகுணஞ்செயலொன்றுமின்றியே
நிருமலமாய்ச்சிவனிறைந்துநின்றதும்
பரவியவுயிர்த்தொகைப்பந்தநீக்குவா
னொருதனிச்சத்தியாலுன்னலுற்றதும்.

(இ-ள்.) உருவமுங் குணமுஞ் செயலுமாதிய எவையும் இல்லாமல் நிருமலமாய்ச் சிவபெருமான் நிறைந்து நின்ற தன்மையும் விரிந்து கிடக்கும் உயிர்த்தொகைகளின் பந்தங்களை யொழித்தற்கு ஒப்பற்ற ஏகசத்தியால் எண்ணப்பட்டதும்.—எ-று.
இதுமுதல் ஆறுபாடல்கள் குளகம். (ஙு)

ஐந்தியற்சத்திகளாயினோர்தமைத்
தந்ததுமருவுருத்தாங்கியவ்வழிச்
சிந்தனையருச்சனைசெய்தியாவரு
முய்ந்திடச்சதாசிவவுருவைந்துற்றதும்.

(இ-ள்.) ஐவகையான சத்திகளை உண்டாக்கியதும் அருவுருவந்தாங்கியதும் அம்முறையே நினைத்து அருச்சித்து அனைவருமுய்தற்குச் சதாசிவ உருவைந்தெய்தியதும்.—எ-று. (ச)

இருபதின்மேலுமைந்தீசன்கேவல
வுருவமதாகியேயுறைந்தபெற்றியும்
விரவியகுடிலையின்விளைவுசெய்துபின்
னருள்புரிமூர்த்திகளாயபேதமும்.

(இ-ள்.) ஈசன் இருபத்தைந்து கேவலவுருவமாக விருத்தலும் பொருந்திய …டிலையின் வழியுண்டாக்கிப் பின்னர் அருள்செய்கின்ற மூர்த்திகளாய பேதங்களும்.

முந்தியமாயைகண்மூலமாகவே
யந்தமிறத்துவமாறுடாறுமுன்
வந்திடவளித்ததுமரபினைந்தொழில்
சிந்தைகொள்கருணையானடாத்துஞ்செய்கையும்.

(இ-ள்.) முற்பட்ட மாயைகளை முதலாகக்கொண்டு அழிவற்ற முப்பத்தாறு …த்துவங்கள் தோன்றுமாறு செய்ததும் முறைப்படி பஞ்சகிருத்தியங்களைத் திருவுளத் …ற் பொருந்திய கருணையால் நடத்துகின்ற செயலும்.—எ-று. (சு)

விதித்திடுமூவகைவியனுயிர்த்தொகை
கதித்திடுதத்துவக்கணங்களங்குளா
ருதித்திடுமுறைமையினெடுங்கச்செய்துதான்
மதித்தொருதன்மையாய்மன்னிநிற்பதும்.

(இ-ள்.) ஏற்படுத்தப்பட்ட மூன்றுவகையான பெரிய உயிர்த்தொகைகளும் …கிருதியான தத்துவக்கூட்டங்களும் அக்கூட்டத்துட்பொருந்திய கணங்களாக அங்குள் …ளவர்களும் ஆக அங்குள்ளவர்கள் தோன்றிய முறைப்படி ஒடுங்கச்செய்து தான் ஒரு …தன்மையாகவே மதித்துநிற்பதும்.—எ-று. (எ)

ஆனதன்னியற்கைகளனைத்துங்கண்ணுதல்
வானவனுகமமறையின்வாய்மையான்
மேனிகழ்தொகைவகைவிரியதாகவே
தானருள்புரிந்தனன்றலைவிகேட்கவே.

(இ-ள்.) இவ்வாறாகிய தமதியற்கைகளனைத்தையும் நெற்றிக்கண்ணுளரான சிவபெருமான் வேதாகமங்களிலுரைக்கும் உண்மையாகத் தலைவியரான உமாதேவியார் கேட்கும்வண்ணம் முன்னறிவ்வாறே தொகையாகவும் வகையாகவும் விரியாகவும் உரைத்தருளினர்.—எ-று. (அ)

சுந்தரியிவ்வகையுணர்ந்துதோமிலா
வெந்தைநிற்குருவிலையென்றிபின்னுற
வைந்தொடுபலவுருவடைந்ததென்னெனக்
கந்தனையருளுவான்கழறன்மேயினன்.

(இ-ள்.) உமாதேவியார் இவைகளைக்கேட்டருளிக் குற்றமற்ற வெந்தையே நினக்குருவமே இல்லையென்றனை அங்ஙனமாகவும் ஐந்துருவுடன் பலவுருவடைந்த தென்னை என்று வினவினள்; அதற்குக் கந்தக்கடவுளை நெற்றிவிழி வழியருளுஞ் சிவ பெருமான் திருவாய்மலர்ந்தருளுவாராயினர்.—எ-று. (கூ)

உருவிலைதமக்கெனவொன்றுநம்வயி
னருளுருவவையெலாமென்னவன்னதோர்
பொருளெனவுன்னியேபுவனமீன்றவள்
பெருமகிழ்வெய்தியிப்பெற்றிகூறினள்.

(இ-ள்.) நமக்குருவமில்லையென்றே அறிதி நீ கூறிய அவ்வுருவங்களெல்லாம் நம்மிடத்துப் பொருந்திய அருளுருவம் என்று திருவாய் மலர்ந்தருளினர் அம்மொழியை ஒரு பொருளாக நினைத்து உலகங்களனைத்தும் பெற்ற அம்பிகை மிக்க மகிழ்ச்சியுடைந்து இத்தன்மையாக உரைத்தருளினர்.—எ-று. (கO)

அந்நிலைவடிவெலாமருளினதலா
வின்னருள்யானெனவுரைப்பதுண்மையே
யென்றுருவாமவையென்றுபாங்கமர்
கன்னிகைவியந்தனள்கழறும்வேலையே

(இ-ள்.) அந்தச்சதாசிவாதி உருவமனைத்தும் அருளாலானமையின் உனதருள் யானென்று கூறுதல் சத்தியம் ஆதலின் அவ்வனைத்தும் எனதுருவம் என அருகிருந்த அம்பிகைதன்னைப் புகழ்ந்துரைத்தகாலத்தில்.—எ-று. (௧௧)

கயந்தனதீருரிகவின்றுபொற்புறப்
புயந்தனிலணிந்தருள்புனிதனங்கைநீ
நயந்தருநின்புகழ்நாடிநம்முனம்
வியந்தனையுனையெனவிளம்பிமேலுமே.

(இ-ள்.) யானையின் றோலானது விளங்கி யழகுகொள்ளுமாறு தோளிலணிந்தருளிய நின்மலரான சிவபெருமான் உமாதேவியைப் பார்த்துப் பெண்ணே நீ நயத்தைத்தராநின்ற நினதுபுகழைக்கருதி நமதெதிரே புகழ்ந்தனையென்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று. (௧௨)

இருளுறுமுயிர்தொறுமிருந்துமற்றவை
தெருளுறவியற்றுதுமதனைத்தீர்துமேன்
மருளுறுசடமதாய்மாயுமேனைய
பொருளுறுநிலைமையைப்புகலவேண்டுமோ.

(இ-ள்.) இருளுருவமான மலத்திற்கட்டுண்டு கிடக்கும் உயிர்வருக்கந்தோறுமிருந்து அவ்வுயிர்கள் தெளிவுறுமாறு செய்கின்றோம் அத்தொழிலினை நாம் விடுவோமாகில் மருட்சிபொருந்திய சடமாகி அழியும் மற்றையபொருள்கள் அடையுந்தன்மையை உரைக்கவேண்டுமோ.—எ-று. (௧௩)

உன்னிடைதனினும்யாமுறுதலில்வழி
நின்னுயிருணர்வுறுநினக்குக்காட்டுது
மன்னதுகாண்கெனவயனையாதிய
மன்னுயிரியற்றிடும்வண்ணநீங்கினன்.

(இ-ள்.) உன்னிடத்திலும் நாம்பொருந்தாவிடத்து நினதுயிரும் உணர்வினையடையாது அதனை நினக்குக் காட்டுகின்றோம் அதனைக்காண்டியென்று பிரமன் முதலிய நிலைபெற்ற உயிர்களினின்று செய்யுஞ்செயல் நீங்கியருளினர்.—எ-று. (௧௪)

தேவர்கணாயகன்செயலிலாமையா
லாவிகள்யாவையுஞ்சடமதாகியே
யோவியமேயெனவுணர்வின்றுற்றன
பூவுலகேமுதற்புவனம்யாவினும்.

(இ-ள்.) தேவர்கள் நாயகரான சிவபெருமான் செயலின்றி இருந்தமையான் பூவுலகமுதலிய புவனங்களிலுள்ள உயிர்களனைத்தும் சடங்களாய்ச் சித்திரங்களையொப்ப அறிவின்றி இருந்தன.—எ-று. (௧௫)

ஆட்டுவித்திடுபவனதுசெயாவழிக்
கூட்டுடைப்பாவைகள்குலைந்துவீழ்ந்தென
நாட்டியபரனருண்டாத்தலின்மையா
வீட்டுபல்லுயிர்த்தொகையனைத்துமாய்ந்தவே.

(இ-ள்.) ஆட்டிவைப்பவன் அவ்வாட்டுதற்றொழிலைச்செய்யாத இடத்துக்கூட்டமாகவுள்ள பாவைகள் நிலைகுலைந்து வீழ்ந்தாங்கு அனைத்துயிர்களையு நிலைநாட்டிய சிவபரனார் தமதருளை நடாத்தாமையிற் சேர்க்கப்பெற்ற பலவகை உயிர்த்தொகைகள் முற்றிலும் மாய்ந்தன.—எ-று. (கசு)

இந்தவாறுயிர்த்தொகையாவுமொல்லையி
னந்தியேசடமதாய்நணியவெல்லையிற்
சிந்தைசெய்தினையதுதெருமந்தஞ்சியே
சுந்தரியரனடிதொழுதுசொல்லுவாள்.

(இ-ள்) இவ்வண்ணம் உயிர்வருக்கங்களனைத்தும் விரைவாகக்கெட்டுச் சடமாகப் பொருந்திய காலத்தில் இச்செயலினை ஆலோசனைசெய்து மனநிலைதளர்ந்து அஞ்சி உமாதேவியார் சிவபெருமான் திருவடிகளைவணங்கி இவ்வாறு கூறுவாராயினர்.

அறிகிலனெந்தைநீயனைத்துமாகியே
செறிவதுமுழுதுயிர்த்திறனியற்றியே
யுறுவதையென்பொருட்டொருவிநின்றனை
யிறுதியினவையெலாமிருளின்மூழ்கவே.

(இ-ள்.) எம்பெருமானே தேவரீர் அனைத்துமாகி நெருங்கியிருத்தலும் அனைத்துயிர்களின் அனைத்துச்செயல்களையும் இயற்றியிருத்தலையும் என்பொருட்டு நீக்கி ஊழிகாலத்திற்போல அவ்வுயிர் அனைத்தும் இருளின் மூழ்குமாறு நின்றருளினீர். ()

ஓரிறையாகுமீதுனக்குயிர்க்கெலாம்
பேருகமளப்பிலபெயருமென்பிழை
சீரியவுளங்கொளல்றற்றம்பெற்றெழீஇ
யாருயிர்மல்குமாறருளுவாயென.

(இ-ள்.) இச்செயலில் எம்பெருமானுக்கு ஒரு இறைப்பொழுதாயிற்று உயிர்வருக்கங்களுக்கெல்லாம் பெரிய உகங்கள் அனேகங்கள் சென்றிருக்கும் ஆதலின் எனதிப்பிழையைச் சிறந்த திருவுளத்திற் கொள்ளாதிர் அரிய உயிர்கள் தெளிவுபெற்றெழுந்து விருத்தியடையுமாறு அருள்புரிவீராகஎன்று.—எ-று. (கக)

பன்முறைபரவினள்பணிந்துநிற்றலு
மன்மலிகூந்தலுக்கருளியாவிக
டொன்மையில்வினைப்பயன்றுய்ப்பநல்குவா
னின்மலனினைந்தனன்கருணைநீர்மையால்.

(இ-ள்.) பலமுறைதுதித்து வணங்கிநின்றவுடனே மலிந்த கூந்தலினையுடைய அவ்வுமாதேவியாருக்கருள்செய்து கருணைத்தன்மையால் உயிர்களை முன்னிற்போல இருவினைப்பயனான இன்பதுன்பங்களை அனுபவிக்கச் செய்வான் நின்மலரான சிவபெருமான் நினைந்தனர்.—எ-று. (உO)

திருத்தகுதனதருள்சேர்ந்தபல்வகை
யுருத்திரர்தமக்குமுன்னுணர்வுசெய்துழி
நிருத்தனையவ்வழிநினைவுற்றிச்செயல்
கருத்திடையாதெனக்கருதிநாடினார்.

(இ-ள்.) அழகிய தமது திருவருளையடைந்த பலவகை உருத்திரர்கட்கு முன்னர் அருள்செய்தவுடனே அவர்கள் சிவபெருமானை அவ்வழிநினைந்து இச்செயல்யாது எனக் கருத்திலாராய்ந்தார்கள்.—எ-று. (உக)

நாடியவெல்லையினான்முகத்தன்மா
றேடியவண்ணறன்செய்கையீதெனக்
கூடியவோதியார்குறித்துமுன்னுற
விடிவுயிர்த்தொகையெழுப்பவெண்ணியே.

(இ-ள்.) அன்னமாய்த்தேடியவனாகிய சதுர்முகனும் பிரமனும் திருமாலுந் தேடிய இறைவனார்செய்கை இதுவெனப்பொருந்திட அறிவினர் தீர்மானஞ்செய்து முன்னர் இறந்த உயிர்களை எழுப்பநினைத்து.—எ-று. (உஉ)

கண்ணுதலெந்தைதன்கழல்களர்ச்சனை
பண்ணுதலுன்னியப்பகவன்றொல்சுடர்
விண்ணிடையின்மையின்வேலைகாண்கிலா
மண்ணிடைபருச்சுனவட்டத்தெய்தினர்.

(இ-ள்.) கண்ணுதலாகிய எந்தையின் திருவடிகளை அருச்சனைசெய்வதைக் கருதி இறைவனுடைய பழைய ஒளியானது இல்லையால் எல்லையற்ற பூமியில் திருவிடைமருதூரையடைந்தனர்.—எ-று. (உ௩)

எங்கணுங்கனையிருளிறப்பவீசலிற்
கங்குலேபோன்றதிக்காலைகண்ணுதற்
புங்கவற்கேற்றிடுபூசைசெய்துமென்
றங்கவர்யாவருமாய்தன்மேயினர்.

(இ-ள்.) எவ்விடத்திலும் நெருங்கிய இருண்டிருந்த காலவிசேஷத்தில் இக்காலம் இரவுபோல இருந்தது இக்காலத்தில் கண்ணுதலாகிய சிவபெருமானுக்கேற்ற பூசையைச்செய்வோமென அவ்விருத்தர்யாவரும் ஆராயத்தொடங்கினார்கள்.—எ-று.

முண்டகமலர்கெழுமுக்கண்மேலையோன்
கொண்டதோரைம்பெருங்கோலத்தேவரு
மெண்டருமூவகையிற்புணர்க்கவர்
மண்டலவிதியினல்வடிவதாக்கியே.

(இ-ள்.) தாமரைமலர்போல விளங்குகின்ற மூன்றுகண்களையுடைய சிவபெருமானார் கொண்டருளிய பஞ்சமூர்த்திகளாகிய அழகிய உருத்திரதேவர்களுக்கு எண்ணத்தக்க மூவகைமுறைமையால் அன்னோர்மண்டல விதியால் உருவம்பிரதிட்டித்து.

எண்ணிருதிறத்தவாயியன்றநற்பொரு
ளுண்ணிகழளியொடுமுய்த்துவேதனுங்
கண்ணனும்வழிபடுகங்குற்பூசையைப்
பண்ணுதன்முயன்றனர்பரிவின்மேலையோர்.

(இ-ள்.) பதினாறுவகையாகப் பொருந்திய உபசாரத்திற்குரிய நல்ல பொருள்களை மனத்திற்பொருந்திட அன்புடன்கொண்டு சேர்த்து பிரமனும் விஷ்ணுவும் வணங்குகின்ற இராத்திரி பூசையை அன்பினையுடைய உருத்திரராகிய மேலோர் செய்ய ஆரம்பித்தனர்.—எ-று. (உ௬)

ஆற்றுநாலுடனஞ்செழுத்தையுங்
கூறினரெண்ணினர்கோதில்கண்டிகை
நீறுடுபுனைந்திறைநிலைமையுட்கொளா
வேறுளமுறையெலாம்விதியிற்செய்துபின்.

(இ-ள்.) சோடசகலாப்பிரசாதத்துடன் பஞ்சாக்கரங்களையும் உரைத்துச்செபித்தார்கள் குற்றமற்ற கண்டிகையை விபூதியுடன் தரித்து இறைவனுடைய தன்மையை உள்ளத்திலெண்ணி [illegible] செய்துபின்னர்,

வான்குலாம்வில்லுவமருமென்பாசடை
தேன்குலாமரையிதழ்செய்யசாதிவீ
கான்குலாம்வலம்புரிகடவுட்டொல்பெயர்
நான்கியாமத்தினுநவின்றுசாத்தியே.

(இ-ள்.) வானமளாவிய வில்லுவத்தின் மணந்தங்கிய பசிய இலையையும் தேன் பொருந்திய தாமரையிதழையும் செவ்வியசாதி மல்லிகையையும் மணம்பொருந்திய நந்தியாவட்டத்தையும் கொண்டு நான்குயாமங்களினு முறையே சிவநாமோச்சாரணத்துடன் அருச்சித்து.—எ-று. (உஅ)

ஏயவான்பயறுபாலெண்ணலோதனந்
தூயநல்லுணவிவைதொகுத்துக்கண்ணுத
லையகன்முன்னுறநான்கியாமத்து
நேயமோடம்முறைநிவேதித்தேத்தியே.

(இ-ள்.) உயர்ந்தபயறு பால் எள் என்னும் இவைகலந்த நல்ல அன்னங்களையும் பரிசுத்தமான சுத்தான்னத்தையும் வரிசையாக அமைத்துச் சிவபெருமானெதிரில் நான்குயாமத்தும் விருப்பத்துடன் முறையாக நிவேதனஞ்செய்து துதித்து.—எ-று.

பின்னருமியற்றிடுபெற்றியாவையுந்
தொன்னிலைவிதிகளிற்குறைமுருவகை
யுன்னினர்புரிந்துழியுவந்துருத்திரர்
முன்னுறவந்தனன்முக்கண்மூர்த்தியே.

(இ-ள்.) பின்னருஞ்செய்யவேண்டிய செயலனைத்தையும் பழய நிலைபெற்ற விதிகளிற் குறையாதவண்ணம் நினைத்துச் செய்தகாலத்து மூன்றுகண்களையுடைய இறைவனுர் அவ்வுருத்திரரெதிரே எழுந்தருளினுர்.—எ-று. (௩O)

அவ்விடைமருதினிலைந்துமாறுமா
மெய்வகையுருத்திரர்வேண்டியாங்கருள்
செய்வதொர்கண்ணுதற்றேவன்றொன்மைபோ
லெவ்வகையுயிரையுமியற்றவுன்னலும்.

(இ-ள்.) அந்தத்திருவிடை மருதூரில் ஏகாதசவுருத்திரர்கள் விரும்பியாங்குஅருள் புரிந்தவரான சிவபெருமான் பழயபடியேஎல்லாவுயிர்களையும் உண்டாக்கநினைத்தலும்.

எழுந்தனர்மாலயனிந்திராதிய
ரெழுந்தனரெழுந்தனர்யாரும்வானவ
ரெழுந்தனர்முனிவரரேனையோர்களு
மெழுந்தனவுயிர்த்தொகையிருளுநீங்கிற்றால்.

(இ-ள்.) மாலும் அயனும் இந்திரனுமெழுந்தார்கள் தேவரனைவரும் எழுந்தார்கள் முனிவரனைவருமெழுந்தார்கள் மற்றவர்களுமெழுந்தார்கள் பிறவுயிர்க் கூட்டங்களனைத்தும் எழுந்தன இருளுநீங்கியது.—எ-று. (௩உ)

அல்லிடையுறங்கினரறிவுசேர்ந்துழி
மெல்லெனவயர்ந்தகண்விழித்தெழுந்தபோ
லெல்லையிலுயிர்த்தொகையாவுமவ்வழி
யொல்லையிலெழுந்தனவுலகிலெங்கணும்.

(இ-ள்.) இரவி லுறங்கியவர்கள் அறிவு பொருந்தியவுடனே மெல்லென அயர்ச்சியிலிருந்து கண்விழித்தாங்கு அளவற்ற உயிர்வருக்கங்களனைத்தும் அப்பொழுது உலகினெவ்விடங்களினும் விழித்தெழுந்தன.—எ-று. (௩௩)

ஓங்கலுங்கரிகளுமுலப்பிலுகமுந்
தாங்கின தரணிபாதலத்திற்கூர்மமா
மாங்கதுபோற்றியதண்டந்தன்னிடைத்
தீங்கதிர்மதியுடுப்பிறவுஞ்சென்றவே.

(இ-ள்.) மலைகளும் யானைகளும் கெடாத அரவங்களும் பூமியைச்சுமந்தன. பாதலத்திலுள்ள ஆதிகூர்மமானது பூமியைத்தன் முதுகாற்சுமந்ததுவானத்தில் இனிய கிரணங்களையுடைய சந்திரனு நட்சத்திரங்களும் பிறவுஞ்சஞ்சரித்தன.—எ-று. (௩௪)

அன்னதொர்திறமெலாமமலனாணையாற்
றுன்னிலையமைந்தவத்தொடர்புநோக்கியே
யிந்நெறியாவையுமீசன்செய்கையே
பின்னிலையென்றனர்பிரமனாதியோர்.

(இ-ள்.) இவ்வாறு நிகழ்ந்த அச்செயலனைத்தும் இறைவனாணையால் முன்னிலையிற் பொருந்தியிருந்த வந்தசம்பந்தத்தைப் பார்த்து இச்செயலனைத்தும் சிவபெருமான்செயலே வேறெவர்செயலு மன்றென்றனர் பிரமனை யுள்ளிட்டார்.—எ-று.(௩௫)

வேறு.

மற்றிவைநிகழும்வேலைமன்னுயிர்க்குணர்ச்சிநல்கி
யுற்றனனெந்தையென்றேயுருத்திரருணர்ந்துதம்முன்
பற்றலரெயின்மூன்றட்டபண்ணவன்வரநேர்சென்று
பொற்றிருவடியில்வீழ்ந்துபோற்றலுமமலன்சொல்வான்.

(இ-ள்.) இவ்வாறு நிகழ்ந்த காலத்து உயிர்களுக்குணர்ச்சியைக்கொடுத்து எம்பெருமான் எழுந்தருளினுரென்றுணர்ந்து தமதெதிரே பகைவர் மதில்களையழித்த சிவபெருமான் எழுந்தருளுதலும் அவரெதிரே சென்று அழகிய திருவடிகளில் விழுந்து வணங்கினர். உடனே அவர்களைக் கடாட்சித்துச் சிவபெருமான் இவ்வாறருளிச் செய்வாராயினர்.—எ-று. (௩௬)

ஈண்டெமையருச்சித்திட்டவியல்பினாலுயிர்கட்கெல்லா
மாண்டதொல்லுணர்ச்சிநல்கியெழுப்பினமற்றுநீவிர்
வேண்டினயாவுங்கேண்மின்விரைந்தெனவமலன்றன்கட்
பூண்டதோரன்புமிக்கோரிணையனபுகலலுற்றார்.

(இ-ள்.) நீங்கள் இவ்விடத்திலெம்மை அருச்சனைசெய்த முறைமையால் நமது விருப்பத்தின்படி அழிந்த அவர்களின் பழய உணர்ச்சியை அளித்தெழுப்பினேம். நீவிர் நமக்கு வேண்டுவனவற்றை விரைந்துகேளுங்கள் என்றுகூறுதலும் சிவபெருமானிடத்துப் பொருந்திய அன்பின்மிக்க வுருத்திரர் இவைகளை யுரைத்தனர்.—எ-று. ()

நிற்றலுமல்லிலெம்போனின்னடியெனையரேனும்
பற்றுடனருச்சித்தோர்க்குப்பழிதவிர்மாகத்திங்க
ளுற்றிருகதிருமொன்றுமொண்பகன்முதனுட்கங்குல்
பெற்றிடுசிறப்புநல்கவேண்டுமாற்பெருமவென்றார்.

(இ-ள்.) நாள்தோறும் இரவிலெம்மைப்போல நினது திருவடியை எவரேனும் விருப்பத்துடன் அருச்சனை செய்வார்க்குக் குற்றமற்ற மாசிமாதத்திற் சந்திரசூரியர்கள் ஒன்றாகச்சேருகின்ற அமாவாசையின் தலைநாளான சதுர்த்தசியினன்றான மகாசிவராத்திரிப் பூசையின்பலனை அளித்தல்வேண்டும் எம்பெருமானே என்று கூறினார்கள்.-எ-று.

நீவிர்செய்பூசைதன்னைநெடிதுநாமகிழ்ந்தவாற்றா
லாவிகளனைத்துமுய்ந்தவருவினையகன்றதும்போற்

பூவினிலென்றும்பூசைபுரிந்தவர்க்கெல்லாமுத்தி
மேவரவளித்துமென்றேவிய்னருள்புரிந்துபோந்தான்.

(இ-ள்.) நீங்கள் செய்த பூசையை மிகவும் நாம் மகிழ்ந்தேற்றுக்கொண்டமை யான் உயிர்களனைத்தும் உய்ந்தன. பாவச்செயலைவிடுத்து நும்போல பூமியிலெஞ்ஞான்றும் பூசைபுரிவாரனைவருக்கும் முத்தியை அடையுமாறு அருள் செய்கின்றேமென்று திக்கவருளைச்செய்து சிவபெருமான் எழுந்தருளினர்.—எ-று. (ருக)

எம்பெருந்தலைவனேகவுருத்திரர்யாருமீண்டித்
தம்பதங்குறுகிமுன்போற்சார்ந்தனரனையகாலை
யம்புயனுதிவானோரனைவருங்கயிலைபுக்கு
நம்பனைவணக்கஞ்செய்துதொழுதிவைநவிலலுற்றார்.

(இ-ள்.) எமது பெரிய தலைவரான சிவபெருமான் எழுந்தருளுதலும் பின்னர் உருத்திரரனைவரு மொருங்குதிரண்டு தமது பதவியையடைந்தனர் அப்பொழுது பிரமன் முதலிய தேவரனைவருந் திருக்கைலையையடைந்து சிவபெருமானை வணங்கித் தொழுது இவைகளை உரைப்பாராயினர்.—எ-று. (சு0)

மன்னுயிர்க்குயிராயுற்றவள்ளல்கேள்யாங்களெல்லா
முன்னருளுறுதீரா துணர்வொரீஇச்சடமதாகிப்
பன்னெடுங்காலம்வாளாகிடந்தனம்பவமுழ்குற்றே
மன்னதுதனக்குத்தீர்வொன்றருளெனவண்ணல்சொல்வான்.

(இ-ள்.) நிலைபேற்றையுடைய உயிருக்குயிரான வள்ளலே நாங்களெல்லாம் உனதருளடையாத தன்மையால் அறிவிழந்து சடமாகிப் பல நெடுங்காலம் சும்மா கிடந்தேம் அதனுற் பாவமெய்தினேம் அதற்கொருதீர்வினை அருளுவீராகவென்று வேண்டுதலும் அவர்களைப்பார்த்துச் சிவபெருமான் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளினர்.

மங்கியேயுணர்வுசிந்திமறைமுறைபுரியாதீரா
லுங்கள்பால்வருவவெல்லாமுமையிடத்தாகுமன்றே
யிங்குநீரின்றுபற்றியியற்றுநுங்கடன்களென்னப்
பங்கயாசனனுந்தேவர்யாவரும்பணிந்துபோனார்.

(இ-ள்.) மங்குதலுற்றுணர்வுசிந்தி வேதவழி கன்மாதிகளைச் செய்யாததன்மையால் உங்களிடம் வருவனவனைத்தும் உமையினிடஞ்சேரும் ஆதலின் நீங்கள் இன்று முதலாக உங்கள் கடன்களைச்செய்யுங்கள் என்றருளிச்செய்யப் பங்கயாசனனுன பிரமனும் மற்றைத்தேவரனைவரும் இறைவனை வணங்கிச் சென்றார்கள்.—எ-று. (சுஉ)

வே று.

வாலிதாமயன்முதலினோர்வணங்கினரேக
வேலவார்குழலுமையவள்பிரான்கழலிறைஞ்சி
மேலைநாளுயிர்த்தொகையினுக்கெய்தியவினையெவ்
பால்வரும்பரிசென்கொலோபணித்தருளென்ன.

(இ-ள்.) வெண்ணிறத்தினனுன பிரமன் முதலியவர்கள் வணங்கிசசெல்ல மயிர்ச்சாந்தூட்டியகூந்தலினையுடைய உமாதேவியார் சிவபெருமான் திருவடிகளை வணங்கிமுன்னர் உயிர்களிடம் பொருந்தியவினை என்னையடைய வேண்டுவதென்னையோ திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று வினவுதலும்.—எ-று. (சுந)

முன்புநீயுனவியந்தனைமுனிந்து
நின்பொருட்டினுலுயிர்கடம்முணர்ச்சியைநீக்கிப்
பின்புணர்த்தினமாதலினன்னவைபெற்ற
மன்பெரும்பவம்யாவையுநின்னிடைவருமால்.

(இ-ள்.) முன்னர் நீ யுன்னை வியந்தனை அப்பொழுது யாம் கோபித்து நின் பொருட்டினு லுயிர்களினுணர்ச்சிகளை விலக்கிப் பின்னருணர்த்தினேம் ஆதலினுல் அவ்வுயிர்களடைந்த நிலைபெற்ற மிகுந்தபாவமனைத்தும் நின்னிடம் வந்து சேரும்.—எ-று. ஆல்-அசை. (சச)

முறையதாகுமாற்பின் னுமொன் றுண்டுயிர்முற்றும்
பெறுவதாமுனக்கல்லதுபெரும்பவமவற்றாற்
பொறைபுரிந்திடற்கெளியவோபோற்றுநீயென்றான்
சிறுவிதிக்கருள்பரிசினைமுடிவுறச்செய்வான்.

(இ-ள்.) தக்கனுக்களித்தவரத்தினை முற்றுவிக்கக்கருதிய சிவபெருமான் உமாதேவியைப்பார்த்து அப்பாவமுழுது நீ யேற்றுநிற்றல் முறையே இன்னமொன்றுளது உயிர்களனைத்தையும்பெற்ற உனக்கல்லது பெரும்பாவத்தினை அச்சிற்றுயிர்களாற் சுமத்தற் கெளிமையாகுமோ ஆதலினவையை நீ ஏற்றுக்கொள் என்று திருவாய்மலர்ந்தருளினர் —எ-று. (சரு)

நாதனவ்வுரையியம்பலுமுளநடுநடுங்கிப்
பேதையேன்செயும்பிழைதணித்தென்வயிற்பெருகு
மேதமாற்றவோர்பரிசினையுணர்த்துதியென்னுப்
பாதபங்கயந்தொழுதலுமினையனபகர்வான்.

(இ-ள்.) சிவபெருமான் அம்மொழிபகர்ந்தவுடனே உமாதேவியார் உளமிக நடுங்கி அறிவிலியான என்னுற் செய்யப்பட்ட பிழையைத்தவிர்த்து என்னிடமிருந்து நிற்கின்ற குற்றத்தினை நீக்குதற்கு ஒரு உபாயத்தினை அருள்புரிவாயாகவென்று திருவடிக்கமலங்களை வணங்குதலும் இவைகளை அருள் செய்வாராயினர்.—எ-று. (சசு)

ஆலமேபுரைநிறத்ததாயமிழ்தினுஞ்சுவைத்தாய்
ஞாலமார்தரவொழுகியகாளிந்திநதிபோய்
மூலமெய்யெழுத்தன்னதோர்முதுவலம்புரியின்
கோலமாகிநோற்றிருத்தியாலுலகருள்குறிப்பால்.

(இ-ள்.) விடம்போலுங் கரிய நிறத்ததாய் அமிர்தினும் இனிமையானதாய் உலகிற் பொருந்துமாறுெழுகிய காளிந்தியாற்றிற்குச் சென்று மூலமாயும் உண்மையாயும் விளங்கும் பிரணவம்போன்ற முதிய வலம்புரிச்சங்கின் வடிவமாகி உலகினை அருளுங் குறிப்பினுல் நோற்றிருப்பாயாக.—எ-று. (சஎ)

அந்நதிக்குணிபற்பகலிருந்துழியயன்சே
யென்னநின்றிடுதக்கனென்பவனவணெய்தி
யுன்னைநேர்ந்துசென்றெடுத்தலுங்குழவியினுருவாய்
மன்னியாங்கவன்பன்னிபாற்சிறுமியாய்வளர்தி.

(இ-ள்.) அந்தக்காளிந்தி நதிக்குள் நீ பலதினங்கள் இருந்தவுடனே பிரமன் மகனுக இருக்கின்ற தக்கனென்பவன் அங்குவந்து உன்னைக்கண்டெடுத்தவுடனே சிறு குழந்தையின் வடிவமாய் நின்று அவன் மனைவியான வேதவல்லியிடம் குழந்தையாய் வளர்வாயாக.—எ-று. (சஅ)

ஐந்தியாண்டெனுமளவைநிற்கக்கன்றுழியதற்பின்
புந்தியார்வமோடெமைநினைந்தருந்தவம்புரிதி
வந்தியாமதுகாணுறுமணஞ்செய்துமறையா
விந்தமால்வரையிடையுனைத்தருதுமென்றிசைத்தான்.

(இ-ள்.) ஐந்து வருடமென்னும் கால நினக்கு நீங்கியவுடனே யதன் பின்னர் மனவிருப்பத்துடன் எம்மை நினைந்து அரிய தவஞ்செய்வாயாக. யாம் வந்து நினது தவத்தினைக்கண்டு கலியாணஞ்செய்து இரகசியமாக இப்பெருமலையினிடத்துக்கு உன்னை அழைத்துவருகின்றேம் என்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (சுக)

இசைத்தவாசகமுணர்தலுமிறையுரத்தழுந்தத்
தசைத்தபூண்முலையுமையவளன்னவன்சரணின்
மிசைத்தன்வார்குழறைவரவணங்கியேவிடைபெற்
றசைத்தசிந்தையணிங்கினளுலகுநோற்றதனால்.

(இ-ள்.) இறைவனருளிச்செய்த வசனங்களைக்கேட்டவுடனே அக்கடவுளின் திருமார்பிற் பொருந்துமாறு ஆலிங்கனஞ்செய்தழுத்திய ஆபரணமணிந்த தனபாரத்தினையுடைய உமாதேவியார் அவ்விறைவன் திருவடிகளிற் தமது நீண்ட கூந்தல் பொருந்தவணங்கி விடைபெற்றுச் சலிக்கப்பெற்ற சிந்தனையுடையராய் உலகஞ்செய்த தவத்தாற் கைலையை விடுத்துச் சென்றனர்.—எ-று. (ரு0)

ஆதிதேவனையொருவியேபுடவியிலணுகி
யோதவேலையைமாறுகொள்காளிந்தியுழிப்போய்
வேதமூலநேர்வால்வளையுருக்கொடுவிளங்கி
யேதமில்லதோர்பதுமபீடத்தின்மேலிருந்தாள்.

(இ-ள்.) உமாதேவியார் ஆதிமுதல்வனை சிவபெருமானைவிடுத்துஉலகத்தை யடைந்து அலைகளையுடைய கடலுக்குமாறான காளிந்தியிடத்துக்குச்சென்று வேதமூலமான பிரணவம்போலும் வெள்ளியசங்கின் உருக்கொண்டு விளங்கிய குற்றமற்ற ஒரு தாமரை மலரான பீடத்தின்மீது எழுந்தருளி இருந்தனர்.—எ-று. (ருக)

தெளிதருஞ்சிவமந்திரஞ்சிந்தனைசெய்தே
யளவில்பற்பகலன்னைநோற்றிருந்தனளவட்கண்
டுளமகிழ்ந்தெடுத்தேகுவானோங்குகாளிந்தி
நளிகொள்சிந்துவிற்றக்கனுற்றனவினிநவில்வாம்.

(இ-ள்.) தெளிவினைத்தருகின்ற சிவமந்திரத்தைச் சிந்தனை செய்துகொண் டளவற்ற பற்பல தினம் உமாதேவியார் தவஞ்செய்திருந்தனர் இனி அவ்வுமாதேவியாரைப்பார்த்து மனமகிழ்ந்தெடுத்துப்போதற்கு உயர்ந்த காளிந்தியென்னும் குளிர்ச்சி வாய்ந்த ஆற்றினிற் தக்கன்வந்ததை உரைக்கின்றாம்.—எறு. (ருஉ)

உமைகைலை நீங்குபடல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உசஉ.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# காளிந்திப் படலம்.

நீளுந்தகைசேர்நிலமாமகடன்
கோளுந்தியபூங்குழல்வார்ந்தெனலாய்
நாளுந்தியவீநணுகிக்கரிதாங்
காளிந்தியெனுங்கடிமாநதியே.

(இ-ள்.) காளிந்தி யென்னும் புதுமைவாய்ந்த நதியானது பகற்காலந்தள்ளி அலருகின்ற நீலமுதலிய கருநிறப்பூக்கள் பொருந்தி, நீண்ட தகுதியினையுடைய பூமிதேவியின் குற்றமற்ற அழகிய கூந்தல் வார்ந்து விளங்கினாற்போல கரியநிறமுடையதாகி விளங்கும்.—எ-று. (க)

முத்துங்கதிரும்பழுமாமணியுந்
தொத்துந்தியசெந்துகிரும்மகிலு
நத்தும்பிறவுந்நனிநல்குவபோ
லொத்துந்துவதவ்வொலிநீர்நதியே.

(இ-ள்.) முத்தங்களையும் நெல் முதலியவற்றின் கதிர்களையும் குறைவற்ற சிறந்த மணிகளையும் கொத்தாகத் தள்ளப்பட்ட செம்பவளங்களையும் அகில்களையுஞ் சங்குகளையும் பிறபொருள்களையும் மிகவும் தானே படைத்தாற்போல தள்ளா நிற்பது ஒலியினையுடைய காளிந்தியென்னும் நீர் நதி.—எ-று. (உ)

எண்மேனிமிருப்மிருநீர்பெருகி
விண்மேலுலவாவிரிகின்றதொரீஇ
மண்மேலொலியாமலிகார்தழுவிக்
கொண்மூவரவொத்துளதக்குடிநை.

(இ-ள்.) அந்தக்காளிந்தி யென்னும் நதியானது அளவற்றதாய் மிகுந்துவருகின்ற நீர் பெருகி ஆகாசத்தினளாவி விரிதலை விடுத்து பூமியின்கண் தங்கி மிகுந்த கருநிறம் வாய்ந்து மேகம் வருதலையொத்தது.—எ-று. (ங)

மீனார்விழிமங்கையர்விண்ணுறைவோர்
வானார்செலவின்வருநீளிடையிற்
கானுமெனவுங்கடலாமெனவுந்
தானாகுவதத்தடமாநதியே.

(இ-ள்.) அந்த விசாலமான சிறந்த நதியானது மீன்போலுங் கண்ணினையுடைய பெண்களும் தேவர்களும் வானத்திற் செல்லுகின்ற செல்கையை ஒப்பச்செல்லும்; அன்றியும் நீண்ட விடத்தினையுடைய கானலைப்போலவுங் கடலைப்போலவுங் கூறுமாறுவது.—எ-று. (ச)

பாரின்புடையேபடரந்நதியை
நேரும்படியோர்நெடுநீருளதோ
காருந்தெளிபாக்கடலீதெனவே
யாரும்பெருமைத்தஃதாயிடவே.

(இ-ள்.) காருங்கண்டறியாத கடலீது எனக்கூறும் பெருமையினையுடையதுவாக உலகினிடத்துச்செல்லும் அக்காளிந்தி நதியை ஒப்பானதாய் ஒரு சலப்பிரவாகமும் உளதோ? இல்லையென்ற குறிப்பு.—எ-று. (ரு)

துப்பாயினதாய்த்துவரத்தகைசே
ரப்பாயுவரற்றழிவில்பொருளின்
வைப்பாயருளால்வருமவ்வொலியற்
கொப்பாகுவதோவுவராழியதே.

(இ-ள்.) தூய்மையானதாய் முற்றிலுந் தகுதிவாய்ந்த நீரையுடையதாய் அழிவற்ற பொருள்களின் இருப்பிடமாய் இறைவனருளாலொழுகிநின்ற அக்காளிந்தி யாற்றுக்கொப்பாகுமோ அன்று; உவரினையுடையகடல்—?எ-று. ஏ-அசை. ()

பாலோங்கியவிற்பணிலம்படர்வா
ணீலோங்கியவம்பொடுநேமியெலா
மேலோங்கியதன்மையின்மெய்த்துயில்கூர்
மாலோன்றனையொத்ததுமற்றதுவே.

(இ-ள்.) பின்னும் அக்காளிந்தி நதியானது பால்போல வெளுத்தவண்ணத்தினவான சங்கங்கள் காணப்படுதலானும் நீலவொளிவாய்ந்த நீருடனே சக்கர வாகங்கள் மேலேயுயர்ந்து காணப்படுந்தன்மையினாலுஞ் சயனித்திருக்குந் திருமாலையொத்து விளங்கியது.—எ-று. (எ)

மீன்பட்டமையால்விரியுந்தொழூதிக்
கான்பட்டிடவுங்கழுநீருறலாற்
றேன்பட்டிடவுந்திரைபட்டிடவும்
வான்பட்டிடுமோசைமலிந்ததுவே.

(இ-ள்.) மீனுண்டாகின்றமையின் மிகுதியான கானம்போல பறவைகள் காணப்படவும் கழுநீர்மலர்கள் பொருந்தி யிருத்தலால் தேன் ஒழுகவும் அலைகள் வீசவும் இவைகளால் வானமளாவிய ஓசையான் மிகுதியானது அந்தநதி. —எ—று. (அ)

ஊன்பெற்றலகில்லுயிர்பெற்றகிலம்
மான்பெற்றவள்வால்வளையாயுறவெங்
கோன்பெற்றிடுமெக்கொடிமெய்யுருவந்
தான்பெற்றதையொத்ததுமாநதியே.

(இ-ள்.) ஊனினைப்பெற்றளவற்ற உயிரினைப்பெற்றுப் பூமியந்தரங்களைப் பெற்றுள்ள உமாதேவியார் வெள்ளியசங்கினுருவமாக இருக்கப்பின்னர் எமது சிவபெருமான் அவ்வுமாதேவியின் திருவுருவைப்பெற்று நின்றதையொத்தது அச்சிறந்தநதி. ()

வே று.

நஞ்செனக்கொலைசெய்கூர்ங்கணங்கையர்ருடையக்கூந்தல்
விஞ்சியநானச்சேறும்விரைகெழுசாந்துமார்ந்து
தஞ்செனக்கொண்டநீலத்தன்மைகுன்றுதுமோவோ
ரஞ்சனப்போர்வைபோர்த்தாலன்னதாலணையநீத்தம்.

(இ-ள்.) விடம்போலுங் கொலையினைச்செய்கின்ற கூரிய கண்ணினரான பெண்கள் நீராட அன்னாரின் கூந்தலினின்றும் மிகுதியாக வெளிப்பட்ட நானக்குழம்பும் மணம் வீசுகின்ற சந்தனமும் கலந்து பொருந்தித் தனக்குரிமையான நீலநிறத்தன்மை கெடாது அதன்மீதொரு கரியபோர்வைபோர்த்தினாற்போலவிளங்கியது அந்நதிநீர். ()

இவ்வுலகத்தோருள்ளத்தெய்தியவிருளுமன்னோர்
வெவ்வினையிருளுந்தன்பால்விழ்த்திடவிளங்கியக
வவ்விருளனைத்துந்தான்பெற்றனந்தெனவங்கருகாராய்ச்
செவ்விதினொழுகிற்றம்மாசீர்திகழ்யமுனையாறே.

(இ-ள்.) இந்த வுலகவாசிகள் தங்கள் உள்ளத்திற் பொருந்திய இருளையும் தீவினையான இருளையும் தன்னிடத்திட்டு, விளக்கம் பொருந்திச்செல்ல அவ்விருள் முழுதுந் தான்பெற்று வந்தாற்போல தனதங்கங் கருநிறமாய்ச் செவ்விதினொழுகியது சிறப்பொடு விளங்குகின்ற யமுனைநதி.—எ-று. (கக)

எத்திறத்தோருமஞ்சவெழுந்துமால்வரையிற்சார்ந்து
மெய்த்தலைபலவுநீடிவிரிகதிர்மணிகள்கான்றிட்

டொத்திடுகொல்கன்ர்மேவியொலிகெழுசெலவிற்ருகி
மைத்துறுபுனற்காளிந்திவாசுகிநிகர்த்ததன்றே.

(இ-ள்.) கரியநிறம்வாய்ந்த நீரினையுடைய காளிந்திநதியானது எத்தகையோரும் அஞ்சும் வண்ணந்தோன்றிப் பெரியமலையையடைந்து தன்னுடலிற் றலைகள் பலநீண்டு கதிரினைவிடுகின்ற மணிகளைக்கக்கிப் பொருந்திய கால்களையடைந்து ஓசையோடுசெல்லாநின்ற செலவினையுடையதாய் வாசுகியென்னும் அரவினை யொத்தது.—எ-று. (௧௨)

நிலமகளுரோமவல்லிநிலையெனநகிலினுப்ப
ணிலகியமணித்தாரென்னவிருங்கடற்கேள்வன்வெஃகுங்
குலமகளென்னநீலக்கோலவாரமுதமென்ன
வுலவியயமுனையெம்மாறுரைக்கலாந்தகைமைத்தாமோ.

(இ-ள்.) பூமிதேவியின் உரோமவல்லியின் நிலையைப்போலவும் அவள் கொங்கைகளினடுவிடத்து விளங்கிய நீலமணிமாலைபோலவும் பெருமைவாய்ந்த கடலாகிய நாயகனால் விரும்பப்படுகின்ற குலமாதினைப்போலவும் நீலநிறம்வாய்ந்த அரிய அமுதம்போலவும் கூறுமாறு ஒழுகிச்செல்லும் யமுனாநதியைக்குறித்து எம்மாற் புனைந்து கூறலாகுந்தகுதியதோ அன்றென்பது குறிப்பு—எ-று. (௧௩)

இன்னபல்வகைத்தாய்நீடுமிரும்புனல்யமுனையின்கண்
மன்னுறநெறிசேர்மாசிமகப்புனலாடவேண்டி
யந்நிலத்தவர்கள்யாருமடைந்தனருலகமெல்லாந்
தன்னிகரின்றியாளுந்தக்கனித்தன்மைதேர்ந்தான்.

(இ-ள்.) இவ்வாறு பலவிதமாகப் பிரவகித்தொழுகு மிருந்தபுனலினையுடைய யமுனாநதியில் முறையே பொருந்திவந்த மாசிமகநீராடவோன் அந்த உலகிலுள்ளாரனைவருஞ்சென்றார்கள் அந்நாளில் உலகமுழுமையும் தனக்கு நிகரெவருமில்லாமலாளுகின்ற தக்கனிச்சங்கதியை யறிந்தான்.—எ-று. (௧௪)

மெய்ப்பயனெய்துகின்றவினைப்படுமுழின்பாலா
லப்பெருநதியிலஞ்ஞான்றாடலைவெஃகித்தக்கன்
மைப்படுங்கூர்ங்கண்வேதவல்லியைமகளிரோடு
மொப்பில்பல்சனத்திேனாடுமொல்லைமுன்செல்லவுய்த்தான்.

(இ-ள்.) தான் செய்தவினையா லுண்டாகவேண்டிய உண்மைப்பயனை அடையவேண்டிய ஊழ்முறையாற் தக்கன் அந்தப்பெரிய யமுனாநதியில் நீராடுதலைவிரும்பி மையணிந்த கூரியகண்ணினளான வேதவல்லியென்னுந்தனது மனைவியைத் தோழியர் முதலிய பெண்களுடனும் ஒப்பற்ற பல சனங்களுடனும் விரைவாக முன்னே செல்லுமாறு அனுப்பினான்.—எ-று. (௧௫)

மாற்றமர்செம்பொற்கோயில்வயப்புலித்தவிசின்மீதாய்
வீற்றிருந்தருடனீங்கிவிரிஞ்சனுமுனிவர்யாரு
மேற்றதோராசிகூறவிமையவர்கணமாயுள்ளோர்
போற்றிடயமுனையென்னும்புனலியாறதன்கட்போனான்.

(இ-ள்.) உயர்ந்த மாற்றுடைய செவ்விய பொன்னாலான மாளிகையிற் சிங்கவணையிலிருத்தலைவிடுத்துப் பிரமனும் முனிவரனைவரும் தக்கவாசிமொழிகூறத் தேவகணமாயுள்ளவர்கள் துதிக்கத்தக்கன் யமுனையென்னும் பெயரினையுடைய நீர் பரந்த ஆற்றினிடத்துச்சென்றனன்.—எ-று. (௧௬)

போனதொர் தக்கனென்போன்புரைதவிர்புனற்காளிந்தித்
தூநதியிடைபோய்மூழ்கித்துண்ணெனவரலுமோர்பாற்
றேனிமிர்கமலமொன்றிற்சிவனிடத்திருந்ததெய்வ
வானிமிர்பணிலம்வைகமற்றவனதுகண்ணுற்றான்.

(இ-ள்.) சென்ற தக்கனென்பவன் குற்றமற்ற காளிந்தியென்னும் பரிசுத்தமான நதியிடைச்சென்று நீராடி விரைந்து திரும்பிவருதலும் ஒருபுறத்திற்தேன்ததும்புகின்ற தாமரைமலரிற் சிவபெருமானிடத்திருந்த தெய்வமான வெண்ணிறம் வாய்ந்த சங்கம் எழுந்தருளி இருப்பவத் தக்கன் அதனைக்கண்டனன்.—எ-று. (கஎ)

வேறு.

கண்ணுறுவானனிமகிழ்ந்தேகைபிணையுய்த்தெடுத்திடுங்காற்காமர்பெற்ற
பெண்ணுருவத்தொருகுழவியாதலும்விம்மிதப்பட்டுப்பிறைதாழ்வேணி
யண்ணலருள்புரிவரத்தாற்கவுரியேநம்புதல்வியானாளென்னா
வுண்ணிகழ்பேருணர்ச்சியினாற்காணுற்றுத்தேவர்குழாமொருவிப்போனான்.

(இ-ள்.) அவ்வாறு கண்டவன் மிக மகிழ்ச்சிகொண்டு கையைநீட்டி எடுக்கும்பொழுது அழகுபொருந்திய பெண்ணுருவமான ஒருகுழந்தையாதலும் ஆச்சரியமுற்றுச்சந்திரன் தங்கிய சடையினையுடைய சிவபெருமானளித்த வரத்தினாற் கவுரியே நமது மகளாயினாளென்று உள்ளேநிகழ்ந்த பெரியஅறிவினாற்கண்டு தேவர்கூட்டத்தினை விடுத்துச்சென்றான்.—எ-று. (கஅ)

அந்நதியின்பான்முன்னரவன்பணியாற்சசிமுதலாமணங்கினோர்க
டுன்னினராய்வாழ்த்தெடுப்பத்துவன்றுபெருங்கிளைஞரொடும்தூநீராடி
மன்னுமகன்கரையணுகிமறையிசைகேட்டமர்வேதவல்லியென்னும்
பன்னிதனையெய்தியவள்கரத்தளித்தானுலகின்றபாவைதன்னை.

(இ-ள்.) அக்காளிந்திநதியில் முன்னர்த் தக்கன் கட்டளையால் இந்திராணி முதலிய தேவமாதர்கள் நெருங்கி வாழ்த்தெடுப்பச் சூழ்ந்த பெருஞ்சுற்றத்தினருடன் பரிசுத்தமானவந் நீரின்முழுகி உறுதிவாய்ந்த அகலமான கரையையடைந்து வேதகானங்கேட்டுக்கொண்டிருந்த வேதவல்லியென்னும் மனைவியையடைந்து அவள் கரத்தில் உலகனைத்தையும்பெற்ற உமாதேவியாரை அளித்தனன்.—எ-று. (கசு)

ஏந்துதனிக்குழவியினைத்தழீஇக்கொண்டுமகிழ்ந்துகுயத்திழிபாலார்த்திக்
காந்தண்மலர்புரைசெங்கைச்சூர்மகளிர்போற்றிசைப்பக்கடிதினேகி
வாய்ந்ததனதிருக்கையிடைப்புக்கனளாற்றக்கனங்கண்வானோரோடும்
போந்துமணிக்கோயில்புக்குத்தொன்முறைபோலரசியிற்கைபுரிந்திருந்தான்.

(இ-ள்.) கணவனாற் கொடுக்கப்பெற்றேந்திய ஒப்பற்ற குழந்தையைத்தழுவிக்கொண்டுமகிழ்வுற்றுத் தனத்தினின்றும் ஒழுகியபாலினை ஊட்டிக் காந்தண்மலர்போன்றசெவ்வியகரங்களையுடைய சூரமகளிர் துதியாநிற்ப விரைந்துசென்றுபொருந்திய தன்னிருப்பிடத்தினை அடைந்தாள். உடனே தக்கனென்பான் அவ்விடத்திற்கூடியிருந்த தேவர்களுடன் சென்று தனது மணிமாளிகையை யடைந்து முன்னிற்போல அரசுசெலுத்தி இருந்தனன்.—எ-று. (உ0)

காளிந்திப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உகூஉ.

உ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உமைதவம்புரி படலம்.

கொண்டுதனதில்லிற்குறுகியபின்வேதவல்லி
மண்டுபெருங்காதலொடுமகண்மையாவளர்த்தனளா
லண்டமளவில்லனவுமலகிலாவுயிர்த்தொகையும்
பண்டுதனதுந்தியினுற்படைத்தருளும்பராபரையை.

(இ-ள்.) அளவற்றனவான அண்டங்களையும் அளவற்ற உயிர்த்தொகையையும் முன்னாளிற் தமதுந்தியின் வழிபடைத்தருளிய பராபரையான உமாதேவியாரை வாங்கிக்கொண்டு தனது கிரகத்துக்குச் சென்ற வேதவல்லி யென்பாள் நெருங்கிய மிகுந்த அன்புடனே புதல்வியாக வளர்த்தனள்.—எ-று. (க)

வளருமதிக்குழவியெனமாநிலமேற்றவழ்தலொடுந்
தளருநடைபயில்கின்றதாறுமுடன்றப்பியபின்
முளையெயிறுள்ளெழுபோதமுளைத்ததெனத்தோன்றுதலு
மளவிலுயிர்முழுதீன்றாளைந்தாண்டுநிரம்பினளால்.

(இ-ள்.) அளவற்ற உயிர்கண்முற்றும் பெற்றருளிய உமாதேவியார் வளருகின்ற இளம்பிறையை யொப்பச்சிறந்த பூமியின்மீது தவழ்தலுடன் நடைகற்கின்ற அளவும நீங்கியவுடனே பற்கள், உள்ளே தோன்றா நின்ற ஞானபோதம் முளைத்தாற் போல தோன்றுதலும் ஐந்துவயது நிரம்பியவராயினர்.—எ-று. (உ)

ஆறானவாண்டெல்லையணைதலுமம்பிகைதனக்கோர்
கூறானபிரான்றன்னைக்கோடன்முறைகுணித்தனளாய்
மாறாதுநோற்பலெனமனங்கொண்டியாய்தனக்கும்
பேறானதக்கனெனும்பெருந்தவற்குமிஃதுரைத்தாள்.

(இ-ள்.) ஆறுவதான வருடந்தோன்றுதலும் அம்பிகையார்தமதொருகூறான சிவபெருமானைக் கொள்ளுமுறையை எண்ணித் தவறாது தவஞ்செய்வேனென்று திருவுளத்திற்கருதி மாதாவானவேதவல்லிக்கும் தந்தையாகிய தக்கனென்னும் பெரிய தவமுடையவனுக்கும் இச்செயலினை உரைத்தருளினர்.—எ-று. (ஙு)

கூறுவதொன்றுமக்குண்டாற்குரவீர்காளிதுகேண்மி
னாறுபுனைசெஞ்சடிலத்தண்ணலுக்கேயுரித்தாகும்
பேறுடையேனவன்வதுவைபெறுவதற்குநோற்பலியான்
வேறொருசார்கடிமாடம்விதித்தென்னைவிடுத்திரென.

(இ-ள்.) அன்னை தந்தையர்களே உங்களிடம் உரைக்கவேண்டிய தொன்றுளது இதனைக்கேளுங்கள் யான் ஆற்றினையணிந்த செவ்விய சடாபாரத்தினையுடைய சிவபெருமானுக்கு உரியபேற்றினையுடையேன் அச்சிவபெருமானென்னை வந்துமணஞ்செய்துகொள்வதற்காக யான் தவஞ்செய்கின்றேன் அத்தவஞ்செய்யும் வண்ணம் வேறொருபுறத்திற் காவலினையுடைய மாடமொன்றமைத்து அதனிலென்னை விட்டுவையுங்கள் என்றுகூறுதலும்.—எ-று. (ச)

நன்றென்றுமகிழ்சிறந்துநல்லாயுந்தந்தையுமாய்ப்
பொன்றுஞ்சுதமதிருக்கைப்பொருவினகர்ப்புறத்தொருசா

ரன்றங்கொர்கடிமாடமணிசிறக்கப்புனைவித்துச்
சென்றங்கட்டவமியற்றச்சேயிழையைவிடுகின்றார்.

(இ-ள்.) நல்லதென்று மிக்க மகிழ்வடைந்து நல்லவன்னையும் அத்தனுமாய் பொன்னிரம்பிய தமதிருப்பினையுடைய ஒப்பற்ற நகரத்தின் ஒருபுறத்திற் காவலுடைய ஒருமாடத்தினை அழகுமிகுமாறமைப்பித்து அங்குத் தவஞ்செய்வதற்கு தம்மகளாரான உமாதேவியாரை விடுகின்றவர்கள்.—எ-று. (௫)

முச்சகமுந்தருகின்றமுதல்விதனைத்தம்மகளென்
றிச்சைகொடுநனிபோற்றியிருவருநாரொடுநோக்கி
யுச்சியினைப்பன்முறைமோந்துயிர்த்தம்மோவுன்னுளத்தி
னச்சியநோன்பியற்றுகெனநாரியரோடேகுவித்தார்.

(இ-ள்.) மூன்றுலகங்களையும் படைத்தருளுகின்ற முதல்வியான உமாதேவியாரைத் தமது புதல்வியென விருப்பங்கொண்டு மிகப்போற்றுதல்செய்து அன்னை தந்தையர்கள் விருப்பத்துடன் பார்த்து உச்சியைப்பலமுறை மோந்துயிர்த்து அன்னையே உன்னுள்ளத்துள் நீ விரும்பின நோன்பினைச்செய்வாயாக என்று பல பெண்களுடன் தவமாளிகைக் கனுப்பிவைத்தனர்.—எ-று. (௬)

மாதவர்பால்விடைபெற்றுவல்விரைவுற்றேகுதலும்
வேதவல்லியதுகாணுமெய்க்கணவன்றனைநோக்கிப்
பேதையிவள்சிவனையுணர்பெற்றிமையென்மொழிகென்ன
வீதனையணிலைமையெனயாவுமெடுத்தியம்புகின்றான்.

(இ-ள்.) உமாதேவியார் அவ்விருவரிடம் விடைபெற்று விரைவாகத் தவச்சாலைக்குப் போதலும் அதனை வேதவல்லி கண்டு தனது கணவனை தக்கனைப்பார்த்துப் பேதையாகிய இவள் சிவபெருமானை அறிந்த தெங்ஙன் உரைத்தியென்று வினவ இது அவள்நிலைமை என அவள் சரிதமனைத்தும் தக்கன் உரைப்பானாயினன்.—எ-று. (எ)

பொங்குபுனற்றடத்திடையான்புரிகின்றதவங்காணூஉச்
சங்கரனங்கெய்திடலுந்தாழ்வில்வரம்பலகொண்டுன்
பங்கினளென்மகளாகப்பண்ணவநீயென்மருகாய்
மங்கலநல்வதுவையுறமறையவனைய்வருகென்றேன்.

(இ-ள்.) பொங்குகின்ற நீரினையுடைய மானதசரோவரத்தில் யான் செய்த தவத்தினைக்கண்டு சங்கரனங்குவருதலும் யான் அவனிடங் குறைவற்ற பலவரங்களைப் பெற்று உனது இடபாகத்தினளான உமாதேவி என்புதல்வியாக, அவளை நீ என்மருகனாய் மங்களகரமான மணஞ்செய்துகொள்ளுதற்குப் பார்ப்பானாகவரக்கடவையென்று கேட்டுக்கொண்டேன்.—எ-று. (அ)

அற்றாகநின்பாலென்றருள்செய்தானம்முறையே
கற்றாவினேறுயர்த்தகண்ணுதலோன்முழுதுலகும்
பெற்றாளையமுனையென்னும்பெருநதியினுய்ப்பநம்பா
லுற்றாண்மற்றெஞ்ஞான்றுமுணர்வினளவைகினளால்.

(இ-ள்.) அவ்வாறே ஆகுகவென்றருள் செய்தனன்; அம்முறைப்படி கற்றாவின் ஏற்றின் வடிவினதான கொடியுயர்த்திய நெற்றிக்கண்ணினையுடைய சிவன் அனைத்துலகங்களையும்பெற்ற உமாதேவியாரை யமுனையென்னும் பெயரினையுடைய நதிக்கனுப்ப நம்மிடத்து மகளாகவந்து எந்தப்பருவத்தினும் அறிவுடையளாகவேஇருந்தனள்.

மாதவமோர்சிலவைகல்பயின்றுமதிக்கோடுபுனை
யாதிதனக்கன்பினளாயருந்துணைவியாகின்றாள்
பேதையெனநினையற்கபெருமாட்டிதனையென்னக்
காதலிவிம்மிதமெய்திக்கரையிலாமகிழ்சிறந்தாள்.

(இ-ள்.) ஒரு சிலதினம் சிறந்த தவஞ்செய்து இளம்பிறைக் கீற்றினையணிந்த உலகமுதல்வனான சிவபெருமானுக்கு அன்புடையவளாய் அவனதரிய மனைவியாக வாகின்றாள் நம் பெருமாட்டியைப் பேதையென நினையாதையென்றுகூற அவன் மனைவி விம்மிதமெய்தி அளவற்ற மகிழ்ச்சியுற்றனள் —எ-று. (க0)

இந்நிலைசேர்முதுகுரவரேவலினாற்சிலதியராங்
கன்னியர்கள்சூழ்போதக்கடிமாடம்போந்துமையாள்
சென்னிநதிபுனைந்தபிரான்றிருநாமமுள்ளுறுத்தி
நன்னியமந்தலைநின்றுநாளுநனிநோற்கின்றாள்.

(இ-ள்.) இத்தன்மையரான அன்னை தந்தையரின் கட்டளையாற் தோழிப் பெண்கள் சூழ்ந்துவரக் காவலினையுடைய மாளிகையை அடைந்து உமாதேவியார் தலையிற் கங்கையையணிந்த சிவபெருமானுடைய திருநாமத்தினை உள்ளே அமைத்து நல்ல நியமத்தின் முற்பட்டு நின்று தினந்தோறுஞ் செவ்வனே தவம்புரிந்தனள். (கக)

வேறு.

ஈண்டுறுமடவார்சூழவிம்முறையிருத்தலோடு
மாண்டுபன்னிரண்டுசென்றவம் பிகைக்கனையகாலை
வேண்டியவேண்டியாங்குவிரதத்தருக்குதவும்வண்மை
பூண்டிடுபரமனன்னாள்புரிந்திடுதவத்தைக்கண்டான்.

(இ-ள்.) நெருங்கிய மாதர்கள் சூழ்ந்து பணிசெய்ய இவ்விதம் உமாதேவியார் தவஞ்செய்திருத்தலும் பன்னிரண்டு வருடங்கள் ஆயின அப்பொழுது வைராக்கியத்துடன் தவஞ்செய்வார்க்கு விரும்பியவைகளை விரும்பியவண்ணமே அளிக்கும் சிவபெருமான் அவ்வுமாதேவியார் செய்யாநின்ற தவத்தினைக் கண்டருளினார்.—எ-று. ()

கண்டுமற்றவளையாளக்கருதியேகயிலையென்னும்
விண்டினையிகந்துமுந்நூல்வியன்கிழிதருப்பையார்த்த
தண்டுகைக்கொண்டுவேதத்தலைநெறியொழுக்கம்பூண்ட
முண்டவேதியனிற்றோன்றிமுக்கணெம்பெருமான்வந்தான்.

(இ-ள்.) தவஞ்செய்தலைக் கண்டு அவ்வுமாதேவியாரை ஆட்கொள்ளக்கருதிக் கைலாயமென்னும் கிரியைவிடுத்து முப்புரிநூல் கோவணம் தருப்பை என்னும் இவைகளைக் கட்டிய தண்டத்தினைத் திருக்கரத்திலேந்தி வைதீகமார்க்கத்துப் பிரமசரிய ஒழுக்கம்பூண்ட திருபுண்டரமணிந்த பார்ப்பானைப்போல வேடங்கொண்டு மூன்று கண்களையுடைய எமது சிவபெருமான் எழுந்தருளினார்.—எ-று. (கந)

தொக்குலாஞ்சூலத்தண்ணறொல்புவியுய்யவேதச்
செக்கர்நூபுரத்தாள்பின்னுஞ்சேப்புறமண்மேற்போந்து
தக்கமாபுரத்தினண்ணிச்சங்கரியென்னுந்தொல்பேர்
மைக்கணாடோற்குந்தெய்வமல்லன்மாளிகையிற்புக்கான்.

(இ-ள்.) யானைத்தோலணிந்த சூலத்தினையுடைய சிவபெருமான் பழய இந்தப் பூமி உய்ய வேதங்களாகிய செக்கர்போன்ற நூபுரமணிந்த திருவடிகள் பின்னரும் செந்நிறமடைய மண்ணுலகத்துக்கு வந்து தக்கமாபுரத்தையடைந்து சங்கரியென்னும் பழய திருநாமத்தினையுடைய மையணிந்த கண்ணினராகிய உமாதேவியார் தவஞ்செய்கின்ற தெய்வீகமும் வளமும்வாய்ந்த மாளிகையுட் புகுந்தனர்.—எ-று. (கச)

அன்னைநோற்கின்றகோட்டத்தணுகியேயளப்பின்மாதர்
முன்னுறுகாவல்போற்றுமுதற்பெருங்கடையிற்சாரக்
கன்னியரெவரும்வந்துகழலிணைபணிதலோடு
மென்னிலைதலைவிக்கம்மவியம்புகென்றிசைத்துநின்றான்.

(இ-ள்.) அன்னையான உமாதேவியார் தவஞ்செய்யும் இடத்தை யடைந்து அளவற்ற பெண்கள் காவல் காக்கின்ற முதற்கடைவாசலை அடைய வப்பெண்களனை வரும் வந்து திருவடிபணிதலும் எனது வருகையை நுமது தலைவிக்கு உரைப்பீராக வென்று திருவாய்மலர்ந்தருளி நின்றனர்.—எ-று. (கரு)

நிற்றலுங்கடைகாக்கின்றநேரிழைமகளிர்சில்லோர்
பொற்றொடியுமைபாலெய்திப்பொன்னடிவணங்கியீண்டோர்
நற்றவமறையோனின்பானண்ணுவான்விடுத்தானென்ன
மற்றவன்றன்னைமுன்கூய்வல்லைநீர்தம்மினென்றாள்.

(இ-ள்.) அவ்வாறு நின்றவுடனே தலைவாசலைக் காக்கின்ற பெண்கள் சிலர் பொன்னந்தொடியணிந்த உமாதேவியாரிடஞ்சென்று பொன்னனைய திருவடிகளை வணங்கி இவ்விடத்தில் நல்ல தவத்தினையுடைய ஒரு மறையவன் நின்னைக்காண வருதற்கனுப்பினன் என்றவுடனே அவனை விரைந்தழைத்துச் சீக்கிரம்கொண்டுவாருங்களென்று கட்டளை இட்டனள்.—எ-று. (கசு)

தம்மினீரென்றலோடுந்தாழ்ந்தனர்விடைபெற்றேகி
யம்மினேர்கின்றநாப்பணரிவையர்கடைமுன்னேகி
வம்மினேவடிகளெம்மோய்வரவருள்புரிந்தாளென்னச்
செம்மலும்விரைவிற்சென்றுதேவிதன்னிருக்கைசேர்ந்தான்.

(இ-ள்.) அழைத்துவாருங்கள் என்றவுடனே வணங்கிவிடைபெற்றுப்போய் அழகிய மின்னர்கொடிபோன்ற இடையினரான பெண்கள் கடைவாசலினெதிரே சென்று அடிகளே வருவீராக, எம தன்னைவருமாறருள்புரிந்தனள் என்றுகூறுதலும் இறைவனும்விரைவாகச்சென்று உமாதேவியின் இருக்கையை அடைந்தனர்.—எ-று.

தேவர்கடேவனங்கோர்சீர்கெழுமறையோன்போலாய்
மேவியகாலையம்மைவிரைந்தெதிரேகிமற்றென்
காவலர்தம்பாலன்பரிவரெனக்கருதியன்னான்
பூவடிவணங்கிவேண்டும்பூசனைபுரிந்துநின்றாள்.

(இ-ள்.) தேவதேவரான சிவபெருமான் அவ்விடத்தில் சிறப்புடன் விளங்கும் ஒரு பிராமணனைப்போல உருக்கொண்டு சென்றவுடனே உமாதேவியார் விரைவாக எதிரேவந்து இவர் எமது நாயகரான சிவபெருமானிடத்து அதிக அன்புடையவரென நினைந்து அம்மறையவனுடைய அலரனைய வடிகளைவணங்கி வேண்டிய பூசைகளைச் செய்து நின்றனர்.—எ-று. (கஅ)

நேயமொடருச்சித்தேத்திநின்றவடன்னைநீல
ஞாயிறுநிகர்த்தமேனிநகைமதிமுகத்தாயீண்டியா
மேயினதொன்றைவெஃகிவிரைந்தருள்புரிதியென்னி
னுயதுபுகல்வமென்னவம்மையிங்கிதனைச்சொல்வாள்.

(இ-ள்.) விருப்பத்துடன் அருச்சனைபுரிந்துநின்ற உமாதேவியாரைப்பார்த்து இறைவனாகிய மறையவன் நீலவண்ணம்வாய்ந்த சூரியனைப்போன்ற திருமேனியினையும் ஒளிவாய்ந்த சந்திரனையொத்த முகத்தினையும் உடையாய் இவ்விடத்துக்கு யான் வந்ததொன்றைக்கருதி விரைவாக அதனைத்தருவாயானால் உரைப்போம் என்றவுடனே உமாதேவியாரிதனை உரைப்பாராயினர்.—எ-று. (கசு)

எனக்கிசைகின்றதொன்றையிசைத்தியேயென்னினின்னே
நினக்கதுகூடுமிங்ஙனினைத்ததென்மொழிதியென்ன
வுனக்கடிமணத்தினெய்தவுற்றனனதுவேநீயென்
மனக்கருள்புரியுமாறுதடுத்தெதிர்மொழியலென்றான்.

(இ-ள்.) என்றற் கொடுக்கத்தகுந்த வொன்றைக்கொடுவென்று கூறுவை யாயின் நீ கேட்குமது நினக்குக்கிடைக்கும் இவ்விடத்தில் நீ எண்ணிய தென்னை உரைப்பாயாக வென்று பிராட்டியார் திருவாய்மலர்ந்தருளச் சிவபெருமானாகிய மறை யோன் உன்னைக்கல்யாணமுறையால் மனைவியாக அடையவந்தேன் அதனை நீ என க்கு அருள்புரிதல் வேண்டும் இனித் தடுத்து எதிர்மொழிகூறேல் என்று கூறினான். ()

வேறு.

அத்தனீதுரைத்தலோடுமம்மையங்கையாற்செவி
பொத்திவெய்தெனக்கனன்றுபுந்திநொந்துயிர்த்துநீ
யித்திறம்புகன்றதென்னையென்னையாளுகின்றதோர்
நித்தன்வந்துவதுவைசெய்யநீடவஞ்செய்தேனியான்.

(இ-ள்.) சிவபெருமானிவ்வாறு கூறியவுடனே உமாதேவியார் அகங்கை களாற் காதுகளைமூடி விரைந்து சீற்றங்கொண்டு மனநொந்து பெருமூச்சுவிடுத்து நீ இவ்வாறு கூறியதென்னை என்னையாளுகின்ற சிவபெருமான் எழுந்தருளித் திரும ணம் புரிதற்கு யான் மிகுந்த தவத்தினைச்செய்தேன்.—எ-று. (உக)

என்னலோடுமினையனென்றியாருமென்றுமிறையுமே
முன்னொணாதுநின்றவாதிமுதல்வனின்னைவதுவையான்
மன்னுகின்றதரிதுபோலுமாதவங்களாற்றியே
கன்னிநீவருந்தலென்றுகழறமாதுபுகலுவாள்.

(இ-ள்.) என்று கூறியவுடனே இன்னதன்மையனென்று யாரும் என்றும் சிறிது நினைக்கமுடியாது நின்ற ஆதிமுதல்வன் நின்னை மணமுறையாலடைவதரிய காரியம் சிறந்த தவங்களைச்செய்து மாதே நீ வருந்தாதே என்று கூறுதலும் அதற்கு உமாதேவியா ருரைப்பாராயினர்.—எ-று. (உஉ)

பரமனைவிரும்பிவந்துபாரின்மாமணஞ்செய
வரியமாதவங்கள்செய்வலன்னதற்குமுன்னவன்
வருகிலாதுதவிர்வனென்னின்வலிதினுவிநீப்பன்யான்
சரதமீதுபித்தனேசழக்குரைத்திருத்திநீ.

(இ-ள்.) பரமனே விரும்பிவந்து இவ்வுலகத்திலென்னை மணஞ் செய்ய அரிய சிறந்த தவங்களைச்செய்வேன் அத்தவத்துக்கிரங்கி முதல்வனான சிவபெருமான் வராது நின்று விடுவாரேல் யானே எனதுயிரினை நீக்கிக்கொள்வேன் உண்மையிது நிற்க, நீ பித்தங்கொண்டவனே குற்றமான மொழிகளை உரைத்திருக்கின்றனை.—எ-று.

போதிபோதியென்றுதானொர்புடையினேகவுவகையாய்
மாதுநின்றனன்புமுள்ளவன்மைதானுநன்றெனு
வாதிதேவனேனையோர்களறிவுறுதவகையவள்
காதனீடுதனதுதொல்கவின்கொண்மேனிகாட்டினன்.

(இ-ள்.) போதி போதி என்று கூறித்தான் வேறொருபக்கஞ்செல்ல மகிழ் வுடையனாய் மாதே நினதன்பும் மனவுறுதியும் நன்றென்றுகூறி ஆதிதேவனான சிவ பெருமான் பிறரறியாவண்ணம் அவ்வுமாதேவிக்கு விருப்பத்தினை மிகுதியாக உண் டாக்குகின்ற தமது பழைய அழகுவாய்ந்த திருமேனியைக் காட்டியருளினர். (உ௩)

ஆதிதன்றொருருவுகாட்டவமலைகண்டுமெய்பனித்
தேதிலாரெனநினைந்திகழ்ந்தனன்னெனுவவன்
பாதபங்கயங்களிற்பணிந்துபோற்றிசெய்தியான்
பேதையேனுணர்ந்திலேன்பிரான்மறைந்துவந்ததே.

(இ-ள்.) முதல்வனான சிவபெருமான் தமது பழைய திருவுருவினைக்காட்ட அமலையான உமாதேவியார் தரிசித்து உடனடுங்கி இறைவனே அயலானென நினைந் திகழ்ந்தேனென்று அச்சிவபெருமானுடைய் சரணகமலங்களில் வணங்கித்துதித்து அறிவில்லாதவளான யான் தேவரீர் மறைந்து வந்ததை அறிந்திலேன்.—எ-று. (௨௫)

உன்னருட்கணெய்துமேலுணர்ச்சியெய்திநிற்பன்யான்
பின்னொர்பெற்றியில்லையாற்பிழைத்ததுண்டுதணிதிநீ
யென்னுநற்றவத்திதன்னையினிதினெந்தைகண்ணுறீஇ
நின்னியற்கைநன்றுநன்றுநீதுளங்கலென்றனன்.

(இ-ள்,) உனது கருணைக்கண்ணின் பார்வையெய்துமேல் யான் அறிவுடைய வளாக விருப்பேன் வேறொருதன்மையுமில்லை குற்றஞ்செய்ததனை பொறுத்தருள்வா யாக என்று கூறு நல்லதவத்தினையுடைய உமாதேவியை எம்பெருமான் செவ்வனே பார்த்து நின்றனியற்கை நன்று நன்று நீ நடுங்காதே என்றருளிச் செய்தனர்.-எ-று.

என்றநாதனைப்பினுமிறைஞ்சியெம்பிராட்டிபா
னின்றமாதரைத்தனதுநேத்திரத்தினோக்கலா
ளொன்றுமுன்னல்செய்திலாளுலப்பிலெந்தைதொல்புகழ்
நன்றுபோற்றெடுத்துநிற்பநாட்டநீருகுத்தரோ.

(இ-ள்.) என்றருளிச்செய்த சிவபெருமானைப் பின்னரும் வணங்கி எம்பெரு மாட்டி அருகினின்ற பெண்களைத் தனது திருக்கண்களாலும் பாராதவளாயும் ஒன்று நினையாதவளாயு நின்று கண்ணீரொழுகவிட்டு அளவற்ற வெம்பெருமானுடைய பழய புகழ்களைச் செவ்வனே கூறித் துதித்தனள்.—எ-று. (௨௭)

கண்டுபாங்கராயமாதர்கன்னியெம்மைநோக்கலாண்
மண்டுகாதலந்தனுளன்மாயம்வல்லனேகொலோ
பண்டுநேர்ந்துளாரையுற்றபான்மைபோலுமேலியா
முண்டுதேருமாறதென்றுளத்திலையமெய்தினர்.

(இ-ள்.) அருகினின்ற தோழியர் கூட்டத்தினர் இச்செயலினைப்பார்த்து இக் கன்னி எம்மைப்பார்க்கின்றாளில்லை. இங்குவந்த விம்மறையோன் மாயவித்தையில்வல் லவனோ இவள் முன்னர்க்கருதிய இறைவனை அடைந்தனளோ நாம் இன்னம் இந்த விஷயத்தில் ஆலோசனை செய்யவேண்டுவதுளது என்று மனத்திலையங்கொண்டனர்.

சிலதியர்க்குள்விரைவிரைந்துசிலவர்சென்றுதக்கனென்
றுலகுரைக்குமொருவன்வைகுமுறையுணண்ணியுன்மக
ணிலைமையீதுகேளெனாநிகழ்ந்தயாவுமுறையினால்
வலிதுகூறமற்றவன்மனத்திலோர்தலுற்றனன்.

(இ-ள்.) தோழியருட் சிலர் விரைவாகச்சென்று தக்கனென்றுலகினர் கூறு மொப்பற்றவன திருப்பிடத்தினை அடைந்து உன் புதல்வியின் நிலைமையிதுகேளென்று நடந்தனமுற்றுமுறையினாற் தாமே உரைக்க அவைகளைக்கேட்ட தக்கன் மனத்தி லாலோசிக்கத் தொடங்கினன்.-எ-று. (௨௯)

போதநீடுபுத்தியாற்புலப்படத்தெரிந்துழி
யாதியந்தமின்றிநின்றவண்ணல்வந்ததாகலு
மேதிலாமகிழ்ச்சிபெற்றெழுந்துதுள்ளியான்பெறு
மாதையங்கவற்களிப்பன்வதுவையாற்றியென்றனன்.

(இ ள்.) அறிவுமிகுந்தபுத்தியினால் விளங்குமாறு தெரிந்தவுடனே ஆதியந்தமற்ற இறைவனே வந்ததாக வறியப்படவும் கணக்கற்ற மகிழ்ச்சிபெற்றெழுந்து துள்ளி யான் பெற்றமகளை கலியாணமுறையால் அச்சிவபெருமானுக் களிப்பேனென்று கூறினன்.

உமைதவம்புரிபடல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௩௨.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமணப் படலம்.

தொல்லையில்வதுவையந்தொழினடாத்திட
வொல்லுவதெற்றையென்றுளங்கொண்டாய்வுழி
நல்லனயாவுமந்நாளினண்ணலு
மெல்லையிலுவகைமிக்கேம்பலெய்தினான்.

(இ-ள்.) பழய வேதமுறைப்படி திருமணநடத்துதற்குப் பொருந்து நாளெந்த நாளென மனதினாலாராய்ந்த விடத்துச் சுபமுகூர்த்தமனைத்தும் அத்தினத்திற் பொருந்தி இருத்தலும் அளவற்றசந்தோஷத்தின் மிகுந்து இறுமாப்படைந்தனன்.—எ-று.

அண்ணலுக்கிப்பகலணங்கையீவனென்
றுண்ணிகழார்வமோடுளத்திற்றாக்கியே
விண்ணவர்யாவரும்விரைந்துசெல்லிய
துண்ணெனவொற்றரைத்தூண்டினானரோ.

(இ-ள்.) பெருமையிற் சிறந்த சிவபெருமானுக்கு இத்தினத்தில் தனதுமகளை அளிப்பதாக உள்ளே நிகழாநின்ற விருப்பத்துடன் மனதுட்டுணிந்து தேவரனைவரும் விரைந்துவருமாறு தூதர்களை அனுப்பினான்.—எ-று. (௨)

தன்னகரணிபெறச்சமைப்பித்தாங்கதற்
பின்னுறமுன்னினும்பெரிதுமேர்தக
மன்னுறுகோயிலைவதுவைக்கேற்றிடப்
பொன்னகர்நாணுறப்புனைவித்தானரோ.

(இ-ள்) தனது நகரத்தை அழகுபொருந்துமா றலங்கரிப்பித்து அதற்குப் பின்னர் தானிருக்கும் மாளிகையை சுவர்க்கமு நாணுமாறு முன்னினும் சிறப்பாக திருமணத்துக்கேற்றவண்ணம் அலங்கரிப்பித்தான்.—எ-று. (௩)

கடிவினைபுரிதரக்காசின்றாக்கிய
படியறுதிருநகர்பையநீங்கியே
கொடியுறழ்மெல்லிடைக்குமரிபால்வரு
மடிகளையணுகினனடிகள்போற்றியே.

(இ-ள்.) கலியாணம் புரியுமாறு குற்றமின்றிச்செய்த ஒப்பற்ற திருநகரினை மெல்லென விடுத்துக் கொடிபோன்ற மெல்லிய இடையினளான உமாதேவியாரிடம் எழுந்தருளி இருக்கின்ற கடவுளை அடைந்து திருவடிகளை வணங்கி.—எ-று. (௪)

அணுகினனண்ணனீயணைந்துமற்றிவண்
மணநயவேட்கையான்மாதுநோற்றன
ணணுகுதியடியனேனகரின்பாலென
நுணுகியகேள்வியானுவன்றுவேண்டவே.

(இ-ள்.) அருகிற்சென்று அண்ணலே நீ வந்து மணஞ்செய்துகொள்ள வேண்டுமென்னும் விருப்பத்தால் என் மகள் தவஞ்செய்தனள் ஆதலின் என்னகரிடத்தெழுந்தருளுவீரென்று நுண்மையான கேள்வியினையுடைய தக்கன் கூறிவேண்டிக் கொள்ளவும்.—எ-று. (௫)

இறையவனன்றெனவெழுந்துசென்றோராய்
நறைமலர்செறிகுழனங்கையாளொடு
மறல்கெழுமனத்தினன்மனையுற்றனரோ
வறைதருநூபுரத்தடிகள்சேப்பவே.

(இ-ள்.) சிவபெருமான் நல்லதென்று எழுந்து முழங்காநின்ற நூபுரமணிந்த திருவடிகள் செந்நிறமடைய நடந்து தேன்பொருந்திய கூந்தலாளான உமாதேவியாருடன் மயக்கம்பொருந்திய மனத்தினையுடைய தக்கன் மாளிகையுளெழுந்தருளினார்.

பூந்திருநிலவியபொருவில்கோயின்முன்
காந்தியொடேகலுங்கடவுண்முன்னரே
வாய்ந்ததொரெண்வகைமங்கலங்களு
மேந்தினரேந்திழைமார்களெய்தினார்.

(இ-ள்.) அழகிய செல்வம் விளங்குகின்ற ஒப்பற்ற மாளிகையினெதிரில் மனைவியுடனெழுந்தருளுதலும் அவ்விறைவனெதிரே பொருந்திய அட்டமங்கலங்களை யேந்திய பெண்கள் வந்தார்கள்.—எ-று. (எ)

தையலர்மங்கலத்தன்மைநோக்கியே
வையகமுதவியமங்கைதன்னுட
னையனுமுறையுளினடைந்துதானொரு
செய்யபொற்பீடமேற்சிறப்பின்வைகினான்.

(இ-ள்.) பெண்கள் அட்டமங்கலங்களுடன் வந்த தன்மையைக்கண்டு உலகனைத்துமீன்ற அன்னையான உமாதேவியாருடன் இறைவனும் மாளிகையினுட்புகுந்து தனித்தவராய் ஒரு செவ்விய பொற்பீடத்தி லெழுந்தருளி இருந்தனர்.—எ-று. (அ)

அன்னதுகாலையிலாற்றுநோன்புடைக்
கன்னியைமறைக்கொடிகண்டுபுல்லியே
தன்னுறுமத்திரந்தந்துமற்றவள்
பின்னலைமென்மெலப்பிணிப்புநீக்கினாள்.

(இ-ள்.) அப்பொழுது செய்யப்பட்ட தவத்தினையுடைய உமாதேவியாரை வேதவல்லி கண்டணைத்துத் தனது மாளிகையிலழைத்துவந்து, அவ்வம்பிகையின் கூந்தற் பின்னலை மெல்லென மெல்லெனச் சிக்குடைத்தனள்.—எ-று. (௯)

சிற்பரையோதியின்செறிவையாய்ந்தபின்
பொற்புறுநானநெய்பூசிப்பூந்துவர்
நற்பொடிதீற்றியேநவையில்கங்கைநீர்
பற்பலகுடங்கரின்பாலுய்த்தாட்டினாள்.

(இ-ள்.) ஞானரூபியான வுமாதேவியின் கூந்தலின் பின்னலைப் பிரித்த பின்னர் அழகுவாய்ந்த புனுகு நெய்பூசி அழகிய நெல்லி முதலிய நல்ல பொடியினைத் தேய்த்து அனேகங் குடங்களிற் கொண்டுவந்த குற்றமற்ற கங்காசலத்தால் அபிஷேகஞ் செய்தனள்.—எ-று. (௧0)

ஆட்டினண்மஞ்சனமணியபூந்தொடை
சூட்டினள்பொற்கலைசூழ்ந்துபல்கலன்
பூட்டினளெம்பிரான்புடையினுய்த்தன
ளீட்டுறுமுயிர்த்தொகையீன்றவாய்தனை.

(இ-ள்.) நன்னீரா லபிஷேகஞ்செய்து மணம்பொருந்திய மலர்மாலைசூட்டிப் பொன்னுடைதரித்துப் பலவகை அணிகளையணிந்து கூட்டமான வுயிர்வருக்கங்களைப் பெற்ற உமாதேவியாரை எம்பெருமான் பக்கத்தில் விடுத்தனள்.—எ-று. (கக

மணவணிமுற்றுறுமாதுபோந்துதன்
கணவனதொருபுடைகலந்தகாலையிற்
பணைமுதலாகியபல்லியங்களு
மிணையறவியம்பினரியாருமேத்தவே.

(இ-ள்.) திருமணவலங்காரத்தினை முற்றிலுங்கொண்ட உமாதேவியார்சென்று தமது கணவரான சிவபெருமானி னொருபுறத்தை யடைந்தவுடனே அனைவருந் துதிக்க முரசமுதலிய பலவாத்தியங்களை முழக்கினார்கள்.—எ-று. (கஉ)

தூதுவருரைகொளீஇத்துண்ணென்றேகியே
மாதவன்முதலியவானுளோரெலாம்
போதினைவளைதருபொறிவண்டாமென
வாதியையடைந்தனரடிபணிந்துளார்.

(இ-ள்.) தூதுவர் சொல்லைக்கொண்டு திருமால் முதலிய தேவரனைவரும் விரைந்துவந்து கமலமலரைச்சூழ்ந்த புள்ளிபொருந்திய வண்டினைப்போல சிவபெருமானை அடைந்து அடிபணிந்தவர்களானார்கள்.—எ-று. (கந)

வீழ்குறுமிழுதெனும்வெய்யநோன்குரற்
காழ்கிளர்திவ்வுடைக்கடிகொள்யாழினை
யூழ்கிளர்கின்னரருவணரேந்துபு
கேழ்கிளர்மங்கலகீதம்பாடினார்.

(இ-ள்.) ஒழுகப்பெற்ற நெய்யனைய வெய்ய வலிய தந்திகளையும் வயிரம் விளங்குகின்ற முறுக்காணிகளையுமுடைய ஒளிவாய்ந்தயாழினை ஒழுக்கம்வாய்ந்த கின்னரர்களும் கருடர்களுமேந்திப் பொருளால் விளக்கம்வாய்ந்த மங்கல கீதங்களைப் பாடினார்கள்.—எ-று. (கச)

கானுறுபஃறலைக்காவுகான்றிடு
தேனுறுவிரைமலரடிகள்சிந்துபு
வானவர்மகளிர்கள்வணங்கிவாழ்த்துரை
யானவைபுகன்றனரமலைபாங்கரில்.

(இ-ள்.) நின்மலையான உமாதேவியாரருகிற்சென்று வளமாகப்பொருந்திய பலதலைகளையுடைய கற்பகச்சோலையிலுண்டான தேனொடுகூடின மணம்வாய்ந்த மலர்களைத் திருவடிகளில் அருச்சித்துத் தேவமாதர்கள் மங்கலவாழ்த்துப் பாடல்களைப் பாடினார்கள்.—எ-று. (கரு)

எல்லையதாகலுமிருந்துதக்கனுங்
கொல்லையின்மறைமொழியுரைத்துத்தன்மனை
வல்லிபொற்சிரகநீர்மரபின்வாக்குற
மெல்லெனவரனடிவிளக்கினனரோ.

(இ-ள்.) முகூர்த்த நெருங்குதலுந் தக்கனென்பவன் விரைவாக வேதவசனங்கூறித் தனது மனைவியான வேதவல்லி பொற்கரக நீரைமுறைப்படி ஒழுக்கச்சிவபெருமான் திருவடிகளை மெல்லென விளக்கினான்.—எ-று. (கசு)

விளக்கியபின்றையில்விரைகொள்வீமுதற்
கொளப்படுபரிசெலாங்கொணர்ந்துமற்றவற்
குளப்படுபூசனையுதவிமாதினை
யளித்திடவுன்னினனமரர்போற்றவே.

(இ-ள்.) திருவடியை விளக்கியபின்னர் மணம்பொருந்திய மலர்முதலியவாகக்கொண்டு வரவேண்டியவைகளைக் கொண்டுவந்து எண்ணத்தக்க பூசனையைச்செய்து தேவர்துதிக்க மகளையளிப்பான் கருதினுன்.—எ-று. (௧எ)

சிற்கனவடிவினன்செங்கையுள்ளுமை
நற்கரநல்குபுநன்றுபோற்றுதி
நிற்கிவடன்னையானேர்ந்தனன்னெனுப்
பொற்கரகந்தருபுனலொடீந்தனன்.

(இ-ள்.) ஞானவுருவினரான சிவபெருமான் திருக்கரத்தின்மீது உமாதேவியின் செவ்விய கரத்தினை வைத்து இவளைச் செவ்வனே காப்பாயாக நினக்கிவளை யானளித்தேனென்று பொன்னுலாகிய கமண்டல நீருடன் அளித்தனன்.—எ-று (௧அ)

மூர்த்தமங்கதனிடைமுதல்வனம்பிகை
சீர்த்திடுமணவணிதெரிந்துகைதொழூஉ
நீர்த்தொகைகதிரொடுநிலவுகண்டுழி
யார்த்தெனவழூத்தினரமரர்யாவரும்.

(இ-ள்.) தேவரனைவரும் அச்சுபமுகூர்த்தகாலத்தில் முதல்வனுடையவும் அம்பிகையினுடையவும் சிறப்புவாய்ந்த திருமணக்கோலத்தினைத் தரிசித்து கடற்குழாம் பூரணகலைகளையுடைய சந்திரனைக்கண்டவுடனே ஆரவாரித்தாற்போல ஆரவாரித்தனர்.—எ-று. (௧௯)

மாடுறுதிசைமுகன்மண்ஞ்செய்வேள்வியிற்
கூடுறுகலப்பைகள்கொணர்ந்துநூன்முறை
நேடினன்சடங்கெலாநிரப்பமான்முத
லாடவரிசைத்தனரமலன்வாய்மையே.

(இ-ள்.) அருகிலிருந்த பிரமன் திருமணச்சடங்கிற்கு வேண்டிய பொருளனைத்தையும் கொண்டுவந்து சாத்திரமுறைப்படி ஆராய்ந்து சடங்குகளனைத்தையும் நிறைவேற்றத் திருமான் முதலிய புருடர்கள் இறைவனுண்மை வசனமான வேதங்களையோதினர்.—எ-று. (௨0)

அன்னுழியுருவமுமருவுமாவியு
முன்னுறுமுணர்வுமாயுலகம்யாவிற்கு
நன்னயம்புணர்த்தியேநண்ணுநாயகன்
றன்னுருவொளித்தனனருளின்றன்மையால்.

(இ-ள்.) அப்பொழுது உருவமு மருவமு முயிரு ஞானமுமாகி உலகனைத்திற்குஞ் சுகத்தினையுண்டாக்கியருளும் இறைவன் அருளின் தன்மையால் அவ்விடத்துத் தாங்கியிருந்த பார்ப்பனக் கோலத்தினையுடைய வுருவினை மறைத்தருளினுன். (௨௧)

மறைந்தனனிருத்தலுமகிணற்காண்கிலா
ளறந்தனைவளர்க்குமெம்மன்னைநோற்றுமுன்
பெறும்பெருநிதியினைப்பிழைத்துளோரெனத்
துறந்தனளுவகையைத்துளங்கிமாழ்கியே.

(இ-ள்.) சிவபெருமான் மறைந்திருந்தவுடனே தமது நாயகனைக்காணாதவராய் முப்பானிரண்டு தருமங்களையும் வளர்க்கின்ற எமதன்னையார் தவஞ்செய்து முன்னர்ப்பெற்ற செல்வத்தினை இழந்தாரையொப்ப நடுங்கி வருந்தி மகிழ்ச்சியை இழந்தனர்.— எ-று. (௨௨)

பொருக்கெனவெழுந்தனள் பூவின்மீமிசைத்
திருக்கிளர் திருமுதற்றெரிவைமாதர்க
ணெருக்குறுசூழல்போய்நிறங்கோடமுகத்
துருக்கியபொன்னெனவுருகிவிம்மினள்.

(இ-ள்.) விரைந்தெழுந்துசென்று கமலாசனத்தி லழகுவிளங்க விருக்கின்ற திருமகள் முதலிய பெண்கள் நெருங்கி இருக்கும் இடத்துக்குச்சென்று நிறம்வாய்ந்த தீயினிடத்துருக்கிய பொன்னை யொப்ப உருகி விம்மினள்.-எ-று. (௨௩)

உயிர்த்தனள்கலுழ்ந்தனளுணர்வுமாழ்கியே
யயர்த்தனள்புலர்ந்தனளலமந்தங்கமும்
வியர்த்தனள்வெதும்பினள்விமலன்கோலமே
மயிர்த்தொகைபொடிப்புறமனங்கொண்டுன்னுவாள்.

(இ-ள்.) பெருமூச்சுவிடுத்துக் கண்ணீர் ஒழுக வறிவழிந்து மயங்கிப் புலர்ந்தயர்ந்துடல்வியர்த்து வெதும்பி யுரோமங்கள் பொடித்திறைவன் திருக்கோலத்தையே மனத்திற்கொண்டு நினைப்பாளாயினள்.— எ-று. (௨௪)

புரந்தரன்மாலயன்புலவர்யாவரு
நிரந்திடுமவையிடைநிறுக்கும்வேள்விவா
யிருந்தனன்மாயையாலிறைவன்றண்ணெனக்
கரந்தனனுதலிற்கள்வன்போலுமால்.

(இ-ள்.) இந்திரன் திருமால் பிரமன் முதலிய தேவரனைவரும் வரிசையாகவிருந்த சபையினிடத்து நடந்த கலியாணத்தில் இருந்த இறைவன்மாயையால் விரைந்து மறைந்தனன். ஆதலினால் அவன் கள்வனோ?.—எ-று. (௨௫)

எய்தியெற்கொண்டதோரிறைவன்றன்னையான்
கைதவனேயெனக்கருதலாகுமோ
மெய்தளர்பான்மையின்வினையினேனிவட்
செய்தவஞ்சிறிதெனத்தேற்றலின்றியே.

(இ-ள்.) உடல் வருந்துமாறு தீவினையுடைய யான் செய்த தவஞ்சிறிதெனத் துணிதலை யன்றி என்னை யடைந்து மணந்த இறைவனை யான்வஞ்சகனென்று கருதுதல் கூடுமோ ?.—எ-று. (௨௬)

வேறு.

என்றென்றுன்னியுயிர்த்திரங்குமிறைவிசெய்கையெதிர்நோக்கி
மன்றனாறுங்குழல்வேதவல்லிபுல்லிமனந்தளரே
லுன்றன்கணவற்பெறும்வாயிறவமேயின்னுமுஞற்றுகென
நின்றதிருவுநாமகளும்பிறருமினையநிகழ்த்தினரால்.

(இ-ள்) என்றிவ்வாறு நினைத்துப் பெருமூச்சு விட்டழுகின்ற உமாதேவியாரின் செய்கையை நேரே பார்த்து மணம் வீசும் கூந்தலினையுடைய வேதவல்லி யென்பாள், அணைத்து மகளே மனந்தளராதே உனது கணவனை நீ யடைதற்கு வழி தவமேயாம். அதனை இன்னஞ் செய்வாயாக என்றனள் உடனே அருகில் நின்ற திருமகளும் சரசுவதியும் பிறதேவமாதர்களும் இவ்வாறு கூறினர்கள்.—எ-று. (௨எ)

அன்னைவாழியிதுகேண்மோவகிலமுழுதுமளித்தனையா
லென்னபொருளுநின்னுருவேயாண்டுநீங்காநின்கணவன்
றன்னைமறைக்குமறையுளதோதவத்தையளிப்பானினைந்தனையோ
வுன்னலரிதாநுமதாடன்முழுதும்யாரேயுணர்கிற்பார்.

(இ-ள்.) உலகமாதாவே இதனைக்கேள் அகிலமுழுது நீயே பெற்றனை அனைத்துப்பொருளு நினதுருவமே எங்கு நீங்காது நிறைந்த நினது நாயகனான சிவபெருமானை மறைக்கு மறைப்புமுளதோ நீ தவத்தைக் காக்குமாறு கருதினையோ உங்கள் திருவிளையாடல்களை நினைத்தற்கே அரிதாம் யாவரோ முற்றிலும் அறியவல்லுநர். ()

வாக்கின்மனத்திற்றொடர்வருநின்மகிணன்றனையுமுன்றனையு
நோக்கமுற்றேந்தஞ்சமெனநுவறல்செய்யாவினையாகம்
போக்கலுற்றேந்தோற்றமுறும்புரையுந்தீர்ந்தோம்போதமனந்
தேக்கலுற்றேமுய்ந்துமியாஞ்செய்யுந்தவமுஞ்சிறிதன்றே.

(இ-ள்.) வாக்கினாலும் மனத்தினாலும் தொடருதற்கரிய நினது கணவனையும் நின்னையும் தரிசித்தோம் நுமதடைக்கலமெனக்கூறி எங்கள் தீவினைகளை முற்றிலும் நீக்கினேம் பிறத்தலென்னுங் குற்றமு நீக்கினேம். உள்ளமுழுது ஞானநிறைவுற்றேம் நாங்கள் செய்ததவமுஞ் சிறிதன்றுதலி னுய்ந்தோம் —எ-று. (௨௯)

என்னுவியம்பிவாழ்த்தெடுப்பவிறைவியவர்க்கண்டினிதருள்செய்
தன்னார்பொய்தலொருவிப்போயருமாதவமேபுரிவாளாய்
முன்னுமுன்னைக்கடிமாடமுயன்றுபோந்தாளிவ்வனைத்து
நன்னாரணனேமுதலானோர்நோக்கிநனிவிம்மிதரானார்.

(இ-ள்.) என்றுகூறி வாழ்த்துரைக்க அவர்களை இறைவிபார்த்துச்செவ்வனே அருள்செய்து அவர்கள் கூட்டத்தை விடுத்துச்சென்று அரிய சிறந்த தவத்தினையே செய்பவளாய் முன்னிருந்து தவஞ்செய்த காவலினையுடைய மாளிகையை அடைந்தனள் இச்செயலனைத்தும் கண்டு திருமால் முதலியோர் மிக ஆச்சரிய மடைந்தனர்.

எங்குற்றனன் கொலிறையென்பாரிஃதோர்மாயமெனவுரைப்பார்
மங்கைக்கொளித்ததென்னென்பார்வாரிகாண்டுமேலென்பா
ரங்கித்தகையபலபலசொற்றலமந்தேங்கியதிசயித்துக்
கங்குற்போதின்மாசூர்ந்தகதிர்போன்மாழ்கிக்கவலுற்றார்.

(இ-ள்.) இறைவனெங்குற்றனன் என்பார் இஃதொருமாயமென்று கூறுவார்கள் இம்மாதுக்கொளித்த தென்னையென்பார் மேல்வருதற்குரிய தேதனைக் காண்போமென்பார்கள் இவைபோல்வன பலகூறிக் கவற்சியுற்றேங்கி அதிசயித்து இராப்பொழுதில் மேகம்படிந்த சந்திரனைப்போல வருந்திக் கவன்றனர்.—எ-று. (௩௧)

நோக்குற்றனையபான்மைதனைநோய்த்திறற்கனனிகனன்று
தீக்கட்கறங்கவெய்துயிர்த்துச்செம்பொற்கடகக்கைபுடைத்து
மூக்கிற்கரந்தொட்டகம்புழுங்கமுறுவல்செய்துமுடிதுளக்கி
யாக்கத்தொடியாம்புரிவதுவையாற்றவழகிதாமென்றான்.

(இ-ள்.) இச்செயலினைப்பார்த்துத் தக்கன் மிகுந்த கோபங்கொண்டு தீமயமான கண்கள் சுழலாநிற்கப் பெருமூச்சுவிடுத்துச் செவ்விய பொன்கடகமணிந்தகையைத்தட்டி மூக்கின்மீது விரல்வைத்து உள்ளம்புழுங்க நகைத்துத் தலையசைத்துச் செல்வத்துடன் நாம்செய்த கல்யாணமிகவழகிது என்று கூறினான்,—எ-று. (௩௨)

வரந்தானுதவும்பெற்றியினுன் மற்றென் மகடூஉவயின்வாரா
விரந்தானதனையான்வினவியியல்பின்வதுவைமுறைநாடி
நிரந்தார்கின்றசுரர்காணநெறியானேர்ந்தேனேர்ந்ததற்பின்
கரந்தான்யாருமானமுறநவையொன்றென்பாற்கண்டானே.

(இ-ள்.) வரம்வேண்டுமுறையாக என் மகளிடம் வந்து நீ எனக்கு மனைவியாதலான வரத்தினைத்தா என இரந்தனன் அதனையான் கேட்டுக் கிரமமான மணமுறைமையை ஆராய்ந்து வரிசிசையாக விருக்கின்ற தேவர்கள் காணும் வண்ணம் கொடுக்கவேண்டு முறைப்படி கொடுத்தேன் கொடுத்தபின்னர் யாருஞ் சந்தேகங் கொள்ள மறைந்தனன் அங்ஙன மறைதற்கேற்ற குற்றமெது வேனுமொன்று என்னினிடத்துக் கண்டானோ ?—எ-று. (ருரு.)

புனையுந்தொன்மைக்குடிவினையைப்புன்மையாக்கியூறுபுணர்த்
தெனையும்பழியின்மூழ்குவித்தேயிறையுமெண்ணுதொளித்தானே
யனையுந்தாதையுந்தமருமாருமின்றியகன்பொதுவே
மனையென்றுடுமொருபித்தன்மறையோனுகின் மயல்போமோ.

(இ-ள்.) செய்யா நின்ற புராதனமான திருமணத்தினை இழிவாக்கிக் குறைவுபடுத்தி என்னையும் பழியின் முழுகச்செய்து சிறிதும் ஆலோசனையின்றி ஒளித்தானே அன்னையும் அத்தனுஞ் சுற்றத்தினரு முதலிய எவரும் இன்றி விசாலமான அம்பலமே வீடென்று கூத்தாடுமொரு பித்தன் மறையவனுனல் மயக்கம் போகுமோ.?-எ-று.

ஆயிற்றீதேயவனியற்கையறிந்தேனிந்நாள்யானென்று
தீயுற்றெனவேயுளம்வெதும்பித்திருமான்முதாலாந்தேவர்தமைத்
போயுற்றிடுநும்புரத்தென்றுபோகவிடுத்துப்புனிதன்செய்
மாயத்தினையேயுன்னியுன்னிவதிந்தான்செற்றம்பொதிந்தானே.

(இ-ள்.) கோபத்தான் மூடப்பெற்ற தக்கன், ஆராயுமிடத்து அச்சிவன் தன்மையை இந்நாள் அறிந்தேன் யானென்று தீப்பட்டாங்கு உள்ளம்வெதும்பித் திருமான் முதலிய தேவர்களைப்பார்த்து உங்கள் நகரங்களுக்கு நீங்கள் போங்கள் என்று கூறியனுப்பி நின்மலனுன சிவபெருமான் செய்த மாயத்தினையே நினைத்து நினைத்து இருந்தனன்.—எ-று. (ருடு)

பொன்னூர்மேனிக்கவுரிமுன்னைப்பொலன்மாளிகையிற்போந்துலப்பின்
மின்னூர்செறிந்தபண்ணையுடன்மேவியங்கண்வீற்றிருந்து
பன்னுளீசன்றனையெய்தப்பரிந்துநோற்கப்பண்ணவனோர்
நன்னுளதனிற்றுபதன்போனடந்தானவடனிடந்தானே.

(இ-ள்.) பொன்போன்ற மேனியளான கவுரி முன்னர்த் தவஞ்செய்த அழகிய மாளிகையையடைந்து அளவின்றி நெருங்கி விளங்கிய பெண்கள் கூட்டத்துடன் பொருந்தி அங்கிருந்து பலதினம் ஈசன் தன்னையடையுமாறு விரும்பித் தவஞ்செய்ய ஒரு நல்ல தினத்தில் இறைவன் ஒரு தவசியைப்போல அவ்வுமாதேவியினிடத்துக் கெழுந்தருளினூர்.— எ-று (ருசு)

நலனேந்தியவெண்டலைக்கலனுநறியகளபநீற்றணியுங்
கலனேந்தியகண்டிகைதொடுத்தகவின்சேர்வடமுங்கடிப்பிணையு
நிலனேந்தியதாளிடைமிழற்றுநீடுமறையின்பரியகமும்
வலனேந்தியசூலமும்பின்னல்வனப்புங்காட்டிவந்தனனே.

(இ-ள்.) நன்மை வாய்ந்த வெள்ளியதலையோடான உண்கலனும் மணம்வீசும் களபமான திருநீற்றணியும் ஆபரணங்களாற் சிரோபூடணமாகக்கொள்ளப்பட்ட அழகு

வாய்ந்த உருத்திராக்கத் தாழ்வடமும் காதணியும் பூமியாற் சுமக்கப்பெற்ற திருவடியின் முழங்காநின்ற உயர்ந்த வேதமாகிய சிலம்பும் வலப்புறத்திலேந்திய சூலப்படையும் சடைப்பின்னலினழகுங் காட்டி.—எ-று. (௩௭)

வேறு.

வந்துமைமுற்படவந்தவனைக்கண்
டெந்தைபிராற்கினியாரிவரென்னாச்
சிந்தனைசெய்தெதிர்சென்றுகைகூப்பி
யந்தரிபோற்றினளன்புறுநீரால்.

(இ-ள்.) இத்தகைய கோலத்துடன் எதிரேவந்த அப்பெருமானைப்பார்த்து இவர் எம்பெருமானுக்கினியவரென்று நினைத்து எதிரேசென்று உமாதேவியார் கரங்களைக்குவித்து அன்புடையவராகத் துதித்தனர்.—எ-று. (௩௮)

பற்றொடுசென்றுபராய்த்தொழுமெல்லைப்
பெற்றமதன்மிசைபெண்ணிடமன்றி
மற்றுளதொல்வடிவத்தொடுநித்த
னுற்றனனவ்விடையொண்டொடிகாண.

(இ-ள்.) விருப்பத்துடன் எதிர் சென்று துதித்து வணங்குங்கால் இடபத்தில் உமாதேவியாரை இடப்புறத்திலன்றியுள்ள பழயவடிவத்துடன் அங்கு ஒள்ளிய வளையலினையுடைய தாட்சாயணிகாணும் வண்ணம் எழுந்தருளினார்.—எ-று. (௩௯)

பார்ப்பதியாகியபாவைநுதற்க
ணாற்புயனென்வயினண்ணினனென்னா
வேற்புறுசிந்தைகொடின்னலிகந்தே
மேற்படுமோகையின்வீற்றினளானாள்.

(இ-ள்.) உமாதேவியார் மூன்றுகண்களையும் நான்கு தோள்களையும் உடைய சிவபெருமான் என்னிடத்திற்கு வந்தனரென்று துன்பமொழிந்து இனிமைவாய்ந்த மனத்துடன் அதிகரித்த மகிழ்ச்சி வாய்ந்து எதிர் சென்றனள்.—எ-று. (௪0)

பன்முறைவீழ்ந்துபணிந்துபராவி
யென்முனமுந்தையிகந்தனையின்றிப்
புன்மையைநீக்குதிபோந்தனைகொல்லோ
சின்மயவென்றெதிர்சென்றுரைசெய்தாள்.

(இ-ள்.) பலமுறை விழுந்து வணங்கித்துதித்து என்னெதிரில்லாமல் முன்னர் மறந்தனை இப்பொழுதெழுந்தருளிய சின்மயனே எனது குறையை நீக்குவாயோ என்று எதிரேசென்று கூறினாள்.—எ-று. (௪௧)

அம்முறைசெப்புமணங்குதனைக்கூய்
மைம்மலிகண்டன்மலர்க்கரமோச்சித்
தெம்முனைசாடுறுசீர்விடைமேற்கொண்
டிம்மெனவேதனிடத்தினில்வைத்தான்.

(இ-ள்.) அவ்வண்ணங் கூறும் உமாதேவியாரை விளித்து நீலநிறமிகுந்த கழுத்தினையுடைய சிவபெருமான் மலர்போன்ற கரத்தினை நீட்டி எடுத்துப்போரிற் பகைவர்களைக் கொல்லுகின்ற சிறப்புவாய்ந்த இடபத்தின்மீது விரைவாகத் தமதிடப்புறத்தி லிருத்தினர்.—எ-று. (௪௨)

நீல்விடமேயினனேரிழையோடும்
பால்விடையூர்ந்துபடர்ந்தனன்வெள்ளி
மால்வரையேகினன்மற்றவள்பாங்கர்
வேல்விழிமாதர்விரைந்ததுகண்டார்.

(இ-ள்.) நீலநிறமான விடத்தினைப் பானஞ்செய்த சிவபெருமான் உமாதேவியாருடன் பால்போலும் நிறம்வாய்ந்த இடபத்தினை நடத்திச்சென்று பெரிய வெள்ளிமலையை யடைந்தான். இச்செயலினை அங்குமாதேவியாரி னூழியக்காரிகளாயிருந்த வேலனைய கண்ணினரான மாதர்கள் கண்டார்கள்.—எ-று. (சங)

இக்கெனவுட்கியிரங்கினரேகித்
தக்கனிருந்திடுசங்கமுனாகிச்
செக்கரெனத்திகழ்செஞ்சடையண்ணல்
புக்கனனாலொருபுண்ணியனேபோல்.

(இ-ள்.) விரைவாக நடுங்கி இரங்கிச்சென்று தக்கனிருக்குஞ் சபையினெதிரையுற்றுச் செக்கரையொப்ப விளங்குஞ் சடையினையுடைய சிவபெருமான் நீறுபூசு முனிவனைப்போல எய்தினான்.—எ-று. (சச)

கண்டனணின்மகள்கைதவமோரா
ளண்டினள்சேர்தலுமாயவன்வல்லே
பண்டையுருக்கொடுபொற்படவன்றாட்
கொண்டுசெல்வானிதுகூறுவதென்றார்.

(இ-ள்.) நின்மகள் கண்டு அவன் வஞ்சனையையுணராது அவனருகிற் சென்றாள் உடனே அவன் விரைந்து பழைய உருவத்தினைத்தாங்கி இடதுபுறத்திலவ்வுமையை யிருத்திச்செல்கின்றான் இதுநாங்கள் உரைக்கவேண்டுவது என்றுகூறினார்கள்.—எ-று.

பாங்கியரின்னபகர்ந்தனகேளாத்
தீங்கனன்மீமிசைதீயதோர்தூநெய்
யாங்குபெய்தென்னவளப்பிலசெற்றந்
தாங்கியுயிர்ப்பொடுதக்கனிருந்தான்.

(இ-ள்,) பாங்கியர்கள் உரைத்த இவைகளைக்கேட்டு சுடாநின்ற தீயின்மீது சுடுகையினையுடைய நல்ல நெய்யை ஒழுக்கினாற்போல அளவற்ற கோபங்கொண்டவனாய்த் தக்கன் பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்தனன்.—எ-று. (சசு)

அக்கணம்வானவராயினரெல்லாந்
தொக்கனர்வந்துதொழுங்கடனாற்றிப்
பக்கமதூடுபராவினர்வைகத்
தக்கனவர்க்கிவைசாற்றுதலுற்றான்.

(இ-ள்.) அப்பொழுது தேவரனைவரும் நெருங்கி வந்து தொழுதலாகிய கடனைமுடித்து அருகில் துதிபுரிந்தவர்களாக இருக்கத்தக்க னென்பானத்தேவர்க்கிதனை உரைப்பானாயினான்.—எ-று. (சஎ)

என்புகல்வேனினியென்மகடன்னை
யன்புறவேட்டருளாலமிடற்றோன்
மன்புனையுங்கடிமன்றலியற்று
முன்புகரந்தனன்முன்னரிதாகி.

(இ-ள்.) யானினியென்ன வுரைக்கப் போகின்றேன் எனது மகளை விருப்பத்துடன் மணந்த நீலகண்டன் அலங்காரத்தினையுடைய மணச்சடங்கு நிறைவேறுதற்கு முன்னர் நினைத்தற்கரியவனாக மறைந்தனன்.—எ-று. (சுஅ)

அற்றலதின் றுமெனுடைவள் பாங்கிற்
கற்றைமுடிக்கொள்கபாலியெனச்சென்
றுற்றனனென்முனுறுமலொளித்தான்
பற்றினனன்னவளைப்படர்கின்றான்.

(இ-ள்.) அதுவுமன்றி இன்றும் என்மகளிடங் கற்றையான முடியினையுடைய கபாலியைப்போல சென்று என்னெதிரில் வராமல் அவளைக் கைப்பற்றிச் செல்கின்றான்.—எ—று. (சுகூ)

அன்னையுமத்தனுமார்வமொடீய
மன்னியகேளிர்மகிழ்ந்தனர்வாழ்த்தப்
பின்னர்மகட்கொடுபோந்திலனீன்றோர்
தன்னைமறைத்திதுசெய்வதுசால்போ.

(இ-ள்.) மாதாவும் பிதாவும் விருப்பத்துடன் கொடுக்க நெருங்கி இருந்தசுற்றத்தினர் மகிழ்ந்து வாழ்த்தப்பின்னர் மனைவியைக்கொண்டு சென்றிலன் பெற்றவர்களை மறைத்திதுசெய்வது முறையோ?—எ-று. (எ0)

இங்கிதுபோல்வனயாவர்செய்கிற்பார்
சங்கரனேலிதுதான்செயலாமோ
நங்கள்குலத்தைநவைக்கணுறுத்தா
னங்கதுமன்றியென்னாணையுநீத்தான்.

(இ-ள்.) இதுபோன்ற செயலினை எவர்செய்வார் சங்கரனாலிது செய்தல் கூடுமோ எங்கள் குலத்தினைக் குற்றத்தின்பாற்பாற்பட்ட தாக்கினான் அதுவன்றியுமென் ஆணையை மீறிநடந்தான்.—எ-று.

இவன் சங்கரனாலிது செய்தல் கூடாது சங்கரனல்லானென்பதவன்கருத்து. சங்கரன்—இன்பத்தைச் செய்பவன். (எக)

வேறு.

இரந்தனன்சிவனெனுமேதமெங்கணு
நிரந்ததுமற்றதுநிற்கவிவ்விடை
கரந்தனனென்பதோருரையுங்காசினி
பரந்ததுவேறுமோர்பழியுண்டாயதே.

(இ-ள்.) சிவன் இரந்தனனென்னுங் குற்றமாகிய வசனம் எவ்விடத்திலும் பரந்தது அதுவன்றிக் கரந்தனனென்பதோர் சொல்லுமுலகிற் பரந்தது வேறேயோர் பழியுமுண்டாகியது.

கரந்தனன்—மறைந்தனன். மற்றுமோர்பழி, உமையைத்திருடிச்சென்றது. இரத்தல் கரத்தல் திருடுதல் என்னு மூன்றுபழிமொழிக்காளாயினான் என்றான். உண்மையா லிச்செயல்களா லிகழ்ச்சியுடைய னல்லானென்பான் பழியென்றான். பழி—உண்மையுணராது கூறுங்குற்றத்திற்கு மாதலிற் பழியெனுமொழியா லிகழ்ந்தனன். (எஉ)

பண்டொருபரிவையைப்பரிந்துமன்றல்வா
யொண்டொடிச்செங்கையினுதகமேவுறக்
கொண்டிலனென்பதுங்கொள்ளுநீரரைக்
கண்டிலனென்பதுங்காட்டினனரோ.

(இ-ள்.) முன்னொருபெண்ணை விரும்பிக் கல்யாணத்திலொள்ளிய வளையணில ந்த தனது செவ்விய கரத்திற் பட்டுவரு நீருடனவளைக் கொண்டானில்லை என்னுங் குற்றத்திற்குரியாரிவனையன்றி வேறெவரையுங் கண்டிலேன் என்றுங் கூறினன்.-எ-று.

என்றிவைபற்பலவிசைத்துச்செய்நலங்
கொன்றிடுசிறுவிதிகுழுமித்தன்புடைத்
துன்றியசுரர்தமைத்தொல்லைத்தத்தமூர்
சென்றிடவேவினன்செயிர்த்துவைகினன்.

(இ-ள்.) என இவை போல்வனவனேகங் கூறிச்செய்ந்நன்றி கொன்றதக்கன் நெருங்கித் தன்னருகிலிருந்த தேவர்களைப் பழயதங்கள் நகரங்களுக்குச் செல்லுமாறு அனுப்பிச் சீற்றத்துடனிருந்தான்.—எ-று. (நிச)

கறுவுகொணெஞ்சொடுகயவனன்றுதொட்
டிறைவனைநினைக்கிலனெள்ளுநீர்மையா
னுறுதலுஞ்சிலபகலுயங்கியிச்செய
லறிதருமயன்முதலமரர்தேர்குவார்.

(இ-ள்.) சீற்றம்பொருந்திய நெஞ்சுடன் அறிவிலியான தக்கன் அன்று முத லாக இறைவனைநினைகிலன் இகழுங்குணமே கொண்டானச் சிலதினம் வருந்தியிருத் தலும் இச்செயலுணர்ந்த பிரமன் முதலிய தேவர்கள் எண்ணுவாராயினர்.—எ-று. ()

திருமணப்படல முற்றிற்று.
ஆ திருவிருத்தம் ௯சுஎ.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தக்கன் கைலைசெல் படலம்.

மெய்ம்மாதவத்தாற்றிருத்தக்குவிளங்குதக்க
னெம்மான்றனையெண்ணலனுவியிழப்பன்வல்லே
யம்மாவியாமுமவனேவலையாற்றுகின்று
நம்மாருயிர்க்குமிறுவாய்நணுகுற்றபோலும்.

(இ-ள்.) உண்மையான தவத்தினாற் செல்வம்பொருந்தி விளங்காநின்ற தக்க னென்பான் சிவபெருமானை நினைக்கின்றானில்லை ஆதலின் விரைந்து இறந்துபடு வான் அம்மா சிவத்துரோகியான அவனேவலை நாமுஞ் செய்கின்றோம் ஆதலின் நம தரியவுயிருக்கு முடிவுநெருங்கியதாயிருக்கலாம்.—எ-று. (க)

ஆனலினித்தக்கனையெண்ணலமாயினன்னோன்
மேனாளரனாற்பெறுகின்றதொர்மேன்மைதன்னான்
மானுதசீற்றங்கொடுநம்பதமாற்றுமென்னா
வோநாமினிச்செய்பரிசென்றிவையோர்ந்துசொல்வார்.

(இ-ள்.) நாமினித் தக்கனை எண்ணுதவர்களானால் அவன் முன்னாளிற் சிவபி ரானிடம் பெற்றுள்ளவரத்தினுயர்வினால் நீங்காத கோபங்கொண்டு நமது பதவியை மாற்றிவிடுவான். இனிநாம் செய்யுந்தன்மைதான் யாது என்று பலவாறாலோசித்து இவைகளை யுரைத்தனர்.—எ-று. (உ)

ஈசன்கைலைதனிற்றக்கனெழுந்துசெல்ல
மாசொன்றுசிந்தைகொளத்தேற்றினம்வல்லையெனனி
னேசங்கொடுபோயவற்காணினிலைக்குமிச்சீர்
நாசம்படலுமொழிவாருநமக்குமென்றார்.

(இ-ள்.) நாம் சிவபெருமானெழுந்தருளி இருக்குந் திருக்கைலைக்குத் தக்கனெழுந்துபோம்வண்ணம் அவனதுகளங்கமான மனதினிற்பொருந்துமாறு விரைந்து தேற்றுவோமானால் அவன்விருப்பத்துடன் சென்றுசிவபெருமானைக்காணுவான் கண்டால் இந்தச்செல்வநிலைக்கு நமக்கு நாசமுண்டாதலும்நீங்கும் என்று கூறினார்கள். ()

வேதாமுதலோரிதுதன்னைவிதியினாடித்
தீதானதக்கன்றனைமேவிநின்செய்தவத்தின்
மாதானவளைச்சிவனோடுமறத்திபோலா
மேதாமுனதுநிலைக்கம்மவினையதொன்றே.

(இ-ள்.) பிரமன் முதலியவர்கள் இதனைமுறைப்படி ஆராய்ந்துகுற்றம்வாய்ந்த தக்கனையடைந்து நின்தவப் புதல்வியைச் சிவபெருமானுடன் மறத்தியோ உனது தகமைக்கது என்னையாகும்—எ-று.

முன்னர்த் தவஞ்செய்துபெற்ற வரத்தினாற் கமலமலரிற் சங்குருவாகவிருந்த மகாதேவியைக் கண்டெடுத்தவுடன் பெண்மகளாக வளர்த்தவனேயன்றி மற்றைப் பெண்களை இவன் பெற்றாற்போன்று பெற்றவளல்லள் என்றும் அவள் சிவசத்தி என்றும் விளக்குவான் நின் செய்தவத்தின் மாதானவளை மறத்தியோ என்றார். (௪)

குற்றந்தெரிதலன்றேகுணனென்றுகொள்ளிற்
சுற்றம்மொருவற்கெவணுண்டுதுறந்துநீங்கிச்
செற்றஞ்செய்கண்ணுமகிழ்வுண்டிதுசிந்தியாயேன்
மற்றுன்னைவந்தோர்வசைசூழ்தரும்வள்ளலென்றார்,

(இ-ள்.) குற்றத்தினை யாராய்வதே குணமாகக் கொண்டால் ஒருவனுக்குச் சுற்றமெங்ஙனுளதாம் விட்டுவிலகிக் கோபங்கொள்ளுங் காலத்தும் மகிழ்ச்சியுளதாம். வள்ளலே! இதனை நீ நினையாது விடுதியாயின் ஒருவசையுன்னை வந்துசூழா நிற்கும்—எ-று. (௫)

முன்னின்றவர்கூறியபான்மைமுறையினாடி-
யென்னிங்கியான்செய்கடனென்னவிறைவியோடும்
பொன்னஞ்சடையோன்றனைக்கண்டனைபோதியென்ன
மன்னுங்கயிலைவரையேகமனம்வலித்தான்.

(இ-ள்.) எதிரினின்றிவர்கள் கூறியதன்மையை முறைப்படி ஆராய்ந்து, இனி யானிங்குச் செய்யவேண்டுங் கடமையாது என்றனன் உடனே அன்னோர் நின்மகளான இறைவியுடன் பொன்னனைய சடையினையுடையசிவபெருமானைக்கண்டு வருதி என்றனர் அதுகேட்ட தக்கன் அப்பொழுதே நிலைபெற்ற கைலாயமலையை அடைய நினைத்தான்.—எ-று. (௬)

கானார்கமலத்தயனிந்திரன்காமர்பூத்த
வானாடர்யாருமவணுற்றிடும்வண்ணநல்கி
யானாதமுன்பிற்றுணையோரொடகன்றுதக்கன்
போனானமலனமர்வெள்ளியம்பொற்றைபுக்கான்.

(இ-ள்.) மணம் பொருந்திய தாமரை மலரிலிருக்கின்ற பிரமன் இந்திரன் அழகுவாய்ந்த தேவர் முதலியவனைவரையு மங்கிருக்கச்செய்து நீங்காதமுன்னும் பின்

னும் வரும் மெய்க்காவலருடன் தக்கன் தன்நகரியை விடுத்துச் சென்று நின்மலரான சிவபெருமானெழுந்தருளி இருக்கும் திருக்கைலை மலையையடைந்தான்.—எ-று ()

வெள்ளிச்சயிலந்தனிலெய்திவிமலன்மேய
நள்ளுற்றசெம்பொற்பெருங்கோயிலைநண்ணிநந்தி
வள்ளற்குறையுளெனுங்கோபுரவாயில்சாரத்
தள்ளற்றகாவன்முறைப்பூதர்தடுத்தல்செய்தார்.

(இ-ள்.) வெள்ளிமலைக்குச்சென்று சிவபெருமானெழுந்தருளி இருக்கின்ற நடுவணதான செவ்விய பொன்னாலயத்தையடைந்து வள்ளலான நந்தியெம்பெருமானுக்கிருப்பிடமான கோபுரவாசலையடையஅங்கு நெருக்கமாக நின்றுகாக்கு முறையினையுடைய பூதர்கள் இவனைத் தடைசெய்தார்கள்—எ-று. (அ)

கடிக்கொண்டபூதர்நிரைதன்னைக்கனன்றியான்முன்
கொடுக்கின்றகாதன்மடமான்றன்கொழுநனோடு
மடுக்கின்றபான்மையிவணாடியறிவனீவிர்
தடுக்கின்றதென்கொலெனக்கூறினன்றக்கனென்போன்.

(இ-ள்.) தன்னையுள்ளே செல்லவொட்டாது தடைசெய்த பூதர் கூட்டத்தினைத்தக்கனென்பான் சீற்றத்துடன்பார்த்து யான் முன் கொடுத்த எனதன்பிற்குரிய எனதிளையமகள் தனது நாயகனுடன் இருக்கின்ற தன்மையை ஆராய்ந்தறிவேன் நீவிர் ஏன் தடைசெய்கின்றீர் என்றான்.—எ—று. (கூ)

அவ்வாசகஞ்சொல்கொடியோனையழன்றுநோக்கி
மெய்வாயில்போற்றும்பெருஞ்சாரதர்மேலொன்று
மைவாழுங்கண்டன்றனையெள்ளினைமற்றுநீயீண்
டெவ்வாறணைகின்றனைசாலவிழுதைநீராய்.

(இ-ள்.) அம்மொழிகூறிய தக்கனைச் சீறிப்பார்த்து வாசல்காக்கும் பெரிய பூதர் முன்னாளில் நீலகண்டரான எமது சிவபெருமானை இகழ்ந்தனை இகழ்ந்த நீ இங்கெவ்வாறு வருகின்றனை அறிவிலியின் தன்மையினையுடையாய்.—எ று. (கய)

முந்துற்றதொல்லையெயின்மூன்றுறைமொய்ம்பினோர்க
ணந்துற்றவையந்தனைவானைநலிவரேனு
மெந்தைக்குநல்லரவரன்பிலிறையுநின்பால்
வந்துற்றதில்லையெவணோவினிவாழ்திமன்னோ.

(இ-ள்.) முன்னரிருந்த பழய மதில்களையுடைய முப்புரங்களில் வாசஞ்செய்த வன்மையினையுடைய திரிபுரர்கள் செழிப்புவாய்ந்த பூமியந்தரங்களை வருத்துபவராயினும் எம்பெருமானுக்கு நல்லவர்களாக இருந்தார்கள். அவர்களிடமிருந்த அன்பிலிறையளவுகூட நின்னிடைவந்து பொருந்தவில்லை இனி எங்கு வாழப்போகின்றனை.

திருபுரர் அசுரராயினுஞ் சிவபக்தராக விருந்தனர் நீமறையவனாகவிருந்தும் சிவபத்தியை யிழந்தனை என்று கூறினர் இதனான்மறையவர்க்குச் சிவபத்தி அவசியமிருத்தல் வேண்டுமென்பது குறிப்பு. (கக)

இறக்கின்றவேலையிமையோர்கடமின்னனீக்கிக்
கறுக்கின்றநீலமிடற்றெந்தைகருணைசெய்த
சிறக்கின்றசெல்வமிசைந்தன்னவன்செய்கையாவு
மறக்கின்றனைநீயெவன்செய்குதிமாயையுற்றாய்.

(இ-ள்.) ஆலகாலத்தால் தேவர்களுக்குண்டான மரணத்துன்பத்தினை யொழித்துக் கறுப்புவாய்ந்த நீலகண்டத்தினையுடைய எம்பெருமான் கருணைசெய்த சிறப்பு

வாய்ந்த செல்வத்தினை அனுபவித்து அப்பெருமானுடைய செயலனைத்தையும் மறக்கின்றனை நீ யென்செய்தி மாயையின் வசப்பட்டனை—எ-று. (கஉ)

ஈசன்றனதுமலர்த்தாளையிறைஞ்சியாற்ற
நேசங்கொடுபோற்றலர்தம்மொடுநேர்தலொல்லா
பாசாந்தனில்வீழ்கொடியோயுனைப்பார்த்தியாங்கள்
பேசும்படியுந்தகவோபவப்பெற்றியன்றே.

(இ-ள்.) சிவபெருமான் திருவடி மலர்களைவணங்கி மிகவும் அன்புகொண்டு பின் அவரை வணங்காதாருடன் பழகுதல்கூடாது. பாசத்தில்வீழ்ந்த கொடியோனே உன்னைப்பார்த்து யாங்கள் பேசுதலுந் தகுதியோ அது பாவச்செயலன்றோ?—எ-று.

ஆமேனுமின்னுமொருமாற்றமுண்டண்ணன்முன்னர்
நீமேவியன்பிற்பணிவாயெனினிற்றியன்றேற்
பூமேலுனதுநகரந்தனிற்போதியென்னத்
தீமேல்கிளர்ந்தாலெனவாற்றவுஞ்சீற்றமுற்றான்.

(இ-ள்.) அங்ஙனமாயினும் இன்னமொன்றுரைக்கின்றோம். இறைவனெதிரே நீ சென்று அன்புடன் வணங்குவாயானால் இங்குநில் அன்றேல் மண்ணுலகிலுள்ள உனது நகரத்துக்குபோதி என்று கூற அக்கினியிற் சுவாலை எழும்பினாற்போலத் தக்கன் மிகவுங் கோபங்கொண்டான்.—எ-று. (கச)

பல்லாயிரவர்பெருஞ்சாரதர்பாதுகாக்கு
மெல்லார்செழும்பொன்மணிவாயிலிகந்துசெல்ல
வல்லானனிநாணினனுள்ளம்வருந்தியங்க
ணில்லாதுமீள்வானிதுவொன்றுநிகழ்த்துகின்றான்.

(இ-ள்.) பல ஆயிரம் பெரிய பூதர்கள் காவல் புரிகின்ற ஒளிதங்கிய செழுமைவாய்ந்த பொன்னாலு மணியாலுமாகிய வாசலை நீங்கிச் செல்லுதற்கு மாட்டாதவனாய் மிக வெட்கமுற்று உள்ளம் வருந்தி அவ்விடத்தில் நிற்காமல் இதுவொன்றைக் கூறுகின்றான்.—எ-று. (சரு)

கொன்னுருஞ்செம்பொற்கடைகாக்குங்குழாங்கள்கேண்மி
னெந்நாளுமுங்களிறைதன்னையிறைஞ்சலேன்யா
னன்னுனெனதுமருகோனிதறிந்திலீரோ
விந்நாரணனுமயனும்மெனக்கேவல்செய்வார்.

(இ-ள்.) வன்மைவாய்ந்த செவ்விய பொற்கடை காக்கின்ற பூதர் கூட்டத்தினர்காள் கேளுங்கள். உங்கள் இறைவனை எந்நாளும் இறைஞ்சேன் அச்சிவன் எனது மருகன் இதனை நீங்கள் அறிந்திலீரோ இந்த நாராயணனும் பிரமனும் எனக்கூழியஞ் செய்பவர்கள்.—எ-று. (கசு)

நின்றீரெவருமென்தொண்டர்கணீடுஞாலம்
பின்றாதுபோற்றுமிறையான்பெயர்தக்கனென்பா
ரொன்றாயவுங்கள்பெரும்பித்தனையோல்லைமேவி
யின்றாமரபிற்பணிந்தேதொழுதேத்துகின்றேன்.

(இ-ள்.) இங்கு நின்றீரெவரும் எனது அடிமைகள் நீண்ட வுலகம் பின்னிடாமல் வணங்கும் இறைவன் யான் என்பெயரினை தக்கனென்று கூறுவார்கள். அத்தகையானே ஒன்றாய உங்கள் பித்தனை யெய்தி இல்லாத வழக்கமாகப்பணிந்து துதிப்பேன் (துதியேன்.)—எ-று. (கஎ)

நில்லிங்கெனவேதடைசெய்தநிலைமைநும்மாற்
செல்லும்பரிசோமருகோனுஞ்சிறுமிதானுஞ்
சொல்லும்படியல்லதுசெய்வதென்றெண்டராளி
றோல்லும்படியாற்றுதலுங்கட்குறுதியன்றே.

(இ-ள்.) இங்கே நில் என்று தடுத்த தன்மை யுங்களாலாகுந் தன்மையதோ எனது மருகனும் மகளும் உரைக்கவேண்டுவதன்றி நீங்கள் செய்யவேண்டுவதென்னை ஊழியர்களாயுள்ளவர்களே பொருந்துமாறு செய்தல் உங்கட்குத்தகுதியல்லவோ.எ-று.

தேற்றாமலின்னவகைசூழ்ந்தநுந்தேவையாரும்
போற்றாமல்வந்துபணியாமற்புகழ்ந்துமேன்மை
சாற்றாமலெள்ளல்புரிபான்மைசமைப்பனென்னு
மேற்றனிழைத்தவினையுய்த்திடமீண்டுபோனான்.

(இ-ள்.) ஆலோசனை செய்யாது இவ்வண்ணம் உங்களைக்கொண்டு செய்வித்த தேவனை எவரும் போற்றாமலும் வந்து பணியாமலும் புகழ்ந்து மேன்மை கூறாமலும் இகழுந்தன்மைக்கேற்ற காரியத்தினைச் செய்வேனென்று கூறி முன்னர்த்தான் செய்த தீயவூழானது பிடித்துந்தத் திரும்பிச்சென்றான்.—எ-று. (கசு)

வேறு.

மீண்டுதன்பதியையெய்திவிரிஞ்சனையாதியாக
வீண்டுபண்ணவரைநோக்கியென்மகளீசன்றன்பாற்
பூண்டபேரார்வத்தொன்றிப்புணர்ப்பதொன்றுன்னித்தங்கண்
மாண்டகுவாயிலோரான்மற்றெமைத்தடுப்பச்செய்தார்.

(இ-ள்.) திரும்பித்தன்னகரடைந்து பிரமன் முதலாக நெருங்கி இருக்குந் தேவர்களைப்பார்த்து எனது மகள் ஈசனிடத்துப்பொருந்திய விருப்பத்தாலவனையடைந்து இருவருமாக ஒரு தந்திரத்தை நினைத்து தம்மிடத்துள்ள மாண்பிற்றகுந்த துவார பாலகர்களால் எம்மைத் தடுக்குமாறு செய்தனர்.—எ-று. (உO)

பின்னரும்பலவுண்டம்மாபேசுவித்தனவுமவ்வா
றென்னையென்றுரைப்பனந்தோவெண்ணினுநாணுக்கொள்வே
னன்னவிங்கிசைப்பனேனுமாவதென்னவர்பாற்போந்தேன்
றன்னைநொந்திவதன்றித்தாழ்வுண்டோவனையர்தம்பால்.

(இ-ள்.) அதுவன்றியும் பேசுவித்தனவும் பலவுள அவர் பேசியவைகளை என்னென்று கூறுவேன் அவைகளை நினைக்கினும் அந்தோ உள்ளே நாணங்கொள்ளுகின்றேன் அவர்களிகழ்ந்தவைகளை இங்குரைப்பேனாயினும் அவற்றால்ஆவதென்னை அவர்களிடஞ்சென்ற என்னை நோவதன்றி அவர்களாற் குறையுளதோ ? இல்லை யென்பது கருத்து.—எ-று. (உக)

நன்றுநன்றென்னையெண்ணாநக்கனையுமையைநீவி
ரின்றுமுன்னாகவென்றுமிறைஞ்சியேபரவுகில்லீ
ரன்றியுமதித்தீரல்லீரப்பணிமறுத்தீராயின்
மன்றநும்முரிமைபின்னேமாற்றுவனல்லையென்றான்.

(இ-ள்.) நன்று நன்று, என்னை மதியாத நக்கனையும் உமையையும் நீங்கள் இன்று முதலாக என்றும் இறைஞ்சி வணங்காதேயுங்கள் அன்றியும் மதியாதேயுங்கள் இதனை மறுத்து நடப்பீர்களானல் உங்கள் உரிமைகளை இப்பொழுதே விரைவின் மாற்றி விடுவேன் என்று கூறினான்.—எ-று. (உஉ)

கறுத்திவையுரைத்தோன்றன்னைக்கடவுளர்யாருநோக்கி
வேறுத்தெமையுரைத்தாய்போனுமேனுநின்னேவறன்னின்
மறுத்தனவுளவோவின்றேமற்றுநின்பணியினிற்றுஞ்
செறுத்திடலென்னுத்தத்தஞ்சேணகர்சென்றுசேர்ந்தார்.

(இ-ள்.) சீற்றங்கொண்டிவ்வாறு கூறியதக்கனென்பவனைத் தேவரனைவரும் பார்த்து எங்களை வெறுத்துரைத்தனை முன்னர் உனதேவலில் மறுத்தனவுளவோவி டையாதே இப்பொழுதும் உனது கட்டளைப்படி நடக்கின்றோம் கோபங்கொள்ளாதே என்று கூறித் தங்கள் தங்கள் வானுலக நகரங்களையடைந்தனர்.—எ-று. (உரு)

தக்கன் கைலைசேல் படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௭௦.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிரமயாகப்படலம்.

இப்படிப்பன்னுள்யாருமிவன்றனியாணைக்கஞ்சி
யப்பணியியற்றலோடுமம்புயமலர்மேலண்ணன்
முப்புரமுனிந்தசெங்கண்முதல்வனதருளாலாங்கோர்
செப்பரும்வேள்வியாற்றமுயன்றனன்சிந்தைசெய்தான்.

(இ-ள்.) இவ்வாறு பலகாலம் அனைவரும் இத்தக்கனுடைய ஆக்கினைக்குப் பயந்து அவன் கூறியவாறே அத்தொழிலைச்செய்தவுடனே கமலாசனனான பிரமன் முப்புரங்கண்மீது சீற்றங்காட்டிய செவ்விய கண்களையுடைய சிவபெருமானது கருணையால் உரைத்தற்கரிய ஒரு யாகஞ்செய்ய நினைத்தனன்.—எ-று. (க)

வேண்டியகலப்பையாவும்விதியுளிமரபினேடு
தேண்டினனுய்த்துத்தக்கன்செப்பியதுன்னியானே
மாண்டிடவரினுமுக்கண்மதிமுடிப்பரமன்றன்னை
யீண்டுதந்தவிமுன்னீவலெனக்கிதுதுணிபாமென்றான்.

(இ-ள்) யாகத்திற்குவேண்டிய திரவியமனைத்தும் விதிப்படி மரபாகத்தே டிச் சேகரித்துத் தக்கன் கூறியதனை நினைத்து நானே இறக்க நேரினும் மூன்று கண் களையுடைய சந்திரசேகரரான சிவபெருமானை இங்கழைப்பித்து அவிர்ப்பாகத்தை முன்னரளிப்பேன் இது எனக்குத்துணிபாம் என்றான்.—எ-று. (உ)

இனையனபுகன்றுசிந்தையாப்புறுத்தேவல்போற்றுந்
தனையர்தங்குழுவைக்கூவித்தண்டுழாய்முகுந்தனுதி
யனைவருமவிப்பால்கொள்ளவழைத்துநீர்தம்மினென்னுத்
துனையவேவதூண்டிப்போதன்றொல்பெருங்கயிலைபுக்கான்.

(இ-ள்.) இவ்வாறுரைத்து மனதினை உறுதிப்படுத்தித் தனதேவலைச்செய்கி ன்ற புதல்வர் கூட்டத்தினை யழைத்துத் தண்ணிய துளவமாலையணிந்த திருமால் முதலிய அனைவரும் அவிர்ப்பாகங்கொள்ள நீங்கள் அழைத்து வாருங்களென்று விரை வாக வனுப்பிப் பிரமன் பழயபெரிய கைலையையடைந்தனன்.—எ-று. (௩)

கயிலையினடுவணுள்ளகடவுண்மாநகரிலெய்தி
யயிலுறுகணிச்சிநந்தியருளொடியுய்ப்பமுன்போய்ப்
பயிலுமன்பொடுநின்றேத்திப்பணிதலுஞ்சிவனீண்டுற்ற
செயலதென்மொழிதியென்னத்திசைமுகனுரைப்பதானான்.

(இ-ள்.) கைலாயத்தின் மத்தியிலுள்ள சிறந்த தேவமாளிகையையடைந்து கூரிய மழுப்படையினையுடைய நந்தியெம்பெருமான் அருள்வழியே உட்செலுத்த முன்னேசென்று பழகிய அன்புடனே நின்று துதித்து வணங்குதலும் சிவபெருமான் இங்குவந்த செயலென்னை உரைத்தியென்னச் சதுர்முகப்பிரமனுரைக்கத் தொடங்கினான்.—எ-று. (ச)

அடியனேன்வேள்வியொன்றையாற்றுவலரணமூன்றும்
பொடிபடமுனிந்தசீற்றப்புனிதநீபோந்தென்செய்கை
முடிவுறவருடியென்னமுறுவல்செய்திறைவனந்தம்
வடிவுளநந்தியங்கண்வருவனீபோதியென்றான்.

(இ-ள்.) அடியேன் ஒருயாகத்தினைச் செய்கின்றேன் மும்மதில்களும் பொடியாமாறு சீறியருளிய புனிதனே நீ எழுந்தருளி எனதவ்வியாகச்செயல் நிறைவேறுமாறு அருள்புரிவாயாக என்றவுடன் இறைவன் புன்னகைபுரிந்து நமதுருவனான நந்தி யவ்விடத்திற்கு வருவன் நீ போதி என்றருளிச்செய்தனன்,—எ-று. (ரு)

போகெனவிடுத்தலோடும்பொன்னடிபணிந்துவல்லே
யேகியதாதைதக்கனிருந்துழியெய்தியேயான்
பாகநல்வேள்வியொன்றுபண்ணுவன்முனிவர்விண்ணோ
ராகியதிறத்தரோடுமணுகுதியையவென்றான்.

(இ-ள்.) நீ போகக்கடவை என்றனுப்பிய உடனே இறைவன் பொன்னடிகளை வணங்கி விரைவாகச் சென்ற பிரமன் தக்கனிருந்த விடத்தையடைந்து ஐயா! யான் அவிர்ப்பாகத்துக்குரிய ஒரு நல்ல யாகத்தினைச் செய்கின்றேன் நீ முனிவர் தேவர் முதலியோருடன் வருவாயாக என்றான்.—எ-று. (சு)

என்னலுநன்றுமுன்போயியற்றுதிமகத்தையென்னப்
பொன்னவிர்கமலத்தண்ணன்மனோவதியதனிற்போந்து
செந்நெறிபயக்கும்வேள்விச்செய்கடன்புரிதலுற்றா
னன்னதோர்செய்கைமாலோனாதியரெவருந்தேர்ந்தார்.

(இ-ள்.) என்றவுடனே தக்கன் நல்லது முன்னர்ச்சென்று யாகத்தினைச் செய்வாயாக வென்றுகூறப் பொன்போலவிளங்குந் தாமரைமலரில் வீற்றிருக்கும்பிரமன் தனது மனோவதி நகரத்தையடைந்து நன் மார்க்கத்தைத்தருகின்ற யாகத்தினைச் செய்திருந்தான் அச்செய்தியைத் திருமால் முதலிய எவரும் உணர்ந்தனர்.—எ-று. ()

வேறு.

அக்கணந்தனின்மாயவனிமையவர்க்கரசன்
மிக்கதேவர்கண்முனிவரர்யாவரும்விரைந்து
தக்கன்முன்னுறமேவலுமவரொடுந்தழுவி
முக்கணாயகற்கவியினைவிலக்குவான்முயன்றான்.

(இ-ள்.) அப்பொழுது மாயவனுந் தேவராசனும் சிறந்ததேவர்களும்முனிச்சிரேட்டருமாகிய வனைவரும் விரைவாகத் தக்கனெதிரே அடைதலும் அவன் அவர்களுடன்கலந்து மூன்றுகண்களையுடைய சிவபெருமானுக்கவியளிப்பதனைத் தடுப்பதற்கு முயற்சித்தான்.—எ-று. (அ)

ஏற்றநீங்குறுதக்கனக்கடவுளரியாரும்
போற்றியேதனைச்சூழ்தரத்தாதைதன்புரத்தி
லாற்றும்வேள்வியிலணைதலுமயனெழுந்தாசி
சாற்றியார்வமொடிருத்தினனன்பாங்கரோர்தவிசின்.

(இ-ள்.) பெருமிதத்தினை இழக்குந் தக்கனென்பவன் அத்தேவரனைவரும் துதியுடன் தன்னைச்சூழ்ந்துவரா நிற்பப் பிரமநகரத்தி லப்பிரமன் யாகஞ்செய்யுமிடத்தை யடைதலும் பிரமனெழுந்தாசிகூறி அருகிலொரு ஆசனத்தில் விருப்பத்துடன் இருத்தினன்.—எ-று. (௯)

கானுலாவுதண்டுளவினனடிகள்கைதொழுதே
யானபான்மையிலோர்தவிசிருத்தினனல்லா
வேனையோருக்கும்விற்றுவிற்றுதவினனிடையிற்
றானொராசனத்திருந்தனன்மறையெலாந்தழங்க.

(இ-ள்.) மணம் வீசுகின்ற தண்ணிய துளவமாலையினையுடைய திருமாலின் அடிகளைவணங்கித் தகுந்தவண்ணம் ஒரு ஆசனத்திலிருத்தினன் இவர்களையன்றி வந்த பிறர்க்கும் வரிசைவரிசையாக ஆசனமளித்தனன் வேதமனைத்து முழங்காநிற்பத்தானுமொராசனத்தி லவர்கள் நடுவிலிருந்தனன்.—எ-று. (௧0)

வேறு.

அங்கணாமைதளித்தவனிவ்வகையமர்தலுமதுபோழ்தி
னங்கையாளொருபங்கினனருளொடுநந்திதேவனைநோக்கிப்
பங்கயாசனன்வேள்வியிற்சென்றுநம்பாகமுங்கொடுவல்லே
யிங்குநீவருகென்றலும்வணங்கியேயிசைந்தவனேகுற்றான்.

(இ-ள்.) அவ்விடத்தில் உலகங்களைப்படைத்த பிரமதேவனிவ்வாறிருத்தலும் அப்பொழுது உமாதேவியை ஒருபுறத்திலுடைய சிவபெருமான் கருணையுடன் நந்திதேவனைப்பார்த்துப் பிரமன்செய்யும் யாகத்திற்சென்று நமது பாகத்தை வாங்கிகொண்டு விரைவாக இங்ஙனம் வருதியென்றவுடன் அதற்கிணங்கி வணங்கி அவ்வாறே செய்கின்றேனென்றான்.—எ-று. (௧௧)

நூற்றுக்கோடிவெங்கணத்தவர்சூழ்தரநொய்தினக்கிரிநீங்கி
யேற்றின்மேல்வருமண்ணலையுள்ளுறுத்தேர்கொள்பங்கயப்போதிற்
றோற்றுநான்முகக்கடவுண்முன்னடைதலுந்துண்ணெனவெழுந்தன்பிற்
போற்றியேதொழுதிருத்தினனெனபவோர்பொலன்மணித்தவிசின்கண்.

(இ-ள்.) வெவ்விய நூறுகோடிப்பூதர் சூழ்ந்துடன் வராநிற்பக்கைலைமலையை விரைவிலகன்று இடபத்திலெழுந்தருளும் இறைவனை உள்ளிற் தியானித்துக்கொண்டு அழகுபொருந்திய தாமரைமலரிற் பிறந்த சதுர்முகப் பிரமனெதிரே செல்லுதலும் அவன் விரைந்தெழுந்து அன்புடன் துதித்து வணங்கி ஒரு அழகிய மணித்தவிசி லிருத்தினன்.—எ-று. (௧௨)

நின்றபாரிடத்தலைவர்க்கும்வரன்முறைநிரந்தவாசனநேர்ந்து
பின்றைநான்முகன்வேள்வியதியற்றலும்பிறங்கெரியுறநோக்கி
நன்றியில்லதோர்தக்கனக்கிரியுறைநக்கனுக்காளாகிச்
சென்றவன்கொலாமிவனெனநகைத்தனன்செயிர்த்திவையுரைக்கின்றான்.

(இ-ள்.) நந்திதேவருடன் வந்து நின்ற பூதத்தலைவர்க்கும் வரிசையான ஆசனமளித்துப் பின்னர் பிரமன் யாகஞ்செய்தலும் நன்றியற்ற தக்கன் தீப்பறக்கப் பார்த்து அக்கைலைமலையிலிருக்கின்ற நக்கனுக்கடிமையாய் இருந்தவனே இவனென்று நகைத்துச்சீறி இவைகளை யுரைக்கின்றான்.—எ-று. (௧௩)

நாரணன்முதலாகியகடவுளர்நளினமாமகளாதிச்
சீரணங்கினர்மாமுனிகணத்தவர்செறிகுநருறைகின்ற
வாரணன்புரிவேள்வியில்விடநுகர்ந்தாடல்செய்பவனுளுஞ்
சாரதங்களுமோநடுவுறுவதுதக்கதேயிதுவென்றான்.

(இ-ள்.) நாராயணன் முதலிய தேவர்களும் கமலாசனியான சிறப்புவாய்ந்த திருமகள் முதலிய பெண்களுஞ் சிறந்த முனிவர் குழாத்தினரும் நெருங்கி இருக்கின்ற பிரமன் செய்யும் யாகத்தில் விடத்தினைத்தின்று கூத்தாடுவோனுலாளப்பட்ட பூதங்களுமோ ? நடுவேவந்திருப்பது இது தகுதியானதே என்று கூறினான்.—எ-று.

விடநுகர்தலுமாடல் புரிதலுமிழிசெயலென்று மருண்டு கூறியது காண்க.

மேவலாரெயின்முனிந்ததீவிழியினன்வெள்ளிமால்வரைகாக்குங்
காவலாளனுநந்தியுங்கணத்தருங்கதுமெனவிவண்மேவக்
கூவினுரெவரோவெனவுளத்திடைக்குறித்தனன்றெரிகுற்றான்
றேவர்யாவரும்வெருவுறவயன்றனைச்செயிர்த்திவையுரைக்கின்றான்.

(இ-ள்.) பகைவர்களின் மும்மதில்களைச் சீறியழித்த தீக்கண்ணனுடைய பெரிய வெள்ளிமலையைக்காக்கின்ற காவற்காரனை நந்தியும் பூதகணத்தரும் விரைந்திங்குவருதற்கு அழைத்தவர் யாவரென மனத்தினுலாராய்ந்து அறிந்து தேவரனைவரும் அஞ்சும் வண்ணம் பிரமனைப்பார்த்துச் சீறி இவைகூறுகின்றான்.—எ-று

எவராலும் வெல்லுதற்கரிய பகைவரின் மும்மதில்களைச் சீறியழித்தது மிழிவு என மயங்கிக்கூறுதல் காண்க: (கஙி)

ஆதிநான்முகக்கடவுளேயாகுநீயழன்மகம்புரிசெய்கை
பேதைபாகனுக்குரைத்தனையவன்விடப்பெயருநந்தியையென்முன்
காதலோடுகைதொழுதுநள்ளிருத்தினைகடவதோநினக்கீது
தாதையாதலிற்பிழைத்தனையல்லதுன்றலையினைத்தடியேனே.

(இ-ள்.) ஆதி நான்முகக்கடவுளான நீ அழலைக்கொண்டு யாகஞ்செய்யும் தன்மையைப் பேதைபாகனுக்குரைத்தனை அப்பேதை பாகனனுப்பவந்த நந்தியை என்னெதிரில் விருப்பத்துடன் வணங்கி நடுவே இருத்தினுய் இது உனக்குத் தகுதியானதோ நீ என் தாதையாதலாற் பிழைத்தனை அன்றேல் உனது தலையினை வெட்டேனே.—எ—று. (கசு)

இன்னமொன்றியானுரைப்பதுண்டஞ்ஞைகேளீமமேயிடனுகத்
துன்னுபாரிடஞ்சூழ்தரக்கழியுடல்சூலமீமிசையேந்தி
வன்னியூடுநின்றுடுவான்றனக்குநீமகத்திடையவிக்கூற்ற
முன்னைவைகலின்வழங்கலையிப்பகன்முதலவன்றனக்கின்றால்.

(இ-ள்.) இன்னமொன்று யான் கூறவேண்டுவதுளது அறிவிலியே கேட்பாயாக, சுடுகாடே வாழுமிடமாக நெருங்கிய பூதஞ்சூழக்கழியுடலினைச் சூலத்தின்மீதேந்தித் தீயினிடத்து நின்றுடுமவனுக்கு நீ யாகத்தி லவிர்ப்பாகம் முன்னுளிற்போல நிகழுமித்தினளிக்காதே இத்தினமுதல்வனுக்கு அவிர்ப்பாகம் இல்லை.

ஈமமேயிடமாகப் பாரிடஞ் சூழ்தரக்கழியுடலைக் கழுத்தேந்தி வன்னியூடு நின்தல் சிவபரத்துவ விடயமாகவும் இகழ்ந்துரைத்தல் காண்க. (கஎ)

அத்திவெம்பணிதலைக்கலன்றங்கியேயடலைமேற்கொடுற்ற
பித்தன்வேள்வியிலவிகொளற்குரியனேபெயர்ந்தவிப்பகல்காறு
மெத்திறத்தருமறையொழுக்கெனநினைந்தியாவதுமோராமற்
சுத்தநீடவியளித்தனரன்னதேதொன்மையாக்கொளற்பாற்றே.

(இ-ள்.) என்பையுங் கொடிய பாம்பையும் தலைமாலையையும் தாங்கிச் சாம்பலை மேற்கொண்டு நின்ற அல்லது கொல்லுதலைமேற்கொண்டு நின்ற பித்தன்யாகத்தில் அவிர்ப்பாகம் பெறுதற்குரியனோ சென்ற இந்நாள்காறும் எத்தகையோரும் அதுவேவழக்கமென எண்ணிஎதையும் ஆராயாது தூய்மைவாய்ந்த அவியை அவனுக்குக் கொடுத்தனர். அதனையே பழயதாகக்கொள்ளக்கூடுமோ.—எ-று. (கஅ)

மற்றைவானவர் தமக்கெலாநல்குதிமாலையேமுதலாக
விற்றைநாண்முதற்கொள்ளுதியிவற்குமுன்னீகுதியவிதனைக்
கற்றைவார்சடையுடையதோர்கண்ணுதற்கடவுளேபரமென்றே
சொற்றமாமறைச்சுருதிகள்விலக்குதிதுணிவுனக்கிதுவென்றான்.

(இ-ள்.) அவனையன்றியுள்ள மற்றைய தேவரனைவருக்குங் கொடுப்பாயாக இந்நாள்முதற் திருமாலையே முதலாகக்கொண்டு அவிகொடுக்கக்கடவை இத்திருமாலுக்கே அவியினை முன்னர்க்கொடு, கற்றையான நீண்ட சடையினையுடைய கண்ணுதற் கடவுளே பரமென்று கூறிய சிறந்தவேதவசனங்களைத்தள்ளக்கடவை இது உனக்குத்துணிபு என்று கூறினான்.—எ-று.

இத்தக்கனுன விழிஞன்காலத்திற்கு முன்னர் மாலைமுதல்வனெனக்கூற முயன்றாரிலரென்றறிக அதற்கு அவன் இற்றைநாள் முதல்மாலையே முதலெனக்கொள்ளுதி என்றதே சான்றாம். (கசு)

என்றவாசகங்கேட்டலுநந்திதன்னிருகரஞ்செவிபொத்தி
யொன்றுகொள்கையினாதிநாமந்தனையுளத்திடைநனியுன்னி
யின்றிவன்சொலுங்கேட்பவுய்த்தனைகொலாமெம்பிரானெனையென்னாத்
துன்றுபையுளின்மூழ்குருவாயிடைத்துண்ணெனவெகுளுற்றான்.

(இ-ள்.) என்றிவ்வாறு கூறிய வாசகத்தினைக் கேட்டவுடன் நந்திகேசர் தந்திருக்கரங்களாற் காதுகளைமூடிப் பொருந்துமாறு ஆதியான சிவபெருமான் திருப்பெயரினை உள்ளத்தில் மிகநினைத்து இன்று இவன்மொழியுங் கேட்குமாறென்னையனுப்பினையோ எம்பெருமானே என்று மேலுமேலும் வருந்திப் பொருந்தா நின்றதுன்பத்துண் மூழ்கிப் பின்னர்த் தீடீரெனச் சீற்றமுடையராயினர்.—எ-று. (உ0)

பண்டுமூவெயிலழலெழநகைத்திடுபரம்பரனருணிராற்
றண்டநாயகஞ்செய்திடுசிலாதனார்தனிமகன்முனிவெய்தக்
கண்டவானவர்யாவருமுட்கினர்கனலுமுட்கவுற்றா
னண்டம்யாவையுநடுநடுக்குற்றனவசைந்தனவுயிர்யாவும்.

(இ-ள்.) முன்னாளில் முப்புரங்கள் தீப்பட்டழியும் வண்ணம் நகைசெய்த பரம்பரனது கருணையாற் தண்டத்தலைமை நடத்துகின்றசிலாதமுனிவரின் ஒப்பற்ற புதல்வரான நந்திகேசர் கோபங்கொண்டதனைக் கண்ட தேவரனைவரும் நடுங்கினர். அக்கினியுமுள்ள நடுங்கினான் அண்டங்களனைத்து நடுநடுங்குற்றன உயிர்களனைத்தும் அசைந்தன.—எ-று. (உக)

ஏற்றின்மேயநம்மண்ணறன்சீர்த்தியிலிறையுமேகுறிக்கொள்ளா
தாற்றலோடவிவிலக்கியதக்கனுக்கஞ்சினமிசைந்தோமான்
மாற்றமொன்றுமிங்குரைத்திடற்காதெனமற்றதுபொறாதந்தோ
சீற்றமுற்றனனந்தியென்றுட்கினர்திசைமுகனெடுமாலோன்.

(இ-ள்.) இடபத்திலெழுந்தருளு நமது கடவுளின் கீர்த்தியிலிறையளவும் எண்ணாது ஆற்றலுடன் அவியைத்தடுத்த தக்கனுக்கஞ்சி இங்கொரு சொல்லும் கூறுதல் தகுதியன்றென்று இசைந்தோம் இதனைப் பொறுத்துக்கொள்ளாமற் கோபங்கொண்டனர் நந்தீசரெனப் பிரமனும் விண்டுவு நடுங்கினர்.—எ-று. (உஉ)

ஈதுவேலையினந்தியத்தக்கனையெரிவிழித்தெதிர்நோக்கி
மாதுபாகனையிகழ்ந்தனைமீண்டுநின்வாய்துளைத்திடுவேனு
லாதிதன்னருளன்றெனவிடுத்தனனுதலினுய்ந்தாய்நீ
தீதுமற்றினியுரைத்தியேல்வல்லைநின்சிரந்துணிக்குவனென்றான்.

(இ-ள்.) இந்தச்சமயத்தில் நந்தீசர் அத்தக்கனை கண்களிற் தீப்பறக்க எதிர் நோக்கி நீ மாதொரு பாகனான சிவபெருமானை இகழ்ந்தனை இங்குனது வாயைத் துணித்திடுவேன் அது எமதாதியான இறைவன் கட்டளை யன்றென விடுத்தேன் அதனாற் பிழைத்தனை இனித் தீதானமொழிகளைக் கூறுவாயானால் நின்தலையை விரைவில் வெட்டிவிடுவேனென்று கூறினார்.—எ-று. (௨௩)

இவையயன்மகனுள்ளமுந்துண்ணெனவிசைத்துமாமகந்தன்னி
லவியதெம்பிராற்கிலதெனவிலக்கினையதற்கிறையவனன்றேற்
புவனமீதுமற்றெவருளாரரிதனைப்பொருளெனக்கொண்டாய்நீ
சிவனையன்றியேவேள்விசெய்கின்றவர்சிரமறக்கடிதென்றான்.

(இ-ள்.) இவைகளைப் பிரமன் மகனான தக்கனது மனமுந்திடுக்கிடக்கூறிச்சிறந்தயாகத்தில் எம்பெருமானுக் கவியில்லையென விலக்கினை அவியை முதலிற்கொள்ளுதற்குரியானெமது இறைவனன்றேற் புவனத்திலெவருளர் நீ அரியை முதல்வனாகக் கொண்டனை என்று கூறிச் சிவபெருமானை யவிக்கு முதல்வனெனக் கொள்ளுதல் இன்றி யாகஞ் செய்பவரின் தலை விரைவிலறுக என்று சாபமிட்டனர்.—எ-று. (௨௪)

வேறு.

இன்னதொர்சாபமதியம்பியாங்கதற்
பின்னருமிசைத்தனன்பிறைமுடிப்பிரான்
றன்னியன்மதிக்கிலாத்தக்கநிற்கிவண்
மன்னியதிருவெலாம்வல்லைதீர்கவே.

(இ-ள்.) இத்தகைய சாபமொழிகூறிப் பின்னரு மொருசாபமொழி இசைத்தனர். சந்திரசேகரரான சிவபெருமானது தன்மையை மதியாத தக்கனே நினக்கு இங்குண்டாயுள்ள செல்வமனைத்தும் விரைந்தழிந்தொழிக.—எ-று. (௨௫)

ஏறுடையண்ணலையிறைஞ்சலின்றியே
மாறுகோடிகழ்தருவாய்கொள்புன்றலை
யீறுறவுன்றனக்கெவருங்காண்டக
வேறொருசிறுசிரம்விரைவின்மேவவே.

(இ-ள்.) இடபத்தினை உடைய சிவபெருமானை வணங்குதலின்றி மாறுபட்டிகழ்ந்தவாயினை உடைய புல்லிய நினது தலையழிக, பின்னர் நினக்கு அனைவருங்காணுமாறு வேறொரு சிறுதலை விரைவின் மேவுக.—எ-று. (௨௬)

ஈரமில்புன்மனத்திழுதைமற்றனைச்
சாருறுகடவுளர்தாமுமோர்பக
லாருயிர்மாண்டெழீஇயளப்பிலாவுகஞ்
சூரெனுமவுணனாற்றுயரின்மூழ்கவே.

(இ-ள்.) இரக்கமற்ற புல்லிய மனத்தினையுடைய இழுதையே உன்பக்கமாகவிருக்குந் தேவர்களும் அரியவுயிரிழந்து பிழைத்து அளவற்றயுகங்கள் சூரனென்னுமவுணனாற் துன்பத்தின் மூழ்குவாராக.—எ-று. (௨௭)

என்றுமற்றினையதுமியம்பியோர்புநீஇத்
துன்றிருங்கணநிரைசூழவெள்ளியங்

குன்றிடையிறைக்கிதுகூறிக்கீழ்த்திசை
முன்றிருவாயிலின்முறையின்மேவினன்.

(இ-ள்.) என்றிவைகளையுமுரைத்து நெருங்கிப் பொருந்திய கணநிரைகள் சூழ்ந்துவராநிற்ப வெள்ளிமலையை யடைந்து சிவபெருமான்றிருமுன்னர் நடந்தன கூறிக் கீழ்த்திசையிலுள்ள முதல்வாசலின் முறையாக இருந்தனர்.—எ-று. (உஅ)

முன்னுறநந்தியம்முளரிமேலவன்
மன்னுறுகடிநகர்மகத்தைநீங்கலு
மன்னதொரவையிடையமரர்யாவரு
மென்னிதுவிளைந்ததென்றிரங்கியேங்கினர்.

(இ-ள்.) நந்தீசர் முன்னதாகக் கமலாசனனுடைய காவலோடு கூடின நகரியில் நடந்தயாகத்தினின்றும் விலகுதலும் அவ்வியாகசபையிலிருந்த தேவரனைவரும் இஃதென்னை இவ்வாறு முடிந்ததென்று இரங்கியேங்கினர்கள்.—எ-று. (உகூ)

நந்தியெம்மடிகண்முன்னவின்றமெய்யுரை
சிந்தைசெய்தேங்கினன்சிரம்பணிப்புற
மைந்தனதுரையையுமறுத்தற்கஞ்சினன்
வெந்துயருழந்தனன்விரிஞ்சனென்பவன்.

(இ-ள்.) விரிஞ்சனென பிரமனென்பவன் எமது நந்தியடிகள் முன்னர்க்கூறிய உண்மைமொழியை நினைத்தேங்கினன் தலைநடுங்க மகனுரைத்தவைகளையு மறுத்தற் கஞ்சினன் மிகுந்த துன்பமனுபவித்தனன்.—எ-று. (௩0)

முடித்திடவுன்னியேமுயலும்வேள்வியை
நடத்திடவஞ்சினனவின்றுசெய்கடன்
விடுத்தனனன்னதைவிமலற்கின்னவி
தடுத்தவன்கண்டரோயாதுஞ்சாற்றலன்.

(இ-ள்.) முடிக்குமாறு கருதிச்செய்த யாகத்தை நடத்தவஞ்சிச் சாபவரலாற்றையுரைத்துச் செய்கடனைச்செய்யாது விடுத்தனன் நீ அதனை விமலனான சிவபெருமானுக்கினியவவியைத் தடுத்தவன்பார்த்து ஒன்று முரையாதிருந்தனன். (௩க)

கறுவுகொள்பெற்றியான்கவற்சிகொண்டுளான்
வறியதோருவகையான்மனத்திலச்சமுஞ்
சிறிதுகொள்பான்மையான்றேவரோடெழாக்
குறுகினன்றன்னகர்க்கோயின்மேயினன்.

(இ-ள்.) கறுவப்பட்ட தன்மையினையுடையவனும் கவர்ச்சிகொண்டவனும் மகிழ்வற்றவனும் மனதிற் சிறிதச்சமுடைய தன்மையானும் ஆகிய தக்கன்தேவர்களுடனெழுந்து சென்று தன்னகரிலுள்ள தனது மாளிகையையடைந்தான்.—எ-று. (௩உ)

அலர்ந்திடுபங்கயத்தண்ணறன்மகங்
குலைந்திடவாயிடைக்குழீஇயதேவர்கள்
சலந்தனினந்திசெய்சாபஞ்சிந்தியாப்
புலர்ந்தனர்தத்தமபுரத்துப்போயினர்.

(இ-ள்.) விரியப்பெற்ற தாமரையாசனத்தில் வீற்றிருக்கும் பெருமைவாய்ந்த பிரமதேவன் செய்த யாக நிறைவேறுதிடையிலழிய அவ்விடத்து நெருங்கி இருந்த தேவர்கள் கோபத்தா னந்திதேவரிட்ட சாபத்தினை நினைத்துவருந்தி வருந்தித் தங்கள் தங்கள் நகரங்களுக்குச் சென்றனர்.—எ-று. (௩௩)

பிரமயாகப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம், சாoஉ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சாலைசெய் படலம்.

அன்றுமுன்னாகவேயளப்பில்காலமா
வொன்றுமவ்வேள்வியிலோம்புகின்றிலர்
துன்றியமுனிவருஞ்சுரரும்பார்தனின்
முன்றிகழந்தணர்முதலினோர்களும்.

(இ-ள்.) அன்று முதலாக அளவற்றகாலம் யாதொரு சடங்கும் அவ்வேள்வி வழியாகச்சுரர்களும் நெருங்கிய முனிவர்களும் உலகினில் விளங்கும் அந்தணர்களுஞ் செய்திலர்.—எ-று. (க)

ஓர்ந்தனனன்னதையூழின்றிநெறி
சார்ந்திடுதக்கனோர்வைகறன்முனஞ்
சேர்ந்திடுமிமையவர்திறத்தைநோக்கியே
யீர்ந்திடுதீயதொன்றியம்புகின்றனன்.

(இ-ள்.) அவ்வாறுயாக நடவாதிருத்தலைத் தீய ஊழின் வழிநிற்குந் தக்கன் ஆலோசித்துத் தன்னருகிலிருக்குந்தேவர்கூட்டத்தினைப்பார்த்து ஒருதினம்கேட்போரின் உள்ளம்பிளக்கும் கொடியமொழி யொன்றைக் கூறுகின்றனன்.—எ-று. (உ)

எடுத்திடுசுருதியினியற்கைமுற்றுற
வடித்திடுதேவிர்காள்வரம்பில்காலமா
வடுத்திடும்வேள்வியதாற்றலின்றியே
விடுத்ததெனனையதுவிளம்புவீரென்றான்.

(இ-ள்.) வேதத்திற்கூறுஞ் செயன்முற்றிலு நன்குணர்ந்த தேவர்களே நீங்கள் அளவற்றகாலங்களாகச் செய்தற்குசிதமான யாகஞ்செய்தலின்றி விட்டதென் அதனை யுரையுங்களென்றான்.—எ-று. (ங)

வேறு.

எய்யாதுவெய்யவினைபீட்டுதக்கனிவைசெப்பலோடுமிமையோர்
மெய்யாரணத்தன்முதனாளியற்றுவேள்விக்களத்திலவியூ
ணையானனத்தர்பெறநல்கலென்றியதனாலுநந்தியடிகள்
பொய்யாதசாபவுரையாலும்யாங்கள்புரியாதிருத்துமெனவே.

(இ-ள்.) உணராமற் கொடிய வினைகளைச் செய்கின்ற தக்கனென்பானிவை களையுரைத்தவுடனே தேவர்கள் உண்மையான வேதங்களையுணர்ந்த பிரமதேவன் முன்னாளிற்செய்த யாகசாலையுள் ஐந்துமுகங்களையுடைய சிவபெருமானுக்கு அவி அளித்தல்கூடாதென்றனை அதனாலும் நந்திதேவரின் பொய்யாத சாபமொழியாலும் நாங்கள் வேள்விகள் செய்யாதிருக்கின்றோம் என்று கூறுதலும்.—எ-று. (ச)

அந்நாளிலீசன்விடுகின்றநந்தியறைகின்றசாபமதனுக்
கிந்நாளுமஞ்சிமகவேள்விதன்னில்யாதுஞ்செயாதுதிரிவீர்
முன்னாகயானெர்பெருமாமகத்தைமுறைசெய்வன்முற்றியிடுமேற்
பின்னாகநீவிர்புரிமின்களென்றுபீடில்லவன்புகலவே.

(இ-ள்.) அந்நாளிலீசனுனப்பிய நந்திகூறிய சாபத்திற்குஇக்காலத்திலும் பயந்து யாகத்தில் யாதொன்றுஞ் செய்யாது திரிகின்றீர் உங்களச்சத்தினை ஒழித்தற்கு முன்னாக யானொரு சிறந்தயாகத்தினைச் செய்கின்றேன் அதுநிறைவேறுமாயிற் பின்னர் நீங்கள் செய்யுங்கள் என்று பெருமையற்றதக்கனுரைத்தலும்.—எ-று. (டு)

நீமுன்னொர்வேள்விபுரிகின்றதையநெறியென்றிசைப்பவவரைப்
போமின்கள்யாருமெனவேபுகன்றுபுரிதோறுமேவிமிகவு
மேமங்கொள்சிந்தையுளதக்கனூழினியல்பாலதற்பினொருநா
ளோமஞ்செய்வேள்விபுரிவான்விரும்பியுள்ளத்திலுன்னிமுயல்வான்.

(இ-ள்.) அவன்மொழிகேட்ட தேவர் ஐயனே நீ முன்னமொருயாகஞ் செய்தல்முறையென்றுகூற அங்ஙனங்கூறிய தேவர்களைப் போமின்களென்று அன்னார் நகரங்களுக் கவர்களையனுப்பி மிகவும் இறுமாப்புவாய்ந்த உள்ளத்தினையுடைய தக்கன் ஊழின் இயல்பினாற் பின்னரொருதினம் ஓமஞ்செய்கின்ற யாகச்சடங்கினை நடத்துவான் விரும்பி உள்ளிலாலோசனை செய்பவன்.—எ-று. (சு)

தொட்டாமனுத்தொன்மயனைத்தனதுசுதரென்னமுன்னமுதவிக்
கட்டாமரைக்குள்விதிபோலநல்குகலைகற்றுளானைவிளியா
முட்டாதவேள்வியதுவொன்றுசெய்வன்முனிவோர்கடேவருறைவா
னெட்டாதவெல்லைதனிலின்றோர்சாலையியல்பால்விதித்தியெனவே

(இ-ள்.) துவஷ்டாவையும் மனுவினையும் மயனையும் தனது புதல்வர்களாக முன்னர்ப்பெற்றுக் கள்ளினையுடைய கமலாசனத்திலிருக்கும் பிரமதேவனைப்போல படைக்குந்தொழில்கட்குரிய நூலினைக்கற்றுள்ள விசுவகன்மனை யழைத்து யான்தவறுத யாகமொன்று செய்வன் அப்பொழுது முனிவர்களுந் தேவர்களும் இருத்தற்கு அளவிடப்படாத அகலநீளத்தினதான ஒருசாலையை இன்று முறைப்படி உண்டாக்கக்கடவை என்று கூறுதலும்.—எ-று. (எ)

வேறு.

இனிதெனவிறைஞ்சியேயேகிக்கங்கையம்
புனனதியதனொருபுடையதாகிய
கனகலமென்பதோர்கவின்கொள்வைப்பிடை
வினைபுரிகம்மியன்விதித்தன்மேயினான்.

(இ-ள்.) சிற்பத்தொழிலினைச்செய்யும் விசுவகன்மனென்பான் நல்லதெனவணங்கிச்சென்று நீர் வளம்பொருந்திய கங்காநதியின் ஒரு புறத்தில் அழகுவாய்ந்த கனகலமென்னும் இடத்தில் யாகசாலையை உண்டாக்கத் தொடங்கினான்.—எ-று.

பத்துநூறியோசனைப்பரப்புநீளமு
மொத்திடும்வகையதாவொல்லைநாடியே
வித்தகவன்மையான்வேள்விக்கோரர
ணத்தகுபொழுதினிலமைத்துநல்கினான்.

(இ-ள்-) தனது வித்தியாவல்லபத்தால் யாகத்துக்கு ஒரு மதிலினை ஆயிரம் யோசனை அகலமும் ஆயிரம்யோசனை நீளமும் பொருந்தினதாக இருக்கும்வண்ணம் விரைவாக ஆராய்ந்து அப்பொழுதே உண்டாக்கினான்.—எ-று. (கூ)

நாற்றிசைமருங்கினுநான்குகோபுரம்
வீற்றுவீற்றுதவியவியன்கொணொச்சியி
லேற்றிடுஞாயில்களியற்றியன்னதை
யாற்றலையுடையதோரரணமாக்கினான்.

(இ-ள்.) நான்கு திசைகளினும் நான்குகோபுரங்களை வரிசைவரிசையாக வமைத்த பெரிய அம்மதிலிற்பொருத்தமான ஞாயிலென்னும் உறுப்புக்களை அமைத்து அம்மதிலினைக்காக்கும் வன்மையினையுடைய ஒரு அரணமாகச்செய்தனன்.—எ-று ()

உள்ளுறவணங்கினருறைதற்கோரிடை
தெள்ளிதின்கிகியேதேவர்தம்மொடு
வள்ளுறைவேற்கணார்மருவியாடுவான்
புள்ளுறைவாவியும்பொழிலுமாக்கினன்.

(இ-ள்.) உட்புறத்திற் தேவமாதர்கள் இருத்தற்கு ஒரு இடம்விரைவாகவமைத்துக் கூர்மைதங்கிய வேல்போலுக்கண்ணிணையுடைய மாதர்கள் தேவர்களுடன் பொருந்தி விளையாடுதற்குப் புட்கள் பொருந்திய வாவிகளையும் சோலைகளையும் உண்டாக்கினன்.– எ-று. (கக)

அப்பரிசமைத்துமேலமரர்வேதிய
ரெப்பரிசனரும்வந்தீண்டிவெஃகினை
துய்ப்பதற்கொத்திடுசுவைகொடீம்பதம்
வைப்பதோரிருக்கையுமரபிற்றந்தனன்.

(இ-ள்.) அவ்வாறு செய்து பின்னர்த் தேவர்களும் மறையவர்களும் மற்றை எல்லாப்பரிசனங்களும் வந்து நெருங்கி விரும்பினவைகளை உண்ணுதற்குப் பொருத்தமான இனிய அன்னங்களை வைப்பதற்கேற்ற இருப்பிடங்களையும் முறைப்படி உண்டாக்கினன்.— எ-று. (கஉ)

அந்தணராதியோரமரர்யாவரும்
வந்துணவருந்துவான்வரம்பில்சாலைக
ளிந்திரவுலகெனவிமைப்பிலீந்தனன்
முந்தையின்மகவிதிமுழுதுநாடினன்.

(இ-ள்.) முன்னரேயாகஞ்செய்யும் விதிகளைமுற்றிலும் ஆராய்ந்த தேவதச்சன் பிராமணர் முதலியவர்களும் தேவரனைவரும் வந்து போசனமருந்துதற்கு அளவற்றசாலைகளை இந்திரவுலகம்போல இமைப்பிலுண்டாக்கினன். – எ-று (கங)

விருந்தினர்பெற்றிடவிரைமென்பாளித
நரந்தமொடாரம்வீநறைகொண்மான்மத
மருந்துறுவெள்ளடையானபாகிவை
யிருந்திடுசாலையுமியற்றினனரோ.

(இ-ள்.) விருந்தினர் பெறும் வண்ணம் மணம்பொருந்திய மெல்லிய சந்தனக்குழம்பும் வாசனைப்பொருளும் முத்துமாலைகளும் மலர்களும் மணம் பொருந்திய சவ்வாதும் அருந்தற்குரிய வெற்றிலைபாக்கு முதலியவைகளும் இருக்குஞ் சாலைகளையும் உண்டாக்கினன்.—எ-று. (கச)

ஆனபல்வகையுடையாடைசெய்யபூண்
மேனதொரம்பொனின்வியன்கொள்குப்பைக
ளேனையவெறுக்கைகண்மணிகள்யாவையுந்
தானமதியற்றிடத்தானநல்கினன்.

(இ-ள்.) பலவகையான உடையாடைகள் செவ்வியபூண்கள் உயர்ந்த அழகிய பொன்னுலாகிய பலவகைக்குவியல்கள் மற்றுள்ளசெல்வங்கள் அரதனங்கள் முதலியவைகளைத் தானஞ்செய்தற்கிடமமைத்தனன். —எ-று. (கரு)

கடிதெழுசததளக்கமலமேனுறை
யடிகடன்னகர்கொலென்றையஞ்செய்திட
நடைதருவேள்விசெய்நலங்கொள்சாலைய
திடையுறவமைத்தனன்யாரும்போற்றவே.

(இ-ள்.) விரைந்தலருஞ் சததளக மலமீதிருக்கின்ற பிரமனுடைய நகரமோ என்று சந்தேகங்கொள்ளுமாறு நிகழப்போகின்ற யாகத்துக்குரிய சாலையின் நடுவில் அனைவருந்துதிக்கும் வண்ணம் உண்டாக்கினன்.—எ-று. (௧௬)

நூறெனும்யோசனை நுவலுமெல்லையின்
மாறகல்சாலையின்வன்னிசேர்தரக்
கூறியமூவகைக்குண்டம்வேதிகை
வேறுளபரிசெலாம்விதித்தல்செய்தனன்

(இ-ள்) நூறுயோசனையாக உரைக்கப்படும் எல்லையின் மாறுபாடற்ற சாலையிலக்கினி பொருந்துமாறு நூல்கூறிய சதுரம்வட்டம் கோணம் என்னுமூவகையகுண்டங்களும் வேதிகைகளும் மற்றுள்ள பிறவும் உண்டாக்கினன்.—எ-று. (௧௭)

மேலோடுகீழ்புடைவெறுக்கையின்மிசைக்
கோலநன்மணிகளாற்குயிற்றிவாவியுஞ்
சோலையும்பறவையுந்தோமிறேவரும்
போலியவோவியம்புனைந்திட்டானரோ.

(இ-ள்.) மேலிலுங் கீழிலும் பக்கத்திலும் பொன்னின்மீது மணிகளாற் சித்திரமிழைத்து வாவிகளுஞ் சோலைகளும் பறவைகளும் குற்றமற்ற தேவரும் போன்ற சித்திரங்களை உண்டாக்கினன்.—எ-று. (௧௮)

புண்டரீகாசனம்பொருந்துநான்முகன்
றண்டுளவோனிவர்தமக்கிருக்கையு
மெண்டிசைவாணருக்கியலிருக்கையு
மண்டருக்கிருக்கையுமருளல்செய்துமேல்,

(இ-ள்.) புண்டரீகமலரான ஆசனத்திலிருக்கும் நான்முகனுந் தண்ணியதுளவலரினையுடைய திருமாலும் இருத்தற்கு இருக்கையும் அட்டதிக்குப் பாலருக்குப் பொருந்திய இருக்கையும் தேவர்கட்கிருக்கையும் உண்டாக்கிப்பின்னர்.—எ-று. (௧௯)

தொக்குறுமுனிவரர்தொல்லைவேதிய
ரொக்கலின்மேயினருறையிருக்கையுந்
தக்கனுக்கிருக்கையுஞ்சமைத்துநல்கினன்
வைக்குறுதவிசினூன்மரபினுடியே.

(இ-ள்.) நெருங்கிவராகின்ற முனிசிரேட்டர்களும் பழயோர்களான வேதியர்களும் பந்துக்களுடன் வந்திருத்தற்கிருக்கையும் அமைக்கப்பட்ட சிற்பநூன்முறையே ஆராய்ந்து தக்கனுக்கிருக்கையும் உண்டாக்கிக் கொடுத்தான்.—எ-று. (௨௦)

தக்கனைவணங்கிநின்சாலைமுற்றிய
புக்கனைகாண்கெனப்புனைவன்செப்பலு
மக்கணமதுதெரிந்தளவிலாதரு
மிக்கனன்மகிழ்ந்தனன்விம்மிதத்தினன்.

(இ-ள்.) தேவதச்சன் தக்கனைவணங்கி நின்யாகசாலை முற்றியதனைச்சென்று காண்பாயாகவென உரைத்தலும் உடனே அதனைச்சென்று கண்டு அளவற்ற ஆசையின்மிகுந்து மகிழ்ந்து ஆச்சரிய முடையனாயினன் —எ-று. (உக)

பூங்கமலத்தமர்புனிதன்கான்முளை
பாங்கரின்முனிவரிற்பலரைக்கூவியே
தீங்கனன்மாமகஞ்செய்யநூன்முறை
யாங்கனம்வலித்தனனவர்க்குச்செப்புவான்.

(இ-ள்.) அழகிய தாமரைமலரிலிருக்கும் பிரமனுடைய புதல்வனான தக்கன் அருகிலிருந்த முனிவரிற் பலரைவிளித்து அக்கினியின்வழி சிறந்தயாகத்தினைச் செய்வான் அவ்விடத்திலுத்தேசித்தவ னவர்க்குரைக்கின்றான்.—எ-று. (உஉ)

தருவுறுசமிதைகள்சாகைதண்ணடை
பரிதிகண்மதலைநாண்பறப்பைபல்பசு
வரணிநன்முதிரைகளாதியாவிதற்
குரியனவுய்த்திரென்றொல்லையேவினான்.

(இ-ள்.) மரங்களிற்பொருந்திய உயர்ந்த விறகான சமிதைகளும் கிளைகளும் தண்ணிய இலைகளும் வட்டமான சிருக்குசிருவமும் ஊன்றுகோலான யூபஸ்தம்பங்களும் தருப்பைக்கயிறுகளும் பறைவைகள் யாடுமுதலிய பசுக்களும் நெருப்புக்கடைந்தெடுக்குஞ்லிகோல்களும் நல்லகோதுமையாதிய தானியங்களும் முதலியவையாய் இதற்கு வேண்டுவனவாக உள்ளவைகளுங்கொண்டுவாருங்களென்று விரைவாக அனுப்பினான்.

ஆனேடுநிதிகளைமணியையைந்தருக்
கானிலையழைத்துநம்மகத்தைக்காணிய
மாநிலத்தந்தணர்வருவருண்டியு
மேனையபொருள்களுமீமென்றோதினான்.

(இ-ள்.) காமதேனுவுடன் சங்கநிதியாதிகளையும் சிந்தாமணியாதிகளையும் கற்பகாதிகளான ஐந்தருக்கான்களையும் அழைப்பித்து நமதுயாகத்தைப் பார்த்தற்குப் பூமியின்கண்ணுள்ள அந்தணர்வருவர் அவர்க்கு உணவும் பிறபொருள்களும் அளியுங்களென்றும் கூறினான்.—எ-று. (உச)

நல்விடைகொண்டுபோய்நவையிலான்முதற்
பல்வகையவையெலாம்படர்ந்துவீற்றுவீற்
றொல்வதோரிடந்தொறுமுற்றவாயிடைச்
செல்வதோர்பொருளெலாஞ்சிறப்பினல்கவே.

(இ-ள்.) நல்ல விடைபெற்றுக் குற்றமில்லாத காமதேனுமுதலிய பலவகையானவையனைத்தும் சென்று தகுந்ததான இடங்களில் அவ்விடத்துத் தம்மை வந்துகேட்கும் பொருளனைத்தும் சிறப்புடன் கொடுத்தற்கிருந்தன.—எ-று. (உரு)

பலவகையாவன சிந்தாமணி கற்பகம் சங்கநிதி பதுமநிதி பாரிசாதம் முதலியன.

தன்துறுகிளைஞராய்த்தணப்பிலாததோர்
முனிவரர்தங்களின்முப்பதாயிரர்
துனியறுவோர்தமைச்சொன்றியேனவை
யணைவரும்விருப்புறவளித்திரென்றனன்.

(இ-ள்.) தனது பந்துக்களாய் நீங்காத முனிவரிற் குற்றமற்ற முப்பதாயிரம் பெயர்களை அழைத்து வருபவருக்கெல்லாம் சோறும் அவையொடு பொருந்தும் பிற பொருள்களையும் அனைவருக்கும் விருப்பமுண்டாமாறு அளித்திரென்று கூறினான்.

மற்றவர்க்கிருதிறமாதவத்தரை
யுற்றனர்யாவருமுண்டியன்றியே
சொற்றனயாவையுந்தொலைவின்றீமென
நற்றவத்தயன்மகனயப்புற்றேவினன்.

(இ-ள்.) அறுபதாயிரம் முனிவரைப்பார்த்து நீங்களிங்கு வந்தாரனைவரும் உணவின்றிக்கேட்கும்பொருள்களை ஓயாமற் கொடுங்களென்று நல்லதவத்தினையுடைய பிரமன் புதல்வனான தக்கன் விருப்பங்காட்டி ஏவினன்.—எ-று. (உஎ)

தீதினைநன்றெனத்தெளியுநான்முகன்
காதலனோர்மகங்கடிதியற்றுவான்
வேதியர்விண்ணவர்யாருமேவுவான்
றூதரைநோக்கியேயினையசொல்லுவான்.

(இ-ள்.) குற்றத்தினைக் குணமாக உணரும் பிரமன் புதல்வனான தக்கனென்பான் ஒப்பற்ற யாகத்தினை விரைந்து செய்தற்கு மறையவர்களும் பிறரும் வருதற்கு தூதுவர்களைப்பார்த்து இவைகளைக் கூறுகின்றான்.—எ-று. (உஅ)

நக்கனையல்லதோர்நாகர்தங்களை
மிக்குறுமுனிவரைவேதமாந்தரைத்
திக்கொடுவான்புவியாண்டுஞ்சென்றுகூ
யுய்க்குதிராலெனவுரைத்துத்தூண்டினன்.

(இ-ள்.) சிவனையன்றியுள்ள தேவர்களையும் சிறப்புப்பொருந்தியமுனிவர்களையும் வேதமுணர்ந்த மனிதர்களான மறையோர்களையும்திக்கிலும் வானிலும்பூமியிலும் மற்றுமுள்ள எவ்விடங்களிலுஞ் சென்றுவிளித்துக்கொண்டு வாருங்களென்றுகூறியனுப்பினன்.—எ-று. (உகூ)

முந்துறவரித்திடுமுனிவரவ்வழித்
தந்தனர்மகஞ்செயத்தருவயாவையும்
வந்தனநோக்கியேமரபினுய்த்திரென்
றெந்தைதனருளிலானியம்பினனரோ.

(இ-ள்) முன்னரழைத்தனுப்பிய முனிவர்கள் அப்பொழுது யாகத்துக்குவேண்டிய அனைத்தையும் கொண்டுவந்து கொடுத்தனர். அவர்கள் கொண்டுவந்தவைகளை எமது தந்தையான சிவபெருமானுடைய அருளற்றதக்கன் பார்வையிட்டு முறைப்படியே வைக்கவேண்டுமிடங்களில் வையுங்களென்று கூறினன்.—எ-று. (௩0)

வரித்திடுபான்மையின்வழாதுபோற்றிடு
மிருத்தினர்தமிற்பலர்யாகசாலையுட்
டிருத்தியவேதிவாய்ச்செறிபல்பண்டமு
நிரைத்தனர்பறப்பையுநிலையிற்சேர்த்தினர்.

(இ-ள்.) வரிக்கப்பெற்ற முறையிற்தவறாது போற்றப்பட்ட ரித்விக்குகளிற்பலர் யாகசாலையுள் செப்பனிடப்பட்ட வேதிகைகளில் நெருங்கிய பலபொருள்களையும் வரிசையாக வைத்தனர் பறப்பைகளையும் வைக்கவேண்டுமிடத்தில் வைத்தனர்.—எ-று. ()

அசைவறுவேதியினணித்திரேரிடை
வசைதவிர்மதலைகண்மரபினட்டுபு
பசுநிரையாத்தனர்பாசங்கொண்டுபின்
னிசைதருபூசையுமியல்பினாற்றினர்.

(இ-ள்.) அசைவற்றயாக மேடையின் சமீபத்திலொரு பக்கத்திற் குற்றமற்ற தம்பங்களை முறைப்படியே நட்டுக் கயிறுகளாற் பசுக்களைக் கிரமமாகக்கட்டி அவைகட்குப் பூசைகளையுஞ் செய்தனர்.—எ-று. (ருஉ)

வேறு.

நடையிதுநிகழும்வேலைநலமிலாத்தக்கனல்கும்
விடைதலைக்கொண்டுபோயவியன்பெருந்தூதர்தம்மிற்
புடவியின்மறையோர்க்கெல்லாம்புகன்றனர்சிலவர்வெய்யோ
னுடுபதிநாள்கோண்முன்னருரைத்தனர்சிலவரன்றே,

(இ-ள்.) இங்கு இவ்வாறு நடக்குங்காலத்தில் நன்மையற்ற தக்கனளித்த விடையைத் தலைமேலேந்திச் சென்ற மிகப்பெரிய தூதர்களிற் சிலர் பூமியிலுள்ள மறையோருக் குரைத்தனர். சிலர் சூரியன்சந்திரன் நட்சத்திரங்கள் மற்றைய கோட்கள் முதலியவைகட்குரைத்தனர்.—எ-று (ருரு)

காவலராகிவைகுங்கந்தருவத்தராதி
யாவதோர்திறத்தோர்க்கெல்லாமறைந்தனர்சிலவராசை
மேவியகடவுளோர்க்கும்விளம்பினர்சிலவர்முப்பாற்
றேவர்கள்யாருங்கேட்பச்செப்பினர்சிலவரன்றே.

(இ-ள்.) சிலர் அரசர்களாகவிருக்கும் கந்தருவர் முதலியோர்க்கெல்லாம் உரைத்தனர். சிலர் திக்குகளில் வாசம்புரியுந் தேவருக்குரைத்தனர் சிலர் மூன்றுபகுதியரான தேவரனைவருக்குங் கூறினர்.—எ-று. (ரு-ச)

விண்ணகமுதல்வனுக்குவிளம்பினர்சிலவராண்டு
நண்ணியதேவர்க்கெல்லாநவின்றனர்சிலவர்மேலைப்
புண்ணியமுனிவரர்க்குப்புகன்றனர்சிலவரேனைப்
பண்ணவர்முன்னஞ்சென்றுபகர்ந்தனர்சிலவரம்மா

(இ-ள்.) சிலர் வானுலகத்தலைவனான இந்திரனுக்குரைத்தார்கள். சிலர்விண்ணுலகில் வாழுந்தேவர்க்கெல்லாம் உரைத்தனர் சிலர் பூலோகத்தில் வாழும் புண்ணிய முனிவருக்குரைத்தனர் சிலர் இவரன்றியுள்ள முனிவரெதிரே சென்றுகூறினர்.—எ-று.

வானவர்முதுவன்றொல்லைமன்றன்மாநகரத்தெய்திக்
கொனகர்வாயினண்ணக்குறுகினர்காப்போருய்ப்ப
மேனிறைகாதலோடும்விரைந்தவற்றொழுந்துநின்சே
யானவன்வேள்விக்கேகவடிகளென்றுரைத்தார்சில்லோர்.

(இ-ள்.) சிலர் தேவர்களுள் முதியோனான பிரமனுடைய பழயமங்களகரமான மனோவதிநகரத்தை அடைந்து அரசமாளிகையின் தலைவாசலையெய்தி அங்குநின்றுகாப்பவர்களால் உள்ளே அநுப்பப்படமிகுதியாக நிறைந்த அன்புடனே அப்பிரமனை விரைந்து வணங்கி நினது புதல்வனுடைய யாகத்துக்கு அடிகளே ஏக என்று கூறினார்கள்.

மேனகுசுடர்செய்தூயவிண்டுலகதனைநண்ணி
மானிறைகின்றகோயின்மணிக்கடைமுன்னரெய்திச்
சேனையந்தலைவனுய்ப்பச்சீதரற்பணிந்துவேள்விப்
பான்மையதியம்பியெந்தைவருகெனப்பகர்ந்தார்சில்லோர்

(இ-ள்.) மேற்புறத்தில் விளங்குகின்ற சுடரினைச்செய்கின்ற தூய்மையான திருமாலின் உலகினையடைந்து மால் இருக்கின்ற கோயிலின் அழகிய தலைவாசலிற் சென்று சேனாதிபதியால் உள்ளே விடப்படச் சீதரனான நாராயணனை வணங்கி யாகவரலாற்றை யுரைத்து எந்தையேவருக என்று சிலர் கூறினார்கள்.—எ-று. (ருஎ)

மற்றதுபோழ்துதன்னின்மாயவனெழுந்துமார்பூ
டுற்றிடுதிருவும்பாருமுடன்வரவுவணர்கோமான்
பொற்றடந்தோண்மேற்கொண்டுபோர்ப்படைகாப்பத்தன்பாற்
பெற்றனர்சூழத்தானைப்பெருந்தகைபரவச்சென்றான்.

(இ-ள்.) அப்பொழுது மாயவனெழுந்து மார்பிற்பொருந்திய திருமகளும் பூமகளும் உடன்வராநிற்பக் கருடர்தலைவனின் அழகியவகன்ற தோண்மீதேறிப்போர்ப் படைக்காவலைத் தன்னிடம் அதிகாரம் பெற்றவர்கள் காத்துச்சூழ விடுவேசேனனென பெரிய தகைமையினையுடையான் வணங்கச்சென்றனன்.—எ-று. (ருஅ)

செல்லலுமதனைநாடித்திசைமுகக்கடவுளங்க
ணெல்லையிலெழுந்துமுப்பாவொண்டொடிமாதரோடு
மல்லியங்கமலநீங்கியன்னமேற்கொண்டுமைந்த
ரெல்லையின்முனிவர்யாருமேத்தினர்சூழப்போந்தான்.

(இ-ள்.) செல்லுதலும் அவ்வாறு திருமால் வந்தசெயலை உணர்ந்து திசைமுகக்கடவுளான பிரமன் விரைந்தெழுந்து காயத்திரி சாவித்திரி சரசுவதி யென்னும் மூவகைப் பெண்களுடன் அகவிதழினையுடைய கமலாசனத்தை விடுத்து அன்னத்தின்மீதேறி மைந்தர்களும் அளவற்ற முனிவர்களும் பிறரும் துதித்துடன் வரச்சென்றான்.—எ-று.

மைந்தராவார் உபப்பிரமர். (ருகூ)

மாலொடுபிரமனீண்டிவருதலுமகவானென்போன்
வேலொடுவில்லும்வாளும்விண்ணவரேந்திச்சூழ
நாலிருமருப்புவெள்ளைநாகமதுயர்த்துத்தங்கள்
பானுறைகுரவரோடுபாகமார்விருப்பில்வந்தான்.

(இ-ள்.) மாலுடன் பிரமனென்பான் வருதலும் இந்திரனென்பான் வில்லும் வாளுந்தேவர்களேந்திச்சூழப் பெரிய நான்கு தந்தங்களையுடைய வெள்ளையானையில் ஏறித் தம்மிடத்துப் பொருந்திய வியாழன் முதலிய குரவர்களுடன் அவிர்ப்பாகம் பெறும் விருப்பத்துடன் வந்தான்.—எ-று. (சூO)

ஆயவன்புரத்தில்வைகுமரம்பையேமுதலாவுள்ள
சேயிழைமார்கள்யாருந்தேவரோடகன்றரெங்க
ணுயகன்போந்தானென்றேநலமிகுசசியென்பாளுந்
தூயதோர்மானத்தேறித்தோகையர்காப்பச்சென்றாள்.

(இ-ள்.) அவ்விந்திரனுடைய நகரத்தில் வாசம்புரியும் அரம்பைமுதலிய பெண்களனைவரும் தேவர்களுடன் சென்றனர் நலத்தின் மிக்கசசியென்பவளும் எங்கள் நாயகன் சென்றானென்று தூய்மைவாய்ந்த ஒரு விமானத்திலேறித் தேவமாதர்காவல் புரியச்சென்றனள்.—எ-று. (சூக)

எண்டிசைக்காவலோருமீரிருதிறத்தரான
வண்டருமுடுக்கடாமுமாரிடத்தொகையுளோரும்
வண்டுளர்குமுதம்போற்றுமதியமுமேனைக்கோளும்
விண்டொடரியக்கர்சித்தர்விஞ்சையர்பிறரும்போந்தார்.

(இ-ள்.) அட்டதிக்குப்பாலர்களும் ஆதித்தியர் உருத்திரர் வசுக்கள் மருத்துவர் என்னு நான்கு பகுதியினரான தேவர்களும் நட்சத்திரங்களும் முனிவர் கூட்டத்தினரும் வண்டுமுழங்குங் குமுத நண்பனான சந்திரனும் மற்றைய கோள்களும் வானினுலாவும் இயக்கர்களுஞ் சித்தர்களும் வித்தியாதரரும் பிறருஞ்சென்றார்கள்.—எ-று.

சேணிடைமதியினேடுசெறிதருமுடுக்களான
வாணுதன்மகளிர்யாருமகிழ்வொடுதந்தைவேள்வி
காணியவந்தாரீதுகண்ணுறீஇயவுணர்கோமான்
சோணிதபுரத்துக்கேளிர்தொகையொடுந்தொடர்ந்துசென்றான்.

(இ-ள்.) வானிலுள்ள சந்திரனுடன் நெருங்கியிருக்கின்ற நட்சத்திரங்களான ஒள்ளிய நுதலினையுடைய பெண்களனைவரும் மகிழ்ச்சியுடன் பிதாபுரியும் யாகத்தினைத் தரிசிக்கும்வண்ணம் வந்தார்கள்; இதனைக்கண்டு சோணிதபுரத்திலிருந்த அசுராதிபன் தனது பந்துமித்திரர்களுடன் சென்றான்.—எ-று. (சங)

வணிகலனிலவுபொற்றோள்வாசவன்முதலாவுள்ள
வினையரும்பிறருமெல்லாமிருவர்தம்மருங்குமீண்டிக்
கனகலவனத்திற்செய்தகடிமகச்சாலையெய்த
முனிவரரோடுந்தக்கன்முன்னெதிர்கொண்டுநின்றான்.

(இ-ள்.) அணியப்பெற்ற ஆபரணங்களினிலவு விளங்குகின்ற இந்திரன்முதலாவுள்ள இனையரும் பிறரும் பிரமவிஷ்ணுக்களின் பக்கங்ககளின் நெருங்கி கனகலவனத்திற்செய்துள்ள காவலினையுடைய யாகசாலையை யடையத்தக்கன் முனிசிரேட்டர்களுடன் முன்னரே எதிர்கொண்டிருந்தனன்.- எ-று. (சச)

எதிர்கொடுமகிழ்ந்துமேலாமிருவர்தங்களையுமங்கண்
முதிர்தருகாதலோடுமுறைமுறைதழுவிவானோர்
பதிமுதலோரைநோக்கிப்பரிவுசெய்தினையர்தம்மைக்
கதுமெனக்கொண்டுவேள்விக்கடிமனையிருக்கைபுக்கான்.

(இ-ள்.) எதிர்கொண்டு மகிழ்ந்து மேலான அரிபிரமர்களான விருவர்களையும் முதிர்ந்த காதலுடன் முறைமுறையாக ஆலிங்கனஞ் செய்து இந்திரன்முதலியோரைப்பார்த்து விருப்பங்காட்டி இவர்களை விரைவாக வழைத்துக்கொண்டு யாகசாலையிலுள்ள காவலினையுடைய தனதிருப்பிடத்தினை அடைந்தனன் தக்கனென்பவன்.—எ-று (சரு)

மாலயன்றன்னைமுன்னர்மணித்தவிசிருத்திவான
மேலுறைமகவானாதிவிண்ணவர்முனிவர்யார்க்கு
மேலுறுதவிசுநல்கியிடைப்படவிருந்தான்றக்கன்
காலுறுகடலாமென்னக்கடவுண்மாமறைகளார்ப்ப.

(இ-ள்.) அரியினையும் அயனையும் முன்னர் அழகிய பீடங்களிலிருத்தி வானத்தில் வசிக்கும் மகேந்திரன் முதலிய தேவர் முனிவர் முதலிய அனைவருக்கும் தகுதியான ஆசனங்களளித்துக் காற்றான்மோதப்பெற்ற கடலைப்போல தெய்வீகம்பொருந்திய சிறந்த வேதங்கள் முழங்கத் தக்கன் அவர்கள் நடுவிலிருந்தான்.—எ-று. (சசு)

அல்லியங்கமலமாதுமம்புவிமகளும்வேதாப்
புல்லியதெரிவைமாரும்பொருவிலாவுடுவினேருஞ்
சொல்லருஞ்சசியுமேனைச்சூரினர்பிறரும்வேத
வல்லிதனிருக்கைநண்ணிமரபின்வீற்றிருந்தார்மன்னே.

(இ-ள்) அகவிதழ்களையுடைய தாமரை மலரை இடமாகவுடையதிருமகளும் பூமிதேவியும் பிரமனாலணையப்பட்ட மாதர்களும் ஒப்பற்ற அசுவனியாதி நட்சத்திரங்களும் அரியபுகழினையுடைய இந்திராணியும் மற்றுமுள்ளதேவமாதரும் தக்கன்மனைவியான வேதவல்லியின் இருக்கையை யடைந்து முறையாக வீற்றிருந்தார்கள்.—எ-று.

மாமலர்க்கடவுண்மைந்தன்மகத்தினைநாடியாருங்
காமுறுமுண்டிமாந்திக்கதுமெனமீடுமென்றே
பூமிசைமறையோர்தாமுமுனிவரும்போந்துவிண்ணோர்
தாமுறுமவையைநண்ணித்தகவினாற்சார்தலோடும்.

(இ-ள்.) சிறந்த கமலாசனனான பிரமன் புதல்வனான தக்கனுடைய யாகத்தைப்பார்த்து அனைவரானும் விரும்பப்படும் உணவருந்தி விரைந்து திரும்புவோமென ப்பூவுலகில் வாழும் மறையவர்களும் முனிவர்களுஞ்சென்று தேவரிருக்கும் சபையை யடைந்து முறைப்படி இருத்தலும்.—எ-று. (௬௮)

அழைத்திடப்போனதூதரனைவரும்போந்துதக்கன்
கழற்றுணைவணங்கிநிற்பக்கருணைசெய்தவரைநோக்கி
விழுத்தகுதவத்தீர்நீவிர்விளித்தனர்தமிலுறுது
பிழைத்தனருளரோவுண்டேன்மொழிமெனப்பேசலுற்றார்.

(இ-ள்.) அழைக்கச்சென்ற தூதரனைவரும் மீட்டெய்தித் தக்கனுடைய உபய பாதங்களை வணங்கி நிற்பக் கருணைசெய்து அத்தூதுவர்களைப்பார்த்துப் புகழத்தக்க தவத்தினையுடையீர் உங்களாலழைக்கப்பட்டவருள் இங்கு வராது தவறினாருளரோ உண்டானால் உரையுங்களென்றுகூற உரைப்பாராயினார்.—எ-று. (௬௯)

அகத்தியன்சனகன்முன்னோரத்திரிவசிட்டனென்பான்
சகத்துயர்பிருகுமேலாந்ததீசிவெஞ்சாபத்தீயோன்
பகைத்திடுபுலத்தைவென்றபராசரனினையபாலார்
மகத்தினையிகழாவீண்டுவருகிலர்போலுமென்றார்.

(இ-ள்.) அகத்தியன் சனகனாதியர் அத்திரி வசிட்டனென்பான் உலகிலுயர்ந்த பிருகு மேலோனான ததீசி வெவ்விய சாபாக்கினியையுடைய துருவாசன் பகைக்கின்ற ஐம்புலன்களைவென்ற பராசரன் ஆதிய இத்தன்மையர் நீ செய்யும் யாகத்தினை இகழ்ந்து இங்கேவரமாட்டார்கள் என்று நினைக்கின்றேம் என்று கூறினார்கள்.(எ-று.)

மற்றதுபுகலலோடுமலரயன்புதல்வன்கேளா
விற்றிதுசெய்தார்யாரேமுனிவரிலிவையர்தாமோ
நெற்றியங்கண்ணினார்க்குநேயமதுடையரென்னாச்
செற்றமொடுயிர்த்துநக்கான்றேவர்கள்யாருமுட்க.

(இ-ள்.) தூதுவரிதனையுரைத்தவுடனே அதனை மலரயன் மகனான தக்கன் கேட்டு இதனைச்செய்தவர்கள் யாவர்? முனிவர்களுள் இவர்கள்தாமோ நெற்றியங்கண்ணினார்க்கு அன்புடையவர்கள் என்று கோபத்துடன் ஊர்த்துவசுவாசம்விடுத்துத் தேவரனைவரும் நடுங்குமாறு சிரித்தனன்.—எ-று. (௭௧)

சாலைசெய்படலம் முற்றிற்று

ஆ திருவிருத்தம் ௬௫௭.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ததீசிப் படலம்.

அன்னவேலையிலாரிடர் தம்மோடுந்
துன்னினுனொருதொல்லிறைக்காகவே
முன்னமாமைமர்மூண்டெழமற்றவன்
றன்னைவென்றததீசியென்பானரோ.

(இ-ள்.) அப்பொழுது பண்டுக்ஷுபன் என்னு மோரரசனுக்காக மாயோன் எதிர்த்துப் போர்செய்யவம்மாலைவென்ற ததீசிமுனிவரென்பவர் முனிவர்கூட்டத்துடன் சென்றனர்.—எ-று.

மாலுந்ததீசி முனிவனும் போர்புரிந்த சரித மிந்நூலின் முன்னர்க்காண்க. (க)

கடிதுபோந்துகடிமகச்சாலையி
னிடையதாகியிமையவர்யாவரு
மடையுமெல்லைபணுகலுங்கண்ணுறீஇக்
கொடியதக்கன்குறித்துணர்கின்றனன்.

(இ-ள்.) விரைந்துசென்று மங்கலகரமான யாகசாலையினுள்ளிடத்தை யடைந்து தேவரனைவருந் தங்கியிருக்கும் இடத்தினை அடைதலும் அவரது வருகையைப் பார்த்துக் கொடிய தக்கன் தன்னுள் இவ்வாறெண்ணி யறிகின்றனன். (உ)

ஆருமாருமரற்குரித்தல்லனிப்
பாகமாமகம்பார்க்கும்பொருட்டினு
லேகினுனெனக்கஞ்சியெனுநினைந்
தோகையெய்தியுளங்குளிர்ப்பாகியே.

(இ-ள்.) சரி சரி இவன் அரனுக்குரியனல்லன் இங்கு நிகழுகின்றயாகத்தினைப்பார்க்கும்பொருட்டினுல் எனக்குப்பயந்து வந்தனன் என்று நினைந்து சந்தோஷமடைந்து உள்ளங்குளிர்ப்புற்று.—எ-று. (ங)

வருகவீண்டெனமற்றவன்றன்னிடை
யொருபெருந்தவிசுய்த்தலுமாதவ
ரிருமருங்குமிருந்திடவாயிடைப்
பொருவின்மாதவப்புங்கவன்மேவியே.

(இ-ள்.) இங்கு வருகவென்று ததீசிமுனிவர் நிற்கும் இடத்துக்கு ஒருபெரிய பீடத்தினை அனுப்புதலும் இருபுறங்களிலும் சிறந்த முனிவர்கள் இருக்க அந்தப்பீடத்தில் ஒப்பற்ற தவத்தினையுடைய ததீசிமுனிவர் இருந்து.—எ-று. (ச)

ஆக்கந்தீருமயன்புதல்வன்றனை
நோக்கியெம்மைநொடித்ததென்னீயிவ
ணாக்கியுற்றதென்னெல்லையில்யாவையு
நீக்கிமின்றிநிகழ்த்துதியென்னவே.

(இ-ள்.) செல்வத்தினை இழக்க நின்ற தக்கனைப்பார்த்து, எம்மை அழைத்ததெதற்காக இவ்விடத்தில் எதனை இயற்ற முயற்சித்திருக்கின்றனை விரைவாக அனைத்தினையும் விடாமாலுரைத்தி என்று கூறுதலும்.—எ-று. (ரு)

தக்கனுண்டுத்ததீசியைநோக்கியே
நக்கனென்பவனுன்பெறுங்கன்னியை
மிக்ககாதலின்வேட்டொளித்தோர்பக
லுக்கமேலுய்த்துயர்வரையேகினுன்.

(இ-ள்.) அவ்விடத்திற் தக்கன் ததீசிமுனிவரைப்பார்த்து நக்கனென்பான் நான் பெற்றமகளை ஒரு தினம் விருப்பத்துடன் மணந்து மறைந்து இடபத்தின் மீது வைத்து உயர்ந்த கைலைமலையை யடைந்தான்.-எ—று. (சு)

பே!யபின்னைப்புதல்விக்குத்தன்பெரு
மாயைசெய்தனன்மற்றவர்த்தங்களை
யாயுமாறவ்வகன்கிரியெய்தினே
னேயதன்மையிருவருந்தேர்ந்தரோ.

(இ-ள்.) அவ்வண்ணஞ்சென்ற பின்னர் என்மகட்குத் தனது பெரிய மாயைச் செய்தனன் இது நிற்க, அவ்விருவரையும் தேடிக்காணும் வண்ணம் அப்பெரிய மலையை யடைந்தேன் நான் வந்ததன்மையை அவ்விருவருமறிந்து.—எ-று. (எ)

அடுத்தபூதரையாங்கவர்கூவியே
தடுத்திடுங்களத்தக்கனைநம்முனம்
விடுத்திரல்லீர்விலக்குதிராலென
வெடுத்தியம்பினரேயினர்போலுமால்.

(இ-ள்.) தம்மை யடுத்து நிற்கும் பூதர்களை யவர்கள் விளித்து அத்தக்கனைத் தடுத்திடுங்கள் நம்மெதிரேவிடாதீர், இங்குவருதலை விலக்குங்கள் என்று எடுத்துக்கூறினராயிருக்கலாம்.—எ-று. (அ)

இற்றுணர்ந்திலனேகினன்பூதர்க
ணிற்றிநீயென்றுநிந்தனையெண்ணில
சொற்றலோடுந்துணையதில்வெள்ளியம்
பொற்றைநீங்கிப்புரம்புகுந்தேனியான்.

(இ-ள்.) இதனை யறியாது யான் சென்றேன் பூதர்கள் நிற்பாயாகவென அளவற்ற நிந்தைமொழிகளை யுரைத்தலும் யான் ஒப்பற்ற வெள்ளிமலையை விடுத்து என் நகரினை யடைந்தேன்.—எ-று. (கூ)

தங்கண்மாநகர்சார்ந்தனனீங்குழி
யெங்கண்மாதுமெனைவந்துகண்டிலண்
மங்கையென்செய்வண்மற்றவன்மாயையாற்
றுங்கமேன்மைதுறந்தனள்போயினுள்.

(இ-ள்.) யானவர்களின் சிறந்த நகரத்துக்குச்சென்று திரும்பிவந்தும் எங்கள் மகள் எனை வந்து கண்டாளில்லை என் மகளென்செய்வாள் அச்சிவனுடைய மாயையாற் றூய்மையான மேன்மையை விடுத்துச்சென்றுள். (கO)

அந்தவேலையரும்பெரும்வேள்வியொன்
றெந்தைசெய்துழியான்சென்றரற்குமுன்
றந்தபாகந்தடுத்தனனவ்வழி
நந்திசாபநவின்றனன்போயினுன்.

(இ-ள்.) அப்பொழுதரிய பெரிய யாகமொன்றினை என் தந்தை செய்த இடத்து யான்சென்று அரனுக்கு முன்னர்க்கொடுத்துவந்த அவியைத்தடுத்தனன் அவ்விடத்து வந்திருந்த நந்தி சாபமிட்டுச்சென்றனன்.—எ-று. (கக)

வேறு.

எறும்படுதண்ணுமையியம்புகையுடைச்
சிறுதொழிலவன்மொழிதீச்சொற்கஞ்சியே
முறைபடுவேள்வியைமுற்றச்செய்திலன்
குறையிடைநிறுவினன்குரவனுகியோன்.

(இ-ள்.) வன்மை பொருந்திய மத்தளம் அடிக்குங் கையினையுடைய சிறு தொழிலாளனான அந்நந்தி கூறிய சாபமொழிக்குப் பயந்து எனது தந்தையான பிரமதேவன் முறையே செய்த யாகத்தினை முற்ற முடிக்காமற் குறைவாக நிறுத்தினன் ()

நஞ்சமர்களனருணந்திகூறிய
வெஞ்சொலுமென்பெருவிரதமுந்தெரீஇ
யஞ்சினரின்றுகாருரும்வேள்வியை
நெஞ்சினுமுன்னலர்நிகழ்த்தும்வேட்கையால்.

(இ-ள்.) விடம்பொருந்திய கழுத்தினையுடைய சிவனனுப்பிய நந்தி சொன்ன சாபமும் என்னுடைய பெரிய விரதத்தினையுமுணர்ந்து எவரும் யாகஞ்செய்ய அஞ்சினர் செய்யவேண்டுமென்னும் விருப்பததுடன் மனதினு நினைத்தாரில்லை.—எ-று. (கங)

ஆனதொர்செயலுணர்ந்தையமேற்றிடும்
வானவன்றனக்கவிமாற்றும்பான்மையா
னொருவேள்வியைநடாத்துகின்றன
னேனையதோர்பயன்யாதும்வேண்டலன்.

(இ-ள்) அத்தகைய செய்கையை யறிந்து யான் பிச்சையெடுக்கின்ற தேவனான சிவனுடைய அவிர்ப்பாகத்தினைத் தடுக்கும்வண்ணம் ஒரு யாகத்தினை நடத்துகின்றேன் வேறே ஒரு பிரயோசனத்தினையும் விரும்பினே னல்லேன்.—எ-று. ()

அப்பெருமகந்தனக்கமரர்மாதவ
ரெப்பரிசனரும்வந்தீண்டுதொக்கன
ரொப்பருந்தவத்தினீருமக்குமித்திறஞ்
செப்பினன்விடுத்தனன்செயலிதென்னவே

(இ-ள்.) அந்தப்பெரிய யாகத்திற்குத் தேவர்களும் சிறந்த தவமுடையமுனிவர்களும் அனைத்துப் பரிசனரும் வந்திங்கு நெருங்கினார்கள் ஒப்பற்ற தவத்தினையுடையீர் உமக்கு மிது சங்கதியை யுரைத்தனுப்பினேன் இது நடந்த வரலாறு என்று தக்கன் கூறுதலும்.—எ-று. (கரு)

வேறு.

தண்ணளிபுரிததீசிதக்கனதுரையைக்கேளாப்
புண்ணியம்பயனின்றம்மாபொருளினிற்பவமேயென்று
வெண்ணினன்வினைகளீட்டுமிழிதகனியற்கைபோலா
மண்ணறன்செயலுமென்னுவணியெயிறிலங்கநக்கான்.

(இ-ள்.) கருணையினையுடைய ததீசிமுனிவர் தக்கன் உரைத்தவைகளைக் கேட்டுப் புண்ணியம் பயனற்றதே பொருளிலும் பாவமே யுண்டாகின்றதென்று நினைத்துப் பாவங்களையே செய்யும் இழிதகையோனது இயல்பினிற்பதுபோலும் பெருமையிற் சிறந்த இறைவனுடைய செயல்களும் என்று வரிசையாக விளங்கும் பற்கள் தெரியும் வண்ணம் சிரித்தனர். —எ—று. (கசு)

நக்கதோர்வேலைதன்னிலைத்தகுமூழிக்கான்மேன்
மிக்கெழும்வடவையென்னவெய்துயிர்த்துரப்பிச்சீறி
முக்கணனடியான்போலுமுறுவலித்திகழ்ந்தாயென்னத்
தக்கனீதுரைத்தலோடுந்ததீசிமாமுனிவன்சொல்வான்.

(இ-ள்.) அவமதிப்பாகச் சிரித்தவுடனே நல்ல ஊழிக்காற்றின்மீது மிகுந்தெழுகின்ற வடவாக்கினியைப்போல ஊர்த்துவசுவாசம் விடுத்து அதட்டிக்கோபித்து நீ முக்கண்ணன் அடியவன்போலும் என் சொற்களைக்கேட்டுச் சிரித்திகழ்ந்தனை யென்று தக்கனிதனையுரைத்தவுடனே அதற்குப்பதிலாகச் சிறந்த ததீசிமுனிவரிவ்வாறு உரைப்பாராயினர்.—எ று. (கஎ)

மலரயன்முதலையாகவரம்பிலாவுயிரைமுன்னந்
தலையளித்துதவுகின்றதாதையாயளித்துமாற்றி
யுலகெலாமாகியொன்றாயுயிர்க்குயிராகிமேலா
யிலகியபரனைநீத்தோயாகமொன்றியற்றநின்றாய்.

(இ-ள்.) தாமரை மலரிலிருக்கும் பிரமனை முதலாகவுள்ள அளவற்றஉயிர்களை முன்னாளிற் கருணையுடன் பெறுகின்ற தந்தையாய்க் காத்தழித்து உலகனைத்துமாகி ஏகமாய் உயிருக்குயிராய்அனைத்திற்கும் மேலாகவிளங்கும் சிவபெருமானைத்தள்ளியோ நீ யொரு யாகஞ்செய்ய நின்றனை.—எ-று. (கஅ)

புங்கவரெவர்க்குநல்கும்புவிபுகழவிகொள்வானு
மங்கியின்முதலும்வேள்விக்கதிபனுமளிக்கின்றானுஞ்
சங்கரன்றனேவேதஞ்சாற்றுமான்மகத்துக்காதி
யிங்கொருதேவுண்டென்னிலெழுகெனவுரைத்திமாதோ.

(இ-ள்.) தேவரனைவருக்குங் கொடுக்கின்ற உலகம் புகழும் அவியைக்கொள்பவனும் அக்கினியின் முதலாயுள்ளவனும் எக்கிய கருத்தாவும் இரட்சிப்பவனும் சங்கரனே என்று வேதங்கூறுகிற்கும் எச்சகருத்தாவாகஇங்கேஒரு தேவனிருந்தால்எழுக என்று கூறுக.—எ-று. (கசு)

மாலயன்முதலோர்யாரும்வரம்பிலித்திருவையெய்த
மேலைநாளளித்தோன்றானும்விமலனுமினையர்க்கெல்லா
மூலமுந்தனக்குவேறோர்முதலிலாதவனுமெங்க
ளாலமர்கடவுளன்றியமரரில்யாவரம்மா.

(இ-ள்.) மால் அயன் முதலிய அனைவரும் வரம்பற்ற இச்செல்வங்களை அடைதற்கு முன்னாளிற் கொடுத்தவனும் மலமில்லாவனும் கல்லானிழலிலெழுந்தருளி இருக்கும் எங்கள் கடவுளையன்றி தேவரிலெவருளர்,—எ-று. (உ0)

தேவதேவன்மாதேவன்சிறப்புடையீசனெங்கோன்
மூவரின்முதல்வனேகன்முடிவிற்குமுடிவாய்நின்றோ
னுவியுளாவியானோனந்தணனாதியென்றே
யேவரையிசைத்தவம்மாவெல்லையின்மறைகளெல்லாம்.

(இ-ள்.) தேவதேவனும் மகாதேவனும் சிறப்புடைய ஈசனும் எங்கோனும் மூவருண் முதல்வனும் ஏகனும்முடிவிற்கு முடிவாயுள்ளவனும் உயிருக்குயிரானவனும் அந்தணனும் ஆதியும் என்று அளவற்ற வேதங்களனைத்தும் எவரை உரைத்தன. ()

விதிமுதலாகியுள்ளோர்வியனுயிர்த்தொகையாமீசன்
பதியவன்பணியதன்றேபரித்தனரினையரெல்லா
மிதுவுமச்சுருதிவாய்மையிவையெலாமயர்த்துவாளா
மதிமயங்கினையாற்பேராமாயையூடழுந்துகின்றாய்.

(இ-ள்) பிரமன் முதலாகவுள்ளவர்கள் பெரிய உயிர்க்கூட்டத்தினராம் சிவபெருமான் பதியாயுள்ளவர் பதியாகிய அவனது கட்டளையயன்றே இவரனைவருந் தாங்கி நிற்கின்றனர் இதுவும் அவ்வேதத்திற்கூறும் உண்மையே இவைகளை யெல்லா மறந்து நீங்காதமாயையிலிழுந்திப் போய்ச் சும்மாயதிமயங்கினை.—எ-று. (உஉ)

அந்தணர்க்காதியீசனேனையோர்க்கரியேவேதா
விந்திரனென்றுவேதமியம்பியமறையோர்தங்கண்
முந்தையின்முதலைநீத்துமுறையகன்றொழுகல்பெற்ற
தந்தையைவிலக்கிவேறுதேடுவான்றன்மையன்றே.

(இ-ள்.) அந்தணருக்கு முதலாயுள்ளவர் சிவபெருமான் பிறருக்கு அரியயன் இந்திரனென்று வேதங்களுரைத்தன பிராமணர்கள் தமது முழுமுதலைவிடுத்துமுறை மாறிநடத்தல் பெற்றதந்தையை விலக்கி வேறொருவனைத்தந்தையாகத் தேடுவானது தன்மையேயாம்.—எ-று. (உங)

ஆதலினெவர்க்குமேலாமாதியையிகழாநிற்றல்
பேதைமையன்றியீதோர்பெருமிதமன்றாலாற்ற
நோதகவுன்னியாரேநாற்பவரனையைநீயே
வேதமதொழுக்கநீத்திவ்வேள்வியைப்புரியநின்றாய்.

(இ-ள்.) அதனால் அனைவருக்குமேலான ஆதியான சிவபெருமானை இகழுதல் அறிவின்மையேயன்றி இதொரு பெருமிதமன்று மிகவும் வருத்தமுண்டாமாறு கருதி எவரே தவஞ்செய்வோர் அத்தகையோன் நீயே அதனால் வேத ஒழுக்கத்தினைவிடுத்துயாகஞ் செய்யநின்றனை.—எ-று. (உச)

விலக்கினைமறையின்வாய்மைவேள்விசெய்யினுமுற்றாது
கலக்குமேலமலனாணைகாண்டியாலவனுக்கஞ்சா
வலத்தினர்யாவருண்டேன்மாய்வரேமறையுமெம்முன்
னிலைப்பொலிசூலமேந்துமேகனென்றேத்திற்றன்றே.

(இ-ள்.) வேதங்கூறு முன்மையை விடுத்து நீ யாகஞ்செய்யினுமது நிறைவேறாது அங்ஙனமன்றி நீ வேதவிரோதமாகக் கலந்து நடப்பாயானால் அப்பொழுதிறைவனுடைய தண்டசத்தியான ஆணையைக்காண்பாய் அச்சிவபெருமானுக் கஞ்சாவன்மையாளர்யாவர் அங்ஙனமெவரேனு முளரேல் இறந்துபடுவர் வேதமுமெமதெதிரில் இலைபோலவிளங்குஞ் சூலமேந்திய ஏகனேமுதல்வனென்று கூறித்துதித்தது.—எ-று.

ஆதியுமுடிவுமில்லாவமலனுக்கவியைநல்கி
வேதகமுறைவழாதுவேள்வியோம்புவதுநாடாய்
தீதுநின்னெண்ணமென்னச்சிவன்றனக்கருள்பாகத்தை
மாதவன்றனக்குநல்கிமாமகம்புரிவனென்றான்.

(இ-ள்.) ஆதியந்தமற்ற சிவபெருமானுக் கவியையளித்து வேதங்கூறுமுறையிற்றவறாது யாகஞ்செய்தலைக் கருதுகின்றிலை உனதெண்ணங்குற்றமானதென்றுகூறுதலுக்தக்கன் சிவனுக்களிக்கும்பாகத்தை மாதவனுச்குக்கொடுத்துச் சிறந்தயாகத்தைச் செய்வேனென்று கூறினன்.—எ-று. (உசு)

அவ்வுரைகொடியோன் கூறவருந்தவமுனிவன்கேளா
வெவவமீதுரைத்தாய்மேலாயாவரும்புகழநின்ற
செவ்வியர்தமையிழித்துச்சிறியரையுயர்ச்சிசெய்த
துய்வகையன்றுனும்மோருயிர்க்கெலாமுடிவீதென்றான்.

(இ-ள்.) அவ்வசனத்தினைக் கொடியவனான தக்கன் உரைக்க அதனை அரிய தவத்தினையுடைய முனிவன் கேட்டுக்குற்றமான இம்மொழியை உரைத்தனைமேலாய் அனைவரும் புகழநின்ற செவ்வியரை யிழித்துச் சிறியரையுயர்ச்சி செய்தல் உய்யுந்திற மன்று உங்களனைவருயிருக்கு மீதுமுடிவான காலம் என்றுகூறினான்.—எ-று. (உஎ)

ஊறுசேர் தக்கன் சொல்வானுனதுருத்திரனையொப்பா
ராறின்மேலேந்தவானவுருத்திரரமர்வாராசை
யீறுசேர்தருமீசானரிருந்தனரவர்க்கேமுன்னர்
வீறுசேரவியைநல்கிவேள்வியைமுடிப்பனென்றான்.

(இ-ள்.) குற்றம் பொருந்திய குணத்தினையுடைய தக்கனென்பான் இவ்வா றுகூறுகின்றான் உனது உருத்திரனை யொத்தவர்கள் ஏகாதசருத்திர ரிருக்கின்றார்கள் இவர்களையன்றியும் திக்கின்முடிவுகளில் ஈசானர்கள் இருக்கின்றார்கள் அவர்கட்கே முன்னர் உயர்ச்சிபொருந்திய அவியைக்கொடுத்து யாகத்தினை முடிப்பேனென்று கூறினான்.—வ-று. (உஅ)

என்னலுமுனிவன்சொல்வானீறுசெய்தகிலமெல்லாந்
தன்னிடையொடுக்கிமீட்டுந்தாதையாய்நல்கியாரு
முன்னருந்திறத்தில்வைகுமுருத்திரமூர்த்திக்கொப்போ
வன்னவன்வடிவும்பேருமவனருளதனாற்பெற்றோர்.

(இ-ள்.) என்று கூறியவுடனே ததீசிமுனிவர் கூறுகின்றார் உலகமுழுமையும் அழித்துத் தன்னிடத்திலொடுக்கிப்பின்னரும் தாதையாகவிருந்து படைத்து எவரானு நினைத்தற்கரிய தன்மையிலெழுந்தருளி இருக்கும் உருத்திர மூர்த்திக்கொப்பவர்க ளோ அவன் வடிவும் பேரும் அவனருளதனாற் பெற்றவர்கள்.—எ-று. (உகூ)

உருத்திரமூர்த்தியென்போனுயர்பரம்பொருளாயுள்ளே
நிருத்தமதியற்றுகின்றநித்தனுமவன்றன்பொற்றாள்
கருத்திடைநினைந்தோரன்னான்காயமுந்திருப்பேர்தானும்
பரிப்பராலனையரெல்லைபகர்ந்திடினுலப்பின்றாமால்.

(இ-ள். உருத்திரமூர்த்தி யென்போன் உயர்ந்த பரம்பொருளாய் உள்ளில் நிருத்தஞ்செய்கின்ற பரம்பொருளாக உள்ளநித்தனேயாவன் அவனுடைய பொன்ன டிகளைக் கருத்தினில் நினைந்தவர்கள் அவ்வுருத்திர மூர்த்தியின் உருவமும் திருப்பெய ரும் தாங்கிநிற்பர் அங்ஙனமானவர்களின் றேகையை உரைப்பதென்றால் முடிவே இன்றாம்,—எ-று. (௩0)

ஆதிதன்னாமம்பெற்றோரவனியலடையார்கொண்ட
வேதமில்வடிவுமற்றேயென்னினுமிறைவரென்றே
பூதலமுழுதும்விண்ணும்போற்றிடவிருப்பரிந்த
வேதனும்புகழுநீரான்மெய்நெறித்தலைமைசார்வார்.

(இ-ள்.) ஆதியான சிவபெருமானுடைய உருத்திர நாமத்தைப் பெற்றவர்கள் அவன் தன்மையை அடையமாட்டார்கள் அவர்கள் கொண்ட குற்றமற்ற வடிவமும் அவன் வடிவம் போன்றதன்றாதாயினும் இறைவரென்றே பூமிமுழுமையும் விண்

ணுலகமும் போற்றுமாறு இருப்பர் இப்பிரமனும்புகழுந்தன்மையான உண்மை மார்க்கத்தின் முதன்மையுறுவர்.—எ-று. (௩௧)

ஈசனையளப்பில்காலமிதயமேலுன்னிநோற்றே
யாசகனுருவம்பெற்றவன்பினர்போல்வரின்னோர்
வாசவன்முதலோர்போலவரத்தகாரெந்தைபானீ
நேசமில்லாததன்மைநினைந்திலர்போலுமென்றான்.

(இ-ள்) சிவபெருமானை அளவற்ற காலம் இதயத்தினிடத்து நினைத்துத்தவஞ் செய்து குற்றமற்ற சாரூபம்பெற்ற அன்பினரை யொப்பரிவ்வேகாத சவீசாதியர் இவர்கள் இந்திராதியரையொப்ப இங்குவரத்தகுந்தவர்களல்லர் எம்பெருமானிடத்து நீ அன்பற்றவனாக விருக்குந்தன்மையை நினைந்திலராயிருக்கலாம் என்று கூறினர். ()

வேறு.

என்றகாலையிருந்ததக்கன்னிது
நன்றுநாரணனுன்முகனிற்கவீ
றென்றுசெய்யுமுருத்திரனாதியாய்
நின்றதென்கொனிகழ்த்துதியென்னவே.

(இ-ள்.) ததீசிமுனிவனவ்வாறு கூறியவுடனே அவனெதிரிலிருந்ததக்கன் இது நன்று நாராயணனும் நான்முகனுமிருக்க அழித்தலொன்றைச் செய்யும்உருத்திரன் முதலாக நின்றதெங்ஙன் உரைத்தியென்றனன் உடனே ததீசி முனிவன்.—எ-று.

விதிசிரங்கள்வியன்முடிவேய்ந்திடும்
பதிசிவன்றன்பதத்துணையுட்கொடு
மதிசிறந்திடவாலிதின்வைகிய
ததிசியென்னுந்தவமுனிசாற்றுவான்.

(இ-ள்.) படைப்புத்தொழிலினரான பிரமர்களின் தலைகளைச்சிறந்த தலைமாலை யாகவணியும் பதியான சிவபெருமானுடைய திருவடியுகளங்களை உள்ளத்திற் கொண்டு புத்திவிளங்காநிற்கத் தூய்மையான வியல்புடன் இருந்தததிசியென்னுந் தவமுனிவன் கூறுகின்றனன்.—எ-று. (௩௪)

இருவர்தம்மொடுமெண்ணியதன்மையா
லொருவனானவுருத்திரமூர்த்தியைப்
பெரியனென்றுபிடித்திலையன்னதுந்
தெரியவோதுவன்றேர்ந்தனைகேட்டியால்.

(இ-ள் அரிபிரமர்களென்னும் இருவர்களுடன் சேர்த்தெண்ணப்பட்ட தன்மையால் அவர்களிலொருவனான உருத்திரமூர்த்தியைப் பெரியனென்று கருதினையில்லை அவன் பெரியனென்பது நீயறியஉரைக்கின்றேன்றேர்ச்சியாகக் கேட்பாயாக.---எ-று

ஆதியந்தமிலாதவெம்மண்ணலுக்
கோதுபேருமுருவுமொர்செய்கையும்
யாதுமில்லையிவ்வாற்றினையெண்ணிலா
வேதம்யாவும்விளம்புந்துணிபினால்.

(இ-ள்.) ஆதியுமந்தமுமில்லாத எமது சுவாமிக்குரைக்கும் பெயரும் உருவும் ஒரு செயலும் எதுவுமில்லை இம்முறையை அளவற்ற வேதங்களனைத்தும் துணிபுடனுரையாநிற்கும்.—எ-று. (௩௬)

அன்னதோர்பரத்தண்ணறனுணையான்
முன்னையாரிருண்மூடத்துண்மூழ்கிய
மன்னுயிர்த்தொகைவல்வினைநீக்குவா
னுன்னியேதன்னுளத்தருள்செய்துமேல்.

(இ-ள்.) அத்தகைய உருவுங்குணமுஞ் செயலுமற்ற சிவபெருமான் தனது அருட்சத்தியால் முன்னர் அரிய விருளான மூடத்திலமுந்திக்கிடந்த நிலைபெற்றவுயிர்த்தொகையின் வலியவினையை நீக்குதற்கு நினைத்து தனதுள்ளத்திலருள்புரிந்து பின்னர்—எ-று. (௩௭)

உருவுஞ்செய்கையுமோங்கியபேருமுன்
னருணினுற்கொண்டனைத்தையுமுன்புபோற்
றெரியநல்கித்திசைமுகனாதியாஞ்
சுரர்கள்யாரையுந்தொன்முறையீந்துபின்.

(இ-ள்.) உருவமுஞ்செயலு முயர்ந்தபெயரும் பழயவருளினாற்றாங்கி அனைத்தினையுமுன்னரிற்போல விளங்குமாறுண்டாக்கித் திசைமுகன்முதலான தேவர்யாரையும் முன்போலப் படைத்துப் பின்னர்,—எ-று. (௩௮)

ஏற்றதொல்பணியாவுமிசைத்தவை
போற்றுசெய்கைபுரிந்துபின்யாவையு
மாற்றுகின்றதுமற்றெமக்காமெனச்
சாற்றினனத்தகைமையுங்கேட்டிநீ.

(இ-ள்) பொருத்தமான அவர்களின் பழயதொழிலனைத்தையும் அவர்களிடம் அமைத்து அவைகளைக்காக்குஞ் செயலையருள்செய்து பின்னர் அனைத்தையுமளிக்குந்தொழில் உமக்காமென்று உரைத்தனன் அந்தத்தகைமையு நீ கேட்பாயாக. (௩௯)

வேறு.

அந்தமாதியின்றாகியேயுயிரெலாமளிக்குந்
தந்தையாகியதனக்கன்றிமுழுதடுந்தகைமை
மைந்தராகியவமரரான்முடிவுறாமையினு
லெந்தைதன்வயிற்கொண்டனனீறுசெய்யியற்கை.

(இ-ள்.) முடிவுமுதலுமின்றி உயிரனைத்தையுமளிக்கின்ற தந்தையாகியதனக்கன்றி அனைத்தினையும் அழிக்குந்தன்மை அவன் மக்களான பிறதேவரான் முற்றுப்பெறாமையினாற் சங்காரத்தொழிலை என்னப்பன் தன்னிடத்து வைத்துக்கொண்டனன்.—எ-று. (௪0)

அன்றுதேவர்கள்யாவருமெம்பிரானடியிற்
சென்றுதாழ்ந்தெமக்கிப்பணிபுரிந்தனைசிறியே
மென்றுதீருதுமிப்பரமென்றனுமெங்கோ
னென்றுகூறுதுங்கேண்மினோநீவிரென்றுரைத்தான்.

(இ-ள்.) முன்னாளிற் படைப்பாதிய பரித்ததேவரனைவரு மெம்பெருமானடியிற்சென்று வணங்கி எங்களுக்கு இத்தொழில்களை யளித்தனை சிறியேங்கள் இந்தச்சுமையினின்று மென்றொழிவேம் என்று கேட்டலும் எமது தலைவனவர்களைப்பார்த்து ஒன்றுரைக்கின்றேன் நீங்கள் கேளுங்களென்று கூறினன்.—எ-று. (௪௧)

ஆயுண்மற்றுமக்கெத்துணையத்துணையளவு
நீயிரிச்செயல்புரிமின்கள்பரமெனநினைத்தீர்
தூயவித்தையானீறுளதாக்கியேதொழுது
காயமேற்புனைந்தஞ்செழுத்துன்னுதிர்கருத்தின்.

(இ-ள்.) உங்களுக்காயு ளெவ்வளவுகாலம் அவ்வளவுகாலமும் நீங்களிந்தத் தொழில்களைச் செய்யுங்கள் இத்தொழில்களைச் சுமையெனக் கருதினவர்களே தூய்மையான மந்திரத்தால் விபூதியை உண்டாக்கி வணங்கி அதனை உடன்மீதணிந்துஉள்ளத்தில் பஞ்சாட்சரத்தினை நினையுங்கள்,— எ-று. (சஉ)

தன்மையிங்கிவைபுரிதிரேலித்தொழிறரிக்கும்
வன்மையெய்துவீரன்றிநங்கலைகளும்மருங்கும்
தொன்மையுள்ளனகாட்டிநின்றருளுமாற்றொலைவி
னன்மையெய்துவீரென்றருள்செய்தனனம்பன்.

(இ-ள்.) இத்தன்மையான காரியத்தைச்செய்வீராயின் இந்தத்தொழிலினைத் தாங்கிநடத்துகின்ற வன்மையை யடைவீர்கள் அன்றியுநமதுகலைகள் உம்மிடத்துப் பழயனவாக வுள்ளவைகளைக் காட்டிநின்றருள் புரியும் அழியாத நன்மையையடைவீர்கள் என்று சிவபெருமானவருக்கருள் செய்தனன்.—எ-று. (சங)

அன்னவர்க்கொடேயெவ்வகைச்செய்கையுமளித்துப்
பின்னையுள்ளதோர்செய்கையும்புரியுமெம்பெருமான்
முன்னைவேதங்களவன்றனையைந்தொழின்முதல்வ
னென்னுமற்றிதுதேருதிகேட்டியாலின்னும்.

(இ-ள்.) அத்தேவர்களைக்கொண்டே எவ்வகையான தொழில்களையும் நடத்திப்பின்னுள்ள சங்காரமானவொருதொழிலையும் எம்பெருமான் செய்வான் பழயவேதங்களவனை ஐந்தொழில் முதல்வனென்று கூறும் இதனை உணர்வாயாக இன்னங்கேட்பாயாக.—எ-று. (சச)

வேறு.

உருத்திரனென்னுநாமமொப்பிலாவரற்குமன்னோன்
றரத்தகுசிறார்களானோர்தங்கட்குமனையன்பாதங்
கருத்திடையுன்னிப்போற்றுங்கணங்கட்குமவன்றன்மேனி
பரித்திடுவோர்க்குஞ்செந்தீப்பண்ணவன்றனக்குமாமால்.

(இ-ள்) உருத்திரனென்னும்பெயர் ஒப்பற்ற சிவபெருமானுக்கும் அச்சிவபெருமானளித்த தகுந்த அவன் மைந்தர்க்கும் அச்சிவபெருமானுடைய திருவடிகளைக் கருத்திடை நினைத்துத் துதிக்குங் கணங்கட்கும் அவனது சாரூப முடையாருக்கும் செவ்விய அக்கினிதேவனுக்குமாகும்.—எ-று. (சரு)

இன்னலங்கடலுட்பட்டோர்யாரையுமெடுக்குநீரா
லுன்னரும்பரமமூர்த்தியுருத்திரனெனும்பேர்பெற்று
னன்னவன்றரவந்தோர்க்குமடியடைந்தோர்க்குமன்னோன்
றன்னுருவெய்தினோர்க்குஞ்சார்ந்ததாலவன்றனிப்பேர்.

(இ-ள்.) துன்பசமுத்திரத்துளழுந்தின ரெவரையும் அத்துன்பத்தினின்றும் எடுக்குந்தன்மையால் நினைத்தற்கரிய பரமமூர்த்தி உருத்திரனெனும் பெயரினைப் பெற்றனன் அவனலாக்கப்பட்டார்க்கும் அவனடியடைந்தோர்க்கும் அவனது சாரூபத்தையடைந்தாருக்கும் அவனது ஒப்பற்ற திருநாமம் சென்று பொருந்தியது.-எ-று

செந்தழலென்னநின்றதேவனுக்குருத்திரப்பேர்
வந்ததுபுகல்வன்கேட்டிவானவர்யாருமீண்டி
முந்தையிலவுணர்தம்மைமுனிந்திடமுயன்றுசெல்ல
வந்தமினிதியந்தன்னையவ்வழியொருங்குபெற்றார்.

(இ-ள்.) செவ்விய அக்கினிதேவனுக்கு உருத்திரநாமம் வந்த காரணமுரைக்கின்றேன் கேட்பாயாக தேவரனைவரு மொருங்குசேர்ந்து முன்னாளில் அசுரரோடு பகைத்துப் போர்முயற்சித்துச் செல்லாநிற்ப அளவற்ற பொன்னிதியை அவ்விடத்திலொன்றாகப் பெற்றனர்.—எ-று. (சஎ)

பெற்றிடுநிதியமெல்லாம்பீடிலாக்கனல்பால்வைத்துச்
செற்றலர்தம்மேற்சென்றுசெருச்செய்துமீண்டுதேவ
ருற்றுழியதுகொடாமலோடலுந்தொடர்ந்துசூழ
மற்றவன்கலுழ்தலாலேவந்ததுமறையுங்கூறும்.

(இ-ள்.) பெற்ற பொன்னனைத்தும் துன்பமற்ற அக்கினியினிடம் வைத்துப் பகைவர்மீது சென்றுபோர்புரிந்து திரும்பித்தேவர் வந்தவுடனே அப்பொன்னை அவர்களிடங்கொடாமலோடுதலும் அத்தேவரவனைவிடாது தொடர்ந்தோடிச் சூழ்ந்து கொள்ள அவ்வக்கினி அழுதமையால் உருத்திரனென்று பெயருண்டாகியது இதனை வேதமுங்கூறும்.—எ-று. (சஅ)

ஓதுமாமறைகடம்மினுருத்திரனெனும்பேர்நாட்டி
யேதிலார்தம்மைச்சொற்றதீசன்மேற்சாராவந்த
வாதிநாயகனைச்சுட்டியறைந்ததும்பிறர்மாட்டேறா
மேதைசாலுணர்வினான்றோர்விகற்பமீதுணர்வரன்றே.

(இ-ள்.) ஓதப்பெற்ற சிறந்த வேதத்துள் உருத்திரனெனும் பெயரைவைத்து அயலாரை உரைத்தது ஈசன்மீதுசாராது அந்த ஆதிநாயகனைச்சுட்டி யுரைத்ததும் அயலார்பாற்செல்லாது மேதையிருந்த உணர்வினையுடைய ஆன்றோர் இந்த விகற்பத்தினை அறிவார்கள்.—எ-று. (சகூ)

ஓங்கியசுருதிதன்னுளுருத்திரனெனுநாமத்தாற்
றீங்கனலோனையேனைத்திறத்தரையுரைத்தவாற்றை
யீங்கிவண்மொழியலெங்கோற்கியம்பியவிடங்கணாடி
யாங்கவன்றலைமைகாண்டியறைகுவனின்னுமொன்றே.

(இ-ள்.) உயர்ந்த வேதத்தினுள் உருத்திரனெனும் பெயரால் அக்கினிதேவனையும் பிறரையும் கூறியிருக்குந் தன்மையும் இங்கெடுத்துக்கூறாதே எம்பெருமானுக்குரைத்த இடங்களை ஆராய்ந்து அவனது தலைமையைக் காண்பாயாக இன்னமொன்றுரைக்கின்றேன் கேட்பாயாக.—எ-று. (டு0)

வேறு.

முந்தையோர்பகன்முனிவர்கள்யாவருமுதலோ
டந்தமில்லதோர்பரமிவரவரெனவறைந்து
தந்தமிற்சென்றுவாதுசெய்தறிவருந்தகவா
னொந்துமற்றவர்பிரமனைவினவுவானுவன்றார்.

(இ-ள்.) முன்னரொருதினம் முனிவரனைவரும் ஆதியந்தமற்ற பரம் இவரவரென்றுகூறி ஒருவரோடொருவர் வாதிட்டு இன்னவர் பரமென வறியக்கூடாத தன்மையால் வருந்தி அன்னோர் பிரமனைக்கேட்போமென்று கூறினார்கள். —எ-று.

மல்லன் மேருவின் முடிதனின் மனோவதிவைகு
மல்லிவான் கமலத்திடையண்ணலையணுகி
யெல்லைதீர்ந்திடுபரம்பொருளுணர்கிலேமிவரென்
றெல்லைதன்னினீயுரைத்தருள்செய்யென வுரைத்தார்.

(இ-ள்.) வளம்பொருந்திய மேரு சிகரத்தினுள்ள மனோவதி நகரில்வாழும் அகவிதழினையுடைய உயர்ந்த கமலாசனத்திலிருந்த பிரமனை அடைந்து அளவற்ற பரம்பொருளை அறிகிலேம் அப்பரம்பொருள் இவரென நீ விரைந்தருள் செய்யெனக் கேட்டனர்.—எ-று. (ருஉ)

உரைத்தவாசகங்கேட்டலுநான்முகத்தொருவன்
கருத்திலிங்கிவைதெளிதரமறைமொழிகாட்டி
விரித்துமென்னினுந்தெளிவுறர்மெய்மையால்விரைவிற்
றெரித்துமிங்கெனவுன்னினனவர்மயறீர்ப்பான்.

(இ-ள்.) முனிவர் கூறிய வசனத்தினைக்கேட்ட வுடனே நான்முகங்களையுடைய பிரமன் மனதிலிவை விளங்குமாறு வேதவசனங்களைக்காட்டி விரித்துரைத்தோமாயினும் உணரார். ஆதலின் வேறு விதத்தால் விரைவாக உணர்த்துதுமென்று அம்முனிவரின் மயக்கினை யொழிக்குமாறு நினைத்தனன்.—எ-று. (ருரு)

நாற்றலைச்சிறுமாமகன்றாதைதன்னலஞ்சேர்
தோற்றமுள்ளுறவுன்னியேவிழிபுனல்சொரிய
வேற்றெழுந்துமீக்கரமெடாவுருத்திரனென்றே
சாற்றிமும்முறைநின்றனன்றெளிதருந்தகவால்.

(இ-ள்.) அம்முனிவர் தெரிந்துகொள்ளும் வண்ணம். நான்கு சிரங்களையுடைய சிறுமைந்தனான சிறந்த பிரமன் பிதாவின் நன்மைபொருந்திய தோற்றத்தினை அகமுகமாகத் தியானித்துக் கண்ணீர் ஒழுக அவர்களெதிரே யெழுந்து நின்று கைகளை மேலெடுத்துப் பரம்பொருள் உருத்திரனென்று மூன்றுமுறை கூறிநின்றனன்.

அங்கணுன்முகன்சூளினாலாதியம்பகவன்
சங்கரன்னெனக்காட்டியேபொடிப்புமெய்தயங்க
வெங்கனற்படுமிழுதெனவுருகிமீமிசைசேர்
செங்கைமீட்டனன்முனிவருக்கினையனசெப்பும்.

(இ-ள்.) அவ்விடத்துப்பிரமன் சபதத்துடன் ஆதியம்பகவன் சங்கரனே எனக்காட்டி உடலிற் புளகம் விளங்க வெவ்விய தீயிற்பட்ட வெண்ணெயைப்போல உள்ளமுருகித் தலைமேலுயர்த்திய செவ்வியகைகளைத் திரும்பவெடுத்து முனிவருக்கிவைகளை யுரைப்பான்.—எ-று. (ருரு)

வம்மினோவுமக்கோருரைமொழிகுவன்வானோர்
தம்மையெங்களையளித்தனன்மறைகளுந்தந்தான்
மெய்ம்மையாவர்க்குஞ்செய்பணியுதவினன்மேனாண்
மும்மையாகியசெய்கைநம்பாலெனமொழிந்தான்.

(இ-ள்.) முனிவர்களே வாருங்கள் உங்களுக்கொரு உறுதிமொழி கூறுகின்றேன் தேவர்களையும் எங்களையும் ஆதியிற்படைத்தான் வேதங்களையும் உபதேசித்தான். மெய்யாக வனைவருக்குஞ்செய்தொழிலை அளித்தனன் முன்னாளில் மூன்றாவதான சங்காரத்தொழில் நம்மிடத்தது என்று கூறினன்.—எ-று. (ருசு)

அருளினீர்மையாலைந்தொழில்புரிபவனநாதி
பரமனின்மலனேதுவுக்கேதுவாம்பகவ
னொருவர்பாலினும்பிறந்திடானருவதாயுருவா
யிருமையாயுறைபூரணனியாவர்க்குமீசன்.

(இ-ள்.) அருளின் தன்மையாற் பஞ்சகிருத்தியங்களை இயற்றுவோன் அநாதியாயுள்ளோன் பரமன் நின்மலன் காரணத்திற்குக்காரணமான பகவன் ஒருவரிடத்தும் பிறவாதவன் அருவமாயும் உருவமாயும் உருவாருவமாயும் இருக்கின்ற எங்கு நிறைந்தவன் அனைவருக்கும் ஈசன்.—எ-று. (ருஎ)

முற்றுமாயினன்முடிவிற்குமுடிவா
யுற்றுளானென்றுமுள்ளவனனைத்தையுமுடையோன்
மற்றென்றுரைப்பரியதோர்சீர்த்தியன்மலர்த்தாள்
பற்றினோர்க்கன்றியுணரவொண்ணாததோர்பழையோன்

(இ-ள்.) அனைத்துமாயுள்ளவன் முடிவிற்கும் முடிவாயுள்ளவன் என்றுமுள்ளவன் எல்லாவற்றையுமுடையவன் என்றுலுரைப்பரிய கீர்த்தியினையுடையவன் அத்தகையவனது சரணகமலங்களைப் பற்றினவருக்கன்றி அறியக்கூடாத ஒப்பற்ற புராண புருஷன்.—எ-று. (ருஅ)

அன்னதோர்சிவன்பரமெனமறையெலாமறையு
மின்னுமாங்கவனிலையினைக்கண்ணனும்யானு
முன்னிநாடியுங்காண்கிலமவன்பதியொழிந்தோர்
மன்னுயிர்த்தொகையென்றனனன்னதொன்மலரோன்.

(இ-ள்.) அந்த சிவபெருமானைப் பரமென்று வேதமனைத்து முறையாநிற்கும் கண்ணனும் யானும் இன்னமும் அச்சிவபிரான் நிலைமையை நினைத்தும் ஆராய்ந்தும் அறிகிலேம் ஆதலின் அச்சிவனே பதியாயுள்ளவன் அவனையன்றியுள்ள பிறர் உயிர்வருக்கங்கள் என்று அப்பழைய பிரமனுரைத்தனன்.—எ-று. (ருகூ)

அருள்புரிந்துபின்சிவனடிகைதொழுதந்நாண்
மருளகன்றிடுபிதாமகனிருந்தனன்மற்றப்
பொருளினீர்மையைத்தெரிந்துதம்புந்திமேற்கொண்ட
விருளொழிந்தனர்மகிழ்ந்தனர்முனிவரரிசைப்பார்.

(இ-ள்.) இங்ஙனம் அருள்செய்து சிவபெருமானடிமலர்களை வணங்கி அந்நாளில் மயக்கமற்ற பிரமனிருந்தனன். அவனுரைத் தவப்பொருளின் தன்மையை உணர்ந்து தமது மனத்திற்கொண்டு முன்னாளில் எவர் பரமாவாரென நின்ற மயக்கமொழிந்து மகிழ்ந்து முனிசிரேட்டருரைக்கின்றனர்.—எ-று. (கூ0)

தாதையாயெமையளித்தனையாங்களுன்றனய
ராதலாலெமக்கித்திறந்தேற்றினையடிகே
ளீதலாலின்றுகுரவனுமாயினையென்றே
பாததாமரைவணங்கினர்முனிவரர்பலரும்.

(இ-ள்) எங்களைப்பிதாவாக விருந்துபெற்றனை நாங்கள் நின்மக்கள் ஆதலின் எமக்கித்தன்மையைத் தெளிவித்தனை அடிகாள் இதுவன்றி இன்று குரவனுமாயினாய் என்று முனிவர் பலரும் அப்பிரமனுடைய திருவடிக் கமலங்களை வணங்கினார்கள்.—எ-று. (கூக)

அடிவணங்கினர்தமைத்தெரிந்தின்றுதொட்டமலன்
வடிவமுன்னுதிரருச்சனைபுரிகுதிர்வயங்கும்
பொடியணிந்துநல்லஞ்செழுத்தியம்புதிர்புரைசேர்
கொடியவெம்பவமகனுதிரெனவிடைகொடுத்தான்.

(இ-ள்.) தனதடிகளை வணங்கிய முனிவர்களைப்பார்த்து நீவிரின்று முதல் மலரகிதனை சிவபெருமானுடைய திருவுருவத்தினைத் தியானித்து அருச்சனைசெய்யுங்கள் விளங்காநின்ற விபூதியையணிந்து நல்ல பஞ்சாக்கர செபஞ்செய்யுங்கள் குற்றம் வாய்ந்த கொடிய பிறவியினின்றும் நீங்குங்கள் என்று கூறி விடையளித்தனன்.

ஆதலாலெங்களீசனேபரம்பொருளல்லா
வேதிலாரெலாமுயிர்த்தொகையாகுமாலிதனைக்
காதலாலுரைத்தேனன்றுவாய்மையேகாண்டி
வேதமேமுதலாகியகலையெலாம்விளம்பும்.

(இ-ள்.) அதனால் எங்கள் சிவபெருமானே பரம்பொருள் அச்சிவபெருமானையன்றியுள்ள அயலாரனைவரும் உயிர்த்தொகையினர் இதனையான் அச்சிவபரஞ்சுடரின் மாட்டுள்ள அன்பினால் உரைத்தேனல்லேன் உண்மையாகவே உரைத்தனன். யான் சொன்னவிதனை வேதமுதலிய கலைகளே யுயைாநிற்கும்.—எ-று. (சுங)

அன்றிமுன்னயனுன்றனக்கரன்புகழனைத்து
நன்றுகேட்டிடவுணர்த்தினனீயதுநாடி
நின்றுமாதவம்புரிந்திதுபெற்றனைநினைக்குப்
பொன்றுகாலம்வந்தெய்தலின்மறந்தனைபோலாம்.

(இ-ள்.) அன்றியும் முன்னர்ப் பிரமன் உனக்கு அரனுர்புகழனைத்தினையும் நன்றாய்க்கேட்கும் வண்ணம் செவியறிவுறுத்தனன். நீ அதனை ஆராய்ந்து அவ்வழியே நின்று சிறந்த தவம்புரிந்து இதனைப்பெற்றனை நினக்கு அழிவுகால நெருங்குதலின் மறந்தனைபோலும்.—எ-று. (சுச)

தந்தையேமுதல்யாவருமுடிவுறுந்தகவால்
வந்துநின்னவையிருந்தனர்மாயையான்மருண்டா
யுய்ந்திடும்படிநினைத்தியேலரற்கவியுதவி
யிந்தமாமகம்புரிந்திடுவாயெனவிசைத்தான்.

(இ-ள்.) நினது தந்தைமுதலிய அனைவரும் அழியவேண்டிய முறைமையால் நினது அவைக்களத்து வந்திருந்தனர் நீ மாயையினால் மயக்கமெய்தினய் நீ உய்யும்வண்ணம் நினைப்பாயானல் அரனுர்க்கவியளித்து இந்தச்சிறந்த யாகத்தினை இயற்றுதி என்று கூறினர்.—எ-று. (சுரு)

ததீசிப் படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௫கக.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ததீசியுத்தரப்படலம்.

இந்தவண்ணமத்ததீசிமாமுனிவரணியம்பக்
கந்தமாமலர்க்கடவுள்சேய்நகைசெய்துகானிற்
சிந்துமென்பொடுசிரத்தொகையணியுமோதேவர்
வெந்தசாம்பரும்பூசுமோபரனெனுமோலோன்.

(இ-ள்.) இவ்விதமாகவந்தத் ததீசிமாமுனி சிரேட்டருரைக்க அவைகளைக்கேட்ட மணம்பொருந்திய சிறந்த தாமரை மலரை இடமாகவுடைய பிரமன் மைந்தனை தக்கன் நகைசெய்து பரனென்று கூறும் மேலோன் காட்டிற்சிந்திய என்புடன் சிரத்தொகையையணியுமோ தேவரின்வெந்த சாம்பலும் பூசுமோ என்றும்.—எ-று. (க)

கழிந்ததீயுடலேந்தியேதிரியுமோகானி
லிழிந்தகேசமுந்தரிக்குமோவேனத்தினெயிறு
மொழிந்தகூருமத்தோடுமேற்கொள்ளுமோவுலக
மழிந்திடும்படியுயிர்களைமுடிக்குமோவமலன்.

(இ-ள்.) உயிர்கழிந்த கொடிய உடலத்தைச்சுமந்து திரியுமோ கானில் இழிந்த கேசமுந்தரிக்குமோ? பன்றிக்கொம்பும் அன்றியுள்ள யாமையின் ஓடும் மேலே தரிக்குமோ ? உருக்களழிந்திடும் வண்ணம் உயிர்களை முடிக்குமோ ? அமலன் என்பான் என்றும்.—எ-று. (உ)

புலியினீருரியுடுக்குமோதந்தியின்புன்றோல்
வலியதன்புயம்போர்க்குமோசெந்தழன்மழுமா
னிலைகொண்முத்தலைவேற்படையெந்துமோவெங்கும்
பலியுமேற்குமோநிருத்தமுஞ்செய்யுமோபகவன்.

(இ-ள்.) புலியின் பிளக்கப்பட்ட தோலைத் தரிக்குமோ ? யானையின் புல்லிய தோலை வலியதனது புயத்திற் போர்த்துமோ? செவ்விய தழலையும் மழுவினையும் மானினையும் இலைவடிவமான மூன்றுதலைகளையுடைய வேலாயுதத்தினையு மேந்துமோ ? எவ்விடத்தும் பிச்சையேற்குமோ ? நிருத்தமுஞ்செய்யுமோ பகவனென்பானென்றும்.

மிக்கசாரதர்படையெனத்திரியுமோவிடமே
கக்கும்வெம்பணிபூணுமோவெண்டலைகலமாச்
செக்கர் மாமுடிதரிக்குமோவம்பரந்திசையா
நக்கனாகுமோவேற்றுருக்கொள்ளுமோநாதன்.

(இ-ள்.) மிகுதியான பூதர்களைப் படையெனக்கொண்டு திரியுமோவிடத்தினை யேகக்குகின்ற வெவ்விய பாம்பினைத் தரிக்குமோ வெள்ளிய தலையை ஆபரணமாகச் செந்நிறம்வாய்ந்த முடியில் தரிக்குமோ திசையே அம்பரமாக நக்கனுவானோ வேற்றுருவங் கொள்ளுமோ நாதனென்பானென்றும்.—எ-று. (ச)

விடையுமேறுமோவாலமுங்கொள்ளுமோவீந்தோர்
சுடலைதன்னினுமாடுமோவொருத்தியைச்சுமந்தோர்
மடமகட்கிடங்கொடுக்குமொமகவையும்பெறுமோ
கடியதோர்குணம்படைக்குமோபரமெனுங்கடவுள்.

(இ-ள்.) விடையிலுமேறுமோ விடத்தினை ஊணுகக்கொள்ளுமோ? இறந்தார் சுடலையினுமாடுமோ? ஒருத்தியைச் சுமந்து ஒருமடமகட்கிடங் கொடுக்குமோ? பிள்ளையையும் பெறுமோ? கடிதொரு குணத்தினைப் பெறுமோ பரமெனக்கூறுங் கடவுளென்ன்பானென்றும்.—எ-று. (ரு)

ஆதலா லுங்களீசனோர் குணமிலனவனுக்
கீதலின் றியாம்புரிகின் றமகத்தவியெனலு
நாதனைக்கொலோ பழிக்குவனிவனெனநகையாக்
கோதின் மாதவமுனிவரனழலெனக்கொதித்தான்.

(இ-ள்.) ஆதலின் உங்கள் கடவுள் ஒரு குணமற்றவன் அவனுக்கு யாம்புரியும் யாகத்திலவியளியேம் என்று கூறுதலும் சிவபெருமானையோ இவன் பழிக்குவனென்று குற்றமற்ற சிறந்த தவத்தினையுடைய ததீசியென்னு முனிசிரேட்டர் தீயைப் போல கொதிப்புற்றனர்.—எ-று. (சு)

தீர்த்தனுண்மையையுணர்கிலனிவனொடுசிறிதும்
வார்த்தைகூறுதறகாதுமாலயன்முதல்வானோ
ரார்த்தசங்கத்திலிகழ்ந்தவற்கெதிர்மொழியறைய
வீர்த்ததென்னுளமுணர்த்துவன்சிலவெனவிசைந்தான்.

(இ-ள்.) சிவபெருமானுடைய உண்மையை உணர்கிலன் இவனுடன் சிறிதும் பேசுதல் தகுதியன்று அரியயன் முதலிய தேவர் நெருங்கிய சபையில் இகழ்ந்தவனுக்கெதிர்மொழி கூற எனதுளமென்னை யீர்த்தது அதனாலிவனுக்குச் சில உணர்த்துவேனென்று பதிலுரைக்கச் சம்மதங் கொண்டனர். —எ-று. (எ)

இந்தவாறிசைசந்தெம்பெருமான் றனக்கிவணீ
நிந்தைபோற்சிலகூறினை நிமலனுக்கவைதாம்
வந்தவண்ணமோர்சிறுவதுமுணர்ந்திலைமருண்டாய்
புந்தியில்லதோர்கயவனீகேளெனப்புகல்வான்.

(இ-ள்.) இவ்வாறு பதிலுரைக்கச் சம்மதங்கொண்டு எம்பெருமானுக்கு இவ்விடத்து நீ நிந்தைபோல சிலவுரைத்தனை மலரகிதனான சிவபெருமானுக்கவை வந்த வரலாற்றினை ஒருசிறிதும் உணர்ந்தாயில்லை மருண்டனை புத்தியற்ற கயவனே நீகேளென்றுரைப்பாராயினர்.—எ-று (அ)

நிலவுகின்றதன்னருளுருக்கொண்டிடுநிமலன்
றலைமைபெற்றிடுபுங்கவர்தம்மைமுன்றந்தே
யுலகம்யாவையுமளித்தருள்செய்திடவுதவி
யலகிலாவுயிர்யாவையுமயன்கணின்றளிப்பான்

(இ-ள்) விளங்காநின்ற தனது கருணையினாலேயே திருவுருக்கொண்ட நிமலன் முதன்மைவாய்ந்த தேவர்களை முன்னருண்டாக்கி அனைத்துலகங்களையும் படைத்துக் காக்குமாறருள்செய்து கணக்கற்ற வுயிர்களனைத்தினையும் பிரமனிடநின்று படைப்பார்.—எ-று. (கூ)

மாயவன்கணின்றவையெலாம்போற்றிமற்றவைக்குத்
தூயதுப்புரவருத்தியேமேல்வினைதொலைச்சி
யாயவற்றிலோர்பற்பலவீடுறவருளி
மேயவாருயிருலகெலாம்பின்னரேவீட்டும்.

(இ-ள்.) மாயோனிடத்து நின்று அவை யனைத்தையுங்காத்து அவ்வுயிர்கட்குத் தூய்மையான போகமருத்தி ஆகாமிய வினையை யொழித்து அவ்வுயிர்களிற் பலவற்

றை வீடுறுமாறருளி வீடுறுது பொருந்தின அரிய வுயிர்களையும் உலகனைத்தையும் பின்னர் அழித்தருளுவர்.—எ-று. (கo)

அன்னவேலையிலவையெலாமழித்தபின்னளிப்போ
ரென்னநின்றவர்தம்மையுமொடுக்குறுமிதற்பின்
முன்னருள்ளதோரேகமாயுறையுமெம்மூர்த்தி
பின்னுமிம்முறைபுரிந்திடுமென்றுமிப்பெற்றி.

(இ-ள்.) அந்த சமயத்தில் அவையனைத்தையும் அழித்த பின்னர் படைத்தளிப்பாரென்ன நின்றவர்களையும் ஒடுக்குவார் இதன்பின்னர் முன்னருள்ள ஏகரூபமாக எமது மூர்த்தி எழுந்தருளியிருப்பார் பின்னரு மவ்வண்ணமே செய்யாநிற்பர் என்றும் இத்தன்மையாகவே நிகழும் —எ-று. (கக)

பரபனிவ்வயைடுந்தொறுமடுந்தொறும்பலவாம்
பிரமனாதியோரென்பினைத்தரிக்குமப்பெரியோர்
சிரமெலாந்தொடுத்தணியலாவணிந்திடுஞ்சிகைதன்
னுரமுலாவுமுந்நூலெனவேயணிந்துறையும்.

(இ-ள்.) சிவபெருமானிவ்வாறு சங்காரம் புரியுந்தோறும் சங்காரம் புரியுந்தோறும் அநேகரான பிரமர் முதலியோரின் என்பினைத் தரிப்பார். அந்தப் பெரியவர்களின் சிரங்களையெல்லாந் தொடுத்து மாலையாகத் தரிப்பார். அவர்கள் சிகைகளைத் தமது மார்பிற்பொருந்திய முப்புரி நூலையொப்ப அணிந்து எழுந்தருளி இருப்பார்.

அல்லதங்கவர்தங்களைமுத்தலையயிலான்
மெல்லவேயெடுத்தேந்திடுமேவர்தமைவிபூதியாற்
றொல்லைநாளினீறாக்கியும்புனைந்திடுந்தூயோன்
மல்லன்மாதவமனையவரியற்றியவகையால்.

(இ-ள்.) அல்லது அப்பிரமாதியரை முத்தலைச் சூலத்தான் மெல்லென வெடுத்தேந்துவார் அவர்களை அச்சங்காரகாலத்தில் விபூதியாக்கியும் தரிப்பார் தூய்மையாளரான சிவபெருமான் சிறந்த மாதவத்தினை அவர்கள்செய்த முறையா லவ்வாறெல்லாஞ் செய்தனர்.—எ-று. (கூ)

ஆதலாற்றனைவியப்பதற்கன்றவையணித
லீதலாதொருதிறமுளதியாவருமெவர்க்கு
நாதனேயிவனென்றுதன்பாங்கரேநண்ணித்
தீதெலாமொரீஇமுத்திபெற்றுய்ந்திடுஞ்செயலே.

(இ-ள்.) ஆதலால் தன்னைப் பிறர் புகழ்வேண்டுமென்றன் றவைகளை யணிதல் இதுவன்றிய மின்னொருதிறமுளது அனைவரும் இவரே அனைவருக்குந் தலைவர் அதற்கடையாளம் பிறதலைவர்களின் றலைமாலையாதிய வணிந்திருத்தலே யென்று தமது திருவடியையடைந்து குற்றமனைத்து மொழிந்து முத்திபெற் றுய்யவேண்டுஞ் செயலுக்காகவுமாகும் —எ-று. (கச)

என்புநீறொடுகழியுடல்சிகைமுடியனைத்து
முன்பணிந்திடுமியல்பினைமுழுதுயிர்த்தொகைக்கு
மன்புசெய்திடுஞ்செயலிதுவாமெனவறிநீ
பின்புமுள்ளதுங்கேண்மதியகந்தையாற்பெரியோய்.

(இ-ள்) அகந்தையாற் பெரியோய் என்பும் நீறும் உடற்கழியும் சிகையும்முடியும் முதலியவனைத்தும் முன்னரணிந்த இயல்பினை அனைத்துயிர்த்தொகைக்கும் அன்புசெய்யுஞ் செயலிதுவாகுமென்று நீ அறியக்கடவை மற்றுள்ளவைகளையும் கேட்பாயாக.—எ-று. (கரு)

விண்ணுளோர்க்கெலாமல்லலேவைகலும்விளைத்து
நண்ணுமாடகக்கண்ணினன்முன்னமோர்நாளின்
மண்ணகந்தனைவெளவியேவயிற்றிடைவைத்துத்
துண்ணெனப்பிலம்புக்கனனுயிரெலாந்துளங்க.

(இ-ள்) விண்ணுலகிலுள்ளாரனைவருக்குந் துன்பத்தினை நாடோறு முண்டாக்கியிருந்த இரணியாட்சனென்பான் முன்னமொருதினம் பூமியினிடத்தினை அபகரித்து வயிற்றினுள்வைத்து உயிரெலாம் வருந்துமாறு விரைவாகப் பாதாளஞ்சென்றனன்.—எ-று. (கசு)

கண்டுவானவர்யாவருமஞ்சினர்கரிய
கொண்டன்மேனியம்பண்ணவன்கோகனதத்தோன்
றுண்டமாகியவிடத்திலோரேனமாய்த்தோன்றி
யண்டமீதுபோய்வடவரையெனவளர்ந்தார்த்தான்.

(இ-ள்.) அதனைக்கண்டு தேவரனைவரும் அஞ்சினார்கள் கரியமேகம்போலுமுருவினனான மாயோன் கமலாசனனான பிரமனுடைய நாசியின் வழியொருபன்றியாகப்பிறந்து அண்டத்தின் மேற்புறத்துச்சென்று மேருவினையொப்பவளர்ந்து பேரிரைச்சல் காட்டினன்.—எ-று. (கஎ)

ஓரிமைக்குமுன்பாதலந்தன்னின்மாலுற்றுக்
கூரெயிற்றினாற்பாய்ந்துபொற்கண்ணனைக்கொன்று
பாரினைக்கொடுமீண்டுமுன்போலவேபதித்து
வீரமுற்றனன்றன்னையேமதித்தனன்மிகவும்.

(இ-ள்.) ஓரிமைப்பொழுதினுள் பன்றியுருவெய்திய மாயோன் பாதாளத்திற்சென்று கூரிய தந்தங்களாற் பாய்ந்து இரணியாட்சனைக் கொன்று பூமியைக்கொண்டு திரும்பி முன்போல வைத்து வீரம்பொருந்தித் தன்னையே மிகமதித்தனன்.—எ-று ()

மாலுமப்பகலகந்தையாயுணர்வின்றிமருப்பான்
ஞாலம்யாவையுமழிதரவிடந்தவைநனிசூழ்
வேலைதன்னையுமுடைத்தனனன்னதோர்வேலை
யாலமார்களத்தண்ணல்கண்டெய்தினனங்கண்.

(இ-ள்.) அத்தினமாயோனும் அகந்தையாய் உணர்வின்றிக்கொம்பினால் உலகமுழுமையும் அழியுமாறு கிளறிப் பூமியைச் சூழ்ந்தகடலினையு முடைத்தனன் அந்தசமயத்தில் விடம்பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமான் அதனைக்கண்டு அவ்விடத்திற்குச் சென்றனர்.—எ-று. (கக)

கண்டுகண்ணுதலவன்மருப்பொன்றினைக்கரத்தாற்
கொண்டுவல்லையிற்பறித்தலுமுணர்வுமுன்குறுக
விண்டுமற்றதும்பறிப்பனிங்கிவனெனவெருவிப்
பண்டுபோலநின்றேத்தலும்போயினன்பரமன்.

(இ-ள்.) வன்றியான மாயோன் செயலினைக் கண்ணுதலான அரனார்கண்டு அவன் கொம்பொன்றினைக் கையினால் விரைந்துபறித்தலும் பழயவறிவுண்டாக மாயோன் இவன் மற்றதனையும் பறிப்பானெனப்பயந்து முன்போல நின்று துதித்தலும் அரனார்சென்றனர்.—எ-று. (உO)

அன்றுகொண்டதோர்மருப்பினைச்சின்னமாவணிந்தா
னின்றுமங்கவன்மார்ப்பிடைப்பிறையெனவிலங்கு
மொன்றுமற்றிதுகேட்டனைநின்றதுமுரைப்பா
நன்றுதேர்ந்துணர்மறைகளுமித்திறநவிலும்.

(இ-ள்.) அன்று பறித்த ஒரு பன்றிக்கொம்பினை அடையாளமாக அணிந்த னர் இன்னும் அன்னதவர் மார்பினில் இளம்பிறையையொப்ப விளங்காநிற்கும் இது வொரு சரிதம் இதனைக்கேட்டனை மற்றையவைகளையு முரைக்கின்றேம் நன்றுயாரா ய்ந்து அறிதி வேதங்களுமிந்தச் செயலை உரைக்கும்.—எ-று. (உக)

அடலின்மேதகுதேவருமவுணருமந்நாட்
கடல்கடைந்திடுமெல்லையின் மந்தரங்கவிழ
நெடியமாலதுநிறுவியேபொருக்கெனநீத்தந்
தடவியுள்ளணைந்தாமையாய்வெரிநிடைத்தரித்தான்.

(இ-ள்.) வன்மையின் மிகுந்த தேவர்களும் அவுணர்களும் முன்னுளிற்கடல் கடைந்திடு காலையின் மந்தரமலையானமத்துக் கவிழநெடியமால் அதனைநேராக நிறுத் திவிரைவாக நீரின்மூழ்கி உட்சென்று ஆமையாகி முதுகின்மீதம் மலையையேந்தினன்.

தரித்தவேலையவ்வேலையைமதித்திடத்தன்க
ணருத்திமிக்குறுமமிர்தினைத்தருதலுமதனைத்
தெரித்துமற்றிதுநமதெனநமதெனச்செப்பி
மருத்தினன்மையாலமரருமவுணருமலைந்தார்.

(இ-ள்.) அவ்வாறு தாங்கியவுடனே அக்கடலைக்கடைய அது தன்னிடத்தன் புமிக்க அமிர்தினையளித்தலும் அதனைக்கண்டு இது நமது நமதென்று கூறி அவ்வமி திலுள்ள நன்மையால் அமரரும் அவுணரும் போர்புரிந்தனர்.—எ-று. (உஉ)

மலைந்தபோரினைநீக்கலன்மாயனிவ்வரையை
யலைந்தவேலையினிறுவியேவெரிநிடையாற்றி
யுலைந்திடாவகைகாத்துமாலெனப்பெரிதுன்னக்
கலந்ததாலவனுளத்தினிலகந்தையங்கடலே

(இ-ள்.) இருபகுதியினரும் புரிந்த போரினை மாயன் விலக்காதவனுய் இம்ம லையை அலையாநின்றவிக்கடலுள் நிறுத்திமுதுகிற் சுமந்து கெடாமற் காத்தேமென மிகவுநினைத்தலும் அவனுள்ளத்தில் அங்காரம் ஒருகடல்போல குடிபுகுந்தது.—எ-று.

அகந்தையெய்தியேயாவையுந்தேற்றலானலைபோய்த்
திகந்தமுற்றிடவேலைகளுழக்கினன்றிரியச்
சகந்தனக்கழிவெய்தலுந்தனதருட்டன்மை
யிகந்தனன்கொலாங்கண்ணனென்றுன்னினனெங்கோன்.

(இ-ள்.) அகங்காரங்கொண்டு எவையும் உணராதானாய் அலைகள் சென்று திக்கினந்தத்தையடையக் கடல்களைக் கலக்கினவனாகத்திரிய உலகத்துக்கழிவுண்டா தலும் எங்கோன்தனதருட்டன்மையைக் கண்ணன் இகழ்ந்தனன் கொல் என்று கரு தினர்.—எ-று. (உ௫)

அற்றைநாள்வண்வல்லையிலேகியேயரிதன்
முற்றலாமையினுருவினைநோக்கியேமுனிந்து
கற்றைவார்சடைக்கண்ணுதல்யாப்புறக்கரத்தாற்
பற்றியாங்கவனகந்தையும்வன்மையும்பறித்தான்.

(இ-ள்.) அந்நாளில் நீண்டசடையினையுடைய கண்ணுதலான சிவபெருமான் அவ்விடத்துக்கு விரைந்துசென்று அரியின் முதிய ஆமையுருவினைக்கண்டு சீறித்தமது திருக்கரத்தாற் பற்றிப் பிடித்து அவனுடைய வகந்தையையும் வன்மையையும் பறித்த னர்.—எ-று. (உசு)

நினைந்துதொல்லுருக்கொண்டனன்புகழ்தலுநிலவைப்
புனைந்தசெஞ்சடைநின்மலனவுணரைப்போக்கி
யினைந்ததேவருக்கமிர்தினையீகெனவேக
வனைந்தமேனிமான்மாயையாலவுணரைமாய்த்தான்

(இ-ள்.) இதனையெண்ணிப் பழயவுருவெய்திச் சிவபெருமானைப்புகழ்தலுஞ் சந்திரகலையணிந்த செஞ்சடா பாரத்தினையுடைய நின்மலனான சிவபெருமான் மாயோனைப்பார்த்து நீ யசுரரையழித்து வருந்திய தேவர்க்கமிர்தினை அளிப்பாயாக வென்று திருவாய்மலர்ந்தருளிச்செல்ல அலங்கரிக்கப்பட்ட வுருவினையுடைய மாயோன் தனது மாயையால் சுரரையழித்தான்.—எ-று. (உஎ)

மாய்த்துவானவர்க்கமுதினைநல்கினன்வையமுங்
காத்தகண்ணனென்றுரைப்பராலவனுறுகமட
மீத்தயங்கியகாப்பினைவாங்கியேவிமலன்
சாத்தினான்முனமணிந்திடுமருப்புடன்சார.

(இ-ள்.) அசுரரைக்கொன்று தேவருக்கமுதினையளித்தனன் உலகினைக்காத்தகண்ணனென்றுகூறுவார்கள். ஆமையின்மீது பொருந்திய ஓட்டினைச்சிவபெருமான் எடுத்து முன்னரணிந்துள்ள பன்றிக்கொம்புடன் பொருந்துமாறணிந்தனர்.—எ-று.

வாரிசூழ்புவியகழ்தருகேழலின்மருப்பு
மூரியாமையினோடுமேற்கொண்டதுமொழிந்தாந்
தாருகாவனத்தெம்பிரான்பலிக்குறுதகவுஞ்
சேரவேயவணிகழ்ந்தவுங்கூறுதுந்தெளிநீ.

(இ-ள்.) கடல்புடையுடுத்த பூமியையகழ்ந்த பன்றியின் கொம்பும் பெரிய யாமையின் ஓடும் தரித்ததனையுரைத்தாம் இனித்தாருகா வனத்தில் எம்பெருமான்பலிக்குச்சென்ற தன்மையும் அப்பொழு தங்குப் பொருத்தமாக நடந்தனவும் உரைக்கின்றேம் நீ கேட்டுணர்வாயாக.—எ-று. (உகூ)

வேறு.

முன்புதாருகவனத்தின்முனிவரர்யாருமீசற்
கன்பிலராகிவேள்வியளப்பிலபுரிந்துதாமே
யின்புறுமுத்திதன்னையெய்துவானுன்னியங்கந்
துன்புறவாளாநோற்றுத்துணிவினொலொழுகலுற்றார்.

(இ-ள்.) முன்னர்க்காலத்துத் தாருகவனத்திலிருந்த முனிவரனைவரும் சிவபெருமானிடம் அன்பில்லாதவர்களாய் அளவற்ற யாகங்களைச் செய்து தாமாகவே இன்பம் பொருந்திய முத்தியையடைவான் கருதி யுடலம் வருந்தச் சும்மா நோற்றுத் துணிவி னொலொழுகாநின்றனர்.—எ-று. (௩0)

ஒழுகியவேலைதன்னிலுயிர்க்குயிராகியுற்றோன்
பழுதினையகற்றித்தன்னோர்பாங்கரிலுமையாண்மேவ
விழுமியகயிலைநாப்பண்வீற்றிருந்தருள்வோனங்க
ணிழுதையர்புரியுநீர்மையாவையுமுணர்ந்தானன்றே

(இ-ள்.) இவர்கள் இவ்வாறு கன்மத்தினைகர்த்தாவாகக் கொண்டொழுகிய நாளில் உயிர்க்குயிராய் விளங்குஞ் சிவபெருமான் குற்றத்தினையொழித்துத் தமதொரு புறத்திலுமையாளெழுந்தருளி இராநிற்பச் சிறந்த கைலாயத்தின் மத்தியில் எழுந்தருளி இருப்பவர் அத்தாருகாவனத்திலறிவிலிகள் செய்யுஞ் செயலனைத்தையும் அறிந்தனர்.—எ-று. (௩க)

முன்னவனிதனைநாடிமுழுதுணர்முகுந்தன்றன்னை
யுன்னினனன்னபான்மையொய்யெனவுணர்ந்துமாலோ
னென்னையுமுதல்வன்றன்பாலெய்துவான்பணித்தானென்னுப்
பன்னகவமளிநீத்துப்பணியினுற்கயிலையுற்றான்.

(இ-ள்.) இதனை முதல்வனுராய்ந்து முற்றுமுணர்ந்த முகுந்தனை நினைத்தார் அத்தன்மையை மாலொன்விரைவாகவுணர்ந்து என்னையும் எனது முதல்வன் தன்னிடத்துக்கு வருமாறு கட்டளையிட்டாரென்று அரவசயனத்தை விட்டெழுந்து சிவாக்கினையால் கைலையை யடைந்தான். - எ-று (௩௨)

உற்றனனகர்முனெய்தியுணர்த்தியநந்தியுய்ப்பப்
பற்றலர்புரமூன்றட்டபரனடிபணிந்துமுன்போய்
நிற்றலுங்குறிப்பாலங்கணினைத்தனவுணர்த்திமாயன்,
பொற்றடஞ்செங்கைபற்றிப்புனிதனுண்டெழுந்துபோந்தான்.

(இ-ள்.) மாயன் கைலைக்கோவிலையடைந்து, தனதுவருகையை இறைவனுக்குணர்த்திய நந்தியெம்பெருமான் உள்ளனுப்ப எதிரே சென்று பகைவரின் மும்மதில்களை யழித்த சிவபெருமானடிமலர்களை வணங்கிநிற்றலுங் ,குறிப்பினுல் அங்குநினைத்தவைகளை அவனுக்குணர்த்தி அவனதுநீண்ட அழகிய கையினைப்பிடித்துக்கொண்டு அவ்விடத்தினின்றும் எழுந்துப் போந்தனர்.—எ-று. (௩௩)

கயிலையங்கிரியைநீங்கிக்கண்ணனைநோக்கித்தொன்று
ளியனுறுநினதுபெண்மையெய்துதியிவணீயென்னப்
புயலுறழ்மேனிமாயோன்பொருக்கெனவளப்பில்காமர்
மயலுறுபான்மையங்கோர்மடந்தையாய்மருங்குவந்தான்.

(இ-ள்.) கைலைமலையை விடுத்து வெளியேறிக் கண்ணனைப்பார்த்து இவ்விடத்தில் நீ நினக்குள்ள பழயபெண்ணுருவினை அடையக்கடவையென்றருளிச்செய்தவுடனே மேகவன்னமான மேனியினையுடைய மாயோன் விரைவாக அளவற்ற மன்மதர்கள் மயங்கத்தக்க தன்மையாக அங்கொருபெண்ணுருவமெய்திச் சிவபெருமானருகிற் சென்றனன்.—எ-று. (௩௪)

வந்திடுகின்றகாலைமாயைசேர்பொருண்மைமுற்றுந்
தந்திடுமுமையுங்காணிற்றளர்ந்துவீழ்பான்மைதானு
மந்தமில்யாணர்மேல்கொண்டாயிடைப்பெயர்ந்தான்முக்க
ணெந்தைதன்வடிவினீர்மையார்விரித்துரைக்கற்பாலார்.

(இ-ள்.) மாயோன் மாதினுருவமெய்தி யருகில்வருகின்ற காலத்து மாயையினையுடைய பொருளனைத்தினையும் அளித்த உமாதேவியாரும் கண்டான் மயங்கிவிழத்தக்க தன்மையாகச் சிவபெருமானும் அளவற்றவழகினை மேற்கொண்டு சென்றனர் முக்கணரான எனதுதந்தை கொண்டவடிவின் தன்மையை எவர்விரித்துரைக்கத்தக்கார் —எ-று. (௩௫)

முன்பனதுருவையெல்லாமுகனுறுவிழியான்மாந்தித்
துன்புறுமான்மீக்கொள்ளத்துண்ணெனவரியுஞ்சோர்ந்து
மன்புடையருளால்வந்தான்மற்றவன்றனக்குமாலோ
னென்பதோர்பெயருமஞ்ஞான்றெய்தியபோலுமன்றே.

(இ-ள்.) முதல்வனுடைய உருவமனைத்தையும் முகத்திலுற்ற விழியாலருந்தித் துன்பம் பொருந்திய மயக்கமேற்கொள்ளத் துண்ணென அரியுஞ்சோர் வுற்றும் அன்

புடையருளினுலுடன் சென்றனன் அம்மாயோனுக்கு மாலோனென்பதொரு பெய ருமந்நாளிலுண்டாகியதாகவும் இருக்கலாம்.—எ-று. (௩௬)

நராரியினுரிவைநீத்துநக்கனேயாகிமுக்கட்
பராபரன்சூலத்தோடுபலிக்கலனங்கைகொண்டு
முராரிதன்பாங்கர்செல்லமுனிவருக்கிருக்கையாகத்
தராலமதிக்கநின்றதாருகாவனத்திற்புக்கான்.

(இ-ள்.) மூன்றுகண்களையுடைய பராபரன் நரசிங்கத்தின் றோலையொழித் துநிருவாணியாகிச் சூலத்துடன் பலிப்பாத்திரத்தினைய கங்கையிலேந்திமுராரி தனது பக்கத்தில் வாராநிற்க முனிவருக்கிருப்பிடமாக உலகமதிக்க நின்றதாருகா வனத்திற் புகுந்தனர்.—எ-று. (௩எ)

புக்கனன்மாலைநோக்கிப்போந்துநீநமையெண்ணுது
தொக்குறுமுனிவர்வைகுஞ்சூழல்கடோறுநண்ணி
மிக்கமால்பூட்டியன்னோர்விரதங்கண்மாற்றிநந்தம்
பக்கநீவருதியென்னப்பகர்ந்தனன்விடுத்துச்சென்றான்.

(இ-ள்.) அங்ஙனம் தாருகாவனத்திற்புகுந்து திருமாலைப்பார்த்து நீ சென்று நம்மை நினையாமற் கூட்டங்கூட்டமாக முனிவர்கள் வாசம்புரிகின்ற இடங்கள் தோ றுஞ்சென்று மிகுந்தமோகத்தைப் பூட்டி அவர்களின் விரதங்களைமாற்றி நமதருகில் வருதியென்றருளிச் செய்து சென்றனர்.—எ-று. (௩அ)

விடுத்தலுமுராரியேகிவேள்வியுந்தவமுந்தாமே
கொடுத்திடுமுத்தியென்னுங்கொள்கைசேர்முனிவர்யாரு
மடுத்திடுமவைக்கணெய்தியளவையிலநங்கர்வல்லே
தொடுத்திடுசரங்களேபோற்றுணைவிழிபரப்பிநின்றான்.

(இ-ள்.) சிவபெருமானலனுப்பப்பட முராரியான திருமால் சென்று வேள்வி யுந்தவமுந் தாமேகொடுத்திடு முத்தியென்னுங் கொள்கையினையுடைய முனிவரனைவ ருநெருங்கியிருக்கின்ற சபையினிடத்துச்சென்று அளவற்ற மன்மதர்களால் விரை வாகத்தொடுக்கப்பட்ட சரங்களைப்போல இருவிழிகளைப் பரப்பிநின்றனன்.—எ-று. ()

கண்டனர்முனிவரம்மாகதுமெனக்காமவேட்கை
கொண்டனர்விரதநோன்மைகுலைந்தனர்மகத்தின்செய்கை
விண்டனர்மதனீர்பாயமெலிந்தனர்வெதும்பிவேழ
முண்டிடுகனியாமென்னவுணர்வுபோயுருகாநின்றார்.

(இ-ள்.) இம்மோகினியை முனிவரனைவருங்கண்டு விரைந்து காமவிச்சை பொருந்தி விரதநோற்றல் குலைந்து யாகத்தினையியற்று தலைவிடுத்து மதநீர்பாய மெ லிந்து வெதும்பி யானையுண்ட விளாம்பழம்போல அறிவழிந்துருகினார்கள்.—எ-று. ()

ஆலமார்கண்டத்தெந்தையருளினன்மாயோன்கொண்ட
கோலமார்வடிவமெல்லாங்குறிப்புடனோக்கிநோக்கிச்
சீலமாமனைத்தும்விட்டிச்செழுஞ்சுடர்மலர்ச்சிகண்ட
வோலமார்விட்டிலென்னவொல்லெனவந்துசூழ்ந்தார்

(இ-ள்.) ஸ்ரீ கண்டத்தினையுடைய வெம்பெருமானுடைய திருவருளினல் மா யோன்கொண்ட வழகுவாய்ந்த வடிவமுற்றிலுங் குறிப்புடன் பார்த்துப்பார்த்து ஒழுக்கமனைத்தும் விடுத்துச் செழுமைவாய்ந்த தீபவொளியைக்கண்டு இரையும் விட் டிற்பறவையையொப்ப விரைந்து வந்து சூழ்ந்தார்கள்.—எ-று. (௪௧)

பார்கொலோவிசும்புகொல்லோபங்கயன்பதியோகாம
னூர்கொலோமுகுந்தன்வைகுமுலகமோவுறையுளன்றே
னீர்கொலோவமரர்க்காகநிருதரைத்தொலைத்தீரும்மை
யார்கொலோவுணருகிற்பாரடியருக்கருளுமென்றார்.

(இ-ள்.) அம்முனிவரவளைப் பார்த்து நீவிர்பாருலகினீரோ விண்ணுலகினீரோ பிரமனூரினீரோ காமனூரினீரோ முகுந்தனிருக்குமூரினீரோ நுமதிருப்பிடமிவைகளிலொன்றன்றேல் நீர்தாமோ பண்டுதேவருக்காக வசுரரைத்தொலைத்தீர் உம்மை எவரோ வறியவல்லுநர் அடியோங்களுக்கும திருப்பிடத்தினைத் தெரித்தருள்வீராக.—எ-று. (௬௨)

என்றிவைபலவும்பன்னியிடருழந்தெரியிற்பட்ட
மென்றளிரலங்கலென்னவெதும்பியேவிரகத்தீயாற்
பொன்றினர்போன்றுநின்றார்பொருவருமுனிவர்பொன்னூர்
கொன்றையஞ்சடையோன்செய்தசெயலினைக்கூறலுற்றேன்.

(இ-ள்.) எனவிவைபலவுங்கூறி வருந்தித்தீயிற்பட்ட மெல்லியதளிர்மாலையையொப்பவெதும்பி விரகத்தீயால் இறந்தாரையொத்து நின்றனரவ்வொப்பற்றமுனிவர்கள் இதுநிற்க, பொன்போலுங் கொன்றையலரணிந்த சடையினையுடைய சிவபெருமான் செய்தசெயலினை உரைக்கின்றேன்.—எ-று. (௬௩)

கண்ணனைவிடுத்துத்தானோர்கலனொடுசூலமேந்தி
யெண்ணருமுனிவர்வைகுமிருக்கையின்மறுகுசென்று
பண்ணிசைமறைகள்பாடியையமேற்படர்வார்போன்று
னுண்ணிகழுணர்வாயென்றுமுயிரினுக்குயிராய்நின்றான்.

(இ-ள்.) கண்ணனை முனிவரிடமனுப்பித்தானொரு பிச்சாபாத்திரத்துடன் சூலமேந்தி எண்ணுதற்கரிய முனிவர்வாழும் இருப்பிடத்து வீதியையடைந்து பண்ணிசைந்த மறைகள்பாடி உள்நிகழுமுணர்வாயெந்நாளு மூயிரினுக்குயிராய் நின்ற சிவபெருமான் பிச்சாடனரைப்போல வாயினர்.—எ-று. (௬௪)

பாட்டியலிசையையங்கண்முனிவர்தம்பன்னிமார்கள்
கேட்டலுமெவர்கொலம்மாகிடைத்தனரவரைக்காண்பான்
வேட்டனவிழிகளின்னேவிரைவினிற்சேறுமென்னா
வீட்டமோடெழுந்துவீதியெய்தியங்கிறைவற்கண்டார்.

(இ-ள்) பாட்டுடன் பொருந்தின இசையை அவ்விடத்திலுள்ள முனிவரின் மனைவியர்கள் கேட்டலும் எவர் கொல்வந்தவர் அவரைக்காணுமாறு எமது கண்கள் விரும்பினவாதலின் விரைந்துசெல்வோமென்று கூட்டத்துடனெழுந்து வீதியையடைந்து இறைவனைக்கண்டார்கள்.—எ-று. (௬௫)

கண்ணுறுமாதர்யாருங்காமனைங்கணையின்மூழ்கி
யுண்ணிகழுணர்வுமாழ்கவுயிர்பதைபதைத்துச்சோர
வண்ணறன்காதலென்னுமாழ்திரைப்பட்டாரன்னூர்
பண்ணியசெய்கைதன்னிற்சிறிதியான்பகர்தலுற்றேன்.

(இ-ள்.) காணப்பெற்ற மாதரனைவரும் மதனனுடைய பஞ்சபாணத்தின் மூழ்கி உள்நிகழு முணர்வுகெட உயிர்துடிதுடித்துச்சோர இறைவனுடைய ஆசையென்னும் ஆழியகடலுளகப்பட்டனர். இனி, அம்மாதராண்டுச்செய்த செய்கையிற் சிறிதினையா னுரைக்கின்றேன்.—எ-று. (௬௬)

வேறு.

காயமேலணிகண்டிலமித்தவர்
தூயபாடலைத்துண்ணெனக்கேட்டலு
மேயகாமத்தின்வீழ்ந்தனமாகையான்
மாயமேயிவ்வடிவமென்பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் இத்தவத்தவரின் உடலத்தின்மீது ஆபரணங்களைக் கண்டிலேம் இவரினினியபாடலை விரைந்து கேட்டவுடனே பொருந்திய காமத்தின் விழுந்தே மாதலின் இவ்வடிவம் மாயமே என்பார்.—எ-று. (சஎ)

ஐயர்செய்கையறிந்தன மிவ்விடைப்
பையவந்துபலிதனைக்கேட்பது
மெய்யதன்றிதுமெல்லியலார்தமை
மையல்செய்திடவந்ததென்பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் நாம் ஐயரின் செய்கையை யறிந்தேம் இவர் இவ்விடை மெல்லெனவந்து பிச்சையைக்கேட்பது உண்மையன்று இச்செயல் பெண்களை மையல் செய்திடவந்தது என்பார்.—எ-று. (சஅ)

நன்றுநன்றிந்தநற்றவர்க்காந்துகி
லொன்றுநல்கியுணவளித்தோவிலா
மன்றலின்புறமங்கையரேவரு
மின்றுகொல்லென்றிரங்குகின்றார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் நன்று நன்று இந்த நல்ல தவசிக்கேற்ற வாடையொன்று கொடுத்துண்டியளித்துக் கெடாத கலியாண சுகமெய்த எந்தமாதருமில்லாது போயினர் கொல் என்று வருந்தினார்கள்.—எ-று. (சக)

மாறிலாவிவ்வனத்திடைவந்தனன்
வேறொரூரிடைமேவிலன்போலுமாற்
றேறில்யாமுனஞ்செய்திடுசெய்தவப்
பேறிதாமெனப்பேசுகின்றார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் ஒப்பற்ற விவ்வனத்துக்குவந்தான் மற்றோரூரினுஞ்சென்றானில்லைபோலும் ஆராய்ந்து தெளியுமிடத்து இது யாமுன்னஞ்செய்துள்ள தவப்பேறே யாகுமென்றுரைத்தார்கள்.—எ-று. (ருo)

ஈண்டுவந்தவிருந்தவன்யாரையும்
வேண்டலன்னிதுமெய்ம்மையவன்பதம்
பூண்டுகாதலிற்போற்றுனர்போலமெய்
தீண்டுதும்மெனச்செப்புகின்றார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் இங்குப்போந்த பெரியதவத்தினையுடையவிவன் எவரையும் விரும்பான் இன்னதுண்மை ஆதலி னவன்பாதங்களையடைந்து அன்புடன் வணங்குவாரை யொப்ப அவனுடலைத் தொடுதும் என்று கூறினார்கள்.—எ-று. (ருக)

பூணிலங்கியபொற்றொடிசங்கின
மாணுறுந்துகின்மற்றிவைசோர்தலுங்
காணுகின்றனர்கைநெரித்தஞ்சியே
நாணிவீதிநடுவிருந்தார்சில.

(இ-ள்.) சிலமாதர் ஆபரணங்களாக விளங்கிய பொன்வளைகளும் சங்கினங்களும் மாட்சிமைவாய்ந்த வாடைகளும் முதலிய இவைகள் சோர்வுறுதலும் அச்செயலினைக்கண்டு கைந்நெரித்துப்பயந்து வெட்கமுற்று வீதிநடுவிலிருந்தனர்.—எ-று. (௫௨)

ஏமம்பாயமெய்யெங்கணுங்காமவே
மேம்பாயவைசூழ்ந் துயிர்வாட்டிட
வாமம்பாய்புனல்போன் மயிர்க்காறொறுங்
காமம்பாயக்கலுழுகின் றார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் கலக்கமிகுதியாக உடலினெவ்விடத்தினும் மன்மதன் விடுமம்பானவை பட்டுயிரை வாட்டத்தனத்தி லெழும்பானீரையொப்ப மயிர்க்கால்கள் தோறும் காமநீரொழுக வழுகின்றனர்.—எ-று. (௫௩)

பாசநீங்கிப்பரபதமீதென
வாசையோடுகண்டன்புசெய்வாரென
வாசநீங்கிவளையுகுத்தையர்தங்
கோசநோக்கினர்கும்பிடுவார்சிலர்.

(இ-ள்) சிலமாதர் பாசமொழிந்து இதுவே பரமபதமென்று ஆசையுடன்கண்டு அன்பு செய்வாரையொப்ப ஆடையிழந்து வளையுமுகுத்து' ஐயரின் இலிங்கத்தினைப் பார்த்து வணங்குவார்கள்.—எ-று. (௫௪)

இளையினோடுறுமெந்தைதன்வேட்கையாற்
களையினோடுகதுமெனச்சென்றுபா
லளையினோடுறுமோதனமங்கைவீழ்
வளையினோடுவழங்குகின்றார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர், இசையோடுற்ற வெந்தையினுசையால் இளைப்புடன் விரைந்துசென்று பால் தயிருடன் கலந்த அன்னத்தினை அழகிய கரத்தினின்றும் விழுகின்ற வளையுடன் இடுகின்றனர்.—எ-று. (௫௫)

பாவைமார்முன்பலிக்குறுந்தன்மையா
னீவியின்றியிந்நெற்றியங்கண்ணுதன்
மேவுநந்துகில்வீழ்கினும்வீழுக
வேவமோவெமக்கென் றுரைப்பார்சிலர்.

(இ-ள்) சிலமாதர் இந்நெற்றியங் கண்ணுதல் மாதரெதிரே பிச்சைக்குவருந் தன்மையால் ஆடையின்றி வராநிற்பான் நமதாடைவீழ்கினும் வீழுக அதனுல் நமக்குக் குற்றமோ என்று கூறுவார்கள்.—எ-று. (௫௬)

போயநாணம்புகுந்ததுமாலுளந்
தீயுமானிறைசிந்தியதாருயிர்
வீயுமெய்யும்விளிந்திடுமெம்முயி
ரீயுமெங்களுக்கென் றுரைப்பார்சிலர்.

(இ-ள்) சிலமாதர், இவனுல் வெட்கமும் ஒழிந்தது மயக்கமும் உள்ளத்திற் புகுந்தது உள்ளமுந்தீகின்றது நிறையுஞ்சிந்தியது அரியஉயிரும் அழியும் உடலுமழியும் ஆதலின் எமதுயிரினை எமக்களிப்பானென்றுரைப்பார்.—எ-று. (௫௭)

தண்டலங்கொறவத்தரிரப்பெனக்
கொண்டுசென்றுகுறுகினர்காமமா
மண்டுதீச்சுடவண்போடியாதலு
மண்டர்நாயகன்போலணிந்தார்சிலர்,

(இ-ள்.) சிலமாதர், இத்தவத்தரின் யாசகப்பொருள் அரிசிகொல்லோவென்று அதனை யெடுத்துக்கொண்டவனருகிற் சென்று நெருங்கிய காமாக்கினியால் சுடப்பட்டு வளவியபொடியாதலும் தேவர் தலைவனான சிவபெருமானை ஒப்பத்தமதுடலிற் பூசிக்கொண்டனர்.—எ-று. (ருஅ)

வடிவினாலெலைமமாலுறுத்தாளுமென்
றடியில்வீழினுமாரருள்செய்கிலர்
கடிதுபோவதுபோலுங்கருத்திவர்க்
கிடுகிலீரையமென்றுரைப்பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் எம்மை நமது வடிவினால் மயக்கி ஆளுமென வடியில் வீழ்ந்தாலுமரிய கருணையைச் செய்கின்றிலர் இவரெண்ணம் விரைந்துபோதல் வேண்டுமென்று போலும் இவர்க்குப் பிச்சையிடாதிர் என்றனர்.—எ-று. (ருகூ)

ஆரமற்றனராரமும்வீழமெய்
யீரமற்றனரீரமதன்படை
தீரமற்றனர்தீரவுமேகலா
பாரமற்றனர்பாரமற்றார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர், பொறுமையற்றாராய் முத்துவடமற்றுச் சந்தனப்பூச்சுமுதிர்ந்து வீழ்ந்து உடலீரமற்று மன்மதபாணம் பிளக்கத்தீரமற்று மேகலாபாரமுற்றிலுமற்றாராயினர்.—எ-று. (சுO)

சூலமுண்டுசுடர்விழிமேனிமிர்
பாலமுண்டுபடர்சடையுண்டுசெங்
கோலமுண்டுகுறைமதியுண்டிவ
ராலமுண்டவராகுமென்பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் இவரிடஞ்சூலமுளது ஒளியுடன்மேனிமிர்ந்த விழியினையுடைய நெற்றியுளது படர்ந்தசடையுளது செந்நிறவடிவமுளது இளம்பிறையுளது ஆதலாலிவர் விடபானஞ்செய்த சிவனாரே என்பார்.—எ-று. (சுக)

எந்தையார்தம்மிருங்குறியின்கணே
சிந்துகின்றதிவலையொன்றல்லவோ
வுந்திமேல்வந்துலகனைத்துந்தரு
மந்தநான்முகனாவதென்பார்சிலர்.

(இ-ள்) சிலமாதர் இவ்வெந்தையாரின் பெருமைவாய்ந்த குறியினின்றுஞ் சிந்திய ஒருதுளியன்றோ நாராயணனுந்தியின்மீது தோன்றி உலகமனைத்தையும் படைக்கும் அந்த நான்முகனாகியது என்பார்.—எ-று. (சுஉ)

சங்குமாழியுந்தாங்குதலின்றியே
பொங்குகாமரம்பொன்னந்துகிலொரீஇத்
துங்கமாதவர்துண்ணெனமால்கொள
வங்கண்மேவுமரியையொத்தார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் சங்குசக்கரங்களை எந்திநிற்றலை விடுத்து உயர்ந்த அழகிய பொன்னுடையை யகற்றி யுயர்ச்சிவாய்ந்த சிறந்ததவமுனிவர் துண்ணென்று மயங்குமாறு அங்குச்சென்ற அரியையொத்தனர்.—எ-று.

இம்மாதரும் சங்கயாளவளையும் ஆழியாகிய மோதிரமும் பொன்னாந்துகிலான சேலையும் இன்றி மோகினிகளாய் நிற்றலின் மோகினியான மாலோடொத்தாராயினர் என்க. (சுங)

கட்டுசெஞ்சடைக்கண்ணியினுள்ளகப்
பட்டமானெனப்பார்த்தகண்வாங்கலர்
சட்டுவந்தனிற்றூங்கியவோதன
மிட்டுவெள்ளிடையேமருவார்சிலர்.

(இ-ள்) சிலமாதர், கட்டப்பட்ட செஞ்சடையான வலையுளகப்பட்டமானைப் போல பார்த்த கண் வாங்காதாராய் சட்டுவத்திலேந்திவந்த வன்னத்தினை வெளியிற் சிந்திக்கலங்குவார்கள்.—எ-று. (சுச)

கிளியின்மேற்செலுங்கேழகிளரோதிமங்
களிமயக்குறுகாளகண்டத்திறை
வெளியின்மேனியுமெய்ப்படுகோலமுந்
தெளிகிலாதுதெருமருவார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் கிளிப்பரியை ஏறி நடாத்துகின்ற நிறம் விளங்கும் இரதி தேவியுங்கண்டு களிமயக்கங்கொள்ளத்தக்க பேரழகுடன் நிற்க, விடம்வாய்ந்த கண்டத்தினையுடைய இறைவன் வெளியின் உருவமும் அவ்வுருவிற் பொருந்திய கோலங்களையும் நன்குணராது மயங்கிநின்றனர். (சுரு)

அளியினட்டவடிசில்கொண்டாயிடைக்
களிமயக்கங்கருத்துறவேகியே
யொளியினுக்கொளியாகியுள்ளாருரு
வெளியினுக்குவிரைந்தளிபார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர், மகிழ்ச்சியுடன் சமைத்த அன்னத்தினை எடுத்துக்கொண் டவ்விடத்துக்கு களிமயக்க முள்ளிற் பொருந்தச்சென்று ஒளிக்கொளியான சிவபெருமானின் உருவெளிக் கவ்வன்னத்தினை விரைந்திடுவார்கள்.—எ-று. (சுசு)

அண்ணன்மேனிகண்டார்வமுற்றூடைபோய்ப்
பெண்ணினீர்மைப்பெருங்குறிமூடியுங்
கண்ணைமூடியுங்கைக்கடங்காமையால்
விண்ணைமூடினர்போல்வெள்கினார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர், இறைவன் திருமேனியைக்கண்டு ஆடைபோகிப் பெண்டன்மைக்குரிய பெரிய குறியைக் கையின் மூடியு மதுகைக்கடங்காமையாற் கண்ணை மூடியும் விண்ணை மூடினாரை யொப்ப வெட்கமுற்றனர்.—எ-று. (சுஎ)

விருந்தராயிவண்மேவினிர்விண்ணவர்
மருந்துபோல்வதோர்வண்பதமுண்டவை
யருந்தியேநல்லருள்புரிந்தோரிறை
யிருந்துபோமென்றிசைத்திடுவார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் விருந்தினராக இவ்விடதநுக்கு வந்தவரே தேவாமிர்தம் போலும் வளப்பம்வாய்ந்த சோறுண்டுளது அவையையுண்டு எம்மீது கருணைசெய்து எம்மிடத்து ஒரு இறைப்பொழுது இருந்துபோதிர் என்றனர்.—எ-று. (சுஅ)

கையிலேந்துகலனொருசூலமும்
வையுநம்மனைவந்திடும்பாலொடு
நெய்யுமுண்டியுநிற்றலுமுண்டியா
முய்யநீரிங்குறையுமென்பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர், ஐயமீவிர் நமது மனைக்கு வருவீராக, கையிலேந்திய சூலமும் கபாலமும் வையும் பாலு நெய்யுங்கலந்த உணவினைத்தினந்தோறுமருந்தி யாங்களுய்ய இங்கிருப்பீராக என்பார்.—எ-று (௬௯)

பார்க்குமாதர்க்கும்பல்குழுவாடவ
ரார்க்குமையலளிக்கும்வடிவுளீர்
சீர்க்கும்மோடொன்றுசெங்கைகொண்டெங்கணு
மேற்குமோவிதென்னென்றுரைப்பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் பாராநின்ற பெண்களுக்கு மவரன்றியுள்ள பல கூட்டத்தினரான புருடரனைவருக்கும் மோகமளிக்கும் வடிவுடையாரே சிறந்த ஓடொன்றைச் செங்கையிற்கொண்டு எவ்விடங்களிலும் இரக்கலாமோ இஃதெதன் என்பார்.

இன்றுமைக்கண்டியாங்களுமாடைபோ
யொன்றுகாதலுற்றேய்ந்தனமிங்கிது
நன்றுகூடுதிர்நங்களைநீரென
நின்றுகூறிநெடிதுயிர்த்தார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் இன்றும்மைக்கண்டு நாங்களும் ஆடைபோகிப் பொருந்திய காதலுற்று ஓய்ந்தேம் இது நல்லது எங்களை நீர் சேருவீராக என்று கூறிநின்று பெருமூச்சு விடுத்தனர்.—எ-று. (௭௧)

நந்துமிவ்வனநண்ணியமாதவ
ரிந்தவேலையிலேகலர்யாவதுஞ்
சிந்தைகொள்ளலிர்சேக்கையுண்டோரிறை
வந்துபோமெனவாய்மலர்ந்தார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர், வளமிகுந்த இவ்வனத்தில் இருக்கும் எங்கள் மாதவர்கள் இப்பொழுதிங்குவரார் ஆதலின் எதுவும் எண்ணுதிர் படுக்கையுளது ஒரு இறைப்பொழுதுவந்து போவீராக என்றுரைத்தனர்.—எ-று. (௭௨)

எம்மையாரிடமாதரென்றெண்ணியோ
வெம்மைபேசினுமேவுகிலீர்பவ
மும்மைமேவுங்கொலோவொழிந்தரர்கள்போ
லம்மவந்தெமையாளுமென்பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர். நீவிர் எங்களைத் தவப்பெண்டிரென்று கருதியோ எமது விரகதாபத்தை யுரைத்தும் எம்மை அணைகின்றிலீர் பிறரை யொப்பப் பாவமும்மை யணுகுமோ மேவாதாதலின் எம்மை வந்தணைவீராக என்பார்.—எ-று. (௭௩)

ஆடைதாருமதன்றெனிற்கொண்டதோர்
வேடைதீரும்விளம்புகிலீரெனிற்
கூடவாருங்குறிப்புமக்கென்னெனப்
பாடுசேர்ந்துபகர்ந்திடுவார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் அவர்பக்கத்தினை அடைந்து ஐய! ஆடையைத்தரு திர் தராவிடின் யாங்கள்கொண்ட விரகதாபத்தை ஒழியும் ஒன்று முரையீராயின் எம்முடன் வருவீராக உமதெண்ணந்தா னென்னெனக்கூறினர்.—எ-று. (௭௪)

ஒல்லுகின்றதுமக்கிவ்வடிவினுற்
செல்லுகிளறதெரிவையர்யாரையுங்
கொல்லுகின்றதுவோபலிகொள்வதோ
சொல்லுமென்றுதொடங்கிடுவார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர் உமக்கிந்த வழகிய வடிவத்தாற் பொருந்திய தொழிலாயுள்ளது செல்லாநின்ற மாதரனைவரையும் கொல்வதுவோ? அல்லது பலியேற்பதுவோ உரைப்பீராக எனப்பின்தொடர்ந்தனர்.—எ-று. (எ௫)

போற்றியிங்கெமைப்புல்லுமென்றுமா
லாற்றியின்பத்தணைகிலிர்யாவருஞ்
சாற்றுகின்றனர்சங்கரனென்றுமை
யேற்றதோவதற்கென்றுரைப்பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர், நாங்களும்மைத் துதித்து எம்மையணைதிரென்றாலும் எங்கள் மயக்கினை யொழித்து இன்பத்துடன் சேரகில்லீர் உம்மைச்சங்கரனென்று கூறுகின்றனர். அதற்குத்தக்கதோவிச்செயல் என்று கூறுவார்கள்.—எ-று. சங்கரன்–இன்பத்தைச் செய்பவன். (எ௬)

அணங்கினல்லவரண்ணறன்கோசமே
னுணங்குமாலொடுநோக்கியதற்குமுன்
வணங்குமாறெனமற்றவர்நாணுபு
கணங்களோடுகவிழ்ந்துசென்றார்சிலர்.

(இ-ள்.) தேவமாதரினுஞ்சிறந்த சில மாதர்கள் இறைவனுடைய லிலிங்கத்தினை மிகுந்த மயக்கத்துடன் பார்த்து அதற்கு வணங்குவாரைப்போன்று தலைகவிழ்ந்து சென்றனர்.—எ-று. (எஎ)

வேறு.

இன்னவர்பலருஞ்சூழாவீண்டுபுகலையுஞ்சங்குந்
துன்னியகலனுநாணுந்துறப்பருங்கற்புஞ்சிந்தி
மன்னுயிரொன்றுந்தாங்கிமாலொடுதொடரவெங்கோன்
பொன்னடிக்கமலஞ்சேப்பப்புனிதமாமறுகிற்போனன்.

(இ-ள்.) இவ்வாறிவர்கள் பலரு நெருங்கிக் கலையுஞ் சங்கும் உடலினெருங்கிய அணிகளும் நாணமும் துறத்தற்கரிய கற்புஞ்சிந்தி உயிரொன்றையுந்தாங்கி விரகதாபங்கொண்டு பின்றொடராநிற்க வெமதிறைவன் பொன்னடிக்கமலம் கன்றுமாறு சிறந்த புனிதமான வீதியிற் சென்றார்.—எ-று. (எஅ)

சில்லிடைவீணைநாதஞ்செய்திடுமஃதேயன்றிச்
சில்லிடைமறைகள்பாடுஞ்சில்லிடைச்சிவநூலோதுஞ்
சில்லிடைத்தன்மெய்காட்டுஞ்சில்லிடையையங்கேட்குஞ்
சில்லிடையன்பர்போற்றன்சீர்த்தியைப்புகழ்ந்துசெல்லும்.

(இ-ள்.) இறைவர் சிலவிடங்களில் வீணாகானஞ் செய்வார் அதுவன்றிச் சில விடங்களில் வேதகானஞ்செய்வர் சில விடங்களில் ஆகமங்களை யுரைப்பர் சில விடங்களில் தமது உண்மையைக்காட்டுவர் சிலவிடங்களிற் பிச்சை கேட்பர் சிலவிடங்களில் அன்பர்களைப்போலத் தமது கீர்த்தியைப் புகழ்ந்துரைத்துச் செல்லாநிற்பர்.

தேமலர்க்கமலையன்னதெரிவையர்தொழுங்காலீசன்
மாமலர்த்தாண்மேலிட்டமலர்களுமன்னார்சிந்துந்
தூமலர்த்தொடையுஞ்சங்குந்துலங்குபொற்கலனுங்காமன்
பூமலர்த்தொடையுமீண்டப்பொலிந்ததப்புனிதவீதி.

(இ-ள்.) அப்புனித வீதி தேனினையுடைய தாமரை மலரிலிருக்குந் திருமகளனைய பெண்கள் வணக்கஞ்செய்யும்பொழுது ஈசனுடைய திருவடித்தாமரைமலரி

லிட்ட நல்லமலர்மாலையும் வளையும் விளங்குகின்ற பொன்னாபரணமும் மன்மதனுடைய மலரம்பும் நெருங்கி விளங்கியது.—எ-று. (௮௦)

ஊனுலாமுயிர்கட்கெல்லாமுணர்வுடனுயிராய்நின்றோன்
வானுலாம்பலிக்குவந்தவடிவினைநினைக்கின்மாயோன்
றானுமாலாகியின்னுந்தளர்வுறுமென்றாலம்மா
வேனையோர்செய்கைதன்னையினைத்தெனவியம்பலாமோ.

(இ-ள்.) ஊனுடையுடலுளுற்ற உயிரனைத்திற்கும் உயிராய் நின்ற இறைவன் பெருமை வாய்ந்த பிச்சைக்கு வந்த உருவினை நினைத்தால் மோகினியான மாயோனு மாலெய்தி இன்னந்தளர்வுறுவானானாற் பிறர்செயலை இத்தகைத்தென்று கூறமுடியுமோ.—எ-று. (௮௧)

செந்திருவனையமேனிச்சீறடிக்கருங்கட்செவ்வாய்ப்
பைந்தொடிமகளிர்கற்பாம்பரவைகண்மதிக்குமெண்ணின்
மந்தரம்போன்றானெங்கோன்மற்றவர்க்கெல்லாம்வெவ்வே
றிந்திரஞாலமென்னவெல்லையிலுருக்கொண்டெய்தி.

(இ-ள்.) வேறு வேறாக இந்திரசாலம்போல அளவற்ற உருவங்களைக்கொண்டு சென்று செவ்விய திருமகளனைய மேனியினையும் சிறிய பாதங்களையும் கரியகண்களையும் செவ்விய வாயையும் உடைய பசியதொடியணிந்த மாதர்களின் கற்பென்னுங் கடலைக்கடைகின்ற அளவற்ற மந்தரமலைகளை எமதிறைவனொத்தனன்.—எ-று.

நீண்டவந்நிகமம்புக்கநிமலன்மேலார்வம்வைத்துக்
காண்டகுமாதர்யாருங்கருவுறுநிலையராகி
மாண்டகுவயாவுமற்றோர்வருத்தமுமின்றியாங்கே
யாண்டகைமகார்களாகவாறெண்ணாயிரரைப்பெற்றார்.

(இ-ள்.) நீளமான வவ்வீதியிற் புகுந்த சிவபிரான்மீது இச்சைவைத்துக் காணத்தகுந்த வம்மாதரனைவரும் கருவுற்ற நிலையினராய் மாட்சிமையுற்ற சூல் வருத்தமும் வேறு வருத்தமுமின்றி அவ்விடத்திலேயே ஆண்மக்களாக நாற்பத்தெண்ணாயிரம் பெயர்களைப் பெற்றனர்.—எ-று. (௮௩)

எந்தைபால்விழைவுசெய்தாங்கிமைப்பினுண்மடவாரீன்ற
மைந்தர்கள்யாருமையன்மலரடிமுன்னர்த்தாழ்ந்து
புந்திகொளன்பினின்றுபோற்றிடவனையனீவிர்
நந்தமையுன்னியீண்டுநற்றவத்திருத்திரென்றான்.

(இ-ள்.) எம்பெருமானிடத் தாசைவைத்து இமைப்பொழுதினுள் அப்பெண்கள்பெற்ற மைந்தரனைவரும் சுவாமியின் மலரடிகளை நினைத்து வணங்கி உள்ளிற் பொருந்திய அன்புடன்நின்று துதிக்க அப்பெருமான் நீங்கள் நம்மை நினைத்து நல்ல தவஞ்செய்வாராய் இவ்விடத்தி லிருங்களென் றருளிச்செய்தனர்.—எ-று. (௮௪)

நெட்டிருஞ்சடிலமீதுநிலவினைமுடித்தவண்ணல்
கட்டுரைசெய்தல்கேளாக்கைதொழூஉவிடைபெற்றேகி
யுட்டெளிவெய்திநோற்றாங்கொருசிறையிருந்தார்நாற்பா
னெட்டுளபத்துநூற்றினெண்டொகைமுனிவர்யாரும்.

(இ-ள்.) நெடிய பெரிய சடையின்மீது நிலவினையணிந்த அண்ணலார் திருவாய் மலர்ந்தருளியதனைக்கேட்டு வணங்கிவிடைபெற்றுச் சென்று உள்ளிற் தெளிவடைந்து தவஞ்செய்வாரா யங்கொருபுறத்திலிருந்தனர் நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும்.—எ-று. (௮௫)

சேயெனவந்தோர்நோற்பச்சென்றுழித்தெரிவைமாரா
மாயிரும்பரவைநீத்தமால்கொடுதொடர்ந்துசெல்லப்
போயினனென்பமன்னேபுரியிகந்தரிமுன்னீந்த
வாயிரங்கமலங்கொண்டோராழியையளிக்கவல்லோன்.

(இ-ள்.) அரி முன்னருச்சித்த ஆயிரங்கமலங்களை ஏற்றுக்கொண்டொரு சக்கரப்படையை யம்மாயோனுக்களிக்க வல்ல சிவபெருமான் மக்களென வந்தார் தவம்புரிவான் சென்றவுடனே பெண்களான மிகவும்பெரிய கடல்வெள்ளம் காமமயக்கங்கொண்டு தொடர்ந்துடன் வராநிற்ப அந்நகரினைவிடுத்துச் சென்றனர் என்று கூறுவார்கள்.—எ-று. (அசு)

போதலுமதனைநோக்கிப்பொற்றொடியாகிநின்ற
சீதரனமலன்றன்பாற்சேறலுந்தொடர்ந்துபின்னர்
மாதவர்யாரும்போந்தார்மற்றதனியல்புநோக்கி
னேதமில்கங்கைபாலாம்யமுனையைக்கடுத்ததன்றே.

(இ-ள்.) அங்ஙனஞ் செல்லுதலும் அதனைப்பார்த்து மாதுருவங்கொண்டு நின்றமாயவன் சிவபெருமானிடத்தில் வருதலும் அவனைத்தொடர்ந்து பின்னாக அங்குள்ள மாதவரனைவரும் வந்தார்கள் அச்செயலைப்பார்த்தாற் குற்றமற்ற கங்கையை யடையும் யமுனாநதியை ஒத்தது.—எ-று. (அஎ)

மெல்லியல்வடிவமாகிமேயினான்றன்பால்வீழ்ந்து
செல்லுறுமுனிவராற்றத்தீவினைபுரிந்தநீரா
லல்லுறழ்மிடற்றுப்புத்தேளவர்க்கெலாந்தனதாயுள்ள
தொல்லுருமறைத்துவேறோர்வடிவொடுதோன்றிநின்றான்.

(இ-ள்.) பெண்வடிவங்கொண்டு நின்ற திருமாலைக்கண்டு மோகமுற்றுப்பின்னே செல்லுமுனிவரனைவரும் மிகவுந் தீவினையைச்செய்த தன்மையால் இருளனைய கண்டத்தினையுடைய சிவபெருமான் அவரனைவருக்குந் தனது பழைய உருவினைமறைத்து வேறொருவடிவுடன் தோன்றி நின்றனர்.—எ-று. (அஅ)

மடந்தையாய்வந்தமாலோன்மணிமிடற்றிறைவன்றன்பா
லடைந்திடமுனிவர்தத்தமரிவையர்தம்மைநோக்கித்
தொடர்ந்தனரிவருநம்போற்றோற்றனர்கலையுநாணுங்
கடந்தனரிவனைக்கண்டுகாதலித்தார்கொலென்றார்.

(இ-ள்.) பெண்ணாகி வந்தமாலோன் நீலகண்டரான இறைவன்பக்கம் அடைதலும் முனிவர் தத்தம் மனைவியர்களைப்பார்த்து இவரும் பின்தொடர்ந்து வந்தனர் நம்மைப்போலகலையு நாணுந்தோற்றனர் ஊரெல்லையையுங் கடந்தனர் இவனைக்கண்டு காமுற்றனரோ என்றனர்.—எ-று. (அகூ)

மோனமாநெறியினேற்குமுனிவரர்முகுந்தன்றன்பா
லானமால்சிறிதுநீங்கியருங்குலப்பன்னிமார்க
ளீனமாநிலையைநோக்கியின்னலுற்றிரங்கியேங்கி
மானமேல்கொண்டுவீடாமன்னுயிரோடுநின்றார்.

(இ-ள்.) மௌனவழியினின்று தவஞ்செய்கின்ற முனிவரர் முகுந்தனிடம் வைத்த மோகத்தைச் சிறிதொழிந்து அரிய குலபத்தினியரின் இழிந்த செயலைப்பார்த்து வருந்தி இரங்கி ஏங்கி அபிமான மேற்கொண்டு இறவா உயிருடன் நின்றனர்.

பொன்னுலாமல்குலாளிப்பெற்றொடியொருத்தியெம்பான்
மன்னியேதவத்தைச்சிந்திமால்செய்தாளொருவன்வந்து
பன்னிமார்கற்பைவீட்டிப்படுத்தினன்மோகமந்தோ
வென்னமாயங்கொலீதென்றெண்ணினர்யாருமீண்டி.

(இ-ள்.) பொன்னணிபொருந்திய வல்குலாளானவிப்பொன்னந்தொடியினை யுடையாளொருத்தி எம்மிடத்துக்கு வந்து தவத்தைச்சிந்தி மோகமுண்டாக்கினள். ஒருவன்வந்து நமது மனைவியரின் கற்பை யழித்தனன் ஐயோ இதென்னமாயம் என்னமோகம் என்று நினைந்து அனைவருமொன்றுசேர்ந்து ஆலோசனை செய்தனர்.

எண்ணியமுனிவர்தேறியியம்புவார்கயிலைவைகுங்
கண்ணுதலாகுமின்னோர்கற்பினையுடைத்தான்யாமுன்
பண்ணியதவத்தைவீட்டப்பைந்தொடியாகிவந்தோன்
மண்ணுலகனைத்துமுண்டமாயவன்போலுமன்றே.

(இ-ள்.) ஆலோசனைசெய்த முனிவர்கள் தெளிவுற்றுரைத்தனர் இம்மாதரின் கற்பினை உடைத்தவன் கைலையிலிருக்குங் கண்ணுதலாகும் நாமுன் செய்ததவத்தினை யழிக்கப் பெண்ணுருவங்கொண்டு வந்தோன் மண்ணுலகனைத்து முண்டமாயவனே யாவன்.—எ-று. (கஉ)

நந்தவந்தன்னைவீட்டநாரணன்றானேநம்பால்
வந்தனனன்றாலீசன்பணியினான்மாயைசெய்தா
னிந்திரைகேள்வன்செய்ததென்கொலோவெமதுநோன்பு
சிந்தினுநன்றாலின்னுந்தீர்வுநேர்ந்தியற்றுகின்றேம்.

(இ-ள்.) நமது தவத்தினையழிக்க நாராயணனே நம்மிடத்துவந்திலன் ஈசன் கட்டளையான்மாயைசெய்தனன் திருமகள் மணாளன் செய்ததென்னே எமது நோன் பழியினுநன்று இன்னமதற்குத் தீர்வுசெய்து பின்னரும்செய்கின்றேம்.—எ-று. (கூ)

அங்கையிற்கபாலொன்றேந்தியையமேற்றிடுவான்போலச்
சங்கரன்வந்துமற்றித்தாருகாவனத்தின்மேவு
மங்கையர்கற்புச்சிந்தும்வசையுரைக்கொழிவுமுண்டோ
செங்கதிர்மதியஞ்செல்லுந்திசையெலாம்பரவுமன்றே.

(இ-ள்.) அழகிய கையில்கபால மொன்றேந்திப் பிச்சைவாங்குவான்போல சங்கரனெய்தி இத்தாருகாவனத்தில் வாழும்பெண்களின் கற்பையழித்தவசையுரைக்கு முடிவுமுளதோ இம்மொழி சூரியசந்திர ருலவும்திசையெலாம் பரவுமே.—எ-று. (கச)

தானொருவேடங்கொண்டுதண்டுளவலங்கற்சென்னி
வானவன்றன்னைவிட்டுமற்றிவைபனைத்துஞ்செய்தோன்
கானுறுகடுக்கைவேய்ந்தகண்ணுதலேகொலென்றே
மானவெங்கனலுஞ்சீற்றவன்னியுங்கிளரநின்றார்.

(இ-ள்.) தானொருபிச்சாடன வேடங்கொண்டு தண்ணியதுளவமாலையணிந் தசிரசினையுடைய தேவனான நாராயணனை விட்டு இக்காரியமனைத்துஞ் செய்தவன் மணம்பொருந்திய கொன்றையணிந்த கண்ணுதலேகொல் என்று அபிமானமான வெவ்வியதீயும் கோபத்தீயும் அதிகரிக்கநின்றனர்.—எ-று. (கடு)

நின்றிடுமுனிவர்யாருநெருப்பெழவிழித்துச்செம்பொற்
குன்றுறழ்முலையினார்தங்குழுவினைக்கூவியார்பின்
சென்றிடுகின்றீர்கற்பின்செய்கையதிகந்தீரிங்ஙன்
பொன்றுதலழகிதன்றேற்போமினும்புரியினென்றார்.

(இ-ள்.) அங்ஙனநின்ற முனிவரனைவரும் தீப்பறக்கப்பார்த்துச் செவ்விய பொன்மலைபோன்ற தனத்தினரான பெண்களை விளித்து எவர்பின்னே போகின்றீர்கள் கற்பிலக்கணத்தினை விடுத்தீர் இங்ஙனே இறத்தலழகிது அன்றேல் நுமதூருக்குச் செல்லுங்கள் என்றனர்.—எ-று. (கூசு)

இத்திறமாதர்கேளாவீங்கிவர்தம்மைக்கண்டோர்
முத்தாரயுறுவதன்றிமுடிவரோமுனிவர்தாமும்
பித்தர்கொலென்றேயன்னான்பிறங்குருவினையுட்கொண்டு
நித்தளதருளான்மீண்டுநீணகரிருக்கைபுக்கார்.

(இ-ள்.) இம்மொழியை மாதர்கேட்டு இவரைத்தரிசித்தவர்கள் முத்தராயிருத்தலையன்றி இறந்துபடுவோர்களோ இம்முனிவரும் பித்தர்கொல் என அப்பிச்சாடனமூர்த்தியின் பிரகாசிக்கின்ற உருவினை உட்கொண்டு அழிவற்ற சிவகிருபையாற் திரும்பிநீண்ட தமதுநகரிலுள்ள இருப்பிடங்களை அடைந்தனர்.—எ-று. (கூஎ)

நீணகர்புகுந்தபின்னர்நேரிழைமகடூஉவாகித்
தாணுவினயலினின்றதண்டுளவலங்கற்புத்தே
ளாணுவினுருவுகொண்டானருளினாலனையதன்மை
காணியவிரிஞ்சனாதிக்கடவுளர்யாரும்வந்தார்.

(இ-ள்.) நீண்டநகரத்தை அடைந்தபின்னர் நேரிழைமடைந்தையாகிச் சிவபெருமானருகில் நின்றதண்ணிய துளவமாலையையுடைய நாராயணன் ஆணுருவங்கொண்டனன் சிவகிருபையாலனைய தன்மையைக் காணுதற்குப் பிரமன்முதலிய தேவரனைவரும் வந்தனர்.—எ-று. (கூஅ)

கடவுளர்யாரும்வந்தகாலையிலங்கணின்ற
முடிவறுமுதல்வன்றன்னைமுனிவொடுநோக்கியீண்டு
கொடியதோர்வேள்வியாற்றிக்கொல்லுதுமிவனையென்னு
மடமைகொண்முனிவர்சூழ்ந்துமற்றொர்தீமகத்தைச்செய்தார்.

(இ-ள்.) தேவரனைவரும் வந்தவுடனே அவ்விடத்தினின்ற முடிவற்றமுதல்வனைக்கோபத்துடன் பார்த்து இவ்விடத்துக் கொடியதொரு யாகத்தினைச் செய்து இவனைக்கொல்லுவோமென அறிவற்றமுனிவர் ஆலோசித்து ஒரு கொடியயாகத்தினைச் செய்தனர்.—எ-று. (கூகூ)

எள்ளுதற்குரியவேள்வியெரியதனிடையேயாரு
முள்ளுதற்கரியதோற்றத்துருமிடிக்குரலபேழ்வாய்த்
தள்ளுதற்கரியசீற்றத்தழல்விழித்தறுகட்செங்கால்
வள்ளுகிர்ப்புலியொன்றம்மாவல்லையினெழுந்ததன்றே.

(இ-ள்.) இகழுதற்குரிய யாகத்தீயினிடத்து எவரும்நினைத்தற்கரிய உருவினையுடைய ஆனைடிக்குரலினையும் பிளந்தவாயினையும் தள்ளுதற்கரிய கோபக்குறிகாட்டும் தீக்கண்களையும் அஞ்சாமையினையும் செவ்வியகாலினையும் கூரிய நகத்தினையுமுடைய ஒரு புலி விரைந்தெழுந்தது.—எ-று. (௬00)

எழுதருபுலியைநோக்கியீசனைமுடித்தியென்றே
தொழுதனர்விடுப்பவாங்கேதுண்ணெனவருதலோடு
மழல்விழிப்பரமனோர்போயங்கையாலுரித்துமற்றவ்
வுழுவையந்தோலைமுன்னமுடுத்தனன்றானையொப்ப.

(இ-ள்.) அங்ஙனமெழுந்த புலியைப்பார்த்து நீ ஈசனைக்கொல்வாயாகவென்று வணங்கி விடுப்ப அது ஈசன் நிற்கும் அவ்விடத்துக்கு விரைந்து வருதலும் தீக் கண்ணினையுடைய சிவபெருமானெதிரேசென்று அதனை அழகியகையாலுரித்து அப் புலித்தோலை முதலில் ஆடையொப்ப உடுத்தனர்.—எ-று, (க0க)

இங்கிதுபோயபின்றையிறுதிசெய்கணிச்சியொன்று
செங்கனலிடையிற்றோன்றித்தீயவர்விடுப்பவேகிச்
சங்கரன்றனதுமுன்னஞ்சார்தலுமதனைப்பற்றி
யங்கையிலேந்திநீநம்மடுப்படையாதியென்றான்.

(இ-ள்.) இப்புலி இவ்வாறொழிந்தபின்னர் கொலைபுரியுமழுவொன்று செவ்விய தீயினிடத்துத் தோன்றிக்கொடிய முனிவரால் விடுக்கப்பட்டுச்சென்று சிவபெருமானெதிரே வருதலும் அதனைப்பிடித்து அகங்கையிலேந்தி நீ நமக்கு அடுந்தொழிற்குரிய ஆயுதமாகக்கடவையென்றனர்.—எ-று. (க0உ)

பின்னுறவொருமானங்கட்பிறந்ததுமுனிவரெல்லா
மன்னதையரன்பாலுய்ப்பவந்தரத்தெழுந்துபாய்ந்து
தன்னெடுங்குரலால்வல்லேசராசரம்வீட்டிச்செல்ல
முன்னவனுயிர்களற்றான்முடிவுறாதருட்கண்வைத்தான்.

(இ-ள்.) பின்னர் ஒரு மானவ்விடத்திற் பிறந்தது முனிவரெல்லாருமாக அதனைச் சிவபெருமானிடமனுப்ப அது, வானிலெழுந்து பாய்ந்து தனது நெடியகுரலால் விரைவாகச்சராசரங்களை அழித்துச் செல்ல முன்னவன் அம்மானாலுயிர்களழியாத தன்மீது கருணைநாட்டம் வைத்தனன்.—எ-று. (க0௩)

மற்றதன்பின்றையெந்தைமான்பிணையதனைநோக்கித்
தெற்றெனவிளித்துநந்தஞ்செவியினுக்கணித்தாய்மேவி
நிற்றலுங்கூவுகென்றேநீடருள்செய்துவாமப்
பொற்றடங்கையிற்பற்றிப்பொருக்கெனவேந்திநின்றான்.

(இ-ள்.) பின்னரெந்தையான சிவபெருமான் அப்பெண்மானைப்பார்த்து விரைவாக வாவெனவழைத்து நமது காதிற்கருகாகப் பொருந்தித் தினமிரைவாயாகவென அருள்புரிந்து நீண்டவழகிய இடக்கரத்தாற்பிடித்துவிரைவாக எந்திநின்றனன்

ஏந்தியபின்னர்வேள்வியெரியழற்கிடையேயெண்ணில்
பாந்தளங்கெழுந்துதீயோர்பணியினாற்சீற்றத்தோடும்
போந்தனவவற்றைமாயோன்புள்ளினுக்கஞ்சித்தன்பாற்
சேர்ந்திடுபணிகளோடுஞ்செவ்விதிற்புனைத்தானெங்கோன்.

(இ-ள்.) மானினையேந்திய பின்னர் வேள்வித் தீயினிடத்து அளவற்ற பாம்பு தோன்றிக் கொடியவம் முனிவரின் கட்டளையாற் கோபத்துடன் வந்தன. அவைகளை மாயோனின் கருடப்பறவைக்குப்பயந்து தம்மிடஞ் சேர்ந்துள்ள பாம்புகளுடன் எங்கோன் செவ்வையாகத் தரித்தனன்.—எ-று. (க0௫)

பணியெலாம்பணியதாகிப்பரனிடைத்திகழப்பின்ன
ரணிகெழுகனலினுப்பணசனிகளெழுந்தாலென்னத்
கணிதமில்பூதவெள்ளங்கதுமெனவெழலுநீவிர்
மணிகிளர்மிடற்றோன்வன்மைமாற்றுதிரென்றேயுய்த்தார்.

(இ-ள்.) அரவமனைத்தும் ஆபரணமாகிச் சிவபெருமானிடத்துவிளங்குதலும் அதன்பின்னர் அழகுடன் விளங்குகின்ற தீயின்நடுவண் இடிகள் தோன்றினாற் போல அளவற்றபூதவெள்ளம் விரைந்து தோன்றுதலும் அம்முனிவர் அப்பூதர்களை நீங்கள் நீலகண்டனுடைய வன்மையை நீக்குங்கள் என்றனுப்பினார்கள்.—எ-று (க0௬)

ஆரிடரேவல்போற்றியண்டமுந்துளங்கவார்த்துச்
சாரதர்வருதலோடுஞ்சங்கரனவரைநோக்கி
நீரெமையகன்றிடாதுநிற்றலுந்தானையாகிச்
சேருதிரென்றானுற்றோர்தீவினைதீர்க்கவல்லான்.

(இ-ள்.) முனிவரின் கட்டளையை யங்கீகரித்துப் பூதர்கள் அண்டமுநடுங்க ஆர்த்துவருதலும் அடைந்தார் தீவினையகற்ற வல்ல சிவபெருமான் அப்பூதர்களைப்பார்த்து நீவிர் எம்மைவிட்டு விலகாமல் எப்பொழுது மெமதுசேனையாக விருத்திரென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௧0எ)

ஆற்றல்சேர்பூதர்யாருமாதியீதுரைப்பவன்னாற்
போற்றியேதானையாகிப்புடையுறநிற்றலோடுஞ்
சீற்றமாமுனிவர்வேள்வித்தீயில்வெண்டலைதானொன்று
தோற்றியேயுலகம்யாவுந்தொலையநக்கெழுந்ததன்றே.

(இ-ள்.) வன்மைபொருந்திய பூதரனைவரும் முதற்கடவுளாலிவ்வாறு கூறப்பட்டவுடனே அப்பெருமானை வணங்கியவருக்குச் சேனையாகி அருகிற்பொருந்தி நிற்றலும் சீற்றம்பொருந்திய முனிவரினோமத்தியில் வெண்டலையொன்று தோன்றி உலகமனைத்து மழியுமாறு சிரித்தெழுந்தது.—எ-று. (௧0அ)

நக்கெழுசிரத்தையன்னோர்நாதன்மேல்விடுத்தலோடு
மக்கணமணுகவற்றாலுலகிலமதிறவாவண்ண
முக்கணனருள்செய்தந்தமுண்டமுண்டகைக்கபற்றிச்
செக்கரஞ்சடைமேற்கொண்டுன்செயலினைப்புரிதியென்றான்.

(இ-ள்.) சிரித்தெழுந்த வெண்டலையையவர்கள் சிவபெருமான்மீது விடுதலும் அன்னதுடனே வராநிற்ப வதனால் உலகம் யாவையும் அழியாவண்ணம் திரிநேத்திரரான சிவபெருமான் அருள்புரிந்து அந்த முண்டத்தினைத் தாமரைமலர்போன்ற திருக்கரத்தாற்பிடித்துச் செவ்வானம் போன்றசடைமீதுவைத்து நினது செயலினைச் செய்வாயாக என்றனர்.—எ-று. (௧0௯)

அறுகுறைமுடிமேற்கொண்டவமலனைநோக்கிநோக்கி
மறுகியமுனிவர்தத்தம்வாய்மைமந்திரங்களேவி
யிறுதிசெய்திடுதிரென்னவினையவைதுடியொன்றாகிச்
செறிதருபுவனம்யாவுஞ்செவிடுசுறவொலித்ததன்றே.

(இ-ள்.) அற்றதலைக் குறையைச்சிரமீதுகொண்ட சுவாமியைப் பார்த்துப்பார்த்து அச்சமுற்ற முனிவர்கள் தங்களிடம் உண்மையாக விளங்கும் மந்திரங்களையனுப்பி அழியுங்களென்று கூற அம்மந்திரங்கள் ஒரு உடுக்கையின் உருவமெய்தி நெடிய புவனமனைத்துஞ் செவிபட ஒலித்தது.—எ-று. (௧௧0)

பொருவருந்துடியினோதைபொம்மெனக்கேட்டலோடுந்
தரணியின்வானினுள்ளசராசரம்யாவுமீச
னருளினால்வீடிற்றில்லையசனியினார்ப்புக்கேட்ட
வுரகர்தங்குலங்களென்னவொய்யெனமயங்கிற்றன்றே.

(இ-ள்.) ஒப்பற்ற உடுக்கையினோசையை விரைந்து கேட்டவுடனே உலகிலும் வானத்திலுமுள்ள சராசரங்களைத்தும் ஈசன் கருணையாலிறவாதிருந்தன ஆயினும், இடியினோசையைக்கேட்ட அரவகுலங்களைப்போல விரைந்து மயங்கின.—எ-று.

அத்துடியார்த்துச்செவ்வேயமலன்முன்னணுகமற்றைக்
கைத்தலமதனிற்பற்றிக்கறங்குதிகன்னத்தென்று

வித்தகமரபில்யாரும்வியப்புறவேந்திநின்று
னித்திறம்யாரேசெய்வாரென்றனர்முனிவரெல்லாம்.

(இ-ள்.) அவ்வுடுக்கையார வாரஞ்செய்துகொண்டு நேராக இறைவனெதிரே வருதலும் மற்றொருகையிலதனைப்பிடித்து எனதுகாதின் முழங்குதி என்ன விசேடத் தன்மையாக எவரும் வியந்து கூறுமாறு ஏந்திநின்றனன் உடனே முனிவரனைவரும் இத்தன்மையான செயலினையெவரே செய்யத்தக்கார் என்று கூறினார்கள்.—எ-று. ()

இனையதுகண்டுபின்னுமிறுதிசெய்யிறைவற்கின்று
லனையதென்றறிதறோராடுசினங்கடவத்தொல்லூழ்
வினையதுவிளைவாற்பின்னும்வேள்வியையியற்றலுற்றார்
முனிவரர்கணற்கணேயோர்முயலகனெழுந்ததன்றே.

(இ-ள்.) இச்செயலினைப்பார்த்துப் பின்னரும் சங்காரமூர்த்திக்குச் சங்காரமின்றென்பதனை உணராதாராய்அடத்தக்க கோபந்தம்மைச்செலுத்த முன்னூழ் வினையினாற் பின்னரும் யாகத்தினைச் செய்தனர் அங்ஙனஞ் செய்த முனிச்சிரேட்டரின் யாகத்தினின்றும் முயலகன் என்பதொரு பூதவுருவந்தோன்றியது.—எ-று. (௧௧௩)

முயலகன்றன்னைநோக்கிமுகமனுஞ்சொற்றுத்தங்கள்
செயலகன்றிருந்தவேள்வித்தீயையும்விளித்துநந்த
மியலகன்றிடவேசெய்தவீசனைமுடித்திரென்றே
மயலகன்றிலாதாருய்ப்பவல்விரைந்தணைந்தவம்மா.

(இ-ள்.) முயலகனென்னும் பூதத்தினைப்பார்த்து முகமனுமுரைத்துத் தங்கள் செயலில் விலகியிருந்த வேள்வித்தீயையும் அழைத்து நமது இயனீங்கச் செய்த ஈசனைக் கொல்லுதிரென்று மயக்க நீங்காத முனிவரனுப்பவவைகள் விரைந்து வந்தன.

வன்னியந்தேவுமுட்கவந்திடுகனலையார்க்கு
முன்னவனொருகையேந்திமுயலகன்றன்னைமெல்லத்
தன்னடியதனால்வீழத்தள்ளியக்கமலத்தாளை
வென்னிடையருளாலூன்றிவிண்ணவர்போற்றநின்றான்.

(இ-ள்.) அக்கினி தேவனுமஞ்சுமாறு வந்த அக்கினியை எவர்க்கு முதல்வரான சிவபெருமான் ஒரு கரத்திலேந்தி முயலகனை மெல்லெனத் தனதுபாதத்தாற் றள்ளி அத்தள்ளிய அடிக்கமலத்தினை அருளினால் அதன்முதுகில் ஊன்றித்தேவர் துதிக்க நின்றனர்—எ-று. (௧௧௫)

நிற்றலுமதனைத்தீயோர்நெருப்பெழவிழியாவின்னு
முற்றனன்பரமனந்தோவுஞற்றியாமுய்த்தவெல்லா
மிற்றனகொல்லோவென்றேயிரங்கியேயெண்ணில்சாபஞ்
சொற்றனருலகமெல்லாந்தொலைப்பவன்றொலையவென்றே.

(இ-ள். அவ்வாறு நின்றவுடனே தீயமுனிவர் நெருப்பெழவிழித்து அந்தோ இன்னம் பரமன்இறவாதிருந்தான் நாம் உண்டாக்கி அனுப்பிய அனைத்தும் அழிந்தன கொல்லென வருந்தி உலகனைத்தும் அழிக்குஞ்சங்காரமூர்த்தி அழியவேண்டுமென்று அளவற்ற சாபங்கூறினர்.—எ-று. (௧௧௬)

சங்கையின்முனிவர்யாருஞ்சாற்றியசாபம்யாவு
மெங்கடம்பெருமான்முன்னுமெய்தியதில்லையன்னோ
ரங்கவன்றன்பாலுய்க்குமளவையிலிறுதிநாளிற்
பொங்கெரியதன்மேற்சொல்லும்பூளைபோன்மாய்ந்தவன்றே.

(இ-ள்.) அளவற்றவம் முனிவரனைவருமுரைத்த சாபமனைத்தும் எங்கள்பெருமானெதிரிலுஞ் சென்றதில்லை அம்முனிவர்கள் அவ்விறைவனைச்சுட்டியிட்ட சாபமனைத்தும் இறைவனிடஞ் செல்லாமல் உலகமுடிவுநாளில் வளர்ந்தெரிகின்ற ஊழித்தீமீது செல்லும் பஞ்சுபோலுடனே யழிந்தன.—எ-று. (கசஎ)

சாபமும்பயனின்றுகத்தவத்தர்கள்யாருங்கொண்ட
கோபமுநீங்கியாற்றல்குறைந்தொருசெயலுமின்றிச்
சோபமுநாணுங்கொண்டுதுளங்கியேதொலைவிலாத
பாபமும்பழியும்பூண்டுபடிக்கொருபொறையாய்நின்றார்.

(இ-ள்.) சாபமொழியும் பயனற்றதாதலும் அம்முனிவர் அனைவரும் கோபமொழிந்து வன்மையிழந்து ஒருசெயலுமில்லாது வாட்டமுநாணமுங் கொண்டுநெங்கி அழியாத பாவமும் பழியும்பூண்டு பூமிக்கொரு சுமையாக நின்றனர்.—எ-று. (கசஅ)

ஏற்றமின்முனிவர்தங்களேழைமைதனையென்னென்று
சாற்றுதுமிறுதியில்லாத்தாணுவைமுடிப்பான்வேள்வி
யாற்றினர்பலவுமுய்த்தாரறைந்தனர்சாபமற்றுன்
மாற்றிடவற்றோதங்கள்வன்மையுமிழந்தார்மாதோ.

(இ-ள்.) உயர்வற்ற முனிவரின் ஏழைமையை என்னென்றுரைப்பேம் அழிவற்ற தாணுவினை அழிப்பான் வேள்விசெய்து அவ்வேள்வியில் தோன்றிய பலபொருள்களையும் அனுப்பினார்கள் சாபமுங் கூறினார்கள் அதனாலேனுமழிக்க முடியுமோ தங்கள் வன்மையையுமிழந்தார்கள்.—எ-று. (கசகூ)

கடுக்கையுநதியும்பாம்புங்கலைமதிக்கொழுந்துஞ்சென்னி
முடித்தவன்பதத்திலூன்றுமுயலகன்மெல்லமெல்ல
வெடுத்தெடுத்தசைத்தலோடுமேதுவங்கதனைநோக்கி
நடித்தனனென்றுநீங்காநடம்புரிகின்றதேபோல்.

(இ-ள்.) கொன்றையலரினையுஞ் சந்திரகலையையும் சிரசில் அணிந்தசிவபெருமான் பாதத்தாலூன்றிய முயலகன் மெல்லமெல்ல உடலைத்தூக்கித்தூக்கி அசைத்தவுடனே இக்காரணத்தைப்பார்த்து என்று நீங்காநடம் புரியுமாறுபோல நடித்தனன்.

ஆண்டவணிமையாமுக்கணாதிநாயகனஞ்ஞான்று
தாண்டவம்புரிதலோடுஞ்சகமெலாந்துளங்கிற்றங்க
ணீண்டியவுயிர்களச்சுற்றிரங்கியநடுக்கமெய்தி
வீண்டனர்வேள்விசெய்துவினையினையீட்டும்வெய்யோர்.

(இ-ள்.) அவ்விடத்திலிமையா முக்கண் முதனாயகன் அப்பொழுது தாண்டவஞ்செய்தலும் அதனால் உலகனைத்து நடுங்கியது அவ்விடத்துப் பொருந்திய உயிர்கள் அஞ்சிமுற்று நடுக்கமுற்று இரங்கின வேள்வி செய்து பாவத்தினைச் சேர்க்கும் கொடியோரான அம்முனிவர் விலகிநின்றனர்.—எ-று. (கஉக)

நஞ்சணிகண்டத்தெந்தைநடநவில்செய்கைதன்னைக்
கஞ்சனுமாழியானுங்கண்டுகண்களித்துப்போற்றி
நெஞ்சகமகிழ்ந்துபாங்கர்நின்றனர்மகவான்றன்னோ
டெஞ்சியவமரர்யாருமிறைஞ்சுவார்போலவீழ்ந்தார்.

(இ-ள்.) விடத்தினைத்தரித்த கண்டத்தினையுடைய வெம்பெருமான்நடனஞ்செய்யும் செயலினைப்பிரமனும்மாலும்பார்த்துக் கண்களித்துத்துதித்து மனமகிழ்ந்து அருகில் நின்றனர். இந்திரனுடன் மற்றையதேவரனைவரும் வணங்குவாரைப்போல வீழ்ந்தனர்.—எ-று. (கஉஉ)

அருளொடுநிருத்தஞ்செய்யுமண்ணலிப்புவனம்யாவும்
வெருவுறுசெயலும்வீழும்விண்ணவரயர்வுநோக்கித்
திருநட்மொழிந்துநிற்பத்தேவருந்தேவர்கோனும்
பரிவுடனெழுந்துநின்றுகைதொழூஉப்பாங்கருற்றார்.

(இ-ள்.) அருளுடன் நடனஞ்செய்யும் இறைவன் இப்புவனமனைத்தும் அஞ்சுந்தன்மையையும் அயர்ந்து விழுந்ததேவர் தன்மையையும்பார்த்து திருநடமியற்றாது நிற்பத்தேவர்களுந் தேவராசனும் அன்புடனெழுந்து வணங்கி அருகிலெய்தினர். ()

மாதொர்பாகத்தோன்றன்னைமதித்திடாமுனிவர்க்கெல்லாம்
போதமேயருளலோடும்பொருக்கெனவெழுந்துபொல்லா
வேதமேயியற்றுகின்றவெம்பெரும்பிழைகள்யாவு
நாதநீபொறுத்தியென்றுநடநவில்கழன்முன்வீழ்ந்தார்.

(இ-ள்.) உமையை ஒருபுறத்திலுடைய இறைவன் தன்னைமதித்திடாத முனிவரனைவருக்கும் நல்லுணர்ச்சியைக் கொடுத்தலும் விரைந்தெழுந்து பொல்லாத துன்பமேசெய்த எமது பெரும்பிழைகளனைத்தினையும் நாதனே நீபொறுப்பாயாகவென்று நடனஞ்செய்யுந் திருவடியெதிரே விழுந்தனர்—எ-று. (கஉச)

பொறுத்தியெம்பிழையையென்றேபோற்றிசெய்முனிவர்தங்க
டிறத்தினைநோக்கிநந்தஞ்செந்நெறியொழுகித்தீய
மறத்தினையகற்றிமேலைமாதவம்புரிதிரென்று
நிறுத்தினனடையாதார்க்குநீடருள்புரியுநித்தன்.

(இ-ள்.) எங்கள் குற்றத்தினைப் பொறுப்பாயாகவென்று துதித்தமுனிவர் செய்கையைப் பார்த்து நமதுசெவ்விய ஆணைப்படிநடந்து கொடிய பாவச்செயல்களை விடுத்து உயர்ந்த சிறந்ததவத்தினைச்செய்யுங்கள் என்று பகைவருக்குமிக்க வருளினைச் செய்யுமிறைவன் அம்முனிவரை யங்கிருக்கச்செய்தனர்.—எ-று. (கஉரு)

முனிவரைநிறுவியங்கண்முக்கணன்மீண்டுவெள்ளிப்
பனிவரையேகிமாலும்பங்கயத்தவனும்வானோ
ரனைவருந்தத்தம்பாலிலடைந்திடவருளியம்பொற்
புனையிழையுமையினோடும்பொருந்திவீற்றிருந்தானன்றே.

(இ-ள்.) முனிவர்களை அவ்விடத்தில் நிறுத்தி மூன்றுகண்களையுடைய சிவபெருமான் திரும்பிக்குளிர்ச்சிவாய்ந்த கைலைமலையை யடைந்து மாலையும் பிரமனையும் எல்லாத்தேவர்களையும் அவரவரிடம் போகவருள்செய்து அழகிய பொன்னாபரணமணிந்த உமாதேவியாருடன் கலந்திருந்தனர்.—எ-று. (கஉசு)

உரித்திடுமுழுவைவன்றோலுரிமுதலுள்ளவெல்லாந்
தரித்ததுமெங்கணுதன்றாருகாவனத்திலன்று
நிருத்தமதியற்றிநின்றநீர்மையும்பிறவுமெல்லாம்
விரித்திவணுரைத்தாங்கேட்டிமேலதுமியம்புகின்றாம்.

(இ-ள்.) உரிக்கப்பட்ட புலியின் வலியதோலினை முதலாக வுள்ளவைகளையெங்கள் சிவபெருமான் தரித்ததுவும் தாருகாவனத்தி லந்நாள் நிருத்தஞ்செய்த தன்மையும் மற்றுள்ளவைகளையும்விரித்திங்குரைத்தோம் மற்றையவைகளையும் உரைக்கின்றோம் கேட்பாயாக.—எ-று. (கஉஎ)

வேறு.

துங்கமால்கரியாக்கையினுலகெலாந்தொலைக்கும்
வெங்கயாசுரனென்பவன்மேருவின்மிசைபோய்ப்

பங்கயாசனற்போற்றிசெய்தருந்தவம்பயில
வங்கணுடியேதோன்றினனுலகெலாமளித்தோன்.

(இ-ள்.) பெரிய மதமயக்கம் பொருந்திய யானையினுருவினனாய் உலகனைத்தையும் அழிக்கும் வெவ்விய கயாசுரனென்பான் மேருவின் உச்சியிற் சென்று பிரமனைத்துதித்து அரியதவஞ்செய்ய அவ்விடத்தில் அவனெதிரே உலகனைத்தும் படைத்த பிரமன் வந்தான்—எ-று. (கஉஅ)

வேண்டுகின்றதென்மொழிகெனநான்முகன்விளம்ப
வாண்டுநோற்றிடுங்கயாசுரனென்றனக்கடிகேண்
மாண்டிடாதபேராயுளுமாற்றலும்வயமு
மீண்டுநல்குதியென்றலுநகைத்திவையிசைப்பான்.

(இ-ள்.) பிரமனவனைப்பார்த்துநினக்கு வேண்டுவதென்னை உரைப்பாயாகவென்று கூற அங்குத்தவஞ்செய்யுங் கயாசுரனென்பான் சுவாமியே எனக்கு அழியாத பேராயுளும் ஆற்றலும் வெற்றியும் இப்பொழுது தருதியென்றான் உடனே பிரமன் நகைத்து இவை கூறுவான்—எ-று. (கஉகூ)

இந்தவண்ணநீவேண்டியதளித்தனமிகலி ,
லந்திவண்ணனேர்சென்றிடல்சேறியேலந்நாட்
சிந்துமிவ்வரங்கடைப்பிடியீதெனச்செப்பி
யுந்திவந்தவன்போயினன்றனதுபேருலகில்.

(இ-ள்.) இவ்விதமே நீ விரும்பிய வனைத்தும் அளித்தனம் பகையுடன் அந்திவண்ணனான சிவபெருமானெதிரே செல்லற்க செல்வாயாயின் அந்நாளிலவ்வரமழியும் இதனை உறுதியாகக் கருதக்கடவை என்று கூறிய பிரமன் தனது பெரிய உலகத்துக்குச்சென்றான்.—எ-று. (கங0)

அன்னகாலையிற்கயாசுரனென்பவனயன்சொ
லுன்னியீசன்மேற்போகலமொழிந்தவர்தம்பாற்
றுன்னிவெஞ்சமராற்றியெவ்வுலகமுந்தொலைத்தே
யின்னலேபுரிந்திருத்துமென்றுன்னியேயெழுந்தான்.

(இ-ள்.) அப்பொழுது கயாசுரனென்பான் பிரமன் வசனத்தினை நினைத்து நாம் ஈசன்மீது பகைத்துச் செல்கலம் ஈசனல்லாரிடஞ்சென்று கொடும்போர்புரிந்து எல்லா உலகங்களையும் அழித்துத் துன்பமே செய்துகொண்டிருப்போமெனக்கருதி எழுந்தான்.—எ-று. (கஙக)

எழுதல்கொண்டிடுமவுணர்கோனமரர்கள்யாருங்
குழுமியேயமர்வான்பதந்தொறுந்தொறுங்குறுகி
வழுவியேயவர்முரிந்திடப்பொருதுமற்றவரூர்
முழுதுமட்டுமாசுவர்க்கமேலேகினன்முனிவால்.

(இ-ள்.) அங்ஙன மாலோசனையுடனெழுந்த கயாசுரன் தேவரனைவருங்கூடி வாழுஞ் சுவர்க்கபதவிகள்தோறுஞ்சென்று அத்தேவர் தோற்றோடுமாறு போர்புரிந்து அத்தேவ பதவிகளனைத்தினையு மழித்துக்கோபத்தால் மகா சுவர்க்கத்துக்குச் சென்றனன்.—எ-று. (கஙஉ)

போகியோடமராற்றியேயன்னவன்புறந்தந்
தேகவேதுரந்துயர்த்திடுநான்மருப்பியானைத்
தோகைவானுதிபற்றியேபன்முறைசுலவி
யாகயாசுரனேச்சினன்மகபதிமயங்க.

(இ-ள்.) அப்பெரிய கயாசுரனென்பான் இந்திரனோடுபொருது அவன் மு
டுமோட்டி உயர்ந்த நான்கு கொம்புகளையுடைய ஐராவதத்தின் வாலினை
பிடித்துப் பலமுறை சுற்றி இந்திரன் மயங்க வீசி எறிந்தனன்.—எ-று (கரு

பின்னரன்னதோர்பொன்னகரழித்தனன்பெயர்ந்து
துன்னுமெண்டிசைக்காவலர்தமையெலாந்துரந்து
தன்னினங்களாமவுணர்கடம்மையுஞ்சாடி
வன்னியஞ்சிகையரக்கர்தங்குழுவையுமாய்த்தான்.

(இ-ள்.) பின்னர் அந்தச் சுவர்க்க உலகத்தினை அழித்துச்சென்று நெருங்கி
அட்டதிக்குப்பாலர்களை யோட்டித்தன தினமாகவுள்ள வசுரர்களையுங்கொன்று தீயை
யதான ரோமத்தினரான அரக்கர் கூட்டத்தினையும் அழித்தான்.—எ-று. (கரு

மஞ்சுநேர்தருகயாசுரன்புவிமிசைவெகுி
வெஞ்சினங்கொடேமக்கடந்தொகையெல்லாம்வீட்டி
நஞ்சமாமெனத்திரிதலுநாடிநற்றவர்க
ளஞ்சியோடியேயரனமர்காசியையடைந்தார்.

(இ-ள்.) கரியமேகம்போன்ற கயாசுரன் பூமியிலிருந்து மிக்ககோபத்துடன்
மனிதர் கூட்டங்களையழித்து விடமாமென்னு மாறுலாவுதலும் இவன் செயலினை
நல்லதவமுடைய முனிவராராய்ந்து பயந்தோடிச் சிவபெருமானெழுந்தருளி இரு
கும் காசியையடைந்தனர்.—எ-று. (கரு

அருந்தவத்தர்களடைதலுங்கயாசுரனவரைத்
துரந்துகாசியிற்சென்றிடவனையவர்துளங்கித்
திருந்துமந்நகர்வாணர்தங்கிளையொடுஞ்செறிந்து
விரைந்துபோய்மணிகன்னிகைபுகுந்தனர்வெருவி.

(இ-ள்.) அரிய தவத்தினையுடைய முனிவர்கள் காசியையடைதலும் கய
சுரன் அவர்களை யோட்டிக்கொண்டு காசியிற்செல்ல அவர்கள் நடுங்கித் திருந்திய வ
நகர் வாசிகளுடன் நெருங்கி விரைந்து பயந்து சென்று மணிகன்னிகையை யடைந்
னர்.—எ-று (கரு

இனிதுவித்தியதம்பயனீவதேயென்னத்
தனதுமந்திரமுடிபவர்செவியிடைச்சாற்றிப்
புனிதமாயதன்னுருத்திரவடிவருள்புரியு
மனகநாயகற்பணிந்துநின்றின்னவாறறைவார்.

(இ-ள்) செவ்விதாக விதைத்த வித்துக்கள் தமதுருவான பயனையளிக்கு
மாறுபோல தனது மந்திரமான தாரகத்தினை இறப்போர் காதிலுரைத்துத் தூ
மையான தனது ருத்திரசாரூபத்தினை அவர்கட்களிக்கின்ற பாவமற்ற பரமனை வண
ங்கி நின்று இவ்வாறுரைக்கின்றனர்.—எ-று. (கரு

வெய்யதந்தியாய்வந்தொருதானவன்விரைவில்
வையகத்தையட்டெம்மையுங்கொல்லியவருவா
னையநின்னதாளரணமென்றடைந்தனமடியே
முய்யவேயருள்புரியெனப்போற்றியேயுறலும்.

(இ-ள்.) வெவ்விய யானையாக வொரசுரன் தோன்றி உலகினை விரைவிலழி
த்து எங்களையும் கொல்லவருகின்றான் ஐயனே! உனது திருவடிகளை அடைக்கல
மென வடைந்தோம் அடியேங்கள் உய்தற்கருள் புரிவாயாகவென்று துதித்திரு
தலும்.—எ-று. (கரு

அகிலநாயகன்மந்திரத்தப்பரிசனர்க
டொகையினேடுபோயரணமென்றடைதருதொடர்பை
முகிலைநேருருக்கயாசுரன்காணுருமுனியா
விகலியேமணிகன்னிகைவாயில்வந்திறுத்தான்.

(இ-ள்.) விசுவநாதருடைய ஆலயத்தில் அவ்வடியவர்கள் கூட்டமாகச்சென்று அடைக்கலமென்றடையுந் தொடர்பினைக் கரியமேகம்போன்ற கயாசுரன் பார்த்துக் கோபித்துப்பகைத்து மணிகன்னிகாலயத்தின் வாசலை வந்தடைந்தான்.—எ-று. ()

வாயில்வந்திறுத்துருமெனத்தெழித்தலுமதித்துக்
கோயிலெய்தியசனமெலாமுளங்குலைகுலையா
வாயகண்ணுதனிமலனைத்தழீஇமயக்கடையத்
தீயனன்னதுநாடியுமடும்வகைசெறுத்தான்.

(இ-ள்.) வாயிலை வந்தடைந்து இடிமுழக்கம்போல கர்ச்சித்தலும் அதனையுணர்ந்து கோயிலிலெய்திய சனங்கள் அனைவரும் உள்ளங்குலைகுலைந்து அங்கெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுருவினைக் கட்டிக்கொண்டு மயக்கமடைய இதனையக் கொடியவனுணர்ந்தும் அவர்களைக்கொல்லுமாறு எதிர்த்தனன்.—எ-று. (௧௯0)

செறுத்துமற்றவன்செல்லுழித்தேவர்களுய்யக்
கறுத்தகந்தரத்தண்ணலாங்கத்திறங்கண்டு
குறித்தெலாமடுமுக்கிரவடிவினைக்கொண்டு
நிறுத்துமண்டமேலுச்சியின்முடிதொடநிமிர்ந்தான்.

(இ-ள்.) அனைவரையுந் தடுத்துக்கொண்டக் கயமுகன் செல்லுங்காலத்து அத்தன்மையைத்தேவர்கள் உய்யும் வண்ணங் கறுத்த கண்டத்தினையுடைய சிவபெருமான் பார்த்தருளி அனைத்தினையு மழிக்கின்ற சருவசங்காரவுருவினை எண்ணி எடுத்துத்தான் நிறுத்திய அண்டத்தின் மேலுச்சியின் முடிதொடும்வண்ணம் உயர்ந்தனர்.

விண்ணுலாவியவமரருமுனிவரும்விழித்துக்
கண்ணிருடரிதெனவிழிபொத்தினர்கவல
வண்ணலாயிரகோடியாதவர்திரண்டதுபோ
லெண்ணிலாதபேரொளியொடுதோன்றினனெங்கோன்.

(இ-ள்.) வானிலுலாவிய தேவர்களும் முனிவர்களும் கண்திறந்து காண்டற்கரிதெனக் கண்களை மூடினராய்வருந்தப் பெருமைவாய்ந்த ஆயிரங்கோடி சூரியர்கள் ஒருங்கு திரண்டாற்போல அளவிடற்கரிய பேரொளியுடனெம்பெருமான் காணப்பட்டார்.—எ-று. (௧௯௨)

உக்கிரப்பெருவடிவுகொண்டெம்பிரானெருகா
னக்குமெல்லெனவுரப்பலுநடுங்கினவகில
மக்கொடுந்தொனியொழிந்திலதுகம்பலவயனு
மிக்கதேவருமவ்வொலிகேட்டலும்வெருண்டார்.

(இ-ள்.) பெரிய உக்கிரவடிவங்கொண்டெம்பெருமான் ஒருமுறை சிரித்து மெல்லென வுரப்புதலும் அகிலநடுங்கின பலவுகங்கள் அக்கொடியவோசை விலகாமலிருந்தது பிரமனும் சிறந்த பிறதேவர்களும் அவ்வோசையைக்கேட்டவுடன் வெருட்சியுற்றனர்.—எ-று.

சொற்றவித்திறமுக்கிரவடிவொடுந்தோன்றிக்
கொற்றமால்கரியவுணன்முன்னெம்பிரான்குறுக
மற்றவன்சிவனுடினைத்தேறியுமலேவா
னுற்றுநின்றனனயர்த்தனன்மலரயனுரையே.

(இ-ள்.) உரைத்த இவ்விதமான உக்கிரவடிவுடனே தோன்றி வெற்றியினையும் மயக்கத்தினையும் உடைய கயாசுரனெதிரே எம்பெருமான்செல்ல இவ்னுன் சிவபெருமானென உணர்ந்தும் பிரமனுரையை மறந்து போர்புரிவானெதிர்த்து நின்றனன் —எ-று. (௧௫௪)

மதித்துவேழமாந்தானவனெதிர்தலும்வடவை
யுதித்தவன்னியுமச்சுறவெரிவிழித்தொருதன்
கதித்ததாள்கொடுதள்ளவேகயாசுரன்கவிழ்ந்து
பதைத்துவீழ்தலுமிதித்தனன்சிரத்தையோர்பதத்தால்.

(இ-ள்.) கர்வித்துக்கயாசுர னெதிர்த்தலும் வடவையிற் பிறந்ததீயும் அக்கினிச்சுவாலை வீசப்பார்த்து ஒருதன்னுடைய தடித்ததாளினால் உதைத்துத்தள்ளுதலும் கயாசுரன் பதைத்துக் கவிழ்ந்து விழுந்தனன் உடனே மற்றொரு திருவடியால் அவன் தலையை மிதித்தனர்.—எ-று. (௧௫௫)

ஒருபதத்தினைக்கவானுறுத்திருக்கரத்துகிரால்
வெரிநிடைப்பிளந்தீரிருதாள்புடைமேவக்
குருதிகக்கியேயொலிடவவுணர்தங்குலத்துக்
கரியுரித்தனன்கண்டுநின்றம்மையுங்கலங்க.

(இ-ள்.) உமாதேவியாரும் பார்த்துநின்று கலங்கும் வண்ணம் ஒரு பாதத்தினைத் தொடைமீதுவைத்து இருகர நகங்களால் அசுரர் குலத்துதித்த கயாசுரனென்னு மானையின் முதுகினைப்பிளந்து நான்கு கால்களும் பக்கங்களிற் பொருந்தி இரத்தங்கக்கி இரைச்சலிட அதன் றோலையுரித்தனர்.—எ-று. (௧௫௬)

கார்த்தசிந்துரத்தவுணர்கோன்விளிந்திடக்கரத்தா
லீர்த்ததோலினையீர்த்தலுமுலகுயிர்யாவுந்
தீர்த்தன்மேனிகொள்பேரொளிநோக்கியேதியங்கிப்
பார்த்தகண்ணெலாங்கதிரிழந்தலமரப்பதைத்த.

(இ-ள்.) கருநிறம் வாய்ந்த கயாசுரனை அசுரர்தலைவன் இறக்கும் வண்ணம் குளிர்ச்சிவாய்ந்த தோலினை யுரித்தலும் உலகின்கணுள்ள உயிர்களனைத்தும் சிவபெருமானுடைய திருமேனியிற் பொருந்திய பேரொளியைப்பார்த்துத் தியங்கி பார்த்த விழிகளனைத்தும் ஒளியிழந்து சுழலவருந்தின.—எ-று. (௧௫௭)

ஆளுநாயகனஃதறிந்துயிர்த்தொகையனைத்தும்
வாளிலாதுகண்ணயர்வதுமாற்றுதன்மதித்து
நீளிரும்கரியுரித்திடுமதளினைநிமலன்
றோளின்மேற்கொடுபோர்த்தனனருள்புரிதொடர்பால்.

(இ-ள்.) அங்ஙனமான்மாக்கள் கண்ணொளியின்றி வருந்துவதனை அவைகளை யாளுந் தலைவனை சிவபெருமானுணர்ந்து உயிர்க்கூட்டமனைத்தும் ஒளியிலாது கண்ணயர்ச்சி யுறுவதனை நீக்கக்கருதி நீண்டபெரிய யானையை யுரித்ததோலினை அருள்செய்யுங்காரணமாக நின்மலனான இறைவன் தனது தோளின்மீது போர்த்தினர்.—எ-று. (௧௫௮)

ஐயன்மிக்கதன்கதிரினைக்குருதிநீரறாத
மையல்யானைவன்றோலைமேற்கொண்டனன்மறைத்தான்
செய்யகோளொடுகரியகோளிருவருஞ்செறிந்து
வெய்யபானுவினடுவுறக்கவர்ந்துமேவியபோல்.

(இ-ள்.) செம்பாம்புங் கரும்பாம்பும் நெருங்கி வெவ்விய சூரியன் நடுவிற் பொருந்தக்கவர்ந்து மேவினாற்போல, இறைவன் மிகுந்த தமது திருமேனியொளியை இரத்தவெள்ள நீங்காத மதமயக்கத்தோடுகூடின யானையின் வன்மைவாய்ந்த தோலினை மேற்போர்த்து மறைத்தனர்.—எ-று. (கசுக)

மிகவுமெம்பிரான்றன்சுடர்மாற்றிமெய்தளரு
மகிலமேலவர்விழிக்கெலாந்தொல்கதிரருளித்
தகவிலச்சமுமகற்றியேகாத்தனன்றன்றனக்கு
நிகருமேனுமின்றாகியேயமர்தருநிமலன்.

(இ-ள்.) தனக்கொப்பு முயர்வுமின்றியுள்ள நிருமலனான எம்பிரான் தனது திருமேனிச்சுடரினை மிகவுமாற்றி உடல் தளர்ந்த உலகத்தவர்கட்கெலாம் பழயகண்ணொளியைக்கொடுத்து அவர்களிடமிருந்த ஆதாரமற்ற அச்சத்தையும் ஒழித்துக் காத்தனர்.—எ-று. (கஙு0)

அந்தவேலையிலமரர்போற்றிசைத்தனரதுகேட்
டெந்தைமாமணிகன்னிகையாலயத்தேக
முந்துதந்திமாலவுணற்குவெருவிமொய்ம்பிழந்து
சிந்தைமான்றுவீழ்பரிசனர்யாவருந்தெளிந்தார்.

(இ-ள்.) அப்பொழுதுதேவர்கள் தோத்திரங்கூறினர் அதனைக்கேட்டுத் தந்தையான சிவபெருமான் சிறந்தமணி கன்னிகை ஆலயத்துச்செல்ல முன்னர்க் கயமுகாசுரனுக்குப் பயந்து வலியிழந்து மனமயங்கி விழுந்த பரிசனரனைவருமெழுந்தார்கள்.-எ-று. (கஙுக)

செறிவுபோகியசனத்திரளெழுந்தருட்டிறத்தாற்
கறைகொள்காலினன்குருதியென்பொடுதசைகாணு
விறைவனேயவன்றன்னையட்டானெனவெண்ணி
யறையுநேமிபோலாடினர்பாடினரார்த்தார்.

(இ-ள்.) நெருக்கம்வாய்ந்த சனத்திரளினரெழுந்து இறைவன் கருணையால் உரலனைய காலினையுடைய கயாசுரனுடைய இரத்தமுமென்புந் தசையுங்கண்டு அவனை இறைவனே கொன்றானென நினைத்து அலைவீசுங்கடல்போல ஓயாது ஆடிப்பாடி ஆர்த்தனர்.—எ-று. (கஙுஉ)

காசிவாணருமுனிவரும் பணிந்தனர்கழல்கள்
பூசையாற்றவும்புரிவித்துவழுத்தியேபோனா
ரீசன்வேழவன்றோல்புனைபேரருளிதுகாண்
பேசுவாமினியயன்சிரமேந்தியபெற்றி.

(இ-ள்) காசிவாசிகளும் முனிவர்களும் திருவடிவணங்கி அவ்விறைவற்கு மிகவும் பூசைசெய்வித்துத் துதித்துச் சென்றார்கள். இது சிவபெருமான் யானையின் பெரிய தோலினைத்தரித்த அருட்சரிதம் இனிப்பிரமகபாலமேந்திய தன்மையை உரைக்கின்றாம்,—எ-று. (கஙுங)

வேறு.

முன்னமோர்வைகன்மாலுமுண்டகத்தயனுமாகப்
பொன்னின்மால்வரையினுச்சிப்பொலங்குவடொன்றினும்பர்

மன்னுழிமுனிவர்தேவர்வரம்பிலோர்வந்தன்னுரைச்
சென்னியால்வணக்கஞ்செய்துசெங்கரங்குவித்துச்சொல்வார்:

(இ-ள்) முன்னொருதினம் திருமாலும் கமலாசனனான பிரமனும் சிறந்த பொன்மலையின் உச்சியிலுள்ள ஒரு சுவர்ண சிகரத்தின்மீது இருக்குங்காலத்து முனிவருந் தேவருமாகிய அளவற்றவர்கள் வந்து அவர்களைத்தலையால் வணங்கிச் செவ்விய கரங்களைக்குவித்துச் சொல்லுகின்றனர்.—எ-று. (கருச)

மூவரின்முதலானொருமுதலிடைமுடிவுமில்லாத்
தேவருமெவையுநல்குஞ்செல்வரும்பரமேலாகி
யோவரும் புவனத்துள்ள வுயிர்க்குயிராய்நின்றோரு
மேவரெங்களுக்குவல்லையிருவருமிசைத்திரென்றார்.

(இ-ள்.) மூவருண் முதலானொரும் முதலும் இடையும் முடிவும் இல்லாத தேவரும் அனைத்தினையு நல்குஞ்செல்வரும் பரமாயும் மேலாயும் ஒழிவற்றபுவனத்துள்ள உயிர்க்குயிராயுள்ளவரும் யாவர் அவரை நீ விரிருவரும் விரைவாக உரையுங்கள் என்றனர்.—எ-று. (கருரு)

என்றுரைத்திடலும்வேதாவெம்பிரான்பிணித்தமாயை
தன்றலைப்படலால்யானத்தலைமையாம்பிரமமாகு
நன்றிதைத்தெளிதிரென்னநாரணன்றானுமற்று
யுன்றனைத்தந்தயானேயுயர்தரும்பிரமமென்றான்.

(இ-ள்.) என்றுகூறுதலும் பிரமன் எம்பெருமான் கட்டியமாயை வலைக்குள் அகப்பட்டு நின்றமையால் யானே அந்தத்தலைமைவாய்ந்த பிரமமாகும் இதனை நன்கு தெளிதிரென்றுகூற உடனே நாராயணன் பிரமனைப்பார்த்து உன்னைப்பெற்றயானே உயர்ச்சிவாய்ந்த பிரமம் என்று கூறினான்.—எ-று (கருசு)

இருவருமினையபேசியெண்ணிலாவைகல்யாரும்
வெருவருநிலையதாகவெய்துயிர்த்தழன்றுமாறாய்ப்
பொருவருதருக்கஞ்செய்யப்போயினர்முனிவர்தேவ
ரொருவருமின்றிநம்மாலுற்றதிப்பெற்றியென்றே.

(இ-ள்.) அயனுமரியுமினையகூறி அளவற்ற தினங்கள் யாவரும் அஞ்சத்தக்க நிலையதாகப் பெருமூச்சுவிடுத்து அழன்று பகையாய் ஒப்பற்ற தருக்கஞ்செய்யத் தேவரும் முனிவரும் நம்மால் இத்தன்மையாயிற்றென்று கூறிச்சென்றார்கள்.—எ-று.

போதனுமனையர்பின்னும்பூசல்செய்திட்டகாலை
வேதமுங்குடிலைதானும்வேறுவேறுருக்கொண்டெய்தி
வாதமதியற்றலென்றுமன்னுயிர்க்குயிராயார்க்குந்
தாதையாஞ்சிவனேவாய்மைத்தற்பரனென்றவன்றே.

(இ-ள்.) முனிவராதியர் சென்றபின்னரும் அவ்வரியயர்கள் சண்டைசெய்த காலத்து வேதமும் குடிலையும்வேறு வேறுருவங்கொண்டு வந்து வாதஞ்செய்யாதீர்கள் எப்பொழுதும் நிலைபெற்றவுயிருக்குயிராய் அனைவருக்குந் தந்தையாஞ் சிவபெருமானே உண்மையான தற்பரனென்று கூறின.—எ-று. (கருஅ)

பண்டவருணர்ந்தவேதப்பனுவலுங்குடிலைவாக்குங்
கொண்டிலர்விலக்கிப்பின்னுங்கொடியவெம்பூசல்செய்யக்
கண்டுமற்றதனையன்னோர்கடுமுரண்டொலைக்குமாறு
கொண்டனன்கருணையார்க்குங்குறித்தருள்கூரும்பெம்மான்.

(இ-ள்.) முன்னர் அவர்கள் உணர்ந்துள்ள வேதப்பாடலும் குடிலைவசனமும் கூறியவைகளையும் ஏற்றுக்கொள்ளாராய் அவைகளை விலக்கிப்பின்னரும் கொடிய வெவ்விய போர்புரியா நிற்ப அதனைக்கண்டு அவர்களின் கொடிய மாறுபாட்டினை நீக்க அனைவரிடமுங் கருணைவைத்தருள்புரியும் இறைவன் திருவுளத்தெண்ணினர்.()

அடிமுடியிலாதவள்ளலமலமாமொளியாய்விண்ணி
னடுவுறவந்துதோன்றநாரணன்றானும்வேதக்
கடவுளுஞ்சிவனுமென்றுகருதிலர்யாதோவிந்தச்
சுடரெனமருண்டார்மாயச்சூழ்ச்சியினீங்கலாதார்.

(இ-ள்.) அடியுமுடியுமில்லாத வள்ளல்நின்மல வொளியுருவாகி வானின்நடு வண்வந்து தோன்றுநிற்ப மாயாமயக்கமொழியாதபிரமனும் திருமாலும் சிவபெருமானென்றுகருதாமல் இவ்வொளியாதோவென மருண்டனர்.—எ-று. (௧௬0)

இயலதுதெரிந்துசோதியிடையதாயெம்மையாளக்
கயிலையிலுமையாளோடுகலந்துவீற்றிருக்குங்கோலச்
செயல்கொடுபரமனண்ணச்சிவனெனச்சிந்தைதேற்றிப்
புயலுறழ்மேனிப்புத்தேள்பொருக்கெனவெழுந்துதாழ்ந்தான்.

(இ-ள்.) இங்குநடக்குஞ் செயல்களையுணர்ந்து இச்சோதியின் நடுவிலாகி எம்மையாளுதற்குக் கைலைமலையிலுமையுடனெழுந்தருளி இருக்கும் தன்மையாகச் சிவபெருமானெழுந்தருள, இங்கு வந்தவர் சிவபெருமானே என்று மனதிற்றுணிந்து மேகம்போன்ற மெய்யினையுடைய திருமால் விரைந்தெழுந்து வணங்கினான்.-எ-று.

மாயையோர்சிறிதுந்தீராமலரயனமதுதந்தை
யாயவன்போந்தானென்னுவச்சுதமூர்த்தியேபோ
னேயமோடெழுந்துதாழானெடியதன்னுச்சிச்சென்னித்
தீயதோர்வாயான்மேலாஞ்சிவனையுமிகழ்தலுற்றான்.

(இ-ள்.) மாயையினின்றும் ஒரு சிறிதும் விலகாதகமலாசனனான பிரமன் நமது தந்தை வந்தனரென்று திருமாலையொப்ப அன்புடனெழுந்து வணங்காமல் நெடிய தனது உச்சியிலுள்ள தலையிற்பொருந்திய கொடியவாயினால் மேலான சிவபெருமானையும் இகழ்ந்தனன்.—எ-று. (௧௬௨)

முண்டகமிருந்தவைந்துமுகத்தவன்முதல்வன்றோற்றங்
கண்டனனிகழவந்தக்கருணையங்கடலுஞ்சீற்றங்
கொண்டிலன்சிறிதுமற்றேகொண்டனனென்னினெல்லா
வண்டமுமுயிரும்பின்னுமழிவுறாதிருக்குமோதான்,

.(இ-ள்.) தாமரை மலரிலிருந்த ஐம்முகனான பிரமன் இறைவன் எழுந்தருளியதனைப் பார்த்திகழ அதனைக்கண்டு கருணைக்கடலான சிவபெருமான் சீற்றங்கொண்டாரில்லை சிறிது கோபங்கொண்டிருந்தால் உலகமு முயிரு மழியாதிருக்குமோ? ()

எகினமதுயர்த்தவண்ணலிரும்பவந்தொலைப்பவேனைப்
பகவர்தமகந்தைமாற்றப்பண்ணவர்மதர்ப்புச்சிந்த
மிகுபெருங்கருணைதன்னால்வேதநாயகனுள்ளத்து
மகிழ்வொடுபுரிந்தானென்பவயிரவக்கடவுடன்னை.

(இ-ள்.) அன்னக்கொடியினையுயர்த்த பிரமனுடைய அகம்பாவந்தொலைக்கவும் மற்றைத்தேவர்களின் அகங்காரத்தினை ஒழிக்கவும் முனிவரின் இறுமாப்பினையகற்றவும் மிகுந்த பெரிய கருணையினால் வேதநாயகனான சிவபெருமான் வைரவக்கடவுளை மகிழ்வுடன் உண்டாக்கினர்.—எ-று. (௧௬௪)

நீலுறுசுடரின்மெய்யுஞெகிழிகளரற்றுந்தாளு
மாலமதுயிர்க்குஞ்செங்கேழுரவவெற்றரையுஞ்சென்னி
மாலேகளநந்தகோடிவயின்வயின்பெயருமார்புஞ்
சூலமும்பரசுநாணுந்துடியுமேந்தியபொற்றோளும்.

(இ-ள்.) நீல நிறம்வாய்ந்த ஒளிபொருந்திய திருமேனியும் சிலம்புகள் முழங்குந் திருவடியும் விடத்தினைக் கக்குகின்ற செம்பாம்பணிந்த வெற்றரையும் அனந்தங் கோடித்தலை மாலைகள் அசையும் மார்பும் சூலமும்மழுவும் பாசமும்டமருகமுமேந்திய அழகிய தோள்களும்—எ-று. (கசுடு)

முக்கணுந்திங்களேபோன்முளைத்தலாளெயிறும்வன்னிச்
செக்கரஞ்சடையின்சீருஞ்செயிர்கெழுநகையுமாக
வுக்கிரவடிவுகொண்டாங்குதித்திடுவடுகன்றன்னை
மைக்கிளர்கண்டத்தெந்தைநோக்கியேவகுத்துச்சொல்வான்.

(இ-ள்.) மூன்றுகண்களும் இளம்பிறைபோலத் தோன்றிய ஒளிபொருந்திய பற்களும் தீ நிறமான செக்கர்போன்ற சடையின் சிறப்பும் சீற்றங்காட்டு நகையுமாக உக்கிர உருவங்கொண்டு தோன்றிய வைரவனைக் கருமைவிளங்குகின்ற ஸ்ரீகண்டத்தினையுடைய எம்பெருமான் பார்த்து வகுத்துரைக்கின்றனர்.—எ-று. (கசுசு)

திகழ்ந்தநஞ்சிறுவனுகுஞ்செங்கமலத்தோன்சென்னி
யிகழ்ந்ததுநம்மையுச்சியிருந்ததேயதனைவல்லே
யகழ்ந்தனைகரத்திலேந்தியவனுயிர்நல்கித்தம்மைப்
புகழ்ந்திடுமுனிவர் தேவர்புரந்தொறும்போதியன்றே.

(இ-ள்.) விளங்காநின்ற நமதுகுமாரனுன செந்தாமரை மலரினையுடையபிரமனது சிரமானது நம்மையிகழ்ந்தது உச்சியிலிருந்ததே அதனை விரைவாகக் கிள்ளிக் கையிலேந்தி அவனுயிரையளித்து அகம்பாவங் கொண்ட முனிவருடையவுந் தேவருடையவும் ஊர்தோறுஞ் செல்லுதி.—எ-று. (கசுஎ)

போந்தனையனையர்தங்கள்புலவுடற்சோரிதானே
வாய்ந்ததோரையமாகவாங்குதிவாங்கும்வேலே
வீந்தவர்தமக்குமீட்டும்வியனுயிருதவியன்னே
ராய்ந்திடுமகந்தைமாற்றியண்டமேலடைதியம்மா.

(இ-ள்.) சென்று அவர்களின் புலவுடற் சோரியைப் பொருந்தியபிச்சையாக வாங்குவாய் வாங்குஞ்சமயத்தில் இறந்தவர்க்குப் பெரியவுயிரினை அளித்து அவர்களெண்ணி இருந்த அகங்காரத்தையொழித்து அண்டத்தின்மீது செல்லுதி.—எ-று. ()

முன்புடைத்தாகுமண்டமுகடுதோய்பதத்தின்மன்னி
மன்பதைக்குலங்கள்யாவும்வானவர்தொகையும்யாண்டுந்
துன்பறக்காத்தியென்று தூயநல்லருளைநல்கி
யன்புடைக்கடலாமெங்கோனமலமாஞ்சோதிபுக்கான்.

(இ-ள்.) முன்னரே அமைந்ததான அண்டமுகட்டிலுள்ள பதத்திலிருந்து மக்கட்பரப்பும் தேவர்குழுவும் எங்குந் துன்புறுவண்ணங் காப்பாயாகவென்று தூய நல்ல அருளை அளித்துக் கருணைக்கடலான எமது சிவபெருமான் நின்மலமான சோதியுட்புகுந்தனர்.—எ-று. (கசுக)

ஆதியங்கடவுளங்கணடைதலுமமலமாகுஞ்
சோதியுமனையர்காணுத்தோற்றமதாகமாயோ
னீதெலாந்தெளிந்துநிற்றலியற்கையன்றென்னுமுக்க
ணுதனையிறைஞ்சிவல்லேநடந்துதன்பதியிற்புக்கான்.

(இ-ள்.) முழுமுதற் கடவுள் அச்சோதியிற் புகுதலும் நின்மலமான சோதியும் அப்பிரம விஷ்ணுக்கள் காணுததோற்றமாகத் திருமாலிவ்வனைத்தும் பார்த்துச் சும்மா நிற்றல் முறையன்றென மூன்றுகண்ணுளரான சிவபெருமானை வணங்கி விரைவாக நடந்து தனது நகரியை யடைந்தனன்.—எ-று. (கஎ0)

அளந்துமண்கொண்டமாயனனகரடைதலோடுங்
கிளர்ந்தெழுகாரிவேதாக்கேழ்கிளருச்சிச்சென்னி
களைந்துதன்னகத்தாலேந்தக்காலுறுகுருதிநீத்தம்
வளைந்ததுபுவியைத்துஞ்சிமலரவன்றானும்வீழ்ந்தான்.

(இ-ள்) மாவலிபாற் பெற்றளந்து மண்ணினைக்கொண்ட திருமால் விசாலமான தனதுநகரியை அடைதலும் ஒளியுறுதோற்றத் தோடெழுந்த வைரவன் பிரமனுடைய நிறம்வாய்ந்த நடுத்தலையைத் தனதுநகத்தாற் கிள்ளியேந்துதலும் இரத்தவெள்ளம் பூமியைச்சூழ்ந்தது பிரமனும் இறந்து விழுந்தான்.—எ-று. (கஎக)

சோரிநீர்நீத்தமாகித்துண்ணெனவுலகங்கொண்டு
மேருமால்வரையைச்சூழவெய்யதன்னுதற்கட்டீயாற்
சேரவேவறப்பித்தந்தச்செங்கமலத்தினானுக்
காருயிர்நல்கலோடுமவனுணர்ந்தெழுந்தானன்றே.

(இ-ள்.) இரத்தவெள்ளம் பிரவாகமாகி விரைவாக வுலகினை மூடி நெடிய மேருமலையைச்சூழ வெவ்வியதமது நெற்றிக்கண் நெருப்பால் அதனை முற்றிலும் வற்றச்செய்து இறந்தவந்தப் பிரமனுக்கு அரிய உயிரினை அளித்தவுடனே அவன் உணர்வு பொருந்தி எழுந்தனன்.—எ-று. (கஎஉ)

வேறு.

துயிலுணர்ந்தவராமென்னத்தொல்லையிற்
பயிலுநல்லுணர்வெய்தலும்பங்கயன்
வயிரவன்றன்மலரடிமீமிசை
யியலுமன்பொடிறைஞ்சியுரைசெய்வான்.

(இ-ள்.) பிரமன் நித்திரை நீங்கியெழுந்தாரையொப்ப முன்னரிருந்த நல்லறிவினை அடைதலும் வைரவனுடைய திருவடிமலரின்மீது பொருந்தியவன்புடன்வணங்கியுரைக்கின்றான்.—எ-று. (கஎஙா)

நெற்றியங்கணிமலற்கியான்செய்யுங்
குற்றமுண்டுகுணிப்பிலவன்னதாற்
பெற்றுளேனிப்பெரும்பழியீங்கினிச்
செற்றமேதுந்திருவுளங்கொள்ளலே.

(இ-ள்.) நெற்றிக்கண்ணுளரான சிவபெருமானுக்கு நான்செய்த குற்றமளவற்றன அதனுலிப்பெரும் பழியை யடைந்தேன் இனிக் கோபமொன்றுந் திருவுளத்திற் கொள்ளற்க.—எ-று. (கஎச)

இன்மையாகவிமைப்பினுலகடும்
வன்மைகொண்டவடுகநின்னருரு
ணன்மையாற்றொல்லைநல்லுணர்வெய்தினன்
புன்மையாவும்பொறுத்திடல்வேண்டுமால்.

(இ-ள்) இமைப்பொழுதி லுலகமின்மையாக அழிக்கின்ற வன்மைவாய்ந்த வைரவனே நின்னரிய அருளின் நன்மையாற் பழய நல்லுணர்ச்சியை அடைந்தேன் எனதுகுற்றமனைத்தும் பொறுத்துக்கொள்ளுதல் வேண்டும்.—எ-று. (கஎரு)

தீயதானசிறியவிச்சென்னியுந்
தூயதாகத்தொழும்பினன்கண்டுழி
மாயைதீரமலர்க்கையிற்கோடிநீ
மேயசூலவியன்படையென்னவே

(இ-ள்.) இறைவனைப் பழித்த கொடிய வித்தலையையும் தூயதாகவும் அடியேன் அதனைக் காணுந்தோறும் மாயை நீங்கவும் கரமலரிற் சூலப்படையைப்போல தாங்கியருள்க.—எ-று. (கஎசு)

என்னவித்தகைபன்னியிறைஞ்சலுஞ்
சென்னிநான்குடைத்தேவனைநோக்கியே
யன்னதாகவென்றையனருளியே
பொன்னின்மால்வரைநீங்கினன்போயினன்.

(இ-ள்.) என்றிவ்வாறு கூறி வணங்குதலும் நான்கு தலைகளையுடைய பிரமனைப் பார்த்து அவ்வாருகவென்று வைரவனுரைத்துப் பெரிய பொன்மலையைவிடுத்துச்சென்றனன்—எ-று. (கஎஎ)

காலவேகன்கனன்முகன்சோமக
னாலகாலனதிபலனாதியாச்
சாலநீடியசாரதர்தானையை
நீலமேனிநிமலனுதவினன்.

(இ-ள்) நீலவுருவினையுடைய வைரவன் பின்னர்க் காலவேகன் கனன்முகன் சோமகன் ஆலகாலன் அதிபலன் முதலிய மிகவுமுயர்ந்த பூதசேனையை உண்டாக்கினன்.—எ-று. (கஎஅ)

எண்ணிலாவக்கணங்களொடெம்பிரா
னண்ணியொல்லைகவையுறுமாதவர்
மண்ணின்மேயவனந்தொறும்வானவர்
விண்ணினெல்லைதொறும்விரைந்தேகினன்.

(இ-ள்.) அளவற்ற வந்தப் பூதகணங்களுடனே எம்பெருமான் விரைந்தடைந்து குற்றம் வாய்ந்த மாதவர்கள் வாழும்வனங்களிலும் வானுலக வெல்லைகளிலும் விரைந்துசென்றனன்.—எ-று. (கஎகூ)

மெய்யினூறும்வியன்குருதிப்புன
லையமாக்கொண்டனையர்தமாவிக
ளுய்யவேபின்னுதவியுளமெலாந்
துய்யவாக்கினன்றொல்லருளாழியான்.

(இ-ள்.) அன்னாரின் உடம்பினின்றூறிய மிகுந்தஇரத்தவெள்ளத்தினைப் பிச்சையாகப்பெற்று அவர்களினுயிரினை உய்யுமாறளித்து உளமனைத்துந் தூய்மையுடையதாக்கினன் பழயவருட்கடலான வைரவன்.—எ-று. (கஅ௦)

வடுகவண்ணலவ்வானவரூரெலாங்
கடிதினீங்கிக்கருமத்தைநீங்குறு
நெடியமாலுறைநீள்புரம்போயினன்
முடுகியேகினர்முன்கணநாதரே.

(இ-ள்.) வடுகக்கடவுள் அத்தேவருலகமனைத்தும் விரைந்து கடந்து கருமத்தினைவிடாத நெடுமாலுறைகின்ற நீண்ட நகரத்துட்சென்றனன். உடனே கணநாதர்கள் அவ்விடத்துக்கு விரைந்து முன்சென்றனர்.—எ-று. (கஅக

அந்தமில்கணமானவர்யாவரு
முந்தியேகமுதற்பெருவாயிலோன்
றந்திரத்தலைவன் றடுத்தானரோ
நந்துமாழியுநாரணன்போலுளான்.

(இ-ள்.) அழிவற்ற வப்பூதகணத்தின ரனைவரும் முன்னே செல்லாநிற்ப முதலிலுள்ள பெரிய வாயில்காவலனும் சங்க சக்கரங்களைத் திருமாலையொப்பத் தரித்தவனும் விடுவசேனனென்று பெயருள்ளவனுமான சேனை காவலன் தடை செய்தனன்.—எ-று. (கஅஉ)

காலவேகனையாதிக்கணத்தவ
ராலமென்னவவனொடுபோர்செய
மேலையோனங்குமேவியவனுடல்
சூலமேற்கொந்தித்துண்ணெனவேகினன்

(இ-ள்.) காலவேகன் முதலிய கணநாதர்கள் ஆலகால விடம்போலக்கொதித்து அவ்விடுவசேனனுடன் போர்புரியாநிற்ப மேலோனான வைரவ னங்குச்சென்று அவனுடலினைச் சூலத்தாற்குத்தி யேந்தி விரைந்து சென்றனன்.—எ-று. (கஅங)

வேறு.

நிலமகளொருபுடைநிறங்கொள்பங்கய
மலர்மகளொருபுடைமருவப்பஃறலை
குலவியபணியின்மேற்கொண்டன்மேனியான்
றலைமையொடுறைதருதானநண்ணினன்

(இ-ள்.) பூமிதேவி யொருபுறத்திலும் மார்பிலிருந்த கமலாசனியான திருமகள் ஒரு புறத்திலும் இருக்கப் பல தலைகளையுடைய அரவ சயனத்தில்மேக வண்ணனான திருமால் முதன்மையுடனிருக்கு மிடத்தை யடைந்தனன்.—எ-று. (கஅச)

நிணங்கிளர்முத்தலைநெடியவேலிறை
கணங்களினிரையொடுகடிதுசெல்லமா
லணங்கினரோடெழாவையன்றுண்மிசை
வணங்கிநின்றெந்தைநீவந்ததென்னென்றான்.

(இ-ள்.) நிணம் விளங்குகின்ற மூன்று தலையினையுடைய நீண்ட சூல வேற்படையேந்திய வைரவன் பூதகணங்களுடன் விரைந்து வராநிற்பத் திருமால் பூமிதிருவென்னும் பெண்களுடனெழுந்து அவ்வைரவ சுவாமியின் கான்மிசைவணங்கி நின்று எந்தையே தேவரீரிங்குவந்தது யாதைக் கருதியோ என்று கேட்டனன்—எ-று.(கஅரு)

என்றலுங்கண்ணுதலிறைவன்யாமுவட்
சென்றதுபலிக்குநின்றிருந்துசென்னியி
லொன்றியகுருதியேயுதவுவாயென
நன்றெனநாரணனவின்றுபோற்றியே.

(இ-ள்.) என்று கூறியவுடனே நெற்றிக்கண்ணினையுடைய வைரவன் நாமிங்கு வந்தது பிச்சைக்கேயாம் நினதழகிய தலையிற்பொருந்திய இரத்தத்தையே அளிப்பாயாக வென நாராயணன் நல்லதென்று கூறித்துதித்து.—எ-று (கஅசு)

தன்னுதலதனிடைத்தனதுசெங்கையி
னன்னகத்தாலொருநாடிவாங்கியெ
யன்னதொர்பொழுதினிலரியுய்த்தானரோ
துன்னியகுருதிநீர்சூலியேற்பவே.

(இ-ள்) நெருங்கிய இரத்தவெள்ளத்தினை வைரவன் பெறும்வண்ணம் தனது நெற்றியிலுள்ள ஒரு நரம்பினைத் தனது செவ்வியகர நகத்தினால் இழுத்தெடுத்து அப்பொழுதே திருமால் விடுத்தனன்.—எ-று. (கஅஎ)

வீண்டியசோரியின்வெள்ளம்வெம்பணி
பூண்டதோர்கண்ணுதல்பொலங்கைச்சென்னிமே
லாண்டொருநூறுநூறவதியுய்த்தனு
மாண்டதுவேறொருமயக்கம்வந்ததே.

(இ-ள்.) ஒழுகாநின்ற இரத்த வெள்ளம் வெவ்விய அரவணிந்த நெற்றிக்கண்ணினையுடைய வைரவனுடைய அழகிய கரத்திலுள்ள கபாலத்திற் பதினாயிர வருடம் விடுதலும் பின்னர் இரத்தம் வருதல் ஓய்ந்தது, அப்பொழுது திருமாலுக்கொரு மயக்கமுண்டாகியது.—எ-று. (கஅஅ)

பாதியுநிறைந்ததுமில்லைபாணியின்
மீதுறுபலிக்கலன்மிக்கவன்மைபோய்ச்
சீதரன்சோர்தலுந்திருவுஞாலமுங்
காதலனிலைமையைக்கண்டிரங்கினர்.

(இ-ள்.) அவ்வாறொழுக விடுத்தும் கரத்தின்மீதிருந்த பிச்சாபாத்திரமானது அரைப்பங்கு நிறைந்ததுமில்லை. திருமகளைத்தாங்கிய மார்பினனாலிய திருமால் சோர்வடைதலும் திருமகளும்பூமகளுந் தங்கள்நாயகன்றன்மையைக்கண்டு வருத்தமுற்றனர்

செஞ்சரணடைந்தயர்தெரிவைமார்தமை
யஞ்சலென்றருளியெம்மண்ணலச்சுத
னெஞ்சுறுமயலினைநீக்கியாங்கவ
னுஞ்செழுமாறுசெய்துறையுணீங்கினான்.

(இ-ள்.) எமதிறைவன் தனது செவ்விய திருவடிகளையடைந்து வருந்துகின்ற பெண்களை அஞ்சன்மினென்று கூறி அச்சுதனுடைய நெஞ்சிற்பொருந்திய மயக்கத்தினை நீக்கி அவன் பிழைத்தெழும் வண்ணஞ்செய்து அம்மாலின் இருப்பிடத்தினை விடுத்துச்சென்றனன்.—எ-று. (கக0)

நீங்கினன்பின்வருநெடியமாயனை
யீங்கினிதிருத்தியென்றியம்பவன்னவ
னோங்குநின்சூலமேலுற்றுளான்றனைப்
பாங்குறவருள்கெனப்பகர்ந்துவேண்டவே.

(இ-ள்.) மாயோனது மாளிகையைவிடுத்து வெளியேவந்த வைரவன் தனது பின்னால் வருகின்ற நெடியமாயனைப்பார்த்து இங்குச் சுகமாக இருக்கக்கடவையென்றுகூற வத்திருமால் உயர்ந்த நினது சூலத்திற் கிடப்பவனை முறையாக அளித்தல் வேண்டுமென்றுரைத்து வேண்டிக்கொள்ளுதலும்.—எ-று. (கககூ)

கைத்தலையயன்றலைக்கபால்கொண்டுற்றவன்
முத்தலைவேலினுமுடிந்தசேனையின்
மெய்த்தலைவன்றனைவிடுத்துத்தொல்லுயி
ரத்தலைநல்கியேயருள்செய்தானரோ.

(இ-ள்.) கையினிடத்துப் பிரமன்றலையான கபாலத்தினைக்கொண்டுள்ள வைரவன் இறந்த சேனாதிபனான விடுவசேனனைச் சூலத்தினின்று நீக்கி அவன் பழைய வுயிரினை அவ்விடத்தளித்துக் கருணை செய்தனன்.—எ-று. (ககஉ)

மாலுலகொருவியேவடுகனன்னதோர்
கோலமொடேகணங்குழுமிச்சூழ்தர
மேலுளபுவனமேன்மேவிவைகலும்
பாலனஞ்செய்தனன்பலவண்டங்களும்.

(இ-ள்.) திருமாலி னுலகத்தினைவிடுத்து வைரவனந்தக் கோலத்துடனே கணங்கள் நெருங்கிச் சூழாநிற்க அண்டமுகட்டிலுள்ள புவனத்தினையடைந்து பலவண்டங்களையுந் தினந்தோறுங்காத்திருந்தனன்.—எ-று. (கசங)

அடுவதொரிறுதியிலமலனாணையாற்
கடவுளர்சென்னியுங்கமலனாதியோர்
முடிகளுமட்டுயிர்முற்றுமாற்றிநுண்
பொடிபடவியற்றுமாற்புவனம்யாவையும்.

(இ-ள்.) இவ்வைரவன் உலகினை யழிக்கின்ற சங்காரகாலத்திற் சிவபெருமானுடைய கட்டளையாற் தேவர்தலைகளையும் பிரமன் முதலியவர்களின் தலைகளை மறுத் துயிர்முழுது மழித்துப் புவன மனைத்தினையு நுண்ணிய பொடியாமாறு செய்வான்—எ-று. (கசச)

பொறியுறுமுயிர்களும்புவனம்யாவையு
மிறுதியாயழிவுறுமீமத்தெல்லையின்
மறையெனுஞாளியையுயர்த்துமற்றவ
னுறுவதோர்மகிழ்ச்சியாலுலவுமென்பவே.

(இ-ள்.) ஐம்பொறிகளோடு பொருந்திய வுயிர்களும் புவனமனைத்தும் முடிவாயழியுஞ் சுடலையில் வேதவுருவான ஞாளிக்கொடியினை யுயர்த்துண்டான மகிழ்வினா லுலவுவானென்று கூறுவார்கள்.—எ-று. (கசரு)

வேறு.

கண்டகங்கொள்கபால்கொடுகாசினி
விண்டகந்தொறும்வெம்பலிக்குற்றது
முண்டகன்முதலோர்தமையெம்பிரான்
றண்டகஞ்செய்தலையளியாகுமால்.

(இ-ள்) வைரவம்பொருந்தின கபாலத்தைக்கொண்டு உலகத்திலும் சுவர்க்கத்திலும் வெவ்விய விரத்தப் பிச்சைக்குச்சென்றதும் பிரமன் முதலியவர்களை எம்பெருமான் தண்டித்த மறக்கருணையேயாம்.—எ-று. (கசசு)

ஆற்றின்மல்குமவிர்சடையண்ணல்பாற்
றோற்றுகின்றதோர்தூயவன்சோரிநீ
ரேற்றதன்மையியம்பினமீங்கினி
வேற்றுருக்கொண்டதன்மைவிளம்புவாம்.

(இ-ள்.) கங்கைநதியுடன் மிகுந்து விளங்குகின்ற சடாபாரத்தினையுடைய சிவபெருமானிடத்துத் தோற்றிய தூயவனான வைரவன் இரத்தபலியேற்ற தன்மையையுரைத்தனம் இனி அவ்விறைவன் வேற்றுருக்கொண்ட தன்மையை உரைக்கின்றேம்.—எ-று. (கசஎ)

வேறு.

முந்தொருஞான்றுமூவுலகும்போற்றிடு
மிந்திரனிமையவரினத்தோடேகியே

யந்தமில்கயிலையிலரனைப்போற்றுவான்
வந்தனனகந்தையும்மனத்திற்றாங்கியே.

(இ-ள்.) முன்னொருகாலத்தில் மூன்றுலகமுந் துதிக்கு மிந்திரன் தேவர் கூட்டத்துடன் சென்று அழிவற்ற கைலாயத்தின்கண் சிவபெருமானைத் துதித்தற்கு அகங்காரத்தினையு மனத்திலுடையவனாக வந்தான்.—எ-று. (௧௯௮)

பொன்கெழுகடிமதிற்பொன்னங்கோயின்முன்
மின்கெழுவச்சிரவேந்தன்சேர்தலுங்
கொன்கெழுபாரிடக்கோலந்தாங்கியே
முன்கடைநின்றனன்முடிவின்முன்னையோன்.

(இ-ள்.) பொன்னால் விளங்குகின்ற காவலினையுடைய மதில் வளைந்த அழகிய ஆலயத்தினெதிரே ஒளி வீசுகின்ற வச்சிரமேந்திய இந்திரன் செல்லுதலும் அழிவற்ற சிவபெருமான் வன்மைமிக்க பூதவுருவமெய்தித் தலைவாசலில் நின்றனர்.—எ-று.

நின்றிடுமொருவனைநெடிதினோக்கியே
யின்றுனைக்கண்டனன்யாரையையநீ
மன்றவும்விருந்தினைவள்ளலைத்தொழச்
சென்றனன்வேலையென்செப்புகென்னவே.

(இ-ள்.) அங்ஙனம் பூதவீர வுருவுடன் நின்ற சுவாமியை மிகவும் உற்றுப் பார்த்து இன்று உன்னைக்கண்டேன். ஐய நீயாவன் மிகவும் புதியை யான் வள்ளலை வணங்கவந்தேன். இப்பொழுது சமயமென்னை யுரைத்தியென்று கூறுதலும்.—எ-று.

மற்றதுகாலையின்மகேசன்யாவதுஞ்
சொற்றிலனாகியேசூர்த்தநோக்குட
னுற்றிடமேல்வருமூற்றமுன்னலன்
செற்றமதாயினன்றேவர்செம்மலே.

(இ-ள்.) அப்பொழுது மகேசன் ஒன்றும் பதிலுரையாமல் அச்சந்தரும் பார்வையுடன் நிற்கப் பின்னருண்டாகுங் கெடுதியை நினையாத தேவராசன் கோபங்கொண்டனன்.—எ-று. (௨0௧)

அண்டருமகந்தையனாற்றவுந்திறல்
கொண்டனனென்றுதன்குலிசமாப்படை
கண்டகனெறிதலுங்கடவுண்மேற்பட
துண்டுகளாகியேநொய்தின்மாய்ந்ததே.

(இ-ள்.) பிறராலடுத்தற்கரிய அகம்பாவத்தினையுடையவன் மிகவும் வன்மையுடையானாக நிற்கின்றானென்று இந்திரன் தனது சிறந்த வச்சிராயுதத்தினை வீசியெறிதலும் அது கடவுண்மீது பட்டு, நுண்ணியதுகளாகி விரைந்தழிந்தது.—எ-று.

மருத்துவன்வச்சிரமாய்ந்துபோதலும்
புரத்தினையட்டருள்புனிதனவ்வழிக்
கிருத்திமவுருவினைநீங்கிக்கேழ்கிள
ருருத்திரவடிவினையொல்லைதாங்கினன்.

(இ-ள்.) இந்திரனுடைய வச்சிரப்படை அழிந்தவுடனே திருபுரத்தினை யழித்த சிவபெருமான் அப்பொழுது பூதவுருவினை நீக்கி நிறம் விளங்குகின்ற உருத்திர வுருவினை விரைவாக அடைந்தனர்.—எ-று. (௨0௩)

உயர்ப்புறுசடிலநின் றாறுதண்புன
லயர்ப்புறுமகபதியகந்தைகண்டட
மயிர்ப்புறமெங்கணும்வந்துதோன்றலின்
வியர்ப்புவந்தடைந்தனமேனிமுற்றுமே.

(இ-ள்.) நிமிர்ந்த சடையினின் றூறுகின்ற தண்ணிய கங்காநதி தன்னிலே மறந்த இந்திரனுடைய அகங்காரத்தினைப்பார்த்து அவனைத்தண்டித்தற்கு மயிர்க்கால் தோறும் வந்து தோன்றினாற்போல உடன்முழுதும் வியர்வைத் துளிகள் தோன்றின.

எள்ளுதல்செய்திடுமிவன் றனருயிர்
கொள்ளுதுமெனச்சினங்கொண்ட தீயொடு
முள்ளுறுகாலெழீஇயொருங்குசென்றெனப்
பொள்ளெனவுயிர்ப்பழல்புகையொடுற்றதே.

(இ-ள்.) இகழ்ந்த இவனுடைய அரிய வுயிரினை வாங்குதுமெனச் சீற்றங்கொண்ட அக்கினியுடன் உள்ளே பொருந்திய காற்றுமெழுந்து ஒன்றாய்ச்சென்றாற்போல விரைவாக ஊர்த்துவ சுவாசமுங் கோபத்தீயும் புகையுடனுண்டாகியது.—எ-று. ()

குறுகிநின்றாற்றலாற்குலிசமாப்படை
யெறிதருகொடியனையெய்தவேளெனச்
செறுகனல்விழியெனச்செப்பச்சேறல்போ
னெறிதருபுருவமுநெற்றிசேர்ந்தவே.

(இ-ள்.) அருகிலடைந்து நின்று வன்மையாற் சிறந்த வச்சிராயுதத்தினை எறிந்த கொடியவனை அம்புவிடுத்த மன்மதனைப்போல நெற்றிக்கண்ணே நீயழித்தி யெனவுரைக்க விவனை யழிப்பான் செல்லுமாறு நெறிக்கப்பெற்ற புருவமும் நெற்றியையடைந்தது.—எ-று (உ0௬)

பற்றலர்புரங்களோவுலகின்பன்மையோ
முற்றுயிரீட்டமோமுடிக்கப்பேதையைச்
செற்றிடல்வசையவன்செயலைக்காண்டுமென்
றுற்றனன்முறுவலுமுதித்ததொல்லையில்.

(இ-ள்.) நாமழித்தற்கு, பகைவர் முப்புரங்களோ அன்றேல் உலகின் கூட்டமோ அன்றேல்உயிர்க்கூட்ட மனைத்துமோ இவ்வறிவிலியை அழித்தலால் வசையுண்டாகும் இவன்செய்கையைப்பார்ப்போமென எண்ணினர். உடனே விரைவாகநகைப்புமுண்டாகியது.— எ-று. (உ0எ)

துடித்தனதுவரிதழுரப்பித்தூயவா
யிடித்தனசேந்தனவிரண்டுகண்களும்
விடத்தினைநுகர்ந்தவன்வெகுளித்தீயினுக்
கடுத்திடுதுணைவர்தமமைதிபோலவே.

(இ-ள்.) ஆலகால விஷபானஞ்செய்த சிவபெருமானுடைய கோபாக்கினிக்குப்பொருந்திய துணைவரையொப்பச் செவ்விதழ் துடித்தன. அதட்டித் தூயவாயிடித்தன இரண்டு கண்களுஞ் செந்நிறமடைந்தன.—எ-று. (உ0அ)

அக்கணமிவ்வகையார்க்குமாதியா
முக்கணனுன்முகன்முதலதேவரு
மிக்குளவுயிர்களும்வெருவவெய்யதோ
ருக்கிரவடிவுகொண்டுருத்துநின்றனன்.

(இ-ள்.) அப்பொழுது இவ்வண்ணம் அனைவர்க்கு முதல்வனான மூன்று கண்களையுடைய சிவபெருமான் பிரமன் முதலிய தேவர்களும் மற்றுள்ள உயிர்களும் அச்சும் வண்ணம் வெவ்வியவோருக்கிர வுருவங்கொண்டு சீறிநின்றனர்.-எ-று. (உ0க)

வேறு.

நிற்கின்றவெம்பெருமான்பெருஞ்சீற்றந்தனைநோக்கிநெஞ்சமாகுங்
கற்குன்றநடுநடுங்கப்பதைபதையாவஞ் சியவன்கழலின்வீழ்ந்தே
யெற்குன்றன்மாயமெலாந்தெரிந்திடுமோமாலயனுமின்னுந்தேரூர்
பொற்குன்றச்சிலையானேவினையேன்செய்பிழையதனைப்பொறுததியென்றான்

(இ-ள்.) அவ்வாறு நின்ற வெம்பெருமானுடைய மிகுந்த கோபத்தினைப்பார்த்து நெஞ்சமென்னுங் கன்மலை நடுநடுங்கப் பதைபதைத்து அச்சமுற்றுப் பாதங்களில் விழுந்து எனக்குன்னுடைய மாயமனைத்துந் தெரியுமோ மாலுமயனுமின்னமுணரார் பொன்மலைவில்லியே வினையினையுடைய வென்றற் செய்யப்பட்ட பிழையைப்பொறுப்பாயாக என்று கூறினன்.-எ-று. (உகO)

போற்றிப்பன்முறைதாழும்புரந்தரனையஞ்சலென்றுபுரிந்துநோக்கி
மேற்றிக்கில் வீழ்கின்றசெங்கதிரோவிதுவென்னவேலைமேற்றன்
சீற்றத்தீயினைவீசியாங்கவற்குவிடைகொடுத்துச்செல்கென்றேவி
யேற்றிற்செயரியணைமேலுமையுள்புகுந்துமையொடும்வீற்றிருந்தானெங்கோன்.

(இ-ள்.) துதித்துப் பலமுறை வணங்கிய இந்திரனை அஞ்சாதே யென்று கருணையுடன்பார்த்து அத்தமனகிரியில் விழுகின்ற சூரியனோ இது என்று கூறுமாறு கடலினிடத்துத் தனது கோபத்தினை யெறிந்து அவ்விந்திரனுக்கு விடையளித்துப் போதியென்றனுப்பிக் கோயிலை அடைந்து உயர்வாக வியற்றப்பட்ட சிங்காதனத்தில் உமாதேவியாருடன் எமது தலைவன் எழுந்தருளி இருந்தனர்.-எ-று. (உகக)

வேறு.

கூற்றுவன்றனிக்கூற்றன்மந்திரம்
வீற்றிருந்திடும்வேலைவாய்த்தனி
லாற்றல்சேர்புனற்கரசன்பால்விடு
சீற்றமானதோர்சிறுவனானதே.

(இ-ள்.) யமனுக்கெமனான சிவபெருமான் ஆலயத்திலெழுந்தருளி இருக்கின்ற காலத்தில் வன்மைமிக்க வருணனிடத்து விடுத்த கோபமானதொரு சிறுவனாக வாகியது.-எ-று. (உகஉ)

ஆனபாலனையம்புராசிதன்
கானுலாந்திரைக்கரங்களாற்றழீஇத்
தானவேசனென்றனயனாயினா
னனலாதியார்நற்றவஞ்செய்தார்.

(இ-ள்.) அவ்வாறுண்டாகிய சிறுவனைக் கடலானது மணம் வாய்ந்த திரைகளாகிய கைகளாற்றழுவித்தானவர் தலைவன் எனது மகனாகவாயினன். ஆதலின் என்னைவிட யாவர் நல்ல தவஞ் செய்தவர்கள்.-எ-று. (உகங)

ஊழிபேரினுமுலகம்பேரினும்
வாழிவாழியென்மைந்தநீயெனாக்
கேழிலாசிகள்கிளத்திப்போற்றினா
னாழிமால்கடற்கரசனென்பவே.

(இ-ள்.) என் மைந்தனே பிரமனாயுள் முடிக்தொழியினும் உலகமழியினும் நீவாழி நீவாழி என்று ஒப்பற்ற ஆசிகள் கூறி வட்டமான பெரிய கடலினிறைவன் போற்றினன்.-எ-று. (உகச)

நசைகுலாவியநரலைகாத்திட
வசைவிலான்சிறிதழுதவேலையில்
வசையிலாதுயர்வானுமண்ணுமெண்
டிசையும்யாவையுஞ்செவிடுபட்டவே.

(இ-ள்.) விருப்பம்பொருந்திய கடலாற்காக்கப்பட வளருநாளில் அசைவற்ற வச்சிறுவன் சிறி தழுதவுடனே வசையின்றி யுயர்ந்த வானுலகமும் மண்ணுலகமும் எட்டுத்திக்குக்களும் மற்றனைத்துஞ் செவிடுபட்டன.—எ-று. (உகரு)

நூன்முகத்திறேர்நுனித்துக்காணுறு
நான்முகத்திறனடியிவ்வொலி
வான்முகத்திடைவருமிதேதெனு
மீன்முகத்துலாம்வேலைமேவினன்.

(இ-ள்,) நூலாராய்ச்சியினை யுடையவர்கள் எண்ணி யறியத்தக்க சதுர்முகப் பிரமன் ஆராய்ந்து ஆகாயவழியாக வருகின்ற விவ்வோசை யேதென்று மீன்கள் பொருந்தி யுலாவுகின்ற கடலிடைச்சென்றனன்.—எ-று. (உகசு)

வேலைசேரவவ்வேலைவேலையுஞ்
சாலவன்பினுற்றவிசொன்றிட்டுநீ
யேலமேவுகென்றிருத்தியான்பெறும்
பாலனீங்கிவன்பார்த்தியாலெனு.

(இ-ள்.) பிரமன் கடலிடத்துக்குச்செல்ல அப்பொழுது வருணனும் மிகவும் அன்பினுல் ஆசனமொன்றிட்டு நீ இருப்பாயாகவென இருத்தி யான்பெற்ற மகன் இவன் இவனைப்பாரென்று.—எ-று. (உகஎ)

கையினீட்டலுங்கடிதுவாங்கியே
யையன்றன்மடியதனிற்சேர்த்திடத்
துய்யபுல்லணங்தொடர்ந்துபற்றினன்
மையன்மைந்தனுந்தனதுவன்மையால்.

(இ-ள்.) கரத்தில் நீட்ட விரைந்து பெற்றுப்பின் தனது மடித்தலத்தில் வைக்க சிவகோபத்திலுண்டான புதல்வனுந் தனது வன்மையாற் பிரமனுடைய தாடியை யெட்டிப்பிடித்தனன்.—எ-று. (உகஅ)

நார்த்தொடுத்தெனுநான்குதாடியு
மீர்த்துத்தூங்கலுமிணையில்வேதனு
மார்த்தியெய்தினனவன்கணேயவன்
சீர்த்திகான்றெனச்சிந்திற்றேன்புனல்.

(இ-ள்.) நாரின் தொடுப்புப்போல விளங்கு நான்கு தாடிகளையும் இழுத்துத் தொங்குதலும் ஒப்பற்ற பிரமனும் துன்பமுற்றுத் தன் கண்கள் தனது கீர்த்தியை வெளிப்படுத்தினற்போல ஒள்ளிய நீரைச் சிந்தின—எ-று. (உகக)

காறொடார்ந்திழிகலங்குகட்புன
லாறுபோலியவகலந்தன்வழிச்
சேறன்மேயதுசெறிவுற்றீண்டியே
வேறோர்வேலைபோல்வேலைபுக்கதே.

(இ-ள்.) காலாகத்தொடாந் தொழுகுகின்ற கண்ணீர் ஆற்றைப்போல மார் பின்வழி, போகத்தொடங்கி நெருங்கிப் பொருந்தி மற்றொரு கடலைப்போல கடலிற் புகுந்தது.—எ-று.

கண்ணீர்முகத்தி னிருபுறத்திலுஞ் சிறிதாக வொழுகி யொழுக்கின் மிகுதியாறுகி யாற்றின் பெருக்கின் திரட்சிபோல மடியிற்றிரண்டு கடலையொப்ப நின்றமையின் வேறோர் வேலையென்றார். (உஉ0)

முக்கணுயகன்முனிவுதன்னிடைப்
புக்ககாலையிற்புனல்வறந்திடு
மைக்கருங்கடல்வறுமைநீங்கிற்றுன்
மிக்கநான்முகன்விழியினீரினல்.

(இ-ள்.) மைபோலுங் கரிய கடலானது மூன்று கண்களையுடைய சிவபெருமானுடைய சோபாக்கினி தன்னிடம் புகுந்த பொழுதுண்டான வெப்பத்தால் வற்றின நீரின் வறுமையை உயர்ந்த பிரமதேவனுடைய கண்ணீரின் பெருக்கினல் நீங்கியது.—எ-று. (உஉக)

பதுமனவ்வழிப்படர்மயிர்த்தொகை
மதலைகையினுமரபினீக்கியே
கதுமெனப்பலகரங்களாலெடுத்
துததிதன்கையிலுயிர்த்துநீட்டினன்.

(இ-ள்.) பிரமனப்பொழுது அச்சிறுவன் கையினின்றுந் தனது நீண்ட தாடியின் தொகையை மெல்லென முறைப்படி விடுவித்துக்கொண்டு விரைவாக வவனைப் பல கைகளாலெடுத்துப் பெருமூச்சுடன் வருணன் கையிற் கொடுத்தனன்.—எ-று.

நீட்டியோரிறைநினைந்துநீயிது
கேட்டியொன்றியாங்கிளத்துவோமிவ
னேட்டலாயதேனிதழிசென்னியிற்
சூட்டுமெம்பிரான்முனிவிற்றோன்றினன்.

(இ-ள்) வருணன் கரத்திற் சிறுவனை நீட்டி யொருகணப்பொழுது யோசித்து வருணனைப்பார்த்து நீ யிதனைக்கேட்பாயாக வுரைக்கின்றோம். இச்சிறுவன் இதழ்களையுந் தேனினையுமுடைய கொன்றைமலரினைச் சிரசிலணிந்த எம்பெருமானுடைய சீற்றத்திற் பிறந்தவன்.—எ-று. (உஉ௩)

கருதிடானொருகடவுடன்னையும்
வரமும்வேண்டலனேதுமற்றிவ
னொருவராலுமீறுற்றிடானரோ
பரமன்சீற்றமேயாணபான்மையால்.

(இ-ள்.) இச்சிறுவன் சிவபெருமானுடைய கோபத்திலுண்டானவனாதலின் ஒரு கடவுளையும் நினையான் வரமு மொருவரிடைப்பெறான் அன்றியும் ஒருவரானும் அழியானென்றறிக—எ-று. (உஉ௪)

தேவர்தேவர்கோன்றிசையினோர்வெரீஇப்
போவரேயெனிற்பொருகிற்பாரெவர்
நீவிரேனுமுன்னிற்றலஞ்சுவீ
ரேவரேயிவனெதிர்நிற்பார்களே.

(இ-ள்) தேவர்களும் தேவராசனும் திசைகாவலர்களும் பயந்து போவார்களானல் இவ்னுடனெதிர்த்துப் போர்புரிபவர்யாவர் நீங்களாயினும் எதிர்நிற்றற்கு அஞ்சுவீர்கள் இனி இவனெதிரினிற்பவர்கள் யாவர்.—எ-று. (உஉ௫)

ஆயுந்தொன்னெறியமரர்யாவரு
மீயுஞ்சாபம்வந்திவனைநேருமோ

காயுந்திண்டிறற்கடவுட்டன்மைசேர்
தீயுந்தீயுநின்சிறுவன்வெம்மையால்.

(இ-ள்.) ஆராயப்பெற்ற பழயமார்க்கங்களையுடைய தேவரனைவரானு மிடப்படுகின்ற சாபமிவனை வந்தடையுமோ அடையாது அனைத்தினையு மெரிக்குந் தெய்வத்தன்மைவாய்ந்த தீக்கடவுளும்நினதிம்மைந்தனுடையசிற்றத்தால் தீய்ந்துபோவான்.

நானுமஞ்சுவனளினைகாவலன்
றானுமஞ்சுவன்றவறில்வேள்விசெய்
கோனுமஞ்சும்வெங்கூற்றுமஞ்சுமவ்
வானுமஞ்சுமிம்மண்ணுமஞ்சுமே.

(இ-ள்.) இவனுக்கு நானு மஞ்சுவேன் திருமகள்கணவனு மஞ்சுவான் குற்றமற்ற யாகத்தினைச் செய்தஇந்திரனு மஞ்சுவான் வெவ்வியயமனு மஞ்சுவான் வானுலகமு மஞ்சும் இம்மண்ணுலகமு மஞ்சு மென்க.—எ-று. (உஉ௭)

பாசனங்களேபரவஞாலமேற்
றேசில்செய்யகோல்செலுத்தியாங்கவ
ராசிசெய்யநீடரசுசெய்வனு
யீசனன்றியாரிவனைவீட்டுவார்

(இ-ள்.) தன்னுறவான கொடிய வசுரபரிவாரங்களே பரவா நிற்ப இவ்வுலகிலொளியற்ற கொடுங்கோல் நடத்தியக் கொடியவர் வாழ்த்த அரசு புரிவான். இவனை ஈசனையன்றிக் கொல்லுவோர் யாவர்,—எ-று. (உஉ௮)

என்னுமாத்திரத்திவன்றனக்குநீ
நன்னலந்திகழ்நாமமொன்றினைப்
பன்னுகென்னநீபரித்தலாலிவன்
றன்னதொண்பெயர்சலந்தரன்னெனு.

(இ-ள்.) என்று பிரமன் கூறும்பொழுது வருணன் இவனுக்கு நீ நன்மை விளங்குகின்றவொரு பெயரினை உரைத்தி யென்ன நீ யிவனைத் தாங்கி நிற்றலினிவன்றனதொள்ளிய பெயர் சலந்தரனென்று கூறினன்.—எ-று.

சலந்தரன்—கடலால் வளர்க்கப்பட்டவன். சலம்—கடல். தரித்தல்—காத்தல். சலம்—கடல். தரித்தல்—தாங்குதல் ஆகவே சலத்தினுற் றாங்கப்பட்டவன் சலந்தரன்.

பேரிட்டொல்லையிற்பிரமன்றனுறை
யூரிற்போயினனுததிபற்பகல்
சீரிற்போற்றவுஞ்சிறுவன்காளையாய்ப்
பாரிற்சேர்ந்தனனவுணர்பாற்பட.

(இ-ள்.) சலந்தரனென்று பெயரிட்டு விரைவாகப் பிரமன்றானிருக்கு மூரிற்குச் சென்றனன் அவனை வருணன் அநேககாலம் சிறப்புடன் வளர்த்தலும் அச்சிறுவன் காளைப்பருவமுடையவனாய் அவுணர் அருகிற்சூழப் பூமியையடைந்தனன்.-எ-று.

சென்றுபாரிடைத்திசைகள்யாவையும்
வென்றுவாசவன்விண்ணுளோர்நிதிக்
குன்றுசேர்தரக்கொடுமைசெய்தனன்
றுன்றுகின்றதொல்லவுணர்சூழ்வே.

(இ-ள்.) நெருங்கிய பழய வசுரர் தன்னைச்சூழ்ந்துவரப் பூமியிற்சென்று திக்கனைத்தினையும் வென்று தேவேந்திரனுடைய பொன்னுலகிலுள்ளவர்களின் நிதிகளாகிய மலைகள் தன்னை யடையுமாறு கொடுமை செய்தனன்.—எ-று. (உ௩க)

பொன்னெடுங்கிரிதனிற்புத்தேளிரு
மன்னும்வைகலும்வானநாடெலாந்
தன்னைநேரிலான்றானவர்க்கெலா
நன்னயப்பொடுநல்கினனரோ.

(இ-ள்.) தேவர்களும் அவர்கள் அரசனும் இவனுக்குப்பயந்து பொன்மலையான நெடிய மேருவிற்சென்று வாசஞ்செய்தலும் ஒப்பற்ற இவன் தேவநாட்டனைத்தையும் அசுரர்கட்கெலாம் விருப்பத்துடனளித்தனன் —எ-று. (உருஉ)

வச்சிரப்படைமன்னன்பொன்னகர்
நச்சும்வண்ணமோர்நகரஞ்செய்கென
வச்சலந்தரனருளத்தானவர்
தச்சனவ்வழிசமைத்துநல்கினன்.

(இ-ள்.) வச்சிராயுதத்தினையுடைய இந்திரனது பொன்னுலகம் விரும்புமாறு ஒரு நகரத்தினை உண்டாக்குவாயாகவென்று அந்தச் சலந்தரனுரைக்க அசுரதச்சனவ்வண்ணமே செய்துகொடுத்தனன்.—எ-று. (உருரு)

பாந்தண்மீமிசைபரிக்குநேமிசா
லாந்தரம்மெனவறையநின்றதோ
ரேந்தன்மாநகரிடையிற்றானவர்
வேந்தர்போற்றிடவரசின்மேயினன்.

(இ-ள்.) அரவமானது தலையாற் சுமக்கின்ற பூமியானது சாலந்தரமெனக் கூறுநின்ற ஒரு அரச நகரத்தில் அசுர அரசர்கள் துதிக்க அரசிலிருந்தான்.—எ-று.

காலநேமியாமவுணன்கன்னிகை
வேலைநேர்விழிவிருந்தையென்பவள்
கோலநாடியேகுரவன்கூறிட
வேலவேமணந்தின்பமெய்தினன்.

(இ-ள்.) காலநேமியென்னு மசுரன் மகளும் வேலையனைய விழியாளும் விருந்தையென்று பெயருள்ளவளுமான பெண்ணின் அழகினைக்குறித்தாராய்ந்து தனது குரவனான சுக்கிரனுரைக்க அவளைப்பொருந்துமாறு மணம்புரிந்தவளிடமின்ப மனுபவித்தனன்.—எ-று. (உருடு)

பாரிலவ்வழிப்பன்னெடும்பகல்
சீரின்வைகினன்றேவர்யாவரு
மேருவுற்றனரவரைமேவியாம்
போர்செய்வோமெனப்புகன்றுபோயினன்.

(இ-ள்) பூமியிலவ்வண்ணம் பலநெடுங்காலம் சிறப்புடனிருந்த சலந்தரன் பின்னர் தேவரனைவரும் மேருவிலிருக்கின்றார்கள் அவர்களையடைந்து நாம்போர்புரிவோமெனக் கூறிச்சென்றனன்.—எ-று (உருகு)

துங்கவீரர்கடொழுசலந்தர
னங்கண்மேவலுமமரர்வெய்யவ
னிங்கும்வந்தனனென்செய்வோமெனாச்
சிங்கங்கண்டதோர்கரியிற்றேம்பினர்

(இ-ள்.) உயர்ந்த வீரர்களால் வணங்கப்படுகின்ற சலந்தரனென்பான் அம்மேருவினிடைப்புகுதலும் தேவரனைவரும் கொடிய சலந்தரனிங்கும் வந்தான் இனியென் செய்வதெனச் சிங்கத்தினைக் கண்டயானையைப்போற் கலங்கினர்கள்.—எ-று.

தேம்புகின்றவர்செய்வதோர்கிலார்
பாம்பணைத்துயில்பவனையுன்னியே
யோம்புகென்றலுமுவணமீமிசை
யேம்பலோடும்வந்திமைப்பிலெய்தினன்.

(இ-ள்.) தேம்புவோருஞ் செய்வதியாதெனவுணராதாரும் ஆகியதேவர் அரவணையிலுறங்கு மரியைநினைத்துஎங்களைக் காப்பாயாகவென்று வேண்டுதலும் மாயோன் கருடன்மீது இமைப்பொழுதின் மிக்கஆசையுடன் வந்தனன்,—எ-று. (உ௩அ)

வருசலந்தரன்மாறுகொண்டெழ
விருபதாயிரம்யாண்டுபல்படை
யுரியமாயைகொண்டுருத்தெழுந்துமால்
பொருதும்வென்றிலன்புகழ்ந்துபோயினன்,

(இ-ள்.) போரினிமித்தம் வந்தசலந்தரன் பகைகொண்டெழுந்து போர்புரிய இருபதாயிரம் வருஷம் பலபடைகளால் தனக்குரிய மாயையைகொண்டு சீறியெழுந்து மாயோன் போர்புரிந்தும் வெல்லாமற்புகழ்ந்து சென்றனன்.—எ-று. (உ௩கூ)

கொண்டன்மேனியன்கொடியன்றன்னொடு
மண்டுபோரிடைமலையும்வேலையி
லண்டர்வாசவனஞ்சியாலமார்
கண்டன்மேவியகயிலையெய்தினர்.

(இ-ள்.) மேகவண்ணனான திருமால் கொடியவனான சலந்தரனுடனே நெருங்கிய போரினைச் செய்தகாலத்துத் தேவர்களும் தேவாசனும்பயந்து விடம்பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமானெழுந்தருளி இருக்கின்ற கைலாயத்தை யடைந்தனர்.—எ-று. (உ௪0)

வேறு.

அற்றுகின்றவேலையின்வேலையருண்மைந்தன்
பற்றார்தம்மைநாடினன்யாண்டும்பார்க்கின்றான்
கற்றாரேத்துங்கண்ணுதன்மேயகயிலாயத்
துற்றார்கொல்லென்றுன்னிவெகுண்டானூர்போந்தான்.

(இ-ள்.) அங்ஙனமாகிய காலத்துக் கடலளித்த குமாரனான சலந்தரன் கற்றவர்புகழுங் கண்ணுதலின் கைலாயத்திற் சென்றாராயிருக்கலாமென்று கோபங்கொண்டு சலந்தரபுரியை யடைந்தனன்.—எ-று. (உ௪க)

தூண்டாவொற்றாற்பெற்றிடுசேனைத்தொகையோடு
மீண்டாநிற்பான்றென்கயிலைக்கென்றெழும்வேலை
வேண்டாவேண்டாநித்தனுடன்வெஞ்சமர்செய்யின்
மாண்டாயென்றாளில்லெனவாழுமதிவல்லி.

(இ-ள்.) தூண்டப்பட்ட வொற்றினாலழைக்கப்பட்ட சேனைக்கூட்டத்துடன் நெருங்கி நிற்பவன்தெற்கிலுள்ள கைலாயத்துக்குப் போருக்குப்போகின்றேனென்று எழுந்த சமயத்தில் அதுகண்டு அவன் மனைவியாக வாழுகின்ற புத்தியினையுடைய வல்லிக்கொடிபோன்ற பிருந்தையென்பவள் நீ கைலாயம் போகவேண்டாம் அழிவற்ற சிவபெருமானுடன் வெவ்வியபோரினைச் செய்வாயானால் இறந்தனையென்றுகூறினள்.

குலந்தனில்வந்தாள்கூறியமாற்றங்குறிக்கொள்ளா
னலந்தருகின்றசெய்வினையோரானவைபாரான்
புலந்தருசெற்றமீக்கொளயாதும்பொறையின்றிச்
சலந்தரனும்பேருண்மையதென்னச்சாதித்தான்.

(இ-ள்.) அசுரகுலத்திற்பிறந்த பிருந்தையென்பவள் சொன்ன சொல்லினைப் பொருட்படுத்தாதவனும் நன்மையைத்தருகின்ற செய்யுந்தொழிலினை யாராயாதானும் குற்றம் உருவதையுமெண்ணானும் இந்திரிய வுணர்ச்சியாலுண்டாகா நின்றகோபம திகரிக்க யாதும் பொறுமையின்றி சலந்தரனென்னும் பெயரை உண்மையென்றுதாபித்தனன்.—எ-று.

சலம் கோபம். தரன்-தாங்கினவன். கோபத்தைச் சுமந்தவனென்று பொருள்.

சோனமேகம்போற்படைமாரிசொரிகின்ற
சேனையூகஞ்சூழ்தரவாழித்திருமைந்தன்
போனனெங்கோன்றென்கயிலைக்கோர்புடையாக
வானுள்ளோனங்கதுகாணுமறுகுற்றான்.

(இ-ள்.) சோனமேகத்தைப்போல ஆயுதங்களை வருவிக்கின்ற சேனையூகஞ் சூழ்ந்து வராநிற்பவருணனுடைய அழகியமைந்தனை சலந்தரன் எம்பெருமானுடைய அழகிய கைலாயத்துக்கு ஒருபுறமாகச் சென்றனன் இவன் வருகையை இந்திரன் கண்டு அச்சமுற்றனன்.—எ-று. (உசச)

தாண்டும்பாய்மாத்தேர்கரிவீரர்தற்சூழ
வீண்டும்வந்தான்றீயவனுவியிறும்வண்ணங்
காண்டுமென்னுவாசவன்வானோர்கணமோடும்
வேண்டும்வெள்ளிக்குன்றுறுகோயின்மேவுற்றான்.

(இ-ள்) தாவுகின்ற குதிரைகளும் தேர்களும் யானைகளும் பதாதியரும் தன்னைச்சூழ்ந்து வராநிற்ப இவ்விடத்திற்கும் வந்தான் கொடியோன் இவனுயிரொழியும்வண்ணம் காண்போமென்று இந்திரன் தேவகணத்துடன் விரும்பப்படுகின்ற வெள்ளிமலையான கைலாயத்திற்பொருந்திய ஆலயத்துட்சென்றான்,—எ-று. (உசரு)

முந்தியவாயிலின்முறைபுரிந்திடு
நந்தியைவணங்கியுண்ணடுக்கஞ்செப்பனு
மந்தமில்பண்ணவனருளைநாடியே
யுந்திடவிந்திரனுறையுள்போயினான்.

(இ-ள்·) கீட்டிசைத்தலை வாசலிலிருந்து சிவாக்கினையைச் செலுத்துகின்ற நந்திதேவரை வணங்கி மனோபயத்தை யுரைத்தலும் அவர் அழிவற்ற சிவபெருமானுடைய அருளினைப்பெற்று உள்ளனுப்ப இந்திரன் சிவபெருமானெழுந்தருளி இருக்கும்கோயிலுட் சென்றனன்—எ-று. (உசசு)

குணங்களின்மேற்படுகுழகன்மால்வரை
யணங்கொடுவீற்றிருந்தருளுமெல்லைபோய்
வணங்கினன்றொழுதனன்வலியதுன்பினு
ளுணங்குதன்மனக்குறையுரைத்தன்மேயினான்.

(இ-ள்.) முக்குணங்களுக்கப்பாற்பட்ட இளந்திருக்கோலத்தினையுடைய சிவபெருமான் பெரியமலைமகளுடன் வீற்றிருக்குமிடத்திற்குச் சென்றுவணங்கித்தொழுது மிகுதியான துன்பத்தினால் வருந்துகின்ற தனதுமனக்குறையை யுரைக்கத் தொடங்கினன்—எ-று. (உசஎ)

நிலந்தனைவளைந்தமுந்நீரில்வந்தவன்
சலந்தரனெனும்பெயர்த்தறுகட்டானவன்
மலைந்தெமைவென்றிடமாசுற்றோடினே
னலந்தருகின்றபொன்னாடுநீத்தனன்,

(இ-ள்) பூமியைச்சூழ்ந்துள்ள கடலிற்பிறந்தவன் சலந்தரனென்னும் பெயரினையும் அஞ்சாமையையுமுடைய வசுரன் போர்புரிந்தெங்களை வெல்ல யான் இழிவற்றோடி நலத்தைத்தருகின்ற சுவர்க்கவுலகத்தினை இழந்தேன்—எ-று. (உசஅ)

வெந்துயரெய்தியேமேருவின்புடை
யுய்ந்தனன்யர்னெனவொளித்துமேவின
னந்தவண்ணத்தையுமறிகுற்றுங்கவன்
வந்தனனவ்வழிமாலையுன்னினேன்.

(இ-ள்.) மிகுந்த துன்பமுற்று மேருவினிடத்துப் பிழைத்தேனென்று ஒளித்திருந்தனன் அச்செய்தியையுமுணர்ந்து அங்கு மவன் வந்தான் அப்பொழுது நாராயணனை நினைத்தேன்.—எ-று. (உசகூ)

மாலும்வந்தணுகியேமலைந்துதோற்றிடா
மேலுமங்கவன்றனைவியந்துபோயினு
னீலகண்டத்தனேநினதுமால்வரை
யேலவந்துற்றனனிதுவுங்கேட்டனன்.

(இ-ள்.) நாராயணனுமெய்திப் போர்புரிந்து தோற்றுப்பின்னுமவனைப்புகழ்ந்துசென்றனன் ஸ்ரீகண்டத்தினையுடைய சுவாமியே! அக்கொடியோன் நினதிம்மலையிற்பொருந்துமாறு வந்தனன் என்பதையுங் கேள்வியுற்றேன்.—எ-று. (உ௫௦)

ஈங்கும்வந்துற்றனனியாவதுன்னியோ
வாங்கதுதெரிகிலேனளியன்றன்பமுந்
தீங்குறுசலந்தரன்றிறலும்வாழ்க்கையு
நீங்குதலுன்னுதிநிமலநீயென்றான்.

(இ-ள்.) எதைக்கருதியோ விங்கும் வந்திருக்கின்றான் அதனை நானறியேன் ஏழையான வென்துன்பமும் கொடுமையினையுடைய சலந்தரனின் வெற்றியும் வாழ்வும் நிமலனே நீங்குமாறு தேவரீர் நினைத்தருளல் வேண்டும் என்று கூறினன்.—எ-று.

வரையெறிபடையினன்மாற்றங்கேட்டுநின்
பருவரலொழிகெனப்பகர்ந்துபோக்கியே
கருணையினீர்மையாற்கணிச்சிவாணவ
னொருதனியாடலையுள்ளத்துன்னினன்.

(இ-ள்.) மலைகளினிறகரிந்தவச் சிரப்படையாளனன விந்திரன் சொன்னவைகளைக்கேட்டு நின் துன்பமொழிதியென்று அருள்செய்தனுப்பி மழுவேந்தியசிவபெருமான் கருணைத்தன்மையால் ஒப்பற்ற ஒருதிருவிளையாடலைத் திருவுளத்திற் கருதினர்.—எ-று. (உ௫உ)

நான்றகுண்டிகையினனரைகொள்யாக்கைய
னூன்றிய கோலினனோலைக்கையினன்
மூன்றனல்வளர்ப்புறுமுனிவரேயெனத்
தோன்றினன்றனக்கொருதோற்றம்வேறிலான்.

(இ-ள்.) தொங்காநின்றகமண்டலமேந்திய கையினையுடையவனும் நரைத்தவுடலினனும் ஊன்றப்பெற்ற கோலினையுடையவனும் தாலபத்திரமென்னு மோலைக்குடையேந்திய கையினனுமாகி மூவகை அக்கினிகளை வளர்க்கின்ற ஒரு கிழமுனிவனைப்போல உருத்தாங்கித் தனக்கொருதோற்றமற்ற இறைவன் தோன்றினர். ()

விம்மலையுற்றிடுவிரதர்க்காகமுன்
கைம்மலையுரித்தவன்கயிலையென்றிடு

மம்மலையொருபுடையணுகுந்தானவர்
செம்மலையெதிர்கொடுசெல்லன்மேயினுன்.

(இ-ள்.) துக்கமடைந்த முனிவர் நிமித்தம் முன்னாளில் யானையையுரித்த சிவபெருமான் கைலாயமென்னு மம்மலையினொருபுறத்தில் அசுரர்தலைவனை யெதிர்கொண்டு செல்லத்தொடங்கினர்.—எ-று. (உ௫௪)

இந்திரனிமையவரினத்தொடீண்டியே
வந்தனைசெய்தனன்மறைந்துபின்வர
வந்தணர்வடிவுகொண்டவுணர்காவலன்
முந்துறவெய்தியேமுதல்வன்கூறுவான்.

(இ-ள்) இந்திரனவன் தேவர்கூட்டத்துடன் வணங்கிப்பின்னான் மறைந்து வாரநிற்ப அந்தணருருக்கொண்டு அசுரர்தலைவன் முன்னரெய்தி முதல்வரான சிவபெருமானுரைக்கத்தொடங்கினர்.—எ-று. (உ௫௫)

எங்குளையாரைநீயெவரைநாடியே
யிங்குறுகின்றனையியம்புவாயென
வங்கணன்மொழிதலுமந்தண்வேதிய
சங்கையதில்வகைசாற்றக்கேளென்றான்.

(இ-ள்.) நீ யெங்கிருப்பவன்யார் நீ யாரைக்கருதி இவ்விடத்துக்குவருகின்றனை உரைத்தியென்று அழகியகண்ணுளரான சிவபெருமான் வினவச் சலந்தரன் அழகியதன்மையினையுடைய மறையோனே சந்தேகமில்லா வண்ணம் உரைக்கின்றேன் கேட்பாயாக என்று கூறினன்.—எ-று, (உ௫௬)

நிலந்தனிலுற்றுளேனேமிகாதலன்
சலந்தரனென்பவன்றமியன்வானவ
ருலைந்திடநுதல்விழியொருவன்றன்னுடன்
மலைந்திடவந்தனன்வல்லையீண்டென்றான்.

(இ-ள்.) பூமியிலிருப்பவன் வருணனுக்குமகன் சலந்தரனென்று பெயருள்ளேன் தேவர்வருந்தும் வண்ணநெற்றிக் கண்ணினையுடைய சிவபெருமானுடன்விரைந்து பொருமாறு வந்தேனென்று கூறினன்.—எ-று. (உ௫௭)

அவ்வுரைவினவியேயண்ணலெண்ணமுஞ்
செவ்விதுசெவ்விதுதீதுண்டோவெனு
வெவ்வமில்புகழ்ச்சிபோலிகழ்ந்துகாட்டிடா
நவ்வியங்கைத்தலனகைத்துச்செப்புவான்.

(இ-ள்.) அம்மொழியைக்கேட்டுப், பெருமையிற்சிறந்த நினதெண்ணத்திற்குக் கெடுதியுண்டோ நல்லது நல்லது என்று குற்றமற்ற புகழ்ச்சியைப்போல் இகழ்ந்து காட்டி மானேந்திய கைத்தலத்தினையுடைய சிவபெருமான் நகைத்துரைக்கின்றார்.—எ-று. (உ௫௮)

கயிலையங்கிரியுறைகண்ணுதற்பிரா
னயலுறவிருப்பன்யானவனொடேயமர்
முயலுறுகிற்றியேன்முடிதியுய்ந்திடுஞ்
செயலினைநினைத்தியேற்செல்கமீண்டென்றான்.

(இ-ள்.) யான் கைலையங்கிரியிலிருக்கின்ற கண்ணுதற்பிரானுடைய பக்கத்திலிருப்பவன் அவனுடன் போர்புரிய நீ முயலுவாயேல் இறந்துபடுவாய் பிழைக்குஞ் செய்கையை நினைப்பாயாறு திரும்பிப்போவாயாக வென்றுரைத்தனர்.—எ-று.

பண்ணவனிணையன பகர்தல்கேட்டலு
மெண்ணமில்சலந்தரனெரியிற்சீறியே
கண்ணழல்கதுவுறக்காயம்வேர்வெழத்
துண்ணெனவுயிர்த்திவைசொற்றன்மேயினான்.

(இ-ள்.) முனிவனிவ்வாறு கூறியதனைக்கேட்டவுடனே ஆலோசனையற்ற சலந்தரன் தீயைப்போலச் சீற்றங்கொண்டு கண்களில் அக்கினிப்பொறி நெருங்க உடலம்வியர்க்க விரைந்து பெருமூச்சுவிடுத்து இவைகளை யுரைப்பானாயினான்.—எ-று.

சிறியவன்போலெனைச்சிந்திப்பீரியான்
பெறுவதோர்சயமெலாம்பேசியாவதென்
னிறைவனாயீண்டுநின்றெனதுவன்மையை
யறிகுதிரறிகுதிரந்தணீரென்றான்.

(இ-ள்.) என்னைச் சிறியவனைப்போல எண்ணினீர் யானடையுஞ் சயங்களைக்குறித்துரைத்தாக வேண்டுவதென்னை கணப்பொழுதிவ்விடத்தில்நின்று எனது வன்மையை அறிவீர் அறிவீர் மறையவரே யென்று கூறினான் —எ-று. (௨௬௧)

என்றிவைசலந்தரனிசைப்பயாமுமுன்
வன்றிறல்காணியவந்தனம்மெனாத்
தன்றிருவடியினாற்றரணியின்மிசை
யொன்றொருதிகிரியையொல்லைகீறினான்.

(இ-ள்) என விவைகளைச் சலந்தரனுரையாநிற்ப இறைவன் யாமும் உனது வலியதிறலினைக்காணுமாறே வந்தேம் என்று கூறித்தனது திருவடியினாற் பூமியின்மீது ஒரு சக்கரத்தை விரைவாகக் கீறியருளினார்.—எ-று. (௨௬௨)

ஆங்கதுதிகிரியொன்றாகவந்தண
னீங்கிதுசென்னியிலேற்றிவன்மையாற்
றாங்குதல்வல்லையோவென்றுசாற்றலுந்
தீங்குறுசலந்தரனினையசெப்புவான்.

(இ-ள்.) அவ்விடத்திலது ஒரு சக்கரப்படையாகவாக மறையவனிங்கிதனைத் தலைமீதேற்றி வன்மையாற் சுமக்கவல்லையோ என்று திருவாய்மலர்ந்தருளுதலும் குற்றம்வாய்ந்த சலந்தரனிவைகளை யுரைத்தனன் —எ-று. (௨௬௩)

புங்கவர்யாரையும்புறங்கண்டேன்வரு
கங்கையையடைத்தனன்கார்கோள்வேலையி
லங்கியையவித்தனனரியைவென்றன
னிங்கிதுதாங்குவதரியதோவெனா.

(இ-ள்.) தேவரனைவரையும் முதுகிடுமாறு செய்தேன் வராநின்றகங்கையை யடைத்தேன் மேகம்படிந்துகிடக்கின்ற கடலிலுள்ள வடவைத்தீயையவித்தேன் அரியை வென்றேன் இங்கிதனைச் சுமத்தலருமையோவென்று.—எ-று. (௨௬௪)

புரத்தழல்கொளுவியோன்பொறித்தநேமியைக்
கரத்திடையெடுத்தனன்கனங்கொண்டெய்தலி
னுரத்திடைப்புயத்திடையுயிர்த்துத்தாங்கியே
சிரத்திடைவைத்தனன்றேவரார்க்கவே.

(இ-ள்.) முப்புரங்களில் அக்கினியை விடுத்தெரித்த சிவபெருமானுண்டாக்கிய சக்கரத்தினைக் கையினிலெடுத்தான் அது கனங்கொண்டதா யிருத்தலின் மார்பிலுந் தோளிலும் மூச்சுத்திணறலுடன் வைத்துத் தேவராரவாரிக்கும் வண்ணம் தலையின்மீது வைத்தனன்.—எ-று. (௨௬௫)

செழுஞ்சுடர்ப்பரிதியைச் சென்னிகோடலா
லொழிந்திடுசலந்தரனுச்சியேமுதற்
கிழிந்ததுமுழுதுடல் கிளர்ந்துசோரிநீ
ரிழிந்ததுபுவிதனிலிழுமெனோசையால்.

(இ-ள்.) செழுமையான சுடரினையுடைய சக்கரத்தினைத் தலைமீது தாங்குதலால் இறக்கின்ற சலந்தரனுடைய தலைமுதல் உடல்முழுதுங்கிழிந்தது இழுமெனு மோசையுடன் இரத்தவெள்ள மொழுகியது.—எ-று. (உசுசு)

பரிதியங்கடவுளப்பதகன்றனுட
லிருபிளவாக்கியேயிறைவன்றன்னிடை
யுருவுகொண்டுற்றதவ்வுலகம்யாவையுங்
குருதியம்பெருங்கடல்வளைந்துகொண்டதே

(இ-ள்.) சக்கரதெய்வம் அக்கீழ்மகனான சலந்தரனுடைய உடலினை இருபிளவாகச்செய்து இறைவனிடத்தொரு தெய்வவுருவமாக வந்துநின்றது உடனே இவ்வுலக முழுதும் இரத்தவெள்ளஞ் சூழ்ந் திரத்தமயமாகியது -எ-று. (உசுஎ)

பாதலநிரயமாம்பாழியூடுநீ
போதெனவெருவைநீர்போந்ததாயிடை
யாதியங்கடவுளவ்வவுணன்சேனையைக்
காதினன் விழிபொழிகனலின்றானையால்.

(இ-ள்.) இறைவன் பாதாளத்தின் கண்ணுள்ள நரகமான இடத்துக்கு நீபோகக்கடவை என்றவுடனே இரத்தவெள்ள மங்குச்சென்றது அப்பொழுது முதற்கடவுளாங் தச்சலந்தரவசுரன் சேனையை கண்ணினின்றுந்தோன்றிய தீப்பொறியாகிய சேனையால் அழித்தனர்.—எ-று. (உசுஅ)

பரந்திடுமவுணர்தம்பகுதிவீட்டியே
கரந்ததொல்வடிவினைக்காட்டிநிற்றலும்
புரந்தரன்முதலினோர்வணங்கிப்போற்றியெம்
மரந்தையையகற்றினையையநீயென்றார்.

(இ-ள்.) பரவிவந்த அசுரப்பகுதியை அழித்து மறைத்துவந்த பழயவடிவினைக்காட்டி நின்றவுடனே இந்திரன் முதலியோர்கள் வணங்கி ஐயனே நீ எமது துன்பத்தினை யொழித்தனை யென்று கூறினார்கள்.—எ-று. (உசுகூ)

முன்புறுபுரந்தரன்முதலினோர்க்கெலா
மின்புறுதொல்லரசியற்றநல்கியே
யன்புடன்விடைகொடுத்தமலநாயகன்
றன்பெருங்கயிலைமேற்சேர்ந்துவைகினான்.

(இ-ள்.) எதிரிலிருந்த இந்திரன் முதலிய தேவருக்கெல்லாம் இன்பம் பொருந்திய பழய அரசினைச் செய்யுமாறருள்செய்து அன்புடன் விடையளித்து அமலனாசிவபெருமான் அழகிய பெரிய கைலாயத்தினை யடைந்திருந்தனர்.—எ-று. ()

ஆவியையிழந்திடுமவுணர்காவலன்
றேவியைவிரும்பியேதிருவினாயகன்
மாவிரதியரெனமற்றவன்மனைக்
காவினுளிருந்தனன்கைதவத்தினான்.

(இ-ள்.) உயிரிழந்த அசுராதிபனான சலந்தரனுடைய மனைவியின்மீது இச்சைகொண்டு திருமகள் கொழுநனானமாயோன் பெரியவிரதமுடைய முனிவர் கோலத்துடன் வஞ்சனையாகச் சலந்தரனுடைய பூஞ்சோலையிற்சென்றிருந்தனன்.—எ-று.

இருந்திடுமெல்லையிலேமக்கற்புடை
விருந்தையென்றிடுமவள்வேந்தன் செய்கையைத்
தெரிந்திலளாற்றவுஞ்சிந்தைநொந்துமெய்
வருந்தினளுய்ந்திடும்வண்ணங்காண்கிலாள்.

(இ-ள்.) இருக்குங்காலத்து இன்புருவமான கற்பினையுடைய விருந்தை யென்னும் பெயரினையுடையவள் சலந்தரனது தன்மையை யுணராதவளாய் மிகவுமனநொந்து உய்யும் வண்ணமில்லாதவளாய் வருந்தினள்.—எ-று. (உஎஉ)

பரிதலுற்றிரங்கினள்பதைத்துச்சோர்ந்தன
ளொருதனித்திருக்கிலளுரையுமாடல
டிரிதலுற்றலவினள்செய்வதோர்கில
ளிருதலைக்கொள்ளியினெறும்புபோன்றுளாள்.

(இ-ள்.) கணவன்மீதன்பு கொண்டிரங்கினள் பதைத்துச்சோர்ந்தனள் ஒற்றையாய்த்தனித்திருக்க முடியாதவளாய்ப் பேசுதலுமில்லாதவளாய் அங்குமிங்குமாக வலவினள் இன்னது செய்வதென்னு முணர்ச்சியற்றவளாய் இருதலைக்கொள்ளியினெறும்பு போன்றவளாயினள்.—எ-று. (உஎங)

கல்வரையேந்தியகாளையைப்புணர்
தொல்வரையூழினுற்றுன்பநீங்கலா
மெல்வரையன்னதோள்விருந்தைமேவினு
ளில்வரையிகந்திடாவேமக்காவினுள்.

(இ-ள்) கன்மலையேந்திய இளையோனான மாயோனைப் புணரவேண்டிய பழய ஊழினுற் றுன்பமொழியாத மெல்லிய மூங்கிலனையதோளியான விருந்தை தனது மாளிகையைச் சூழ்ந்த காவலினையுடைய சோலையுள் உலாவ வந்தனள். ()

மடவரல்வருதலும்வைகுண்டந்தனிற்
கடைமுறைபோற்றிடுமிருவர்காவல
ரடலரியாகியேயார்த்துமுன்னுற
விடியுறுமரவுபோலேங்கியோடினுள்.

(இ-ள்) விருந்தையானவள் வருதலும் வைகுண்டத்தில் வாசல் காக்கின்ற இரண்டு துவாரபாலர்கள் வன்மைபொருந்திய இரண்டு சிங்கங்களாகிக் கர்ச்சித்து கொண்டெதிரே வர இடியொலிகேட்ட பாம்பைப்போல ஏக்கமுற்றுஓடினுள் —எ-று.

மடந்தையங்கிரிதலுமடங்கலானவர்
தொடர்ந்தனர்பின்வரத்துளங்கிச்சோலையி
னிடந்தனின்முனியெனவிருந்தவெய்யனை
யடைந்தனளடைதலுமஞ்சனீயென்றான்.

(இ-ள்) விருந்தையோடுதலும் சிங்கவுருவங்கொண்ட துவாரபாலகர்விடாது தொடர்ந்து பின்னேவரா நிற்ப நடுங்கிச்சோலையினிடத்து முனியைப்போல விருந்த மாயோனை கொடியனை அடைந்தனள் அடைதலுமவன் நீயஞ்சாதே யென்றான்.

என்றருள்புரிதலுமிகல்வெஞ்சீயமாய்ப்
பின்றொடர்காவலர்பெயர்வுற்றோடினர்
நின்றவளிருந்தவனிலைமைநோக்கியே
நன்றிவனியல்பெனநவில்வதாயினள்.

(இ-ள்.) அஞ்சாதே என்று கூறியவுடனே வலியவெவ்விய சிங்கமாய்ப் பின்னேதொடர்ந்த துவாரபாலர்கள் பெயர்ந்தோடினார்கள், அங்குநின்ற விருந்தைசோ

லையிலிருந்தவனுடைய நிலைமையைப்பார்த்து இவன் செயல் நன்றென்று கருதிக்கூறு கின்றாள்.—எ-று. (௨எஎ)

எந்தையெம்பெருமகேளெனதுகாதல
னந்தமிலீசன்மேலமருக்கேகினான்
வந்திலனின்னமுமாய்வுற்றான்கொலோ
வுய்ந்துளனேகொலோவுரைத்திநீயென்றாள்

(இ-ள்.) எந்தையான எம்பெருமானே கேட்பாயாக எனது காதலன் அழி வற்ற ஈசனுடனே போருக்குச்சென்றான் இன்னமும் வந்திலன் இறந்தானோ பிழைத் தானோ நீ உரைப்பாயாக என்றனள்—எ-று.—எ-று (௨எஅ)

இரங்கினளிவ்வகையிசைப்பமாதவன்
வரங்கெழுதானையின்மன்னர்மாயையாற்
குரங்கெனவீருருக்கொண்டுகொம்மென
வுரங்கிளர்சலந்தரனுடல்கொண்டெய்தினர்.

(இ-ள்.) வருந்தினவளாக இவ்வாறு பிருந்தை கூற மாதவனிடத்து வரம் பெற்று விளங்குகின்ற சேனைகாவலர் மாயையாற் குரங்கென விரண்டுருக்கொண்டு விரைவாக வன்மையுடன் விளங்குகின்ற சலந்தரனுடைய உடலைக்கொண்டுவந்தனர்.

இருபிளவாமவனியாக்கைகொண்டுசென்
றரிவைமுன்னிட்டனரதனைக்காண்டலும்
வெருவினள்பதைத்தனள்வீழ்ந்தரற்றினு
ளொருவினளுயிரெனவுணர்வுநீங்கினாள்.

(இ-ள்.) இரண்டுபிளவானவவனுடலினைக்கொண்டுபோய் விருந்தையினெதி ரே இட்டனர் அதனைக்காணுதலும் நடுங்கிப் பதைத்து விழுந்து உயிர்விட்டன ளென்னுமாறு அறிவு சோர்ந்தனள்.—எ-று. (௨அ௦)

வருந்தலைவருந்தலைமங்கைநீயெனுக்
கரந்தனையோச்சியேகாதனீர்மையா
லிருந்தவனெழுப்பலுமெழுந்துதேறியே
விருந்தைகைதொழுதிவைவிளம்பன்மேயினாள்.

(இ-ள்.) வஞ்சமுனிவன் கையை நீட்டி நீ வருந்தாதே நீ வருந்தாதே மங் கையே யென்று ஆசைத்தன்மையால் தொட்டெழுப்புதலும் எழுந்து தெளிந்து விருந்தை கைதொழுது இவைகளை உரைக்கத்தொடங்கினாள்.—எ-று. (௨அக)

நின்னிகர்மாதவர்நிலத்தினில்லையா
லென்னுயிர்காத்தியேலெனதுநாயகன்
பொன்னுடலந்தனைப்பொருத்தியவ்வுயிர்
தன்னையுமமைத்தனைதருதிநீயென்றாள்.

(இ-ள்.) நினக்கொப்பான சிறந்ததவசியர் பூமியிற்கிடையார் நீஎனதுயிரைக் காப்பாயேல் எனது கணவனுடைய அழகிய உடலினைப் பொருத்தி உயிரையும் அவ் வுடலில் வைத்துத்தருதி என்றுகூறினாள்.—எ-று. (௨அ௨)

ஆய்துகாலையிலவுணன்யாக்கையை
யேயெனவொன்றுமாறியற்றிமாதவன்
மாயமாதாகியேமறைந்துமற்றவன்
காயமதிடைதனிற்கலந்துவைகினான்.

(இ-ள்.) அவளங்ஙனமுரைத்த காலத்துச் சலந்தராசுரனுடலினை விரைவாகப் பொருந்தும் வண்ணஞ்செய்து மாதவன் மாயமாய் மறைந்து அச்சலந்தரனுடைய உடலிற்பொருந்தி இருந்தான்.—எ-று. (உஅ௩)

புல்லியகுரங்கெனப்புகுந்தகள்வரு
மொல்லையின்மறைந்தனருயர்சலந்தரன்
றொல்லுடல்புகுந்தரிதுண்ணென்றேயெழ
மெல்லியல்கண்டனள்வியந்துதுள்ளினாள்.

(இ-ள்.) இழிந்த குரங்குருவமாகவந்தவஞ்சர்களும் விரைவாகமறைந்தனர். உடனே உயர்ந்த சலந்தரனுடைய பழய உடலத்திற்பொருந்தி மாயோன் விரைந்தெழா நிற்ப விருந்தைகண்டு ஆச்சரியமுற்றுத் துள்ளினாள்.—எ-று.

துள்ளுதல் சந்தோடமிகுதியாற் குதித்தாடுதல். (உஅ௪)

உய்ந்தனன்கணவனென்றுளத்திலுன்னியே
வெந்துயரகன்றனள்விருந்தையென்பவள்
வந்தனைபோலுமென்மகிணநீயெனா
வந்தமிலுவகையாலவனைப்புல்லினாள்.

(இ-ள்.) தன் கணவன் உயிருற்றெழுந்தானென்று மனதினினைத்து விருந்தைஎன்பவள் வெவ்விய துயரினின்றும் நீங்கினாள் என் கணவனேவந்தாயோவென்று அளவற்ற மகிழ்வினாலவனை ஆலிங்கனஞ்செய்தாள்.—எ-று. (உஅ௫)

புல்லியவிருந்தையைப்புணர்ந்துமாயவ
னெல்லியும்பகலுமோரிறையுநீங்கலா
னல்லியந்தேனுகரளியைப்போலவண்
மெல்லிதழமுதமேமிசைந்துமேவினான்.

(இ-ள்.) கட்டியணைத்த விருந்தையைப்புணர்ந்து மாயவன் இரவும் பகலும் இறைப்பொழுதும் விலகாதவனாய் மலரினகவிதழிலுள்ள தேனினை உண்ணுகின்ற வண்டினைப்போல அவளுடைய மெல்லிய இதழினமுதினை அருந்தி இருந்தனன் ()

காய்கதிர்நுழைவுறுக்கடிமென்காவினுண்
மேயினன்பலபகல்வேளினூல்வழி
யாயதோர்வைகலினரனதாணையான்
மாயமதயர்த்தனன்மலர்க்கண்டுஞ்சினான்.

(இ-ள்). காய்கின்ற கதிர்நுழையாத இருண்ட அச்சத்தினைத் தருகின்ற இளமரக்காவினுள் இருந்து ..லதினம் மன்மதாகமப்படி சுகானுபவத்திலிருந்தான் அங்ஙனமாகிய தினங்களுள் ஒருதினம் சிவபெருமானுடையகட்டளையால் தான்கொண்ட மாயைமறந்து உறங்கினான்.—எ-று. (உஅ௭)

துஞ்சியவேலையிற்றுணைவியாகிய
பஞ்சினின்மெல்லடிப்பாவைபார்த்திவன்
வஞ்சகன்வஞ்சகன்மாயனேயெனா
வஞ்சினணெஞ்சகமழன்றுநீங்கினாள்.

(இ-ள்.) துஞ்சிய வேலையில் பஞ்சின் மெல்லடியாளான சலந்தரன் மனைவியாகிய பிருந்தைபார்த்து இவன் வஞ்சகன் வஞ்சகன் மாயனே என்று அஞ்சி மனமழன்று அவனைவிட்டு விலகிச்சென்றனள்.—எ-று. (உஅ௮)

அருந்ததியன்னகற்பழிந்ததன்மையால்
வருந்தினளுயிர்த்தனண்மாயம்யாவையும்

பொருந்தியதன் னுயிர்ப்போதநீர்மையாற்
றெரிநதனள்சீதரற்கிதனைச்செப்புவாள்

(இ-ள்) அருந்ததியையொத்த கற்பழிந்த தன்மையால் வருந்தியுயிர்த்து மாயோன் மாயமனைத்தும், பொருந்திய தனது ஜீவபேதத்தன்மையாலுணர்ந்து தாங்குஞ் சீதரனுக்கிதனை யுரைக்கின்றாள்.—எ-று. (உஅக)

மாவலியுடையபதோர்மடங்கலாயினோர்
காவலிருவரக்காவலாளருன்
மேவலராயுறவேந்லனுகிநீ
யோவலைருங்கொடுதிரிதியொண்புவி.

(இ-ள்.) மிக்க வன்மையினையுடைய சிங்கமாகவந்தென்னைத் துரத்தியவர்கள் நினது துவாரபாலர் அன்னோர் நின்பகைவராகிநிற்க நீ ஒள்ளியபூமியில் அரசனுகப்பிறந்து குரங்குகளுடன் விடாமற் திரிவாயாக.—எ-று (உகo)

பொற்புறுகணவனைப்போலவந்தெனைப்
பற்பகல்புணர்ந்தனைபகைவர்மாயையாற்
கற்புடைமனைவியைக்கவர்ந்துபோகநீ
சொற்படுபழியினைச்சுமத்தியாலென்றாள்.

(இ-ள்) எனதழகிய கணவனைப்போல வந்து என்னை அநேகதினம் புணர்ந்தனை ஆதலின் மாயத்தால் நினது கற்பினையுடைய மனைவியைப் பகைவர் கவர்ந்துசெல்லாநிற்ப அதனாலுரையா நின்றபழியினை நீ சுமப்பாயாகவென்று கூறினாள். ()

இக்கொடுமொழிபுகன்றெரியைமூட்டியே
புக்குயிர்துறந்தனள்புலம்பியாங்கவ
ளக்குறுசுடலைநீறுடிவாடினான்
மைக்கடன்மேனியன்மாலின்மூழ்கியே.

வேறு.

(இ-ள்.) இந்தக்கொடிய சாபமொழியைக்கூறித் தீயுண்டாக்கி அதனில்விழுந்துயிர்விடுத்தனள் இதனைக் கரியகடலினையனைய மேனியினையுடைய மாயோன் உணர்ந்து அவள் என்புகிடக்குஞ் சுடுகாட்டுச் சாம்பலைப்பூசி வருந்தினான்.—எ-று (உகஉ)

அத்துணைதன்னின்வானோரம்புயன்கயிலையேகி
நித்தனையிறைஞ்சிமாயோனிலைமையையுணர்த்தும்போழ்திற்
சத்தியங்கதனைத்தேர்ந்துதலையளிசேய்துதானோர்
வித்தினையுதவியீதுவிண்டுமுன்னிடுதிரென்றாள்.

(இ-ள்.) அப்பொழுது தேவர்களும் பிரமனுங்கைலாயத்துக்குச் சென்று சிவபெருமானை வணங்கி மாயோன் தன்மையை யுரைக்கும்பொழுது அதனை உமாதேவியுணர்ந்து கருணைசெய்து தானொருவித்தினைக் கொடுத்து இதனை நாராயணனெதிரே இடுங்களென்று திருவாய்மலர்ந்தருளுதலும்.—எ-று. (உகங)

ஈதலுமதனைவேதாவிருகையாலேந்திச்சென்னி
மீதுறக்கொண்டுபோந்துவிருந்தைதன்னீமந்தன்னிற்
றூதுறுபலியின்வித்தடங்கடலமுதம்பெய்ய
மாதவன்முன்னமாங்கோர்துளவமாய்மலிந்ததன்றே.

(இ-ள்.) உமாதேவியார் கொடுத்தவித்தினைப் பிரமனிருகரங்களாலுமேந்தித் தலைமேலாகக்கொண்டு சென்று பிருந்தையின் சுடலையிற் புழுதியான சாம்பலில் விதைத்துப் பெரியகடனீரினை அதனில் வார்க்க அது மாதவனெதிரே யொருதுளசியாக வளர்ந்துநின்றது.—எ-று. (உகச)

தண்டுளவான தாங்கோர்தையலாய்நின்றகாலைக்
கண்டனன்றிருவின்கேள்வன்கனலிடைப்புகுந்தாண்மீது
கொண்டிடுகாதனீங்கியவள்வயிற்கூட்டம்வெஃக
வண்டருமயனுமாலுக்கருங்கடியியற்றியீந்தார்.

(இ-ள்.) தண்ணியதுளவமான தவ்விடத்திலொரு பெண்ணுருக்கொண்டு நின்றவுடனே அதனைத் திருமகள் கொழுநன்கண்டு தீயில்விழுந்திறந்த பிருந்தையின் மீதுவைத்த மோகமொழிந்து இப்பெண்ணினிடத்துச் சேர்க்கையை விரும்பத் தேவரும்பிரமனும் அவளை அந்நாராயணனுக்கு மணஞ்செய்தளித்தனர்.—எ-று. (உகரு)

கடியுறுதுளவமென்னுங்கன்னியைக்கொண்டுகஞ்சக்
கொடியுறுதகைமைத்தானகோநகர்குறுகிவேறோர்
படியுறுபெற்றித்தல்லாப்பல்பெரும்போகமாற்றி
முடியுறுசூட்டுமாகமுடித்தனன்முளரிக்கண்ணன்.

(இ-ள்.) மணம்பொருந்திய துளவலரென்னும் பெண்ணை அழைத்துக் கொண்டு திருமகள் வாசத்துக்குரிய வைகுந்தநகரையடைந்து வேறொருமுறையாகக்கிடைத்தல்கூடாத பலபெரிய போகமனுபவித்து அவளைத்தலைமாலையாகவும் சூடி அனுபவித்தனன் தாமரைமலர்போன்ற கண்களையுடைய திருமால்.—எ-று. (உகசு)

அவன்சலந்தரனைவீட்டுமாழியைவாங்கப்பன்னாட்
சிவன்கழல்வழிப்பட்டோர்நாட்செங்கணைமலராச்சாத்த
வுவந்தனன்விடைமேற்றோன்றியப்படையுதவப்பெற்று
நிவந்தனனதனால்வையநேமியானென்பமாதோ.

(இ-ள்.) அம்மாயோன் சலந்தரனைக்கொன்ற சக்கரத்தைப்பெறுதற்கு அநேகதினம் சிவபெருமான் திருவடிகளைத் தாமரைமலரால் அருச்சித்து ஒருதினம் தனது செவ்வியகண்ணையே தாமரைப்புட்பமாக அருச்சிக்கமகிழ்ந்து இடபத்திலெழுந்தருளி அச்சக்கரத்தினையளிக்க வதனைப்பெற்று உயர்வுற்றான் அதனாலவனை உலகினர் நேமியானென்று கூறுகின்றார்கள்.—எ-று. (உகள)

வேறு.

போற்றலார்தம்புரமடுபுங்கவன்
வேற்றுருக்கொள்வியனருட்டன்மையைச்
சாற்றினுமினித்தன்னிகரில்லதோ
ரேற்றின்மேல்வருந்தன்மையியம்புவாம்:

(இ-ள்.) பகைவரின் முப்புரங்களையழித்த இறைவன் வேற்றுருக்கொண்ட பெரிய அருளின் தன்மையை உரைத்தோம் இனித்தனக்கு நிகரற்ற இடபத்தின்மீது ஏறிவருந் தன்மையையுரைக்கின்றோம்.—எ-று. (உகஅ)

இன்னநான்குகத்தெல்லையிராயிர
மன்னுகின்றதொர்வைகலவ்வைகறான்
றுன்னுமுப்பதுதொக்கதொர்திங்களா
மன்னதாறிரண்டால்வருமாண்டரோ.

(இ-ள்.) பிரமனுக்கு இந்நான்கு யுகங்கள் இரண்டாயிரங்களின் செல்கை ஒருதினம் அத்தின நெருங்கிய முப்பதுகொண்டதொருமாதம் அம்மாதம் பன்னிரண்டானால் ஒருவருடம்.—எ-று. (உகக)

ஆண்டு நூறுசென்றாலயற்காயுவு
மாண்டுபோமதுமாற்கொருவைகலா
மீண்டுநூல்களெலாமிவைகூறுமாற்
காண்டியாலிவைகற்றுணர்பேதைநீ.

(இ-ள்.) நூறுவருடங்களானால் பிரமனதாயுள்முடியும் அவ்வாறொரு பிரமன் இறந்தகாலம் திருமாலுக்கொருதினம் நெருங்கிய நூல்களனைத்தும் இவற்றையுரையாநிற்கும் கற்றறிபேதையே இவைகளையாராய்ந்து பார்.—எ-று. (ஙOO)

ஆயதன்மையிலச்சுதற்காயுவு
மாயுமெல்லையின்மன்னுயிர்யாவையுந்
தேயுமண்டஞ்சிதைந்திடுமெங்கணும்
பாயிருங்கனலேபரந்துண்ணுமால்.

(இ-ள்.) அம்முறையில் விண்டுவினாயுளும் அழிந்தொழியும். அக்காலத்தில் நிலைபெற்ற சீவராசிகளனைத்தும் குறையும் எங்குப்பார்த்தாலும் அண்டங்கள் சிதைந்தழியும் எவ்விடத்திலும் பரவியபெரிய அக்கினியே அனைத்துப் பொருள்களையுமழிக்கும்.—எ-று. (ஙOக)

ஆனகாலையகிலமுமீமமாய்த்
தூநலங்கொடுதோன்றுமச்சூழலிற்
றானுலாவித்தனிநடஞ்செய்திடு
ஞானநாயகனுயகிகாணவே.

(இ-ள்.) அப்பொழுது அனைத்துலகுஞ் சுடுகாடாய் நல்லதன்மைவாய்ந்து காணப்படும், அங்ஙனங் காணப்படும் அவ்விடத்தில் ஞானநாயகரான சிவபெருமான் தமதருட்சத்திகாணும் வண்ணம் ஏகமாகநின்று நடனஞ்செய்வார் —எ-று. (ஙOஉ)

பெருகுதேயுப்பிரளயமன்னதிற்
றருமம்யாவினுக்குந்தனித்தெய்வதம்
வெருவியாமிவண்வீடுதுமேலினிப்
புரிவதேதெனப்புந்தியிற்சூழ்ந்ததே.

(இ-ள்.) பெருகிய அக்கினிப்பிரளயத்தில் அனைத்திற்குந் தனித்தெய்வமான தருமம் அச்சமுற்று இனிநாமிறப்போம் இனிமேற்செய்வதென்னையென்று மனதினிலாலோசனை செய்தது.—எ-று (ஙOங)

தரும மெத்தேயத்தாருக்கு மெச்சாதியாருக்கு மெச்சமயத்தாருக்கு மொன்றேயாதலின் தனித்தருமத்தெய்வதமென்றார். அக்கினிப்பிரளயத்தில் அனைத்துப் பொருளுமழிந்து அத்தருமமொன்றுமே அழியாது எஞ்சி நின்றமையை விளக்கத்தனித்தருமமென்றார். அக்கினிப்பிரளயத்திலுந் தருமத்தெய்வமழியாது நிற்பதொன்றாதலைக்காண்க.

ஆறுலாஞ்சடையண்ணலைச்சேர்வனே
லீறிலாதென்றுமுற்றிடுவேனெனாத்
தேறியேயறத்தெய்வதஞ்செங்கணு
டேனறதாயொரேறுருக்கொண்டதே.

(இ-ள்.) கங்கையாறு பொருந்திய சடையினையுடைய கடவுளையடைந்தால் அழியாமலென்று மிருப்பேனென்று துணிந்து தருமதேவதை செவ்வியகண்ணினவான இடபமாகிய ஒரு அழகிய உருவினைக்கொண்டது.—எ-று. (ஙOச)

ஏற்றின்மேனிகொண்டீசன் முன்னேகியே
போற்றியானின்றுபொன் றிடுந்தன்மையை
மாற்றியாற்றல்வழங்கிநிற்கூர்தியாம்
பேற்றையெற்குப்பிரானருளென்னவே.

(இ-ள்) இடபவுருவங் கொண்டிறைவனெதிரே சென்றுதுதித்துயானின்று அழியுந் தன்மையைமாற்றி வன்மையளித்து நினக்குவாகனமாக இருக்கும் பேற்றினை யடியேற்கு எம்பெருமானே அருள்செய்வாயாக என்று கூறுதலும்.—எ-று. ()

வேறு.

இறத்தலேயின்மையும்யானமாய்த்தனைப்
பொறுத்திடுந்தன்மையும்பொருவில்வன்மையு
முறைத்திடுமன்பும்வாலுணர்வுநல்கியே
யறத்தனிக்கடவுளுக்கண்ணல்கூறுவான்.

(இ-ள்.) தருமதெய்வத்துக்குச் சாவாததன்மையும் வாகனமாய்த் தன்னைச் சுமக்குந்தன்மையும் உரைக்கப்பெற்ற அன்பும்தூய வுணர்வுமளித்துப் பெருமையிற் சிறந்த இறைவனுரைக்கின்றார்.—எ-று. (௩௦௬)

முதலயலிடைகடைமொழியநின்றிடுஞ்
சதுர்விதயுகந்தனிற்றருமத்தின்றிற
மிதுவெனநான்குமூன்றிரண்டொன்றாகிய
பதமுறையூன்றியேபடியிற்சேறிமேல்.

(இ-ள்.) முதலும் அயலும் இடையுங்கடையுமென வுரைக்கநின்றிடுங் கிரேததிரேத துவாபர கலியென்னு நான்குவகையுகங்களில் தருமத்தின் தன்மை யிதுவென்றுநான்குமூன்று இரண்டு ஒன்று ஆகியகால்களை முறையே பூமியில்வைத்து உலகிற் பின்னருலவுவாயாக.—எ-று. (௩௦௭)

ஈங்குனதிடந்தனில்யாமெக்காலமு
நீங்கலமிருந்தனநீயும்வந்துநம்
பாங்கரினடைந்தனைபரிவோடூர்தியாய்த்
தாங்குதியாரினுந்தலைமைபெற்றுளாய்.

(இ-ள்.) எவரினுந்தலைமைபெற்ற தருமமே! யாமெக்காலமு முன்னிடத்தில் நீங்காமலிருந்தோம் நீயும்வந்து நமதுபக்கத்தையடைந்தனை விருப்பத்துடன் நம்மை வாகனமாகத் தாங்கக்கடவை.—எ-று. (௩௦௮)

எண்ணுந்தொண்டர்களியற்றுபாவமும்
புண்ணியமாநமைப்புறக்கணித்துளார்
பண்ணியவறமெலாம்பாவமாகுமாற்
றிண்ணமீதருமறைதானுஞ்செப்புமே.

(இ-ள்.) எம்மை எண்ணுகின்ற எமதடியவர்கள் செய்கின்ற பாவமும் புண்ணியமாகும் எம்மையலட்சியஞ் செய்தவர்கள் செய்த தருமமெலாம் பாவமாகும் இது திண்ணம் இதனை அரியவேதமு முரையாநிற்கும்.—எ-று. (௩௦௯)

மைதவிரடியர்செய்பவமுமற்றுளார்
செய்திடுதருமமுந்திரிபதாகியே
யெய்திடுகின்றதியாமுன்றன்னிடை
மெய்திகழுயிரெனமேவும்பான்மையால்.

(இ-ள்.) நா முன்னிடத்து மெய்யாக விளங்குமுயிராகப் பொருந்தியிருக்குந் தன்மையாற் குற்றமற்ற அடியவர்கள் செய்யும்பாவமும் மற்றையோர் செய்திடுந்தருமமும் மாறுபட்டு நிற்கும்.—எ-று. (கூ௯0)

நின்னிடையாமுளோநீயுமூர்தியாய்
மன்னுதியெமதுபான்மற்றிதல்லதை
யின்னுமோர்வடிவுகொண்டெம்மைப்போற்றுதி
யன்னதுமுணர்கெனவருளிச்செய்தரோ.

(இ-ள்.) நின்னிடத்து நாமிருக்கின்றோம் நீயும்எம்மிடத்து ஊர்தியாகப்பொருந்தி இருக்கின்றனை இஃதன்றி வேறுமொரு வடிவுகொண்டு எம்மைத்துதிப்பாய் அதனையு மறிவாயாகவென வருளிச்செய்து.—எ-று. (கூகக)

வேறு.

கூர்ந்தசூலக்கொடும்படைவானவன்
சார்ந்துபோற்றுந்தருமக்கடவுளை
யூர்ந்திடுந்தனியூர்திபதாகியே
சேர்ந்திடும்படிசீரருள்செய்தனன்.

(இ-ள்.) கூரியசூலமான கொடிய படையேந்திய சிவபெருமான் தன்னையடைந்துவணங்கிய தருமதேவதையை நடாத்து மொப்பற்றவாகனமாகப் பொருந்தியிருக்குமாறு சிறந்தவருள் புரிந்தனர்.—எ-று. (கூகஉ)

அந்தநாண்முதலாதிப்பிரான்றனைச்
சிந்தைமேற்கொண்டசீருடையன்பர்முன்
னந்தியாகுநலம்பெறுமூர்திமேல்
வந்துதோன்றும்வரம்புரிபான்மையால்.

(இ-ள்.) அத்தினமுதலாக ஆதிக்கடவுள் தம்மைச் சிந்தையின்மீது கொண்டசிறப்பினையுடைய அடியவரெதிரே தருமத்தெய்வத்திற்கு வரமளித்திருக்குந் தன்மையால் இடபமான நன்மைபொருந்திய வாகனத்திலெழுந்தருளுவர்.—எ-று. (கூகங)

சாற்றுமவ்விடைக்கேதனைத்தாங்குபே
ராற்றலீந்தசெயலறிந்தல்லவோ
மாற்றலார்புரஞ்செற்றுழிமாயவ
னேற்றின்மேனிகொண்டெந்தையைத்தாங்கினன்.

(இ-ள்.) முன்னுரைத்த அந்த இடபத்துக்கே தன்னைச்சுமக்கும் பேராற்றலினை இறைவனளித்ததை அறிந்தன்றோ பகைவர்முப்புரங்களை அழித்தபொழுது மாயவன் இடப உருவங்கொண்டு எமது பெருமானைச் சுமந்தனன்.—எ-று. (கூகச)

ஆதலாலரனவ்விடையூர்ந்திட
லேதமோவன்றிதுநிற்கத்தெண்டிரை
மீதுதோன்றும்விடத்தையுண்டானென
வோதினையதனுண்மையைக்கேட்டிநீ.

(இ-ள்.) அதனாலரன் அந்த இடபத்தையேறிநடத்துதல் குற்றமோ வன்று, இது நிற்கக் கடலின்மீது பிறந்தவிடத்தினை உண்டனனென்று கூறினாய் அதனுண்மையை நீ கேட்பாயாக.—எ-று (கூகரு)

வேறு.

நிருதர்தம்முடனவுணருமமரருநேர்ந்து
திருகுவெஞ்சினத்தொருபகன்முந்துபோர்செய்ய

விருதிறத்தினும்பற்பலர்வல்லையிலிறப்ப
வெருவியன்னதுகண்டனரமரினைவிடுத்தார்.

(இ-ள்.) அசுரர்களுந் தேவர்களுமெதிர்த்து மாறுபட்ட வெவ்வியகோபத்துடன் ஒருதினம் கொடியபோர்புரிய இருபகுதியினும் அநேகர் விரைவாக இறந்தனர் அதனைக்கண்டு இருபகுதியினரும் பயந்து சண்டைசெய்வதை நிறுத்தினார்கள்.

மேலைவானவரவுணர்தங்கோவொடுவிரவிக்
காலமெண்ணிலவிருந்துபோர்செய்வதுகருதி
நாலுமாமுகத்திறையவன்பதத்தினைநணுகிச்
சீலமோடவன்றாண்மலர்பணிந்துரைசெய்வார்.

(இ-ள்.) விண்ணுலகினரான தேவர்கள் அசுரவரசனுடன் கலந்தாலோசனை செய்து ஒருவரையொருவர் எதிர்த்து அளவற்றகாலம் போர்புரிதலைக்கருதிச் சிறந்த நான்குமுகங்களையுடைய பிரமனுலகினை யடைந்து ஒழுக்கத்துடன் அவன் சரணகமலங்களை வணங்கி உரைப்பார்கள்.—எ-று. (ருகஎ)

ஒல்குமாயுளையுடையரேம்பற்பகலுளுற்று
மல்குபேரமரியற்றுவான்பாற்கடன்மதியா ,
வல்கலின்றியவமிர்தினைவாங்கியேயடிகே
ணல்குவரெமக்கென்றலுமயனிவைநவில்வான்.

(இ-ள்) சுவாமியே நிலையற்ற ஆயுளினையுடைய நாங்கள் பலதினங்கள் பழகியுள்ள மிகுந்த பெரும்போரினைச் செய்தற்குப் பாற்கடலினைக்கடைந்து குறைவின்றி யமிர்தினை எடுத்து எமக்குக் கொடுப்பாயாகவென்று கூறுதலும் பிரமனிதனையுரைக்கின்றான்—எ-று. (ருகஅ)

ஆதிமாயவற்கிச்செயன்மொழிகுவமவனே
யோதவேலையைக்கடைந்தமுதளித்திடுமுண்டாற்
சாதல்வல்லையில்வந்திடாதென்றயன்சாற்றிப்
போதுநாமெனவவரொடும்பாற்கடல்புகுந்தான்.

(இ-ள்.) ஆதிநாராயணனுக்கிச் செயலினை உரைப்போம் அவனே அலைகளையுடைய கடலினைக்கடைந்து அமுதளிப்பானதனை யுண்டான் மரணமானது சீக்கிரமுண்டாகாது என்று, பிரமனுரைத்துப்போவோமென அத்தேவர்களுடன் பாற்கடலையடைந்தான்.—எ-று. (ருகக)

நனந்தலைப்படுபயங்கெழுதெண்டிரைநடுவ
ணனந்தன்மீமிசைத்துயிலுறுமூர்த்தியையணுகி
மனந்தவாதபேரன்பொடுநான்முகன்வழுத்த
நினைந்துகண்விழித்தெய்யெனவெழுந்தனனெடியோன்.

(இ-ள்.) நல்லசங்குகள் அலைவீசுதலைத் தடுக்கின்ற பால் விளங்குகின்ற கடலின்நடுவில் அனந்தன்மீது கண்ணுறங்கு நாராயணனை யடைந்து மனத்தினீங்காத பேரன்புடன் நான்முகன் றுதிக்க நெடியோனென திருமால் அதனை யெண்ணியறிந்து கண்விழித்து விரைந்தெழுந்தான்.—எ-று. (ருஉ0)

நீவிரிவ்விடைவந்தவாறென்னெனநெடியோன்
பூவின்மேல்வருபண்ணவனவுணர்கள்பொருவி
றேவர்வேந்தர்கள்வேண்டியகுறையினைச்செப்ப
வாவதென்றதற்கியைந்தனனளித்திடுமருளால்.

(இ-ள்.) திருமால் நீங்களிவ்விடத்துக்கு வந்தவாலாறென்னேயென்று கேட்கத் தாமரைமலரிற்பிறந்த பிரமதேவன் அசுரர்தலைவனும் தேவர்தலைவனும் வேண்டிய குறையை உரைக்க, இரட்சிக்குங் கருணையாலவ்வாறேயாகவென்று அதற்கியைந்தனன்.—எ-று. (ஙஉக)

அருள்புரிந்தெழுமாயவன்மந்தரமதனை
யுருள்புரிந்திடுமத்தெனநிறுவியேயுடலாம்
பொருள்புரிந்திடுமதியினைமதலையாப்புரியா
விருள்புரிந்தவாசுகிதனைநாணெனயாத்தான்.

(இ-ள்.) அருள்செய்தெழுந்த திருமால் மந்தரமலையை உருட்சியானமத்தாக நாட்டி உடலைவளர்க்கின்ற ஓடதிகளைத் தனது கலைகளால் வளர்க்கின்ற சந்திரனைத் தூணாகச்செய்து இருளைச்செய்கின்ற விடத்தினையுடைய வாசுகியென்னும் பாம்பினை நாணாகக்கட்டினான்.—எ-று. (ஙஉஉ)

ஒருபுறத்தினிலமரர்களொருபுறத்தவுண
ரிருபுறத்தினுமீர்த்திடநல்கியிப்புவிசூழ்
தருபுறக்கிரியனையமத்தடிமுடிதன்மெய்
வருபுறத்தினுங்கரத்தினும்பரித்தனன்மாலோன்.

(இ-ள்.) ஒருபுறத்தினிற் தேவர்களும் மற்றொருபுறத்தினில் அசுரர்களும் நின்று இரண்டுபுறங்களிலுமாக இழுக்கக்கொடுத்து இவ்வுலகினைச்சுற்றியுள்ள சக்கரவாளகிரிபோன்ற மத்தின் அடியையும் முடியையும் தனது முதுகினாலுங் கையினாலுந் திருமால் தாங்கினான்.—எ-று. (ஙஉங)

ஆனதன்மையின்மாயவன்பரித்துழியமரர்
கோனும்வானவர்யாவருமவுணருங்கோமான்
றானும்வாசுகிபற்றியேவலியுறுந்தகவால்
வானிலாவுமிழ்பாற்கடன்மறுகிடமதித்தார்.

(இ-ள்.) அவ்வாறான தன்மையிற் திருமால் தாங்கினவுடனே தேவராசனும் தேவரனைவரும் அசுரர்களும் அசுராதிபனும் வாசுகியைப்பிடித்து அதற்கு சோவுண்டாமாறு வெள்ளிய சந்திரனைத் தன்னிடத்து நின்றும் வெளிப்படுத்துகின்ற பாற்கடல் கலங்கும் வண்ணம் கடைந்தார்கள்.—எ-று. (உஉச)

மதித்தவேலையவ்வேலையினுடைந்தெனவாய்விட்
டதிர்த்ததேவருமுலைந்தனர்குலைந்தனவகிலங்
கதித்தமேருவுஞ்சலித்தனவொலித்தனகரிகள்
பதைத்துவெய்துயிர்த்தொடுங்கினநடுங்கினபணியே.

(இ-ள். அங்ஙனங்கடைந்தகாலத் துடைந்தாற்போல வக்கடல் வாய்விட்டொலித்தது. அவ்வொலியைக் கேட்டுத் தேவர்களும் நடுநடுங்கினார்கள். உலகமனைத்தும் நடுநடுங்கின. தடித்த மேருவுஞ் சலித்தது திக்குயானைகள்பயந்து பிளிறின அட்டநாகங்கள் பதைத்து வெய்துயிர்த்து ஒடுங்கி நடுங்கின.—எ-று. (ஙஉரு)

உடைந்துபோவதுகொல்லெனவமரர்களொருங்கே
தொடர்ந்ததம்பெருவலிகொடேமந்தரஞ்சுழலக்
கடைந்துவேலையைக்கலக்குழியீர்த்திடுங்கயிறு
யடைந்தவாசுகிபொறுக்கலாதயர்ந்ததையனமேற

(இ-ள்.) உடைந்துபோவதோ வென்று தேவரனைவரும் பொருந்திய தமது பெரியவன்மையைக்கொண்டு மந்தரமாகிய மத்துச் சுழலுமாறு கடைந்து பாற்கடலைக் கலக்கியகாலத்து இழுக்குங்கயிறாகவிருந்த வாசுகி பொறுக்காமல் அயர்ந்தது.—எ-று.

ஊன்றுபேதுறவெய்தியேயாற்றவெய்துயிர்த்துத்
தோன்றுவெஞ்சினங்கொண்டுமெய்பதைத்துநாத்துடிப்ப
வான்றவாயிரம்வாய்தொறுமாலகாலத்தைக்
கான்றதத்துணையளக்கருமுமிழ்ந்ததுகடுவே

(இ-ள்.) அவ்வாசுகி மிகுந்த நடுக்கமுற்று மிகவும் பெருமூச்சுவிடுத்து உண்டாகாநின்ற பெருங்கோபங்கொண்டு உடல்துடித்து நாத்துடிப்ப ஆயிரம்வாய்தோறும் ஆலகாலத்தைக்கக்கியது அப்பொழுது அப்பாற்கடலும் விடத்தினைக்கக்கியது.—எ-று.

ஈற்றுக்கோடியினெழுமுகிற்கோடியினிருண்டு
கூற்றுக்கோடியின்மறங்கொடுதிசைதொறுங்குலவுங்
காற்றுக்கோடியின்விரைவினல்வடவையங்கடுந்தீ
நூற்றுக்கோடியிற்பரந்ததவ்விடமெலாநொய்தின்.

(இ-ள்.) அவ்விடமனைத்தும் உலகமுடிவுகாலத்தி லெழுகின்ற மேககூட்டங்களையொப்பக் கருநிறம்பெற்றுக்கோடிக்கூற்றுக்களிடந்தங் கும்கொலையாகிய கொடுமையைமேற்கொண்டு திக்குகள்தோறும் உலாவுகின்ற கோடிக்காற்றுக்களின் வேகத்துடன் நூறுகோடிவடவாக்கினியைப்போல விரைவாகப்பரவியது —எ-று. (ஙஉஅ)

ஓடலுற்றெழுந்தவ்விடஞ்சூழ்தலுமுலையா
வோடலுற்றனர்தானவரும்பராயுள்ளோ
ரோடலுற்றனர்முனிவரரோடலுற்றனரா
லோடலுற்றனருலகெலாம்படைத்திடுமுரவோர்.

(இ-ள்.) ஓடுதலுற்று எழுந்து அவ்விடஞ்சூழ்ந்துகொள்ளுதலும் நிலைகுலைந்து அசுரராயுள்ளாரனைவருமோடினார்கள். தேவர்களாயுள்ளவர்களுமோடினார்கள் முனிவர்களுமோடினார்கள் உலகெலாம்படைக்கு மாற்றலினையுடைய பிரமன் முதலியவர்களுமோடினார்கள்.—எ-று (ஙஉகூ)

தண்டுழாய்முடிப்பண்ணவனிதனையதோர்தன்மை
கண்டுமந்தரங்காப்புவிட்டுள்ளமேற்கவற்சி
கொண்டுநாமின்றுபோற்றுதுமீதெனக்குறியா
வண்டராதியர் மேற்செலும்விடத்தின்முன்னடுத்தான்.

(இ-ள்.) தண்ணிய துளவமாலையணிந்த முடியினையுடைய திருமால் இச்செயலினைப்பார்த்து மந்தரமாகிய மத்தினைக்காத்து நின்றதனைவிடுத்து உள்ளத்திற் கவற்சியெய்தி நாமிதனைக் காப்போமாகவென்றுகருதித் தேவர்முதலியோர்மீது செல்லும் விடத்தினெதிரிலடுத்தனன்.—எ-று. (ஙஙo)

மேல்வருங்கொடுவிடத்தின்முன் னுறுதலும்வெகுண்டு
சாலவங்கது தாமரைக்கண்ணன்மேற்றாக்கி
மூலமுள்ளதோர்வச்சிரமணிநிறமுருக்கி
நீலவண்ணமேயாக்கியதவனுநின்றிலனால்.

(இ-ள்.) தேவர் முதலியோர்மீது செல்லாநின்ற விடத்தினெதிரே செல்லுதலும் கோபங்கொண்டு அந்தவிஷம்கமலக்கண்ணனான நாராயணன்மீதுதாக்கிப் பண்டிருந்தவைரமணி நிறத்தினைக்கெடுத்து நீலவண்ணமாகச்செய்தது. அத்திருமாலுமவ்விடத்தினெதிரில்நின்றிலன்,—எ-று. (ஙஙக)

கோலகாலமாயுலகெலாமடுந்தொழில்கொண்ட
வாலகாலமுன்னிற்கலாரரிமுதலானோர்
மூலகாலமுமிறுதியுமின்றியேமூவாக்
காலகாலன்வாழ்கயிலையையடைந்தனர்கடிதில்.

(இ-ள்.) கோலாகலமாயுலக முழுமையும் மழிக்கும் தொழிலினைக்கொண்ட ஆலகாலத்தினெதிரே அரிமுதலியோர் நிற்குமாற்றலற்றவராகித்தோற்றமுமழிவுமற்று விளங்குங்காலகாலரான சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் கைலாயத்தை விரைவாக வடைந்தனர்.—எ-று. (கூகூஉ)

முந்துவெவ்விடஞ்சுடுதலாலிரிந்தவர்முக்க
ணெந்தையெம்பெருமாட்டிவாழ்கயிலையிலெவரும்
வந்ததற்புதநீரதோவெருவினுன்மைந்தர்
தந்தைதாயிடத்தன்றியேயாங்கனஞ்சார்வார்.

(இ-ள்.) முன்னிட்டு வராநின்ற வெவ்விய விடஞ்சுடுதலினால் விலகியோடியவர்கள் எமது தந்தையான சிவபெருமானும் தாயான எம்பெருமாட்டியும் எழுந்தருளியிருக்கும் கைலையி லனைவரும் வந்தது ஆச்சரியமான செயலோவன்றாம் குழந்தைகள் பயமுற்றாற் தந்தைதாயர்களிடத்தன்றி வேறெவ்விடத்துக்குப் போவார்கள்.

வேறு.

ஆயவர்கயிலையிலமலற்காகிய
கோயிலின்முதற்பெருங்கோபுரத்திடை
நாயகநந்தியத்தேவைநண்ணியே
போயதெந்துயரெனப்புகன்றுபோற்றினார்.

(இ-ள்.) அங்ஙனஞ் சென்ற வத்தேவர்கள் கைலாயத்திற் சிவபெருமானுடைய கோயிலின் முதன்மை வாய்ந்த பெரிய கோபுரத்தினிடத்து எழுந்தருளி இருக்கும் தலைவரான நந்தி தேவரையடைந்து எந்துயர் போயதென்று கூறி வணங்கினார்கள்.—எ-று. (கூகூச)

போற்றியபின்னுறப்புகுந்தவாறெலாஞ்
சாற்றினர்கேட்டலுந்தகுவர்தேவர்கள்
வீற்றுறவவணிறீஇவேதன்மாறிசைக்
கோற்றொழிலார்தமைக்கொண்டுபோயினான்.

(இ-ள்.) வணங்கிய பின்னர் நடந்த வரலாறனைத்துமவர் கூறக்கேட்டு நந்திதேவர் அசுரர்களையுந் தேவர்களையும் வரிசையாக வவ்விடத்தினிற்கச்செய்து பிரமனையும் மாலையும் திக்குபாலர்களையு மழைத்துச் சென்றனர்.—எ-று. (கூகூடு)

நடைநெறியருள்புரிநந்தியெம்பிரான்
கடைநிலையைந்தவாங்காப்பிலெண்டிசை
யடைதருமன்னரையருளினோக்கியிவ்
விடைதனினுறுதிரென்றியம்பியேகியே.

(இ-ள்) சிவபெருமானுடைய திருக்கோவிலின் வாசலைக் காவல் செய்கின்ற நந்தி யெம்பிரான் ஐந்தாவது வாசலில் அட்டதிக்குப் பாலரைக் கருணையுடன்பார்த்து நீவிரிவ்விடத்திலிருங்களென்று கூறிச்சென்று.—எ-று. (கூகூசு)

அருண்முறைநாடிமால்யனென்றுள்ளதோ
ரிருவரையமலன்முன்னெய்தவுய்த்தலுங்
கருணையங்கடற்ணைக்கண்டுபோற்றினர்
பரவசமாயினர்பணிந்துபன்முறை

(இ-ள்.) இறைவனருளினை யாராய்ந்தறிந்து திருமாலும் அயனும் என்றுரைக்கப்படுகின்ற இருவர்களைச் சிவபெருமானெதிரே யடையுமாறு விடுத்தருளுதலும் அவ்விருவரும் கருணைக்கடலான சிவபெருமானைத் தரிசித்துப் பலமுறைபணிந்து போற்றிப் பரவசமாயினர்.—எ-று. (கூகூஎ)

போற்றினர்நிற்றலும்புரத்தைமுன்னடு
மாற்றிலினும்பராவரிநின்மேனிதான்
வேற்றுருவாயிவண்மேவிற்றென்னெனச்
சாற்றினன்யாவையுமுணருந்தன்மையான்.

(இ-ள்.) வணங்கி நின்றவுடனே முன்னர்த் திருபுரத்தையழித்த வன்மையி லுயர்ந்தவரும் அனைத்துமுணருந் தன்மையினையுடையவருமான சிவபெருமான் திருமாலைப்பார்த்து அரியே! நினதுடலம் வேற்றுருவமாகி நீ யிங்குவந்ததென்னை என்று வினவினர்.—எ-று. (௩௩அ)

மெய்வழிபாடுசெய்மேலையோர்க்கெலா
முய்வழிபுரிபவனினையவோதலு
மைவழிமேனியன்மானமுள்ளுற
வவ்வழியினையனவறைதன்மேயினன்.

(இ-ள்.) உண்மையான வழிபாட்டினையுடைய மேலோருக்கெலாம் உய்யுமார்க்கத்தினையருளுஞ் சிவபெருமான் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளுதலும் கரியநிறம் வழிந்தொழுகுகின்ற மேனியினையுடை மாயோன் அபிமானம் உள்ளே நிற்க அவ்விடத்திவைகளை யுரைப்பானாயினன்.—எ-று. (௩௩௯)

வஞ்சினவவுணர்கள்மானமேலவர்
வெஞ்சினவமரினில்விளிந்தவேலையி
லெஞ்சலிலாயுவுற்றிகல்செய்வாமெனப்
புஞ்சமொடயனொடுபுகறன்மேயினர்.

(இ-ள்.) வஞ்சினத்தினையுடைய வசுரர்களும் சுவர்க்க வாணரான தேவர்களும் கொடுங்கோபத்தோடு செய்த போரிலிறந்தவுடனே இறவாது எஞ்சியவர்கள் குறையாதவாயுளைப்பெற்றுப் போர்புரிவோமென்று கூட்டமாகச்சென்று பிரமனிடமுரைத்தனர்.—எ-று. (௩௪0)

அன்னமென்கொடியினனனையரோடுபோந்
தென்னொடுகூறினன்யானெழுந்தரோ
வுன்னருள்பெற்றிலனுணர்ந்திடாமலே
மன்னியவமிழ்திவண்வருதல்வேண்டினேன்.

(இ-ள்.) அன்னக்கொடியினையுடைய பிரமன் அத்தேவாசுரர்களுடன் வந்து என்னிடத்திலுரைத்தனன் யான் உனதருளைப்பெற்றுச் செல்லுதலை மறந்து நிலைபெற்ற அமிர்தமிங்குண்டாதலை விரும்பினேன்.—எ-று. (௩௪௧)

தானவரமரர்கள்சதுர்முகத்தவ
னேனையர்தம்முடனியானின்றெய்தியே
பானிறைகடல்கடைபொழுதிற்பாயெரி
யானதுமருளுறவாலம்போந்ததே.

(இ-ள்.) அசுரர்களுந் தேவர்களும் பிரமனும் பிறரும் உடன்வரயான்சென்று பால் நிறைந்த கடலைக்கடைந்தகாலத்துப் பரவியதீயும் அஞ்சும்வண்ணம் ஆலகாலமதனிலுண்டாகியது.—எ-று. (௩௪௨)

உன்றனதருள்பெறுவுண்மைநாடியே
யின்றுலகுயிரெலாமிறக்கவவ்விடஞ்
சென்றதியாவருந்தெருமந்தோடினர்
நின்றவென்மெய்யையிந்நிறமதாக்கிற்றே.

(இ-ள்.) உனது கருணையைப்பெருத வுண்மையை நினைத்து உலகுயிரனைத்தும் இறக்குமாறவ்விடஞ்சென்றது. உடனே அனைவரு மயங்கி யோடினுர்கள். எதிர்த்து நின்ற எனதுடலினை இவ்வண்ணமாகச்செய்தது.—எ-று. (ருசங)

வேற்றுருவாக்கியென்மெய்யிற்ருக்கலு
மாற்றலனகன்றனனனையர்தம்மொடே
யேற்றமதானவெம்மிடர்கள்யாவையு
மாற்றுனர்யாருளர்மற்றுநீயலால்.

(இ-ள்.) வேற்றுருவாகச்செய்து எனதுடலிற் தாக்குதலும் சகிக்கமாட்டாதவனுய் விலகி மூன்னேடின தேவாசுரர்களுடன் அங்கு நின்றும் போந்தேன் தேவரீரையன்றி எங்களுக்குண்டான இந்தப்பெரிய துன்பத்தினை வேறுயாவர் நீக்கப்போகின்றூர்கள்.—எ-று. (ருசச)

உன்னருள்பெறுமலவ்வுததிசேர்தலா
லின்னதொரின்னல்வந்தெய்திற்றுதலா
னின்னடியடைந்தனநீடுதீயெனத்
துன்னியகொடுவிடந்தொலைக்கச்செல்லுமால்.

(இ-ள்.) தேவரீர் கருணையைப்பெருமல் அக்கடலையடைதலால் இத்துன்பம் வந்து சேர்ந்தது இப்பொழுது தேவரீர் திருவடிகளையடைந்தேம் தேவரீரிங்கு எம்மைக்கொடிய தீயைப்போலத்துரத்தி வந்த விடத்தினை அழிக்க அழியும்.—எ-று. ()

ஆரணம்யாவையுமறிந்துநாடொணுப்
பூரணவுமையொடுபொருந்தியின்னதா
மேரணவுருவுகொண்டிருக்கையெம்மையாள்
காரணமன்றியேகருமம்யாவதோ.

(இ-ள்.) அனைத்து வேதங்களாலும் உணர்ந்து தியானிக்க முடியாத பூரணரே தேவரீர் உமாதேவியாருடன் பொருந்தி இத்தகைய அழகிய உருவங்கொண்டெழுந்தருளி இருத்தல் எம்மையாளுங் காரணமன்றி வேறு கருமமென்னையோ ? ()

தீயெனவெழுதருசீற்றவெவ்விட
மாயதைமாற்றியேயளியர்தங்களை
நீயருள்புரிகெனநீனிறந்திகழ்
மாயவனுரைத்தனன்வழுத்திநிற்கவே.

(இ-ள்.) தீயைப்போலெழுந்த கோபத்தினையுடைய கொடிய விடத்தினை நீக்கி ஏழையர்களான அடியோங்களைத் தேவரீர் கருணைகாட்டி ரட்சித்தல் வேண்டுமென நீலநிறம் விளங்கு முருவினனுன மாயோனுரைத்துத் துதித்து நின்றவுடனே.

மாதிரவிறைவரும்வானுளோர்களு
நீதியிலவுணருநின்றவெல்லையி
ஞதனைவழுத்தலுநம்பன்கேட்டரோ
வேதிவையரவமென்றியம்பலோடுமே.

(இ-ள்) திசைகாவலருந் தேவர்களும் நீதியற்றவசுரர்களும் தாநின்றவிடத்திலேயே சிவபெருமானைத் துதித்தலும் சிவபெருமா னவ்வோசையைக்கேட் டிவ்வோசையாதென வினவியருளுதலும்.—எ-று. (ருசஅ)

வானவரவுணர்கண்மாதிரத்தவ
ரேனையர்வல்விடத்தின்னலுற்றுளார்
கோநகர்க்கடைதொறுங்குழுமியேத்தினு
ரானதிவ்வொலியெனவயன்விளம்பவே.

(இ-ள்.) பிரமதேவன் எம்பெருமானிரே தேவரும் அமரருந்திசைகாவலரும் பிறரும் கொடியவிடத்தால் வருந்தினவர்களாய் இக்கோவிலின் றிருவாசல்கடோறு நெருங்கி நின்று தேவரீரைத்துதிக்கின்றன ரதனாலுண்டாகிய திவ்வோசையெனக் கூறுதலும்.—எறு, (௩௪௯)

கறுத்திடுமிடறுடைக்கடவுணந்தியைக்
குறிப்பொடுநோக்கியேகொணர்தியாலெனப்
புறத்திலம்மேலவன்போந்துமற்றவர்
திறத்துடனுறையுளிற்செல்லவுய்ப்பவே.

(இ-ள்.) கருநிறமவாய்ந்த கண்டத்தினையுடைய சிவபெருமான் நந்திதேவரைக்குறிப்புடன் கடாட்சித்துக் கொண்டு வருவாயாகவென்று திருவுளம்பற்றுதலும் உடனே சன்னிதானத்துக்கு வெளியே அந்நந்திதேவர் சென்று வெளியினின்ற தேவராதியரைமுறையாக மூலத்தானத்திற் கனுப்பிவைத்தலும்.—எ-று. (௩௫௦)

வந்தவர்யாவரும்வணங்கியீசனைப்
புந்தியிலன்பொடுபோற்றியாற்றவு
நொந்தனம்விடத்தினானெய்திலன்னதைச்
சித்தினையெமக்கருள்செய்தியென்னவே.

(இ-ள்.) அங்ஙனஞ் சன்னிதானத்துக்குச்சென்றவனைவரும் சிவபெருமானை வணங்கி மனத்திலன்புடன் துதித்து அடியோங்கள் விடத்தினால் மிகவுநொந்தோம் விரைவாக வவ்விடத்தினையொழித்து அடியோங்களுக்கருள்செய்வீராக என்று இரந்து வேண்டுதலும்.—எ-று. (௩௫௧)

வேறு.

ஈதெலாங்கேட்டமேலோனிறைவியைநோக்கியின்னோ
ரோதலாமாற்றமுன்றனுளத்தினுக்கியைவதாமோ
மாதுநீபுகறியென்னவந்துநின்னடைந்தார்வானோ
ராதலாலவர்க்குவல்லேயருள்புரிந்திடுதியென்றாள்.

(இ-ள்.) இவ்வனைத்தையுங் கேட்டசிவபெருமான் உமாதேவியைப்பார்த்து மாதே இவர்கள் கூறுமொழியுனதுமனத்துக் குகந்ததுதானோ நீயுரைத்தியென்றனர் அதுகேட்ட வுமாதேவியார் தேவர்கள் உம்மைச்சரணென வந்தடைந்தனர் ஆதலால் அவர்க்குவிரைவாக வருள்புரிந்திடுதிர் என்றனள்—எ-று. (௩௫௨)

வண்டமர்குழலெம்மன்னைமற்றிவையிசைத்தலோடு
மண்டருமகிழ்ச்சியெய்தியாதியங்கடவுடன்பாற்
றொண்டுசெய்தொழுகுகின்றசுந்தரன்றன்னைநோக்கிக்
கொண்டிவண்வருதியாலக்கொடுவிடந்தன்னையென்றான்.

(இ-ள்.) வண்டுபடிந்த கூந்தலினையுடைய எமதன்னையார் இவைகளை யருளிச்செய்தவுடனே முழுமுதற்கடவுள்அடைதற் கரியமகிழ்ச்சிகொண்டு தம்மிடத்துத் தொண்டுபுரிந்து வாழுகின்ற சுந்தரன் என்பவரைப்பார்த்து அக்கொடியவிடத்தினை இங்கு கொண்டு வருவாயாக என்று திருவாய்மலர்ந்தருளினார்—எ-று. (௩௫௩)

என்றலுமினிதேயென்னாவிறைஞ்சினனேகியாண்டுந்
துன்றியவிடத்தைப்பற்றிச்சுந்தரன்கொடுவந்துய்ப்ப
வொன்றொருதிவலையேபோலொடுங்குறமலர்க்கைவாங்கி
நின்றிடுமமரர்தம்மைநோக்கியேநிமலன்சொல்வான்.

(இ-ள்.) இறைவன் நீவிடத்தினைக்கொண்டு வரக்கடவையென்றவுடனேநல்லதென்று வணங்கிச்சென்று எங்கும் பரவிக்கிடந்த விடத்தினைப்பிடித்துச் சுந்தரன் என்பவர் கொண்டுவந்து இறைவன் சன்னிதானத்திற்சேர்த்தவுடனே உலகனைத்தும் பரவிநின்றவவ்வாலகால விஷமானது ஒரு சிறுதுளியையொப்ப வொடுங்கியது அதனைச்சிவபெருமான் தமது கரகமலத்தில்வாங்கி எதிரினிற்குந் தேவர்களைப்பார்த்துத்திருவாய்மலர்ந்தருளுகின்றனர்.—எ-று. (௩௫௪)

காளகவுருவுகொண்டகடுவினையுண்கோவன்றே
னீளிடையதனிற்செல்லநெறிப்படவெறிகோவென்னு
வாளுறுமதிதோய்சென்னிவானவனருளவன்னான்
ருளுறவணங்கிநின்றுசதுர்முகன்முதலோர்சொல்வார்.

(இ-ள்.) கருமைநிறம்வாய்ந்த இவ்விடத்தினை உண்ணவோவல்லது நெடுந்தூரத்திற்சென்று விழுமாறு முறையே யெறியவோவென்று ஒளிபொருந்திய சந்திரனையணிந்த திருமுடியினையுடைய சிவபெருமான் வினவ அவரது திருவடிகளை வணங்கி நின்று பிரமன்முதலியோர் கூறுகின்றனர்.—எ-று. (௩௫௫)

ஐயநீயன்றியாரிவ்வனல்விடமாற்றுநீரார்
செய்யகைக்கொண்டவாற்றுற்சிறிதெனக்காட்டிற்றன்றே
வெய்யதோரிதனையின்னேவிட்டனையென்னிற்பின்னை
யுய்வரோயாருமின்னேயொருங்குடன்முடிந்திடாரோ.

(இ-ள்.) ஐயனீரே நும்மையன்றி யாவரிந்தத் தீமயமானவிடத்தினைத்தாங்குந் தன்மையோர் தேவரீர் செவ்விய திருக்கரத்திலேந்திய முறையாற் சிறிதெனக்காட்டிற்று கொடிய விவ்விடத்தினை விடுவீராயிற் பின்னர் எவரும்பிழையார் இப்பொழுதே ஒரு சேரவழியமாட்டார்களோ?—எ-று. (௩௫௬)

முடிவிலாவுனக்கேயன்றேமுன்னுறுபாகமெல்லாம்
விடமதேயெனினுமாகவேண்டுதுமிதனைவல்லே
யடியரேமுய்யுமாற்றாலருந்தினையருண்மோவென்னக்
கடிகமழிதழிமிவய்ந்தோன்கலங்கலீரினிநீரென்றான்.

(இ-ள்.) அழிவற்ற தேவரீர்க்கன்றே முதற்பாகமனைத்தும் விடமாயினும் ஆகுக நாங்களிதனையங்கிகாரஞ் செய்யுமாறு கேட்டுக்கொள்ளுகின்றோம் இதனை விரைவாக அடியோங்களுய்யும்வண்ணம் அருந்தியருளுகவென்று கூறுநிற்ப அதனைக்கேட்டு மணம்வீசுகின்ற கொன்றை மலர்மாலையணிந்த சிவபெருமான் இனிநீங்கள் கலக்கமுறுதீர் என்று திருவாய்மலர்ந்தருளினர்—எ-று. (௩௫௭)

என்றனன்விரைவிற்றன்கையேந்தியவிடமுட்கொள்ளச்
சென்றதுமிடற்றிலன்னதிறத்தினையாருநோக்கி
யின்றெமதுயிர்நீகாத்தற்கிங்கிதுசான்றாயங்க
ணின்றிடவருடியென்றேநிமலனைப்போற்றலுற்றார்.

(இ-ள்.) என்று திருவாய்மலர்ந்தருளித் தமதுதிருக்கரத்திலிருந்த விடத்தினைப் பானஞ்செய்ய வது இறைவனார் திருக்கழுத்தளவு மிறங்கியது அத்தன்மையை அனைவரும்பார்த்து இன்றெங்கள் உயிரினைத் தேவரீர் காத்ததற்கிது அடையாளமாக அக்கழுத்தினிடத்தே நிற்குமாறு திருவருள்புரிதல் வேண்டுமென இறைவனைத் துதித்தனர்.—எ-று. (௩௫௮)

போற்றலுமிடற்றிலெங்கோன்பொலன்மணியணியதென்ன
மாற்றருந்தகைமைத்தானவவ்விடநிறுவியன்னார்க்
கேற்றநல்லருளைச்செய்யயாவருமிறந்தேயின்று
தோற்றினராகுமென்னச்சொல்லருமகிழ்ச்சிகொண்டார்.

(இ-ள்.) தேவர் துதித்தவுடனே எமது சிவபெருமான் திருக்கழுத்திலழகிய நீலமணிவடம்போல பிறரால் நீக்குதற்கரியதான கொடியவிடத்தினை யமைத்து அத் தேவருக்குத் தருந்த நல்லருளைப்புரியா நிற்ப வனைவரும் அன்றேயிறந்து பிறந்தாரையொப்ப உரைத்தற்கரிய மகிழ்ச்சியெய்தினார்கள்.—எ-று. (ருருக)

மாமகிழ்சிறந்துநிற்குமாலயன்முதலோர்தம்மைத்
தூமதிமிலைச்சுஞ்சென்னிதொல்லையோனருளானோக்கிக்
காமருகடலையின்னுங்கடைதிராலமுதுண்டாகும்
போமினீரின்னேயென்னப்போற்றினர்வணங்கிப்போனார்.

(இ-ள்.) மிக்கமகிழ்வுற்று நிற்குமாலயன் முதலியோர்களைத் தூயசந்திரனைய ணிந்த திருமுடியினையுடைய புராதனரான சிவபெருமான் கருணையுடன் கடாட்சித்து அழகிய கடலையின்னங் கடையுங்கள் அமுதுண்டாகும் இப்பொழுதே போங்கள் என்று திருவாய் மலர்ந்தருள அவ்வாறே செய்கின்றோமென்று துதிகூறி இறைவனை வணங்கிச்சென்றனர்.—எ-று. (ருசு0)

போனவர்தொன்மைபோலப்புணரியைக்கடைந்தகாலை
மேனிகழமிர்தமேனையின்பொருள்பலவும்வந்த
வானவர்தாமேபெற்றார்மற்றவைதம்மையால
மானதையமலனுண்டதவருயிரளித்ததன்றே.

(இ-ள்) சென்றவர்கள் பழயபடியே கடலைக்கடைந்தவுடனே முன்னுரைத் தவமிர்தமும் மற்றைச்சிறந்த பலபொருள்களும் தோன்றின; அனைத்தையுந் தேவர்களேயடைந்தனர் இறைவனார் விடத்தினைப் பானஞ்செய்தது அத்தேவருயிரைக்காத்தது.—எ-று. (ருசுக)

கடல்விடநுகர்ந்ததொல்லைக்கடவுள்பின்னழிக்குங்காலை
யுடலுயிரகிலம்யாவுமொடுங்கியவிடமதன்றோ
சுடலையதாகுமந்தச்சுடலைகாணனையசோதி
நடநவில்கினறவெல்லைநாடருந்தகைமைத்தம்மே.

(இ-ள்.) பாற்கடலிற் பிறந்தவிடத்தினை முன்னருண்டகடவுள் சங்காரஞ் செய்யுங்காலத்தில் உடலும் உயிரும் அகிலமுமொடுங்கிய விடமன்றோ சுடலையாகும் அந்தச்சுடலையே யவ்விறைவன் நடனஞ்செய்கின்ற இடம் அன்னது எண்ணியறிதற்கரிய விடயம்.—எ-று. (ருசுஉ)

அங்கதுமன்றியெந்தையகிலமுமுடித்தஞான்றி
னெங்கும்வெள்ளிடையதாகியிமமாமவ்விமத்து
மங்கையுந்தானுமேவுமற்றிதுதவறேவன்றான்
கங்கையைமுடிமேற்கொண்டகாதைமேலுரைத்துமன்றே.

(இ-ள்) அதுவுமன்றி யெந்தையாரனைத்து மழித்தகாலத்தில் எங்கும்வெள்ளிடையாகிச் சுடலையாகும் அச்சுடலையில் உமாதேவியுந் தாமுமாக எழுந்தருளி இருப்பார். இது குற்றமான செயலோ? அன்று; இனி அவ்விறைவனார் கங்கையைத் தலைமீதணிந்த சரிதத்தினை மேலுரைக்கின்றோம்.—எ-று. (ருசுரு)

ஈசனையொருஞான்றம்மையெழில்பெறுகயிலைக்காவிற்
பேசலளாடலுன்னிப்பின்வராவிழியிரண்டுந்
தேசுறுகரத்தாற்பொத்தச்செறிதருபுவனம்யாவு
மாசிருள்பரந்ததெல்லாவுயிர்களும்வருத்தங்கொள்ள.

(இ-ள்) ஒருதினம் திருக்கைலைமலையிலுள்ள சோலையில் உமாதேவியார் உரையயரடாமல் விளையாட்டைக்கருதிப் பின்புறத்தில் வந்து சிவபெருமானுடைய இருவழிகளையும் அழகிய கரத்தினால் மூடுதலும் அதனால் உடனேநெருங்கிய உலகனை த்தினும் உள்ள உயிர்கள் வருத்தமடையும் வண்ணம் கரியவிருள்பரவியது.—எ-று.()

திங்களின்கதிருமேனைத்தினகரன்வெயிலுந்தீயின்
பொங்குசெஞ்சுடருமேனைப்புலவர்தங்கதிருமற்று
மெங்குளவொளியுமாய்வுற்றிருணிறம்படைத்தமாதோ
சங்கரன்விழியாலெல்லாச்சோதியுந்தழைத்தநீரால்.

(இ-ள்.) சிவபெருமான் விழியாலெல்லாச் சோதியுந்தழைத்த தன்மையால் அவ்விழிகள் மூடப்பெறுதலும் சந்திரனுடைய கிரகணங்களும் சூரியனுடையவெயிலும் அக்கினியின் பிரகாசிக்கின்ற செஞ்சுடரும் மற்றைத்தேவரின் சரீரவொளியும் பின்னும் எங்குமுள்ள வொளியும் அழிந்து இருள்நிறம் பெற்றன.—எ-று. (ருசுரு)

தன்னிகர்பிறரிலாததற்பரன்விழியிரண்டுங்
கன்னிகைகமலக்கையாற்புதைப்பவக்கணமதொன்றின்
மன்னுயிர்த்தொகைகட்கெல்லாம்வரம்பிலாவூழியாக
வன்னதோர்பான்மைநோக்கியருளுவானினைந்தானன்றே.

(இ-ள்.) தமக்கொப்பானொருவருமில்லாத தற்பரான சிவவெருமானிருவிழிகளையும் கன்னிகையான வம்பிகை தாமரைமலர் போன்ற கரங்களான் மூடாநிற்ப அங்ஙனஞ்செய்த அந்த ஒருகண நேரத்துள் நிலைபெற்ற வுயிர்த்தொகைக்கெல்லாம் அளவற்ற ஊழிகாலமாகாநிற்க அத்தன்மையையுணர்ந்து கருணைசெய்யத்திருவுளத் தெண்ணினர்.—எ-று. (ருசுசு)

ஓங்குதன்னுதலினுப்பனொருதனிநாட்டநல்கி
யாங்கதுகொண்டுநாதனருள்கொடுநோக்கியாண்டு
நீங்கருநிலைமைத்தாகிநின்றபேரிருளைமாற்றித்
தீங்கதிர்முதலானோர்க்குச்சிறந்தபேரொளியையீந்தான்.

(இ-ள்.) உயர்ந்த தமது நெற்றியினுவ்வண் ஒப்பற்ற வொருவிழியை யுண்டாக்கி அதனால் இறைவன் கருணையுடன்பார்த்து எங்கு நீங்கருந்தன்மையாக நின்ற பெரிய இருட்டினையொழித்து இனிய அமுதகிரணங்களையுடைய சந்திரன் முதலியவர்களுக்குச் சிறந்த பேரொளியை யளித்தனர்.—எ-று. (ருசுஎ)

மண்ணுறுபுவனத்துள்ளமாயிருண்முழுதுநீங்க
வுண்ணிகழுவகைமேல்கொண்டுயிர்த்தொகைசிறத்தலோடுங்
கண்ணுதலிறைவன்செய்கைகவுரிகண்டச்சமெய்தித்
துண்ணெனவிழிகண்மூடுந்துணைக்கரம்வாங்கினாளால்.

(இ-ள்.) பிருதிவிதத்துவத்திலுள்ள பேரிருண் முழுதுமொழியா நிற்கப்பின்னர் உள்ளே நிகழுகின்ற மகிழ்வுமேற்கொண்டு உயிர்த்தொகை சிறப்படைதலும்நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானதிச்செயலினை உமாதேவியார் பார்த்தச்சமடைந்து கண்களை மூடியிருந்த இருகரங்களையும் விரைவாக எடுத்தார்கள்.—எ-று. (ருசுஅ)

சங்கரன்விழிகண்மூடுந்தருணதுகைதிறக்குமெல்லை
யங்குலியவைவிரைந்துமச்சத்தால்வியர்ப்புத்தோன்ற
மங்கையத்தகைமைகாணூஉமற்றவைவிதிர்ப்பப்போந்து
கங்கையோர்பத்தாயாண்டுங்கடல்களிற்செறிந்தவன்றே.

(இ-ள்.) சிவபிரான் விழிகளை மூடிய தமது திருக்கரங்களை வாங்குங்காலத் திப்பத்துவிரல்களிலும் அச்சத்தால் வியர்வையுண்டாக அதனை உமாதேவியார்கண்டு அவ்வியர்வைத்துளிர்களை யுதறவவை பெருகியோடிப் பத்துக்கங்கைகளாகிக் கடல்களில் நிறைந்தன.—எ-று. (௫௬௯)

ஆயிரநூறுகோடியணிமுகம்படைத்தியாண்டும்
பாயிருநீத்தமாகிப்பரவலுமதுகண்டஞ்சி
மாயனுமயனும்வானோர் மன்னனும்பிறரும்போற்றி
மீயுயர்கயிலைநண்ணிவிமலனையடைந்துதாழ்ந்தார்.

(இ-ள்.) அக்கங்கைகள் ஆயிரநூறுகோடியழகிய முகங்களையுடையவையாய் எங்கும்பரவிப்பெருவெள்ளமாகிப் பரவுதலும் அதனைக்கண்டச்சமுற்றுத் திருமாலும் பிரமதேவனுந் தேவராசனும் மற்றுள்ளவர்களும் மிகவுயர்ந்த கைலாயத்தை யடைந்து இறைவனுர் சன்னிதியிற் சென்று போற்றி வணங்கினார்கள்.—எ-று. (௫௭௦)

அடிமலர்தொழுதேயெந்தாயறிகிலோமிதுவோர்நீத்தங்
கடல்களுமன்றால்யாண்டுங்கல்லெனவிரைத்தியாரு
முடிவுறுதிறத்தாலண்டமுழுவதுங்கவர்ந்தமுன்னாள்
விடமெனப்பரித்தேயீதுவிமலநீகாத்தியென்றார்.

(இ-ள்.) சிவபெருமான் திருவடிகளைவணங்கி எந்தையே யாங்களறிகிலேம் இதுவோர் பெருவெள்ளம் கடல்களுமன்று எவ்விடத்திலுங் கலீரென இரைத்து அனைவருமழியும் வண்ணம் அண்டமுற்றிலுங் கவர்ந்தன பண்டுதோன்றிய விடத்தினையொப்ப இதனைத்தாங்கி விமலனேகாத்தருள்வாயாக என்று கூறினார்கள்.—எ-று.

என்றலுநதிகடோற்றமியம்பியெவ்வுலகுஞ்சூழ்போய்
நின்றவந்நீத்தந்தன்னைநினைத்தவணழைத்துநாத
னொன்றுதன்வேணிமேலோருரோமத்தினும்பருய்ப்ப
மன்றலங்கமலத்தோனுமாலுமிந்திரனுஞ்சொல்வார்.

(இ-ள்.) தேவர்களவ்வாறு கூறியவுடன் சிவபெருமான் அந்நதிகளின் உற்பவத்தினை யவர்களிடமுரைத்து எவ்வுலகத்திலுஞ் சூழ்ந்துநின்ற வச்சலப்பிரவாகத்தினைத்திருவுளத்திற் கருதியழைத்துத் தமது சடையின்மீதுள்ள ஒரு ரோமத்தின்மீது விடுத்தனர் அதனைக்கண்டு மணம்பொருந்திய தாமரைமலரையுடைய பிரமனுந் திருமாலும் இந்திரனு மிவ்வாறு விண்ணப்பஞ்செய்கின்றனர்.—எ-று. (௫௭௨)

மேதினியண்டமுற்றும்விழுங்கியகங்கையுன்றன்
பாதியாள்கரத்திற்றோன்றும்பான்மையாலுனதுசென்னி
மீதினிற்செறிக்கும்பண்பால்விமலமாமதனிலெங்கண்
மூதெயினகரம்வைகச்சிறிதருண்முதல்வவென்றார்.

(இ-ள்.) முதல்வரே! பிருதிவியண்டமுழுதும் மூடிக்கொண்ட கங்காநதியானது தேவரீரினொருபாதியுருவினரான உமாதேவியாரின் திருக்கரத்திலவதரித்த தன்மையாலும் தேவரீர்திருமுடியிற்தரித்த முறைமையாலும் தூய்மையானதேயாகும் ஆதலின், எங்கள் பெரியமதில் சூழ்ந்த நகரங்களில் இருக்கும் வண்ணம் அடியோங்களுக்கு அதனிற் சிறிதருள் புரிவீராக என்றிரந்து கேட்டார்கள்.—எ-று. (௫௭௩)

இறையவன்வேணியுள்புக்கிருந்ததோர்கங்கைதன்னிற்
சிறுவதைவாங்கிமூவர்செங்கையுஞ்செறியநல்க
நிறைதருமன்பாற்றாழ்ந்துநிகழ்விடைபெற்றுத்தத்த
முறைநகரெய்தியங்கணுய்த்தனரனையநீத்தம்.

(இ-ள்) சிவபெருமான் தமது சடையுட் புக்கிருந்த கங்காநதியுள் ஒரு சிறி தெடுத்து மாயோன் பிரமன் இந்திரனென்னு மூவர்கரங்களிலு நிறையுமாறளிக்க அன்னோர் பூரணவன்புடன் வணங்கி விடைபெற்றுத் தங்கள் தங்கள் வாசத்தலத்தை யடைந்து அந்தத்தீர்த்தத்தினை யங்கு விடுத்தனர்.—எ-று. (௩எச)

அந்நதிமூன் றுதன்னிலயனகர்புகுந்தகங்கை
பன்னருந்திறலின்மிக்கபகீரதன் றவத்தான்மீளப்
பின்னருமிமையாமுக்கட்பெருந்தகைமுடிமேற்றூங்கி
யிந்நிலவரைப்பிற்செல்லவிறையதில்விடுத்தல்செய்தான்.

(இ-ள்.) அந்த மூவகைக்கங்கையுள் பிரமனுலகையடைந்த கங்கை, உரைத் தற்கரிய வெற்றியின் மிகுந்த பகீரதன்செய்த தவத்தினால் மீட்டும் இமையாத மூன்று கண்களையுடைய இறைவனார்முடிமீதேற்று இந்நிலவுலகத்திற்செல்லுமாறு அதனிற் சிறிது விடுத்தருளினார்.—எ-று. (௩எரு)

நானிலமிசையேயுய்த்தநன்னதிசகரரெல்லாம்
வானுயர்கதிபெற்றுய்யமற்றவரொன்பிற்பாய்ந்து
மீனெறிதரங்கவேலைமேவியதிஃதொன்றல்லா
லேனையநதிகடொல்லையிடந்தனிலிருந்தவன்றே.

(இ-ள்.) நால்வகை வேறுபாடுகளையுடைய பூமியில் விடுத்த வந்த நல்ல நதி யானது சகரரனைவரும் சுவர்க்ககதியை யடைந்துய்தற்கு அவர்களினெலும்பிற் பாய்ந்து மீன்கள் தாவுகின்ற அலைகளையுடைய கடலையடைந்தது இந்நதியொன்றல்லாத மற்றையநதிகள் பழயவிடங்களிலிருந்தன.—எ-று. (௩எசு)

தொல்லையிலிறைவியங்கைத்தோன்றியகங்கைநீத்த
மொல்லையிலுலகங்கொள்ளாதடக்கியவுண்மையன்றே
வல்லிருளனையகண்டத்ததிபங்கடவுண்முன்னோர்
மெல்லியறன்னைவேணியிசைக்கொண்டானென்னுமாறே.

(இ-ள்.) முன்னர்க்காலத்து உமாதேவியின் திருக்கரத்திற் பிறந்த கங்கா சலப்பிரவாகம் விரைவாக உலகினை யழிக்காதவண்ணம் அடக்கிய உண்மையையன் றோ வலிய விருளனைய கண்டத்தினையுடைய முழுமுதற்கடவுளான சிவபெருமான் முன்னாளி லொருபெண்ணைச் சடையின்மீது தாங்கினாரென்று கூறுதல்.—எ-று. ()

மாதுமைவசத்தனாகிமருவுவானென்றியன்னா
ளாதனதருளேயெல்லாநண்ணுவித்தருளும்வண்ணம்
பேதகமாகித்தானோர்பெண்ணுருக்கொண்டுமேவு
மாதலினவள்வந்துற்றதன்மையையறைவன்கேட்டி.

(இ-ள்.) அழகிய உமாதேவியின் வசப்பட்டவனாய் இருப்பானென்று கூறி னாய் அவ்வுமாதேவியார் இறைவனார் கருணையுருவமே. அனைத்தையும் படைத்துக் காக்குமாறு வேறுபட்டு ஒரு பெண்ணுருக்கொண்டெழுந்தருளி இருக்கும் அதனால் அவ்வுமாதேவியார் அவதரித்ததன்மையை யுரைக்கின்றேன் கேட்பாயாக.—எ-று.

தொல்லையோர்கமலத்தண்ணறோன்றியேயிருந்தகாலைப்
பல்லுயிர்த்தொகுதிதன்னைப்படைப்பதுகருதிமுன்னர்
வல்லையிற்சனகனாதிமைந்தர்நால்வரையுநல்க
நல்லுணர்வெய்தியன்னோர்நற்றவராகியுற்றார்.

(இ-ள்.) முன்னொரு கற்பத்திற் பிரமன் பிறந்திருந்தகாலத்துப் பலவகை உயிர் வருக்கங்களைப் படைப்பது கருதி முதலில் விரைவாகச் சனகன்முதலிய புதல்வர்கள் நால்வரையுமளிக்க அன்னவர் நல்லறிவெய்தி நல்லதவசிகளாகி இருந்தார்கள்.—எ-று.

அன்னதற்பின்னர்வேதனளிப்பதுமல்காதாக
வின்னலுற்றிரக்கமெய்தியாதினிச்செய்வதென்று
முன்னுறுகுமரரோடுமுகுந்தனதிடத்திலெய்திப்
பொன்னடிவணக்கஞ்செய்துதன்குறைபுகன்றுநின்றான்.

(இ-ள்.) அதன் பின்னர்ப் பிரமனுக்குப் படைப்புத்தொழில் வளர்ந்துவராது குறைய வதனால் வருந்தி இரக்கமுற்று இனியாதுசெய்வதென்று முன்னராளித்த மைந்தர்களுடன் முகுந்தனிடஞ்சென்று அவர் பொன்னடிகளை வணங்கித் தனது குறையை யுரைத்து நின்றனன்.—எ-று. (ருஅ0)

நின்றிடுகின்றகாலைநேமியங்கரத்துவள்ள
லின்றிதுநம்மான்முற்றாதீசனலன்றியென்று
நன்றுணர்முனிவரோடுநான்முகனோடும்வெள்ளிக்
குன்றினிலேகிநாதன்குரைகழல்பணிந்துசொல்வான்.

(இ-ள்.) அவ்வாறு நின்றவுடனே சக்கரமேந்திய வள்ளலான மாயோன் இது ஈசனலன்றி நம்மால் முற்றுப்பெறாதென்று நல்லதையுணர்ந்த முனிவருடனும் நான்முகனுடனும் வெள்ளிமலையான கைலாயத்தை யடைந்து சிவபெருமானுடைய முழங்குகின்ற வீரகண்டையணிந்த திருவடிகளை வணங்கியுரைப்பான்.—எ-று. (ருஅக)

அண்டர்கண்முதல்வகேண்மோவம்புயன்படைப்பினுள்ளங்
கொண்டளனதுமல்காதாற்குறையிதுநீக்குகென்ன
வண்டுளவத்தினனைமைந்தரையயனைநோக்கி
நுண்டுகள்படவேயீசனெய்தெனவீறுசெய்தான்.

(இ-ள்.) தேவர்முதல்வரே! கேட்பீராக பிரமன் படைப்புத்தொழிலில் மனம் வைத்தனன் அது மலிவுற்றதில்லை இக்குறையை நீக்கி யருள்க என்று கூறுதலும் சிவபெருமான் மாயோனையும் சனகாதியர்களையும் பிரமனையும் பார்த்து நுண்ணிய துகளாமாறு விரைவாக அழித்தருளினர்.—எ-று. (ருஅஉ)

ஏகனையாகிவைகுமெந்தைதன்னிடப்பாலான்
வாகுவைநோக்குமெல்லைமற்றவனுமையாடோன்றப்
பாகமதிருத்தியன்னட்பரிவொடுகலந்துமேவிக்
கோகனதக்கண்ணனைக்குமரரையயனைத்தந்தான்.

(இ-ள்.) தனித்தவராக வெழுந்தருளியிருக்கும் எந்தையார் தமது இடது தோளைப்பார்த்தனர் உடனே அவ்விடத்தில் உமாதேவியார் அவதரித்தனர் அவரைத் தமது பாகத்திலிருக்கச்செய்து அவருடன் விருப்பமாகக்கலந்திருந்து தாமரைமலரிதழ்போன்ற கண்ணுளனை திருமாலையும் சனகனதியரையும் பிரமனையு மளித்தனர்.—எ-று. (ருஅங)

தந்துழியீசன்றன்னைத்தனயருமயனுமாலும்
வந்தனைசெய்துபோற்றமாயவன்வதனநோக்கி
நந்தமதருளதாகுநங்கையோடினிதுசேர்ந்தா
முந்தையின்வேதாச்செய்கைமுற்றிடும்போதியென்றான்.

(இ-ள்.) அங்ஙன முண்டாக்கியவுடனே சிவபெருமானைப் புதல்வரான சனகாதியரும் அயனும் மாலும் வணங்கித்துதிக்க எம்பெருமான் மாயவன் முகத்தைப் பார்த்து நாம் நமதருளாயுள்ளமாதுடன் இனிது பொருந்தினோம் இனி முன்போலப் பிரமனுடைய சிருட்டித்தொழில் நடக்கும் போதி என்று திருவாய் மலர்ந்தருளினர்.

என்னலுமுவகையெய்தியாமினியுய்ந்தோமென்று
வன்னையோடத்தன்றன்னையளியொடுவலஞ்செய்தேத்திப்
பின்னரும்வணக்கஞ்செய்துபெயர்ந்தனர்பின்புவேதா
மன்னுயிர்த்தொகுதியெல்லாம்வரன்முறைபடைக்கலுற்றான்.

(இ-ள்.) போதி என்று திருவாய்மலர்ந்தருளியவுடனே மகிழ்வுற்று இனி நாமுய்ந்தோமென்று அம்மையப்பர்களை அன்புடன் சுற்றிவந்து துதித்துச் சென்றார்கள். பின்னர்ப் பிரமன் மன்னுயிர்த்தொகைகளைக் கிரமப்படி படைத்தான்.—எ-று. (௩௮௫)

மாற்றலர்புரமூன்றட்டவானவனுமையாளோடும்
வீற்றிருந்தருளலாலேவிழைவுடனாண்பெண்மேவி
யாற்றவுமின்பமெய்தியாவிகள்பெரிதுமல்க
நாற்றிசைமுகத்தன்செய்கைநன்றுறநடந்ததன்றே.

(இ-ள்.) பகைவர் முப்புரங்களையழித்த இறைவன் உமாதேவியுடன் வீற்றிருந்தருளலால் விருப்பத்துடன் ஆணும் பெண்ணுங் கலந்து மிகவு மின்பமெய்தி உயிர்கள் மிகவும் வளராநிற்கப் பிரமனுடைய சிருட்டித்தொழில் செவ்வனே நடந்தது. ()

தேனமர்கமலத்தண்ணல்செய்தொழின்முற்றுமாற்றா
லானதன்னருளையாங்கோராயிழையாகநல்கி
மேனிகழ்கருணைதன்னான்மேவுவதுணராயேனை
வானவர்போலெங்கோனைமதித்தனைமதியிலாதாய்.

(இ-ள்.) புத்தியற்றவனே! தேன்பொருந்திய கமலமலரையுடைய பிரமன் செய்தொழிலான படைப்பு நிறைவேறும்வண்ணம் தமதருளினையொரு பெண்ணுருவாகச்செய்து முன்னிகழ்ந்த கருணையா லெழுந்தருளி இருப்பதனை நீயறியாய் மற்றைத்தேவரையொப்ப எமதிறைவனை மதித்தனை.—எ-று. (௩௮௭)

காமருவடிவாயெங்குங்காண்பதுசத்தியங்கண்
மாமயமாகிநின்றான்மன்னியசிவனுமீது
தூமறைமுதலாவுள்ளதொல்லைநூல்புகலுமன்னார்
தாமொருபுதல்வன்றன்னைத்தந்தவாசாற்றுகின்றாம்.

(இ-ள்.) அழகிய உருவாயெவ்விடத்துங்காணப்படுவது சத்தி, அவ்வுருவிலறிவுமயமாய் நிற்பவர் நிலைபெற்ற சிவபெருமான் இதனைத் தூய்மையான வேதமுதலாகவுள்ள பழைய நூல்களுரையா நிற்கும் இனியவர்களொரு புதல்வனைப்பெற்றதனையுரைக்கின்றோம்.—எ-று. (௩௮௮)

ததீசியுத்தரப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௮௮.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# கயமுகனுற்பத்திப் படலம்.

பாகசாதனன்றொல்லைநாள்வானவப்படையோ
டேகியேயசுரர்க்கிறைதன்னைவென்றிகலில்
வாகைசூடியேவிஞ்சையர்முதலினோர்வாழ்த்தப்
போகமார்தருமுலகிடைமீண்டுபோய்ப்புகுந்தான்.

(இ-ள்.) இந்திரன் முன்னாளில் தேவசைனியங்களுடன் சென்று அசுரராசனைவென்று பகையின்மையைக்குறிக்கும் வாகைமாலையணிந்து வித்தியாதரர்முதலினோர் வாழ்த்தத் தான் போகமனுபவிக்கின்ற சுவர்க்கவுலகத்திற் திரும்பச்சென்றடைந்தனன்.—எ-று. (௧)

பொன்னகர்க்கிறைபோதலும்பொருமையிற்புழுங்கி
வன்னியுற்றிடுமலங்கல்போலுளநனிவாடி
வென்னளித்திடுமவுணர்தங்கோமகன்வினையேற்
கென்னினிச்செயலெனப்பெரிதுன்னியேயினைந்தான்.

(இ-ள்.) சுவர்க்கத்துக்கரசனான விந்திரன் செல்லுதலும் பொருமையால் புழுக்கமுற்றுத் தீயில்விழுந்த மலர்மாலையைப்போல உள்ளம் மிகவும் வாடி இந்திரற்கு முதுகுகாட்டிய அசுர அரசன் பாவியான வெனக்கு இனிச்செயலென்னையென மிகவுநினைந்து வருந்தினன்.—எ-று. (௨)

வெருவரும்படிமலைந்திடுமமரர்பான்மேவிப்
பொருதுவென்றிகொண்டெனக்குமப்பெரும்புகழ்புனைய
வொருவரெங்குலத்தில்லைகொலோவெனவுரையாக்
குருவிருந்துழியணுகியேவணங்கினன்கொடியோன்.

(இ-ள்.) கொடியவசுராதிபன், நாமமசுமாறு போர்புரிந்த தேவரிடஞ்சென்று போர்செய்து வெற்றியெய்தி எனக்குமந்தப்பெரிய புகழினைச்சூட்டுதற்கு எங்குலத்திலெவருமில்லையோவென்று கூறித்தனது குருவிருக்குமிடத்தை யடைந்து அவனை வணங்கினன்.—எ-று. (௩)

பொற்றையின்சிறைதடிந்தவன்சுரரொடும்போர்மே
லுற்றகாலையிற்படையுடன்யான்பொருதுடைந்து
மற்றவற்குவென்னளித்தனனம்பெருமரபிற்
கொற்றவீரர்களியாவருமுடிந்தனர்கூற்றால்.

(இ-ள்.) மலைகளினிறகுகளை யறுத்த இந்திரன் தேவர்களுடன் சண்டைசெய்யவந்தவுடனே சேனைகளுடன் யான்சென்று பொருது அவ்விந்திரற்கு முதுகிட்டனன் நமது பெரிய மரபிலுள்ள வெற்றிவீரரனைவரும் ஒருசேர யமனாலிறந்தனர்.()

கழியமாசினையடைந்தனமின்னலேகரையாம்
பழிகொள்வேலையிலழுந்தினமுடைந்திடுபகைவர்க்
கழிவுமுற்றனம்பெருந்திறலற்றனமவுண
ரொழியுமெல்லவுந்தெய்தியதோவிவணுரைத்தி.

(இ-ள்.) மிகவும் இழுக்குற்றேம் துன்பமே கரையாகவுள்ள பழிக்கடலுள் மூழ்கினேம் நமக்குடையும் பகைவர்க்கு நாந் தோற்றலையும் முற்றேம் மிகவும் வன்மையை இழந்தனம் இவ்விடத்தில் அசுரர்குலமழியுநாள் நெருங்கியதோ உரைப்பாயாக.

சிறுவராயினோர்பெருமையிற்பிழைப்பரேற்றெருட்டி
யுறுதிபற்பலகொளுத்திமற்றவர்தமையுயர்ந்த
நெறியினுக்குதல்குரவர்தங்கடனதுநீயே
யறிதியாதலினுய்யுமாறுரைத்தியென்றறைந்தான்.

(இ-ள்.) சிறுவராயுள்ளார் பெருமையிற் பிழைப்பாராயின் விளங்கவுரைத்துப் பற்பலவுறுதிகளை யறிவுறுத்து அச்சிறியரை யுயர்ந்த வழியினிறுத்துதல்குரவர்கடமையதனை நீயே யறிவாய் ஆதலின் நாங்கள் உயர்வுறுமாறருள்செய் என்று கூறினன். ()

உரைத்தவாசகங்கேட்டலுமன்னனீயுளத்தில்
வருத்தமுற்றிடலென்னவேதேற்றிமேல்வருவ
கருத்திலுன்னினன்றெரிதலும்வெதும்பியகாயத்
தரைத்தசாந்தினையப்பினன்போலவொன்றறைந்தான்.

(இ-ள்.) அசுராதிபன் கூறியவைகளைக்கேட்டவுடனே சுக்கிரன் அரசனே நீ மனதில் வருத்தங்கொள்ளாதே என்றுகூறித் தேற்றி எதிர்காலவினையை மனதினினைத்துணர்ந்து வெப்பமுற்றவுடற்குத்தட்பமுற்ற வரைத்தசந்தனத்தினை யப்பியாங்கு ஒன்றுகூறினன்.—எ-று. (எ)

வேறு.

ஆதியம்பரமன்றாளேயடைதருபுனிதன்றொல்லை
வேதியர்தலைவனானவிரிஞ்சன்மெய்யுணர்விற்பூத்த
காதலன்புலன்களாயபகைஞரைக்கடந்தகாட்சி
மாதவமுனிவர்க்கீசன்வசிட்டனென்றுரைக்கும்வள்ளல்.

(இ-ள்.) முதல்வரான சிவபெருமான் திருவடிகளையேயடைந்த தூயன் பழய வேதியர் தலைவனான பிரமனுடைய உண்மையுணர்விலுண்டாகிய புதல்வன் ஐம்புலன்களான சத்துருகளையென்ற தோற்றத்தினையுடைய மாதவர்களான முனிவருக்கீசனாயுள்ளோன் வள்ளலானவசிட்டனென்பான்.—எ-று. (அ)

அன்னவன்மரபின்வந்தோனறிஞர்க்குமறிஞன்மேலாய்
மன்னியநெறிக்கணின்றோன்மாகதனென்னும்பேரோ
னுன்னருமறைகள்யாவுமுணர்ந்தவனுயர்ந்தவீடு
தன்னையிங்கடைவனென்னாத்தவந்தனையியற்றலுற்றான்.

(இ-ள்.) அவ்வசிட்டன் மரபில்வந்தவன் அறிஞர்க்கும் அறிஞன் உயர்வாகப் பொருந்திய நன்மார்க்கத்தினின்றவன் மாகதனென்னும் பெயருள்ளவன் நினைத்தற்கரிய வேதங்களனைத்தையும் அறிந்தவன் உயர்ந்த மோட்சத்தை அடைவேனென்று தவத்தினைச்செய்கின்றான்.—எ-று. (க)

ஆயவன்றன்பாலின்றேரசுரகன்னிகையைத்தேற்றி
யேயினையென்னினன்னாளெய்தியேயவன்றனோடு
மேயினகாலையாங்கோர்வேழமாமுகத்தனுங்க
ளாயகனாகத்தோன்றிநற்றவம்புரிவனன்றே.

(இ-ள்.) அவனிடத்திலோ ரசுரகன்னிகையைத்தேற்றி யனுப்பினையானால் அவள்சென்றவனுடன் கலந்தவுடனே ஓர் யானைமுகாசுரன் உங்கள் தலைவனாகப்பிறந்து நல்லதவத்தினைச்செய்வான்.—எ-று. (கo)

நற்றவம்புரிதல்காணுநண்ணலர்புரங்கண்மூன்றுஞ்
செற்றவன்மேவிமேலாஞ்செல்வமுந்திறலுநல்க
மற்றவன்வானோர்தொல்சீர்மாற்றியெவ்வுலகுமாளுங்
கொற்றவனுவனென்றுகூறினன்குரவனுன்னேன்.

(இ-ள்) நல்லதவம் புரிதலைக்கண்டு பகைவர் முப்புரங்களையும் அழித்தசிவபெருமான் அவனெதிரே தோன்றி மேலான செல்வத்தையும் வல்லமையையும் வரமாகவளிக்க வன்னேன் தேவரின்பழய சிறப்பினை யொழித்து எல்லாஉலகங்களையும் ஆளுகின்ற அரசனுவானென்று அசுரகுருவான சுக்கிரனுரைத்தனன்.—எ-று. (கக)

அவ்வுரைகேட்டலோடுமடித்துணையிறைஞ்சியீது
செவ்விதுசெவ்விதெந்தாய்செய்வனீபணித்ததென்ன
வெவ்வமில்புகருமற்றேயியற்றியசென்மோவென்ன
மைவரையனையமேனிமன்னவன்கடிதுமீண்டான்.

(இ-ள்.) அம்மொழியைக்கேட்டவுடனே அவனுடைய பாதங்களை வணங்கி எந்தையே இது நல்லது நல்லது நீ சொன்னதனைச் செய்கின்றேனென்று கூறக் குற்றமற்ற வெள்ளியும் அவ்வாறே செய்யப்போதியென்றுரைக்கக் கரியமலைபோன்ற அசுரமன்னன் விரைந்து திரும்பிச்சென்றனன்.—எ-று. (கஉ)

மீண்டுதன்னிருக்கையெய்திவிபுதையென்றொருத்தியன்னுள்
காண்டருமெழிலின்மிக்ககன்னிதன்குலத்தில்வந்தாள்
பூண்டகுநாணினோடும்பொருந்தினளவளையெய்தி
யீண்டொருமொழிகேட்டன்னுயென்னிடர்தீர்த்தியென்றான்.

(இ-ள்.) திரும்பித்தன்னிட மடைந்து தன்குலத்திற் பிறந்தவளும் காணத்தக்க வழகின் மிகுந்தகன்னிகையும் நாணத்தினைப் பூடணமாகவுடையவளும் விபுதையென்று பெயருள்ளவளுமான அசுரமாதையடைந்து அன்னையே இங்கெனதொருசொல்லைக்கேட்டு எனதுதுன்பத்தினை நீக்குவாயாகவென்று கூறினன்.—எ-று. ()

மன்னவர்மன்னன்கூறுமாற்றமங்கதனைக்கேளாக்
கன்னிகையாகிநின்றகாமருவல்லியன்னு
ணின்னடித்தொண்டுசெய்யுநிருதர்தங்குலத்துவந்தே
னென்னுனக்கிபற்றுஞ்செய்கையிசைந்தனவிசைத்தியென்றாள்.

(இ-ள்.) அரசர்க்கரசனுடைய வசனத்தினைக் கேட்டு அழகுவாய்ந்தகொடிபோன்ற கன்னிகையான விபுதை யான் நினதடித்தொண்டு செய்யுமசுரர் குலத்திற் பிறந்தவள் என்னுலுனக்குச் செய்யவேண்டுவதென்னை உனக்குச்சம்மதமானதையுரைப்பாயாக வென்று கூறினள்.—எ-று. (கச)

உரையெனலோடுமன்னனுன்குலத்தோரைவிண்ணோர்
பொருதுவென்கண்டுமீண்டுபோனதையறிதியன்றே
மருவருங்குழலாய்போரில்வானவர்தம்மைவெல்ல
வொருவருமில்லைநின்னுலுற்றிடவேண்டுங்கண்டாய்.

(இ-ள்.) சொல்லென்று கூறியவுடனே அரசன் அம்மாதைப்பார்த்து உனது குலத்தவர்களைத் தேவர்கள் பொருது முதுகிடுவித்துச்சென்றதனை நீயறிவாயன்றோ! மணங்கமழுங் கூந்தலினையுடையாய் சண்டையிலசுரர்களைச் செயிப்பதற்கு ஒருவருமிலர் இனியத்தகையோன் நின்னுலுண்டாதல் வேண்டும்—எ-று. (கரு)

ஆங்கதற்கேதுக்கேட்டியம்பொன்மால்வரைத்தெனுது
பாங்கரிலரியநோன்புபயிலுமாகதன்பாற்சென்று

நீங்கல்செல்லாதுபன்னுணிவறிந்தொழுகிக்காலந்
தீங்கறநாடியன்னான்செய்தவஞ்சிதைத்துச்சேர்தி.

(இ-ள்.) அதற்குமார்க்கத்தைக்கேள் அழகியமேருமலையின் தென்புறத்திற் தவஞ்செய்திருக்கும் மாகதனிடஞ் சென்று அவனைவிட்டுப் பிரியாது பலகாலமவன் குறிப்பறிந்து நடந்து காலத்தினைக் குற்றமறவாராய்ந்து அவன் செய்யுந்தவத்தினைக் கெடுத்து அவனைச் சேருவாயாக.—எ-று. (கசு)

சேருதியென்னினங்கோர்சிறுவனின்னிடத்திற்றோன்றிப்
பாருலகனைத்துமேலாம்பதங்களும்வலிதிற்கொண்டு
வீரரில்வீரனாகிவெம்பகைவிட்டியெங்க
ளாரஞர்துடைக்குமன்னாயன்னவாறமைதியென்றான்.

(இ-ள்.) சேருவாயானால் ஒரு சிறுவன் நின்னிடத்திற்பிறந்து மண்ணுலகனைத்தும் மேலான பதவிகளும் பலாத்காரமாக அபகரித்து வீரரில்வீரனாகி வெவ்விய பகையையொழித்து எங்களுடைய அரியதுன்பத்தினை நீக்குவான் ஆதலின் அன்னையே அவ்வாறு சம்மதிப்பாயாக வென்று கூறினான்.—எ-று. (கஎ)

வேந்தனதுரையைக்கேட்டவிபுதையம்முனிவன்றன்பாற்
போந்துனதெண்ணமுற்றப்புதல்வனையளித்துமீள்வ
லேந்தனீயிரங்கலென்றேயேகினளிறைவன்வானோர்
மாய்ந்தனரினியென்றுன்னிமகிழ்ச்சியோடிருந்தானங்கண்.

(இ-ள்.) அசுரமன்னவனுடைய வசனத்தினைக்கேட்ட விபுதை என்பவள் அம்முனிவனிடஞ்சென்று உனதெண்ணம் நிறைவேறப் புதல்வனைப்பெற்று வருகின்றேன் அரசனே நீ வருந்தாதே என்று கூறிச்சென்றாள். அதுகண்ட அரசன் இனித் தேவர் இறந்தனரென்று நினைத்து அவ்விடத்தின் மகிழ்ச்சியுடனிருந்தனன்.—எ-று

ஏகியவசுரகன்னியேமமால்வரையின்சார்போய்
மாகதன்பாற்சென்றன்னான்மாதவத்திறத்தைநோக்கி
யாகொடிதிவனேயல்லாதாரிதுபுரியுநீரார்
மோகமிங்கிவனையாக்கிமுயங்குவதெவ்வாறென்றாள்.

(இ-ள்,) சென்றவசுரப்பெண் பெரிய மேருமலையினருகிற்போய் மாகதனருகிற்சென்று அவனது பெருந்தவத்தினைப் பார்த்து ஆ கஷ்டம் இவனையன்றி யெவரிது செய்யுந்தன்மையர் இவனுக்கு மோகமுண்டாக்கி இவனை எவ்வாறு சேருவது என்றனள்.—எ-று. (கக)

நேமிகளனைத்துமாரநிவந்தெழும்வடவைதன்னை
மாமுகின்மாற்றவற்றோமாற்றவேவல்லதென்னிற்
காமவேளெடுத்தசெய்யகணையெலாமொருங்குசென்றித்
தோமில்சீர்முனியைவாட்டித்துறவையுமாற்றுமென்றாள்.

(இ-ள்.) கடன் முழுதும் பொருந்தி உயர்ந்தெழுகின்ற வடவைத்தீயைப் பெரிய மேகநீக்க வல்லமையுடையதோ அங்ஙன நீக்கவல்ல தானால் மன்மதனெடுத்த செவ்விய வம்பனைத்து பொன்றாகச் சென்றிந்தக்குற்றமற்ற சிறப்பினையுடைய முனிவனை வாட்டித் துறவையு நீக்குமென்றனள்.—எ-று. (உ௦)

வானுயர்தவத்தினிற்குமாகதன்யானேயல்ல
மேனகைவரினுநோக்கான்விண்ணவர்பகைஞர்தங்கள்
கோனிஃதுணரான்போலுங்குறுகிநீபுணர்தியென்று
னுதற்கிசைந்தவாறுநகனமென்னநகைத்துநின்றாள்.

(இ-ள்.) மிகவுமுயர்ந்த தவத்தினி னிற்கின்ற விம்மாகத முனிவன் நானே யல்ல மேனகை வந்தாலும் கண்ணெடுத்துப்பாரான் தேவர் பகைவரான அசுரர்தலை வனிதனை யுணரான்போலும் நீ சென்றவனைச் சேருதி என்று கூறினான் நானதற்கு இசைந்ததன்மையு நன்றாக விருக்கின்றது என்று கூறிச் சிரித்தனள்.—எ-று. (உக)

போந்தனென் மீண்டுமென்னிற்போற்றலர்க்குடைந்துசோரும்
வேந்தனென் னுற்றாயென் றுமீளவும்விடுப்பனம்மா
வேய்ந்தநேயத்திலென்பாலெய்திமற்றிவனேயெற்குக்
காந்தனேயாகநோற்றுக்காலமும்பார்ப்பனென்றாள்.

(இ-ள்.) திரும்பிப் போவேனாற் பகைவர்க்குடைந்து வாடுகின்ற அரசன் ஏன் வந்தாயென்று பின்னருமனுப்புவான் பொருந்திய விருப்பத்திலென்னையடைந்து இவனே எனக்குக்காதலனா மாறுதவஞ்செய்துகாலமும் பார்ப்பேனென்றனள்.-எ-று.

என்றிவையுன்னியுற்றோர்க்கினிதருள்புரியும்வெள்ளிக்
குன்றுறைபெருமான்செய்யதுணைகழல்கருத்துட்கொண்டு
வன்றிறனோன்பின்மிக்கமாகதமுனிவனேரா
நின்றருந்தவத்தையாற்றநெடும்பகல்கழிந்தநன்றே.

(இ-ள்.) என்றிவைகளை நினைந்து தம்மையடைந்தார்க்குச் செவ்வனேயருள் செய்கின்ற வெள்ளிமலையிலெழுந்தருளி இருக்கும் இறைவனுடைய செவ்வியமுழங்கு கின்ற வீரக் கழலணிந்த திருவடிகளை மனத்துட்கொண்டு மிக்க வன்பினையுடைய நோன்பின் மிகுந்த மாகதமுனிவனெதிரே நின்று அரியதவத்தினைச்செய்தனள் வெகு காலங்களாயின.—எ-று. (உரு)

மாதுசெய்தவத்தினாலும்வரன்முறைவழாதவூழி
னேதுவினாலுமங்கணிருங்களிற்றொருத்தலொன்று
காதலம்பிடியினோடுகலந்துடன்புணரக்காணூஉ
வாதரம்பெருகப்பல்கானோக்கினனருந்தவத்தோன்.

(இ-ள்.) விபுதை என்பாள் செய்த தவத்தாலும் வரன்முறையிற் றவறாத ஊழின் ஏதுவினாலும் அவ்விடத்திற் பெரிய வொராண் யானை காதலினையுடைய பெண்யானையுடனே கலந்து புணரக்கண்டு ஆசைவளரப்பலமுறையதனை யரியதவத் தினையுடைய மாகதமுனிவன் பார்த்தான்.—எ-று. (உசு)

மறந்தனன்மனுவின்செய்கைமனப்படுபொருளைவாளா
துறந்தனன்காமமென்னுஞ்சூழ்வலைப்பட்டுச்சோர்வுற்
றிறந்தனன்போலமாழ்கியினுயிர்சுமந்தானின்று
பிறந்தனனிணையகூட்டம்பெற்றிடுவேனேலென்றான்.

(இ-ள்.) மந்திரஞ் செபிக்குந் தொழிலையுடைய மனத்திற் றங்கியதியானப் பொருளை பயனறவிடுத்துக் காமமென்னும் சுற்றுவலைக்குளகப்பட்டுச் சோர்ந்து இறந் தவனைப்போல வருந்தி இனிய உயிரைமாத்திரஞ் சுமந்தவனாய் இவ்விலங்கின் கூட்டத் தினையானும் பெறுவேனானால் இன்று பிறந்தவனாவேன் என்றனன்.—எ-று. (உரு)

என்றிதுபுகன்றுமுன்செய்தவக்குறைக்கிரங்கியென்று
நின்றதுபழியேயேனுநீடுமேற்காமச்சூர்நோய்
தின்றுயிர்செகுக்குமந்தோசெய்வதிங்கெவனோவென்று
வென்றிகொண்முனிவன்றானுமனத்தொடுவினவலுற்றான்.

(இ-ள்.) எனவிதனை யுரைத்து முன்செய்த தவக்குறைக்கிரங்கி என்றும் பழி நின்றதாயினும அச்சத்தைத்தருகின்ற காமநோய் அதிகரிக்குமானால் அது எனதுயி

ரைத் தின்றழிக்கும் ஐயோ என்னைசெய்வதென்று வெற்றிபொருந்திய முனிவன்மனத்துடன் வினவத்தொடங்கினன் —எ-று. (உசு)

தீவிடந்தலைக்கொண்டாங்கேதெறுதருகாமச்செந்தீ
யோய்வதுசிறிதுமின்றியுள்ளுயிரலைக்கும்வேலை
யாவதெனிருக்கினின்னுமருந்தவங்கூடுமாவி
போவதிற்பயன்யாதென்னப்புணர்ச்சிமேற்புந்திகொண்டான்.

(இ-ள்.) கொடியவிடந் தலைக்கேறினாற்போல கொல்லுகின்ற காமமென்று கூறுஞ்செந்தீகுறைவது சிறிதுமில்லாது உள்ளுயிரை யலைக்குஞ்சமயத்தில் இன்னஞ் சும்மாவிருப்பதனா லாவதென்னை அரியதவம் பின்னர்க்கூடும் உயிர்போவதனாற்பயன் யாதென்று புணர்ச்சிமீது நினைவுகொண்டனன்.—எ-று. (உஎ)

போவதற்கெண்ணும்போதிற்பொருவில்சீரசுரர்க்கெல்லாங்
காவலனேவல்போற்றுங்கன்னிகைமுனிவன்காமத்
தோய்வதும்பிறவுமெல்லாமொருங்குடனோக்கியெண்ணம்
யாவதுமுடிந்ததென்னாவெல்லையின்மகிழ்ச்சிபெற்றாள்.

(இ-ள்.) புணர்ச்சியைக்கருதித் தவத்தைவிடுத்துப் போவான் கருதுஞ்சமயத்தில் ஒப்பற்ற சீரினையுடைய அசுரரனைவருக்கும் அரசனாயுள்ளவனுடைய கட்டளையைப் பாதுகாத்து நிற்கின்ற கன்னிகையான விபுதை மாகத முனிவன் காமத்தால் ஓய்வதும் பிறவுமெல்லாம் ஒன்றாகப்பார்த்து எனது எண்ணம் அனைத்தும் முடிந்ததென்று அளவற்ற மகிழ்ச்சிபெற்றனள்.—எ-று. (உஅ)

ஈங்கிதுகாலமாகுமிடனுமாமிதற்குவேறு
தீங்கிலையிணையகூட்டஞ்செய்தவஞ்செய்ததென்னா
வாங்கியநுதலினாளும்வல்விரைந்தெழுந்துதூயோன்
பாங்கரினணுகிப்பொற்றாள்பணிந்தனள்பரிவுகூர.

(இ-ள்.) இதற்கிதுவே காலமும் இடமும் இதற்குவேறு தீங்கில்லை இத்தகையசேர்க்கை நமக்குத்தவஞ் செய்ததனாலுண்டாகியது என்று வளைந்தநெற்றியினையுடைய விபுதையும் அதிகவிரைவாகவெழுந்து தூயவம்முனிவனருகிற்சென்று விருப்பம்மிக அவன் பொன்னடிகளை வணங்கினாள்.—எ-று. (உகூ)

மின்னிடைபணிந்துநிற்பமெய்யுறுப்பனைத்துநோக்கிப்
பின்னருமான்மீக்கொள்ளப்பித்தரின்மயங்காநின்று
கன்னியுமென்னைவெஃகுங்காந்தருவத்தினாளு
மின்னவளாயினன்றேவென்னுயிருய்யுமென்னா.

(இ-ள்.) மின்னற்கொடிபோன்ற இடையினையுடைய விபுதையென்பவள் வணங்கி நிற்கவவளுடலுறுப் பனைத்தையும் பார்த்துப் பின்னுமோகமதிகரித்துப் பைத்தியகாரரைப்போல் மயங்கிஇம்மாதும் என்னைவிரும்புகின்ற காந்தருவமணமுடையாளும் இவளானலன்றே எனதுயிர் உய்யும் என்று,— (௩0)

கருத்திடையுன்னியார்நீகன்னியோவென்னவேலோடு
மருத்திகொண்முனியைநோக்கியன்னதாமென்னநம்பால்
வரத்தகுங்கருமமென்கொல்வல்லையிலியம்புகென்றான்
விரத்தரிற்றலைவனாகிவீடுபெற்றுய்யநோற்றான்.

(இ-ள்.) வைராக்கியமுடையவரில் முதல்வனாகி வீடு பெற்றுய்யத்தவஞ்செய்தமாகதமுனிவன் உள்ளத்தில் நினைத்து நீயார் கன்னியோவென்றவுடனே ஆசைகொண்ட முனியைப்பார்த்து யான் கன்னியே என்றுகூற எம்மிடத்தில் நீ வருவதற்குத்தகுந்த கருமமென்னை விரைந்துரைத்தியென்றான்.—எ-று. (௩க)

முருந்தெனுமுறுவலாளுமுனிவநீகணவனாக
விருந்தவம்புரிந்தேன்பன்னாளின்றதுமுடிவதாகப்
பொருந்தினனீண்டுநின்னைப்புல்லியவந்தேனென்ன
வருந்துறாதமுதம்பெற்றமாக்கள்போன்மகிழ்ச்சியுற்றான்.

(இ-ள்.) பறவையிறகினடிப் புறம்போன்ற பற்களையுடைய விபுதையும் முனிவனே நீ கணவனாக வேண்டுமென்று வெகுகாலம் பெரியதவத்தினைச்செய்தேன் அது இன்று முடிவதாக நின்னைச்சேரவிங்கு வந்தேனென்றுகூற வதுகேட்ட வம்மாகதன் வருத்தமடையாமலமுதம் பெற்றமனிதரையொப்ப மகிழ்ச்சியெய்தினான்.—எ-று.

என்பெருந்தவமும்பன்னாளென்பொருட்டாகநோற்ற
நின்பெருந்தவமுமன்றோநின்னுடனென்னையீண்டே
யன்புறக்கூட்டிற்றம்மாவடுகளிறென்னப்புல்லி
யின்புறவேண்டுநீயுமிரும்பிடியாதியென்ன.

(இ-ள்) எனது பெரிய தவமும் பலகாலம் என் பொருட்டுத்தவஞ் செய்த நினது பெரியதவமுமன்றோ நின்னுடனென்னை யிவ்விடத்தில் அன்பாகச் சேர்த்தது இனி நாமிருவருங் கொலையானையுருவிற் கூடிச்சுகித்தல்வேண்டும்நீயும் பெரியபெண் யானையாவாயென்றுகூற.—எ-று. (௩௩)

மெல்லியறானுமங்கோர்வெம்பிடியாகித்தோன்றி
யெல்லையில்காதல்பின்னுமீதனுமுனிவன்றானு
மல்லலங்களிறதாகிவானுயர்புழைக்கைநீட்டிப்
புல்லினனூற்றந்தானேபுணர்ச்சியிற்சிறந்ததன்றே.

(இ-ள்.) விபுதையுமுடனே அவ்விடத்திலொரு வெவ்விய பிடியானையினுருவெய்திநின்று அளவற்றகாதலைப் பின்னுமுண்டாக்குதலும் முனிவனும் வன்மைமிக்க ஒரு ஆண் யானையாகி வானிலுயர்ந்த துதிக்கையை நீட்டிப் பிடித்து அவளைப் புல்லினன் புணர்ச்சியிற் சிறந்தது ஆலிங்கனமன்றோ?—எ-று. (௩௪)

நையுறுமுள்ளமாதிநான்மையும்பொறியினண்ணி
யையுறுபுலனோரைந்துமாவியினொருங்கவன்னாண்
மெய்யுறுபுணர்ச்சித்தாயவேட்கையின்மேவலுற்றுச்
செய்யுறுகாமமுற்றித்தீர்ந்திடுகாலைதன்னில்.

(இ-ள்) நைந்த உள்ளமுதலிய கரணநான்குமைம்பொறியிற் கலந்து நுண்மையானவைம்புலனும் உயிருளொடுங்க அம்மாகதன் மெய்யுறுபுணர்ச்சியாகிய விருப்பிற் பொருந்தி நிகழ்த்திய இச்சைமுடிந்து விலகுங்காலத்தில் —எ-று. (௩௫)

அயன்முதற்றலைவர்வானத்தமர்தருபுலவராற்றுஞ்
செயன்முறைக்கடன்கள்யாவுஞ்சிந்தினன்சிதைக்கும்வண்ணம்
வயமுகத்தடவுகொண்டவயிர்த்திடுமருப்பினால்வாய்க்
கயமுகத்தவுணனங்கேகதுமெனவுதயஞ்செய்தான்.

(இ-ள்.) பிரமன் முதலிய தலைவர்களும் சுவர்க்கத்தில் வாழுந்தேவர்களும் செய்கின்ற முறையான தொழிலனைத்தையும் அழித்தொழிக்கும்வண்ணம் பெரிய முகத்தில் விளைந்த கோடுகளையுநான்ற வாயினையும் உடையகயமுகாசுரன் உடனே விரைவாகப் பிறந்தனன்.— எ-று. (௩௬)

பற்றியபலகையொள்வாள்விதிர்த்தனன்பரவைஞாலஞ்
சுற்றினன்வரைகள்யாவுந்துகள்படத்துணைத்தாளூந்தி
யெற்றினனுருமேறஞ்சவிரட்டினனுலகமெல்லாஞ்
செற்றிடுங்கடுவதென்னத்திரிந்தனன்சீற்றமிக்கான்

(இ-ள்.) கையிற் பிடித்த பலகையையும் ஒள்ளியவாட்படையையும் சுழற்றி ஞன் மலைகளனைத்துந் துகளாமாறு இருபதங்களாலுமுதைத்து எறிந்தான் இடியே றுமஞ்சுமாறுர வாரித்தான் உலகனைத்தையும் அழிக்கும் விடத்தைப்போல கோபமி குந்தவனுய்த் திரிந்தான்.—எ-று. (௩௭)

அன்னதோர்பிடியுரோமமளப்பிலவவற்றிலாங்கே
மின்னிலங்கெயிற்றுப்பேழ்வாய்விளங்கெழிற்செக்கர்வாய்ந்த
சென்னியங்குடுமிவீரர்தெழித்தெழீ இச்செங்கைதன்னிற்
றுன்னிரும்படைகளோடுந்தோன்றினர்தொகையிலான்றோர்.

(இ-ள்.) பின்னர் அந்தப்பெண்யானையி னளவற்ற உரோமங்களினின்று மின்னலெனவிளங்கும் பற்களையும் பிளந்தவாய்களையும் பிரகாசிக்கின்ற அழகியசெந் நிறம்வாய்ந்ததலை ரோமங்களையும் உடையவீரர்கள் ஆரவாரித்தெழுந்து செவ்வியகரங் களிற் பொருந்திய பெரிய ஆயுதங்களுடன் அளவற்றவர்கள் பிறந்தார்கள் —எ-று.

இன்னவரோடுகூடியிபமுகத்தவுணனுர்ப்பத்
தன்னையும்பயந்தோன்றானுந்தளர்ந்தனரிரியல்போகி
முன்னுறுமுருவங்கொள்ளமுனிவரனுணர்வுதோன்ற
வுன்னினின்றிரங்கியேங்கியூழ்முறைநினைந்துநைந்தான்.

(இ-ள். இவ்வாறு பிறந்தவசுரர்களுடன் சேர்ந்து கயமுகாசுரனுரவாரிக்க அவனன்னையான விபுதையும் அத்தனை மாகதனும் தளர்ந்துவிலகியோடிப் பழைய வுருவங்கொண்டவுடனே முனிசிரேட்டனுக்கு முன்னிருந்த வறிவுதயமாகச் சென்ற காலத்தை நினைத்து வருந்தியேங்கி யூழின்முறையை நினைந்து வருந்தினன்.—எ-று.

மாயமாங்காமமென்னும்வலையிடைப்பட்டுநீங்குந்
தூயவன்முன்னநின்றதோகையைச்சுளித்துநோக்கி
நீயெவர்குலத்தில்வந்தாய்நினைந்ததென்கழறுகென்னச்
சேயிழைமரபும்வந்தசெய்கையுமுணர்த்தினின்றாள்.

(இ-ள்.) மாயமாகிய காமமென்னும் வலையிலகப்பட்டு நீங்கியதூயவனுனமாக தன் எதிரினின்ற மாதைச்சுளித்துப்பார்த்து நீ எவர்குலத்திற் பிறந்தவள் நீ கருதி யதென்னை யுரைத்தியென்று கேட்கவம்மாது தனது மரபும் தான்வந்த வரலாறும் தெரிவித்தனள்.—எ-று. (௬0)

வரன்முறையுணர்தலோடுமாகதமுனிவன்யானே
தரணியிலுயிர்களானசராசரந்தனக்குமேலாஞ்
சுரகுலந்தனக்குமின்றேதுன்புறுவித்தேனென்னு
வெரியுறுதளிர்போல்வாடியின்னலங்கடலுட்பட்டான்.

(இ-ள்.) வரலாற்று முறையையுணர்ந்த வுடனேமாகத முனிவன்நானே பூமி யிலுள்ள வுயிர்களுக்குஞ் சராசரங்கட்கு மேலானதேவகுலத்துக்கும் இன்றேதுன்பத் தையுண்டாக்கினேனென்று தீயிற்பட்ட தளிர்போல வாட்டமுற்றுத் துன்பசமுத்தி ரத்துண்மூழ்கினன்.—எ-று. (௬க)

சிலபொழுதிரங்கித்தேறிச்சேயிழைமடந்தைநுங்கோன்
மெலிவுநினனெண்ணந்தானும்வீடுபெற்றுய்யயான்முன்
பலபகல்புரிந்தநோன்பும்பாருலகனைத்தும்வானே
ருலகமுமுடிந்தவேநீயொல்லையிற்போதியென்றான்.

(இ-ள். சிறிது நேரம் வருந்தித்தெளிந்து செவ்விய வாபரணமணிந்தமாதே நினது அரசனுடைய மெலிவும் நினதெண்ணமும் வீடுபெற்றுய்தற்கு முன்னர்யான்

பலகாலஞ்செய்த நோன்பும் முடிந்தன இனி நீ விரைவாகப் போவாயாகவென்று கூறினன்.—எ-று. (சுஉ)

போதிநீயென்னலோடும்பொன்னடிவணங்கிச்சென்று
தாதுலாந்தெரியலாகத்தயித்தியர்க்கிறைபாலெய்தி
யீதெலாமுரைத்தலோடுமெல்லையின்மகிழ்ச்சியாகிக்
காதல்கூர்தபனற்காணுங்காலையங்கமலம்போன்றான்.

(இ-ள்.) நீ போவாயாகவென்று கூறியவுடனே அவன் பொன்னடிகளைவணங்கிச்சென்று தாதுலவியமலர் மாலையணிந்த மார்பினையுடைய வசுரர்தலைவனிடமடைந்து இவ்வனைத்தும் உரைத்தவுடனே அளவற்ற சந்தோஷமுடையவனாகி விருப்பம்பொருந்திய சூரியனைக்கண்ட உதயகாலத்துத் தாமரையரும்பையொத்தவனானான்.

காலையங்கமலங்கதிரினைக் கண்டவுடனலருமாறிவள் கூறிய மொழியாலிவள் தெரிசனம்களிப்பை யவனுக்குண்டாகிய தென்றுகுறிப்பார் "தபனர்க்காணுங்காலையங் கமலமொத்தான்" என்றார். தபனற்காணுங் காலை என்பதற்குச் சூரியனைக் கண்ட பொழுது என்றுமாம். (சுங.)

தாங்கருமுவகையோடுந்தானவர்க்கரசனண்ண
வீங்குறுமுனிவன்முன்போலினிதுநோன்பியற்றப்போனா
னுங்கவனுதித்தமைந்தரனைவருமுதல்வன்றன்னோ
டோங்கலின்குலங்கண்மேருவுடனடந்தென்னச்சென்றார்.

(இ-ள்.) தாங்குதற்கரிய மகிழ்ச்சியுடன் அசுராதிபன் இருக்க இங்கிருந்த மாகதமுனிவன் முன்போல இனிது தவஞ்செய்யச் சென்றனன் அவ்விடத்திற் பிறந்த வம்மைந்தரனைவரும் தங்கள் தலைவனுடன் மலையின் கூட்டங்கள் மேருமலையுடன் சென்றாற்போலச் சென்றனர்.—எ-று. (சுச)

சீற்றங்கொடாறுகணுகமொருவழித்திரண்டதென்னக்
கூற்றம்பல்லுருவுகொண்டுகுலாயகொட்பென்னவூழிக்
காற்றெங்கும்பரவிற்றென்னக்கடலிடைப்பிறந்தநஞ்ச
மூற்றங்கொண்டுலாயதென்னவுலகெலாந்திரிதந்துற்றார்.

(இ-ள்.) கோபம்பொருந்தின வஞ்சாமையினையுடைய பாம்புகள் ஒரு இடத்திற்கூடி நின்றாற்போலவும் கூற்றமானது பலவுருவங்கொண்டு பொருந்தியுலவினாற் போலவும் ஊழிக்காற்று எவ்விடத்திலும் பரவிநின்றாற் போலவும் கடலினிடத்துத் தோன்றிய ஆலகாலவிஷமானது வன்மைகொண்டுலவினாற்போலவும் உலகனைத்திலுஞ் சுற்றினார்கள்.—எ-று. (சுரு)

மலையினைப்பொடிப்பரேனைமண்ணினைமறிப்பர்வாரி
யலையினைக்குடிப்பர்கையாலாருயிர்த்தொகையையள்ளி
யுலையினைப்பொருவுபேழ்வாயோச்சுவர்பரிதியோடு
நிலையினைத்தடுப்பர்சேடனெளிதரப்பெயர்வர்மாதோ.

(இ-ள்.) மலையைப் பொடிப்பார்கள் மற்றுள்ள மண்ணினைப் பெயர்ப்பார்கள் அலைகளையுடைய கடனீரைக்குடிப்பார்கள் கைகளால் அரிய உயிர்க்கூட்டங்களைவாரி உலைக்களம்போன்ற பிளந்த வாயுளிடுவார்கள் சூரியனது தேரோடுமிடத்தினைத் தடைசெய்வார்கள் ஆதிசேடன் நெளியும் வண்ணம் நடப்பார்கள்.—எ-று. (சுசு)

தக்கதோரவுணரோடுந்தந்திமாமுகத்துவீரன்
திக்கெலாமுலவியெல்லாத்தேயமுமொருங்கேசென்று

மக்களேயாதியானமன்னுயிர்வாரிநுங்கித்
தொக்கதோர்செந்நீர்மாந்தித்துண்ணெனத்திரியுமன்றே.

(இ-ள்.) தகுந்த அவுணர்களுடன் கயமுகவசுரவீரன் திக்கனைத்து முலாவி அனைத்துத்தெயங்களிலு மொருங்கேசென்று மனிதர் முதலிய மன்னுயிர்களை அள்ளிவிழுங்கி ஒருங்கு திரண்ட இரத்தவெள்ளங் குடித்து எவருந் திடுக்கிடத்திரிவான்.

அத்திறம்வைகன்றேறுமவுணருமிறையுமேகிக்
கைத்துறுமுயிர்கள்யாவுங்கவர்ந்தனர்மிசைந்தாராகப்
பொய்த்தவர்வெறுக்கையென்னப்போயினவுயிர்கள்சால
வெய்த்தனர்முனிவர்தேவரிறந்ததுமறையினீதி.

(இ-ள்.) அவ்வாறு தினந்தோறுமசுரர்களும் அவர்தலைவனை கயமுகனுஞ் சென்று தமக்குவிரோதமாகப் பொருந்திய உயிர்களனைத்தையும் அபகரித்துத் தின்று வாராநிற்ப உயிர்கள் மிகுதியும் பொய்யுரைப்போர் செல்வம்போல அழிந்தன இதனால் முனிவருந்தேவரும் இளைத்தனர் வேதநீதி இறந்தது.—எ-று. (சஅ)

முகரிமையடைந்தவன்றேன்முகத்தவனவுணரோடு
மகலிடமிசையேயிவ்வாறமர்தலுமனையதன்மை
தகுவர்கண்முதல்வனோர்ந்துதமதுதொல்குரவனை
புகரினைவிடுப்பவன்றான்போந்திவைபுகலலுற்றான்.

(இ-ள்.) முதன்மையையடைந்த வலிய யானைமுகனான வசுரன் உடன்பிறந்த வசுரர்களுடன் பூமியிலிவ்வாறிருத்தலும் அத்தன்மையை அசுரர்தலைவனுணர்ந்து தங்கள் பழய புரோகிதனை சுக்கிரனை யனுப்ப அவன் இவனையடைந்து இவைகளை யுரைக்கத் தொடங்கினன்.—எ-று. (சகூ)

வேறு.

ஒள்ளிதாகியவுங்குலத்துற்றுள
மள்ளர்யார்க்குமோர்வான்குருவாயினேன்
றெள்ளுபன்மறைத்திட்பமுந்தேர்ந்துளேன்
வெள்ளியென்பதொர்மேதகுபேரினேன்.

(இ-ள்.) யான் தூயதாகி நினதுகுலத்தவரான வீரரனைவருக்கும் ஒப்பற்ற வலிய குருவாயுள்ளவன்தெளிந்த பலவேதங்களின் திண்ணியபொருள்களையு முணர்ந்துளேன் சுக்கிரனென்று மேன்மையான ஒரு பெயரினையுமுடையேன் —எ-று. (ருo)

உங்குலத்துக்கொருமுதலாகிய
சிங்கமன்னதிறலினனுய்த்திட
லிங்குநின்புடையெய்தினன்மேனெறி
தங்குநன்னயஞ்சாற்றுதற்கேயென்றான்.

(இ-ள்.) உனது குலத்துக்குஒப்பற்ற தலைவனாகவுள்ளவனும் சிங்கம்போன்ற வன்மையினையுடையவனுமான அரசனாலனுப்பப்பட இங்குநின்னருகில்வந்தேன் வந்தது இனி நடக்கவேண்டும் வழிகளுக்குநல்ல நயங்களை நினக்குபதேசிக்கும் வண்ணமேயாம்.—எ-று. (ருக)

குரவனுகிக்குறுகியசல்லியன்
பரிவொடீதுபகர்தலுமாங்கவன்
றிருவடித்துணைசென்றுவணங்கியே
கரிமுகத்தன்கழறுதன்மேயினன்.

(இ-ள்.) ஆசாரியனாகவந்தசுக்கிரன் விருப்பத்துடனிதனை யுரைத்தவுடனே கயமுகாசுரன் அச்சுக்கிரனுடைய திருவடித்துணைகளைச் சென்று வணங்கி யுரைப்பானாயினன்.—எ-று. (கூஉ)

இறுவதின்றியவெங்குலத்தோர்க்கெலா
மறிவநீயருளாலடியேற்கிவ
ணுறுதிகூறுகின்றாயிதனூங்கினிப்
பெறுவதொன்றுளதேயெனப்பேசினான்.

(இ-ள்.) மரணமற்ற எமது குலத்தினருக்கெல்லாம் ஞானாசாரியனே! நீ கருணையினாலடியேனுக்கிவ்விடத்தில் உறுதியையுபதேசிக்கின்றனை இதனிலும் பெரியதொன்று இனியானடையத்தக்க தாகவுளதோ என்றுகூறினான் —எ-று. (கூங)

அந்தவேலையவுணர்கள்யாவருஞ்
சிந்தைமேல்கொண்டதீதினைநீத்திடா
வெந்தையார்தங்குரவரிவரெனா
வந்துபார்க்கவன்றாளில்வணங்கினார்.

(இ-ள்.) அப்பொழுது கயமுகனுடன் பிறந்த அசுரரனைவரும் கருத்திற்கொண்டிருந்த கொடுமையை விடுத்து இவர்எந்தையாரின் குரவரென்று வராநின்றசுக்கிரனுடைய பாதங்களில் வணங்கினர்கள்.—எ-று. (கூச)

சீதவான்முகிற்கோளனுஞ்செவ்வியோ
னாதிதன்னருளாலவுணர்க்கிறை
போதகன்முகநோக்கிப்பொருவிலா
வோதிமாண்பினிவையுரைக்கின்றனன்.

(இ-ள்.) குளிர்ச்சிவாய்ந்த உயர்ந்தமழைக்கோளனும் அழகியனானசுக்கிரன் கடவுளின் கிருபையால் அசுராதிபனான கயமுகாசுரனுடைய முகத்தைப்பார்த்து ஒப்பற்ற புத்திசாதுரியத்தாலிவைகளைக் கூறுகின்றனன்.—எ-று. (கூரு)

வேறு.

மீயுயர்தவத்தையாற்றாய்விமலனையுணராயொல்லார்
மாயமுந்திறனுஞ்சீரும்வன்மையுஞ்சிறிதுந்தேரா
யேயவிவ்வுடலநில்லாதென்பதுங்கருதாய்வாளா
போயினபன்னாளெண்ணீபுரிந்தனைபுந்தியில்லாய்.

(இ-ள்.) புத்தியில்லாத கயமுகனே! மிகவுமுயர்ந்ததவத்தினைச் செய்கின்றாயில்லை மலரகிதனான கடவுளையும் அறியாய் மாயமும் வெற்றியும் சீரும் வன்மையும் சற்றுமுணராய் பொருந்திய இந்தவுடலம் நில்லாதென்பதனையும் எண்ணிலாய்வாளா பலநாட்கள் சென்றன நீ யென்செய்தனை.—எ-று. (கூசு)

முப்பகைகடந்துமற்றைமுரட்பகைமுடித்திட்டைம்பான்
மெய்ப்பகைகடந்துநோற்றுவிழுத்தகுமாற்றல்பெற்றுத்
துப்பகைதொண்டைச்செவ்வாய்ச்சுரரொடுபுணரும்வானாட்
டப்பகைகடந்துதொல்சீரடைந்திலைபோலுமன்றே.

(இ-ள்.) காமவெகுளி மயக்கங்களான மூன்றுபகைகளையும் கடந்து அவையன்றியுள்ளவலிய பகையைமுடித்து ஐந்துவிதமான உடற்பகையைக்கடந்து தவஞ்செய்து பெருமிதமாக வுரைக்கத்தகுந்த வன்மையையடைந்து பவளத்தினைப் பழித்த தொண்டைக்கனிபோன்ற செவ்வியவாயினையுடைய தேவமகளிருடன் புணருகின்ற தேவர்களையுடைய சுவர்க்கத்தினந்தப் பகையைக்கடந்து பழயசெல்வத்தினைப் பெற்றாயில்லை.—எ-று. (கூஎ)

இம்மையிலின்பந்தன்னைப்புகழொடுமிழத்திமேலை
யம்மையிலின்பந்தானுமகன்றனைபோனுமன்றே
யும்மையுமின்பமென்பதுற்றிலையென்னிற்பின்னை
யெம்மையிலின்பந்துய்க்கவிசைந்துநீயிருக்கின்றாயால்.

(இ-ள்.) இம்மையிலனுபவிக்க வேண்டியசுகத்தைப் புகழுடனே இழக்கின்றாய்மறுமையிலுள்ள அந்தவுலகவின்பத்தையும் விடுத்தனை நடுவணதான இக்காலத்தும் இன்பமென்பதனை அடைந்தாயில்லை ஆனால் எந்தச் சென்மத்தி லின்பமனுபவிக்கத்துணிந்து நீ இருக்கின்றனை.—எ-று. (ருஅ)

ஆக்கமுந்திறலுஞ்சீருமாயுவுநலனுமேலா
மூக்கமும்வீடுமெல்லாந்தவத்தினதாற்றமன்றோ
நோக்குறுமிந்நாள்காறுநோற்கலாதினையவெல்லாம்
போக்குவதென்னைகொல்லோபுகலுதியிகலும்வேலோய்.

(இ-ள்.) செல்வமும் வெற்றியும் சிறப்பும் ஆயுளும் நன்மையும் மேலானஊக்கமும் மோட்சமுமாகிய அனைத்தும் தவத்தின்பற்றுக் கோடாலுண்டாவதன்றோ காணப்பட்ட இத்தினம்வரைக்குந் தவம்புரியாது இவ்வனைத்தினையும் விடுத்ததென்னை? பகைவரோமோறு கொள்வேலினையுடையாய் உரைப்பாயாக.—எ-று. (ருக)

ஆற்றிடுதருமம்விஞ்சையரும்பெறன்மகவுசீர்த்தி
யேற்றிடுகொற்றமாற்றலிருநிதிபெருமையின்ப
நோற்றிடுவிரதஞ்சீலநுவலரும்போதம்யாவுங்
கூற்றுவன்கூவுஞான்றுகுறித்திடிற்கூடுமோதான்.

(இ-ள்.) செய்யப்படுந்தருமமும் வித்தையும் பெறுதற்கரிய புத்திரப்பேறும் கீர்த்தியும்பொருந்திய வெற்றியும் வன்மையும் மிக்கசெல்வமும் பெருமையும் சுகமும் நோற்கப்படும் விரதமும் சீலமும் உரைத்தற்கரிய உணர்வும் முதலிய அனைத்தும் எமனழைக்குங் காலத்துக்கருதினுற் கைகூடுமோ கூடாதென்று குறிப்பு.—எ-று. (சுo)

காலனாகியதோர்சேர்ப்பன்காலமாம்வலையைவீசி
ஞாலமாந்தடத்தில்வைகுநல்லுயிர்மீன்கள்வாரி
யேலவேயீர்த்துநின்றானிறுதியாங்கரைசேர்காலை
மேலவன்கையுட்பட்டுமெலிவொடுவீடுமன்றே.

(இ-ள்.) காலனென்னும் நெய்தனிலத்தலைவனான செம்படவன் காலமாகியவலையைவீசி உலகமென்னுந் தடாகத்திற் பொருந்திய நல்லஉயிர்களாகிய மீன்களைவாரிப்பொருந்துமாறிழுத்து நிற்பவன் மரணமென்னுங்கரையையடையுங் காலத்துப் பின்னர் அவன்கையிலகப்பட்டு வாட்டத்துடன் அழியும்.—எ-று. (சுக)

சீரியதுடலமென்கைதெரிந்திலைநிலைத்தல்செல்லா
தாருயிர்வகையுமென்பதறிந்திலையாயுட்பன்னாட்
சாருதல்வேண்டுமென்னுந்தகைமையுநினைத்தியல்லை
பாருயிரிறப்பநுங்கியிருப்பதோபரிசுமாதோ.

(இ-ள்.) உடலஞ்சிறந்ததென்பதையுணர்ந்தாயில்லை அரியவுயிர் வருக்கங்களும் ஒரேஉடலில் நிலைத்து நிற்காதென்பதனை அறிந்தாயில்லை பலநாள் இருக்கத்தக்க ஆயுள்வேண்டுமென்னுந் தன்மையைநினைத்தாயில்லை, உலகிலுள்ள உயிர்களை மிகவுந்தின்று இருப்பதோ முறைமை—எ-று. (சுஉ)

மந்திரமில்லைமாயமில்லையோர்வரமுமில்லை
தந்திரமில்லைமேலோர்தருகின்றபடையொன்றில்லை

யந்தரவமரரெல்லாமனிகமாய்ச்சூழநின்மே
லிந்திரன்பொருவான்செல்லின்யாதுநீசெய்திமாதோ.

(இ-ள்.) நின்னிடத்தின் மந்திரமுமில்லை மாயமுமில்லை எவரிடத்தும் ஒருவரமும் பெற்றாயில்லை தந்திரமுமறிந்தாயில்லை ஒருவராற் கொடுக்கப்பட்ட (சிறந்த) ஆயுதமுமொன்றுமில்லை வானாட்டிலுள்ள தேவரனைவருஞ் சேனைகளாகச்சூழாநிற்ப இந்திரன் தனது பகைவனாக நின்மீது போர்புரிவான் வருவானானால் நீ என்னை செய்யப்போகின்றனை.—எ-று. (கூஙு)

சிறியதோர்பயனைத்தூக்கித்தீயவர்செய்யுஞ்சூழ்ச்சி
யறிகிலவாகிவீழ்வுற்றகப்படுமாவுமீனும்
பறவையுமென்னவொல்லார்புணர்ப்பினிற்படுதியின்னே
விறலொடுவலியுஞ்சீருமேன்மையுமின்றியுற்றாய்.

(இ-ள்) வெற்றியும் வன்மையும் செல்வமும் மேன்மையுமின்றி வாளாவிருக்கும் கயமுகனே! சிறிதாயுள்ள பயனைக்கருதிக் கொடியோர் செய்யும் வஞ்சனையையறியாதனவாய் விரும்பிச்சென்று வலையுளுந் தூண்டிலிலும் கண்ணியிலும் அகப்பட்டுக் கொள்ளுகின்ற விலங்கினையும் மீனினையும் பறவையையும்போலப் பகைவர் வஞ்சனைச்செயலுள் இன்றே அகப்பட்டுக்கொள்வாய்.—எ-று (கூச)

ஆதலினெவர்க்குமேலாமரன்றனையுன்னியாற்ற
மாதவம்புரிதியன்னான்வரம்பலகேட்டவெல்லாந்
தீதறவுதவும்பின்னர்த்தேவருன்னேவல்செய்வார்
மேதகுமுலகுக்கெல்லாம்வேந்தனாயிருத்தியென்றான்.

(இ-ள்) அதனால் நீ எவர்க்கு மேலோனாகிய சிவபெருமானை நினைத்து மிகவும் பெரிய தவத்தினைச் செய்வாயாக அச்சிவபெருமான் நீ பலவாகக்கேட்கும் வரமனைத்துங் குற்றமற அருள்வார் பின்னர் உனக்குத் தேவர்கள் ஊழியஞ் செய்வார்கள் உயர்ந்த உலகமனைத்திற்கும் நீ அரசனாக விருப்பாய் என்று கூறினான்.—எ-று (கூரு)

சொன்னவைகேட்டலோடுந்தொழுதகையவுணர்தோன்றன்
முன்னிவையாவரேனுமொழிந்தனரில்லையானு
மின்னவைபுரிதறேற்றேனினித்தவமியற்றுகின்றே
னன்னவைபுரியுந்தன்மையருள்செய்யவேண்டுமென்றான்.

(இ-ள்.) சுக்கிரனுரைத்தவைகளைக் கேட்டவுடனே தொழப்பெற்ற கையினையுடைய அசுரர்தலைவனான கயமுகன் (சுக்கிரனைப்பார்த்து) முன்னரிவைகளை யெவருமுரைத்தாரிலர் நானும் இவைகளைச்செய்ய வறியேன் இனித்தவஞ் செய்கின்றேன். அத்தவங்களைச்செய்யுமார்க்கத்தினை எனக்கு நீ உபதேசிக்கவேண்டுமென்று கூறினான்.

வேறு.

ஐவினைசெய்பொறிகளெலாமரங்கமெனக்கறங்குமறிவடங்குகின்ற
மெய்வினையமந்திரமுந்தந்திரமுமங்கமுறுவிதியினோடு
கைவினையுமுட்கோளும்புறங்காப்பும்விரதஞ்செய்கடனுமேனைச்
செய்வினையுமுணர்வித்துமேருவின்பானற்றவம்புரியச்செல்லுகென்றான்.

(இ-ள்.) அங்ஙனங் கேட்ட கயமுகாசுரனுக்குச் சுக்கிரன் காணல் கேட்டல் முதலிய ஐவகைத்தொழில்களைச்செய்கின்ற பொறிகளனைத்தையும் இடமாகக்கொண்டு சுழலுகின்ற அறிவடங்குகின்ற வுண்மைச்செயலான மந்திரமுந் தந்திரமு மங்கமும் பொருந்திய விதியுடனே முத்திரைகளும் அந்தரங்க தியானமும் கவசமும் விரதானுட்

டான கடன்களும் மற்றைய செய்வினைகளும் தெளிவித்து மேருச்சாரலிற் தவஞ்செய்யப்போவாயாக வென்று கூறினான் —எ-று. (சுஎ)

ஏவுதலுங்கயமுகத்தோனவுணரொடும்புகரடியினிறைஞ்சியங்கண்
மேவுவன்யானெனவுரையாவிடைகொண்டுநோற்றிடுவான்விரைவினேகக்
காவதமங்கோரிரண்டுகடப்பளவுந்தானின்றுகண்ணினோக்கிப்
போவனினியெனமகிழ்ந்துமீண்டுபோயவுணர்பதிபுகுந்தானன்றே.

(இ-ள்.) அனுப்புதலுங் கயமுகன் அசுரர்களுடன் சுக்கிரனுடைய பாதத்தில் வணங்கி அவ்விடத்துச் செல்கின்றேன் யானென்று கூறி விடைபெற்றுத் தவஞ்செய்தற்கு விரைவாகச்செல்ல அவன் இருகாதங்கள் சடந்து செல்லுங்காறுந் தான் நின்று கண்ணாற்பார்த்து இனிப்போவானெனச் சந்தோஷித்துத் திரும்பிச்சென்று அசுரர் நகரத்தை யடைந்தனன்.—எ று. (சுஅ)

அக்காலத்தெதிர்வந்தவிறைவனுடன்புகுந்தவெலாமறையவனு
னிக்காலந்தானன்றோவருள்செய்தீரெனவியம்பியேத்தியன்பான்
முக்கால்வந்தனைசெய்துவிடுத்திடப்போய்த்தன்பதத்தின்முன்னமேபோன்
மிக்கானும்வீற்றிருந்தான்கடவுளரும்புரந்தரனும்விழுமங்கொள்ள.

(இ-ள்.) அப்பொழுது எதிரேவந்த அசுர மன்னவனிடத்தில் நடந்தனவனைத்து முரைக்க விக்காலத்திலன்றோ வருள்செய்தனிரென்று கூறித் துதித்து அன்பினால் மும்முறைவணங்கி அவன் விடுப்பத் தனது பதவியில் முன்போலத் தேவர்களும் தேவராசனுந் துன்பமெய்தச்சென்று உயர்ந்த சுக்கிரனும் இருந்தனன்.—எ-று. (சுகூ)

மாண்டகுமவ்வலிபகலன்மருப்பதனையெதிர்ந்துதொல்லைவைப்பினீங்கு
மீண்டியதிண்காழிரும்பினெஃகமுதல்வியன்படைகளியற்கையென்னக்
காண்டகையதங்குரவனைபுகருனையதனைக்கருத்துட்சேர்த்தி
யாண்டகைசேரிபமுகத்தோனவுணருடன்றவம்புரிவானகலுற்றான்

(இ-ள்.) மாட்சிமைவாய்ந்த வந்த வன்மையினையுடைய மார்பினனான வக்கயமுகனுடைய தந்தங்களையடைந்து விரைந்து முன்னிருந்த விடத்துக்கு வேகத்தாற் திரும்பிச்செல்லுகின்ற நெருங்கிய திண்ணரிய வொளிவாய்ந்த இரும்பினாலான வேல் முதலிய பெரிய வாயுதங்களின் தன்மையைப்போலக் காணத்தக்க தனது ஆசாரியனான சுக்கிரனுரையை மனத்திற் சேர்த்து ஆண்டன்மைவாய்ந்த வக்கயமுகன் அசுரர்களுடன் தவஞ்செய்தற்குச் சென்றான்.—எ று.

இவன் செல்கை இவன் கோட்டிற்பட்டுத் திரும்பும் எஃக முதலியவற்றின் மீட்சியை யொத்தது. (எ0)

அங்கண்முகில்படிந்தறியாமேருவினுக்கொருசார்போயவுணர்வேந்தன்
றுங்கமிகுகருவிகளாய்வேண்டுவனகொணர்வித்துத்தூநீராடிச்
செங்கதிரோன்றனைநோக்கியாற்றுகடன்முடித்துமுன்னைத்தீர்வுநேர்ந்து
தங்கள்குரவன்பணித்தபெற்றியினான்மிக்கதவந்தனைச்செய்வான்.

(இ-ள்.) அசுரர் தலைவனான கயமுகன் அவ்விடத்தில் மேகம்படிந்தறியாத மேருவினொரு புறத்திற்சென்று தூய்மை மிகுந்த உபகரணங்களாக வேண்டுமவைகளைக் கொண்டுவரச்செய்து நன்னீரின் முழுகிச் செவ்விய கிரணங்களையுடைய சூரியனைப்பார்த்துச் செய்யவேண்டுங் கடன்களைச் செய்து முடித்து முன்னை யேற்பாட்டின் வண்ணம் சங்கற்பஞ்செய்து தங்கள் ஆசிரியன் இட்ட கட்டளையின் முறைப்படி சிறந்த தவத்தினைச் செய்தனன்.—எ-று. (எக)

பொறியிலுறுபுலனவித்துநவைநீக்கிக்கரணவியல்போக்கியாசான்
குறிவழியேதலைநின் றுமூலவெழுத்துடனைந்துங்கொளுவியெண்ணி
யறிவுதனிலறிவாகியுயிர்க்குயிராய்ப்பரம்பொருளாயமலமாகிச்
செறிதருகண்ணுதற்கடவுளடிபோற்றியவனுருவைச்சிந்தைசெய்தான்.

(இ-ள்.) ஐம்பொறிகளை வாயிலாகவுடைய ஐம்புலன்களை அடக்கிக் குற்றமொழித்துக் கரணத்தின் தன்மையை நீக்கிக் குருவுபதேசித்த குறிப்பையே குறிப்பாகக்கொண்டு பிரணவத்துடன் பஞ்சாட்சரங்களைக்கலந்து செபித்து அறிவுக்கறிவா யுயிருக்குயிராய்ப் பரம்பரமா யமலமாகி யெங்கு நிறைந்துள்ள கண்ணுதற்கடவுளின் திருவடிகளைத்துதித்து அச்சிவபெருமான் திருவுருவினைச் சிந்தித்தனன்.—எ-று.

இறைவனைத் தியானிக்கவேண்டுந் திறத்தினை இங்கு ஆசிரியர் அழகுற விளக்கியிருத்தல் காண்க. (எஉ)

வேறு.

ஆயிரமாண்டுபுல்லடகுமேயினு
னுயிரமாண்டுசில்புனலருந்தினு
னுயிரமாண்டளவனிலநுங்கினான்
மாயிரும்புவியுயிர்மடுக்கும்வாயினான்.

(இ-ள்.) மிகப்பெரிய உலகிலுள்ள உயிர்களை எடுத்து விழுங்கும் வாயினையுடைய கயமுகன் ஆயிரம் வருடங்கள் சிறிதிலைகளைத் தின்றிருந்தனன். ஆயிரம் வருடங்கள் சிறிது நீரருந்தி இருந்தனன். ஆயிரம் வருடகாலம் காற்றைப் புசித்திருந்தனன்.

காலமூவாயிரங்கழிந்தபின்முறை
மாலுறுமருத்தெனுமாவைத்தூண்டியே
மூலவெங்கனலினைமுடுக்கிமூட்டுறு
மேலுறுமமிர்தினைமிசைதன்மேயினான்.

(இ-ள்.) இங்ஙனம்மூவாயிரவருட காலங்கள் கழிந்த பின்னர் மயக்கம்பொருந்தியபிராணவாயுவையோட்டி வெவ்விய மூலாக்கினியை விரைந்தெழுப்பிப் பிரமநாடியின் முட்டச்செய்து அங்கு மேலே பொருந்தின அமிர்தத்தினை உண்ணத்தொடங்கினான்.—எ-று.

பிரமநாடி யென்பது சிரமுடிவிலுள்ளது. (எச)

கண்டனரதுசுரர்கவலுஞ்சிந்தையர்
திண்டிறலவுணனிச்செய்கைமுற்றுமே
லண்டமும்புவனமுமலைக்குமேயெனக்
கொண்டனர்தம்பதியறியக்கூறினார்.

(இ-ள்.) அவனவ்வாறு தவஞ்செய்வதனைத் தேவர்கள் பார்த்துக் கவற்சிகொண்ட மனமுடையராகித் திண்ணிய திறலாளனான இவ்வசுரனுக் கிந்தச் செயல் முடிவுறுமாயின் அண்டத்தையும் புவனங்களையும் வருத்துவானென்று கருதி யவன்செயலனைத்தினையுந் தமதரசனான விந்திரனறியக் கூறினார்கள்.—எ-று. (எரு)

கூறியசெயலினைத்தேர்ந்துகொற்றவ
னூறியவெகுட்சியனயர்ந்துசோர்வுறு
வீறியல்வாய்மையும்விறலுமாண்மையு
மாறியவோவெனுமறுக்கமெய்தினான்.

(இ-ள்.) தேவருரைத்த செயலை யுணர்ந்த தேவராசன் கோபமற்றவனாய் அயர்ந்து சோர்ந்து அக்கயமுகனால் இறுமாப்பொடு பொருந்தின உண்மையும் வெற்றியும் ஆண்மையுநீங்கியவோவென்று அச்சமுற்றனன்.—எ-று. (எசு)

புலர்ந்தனன்னிரங்கினன்பொருமலெய்தினா
னலந்தனனுயிர்த்தனனச்சங்கொண்டனா
னுலந்தனன்போன்றனனொடுங்கித்தன்னுளங்
குலைந்தனன்வன்செயல்கூறற்பாலதோ.

(இ-ள்.) புலர்ந்து இரங்கி வாட்டமுற்று அலந்து உயிர்த்து அச்சங்கொண்டு இறந்தவனை யொத்தவனுய் யொடுங்கித் தன்னுள்ளங் குலைந்தனன் இங்ஙனம் அவ்விந்திரன் அடைந்த செயல் உரைக்கத்தக்கதோ அன்றே.—எ-று. (எஎ)

ஈசனையன்றுகாறெதிரக்கணடிலன்
காய்சினமகன்றிடுகயமுகத்தினன்
றேசிகனருளினாற்றீயின்கண்ணுறீஇ
மாசறுதவஞ்செயமனத்துமுன்னினான்.

(இ-ள்.) அந்நாள்வரைக்குஞ் சிவபெருமானை எதிர்ப்படக்காணாதவனும் மிகுந்த கோபத்தினை விடுத்தவனுமான கயமுகன் குருவினருளினால் நெருப்பின்கண் நின்று குற்றமற்ற தவஞ்செய்தற்கு மனத்தினினைத்தனன்.—எ-று.

இங்ஙனஞ்செய்த தவத்துக்கிரங்கி ஈசன்வராவிடிற் றீயினின்று தவஞ்செய்யென்று சுக்கிரனுபதேசித்தனனென்று இச்செயல் விளக்குதல் காண்க. (எஅ)

சுற்றுநநாற்கனல்சூழநள்ளிடை
மற்றொருபேரழல்வதியவன்னதிற்
கொற்றவெங்கயமுகக்குரிசிறாணிறீஇ
நற்றவமியற்றினனாதற்போற்றியே.

(இ-ள்.) சுற்றிலு நாலிடங்களில் அக்கினி பொருந்த நடுவிடத்தில் மற்றொரு நெருப்புத்தங்க வந்நெருப்பின் நடுவில் வெற்றியினையுடைய வெவ்விய கயமுகாசுரன் காலினையூன்றிச் சிவபெருமானை நினைத்து நல்ல தவஞ்செய்தனன்.—எ-று. (எக)

மேயினகொழும்புகைமிசைக்கொண்டாலெனத்
தீயழனடுவுறச்செந்நின்றையிரண்
டாயிரமாண்டையினவதியாருயிர்
நோயுறவிபமுகனோற்றலோம்பினான்.

(இ-ள்.) தீயிற்பொருந்திய கொழுவிய புகையானது மேலெழுந்து சென்றாற் போல சுடுகின்ற வத்தீயின் நடுவிற் செவ்வனே நின்று பதினாயிர வருட காலம் வரைக்கும் அரிய உயிர் வருந்தக் கயமுகன் தவத்தைச் செய்தனன்.—எ-று.

தவம் அருமையாகச் செய்யப்படுவதென்பதைக் குறிப்பார் " ஓம்பினான் " என்றார். (அ0)

புழைக்கையின்முகத்தினன்புனிதமார்தரு
தழற்சிகைமீக்கொளத்தனதுதாணிறீஇ
விழுத்தகநோற்றலைவியந்துநோக்குறீஇ
யழற்பெருங்கடவுளுமருள்செய்தானரோ.

(இ-ள்.) துவாரம் பொருந்திய துதிக்கையினையுடைய கயமுகன் பற்றி யெரியும் நின்மலமான அக்கினியின்மீது தனது பாதத்தினை வைத்துப் பெருமிதம் பொருந்தத் தவஞ்செய்தலைப்புகழ்ந்து பார்த்துப் பெரிய தழற்கடவுளு மவனிடத்துக் கருணைவைத்தனன்.—எ-று. (அக)

அன்னதோரமைதியிலவுணன்மாசுடல்
வன்னியிலுறுத்துகாரிரும்பின்மாண்டது

பொன்னினுமணியினும்பொலிந்துபூத்தது
மின்னிவர்வச்சிரமிடனுஞ்சான்றதால்.

(இ-ள்.) அப்பொழுது கயமுகனுடைய மாசு தங்கிய உடலம் தீயிலிட்ட கரிய இரும்பைப்போல மாட்சிமையுற்றுப் பொன்னினும் மணியினும் பிரகாசித்துத் தோன்றியது. ஒளிவிடுகின்ற வச்சிரத்தின் வன்மையும் மிகுதிபாகவுண்டாகியது.—எ-று.

வன்மையுடையவைகளுள் முதன்மையானது வச்சிரமாதலின் வச்சிரம்போன்ற வன்மையென்றனர். (அஉ)

ஏற்றநந்தொன்மரபியல்வழாமலே
போற்றியவருமிவன்பொறையும்பூண்டகை
நோற்றிடுதிட்பமுநுவலற்பாலவோ
தூற்றுதுமலரெனவவுணர்தோன்றினர்.

(இ-ள்.) தகுந்த நமது பழயமரபின் முறைதவறாமற் றுதிக்கப்பிறந்த இவனது சாந்த குணமும் கொள்ளப்பெற்ற தகுதியுடன் தவஞ்செய்கின்ற திண்மையும் உரைக்கத்தக்கனவோ? நாம் அவன்மீது மலர்மாரி பெய்துமென அசுரர்கள் வந்தார்கள்.

தீயிற்காலூன்றுங்காற்சுடுகின்றதென விரைந்து காலெடாமலும் பட்டினியாற் பசிவருத்துகின்றதென விரைந்துண்டி விழையாமலும் செய்யுஞ் செயல்களிற் சாந்தனை இருத்தலே இவனிடமுள்ள சாந்தமென்றறிக. (அரு)

வீசினர்நறுமலர்வியப்பினன்மொழி
பேசினர்புகழ்ந்தனர்பிறங்குமார்வத்தா
லாசிகள்புகன்றனரமரர்தானையை
யேசினரவர்தமதின்னலேக்குவார்.

(இ-ள்.) மணம்பொருந்திய மலர்களை இறைத்தார்கள் அதிசயத்துடன் நல்ல வசனங்களைக் கூறினார்கள். புகழ்ந்தார்கள் விளங்காநின்ற விருப்பத்தால் ஆசிமொழி கூறினார்கள். இவையன்றித் தேவசைனியங்களை இகழ்ந்து அத்தேவருக்குத் துன்பம் வருங்காலத்தை எதிர்பார்த்திருந்தனர்.—எ-று. (அச)

தளப்பெரும்பங்கயத்தவிசின்மீமிசை
யளப்பருங்குணத்துடனமர்ந்தநாயக
னுளப்படநோக்கினனுவந்துபூமுடி
துளக்கினனமரர்கடுணுக்கமெய்தினர்

(இ-ள்.) பெரிய விதழ்களையுடைய தாமரைமலரான பீடத்தின்மீது அளத்தற்கரிய குணத்துடன் எழுந்தருளி இருந்ததலைவனான சிவபெருமான் உள்ளிற்பொருந்தியிருந்தவண்ணமே இவைகளைப்பார்த்துத் தமதழகிய திருமுடியசைத்தனர் அக்காலத்தில் தேவர் நடுக்கமெய்தினார்கள்:—எ-று.

இதற்கு மற்றொருரை-அசுரர்கள் இங்ஙனஞ் செய்யுஞ்சமயத்திற் கயமுகன்தளமான பெரியகமலாசனத்தின்மீது அளவற்ற குணத்துடனெழுந்தருளி இவனதுதியானத்துக்கேற்க விளங்குமனைவர்க்குந் தலைவனான சுவாமியை இவன் உள்ளிற்பொருந்துமாறு தரிசித்து மகிழ்வுற்று அழகியதலையையசைத்தனன் அதுகண்டு தேவர்கள்நடுக்கமுற்றார்களென்பதே. (அகு)

இன்னணமருந்தவமியற்றுமெல்லையிற்
பொன்னவிர்சடைமுடிப்புனிதநாயக
னன்னதுநாடியேயவுணருக்கிறை
முன்னுறவந்தனன்மூரியேற்றின்மேல்.

(இ-ள்.) இவ்வாறிவன் அரிய தவஞ்செய்யுங் காலத்திற் பொன்போலும் விளங்குகின்ற சடைமுடியினையுடைய நின்மலரான சிவபெருமான் அவனதச்செயலினை ஆராய்ந்து அவ்வசுராதிபனெதிரே மூரியினையுடைய இடபவாகனத்தில் எழுந்தருளினார்.—எ-று.

மூரி-எருதின் முதுகிற் காணப்படுமொருவகை ஊன்முடிச்சு, இதனைத்திமில் என்ப. (அசு)

வேறு.

வந்துதோன்றலுமற்றதுநோக்கியத்
தந்திமாமுகத்தானவனேன்பொரீஇச்
சிந்தையன்பொடுசென்னியிற்கைதொழு
தெந்தைதன்னையிறைஞ்சிநின்றேத்தினன்.

(இ-ள்.) எதிரில்வந்து நின்றவுடனே அதனைக்கண்டு கயமுகாசுரன் தவஞ்செய்வதை விடுத்து மனத்தின்கண் அன்புடன் தலையிற்குவித்த கையினாற்றொழுது எந்தையான சிவபெருமானை வணங்கிநின்று துதித்தனன்.—எ-று. (அஎ)

போற்றுகின்றழிப்புங்கவனின்றுகா
ருற்றுநோன்பிலயர்ந்தனைநீயினிப்
பேற்றைவேண்டுவபேசினைகொள்கெனத்
தேற்றமிக்கவன்செப்புதன்மேயினன்.

(இ-ள்.) அவன் துதிசெய்யும் பொழுது சிவபெருமான் அவனைப்பார்த்து நீ இன்றுவரைக்குஞ் செய்த நோன்பினாலிளைத்தனை இனிப்பெற்றுக்கொள்ள வேண்டியவைகளை உரைத்துப் பெற்றுக்கொள்ளுவாயாக என்றருளிச்செய்தவுடனே தேறுதலில் மிகுந்த கயமுகன் சொல்லத்தொடங்கினன்—எ-று. (அஅ)

வேறு.

மாலயனிந்திரன்முதல்வரம்பிலோர்
மேலுறுதகையினர்வெய்யபோரிடை
யேலுவரென்னினுமெனக்குவென்னிட
வாலமர்கடவுணீயருளல்வேண்டுமால்.

(இ-ள்.) கல்லால் நிழலிலமருங்கடவுளே அடியேனுடன் மாலும் அயனும் இந்திரனும் முதலிய அளவற்ற மேன்மை வாய்ந்த தகுதியினையுடையார் கொடிய போரிலெதிர்ப் பாராயினும் அவர்கள் எனக்கு முதுகிடும் வண்ணம் தேவரீர் அருள் புரிதல் வேண்டும்.—எ-று. (அகூ)

எற்றுவவெறிகுவவீர்வவெய்குவ
குற்றுவமுதலியகுழுக்கொள்வான்படை
முற்றுறவரினும்யான்முடிவுறுவகை
யற்றமில்பெருமிடலளித்தல்வேண்டுமால்.

(இ-ள்.) எற்றுவனவும் எறிவனவும் ஈர்வனவும் எய்குவனவும் குற்றுவனவும் முதலிய கூட்டமான உயர்ந்தபடைகள் முற்றிலும் வந்தாலும் அவைகளால் நான் இறவாவண்ணம் அழியாத பெரியவன்மையை யளித்தல்வேண்டும்.—எ-று. (கூ0)

மிக்கதோரமரரால்வியப்பின்மானுட
மக்களாலவுணரான்மற்றையோர்களாற்
றெக்குறுவிலங்கினாற்றுஞ்சிடாவகை
யிக்கணந்தமியனேற்கீதல்வேண்டுமால்.

(இ-ள்.) சிறந்த ஒப்பற்றதேவர்களாலும் ஆச்சரியப்படத்தக்க மானுடமக்களாலும் அவுணர்களாலும் மற்றையோர்களாலும் நெருங்கிய விலங்கினங்களாலும் இறவாவண்ணம் இப்பொழுதே அடியேனுக்கருள் செய்தல்வேண்டும்.—எ-று. (கக)

என்னிகராகிவந்தொருவனென்னொடு
முன்னுறவெஞ்சமர்முயலுமென்னினு
மன்னவன்படையினுமழிவுறுவகை
பொன்னவிர்வேணியாய்புரிதல்வேண்டுமால்.

(இ-ள்.) எனக்கொப்பானவனாக வொருவன்வந்து என்னுடன் கருதப்பெற்ற வெவ்வியபோரினைப் புரிவானாயினும் அவனதாயுதங்களாலும் யான்அழியாதவண்ணம் பொன்போலும் விளங்குகின்ற சடையினையுடையாய் அருள்செய்தல்வேண்டும்.(கஉ)

வரந்தருகடவுளர்முனிவர்மற்றையோ
ரிருந்திடுமுலகெலாமென்னதாணையிற்
றிரிந்திடுமாழியுங்கோலுஞ்சென்றிடப்
புரிந்திடுமரசியல்புரிதல்வேண்டுமால்.

(இ-ள்.) வரமளிக்குந்தேவர்களும் முனிவர்களும் பிறரும் இருக்கின்ற உலகமனைத்தும் எனதாணையாலுதவும் சக்கரமுஞ்செங்கோலுஞ் செல்லுமாறு செலுத்துகின்ற அரசியலை அளித்தல்வேண்டும்.—எ-று. (கங)

அன்றியுமொன்றுளதடியன்சூழ்ச்சியாற்
பொன்றினும்பிறவியுட்புகாமைவேண்டுமா
லென்றலுநோற்றவர்க்கேதுமீபவ
னன்றவைபெறுகெனநல்கியேகினான்.

(இ-ள்.) இவையன்றியும் இன்னமொன்றுள்ளது, அடியேன் பகைவர்வஞ்சனையாலிறந்து படுவேனாயின் மறுபிறவியுட் புகுதாமையை யருளுதல் வேண்டும் என்றவன் கூறியவுடனே தவஞ்செய்வார் கருதுவதனைத்து மளிக்குஞ் சிவபெருமான் அங்ஙனமே அவைகளைப் பெறுவாயாகவென அவன் கருதிக்கேட்ட வரமனைத்துமளித்து மறைந்தனர்.—எ-று. (கச)

பெற்றனன்படைகளும்பிறவுந்தன்புறஞ்
சுற்றிடுகிளையெலாந்தொடர்ந்துசூழ்தர
வுற்றனன்காண்டகுமும்பருங்குவன்
மற்றொருகயமுகனென்றுமாழ்கினார்.

(இ-ள்.) வரமும் ஆயுதமுதலியவும் பிறவும் பெற்றவனாய்த் தன்புறத்திற் சுற்றிவருங்கிளையெலாந் தொடர்ந்துசூழ்ந்து வரச்சென்றான் இவனைக்கண்ட தேவர்கள் இவனிவன் வேறொரு கயமுகனென்று கருதிவருந்தினார்கள்.—எ-று.

தவம்புரிதற்கு முன்னர் இரும்பெனவிலங்கிய விவனுடலம் இப்பொழுதுபொன்னென வொளிர்தலினான் மற்றொரு கயமுகனென மருண்டனர். (கரு)

காழுறுபெருந்தருநாறுகாசினி
வீழுறுதூரொடுமெலிந்துநின்றன
வூழுறுபருவம்வந்துற்றகாலையிற்
சூழுறுதொன்னிலையென்னத்தோன்றினான்.

(இ-ள்.) இக்கயமுகன் வைரம்பொருந்திய பேரான்மரமானது சிறுமுளையல்லது விழுது பூமியில்விழுந்து வேருடன் மெலிந்து நின்றவைமுறையாக நற்பருவமுண்

டான காலத்தில் அவைகளாற் சூழப்பெற்றுத் தழைந்துநிற்கும் பழயநிலைமையையொப்பக் காணப்பட்டான்.—எ-று.

மற்றொருனை, வைரவம்பொருந்திய பேராலின் நாறுகள் பூமியிற்றன்னிடத்திலுமிறங்கிச்சென்று சிறுவேர்களான விழுதுகளுடன் சிலகாலமெலிந்து நின்றவைதனக்கழிவு வந்து பொருந்துஞ் சமயத்தில் இவ்விழுதுமுதலிய பருத்துச்சூழ்ந்து பழயவண்ணத்தினு மதிகமாக விளங்குமாலின் நிலையைப்போல இவனுஞ் சேனைவன்மையாயுதவன்மையாதிகளுடன் தவத்தாற்பொலிந்து காணப்பட்டான்—எ-று. (கூசு)

அற்புதமெய்தினனலைகொள்வாரியிற்
புற்புதமாமெனப்புளகம்பூத்துளான்
சொற்பகர்வரியதோர்மதர்ப்பின்சும்மையான்
சிற்பரன்கருணையிற்றிளைத்தன்மேயினான்.

(இ-ள்.) அற்புதமெய்தி அலைவாய்ந்த கடலிற் பொருந்திய குமிழியைப்போல புளகமெய்தி உரைத்தற்கரிய வொப்பற்ற இறுமாப்பென்னுஞ் சுமையைத்தாங்கி என்றும் விளங்கும் மேலான சிவபெருமானுடைய அருளிலழுந்தலானன்—எ-று.

அன்னதுதேர்வுறீ இயவுணர்தொல்குல
மன்னனும்வெள்ளியுமதங்கமாமுகன்
றன்னைவந்தெய்தியேசயமுண்டாகெனப்
பன்னருமாசிகள்பகர்ந்துமேயினார்.

(இ-ள்.) அதனையுணர்ந்து அசுரரின் பழய குலாதிபனான அசுரேந்திரனெனும் அரசனும் சுக்கிரனும் சிறந்தகயமுகாசுரனை வந்தடைந்து ஜயவிஜயீபவ முதலிய உரைத்தற்கரிய பல ஆசிகளை உரைத்திருந்தனர்—எ-று. (கூஅ)

தண்ணளியில்லதோர்தந்திமாமுக
னண்ணலங்கடகளிற்றமரர்கோனையும்
விண்ணவர்பிறரையும்வென்றுமீண்டுபின்
மண்ணுலகதனிடைவல்லையெய்தினன்.

(இ-ள்.) கருணையற்ற கயமுகாசுரன் பெருமைவாய்ந்த மததாரையினையுடையஐராவதத்தினையுடைய இந்திரனையும் மற்றைத்தேவர்களையும் வென்று திரும்பிப்பின்னர்ப் பூவுலகத்தில் விரைந்துவந்தான்.—எ-று. (கூகூ)

வேறு.

புவனிதன்னிடைப்போந்துபின்
னவுணர்கம்மியவறிஞனை
நவனுமன்பொடுநோக்குறு
வுவகையாலிவையுரைசெய்வான்.

(இ-ள்) பூமியினிடத்துக்கு வந்து பின்னர் அசுரர்தச்சனான அறிஞனைஉரைக்கப்பெற்ற அன்புடன் பார்த்து மகிழ்ச்சியாலிவைகளைச் சொல்லுகின்றான்.—எ-று. ()

நாவலந்தருநண்ணுமித்
தீவின்மேதகுதென்றிசைப்
பூவிலோர்நகர்புரிதியான்
மேவவென்றுவிளம்பலோ.

(இ-ள்.) நாவன்மரங்கள் பொருந்திய விந்தத்தீவின் மேன்மைவாய்ந்ததென்பாகத்திலுள்ள பூமியில் யான்வாசஞ்செய்தற்கொரு நகரியை உண்டாக்குவாயாக என்றுகூறுதலும்.—எ-று. (க0க)

பூவின்மேல்வருபுங்கவத்
தேவுநாணுறுசெய்கையிற்
காவன்மாநகர்கண்டதிற்
கோவிலொன்றுகுயிற்றினன்.

(இ-ள்.) கமலமலரிற்பிறந்த உயர்வினையுடைய பிரமதேவனும் வெட்கத்தக்க வேலைத்திறத்திற் காவலினையுடைய சிறந்த நகரமுண்டாக்கி அதனிலிராசமாளிகை யொறுண்டாக்கினன்.—எ-று. (கoஉ)

வேறு.

வெங்கண்மேதகுவேழமுகத்தனைத்
தங்கடொல்பகைதாங்குவதாமெனச்
சிங்கமாற்றுந்திருமணிப்பீடமொன்
றங்கவன்வைகவாற்றினனவ்விடை.

(இ-ள்.) அவ்விடத்தில் அக்கயமுகனிருத்தற்கு வெவ்விய கண்களையுடைய யானைமுகத்தனைத் தங்கள் பழய பகையாளர் சுமந்து நின்றாற்போலச் சிங்கங்கள் சுமக்கும் அழகியமணிப் பீடமொன்றுண்டாக்கினன்.—எ-று. (கoந)

இனைத்தியாவுமிமைப்பினிற்கம்மிய
னினைப்பினிற்செய்நிலைமையைநோக்கியே
சினத்தினீங்கியசெய்தவத்தேசிகன்
மனத்தினூடுமகிழ்ச்சியின்மேயினன்.

(இ-ள்.) இவ்வனைத்தையும் இமைப்பொழுதினில் அசுரதச்சன் நினைவினாலுண்டாக்கிய நிலைமையைக்கண்டு கோபத்தினைவிடுத்த தவத்தினையுடைய அசுரகுரவனான சுக்கிரன் மனதின்கண் மகிழ்ச்சியுற்றனன்.—எ-று. (கoச)

காமர்தங்கியகாப்பியனந்நகர்
தூமதங்கெழுதோன்முகற்காதலான்
மாகதங்கபுரமெனமற்றொரு
நாமமங்கதற்கெய்திடநாட்டினன்.

(இ-ள்.) அழகுவாய்ந்த சுக்கிரன் அந்த நகரம் சிந்துகின்ற மதத்தோடு விளங்குகின்ற கயமுகாசுரனிருந்தரசுபுரிதற் காதலிற் சிறந்தமதங்கபுரமென அதற்கொரு பெயரிட்டனன்.—எ-று. (கoரு)

அந்தமாநகரைதெனக்கம்மியன்
சிந்தைநாடின்செய்திடுகாலையிற்
றந்திமாமுகத்தாளவன்கண்ணுற்றி
யந்தமில்லதொரார்வமொடேகினன்.

(இ-ள்.) அந்தச்சிறந்த நகரத்தை விரைவாக அசுரதச்சன்மனத்தினனினைத்துண்டாக்கிய காலத்து அதனைக் கயமுகவசுரன்கண்டு அதனுள் அளவற்ற மகிழ்ச்சியுடன் புகுந்தனன்.—எ-று. (கoசு)

காதமங்கொருபத்தெனக்கற்றவ
ரோதுகின்றவொழுக்கமுமொன்றெனும்
பாதியெல்லைப்பரப்பும்பெறுநகர்
வீதிநோக்கினன்விம்மிதமெய்தினன்.

(இ-ள்.) கற்றவர்பத்துக்காத நீளமென வோதுகின்ற நீட்சியும் ஐந்துகாத வளவான குறுக்ககலமும் பொருந்திய அந்நகரின் வீதிகளைப்பார்த்து ஆச்சரியமடைந்தனன்.—எ-று. (க0எ)

அரக்கர்தொல்லையவுணர்க்கரசொடு
தருக்குதானவர்தம்முடனெய்தியே
பெருக்கமுற்றதன்பின்னவரின்னவ
ரிருக்கநல்கினனிந்நகர்யாவையும்.

(இ-ள்.) கயமுகாசுரன் அரக்கர்களுடனும் பழய தங்கள் அசுரேந்திரனை அரசனுடனும் செருக்குவாய்ந்த தானவர்களுடனும் சென்று வங்கிசவிர்த்தியுள்ள தமதுசந்ததியாராகிய தம்பிமார்களும் இவர்களும் இருக்குமாறு பகிர்ந்து கொடுத்தனன் இந்த மதங்கபுரமனைத்தையும்.—எ-று. (க0அ)

அங்கண்மேவுமணிமணிக்கோயிலின்
மங்கலத்தொடுவல்லையினேகியே
சிங்கவேற்றின்சிரங்கெழுபீடமேல்
வெங்கைமாமுகன்வீற்றிருந்தானரோ.

(இ-ள்.) இன்னன மவரனைவருக்கு மிருப்பிடங் காட்டியபின்னர் அவ்விடத்திற்பொருந்திய அழகியமணிமயமான அரண்மனையில் மங்கலகரத்துடன் விரைந்து சென்று சிங்கவேற்றின் தலையில் விளங்கும் பீடத்தின்மீது கயமுகாசுரனிருந்தனன்.

போந்துபின்னர்ப்பொருவருந்தானவர்
வேந்தன்மாமகளானவிசித்திர
காந்திதன்னைக்கருதுநன்னாளினி
லேந்தன்முன்வரைந்தின்புறமேவினான்.

(இ-ள்.) பின்னர்ச் சென்று ஒப்பற்ற அசுராதிபனான அசுரேந்திரன்மகள் விசித்திர காந்தியென்பவளை எண்ணப்பெற்ற நன்னாளில் மணம்புரிந்து அக்கயமுகன் முதன்மனைவியாகக்கொண்டு இன்பமுண்டாமாறவளுடன் வாழ்ந்தான்—எ-று.(கக0)

விண்ணின்மாதர்கண்மேதகுதன்குல
நண்ணுமாதர்கணாகர்தம்மாதர்கள்
வண்ணவிஞ்சையர்மாதர்களாதியா
மெண்ணின்மாதரைப் பின்வரைந்தெய்தினான்.

(இ-ள்.) வானுலகமாதரான தேவப்பெண்கள் உயர்ச்சிவாய்ந்த தனது அசுரகுலப்பெண்கள் நாகப்பெண்கள் அழகிய வித்தியாதரப் பெண்கள் முதலிய அளவற்ற பெண்களைப் பின்னர் மணந்து மனைவியராகக்கொண்டனன்.—எ-று. (ககக)

பொன்னகர்க்கும்பொலங்கெழுபுட்பக
மன்னகர்க்குமவ்வானவரீண்டிய
வெந்நகர்க்குமிலாவளமெய்திய
வந்நகர்க்கணமர்ந்திடன்மேயினான்.

(இ-ள்.) சுவர்க்க நகரத்துக்கும் அழகுவிளங்குகின்ற புஷ்பகவிமான மன்னனை குபேரனுடைய நல்ல நகரத்துக்கும் அத்தேவர்கள் வாழுகின்ற மற்றெந்தநகருக்கும் இல்லாத வளப்பங்களைத் தன்னிடத்துடைய அம்மதங்கபுரத்திற் கயமுகாசுரன் வாழ்ந்தான்.—எ-று. (ககஉ)

சூழும்வானவர்தானவர்துன்னியே
தாழவேழுலகுந்தனதாணையால்
வாழிசேர்கொடுங்கோலொடுமன்னுபே
ராழிசெல்லவரசுசெய்தானவன்.

(இ-ள்.) அக்கயமுகன் தன்னைச்சூழ்ந்த தேவர்களும் அசுரர்களுநெருங்கி அடிவணங்கி ஏழுலகங்களையுந் தனதாணையால் வாழிவாய்ந்த கொடுங்கோலுடனே பொருந்தியபெரிய ஆக்கினைசக்கர மூலவ வரசுபுரிந்தனன்.—எ-று.

அவனது கொடுங்கோலினை அழிந்தொழிகவெனச் சபிப்பாரெவருமின்றி அனைவரும் வாழ்த்துதலையே சொண்டிருந்தமையின் வாழிசேர் கொடுங்கோலென்றனர்.

ஆவுஞ்சங்கமும்பயுமும்மலர்க்
காவுமாமணியுங்கமலாலயத்
தேவும்பின்வருந்தேவருமாதரு
மேவல்செய்யவினிதிருந்தானரோ.

(இ-ள்.) காமதேனுவும் சங்கநிதியும் பதுமநிதியும் மலர்களையுடைய கற்பகச் சோலையும் சிந்தாமணியும் கமலாலயத் தேவான பிரமனும்,அவனையன்றியுள்ள மற்றைத்தேவரும் தேவமாதரும் தனக்கு ஊழியஞ்செய்யச் செவ்வனே இருந்தனன்.—எ-று.

புந்திமிக்கபுகரும்புகருட
னந்தமற்றவவுணர்கண்மன்னனுந்
தந்தியின்முகத்தானவனுக்குநன்
மந்திரத்துணையர்யவண்வைகினர்.

(இ-ள்.) புத்தியின் மிகுந்த சுக்கிரனும் சுக்கிரனுடனழிவற்ற வசுரவரசனும் தங்கள் நகரங்களிற்சென்று வாழாமற் கயமுகவசுரனுக்கு நல்ல மந்திரத்துணைவர்களாகவம்மதங்கபுரத்திலிருந்தார்கள்.—எ-று. (கசு)

அன்னகாலையடுகரிமாமுக
மன்னன்முன்வரும்வாசவனாதியாந்
துன்னுவானவர்சூழலைநோக்கியே
யின்னதொன்றையியம்புதன்மேயினன்.

(இ-ள்.) இங்ஙனஞ் சுக்கிர வசுரேந்திராதியருடனிருந்து அவர்கள் சொற்படி அரசுபுரிந்த அப்பொழுது கொலையினையுடைய கயமுகாசுரன் ஒருதினம் தன்னெதிரில் வந்த இந்திரன் முதலிய நெருங்கிய தேவர் கூட்டத்தினைப்பார்த்து ஒன்று கூறினன்.

வைகலும்மிவண்வந்துழிநுங்கடம்
மொய்கொள்சென்னியின்மும்முறைதாக்கியே
கைகள்காதுறக்கால்கொடுதாழ்ந்தெழீஇச்
செய்கநம்பணிதேவர்கணீரென்றான்.

(இ-ள்.) தேவர்களே நீங்கள் நாள்தோறும் இவ்விடத்திற்கு வந்தவுடனே உங்களுடைய வன்மைவாய்ந்த தலையில் மூன்று தரம் குட்டிக் கைகள் காதுகளிற் பொருந்தக் காலால் வணங்கி யெழுந்து நமதூழியங்களைச் செய்வீர்களாக என்று கட்டளையிட்டான்.—எ-று. (கஎ)

அன்னதோதனுமண்டர்கள்யாவரு
மன்னன்முனுமறுப்பதையஞ்சியே
முன்னரேநின்றுமொய்ம்புடைத்தோன்முகன்
சொன்னதோர்புன்றொழின்முறையாற்றினர்.

(இ-ள்) அதனையுரைத்தவுடனே தேவரனைவரும் தேவராசனும் அச்செயலினைமறுப்பதற்கஞ்சி அவனெதிரினின்று வன்மையினையுடைய கயமுகாசுரன் சொல்லிய அவ்விழிதொழிலை முறையாகச்செய்தனர்.—எ-று. (கக அ)

எழிலியூர்தியுமேனையவானவர்
குழுவினோர்களுங்குஞ்சரமாமுகத்
தழிதகன்பணியல்கலுமாற்றியே
பழியெனும்பரவைப்படிந்தாரரோ.

(இ-ள்.) மேகவாகனனுன இந்திரனும் மற்றைத்தேவர் கூட்டத்தினரும் கயமுகாசுரனுன கெட்டசெயலினையுடையவனது ஊழியங்களைநாடோறுஞ்செய்து துன்பமென்னுங் கடலுள் மூழ்கினார்கள்.—எ-று. (கககூ)

கரிமுகத்துக்கயவனதேவலாற்
பருவரற்பழிமூழ்குறுபான்மையைச்
சுரர்களுக்கிறைதொல்லைவிரிஞ்சன்மா
லிருவருக்குமியம்பியிரங்கினன்.

(இ-ள்.) கயமுகாசுரனுகிய இழிஞனுடைய கட்டளையாற் துன்பத்தைத்தரும்பழியின் மூழ்கியதன்மையைத் தேவராசன் பழய பிரமன் மாயோனென்னுமிருவரிடமுமுரைத்து வருந்தினன்.—எ-று. (கஉ0)

இரங்குமெல்லையிலிந்திரமுற்றுளந்
தரங்கமெய்தித்தளர்ந்திடனீயெனு
வரங்கொள்பான்மையுணர்த்தியவனெடும்
புரங்களட்டவன்பொற்றையிற்போயினர்.

(இ-ள்.) பிரமனுமாலுமிந்திரன் வருந்தியகாலத்து இந்திரனே நீ உள்ள முழுதும் கேடுற்றுவருந்தற்க என்று அவனுக்குத் தைரியமுண்டாமாறு சிலகூறி அவனுடன் திருபுரதகனரான சிவபெருமானெழுந்தருளி இருக்கும் திருக்கைலை மலையையடைந்தனர்.—எ-று. (கஉக)

மாகர்யாவரும்வாசவனும்புடை
யாகவந்திடவம்புயன்மாலுமை
பாகன்மேயபனிவரைக்கோயிலு
ளேகினர்நந்தியெந்தைவிடுப்பவே.

(இ-ள்.) தேவரனைவரும் இந்திரனும் அருகாக வராநிற்பப் பிரமனுமாலும் உமாபங்கர் எழுந்தருளி இருக்கும் மூலத்தானத்துள் நந்திதேவரான எந்தையாரால் விடுக்கப்படச் சென்றனர்.—எ-று. (கஉஉ)

கண்டுநாதன்கழலிணைதாழ்ந்துநற்
றெண்டுகொணத்துதித்தலுமாங்கவ
னண்டரோடுமலமரலெய்தியே
வண்டுழாய்முடிவந்ததென்னென்னவே.

(இ-ள்.) கண்டு சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளையும்வணங்கிநல்லதொண்டுவிளங்குமாறு துதித்தலும் அச்சிவபெருமான் வளவிய துளவமணிந்த முடியினையுடையாய் தேவர்களுடன் கவற்சியெய்தி வந்ததென்ன காரணமென்றுவினவுதலும்—எ-று. (கஉ௩

வேறு.

ஆனதோர்பொழுதின் மாலரனை நோக்கியோர்
தானவன் கயமுகனென்னுந் தன்மையான்
வானவர்தமையெலாம்வருத்தினனவ
னூனமிறவம்புரிந்துடையவன்மையால்.

(இ-ள்.) அப்பொழுது திருமால் சிவபெருமானைப்பார்த்து ஒரு அசுரன் கயமுகனென்னுந் தன்மையினையுடையவன் கெடாத தவஞ்செய்துள்ள வன்மையாற் தேவரனைவரையும் துன்பப்படுத்தினன்.—எ-று. (கஉச)

வெங்கயமுகத்தினன் விறலைநீக்குற
லெங்களுக்கரியதாலெவர்க்குமாதியாம்
புங்கவநினக்கதுபொருளன்றுகையா
லங்கவனுயிர்தொலைத்தருளவேண்டுநீ.

(இ-ள்.) கொடிய கயமுகாசுரனுடைய வெற்றியை யொழித்தற்கு எங்களாலரியதேயாம் எவர்க்குமாதியான தேவரீருக்கது ஒரு பொருளன்றாதலின் அவனுயிரையொழித்து அடியோங்களுக்கு அருள்செய்தல்வேண்டும். (கஉரு)

என்றுரைசெய்தலுமீசன்யாமிவ
ணொன்றொருபுதல்வனையுதவித்தோன்முக
வன்றிறலவுணனைமாய்த்துமற்றவன்
வென்றிகொண்டேகுவான்விடுத்துமேலென்றான்.

(இ-ள்.) என்று கூறியவுடனே சிவபெருமான் நாமிவ்விடத்திலொரு மகனையளித்து யானைமுகத்தினையுடைய வலியதிறலாளனை அசுரனைக்கொன்று வெற்றிபெற்றுவரும் வண்ணம் பின்னர் விடுப்பேமென்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று. ()

வீடியபற்றுடைவிரதர்க்கென்னினு
நாடியவரியவனவின்றவாய்மையைச்
சூடினர்சென்னிமேற்றொழுதகையரா
யாடினர்பாடினரமரர்யாருமே.

(இ-ள்.) ஒழிந்த ஆசையினையுடைய விரதர்க்காயினும் தேடுதற்கரியவரான சிவபெருமானருளிச்செய்த சத்தியவசனத்தினைத் தலையிற்சூடினராய்த் தேவரனைவரும் ஆடிப்பாடினர்.—எ-று. (கஉஎ)

பாங்கரிலனையரைப்பரிந்துநோக்கியே
யீங்கினிநும்பதிக்கேகுவீரென
வாங்கவரெம்பிரானடியில்வீழ்ந்தனர்
வீங்குறுகாதலால்விடைகொண்டேகினர்.

(இ-ள்.) அருகில் நின்றவர்களை விருப்பமாகப்பார்த்து இனி நீங்கள் உங்கள் நகரங்களுக்குச் செல்லுங்களென்றருளிச் செய்தவுடனே யத்தேவரெம்பிரானடிமலர்களை வணங்கி மிகுந்த விருப்புடன் விடைபெற்றுச் சென்றனர்.—எ-று. (கஉஅ)

ஏகியவெல்லையிலெண்ணிலாவிதி
சேகரமிலைச்சியசென்னிவானவன்
பாகமுற்றுலகெலாம்பயந்தசுந்தரத்
தோகையைநோக்கியேயிதனைச்சொல்லுவான்.

எண்டகுபெருநசையெய்தியைம்புலன்
விண்டிடலின்றியேவிழியின்பாற்படக்
கண்டனள்கவுரியக்கடிகொண்மண்டபங்
கொண்டிடுமோவியக்கோலம்யாவுமே.

(இ-ள்) உமாதேவியார் எண்ணத்தக்க பேராசைகொண்டு ஐம்புலன்களும் விலகாமற் கண்ணினிடத்துப் பொருந்தப் பிரகாசம் வாய்ந்த வம்மண்டபங்கொண்டுள்ள சித்திரவுருவ மனைத்தினையும் சென்று சென்று பார்த்தனர்.—எ-று. (கசுக)

பாங்கரில்வருவதோர்பரமனாணையா
லாங்கதனடுவணிலாதியாகியே
யோங்கியதனியெழுத்தொன்றிரண்டதாய்த்
தூங்குகைம்மலைகளிற்றோன்றிற்றென்பவே.

(இ-ள்.) பக்கத்தில் வராநின்ற சிவபெருமானுடைய கட்டளையால் அச்சித்திரங்களின் நடுவில் முதலானதாக விளங்கிய ஏகாட்சரமான பிரணவமானது ஒன்றிரண்டாகித் தொங்காநின்ற துதிக்கையினையுடைய யானைகளைப்போல வுருக்காட்டிற்று.

அன்னவையுமையவள்காணவாங்கவை
முன்னுறுபுணர்ச்சியின்முயற்சிசெய்தலு
மென்னைகொலிதுவெனவெண்ணித்தன்னொடு
மன்னியமுதல்வனைவணங்கிக்கூறுவாள்

(இ-ள்.) அவ்வாறுருவான யானைகளை உமாதேவியார் கண்டருள உடனே அவைகள் எண்ணப்பட்ட புணர்ச்சியின் முயற்சியைச் செய்தலும் இது வென்னையென நினைத்துத் தம்மொடு பொருந்திய சிவபெருமானை வணங்கி யுரைக்கின்றனர்.—எ-று. (கசுரு)

மூலமாமெழுத்திவைமுயங்கிமால்கரிக்
கோலமாய்ப்புணர்வதென்கூறுகென்றலு
மேலவார்கருங்குழலிறைவிகேளென
வாலமார்களத்தினனருள்செய்கின்றனன்.

(இ-ள்.) பிரணவாட்சரங்களான இவைகள் ஒன்றோடொன்று பொருந்திப் பெரியயானையினுருவமாய்ப்புணர்வதென்னை அருளிச்செய்க என்றவுடனே விடம் பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமான் மயிர்ச்சார்தட்டிய நீண்ட கூந்தலினையுடைய இறைவியே கேட்பாயாகவென்றருளிச் செய்கின்றனர்—எ-று. (கசுசு)

வேறு.

முன்புநீகாண்டலின்மூலமாயுடையதோர்
மன்பெருந்தொல்பொறிமருவியீருருவுறீஇ
யன்பினாலானைபோற்புணருமாலாகையா
னின்பெருந்தகவினைநினைகிலாய்நீயுமே.

(இ-ள்.) முன்னர் நீயதனைப் பார்த்தமையால் அனைத்திற்கு முதலாகவுள்ள நிலைபெற்ற பிரணவாக்கரம் நின்னருள் பொருந்தி இரண்டுருவெய்தி விருப்பத்தினால் யானைபோற் புணராநின்றது. ஆதலால் நினது பெரிய தகைமையை நீயுநினைகின்றாயில்லை.—எ-று. (கசுஎ)

காட்சியாலிதுசெயுங்காரணம்பெற்றநின்
மாட்சிதான்யாமலான்மற்றியாருணர்குவா
ராட்சியாயுற்றதொல்லருமறைக்காயினுஞ்
சேட்செலாநிற்குநின்றிருவருட்செய்கையே.

(இ-ள்.) பார்த்தமாத்திரத்தானே யிதனைச்செய்த காரணத்தினை இயல்பாகப்பெற்றுள்ள நினது மாட்சிமையை நாமன்றி வேறியாரறிவார்கள். ஆட்சியாகப் பொருந்திய வரிய பழைய வேதத்திற்காயினும் நீண்டுநிற்கு நினது திருவருட்செய்கை. ()

என்னவேமுகமனுலெம்பிரானம்பிகை
தன்னுடேமொழியவத்தந்தியும்பிடியுமாய்த்
துன்னியேபுணர்வுறுந்தூயசெய்தொழில்விடா
முன்னமேபோன்றதான்முடிவிலாக்குடிலையே

(இ-ள்) என்றிவ்வாறு முகமனுக எம்பெருமான் அம்பிகையுடனுரைக்க முடிவிலாக்குடிலையான ஓங்காராட்சரம் அந்த ஆண் யானையும் பெண் யானையுமாக உருக்கொண்டு பொருந்திப்புணர்ந்த தூய்மையான தொழிலினை விடுத்து முன்னிருந்தது போல விருந்தது.—எ-று. (கசஎ)

அக்கணத்தாயிடையைங்கரத்தவனருண்
முக்கணுல்வாயினுல்மும்மதத்தாறுபாய்
மைக்கருங்களிறெனுமாமுகத்தவன்மதிச்
செக்கர்வார்சடையனேர்சிறுவன்வந்தருளினன்.

(இ-ள்.) அப்பொழு தவ்விடத்து ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகப்பெருமான் அருள்பொழியு மூன்றுநயனங்களையும் நான்றவாயினையும் மும்மதமான ஆறுபாய்கின்ற மைபோலுங் கரிய யானைமா முகத்தினையும் சந்திரகலையணிந்த செக்கர்போன்ற சடையினையுமுடைய ஒரு சிறுவனாக அவதரித்தருளினர்.—எ-று. (கசஅ)

ஒருமையாலுணருவோருணர்வினுக்குணர்வதாம்
பெருமையானெங்கணும்பிரிவரும்பெற்றியா
னருமையானேவருமடிதொழுதன்மையா
னிருமையாமீசனேயென்னநின்றருளுவான்.

(இ-ள்.) ஏகாக்கிர சித்தத்தாலெண்ணுவா ரெண்ணத்துளறிவுக் குளறிவாய் விளங்கும் பெருமையினையுடையவன் எங்கும் பிரியாது நிறைந்ததன்மையினையுடையவன் அருமையானவன் அனைவரு மடிவணங்குந் தகுதியான் இரண்டாவதீசனேயென்ன நிற்பவன்.—எ-று. (கசகூ)

மருளறப்புகலுநான்மறைகளிற்றிகழுமெய்ப்
பொருளெனப்படுமவன்புவனமற்றவர்கடம்
மிருளறுத்தவர்மனத்திடர்தவிர்த்தருளவோ
ரருளுருத்தனையெடுத்தவதரித்துளனவன்.

(இ-ள்.) மயக்கமொழி யப்பொருணிலை யிதுவெனக் கூறுஞ் சதுர்வேதங்களில் விளங்கும் உண்மைப்பொருளென உரைக்கப்படுபவன் புவனங்களிற் பொருந்தினவர்களின் அஞ்ஞானவிருளினை யொழித்து அவர் மனவிடரை நீக்கி யருளுதற்கொரு அருளுருக்கொண்டவதரித்தவனே யவன்.—எ-று. (கரு0)

வந்துமுன்னிருவர்தம்மலரடித்தலமிசைச்
சிந்தையார்வத்தொடுஞ்சென்னிதாழ்த்திடுதலுந்
தந்தையுந்தாயுமுன்றழுவிமார்புறவணைத்
தந்தமில்கருணைசெய்தருளினரவ்வழி.

(இ-ள்.) அங்ஙனம் வராநின்று அன்னையத்தர்களான இருவரின் சரண[illegible]ங்களின்மீது மனவிருப்பத்துடன் தலைசாய்த்து வணங்குதலும் [illegible] தந்தையுந்தாயுமான சிவபெருமானும் உமாதேவியாரும் முன்னர் [illegible] தழுவி மார்பிற் பொருந்த வணைத்து அளவற்ற கருணை காட்டினார்கள்,—எ-று. (கருக)

என்னரேயாயினும்யாவதொன்றெண்ணுதன்
முன்னரேயுனதுதாண்முடியுறப்பணிவரே
லன்னர்தஞ்சிந்தைபோலாக்குதியலதுனை
யுன்னலார்செய்கையையூறுசெய்திடுதிநீ.

(இ-ள்.) எத்தகையோராயினும் எதுவேனுமொரு காரியத்தினைச் செய்வானெண்ணுதற்கு முன்னர் உனது பாதங்களிற் றலைபட வணங்குவாராயின் அவரெண்ணம்போல வக்காரியத்தினை முட்டின்றி முடியச்செய்தி அங்ஙனமுன்னை நினையாதார் செய்கையை நீ இடையூறு செய்வாயாக.—எ-று. (கருஉ)

சேயநன்மலர்மிசைத்திசைமுகன்மான்முத
லாயபண்ணவர்தமக்காருயிர்த்தொகையினுக்
கேயபல்கணவருக்கெத்திறத்தோர்க்குநீ
நாயகம்புரிதியானல்லருட்டன்மையால்.

(இ-ள்.) செவ்விய நல்லதாமரை மலரிலிருக்கின்ற பிரமன் திருமால் முதலாயுள்ள தேவருக்கும் அரிய உயிர்த்தொகைக்கும்பொருந்திய பலவகைக்கணங்களுக்கும் மற்றுமுள்ள எத்தகையோருக்கு நீ தலைமைத் தன்மையை நல்லருளின் றன்மையால் நடாத்துவாயாக —எ-று. (கருரு)

கானுறுங்கரடவெங்கயமுகத்தவனெனுந்
தானவன்வன்மையைச்சாடியேதண்டுழாய்
வானவன்சிறுமையுமாற்றியேவருகென
வானையின்முகவனுக்கைம்முகனருள்செய்தான்.

(இ-ள்.) நாற்றம் பொருந்திய மதநீரினையுடைய வெவ்விய கயமுகத்தவனென்று கூறப்படுகின்ற அசுரனுடைய வன்மையை யழித்துத் தண்ணிய துளவமணிந்த திருமாலின் சிறுமையையுமொழித்து வருவாயாகவென யானைமுகனான விநாயகப்பெருமானுக்குச் சிவபெருமா னருள்செய்தனர்.—எ-று. (கருச)

மோனமேகுறியதாமுதலெழுத்தருளிய
ஞானமாமதலைபானண்ணவேபூதவெஞ்
சேனையாயினவருள்செய்துசிற்பரையொடு
மானைமாமுகனொடுமமலன்மீண்டருளினன்.

(இ-ள்.) மௌனமே குறியாகவுள்ள பிரணவாட்சரமளித்த ஞானப்பிள்ளையான விநாயகனுடன் செல்லுதற்கு வெவ்விய பூதசேனைகளாயுள்ளவைகளையுண்டாக்கிக் கொடுத்துச் சிற்பரையான உமாதேவியாருடனும் யானைமாமுகனுடனும் அமலரான சிவபெருமான் மீண்டெழுந்தருளினர்.—எ-று. (கருரு)

புங்கவர்க்கிறைவனும்புதல்வனைநோக்கிடா
நங்கடைத்தலையினிறுயகம்புரிகென
வங்கருத்தியொடிருத்தினனணிக்கோயிலுட்
சங்கரக்கடவுள்சுந்தரியொடுமருவினன்.

(இ-ள்.) தேவர்களுக்குத் தலைவனான மகனைப்பார்த்து நமது கடைத்தலைத்யினிற் தலைமைத் தன்மையைச் செய்தியென அவ்விடத்தில் விருப்பத்துடனிருத்தி அழகிய ஆலயத்து ளுயிர்களுக்கின்பத்தைச் செய்கின்ற சங்கரனான சிவபெருமான் சுந்தரியான உமாதேவியாருடன் சென்றிருந்தனர்.—எ-று. (கருசு)

தந்திமாமுகமுடைத்தனயனங்கணுகியே
முந்துபாரிடமெலாமொய்த்துமுன்சூழ்தர
நந்திவந்தனைசெயநான்முகன்முதலினோர்
வந்துவந்தடிதொழமகிழ்வொடேவைகினன்.

(இ-ள்.) சிறந்தயானை முகத்தினையுடைய புதல்வனான விநாயகனவ்விடத்துச்சென்று முந்தியபூதர்களனைவரும் நெருங்கிமுன்னே சூழ்ந்துநிற்க நந்திதேவர் வந்தனைபுரிய நான்முகன் முதலானவர்கள் வந்துவந்தடிதொழ மகிழ்வுடனெழுந்தருளி இருந்தனன்.—எ-று. (கருஎ)

அன்னதற்பின்னரேயாயிரம்பெயருடைப்
பொன்னுலாநேமியான்புனிதனைக்காணிய
மின்னுதண்சுடர்விடும்வெள்ளிமால்வரைமிசைத்
துன்னினனாலயச்சூழன்முன்னணுகினன்.

(இ-ள்.) அதற்குப்பின்னர் ஆயிரம்பெயருடையவனும் அழகுவாய்ந்த சக்கரப்படையினையுடையவனுமான திருமால் நின்மலரான சிவபெருமானைத் தரிசித்தற்கு ஒளிவீசுகின்ற தண்ணியசுடர் விடுகின்றபெரிய வெள்ளிமலையான கைலாயத்தின்மீது சென்று கோயிலின் முன்னிடத்தை யடைந்தனன்.—எ-று. (கருஅ)

அந்தியார்சடைமுடியண்ணறன்னருளினா
னந்திதேவுய்த்திடநங்கையோர்பங்கனா
மெந்தைபாலெய்தியேயிணைமலர்த்தாடொழாப்
புந்தியார்வத்தொடும்போற்றிசெய்தருளவே.

(இ-ள்.) அந்திவண்ணமான சடைமுடியினையுடைய கடவுளின் கருணையால் நந்திதேவராலனுப்பப்பட உமையையொருபுறத்திலுடைய எந்தையான சிவபெருமானிடஞ்சென்று உபயமலரடிகளைவணங்கிமனவிருப்பத்துடன் தோத்திரஞ்செய்தலும்.

நிருத்தனவ்விடைதனினேமியான்றனை
யிருத்தியென்றருள்புரிந்திடத்தின்மேவிய
வொருத்தியைநோக்கியொன்றுரைப்பங்கேளென
வருததிசெய்யாடலொன்றருளிற்கூறுவான்.

(இ-ள்.) நடனஞ்செய்யுஞ் சிவபெருமான் சக்கரத்தினையுடைய மாயோனை இருத்தியென்றருள்செய்து இடதுபாகத்திற் பொருந்திய ஒப்பற்ற உமாதேவியைப் பார்த்து ஒன்றுரைப்பேங்கேளென்று விருப்பங்கொண்ட விளையாட்டொன்றையருளினாலுரைக்கின்றனர்.—எ-று. (கசுo)

சூதினையெம்மொடேபொருதிதோற்றனை
யாதியேனீபுனையணிகள்யாவையு
மீதியால்வென்றனையென்னினெம்மொரு
பாதியாஞ்சசிமுதற்பலவுங்கோடியால்.

(இ-ள்.) நீ யெம்முடன் சூதாடக்கடவை தோற்றாயானால் நீதரித்துள்ள ஆபரணமனைத்தும் எமக்களித்தி வென்றியேல் எமது ஒருபாதியாகவுள்ள சந்திரன்முதலியபலவற்றையு நீ பெற்றுக்கொள்வாயாக.—எ-று. (கசுக)

என்னலுமுமையவளிசைவுகோடலு
மன்னதொரெல்லையினரியைநோக்கியே
தன்னிகரில்லவனிதற்குச்சான்றென
மன்னினையிருத்தியான்மாயநீயென்றான்.

(இ - ள்.) என்றருளிச்செய்ய உமாதேவியாரதற்குச் சம்மதித்தலும் அப்பொழுது திருமாலைப்பார்த்துத் தனக்கொப்பெவருமில்லாத சிவபெருமான் மாயனே நீ இதற்குச் சாட்சியாகப் பொருந்தி இருத்தி என்றுஅருளிச் செய்தனர்.—எ-று. (கசுஉ)

பற்றிகலின் றியேபழவினைப்பயன்
முற்றுணர்ந்துயிர்களைமுறையின் வைப்பவன்
மற்றிதுபுகறலும்வனசக்கண்ணினு
னற்றிறமிஃதெனநவின் றுவைகினன்.

(இ-ள்.) விருப்பும் வெறுப்புமில்லாமற் பழய வினையின்பயனை முழுதுமறிந்துஉயிர்களை முறையாகவைப்பவரான சிவபெருமான் இதனையருளிச் செய்தலுங் கமலாட்சனுன திருமால் இதுநல்லசெயலெனவுரைத்திருந்தனன்.—எ-று. (கசுங)

இந்தவாறுயிடைநிகழுமெல்லையிற்
சுந்தரன்முதலியவுழையர்சுற்றினே
ரந்தமில்பெருங்குணத்தாதியேவலிற்
றந்தனர்காசொடுபலகைதன்னையே.

(இ-ள்.) இவ்வண்ணமங்கு நிகழுங்காலத்துச் சுந்தரன் முதலிய ஊழியர்களாகச் சூழவுள்ளவர்கள் அழிவற்றபெருங் குணத்தினையுடைய ஆதியான சிவபெருமானுடைய கட்டளையால் மணிகளாலான சூதாடுகருவிகளையும் பலகையையுங் கொண்டுவந்து வைத்தனர்.—எ-று. (கசுச)

அதுபொழுதண்ணலுமரியைநோக்கியிம்
முதிர்தருகருவியைமுறையின் வைக்கெனக்
கதுமெனவைத்தலுங்கவுரிநீநமக்
கெதிருறுகென்றுமுன்னிருத்தினரோ.

(இ-ள்.) அப்பொழுதிறைவனுந் திருமாலைப்பார்த்து இந்த முதிர்ச்சிவாய்ந்த கருவிகளை முறையேவைத்தி யென்றருளிச்செய்ய அவ்வாறே மாயோன் விரைவாக வைத்தலும் உமாதேவியாரை நீ நமதெதிரிலிருத்தியென்றிருத்தினர்.—எ-று. (கசுரு)

கவற்றினைமுன்னரேயுய்ப்பக்கண்ணுத
லவற்றினைப்பின் னுறவவளுமுய்த்தன
டவற்றியல்பல்லதோர்வல்லசாரியா
லெவற்றினுமேலையோரினிதினடினர்.

(இ-ள்.) கவறென்னுஞ் சூதாடுகருவியை முன்னர்க்கண்ணுதலான சிவபெருமானெறியப் பின்னர் உமாதேவியாரு மவைகளை உருட்டினர் தவறியல் பல்லதான தக்க சுழற்சியால் எவற்றினுமேலையோர் செவ்வனே ஆடினார்கள்.—எ-று. (கசுசு)

பஞ்செனவுரைசெய்வர்பாலையென்பரீ
ரஞ்செனமொழிவரஞ்சென்பரன்றியுந்
துஞ்சலினடமென்பர்துருத்தியீதென்பர்
விஞ்சியமகிழ்வொடுவெடியென்றோதுவார்.

(இ-ள்.) பஞ்சென்று கூறுவர் பாலையென்பர் ஈரைஞ்சென மொழிவர் ஐஞ்சென்பர் அல்லாமலுங் கெடாதநடமென்பர் இது துருத்தியென்பர் மிக்க மகிழ்வுடன் வெடியென்று கூறுவார்கள்.—எ-று. (கசுஎ)

அடியிதுபொட்டையீதென்பரஃதென
முடிவிலகுழூஉக்குறிமுறையின்முந்துறக்

கடிதினிற்கழறினர்கவறுசிந்தினர்
நொடிதருகருவிகளெதிரினூர்க்கினர்.

(இ-ள்.) இது அடி, இதுபொட்டையென்பர், அஃதென்று அளவற்ற குழூ உக்குறி முறையால் முந்துறவிரைவாகவுரைத்துக் கவறினை உருட்டினார்கள் அழிக்கப் பெற்ற கருவிகளை எதிரின் மகிழ்வுகாட்டிக் குவித்தனர்.—எ-று.

அழிக்கப்பெற்ற கருவிகள்-வெட்டப்பெற்ற காய்கள்.　(௧௬௮)

ஏற்றனவனெய்தியவின்னருள்யாவதேயோ
தேற்றுமஃதியார்க்குமளப்பருஞ்செய்கையாலே
மேற்றனெதிராவுடனுடியமெல்லியற்குத்
தோற்றனெடுமாலயனுடவுந்தோற்றிலாதான்.

(இ-ள்.) ஆனேற்றினையுடையவரும் மாலுமயனு நாடவுந்தோற்றாதவருமாண சிவபெருமான் கொண்டவருளின் திறமென்னையோ நாமறியேம் அவர்திருவுளமெவர்க்குமளந்தறிதற்கரிய செய்கையினதாதலின் நாமெவ்வாறறிவேம் இதுநிற்க முன்னர்த் தாமெதிர்ந்துடனுடிய மெல்லிய தகைமையினையுடைய உமாதேவியாருக்குத்தோற்றனர்.

ஏற்றனவனென்பதற்கு எதிர்ந்தாடினனுகிய வ்வன் என்றும் கொள்ளலாம் அங்ஙனங்கொள்ளிற் பின்னர் வருமெதிராவுடனுடிய என்பதிரட்டுற மொழிதலா மாதலின் ஆனேற்றனென்றேம் ஏற்றன் இடபத்தையுடையான் என்னினுமாம்,

ஒன்றுயபரஞ்சுடரோனுமைதன்னைநோக்கி
நன்றுயதுநின்வலியென்றுநகைத்துநம்மை
வென்றுயலைதோற்றனைமுன்னர்விளம்புமாற்று
னின்றுரொடுபூணுமெமக்கினிநேர்தியென்றான்.

(இ-ள்.) ஏகமான பரஞ்சுடராகிய சிவபெருமான் உமாதேவியாரைப்பார்த்து நினதுவன்மை நன்றுயது என்று சிரித்து நம்மை வென்றுயலை தோற்றனை ஆதலின் முன்னுரைத்தவண்ணம் நினது மாலையுடனணிகளையு மெமக்கினி அளித்தியென் றருளிச் செய்தனர்.—எ-று.　(௧௭௦)

மூன்றுமுலகங்களுமாருயிர்முற்றுமுன்ன
மீன்றுளதுகேட்டலுந்தானிகலாடலஞ்சி
வான்றவியபேரடிமாயனைவல்லைநோக்கிச்
சான்றுமெனவைகினைநீயிதுசாற்றுகென்றாள்.

(இ-ள்.) மூன்றான வுலகங்களையும் அரிய உயிர்வருக்கங்களையும் முற்றிலும் முன்னாளித்த உமாதேவியார் அதனைக் கேட்டவுடனே தாம்பகைத்து நானேவென் றேனென்றுகூற வஞ்சி வானைக்கடந்த பெரிய வடியினையுடைய மாயோனை விரைந்து பார்த்து நீ இதற்குச் சாட்சியாகவிருந்தனை நீ யிதனை உரைத்தி யென்றனர் —எ-று.

சொல்லுமளவிற்சுடர்நேமியன்சூதுடைப்போர்
வெல்லுந்தகையோன்பரனென்றுவிளம்பலோடு
நல்லுண்மைசொற்றுய்திறநன்றிதுநன்றிதென்னுச்
செல்லுண்டவைம்பாலுமையாற்றச்சினம்புரிந்தாள்.

(இ-ள்.) உமாதேவியாரங்ஙன முரைத்தவுடனே ஒளிவாய்ந்த சக்கரப்படையினையுடைய மாயோன் இச்சூதுடைப்போரைவென்ற தகுதியோன் பரனென்று கூறுதலும் உண்மையைக்கூறிறுய் நின்றன்மை நன்று நன்றென்று மேகத்தின் கருமையைப் பழித்தகூந்தலாரான உமாதேவியார் மிகவுங் கோபங்கொண்டனர்—எ-று.

பாராயலைகண்ணனுமாயினைபாலினுற்றாய்
தேராததுவொன்றிலையாவருந்தேரவொண்ணுப்
பேராதியோனவைகூறினுநீயிதுபேசலாமோ
காராமெய்யென்பர்மனமுங்கரியாய்கொன்மன்னே.

(இ-ள்.) நீ பாராமலு மிருந்தாயல்லை கண்ணனுமானாய் பாலிலுற்றனை உணராத தொன்றுமில்லை எவரானுமுணர்தற்கரிய பேரினையுடைய ஆதியோன் தவறு கூறினு நீயிது கூறலாகுமோ நினதுடலினைக்கரிய தென்பர் மனமுங்கரியையோ?-எ-று.

எல்லார்க்குங் கணணிருக்கினுங் கணணனெனக் காரணச் சிறப்புப்பெயராகக்கொண்டவன் மாயனாதலிற் கண்ணனுமாயினையென்றனர். கண்ணனாயிருந்தும் அதற்குரிய செயலினை இழந்தனை என்பது குறிப்பு. பாலிலுற்றாய் என்பதற்கும் பாற்கடலுளிருந்தனை யெனவும் பக்கத்திலிருந்தனை எனவும் பொருளாம். பாலைக் கையில் வாங்கினவன் பொய்சொல்லக் கூடாதென்பர். பாலிலேயே கிடக்கின்ற நீ பொய்சொன்னது வியப்பெனவும் தூரத்திலிருக்கினுஞ் சரியாகப்பார்த்தானில்லையென்று கருதலாம் பாலிலுற்றாய், எங்கள் பக்கத்திலிருந்தனை நீ பொய் சொல்லலாகுமோ வெனவும் பொருள் கொள்ளுமாறு நிற்றல்காண்க. (கஎ௩)

எம்பாலிதுசொற்றனையாதலினென்றுமாயை
யோம்பாவருவாயுறுகைதவத்தூற்றமிக்காய்
பாம்பாதியென்னப்பகர்ந்தாள்பகர்கின்றவெல்லை
யாம்பாலுருவமஃதங்கனடைந்ததன்றே.

(இ-ள்.) எம்மிடத்திலிது கூறினையாதலின் எந்நாளும் மாயைவளர்த்து வருவோய் பொருந்திய கைதவத்தினூற்ற மிகுந்தோய் நீ பாம்பாகக்கடவாயென் றருளிச் செய்தனர் அருளிச்செய்யும்பொழுதே அத்தகைய பாம்புருவம் அவனுக்கவ்விடத்திலுண்டாகியது.—எ-று. (கஎச)

அவ்வாறவன்பாலணைகின்றதோர்போழ்திலாழிக்
கைவானவனுமதுகண்டுகவற்சியெய்திச்
செவ்வானுறழுமுடியோனடிசென்றுதாழா
வெவ்வாறெனக்கிவ்வுருநீங்குமிசைத்தியென்றான்.

(இ-ள்.) அவ்வண்ணம் அம்மாயோனிடத்திற் பாம்புருவமுண்டாகின்ற சமயத்திற் சக்கரமேந்திய வம்மாயோனும் அதனைக்கண்டு கலக்கமடைந்து செவ்வானம் போன்ற சடையினையுடைய சிவபெருமானடிமலர்களைவணங்கி எனக்கெவ்வண்ணம் இந்த உருவம் நீங்கு மருள்செய்யென்று கூறினன்.—எ-று. (கஎரு)

காலாய்வெளியாய்ப்புனலாய்க்கனலோடுபாராய்
மேலாகியுள்ளபொருளாயெவற்றிற்கும்வித்தாய்
நாலாயவேதப்பொருளாகிநண்ணுற்றநாதன்
மாலாயவனுக்கிஃதொன்றுவகுத்துரைப்பான்.

(இ-ள்.) காற்றாகியும் ஆகாயமாகியும் நீராகியும் தீயுடன் மண்ணாகியும் இவையன்றியுள்ள உயர்ந்த பிறபொருள்களாகியும் அனைத்துக்கும் வித்தாகியும் நான்கான வேதத்தின் பொருளாகியும் பொருந்தியிருக்கின்ற தலைவரான சிவபெருமான் திருமாலுக்கு இன்னதொன்றை வகுத்தருளுகின்றனர்.—எ-று. (கஎசு)

என்பால்வருமன்பினிசைத்தனையீதுபெற்றாய்
நின்பால்வருமின்னலைநீக்குவன்னீங்குகின்றாய்
தென்பாலுலகந்தனிலன்னதொர்தேயமீதின்
முன்பாலவனம்மெனவொன்றுளமொய்ம்பிமின்காய்.

(இ-ள்.) வன்மையின் மிகுந்த மாயோனே எம்மிடம் பொருந்திய வன்பினுற் தவறுகூறி இதனைப் பெற்றனை நின்னிடைப்பொருந்திய துன்பத்தை நீக்குவன் நீயு மித்துன்ப நீங்கப்போகின்றனை. தென்திசைக்கணுள்ள தெட்சண தேயத்தில் ஆல வனமென வொன்றுள்ளது.—எ-று. (கஎஎ)

ஆங்கேயினிநீகடிதேகினையன்னகானிற்
பாங்கேயொருதொன்மரநின்றதுபார்த்ததுண்டே
யூங்கேபராரையின்மேயபொங்தொன்றினூடு
நீங்கேகுறப்போய்ப்பெருமாதவஞ்செய்துசேர்தி.

(இ-ள்.) அவ்விடத்துக்கு விரைந்து சென்று அந்தக்காட்டில் அழகுபொருந் திய ஓராலமரம் நின்றது அதனை நீ பார்த்ததுண்டன்றே அதன்பரிய அரையிற் பொ ருந்திய ஒரு பொந்தினிடத்துக் குற்ற நீங்குமாறு சென்றிருந்து பெரிய சிறந்த தவத் தினை செய்திருப்பாயாக.—எ-று. (கஎஅ)

அஞ்சேலவணீயுறைகின்றதோர்காலையானே
யெஞ்சேயவனுங்கயமாமுகனெய்துவானச்
செஞ்சேவகனுக்கெதிர்கொண்டனைசென்றுகாண்டி
மஞ்சேயனையாயுனக்கிவ்வுருமாறுமன்றே.

(இ-ள்.) அஞ்சாதே யவ்விடத்தி னீயிருக்கின்றகாலத்து எமது மைந்தனுன சிறந்த யானைமுகன் வருவான் அந்தச் செவ்விய வீரனுக்கெதிர் சென்று அவனைக் கா ண்பாயாக மேகவன்னனே நினக்குண்டாகிய இந்தப் பாம்புருவ நீங்கும்—எ-று. ()

வேறு.

என்னுமளவிற்றொழுதிறைஞ்சியினிதேத்தி
யன்னதொர்வனத்திடையமர்ந்ததொன்மரத்திற்
றுன்னுவனெனக்கடிதுசொல்லுதலும்யார்க்கு
முன்னவனுமேகெனமுராரியைவிடுத்தான்.

(இ-ள்.) என்று கூறியவுடனே தொழுது வணங்கிச் செவ்வனே துதித்து அந்த ஆலங்காட்டிற் பொருந்திய ஆலமரத்திற் சென்றிருப்பேனென்று விரைந்துரைத் தலும் எவர்க்கு முதல்வரான சிவபெருமானும் செல்கவென முராரியான திருமாலை அனுப்பினர்.—எ-று. (கஅ0)

விட்டிடுதலுங்கயிலைநீங்கினன்விரைந்தே
கட்டழகின்மேதகையகாமனதுதாதை
சிட்டர்கள்பயின்றுறைதெனாதுபுலநண்ணி
மட்டொழுகுதொன்மரவனத்தினிடையுற்றான்.

(இ-ள்.) கட்டழகின் மேம்பட்ட மன்மதன் தந்தையான திருமால் சிவபெரு மானால் விடப்பட விரைந்து கைலையை விடுத்து சிரேட்டர்கள் வாசம்புரிகின்ற தென் னாட்டை யடைந்து தேனொழுகும் ஆலவனத்தை யடைந்தனன்.—எ-று. (கஅக)

நன்மதியுடைப்புலவர்நால்வர்களுமுய்யச்
சின்மயமுணர்த்தியருடேவனமர்தாருத்
தன்மையதுபெற்றுகனிதண்ணிழல்பரப்புந்
தொன்மரவியற்கையதனிற்சிறிதுசொல்வாம்.

(இ-ள்.) நல்லறிவினையுடைய சனகாதியறிஞர் நால்வர்களு முய்யும்வண்ணம் ஞானோபதேசஞ் செய்தருளிய தட்சணமூர்த்தியான சிவபெருமா னெழுந்தருளியிருக்

கும் கல்லாவின் தன்மையைப்பெற்று மிகவுந் தண்ணிய நிழலைப்பரப்புகின்ற அவ்வால மரத்தின் றன்மையிற் சிறிதுரைக்கின்றேம்.—எ-று. (கஅஉ)

பசுந்தழைமிடைந்தவுலவைத்திரள்பரப்பி
விசும்பளவுநீடியுயர்வீழினிரைதூங்கத்
தசும்பனையதீங்கனிகடாங்கியதுதாளால்
வசுந்தரையளந்தநெடுமாயவனைமானும்.

(இ-ள்.) பசிய இலைத்திரள்நெருங்கிய கிளைக்கூட்டங்களைப் பரவவிடுத்து வானமளவு முயர்ந்து நீளமான விழுதின் வரிசைகள் தொங்கக் குடம்போன்ற இனிய பழங்களைச் சுமந்துள்ளது காலினாற் பூமியையளந்த திருவிக்கிரமனென நெடுமாலை யொக்கும்.—எ-று. (கஅங)

அண்டநடுவாயவுலகேழினையுமந்நா
ளுண்டருளியொல்லைதனிலோர்சிறுவனாகிப்
பண்டுகரியோன்றுயில்கொள்பாசடைகடன்பாற்
கொண்டவடமன்னதொருகொள்கையதுடைத்தால்.

(இ-ள்.) அண்டத்தின் நடுவிடத்திலுள்ளதாய் ஏழுலகங்களையும் அந்நாளிலுண்டு விரைவாக ஒரு சிறுவனாகி முன்னாளின் மாயோன் துயில்கொண்ட பசிய இலைகளைத் தம்மிடத்துக்கொண்ட ஆல்இவ்வாலே என்னத்தக்க கொள்கையையுமுடைத்து.

மழைத்தபசுமேனியதுமாதிரவரைப்பில்
விழுத்தகையவீழினிரைவீசுவடதாருத்
தழைக்குலமருப்புமிசைதாங்கியிடைதூங்கும்
புழைக்கைகொடுமால்களிறுநாடுகரிபோலும்.

(இ-ள்.) குளிர்ச்சிவாய்ந்த பச்சைமேனியானது திக்கினெல்லையி லவிழத்தக்க விழுதின் வரிசைகளை மிகுதியும் விடுகின்ற வவ்வாலமரம் தழைக்கூட்டத்தை கொம்பின்மீதுதாங்கி நடுவே தொங்குகின்ற தும்பிக்கையுடன் மதமயக்கம்பொருந்திய யானையை நாடுகின்ற பெண் யானையை ஒக்கும்.—எ-று. (கஅடு)

பாசடைதொடுத்தபடலைப்பழுமரத்தின்
வீசிநிமிர்க்கின்றபலவீழின்விரிகற்றை
பூசலிடுகூளியொடுபூதநிரைபற்றி
யூசல்பலவாடியெனவூக்கியனவன்றே.

(இ-ள்.) பசிய இலைகள் ஒன்றோடொன்று பின்னிக்கிடக்கின்ற வவ்வாலமரத்தில் அசைந்துயர்கின்றபல விழுதுகளின் விரிந்த கூட்டமானது பொருகின்ற கூளிகளுடன் பூதநிரைகள் பிடித்துக்கொண்டு ஊஞ்சல் பலவாடுதற்கு முயற்சித்தமைத்தவை யொக்கும்.—எ-று. (கஅசு)

ஆல்வரையின்வீழ்நிரைகளாசுகமுடற்றப்
பால்வரையினெற்றிவருமாநிரவிபாகன்
கால்வரையினேகவெழுகந்துகமதென்னு
மால்வரையின்வீசுபலமத்திகையதொத்த.

(இ-ள்.) ஆலமரமாகிய மலையின் விழுதின் வரிசைகள் காற்றான்மோதப்படப் பக்கத்திலுள்ள மலைகளி னுச்சிகளிற் சென்று படுந்தன்மை சூரியனுடைய தேர்ப்பாகனாகிய அருணனென்பவன் வழியின் வண்ணஞ் செல்லுதற்குச் சத்தமாவென்னுங் குதிரைகளான பெரிய மலைகண்மீதுமோதும் பல சவுக்கடியை யொத்தன.—எ-று.

மத்திகை – குதிரைச்சம்மட்டி. (கஅஎ)

ஆசறுதெனுதிசையாளுமிறையெண்ணில்
பாசமொடுநின்றதொருபான்மையஃதன்றேல்
வாசவனுமாகமிசைமாலிகையுமாமால்
வீசுபழுமாமரவிலங்கலுமவ்வீழும்.

(இ-ள்.) ஆலமரமாகிய வம்மலேயும் அதனசைகின்ற வவ்விழுதுகளும் குற்றமற்றதெற்குத்திக் கினையாளுந் தலைவனுக்கொப்பென்னில் அவ்யமன் பாசத்துடன் நின்றதமையது. அஃதன்ருனல் இந்திரனும் அவன் மார்பிலணிந்த மாலையையு மொக்கும்.

மாநிலமெலாந்தனை வழுத்தவருமன்னற்
கூனமுறுகாலைதனிலொண்குருதிவாரி
வானமுகில்கான்றனையமாண்டதொன்மரத்தின்
மேனிதருசெய்யபலவீழின்விரிமாலை.

(இ-ள்.) பெரிய உலகனைத்துந் தன்னைத் துதிக்கவருகின்ற அரசனுக்கு அழிவுண்டாகின்ற சமயத்தில் ஒள்ளிய ரத்தவெள்ளத்தினை வானிலுலாவு மேகம் பெய்ததனை யொக்கும் மாட்சிமைவாய்ந்த அவ்வாலமரத்தின் நிறம்வாய்ந்த செவ்விய பல மாலைபோல விரிந்து கிடக்கும் விழுதின்கூட்டம்.—எ-று. (கஅகூ)

இம்பருறையாலமிசையெம்முருவுகொள்ளா
வம்புலவுதண்டுளவமாயன்வருமென்று
வெம்பணிகடம்பதியின்மேவுவனபோலாந்
தம்பமெனவேதரைபுகுந்ததனிவீழ்கள்.

(இ-ள்.) இவ்வுலகிலுள்ள ஆலின்மீது எமதுருவங்கொண்டு மணம்பொருந்திய தண்ணிய துளவமாலையணிந்த மாயோன் வருவானென்று வெவ்விய அரவங்கள் தமது பாதாளத்திற்குப் போகுந் தன்மையை யொத்தன தம்பங்களைப்போலத் தரையிற்புகுந்த ஒப்பற்ற விழுதுகள்.—எ-று. (ககூ0)

கடித்தனம்வெயிற்றினழல்காலவரவின்மே
னடிக்குமொருகட்செவிநமைக்குறுகுமென்றுத்
துடித்தனவெனத்தலைதுளக்கினவுரோமம்
பொடித்தனநிகர்த்துளபுனிற்றினுறுபுன்காய்.

(இ-ள்.) கடித்தனவாகிய பற்களின் வழி விடமாகிய தீயைக்கக்கப் பாம்பின்மீது நடிக்கின்ற ஒருபாம்பு நம்மை யடையுமென்று கம்பிதமுற்றுற்போலத் தலையசைத்தன. புதிதாய்க் காய்த்த இளங்காய்கள் உரோமம் பொடித்ததனை யொத்தன.(ககூக)

கிளர்ப்புறுகவட்டிலைகிடைத்தகிளையாவு
மளப்பில்புகைசுற்றிடவனற்கெழுவுகற்றை
துளக்குறுதரக்குழுவுதோன்றியதுபோன்ற
விளக்கழனிகர்த்துளவிரிந்தமுகையெல்லாம்.

(இ-ள்.) உயரம்பொருந்திய கவடுகளிற் கிளைத்த கிளையனைத்தும் அளவற்ற புகைசுற்ற அனல் நெருங்கிய கற்றையசையக் கூட்டமாகத்தோன்றி யதனை யொத்தன. விரிந்த முகையனைத்தும் விளக்கழலை யொத்தன.—எ-று. (ககூ२)

செருப்புகுசினத்தெதிர்செறுத்தமதவெற்பின்
மருப்பினையொசிப்பவன்வரத்தினியல்காணு
விருப்பமலிவுற்றதன்விழித்தொகைகளெங்கும்
பரப்பியநிகர்த்துளபய்ங்கெழுவுபைங்காய்.

(இ-ள்.) போரிற்புகுந்து சீற்றத்துட னெதிர்த்துத் தடுத்த மதயானையின் கொம்பினையொடித்த திருமாவின் வருகையைக்கண்டு விருப்பமிகுந்த தனதுவிழியின் றெகையினை எவ்விடத்தும் பரப்பி யதனை யொத்துளது பால்நிறைந்த பசிய காய்கள்.

வெள்ளிபடுகின்றமதிவிண்படர்விமானங்
கள்ளிபடுபால்கெழுசவட்டினிடைதேய்ப்பத்
துள்ளிபடுகின்றளவிலோர்திவலைதொத்தப்
புள்ளிபடுமாறுமுயலென்பர்புவிமேலோர்.

(இ-ள்.) வெண்ணிறம் வாய்ந்த சந்திரனுடைய வானிற்செல்லும் விமானமானது கள்ளியிலு மதிகமாக உண்டாகின்ற பால் விளங்குகின்ற இம்மரக்கவட்டினிடையிற் தேய்க்கப் பால் துளிக்குஞ் சமயத்தில் ஒருதி வலைமீதுபடப் புள்ளிபட்ட மையை முயலென்று உலகிலுள்ளவர்கள் கூறுவார்கள்.—எ-று.

சந்திரன் களங்கமுடையவ னல்லனென்பது கருத்து. (ககச)

காவதமொரேழுளபராரைகணிப்பின்றுற்
றூவறுமுயர்ச்சியதனுக்குமதிசான்றே
பூவலகமெங்குநிழல்போக்கிநெடிதோம்புங்
கோவதெனநின்றதுயர்கோளியெனுங்குன்றம்.

(இ-ள்.) எழுகாவத வளவகன்ற பராரைகளுக் களவேயின்றும் கெடாத உயரத்துக்குச் சந்திரனே சான்றுயுள்ளவன் பூவுலகமெங்கும் நிழல் பரப்பி மிகவுங் காக்கும் இறைவனைப்போல உயர்ந்த ஆலமெனு மலைநின்றது.—எ-று. (ககரு)

அவ்வகையதாருவினைநோக்கினணைந்தான்
பவ்வநிறவண்ணறுயில்பாசடைகடம்மோ
டெவ்வகைசுமத்திரெனவேவினவவென்றே
வெவவரவினுக்கிறைவன்மேவியதுமான.

(இ-ள்.) அத்தன்மையவான மரத்தினைப்பார்த்து வெவ்விய அரவரசன் கடல்வண்ணனை மாயோன் தூங்கும் பசிய இலைகளுடன் நீங்கள் எவ்வாறு அவனைச் சுமப்பீர்களென்று கேட்டற்கென வந்தாற்போல திருமால் பாம்புருவமாக வந்தான்.—எ-று.

மாயனை நொய்ய நீவிரெங்ஙனந் தாங்குகின்றீர்கள் என்று மாயனது திண்மையை யவன்பாயலாக விருந்துணர்ந்த சேடன் வினவி ஐயமகற்றவந்தாற்போல வந்தானெனச் சேர்த்துரைக்க. (கககூ)

அந்தமில்பெருங்கடல்வளாகமனைத்துந்தன்
னுந்தியிலடைந்ததெனவோங்கல்கெழுமொள்வாள்
வந்துறையினிற்புகுவதென்னவடதாருப்
பொந்தினிடையேயணுகினுலகுபூத்தோன்.

(இ-ள்.) அளவற்ற கடல்புடையுடுத்த நெடுநில வளைப்புமுழுதுந் தனது வயிற்றிலடைந்தாற்போலவும் உயர்ந்து விளங்குகின்ற ஒள்ளிய வாட்படை உறையிற் புகுந்தாற்போலவும் உலகினைப் படைத்த மாயோன் ஆலமரப்பொந்தினிடத்துப் புகுந்தனன்.—எ-று.

ஓங்கல் கெழுமொள்வாள் வந்துறையினிற் புகுவதென்ன என்பதற்கு, உதயகிரியி லுதித்து விளங்கிய ஒள்ளிய சூரியன் சென்று கடலுட் புகுந்தாற்போலவும் என்றும் பொருள்கொள்ளலாம். (ககஎ)

சத்தியுரையாலரிதனிப்பணியதான
வித்திறமிசைத்தனமினிச்சுரரைவாட்டு
மத்திமுகவெய்யவனையாதியருள்செய்யும்
வித்தகமுதற்புதல்வன்வென்றமையுரைப்பாம்.

(இ-ள்.) உமாதேவியின் சாபமொழியான் மாயோன் ஒப்பற்ற பாம்பானஇத் தன்மையை உரைத்தனம்; இனித்தேவர்களை வருத்துகின்ற யானைமுகனைகொடிய வனைச் சிவபெருமானளித்த ஞானசொரூபியான விநாயகப்பெருமான் வென்றமையை உரைக்கின்றோம்.—எ-று. (ககஅ)

வேறு.

முந்துவேழமுகத்தவனேவலா
னொந்துசிந்தைநுணங்கியதேவரு
மிந்திராதிபர்யாவருமைங்கரன்
வந்ததோர்ந்துமகிழ்ச்சியின்மேயினர்.

(இ-ள்.) முன்னர்க்கயமுகாசுரனுடைய கட்டளையால் நொந்துமனந்தளர்ந்த தேவர்களும் இந்திரன்முதலிய அனைவரும் ஐந்துகரங்களையுடைய விநாயகப்பெருமா னவதரித்ததை அறிந்து மகிழ்வுடனிருந்தார்கள்.—எ-று. (ககக)

ஏதமின்மகிழ்வெய்தியவிந்திர
னாதியோர்கயிலாயத்தணுகியே
போதகத்துப்புகர்முகப்புங்கவன்
பாதமுற்றுப்பணிந்துபரவினர்.

(இ-ள்.) குற்றமற்ற மகிழ்வடைந்த இந்திரன் முதலியவர்கள் கைலாயத்துக் குச் சென்று புள்ளிவாய்ந்த விளயானை முகமுடைய விநாயகருடைய பாதங்களை யடைந்து வணங்கித்துதித்தார்கள்.—எ-று. (உ00)

பரவல்செய்திடுமன்னவரைநோக்கியே
கருணைசெய்துகயமுகத்தெம்பிரா
னுரையுநுங்கட்குறுகுறைறையென்றலும்
வரன்முறைப்படவாசவன்கூறுவான்.

(இ-ள்.) துதிக்குந்தன்மையைப பார்த்து யானைமுகத்தினையுடைய எம்பெ ருமான் கருணைசெய்து உங்கட்குள்ள குறைவினையுரையுங்களென்றருளிச் செய்ய முறையாக இந்திரனுரைக்கின்றான்.—எ-று. (உ0க)

தொல்லைநாண்மதிசூடியசோதிபா
லெல்லைநீங்கும்வரந்தனையெய்தினன்
கல்லென்வெஞ்சொற்கயாசுரனென்பவ
னல்லல்செய்தனனற்றவுமெங்களை.

(இ-ள்.) சந்திரசேகரான சிவபெருமானிடத்தில் முன்னாளிலளவற்றவரங்க ளைப்பெற்றவனுங்கல்லென வெவ்வியமொழி கூறுபவனுமான கயாசுரனென்பவன் எங்களை மிகவுந் துன்பஞ்செய்தனன்—எ-று. (உ0உ)

பின்னுநங்களைப்பீடறவைகலுந்
தன்னைவந்தனைசெய்யவுஞ்சாற்றினா
னன்னசெய்தனமன்றியுமெங்கள்பான்
மன்னவேபுதிதொன்றுவகுத்தனன்.

(இ-ள்.) பின்னருமெங்களைப் பெருமிதநீங்க நாள்தோறும் தன்னை வந்தனை செய்யும் வண்ணமுங்கூறினன் அதனைச்செய்தேம் அதுவன்றியுமெங்களிடத்தில் நிலை பெறுமாறு புதிதாகவொன்று வகுத்தனன்.—எ-று. (உ0ரு)

கிட்டித்தன்முன்கிடைத்துழிநெற்றியிற்
குட்டிக்கொண்டுகுழையிணையிற்கரந்
தொட்டுத்தாழ்ந்தெழச்சொற்றனனுங்கதும்
பட்டுப்பட்டுப்பழியிடைமூழ்கினேம்.

(இ-ள்.) நெருங்கித் தன்னருகையடைந்தவுடனே நெற்றியிற்குட்டிக் கொண்டுஇருகாதிலும் கைவைத்துத் தாழ்ந்தெழுமாறுங்கூறினன் அச்செயலினையுஞ் செய்து பழியிலழுந்தினேம்.—எ-று. (உ0௪)

கறுத்துமற்றவன்கட்டுரைக்கின்றசொன்
மறுத்தலஞ்சிவரும்பழிதன்னையும்
பொறுத்துநாணமும்போகவின்றந்தமுஞ்
சிறப்பிலாவச்சிறுதொழில்செய்தனெம்.

(இ-ள்.) அவன் சீறிக்கூறுமொழிகளை மறுத்தற்கஞ்சி வராநின்ற பழியையும் பொறுத்து நாணமுங்கெட இன்றுகாறுஞ் சிறப்பற்றவச் சிறுதொழிலைச்செய்தனம்.

ஆங்கவன்றனதாவியொடெங்குறை
நீங்குவித்திடநீவருவாயென
வோங்கனல்குமுமையவடன்னொரு
பாங்கர்வைகும்பராபரன்கூறினன்.

(இ-ள்.) அவனுயிரையும் எங்கள்குறையையு நீக்குதற்குத் தேவரீர்வருவீரென்றுமலைபெற்றமகளான உமாதேவியைத் தமதொருபாகத்திலுடைய பராபரரான சிவபெருமானருளிச்செய்தனர்.—எ-று. (உ0சு)

ஆதலானின்னடைந்தனமெம்முடை
யேதமாற்றுதியென்றுவழிபடீஇ
மோதகாதிகண்முன்னுறவார்த்திடப்
பூதநாதனருளிற்புகலுவான்.

(இ-ள்.) அதனால் தேவரீரையடைந்தேம் எங்கள் துன்பம் நீக்குவீராக வென்று வணங்கி மோதகமுதலியவைகளை எதிரிற்குவிக்கக் கணநாதரான விநாயகர் கருணையாலுரைக்கின்றனர்.—எ-று. (உ0எ)

அஞ்சலஞ்சலவுணர்க்கரசனும்
விஞ்சுவேழமுகமுடைவீரனைத்
துஞ்சுவித்துந்துயர்தவிர்ப்போமெனக்
குஞ்சரத்திருமாமுகன்கூறவே.

(இ-ள்) இந்திரனே அஞ்சாதே யஞ்சாதே அசுராதிபனான உயர்ந்தகயமுகாசுரவீரனை இறக்கச்செய்து உங்கள் துன்பத்தினை ஒழிப்போமென அழகிய யானைமுகப் பெருமானருளிச்செய்தலும்.—எ-று. (உ0அ)

இறைவனேடுமிமையவரெம்முடைச்
சிறுமைநீங்கினசெல்லலுநீங்கின
மறுமையின்பமும்வந்தனவாலினிப்
பெறுவதொன்றுளதோவெனப்பேசினர்.

(இ-ள்.) இந்திரனுடன் தேவர்கள் அனைவரும் அம்மொழிகேட்டு எம்முடைச் சிறுமை நீங்கின துன்பமுமொழிந்தன மறுமைக்கணனுபவிக்கவேண்டிய இன்பமும் வந்தன இனிப்பெறுவதொன்றுளதோவென்று கூறினார்கள்.—எ-று. (உ0௬)

வேறு.

துன்பினையுழந்திடுசுரர்களிவ்வகை
யின்புறுகாலையிலீசன்றந்திடு
மன்புடைமுன்னவனுனைமாமுக
முன்பனையடுவதுமுன்னினனரோ.

(இ-ள்.) துன்பத்தினை அனுபவிக்கின்ற தேவர்களிவ்வண்ணம் சந்தோஷமனுபவிக்கின்ற சமயத்திற் சிவபெருமானளித்த விநாயகப்பெருமான் கயமுகாசுரனாகிய அரசனைச்சங்கரித்தலைத் திருவுளத்துக்கருதினார்.—எ-று. (உ௧0)

பொருக்கெனத்தவிசினின்றெழுந்துபூதர்க
ணெருக்குறுவாய்தலினெய்திநீள்கதி
ரருக்கனினிலகியவசலனென்பவன்
றருக்கியபுயத்தின்மேற்சரண்வைத்தேறினன்.

(இ-ள்.) அங்ஙனங் கருதியவர் பீடத்தினின்றும் விரைவாகவிறங்கிப் பூதர்கள் நெருங்கி நிற்கின்ற வாசலையடைந்து நீண்ட கிரணத்தினையுடைய சூரியனைப்போல் விளங்கிய அசலனென்பவனது தடித்ததோளின்மீது பாதம்வைத்தேறியருளினார். ()

ஏறியங்கசலன்மேலிருந்துசெல்லுழிக்
காறுடர்முகிலினங்கவைஇயகாட்சிபோன்
மாறில்வெம்பூதர்கள்வந்துசுற்றியே
கூறினரவன்புகழ்குலாயகொள்கையார்.

(இ-ள்.) அசலன்மீதேறியிருந்து செல்லுஞ் சமயத்திற் காற்றின் மோதப் பெற்ற மேககூட்டங்கள் ஒருங்குபடிந்தாற்போல எதிரற்றவெவ்விய பூதர்கள் வந்து சூழ்ந்து மகிழ்வுற்றகொள்கையினராய் அவ்விநாயகப்பெருமான் புகழைக்கூறினார்கள்.

சாமரைவீசினர்தணப்பில்பன்மணிக்
காமருதண்ணிழற்கவிகையேந்தினர்
பூமருமதுமலர்பொழிதன்மேயின
ரீமருபூதரிலெண்ணிலோர்களே.

(இ-ள்.) மகிழ்வுற்ற பூதரில் அளவற்றவர்கள் சாமரைவீசினார்கள் நெருங்கிய பலமணியின் அழகுவாய்ந்த தண்ணியநிழலைத்தருகின்ற குடையைத்தாங்கினர் அழகும்மணமுந் தேனும்பொருந்திய மலர்களைவாரி இறைக்கத் தொடங்கினர்—எ-று. ()

துடியொடுசல்லரிதோமிறண்ணுமை
கடிபடுகரடிகைகணையஞ்சல்லிகை
யிடியுறழ்பேரிகையிரலைகாகளங்
குடமுழவியம்பினர்கோடிசாரதர்.

(இ-ள்.) கோடிபூதர்கள் உடுக்கைகளுடன் சல்லரிகள் குற்றமற்றதண்ணுமைகள் ஓசையினையுடைய கரடிகைகள் கணையங்கள் சல்லிகைகள் இடிமுழக்கங்காட்டும் பேரிகைகள் கொம்புகள்காகளங்கள் குடமுழாக்கள் முதலியனவற்றைமுழக்கினார்கள்.

சிந்தையிலுன்னினர்தீமைதீர்ப்பவன்
வந்திடுகாலையின்மகத்தின்வேந்தனு

மந்தரவமரருமடைந்துபோற்றியே
புந்திகொளுவகையாற்போதன்மேயினர்,

(இ-ள்.) மனதினினைத்தவரின் தீமையைத்தீர்க்கும் விநாயகப்பொருமான் இங்ஙனம் வாரநின்ற சமயத்தில்யாகாதிபனான இந்திரனும் சுவர்க்கத்தினையுடைய தேவர்களும் அவரையடைந்துவணங்கி மனதிற்பொருந்திய மகிழ்ச்சியாலுடன் செல்வாராயினர்.—எ-று. (உகரு)

தாருவினறுமலர்தத்தங்கைக்கொடு
பேரருணுதல்விழிப்பிள்ளைமீமிசை
சேருறவீசியேபுடையிற்சென்றனர்
காரினையடைதருகடவுள்வில்லென.

(இ-ள்.) மணம்பொருந்திய கற்பகமலர்களைத் தங்கள் தங்கள் கைகளிற் கொண்டுபெரிய கருணையினையும் நெற்றிக்கண்ணினையும் உடைய விநாயகப்பெருமான் திருமேனியிற் சென்று பொருந்தும்வண்ணம் இறைத்தவர்களாக அருகில் மேகத்தினைச்சூழ்ந்துள்ள இந்திர வில்லினைப் போற்சென்றனர்.—எ-று (உகசு)

விரைந்தெழுசாரதவெள்ளமெண்ணில
நிரந்தனசூழ்தரநிமலன்மாமகன்
பெருந்தரையேகியேபிறங்குதோன்முகன்
புரந்திடுமதங்கமாபுரமுன்போயினன்.

(இ-ள்.) விரைந்தெழுந்த பூதவெள்ளமளவற்றன நிரந்து சூழாநிற்பச்சிவகுமாரரான விநாயகப்பெருமான் பெரிய பூமியினிடஞ்சென்று விளங்காநின்ற கயமுகாசுரன் அரசுபுரிகின்ற மதங்கமாபுரத்திற்சென்றனர்.—எ-று. (உகஎ)

ஆயதுகயமுகத்தவுணர்கோடியே
வேயினர்புகறலும்வெகுட்சிகொண்டெழீஇ
யேயதன்படையெலாமெடுத்துமற்றவன்
சேயுயர்தனதுபொற்றேரிலேறினன்.

(இ-ள்.) அங்ஙனம் விநாயகப்பெருமானெழுந்தருளியதனைக் கயமுகாசுரனுக்கு ஒற்றுவோர் கூறுதலும் கோபங்கொண்டெழுந்து பொருந்தியதனதாயுதமனைத்துமெடுத்துத் தனது செவ்வியவுயர்ந்த பொன்தேரிலேறினன்—எ-று. (உகஅ)

பல்லியமியம்பினபரிகள்சுற்றின
சில்லிகொளாழியந்தேர்கள்சூழ்ந்தன
வெல்லையில்பகிரையாவுமொய்த்தன
வல்லியலவுணர்கள்வரம்பின்றீண்டினர்

(இ-ள்.) அப்பொழுது மேளங்கள் முழங்கின குதிரைகள் சூழ்ந்தன தகடிட்டிழைத்த சக்கரங்களையுடைய தேர்கள் சூழ்ந்தன அளவற்றயானைவரிசைகள் மொய்த்தன வலியதன்மையினையுடைய அளவற்ற அசுரர்கள் நெருங்கினார்கள்.—எ-று. (உகக)

ஆயிரவெள்ளமாமனிகஞ்சுற்றிடக்
காய்கனல்விழியுடைக்கயமுகாசுர
னேயெனும்ளவையிலேகிக்கண்ணுத
லுய்கன்மதலைதன்படைமுனண்ணினன்.

(இ-ள்.) ஆயிரவெள்ளஞ் சேனைகள் சூழ்ந்துலாநிற்பச் சீற்றம்வாய்ந்த தீவிழியினையுடைய கயமுகாசுரன் ஏ என்னும் அளவையுட்சென்று நெற்றிக்கண்ணினையு

டைய சிவபெருமானுடைய திருக்குமாரரான விநாயகப்பெருமானின் சேனையினெதிரேசென்றனன்.—எ-று. (உ௨०)

நண்ணியகாலையினவையில்பூதரு
மண்ணலங்கழலடியவுணருங்கெழீஇப்
பண்ணினர்பெருஞ்சமர்படையின்வன்மையால்
விண்ணவர்யாவரும் வியந்துநோக்கவே.

(இ-ள்.) அங்ஙனம் வந்தவுடனே தேவரனைவரும் ஆச்சரியமுற்றுப்பார்க்கும் வண்ணம் குற்றமற்றபூதர்களும் பெருமைவாய்ந்த வீரக்கழலணிந்த அடிகளையுடைய அசுரருங்கலந்து ஆயுதசாமர்த்தியத்தினுற் பெரும்போர் புரிந்தார்கள்—எ-று. (உ௨க)

புதிதெழுவெயிலுடன்பொங்குபேரிரு
ளெதிர்பொருமாறுபோலினங்கொடானவ
ரதிர்கழற்பூதரொடமர்செய்தாற்றலர்
கதுமெனவழிந்தனர்கலங்கியோடினர்.

(இ-ள்) புதிதாக உதித்தவெயிலுடன் மிக்கபேரிருள் எதிர்பொருந்தன்மையைப்போல ஓரினமாகப் பொருந்திய தானவர்கள் முழங்குகின்ற கழலினரான பூதர்களுடன் போர்புரிந்து எதிர்நிற்கமாட்டாமல் விரைவாக வழிந்து கலங்கியோடினார்கள்.—எ-று (உ௨உ)

ஓடினரளப்பிலருயிரைச்சிந்தியெ
வீடினரளப்பிலர்மெய்குறைந்துபி
ணுடினரளப்பிலரகலுந்தற்கிடந்
தேடினரளப்பிலர்தியக்கமெய்தினர்.

(இ-ள்.) அசுரரில் அளவற்றவர்கள் ஓடினார்கள் உயிரிழந்து அநேகர் அழிந்தார்கள் உடல்குறைந்து சுவாதந்தமாகி அநேகர் ஆடினார்கள் விலகியோடுதற்கிடந்தேடி அநேகர் தியக்கமெய்தினார்கள்.—எ-று (உ௨௩)

ஒழிந்தனகரிபரியுலப்பிறேர்நிரை
யழிந்தனவித்திறமவுணர்தம்படை
குழிந்திடுகண்ணுடைக்குறள்வெம்பூதர்கண்
மொழிந்திடவரியதோர்விசயமுற்றினர்.

(இ-ள்.) இவ்வாறாக அசுரசைநியங்கள் ஒழிந்தன; யானையுங் குதிரையுமளவற்ற தேர்நிரையுமாகிய இவைகளும் அழிந்தன குழிந்தகண்ணினவான குறுகிய வெவ்விய பூதப்படைகள் உரைத்தற்கரிய வெற்றியையடைந்தார்கள்.—எ-று. (உ௨௪)

உயர்தருதானவருடைந்ததன்மையும்
புயவலிகொண்டுளபூதர்யாவருஞ்
சயமுடன்மேல்வருதகவுநோக்கியே
கயமுகவவுணர்கோன்கனலிற்சீறினன்.

(இ-ள்) உயர்ச்சிவாய்ந்த அசுரர்உடைந்த தன்மையும் புயபலம்பொருந்திய பூதரனைவரும் வெற்றியுடன் மேலேறிவருந் தன்மையும்பார்த்து அசுராதிபனானகயமுகன் தீயைப்போலச் சீற்றமுற்றனன்.—எ-று. (உ௨௫)

உளத்தினில்வெகுண்டுசென்றொருதன்கைச்சிலை
விளைத்தனனத்துணைவளைத்துப்பேரமர்
விளைத்தனர்பூதர்களனையர்மெய்யெலாந்
துளைத்தனன்கணைமழைசொரிந்துதுண்ணென.

(இ-ள்.) உள்ளத்தின்கண் கோபமுற்றுச்சென்று ஒப்பற்றதனது கைவில்லினை வளைத்தனன் அப்பொழுது அவனைச் சூழ்ந்துகொண்டு அவனுடன் பூதவீரர்கள் போர் புரிந்தார்கள் உடனே அவன் விரைவாக அம்புமழைசிதறி அவர்கள் உடலங்களைத் தொளைத்தனன்.—எ-று. (௨௨௬)

அரந்தெறுபகழிகளாகம்போழ்தலும்
வருந்தினர்திறலொடுவன்மைநீங்கின
ரிரிந்தனர்பூதர்கள்யாருமோடினர்
புரந்தரனிமையவர்பொருமலெய்தவே.

(இ-ள்.) அரத்தாற் கூராக்கப்பட்ட அம்புகள் உடலைப்பிளந்தவுடனே வருந்தித் திறலுடன் வன்மை நீங்கி விலகி இந்திரனுந் தேவரும் வருந்தும் வண்ணம் பூதர்கள் அனைவரு மோடினார்கள்.—எ-று. (௨௨௭)

கணநிரைசாய்தலுங்கண்டுமற்றது
மணிகிளர்கிம்புரிமருப்புமாமுக
னிணையறுமசலன்மேலேகிவல்லையி
லணுகினனிபமுகத்தவுணர்கோனையே.

(இ-ள்.) பூதகண வரிசைகள் முதுகிடுதலும் அதனைக்கண்டு மணியொளி விளங்குகின்ற கிம்புரிக்கோட்டினையுடைய யானைமுக விநாயகப்பெருமான் ஒப்பற்ற அசலன்மீது விரைவாகச்சென்று அசுராதிபனான கயமுகாசுரனெதிரையடைந்தனர்.

காருடையிபமுகக்கடவுண்மேலையோ
னேருறவருதலுநின்றதூதரைச்
சீருறுகயமுகத்தீயனோக்கியே
யாரிவண்பொருவதற்கணுகுற்றானென.

(இ-ள்.) கரியநிறம்வாய்ந்த யானைமுகத்தினையுடைய தேவர் தலைவன் எதிராக வருதலும் எதிரினின்ற தூதர்களைச் சிறப்புவாய்ந்த கயமுகாசுரனாகிய கொடியவன்பார்த்து யாரிங்குப் போர்புரிதற்கு வருகின்றவன் என்று வினவுதலும்—எ-று.

பரவியவொற்றர்கள்பணைமருப்புடைக்
கரிமுகமுடையன்முக்கண்ணனைங்கர
னுருகெழுபூதன்மேலுறுகின்றான்சிவன்
பெருமகனாகுமிப்பிள்ளைதானென்றார்.

(இ-ள்.) கயமுகாசுரனைத்துதித்த அவனுடைய ஒற்றர்கள் இதோ வருகின்ற வன்பணைத்த கொம்புகளையுடைய யானைமுக முடையவன் மூன்று கண்களையுடையவன் ஐந்துகரங்களையுடையவன் தோற்றமிக்க பூதன்மீது வருகின்றான் அங்ஙனம் வருமவன் சிவகுமாரன் என்றனர்.—எ-று. (௨௩௦)

அன்னதுகேட்டலுமவுணன்சீறியே
பன்னருங்கலைதெரிபாகைநோக்கிநம்
பொன்னிரதத்தினைப்புழைக்கைமாமுகன்
முன்னுறக்கடவுதிமொய்ம்பவென்னவே.

(இ-ள்.) ஒற்றருரைத்த அதனைக் கேட்டவுடனே அசுரன் கோபித்து அளத்தற்கரிய அசுவநூல் முதலிய கலைகளையுணர்ந்த தனது பாகனைப்பார்த்து மொய்ம்பனே! நமது பொன்னந்தேரினை அத்துதிக்கையினையுடைய யானைமுகனெதிரே செலுத்தக்கடவை என்றனன்.—எ-று. (௨௩௧)

கேட்டிவேலவையோன்கிஞ்சுகக்குரத்
தாட்டிறற்பரியினந்தன்னின்மத்திகை
காட்டினன்றவறிலாக்கனகத்தேரினை
யோட்டினனைங்கரத்தொருவன்முன்னுற

(இ-ள்.) அங்ஙனங் கயமுகாசுரனுரைத் ததனைக்கேட்ட சாரதியானவன் செந்நிறமான குளம்புகளையுடையவும் வலிய கால்களுடையவுமான வெற்றிக்குதிரைகள்மீது மத்திகையான சவுக்கினாற் தட்டி எச்சரித்துக் குற்றமற்ற பொன்னாலாகிய தேரினை ஒப்பற்ற ஐந்துகைகளையுடைய விநாயகரெதிரே யோட்டினன்.—எ-று. (உ௬உ)

ஆயிடைக்கரிமுகத்தவுணனைங்கரத்
தூயனையழல்விழிசுழலநோக்கியே
காயெரியெழிறகக்கறைகொள்பற்களாற்
சேயிதழதுக்கியேயினையசெப்புவான்.

(இ-ள்.) அவ்விடத்துக் கயமுகாசுரன் ஐந்து கைகளையுடைய நின்மலரான விநாயகப்பெருமானைத் தனது தீவிழிகள் சுழலப்பார்த்துக் காயுந் தீப்பொறிகள் பற்களினின்றுதிரும் வண்ணம் ஊன்கறைவாய்ந்த பற்களாற் செவந்த இதழினையதுக்கி இவைகளை யுரைக்கின்றான்.—எ-று. (உ௬௩)

நுந்தையென்மாதவநோக்கிமுன்னரே
தந்திடுபெருவரந்தன்னைத்தேர்கிலை
யுய்ந்தனைபோதிநின்னுயிர்கொண்டென்னெதிர்
வந்தனையிறையதுமதியிலாய்கொலோ.

(இ-ள்.) உனது தந்தை யெனது சிறந்த தவத்தினைப்பார்த்து முன்னமே யெனக்குத்தந்துள்ள பெரிய வரத்தினை நீ யுணர்ந்தாயில்லை நீ உன்னுயிரைக்கொண்டு பிழைத்துப்போகக்கடவை என்னெதிரே வந்தனை யுனக்கு புத்தியில்லையோ —எ-று.

அன்றிநீயமர்செயவமைதியென்னினும்
வன்றிறலுனக்கிலைமைந்தவென்னெதிர்
பொன்றினரல்லதுபோர்செய்தென்னைமுன்
வென்றவரிவரெனவிளம்பவல்லையோ.

(இ-ள்) திரும்பிப்போவதை விடுத்து என்னுடன் போர்செய்ய முயலுவாயாயினும் போர்புரியத்தக்க வலிய வன்மை யுனக்கில்லை இளையோய் என்னுடன் பொருது என்னெதிரிலிறந்தாரையன்றி வென்றவ ரிவரெனக்கூற நின்னாலாகுமோ?

தேன்பெறுதருநிழற்றிருவின்வைகிய
வான்பெறுதேவரான்மக்களாலவ
ரூன்பெறுபடைகளாலொழிந்திடேனிது
நான்பெறுவரத்தியல்பிலக்கேட்டியேல்.

(இ-ள்.) உரைக்கக்கேட்பாயானாற் தேன்பொருந்திய கற்பக நிழலிற் செல்வத்துடன் வாழ்ந்த சுவர்க்கத்தினையுடைய தேவர்களாலும் மனிதர்களாலும் அவர்கள் சுமந்துள்ள ஊனளாவிய படைகளாலும் அழியேன் இது நான் பெற்ற வரத்தின் தன்மை.—எ-று. (உ௬௪)

பின்னரும்பலவுளபெற்றதொல்வர
மென்னைவெல்பவரெவரிந்திராதிபர்
தன்னிடர்தணிப்பவர்போலச்சார்ந்தனை
யுன்னைவென்றன்னவருயிருமுண்பனால்.

(இ-ள்.) பின்னும் பலவுள யான்பெற்ற பெரிய வரங்கள் என்னை வெல்பவர் யாவர் இந்திராதியரின் துன்பத்தினை நீக்குமவர்களைப்போல வந்தாய் இனி, உன்னை வென்று அவ்விந்திராதியரின் உயிரையும் உண்பேன்.—எ-று. (உ௩௭)

பொருதெனைவென்றனைபோகவல்லையேல்
வருதியென்றுரைத்தலும்வானுலாவிய
புரமெரிபடுத்தவன்புதல்வனவ்விடை
யருளுடனொருமொழியறைவதாயினன்.

(இ-ள்.) என்னைப் பொருதுவென்று போகவல்லையானால் வருதியென்று கூறுதலும் வானிலுலாவியபுரத்தி லக்கினியைவிடுத்த சிவபெருமான் திருக்குமாரரான விநாயகனார் அவ்விடத்திற் கருணையுடனொருமொழி யுரைத்தருளுகின்றார். ()

வேறு.

நிரந்தபல்படையுநாளுநிலைபெறநினக்குத்தொன்னாள்
வரந்தருகின்றவெந்தைவல்லைநின்னுயிரைவவ்விப்
புரந்தரன்முதலினோர்க்குப்பொன்னிறுடுதவியன்னா
ரரந்தையுமகற்றிச்செல்கென்றருளினனெனக்குமன்றே.

(இ-ள்.) வரிசையான பலபடைகளையும் வாழ்நாளினையும் நிலைபெற நினக்கு முன்னாளிற் தந்த எமது தந்தையார் விரைவாக நினதுயிரைவவ்வி இந்திரன் முதலினோர்க்குச் சுவர்க்கநாட்டை யளித்து அவர்கள் துன்பத்தையுமகற்றி வருக என எனக்கு மருள்புரிந்துள்ளார்.—எ-று. (உ௩௯)

உன்னுயிர்காத்தியென்னினுறுதியொன்றுரைப்பன்கேண்மோ
பொன்னகரத்தையிந்தப்புரந்தரன்புரக்கநல்கி
யிந்நிலத்தரசுசெய்தேயிருத்தியஃதிசையாதென்னி
னின்னுயிர்முடிப்பானேர்ந்துநின்றனனினைவென்னென்றான்.

(இ-ள்.) உனதுயிரைக்காத்தியாயின் உறுதியொன்றுரைப்பேனதனைக்கேட்பாயாக; பொன்னுலகத்தை இந்த இந்திரனும் வண்ணங்கொடுத்து இந்நிலத்து லரசுசெய்திருப்பாயாக; இஃதிசையாதாயின் நினதுயிரை அழித்தற்கு எதிர்த்து நின்றேன் நினதெண்ண மென்னை யென்று கேட்டனர்.—எ-று. (உ௪௦)

என்னலுமவுணன்பொங்கியெரியுகவிழித்துச்சென்றோர்
பொன்னெடுஞ்சிலையைவாங்கிப்பொருக்கெனப்புரிநாணேற்றி
மின்னுடைவடிம்பின்வாளிவீசலும்விமலனலகு
முன்னவனெழுவொன்றேந்திமுரணொடுசிந்தினின்றான்.

(இ-ள்.) என்று கூறியவுடனே கயமுகன் கோபித்துத் தீப்பறக்கப்பார்த்துச் சென்று ஒரு பொன்மயமான பெரிய வில்லினை யெடுத்து வளைத்து விரைவாக முறுக்கேறிய நாணினையேற்றி ஒளிபொருந்திய நுதியொடுகூடின அம்புகளை விடுதலும் சிவபெருமானளித்த முதல்வரான விநாயகப்பெருமானொரு எழுவாயுதந்தாங்கி வன்மையுடன் அவைகளைச்சிதறி நின்றார்.—எ-று. (உ௪௧)

பொற்றனுமுரிந்துவீழப்புழைக்கையிற்பிடித்ததண்டா
லெற்றினனனையகாலையிபமுகத்தசுரனென்போன்
மற்றோருசிலையைக்கையால்வாங்கினன்வாங்குமுன்னர்ச்
செற்றனனதனைமைந்தன்றிசைமுகன்முதலோரார்ப்ப.

(இ-ள்.) அழகிய வில்லொடிந்து விழும் வண்ணம் தும்பிக்கையிற் பிடித்த தண்டினால் அடித்தனர். அப்பொழுது கயமுகாசுரனென்பவன் மற்றொரு வில்லினைக் கையினாலெடுத்து வளைத்தனன் வளைக்கு முன்னம் பிரமன் முதலியோராரவாரிக்கும் வண்ணம் விநாயகப்பெருமான் அதனையு மெழுவாலடித்தழித்தனர்.—எ-று.

திண்டிறல்பெற்றவீரச்சிலைமுரிந்திட்டபின்னர்த்
தண்டமொன்றேந்தியீசன்றனயனோடெதிர்தலோடும்
விண்டதுசோரும்வண்ணம்வெய்தெனப்புடைத்துமாயாக்
கண்டகனுரத்திற்றாக்கக்கையறவெய்திநின்றான்.

(இ-ள்.) மிக்க வன்மையினையுடைய வீரவில்லொடிந்தபின்னர் ஒரு தண்டத்தினைத்தாங்கி விநாயகருடன் எதிர்த்த வுடனே அத்தண்டு மொடிந்து விழும் வண்ணம் விரைவாக வடித்துக்கெடுத்துப் பின்னரும் அழியாத கயமுகாசுரனாகிய அசுரனுடைய மார்பிலடிக்க அவன் அதனால் துன்பமடைந்து நின்றனன்.—எ-று. ()

நடுங்கினன்சிந்தையொன்றுநவில்கிலனுணத்தாலே
யொடுங்கினன்கயவெஞ்சூரனுலந்தனன்போலநின்றா
னடும்பரிகளிறுதிண்டேரணிகெழுதானைபாரிற்
படும்படிநினைந்துமுன்னோன்பாசமொன்றுய்த்தானன்றே.

(இ-ள்.) மார்பிலடிபட்டுத் துன்பமுற்ற கயமுகனை கொடிய வசுரன் உள்ள நடுங்கி இறந்தானையொப்ப நின்றான்; உடனே முதல்வரான விநாயகர் அவனுடைய பகைவரைக்கொல்லுங் குதிரைப்படை யானைப்படை அழகு விளங்குங் காலாட்படை முதலியவை பூமியில் விழும்வண்ணம் ஒரு பாசத்தினை விடுத்தனர்.—எ-று. (உ௲௪)

விட்டவெம்பாசமங்கண்வெய்யதோர்சேனைமுற்றுங்
கட்டியதாகமைந்தன்கணிச்சியுமதற்பினேவ
வட்டதாலதனைநோக்கியாடினரமரர்தானை
பட்டனவுணர்ந்துதீயான்பதைபதைத்துயிர்த்துநொந்தான்.

(இ-ள்.) விடுத்த வெவ்விய பாசமானது அவ்விடத்திலுள்ள வெவ்விய அசுர சேனைகள் முழுமையும் கட்டாநிற்ப விநாயகப்பெருமான் அதன்பின்னர்த் தமது மழுவாயுதத்தையும் அனுப்ப வதுசென்றனைவரையுங் கொன்றது அதனைக்கண்டு தேவர் ஆடினார்கள் அப்பொழுது கொடிய கயமுகன் தனது சேனைகளழிந்துபோனதையறிந்து பதைபதைத்து வருந்தினான்.—எ-று. (உ௲௫)

முந்துதன்கரத்திலுள்ளமுரண்கெழுபடைகள்யாவுஞ்
சிந்தினனவைகளெல்லாஞ்சேர்ந்தனதிங்கள்சூடு
மெந்தையைவலஞ்செய்தேத்தியேவலினியன்றமாதோ
வெந்திறலவுணன்மேன்மேல்வெகுளித்தீக்கனலநின்றான்.

(இ-ள்.) முன்னர்த் தனது கையிலுள்ள வன்மைவாய்ந்த படைகளனைத்தையும் விநாயகர்மீதுவிடுத்தான் அவையனைத்து மொருங்குசேர்ந்து சந்திரனையணிந்த எந்தையாரான விநாயகப்பெருமானை வலம்வந்து துதித்து அவர்கட்டளைக்குட்பட்டு நின்றன, அதுகண்டு வெவ்விய திறலாளனான கயமுகன் மேலுமேலும் கோபமதிகரிக்க நின்றனன்.—எ-று. (உ௲௬)

நின்றவன்றன்னைநோக்கிநெடியபல்படைகளேவிற்
சென்றிவன்றன்னைக்கொல்லாசிவனருள்வரத்தின்சீரா
லின்றினிச்செய்வதென்னென்றிறைவரையுன்னியெந்தை
தன்றிருக்கோட்டிலொன்றுதடக்கையின்முரித்துக்கொண்டான்.

(இ-ள்.) அங்ஙனஞ் சீறிநின்ற கயமுகனைப்பார்த்து இவன்மீது நெடியபல படைகளை விடுவோமாயின் சிவபெருமானருளியுள்ள வரத்தின் சிறப்பினால் அவை சென்று இவனைக்கொல்லாவென்று சிறிது பொழுதாலோசனை செய்து எந்தையான விநாயகர் தமது திருக்கோடுகளிலொன்றினை விசாலமான கரத்தினால் ஒடித்துக்கொண்டனர்.—எ-று. (உ௪எ)

தடக்கையிலேந்துகோட்டைத்தந்தியாமவுணன்மீது
விடுத்தலுமனையன்மார்பைவெய்தெனக்கீண்டுபோகி
யுடற்படிமிசையேவீழ்த்தியொல்லையிலோடித்தெண்ணீர்க்
கடற்படிந்தமலன்மைந்தன்கரத்தில்வந்திருந்ததன்றே.

(இ-ள்.) விசாலமான அத்தத்திலொடித்தேந்திய தந்தத்தினைக் கயமுகாசுரன் மீது விடுத்தலும் அது அவன் மார்பினைவிரைந்து பிளந்து அவனுடலைப்பூமியிற்றள்ளி விரைந்தோடிச்சென்று நன்னீர்க்கடலின் மூழ்கி நின்மலரான சிவகுமாரர் திருக்கரத்தில் வந்து பொருந்தி யிருந்தது.—எ-று. (உ௪அ)

புயலினத்தொகுதியொன்றிப்புவிமிசைவழுக்கிற்றென்னக்
கயமுகத்தவுணன்முந்நீர்க்கடலுடைந்தெனனவார்த்திட்
டியலுடைத்தேர்மேல்வீழமவைத்தனனவன்றன் மார்பில்
வியனதித்தாரையென்னவிரிந்தனகுருதிவெள்ளம்.

(இ-ள்.) கயமுகாசுரன் மேகவினங்கள் ஒருமித்துப் பூமியில்வழுக்கி விழுந்தாற்போலவும் முந்நீர்க்கடலுடைந்தாற்போலவும் ஆரவாரித்து அழகமைந்த தேரினின்றும்விழுந்து சோர்ந்தானவனுடைய மார்பினின்றும் பெரிய ஆற்றுவெள்ளம் மொழுகினாற்போல இரத்தவெள்ளம் விரிந்தோடின.—எ-று. (உ௪௯)

ஏடவிழலங்கற்றிண்டோளிபமுகத்தவுணன்மார்பி
னீடியகுருதிச்செந்நீர்நீத்தமாயொழுகும்வேலைப்
பாடுறவருங்கானென்றிப்பரத்தலினதுவேசெய்ய
காடெனப்பெயர்பெற்றின்னுங்காண்டகவிருந்ததம்மா.

(இ-ள்.) இதழ்விரிந்த மலர்மாலையணிந்த திண்ணியதோளினையுடையகயமுகாசுரன் மார்பில் மிக்க விரத்தவெள்ளம் பிரவாகமாக ஒழுகும் சமயத்தில் அருகிலுள்ள ஒரு காட்டிற் பரந்ததனாலது செங்காடெனப்பெயர்பெற்று இன்னங்காணத்தக்கதாகவிருந்தது.—எ-று. (உ௫௦)

ஆய்ந்தநல்லுணர்வின்மேலோரறிவினுமணுகாவண்ண
லீந்ததொல்வரத்தான்மாயாவிபமுகத்தவுணன்வீழ்ந்து
வீந்தனன்போன்றுதொல்லைமெய்யொரீஇவிண்ணுமண்ணுந்
தீந்திடவெரிகண்சிந்தச்சீற்றத்தோராகுவானான்.

(இ-ள்.) ஆராய்ந்த நல்லுணர்வினையுடையமேலோரின் அறிவினும் அணுகா இறைவனார் கொடுத்தருளிய பழயவரத்தினால் இறவாதகயமுகாசுரன்விழுந்து இறந்தான்போன்று பழயயானையுடலை விடுத்து விண்ணு மண்ணுங்கருகவெரியைக்கண்கள் சிந்தாநிற்பச்சிறந்த ஒரு ஆகுவென்னும் பெருச்சாளி உருவங்கொண்டனன். ()

தேக்கிபுநதிசேர்கின்றசென்னியன்செம்மறனைச்
தாக்கியவருதலோடுஞ்சாரதன்றோளினீங்கி
நீக்கருந்துப்பின்றுக்கிநீநமைச்சுமத்தியென்று
மேக்குயர்பிடரிற்றுவிவீற்றிருந்தார்தலுற்றான்.

(இ-ள்.) நிறைந்தகங்கை பொருந்திய திருமுடியினையுடைய சிவகுமாரரான விநாயகப்பெருமானை மோதுதற்கு வருதலும் அசலபூதன்றேளினின்றும் விலகிநீக்கு தற்கரிய தாயகுணமுடையதாகச்செய்து நீ நம்மைச்சுமப்பாயாகவென மேலுயர்ந்த அதன் முதுகிற்றாவி வீற்றிருந்து அதனை ஊர்தியாக ஊர்ந்தனர் —எ-று. (உருஉ)

மற்றதுகண்டதேவர்வாசவன்முதலோர்யாரு
மிற்றனன்கயவெஞ்சூரனெமிடர்போயிற்றன்றே
யற்றதெம்பகையுமென்னுவாடினர்பாடாநின்றார்
சுற்றியகலிங்கம்வீசித்துண்ணெனவிசும்புதூர்த்தார்.

(இ-ள்.) இச்செயலினைக்கண்ட தேவர்களும் இந்திரனும் முதலிய அனைவரும் கயமுகனாகிய வெவ்வியவசுரனிறந்தான் எமதிடர்போயிற்று எமதுபகையும் அழிந்தது என்று ஆடிப்பாடி இடையிற்கட்டிய ஆடையை வானத்தில்வீசி வானத்தினை விரைவாக நிறைத்தனர்.—எ-று. (உருங)

காமருபுயலின்றோற்றங்காண்டலுங்களிப்பின்மூழ்கி
யோருகலாபமஞ்ஞையினமெனக்குலவுகின்றார்
தேமருமிதழியண்ணல்சிறுவனைத்தெரியாவண்ணம்
பூமலர்பொழிந்துநின்றுபுகழினைப்போற்றலுற்றார்

(இ-ள்.) அழகியமேகத்தின் தோற்றத்தினைக்கண்டவுடனே களிப்பின்மூழ்கி இன்புறுகின்ற தோகையினையுடைய மயிற்குழாத்தைப்போல மகிழுகின்றவத்தேவர்கள் தேன்பொருந்திய கொன்றையலரணிந்த சிவகுமாரரைப் பிறர்காணாவாறுபூத்த மலரினை இறைத்துநின்று அவர் கீர்த்திப்பிரதாபங்களைப்பாடித்துதித்தனர்.—எ-று.

காப்பவனருளுமேலோன்கண்ணகன்ஞாலம்யாவுந்
தீப்பவனேனைச்செய்கைசெய்திடுமவனுநீயே
மேப்படுஞ்செய்கையென்னவெமதுளம்வெதும்புமின்ன
னீப்பதுகருதியன்றேநீபருள்வடிவங்கொண்டாய்.

(இ-ள், இவ்வுலகத்தைக்காக்கின்றவனதருளும்மேலோனும் இடமகன்றஉலகமனைத்தையும் அழிப்பவனும் மற்றைப்படைப்பு முதலிய செய்கைகளைச்செய்பவனும் உன்னையன்றி வேறெவருமிலர் அம்புபட்டுத் துடித்தாற்போல வெங்களுள்ளமடைந்த துன்பநீக்குதலைக் கருதியன்றே நீ யிவ்வருள்வடிவங் கொண்டனை.—எ-று. (உருச)

உன்னிடைப்பிறந்தவேதமுன்பெருநிலைமைதன்னை
யின்னதென்றுணர்ந்ததில்லையாமுனையறிவதெங்ங
னன்னையும்பயந்தோன்றானுமாயினையதனான்மைந்தர்
பன்னியபுகழ்ச்சியாவும்பரிவுடன்கேட்டிபோலாம்.

(இ-ள்.) உன்னிடத்திற்பிறந்த வேதமானது உனதுபெரிய நிலைமையை இன்னதென அறிந்ததில்லையாக நாங்களுன்னையெவ்வாறறிவேம் நீ எங்களுக்குத்தாயுந் தந்தையுமாக ஆயினை அதனால் மைந்தரான நாங்கள் கூறிய புகழ்ச்சியனைத்தையும்விருப்பத்துடன் கேட்டனை.—எ-று. (உருசு)

என்றிவரெகினமூருமிறையொடுமிறைஞ்சியேத்தி
நன்றிகொள்சிந்தையோடுநகையொளிமுகத்தராகி
மன்றவர்குமரன்றன்பால்வந்தனர்சூழ்தலோடு
மொன்றியகருணைநோக்காலுலப்பிலாவருள்புரிந்தான்.

(இ-ள்.) என்றிவ்வாறு தேவர்கள் அன்னவாகனனான பிரமனுடன் வணங்கித் துதித்து நன்றிபொருந்திய வுள்ளத்துடன் நகை விளங்கு முகத்தினராகிப் பொன்

னம்பலத்தினையுடைய சிவகுமாரரை வந்து சூழ்ந்தவுடனே பொருந்திய கருணை நோக்காற் கெடாதவருளைச் செய்தனர்.—எ-று. (உ௫௭)

உய்ந்தனமினிநாமென்றுமேவோதிமமுயர்த்தோன்வெள்ளைத்
தந்தியன்யாரும்போற்றிச்சார்தலுஞ்சமரின்முன்னம்
வெந்தொழிலவுணன்காயவிந்திடுபூதர்தம்மை
யெந்தையங்கினிதுநோக்கியெழுதிரென்றருளிச்செய்தான்

(இ-ள்.) இனிநாமுய்ந்தோமென்று அன்னக்கொடியினனான பிரமனும் வெள்ளை யானையினையுடைய இந்திரன் முதலியவனைவரும் துதித்தாராய் எதிரேவருதலும் சண்டையின் முன்னம் வெவ்வியதொழிலாளனான கயமுகவசுரன் கொல்ல இறந்த பூதர்களை எந்தையான விநாயகப்பெருமான்பார்த்து எழுவீராக வென்றருளிச் செய்தனர்.

அவ்வகையருளலோடுமரவெனவெழுந்துபோற்றி
மைவரைமிடற்றுப்புத்தேண்மைந்தனை வணங்கியேத்தி
யெவ்வமில்பூதர்யாருமீண்டினரினையவெல்லாஞ்
செவ்விதினுணர்ந்துகொண்டான்றேசிலாநிருதர்க்கீசன்.

(இ-ள்.) அவ்வாறருளிச் செய்தவுடனே குற்றமற்ற அப்பூதர் அனைவரும் ஹர ஹரத்தொனியுடனெழுந்து துதித்து நீலகண்டத்தினையுடைய சிவகுமாரரான விநாயகப்பெருமானை வணங்கித் துதித்துவந்து நெருங்கினார்கள் இவ்வனைத்தையும் செவ்வனே உணர்ந்தனன் ஒளியற்ற பழைய அசுராதிபனான அசுரேந்திரன்.—எ-று. ()

மந்திரியோடுஞ்சூழ்ந்துவருந்தினன்புலம்பிமாழ்கி
யுய்ந்தனன்போவல்யானென்றுன்னியோர்பறவையாகி
யந்தரத்திறந்தபுள்ளோடணுகியப்பதியைநீங்கிச்
சிந்தையிற்செல்லல்கூரச்செம்பொன்மால்வரையிற்சென்றான்.

(இ-ள்.) சுக்கிரனுடனாராய்ந்து வருந்திப்புலம்பித் துன்புற்று இனியான்பிழைத்துப் போகின்றேனென்று ஒரு பறவையுருவந்தாங்கி யாகாயத்திற் பொருந்திய பறவைகளுடன் கலந்து அம்மதங்கபுரத்தைக் கடந்து மனத்தில் வருத்தங் குடிகொள்ளச்செவ்விய பொன்னாகிய பெரியமேருமலையை யடைந்தான்.—எ-று (உ௬௰)

தாழுறுசாரலூடுதபனனுமுணராத்தாருச்
சூழலொன்றுண்டாலங்கட்சுருங்கையோடிருந்தசேமப்
பூழையுட்புலம்பியுற்றான்பொன்னகரிறைக்குமங்க
ணூழிவெங்காலிற்சூழுமுலப்பில்பூதர்க்குமஞ்சி.

(இ-ள்.) இந்திரனுக்கும் வெவ்விய ஊழிக்காற்றினைப்போலச் சூழ்ந்தபூதர்கட்கும் பயந்து தாழ்ந்த அம்மலையடிவாரத்திற் சூரியனுமறியாத ஒரு மரச்சூழலுளது அவ்விடத்திற் சிறுதுவாரத்துடனிருந்த காவலினையுடைய ஒருமரப்பொந்தினிற் புலம்பிக் கொண்டிருந்தனன்.—எ-று. (உ௬க)

வானவர்பகைஞனந்தமதங்கமாபுரியைநீங்கிப்
போனதோர்காலைமற்றைப்புகருமோர்புள்ளதாகித்
தானுறையுலகுநண்ணித்தவமறைந்தல்லதாற்றி
யூனுடலோம்புவார்போலொருப்படாயோகினுற்றான்.

(இ-ள்.) தேவவைரியான அசுரேந்திரன் அம்மதங்கமாபுரத்தைக்கடந்து போனவுடனே சுக்கிரனுமொரு பறவையுருவந்தாங்கித் தானுறையுமுலகினையடைந்து தவத்தையுபதேசித்து அவத்தைச்செய்துக்கொண்டு மாங்கிசமயமான உடலை வளர்ப்பாரையொப்ப மனமொருப்படாதயோக சிந்தனையிலிருந்தனன்.—எ-று. (உ௬உ)

பூதருமன்னவேலைப்புரிசைசூழ்நகரம்போகி
நீதியிலவுணராகிதிறங்கிளர்படைகொண்டோரைக்
காதிவெஞ்சினப்போர்முற்றிக்களத்திடைவருதலோடு
மாதிதந்தருளுமைந்தனவ்விடையகன்றுமீண்டான்.

(இ-ள்.) பூதர்களுமப்பொழுது மதில் சூழ்ந்த மதங்கபுரமடைந்து ஒளிவிடும் படையேந்தினராய் நீதியற்றோராயுள்ள அசுரர்களைக்கொன்று வெஞ்சினத்துடன்போரினைமுடித்துக் களத்தினிடத்து வருதலும் சிவபெருமானளித்த விநாயகப்பெருமானவ்விடத்தினின்றுந் திரும்பிச் சென்றனர்.—எ-று. (உசுரு)

மீண்டுசெங்காட்டிலோர்சார்மேவிமெய்ஞ்ஞானத்தும்பர்த்
தாண்டவம்புரியுந்தாதைதன்னுருத்தாபித்தேத்திப்
பூண்டபேரன்பிற்பூசைபுரிந்தனன்புவியுளோர்க்குக்
காண்டகுமனையதானங்கணபதீச்சரமதென்பார்.

(இ-ள்.) திரும்பிச்செங்காட்டினொருபுறத்திற்றங்கி உண்மைஞானத்தினுச்சியில் நடனஞ்செய்கின்ற பிதாவான சிவபெருமானுடைய திருவுருவைப் பிரதிட்டித்து வணங்கிப் பொருந்திய பேரன்பினாற் பூசைசெய்தனர் பூவுலகிலுள்ளாராற் தரிசிக்கத்தக்க அவ்விடத்தைக் கணபதீச்சரமென்று கூறுவார்கள்.—எ-று. (உசுசு)

புரமெரிபடுத்தோன்றன்னைப்பூசனைபுரிந்தபின்னர்
எரிவிழிசிதறுமாகுவெருத்தமேலினிதினேறிச்
சுரபதியயன்விண்ணோர்களொழுதுடன்சூழ்ந்துபோற்ற
வரவெனமாலோன்வைகுமாலமாவனத்திற்புக்கான்.

(இ-ள்.) திருபுரங்களைத்தீயிட்டழித்த சிவபெருமானைப் பூசித்தபின்னர் எரியை விழியாற்சிதறுகின்ற ஆகுவினிலினிதாக ஏறிக்கொண்டு இந்திரன்பிரமன்தேவர் முதலியோர் சுற்றித்துதிக்கப் பாம்புருவமாக மாயோனிருக்குமாலவனத்தையடைந்தனர்.—எ-று. (உசுஎ)

கயமுகனுற்பத்திப் படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-ககஎஉ.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அனந்தன்சாப நீங்குபடலம்.

புக்கதொருபொழுதிலங்கண்முந்தோராலம் பொந்தினிடையிருந்தமலன்பொற்றாளுன்னி, மிக்கதவம்புரிமாலைங்கரத்து முன்னோன்மேவியதுமனங்கொண்டுவிரைவினுங்கே, யக்கணமேயெதிர்சென்றுவழுத்திக்காணவம்மையளித்தருள் சாபமகறலோடுஞ், சக்கரமேமுதலியவைம்படைகளேந்தித்தனது தொல்லைப்பேருருவந்தனைப்பெற்றான்.

(இ-ள்.) ஆலவனத்தினில் விநாயகப்பெருமான் எழுந்தருளியவுடனே அவ்விடத்தின் முன்னரோராலம் பொந்தினிடத்திருந்து மலரகிதரான சிவபெருமான் பொன்னந்திருவடியைத்தியானித்துச் சிறந்ததவஞ் செய்யுந்திருமால் ஐங்கரத்துமுதல்வனார் எழுந்தருளியதனைக்கருதியுணர்ந்து சீக்கிரமாக வப்பொழுதேயெதிர்சென்று துதித்துத் தரிசித்தவுடனே உமாதேவியாரிட்ட சாபம்விலகுதலும் சக்கரம்முதலிய பஞ்சாயுதங்களைத்தாங்கித் தனதுபழய பெரிய வுருவினையடைந்தான் —எ-று. (க)

மாலோன்றொல்லுருவுதன்பாண்மேவக்கண்டுமகிழ்சிறந்துசிவனருளை மனங்கொண்டேத்தி, மேலோன்றன்முன்னரெய்திவணக்கஞ்செய்துமீண்டுமவன்றனைத்துதித்துவிமலநீயென், பாலோங்குபூசனைகொண்டருளல்வேண்டும்பணித்தருள்கவாதிபராபரத்தின்பாலாய்,மூலோங்காரப்பொருளாயிருந்தாண்முன்னமொழிந்தருள்சாபந்தொலைத்தமுதல்வவென்றான்.

(இ-ள்.) திருமால் தனது பழயவுருவந் தனக்குண்டாகக்கண்டு மகிழ்ச்சிமிக்குச்சிவபெருமான்றிருவருளை மனத்திற்கொண்டுதுதித்து மேலோரான விநாயகரெதிரேசென்றுவணங்கிப் பின்னருமவரைத் துதித்துவிமலனே நீ என்னிடத்திலுயர்ந்த பூசையைப்பெற்றுக் கொள்ளுதல்வேண்டும் பராபரத்தின் ஒருபுறத்தாளாய் மூலவோங்காரப் பொருளாயிருந்த உமாதேவியார் முன்னருரைத்த சாபந்தொலைத்த முதல்வனே அருள்புரிக என்று துதித்தான்.—எ-று. (உ)

ஐங்கரன்றன்மாலுரைத்தமாற்றங்கேளாவன்னதுசெய்கெனவருளியங்கண்மேவக், கொங்குலவுமஞ்சனநீர்சாந்தமாலைகொழும்புகையேமுதலியனகொண்டுபோந்து, சங்கரனார்மதலைதனையருச்சித்தன்பாற்றுவறுபண்ணியம்பலவுஞ்சால்பிற்றந்து, பொங்கியபாலவிரியினொடுமுன்னமார்த்திப்போற்றியேயிலைதொன்றுபுகலலுற்றான்.

(இ-ள்., விநாயகப்பெருமான் திருமால் கூறியமொழியைக்கேட்டு அதனைச் செய்கவென அருள்புரிந்தவ்விடத்திலெழுந்தருளி இருந்தனர் உடனே திருமால்மணம் பொருந்தியதிருமஞ்சனம் சந்தனம் மாலைகொழுவியதூபம் முதலியன கொண்டுவந்து சிவகுமாரரான விநாயகப்பெருமானை அருச்சனைசெய்து அன்பினோற் குற்றமற்றபல சாரங்கள் பலவற்றையும் உயர்ந்தபாலன்னத்துடன் படைத்து நிவேதித்துத்துதித்து இன்னதொன்றையுரைப்பானாயினான்.—எ-று. (ங)

விண்ணுமம்புகல்கின்றதிங்கடன்னின்மிக்கமதிதனிலாறும்பக்கமாகு
மிந்நாளில்யானுன்னையருச்சித்திட்டவியற்கைபோல்யாருமினிப்பீறிலாவுன்
பொன்னருமலரடியேபுகலென்றுன்னிப்பூசைபுரிந்திடவுமவர்புன்கணெல்லா
மந்நாளேயகற்றிநீயுலவாச்செல்வமளித்திடவும்வேண்டுமிஃதருள்கவென்றான்

(இ-ள்.) வில்லின்பெயர் அமைந்ததனுவென்னு மார்கழி மாதத்திற் சுக்கில பட்சத்துச் சட்டிதிதியான இத்தினத்தில் யானுன்னை அருச்சித்ததன்மைபோல எவரும் பூசிக்கவும் அழிவற்ற உனது பொன்னமைந்த மலரடிகளையே அடைக்கலமென்றடைந்து பூசை அங்ஙனம்பூசைசெய்பவரின் துன்பமனைத்தும் அந்நாளே நீக்கி நீ அவருக்கே விடாதசெல்வமளிக்கவும் வேண்டும் இவ்வரம் அருள்புரிவீராக —எ று (ச)

மாயனுரைகேட்டலுநீமொழிந்தற்றுகமகிழ்ந்தனநின் பூசையெனமதித்துக்கூறி, யாயவனுமயன்முதலாவுள்ளோர்யாருமன்பினொடுவாழ்த்திசைப்பவாகுவென்னுந், தூயதொருநீதியிலெய்திக்கணங்களானோர்சூழ்ந்துவரக்கயிலையெனுந்துகடீர்வெற்பி, னேயமுடன் போந்தரனை வணக்கஞ்செய்துநீடருள்பெற்றேதொல்லைநிலயத்துற்றான்.

(இ-ள்) திருமால் கூறியதனைக்கேட்டலும் நீ கூறியவண்ணமேயாக நின்பூசையைமகிழ்ந்தேம் என மதித்துரைத்து அம்மாயோனுமயனு முதலியவனைவருமன்பினுடன் துதிபுரியாநிற்ப ஆகுவென்னுந் தாயவாகனத்திலேறிக் கணங்களாயுள்ளவர்சூழ்ந்துவாராநிற்பக் கைலாயமென்னுங் குற்றமற்ற மலையில் விருபத்துடன் சென்று சிவபெருமானை வணங்கி அவரதுமிக்க வருளினையடைந்து பழயகோபுரவாசலையுற்றிருந்தனர்.—எ-று. (ரு)

வேறு.

அற்றைநாளிலரியயனாதியோர்
நெற்றியங்கணிமலன் பதங்களின்
முற்றுமன்பொடுமும்முறைதாழ்ந்தருள்
பெற்றுநீங்கினர்பேதுறனீங்கினார்.

(இ-ள்.) அப்பொழுது கயமுகாசுரனாலுண்டான அச்சததினு நீங்கினஅரிபிரமாதியோர்கள் நெற்றிக்கண்ணுளரான சிவபெருமான் திருவடிகளில் பூரணவன்புடன் மும்முறை வணங்கியருள் பெற்றுத்திரும்பினார்கள்.—எ-று. (சு)

கரிமுகம்பெறுகண்ணுதற்பிள்ளைதாள்
பரவிமுன்னம்பணிந்தனர்நிற்புழி
யருள்புரிந்திடவன்னதொர்வேலையிற்
பரிவினாலொர்பரிசினைக்கூறுவார்.

(இ-ள்.) யானைமுகத்தினையும் நெற்றிக்கண்ணினையுமுடைய விநாயகப்பெருமான் திருவடிகளைவணங்கித் துதித்து எதிரினிற்குஞ் சமயத்தில் அக்கணேசனார் அருள்புரியாநிற்ப வப்பொழுது அன்பினாலொரு தன்மையையுரைத்தனர்.—எ-று.(எ)

எந்தைகேண்மதியெம்மையலைத்திடுந்
தந்திமாமுகத்தானவற்செற்றியா
னுய்ந்துநாங்களுனதடியோமிவண்
வந்துநல்குகைம்மாறுமற்றில்லையே.

(இ-ள்.) எந்தையே எம்மைவருத்திய யானைமுகவசுரனைக் கொன்றருளினீர் அதனாலுய்வுற்றவுனதடியரேம் இங்குவந்து தேவரீருக்குச் செய்யுங்கைம்மாறு வேறொன்றும் இல்லை —எ-று. (அ)

நென்னல்காறுநிகரில்கயாசுரன்
முன்னராற்றுமுறைப்பணியெந்தைமுன்
னின்னநாட்டொட்டியற்றுதும்யாமென
வன்னசெய்திரென்றானருணீர்மையான்.

(இ-ள்.) நேற்றுவரைக்கும் ஒப்பற்றகயமுகாசுரன் எதிரிற்செய்த வழக்கமான தொழிலினை எந்தையின் முன்னரின்றுதொட்டு நாங்கள் செய்கின்றேமென்றனர் உடனே அருட்டன்மையினையுடைய விநாயகனார் அதனைச்செய்யுங்களென்றுகூறினார்.

இத்திறம்படுமெல்லையினின்றிடு
மத்தலைச்சுரர்யாவருமன்புறீஇக்
கைத்தலத்தைக்கபித்தமதாக்கியே
தத்தமத்தகந்தாக்கினர்மும்முறை,

(இ-ள்.) இவ்வாறான சமயத்திலெதிரினின்ற தேவரனைவருங் கைத்தலங்களை மூடிக்கொண்டு அன்புற்றுத் தங்கள் தங்கள் மத்தகங்களின் மும்முறை குட்டிக்கொண்டார்கள்.—எ-று. (க0)

இணைகொள்கையையெதிரெதிர்மாற்றியே
துணைகொள்வார்குழைதொட்டனர்மும்முறை
சுணைகொள்காலுங்கவானுஞ்செறிந்திடத்
தணிவிலன்பொடுதாழ்ந்தெழுந்தேத்தினர்.

(இ-ள்) இருகரங்களையும் எதிரெதிர்மாற்றி இருகாதுகளிலும் பொருந்தத் தொட்டுக்கொண்டு மும்முறை கணைக்காலுந் தொடையு நெருங்கக் குறையாதவன்புடன் தாழ்ந்தெழுந்து துதித்தனர்.—எ-று. (கக)

இணங்குமன்புடன்யாருமிதாற்றியே
வணங்கிநிற்பமகிழ்சிறந்தான்வரை
யணங்கின்மாமகனவ்வியனேக்கியே
கணங்களார்த்தனகார்க்கடலாமென.

(இ-ள்.) பொருந்திய அன்புடன் யாவரு மிதனைச்செய்து வணங்கிநிற்க மலைமகளான உமாதேவியின் புதல்வரான விநாயகனார் அச்செயலினைப்பார்த்து மிக மகிழ்வுற்றனர் உடனே கரிய கடலினைந்தாற்போல கணங்களாரவாரித்தன.—எ-று. (கஉ)

நின்றதேவர்நிமலனைநோக்கியே
யுன்றன்முன்னமுலகுளர்யாவரு
மின்றுதொட்டெமைப்போலிப்பணிமுறை
நன்றுசெய்திடநல்லருள்செய்கென.

(இ-ள்.) எதிரில் நின்ற தேவர்கள் மலரகிதரான விநாயகப்பெருமானைப்பார்த்து உன்னெதிரே உலகிலுள்ளாரனைவரும் இன்று தொட்டெங்களைப்போல இப்பணிமுறையைச் செவ்வனே செய்யாநிற்பத் திருவருள்செய்க என்றிரத்தலும்.—எ-று.

கடனிறத்துக்கயமுகனத்திற
நடைபெறும்படிநல்கியமரர்கோ
னெடியமாலயனின்றுளருக்கெலாம்
விடைபுரிந்துவிடுத்தனனென்பவே.

(இ-ள்.) கடல்போலுங் கரிய நிறத்தினையுடைய விநாயகனார் அச்செயல் நடைபெறும்வண்ணம் அருள்புரிந்து தேவராசன் நெடுமால் பிரமன் முதலியவர்களாய் எதிரினின்ற அனைவருக்கும் விடையளித்தனுப்பினார்.—எ-று. (கச)

அம்புயக்கணரியயன்வாசவ
னும்பரவ்வரையொல்லையினீங்குறுத்
தம்பதந்தொறுஞ்சார்ந்தனர்வைகினர்
தும்பியின்முகத்தோன்றலருளினால்,

(இ-ள்.) யானைமுக விநாயகரருளினாற் கமலக்கண்ணனான அரி, பிரமன், இந்திரன், தேவர் முதலியோர் ரம்மலையை விரைந்து நீங்கி அவரவர் பதந்தொறுமடைந்து வாழ்ந்தனர்.—எ-று. (கடு)

முந்தைவேதமுதலெழுத்தாகிய
வெந்தைதோற்றமியம்பினமிங்கினி
யந்தமில்குணத்தாண்டகைக்கோர்குணம்
வந்ததென்னென்றிமற்றதுங்கேட்டிநீ.

(இ-ள்.) முதன்மையான வேதத்தின் முதலெழுத்தான எம்பெருமானுடைய திருவவதாரத்திறத்தையுரைத்தாம் இங்கு இனி முடிவற்ற பெருங்குணத்தினையுடைய இறைவனார்க்கு ஒரு குணம்வந்த தென்னையென்று கேட்டனை அதனை யுரைக்கின்றேம் கேட்பாயாக.—எ-று. (கசு)

வேறு.

நற்குணமுடையநல்லோருநாடொணாச்
சிற்குணனாகுமச்சிவன்பராபரன்
சொற்குணமூவகைத்தொடர்புமில்லதோர்
நிர்க்குணனவன்செயனிகழ்த்தற்பாலதோ.

(இ-ள்.) நற்குணமுடைய நல்லவர்களாலு நாடுதற்கரிய ஞானகுணத்தினையுடைய னச்சிவன் பராபரன் உரைக்கப்பெற்ற சாத்துவிதராசத தாமதமென்னு மூவகைக் குணசம்பந்தமுமில்லாத ஒப்பற்ற நிர்க்குணன் அத்தகைய வச்சிவபிரான் செயலையுரைத்து முடியுமோ?—எ-று. (கஎ)

பரவியவுயிர்க்கெலாம்பாசநீக்குவா
னருளினாகியேயமலன்மாலயற்
கிருதொழின்முறையினையீந்துமற்றவைக்
குரியனகுணங்களுமுள்ளவாக்கினான்.

(இ-ள்.) மலிந்துகிடக்கு முயிரனைத்துக்கும் பாசநீக்குதற்குக் கொண்ட கருணையினையுடையவாகி மலரகிதரான சிவபிரான் மாலுக்கு மயனுக்குந் திதிசிருட்டிகளான இருதொழில்களை யளித்து அச்செயற்குரிய குணங்களையுமவரிடமுள்ளனவாகச் செய்தனர்.—எ-று. (கஅ)

முடித்திடலியற்றுமெம்முதல்வனத்தொழி
றடுப்பரும்வெஞ்சினந்தன்னின்முற்றுமா
லடுத்தவப்பான்மையாலதன்கட்டாமதம்
படுத்தினனத்திறம்பலருந்தேர்வரால்.

(இ-ள்.) சங்காரத்தொழிலை எமது முதல்வனார் நடத்துவார் அத்தொழில் தடுத்தற்கரிய கடுங்கோபத்துடன் நிறைவேறும அங்ஙனம் பொருந்தியதன்மையாலதனிடத்துத் தாமத குணத்தினை யமைத்தனர் அத்தன்மையினைப் பலருமறிவார்கள்.

மாமறையளப்பிலவரம்பிலாகமந்
தோமறவுதவியோர்தொன்மரத்திடைக்
காமருமுனிவரர்கணங்கட்கன்னவை
தாமதகுணத்தனேற்சாற்றவல்லனோ.

(இ-ள்.) சிறந்த அளவற்ற வேதங்களையும் வரம்பற்ற வாகமங்களையும் குற்றமற வருளிச்செய்து ஒப்பற்ற வடவிருட்சத்தி னிழலில் விரும்பிய முனிவருக்கும் கணங்கட்கும் அவைகளைத் தாமத குணத்தராயின் உரைத்தற்கு வல்லவராவரோ. ()

வாலியநிமலமாம்வடிவங்கண்ணுதன்
மேலவனெய்துமோவேதம்விஞ்சையின்
மூலமென்றவனையேமொழியுமோவிது
சீலமில்லார்க்கெவன்றேற்றும்வண்ணமே.

(இ-ள்.) நெற்றிக்கண்ணினையுடைய வம்மேலவர் வெள்ளிய நின்மலமான உருவினை அடைவாரோ? வேதங்கள் விஞ்சையின் மூலமென்று அவரையே யுரைக்குமோ? இதனை ஒழுக்கமில்லாதார்க்கு எவ்வாறு தேற்றும் தன்மையது.—எ-று. (உக)

இமையவர்யாவருமிறைஞ்சுங்கண்ணுதல்
விமலனன்றிறுதியைவிளைக்கும்பண்பினாற்
றமகுணனென்றியத்தன்மைசெய்கையா
லமைகுணமியற்குணமறியற்பாலதோ.

(இ-ள்.) தேவரனைவரும் வணங்குஞ் சிவபெருமானான விமலனார் பண்டு சங்காரத்தினைச்செய்த முறைமையாற் தாமத குணத்தரென்றனை அத்தாமத குணஞ்செயற்கையாலமைந்த குணம் இயற்கைக் குணமறியத்தக்கதோ?—எ று (உஉ)

ஈத்தலுமளித்தலுமியற்றுவோர்க்குள
சாத்திகராசதந்தத்தஞ்செய்கையின்
மாத்திரையல்லதுமற்றவர்க்கவை
பார்த்திடினியற்கையாப்பகரலாகுமோ.

(இ-ள்.) படைத்தலுங் காத்தலுஞ் செய்வாரிடத்துள்ள சாத்துவிதகுணமும் இராசதகுணமும் அந்தந்தச்செய்கையின் மாத்திரமன்றி யப்பிரமவிஷ்ணுக்களுக்கவை பார்த்திடில் இயற்கையாக உரைத்தல் கூடுமோ? (உங)

அக்குணமானவையளிக்குஞ்செய்கையாற்
றொக்குறுமியற்கையத்தொல்லையோர்கள்பா
லிக்குணமல்லதோரிரண்டுஞ்சேருமான்
முக்குணநெறிசெலுமுனிவர்தேவர்போல்.

(இ-ள்.) இயற்கையினையுடையபழைய வவ்விருவரிடமும் இக்குணமன்றியுள்ள இரண்டும் பொருந்தும் முக்குண வழியொழுகு முனிவரையுந் தேவரையும் போலஅக்குணங்களானவை சிவபெருமானாற் கொடுக்கப்பெற்ற செய்கையால் அவரிடம் பொருந்தி நிற்கும்.—எ று. (உச)

நேமியாற்குருவெலாநீலமாயதுந்
தோமறுகடலிடைத்துயில்கொள்பான்மையு
மேமுறுமகந்தையும்பிறவுமெய்துமேற்
றாமதராசதந்தானுமுற்றவே.

(இ-ள்.) சக்கரத்தினையுடைய திருமாலுக்கு உருமுற்றும் நீலமாகியதும் குற்றமற்ற கடலிடத்துறங்குந் தன்மையும் இறுமாப்பைத் தருமகங்காரமும் பிறவுமெய்துமாயின் தாமதராச தங்களும் பொருந்தின.—எ-று. (உரு)

அறிவொருங்குற்றுழியனையன்கண்ணுத
லிறைவனைவழிபடீஇயேத்தியின்னரு
ணெறிவருதன்மையுநீடுபோதமும்
பெறுதலிற்சாத்திகமுறையும்பெற்றுளான்.

(இ-ள்.) அறிவுமுறையே பொருந்தியகாலத் தம்மாயோன் கண்ணுதலிறைவனைத்துதித்து இனிய அருளின்வழி நிற்குந்தன்மையும் மிக்க ஞானமும் பெறுதலாலுயர்ந்த சாத்துவிதகுணத்தையும் பெற்றவனாகின்றான்.—எ-று. (௨௯)

மேனிபொற்கென் றலின்விமலவான்பொரு
ளுனெனுமருட்கையினவையிலீசனைத்
தானுணர்தெளிவினிற்றவத்திற்பூசையி
லானதுகுணனெலாமயன்றனக்குமே.

(இ-ள்.) உடலம் பொன்மையாக விருத்தலாலும் விமலவான் பொருள் நானேயென்று மருட்கையுறுதலாலும் குற்றமற்ற இறைவனை உணருந் தெளிவினாலும் தவத்தினாலும் பூசையாலும் பிரமனுக்குங் குணமனைத்தும் பொருந்தியுள்ளன.—எ-று.

ஆதலின்விருப்புடனல்லதெய்தினோ
ரோதியகுணவிதத்துறுவர்கண்ணுத
லாதனுக்கனையதுநணுகுறாமையாற்
பேதைமையொருகுணமவன்கட்பேசுதல்.

(இ-ள்.) அதனால் வேண்டுதலும் வேண்டாமையற்ற பெரியோருரைத்த குணவிதத்திற் பொருந்துவர். கண்ணுதலான சிவபெருமானுக்கவைகள் பொருந்தாமையால் அவரிடமொரு குணமுள்ளதென்று கூறுதல் அறியாமையேயாம்.—எ-று.()

மூன்றெனவுளபொருள்யாவுமுன்னமே
யீன்றவன்கண்ணுதலென்னுநான்மறை
சான்றதுவாகுமாற்றவத்தர்க்கென்னினு
மான்றதோரவன்செயலறியற்பாலதோ.

(இ-ள்.) மூன்றாகவுள்ள பொருள்களனைத்தையும் முதலிற் படைத்தவர் கண்ணுதலென்னும் வேதமேசான்றாம், மிகவுந்தவமுடையவர்க்காயினும் உயர்ந்த அவர் செயலறிய முடியுமோ.—எ-று. (௨௯)

செங்கண்மான்முதலியதேவரேனையோ
ரங்கவரல்லவையகத்துள்வைகியே
யெங்குமாயாவையுமியற்றுகின்றதோர்
சங்கரனொருகுணச்சார்பின்மேவுமோ.

(இ-ள்.) செவ்விய கண்களையுடைய திருமால் முதலிய தேவர்கள் மற்றுள்ளவர்கள் இவரல்லாதவையாதியின் உள்ளிற்பொருந்தி எங்குமாகியனைத்துக்காரியங்களையுஞ் செய்கின்ற சங்கரன் என்னுந் திருநாமமுடையவர் ஒருகுணச் சார்பிலிருப்பாரோ இரார்.—எ-று. (௩0)

ஈறுசெய்முறையினையெண்ணித்தாமதங்
கூறினரல்லதுகுறிக்கொண்மேலையோர்
வேறொருசெய்கையின்விளம்பினாரல
ராறணிசெஞ்சடையமலனுக்கரோ.

(இ-ள்.) கங்கையாற்றை யணிந்த செஞ்சடை யமலனார்க்குச் சங்காரமாகிய தொழின்முறையைக்கருதித் தாமதகுணமுங்கூறினார்களேயன்றி அவரைச்சுட்டியுணர்ந்தமேலோர்கள் வேறொருசெய்கையா லுரைத்தவரல்லர்.—எ-று. (௩௧)

வேறு.

என்றிவைபலவுந்தூயோனிசைத்தலுமினையவெல்லாம்
வன்றிறல்வெறுக்கையெய்திமயங்குலாற்றக்கனென்னும்
புன்றொழில்புரியுந்தீயோன்பொறுத்திலன்புந்திமீது
நன்றெனவறிதரேற்றுனொருசிலநவிலலுற்றான்.

(இ-ள்.) என விவைபலவுந் தூயவரான ததீசிமுனிவர்கூறுதலும் இவையனைத்தும் வலியதிறலினையும் செல்வத்தினையும் பொருந்திமயங்குதலினாற்தக்கனென்னும் இழிதொழில்செய்யுங் கொடியோன் பொறுத்திலன் புத்தியின்கண் நன்றென அறியான் சிலமொழிகளை யுரைத்தனன்.—எ-று. (ருஉ)

முனிவகேள்பலவுமீண்டுமொழிவதிற்பயனென்வெள்ளிப்
பனிவரையுறையுறுங்கோன்பகவனேயெனினுமாக
வனையவன்றனக்குவேள்வியவிதனையுதவேனீயு
மினியிவைமொழியல்போதியென்செயன்முடிப்பனென்றான்.

(இ-ள்.) முனிவனேகேட்பாயாக நீ பலவுமிங்குரைப்பதிற் பயனென்னை குளிர்ச்சிவாய்ந்த வெள்ளிமலையிலிருக்கு முனது தலைவன் பகவனேயெனினும் ஆக, அவனுக்கு வேள்வியவிபிர்ப்பாக நானளியேன் நீயும் இனி இவைகளையுரையாதே இங்கு நின்றும்போகக்கடவை யான் எனது செய்கையை முடிப்பேன்.—எ-று. (ருங)

வேறு.

வளங்குலவுதக்கனிதுபுகன்றிடலுந்ததீசிமுனிமனத்திற்சீற்றம்
விளைந்ததுமற்றவ்வளவில்வெருவியதுவடவையழல்விண்ணோர்நெஞ்சந்
தளர்ந்ததுபொன்மால்வரையுஞ்சலித்ததந்தக்குலகிரியுந்தரிப்பின்றாகி
யுளைந்தனவேலைகளேழுமொடுங்கியனநடுங்கியதிவ்வுலகமெல்லாம்.

(இ-ள்.) வளத்தால் விளங்குகின்ற தக்கனிது கூறியவுடனே ததீசிமுனிவர் மனதிற்கோப முண்டாகியது. அப்பொழுது வடவாக்கினி பயங்கொண்டது. தேவர் நெஞ்சுந்தளர்ந்தது. பெரியமேருமலையுஞ் சலித்தது. அந்தக்குலமலைகளும் நிலையற்றசைந்தன. கடல்களேழும் இரையாதொடுங்கின. இவ்வுலகமெல்லாம்நடுங்கியது.—எ-று.

அக்கணமேமுனிவரன்றன்பெருஞ்சீற்றந்தனைநோக்கியந்தோவென்னு
லெக்குவடுமெக்கிரியுமெக்கடலுமெவ்வுலகும்யாவும்யாருந்
தக்கனொருவன்பொட்டாற்றளர்ந்திடுமோவெனமுனிவுதணிந்துதற்சூ
ழொக்கலொடுமவணெழுந்துசிறுவிதியின்முகநோக்கியொன்றுசொல்வான்.

(இ-ள்.) உடனே முனிசிரேட்டரான ததீசி தமதுள்ளத்தோன்றிய கடுங்கோபத்தினைப்பார்த்து ஐயோ என்னால் எல்லாமலைகளும், எல்லாக்கடல்களும், எல்லாவுலகமும் யாவையும் யாரும் தக்கனொருவன்பொருட்டுத் தளர்ச்சியுறுமோ என்று கோபந்தணிந்து தம்மைச்சூழ்ந்த சுற்றத்தினருடன் அவ்விடத்தினின்றும் எழுந்து தக்கன் முகத்தினைப்பார்த்து ஒன்றுகூறினர்.—எ-று. (ருரு)

சங்கரனைவிலக்கியின்றுபுரிகின்றமகஞ்சிதைதகதக்கநின்னோ
டிங்குறையுமமரரெலாமழிவுறவின்னேயென்றுவிசைந்துப்பின்ன
ரங்கணுறுமறையோர்தம்முகநோக்கியந்தணரிலழிதூவானீ
ருங்கள்குலத்தலைமைதனையிழந்திட்டீர்கேண்மினெனவுரைக்கலுற்றான்.

(இ-ள்.) இன்று சங்கரனைத்தவிர்த்துச் செய்கின்றயாகமழிக. தக்கனே நின்னுடன் இங்கிருக்குந் தேவரெல்லாம் இன்றே அழிக என்று சாபமுரைத்துப் பின்னரங்கிருந்த வேதியர்கள்முகத்தைப்பார்த்துப் பார்ப்பனரில் அலியாயுள்ளவர்களே உங்கள் குலத்தன்மையை இழந்தீர்கள் கேளுங்களென உரைக்கத்தொடங்கினர்.—எ-று.

பேசரியமறைகளெலாம்பராபரனீயெனவணங்கிப்பெரிதுபோற்று
மீசனையுமன்பரையுநீற்றொடுகண்டிகையினையுமிகழ்ந்துநீவிர்
காசினியின்மறையவராயெந்நாளும்பிறந்திறந்துகதியுறாது
பாசமதனிடைப்பட்டுமறையுரையாநெறியதனிற்படுதிரென்றான்.

(இ-ள்.) உரைத்தற்கரிய வேதங்களனைத்தும் பராபரனீயெனத்தாழ்ந்து மிகவும் துதிக்கின்ற ஈசனையும் அன்பர்களையும் விபூதிருத்திராட்சங்களையும் இகழ்ந்து நீங்கள் பூமியின் மறைபவராயெந்நாளும் பிறந்து இறந்து மோட்சமடையாது பாசத்தின் வாய்ப்பட்டு அவைதிகமாக்கத்திற் புகுதிர் என்று சபித்தனர்.—எ-று. (௩௭)

இனையநெறியாற்சாபம்பலவுரைத்துத்ததீசிமுனியிரண்டுபாலு
முனிவர்தொகைதற்சூழத்தானுறையுமாச்சிரமமுன்னிச்சென்றா
னனையவன்றன்பின்னுகைத்தக்கனென்போன்பெருந்தகவுமாற்றுநோன்பும்
புனைபுகழுஞ்செழுந்திருருவுமாற்றலுமாமனச்செருக்கும்போயிற்றன்றே.

(இ-ள்.) இந்தமுறையாகப் பலசாபங்களையுரைத்துத் ததீசிமுனிவர் இருபுறமும் முனிவர் குழாந்தம்மைச்சூழ்ந்து வாநிற்பத் தமதாச்சிரமத்தை நாடிச்சென்றனர். அத்ததீசிமுனிவர் பின்னுலேயே தக்கனுடைய பெருந்தன்மையும் செய்யுநோன்பும் புனையப்பெற்ற கீர்த்தியும் செழுமைவாய்ந்த திருவும் வன்மையும் சிறந்தமனச் செருக்கும்போயது.—எ-று. (௩௮)

அனந்தன்சாபநீங்குபடல முற்றிற்று,

ஆ திருவிருத்தம் ௧௨௧0.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தானப் படலம்.

போனதோர்பொழுதிலவன்றுவசமிற்றமகத்தூணிற்பொருக்கென்றெய்திக்
கானுலாவியகொடியுங்கழுகுமிடைந்தனயாருங்கலங்கத்தானே
மானமார்வேதவல்லிமங்கலநாணுங்கழன்றமற்றித்தன்மை
யானதோர்துன்னிமித்தப்பலவுண்டான்முடிவோன்கணவையுறாவோ.

(இ-ள்,) ததீசிமுனிவன் சென்றவுடனே அத்தக்கன் கொடிகளறுந்து விழுந்தன. யூபஸ்தம்பத்திற் காட்டிலுலவும் காகங்களும் கழுகுகளுநெருங்கின. அனைவருங் கலங்கும் வண்ணம் வேதவல்லியின் மங்கல சூத்திரமும் கழன்றது. இவைபோன்ற துன்னிமித்தங்கள் இங்ஙனம் பலவுண்டாயின இறந்துபடுவோனிடத்து அவையுண்டாகாதிருக்குமோ.—எ-று. (௧)

வேறு.

இந்தவாறுதுன்னிமித்தங்கள்பலநிகழ்ந்திடவுஞ்
சிந்தைசெய்திலன்சிறுவதுமஞ்சிலன்றீயோன்
றந்தைதன்னையுநாரணன்றன்னையுந்தகவான்
முந்துபூசனைபுரிந்தனன்முகமன்கண்மொழியா

(இ-ள்.) இவ்வண்ணம் துன்னிமித்தங்கள் பலநடைபெறுதலும் இவைகள் தனதழிவிற்காக வுண்டாவனவென்று கருதிலன் சிறிதும் மஞ்சிலன் பின்னர்க் கொடியவனான வத்தக்கன் பிதாவையும் நாராயணனையும் முறைப்படி முகமன்கூறி முதலிற்பூசித்தனன்.—எ-று. (உ)

மற்றைவானவர்யாவர்க்குமுனிவர்க்குமரபா
லெற்றுவேண்டியவவைவயெலாநல்கியேயிதற்பின்
பெற்றமங்கையர்தமக்குமாமருகர்க்கும்பெரிது
மற்றமில்லதோர்மங்கலத்தொல்சிறப்பளித்தான்

(இ-ள்.) மற்றைத்தேவரனைவருக்கும் முனிவருக்கு முறைப்படி எவைவேண்டுமோ அவையனைத்துங்கொடுத்து இதன் பின்னர்த்தான்பெற்ற புதல்வியருக்கும் சிறந்தமருகர்களுக்கும் மிகவும் அழிவற்ற மங்களகரமான பழய சிறப்புகளைச்செய்தனன்.

நாலுமாமுகக்கடவுள்சேயித்திறநல்கி
மாலும்யாவருங்காத்திடத்தீத்தொழின்மகஞ்செய்
வேலைநோக்கியேதொடங்கினனவ்விடைவேள்விச்
சாலைதன்னிடைநிகழ்ந்தனசாற்றுவன்றமியேன்.

(இ-ள்.) சிறந்த நான்குமுகங்களையுடைய பிரமன்புதல்வனான தக்கன் இவ்வண்ணமளித்துத்திருமாலும் மற்றவரனைவரும் காவல்செய்யத்தீயினாற்செய்யுந்தொழிலான யாகத்தினைச்செய்யவேண்டிய காலத்தைப்பார்த்து ஆரம்பித்தனன் இனி அவ்யாக சாலையில் நடந்தவைகளை யுரைக்கின்றேன்.—எ-று. (ச)

முன்னரேதக்கனேவலும்வினைசெயன்முறையான்
மன்னுதேனுவோராடகச்சாலை யின்மாடே
பொன்னின்மால்வரைநடுவுசேர்வெள்ளியம்பொருப்பை
யன்னதாமெனவன்னமாம்பிறங்கலையளித்த.

(இ-ள்.) தக்கன் முன்னரே கட்டளையிட்டனுப்புதலும் அவன் கட்டளைத்தொழிலை முறையே நிறைவேற்ற நிற்குங்காமதேனுவானது ஒரு பொன்மயமான அன்னசாலையினிடத்துப் பெரிய பொன்மலையின் நடுவிற்பொருந்திய வெள்ளிமலையையொப்ப அன்னமாகிய மலையை யுண்டாக்கியது.—எ-று. (ரு)

ஏதநீங்கியதீயபாலடிசிலுமெண்ணில்
பேதமாகியமுதிரையினுண்டியும்பிறவா
மோதனங்களும்வீற்றுவீற்றுகவேயுலகின்
மாதிரங்களிற்குலகிரியாமெனவகுத்த.

(இ-ள்.) குற்றமில்லாத பால்கலந்த அன்னத்தினையும் அளவற்றபேதமாகிய கடலையாதியி னுணவுகளையும் அவையன்றியுள்ள அன்னங்களையும் வரிசைவரிசையாக உலகினிற் திக்குகளிலுள்ள குலமலைகளையொப்ப வகுத்தது.—எ-று. (சு)

நெய்யினோடுளாய்விரைகெழுநுண்டுகணீவிக்
குய்யினூவியெவ்வுலகமுநயப்புறக்குழுமி
வெய்யதாகியகருனைகடிசைதொறுமேவு
மையல்யானைகளாமெனவழங்கிற்றுமாதோ.

(இ-ள்.) அனைவரும் விரும்பும்வண்ணம் நெய்யுடன் பிசைந்து மணம்வீசு நுண்ணிய பொடியைக்கலந்து தாளிப்பினாவி எவ்வுலகமும் விரும்பச்சேர்ந்து சுவையுடன் விளங்கும் பொரிக்கறிகளைத் திக்குகள்தோறும் பொருந்திய மதமயக்கம்வாய்ந்தயானைளென்று கூறுமாறு குவித்தது.—எ-று. (எ)

அண்ணல்சேர்வெந்தைதோயவைநொலையலேயாதிப்
பண்ணியங்களுந்தாரமுங்கனிவகைபலவு
மண்ணின்மேலுறுகிரியெலாங்குலகிரிமருங்கு
நண்ணினுலெனத்தொகுத்தனயாவருநயப்ப.

(இ-ள்.) ஒன்றோடொன்று பொருந்தின பிட்டு, தோசை அப்பவருக்கம் முதலிய பண்ணியவகைகளும் அரும்பண்டங்களும் பழவருக்கங்கள் பலவும் மண்ணின்மீதுள்ள மலையெலாம் குலகிரியின்பக்கத்திற் பொருந்தினாற்போல யாவரும் விரும்பும் வண்ணம் தொகுத்தது.—எ-று. (அ)

விருந்தினோர்கொளவிழுதுடன்பாறயிர்வெள்ளந்
திருந்துகங்கையும்யமுனையுமாமெனச்செய்த
வருந்துமுண்டிகள்யாவையும்வழங்குகோவதனிற்
பொருந்துகின்றதுதந்ததென்றுலதுபுகழோ.

(இ-ள்.) விருந்தினர்கொள்ளும்வண்ணம் நெய்யுடன் பால்தயிர்களின் வெள்ளங்களைத்திருந்திய கங்கையையும் யமுனையையும்போலச்செய்தது. உண்ணு முணவனைத்தையு மளித்ததேனு தன்னிடத்துப்பொருந்தும் நெய்பால் தயிராதிய தந்ததென்று கூறுவதினுற் புகழாகுமோ.—எ-று. (கூ)

தாவில்பாளிதமான்மதஞ்சாந்துதண்பனிநீர்
நாவிவெள்ளடைசெழும்பழுக்காயொடுநறைமென்
பூவுமேனையபொருள்களுநல்கினபுகழ்சேர்
தேவர்கோமகன்பணிபுரிகின்றதோர்தேனு.

(இ-ள்.) புகழ்பொருந்திய தேவராசனுக்கு ஊழியஞ்செய்யுமொப்பற்ற காமதேனு கெடாத சவ்வாது சந்தனங் குளிர்ச்சி வாய்ந்த பனிநீர் புனுகு வெற்றிலை செழுமைவாய்ந்த பாக்குடன் தேன்பொருந்திய மலர்கள் இன்னமுள்ளவைகள் முதலியவைகளையுமுண்டாக்கியது.—எ-று. (க0)

ஆவதிவ்வகையாவதுநல்கியேயங்கண்
மேவுகின்றதுமணியுமச்சங்கமும்வியன்சேர்
காவுமம்புயநிதியமுந்தக்கனுங்கடியோ
னேவலாலருட்சாலையிலடைந்தனவிமைப்பில்.

(இ-ள்.) காமதேனுவானது இவ்வண்ணம் வேண்டுமவைகளை 'யுண்டாக்கி அவ்விடத்திலிருக்கின்றது. பின்னர்த் தக்கனுகிய கொடியவனது கட்டளையாற்சிந்தாமணியும் சங்கநிதியும் பெருமைவாய்ந்த கற்பகச்சோலையும் பதுமநிதியும் கணப்பொழுதிற் தானசாலையை யடைந்தன.—எ-று. (கக)

கணிதமில்லதோர்பரிதிகண்மேனியிற்களுலு
மணிகளோர்புடைதொகுத்தனவாடகவரைபோ
லணிகொள்காஞ்சனமோர்புடைதொகுத்தனவம்பொற்
பணிகளாடைகளோர்புடைதொகுத்தனபடைத்தே.

(இ-ள்.) அளவற்ற சூரியர்களின் பிரகாசமாக விளங்குகின்ற மணிகளை யொருபுறத்தில் தொகுத்தன. பொன்மலைபோல அழகுவாய்ந்த தங்கத்தினை யொருபுறத்திற் தொகுத்தன அழகிய பொன்னுபரணங்களையும் ஆடைகளையும் உண்டாக்கி ஒரு புறத்தில் குவித்தன.—எ-று, (கஉ)

மற்றும்வேண்டியபொருளெலாமுதவியம்மருங்கி
லுற்றவேலையத்தக்கனதேவலினெழுகா

நிற்றல்போற்றியமுனிவரர்யாவருநிலத்தோர்க்
கிற்றெலாமிவண்வழங்குதும்யாமெனவிசைத்தார்.

(இ-ள்.) பின்னரும் வேண்டிய பொருளனைத்தையும் உண்டாக்கிஅப்பக்கத்தி லிருந்தவுடனே அத்தக்கன் ஏவலின் வழிநடவாநின்ற முனிவரனைவரும் நாம் இவைகளையெல்லாம் பூவுலகினருக்குக் கொடுப்போமென்று கூறினார்கள். (கரு)

வேறு.

இன்னவேலையிலிச்செயல்யாவையு
முன்னமேயுணர்முப்புரிநூலினர்
துன்னியேமனந்தூண்டவந்தொல்லையி
லன்னசாலைதனையணைந்தாரரோ.

(இ-ள்.) இத்தகைய சமயத்தி லிச்செயலனைத்தும் முன்னரே யுணர்ந்த முப்புரிநூலினரான மறையவர் நெருங்கி மனந்தூண்டாநிற்ப விரைந்துசென்று அன்னசாலையை யடைந்தார்கள்.—எ-று. (கசு)

சாலைகாண்டலுந்தக்கனையேத்தியே
பாலர்தன்மையிற்பாடினராடினர்
கோலமார்பிற்குலாவியவெண்டுகில்
வேலையாமெனவீசிநின்றார்த்துளார்.

(இ-ள்.) அன்னசாலையைக்கண்டவுடனே தக்கனைத்துதித்துச் சிறுவர்தன்மையினராய்ப்பாடி ஆடி அழகிய மார்பிற்பொருந்திய வெள்ளாடையை மேல்வீசிக்கடல்போல் ஆரவாரித்தார்கள்.—எ-று. (கஎ)

மிண்டுகின்றவவ்வேதியர்தங்களைக்
கண்டுவம்மின்கதுமெனநீரெனாக்
கொண்டுசென்றுகுழுவொடிருத்தியே
யுண்டிதன்னையுதவுதன்மேயினார்.

(இ-ள்.) நெருங்கிவாரின்ற வம்மறையோர்களை முனிவர்கண்டு நீவிர்விரைந்து வாருங்கள் என்று அழைத்துச்சென்று கூட்டமாக இருத்தி உணவுகளை யளிக்கத் தொடங்கினார்கள்.—எ-று. (கஅ)

மறுவில்செம்பொன்மணிகெழுதட்டைக
ளிறுதியில்லனயாவர்க்குமிட்டுமே
னறியவுண்டிகணல்கியின்னோர்தமக்
குறவினரெனவூட்டுவித்தாரவண்.

(இ-ள்.) குற்றமற்ற செம்பொன்னாலாகிய அழகு விளங்குகின்ற தாம்பாளங்களை அனைவருக்கும் எதிரிலிட்டு அவைகளில் நறுமணம் வீசும் உணவுகளைப்பரிமாறி இவர்கட்கு உறவினரையொப்ப அவ்விடத்தி லுண்பித்தார்கள்.—எ-று. (கஎ)

அன்னகாலையரும்பசிதீர்தரத்
துன்னவுண்டுஞ்சுவையுடைத்தாதலா
லுன்னியுன்னியிவ்வுண்டிகள்சாலவு
மின்னம்வேண்டுமெனவுரைப்பார்சிலர்.

(இ-ள்.) அப்பொழுது அரியபசிநீங்க நிறையப்புசித்துப் புசித்த உணவு மிகவுஞ் சுவையுடையனவாதலின் நினைத்து நினைத்து இவ்வுண்டிகள் மிகவும் இன்னம் வேண்டுமென்று சிலர் கூறுவார்கள்.—எ-று. (கஅ)

குற்றமொன் றுளகூறுவதென்னினி
நற்றவஞ்செய்துநான்முகனுலிவ
ணுற்றவுண்டியெலாமுணவோர்பசி
பெற்றிலோமெனப்பேதுறுவார்சிலர்.

(இ-ள்.) ஒருகுற்றமுளது இனியென்ன செய்யப்போகின்றோம் நல்லதவஞ் செய்து பிரமதேவனுல் இவ்விடத்திற்பொருந்திய உணவெலாமுண்ணுதற்கு ஒரு பசியைப் பெற்றிலோமென்று சிலர் வருந்துவார்கள்.—எ-று. (கக)

வீறுமுண்டிமிசைந்திடவேண்டும்வாய்
நூறுநூறதெனநுவல்வார்தமை
யேறவேண்டுமிதிலமையாதெனச்
சீறியேயிகல்செய்திடுவார்சிலர்.

(இ-ள்.) மிக்க இவ்வுணவினை உண்ணுதற்கு வேண்டும் வாய்கள் பதினுயிரம் வேண்டுமென்று கூறிய சிலருடன் இன்னம் அதிகமாகவேண்டுமெனக் கூறிச் சிலர் சண்டை செய்வார்கள்.—எ-று. (உ0)

புலவர்கோனகர்போற்றியதேனுவந்
தலகிலிவ்வுணவாக்கியதாலெனுச்
சிலர்புகன்றனர்தேக்கிடவுண்மினோ
வுலவலீரெனவோதுகின்றூர்சிலர்.

(இ-ள்.) தேவராசனுடைய நகரத்தை உணவினுற்காத்த காமதேனுவந்து அளவற்ற இவ்வுணவுகளையுண்டாக்கியதென்று சிலர் கூறினுர்கள் தேக்கெறிய உண்ணுங்கள் விடாதீர்களென்று சிலர் கூறுகின்றூர்கள்.—எ-று. (உக)

அறிவிலாதவயன்மகன்யாகமின்
றிறுதியாமென்றிசைத்தனரன்னது
பெறுதியேனுமிப்பேருணவேநமக்
குறுதிவல்லையிலுண்மினென்பார்சிலர்.

(இ-ள்.) அறிவற்ற தக்கனுடைய யாகமானது இன்றழியுமென்று கூறினுர்கள் அது நிறைவேறுவதாயினும் இப்பெரிய உணவே நமக்குறுதி, விரைவாக உண்ணுங்களென்று சிலர் கூறுவார்கள்.—எ-று. (உஉ)

உண்டிலேமிவணுண்டதிலீதுபோற்
கண்டிலேமொருகாட்சியுமின்பமுங்
கொண்டிலேமின்றுகொண்டிதிலீசனுல்
விண்டிலேமெனின்மேலதென்பார்சிலர்.

(இ-ள்.) இங்குண்டோ மல்லோம் இவ்வன்ன சாலையிலுண்டதில் இதுபோல ஒரு காட்சியும் கண்டிலேம் இன்பமடைந்திலேம் இன்று நாமடைந்தவற்றுள் சிவபெருமானுல் அழியாதிருப்போமாயின் அதுவே மேலானது என்று கூறுவார்கள். (உங)

எல்லையில்லுணவீயுமித்தேனுவை
நல்லநல்லதொர்நாண்கொடியாத்திவண்
வல்லைபற்றிநம்மாநகரிற்கொடு
செல்லுதும்மெனச்செப்புகின்றூர்சிலர்.

(இ-ள்.) அளவற்றவுணவளிக்கு மித்தேநுவை மிகவு நல்ல கயிற்றூற்கட்டி இங்குவிரைந்து பிடித்து நமது சிறந்தவூரிற்கொண்டு செல்வோமெனச் சிலர்கூறுகின்றூர்கள்—எ-று. (உச)

மக்கள்யாவரும்வானவர்யாவரு
மொக்கல்யாவருமுய்ந்திடவாழ்தலாற்
றக்கனேற்றதவத்தினுமுண்டுகொல்
மிக்கதென்றுவிளம்புகின்றார்சிலர்.

(இ-ள்.) மனிதரனைவரும் தேவரனைவரும் சுற்றத்தினரனைவரும் உய்யும் வண்ணம் வாழ்தலால் தக்கன் செய்த தவத்தினை விடவுமுளதோ உயர்ந்ததென்று சிலர் கூறுகின்றார்கள்.—எ-று. (உ௫)

மைந்தனிட்டனமாந்திடநான்முகன்
றந்திலன்வயின்சாவுமாங்கவன்
சிந்தைமேலழுக்காறுசெய்தானென
நொந்துநொந்துநுவலுகின்றார்சிலர்.

(இ-ள்.) தன்மைந்தனிட்டவற்றை உண்ணுதற்கு அவன்தந்தையான பிரமன் மிகவும் பெரியவற்றினைத் தந்தானிலன் அவன்மனத்தின்கண் பொறாமையுற்றான் என்று வருந்திவருந்திச் சிலர் உரைத்தனர்.—எ-று. (உ௬)

குழுவுசேர்தருகுய்யுடையுண்டிகள்
விழைவினோடுமிசைந்தனமாற்றவும்
பழுதிலாவிப்பரிசனர்தம்மொடு
மெழுவதெப்படியென்றுரைப்பார்சிலர்.

(இ-ள்.) வாசனைத்திரவியங்கள் கலந்து தாளித்த உணவுகளைவிருப்பத்துடன் அருந்தினோம் மிகவும் குற்றமற்ற இச்சிநேகிதர்களுடன் எப்படியெழுவதென்று சிலர் கூறுவார்கள்.—எ-று. (உ௭)

இந்தநல்லுணவீண்டுநுகர்ந்திட
நந்தமைந்தரைநம்மனையாட்கொடு
வந்திலம்மினிவந்திடுமோவெனச்
சிந்தைசெய்தனர்செப்புகின்றார்சிலர்.

(இ-ள்.) இந்த நல்ல உணவினை இங்குண்ணுதற்கு நமது புதல்வரையும் நம் மனைவியரையும் கூடக்கொண்டுவந்திலேம் என்றுசிந்தித்துச்சிலர் கூறுகின்றார்கள். (உ௮)

அன்னபற்பலவார்கலியாமெனப்
பன்னிருங்கும்பனவர்கள்கேட்டன
ரென்னமற்றவையாவையுமார்தர
முன்னளித்துமுனிவரருத்தினர்.

(இ-ள்.) இவைபோல்வனபலவற்றைக் கடலைப்போல மலிவித்து உண்ணு மறையோர்கள் கேட்டன எவையோ அவைகள் அனைத்தையும் உடனே அவர்கள் எதிர்கொடுத்து முனிவர்கள் உண்பித்தார்கள்.—எ-று. (உ௯)

அருத்திமிச்சிலகற்றியருந்தவ
விருத்திமேவியவேதியர்தங்களை
யிருத்திமற்றொரிருக்கையில்வாசநீர்
கரைத்தசந்தின்கலவைவழங்கினர்.

(இ-ள்.) உண்பித்து உச்சிட்டமாகிய அரியதவவிருத்தி பொருந்திய மறையவர்களை வேறோரிடத்திலிருத்தி வாசனைபொருந்திய பனிநீரிற்கரைத்த சந்தனக்கலவையை வழங்கினார்கள்.—எ-று. (௩0)

நளிகுலாவியநாவிநரந்தம்வெண்
பளிதம்வெள்ளடைபாகுடனேனவை
யளியுலாவுமணிமலர்யாவையு
மொளிறுபீடிகையுய்த்தனர்நல்கினர்.

(இ-ள்.) குளிர்ச்சிவாய்ந்த சவ்வாதுகஸ்தூரி வெள்ளியகர்ப்பூரம் வெற்றிலை பாக்குடன் மற்றையவைகளையும் வண்டுலாவும் அழகிய மாலையாதிய யாவையும் ஒளி விளங்கும் பீடங்களில் வைத்துக் கொடுத்தார்கள்.—எ-று. (௩க)

அரைத்தசாந்தமணிந்துமெய்யெங்கணும்
விரைத்தபூந்துணர்வேய்ந்துபைங்காயடை
பரித்துநின்றபனவர்புத்தேளுறுந்
தருக்களாமெனச்சார்ந்தனரென்பவே.

(இ-ள்.) உடன் முழுதும் அரைத்தசந்தனம் பூசிமணம்பொருந்தியபூங்கொத் தணிந்து பசியபாக்குவெற்றிலைகளைத் தாங்கிநின்ற பிராமணர்கள்தேவர்நாட்டிற்பொ ருந்திய கற்பகமரங்களைப்போலச்சென்றார்கள்.—எ-று. (௩உ)

ஆனபான்மையிலந்தணர்யாவரு
மேனகாதலின்வெய்தெனவேகியே
வானமண்ணிடைவந்தெனவேர்கெழு
தானசாலைதனையடைந்தார்களே.

(இ-ள்.) இவ்விதமாக மறையவரனைவரும் மிக்க விருப்பத்துடன் விரைந்து சென்று சுவர்க்கநாடுமண்ணினில் வந்தாற்போல அழகுவிளங்குகின்றதான சாலையை யடைந்தார்கள்.—எ-று. (௩௩)

அடையும்வேலையயனருள்காதலன்
விடையினாலங்கண்மேவுமுனிவர
ரிடையறாதவர்க்கீந்தனரீந்திடுங்
கொடையினாலெண்ணில்கொண்டலைப்போன்றுளார்.

(இ-ள்.) அங்ஙனம் மறையவர்கள் வந்தவுடனே பிரமன் புதல்வனான தக்க னுடைய கட்டளையால் அவ்விடத்திலிருக்கு முனிசிரேட்டர்கள் விடாமற் கொடுக்குந் தன்மையிலளவற்றமேகங்களைப்போன்றவர்களாகி யோயாமற்கொடுத்தார்கள்.—எ-று.

பொன்னைநல்கினர்பூணொடுபூந்துகி
றன்னைநல்கினர்தண்சுடரோனென
மின்னைநல்கும்வியன்மணிநல்கினர்
கன்னியாவுங்கறவையுநல்கினர்.

(இ-ள்.) பொன்னைக் கொடுத்தார்கள் ஆபரணங்களுடன் அழகியஆடைகளை அளித்தார்கள் சந்திரனையொப்ப ஒளிவீசும் பெரியமணிகளையளித்தனர் கன்னிப்பசுக் களையுங் கறவைப்பசுக்களையும் அளித்தார்கள்.—எ-று. (௩௫)

படியிலாடகப்பாதுகைநல்கினர்
குடைகணல்கினர்குண்டிகைநல்கினர்
மிடையும்வேதியர்வேண்டியவேண்டியாங்
கடையநல்கினரங்கைகள்சேப்பவே.

(இ-ள்.) ஒப்பற்றபொன்பாதுகைகளைக்கொடுத்தார்கள் குடைகளைக்கொ டுத்தார்கள் கமண்டலங்களைக் கொடுத்தார்கள் இங்ஙனம் அங்கு நெருங்கின மறைய வர்கள் விரும்பியவைகளை விரும்பியபடியே அகங்கைகள் கன்றும்வண்ணம் வாரிக் கொடுத்தார்கள்.—எ-று. (௩௬)

இந்தவண்ணமிறையதுந்தாழ்க்கிலர்
முந்துநின்றமுனிவரராண்டுறு
மந்தணாளர்க்கயினியொடர்ம்பொரு
டந்துநின்றுதயங்கினரோர்புடை.

(இ-ள்.) இவ்விதம் கணப்பொழுதுஞ் காலதாமதஞ் செய்யாதவர்களாய்த் தானஞ் செய்தலில்முற்பட்டு நின்றமுனிவரர்கள் அங்கு வந்த மறையவர்களுக்குச் சோறுடனே வேண்டும்பொருள்களைக் கொடுத்துக்கொண் டொருபுறத்தில் விளங்கினார்கள்.

அற்றமில்சிறப்பந்தணராயிடைப்
பெற்றபெற்றபெருவளன்யாவையும்
பற்றிமெல்லப்படர்ந்தனர்பற்பல
பொற்றைசெய்தனர்போற்றினரோர்புடை.

(இ-ள்.) அழிவற்ற சிறப்பினையுடைய அந்தணர்கள் அவ்விடத்திற்பெற்ற பெற்ற பெருவளனனைத்தினையும் எடுத்து மெல்லெனச்சென்று ஒருபுறத்தில்மலைபோலக் குவித்தனர்.—எ-று. (௩அ)

வரத்தினுகும்வரம்பில்வெறுக்கைதம்
புரத்தினுய்த்திடும்புந்தியில்லன்னவை
யுரத்தினுற்றமக்கொப்பரும்வேதியர்
சிரத்தின்மேற்கொடுசென்றனரோர்புடை.

(இ-ள்.) வரத்தினுற்கிடைத்த அளவற்ற செல்வங்களைத் தமதூருக்குக் கொண்டுசெல்லும் புத்தியினுல் அவைகளை வன்மையால் தமக்கொப்பற்றமறையவர்கள் ஒரு புறத்திற்தலைமேற் கொண்டுசென்றார்கள்.—எ-று. (௩௯)

அரிதனூர்தியுமன்னமுங்கீழ்த்திசை
யரிதனூர்தியுமாங்கவன்மாக்களு
மரிதனூர்தியுமாருயிர்கொண்டிடு
மரிதனூர்தியுமார்ப்பனவோர்புடை.

(இ-ள்.) விண்டுவின்வாகன மானகருடனும் அன்னமும் கிழக்குத் திசைக்குரிய இந்திரனுடைய வாகனமான ஐராவதமும் அவனதுமற்றுள்ள உச்சைச்சிரவமுதலிய குதிரையாதிகளும் வருணனதுவாகனமும் அரியஉயிரைக் கவருகின்ற யமனுடையவாகனமும் ஒரு புறத்தின் முழங்குகின்றன.—எ-று. (௪0)

தானமீதுதயங்கியதேவரு
மேனையோர்களுமிவ்விடையீண்டலின்
மீனமார்தருவிண்ணெனவெண்ணிலா
மானகோடிமலிகின்றவோர்புடை.

(இ-ள்.) சுவர்க்கத்தில் விளங்கிய தேவர்களும் பிறரும் இவ்விடத்து வந்து நெருங்குதலால் நட்சத்திரம் பொருந்திய வானம்போல வெள்ளியநிலவுவீசும்விமான கோடிகள் ஒரு புறத்தின் மிகுந்துகாணப்படுகின்றன.—எ-று. (௪க)

நரம்பின்வீணைளுரனுறும்வேய்ங்குழல்
பரம்புதண்ணுமைபண்ணமைபாடனூல்
வரம்பினேய்ந்திடவானவர்நாடவே
யரம்பைமார்கணின்றுடினரோர்புடை.

(இ-ள்.) நரம்பினையுடைய வீணையும் ஒலிக்கின்ற வேய்ங்குழலும் மிக்கதண்ணுமைகளும் பண்ணமைந்த பாடல்களும் நூல்வரம்பிற் பொருந்தத் தேவர்காணும் வண்ணம் ஒரு புறத்தில் அரம்பைமாதர்கள் நின்றுடினார்கள்.—எ-று. (௪உ)

தேவர்மாதருஞ்சிற்சிலதேவருந்
தாவிலாமகச்சாலையின் வைகிய
காவுதோறுங்கமலமலர்ந்திடு
மாவிதோறுமுற்றுடினரோர்புடை.

(இ-ள்.) தேவப்பெண்களும் சிற்சிலதேவர்களும் கெடாதயாகசாலையிற் பொருந்திய சோலைகள்தோறும் தாமரைகளலர்ந்த வாவிகள்தோறும் புகுந்து ஒரு புறத்தில் விளையாடினார்கள்.—எ-று. (சங)

வேதவல்லிவியப்புடனல்கிய
காதன்மாதருங்காமருவிண்ணவர்
மாதராருஞ்சசியுமகத்திரு
வோதிராடியங்குற்றனரோர்புடை.

(இ-ள்.) வேதவல்லி அதிசயமாகப்பெற்ற ஆசையினையுடைய பெண்களும் அழகுவாய்ந்த தேவப்பெண்களும் இந்திராணியும் யாகவைபவத்தை எடுத்துக்கூறி அவைகளைப்பார்த்துக்கொண்டொரு புறத்திலிருந்தனர்.—எ-று. (சச)

இனையபற்பலவெங்கணுமீண்டலிற்
கனைகொள்பேரொலிகல்லெனவார்த்தன்
வனையன்வேள்விக்ககன்கடல்யாவையுந்
துனையவந்தவண்சூழ்ந்தனபோலவே.

(இ-ள்) இவ்விதமான செயல்கள்பல எவ்விடத்திலும் பொருந்துதலால் அத்தக்கன் யாகத்துக்கு விரிந்தகடலனைத்தும் விரைந்து வந்து அவ்விடத்திற்சூழ்ந்தன போல நெருங்கிய பேரோசை கலிரெனமுழங்கின.—எ-று. (சடு)

ஊனமேலுறும்பருமிம்பரு
மேனகாதலின்மிக்கவணீண்டுவ
வானயாறுவருநதியும்புவித்
தானயாறுந்தழீஇயின்போன்றவே.

(இ-ள்.) எதிர்காலத்திற்றுன்ப மடையும் மேலுலகினரும் இவ்வுலகினருமிகுந்தகாதலினன் மிக்கு அவவிடத்திற்பொருந்தி இருத்தல் வானின்வழிவந்த கங்கையும் பூமியிலுள்ள மற்றைநதிகளும் ஒன்றோடொன்று கலந்தனபோன்றன. ()

தானப்படலமுற்றிற்று.
ஆ திருவிருத்தம் கஉடுசு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வேள்விப்படலம்.

இகந்தசீர்பெறுமிப்பெருஞ்சாலையி
லகந்தைமிக்கவயன்பெருங்காதலன்
மகம்புரிந்ததுமற்றதுசிந்திடப்
புகுந்தவாறும்பொருக்கெனக்கூறுகேன்.

(இ-ள்.) அளவுகடந்த் சிறப்புவாய்ந்த இந்தப்பெரிய சாலையில் அகங்காரமிகுந்த தக்கன்யாகஞ்செய்தலும் அவ்யாகமழிய நடந்தவரலாறும் விரைவாகவுரைகின்றேன் —எ-று. (க)

வேறு.

மருத்துழாய்முடிமாலயன்பாங்குறமகத்தின்
கருத்தனுகியதீயவன்முன்னமேகருதி
வரித்தமேலவர்தங்களை நோக்கியேமரபி
னிருத்துமுத்தழலென்றலுநன்றெனவிசைந்தார்.

(இ-ள்.) மணம்பொருந்திய துளவமாலையணிந்த முடியினையுடைய மாலுமயனுமருகிலிருக்க யாககர்த்தனுகிய கொடியதக்கன் முன்னரே யாலோசித்து வரித்தமேலோர்களைப் பார்த்து முறைமைப்படி மூவகையக்கினிகளையும் குண்டங்களிலமையுங்களென்றுகூற நல்லதென்று இசைந்தார்கள்.—எ-று. (உ)

முற்றுநாடியவிருத்திஞேராணியின்முறையா
லுற்றவங்கியைவேதிகைப்பறப்பைமேலுய்த்துச்
சொற்றமந்திரமரபினுற்பரிதிகள்சூழ்ந்து
மற்றுமுள்ளதோர்விதியெலாமியற்றினர்மன்னே.

(இ-ள்.) முழுதுமுணர்ந்த ரித்விக்குகள் அரணிகளில் முறையாகப் பொருந்திய அக்கினியை வேதிகைகளில் வைத்துள்ள நெய்விடுகருவிகளில் வைத்து உரைக்கப்பெற்ற மந்திரமுறையினுற் குண்டங்களின் வட்டங்களைச்சுற்றிப் பின்னுமுள்ள விதியனைத்தையும் செய்துமுடித்தனர்.—எ-று. (௩)

ஆங்குமுத்தழல்விதிமுறைசெய்தலுமயன்சேய்
பாங்கருற்றிடுமிருத்தினர்யாரையும்பாரா
நீங்கணுங்களுக்காகியசெய்கையைநினைந்து
தூங்கலின்றியேபுரிமினேகடிதெனச்சொன்னன்.

(இ-ள்.) அவ்விடத்தில் மூன்றக்கினிகளையும் முறையே உண்டாக்குதலும் பிரமன்புதல்வனுன தக்கன் அருகிலிருந்த ரித்விக்குகள் அனைவரையும்பார்த்து நீங்கள் உங்களுக்கான செய்கையைக்கருதித் தூங்காமல் விரைவாகச் செய்யுங்களென்று கூறினன்.—எ-று. (௪)

சொன்னவாசகங்கேட்டலுமிருத்திஞேர்தொகையின்
முன்னமாகியவம்மகந்தனக்கவிமுழுதும்
வன்னியாதியாஞ்சமிதையுந்தருப்பையுமற்று
மின்னபோல்வதுங்கொடுவழங்கினர்களாதிருவர்.

(இ-ள்.) சொன்னமொழியைக் கேட்டவுடனே பன்னிரண்டு ரித்விக்குகள் முன்னரே சித்தப்படுத்தியுள்ள அந்தயாகத்துக்குரிய அவிமுழுமையும் வன்னிமுதலிய சமித்தக்களும் தருப்பையும் ்வைபோல்வனவுங்கொண்டு ஆகுதிசெய்தார்கள்.

அந்தவேள்விசெய்வித்தனரொருவராலவிக
ளெந்தயல்லவர்கொள்ளவேயவரவர்க்கிசைத்த
மந்திரந்தனைப்புகன்றனரொருவரவ்வானோர்
தந்தமைக்குறித்தழைத்தனரொருவர்பேர்சாற்றி.

(இ-ள்.) ஒருரித்விக்கானவர் அந்தயாகத்தை நடத்தினர் மற்றொருவர் அவிகளை எமது சிவபெருமானன்றியுள்ளவர்கள் பெறும்வண்ணம் அவரவர்க்குக்கூறிய மந்திரங்களையுரைத்தனர் மற்றொருவர் அத்தேவர்களின் பெயரினைக்கூறி அழைத்தனர்.

மற்றவர்க்கெலாமமைந்திடுமெவிகளைமலர்க்கை
பற்றியங்கிவாயளித்தனரொருவரப்பரிசி
னற்றநோக்கியேயிருந்தனரொருவரங்கதற்கு
முற்றுநல்லருள்புரிந்தனரொருவரம்முதல்போல்.

(இ-ள்.) ஒருவர் அத்தேவருக்காகப் பொருந்திய அவிகளை மலரனையகையியினிலெடுத்து அக்கினியினிட மளித்தார்கள். அந்தமுறையில் ஒருவர் காலம்பார்த்திருந்தனர் அதற்கு மற்றொருவர் அம்முதலையொப்பமுழுது நல்லருள் செய்தனர்.-எ-று.()

இருத்திஞேர்களும்பிறருமீதியற்றுழியாக
கருத்தனுகியதக்கனத்தேவரைக்கருதிப்
பரித்துநுங்குதிரென்றவிபுரிதொறும்பகர்ந்தே
யருத்தியுற்றனன்கடவுளர்தமக்கெலாமமுதின்.

(இ-ள்.) ரித்விக்குகளும் பிறரும் இவைகளைச்செய்யுங்காலத்து யக்ஞகருத்தனுகிய தக்கன் அந்தத்தேவர்களை நினைத்து அவிகொடுக்குந்தோறும் நீங்கள் அவியைப்பெற்றுண்ணுங்களென்றுகூறி அத்தேவர்களையமுதத்தையொப்ப வுண்பித்திருந்தனன் —எ-று. (அ)

திருந்துகின்றநற்சுவையினுற்றாய்மையாற்றிகழு
மருந்துபோன்றனவென்னினுமுயிர்தொறுமனத்து
மிருந்தவெம்பிரானன்றியேயிசைதலினிமையோர்க்
கருந்துநீரலாநஞ்செனலாகியவவிகள்.

(இ-ள்.) திருத்தமான நல்லசுவையினுலும் தூய்மையினுலும் விளங்காநின்ற அமுதம்போன்றன வாயினும் உயிர்தோறுமனத்தும் எழுந்தருளியிருந்த எம்பிரானன்றியே அருந்ததலால தேவருக்கு அந்த அவியானது உண்ணத்தகாத விடத்தைப்போலவாயின.—எறு. (கூ)

வேள்விப்படலமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் கஉசுரு.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உமைவருபடலம்.

பேசுமிவ்வேள்விபிதாமகன்மைந்த
னாசம்விளைந்திடநாடியியற்ற
மாசறுநாரதமாமுனியுற்றே
காசினிமேலிதுகண்டனனன்றே.

(இ-ள்.) உலகினில் உரைக்கப்பெற்ற இந்த யாகத்தினைப் பிரமன் புதல்வனான தக்கன் நாசமுண்டாமாறு யோசித்துச்செய்யாநிற்கக் குற்றமற்ற சிறந்த நாரதமுனிவன் அங்குத்தக்கனியற்று மவ்வியாகத்தினைப்பார்த்தான்.—எ-று. (க)

கண்டனனுமைமர்கண்டனைநீக்கிப்
புண்டரிகந்திகழ்புங்கவன்மைந்த
னண்டருடன்மகமாற்றினனன்னோன்
றிண்டிறல்கொல்லிதுசெய்திடலென்னா.

(இ-ள்.) நீலகண்டரான சிவபெருமானை விலக்கிக் கமலமலரில் விளங்கும் பிரமன் புதல்வனான தக்கன் தேவருடனிருந்து யாகஞ்செய்கின்றனன் இது செய்திடுதல் அவனுடைய வன்மையாலோவென்று.—எ-று. (உ)

எண்ணியநாரதனெவ்வுலகுஞ்செய்
புண்ணியமன்னதொர்பூங்கயிலாய
நண்ணிமுன்னின்றிடுநந்திகளுய்ப்பக்
கண்ணுதல்சேவடிகைதொழுதுற்றான்.

(இ-ள்.) தன்மனதினுட் கருதிய நாரதன் அனைத்துலகமுஞ் செய்த புண்ணியம்போன்ற அழகிய கைலாயத்தை யடைந்து தலைவாசலினிற்கு நந்தியடிகள் அநுப்ப உட்சென்று நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானுடைய செவ்விய திருவடிகளைவணங்கியருகிலெய்தினன்.—எ-று. (ங)

கைதொழுதேத்தியகாலையன்னானை
மைதிகழ்கந்தரவள்ளல்கண்ணுற்றே
யெய்தியதென்னிவணிவ்வுலகத்திற்
செய்தியதென்னதுசெப்புதியென்றான்.

(இ-ள்.) கரங்கூப்பித் துதித்தகாலத் தந்தநாரதனைக் கருமைவிளங்கும் கண்டத்தினையுடைய சிவபெருமான் பார்த்து எதைக்கருதிவந்தனை இந்த உலகத்திலென்ன விசேடச்செயலதனை யுரைத்தி என்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று. (ச)

எங்கணுமாகியிருந்தருள்கின்ற
சங்கரனிம்மொழிசாற்றுதலோடு
மங்கதுவேலையிலம்முனிமுக்கட்
புங்கவகேட்டியெனப்புகல்கின்றான்.

(இ-ள்) அனைத்துப் பொருளிலும் வியாபித்திருப்போரான சிவபெருமான் இவ்வசனமருளிச் செய்தவுடனே அப்பொழுது அந்நாரத முனிவன் திரிலோசனரான பெருமானே! கேட்பீராக என்று கூறுகின்றான்.—எ-று. (ரு)

அதிர்தருகங்கையதன்புடைமாயோன்
விதிமுதலோரொடுமேதகுதக்கன்
மதியிலியாயொர்மகம்புரிகின்றான்
புதுமையிதென்றுபுகன்றனனம்மா.

(இ-ள்.) சிறந்த தக்கனென்பான் புத்தியில்லாதவனாக முழங்காநின்ற கங்காநதியின் கரையில் மாயோன் பிரமன் முதலிய தேவர்களுடன் ஒருயாகஞ் செய்கின்றான் இதுதான் புதுமையென்று நாரதமுனிவனுரைத்தனன்.—எ-று. (சு)

ஈங்கிதுகூறலுமெம்பெருமான்றன்
பாங்கரின்மேவுபராபரைகேளா
வாங்கவன்மாமகமன்பொடுகாண்பா
னேங்குமகிழ்ச்சியுளத்திடைகொண்டாள்.

(இ-ள்.) இதனை யுரைத்தவுடனே எம்பெருமானுடைய இடப்புறத்திலிருந்த பராபரையான தாட்சாயணிதேவியார் அதனைக்கேட்டு அத்தக்கனுடைய சிறந்த யாகத்தினைவிருப்பத்துடன் பார்த்தற்கு மிக்க மகிழ்வினை உள்ளத்திற் கொண்டனள். (எ)

அங்கணனல்லருளாலவையான்றன்
பங்குறைகின்றனள்பாங்கரினீங்கி
யெங்கள்பிரானையெழுந்துவணங்கிச்
செங்கைகுவித்திதுசெப்புதலுற்றாள்.

(இ-ள்.) அழகிய கண்களையுடைய சிவபெருமானது நல்லருளினால் அவரது பக்கத்திலிருக்கு முமாதேவி பக்கத்தினின்று மெழுந்து எங்கள் பெருமானைவணங்கிச் செவ்விய கரங்களைக்குவித்து இதனை யுரைக்கத் தொடங்கினாள்.—எ-று. (அ)

தந்தையெனப்படுதக்கனியற்று
மந்தமகந்தனையன்பொடுநோக்கி
வந்திடுகின்றனன்வல்லையிலின்னே
யெந்தைபிரான்விடையீகுதியென்றாள்.

(இ-ள்.) தந்தையென்று கூறப்படுகின்ற தக்கன் செய்கின்ற வந்த யாகத்தை விருப்பத்துடன் பார்த்து விரைந்து வருகின்றேன் இப்பொழுதே எந்தைபிரானே விடையருள்வாயாகவென்று கூறினாள்.—எ-று. (கூ)

என்றலுநாயகனேந்திழைதக்க
னுன்றனையெண்ணலனும்பர்களோடும்
வன்றிறலெய்திமயங்குறுகின்றா
னின்றவன்வேள்வியிலேகலையென்றான்.

(இ-ள்.) உமாதேவியாரிவ்வாறு கூறியவுடனே சிவபெருமான் உமையே? தக்கன் உன்னை மதியான் தேவர்களுடன் மிக்க செருக்குற்று மயங்குகின்றனன் ஆதலின் இப்பொழுது அவன் யாகத்துக்குப் போகாதே யென்றருளிச்செய்தனர். (கய)

இறையிதுபேசலுமேந்திழைவேதாச்
சிறுவனெனப்படுதீயதொர்தக்க
னறிவிலனாகுமவன்பிழைதன்னைப்
பொறுமதியென்றடி பூண்டனண்மாதோ.

(இ-ள்) சிவபெருமானிதனை யருளிச்செய்தவுடனே உமாதேவியார் பிரமன் மகனான தக்கன் என்றுரைக்கப்படுங் கொடியோன் அறிவிலியேயாவன் ஆதலின் அவன் செய்த பிழையைப் பொறுப்பாயாகவென்று திருவடியில் வணங்கினாள்.—எ-று.

பூண்டனள்வேள்விபொருக்கெனநண்ணி
யீண்டிவண்மேவுவல்வீடருள்செய்யுந்
தாண்டவனீவிடைதந்தருளென்றாண்
மாண்டகுபேரருள்வாரிதிபோல்வாள்.

(இ-ள்.) மாட்சிமை மிக்க பேரருட் கடலனைய உமாதேவி இறைவனை வணங்கி வீட்டினை யருள்செய்கின்ற தாண்டவமூர்த்தியே விரைந்து சென்று திரும்பியிங்கு வருவேனென்று கூறினாள். —எ-று. (கஉ)

மாதிவைகூறலும்வன்மைகொடக்கன்
மேதகுவேள்வியைப்பினைநோக்குங்
காதலையேலதுகண்டனைவல்லே
போதியென்றுபுகன்றனன்மேலோன்.

(இ-ள்.) உமாதேவியாரிதனை யுரைத்தவுடனே மேலோனான சிவபெருமான் நீ வன்மைவாய்ந்த தக்கனுடையயாகத்தைக்காணவேண்டும் விருப்பினையுடையவளானாற் கண்டுவிரைந்து திரும்பிவருவாயாக என்றருளிச்செய்தனர்.—எ-று. (கங)

வேறு.

அரன்விடைபுரிதலுமம்மையாங்கவன்
றிருவடிமலர்மிசைச்சென்னிதாழ்ந்தெழா
விரைவுடனீங்கியோர்விமானத்தேறினாள்
மரகதவல்லிபொன்வரையுற்றாலென.

(இ-ள்.) சிவபெருமான் விடையளித்தவுடனே உமாதேவி அவரது திருவடி மலர்மீது தலைசாய்த்துவணங்கி யெழுந்து விரைவாக அவ்விடத்தை விடுத்து மரகதவல்லி பொன்மலையினுச்சியினிருந்தாற்போல ஒரு விமானத்திலேறினாள். (கச)

ஐயைதன்பேரருளனைத்துமாங்கவள்
செய்யபொன்முடிமிசைநிழற்றிச்சென்றெனத்
துய்யதோர்கவுரிபாற்சுமாலிமாலினித்
தையலார்மதிக்குடைதாங்கிநண்ணினார்.

(இ-ள்.) உமாதேவியின் பெரிய அருண்முழுதும் அவளுடைய செய்விய பொன்முடியின்மீது நிழல்செய்து சென்றாற்போல தூய்மைவாய்ந்த கவுரியினருகிற் சுமாலி மாலியென்னும் பெண்கள் சந்திரவட்டக்குடைகளேந்திச் சென்றார்கள்.-எ-று.

துவரிதழ்மங்கலைசுமனையாதியோர்
கவரிகளிரட்டினர்கவுரிபாங்கரி
லிவர்தருமோதிமமெண்ணிலாதவோ
ரவிர்சுடர்மஞ்ஞைபாலடைவதாமென.

(இ-ள்.) செல்லாநின்ற அளவற்ற அன்னப்பறவைகள் ஒளிவிளங்கு மொரு மலையினருகி லடைந்தாற்போலச் செந்நிறமமைந்த விதழினரான மங்கலைசுமனையாதியோர்கள் கவுரியின் பக்கத்திற் சாமரை வீசினார்கள்.—எ-று. (கசு)

கால்செயும்வட்டமுங்கவின்கொள்பீலியு
மால்செயுநறுவிரைமல்கவீசியே
நீல்செயும்வடிவுடைநிமலைபாற்சிலர்
வேல்செயும்விழியினர்மெல்லவேகினர்.

(இ-ள்.) நீலநிறங்காட்டுந் திருமேனியினையுடைய உமாதேவியினருகில் வேல்போலும் விழியினையுடைய சிலர் பெண்கள் காற்றைத் தருகின்ற ஆலவட்டங்களையும்

அழகு வாய்ந்த மயில் விசிறிகளையும் மோகத்தை யுண்டாக்கும் வாசனைப்பொருள்களை யும் மிகக்கலந்து மணம்வீச வீசிச்சென்றார்கள்.—எ-று. (கஎ)

கோடிகமண்டைப்பைவாள் குலவுகண்ணடி
யேடுறுபூந்தொடையேந்தியம்மைதன்
மாடுறவணுகியேமானத்தேகினா்
தோடுறுவரிவிழித்தோகைமார்பலர்.

(இ-ள்.) காதணியளவும் பாய்ந்து செல்லுங் கீற்றுப்படர்ந்த கண்ணினரான பலபெண்கள் உமாதேவியினருகில் விமானத்தில் அணிகலச்செப்புக்களையும் அடைப் பைகளையும் வாட்படைகளையும் விளங்காநின்ற கண்ணடிகளையும் இதழ்வாய்ந்த பூ மாலைகளையும் சுமந்தவர்களாகச் சென்றனர்.—எ று. (கஅ)

நாதனதருள்பெறுநந்திதேவியாஞ்
சூதுறழ்பணைமுலைச்சுகேசையென்பவண்
மாதுமைதிருவடி மலர்கடீண்டிய
பாதுகைகொண்டுபின்படர்தன்மேயினள்.

(இ-ள்.) சிவபெருமான் திருவருள்பெற்ற நந்திதேவரின் மனைவியான சுகேசி யென்பவள் அழகிய உமாதேவியின் திருவடிமலர்கள்பட்ட பாதுகைகளை உடன்கொ ண்டு பின்னாற் சென்றனள்,—எ-று. (கக)

கமலினியனிந்திதையென்னுங்கன்னிய
ரமலைதன்சுரிகுழற்கானபூந்தொடை
விமலமொடேந்தியேவிரைந்துசெல்கின்றார்
திமிலிடுகின்றதொல்சேடிமாருடன்.

(இ-ள்.) கமலினி அனிந்திதை யென்னுங் கன்னியர் உமாதேவியாரின் சுரி ந்த கூந்தலுக்காகிய பூமாலைகளைத் தூய்மையுடனேந்தி ஆரவாரஞ்செய்து சென்று பழய சேடியருடன் விரைந்து சென்றார்கள்.—எ-று. (உ0)

அடுத்திடுமுலகெலாமளித்தவம்மைசீர்
படித்தனரேகினர்சிலவர்பாட்டிசை
யெடுத்தனரேகினர்சிலவரேர்தக
நடித்தனரேகினர்சிலவர்நாரிமார்.

(இ-ள்.) அடுத்துள்ள உலகனைத்தினையும் பெற்ற உமாதேவியாரின் கீர்த்தி களைச் சிலர் படித்துச் சென்றனர் உரக்க விசையாகப் பாடிக்கொண்டு சிலர் சென்ற னர். அழகுபொருந்த நடனஞ் செய்துகொண்டு சிலர் சென்றனர்.—எ-று. (உக)

பாங்கியர்சிலதியர்பலருமெண்ணிலா
வீங்கியபேரொளிவிமானத்தேறியே
யாங்கவள்புடையதாயணுகிச்சென்றன
ரோங்கியநிலவுசூழுடுக்கள்போன்றுளார்.

(இ-ள்.) பாங்கியருஞ் சிலதியருமாகிய பலரு மளவற்ற மிக்க வொளியினை யுடைய விமானத்திலேறி உயர்ந்த நிலவினைச் சூழ்ந்த நட்சத்திரங்களை யொத்தவர்க ளாகி அவ்வுமாதேவியாரி னருகாகச் சென்றனர்.—எ-று, (உஉ)

தண்ணுறுநானமுஞ்சாந்துஞ்சிந்தமுஞ்
சுண்ணமுஞ்ங்களபமுஞ்சுடரும்பூண்களு
மெண்ணருந்துகில்களுமிட்டமஞ்சிகை
யொண்ணுதலார்பரித்துமைபின்போயினா்.

(இ-ள்.) குளிர்ச்சிவாய்ந்த வாசனைத்திரவியங்களையும் சாந்தினையும் சந்தனத்தினையும் சுண்ணங்களையும் கூட்டுச் சந்தனங்களையும் ஒளிவிளங்கும் ஆபரணங்களையும் அளவிடுதற்கரிய ஆடைகளையும் வைத்துள்ள பேழைகளை ஒள்ளிய நுதலினையுடையபெண்கள் தாங்கினராயுமாதேவியாரின் பின்னாற் சென்றனர்—எ-று. (உ௩)

குயில்களுங்கிள்ளையுங்குறிக்கொள் பூவையு
மயில்களுமஞ்சமுமற்றுமுள்ளவும்
பயி்லுறவேந்தியேபரைமுன்சென்றன
ரயில்விழியணங்கினரளப்பிலார்களே.

(இ-ள்.) குயில்களையும் கிளிகளையும் குறிப்பாய்ப்பயிற்று மவைகளைப்பயிலுநாகணவாய்களையும் மயில்களையும் அன்னங்களையும் இன்னமுள்ளவைகளையும் பொருந்துமாறு தாங்கி வேல்போலுங்கண்ணினரான அளவற்ற பெண்கள் பரையான உமாதேவிக்குமுன்னே சென்றார்கள்.—எ-று. (உ௪)

விடையுறுதுவசமும்வியப்பின்மேதகு
குடைகளுமேந்தியுங்கோடிகோடியா
மிடியுறழ்பல்லியமிசைத்துமம்மைதன்
புடைதனில்வந்தனர்பூதரெண்ணிலார்.

(இ-ள்.) அளவற்ற பூதர்கள் இடபவுருவமைந்த கொடிகளையேந்தியும் அதிசயிக்கத்தக்க மேன்மைவாய்ந்த குடைகளைத்தாங்கியும் இடிமுழக்கம்போன்ற கோடாகோடிப் பல்லியங்களை முழக்கியும் உமாதேவியாரி னருகிற்சென்றனர்.—எ-று. ()

அன்னவளடிதொழுதருள்பெற்றொல்லையிற்
பன்னிருகோடிபாரிடங்கள்பாற்பட
முன்னுறவேகினன்மூரியேற்றின்மேற்
றொன்னெறியமைச்சியற்சோமநந்தியே.

(இ-ள்.) அவ்வுமாதேவியி னருள்பெற்று விரைவாகப் பன்னிரண்டு கோடிப் பூதங்கள் அருகில் வராநிற்பப் புராதனமான அமச்சியலினையுடைய சோமநந்தியான கணுதிபன் பெரிய இடபத்தின்மீது முன்னாகச்சென்றனன்.—எ-று. (உ௬)

இவரிவரித்திறமீண்டவெல்லைதீர்
புவனமுமுயிர்களும்புரிந்துநல்கிய
கவுரியம்மானமேற்கடிதுசென்றரோ
தவனுறுவோன்மகச்சாலைநண்ணினள்.

(இ-ள்.) இங்ஙன மிவரனைவரு மிவ்வாறு மூன்னும்பின்னுநெருங்கி வராநிற்ப அளவற்ற புவனங்களையும் உயிர்களையும் விரும்பிப்படைத்த கவுரியழகிய விமானத்தில் விரைந்து சென்று இழிந்த செயல் செய்யுந் தக்கனுடையயாகசாலையை யடைந்தனள்.

ஏனுறுமானநின்றிழிந்துவேள்வியஞ்
சாலையுளேகியேதக்கன்முன்னுறும்
வேலையினுமைதனைவெகுண்டுநோக்கியே
சீலமிலாதவனினையசெப்பினான்.

(இ-ள்.) எழுந்தருளி இருந்த விமானத்தினின்று மிறங்கி யாகசாலையுட்சென்று தக்கனெதிரே செல்லுங்காலையில் அந்த ஒழுக்கமற்றவன் உமாதேவியைச் சிறிப்பார்த்து இவைகளை யுரைத்தான்.—எ-று. (உ௮)

வேறு.

தந்தைதன்னுடைநாயிலாதவன்
சிந்தையன்புறுந்தேவியானநீ

யிந்தவேள்வியானியற்றும்வேலையில்
வந்ததென்கொலோமகளிர்போலவே.

(இ-ள்.) பிதாவுடன் மாதாவுமில்லாதவனான சிவனிடஞ் சிந்தையன்புக்குரிய வவன் மனைவியான நீ இந்தயாகத்தினையான் செய்யுங்காலத்திற்கென் பெண்மக்களைப்போல வெதற்காகவந்தனை.—எ-று. (உக)

மல்லல்சேருமிம்மாமகந்தனக்
கொல்லைவாவெனவுரைத்துவிட்டது
மில்லையீண்டுநீயேகலாகுமோ
செல்லுமீண்டுநின்சிலம்பிலென்னவெ.

(இ-ள்.) வளப்பமிக்க இந்தச்சிறந்த யாகத்துக்கு விரைந்து வருவாயாக வென்று கூறியனுப்பியதுமில்லை அங்ஙனமாக இங்கு நீ வரலாகுமோ நீ திரும்பியுன் மலைக்குச்செல்லென்று கூறியவுடனே.—எ று. (௩0)

மங்கைகூறுவாண்மருகர்யார்க்குமென்
றங்கைமார்க்குநீதக்கதக்கசீ
ருங்குநல்கியேயுறவுசெய்துளா
யெங்கடம்மையோரிறையுமெண்ணலாய்.

(இ-ள்.) உமாதேவியாரிவ்வாறு கூறுகின்றனர் மருகரானவருக்கும் என் தங்கைமாருக்குந் தக்க தக்க சீரினை இங்குச்செய்துறவு செய்தனை எங்களை ஒரு இறையளவும் எண்ணுகின்றாயில்லை.—எ-று. (௩க)

அன்றியும்மிவணுற்றும்வேள்வியிற்
சென்றவென்னையுஞ்செயிர்த்துநோக்குவாய்
நன்றதோவிதோர்நவையதாகுமா
லுன்றனெண்ணம்யாதுரைத்தியென்னவே.

(இ-ள்.) அல்லாமலும் இவ்விடத்திற் செய்கின்ற யாகத்துக்குவந்த என்னையும் சீறிப்பார்க்கின்றனை இது நல்லதோ இது உனக்கொரு குற்றமேயாகும் உன்னெண்ணமென்ன யுரைப்பாயாக வென்றவுடனே.—எ-று. (௩உ)

ஏயமுக்குணத்தியலுஞ்செய்கையுட்
டீயதொல்குணச்செய்கையாற்றியே
பேயொடாடல்செய்பித்தன்றேவியாய்
நீயுமங்கவனிலைமையெய்தினாய்.

(இ-ள்.) பொருந்திய முக்குணங்களால் நடக்குஞ் செய்கைகளுட் கொடிய பழைய தாமதகுணச்செயலைச் செய்து பேயோடாடல் செய்த பித்தனுக்கு மனைவியாகி நீயுமவனிலையை அடைந்தனை.—எ-று. (௩௩)

அன்னவன்றனோடகந்தைமேவலா
லுன்னையெள்ளினனுனதுபின்னுளோர்
மன்னுகின்றவென்மருகர்யாவரு
மென்னினும்மெனக்கினியர்சாலவும்.

(இ-ள்.) அவனுடன் நீ செருக்குவாய்ந்திருந்தமையால் உன்னை இகழ்ந்தனன் உனது தங்கைமார்களை அடைந்த எனது மருகர்களனைவரும் எந்தவிதத்திலும் எனக்கு மிகவுமினியர்.—எ-று. (௩௪)

ஆதலாலியானவர்கள்பாங்கரே
காதலாகியேகருதுதொல்வளன்
யாதுநல்கினனிந்தவேள்வியி
லோதுநல்லவியுளதுநல்கினேன்.

(இ-ள்.) அதனால் யான் அவர்களிடம் அன்புடையவனாகி எண்ணா நின்ற பழயவரிசைகளனைத்து மவர்கட்குக்கொடுத்தேன் இந்த யாகத்தில் உரையாநின்ற நல்ல அவியாக உள்ளதனையு மளித்தேன்.—எ-று. (௩௫)

புவனியுண்டமால்புதல்வனாதியா
மெவரும்வந்தெனையேத்துகின்றனர்
சிவனுநீயுமோர்சிறிதுமெண்ணலீ
ருவகையின்றெனக்குங்கள்பாங்கரில்.

(இ-ள்.) உலகினை யுண்டமாலும் அவன் மகனான பிரமனுமாதிய எவரும் வந்து என்னைத்துதிக்கின்றனர் சிவனும் நீயும் ஓர் சிறிதும் மதிக்கின்றிலீர் அதனால் உங்களிடத்தில் எனக்கு விருப்பமில்லை.—எ-று. (௩௬)

ஏற்றின்மேவுநின்னிறைவனுக்கியா
னாற்றும்வேள்வியுளவியுமீகலன்
சாற்றுகின்றவேதத்தின்வாய்மையு
மாற்றுகின்றனன்மற்றென்வன்மையால்.

(இ-ள்.) இடபத்தின் மேவு நினது கணவனுக்கு யான் செய்யும் யாகத்தில் அவிர்ப்பாகமுமளியேன் எனது வன்மையாற் சிவபரமாக உரையாநின்ற வேதத்தின் உண்மைப்பொருளையு மாற்றுகின்றேன்.—எ-று. (௩௭)

அனையதன்றியீண்டடுத்தநிற்கும்யான்
றினையின்காறுமோர்சிறப்புஞ்செய்கல
னெனவியம்பலுமெம்பிராட்டிபாற்
றுனையவந்ததாற்றீமில்சீற்றமே.

(இ-ள்.) அதுவன்றி இங்குவந்த நினக்கும் யான் தினையளவுமொரு சிறப்புஞ் செய்யேன் என்றுகூறுதலும் எமபெருமாட்டியிடம் குற்றமற்ற கோபம் விரைவாக உண்டாகியது.—எ-று. (௩௮)

சீற்றமாயதீச்செறியுயிர்ப்பொடே
காற்றினோடழல்கலந்ததாமெனத்
தோற்றியண்டமுந்தொலைவிலாவியு
மாற்றுவாளெனழ்இமல்கியோங்கவே.

(இ-ள்.) கோபமாகிய நெருப்பு நெருங்கி உயிர்ப்புடன் காற்றுடன் அழல் கலந்தாற்போல உண்டாகி அண்டமு மழியாத உயிர்களும் அழிப்பாளெழுந்து வளர்ந்து ஓங்குதலும்.—எ-று. (௩௯)

பாருமுட்கினபரவுபௌவமுந்
நீருமுட்கினநெருப்புமுட்கின
காருமுட்கினகரிகளுட்கின
வாருமுட்கினரமரராயுளார்.

(இ-ள்.) பூமிகளு நடுங்கின. பரந்த கடல்களு நடுங்கின அக்கினிகளு நடுங்கின. மேகங்களு நடுங்கின. திக்குயானைகளு நடுங்கின. தேவராயுள்ளாரனைவரு நடுங்கினார்கள்.—எ-று. (௪0)

பங்கயாசனப்பகவன்றானுமச்
செங்கண்மாயனுஞ்சிந்தைதுண்ணென
வங்கணுட்கினரென்னிருங்கவள்
பொங்குசீற்றம்யார்புகலவல்லரே.

(இ-ள்.) கமலாசனனான பிரமனும் அங்கிருந்த செவ்வியகண்களையுடையமாயோனும் சிந்தையிற் றிடுக்கென அவ்விடத்தில் நடுங்கினார்கள் அவ்வுமாதேவியின் மிகுந்த கோபத்திறத்தினை இவ்வளவினதென்று எவர் கூறவல்லவர்கள்.—எ-று. (சக)

வேலையன்னதில்விமலையென்பவள்
பாலினின்றதோர்பாங்கிதாழ்ந்துமுன்
ஞாலம்யாவையுநல்குமுன்றனக்
கேலுகின்றதொவினையசீற்றமே.

(இ-ள்.) அந்த சமயத்தில் உமாதேவியினருகில் நின்றவிமலையென்னுமொரு மாது வணங்கி உலகனைத்தினையு முன்னரளித்த நினக்குத்தகுகதோஇத்தகையகோபம்.

மைந்தர்யாரையும்வளங்கடம்மொடுந்
தந்துநல்கியதாய்சினங்கொளா
வந்தமாற்றுவானமைந்துளாயெனி
னுய்ந்திடுந்திறமுண்டுபோலுமால்.

(இ-ள்.) தனுகரணபுவனபோகங்களாகிய வளப்பங்களுடன் உயிர்களனைத்தையும் பெற்றளித்த மாதாவான நீ அழிக்கும் வண்ணம் ஒருப்பட்டாயானால் உய்யுந் திறமுமுளதோ.—எ-று. (சங)

அறத்தையீங்கிவனகன்றுள்ளானெனச்
செறுத்தியன்னதோர்சீற்றம்யாரையு
மிறைக்குமுன்னரேயீறுசெய்யுமாற்
பொறுத்தியீதெனப்போற்றன்மேயினாள்.

(இ-ள்.) இங்கித்தக்கன் தருமவழியை யிழந்தானென்று கோபங்கொண்டனை அந்தக்கோபம் எவரையுங் கணப்பொழுதினுள் அழித்துவிடும் ஆதலாற் பொறுத்தருள்வாயாகவென்று துதித்தனள்.—எ-று. (சச)

போற்றிநிற்றலும்புனிதைதன்பெருஞ்
சீற்றமாயெழுந்தீயையுள்ளுற
மாற்றிவேள்விசெய்வானைநோக்கியே
சாற்றுகின்றனளினையதன்மையே.

(இ-ள்.) விமலையிங்ஙனங்கூறித் துதித்தவுடனே புனிதையானவுமாதேவியார் தமதுபெருங் கோபமாயெழுந்த தீயினைத்திருப்பிஉள்ளாகவமைத்து யாகஞ்செய்யுந்தக்கனைப்பார்த்து இவ்வாறுகூறினார்கள்.—எ-று. (சரு)

என்னைநீயிவணிகழ்ந்ததன்மையை
யுன்னலேனெனையுடையநாயகன்
றன்னையெள்ளினய்தரிக்கிலேனதென்
கன்னமூடுசெல்கடுவுபோலுமரல்.

(இ-ள்.) என்னை இங்கு நீ இகழ்ந்த தன்மையை ஒரு பொருளாக மதியேன் என்னையுடைய நாயகனை இகழ்ந்தனை அதனைத்தாளேன் அது என் காதுக்குட்செல்லும் விடம்போலவிருந்தது.—எ-று. (சசு)

நிர்க்குணத்தனேநிமலனன்னவன்
சிற்குணத்தனுய்த்திகழுவானொரு
சொற்குணத்தனேதொலேக்குநாளடு
முற்குணத்தினைமுன்னுமாறலால்.

(இ-ள்.) அச்சிவபிரான் நிர்க்குணத்தன் நிமலன் சிற்குணனுக விளங்குவான் சொல்லப்பெற்ற ஒருகுணமுடையனே சங்காரகாலத்துக்கு முன்னுள்ள குணத்தினை கருதுவதன்றித் தாமதமாகிய வொருகுணமுடையனே.—எ-று.

அந்நிமலன் நிர்க்குணத்தனே அவனே சிற்குணனுகவும் விளங்குவான் சங்கார காலத்திற் சங்கரிக்குமுன் குணத்தினை எண்ணுவதன்றி நின்னுலுரைக்கப்பட்டதாமதகுணமுடையனே ? அன்றே என்றனர் என்றறிக. (சஎ)

துன்றுதொல்லுயிர்தொலேவுசெய்திடு
மன்றுதாமதத்தடுவதன்றியே
நன்றுநன்றதுஞானநாயகற்
கென்றுமுள்ளதோரியற்கையாகுமோ.

(இ-ள்.) நெருங்கிய பழயவுயிர்களைச் சங்கரிக்குமக்காலத்திற் தாமதகுணத்துடன் சங்கரிப்பதன்றி, நல்லது நல்லது அத்தாமதகுணம் ஞானநாயகனுக்கு எந்நாளும் இயல்பாக அமைந்தகுணமாகுமோ ?—எ-று. (சஅ)

தீயதன்றடுஞ்செயனுநல்லரு
ளாயிலாவிகளழிந்துந்தோன்றியு
மோய்விலாதுழன்றலேவுறுமலே
மாய்வுசெய்திறைவருத்தமாற்றலால்

(இ-ள்.) உயிர்கள் செத்தும் பிறந்தும் ஓயாமலுழன்று வருந்தாமற் சங்கரித்து இறைவன் இளேப்பாற்றுதலால் சங்காரத்தொழிலுங் கொடியதன்றும் ஆராயுமிடத்து நல்ல அருட்டிறமேயாகும்.—எ-று (சக)

ஆனவச்செயலழிவிலாததோர்
ஞானநாயகற்கன்றிநாமெனு
மேனையோர்களாலியற்றலாகுமோ
மேனகாவலும்விதியுமென்னவே.

(இ-ள்.) முன்னுரைத்தனவாகிய காத்தலேயும் படைத்தலேயும்போல சங்காரமாகிய அத்தொழில் அழிவற்றஞான நாயகனுக்கன்றி அகங்காரம்பொருந்திய பிறராற் செய்யமுடியுமோ.—எ-று. (ருo)

முன்னரேயெலாமுடித்தநாதனே
பின்னுமத்திறமளிக்கும்பெற்றியா
னன்னவன்கணேயனேத்துமாகுமா
லின்னபான்மைதானிறைவன்வாய்மையே.

(இ-ள்) முன்னமே அனைத்தையுஞ் சங்கரித்த சிவபெருமானே பின்னருமவ்வழித்தவைகளேப் படைக்குமுறையால் அவ்விறைவனிடத்து எல்லாமாகும். இத்தன்மையே சிவபெருமானின் உண்மைநிலே.—எ-று. (ருக)

தோமிலாகமஞ்சுருதிசெப்பியே
யேமவிஞ்சைகட்கிறைவனுகியே
நாமறும்பொருணல்குமெந்தையைத்
தாமதன்னெனச்சாற்றலாகுமோ.

(இ-ள்.) குற்றமற்ற ஆகமங்களையும் வேதங்களையும் அருளிச்செய்து ஆன்ம ரட்சைக்குரிய அனைத்துவித்தைகளுக்கும் இறைவனாகி நிந்தையற்ற பொருள்களைய ளித்த எந்தையைத்தாமத குணத்தினன் என்று கூறுதல் கூடுமோ ?—எ-று. (ருஉ)

ஆதலாலவனனைவருக்குமோர்
நாதனுமரோவவற்குநல்லவி
யீதல்செய்திடாதிகழ்தியஞ்சியே
வேதம்யாவையும்வியந்துபோற்றவே.

(இ-ள்.) அதனாலச்சிவபெருமான் அனைவருக்குமொப்பற்ற கத்தாவேயாவன்; அவனுக்குப்பயந்து வேதமனைத்தும் முதற்கத்தா சிவனே சிவனேயென்று வியந்து அவனையே துதியாநிற்க நீயவனுக்கவியளிக்காமலிழுகின்றனை —எ-று. (ருங)

சிவனெனுந்துணைச்சிறெழுத்தினை
நுவலுவோர்கதிநொய்திலெய்துவா
ரவனையெள்ளினுயாரிதாற்றுவா
ரெவனையுய்குதியிழுதைநீரைநீ.

(இ-ள்.) சிறப்புவாய்ந்த சிவ என்னும் இரண்டெழுத்துக்களை யுரைப்போர் கதியை விரைவிலடைவார்கள். அச்சிவபெருமானை யிகழ்ந்தனை எவரிதனைச் செய்வார் அறிவிலியின் தன்மையயடைந்த நீ எவ்வாறுய்வாய்?—எ-று. (ருச)

முண்டகமிசையினேன்முகுந்தனுடியே
பண்டுணர்வரியதோர்பரனையாதியாக்
கொண்டிலரெள்ளியகொடுமையோர்க்கெலாந்
தண்டம்வந்திடுமெனமறைகள்சாற்றுமால்.

(இ-ள்.) கமலமலரிலிருக்கும் பிரமனும் முகுந்தனும் தேடிப்பண்டுகாணுத சிவ பெருமானை முதல்வனுகக் கொள்ளாராய் இகழ்ந்த கொடுமையினையுடையாரனைவ ருக்கும் தண்டனைகிடைக்குமென்று வேதங்கள் உரையாநிற்கும்.—எ-று. (ருரு)

ஈதுகேள்சிறுவிதியிங்ஙனோர்மகம்
வேதநாயகன்றனைவிலக்கிச்செய்தனை
யாதலானுனக்கும்வந்தடைகதண்டமென்
றோதினுளுலகெலாமுதவுந்தொன்மையாள்.

(இ-ள்.) உலகனைத்தும் படைத்தபுராதனியான உமாதேவி தக்கனைப்பார்த்து ஓதக்கனே! இதனைக்கேட்பாயாக நீயொருசிறந்தயாகத்தினை வேதமுதல்வனுன சிவபெ ருமானை விலக்கிச்செய்தனை ஆதலால் உனக்கும் தண்டம் வந்தடைக என்று கூறினுள்.

இன்னனகொடுமொழியியம்பிவேள்விசெ
யந்நிலமொருவியிவ்வகிலமீன்றுளாண்
முன்னுளபரிசனமுறையின்மொய்த்திடப்
பொன்னெழின்மானமேற்புகுந்துபோந்தனள்.

(இ-ள்.) இவ்விதமாகிய சாபமுரைத்து யாகமியற்றுமந்தப் பூமியைவிடுத்து இவ்வுலகினைப்பெற்ற உமாதேவியார் முன்னர் நின்றபரிசனங்கள் முறையிற்சூழ்ந்து வராநிற்பப் பொன்னுலாகிய அழகிய விமானத்திலேறிச்சென்றனர்.—எ-று. (ருஎ)

அகன்றலையுலகருளயன்றன்காதலன்
புகன்றனவுன்னியுட்புழுங்கியைந்துமா
முகன்றிருமலையிடைமுடுகிச்சென்றனள்
குகன்றனைமேலருள்கொடிநுசுப்பினுள்.

(இ-ள்.) இடமகன்ற உலகினைப்படைத்த பிரமன்மகனான தக்கன் கூறியன நினைத்துத் திருவுளம்புழுங்கிச் சிறந்தபஞ்சானனங்களையுடைய சிவபெருமானுடைய அழகிய கைலாயத்திற் குகப்பெருமானைப் பின்னரருளுங் கொடிபோலுமிடையினையுடைய உமாதேவி விரைந்து சென்றனள்.—எ-று. (௫அ)

ஒருவினளூர்தியையுமைதன்னாயகன்
றிருவடிவணங்கினள்சிறியதொல்விதி
பெரிதுனையிகழ்ந்தனன்பெருமவன்னவ
னரிதுசெய்வேள்வியையழித்தியென்னவே.

(இ-ள்.) உமாதேவியார் விமானத்தை விடுத்திறங்கித் தமது நாயகரான சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிப் பெருமானே! சிறிய பழயதக்கனுன்னைமிகவும் இகழ்ந்தனன் அவன் அருமையாகச் செய்கின்றயாகத்தினையழிப்பாயாக என்றவுடனே.—எ-று. (௫௯)

எவ்வமில்பேரருட்கிறைவனாகியோ
னவ்வியங்கரமுடைநாதனாதலி
னவ்வுரைகொண்டிலனாகவம்பிகை
கவ்வையொடினையனகழறன்மேயினாள்.

(இ-ள்.) மானேந்திய திருக்கரத்தினையுடைய சிவபெருமான் குற்றமற்றபேரருட்கிறைவனாக வுள்ளவனாதலின் அவ்வசனத்தினை ஏற்றுக்கொள்ளாதிருந்தனன் உடனே அம்பிகை துன்பத்துடனுரைக்கத் தொடங்கினாள்.—எ-று. (௬0)

மேயினகாதலும்வெறுப்புநிற்கிலை
யாயினுமன்பினேற்காகவன்னவன்
றீயதோர்மகத்தினைச்சிதைத்தல்வேண்டுமென்
னாயகனேயெனநவின்றுபோற்றினாள்.

(இ-ள்.) என்னாயகனே! பொருந்திய விருப்பும் வெறுப்பும் நினக்கில்லையாயினும் அன்பினையுடைய என்னிமித்தம் அத்தக்கனுடைய கொடியயாகத்தினையழித்தல் வேண்டும் என்று கூறிவணங்கினாள்.—எ-று. (௬௧)

உமைவருபடலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம். ௧,௩௨௬.

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# வீரபத்திரப் படலம்.

அந்தவெல்லையெமையாளுடையவண்ணலகிலந்
தந்தமங்கைதனதன்பினைவியந்துதளருஞ்
சிந்தைகொண்டசெயன்முற்றியிடுமாறுசிறிதே
புந்தியுள்ளுறநினைந்தனனினைந்தபொழுதே.

(இ-ள்.) அப்பொழுது எம்மையாளுடைய இறைவன் உலகினைப்படைத்த உமாதேவியினன்பினை வியந்து திருவுளத்திற் கொண்டிருந்த நீக்குதற்கரிய செயல் நிறைவேறும் வண்ணம் சிறிது திருவுளத்திற் கருதினவுடனே.—எ-று. (க)

பொன்னின்மேருவினிருந்திடுபொலங்குவடெலா
மின்னும்வெள்ளிமுளைமேற்கொடுவிளங்கியதென
மன்னுதண்சுடர்மதிக்குறையிலைச்சுமவுலிச்
சென்னியாயிரமும்வான்முகடுசென்றொளிரவே.

(இ-ள்.) பொன்மயமான மேருமலையிலுள்ள பொன்சிகரமனைத்தும் மின்னுகின்ற வெள்ளிமுளையை மேற்கொண்டு விளங்கினாற்போல நிலைபெற்ற குளிர்ச்சிவாய்ந்த இளந்திங்களைச் சூடியமவுலிகளையுடைய ஆயிரந்தலைகளும் வானமுகட்டிற்சென்று விளங்கவும்.—எ-று. (உ)

விண்டலந்தனிலிலங்குசுடரின்மிடலினைக்
கண்டலந்தரவொதுங்குவனபோற்கதிருலா
மண்டலந்திகழ்முகந்தொறும்வபங்குபணியின்
குண்டலங்களிணைகொண்டகுழைகொண்டுலவவே.

(இ-ள்.) வானினிடத்து விளங்கும் சுடரின் வன்மையைக்கண்டு துன்பமுண்டாக வொதுங்குவனபோல ஒளிபொருந்திய மண்டலம்போல விளங்குமுகந் தோறும் பிரகாசிக்கின்ற அரவகுண்டலங்கள் இருகாதுகளிலும் பொருந்தியசையவும்.(ங)

ஆன்றதிண்கடல்வறந்திடவிறந்ததனிடைத்
தோன்றுகின்றதொர்மடங்கல்வலியின்றுதொலைய
மூன்றுகண்கண்முகமாயிரமுமேவிமுனிவாற்
கான்றவங்கிகளினண்டமுழுதுங்கரியவே.

(இ-ள்.) அகன்ற திண்ணிய கடனீர் வற்றுமிக்கு அக்கடலிற்பிறந்த ஒப்பற்ற வடவாக்கினியினாற்றல் இன்றுதொலைய ஆயிரமுகங்களிலும் மும்மூன்றுகண்கள் பொருந்திச் சீற்றத்தாற் சிதறிய அக்கினிப்பொறிகளா லண்டமுழுதுங்கரியவும்.—எ-று. ()

சண்டமாருதமுமங்கியுமொதுங்குதகவாற்
றுண்டமீதுறுமுயிர்ப்புடனெழுந்தசுடுதீ
யண்டகோளமுடனப்புறமுமாகியழியாக்
கொண்டலூடுதவழ்மின்னுவெனமேவுலவவே.

(இ-ள்.) சண்டமாருதமும் அக்கினியும் விலகத்தக்க விதமாய் மூக்கினிடத்து மூச்சுடன் பிறந்த சுடுதீயானது அண்டகோளத்துடனப்புறத்திலுஞ் சென்று அவைகளையழித்து மேகத்தினிடத்துலவும் மின்னலைப்போல விளங்கவும்.—எ-று. (டு)

மலரின்வந்துறையுநான்முகன்முகுந்தன்மகவான்
புலவர்தம்புகழனைத்தையுநுகர்ந்தபொழுதிற்
சிலவொழுங்கொடிதழின்புடைகள்சிந்தியெனவே
நிலவுசெய்தபிறைவாளெயிறுநின்றிலகவே.

(இ-ள்.) தாமரைமலரிலிருக்கின்ற நான்குமுகங்களையுடையபிரமனதும் முகுந்தனதும் இந்திரனதும் மற்றைத்தேவருடையவும்புகழனைத்தினையும் உண்டபொழுதுசில இதழின் அருகிற்சிந்தினாற்போல நிலவினைச் செய்கின்ற பிறைவாளெயிறு விளங்கவும்.

துண்டமீதினழலோவிதழின்வீழ்ந்தசுசியோ
மண்டுதீவிழிகள்கான்றகனலோமனமிசைக்
கொண்டதோர்வெகுளியாகியகொடுந்தழலதோ
வெண்டிசாமுகமுமாகியடுகின்றதெனவே.

(இ-ள்) நாசியிற்றோன்றிய தீயோ இதழினின்றும் விழுந்த அக்கினியோ நெருங்கிய தீ விழிகள் கக்கிய தீயோ மனத்திற்கொண்ட கோபமாகிய கொடிய நெருப்போ எட்டுத் திக்குகளிலுமாகி யழிக்கின்றதென்று கூறவும்.—எ-று. (எ)

தண்டலின்றுறையுமாவிகள்வெரீஇத்தளரமே
லண்டரண்டநிரைவிண்டிடவவற்றிடையுறுந்
தெண்டிரைக்கடல்கலங்கவடலுற்றசிவனிற்
கொண்டவார்ப்புமுழுதெண்டிசைகுலாய்நிமிரவே.

(இ-ள்.) கெடுதலற்று வாழும் உயிர்கள் பயந்து தளர்ச்சியுறவும் மேலுள்ள வண்டரண்ட நிரைகள்பிளக்கவும் அவைகளிற்பொருந்திய தெள்ளியதிரையினையுடையகடல்கலங்கும் வண்ணமும் அழிக்கின்ற சருவசங்கார மூர்த்தியைப்போல கொள்ளப்பட்டஆரவாரிப்பு எட்டுத்திக்கிலும் பொருந்தி மேற்செல்லவும்.—எ-று. (அ)

தராதலங்கண்முழுதுண்டுமிழுகின்றதகைசே
ரராவினங்கடமையங்கடகமங்கதமொடே
விராயமென்றொடிகளாவிடுபுவிண்ணுறநிமிர்ந்
திராயிரங்கொள்புயமெண்டிசையெலாஞ்செறியவே.

(இ-ள்.) உலகங்கள் முழுமையும் உண்டுமிழத்தக்க அரவினங்களை அழகிய கடகங்களாகவும் அங்கதங்களாகவும் ஒன்றோடொன்று பொருந்திய மெல்லியதொடிகளாகவும் அணிந்து வானமளாவவுயர்ந்து இரண்டாயிரந் தோள்களும் எட்டுத்திக்கனைத்து நெருங்கவும்.—எ-று. (கூ)

வரத்தின்மேதகையவேதன்முதலானவலியோர்
சிரத்தின்மாலிகையடுக்கலவரென்புசெறிபூண்
பெருத்தகேழலின்மருப்பினுடனாமைபிறவு
முரத்தின்மேவுபுரிநூலொடுபெயர்ந்தொளிரவே.

(இ-ள்.) வரத்தான் மிக்கபிரமன் முதலிய வன்மையாளரின் சிரமாலைவரிசைகளும் அவர்களினெலும்புகளாகிய நெருங்கிய ஆபரணமும் பெரியபன்றியின் கொம்புடன் ஆமையோடு முதலியனவும் மார்பிற்பொருந்திய முப்புரிநூலுடன் அசைந்து விளங்கவும்.—எ-று. (கம)

குந்தம்வெம்பலகைதோமரமெழுக்குலிசம்வாள்
செந்தழற்கழுமுள்சூலமொடுபீலிசிலைகோன்
முந்துதண்டமவிராழிவசியாலமுதலா
மந்தமில்படைகளங்கைதொறுங்குலவவே.

(இ-ள்.) குந்தமும் வெவ்விய பலகையும் தோமரமும் எழுவும் குலிசமும்செவ்வியதழலினைக்கக்குகின்ற கங்கபத்திரமும் சூலமும் பேரீட்டியும் வில்லும் அம்பும் உயர்ந்த தண்டமும் விளங்குகின்ற சக்கரமும் பெருவாளும் மழுவும் முதலாகவுள்ள அளவற்ற ஆயுதங்கள் கைகளினசங்கள் தோறும் விளங்கவும்.—எ-று. (கக)

ஐயமாழைதனின்மாமணியிஞகியறிவார்
செய்யலாதுவருபேரணிகளோடுசிவணிப்
பையுலாவுசுடர்வெம்பணிகளானபணியு
மெய்யெலாமணியிடந்தொறுமிடைந்திலகவே.

(இ-ள்.) அழகிய பொன்னுலும் சிறந்தமணியிஞலும் ஆகிக்கம்மாளராற்செய்யப்படாதுண்டான பெரிய அணிகளுடன் கலந்துவிடப்பையோடு பொருந்தின ஒளிவாய்ந்த வெவ்விய அரவங்களான ஆபரணங்களும் உடன்முழுதுமணியவேண்டுமிடங்களிலெல்லாம் அணிந்து நெருங்கி விளங்கவும்.—எ-று. (கஉ)

நெஞ்சலஞ்சலமரும்பிறவிநீடுவினையிற்
சஞ்சலஞ்சலமகன்றதனதன்பர்குழுவை
யஞ்சலஞ்சலெனுமஞ்சொலெனவிஞ்சுசரணமேற்
செஞ்சிலம்பொடுபொலங்கழல்சிலம்பமிகவே.

(இ-ள்.) நெஞ்சமானது அலைந்து சுழலுகின்ற பிறவியின் நீண்ட தீவினையின் சஞ்சலமான துன்பமகன்ற தனதடியவர் கூட்டத்தினை அஞ்சலஞ்சலெனு மழகியசொல்போலப் பெரிய கால்களிற் செவ்விய செஞ்சிலம்புகளுடனே பொன்னங்கழல்கள் மிகவுமொலிக்கவும்.—எ-று. (கங)

வேறு.

அந்திவான்பெருமேனியன்கறைமிடறணிந்த
வெந்தைதன்வடிவாயவனுதல்விழியிடையே
வந்துதோன்றியேமுன்னுறநிறனன்மாதோ
முந்துவீரபத்திரனெனுந்திறலுடைமுதல்வன்.

(இ-ள்.) அந்திக்காலத்து வானம்போலும் விளங்குமேனியனும் விடத்தினைக்கண்டத்தில் வைத்துள்ள எந்தையின் வடிவாயுள்ளவனும் முற்பட்ட வீரபத்திரனெனும் பெயருந் திறலும் வாய்ந்தவனுமான முதல்வன் அவ்வெம்பெருமான்நெற்றிக்கண்ணினிடத்து வந்து தோன்றினுன்.—எ-று. (கச)

அங்கவேலையிலுமையவள்வெகுளியாலடல்செய்
நங்கையாகியபத்திரகாளியைநல்கச்
செங்கையோரிரண்டாயிரம்பாதிசெம்முகமாய்த்
துங்கவீரபத்திரன்றனையடைந்தனடுணையாய்.

(இ-ள்.) அவ்விடத்திலப்பொழுது உமாதேவியார் தமதுசீற்றத்தாற் பெண்களிற்சிறந்த பத்திரகாளியையுண்டாக்க அக்காளி செவ்விய இரண்டாயிரங்கைகளும் ஆயிரமுகங்களும் உடையவளாய் உயர்ந்த வீரபத்திரனுக்குத் துணையாகச்சென்று நின்றனள்.—எ-று. (கரு)

எல்லைதீர்தருபடைக்கலத்திறையுமவ்விறைவற்
புல்லுகின்றதோர்திறலுடைத்துணைவியும்போலத்
தொல்லைவீரனுந்தேவியுமேவருதொடர்பை
யொல்லைகாணுறுமகிழ்ந்தனர்விமலனுமுமையும்.

(இ-ள்.) அளவற்ற ஆயுதங்களினிறையும் அவ்விறைவனைச்சேருகின்ற அவன் துணைவியும்போல பழய வீரபத்திரனும் பத்திரகாளியும் சேர்ந்து வருந்தன்மையை விரைந்துகண்டு மகிழ்ந்தனர் சிவபெருமானும் உமாதேவியும்.—எ-று. (கசு)

தன்னைவந்தடைபத்திரைதன்னொடுதடந்தாண்
மன்னுவார்கழல்கலித்திடவலஞ்செய்துவள்ள
லன்னைதாதையைவணங்கியேயவர்தமைநோக்கி
முன்னநின்றுகைதொழுதனனிவைசிலமொழிவான்.

(இ-ள்.) தன்னைவந்தடைந்த பத்திரகாளியுடனே பெரிய கால்களிற்பொருந்திய வார்ந்த கழலொலிக்க மாதாபிதாக்களான சிவபெருமானையும் உமாதேவியையும் வலம்வந்துவணங்கி அவர்களைப்பார்த்து எதிரில்நின்று கரங்கூப்பிவணங்கி இவை சில கூறுகின்றான்.—எ-று. (கஎ)

மாலயன்றனைப்பற்றிமுன்றந்திடோமறவெங்
காலனாவியைமுடித்திடோவசுரரைக்களைகோ
மேலைவானவர்தம்மையுந்தடிந்திடோவேலை
ஞாலம்யாவையும்விழுங்குகோவுலகெலாநடுக்கோ.

(இ-ள்.) மாலையும் அயனையும் பிடித்தெதிரிற்கொண்டு வரவோ மறமும் வெம்மையுமுடைய காலனாவியைமுடிக்கவோ அசுரரைக்கொல்லவோ சுவர்க்கத்திலுள்ள தேவர்களையுங்கொல்லவோ கடல்சூழ்ந்த உலகனைத்தையும் விழுங்கவோ உலகெலாமஞ்சுமாறு செய்யவோ.—எ-று. (கஅ)

மன்னுயிர்த்தொகைதுடைத்திடோவரம்பிலவாகித்
துன்னுமண்டங்கடகர்த்திடோநுமதுதாமலர்த்தாள்
சென்னியிற்கொடேயாவதொன்றெனினுஞ்செய்வ
னென்னையிங்குநீர்நல்கிபதெப்பணிக்கென்றான்.

(இ-ள்.) நிலைபெற்ற உயிர்த்தொகையைத் துடைக்கவோ அளவற்றனவாகிய நெருங்கிய அண்டங்களைத் தகர்க்கவோ உங்களுடைய தூயமலரடிகளைத் தலைமேற்கொண்டு எதுவாயினுஞ் செய்வன் என்னை இங்கு நீங்கள் உண்டாக்கியது எந்தத்தொழில் செய்யும்பொருட்டு? என்று வினவினான்.—எ-று. (கக)

என்றவீரனைநோக்கியேகண்ணுதலெம்மை
யன்றிவேள்விசெய்கின்றனன்றக்கனவ்விடைநீ
சென்றுமற்றெமதவியினைக்கேட்டியத்தீயோ
னன்றுதந்தனனேயெனினிவ்விடைநடத்தி.

(இ-ள்.) இங்ஙனம் வினவிய வீரபத்திரனைப்பார்த்துச் சிவபெருமான் எம்மையன்றித் தக்கனென்பவன் யாகஞ்செய்கின்றான் அவன் யாகஞ்செய்யு மவ்விடத்துக்கு நீ சென்று எமக்குச்சேரவேண்டிய வவியினைக்கேள், அக்கொடியோன் செவ்வனே கொடுத்தானானால் அங்கு நின்றுந் திரும்பிவருதி —எ-று. (உ0)

தருதலின்றெனினனையவன்றலையினைத்தடிந்து
பரிவினாலவன்பாலுறுவோரையும்படுத்துப்
புரியுமெச்சமுங்கலக்குதியங்கதுபொழுதின்
வருதுமாயிடையேகுதியென்றனன்வள்ளல்.

(இ-ள்.) தராவிடின் அந்தத்தக்கன் தலையையறுத்து விருப்பத்துடன் அவன் பக்கத்திலிருந்தவர்களையு மழித்து அங்குச்செய்யும் யாகத்தினையும் அழிக்கக்கடவை

அப்பொழுது நாமவ்விடத்துக்கு வருவேம்செல் என்று வள்ளலான சிவபெருமான் கட்டளையிட்டனர்.—எ-று. (உக)

அந்தவேலையிற்பத்திரைதன்னெடுமடலின்
முந்துவீரனவ்விருவர்தம்பதங்களின்முறையாற்
சிந்தையன்புடன்வணங்கியேவிடைகொண்டுசிவனை
நிந்தைசெய்தவன்வேள்வியையழித்திடநினைந்தான்.

(இ-ள்.) அப்பொழுது பத்திரகாளியுடன் வன்மையின்மிக்க வீரபத்திரன் அவ்விருவரின் பாதங்களில் மனப்பூர்வமான அன்புடன் வணங்கி விடைபெற்றுச் சிவபெருமானை இகழ்ந்த தக்கன்செய்யும்யாகத்தை அழித்திட எண்ணினான்.—எ-று. ()

உன்னிமற்றவணீங்கியேயாற்றவுமுருத்துத்
தன்னுயிர்ப்பினாலளவையில்கணங்களைத்தந்து
துன்னுகின்றமெய்வியர்ப்பினாற்சிலவரைத்தொகுத்து
வன்னிபோன்மயிர்க்காற்றாறுஞ்சிலவரைவகுத்தான்.

(இ-ள்.) யாகத்தினை யழிக்க நினைத்து மிகவுஞ்சீறித் தனது சுவாசத்தினாலளவற்ற கணங்களையுண்டாக்கி நெருங்கிய வெவ்விய வியர்ப்பினாற் சில பூதரை யுண்டாக்கி நெருப்புப்போன்ற மயிர்க்கால்கள்தோறும் சிலரையுண்டாக்கினான்.— எ-று. ()

மொழியினிற்பலபூதரையளித்தனன்முளரி
விழியினிற்பலபூதரையளித்தனன்வேணி
யுழியினிற்பலபூதரையளித்தனனுந்திச்
சுழியினிற்பலபூதரையளித்தனன்றூயோன்.

(இ-ள்) பலபூதர்களை மொழியினிலுண்டாக்கினான் அக்கினி நேத்திரத்திற் சில பூதர்களை யுண்டாக்கினான் சடையினிடத்துப் பல பூதரையுண்டாக்கினான் உந்திச்சுழியினிற் அத்தூயோன் பல பூதர்களையுண்டாக்கினான்.—எ-று. (உச)

தோளிலெண்ணிலாவீரரையளித்தனன்சுவையின்
கோளிலெண்ணிலாவீரரையளித்தனன் குளிர்பொற்
றாளிலெண்ணிலாவீரரையளித்தனன்றடக்கை
வாளிலெண்ணிலாவீரரையளித்தனன்வலியோன்.

(இ-ள்.) வலிய வவ்வீரன் தோளிலளவற்ற வீரர்களையுண்டாக்கினான். சுவையைக்கொள்ளுநாவினிலெண்ணிலா வீரர்களையுண்டாக்கினான். குளிர்ந்த் பொன்னந்தாளி லெண்ணிலா வீரர்களையுண்டாக்கினான். தடக்கையிலுள்ள வாளினில் அளவற்ற வீரர்களை யுண்டாக்கினான்.—எ-று. (உரு)

கையினிற்சிலபூதரையளித்தனன்களத்தில்
வெய்யமார்பினிற்கன்னத்திற்சிலவரைவிதித்தா
னையதோர்முழந்தாடனிற்சிலவரையளித்தான்
குய்யமீதினிலூருவிற்சிலவரைக்கொடுத்தான்.

(இ-ள்.) கையிற் சில பூதர்களை யுண்டாக்கினான். கழுத்திலும் வெவ்விய மார்பிலுங் கன்னத்திலுஞ் சிலரையுண்டாக்கினான். அழகிய முழந்தாளிற் சிலவரை யுண்டாக்கினான் குய்யத்திலுந் தொடையிலுஞ் சிலவரையுண்டாக்கினான்.—எ-று. (உசு)

இன்னதன்மையில்வீரபத்திரனெனுமிறைவன்
றன்னைநேர்வருமெண்ணிலாவீரரைத்தந்து
துன்னுகின்றுழிப்பத்திரையென்பதோர்துணைவி
யன்னபண்பினிற்காளிகடொகையினையளித்தாள்.

(இ-ள்.) இவ்வாறாக வீரபத்திரனென்னும் இறைவன் தன்னையொத்த அளவற்ற வீரர்களையுண்டாக்கி நெருங்கியவுடனே பத்திரையென்னு மவன்துணைவி அம்முறையாகவே காளிகளின் கூட்டத்தினை யுண்டாக்கினாள்.—எ-று. (உஎ)

வீரபத்திரவுருத்திரன்வேறுவேறளித்த
சாரதர்க்குளங்கோர்சிலர்நீனிறந்தழைப்போர்
கோரபத்திரம்மணிக்கலன்மின்னுவிற்குலவக்
காரெனப்பொலிந்துருமெனக்கழறுகின்றனரால்.

(இ-ள்.) வீரபத்திரனென்னும் உருத்திரன் வேறு வேறாக வுண்டாக்கின பூதர்களு ளொருசிலர் நீல நிறந் தழைக்கப்பெற்றவர்கள் கோரமான வாட்படைகளும் இரத்தினாபரணங்களும் மின்னலைப்போல விளங்கக்கரியமேகங்களைப்போல விளங்கி இடியெனப் பேசுகின்றனர்.—எ-று. (உஅ)

அக்குமாலையுமணிகளுமுடுக்கள்போலவிரப்
பக்கவாணிலாவெயிறுகள்பிறையெனப்பயில
மிக்குநீடியவடிவினராகியேமேலாஞ்
செக்கர்வானெனச்சேந்தெழுபூதர்கள்சிலரே.

(இ-ள்.) என்புமாலைகளும் அரதனங்களும் நட்சத்திரங்களைப்போல விளங்கப் பக்கங்களில் ஒளிவிடுகின்ற நிலவனைய பற்கள் இளம்பிறைகளைப்போலப் பொருந்த மிகுந்து நீண்ட வுருவினராகி யுயர்ந்த செக்கர்வானம்போலச் செந்நிறம்வாய்ந்து தோன்றிய பூதர்கள் சிலர்.—எ-று. (உகூ)

அண்டரைத்தொலைவித்திடும்வீரனையடைந்தோர்
பிண்டமுற்றும்வானிறத்தினர்பூதரிற்பெரியோர்
பண்டிரைத்தொருமுனிமகன்பின்றொடர்பாலின்
றெண்டிரைக்கடற்றொகையெனக்கிளர்ந்தனர்சிலரே.

(இ-ள்.) தேவர்களை யழிக்கின்ற வீரபத்திரனையடைந்தவர்கள் உடன்முழுதும் வெண்ணிறமானவர்கள் பூதருட் பெரியவர்கள் முன்னாளில் முனிமகனான உபமன்னியுவின் பின்னே இரைந்துச்சென்ற தெள்ளிய திரைகளையுடைய பாற்கடலின் றொகையைப்போலச் சென்றனர்.—எ-று. (௩௦)

வெம்பொன்மேனியரனுகுறினவர்தமைவிரைவிற்
பைம்பொன்மேனியராக்குமத்திருநிழல்பரப்பி
யம்பொன்மார்புடைமுகுந்தனில்வடிவுடையவராய்ச்
செம்பொன்மால்வரைநிரையெனத்தோன்றினர்சிலரே.

(இ-ள்.) வெவ்வியபொன்னுருவினர் அடைந்தாற் தம்மையடைந்தவர்களைச் சீக்கிரத்திற் பசிய பொன்மேனியராகச் செய்கின்ற விருப்பத்தைத் தருகின்ற நிழலைப்பரப்பி அழகிய திருமகளை மார்பிலுடைய முகுந்தனிலும் அழகுடையவர்களாகிச் செவ்விய பெரிய பொன்மலை வரிசைகளை யொப்பக் காணப்பட்டனர் சிலர்.—எ-று. (௩௧)

மேயவான்பசப்பூர்தருமேனியராகிக்
காயமித்துணையெனப்படாக்கணக்கினராகி
மாயர்கண்டுயில்சேக்கையைத்தங்கணேவகுத்துச்
சேயதொன்மரத்தொகையெனக்கெழீஇயினர்சிலரே.

(இ-ள்.) ஆகாயத்திற் பொருந்திய பசலைநிறம் வாய்ந்த உடலினராயும் உடலம் இவ்வளவினதென்றறியப்படாத கணக்கினை யுடையவர்களாகியும் திருமால் கண்ணுறங்கும் படுக்கையைத் தம்மிடத்தில் வகித்துக்கொண்டு செவ்வியதாக விளங்கும் ஆலமரங்களின் கூட்டங்களைப்போலச் சிலர் விளங்கினார்கள்.—எ-று. (௩௨)

வேறு.

அங்கவர்க்குளடல்விடையானனந்
தங்கிநின்றுதயங்கினரோர்சிலர்.
பொங்குசீற்றப்பொருதிறல்வாலுளைச்
சிங்கமாமுகமாய்த்தெழித்தார்சிலர்.

(இ-ள்.) அங்ஙனந்தோன்றிய பூதருட்சிலர் வெற்றிவாய்ந்த இடபமுகம் பொருந்தி விளங்கினார்கள். சிலர் மிக்ககோபத்தினையும் போராற்றலினையும் வெள்ளிய புறமயிரினையும் உடைய சிங்கமுகம்பொருந்தி ஆரவாரித்தார்கள்.—எ-று. (௩௩)

புழைகொள்கையுடைப்போர்வலியாளியின்
முழைகொண்மாமுகமாகிமொய்த்தார்சிலர்
வழுவையானனமன்னினரோர்சில
ருழுவையின்முகமாகியுற்றார்சிலர்.

(இ-ள்.) துவாரம்பொருந்திய கையினையுடைய போர்வலிவாய்ந்த யாளியின் குகைபோன்ற வாயமைந்த சிறந்த முகம்பொருந்திச் சிலர் நெருங்கினார்கள். சிலர் யானை முகம்பொருந்தினார்கள். சிலர் புலியின்முகம் கொண்டுற்றனர்.—எ-று. (௩௪)

அலைமுகப்பரியான்னமெய்தியே
கொலைமுகத்துக்குழீஇயினரோர்சிலர்
மலைமுகத்துமரைகளிறெண்குடன்
கலைமுகத்துக்கவினடைந்தார்சிலர்.

(இ-ள்.) சிலர் கடலினிடத்துள்ள வடவையென்னுங் குதிரையின் முகம் பொருந்திக் கொலையினிடத்துக் கூட்டமாகச் சேர்ந்தார்கள். சிலர்மலையினிடத்துள்ள மான் யானை கரடி குரங்கு முதலியவைகளின் முகங்களி னழகைப்பெற்றனர்.—எ-று.

இனையர்தங்குழுவெண்ணிலவன்னர்கைப்
புனையநின்றபொருபடையெண்ணில
வினைகொள்வன்மையும்வீரமுமிற்றென
நினைவதற்கரிதெங்ஙனிகழ்த்துகேன்.

(இ-ள்,) இவர்களின் கூட்டங்கள் அளவற்றன. அவர்கள் கரங்களிலேந்தி நின்ற போருக்குரிய ஆயுதங்களும் எண்ணற்றன. தொழிற்றிறமமைந்த வன்மையும் வீரமும் இத்தகையதென எண்ணுதற்கு அரியதேயானால் எவ்வாறுகூறுவேன்.—எ-று.

கையிலெண்ணில்படையினர்காய்கனற்
செய்யபூணினர்தீக்கலுழ்கண்ணினர்
வெய்யசொல்லர்வெருவருமேனியர்
வையம்யாவுமடக்குறும்வாயினர்.

(இ-ள்.) கைகளிலளவற்ற ஆயுதங்களையுடையவர்கள் காயுங்கனல்போன்ற செவ்விய ஆபரணங்களையுடையவர்கள் தீயினைக்கக்குங்கண்ணினையுடையவர்கள் கொடுஞ்சொல்லினை யுடையவர்கள் அச்சந்தருமேனியினர் உலகனைத்தினையும் விழுங்கத் தக்க வாயினையுடையவர்கள்.-எறு. (௩௭)

கட்டுசெஞ்சடைக்கற்றையர்காய்ந்தெழு
நெட்டழற்குநிகர்வருநாவினர்,
வட்டிமாலைகண்மானுமெயிற்றினர்
தொட்டமூவிலைச்சூலந்துளக்குவார்.

(இ-ள்.) கட்டப்பட்ட செஞ்சடைக் கற்றையினையுடையவர்கள் பற்றி எரிகின்ற செவ்விய தழற்கு நிகரானநாவினையுடையவர்கள் பலகறைமாலையொத்த பற்

சுளையுடையவர்கள் தாங்கப்பெற்ற இலைவடிவமான மூன்றுதலைகளையுடைய சூலத்தினை யேந்திவிளங்குபவர்கள்.—எ-று. (௩அ)

துண்டமீதுசொரிதருந்தீயின
ரண்டகூடமலைத்திடுங்கையினர்
சண்டமாருதந்தாழ்க்குஞ்செலவின
ருண்டுபோரென்றுளந்தளிர்ப்பெய்துவார்.

(இ-ள்.) நாசியினின்றுஞ் சொரியப்பெற்ற தீயினையுடையவர்கள் அண்டகூடங்களை யலைத்திடுங் கையினையுடையவர்கள் சண்டமாருதம் பின்னிடத்தக்க நடையினை யுடையவர்கள் சண்டையுளதெனவுணர்ந் துள்ளக்கிளர்ச்சியுறுவோர்கள்.-எ-று.

மடித்தவாயினர்வானவரென்பினாற்
றொடுத்தகண்ணிதுயல்வருமார்பினர்
தடித்ததோளர்தனித்தழலென்னினும்
பிடித்துநுங்கும்பெரும்பசிமிக்குளார்.

(இ-ள்) மடிக்கப்பெற்ற வாயினையுடையவர்கள் தேவரினெலும்புகளாற் கட்டப்பட்ட மாலைகள் தொங்கும் மார்பினையுடையவர்கள் தடித்த தோளினர் ஒப்பற்ற தீக்கடவுளையேனும் பிடித்துத்தின்னும் பெரும்பசியினையுடையவர்கள்.—எ-று. (சு0)

நச்சிற்றீயவர்நானிலமங்கையு
மச்சுற்றெஞ்சவடிகள்பெயர்த்துளார்
கச்சைத்தோன்மிசைகட்டியதட்டிய
ருச்சிட்டம்மென்றுலகினையுண்கிலார்.

(இ-ள்.) விடத்தினுங் கொடியோர் பூமிதேவியுமஞ்சி இளைக்குமாறடி பெயர்த்துவைப்பவர்கள், கச்சையாகவமைந்த தோலின்மீது கட்டிய தட்டியென்னுஞ் சல்லடங்களையுடையவர்கள்; உலகினை மாயனுண்டமிச்சிலென்று உண்ணாது விடுத்தவர்கள்.

சூழியானைதுவன்றியமால்வரைப்
பாழியாகப்படர்செவிவாயின
ரூழிமாருதமுட்குமுயிர்ப்பின
ராழியாகவகன்றவகட்டினர்.

(இ-ள்.) முகபடங்களையுடைய யானைகள் நெருங்கிக்கிடந்துறங்கும் இடமாக வகன்ற செவிகளையும் வாய்களையும் உடையவர்கள்; ஊழிக்காற்று முள்ளுடையத்தக்க சுவாசத்தினை யுடையவர்கள் வட்டமாகவகன்ற வயிற்றினையுடையவர்கள்—எ-று.(சுஉ)

ஆழ்ந்தசூர்ப்பசுங்கண்ணரடித்துணை
தாழ்ந்தகையர்தடக்குறுந்தாளினர்
வீழ்ந்துமிக்கவியனதரத்தினர்
சூழ்ந்தபூதத்தொகையினர்யாவரும்.

(இ-ள்.) உள்ளாழ்ந்த வஞ்சந்தருகின்ற பசியகண்களையுடையவர்கள்; காலடியளவுந்தாழ்ந்த கைகளையுடையவர்கள்; அகன்ற குறியதாளினையுடையவர்கள் மிகவும் விழுந்துதொங்காநின்ற உதட்டினையுடையவர்கள் வீரபத்திரனைச்சூழ்ந்துநின்ற பூதத்தொகையின ரனைவரும் இவ்வாறுனவர்கள்.—எ-று. (சு௩)

வேறு.

அத்தகைநின்றிடவண்ணலுடன்சேர்
பத்திரகாளிபயந்திடுகின்ற
கத்துகடற்புரைகாளிகடம்மை
யித்துணையேயெனவெண்ணரிதாமால்.

(இ-ள்.) பல வேறுவகைப்பட்ட பூதரினங்களாதியவைகளும் பிறவுமாகிய இச்செயலிவ்வாருக வீரபத்திரனுடன்வந்த பத்திரகாளியுண்டாக்கிய இறையுங்கடலனைய காளிகளை இவ்வளவினரென்று கணக்கிடுதற் கரிதேயாம்.—எ-று. (௬௪)

அந்தமில்பல்படையங்கையிலேந்தி
யுந்தியதும்பைகளுச்சிமிலைச்சிச்
சுந்தரமெய்தியதோற்றமதாகி
விந்தையெனச்சிலர்மேவினரன்றே.

(இ-ள்.) அளவற்ற பலவகை யாயுதங்களை அகங்கைகளிலேந்தியுயர்ந்த தும்பையலரையுச்சியிற் றரித்து அழகுவாய்ந்த தோற்றத்தினராகித் துர்க்கையைப்போலச் சிலர் சென்றனர்.—எ-று. (௬௫)

தோளின்மிசைத்திரிசூலமிலங்கக்
கோளிலுயிர்ப்பலிகொள்கலனேந்தித்
தாளிடைநூபுரசாலமிலங்கக்
காளிகள்போற்சிலர்காட்சிமலிந்தார்.

(இ-ள்.) தோளின்மீது திரிசூலம் விளங்கக்குற்றமற்ற உயிர்ப்பலிகொள்ளுங் கபாலங்களையேந்திக் கால்களிற் சிலம்பினினங்கள் விளங்கக்காளிகளைப்போலச் சிலர் தோற்றத்தின் மிக்குச்சென்றனர்.—எ-று. (௬௬)

வாகினியெங்குளவென்றிடமல்கு
மோகினிபோற்சிலர்மொய்த்தனர்மாயச்
சாகினிபோற்சிலர்சார்ந்தனரல்லா
யோகினிபோற்சிலருற்றனரம்மா.

(இ-ள்.) இனிவெற்றி எங்குளதென்று கூறுமாறு மிகுந்த மோகினியைப் போலச் சிலர் நெருங்கினர்கள்; மாயத்தினையுடைய சாகினியைப்போலச் சிலர்சென்றனர் யோகினியைப்போலச் சிலர்சென்றார்கள்.—எ-று. (௬௭)

அயிருறவண்டமனைத்தையுமெற்று
வுயிரவிதுங்கியவுன்னியெழுந்தே
செயிரவியாதுதெழித்திடுதொன்றாள்
வயிரவிபோற்சிலர்மன்னினர்மாதோ.

(இ-ள்.) அண்டமனைத்தினையு நுண்ணியமணலாக மிதித்து உயிராகிய அவியை யுண்ணுதற்கு நினைத்தெழுந்து கோபநீங்காது கர்ச்சிக்கின்ற ஊழிக்காலத்து வைரவியைப்போல சிலர் வந்தார்கள்.—எ-று. (௬௮)

நீடலைமாலைநிலத்திடைதோய
வாடுறுபாந்தளணிக்கலன்மின்ன
வீடுறுவானுருமேறெனவார்த்தே
மோடிகளாமெனமொய்த்தனர்சில்லோர்.

(இ-ள்.) நீண்ட சிரமாலை பூமியிற்படவும் ஆடுகின்ற பாம்பாகிய அழகியகலன்கள் மின்னவும் ஒன்றோடொன்றுதாக்குகின்ற இடியேற்றைப்போல ஆரவாரித்துக்கொண்டு மோடிகளைப்போலச்சிலர் மொய்த்தனர்.—எ-று. (௬௯)

இவ்வகைமாதர்கள்யாவருமெவ்வே
றைவகைமேனியராய்வதனங்கள்
கைவகையெண்ணிலராய்க்கவின்மாட்சிச்
செவ்வியராய்ச்செருமேற்கிளர்கின்றார்.

(இ-ள்.) இவ்வண்ணம் மாதரனைவரும் வேறுவேறாக அழகியவகையினவான மேனியினராய் முகங்களுங் கைகளும் அளவற்றவர்களாய் அழகின் மாட்சிமையிற் செவ்வையானவர்களாய்ப் போரினில் ஊக்கங்கொண்டு நின்றனர்.—எ-று. (௫0)

வேறு.

கணந்திகழனையபூதர்காளிகைமார்கள்யாரு
மணங்குறுகாளிதன்னோடாண்டகைவீரன்றாளிற்
பணிந்தனர்பரசியன்னார்பாங்கரில்விரவிச்சூழ்ந்து
துணங்கைகொடாடிப்பாடித்துள்ளியேபோதலுற்றார்.

(இ-ள்.) கூட்டமாக விளங்கிய பூதர்களும் காளிகளுமாகிய அனைவரும் அச்சந்தருங்காளியுடன் ஆண்டன்மையிற் சிறந்த வீரபத்திரனுடைய கால்களில் வணங்கித் துதித்து அவர்கள் பக்கத்தில் நெருங்கிச்சூழ்ந்து துணங்கையாகவாடிப் பாடித் துள்ளிச்சென்றனர்.—எ-று. (௫௧)

ஈட்டமிக்கெழுந்துசெல்லுமின்னதோர்பூதர்தம்மின்
மோட்டிகற்பானுகம்பன்முதலியகணங்கண்முத்தி
வீட்டுடைத்தலைவனானவீரபத்திரன்முன்னாகி
யீட்டுடைப்பல்லியங்கள்யாவையுமியம்பிச்சென்றார்.

(இ-ள்.) கூட்டமிகுந்து எழுந்து செல்லாநின்ற இந்தக்கணங்களுள் மிக்க வன்மையினையுடைய பானுகம்பன் முதலிய கணங்கள்முத்தி வீட்டின்றலைவனான வீரபத்திரனுக்கெதிரிற் கூட்டமான மேளங்கள் பலவற்றையு முழக்கிச்சென்றனர்.-எ-று.

கொண்டபோராற்றலோடுங்குலவியவீரன்றன்பா
லண்டமேனுரிஞ்சப்பல்வேறணிப்பெருங்கவிகைகொண்டும்
விண்டிலாங்கவரியீட்டம்வீசியுஞ்சேறலுற்றார்
தண்டனேபிருகிசிங்கனுதியாந்தறுகட்பூதர்.

(இ-ள்.) தண்டன் பிருகி சிங்கன் முதலிய அஞ்சாமையினையுடைய பூதர்கள் பொருந்திய போராற்றலுடன் விளங்கிய வீரபத்திரனருகில் அண்டத்தின்மீதுபடும் வண்ணம் பலபெரிய அழகியகுடைகளை யேந்தியும் விரிந்துவிளங்குகின்ற சாமரங்களை வீசியுஞ் சென்றனர்.—எ-று (௫௩)

பாசிழைமகளிர்சில்லோர்பத்திரைபாங்கராகித்
தேசுடைக்கவிகையீட்டந்திருநிழல்பரப்பவேந்தி
மாசறுகவரிவட்டம்வரம்பிலவிரட்டிப்பல்வே
றாசிகள்புகன்றுசெம்பொனணிமலர்சிதறிப்போந்தார்.

(இ-ள்.) பசிய இழையணிந்த சில காளிப்பெண்கள் பத்திரகாளியினருகில் ஒளிபொருந்திய குடைக்கூட்டங்களைத் திருநிழல் பரப்புமாறு தாங்கியும் களங்கமற்ற சாமரங்களை அளவற்றனவாகவீசியும் பலவேறான ஆசிகள்கூறியும் செம்பொனலாகிய அழகிய மலர்களைச் சிந்தியுஞ் சென்றார்கள்.—எ-று. (௫௪)

படர்ந்திடுபுணரிபோலப்பார்முழுதீண்டித்தானை
யடங்கலுமார்க்குமோதையகிலமுஞ்செறியவிண்ணு
முடைந்ததவ்வண்டங்கொல்லோவுதுகொலோவிதுவோவென்னா
மிடைந்தபல்லண்டந்தோறும்விதிர்ப்பொடும்விளம்பலுற்றார்.

(இ-ள்.) அகன்ற கடலைப்போற் சேனைகள் அனைத்தும் உலகமுழுதிலுநெருங்கி ஆரவாரிக்கு மோசையானது அகிலத்திலும் விண்ணிலுநெருங்க உடைந்தது அந்தவண்டமோ உதுவோ இந்த அண்டமோவென்று நெருங்கிப்பல அண்டத்திலுள்ளவர்களும் நடுக்கத்துடன் கூறினார்கள்.—எ-று. (௫௫

பூழிகளெழுந்தவம்மாபுவியெலாம்பரவித்தொல்பே
ராழியுமடைத்துவான்புக்கச்சுதன்பதங்காறேகி
யூழியின்முதல்வனர்க்குமொலியினுலுடைந்தவண்டப்
பாழிகடொறுமுற்றெல்லாப்புவனமும்பரந்தவன்றே.

(இ-ள்.) எழுந்தபுழுதிகள் உலகமுழுதும் பரந்து பழய பெரிய கடலையுமடைத்து வானிற்புகுந்து அச்சுதன் பதம்வரைக்குஞ்சென்று ஊழிமுதல்வனுன வீரபத்திரவுருத்திரன் ஆரவாரிக்குமோசையா லுடைந்த அண்டத்தின் ஊர்கடொறுமடைந்து எல்லாப்புவனத்திலும் பரந்தன.—எ-று. (கசு)

அங்கெழுபூழிதன்னுலவர்விழிக்கலுழுந்தீயாற்
செங்கையிற்படைகடேய்ப்பச்சிதறியகனலால்வைய
மெங்கணுமெரிகடுன்னியிரும்புகைப்படலமீண்டிக்
கங்குலும்பகலுங்காணுக்கடைப்பகல்போன்றதன்றே.

(இ-ள்.) அங்கெழுந்த புழுதியாலும் அவர்கள் கண்கள்கக்கிய தீயாலும் செவ்வியகைகளிலுள்ள படைகள் ஒன்றோடொன்று தேய்ப்பதனுற்சிதறியகனலினுலும் உலகமுழுது மெரிகள் நெருங்கிப் பெரியபுகைப்படலங் கூட்டமாகி இரவும் பகலுங் காணப்படாத ஊழிநாள்போலிருந்தது.—எ-று. (கஎ)

இப்பெருந்தானைசூழவெம்பிரானெழுந்துசீற்றத்
துப்புடனேகித்தக்கன்றென்மகம்புரியுஞ்சாலை
வைப்பினையணுகித்தன்பால்வருபடைத்தலைவர்க்கொன்று
செப்பினனென்பமன்னேசேணுருமேறுநாண.

(இ-ள்.) இத்தகைய பெரிய சேனைசூழ எம்பெருமானெழுந்து மிக்ககோபத்துடன்சென்று தக்கன் யாகஞ்செய்யும் பழயவிடத்தினையடைந்து வானிலுள்ள உருமேறு நாணுமாறு தனதருகில் வராநின்ற படைத்தலைவர்களுக்கொன்று கூறினன்.

பற்றலர்புரமூன்றட்டபரமனையிகழ்ந்துநீக்கிச்
சிற்றினம்பொருளென்றுன்னிச்சிறுவிதியென்னுந்தீயோ
னிற்றிடுநெறியால்வேள்வியியற்றுமிச்சாலைவாயில்
சுற்றொடுசேமஞ்செய்துதுயக்கறக்காத்திரென்றான்.

(இ-ள்.) பகைவரின் முப்புரங்களையழித்த சிவபெருமானை இகழ்ந்து நீக்கிச் சிற்றினத்தைப்பொருளெனக்கருதித் தக்கனென்னுங்கொடியவன் இறக்குமுறையாக யாகஞ்செய்யு மிவ்யாகசாலையின் வாசலைச்சுற்றிலும் பத்திரஞ்செய்து சோர்வின்றிக் காப்பீராக என்றனன்.—எ-று. (கக)

என்றலுந்தானையோர்களெயிற்புறமுற்றுஞ்சூழ்ந்து
நின்றனர்வானினூடுநெருங்கினர்வாய்தோறுஞ்
சென்றனர்கொடியதக்கன்சேனையாயெதிர்ந்தோர்தம்மைக்
கொன்றனரவரூன்றுய்த்துக்கூற்றனுமுட்கவார்த்தார்.

(இ-ள்.) என்றவுடனே சேனைகள் மதிற்புறமுழுதுஞ்சூழ்ந்து நின்றார்கள் ஆகாயத்தில் நெருங்கினர்கள் வாசல்கடோறுஞ் சென்றார்கள் கொடிய தக்கனுடைய சேனையாக எதிர்த்தவர்களைக்கொன்று அவர் ஊன்களைத்தின்று எமனுமஞ்சுமாறு ஆரவாரித்தார்கள்.—எ-று. (உ0)

வீரபத்திரப் படல முற்றிற்று.

ஆகதிருவிருத்தம் க,ரு௲அசு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# யாகசங்காரப் படலம்.

ஆர்த்தலுமிறைவிதன்னோடாண்டகைவீரன்வாசத்
தார்த்தொகைதூங்கும்பாகசாலையுளேகலோடுந்
தீர்த்தனைத்தலைவிதன்னைத்திசைமுகன்முதலோர்யாரும்
பார்த்தளருளந்துண்ணென்றுபதைபதைத்தச்சங்கொண்டார்.

(இ-ள்.) பூதர்கள் அவ்வாறாரவாரஞ்செய்தவுடனே பத்திரகாளியுடன் வீரபத்திரன் மணந்தங்கிய மலர்மாலைகள் தொங்குகின்ற யாகசாலையுட் செல்லுதலும் அத்தூய்மையாளனான வீரபத்திரனையும் பத்திரகாளியையும் பிரமன் முதலியவர்கள் பார்த்து உள்ளந்துண்ணென்று பதைபதைத்து அச்சமடைந்தனர்.—எ-று. (க)

மடங்கலின்வரவுகண்டமானினம்போன்றும்வானத்
தடங்கியவுருமேற்றவரவினம்போன்றும்யாக்கை
நடுங்கினராற்றல்சிந்திநகையொரீஇமுகனும்வாடி
யொடுங்கினருயிரிலார்போலிவைசிலவுரைக்கலுற்றார்.

(இ-ள்.) சிங்கத்தின் வருகையைக்கண்ட மானின்கூட்டத்தைப்போலவும் மேகத்திற்பொருந்திய இடியேறுவிழுந்த அரவினம்போலவும் உடல் நடுங்கி வன்மையிழந்து நகை நீங்கிமுகம்வாடி யொடுங்கி உயிரற்றவரையொப்ப இவைசில கூறுவாராயினர்.—எ-று. (உ)

ஈசனுமுமையுமேவந்தெய்தினரென்பாரன்னார்
காய்சினமுதவவந்தகாட்சியர்காணுமென்பார்
பேசரிதந்தோவந்தோபெரிதிவர்சீற்றமென்பார்
நாசம்வந்திட்டதின்றேநம்முயிர்க்கெல்லாமென்பார்.

(இ-ள்.) ஈசனுமுமையுமே இக்கோலத்துடன்வந்து சேர்ந்தனரென்பார்கள். அவர்களின் பெருங்கோபத்தாலாக்கப்பட்டுவந்த தோற்றத்தினரென்பார்கள். உரைத்தற்கரிது அந்தோவந்தோ இவர் சீற்றம் பெரிதென்றுகூறுவார்கள் நம்முயிரனைத்துக்கும் இன்றே நாசமுண்டாகியது என்பார்.—எ-று. (ங)

தக்கனுக்கிறுமின்றேசார்ந்ததுபோலுமென்பார்
மிக்கதோர்விதியையாரேவிலக்கவல்லார்களென்பார்
முக்கணெம்பெருமான்றன்னைமுனிந்திகழ்கின்றநீரா
ரக்கணமுடிவரென்றற்கையமுமுண்டோவென்பார்.

(இ-ள்.) தக்கனென்பவனுக்கு நாசமும் இந்நாளிற்போலும்என்று கூறுவார்கள் எவற்றினுமுயர்ந்த விதியை எவர் விலக்க வல்லவர்கள் என்பார்கள் மூன்றுகண்களையுடைய எம்பெருமானை வெறுத்திகழ்ந்ததன்மையார் உடனே அழிவாரென்பதற்குச் சந்தேகமுளதோவென்று கூறுவார்கள். (ச)

விமலனையிகழுகின்றன்வேள்வியேன்புரிந்தானென்பார்
நமையெலாம்பொருளென்றுன்னிநடத்தினன்காணுமென்பா
ரிமையவர்குழுவுக்கெல்லாமிறுதியின்றாமோவென்பா
ருமையவள்பொருட்டாலன்றோவுற்றதீங்கிதெலாமென்பார்.

(இ-ள்.) மலாகிதனை சிவபிரானை இகழுமித்தக்கன் யாகமேன்செய்தனன் என்று கூறுவார்கள். நமையெலாம் பொருளாசமதித்து நடத்தினான் என்று கூறுவார்கள், தேவர் கூட்டத்துக்கெல்லாம் இன்றுதானோ அழிவு என்று கூறுவார்கள் இத்தீங்கனைத்தும் உமையவள் பொருட்டன்றோ உண்டாகியது என்று கூறுவார்கள். ()

ஈடுறுபூதர்யாருமெங்கணும்வளைந்தாரென்பா
ரோடவுமரிதிங்கென்பாரொளித்திடற்கிடமேதென்பார்
வீடினங்காணுமென்பார்மேலினிச்செயலென்னென்பார்
பாடுசூழங்கிநாப்பட்பட்டபல்களிறுபோன்றார்.

(இ-ள்) வன்மைமிக்க பூதரனைவரும் எவ்விடத்திலுஞ் சூழ்ந்துகொண்டனர் என்று கூறுவார்கள். இங்குஓடவும் அரிதென்பார்கள் ஒளித்துக்கொள்ளுதற்கிடமேது என்பார்கள் இறந்தோமென்பார்கள் இனிமேற் செயலென்னை யென்பார்கள் பக்கத்திற்சூழ்ந்ததீயின் நடுவிற்சிக்கிக்கொண்ட பலயானைகளை யொப்பவர்கள்.—எ-று (௬)

அஞ்சினரினையகூறியமரர்களரந்தைகூரச்
செஞ்சரணதனைநீங்காச்சிலபெரும்பூதர்சூழப்
பஞ்சுறழ்பதுமச்செந்தாட்பத்திரையோடுசென்று
வெஞ்சினவீரன்வெய்யோன்வேள்விசெய்வதனைக்கண்டான்.

(இ-ள்.) அஞ்சினோராயிவைகளையுரைத்துத் தேவர்கள் வருந்தச்செவ்வியகாலடியைவிட்டுவிலகாத சிலபெரியபூதர்கள் சூழ்ந்துவராநிற்பச் செம்பஞ்சுக்குழம்புபடிந்த தாமரைமலர்போலுங் கால்களையுடைய பத்திராதேவியுடன் மிக்கசீற்றத்தினையுடைய வீரபத்திரன்சென்று கொடியதக்கன் யாகஞ்செய்வதனைப்பார்த்தான். (எ)

இடித்தெனநக்குப்பொங்கியெரிவிழித்திகலியார்த்துப்
பிடித்தனன்வயக்கொம்பொதைபிளந்ததுசெம்பொன்மேரு
வெடித்ததுமல்லன்ஞாலம்விண்டனவண்டம்யாவுந்
துடித்தனவுயிர்கண்முற்றுந்துளங்கினர்சுரர்களெல்லாம்.

(இ-ள்.) இடிஇடித்தாற்போல சிரித்துச்சீறியெரிதோன்றக் கண்களையுருட்டி விழித்துப் பகைத்துக்கர்ச்சித்து, வெற்றிக்கொம்பினை யூதியோசையையுண்டாக்கினான் அவ்வோசையாற் செவ்விய பொன்மயமான மகமேருபிளந்தது வளர்தங்கியஉலகம்வெடித்தது அண்டங்கள்பிளந்தன உயிர்களனைத்துந் துடித்தன தேவரனைவரு நடுங்கினர்.

எழுகின்றவோசைகேளாவிடியுண்டவரவிற்சோரா
விழுகின்றார்பதைக்கின்றார்வாய்வெருவுகின்றார்களேங்கி
யழுகின்றாரோடுகின்றாரழிந்ததோவேள்வியென்று
மொழிகின்றார்மீளுகின்றார்முனிவருமிமையோர்தாமும்.

(இ-ள்.) அங்ஙனம் எழாநின்ற ஓசையைக் கேட்டு இடிபட்ட நாகம்போலச் சோர்ந்து முனிவர்களுந்தேவர்களும் விழுகின்றனர் பதைக்கின்றனர் வாய்குளறுகின்றனர் ஏங்கியழுகின்றனர் ஓடுகின்றனர் வேள்வியழிந்ததோவென்று கூறுகின்றனர் சென்றுதிரும்புகின்றனர்.—எ-று. (௯)

வானவர்பிறரிவ்வாறுவருந்தினரென்னினங்க
ணேனையர்பட்டதன்மையியம்பரிதெவர்க்குமென்று
ஞனதுபுகலவற்றோநளிர்புனல்வீறந்தகாலத்
தானதோருருமேறுற்றவசுணமாத்தன்மைபெற்றார்.

(இ-ள்.) வீரபத்திராதியரின் சிங்கநாதாதிகேட்டுத்தேவர்களும் இவ்வாறு வருந்தினரென்றால் அவ்விடத்திற் பிறரடைந்ததன்மையை யெவராலுமுரைத்தற்கு முடி

யாதானால் என்னாலதுகூற முடியுமோ குளிரமைந்த நீர்வற்றிய கோடைக்காலத்துண்டானபேரிடி யொலிகேட்ட சேகயப்புள்ளின் தன்மையையடைந்தார்கள் என்றுகூறுதலே அமைவுடைத்தாம்.—எ-று. (௧௦)

வேலையங்கதனின்மேலாம்வீரருள்வீரனேகி
மாலயன்றானுமுட்கமகத்தின்முன்னடைதலோடுஞ்
சீலமதகன்றகொள்கைச்சிறுவிதியவற்கண்டேங்கிச்
சாலவுநடுக்குற்றுள்ளந்தளர்ந்தனன்றலைமைநீங்கி.

(இ-ள்.) அப்பொழுது மாலும் அயனும் அஞ்ச மேலானவீரருள்வீரனான வீரபத்திரன் யாகசாலையுட்சென்று யாகத்தினெதிரிற் செல்லுதலும் ஒழுக்கமற்ற தக்கனவனைக்கண்டு எங்கிமிகவுநடுங்கி நிலைகெட்டு உள்ளந்தளர்ந்தனன்.—எ-று. (௧௧)

சாரதர்வளைந்தவாறுஞ்சாலையதுடையுமாறு
மாருமங்குற்றவானோரயர்வுறுமாறுநோக்கிப்
பேரஞருழந்துதேறிப்பெருந்திறலாளன்போல
வீரபத்திரனைநோக்கிவிளம்பினனினையதொன்றே.

(இ-ள்.) பூதர்கள் வெளிப்புறத்திற் சூழ்ந்ததன்மையும் சாலையழியுந் தன்மையும் அங்கிருக்குந் தேவரனைவரும் தளர்வடைதலையும் பார்த்துப்பெருந்துக்கமடைந்து தேறிப், பெருத்த வன்மையாளனைப்போல வீரபத்திரனைப்பார்த்து இவ்வாறொன்று கூறினான்.—எ-று. (௧௨)

இங்குவந்தடைந்ததென்கொல்யாரைநீயென்னலோடுஞ்
சங்கரன்றனதுசேயான்றக்கநின்வேள்விதன்னி
னங்கவதற்குதவும்பாகமருளுதியதற்காவந்தப்
புங்கவனருளினாலேபோந்தனனீண்டையென்றான்.

(இ-ள்.) நீயாவன் இங்கெதற்க வந்தனை என்றுகேட்டவுடனே வீரபத்திரன் தக்கனே யான் சங்கரனுடைய புதல்வன் நினதுயாகத்தில் அச்சங்கரனுக்களிக்கும் பாகத்தை கொடுக்கக்கடவை அதனுக்காக அவ்வுயர்ந்தவனுடைய கட்டளையால் இங்குவந்தேனென்று கூறினான்.—எ-று. (௧௩)

இத்திறம்வீரன்கூறவிருந்தவத்தக்கனுங்க
ளத்தனுக்குலகம்வேள்வியதனிடையவியின்பாக
முய்த்திடாதென்னவங்கணுறைதருமறைகளானுஞ்
சுத்தமார்குடிலைதானுந்துண்ணெனவெழுந்துசொல்லும்.

(இ-ள்.) இவ்வண்ணம் வீரபத்திரனுரைக்க அத்தக்கன் உங்கள் அத்தனுக்கு உலகமானது யாகத்தில் அவியின்பங்கினைக் கொடுக்காது என்று கூறுதலும் உடனே அங்கிருந்த நான்குவேதங்களும் சுத்தமான குடிலையும் விரைவாக எழுந்து இவ்வாறு கூறுநிற்கும்.—எ-று.

சிவபெருமானை இகழுந்தக்கனுக்கு வீரபத்திரனிடமிருந்த அச்சமிருத்தலின் உயர்த்தி உங்களத்தன் என்றானெனவறிக. (௧௪)

ஈறிலாவுயிர்கட்கெல்லாமிறையவனொருதானாகு
மாறிலாவரனேயல்லான்மகத்தினுக்கிறையாயுள்ளோன்
வேறொரூவானவனுமுண்டோவேள்வியிலவற்குநல்குங்
கூறுநீபாணியாதுகொடுத்தியாலென்றவன்றே.

(இ-ள்.) அழிவற்ற உயிரனைத்துக்கும் ஒப்பற்ற இறைவனாகவுள்ள மாறுபாடற்ற அரனையன்றியாக கருத்தாவாகவுள்ளவன் மற்றொருதேவனுமுளனோ இலன் ஆத

ின்யாகத்தில் அவ்வரனுக்குக்கொடுகின்ற பாகத்தைக்காலதாமதஞ் செய்யாது கொடு
ி என்றனன்.—எ-று. (கடு)

தேற்றமில்சிதடனுகுஞ்சிறுவிதிகேட்பவின்ன
கூற்றினுன்மறைகணுன்குங்குடிலையுமொருங்குகூடிச்
சாற்றனுமன்னுனல்காத்தலைமைகண்டிறைவன்றொல்சீர்
போற்றியங்ககன்றுதத்தம்புகலிடம்போயவன்றே.

(இ-ள்.) தெளிவற்ற அறிவிலியான தக்கன் கேட்கும்வண்ணம் இந்தமொழி
ால் நான்குவேதங்களும் பிரணவமுமொன்ருகச்சேர்ந்து கூறுதலும் அத்தக்கன் அ
ியளியாத தலைமையைப்பார்த்து இறைவனுடைய பழயபுகழைப்புகழ்ந்து அங்குநின்
ம் விலகித் தத்த மிருப்பிடங்களுக்கு சென்றன.—எ-று. (கசு)

போதலுந்தக்கன்றன்னைப்பொலங்கழல்வீரன்பாரா
வேதமும்பிறவுங்கூறும்விழுப்பொருள்கேட்டியன்றே
யீதியெம்பெருமாற்குள்ளவின்னவியெனலுங்கானிற்
பேதையொடாடல்செய்யும்பித்தனுக்கீயேனென்றான்.

(இ-ள்.) அவ்வாறு சென்றவுடனே தக்கனை அழகிய கழலணிந்த வீரன்பார்
து வேதமும் பிறவுந்துதிக்குமுயர்ந்த பொருளைக்கேட்டனையே எம்பெருமானுக்குள்
இனிய வவியை யளிப்பாயாகவென்று கூறுதலும் சுடுகாட்டிற் பேதையுடன் நடிக்
ின்ற பித்தனுக்குக் கொடேன் என்று கூறினன்.—எ-று. (கஎ)

ஆங்கதுகேளாவண்ணலம்புயனுதியாகிப்
பாங்குறவிரவும்வானோர்பல்குழுவதனைநோக்கி
நீங்களுமிவன்பாலானீர்நிமலனுக்கவிநல்காம
லீங்கிவனிகழுந்தன்மையிசைவுகொலுமக்குமென்றான்.

(இ-ள்.) அதனைக்கேட்ட வீரபத்திரன் பிரமன்முதலியவர்களாய்ப் பக்கத்திற்
ழ்ந்திருந்த தேவர்களின் பலகூட்டங்களைப்பார்த்து நீங்களும்இவன்சார்பிலிருக்கின்
ீர்கள் நிமலனுக்கவியையளியாமல் இவன் இகழுந்தன்மை உங்களுக்குஞ் சம்மதந்
ானே என்று கேட்டனன்.—எ-று. (கஅ)

என்றலுமனையர்தொல்லூழிசைவினலதுகேளார்போ
லொன்றுமங்குரையாராகியூமரினிருத்தலோடு
நின்றதோர்வீரன்வல்லேநெருப்பெழவிழித்துச்சீறி
நன்றிவர்வன்மையென்னுநகையெயிறிலங்கநக்கான்.

(இ-ள்.) என்றுவினவியவுடனே அவர்கள் பழயஊழின் சம்பந்தத்தால் வீர
த்திரன் கூறியதனைக் கேளாதவர்களைப்போல ஒன்றுமுரையாராய் ஊமைகளைப்
போல இருத்தலும் அவனெதிரினின்ற வீரபத்திரன் விரைவாக நெருப்புண்டாக விழி
த்துக்கோபித்து இவன்நெஞ்சுரம் நன்றுஎன்று ஒளிவிளங்கும் பற்கள்தெரிய நகைத்
னன்.—எ-று. (கக)

கடித்தனனெயிறுசெந்தீக்கான்றனன்கனன்றுகையிற்
பிடித்திடுமேருவன்னபெருந்திறற்கதையதொன்றாற்
றடித்திடுமகலமார்பத்தடவரையகடுசாய
வடித்தனன்றக்கனுள்ளம்வெருவரவரிமுன்வீழ்ந்தான்.

(இ-ள்.) தீப்பறக்கப்பற்களைக்கடித்துக்கையிற்பிடித்துள்ள மேருவனைய மிக
பெரியவலியமைந்த வொருகதையினுற் தக்கனுடைய தடித்தவகன்ற மார்பமாகிய
பெரியமலைபிளக்கவடித்தனன் அடிபட்டுத்தக்கன் உள்ளத்திலச் சத்துடன் அரியினெ
திரே விழுந்தனன்.—எ-று. (உ0)

விட்டுமுன்வீழ்தலோடும்வீரருள்வீரத்தண்ணன்
மட்டுறுகமலப்போதில்வான்பெருந்தவிசில்வைகுஞ்
சிட்டனைநோக்கியன்னான்சிரத்திடையுருமுற்றென்னக்
குட்டினனொருதன்கையான்மேல்வருங்குமரனேபோல்.

(இ-ள்.) விஷ்ணுவினெதிரே தக்கன் விழுந்தவுடனே வீரருள்வீரனான அ... ணல்மணம் பொருந்திய தாமரைமலரான சிறந்தபெரிய தவிசிலிருக்கும் பிரமனை பார்த்து அவன்றலையில் இடிவிழுந்தாலெனப் பின்வரும் குமாரக்கடவுளைப்போலத... தொருகையினாற் குட்டினான்.—எ-று. (உ...

தாக்குதலோடுமையன்சரணிடைப்பணிவான்போல
மேக்குறுமீசன்னிசோரவிரிஞ்சனும்வீழவன்னான்
வாக்குறுதேவிதன்னைமற்றவர்தம்மைவாளான்
மூக்கொடுகுயமுங்கொய்தானிறுதிநாண்முதல்வன்போல்வான்.

(இ-ள்.) குட்டுதலும் ஐயனுடையகால்களில் வணங்குவோனையொப்ப உயர்ந்... தலைவணங்கிப்பிரமனும் விழ வவனது வாக்கிலிருக்க தேவியையும் மற்றையோரையு... வாளினால் ஊழிக்கால முதல்வனையொத்த வீரபத்திரன் மூக்கினையுந் தனத்தினையு... அறுத்தனன்.—எ-று. (உஉ...

ஏடுலாந்தொடையல்வீரனித்திறமிவரைமுன்னஞ்
சாடினனதுகண்டங்கட்சார்தருமிமையோர்யாரு
மோடினருலந்தார்வீழ்ந்தாரொளித்திடற்கிடமேதென்று
தேடினரொருவரின்றிச்சிதறினர்கதறுகின்றார்.

(இ-ள்.) பூவிதழ் பொருந்திய மாலையணிந்த வீரபத்திரன் இவ்வண்ணம் முன்... னர்த்தண்டித் தானதனைப்பார்த்து அவ்விடத்திலிருந்த தேவரனைவரும் ஓடிவிழுந்து ஒளித்தற்கிடமேதென்று தேடியொருவருமங்கின்றிச் சிதறிக்கதறுகின்றார்கள்.—எ-று

வேறு.

இன்னதோர்காலையிலிரிந்துபோவதோர்
மென்னிறைமதியினைவீரன்காணுறாத்
தன்னொருபதங்கொடேதள்ளிமெல்லெனச்
சின்னமதுறவுடறேய்த்திட்டானரோ.

(இ-ள்.) அப்பொழுது விலகியோடுகின்ற கலைநிறைந்த சந்திரனை வீரபத்தி... ரன் பார்த்துத் தனதொரு காலினாற் தள்ளிமெல்லென உடலம் சிதைவுறுமாறு தேய்... த்தனன்.—எ-று. (உச...

அடித்தலங்கொடுமதியதனைத்தேய்த்தபின்
விடுத்தனன்கதிரவன்வெருவியோடலு
மிடித்தெனக்கவுளிடையெற்றினனவ
னுடுத்திரளுதிர்ந்தெனவுகுப்பத்தந்தமே.

(இ-ள்.) காலடியைக்கொண்டு சந்திரனைத்தேய்த்த பின்னர் அவனை விடுத்த... னன் சூரியன் பயந்தோடுதலும் நட்சத்திரங்களுதிர்ந்தாற்போல வவன் பற்களுதிரும் வண்ணம் இடியிடித்தாலெனக் கன்னத்திலடித்தனன்.—எ-று. (உ...

எறித்தருகதிரவனெயிறுபார்மிசைத்
தெறித்திடவுயிரொரீஇச்சிதைந்துவீழ்தலும்
வெறித்தருபகனெனும்வெய்யவன்விழி
பறித்தனன்றருவதோர்பரிசுநல்குவான்.

(இ-ள்.) ஒளிவீசுஞ் சூரியனுடைய பற்கள் பூமியிற்றெறிக்க உயிரிழந்து சிதைந்து விழுதலும் வெருண்டு நின்றபகன் என்னுமற்றொரு சூரியனுடையகண்களைப்பிடுங்கினான் தகுந்ததன்மையைச் சிவத்துவேஷிகளுக்குச் சிட்சாரூபமாகக் கொடுக்கும் வீரபத்திரன்.—எ-று. (உசு)

தொட்டலும்பகன்விழித்துணையையித்திறம்
பட்டதுதெரிந்துயிர்பலவும்பைப்பைய
வட்டிடுகூற்றுவனலமந்தோடலும்
வெட்டினனவன்றலைவீரவீரனே.

(இ-ள்) பகனுடைய உபயநயனங்களையும் பறித்தலும் இவ்வாறு நடந்ததனைக்கண்டு பலவுயிர்களையும் மெல்லெலனக் கொலைபுரிகின்ற எமன்வருந்தியோடுதலும் வீரபத்திரன் அவன்றலையை வெட்டினான்.—எ-று. (உஎ)

மடிந்தனன்கூற்றுவனுகவாசவ
னுடைந்தனன்குயிலெனவுருக்கொண்டும்பரி
லடைந்தனனதுபொழுதண்ணல்கண்ணுறீஇத்
தடிந்தனன்வீட்டினன்றடக்கைவாளினால்.

(இ-ள்.) எமனிறந்தவுடனே இந்திரன் உடைந்து குயிலென உருவங்கொண்டு வானிற்பறந்தான் அப்பொழுததனைப் பெரிய கையிலிருந்த வாளினால் வீரபத்திரன் வெட்டிக் கொன்றனன்.—எ-று. (உஅ)

அண்டர்கோன்வீழ்தலுமலமந்தோடிய
திண்டிறலங்கியைத்திறல்கொள்சேவகன்
கண்டனனங்கவன்கரத்தையொல்லையிற்
றுண்டமதாகவேதுணித்துவிட்டினான்.

(இ-ள்.) தேவராசன் விழுந்தவுடனே அலமந்து ஓடிய மிக்க வன்மையினையுடைய அக்கினியை வெற்றிவாய்ந்த வீரபத்திரன் பார்த்து அவன் கைகளை விரைவிற்றுண்டாக வெட்டியெறிந்தான்.—எ-று. (உகூ)

கறுத்திடுமிடறுடைக்கடவுட்டேவனை
மறுத்தவனல்கியவரம்பிலுண்டியும்
வெறுத்திலையுண்டியாலென்றுவீரனு
மறுத்தனனெழுதிறத்தழலினாக்களே.

(இ-ள்.) கறுத்தகண்டத்தினையுடைய கடவுளான தேவனைமறுத்தவனான தக்கன் அளித்தவரம்பில்லாத உணவுகளையும் வெறுக்காமலுண்டனை யென்று வீரபத்திரனும் அக்கினியின் எழுபகுதியினையுடைய நாவுகளை யரிந்தனன்.—எ-று. (௩0)

துள்ளியநாவொடுந்துணிந்தகையொடுந்
தள்ளுறவீழ்ந்திடுந்தழலின்றேவியை
வள்ளுகிரைக்கொடுவலங்கொணாசியைக்
கிள்ளினன்வாகையாற்கிளர்பொற்றோளினான்.

(இ-ள்.) வெற்றியாற் பூரிக்கின்ற அழகிய தோளினையுடைய வீரபத்திரன் துடிக்கப்பெற்ற நாவுடனும் துண்டிக்கப்பெற்ற கையுடனும் தள்ளவிழுந்த அக்கினியின் மனைவியின் மேலுயர்ந்த நாசியைக் கூரிய நகத்தினாற் கிள்ளியெறிந்தான்.—எ-று.

அரிதுணைக்கின்னந்தாரானைசெய்திடு
மொருதனித்திறலினானும்பர்மேலெழு

நிருதியைக்கண்டனனிற்றியாலெனுப்
பொருதிறற்றண்டினுற்புடைத்திட்டானரோ.

(இ-ள்.) அக்கினியின் மனைவிக்கு இத்தகைய தண்டனையைச்செய்த ஒப்பற்ற திறலினையுடைய வீரபத்திரன் வானிலெழுந்து செல்லுநிருதியைப்பார்த்து நிற்பாயாகவென்று போர்புரிகின்ற வலிய தண்டத்தால் அடித்தனன்.—எ-று. (கூஉ)

வீட்டினனிருதியைவீரன்றன்பெருந்
தாட்டுணைவீழ்தலுந்தடிதலோம்பினு
னோட்டினன்போதிரென்றுரைத்துச்சென்னெறி
காட்டினனுருத்திரகணத்தர்க்கென்பவே.

(இ-ள்.) நிருதியைக்கொன்ற வீரபத்திரனுடைய காலிணைகளில் விழுந்து வணங்குதலும் உருத்திர கணங்களைக் கொல்லுதலையொழித்துப் போம்வழிகாட்டிப் போதிரென்று கூறினன். (கூக)

ஒழுக்குடனுருத்திரரொருங்குபோதலு
மெழுக்கொடுவருணனையெற்றிச்செங்கையின்
மழுக்கொடுகாலினைமாய்த்துமுத்தலைக்
கழுக்கொடுதனதனைக்கடவுள்காதினன்

(இ-ள்.) உருத்திரர் வரிசையாகச் சென்றவுடனே வீரபத்திரன் எழுவாயுதத்தைக்கொண்டு வருணனை யடித்துச் செவ்விய கையிலுள்ள மழுவினல் வாயுவினைக் கொன்று மூன்று தலைகளையுடைய கழுவினற் குபேரனைக்கொன்றான்.—எ-று. (கூச)

எட்டெனுந்திசையினேனேங்கிவெள்கியே
யட்டிடுங்கொல்லென வஞ்சிப்போற்றலும்
கிட்டினன்வைதனன்கேடுசெய்திலன்
விட்டனனுருத்திரர்மேவுந்தொன்னெறி.

(இ-ள்.) எட்டாவதாகவுரைக் குந்திசையினையுடைய ஈசானனென்பவன் ஏங்கி வெள்கிக் கொல்லுவானோவென்று பயந்து வணங்குதலும் வீரபத்திரனவனை நெருங்கி வைது கொல்லாமல் முன் உருத்திரர் சென்ற பழயவழியே போகுமாறு விடுத்தனன்.

தாணுவினுருக்கொடுதருக்கும்பரினு
னுணுடுபோதலுநடுநடுங்கியே
சோணிதபுரத்திறைதுண்ணென்றோடுழி
வேணுவினவன்றலைவீரன்வீட்டினன்.

(இ-ள்.) சிவபெருமான் திருவுருவைப்பெற்றுச் செருக்கும் ஈசானநாம முடையவன் வெட்கத்துடன் போதலுநடுநடுங்கிச் சோணித புரத்திறைவனை அசுரன்விரைந்தோடுதலும் வீரபத்திரன் வாட்படையினல் அவன்றலையை வெட்டியெறிந்தான். ()

மணனயர்சாலையின்மகத்தின்றெய்வதம்
பிணையெனவெருக்கொடுபெயர்ந்துபோதலுங்
குணமிகுவரிசிலைகுனித்துவீரனோர்
கணைதொடுத்தவன்றலைகளத்தில்வீட்டினன்.

(இ-ள்.) சுபகரமான யாகச்செயல் நடக்கும் அவ்யாகச்சாலையிலிருந்த யாகாதி தெய்வமானது மானுருவங்கொண்டு பயந்தோடுதலும் சிறந்தநாணேறிட்ட வரிந்தவில்லைவளைத்து ஒருகணைதொடுத்து அவன் றலையையறுத்துக் களத்திலிட்டனன் —எ-று.

இரிந்திடுகின்றதோரெச்சனென்பவன்
சிரந்துணிபடுதலுஞ்செய்கையிவ்வெலா
மரந்தையொடேதெரிந்தயன்றன்காதலன்
விரைந்தவணெழுந்தனன்வெருக்கொள்சிந்தையான்.

(இ-ள்.) வீரபத்திரனுக்குப் பயந்து மானுருவங்கொண்டு ஓடின எச்சனுடைய தலையறுதலும் இச்செயலனைத்துந் துன்பத்துடன் கண்ட பிரமன் புதல்வனான தக்கன் அஞ்சுஞ்சிந்தையுடன் விரைவாகவெழுந்தனன்.—எ-று. (௩அ)

விட்டனன்றிண்மையைவெய்யதோர்வலைப்
பட்டதோர்பிணையெனப்பதைக்குஞ்சிந்தையான்
மட்டிடலரியவிம்மகமுமென்முனங்
கெட்டிடுமோவெனுவிலைகிளத்தினன்.

(இ-ள்.) திண்மையைவிடுத்துக் கொடிய வலையுள்ளகப்பட்ட மானைப்போலத் துடிக்குஞ் சிந்தையினையுடையவனாகி அளவிடுதற்கரிய இந்த யாகமுமென்னெதிரிற் கெடுமோ எனவிவைகளையுரைத்தனன்.—எ-று. (௩௯)

ஊறகனுன்முகத்தொருவன்வாய்மையாற்
கூறியவுணர்வினைக்குறித்துநோற்றியா
னுறணிசெஞ்சடையமலன்றந்திட
வீறகல்வளம்பலவெய்தினேன்ரோ.

(இ-ள்.) குற்றமற்ற ஒப்பற்ற பிரமனுரைத்தவுண்மை மொழியை யங்கீகரித்துத் தவஞ்செய்து கங்கையாற்றினையணிந்த சடையினையுடைய மலரகிதனான சிவனளிக்க எல்லையற்ற பலவளங்களைப்பெற்றேன்.—எ-று. (௪௦)

பெருவளநல்கியபிரானைச்சிந்தையிற்
கருதுதல்செய்திலன்கசிந்துபோற்றிலன்
றிருவிடைமயங்கினன்சினையைநல்கியே
மருகனென்றவனையான்மன்றவெள்ளினேன்.

(இ-ள்.) எனக்குப்பெரிய செல்வத்தினை வரத்தாலளித்த தலைவனை மனதினில் மதித்திலேன் மனமுருகிவணங்கிலேன் செல்வத்தின் மயங்கினேன் எனது மருகனென்யானவனை மிகவும் இகழ்ந்தேன்.—எ-று. (௪௧)

வேதநூல்விதிமுறைவிமலற்கீந்திடு
மாதியாமவிதனையளிக்கொணுதெனத்
தாதையோன்வேள்வியிற்றடுத்தியானுமிவ்
வேதமாமகந்தனையியற்றினேனரோ.

(இ-ள்.) வேதசாத்திர முறைப்படி அவ்விமலனுக்களிக்கும் முதலாவதான அவியைக்கொடுக்கப் படாதென்று தந்தையான பிரமனுடைய யாகத்திற் தடுத்து நானும் இத்தத்துன்பத்துக்குரிய யாகத்தினைச்செய்தேன்.—எ-று. (௪௨)

தந்தைசொல்லாமெனுந்ததீசிவாய்மையை
நிந்தனைசெய்தனனீடுவேள்வியில்
வந்தவென்மகடனைமறுத்துக்கண்ணுதன்
முந்தையையிகழ்ந்தனன்முடிவதோர்கிலேன்.

(இ-ள்) பிதாவின் வசனமாமென்று கூறத்தக்க ததீசியின் உண்மைமொழியை இகழ்ந்தேன் சிறந்தயாகத்துக்கு வந்த எனது மகளையும் வராதேயெனத்தடுத்து இறப்பு நெருங்கியதுணராது யான் நெற்றிக்கண்ணினையுடைய முதல்வனை யிகழ்ந்தனன்.—எ-று. (௪௩)

அன்றியும்வீரனின்றவியையீதியா
லென்றலுமவன்றனதெண்ணநோக்கியு
நன்றெனவீந்திலன்மறையுநாடிலேன்
பொன்றிடவந்தகொலிவினையபுந்தியே.

(இ-ள்.) அல்லாமலும் வீரபத்திரன் நின்று அவியையளித்தியென்று கூறுதலும் அவனதுள்ளக் குறிப்புணர்ந்தும் நல்லதென்று கொடுத்திலேன் வேத வசனத்தினையும் ஆராய்ந்திலேன் இத்தகையபுத்தி இறத்தற்காகவுண்டாகியதோ.—எ-று. (சச)

அல்லியங்கமலமேலண்ணலாதியாச்
சொல்லியவானவர்தொகைக்குநோற்றிட
வல்லபண்ணவர்க்கும்வேதியர்க்குமற்றவ
ரெல்லவர்தமக்குமோரிறுதிதேடினேன்.

(இ-ள்.) அகவிதழினையுடைய கமலமலரிலிருக்கும் பிரமன் முதலாக உரைக்கப்பட்ட தேவர்கூட்டத்துக்கும் நோற்றலில் வல்லமுனிவருக்கும் மறையவர்க்கும் இவரன்றியுள்ளவர்கட்கும் ஒரு அழிவுகாலத்தினை உண்டாக்கினேன்.—எ-று. (சரு)

துதிதருமறைப்பொருட்டுணிபுநாடியு
நதிமுடியமலனைநன்றுநிந்தியா
விதுபோழுதிறப்பதற்கேதுவாயினேன்
விதிவழிபுந்தியுமேவுமேகொலாம்.

(இ-ள்.) புகழ்வாய்ந்த வேதப்பொருளின் துணிபைநாடியும் கங்காதரனை வமலனை மிகவுமிகழ்ந்து இப்பொழுது இறப்பதற்கு ஏதுவானேன் புத்தியும் அவனவன் அநுபவிக்க வேண்டிய விதியை வழியாகக்கொண்டு செல்லுமாயிருக்கலாம் எ-று.

எனத்தகுபரிசெலாமினைந்துதன்னுடை
மனத்தொடுகூறியேமாளுமெல்லையி
னினைத்தறிவின்மையைநிகழ்த்திஞவதென்
னினிச்செயலென்னெனவெண்ணிநாடினான்.

(இ-ள்.) என்றிவ்வண்ணம் தகுந்தமுறையனைத்தையும் மிகவும்வருந்தித் தனதுமனதுடன் உரைத்துப்பின்னர் சாகுங்காலத்தில் முன்னிழந்த அறிவின்மையை எண்ணியிகழ்ந்து கூறிப்பிரயோசனமென்னை இனிச்செய்யவேண்டுவதென்னை யெனவுள்ளத்திலாராய்ந்தான்.—எ-று. (சஎ)

பாடுறுசாரதர்பரப்பும்வேள்வியி
னூடுறுவீரனதுரமுஞ்சீற்றமுஞ்
சாடுறுபத்திரைதகவுங்கண்ணுறீஇ
யோடுவதரிதெனவுன்னியுன்னிமேல்.

(இ-ள்.) அருகிற் சூழ்ந்தபூதர்களின் மிகுதியும் யாகசாலையில் வந்துள்ள வீரனுடைய வன்மையும் கோபமும் கொலைபுரிகின்ற பத்திரையின் தன்மையும்பார்த்து இனியோடுதல் அரிதென எண்ணியெண்ணிப்பின்னர்.—எ-று. (சஅ)

சென்றதோருயிரொடுசிதைந்ததேவர்போற்
பின்றுவனென்னினும்பிழைப்பதில்லையால்
வன்றிறல்வீரன்முன்வன்மையாளர்போ
னின்றிடறுணிபெனத்தக்கனிற்பவே.

(இ-ள்.) போகப்பட்ட உயிருடன் சிதைந்த தேவர்களைப்போல பின்னிடுவேனாயினும் பிழைப்பதில்லை ஆதலின் வலியதிறலினையுடைய வீரனெதிரே வன்மையுடையாரைப் பொப்பநிற்றலே துணிபெனத்துணிந்து தக்கனின்றவுடனே.—எ-று.

வேறு.

கண்டுமற்றதுவீரபத்திரனெனுங்கடவுள்
கொண்டசீற்றமொடேகியேதக்கனைக்குறுகி
யண்டரோடுநீயீசனையிகழ்ந்தனையதனாற்
றண்டமீதெனவாள்கொடேயவன்றலைதடிந்தான்.

(இ-ள்.) அவனவ்வாறு நின்றதனை வீரபத்திரனென்னுங் கடவுள்கண்டுகோபத்துடன் சென்றத் தக்கனையடைந்து தேவர்களுடன் நீ ஈசனையிகழ்ந்தனை அதனால் இது உனக்கு சிட்சையெனவாளினாலவன் தலையை வெட்டினான்.—எ-று. (கo)

அற்றதோர்சென்னிவீழுமுனிறைவனங்கையினாற்
பற்றியாயிடையலமரும்பாவகற்பாராத்
திற்றியீதெனக்கொடுத்தனன்கொடுத்தலுஞ்செந்தீ
மற்றொர்மாத்திரைப்போதினின்மிசைந்ததுமன்னோ.

(இ-ள்.) வெட்டப்பட்ட தலைவிழுதற்குமுன்னே வீரபத்திரன் கையினாற்பிடித்து அவ்விடத்திற் சுழலுகின்ற தீயைப்பார்த்து இதனைத்தின்னுதியெனக்கொடுத்தனன் கொடுத்தவுடனே ஒருகணப்பொழுதினுள் அந்நெருப்பு அத்தலையை எரித்தழித்தது.—எ-று. (கக)

மெல்லவேயெரியத்தலைநுகர்தலும்வேத
வல்லியாதியாந்துணைவியர்தக்கன்மாமகளிர்
சில்லிருங்குழருழ்வரச்செங்கரங்குலைத்தே
யொல்லையத்திறங்கண்டனர்புலம்பிவந்துற்றார்.

(இ-ள்.) மெல்லென அக்கினி அத்தலையைத் தின்னுதலும் தக்கன் மனைவியானவேதவல்லி முதலியவர்கள் அச்செயலினைக்கண்டு விரைவாகத்தகட்டணியணிந்த கூந்தல்சோரச் செவ்விய கரங்களையுதறிக்கொண்டு புலம்பினவர்களாக ஆங்கு வந்து சேர்ந்தனர்.—எ-று. (கஉ)

அந்தவேலையின்மறைக்கொடிதன்னைமுன்னணுகி
முந்திவார்குழையிறுத்தனளேனையர்முடியுந்
தந்தநங்கையர்சென்னியும்வாள்கொடுதடிந்து
கந்துகங்கள்போலடித்தனள்பத்திரகாளி.

(இ-ள்.) அப்பொழுது பத்திரகாளி வேதவல்லியினெதிரே சென்றுவாளினால் அவளுடைய காதுகளை முன்னரறுத்துப் பின்னர் மற்றையரின் தலைகளையும் அவள் பெற்ற அசுவனியாதியரின்தலைகளையும் வெட்டிப்பந்தடிப்பதுபோல வடித்தனள். ()

காளியாம்பெயர்த்தலைவியுங்கருதலர்தொகைக்கோ
ராளியாகியவீரனுமேனையண்டர்களைக்
கேளிராகியமுனிவரைத்தனித்தனிகிடைத்துத்
தாளிலார்ப்பினிற்றடக்கையிற்படைகளிற்றடிந்தார்.

(இ-ள்.) காளியென்னும் பெயரினையுடைய தலைவியும் பகைவர்கூட்டத்துக்கொருசிங்கமான வீரபத்திரனும் மற்றைத்தேவர்களையும் தக்கனுக்குச் சுற்றத்தினரானமுனிவர்களையும் வேறுவேறாக வடைந்து காலாலும் அட்டகாசத்தாலும் பெரியகைகளாலும் ஆயுதங்களாலும் கொன்றனர்.—எ-று. (கச)

மருத்துமூழியிலங்கியுமுற்றெனமாது
முருத்திரப்பெருமூர்த்தியும்வந்தெனவுயர்சீ
தரித்தவீரனும்பத்திரகாளியுந்தக்கன்
றிருத்தும்வேள்வியைத்தொலைத்தனர்தனித்தனிதிரிந்தே.

(இ-ள்.) ஊழிக்காற்றுமூழித்தீயும் ஒன்றாகச்சேர்ந்து சென்றாற்போலவும் உருத்திராணியும் உருத்திரனாகிய பெரியமூர்த்தியும் வந்தாற்போலவும் உயர்ந்தசிறப்புவாய்ந்த வீரபத்திரனும் பத்திரகாளியுந் தக்கனாற் திருத்தப்பட்ட யாகத்தினைத்திரிந்து திரிந்து அழித்தார்கள்.—எ-று. (ருரு)

அண்ணறன்மையுந்தேவியினிலைமையுமயரும்
விண்ணுளோர்சிலர்நோக்கியேயாங்கணும்விரவி
யண்ணுகின்றனர்யாரையுந்தொலைக்குநரம்மா
வெண்ணிலார்கொலாம்வீரனுமிறைவியுமென்றார்.

(இ-ள்.) பெருமையிற் சிறந்த வீரபத்திரனுடைய தன்மையும் பத்திரகாளியின் நிலைமையும் பார்த்து வருந்துகின்ற ஆகாயவாசிகள் இவர்கள் எங்குமுலவிக்கலந்தடைகின்றனர் எவரையுமழிக்கின்றனர் ஆதலின் வீரபத்திரனும் பத்திரகாளியும் மெண்ணற்றவர்களாகவே இருப்பார்கள் என்று கூறினார்கள்.—எ-று. (ருசு)

இற்றெலாநிகழ்வேலையில்வீரனதிசைவாற்
சுற்றுதானையரித்திறநோக்கியேசூழ்ந்த
பொற்றைபோலுயர்காப்பினைவீட்டியுள்புகுந்து
செற்றமோடுசென்றார்த்தனர்வானுளோர்தியங்க.

(இ-ள்.) இவைகளெல்லா நடக்கின்ற சமயத்தில் வீரபத்திரனுடைய கட்டளையாற் சூழ்ந்துநின்ற பூதசேனையர் இச்செயலினைக்கண்டு மலைசூழ்ந்தது போலுயர்ந்துள்ள மதிலினையிடித்துட்புகுந்து தேவர்கள் தியங்கும் வண்ணம் கோபத்துடன் சென்றாரவாரித்தனர்.—எ-று. (ருஎ)

சூர்த்தநோக்குடைப்பூதருங்காளிகடொகையு
மார்த்தகாலையின்முனிவருந்தேவருமயர்ந்து
பார்த்தபார்த்ததோர்திசைதொறுமிரிதலும்படியைப்
போர்த்தவார்கடலாமெனவளைந்தடல்புரிய.

(இ-ள்.) அச்சந்தரும் பார்வையினையுடைய பூதர்களுங்காளிகளின் தொகையும் இரைந்தபொழுது முனிவர்களுந் தேவர்களுமயர்ந்து கண்டகண்ட திசைதோறும் விலகியோடுதலும் உலகினைச்சூழ்ந்த பெரியகடலைப்போல அவர்களை வளைந்து கொல்லா நிற்க.—எ-று. (ருஅ)

வேறு.

தியக்குற்றனர்வெருளுற்றனர்திடுக்கிட்டனர்தெருள்போய்த்
துயக்குற்றனர்பிறக்குற்றனர்தொலைவுற்றனர்மெலியா
மயக்குற்றனர்கலக்குற்றனர்மறுக்குற்றனர்மனமே
துயக்குற்றனரிமையோர்களுமுயர்மாமுனிவரரும்.

(இ-ள்.) தேவர்களும் முனிவர்களும் தியக்கமுற்றனர் வெருட்சியெய்தினர் திடுக்கிட்டனர் தெளிவொழிந்து கலக்கமெய்தினர் பின்னிட்டனர் தொலைவடைந்தனர் மெலிந்துமயக்குற்றனர் அச்சமடைந்தனர் மனதிற்தமொற்ற மடைந்தனர். (ருகூ)

அளிக்கின்றனர்தமைத்தம்முனையருண்மக்களைமனையைக்
களிக்கின்றதொரிளையோர்தமைச்சுற்றந்தனைக்கருதி
விளிக்கின்றனர்பதைக்கின்றனர்வெருக்கொண்டனர்பிணத்தூ
டொளிக்கின்றனரவன்வேள்வியிலுறைகுற்றதொர்மறையோர்.

(இ-ள்.) அத்தக்கனுடைய யாகத்திலிருந்த பார்ப்பாரெல்லாம் தம்மையளிக்கின்றவர்களையும் தம்முன்னோரையும் பெற்றமக்களையும் மனைவியையும் மகிழுகின்ற சிறுவர்களையும் சுற்றத்தையும் நினைத்துநினைத்து விளிக்கின்றவர்களும் பதைக்கின்றவர்களும் பயந்தவர்களுமாகிப் பிணங்களினிடையி லொளிக்கின்றனர்.—எ-று. (சுo)

அலக்கட்படுமிமையோர்களுமருமாமுனிவரரு
நிலக்கட்படுமறையோர்களுநெடுநீர்க்கடலாகக்
கலக்குற்றனர்வரையாமெனக்கரத்தாற்புடைத்துதிர்த்தா
ருலக்கிற்றிரளாகச்சினத்துயர்மால்கரியொத்தே.

(இ-ள்.) துன்புறும் தேவர்களையும் அரிய சிறந்த முனிவர்களையும் பூமியின்கணுள்ள மறையோர்களையும் நெடியநீர்க்கடலாகக் கருதிக்கலக்கினூர்கள் மலையெனக் கருதிக்கையினாலடித் துதிர்த்தனர் கொதுகின் றிரளினைச்சீற்றம்மிகுந்த பெரியயானை கொல்லுமாறுபோலக் கொன்றனர்,—எ-று. (௬௧)

முடிக்குந்திறற்பெருங்கோளரிமுழங்கிற்றெனமுரணு
லிடிக்கின்றனர்கலைமானெனவிமையோர்தமைவிரைவிற்
பிடிக்கின்றனரடிக்கின்றனர்பிறழ்பற்கொடுசிரத்தைக்
கடிக்கின்றனரொடிக்கின்றனர்களத்தைப்பொருகளத்தில்.

(இ-ள்.) கொல்லுந்திறமமைந்த பெருஞ்சிங்கங் கர்ச்சித்தாற்போல வன்மையா லிடிக்கின்றனர் கலைமானைப்போலத் தேவர்களைப் பிடிக்கின்றனர் அடிக்கின்றனர் விளங்குகின்ற பற்களைக்கொண்டு தலைகளைக்கடிக்கின்றனர் பொருமக்களத்திற் கழுத்தினை யொடிக்கின்றனர்.—எ-று. (௬௨)

முறிக்கின்றனர்தடந்தோள்களைமுழுவென்புடனுடலங்
கறிக்கின்றனரடிநாவினைக்களைகின்றனர்விழியைப்
பறிக்கின்றனர்மிதிக்கின்றனர்படுக்கின்றனர்சங்கங்
குறிக்கின்றனர்குடிக்கின்றனர்குருதிப்புனறனையே.

(இ-ள்.) பெரிய தோள்களை ஒடிக்கின்றனர் என்பனைத்துடன் சரீரங்களை மெல்லுகின்றனர் நாவினடிகளை யறுக்கின்றனர் கண்களைப்பறிக்கின்றனர் மிதிக்கின்றனர் கொல்லுகின்றனர் வெற்றிச்சங் கூதுகின்றனர் இரத்தவெள்ளங் குடிக்கின்றனர்.—எ-று. (௬௩)

எடுக்கின்றனர்பிளக்கின்றனரெறிகின்றனரெதிர்போய்த்
தடுக்கின்றனருதைக்கின்றனர்தடந்தாள்கொடுதுகைத்துப்
படுக்கின்றனர்தலைசிந்திடப்படையாவையுந்தொடையா
விடுக்கின்றனர்மடுக்கின்றனர்மிகுமூனினைப்பகுவாய்.

(இ-ள்.) எடுக்கின்றார்கள் பிளக்கின்றார்கள் எறிகின்றார்கள் எதிரே சென்று தடுக்கின்றனர் உதைக்கின்றார்கள் பெரியகால்களால் மிதித்துக்கொல்லுகின்றனர், தலைகளறும் வண்ணம் அம்புகளனைத்தையுந் தொடையாக விடுகின்றார்கள் மிகுதியான ஊனினைப்பிளந்த வாயுள்வாரியிடுகின்றனர்.—எ-று. (௬௪)

நெரிக்கின்றனர்சிலர்சென்னியைநெடுந்தாள்கொடுமிதியா
வுரிக்கின்றனர்சிலர்யாக்கையையொருசிற்சிலர்மெய்யை
யெரிக்கின்றனர்மகத்தீயிடையிழுதார்கடத்திட்டே
பொரிக்கின்றனர்கரிக்கின்றனர்புகைக்கின்றனரம்மா.

(இ-ள்.) சிலர் தலைகளை நெரிக்கின்றார்கள் நெடியதாளால்மிதித்துச் சிலர் சரீரத்தை யுரிக்கின்றனர் சிற்சிலர் உடலையாகத் தீயிலிட்டு எரிக்கின்றார்கள் நெய்க்குடங்களிலிட்டுப் பொரிக்கின்றார்கள் கரிக்கின்றார்கள் புகைக்கின்றார்கள்.—எ-று. (௬௫)

அகழ்கின்றனர்சிலர்மார்பினையவர்தங்குடர்சூடி
மகிழ்கின்றனர்நகைக்கின்றனர்மதர்க்கின்றனர்சிவனைப்
புகழ்கின்றனர்படுகின்றதொர்புலவோர்தமைக்காணு
விகழ்கின்றனரெறிந்தேபடையேற்கின்றனரன்றே.

(இ-ள்.) சிலர் மார்பினைப் பிளக்கின்றனர் அங்ஙனம் பிளந்தாரின் குடலைமாலையாகச்சூடி மகிழ்கின்றார்கள் சிரிக்கின்றார்கள் இறுமாப்புறுகின்றார்கள் சிவபெருமானைப் புகழ்கின்றனர் சாகின்ற தேவர்களைப் பார்த்திகழுகின்றனர் ஆயுதங்களை மேலெறிந்து பிடிக்கின்றனர்.—எ-று. (சுசு)

கரக்கின்றதோர்முனிவோர்களைக்கண்டேதொடர்ந்தோடித்
துரக்கின்றனர்பிடிக்கின்றனர்துடிக்கும்படிபடிமேற்
றிரக்குன்றுகொடரைக்கின்றனர்தெழிக்கின்றனர்சிலவூ
னிரக்கின்றதொர்கழுகின்றொகைக்கீகின்றனர்மாதோ.

(இ-ள்.) மறைகின்ற முனிவர்களைக்கண்டு தொடர்ந்தோடி விரட்டுகின்றனர். பிடிக்கின்றார்கள் துடிக்கும்வண்ணம் பூமியில் கால்களான மலைகளைக் கொண்டரைக்கின்றார்கள் தெழிக்கின்றார்கள் சில ஊன்களைத் தம்மையிரக்குங் கழுகின்கூட்டத்துக்கிடுகின்றனர்.—எ-று. (சுஎ)

நெய்யுண்டனர்ததியுண்டனர்பாலுண்டனர்நீடுந்
துய்யுண்டனரிமையோர்கடந்தொகைக்காமெனவுய்க்கு
மையுண்டதொரவியுண்டனர்மகவேள்வியில்வந்தே
நையுண்டவருயிர்கொண்டிடுநாளுண்டவரெல்லாம்.

(இ-ள்.) இவ்யாகசாலையையடைந்து அழிந்தவரினுயிர் கொண்டுள்ள வாழ்நாளை யழித்த பூதரனைவரும் நெய்யுண்டனர் தயிருந்தினர் பால் குடித்தனர் மிகுதியான சோறுண்டனர் தேவர் கூட்டத்துக்குக் கொடுக்கின்ற அழகமைந்த அவியையுண்டார்கள்.—எ-று (சுஅ)

உகத்துக்கடையனலைக்கடலுவர்நீர்தணித்தெனவே
மகத்திற்றிரிவிதவேதியில்வைகுங்கனலதனை
மிகத்துப்புரவுளதென்றுகொல்வியப்பார்தமதுயிரி
னகத்துப்புனல்விடுத்தேவிரைந்தவித்தார்மகமழித்தார்.

(இ-ள்.) ஊழிமுடிவிலுண்டாகும் பிரளயாக்கினியைக் கடலிலுள்ள வுவர்நீர் தணித்தாற்போல யாகத்தில் மூவகைவேதிகளிலிருக்கும் அக்கினியை மிகவுந் தூய்மையானதென்றோ? வியப்பமைந்த தமதுயிரினகத்துள்ள நீரினைவிடுத்து யாகத்தினை யழித்த பூதர்கள் அழித்தார்கள்.—எ-று. (சுக)

உயிர் என்றது உயிர்நிலையென வழங்கும் இலிங்கத்தினையெனவும் அகத்துப் புனலென்றது உவர் நீரான மூத்திரத்தினை யெனவுமறிக.

தடைக்கொண்டதொர்சிறைதோறுளசாலைக்கதவெல்லா
மடைக்கின்றனர்தழலிட்டனரவணுற்றவர்தம்மைத்
துடைக்கின்றனர்கலசத்தொடுதொடர்கும்பமும்விரைவா
லுடைக்கின்றனர்தகர்க்கின்றனருதிர்க்கின்றனருடுவை.

(இ-ள்.) அறையாகத் தடுக்கப்பட்ட இடங்களிலுள்ள யாகசாலைக்கதவினைத்தும் அடைத்துத் தீயிட்டு அங்குள்ளவர்களை அழிக்கின்றார்கள் கலசங்களையும் கும்பங்களையும் உடைக்கின்றனர். யாடுகளையெடுத்துத் தீயிற்சொரிகின்றார்கள்.—எ-று (எO)

தவக்கண்டகத்தொகையார்த்திட்டத்தனிமாமகத்தறியிற்
றுவக்குண்டயரணிமேதகுதுகடூர்பசுநிரையை
யவிழ்க்கின்றனர்சிலர்கங்கையினலையிற்செலவிடுவார்
திவக்கும்படிவாஞ்சேசினர்சிலவெற்றினர்படையின்.

(இ-ள்.) மிகவும் கழுத்தின்கணுள்ள மணிகள் முழங்காநிற்ப ஒப்பற்ற யூபஸ்தம்பத்தில் கட்டுண்டு வருந்துகின்ற வழகுமிக்க குற்றமற்ற பசுநிரையை அவிழ்த்துச் சிலர் கங்காநதியினலையிற் செல்லுமாறு விடுவார்கள் துவளும் வண்ணம் வானிலெறிந்தனர் சிலவற்றை ஆயுதங்களால் வெட்டினார்கள்.—எ-று.

தவக்கண்டகத் தொகையார்த்திட என்பதற்கு, யாகத்துக்குரிய யாடுகளின் கழுத்திலுணவுக்காக காரைமுதலிய முட்செடிகளைக்கட்டுதல் வழக்கமாதலின் யாடுகளுக்குத் தவத்துக்குரிய காரைமுட்செடிகளை யுண்பிக்க வவைகள் யூபஸ்தம்பங்களில் கட்டுண்டயர்ந்து நிற்பனவெனவும், தவக்கண்டகத்தொகை யார்த்திட, தவத்தாலாக்கியகண்டகத்தொகை, கண்டகம் வாளாயுதம், ஆர்த்திடவைக்க அதாவது கத்தியாலறுத்தற்கு எனவும் பொருளாம். மந்திரசெபத்துடன் தோயலிடப்பட்ட கத்தியாதலின் தவக்கண்டகமென்றனர். என்றுங்கூறலாம்.

பசுவென்றது யாகத்துக்குரிய யாடுகளை என வறிக, யாகத்துக்குரிய குதிரை நரர் முதலியவனைத்தும் பசுவென்னும் பெயரினுலேயே வழங்குதல் வழக்கெனவறிக,

பங்கங்கள்பட்டச்செய்திடுபதகன்மகந்தனிற்போய்க்
கங்கங்களைமுறிக்கின்றனர்கவின்சேரரமகளி
ருங்கங்களைக்கறிக்கின்றன ரறுக்கின்றன ரதனை
யெங்கெங்கணுமுமிழ்கின்றனரெறிகின்றனரெவரும்.

(இ-ள்.) இழிவுபலவுண்டாமாறு செய்துள்ள கீழ்மகனான தக்கனுடைய யாகசாலையுட்சென்று பூதரெவரும் பருந்தருவமாக வமைத்துள்ள மேடைகளை இடிக்கின்றனர்; அழகுவாய்ந்த அரமாதரின் உறுப்புக்களை கறிக்கின்றனர்; அவ்வங்கங்களை யறுக்கின்றனர்; அதனை எவ்விடங்களிலு மிடுக்கின்றனர்; எறிகின்றனர்.—எ-று. ()

படுகின்றவர்வருமூர்தியும்பட்டர்மானமுந்தேருஞ்
சுடுகின்றனரவர்கொண்டிடுதொலைவில்படைக்கலமு
மிடுகுண்டலமுமுடிகண்டிகையெவையுந்தழலிட்டே
கடுகின்றுகளாகப்பொடிகண்டார்திறல்கொண்டார்.

(இ-ள்.) இறந்தவர்கள் ஏறிவந்த வாகனங்களையும் விரிந்த விமானங்களையும் இரதங்களையுஞ் சுடுகின்றனர். அவர்கள் கொண்டுள்ள அழியாத ஆயுதங்களையும் தரித்துள்ள குண்டலங்களும் முடிகளும் கண்டிகைகளும் தீயிலிட்டு வன்மைவாய்ந்த பூதர்கள் கடுகளவு பொடியாகச்செய்தனர்.—எ-று. (எ௩)

அடிக்கொண்டதொர்மகச்சாலையுளமர்வேதியையடியா
லிடிக்கின்றனர்பொடிக்கின்றனரிருந்தோரணத்தொகையை
யொடிக்கின்றனர்பெருந்தீயினையுமிழ்கின்றனர்களிப்பா
னடிக்கின்றனரிசைக்கின்றனர்நமனச்சுறுந்திறத்தோர்.

(இ-ள்.) எமனுமஞ்சுமாறான திறலினையுடைய பூதர்கள் முதலானதாகக்கொண்டுள்ள யாகசாலையுட்பொருந்திய வேதிகையைக் காலாலிடிக்கின்றனர்; பொடிக்கின்றனர்; பெரிய தோரணத்தொகையை யொடிக்கின்றனர்; பெருந்தீயினைக்கக்குகின்றனர்; களிப்பினால் நடிக்கின்றனர்; பாடுகின்றனர்.—எ-று. (எச)

தருமத்தினைப்படுகின்றதொர்தக்கன்றனக்குறவா
மருமக்களைப்பிடிக்கின்றனர்வாயாற்புகலொண்ணுக்
கருமத்தினைப்புரிகின்றனர்கரத்தாலவருரத்தே
யுருமுற்றெனப்புடைக்கின்றனருமிழ்வித்தனரவியே.

(இ-ள்) தருமத்தினை யழிக்கின்ற தக்கனுக்குறவாகியுள்ள மருமக்களைப்பிடித்து வாயாலுரைக்கக்கூடாத செயலைச்செய்து கைகளாலவர்மார்பி லிடிவிழுந்தாற்போலவடித்து அவருண்டிருந்த வவியனைத்தும் உமிழச்செய்தனர்.—எ-று. (எரு)

தறிக்கின்றனர்சிலதேவரைத்தலைமாமயிர்முழுதும்
பறிக்கின்றனர்சிலதேவரைப்பாசங்கொடுதறியிற்
செறிக்கின்றனர்சிலதேவரைச்செந்தீயிடைவதக்கிக்
கொறிக்கின்றனர்சிலதேவரைக்கொலைசெய்திடுங்கொடியோர்.

(இ-ள்.) யாகசாலையுட் கொலைபுரியும் கொடியபூதர்கள் சிலதேவரை வெட்டுகின்றனர்; சிலதேவரைத் தலையிலுள்ளமயிர்முழுதும் பறிக்கின்றார்கள்; சிலதேவரைப் பாசங்கொண்டு தறியிற்கட்டுகின்றனர்; சிலதேவரைச் செந்தீயில் வதக்கிக்கொறிக்கின்றார்கள்.—எ-று. (எசு)

நாற்றிக்கினுமெறிகின்றனர்சிலர்தங்களைநல்லூன்
சேற்றுத்தலைப்புதைக்கின்றனர்சிலர்தங்களைச்செந்நீ
ராற்றுக்கிடைவிடுக்கின்றனர்சிலர்தங்களையண்டப்
பாற்றுக்கிரையிடுகின்றனர்சிலர்தங்களைப்பலரும்.

(இ-ள்.) அப்பூதர் பலரும் நான்கு திக்கினுஞ் சிலவரை யெறிகின்றார்கள்; சிலரை நல்ல ஊன் சேற்றிற்புதைக்கின்றார்கள்; சிலரை ரத்தயாற்றி லிடுகின்றனர்; சிலரை வானிலுலாவும் பருந்துகளுக்கிரையாக விடுகின்றார்கள்.—எ-று. (எஎ)

இடைந்தாரையும்விழுந்தாரையுமெழுந்தாரையுமெதிரே
நடந்தாரையுமிரிந்தாரையுநவையுற்றிடவிறந்தே
கிடந்தாரையுமிருந்தாரையுங்கிளர்ந்தாரையும்விண்மேற்
படர்ந்தாரையுமவர்க்கேற்றதொர்பலதண்டமும்புரிந்தார்.

(இ-ள்.) இடைந்தவர்களையும், விழுந்தவர்களையும், எழுந்தவர்களையும், எதிரே வந்தவர்களையும, விலகியோடினவர்களையும், குற்றம்பொருந்தச் செத்துக்கிடந்தவர்களையும், இருந்தவர்களையும், மகிழ்ந்தவர்களையும், ஆகாயத்திற் சென்றவர்களையும் அவர்களுக்கேற்ற பல தண்டங்களையுஞ் செய்தனர்.—எ-று. (எஅ)

உலக்குற்றிடுமகங்கண்டழுதுளநொந்தனர்தளரா
மலக்குற்றிடுமணங்கோர்தமைவலிதேபிடித்தீர்த்துத்
தலக்கட்படுமலர்ப்பொய்கையைத்தனிமாக்கரிமுனிவாற்
கலக்கிற்றெனப்புணர்கின்றனர்கணநாதரிற்சிலரே.

(இ-ள்.) அழிந்தயாகத்தினைப்பார்த்து அழுதுமனந்தளர்ந்து கலக்கமடைந்த தேவமாதரை வலிந்து பிடித்திழுத்து பூமியிற்பொருந்திய தாமரைத்தடாகத்தை ஒப்பற்ற பெரியயானைகோபத்தாற் கலக்கினாற்போல கணநாதரிற்சிலர் புணர்கின்றனர்.

குட்டென்பதும்பிளவென்பதுங்கொல்லென்பதுங்கடிதே
வெட்டென்பதுங்குத்தென்பதுமுரியென்பதும்விரைவிற்
கட்டென்பதுமடியென்பதுமுதையென்பதுங்களத்தே
யெட்டென்பதோர்திசையெங்கணுமெவரும்புகல்வனவே.

(இ-ள்.) அக்களத்தி னெட்டென்னுந் திசையினெவ்விடத்திலும் குட்டென்பதும், பிளவென்பதும், கொல்லென்பதும், விரைவாகவெட்டென்பதும், குத்தென்பதும், முரியென்பதும், விரைவிற்கட்டென்பதும், அடியென்பதும், ஆகிய மொழிகளே எவராலும் உரைக்கப்படுவன.—எ-று. (அ0)

கையற்றனர்செவியற்றனர்காலற்றனர்காமர்
மெய்யற்றனர்நாவற்றனர்விழியற்றனர்மிகவு
மையுற்றிடுகளமற்றன ரல்லான்மலரயன்சேய்
செய்யுற்றிடுமகத்தோர் களிற்சிதைவற்றவரிலையே

(இ-ள்.) கையற்றவர்களும், காலற்றவர்களும், செவியற்றவர்களும், அழகிய உடலற்றவர்களும், நாவற்றவர்களும், கண்ணற்றவர்களும், மிகவுங்கபம் பொருந்திய கண்டமறுபட்டவர்களும், அன்றி மலரிலிருக்கும் பிரமன்மகனுன தக்கன்செய்த யாகத்தில் சிதைவில்லாதவர்களிலர்.—எ-று. (அக)

வேறு.

இத்திறம்யாரையுமேந்தலுனையும்
பத்திரைசேனையும்பரவித்தண்டியா
மெத்துறுமளைகெழுவேலையிற்பல
மத்துறுகின்றெனமகத்தைவீட்டவே.

(இ-ள்) இவ்வண்ணம் எவரையும் வீரபத்திரன் சேனையும், பத்திரகாளியின் சேனையும், வியாபித்துத் தண்டித்துமிகுதியான தயிர்க்கடலில் பலமத்துற்றாற்போல கலக்கி யாகத்தை யழித்தலும்.—எ-று. (அஉ)

செழுந்திருவுரத்திடைதெருமந்துற்றிடத்
தொழுந்திறற்பரிசனந்தொலையமாயவ
னழுந்திடுகவலொடுமெயர்வுயிர்த்தவ
ணெழுந்தனன்மகம்படுமிறப்புநோக்கினுன்.

(இ-ள்.) செழுமைவாய்ந்த திருமகள் மார்பத்திற் கவற்சிகொண்டிருக்க வணங்குந் தகுதியினவான பரிசனமொழியத் திருமால் அழுந்திய துன்பத்துடன் இளைப்பாறி எழுந்து யாகம்பட்ட பாட்டைப்பார்த்தான்.—எ-று. (அ௩)

திருத்தகும்வேள்வியைச்சிதைவின்றுகயா
னருத்தியிற்காத்ததுமழகிதாலெனுக்
கருத்திடையுன்னினன்கண்ணன்வெள்கியே
யுருத்தனன்மானநின்றுளத்தையீரவே.

(இ-ள்.) செல்வமிகுந்த யாகத்தையான் கெடாதவண்ணம் அன்புடன் காத்ததும் அழகாக விருக்கின்றதென்று உள்ளத்திநினைத்து மாயோன் வெட்கமுற்று அபிமானமானது உள்ளத்தைப் பிளக்கக் கோபங்கொண்டனன்.—எ-று. (அ௪)

பரமனையிகழ்ந்திடுபான்மையோர்க்கிது
வருவதுமுறையெனமனத்துட்கொண்டிலன்
றெருமருமுணர்வினன்றிறல்கொள்வீரன்மேற்
பொருவதுகருதினன்பொருவிலாழியான்.

(இ-ள்.) சிவபெருமானை இகழுந்தன்மை யருக்கிது வருவது முறையென மனத்துட்கொண்டானிலன் மருட்சியுற்ற அறிவினனாகி வெற்றிவீரனான வீரபத்திரனுடன் சண்டைசெய்ய ஒப்பற்ற சக்கரப்படையினையுடைய மாயவன் நினைத்தனன்.

உன்னினன்கருடனையுடைந்தாதலுந்
தன்னுறுசீற்றமாந்தழலையாங்கொரு
பொன்னிருஞ்சிறையபுள்ளரசனுக்கனு
மன்னதுவணங்கியேயரிமுனின்றதே.

(இ-ள்.) கருடனை நினைந்தான் அது வீரபத்திரனுக்குப் பயந்து ஓடியதாயிருத்தலும் உடனே தனது கோபாக்கினியைப் பொன்மயமான பெரிய இறகினையுடைய கருடனுக்குதலும் அதுவணங்கி யரியினெதிரில்நின்றது.—எ-று. (அசு)

நிற்றலுமதன்கையினீலமேனியான்
பொற்றடந்தாள்வையாப்பொருக்கென்றேறியே
பற்றினனைம்பெரும்படையும்வேள்வியுண்
முற்றுறுபூதர்மேன்முனிவுற்றேகினான்.

(இ-ள்.) நின்றவுடனே யக்கருடனது கையில் நீலமேனி நெடுமால் அழகிய பெரியகாலினைவைத்து விரைந்தேறிப் பஞ்சாயுதங்களையுமேந்தி யாகசாலையுளிருக்கும் பூதர்கண்பூது கோபங்கொண்டு சென்றனன்.—எ-று. (அஎ)

எடுத்தனன்சங்கினையிலங்குசெந்துவ
ரடுத்திடுபவளவாயாரச்சேர்த்தியே
படுத்தனன்பேரொலிபரவைத்தெண்டிரைத்
தடக்கடலுடைந்திடுதன்மைபோலவே.

(இ-ள்.) சங்கத்தினை யெடுத்து விளங்காநின்ற செந்நிறமமைந்த பவளம் போலும் வாயிற்பொருந்தவைத்துத் தெள்ளிய அலைகளையுடைய பெரிய கடலுடைந்தாற்போல பேரொலியை உண்டாக்கினான்.—எ-று. (அஅ)

மீச்செலுமமரர்கள்புரிந்தவேள்வியந்
தீச்சிகையுதவியசிலையைவாங்கியே
தாச்செலும்வசிகெழுசரங்களெண்ணில
வோச்சினன்வீரனதுரவுத்தானைமேல்.

(இ-ள்.) வானிலுலவுந் தேவர்கள் செய்த யாகாக்கினியளித்த வில்லைவளைத்து வீரபத்திரனுடைய வன்மைவாய்ந்த சேனைகண்மீது தாவிச்செல்லாநின்ற கூரமைந்த அளவற்ற அம்புகளை விடுத்தனன்.—எ-று. (அகூ)

காளிகடொகைகளுங்கழுதினீட்டமுங்
கூளிகடொகைகளுங்குழுமியேற்றெழீஇ
வாளிகடொகைசொரீஇமாயற்சூழ்வுறு
நீளிகல்புரிந்தனர்நிகரில்வன்மையார்.

(இ-ள்.) காளிகளின் தொகைகளும், பிசாசுகளின் கூட்டமும், கூளிகளின் கூட்டமுங்கூடி எதிர்த்தெழுந்து அம்புகளைத் தொகையாகவிடுத்து மாயனைச்சூழ்ந்து ஒப்பற்ற வன்மையினை யுடையவர்கள் பெருஞ்சண்டை செய்தார்கள்.—எ-று. (கூ0)

தண்டுளவலங்கலந்தடம்பொற்றோளுடை
யண்டனுந்தன்படையனைத்துநேர்கொடு
மண்டமர்புரிதலைமற்றவெல்லையிற்
கண்டனனகைத்தனன்கடவுள்வீரனே.

(இ-ள்.) தண்ணிய துளவமாலையணிந்த பெரியபொன்னந்தோளினையுடைய தேவனான திருமாலுந் தனது சேனைகளனைத்தும் எதிர்த்து நின்று பெரும்போர்புரிதலைப்பார்த்துக் கடவுளான வீரபத்திரன் நகைத்தனன்.—எ-று. (கூக)

வெருவரும்பெருந்திறல்வீரன்றண்டுழா
யரியொடுபோர்செயவாதிநாயகன்
றிரைகடலுகமுஞ்சிறிதுதானென
வொருபெருந்தேரினையுய்த்திட்டானரோ.

(இ-ள்.) பகைவரஞ்சத்தக்க மிகுந்தவன்மைவாய்ந்த வீரபத்திரன் தண்ணிய துளவமாலையணிந்த அரியுடன் போர்புரிதற்கு முதற்கடவுளான சிவபெருமான் திரையினையுடைய கடல்சூழ்ந்த உலகமுஞ் சிறிதென்று கூறுமாறு ஒரு பெரிய இரதத்தினை அனுப்பினர்.—எ-று. (கஉ)

பாயிரந்தானெனப்பகரும்வேதமா
மாயிரம்புரவிகளளப்பில்கேதனங்
காயிரும்படைகண்மீக்கலந்ததாகிய
மாயிருந்தேரவண்வல்லைவந்ததே.

(இ-ள்.) அனைத்து நூலுக்கும் பாயிரமெனக்கூறும் வேதமாகிய ஆயிரம் குதிரைகளையும் அளவற்ற கொடிகளையும் பகைவர்களைக் கொல்லும் பெரிய ஆயுதங்களையும் உட்கொண்டதாய் விளங்கும் மிகப்பெரிய ரதம் ஒன்று அவ்விடத்துக்கு விரைவாக வந்தது.—எ-று (கங)

தேரவண்வருதலுந்திறல்கொள்வீரனாற்
பாரிடைவீழ்ந்தயர்பங்கயாசன
னாருயிர்பெற்றெனவறிவுபெற்றெழீஇ
நேரறுமகம்படுநிகழ்ச்சிநோக்கினன்.

(இ-ள்.) இரதம் அவ்விடத்தில்வந்தவுடனே வெற்றிவாய்ந்த வீரபத்திரனால் பூமியில் விழுந்து மயங்கிய கமலாசனனான பிரமன் அரிய உயிர்பெற்றாற்போல அறிவுபொருந்தி எழுந்து ஒப்பற்றயாக மழிந்த செயலைப் பார்த்தான்.—எ-று. (கச)

அரிபொருநிலைமையுமாடல்வீரன
துருகெழுசெற்றமுமும்பர்தன்னிடை
யிரதம்வந்திட்டதும்யாவுநோக்கியே
கருதினன்யானுயுங்காலமீதென.

(இ-ள்.) மாயோன் போர்புரியுந்தன்மையும் வெற்றிவாய்ந்த வீரபத்திரனுடைய தோற்றமிக்க கோபமும் ஆகாயத்திற் தேர்வந்தது மாதியவனைத்தும் பார்த்து யானுய்யுங்கால மிதுவென்று எண்ணினன்.—எ-று. (கரு)

விண்ணிழிதேரிடைவிரைவினன்முக
னண்ணினன்வல்வனினகைமுட்கோல்கொடு
துண்ணெனநடத்தியேதொழுதுவீரனும்
புண்ணியன்றனக்கிதுபுகறன்மேயினன்.

(இ-ள்.) பிரமன் வானினின்றும் இறங்கிவந்த தேரின்மீது சாரதியைப்போலச் சென்றிருந்து ஒளிபொருந்திய முட்கொலெந்தி விரைவாக நடத்தி வீரபத்திரனாகிய புண்ணியனை வணங்கி இதனை யுரைக்கத் தொடங்கினன்.—எ-று. (கசு)

நீறணியபவளமெய்நிமலனிற்கிதோர்
வீறணிதேர்தனைவிரைவிலுய்த்தனன்
றேறலர்தமையடுந்திறல்கொள்வீரநீ
யேறுதிதுணைவியோடென்றுபோற்றினன்.

(இ-ள்.) நீறணிந்த பவளம்போலும் திருமேனியினையுடைய நிமலனே நினக்கு இதோ ஒருவெற்றிவாய்ந்த இரதத்தினை விரைவாகக்கொண்டு வந்திருக்கின்றேன் பகைவரைக் கொல்லும் வன்மையமைந்த வீரபத்திரனே நீ துணைவியுடன் ஏறியருளென்று வணங்கினன்.—எ-று. (கஎ)

போற்றினனிரத்தலும்பொருவில்வேதன்மேற்
சீற்றமுள்ளதிலொருசிறிதுநீங்கியே
யாற்றல்கொள்வீரனெம்மன்னைதன்னுட
னேற்றமோடதன்மிசையிமைப்பின்மேவினான்.

(இ-ள்.) வணங்கிவேண்டுதலும் ஒப்பற்ற பிரமன்மீது கொண்டிருந்த கோபத்திலொரு சிறிது நீங்கிவன்மைவாய்ந்த வீரபத்திரனெமது அன்னையுடன் கவுரவத்துடன் அதன்மீது இமைப்பொழுதிலேறினான்.—எ-று. (கூ௯)

மேவியகாலையில்வெலற்கருந்திறற்
சேவகவடியனேன்றிறத்தைகாண்கெனத்
தாவகறேரினைத்தண்டுழாய்முடிக்
காவலன்முன்னுறக்கடாவியுய்ப்பவே.

(இ-ள்.) எழுந்தருளி இருந்தவுடனே பிரமன் வெல்லுதற்கரிய வெற்றியினையுடைய வீரனே! அடியேனுடைய திறத்தினைக்காண்டியென்று குதிரைகளை மிகுதியாகப் பூட்டியுள்ள வத்தேரினைத் தண்ணியதுளவ மாலையணிந்த திருமாலினெதிரே ஓட்டி நிறுத்துதலும்.—எ-று. (கக)

வரனுறுநான்முகவலவனுய்த்திடு
திருமணித்தேர்மிசைத்திகழ்ந்தவீரன்முன்
னொருதனிவையமேலும்பர்க்காகவே
புரமடவருவதோர்புராரிபோன்றனன்.

(இ-ள்.) மேன்மைவாய்ந்த நான்முகனாகிய சாரதியோட்டிய அழகியமணிமயமான தேரின்மீது விளங்கிய வீரபத்திரன் முன்னாளில் ஒப்பற்ற பூமியாகிய இரதத்தின்மீது திரிபுரதகனஞ் செய்யவந்த புராரியான சிவபெருமானை யொத்தனன்.

இத்திருபுரதகன சரிதத்தை இந்நூலின் ஏழாவது காண்டமானஉபதேசகாண்டத்துக்காண்க. (௧௦௦)

எல்லையில்பெருந்திறலிறைவனேறுதே
ரல்லியங்கமலமேலண்ணலுய்த்திடச்
சொல்லருந்தானையின்றொகையைநீக்கியே
வல்லைசென்றிறுத்ததம்மாயன்முன்னரே.

(இ-ள்.) அளவற்ற மிக்கதிறலாளனான வீரபத்திர விறைவனேறிய இரதம் அகவிதழினையுடைய தாமரைமலர்மீது இருக்கும் பிரமனோட்டா நிற்பஉரைத்தற்கரிய பூதசேனையின் கூட்டத்தினை விடுத்து விரைவாக அம்மாயோனெதிரிற் சென்று நின்றது.

பாருலகளவினும்பரந்தபைம்பொனந்
தேரவணெதிர்தலுந்திருவுலாவிய
காருறழ்மேனியங்கண்ணன்கண்ணுதல்
வீரனைநோக்கியோர்மொழிவிளம்பினான்.

(இ-ள்.) பூமியினளவினும் அதிகமான பசியபொன்னந் தேரங்குவந்தலும் திருமகள் தங்கிய கரியதிருமேனியினையுடைய மாயோனான கண்ணன் நெற்றிக்கண்ணுளனான வீரபத்திரனைப்பார்த்து ஒரு சொல்லுரைத்தனன்.—எ-று. (௧௦௨)

வேறு.

தெழித்துவார்புனற்கங்கையஞ்சடைமுடிச்சிவனைப்
பழித்ததக்கனையடுவதல்லாலவன்பாலி
விழுக்கிறேவரையடுவதென்வேள்வியையெல்லா
மழித்ததென்னைநீபுகலுதியாலெனவறைந்தான்.

(இ-ள்.) முழங்காநின்ற கங்கையுலவு நீண்டசடைமுடியினையுடைய சிவபெருமானை இகழ்ந்த தக்கனைக் கொல்வதன்றி அவனருகிலிருந்த குற்றமற்ற தேவரைக் கொன்றதென்னை? யாகமனைத்தையும் அழித்ததென்னை நீயுரைத்தி என்றுகூறினன்.

பாடல்சான்றிடுமாலிதுபுகறலும்பலரு
நாடுதொல்புகழ்வீரனன்றிதுவென்னநகையா
வீடுசேரிமிலேற்றுடன்வயப்புலியேறொன்
றூடல்செய்தல்போலொருமொழியுரைத்தனனன்றே.

(இ-ள்.) பெருமையமைந்த மாலிதனையுரைத்தவுடனே பலராலும் நாடப்பட்ட புராதனமான பெரும்புகழினையுடைய வீரபத்திரன் கேட்டு இது நன்றென்று நகைத்து வன்மைமிக்க இமிலினையுடைய எருதுடன் வெற்றிவாய்ந்த சிங்கமொன்று விளையாடினாற்போல ஒரு மொழி கூறினன்.—எ-று.

இமில் - பிடரியிலுயர்ந்து காணுமூன் முடிச்சு. (கoரு)

எல்லையில்லதோர்பரமனையிகழ்ந்தவனியற்று
மல்லல்வேள்வியிலவிநுகர்ந்தோர்க்கெலாமறைமுன்
சொல்லுந்தண்டமேபுரிந்தனனின்னையுந்தொலைப்பாம்
வல்லையேலதுகாத்தியென்றனனுமைமைந்தன்.

(இ-ள்.) முடிவற்ற பரமனை இகழ்ந்தவனான தக்கன் செய்யும் வளந்தங்கிய யாகத்திலவியருந்தினவர்கட்கெல்லாம் வேதமுன்னருரைத்த தண்டமேசெய்தேம். நின்னையுந் தொலைப்போம் வல்லையாயினதனைக் காத்துக்கொள் என்றனன் உமாதேவியின் குமாரனான வீரபத்திரன்.—எ-று. (கoகு)

வீரனிங்கிதுபுகறலுஞ்செங்கண்மால்வெகுண்டு
பாரவெஞ்சிலைகுனித்தனனாணொலிபடுத்தி
யாருஞ்விண்முகிலொன்றுதன்வில்லொடுமெப்பு
மாரிபெய்தெனப்பகழியாற்பூதரைமறைத்தான்.

(இ-ள்.) இதனை வீரபத்திரனுரைத்தவுடனே செவ்விய கண்ணுளனான மாயோன் கோபங்கொண்டு பெரிய வெவ்விய வில்லினைவளைத்து நாணொலியுண்டாக்கிப் பொருந்தாநின்ற ஆகாயத்திற் மேகமொன்று தனது இந்திரவில்லுடன் நின்று அப்பாகிய மாரியைப்பெய்தாற்போல அம்புகளை விடுத்துப் பூதர்களை மறைத்தனன்.—எ-று.

கணங்கடம்மிசைமால்சரம்பொழிதலுங்காணூஉ
வணங்குதன்னொடுநகைசெய்துவீரனுமமலன்
பணங்கொள்பஃறலைப்பன்னகக்கிறைவனாற்படைத்த
குணங்கொண்மேருவேயன்னதோர்பெருஞ்சிலைகுனித்தான்.

(இ-ள்.) பூதகணங்கள்மீது மாலோன் அம்புவிடுதலும் அதனைக்கண்டு வீரனாகிய அமலன் பத்திரகாளியுடன் நகைத்துப் படங்களையுடைய பலதலைப் பாம்புகளினிறைவனான ஆதிசேடனாற் கட்டப்பட்ட நாணியினையுடைய மேருவினையொத்ததான ஒரு பெரியவில்லினை வளைத்தனன்.—எ-று. (கoஎ)

செற்றமீக்கொளவையன்வில்வாங்கினன்சிறிதே
பற்றிநாணொலியெடுத்தலுமொடுங்கினபரவை
பொற்றையாவையுங்கிண்டனதுளங்கினபுவன
மிற்றைவைகலோவிறுதியென்றயர்ந்தனரெவரும்.

(இ-ள்) கோபமதிகரிக்க வீரபத்திரன் தனது வில்லைச்சிறிது வளைத்து நாணொலிகாண்டலும் கடல்களொடுங்கின; மலையனைத்தும் பிளந்தன; புவனங்கள் நடுங்கின; அனைவரும் இத்தினமோ முடிவுநாளென்று அயர்ந்தனர்.—எ-று. (கoஅ)

கோளிலாகியபுற்றிடையோரராக்குறுகி
மீளில்வெஞ்சினக்குழவிகொண்டேகலின்வீரன்
றோளில்வாங்கியசிலையினிற்றாணியிற்றுதைந்த
வாளிவாங்கியுய்த்தொருதனிமாயனைமறைத்தான்.

(இ-ள்.) இருப்பிடமான புற்றினில் ஒரு பாம்புசென்று திரும்பினால் வெவ்விய கோபத்தினையுடைய அதன் குட்டிகளையுமுடன்கொண்டு செல்லுமாறு வீரபத்திரன் தோளினால் வளைத்த வில்லினில் அம்பறாத் தூணியில் நிறைந்திருந்த அம்புகளையெடுத்துவிடுத்து ஏகனாகநின்று போர்புரியும் மாயனை மறைத்தனன்.—எ-று. (௧௦௯)

செங்கணான்றனைமறைத்தபின்மற்றவன்செலுத்துந்
துங்கவெங்கணையாவையும்பொடிபட்டுத்தொலைப்ப
வங்கொராயிரம்பகழியையப்பதென்பூட்டி
யெங்கணாயகன்றிருமணிப்புயத்தினேரெய்தான்.

(இ-ள்.) செவ்வியகண்ணுளனான மாயோனை வீரபத்திரன் விடுத்த அம்புகள் மறைத்தவுடனே அவ்வீரபத்திரன் விடுத்த உயர்ந்த வெவ்விய அம்பனைத்தும்பொடிபடுமாறு மாயோன் தொலைத்துப் பின்னும் அவ்விடத்திலோராயிரம் அம்புகளை விரைவாகப்பூட்டி எங்கள்நாயகனான வீரபத்திரனுடைய அழகியபுயத்தினேரே யெய்தனன்.

எய்யும்வெங்கணையாவையும்வீரருளிறையா
மையனாயிரமோர்ச்சினனகற்றி
யொய்யெனக்கரியோன்றுதன்மீமிசையொருதன்
வெய்யபொத்திரமேவினனவனுளம்வெருவ.

(இ-ள்.) மாயோனெய்த வெவ்விய கணைகள் அனைத்தினையும் வீரருள் இறைவனான வீரபத்திரன் ஆயிரமம்புகளை விடுத்துவிலக்கி விரைந்து கரியோனான மாயோனுடைய நெற்றியிற் றனது ஒரு அம்பினை அவனுள்ளி லச்சங்கொள்ளுமாறு விடுத்தனன்.—எ-று. (௧௧௧)

ஏவுதொல்கணைமாயவனுதலிடையிமைப்பின்
மேவுகின்றுழியனையவன்றளர்தலும்வீரன்
வாவுதேர்மிசையூன்றினன்சிலையைவார்கணையுந்
தூவுகின்றிலன்மாலிடர்நீங்குறுந்துணையும்.

(இ-ள்.) விடுத்த அம்புமாயோன் நெற்றியில் கணப்பொழுதினுட் சென்று புகுந்தவுடனே அம்மாயோன் தளர்வடைதலும் அதுகண்ட வீரபத்திரன் ஓடாநின்ற தேரினில் வில்லையூன்றி மாலின்தளர்வகலுங் காறும் நீண்டமைந்த அம்பும்விடாதிருந்தனன்.—எ-று. (௧௧௨)

இன்னலத்துணையகன்றுமாலெதிர்தலுமெமது
மன்னுநேர்ந்தனனிருவரும்வரிசிலைவளையாப்
பொன்னின்வாளிகள்பொழிந்தனர்முறைமுறைபொருதா
ரன்னபான்மையர்செய்தபோர்யாவரேயறைவார்.

(இ-ள்.) தளர்வுநீங்கியவுடனே மாயோனெதிர்த்தலும் எமதுதலைவனான வீரபத்திரனுமெதிர்த்தனன் இருவரும்வரிந்த விற்களைவளைத்துப் பொற்றகடணிந்த அம்புகளைவிடுத்து ஒருவருக்கொருவர் போர்புரிந்தனர் அந்தத்தகுதியினையுடைய இருவரும் புரிந்த போரினை இத்தகைத்தென்று எவர் கூறவல்லுநர்.—எ-று. (௧௧௩)

மாறுகொண்டபோரிவ்வகைபுரிதலும்வயத்தால்
வீறுகொண்டுயர்முக்கணான்வெய்யதீவடவைக்

கூறுகொண்டதோர் படையினையோச்சலுங்குவட்டி
லேறுகொண்டலையனையவனுரத்திலெய்தியதே.

(இ-ள்.) பகைபொருந்திய சண்டையை இவ்வண்ணம் செய்தலும் வெற்றியால் மேன்மைவாய்ந்துயர்ந்த மூன்றுகண்களையுடைய வீரபத்திரன் வெவ்விய வடவாக்கினியினமிசம் பொருந்தின ஒரு படையினை விடுதலும் அது மலைமீதிலிருக்கரிய மேகம்போன்ற மாயோனுடைய மார்பிற்சென்றுபட்டது. —எ-று. (ககச)

எய்துகாலையிலுளம்பதைபதைத்திட விரங்கி
வெய்துயிர்ப்புடனுணர்வொரீஇயுளநனிமெலிந்து
நொய்தின்மையலைநீங்கலுமுகுந்தனைநோக்கிச்
செய்திபோரென்வுரைத்தனன்சரபமாந்திறலோன்.

(இ-ள்.) மார்பில்வந்து புகுந்தவுடனே உள்ளம்மிகவுந்துடிக்க இரங்கிபெருமூச்சுடன் அறிவகன்று மிகவுமுள்ளமெலிந்து நின்ற பின் விரைவாக வம்மயக்கமொழி மாயவனைப் பார்த்துச் சரபவுருவங் கொள்ளுமாற்றலினையுடைய வீரபத்திரன் போர் செய்வாயாக என்று கூறினன்.—எ-று. (ககரு)

மெய்வதத்தினையாவர்க்கும் விரைவினிலிழைக்குந்
தெய்வதப்படைமுழுவதுஞ்செங்கண்மால்செலுத்த
வவ்வனைத்தையுமனையவப்படைகளாலகற்றிக்
கவ்வைமுற்றினனுதல்விழியளித்திடுங்கடவுள்.

(இ-ள்.) எத்தனையோருக்கும் உடலுசத்தினைச் சீக்கிரத்திலுண்டாக்கும் தெய்வாத்திரங்கள் முற்றிலும் செவ்விய கண்ணன் விடுப்ப அவன் விடுத்தவந்தத்தேவாத்திரமனைத்தையும் அத்தேவாத்திரங்களாலேயே அகற்றிச் சிவபெருமானுடைய நெற்றிக்கண் அளித்தவீரபத்திரக்கடவுள் அட்டகாசஞ் செய்தனன்.—எ-று. (ககசா)

வேறு.

தேன்றிகழ்பங்கயத்திருவினயக்த்
தோன்றறன்படைக்கலந்தூண்டவெங்கணுஞ்
சான்றெனநின்றவன்றனயன்வீரமாம்
வான்றிகழ்படைதொடாவல்லைமாற்றவே.

(இ-ள்.) தேனோடு விளங்குந்தாமரை யாசனத்தையுடைய திருமகள் கணவனான தலைவன் தனது படைக்கலமான நாராயணாத்திரத்தினை விடுப்பச்சருவ சாட்சியாகநின்றசிவகுமாரன் வீரமென்னு மிக்கசிறப்பினையுடைய அம்பினைவிடுத்து அதனை விரைந்தழித்தனன்.—எ-று. (ககஎ

அரியதன்பின்னுறவ்வாதிவீரன்மேற்
பொருகணையளப்பிலபொழியமாற்றியோர்
சரமதுசெலுத்திமால்சார்ங்கமொன்றையு
மிருதுணிபடுத்தினனிறைவன்மைந்தனே.

(இ-ள்.) மாயோன் பின்னர் ஆதியான வீரன்மீது பொராநின்ற அளவற்ற அம்புகளைவிடுப்ப அவைகளைமாற்றி யோரம்புவிடுத்து மாலின்வில்லான சாரங்கத்தினைச் சிவகுமாரனான வீரபத்திரன் இருதுண்டாகச்செய்தனன்.—எ-று. (ககஅ)

பின்னுமத்துணைதனிற்பெருந்திறற்பெயர்
முன்னவனிருகணைமுறையினேச்சியே
பன்னகமிசைத்துயில்பகவனார்திதன்
பொன்னிருஞ்சிறையினைப்புவியில்வீட்டினன்

(இ-ள்.) பின்னரும் உடனே வீரபத்திர நாமமுடைய முதல்வன் முறையே இரண்டம்புவிடுத்து அரவிலுறங்கும் பகவனான மாயோனுடைய வாகனமான கருடனது அழகியபெரிய சிறகிரண்டினையும் வெட்டிக்கீழிட்டனன்.—எ-று. (கககூ)

ஆயதோரமைதியிலாழியங்கையான்
மாயவனுதலின்வரம்பில்சண்ணரை
மேயினகாதலின்விதிப்பவீரன்முன்
பாயிருண்முகிலெனப்பரம்பினாரரோ

(இ-ள்.) அப்பொழுது சக்கரமேந்திய கையினையுடையவன் மாயவனுதலின் அளவற்ற மாயவர்களைப்பொருந்திய விருப்பத்துடன் உண்டாக்க அவர்கள் வீரபத்திரனெதிரின் மிகுந்த கரிய மேகத்தினைப்போலப் பரவினின்றனர்.—எ-று. (கஉ0)

அங்கவர்யாரையுமமலன்வெய்யகட்
பொங்கழல்கொளுவிநுண்பொடியதாக்கலும்
பங்கயவிழியினான்பரமன்னறருள்
செங்கையிலாழியைச்செல்லென்றேவினான்.

(இ-ள்.) அவ்வஞ்ச மாயரனைவரையும் அமலனான வீரபத்திரன் வெவ்விய கண்களினின்றுந் தோன்றி யெரியுந் தீயாலெரித்து நுண்ணிய புழுதியாகச்செய்தலும் பின்னர்க் கமலக்கண்ணன் தனக்குப்பரமன் அர்நாளி லளிக்கத்தான் செவ்விய கையிலேந்திநிற்கும் சக்கரப்படையைச் செல்க என்று விடுத்தனன்.—எ-று. (கஉக)

விடுத்ததோர்திகிரியைவீரனங்கையாற்
பிடித்தவண்விழுங்கினன்பெயர்த்துமாயவ
னெடுத்திடுகதையினையெறியவன்னது
தடுத்தனன்றனதுகைத்தடம்பொற்றண்டினால்.

(இ-ள்.) மாயவன் விடுத்த சக்கரப்படையை வீரபத்திரன் அழகிய கையாற் பிடித்து அவ்விடத்தில் விழுங்கினன் பின்னரு மாயவன் தானெடுத்த தண்டாயுதத்தினையெறிய அதனைத்தனது கையிலுள்ள பெரிய பொன்மயமான தண்டத்தால் தடுத்தனன்.—எ-று. (கஉஉ)

வேறு.

சங்கார்செங்கைப்புங்கவனேவுந்தண்டம்போய்
மங்காவங்கண்வீழ்வதுகாணுவாள்வாங்கிப்
பொங்காநின்றேயுய்த்திடவெய்தும்பொழுதின்க
ணுங்காரஞ்செய்திட்டனனம்மாவுமைமைந்தன்.

(இ-ள்.) சங்குப்பொருந்திய செவ்விய கையினையுடைய மாயவனான தேவன் விடுத்த தண்டஞ்சென்று மழுங்கி யங்கு விழுந்ததனைக் கண்டு தனது வாட்படையை எடுத்துக் கோபங்கொண்டு வெட்ட வருதலும் உமாதேவியின் மைந்தனான வீரபத்திரன் அதுகண்டு ஒரு உங்காரஞ்செய்தனன்.—எ-று. (கஉ௩)

ஒய்யென்றையன்சீற்றமொடங்கணுங்காரஞ்
செய்யுங்காலத்தோவியமென்னச்செயனீங்கிக்
கையும்வாளுமாயவனின்றான்கடலூடே
வையம்முண்டுகண்டுயில்கின்றமாமாயன்.

(இ-ள்.) வீரபத்திரன் விரைவாகக் கோபத்துடன் உங்காரஞ்செய்தவுடனே செயல்நீங்கிச் சித்திரத்தைப்போல உலகினையுண்டு கடலிலுறங்கு மாயவன் கையும் வாளுமாக வகுநின்றனன்.—எ-று. (கஉ௪)

சான்றகன்மாயனச்சுறவெய்தித்தளர்காலை
மூன்றுகண்வீரன்யாதுநினைந்தோமுனிவெய்த
வான்றதொர்செற்றநீங்குதியென்னவண்டத்தே
தோன்றியதம்மாகண்ணுதலீசன்சொல்லொன்றே.

(இ-ள்) அறிவழிந்த மாயவ னச்சமுற்றுத் தளருங்காலத்தில் மூன்று கண்களையுடைய வீரன் யாதைக்கருதியோ சீற்றங்கொள்ளுதலும் உடனே ஆகாயத்திற் கண்ணுதலான இறைவனுடைய கட்டளையான சொல்லொன்று மிக்க கோபத்தை விட்டுவிடு என்றுண்டாகியது.—எ-று. (கஉடு)

அந்தரமீதேவந்திடுசொல்லங்கதுகேளா
வெந்தைமனங்கொள்வெஞ்சினநீங்கியிடுபோழ்தி
லந்தின்மணித்தேருய்த்திடுபாகனதுநோக்கி
வந்தனைசெய்தேபோற்றியொர்மாற்றம்வகுப்பானல்.

(இ-ள்.) வானிலெழுந்த சொல்லினைக்கேட்டு எந்தையான வீரபத்திரன் மனத்திற்கொண்ட கோபத்தினை விடுத்திருந்தவுடனே அவ்விடத்திலழகிய தேரினையோட்டிய பாகனான பிரமன் அதனைக்கண்டு வந்தனைசெய்து துதித்து ஒருசொல் உரைக்கின்றான்.—எ-று. (கஉசு)

வேறு.

அறத்தினையொருவிச்செல்லுமழிதகனுலகமெல்லா
மிறத்தலையெய்தவிங்கணியற்றியமகத்தின்மேவிப்
பெறத்தகுமவியைநுங்கும்பேதையேன்பிழையையெல்லாம்
பொறுத்தனைகொண்மோவென்னப்பொன்னடிக்கமலம்பூண்டான்.

(இ-ள்.) தருமவழியை விடுத்து நடக்கும் அழிந்த தகுதியினையுடைய தக்கனென்பான் உலகனைத்தும் அழியும் வண்ணம் இங்குச்செய்த யாகத்தையடைந்து அடைதற்குசிதமான அவியைப்பெற்றுப் புசித்த அறிவிலியான வென்னுடைய குற்றமனைத்தையும் பொறுத்துக்கொள் என்று வீரபத்திரனுடைய பொன்னனைய அடிக்கமலத்தினைப்பற்றி வணங்கினான்.—எ-று. (கஉஎ)

பூண்டிடுமுலகந்தந்தபுங்கவன்றன்னைநோக்கி
யாண்டகைவீரனஃதேயாகவென்றருளலோடு
நீண்டதோர்மாயனன்னனீடருணிலைமைகாணூஉ
வீண்டிதுகாலமென்னவேத்தினனியம்பலுற்றான்.

(இ-ள்.) திருவடியைப்பிடித்துக்கொண்டு வணங்கிய உலகினைப்படைத்த தேவனை பிரமனைப்பார்த்து ஆண்டகையான வீரபத்திரன் அவ்வாறேயாகுக என்றருளிச்செய்தலும் நெடுமாலவ்வீரபத்திரனுடைய மிகுந்த கருணைத்திறத்தினைக்கண்டு இதுதான் சமயமெனத் துதித்துரைக்கத்தொடங்கினான்.—எ-று. (கஉஅ)

பாரவெஞ்சிலையும்வீட்டிப்பல்படைக்கலமுஞ்சிந்திச்
சேரலருயிர்களுண்டதிகிரியுஞ்செல்லநுங்கிப்
போரிடையெனையும்வென்றுபுகழ்புனைந்திடுதியென்றால்
வீரநின்றகைமையாரேமுடிவுறவிளம்பவல்லார்.

(இ-ள்.) எனது பெரிய வில்லினையும் ஒடித்துப் பலவாயுதங்களையுமழித்துப் பகைவருயிரை யருந்தின சக்கரத்தினையும் உட்செல்லும்வண்ணம் விழுங்கிப்போரினிலென்னையும் வென்று கீர்த்தி மாலைபூண்டனையானால் வீரனே நினது தன்மையை எவரே முற்றிலுமுரைக்க வல்லவர்கள்.—எ-று. (கஉகூ)

ஆசறுநெறியினீங்குமயன்மகனியற்றுகின்ற
பூசனைவிரும்பிவேள்விபுகுந்தனன்புந்தியில்லேன்
மாசறுபுகழாய்நின்னூன்மற்றிதுபெற்றேனந்தோ
வீசனையிகழ்ந்தோர்தம்பாலிருப்பரோவெண்ணமிக்கோர்.

(இ-ள்.) குற்றமற்ற நன்மார்க்கத்தினின்றும் விலகிய தக்கன் செய்த பூசையை விரும்பிப் புத்தியற்றயான் அவன் செய்யும் யாகத்துக்கு வந்தேன் மாசற்ற புகழினையுடையாய் நின்னாலிதனைப்பெற்றேன் ஐயோ ஈசனை இகழ்ந்தாரிடத்து இருப்பார்களோ ஆலோசனையிற் சிறந்தவர்கள் —எ-று. (கநு0)

ஆதிநாயகனைபொல்லா ரணையவர்ச் சேர்ந்தார்க்கெல்லாம்
வேதமேயிசையாநிற்கும் வியன்பெருந்தண்டமன்றே
வீதெலாமெம்மனோர்பாலியற்றியவினையத்தன்மை
நீதியாலெம்பாலன்றிநின்கணோர்குறையுமுண்டோ.

(இ-ள்.) ஆதிநாயகனான சிவபெருமானைப் பகைத்தவர்க்கும் அவர்களைச் சேர்ந்தோர்கட்குமெல்லாம் மிகப்பெரிய தண்டனையை வேதமேகூறும் ஆதலின் இவ்வனைத்தும் எங்களிடத்தில் நீ செய்த தன்மை நீதியாலானதேயாம்ஆராயில் எம்மிடத்திலன்றி நின்னிடத்திலொரு குறையுளதோ. - எ-று. (கநுக)

விழிதனின்முறுவறன்னின்வெய்துயிர்ப்பதனிலார்ப்பின்
மொழிதனிற்புவனமெல்லாமுதலொடுமுடிக்கவல்லோய்
பழிபடுவேள்விதன்னிற்பலரையும்படையினோடு
மழிவுசெய்திட்டதம்மாவடிகளுக்காடலன்றே.

(இ-ள்) விழியினாலும் புன்னகையாலும் பெருமூச்சினாலும் அட்டகாசத்தாலும் சொல்லினாலும்புவனமனைத்தினையும் அடியோடழிக்க வல்லோய் பொருந்திய இவ்யாகத்திற் பலரையும் ஆயுதங்களுடன் அழித்தது அடிகளுக்கொரு விளையாட்டன்றே.— எ-று. (கநுஉ)

உறுநர்தந்தொகைக்குவேண்டிற்றுதவியமுதல்வனேவு
முறையதையுன்னிவேள்விமுடிப்பதோராடலாகச்
சிறிதெனுமளவைதன்னிற்சிதைத்தனையன்றியெந்தா
யிறுதிசெய்திடநீயுன்னின்யார்கொலோவெதிர்க்குநீரார்.

(இ-ள்.) அடியடைந்த அன்பர் விரும்பியவைகளை யளிக்கும் முதல்வனான சிவபெருமானேவிய முறைமையை நினைத்து யாகத்தினையழிப்பதை ஒரு விளையாட்டாகச்சிறிதெனுங் காலவளவையுள் அழித்தனையேயன்றி எந்தையே நீயழிக்க வேண்டுமென்று கருதுவாயானால் எவரே நின்னுடனெதிர்க்குந் தன்மையினர்.—எ-று. (கநுங)

இறுதிசெய்திடலேசீற்றமின்பமேயாண்மையென்று
வறைதருசத்திநான்காமரன்றனக்கையைகாளி
முறைதருகவுரியின்னோர்மும்மையும்பெற்றோரேனைப்
பெறலருஞ்சத்தியானிப்பெற்றியுமறைகள்பேசும்.

(இ-ள்.) அரனுக்குச் சங்கரித்தலும் கோபங்கோடலும் இன்புறுதலும் ஆண்மையுறுதலும் எனவுரைக்கப்பட்ட சத்திகள் நான்காம் ஐயையும் காளியும் முறையமைந்த கவுரியும் முன்னுரைத்த நான்கின் மூன்றினைப்பெற்றவர்கள் மற்றைப்பெறுதற்கரிய சத்தி நான் இத்தன்மையும் வேதங் கூறும் —எ-று. (கநுச)

அன்னதோர்பரிசால்சனருஞ்பெருஞ்சத்தியென்னிற்
பின்னமன்றவற்கியானும்பெரிதும்மன்புடையேன்முக்கன்

முன்னவன்றன்பாலீண்டென்மொய்ம்புடனிழந்தநேமி
யின்னுமங்கவன்றாளர்ச்சித்திமைப்பினிலெய்துகின்றேன்.

(இ-ள்.) அவ்விதமான முறையால் ஈசனது பெறுதற்கரிய சத்தியென்னிற் பின்னமானதன்று அவ்வரனுக்கு நானும் மிகவும் அன்புடையேன் அம்முதல்வனிடத்தில் வன்மையாலிங்கிழந்த சக்கரப்படையை அவன் திருவடியை இன்னும் அருச்சித்து இமைப்பினில் அடைகின்றேன்.—எ-று. (௬௫)

முனிவுடனடிகளீண்டுமுறைபுரிந்ததனுக்கின்னன்
மனனிடைகொள்ளேனின்னான்மற்றிதுபெறுதலாலே
புனிதமாக்கொள்வன்றண்டம்புரிந்தனைபொறுத்திகுற்ற
மினியருள்புரிதியென்னாவிணையடியிறைஞ்சலோடும்.

(இ-ள்.) கோபத்துடன் அடிகள் இவ்விடத்திற் தண்டஞ்செய்ததற்கு மனதினில் வருத்தங்கொள்ளேன் நின்னால் யானிதனைப்பெறுதலாற் புனிதமாகவே கொள்வேன் தண்டனை செய்தனை எனது குற்றத்தினை இனிப்பொறுத்தருள். இனியடியேனிடம் கருணைவைப்பாயாக வென்று வீரபத்திரனுடைய உபயபாதங்களை வணங்குதலும்.—எ-று (௬௬)

வீரருள்வீரன்மாலோன்விளம்பியமாற்றங்கேளா
நாரணற்கன்புசெய்துநணியதோர்காலைதன்னிற்
பாரிடஞ்சூழநந்திபரவிட்வுமையாளோடு
மூரிமால்விடைமேற்கொண்டுதோன்றினன்முடிவிலாதான்.

(இ-ள்.) வீரருள் வீரனான வீரபத்திரன் மாலோன்கூறிய வசனங்களைக்கேட்டு நாராயணனிடங்கருணைவைத்து அவனருகிற்சென்ற சமயத்தில் அழிவில்லாத சிவபெருமான் பூதங்கள்சூழ நந்திதேவர் வணங்க உமாதேவியுடன் மூரியினையுடைய பெரிய இடபத்தின்மீது ஏறி யெழுந்தருளினான்.—எ-று. (௬௭)

தேங்கியகங்கைசூடுஞ்செஞ்சடைக்கடவுடோன்ற
வாங்கதுதெரிந்தவீரனச்சமோடங்கைகூப்பிப்
பாங்குறநிற்பமாலும்பங்கயத்தயனுந்தாழா
நீங்கியதாயைநேருங்குழவியினிலையரானார்.

(இ-ள்.) உலகமுழுது நிறைந்த கங்கையையணிந்த செஞ்சடையினையுடைய கடவுள் எழுந்தருள வதனையுணர்ந்த வீரபத்திரன் அச்சத்துடன் கைகுவித்து அருகாகநிற்க மாலும் கமலாசனனான பிரமனும் வணங்கி விலகிச்சென்ற தாயையடைந்த குழந்தைகளின் தன்மையை யடைந்தார்கள்.—எ-று. (௬௮)

கண்டனள்கவுரிவேள்விக்களத்திடைக்கழலுங்கையும்
துண்டமுந்தலையுமார்புந்தோள்களுந்துணிந்துவீழ
வண்டருந்தக்கன்றானுமாவிபோய்க்கிடந்ததன்மை
கொண்டதோர்சீற்றநீங்கியருள்வரக்கூறுகின்றாள்.

(இ-ள்.) உமாதேவி, தேவர்களும் தக்கனும் வேள்விக்களத்திற் காலுங்கையும் நாசியும் தலையு மார்புந் தோள்களுந்துணிந்துவீழ உயிரிழந்து கிடந்த தன்மையைப் பார்த்துத் தான் கொண்டிருந்த கோபமொழிந்து கருணையுண்டாக வுரைக்கின்றனள்.

பொன்னார்சடையெம்புனிதன்றனைநோக்கி
முன்னாகியபொருட்குமுன்னோனேவேள்விக்கு
மன்னானவற்குமிமையோர்க்குமற்றெவர்க்கு
மென்னான்முடிவெய்திற்றென்றுரைக்குமிவ்வுலகே.

(இ-ள்.) பொன்போன்ற நிறமமைந்த சடையினையுடைய எமது புனிதனான சிவபிரானைப்பார்த்து முன்னாய பொருளானைத்துக்கு முன்னோனே! இவ்வுலகமான து யாகாதிபனுக்கும் மற்றையர்க்கும் என்னால் முடிவுண்டாயிற்றென்று கூறுநிற்கும்.—எ—று. (கசo)

மற்றவர்கள்புந்திமயக்குற்றுணதுதொல்சீர்
சற்றுமுணராதுதவறுசெய்ததன்மையினாற்
செற்றமிகுவீரத்திருமகனாலிஞ்ஞான்று
பெற்றனரேயன்றோபெறத்தக்கதோர்பரிசே.

(இ-ள்.) அத்தக்கன் முதலியவர்கள் உனது தன்மையைச் சிறிதுமுணராது தவறுசெய்த தன்மையினாற் கோபமிகுந்த வீரத்திருமகனாலித்தினம் அடையத்தக்க ஒரு தன்மையை அடைந்தார்களன்றோ?—எ—று. (கசக)

முந்துமிவரைமுடித்தியெனவெஃகியதுந்
தந்துமுடித்தாய்தனிவீரனாலணைய
ருய்ந்துகுறைபோயுயிர்பெற்றெழும்வண்ண
மிந்தவரமுமெனக்கருளாயெங்கோவே.

(இ-ள்.) முன்னரு மிவரையழித்தியென யான் விரும்பியதனையும் ஒப்பற்ற வீரனாற்செய்து முடித்தனை, இனியவர்கள் குறைநீங்கி உயிர்பெற்றெழும் வண்ணம் எங்கோவே! இந்தவரமு மெனக்கருள்வாயாக என்றனள்,—எ—று. (கசஉ)

என்றுதொழுதாங்கெமையுடையாள்கூறுதலு
நன்றுன்னருளென்றுநகைசெய்துதன்பாங்கர்
நின்றதிறலோனைநேர்நோக்கியிம்மாற்ற
மொன்றுபகர்ந்தானுயிர்க்குயிராயுற்றபிரான்.

(இ-ள்.) என்று வணங்கி யெமமையடிமையாகவுடைய உமாதேவியார் கூறுதலும் நன்றுன் கருணையென்று நகைத்துத் தனதருகில் நின்ற வீரபத்திரனை எதிர் நோக்கி உயிர்க்குயிராயுள்ள பெருமான் இம்மொழியருளிச்செய்தனன்.எ—று. (கசஙு)

ஈண்டைமகத்திலெமையிகழ்ந்துநின்சினத்தான்
மாண்டுசிதைவுற்றவலியிலோர்தம்முயிரை
மீண்டுமளித்துருவுமேனாளெனப்புரிதி
யாண்டகைநீயென்றேயரனருளிச்செய்தலுமே.

(இ-ள்.) ஆண்டகையே நீ இவ்விடத்திலிந்த யாகத்திலெம்மையிகழ்ந்து நினது கோபத்தாற் செத்துச்சிதைந்த வலியற்றவர்களின் உயிரைத்திரும்பவும் மளித்து முன்னரிற்போலச்செய்தி யென்று சிவபெருமான் அருளிச்செய்தலும்.—எ—று. (கசச)

வீரனதற்கிசைந்துமேனாளெனவிறந்தீர்
யாருமெழுதிரெனவுரைப்பவானவர்கள்
சோருமுனிவர்மறையோர்துயிலுணர்ந்த
நீரரெனவுயிர்வந்தெய்துநிலத்தெழுந்தார்.

(இ-ள்.) அதற்கு வீரபத்திரன் இசைந்து இறந்தீர் நீவிர் யாவரும் முன்னாளிற்போல எழுவீராகவென்று கூறத் தேவர்களும் முனிவர்களும் மறையவர்களும் நித்திரை நீங்கிய தன்மையரைப்போல உயிருண்டாகப் பூமியினின்றும் எழுந்தார்கள்.

தண்டமியற்றுந்தனிவீரனுஞ்சிதைந்த
பிண்டமுழுதுருவும்பெற்றார்மகம்புக்கு
விண்டசெயலுமுயிர்மீண்டதுவுங்கங்குலிடைக்
கண்டபுதியகனவுநிலைபோலுணர்ந்தார்.

(இ-ள்.) தண்டனை செய்யாநின்ற ஒப்பற்ற வீரபத்திரனாற் சிதைந்த பிண்டத்தில் முழுதுருவும்பெற்று யாகத்திற் புக்கிறந்தசெயலும் மீட்டும் உயிர்பெற்றெழுந்ததுவும் இரவிற்கண்ட புதிய கனவினையொப்ப உணர்ந்தார்கள்.—எ-று. ()

அந்தண்முனிவோரனைவோரும்வானவரு
மிந்திரனேயாதியிமையோர்களும்வெருவிச்
சிந்தைமருண்டுசிவனையிகழ்ந்ததனால்
வந்தபழியுன்னிவருந்திமிகவெள்கினரால்.

(இ-ள்.) அழகிய தன்மையினையுடைய முனிவரனைவருந் தேவர்களும் இந்திரன் முதலியதேவர்களும் பயந்து மனமருண்டு சிவபெருமானையிகழ்ந்தமையால் வந்த பழியை நினைந்து வருந்தி மிகவும் வெட்கமுற்றார்கள்.—எ-று. (கசஎ)

பாணுரளிமுரலும்பைந்தார்புனைவீரன்
மாணுகத்தன்னோர்மருங்காகத்தேவியுடன்
பூணுரரவப்புரிசடையெம்புண்ணியனைச்
சேணுர்ககனந்திகழுஞ்செயல்கண்டார்.

(இ-ள்.) இசையமைந்த வண்டுகள் ஒலிக்கின்ற பசியமாலையணிந்த வீரபத்திரன், மாட்சிமையுடன் தனதொருபக்கத்தில் நிற்க உமாதேவியுடன் ஆபரணமாக வணிந்த அரவங்களோடுங் கூடின முறுக்கிய சடையினையுடைய எமது புண்ணிய மூர்த்தியைத் தேவர்கள் ஆகாயத்தில் விளங்கக்கண்டார்கள்.—எ-று. (கசஅ)

துஞ்சலகன்றசுரருமுனிவரரு
நஞ்சமணிமிடற்றுநாயகனைக்கண்ணுற்றே
யஞ்சிநடுங்கவதுகண்டெவரிவர்க்குத்
தஞ்சமெமையல்லாலென்றுதளரேலென்றான்.

(இ-ள்.) சாதலொழிந்த தேவர்களு முனிவர்களும் விடந்தங்கிய கண்டத்தினையுடையநாதனை சிவபெருமானைப்பார்த்து அஞ்சிநடுங்குவதைக்கண்டு சிவபெருமான் எம்மையன்றி இவர்க்கு யாவர் தஞ்சமாகவுள்ளவர்கள் என்று கருதி அஞ்சாதீர் என்றருளிச்செய்தனன்.—எ-று. (கசகூ)

என்றாங்கிசைத்தவிறைவனருணுடி
நன்றாலிதென்றுநனிமகிழ்ந்துமுன்னணித்தாச்
சென்றார்தொழுதார்திசைமுகன்மாலாதியராய்
நின்றாரெவருநெறியாலிவையுரைப்பார்.

(இ-ள்.) தளரேலென்றருளிச்செய்த சிவபெருமானுடைய அருளை நினைத்து இதுநன்றென்று மிகவுமகிழ்ந்து சமீபத்தில் முன்னாகச்சென்றுதொழுது பிரமன் விஷ்ணு முதலியவர்களாக நின்றவர்கள் முறையுடனிதனை யுரைக்கின்றனர்.—எ-று.

சிந்தையயர்வுற்றுச்சிறுவிதிதன்வேள்விதனி
லெந்தைநினையன்றியிருந்தேங்கள்கண்முன்னும்
வந்துகருணைபுரிந்தனையான்மைந்தர்க்குத்
தந்தையலதுபிறிதொருவர்சார்புண்டோ.

(இ-ள்.) எந்தையே மனமயங்கித் தக்கனுடைய யாகத்தில் நின்னையன்றியிருந்த எங்கள் கண்ணெதிரிலும் எழுந்தருளிக் கருணைசெய்தனை மைந்தருக்குத் தந்தையையன்றி வேறொரு சார்புமுளதோ.—எ-று. (சடுச)

அற்றமிலன்பில்லாவடியேங்கள்பாலடிகள்
செற்றமதுபுரியிற்செய்கைமுதலானசெயல்
பற்றிமுறைசெய்பதமுளதோவஞ்சலென
மற்றோர்புகலுளதோமன்னுயிருந்தானுளதோ.

(இ-ள்.) அடிகளே! அழிவற்ற வன்பில்லாத அடியோங்களிடத்துத் தேவரீர் கோபங்காட்டினாற் சிருட்டி முதலான தொழில்களை யாதாரமாகக்கொண்டு நடக்கும் பதங்கள் நிலைக்குமோ அஞ்சலென்றுகூற வேறோர் அடைக்கலத்தான முளதோ நிலைபெற்ற உயிர்களுமிருக்குமோ.—எ-று. (கடுஉ)

வேதத்திறங்கடந்தவேள்விப்பவியருந்தும்
பேதைச்சிறியேம்பெரும்பகலுந்தீவினையி
லேதப்படாமேயிமைப்பிலதுதொலைத்த
வாதிக்கெவன் கொலளிக்கின்றகைம்மாறே.

(இ-ள்.) வேதமுறையைக்கடந்து செய்தயாகத்தி லவியருந்தின அறிவிலிகளான சிறியேங்கள் நெடுங்காலந்தீவினையால் வருந்தாமல் இமைப்பொழுதி லப்பாவத்தினைத் தண்டித்துத்தொலைத்த ஆதியான நினக்கு என்னகைம்மாறு செய்யப்போகின்றேம்.—எ-று. (கடுஙு)

இங்குன்னடிபிழைத்தோமெல்லோமும்வீரனெனுஞ்
சிங்கந்தன்கையாற்சிதைபட்டவாறெல்லாம்
பங்கங்களன்றேபவித்திரமாய்மற்றெங்க
ளங்கங்கட்கெல்லாமணிந்தவணியன்றே.

(இ-ள்.) இவ்விடத்திலுனது திருவடியிற்பிழைத்த அனைவரும் வீரபத்திரனென்னுஞ் சிங்கத்தின் கையினாற் சிதையுற்றவாறனைத்தும் குற்றங்களன்றாம் பவித்திரமாய் எங்கள் அங்கங்களனைத்திற்கும் அணிந்த அணியன்றே.—எ-று. (கடுச)

கங்கைமுடித்ததுவுங்காய்கனலையேந்தியதும்
வெங்கண்மிகுவிடத்தைமேனாளருந்தியது
நங்கையுமைகாணநடித்ததுவுமுற்பகலு
மெங்கண்மிசைவைத்தவருளன்றோவெம்பெருமான்.

(இ-ள்.) எங்கள்மீதுவைத்த வருளாலன்றோ? எம்பெருமான் முன்னாளிலும் கங்கையைத் தரித்ததுவும் சுடுந்தீயைத் தாங்கியதும் கொடுந்தன்மை மிகுந்த விடத்தினை அருந்தியதும் நங்கையான உமாதேவியார் காணும்வண்ணம் நடனஞ் செய்ததுவும்.

ஐயபலவுண்டறிவிலேநின்றனக்குச்
செய்யவருபிழைகள்சிந்தைமிசைக்கொள்ளாம
லுய்யும்வகைபொறுத்தியுன்னடியேமென்றலுமே
தையலொருபங்கன்றணிந்தனமாலஃதென்றான்.

(இ-ள்.) ஐயனே! அறிவிலிகளான நாங்களுனக்குச்செய்துவந்த பிழைகள் பலவுள அவைகளைத் திருவுளத்தில் வையாமல் உனடியேமுய்யுமாறு பொறுத்தருள்க என்று வேண்டிக்கொண்டவுடனே உமையை யொருபுறத்திலுடைய சிவபிரான் அது தணிந்தோமென் றருளிச்செய்தனன்.—எ-று. (கடுசு)

ஏற்றுத்தலைவனியப்புந்திருவருளைப்
போற்றித்தொழுதுதம்புந்திதளிர்ப்பெய்திக்
கூற்றைத்தடிந்தகுரைகழற்றாண்முன்னிறைஞ்சித்
தேற்றத்துடன்பாடியாடிச்சிறந்தனரே

(இ-ள்.) இடபத்தினையுடைய தலைவன் அருளிச்செய்த திருவருளைத் துதித்துத் தொழுது உள்ளக்கிளர்ச்சியுற்று எமனைவதைத்த ஓசையினையுடைய கழலணிந்த திருவடிமுன் வணங்கித் தெளிவுடன் பாடியாடிச் சிறந்தார்கள்.—எ-று. (கருஎ)

அன்னபொழுதத்தயன்முதலாந்தேவர்கண்மே
லுன்னவரியவொருவனருட்கண்வைத்து
நுந்நும்மரசுநுமக்கேயளித்தனமான்
முன்னரெனவேமுறைபுரிதிரென்றுரைத்தான்.

(இ-ள்.) அப்பொழுது பிரமன்முதலிய தேவர்கள்மீது நினைத்தற்கரிய ஒப்பற்ற சிவபெருமான் அருட்கண்வைத்து உங்கள் உங்கள் அரசுகளையுங் கட்கேயளித்தேம் முன்போலவே அரசுசெலுத்துங்கள் என்றருளிச்செய்தனன்.—எ-று. (கருஅ)

மாலயனேயாதியராம்வானவர்களெல்லோரு
மாலமிடற்றண்ணலருளின்றிறம்போற்றி
யேலமகிழ்வெய்தவிறந்தெழுந்தோர்தங்குழுவிற்
சீலமிலாத்தன்மகனைக்காணான்றிசைமுகனே.

(இ-ள்.) மாலயன் முதலிய தேவரனைவரும் விடந்தங்கிய கண்டத்தினையுடைய அண்ணலின் கருணைத்திறத்தைத் துதித்து மிகவு மகிழ்வுற்றிருப்பப் பிரமன் செத்துப்பிழைத்தார் கூட்டத்துள் தன்மகனான ஒழுக்கமற்ற தக்கனைக்கண்டிலன்.

மாண்டதொருதக்கன்வயவீரன்றன்னருளா
லீண்டுசெனந்தன்னோடெழாவச்செயனோக்கிக்
காண்டகையநாதன்கழலிணைமுன்வீழ்ந்திறைஞ்சி
யாண்டுகமலத்தயனின்றுரைக்கின்றான்.

(இ-ள்.) வீரபத்திரனுடைய கருணைமொழியால் உயிர்த்தெழுந்த சனங்களுடன் இறந்தவனான தக்கன் எழாததன்மையைப்பார்த்துத் தரிசனயோக்கியமான இறைவனுடைய உபயதிருவடிகளின்எதிரே விழுந்து வணங்கி நின்று கமலாசனனான பிரமன் கூறுகின்றான்.—எ-று. (கசுo)

வேறு.

ஐயநின்வாய்மையெள்ளியழல்கெழுமகத்தையாற்றுங்
கையனதகந்தைநீங்கக்கடிதினிற்றண்டஞ்செய்து
மையுறுநிரயப்பேறுமாற்றினையவனுமெம்போ
லுய்யவேயருளுகென்னவுமாபதிகருணைசெய்தான்.

(இ-ள்.) ஐயனே! நினது உண்மைக்கட்டளையான வேதவசனங்களை மறுத்துத் தீவிளங்கும் யாகத்தைச் செய்த கீழ்மகனுடைய அகங்காரமொழிய விரைந்து தண்டித்து இருள்வடிவான நரகப்பேற்றை மாற்றினாய் அத்தக்கனும் எம்மைப்போலப் பிழைத்தெழவருள்புருதி என்று வேண்டிக்கொள்ள, அவ்வாறே உமாகாந்தனும் அருள் செய்தனன்.—எ-று. (கசுக)

இறையருள்கண்டுவீரனெல்லையங்கதனிலெந்தை
யறைகழல்கண்டுபோற்றியவற்றியல்வினவித்தாழாப்
பொறியுளதென்றுதக்கன்புன்றலைபுகுத்தவுன்னுக்
குறையுடலதனைப்பானுகம்பனைக்கொணர்தியென்றான்.

(இ-ள்.) இறைவனுடைய கருணைத்திறத்தினை வீரபத்திரன் பார்த்து உடனே எந்தையின் முழங்காநின்ற கழலணிந்த திருவடிகளைவணங்கி அச்செயலினை வினவி வணங்கிக் குறைபாத அடையாளமுளதென்று தக்கனுடைய புல்லிய தலை

யைப்புகுத்த நினைத்துத் தக்கனுடைய தலையிலாத குறையுடலிலே பானு கம்பனை க்கொண்டெடுத்துவரச் செய்தனன்.—எ-று.

தாழாப்பொறியுளதென்பதற்கு - கெடாத குறிப்பொன்றுளதென வென்றுங் கூறுப. (கசுஉ)

வித்தகவலிகொள்பூதன்வீரபத்திரன்றன்முன்ன
ருய்த்தலுமதன்மேல்வேள்விக்குண்டியாம்பசுவுள்வீந்த
மைத்தலைகண்டுசேர்த்தியெழுகென்றான்மறைகள்போற்று
மத்தனையிகழுநீரராவரிப்பரிசேயென்னு.

(இ-ள்.) அதிசயிக்கத்தக்க வன்மைவாய்ந்த பானுகம்பன் வீரபத்திரனெதிரே தக்கனுடலைக் கொண்டுவந்திடுதலும் பின்னர் யாகத்துக்குணவான பசுக்களுள் ஒரு செத்தயாட்டின் தலையைப்பார்த்து அதனைத்தக்கன் உடலிற்சேர்த்து வேதங்கள் உண்மையிற் றுதிக்குஞ் சிவபெருமானை இகழுபவர்கள் இவ்வாறே யாவரென்று அனை வருமறியும்வண்ணம் தக்கனே எழுக என்று கூறினன்.—எ-று. (கசுந)

என்றலுமுயிர்பெற்றங்கணெழுந்தவத்தக்கன்முன்ன
நின்றதோர்வீரற்கண்டுநெஞ்சுதுண்ணென்னவஞ்சித்
தன்றகவிழந்துபெற்றதலைகொடுவணங்கிநாணி
யன்றுசெய்நிலைமைநாடியரந்தையங்கடலுட்பட்டான்.

(இ-ள்.) எழுகவென்றவுடனே அவ்விடத்திலுயிர்பெற்றெழுந்த தக்கன் தன் னெதிரில் நின்ற வீரபத்திரனைப்பார்த்து நெஞ்சுதிடுக்கிட்டுப்பயந்து தனது தகவினை இழந்து புதிதாகப்பெற்ற தலையைக்கொண்டு வணங்கி நாணமுற்று அன்று செய்த நிலைமையை நினைத்துத் துக்கமாகிய கடலுளழுந்தினன்.—எ-று. (கசுச)

அல்லல்கூர்ந்திரங்குகின்றவசமுகனடல்வெள்ளேற்றின்
மெல்லியலோடுமுற்றவிமலனதுருவங்காணூஉ
வொல்லெனவெருக்கொண்டாற்றவுற்றனனச்சமற்றவ்
வெல்லையிலிறைவன்றக்காவஞ்சலையினிநீயென்றான்.

(இ-ள்.) துன்பம் பொருந்தி வருந்துகின்ற யாட்டுமுகத்தக்கன் வெற்றி வாய்ந்த இடபத்தில் உமாதேவியுடன் எதிரேவந்த மலரகிதனன சிவபெருமானுடைய திருவுருவினைக்கண்டு விரைந்து பயந்து மிகவுமச்சமடைந்தனன் அப்பொழுதிறை வன் தக்கனே இனி யஞ்சாதே என்றருளிச்செய்தனன்.—எ-று. (கசுரு)

அஞ்சலென்றருளலோடுமசமுகத்தக்கனெங்கோன்
செஞ்சரண்முன்னர்த்தாழ்ந்துதீயனேன்புரிந்ததீமை
நெஞ்சினுமளக்கொணாதெனைதொறுஞ்சுடுவதையா
வுஞ்சனனவற்றைநீக்கியுனதருள்புரிந்தபண்பால்.

(இ-ள்) அஞ்சற்கவென்று கூறியவுடனே யாட்டுமுகமுள்ள தக்கனென்பவன் எமது தலைவனுடைய செவ்விய திருவடியினெதிரே வணங்கித் தீயனேன்செய்த தீமை யை மனத்தினாலும் அளத்தற்குக்கூடாதது; எண்ணுந்தோறுஞ் சுடுவது ஐயனே அவற்றை நீக்கி நீயுனதருளைச்செய்த தன்மையால் உய்ந்தேன்.—எ-று. (கசுசு)

அடியனேன்பிழைத்ததேபோலார்செய்தாரெனினுமென்போற்
படுவதேசபதமன்றோபங்கயத்தயனைநல்கு
நெடியவன்றனையென்றன்னினின்பெருமாயையாலே
யடிகளையிகழ்ந்தேன்யாதுமறிகிலேன்சிறியேனென்றான்.

(இ-ள்.) அடியனேன் தவறியவண்ணம் எவர்தவறுபுரியினும் என்னைப்போல இங்ஙனஞ் சிட்சையடைத லுண்மையன்றோ நினது பெரியமாயையினுற் றலைதுந் தித் தாமரையிலயனை யளித்த நெடுமாலைத்துணையென்று கருதி நின்னையிகழ்ந்தேன் ஒன்றுமறியேன் சிறியேன் என்று கூறினன்.—எ-று. (கசுஎ)

காலையங்கதனிலம்மைகாளிதன்னோடுபோற்றிப்
பாலுறநின்றவீரபத்திரன்றனைவம்மென்றே
வேலவன்றேவியென்னவெரிந்புறநீவியன்னார்க்
கேலநல்வரங்களீந்தாளீசனுக்கன்புமிக்காள்.

(இ-ள்.) இவ்வாறு தக்கன் துதித்து நின்றவுடனே உமாதேவிபத்திரகாளி யுடன் வணங்கி யருகில்நின்ற வீரபத்திரனை வருகவென்றழைத்துக் குமரக்கடவுளை யும் அவன்றேவியையும்போல முதுகைத்தடவியவர்கட்குப் பொருந்துமாறு ஈசனுக் கன்புமிகுந்த உமாதேவி வரங்களளித்தனள்.—எ-று.

குமரக்கடவுளிடம் உமாதேவியாருக் கன்பதிகமாதலும் குமரக்கடவுளுக் குமா தேவியாரிடம் அன்பு அதிகமாகவிருத்தலும் உண்மையாதலின் உமாதேவியார் வீரபத் திரன் முதுகைக் குமரக்கடவுளின் முதுகைத் தடவுமாறு தடவினரென்று கூறினர். குமரக்கடவுள் எப்பொழுதும் உமாதேவியாரையே உள்ளத்தில் தியானித்துக்கொண் டிருப்பவரென்று இந்நூலின் உபதேசகாண்டத்து மகாகைலாயத்திற முரைத்தவிடத் துரைத்திருத்தலைக்காண்க. (கசுஅ)

மீத்தகுவிண்ணுளோரும்வேள்வியந்தேவுமாலும்
பூத்திகழ்கமலத்தோனும்புதல்வனுமுனிவர்தாமு
மேத்தினர்வணங்கிநிற்பவெம்மையாளுடையமுக்க
ணாத்தனங்கவரைநோக்கியிவைசிலவருளிச்செய்வான்.

(இள்-.) மிகவுமுயர்ந்த தேவர்களும் யாகத்தெய்வமும் மாலும் பூவில் விளங் கும் பிரமனும் அவன் மகனான தக்கனும் முனிவர்களும் ஏத்திவணங்கிநிற்ப எம்மை யாளாகவுடைய மூன்றுகண்களோகூடின ஆத்தனான சிவபிரான் அவர்களைப்பார்த்து ச்சிலவருளிச்செய்தனன்.—எ-று. (கசுகூ)

வம்மினோபிரமனாதிவானவர்மகஞ்செய்போழ்தி
னம்மைநீரிகழ்ந்தியாருநவைபெறக்கிடந்ததெல்லா
மும்மையில்விதியாந்தண்டமுமக்கிதுபுரிந்தவாறு
மிம்மையின்முறையேநாணுற்றிரங்கலீரிதனுக்கென்றான்.

(இ-ள்.) வாரீர் பிரமன் முதலிய தேவர்களே! யாகஞ்செய்யுங்காலத்து நம்மை யிகழ்ந்து நீவிரனைவரும் துன்புறக்கிடந்தது அனைத்தும் முன்னுள்ள விதியேயாம்; உங்களுக்கிந்தத் தண்டனையைச் செய்ததுவும் இம்மையின் முறையாம். ஆதலின் இத னுக்காக வெட்கமுற்று வருந்தாதீர்கள் என்றருளிச் செய்தனன்.—எ-று. (கஎ0)

வேறு.

இனைத்தருள்புரிதலுமெண்ணலாரையு
நினைத்தருள்புரிதருநிமலன்றாடொழாச்
சினத்தொடுமகத்தைமுன்சிதைத்துளோனையு
மனத்தகுமன்பினுல்வணங்கிப்போற்றவே.

(இ-ள்.) இவையனைத்தையும் அருள்புரிதலும் பகைவர்களையுங்கருதி யருள் செய்கின்ற நிமலனான சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிக் கோபத்துடன் முன் யாகத்தினையழித்தவீரபத்திரனையும் மனதினில் தகுதிவாய்ந்த அன்பினால் வண ங்கித் துதித்தலும்.—எ-று. (கஎக)

வீரரில்வீரனும்விசயமேதகு
நாரியுமயல்வரநந்திமுன்செலப்
பாரிடமெங்கணும்பரவமாதொடே
போரடல்விடையினன்பொருக்கென்றேகினன்.

(இ-ள்.) சிவபெருமான் வீரருள்வீரனை வீரபத்திரனும் வெற்றிமிக்க பத்திரகாளியும் அருகில் வராநிற்ப நந்திதேவன் முன்செல்லப் பூதங்களெவ்விடத்திலுஞ்சூழ உமாதேவியுடன் போருக்குரிய வலியமைந்த இடபத்தில் விரைந்து சென்றனன். ()

கயிலையிலேகியேகவுரியோடரன்
வியனகர்மன்றிடைவீற்றிருந்துழி
வயமிகுவீரற்குவானமேக்குற
வியனுமோர்பதமளித்திருத்தியாங்கென.

(இ-ள்.) கவுரியுடன் சிவபெருமான் கைலாயத்துக்குச்சென்று பெரிய ஆலயத்திலுள்ள சபையிலெழுந்தருளி இருந்தவுடனே வெற்றிவாய்ந்த வீரபத்திரனுக்கு வானின் மேலாகப் பொருந்திய ஒரு பதவியளித்து அவ்விடத்திலிருத்தியென்று அருளிச்செய்தன் உடனே.—எ-று. (கஎங)

இருவர்தந்தாளையுமிறைஞ்சியன்னவர்
தருவிடைபெற்றனனுகித்தக்கன
துரியதோர்மகமடுமுலப்பில்பூதர்க
டிரைகடலாமெனத்திசைதொறீண்டவே.

(இ-ள்.) வீரபத்திரன், உமாதேவியுஞ் சிவபிரானுமாகிய இருவரின்றிருவடிகளை வணங்கி அவ்விருவருமளித்த விடைபெற்றவனுகித் தக்கனுடையயாகசங்காரத்துக்காகவுண்டான அளவற்ற பூதர்கள் அலையினையுடைய கடலைப்போலத் திசைகள்தோறு நெருங்கிவராநிற்ப.—எ-று. (கஎச)

தந்தைமுன்விடுத்ததோர்தடம்பொற்றேரயல்
வந்ததங்கதன்மிசைவயங்கொளாடலான்
பைந்தொடியொடும்புகாப்பானுகம்பன
துந்திடவரனருளுலகிற்போயினன்.

(இ-ள்.) பிதாவான சிவபெருமானல் முன்னரனுப்பப்பட்ட இரதம் எதிரே வராநிற்க, அதனில் வெற்றிவாய்ந்த போரினையுடைய வீரபத்திரன் பத்திரகாளியுடன் ஏறிப்பானுகம்பன் சாரதித்தொழில்செய்யச் சிவபெருமான் தனக்களித்த உலகினிற் சென்றான்.—எ-று. (கஎரு)

போயினனதனிடைப்பொருவின்றொல்பெருங்
கோயிலினெய்தியேகுழுக்கொள்சாரதர்
மேயினர்சூழ்தரவீரபத்திர
னேயதோர்துணைவியோடினிதுமேவினன்.

(இ-ள்.) வீரபத்திரன் தனக்கிறைவனளித்த புவனத்துட்சென்று ஒப்பிலாத பழய பெரிய கோவிலையடைந்து கூட்டமாகப் பொருந்திய பூதர்கள் சூழ்ந்து காவல்புரிய உடன்பொருந்திய துணைவியான பத்திரகாளியுடன் சுகமாக வாழ்ந்தனன். ()

யாகசங்காரப் படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் க,ருகூஉ.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அடிமுடிதேடு படலம்.

இங்கிதுநிற்கமுன்னிறைவன்வந்துழி
யங்குறநின்றதோரமரர்தங்களுட்
செங்கமலத்துறைதேவன்றக்கனுந்
துங்கமின்மைந்தனைநோக்கிச்சொல்லுவான்.

(இ-ள்.) இஃதிங்ஙனமாகச் சிவபெருமான்முன் எழுந்தருளியவுடனே அங்குநின்ற தேவர்களுக்குட் செந்தாமரை மலரிலிருக்கும் பிரமன் இழிவடைந்த தக்கனாகிய மகனைப் பார்த்துரைக்கின்றனன்.—எ-று. (க)

யாதுமுன்னுணர்ந்தனையாதுசெய்தனை
யாதவண்கருதினையாரிற்பெற்றனை
யாதுபின்செய்தனையாதுபட்டனை
யாதிவண்பெற்றனையாதுன்னெண்ணமே.

(இ-ள்) தக்கனே! எதனை முன்னறிந்தனை எதனைச்செய்தனை எதனையங்குக் கருதினாய் எவரிடத்திவைகளைப் பெற்றனை பின் யாதுசெய்தனை இப்பொழுது எதனை யடைந்தனை இங்கெதனை யடைந்தனை உன் எண்ணம் என்னை?—எ-று. (உ)

பொன்றுதலில்லதோர்புலவர்யாவர்க்கும்
வன்றிறன்முனிவரர்தமக்கும்வையமேற்
றுன்றியவந்தணர்தொகைக்குந்துண்ணெனக்
கொன்றுயிருண்பதோர்கூற்றமாயினாய்.

(இ-ள்.) மரணமற்ற தேவரனைவர்க்கும் மிக்க வன்மையினையுடைய முனிவர்க்கும் உலகினிற் பொருந்திய மறையவர் தொகுதிக்கும் விரைவாகக்கொன்று உயிருண்ணுமொரு கூற்றமாகவாயினாய்.—எ-று. (ங)

சீரையுந்தொலைத்தனைசிறந்ததக்கனும்
பேரையுந்தொலைத்தனைபேதையாகிநின்
னேரையுந்தொலைத்தனையேவல்போற்றுந
ராரையுந்தொலைத்தனையலக்கணெய்தினாய்.

(இ-ள்.) சீரையுந்தொலைத்தனை, சிறந்த தக்கனென்னும் பேரையுந்தொலைத்தனை அறிவிலியாகி நின்னறிவினையுந் தொலைத்தனை ஊழியஞ்செய்வாரெவரையுந் தொலைத்தனை, துன்பமுற்றனை.—எ-று. (ச)

நின்னுணர்வல்லதுநிகரின்மேலவர்
சொன்னதுமுணர்ந்திலைதொல்லையூழினா
லின்னிலையாயினையிறையையெள்ளினாய்
முன்னவனுயர்நிலைமுழுதுந்தேர்ந்தநீ.

(இ-ள்.) நினது சுயவறிவையன்றி ஒப்பற்ற பெரியோர் உரைத்ததையும் உணர்ந்தாயில்லை, பழயவூழ்வினையா லிந்நிலையாயினாய் முதல்வனான சிவபெருமானதுயர்ந்த நிலைமை முழுதுமுணர்ந்த நீ அவ்விறைவினை இகழ்ந்தனை.—எ-று. (ரு)

இயற்படுவளம்பெறீ இயீசன்மேன்மைக
ளயர்த்தனை நின்னளவன்றுமையறு
னுயிர்த்தொகைதமக்கெலாமுள்ளதாதலான்
மயக்கினையடைந்தனை மற்றென்செய்திநீ

(இ-ள்.) ஒழுங்கமைந்த செல்வத்தினைப்பெற்று ஈசனுடைய மேன்மைகளை அயர்த்தனை இங்ஙனம் அயர்த்தல் நின்னளவன்று, மயக்கமானது சீவராசிகளனைத்துக்கும் உள்ளது. ஆதலின் நீயுமம்மயக்கத்தினை யடைந்தனை நீ யென்செய்தி.--எ-று. (சு)

முற்றுணர்வெய்தியேமுழுதளித்திடப்
பெற்றவெங்கண்ணினும்பெரிதுமாமயக்
குற்றனமுற்பகலது கண்டின்றுபோ
னெற்றியங்கண்ணினனருளினீக்கினன்.

(இ-ள்.) முற்றுணர்வையடைந்து முழுதும் படைக்குந் திறம்பெற்ற எம்மிடத்தும் மிகவுமயக்குற்றது. அதனைக் கண்டின்றுபோல் நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமான் கருணையால் நீக்கியருளினான்.—எ-று. (எ)

ஆதலினருளுண்டயமலநாயகன்
பாதமதருச்சனை பரிவிற்செய்குதி
பேதுறுமிப்பவப்பெற்றிநீக்கியே
போதமொடின்னருள்புரிவனென்றலும்.

(இ-ள்.) அதனால் அருளினையுடைய அமலநாயகனது திருவடிமலர்களை அன்புடன் அருச்சனை செய்யக்கடவை; அங்ஙனஞ்செய்தியேல் துன்புறுகின்ற இந்தப் பாவத்தன்மையை நீக்கி ஞானத்துடன் இனிய அருளினையுஞ் செய்வன் என்று கூறுதலும்.—எ-று. (அ)

மைதிகழ்முகத்தினன்மற்றதற்கிசைந்
துய்திறமுணர்த்தினையுங்கள்கண்ணுமுன்
னெய்தியமையலுமெம்பிரானருள்
செய்ததுமியம்புதெளிதற்கென்னவே.

(இ-ள்) யாடுபோல விளங்கு முகத்தினையுடைய தக்கன் பிரமன் கூறியவச்செயற்கு இசைந்து உய்யுந்திறமுணர்த்தினை,உங்களிடமும் முன்னரெய்திய மயக்கமும் எம்பிரான் அருள்செய்ததும் நான் தெளிவடைதற்காக உரைப்பாயாக என்று தக்கனுரைத்தலும்.—எ-று. (கூ)

பொன்னிருஞ்சததளப்போதின்மீமிசை
மன்னியதிசைமுகன் மதலைமாமுக
முன்னுறநோக்கியேமுந்துங்கூறின
மின்னமுமக்கதையியம்புவோமெனா.

(இ-ள்.) பொன்மயமான நூறிதழ்த்தாமரைப்பூவின்மீது வீற்றிருந்த பிரமன் தனது மகனுடைய சிறந்த முகத்தினைப்பார்த்து அதனை முன்னருரைத்தாம் இன்னமு மந்தகதையை யுரைக்கின்றேமென்று.—எ-று. (கο)

நாலுள திசைமுகநாதன்றொல்லைநாண்
மாலொடுபெற்பகன்மலைவுசெய்துநா
மேலதோர்பொருளென விமலன்வந்தருள்
கோலமதுன்னியேதொழுதுகூறுவான்.

(இ-ள்.) நான்கு திசைக்கு நான்கு முகங்களையுடைய பிரமன் முன்னாளில் மாலுடன் பலதினம் போர்புரிந்து நாமே மேலான பொருளென்றுகூற விமலன் வந்தருளிய கோலத்தினை நினைத்து வணங்கி யுரைக்கின்றான்.—எ-று. (கக)

வேறு.

பத்தினொடு நூறெதிர்படுத்தயுகநான்மை
யொத்தமுடிவெல்லையெனதோர்பகலதாகு
மத்தகுபகற்பொழுதுமந்தியொடுசெல்ல
நத்தமுறுநான்றுயிலினண்ணுவனவ்வேலை.

(இ-ள்.) பத்துடனே நூற்றினை யெதிரேற்பித்துப் பெருக்குவதாலுண்டாகும் ஆயிரஞ் சதுர்யுகங்கள் ஆனால் அது எனது ஒரு பகற்பொழுதாம். அத்தகைய பகற்காலமும் அந்திக் காலத்துடன் செல்ல இரவுண்டாகும் அப்பொழுது நான் நித்திரை செய்வேன்.—எ-று. (கஉ)

வாளுமொடுங்கும்பரிதிமாமதியொடுங்கு
நாளுமொடுங்குந்தமதுநாளுமொடுங்குற்றே
கோளுமொடுங்குங்குலிசபாணிமுதல்வானோர்
கேளுமொடுங்கும்புவனிகேடுபடுமன்றே:

(இ-ள்.) அப்பொழுது ஒளியுள்ள அக்கினியும் சூரியனுஞ் சிறந்த சந்திரனுமொடுங்கும் தமது வாணாளுமொடுங்கி நாட்களுமொடுங்கும். வச்சிரபாணியான இந்திரன் முதலிய நண்பர்களும் ஒடுக்குவார்கள் உலகமுமழியும்.—எ-று. (கங)

மண்ணுலகிலாருயிர்வறந்திறுதியாகும்
விண்ணுறுபதங்களில்வியன்முனிவர்யாருந்
துண்ணெனவெருக்கொடுதுளங்கினர்கள்சூழா
வெண்ணுசனலோகமிசையெய்துவர்களந்நாள்.

(இ-ள்.) மண்ணுலகிலுள்ள அரிய உயிர்கள் வறந்தழியும் அப்பொழுது வானுலகிலுள்ள பதவிகளிலிருந்த பெரியமுனிவர் யாரும் விரைந்து பயந்து ஆலோசித்து எண்ணப்பட்ட சனலோகத்தினை யந்நாளிலடைவார்கள்.—எ-று. (கச)

வாரிதிகணாற்றிறமும்வல்லையிலெழுந்தே
யாரியைதவஞ்செய்பதியாதியனவல்லாப்
பாரினையருந்தியொருபாகமதன்மேலு
மோரெழுபிலத்துலகமுண்டிலவுமன்றே.

(இ-ள்.) நாற்புறங்களிலும் கடல் விரைவாகத்தோன்றி உமாதேவி தவஞ்செய்த காஞ்சிபுர முதலிய அல்லாத பூமியையுண்டு, ஒருபாகமுள்ள வெள்ளம் இவைகளை யழித்ததன்றியும் ஒரு ஏழானபாதாள உலகினையும் உண்டிலவும்.—எ-று.

உண்ணுதல்-மூடிக்கொள்ளுதல். (கரு)

ஒண்டிகிரிமால்வரையுடுத்தநிலமுற்றுங்
குண்டுறுபிலத்தினொடுகூடும்வகைவீட்டி
யண்டருலகுண்டுநிமிர்ந்தப்புறனுமாகி
மண்டுபுனலேயுலகைமாற்றியிடுமன்றே.

(இ-ள்.) ஒள்ளியசக்கரவாளகிரி சூழ்ந்த உலகமுழுதும் ஆழமான பிலத்துடன் ஒன்றுமாறழித்துத் தேவருலகினையுமுண்டு மேற்சென்று அப்புறத்தினுமாகி நெருங்கிய சலப்பிரவாகமே உலகினையழித்துவிடும்.—எ-று (கசு)

ஆனதொருவேலையிலொராலிலையின் மீதே
மேனிலவுதண்மதிமிலைந்தவன் மலர்த்தா
டானகமுறுத்தியொர் தனிக்குழவியேபோற்
கானுறுதுழாய்மவுலிகண்டுயிலுமாதோ.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் ஒரு ஆலிலையின்மீது வானில் விளங்குந் தண்ணிய மதியை யணிந்த சிவபெருமானுடைய மலரடிகளை அகத்திலமைத்து ஒரு தனிக்குழந்தையைப்போல மணம்பொருந்திய துளவமணிந்த முடியினையுடைய மாயோன் நித்திரை செய்வான்.—எ-று. (கஎ)

கண்டுயிலுகின்றபடிகண்டுசனலோகத்
தண்டுமுனிவோர்புகழவாங்ஙனம்விழித்தே
பண்டைநிலனேடவதுபாதலமதாகக்
கொண்டன் மணிமேனியனொர்கோலவுருவானான்.

(இ-ள்.) மாயோன் நித்திரைசெய்கின்ற தன்மையைப் பார்த்துச் சனலோகத்தையடைந்து நின்ற முனிவர்கள் அவனைத் துதிக்க உடனே கண்விழித்துப் பழய பூமியைத்தேட வது பாதலத்ததாக அழகிய மேகவண்ணனான மாயோன் ஒரு பன்றியுருவங்கொண்டனன்.—எ-று. (கஅ

கோலமெனுமோருருவுகொண்டுபிலமேகி
ஞாலமெவணுற்றதெனநாடியதுதன்னை
வாலியவெயிற்றினிடைவல்லைகொடுமீண்டு
மூலமெனவேநிறுவிமொய்ம்பினொடுபோனான்.

(இ-ள்.) பன்றியெனுமொருருவினைத்தாங்கிப் பாதாளஞ்சென்று பூமியெங்கிருக்கின்றதெனத்தேடி யதனை வெள்ளிய கொம்பினில் விரைந்துகொண்டு திரும்பி முன்னரிற்போலத் தாபித்து வன்மையொடு சென்றான்.—எ-று. (கக)

அற்பொழுதுநாலுகமொராயிரமுமேக
வெற்பொழுதுதோன்றியதியான்றுயிலுணர்ந்தே
கற்பனையியற்றியகருத்தினினைபோழ்தி
னிற்புழியடைந்தனநெடும்புணரியெல்லாம்.

(இ-ள்.) இராப்பொழுதான ஆயிரஞ்சதுர்யுகமுஞ்செல்லப் பகற்பொழுதுண்டாகியது. உடனே யான் துயிலுணர்ந்து படைப்புத்தொழில் செய்யக்கருத்தில் நினைத்தேன் நினைத்தலும் நெடிய கடல்களனைத்தும் அவைகள் நிற்கும் இடங்களை யடைந்தன.

அருத்திகெழுபாற்கடலராவணையின்மீதே
திருத்திகழுமார்புடையசெம்மல்புவிதன்னை
யிருத்தினமெயிற்றினிலெடுத்தெனநினைத்தே
கருத்தினிலகந்தைகொடுகண்டுயிலலுற்றான்.

(இ-ள்.) இஃதிங்ஙனமாக விருப்பம் விளங்கும் பாற்கடலில் அரவசயனத்தின்மீது திருமகள்விலாசம் பொருந்திய மார்பினையுடைய திருமால் நாம் பூமியைத் தந்தத்தாலெடுத்து நிலைநாட்டினோமென உள்ளத்திலகங்காரத்துடன் நித்திரை செய்தனன்.—எ-று. (உக)

ஆனபொழுதத்தினிலளப்பிலிமையோரைத்
தானவரைமானுடவர் தம்மொடுவிலங்கை
யேனையவுயிர்த்தொகையையாவையுமளித்தே
வானகமும்வையகமுமல்கும்வகைவைத்தே.

(இ-ள்.) அப்பொழுது அளவற்ற தேவர்களையும் அசுரர்களையும் மானிடர்களையும் விலங்குகளையும் மற்றைய வுயிர்க்கூட்டங்களையும் இன்னமுள்ள அனைத்தினையும்படைத்துச் சுவர்க்கத்தினையும் பூமியையும் விருத்தியாகுமாறு செய்து.—எ-று.

மன்னியனுமிந்திரனை வானரசிலுய்த்தே
யன்னவனொழிந்ததிசையாளர்களையெல்லாந்
தங்கிலைநிறுத்தியது தன்னைநெடிதுன்னி
யென்னையலதோர்கடவுளின்றெனவெழுந்தேன்.

(இ-ள்.) அரசுமுறை பொருந்திய இந்திரனை வானுலகினையாளுமாறு வைத்து அவனன்றியுள்ள திசைகாவலரை யெல்லாம் அவரவர் நிலையிலிருக்கச்செய்து இங்ஙனஞ்செய்ததனை மிகவு மாலோசித்து என்னையன்றிக் கடவுள் வேறொருவனு மிலனென வெழுந்தனன்.—எ-று. (உ௩)

துஞ்சனுறுகாலைதனிற்றுஞ்சுமெழும்வேலை
யெஞ்சலினுயிர்த்தொகுதியாவுமெழும்யானே
தஞ்சமெனையன்றியொருதாதையிலையார்க்கும்
விஞ்சுபொருள்யானெனவியந்தெனைநடந்தே.

(இ ள்.) யான் தூங்கும்பொழுது உயிர்வருக்கங்கள் அழியும் யான் தூங்கியெழுந்தவுடனே குறைவற்ற வுயிர்க்கூட்டமனைத்தும் உண்டாகும். இதனால் யானே உலகிற்குத் தஞ்சம். என்னையின்றி யொருதாதை யெவனுமிலன்; எவரினும் உயர்ந்த பொருள்யானே என என்னை வியந்து நடந்து.—எ-று (உ௪)

மல்லனுறுமேனுலகுமாதிரமுமேனைத்
தொல்லுலகுமேருவொடுசுற்றுகடலேழு
மொல்லெனவிரைத்தெழுமுயிர்த்தொகையுமல்லா
வெல்லையில்பொருட்டிறனும்யானெடிதுநோக்கி.

(இ-ள்.) வளந்தங்கிய மேலுலகையும் திக்குகளையும் மற்றுள்ள பழய வுலகங்களையும் மேருவுடன் உலகினைச் சூழ்ந்த எழுகடல்களையும் விரைந்திரைந்தெழுந்த உயிர்க்கூட்டங்களையும் இவையல்லாத அளவற்ற பொருட்கூட்டங்களையும் யான் மிகவும் பார்த்து.—எ-று. (உரு)

இப்பொருளனைத்துமுனம்யான்பயந்தவென்று
லொப்பிலையெனக்கெனவுளத்திடைமதித்தே
னப்பொழுதிலாரமுதவாழியிடையாழிக்
கைப்புயலகந்தையொடுகண்டுயிலல்கண்டேன்.

(இ-ள்.) இப்பொருள்களனைத்தும் முன்னம் யானுண்டாக்கியதாலால் எனக்கொப்பானவர்கள் எவருமிலரென்று மனதினின் மதித்தேன். அப்பொழுது அரிய பாற்கடலிற் சக்கரமேந்திய கையினையுடைய மேகவண்ணனான திருமால் நித்திரை செய்வதனைப் பார்த்தேன்.எ—று (உ௬)

அன்றவனைமாலெனவறிந்தனனறிந்துஞ்
சென்றனனகந்தையொடுசெய்யதிருவைகு
மற்றன்மணிமார்பமிசைவண்கைகொடுதாக்கி
யின்றுயிலுணர்ந்திடுதியென்றனுமெழுந்தான்.

(இ-ள்.) அந்நாளிலவனை மாலெனவறிந்தேன் அறிந்தும் அகங்காரத்துடன் அங்குச்சென்று செவ்விய திருமகள் வாசம்புரியும் மங்களகரமான மணிமார்பின்மீது எனது வண்மையமைந்த கையைக்கொண்டடித்து இனிய துயிலினின்றும் உணர்தி என்றவுடனே எழுந்தனன்.—எ—று. (உஎ)

ஏற்றெழுமுராரிதனையாரையுரையென்றே
சாற்றுதலும்யாமுனதுதாதையறியாய்கொ
ணுற்றலைகொள்மைந்தவெனநன்றெனநகைத்துத்
தேற்றிடினுநீதுயிறெளிந்திலைகொலென்றேன்.

(இ-ள்.) அடியேற்றெழுந்த முராரியான திருமாலை யார் நீ சொல்லென்று கூறுதலும் நான்கு தலைகளையுடைய மைந்தனே நாமுனது தந்தையென வறியாயோ வென்றனன் உடனே நான் நன்றென்று நகைத்து, நான் உணர்த்தியும் நீ துயிலினின்றும் உணர்ந்தாயில்லையோ என்றேன்—.எ-று. (உ௮)

தந்தையெனவந்தவர்கடாமுதவுகின்ற
மைந்தர்கடமக்குரைசெய்வாசகமதென்ன
முந்துறவெமக்கிதுமொழிந்ததியல்பன்று
லெந்தையெனவேநினைதியாம்பிரமமேகாண்.

(இ-ள்.) தகப்பனென வந்தவர்கள் தாம்பெற்ற மைந்தர்க்குரைக்கும் வசனத் தினையொப்ப முன்னுக வமைத்துக் கூறியதுமுறையன்று என்னை நினது தந்தையென்றே கருதக்கடவை நாமே பிரமம் என்பதனையறிதி,—எ-று. (உக)

உந்தியிலிருந்துவருமுண்மையுணராமே
மைந்தனெனநீயெமைமனத்தினினைகுற்று
யிந்தனமுதித்திடுமெரிக்கடவுளுக்குத்
தந்தையதுவோவிதுசழக்குரையதன்றோ.

(இ-ள்.) உனது நாபியின்வழி நாம் வெளிப்பட்ட வுண்மை யின்னதென்றுணராமல் நின்மகனென்றெம்மை மனதில் நினைத்தனை; கட்டையினில் நெருப்புப்பிறக்கும்; ஆனலத்தீக்கடவுளுக்கு விறகு தந்தையாகுமோ இதுசழக்கான மொழியன்றோ?

நின்னுடையதாதையெனநீயுனைவியந்தா
யன்னதைவிடுக்குதியருந்தவவலத்தான்
முன்னமொருதூணிடைமுளைத்தனையவற்று
ளுன்னிலதுவேமிகவுயர்ந்தபொருளாமோ.

(இ-ள்.) உன்னுடைய தந்தையென வென்னைச் சுட்டியுரைத்து நீ யுன்னை வியந்தனை அதனை விட்டுவிடு; அரியதவத்தின் வன்மையால் முன்னமொரு தூணிடத்துப் பிறந்தனை அவைகளால் ஆராயுமிடத்து அது மிகவுயர்ந்த பொருளாகுமோ?

தூய்யமகனும்பிருகுசொற்றசபதத்தா
லையிருபிறப்பினையடிக்கடியெடுத்தாய்
மெய்யவையனைத்தையும்விதித்தனம்விதித்தெங்
கையதுசிவந்துளதுகண்டிடுதியென்றேன்.

(இ-ள்.) தூய்மைவாய்ந்த எமது மகனுன பிருகு இட்ட சாபத்தாற் பத்துப் பிறப்பினை அடிக்கடியடைந்தனை அவ்வுடம்பனைத்தும் படைத்தேம்; படைத்து எமது கையானது சிவப்பேறி யுள்ளதனைப்பார் என்று கூறினேன். —எ-று. (௩உ)

வேறு.

அன்றவர்க்கெதிர்புகுந்தனையசொற்புகறலுங்
குன்றெடுத்திடுகரக்கொண்டல்போன்மேனியா
னன்றெனச்சிரமசைஇநகைசெயாவெகுளியாற்
பொன்றளிர்க்கரதலம்புடைபுடைத்துரைசெய்வான்.

(இ-ள்.) அன்றம்மாலுக்கெதிரேபுகுந்து அந்தச்சொற்களைக் கூறுதலும் மலையைக்குடையாக வெடுக்குங் கையினையுடைய கரியமேகம்போலு மேனியினையுடையவன் நன்றென்று தலையசைத்து நகைசெய்து கோபத்தாற் பொன்றளிர்போன்ற கரதலத்தைப் பலமுறை புடைத்துரைக்கின்றான்.—எ-று. (ருரு)

நச்சராப்பூண்டிடுநம்பனுன்சென்னியி
னுச்சியந்தலையினையுகிரினாற்களைதலு
மச்சமாய்வீழ்ந்தனையதுபடைத்தின்னமும்
வைச்சிலாய்நன்றுநீமற்றெமைத்தவுருதே.

(இ-ள்.) விடவரவினையணிந்த சிரசினையுடைய நம்பன் உனது தலையில் நடுத்தலையை நகத்தினாற் கிள்ளியகற்றுதலும் அச்சுற்று விழுந்தனை அதனைப்படைத்து இன்னமும் வைத்துக்கொண்டாயில்லை நன்று நீ எம்மைப்படைப்பது —எ-று. (ருச)

நேயமாய்முன்னரேநின்னையீன்றுதவிய
தாயும்யாமன்றியுந்தந்தையும்யாமுனக்
காயதோர்கடவுள்யாமடிகள்யாமைந்தநம்
மாயையாலின்றிவண்மதிமயக்குறுதிகாண்.

(இ-ள்.) விருப்பத்துடன் முன்னாளில் நின்னைப்பெற்றளித்ததாயும் யாமே அன்றியுந் தந்தையும் யாமே உனக்கு ஆனகடவுளும்யாமே குருவும் நாமே மகனே நமது மாயையா லுண்மையை யுணராது இங்குப் புத்திமயக்கமுற்றனை.—எ-று. (ருரு)

பொன்னலாதாங்கொலோபூணெலாமிறைபுரி
மன்னலாதாங்கொலோமாநிலமாநிலந்
தன்னலாதாங்கொலோதகுவதோர்வளமதி
லென்னலாதாங்கொலோவெச்சராசரமுமே.

(இ-ள்.) பொன்னையின்றிப் பூணுண்டாகுமோ அரசுபுரியு மரசனையின்றி உலகஞ் சிறப்புறுமோ உலகமில்லாதுண்டாகுமோ தகுவதான வளங்கள்; அதனில் என்னையன்றி யுண்டாகுமோ எந்தச் சராசரங்களும்.—எ-று. (ருசு)

எண்ணுவிப்போனுநானெண்ணுகின்றோனுநான்
கண்ணுதற்பொருளுநான்காண்டகும்புலனுநா
னண்ணுதற்கரியனுநாரணக்கடவுணான்
விண்ணகத்தலைவனுன்வேதமும்பொருளுநான்.

(இ-ள்.) எண்ணுவிப்பவனும் யான் எண்ணுகின்றவனும் யான் நெற்றிக்கண்ணினையுடைய உருத்திரனான பொருளு நான் காணத்தக்க புலனும் நான் அடைதற்கரியவனு நான் நாரணனான கடவுளு நான் வானுலகத்தின் தலைவனு நான் வேதமு மதன்பொருளு நான்.—எ-று. (ருஎ)

ஆதிநானுருவுநானருவுநானிருளுநான்
சோதிநானத்தனான்றாயனான்மாயனான்
யாதுநான்பூதநான்யாருநான்சங்கரன்
பாதிநானவனுநான்பரமெனும்பொருளுநான்.

(இ-ள்.) ஆதியுநான் உருவுநான் அருவுநான் இருளுநான் ஒளியுநான் அத்தனு நான் தாயனும்நான் மாயனும்நான் யாதும்நான் பூதமுநான் யாருநான் சங்கரனுடைய பாதியாயுள்ளவனுநான் அச்சங்கரனுநான் பரமெனும் பொருளுநான்.—எ-று.

என்றுபற்பலவுரைத்திடுதலும்யானெதிர்
சென்றுருத்திருவருஞ்செருவினைப்புரிதுமேல்

வென்றியுற்றவரரோமேலையோரெழுகென
வன்றிறற்போர்செய்வான்வந்தனன்மாலுமே.

(இ-ள்.) என்று பற்பல கூறுதலும் யானெதிரே சென்று கோபித்து இருவரும் சண்டையைச்செய்தால் வெற்றிபெற்றவரே மேலானவர் எழுக என்று கூற வலிய திறலுடன் போர்புரிதற்கு மாலும் வந்தனன்.—எ-று. (௩௯)

ஏற்றெழுந்தோர்சிலையேந்தியேவாங்கிமால்
கூற்றிரும்படைமுதற்கொடியவெம்படையெலா
மாற்றருந்தன்மையால்வல்லையுய்த்திடுதல்கண்
டாற்றின்ன்குசைகளாலனையவெம்படைதொடா.

(இ-ள்) எதிர்த்தெழுந்து ஒரு வில்லினை வளைத்து மாயோன் எமனுடைய பெரிய அம்பு முதலிய கொடிய வெவ்விய அம்புகளை நீக்குதற்கரிய தன்மையாக விரைந்து விடுதலைப்பார்த்து யான் தருப்பையா லந்த வெவ்வியபடைகளையுண்டாக்கி விடுத்துத் தடுத்தனன்.—எ-று. (௪0)

வேறு.

ஆங்கவையழிவுறவரியுந்தன்படை
வாங்கினன்விடுத்தலும்வருதல்கண்டியான்
பாங்கரினின்றவென்படையையங்கையிற்
ருங்கினின்றுய்த்தனன்றடுத்துமீண்டதே.

(இ-ள்.) அவைகளழியா நிற்ப வரியும் தனது பெயரினையுடைய அம்பினை எடுத்து விடுதலும் அது வருதலையான் பார்த்து அருகினின்ற எனது பெயராலான அம்பினை அழகிய கையிலேந்தி விடுத்தனன் அதுசென்று நாராயணாத்திரத்தினைத்தடுத்துத்திரும்பியது—எ-று. (௪௧)

அப்படைமீண்டபினாதியாகிய
வொப்பருஞ்சிவனளித்துளதுபுங்கவ
ரெம்பெரும்படைக்குமோரிறைவனாயது
மைப்புயன்மேனிமால்வழுத்திவாங்கினன்.

(இ-ள்.) அந்நாராயணாத்திரந் திரும்பியவுடனே ஆதியாகிய வொப்பற்ற சிவனளித்துள்ளதும் தேவர்களினெந்தப் பெரிய படைக்கும் ஒரு தலைவனாகவுள்ளதுமான படையினைக் கரிய மேகம்போன்ற மேனியினையுடைய மாயோன் வழுத்தி யெடுத்தனன்.—எ-று. (௪௨)

மஞ்சனமுதலியமறுவில்பூசனை
நெஞ்சுறுபுலன்களினிரப்பியோச்சலு
மெஞ்சலிலமரர்களிரியமேற்செலு
நஞ்சினுங்கொடிதெனநடந்தவேலையே.

(இ-ள்.) திருமஞ்சன முதலிய குற்றமற்ற பூசையை மனதிற்பொருந்திய புலன்களாற் செய்து முடித்து விடுதலும் கெடாத தேவர்கள் விலகியோட மேற்சென்ற நஞ்சினுங் கொடியதென வந்தகாலத்தில்.—எ-று. (௪௩)

முன்னமேயெனக்குமம்முக்கணையக
னன்னதோர்படையளித்தருளினைதை
யுன்னியேவழிபடஇயொல்லையுய்த்தனன்
வன்னிமேல்வன்னிசெல்வண்மையென்னவே.

(இ-ள்.) முன்னமே யெனக்கும் அந்தத் திரிலோசனனென கர்த்தா அந்தப்பாசுபதாஸ்திரத்தையளித்தனன் நானும் அதனை எடுத்து மனதினால் நினைத்து வணங்கித் தீயின்மீது செல்லுந் தீயினைப்போல விரைவாக விடுத்தனன்.—எ-று. (சச)

ஒருதிறத்திருவருமுனூற்றியேவிய
வரனருள்பெரும்படை தம்மிலாடல்செய்
தெரிகனற்கற்றைகள்யாண்டுஞ்சிந்தியே
திரிதலுற்றுலகெலாஞ்செற்றுலாயவே.

(இ-ள்.) ஒரு தன்மையினதாக இருவரும் பூசித்தனுப்பிய சிவனளித்த பெரும்படைகள் ஒன்றோடொன்று பொருது எரியுந் தீக்கற்றையை யெவ்விடத்திலுஞ் சிந்தித் திரிந்துலகனைத்தையும் அழித்துலவின.—எ-று. (சடு)

அப்படைதிரிதலுமவைகள்வீசிய
துப்புறழ்கொழுங்கனறொல்லைவானினு
மிப்புவிமருங்கினுமீண்டவானவர்
வெப்புறவிரிந்தனர்விதிர்ப்புற்றேங்குவார்.

(இ-ள்.) அவ்வாயுதங்கள் இவ்வண்ணம் திரிதலும் அவைகள் சிதறிய பவளம் போலுங் கொழுவிய கனல் பழய வானத்தினும் இம்மண்ணுலகத்தினு நெருங்க அது கண்டு நடுக்கமுற்றேங்கித் தேவர்கள் ஓடுவோராயினார்.—எ-று. (சசு)

வீண்டனரொருசிலர்வெதும்பிவிம்மியே
மாண்டனரொருசிலர்வந்தநஞ்சமுண்
டாண்டவர்கழலிணையடைதும்யாமெனக்
காண்டருகயிலையின்கண்ணுற்றார்சிலர்.

(இ-ள்.) சிலர் விலகியோடினார்கள் சிலர் வெதும்பி விம்மியிறந்தார்கள் முன்னம் வந்த நஞ்சினையுண்டாண்டவருடைய காலிணையை யடைவோம் யாமென்று தரிசன யோக்கியமான ஸ்ரீகைலாயத்துக்குச் சிலர் சென்றார்கள்.—எ-று. (சஎ)

காரெலாங்கரிந்தனககனந்தன்னொடு
பாரெலாமெரிந்தனபௌவப்பாற்படு
நீரெலாம்வறந்தனநிரந்தபல்லுயிர்ப்
பேரெலாந்தொலைந்தனபின்னும்போர்செய்தேம்.

(இ-ள்.) மேகங்களெல்லாங்கரிந்தன. வானினுடன் மண்ணெல்லாமெரிந்தன. கடலினிடத்துப்பொருந்தின நீரனைத்தும்வற்றின வரிசையாகவிருந்த பலவுயிர்களின் பேரெலாந்தொலைந்தன. அங்ஙனமாயும் பின்னும் போர்புரிந்தேம்.—எ-று. ()

இந்தவாறமர்புரிந்திட்டகாலையிற்
றந்தையாரருளினாற்றமியன்மாமுகம்
வந்துநாரதனெனுமறுவின்மாமுனி
சிந்தைசெய்தெமக்கிவைசெப்பன்மேயினான்.

(இ-ள்.) இவ்வண்ணஞ் சண்டைசெய்தகாலத்திற் தந்தையான சிவபெருமான் அருளினாற் தமியேனுடைய சிறந்தமுகத்தெதிரே வந்து குற்றமற்றசிறந்தநாரதனென்னுமுனிவன் ஆலோசனைசெய்தெமக்கிதனைக் கூறுவானாயினான்.—எ-று. ()

நீர்முதனுமெனநினைந்துகூறியே
போர்முதலேசிலபுரிகின்றீர்கொலா

மோர்முதலன்றியேயில்லையுங்களி
லார்முதலிருவருமன்னபண்பினீர்.

(இ-ள்) நீங்கள் நாம் பிரமமென நினைந்துரைத்துச் சிலகாலமாகப்போரினை யே செய்கின்றீர்கள்போலும் ஒரு பிரமத்தினை யன்றியில்லை. உங்களுக்குள்ளவர் அந்த முதற்கடவுளான பரப்பிரமம்? நீங்களிரண்டு பேர்களும் நாம்பிரமம் நாம்பிரமமென்று கூறுகின்றீர்கள்.—எ-று. (௫0)

பொருசமர்கருதியேபுகுந்தபோழ்தினு
முரியதோர்படையலதுலகந்தீப்பதோர்
வெருவரும்பெரும்படைவிடுத்திரப்படை
யருளியகடவுளையயர்த்திர்போலும்மால்.

(இ-ள்.) பொராநின்ற போரைக்கருதி இங்குவந்தீராயினும் தகுந்தபடைக் கலங்களைக்கொண்டன்றி உலகினை யழிப்பதற்குரிய அஞ்சத்தக்க பெரும்படைகளை விடுத்தீர்கள் அப்படைகளை யுங்களுக்களித்த கடவுளை மறந்தனிர்போலும்.எ—று.

கடவுளைமறந்திரேற்கருதிநீர்பெறு
மடுபடைநாமமுமயர்த்திரோவது
நெடிதுநும்மனத்தினினினைந்துதேற்றுமின்
விடுமினியமரெனவிளம்பிமேலுமே.

(இ-ள்.) முதற்கடவுளை மறந்தீராயின் பலகாலநினைத்து நீங்கள்பெற்ற இக் கொல்லும்படையின் பெயர்களையும் மறந்தீர்களோ அதனை மிகவும் உங்கள் மனதில் நினைந்து தெளியுங்கள் இனிச்சண்டையை விடுங்களென்று கூறிப்பின்னரும்.—எ-று.

வாதியாவின்னுநீர்மலைதிரேயெனி
லாதியாயருவுருவானதோர்பொருள்
சோதியாய்நடுவுறத்தோன்றுங்காண்டிரென்
றோதியாலெமக்கிவையுணர்த்திப்போயினான்.

(இ-ள்.) வாதித்து இன்னு நீங்கள் போர்புரிவீராயின் ஆதியாய் அருவுரு வான பரம்பொருள் சோதியாக நடுவேதோன்றுமென்று ஞானவுணர்ச்சியா லெமக் கிவைகளை யுரைத்து நாரதமுனிவன் போயினான்.—எ-று. (௫௩)

போயினனுரைத்தசொற்புந்திகொண்டிலந்
தீயெனவுருத்திகல்செருக்குநீங்கல
மாயிரமாண்டுகாறமரியற்றின
மாயிரும்புவனமுமுயிருமாயவே.

(இ-ள்.) சென்ற நாரதன் கூறியசொல்லினை மனதுட்கொண்டிலேம் தீயை ப்போலச் சீறிப் போர்செய்கின்ற அகங்காரமொழிந்திலம் மிகப்பெரிய புவனமும் உயி ர்களுமழியுவண்ணம் ஆயிரவருடமளவும் போர்புரிந்தனம்.—எ று. (௫௪)

இங்கிவையாவையுமிறுதியூழியி
னங்கியினடம்புரியண்ணனோக்கியே
தங்களிலிருவருஞ்சமர்செய்கின்றனர்
புங்கவர்தாமெனும்புகழைவெஃகினர்.

(இ-ள்.) இவையனைத்தினையும் மகாப்பிரளயகாலத்தில் அக்கினியினின்று நடனஞ்செய்கின்ற இறைவன்பார்த்துத் தலைமைக்கடவுள் தாமேயென இருவரும் கீர் த்தியை விரும்பினவர்களாகி ஒருவரோடொருவர் போர்செய்கின்றனர்.—எ-று. ()

அறிவறைபோயினரகந்தையுற்றன
ருறுவதொன்றுணர்கிலருண்மையோர்கிலர்
சிறுவரிலிருவருஞ்சீற்றப்போர்செயா
விறுதிசெய்கின்றனருலகம்யாவையும்.

(இ-ள்.) அறிவு ஒட்டைபோயினர் அகங்காரமெய்தினார்கள் உண்டாவ தின்னதென்றறிகின்றிலர் உண்மையை நினைந்து பார்த்திலர் சிறியோரை யொப்ப விருவருங் கோபங்கொண்டு சண்டை யிட்டுலகமனைத்தினையும் அழிக்கின்றனர். ()

ஈங்கிவர்செயலினையின்னுங்காண்டுமேற்
றீங்குறுமுலகுயிர்சிதைந்துவீடுமா
லோங்கியநந்நிலையுணர்த்தினாயிடைத்
தாங்கரும்வெஞ்சமர்தணிந்துநிற்பரால்.

(இ-ள்) இங்கு இவர்செயலினை இன்னமும் பார்ப்போமாயின் கெடுதியுண்டாகி உலகமு முயிருஞ்சிதைந்தழியும் நமதுயர்ந்த தானுவென்னு நிலையைவிளக்கினால் இவர்கள் தாங்குதற்கரிய பெரும்போரினை நிறுத்தி நிற்பார்கள்.—எ-று. (ருஎ)

தம்மையேபொருளெனச்சாற்றுகின்றதும்
வெம்மைசேர்வெகுளியும்வெறுத்துவீட்டியே
செம்மைசேர்மனத்தராய்த்திகழ்வர்தாமெனு
வெம்மையாளுடையவனெண்ணினனரோ.

(இ-ள்.) தம்மையே பரம்பொருளென்று கூறுவதும் கொடுமையமைந்த கோபமும் வெறுத்தொழித்துச் செம்மைவாய்ந்தமனத்தினராக விளங்குவார்களென்று எம்மையாளுடைய சிவபெருமான் திருவுளத்தெண்ணினன்.—எ-று. (ருஅ)

வேறு

ஆன்றதோரளவைதன்னிலடைந்ததுமாகந்தன்னில்
வான்றிகழ்பானுட்கங்குன்மதிபகறழுவுநென்னன்
ஞான்றதுதனில்யாங்கண்டுநடுங்குறநடுவணுகத்
தோன்றினன்கனற்குன்றேபோற்சொல்லரும்பரத்தின்சோதி.

(இ-ள்.) வெகுகால மிவ்வாறுசெல்லாநின்றபொழுது மாசிமாதத்தில் அமாவாசையின் தலைநாளான மகாசிவராத்திரியில் நாங்கள் தரிசித்து நடுங்கும்வண்ணம் உரைத்தற்கரிய பரத்தின்சோதியான சிவபெருமான் எங்களிருவரின்நடுவில் அக்கினி மயமான மலைபோலத்தோன்றினன்.—எ-று.

இதனை, மாகக்ருஷ்ண சதுர்தச்யாம்மத்யே ராத்ரமதுல்யபாः தஸ்மின்ஜோதிஷ்லில் யேததஸ்த்ரம் ஸைவந்ததாத்மஜ. என்னும் வடமொழியானும் முணர்க. (ருகூ)

தோற்றியசெய்யசோதிதொல்லமருழந்தியாங்கண்
மாற்றரும்படைகளாகவழங்கியவிரண்டும்வௌவி
யாற்றருந்தன்மைத்தாகவுணுருறுதகன்றுபோகிச்
சீற்றமுஞ்சமருநீங்கிச்சேணுறநோக்கிநின்றேம்.

(இ-ள்.) அங்ஙனமுண்டாகிய செவ்விய சோதிலிங்கமானது நாங்கள் பெரும் போர்புரிந்து ஒருவருக்கொருவர் நீக்குதற்கரிதாக விடுத்த இருவரின் ஆயுதங்களையுந் தன்னுக்குள் இழுத்துக்கொண்டு தாளுசற்குகூடாத தன்மையினதாகி நிற்க, நாங்கள் உடனே கோபமும் போரும்விடுத்து அதனையடையாது விலகிச்சென்று வானத்திலந்தச் சோதியையே பார்த்துக்கொண்டு நின்றேம்.—எ-று. (கூ0)

நிற்றலும்யாங்கள்கேட்பநெடுவிசும்பிடையோர்வார்த்தை
தெற்றெனவெழுந்ததம்மாசிறுவிர்காணுமதுவன்மை
பற்றலர்புரமூன்றட்டபரமனேகாண்பான்சோதி
மற்றிதனடியுமீறும்வரன்முறைதேருமென்றே.

(இ-ள்.) நின்றவுடனே நாங்கள் கேட்கும் வண்ணம் நீண்டவானத்திலொரு மொழி சிறுவர்களே உங்கள் வன்மையைப் பகைவர் முப்புரங்களையழித்த பரமனே காணுமாறு நீங்கள் இச்சோதிமலையின் அடியையும் முடியையும் முறையே உணருங்கள் என்று விரைவாக உண்டாகியது.—எ-று. (௬௧

கேட்டனமதனைநெஞ்சிற்கிளர்ந்தெழுசீற்றம்யாவும்
வீட்டினமெனினும்பின்னும்விட்டிலமகந்தைதன்னைக்
காட்டியவெமதுமுன்னோன்காண்பனும்வலியையென்ன
வீட்டுடன்விசும்பிற்சொற்றார்யார்கொலென்றெண்ணிப்பின்னும்.

(இ-ள்) நாங்கள் அதனைக்கேட்டு மனதின்மிகுதியாக வுண்டாகும் கோபமனைத்தினையும் விடுத்தோமாயினும் பின்னரும் அகங்காரத்தினை விட்டிலேம் நீங்கள் காட்ட எமது முன்னோன் நுமது வன்மையைக்காண்பானென்று பெருமையுடன் வானிலுரைத்தவர் யாவரென்று எண்ணிப்பின்னரும்.—எ-று. (௬௨)

ஏனுறவெதிர்ந்தியாஞ்செயிகலினுக்கிடையூறாக
நீணிலமதனைக்கீண்டுநிமிர்ந்துவான்புகுந்துநீடு
மாணுறுசோதிதானுமறைமுனியுரைத்தவாறு
காணியவந்ததெம்மிற்கடந்தவான்பொருள்கொலென்றேம்,

(இ-ள்.) வன்மைபொருந்த எதிர்த்து நாங்கள் செய்கின்ற போருக்கிடையூறாக நீண்டபூமியைப்பிளந்து தோன்றி ஆகாயத்தையடைந்துயர்ந்து நிற்கின்ற மாட்சிமைவாய்ந்த சோதியானது வேதமுனியான நாரதன் கூறியவண்ணம் காணவந்தது; அங்ஙனம் வந்தவது எம்மினும் முயர்ந்த சிறந்தபொருளோ? என்றேம்.—எ-று. (௬௩)

தீதறுகாலின்வந்தசெந்தழலன்றலீது
யாதுமொன்றறிதறேற்றாமிருவருமிதனையின்னே
யாதியுமுடியுநாடியன்னதுகாண்டுமென்றே
மாதவன்றானும்யானும்வஞ்சினமிசைத்துமன்னோ.

(இ-ள்.) குற்றமற்ற வாயுவிலுண்டாகுஞ் செவ்வியதீயன்றிது. இதனைக்குறித்து யாதொன்று முணர்ந்திலேம் ஆதலினிருவருமிதனை இன்றே அடிமுடியுநாடி அதனைக்காண்போமென்று மாதவனும் யானுஞ்சபதங்கூறி.—எ-று. (௬௪)

நீடுவானுருவிச்சென்றுநிலனுறவிடந்துபுக்கு
மோடிநாமொரல்லைதன்னிலுற்றிதற்கடியுமீறு
நாடினலவற்றிலொன்றுநலம்பெறமுன்னங்கண்டோர்
பீடுயர்தலைவரீதேதுணிவெனப்பேசிநின்றேம்.

(இ-ள்.) நீண்டவானினை யூடுருவிச்சென்றும் பூமியிற்பொருந்தத்தோண்டியும் ஓடிச்சென்று நாமிருவரும்விரைவாக இதனடியுமுடியுந் தேடினல் அவற்றிலொன்றினை நன்மைபொருந்த முன்னர்க்கண்டவர்கள் பெருமையாலுயர்ந்த தலைவர் இதுவே துணிபென்று கூறிநின்றேம்.—எ-று. (௬௫)

முடியினைக்காண்பனென்றேமொழிந்தனன்றமியனேனை
யடியினைக்காணபனென்றேயரியுமங்கிசையாநின்று
னடைபயின்மழலையோவாநாகிளஞ்சிறுவர்வானிற்
சுடர்பலிகதிரைக்கையாற்றீண்டுவான்றுணியுமாபோல்,

(இ-ள்.) நடத்தலைப்பழகுகின்ற மழலைச்சொல்நீங்காத மிகவுமிளைய சிறுவர்கள் வானிலுள்ள ஒளிமிக்க சுடரினைக்கையாற்றெடுவோன் துணிந்தாற்போல யான் முடியினைக்காண்பேனென்று கூறினேன் மற்றை அடியினைக்காண்கின்றேனென்று அரியுங்கூறினான்.—எ-று. (சுசு)

எரியுறழ்தறுகட்செங்கணிமிலுடையெருத்தம்யாரு
முருகெழுதுமுனிக்கூர்வாயொள்ளெயிறிலங்குதந்தங்
கருவரையனையமேனிக்கடுநடைக்குறுந்தாள்வெள்ளைக்
குரமொடுகண்ணனன்றோர்கோலமாங்கோலங்கொண்டான்.

(இ-ள்.) பின்னர்க்கண்ணன் தீயனைய அஞ்சாமையினையுடைய செவ்விய கண்ணுமுன்முடிச்சுயர்ந்த இமில் எனப்பெயர்வாய்ந்த எருத்தமும் எவருமஞ்சத்தக்க வொலியினையுடைய கூரியவாயி னுள்ளியபற்களுடன் விளங்கும் தந்தமும் கரிய மலைபோன்ற வுருவமும் கடுகிய நடையுங் குறுகிய காலும் வெள்ளிய குரமுமுடைய வொருபன்றியின் வடிவினைக்கொண்டனன்.—எ-று. (சுஎ)

ஒருபதுநூறதாகும்யோசனையுகப்பினோடு
பருமையுமாகுமந்தப்பகட்டுருவாகிமுன்னந்
தரணியையிடந்துகீழ்போய்த்தடவியேதுருவிச்சென்று
நிரைபடுபுவனம்யாவுநீந்தியேபோயினானல்.

(இ-ள்.) நாராயணன், ஆயிரம்யோசனை யுயர்த்துடனாயிரம்யோசனை பருமனுமாகு மழகிய பன்றியுருவமாகி முதலிற் பூமியைப்பிளந்து கீழ்ச்சென்று தடவித்தேடி வரிசையாகவுள்ள புவனமனைத்தினையுங் கடந்துசென்றனன்.—எ-று. (சுஅ)

பதாலநாடியன்னான்படர்தலும்யானுமாங்கோ
ரோதிமவடிவமாகியொல்லையிலெழுந்துமீப்போய்
மேதகுவிசும்பின்மேலாம்வியன்புவனங்களூடிப்
போதலுஞ்சோதிமுன்னம்போலமேல்போயிற்றம்மா.

(இ-ள்.) பாதாளத்திற் தேடிக்கொண்டு நாராயணன்செல்ல யானும் ஒரு அன்னப்பறவையி னுருவமாகி விரைந்தெழுந்து மேலேசென்று பெருமைவாய்ந்த விசும்பின் மேலாகவுள்ள பெரிய பெரிய புவனங்களில் தேடி மேற்செல்லுதலும் அச்சோதி என் முன் மேற்சென்றது.—எ-று. (சுகூ)

முன்னமோரேனமாகிமுரணொடுபுவனிகீண்டு
வன்னியாயெழுந்தசோதிவந்ததோர்மூலங்காண்பா
னுன்னியெபோனமாலோனூக்கியேசெல்லச்செல்லப்
பன்னெடுங்காலஞ்சென்றபாதமுங்காணான்மாதோ.

(இ-ள்.) முன்னர்ப் பன்றியுருவங்கொண்டு வன்மையுடன் பூமியைப்பிளந்து தீயாகவெழுந்த சோதியுண்டான மூலத்தினைக்காணுதற்கு நினைத்துச்சென்ற மாயோன் முயற்சித்துப்போகப்போகப் பல நெடுங்காலங்களாயின அங்ஙனமாகியும் பாதமுங்கண்டிலன்.—எ-று. (எ0)

நொந்தனவெயிறுமேனிநுடங்கினநோன்மையாவுஞ்
சிந்தினபுனலுண்வேட்கைசேர்ந்தனவுயிர்ப்பினோடும்
வந்தனதுயரம்போனவஞ்சினமகந்தைவீந்த
முந்தையினுணர்வுமால்பான்முழுதொருங்குற்றதன்றே.

(இ-ள்.) பற்கள் நொந்தன. உடன்மெலிந்தது. வன்மையனைத்துஞ்சிதறின. நீரருந்தும் விருப்பஞ்சேர்ந்தது. ஊர்த்துவசுவாசத்துடன் துக்கமுண்டாகியது வஞ்

சினமு மகந்தையுமொழிந்தன. பண்டையவறிவனைத்தும் மாயோனிடத்து முற்றிலு மொருங்கேவந்தது.—எ-று. (எக)

தொல்லையிலுணர்ச்சிதோன்றத்துண்ணெனத்தெளிந்தகண்ண
னல்லுறழ்புயலின்றோற்றத்தண்ணலங்களிற்றின்யாக்கை
மெல்லவேதரிக்கலாற்றான்வீட்டவுங்கில்லான்மீண்டு
செல்லவுமூற்றமில்லான்சிவனடிசிந்தைசெய்தான்.

(இ-ள்.) பழயவறிவுண்டாக விரைவாகத்தெளிந்த கண்ணன் இருளனைய மேகம்போன்ற பெரிய பன்றியுருவினைத் தரிக்கவுஞ் சகியாது மெல்லென ஒழித் தற்குங்கூடாமல் திரும்பிவருதற்குஞ் சத்தியின்றி நின்று சிவபெருமான் திருவடி களைச் சிந்தித்தனன்.—எ-று. (எஉ)

வேறு.

என்றுமுணர்வரியவெம்பெருமானுன்றிருத்தா
ளன்றியரணில்லையவற்றையருச்சித்திடவும்
பொன்றியதென்வன்மைபொறுத்திகுறையடியே
னென்றுமுணரேனென்றுளநொந்துபோற்றினனே.

(இ-ள்.) எந்நாளும் உணர்தற்கரிய எம்பெருமானே உன் திருவடியையன்றி ஆதாரம்வேறுகிடையாது. அத்திருவடிகளை யருச்சித்திடவும் வன்மையற்றவனாகவிரு க்கின்றேன் என்குற்றத்தினைப் பொறுப்பாயாக அடியேன் ஒன்றும் உணரேன் என்று உள்ளநொந்து துதித்தனன்.—எ-று. (எங)

ஆனபொழுதிலமலன்றிருவருளாற்
றேனுலவுதண்டார்த்திருமான்மிடலுடைத்தா
யேனவடிவோடெழுந்துபுவிப்பாலெய்தி
வானுறுசோதிக்கணித்தாவந்துவணங்கினின்றான்.

(இ-ள்.) அப்பொழுது மலரகிதனான சிவபெருமான் திருவருளினால் வண்டுல வுந் தண்ணளவமாலையணிந்த மாயோன் வன்மைபொருந்திப் பன்றியுருவுடனெழுந்து உலகினிடத்தையடைந்து வானமளாவிய சோதியினருகாகவந்து வணங்கினான். ()

வேறு.

நின்றானொருபாலெனடுமாலதுநிற்கயான்முன்
பின்றுவகையாற்பெருஞ்சூளிவைபேசிவானிற்
சென்றாயிரமாண்டுதிரிந்துதிரிந்துநாடிக்
குன்றாதசோதிக்கொழுந்தின்றலைகூடலேன்யான்

(இ-ள்.) இங்ஙனந்துதிபுரிந்து நெடுமாலொருபுறத்தில் நிற்க யான்முன்னர் அத்திருமாலுக்கிளைக்காமற் பெரியவிந்தச் சபதமுரைத்து வானிற்சென்று ஆயிரவரு டந்திரிந்து திரிந்து தேடியுங்குறையாத வச்சோதிக்கொழுந்தின் தலையை யானடைந் திலேன்.—எ-று. (எசு)

மீளும்படியுநினையேன்வினையேனுமீளிற்
சூளும்பழுதாமதுவன்றித்துணிந்துமுன்ன
மூளுஞ்சுடரின்முதல்கண்டரிமூர்த்தியாவா
னாளென்பரென்னையழிவெய்துமிவ்வாற்றன்மன்னோ.

(இ-ள்.) திரும்பிப்போகவு மெண்ணேன் வினையினையுடையேன் திரும்பி வந்தாற் சபதமும் பழுதாகும் அதுவல்லாமலும் துணிந்து அரியிச்சோதியினடியைக்

கண்டு தலைமைப்பொருளாவான் அங்ஙனமானால் என்னை யவனடியனென்றுகூறுவார்கள் இந்த வண்மையுமழிந்தொழியும்.—எ-று. (௭௬)

எந்நாள்வரைசெல்லினுஞ்செல்லுகவின்னும்விண்போய்ப்
பொன்னார்முடிகண்டபினல்லதுபோகலேனென்
றுன்னுவதுகாணியபோதலுமுள்ளம்வெம்பி
மன்னுவுயிருமுலைந்தாற்றலுமாண்டதன்றே.

(இ-ள்.) எத்தனைகாலமாயினு மாகுக இன்னமேற்சென்று அழகியமுடியைக் கண்டல்லது யான்போகேன் என்று நினைத்து அச்சோதியைக் காணச்செல்லுதலும் உடனே உள்ளம்வெதும்பி உயிருமுலைந்தெனது வன்மையுமழிந்தது.—எ-று.

இனி, எந்நாள்வரை செல்லினுஞ் செல்லுக என்பதற்கு, எந்நாள் - எவ்வளவு காலம். வரை-இம்மலை, செல்லினும்-மேற்போனாலும்-செல்லுக, இன்னம் மேற்செல்லுக. இன்னும்-பின்னும், விண்போய்-மேலாகச்சென்று என்றுங்கூறுப. (௭௭)

கண்ணுஞ்சுழன்றசிறைநொந்தனகாலுமோய்ந்த
வெண்ணுந்திரிந்ததுபோதிலெழுந்தசோதி
யுண்ணின்றசித்தரெனவேபலரொல்லைமேவி
விண்ணின்றலைப்பாயிதுவொன்றுவிளம்பலுற்றார்.

(இ-ள்.) கண்களுஞ் சுழன்றன இறகுகளும் நொந்தன நினைவுமாறுபட்டது அதுசமயத்தில் அச்சோதியினுள்நின்ற சித்தரைப்போல அநேகர்விரைந்து வெளிப்பட்டு வானினுச்சியிற்சென்று இதனையுரைத்தனர்.—எ-று. (௭௮)

வானார்பரஞ்சோதியினீற்றினைவாரிதன்னுண்
மீனார்தரவேதிரிகின்றதொர்வெள்ளையன்னந்
தானாமுணருஞ்சிறைபோகித்தளர்ந்துவன்மை
போனாலுநாடவருகின்றதுபோலுமம்மா.

(இ-ள்.) வானத்திற்பொருந்திய பரஞ்சோதியின் முடியினை நீரினிலுள்ள மீனினையடையத்தேடித் திரியுமொரு வெள்ளையன்னமானது தானேதேடி அறியும்? இறகுபோகித்தளர்ந்து வன்மைபோனாலும் தேடவருகின்றதுபோலும்—எ-று. (௭௯)

அன்னந்தனக்கீதறிவின்மையதாகுமல்லாற்
பின்னொன்றுளதோதுணிவுற்றதொர்பெற்றிநோக்கி
னின்னுஞ்சிறிதுபொழுதேகினிறக்குமிந்த
மன்னுஞ்சுடரைச்சிவனென்றுமனங்கொளாதோ.

(இ-ள்.) அன்னபறவைக்கிது அறியாமையாகுமேயன்றி வேறொன்றுளதோ இது துணிந்துள்ள ஒருதன்மையைக்கண்டால் இன்னஞ்சிறிதுகால மிங்ஙனேசெல்லினிதுசாகும் இது இங்கு நிலைபெற்ற இச்சுடரினைச் சிவபெருமானென்று மனதினிற் கருதாதோ.—எ-று. (௮0)

மாலென்பவனுநிலங்கீண்டனன்வல்லையேகி
மூலந்தெரிவானுணராமன்முரணுநீங்கிச்
சீலங்குறுகச்சிவனேசரணென்றுபைய
ஞாலந்தனில்வந்தனல்வெற்பினைநண்ணிநின்றான்.

(இ-ள்.) மாலென்பவனும் பூமியைப்பிளந்து விரைந்துசென்று அடியைக் காணுதற்குத் தேடிக்காணாமல் வன்மையுமிழந்து நல்லறிவுண்டாகச் சிவனே அடைக்கலமென மெல்லெனப்பூமிக்குவந்து அக்கினிமலையையடைந்து நின்றனன். (௮௧)

முந்துற்றிதனையருள்செய்திடுமூர்த்திதானே
சிந்தைக்குண்மாசுதனைத்தீர்த்தருள்செய்யினுய்யு
மிந்தப்பறவையெனயானுமிதனைநாடிப்
புந்திக்குண்மையலொழிந்தேயவர்ப்போற்றிசெய்தேன்.

(இ-ள்) முற்பட்டிதனை யருள்செய்தகடவுளே இந்தப்பறவையின் மனமாசினை நீக்கினுலிது பிழைக்கும். என்றவர்கள் கூறுநிற்ப யானும் அவர்கள் உரைத்த இதனையாராய்ந்து மனதினுள்ளிருந்த மயக்கமொழிந்து அவர்களைத்துதித்தேன். ()

ஈசன்னருளாலிவைகூறினரேகலோடு
மாசின்வழியாமகந்தைத்திறனுதியாய
பாசங்களைவீட்டியரன்புகழ்பன்னியேத்தி
நேசங்கொடுபூசனைசெய்யநினைந்துமீண்டேன்.

(இ-ள்) சிவபெருமானுடைய அருளினுலிவைகளையுரைத்தவர்கள் சென்றவுடனே அஞ்ஞானத்தின் வழித்தாயுண்டாகும்அகங்காரத்தன்மை முதலியவைகளான பாசங்களையொழித்து அரன்கீர்த்தியை உரைத்துத் துதித்து விருப்பங்கொண்டு பூசைசெய்ய நினைந்து திரும்பினேன்.—எ-று. (அரு)

வேறு.

வந்துகண்ணன்றனையணுகிவான்பொருள்யாமென்றிகலி
முந்துறுவெஞ்சமரியற்றிமுனிமொழியுமுணர்ந்திலமாற்
றந்தைவரவறியாமற்றுண்முடியுந்தேடனுற்றே
மந்தமுறும்வேலைதனிலவனருளாலவற்புகழ்ந்தேம்.

(இ-ள்) திரும்பிவந்து திருமாலையடைந்து அவனைப்பார்த்து நாமே சிறந்த பரம்பொருளென்று முற்பட்ட பெரும்போர்புரிந்து இடையில்வந்து கூறியநாரதவிருடியின் மொழியையும் அறிந்தேமல்லேம்; நமதுபிதாவின் வருகையையறியாமல் அடியுமுடியுந்தேடினேம் முடிவுண்டான இக்காலத்தி லவனருளாலவனைப் புகழ்ந்தேம். ()

கீண்டுநிலனிருவிசும்பிற்கிளர்ந்துமடிமுடியுணரே
மீண்டுமவன்றன்னருளான்மிடல்பெற்றுவந்தனமா
லீண்டுசிவன்றனைவழிபட்டிருவருமன்னவன்றோற்றங்
காண்டுமெனயானுரைப்பக்கண்ணனுமங்கதற்கிசைந்தான்.

(இ-ள்) நாம் பூமியைக் கீறிச்சென்றும் வானிற் பறந்துசென்றும் அடியுங்கண்டிலேம் முடியுங்கண்டிலேம். பின்னரும் அவன் கருணையினுல் வன்மை பெற்றுத் திரும்பிவந்தோம் இனி நாமிருவரும் சிவனை வழிபட்டு அவன் தோற்றத்தினைத் தரிசிப்போமாக என்று யான் கூறினவுடனே கண்ணனு மதற்கிசைந்தனன்.—எ-று. (௯௫)

இருவருமச்சிவனுருவையியன்முறையாற்றாபித்து
விரைமலர்மஞ்சனஞ்சாந்தம்விளக்கழலாதியவமைத்துப்
பொருவருபூசனைபுரிந்துபோற்றிசெய்துவணங்குதலு
மெரிகெழுசோதிக்கணித்தாவெந்தையவண்வந்தனனே.

(இ-ள்) அச்சிவபெருமான் திருவுருவினை இருவரும் இலக்கணமுறைப்படி தாபித்து மணம்பொருந்திய சிறந்த புஷ்பம் திருமஞ்சனம் சந்தனம் தீபம் தூபம் முதலியவைகளை உண்டாக்கி ஒப்பற்ற பூசையைச்செய்து துதித்து வணங்குதலும் அக்கினியாக விளங்குமச்சோதியினருகாக எம்பெருமானெழுந்தருளினன்.—எ-று, (அசு)

மைக்களமுமான்மழுவும்வரதமுடனபயமுறு
மெய்க்கரமுநாற்புயமும்விளங்குபணிக்கொடும்பூணுஞ்

செக்கருறுமதிச்சடையுஞ்சேயிழையோர்பாகமுமாய்
முக்கணிறையாங்காணமுன்னின்றேயருள்புரிந்தான்.

(இ-ள்.) கரியகண்டமும் மானும்மழுவும் வரதாபயங்களாகப் பொருந்திய கரதலங்களையுடைய நான்கு தோள்களும் விளங்கு பிரகாசிக்கின்ற அரவகுண்டலமும், செவ்வானிலொளிரும் இளமதியணிந்த சடையும் உமாதேவியொரு பாகமுமாகித் திரிலோசனனான சிவபெருமான் நாங்கள் தரிசிக்கும்வண்ணம் எங்கள்முன்னின்று அருள்புரிந்தனன்.—எ-று. (அஎ)

அவ்விடையாமிருவர்களுமமலன்றனடிவணங்கிச்
செவ்விதினின்றவனருளிற்றிளைத்திதனைச்செப்பினமான்
மெய்வகையாமன்பின்றிவிளங்காநின்னியன்மறையு
மிவ்வகையென்றுணராதேயாங்காணற்கெளிவருமோ.

(இ-ள்.) அப்பொழுது நாங்களிருவரும் அமலனான சிவபெருமானடிகளை வணங்கி நேரேநின்று அவனருளின் முழுகி உண்மையன்பில்லாமல் நினது தன்மை விளங்காது. வேதமுமித்தகையதென்றறியாதே அங்ஙனமான வரும் பொருள் நாங்கள் காணுதற்கு எளிதாக வெளியேவருமோவென்று இதனை உரைத்தோம்.—எ-று. (அஅ)

வேறு.

புந்திமயங்கிப்பொருங்காலையெம்முன்னிற்
செந்தழலின்மேனிகொடுசென்றருளித்தொல்லறிவு
தந்துநினையுணர்த்தித்தாக்கமருநீக்கினையா
லெந்திரம்யாமுண்ணின்றியற்றுகினறாய்நீயன்றே.

(இ-ள்.) நாங்கள் மனமயங்கி போர்புரிந்தகாலத்து எமதெதிரிற் செவ்விய தழலின் மேனிகொண்டுவந்து பழயவறிவினை எமக்களித்து நின்னையுமறிவித்து ஒருவரோடொருவ ரிடித்துக்கொண்ட சண்டையையுமொழித்தனை; நாங்கள் யந்திரங்கள், அவ்வியந்திரங்களையசைத் தியங்கச்செய்வோன் நீயன்றே?—எ-று. (அகூ)

உன்னையுணருமுணர்வுபுரிந்தாலுன்னைப்
பின்னையுணர்வெம்பெரும சிறியேஞ்செய்த
புன்னெறியையெல்லாம்பொறுத்தியாற்றஞ்சிறுவ
ரென்னசெயினுமினிதன்றேயீன்றவர்க்கே.

(இ-ள்.) உன்னையறியத்தக்க வறிவளித்தால் உன்னைப்பின்னையறிவோம் பெருமானே சிறியோஞ்செய்த புன்னெறியனைத்தும் பொறுத்தருள் தமதுசிறுவர்களென்ன செய்தாலும் அச்செயல் பெற்றவர்க்கினிய செயலன்றே.—எ-று. (கூ0)

இன்னாத்தகைசேரிரும்பினைவல்லோனிலங்கும்
பொன்னாக்கியபரிசுபோலேயெமையருளி
மன்னாக்கினையயர்த்தோமற்றனையும்யாங்களுயிர்
தொன்னாட்பிணித்ததொடரகற்றவல்லோமோ.

(இ-ள்.) கொடுந்தன்மைவாய்ந்த இரும்பினை, வல்லானொருவன் பொன்னாகச் செய்த தன்மையைப்போல எமக்கருள்புரிந்து சிருட்டித்திதிகளின்றலைவர்களாக வாக்கினை அங்ஙனஞ்செய்த உன்னையுமறந்தோம். நாஙகள் சீவர்கள் உன்னால் அநாதியாகக் கட்டப்பட்ட பாசமகற்ற வல்லவர்களோவன்றே.—எ-று. (கூக)

என்றியம்பியாமேத்தலுமெதிருறநோக்கிக்
குன்றவில்லுடையொருவனீர்செய்தனகுறியா
வொன்றுமெண்ணலீர்நும்பெரும்பூசனையுவந்தா
மன்றுமக்கருள்பதந்தனையின்னும்யாமளித்தேம்.

(இ-ள்.) என்றுகூறி நாங்கள் துதித்தலுமெங்களை யெதிராகப் பார்த்து மலை வில்லினையுடைய ஒப்பற்ற இறைவன் நீங்கள் செய்தவைகளைக்கருதி ஒன்றுகினையாதிர் நீங்கள் செய்த பெரியபூசையைப்பெற்று மகிழ்ந்தோம். முன்னாளிலுங்களுக்களித்த பதவிகளை நாமுங்களுக்களித்தோம்.—எ-று (கூஉ)

வேண்டுநல்வரங்கேண்மினீரென்றலும்விசும்பிற்
றூண்டவம்புரிபகவநின்சரணமேயரணாப்
பூண்டிடுந்தலையன்பருளென்றலும்புரிந்து
காண்டகுந்தழற்சோதியுளிமைப்பினிற்கலந்தான்.

(இ-ள்.) வேண்டிய நல்ல வரத்தினைக் கேளுங்கள் என்றவுடனே நாங்கள் சிதாகாய வெளியில் நடனம்புரியும் பகவனே நின் திருவடியையே யடைக்கலமாகக் கொண்டனுபவிக்கும் தலைமையன்பினை அளித்தருள் என்றேம் என்றவுடனே அவ்வா றேயாகுக வென்றருள்புரிந்து தரிசிக்கத்தக்க வவ்வக்கினிச்சோதியுள் இறைவன் கண ப்பொழுதிற் கலந்தனன்.—எ-று.

கலத்தல்-சோதியொடு சோதியாதல். (கூங)

கலந்தகாலையில்யாங்கண்முன்றொழுதெழுங்காலைச்
சலங்கொள்பான்மையின்முன்னுறத்தேடுவான்றழலாய்
மலர்ந்தபேரொளிமீமிசைசுருங்கியேவந்தோர்
விலங்கலாகியதுலகெலாம்பரவியேவியப்ப.

(இ-ள்) அங்ஙனஞ்சோதியுட் கலந்தவுட்னே நாங்களச்சோதியினெதிரில் விழுந்து வணங்கி யெழுந்தோமப்பொழுது தீராக்கோபத்துடன் நாங்கள்செய்த சண் டையிலடியும் முடியுந்தேடும்வண்ணம் தழலாய்விரிந்த பேரொளியானது மேலுமேலு ஞ்சுருங்கிவந்து உலகினைத்தும் கண்டாச்சரியத்துடன் துதிபுரிய ஒருமலையாகியது. ()

அன்னதாஞ்சிவலிங்கரூபந்தனையணுகி
முன்னமாகியேமும்முறைவலஞ்செய்துமுறையாற்
சென்னியாற்றொழுதேத்தியெம்பதங்களிற்சென்றேம்
பின்னரெந்தையைமறந்திலம்போற்றுதும்பெரிதும்.

(இ-ள்.) அவ்வாறான சிவலிங்கமூர்த்தியை யடைந்து எதிரிற் சென்று மூன்று தரம் சுற்றிவந்து முறைப்படி தலையால் வணங்கித் துதித்து எமது பதவிகளிற் சென் றோம். அதன் பின் எந்தையை மறவாது மிகவுந் துதிக்கின்றோம்.—எ-று. (கூடு)

அரியும்யானுமுன்றேடுமவ்வனற்கிரியனல
கிரியெனும்படிநின்றதாலவ்வொளிகிளர்ந்த
விரவதேசிவராத்திரியாயினதிறைவற்
பரவியுய்ந்தனரன்னதோர்வைகலிற்பலரும்

(இ ள்.) திருமாலும் யானு முன்னரடியு முடியுந்தேடிய அக்கினிமலை அனல கிரியென் றுலகர் கூறுமாறு நின்றது. (அனலகிரி-அருணாசலம்) அவ்வொளி தோன்றிய இரவே சிவராத்திரியாயிற்று. அம்மகாசிவராத்திரியி லிறைவனைப்பூசித்துத் துதித்து அநேகர் வரம்பெற்றார்கள். (கூசு)

ஆதலாலவனருள்பெறினவனியலறியு
மோதியாகுவரல்லரேற்பலகலைபுணர்நதென்
வேதநாடியென்னிறையுமன்னவனிலைவிளங்கார்
பேதைநீரருமாங்கவரல்லதுபிறரார்.

(இ-ள்.) ஆதலாலவனருள்பெறின் அவனது தன்மையை யுணருமறிவுடைய வராகுவர், அங்ஙனமருள் பெறாதவராயின் பலகலைகலை யுணர்ந்துதானென்னை ? வேத

ங்களை யாராய்ந்தென் சிறிதுமவன் நிலைமையை யறியார். அறிவிலிகளும் அவரை யன்றி மற்றுயாவர்.—எ-று. (கஎ)

மோகவல்வினையாற்றியேபவத்திடைமூழ்கும்
பாகரல்லவர்க்கெய்திடாதவனருள்பவமும்
போகமாற்றிடுதருமமுநிகர்வருபுனிதர்க்
காகுமற்றவனருணிலைபாகராமவரே.

(இ-ள்.) மோகத்தால் தீவினைகளைச்செய்து பிறவியினிலழுந்தும் பகுதியின ரான பாவிகட்கும் அல்லரான பசுபுண்ணிய சீலருக்கும் அச்சிவபெருமான் திருவருள் கிட்டாது. பாவமும் போகத்தைத் தருகின்ற புண்ணியமும் சமநிலையுறுதலான இரு வினை யொப்புவாய்ந்த புனிதருக்கே யவனருளுண்டாகும். அவர்களே யவ்வருளு க்குரிய நிலையினையுடைய சத்திநிபாதத்துத்தமர்.—எ-று. (கஅ)

நீயுந்தொல்வினைநீங்கலினெம்பிரானிலைமை
யாயுந்தொல்லுணர்வின்றுவந்தெய்தியதவனே
தாயுந்தந்தையுங்குரவனுங்கடவுளுந்தவமு
மேயுஞ்செல்வமுமனையவற்சார்தியாலென்றான்.

(இ-ள்.) நீயும் பழய இருவினையினின்றும் இப்பொழுது நீங்குதலால் எம்பெ ருமானுடைய நிலைமையையாராயுங்குண நினக்குண்டாகியது. அச்சிவபெருமானே மாதாவும் பிதாவும் குருவும் கடவுளும் தவமும் பொருந்திய செல்வமும் ஆதலினவ னை யடைவாயாக என்று கூறினன்.—எ-று. (கக)

அடிமுடிதேடுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம். க,சுசக.

---

கட

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தக்கன் சிவபூசைசெய்த படலம்.

மருமலரயனிவைவகுப்பநாடியே
புரிகுவனஃதெனப்புகன்றுதாதைதாள்
பரிவொடுசிறுவிதிபணிந்துகாசியாந்
திருநகரதனிடைச்சேறன்மேயினான்.

(இ-ள்.) மணம்பொருந்திய தாமரைமலரிலிருக்கும் பிரமன்சிவோத்கருஷங்க ளான இவைகளை யுரையாநிற்கத் தக்கன் அவைகளைக் கேட்டாலோசித்து யானும் அச்சிவபெருமானை வழிபடுதலைச்செய்வேனென்று பிரமன் கால்களை விருப்பத்துடன் வணங்கிக் காசியாகிய அழகிய நகரத்துக்குச் செல்வானுயினன்.—எ-று. (க)

சென்றனன்காசியிற்சிறந்ததொன்மணி
கன்றிகையொருபுடைகங்கைவேலையிற்
பொன்றிகழ்செஞ்சடைப்புனிதற்காலய
மொன்றுமுன்விதித்தனனுணர்வுசேர்ந்துளான்,

(இ-ள்.) அறிவடைந்த தக்கன் காசிக்குச்சென்று சிறந்த கங்கைக்கரையிலுள்ள மணிகன்னிகையினொரு புறத்திற் பொன்போலும் விளங்காநின்ற செஞ்சடையினையுடைய சிவபெருமானுக்கு ஒரு கோயிலுண்டாக்கினன்.—எ-று. (உ)

அருளுருவாகியேயகிலமாவிக
டருவதுங்கொள்வதுமாகித்தாணுவா
யுருவருவாகியவொப்பில்பேரொளித்
திருவுருவொன்றினைச்சிவனுக்காக்கினன்.

(இ-ள்.) அருள்வடிவே வடிவாயுலகினையு முயிர்களையும் படைப்பதும் அழிப்பதுமாகித் தாணுரூபமாய் உருவமும் அருவமுமாகியுள்ள ஒப்பற்ற பேரொளியினையுடைய ஒரு சிவலிங்கமாகிய திருவுருவத்தினைச் சிவபெருமானைப் பூசித்தற்காகப் பிரதிட்டித்தான்.—எ-று. (௩)

நாயகன்மொழிதருநவையிலாகமம்
மேயினமுறைதெரிவிரதனாகியே
பய்புனல்புனைசடைப்பரமன்றாண்மல
ராயிரம்யாண்டுகாறருச்சித்தேத்தினன்.

(இ-ள்.) சிவபெருமானுரைத்த குற்றமற்ற சிவாகமங்களி லுரைக்கப்பட்ட முறைகளை உணர்ந்து சிவதீட்சா விரதத்தினையுடையவனாகிப் பாயாநின்ற கங்கையையணிந்த சடையினையுடைய சிவபெருமான் றிருவடி மலர்களை ஆயிரம் வருடங்காறுஞ்சிவாகமங்கூறும் பூசாவிதான முறையிற்பூசித் தருச்சனைபுரிந்து துதித்தனன்.எ-று.

அருச்சனைபுரிதலுமயன்றன்காதலன்
கருத்துறுமன்பினைக்கண்டுகண்ணுதல்
பொருக்கெனவெளிப்படப்புகழ்ந்துபோன்னுலாந்
திருக்கழல்வணங்கினன்றெளிவுபெற்றுளான்.

(இ-ள்.) பிரமன் மகனான தக்கன் சைவாகமமுறையால் அருச்சனைபுரிதலும் அவனுள்ளிற் பொருந்திய அன்பினையுணர்ந்து சிவபெருமான் விரைந்து தோன்றத் தெளிவடைந்த தக்கன் புகழ்ந்து பொன்மயமான அழகிய கழலணிந்த திருவடிகளை வணங்கினன்.—எ-று. (௬)

அகந்தையதாகியேயையநின்றனை
யிகழ்ந்தனனென்கணேயெல்லையிபவம்
புகுந்தனவவையெலாம்போக்கிநின்னிடைத்
தகும்பரிசன்பினைத்தருதியாலென்றான்.

(இ-ள்) ஐயனே! அகங்காரங்கொண்டு நின்னை இகழ்ந்தேன். அதனால் என்னிடத்தி லளவற்ற பாவங்கள் வந்து பொருந்தின. அவையனைத்தையும் போக்கிஎன்று நின்னடிமலரிற்பொருந்தத்தக்க அன்பினை அளிப்பாயாகவென்றுவேண்டினன்-எ-று.

ஆயவைதொலைத்தளித்தவன்றன்பூசையி
னேயமதாகியேநிமலன்றன்கண
நாயகவியற்கையைநல்கிவல்லையிற்
போயினன்றக்கனும்புனிதனாயினன்.

(இ-ள்.) அவனிடத்தாகிய பாவங்களைத் தொலைத்தவனுக் கருள்புரிந்து அவனுடைய பூசையில் விருப்பமுள்ளவனாகி நிமலனான சிவபெருமான் தக்கனுக்குத் தனது கணநாதத்தன்மையை அளித்து விரைந்து மறைந்தனன். அது காரணமாகத் தக்கனும் புனிதனானன்.—எ-று. (எ)

வேறு.

கங்கைச்சடையான் றனைத்தக்கனக்காசிதன்னி
லங்கர்ச்சனைசெய்திடப்போந்துழியம்புயன்மா
றுங்கத்திமையோரிறையாவருஞ்சூரமாதர்
சங்கத்தவருமகவெல்லைதணந்துபோனார்.

(இ-ள்.) கங்கையணிந்த சடையினையுடைய சிவபெருமான்றிருவடி மலர்களை த்தக்கனக் காசியில் அருச்சனை செய்யும்வண்ணம் வந்தவுடனே பிரமனுந் திருமாலும் உயர்ச்சிவாய்ந்த தேவர்கள் தலைவனான இந்திரன் முதலியவர்களும் காண்பார்க்கச் சந்தருந் தேவமாதரின் கூட்டத்தவர்களும் யாகசாலையினிடத்தினை விடுத்துச் சென் றனர்.—எ-று. (அ)

போகுற்றவர்களனைவோரும்பொருவில்சீர்த்தி
வாகுற்றவீரன்சயந்தன்னைவழுத்தித்தங்கட்
காகுற்றதொல்லைத்தலந்தோறுமடைந்துமாதோர்
பாகத்தமலன்றனைப்பூசனைபண்ணலுற்றார்.

(இ-ள்.) சென்றவர்களனைவர்களும் ஒப்பற்ற கீர்த்தியினையுடைய வலியமைந்த வீரபத்திரனுடைய சயத்தினைத் துதித்துத் தங்களுக்கு விருப்பமான பழய தலங்கள் தோறுஞ் சென்று உமையை யொருபுறத்திலுடைய மலரகிதனான சிவபெருமானைப் பூசை செய்தார்கள்.—எ-று. (க)

ஆராதனைகள்புரிந்தேயனைவோருமெங்கும்
பேராதுநிற்கும்பெருமானருள்பெற்றுமெய்யிற்
றீராதசின்னங்களுந்தீர்ந்துசிறந்துதத்த
மூராகியதோர்பதமேவியுறைதலுற்றார்.

(இ-ள்.) அனைவரும் சிவாராதனையை யெவ்விடத்திலுஞ்செய்து எங்கு நிறைந்து நிற்குஞ் சிவபெருமான் திருவருளைப்பெற்று உடலில் நீங்காதிருந்த வடுக்களுமொழிந்து சிறப்புற்றுத் தங்கள் தங்கள் ஊர்களான பதங்களையடைந்து வாழ்ந்தார்கள்எ-று.

மேதக்கதக்கன்மகந்தன்னில்விரைந்துபுக்காங்
கேதத்தடிசின்மிசைந்தேபொருள்யாவுமேற்றுப்
பூதத்தரின்மாய்ந்தெழுந்தேதம்புரிகடோறும்
பேதைத்தொழிலந்தணர்யாரும்பெயர்ந்துபோனார்.

(இ-ள்.) அறிவற்ற தொழிலினையுடைய வந்தணரெல்லாம் உயர்ச்சிவாய்ந்த தக்கனுடைய யாகத்தில் விரைந்து புகுந்து உணவருந்தி அவனளித்த பொருளனை த்தும் தானமாகப்பெற்றுக் குற்றத்தால் பூதர்களாலிறந்து பின்னரெழுந்து தம்மூர்கள் தோறும் மீண்டுசென்றனர்—எ-று. (கக)

என்றிங்கிவைகள்குரவோனிசைத்திட்டல்கேளா
நன்றென்றுசென்னிதுளக்குற்றுநனிமகிழ்ந்து
குன்றின்சிறைகொய்தவன்றந்தகுரிசிலுள்ளத்
தொன்றுங்கவலையிலனாகியவ்வும்பருற்றான்.

(இ-ள்) என இவைகளை வியாழன் உரைக்கக்கேட்டு நன்றென்று தலையசைத்து மிகமகிழ்ந்து மலையினிறகரிந்த இந்திரன் மகனான சயந்தன் மனதிலொரு கவலையுமில்லாதவனாகி யச்சுவர்க்கத்தி லரசுபுரிந்திருந்தான்.—எ-று. (கஉ)

தக்கன் சிவபூசைசெய்த படலமுற்றிற்று.

ஆக திருவிருத்தம். ககஎங.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கந்தவிரதப் படலம்.

உரைசெறிமகவான்செம்மனும்பரிலிருப்பவிம்பர்
முரசெறிதானைவேந்தன்முசுகுந்தனென்னும்வள்ளல்
விரைசெறிநீபத்தண்டார்வேலவன்விரதம்போற்றித்
திரைசெறிகடற்பாராண்டசெயன்முறைவிளம்பலுற்றாம்:

(இ-ள்.) உயர்வமைந்த சயந்தன் சுவர்க்கத்தினி லரசுசெலுத்தியிருப்ப இவ்வுலகத்தில் முரசு முழக்குஞ் சேனைகளையுடைய முசுகுந்தனென்றுரைக்கப்படு மரசவள்ளல் மணம்பொருந்திய கடம்பலரினலான குளிர்ச்சிவாய்ந்த மாலையணிந்த வேற்படையினையுடைய சிவசுப்பிரமணியப் பெருமானுக்குரிய சட்டி விரதத்தினை யனுட்டித்துத் திரைகள் நெருங்கிய கடல்சூழ்ந்த பூமியையாண்ட செயலின் முறையை உரைக்கின்றாம்—எ-று. (௧)

முன்றொருஞான்றுதன்னின்முசுகுந்தன்வசிட்டனென்னு
மந்தணனிருக்கையெய்தியடிமுறைபணிந்துபோற்றிக்
கந்தவேள்விரதமெல்லாங்கட்டுரைபெரியோயென்ன
மைந்தநீகோட்டியென்னுமற்றவைவழாதுசொல்வான்.

(இ ள்.) முன்னொருகாலத்தில் முசுகுந்த மன்னன் வசிட்டனென்னும் முனிவனுடைய ஆசிரமத்தையடைந்து முறைப்படி யவனடிகளை வணங்கித்துதித்துப் பெரியோய் கந்தவேளின் விரதமனைத்தும் உரைத்தியென்று கேட்க அவ்வசிட்டன் மைந்தனே நீ கேட்பாயாகவென்று அவ்விரதங்களனைத்தையுந் தவறாதுரைக்கின்றான்.எ-று.

எள்ளருஞ்சிறப்பின்மிக்கவெழுவகைவாரந்தன்னுள்
வெள்ளிநாள்விரதந்தானேவிண்ணவருலகங்காத்த
வள்ளறன்விரதமாகுமற்றதுபுரிந்தமேலோ
ருள்ளமேனினைந்தவெல்லாமொல்லையின்முடியுமன்றே.

(இ-ள்.) இகழ்தற்கரிய சிறப்பின் மிகுந்த பானுவாதி யெழுவகை வாரங்களுள் வெள்ளிநாள் விரதமே தேவருலகினைக்காத்த குமாரவள்ளலின் விரதமாம். அவ்வெள்ளிநாள் விரதத்தை யனுட்டித்த பெரியவர்கள் உள்ளத்தில் நினைத்தவெல்லாம் விரைவின் நிறைவேறும்—எ-று. (௩)

பகிரதனென்னும்வேந்தன்படைத்தபாருலகையெல்லா
நிகரறுகோரனென்னுநிருதனங்கொருவன்வௌவ
மகவொடுமனையுந்தானும்வனத்திடைவல்லையேகிப்
புகரவன்றனதுமுன்போய்த்தன்குறைபுகன்றுநின்றான்.

(இ-ள்.) பகிரதனென்னுமோரரசன் ஆண்ட மண்ணுலகனைத்தினையும் ஒப்பற்ற கோரனென்னும் ஒரு அசுரன் அபகரித்துக்கொள்ளப் பின்னர்ப் பகிரதன் புதல்வனுடனும் மனைவியுடனும் வனத்துக்கு விரைந்து சென்று வெள்ளியினெதிரேசென்று தனது குறையை யுரைத்துநின்றான்.—எ-று. (௪)

பார்க்கவனென்னுமாசான்பகீரதனுரைத்தல்கேளா
வேற்கரன்மகிழுமாற்றல்வெள்ளிநாள்விரதந்தன்னை
நோற்குதிமூன்றியாண்டுநுங்களுக்கல்லல்செய்த
மூர்க்கனுமுடிவனீயேமுழுதுலகாள்வையென்றான்.

(இ-ள்.) பார்க்கவனென்று பெயருள்ள அசுரகுருவான சுக்கிரன், பகீரதன் கூறியதனைக்கேட்டு வேலேந்திய திருக்கரத்தினையுடைய முருகவேள் மகிழும்வண்ணம் சுக்கிரவார விரதத்தினை மூன்று வருட நோற்கக்கடவை நோற்றால் உங்களுக்குத் துன்பஞ்செய்த மூர்க்கனும் இறப்பான் நீயே இவ்வுலகமுழுதையும் அரசாளுவை என்றனன்.—எ-று. (ரு)

நன்றெனவினவிமன்னன்ஞாயிறுமுதலாநாளி
லொன்றெனும்வெள்ளிமுற்றுமுணவினைத்துறந்துமுன்பின்
சென்றிடுமிரண்டுநாளுந்திவாவினிலடிசின்மாந்தி
யின்றுயிலதனைநீத்தியாண்டுமூன்றளவுநோற்றான்.

(இ-ள்.) பகிரத மன்னன் அதனை நல்லதென்று கேட்டு ஞாயிறு முதலிய நாட்களிலொன்றென்றுரைக்கப்படும் வெள்ளிக்கிழமைத்தினமுற்றும் ஆகாரமின்றியிருந்து வியாழனுஞ் சனியுமான இருதினங்களிலும் பகலின்மாத்திரம் உணவருந்தி இனியதுயிலினைவிடுத்து மூன்றியாண்டளவு சிவசண்முகப் பெருமான்றிருவடி மலர்களைப் பூசித்து நோற்றனன்.—எ-று (சு)

நோற்றிடுமளவிலையனுதியுடைச்செவ்வேல்வந்து
மாற்றலனுயிரையுண்டுவல்லையின்மீண்டுசெல்லப்
போற்றியேபகீரதப்பேர்ப்புரவலன்றன்னூரெய்தி
யேற்றதொல்லரசுபெற்றானின்னுமோர்விரதஞ்சொல்வாம்.

(இ-ள்.) நோற்குங்காலத்தில் முருகக்கடவுளின் கூரமைந்த செவ்விய வேற்படை வந்து பகைவனுயிரையுண்டு விரைந்து திரும்பிச்செல்லக் குமரக்கடவுளைத் துதித்துப் பகிரதனென்னும் பெயருடைய அரசன் தனது நகரத்தையடைந்து தகுந்த பழய அரசினைப்பெற்றனன் இன்னமொரு விரத முரைக்கின்றேம்.—எ-று. (எ)

வாரிசமலர்மேல்வந்தநான்முகன்மதலையான
நாரதமுனிவனென்போனலத்தகுவிரதமாற்றி
யோரெழுமுனிவர்தம்மிலுயர்ந்திடுபதமுமேலாஞ்
சீரொடுசிறப்புமெய்தச்சிந்தனைசெய்தானன்றே.

(இ-ள்.) கமல மலரிற்பிறந்த நான்கு முகங்களையுடைய பிரமன் மைந்தனான நாரதமுனிவனென்பவன் இந்த நன்மையமைந்த தகுந்த விரதத்தினை யியற்றிச் சத்த விருடிகளுள் உயர்ந்த பதமும் மேலான சீருடன் சிறப்பும் அடைதற்கு எண்ணினான்.

நூற்படுகேள்விசான்றநுண்ணியவுணர்வின்மிக்கோன்
பார்ப்பதியுதவுமுன்னோன்பதமுறைபணிந்துபோற்றி
யேற்புறுமுனிவரானவெழுவகையோரில்யானே
மேற்படவிரதமொன்றைவிளம்புதிமேலோயென்றான்.

(இ-ள்.) நூலிற்பொருந்திய கேள்வியின் மிகுந்த நுண்ணிய வுணர்வின் மிகுந்த நாரதன் பார்வதியின் மூத்தமகனான விநாயகனுடைய கால்களை முறைப்படிவணங்கித் துதித்துத் தகுதியமைந்த சத்தவிருடிகளுள் யானே உயர்ந்தோனாக ஒருவிரதத்தினை உயர்ந்தோய் உரைத்தருளுதி என்றனன்.—எ-று. (க)

முன்னவனதனைக்கேளாமுழுதருள்புரிந்துநோக்கி
யன்னதுபெறுதிதிண்ணமாறுமாமுகத்துநம்பி
பொன்னடிவழிபாடாற்றிப்பொருவில்கார்திகைநாளென்னைப்
பன்னிருவருடங்காறும்பரிவுடன்புரிதியென்றான்,

(இ-ள்.) விநாயகனதனைக்கேட்டு முழுதுங் கருணைசெய்து பார்த்து நீ விரும்பியதனை உண்மையாக வடைவாய் சிறந்த சண்முகனை நம்பியினுடைய பொன்னடிகளைப்பூசித்துக் கார்த்திகைநாள் விரதத்தினைப் பன்னிரண்டுவருடமளவும் விருப்பத்துடன் செய்வாயாக என்றனன்.—எ-று. (கo)

நாரதன்வினவியீதுநான்புரிந்திடுவனென்னாப்
பாருலகதனில்வந்துபரணிநாளபராணத்தி
லோர்பொழுதுணவுகொண்டேயொப்பில்கார்த்திகைநாடன்னில்
வீரவேற்றடக்கையண்ணல்விரதத்தையியற்றலுற்றான்.

(இ-ள்.) இதனை நாரதன்கேட்டு நான் அதனைச் செய்வேனென்று பூவுலகத்தினையடைந்துபரணி நாள் பின்னேரத்தில் ஒருபொழுதுண்டு ஒப்பற்ற கார்த்திகைநாளில் பெரிய திருக்கரத்தில் வீரவேலினையுடைய பெருமையிற்சிறந்த குமாரசுவாமியின் நோன்பினைச் செய்யத் தொடங்கினான்—எ-று. (கக)

தூசொடுகயத்தின்மூழ்கித்துய்யவெண்கலைகள்சுற்றி
யாசறுநியமமுற்றியான்றமைபுலத்தணுகித்
தேசிகன்றனதுபாதஞ்சென்னிமேற்கொண்டுசெவ்வேள்
பூசனைபுரிந்திட்டன்னான்புராணமும்வினவினான்.

(இ-ள்.) கட்டிய ஆடையுடன் குளத்திற் குளித்துப் பரிசுத்தமான வெள்ளாடையுடுத்திக்குற்றமற்ற நியமங்களை முடித்துச்சிறந்தமைந்த புலன்களையுடையவனுகிக் குருவின்பாதத்தைத் தலைமேலமைத்துச்சிவசுப்பிரமணியப் பெருமானுடைய திருவடிகளைப்பூசித்து, அவ்வெம்பெருமானுடைய புராணத்தையுங்கேட்டனன் —எ று. (கஉ)

கடிப்புனலள்ளித்தன்னோர்கைகவித்துண்டுமுக்காற்
படுத்திடுதருப்பையென்னும்பாயலிற்சயனஞ்செய்து
மடக்கொடிமாதர்தம்மைமறலியாமதித்துவள்ள
லடித்துணையுன்னிக்கங்குலவதியுமுறங்காதுற்றான்.

(இ ள்.) மணம்பொருந்திய நீரினையள்ளித் தனதொருகையினால் மும்முறை குடித்து. பரப்பப்பட்ட தருப்பையாகிய பாயலிற்கிடந்து இளங்கொடியனைப் பெண்களை யமனுகக்கருதி வள்ளலான குமாரவேளி னுபயபாதங்களையு நினைத்து இராமுழுது முறங்காதிருந்தனன்.—.எ று. (கங)

அந்தநாள்செல்லப்பின்னருரோகிணிபடைந்தகாலைச்
சந்தியாநியமமெல்லாஞ்சடக்கெனமுடித்துக்கொண்டு
கந்தவேள்செம்பொற்றண்டைக்கான்முறைவழிபட்டேத்தி
வந்தமாதவர்களோடும்பாரணமகிழ்ந்துசெய்தான்.

(இ-ள்.) அத்தினமகலப் பிற்றைநாள் ரோகணி வந்தவுடனே சந்தியாவந்தனமாதி நியமங்களை விரைவாக முடித்துக்கொண்டு கந்தவேளின் செவ்விய தண்டைக்கால்களைப்பூசித்து முறையே வழிபாடு செய்து துதித்து வந்திருந்த சிறந்த தவசிகளுடன்சந்தோஷமாக விரதமுடிவிலுண்ணுதலான பாரணஞ்செய்தனன்.—எ-று. (கச)

பாரணம்விதியிற்செய்தோன்பகற்பொழுதுறங்குமாயி
ரணமறையோர்தம்மிலைம்பதிற்றிருவர்தம்மைக்

காரணமின்றிக்கொன்றகடும்பழியெய்துமென்று
நாரதன்மாயம்வல்லோனிமைத்திலன்நயனஞ்சற்றும்.

(இ-ள்.) முறைப்படி பாரணை செய்தவன் பகற்போதி லுறங்குவானானால்வே தமுணர்ந்த பார்ப்பாரில் நூறுபேர்களைக் காரணமில்லாது கொன்ற கொடியபழிவந்து சேருமென்று மாயத்தில் வல்ல நாரதன் உணர்ந்து கண்களைச்சற்றும் இமைக்காதவனாக விருந்தான்.—எ-று. (கரு)

விழியொடுமிமைகூடாமேவெய்யவன்குடபால்வீழும்
மொழுதளவிருந்துமற்றைப்புறத்துளசெயலும்போற்றி
யழிவறுவிரதமிவ்வாறீரிருவருடமாற்றி
யெழுவகைமுனிவோருக்குமேற்றமாம்பதத்தைப்பெற்றான்.

(இ-ள்) கண்ணுடன் இமைபொருந்தாமற் சூரியன் மேற்றிசையடையுங்காறு மிருந்து பின்னை மாலைக்காலத்துச் செய்யவேண்டிய செயல்களையுமுடித்துக்கெடுதலற்ற விரதத்தினை இவ்வண்ணம் பன்னிரண்டு வருடங்கள் செய்து சத்தவிருடிகளுக்கு முயர்ந்ததான பதத்தைப்பெற்றனன்.—எ-று. (கசு)

இந்தநல்விரதந்தன்னையீண்டொருமறையோனோற்று
முந்தியமனுவேயாகிமுழுதுலகதனையாண்டா
னந்தணனொருவன்பின்னுமவ்விரதத்தைப்போற்றிச்
சிந்தையினினைந்தாங்கெய்தித்திரிசங்குவாகியுற்றான்.

(இ-ள்.) இந்த நல்ல கார்த்திகைவிரதத்தினை இங்கொரு பார்ப்பானனுட்டித்து முதன்மனுவாகப் பிறந்து உலகமுழுதுமாண்டனன். பின்னுமொரு பார்ப்பானிந்த விரதத்தினை நோற்ற மனநிலெண்ணியவைகளையடைந்து திரிசங்குவாகியிருந்தனன்.

ஈங்கொருமன்னன்வேடனிருவருநோற்றுவண்மை
தாங்கியவந்திமானேசந்திமானென்றுபேராய்
வீங்குநீருடுத்தபாரைமேலைநாட்புரந்தாரென்ப
வாங்கவர்பின்னாண்முத்தியடைவதுதிண்ணமம்மா.

(இ-ள்.) இங்கு ஒரு அரசனும் வேடனும் இந்த விரதத்தினை நோற்று அந்திமான் சந்திமான் என்று தாங்கப்பெற்ற பெயரினையுடையவர்களாகி மிகுந்த கடனீராற் சூழப்பட்ட பூமியை முன்னர்க்காலத்து ஆண்டனரென்று கூறுவார்கள்; அங்ஙனம் கார்த்திகைவிரத மனுட்டித்தவர்கள் மேனாள் முத்தியடைவது நிச்சயம்.—எ-று.

இப்படியாரனாளில்விரதத்தையியல்பினோற்று
முப்புவனத்தின்வேண்டுமுறைமையையடைந்தநீரார்
மெய்ப்படுதொகையையாரேவிளம்புவரீதேயன்றி
யொப்பருவிரதம்வேறுமொன்றுளதுரைப்பக்கேண்மோ.

(இ-ள்.) இவ்வண்ணங் கார்த்திகைநாளில் விரதத்தை முறைப்படி நோற்று மூன்றுலோகங்களினும் வேண்டு முறைகளை யடைந்த தன்மையினையுடையவர்களின் தொகையையாவரே உரைக்கத்தக்கார் இதுவல்லாமல் ஒப்பற்ற விரதம் வேறுமொன்றுளது உரைக்குதும் அதனையும் கேட்பாயாக.—எ-று. (கசு)

வெற்பொடுமவுணன்றன்னைவீட்டியதனிவேற்செங்கை
யற்புதன்றன்னைப்போற்றியமரருமுனிவர்யாருஞ்
சொற்படுதுலையின்றிங்கட்சுக்கிலபக்கந்தன்னின்
முற்பகலாதியாகமுவிருவைகனோற்றார்.

(இ-ள்.) கிரவுஞ்ச மலையுடன் தாருகாசுரனைவதைத்த ஒப்பற்ற வேற்படையேந்திய செவ்விய திருக்கரத்தினையுடைய குமாரக்கடவுளைத் துதித்துத் தேவர்களும் முனிவரனையோரும் சொல்லப்பட்ட துலாமாதத்துச் சுக்கிலபட்சத்துப் பிரதமை முதலாக ஆறுதினம் நோன்பிருந்தனர்.—எ-று. (உ0)

முந்தியவைகலாதிழவிருநாளுங்காலை
யந்தமில்புனலின்மூழ்கியாடையோரிரண்டுதாங்கிச்
சந்தியிற்கடன்கள்செய்துதம்பவிம்பங்கும்பத்திற்
கந்தனைமுறையேபூசைபுரிந்தனர்கங்குற்போதில்.

(இ-ள்.) பிரதமைமுதற் சட்டியின்காறுந்தினந்தோறுங் காலையிற், கெடாத நீரிற்குளித்து இரண்டாடையுடுத்துச் சந்திக்கடன்களைச் செய்து இரவிற் தம்ப விம்ப கும்பங்களிற் கந்தக்கடவுளை முறைப்படி பூசித்து.—எ-று. (உக)

நிறைதருகட்டிகூட்டிநெய்யினிற்சமைக்கப்பட்ட
குறைதவிர்மோதகத்தைக்குமரநாயகற்கருத்திப்
பிறவுளவிதியுஞ்செய்துபிரான்றிருப்புகழ்வினவி
யுறுபுனல்சிறிதுமாந்தியுபவசித்திருந்தார்மாதோ.

(இ-ள்.) நிறுத்திடப்பட்ட வெல்லக்கட்டிசேர்த்து நெய்யினிற்சமைத்த குறைவற்றமோதகத்தைக்குமாரசுவாமிக்கு நிவேதித்து மற்றுள விதிகளையுஞ்செய்து அக்குகப்பிரானுடைய திருப்புகழைக்கேட்டுச் சிறிது நீரருந்தி உபவசித்திருந்தனர்.—எ-று.

ஆரணமுனிவர்வானோரங்கதன்மற்றைவைகல்
சீரணிமுருகவேட்குச்சிறப்பொடுபூசையாற்றிப்
பாரணம்விதியிற்செய்தார்பயிற்றுமிவ்விரதந்தன்னாற்
றூரணியவுணர்கொண்டதம்பதத்தலைமைபெற்றார்.

(இ-ள்.) வேதமுணர்ந்த முனிவர்களுந் தேவர்களும் அச்சட்டியின் மறுதினம் சிறப்பமைந்த முருகவேட்குச் சிறப்புடன் பூசைசெய்து முறைப்படி பாரணஞ்செய்தனர். இங்ஙனம் இவர்கள்செய்த இவ்விரதத்தாற் பூமியிலிருந்தவசுரரடைந்த தமது பதத்தலைமையைத்தாமே அடைந்தனர்.—எ-று. (உங)

என்றிவைகுரவன்செப்பவிறையவன்வினவியெந்தாய்
நன்றிவைபுரிவனென்னாநனிபெருவேட்கையெய்தி
யன்றுதொட்டெண்ணில்காலமவ்விரதங்களாற்றிக்
குன்றெறிநுதிவேலையன்குரைகழலுன்னிநோற்றான்.

(இ-ள்.) என இவைகளை வசிட்டன்கூற முசுகுந்தன்கேட்டு எந்தையே நல்ல இவைகளைச் செய்கின்றேனென்று மிகவும் விருப்பங்கொண்டு அன்று முதலளவற்ற காலம் அந்த விரதங்களைச்செய்து குன்றினைப்பிளந்து கூரமைந்த வேலினையுடைய ஐயனது முழங்குங் கழலணிந்த பாதங்களைத் தியானித்து நோன்பிருந்தனன்.—எ-று.

வேறு.

ஆன்காலையிலாறுமாமுகமுடையமலன்
கோனவன்றனக்கருளுவான்மஞ்ஞைமேல்கொண்டு
தானைவீரனுமெண்மருமிலக்கருஞ்சார
வானுளோர்களுங்கணங்களுஞ்சூழ்வுறவந்தான்,

(இ-ள்.) அப்பொழுது சிறந்த ஆறு திருமுகங்களையுடைய குமரவேள் முசுகுந்தனுக் கருள்செய்தற்கு மயில்வாகனத்தின்மீது சேனாதிபனான வீரவாகுவும் மற்றைய எண்மரும் இலக்கம் வீரருமுடன் வராநிற்பத் தேவர்களுங் கணங்களுஞ் சூழ்ந்துவர எழுந்தருளினான்,—எ-று. (உரு)

வந்துதோன் றலுமன்னவர்மன்னவன்மகிழ்ந்து
கந்தவேளடி பணிந்தனன் கைதொழூஉப்பரவ
வந்தமில்பகல்விரதங்களாற்றினையதனு
லெந்தநல்வரம்வேண்டினையது புகலென்றான்.

(இ-ள்.) எதிரே வருதலும் அரசர்க்கரசனுன முசுகுந்தன் சந்தோஷமுற்றுக் கந்தவேளின் அடிகளை வணங்கிக் கைதொழுது துதிக்க இறைவன் அளவற்றகாலம் விரதங்களை யனுட்டித்தனை யதனுலுனக்கெந்த நல்ல வரம் வேண்டு மதனையுரைத்தி யென்றருளிச்செய்தனன்.—எ-று. (உசு)

என்றகாலையின்முசுமுகமுடையவனெந்தாய்
நன்றுபாரெலாமெனதுசெங்கோலிடைநடப்பான்
வென்றிமொய்ம்பினனுதியாம்வீரரையெல்லா
மொன்றுகேண்மையிற்றுணைவராத்தருதியென்றுரைத்தான்.

(இ-ள்.) என்றவுடனே முசுகுந்தன் எந்தையே பூமிமுழுது மெனது செங் கோலின் வழி நன்ருய் நடத்தற்கு வீரவாகுதேவன் முதலியவர்களையெல்லாம் பொரு ந்திய நண்புடன் படைத்துணை வீரராகத்தருதல்வேண்டும் என்று கேட்டனன்.—எ-று.

மன்னனிவ்வகைவேண்டுகோள் வினவுருவள்ள
லன்னவாறுனக்குதவுவமென்றருள்புரிந்து
மின்னல்வாட்படைவீரமொய்ம்பன்முதல்விளம்புந்
துன்னுதானையந்தலைவரைநோக்கியேசொல்வான்.

(இ-ள்.) முசுகுந்த னிவ்வண்ணம் வேண்டுகோளையுரைக்கக்கேட்ட வள்ள லான குமாரவேள் அவ்வாறே யுனக்கருள்வோமென்று அருள்செய்து ஒளிபொரு ந்திய வாட்படையினையுடைய வீரவாகுதேவன் முதலாக வுரைக்கப்படுகின்ற நெருங் கிய சேனைத்தலைவரைப் பார்த்தருளிச்செய்கின்றனன்.—எ-று. (உஅ)

நோற்றல்கூடியமுசுகுந்தனும்மினுமெம்பா
லேற்றமேதகுமன்பினனெழுகடற்புவியும்
போற்றவைகுவானீவிர்களாங்கவன்புடைபோ
யாற்றல்சான்றிடுதுணைவராயிருத்திரென்றறைந்தான்.

(இ-ள்.) சட்டி முதலிய விரதங்களை நோற்றலில் முற்றுப்பெற்ற முசுகுந்த மன்னவன் உங்களை விடவும் என்னிடத்தில் மிகவும் அதிகமான அன்புடையவன் எழுகடல்சூழ்ந்த உலகனைத்துந்துதிக்கவாழுவோன் ஆதலால் நீங்கள் அவனிடஞ்சென்று வன்மை மிக்கபடைத்துணைவராக இருப்பீராக என்றருளிச்செய்தனன்.—எ-று.

வேறு.

முழுதருட்புரிதருங்கடவுள்சொல்வினவியேமுடிவதில்லாச்
செழுமதித்தண்குடைச்சூர்குலந்தனையடுந்திறலினேங்கள்
பழிபடப்பானுவின்வழிவருஞ்சிறுமகன்பாங்கராகி
யிழிதொழில்புரிகிலோமெனமறுத்துரைசெய்தார்யாரும்வீரர்.

(இ-ள்.) அருள்முழுது மளிக்குங் குமரக்கடவுளின் சொல்லைக்கேட்டு வீர ரனைவரும் அழிவற்ற செழுமதித்தண் குடையாளனுன சூரமன்மனுடைய குலத்தினை அழித்த ஆற்றலினையுடைய நாங்கள் இழிவுண்டாம்வண்ணம் சூரியன் வழித்தோன்ற லான சிறியமனிதன் சார்பாய் இழிதொழில்செய்யோம் என்று மறுத்துரைத்தனர். ()

ஞானநாயகனவர்மொழிதனைத்தேர்ந்துநம்முரைமறுத்தி
ரானதோர்பான்மையானீவிர்மானுடவராயவனிமன்னன்
சேனையாகிப்புறம்போற்றியேபற்கற்சேர்திர்பின்னர்
வானுளோர்புகழவேநோற்றுநம்பக்கலில்வருதிரென்றான்.

(இ-ள்.) ஞானநாயகனான எம்பெருமான் அவர்மறுத்துரைத்ததனை யுணர்ந்து நமதுரையை மறுத்தீர்கள் அதனால் நீங்கள் மனிதர்களாய் இம்மண்ணுலக வரசனுடைய சேனையாகி அவனைப்புறங்காத்துப் பலகாலமிருத்திர் பின்னர் தேவர்புகழுயாறு நோன்புழந்து நம்மிடத்துக்கு வருதிரென்று சபித்தனன்.—எ-று. (௫௧)

ஐயன்வாய்மொழியினால்வீரமொய்ம்புடையவனாதியானோர்
மையன்மானுடவராய்த்தொல்லைநாளுடையதோர்வன்மைநீங்கி
மெய்யெலாம்வியர்வுறப்பதைபதைத்தேங்கியேவிழுமமிக்குப்
பொய்யரேம்பிழைபொறுத்தருடியாலென்றுபொன்னடிபணிந்தார்.

(இ-ள்.) கடவுளின் வாய்மொழியால் வீரவாகு முதலியவர்கள் மயக்கம் பொருந்தி மானுடவராகி முன்னாளிலிருந்த வன்மையொழிந்து உடலெலாம் வியர்வை தோன்றப் பதைபதைத்தேங்கித் துன்பமிகுந்து பொய்யினையுடைய எங்கள்பிழையைப்பொறுத்தருள்வாயென்று பொன்னடி வணங்கினார்கள்..—எ-று. (௫௨)

கமலமார்செய்யசேவடியின்மேற்றாழ்ந்துகைதொழுதுபோற்றிக்
குமரவேள்விடைதனைப்பெற்றுமானவரெலாங்கொற்றமன்னன்
றமர்களாயொழுகினார்நேமியம்படையுடைத்தருமமூர்த்தி
யமரர்கோனிளவலாயாங்கவன்பின்செலுமமைதியேபோல்.

(இ-ள்.) தாமரை மலரையொத்த செவ்விய திருவடிகளில்வணங்கிக் கைதொழுது துதித்துக் குமரகடவுளிடம் விடைபெற்றுச் சக்கரப்படையினையுடைய தருமமூர்த்தியான நாராயணன் இந்திரனுக்குத் தம்பியான உபேந்திரனாக அவ்விந்திரன் பின்சென்ற முறையை யொப்ப வீரரனைவரும் வெற்றிவேந்தனுக்கு நண்பர்களாக விருந்தார்கள்.—எ-று. (௫௩)

ஆயதோர்காலையின்முசுமுகத்திறையவனுடல்வேற்கை
நாயகன்பொற்பதம்வந்தியாநிற்பநல்லருள்புரிந்தே
பாயபொன்சுடர்மணித்தோகையம்புரவியும்படைகளாகு
மாயிரும்பூதருந்தானுமந்நிலைதனின்மறைதலுற்றான்.

(இ-ள்.) அவ்வாறான சமயத்தில் முசுகுந்தமன்னன் வெற்றிவேலுற்ற திருக்கரத்திறைவனைவணங்க அவனுக்கு நல்லருளைச்செய்து அகன்ற பொன்சுடர்போலும் நீலமணிபோலும் விளங்கு மயிற்பரியும் சேனையாகச் சிறந்த பெரியபூதர்களும் தானும் அந்நிலையிலேயே மறைந்தருளினான்.—எ-று. (௫௪)

வேறு

மறைந்தனன்குமரனேகமன்னவன்மகிழ்ச்சிகொண்டு
சிறந்திடுகருவூரென்னுந்திருநகரரசின்மேவி
யறந்தருமாடவீதியளப்பிலபுரிவித்தாங்கே
நிறைந்திடுவீரர்தம்மைநிலைபெறவிருத்தினானே.

(இ-ள்.) குமரக்கடவுள் மறைந்தெழுந்தருளுதலும் முசுகுந்தன் சந்தோஷமடைந்து சிறப்பமைந்த கருவூரென்னுந் திருநகரிலுள்ள ராசதானியையடைந்து தருமத்தினை யளிக்கு மாடவீதிகளை அளவற்றனவாகச் செய்வித்து அவைகளில் மானுடவீராகவந்து நெருங்கியுள்ள நவவீராதியரை வாழும்வண்ணம் அமைத்தனன். ()

ஆபவர் தங்கட்கெல்லாமரும்மெறலாக்கமுள்ள
தேயமுங்கரிதேர்வாசித்திரள்களும்வரிசைமுற்றுந்
தூயபல்சனங்களாகுந்தொகுதியுமுதவித்தண்ட
நாயகமுதல்வராகநல்கினன்ஞாலமன்னன்.

(இ-ள்.) மண்ணுலகவரசனுன முசுகுந்தன் அவ்வீரரனைவருக்கும் பெறுதற்கரிய பெருஞ்செல்வக்களையுடைய தேயங்களையும் யானைகளையுங் குதிரைக் கூட்டங்களையும் மற்றுள்ள வரிசைகளனைத்தையும் தூயபல அடிமைச்சனங்களின் கூட்டத்தையும் கொடுத்துச் சேனைநாயக முதல்வராக அதிகாரமளித்தனன்.—எ-று. (௩௬)

அன்னதோர்காலந்தன்னிலரம்பையரவனியாளு
மன்னவர்தம்பாற்றேன்றிவளர்தலும்வாகைமொய்ம்பின்
முன்னவன்முதலோர்க்கெல்லாமுசுகுந்தவேந்தனந்தக்
கன்னியர்தம்மைக்கூவிக்கடிமணமியற்றுவித்தான்.

(இ-ள்.) அவ்வாறுன காலத்தில் அரம்பாஸ்திரீகள் உலகினையாளும் அரசரிடம் பிறந்து வளர்தலும் வீரவாகுதேவன் முதலியோருக்கெல்லாம் முசுகுந்தமன்னன் அந்தப்பெண்களை யழைப்பித்துக் கலியாணஞ் செய்வித்தனன்.—எ-று. (௩௭)

அந்தமில்வன்மைசான்றவாடலம்புயத்தோன்புட்ப
கந்தியென்றுரைபெற்றுள்ளகன்னிகைதன்னைவேட்டுச்
சிந்தையின்மகிழ்வாற்சேர்ந்துசித்திரவல்லியென்னும்
பைந்தொடிதன்னையன்பாற்பயந்தனன்பதுமமின்போல்.

(இ-ள்.) அளவற்ற வன்மைமிகுந்த வீரவாகுதேவன் புட்பகந்தியென்று பெயருள்ள பெண்ணை மணந்து மனமகிழ்வுடனவளைக்கலந்து சித்திரவல்லியென்னும் சிறப்பு விளங்கும் புதல்வியை அன்புடன் கமலமாதான திருமகளைப் பெற்றெனப் பெற்றனன்.—எ-று. (௩௮)

அத்தகுபொழுதிற்பின்னையனகனேசனகனென்னும்
புத்திரர்தம்மைநல்கிப்புவனியாண்முசுகுந்தற்குச்
சித்திரவல்லியென்னுஞ்சீர்கெழுபுதல்விதன்னை
மெய்த்தகுவதுவைநீரால்விதிமுறைவழாமலீந்தான்.

(இ-ள்.) அக்காலத்திற் பின்னரும் அனகன் சனகன் என்றுரைக்கப்பட்ட பிள்ளைகளைப்பெற்று உலகாளு முசுகுந்தனுக்குச் சித்திரவல்லியென்னுஞ் சிறப்புடன் விளங்குமகளை சரியான திருமணமுறையாய் விதிப்படி தவருதளித்தனன்.—எ-று.

ஏனையவீரர்தாமுமியல்புளிவழாமல்வேட்ட
தேனிவர்குழலாரோடுஞ்சிறந்தவில்வாழ்க்கைபோற்றிப்
பானலங்குதலைச்செவ்வாய்ப்பாலரைநீலவேற்கண்
மானனையாரைநல்கிமனுகுலத்தொன்றியுற்றார்.

(இ-ள்.) மற்றைய வீரர்களும் முறைதவருமல் மணந்த வண்டுபடிக்க கூந்தலாருடன் சிறந்த இல்வாழ்க்கையை நடத்திக் கருநெய்த லலரையொத்தகுதலைச் செவ்வாயினையுடைய ஆண்குழந்தைகளையும் நீலவேல்போலுங்கண்களையுடைய பெண்குழந்தைகளையும் பெற்று மனுகுலத்தோடு கலந்து வாழ்ந்தனர்.—எ-று. (௪0)

சித்திரவல்லியென்னுஞ்சீருடைச்செல்வியங்கோர்
தத்தையைவளர்த்தலோடுந்தண்டகத்தருமன்றேவி
யத்தனிக்கிளியைவெஃகவாங்கவன்றாதர்போந்து
கைத்தலத்ததனைப்பற்றிக்கடிதினிற்கொடுபோயீந்தார்.

(இ-ள்.) சித்திரவல்லியென்னுஞ் சீரினையுடைய இராசமாதேவி ஒருகிளியை வளர்த்தலும் அந்த ஒப்பற்ற கிளியைப் பாவிகளைத் தண்டிக்கின்ற எமதருமனுடைய மனைவி விரும்ப அவ்வெமனுடைய தூதர்கள் வந்து அரசியின் கையினிடத்திருந்த அக் கிளியை வெடுக்கென்று பிடுங்கி யெடுத்து விரைவாகக்கொண்டு கொடுத்தனர்.—எ-று.

அவ்வழிகிள்ளைகாணளாயிழையயர்தலோடு
மெவ்வழிபோயிற்றேவென்றிறையவனுலகினுடி.
மைவழிகின்றமேனிமறலிதன்றுணைவியாளுள்
கைவழியமருந்தன்மைகதுமெனவுணர்ந்தானன்றே

(இ-ள்.) அப்பொழுது கிளியைக்காணாது சித்திரவல்லி வருந்துதலும் அவள் கணவனான முசுகுந்தன் அக்கிளி எவ்விடத்துச் சென்றதென்றுலகத்திலாராயந்து கருமைவழிந்தொழுகு மேனியினையுடைய எமனுடைய மனைவியின் கையினிடத்து இருக்குந்தன்மையை விரைவாக வறிந்தனன்.—எ-று. (சஉ)

பூதலம்புரந்தசெங்கோற்புரலவன்வீரமொய்ம்ப
ஞதியர்தம்மைக்கூவியங்ஙனந்தூண்டவன்னே
ரேதமில்கரிதேர்வாசியெல்லையின்மறவர்சுற்ற
மேதியங்கடவுண்மூதூர்விரைந்துபோய்வளைந்துகொண்டார்.

(இ-ள்.) உலகினையாளுஞ் செங்கோலினையுடைய முசுகுந்தமன்னவன் வீரவாகு தேவன் முதலியவர்களை அழைத்து அப்பொழுது எமபுரிக்கனுப்ப அவர்கள் குற்றமற்ற யானை குதிரை தேர்களுடன் அளவற்ற போர்வீரர் தம்மைச் சூழ்ந்துவர எருமையேற்றினையுடைய எமனுடைய நகரத்துக்கு விரைவாகச்சென்று முற்றுகையிட்டனர்.—எ-று. (சங)

தன்னகர்வளைதலோடுந்தருமன்வந்தேற்றகாலை
யன்னவனெடுபோர்செய்தேயடுமுரண்டொலைச்சியம்பொன்
வன்னமென்கிள்ளைதன்னைவாங்கினர்மீண்டுதங்கண்
மின்னுளமகிழநல்கிவேந்தற்குவிசயஞ்செய்தார்.

(இ-ள்.) மனிதர்தனது நகரியை வளைத்துக்கொண்டவுடனே தருமராசன் வந்தெதிர்க்க இவர்கள் அவனுடன் பொருது அவனது கொலைக்குரிய வன்மையை அழித்து அவனைக்கொண்டு வன்னமமைந்த மெல்லிய கிளியைவாங்கித் திரும்பிவந்து தமது குலக்கொடியான சித்திரவல்லியின் மனமகிழவளித்து முசுகுந்தமன்னனுக்கு வெற்றியை யுண்டாக்கினர்.—எ-று. (சச)

சித்திரவல்லிபின்னர்ச்சீர்கெழுசூல்கொண்டுற்று
மெய்த்தகுபலங்காய்வேண்டிவேண்டினள்வினவலோடு
முத்தணியலங்கற்றிண்டோண்முசுகுந்தனதுகொண்டேக
வத்திருமலைநன்னாட்டுக்களப்பிலோர்தம்மையுய்த்தான்.

(இ-ள்.) சித்திரவல்லி பின்னர்ச் சிறப்புவாய்ந்த கருப்பந்தாங்கியிருந்து தகுந்த பழங்களையும் காய்களையும் விரும்பிக்கேட்டலும் முத்தமாலையணிந்த திண்ணிய தோளினையுடைய முசுகுந்தன் அதுகொண்டு வருதற்கு அழகிய நல்ல மலைநாட்டுக்களவற்றவர்களை யனுப்பினன்.—எ-று. (சரு)

மஞ்சுசூழ்மலைநாடுள்ளார்மன்னவர்மன்னனுணைக்
கஞ்சலரிகழ்தலோடுமாடலம்புயனுமேனைச்
செஞ்சிலைவீரர்தாமுஞ்சென்றனரந்நாட்டுள்ள
வெஞ்சுரமீரொன்பானும்வென்றொருபகலின்மீண்டார்.

(இ-ள்.) மேகந்தவழு மலைநாட்டிலுள்ளவர்கள் அரசர்க்கரசனுன முசுகுந்தனுடைய ஆணைக்கஞ்சாதாராய் இகழ்தலும் (சென்றோர் திரும்பிவந்துரைக்க) வீரவாகுதேவனும் மற்றைய செவ்விய விற்படையினையுடைய வீரர்களுஞ்சென்று அம்மலைநாட்டிலுள்ளாரொடு பொருது அந்நாட்டோர்களான வெவ்விய பதினொன் சூரங்களையும் ஒரு பகலில் வென்று திரும்பிவந்தனர்.—எ-று. (சசு)

பூண்டிடுகழற்கால்வீரர்பொற்புறுபுதல்வியானுள்
வேண்டியதீயபைங்காய்வியத்தகநல்கிப்பின்ன
ரீண்டுளதரணியெல்லாமேகியேதிறைகொண்டெங்கு
மாண்டையமன்னன்கோலுமாணையுநடக்கச்செய்தார்.

(இ-ள்.) கழலினையணிந்த காலினையுடைய வீரர்களின் அழகிய புத்திரியான சித்திரவல்லி யென்னு மிராசமாதேவி விரும்பிய இனிய பலவின்கனி முதலியவைகளை அவள் மெச்சுமாறு கொண்டுவந்தளித்துப் பின்னர் இங்குள்ள பூமிமுழுதுந் திக்குவிஜயஞ்செய்து பலதேயமன்னரிடந் திறைவாங்கிஎவ்விடத்திலும் அக்கருவூரரசனுன முசுகுந்தனுடைய செங்கோலும் ஆணையுநடக்குமாறு செய்தனர்.—எ-று.

கருமுதிர்கின்றகாமர்கற்பகவல்லியன்னு
ளொரிகிளரங்கிவன்மனென்பதோர்குமரன்றன்னை
யரியதோர்தவத்தின்சீராலளித்தனளதனைக்கண்டு
பெரிதுளமகிழ்ந்துமன்னன்பேரரசாட்சிசெய்தான்.

(இ-ள்.) சூல் முதிர்ந்த அழகிய காமவல்லிபோன்ற சித்திரவல்லி ஒளி விளங்கும் அக்கினிவன்மனென்னும் ஒரு குமாரனை அருமையான தவத்தின் சிறப்பாற்பெற்றனள் அங்ஙனம் பெற்றதனைப்பார்த்து மிகவும் உள்ளமகிழ்ந்து முசுகுந்த மன்னன் பெரிய அரசாட்சி செய்தனன்.—எ-று. (சஅ)

வேறு.

அன்னகாலையில்வலாசுரனெனும்பதோரவுணன்
பன்னெடும்பெருஞ்சேனையுந்தானுமாய்ப்படர்ந்து
பொன்னினாட்டினைச்சுற்றியேயடர்த்தலும்புலவோர்
மன்னர்மன்னவனவனுடன்சிலபகன்மலைந்தான்.

(இ-ள்.) அப்பொழுது வலாசுரனென்னு மொரசுரன் பலநெடிய பெரியசேனைகளுந் தானுமாகச்சென்று சுவர்க்கநாட்டைச்சூழ்ந்து போர்புரிதலும் தேவர்க்கரசனுன இந்திரன் அவனுடன் சிலதினம் போர்புரிந்தான்.—எ-று. (சகூ)

நிருதர்போற்றியவலாசுரன்றன்னோடுநேர்ந்து
பொருதுவென்றிலனுதலாற்பூதலம்புரக்குங்
குருதிவேற்படைமுசுகுந்தமன்னனைக்கூவி
வருதியென்றொருதூதனைவிடுத்தனன்மகவான்.

(இ-ள்.) நிருதர்களாற் துதிக்கப்பட்ட வலாசுரனுடனே யெதிர்த்துப் பொருது வென்றிலன் ஆதலாற் பூமியையாளுகின்ற இரத்தந்தோய்ந்த வேற்படையினையுடைய முசுகுந்த மன்னனைப் படைத்துணைக்காகவழைத்து வருதியென்றொரு தூதனை இந்திரன் பூவுலகத்துக்கனுப்பினுன்.—எ-று. (ரு0)

ஏயதூதுவனிருநிலம்புக்கனனிமையோர்
நாயகன்பணியுணாத்தலுநன்றெனவினவி
மாயிருந்திறல்வீரர்தம்படையொடும்வான்மேற்
போயினுன்முசுகுந்தனென்றுரைபெறும்புகழோன்.

(இ-ள்.) அனுப்பிய தூதுவன் பெரிய பூமியையடைந்து முசுகுந்தனென்றுரைக்கும் புகழினையுடைய மன்னனுக்குத் தேவராசனுடைய கட்டளையைக் கூறியவுடனே அவன் நல்லதென்று அதனைக்கேட்டு மிகவுமதிகமான வன்மையினையுடைய வீரவாகுதேவன் முதலிய சேனைவீரருடன் புகழினையுடைய மன்னன் சுவர்க்கத்துக்குச் சென்றான்.—எ-று. (ருக)

போனமன்னவன்புரந்தரன்பொன்னடிவணங்கித்
தானைவிண்ணவர்க்கதிபனுந்தலைமையைத்தாங்கி
மானினங்கண்மேன்மடங்கல்சென்றெனவல்லவுணர்
சேனையங்கடல்யாவையுமிமைப்பினிற்செறுத்தான்.

(இ ள்.) சுவர்க்கத்துக்குச் சென்ற முசுகுந்தமன்னன் இந்திரனுடைய பொன்னடியைவணங்கித் தேவசேனைக் கதிபனாகவிருக்குந் தலைமையைக் கைக்கொண்டு மானின் கூட்டத்தின்மேல் சிங்கஞ் சென்றாற்போல சென்று வலிய அசுரரின் சேனைக் கடல் முற்றிலும் இமைப்பொழுதினி லழித்தனன்.—எ-று. (ருஉ)

சுற்றுநிற்புறமவுணராஞ்சூழ்பெரும்பௌவம்
வற்றுகின்றுழிவலாசுரன்றன்னொடுமகவான்
செற்றநீரொடுசில்பகனின்றுபோர்செய்து
கொற்றமார்குலிசத்தினாலவனுயிர்குடித்தான்.

(இ-ள்) சுற்றிலுநின்ற அசுரர்களாகிய சூழ்ந்தபெருங்கடல் வற்றுங்காலத்து வலாசுரனுடன் இந்திரன் கோபத்தன்மையுடன் சிலதினநின்று பொருதுவெற்றிபொருந்திய வச்சிராயுதத்தால் அவனுயிரைக்குடித்தனன்.—எ-று. (ருங)

மன்னுதொல்புகழ்வலனுயிர்கோறலால்வலாரி
யென்னவோர்பெயர்பெற்றனன்வாகையுமெய்திக்
கொன்னுனைப்படைமுசுகுந்தவேந்தனைக்கொண்டு
பொன்னகர்த்திருக்கோயிலிற்புரந்தரன்புகுந்தான்.

(இ-ள்.) நிலைபெற்ற புகழினையுடைய வலனுயிரை அழித்தமையால் வலாரி என்னும் பெயரினையும் அடைந்தனன் வெற்றியுமடைந்துகொலையினை நுதியினிலுடைய படையேந்திய முசுகுந்தமன்னனை உடன்கொண்டு சுவர்க்கநகரத்திலுள்ள அழகிய தனது மாளிகையில் இந்திரன் புகுந்தான்.—எ-று. (ருச)

காய்ந்தமாற்றலர்தம்வலிகடந்தெனைக்ககன
வேந்தனாக்கினைவீரமுமேதகுபுகழு
மீந்தெனக்குநற்றுணைவனுமாயினையிதனு
லாந்தரங்கமாஞ்சுற்றநீயல்லையோவென்றான்.

(இ-ள்.) சீறிப்பொருத பகைவர் வன்மையைக்கடந்து என்னைவிண்ணுக்கரசனாக்கினாய் வீரத்தினையும மேன்மைவாய்ந்த புகழினையும் எனக்குத்தந்து எனக்கு நல்ல துணைவனுமாயினாய் இதனால் எனக்கு அந்தரங்கமான உறவினன் நீயன்றோ என்று கூறினான்.—எ-று. (ருரு)

என்றுமன்னனைநோக்கியேமுகமன்களியம்பிக்
குன்றுபோலுயர்தன்பெருங்கோயிலுட்கொடுபோய்
மன்றன்மாண்புனலாடியேமணிக்கலைபுனைந்து
சென்றுமாறொழுந்தேவனைப்பூசனைசெய்தான்.

(இ-ள்) என்றிவ்வாறு முசுகுந்த மன்னனைப்பார்த்து முகமன்கூறி மலைபோலுயர்ந்த தனது பெரிய கோயிலுட்கொண்டுசென்று மணந்தங்கிய மாட்சிமையான

நீரின் முழுகி அழகிய வாடையணிந்து சென்று திருமால் வணங்கு மகாதேவனைப்பூசை செய்தனன்.—எ-று. (ருகூ)

எயிலையங்கெரியூட்டியகண்ணுதலிமைய
மயிலுமைந்தனுமொருபுடைமகிழ்வுடன்மேவக்
கயிலையின்கணேயமர்தல்போலிருத்தலுங்கண்டான்
பயிலுமமன்புடைமன்னவன்பரவசமானான்.

(இ-ள்.) அவ்விடத்தில் மும்மதில்களைத் தீயிட்டழித்த சிவபெருமான் பார்வதிதேவியும் குமாரக்கடவுளு மொருபுறத்திலிருக்கக் கைலாயத்தி லெழுந்தருளி யிருப்பதுபோல இருத்தலுந்தரிசித்து உழுவலன்புடைய முசுகுந்தமன்னவன் தன்னிலைமறந்து நின்றனன்.—எ-று. (ருஎ)

ஆடினான்றொழுதேத்தினனடிகளைமுடிமேற்
சூடினானுளமுருகினன்றுள்ளினான்சுருதி
பாடினான்கரங்கொட்டினான்பகரொணுவுவகை
கூடினான்மொழிகுழறினன்பொடிப்புமெய்கொண்டான்.

(இ-ள்.) ஆடினன் தொழுது துதித்துத்திருவடிகளை முடிமீதுசூடி உள்ளமுருகித்துள்ளி வேதகீதம்பாடிக்கரங்கொட்டி உரைத்தற்கரிய சந்தோஷமடைந்து மொழி குழறிஉடலிற்புளம் போர்த்தவனானான்.—எ-று. (ருஅ)

சிறந்தவெள்ளியங்கிரியின்மேற்கண்ணுதற்செல்வ
னுறைந்தவிப்பெருங்கோலத்தைக்கண்டுகண்டுளத்தே
நிறைந்தமாமகிழ்வெய்தியேயிருந்தனனெடுநாண்
மறந்தனன்கொலோபிறப்பினான்மயங்கியேயென்றான்.

(இ-ள்.) சிறப்புவாய்ந்த திருக்கயிலை மலையில் நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமான் எழுந்தருளி இருந்த இந்தப்பெரிய கோலத்தினைத் தரிசித்து உள்ளத்தின் நிறைந்த மிக்கமகிழ்வெய்தி நெடுநாளங்கிருந்தனன் இப்பொழுது மனிதப்பிறப்பினான் மயங்கி மறந்திருந்தேனே என்றுகூறினான்.—எ-று. (ருகூ)

ஓவிலாமலேயொருபொருள்போற்றுவானுன்னி
மேவுகின்றவனவசமாய்விழிதுயின்றதுபோன்
மாவின்மாமுகம்வாங்கியுமயங்கியமன்னன்
றேவதேவனைநோக்கியேதொழுதிவைசெப்பும்.

(இ-ள்.) மனிதப்பிறவியிலும் ஓய்வின்றி அவ்வொப்பற்ற பரம்பொருளைத் துதிப்பான் நினைத்து நின்றவன் அவசமுற்றுக் கண்ணுறங்கினவனைப்போல மறவாமைக்காகக் குரங்கின் முகத்தினைப்பெற்றும் மயங்கிய முசுகுந்தன் தேவதேவனை வணங்கி இவைகளை யுரைக்கின்றான்.—எ-று. (சு0)

ஏகனேபோற்றியார்க்குமீசனேபோற்றியம்மை
பாகனேபோற்றிமேலாம்பரஞ்சுடருருவேபோற்றி
மேகமார்களனேபோற்றிவிடைமிசைவருவாய்போற்றி
மோகமார்தக்கன்வேள்விமுடித்திடுமுதல்வாபோற்றி.

(இ-ள்.) ஏகனே நமஸ்காரம் அனைவருக்கு மீசனே நமஸ்காரம் உமாபங்கனே நமஸ்காரம் உயர்ந்த பரஞ்சுடருருவனே நமஸ்காரம், மேகவன்னமான கரிய விடந்தங்கிய கண்டத்தினையுடையாய் நமஸ்காரம் இடபத்தின்மீது எழுந்தருளுவாய் நமஸ்காரம் மோகம்பொருந்தின தக்கனுடைய யாகத்தினையழித்த முதல்வனே நமஸ்காரம்,

அம்புயாசனன்மாலின்னுமளப்பருந்திறத்தாய்போற்றி
நம்பனேபோற்றியெங்களுதனேபோற்றிகோதில்
செம்பொனேமணியேபோற்றிசிவபெருமானேபோற்றி
யெம்பிரான்போற்றிமுக்கணிறைவனேபோற்றிபோற்றி

(இ-ள்.) பிரமனும் மாயோனும் இன்னமளந்தறிதற்கரிய தன்மையினை யுடையாய் நமஸ்காரம் எங்கள் நாதனே நமஸ்காரம் குற்றமற்ற செம்பொனே நமஸ்காரம் மணியே நமஸ்காரம் சிவபெருமானே நமஸ்காரம் எம்பெருமானே நமஸ்காரம் திரிலோசன கர்த்தாவே நமஸ்காரம்.—எ-று. (சுஉ)

பொங்கராவணிகளாகப்புனைதருபுனிதாபோற்றி
யங்கராகத்திற்பூதியணிந்திடுமாதிபோறறி
வெங்கராசலத்தின்வன்றோல்வியன்புயம்போர்த்தாய்போற்றி
சங்கராபரமாபோற்றிதாணுவேபோற்றிபோற்றி.

(இ-ள்.) சீறும் பாம்புகளை ஆபரணமாகவணிந்த புனிதனே நமஸ்காரம்பூசும் பரிமள திரவியத்தைப்போல விபூதியையணிந்த ஆதியே நமஸ்காரம் வெவ்வியகர மலையானயானையின் வலியதோலினைப்பெரியதோளிற் போர்த்தினாய் நமஸ்காரம் சங்கரனே நமஸ்காரம் பரமனே நமஸ்காரம் தாணுவே நமஸ்காரம் நமஸ்காரம்.?—எ-று.

முன்னெனும்பொருளுக்கெல்லாமுன்னவாபோற்றிமுப்பான்
மன்னுயிர்க்குயிரேபோற்றிமறைகளின்முடிவேபோற்றி
யென்னைமுன்வலிந்தாட்கொண்டேயிருநிலம்விடுத்தாய்போற்றி
நின்னுருக்காட்டியென்னைநினைப்பித்தநித்தாபோற்றி.

(இ-ள்.) முன்னான வஸ்துவுக்கெல்லா முன்னானவனே நமஸ்காரம் மூவகையான வுயிருக்குயிரேநமஸ்காரம் வேதங்களின் முடிவாயுள்ளவனேநமஸ்காரம் என்னை முன்னே வலிந்தாட்கொண்டு பெரியபூமியில் விடுத்தாய் நமஸ்காரம் நின துருவினைக் காட்டி யென்னை நினைப்பித்த நித்தனேநமஸ்காரம் —எ-று. (சுச)

எவ்வெவர்தம்மையேனும்யாவரேயெனினும்போற்றி
னவ்வவரிடமாக்கொண்டேயவர்க்கருடருவாய்போற்றி
மெய்வருதெளிவினுன்னைவெளிப்படபுணர்ந்துளோர்க்குத்
தெய்வதபோகமுத்திசிறப்பொடுதருவாய்போற்றி.

(இ-ள்.) எத்தகையோரையேனும் எவரையாயினும் காத்து அவரவரிடமாக நின்று அவர்களுக்கருள் கொடுப்போய் நமஸ்காரம் உண்மையைக்காட்டுந் தெளிவினாலுன்னை வெளிப்பட அறிந்தவர்க்குத் தெய்வபோகமும் முத்தியுஞ்சிறப்புடன் அளிப்போய் நமஸ்காரம்.—எ-று. (சுரு)

அம்புயமலர்மேலண்ணலச்சுதனாதிவானோர்
தம்பதமெமக்குநல்குந்தற்பராவென்றேயாரு
நம்புறுபொருட்டால்வேதநவின்றிடவடைந்தோர்க்கெல்லா
வும்பர்தம்பதமுமீயுமுலகுடைமுதல்வாபோற்றி.

(இ-ள்.) கமலமலரிலிருக்கும் பெருமையிற்சிறந்த பிரமனும் அச்சுதனுமுதலிய தேவர்களின் பதங்களை எங்களுக்குக் கொடுக்கின்ற தற்பரனேயென்று யாரும் நம்பும் வண்ணமாக வேதங்கூற அடைந்தவருக்கெலாம் தேவர்பதவிகளையும் அளிக்கின்ற உலகுடை முதல்வனே நமஸ்காரம்.—எ-று. (சுசு)

உறைதருமமரர்யாருமுழையராய்ச்சூழநாப்பண்
மறைபயில்பெரியோருற்றுவழிபடவிருந்தாய்போற்றி

யறுவகையைந்துமாறுமாகியவரைப்பின்மேலா
மிறைவனேபோற்றிபோற்றியென்பிழைபொறுத்தியென்றான்.

(இ-ள்.) பதவிகளிலிருக்குந் தேவரெல்லாம் அனுக்கராய்ச் சூழ்ந்துநிற்கவும் வேதமுணர்ந்த பெரியவர்கள் அடைந்து வணங்கவும் இருந்தாய் நமஸ்காரம் முப்பத்தாறு தத்துவங்கட்கு மேலாயுள்ள இடத்திலெழுந்தருளி இருக்கும் இறைவனே நமஸ்காரம் நமஸ்காரம் எனது பிழையைப் பொறுத்தியென்று கூறினான்.—எ-று. (சுஎ)

இவைமுசுகுந்தன்கூறவெம்பிரான்கருணைசெய்தே
யவன்முகந்தன்னைநோக்கியாழியானளப்பில்கால
முவகையால்வழிபாடாற்றியும்பர்கோனிடத்தில்வைத்தான்
புவியினிற்கொடுபோய்நம்மைப்பூசனைபுரிதியென்றான்.

(இ-ள்.) இவைகளை முசுகுந்தன் கூறித் துதிக்க எம்பெருமான் கருணைசெய்து அவன்முகத்தினைப்பார்த்து மன்னனே எம்மைச் சக்கரப்படையினையுடைய மாயோன் அளவற்றகாலம் மனமகிழ்ச்சியாற் பூசித்துத் தேவராசனிடத்தில் வைத்தனன் நீ நம்மைப் பூமியிற்கொண்டு சென்று பூசனைசெய்தி என்றருளிச் செய்தனன்.

என்றிவைமுக்கண்மூர்த்தியிந்திரன்கேளாவண்ண
நன்றருள்புரிதலோடுநனிபெருமகிழ்ச்சியெய்தி
யுன்றிருவுளமீதாயினுய்ந்தனனடியேனென்று
வென்றிகொண்மன்னர்மன்னன்விம்மிதனாகியுற்றான்.

(இ-ள்.) என்று இவைகளைச் சிவபெருமான் இந்திரன் கேளாத வண்ணம் செவ்வனே உரைத்தருளுதலும் அது கேட்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்து உனது திருவுள மிதுவானால் அடியேன் உய்ந்தேனென்று வெற்றி பொருந்திய அரசர்க்கரசனான முசுகுந்தன் ஆச்சரியமடைந்து நின்றனன்.—எ-று. (சுகூ)

இந்திரனமலன்பூசையிவ்வழிமுடித்தபின்னர்ச்
செந்தழலோம்பியேனைச்செய்கடன்புரிந்துவேறோர்
மந்திரம்புகுந்துதேனுவருகெனவல்லைகூவி
வெந்திறன்மன்னற்கந்நாள்விருந்துசெய்வித்தானன்றே.

(இ-ள்.) சிவபெருமானுடைய பூசையை இந்திரனிவ்வண்ணஞ் செய்துமுடித்தவுடனே அக்கினிகாரியஞ்செய்து மற்றைச்செய் கடன்களையுஞ் செய்து மற்றொரு மாளிகையையடைந்து காமதேனுவினை வருகஎன்று விரைந்தழைத்து மிக்க வெற்றியினையுடைய முசுகுந்த மன்னனுக்கு அந்நாளில் விருந்துசெய்வித்தனன். (எO)

விருந்துசெய்வித்தபின்னர்விசித்திரக்கலையும்பூணுந்
தெரிந்திடுமணியுமுத்துந்தெய்வதப்படையுமற்றும்
பரிந்துடனுதவியின்னும்வேண்டுவபகர்தியென்னப்
புரந்தரனுரைத்தலோடும்புரவலனிதனைச்சொல்வான்.

(இ-ள்.) விருந்துசெய்வித்த பின்னர் விசித்திரமான ஆடையும் ஆபரணமும் விளங்காநின்ற மணிகளும் முத்துக்களும் தேவாத்திரங்களும் இன்னமுள்ளவைகளும் விரும்பியளித்து இன்னம் வேண்டுவனவற்றை உரைத்தியென்றுகூற முசுகுந்தனிதனையுரைக்கின்றான்.—எ-று. (எக)

ஏவருந்தெரிதறேற்றாத்திருந்திடுமிமையாமுக்கட்
பாவையோர்பாகன்றன்னைப்பரிவொடுகொடுத்தியைய
பூவுலகதனின்யான்போய்ப்பூசனைபுரிதற்கென்னத்
தேவர்கண்முதல்வன்கேளாவினையனசெப்பலுற்றான்.

(இ-ள்.) எவராலுமுணர்தற்குக் கூடாதிருக்கின்ற இமையாத முக்கண்களையுடைய அர்த்தநாரீசனை ஐயனே விருப்பத்துடன் அளித்தி, பூவுலகத்தில் யான்சென்று பூசை செய்தற்கு என்று கேட்க இதனைத் தேவராசன் கேட்டு இவைகளை யுரைத்தனன்.—எ-று. (எஉ)

உந்தியாலுலகைத்தந்தவொருதனிமுதல்வன்முன்னை
மைந்தர்தாமின்மையாலேமன்னுயிர்த்தொகுதிக்கெல்லாந்
தந்தையாயிருந்ததங்கோன்சரணமேயரணமென்னுச்
சிந்தைசெய்தூழிகாலஞ்செய்தவமியற்றியிட்டான்.

(இ-ள்.) தனதுநாபிக்கமலத்தின்வழியாக உலகினைப்படைத்த ஒருதனிமுதல்வனை மாயோன் முன்னர்மைந்தரின்மையால் உயிர்த்தொகுதியனைத்துக்குந் தந்தையாயிருந்த தனது தலைவனை சிவபெருமானுடைய சரணமேகதியென்று நினைத்து வெகுகாலந் தவஞ்செய்தனன்.—எ-று. (எங)

தவமுழந்திருந்தகாலைச்சாரதப்புணரிசுற்றக்
கவுரியுந்தானுமையன்கருணையால்வந்துதோன்றப்
புவிதனையளந்தமாயோன்பொள்ளெனவெழுந்துபோற்றிச்
சிவனடிவணக்கஞ்செய்துசெங்கையாற்றொழுதுநின்றான்.

(இ-ள்.) தவஞ்செய்திருந்த சமயத்தில் பூதகணக்கடல்சூழ உமாதேவியாருந் தானுமாக விறைவன் கருணையாலெழுந்தருள உலகினையளந்த மாயவன்விரைந்தெழுந்து துதித்துச் சிவபெருமான் திருவடிகளை வணங்கிச் செவ்வியகைகளால் தொழுது நின்றனன்.—எ-று. (எச)

வேறு.

மாதொருபாகன்மகிழ்ந்தருள்செய்து
நீதவமாற்றிநெடும்பகனின்று
யேதிவண்வேண்டுமியம்புதியென்னச்
சீதரனின்னனசெப்புதலுற்றான்.

(இ-ள்.) உமையையொருபுறத்திலுடைய சிவபெருமான் மகிழ்ந்தருள்புரிந்து நீ வெகுகாலந் தவஞ்செய்திருந்தனை உனக்கிங் கென்னைவேண்டும் சொல் என்னஅதற்குத் திருமாலிவைகளை யுரைக்கத்தொடங்கினன்.—எ-று. (எரு)

அந்தமிலாயுவுமாருயிர்காப்புஞ்
செந்திருவோடுறைசெல்வமுமீந்தாய்
மைந்தனிலாமல்வருந்தினனெந்தாய்.
தந்தருளாய்தமியேற்கினியென்றான்.

(இ-ள்.) அழிவற்ற ஆயுளும் அரிய உயிர்களை ரட்சித்தலும் செந்திருவுடனுறையுஞ் செல்வமும் அளித்தனை. பிள்ளையின்றி வருந்துகின்றேன் எந்தையே அடியேனுக்கு இனிப்பிள்ளை வரமளித்தருள் என்றனன்.—எ-று. (எசு)

குன்றினையாற்றிடுகோனிவைசெப்ப
நன்றெனவேநகையாநவையில்லா
வொன்றொருசெம்மலுனக்குதவுற்று
மென்றருள்செய்தனன்யாரினுமேலோன்.

(இ-ள்.) மலையைக்குடையாக வேந்தியமாயோனிதனையுரைத்தலும் யாரினுமேலோனை சிவபெருமான் நன்றென்று நகைத்துக் குற்றமற்ற வொராண்மகனை யுனக்களித்தோமென்றருள் செய்தனன்.—எ-று. (எஎ)

கழையிசைபோற்றுகருங்கடல்வண்ணன்
முழுதுலகின்றிடுமுற்றிழைபாதந்
தொழுதிலனின்றுதுதித்திலனன்பால்
வழிபடுநீரின்வணங்கிலன்மாதோ.

(இ-ள்.) வேய்ங் குழலி விசைவா ஆதிய கரியகடல்வண்ணனுன மாயோன் உலகமுழுதுமளித்த உமாதேவியின் பாதங்களை வணங்கிலன் எதிரில் நின்று துதிக்கவுஞ் செய்திலன். அன்பினுல் வழிபடுந்தன்மையில் வணங்கினனலன்.—எ-று. (எஅ)

வேறு.

முறையினுற்றனக்கிளையவளென்றேமுன்னினன்கொலோமூலமுநடுவு
மிறுதியும்மிலாப்பரமனுக்கெம்போலிவளுமோர்சத்தியெனநினைந்தனனோ
மறுவிலாமலைமகளெனவுளத்தேமதித்தனன்கொலோமாயவன்கருத்தை
யறிகிலேமுமையம்மைபாற்சிறிதுமன்புசெய்திலன்முன்புசெய்வினையால்

(இ-ள்.) முன்செய்தவினையால் மாயவன் முறையால் தனக்கிளையவளென்று மதித்தானே ஆதிமத்தியாந்தரகிதனுன பரமனுக்கு எம்மைப்போலிவளுமொரு சத்தியென நினைத்தானே குற்றமற்ற மலையரையனுக்கு மகளென்று மதித்தானேமாயவன் கருத்தினை அறிகிலேம் உமாதேவியினிடஞ் சிறிதுமன்பு செய்திலன்.—எ-று. (எகூ)

ஆன்றவைம்புலனொருவழிப்படுத்தியார்வம்வேரறுத்தையமொன்றின்றி
யூன்றிரிந்திடினுந்நிலைதிரியாவுண்மையேபிடித்துலகங்கண்முழுது
மீன்றவெம்பெருமாட்டியைநீக்கியெம்பிரானையேவழிபடுமியற்கை
மூன்றுதாளுடையொருவனுக்கல்லாலேனையோர்களான்முடியுமோமுடியா.

(இ-ள்.) மிக்கஐம்புலன்களை ஒருவழிப்படுத்தி ஆசையை வேரறுத்துச் சந்தேகமில்லாமல் மாங்கிசம் தன்னுடலைவிட்டுப் பிரியினும் தன்னிலைமாறுபடாத உண்மையைக்கடைப்பிடித்து உலகனைத்தினையும்பெற்ற எம்பெருமாட்டியைநீக்கி எம்பெருமானை வழிபடுந்தன்மை மூன்றுகால்களையுடைய ஒப்பற்றபிருங்கி இருடிக்கன்றியேனையோர்களான் முடியுமோ முடியாது.—எ-று. (அ0)

அன்னகாலையிலெம்பெருமாட்டியாழியம்படையண்ணலைநோக்கி
யென்னைநீயிவணவமதித்தனையாலெம்பிராற்குநீயன்புளனன்றுன்
முன்னநீபெறுமதலையுமையன்முனிவினுல்லையின்முடிந்திடவென்னுப்
பன்னருங்கொடுமொழிதனையியம்பிப்பராபரன்றனைநோக்கியேபகர்வாள்.

(இ-ள்.) அப்பொழுது எம்பெருமாட்டி சக்கரப்படையினையுடைய மாயோனைப்பார்த்து என்னை நீஇங்கு அவமதித்தனை எம்பெருமானுக்கு நீஅன்புள்ளவனல்லை நீ முன்னம் பெறும்பிள்ளையும் இவ்விறைவன் கோபத்தால் விரைவிலழிகவென்றுஉரைத்தற்கரிய சாபமொழியினைக் கூறிப்பராபரனைப் பார்த்துரைக்கின்றாள்—எ-று. (அக)

ஆனதோர்பரப்பிரமமும்யானேயல்லதில்லையென்றறிவிலாப்பேதை
மானுடப்பெரும்பசுக்களையெல்லாமருட்டிடுபேதிரிவஞ்சகன்முன்ன
ஞானநீரினுரறிவினுலன்றிநணுகுறுதநீயனுகிநிற்பதுவோ
வூனுலாவியவுயிரினுக்குயிராமொருவசெல்லுதும்வருகெனவுரைத்தாள்.

(இ-ள்.) ஒப்பற்ற பரப்பிரமமும் என்னையன்றியில்லையென்று அறிவற்ற பேதைகளான மானுடப்பெரும் பசுக்களை மருட்டித்திரிகின்ற வஞ்சகனெதிரே ஞான இலக்கணமுணர்ந்தாரின் அறிவினுலன்றி அறியப்படாத நீ அடைந்து நிற்பதுவோ? ஊனுடலிற் பொருந்திய உயிருக்குயிராகிய ஒப்பற்றேய் போவோம் வருதிஎன்று கூறினுள்.

இன்னவாறுரைத்தெம்பெருமாட்டியெம்பிரான்றனைக்கொண்டுபோமளவி
லன்னதன்மைகண்டச்சுதக்கடவுளலக்கணெய்தியெயச்சமுற்றயர்ந்து
தன்னுளந்தடுமாறிமெய்பனித்துத்தளர்ந்துநேமியந்தண்கரைக்கணித்தாய்
மன்னுபல்பொருட்கலந்தனைக்கவிழ்த்தவணிகனுமெனவருந்தினன்மாதோ.

(இ-ள்.) இவ்வாறு கூறி எம்பெருமாட்டி எம்பெருமானை யழைத்துடன்கொண்டு செல்லும்பொழுது அத்தன்மையைப்பார்த்து அச்சுதக்கடவுள் துன்பமடைந்து அச்சமெய்தி அயர்ந்து நிரம்பிய பல பொருள்களையுடைய கப்பலைக் கடலின் தண்ணிய கரையின் சமீபத்திற் கவிழவிட்ட வணிகனைப்போல வருந்தினான்.—எ-று. (அங)

அம்மைதன்பொருட்டாலிடையூறிங்கடைந்ததென்றுபாகைந்தனிலுன்னி
யெம்மையாளுடையிறையவன்றனையுமிறைவிதன்னையுமிளங்குமரனையு
மெய்மைசேர்வடிவாகவாங்கமைத்துவேதவாகமவிதிமுறைவழாமற்
பொய்மைதீர்ந்திடுமன்பினாற்பூசைபுரிந்துபின்னரும்வருந்தியேநோற்றான்.

(இ-ள்.) உமாதேவியாரை வணங்காமை காரணமாக இங்கிடையூறுண்டாகியதென்று திருமாலுள்ளில் நினைத்து எம்மையாளாகவுடைய இறைவனையும் இறைவிதன்னையும் இளமைவாய்ந்த குமாரவேளையும் மெய்ம்மையான உருவமாகப் பிரதிட்டித்து வேதாகமவிதி முறைகளில் வழுவாமல் உண்மையான அன்புடன் பூசைசெய்து பின்னரும் வருந்தி நோற்றனன்.—எ-று. (அச)

அனையதன்மையாலாண்டுபல்லாயிரகோடி
புனிதனாகியேநோற்றனனதுகண்டுபுழுங்கி
முனிவராயுளோரின்னமும்வருகிலன்முதல்வ
னினியருந்தவஞ்செய்பவரில்லையாலென்றார்.

(இ-ள்.) அவ்விதமாகப் பல்லாயிரங்கோடி வருடம் புனிதனாக நோற்றனன் அதனைக்கண்டு வருந்தி முனிவராயுள்ளவர்கள் இன்னமுமிறைவன்வந்திலன் ஆதலினினி இறைவனெழுந்தருளி வரமளிப்பானென வரியதவஞ்செய்வோரிலர் என்றனர்.

அந்தவெல்லையிற்சத்தியுஞ்சிவமுமாயனைத்தும்
வந்திடும்பரிசளித்தவரிருவரும்வரலுஞ்
சிந்தையின்மகிழ்வெய்தியேயம்மைசேவடியின்
முந்தியோடியேவணங்கினன்முழுதொருங்குணர்ந்தோன்.

(இ-ள்.) அப்பொழுது சத்தியும் சிவமுமாய் அனைத்துமுண்டாமாறு செய்தவர்களான சிவபெருமானும் உமாதேவியும் எழுந்தருளுதலும் மனத்தின் மகிழ்வுற்று முழுதும் ஒருங்கே யுணர்ந்த மாயோன் அம்மையின் திருவடியில் முன்னரோடிச் சென்று வணங்கினன்.—எ-று. (அரு)

இறைவிதாண்மலர்பணிந்தபின்னெம்பிரான்பதமு
முறையினாற்பணிந்திருவர்தஞ்சீர்த்திகண்முழுது
மறையின்வாய்மையாற்பன்முறையால்வழுத்துதலு
நிறையுநல்லருள்புரிந்தனன்றனக்குநேரிலாதான்.

(இ-ள்.) உமாதேவியின் திருவடிகளை வணங்கிய பின்னர் எம்பெருமானுடைய திருவடிகளையும் முறையினால் வணங்கி அவ்விருவரின் சீர்த்திகள் முற்றிலும் வேதவசனத்தாற் பலமுறை துதித்தலும் ஒப்பற்ற சிவபெருமான் பூரணமான நல்லருளைச் செய்தனன்.—எ-று. (அசு)

மாதுநீயிவற்கருள்புரியென்னவம்மாது
சீதரன்றனைநோக்கியேநம்பெருந்தேவ

னேதும்வாய்மையும்யான்முனிந்துரைத்திடுமுரையும்
பேதியாவினியாவரேயன்னவைபெயர்ப்பார்.

(இ-ள்.) மாதேநீ இவனுக்கருள்செய் என்றவுடனே அவ்வுமாதேவி சிதரனை ப்பார்த்து நமது பெரிய தேவனான சிவபெருமானுரைத்த உண்மை மொழியும் யாம் கோபித்துரைத்த சாபமொழியும் விலகா இனியெவ ரவைகளை நீக்குவோர்.—எ-று.

எங்கணாயகன்விழிபொழியங்கியாலிறந்து
துங்கமேன்மைபோய்ப்பின்முறைமுன்புபோற்றோன்றி
யுங்குன்மாமகனிருக்கவென்றுரைத்தனளுமையா
ளங்கதாகவென்றருளியேமறைந்தனனையன்.

(இ-ள்.) எங்கள் நாயகனுடைய விழிபொழியும் நெருப்பினாலிறந்து உயர்ந்த மேன்மையொழிந்து பின்னர் முன்னர்ப்போல தோன்றி இங்கு உளது சிறந்த மகன் இருக்க என்றுமையாள் அருளிச்செய்தனள் அவ்வாறே யாகுகவென்று கூறிச் சிவபெருமானும் மறைந்தனன்.—எ-று. (அகூ)

அம்மைதன்னுடனெம்பிரான்மறைதலுமண்ணல்
விம்மிதத்தொடுதன்பதிபுகுந்துவீற்றிருப்ப
மைம்மலிந்திடுமெய்யுடைக்காமவேள்வாரா
விம்மெனக்கடிதுதித்தனனவன்மனத்திடையே.

(இ-ள்.) உமாதேவியாருடன் எம்பெருமான் மறைந்தவுடனே திருமால் ஆச்சரியத்துடன் தனது நகரியையடைந்திருக்கக் கருநிறமிக்க காமவேள் விரைவாக வம்மாயோனுள்ளத்தினின்றும் தோன்றினன்.—எ-று. (கூO)

வேறு.

வந்திடுங்காமவேள்வடிவுடைக்காளையாய்க்
கந்தமார்பூங்கணைகன்னல்விற்கைகொடே
மைந்தராஞேர்களுமாதருங்காமமேற்
புந்திவைத்திடும்வகைபோர்புரிந்துலவினன்.

(இ-ள்) அங்ஙனம்வந்த மன்மதன் வடிவமைந்த காளையாகிமணம்பொருந்திய மலர்க்கணைகளையும் கரும்பு வில்லினையுங் கையிலேந்திப் புருடர்களும் பெண்களும் காமத்திற் புத்திசெலுத்துமாறு போர்செய்துலாவினன்.—எ-று. (கூக)

தண்ணிழற்குடையெனச்சசிபடைத்துடையவ
னெண்ணமற்றொருபகல்யார்க்குமேலாகிய
கண்ணுதற்பகவன்மேற்கணைமலர்சிதறியே
துண்ணெனத்துகளதாய்த்தொலைதலுற்றனரோ.

(இ-ள்.) தண்ணிய நிழலையளிக்குங் குடையாகச் சந்திரனைப்பெற்றுள்ள வம்மன் மதன் ஆலோசனையின்றி யொருதினம் எவர்க்கு மேலான கண்ணுதற் பரமன் மீது மலர்க்கணைவிடுத்துத் திடீரென்று துகளாகி மடிந்தனன்.—எ-று. (கூஉ)

பூழியாய்மாண்டுளான்பொருவிலாநல்லரு
ளாழியானணையாலருவொடேயுருவமாய்
வாழிசேர்தொல்லைநாள்வளனொடுமென்னினன்
சூழிமால்கிரிதருந்தோகைசொற்றவறுமோ.

(இ-ள்.) புழுதியாக இறந்த மன்மதன் ஒப்பற்ற அருளாழியினையுடைய சிவபெருமானுடைய கட்டளையால் அருவத்துடன் உருவமுடையவனாகிப் பழயநாட் செல்

வத்துடனிருந்தனன். சிகரங்களையுடைய பெரியமலையளித்த உமாதேவியின்சொல் தவறுமோ தவறாது.—எ-று. (கூ௩)

நிற்பமற்றித்திறநேமியான்முன்னைநா
ளற்புடன்வழிபடுமமலையைக்குமரனைத்
தற்பரக்கடவுளைத்தனதுமார்பிற்கொடே
பற்பகற்பணியின்மேற்பாற்கடற்றுஞ்சினான்.

(இ-ள்.) இச்செயல் நிற்க, சக்கரப்படையுடைய மாயோன் முன்னாளில் அன்புடன் வழிபட்ட உமாதேவியையுங் குமரக்கடவுளையும் தற்பரனை சிவபெருமானையும் தனது மார்பிற்கொண்டு பாற்கடலில் ஆதிசேடன்மீது பலதினம் நித்திரைசெய்தனன்.—எ-று. (கூ௪)

நீடவேதுயிலுமாநெட்டுயிர்ப்பசைவினாற்
பீடுசேர்நாகணைப்பேருயிர்ப்பசைவினாற்
பாடுசூழ்தெண்டிரைப்பாற்கடலசைவினா
லாடியேவைகினாரலகிலாவாடலார்.

(இ-ள்.) மிகுதியாக உறங்குமாலின் நெட்டுயிர்ப்பின் அசைவினாலும் பெருமைவாய்ந்த அரவணையின் பெருமூச்சினசைவினாலும் பக்கத்திற் சூழ்ந்த தெள்ளிய திரைகளையுடைய பாற்கடலினசைவினாலும் அசைவற்ற ஆடலினையுடைய சிவபெருமானாடிக்கொண்டிருந்தனர்.—எறு. (கூ௫)

அன்னதோரமைதியிலசுரசேனைக்கெலா
மன்னனாயுற்றுளான்வாற்கலியென்பவ
னென்னைவானவரொடுமீடழித்தமர்தனின்
முன்னைநாள்வென்றனன்முடிவிலாமொய்ம்பினால்.

(இ-ள்.) அவ்வாறு சோமாஸ்கந்தமூர்த்தி அசைந்தாடுவாரா யிருக்குங்காலத்தில் அசுரசேனைகளுக்கு அரசனாயுள்ளவனும் வாற்கலியென்னும் பெயருள்ளவனுமான ஒருவன் என்னைத் தேவர்களுடன் பொருதழித்து அழியாதவன்மையால் முன்னாளில் வென்றனன்.—எ-று. (கூ௬)

அத்திறங்கண்டுநானமரரோடேகியே
பத்துநூற்றுத்தலைப்பாந்தண்மேற்றுயில்கொளுஞ்
சுத்தனைப்போற்றியேதொழுதுவாற்கலியினா
லெய்த்தனங்காத்தியாலெம்மைநீயென்றனன்.

(இ-ள்.) அத்தன்மையைப்பார்த்த நான் தேவர்களுடன் சென்று ஆயிரந்தலைகளையுடைய அரவின்மீதுறங்குகின்ற சுத்தனை திருமாலைத்துதித்து வணங்கி வாற்கலியினால் இளைத்தோம் எங்களைக்காப்பாயாக என்று கூறினேன் எ-று. (கூ௭)

நஞ்சுபில்கெயிறுடைநாகமாம்பள்ளிமேற்
றுஞ்சும்வாலறிவினன்றுயிலைவிட்டேயெழீஇ
யஞ்சலீருங்களுக்கல்லலேயாற்றிய
வஞ்சனாருயிர்தனைவல்லையுண்டிடுதுமால்.

(இ-ள்.) விடத்தினைக் கக்குகின்ற பற்களையுடைய பாம்பாகிய சயனத்தின் மீது கண்ணுறங்குந் தூயவறிவினையுடைய மாயோன் துயிலைவிட்டெழுந்து அஞ்சன்மின் உங்களுக்குத் துன்பத்தினைச்செய்த வஞ்சகனுயிரை விரைந்தழிக்குதும்.—எ-று.

என்றுதன்கையமைத்தேதெழாடேழுலகமுண்
டன்றொராலிலையின்மேலறிதுயின்மேவிய

மன்றலந்தண்டுழாய்மாலைசூழ்மவுலியா
ஞென்றுபேரன்பினுலொன்றெனக்குரைசெய்தான்.

(இ-ள்.) என்று தனது கையினுல் அபயமளித்துப் பண்டு பதினுன்குலோகங்களையுமுண்டு, ஒரு ஆலிலையின்மீது அறிதுயிலமர்ந்த மணமுங்குளிர்ச்சியும் வாய்ந்த துளவமாலையணிந்த சிரசினையுடைய மாயோன் பொருந்திய பேரன்பினுலெனக்கொன்றுரைத்தனன்.—எ-று. (கூகூ)

பார்த்தியாலெனதெனும்பைம்பொன்மார்பத்திடை
மூர்த்தியாய்வைகியமுதல்வியைக்குமரனைத்
தீர்த்தனைப்பூசனைசெய்துநின்றீவினை
யார்த்திநீங்குதியெனுவாதரத்தருளினுன்.

(இ-ள்.) எனதாகிய பசியபொன் மார்பினில் உருவங்கொண்டிருக்கின்ற உலக முதல்வியான உமாதேவியையும் குமரக்கடவுளையும், சிவபெருமானையும் பார் இவர்களைப்பூசித்து நின்னுடைய பாவவினையாலாகுந் துன்ப நீங்குவாயாக என்று அன்புடன் கூறினுன்.—எ-று, (௬00)

அன்னவாறருள்செய்தேயனையர்மூவோரையும்
பொன்னுலாமார்பினும்பொள்ளெனவாங்கியே
யென்னதாகியகரத்தீந்தனனீதனுஞ்
சென்னிமேற்றுங்கினேன்மாதவத்திண்மையால்.

(இ-ள்.) அவ்வண்ணமுரைத்து அவர்கள் மூவர்களையும் திருமகள் தங்கிய மார்பில் நின்றும் விரைந்தெடுத்து என்னுடையகையில் அளித்தனன் அளித்தவுடனே நான்செய்த தவத்தின் வன்மையால் அவர்களைத் தலைமீது தாங்கினேன்.—எ-று. ()

வேறு.

அங்கதற்பின்மூறையாகவச்சுதன்பாற்கடலகன்று
நங்குழுவெலாஞ்சூழநாவலந்தீவகத்தணுகி
யெங்கள்பிரானருணடஞ்செய்யெல்லையிலாத்தில்லைதனிற்
றுங்கமணிமன்றுதனைத்தொழுதுபரவசமானுன்.

(இ-ள்) அதன் பின்னர் மாயோன் பாற்கடலைவிடுத்து நமது தேவர்கூட்டமனைத்துஞ் சூழ்ந்துவர நாவலந்தீவை யடைந்து எங்கள் பெருமானருள் நடனஞ் செய்கின்ற அளவற்ற தில்லையையடைந்து அங்குள்ள உயர்ந்த நடன சபாபதியின் அழகிய பொன்னம்பலத்தினை வணங்கிப் பரவசனுனன்.—எ-று. (௬0௨)

செல்லரியபரவசமாய்த்திருமுன்னேவீழ்ந்திறைஞ்சித்
தொல்லைதனிலறிவிழுந்துதூவிழிகள்புனல்பெருகப்
பல்லுயிர்க்குமுயிராகும்பரமசிவபூரணத்தி
னெல்லைதனிற்புக்கழுந்தியெழுந்திலனீரிருதிங்கள்.

(இ-ள்.) நடத்தற்குக்கூடாத பரவசமாய்த் திருமுன்னே விழுந்து வணங்கிப் பழய உணர் விழுந்து இருவிழிகளிலும் நீர்பெருகப் பலவகை உயிர்களுக்கும் உயிராகவுள்ள பரமசிவ பூரணத்தினளவிற்புகுந்து,லயித்து நான்குமாதம் எழாதுகிடந்தனன்.

இத்திறத்தாலவசமதாயீறுமுதனடுவுமிலா
வத்தனது திருவடிக்கீழடங்கியேயாணையினுன்
மெய்த்துரியங்கடந்தவுயிர்மீண்டுசாக்கிரத்தடையத்
தத்துவமெய்யுணர்ச்சியெலாந்தலைத்தலைவந்தீண்டினவால்.

(இ-ள்.) இவ்வண்ணம் அவசமெய்தி ஆதிமத்தியாந்தரகிதமான சிவபெருமானுடைய திருவடிக் கீழடங்கி இறைவனுணையால் உண்மையான துரியங்கடந்து நின்ற உயிர்திரும்பிச் சாக்கிராவத்தையை யடைதலும் தத்துவங்களின் உண்மையுணர்ச்சிகளெல்லா மவ்வவ்விடங்களில் வந்துபொருந்தின.—எ-று. (கoச)

கண்டுயில்வானெழுந்ததெனக்கதுமெனமாயோனெழுந்து
புண்டரிகப்பதந்தொழுதுபோற்றிசெய்துபுறத்தேகித்
தெண்டிரைசூழ்புவிக்கரசுசெலுத்தியவாற்கலியுடனே
மண்டுபெருஞ்சமர்செய்துவல்லைதனிலுயிருண்டான்.

(இ-ள்) தூங்குவோ னெழுந்தாற்போல மாயோன் விரைந்தெழுந்து நடராசப்பெருமானுடைய சரணகமலங்களைத் துதித்து வெளியேவந்து தெளிந்த நீரினையுடைய கடல்சூழ்ந் தவுலகி லரசுசெலுத்திய வாற்கலி யென்பவனுடனே நெருங்கிய பெரும்போர்புரிந்து விரைவிலவனுயிருண்டனன் —எ-று. (கoரு)

வாற்கலிதன்னுயிருண்டுவாகைபுனைந்தேதிருமால்
சீர்க்கருணைநெறியதனாற்றேவருக்குமென்றனக்கு
மேற்கும்வகைவிடையுதவியிம்மெனவேமறைந்தேகிப்
பாற்கடலிற்பணியணைமேற்பண்டுபோற்கண்வளர்ந்தான்.

(இ-ள்.) வாற்கலியைக்கொன்று திருமால் வெற்றிபெற்றுச் சிறந்த கருணைத் தன்மையால் தேவர்களுக்கும் எனக்கும் தக்கபடி விடையளித்து விரைந்து மறைந்து சென்று பாற்கடலில் அரவணையில் முன்னுளிற்போல கண் வளர்ந்தனன்.—எ-று.

தேவர்குழாத்தொடுமீண்டுசிறந்திடுமித்துறக்கத்தி
லாவலுடன்வந்தேயானன்றுமுதலின்றளவும்
பூவைநிறங்கொண்டபுத்தேள்பொன்மார்பில்வீற்றிருந்த
மூவரையுமருச்சித்தேன்முதுமறைநூல்விதிமுறையால்.

(இ-ள்.) யான் தேவர் கூட்டத்துடன் திரும்பிச்சிறந்த இந்தச்சுவர்க்கத்தில் விருப்பத்துடன் வந்து அன்றுமுதலின்று வரைக்கும் காயாமலரின் நிறங்கொண்ட மாயோன் மார்பிலிருந்த மூவரையும் புராதனமான வேதாகமவிதி வழுவாமல் அருச்சித்தேன்.—எ-று. (கoஎ)

மன்னர்க்குமன்னவநீவழிபடுதல்காரணமாத்
தன்னொப்பிலாதாரைத்தருகென்றாய்தந்திடுவ
தென்னிச்சையன்றேமாலிசைவுனக்குண்டாமாகிற்
பின்னைத்தந்திடுவெனெனப்பெருந்தகையோன்பேசினனால்.

(இ-ள்.) அரசர்க்கரசனே நீ பூசித்தல்காரணமாக ஒப்பற்ற இம்மூவரையுந் தருக என்றனை தருவது எனது சம்மதமன்றே மாயோன் விருப்ப முன்னிடத்துண்டாகுமானல் கொடுக்கின்றேனென்று பெருந்தகையான இந்திரனுரைத்தனன்.எ-று.

பேசுதலுமுசுக்குந்தன்பெயர்ந்துபாற்கடலிடைபோய்க்
கேசவனையடிவணங்கிக்கிட்டிநின்றுவேண்டுதலும்
வாசவன்றனிடந்தனில்வைத்திடுநம்முயிர்க்குயிரைப்
பூசனைசெய்கொடுபோந்துபூதலத்தினிடையென்றான்.

(இ-ள்.) இந்திரனிவ்வா றுரைத்தவுடனே முசுகுந்தமன்னவன் திரும்பிப்பாற்கடலுக்குச்சென்று கேசவனை அடிவணங்கி நெருங்கி நின்று தனது விருப்பத்தினைக் கூறிக்கேட்டவுடனே கேசவன் இந்திரனிடத்தில் வைத்துள்ள நமதுயிர்க்குயிரை நீ பூமியிற்கொண்டுசென்று பூசிக்கக்கடவை என்றனன்.—எ-று. (கoகூ)

நன்றெனவேயிசைவுகொண்டுநாரணனைவிடைகொண்டு
சென்றுபுரந்தரற்குரைப்பச்சிந்தைதளர்ந்தேயிரங்கி
யன்றுதனையீன்றதனிப்புனிற்றுவையகனுவதோர்
கன்றெனவேநனிபுலம்பியொருசூழ்ச்சிகருதினனால்.

(இ-ள்.) நல்லதென்று சம்மதித்து நாராயணனிடம் விடைபெற்றுச்சுவர்க்கத்துக்குச்சென்று இந்திரனுக்குரைக்க அவன் மனந்தளர்ந்து வருந்தி அந்நாளில் தன்னைப்பெற்ற தாயைவிட்டுப் பிரிவதான கன்றைப்போல மிகவும் புலம்பி ஒரு தந்திரத்தினை எண்ணினன். (கக0)

தேவர்பிரானவ்வளவிற்றெய்வதக்கம்மியன்செயலான்
மூவடிவுமூவிரண்டுமுறைவேறுவேறாக
வேவர்களும்வியப்பெய்தவிமைப்பின்முனமமைப்பித்துக்
காவலன்கைதனிற்கொடுப்பக்கைதவமென்றறிந்தனனே.

(இ-ள்.) தேவராசன் உடனே தேவதச்சனுடைய செயலால் மூன்றுருவங்களையும் ஆறுமுறை வேறுவேறாக எவரும் ஆச்சரியப்படும்வண்ணம் இமைப்பொழுதினுள் உண்டாக்கி அரசன் கரத்திலளிக்க வஞ்சனை யென்றறிந்தனன்.—எ-று. (ககக)

ஆதியில்விண்ணவர்தச்சனமைத்திடுமூவிருவடிவும்
பூதலமன்னவன்வாங்கிப்புதல்வனொடுங்கவுரியொடும்
வீதிவிடங்கப்பெருமான்மேவியதாமெனவிருந்து
மேதுமுனையாமெறியாலிவரவரன்றெனமொழிந்தான்.

(இ-ள்.) முதலில் தேவதச்சனுண்டாக்கிய ஆறு சோமாஸ்கந்த மூர்த்தங்களையும் மண்ணுலக வரசன்பெற்றுக் குமாரக்கடவுளுடனும் உமாதேவியுடனும் வீதிவிடங்கப் பெருமானெழுந்தருளியது போலிருந்தும் இவர் அவரல்லர் என்று பிறர் வேறென்றும் உரையாதவண்ணம் கூறினன்.—எ-று. (ககஉ)

துங்கமுறுமுசுகுந்தன்சொல்வினவிச்சுடராழிப்
புங்கவன்றன்மார்பமெனும்பொன்னூசலாட்டுகந்து
மங்கையொடுங்குமரனொடுமகிழ்ச்சியொடும்வீற்றிருந்த
வெங்கள்பிரானதனைக்கொடுவந்திவராமோவென்றனனே.

(இ-ள்.) உயர்ச்சிவாய்ந்த முசுகுந்தன் கூறியதனைக்கேட்டு இந்திரன் ஒளிவாய்ந்த ஆழியினையுடைய திருமாலின் மார்பமாகிய பொன்னூசலி லாடுதலைமகிழ்ந்து உமாதேவியாருடனும் குமரவேளுடனும் வீற்றிருந்த எங்கள் பெருமானைக்கொண்டு வந்து இவரோ அவர் என்று கேட்டான்.—எ-று. (ககங)

இந்திரனிவ்வாறுரைப்பவிமையாமுக்கட்பகவன்
முந்துதிறன்முசுகுந்தன்முகநோக்கிநின்பாலில்
வந்தனமாலெம்மையினிமாநிலத்திற்கொடுபோந்து
புந்திமகிழ்வாற்பூசைபுரிவாயென்றருள்செய்தான்.

(இ-ள்.) இந்திரனிவ்வாறு கூறியவுடனே இமையாதமூன்றுகண்களையுடைய சிவபெருமான் முற்பட்ட வெற்றியினையுடைய முசுகுந்தனுடைய முகத்தைப்பார்த்து நின்னிடம் வந்தேம் எம்மையினிச் சிறந்த பூமியிற்கொண்டு சென்று மனமகிழ்வுடன் பூசைசெய்வாயாக என்றருள் புரிந்தனன்.—எ-று. (ககச)

ஊழிநாயகன்மகவானுணராமேயிஃதிரைப்பக்
கேழிலாப்பேருவகைகிடைத்தினிதுபணிந்தேத்தி
யாழியான்பூசனைகொண்டமர்ந்தவராமாமிவரை
வாழியாய்தருகவெனவாங்கினன்மன்னவர்மன்னன்,

(இ-ள்.) மகாப்பிரளயத்தின் கர்த்தாவான சிவபெருமான் இந்திரனறியாமல் இதனை யருளிச்செய்ய ஒப்பற்ற பேருவகைகொண்டு செவ்வனே வணங்கித் துதித்து மாயோன் பூசையை யேற்றவரிவரே யாவர் இவரை வாழ்வினையுடையாய் தருகவென்று வாங்கினன் அரசர்க்கரசனான முசுகுந்தன். –எ-று. (ககரு)

வாங்கியபின்னிமையவர்கோன்மன்னவனைமுகநோக்கி
யீங்கிவரையறுவரொடுமிருநிலத்தினிடைகொடுபோய்ப்
பூங்கமலாலயமுதலாப்புகல்கின்றதலந்தன்னிற்
றீங்கறவேவழிபாடுசெய்தியெனவிடைகொடுத்தான்.

(இ-ள்.) பெற்றுக்கொண்டவுடனே இந்திரன் முசுகுந்தன் முகத்தைப் பார்த்து இப்பெருமானை இவ்வாறு பேர்களுடன் சிறந்த பூவுலகிற் கொண்டு சென்று அழகிய கமலாலய முதலாக உரைக்குந் தலத்தினிற் குற்றமற வழிபாடு செய்வாயாகவென்று விடைகொடுத்தனன்.—எ-று. (ககசு)

நன்றெனவேவிடைகொண்டுநானிலத்தினிடையிழிந்து
தென்றிசையாரூர்தன்னிற்சிவனுறைபூங்கோயில்புக்கு
மன்றல்கமழ்தண்டுளவோன்வழிபடவீற்றிருந்தோரை
வென்றியரியணைமீதில்விதிமுறையாற்றாபித்தான்.

(இ-ள்.) நன்றென்று விடைகொண்டு பூமியிலிறங்கிவந்து தென்றிசையிலுள்ள திருவாரூரிற் சிவபெருமானெழுந்தருளி இருக்குங்கமலாலயத்தையடைந்து மணமுங் குளிர்ச்சியும் அமைந்த தண்ணியதுளவ மாலையணிந்த விஷ்ணுமூர்த்தி பூசிக்க வெழுந்தருளி இருந்தவரை வென்றிவாய்ந்த சிங்காசனத்தில் விதிமுறைப்படி தாபனை செய்தனன்.—எ-று. (ககஎ)

கடனாகைநள்ளாறுகாறுயல்கோளரியூர்
மடனாகமுத்தீனும்வாய்மியூர்மறைக்கான
முடனாகுந்தலமாறிலோராறுவடிவுகொண்ட
படநாகமதிவேணிப்பரஞ்சுடரையமர்வித்தான்.

(இ-ள்.) கடற்கரையதான திருநாகையும் திருநள்ளாறும் திருக்காறுயலும் திருக்கோளரியூரும் சங்குகள் ஒலியுடன் முத்துக்களைப் பெறுகின்ற திருவாய்மியூரும் திருமறைக்காடுமாகிய ஆறுதலங்களிலும் ஆறுருவங்கொண்ட படத்தினையுடைய பாம்பினையுஞ் சந்திரனையுமணிந்த சடையினையுடைய பரஞ்சுடரான சிவபெருமானை எழுந்தருளி இருக்கச்செய்தனன்.—எ-று. (ககஅ)

இப்படியேயொருபகலிலெழுவரையுந்தாபித்து
மெய்ப்பரிவில்வழிபாடுவிதிமுறையாற்புரிவித்துச்
செப்பரியபுகழாரூர்த்தேவனுக்குவிழாச்செய்வான்
முப்புவனங்களும்போற்றுமுசுகுந்தன்முன்னினனால்.

(இ-ள்.) இவ்விதமே ஒரு தினத்திலேழுமூர்த்திகளையுந் தாபித்து உண்மையன்புடன் பூசையை முறைப்படி செய்வித்து உரைத்தற்கரிய புகழினையுடைய ஆரூர்ப் பெருமானுக்குத் திருவிழா நடத்தித் தரிசித்தற்கு மூன்றுலகமுந் துதிக்குமுசுகுந்தன் நினைத்தான்.—எ-று. (ககக)

அந்நாளிலிமையவர்கோனருச்சனைசெய்பரம்பொருளைக்
கொன்னார்வேன்மன்னவன்கைக்கொடுத்ததொருகொடும்பவத்தாற்
பொன்னாட்டிற்றிருவிழந்துபுலையுருவந்தனைத்தாங்கிக்
கைந்நாகமிசையூர்ந்துகமலையெனும்பதியடைந்தான்.

(இ-ள்.) அந்நாளில் தேவராசன் அருச்சித்த பரம்பொருளினை அச்சந்தங்கியவேற்படையினையுடைய முசுகுந்த மன்னவனிடங் கொடுத்த கொடிய பாவத்தாற் சுவர்க்கத்திலுள்ள செல்வத்தினை இழந்து புலையனுருவந்தாங்கித் துதிக்கையினையுடைய ஐராவதத்தினையேறி நடத்தித்திருவாரூரை யடைந்தான்.-எ-று. (கஉ0)

ஆரூரின்மேவியபின்னமலன்விழாப்போற்றுதற்குப்
பாரூருந்திரையூரும்பலவூரும்வருகவென்றே
வாரூருமுரசெறிந்துமதக்களிற்றின்மிசையேறித்
தேரூருஞ்செம்பொன்மணித்திருவீதிப்புடைசூழ்ந்தான்.

(இ-ள்.) திருவாரூரையடைந்தபின்னர் சிவபெருமான் திருவிழாவைக்கண்டு துதித்தற்குப் பாரூர்களும் திரையூர்களும் பலவூர்களும் வருகவென்று வாரிட்டிறுக்கியுள்ள முரசினையடித்து முழக்கிமதத்தினையுடைய யானையின்மீது தேரோடுஞ் செம்பொன் மயமான அழகிய திருவீதியின் புறத்திற் சுற்றிச்சுற்றிவந்தான்.—எ-று.

பாரூருந் திரையூரும்-என்பதற்கு பார் பூமியை, ஊரும்-நகர்ந்து சூழ்கின்ற, திரை-கடல், ஊரும்-சூழ்ந்த, பலவூரும்-பலவூரிலுள்ளாரும் என்றுங்கூறலாம் (கஉக)

பூங்கமலாபுரிவாழும்புங்கவனுர்க்கன்னதற்பி
ஞோங்குதிருவிழாநடத்தியொழிந்தபதிப்பண்ணவர்க்கு
மாங்கதுபோனிகழ்வித்தேயந்தமில்சீர்முசுகுந்தன்
பாங்கில்வரும்வீரருடன்பாருலகம்புரந்திருந்தான்.

(இ-ள்.) அழகிய கமலாபுரமான திருவாரூரிலெழுந்தருளி இருக்கும் இறைவனுக்கதன்பின்னர் உயர்ந்த திருவிழா நடத்திமற்றைக்கடனுகை நள்ளாறுகாறுயல் கோளரியூர் மடனுகமுத்தீனும் வாய்மியூர் மறைக்கானமென்னும் ஆறுதலங்களிலும் எழுந்தருளி இருக்கும் மூர்த்திகளுக்கும் அது போலத்திருவிழா நடப்பித்து அழிவற்ற செல்வத்தினையுடைய முசுகுந்தன் தவமுறையாற்கிடைத்த வீரவாகுதேவன் முதலியவீரர்களுடன் பூவுலகிலரசு செலுத்தியிருந்தான்.—எ-று. (கஉஉ)

ஆண்டுபலவப்பதியிலமலன்விழாச்சேவித்துக்
காண்டகையதவம்புரிந்துகடைஞர்வடிவினைநீங்கித்
தூண்டகையதோண்மகவான்றொல்லுருவந்தனைப்பெற்று
மீண்டுசுரர்பதிபுகுந்துவிபவமுடன்வீற்றிருந்தான்.

(இ-ள்.) பலவருடங்கள் அத்திருவாரூரிற் தியாகராசப் பெருமானுன அமலனது திருவிழாவைத் தரிசித்துத் தகுதிவாய்ந்த தவத்தினைச்செய்து இந்திரப்பெரும் பறையென்று விளிக்கின்ற புலையுருவமொழிந்து தூண்போலுந்திரண்ட புயங்களையுடைய இந்திரன் பழய தனது தேவராசவுருவினைப்பெற்றுச் சுவர்க்கவுலகத்தையடைந்து செல்வத்துடன் இருந்தனன்.—எ-று. (கஉங)

விண்ணவர்கோனேகியபின்விரவுபுகழ்க்கருவூரி
லெண்ணரியபலகாலமிறையரசுசெலுத்தியபின்
மண்ணுலகம்புரக்கவங்கிவன்மனுக்குமுடிசூட்டித்
துண்ணெனவேநோற்றிருந்துதொல்கயிலைதனையடைந்தான்.

(இ-ள்) தேவராசன் சுவர்க்கத்துக்குச் சென்றபின்னர் புகழ்வாய்ந்த கருவூரில் இருந்து எண்ணுதற்கரிய பலகாலம் முசுகுந்தன் அரசு செலுத்தியபின்னர் மண்ணுலகினை ஆளுதற்குத் தன்மகனை அக்கினிவன்மனுக்கு முடிசூட்டிவிரைந்து தவம் புரிந்து முன்னிருந்த கைலாயத்தை யடைந்தனன்.—எ-று.

இம்முசுகுந்தன் பாகவத புராணமுதலியவைகளிற் கூறப்படும் முசுகுந்தன் அல்லனென்றறிக ஒருவன் பெயருள்ள மற்றொருவனுலகிலுளனாதலே மறவன்மின்.

துங்கமிகுமுசுகுந்தன்றொல்கயிலையடைந்தபின்ன
ரெங்கள்விறன்மொம்பினனுமிலக்கருடனெண்மர்களுந்
தங்கள்சிறார்தமைவிளித்துத்தத்தமதுசிறப்புநல்கி
யங்கிவன்மன்பாலிருத்தியரியதவமாற்றினரே.

(இ-ள்.) உயர்வுமிகுந்த முசுகுந்தன் தானிருந்த பழயகைலாயத்தையடைந்த பின்னர் எங்கள் வீரவாகுதேவனும் இலக்கர்களுடன் எண்மர்களும் தங்கள் சிறுவர்களை யழைத்துத்தங்கள் சிறப்புக்களை அவர்களுக்களித்து அக்கினிவன்மனிடமிருத்தி அரிய தவஞ்செய்தனர்.—எ-று. (கஉரு)

மாதவமெண்ணிலவியற்றிமானுடத்தன்மையைநீங்கி
யாதிதனிலடியெய்தியருண்முறையாலனைவர்களு
மேதகுசீர்க்கந்தகிரிவிரைந்தேகிவேற்கடவுள்
பாதமலர்பணிந்தேத்திப்பத்திமைசெய்துற்றனரால்.

(இ-ள்.) அளவற்ற சிறந்ததவங்களைச்செய்து மானுடத்தன்மை யொழிந்து முன்னுள்ளவன்மையைப் பெற்று இறைவன் கருணையால் வீரவாகுமுதலிய அனைவோரும் மிக்க சிறப்பினையுடைய கந்தகிரியை விரைந்தடைந்து வேலாயுதப் பெருமானுடைய பாததாமரைகளை வணங்கித்துதித்துப் பத்திசெய்திருந்தனர் —எ-று. (கஉசு)

ஆகையாலயனறியாவருமறைமூலந்தெரிந்த
வேகநாயகன்விரதமெவரேனும்போற்றியிடி
ளேகையானினைந்தவெலாமொல்லைதனிற்பெற்றிடுவர்
மாகமேலிமையவரும்வந்தவரைவணங்குவரே.

(இ-ள்.) இதனால், பிரமனறியா அரியவேதமூலத்தின் பொருளையுணர்ந்துள்ள வேதநாயகனான கந்தப்பெருமான் திருவடிக்குரிய விரதத்தினை எவரேனும் அனுட்டிப்பாராயின் மகிழ்வுடன் எண்ணியவனைத்தும் விரைவாக அடைவார்கள்; அங்ஙனம் கந்தவிரதங்களை நோற்பவர்களை வானுலகில் வாழுந்தேவர்களும் வந்து வணங்குவார்கள்.—எ-று.

வாரத்தில் வெள்ளியும் நாளிற் கார்த்திகையும் திதியிற்சட்டியும் ஆகியமூவகை விரதங்களிலெதையேனு மொன்றினை நோற்பவர்கள் தேவர்களினும் உயர்ந்தவரென வும் விண்ணவரையும் ஏவல்கொள்ளும் ஆற்றலுடையரென்பதனையும் பின்னரும்வற் புறுத்துவார், மாகமேலிமையவரும் வந்தவரை வணங்கிடுவா, ரென்றார். (கஉஎ)

கந்தவிரதப் படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம். க-அகக.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வள்ளியம்மை திருமணப்படலம்.

வெள்ளியங்கிரியினோர்சார்விளங்கியகந்தவெற்பி
னள்ளுறுநகரந்தன்னினங்கையோடினிதுமேவு
மள்ளிலைவேற்கைநம்பியம்புவியெயினர்போற்றும்
வள்ளியைவதுவைசெய்தமரபினைவழாதுசொல்வாம்.

(இ-ள்.) திருக்கைலமலையினொருபுறமாக விளங்காநின்ற கந்தமாதன கிரியி னடுவணுள்ள கோவிலில் தெய்வயானை யம்மையுடன் செவ்வனே எழுந்தருளி இருக்கும் கூரியதகட்டுவடிவமான வேற்படையேந்திய குமாரக்கடவுள் பூவுலகிலுள்ள வேடர்களால் வளர்க்கப்பட்ட வள்ளியம்மையைத் திருமணஞ்செய்துகொண்ட முறையைத்தவறாது சொல்வோம். —எ-று. (க)

வேறு.

அயன்படைத்திடுமண்டத்துக்காவியாய்ப்
பயன்படைத்தபழம்பதியென்பரா
னயன்படைத்திடுநற்றொண்டைநாட்டினுள்
வியன்படைத்துவிளங்குமேற்பாடியே.

(இ-ள்.) எல்லா நன்மைகளையுந் தன்னிடத்துள்ள நல்லதொண்டை நாட்டினுட் பெருமிதம் வாய்ந்து விளங்கும் மேற்பாடியென்னு மூரினைப்பிரமனாற் படைக்கப்பட்ட அண்டத்துக்காவிபோல்வதாகிப்பலனுடைத்தாகிய பழயநகரென்பர்.—எ-று.

ஆயதொல்லையணிநகர்ஞாங்கரின்
மீயுயர்ந்ததொர்வெற்புநிற்கின்றதாற்
பாயதெண்கடற்பாரளவிட்டிடு
மாயவன்றன்வடிவெனநீண்டதே.

(இ-ள்.) அந்தப்பழய வழகினையுடைய மேற்பாடி நகரினருகில் மேலேயுயர்ந்துள்ள ஒரு மலை பரந்த தெள்ளியக்கடல்சூழ்ந்த பூமியை யோரடியாகவளந்ததிருமாலின் திருவிக்கிரமவுருவம்போல நீண்டு நிற்கின்றது.—எ-று. (உ)

அரவுந்திங்களுமாறுமெல்லாரமுங்
குரவுங்கொன்றையுங்கூவிளமும்மிசை
விரவுந்தன்மையின்வெற்புவிண்ணோரெலாம்
பரவுங்கண்ணுதற்பண்ணவன்போன்றதால்

(இ-ள்) அம்மலை. தன்மீது பாம்புகளையுஞ் சந்திரனையும் ஆற்றினையும் மெல்லிய வாத்திகளையும் குரவையுங் கொன்றையையும் வில்வத்தையுங் கொண்டு நிற்குந் தன்மையால் தேவரெல்லாந் துதிக்கு நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானை யொத்தது.—எ-று. (ச)

வாலிதாகியவாலருவித்திர
ணீலமேகநிரையொடுதாழ்தலிற்
றோலுநூலுந்துயல்வருமார்புடை
நாலுமாமுகன்போலுமங்காகமே.

(இ-ள்.) அம்மலையில் வெண்மையாகிய பெரிய அருவித்திரள்கள்நீலநிறமான மேகக்கூட்டங்கள் தாழ்ந்து காணப்படுதலால் அது தோலு நூலுங் கிடைந்தசைகின்ற மார்பினையுடைய சிறந்த நான்முகனை யொத்தது.—எ-று (ரு)

குமரவேள் குறமங்கையொடிவ்விடை
யமருமாலதுகாண்பமென்றாசையாற்
றமரவானதிதானணுகுற்றிட
நிமிருகின்றதுநீள்கிரியன்னதே.

(இ-ள்.) அம்மலையுயர்ந்து நிற்பது, குமரக்கடவுள் வள்ளிநாயகியுடன் இவ்விடத்திலிருப்பான் அங்ஙனமிருத்தலைக் காண்பேமென்று விருப்பத்தால் திருமால் ஒளியினையுடைய ஆகாயகங்கை தன்னருகாக நிமிர்ந்து நிற்பதை யொக்கும்.

இதற்கு, அந்நீண்டகிரியானது குமரவேள் குறமகளோடு இவ்விடத்தில் விருப்பா யிருப்பான் அங்ஙன மிருத்தலைக்காணுமாறு ஒளியினையுடைய தேவகங்கையானது கீழ்நோக்கி யிறங்கி நிற்பதை யொப்பது என்றுங் கூறுப.

மாயனுக்குங் கங்கைக்குங் குமரவேள் மருகனு மகனுமாதலின் அவர் வள்ளிநாயகியுட னிருத்தலை இருவருங்காண விழைவாராதலி னிரண்டுரையும் பொருந்துதல் காண்க.—எ-று. (சு)

வேறு.

கள்ளிறைத்திடுபூந்தண்டார்க்கடம்பணிகாளைபன்னாட்
பிள்ளைமைத்தொழின்மேற்கொண்டுபெட்புடனுழுகும்வண்ணம்
வள்ளியைத்தன்பால்வைத்துவள்ளிவெற்பென்னுநாம
முள்ளவக்கிரியின்மேன்மையுரைத்திடுமளவிற்றாமோ.

(இ-ள்.) தேனினையொழுக விடுகின்ற குளிர்ச்சிவாய்ந்த கடம்ப மலர்மாலையணிந்த குமரவேள் பாலக்கிரீடையை மேற்கொண்டு விருப்பத்துடன் நடத்தற்கு வள்ளியம்மையைத் தன்னிடம்வைத்து வள்ளிமலையெனும் பெயரினைப்பெற்றுள்ள அம்மலையின் சிறப்பினைச்சொல்லுந் தரத்ததோ.—எ-று.

சிறுபிள்ளைகள் பயன் கருதாது விளையாடுமாறு குமரவேளும் காமத்தாலன்றி வள்ளிநாயகியாரிடம் வாளா, களவொழுக்கமாகப் பலவேடங்கள்பூண்டு விளையாடினாரென்றும் அவர் காமம் வெகுளிமயக்கங்களை யுடையவரல்லரென்றும் விளக்குவார், பிள்ளைமைத்தொழின் மேற்கொண்டு பெட்புடனுழுகும் வணணம் என்றார் (எ)

செய்யவெண்குன்றிவித்துஞ்சீர்திகழ்கழைவீழ்முத்தும்
பையரவினங்களீன்றபருமணித்தொகையுமீண்டிச்
சையமதெங்குஞ்சேர்தருரகாகணங்களெல்லாம்
வெய்யவனழற்காற்றாதுவீழ்ந்தெனவிளங்குகின்ற.

(இ-ள்.) செம்மையும் வெண்மையுமான குன்றி வித்துக்களும்சிறப்புடன் விளங்கு மூங்கிலினின்று முதிரு முத்தும் விடப்பையினையுடைய பாம்பினங்கள் கக்கிய பரியமணியின் தொகுதியும் நெருங்கி அம்மலையினெவ்விடத்திலுங் கிடத்தல் நட்சத்திரக்கூட்டமெல்லாம் சூரியனுடைய வெப்பத்துக்காற்றாமல் வீழ்ந்தாற்போல விளங்குகின்றன.—எ-று. (அ)

கானுறுதள்ளவம்பூத்தகாட்சியாற்கழைகளெல்லாந்
தூங்கைமுத்தமீன்றதோற்றத்தாற்பொதும்பர்தன்னிற்
றேனமர்தொடையறாங்குஞ்செய்கையாற்சிலம்பின்சாரன்
மீனமுமதியும்பூத்தவிண்ணெனவிளங்கிற்றம்மா.

(இ-ள்.) மணம்பொருந்திய முல்லையலர்ந்த காட்சியானும் மூங்கிலெல்லாம் தூயவொளியினையுடைய முத்துக்களைச் சிதறிய தோற்றத்தானும் சோலைகளில் தேன் பொருந்திய இறால்கள் தூங்குதலானும் அம்மலையின் சாரலானது நட்சத்திரங்களுஞ் சந்திரனுமுதித்த வானத்தையொப்ப விளங்கியது.—எ-று. (௯)

கூட்டளிமுரலுநீலக்குண்டுநீர்ச்சுனைகள்யாண்டுங்
காட்டியபிறங்கல்யாருங்காணுணுவள்ளலீண்டே
வேட்டுவர்சிறுமிக்காகமேவுதல்காண்பனென்று
நாட்டமெய்ம்முழுதும்பெற்றுநண்ணியதன்மைபோலாம்.

(இ-ள்.) கூட்டமாகிய வண்டுகளொலிக்கின்ற நீலமலர்களையுடைய ஆழமாகிய நீரோகூடின சுனைகளை எவ்விடத்திலுங் காட்டுகின்ற வம்மலையானது எவராலுங்காணுதற்கரிய வள்ளலான குமரவேள் வேடர்மகளான வள்ளிநாயகியின் பொருட்டு பல வகை வேடங்களைக் கொண்டெழுந்தருளுதலைக் காண்பேனென்று தன்னுடல் முழுதுங் கண்களைப்பெற்று நின்றதன்மையை யொக்கும்.—எ-று. (௧௦)

விண்ணுயர்பிறங்கன்மீதுவிரிகின்றசுனைகண்மிக்குத்
துண்ணெனவிளங்கும்பெற்றிசூரியன்முதலோர்காண
மண்ணெனுமடந்தையாங்கோர்மதலையில்வரம்பிலாத
கண்ணடிநிரைத்துவைத்தகாட்சிபோன்றிருந்தமாதோ.

(இ-ள்.) வானமளாவிய வம்மலைமீது பரந்தசுனைகள் மிகுந்து கண்டார் நெஞ்சந்துண்ணென விளங்குந்தன்மையானது சூரியன் முதலியவர்கள் பார்க்கும்வண்ணம் பூமியாகியமாது ஒரு தூணத்தில் அளவற்ற கண்ணடிகளை வரிசையாகப்பரப்பிவைத்த தன்மைபோல விருந்தது.—எ-று. (௧௧)

ஒள்ளிணர்க்கணியின்கொம்பருலவியேயசோகில்வாவி
வெள்ளிலிற்பாய்ந்துமந்திவியன்கடுவுறைப்பமீள்வ
வள்ளியரிடத்துச்சென்றோர்மானவப்பண்பிலோர்பாற்
பொள்ளெனவிரப்பான்புக்குப்புலம்பொடுமீண்டவாபோல்.

(இ-ள்.) கொடையாளரிடம் இரப்பான் சென்ற ஆதுலர்மனிதர் தன்மையற்றவர்களிடம் விரைவாக இரத்தற்குச்சென்று அவர்கள் இகழ்ந்து துரத்துதலால் வருத்தத்துடன் திரும்பினாற்போல மந்திகள் ஒள்ளிய கொத்துக்களையுடைய வேங்கை மரங்களின் கொம்புகளிலுலாவி அசோகமரங்களிற் குதித்துக் களித்து விளாமரங்களிற் தாவி அதனிலுள்ள பெரியமுட்கள் தைக்கவருத்தித் திரும்புகின்றன.

விளாமரம், மானுடத்தன்மையற்றோர்க் கிணையாதல் காண்க. (௧௨)

தொகையுறுகுலைச்செங்காந்தடுடுப்பெடுத்தமருஞ்சூழ்விற்
சிகையுறுதோகைமஞ்ஞைசெறிந்துலாவுற்றதன்மை
யகையுறுகழைகொன்றுண்டவாரழல்சிதறவாங்கே
புகையுறுகின்றதன்மைபோலவேபொலிந்ததம்மா.

(இ-ள்.) கூட்டமாகப்பொருந்திய பூங்கொத்துக்களையுடைய செங்காந்தள்கள் அலர்களை மேலெடுத்துக்காட்டி நிற்குமிடங்களில் ஒளிபொருந்திய கலாபங்களையுடைய மயில்கள் நெருங்கி யுலாவுகின்ற தன்மை காற்றுன்மோதப்படவதனா லுண்டாகித் தானுண்டான மூங்கில்களை யழித்த தீயானது சிதற அங்ஙனமே புகைபொருந்திய தன்மையை யொப்ப விளங்கியது.—எ-று. (௧௩)

கண்டுதங்கேளிர்தம்மைக்கைகொடுபுல்லியில்லங்
கொண்டுசெல்பான்மையுன்னிவிலக்குறுகொள்கைத்தென்ன

விண்டொடர்செலவிற்றுகும்வெஞ்சுடர்க்கதிரைவெற்பிற்
றண்டலைகணியின்கொம்பாற்றழிஇக்கொடுதடுக்கலுற்ற.

(இ-ள்.) உலகினர் தமதுறவினரை வழியிற்கண்டு அவர்களைக் கைளாற் றழுவித் தமதுவீட்டிற் கழைத்துச்செல்லுந் தன்மையை நினைத்து அவர்களின் போக் கினைத் தடுக்குமாறுபோல வானிற்செல்லுஞ் செலவினையுடைய வெவ்விய சுடரொடுங் கூடிய சூரியனை அம்மலையிலுள்ள சோலை வேங்கைமரக்கிளையால் தழுவிக்கொண்டு தடுக்கின்றது.—எ-று. (கச)

நிறையழிகடமால்யானைநெடுவரைச்சிகரம்பாய்ந்து
விறலொடுமுழங்கவாங்கோர்விடரளைமடங்கல்கேளாக்
கறுவுகொள்சினத்தினர்க்குங்கம்பலைகனகனெற்றுந்
தறியிடையிருந்தசீயத்தழங்குரலென்னலாமால்.

(இ-ள்.) மதமயக்கத்தால் தன்னிலைமறந்த யானையானது நீண்ட மலைச்சிக ரத்திற்பாய்ந்து வன்மையுடன் சத்திக்க அச்சத்தத்தினை அங்குள்ள ஒரு பிளந்த குகை க்குள்ளிருந்த சிங்கங்கேட்டுக்கறுவப்பட்ட கோபத்துடன் கர்ச்சிக்குங் கர்ச்சனையானது இரணியனடித்த தூணினிடத்திருந்த நரசிங்கத்தின் முழங்காநின்ற கர்ச்சனையை யொத்தது.—எ-று. (கரு)

பறையடிப்பதனுற்சேணிற்பயன்விரிப்பார்போன்மாறு
யறையடிப்பாந்தளார்ப்பவகலிருவிசும்பேறுர்ப்பக்
கறையடித்தொகுதியார்ப்பக்கடுந்திறலரிமாஞர்ப்பச்
சிறையடிக்கொண்டுசிம்புளார்த்திடத்திங்கள்செல்லும்.

(இ-ள்.) பறையடிப்பதனுலே தூரத்திலுள்ளார்க்குக் குறித்த பொருளை விள க்குவாரையொப்ப (சந்திரனுதித்தலைக்கண்டு) எதிராயம் மலையினடிக்குகைகளிலுள்ள அரவங்கள் ஆரவாரிக்க,அதனைக்கேட்டு அதற்கெதிராய் அகன்ற பெரிய இடியேறுமுழ ங்க அதற்கெதிராய் உரலனைய காலினவான யானைகள் முழங்க, அதற்கெதிராய் மிக்க வன்மை வாய்ந்தசிங்கங்கள் கர்ச்சிக்க,அதற்கெதிராய் இறகடித்துச் சிம்புட்பறவை யா ரவாரிக்க, அம்மலையின்மீது சந்திரன் செல்லாநிற்கும்.—எ-று.

இதற்கு,தூரத்திலுள்ளார் தமதபிப்பிராயங்களைப் பறையோசையின் குறிப்பினுல் விளக்குதற்கு ஒருவர் பறையடித்து நிறுத்தியவுடன் மற்றிடத்திலுள்ளார் பறையடிப் பார்கள் இருபகுதியினர் பறையும் ஒருங்கே முழங்கினுற் குறித்தபொருள் விளங்காது ஆதலின், ஒருவர்பின்னொருவர் முழக்குவர் இங்ஙனமுழக்குதல் குறிஞ்சிநில வழக்கு. அவ்வண்ணம் பாந்தளும் இடியேறுங் கறையடித்தொகுதியுமரிமாவுஞ் சிம்புளுமொன் றின் பின்னொன்று முழக்கங்காட்ட ஒருமாதஞ்செல்லும்; அம்மலையிலென்றுங் கூற லாகும். (கசு)

இன்னபல்வளமைசான்றகிரிதனிலெயினரீண்டி
மன்னியதாங்கோர்சீறூர்வதனமாறுடையவள்ளல்
பின்னரேதன்பான்மேவப்பெருந்தவந்தன்னையாற்றிப்
பொன்னகரிருந்தவாபோற்புன்மையற்றிருந்ததம்மா.

(இ-ள்.) இத்தகைய பலவித வளங்கள் மிகுந்துள்ள வம்மலையில் வேட ர்கள் நெருங்கி வாழ்வதான ஒரு சிற்றூரானது ஆறுமுகங்களையுடைய வள்ளலான குமரக்கடவுள் பின்னர்த் தன்னிடத்தெழுந்தருளமிக்க தவத்தைச்செய்து பொன்னகர மானது இருந்தாற்போல சிறப்புற்றிருந்தது.—எ-று. (கஎ)

ஆயதோர்குறிச்சிதன்னிலமர்தருங்கிராதர்க்கெல்லா
நாயகனுகம்பூண்டுள்ளோனுமவேனம்பியென்போன்
மாயிருந்தவமுன்செய்தோன்மைந்தர்கள்சிலரைத்தந்து
சேயிழைமகட்பேறுன்னித்தெய்வதம்பராவியுற்ருன்.

அந்கிராதரைக் காக்கும் பாதுகாவலை மேற் கொண்டவன், பிறர் தம் துன்பத்தினின்றும் ஒன்றுவர். இதனாலும்.

(இ-ள்.) அத்தகைய குறிச்சியில் வாழுகின்ற வேடர்க்கெல்லாம் தலைவனாக வுள்ளவன் அரசென்னுஞ் சகடத்தினது நுகத்தைப் பூண்டிருப்பவன் அச்சத்தைத் தரும் வேற்படையேந்திய நம்பியென்னு மியற்பெயருடையவன் மிகப்பெரிய தவத்தினை முன்னர்ச்செய்துள்ளவன் சில ஆண்மக்களைப்பெற்று பெண்மக்களைப் பெறக் கருதி இஷ்டதேவதையைத் துதித்திருந்தான்.—எ-று. (கஅ)

அவ்வரைமருங்குதன்னிலைம்புலனெருங்குசெல்லச்
செவ்விதினடாத்துந்தொன்மைச்சிவமுனியென்னுமேலோ
னெவ்வெவர்தமக்குமெய்தாவீசனையுளத்துட்கொண்டு
சைவநல்விரதம்பூண்டுதவம்புரிந்திருத்தலுற்ருன்.

(இ-ள்.) அம்மலைச் சாரலில் ஐம்புலன்களு மொருவழிப்பட்டுச்செல்ல முறையே நடத்துகின்ற பழைய சிவமுனியென்னு முயர்ந்தோன் எத்தகையோராலு மடைதற்கரிய சிவபெருமானை இருதயகமலத்துத் தியானமாகவைத்து நல்ல சைவ விரதத்தைக்கொண்டு தவஞ்செய்திருந்தனன்.—எ-று. (ககூ)

சிறப்புறுபெரியபைங்கட்சிறுதலைச்சிலைக்கும்புல்வாய்
நெறிப்பொடுநிமிர்வுற்ருன்றநெடுஞ்செவிக்குறியதோகைப்
பொறிப்படுபுனிதயாக்கைப்புன்மயிர்க்குளப்புமென்கான்
மறிப்பிணையொன்றுகண்டோர்மருளவந்துலாவிற்றங்கண்.

(இ-ள்.) அவ்விடத்தில் சிறப்புவாய்ந்த பெரிய பசிய கண்களையும் சிறிய தலையையும் ஒலிக்கின்ற சிறிய வாயினையும் நெறிப்புறுதலுடன் நிமிர்ந்தகன்ற காதுகளையும் புள்ளியமைந்த புனிதமான சரீரத்தினையும் சிறு ரோமங்கள் வாய்ந்த குளம்போடுகூடின மெல்லிய கால்களையும் உடைய பொன்மான் ஒன்று கண்டவர்கள் மருளும் வண்ணம் வந்துலாவியது.—எ-று.

இத்தகைய வழகிற்சிறந்த பொன்மானுலகில் அசாதாரணமாதலிற் கண்டார் மருள்வரென்க. (உ0)

போர்த்தொழில்கடந்தவைவேற்புங்கவனருளால்வந்த
சீர்த்திடுநவ்விதன்னைச்சிவமுனியென்னுந்தூயோன்
பார்த்தலுமிளமைச்செவ்விபடைத்திடும்பிறனிற்கண்ட
தூர்த்தனின்மையலெய்திக்காமத்தாற்சுழலலுற்ருன்.

(இ-ள்.) பகைவருடைய போரின் தொழிலைவென்ற கூரியவேற்படையினையுடைய குமரக்கடவுளின் திருவருளால் அங்குவந்த சிறப்புவாய்ந்த பெண்மானைச் சிவமுனிவனான தூயோன் கண்டவுடனே இளமைப்பருவத் தழகினையுடைய அயலான் மனைவியைக்கண்ட காமுகனைப்போல மயக்கங்கொண்டு காமத்தால் நிலைதடுமாறினன்.—எ-று.

பிறனிற் கண்ட தூர்த்தன் காமத்தை யவண் மாட்டு வெளியிடவியலாது வருந்தியாங் கிம்முனியு மான்பிணைக்குத் தனது காமத்தினைக்கூற முடியாது வருந்தினனென்பார். பிறனிற்கண்ட தூர்த்தனின்மையலெய்திக் காமத்தாற் சுழலலுற்ருன் என்ருர். (உக)

ஏமத்தின்வடிவஞ்சான்றவிலங்கெழிற்பிணையின்மாட்டே
காமத்தின்வேட்கைவைத்துக்கவலையாயவலமெய்தி
மாமத்தமளைப்புக்கென்னமனக்கருத்துடைந்துவேறா
யூமத்தம்பயன்றுய்த்தார்போலுன்மத்தனாகியுற்றான்.

(இ-ள்.) பொன்போலும் வடிவாற் சிறந்து விளங்கு மழகினையுடைய வம்மானினிடத்துக் காமத்தால் ஆசையைவைத்துக் கவலையுடனவலமடைந்து தயிரிற் பெரியமத்துப் புகுந்தாங்குமனக் கருத்துக்கெட்டு வேறாகி யூமத்தங்காயைத் தின்றாரையொப்ப உன்மத்தனாகி இருந்தான்.—எ-று.

ஏமத்தின் வடிவுசான்ற என்பதற்கு, இன்பத்தைத்தரு முறுப்பு நிறைந்த என்றும் இன்பமாகிய வடிவு நிறைந்த என்றும் கூறுதலமையும் உன்மத்தன், ஒன்றுந் தோன்றாது மயங்கி இருப்போன். (௨௨)

படவரவனையவல்குற்பைந்தொடிநல்லார்தம்பாற்
கடவுளர்புணர்ச்சியென்னக்காட்சியினின்பந்துய்த்து
விடலருமார்வநீங்கிமெய்யுணர்வெய்தப்பெற்றுத்
திடமொடுமுந்துபோலச்சிவமுனியிருந்துநோற்றான்.

(இ-ள்.) அரவபடம்போலு மல்குலினையும் பசியவளையலினையும் உடைய பெண்களிடத்துக் கடவுளரின் புணர்ச்சியையொப்பக் காட்சியாலின்பமனுபவித்து நீக்குதற்கரிய ஆசையொழிந்து பழய உண்மையுணர்ச்சி யடையப்பெற்று உறுதியாக முன்போல சிவமுனியிருந்து தவஞ்செய்தனன்.—எ-று.

கடவுளர்புணர்ச்சி யுள்ளப்புணர்ச்சியேயன்றி மெய்யுறு புணர்ச்சி யன்றென்பாரு முளராதலின் கடவுளர் புணர்ச்சியென்ன காட்சியாலின் பந்துய்த்து என்றார் இதனையோராசிரியனுள்ளத்தானே புணர்ந்தாரென்னும் என்று நக்கீரனார் கூறியிருத்தலாலும் பிறவற்றானுமுணர்க.

உள்ளப்புணர்ச்சியுமெய்யுறுபுணர்ச்சியுங் கள்ளப்புணர்ச்சியுட் காதலர்க்குரியஎன்ப திலக்கணம்; அன்றியும் இருவர் கண்ணுங் காதல் கூர்ந்தவழியெல்லாம் கந்தருவமென்பது வேதமுடிபு என்றுங்கேட்கப்படுதலின் காட்சியாலின்பந்துய்த்த லுளதெனவறிக. உள்ளப்புணர்ச்சியென்பது காட்சியாலின்பந் துய்த்தலையாதலி னதனைக் காட்டினும்

நற்றவன்காட்சிதன்னானவ்விபாற்கருப்பஞ்சேரத்
தெற்றெனவறிதரேற்றிச்செங்கண்மாலுதவும்பாவை
மற்றதனிடத்திற்புக்காள்வரைபகவெறிந்தவைவேற்
கொற்றவன்முன்னஞ்சொற்றகுறிவழிப்படருநீராள்.

(இ-ள்.) நல்ல தவத்தினையுடைய அந்தச்சிவமுனிவனுடைய காமப்பார்வையால் மானினிடத்துக் கருப்பமுண்டாக வதனை விரைந்துணர்ந்து கிரவுஞ் சமலை பிளவுபட வெறிந்த கூரிய வேற்படையினையுடைய குமரக்கடவுள் முன்னருரைத்த அடையாளத்தின் வழிச்செல்லுந் தன்மையினளான திருமால் முன்னம்பெற்ற சுந்தரி அம்மானின் வயிற்றிற் புகுந்தனள்.—எ-று. (௨௩)

மானிடத்தின்வருமைந்தன்முந்துநீ
மானிடத்தின்வருகென்றவாய்மையான்
மானிடத்தின்வயினடைந்தாண்மரு
மானிடத்தின்மானுதம்மான்மகள்.

(இ-ள்.) சிவபெருமானிடத்திலவதரித்தருளிய குமரக்கடவுள் முன்னாளில் சரவணப் பொய்கையின் கரையில் எழுந்தருளி அமிர்தவல்லியுடன் தவஞ்செய்து நின்ற இச்சுந்தரிக்கு நீ சிறந்த முனிவனிடத்து மகளாகத்தோன்றி வேடர்பால் வளர்ந்

துவருக என்றருளிச்செய்த கட்டளையால் வழித்தோன்றலான விஷ்ணு யசசு என்பவனிடம் குதிரைமுகத்துடன் பிறக்குமந்த மாயன்மகளான சுந்தரி சிவமுனிவரின் கட்பார்வையின்வழி அம்மானின் வயிற்றை யடைந்தனள்.—எ-று.

மருமானிடத்தில் - மகனாகிய பிரமனிடத்தில், மாலாகிய-வெண்பன்றியாகப் பிறந்த, மான்மகள்-திருமாலின் புதல்வியான சுந்தரி, மானிடத்தில்-சிவபெருமானிடத்தில் வருமைந்தன்-அவதரித்த குமரவேள், முந்து-முன்னாளில், நீ மானினிடத்தில் வருகவென்ற வாய்மையால்-நீ மகானான சிவமுனியின் வழியாக வருதி என்ற கட்டளையால்: மானிடத்தின்-சிவமுனியாற் காமிக்கப்பட்ட காமநோக்கின் வழியாய் மானினது. வயின் வந்தாள், வயிற்றிற் பிரவேசித்தனள் என்றுங் கூறுப.

"அந்தண் மாமுனிபுதல்வியாய் வேடர் பாலமர்தி" என்ற குமரக்கடவுளின் கட்டளையை நிறைவேற்றக் காலம்பார்த்திருந்த சுந்தரி சிவமுனியின்கட் பார்வையின் வழிமானின்வயிற்றிற் புகுந்தன ளென்றறிக.

மருமானைக் காசிபனெனவும், மான் என்பதகு சிற்றந்த,வாமனன் என்றுங் கூறுதலையும் "தம்மானையறியாத சாதியாருள்ரேயோ"என்றும் எம்மானை எறிகெடிலவீரட்டானத்தானை யென்றும் வரும் தமிழ் வேதங்களாற் சிவபெருமானுக்கு மான் என்னுந் திருநாம முளதாதலையறிக. (உ௫)

அனையகாலையிலாயிடைநீங்கியே
புனிதநவ்விபுனமெங்கணுமுலாய்ச்
சுனையினீருண்டொர்சூழலின்வைகியே
யினியமால்வரையேறிநடந்ததே.

(இ-ள்.) அப்பொழுது அவ்விடத்தினை விட்டுப்புனிதமான மான் தினைப்புனத்தி னெவ்விடங்களிலு முலாவி மலைச்சுனையின் நீரருந்தி ஒரு சோலையிற்கிடந்து இனிய பெரிய மலையின் மீதேறியுலாவியது.—எ-று. (உ௬)

நடந்தநவ்விநலத்தகுவெற்பினி
லிடந்தொறுஞ்செறியேனற்புனமெலாங்
கடந்துபோயதுகாவல்கொள்வேட்டுவர்
மடந்தைமார்கள்வரிவிழியென்னவே.

(இ-ள்.) அங்ஙனநடந்த மான் நன்மையமைந்த வம்மலையினிடத்துள்ள தினைப்புலங்களையெல்லாம் கடந்து அப்புனங்களைக் காக்கின்ற குறமாதரின் கீற்றமைந்த கண்களைப்போலச் சென்றது.—எ-று. (உ௭)

பிள்ளையீற்றுப்பிணைவெயின்சேரியி
னுள்ளமாதருளித்தலைக்கோல்கொடு
வள்ளிகீழ்புகுமாமுதல்வெளவியே
பொள்ளல்செய்திடுபுன்புலம்புக்கதே.

(இ-ள்.) பிள்ளையைப் பெறவேண்டிய வப்பெண்மான், வேடர் சேரியிலுள்ள பெண்கள் உளியைத் தலையிற்கொண்ட கோலினைக்கொண்டு நிலத்தின் கீழ்ச்சென்ற வள்ளிக்கிழங்குகளைத் தோண்டியெடுத்துப் பொத்தலாக்கிய வறும் புலத்திற் புகுந்தது.—எ-று.

புலம்-கொல்லை. (உ௮)

தோன்றலுக்குத்துணைவிபைத்தொல்பிணை
தான்றரித்துத்தளர்ந்துதளர்ந்துபோய்
மான்றராற்றியுயிர்த்துவயிறுநொந்
தின்றுவள்ளியிருங்குழியிட்டதால்.

(இ-ள்.) சிவசுப்பிரமணியப் பெருமானுக்கு மனைவியாகவேண்டிய சுந்தரியைப் பெருமையமைந்த வம்மான் வயிற்றிற் றாங்கி வருந்தி வருந்திச்சென்று மயங்கியழுது பெருமூச்சுவிட்டு வயிறு நோயிற்றுப் பெரிய வள்ளிக்குழியிற் பெற்றிட்டது.

தொல், பழமை. ஈண்டு இலக்கணையாற் பெருமை யென்றும். (உக)

குழைகுறுந்தொடிகோல்வளையேமுதற்
பழையபூண்கள்பலவுடன்றுங்குறுத்
தழைபுனைந்துதனதுணர்வின்றியே
யுழைவயின்வந்துதித்தனளொப்பிலாள்.

(இ-ள்.) ஒப்பற்ற சுந்தரி குண்டலமுஞ் சிறுதொடியுங் கோல்வளையுமாகிய பழய வாபரணங்கள் பலவற்றைத் தோன்றும்பொழுதே யணிந்து அவைகளுடன் புதிதாகத் தழையையு மடையாகத்தரித்துத் தனது பழய வுணர்ச்சியின்றி மானின்வயிற்றில் வந்து பிறந்தனள்.

கோல்வளை ஒருவகைவளைவிசேடம்; விளிம்புமடித்தியற்றப்பட்ட வளையென்ப.

கோற்றொடிக்கைக்குழவியைநோக்கியே
யீற்றுமான்பிணையெம்மினத்தன்றிது
வேற்றுருக்கொடுமேவியதீண்டென
வாற்றவேமருண்டஞ்சியகன்றதே.

(இ-ள்.) கோல்வளையணிந்த கரங்களையுடைய குழந்தையைப் பார்த்து அதனைப்பெற்ற மான்பிணை இது எம்மினத்ததன்று வேற்றுருவங்கொண்டு வந்ததிங்கென்று மிகவு மருண்டு அஞ்சி விலகிச்சென்றது.—எ-று. (நக)

வேறு.

அன்னையெனவீன்றவரிணமருண்டோடியபின்
றன்னிணையிலாததலைவிதனித்தனளாய்க்
கின்னரநல்யாழொலியோகேடில்சீர்ப்பாரதித
னின்னிசையோவென்றயிர்க்கவேங்கியழுதிட்டனளே.

(இ-ள்.) தாயாகப்பெற்ற மான் மருண்டோடிய பின்னர்த் தனக்கொப்பொருவருமில்லாத தலைவியானவள் தனித்தவளாய்க் கின்னரர்களின் நல்லயாழோசையோ கேடற்ற சீரினையுடைய சரசுவதியின் இனிய இசையோ என்று சந்தேகமுற ஏங்கியழுதனள்.—எ-று. (நஉ)

அந்நவளவைதனிலாறிரண்டுமொய்ம்புடைய
வெந்தையருளுய்ப்பவெயினர்குலக்கொற்றவனும்
பைந்தொடிநல்லாளும்பரிசனங்கள்பாங்கெய்தச்
செந்தினையின்பைங்கூழ்செறிபுனத்துப்புக்கனரே.

(இ-ள்.) அப்பொழுது பன்னிரண்டு தோள்களையுடைய எந்தையான குமரக்கடவுளின் திருவருளானது செலுத்த வேடர்குலபதியான நம்பியும் பசியவளையலணிந்த அவன் மனைவியும் பரிசனங்கள் அருகில்வாரநிற்பச் செந்தினையின் பயிர்செறிந்த புனத்துப் புகுந்தனர்.—எ-று. (நந)

கொல்லைப்புகுந்தகொடிச்சியொடுகானவர்கோ
னல்லைநிகர்குழலாளம்மென்குரல்கேளா
வெல்லையதனிலெழுமொலியங்கேதென்னா
வல்லைதனிலவ்வறும்புனத்தில்வந்தனனே,

(இ-ள்.) தினைப்புனத்துட் பிரவேசித்த வேடர் தலைவன் இருளனைய கூந்தலாளான மனைவியுடன் சுந்தரியினுடைய அழகிய மெல்லிய குரலோசையைக் கேட்டு அப்பொழுதங்குண்டாகும் ஓசை என்னையென்று விரைவாகவந்த வெறுங்கொல்லையுள் வந்தான்,—எ-று. (ரு௪)

வந்தான்முதலெடுத்தவள்ளிக்குழியில்வைகு
நந்தாவிளக்கனையநங்கைதனைநோக்கி
யிந்தாவிஃதோரிளங்குழவியென்றெடுத்துச்
சிந்தாகுலந்தீரத்தேவிகையிலீந்தனனே.

(இ-ள்.) வந்தவன் கிழங்கெடுத்த வள்ளிக்குழியிற் கிடக்கின்ற கெடாதமாணிக்கதீபம் போன்ற சுந்தரியைப்பார்த்து இந்தா இவ்விடத்தி லொரிளங் குழந்தையென்றெடுத்து மனவருத்த மொழியத்தனது மனைவியின் கையிற் கொடுத்தனன்.

இந்தா என்பது, இங்குஎன்னும் பொருளது; செந்தமிழ்நாட்டுந் தென்பாண்டி நாட்டும் வழங்கும் இந்தாயிருக்கு இந்தாடா இந்தாடி இந்தாலே என்பவைகளாலுணர்க. இந்தா – இவ்விடத்து. (ருரு)

ஈந்தான்சிலைநிலத்திலிட்டாமனைமுழங்கித் தோங்கிப்
பாய்ந்தான்றெழித்தானுவகைப்படுகடலிற்
றோய்ந்தான்முறுவலித்தான்றோள்புடைத்தான்றொல்பிறப்பி
னீந்தாமியற்றுதவநன்றாங்கொலென்றுரைத்தான்.

(இ-ள்.) குழந்தையை மனைவியின் கரத்திற் கொடுத்த நம்பி வேடன் வில்லினைப்பூமியிலிட்டு எழுந்தோங்கிக்குதித்து ஆரவாரஞ்செய்து சந்தோஷமாகிய ஓசையினையுடையகடலில் முழுகிநகைத்துத் தோள்கொட்டி முன்செனனத்தில் நாம் செய்த தவநல்லது என்று கூறினன்.—எ-று. (ருசு)

தோள்புடைத்தான் – புயம் பூரித்தான் என்றுமாம்.

கொற்றக்கொடிச்சிகுழவியைத்தன்கைவாங்கி
மற்றப்பொழுதில்வயாவும்வருத்தமுமாய்ப்
பெற்றுக்கொள்வாள்போலப்பேணிப்பெரிதுமகிழ்
வுற்றுக்கனதனத்திலூறுமமிர்தூட்டினளால்.

(இ-ள்.) திண்ணியவுடலினளான வக்கொடிச்சி குழந்தையைத் தன் கையினில் வாங்கி அப்பொழுது சூலும் வருத்தமுமுடையவளாகிப் பெற்றுக்கொண்டவளைப் போல விருப்பங்கொண்டு மிகவுமகிழ்வடைந்து கனத்ததனத்திலூறிய பாலினை யூட்டினள்.—எ-று. (ருஎ)

வென்றிச்சிலையெடுத்துமேலைப்புனமகனாறு
குன்றக்குறவன்குதலைவாய்க்கொம்பினுடன்
மன்றற்றுணைவிதனைவல்லைகொடுசீறூரிற்
சென்றக்கணத்திற்சிறுகுடிலிற்புக்கனனே.

(இ-ள்.) உடனே குன்றக்குறவனான நம்பி தனது வெற்றிவில்லினை யெடுத்துக் குதலைவாயினையுடைய கொம்புபோல் வாளான சுந்தரிதேவியுடன் தான்மணந்த மனைவியான கொடிச்சியையுடன்கொண்டு அம்முதுபுனத்தினைக்கடந்து விரைந்து சிற்றூரின்கண் சென்று தனது சிறுகுடிலிற் புகுந்தான்.—எ-று. (ருஅ)

அண்டரமுதமனையமகட்பெற்றிடலான்
மண்டுபெருமகிழ்வாய்மாத்தாட்கொழுவிடையைக்
கெண்டியொருதன்கிளையோடினிதருந்தித்
தொண்டகமதார்ப்பக்குரவைமுறைதூங்குவித்தான்.

(இ-ள்.) தேவாமுதம்போன்ற மகளைப்பெற்றமையான் நெருங்கிய பெரிய மகிழ்வுடன் வலியகால்களையுடைய கொழுத்த கடாவை வெட்டித்தனது சுற்றத்திலருடன் செவ்வனே புசித்துத் தொண்டகப்பறை முழங்கக் குரவைக்கூத்தாடுவித்தான்.

காலையதற்பின்கடவுட்பலிசெலுத்தி
வாலரிசிமஞ்சண்மலர்சிந்திமறியறுத்துக்
கோலநெடுவேற்குமரன்விழாக்கொண்டாடி
வேலனைமுற்கொண்டுவெறியாட்டுநேர்வித்தான்.

(இ-ள்.) அதற்குப்பின்னர் கடவுளான முருகவேட்குப் பூசையைச்செலுத்தி வெள்ளியவரிசியும் மஞ்சளும்மலருமிறைத்து ஆட்டுமறியைவெட்டி அழகியநெடியவேற்படையினையுடைய குமாரசுவாமிக்குத் திருவிழாநடத்தித் தேவாளனைக்கொண்டுவெறியாட்டுச்செய்வித்தான்.—எ-று. (௬0)

வெறியாட்டாளன் வேலினையுடையனாதலின் வேலனென்றார்

இன்னபலவுமியற்றியிருங்குறவர்
மன்னன்மனைவிவடமீன்றனையனையாள்
கன்னிமடமகட்குக்காப்பிட்டுக்கானமயிற்
பொன்னஞ்சிறைப்படுத்தபூந்தொட்டிலேற்றினளே.

(இ-ள்.) இவைபோல்வன பலவற்றையுஞ்செய்து பெரிய வேடராசன் மனைவியான அருந்ததியனையவள் கன்னியாகிய அம்மடமையுடைய மகளுக்குக் காப்பணிந்து கானத்திலுள்ள மயிலின் பொன்போலு மழகிய இறகுகளை அழகினுக்காகக் கட்டப்பட்ட பூந்தொட்டிலேற்றினாள்.—எ-று. (௬௧)

நாத்தளர்ந்துசோர்ந்துநடுக்கமுற்றுப்பற்கழகன்று
மூத்துநரைமுதிர்ந்தமூதாளர்வந்தீண்டிப்
பாத்திபடுவள்ளிப்படுகுழியில்வந்திடலால்
வாய்த்தவிவணாமம்வள்ளியெனக்கூறினரே.

(இ-ள்.) நாக்குத்தளர்ந்து சோர்ந்து நடுக்கமுற்றுப் பற்கள்விழுந்து மூப்பெய்தி நரைமுதிர்ந்த கிழவர்கள் வந்துசேர்ந்து பாத்தியாகப்படுத்த வள்ளிகளையுடைய குழியில் வந்தமையால் பொருந்திய இவள் பெயர்வள்ளியென்று கூறினார்கள்.—எ-று. ( )

தம்மரபிலுள்ள தமராகியமுதுவ
ரிம்முறையாலாராய்ந்தியற்பேர்புனைந்துரைப்பக்
கொம்மைமுலையாள்கொடிச்சியொடுகுன்றவர்கோ
னம்மனையைநம்மகளென்றன்பால்வளர்த்தனனே.

(இ-ள்.) தமது மரபிலுள்ள பந்துக்களான கிழவர்கள் இம்முறையாகவாராய்ந்து இயற்பெயரை அமைத்துக் கூறத் திரட்சியாகிய தனங்களையுடையளான கொடிச்சியுடன் குறவர் தலைவன் உலகமாதாவான வள்ளியம்மையைத் தமது மகளென்று கருதி அன்புடன் வளர்த்தனன்.—எ-று. (௬௩)

முல்லைப்புறவமுதல்வன்றிருமடந்தை
கொல்லைக்குறிஞ்சிக்குறவன்மகளாகிச்
சில்லைப்புன்கூரைச்சிறுகுடிலிற்சேர்ந்தனளாற்
றொல்லைத்தனிந்தந்தைதோன்றியமர்வுற்றதுபோல்,

(இ-ள்.) முல்லைக்கொடிகளையுடைய வனத்திற்கு முதல்வனான மாயோனுடைய திருமகள் புனங்களையுடைய குறிஞ்சிக்குறவனுக்கு மகளாகி இழிந்தபுல்முதலியவற்றால் கட்டப்பட்ட புல்லிய கூரையினையுடைய சிறுகுடிலில் முன்னாளிற் தனது தந்தை அரசர் குடியிற்பிறந்து இடையர் குடியிற் புகுந்தாங்கு சேர்ந்திருந்தனள்.—எ-று.

மூவாமுகுந்தன்முதனாட்பெறுமமுதைத்
தேவாதிதேவன்றிருமைந்தன்றேவிதனை
மாவாழ்சுரத்திற்றம்மாமகளாய்ப்போற்றுகையா
லாவாகுறவர்தவமாரளக்கவல்லாரே.

(இ-ள்.) மூவாமையினையுடைய முகுந்தன் முன்னாளிற்பெற்ற வமுதம்போல்பவளை மகாதேவருக்கெல்லா மகாதேவனான சிவபெருமானுடைய திருக்குமாரனான சிவசண்முகப்பெருமான் மனைவியை விலங்குகள் வாழுஞ்சுரத்திற்றனது சிறந்த மகளாகவளர்த்தலினால் ஆவா குறவரின் தவத்தை யெவரளக்க வல்லுநர்.—எ-று. (௪௬)

பொற்றொட்டில்விட்டுப்புவியின்மிசைதவழக்
கற்றுத்தளர்நடையுங்காட்டிக்கணிநீழன்
முற்றத்திடையுலவிமுறத்தின்மணிகொழித்துச்
சிற்றில்புனைந்துசிறுசோறட்டாடினளே

(இ-ள்.) வள்ளிநாயகி பொன்னந் தொட்டிலை விடுத்துப் பூமியின்மீது தவழக் கற்றுத்தளர் நடையுங்காட்டி வேங்கைமர நிழலினையுடைய முற்றத்தில் உலாவி முறத்தின் மணிகளைக்கொழித்துச் சிறுவீடுகட்டிச் சிறுசோறு சமைத்து விளையாடினாள்.

முந்தையுணர்வுமுழுதுமின்றியிம்முறையாற்
புந்திமகிழ்வண்டல்புரிந்துவளர்செவ்விக்க
ணெந்தைபுயம்புல்லுவதற்கிப்பருவமேற்குமெனப்
பைந்தொடியினுக்கியாண்டுபன்னிரண்டுசென்றனவே.

(இ-ள்.) பழயவுணர்வு சிறிதுமின்றி இம்முறையாக மனமகிழ்ச்சியைத் தரும் விளையாடுதலைச் செய்து வளருங்காலத்தில் எந்தையான சுப்பிரமணியம்பெருமானுடைய தோள்களைச் சேருதற்கு இந்தப்பருவந்தக்கதென்று கூறப்பசிய வளையலணிந்த வள்ளிநாயகிக்குப் பன்னிரண்டு வயதுகளாயின.—எ-று. (௪௭)

ஆனபருவங்கண்டம்மனையுமம்மனையிற்
கோனுமொருதங்குலத்தின்முறைநோக்கி
மானின்வயிற்றுதித்தவள்ளிதனைப்பைம்புனத்தி
லேனல்விளையுளினிதளிக்கவைத்தனரே.

(இ-ள்.) அவ்வாறான பருவத்தினைப்பார்த்துத் தாயும் அவ்வில்லிலுள்ள தந்தையான நம்பியும் ஒப்பற்றதமது குலத்தின் முறையையாராய்ந்து மானின்வயிற்றிற்பிறந்தவள்ளியைப் பசியபுனத்திற் றினைப்பயிரைக் காவல்புரியுமாறு வைத்தார்கள்.—எ-று.

வேடர் தம் பெண்மக்கள் மங்கைப்பருவமடைந்தவுடன் தினைப்புனங்காத்தல் வேண்டுவது முறையாதலினருமையாகக்கிடைத்த வள்ளிநாயகியையுந் தினைப்புனங் காப்பான் விடுதற்கு விருப்பற்றாராயினுஞ் சாதிவழக்குக்கிழுக்கு வாராமைக்காகத் தினைப்புனங்காக்க வைத்தனரென்பார். தங்குலத்தின் முறைநோக்கி என்றார். (௪௮)

காட்டிலெளிதுற்றகடவுண்மணியைக்கொணர்ந்து
கூட்டிலிருளோட்டக்குருகுய்த்தவாறன்றோ
நீட்டுசுடர்வேற்குமரன்றேவியாந்தெள்ளமுதைப்
பூட்டுசிலைக்கையார்புனங்காப்பவைத்ததுவே:

(இ-ள்.) காட்டிலெளிதாகக்கிடைத்த தேவமணியான சிந்தாமணியைக்கொண்டுவந்து தமதுகூண்டிலுள்ள விருளோடுமாறு குருவிகள்வைத்த தன்மையன்றோ நீட்டப்பட்ட சுடரினையுடைய வேற்படையேந்திய குமாரக்கடவுளுக்குத் தேவியாகும் தெள்ளியவமுதம்போல்பவளை நாண் பூட்டப்பட்ட வில்லேந்திய கையினையுடைய வேடர்கள் தினைக்கொல்லையைக்காக்குமாறு வைத்தது.—எ-று. (௪௯)

சுத்தமெழுகிட்டுச்சுடர்கொளுவிப்பர்மணியின்
பத்திருயின் றிட்டபழுப்பேணியிற்பாதம்
வைத்துமகிழ்ந்தேறிமகடேஉத்தினைப்புனத்தி
லெத்திசையுங்காணுமிதணத்திருந்தனளே.

(இ-ள்.) சுத்தமாகிய மெழுகினையழுத்தி அதன்மீது நெருப்பைக்கொளுத்திப் பலவாகிய மணிகளின் வரிசைகளைப் பதித்துள்ள பழுப்பையுடைய ஏணியிற் திருவடி வைத்தேறி அவ்வள்ளிநாயகி தினைப்புனத்தி னெவ்விடத்தினையும் காணத்தக்கபரணி யிருந்தனள்.—எ-று. (௯0)

கிள்ளையொடுகேகயமேயன்றிப்பிறநிலத்தி
லுள்ளபறவையொருசார்விலங்கினொடும்
வள்ளிமலைப்புனத்தில்வந்துற்றனமாவும்
புள்ளுமயங்கல்பொருணூற்றுணிபன்றே,

(இ-ள்.) கிளிகளொடு மயில்களன்றிப் பிறநிலங்களிலுள்ள பறவைகளும் ஒரு சாரான விலங்குகளும் வள்ளிமலைப்புனத்தில் வந்து பொருந்தின; மாவும் புள்ளு மயங்கியிருத்தல் பொருளிலக்கண நூற்றுணிபல்லவோ.—எ-று.

இங்ஙனமாதலை,முத்திறப்பொருளுந் தத்தந் திணையொடு மரபின் வாராது மயங் கலுமுரிய என்பதனாலுணர்க. (௯௧)

கட்டுவரிவிற்கருங்குறவர்கைத்தொழிலா
லிட்டவிதணத்திருந்தெம்பெருமாட்டி
தட்டைகுளிர்தழலைத்தாங்கித்தினைப்புனத்தைக்
கிட்டலுறுவண்ணங்கிளிமுதற்புள்ளோட்டினளே.

(இ-ள்.) கட்டப்பட்ட வரிந்தவில்லினையுடைய கரியவேடர்கள் கைவேலையா னமைத்த பரணிலிருந்து எம்பெருமாட்டி தட்டையுங் கவணும் தழலும் கரத்திலேந் தித் தினைப்புனத்தை யடையாத வண்ணங்கிளி முதலியவைகளை யோட்டினள்.-எ-று.

எய்யானவையுமிரலைபரைமான்பிறவுங்
கொய்யாதவேனற்குரல்கவர்ந்துகொள்ளாமன்
மையார்விழியான்மணிக்கற்கவணிட்டுக்
கையாலெடுத்துக்கடிதோச்சிவீசினளே.

(இ-ள்.) முட்பன்றிகளும் கருமான்களும் அறுக்கப்படாததினைக் கதிரைக் கவர்ந்து கொள்ளாதவண்ணம் மைதீட்டிய கண்ணினையுடைய வள்ளிநாயகி மணிக ளாகிய கற்களைக் கவணிலிட்டுக் கையினலெடுத்து விரைந்தோங்கி யெறிந்தனள்.எ-று.

பூவைகாள்செங்கட்புறவங்காளாலோலந்
தூவிமாமஞ்ஞைகாள்சொற்கிளிகாளாலோலங்
கூவல்சேர்வுற்றகுயிலினங்காளாலோலஞ்
சேவல்காளாலோலமென்றுடிருந்திழையாள்.

(இ-ள்.) நாகணவாய்களே செம்மையாகிய விழிகளையுடைய புறாக்களேஆலோ லம் தோகையினையுடைய பெரியமயில்களே சொற்களையுடைய கிளிகளே ஆலோலம் கூவுதலைப்பொருந்திய குயிலினங்களே ஆலோலம் கோழிகளே ஆலோலமென்றாள் திருத்தமான ஆபரணங்களையுடைய வள்ளிநாயகி —எ-று.

ஆலோலமென்பது பறவைமுதலியவைகளை நயமாகவோட்டு மொருவகையின் னோசை. (௯௪)

இந்தமுறையிலிவளேனற்புனங்காப்ப
வந்தவளவிலவளுக்கருள்புரியக்
கந்தவரைநீங்கிக்கதிர்வேலவன்றனியே
வந்துதணிகைமலையிடத்துவைகினனே.

(இ-ள்.) இவ்வாறிவள் தினைப்புனங்காவல்செய்ய வப்பொழுதவளுக்கருள்செய்யும் வண்ணம் கந்தமாதனத்தைவிடுத்துக் கிரணத்தினையுடைய வேற்படையேந்திய குமரப்பெருமான் தனியேவந்து திருத்தணிகைமலையி லெழுந்தருளி இருந்தனன்.

வேறு.

சூரல்பம்பியதணிகைமால்வரைதனிற்சுடர்வேல்
வீரன்வீற்றிருந்திடுதலும்வேலையங்கதனில்
வாரியும்வடித்துந்தியும்வரிசையாலுறழ்ந்துஞ்
சீரியாழ்வல்லநாரதன்புவிதனிற்சேர்ந்தான்.

(இ-ள்.) பிரம்புகள் நிறைந்த பெரிய திருத்தணிகைமலைமீது ஒளிவாய்ந்த வேலினையுடைய வீரனான சுப்பிரமணியப்பெருமான் எழுந்தருளிஇருத்தலும் அப்பொழுது சிறந்த யாழினைவார்தல் வடித்தல் உந்தல் முறையாக உறழ்த்தலென்னும் திறத்துடன் வாசிக்க வல்லநாரத முனிவன் பூலோகத்தை யடைந்தனன்.—எ-று. (௩௬)

வளவிதாகியவள்ளிமால்வரைதனில்வந்து
விளையுளாகியதினைப்புனம்போற்றிவீற்றிருந்த
புளினர்பாவையைக்கண்டுகைதொழுதுபுந்தியினி
லளவிலாததோரற்புதத்துடனிவையறைவான்.

(இ-ள்.) வளத்தினையுடையதாகிய பெரியவள்ளிமலையையடைந்து விளைதலாகிய தினைப்புனத்தினைக் காவல்செய்து வீற்றிருந்த வேடர்குமாரியான வள்ளி நாயகியைப்பார்த்துக் கைகூப்பித்தொழுது மனதினினுள் அளவற்றதான அற்புதத்துடன் இவற்றையுரைக்கின்றான்.—எ-று. (௩௭)

அன்னையாகியிங்கிருப்பவர்பேரழகனைத்து
முன்னியான்புனைந்துரைக்கினுமுலவுமோவுலவா
வென்னையாளுடையறுமுகன்றுணைவியாயிருப்ப
முன்னர்மாதவம்புரிந்தவரிவரெனமொழிந்தான்.

(இ-ள்.) அன்னையாகி இங்கே இருக்கும் இவரது பெரிய அழகுமுற்றிலும் எண்ணியெண்ணி யான்வருணித்துரைத்தாலும் ஒழியுமோ ஒழியாது என்னையாளாகவுடைய ஆறுமுகப்பெருமானது மனைவியாயிருத்தற்கு முன்னர்ச்சிறந்ததவஞ்செய்தவரிவரென்று கூறினன்.—எ-று. (௩௮)

வேறு.

கார்த்தினைப்புனங்காவற்கன்னியைப்
பார்த்துமற்றிவைபகர்ந்துபோற்றிப்போய்
மூர்த்தமொன்றினின்மூன்றுபூமலர்
தீர்த்திகைச்சுனைச்சிகரநண்ணினான்.

(இ-ள்.) கரியதினைப் புனத்தினைக் காக்குங்கன்னியான வள்ளிநாயகியைப் பார்த்து இவைகளைத்தன்னுக்குட் கூறிவணங்கிச்சென்று நாளொன்றிற்கு மூன்றுசெங்காவிமலர்கள் அலர்கின்ற தீர்த்தமான சுனையினையுடைய திருத்தணிகைமலையினுச்சியையடைந்தான்.—எ-று. (௩௯)

தணிகையங்கிரிதன்னில்வைகிய
விணையில்கந்தனையெய்தியன்னவன்
றுணைமென்சீறடிதொழுதுபன்முறை
பணிதல்செய்திவைபகர்தன்மேயினன்.

(இ-ள்) தணிகைமலையி லெழுந்தருளி இருக்கும் ஒப்பற்ற கந்தக்கடவுளை யடைந்து அப்பெருமானது இரண்டுமெல்லிய சிறிய திருவடிகளைத்தொழுது பலமுறைவணங்கி இவைகளையுரைக்கத் தொடங்கினன்.—எ-று. (சுo)

மோனநற்றவமுனிவன்றன்மகண்
மானினுற்றுளாள்வள்ளிவெற்பினிற்
கானவக்குலக்கன்னியாகியே
யேனலைப்புரந்திதணின்மேயினள்.

(இ-ள்.) மௌன நிலையில் நின்று நல்ல தவத்தினைச்செய்கின்ற சிவமுனியின் புதல்வி மான் வயிற்றிற் பிறந்தவள் வள்ளிமலையில் வேடர்குலமகளாகித் தினைப்புனங் காத்துப் பரணிலிருக்கின்றாள்.—எ-று. (சுக)

ஐயனேயவளாகநல்லெழில்
செய்யபங்கயத்திருவிற்கும்மிலை
பொய்யுதன்றிதுபோந்துகாண்டிநீ
கையனேனிவண்கண்டுவந்தனன்.

(இ-ள்.) ஐயனே! அவளுடலிற்பொருந்திய நல்லழகு செந்தாமரை மலரிலிருக்குந் திருமகட்குமில்லை இது பொய்யன்று நீ சென்று காண்பாயாக சிறியேனிப்பொழுது பார்த்து வந்தேன்.—எ-று. (சுஉ)

தாயதாகுமத்தையன்முன்னரே
மாயவன்மகண்மற்றுன்மொய்ம்பினைத்
தோயநோற்றனள்சொற்றவெல்லையிற்
போயவட்கருள்புரிதியாலென்றான்.

(இ-ள்.) உலகமாதாவாகு மம்மாது முன்னாளின் மாயோன் புதல்வி தேவரீருடைய புயங்களை அணையுமாறு தவஞ்செய்துள்ளவள் ஆதலின் அடியேன் கூறிய இடத்திற்சென்று அம்மாதுக்கருள்செய்தி என்று கூறினன்.—எ-று. (சுங)

என்றவேலையிலெஃகவேலினா
னன்றுநன்றிதுநவையில்காட்சியோய்
சென்றிநீயெனச்செப்பித்தூண்டியே
கன்றுகாமநோய்க்கவலையுள்வைத்தான்.

(இ-ள்.) என்றுரைத்தவுடனே கூரிய வேற்படையினையுடைய குமரவேள் குற்றமற்ற காட்சியினையுடையாய் இது நன்று நன்று நீ போவெனக்கூறி யனுப்பிப் பின்னர் வருத்துகின்ற காமநோயாகிய கவலையைத்தன்னுள்ளில் வைத்தருளினன்.—எ-று.

எய்யும்வார்சிலையெயினர்மாதரா
ளுய்யுமாறுதன்னுருவநீத்தெழீஇச்
செய்யபேரருள்செய்துசேவகன்
மையன்மானுடவடிவந்தாங்கினன்.

(இ-ள்.) அம்புகளையெய்கின்ற நெடிய வில்லினையுடைய குறவர் குலமாதான வள்ளிநாயகி உய்யும் வண்ணம் செவ்விய பெரிய கருணைகொண்டு வீராதி வீரனை

குமரவேள் தனது திருவுருவத்தினை விடுத்தெழுந்து காமமயக்கத்தினையுடைய மானுடவுருவந்தாங்கினான்.—எ-று. (சுரு)

காலிற்கட்டியகழலன்கச்சினன்
மாலைத்தோளினன்வரிவில்வாளிய
னீலக்குஞ்சியனெடியன்வேட்டுவக்
கோலத்தைக்கொடுகுமரன்றோன்றினான்.

(இ-ள்.) குமரக்கடவுள் காலிற்கட்டிய கழலினனும் இடையிலிறுக்கிய கச்சினனும் மாலையிட்ட தோளினனும் வரிந்தவில்லும் வாளியுமுடையவனும் கரியகுஞ்சியனும் நெடியவனுமுள்ள ஒரு வேட்டுவக்கோலத்தை யெடுத்துத்தோன்றி யருளினான்.—எ-று.

வேட்டுவக்கோலத்தைக்கொடு என்பதற்கு, வேட்டையாடு மரசர் கோலத்தைக் கொடு என்றுங் கூறுவர். வ்யாத வேஷங்கராஹீத் வாதநிரகாத் ஷண்முகஸ்ததா என்பது வடமொழி ஸ்காந்தவசனம். வியாதன் - வேடன். (சுசு)

கிள்ளையன்னதோர்கிளவிமங்கைமாட்
டுள்ளமோகந்தன்னுள்ள லைக்கத்தனைத்
தள்ளவெம்பிரான்றணிகைவெற்பொரீஇ
வள்ளியங்கிரிவயின்வந்தெய்தினான்.

(இ-ள்.) எமது பெருமானான குமரவேள் கிளிமொழிபோலு மொழியினையுடைய வள்ளிநாயகியிடத்து வைத்துள்ள மோகமானது தன்னுள்ளினிடத்தினை அலைக்கத் திருத்தணி மலையைவிடுத்து வள்ளியங்கிரியினிடத் தெழுந்தருளினான்.—எ-று.()

வேறு.

மண்டலம்புகழுந்தொல்சீர்வள்ளியஞ்சிலம்பின்மேல்போய்ப்
பிண்டியந்தினையின்பைங்கூழ்ப்பெரும்புனத்திறைவிதன்னைக்
கண்டனன்குமரனம்மாகருதியவெல்லைதன்னிற்
பண்டொருபுடையில்வைத்தபல்பொருள்கிடைத்தவாபோல்.

(இ-ள்.) மண்ணுலகினிடத்துள்ளாராற் புகழப்படுகின்ற பெரிய சீரினையுடைய வள்ளிமலையின் மேற்சென்று மாவினையுடைய தினையினது பசிய பயிரினையுடைய பெரியபுனத்திலிருக்கும் இறைவியைக் குறித்தவிடத்தில் ஒருவனுக்கு முன்னொருபுறத்திற்புதைத்துவைத்த பழம்பொருள் கிடைத்தாற்போலக் கண்டனன்.—எ-று, (சுஅ)

பூமஞ்சார்மின்கொலென்னப்பொருப்பினிலேனல்காக்குங்
காமஞ்சாலிளைமையாளைக்கடம்பமர்காளைநோக்கித்
தூமஞ்சால்விரகச்செந்தீச்சுட்டிடச்சோர்ந்துவெம்பி
யேமஞ்சால்கின்றநெஞ்சனிதணினுக்கணியன்சென்றான்.

(இ-ள்.) அழகிய மேகத்திற் பொருந்திய மின்னலோவென்று கருதும் வண்ணம் மலைச்சாரலிற் தினையைக்காக்கின்ற காம வின்பத்தினை நுகர்தற்கேற்ற பருவத்தினையுடைய இளமைப்பருவம்வாய்ந்த வள்ளிநாயகியைக் கடம்பலாணிந்த இறையோன்கண்டு காமநோயாகிய புகைநிறைந்த செவ்விய அக்கினிசுட அதனாற் சோர்ந்து வெதும்பி மயக்க நிறைந்த உள்ளத்தினனாய்ப் பரணினுக்கு அருகாச்சென்றனன் —எ-று.

நாந்தகமனையவுண்கணங்கைகேண்ஞாலந்தன்னி
லேந்திழையார்கட்கெல்லாமிறைவியாயிருக்குநின்னைப்
பூந்தினைகாக்கவைத்துப்போயினார்புளினரானோர்க்
காய்ந்திடுமுணர்ச்சியொன்றுமயன்படைத்திலன்கொலென்றான்.

(இ-ள்.) வாளனையமையுண்ட கண்களையுடைய நங்கையே கேளாய் உலகினில் அணியணிந்த மடந்தையருக்கெல்லாம் தலைவியாயிருக்கு நின்னை வேடராயுள்ளார் பொலிவினையுடைய தினையைக் காக்குமாறு வைத்துச்சென்றார்கள். அவ்வேடுவர்க்கு, ஆராயத்தக்க அறிவொன்றினைமாத்திரம்பிரமன்படைத்திலனோ?—எ-று. (௭௦)

வாரிருங்கூந்தனல்லாய்மதிதளர்வேனுக்குன்றன்
பேரினையுரைத்திமற்றுன்பேரினையுரையாயென்னி
னூரினையுரைத்தியூருமுரைத்திடமுடியாதென்னிற்
சீரியநின்சீறூர்க்குச்செல்வழியுரைத்தியென்றான்

(இ-ள்.) வார்ந்து விளங்காநின்ற சிறந்த கூந்தலினையுடையாய் உன்னைக்கண்டமையால் மனந்தளர்வேனுக்கு உன் பெயரினையுரைப்பாய் உன்பெயரினை யுரையாயானால் நீ இருக்கும் ஊரினை உரைப்பாய் ஊரும் உரைத்திடமுடியாதானாற் சிறந்தநினது சிற்றூர்க்குப்போம்வழியை உரைப்பாயாக என்றுரைத்தான்.—எ-று. (௭௧)

மொழியொன்றுபுகலாயாயின்முறுவலும்புரியாயின்
விழியொன்றுநோக்காயாயின் விரகமிக்குழல்வேனுய்யும்
வழியொன்றுகாட்டாயாயின்மனமுஞ்சற்றுருகாயாயிற்
பழியொன்றுநின்பாற்சூழும்பராமுகந்தவிர்தியென்றான்.

(இ-ள்.) ஒருசொல் கூறாயானாற் புன்னகையுஞ்செய்யாயானாற் கண்ணாலுமொருமுறை பாராயானால் நின்மீது விரகமிகுந்துழலும் யான் உய்யுமொரு வழியைக் காட்டாயானால் மனதுஞ்சிறிதுருகாயானால் நின்னையொரு பழிவந்து சூழ்ந்துகொள்ளும் பாராமுகமாயிருப்பதை விட்டுவிடு என்றனன்.—எ-று. (௭௨)

உலைப்படுமெழுகதென்னவுருகியேயொருத்திகாதல்
வலைப்படுகின்றான்போலவருந்தியேயிரங்காநின்றான்
கலைப்படுமதியப்புத்தேள் கலங்கலம்புனலிற்றோன்றி
யலைப்படுதன்மைத்தன்றோவறுமுகனுடலெல்லாம்.

(இ-ள்.) உலையிற்பட்ட மெழுகினைப்போல உருகி யொருத்தியின் காதலாகிய வலையுளகப்பட்டானையொப்ப வருந்தி யிரங்கினான் கலைகளையுடைய சந்திரன் கலங்கனீரிற் பிரதி பிம்பித்து அலையுந்தன்மையதன்றோ ஆறுமுகப்பெருமானுடைய விததிருவிளையாடலனைத்தும்.—எ-று. (௭௩)

செய்யவள்குமரிமுன்னந்திருநெடுங்குமரனின்று
மையலின்மிகுதிகாட்டிமற்றிவைபகருமெல்லை
யெய்யுடனுளியம்வேழமிரிதரவிரலையூத
வொய்யெனவெயினர்சூழவொருதனித்தாதைவந்தான்.

(இ-ள்.) திருமகளின் புதல்வியான வள்ளிநாயகியெனெதிரே அழகிய நெடிய குமரவேள் நின்று காம மயக்கத்தின் மிகுந்த தன்மையைக்காட்டி இவைகளையுரைக்குங்காலத்து முட்பன்றிகளும் கரடிகளும் யானைகளும் விலகியோடும் வண்ணம் கொம்புகளை யூதிக்கொண்டு விரைவாக வேடர்கள் சூழ்ந்துவர வள்ளிநாயகின் ஒப்பற்ற தந்தையான நம்பி வேடன்வந்தான்.—எ-று. (௭௪)

ஆங்கதுகாலைதன்னினடிமுதன்மறைகளாக
வோங்கியநடுவணெல்லாமுயர்சிவநூலதாகப்
பாங்கமர்கவடுமுற்றும்பல்கலையாகத்தானோர்
வேங்கையினுருவமாகிவேற்படைவீரனின்றான்.

(இ-ள்.) அப்பொழுது அடிமுதலானது வேதங்களாகவும் உயர்ந்த நடுவிடமெல்லாஞ் சிறந்த சிவாகமங்களாகவும் பக்கங்களிற் பொருந்திய கிளைகளனைத்தும் பலகலைகளாகவும் ஆகி வேலாயுதத்தினையுடைய வீரனான சுப்பிரமணியப்பெருமான் ஒரு வேங்கைமரத்தி னுருவங்கொண்டு நின்றருளினான்.—எ-று. (எரு)

கானவர்முதல்வனுங்கேகதுமெனவந்துதங்கண்
மானினிதன்னைக்கண்டுவள்ளியங்கிழங்குமாவுந்
தேனொடுகடமான்பாலுந்திற்றிகள்பிறவுநல்கி
யேனலம்புனத்தினின்றயாணர்வேங்கையினைக்கண்டான்.

(இ-ள்.) வேடர் தலைவன் அவ்விடத்துக்கு விரைவாக வந்து தங்கள் குலமகளான வள்ளிநாயகியைக்கண்டு தேனுங்கடமானின் பாலும் பிறவான தோரை யைவனமேனல் முதலிய உணவுகளையுமளித்துப் பின்னர் அத்தினைப்புனத்தினின்ற புதுமையான வேங்கைமரத்தினைக் கண்டான்.— எ-று.

மகண்மீதன்பதிகமானவனாதலின் இவன் விழிகள் மகளைப்பார்த்து மகிழ்ந்து அவட் குண்டியளித்த பின்னரே பிறபொருளைக் கண்டனவாதலிற் புதிய வேங்கையைப் பின்னர்க் கண்டானென்றறிக. (எசு)

ஆங்கவனயலாய்நின்றவடுதொழின்மறவரானோர்
வேங்கையினிலைமைநோக்கிவிம்மிதரீராகி
யீங்கிதுமுன்னுற்றன்றாலித்துணைபுகுந்தவாற்றாற்
றீங்குவந்திடுதறிண்ணமென்றனர்வெகுளித்தீயார்.

(இ-ள்.) அவ்விடத்தி லவ்வேட நம்பியின் அருகில் நின்ற கொலைத்தொழிலினையுடைய குறவர்கள் கோபத்தீயினையுடையவராகி வேங்கைமரத்தின் நிலைமையைப் பார்த்து ஆச்சரியமடைந்து இவ்விடத்திலிது முன்னரிருந்ததன்று இப்பொழுதுண்டாயிருத்தலால் இதனாற் கெடுதியுண்டாதல் நிச்சயம் என்றுரைத்தார்கள். — எ-று (எஎ)

எறித்தகதிரைமாற்றுமிருநிழற்கணியையின்னே
முறித்திடுவீர்களென்பார்முதலொடுவீழச்சூழப்
பறித்திடுவீர்களென்பார்பராரையைக்கணிச்சிதன்னாற்
றறித்திடுவீர்களென்பார்தாழ்க்கலீர்சற்றுமென்பார்.

(இ-ள்.) எறிக்கின்ற சூரியனுடைய கதிரினை நீக்குகின்ற மிகுந்த நிழலினைத் தருகின்ற வில்வேங்கைமரத்தினை இப்பொழுதே முறித்திடுங்கள் என்று கூறுவார்கள் வேருடன் விழுதற்குச் சுற்றிலுந்தோண்டுங்கள் என்று கூறுவார்கள் பரியவரையைக் கோடரியால் வெட்டிவிடுங்கள் என்பார்கள் சிறிதுந் தாமதஞ் செய்யாதீர்கள் என்பார்கள்.— எ-று. (எஅ)

இங்கிவையுரைக்குந்தீயோர்யாரையும்விலக்கிமன்ன
னங்கைதன்வதனப்பாராநறுமலர்வேங்கையொன்று
செங்குரலேனற்பைங்கூழ்செறிதருபுனத்தின்மாடே
தங்கியதென்னைகொல்லோசாற்றுதிசரதமென்றான்.

(இ-ள்.) இவைகளையுரைக்கு மக்கொடிய வேடரனைவரையும்விலக்கி அரசன் வள்ளிநாயகியின் முகத்தைப்பார்த்து மணம்பொருந்திய மலர்களையுடைய வேங்கைமரமொன்று செவ்விய குரலினையுடைய தினைப்பயிர்நெருங்கிய புனத்தினருகில் நூதனமாகவுண்டாகி யிருந்ததென்னை யுண்மையை யுரைப்பாயாகவென்றனன்.—எ-றீ. ()

தந்தையாங்குரைத்தல்கேளாத்தையலும்வெருவியீது
வந்தவாறுணர்கிலேன்யான்மாயம்போற்றோன்றிற்றையா

முந்தைநாளில்லாதொன்றுபுதுவதாய்முளைத்ததென்னாச்
சிந்தைமேனடுக்கமெய்தியிருந்தனன்செயலிதென்றாள்.

(இ-ள்.) அவ்விடத்திற் தனது தந்தை கூறியதனைக்கேட்டு வள்ளிநாயகியும் பயந்து ஐயனே இதுவந்த வரலாற்றினை யானறியேன் மாயம்போலத் தோன்றியது முன்னில்லாத ஒன்று புதிதாகவுண்டாகியது என்று மனதின்கண் நடுக்கமுற்றிருந்தேன் இது நடந்தவரலாறு என்றனள்.—எ-று. (௮௦)

வேறு.

என்றிவைசொற்றபினேந்திழையஞ்சே
லன்றிவண்வைகுதிநாண்மலர்வேங்கை
யின்றுணையாயிவணெய்தியதென்னாக்
குன்றுவன்வேடர்குழாத்தொடுபோனான்.

(இ-ள்.) எனவிவைகளை யுரைத்தவுடனே அரசன் ஏந்திழையே அஞ்சாதே செவ்வனே யிங்கிருத்தி; புதியமலர்களையுடைய இவ்வேங்கை மரம் நினக்கினியதுணையாக இங்குத் தோன்றியது என்று கூறி உடன்வந்த வேடர்கள் கூட்டத்துடன் சென்றனன்.—எ-று. (௮௧)

போனதுகண்டுபுனத்திடைவேங்கை
யானதொர்தன்மையையையனகன்று
கானவர்தம்மகள்காண்வகைதொல்லை
மானுடநல்வடிவங்கொடுநின்றான்

(இ-ள்.) சிவசண்முகப் பெருமான் வேடநம்பி சென்றதனைக்கண்டு புனத்தில் வேங்கைமரவுருவமாக விருந்ததனை விடுத்துக் குறவர் குலமகள்காணும் வண்ணம் பழய மானுடனாகிய வடிவினைக்கொண்டு நின்றனன்.—எ-று. (௮௨)

வேறு.

தொல்லையினுருக்கொடுதோன்றிநின்றவே
ளெல்லையின்மையலுற்றிரங்குவானென
வல்லிவர்கூந்தலாளருகுநிற்புறீஇ
நல்லருளாலிவைநவிறன்மேயினான்.

(இ-ள்.) முன்வந்த வுருவத்துடன் எழுந்தருளிநின்ற குமரவேள் அளவற்ற காமமோகமுற்று வருந்துவானையொப்ப இருளடர்ந்த கூந்தலினையுடையவள்ளிநாயகியினருகு நின்று நல்ல அருளினாலிவைகளை யுரைப்பானாயினான்.—எ-று. (௮௩)

கோங்கெனவளர்முலைக்குறவர்பாவையே
யீங்குனையடைந்தனனெனக்குநின்னிரு
பூங்கழலல்லதுபுகலொன்றில்லையா
னீங்கலனீங்கலனின்னையென்றுமே.

(இ-ள்.) கோங்கரும்பை யொப்பவளர்ந்த தனங்களையுடைய குறவர்குலத்துப்பிறந்த பாவைபோல்வாய், இங்குன்னையடைந்தேன் எனக்கு நின்னுடைய சரணகமலங்களையன்றி அடைக்கலம் வேறொன்றில்லை உன்னைவிடுத்து என்றும் நீங்கேன் நீங்கேன்.—எ-று. (௮௪)

மாவியல்கருங்கணாய்மற்றுநின்றனைப்
பாவியனீங்கியேபடரவல்லனோ
வாவியையகன்றுமெய்யறிவுகொண்டெழீஇப்
போவதுகொல்லிதுபுகலவேண்டுமே.

(இ-ள்.) மானின் பார்வைபோன்ற பார்வையினையுடைய கரியகண்ணினையுடையாய் நின்னைப்பாவியேன் விட்டுப்போக வல்லமையுடையவனோ உயிரைவிடுத்து உடலானது அறிவுபொருந்தி எழுந்துபோகுமோ நீயே உரைத்தல்வேண்டும்.—எ-று.

மைதிகழ்கருங்கணின்வலைப்பட்டேற்கருள்
செய்திடலன் றியேசிறைக்கணித்தனை
யுய்திறம்வேறெனக்குளதொலீண்டுநின்
கைதனிலிவ்வுயிர்காத்துக்கோடியால்.

(இ-ள்.) மைவிளங்கும் கரிய கண்ணென்னும் வலையிற்பட்டேனுக்கு அருள் செய்யாமற் புறக்கணித்தனை, எனக்குவேறே உய்யுந்திறமுள்ளதோ இவ்விடத்து என்னுயிர் நின்கையினிடத்தது அதுதொலையாமற் காத்துக்கொள்.—எ-று. (அசு)

கோடிவர்நெடுவரைக்குறவர்மாதுநீ
யாடியசுனையதாயணியுஞ்சாந்தமாய்ச்
சூடியமலர்களாய்த்தோயப்பெற்றிலேன்
வாடனனினிச்செயும்வண்ணம்யாவதே.

(இ-ள்.) சிகரங்களுயர்ந்த நெடிய மலையினையுடைய குறவர் குலமாதே நீ நீராடுஞ் சுனையாயும் அணியுஞ்சாந்தமாயும் சூடியமலர்களாயும் உருக்கொண்டு நின்னைப்பொருந்தப் பெற்றிலேனாய்வாடினேன் இனிச்செய்யுந்திறம் என்னை?—எ-று. (அஎ)

புல்லிதுபுல்லிதுபுனத்தைக்காத்திடன்
மெல்லியல்வருதியால்விண்ணின்பால்வரும்
வல்லியர்யாவரும்வணங்கிவாழ்த்திடத்
தொல்லியல்வழாவளந்துய்ப்பநல்குவேன்.

(இ-ள்.) மெல்லிய இயலினையுடையாய் நீ தினைப்புனத்தினைக் காத்தல் மிகவும் இழிந்தது என்னுடன் வருதி வந்தால் நின்னைவானுலகத்திலுள்ள தேவமாதரனைவரும் வணங்கி வாழ்த்தப்பெருமையிற் குறையாத செல்வங்களை நுகருமாறளிப்பன்.—எ-று. (அஅ)

என்றிவைபலபலவிசைத்துநிற்றலுங்
குன்றுவர்மடக்கொடிகுமரன்சிந்தையி
லொன்றியகருத்தினையுற்றுநோக்கியே
நன்றிவர்திறமெனநாணிக்கூறுவாள்.

(இ-ள்) எனவிவைபலவற்றைக் கூறிநிற்றலும் வேட்டுவர் மகளான மடப்பமமைந்த வள்ளிநாயகி எதிரினிற்கும் முருகவேளான அவ்வாலிபனது மனதிற்பொருந்திய அபிப்பிராயத்தினை உற்றுப்பார்த்து இவர்திறநன்றென்று நாணமுற்றுரைக்கின்றாள்.—எ-று. (அக)

இழிகுலமாகியவெயினர்பாவைநான்
முழுதுலகருள்புரிமுதல்வர்நீரெனைத்
தழுவுதலுன்னியேதாழ்ச்சிசெப்புதல்
பழியதுவேயலாற்பான்மைத்தாகுமோ.

(இ-ள்.) நானோ இழிந்தகுலமான வேடரின்மகள் நீவிர் உலகமுழுதையுங் காத்தருள்கின்ற அரசர்; அங்ஙனம் உயர்ந்தகுலத்தவரான நீர் என்னைத்தழுவநினைத்து தாழ்ச்சிகூறுதல் பழியாகுமேயன்றி முறையாகுமோ,—எ-று. (கூ0)

இலைமுதிரேனல்காத்திருக்கும்பேதையா
னுலகருளிறைவர்நீருளமயங்கியென்

கலவியைவிரும்புதல்கடனதன்றரோ
புலியதுபசியுறிற்புல்லுந்துய்க்குமோ

(இ-ள்.) யானோ இலைபழுத்த தினையைக்காத்திருக்கும் பேதை, நீரோ உலகினைக்காக்குமரசர் அங்ஙனமாகவும் உள்ளமயங்கி என்னுடைய புணர்ச்சியை விரும்புதல் முறைமையன்று புலிபசித்தாற் புல்லினையுந் தின்னுமோ.—எ-று. (௧௧)

வேறு.

என்றிவைபலப்பலவுமேந்திழையியம்பா
நின்றபொழுதத்திலவணெஞ்சம்வெருக்கொள்ள
வென்றிகெழுதொண்டகம்வியன்றுடியியம்பக்
குன்றிறைவன்வேட்டுவர்குழாத்தினொடும்வந்தான்.

(இ-ள்.) என்று இவைபலபலவும் வள்ளிநாயகியுரைக்குங் காலத்தில் அவளுள்ளம் பயமுறும்வண்ணம் வெற்றிவிளங்குந் தொண்டகமும் பெரியதுடியுமுழங்கவும் மலையரசனானவன் பின்னரும் வேடர் கூட்டத்துடன் வந்தான்.—எ-று. (௧௨)

வந்தபடிகண்டுமடமானடுநடுங்கிச்
சிந்தைவெருவிக்கடவுள்செய்யமுகநோக்கி
வெந்திறல்கொள்வேடுவர்கள்வெய்யரிவணில்லா
துய்ந்திடநினைந்துகடிதோடுமினியென்றாள்.

(இ-ள்.) வேடர்தலைவனான தனதுதந்தை வந்ததன்மையைத் தூரத்தேகண்டு மடமையமைந்த வள்ளிநாயகி உள்ளநடுங்கிக் குமரக்கடவுளின் செவ்விய முகத்தினைப்பார்த்து மிக்கவலியமைந்த வேடுவர்கள் கொடியவர்கள் ஆதலினால் இங்கு நில்லாமல் நீர் உய்யுமாறு கருதிவிரைந்தோடிப் போவீராக. என்று கூறினாள்.—எ-று.

ஓடுமினியென்றவளுரைத்தமொழிகேளா
நீடுமகிழ்வெய்தியவணின்றகுமரேச
னாடுபுகழ்சைவநெறிநற்றவவிருத்த
வேடமதுகொண்டுவரும்வேடரெதிர்சென்றான்.

(இ-ள்.) அவ்வள்ளிநாயகி இனியோடிப் போதிர் என்றசொல்லினைக்கேட்டு மிகுந்த மகிழ்வுற்று அங்குநின்ற குமரக்கடவுள் உடனே உலகம்புகழ்கின்ற சைவமார்க்கத்தினையுடைய நல்ல தவத்தோடுகூடின கிழவேடந்தாங்கி வராநின்ற வேடரெதிரே சென்றான். (௧௪)

சென்றுகிழவோன்குறவர்செம்மலெதிர்நண்ணி
நின்றுபரிவோடுதிருநீறுதனைநல்கி
வன்றிறன்மிகுத்திடுகவாகைபெரிதாக
வின்றியமையாதவளனெய்திடுகவென்றான்.

(இ-ள்.) கிழவன் குறவர்தலைவனெதிரே சென்று நின்று விருப்பத்துடனவனுக்கு விபூதியளித்து நினக்குமிகுந்தவன்மையுண்டாகுக வெற்றியுமதிகமாகுக இன்றியமையாதவளங்களு முண்டாகுக என்று ஆசிகூறினான்.—எ-று. (௧௫)

பூதியினையன்பொடுபுரிந்தகுரவன்றன்
பாதமலர்கைகொடுபணிந்துகுறமன்னன்
மேதகுமிவ்வெற்பினில்விருத்தரெனவந்தீ
ரோதிடுதிர்வேண்டியதையொல்லைதனிலென்றான்.

(இ-ள்.) விபூதியை அன்புடன் ஆசிகூறியளித்த கிழவனுடைய பாதமலர்களைக் கைகொண்டு வணங்கி வேடவரசன் மேன்மை யமைந்த விம்மலையிற் கிழவராக வந்தவரே உமக்கென்னுலாக வேண்டியதனை விரைந்துரைப்பீராக என்று கூறினான்.

ஆண்டொழிலின்மேதகையவண்ணலிதுகேண்மோ
நீண்டதனிமூப்பகலநெஞ்சமருணீங்க
வீண்டுநும்வரைக்குமரியெய்தியினிதாட
வேண்டிவருகின்றனன்மெலிந்துகடிதென்றான்.

(இ-ள்.) ஆண்மைத்தொழிலில் மேன்மைவாய்ந்த அண்ணலே இதனைக்கேள், யான் எனக்குண்டாயுள்ள மிகமுதிய கிழத்தன நீங்கவும் மனதிற்பொருந்திய மருள் நீங்கவும் இவ்விடத்துள்ள நும்மலைக்குமரியையடைந்து ஆடுமுறையிலாடுதற்கு விரும்பிமெலிந்து விரைந்துவந்தேன் என்றனன்.—எ-று.

ஆண்டன்மையிற் சிறந்த அண்ணலான குமரவேள் வேடராசனைப்பார்த்து இதனைக்கேள், இப்பொழுது கொண்டுள்ள நெடிய கிழவுருவநீங்கி முருகனுகவும் நெஞ்சிலுள்ள இவண் மோகமான மருள் நீங்கவும் இவ்விடத்திலிருக்கின்ற நின்னுடைய மலையிற்பிறந்த இந்த குமரியான வள்ளிநாயகியை அடைந்து செவ்வனே புணர்தற்கு விரும்பி இவளாசையால் மிகமெலிந்து விரைவாக வருகின்றேன் என்றருளிச் செய்தனன் எனச் சிலேடையாக வொருபொருள் தொனித்தல் காண்க. குமரவேள் பொய்யா மொழியாராதலி னிவ்வாறு கூறினர் என்றுணர்க. (௯௭)

நற்றவன்மொழியைக்கேளாநன்றுநீர்நவின்றதீர்த்த
நிற்றனுமாடியெங்கணேரிழைதமியளாகி
யுற்றனளவளுக்கெந்தையொருதனித்துணையதாகி
மற்றிவணிருத்திரென்னவழகிதாமன்னவென்றான்.

(இ-ள்.) அந்நல்லதவசியின் மொழியைக்கேட்டு வேடவரசன் எந்தையே உம்மாலுரைக்கப்பட்ட நல்லதீர்த்தத்தில் தினமுங்குளித்து எங்கள் பெண்தனித்தவளாக இருக்கின்றாள் அவளுக்கு ஒரு தனித்துணையாகி இங்கிருத்திர் என்று கூறுதலும் கிழவன் மன்னவனே அழகிது என்றனன்.—எ-று. (௯௮)

இனையதோர்பொழுதிற்றந்தையேந்திழைதன்பாலேகித்
தினையொடுகிழங்குமாவுந்தீங்கனிபிறவுநல்கி
யனையவடுணையதாகவருந்தவன்றன்னைவைத்து
வனைகழலெயினரோடும்வல்லையின்மீண்டுபோனான்.

(இ-ள்.) இந்த சமயத்தில் தந்தையான நம்பிவேடன் வள்ளிநாயகியிடஞ்சென்று தினையுங்கிழங்கு மாவுந் தீங்கனிமுதலியவுங்கொடுத்து அவளுக்குத் துணையாகவத்தவசியைவைத்துக்கட்டப்பட்ட வீரக்கழலினையுடைய வேடர்களுடன் விரைந்துதிரும்பிச்சென்றனன்.—எ-று. (௯௯)

போனதுமுதியோன்கண்டுபுனையிழைதன்னைநோக்கி
நானினிச்செய்வதென்கொனலிவதுபசிநோயென்னத்
தேனொடுகனியுமாவுஞ்செங்கையிற்கொடுப்பக்கொண்டு
வேனிலுமுடுகிற்றுண்ணீர்விடாய்பெரிதுடையேனென்றான்.

(இ-ள்.) அங்ஙனஞ்சென்றதனைக் கிழவன்கண்டு வள்ளிநாயகியைப்பார்த்து நானென்ன செய்யப்போகின்றேன் என்னைப்பசிநோய் வருத்துகின்றது என்று கூற அன்னவள்தேனுங் கனியுமாவுஞ் செவ்விய கையிற்கொடுக்க அவைகளைவாங்கிப்புசித்து வெய்யிலும் அதிகரித்ததுத் தண்ணீர்த்தாக மிகவுமுடையேனென்று கூறினான்.

செப்புறுமனையமாற்றஞ்சேயிழைக்கிழத்திகேளா
விப்புறவரைக்குமப்பாலெழுவரைகடந்ததற்பி
னுப்புறமிருந்ததெந்தாயொருசுனையங்கணேகி
வெப்புறலின்றித்தெண்ணீர்மிசைந்துபின்வருதியென்றாள்.

(இ-ள்.) கிழவனுரைத்த வம்மொழியைச் செவ்விய அணிகளையுடைய தலைவி கேட்டு எந்தையே இந்த மலைக்கப்பாலுள்ள ஏழுகுன்றுகளைக் கடந்ததற்குப்பின்னர் அப்புறத்திலொரு சுனையுள்ளது அங்குச்சென்று தாகத்தால் வெப்பமுறுதலின்றித் தெளிந்த நீரைக்குடித்து வருதிர் என்றனள்.—எ-று. (க0க)

பூட்டுவார்சிலைக்கைவேடர்பூவைபேபுலர்ந்துதெண்ணீர்
வேட்டனன்விருத்தன்வெற்பில்வியனெறிசிறிதுந்தேரேன்
றாட்டுணைவருந்துமென்றுதாழ்த்திடாதொல்லையேகிக்
காட்டுதிசுனைநீரென்றானறுமுகங்கரந்தகள்வன்.

(இ-ள்.) நாணியேற்றுகின்ற நெடியவில்லினையேந்திய கையினரான வேடர் குலத்திற்பிறந்த பூவைபோல்வாய் கிழவனாகிய யான்நாவுலர்ந்து தெண்ணீரைப்பருக விரும்பினேன் இம்மலையின் பெரியவழியைச்சிறிது முணரேன் காலிணைகள் வருந்துமென்று வராதிராமல் விரைந்தென்னுடன் வந்து சுனைநீரினைக்காட்டக் கடவையென்று ஆறுதிருமுகங்களை மறைத்துவந்த கள்வனுரைத்தனன்.—எ-று. (க0உ)

முருகனதுரையையந்தமொய்குழல்வினவியெந்தாய்
வருகெனவழைத்துமுன்போய்வரையெலாங்கடந்துசென்று
விரைகமழ்சுனைநீர்காட்டவேனிலால்வெதுப்பினான்போற்
பருகினன்பருகிப்பின்னரிஃதொன்றுபகர்தலுற்றான்.

(இ-ள்.) முருகவேளின் மொழியை நெருங்கிய கூந்தலினையுடைய வள்ளிநாயகி கேட்டு எந்தையே வருகவெனவழைத்துக்கொண்டுதான் முன்னடந்து அம்மலையினைத்தையுங்கடந்துசென்று மணம்வீசுஞ்சுனை நீரினைக்காட்டவேனிலால் வெப்பமுற்றவனைப்போல அந்நீரைப்பருகினான் பருகியபின்னரின்ன தொன்றைஉரைத்தருளுகின்றான்.

ஆகத்தைவருத்துகின்றவரும்பசியவித்தாய்தெண்ணீர்த்
தாகத்தையவித்தாயின்னுந்தவிர்ந்திலதளர்ச்சிமன்னோ
மேகத்தையனையகூந்தன்மெல்லியல்வினையேன்கொண்ட
மோகத்தைத்தணித்தியாயின்முடிந்ததென்குறையதென்றான்.

(இ-ள்.) மேகம்போலுங் கரியமெல்லிய கூந்தலினையுடையாய் நீ எனதுடலை வருத்துகின்ற அரியபசியை அவித்தனை தெண்ணீர்த் தாகத்தினையுந் தவிர்த்தனை அங்ஙனஞ்செய்துந் தளர்ச்சி நீங்கிலை வல்வினையேன்கொண்டுள்ள மோகத்தைத் தணித்தாயானால் என்குறையு முடிந்தது என்றனன்.—எ-று. (க0௩)

ஈறின்முதியோனிரங்கியிரந்துகுறை
கூறிமதிமயங்கிக்கும்பிட்டுநின்றளவி
னாறுமலர்க்கூந்தனங்கைநகைத்துயிர்த்துச்
சீறிநடுநடுங்கியிவ்வாறுசெப்புகின்றாள்.

(இ-ள்.) அழிவற்ற குமரவேளான கிழவன் இரங்கி இரந்து குறைகூறி மதிமயங்கிக் கும்பிட்டு நின்றவுடனே அச்செயலைப்பார்த்து மணந்தங்கிய குரா முதலிய மலரணிந்த கூந்தலினையுடைய வள்ளிநாயகி சிரித்துப் பெருமூச்சுவிடுத்து நடுநடுங்கி இவ்வாறுரைக்கின்றாள்.—எ-று. (க0௪)

கொய்தினைகள்காப்பேனைக்கோதிலாமாதவத்தீர்
மெய்தழுவவுன்னிவிளம்பாதனவிளம்பிக்
கைதொழுதுநிற்றல்கடனன்றுகானவரிச்
செய்கைதனையறியிற்றீதாய்முடிந்திடுமே,

(இ-ள்.) குற்றமற்ற சிறந்த தவத்தினையுடையீர் கொய்யத்தக்க தினைகளைக் காக்கு மென்னை மெய்தழுவ நினைத்துக் கூறுதனவற்றைக்கூறிக் கைதொழுது நிற்றல் முறையன்று வேடர்கள் உமதித்தகாதசெய்கையை யறிந்தாற் றீதாகமுடியும் ()

நத்துப்புரைமுடியீர்நல்லுணர்வுசற்றுமிலீ
ரெத்துக்குமூத்தீரிழிகுலத்தேன்றன்னைவெஃகிப்
பித்துக்கொண்டார்போற்பிதற்றுவீரிவ்வேடர்
கொத்துக்கெலாமோர்கொடும்பழியைச் செய்தீரே.

(இ-ள்.) சங்கனைய வெள்ளியதலை முடியினையுடையீர் நல்லறிவு சிறிதும் இல்லாதவ ராக இருக்கின்றீர் எதற்காக மூத்தீர் இழிகுலத்தாளான என்னை விரும்பிப் பைத்தியங்கொண்டாரைப்போல புலம்புகின்றீர் இந்த வேடர் கொத்தனைத்துக்கு மொரு கொடிய பழியை உண்டாக்கினீரே.—எ-று. (௧௦௭)

சேவலாய்வைகுந்தினைப்புனத்திற்புள்ளினுடன்
மாவெலாங்கூடிவளர்பைங்குரல்கவரு
நாவலோய்நீருநடந்தருளுநான்முந்திப்
போவனுலென்றுபுனையிழையாள்போந்தனளே.

(இ-ள்.) வள்ளிநாயகி நாவலனே யான் காவலாக இருக்கின்ற தினைப்புனத்திற் பறவைகளும் விலங்குகளு மொருங்குகூடிப் பசிய தினைக்குரல்களைக்கவராநிற்கும் ஆதலின் நான் முன்செல்லுகின்றேன் நீரு நடவுமென்று கூறி நடந்தனள்.—எ-று.

நடவுமென்பதற்குமதுவிருப்பத்தின்படி செல்வீராக என்று வெறுத்துரைத்தனள் எனலுமாகும். (௧௦௮)

பொன்னேயனையாண்முன்போகுந்திறநோக்கி
யென்னேயினிச்செய்வதென்றிரங்கியெம்பெருமான்
றன்னேரிலாதமருந்தந்திமுகத்தெந்தைதனை
முன்னேவருவாய்முதல்வாவெனநினைந்தான்.

(இ-ள்.) பொன்போன்ற வள்ளிநாயகி முன்செல்லுந்தன்மையைப் பார்த்து இனியென்ன செய்வதென்று வருந்தி எம்பெருமான் ஒப்பற்றவராகவிளங்கும் யானைமுகத்தினையுடைய எந்தையை முதல்வனே இவளெதிரே வருவாயாகவென்று நினைத்தனன்.—எ-று. (௧௦௯)

அந்தப்பொழுதிலறுமாமுகற்கிரங்கி
முந்திப்படர்கின்றமொய்குழலாண்முன்னுகத்
தந்திக்கடவுட்டனிவாரணப்பொருப்பு
வந்துற்றதம்மாமறிகடலேபோன்முழங்கி.

(இ-ள்.) அப்பொழுது சண்முகப்பெருமானுக் கிரங்கி முன்னேசெல்லுகின்ற நெருங்கிய கூந்தலினையுடைய வள்ளிநாயகியி னெதிரே விநாயகப் பெருமானாகிய மலையனைய யானையானது திரைமறியுங் கடலையொப்ப முழங்கிக்கொண்டு வந்தது.

அவ்வேலையில்வள்ளியச்சமொடுமீண்டுதவப்
பொய்வேடங்கொண்டுநின்றபுங்கவன்றன்பாலணுகி
யிவ்வேழங்காத்தருள்கவெந்தைநீர்சொற்றபடி
செய்வேனெனவொருபாற்சேர்ந்துதழீஇக்கொண்டனளே.

(இ-ள்.) அப்பொழுது வள்ளிநாயகி அச்சத்துடன் திரும்பித் தவசியாகிய பொய்வேடந்தாங்கி நின்ற சுப்பிரமணியப் பெருமானையடைந்து இவ்வானையினின்றும் என்னைக்காத்தருள்வீராக எந்தையே நீர் சொன்னவண்ணம் செய்வேனென்று அக்கிழவன தொருபுறத்தையடைந்து சேர்ந்து தழுவிக்கொண்டாள்.—எ-று. (௧௧௧)

அன்னதொருகாலையறுமாமுகக்கடவுண்
முன்னொருசார்வந்துமுதுகளிற்றின்கோடொற்றப்
பின்னொருசார்வந்துபிடியின்மருப்பூன்ற
விந்நடுவேநின்றானெறுழ்வயிரத்தூணேபோல்.

(இ-ள்.) அப்பொழுது சிறந்தவாறு திருமுகங்களையுடைய கடவுள் முன்னாகிய ஒரு புறத்திலந்த முதியயானையின் கோடுபடப் பின்னாகிய வொருபுறத்திற் பிடியனைய வள்ளிநாயகியின் தனமாகிய மருப்பு ஊன்ற வலியமைந்த வயிரத்தூண்போல இவைகட்கு நடுவே நின்றருளினான்.—எ-று. (கக௨)

கந்தமுருகன் கடவுட்களிறுதனை
வந்தனைகள்செய்துவழுத்திநீவந்திடலாற்
புந்திமயறீர்ந்தேன்புனையிழையுஞ்சேர்ந்தனளா
லெந்தைபெருமானெழுந்தருள்கவீண்டென்றான்.

(இ-ள்.) கந்தனாகிய முருகன் அத்தெய்வயானையை வந்தனைகள் செய்து துதித்து நீ வந்தமையால் மனமயலொழிந்தேன் புனையப்பட்ட இழையினையுடைய விவளும் என்னைச் சேர்ந்தனள் ஆதலின் எந்தை பெருமான் திரும்பி யெழுந்தருள்க என்றருளிச்செய்தனன்.—எ-று. (ககங)

என்னுமளவினிதென்றியானைமுக
முன்னிளவிலேகமுகமாறுடையபிரான்
கன்னிதனையோர்கடிகாவினிற்கலந்து
துன்னுகருணைசெய்துதொல்லுருவங்காட்டினனே.

(இ-ள்.) என்றுகூறு மளவில் நல்லதென்று யானைமுகத்தினையுடைய மூத்த பிள்ளையான விநாயகப்பெருமான் எழுந்தருளுதலும் பின்னர் ஆறுதிருமுகங்களையுடைய பெருமான் கன்னிகையான வள்ளிநாயகியை ஒரு மணம்பொருந்திய சோலையிற் புணர்ந்து நெருங்கிய கருணையைச்செய்து பழய திருவுருவினைக்காட்டி யருளினான்.—எ-று. (ககச)

முந்நான்குதோளுமுகங்களோர்மூவிரண்டுங்
கொன்னார்வைவேலுங்குலிசமுமேனைப்படையும்
பொன்னார்மணிமயிலுமாகப்புனக்குறவர்
மின்னாள்கண்காணவெளிநின்றனன்விறலோன்.

(இ-ள்.) வெற்றியினையுடைய முருகவேள் பன்னிரண்டு தோள்களும் ஆறு முகங்களும் பெருமையமைந்த கூரியவேலாயுதமும் வச்சிரமும் பிறவாயுதங்களும் அழகமைந்த நீலமயில்வாகனமும் உடையவனாகித் தினைப்புனத்தினையுடைய வேடர்குலமகளான வள்ளிநாயகியின் கண்கள்காணும் வண்ணம் வெளியாகநின்றனன்.—எ-று. ()

கூரார்நெடுவேற்குமரன்றிருவுருவைப்
பாராவணங்காப்பரவலுறாவிம்மிதமுஞ்
சேராநடுநடுங்காச்செங்கைகுவியாவியரா
வாராதகாதலுருவம்மையிதுவோதுகின்றாள்.

(இ-ள்.) கூரமைந்த நெடிய வேற்படையினையுடைய குமரக்கடவுளின் திருவுருவினைத்தரிசித்து வணங்கித்துதித்து ஆச்சரியமடைந்து நடுநடுங்கிச் செவ்வியகைகளைக் குவித்து வியர்த்து முடிவற்றக்காதலுற்று உலகமாதாவான வள்ளிநாயகி இதனை உரைப்பாளாயினாள்.—எ-று

ஆராக்காதல் - நிறையாக்காதல், அது முடிவின்மையை யீண்டுக்குறித்தது.

மின்னேயனையசுடர்வேலவரேயிவ்வுருவ
முன்னேநீர்காட்டிமுயங்காமலித்துணையுங்
கொன்னேகழித்தீர்கொடியேன்செய்குற்றமெலா
மின்னேதணித்தேயெனையாண்டுகொள்ளுமென்றாள்.

(இ-ள்.) மின்னலனைய ஒளியினையுடைய வேலவரே இவ்வுருவத்தினை முன்னே காட்டி யென்னையணையாமல் இவ்வளவுகாலமும் வாளாகழித்தீர் கொடியேன் செய்த குற்றத்தினையும் இப்பொழுதே பொறுத்து என்னையாண்டுகொள்ளும் என்று கூறினாள்.—எ-று. (கஎ)

உம்மையதனிலுலகமுண்டோன்றன்மகணீ
நம்மையணையும்வகைநற்றவஞ்செய்தாயதனு
லிம்மைதனிலுன்னையெய்தினோமென்றெங்க
ளம்மைதனைத்தழுவியையனருள்புரிந்தான்.

(இ-ள்.) முன் சனனத்தில் நீ உலகமுண்ட மாலின்மகள் நம்மைச்சேருதற்கு நல்லதவத்தினைச் செய்தனை அதனால் இந்த சனனத்தில் உன்னை யணைந்தோமென்று கூறி எங்கள் மாதாவைத் தழுவிப் பிதாவான முருகவேள் அருள் செய்தனன்.—எ-று.

எங்கண்முதல்வனிறைவிதனைநோக்கி
யுங்கள்புனந்தன்னிலுறைந்திடமுன்னேகுதியான்
மங்கைநல்லாயாமும்வருவோமெனவுரைப்ப
வங்கண்விடைகொண்டடிபணிந்துபோயினளே.

(இ-ள்.) எங்கள் தலைவனான குமரவேள் இறைவியான வள்ளிநாயகியைப் பார்த்து நீ உங்கள் புனத்திலிருத்தற்கு முன் செல்லக்கடவை மாதருட் சிறந்தாய் நாமும் வருவோமென்று கூற உடனே திருவடிகளை வணங்கி விடைபெற்று அவ்விடத்துக்குச் சென்றனள்.—எ-று. (கக௯)

வேறு.

வாங்கியசிலைநுதல்வள்ளியென்பவள்
பூங்குரலேனலம்புனத்துளேகியே
யாங்கனமிருத்தலுமயற்புனத்தமர்
பாங்கிவந்தடிமுறைபணிந்துநண்ணினாள்.

(இ-ள்.) வளைந்த வில்லனைய நெற்றியினையுடைய வள்ளியென்பவள் பொலிவமைந்த கதிர்களையுடைய புனத்துட்சென்று அங்கிருத்தலும் அயலிலுள்ள புனங்காப்பவளான தோழியெய்தி அவ்வம்மையின் கால்களை முறைப்படி வணங்கி அருகிலெய்தினாள்.—எ-று. (க௨0)

நாற்றமுந்தோற்றமுநவிலொழுக்கமு
மாற்றமுஞ்செய்கையுமனமுமற்றதும்
வேற்றுமையாதலும்விளைவுநோக்கியே
தேற்றமொடிகுளையங்கிளையசெப்புவாள்.

(இ-ள்) மணமுமுருவும் உரைக்கப்படு மொழுக்கமும் சொல்லும் செயலும் மனமும் பிறவும் வேறுபடுதலும் மற்றைப்புதிய காமநுகர்ந்த அடையாள மாதியவுங் கண்டு துணிவுடன் தோழியானவ ளிதனையுரைத்தனள்.—எ-று. (க௨க)

இப்புனமழிதரவெங்ஙனேகினை
செப்புதிநீயெனத்தெரிவைநாணுரு

வப்புறமென்சுனையாடப்போந்தனன்
வெப்புறும்வேனிலான்மெலிந்தியானென்றாள்.

(இ-ள்.) இந்தப்புன மழியும் வண்ணம் யெங்குப் போயினாய் நீயுரைத்தி யென்று கேட்க வதனைக்கேட்டு வள்ளிநாயகி வெட்கமுற்று யான் வெதுப்பாநின்ற வேனிலான் மெலிந்து அப்புறத்திலுள்ள மெல்லிய சுனையில் நீராடச்சென்றேன் என்றனள்.—எ-று. (௧௨௨)

மைவிழிசிவப்பவும்வாய்வெளுப்பவு
மெய்வியர்வடையவுநகிலம்விம்மவுங்
கைவளைநெகிழவுங்காட்டுந்தண்சுனை
யெவ்விடையிருந்துளதியம்புவாயென்றாள்.

(இ-ள்.) நினது மையணிந்த விழிகள் சிவப்படையவும் வாய்வெளிறடையவும் உடலம் வியர்வை யெய்தவும் கொங்கைகள் விம்முதலுறவும் கைவளைகள் நெகிழவும் காட்டுகின்ற தண்ணிய சுனையானது எவ்விடத்திலிருக்கின்றது உரைப்பாயாக என்றனள்.

சொற்றிடும்குழலைச்சுளித்துநோக்கியே
யுற்றிடுதுணையதாவுனையுட்கொண்டியான்
மற்றிவணிருந்தனன்வந்தெனக்குமோர்
குற்றமதுரைத்தனைகொடியைநீயென்றாள்.

(இ-ள்.) இங்ஙனமுரைத்த உயிர்ப்பாங்கியைச்சிறிப்பார்த்து எனக்குற்றதுணையாகவுன்னை யென்னுட்கருதி யானிங்கிருந்தேன் அங்ஙனமாகவும் எனக்கு வந்தொரு குற்றத்தினைக் கூறினாய் ஆதலின் நீ கொடியவளென்று கூறினள் (௧௨௩)

பாங்கியுந்தலைவியும் பகர்ந்துமற்றிவை
யாங்கனமிருத்தலுமதனைநோக்கியே
வீங்கிதுசெவ்வியென்றெய்தச்சென்றனன்
வேங்கையதாகிமுன்னின்றமேலையோன்.

(இ-ள்.) தோழியுந் தலைவியும் இவைகளையுரைத்துப் புனத்திலிருத்தலும் அதனைப்பார்த்து இதுதான் சமயமென முன் வேங்கைமரமாக நின்ற மேலோனான குமரக்கடவுள் அவர்களையடைய வப்புனத்துக்குச் சென்றனன்.—எ-று. (௧௨௪)

கோட்டியசிலையினன்குறிக்கொள்வாளியன்
றீட்டியகுறியவாள்செறித்தகச்சினன்
வேட்டமதழுங்கியவினைவலோனெனத்
தாட்டுணைசிவந்திடத்தமியனேகினன்.

(இ-ள்.) வளைக்கப்பட்ட வில்லுடையவனும் பூட்டப்பட்ட அம்பினையுடையவனும் தீட்டப்பட்ட குற்றுடைவாளைச் சேர்த்துக் கட்டிய கச்சுடையவனும் வேட்டையாகிதலா விளைத்த வேட்டைத்தொழிலின் வல்லுநனைப்போல இரண்டுதிருவடிகளுஞ் சிவப்படையத் தனித்தவனாகச் சென்றனன்,—எ-று. (௧௨௫)

வேறு.

காந்தள்போலிபகரத்தினீர்யானெய்தகணையாற்
பாய்ந்துசோரியும்பெருமுழக்குறுபகுவாயு
மோய்ந்தபுண்படுமேனியுமாகிபோரொருத்தல்
போந்ததோவிவண்புகலுதிர்புகலுதிரென்றான்.

(இ-ள்.) காந்தண் மலர்போன்ற கையினையுடையீர் யானெய்த அம்பினால் ஒழுகப்பட்ட இரத்தமும் மிகவும் முழக்கங்காட்டும் பிளந்தவாயும் நுணுகிய புண்

பொருந்திய உடலும் ஆகி ஒரு ஆண்யானை இங்குவந்ததோ உரைத்தீர் உரைத்தீர் என்றனன்.—எ-று. (கஉஎ)

வேழமேமுதலுள்ளனகெடுதிகள்வினவி
யூழிநாயகனிற்றலுமுமக்குநேரொத்து
வாழுநீரருக்குரைப்பதேயன்றிநும்வன்மை
யேழையேங்களுக்கிசைப்பதென்னென்றனளிருளே.

(இ-ள்.) ஊழிக்கு நாயகனான குமரவேள் யானை முதலாக வுரைக்கப்படும் கெடுதிகளை வினவிநிற்றலும் தோழியானவள் உமது வன்மையை உமக்குச்சமானமாக வாகுந்தன்மையினரிடம் உரைப்பதையன்றி ஏழைகளான எங்களைப்பார்த்துரைப்பதென்னை யென்றனள்,—எ-று. (கஉஅ)

ஐயர்வேட்டைவந்திடுவதுந்தினைப்புனத்தமர்ந்து
தையல்காத்திடுகின்றதுஞ்சரதமோபறவை
யெய்யும் வேட்டுவர்கோலமேபோன்றனவிருவர்
மையறன்னையுமுரைத்திடும்விழியெனமதித்தாள்.

(இ-ள்.) இவ்விருவர்கண்களும் புட்களையெய்யும் வேடர்களின் கண்களின் தன்மைபோன்றனவாய் இவரிருவரின் ஆசையினையும் உரையாநிற்கும் ஆதலால் இவ்வையர் வேட்டையாட வருவதும் தினைப்புனத்திலிருந்து இம்மாது சேவல் புரிவதும் உண்மையோ அன்றாம் என்று துணிந்தனள்.—எ-று.

பறவையை யெய்யும் வேடர் அதனை நேரேபாராமற் குறிப்பாகப்பார்ப்பார்கள் இவர்களுமொருவரையொருவர் விரும்பிப்பாராதவரை யொப்பப் பார்த்தனராதலி னவர்களின்வஞ்சப்பார்வைக்கு பறைவையெய்யும் வேடர்பார்வை யொப்பாயதெனவறிக.()

மனத்திலிங்கிவையுன்னியேதுணைவியுமற்றைப்
புனத்திலேகிவீற்றிருந்தனளன்னதோர்பொழுதிற்
சினத்திடுங்கரியெய்தனமென்றசேவகன்போய்க்
கனத்தைநேர்தருகூந்தலாய்கேளெனக்கழறும்.

(இ-ள்.) தோழியும் மனத்திலிவைகளை யெண்ணி அடுத்த புனத்துச்சென்று பரணிலிருந்தனள் அப்பொழுது சீறிவந்த யானையை யெய்தே மெனவுரைத்துநின்ற வீரன்சென்று மேகம்போலுங் கூந்தலினையுடையாய் கேளென உரைப்பானாயினன்.

உற்றகேளிருநீங்களேதமியனுக்குமக்குப்
பற்றதாயுளபொருளெலாந்தருவனும்பணிகண்
முற்றுநாடியேபுரிகுவன்முனிவுகொள்ளாது
சற்றுநீரருள்செய்திடுமென்றனன்றலைவன்.

(இ-ள்.) அனைவருக்குந் தலைவனான முருகவேள் தோழியைப்பார்த்து தமியேனுக்குற்ற உறவினரு நீங்களே உங்களுக்கு விருப்பாயுள்ள பொருளனைத்தையுந் தருவேன் உங்கள் கட்டளைகளை முற்றிலுந் தேடிச்செய்வேன் நீங்கள் என்மீது கோபம் கொள்ளாது சிறிதருள்புரிவீர் என்றருளிச்செய்தனன்.—எ-று. (கருக)

அண்ணல்கூறியதிருளைதேர்ந்திடுதலுமைய
ரெண்ணமீதுகொல்லம்பெருங்கிளைக்கிதோரிழுக்கை
மண்ணினுட்டவோவந்ததுமறவர்தம்பேதைப்
பெண்ணையாதரித்திடுவரோபெரியவரென்றாள்.

(இ-ள்.) இறைவனுரைத்ததனை இன்னதெனத் தோழியறிதலும் இவ்வையருடைய எண்ணமிதுவோ இவர் எமதுபெரிய கிளைக்கு இவ்வொரு குற்றத்தினைப் பூமி

யில் சிறுத்தவோ வந்தது என்றுள்ளில் நினைத்தாளாய்ப் பெரியராயுள்ளார் மறவரின் பேதைப்பெண்ணை விரும்புவார்களோ என்று கூறினாள்.—எ-று

மறவர் - வேடர். பெரியர் உயர்குலத்தார். (௧௩௨)

சீதரன் றருமமிர் தினையெயினர்கள்செய்த
மாதவந் தனைப்பெண்ணினுக்கரசைமற்றெனக்குக்
காதனல்கியேநல்லருள்புரிந்தகாரிகையைப்
பேதையென்பதேபேதைமையென்றனன்பெரியோன்.

(இ-ள்.) தோழிகூறியதனைக்கேட்ட பெரியோனான குமரவேள் (அவண்மொழிக்குப்பதிலாகச்) சீதரன்றந்த அமிர்தினை வேடர்கள் செய்த சிறந்ததவத்தினை பெண்ணினுக்கரசை எனக்குக்காதலையளித்து நல்லருளைச்செய்த அழகியைப் பேதையென்றுகூறுவதே அறியாமையென்றருளிச் செய்தனன்—எ-று.

சீதரனான மாயோன்பெற்ற மகளான அமிர்தம்போல் பவளைஎன்றும் திருமாலன்னாளிற் பாற்கடலைக் கடைந்தெடுத்தளித்த அமுதம்போல் வாளையெனவும் இருபொருள்பட்டுண்மை காட்டி நிற்றல்காண்க இம்மொழியால் வள்ளிநாயகியின் அருமைத்தன்மையை விளக்கினர். (௧௩௩)

என்றெங்கோனுரைசெய்தலுமடமகளிங்ஙன்
குன்றங்காவலர்வருகுவரவர்மிகக்கொடியோ
ரொன்றுந்தேர்கிலர்காண்பரேலெம்முயிரொறுப்பார்
நின்றிங்காவதென்போமெனநெறிப்படுத்துரைத்தாள்.

(இ-ள்.) என்றிவ்வாறு எமதுதலைவனுரைத்தலும் மகிமையினையுடைய வத்தோழி இவ்விடத்தில் இம்மலையின் காவலரானவேடர்கள் வருவார்கள் மிகவுங் கொடியவர்கள் ஒன்றையுமுணரார் நம்மையுமெம்மையுமொருங்கே காண்பாராயின் எமதுயிரை அழிப்பார்கள் ஆதலின் நீர் இங்குநின்றுவதென்னை போமென்று முறையாகவுரைத்தனள்.—எ-று. (௧௩௪)

தோட்டின்மீதுசெல்விழியினாய்தோகையோடென்னைக்
கூட்டிடாயெனிற்கிழிதனிலாங்கவள்கோலந்
தீட்டிமாமடலேறிநும்மூர்த்தெருவதனி
லோட்டுவேனிதுநாளையான்செய்வதென்றுரைத்தான்.

(இ-ள்.) (இங்ஙனம் தோழிகூறியவுடனே எங்கோமானவளைப்பார்த்துக்) காதணியளவுஞ் செல்லும் விழியினையுடையாய் நினது துணைவியான மயில்போல் வாளுடனென்னைச்சேர்க்கா தொழிவையானால் யான் அவள் வடிவினைப் படத்திலெழுதிக்கொண்டுபனைமடலாலாய குதிரைமீதேறிஅதனையுமதூர்த்தெருவினிடத்துஓட்டுவேன் இதனையான் செய்வது நாளையெனக்கூறினான்.—எ-று. (௧௩௫)

ஆதிதன்மொழிதுணைவிகேட்டஞ்சியையர்க்கு
நீதியன்றுதண்பனைமடலேறுதனீரிம்
மாதவித்தருச்சூழலின்மறைந்திருமற்றென்
காதன்மங்கையைத்தருவனென்றேகினள்கடிதின்.

(இ-ள்.) முதல்வனுடைய வசனத்தினைத் தோழிகேட்டுப்பயந்து தண்ணிய பனைமடலாலாகிய குதிரைமீதேறுதல் அரசராகிய நுமக்கு நீதியன்று, நீர் இந்தக்குருக்கத்திமரச்செறிவினிடத்து ஒளித்திரும் எனதாசை நங்கையை இங்கழைத்துத் தருவேனென்று கூறிவிரைந்து சென்றனள்.—எ-று. (௧௩௬)

வேறு.

அங்கவெல்லையிலகமகிழ்ச்சியா
யெங்கடம்பிரானினிதினேகியே
மங்குல்வந்துகண்வளருமாதவிப்
பொங்கர்தன்னிடைப்புக்குவைகினான்.

(இ-ள்.) அப்பொழுது மனமகிழ்ச்சியுடன் எங்கள் தலைவனான குமரக்கடவுள் செவ்வனே சென்று மேகங்கள் வந்துபடிந்து கிடக்கின்ற குருக்கத்திச்சோலையிற் சென்றிருந்தனன்.—எ-று. (௧௩௭)

பொள்ளெனத்தினைப்புனத்திற்பாங்கிபோய்
வள்ளிதன்பதம்வணங்கிமானவேற்
பிள்ளைகாதலும்பிறவுஞ்செப்பியே
யுள்ளந்தேற்றியேயொருப்படுத்தினாள்.

(இ-ள்.) தோழியானவள் விரைவாகத்தினைப்புனத்துக்குச்சென்று வள்ளிநாயகியின் பாதங்களை வணங்கிப்பெரியவேலேந்திய இளையோன்காதலும்பிறவுங்கூறி மனந்தேற்றிச் சம்மதிப்பித்தனள்.—எ-று. (௧௩௮)

இளையமங்கையையிருளையேனலின்
விளைதரும்புனமெல்லநீங்கியே
யளவின்மஞ்ஞைகளகவுமாதவிக்
குளிர்பொதும்பரிற்கொண்டுபோயினாள்.

(இ-ள்.) அப்பாங்கியானவள் இளையமங்கையான வள்ளிநாயகியையுடன்கொண்டு தினைவிளைகின்ற புனத்தினை மெல்லெனக்கடந்து அளவற்ற மயில்கள் கேகாரவமான ஓசையினைக் காட்டுகின்ற குருக்கத்தி மரங்கள்நிறைந்த குளிர்ந்த சோலையுட் கொண்டு சென்றனள்.—எ-று.

அளவின்மஞ்ஞைகளகவும் என்பதற்கு, அளவற்ற மயில்களாடுகின்ற என்றுங் கூறலாம். (௧௩௯)

பற்றின்மிக்கதோர்பாவையிவ்வரை
சுற்றியேகிநீசூடுங்கோடல்கள்
குற்றுவந்துநின்குழற்குநல்குவ
னிற்றிநீண்டெனநிறுவிப்போயினாள்.

(இ-ள்.) என்னிடத்திலன்பு மிக்கபாவைபோல்வாய் யானிம்மலையைச் சுற்றியுலவி நீ சூடுங்காந்தண் மலர்களைப்பறித்து வந்து நின் கூந்தற்காகவளிப்பேன் இங்கு நிற்பாயாக வென்று குறியிடத்துய்த்துச் சென்றனள்.—எ-று. (௧௪௦)

வேறு.

கோற்றொடியிருளைதன்குறிப்பினால்வகை
சாற்றினளகன்றிடத்தையனிற்றலு
மாற்றவுமகிழ்சிறந்தாறுமாமுகன்
றோற்றினனெதிர்ந்தனன்றொன்மைபோலவே.

(இ-ள்.) கோல்வளையணிந்த தோழியானவள் தனது குறிப்பினால்தான் பிரிதற்கு வகைகூறிச்செல்ல வள்ளிநாயகிதனித்து நிற்றலும் அதுகண்டு சிறந்த ஆறுதிருமுகங்களையுடைய சண்முகப்பெருமான் முன்போலத்தோன்றி யெதிரே வந்தனன். ()

வடுத்துணைநிகர்விழிவள்ளியெம்பிரா
னடித்துணைவணங்கலுமவளையங்கையா
லெடுத்தனன்புல்லினனின்பமெய்தினன்
சுடர்த்தொடிகேட்டியென்றிதனைச்சொல்லினன்.

(இ-ள்.) இரட்டைமாவடுப்போலும் விழியிணையுடைய வள்ளிநாயகி எம்பிரானுடைய உபயசரணங்களை வணங்குதலும் அவளைத் தனதழகிய கரத்தாலெடுத்தணைத்து இன்பமனுபவித்து ஒளிதங்கிய வளையலினையுடையாய்கேளென்று இதனையுரைத்தனன்.—எ-று. (கசஉ)

உந்தையும்பிறரும்வந்துன்னைநாடுவர்
செந்தினைவிளைபுனஞ்சேவல்போற்றிடப்
பைந்தொடியணங்கொடுபடர்திநாளையாம்
வந்திடுவோமெனமறைந்துபோயினன்.

(இ-ள்.) உனது தந்தையும் தோழியர் முதலியபிறரும் ன்னைப் புனத்திற்தேடுவார்கள் செவ்விய தினைவிளையும் புனத்திற் சேவல் கா து உனது தோழியான பசியதொடியணிந்தவளுடன் செல்லுதி நாம்நாளை வருவோமென்று மறைந்து சென்றனன்.—எ-று. (கசங)

போந்தபினிரங்கியப்பொதும்பர்நீங்கியே
யேந்திழைவருதலுமிகுளைநேர்கொடு
காந்தளின்மலர்சிலகாட்டியன்னவள்
கூந்தலிற்சூடியேகொடுசென்றேகினள்.

(இ-ள்.) வள்ளிநாயகி குமரவேள் மறைந்துசென்றபின்னர் பிரிவாற்றாமையால் வருந்தி அச்சோலையை விடுத்துவெளியே வருதலுந் தோழியெதிரெய்திச் சில காந்தளலர்களைக் கையுறையாகக்காட்டி இது நின்குழற்காக யான்குற்றபூவெனவவள் கூந்தலிற்சூட்டி உடன்கொண்டு சென்றனள்.—எ-று. (கசச)

இவ்வகைவழிபடுமிகுளைதன்னொடு
மைவளமேயெனநவிலுந்தீஞ்சொலாள்
கொய்வருதினைப்புனங்குறுகிப்போற்றியே
யவ்விடையிருந்தனளகப்புலர்ந்துளாள்.

(இ-ள்.) இவ்வாறுபசரிக்கின்ற தோழியுடன் குறிஞ்சியாழிசையே போலுமென்று கூறத்தக்க இனிமையமைந்த சொல்லினையுடைய வள்ளிநாயகி கொய்யப்படும் பருவமடைந்த தினைப்புனத்தையடைந்து சேவல்காத்து உள்ளம்வாடியிருந்தனள்.

வளந்தருபுனந்தனில்வள்ளிநாயகி
தளர்ந்தனளிருத்தலுந்தலையளித்திடு
மிளந்தினையின்குரலீன்றுமுற்றியே
விளைந்தனகுறவர்கள்விரைந்துகூடினர்.

(இ-ள்.) வளத்தினைத் தருகின்ற தினைப்புனத்தில் வள்ளிநாயகி குமரவேளைக் காணாது வருந்தியிருத்தலும் அவளாற் காக்கப்பட்ட இளந்தினைகள் இனியகதிர்விடுத்து முற்றிவிளைந்தன, உடனே அதனையறுத்தற்கு வேடர்கள் விரைந்துவந்து சேர்ந்தனர்.—எ-று. (கசரு)

வேறு.

குன்றவாணர்கள்யாவருங்கொடிச்சியைநோக்கித்
துன்றுமேனல்கள்விளைந்தனகணிகளுஞ்சொற்ற

வின்றுகாறிதுபோற்றியேவருந்தினையினிநீ
சென்றிடம்மவுன்சிறுகுடிக்கெனவுரைசெய்தார்.

(இ-ள்) குறவர்களனைவரும் வள்ளிநாயகியைப்பார்த்து நெருங்கிவளர்ந்ததினைகள் விளைந்தன; அவைவிளைந்தனவென வேங்கைகளும் மலர்ந்து கூறின; இதாறும் இதனைக்காத்து வருந்தினை இனி நீ சென்றிடம்ம நின்சிற்றூருக்கென்றனர்.—எ-று.

குறவரிவ்வகைசொற்றனசெவிப்புலங்கொண்டாங்
கெறியும்வேல்படுபுண்ணிடையெரிநுழைந்தென்ன
மறுகுமுள்ளத்தளாகியேமற்றவணீங்கிச்
சிறுகுடிக்குநல்விகுளையுந்தானுமாய்ச்சென்றாள்.

(இ-ள்.) வேடர்களிவ்வாறு கூறியதனைக் காதாற்கேட்டு, எறியப்பட்ட வேல்பட்ட புண்ணினிடத்து எரியிற்காய்ந்த இரும்பு நுழைந்தாற்போல வருந்துமனத்தினையுடையவளாகி அப்புனத்தினைவிட்டு விலகிச்சிற்றூர்க்கு நல்ல தோழியுந்தானுமாகப் போயினாள்.—எ-று. (கசஅ)

மானினங்களைமயில்களைக்கிளியைமாண்புறவை
யேனையுள்ளவைதங்களைநோக்கியேயாங்கள்
போனசெய்கையைப்புகலுதிர்புங்கவர்க்கென்னாத்
தானிரங்கியேபோயினளொருதனித்தலைவி.

(இ-ள்.) ஒப்பற்ற தலைவியான வள்ளிநாயகி மானினங்களையும் கிளிகளையும் மாட்சிமையான புறாக்களையும் மற்றுள்ள பிறபொருள்களையும் பார்த்து நாங்கள் புனம்விடுத்துச் சென்றசெய்தியை முருகப்பெருமானுக் குரைப்பீராகவென்று கூறிக்கொண்டு வருந்திச்சென்றனள்.—எ-று. (கசகூ)

பூவையன்னதோர்மொழியினாள்சிறுகுடிப்புகுந்து
கோவில்வைப்பினுட்குறுகியேகொள்கைவேறாகிப்
பாவையொண்கழங்காடலள்பண்டுபோன்மடவா
ரேவர்தம்மொடும்பேசலள்புலம்பிவீற்றிருந்தாள்.

(இ-ள்.) நாகணவாய்போலு மொழியினையுடைய வள்ளிநாயகி சிற்றூரிற்சென்று நம்பிவேடனுடைய குடிலினையடைந்து சிந்தைவேறுபட்டுப்பாவையுடன்விளையாடுதலையும் ஒள்ளியகழங்காடுதலையும் செய்யாளாயும் முன்போல எந்தமாதருடனும் பேசாளாயும் புலம்பியிருந்தனள்.—எ-று. (கருo)

மற்றவெல்லையிற்செவிலியுமன்னையுமகளை
யுற்றுநோக்கியேமேனிவேறாகியதுனக்குக்
குற்றம்வந்தவாறென்னெனவற்புறக்கூறிச்
செற்றமெய்தியேயன்னவடன்னையிற்செறித்தார்.

(இ-ள்) அப்பொழுது செவிலியுநற்றாயும் மகளானவள்ளி நாயகியையுற்றுப்பார்த்து உனக்கு மேனிவேறாகியது இத்தகைய குற்றமுண்டான வாலாறென்னையென்று கடுமொழியாகவுரைத்துக் கோபங்கொண்டு அவளை இல்லின்கண் சேர்த்தார்கள்.—எ-று.

இற்செறித்தல், இனிப்புறத்தே போகவேண்டாமென வாணையிட்டு வீட்டிலிருத்தல். (கருக)

ஓவியமனையநீராளுடம்பிடித்தடக்கையோனை
மேவினள்பிரிதலாலேமெய்பரிந்துள்ளம்வெம்பி
யாவியதில்லாளென்னவவசமாயவகண்வீழப்
பாவையரெடுத்துப்புல்லிப்பருவரலுற்றுச்சூழ்ந்தார்.

(இ-ள்.) சித்திரப்பாவைபோல்பவளான வள்ளிநாயகி வேலேந்திய பெருமையமைந்த திருக்கரத்தினையுடைய குமரபெருமானைக் கூடிப்பிரிதலால் உடல்வருந்தி உள்ளம்வெதும்பி உயிரில்லாதவள்போல அவசமாகி மயங்கிவிழ உடனே ஆண்டிருந்த வேடர்மாதர் எடுத்தணைத்து வருந்திச்சூழ்ந்தனர்.—எ-று. (௧௫௨)

ஏர்கொண்மெய் நுடங்குமாறுமிறைவளைகழலுமாறும்
கூர்கொள்கண் பனிக்குமாறுங்குணங்கள்வேறுயவாறும்
பீர்கொளுமாறுநோக்கிப்பெண்ணினைப்பிறங்கற்சாரற்
சூர்கொலாந்தீண்டிற்றென்றூர்சூர்ப்பகைதொட்டதோரார்.

(இ-ள்.) அழகுபொருந்திய உடலம் துவளுந் தன்மையும் கைவளைகழலுமாறும் கூரமைந்தகண்கள் நீர்துளிக்குமாறும் குணங்கள் வேறுபட்டதும் அச்சமடைதலையும் பார்த்து இப்பெண்ணினைச் சூர்ப்பகையான சிவசுப்பிரமணியப் பெருமான் தொட்டதனையுணராதார் தம்மலைச்சாரலிலுள்ள தெய்வந் தொட்டதுபோலு மென்றனர்.—எ-று. (௧௫௩)

தந்தையுங்குறவர் தாமுந்தமர்களும்பிறருமீண்டிச்
சிந்தையுள்ளயர்வுகொண்டுதெரிவைதன்செயலைநோக்கி
முந்தையின்முதியாளோடுமுருகனைமுறையிற்கூவி
வெந்திறல்வேலினுற்குவெறியயர்வித்தாரன்றே.

(இ-ள்.) தந்தையுங்குறவர்களுஞ் சுற்றத்தினரும் மற்றையோருமாங்கெய்தி மனத்தின்கண் தளர்வுபொருந்தி வள்ளிநாயகியின் செயலைப்பார்த்து முன்னுளிற்போல தேவராட்டியுடன் முருகனை முறையாக விளித்து வெவ்விய திறலமைந்த வேலாயுதப்பெருமானுக்கு வெறியாட்டு நடத்தினர்கள்.—எ-று.

பிதாவான நம்பியும் அவன் பரிசனரான குறவர்களும் ஏனைச்சுற்றத்தினரும் மற்றையரும் வந்துநெருங்கி மனதிலயர்ச்சிபொருந்தி முன்வழக்கப்படி தேவராட்டியுடன் வெறியாட்டாளனை முறையாலழைத்து வெவ்வியவலியமைந்த வேற்படையினையுடைய முருகவேட்கு வெறியாட்டென்னும் விழாவினைச் செய்வித்தனர் என்றுங்கூறுப.

தங்குடிக்கொரு குறைநேருங்காலத்திலதனை வெறியாட்டின் வழியறிந்துகொள்ளுதல் மலைக் குறவரின் புராதனவழக்கமாதலை விளக்குவார் முந்தையினென்றூர்.

வெறியயர்கின்றகாலைவேலன்மேல்வந்துதோன்றிப்
பிறிதொருதிறமுமன்றூற்பெய்வளைதமியளாகி
யுறைதருபுனத்திற்றொட்டாமுளமகிழ்சிறப்புநேரிற்
குறையிதுநீங்குமென்றேகுமரவேள்குறிப்பிற்சொற்றான்.

(இ-ள்.) வெறியாடலைச் செய்யுங்காலையில் வேலனான வெறியாட்டாளன்மீது குமரவேள் வந்து தோன்றி இவட்குண்டாயவிது மற்றொரு செயலுமன்று, இடப்பட்டவளையலினையுடைய இவ்வள்ளி தனித்தவளாய்த்தினைப்புனத்திலிருந்தகாலத்தில் நாம் தொட்டோம் ஆதலால் இவளிடத்து மாறுபாடான விக்குணங்களுண்டாயின. எமதுள்ள மகிழத்தக்க பூசையைச் செய்வீராயின் இக்குறை நீங்குமென்று சுப்பிரமணியப்பெருமான்குறிப்பினுற் கூறியருளினன்—.எ-று.

வெறியாடலென்பது தெய்வத்தையழைத்துக் குறிகேட்பது. ஒவ்வொருவேடர் சேரியினும் ஒரு ஆண்மகனும் ஒரு பெண்மகளும் வெறியாட்டினராக விருப்பர். இக்காலத்திலிவர்களைப் பூசாரியெனவும் பூசாரிச்சியெனவும் வழங்குவர். இவர்களிற் பெண்டெய்வம் வருதற்குப் பெண்ணும் ஆண்டெய்வம் வருதற்காணுமாகக் கொண்டிருப்

பர். பெண்டிருள் வயதுமுதிர்ந்தவளே இத்தொழிலினிற்பாள் இவர்கள்பொங்கலிட்டுப் பல்பிரப்பமைத்துத் தங்கள் தெய்வங்களை வருணிப்பார்கள் அப்பொழுது அத்தெய்வமவர்கள் மீதாவேசமாகும் உடனே இன்னோர் தங்களைத் தெய்வமாகக் கருதிவெறிகொண்டாடுதலினவர்கள் வெறியாட்டாளர் என்று பெயரெய்தினர் என்றுங்கூறுவர். மலைக்குறவருக்கு முருகக்கடவுள் முதன்மையான தெய்வமாதலினவர்கள் தந்தேவராளனையும் முருகனென்பர்.

சுப்பிரமணியப்பெருமான் நாமவளையங்கீகரித்தோம் இனி நம்மையின்றியவளிராள் எமது விரகதாபத்தினாலேயே இவ்வாறுயினுள் எமதுளமகிழுமாறெமக்கவளையளித்தலாகிய சிறப்பினைச்செய் திரேல் இக்குறை நீங்குமென்று குறிப்பித்தார் என்பார் பெய்வளை தமியளாகியுறை தருபுனத்திற்றெட்டாமுள மகிழ்சிறப்பு நேரிற் குறையிது நீங்கு மென்றேகுமரவேள் குறிப்பிற்சொற்றான் என்றார். (கஙரு)

குறிப்பொடுநெடுவேலண்ணல்கூறியகன்னமூலு
நெறிப்படவருதலோடுநேரிழையவசநீங்கி
முறைப்படவெழுந்துவைகமுருகனைமுன்னியாங்கே
சிறப்பினைநேர்துமென்றுசெவிலித்தாய்பூராவல்செய்தாள்.

(இ-ள்.) நெடிய வேலினையுடைய சுப்பிரமணியப்பெருமான் உரைத்தருளிய மொழிகள் காதினிடத்து நேரேவந்துபடுதலும் வள்ளிநாயகி மயக்கமொழிந்து முறையாக எழுந்திருக்க அதுகண்டு குமரக்கடவுளை நினைத்துச் சிறப்புச்செய்கின்றேமென்று செவிலித்தாயானவள் பிரார்த்தனை செய்து துதித்தாள்.—எ-று.

செவிலித்தாய், வளர்ப்புத்தாய். "நற்றாய் தோழி செவிலியாகும்" என்பதிலக்கணம். சிறப்பு-பெரும்பூசை. (கஙசு)

மனையிடையம்மைவைகவனசரர்முதிர்ந்தசெவ்வித்
தினையினையரிந்துகொண்டுசிறுகுடியதனிற்சென்று
ரினையதுநோக்கிச்செவ்வேளிருவியம்புனத்திற்புக்குப்
புனையிழைதன்னைக்காணான்புலம்பியேதிரிதலுற்றான்

(இ-ள்.) வள்ளியம்மை இல்லத்திலிருக்க வேடர்கள் முதிர்ந்த பருவத்தினையுடைய தினையினை யரிந்துகொண்டு தமது சிற்றூருக்குச்சென்றார்கள். இதனைக்கண்டு குமரவேள் தினைத்தாளினையுடைய அவ்வறும்புனத்திற் சென்று அணியப்பட்ட அணிகளையுடைய வள்ளிநாயகியைக் காணாது புலம்பித்திரிந்தனன்.—எ-று. (கஙள)

கனந்தனைவினவுமஞ்ஞைக்கணந்தனைவினவுமேனற்
புனந்தனைவினவுமம்மென்பூவையைவினவுங்கிள்ளை
யினந்தனைவினவும்யானையிரலையைவினவுந்தண்கா
வனந்தனைவினவுமற்றைவரைகளைவினவுமாதோ.

(இ-ள்.) தினைப்புனங் காவல்செய்திருந்தாளெங்குப்போயினாள் கூறுகவென்று மேகத்தினை வினாவுவான்; மயிலின் கூட்டத்தினை வினாவுவான்; தினைப்புனத்தினையும் வினவுவான்; அழகிய மெல்லிய நாகணவாய்களை வினவுவான்; கிளியின் கூட்டத்தினை வினாவுவான் ; யானைகளையும் மானினங்களையும் வினாவுவான் ; குளிர்ந்த சோலையை வினாவுவான்; மலைகளை வினாவுவான்.—எ-று. (கஙஅ)

வாடினான்றளர்ந்தானெஞ்சம்வருந்தினான்மையற்கெல்லை
கூடினான்வெய்துயிர்த்தான்குற்றடிச்சுவடுதன்னை
நாடினான்றிகைத்தானின்றுநடுங்கினானங்கைதன்னைத்
தேடினான்குமரற்கிதுதிருவிளையாடல்போலாம்.

(இ-ள்.) இங்ஙனம் தலைவியைக்காணாது முகிலோடும் புள்ளோடும் புனத்தோடும் விலங்கோடுங் காவோடும் வினவிய குமரவேள் அவைகளொன்றும் விடையிறுக்காமையினால் வாடித்தளர்ந்து நெஞ்சம் வருந்தி மோகத்திற்கொரு எல்லையாகிப் பெருமூச்சுவிடுத்து அத்தலைவியின் சிறிய அடிச்சுவட்டினை ஆராய்ந்து திகைத்து நடுங்கி வள்ளிநாயகியைத்தேடினான்; குமரவேட்கு இதுவொரு திருவிளையாடல்போலும்.

வல்லியைநாடுவான்போன்மாண்பகல்கழித்துவாடிக்
கொல்லையம்புனத்திற்சுற்றிக்குமரவேணடுநாள்யாமஞ்
செல்லுறுமெல்லைவேடர்சிறுகுடிதன்னிற்புக்குப்
புல்லியகுறவர்செம்மல்குரம்பையின்புறம்போய்நின்றான்.

(இ-ள்.) குமரக்கடவுள் வள்ளிநாயகியைத் தேடுவானைப்போல மாட்சிமையான பகற்பொழுதினைக்கழித்துக் கொல்லையாகிய தினைப்புனத்திற்சுற்றி இடையிரவாகிய யாமம் நிகழுங்காலத்து வேடர்களின் சிற்றூரையடைந்து இழிந்த குறவர் தலைவனான வேட நம்பியின் சிறுகுடிலின் புறத்தே சென்று நின்றனன்.—எ-று. (கசுO)

பாங்கிசெவ்வேளைக்கண்டுபணிந்துநீர்கங்குற்போதி
லீங்குவந்திடுவதொல்லாதிறைவியும்பிரியினுய்யா
ணீங்களிவ்விடத்திற்கூடநேர்ந்ததோரிடமுமில்லை
யாங்கவடன்னைக்கொண்டேயகலுதிரடிகளென்றாள்.

(இ-ள்.) அங்ஙனம் வந்துநின்ற முருகவேளைப் பாங்கியானவள் கண்டு அடிபணிந்து தேவரீர் இரவில் இங்கு வருதல் கூடாது எங்கள் தலைவியும் உம்மைப்பிரிந்திருந்தா லுயிர்வாழாள் நீங்களிருவரும் இவ்விடத்திற் சேருதற்கோரிடமும் இல்லை ஆதலால் அடிகளே அவளை உடன்கொண்டு செல்லுதிர் என்றனள்.—எ-று.

கங்குற்போதி லிங்குவந்திடுதலொல்லாது என்பதற்கு, ஏற்றிழிவுடைத்தாகிய இம்மலையில் அரவும் உருமும் புலியும் எண்கும்வெண் கோட்டியானையுமென விவற்றதேதமுடைத்தாதலி னிராக்காலத்தில் வருதல் தகுதியன்றென எம்பெருமானையறியாதா ளாதலிற் றோழி கூறினளென்க. (கசுக)

என்றிவைகூறிப்பாங்கியிறைவனைநிறுவியேகித்
தன்றுணையாங்கவைகுக்கையலையடைந்துகேள்வ
ருன்றனைவ . . . ச்செல்வானுள்ளத்திற்றுணியாவிங்ஙன்
சென்றனர்வருதியென்னச்சீரிதென்றெருப்பாடுற்றாள்.

(இ-ள்.) என்று இவைகளைக் கூறிப் பாங்கியானவள் இறைவனை யவ்விடத்தில் நிற்கச்செய் துட்சென்று தன் துணைவியான வள்ளிநாயகியை யடைந்து உனது தலைவர் உன்னைக்கவர்ந்து செல்லுதற்கு உள்ளத்திற்றுணிந்து இங்குவந்தனர் வருதி என்றுரைக்க நல்லதென்று சம்மதித்தனள்.—எ-று. (கசுஉ)

தாய்துயிலறிந்துதங்கடமர்துயிலறிந்துதுஞ்சா
நாய்துயிலறிந்துமற்றந்நகர்துயிலறிந்துவெய்ய
பேய்துயில்கொள்ளும்யாமப்பெரும்பொழுததனிற்பாங்கி
வாய்தலிற்கதவைநீக்கிவள்ளியைக்கொடுசென்றுய்த்தாள்.

(இ-ள்.) பாங்கியானவள் நற்றாய் கோடாயென்னுந் தாயரின் நித்திரையையறிந்து தங்களுறவினர் நித்திரையையறிந்து தூங்காத நாயின் தூக்கத்தினை யறிந்து அந்நகரிலுள்ளாரின் உறக்கத்தினையுமறிந்து கொடியபேய் உறங்குவதான நடுயாமமான பேரிரவில் வாயிற்கதவைத் திறந்து வள்ளியை அழைத்து முருகவேளின் எதிரிற்கொண்டு சேர்த்தனள்.—எ-று. (கசுங)

அறுமுகவொருவன்றன்னையரியிழையெதிர்ந்துதாழ்ந்து
சிறுதொழிலெயினரூரிற்றீயனேன்பொருட்டாலிந்த
நறுமலர்ப்பாதங்கன்றநள்ளிருள்யாமந்தன்னி
லிறைவர்நீர்நடப்பதேயென்றிரங்கியேதொழுதுநின்றாள்.

(இ-ள்.) ஒப்பற்ற சண்முகப்பெருமானை வள்ளிநாயகி யெதிர்சென்று வணங்கி எப்பொருட்கு மிறைவராகிய தேவரீர் தீமையுடைய என்பொருட்டாக இந்த நடுநிசியில் சிறிய தொழிலினையுடைய வேடரூரில் மணம்பொருந்திய தாமரை மலர்போன்ற திருவடிவருந்தத் தேவரீர் நடப்பதோ என்று வருந்தியுரைத்து வணங்கி நின்றனள்.

மாத்தவமடந்தைநிற்பவள்ளலையிகுளைநோக்கித்
தீத்தொழிலெயினர்காணிற்றீமையாய்விளையுமின்னே
யேத்தருஞ்சிறப்பினும்மூர்க்கிங்கிவடனைக்கொண்டேகிக்
காத்தருள்புரியுமென்றேகையடையாகநேர்ந்தாள்.

(இ-ள்.) மிகுந்த தவத்தினையுடைய வள்ளிநாயகி இங்ஙனமுரைத் தடிபணிந்து நிற்ப வள்ளலான குமரக்கடவுளைத் தோழிபார்த்து நும்வருகையைக் கொடிய தொழிலினையுடைய வேடர்கண்டாற் றீமையாகமுடியும் ஆதலின் இப்பொழுதே புகழ்தற்கரிய சிறப்பினையுடைய நுமதூருக்கு இவளைக்கொண்டு சென்று காத்தருள்வீராகவென்று கூறி வள்ளிநாயகியை அடைக்கலமாக வளித்தனள்.—எ-று. (கசுரு)

முத்துறுமுறுவலாளைமூவிருமுகத்தினுன்றன்
கைத்தலந்தன்னிலீந்துகைதொழுதிகுளைநிற்ப
மெய்த்தகுகருணைசெய்துவிளங்கிழாய்நீயெம்பாலின்
வைத்திடுகருணைதன்னைமறக்கலங்கண்டாயென்றான்.

(இ-ள்.) முத்தனைய பற்களமைந்த வள்ளிநாயகியைச் சண்முகப்பெருமானுடைய திருக்கரத்திலளித்துத் தோழிவணங்கி நிற்கக் குமரவேள் அவட்கு மெய்ம்மையான தகுந்த கிருபைசெய்து பிரகாசிக்கின்ற அணிகளையுடையாய் நீ எம்மிடத்தில் வைத்த கருணையை மறவேம் என்றருளிச் செய்தனன்.—எ-று. (கசுசு)

மையுறுதடங்கணல்லாள்வள்ளியைவணக்கஞ்செய்து
மெய்யுறப்புல்லியன்னாய்விரைந்தனைசேறியென்று
வையனோடினிதுகூட்டியாங்கவர்விடுப்பமீண்டு
கொய்யுறுகவரிமேய்ந்தகுரம்பையின்கூரைபுக்காள்.

(இ-ள்.) மையுற்ற பெரிய கண்களையுடைய தோழியானவள் வள்ளிநாயகியையடிவணங்கித் தன்னுடலிற்பொருந்தத்தழுவி அன்னையே விரைந்து செல்வாயென்று குமரக்கடவுளுடன் முறையாகச் சேர்த்துப் பின்னர் அவர்கள் நீபோவெனவனுப்ப மீண்டு, கொய்யப்பட்டகவரியால் மேய்ந்துள்ளகூரையினையுடைய சிறுகுடிலுட் புகுந்தனள்.—எ-று. (கசுஎ)

விடைபெற்றேயிகுளையேகவேலுடைக்கடவுளன்ன
நடைபெற்றமடந்தையோடுநள்ளிருளிடையேசென்று
கடைபெற்றசீறூர்நீங்கிக்காப்பெலாங்கடந்துகாமன்
படைபெற்றுக்குலவுமாங்கோர்பசுமரக்காவுட்சேர்ந்தான்.

(இ-ள்.) விடைபெற்றுத் தோழிசெல்ல வேற்படையினையுடைய கடவுள் அன்னப்பறவைபோல நடைவாய்ந்த வள்ளிநாயகியுடன் அந்தராத்திரியில் நடந்துசென்று காவலனைத்தையுங் கடந்து வாயிலையுடைய அச்சிற்றூரை விடுத்து நீங்கி மன்மதனுடைய படைகளைத் தன்னிடத்துக்கொண்டு பிரகாசிக்கின்ற பெரியமரங்களையுடைய சோலையுட் சென்றான்.—எ-று. (கசுஅ)

செஞ்சுடர்நெடுவேலண்ணல்செழுமலர்க்காவிற்புக்கு
வஞ்சியொடிருந்தகாலைவைகறைவிடியல்செல்ல
வெஞ்சலில்சீறூர்தன்னிலிறையவன்றனதுதேவி
துஞ்சலையகன்றுவல்லேதுணுக்கமுற்றெழுந்தாளன்றே.

(இ-ள்.) செவ்விய சுடரினையுடைய நெடிய வேற்படையேந்திய சண்முகப்பெருமான் செழுமைவாய்ந்த மலர்களையுடைய வச்சோலையுட் புகுந்து வள்ளிநாயகியுட னிருந்தகாலத்தில் வைகறைப்போது செல்லாநிற்க வளங்குறையாத சிற்றூருக்கரசனான வேடநம்பியின் மனைவியானவள் நித்திரைநீங்கி விரைவாகத்திடுக்கிட்டெழுந்தனள். — எ-று. வைகறைவிடியல் ஒருபொருட்பன்மொழியென.

வைகறை விடியலென்பதற்கு அற்றைநாட்பொழுது தன்னெல்லையோடறும் விடியற்காலம் என்றுங் வைகுதல் கழிதலென்னும் பொருட்டு என்றுங் கூறுப. (௧௬௯)

சங்கலைகின்றசெங்கைத்தனிமகட்காணளாகி
யெங்கணுநாடிப்பின்னரிகுளையைவந்துகேட்பக்
கங்குலினவளுநானுங்கண்படைகொண்டதுண்டா
லங்கவளதற்பின்செய்ததறிகிலனன்னையென்றாள்.

(இ-ள்.) அந்நற்றாயானவள் வளையலலைகின்ற செவ்விய கைகளையுடைய ஒப்பில்லாத புதல்வியை எவ்விடத்திலுந் தேடிக்காணாதாளாய்ப் பின்னர்த்தோழியையடைந்து வினவ அவள் இரவில் அவளுநானுமாக உறங்கியதுண்டு பின்னரவள் செய்ததனை அன்னையே அறியேனென்று கூறினாள். — எ-று. (௧௭0)

தம்மகட்காணவண்ணந்தாய்வந்துபுகலக்கேட்டுத்
தெம்முனைக்குறவர்செம்மறெருமந்துசெயிர்த்துப்பொங்கி
நம்மனைக்காவனீங்கநன்னுதற்பேதைதன்னை
யிம்மெனக்கொண்டுபோந்தான்யாவனோவொருவனென்றான்.

(இ-ள்) தமது மகளைக்காணாத தன்மையைத் தாய்வந்து கூறக்கேட்டுப் பகைவரோடு போர்புரியும் வேடர்க்கரசனான நம்பி மனஞ்சுழன்று கோபித்து நமது வீட்டிலுள்ள காவலைக்கடந்து நல்லநெற்றியினையுடைய பாவைபோல்வாளை விரைந்து கொண்டு சென்றவன் யாவனோ என்றான். — எ-று. (௧௭௧)

மற்றிவைபுகன்றுதாதைவாட்படைமருங்கிற்கட்டிக்
கொற்றவில்வாளியேந்திக்குமரியைக்கவர்ந்தகள்வ
னுற்றிடுநெறியைநாடவொல்லையிற்போவனென்னச்
செற்றமொடெழுந்துசெல்லச்சிறுகுடியெயினர்தேர்ந்தார்.

(இ-ள்.) தந்தையாகிய நம்பி வேடன் இவைகளைக்கூறிவாட்படையை இடையிற் கட்டி வெற்றியமைந்த வில்லுமம்புமேந்தித் தன் குமரியை அபகரித்த திருடன் செல்லும் வழியைத்தேடுதற்கு விரைந்து போவேனென்று கோபத்துடன் எழுந்து செல்ல இதனைச் சிற்றூரிலுள்ள வேடர்கள் அறிந்தார்கள். — எ-று (௧௭௨)

எள்ளுதற்கரியசீறூரிடைதனில்யாமத்தேகி
வள்ளியைக்கவர்ந்துகொண்டுமாயையான்மீண்டுபோன
கள்வனைத்தொடர்துமென்றேகானவர்பலருங்கூடிப்
பொள்ளெனச்சிலைகோல்பற்றிபபோர்த்தொழிற்கமைந்துபோனார்.

(இ-ள்.) இகழ்தற்கரிய சிற்றூரினிடத்து நடுநிசியில்வந்து வள்ளியைத்திருடிக்கொண்டு மாயையாற் திரும்பிச்சென்ற திருடனைப் பின்பற்றுவோமென்று வேடர் பலரொருங்குசேர்ந்து வில்லம்புகளைத் தாங்கிப் போர்க்கோலங்கொண்டு சென்றனர். — எ-று. (௧௭௩)

வேடுவர்யாருமீண்டிவிரைந்துபோய்வேந்தனோடு
கூடினரிரலைதன்னைக்குறித்தனர்நெறிகடோறு
மோடினர்பொதும்பரெல்லாமுலாவினர்புலங்கள்புக்கு
நாடினர்சுவடுநோக்கிநடந்தனரிடங்களெங்கும்.

(இ-ள்.) சிற்றூர் வேடரனைவரும் ஒருங்கு திரண்டு விரைந்துசென்று தங்கள் அரசனையடைந்து கொம்புகளையூதி வழிகள்தோறும் ஓடினார்கள். சோலைகள்தோறும் உலாவினார்கள் தினைப்புனங்களிற் புகுந்து தேடினார்கள் காலடிச்சுவட்டினை நாடிக் கொண்டெவ்விடங்களிலு நடந்தார்கள்.—எ-று. (கஎச)

ஈங்கனமறவரோடுமிறைவன்றேடிச்செல்லப்
பாங்கரிலொருதண்காவிற்பட்டிமைநெறியானுற்ற
ளாங்கனந்தெரியாவஞ்சியாறுமாமுகத்துவள்ளல்
பூங்கழலடியில்வீழ்ந்துபொருமியேபுகலலுற்றாள்.

(இ-ள்) இவ்வண்ணம் மறவர்களுடனே வேடநம்பி தேடிச் செல்லாநிற்க அருகிலுள்ள ஒரு தண்ணிய சோலையில் களவொழுக்கத்தால் முருகவேளுடன் வந்த வள்ளிநாயகி அதனை யுணர்ந்து பயந்து சிறந்த ஆறு திருமுகங்களையுடைய குமாரவள்ளலின் அழகிய கழலணிந்த பாதங்களில்விழுந்துவணங்கிப் பொருமியுரைக்கின்றாள்.

கோலொடுசிலையும்வாளுங்குந்தமுமழுவும்பிண்டி
பாலமும்பற்றிவேடர்பலருமாய்த்துருவிச்சென்று
சோலையின்மருங்குவந்தார்துணுக்கமுற்றுளதென்சிந்தை
மேலினிச்செய்வதென்கொலறிகிலேன்விளம்பாயென்றாள்.

(இ-ள்.) எம்பெருமானே வேடுவர் பலரு மொன்றாகி அம்பும் வில்லும் வாளும் ஈட்டியும் மழுவும் பிண்டி பாலமுமேந்தி நம்மைப்பலவிடங்களிலுந் தேடிச்சென்று இப்பொழுது இச்சோலையினருகிலும் வந்தார்கள் அதனால் என்மனம் நடுக்கமடைந்தது இனிமேற்செய்வதென்னையோ அறிகிலேன் உரைத்தருள்க என்றனள். ()

வருந்தலைவாழிநல்லாய்மால்வரையோடுசூர
னுரந்தனைமுன்புகீண்டவுடம்பிடியிருந்ததும்மோர்
விரைந்தமர்புரியச்சூழின்வீட்டுதுமதனைநோக்கி
யிருந்தருணம்பினென்னாவிறைமகட்கெந்தைசொற்றான்.

(இ-ள்.) உடனே எந்தையான முருகவேள் நீ வருந்தாதே முன்னர்ப்பெரியகிரவுஞ்சமலையுடன் சூரபன்மன் மார்பினைப்பிளந்த வடிவேலுளது, நம்மவர்கள் விரைந்து போர்புரிய வருவாராயின் அவரையழிப்பேம் அதனைப்பார்த்துக்கொண்டெமது பின்புறத்திலிருத்தியென்று தலைவிக்குரைத்தனன் —எ-று. (கஎஎ)

குறத்திருமடந்தையின்னகூற்றினைவினவிச்செவ்வேள்
புறத்தினில்வருதலோடும்பொள்ளெனக்குறுகியந்தத்
திறத்தினையுற்றுநோக்கிச்சீறிவெய்துயிர்த்துப்பொங்கி
மறத்தொழிலெயினர்காவைமருங்குறவளைந்துகொண்டார்.

(இ-ள்.) அழகிய குறவர் குலக்கொடியாகிய வள்ளிநாயகி இந்த மொழியைக் கேட்டு குமாரக்கடவுளின் பின்புறமாகச்சென்று நிற்றலும் கொலைத்தொழிலினையுடைய வேடுவர் விரைந்து வந்து அச்செயலை யுற்றுப்பார்த்துக் கோபித்து வெய்தாக மூச்சுவிடுத்துப் பொங்கி அச்சோலையைச் சுற்றிலுஞ் சூழ்ந்துகொண்டார்கள். —எ-று.

தாதையங்கதனைக்கண்டுதண்டலைகுறுகிநந்தம்
பேதையைக்கவர்ந்தகள்வன்பெயர்கிலனெமதுவன்மை

யேதையுமதியானம்மாவிவன்விறலெரிபாய்ந்துண்ணு
மூதையங்கானமென்னமுடிக்குதுமொல்லையென்றான்.

(இ-ள்.) அதனைத் தந்தையானநம்பி வேடன்கண்டுசோலையையடைந்து நமது பேதைமகளைக் கவர்ந்த சோரன்புடை பெயர்கின்றானலன் இவன் நமது வன்மை யேதையுமறியான் இனி இவன்வன்மையைநாம் தீ புகுந்துண்ணுகின்ற வெட்டிச்சுடுங் காட்டைப்போல விரைந்தழிப்போம் என்று கூறினான்.—எ-று. (கஎகூ)

குறவர்கண்முதல்வன்றானுங்கொடுந்தொழிலெயினர்யாரு
மறிகடலென்னவார்த்துவார்சிலைமுழுதும்வாங்கி
யெறிசுடர்ப்பரிதித்தேவையெழிலிகண்மறைத்தாலென்ன
முறைமுறையம்புவீசி முருகனைவளைந்துகொண்டார்.

(இ-ள்.) வேடர் தலைவனான நம்பியும் கொடிய தொழிலினையுடைய வேடரனைவோரும் அலைமறியுங் கடலைப்போல ஆரவாரித்து வாரினையுடைய வில் முழுதும் வளைத்துச் சுடரெறிக்கும் பரிதியங்கடவுளை மேகசாலங்கள் மறைத்தாற்போல வரிசை வரிசையாக வம்புவிடுத்து முருகக்கடவுளை மறைத்தார்கள்.—எ-று. (கஅ0)

ஓட்டலராகிச்சூழ்ந்தாங்குடன்றுபோர்புரிந்துவெய்யோர்
விட்டவெம்பகழியெல்லாமென்மலர்நீரவாகிக்
கட்டழகுடையசெவ்வேற்கருணையங்கடலின்மீது
பட்டனபட்டலோடும்பைந்தொடிபதைத்துச்சொல்வாள்.

(இ-ள்.) கொடிய வேடர்கள் பகைவர்களாகிச் சூழ்ந்து பகைத்துப் போர்செய்து விடுத்த வெவ்விய அம்புகளனைத்தும் மெல்லிய மலரின் தன்மையவாய்ப் பேரழகுடைய செவ்வேளான கருணைக்கடலின்மீதுவந்து பட்டன. அங்ஙனம் படுதலும் அதனைக்கண்டு ஆற்றாளாய்ப்பசியதொடியணிந்த வள்ளிநாயகி பதைத்துரைக்கின்றாள்.

குறிஞ்சித் தெய்வமான குமாரசுவாமியார்மீது வேடர் இயல்பா யன்புடையரென்றும் அவரை யவரென்றறியாது பகைத்தனரென்றுங் குறிப்பார், ஒட்டலராகி என்றார். சிவசண்முகப்பெருமான்மீ தன்புடைய வேடரறியாது விடுத்தமையினவர் விடுத்தவெம்பகழிகள் அவர் தூவிய அலர்போலவந்து பட்டனவென்பார், மென்மலர் நீரவாகிஎன்றார். தம்மையருச்சிப்பார் தமதடியிலிடும் பூக்களைப்போல வள்ளியைத்தந்த நிரபராதிகளான வேடரினம்புகளை இறைவரேற்றனரென்பார், மென்மலர் நீரவாகி என்றார்.-எ-று. மென் மலர் நீரவாகி- [illegible] (கஅக)
[illegible]

நெட்டிலைவாளிதன்னைஞரேலென நும்மேற்செல்லத்
தொட்டிடுகையர்தம்மைச்சுடருடைநெடுவேலேவி
யட்டிடல்வேண்டுஞ்சியமடுதொழில்குறியாதென்னிற்
கிட்டுமேமரையுமானுங்கேழலும்வேழந்தானும்

(இ-ள்.) நெடிய இலையினைய இறகுகளை இருபுறத்திலு மிட்டமைக்கப்பட்ட அம்புகளை ஞரேலென்று எம்பெருமான்மீது தைக்கும்வண்ணம் விடுகின்ற கீழோராகிய இவ்வேடர்களை ஒளியினையுடைய நெடியவேலினை விடுத்துக் கொல்லுதல் வேண்டும் சிங்கமகொல்லுந் தொழிலைக் கருதாதிருக்குமாயின் அச்சமின்றி மரையும் பன்றியும் யானையுழ் அதனருகிலெய்துமே.—எ-று. (கஅஉ)

என்றிவைகுமரிசெப்பவெம்பிரானருளாற்பாங்கர்
நின்றதேர்கொடிமாண்சேவனிமிர்ந்தெழுந்தார்ப்புக்கொள்ளக்
கூன்றவர்முதல்வன்றானுங்குமரருந்தமருமியாரும்
பொன்றினராகிமாண்டுபொள்ளெனப்புவியில்வீழ்ந்தார்.

(இ-ள்.) என இவைகளை வள்ளிநாயகிகூற எம்பெருமானுடைய கட்டளையால் அருகினின்ற ஒப்பற்றகொடியான மாட்சிமையமைந்த கோழியானது நிமிர்ந்தெழுந்து கொக்கரிக்க வேடர் தலைவனான நம்பியும் அவன் புதல்வரும் அவன் சுற்றத்தினரும் பிறரும் வலியழிந்தாராகி இறந்து திடீரெனப் பூமியில் விழுந்தனர்.—எ-று.

தந்தையுமுன்னையோருந்தமரும்வீழ்ந்திறந்ததன்மை
பைந்தொடிவள்ளிநோக்கிப்பதைபதைத்திரங்கிச்சோரக்
கந்தனத்துணைவியன்புகாணுவான்கடிகாநீங்கிச்
சிந்தையிலருளோடேகவனையளுந்தொடர்ந்துசென்றாள்.

(இ-ள்.) தந்தையுந் தமையன் மார்களுஞ் சுற்றத்தினரும் வீழ்ந்திறந்த தன்மையைப் பசியதொடியணிந்த வள்ளிநாயகிகண்டு பதைபதைத்து இரங்கிச்சோரக், கந்தக்கடவுளந்தத் துணைவியினன்பினைக்காணும் வண்ணம் மணந்தங்கிய அச்சோலையை விடுத்து உள்ளிற்கருணையுடன் எழுந்தருள அவ்வம்மையுந் தொடர்ந்துசென்றனள்.

செல்லநாரதப்பேர்பெற்றசீர்கெழுமுனிநேர்வந்து
வல்லியோடிறைவன்றன்னைவணங்கிநின்செய்கையெல்லாஞ்
சொல்லுதியென்னவன்னான்றேருகையைக்காண்டலொட்டு
மல்லல்வேட்டுவரையட்டுவந்திடுமளவுஞ்சொற்றான்.

(இ-ள்) சிவசண்முகப்பெருமானுடன் வள்ளிநாயகி செல்லாநிற்க நாரதனென்னும் பெயர்வாய்ந்த சிறப்பு விளங்கும் முனிவன் எதிரேவந்து வள்ளிநாயகியுடன் இறைவனை வணங்கி நினது செயல் முழுதுஞ் சொல்லுதியென்ன அம்முருகவேள் வள்ளிநாயகியைக் கண்டதுமுதல் வன்மைவாய்ந்த வேடர்களைக்கொன்றுவந்த வளவுங்கூறியருளினான்.—எ-று. (௧௮௫)

பெற்றிடுதந்தைதன்னைப்பிறவுளசுற்றத்தோரைச்
செற்றமொடட்டுநீக்கிச்சிறந்தநல்லருள்செயாமற்
பொற்றொடிதன்னைக்கொண்டுபோந்திடத்தகுமோவென்னு
மற்றிவைமுனிவன்கூறவள்ளலுமஃதாமென்றான்.

(இ-ள்.) பெற்ற தந்தையையும் மற்றுள்ள சுற்றத்தினரையும் கோபத்துடன் கொன்றொழித்து அவர்களெழுமாறு சிறந்த நல்ல அருளைச்செய்யாமற் பொன்னாலாகிய தொடியினையுடைய இவளை உடன்கொண்டுபோதல் தகுமோ வென்றிவைகளை நாரதமுனிவன் கூறச் சுப்பிரமணியப்பெருமானும் நீ கூறியது தகுதியானதேயாகும் என்றருளிச்செய்தனன்.—எ-று. (௧௮௬)

விழுப்பமதுளதண்காவில்விசாகன்மீண்டருளித்தன்பால்
முழுப்பரிவுடையநங்கைமுகத்தினைநோக்கிநம்மேற்
பழிப்படுவெம்போராற்றிப்பட்டநுங்கிளையையெல்லா
மெழுப்புதியென்னலோடுமினிதெனவிறைஞ்சிச்சொல்வாள்.

(இ-ள்.) விசாகனான சுப்பிரமணியப்பெருமான் சிறப்பமைந்த குளிர்ந்த சோலையின்கண் மீண்டெழுந்தருளித் தம்மிடத்துப் பூரணமான வன்பினையுடைய வள்ளிநாயகியின் திருமுகத்தினைப்பார்த்து நம்மீது பழித்தலின் பாற்பட்ட வெவ்விய போரினைச்செய்து இறந்த நினது கிளைஞரையெல்லாம் எழுகவென்று கூறி எழுப்புக என்றருளிச்செய்தவுடனே நன்றென்று வணங்கிக் கூறுகின்றாள். (௧௮௭)

விழுமியவுயிர்கள்சிந்திவீழ்ந்தநங்கேளிர்யாரு
மெழுதிரென்றருளலோடுமிருநிலத்துறங்குகின்றோர்
பழையநல்லுணர்வுதோன்றப்பதைபதைத்தெழுதற்கொப்பக்
குழுவுறுதமர்களோடுங்குறவர்கோனெழுந்தானன்றே.

(இ-ள்.) இறந்த உயிர்சிந்தி விழுந்த நந்தமராயினு ரனைவரும் எழுதிரென்ற ருளிச்செய்தவுடனே பெரிய பூமியிற் கிடந்துறங்குவோர் பழைய நல்ல வறிவுதோன்றப் பதைபதைத் தெழுதற்கொப்பக் கூட்டமாகவுள்ள சுற்றத்தினர்களான வேடர்களுடனே வேடராசனுன நம்பியெழுந்தனன்.—எ-று. (கஅஅ)

எழுந்திடுகின்றகாலையெம்பிரான்கருணைவெள்ளம்
பொழிந்திடுவதனமாறும்புயங்கள்பன்னிரண்டும்வேலு
மொழிந்திடுபடையுமாகியுருவினையவர்க்குக்காட்ட
விழுந்தனர்பணிந்துபோற்றிவிம்மிதராகிச்சொல்வார்.

(இ-ள்.) எழுந்தவுடனே எம்பெருமான் கருணை வெள்ளம் பொழியும் ஆறு திருமுகங்களும் பன்னிருதோள்களும் வேலாயுதமும் மற்றுள்ள "நவிலநந் தோமரங் கோடிவாள் வன்றிறற் சூலிசம்பகழி யங்குசழ மணிமலர்ப் பங்கயந்தண்டம் வேன்றி வின்மழு" என்னும் பதினோராயுதங்களும் பொருந்திய திருவுருவினையவ் வேடர்களுக் காட்டக் கண்டு வணங்கித்துதித்து அற்புதமுடையராகி உரைக்கின்றார்கள்.எ-று.

அடுந்திறலெயினர்சேரியளித்திடுநீயேயெங்கண்
மடந்தையைக்கரவில்வௌவிவரம்பினையழித்துத்தீரா
நெடுந்தனிப்பழியதொன்றுநிறுவினைபுதல்வர்கொள்ள
விடந்தனையன்னையூட்டின்விலக்கிடுகின்றாருண்டோ.

(இ-ள்.) பகைவரைக்கொல்லும் வன்மையமைந்த வேடர் சேரியான சிற்றூரினைக்காக்கு நீயே எங்கள் பெண்ணைக் களவாக அபகரித்து எமது குலவரம்பினையழித்துத் தீராத நெடிய ஒப்பற்ற பழியைத் தாபனை செய்தனை; தாம்பெற்ற மக்கள் தின்னும் வண்ணம் விடத்தினைத் தாயானவள் ஊட்டினுற் தடுப்பவர்களும் உளரோ?

ஆங்கதுநிற்கவெங்களரிவையைநசையால்வௌவி
நாங்களுமுணராவண்ணநம்பெருங்காவனீங்கி
யீங்கிவட்கொணர்ந்தாயெந்தாயின்னினிச்சீறூர்க்கேகித்
தீங்கனல்சான்றாவேட்டுச்செல்லுதிநின்னூர்க்கென்றார்.

(இ-ள்.) இது நிற்க. எங்கள் குலமாதை ஆசையால் வௌவி நாங்களுமறியா வண்ண நமது பெரிய காவலுங்கடந்து இவ்விடத்துக்கு இவளைக்கொண்டுவந்தனை இனி எங்கள் சிற்றூருக்குவந்து நல்ல ஓமாக்கினி சாட்சியாகத் திருமணஞ்செய்து நின்னூருக்குச்செல்லுதி என்றனர்.—எ-று. (கககூ)

மாதுலன்முதலோர்சொற்றமணமொழிக்கிசைவுகொண்டு
மேதகுகருணைசெய்துமெல்லியறனையுங்கொண்டு
கோதிலாமுனிவனோடுங்குளிர்மலர்க்காவுநீங்கிப்
பாதபங்கயங்கணோவப்பருப்பதச்சீறூர்புக்கான்.

(இ-ள்.) சண்முகப் பெருமான் மாதுலனுன நம்பி முதலியவர் கூறிய திருமணமொழிக்கிசைவுகொண்டு மிகுந்த கிருபைசெய்து வள்ளிநாயகியை யழைத்துக் கொண்டு குற்றமற்ற நாரதமுனிவனுடன் குளிர்ச்சிவாய்ந்த வம்மலர்ச்சோலையை விடுத்துத் திருவடித் தாமரைகள் வருந்த மலையிடத்ததான சிற்றூருக்கெழுந்தருளினன்.

தந்தையுஞ்சுற்றத்தோருஞ்சண்முகன்பாங்கரேகிச்
சிந்தையின்மகிழ்ச்சியோடுசிறுகுடியோரைநோக்கிக்
கந்தனேநமதுமாதைக்கவர்ந்தனனமதுசொல்லால்
வந்தனன்மணமுஞ்செய்யமற்றிதுநிகழ்ச்சியென்றார்.

(இ-ள்.) வள்ளிநாயகியின் பிதாவுஞ் சுற்றத்தினரும் சண்முகப்பெருமான் பக்கமாகச்சென்று மனமகிழ்வுடன் சிற்றூரினரைப்பார்த்து கந்தனே நமது மகளைக் கவர்ந்தான் நமது சொல்லினால் மணமுஞ் செய்துக்கொள்ளவந்தனன் இது நடந்த வரலாறு என்றனர்.—எ-று. (ககூ௩)

சங்கரன்மதலைதானே தையலைக்கவர்ந்தானென்று
மங்கலவதுவைசெய்யவந்தனனிங்ஙனென்றுந்
தங்கள்சுற்றத்தோர்கூறச்சிறுகுடிதன்னிலுற்றோர்
பொங்குவெஞ்சினமுநாணுமகிழ்ச்சியும்பொடிப்பநின்றார்.

(இ-ள்.) சிவகுமாரனே நமது வள்ளியைக் கவர்ந்தானென்றும் இப்பொழுது மங்களகரமான திருமணஞ்செய்துசெல்ல வந்தனனென்றும் தங்கள் சுற்றத்தினர் உரைக்க அச்சிற்றூரில்வாழுமவர்கள் அதனைக்கேட்டு மேலெழாநின்ற கடியகோபமும் நாணமும் மகிழ்ச்சியும் உண்டாக நின்றனர்.—எ-று. (ககூ௪)

குன்றவர்தமதுசெம்மல்குறிச்சியிற்றலைமைத்தான
தன்திருமனையினூடேசரவணமுதல்வன்றன்னை
மன்றலங்குழலியோடுமரபுளியுய்த்துவேங்கைப்
பொன்திகழதளின்மீதுபொலிவுறவிருத்தினானே.

(இ-ள்.) வேடர் தலைவனான நம்பி, சிற்றூரான குறிச்சியில் முதன்மையான தாகவுள்ள தனதழகிய மனையிற் சரவணபவனை மணமமைந்த கூந்தலினையுடைய வள்ளிநாயகியுடன் முறையே உள்ளழைத்து அழகு விளங்கும் வேங்கைத்தோலின் மீது விளங்குமாறிருத்தினான்.—எ-று. (ககூரு)

அன்னதோர்வேலைதன்னிலறுமுகமுடையவள்ள
றன்னுழையிருந்தநங்கைதனையருளோடுநோக்கக்
கொன்னவில்குறவர்மாதர்குயிற்றியகோலநீங்கி
முன்னுறுதெய்வக்கோலமுழுதொருங்குற்றதன்றே

(இ-ள்.) அப்பொழுது ஆறுமுகங்களையுடைய வள்ளல் தன்னருகிலிருந்த வள்ளிநாயகியை யருளுடன்பார்க்கக் கொலைசெய்தலையுடைய வேடர்மாதர் செயற்கையாக வமைத்த கோலமொழிந்து முன்னிருந்த தெய்வக்கோல முற்றிலும் ஒருங்கே யுற்றது.—எ-று. எவருக்கியானர் செய்தற்குரிய தெய்வக்கோலமுமாம்; முன்கோலம் [illegible]
முன்னிருந்த தெய்வக்கோலம் சுந்தரியாயிருந்த காலத்துள்ளகோலம். (ககூசு)

கவலைதீர்தந்தைதானுங்கணிப்பிலாச்சுற்றத்தாருஞ்
செவிலியுமன்னைதானுமிகுளையுந்தெரிவைமாருந்
தவலருங்கற்பின்மிக்கதம்மகள்கோலநோக்கி
யிவளெமதிடத்தில்வந்ததெம்பெருந்தவமேயென்றார்.

(இ-ள்.) கவலை நீங்கிய பிதாவும் அளவற்ற சுற்றத்தினரும் செவிலியும் நற்றாயும் உயிர்ப்பாங்கியும் மற்றைப்பெண்களும் கெடுதலற்ற கற்பினால் மிகுந்த தம்புதல்வியின் கோலத்தைப்பார்த்து இவளெம்மிடத்தில் வந்திருந்தது எமது பெரிய தவத்தினாலேயே என்றனர்.—எ-று. (ககூஎ)

அந்தநல்வேலைதன்னிலன்புடைக்குறவர்கோமான்
கந்தவேள்பாணிதன்னிற்கன்னிகைகரத்தைநல்கி
நந்தவமாகிவந்தநங்கையைநயப்பாலின்று
தந்தனன்கொள்கவென்றுதண்புனற்றாரையுய்த்தான்.

(இ-ள்.) அவ்விதமான நல்ல சமயத்தில் அன்பினையுடைய குறவராசனுன நம்பி கந்தவேளான சுப்பிரமணியப்பெருமான் திருக்கரத்தில் வள்ளிநாயகியின் திருக்கரத்தைவைத்து எமது தவத்தினல் எம்மிடம் வந்த நங்கையை விருப்பத்துடனின்று தந்தேன் கொள்கவென்று தண்ணிய நீரினல் தாரைவார்த்தான்.—எ-று. (ககூஅ)

நற்றவமியற்றுந்தொல்சீர்நாரதனவ்வுகாலைக்
கொற்றமதுடையவேலோன்குறிப்பினலங்கியோடு
மற்றுளகலனுந்தந்துவதுவையின்சடங்குநாடி
யற்றமதடையாவண்ணமருமறைவிதியாற்செய்தான்.

(இ-ள்.) நல்லதவத்தினைச்செய்கின்ற நாரதமுனிவன் அப்பொழுது வெற்றியினையுடைய சுப்பிரமணியப்பெருமானுடைய குறிப்பினல் அக்கினியுடன் மற்றுள்ள கலப்பை யென்னு முபகரணங்களையுங்கொண்டுவந்து திருமணச்சடங்கை நாடிச்சோர்வுறுவண்ணம் அரியவேதவிதியாற் செய்பவேண்டுமுறைப்படி செய்தனன் —எ-று.

ஆவதோர்காலைதன்னிலரியுநான்முகனும்வானோர்
கோவொடுபிறருஞ்சூழக்குலவரைமடந்தையோடுந்
தேவர்கடேவன்வந்துசேண்மிசைநின்றுசெவ்வேள்
பாவையைவதுவைசெய்யும்பரிசினைமுழுதுங்கண்டான்

(இ-ள்.) அங்ஙனமத் திருமண நிகழுங்காலத்துத்திருமாலும் பிரமனும் இந்திரனும் முதலாகிய பிறரும் உடன் சூழ்ந்துவரச் சிரேட்டமான மலையையன்மகளுடன் தேவதேவன் வந்து வானிலேயே நின்று குமரக்கடவுள் வள்ளிநாயகியைத் திருமணஞ் செய்யுந் தன்மையை முற்றிலும் பார்த்தருளினன்.—எ—று. (உ௦௦)

கண்ணுதலொருவன்றானுங்கவுரியுங்கண்ணுற்கண்டு
தண்ணளிபுரிந்துநிற்பத்தண்டுழாய்முடியோனுதிப்
பண்ணவருவகைநீடிப்பனிமலர்மாரிவீசி
யண்ணலைவழிபட்டேத்தியஞ்சலிபுரிந்திட்டார்த்தார்.

(இ-ள்.) ஒப்பற்ற நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமானும் உமாதேவியும் நயனங்களாற்பார்த்துக் கருணைசெய்து நிற்கத்தண்ணிய துளவலர் முடியினையுடைய மாயோன் முதலிய தேவர்கள் மகிழ்ச்சி மிக்குக் குளிர்ச்சிவாய்ந்த பூமழைபெய்து சண்முகப்பெருமானை வணங்கித்துதித்து அஞ்சலியத்தராய் [illegible]ரிந்தனர்.—எ-று.()

அறுமுகமுடையவள்ளலன்னதுநோக்கிச்சீறா
ரிறையதுமுணராவண்ணமிமையமேலணங்கினேடுங்
கறையமர்கண்டன்றன்னைக்கைதொழுதேனையோர்க்கு
முறைமுறையுவகையோடுமுழுதருள்புரிந்தானன்றே.

(இ—ள்.) சண்முகப்பெருமானதனைக்கண்டு சிற்றாரார் சிறிது மறியாவண்ணம் பார்வதிதேவியுடன் விடர்தங்கிய கண்டத்தினையுடைய சிவபெருமானைவணங்கி மற்றையருக்கும் மகிழ்வுடன் பூரணகிருபையைச் செய்தனன்.—எ·று. (உ௦உ)

வேறு.

அங்கவேலையினலரின்மேலவன்
செங்கண்மாயவன்றேவர்கோமகன்
சங்கைதீர்தருந்தவத்தர்தம்மொடு
மங்கைபாதியன்மறைந்துபோயினன்.

(இ-ள்.) அச்சமயத்திற் தாமரை மலரிலிருக்கும் பிரமனும் செவ்விய கண்களையுடைய மாயோனுந் தேவராசனும் ஐயமற்ற தவத்தினையுடைய முனிவருமாகிய இவர்களுடன் உமையை யொருபுறத்திலுடைய சிவபெருமான் மறைந்துசென்றனன்.

தேவர் கோமகன் என்பதற்குத் தேவர்களும் அவர்களினரசனான இந்திரனும் என்றுங் கூறலாகும். (உ0௩)

போனவெல்லையிற்பொருவினாரதன்
றுனியற்றியசடங்குமுற்றலுங்
கானவேடுவர்கன்னிதன்னோடு
மானவேலனைவணங்கிப்போற்றினான்.

(இ-ள்.) சிவபெருமானெழுந்தருளியவுடனே ஒப்பற்ற நாரதமுனிவன்தான் செய்த சடங்குமுற்றுப் பெறுதலும் காட்டிலுள்ள வேடர்மகளான வள்ளிநாயகியுடன் பெரிய வேலினையுடைய குமாரப்பெருமானைத் தொழுது துதித்தான்.—எ-று. (உ0௪)

வேறு.

மற்றதுகாலைதன்னின்மாதுலன்வள்ளிதன்னைக்
கொற்றவேலுடையநம்பிவதுவைசெய்கோலநோக்கி
யுற்றவிவ்விழிகடம்மாலுறுபயனொருங்கேயின்று
பெற்றனனென்றானன்னானுவகையார்பேசற்பாலார்.

(இ-ள்.) அப்பொழுது மாமனாகிய நம்பியென்பவன் வள்ளியம்மையை வெற்றிவேலினையுடைய சுப்பிரமணியப் பெருமான் திருமணமுடித்த அழகினைத்தரிசித்து எனதுடலிற் பொருந்திய இக்கண்களாலடையும் பயனை இன்று ஒருங்கே பெற்றேனென்றுரைத்தான்; அவனடைந்த மகிழ்ச்சியை எவர்பேசவல்லுநர்.—எ-று. (உ0௫)

மெல்லிடைகொம்பென்றன்னவிரைமலர்தழைமேற்கொண்ட
புல்லியகுறவர்மாதர்பொருவில்சீர்மருகன்றானும்
வல்லியுமின்னேபோலவைகலும்வாழ்கவென்று
சொலலியலாசிகூறித்தூமலரறுகுதூர்த்தார்.

(இ-ள்.) மெல்லிய இடையைப் பூங்கொம்பென்று கண்டார் கருத நறுமணம் பொருந்திய மலர்களையுந் தழைகளையும் இடைமேலணிந்துள்ள புல்லிய குறவர் பெண்கள் ஒப்பற்ற சிறப்பினையுடைய மருமகனும் வள்ளியும் இந்நாளிற்போல என்றும்வாழ்க எனச்சொல்லாநின்ற வாசிமொழிந்து நல்லமலரோடு கலந்த அரிசியை வாரியிட்டுநிறைத்தனர்.—எ-று.

அறுகிடுதலைச் சேஷையிடுதலென்ப. இது மணமகனையும் மணமகளையும் ஆசீர்வதிப்போர் அரிசியை மும்முறை இருகரங்களானும் வாரிஅன்னாரெதிரே தனித்தனி இட்டுவாழ்த்துஞ் சடங்கெனவறிக. (உ0௬)

செந்தினையிடியுந்தேனுந்தீம்பலகனியுங்காயுங்
கந்தமும்பிறவுமாகவிலைபொலிகலத்திலிட்டுப்
பைந்தொடியணங்குநீயும்பரிவுடனுகர்திரென்ன
வெந்திறலெயினர்கூறவியனருள்புரிந்தான்மேலோன்.

(இ-ள்.) செந்தினைமாவும் தேனும் இனிப்புள்ள பலவகைப்பழங்களும் காய்களுங்கிழங்குகளும் பிறவுணவுகளுமான இவைகளை இலையினாலமைத்த கல்லையாகிய உண்கலத்தில் வைத்துப் பசியவளையலணிந்த தெய்வமாதான எமது வள்ளியு நீயும் விருப்பத்துட னருந்துவீர்களாகவென்று கொடியவன்மையமைந்த வேடர்கள்கூற

அனைவரிலு முயர்ந்த சண்முகப்பெருமான் அப்பொழுது அவர்களிடம் பேரருள் செய்தனன்.—எ-று. (உ0எ)

வேறு.

கிராதர்மங்கையும்பராபரன்மதலையுங்கு[illegible]
விரிவுசில்லுண்டிமிசைந்தனர்மிசைந்திடுதன்மை
முராரியாதியாந்தேவர்பான்முனிவர்பான்மற்றைச்
சராசரங்கள்பாலெங்கணுஞ்சார்ந்துளதன்றே.

(இ-ள்.) குன்றக்குறவர்மகளான வள்ளிநாயகியும் சிவபரஞ் சுடரின்மைந்தனான சண்முகப்பெருமானும் பலவகையான காய்கனியாதிய சிற்றுண்டிகளை அருந்தினார்கள் அருந்தியதன்மை முரனைக்கொன்ற மாயோன் முதலிய தேவர்களிடத்தும் முனிவர்களிடத்தும் மற்றைச்சராசரங்களிடத்தும் சேர்ந்துளது —எ-று.

முருகவேள் அனைத்துயிரிலு நிறைந்துநிற்கும் முழுமுதற் கடவுளென்பதனை அவர்கொண்ட நிவேதனவழியால் விளக்குவார், மிசைந்திடுந் தன்மைமுராரியாதியாந் தேவர்பான் முனிவர்பான் மற்றைச் சராசரங்கள் பாலெங்கணுஞ் சார்ந்துளதன்றே என்றார். (உ0அ)

அனையகாலையிலறுமுகனெழுந்துநின்றாங்கே
குனியும்வில்லுடைக்குறவர்தங்குரிசிலைநோக்கி
வனிதைதன்னுடன்சென்றியாஞ்செருத்தணிவரையி
லினிதுவைகுதுமென்றலுநன்றெனவிசைத்தான்.

(இ-ள்.) அப்பொழுது சண்முகப் பெருமானெழுந்து நின்று வளையும் வில்லினையுடைய வேடராசனைப்பார்த்து யாம் இப்பெண்ணுடன் சென்று திருத்தணிகைமலையில் இனிதாக விருக்கின்றேம் என்றருளிச்செய்தலும் நம்பி வேடன் அவ்வாறே நல்லதென்றுகூறினன்.—எ-று. (உ0க)

தாயும்பாங்கியுஞ்செவிலியுந்தையலைநோக்கி
நாயகன்பின்னர்நடத்தியோநன்றெனப்புல்லி
நேயமோடுபல்லாசிகள்புகன்றிடநெடுவேற்
சேயுடன்கடிதேகவேசிந்தையுட்கொண்டாள்.

(இ-ள்.) நற்றாயும் தோழியும் செவிலியும் வள்ளிநாயகியைப்பார்த்து நீ நின்கணவன்பின்னே செல்லுதியோ நன்று என்று கூறித்தழுவி விருப்பத்துடன் பல ஆசிமொழிகள்கூற நெடியவேலினையுடைய குமரக்கடவுளுடன் செல்லுதற்கே திருவுளத்திற்கருதினள்.—எ-று. (உக0)

பாவைதன்னுடன்பன்னிருபுயமுடைப்பகவன்
கோவினீங்கியேகுறவர்தங்குரிசிலைவிளித்துத்
தேவருந்தொழச்சிறுகுடியரசியல்செலுத்தி
மேவுகென்றவணிறுவியேபோயினன்விரைவில்.

(இ-ள்.) வள்ளியம்மையுடன் பன்னிரண்டு புயங்களையுடைய சாட்குண்ணிய பரிபூரணனான சண்முகப்பெருமான் நம்பிராசனுடைய இல்லத்தைவிடுத்து அவ்வேடராசனை அழைத்து நீ தேவரும் வணங்கும்வண்ணம் சிற்றூரிலரசுமுறை நடத்தி இருத்தியென்றவனையவ்விடத்தில் இருத்திவிரைந்தெழுந்தருளினன்.—எ-று. (உகக)

இன்னதன்மைசேர்வள்ளியஞ்சிலம்பினையிகந்து
பன்னிரண்டுமொய்ம்புடையவன்பாவையுந்தானு

மின்னும்வெஞ்சுடர்ப்பரிதியும்போலவிண்படர்ந்து
தன்னையேநிகர்தணிகைமால்வரையினைச்சார்ந்தான்.

(இ-ள்.) இத்தன்மையான சிறப்புக்களுக் கிடமான வள்ளிமலையைவிடுத்துப் பன்னிரண்டு புயங்களையுடைய சண்முகப்பெருமான் வள்ளிநாயகியுந்தானும் மின்னற்கொடியையுஞ் சூரியனையும்போல ஆகாயமார்க்கமாகச்சென்று தனக்குத்தானே ஒப்பான ஸ்ரீ பரிபூரணகிரியென்னும் பெரிய திருத்தணிகைமலையி லெழுந்தருளினன்.

செச்சைமௌலியான்செருத்தணிவரைமிசைத்தெய்வத்
தச்சன்முன்னரேயியற்றியதனிநகர்புகுந்து
பச்சிளங்கொங்கைவனசரர்பாவையோடொன்றி
யிச்சகத்துயிர்யாவையுமுய்யவீற்றிருந்தான்.

(இ-ள்.) வெட்சிமாலையணிந்த திருமுடியினையுடைய சண்முகப்பெருமான் திருத்தணிகைமலைமீது தேவதச்சன் முன்னரேயமைத்த ஒப்பற்ற ஆலயத்துட்சென்று பசிய இளந்தனங்களையுடைய வேடர்குமாரியான வள்ளிநாயகியுடன் கலந்து இவ்வுலகத்துள்ள உயிர்கள் அனைத்தும் உய்யும்வண்ணம் எழுந்தருளி இருந்தான்.—எ-று.

அந்தவேலையில்வள்ளிநாயகியயில்வேற்கைக்
கந்தவேள்பதம்வணங்கியேகைதொழுதைய
விந்தமால்வரையியற்கையையியம்புதியென்னச்
சிந்தைநீடுபேரருளினுலின்னனசெப்பும்.

(இ-ள்.) அப்பொழுது வள்ளிநாயகி கூரிய வேற்படையேந்திய குமரக்கடவுளின் திருவடிகளை வணங்கிக் கைதொழுது ஐயனே இப்பெரிய மலையின் தன்மையையுரைத்தியென்றுகூற இறைவன் திருவுளத்திற் பொருந்திய மிகுந்த கருணையாலிவைகளை யருளிச் செய்வான்.—எ-று. (உகச)

செங்கண்வெய்யசூர்ச்செருத்தொழிலினுஞ்சிலைவேடர்
தங்களிற்செயுஞ்செருத்தொழிலினுந்தணிந்திட்டே
யிங்குவந்தியாமிருத்தலாற்செருத்தணியென்றோர்
மங்கலந்தருபெயரினைப்பெற்றதிவ்வரையே.

(இ-ள்.) செம்மையான கண்களையுடைய கொடிய சூரனுடன் செய்த செருத்தொழிலினும் வில்லேந்திய வேடராற் செய்யப்பட்ட செருத்தொழிலினும் தணிவடைந்து யாம் இங்குவந்திருத்தலாற் செருத்தணி என்றொரு மங்கலகரமான பெயரினை இம்மலைபெற்றது.—எ-று. (உகரு)

முல்லைவாணகையுமையவண்முலைவளையதனுன்
மல்லன்மாநிழலிறைவரைவடுப்படுத்தமரு
மெல்லைநீர்வயற்காஞ்சியினணுகநின்றிடலாற்
சொல்லலாந்தகைத்தன்றிந்தமால்வரைத்தூய்மை.

(இ-ள்.) முல்லையரும்பனைய ஒளிதங்கிய நகையினையுடைய உமாதேவிமுலையாலும் வளையாலும்வளப்பம்பொருந்திய மாநிழலிலிருக்கும் ஏகாம்பரநாதரான இறைவரைத்தழும்புபடுத்தி எழுந்தருளி இருக்கின்ற நீரினையுடைய வயல்சூழ்ந்த காஞ்சிபுரத்துக்குச்சமீபமாக நிற்பதால் இந்த மலையின் பரிசுத்தம் உரைக்குந் தகைமையானதன்று.—எ-று. (உகசு)

விரையிடங்கொளும்போதினுண்மிக்கபங்கயம்போற்
றிரையிடங்கொளுநதிகளிற்சிறந்தகங்கையைப்போற்
றரையிடங்கொளும்பதிகளிற்காஞ்சியந்தலம்போல்
வரையிடங்களிற்சிறந்ததித்தணிகைமால்வரையே.

(இ-ள்.) நறுமணத்தைத் தம்மிடத்துக்கொண்ட மலர்களுளுயர்ந்த தாமரையைப்போலவும் அலைகளைத் தம்மிடத்துக்கொண்ட நதிகளிற் சிறந்த கங்காநதியைப் போலவும் பூமியினிடத்துள்ள நகரங்களுட்சிறந்த காஞ்சிநகரத்தைப் போலவும் மலைகளுள் இந்தப்பெரிய திருத்தணிகை மலைசிறந்தது.—எ-று. (உகஎ)

கோடியம்பியும்வெய்ங்குழலூதியுங்குரலா
னீடுதந்திரியியக்கியுமேழிசைநிறுத்துப்
பாடியுஞ்சிறுபல்லியத்தின்னிசைபடுத்து
மாடுதும்விளையாடுதுமிவ்வரையதன்கண்.

(இ-ள்.) யாம் இம்மலையினிடத்திற் கொம்புகளை யூதியும் வேய்ங்குழலூதியும் இன்னிசையான்மிக்க வீணையைவாசித்தும் சத்தசுரங்களை அளவுபட வாயாற்பாடியும் சிறுவாச்சியங்களின் இன்னிசையை யமைத்தும் ஆடுவோம் விளையாடுவோம்.-எ-று.

மந்தரத்தினுமேருமால்வரையினுமணிதோய்
கந்தரத்தவன்கயிலையேகாதலித்ததுபோற்
சுந்தரக்கிரிதொல்புவிதனிற்பலவெனினு
மித்தவெற்பினிலாற்றவுமகிழ்ச்சியுண்டெமக்கே.

(இ-ள்.) மந்தரமலையினும் மேருமால் வரையினும் கருமைதங்கிய ஸ்ரீகண்டத்தினையுடைய சிவபெருமான் கைலாயத்தையே விரும்பியதுபோலப் பெரிய இந்த உலகினில் அழகுள்ள மலைகள் பலவுளவாயினும் எமக்கிந்தத் தணிகைமலையினிடம் வசித்தலின் மிகுந்த விருப்பமுளது.—எ-று. (உகக)

வான்றிகழ்ந்திடுமிருநிலவரைபலவற்று
ளான்றகாதலாலிங்ஙன்மேவுதுமதற்குச்
சான்றுவாசவன்வைகலுஞ்சாத்துதற்பொருட்டான்
மூன்றுகாவியிச்சுனைதனிலெமக்குமுன்வைத்தான்.

(இ-ள்.) பெரியபூமியிலுள்ள வானமளாவிய பலமலைகளுள்ளும் மிகுந்தவிருப்பத்துடன் இம்மலையிருக்கின்றோம் அதற்குச்சாட்சி இந்திரன் நாடோறும் நமக்குச் சாத்துதற்கு மூன்றுசெங்காவி மலர்க்கொடிகளை இம்மலைச் சுனையிலெமக்காக முன் வைத்தான்.—எ-று. (உஉ0)

காலைப்போதினிலொருமலர்கதிர்முதிருச்சி
வேலைப்போதினிலொருமலர்விண்ணெலாமிருள்சூழ்
மாலைப்போதினிலொருமலராகவிவ்வரைமே
னீலப்போதுமூன்றொழிவின்றிநிற்றலுமலரும்.

(இ-ள்.) இம்மலைச்சுனையில் உதயகாலத்திலொரு மலரும் சூரியகிரண முதிருகின்ற உச்சிப்பொழுதிலொருமலரும் ஆகாயமுழுதும் இருள்சூழ்ந்துகொள்ளு மாலைநேரத்திலொரு பூவும் ஆக மூன்று செங்கழுநீர் மலர்கள் ஒழிவில்லாது மலரும். ()

ஆழிநீரரசுலகெலாமுண்ணினுமளிப்போ
ரூழிசேரினுமொருபகற்குப்பலமூன்றாய்த்
தாழிருஞ்சுனைதன்னிடைமலர்ந்திடுந்தவிரா
மாழையொண்கணுயிவ்வரைப்பெருமையார்வகுப்பார்.

(இ-ள்.) மாவடுவனைய வெள்ளிய கண்களையுடையாய் இம்மலையின் பெருமையையாவர் வகுப்பவர் வட்டவடிவான கடலானது பொங்கி உலகெலா முண்டாலும் படைத்தல் காத்தல்களைச் செய்வோரான பிரம விஷ்ணுக்களின் வாழ்நாள் முடியினும் ஒருதினத்துக்கு செங்காவிமலர் மூன்றாக ஆழமான பெரிய வச்சுனையினிடத்துத் தவறன்றியலரா நிற்கும்.—எ-று. (உஉஉ)

இந்தவெற்பினைத்தொழுதுளார்பவமெலாமேகுஞ்
சிந்தையன்புடனிவ்வரையின்கணேசென்று
முந்தநின்றவிச்சுனைதனில்விதிமுறைமூழ்கி
வந்துநந்தமைத்தொழுதுளார்நம்பதம்வாழ்வார்.

(இ-ள்.) இந்த மலையைத் தொழுத வர்களின் பாவமனைத்தும் ஒழியும். மனதிலன்புடன் இம்மலையினிடத்துச் சென்று முற்படநின்ற இச்சுனையில் விதிப்படி குளித்து நம்மைத்தொழுதவர்கள் நமது பதத்தில் வாழ்வார்கள்.—எ-று. (உஉங)

அஞ்சுவைகலிவ்வகன்கிரிநண்ணியெம்மடிக
டஞ்சமென்றுளத்துன்னியேவழிபடுந்தவத்தோர்
நெஞ்சகந்தனில்வெஃகியபோகங்கணிரப்பி
யெஞ்சலில்லதோர்வீடுபேறடைந்தினிதிருப்பார்.

(இ-ள்.) ஐந்துதினம் இப்பெரிய மலையயடைந்து எமது பாதமேகதியென உள்ளத்திற் கருதி யெம்மை வழிபடும் தவத்தினையுடையவர்கள் மனதினில் விரும்பிய போகங்களை அனுபவித்துக் கெடுதலற்ற வீடுபேற்றையடைந்து இனிதாக விருப்பார்கள்.—எ-று. (உஉச)

தேவராயினுமுனிவராயினுஞ்சிறந்தோ
ரேவராயினும்பிறந்தபினிவ்வரைதொழாதார்
தாவராதிகடம்மினுங்கடையரேதமது
பாவராசிகளகலுமோபார்வலஞ்செயினும்.

(இ-ள்.) தேவர்களானாலும் முனிவர்களாயினும் சிறப்புள்ளவர்களெவர்களாயினும் பிறந்தபின் னிம்மலையைவணங்காதார் புன்முதலிய தாவரப்பொருளினும் கடையானவர்களே அன்னவர்கள் இப்பூமியை வலமாகவந்தாலும் தமது பாவராசிகள் விலகுமோவிலகாது.—எ-று. (உஉரு)

பாதகம்பலசெய்தவராயினும்பவங்க
ளேதும்வைகலும்புரிபவராயினுமெம்பா
லாதரங்கொடுதணிகைவெற்படைவரேலவரே
வேதன்மாலினும்விழுமியரெவற்றினுமிக்கார்.

(இ-ள்.) பலபாதகங்களைச் செய்தவர்களாயினும் எல்லாப்பாவங்களையும் தினந்தினமுஞ் செய்பவராயினும் எம்மிடத்தில் அன்புவைத்துத் தணிகைமலையையடைவாரானால் அவர்கள் பிரமவிஷ்ணுக்களினுஞ் சிறந்தாரும் மிக்காருமாவர்.-எ-று. (உஉசு)

வேறு.

உற்பலவரையின்வாழ்வாரோரொருதருமஞ்செய்யிற்
பற்பலவாகியோங்கும்பவங்களிற்பலசெய்தாலுஞ்
சிற்பமதாகியொன்றாய்த்தேய்ந்திடுமிதுவேயன்றி
யற்புதமாகவிங்ஙனனந்தகோடிகளுண்டன்றே.

(இ-ள்.) செங்காவிகளையுடைய இத்தணிகை மலையிலிருப்போர் ஒருதருமஞ் செய்வாராயின் அது பற்பலவாகி வளரும்; பாவங்களிற் பலசெய்தாலும் அற்பமாகியொன்றாகித் தேய்ந்தொழியாநிற்கும். இதுவன்றியும் இவ்விடத்தில் அற்புதமாகவுள்ளவைகள் அனந்தகோடிகளுள.—எ-று.

இக்கிரியில் வாழ்வார் தீங்கினை யொருநாளு மியற்றாரென்பார் செய்தாலும் என எதிர்மறை யும்மையுடனுரைத்தனர். (உஉஎ)

என்றிவைகுமரன்கூறவெயினர்தம்பாவைகேளா
நன்றெனவுவகையெய்திநாணிலவரைப்பினுள்ள
குன்றிடைச்சிறந்தவிந்தத்தணிகைமால்வரையின்கொள்கை
யுன்றிருவருளாற்றேர்ந்தேயுய்ந்தனன்றமியனென்றாள்.

(இ-ள்.) என இவைகளைக் குமரக்கடவுள் உரைத்தருள அவைகளைக்கேட்டு நன்றென்று மகிழ்ந்து பூமியினிடத்துள்ள மலைகளுட் சிறந்த பெரிய தணிகைமலையின் தன்மையை உனது திருவருளாலுணர்ந்து அடியேனுய்ந்தேனென்றுரைத்தனள்.

இவ்வரையொருசார்தன்னிலீராறுதோளுடையவெந்தை
மைவிழியணங்குந்தானுமாலயனுணராவள்ள
லைவகையுருவிலொன்றையாகமவிதியாலுய்த்து
மெய்வழிபாடுசெய்துவேண்டியாங்கருளும்பெற்றான்.

(இ-ள்.) இம்மலையி னொருபுறத்திற் பன்னிரண்டு புயங்களையுடைய வெந்தையான குமரவேள் மையணிந்த விழியினையுடைய வள்ளிநாயகியுந் தானும் மாலுமயனுமுணராத வள்ளலான சிவபெருமானுடைய ஐந்துவிதமான வுருவங்களிலொன்றான கன்மசாதாக்கிய உருவமான சிவலிங்கபெருமானை ஆகமவிதிப்படி பிரதிட்டித்து உண்மையான வழிபடுதலைச்செய்து விரும்பிய வண்ணம் அருளும் பெற்றனன்.—எ-று.

ஐவகையுருவங்களாவன, சிவசாதாக்கியம் அமூர்த்தி சாதாக்கியம் மூர்த்திசாதாக்கியம் கர்த்துருசாதாக்கியம் கன்மசாதாக்கியம் என்பன. (உஉகூ)

கருத்திடைமகிழ்வுமன்புங்காதலுங்கடவமுக்க
ணொருத்தனைவழிபட்டேத்தியொப்பிலாநேடுவேலண்ணன்
மருத்தொடைசெறிந்தகூந்தல்வள்ளிநாயகியுந்தானுஞ்
செருத்தணிவரையில்வைகிச்சிலபகலமர்ந்தானன்றே.

(இ-ள்.) உள்ளத்தில் மகிழ்ச்சியும் அன்புங்காதலுமுந்த மூன்றுகண்களையுடைய ஏகனான சிவபெருமானை வழிபட்டுத் துதித்து ஒப்பற்ற நெடிய வேற்படையினையுடைய குமரக்கடவுள் மணந்தங்கிய மாலையணிந்த கூந்தலானான வள்ளிநாயகியுந் தானுஞ் செருத்தணிமலையிற் சில தினமிருந்தனன்.—எ-று. (உஙo)

தள்ளருவிழைவின்மிக்கதணிகையினின்றுமோர்நாள்
வள்ளியுந்தானுமாகமானமொன்றதனிற்புக்கு
வெள்ளியங்கிரியின்பாங்கர்மேவியகந்தவெற்பி
லொள்ளிணர்க்கடப்பந்தாரோனுலகெலாம்வணங்கப்போனான்.

(இ-ள்.) நீக்குதற்கரிய விருப்பத்தின் மிகுந்த திருத்தணிகைமலையினின்றும் ஒருதினம் ஒள்ளிய கொத்துக்களாக வலருங்கடம்பலர்மாலையணிந்த குமரக்கடவுள் வள்ளிநாயகியுந் தானுமாக ஒரு விமானத்திலெழுந்தருளி வெள்ளிமலையினருகிலுள்ள கந்தமாதனத்தில் உலகமெலாம் வணங்க எழுந்தருளினான்.—எ-று. (உஙக)

கந்தவெற்பதனிற்சென்றுகடிகெழுமானநீங்கி
யந்தமில்பூதர்போற்றுமம்பொனாலயத்தினேகி
யிந்திரன்மகடூவாழுமேந்திழையினிதுவாழு
மந்திரமதனிற்புக்கான்வள்ளியுந்தானும்வள்ளல்.

(இ-ள்.) கந்தமாதன கிரியிற்சென்று பிரகாசம்பொருந்திய விமானத்தினின்றும் இறங்கி அளவற்ற பூதர்கள் காவல் செய்கின்ற அழகிய பொற்கோயிலுட்புகுந்து இந்திரன் புதல்வியான தேவயானையம்மை செவ்வனே வாழுகின்ற ஆலயத்துள் பக்தாபீஷ்டப்ரதாயகனான சுப்பிரமணியப்பெருமான் வள்ளிநாயகியுந்தானுமாக எழுந்தருளினான்.—எ-று. (உஙஉ)

ஆரணந்தெரிதறேற்றலறுமுகன்வரவுநோக்கி
வாரணமடந்தைவந்துவந்தனைபுரியவன்னாள்
பூரணமுலையுமார்பும்பொருந்துமாறெடுத்துப்புல்லித்
தாரணிதன்னிற்றீர்ந்ததனிமையின்றுயரந்தீர்த்தான்.

(இ-ள்.) வேதங்களாலறிதற்கரிய சண்முகப்பெருமான் எழுந்தருளுதலைப்பார்த்து இந்திரகுமாரியான தெய்வயானையம்மை யெதிரேவந்து வந்தனஞ்செய்தலும் அவ்வம்மையின் வளரவேண்டுமளவு வளர்ந்து மார்பினிடமுழுது நிறைந்துள்ள தனங்களுந் தனதுமார்பும் பொருந்துமாறு எடுத்தணைத்து உலகினில்விட்டுச் சென்ற தனிமையின் துயரத்தினை நீக்கியருளினான்.—எ-று.

தாரணி தன்னிற்றீர்ந்த என்பதற்கு, ~~கடம்பலர்~~ மாலையணிந்த தன்னைவிட்டுப்/மின்மினி பிரிந்திருந்த என்றுகூறினுமாம். பூமியிற் றன்னைப் பிரிந்திருந்த தனிமையு மாம். (உங௩)

ஆங்கதுகாலைவள்ளியமரர்கோனளித்தபாவை
பூங்கழல்வணக்கஞ்செய்யப்பொருக்கெனவெடுத்துப்புல்லி
யீங்கொருதமியளாகியிருந்திடுவேனுக்கின்றோர்
பாங்கிவந்துற்றவாறுநன்றெனப்பரிவுகூர்ந்தாள்.

(இ-ள்.) அப்பொழுது வள்ளிநாயகி தேவராசன் பெற்றபாவைபோல்வாளான தேவயானையம்மையின் திருவடித்தாமரைகளை வணங்குதலும் தெய்வயானையம்மையவ்வள்ளியம்மையை விரைந்தெடுத்தணைத்து இங்கொரு தனித்தவளாக இருப்பேனுக்கொரு தோழி வந்து சேர்ந்த தன்மை நன்றென்று அன்புடையளாகக் கூறினாள்.—எ-று. (உங௪)

சூர்க்கடல்பருகும்வேலோன்றுணைவியரிருவரோடும்
போர்க்கடல்கொண்டசீயப்பொலன்மணியணைமேற்சேர்ந்தான்
பாற்கடலமளிதன்னிற்பாவையர்புறத்துவைகக்
கார்க்கடற்பவளவண்ணன்கருணையோடமருமாபோல்.

(இ-ள்.) பாற்கடற் பள்ளியிற் திருமகளும் நிலமகளும் இருபுறமுமிருக்கக்கரிய கடலிற்பிறந்த பவளநிறத்தினையுடைய மாயோன் கருணையுடனிருந்தாற்போல அச்சத்தைத்தருங்கடலைப் பருகியவேலினையுடைய சண்முகப்பெருமான்தெய்வயானையம்மை வள்ளியம்மையென்னும் இருதுணைவியர்களுடன் போர்புரிவதில் வன்மைவாய்ந்த சிங்கந்தாங்கும் அழகிய இரத்தினமிழைத்த வாசனத்திலெழுந்தருளி யிருந்தனன்.-எ-று.

மாயோன் பவளவன்னனுதலைக் காஞ்சிமான்மியத்துட்காண்க.

செங்கனல்வடவைபோலத்திரைக்கடல்பருகும்வேலோன்
மங்கையரிருவரோடுமடங்கலம்பீடமீதி
லங்கினிதிருந்தகாலையரமகளவனைநோக்கி
யிங்கிவள்வரவுதன்னையியம்புதியெந்தையென்றாள்.

(இ-ள்.) செம்மையாகிய வடவாமுகாக்கினியைப்போல திரையையுடைய கடலைப் பருகிய வேற்படையினையுடைய சண்முகப்பெருமான் இரண்டுமனைவியருடனும் சிங்காதனத்திலவ்வண்ணஞ் செவ்வனேயிருந்தருளியகாலத்திற் தெய்வயானையம்மை அச்சுப்பிரமணியப் பெருமானைப்பார்த்து எந்தையே இவளுடைய வருகையை உரைத்தருள்க என்றனள்.—எ-று. (உங௫)

வேறு.

கிள்ளையன்னசொற்கிஞ்சுகச்செய்யவாய்
வள்ளிதன்மையைவாரணத்தின்பிணாப்
பிள்ளைகேட்பப்பெருந்தகைமேலையோ
னுள்ளமாமகிழ்வாலிவையோதுவான்.

(இ-ள்.) கிளிமொழிபோலு மொழியினையும் முருக்கம் பூவனைய செவ்வியவாயினையுமுடைய வள்ளியம்மையின் வரலாற்றினை ஐராவதத்தின் மகளாக உபசரிக்கப்படுகின்ற தெய்வயானை யம்மைகேட்கப் பெருந்தன்மையினையுடைய சண்முகப்பெருமான் திருவுளத்தின்கண் உண்டாகிய பெருமகிழ்வாலிவைகளை அருளிச்செய்கின்றான்.

நீண்டகோலத்துநேமியஞ்செல்வன்பா
லீண்டைநீவிரிருவருந்தோன்றினீ
ராண்டுபன்னிரண்டாமளவெம்புயம்
வேண்டிநின்றுவிழுத்தவமாற்றினீர்.

(இ-ள்.) நெடிய வடிவினையுடைய சக்கராயுதமேந்திய திருமாலிடத்தில் இங்கிருக்குநீங்களிருவரும் பிறந்தீர்கள் பன்னிரண்டு வயதாமளவில் எமதுபுயங்களை விரும்பிநின்று பெருந்தவஞ் செய்தீர்கள்.—எ-று. (உ௩அ)

நோற்றுநின்றிடுநுங்களையெய்தியா
மாற்றவும்மகிழ்ந்தன்பொடுசேருதும்
வீற்றுவீற்றுவிசும்பினும்பாரினுந்
தோற்றுவீரென்றுசொற்றனந்தொல்லையில்.

(இ-ள்.) முன்னாளிற் தவஞ்செய்திருந்தவுங்களை நாமடைந்து நுந்தவத்துக்கு மிகவுமகிழ்ந்தேம் நும்மை விருப்பத்துடன் சேருதும் நீவிர் முறையே தேவலோகத்திலும் பூலோகத்திலுஞ் சென்று அவதரித்திருங்கள் என்று முறையாக வுரைத்தாம்.

சொன்னதோர்முறைதூக்கியிருவருண்
முன்னமேவியநீமுகிலூர்தரு
மன்னன்மாமகளாகிவளர்ந்தனை
யன்னபோதுனையன்பொடுவேட்டனம்.

(இ-ள்.) இருவீருள் நீயெமது கட்டளையையாராய்ந்து மேகவாகனனான இந்திரனுடைய சிறந்தமகளாகி வளர்ந்தனை அப்பொழுதுன்னை விருப்பத்துடன் மணஞ்செய்துகொண்டேம்.—எ-று. (உ௪௦)

பிளவுகொண்டபிறைநுதற்பேதைநின்
னிளையளாய்வருமிங்கிவள்யாம்புகர்
விளைவுநாடியன்றழன்மூழ்கியே
வளவிதாந்தொல்வடிவினைநீக்கினாள்.

(இ-ள்.) பிளவாயுள்ள இளம்பிறைபோலு நுதலினாய் நின்னிளையாளான வின்னவள் நாங்கூறியதனை யாராய்ந்து பெரியதீயில் முழுகிச் சிறந்த பழயவடிவினை யொழித்துக்கொண்டனள்.—எ-று. (உ௪௧)

பொள்ளெனத்தன்புறவுடல்பொன்றலு
முள்ளினுற்றவுருவத்துடனெழீஇ
வள்ளிவெற்பின்மரம்பயில்சூழல்போய்த்
தெள்ளிதிற்றவஞ்செய்திருந்தாளரோ.

(இ-ள்.) தீயில் விழுந்தமையாற் தனது தூலவுடலமழியச் சூக்கவுடலுடன் எழுந்து வள்ளிமலையில் மரங்கள் பொருந்திய இடத்திற்சென்று சீரியதாகத்தவஞ்செய்திருந்தனள்.—எ-று. (உ௪௨)

அன்னசாரலதனிற்சிவமுனி
யென்னுமாதவனெல்லையில்காலமாய்
மன்னிநோற்புழிமாயத்தினீரதாய்ப்
பொன்னின்மானொன்றுபோந்துலவுற்றதே.

(இ-ள்) அம்மலையடிவாரத்திற் சிவமுனியென்னுமாதவன் அளவற்றகாலமாக இருந்துதவஞ் செய்யுமிடத்தில் மாயத்தன்மையாய் ஒரு பொன்மானென்று வந்துலாவியது.—எ-று. (உசரு)

வந்துலாவுமறிதனைமாதவன்
புந்திமாலொடுபொள்ளெனநோக்கலு
மந்தவேலையதுகருப்பங்கொள
விந்தமாதக்கருவினுளெய்தினுள்.

(இ-ள்.) அங்குவந்துலாவிய பொன்மானைச் சிவமுனிவன் மயக்கத்துடன் விரைந்துபார்த்தலும் அப்பொழுதம்மான் கருப்பந்தாங்க இப்பெண்அக்கருவினுட்பிரவேசஞ் செய்தனள்.—எ-று. (உசச)

வேறு.

மானிவடன்னைவயிற்றிடைதாங்கி
யானதேர்வள்ளியகழ்ந்தபயம்பிற்
றுனருள்செய்துதணந்திடவங்கட்
கானவன்மாதொடுகண்டனனன்றே.

(இ-ள்.) மானனதிவளை வயிற்றினிடத்துச் சுமந்து அம்மலையிடத்ததான வள்ளிக்கிழங்கெடுத்த பள்ளத்திற் பெற்றுச்செல்ல அவ்விடத்தில் தன் மனைவியுடன் வந்த வேடன் இவளைக்கண்டான்.—எ-று. (உசரு)

அவ்விருவோர்களுமாங்கிவடன்னைக்
கைவகையிற்கொடுகாதலொடேகி
யெவ்வமில்வள்ளியெனப்பெயர்நல்கிச்
செவ்விதுபோற்றினர்சீர்மகளாக.

(இ-ள்.) அவ்வேடனும் வேடச்சியும் அவ்விடத்திலிவளைக் கைகளின் முறையாகத்தாங்கி விருப்பத்துடன்சென்று குற்றமற்ற வள்ளியென்று பெயரிட்டுத் தங்கள் சிறந்த மகளாகச் செவ்வனே வளர்த்தார்கள்.—எ-று. (உசசு)

திருந்தியகானவர்சீர்மகளாகி
யிருந்திடுமெல்லையில்யாமிவள்பாற்போய்ப்
பொருந்தியும்வேட்கைபுகன்றுமகன்றும்
வருந்தியும்வாழ்த்தியுமாயைகள்செய்தேம்.

(இ-ள்.) திருத்தமுற்ற வேட்டுவர்களின் சிறந்தமகளாகி இருந்தகாலத்து யாமிவளிடஞ்சென்று ஆசையை யுரைத்தும் வாழ்த்தியும் பொருந்தியும் வருந்தியும் இவ்வாறுபல மாயைகளைச் செய்தேம்.—எ-று. (உசஎ)

அந்தமின்மாயைகளாற்றியதற்பின்
முந்தையுணர்ச்சியைமுற்றுறநல்கித்
தந்தையுடன்றமர்தந்திடநென்ன
விந்தமடந்தையையாமணஞ்செய்தேம்.

(இ-ள்) அளவற்ற மாயைகளைச்செய்து அதன் பின்னர் பழய வறிவுமுழுதுமுண்டாமாறருள் புரிந்து தந்தையுஞ் சுற்றத்தினரு மளிக்க நெருநல் இந்தமாதை நாம்மணம் புரிந்தேம்.—எ-று.

தந்திடல்- தாரைவார்த்தளித்தல் (உசஅ)

அவ்விடைமாமணமாற்றியகன்றே
யிவ்விவடன்னுடனிம்மெனமேவிக்
தெய்வவரைக்கணோர்சில்பகல்வைகி
மைவிழியாயிவண்வந்தனமென்றான்.

(இ-ள்.) அச்சிற்றூரி பெருமையான திருமணஞ்செய்து இவளுடனங்கு நின்றும் வந்து தெய்வத் தன்மையினையுடைய திருத்தணிகை மலையிற் சிலதினமிருந்து இவ்விடத்துக்கு வந்தோமென்று அருளிச்செய்தனன்.—எ-று. (உசகூ)

என்றிவைவள்ளியியற்கையனைத்தும்
வென்றிடுவேற்படைவீரனியம்ப
வன்றிறல்வாரணமங்கைவினவி
நன்றெனவொன்றுநவின்றிடுகின்றாள்.

(இ-ள்.) இவ்வாறு வள்ளிநாயகியின் வரலாறனைத்தும் பகைவரைவென்ற வேலாயுதத்தினையுடைய வீரனான சண்முகப்பெருமானருளிச்செய்ய மிக்கவன்மையினையுடைய ஐராவத குமாரியான தெய்வயானையம்மைகேட்டு நல்லதென்றொன்று கூறியருளுகின்றாள்.—எ-று. (உருo)

வேறு.

தொல்லையின்முராரிதன்பாற்றோன்றியவிவளும்யானு
மெல்லையில்காலநீங்கியிருந்தனமிருந்திட்டேமை
யொல்லையிலிங்ஙன்கூட்டியுடனுறுவித்தவுன்றன்
வல்லபந்தனக்கியாஞ்செய்மாறுமற்றில்லையென்றாள்.

(இ-ள்.) முன்னாளிற் திருமாலிடம் பிறந்த இவளும் யானும் அளவற்ற காலம்பிரிந்திருந்தேம் பிரிந்திருந்த எங்களை விரைவாக விங்குச்சேர்த்து உடனுறச்செய்தவுனது வல்லவத்துக்கு நாங்கள் செய்யும் பதிலுபகாரமொன்றுமில்லை யென்றருளிச் செய்தனள்.—எ-று. (உருக)

மேதகுமெயினர்பாவைவிண்ணுலகுடையநங்கை
யோதுமொழிவினவிமேனாளுனக்கியான்றங்கையாகு
மீதொருதன்மையன்றியிம்மையுமிளையளானே
ஞாதலினுய்ந்தேனின்னையடைந்தனனளித்தியென்றாள்.

(இ-ள்.) மேன்மைவாய்ந்த வேடர்குல மடந்தையான வள்ளியம்மை சுவர்க்க லோகத்தையுடைய தெய்வயானையம்மை கூறிய சொல்லினைக்கேட்டு முன்னாளிலுனக்கு யான் தங்கையாகிய இந்த ஒரு தன்மையன்றி இந்தப்பிறப்பிலு நினக்கிளையவளானேன் ஆதலாலுய்ந்தேனானயான் நின்னையடைந்தேன் என்னைக்காப்பாயாக என்றருளிச்செய்தனள்.—எ-று. (உருஉ)

வன்றிறற்குறவர்பாவைமற்றிதுபுகன்றுதௌவை
தன்றிருப்பதங்கடம்மைத்தாழ்தலுமெடுத்துப்புல்லி
யின்றுனைத்துணையாப்பெற்றேனெம்பிரானருளும்பெற்றே
னென்றெனக்கரியதுண்டோவுளந்தனிற்சிறந்ததென்றாள்.

(இ-ள்.) வலிய திறலினையுடைய வேடர்புதல்வியான வள்ளியம்மை இதனையுரைத்துத் தமக்கையின் திருவடிகளில் வணங்குதலும் தெய்வயானையம்மை அங்ஙனம் வணங்கிய வள்ளியம்மையை எடுத்தணைத்து இன்றுன்னைத் துணையாகப்பெற்

றேன் எம்பெருமானருளும்பெற்றேன் ஆதலின் எனக்கு இனி யடையதக்கதாய் உள்ளத்திற் சிறந்த பொருள் வேறென்றுளதோ என்றருளிச்செய்தனள்.எ-று.(உ௫ங)

இந்திரனருளுமா துமெயினர்தம்மா துமிவ்வா
றந்தரஞ்சிறிதுமின்றியன்புடனளவளாவிச்
சிந்தையுமுயிருஞ்செய்யுஞ்செயற்கையுஞ்சிறப்புமொன்றாக்
கந்தமுமலரும்போலக்கலந்துவேறின்றியுற்றார்.

(இ-ள்.) இந்திரன் பெற்றமகளான தெய்வயானையம்மையும் வேடர்குலமகளான வள்ளியம்மையும் இவ்வண்ணம் பேதஞ் சிறிதுமின்றி அன்புடன் அளவளாவி உள்ளமுமுயிருஞ் செய்யுஞ் செயலுஞ் சிறப்பு மொன்றாகி மணமும் மலரும் போலக் கலந்து வேறின்றி யிருந்தார்கள்.—எ-று.

அளவளாவல் - கலந்துபேசுதல். (உ௫ச)

இங்கிவரிருவர்தாமுமியாக்கையுமுயிரும்போலத்
தங்களில்வேறின்றாகிச்சரவணத்தடத்தில்வந்த
புங்கவன்றன்னைச்சேர்ந்துபோற்றியேயொழுகலுற்றார்
கங்கையும்யமுனைதானுங்கலைகடலுடன்சேர்ந்தென்ன.

(இ-ள்.) இவ்விடத்தி லிவ்விருவரும் கங்கையும் யமுனையு மொலிக்குங் கடலுடன் வேற்றுமையின்றிக் கலந்தாங்கு உடலு முயிரு மொன்றாகி யிருப்பதுபோல தங்களுள் வேற்றுமையின்றிச் சரவணப் பொய்கையி லவதரித்த சண்முகப்பெருமானைக்கலந்து துதித்து ஒழுகினார்கள்—எ-று. (உ௫௫)

கற்றையங்கதிர்வெண்டிங்களிருந்துழிக்கனலிப்புத்தே
ளுற்றிடுதன்மைத்தென்னவும்பர்கோனுதவுமானு
மற்றைவில்வேடர்மானும்வழிபடல்புரிந்துபோற்ற
வெற்றியந்தனிவேலண்ணல்வீற்றிருந்தருளினானே.

(இ-ள்.) கூட்டமான கிரணங்களையுடைய சூரியனும் வெள்ளிய சந்திரனுமிருந்தவிடத்தில் அக்கினிதேவன் நடுவண் இருந்த தன்மைபோல தேவராசன்பெற்ற தெய்வயானையம்மையும் வில்லினையுடைய வேடராசன்பெற்ற வள்ளியம்மையும் வழிபாடுசெய்து துதிக்க ஒப்பற்ற வெற்றியினையுடைய வேலாயுதமேந்திய சண்முகப் பெருமான் எழுந்தருளி இருந்தனன்.—எ-று. (உ௫சு)

கல்லகங்குடைந்தசெவ்வேற்கந்தனோர்தருவதாகி
வல்லியர்கிரியைஞானவல்லியின்கிளையாய்ச்சூழப்
பல்லுயிர்க்கருளைப்பூத்துப்பவநெறிகாய்த்திட்டன்ப
ரெல்லவர்தமக்குமுத்தியிருங்கனியுதவுமென்றும்.

(இ-ள்.) கிரவுஞ்ச மலையைப் பிளந்த செவ்விய வேற்படையேந்திய கந்தக் கடவுள் ஒரு தேவதாருவாய் இருமனைவியரும் கிரியைஞானமென்னும் சத்திகளின் கிளைகளாய்ப் பொருந்தப்பலவகை உயிர்களிடமும் அருளைப்பூத்துசனனமார்க்கமாகக் காய்த்து எல்லாவன்பர்கட்கும் முத்தியென்னும் பெரிய பழத்தினை அளிக்கும்.-எ-று.

பெண்ணொருபாகங்கொண்டபிஞ்ஞகன்வதனமொன்றிற்
கண்ணொருமூன்றுவைகுங்காட்சிபோலெயினர்மாதும்

விண்ணுலகுடையமாதும்வியன்புடைதன்னின்மேவ
வண்ணலங்குமரனன்னார்க்கருள்புரிந்திருந்தானங்கண்.

(இ-ள்.) உமையை யொருபுறத்திலுடைய சிவபெருமான தொருமுகத்தில் மூன்றுகண்கள் இருக்குந் தோற்றத்தைப்போல வேடர்மகளான வள்ளியம்மையும் சுவர்க்க வுலகினையுடைய தெய்வயானையம்மையும் சிறந்த பக்கங்களிலெழுந்தருளி இருக்கப்பெருமையிற் சிறந்த சண்முகப்பெருமான் அவர்கட் கருள்புரிந் தெழுந்தருளி இருந்தனன்.—எ-று. (௨௫௮)

சேவலுங்கொடிமான்றேருஞ்சிறைமணிமயிலுந்தொன்னாண்
மேவருந்தகரும்வேலும்வேறுளபடைகள்யாவு
மூவிருமுகத்துவள்ளன்மொழிந்திடுபணிகளாற்றிக்
கோவிலின்மருங்குமுன்னுங்குறுகிவீற்றிருந்தமன்றே.

(இ-ள்.) கோழிக்கொடியும் கொடிகளையுங் குதிரைகளையுமுடைய இந்திர ஞாலத்தேரும் இறகினையுடைய அழகியமயிலும் முன்னாள் நாரதமுனிவன் செய்த யாகத்தின் வழிவந்த செம்மறிக் கடாவான தகர்ப்பரியும் வேலாயுதமும் மற்றுள்ள ஆயுதங்களும் சண்முகப்பெருமானாகிய வள்ளல் அருளிச் செய்யும் கட்டளைகளை நடத்தி ஆலயத்தின் பக்கத்திலும் எதிரிலும் அடைந்து முறையாக விருந்தன.—எ-று. (௨௫௯)

ஆறிருதடந்தோள்வாழ்கவறுமுகம்வாழ்கவெற்பைக்
கூறுசெய்தனிவேல்வாழ்க்குக்குடம்வாழ்கசெவ்வே
ளேறியமஞ்ஞைவாழ்கயானைதன்னணங்குவாழ்க
மாறிலாவள்ளிவாழ்கவாழ்சீரடியாரெல்லாம்.

(இ-ள்.) சுப்பிரமணியக்கடவுளின் பெரிய பன்னிரண்டு திருத்தோள்களும் வாழக்கடவன ஆறு திருவதனங்களும் வாழக்கடவன கிரவுஞ்ச மலையைப்பிளந்த ஒப்பற்ற வேலாயுதமும் வாழக்கடவது கோழிக்கொடியும் வாழக்கடவது அக்கடவுள் ஏறியருளுகின்ற மயிற்பரியும் வாழக்கடவது ஐராவத குமாரியான தெய்வயானை அம்மையாரும் வாழக்கடவர் ஒப்பற்ற வள்ளியம்மையாரும் வாழக்கடவர் சிறப்பினையுடைய வீரவாகு தேவர் முதலிய அடியவர்களும் வாழக்கடவர்.—எ-று. (௨௬௦)

புன்னெறியதனிற்செல்லும்போக்கினைவிலக்கிமேலா
நன்னெறியொழுகச்செய்துநவையறுகாட்சிநல்கி
யென்னையுமடியனாக்கிபிருவினைநீக்கியாண்ட
பன்னிருதடந்தோள்வள்ளல்பாதபங்கயங்கள்போற்றி.

(இ-ள்.) (என்னுளத்தினை) இழிந்த செயல்களான காமவெகுளி மயக்காதிகளைத் தரும் அன்னியமதச் சார்பிலொழுகச்சென்ற நூற்பயிற்சி முதலியவைகளிலேயே மேலும் மேலுஞ் செல்லாநின்ற செல்கையைத்தடுத்து வேதசிவாகமசித்தாந்தவாராய்ச்சியினையுடைய நல்லாசிரியனளித்த வருளுபதேசத்தின் வழியே அநுட்டித்து நிற்கச்செய்து அவ்வநுட்டிப்பின் பயனாகிய நாமுளேம் நீ காண்கவெனக் குற்றமற்ற தமதுசகள நிட்களசொரூபங்களை யுள்ளும் புறம்புந் தரிசிக்குமாறு காட்சியளித்து அவ்வித தரிசனபாக்கியத்துக்குத் தக்கானல்லாத என்னையும் தமது திருவடித் தொண்டனாக்கி இருவினைகளையுமின்றிச்செய்து ஆட்கொண்ட சிறந்த பன்னிரண்டு புயங்களையுடைய ஞானதாதாவான எம்பெருமானுடைய திருவடித்தாமரைகள் போற்றபடுவன.

## வேறு.

வேல்சேர்ந்தசெங்கைக்குமரன்வியன்காதைதன்னை
மால்சேர்ந்துரைத்தேன்றமிழ்ப்பாவழுவுற்றதேனும்
நூல்சேர்ந்தசான்றீர்குணமேன்மைநுவன்றுகொண்மின்
பால்சேர்ந்ததனாற்புனலும்பயனாவதன்றே.

(இ-ள்.) நூலொடுசார்ந்த அறிவினையுடைய சான்றோர்காள்! வேலாயுதத்தினை யேந்திய செவ்விய திருக்கரத்தினையுடைய சுப்பிரமணியப் பெருமானது பெருமை யமைந்த சரிதத்தினை வெளியிடவேண்டு மென்னுமவாவாகிய மயக்கங்கொண்டுள்ளே னாதலின் என்னாலியற்றப்பட்ட வித்தமிழ்ச்செய்யுட்கள் ஆனந்தமுதலிய குற்றங்களு டையனவாயினும் அவற்றுட்சார்ந்து நிற்குங் குமரவேளின் றிருவிளையாடலாதியபொ ருளின்மேன்மையினாலேசிறந்ததென்று ஏற்றுக்கொள்ளுங்கள். பாலையடைந்தமையால் நீரும் பாலின் றன்மையைப் பெறுகின்றதன்றோ?—எ-று. (௨௬௨)

பொய்யற்றகீரன்முதலாம்புலவோர்புகழ்ந்த
ஐயற்கெனதுசிறுசொல்லுமொப்பாகுமிப்பார்
செய்யுற்றவன்மாலுமைபூசைகொடேவதேவன்
வையத்தவர்செய்வழிபாடுமகிழுமன்றே.

(இ-ள்.) இவ்வுலகினைப்படைத்த பிரமனும் திருமாலும் உமாதேவியுஞ்செய்த பூசைகளை யேற்றுக்கொண்ட சிவபெருமான் மண்ணுலகினர் செய்யும் பூசையையும் ஏற்று மகிழ்வார் ஆதலின் உண்மை யொழுக்கத்தினையுடைய நக்கீரன் முதலிய தெய் வீகம் வாய்ந்த முதுமொழிப் புலவர்கள்பாவாற் புகழப்பட்ட (சகலகலைகளு முருக்கொ ண்டு நின்றேத்தும்) சுப்பிரமணியப்பெருமானுக்கு என்னுடைய விழிந்த பாடல்களும் அங்கீகாரமாகும்.—எ-று.

சிவபெருமானே குமரக்கடவுளாதலால் இவ்வாறு கூறினாரெனவறிக. (௨௬௩)

என்னாகன்விண்ணவர்நாயகன்யானைநாம
மின்னாயகனான்மறைநாயகன்வேடர்நங்கை
தன்னாயகன்வேற்றனிநாயகன்றன்புராண
நன்னாயகமாமெனக்கொள்கவிஞ்ஞாலமெல்லாம்.

(இ-ள்.) எனது நாயகரும் கிராதகுலவல்லிகாந்தரும் நிருபமசத்திதரநாயகரும் ஆகிய சிவசண்முகப்பெருமானுடைய இப்புராணத்தினை (மற்றைய புராணங்களாகிய நட்சத்திரங்களின் நடுவண்சந்திரனைப்போலத்) தலைமையமைந்ததென உலகத்தவர்கள் அறிந்துகொள்ளக்கடவர்.—எ-று. (௨௬௪)

வற்றாவருள்சேர்குமரேசன்வண்காதைதன்னைச்
சொற்றாருமாராய்ந்திடுவாருந்துகளறாமே
கற்றாருங்கற்பான்முயல்வாருங்கசிந்துகேட்க
லுற்றாரும்வீடுநெறிப்பாலினுறுவரன்றே.

(இ-ள்.) அளிக்கவளிக்கக் குறையாத அருளினையுடைய குமாரசுவாமியின் வளவிய இச்சரிதத்தினைப் படிப்பவர்களும் பொருளை யாராய்பவர்களுங் குற்றமின்றிக் கற்றவர்களும் கற்றற்கு முயற்சிசெய்பவர்களும் மனமுருகிக்கேட்பவர்களும் போகானுபவமுதிர்வுடையாராய் முத்தியை முறையேயடைவார்கள்.—எ-று. (௨௬௫

பாராகியேனைப்பொருளாயுயிர்ப்பன்மையாகிப்
பேராவுயிர்கட்குயிராய்ப்பிறவற்றுமாகி
நேராகித்தோன்றலிலதாகிநின்றான்கழற்கே
௭ யாராதகாதலொடுபோற்றியடைதுமன்றே.

(இ-ள்.) பிருதிவியாய் மற்றைய பூதாதிகளான பொருள்களாய்ச் சீவசமூகமாய் அழியாத ஆன்மாக்களுக்குப் பரமான்மாவாய் மற்றுள்ளவைகளுமாய் உண்மைப் பொருளாய்ப் பிறப்பற்றதாயுள்ள நிட்களசொரூபியான சிவபெருமானது திருவடியில் அமையாத காதலுடன் துதித்தடைவோம்.—எ-று.

இங்ஙனங்கூறிய நிட்களசிவமே நம்மையாளும் வண்ணம் சகளத்திருமேனியுடன் எழுந்தருளியிருப்பவன் ஆதலின் அவன்கழலை அடைவோமாக என்க. (உசுசு)

வள்ளியம்மை திருமணப்படல முற்றிற்று.

தட்சகாண்ட முற்றிற்று.

ஆ திருவிருத்தம். உ௦சுஎ.

ஆகக்காண்டம் சு-கு திருவிருத்தம் க௦,ஙசசு.

வாழி வெண்பா.

கந்தன் கழல்வாழி கச்சியப்பன் வாழியவன்
றந்த தமிழ்வாழி யத்தமிழ்க்கு, முந்துரையாம்
நல்லகலா பூடணமு நம்பனுமை யாண்மனுவு
மெல்லவரும் வாழி யிசைந்து.

---

ஸ்ரீமத் கச்சியப்பசிவாசாரிய ரருளிச்செய்த கந்தபுராணமூலமும்,

பானுகவியவர்கள் இயற்றிய

கலாபூஷணமேன்னும் அதன் உரையும் முற்றுப்பெற்றன.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிவசண்முகன்றுணை.

கச்சியப்ப சிவாசாரியர் திருவடிவாழ்க.

